


உ

குருவே துணை

# பக்தமான்மியம்

## அநுபந்தம்

இவை

மஹான் வண்ணச்சரபம்

ஸ்ரீதண்டபாணி சுவாமிகள் அன்புக்குரிய

ஸ்ரீமத் இராமானந்த சுவாமிகளது மாணாக்கர்

கோயமுத்தூருக்கடுத்த சிரவணபுரம்

கௌமாரமடாலயம்

**ஸ்ரீமத் கந்தசாமிசுவாமிகளால்**

இயற்றப்பெற்று

சிரவணம்பட்டி

முத்துக்கவுண்டர் குமாரர் சுப்பய்யா என்கிற

பழனிக்கவுண்டரவர்களின்

பொருளுதவி கொண்டு

சிரவணபுரம் கௌமாரசபையாரால்

சென்னை

கேசரி அச்சுக்கூடத்தில்

பதிக்கப்பெற்றன. 1928

விபவவூ மேஷ மாதம்

 [விலை ரூ. 7.

உ

குருவே துணை.



ஸ்ரீலஸ்ரீ

இராமானந்த சுவாமிகள்

சிரவணபுரம் கௌமாரமடாலயம்.

85/

உ

குருவே துணை

# உபோற்காதம்

---

கலிவிருத்தம்

திருவருட்கட லாயடியவர்பவந் தீர்க்கும்
பொருவினாரணக் கடவுள்செந்தாமரைப் பூநே
ரிருபதந்தொழு துய்ந்தமெய்ப்பத்தர்த மிருஞ்சீர்
மருவுபத்தமான் மியத்தமிழ்க்காவியம் வாழ்க.

வசனம்

பக்தமான்மியம் என்னும் இந்நூற்பெயரானது பக்தர்களது மகிமையை விளக்கு நூலென்ற பொருளைத்தந்து நிற்கும் ஆறனுருபடியாகப் பிறந்த அன்மொழித்தொகை.

பக்தரென்றது பக்தியுடையோரென்னும் பொருளைப்பயப்பதான பொதுமொழியேனும் ஈண்டு ஸ்ரீநாராயணன் மீதுண்மையன்பு செலுத்திய வைணவ பக்தர்களையே குறித்ததென்பது, சிலநூற்றாண்டுகளுக்கு முன் மிதிலாபுரியிற்றோன்றி விளங்கிய சந்திரதத்தரென்பவரால் தெய்வீகங்காரணமாக வடமொழியிலியற்றப்பட்ட “பக்தமாலா” என்னு நூலிற்குறிக்கப்பட்ட வைணவ, சாத்தேய, சைவ, பக்தர்களது சரித்திரப்பகுதி மூன்றனுள் வைணவ பக்தர் கதையைச் சொல்வேனென்று நூலாரம்பத்திற் கூறியுள்ளமையால் விளங்குவதாம். அதுவருமாறு, “கமலமகட்புணர் திருமா லுமையவள்சங்கர னடிமைக் கணத்தோராகித்-தமமறுமெய்ப்பத்தர்கண்முப் பிரிவாங்கதைகளுல கோர் சார்ந்துதேறிச்-சமரசமுற்றிடப்புகன்ற சந்திரதத் தன்றிருநூற் சாரங்கொண்டே—விமலமுறு நாரணன்றன் றொண்டர்கதையினைச்சிறியான் விளம்புவேனே” என்றதாம்.

இந்தக்காவியத்தினை யியற்றியருளிய ஸ்ரீகந்தசாமி சுவாமிகளென்பார், தமது சிறப்புப்பாயிரம் நான்காங்கவியில் நூற்காரணமென்ற விலாசத்தின்கீழ் “ துப்பனையவடிவுளவெங் குருராமானந்தத் தோன்றல்கனவொடு நனவிற் சொலக்குறிப்பிட்டதையு, மப்பகவன்றாண்மறவாச் சுந்தரமெய்த் தொண்ட ரளவில்பெருங்காதலுட னனைவருங்கேட்டுய்வான், செப்பவிடு பணியையுமற் றவர்பததூளியையுஞ் சென்னிமிசை கொண்டுவப்பாற் செயத்துணிவு கொண்டேன்” எனவிதந்தமையால், தமது சற்குருமூர்த்தியின் உத்தரவிற்படிந்து பாடினரென்பது பெறக்கிடந்தது.

பக்தியென்பது சாமானியமான வொன்றன்று, கருமம், ஞானம் என்னு மிரண்டுக்கு மிடையில், நடுநிலைத்தீபமாய் நின்று, தன்னையடைந் தார்க்குப்போகமோட்சங்களை யினிது கொடுக்குஞ் சிறப்பினதாகும். பசுவாகிய ஆன்மாவானது பதியாகிய தெய்வத்தை யடைதற்குரிய சோபானமாயுள்ளது. "பத்திவலையிற் படுவோன் காண்க" என்ற ஸ்ரீ வாதவூரடிகளது மணிவாசகத் தமிழ்மறை அக்கொள்கையை வலியுறுத்திற்று, "பத்தியாய் நினைந்து பரவுவார்தமக்குப் பரகதிகொடுத்தருள் செய்யுஞ் சித்தன்" என்றது மஃது. "பத்தியென்கை தெளிந்தவுபா சனையேயாகும்" என்றது கவுமார முறைமை. "அன்பெனும்பிடியு ளகப்படு மலையே" என்ற அருட்பிரகாச வள்ளலாரருளுரையு மொத்தோதிற்று. அன்பு, பக்தி, என்பன வோரோவழி யொத்தபொருளனவாகும். இதனால் அதீதப்பொருளாகிய தெய்வத்தை வசப்படுத்துவதற்குரிய கருவி பக்தியே யென்பது தெற்றென விளங்கும்.

அத்தகைய பக்தியைப் பூர்வகாலத்தில், பட்சி மிருகாதி செந்துக்களுஞ் செலுத்தித் தெய்வ கிருபையைப் பெற்று வாழ்ந்தடைந்த சரிதங்கள் பலவாறு வழங்குவது நன்கு தெரிந்ததே. பக்தி சிறிது மில்லாதவர் புதரோடொப்ப ரென்பது திண்ணம். அநாதிதொடங்கிப் பலவிதப் பிறவிகளிற்பட்டுழன்று நாளடைவில் ஈசுரகிருபையால், அரியமனிதப் பிறவியை யடைந்தவர்களின் கடமையாவது, டக்திநெறி சென்று சித்தியும், பின் முத்தியும் பெறுவதே யென்பது, "தெய்வமொன்றுளதெனத் தேறிப் பணிவது மானிடப்பிறப்பில் வந்தோர் கடனே" பத்திநெறியிற் பதிந்து நின்று பாடுபட்டுச், சித்திமுத்திப் பேற்றூற் றிருத்தி யடைவீரே" என்ற சத்திய சூத்திர நூல் விளக்குகிறது.

அத்தகைச் சிறப்பினதான பக்தியைப் பெறுவதற்கு அது எத்தன்மையது அதனைப் பெற்றோர் யாவரென்ற விவரம் தெரியவேண்டிய தவசியமாகும்.

கருமம் பக்தி ஞானம் என்ற மூன்றும் வேதவுடன் பாடேனும், ஒன்றுக்கொன்று மேம்பட்டனவாம். அவை முறையே பிஞ்சு காய் கனி போன்றன வென்கைசால்பாம். பக்தியில்லாத கருமம் பயனற்றதும் விபரீதமுமாய் முடியும், பக்திவழி பெறுதஞானமும் பேச்சளவாயும் விபரீதமாயுமுடியும். மாதா பிதாவை யொத்துத் தூலமாயியல்பாயுள்ளது கருமமும், சற்குருநாதனை யொத்துச் சூக்குமமாய் விசேடமாயுள்ளது பக்தியும், தெய்வத்தையொத்து அதீதமாயத் துவிதப்பட்டுள்ளது ஞானமுமாதலின், மூன்றும் அவசியமானவையென்பதே மேலோர் துணிவு. "ஈன்றுளாரொடெழிற் குருநாதனு-மேன்று நாடூ ரெய்துமெய்த்தெய்வமு-மூன்று காண்ட முறைமையென்றுன்னுவார்-வான்றுதிக்க வருகவுமாரரே" என்ற கௌமார முறைமைப் பாயிரக்கருத்தின்படி கருமம் என்ற அஸ்திவார பலங் கொண்டு, பக்தியென்னும் அரண்மனை புகுந்து ஞானமென்னும் மேனிலை

மாளிகையிற் றலைவனுடன்கலந்து சுகிக்கவிரும்பும் பேரின்பக்காமிகளாகிய வுத்தமர்களுக்கு, இந்தப் பக்தமான்மிய நூலாராய்ச்சி, இன்றியமையாச் சிறப்பினதென்பது சித்தம். குருவாக்கிய பரிபாலனமாக இவர் இக்காவியத்தினை யாத்தனரன்றித் தமது புலமைத்திறத்தைப் பிறர்கண்டு வியக்கவேணு மென்ற செருக்குடனியற்றினாரல்லரென்பது “இப்பனுவற் சொலுமறிவீண் டெய்தாதவெனைக்கொண் டியற்றிடுவான் புகுத்தவர்கட் கியான்செய்கைமா றென்னே” எனச் சிறப்புப்பாயிர நாலாங்கவியீற்றடியிற் சொன்னமையாற் புலப்படுகின்றது.

இக்காவியத்தின் பூர்வாங்கமாயமைந்துள்ள பிராசீனபத்தர் தொகை யென்ற பிரிவில், பக்தியின்பெருமைகளை நன்குவிளக்கிப் புகன்றுள்ளாராதலி லிங்கு யாம்கூறுதல் மிகை. நாபதாசர் முதல் வருணனை இறுதியாக தொண் ணூற்றெட்டுக்கதிகளும் வேறுநூலிலிருந்து அநுபந்தம் கதி ஆறும்கொண்டு பூர்வாங்கப்பகுதியவான பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம், சந்திரதத்தர் வரலாறு, பிராசீனபத்தர் தொகை, என்ற நான்குடன் எகூஎ. கவிகளாய் விருத்தயாப்பில் முடித்துள்ளார்.

பாரதம், இராமாயணம், குருபரம்பரை, அரிசமயதீபம், பக்தவிஜயம், பக்தலீலாமிர்தம், என்றற்றொடக்கத்தனவாய்ப் பகவத் பக்தசரித்திரங்களைக் கூறும் நூல்களில் கூறப்பட்டனசிலவும், அல்லாதனசிலவும் இதனில் அமைந் துள்ளதுமன்றி அவற்றுள் விளங்கப்பெறுதசில முக்கியவுண்மைக்கதைகளை யுந்தனுட்கொண்டுள்ளது. கற்பவர்மனத்தைக்கனன்மெழுகொத்துநெகிழ் விக்குங்கதைகளையுடையதாய், மூர்த்தியுபாசனையின்பெருமை, அருட்சித்தியி னருமை, அடிமைத்தன்மை, சினமின்மை, நிராசை, குருபக்தி, முதலிய நன் மைகளையும் காட்டி, கல்விச்செருக்கு, வீணனதிருப்தி, காமம், குரோதம், அழுக்காறு, கொலை, புலை, முதலிய தீமைகளைப் போக்குதற்குரிய கருவியான பல குறிப்புகளையுட்கொண்டு விளங்குகின்றது. பொதுவில் வைணவபக்த சரிதை யெனத்தோன்றினும், சிறப்பிலாராய்வோர்க்குச் சமயபேதத்தன்மை யின்றிச்சமரச நிச்சயத் திறமையை யளிக்கத் தக்க, அதிநுட்ப விசேடங்கள் பல இதனிலமைந்துள்ளன.

தாய்மொழியைநம்புஞ்சேயினம்போல், பெரியோர் நூற்கருத்தின் சித் தாந்தங்களையும், உபதேசசாரங்களையு நம்பி வழிப்பட்டுப் பயன்பெறும் பக்குவிகளுக்கு நூல்கள் இசைக்கப்பட்டுள்ளனவே யன்றி, எல்லாம் பொய் யென்றிகழ்ந்து தமது விபரீத நிச்சயத்தையே மேலென்றெண்ணித் திரிவோர்க்கு எத்தனை கூறினும் பயன்படாது. “தெய்வவல்லவச் சீர் திகழ்தாற்காம்பொய் செப்பினு மொப்பிநம்பியற்கை, சைவாதி யர்தம் பான்மையாந்தழலாற் றகிப்புறுத்தமிழையும் பழிக்கும், பொய் வழக்கமண ராதியர்குணமாம்” என்ற மூதுரை மிகப்போற்றற்பாலது. முன்னூலை மொழிபெயர்த்துக் கவிபாடும் அவ்வளவிற் கடன்கழித் துச்செல்லாமல் ஆங்காங்கு விஷயவிளக்கமான அநுபூதியுண்மைகொண்ட

வுபதேசசாரங்களைக் கலந்து சொல்லும் அருமை மேலோர்கண்டு வியத் தற்பாலது. இதிற்கூறப்படும் கதிகளின் விவரம் அட்டவணையிற்காண லாம். இடையிடையே முக்கியமான விடங்களில் அரியசந்தயாப்பிற் கவிகொண்டு கதை கூறும் கல்விப்பெருக்கம் கலைமகளருளென்பதன்றிவே றென்சொல்வது. "கவிராசர்குலநடுங்கக் காதறுத்துச்செயங்கொடுசக் கர வர்த்திப்பேர், புவிமீதுநிறுத்தியவன்" என்றும், "புரைதவிர்கவிதாசார்வ பூமனென்றொருபேர் பெற்றுத், தரையில்வாழ் புலவருள்ளத் தருக்கெலா முருக்குந்தக்கோன்" என்றும் புகழ்பெற்று மகாபாரதம் தமிழிற்பாடிய வில்லிபுத்தூராழ்வார்முதலான சிலபுலவர்கள்தவிர முற்காலத்துக் காவியப் புலவர்களிற்சந்தக்கவியிற் சாற்றினோரில ரென்னலாம். "வண்ணப்பாவலர் வளர்புகழ்ப்பேரறை, யன்னவர்தாமேயறிவார் மன்னோ" என்றதுவண்ணத் தியல்புநூல். அப்பெற்றித்தானசந்தம் இந்தப்பக்தமான்மியகாவியத்திற் பலவிடங்களிலு மமைந்து விளங்குகின்றது.

இந்நூல் வைணவபக்தமகிமை யோதுவ தாயினும், ஸ்ரீ சடகோபர், விட்டுணுசித்தர், நாச்சியார், முதலான சமபாசாரியத்தன்மை பெற்றதமிழ்த் தொண்டர்களை யெடுத்துக்கொண்டதில்லை, தேசிகர், மணவாளமாமுனி முதலிய, ஸ்தாபனுசாரியர்களையுங் குறித்திலது. ஸ்ரீ வைணவவிஜிஷ்டாத்து விதபாஷியகர்த்தரான இராமாநுஜமுனிவருக் கென்றொருகதி, இருபதாவ தாக எடுத்துக் கூறுகின்றது, கூறினும் அவரது அவதாரமுதலிய வைபவங் களைமுறையே கூறியதின்று, சிலவிதம் சொல்லப்பட்டுள்ளவைகள் அவரது பிரதாபங்கூறும் ஏனையநூல்களிலிராபோலும். இல்லாமைபற்றி அப்பகுதி பொய்யென்று கூறுதல் வழுவாம். ஏனெனில், எடுத்துக்கொண்ட பாகத் துக்குரியவற்றைக்கூறித் தமக்கொவ்வாத கூற்றினையொதுக்கி விடுவது நூலாசிரியருக்கியல் பாமாதலினென்க. இராமாநுசகதியின் பத்தொன்பதா வதுகவியில், "அருள் வடிவக்—குன்றேபுரைவான் கொளுங் கதையினோர் பெருமை—நன்றே யுலகி ன்விலாததுபுகல்வேன்" என்றுகூறிச் செல்வ தால், தனதுமுன்னூற் கருத்தைப் பின்பற்றிக்கூறின ரென்றறியலாம். இதேபோல் விபீடணகதியில் இராமாயணஞ் சொல்லாத கதையும், விதுர மங்கைகதியில்சில, பாரதஞ்சொல்லாத கதையும், மற்றுஞ் சில கதிகளிலும் அவ்வாறு சில வருவனவாம். அவற்றை யாராய்ந்தும் பெரியோர்களிடம் கேட்டறிந்துங்கைக் கோடலே சால்பாகும். பெரும்பாலும் வடதேசத்திற் பிறந்து விட்டுணு பத்தி செலுத்தியவர்களும், சம்ஸ்க்ருதம், இந்துஸ்தானி மஹாராஷ்டம் முதலிய பாஷாவிற்பத்தியில் நூல் செய்தவர்களுமாயே, கதித்தலைவர்கள் காணப்படுகின்றனர்.

சைவர்கள் திருத்தொண்டர் புராணத்தைப் போற்றிக் கைபாண்டு வருவது போலவே நாராயண பக்தி செலுத்தும் பாகவத சிரேட்டர்கள் மன முருகிக் கொண்டு வத்தற் குரிய வுத்தம காவியம் இந்தப் பக்தமான் மியமாகும். அக்கினியானது எந்த மரத்திற் பற்றி விளங்கினும், அக்கினி

யென்று பலராலுங் கொண்டாளப் படுவதன்றி மரத்தின் பேதமில்லா தொழிதல்போல, பக்தி யுடையவர் எத்தேசத்தில் எக்குலத்தில் எந்தப் பாஷையிலுள்ளவரேனும், எந்த மூர்த்தியையு பாசித்தவரேனும், அப்பேதங்கள் தோன்ருமல் பக்தர் என்ற நிச்சயங்கொண்டு அவர்கள் மீதுரிமை செலுத்துவதே யுத்தமரிலக்கணமாதலில், இக்காவியம் அத்தகையார்க் கானந்தப் பெருக்குதவுமென்பது திண்ணம். பேத பாவனையே தமதியற்கைக் குணமாயமைந்துழலும் வினையுடையோர்க்கு, எவ்வளவு விசேடங்களும் சமாதான வொற்றுமையு முடைய நூலாயினும் அதிலுள்ள சொற்ப வேறு பாட்டைக் குறித்துத் தூற்றும் விபரீதம் பீடித்து வருத்து மென்பதுண்மை, ஆயின் அவர்களும் காலக்கிரமத்திற் சமரசபக்குவம் பெறுவார்களென்பதே மேலோர் துணிவாம்.

உருக்கு மாங்கத கதி முப்பத்தைந்தாவது கவியில் "மூலவாணவமா மலத்தினைக் கொண்டு வருந்துநரிராமானந்த தேசிகனருளுக்க—நலத்தினைக் கொண்டு ஞான மெய்வீட்டி னண்ணிடுந்தன்மைபோல்" என்றும் மயூரத்துவசகதி நாற்பத்தொன்பதாவது கவியில், "இராமானந்ததேசிகன்றனுள்ளிய திருவடித்துணைச் செம் போதிடத்தன்பு கொண்டவர்" என்றும், சங்காராசாரியர்கதி அறுநூற்றுத் தொண்ணூற்ருென்ருவது கவியில் "இராமானந்த சற்குரவன் மலரடித் துணைகொடத்துவிதந்—துன்னருட் சமயாதீதகௌமாரத் தொண்டர்" என்றும், நாம தேவர்கதி நூற்றறுபத்தொன்பதாவது கவியில் "இராமானந்தப் பெருமான் வடிவமைந்த மனமேபோல்" என்றும் ஆங்காங்கு எடுத்துக் கூறித் தமது குருபக்தியை விளக்கும் அருமை அன்பர்கள் மனத்தை யானந்தப் படித்துவற்கைய மில்லை.

"எந்தவிதச்சமயத்து மூர்த்தியேனு மெழிற்குருவா மல்லதன் பாலெண்ணுவார்முன், வந்தவர்தற்கவசமைத்த கோலமாகு மற்ருென்றுமில்லையில்லை மயங்கவேண்டாம்" என்ற ஆசிரியவசனப்படி சற்குருநாதனையன்றி வேறுபட்டுத் தெய்வமொன்றின்றென்னும் விவேகாநுபவத்தெளிவினால், ஒவ்வொரு கதியினீற்றிலும் அந்தக்கதாசாரத்தை யொவ்வொரு கவியிலமைத்து, அவ்வச்சரித்திரகர்த்தாவான பத்தர்களுக்கும் அநுக்கிரகித்த ஸ்ரீ நாராயணன் தமது குருமூர்த்தமான சுவாமிகளென்றே குறித்து, "இராமானந்தப் பெயர்கொடெனதிதயத்திலங்கும் பெருமாளே" என்ற மகுடத்துடன் சொல்லித்துதித்துள்ளார். இத்தகைய குருபக்தியமைவது அநந்த சென்மதவமுதிர்ச்சியுள்ளோர்க்கேயாமென்பது நிராட்சேபம்.

இவ்விதக் குருவழிபாடாகிய கௌமாரநிச்சயமின்றி, குருதன்னைப் போன்றவொருவனென்றும் இருவருக்கு மேலான தெய்வம் வேருென்றுள்ளதென்றும் எண்ணிவழிபடுவோர், மற்றெல்லாப் பயனுமடைவாரேனும், ஐக்கமுத்தி மாத்திரமடைவதரிதென்பதுண்மை.

"அருவபரம் பொருளேமெய் யடியவருக் கருள்செய்யக்
குருவடிவா வருமென்னுங் குறிப்பறிய மாட்டாதா
னொருசமய நெறியேசென் றுன்னியவா விளையாடுங்
கெருவமுறப் பெற்றாலுங் கேடில்கதி யடையானே.

மெய்யாய திவருளோர் மேனிகொடு வந்தாலு
மையார்புன் மனமுள்ளோர் மனிதபா வனைசெய்வார்
பையாய வல்குன்மின்னார் பால்குடித்த குரவரையும்
பொய்யாகா வீடடைவோர் பூரணனென் றுணர்வாரே.

குருமகிமை யுணராதான் கோடி தவஞ் செய்தாலும்
பொருவருமா யிரவேதப் பொருளுரையுங் கற்றாலுந்
திருமகள்கோ னெனப்பல்லோர் செப்பும் வென்றி யடைந்தாலுங்
கருவதனிற் பட்டுழலுங் கனதுயரந் தவிரானே" என்பது

எமது குருபாதத்துவச் சமயாதீதச் சருக்கத்தின் விதியாம். சீடனது நிச்சயபாவனைக்குப்பப்பனே யன்றிப் பாவிக்கப்படுபவன்பரம் பொருளாயிருக்க வேண்டியதில்லை. அவன் தனதுகுருவை யவ்வாறு பாவிக்கக்கடவன். ஒருவன் தனதுகுருவுக்குப் பரத்துவஞ்சொல்லித்துதிக்கக்கேட்பவன்வியட்டியாயுள்ள நாமரூபங்களில் மனஞ்செல்லவிடாமல் குருவென்ற சமட்டியிற்கொண்டு தனது சிறப்புக்குருவுக்கு ஏற்றிக்கொள்ளக்கடவன். "அக்கிரகண்ணியமான குரவனாட்ட மறிஞர்சிலர்க்கோயாகு மனேஎர்க்காகா" என்பது கௌமாரவேத வாக்காதலின், குருமுன்னிலையிற் பக்குவநிலையிற் போதிக்கப் பெற்றுச்சாதிக்கப்பெறுவதாகிய இதனை யிங்கு விரிப்பினடங்காமை பற்றி விடப்பட்டது. "சீலஞான நெஞ்சிரக்கமாதியகுணஞ்சிறிதுமில்சிறியோனை, ஞாலமீதுமுற்றவமுளார்குருவெனக்ப்பினுமவன்கோலம், போல வந்தருள் புரி பரிபூரணப் பொருள்" என்றும், "வந்தாள் குரவன் மனிதனே யாயினுமென், சிந்தா யனைத்துமவன் செல்வமே—யெந்தாயென்—றேத்திக்கருதி விலனைக்த் தோன்றுமொன்று—சாத்திரங்கள் கூறவிதேதான்" என்றும் விதந்துள்ள மறைமொழிகொண்டு தெளிந்துகொள்க.

இந்தக்காவிய நூலையியற்றியருளிய ஆசிரியராகிய ஸ்ரீமத்—கந்தசாமி சுவாமிகள், கொங்கு நாட்டிற்சிறந்த சிவதலமான பேரையூரென்னும், மேலச்சிதம்பரத்தின் ஈசானத்திலும், கோயமுத்தூருக்கு வடபுறம் ஐந்து மைல் தூரத்திலுமுள்ள சிரவணம் பட்டி யென்ற கிராமத்தில் உழவுத் தொழிலின் மேம்பட்டுவிளங்கும் வேளாண்குலசிரேட்டரான வெங்கடசாமிக்கவுண்ட ரென்பவருக்கு, அவரது மனைவியாராகிய கற்பிற்சிறந்த குட்டியம்மை யென்பாரது வயிற்றில் அருந்தவப்புதல்வராய், கலியுகம், ௪௯௯௪— ஆகிய நந்தனவருஷத்தில் அவதரித்துப் பாலச்சடங்குகள் முறையே யியற்றப்பெற்று, கந்தசாமி யென்ற பிள்ளைத்திருநாமத்துடன், அன்பு பொறுமை முதலிய குணங்கள் சேரவளர்ந்து பாடசாலையிற் சிலகாலம் கல்வி பயின்று தெளிந்தனர். பின்பு, ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளின் அபிசாவ

தார மூர்த்தமாய் விளங்கி, அற்புதத் தமிழ்மறை யயிர்தசாகரமாய்ப் பெருகவியற்றி, கண்டவரிவன்றிருக் கவின் பழனிக்கிரித்—தண்டபாணியனெனத் தலைவணக்கஞ் செய—மிக்கவெண்ணீற்று மேனியுஞ்சிகையும்—தொக்கபாதுகையுந் தூயகைத்தண்டுஞ்—சின்முத்திரையுந் திகழ்ந்தகண்டிகையும்—பன்முத்தணிதிகழ் பவளவாய்நகையும்--வண்கோலமார்பில் வயங்குசெவ்வேலும் வெண்கோவணங்கிள் வியன்கொள் செங்காவித்—தானையுங்கொள்ளுந் தகைத் திருப்புகழோன்—றேனே நேருபதே சத்திறம்பெற்று, அகத்தியமுனிவரின் அமிசாவதாரமாய்ச் சிரவணபுரியான தனது நகரத்தின்மேல்புறம், சின்னவேடன் பட்டியி னெல்லைகலந்த கௌமாரமடாலய மமைத்தெழுந்தருளி, அவத்தகை தீர்பலர்க் கருளுரை யோதியுந்,தவத்திருவேடஞ்சாரப்புரிந்துங், கொலைபுலையிஞ்சை கொள்ளாவிரத, நிலைபெறக்கங்கண நிலவக்கட்டியுஞ், சித்திமகோற்கடன் றிருக்கைவேற்குகனுரு, பத்திசெய்பவர்தொழப் பரிந்து தாபித்துஞ், சமயவிகற்ப சஞ்சலநீங்கி, விமலவத்துவித வியன்கவுமார, நிச்சயம்பொருந்தி நிகழ்த்துபல்புராண, விச்சைகள்யாவு மேனிலைஞான, மேடைக்குரிய வியன்படியடுக்கெனச், சாடைக்குறிப்பாற் றன்னறிவதனிற், றெரிந்துதழுவுஞ் சீர்ச்சமரசங்கொள, விரிந்திலங்கியசதுர் வேதசித்தாந்த, சண்மத சமயா தீதவத்துவித, வுண்மைக் கவுமா ரச்சபையுதவியும், பஞ்சபூதப் பகுதியண்டங்கள், செஞ்சுடர்வெண்சுடர் திரிதருவீதி, யுதயத்தன்மையு முச்சாத்தமனப், பண்புமில்லாப் பரிதியுந்தேய்தல், வளர்தலில்லா முழுமதித்தகை சுழுத்தி, கிளர்தருசொப்பன மாதியாக்கெழுவுவ, வொளிப்புறமிருட்புற முதலாவுள்ள, வெளிப்புறவுண்மைகள் விளங்கநுபூதியிற், கண்டனயாவுங் கைகொடுபடங்களிற், றெண்டர்கண்டுணர்ந்துயத் தூரியத்தெழுதியும், கருணைத்திருமேனி கொண்டுவிளங்கும், ஸ்ரீமத் ஸ்ரீ-இராமானந்த சுவாமிகளைச் சற்குருமூர்த்தமாகச் சரணுகதியடைந்து, மந்திரோபதேசமும், தியானமார்க்கமுறைகளும் பெற்றுக் குருபரனருளாற் குறைவிலாத் தமிழ்வாக்குதிக்கப்பெற்றுக் காலக்கிரமத்திலுரிய பக்குவங்கண்டு தமதுகுருவினுல் அரிய திருவேடமுந்தரக்கொண்டு விளங்குகின்றனர்.

சாந்தம் பக்தி அடக்கம் ஆசாரம் பெருந்தன்மை மெய்யுணர்ச்சி சத்தியம் கருணைமுதலிய வுத்தமகுணங்களிவரிடம் ஒருங்கு குடிகொண்டன போலும். உலகமாயா பீடிதங்களான, ஏடணைகளிவரைப்புணராது விலகி நிற்பது சற்குருகிருபையின் குறிப்பும் இவரது பூர்வதவவலியுமே காரணமென்னலாம். இவராலியற்றப்பட்டுள்ள நூல்கள்பல; சண்மதபாமுஞ் சமயாதீதபாமும், குருபாமுமாயுள்ளன. ஆசுமுதல் நாற்கவியு மிவருக்கமைந்துள்ளமையற்புதமே. தமது மடாலயத்தின் கௌமாரசபையில் அன்புடன் கவிகூறி யுபதேசசாரமான வுபந்நியாசம் புரிவதைக்கேட்டவர், தத்தம், அறிவளவிற்றெரிந்து மகிழ்வதன்றி யெழுதித்தெரிவிப்பதன்று.

இரத்தினசலக்கடவுள், யமகவந்தாதி, மருதாலயமகவந்தாதி, அலங்காரம், சந்தப்பதிகம், கணபதியமகவந்தாதி, அவிநாசிப்பிரபந்தங்கள், சத்தி

மதத்திருப்புகழ், சூரியமூர்த்தி சந்தப்பதிகம், வைணவப்பதிகங்கள், சித்திமகோற்கடர், தண்டபாணி தோத்திரப்பனுவல்கள், கௌமார ஏகபாதத்தந்தாதி, சற்குருசரிதவண்ணக்கோவை, அலங்காரச்சிந்து முதலான பலவற்றுட் சில அச்சிடப்பெற்றன, மற்றவை சமயம் நேர்ந்தபோது அச்சிடற்பாலனவாம். இவரது சரித்திரம், இதன்பின் குறிக்கப்படுகிற சிறப்புப்பாயிரத்திற் சிறிது விளங்கக்கூறியுள்ளதாலிங்கு விரிக்கவில்லை.

இந்தப் பக்தமான்மிய காவியத்தினைச் சீரநத்தம் நஞ்சப்பக்கவுண்டர் குமாரரும், கௌமாரசபை அடியவர்களிலொருவருமாகிய — ம-ா-ா-ஸ்ரீ இரங்கசாமிக்கவுண்டரவர்களின் உண்மைபபிப்பிராயத்திற்கிணங்கி, சிரவணம் பட்டிமுத்துக்கவுண்டர் குமாரர் சுப்பய்யா என்கிற, ம-ா-ாஸ்ரீ பழனிக் கவுண்டரவர்கள் மனப்பூர்த்தியாய்க்கொடுத்த புண்ணியப் பொருளுதவி கொண்டு, சிரவணபுரம் கௌமாரசபையார் அரிய புத்தகமாயச்சிட்டு அன்புடையோர் கண்டு களித்துக் கொண்டுபடித்துப் பயனெய்துமாறு பிரசுரித்தனர். எல்லோருக்கு மங்களமுண்டாகப் பரமசற்குருநாதன் அருள்புரிக.

### கலிவிருத்தம்

பத்த மான்மியம் படிக்கின் றோர்களும்
புத்த கங்கையிற் பொருந்தக் கொண்டன்பா
னித்தம் பூசனை நிகழ்விப் போர்களுஞ்
சுத்த மாநலந் தோய்ந்து வாழ்வரே.

இங்ஙனம்

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்,
ஸ்ரீலஸ்ரீ தண்டபாணி சுவாமிகளது
குமாரனு மாணக்கனுமான
தி. மு. செந்திநாயகம்பிள்ளை

விபவஇல
மேடரவி }

## குருபாதமேகதி.

---

இந்தக் கௌமார மடாலயமானது கோயமுத்தூருக்கு வடபுறம் போகிற சத்திமங்கலம் ரோட்டில் மூன்றுமைல் கழித்து மண்பாதையிலிரண்டுமைல் சென்றால், சின்ன வேடம்பட்டிக்கிராமத்தின் கீழ்த்திசையிற் சமீபத்துள்ளது.

உ

குருவே துணை

# சாத்துகவிகள்

மஹான் வண்ணச்சரபம்
ஸ்ரீலஸ்ரீ தண்டபாணிசுவாமிகளது பத்தினியாராகிய
ஸ்ரீமதி சுந்தர அம்மையவர்களியற்றியன
அறுசீர்விருத்தங்கள்.

ஐம்புலன் றன்னைவென்ற வரியமா தவத்தின்மிக்கோன்
றம்பரன் குருவேயென்று சார்ந்திடுந் தகைமைவாய்ந்தோன்
செம்பொனேர் திறற்கௌமாரர் சிரவண புரத்தினூடே
யும்பரும் புகழ்ந்துபோற்றற் குரியவா றுள்ளங்கொண்டு. (க)

பத்தமான் மியத்தைமுன்னூற் படியருந் தமிழின்ஞான
சத்துவங் கமழப்பாவாற் சாற்றெனத் தடையின்மோனக்
கத்தனு மிராமானந்தன் கழறிய படியேசெய்தா
னெத்தலத் தோரும்போற்ற வெழிற்கந்த சாமிதானே. (உ)

---

இந்நூலாசிரியசுவாமிகளின் பரமாசாரியரும்
மஹான் வண்ணச்சரபம் ஸ்ரீ தண்டபாணிசுவாமிகள் மாணாக்கரும்
சிரவணபுரம் கௌமாரமடாலயத்தாபகத் தலைவருமாய் விளங்கும்
ஸ்ரீலஸ்ரீ இராமானந்தசுவாமிகளியற்றியன
அறுசீர்விருத்தங்கள்.

பொன்னுலகின்புத்தமுதைப் பத்தமான்மியத்துணையாப் புகல்வாரஃதைத்
தின்னுமவர் துன்பினுக்கோ ரெல்லையில்லையெனவுலகஞ் செப்புஞ்சேடன்
பன்னரியவிவ்வமுதைப் பார்த்தவர்க்குங் கேட்டவர்க்கும் பசிநோயோடு
மின்னறரு பிறப்பிறப்பாம் பெரும்பிணியுஞ்சாராதென் றிசைக்கலாமே. (க)

சிட்டரினம்பரிந்தேத்துங் கந்தசாமிச்சீலன் செப்பும்பாவைப்
பெட்டகத்துள்ளமைத்தாலு மெவ்வுலகும்புகழ்மணக்கும் பிழைதீரன்பிற்
றொட்டவர்க்குங்கைமணக்குஞ் சொன்னவர்க்குநாமணக்குந் துகடீர்நெஞ்சி
னட்டவர்க்குந்தமிழ்ப்பயிரா யுலவாதபேரின்ப நல்குந்தானே. (உ)

பத்தர்பெருங்காவியத்தைப் பகர்ந்தகந்தசாமியுடன் படித்துங்கேட்டுஞ்
சித்தமதிற்சொற்சுவையும் பொருணயமுந்தேர்ந்துமகிழ் சிறந்தஞான
வித்தகருமச்சிடற்கு விரிவாகப்பொருளளித்த விவேகத்தோரு
முத்தமசற்குருநாதன் கண்ணருள்பெற்றுயர்பதத்தி லொளிர்கமாதோ. (௩)

சென்னை ஆனந்தாச்சிரமம் ஸ்ரீ ஜகத்குருபீடம்
நியாயசந்திர வேதாந்த பாஸ்கர ஸ்ரீ வீரசேகர

## சுப்பய்யஞானதேசிகேந்திரசுவாமிகளியற்றியன

அறுசீர்விருத்தங்கள்.

நித்தியநற்கலைமகடா னிலையதனினிலைத்திடவே நிறுவிவாழ்த்திப்
பத்தியுளவடியவர்க்குப் பாடியமாதியநூல்கள் பணித்தசீரோன்
சத்திபசிற்சுககனமாஞ் சங்கரமாமுனிவரன்றன் சரித்திரத்தை
யெத்தகையவுத்தமரும் பருகிடவேசெந்தமிழி லினிதாயீந்தான். (க)

கொங்குபுகழ்சிரவணமா புரியதனிற்குருபரனைக் குளிர்ந்துவாழ்வான்
றுங்கமுனிவரன்ராமா னந்தனிணையடியுளத்திற் றுணையாக்கொண்டே
புங்கதவர்மகிமைகளை நவரசமாயின்றமிழிற் புகன்றுவாழுஞ்
சங்கையறுந்தோடகனே யெனுங்கந்தசாமியருந் தவமிக்கோனே. (உ)

---

திருநெல்வேலி ஜில்லா வல்லநாடு

## ஸ்ரீ சிவராமலிங்கசுவாமிகளியற்றியன

எழுசீர்விருத்தங்கள்.

பூம்பொழிற்கொங்கார் கொங்குநாட்டென்றும் புனிதராய்க்கேள்வியர் பொதுளித்
தீம்புகல்சிரவ ணப்பதியிற்சீர்த் தினகரன்புகழ்குணப்பூண
னேம்புநற்றவத்தன் கந்தசாமிப்பே ரோங்குணர்வினன்மலரருட்கண்
கூம்பலிலிராமா னந்ததேசிகர்தாள் குறித்திறைஞ்சேத்துமன்பினனே. (க)

புண்ணியப்பாரத கண்டமிப்புவியிற் புலவராய்ப்பத்தராய்ஞானத்
திண்ணியர்வாழ்ந்தா ரருஞ்செயலினருட் சிலர்சரிதங்கொளும்வடசொ
னண்ணியபத்த மாலைமிக்கோர்பே ணயம்பொருட்சொற்சுவையூற்றுப்
பண்ணியற்றமிழிற் பெயர்த்தனன்பாவாப் பத்தமான்மியமெனுநூலே. (உ)

---

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீமத் சுந்தரசுவாமிகளியற்றியன

வண்ணவிருத்தங்கள்.

தனனத்தன தானன தத்தன தனதானா

திருவிற்பொலி வார்தருரத்தின கிரியிற்கொரு பாகமதுற்றசி
ரவணப்பதி யூரிறைமைக்குறு நலமார்வான்
செகமெச்சிடு சீர்மைபடைத்தவி ருமுவுத்தொழி னேயமிகுந்தணி
திகழ்சத்திய சீலனெனச்சொலு மொருமேலா
னிருமைப்பய னேய்தரலுற்றிடு முயர்புத்திர ராமைவருக்கிடை
யிகமுற்றிடு மேர்வைபடைத்தவ னெழில்வேலோ
னியையக்கிரி மீதினிலுற்றிடு தளியைப்புனை வோனவனச்சிய
விளையற்குறு பாலனெனப்புவி வரலானே

னருமைத்தமிழ் பாடிடும்விற்பனர் பலருக்குளே மேன்மைபடைத்தவ
னடியர்க்கடி யேனெனுமிக்கவ னறிவேய்வோ
னறவர்க்குளோர் நாயகமொப்பவ னுறுசுக்கிர வாரமதிற்சபை
யமையச்செவி யூடுநிறைப்பவன் முனைநாள்வாழ்
தருபத்தர்கண் மான்மியநற்கதை யதனைத்தமி ழால்வருபத்திமை
தழையப்பகர் நாவுபடைத்தவ னூரமூடேய்
தாவிக்கவுமார வெழிற்சபை மகிழப்பொலி ஞானமுரைத்திடு
தகைமைக்குண வாழ்வினலத்துட னுறுமாறே. (க)

தந்ததானதன தனனத்தன தானன

சிந்துநேர்கருணை யுடனெப்பறு சீர்மைதோய்
தெம்பொடேயசர சாமுற்றிலுமேவியே
யுந்துசீவருணர் தரமிக்கரிதாகியே
யொன்றிநாடுமவர் விழிகட்கெதிராகவே
வந்துபோகுமொரு பொருளைக்குறி யாகவே
மன்றநாடியெனோர் துணைவற்கரு ளீயவே
கந்ததாவெனவு னுபுநத்துவன் மேன்மைதோய்
கந்தசாமிமுனி சுகமுற்றிவண் வாழ்கவே. (உ)

தனதானந் தனனத்தன தானன

முனுள்யானெஞ் சதனுட்டிரி பாகியே
முனோர்போகங் களைநத்துபு மேலுமே
வினசாரந் தளவப்படி யேகியே
வினைகாதென் றனெர்பக்கலின் மேவியே
யெனைகாணம் புவிசொற்பன மாகுமா
லெனமோனந் தனையுய்த்துணர் வாயென
வெநாளுடுந் துணையுற்றருள் சாமியா
மிராமானந் தனிணைப்பதம் வாழியே. (ங)

அறுசீர்விருத்தங்கள்.

ஆயசீர்ச் சிரவணத்தூ ரமைந்துறு மாந்தர்தம்முண்
மேயசீர் வேளாளர்க்குள் வேண்டிடும் பொருண்மிக்குள்ளோன்
தூயதோ ருளத்தனுகித் துலங்குமுத் தையன்றானுந்
தாயெனு நஞ்சம்மாள்செய் தவத்தினாற் பிறந்தோனம்மா. (ச)

இளமையிற் கல்விநுட்ப மென்னல்சற் றியைந்தோனுகி
வளமைசேர் மனைக்கணக்கும் வரவர வெழுதலுற்றுந்
தளர்வுறு தந்தைசொற்கீழ்த் தான்பினர் கொடுக்கல்வாங்க
லுளபடி புரிவோனெஞ்சு ளுண்மைகண் டுணருந்தூயோன். (ரு)

செல்வமிக் கிருந்தும்தன்னுட் செருக்கென லில்லாப்பண்புற்
றில்லென வடைகின்றோர்கட் கியன்றவா கொடைபுரிந்துஞ்
சொல்லறந் தவறிடாத சூழ்ச்சியுந் தெய்வபத்தி
புல்லிடத் தவமுன்செய்த புண்ணியன் புகழ்பொறுத்தோன், (சு)

அடியவர் களின்மேற்பத்தி யச்சமு முடையோனந்நாட்
படியெலா மளந்தமாயன் பத்தர்மான் மியங்கேட்டுள்ளந்
துடிதுடித் தாவேசங்கொ டேனுய்க் காட்டானுகிப்
படியிடத் துறும்பல்லோரிற் பணிவுட னடிக்கின்றேனே. (எ)

முன்னைநா ளிராமகாதை முடிவுறு மளவுந்தன்னோர்
பொன்னினைப் பரிவினீந்து புகழும்புண் ணியமும்பெற்ற
தன்னன சடையவள்ள றன்மைபோ லிந்தநாளின்
மன்னிடும் பத்தர்காதை வழங்குமா செலவிட்டோனே. (அ)

மனிதராப் பிறந்தோர் தங்கள் வாழுநா ளுள்ளமட்டுங்
கனிவுறு தெய்வத்தன்பே கடைப்பிடி யாகப்பற்றித்
தொனிதர வுலகில்வாழ்ந்து தொண்டர்தம் பணியுஞ்செய்தீண்
டினியுறுக் கதிபெற்றுய்த வியல்பென வளவில்வேதம். (கூ)

சொற்றிடு மதுசெய்யற்காந் துணிவிலார்க் கினுமோர்சூழ்ச்சி
சொற்றிடு கின்றேனுங்கள் தூலமிங் கழிந்திட்டாலு
மற்றிடாப் புகழுடம்பை யடைவது கடமையஃதும்
பெற்றிட விருப்பில்லார்பாற் பேசிட விருப்பின்றின்றே. (க0)

சிலம்பியென் றிடுமாதந்நாட் டேகநொந் திடநூனூற்று
நலம்பெறத் தனதுகீர்த்தி நாட்டிட வெண்ணினளாய்ப்
புலங்கொள்கம் பனுக்கைஞ்ஞூறு பொன்னளித் தரைப்பாப்பெற்றுள்
ளலந்துறு நாளிலெளவை யார்தம தருளான்முக்கால் (கக)

மகிழ்ந்துபின் னரைப்பாட்டாலே வழுத்திடச்சிலம்பிபோரா
டிகழ்ந்தன ளின்றுமேலே செப்பிடு மெதிர்காலத்தும்
புகழ்ந்துற விளங்கல்கண்டும் பூரியோர் பொருளுற்றேமென்
றகந்தைகொண் டுண்டுறங்கி யழிவரா லந்தோவந்தோ. (கஉ)

வாணன்றன் பொருட்டாய்நாண் மலிபுகழ்ப் புகலூர்தன்னி
ஞணம்விற் றுண்போர்க்கெல்லா நாயக மாகினுடன்
ஞணமிக் கதுபோலுள்ளத் தறிவுமுற் றவளாயன்னேற்
பேணலுற் றளவில்பொன்னும் பெட்பினு லீந்துமாதோ. (கங)

அன்றுபோ லென்றுந்தன்னே ரரும்புக ழழியாதாளாய்க்
குன்றுமே விடுந்தீபத்திற் குலவின ளன்னேர்ப்போல
நன்றிய லறிவும்பொன்னு ணட்டிடு செயலுஞ்செய்து
வென்றிகொள் சுப்பையப்பேர் விளங்குசீர்ப் பழனியப்பன். (கச)

நிகழுமிக் கலியுகந்தா னீங்குமா பிரளயந்தான்
றிகழ்தரு மளவுந்தன்பேர் திகழ்வுற வறஞ்செய்பண்பாற்
சகமிசை தோற்றும்பத்தர் சாற்றுநல் லாசிதன்னாற்
புகழும்புண் ணியமுமின்னோன் பொருந்திவாழ்ந் திடுகமாதோ. (கரு)

எழுசீர்விருத்தங்கள்.

சென்னையூரினிற் கேசரியச்சியந் திரப்பெருஞ்சாலைக்கண்
பொன்னினோடுவெள் வாணியுநடஞ்செய்து பொலியமாதவமுன்னா
டின்னலாதிய நீத்துநோற்றவன்றொண்டர் செப்பிடும்பலபாட
றன்னொரன்புகொ டெத்தனையாயினுஞ் சலிப்புறுதவனாகி. (கசு)

அச்சியற்றியுள் ளன்புடனீபவ னடியவர்க் கடியேனென்
மெச்சிடத்தகு நற்குணம்யாவையு மேவிவேதியர்க்கெல்லாம்
பொச்சமின்றியோர் நாயகமாகியே பொலிபவனீன்றோரால்
வச்சசுந்தரமையரென் பெயர்கொடிம் மகிதலந்தனில்வாழ்வோன். (கஎ)

நாவலம்பெறு பாவலர்களுக்கொரு நற்றுணையெனநின்றே
மேவலுற்றதா லிகபரசுகத்தினை மேவிடறுணிவென்றென்
சேவலங்கொடிக் குருபரனடியிணைச் சிந்தனையொடுசொற்றே
றுவதாலவ னடைவதற்கையமென் னகத்தினிலிலைமாதோ. (கஅ)

---

சிரவணபுரம் கௌமார மடாலயம்

## ஸ்ரீ சபாபதி ஐயா அவர்களியற்றியன

அறுசீர்விருத்தங்கள்.

கடன்மடையையுடைத்ததுபோற் றமிழ்க்கவிகள்மிகக்கொழிக்குங் கந்தசாமி
மிடன்மலிமெய்ப் பத்தர்கண்மான் மியங்கடமையுலகமெலாம் வியந்துபோற்ற
வடன்மலிதன்னநுபவமு மிடையிடையேயமைத்ததனி லணியாச்சொல்ல
றிடமலிமெய்ப்பத்தியொடு புலமையுமுள்ளவருளத்திற் றெளிவர்மாதோ. (க)

வெண்பா

புண்ணியத்தர் தம்முடலம் பொன்றும லுண்ணமுதம்
விண்ணிடத்திலெய்துமுயர் மெய்த்தவந்தோய்—கண்ணியர்கள்
கைப்பற்று துண்ணமுதங் கந்தசா மித்தவன்சொன்
மெய்ப்பத்தர் மான்மியமா மே. (உ)

---

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீ இராமசாமிசுவாமிகளியற்றியன

அறுசீர்விருத்தங்கள்.

அருவமெய்ப் பொருளேதன்பே ரருளினா லுருவங்கொண்டு
வெருள்செய்வெம் பவத்திலென்னை வீழ்தரா தாண்டுகொண்ட
குருபர னிராமானந்தக் கொற்றவ னருளவின்பிற்
றருநிகர் புலமைவாய்ந்த தவக்கந்த சாமிமேலோன். (க)

மைத்தகைக் கருணைமேனி வாய்ந்தமான் மலர்ப்பதத்தின்
மெய்த்தகைப் பத்திகொண்டு விளங்கினோர் கதைவெற்பின்மேல்
வைத்தவொண் சுடரேபோல வயங்கிடப் புரிந்தானெப்பில்
பத்தமான் மியப்பேர்கொண்டு பரிதிபோல் விளங்கமாதோ. (உ)

---

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீ சின்னச்சாமி சுவாமிகளியற்றியன

### கட்டளைக்கலித்துறைகள்.

அம்பரமாநின் றவிர்பரந்தாம னடிகருதிக்
கம்பலைகொண்டுகண் ணூருப்பொழியுங் கருணையன்பர்
தம்பதநாடித் தமிழ்பெறும்பேறீ தெனத்தரையோ
ரும்பரும்போற்று முயர்சுவைசான்ற வுருக்கொளவே. (க)

எங்குருவாகு மிராமானந்தப்பர னின்னமுதச்
செங்கனிவாய்நின் றருள்பிரசாதஞ் செவிமடுத்தே
மங்குலிற்பெய்கந்த சாமித்தவன்பத்த மான்மியநூ
லிங்கருந்தாவி யினங்களைவைகுந்த மேற்றிடுமே. (உ)

---

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

## ஸ்ரீ இரங்கமுத்து ஐயா அவர்களியற்றியன

### வெண்பாக்கள்.

தேன்றதும்பு பாடற் றிருப்புகழோன் பேரனென்றுஞ்
சான்றவிரா மானந்த சற்குரவன்—றேன்றலென்றுந்
தான்மிளிருங் கந்தசா மித்தகையோன் சாற்றுபத்த
மான்மியத்தை யொப்பதது வாம்.

மாலமைந்த வைம்புலமா மாற்றலரால் வாடுமன
மாலமைந்த தாட்டுணையா மாற்றலரா—மாலமைந்த
விட்புலத்தோர் மெச்சும் வியன்பத்த மான்மியநூல்
கட்புலத்திற் கண்டவர்கட்கு. (உ)

### கட்டளைக்கலித்துறைகள்.

பன்னலந்தோய்தரு பத்தர்கள்யாரும் பகவனரு
ணன்னலங்கொண்டியற் றூடல்கள்யாவு நறுந்தமிழாற்
கன்னலம்பாகமு தன்னசந்தத்திற் கழறினனன்
மன்னலந்தோய்கந்த சாமிப்பெயர்பொலி மாதவனே. (ந)

அந்நாள்சிலம்பிப் பெயர்மாதறமொன்று மாற்றலின்றித்
தன்னுமமாத்திரங் காத்தாளரிபத்த மான்மியத்தைப்
பொன்னுவலோடளித் தச்சிட்டடியர் புகழுநல்கிப்
பன்னூஞ்சீருடன் கொண்டான்பழனியப் பன்றவமே. (ச)

சிரவணபுரம் கௌமாரமடாலயம் அடியார்களிலொருவராகிய

## கிருஷ்ணசாமி ஐயா அவர்களியற்றியன

### அறுசீர்விருத்தங்கள்

அலைகடற் பாரோர்போற்ற வருட்குரு ராமானந்தன்
சொலைமிகக் கொண்டோருள்ளத் தூயனுங் கந்தசாமி
விலைமதித் தறிதரோரு வியன்பெரு மணியேபோலுங்
கலைமக ளுருக்கொண்டென்னக் கவின்றமிழ்க் கவிகடம்மால். (௧)

விண்ணவர் புகழ்ந்துபோற்றும் விண்டுவின் பத்தர்காதை
மண்ணினி லன்பர்தேர்வான் வழுத்தின னன்னோற்ற
றண்மதிக் குடையோன்றந்தை தாளுளத் தூன்றலில்லா
வெண்மதி யினர்களோர்தன் மிகவரி தரிதாமன்றே. (௨)

---

சிரவணபுரம்

கௌமாரசபை அடியவர்களிலொருவரான

## ஸ்ரீ எறிபத்தசுவாமிகளியற்றியன

### அறுசீர்விருத்தங்கள்.

அந்தமுமாதியு மில்லா வகண்டபரிபூரணமே யடியார்க்குற்ற
பந்தமகற்றிடவருமி ராமானந்தக்குரவன் பாதந்தன்னைச்
சந்ததமுமறவாமற் கருதியருந்தவம்புரியுந் தக்கோன்வாய்மைச்
செந்தகைநாவுடையகந்த சாமியென்னற் றுணைவனரும் புலமைசேர்ந்தோன். ()

அன்னவற்பார்த்தருட்குரவ னரிதாசர்கதையினைமெய் யருட்சீரோடு
சொன்னயமாதியபொலியப் பக்தமான்மியமெனும்பேர் தோயச்செப்பென்
றுன்னருமன்பினிலுரைத்தவுத்தரவைச்சிரமேற்கொண் டுரைத்தான்முன்னு
ளென்னதவஞ்செய்தனனோ விப்பெரும்பேறெய்திடப்பெற் றிட்டானம்மா.

### வண்ணவிருத்தம்.

தந்ததானன தத்ததானன தனதானா

சந்தமால்வரை யிற்குலாமுனி யமிசாயே
சந்தமார்பொழின் மெத்தவார்சிர வணவூரான்
பந்தைநேர்தன முற்றமாதர்பொன் மகியாசீள்
பந்தவேதனை யற்றுளோர்பர விடுராமா
னந்தமாமுனி வற்கொர்சேயென வுறுமேலோ
னந்தமாழிகை வைத்தமாயவ னடியார்சீர்
கந்தமாமல ருற்றவாணியுண் மகிழ்வீரூர்
கந்தசாமிசொல் பத்தமான்மிய நிகர்யாதே.

சிரவணபுரம் கௌமாரசபை அடியவர்களிலொருவராகிய
கண்ணப்பசுவாமிகளியற்றியன
இரட்டையாசிரியவிருத்தம்

கொங்குநா டவநியில ருந்தவமிசைப்பவேர் கொண்ட சிரவணபுரத்திற்
கோதிலாஞானகுரு வாயுருவெடுத்துநற் குணமுளப லன்பர்சூழத்
தங்குமாறருடரும் தண்டபாணிக்கடவு டலமொன்றியற்றி மேலாந்
தவமியற்றிடுமெடியர் சார்ந்திடமடாலயந் தருவன விசைத்துநாளு
மெங்குளோரும் பணிந்தேத்தரகசியமுறைத் தெண்ணரிய பிறவிமாற்று
மெந்தை ராமானந்த தேசிகசிகாமணிக் கேன்றசீடரின் முதன்மையான்
கங்குலோர் சிறிதுமில் லாமனப்பெற்றியன் கந்தசாமிப் புனிதன்மெய்க்
கருணையாரியனுரைகொ டரிபத்தமான்மியக்காதைசொலவெண்ணிமாதோ.

அறுசீர்விருத்தம்.

கண்மணியாயொளிர்கின்ற கருணைத்தேசிகன்மலர்த்தாள்கருத்திலுன்னித்
தண்மதியால்வடமொழிச்சந் திரதத்தர்நூலைநறுந் தமிழிற்சந்தப்
பண்மலிபாக்கொடுவிரித்துப் பாரிலுளோர்பெருவாழ்வு படைத்துவாழ
விண்மணிபோல்விளங்கியிருண் மாயையறவிண்டனன்கார் மேகம்போன்றே.

---

சிரவணபுரம்
கௌமாரசபை அடியார்களிலொருவரான
இராமசாமிசெட்டியாரியற்றியன
எழுசீர்விருத்தம்.

திருமலிகொங்கின் முகமெனத்திகழுஞ் சிரவணபுரத்திலகமதாய்
மருவுகௌமார மடாலயத்திலகு மகிமைராமானந்தமுனிவன்
றிருவடித்துணைக்கன் பமைகந்தசாமி சீலனுமாதவர்திலகன்
கருமணிவண்ணன் பத்தர்காவியமாங் கவிமழைபொழிந்தனன்கார்போல்.

வெண்பா.

செவிவாய்கொ ளாவித் திரளெல்லா நெஞ்ச
மவிழ்வாய்ப்பத் திச்சூ லமைந்து—குவிவாகி
ஞானத் துணைகொடரு ளாரணன்பொற் றூட்டுணையாம்
வானத் தமையும் வகை.

---

சிரவணபுரம் கௌமார சபை அடியார்களிலொருவரான
ப. இராமசாமி முதலியாரவர்களியற்றியன.
அறுசீர்விருத்தங்கள்

எல்லவன்றன்கதிர்நுழையாப் பொழின்மலியெஞ்சிரவணத்தா ரெழிற்கௌமார
வல்லமடத்தினிலொளிரெங் குருராமானந்தமுனி மாணுக்கர்க்குட்
சொல்லரிய தமிழ்க்கவிகண் மிகக்கொழிக்குந்திறமையொடட் டறவும்வாய்ந்தோன்
புல்லவருந்தலையசைக்க வமுதமழையெனச்செவியிற் பாய்ப்போனம்மா. (க)

அநித்தியமாமுலகினிடை யேதுசுகமச்சோவென் றழுத்திக்காதுட்
டொனித்திடவேமிகுநயமுங் கலந்துளபேர்சோகமறச் சொல்வன்பாரின்
மனித்தர்களாப்பிறந்திடுவோர் புருடார்த்தமடைவதுவே மாட்சியென்னக்
கனித்ததமிழ்க்கவிமழைபெய் கந்தசாமித்திருப்பேர் கவிஞமேலோன் (உ)

முன்னுளிற்கதியடைந்த பத்தர்கண்மான்மியங்கடமை முறையேவைத்துத்
தன்னுவாற்சந்திரதத் தன்சொல்வடமொழிநூலைத் தமிழினுலே
பன்னுயென்றருள்கொடிரா மானந்ததேசிகன்சொல் பணியையேற்றுச்
சொன்னுன்றனநுபவநற் சுருதியுத்தியதனிடத்திற் றுதையமாதோ. (௩)

கேட்டவர்கட்கினுங்கேட்போங் கேட்பமெனவுளத்திலன்பு கிளர்வதன்றி
வாட்டமெனலெவருளத்துஞ் சிறிதுமுறமாட்டாதிவ் வண்மைதன்னைக்
கோட்டமுறுமென்மனத்தின் செயலைபுன்னிக்கூறலுற்றேன் குவலயத்தீர்
வீட்டடையுமாவலுண்டேன் மாட்டடைந்துகேட்கிலுள்ளம் விமலமாமே (௪)

பத்தர்கடம்மான்மியமா மிக்கதையையன்புகொடு படிப்போர்கேட்போர்
நத்தியவாறிகபோகம் வேணமட்டுமநுபவித்து நவிலந்தத்திற்
பத்தர்கண்முன்னடைந்திடுமெய்ப் பாகதியுமடைவரெனல் பழுதேயில்லாச்
சத்தியஞ்சத்தியமாகு மெனவுரைத்தேன்முக்காலுஞ் சரதந்தானே. (௫)

---

திருப்பேரூர் ஸ்ரீ சாந்தலிங்கசுவாமிகள் மடாலயம்
சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் அமைச்சர்
கோயமுத்தூர் விளாங்குறிச்சி

## வி. நா. மருதாசலக்கவுண்டரவர்க ளியற்றியன

வெண்பாக்கள்.

சட்சமய வாரியுண்டு தண்டமிழின் மாரிபெய்யும்
பட்சமா தைத்தண்ட பாணிகுரு—லட்சணமா
யேன்றஞா னப்புதல்வ னெங்களிரா மானந்தத்
தோன்றலுக்கு ஞானச் சுதன். (க)

வண்ணத் தமிழ்பழுத்த வாய்க்கந்த சாமியெனுந்
திண்ணக்கௌ மாரர் சிகாமணிதா—னெண்ணரிய
வின்பொளிரத் தந்தா னெழிறு ரணற்கொருமை
யன்பர் சரித மவை. (உ)

மலையாளத் தோடு வடமொழியுந் தென்சொற்
கலையாவுந் தானுய்ந்து கண்டு—நிலையான
தெய்வத் தமிழ்க்கவிதைத் தேன்பொழிந்தான் பாருலகை
யுய்விபத்த மான்மிய நூ லொன்று. (௩)

சீரார் சிரவணபு ரிக்கந்த சாமிமுனி
தாரார்வித் தாரகவித் தன்மைகண்டோர்—போாய்ந்து
வைணவநூற் சிந்தா மணியென்பார் மற்றிவனே
வைணவச் சேக்கிழார் மன். (௪)

## எண்சீர் வண்ண விருத்தம்.

தனன தான தந்தனு தனனு

முருக தாச வின்பகு ரியனுன் - முதிர்க லாவ ளங்கொணீ டொளியே
பெருகி ராம னந்தமா மதியே - பெறுத லான கந்தசா மியெனுேர்
சிரவ ணுபு ரங்கௌமா ரரையா - டெளிவு தோய்ப்ர சங்கவா னமுதே
தருமை நீல விண்டுதா சர்கதா - சரியை யாதி யின்பநா விடுமே. (ரு)

---

திருவாமாத்தூர் கௌமாரமடாலயம்
ஸ்ரீமத். தண்டபாணிசுவாமிகள் பௌத்திரரும்
தி. மு. செந்திநயகம்பிள்ளையவர்கள்குமாரருமான
## தி. செ. முருகதாசபிள்ளையியற்றியன.

அறுசீர்விருத்தங்கள்.

சீர்மலி கொங்கின்மேலாஞ் சிரவண புரிவேலப்ப
னூர்மலி சுதனுத்தோற்றி நலங்கொளுத் தமரீடேறக்
கூர்மலி ஞானவாய்மை கொழித்தென்போ லிளமையோர்க்கு
மோர்மலி குருவா நிற்கு மிராமானந் தப்பேரேந்தல். (க)

தனதுபிற் றுணைவன்சேயாய்ச் சற்குண மணியாய்வந்த
கனமுறு தவத்தின்மிக்க கந்தசா மியைக்கண்ணேக்கி
யனகமெய் யுபதேசஞ்சொற் றகிலமா லறமெஞ்ஞான
தினகர னொளிக்குள்ளாக்கிச் சிவத்திரு வேடநல்கி. (உ)

கல்வியின் பயனும்மேலோர் காதினுக் கமுதாய்வண்மைச்
செல்விகோ னருள்சேர்பத்தர் திறற்கதை தமிழிற்பாவாய்ப்
பல்வித நலங்கள்சேரப் பகருகென் றுரைத்தானஃதே
நல்விதி யெனக்கொண்டின்ப நணுகியோ துபுமுடித்தே. (ங)

சமரச கவுமாரச்சீர் தழைத்ததன் மடாலயத்தில்
விமலகற் கந்தசாமி வித்தக னரங்கேற்றிச்சிற்
குமரநா யகன்சொரூபக் குருபர னருட்சீர்கொண்டா
னமரர்பூ மாரிபெய்தா ரடியர்கண் மழைபெய் தார்த்தார். (ச)

அச்சிர வணநகர்ப்பா லவிருஞ்சுப் பையபினன்னு
மெச்சியற் பழனிப்பேர்தோய் வேளாள திலகனன்பாய்
நச்சிநற் பொருளளித்து நயங்கொள்புத் தகங்களாக
வச்சியற் றுபுதந்திட்டா னவனென்றும் வாழ்கமாதோ. (ரு)

## எண்சீர்வண்ணவிருத்தம்.

தந்த தானதன தத்தன தனன

சண்ட னேலவில கச்செயோர் துணையே - சங்கை தீர்புலவ ருக்கொா ரமுதே
தண்ட பாணிமுனி சொற்றபா டலேநேர் - சந்த நீடுகவி மெத்தமே வியதே
புண்ட ரீகனடு முத்தையோ விடுமே - புங்க மாதவரு மெச்சுசீ ரினதே
கண்ட பாவனைய றக்கௌமா ரர்கள்சூழ்-கந்தசாமிநுவல் பத்தமான் மியமே.

---

## நூலாசிரியர் வரலாறென்ற

# சிறப்புப் பாயிரம்.

திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம்
ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் குமாரருமாணுக்கருமான
தி. மு. செந்திநாயகம்பிள்ளையவர்களியற்றியது.

எண் சீர்விருத்தங்கள்

திருமலியுங் கொங்குவள நாட்டின் மேல்பாற்
றென்கயிலை யெனும்பெருமை திகழ்வுற் றோங்கு
முருமலிவெள் ளியங்கிரிநின் றிறங்கிக் கீழ்பா
லுலகினர்க்கின் புதவவிரைந் தோடுங் காஞ்சிப்
பெருநதித்தென் கரையினுயர் பேரை நாமம்
பெற்றுளதோர் சிதம்பரத்தின் வடகீழ்ப் பாங்கர்
பொருவில்குடி வளஞ்செல்வப் பொலிவுந் தோய்ந்து
பொழில்வளையுஞ் சிரவணப்பேர்ப் புரியொன் றுண்டால். (க)

அத்தகைச்சீர் நகரினிடை வேளாண் டொன்மை
யமைந்துழவாற் பலநலங்கொண் டறஞ்செய் மேன்மைப்
பத்தனுயர் வேலப்பன் றவச்சே யாகிப்
பார்வருமெம் மிராமானந் தன்பிற் றோன்றல்
சுத்தமுறு வெங்கடசா மிப்பேர் மேயோன்
றுணைமனையொ டியற்றுதவத் தொடர்பி னாலே
வித்தகச்சே யாகியவ தரித்த தோர்சேய்
விளங்குகந்த சாமியெனும் வியன்பேர் சூட்டி. (உ)

உரியபரு வங்களிற்கே ளிர்கள்க ளிப்ப
வுரைத்துளபா லியச்சடங்கோவ் வொன்றுஞ் செய்து
பெரியபய னுனகல்வி பயிற்றுஞ் சாலை
பேணியுய்த்தார் பழயபா டங்கற் றாங்கே
தெரிதலுற்றான் பலர்வியப்ப விராமானந்த
தேசிகன்றன் கடைக்கணருட் டிவலை தோய்ந்தே
யரியகவு மாரசபைத் தொண்டர் கூட்டத்
தணைந்துசற்சாத் திரப்பயிற்சி யதிகக் கேள்வி. (ங)

சிந்தித்த லியற்றியருட் குரவன் றன்னாற்
றிருவெழுத்தா றுபதேசஞ் செய்யப் பெற்றான்
பந்தித்து நின்றவினை முழுது நீங்கிப்
பரமகுரு பரனுருப்பா வனையுட் கொண்டான்

வந்தித்துத் தமிழ்ப்பனுவல் பலவாப் பாடும்
வாக்குநலம் பெற்றுன்மெய் வகைதே ராதார்
நிந்திப்புக் குளஞ்சிறிதுந் தளரா வுண்மை
நிச்சயமும் பொருந்தியங்கு நிலவி னுனே. (ச)

சுந்தரப்பேர் மாமுனிவன் முதலா வாங்கு
துதைந்துளகௌ மாரரினஞ் சூழ்ந்து ளன்பாய்ச்
சொந்தமுறு சோதரவாஞ் சையிற்பா ராட்டச்
சுக்கிரவா ரத்தினங்க டோறுந் தொண்டர்
வந்தமைந்து குருபரன்ருள் பணிந்து நன்கு
வாயிகங்கா யிகம்புரிந்து மகிழ்ந்து கேட்கச்
செந்தமிழ்நா வலர்வியக்கத் தக்க வாறு
திவ்வியமாம் பிரசங்கத் திறமை தோய்ந்தான். (ரு)

சமயவிகற் பங்களெலாங் கடந்தொன் ருன
சமரசநிச் சயவிளக்கஞ் சார்ந்து மேலாய்ச்
சமமுயர்வற் றிலங்கியும்பல் புராண சார
சம்பிர தாயங்களையுந் தழுவிக்காட்டும்
விமலவத்து விதகவுமா ரத்தின் கொள்கை
விரும்பிபநுட் டித்தறிஞர் வினவப் போதித்
திமகரன்போ லொளிபரப்பிச் செருக்கோர் சற்று
மின்றியருட் குருபரன்ரு ளிறைஞ்சிப் போற்றி. (சு)

சித்திமகோற் கடவிநா யகப்பெம் மானுந்
திருமலிதண் டேந்தியகைச் செவ்வே டானும்
பத்தியுளார் வணங்குதிரு வுருக்கொண் டங்கே
பதியவிரா மானந்தன் பண்ணுங் கோயி
னித்தியநை மித்திகபூ சைகடன் கையா
னெகிழ்ந்தமனத் துடனியற்றி நிறைந்த நெஞ்சான்
மைத்திமிர மறப்புரியுந் தியான யோக
வழியிலநு பூதிபல வயங்கப் பெற்றுன். (எ

குருபரனல் லாதொருதே வின்றெங் கியாவர்
கூறுமெந்தத் தேவுமவன் குறிப்பிற் ருெண்டர்
மருவியநுட் டித்தடைதற் கெடுத்துக் கூறு
மாண்பினவென் றறிந்துமவன் வடிவே யென்ன
மருளறநன் கோர்ந்துமலை வறப்பொன் மேரு
வரையினுயர்ந் தொளிவீசு மனத்தின் மேலோ
னிருநிலம்பொன் பெண்ணெனுமு வேடணைப்பே
யிரிந்தோடத் தகுஞான வேண்மை யோனே. (அ)

சற்குரவன் சரிதவண்ணக் கோவை யென்றுஞ்
சத்திமதத் திருப்புகழ்நூ லென்றும் வானில்
விற்குலவ வருபரிதி சந்த மென்றும்
வேலவன்சந் தப்பனுவ லென்று மீசன்
றற்குரிய வென்றுமுகில் வண்ண மாயன்
றன்புகழ்ப்பா மாலையென்றுந் தவிரா ஞான
மற்குலவு கணேசர்துதித் தொகுதி யென்றும்
வழுத்துசந்தக் கவியனந்த வகையா மன்றே. (கூ)

மணிமலைவே லவன்கொளிய மகவந் தாதி
மருதமலை வேலனிய மகவந் தாதி
கணிதமில்சீர்க் கணபதியூர்க் களிற்றந் தாதி
கவுமார வேகபா தத்தந் தாதி
பிணிமுகம்வேல் களைத்துதித்த பனுவன் முன்னுப்
பிறங்குசெம்பா கப்பனுவல் பலவாப் பேசித்
தணிவில்புகழ்ப் பழனிமலைக் குமர வேண்முன்
றன்குரவன் றிருவேடந் தரப்பெற் றானே. (கo)

கல்லாடை கோவணங்கீ ளணிவெண் ணீறு
கவின்கொளக்க மாலைசெப மாலை தாங்கி
வல்லாண்மைக் குரவனடி யமைந்து தொண்டர்
மலரடித்தூள் புனைதருசென் னியிற்று லங்கு
நல்லார்வச் சிகையுமெழிற் கரத்தி னீங்கா
ஞானநூற் புத்தகமுந் திகழச் சிந்தை
கொல்லாமை வருத்தாமை முதலா நோன்பு.
குறித்தசெந்நூற் கங்கணமுங் குலவக் கொண்டான். (கக)

மயிலினமா டிடக்குயில்கள் பாடக் கிள்ளை
வண்பொருள்கூ றிடச்சிறைவண் டிசைமிழற்ற
வெயிலவனு தபம்புகுதா நிழற்செய் சோலை
விளங்குசிர வணபுரத்தில் வியன்பொன் மேரு
சயிலநிகர் கனகசபைக் கொலுவில் வாழ்தன்
சற்குரவ னுரைகொடுதென் றிருவா மாத்தூர்
பயின்முருக தாசதிருப் புகழ்ப்பேர்த் தண்ட
பாணிவண்ணச் சரபகுரு பான்றன் கோயில். (கஉ)

சென்றுதெரி சனைபுரிந்து பூசை யாற்றித்
திருவருள்பெற் றங்குளமெய்த் திறற்கௌ மார
மன்றுளிருந் தன்பர்மன மகிழ்ந்து கூறும்
வரவேற்புப் பத்திரிகை வினவிச் சின்னாள்

கன்றுதலில் லாமனத்தொ டங்கு மேவிக்
கவித்திறமைப் பிரசங்கங் கழறிப் பின்னர்
தன்றுணையன் பினர்பரவத் தில்லை யாதித்
தலம்பலசூழ்ந் தூரியபுரந் தனைச்சேர்ந் தானே. (கங)

சிரவணமா புரத்தினிடை யவிரு ஞான
தேசிகன்றன் கனகசபைச் சிறப்பு மங்கே
திரமனமெய்த் தொண்டர்பல ருலக வாழ்வைச்
சிறிதெனநீத் தவனடித்தொண் டியற்றி மேலாம்
வரமகிமை யநுபூதி பெறுஞ்சி றப்பு
மதமலைமா முகன்குமரன் சந்நி தானம்
விரவுபல தெய்வீகச் சிறப்புஞ் சோலை
விரைமலர்நந் தாவனத்தின் வியன்சி றப்பும். (கச)

செங்கமலத் துடன்றவளக் கமலந் தானுந்
திகழ்நீலஞ் செங்கழுநீர் செறிநீர் வாவிப்
பொங்கமுமா தியவமைய விசைச்சீர் சொற்சீர்
பொருந்துமுய ரலங்காரச் சிந்தென் றோர்நூன்
மங்களமே விடவுரைத்துத் துதித்துத் தொண்டர்
மகிழவருட் கவுமார சபையில் வாய்ந்தே
புங்கவர்மெச் சிடவரங்கேற் றினன்கேட் டோர்தம்
புண்ணியமிவ் வளவெனயாம் புகலொண் ணுவே. (கரு)

எத்தனையாம் விவகாரந் தனக்குற் றாலு
மெனதெனும்பா வனைசிறிது மின்றி யாசான்
சுத்தமனத் தொண்டர்பணி யெனவுட் கொண்டு
சுலபமுற வினிதுமுடித் துளத்திற் பற்று
நித்தவியா பகவகண்ட சொருப ஞான
நிசவடிவ நாட்டமதி னிலைத்து வாழுஞ்
சித்தமுளான் கந்தசா மிப்பேர் யாருஞ்
செப்பிவணங் கிடக்குலவுந் தினத்தின் மாதோ. (கசு)

### எழுசீர்விருத்தங்கள்.

தென்பசுந்தமிழ்க் கிரியில்வாழகத்தியன் றிருமலிகலைதானே
யன்பருக்கருள் புரிந்திடக்கருணையா லரியசேயெனத்தோற்றி
யின்பமேவிரா மானந்தநாமமொ டிலங்குதேசிகனுனேன்
றன்பதந்தொழு மிவனிடமொருவிதஞ் சாற்றினன்றயையாலே. (கஎ)

மிதிலையூரிலோர் வேதியன்புதல்வனு விளங்குசந்திர தத்தன்
கதிர்கொளாழியங் கரத்திருமால்சொலுங் கவினுரைப்படிமுன்னுண்
மதிமிகுத்தமெய்ப் பத்தர்தஞ்சரிதைநூல் வடமொழியதனுலே
பதியவோதினன் பத்தமாலிகையெனப் பரன்சிவையரியன்பர். (கஅ)

பகுதிமூன்றெனப் பிரித்துளவதிலரி பத்தர்தம்பிரதாபந்
தருதமிழ்க்கவி யாற்புகன்றுலகினர் தாங்தெரிந்தாராதித்
திருதலற்றநற் பேறுறவமைத்தியென் றிசைத்தவுத்தரவாலே
மிகுநலம்பெறு தொண்டுதற்கமைந்ததை விருப்புடன் சிரமேற்று. (கக)

பாயிரம்பொதுச் சிறப்பெனவிருவிதம் பகர்ந்துசந் திரதத்தர்
சேயிலுற்பவித் தரியருள்கொடுமுனூல் செப்பியவரலாறும்
வாயிகத்தொடு காயிகமானதம் வாய்ந்தபல்பழந்தொண்டர்
மாயிரும்புகழ்ப்பத்தியின்பெருமையும் வழுத்தியங்கதன்பின்னர். (உ0)

நாபதாசர்மா ருதிவிபீடணனரு ணலந்திகழ்சபரிப்பெண்
சோபமீரசா மிளன்சடாயுநற்றவங் தோயுமம்பரீடன்முற்
பாபமோசனப் பத்தர்தஞ்சரிதைகள் பகர்ந்ததொண் ணூற்றெட்டுந்
தாபதக்குரு பரன்சொலாலநுபந்தச் சரிதையாறுஞ்சாற்றி. (உக)

இடையின்முக்கிய மானதானங்களி லினியராமானந்தன்
றடையில்பேரருட் பெருமைகளுவமைபாற் றக்கவாறெடுத்தோதிக்
கடைபடுந்திருப் பாற்கடலமுதெனக் கதிகளின்கடைப்பாத்தோ
ருடையமீத்சிகன் றனையலாற்பரமிலா வுண்மையுத்தமர்தேற. (உஉ)

தனதுசத்திய நிச்சயவநுபவந் தானு மஃதாமாற்றால்
வினதைசேய்பிட ரூர்பரந்தாமன்செய் வியன்விளையாட்டெல்லா
மனகசற்குரு நாதன்றனுட்டெனவறைந்துதோத்திரித்தென்மே
லுனதுகட்கடாட் சஞ்செலுத்துகவென வுருகிவேண்டினனன்றே. (உ௩)

இடர்கள்போக்கிரா மானந்தப்பெயர்கொடெ னிதயம்வாழ்பெருமாளென்
றடல்பெறப்பகர் தாழிசைத்தொகையொர்பத்தணைந்தநூற்றையுநாளுந்
திடமனத்தொடோ துநர்பத்தமான்மியச் செய்பகாவிய முற்றும்
புடவியிற்படித் திட்டவர்பெறும்பயன் பொருந்துதனிசமாதோ. (உச)

சேக்கிழார்திருத் தொண்டர்தம்புராணத்தைத் தில்லையினடராயன்
வாக்கினுதர வாற்புகன்றுங்கிவன் வண்குருபரன்சொல்லாற்
றேக்கிசைத்தமிழ் விருத்தமேழ்சகத்திரத் திரிசதத்தெழுபானென்
றுக்கியற்புதப் பத்தமான்மியத்தினை யறைந்தனனருளாலே. (உரு)

பத்தியின்பிர தாபமோர்ந்தவ்வணம் பரிந்துதானநுட்டித்தெண்
சித்திபெற்றரு ளாடல்பற்பலநலஞ் செழித்திடப்புரிந்தோவா
முத்தியிற்புக விரும்புநர்க்கிந்தவோர் முதியகாவியம்போதும்
புத்தியூடழுக் காறுளார்மயல்கொடு புகல்வசைபொருளன்றே. (உகூ)

கவியையாயிரத் தொருமுப்பதாமெனுங் கனமுறுவிபவாண்டிற்
சொலிபுகழ்ச்சிர வணபுரத்துரியதன் றூயமாமடத்தின்பான்
மலினமற்றகெள மாரமாசபையிடை வயங்கறுகாற்பீடத்
தொலிமிகப்பத்த மான்மியங்கந்தசா மித்தவனுரைத்தானே. (உஎ)

குரவன்சொற்பணி விடைதலைமீதுறக் கொண்டுகாவியங்கூறிப்
பரவன்பார்கந்த சாமிமாதவன்பெறும் பயன்சொலலெளிதேயோ
விரவுபூமியின் விடயபோகங்களை விலக்கி நல்லருட்போகக்
காவிலின்பவாரிதிதனக்குரியதாக் கைவரப்பெற்றனே. (உஅ)

தொண்டர்சீர்சொலிற் பெரிதுமுற்றுறுதெனத் துணிந்தெளவைப்பெருமாட்டி
விண்டபாடலின் பொருள்கொளும்பொதுவிதி வியன்குருவருள்வேண்டா
வண்டவாணவத் தொடர்பினர்க்கேயருள் வலிகொடுதனக்கென்னக்
கொண்டதின்றியோ திடுமவர்க்கன்றெனக் கூறலெந்துணிவாமே. (உகூ)

அத்தகைப்பெருஞ் சிறப்பினதாம்பத்த மான்மியந்தனையன்பால்
வித்தகச்சிர வணபுரிவளரும்வே ளாளர்தங்குலமேலோன்
சுத்தமேவுமுத் துப்பெயரினன்பெறு தூயநற்றவப்பாலன்
பத்தர்தொண்டுசெய் சுகுணன்சுப்பையப்பேர் பழனிப்பேரொடுவாய்த்தோன்

தனதுகைப்பொருள் கொடுத்துநல்லச்சினிற் றக்கவாறமைப்பித்தே
தினமுங்கைக்கொடு படிப்பவர்மகிழ்வுறச் சிறந்தபுத்தகமாக்கி
யனகமெய்ப்பயன் பெற்றனன்வள்ளுவ ரற்காப்பண்பதுசெல்வ
முனதுகைப்படி னற்குபவுடன்செயென் றுரைத்தசொற் கிலக்கானோன். ()

ஓடுமாற்றுநீ ரினைக்குளத்தினிலடைத் துரியகாலஞ்சேர
நீடுசெய்ப்பயிர்க் கூட்டுதலெனப்பொரு ணிலையிலாமையைநாடி
யீடுசால்பெரும் புண்ணியத்துய்த்தலி னிவன்பொருண்மணற்கேணி
மாடுதிக்குநீ ரூற்றெனச்சந்ததம் வளர்ந்துமேம்படன்மெய்யே. (௩உ)

ஈதலொன்றிசை பெற்றுவாழ்ந்திடுதலொன் றிரண்டலாலெடுத்திங்கே
யோதவூதிய மின்றுயிர்க்கெனுமறை யுரியவின்னவன்செய்த
மேதகைத்தொண்டி னிலக்கணமாகிநல் வெற்பின்மேல்விளக்கென்னச்
சீதவாரிசூழ் புவியினும்வானினுஞ் சிறந்துநின்றதுமன்னோ. (௩௩)

சென்னையூரிலச் சியந்திரசாலைமெய் திகழ்ந்தகேசரிப்போரா
லன்னைபோனடத் திடுமோர்சுந்தரப்பெய ரந்தணர்குலதீபன்
பொன்னைநேரிரா மானந்தமாதவன் புகலருளுரைபெற்றோன்
றன்னைநேருயர் தரப்பதிப்பாச்செய்து தந்தனன்றவத்தாலே. (௩ச)

சாதநீதிதோய்ந் திலகுகௌமாரமா சபையின்மெய்யடியார்தாம்
வரமிகுந்தவப் பத்தமான்மியப்பெயர் வாய்ந்தபுத்தகங்கொண்டே
விரதசீலவுத் தமர்பலர்கொளும்படி விருப்புடன்கொடுத்தெங்கும்
பரவவைத்தனர் முகின்மழைபெய்துநீர் பலருணத்தரல்போன்றே. (௩௫)

வாழ்கசெந்தமிழ் வாழ்கபத்தர்கள்பெரு மான்மியத்திருப்பேர்நூல்
வாழ்கநற்சிர வணபுரத்தெழிற்கவு மாரமாசபைத்தொண்டர்
வாழ்கநந்துணை யாமிராமானந்த மாமுனிவரர்கோமான்
வாழ்ககந்தசா மிப்பெயர்த்தவசிகா மணிமகிழ்வுடன்மாதோ. (௩௬)

அறுசீர்வண்ணவிருத்தம்

தத்ததானன தானனதானன தந்ததானனு

சுத்தமாதவ நீதிகெடாதமெ யன்பரானபேர்
தொக்கபேரவை யூடுநிலாவுமொர் சிங்கவேறனன்
முத்தவாணகை மாதர்பொன்மாநில மென்றுமாயையான்
முற்றுமூவித வேடணைதீர்மன மொன்றுதீரவான்
மத்தவாரண மூர்மகவானுல கின்கண்மேவவே
வைத்தவேள்வியி லானுகர்வாரையி கழ்ந்தவாயனே
பத்தமான்மிய காவியநூல்பகர் கந்தசாமிசீள்
பற்பல்கால்கவு மாரமடாலய மன்றில்வாழ்கவே. (௩எ)

முற்றிற்று

---

## கதிக்கோவை

---

எழுசீர்விருத்தங்கள்

வியன்மிகுநாப தாசனஞ்சனைசேய் விபீடணன்சபரிவெங் தூர்த்தச்
செயல்கொளுமசாமி ளன்றிறற்சடாயு செய்யவம்பரீடமன் னவன்பின்
வயமுறுவிதுர மங்கைகுலேசன் வண்மைகொள்சந்திர காசன்
செயமிகுசிபிபாஞ் சாலிவான்மீகி திகழுருக்குமாங்கத மன்னே. (க)

கவின்மயூரத்து வசன்பிரகலாதன் காணிம்பாதித்தன்சா மாதன்
புவிபுகழ்சீமார்க் கனிராமாநுஜன்மெய்ப் பொருவிலாச்சீரங்க பத்த
னவில்கிருட்டிணதா சன்கீல்காக்கிரரிங் நாடுணர்சங்கர முனிவன்
குவிமனத்துதய னப்பெயர்க்குரவன் குறித்தவிட்டலபுண்ட ரீகன். (உ)

சமர்த்தராமசாமி நாமதேவனருட் சயதேவர்சீதர சாமி
தமக்குழற்குருகும் வில்வமங்கலன்மெய் தயங்கியவிட்டுணு சர்மன்
சுமக்குநற்கற்பின் மணிகொடின்னருட்சீர் தோய்திரிலோசன னிலங்கைச்
சமர்க்கெழுங்குலசே கரன்ரதீமதிப்பேர்த் தையல்கன்னிகாத்துவ யரோ.()

பத்திசால்கர்மா பாயிசாத்துவீகன் பாஞ்சாலமனிராஜ கன்னி
மித்திரச்சொன்ன காரர்நற்பத்தி மேவிடுமன்னவி யாதன்
புத்திரற்குறித்த வைசியபத்தன் பொருந்துகாமத்துவ சனரு
ணத்தியசயமல் லன்கிருட்டிணபத் தன்புகழ்நவிலரி பாலன். (ச)

சாட்சிகோபால னிராமதாசன்சீர் தழைபத்ராஜலராம தாச
னீட்சிசால்பத்திக் கபீர்முராரிபத்த னிகரிலாச்சூரநா தன்பன்
மாட்சிதோய்துளசி தாசன்பிம்பாசி பத்தன்வண்மைகொள்கனு பத்தன்
சூட்சிமேவுளத்து வேசியாபத்தி துகளறுமிரவிதா சன்பின். (ரு)

நாகரிபத்தன் றத்துவாசிசிவா சிப்பெயர்நண்ணிய துணைவர்
கரவின்மாதவதா சனிராகுநாதன் கவின்கிருட்டிணசைதன் னியமே ன
திரமலியுள்ளம் பெறுகூரதாசன் றிகழ்தருணேகொளரி வியாசன்
பரவுவிட்டலதா சன்பத்திமலிரூ பசனுதனனுச்சவியாசன். (கூ)

குரவனுக்கினிய செயுமரிதாசன் குலவருட்பெறுசத னபத்தன்
விரவியசோசீ பத்தனுள்ளன்பு மேவியசூத்ரதம் பதிகள்
வரமலிகோவிந் தன்குஞ்ஞாமாலி வயங்கிலசாபத்தி மாண்சேர்
நரசிம்மபத்தன் சதுர்ப்புஜன்பத்தி நயந்தவுள்ளத்துமீ ராபாய். (எ)

பொருவருசகூசி யாமனற்செகநா தன்புகழ்மலிராசு பத்தி
மருவியசுகானந் தன்சேனுபத்தி வதிநந்ததாசனுக் கிலனே
பிருதிவிராசன் கோகுலநாதன் பிறங்குகதாதர பட்டன்
றிருமலியிரத்தி னுவதிகூப தாசன்சீர்திகழ்கர மௌதி. (அ)

நார்மலிபிரேம நிதிசகதேவ நர்த்தகிகோவிந்த டக்ரன்
சீர்மிகுமந்தர்ப் பத்திராஜன்றே சிகற்குபிரருள்குரு பத்தி
பார்சொலிராமப் பிரசாதன்பல்சீர் பகர்வருணனையெனப் புவியோர்
தேர்வுறப்பத்த மாலையாநூலிற் றிகழ்கதியொருதொண்ணூற் றெட்டும். (கூ)

போசலபாவா பெரியதாசன்சீர் பொருந்துதாமாசிபண் டிதனே
பேசருநலஞ்சே ரேகநாதன்பேர் பிறங்குஞானேசுரன் மாயைப்
பாசமோவியதுக் காராமனீரூப் பகரநுபந்தமோராறு
நேசமார்பதிக மாகமாதையினி னிகழ்த்தினன்முருகதாசனரோ. (க0)

கௌமாரமடாலயம், }
திருவாமாத்தூர். }

இங்ஙனம்,
தி. செ. முருகதாச பிள்ளை.

# குருபாதமே கதி.



உ

குருவே துணை

# பக்தமான்மியத்தின் கதி விவர அட்டவணை

# குருபாதமேகதி.

---

உ

குருவே துணை.



ஸ்ரீமத்

கந்தசாமிசுவாமிகள்

சிரவணபுரம் கௌமாரமடாலயம்.

உ

குருவே துணை.

# பக்தமான்மியம்.



## பொதுப்பாயிரம்.

### பொதுத்தெய்வம்.

நினைவார்நினையும் வண்ணமவர் நெஞ்சக்கமல நிலவியரு
வினைவேரறுக்கும் பரஞ்சோதி விமலன்றிருத்தாட் டுணைபோற்றிக்
கனைவாரிதிநேர் கருணையுருக் கலந்தபத்தர் காதையினை
முனைவோரரசா யவிர்கும்ப முனியின்றமிழான் மொழிகுவாம். (க)

### திருமால்.

ஆக்குந்தொழிலோ னலகில்லா வண்டத்தொகுதி யத்தனையும்
போக்குந்தொழிலோ னிடையூறு பொருந்தாவண்ணம் பொங்கருளாற்
காக்கும்பகவன் பங்கயத்தாள் கருதிவணங்கிக் கடலன்பு
தேக்கும்பெருமைப் பாகவதர் திறல்செந்தமிழாற் செப்புவாம். (உ)

### இலக்குமி.

தென்பொலிமெய்ப் பத்தருளக் கமலமெனக்குரித்தெனவே தெரித்தல்போலப்
பொன்பொலிசெம்பதுமமிசை பொருந்துமிலக்குமியிருநூ புரத்தாள் போற்றி
மின்பொலிசூன்மேகநிற மாய னுருவுளங்கொடுபல் விளையாட்டாற்றுங்
கொன்பொலிமெய்ப்பத்தர்பெரு மான்மியத்தையன்பின்மிகக் கூறுவேனே. ()

### பரமசிவன்.

வென்றபுலத்தினரான மெய்யடியார்தம்மிதய வெளியென்றேது
மன்றகத்தினடித்தருளும் பரசிவனற்பாதமலர் வணங்கிப்போற்றித் [தேன்
துன்றகிலத்தெப்பொருளு மரியேயென் றுணர்ந்தவுண்மைத் துணிவோடன்
மன்றலருட்பதம்புகுமெய்ப் பத்தர்கண்மான்மியத்தையன்பில் வழுத்துவேனே

### சித்திமகோற்கடர்.

பணம்பொலிபாம்பணையிலறி துயில்புரிமெய்ப்பகவனிரு பதுமத்தாடோய்
குணம்பொலிமெய்ப்பத்தர்பெரு மான்மியச்சீரூறறவே கூறச்செய்வாய் [ண்டர்
மணம்பொலிபூம்பொழில்வளஞ்சால் சிரவணமாபுரத்தினிடை மகிமைத்தொ
கணம்பொலிகௌமாரமடா லயமருவுசித்திமகோற் கடப்பெம்மானே. (ரு)

### குமாரக்கடவுள்.

விண்டணிகையாகியதிவ் வுலகினுக்கென்றெவர்க்குமெளி விளங்கும்வண்ணம்
விண்டணிகைமாதவன்ரு ளன்பெனக்காட்டன்பர்கதை விளம்பச்செய்வாய்
தண்டணிகைநிகர்த்தசிர வணபுரக்கௌமாரமடா லயத்தோர்சந்தத்
தண்டணிகைஞானகுரு பரனேயென்னுளச்சலசந் தழைத்தகோவே. (சு)

### சூரியமூர்த்தி.

விண்ணளித்தாள்வலாரிபெரு வாழ்க்கையையுமநித்தமென வெறுத்துநாபித்
தண்ணளித்தாள்வாரிசமா தவன்பதுமத்தாட்டுணையிற் றளராப்பத்தி
நண்ணளித்தாள்குன்றுமெய்ப் பத்தர்சரித்திரநாயே னவின்மாஞானக்
கண்ணளித்தாள்யாவர்களுங் காணவருஞ்சீர்ப்பரிதிக் கடவுளானே. (எ)

### சரசுவதி.

சொன்னயமும்பொருணயமுந் தொடைநயமுநடைநயமுந் துலங்குமற்றை
யெந்நயமும்பொலிதரமெய்ப் பத்தர்கதையென்னாக்கொண் டியம்பச்செய்வாய்
மன்னயனுதியர்நாவி லாரணமாதியசொலருள் வாரிபோலு
மின்னயசத்துவவடிவ வெண்டோட்டுமுண்டகமேல் விளங்குந்தாயே. (அ)

### முருகதாச குரு.

சழக்கிடுங்கொடு மலவிருளறவே சாடிமாந்தர்க டவவழியடையப்
பழக்கிடும்படி தோன்றுமெய்ப்பத்தர் பாழிமான்மியப் பரப்பினைப்பகர
வழக்கிடுங்கரி மடங்கனேர்புலவர் வாயடக்கிடும் வண்ணமாண்கவிகண்
முழக்கிடுந்திருப் புகழ்த்தண்டபாணி முருகதாசனைப் பெருகவுட்பதிப்பாம். ()

### சிறப்புக்குரு.

நிந்தைகொ ளுலகவாழ்வை நிலையெனு நிலையினேன்றன்
சிந்தைகொ ளிராமானந்த தேசிகன் றிருத்தாள்போற்றிச்
சந்தைகொ ளருட்பேராட றழைத்திடும் பத்தர்காதை
விந்தைகொ ளியலினாயேன்விளம்புதல் விரும்பினேனே. (க0)

### உண்மை.

தாதியலம்போருகநா பியன்பத்தர்மான்மியச்சீர் தழையச்சாற்றப்
போதியமெய்யன்பொடருட் புலமையுனக்கிலையெனயான் போதித்தாலு
மோதியலதடங்காவா றென்னுளத்துக்கிச்சைதனை யுதிப்பித்தொன்றுஞ்
சோதியருட்குருபரநின் பரமெனக்கோர்செயலுமிலை சொன்னேன்மெய்யே. ()

## ஆழ்வார்கள்.

தருதாய்பொன்மகமேரு வரைநாணுமணிமேவு தனமூறுபால்
பருகாதசடகோபன் முதலானபெரியோர்கள் பதநாடுவேன்
கருமேகநிறமாய னிருபாதமறவாது கருதோகைதோய்
தருபாகவதர்காதை முழுதோதுமொருமேன்மை தருமாறரோ. (கஉ)

## கவுமாரர்.

பவுராணிகநன் மார்க்கமிளம் பருவமுடையார் பயின்றேறுஞ்
சவுபானமெனுந் தகையுணர்ந்து சமயப்பிணக்கின் மயங்காதே
மவுனகரச்சற் குரவனிரு மலர்த்தாண்மகிமை யுணர்ந்தபெருங்
கவுமாரர்கடா ளிருத்துவனென் கண்ணிற்சிரத்திற் கருத்தினுமே. (கந)

## அறுசமயத்தொண்டர்.

அறுவகைச் சமயத்தூடு மமைந்தமெய் யன்பர்தங்க
ணறுமலர்ப் பதங்கடோய்ந்த நற்றுகள் சிரமேற்முங்கி
நிறுவுமெய்ப் புகழ்ச்சீர்ப்பத்தர் நீடருட் காதைதன்னை
மறுவில்செந் தமிழினயேன் வழுத்திடன் மதித்துள்ளேனே. (கச)

## பத்தர்

இருளுமாணவத் தாற்றினநிந்தைமிக் கியம்பு
மருளுளத்தரும் பெற்றிடத்திருவருள் வழங்குந்
தெருளுளம்பெறு பத்தரைச்செப்புதங் காதைக்
கருளுதற்பொருட் டேத்திடன் மிகையெனலாமே. (கரு)

## வேண்டுகோள்.

பெறுதற்கரிய மானிடநற் பிறப்பையடையப் பெற்றவர்தா
முறுதிச்சித்தி முத்திநிலை யுணர்ந்துய்ந்திடத்தண் ணருளாலே
யறுதியறுமெய்ப் பத்தர்கணீ ராடனிசமே லடிமையினேன்
சிறுபுன்மதியி னின்றுமிகந் தேரவெளிதிற் றெரிப்பீரே. (கசு)

## சந்திரதத்தர்.

எந்திரத் தொகைதோய்நொச்சி யிலங்கெழின் மிதிலையூடே
வந்திரும் பத்தர்காதை வடமொழி யதனற்சொன்ன
சந்திர தத்தற்போற்றிச் சற்றுமெய் மாறுவண்ணந்
தந்திரத் தமிழாற்பத்தர் மான்மியஞ் சாற்றுவேனே. (கஎ)

பொதுப்பாயிர முற்றிற்று.

---

# சிறப்புப்பாயிரம்.

## அவையடக்கம்.

ஓதியநூல்களிலெவரு நலமெனக்கொண்டதுவு
மொருங்குதவறென்றெவரு மொதுக்கியதுமுலக
மீதிலையாலொருவர்புகழ்ந் திட்டதனைப்பிறர்தாம்
வெறுத்திகழல்புதிதலவிம் மேதினிவாய்பாடே
கோதிலதியான்புகல்பனுவல் புவியிடத்தியாவருங்கைக்
கொண்ணலத்ததாகுமெனக் கூறிடவஞ்சுகின்றே
னாதியமெய்ப்பொருளெவர்வாய்ச் சொல்லினுங்கேட்டுவப்பா
ருகந்துகொள்வாரென்றடியே னோதியதோர்வீரே. (க)

## இதுவுமது.

துற்குணப்பொதிநே ருடல்குறைந்தொழுகச் சூழ்தொழுநோயரேயெனினும்
பொற்குவைப்பொருட்டாற் பொருட்பிழைபாடும் புலவர்சொல் குறைபொரு
சிற்குணக்குன்றும் பத்தர்தஞ்சீர்த்தித் திரணிறைதூலமொப்பதனு [ளன்றே
னற்குணப்பெரியோ ரிகழ்ந்திடாரெவர்க்கா நானவின்றிடலவையடக்கம். (உ)

## அதிகாரியநதிகாரிகள்.

விமலபரம்பொருளொன்றே கருதிடல்போலுருநாமம் வெவ்வேறெய்ந்து
மும்மலமறுத்தன்பரைக்காத் திடுமெனக்கண்டிடுமறிவு முதிர்ச்சிவாய்ந்த
சமரசநிச்சயமுடையார் கைக்கொள்வரிதுமேன்மற் றதுதாழ்வென்னுஞ்
சமரசத்தின்குணம்பொருந்து மதவாதரிந்நூற்குத் தக்கா ரன்றே. (ஙூ)

## நூற்காரணம்.

துப்பனையவடிவுளவெங் குருராமானந்தத்
தோன்றல்கனவொடு நனவிற் சொலக்குறிப்பிட்டதையு
மப்பகவன்றூண்மறவாச் சுந்தரமெய்த்தொண்ட
ரளவில்பெருங்காதலுட னனைவருந்தேர்ந்துய்வான்
செப்பவிடுபணியையுமற் றவர்பததூளியையுஞ்
சென்னிமிசைகொண்டுவப்பாற் செயத்துணிவுகொண்டே
னிப்பனுவற்சொலுமறிவீண் டெய்தாதவெனைக்கொண்
டியற்றிடுவான்புகுத்தவர்கட் கியான்செய்கைமாறென்னே. (ச)

## இதுவுமது.

நல்லார் குணங்க ளுரைப்பதுநன் றென்றுரைத்த
வல்லாடன் மாற்ற மதித்தரிதன் வாரிசத்தாட்
சல்லாபப் பத்தர்கதை சாற்றிச் சதுர்விதமா
முல்லாசப் பேறு முறவேட் டனன்மாதோ. (ரு)

சம்பந்தம்.

கலையுணர் திறங்கொடு கற்பித் திட்டதுஞ்
சிலைநுதன் மகளிர்சிங் காரஞ் செப்பலுங்
கொலையயி லிறைவர்தங் கொற்றங் கூறலு
மலவருட் பத்தர்க ளமல மாண்பிதே. (௬)

நூற்பொருள்.

பத்தியின் பெருக்கும்விட் பாலர் மெச்சருட்
சித்திவிம் மிதங்களுஞ் செனிப் பிறப்பறு
முத்திவை பவமுமென் மூவி தங்களு
மித்திரு நூல்கொள விசைக்கு மென்பவே. (எ)

விடயம்.

பழுதின்மெய்ப் பத்தர்சீர்ப் பரவை யாழுமெ
னெழுவகை மான்மன மிகுமழ் பேறபவர்
செழுஞ்செவி மதகினுட் சேர்ந்து பத்திதந்
திழுமியல் பயன்கணுன் கினைபு மீயுமால். (அ)

பிரயோசனம்.

மயற்கடற் பருகிடு வடவை பத்தியாம்
பயிர்க்குறு பயோதரம் பகவன் றண்ணரு
ளியக்கநெஞ் சாடிகொ ளிரசம் விண்ணவர்
வியக்குமெய்ப் பத்தர்சீர் விள்ளுமீதரோ. (௯)

இ ட ம்.

விண்கொள்சீர்த்தி வியனருட்பத்தர்சீர்
பண்கொள்பாவிற் பகரிடமேதெனிற்
றிண்கொள்சித்தர் சிரவணமாபுர
வண்கொள்சீர்க்கவு மார மடாலயம். (௧௦)

நூற்பெயர்.

நெடியவனடிமலர் நிமலநெஞ்சகக்
குடிபெறுபத்தர்தங் கோதின்மாக்கதை
படிபெயரியாதெனிற் படியெலாம்புகழ்ப்
படிவுடனுலவுமெய்ப் பத்தமான்மியம். (௧௧)

சிறப்புப்பாயிர முற்றிற்று.

ஆக கவி ௨௮.

# சந்திரதத்தர்வரலாறு.

தானப்பெருக்குங் கரியுமிழுந் தானப்பெருக்குந் தவர்குலவு
கானப்பெருக்குங் கடவுண்மறைக் கானப்பெருக்குங் கதிர்வடமீன்
மானப்பெருக்குங் கற்புடையார் மானப்பெருக்கு மலிதலினல்
வானத்தமரர் தாமுமகிழ் வானத்தமர மிதிலைநகர். (க)

பொன்றுப்புகழ்தோய் தசரதப்பேர் புனைந்தவிரவி குலமருமான்
குன்றுத்தவத்தின் பெரும்பயனுங் குமாரனகிக் கொடுஞ்சிலைக்குத்
தன்றுட்டுணையாற் றையலுருத் தந்தோன்விரும்பிச் சர்ம்மகிமைத்
தென்றுன்மிதிலை நகர்ப்பெருமை யியம்பிமுடிப்பா ரியாவரே. (உ)

வளங்கொணகரில் வாழ்க்கைபெறு மறையோர்மதிக்கு மதியோனு
விளங்கொள்ளியவா ரணமுடிதோய் விமலன்கமலப் பதமறவா
வுளங்கொள்வேணீ ராமசர்மா வென்றேதிடும்பே ருடையானுண்
களங்கொடாரா தேவியெனுங் காந்தையோடு களித்துறுநாள். (ங)

உரைமேற்புகலா மனைவியுட னென்றுமனங்கொண் டுரகமிசை
திரைமேற்புரியு மறிதுயின்மெய்த் தேவனிருசே வடிகருதி
வரைமேற்றுலங்குஞ் சுடரென்ன மாறுச்சீர்த்தி வளத்தோனுத்
தரைமேற்றுலங்க வொருசுதனைத் தருதியெனச்சாற் றுபுபணிந்தான். (ச)

பொருவாவிரதம் புரிந்திளைப்பார் புந்தியுவகை பூப்பவுந்தன்
மருவாரிசத்தாட் டுணையன்பு மனஞ்சால்பத்தர் மாண்மியச்சீர்
பெருவாரிதிசூ ழுலகினர்கள் பெரிதுந்தெரிந்து பேணிடவுந்
திருவாருரஞ்சேர் மாதவன்றன் றிருவுள்ளத்தெண் ணினன்மாதோ. (ரு)

கத்துந்தரங்கக் கனம்பொலிபாற் கடலிற்கருணைக் கண்வளர்வெண்
ணத்துந்தியகைப் பெருமாளுண் ணுடுஞ்செயலா னுகமுலைத்
தத்துங்கடமை விழித்தாரா தேவிகருப்பஞ் சார்ந்துமதி
பத்துங்கடந்து தன்னிகரோர் பாலற்பரிவிற் பயந்தாளே. (சு)

அந்தமலிபுத் திரப்பேற்று லப்பனெடுதா யதிமகிழ்வாய்ச்
சந்தமறையின் விதித்துளவாஞ் சடங்குபலவுந் தகவாற்றி
நந்தலறுசந் திரதத்த நாமம்புனைந்தார் நலம்பொருந்து
மைந்தனிட்ட பெயர்க்கிசைய வளர்ந்தானுளோர் வணமாயே. (எ)

வண்ணம்புகுநன் மகற்காறு மதியுற்றிடுகா லையின்மாதா
விண்ணம் புகுந்தா ளதுகண்டு வேணீராம சர்மாத்தன்
கண்ணம்புகுத்துக் கான்முளையைக் கண்டுகரைந்து கருதன்னை
யெண்ணம்புகுதா வணங்கரத்தி லேந்திப்பரிவில் வளர்த்தானே. (அ)

இல்லத்திருந்து பெரும்பயனு மினியமகப்பே றெய்தியதாற்
புல்லற்புடன்மற் றெருமாதைப் புனர்விவாகம் பொருந்தானு
நல்லற்புடனே குழவிதனை நாய்கர்பொருட்பே ணுதலென்ன
மல்லற்பொருந்த வளர்த்திடுநாண் மைந்தற்கைந்தாண் டுற்றதே. (கூ)

தந்தைமைந்தற் காற்றுதவி தக்கோர்குலவு சபையினிடை
முந்தவிருப்பச் செயலென்மறை முறையிற்பள்ளி புகுவித்தான்
விந்தைபடவெக் கலைகளையும் விரைவிலுணர்ந்து மேதினியோர்
சிந்தையுவந்து தந்தைதவச் சிலம்புகழத் திகழ்ந்தானே. (க0)

தொக்ககுணமும் விற்பனமுந் துலங்குவடிவச் சுந்தரமுந்
தக்கபடிவாய்ந் திடுகுறிப்பேர் தனைக்காரணமாச் சாற்றும்வண
மிக்கநலங்கொண் டியனுளில் வேணீராம சர்மாத்தன்
புக்ககுலத்தோர் திருவனையாட் பொருவில்வதுவை புணர்த்தானே. (கக)

நன்றுங்காலந் தாதையய னகருக்கொருகா ரியமாகச்
சென்றுநிற்க வப்பதிகோல் செலுத்துமிலேச்ச மன்னவன்றன்
குன்றுவிகற்சீ வனநாமங் கொள்ளுங்கொடுஞ்சே வகன்கடமைப்
பொன்றராதா ரியாவரையுங் கொடுபோய்ச் சிறைச்சா லையிற்புகுத்தான்.(கஉ)

மாற்றிற்புகுத்திக் கதிவழியை மண்மூடிடச்செய் மாமாயைச்
சேற்றிற்பதியா வணமிந்து தத்தப்பெயர்கொ டெள்ளியனைக்
கூற்றிற்றுயரம் புரிவான்போற் குன்றுப்பத்தி கொடுத்திகச்சீர்
பாற்றித்தடுத்தாண் டிடவுளத்திற் பகவன்கருதும் பண்பாலே. (கங)

விந்தையுறச்சந் திரதத்த விடலைதனையு மவன்சிறிய
தந்தைதனையு மேதுவின்றிச் சிறைச்சாலையினுட் சார்வித்தான்
சிந்தைகலங்கு மதிதத்தன் றேறவவன்றன் சிறுதாதை
நிந்தைபொருந்து கருமமிதா னீயஞ்சலைபுன் னெஞ்சமெனு. (கச)

ஆபத்துத்தா ரணமான வருமந்திரமென் னகத்துளதா
னீபத்திச்சீ ருடனதைபுன் னெஞ்சிற்பதித்துக் கணித்தாயேற்
சோபத்திரள்க ளொழிக்குமெரித் துய்போலெனச்சொன் னுன்முனிவர்
சாபத்திறம்போ லக்கணமே சாரப்பிடித்தான் மதிதத்தன். (கரு)

வெம்மையுடனூண் டுயிலுமற வெறுத்திட்டிரவு பகலுமுளச்
செம்மையுடனம் மறையினையே செபித்துச்சிந்தா குலமிகுத்திட்
டெம்மைப்புரக்க வேண்டுமென விரந்துமனது கரைந்துருகி
யம்மையப்ப னுமரிதா ளன்பிற்கருதிப் பணிந்தானே. (கசு)

வேறு.

ஆதிமூலமே யென்றொருதரமுளத் தஞ்சி
யோதியானையின் றுயரையுமுரககே தனத்தோ
னீதியற்றபே ரவையிடைநினைந்துநெஞ் சழியு
மாதினுபத்து நீக்கினேன்சகிப்பனே மனமே. (கஎ)

மூன்றதாந்தினந் தன்னிடைசீவன மூர்க்க
னூன்றுசொப்பனத் தூடரிதோன்றியின் றுன்பா
லேன்றயாரையுஞ் சிறையினின்றகற்றுதி யின்றேற்
றேன்றிடும்பெருந் துயரெனவருளினூற் சொன்னான். (கஅ)

குற்றநீடிய நெஞ்சினருறவினுங் குணஞ்சான்
முற்றறிந்துளார் பகைநலமென்கைமெய் மொழியே
யுற்றமெய்த்தவப் பெரியர்களுளமுலா வொருவன்
செற்றமின்சிகற் சீவனன்கனவுறுஞ் செயலால். (கசு)

மடம்புகுந்திடு சீவனன்கனவினை மனத்தி
னிடம்புகன்றவா றென்னெனச்சிறிதுமெண் ணில்லான்
கடம்புணர்ந்திடு மிபமெனவிருண்மதக் கதிப்பால்
விடம்புசித்தவ னுமெனத்துயின்றனன் மீட்டும். (உ0)

மீண்டுமவ்வணங் கண்டனனுடன்றுயில் விழித்துக்
கூண்டுளாரிடங் கூறலுமதிகொடு குணியார்
காண்டனின்மனப் பிரமையதாமெனக் கரைந்தார்
பூண்டதம்முரு வத்தினுன்மானிடர் போல்வார். (உக)

புவனிமீதினி வியார்க்குமவ்வவர்புரிந் திட்ட
தவசினவ்வள வேவருஞ்சகலமு மென்ன
நுவறலாற்கொடும் பாவியன்னவற்குறு நோயைத்
தவனுறுங்கதி சாற்றிடுந்தகையரின் றுனர். (உஉ)

இன்னவாய்மைகேட் டவனிடமிருந்தவர் சிறைப்பாற்
றுன்னுமங்கவ ரிடஞ்சொலவுவகையுட் டோய்ந்தே
யென்னவாறுசெய் திடுங்கொனூரணனரு ளென்ன
மன்னுளத்திடத் தாயருள்வள்ளருண் மதித்தார். (உங)

ஆயகாலையிற் சீவனப்பெயரின னமைந்த
தேயமானிட னொருவனன்னவனிடஞ் சேர்ந்தான்
மேயவூர்நிகழ் வென்னெனவினவிட வந்தோ
னேயதன்கர நிருபமங்கவனிட மீந்தான். (உச)

கடிதவிழ்த்துடன் படித்தனன்சீவனன் காண்க
குடிகொணின்றனி மனையையுன்குலக்கொழுந் தாமோர்
படியில்பாலனே டங்கிநுங்கினதெனல் பார்த்தான்
முடிவிலாத்துயர் பொங்கிடவடைந்தனன் மூர்ச்சை. (உரு)

பகவனம்புயப் பதங்கருதன்பருட் பதைப்ப
மிகவிடுக்கணுற் றுபுமகிழ்வெய்யபா விகடா
மிகமிசைத்தனக் கெய்துகான்முளையையு மிழந்தே
சகமிசைத்தன்வேர் கெல்வரென்றிடற்கிதோர் சான்றே. (உசு)

தீயசீவனற் கெய்துசம்பவமிறை தேர்ந்து
தேயமெய்திட விடையளித்தன்னவன் சேர்ந்த
தாயதானத்தின் மற்றொருவன்றனை யமைத்தா
னேயமோடவந் தவனுசாயுணர்ந்தன னிகழ்வே. (உஎ)

சிந்தைகொண்டன னிக்கொடுஞ்செய்கையாற் றீரா
நிந்தையும்பெருந் துயரமுநேர்ந்திட லல்லால்
விந்தையார்பய னென்றுளதென்னவுள் வெருண்டே
முந்தைவல்வினைத் தொடர்புநேர்சிறையைமோ சித்தான். (உஅ)

சூர்த்தவன்சிறைச் சாலைபுட்டியர்மிகத் தோய்ந்தார்
பேர்த்தும்வந்தெமைப் பிடிப்பர்கொலென்றபீ தியராய்
மூர்த்தமொன்றுறு முன்னர்தமுதுநக ரடைந்தார்
சீர்த்தசந்திர தத்தனிவ்வாறுளந் தேர்வான். (உகூ)

முத்தினந்துயி லுணவறமுள்சிறைச் சாலை
மத்தியிற்றுயர் படுமெனைமாற்றியாண் டதுதா
னத்திடும்பொரு ளியாவையுமுடனுட னல்கும்
பத்தியல்லவோ மற்றதற்கிணையெதாம் பார்மேல். (௩0)

புத்திநல்கும்விட் புலத்தருமெச்சருட் புலமைச்
சித்திநல்கிடுஞ் செனனமாரணத்திடை சேரா
முத்தியுந்தரு மென்றிடின்மூவுல கத்தும்
பத்தியொப்பதாம் பொருளுளதேகொலாம் பார்க்கின். (௩க)

எலையில்பத்தியா லெய்துமின்பத்தினை யிகந்து
நிலையிலைம்புலந் தருசிறுசுகங்கொள நினைத
லலையுலாவுவான் கஙகையைவிட்டவ மாரும்
புலையரங்கணம் புக்குருள்புன்மையே போலாம். (௩உ)

மூன்றுநாட்பக வன்றுணைத்திருவடி முளரி
நான்றுதித்திட வித்தகையின்புற நல்கி
லூன்றுநாளெலா மோவறவென்னுளத் தூன்னில்
யான்றுதைந்திடற் கரியதோர்பேறுமற் றெதுவே. (௩௩)

மருத்திகழ்ந்திடு பத்தியாரமிழ்தினை மாந்தித்
திருத்திகண்டவென் மனமினிச்சிறுமைதோய் செகப்பொய்
விருத்திகொண்டிடா தலகில்பேரின்பமே விடுவான்
கருத்திசைந்ததென் செயன்மிகநன்றெனக் களித்தான். (௩௪)

தனதுசாதகப் பலனெதுசார்புடைத் தென்ன
மனதிஞடியோர் வல்லசோதிடன்வயின் மருவி
வினவுகான்முப்பா னேழ்வருடத்தினில் வீவுண்
டெனவுரைத்தலின் மிகக்கலங்குற்றன னிதயம். (௩௫)

அளவில் சோதிட ரிடமெலாஞ்சென்றுசென் றுய்கா
லுளமிசைந்தவ ரியாவருமொன்றுபோ விசைத்தா
ரிளகுநெஞ்சின ஞகியிப்பெருந்துய ரிறுமா
வளமைதோய்நல மீபவரியாரென மதித்தான். (௩௬)

இறப்புறும்பொழு துறுதுயர்க்கெல்லையின் றென்கை
மறப்புறுவிசா ரத்துடனத்துயர் மாற்றுஞ்
சிறப்பருட்குருத் தேட்டவாச்சேர்தர லளப்பில்
பிறப்பின்மாதவம் புரிந்துளார்க்கல்லது பெறுமோ. (௩௭)

இன்னவின்னல்கொண் டின்னவனிருந்திடு மேல்வை
பன்னகப்பெரும் பாயலிற்றுயில்பரந் தாம
னன்னயப்பெரும் பத்தனென்றவனெதிர் நண்ணத்
தன்னகத்துறு குறையறச்சாற்றுபு தாழ்ந்தான். (௩௮)

பாதம்வந்தனை புரிமதிதத்தனைப் பார்த்து
நீதயங்கிடே லுனக்கியானன்புட னிகழ்த்து
மாதவன்றிரு மந்திரந்தனைமற வாதே
யோதவங்களியா வையுமொழித்திடுமிஃதுண்மை. (௩௯)

என்றுசாற்றின னக்கணமறைதலு மேய்ந்தோ
னன்றுமீடிய நாரணனேயென நாடி
நின்றகாலையி னடந்தபோதிருந்திடு நிலைக்க
ணென்றுலாம்பக லிரவுடனெப்பொழு தினுமே. (௪0)

இடைவிடாதுள மலர்மிசையன்பினே டிலங்கைம்
படைவிடாதகைப் பரனடிபதித்துரை செபத்தி
னடைவிடாதநா வுடையனுயம்புய நயனக்
கடைவிடாதருள் புரியெனவேத்தினன் கரைந்தான். (௪௧)

காரணநான்குமைம் புலங்களுந்துறந்துகா குத்தன்
சரணவாரிச மேசரணென்றுபொய்ச் சகத்தைத்
திரணமாமென நாடுபுதிகழ்தரு நாளி
லரணமேவிய காசிகாணுறவவா வடைந்தான். (௪௨)

பெற்றதாய்கொணற் பரிவையும்பெற்றிடு பெருமை
யுற்றதாதைபாற் றன்மரணத்திற மொன்றுஞ்
சொற்றிலான்றிரைக் கங்கைமாநதிசூலாங் காசி
நற்றலம்புக நசைத்தனனியானென நவின்றான். (௪௩)

தடைவிளம்பிடா துவப்புடனுசிகள் சாற்றி
விடையளித்திடப் பெருமகிழ்வடைந்துவல் விரைந்த
நடையனுயடைந் திட்டனன்காசிமா நகரங்
குடையெனுமலை கொண்டகொண்டலையுளங் கொண்டான். (௪௪)

குவிமுத்தக்கரை பெற்றமந்தாகினி குலவு
மவிமுத்தத்தலத் தெய்தினனல்லலுண் டாக்குந்
துவிமுத்தத்தரின் றேய்பறுசுகத்துடன் றால
மவிமுத்தம்பெற வரினுநன்றேயென வமைந்தான். (சரு)

குறைவுசற்றுமின் மனத்தனுக்குருபரன் கூறு
மறைவிடாதநா வுடையனுய்மறைமுடி வயங்கு
மிறைவன்றாட்டுணை யகன்றிடாதிதயமீ திருத்தி
நிறையுமார்வமோ டவனவணுற்றன னிலைத்தே. (சசு)

சாதகத்தின்முத் தசத்தினேழ்சார்தரு தருணம்
வீதலெய்திடு மென்றுசாற்றிடுதலின் வெருண்டே
யேதநீக்குகா சியெய்தினனென்றுநா கரிக
ரோதல்கேட்டனன் றுதையுட்கவலைமிக் குற்றான். (சஎ)

என்னதுன்பமின் றெய்தியுளான்கொலென் றிரங்கித்
துன்னிடுஞ்சில சுற்றமானவருடன் சுதன்றன்
பன்னியுந்தொடர்ந் துறவெழுபத்தின்மே லைந்தா
மன்னிடும்பரு வத்தவன்காசியை வாய்ந்தான். (சஅ)

வந்துமைந்தனைக் கண்டனன்புத்திர வாஞ்சை
யுந்துநீர்மையா லோவெனவிழியினீ ருகுத்து
நொந்துசிந்தையென் வந்தவாநுவறியென் றிடவு
மிந்துதத்தன்மு னியன்றவாறனைத்தையு மிசைத்தான். (சகூ)

வினவுதாதைகா தலினுடன்சிலபகன் மேவித்
தனதுடன்றொடர் கேளிர்கடமதுளச் சார்பை
மனதினுடினன் றனக்குமூர்மருவிட வாஞ்சை
கனறலாலுடன் மைந்தனைநோக்குபு கழறும். (ருo)

மெத்துசோதிடத் தலைவர்கள்விளம்புமவ் விதமாந்
தத்துனக்கெது வரையுமென் றுசாவலுந் தவள
நத்துறுங்கரத் தவனிருநாண்மலர்க் கழற்கே
தொத்துறும்புகழ்ச் சந்திரதத்தன்மெய் சொல்வான். (ருக)

இந்தவாண்டிறு தியின்வரையென்றலு மியான்று
னந்தமட்டுமீண் டிருந்திடவமைவுறு தென்ன
நொந்தசிந்தைய னுய்த்தனேர்மைந்தனை நோக்கி
யெந்தவாறுனைப் பிரிந்திருந் திடுவனியானென்றும். (ருஉ)

உனதுதாயிறந் திட்டபோதுறவின ரியாரும்
புனர்விவாகமொன் றுற்றிடென்றென்னுடன் புகன்றார்
தனயனுற்றுள னென்றுனைநம்பினன் றவிர்த்தே
யெனதுபாழ்விதி யின்னவாறியற்றிய தென்றும். (ருஙு)

அழுதுநெஞ்சமிக் கிரங்குபுமி திலையூ ரடைந்தான்
பழுதில்சந்திர தத்தனீடருள்கொடு பகவ
னிழுதியைந்திடச் சாற்றுசொலோவற வியம்பி
யுழுவலன்பினு னூரணற்றுதித்தவ னுற்றுன். (ருச)

இயங்குமோர்தினத் திரவினிலுடலுட னிதயம்
பயங்கரம்பொருந் திடவொருகனவினிற் பாரும்
வியங்கொள்வானமுந் தடவிடவிளங்குகா ருருவந்
தயங்குகாலதண் டத்துடன் பாசமுந் தரியா. (ருரு)

முரணமைந்துயிர் கவர்ந்திடமுயன்றதாங் குடனே
யாணமைந்துள மந்திரங்கனித்தரி யம்பொற்
சரணவாரிச மனத்தினுட்கருதவத் தருணங்
கிரணமாருட லரியடியவர்சிலர் கிளர்ந்தார். (ருசு)

அருளினுலவன் பொருட்டவணடைந்தவ ரறைவார்
வருதலியாந்துவா ரகையிருந்தெங்கர மாடே
சருவலீதருட் டுவாரகாபதிபிர சாதம்
பருகினோர்கடீர்க் காயுளாய்வதிவரிப் படிமேல். (ருஎ)

சுகாநுபோகமெய்த் தவமுடையார்கொடுல் லபஞ்சான்
மகாவிசேடமுற் றுள்ளதீண்டிதனைமாந் திடுவா
ரகாலமாரண மெய்திடார்சாதமென் றறைந்தே
யிகாதுண்ணீயெனக் கண்டடன்சருக்கரை யீந்தார். (ருஅ)

உடலினேடுள முயிருமண்ணித்தினி தூறக்
கடவதாயுல கத்தினெப்பொருளினுங் காணப்
படலிலாததித் திப்பதாய் நனவிடைப் படர்ந்தும்
விடலிலாதுட லுருகிடவினித்ததான்மிகவே. (ருகூ)

ஒடிவிலாதமெய்ப் பத்திமையுற்றவ ரூடே
படிவதானவா பத்தையுஞ்சார்வறப் பாற்றி
முடிவிலாதபே ரின்புளூமுழ்குவித் திடுமேற்
படியிலன்னதன் பெருமையாமென்னுரைப் பதுவே. (சூ0)

இற்றெனக்கிளத் தற்கரிதானவின் பினனுப்
பொற்றைநேர்மனச் சந்திரதத்தன்மெய்ப் போத
முற்றவிர்ந்தனன் மற்றைநாளவன்விழி யுவப்ப
முற்றுலங்கியோர் பத்தனுமாதவன் மொழிவான். (சூக)

பரிவொடென்றனிப் பாடைதோய்பத்தர்தங் காதை
விரிவமைந்திடச் சமக்கிருதத்தில்விள் ளென்ன
வுரிமையோடுசொற் றக்கணத்தினின்மறை வுற்று
னரியசீர்மதி தத்தனிவ்வாறுளத் தறைவான். (சூஉ)

கணித்திடற்கரி தாம்புகழ்பத்தர்தாங் கண்ட
குணித்திடற்கரி தாம்விளையாட்டெலாங் கூற
மணித்தலைப்பெருஞ் சேடனுமாழ்குவ னெனக்குப்
பணித்தவாறெவ னென்றுளத்தடைந்தனன் பரிவே. (கூங)

அன்றுதொட்டுடற் காற்றருமசாத்திய ரோக
மொன்றலுற்றதாற் கண்டவரியாருமுள் ளுடைந்தே
யின்றுகாணினிப் பிழைத்திடுந் திறமென வியம்பக்
கன்றலுற்றதா னெய்சொரிந்திடவெழு கனல்போல். (கூச)

சிமயமொப்பெனச் சேர்ந்ததீப்பிணிசில தினத்திற்
றமரவாரிதி மீதெழுந்தபனநா யகன்முற்
குமரிவல்லிருட் குலங்குலைந்தொழிந் திடு கோள்போற்
கமலநாபன்கண் ணருளினாற்கழிந்தொழிந் ததுவே. (கூரு)

சிலையினைக்குடை யெனக்கொளுமாதவன் றிருத்தாட்
டலையமைந்தமெய்ப் பத்திசான்மாதவர் தம்பான்
மலையையொத்திட வருமொராபத்திம மானு
நிலையதாமெனு மொழிக்கிதோர்சாட்சியா நிகழ்த்தின். (கூகூ)

ஆபத்தானவவ் வாண்டினையிவ்வண மகற்றித்
தாபத்தோடுமைந் தன்செயலென்னெனத் தணியாச்
சோபத்தோடும்போந் தந்தையுட்சுகமுற வகிலின்
றாபச்சீர்மணி மாடமார்மிதிலையூர் தோய்ந்தான். (கூஎ)

காண்டுளார்களியா வருங்களிக்கடலிடை மூழ்கி
மாண்டுகாலமா மானிடர்மறுத்துமிம் மண்மேன்
மீண்டுவந்ததில் வியந்தனரெனில்வியன் முதை
பூண்டவின்பினை யிற்றெனக்கிளத்திடப் போமோ. (கூஅ)

சீலஞ்சென்றிட விவ்வணந்திகழ்தரு நாளிற்
காலஞ்சென்றனன் முதைமற்றவற்குறுங் கடன்கள்
கோலஞ்சென்றிட வாற்றுபுகொஞ்சகா லங்கண்
ஞாலஞ்சென்றிடு வாழ்க்கையினழுவிட நடந்தான். (கூகூ)

மற்றிவ்வாறுறு நாட்பிரமாவருத் தப்பேர்
பெற்றதீர்த்தத்தின் மூழ்குபுகிரியைகள் பிறக்கிச்
செற்றமற்றவான் மீகியாச்சிரமத்தைச் சேர்ந்தாங்
குற்றபல்வள நோக்கிவைகினன்களிப் புடனே. (எ0)

ஓர்தினத்திரா வினிற்றுயில்கனவின்முன் னுரைத்த
சீர்மிகுத்திடு மாதவன்றோன்றிநான் செப்பு
நார்மிகுத்திடு பத்தர்தங்காதையை நவில்வா
யேர்மிகுத்திடு சமக்கிருதத்தினி லென்றும். (எக)

அன்னகாதையீண் டுளதுகாணென்னவு மறைந்தே
மின்னல்போலுடன் மறைந்தனன்மறைதலும் வியப்புற்
றென்னையும்பொரு ளாக்கினேற்கென்கைமா றென்றே
பன்னருங்களிப் புற்றனனுற்றனன் பகலோன். (எஉ)

திடந்தவாப்புகழ் பெற்றவான்மீகியாச் சிரமத்
திடங்குலாவிய பத்தர்பாலீதெலா மியம்ப
வடங்கிடாவிறும் பூதராயகமகிழ் வடைந்தார்
தொடங்கினனுடன் பத்தர்களாடல்கள் சொலவே. (எங)

மூவலின்றிய நாரணனருளைமுன் னிட்டே
யோவலின்றிய பத்தர்தாமுலகுளோ ருய்வான்
மாவலங்கொண்மெய் யருளினற்றுடலின் வகைக
டேவாரமு தெனவடமொழியினற் செய்தான். (எச)

படவராவணை மிசையறிதுயில்புரி பகவன்
மடல்கொள்வாரிசத் துணையடிமனத்தினுண் மறவாத்
திடமுலாவடி யாரடியாரலாற் றெய்வம்
புடவிமீதில யென்னுமெய்ப்போதமுட் புணர்ந்தான். (எரு)

சோமசேகர னம்பிகையாதியாச் சொல்ல
ஞமரூபத்தின் விகற்பமே புண்மையோ நாடி
னேமமுற்றொரு கணப்பொழுதடக்கிடா நெஞ்சப்
பாமரர்க்கஃ துண்மையாய்விளைத்திடும் பகையே. (எசு)

ஒன்றலாற்பொரு ளுளதென்போர் மயக்கறு வுளத்த
ரென்றநிச்சய வநுபவமுலகுளோ ரெவரு
மொன்றமெய்ச்சம ரசவுளத்துடனர னுமையை
மன்றவேத்தருட் பத்தர்தம்மகிமையும் வகுத்தான். (எஎ)

பொய்யகன்றிடு தவம்பலபிறப்பிடை புரிந்து
மெய்யறிந்துளோ ரியாவரும்வியந்துமெச் சிடுவார்
மையனெஞ்சினேர்க் கொன்றிகழ்ந்தொன்றினை மதிக்கும்
வெய்யபாழ்மதக் கொள்கைமேல்வருமிகு விருப்பே. (எஅ)

வேறு.

முத்திரங்கொண்டொருமைபடு பத்தருள் கொண்டடியேன் மொழிந்தகாதை
சத்தியஞ்சத்தியமுலகீர் சந்தேகமடையாதீர் சாத்திரந்தான்
பத்தியுள்ளார்க்கேபலிக்கு மாகையானம்பிநலம் படைப்பீரென்ன
நத்தியுரைத்திட்டான்மெய் நானுமுரைத்தனன்றேர்மின் ஞாலத்தோரே. ()

நாற்றிசையூடுள்ளபல பத்தர்திருக்காதையெல்லா ஞாலந்தேரச்
சாற்றிடச்சந்திரதத்த நாமமொடுவந்தவன்றான் சலசநாபன்
மாற்றியல்செம்பொற்றிருத்தாண் மாறாப்பேரன்பினுடன் மதித்துப்போற்றி
யூற்றியலானந்தநிறை வைகுந்தப்பெருவாழ்வை யுற்றான்மாதோ (அ௦)

வேறு.

சந்திர தத்தன்றன்னோர் தாயுடன் றந்தைதானு
மந்திரப் பொருள்போதிக்க வாய்த்திடு குரவன்றானும்
புந்தியின் புறச்செய்தேற்கும் பொருவின்மெய்த் தேவுமாகிச்
செந்திரு மார்பனின்றான் றிருவருட் பொலிவாலம்மா. (அக)

தொண்டர்தம் பெருமைதன்னைச் சொல்லுதல் பெரிதென்றெளவை
விண்டதோர் மொழிபொய்யன்று மெய்ம்மையே யெனினுமேலோர்
கண்டமட் டேனுமன்பாற் கழறிடா தொழியிலிந்த
மண்டலத் தென்போல்வார்க்குப் வழியொன்று மமையாதன்றே. (அஉ)

ஆதலில் வடசொல்லாலோ வணிமிகு தென்சொல்லாலோ
பூதல மிசைவேறெந்தப் பொருள்செறி பாடையாலோ
பாதக மகற்றிஞானப் பயன்பெறு பத்தர்மாட்சி
யோதலிற் பெரியபேறென் றுண்டுகொ லுணருங்காலே. (அங)

சிறுபரு வத்திற்றுன்பஞ் சேர்ந்தபோ ததனுன்மங்கா
துறுதுய ரறுதற்கான வுறுதிவாய்த் திட்டசிந்தை
மறுவில்சந் திரதத்தன்பால் வாய்ந்தமை மதிக்கில்வீடு
பெறும்விதி யமைந்த வீற்றுப்பிறவியென் றறியலாமே. (அச)

நல்குர வடைந்தோனென்றை நயந்திடா துறுதல்வீணே
பல்குயர் செல்வமுள்ளோன் பயில்சுக போகநீத்துள்
ளொல்குத லின்றிமெய்யா முயர்தவம் புரிதன் மேன்மை
கல்குடை யெனக்கொண்மாயன் கருணையா லமைந்ததாமே. (அரு)

வேறு.

இந்தப்புவியூ டெழின்மிதிலை யினிலேபிறந்து கொடுங்கோல்வேந்
தேவற்சிறையால் வருந்தியரி யினதுமறையா லதுநீங்கிச்
சொந்தவறிவா னரணனைத் தொழுதன்னவன்சொ லுபதேசந்
தோய்ந்துமறலி பயமகலத் துறந்துபகவ னருளெய்திப்
பந்தமறுமெய்ப் பத்தரிசை பரந்தாமன்சொற் படிவடசொற்
பனுவல்பகர்சந் திரதத்தன் பரிசென்றனக்கிங் குறவமைத்தே
யெந்தக்கணத்து முனைமறவா வியல்புங்கொடுக்கத் தயைகூர்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (அசு)

சந்திரதத்தர்வரலாறுமுற்றிற்று.

ஆ கவி கஎச

---

உ

குருவே துணை.

# பக்தமான்மியம்



## பிராசீனபக்தர்தொகை.

கமலமகட்புணர் திருமா லுமையவள்சங்கர னடிமைக் கணத்தோராகித்
தமமறுமெய்ப்பத்தர்கண்முப் பிரிவாங்காதைகளுலகோர் சார்ந்துதேறிச்
சமரசமுற்றிடப்புகன்ற சந்திர தத்தன்றிருநூற் சாரங்கொண்டே
விமலமுறுநாரணன்றன் றொண்டர்கதையினைச்சிறி தியான் விளம்புவேனே. (க)

வேறு

இருவினைத்தொடர் பால்விண் ணிருணில
மருவிவாடுமான் மாக்களுள்வாஞ்சைமுற்
றருளலிற்றரு வன்னமெய்ப்பத்தியின்
பெருமையிற்சில பேசிடுவாமரோ. (உ)

நீசவீனக் குலத்தினிலத்திடை
மாசமைந்துதித் தாரையும்வான்பெறு
தேசவிர்ந்திடு தேவர்முனிவரும்
பேசவைக்கும் பெருமிதப்பத்தியே. (ந)

தோன்றுகாலந் தனிற்றொல்லுலகிடை
தோன்றுறப்பெறுந் தூலமொல்வாரையு
மூன்றுகால முறையுணர்ந்தோர்கண்முன்
பேன்றுவாழ்த்த வியற்று நற்பத்தியே. (ச)

எழுத்திலக்கண மாவதிதென்றுளத்
தழுத்திலக்க ணவாநெஞ்சவரையும்
பழுத்திலங்கியற் பாவலர்பண்டிதர்
வழுத்திடச்செயு மாசின்மெய்ப்பத்தியே. (ரு)

கடியவென்புங் கரையவுருக்கியே
நெடியவானி னிறைபரிபூரண
வடிவமாகி வயங்கிடவைப்பது
மொடிவில்பத்தியென் றோதிடலாகுமே. (சூ)

விலக்கதென்ன விளம்பிடுசெய்கையைத்
துலக்கமார்விதித் தூய்மையதென்னவே
தலக்கணுற்றவிர் சான்றவர்வாய்கொடு
சொலச்செய்வித்திடுந் தூயநற்பத்தியே. (எ)

படியின்மீதறப் பாவப்பயன்களை
படிவியேனே படிகமொப்பாவன
கடிதிவியாவையுந் தன்மயங்காண்டலாற்
சுடிகைமாமணி சுந்தரப்பத்தியே. (அ)

தன்னைநெஞ்சத் தலங்கொளும்புண்ணியர்க்
கென்னையின்பமு மங்கவரிச்சியா
முன்னையெய்த முடித்தலின்மூதரு
ளன்னையொக்கு மவிர்தருபத்தியே. (கூ)

படியின்மேன்மைப் படுங்குலந்தோன்றிய
வடிவுகொண்டு வயங்குநர்தம்மையுங்
கொடியவீனக் குலத்துதித்தார்களுக்
கடிமையாக்கிடு மாசின்மெய்ப்பத்தியே. (க0)

திரிமலத்தின் றிமிரறச்சாடுபு
விரியவுள்ளக் கமலம்விளக்கியே
யுரியதேவினை யுள்ளுறக்காட்டலாற்
பரிதியொக்கும் படியறுபத்தியே. (கக)

பொங்குமின்புருப் புத்தமுதீந்தவி
ரங்கமெய்தியண் ணித்தினிதாகியே
மங்குகாமுகர் மாறெனக்காண்டலாற்
றிங்களொக்குந் திருந்தியற்பத்தியே. (கஉ)

கடவிடும்பரி காரமிலாவணம்
படர்தருங்கொடும் பாவவுருப்பெருங்
கடலைவற்றக் கணத்தினிற்காண்டலால்
வடவையொக்கு மகிமைகொள் பத்தியே. (கங)

காயவாழ்க்கையர் கண்டிடுகன்மமுந்
தூயமாட்சியர் தோயுமெஞ்ஞானமுந்
தோயவோரிரு பாலுந்துணைநடு
நாயகம்பொரு மானவில்பத்தியே. (கச)

ஆக்கும்வேத னறியுஞ்சகலமெய்
போக்குநாதன் புகுதருகேவல
மேக்குறுதுயிர்க் கின்பருள்சுத்தமா
லேய்க்குமற்றென் றிணையறுபத்தியே. (கரு)

காயகன்மக் கடுஞ்சிறைக்குட்டுய
ரேயவாருயி ரென்றிடுகன்னியைத்
தூயஞானத் துணைவனிற்சேர்த்திடு
நேயநற்றுணை நேரறுபத்தியே (கசு)

அருவமாகி யவிர்பரந்தன்னைநா
டுருவமாக்கி யுளத்திடையோவற
மருவவைத்துப்பின் மாநிலமீதினும்
வருவதாக்கும் வளம்படுபத்தியே (கஎ)

குணமுடன்றனை யுள்ளுறக்கொண்டவர்க்
கணவுவிக்கின மியாவுமறுத்தொரு
கணமதிற்பயன் கையுறக்கூட்டலாற்
கணபதிக்கிணை காமருபத்தியே. (கஅ)

மண்முகக்கன்ம வாதனைமாற்றியே
யுண்முகத்தி லொளிர்தருஞானமெய்
விண்முகத்தில் விரவிடக்கூட்டலாற்
சண்முகற்கிணை தன்னிகர்பத்தியே. (கசு)

பொத்துமும்மலம் புல்லுயிருக்கருட்
சித்திமுத்தித் தெரிவையர்போகமா
மெய்த்திளைப்பின் விருப்பமளித்தலாற்
சித்தசற்கிணை சின்மயப்பத்தியே. (உ0)

புத்தியுட்டனைப் புல்லுறுபான்மைய
ரெத்திறத்தின ரேனுமவர்களை
மெய்த்திறற்கட வுட்டொகைவேட்டணை
சத்தியிற்கொளச் சார்த்திடும்பத்தியே. (உக)

பேசலென்பல வாறருப்பெற்றிய
தேசவிர்ந்தமெய்த் தெய்வமுஞ்சிந்தையிற்
பாசநீங்கருட் பத்தர்பணிசெயற்
காசைகொண்டிடு மென்னிலதிகமே. (உஉ)

இவிதமேன்மை யிலங்குமெய்ப்பத்திதான்
கவினும்வைதிரா காதிசமென்னவே
யவிரும்வைதிவன் ணுச்சிரமநெறி
நவிவிராகா திசம்பயனுடலே. (உஙு)

வழுத்தும்வைதி வருணாச்சிரமந
லொழுக்கினிற்றல வண்ணமுஞற்றிடில்
விழுத்தபுண்ணிய மேவிடுமேவிட
விழுக்குபாவ மிரிந்திடுமென்பவே. (உச)

ஆயபாவத் துடனறியாமைபோ
ரேயநித்த வநித்தவுணர்ச்சியு
மாயவிம்மை மறுமையின்பக்கைப்புந்
தோயும்வன்பிற வித்துன்புந் தோன்றுமே. (௨௫)

அன்னதால்வீ டடைந்திடுமாசையா
மின்னதாற்பய னின்முயற்சியிறு
நன்னரியோக முயற்சிநணுகுறு
மன்னஃதான்மெய் யுணர்ச்சிமருவுமே. (௨௬)

இலகுமெய்யுணர் வாலெனதென்பது
விலகுமியானெ னகப்பற்றும்வேரறு
நிலவுமிவ்வழி யேகதிநேர்மையென்
றலகில்வேத மறியவறையுமே. (௨௭)

கரையுமற்றது காதலெய்துற்றன
விரைவினல்கல் வியன்சுகமோண்பொருள்
பிரமதத்துவ மோர்தரல்பெட்டவர்
பரவுஞானம் பயிலுறுஞ்சிந்தையர். (௨௮)

புகலரும்பல் விதத்திற்பொருந்திய
சகலருக்கு மவரவர் தன்மையி
லகமுளிச்சித் திடுதலனைத்தையு
மிகவளித்திடு மேதகுபத்தியே. (௨௯)

அகமுருக்கி யவிர்பத்தியல்லது
நிகரிலாது நிறைபரிபூரணப்
பகவற்குள்ளப் பிரீதிபயப்பதாந்
தகைகொளோர்பொரு ளின்றெத்தலத்துமே. (௩0)

நறைகொள்வாரிச வாசனந்நாபியன்
கறைகொணீலக் களப்பரமேசுர
னிறைவியாகு மெழின்மகதேவியு
மறைவகுத்திடு பத்திவசத்தரே. (௩௧)

இணங்குதேவர் முதற்பதினெண்வகைக்
கணங்களுங்கொடுங் கான்விருகங்களும்
விணங்குலாவும் விரிசிறைப்புட்களு
மணங்கொள்பத்தி வசத்தினரென்பவே. (௩௨)

சார்ந்திடுஞ்சமு சாரத்திருந்துமுட்
பேர்ந்திடாது பிரான்பிரசக்கழ
லார்ந்தபத்தியு ளாழ்ந்தவராவரேற்
சேர்ந்தவிட்புலத் தேவர்தந்தேவரே. (௩௩)

அன்னரேசராத் தோடசரங்களென்
றுன்னலுற்ற வுலகமுழுமையு
மின்னநீர்மைய வென்றறிவாலுணர்
தன்யரென்றுபன் னூல்களுஞ்சாற்றுமே. (௩௪)

அழிவதின்றி யவிர்புருடார்த்தங்கொள்
வழிகளாகிய பற்பலவற்றையு
மிழிவதாக்கி யிசைக்குமவைக்கெலாங்
கழிநலத்தது காமருபத்தியே. (௩௫)

எனதுபத்த னிறத்தலில்லானென்றுங்
கனவுநேர்பல் கருமமும்விட்டெனை
மனதினுடில் வருபவமாற்றுவே
னுனதுநெஞ்சத் தொருதுயரொன்றிடேல். (௩௬)

சிரத்தையோடெனைச் சிந்தைசெய்வாரென்னந்
தரத்தினிட்டார்க ளாவர்தளிர்துணர்
பரத்தநீரிவை பத்தியினுலிடுந்
திரத்தர்பூசை திருத்தியெற்காகுமே. (௩௭)

என்றுபார்த்த னிதயங்களிப்புற
நன்றுநம்பக வான்முனவின்றநா
லென்றுமானு மிலங்குமெய்ப்பத்தியே
துன்றுமேனைய தொல்லுடுக்கூட்டமே. (௩௮)

ஏய்ந்தபத்தி யிசையப்பெறுமவர்
வாய்ந்தலக்கண மானவழுத்துவாஞ்
சாந்திதாந்தி தயவுடனேபொறை
யேந்தியந்தண பூசையியற்றுநர். (௩௯)

சுசிமிகுத்தவர் தஞ்சுவகன்கத்தின்
வசியர்செவ்வன சத்தனைமாயனைச்
சசிமுடிப்பரன் றன்னையொன்றென்னவே
கசியுமுத்தமக் காட்சியுற்றார்களும். (௪௦)

பதியைச்சிந்தை பதித்திடுபூசைய
ரதிதிபூசையி லார்வமிகுத்தவர்
சதியன்மாதரைத் தாயெனவெண்ணுவோர்
விதிகொளேகா தசிவிரதத்தினோர். (௪௧)

மரியுடற்பிண மாந்துதலில்லவ
ரரிதன்னும மனந்தமுஞ்சாற்றுவார்
விரிபவப்பொய் விளம்புகிலார்மையிற்
கரியமேனியன் காதல்கொள்பூசையர். (௪௨)

பசித்துற்ருேர்க்குப் பரிந்தன்னமீபவர்
*சுசியிட்டீகுநர் தோய்மழைப்போதினி
லொசியுமுட்டிணப் போதுதகர்ந்தனைக்
கசிவொடீகுநர் பத்தர்கணத்தரே. (சங)

பொங்குசுந்தரம் பூத்தவிரங்கிய
மங்கையர்க்குள மான்மருவாதவர்
சங்கைதீர்பிறர் தம்பொருள்கண்டுளந்
தங்குமோகை தழைத்திடுதன்மையர். (சச)

பிறர் பெரும்புகழ் பேசியபோதுகேட்
டுறமனத்தி லுதிக்குமுவகையர்
பெறுதனன்னை பிதாவினைவிண்டுவைப்
பொறியைப்போற்கொடு பூசைபுரிகுநர். (சரு)

அன்னியர்க்குப காரஞ்செயாசையர்
மன்னிடும்பிறர்க் காப்பவர்வாய்நிந்தை
பன்னிடாதவர் பாசாண்டர்பாழ்மதந்
துன்னிடாரிவர் தூயநற்பத்தரே. (சசு)

இடம்பமில்லவ ரேழிசைநான்மறை
யிடம்பொருந்திய விச்சையுடையவர்
தொடங்கிராகத் துவேசமென்ருேதிடு
மடங்கொடாயினு மாலடிவந்திப்போர். (சஎ)

மயலிற்கோபிக ளுந்தன்மனத்திடை
பயமிகுந்து பவமலிகஞ்சனு
முபறுவேசத்தின் மூள்சிசுபாலனு
மயர்விலாதுட்கொ டானந்தமெய்தினர். (சஅ)

மூடஞ்ஞானங்கொ டோமுழுமோகத்தோ
வாடுலோபத்தி லோபிரமாதத்தோ
நாடுவார்பக வானடிநாடொறுங்
கூடுதற்கரி தாநலங்கொள்வரே. (சகூ)

தேவரேமுத லாப்பட்சிகள்வரை
யாவதான வுயிர்களினீட்டமு
மாவலோடு பகவனடிநினைத்
தோவலில்கதி யுற்றிடலுண்மையே. (ருo)

அலகிலாவழி யூடெதிலாயினுஞ்
சலசலோசனன் றன்னையுபாசனை
நலமுறப்புரி வார்களுணண்ணுடுபற்
பலவரங்களும் பற்றுதலுண்மையே. (ருக)

---

*சுசி - அக்கினி

தறுகணீள்பது மாசுரன்சங்கரற்
குறுகணுற்றிட வுன்னியபோதினின்
மறுகிநாரணற் சிந்தைசெய்வண்மையா
லுறும்விபத்தற லாருணரார்களே. (ருஉ)

பேசரும்பல் புராணப்பெருக்கிற்சொ
லாசையாவு மடைந்திடவெண்ணியே
யீசனுகி யிலங்கரியின்பத
நேசம்வாய்ந்தவ ரெண்ணிலநேகரே. (ருங)

நாரதன்பர் வதன்சனகாதிகள்
வாரமிஞ்சு சுவாயம்புவன்யமன்
தீரவிச்சுவச் சேனன்சயனுட
ஞரவிழ்விச யன்சுநந்தன் னந்தன். (ருச)

உருத்திரன்சண்ட னுற்றசுபத்திரன்
குருப்ரசண்டன் குமுதன்குமுதாக்கன்
றிருத்துபுண்ணிய சீலன்சுசீலனே
மருத்திகழ்ந்திடு வைவச்சுதமனு. (ருரு)

இத்திறத்தின ரியாவருநாரணன்
பத்திகொண்டு பழுதிறமாதுயிர்
சத்தியப்பட வேதனைத்தற்குமு
ளொத்திணங்கிய வுத்தமராவரே. (ருசு)

வேறு

கரபாச னன்றக்கன் சரபங்கன் கவிசமச
னரியந்த ரீக்கன்பிப் பலனவிரா விகோத்திரனே
வரமார்பி ரபுத்தன்றி ரவிடனு கவழுத்து
மரசப்பு தல்வர்கள்பத் திகொடரிதா நலனடைந்தார் (ருஎ)

வேறு

பிருதுமுசு குந்தனிமி சுதன்வாவு சிபியே பிரியவிர தன்னிக்கு வாகுரிபு காமி
பிருகுபுத் திரவசுவண் சததன்வா விரகு பிராசீன பர்க்கிசுசத் தியசந்தன்சனக
னுருக்குமாங் கதன்சகரன் மாந்தாதா நகுட னுற்றாகு கணன்பகீ ரதனம்ப ரீட
னரிச்சந்தி ரன்சுரதன் பரதன்ற திசி யான்றாயோ மூர்த்திரந்தி தேவனெடுத் தங்கன்.

வேறு

பூரிதை வகன்யயாதி புகழ்மலி திலீபன் பூரு
பாரியல் யதுவுத்தான பாதன்வீட் டுமனயோத்தி
வீரிய தசர தப்பேர் விரவின னுதி வேந்தர்
சீரிய விண்டு பத்திச் சிந்தையாற் சிறப்புற் றோரே. (ருகூ)

அநுமன்சாம் புவன்சுக்ரீவ னவிர்கரு டன்கிராகந்
தொனிபுகழ்ச் சடாயுநீலன் றௌன்மைசால் புசுண்டனின்னோர்
புனிதமா மறைக்கெட் டாது புவிமுழு தளந்த மாயன்
பனிமலர்ப் பதங்களுடும் பத்தரிற் சீரி யோரே. (சுo)

வேறு

துருவன் சந்திர காசன்றொல் பாண்டவ
ரருமயூரத் துவசனலர்க்கனேர்
பரவுசித்திர கேதுபரீட்சித்து
மருவுசெம்புத் துசனின்னமன்னரும். (சுக)

வேறு

வான்மீகி சுகன்சூதன் பரத்துவாசன் வளர்சௌனகனகர்க்கன் பிரசே தாக்கன்
வான்மீளா வகத்தியன்சமீகன் யாக்ஞ வற்கன்புலத்தியனே புலகன் வியாசன்
கான்மேவு சவனன்சோ பரிரிசீகன் கவுதமனத் திரிகர்த்த மன்சிருங்கி
பான்மேவாங்கிரசுதாத்பியன் பிருகுவைசம்பாயனன்லோமசன்விசுவா மித்திரனுமன்றி.

வேறு

காசிபன் பிருங்கிமார்க் கண்டன் மாண்டவ்யன்
மாசில்ச மதக்கினி மாயா தரிசனே
யேசில்சீர்ப் பராசர னிசைதுர் வாசனும்
பாசிய லரியடி படிந்த பத்தரே. (சுங)

மிக்கவுத்தவன் விதுரன்சுதாமாவொ
டக்குரூரன்சஞ் சையனசாமிளன்
மெய்க்குகன்சுர்த தேவனிம்மேதினி
மக்களாகி மகிமைகொள் பத்தரே. (சுச)

வேறு

சபரிமதா லசதிசதீ தேவிதிரோ பதியே
சத்தியரு பாவாத்தி ரேயசுத குந்தி
தபவிந்தி யாபலியுங் கிட்டிணனுக் கன்னந்
தந்தபிரா மணகுலத்திற் சார்ந்திடுமங் கையரு
மபமாகு மாசையொழித் தரியடியே நாடி
யானந்த மடைந்தனரீ தனந்தபுரா ணங்கள்
சுபமாக விரித்துளதா லிங்குசில சரிதஞ்
சொல்லுவனித் தொல்லுலகர் சுகமிகவுற் றிடவே. (சுரு)

வே று.

பலதேயத்துப் பலபதியிற் பலதாய்தந்தை தருஞ்சுதராப்
பகவனடிபோற் றிசைத்தருளின் பயன்கைக்கொண்டு பழயமறைச்
சலசாதனத்தான் கரங்கொடுடல் சமைக்கக்கருவுற் றுழலாமெய்த்
சரதக்கதிகொள் பத்தர்தொகை தனக்கந்நாளிற் றயைசெய்தாய்
மலவாதனைதீர் பரஞான வாரியமுதா முனதுருவ
மாருத்தியான யோகநில வாய்க்கவெனக்கென் றருள்வாயோ
யிலகாரணநிச் சயமுணர்ந்தோ ரேத்துந்திருவோ ணப்பதியா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (சுசு)

பிராசீனபத்தர்தொகை முற்றிற்று.

ஆ கவி கஅo

முதலாவது

# நாபதாசர்கதி.

மிகைகொள்பே ரருட்சீர் சான்ற மெய்ப்பிரா சீனபத்தர்த்
தொகைபடத் துதித்தன் னோர்தாட் டுணைத்துகள் சிரமேற் கொண்டு
வகைபடப் பத்தர்கண்ட மாண்விளையாட லியாவுந்
தகைபடப் புகன்றநாப தாசர்சீர் சாற்று வேனே. (க)

வேறு

விண்ணம்பொலிபு மணிமாட மீதாமகளிர் வியனமர
ருண்ணம்பொலிபு மாரமுத முவட்டிபுருகிச் செவிசாய்க்கும்
வண்ணம்பொலியுங் கனிமிடற்றில் வழுத்துமதுர மலிதருநற்
பண்ணம்பொலிபு மேனாட்டைப் பிரிபாலனஞ்செய் திடும்வேந்தன். (உ)

வான மருவும் புருகூதன் வதிவாகனங்கள் வெளிறவிடாத்
தானமுதவு மங்கையுளான் றக்ககல்வி கேள்விகளி
லூனமருவாச் சேடனுமு ளொல்குமுரத்தா னுற்றமைந்த
மானசிங்கப் பெயர்பொறுக்கும் வல்லோனுன மாட்சியனே. (ந)

ஆசைப்பெருக்கை யுடையோருக் கழியாப்பழியோ டல்லலெனு
மாசைப்பெருக்கு வெறுக்கையையஃ தாக்கித்தன்னை மருவினருக்
கோசைப்பெருக்காந் துதிமுழக்கி யும்பர்வணங்க வுஞற்றிடுமெய்ப்
பூசைப்பெருக்கா ரருட்செல்வப் பொலிவிலாசை புணர்ந்தானே. (ச)

இன்னபொருளை யாவரெனக் கீவாரென்ன வெண்ணிடுநாட்
டன்னதருமைத் தவங்களெலாந் தழைந்தோருருவாய்ச் சார்ந்ததென
வன்னக்கமலத் திருமாது மருவுமகிணன் மலர்ப்பாத
முன்னற்புதமா ரொருகுரவ னுற்றான்கருணை வற்றானே. (ரு)

மண்டுன்றியபல் லுயிரிடத்து மாறாக்கருணை வாய்ந்தோனும்
விண்டுமலர்த்தா ளுளம்பிரியா வியன்கிட்டிணப்பே ராசானைக்
கண்டுந்திடநீர் விழிகண்மனங் கரையப்பணிந்து கனிந்தேத்தித்
தொண்டுண்டெனில்விண் டிப்பதியிற் றேயென்றனையாண் டென்றானே.

மன்னர்க்கருஞ்செவ் வியனுகு மானசிங்கப் பேர்வேந்தன்
றன்னற்புதமார் குணதிசயச் சால்புந்தரணிவாழ்வுவர்ப்பு
மன்னற்பளவி லாமையையு மன்றுடுபுதன் பாவிரக்கு
மின்னற்பரிவுங் கண்டுள்ளத் திரக்கமிகவெய் தினனிசைக்கும். (எ)

அண்டமுழுது மளந்திடுமா லம்போருகத்தாட் டுணையகத்திற்
கொண்டநிலையார்க் கேயின்பங் கொடுக்கும்பதிதான் பிறிதேதோ
தொண்டன்புடையார் பதிமுழுதுஞ் சொந்தமெமக்குத் துயருனக்கேன்
விண்டபடியீண் டேவதிவான் விரும்பினேனென் றுரைத்தமர்ந்தான். ()

அன்னோன்றனக்குத் தன்னகரி னவிர்மேற்றிசையி லஞ்சலச
மின்னோங்கிடுசி ராச்சிரம மிகுபோன்பால் விதித்ததன்க
ணன்னோன்பியற்றப் புகுவித்து நாளுமவன்ற னளினமலர்ப்
பொன்னோங்கமலச் சேவடிகள் போற்றியுளம்பூ ரித்தானே. (கூ)

சேணாட்டமார் மெச்சுநலஞ் சேர்கிட்டிணப்பே ராசாற்கு
வீணாட்டவந்தோ யுலகியலை வெறுத்துத்துறந்த விரத்தியுடன்
பூணுக்கருத்தி லாசான்றன் புனிதக்கழல்கள் பூண்டவரா
மாணாக்கர்களக் கிரன்கில்க னெனும்பேரிருவர் வாய்ந்தாரே. (க0)

உணருமுலகாம் புலங்களினூ டுழலாவண்ண முளக்கமலம்
புணருந்துணைத்தாட் சற்குரவன் புரியான்மார்த்த பூசனைக்காத்
துணரும்வளமார் தருப்பைமுதற் சொல்லுமுபக ரணத்தொகையுங்
கொணரும்படிகா னடைந்தார்கள் கொண்டுமீண்டார் குருவிடமே. (கக)

தம்மையனையார் வருபொழுதிற் றடங்கானகத்தின் றூரியிடை
மும்மைபொருந்துந் தவத்தானன் முறைதீர்கருணை முதிர்ச்சிபெறு
மம்மையகல வேதேதோ வணையத் துணையாதாரமின்றிச்
செம்மைகுலவு விழித்துணைக டிறவாதொருசேய் திகழ்ந்ததே. (கஉ)

கொடும்பண்புடைய புலீசக் குலந்தோய்தருவந் தியர்தாமு
மடும்பண்புடைய மாவினமு மணுகாவணமக் குழவிதனை
விடும்பண்புடைய கொடியரையு மேவிக்காவல் புரிவோன்ற
னெடும்பண்புடைய திருவருளே நேயத்துணையா மேயதுவே. (கங)

மூவாநலந்தோய் கில்கனெனு முனிவன்முன்னே வாலுமவ
னோவாவருடோய் விழிக்கெதிரே யுறுமக்குழவி தனைக்கண்டா
னுவாவெனவுள் ளிரும்பூது மணையக்கூவி யக்கிரனை
மேவாய்காண்டி யிவணுளதோர் வியனீயென்ன விண்டானே. (கச)

சொல்லாவுடன்றீர்த் தங்கொணர்ந்து தூயவிழிகண் மண்ணுதலும்
வில்லாரொளிகா ணுறவுள்ளம் வியந்தப்புனிதக் குழவியொடு
நல்லாச்சிரமத் திடைபோந்து ஞானசிரியன் பானடந்த
வெல்லாம்விளம்பக் குருபரன்ற னிதயத்துவகை யேய்ந்தானே. (கரு)

அன்னைபல்லா யிரவரினீ டருட்சற்குரவ னம்மகன்றான்
முன்னையியற்று மருந்தவத்தின் முடிவுமிந்நாண் முதுக்குறைவும்
பின்னைமரபை யுலகமெலாம் பிறங்கப்புரியும் பெற்றியையுந்
தன்னையமருஞ் சிந்தையிடை சற்றாய்ந்தினைய சாற்றுவான். (கசு)

பொன்னேருரந்தோய் திருமாலம் புயத்தாட்புகலுள் ளகலாரா
நன்னேயத்துப் பத்தரிவ ணண்ணுந்தோறு நனிவணங்கி
யென்னேயடியேன் செய்பணியென் றேத்தியவர்க ளிடுமேவல்
கொன்னேமுடித்தங் கவருள்ளங் குளிரப்புரிவ தன்றியே. (கஎ)

அன்னார்மிசைந்த வுச்சிட்ட மருந்துநெறிபூண் டவரலம்பும்
பொன்னார்கரபா தோதகத்திற் புனிதமுறவே மூழ்கியென்று
மின்னார்சாது சேவைதனை மேவிநாபப் பெயர்விளங்க
முன்னாமதாச் சிரமத்தின் முகப்புறமர்தி யெனமொழிந்து. (கஅ)

கோலம்பெறநல் லுடையொன்றுங் கொடுத்திட்டிவனுட் குழையாமே
சீலம்பெறச்செய் குதிரென்று செப்பக்குரவ னாணைதனை
மூலம்பெறவே யாவருக்கு மொழிந்தானுயரக் கிரதாசன்
ஞாலம்பெறச்சீர் விளக்கவரு நாபன்களிப்போ டுற்றானே. (கக)

அளவில்கால நெடியதவ மாற்றியறிவு மியாக்கைபதும்
வளமைமுதிரப் பெற்றவர்தம் மதியினுவந்து வாஞ்சைபெறும்
பளகிலடியார் பிரசாதம் பருகுமருமை படிமிசையிவ்
விளமைவயதில் வலிதெய்தி னிவன்முற்றவமா ளப்பவரே. (உ0)

முடியுங்கதிவேட் கையாளன் முத்தரிதன்மாண் பறிவான்றிச்
செடியுந்துடல மியானெனவே சேருமகந்தைப் பிணிப்புண்டு
படியுமுணவைம் புலனாரப் பருகிப்பெருகிப் பழுத்துடல
மடியுந்தரங்கொ ளிளமதியோர் மதித்துப்புகலும் வரம்பிற்றே. (உக)

வேறு

புரணபே ரின்பமோங்கும் பூமியாம் பத்தர்தம்பொற்
சரணவா ரிசம்படிந்த சலத்துள்வா ழுறிவில்செந்து
மரணமற் றுயர்வான்பேற்றை மருவுமே லறியுமேன்மைக்
கரணமுற் றவர்கண்மூழ்கிற் கழறலென் னவர்தம்பேறே. (உஉ)

மணங்கமழ்பதுமபீட மன்னியிவ் வண்டமெல்லா
மிணங்கவே படைக்கும்வேத னியல்பதத் தினுமேலன்றோ
பணங்கவி னரவப்பாயோன் பத்தர்தஞ் சேடமாருஞ்
சுணங்கனும் பிறப்பிங்கென்னிற் சொல்வதென் னவன்றன்சீரே. (உங)

கண்ணுறல் பத்தர்சேவை காதுற லவர்சொல்வார்த்தை
பண்ணுத லவர்நல்லேவல் படிதல்பா தோதகத்தி
லுண்ணுத லவர்தஞ்சேட முயிர்த்தலன் னவர்மெய்க்காற்றே
னண்ணுறு நாபதாச னற்றவம் பெற்றாரியாரே. (உச)

இவ்வகை யடியரேவ லியற்றிடு மியல்பினோடு
மெவ்வமில் குருநாதன்சொ லிராமநா மத்தையன்பாற்
செவ்வகை பகலிராவுஞ் செபித்திடு மான்மியத்தாற்
செவ்வன சத்தாமேனைக்குஞ் சீலமுந் தெளிவும்வாய்ந்தான். (உரு)

சாலவு மரிதேயாகுஞ் சாற்றுமா னிடமென்றோர்ந்த
சீலமுற் றோருமற்றைச் செனனமோத் துள்ளார்தாமு
மூலமெய்க் கதிசேர்ந்துய்வான் மூதுல கிடைதோய்பத்த
ரேலருட் பணிகைக்கொள்வா ரெய்திடாப் பேறென்றுண்டோ. (உசு)

இன்னவா நாபதாச னிலங்கிடு மியல்பைநோக்கித்
தன்னகத் துவகைபொங்கிச் சாற்றுமக் கிரதாசன்று
னன்னலப் பெருக்கஞ்சான்ற நாபநீ யின்று தொட்டிங்
கென் னருகி யைங்கிட்டேவ லியாவையு மியற்றுகென்றான். (உஎ)

உரைத்திடு மாற்ற நாப னுறுசெவி யுற்றபோதிற்
கரைத்தநெஞ் சினனுக்கண்ணீர் கரைபுரண் டோடவன்பாற்
றரைத்தலை வீழ்ந்தெழுந்தெத் தவமுனண் முடித்தேனென்றான்
வரைத்தகற் புறுமின்னுளின் மகிழ்பணி வயக்கினனே. (உஅ)

கருப்பையுட் புகாதுதன்னைக் காக்குமக் கிரதாசன்றன்
விருப்பையுள் ளுணர்ந்தன்னோன்றன் மெய்ப்பணி பலவுமாற்றி
நெருப்பையொப் பெனச்சோம்பானு நிகழ்தரு நாளிலோர்நாட்
டருப்பைபா சனமீதக்ர தாசனோர் தனிமாடத்தில். (உகூ)

பொருந்தியான் மார்த்தபூசை புரிந்தினி திருந்தானப்பாற்
குருந்திய னுபதாசன் குலவுசா மரங்கையேந்தி
விருந்தியல் காட்சியோனு வீசியாண் டிருந்தானுக
விருந்தியல் சிந்தைதன்னு டிணையிலக் கிரதாசன்றான். (௩0)

தன்மய னுமிராம சந்திர னுருவந்தன்னைப்
பொன்மய பீடமீதிற் பொருந்திடத் தாபித்தப்பாற்
பன்மய மானபொற்பீ தாம்பரம் பரிவாற்சாத்தி
மின்மயப் பணிகள்பூட்டி மிக்கலங் காரஞ்செய்து. (௩க)

தென்றலங் குன்றின்சந்தந் திகழ்தரச் சாத்திவண்டார்
மன்றலந் துளவமாலை மகிழ்வொடு சூட்டுங்காலை
மன்றவக் கிரதாசன்றன் மலர்க்கழல் பணியுஞ்சீட
னென்றதோர் வணிகன்கப்ப லேறுபு கடன்மேற்சென்றான். (௩உ)

இவிதமாம் பொழுதுகப்ப லெண்ணிலாப் பொருளினோடுங்
கவிழ்தரத் துவக்குஞ்செய்கை கண்டுடன் வணிகனுனே
னெவிதமா முயற்சிசெய்து மியாதொரு பயனுமின்றிப்
புவியினு னுகர்வாராற்றும் புண்ணியம் போன்றதன்றே. (௩௩)

தனத்திரள் பரிவாரத்தோர் தம்முயி ராதிபோஞ்சீர்
மனத்திடை மதித்தாசான்றன் மலர்ப்பதம் வழுத்தலோடுஞ்
சினத்திருக் ககன்றகாட்சிச் சீர்கொளக் கிரதாசன்றான்
வனத்திரு மாலைநாடி மருவுமெய் மறந்துற்றனே. (௩ச)

தன்னியல் வடிவிலன்பு சான்றவக் கிரதாசன்றான்
மன்னிய தனதுநெஞ்சை வைத்துறும் பான்மையோர்ந்து
தன்னிக ராமிராம சந்திரன் றனேசென்று
பொன்னியல் கலஞ்சாயாமற் பொருக்கென நிலைசெய்தானே. (௩ரு)

காமரு பூசைமுற்றுங் கழிதரு மளவுநாபன்
சாமரைப் பணியையுள்ளந் ததும்புவ கையினோடாற்றித்
தேமலி பூசைதீர்ந்த பின்புதே சிகனைத்தாழ்ந்து
சேமமிக் கெழுந்தகப்பல் சென்றதுசேய்த்திலென்றான். (௩௬)

நன்றுதன் னருகினிற்கு நாபனை நகைத்து நோக்கிக்
குன்றுரு வுவப்போடன்னோற் குழைவுறத் தழுவிநீதா
னென்றுமென் சீடர்கூட்டத் துயர்வுளோ னென்றுகூறி
யென்றுமா றுதசீர்த்தி யிலகிட வினைய சொல்வான். (௩௭)

நான்சொலும் வண்ணமிந்த நானில மீதிற்றோன்றி
வான்சொலுஞ் சித்தியாடல் வரையறச் செய்துபின்னர்
தேன்சொலுந் தியசெய்யாடோய் சீதரன் றாளிற்சேர்ந்தோர்
நோன்சொலுப் புடைதோய்பாரி னுண்ணிய ருணரவென்றான். (௩அ)

எனக்குரு வுரைத்தகாலை யிணையடி வணங்கிப்போற்றித்
தனக்குவ மானந்தானுத் தழைத்திடும் பத்தர்தங்கள்
கனக்குமாட் சிமைதோய்சித்திக் காரணக் காதையாவு
மனக்குறி வழிசென்றெய்ப்பேன் வழுத்தலாம் வரம்பிற்றேயோ. (௩௯)

யாதுமொன் றறியாநாயே னெவ்வண மிசைப்பேனென்னப்
பேதுற லோடுசொல்லப் பேசுமக் கிரதாசன்றான்
மோதுவா ரிதியிற்கப்பன் மூழ்கலு மெழுந்துதூரம்
போதுமோர் செயலுமெவ்வா புகன்றனை யதுபோலென்றான். (௪0)

தன்னருட் குரவன்மெச்சுந் தகைபுறப் பெற்றபோது
மென்னயான் பெற்றதொன்றென் றியம்புதற் பழிப்புமாற்றந்
துன்னருட் சுகந்தோய்பத்தித் துறைபுளோர் கொள்வதன்றிப்
பின்னமை நெறிக்கோட்பட்ட பெட்டரெய் திடுவதன்றே. (௪௧)

நலங்கிளர் குரவன்மீட்டு நாபனை யன்பானோக்கி
வலங்கிள ரென்கணோக்க மருவிய செய்கைகொண்டும்
பலங்கிளர் பத்தர்ப்போற்றிப் பரவுமான் மியச்சீர்கொண்டும்
புலங்கிள ருனதுநெஞ்சிற் புணர்ந்திடு முண்மையஃதால். (௪௨)

இறப்புட னிகழ்வெதிர்ப்பென் றியம்புமுக் காலத்தூடுஞ்
சிறப்புடன் றோன்றும்பத்தர் செய்வினை யாடலியாவு
மறப்புணர்ப் பெய்திவாடு மானிட ராவாரெல்லாந்
திறப்புது மதிகொண்டின்பஞ் சேர்தரச் செப்புவாயால். (௪௩)

அவிருமெய்ப் பத்தர்சேட மார்ந்தநின் னாவின்மீதி
னவிலுமென் ஞானவாணி நட்டம்புரி செயலினாலுங்
கவினுமுக் காலந்தேறுங் காட்சிநிற் கமைந்ததாலும்
புவியினீ புகல்வதான புனைந்துரை களுமெய்யாமே. (௪௪)

என்றுமிக் கருளாற்சாற்று மிணையில்சற் குரவன்செய்ய
மன்றலங் கமலத்தாளை வணங்கியுண் மதித்துப்போற்றி
நின்றதன் மனவெளிக்க ணிகழ்ந்திடும் பத்தர்மாட்சி
நன்றனை வருந்தேர்ந்துய்வா னுடொறு நவின்றான்மாதோ. (௪௫)

இன்னணங் குரவன்கூறு மேவலும் பத்தர் தங்கண்
மன்னருட் பணிகளுந்தன் மயத்திரி கரணத்தாற்றித்
தன்னன சிறப்பினேடுஞ் சகத்தின்வாழ்ந் திருந்துபின்னர்
பன்னக சயனன்பாத பங்கயந்தோய்ந்தான் மாதோ. (௪௬)

வேறு

கிருட்டிணப்பேர்த் தேசிகன்றாள் கிட்டிவணங்கு மக்கிரனுங்
கில்கன்றானுங் கண்டுவப்பாற் கிளர்கண்விளங்கப் புரிந்தொருதங்
குருப்பாலுரைத்துத் திடவவன்வாய் கூறுநாபப் பெயர்சூடிக்
குறையாமகிமை யக்கிரனைக் குருவாக்கொண்டு பணிபுரிகா
லிருட்காராழி யிடைகலமா ழின்னலகன்றே நெடுந்தூர
மேகும்விவரந் தெரிந்துரைத்த வினைதீர்நாப தாசரென
விருக்குமுடிவோர் பத்தர்புக ழெல்லாஞ்சொலுஞ்சி ரெனக்கருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமானே. (௪௭)

நாபதாசர்கதி முற்றிற்று.

(ஆகூ கவி உ௨௭)

---

இரண்டாவது

# அநுமார்கதி.

தொண்டர்தந் தொண்டராவோர் தோய்தராப் பேறின்றென்சீர்
மண்டலத் துள்ளார்தேர வழுத்திலக் கியமாய்நின்ற
வொண்டமை நாபதாச னுயர்புக ழுரைத்தேனிப்பால்
விண்டமை யநுமன்சீர்த்தி வேலையிற் சிலசொல்வேனே. (௧)

கசரத பரிபதாதிக் கணம்பொலி யயோத்தியாண்ட
தசரத வேந்தனுற்றுந் தவத்தரு மைந்தனுகிச்
சுசரத முனிவர்தேவர் துயரறத் துராசாரத்தின்
வசரத மாகும்வண்ணம் வந்துதித் தருளி ராமன். (௨)

தாதைசொற் பிழையாவண்ணந் தம்பிலக் குமணனேடு
சீதைமின் சமேதனுகச் செறிவனத் துற்றநாளின்
மாதைரா வுணன்கொண்டேக வானரச்சேனைசூழப்
பேதையா மவனைக்கொல்வான் பெயர்ந்தன னிலங்கைக்கன்றே. (௩)

அடலணை யிராகவன்று னவிரிலக் குவன்சுக்ரீவன்
மிடலணை யநுமனாதி வீரர்சுற் றினர்கணிற்ப
விடலணை யாமலார்க்கும் விரிதிரைப் பெருக்கார்நீலக்
கடலணை செய்வானுள்ளங் கருதியாண் டுற்றகாலை. (ச)

மானவை பொருந்திலங்கை மாநகர்க் கோர்கூற்றாகச்
சானகி தனைக்கொணர்ந்த சரிதைகேட் டுள்ளயர்ந்து
வேனமை விவேகஞ்சான்ற வீடணன் முன்னோற்றாழ்ந்திட்
டானநற் போதந்தோய்வா னளவற முயன்றான்மன்னோ. (ரு)

ஓம்புதன் குலத்தைமுற்று மொழித்திடுங் குடாரத்துற்ற
காம்புற ழிராவணன்றான் கனிந்துவீ டணனன் பாற்சொ
லாம்புது மதியையெண்ணா னழலெனக் கனன்றானந்தோ
பாம்புணப் பால்வார்த்தாலும் பயப்பது விடமேயன்றே. (சு)

மொண்டமிழ் முதலைதானு மூர்க்கரா னவருந்தாங்கைக்
கொண்டது விடாரென்றான்றோர் கூறுதல் சரதமம்மா
வண்டமைக் குணந்தோயின்னோன் மறுமையோ டிம்மையாக்கங்
கொண்டமைந் திடவுட்சற்றுங் கொண்டிலன் போலுமாதோ. (எ)

பெரியனீண் டிவனென்றுன்னிப் பீடிரா கவற்பகைத்திட்
டுரியபே றெய்தநாடு மியற்கையா துறழ்வதென்னில்
விரிநதி கடப்பான்றம்முள் விரும்பினோர் தெப்பம் விட்டு
வரியபே ரிடங்களூர்ந்து மாண்டிடுந் தன்மைத்தாமால். (அ)

ஆதலி னிவன்பாலுற்றீண் டரும்பழி பாவமேற்றுப்
பாதக நிரயத்தாழ்ந்து பட்டிடேன் பாவதூலச்
சோதர வாஞ்சைசற்றுந் தோய்ந்திடேன் சுகவிராமன்
றாதவிழ் கமலபாதஞ் சரணடை வேனென்றுன்னா. (கூ)

காசினி யுள்ளாரியாருங் காண்டலுஞ் செய்யவொண்ணா
மாசிய லந்தகார மாற்றுசெங் கதிரேபோல
வீசியற் கிரணப்பந்தி விரிமணி யாரமொன்று
தேசியல் கரத்திலேந்திச் செழுங்கடற் கரையில்வந்தான். (கo)

வந்தவ னிராகவன்றன் வயங்குகா யாம்பூவன்ன
சுந்தர மேனிச்சீலந் துலங்குகண் ணாரக்கண்டா
னந்தமில் பரமானந்த மடைந்திரு கண்ணீர் வாரத்
தந்தனன் கரத்தின்மாலை தரையில்வீழ்ந் தவசமுற்றான். (கக)

சிறிதுபோ தவசமாகித் தெளிவடைந் தெழுந்துமுன்னோற்
பிறிவுறு தன்னதுண்மை பேசியாண் டுற்றானாக
வெறிநிறை யலங்கற்றிண்டோள் வீடணன் றந்தமாலை
செறிதரு மணியின்சீலஞ் செப்பியுண் மகிழ்ந்தின்பாகி. (கஉ)

தொழுதரு கமைந்துநின்ற தூயசீ ராஞ்சனேயன்
பழுதறு முகத்தைநோக்கிப் பத்தவற் சலனும்வள்ளன்
முழுமணி யாரந்தன்னை முண்டகக் கரங்கொண்டன்னோன்
விழுமிய களத்தின்மாடே மேதக வணிந்தான்மாதோ. (கங)

இருவினைத் தொடக்குண்டாக்கை யாமெனன விருப்பார்தாமு
மருவினை தலைமிக்காற்று மகற்புனைந் துவப்பாரென்றாற்
றருவினைப் புறஞ்செய்வள்ள றன்பதத் தன்புசான்ற
பெருவினை யநுமற்கிட்டுப் பெற்றவின் புரைப்பதாமோ. (கச)

வேறு

தன்களத்தின்மாலையிட்ட விராகவன்பொற்சேவடிக டாழ்ந்துபோற்றிப்
பின்கரத்திலெடுத்தனனுங் கவற்றையெல்லாமொன்றொன்றாப் பெரிதுநோக்கி
மின்கதிர்க்குமணியொன்றைத் தன்பல்லாற்கறித்தயலில் வீசாநின்றான்
கொன்கவின்றவிராகவனல் லாலவணின்றார்முறுவல் கொண்டாரன்றே. (கரு)

நிலத்தளவிலாதகலை ஞானவுணர்ச்சியின்மிகவு நிறைவுற்றோராய்ப்
புலத்தளவாமதியமைந்தெதத் தனைவிதமாமேன்மைகளும் பொருந்தினுலுஞ்
சலத்தளவாயோங்கிவளர் கோகனகம்பெற்றவொரு தண்டேபோலக்
குலத்தளவேயாங்குணமென் றேதுமொழிமெய்யெனவுட் கொள்வாரானர். ()

மீண்டுமணிமாலையினை நோக்கினன்பூமியிலடைய வீசலோடுங்
காண்டுளரியாவருமுள்ளத் தடங்காதவிம்மிதராய்க் களிப்பானேக்கி
யீண்டுபுரிசெயலென்னோ வெனவினவுபொழுதநும னிதயத்தூடு
நீண்டுளபத்தியின்மகிமை யார்க்குமறிவுறுத்திடுவா னினைந்தான்மாதோ.(கஎ)

சிராமசந்திரனை யாரொருவர்தம்முளத்திற் சேர்த்திடாரோ
சிராமநாமவிலச் சினையெந்தப்பொருளிடத் திற் சேர்தலின்றோ
யாராகினுலுமெந்தப் பொருளேனுமென்னிதய மேற்காகிச்சொற்
றாராளவிடம்பமன்று சிராமனுணைபெருஞ் சாதமென்றான். (கஅ)

உலகனிலியாவருக்குந்தந் தேகமிசையபிமான முளதேயன்றோ
விலகிடுமத்தேகமிசை யினும்ராமவிலச்சினையீண் டிலதேலென்னல்
விலகிடவப்புறத்தெறியப் படுவதென்றிட்டவர்தேற விண்டாயுட்சீ
ரலகிறனுதுடல்கொளிரா சியத்தையவர்விழிகாண வருள்செய்கின்றான். (கக)

நவிலநுமனெவ்வொருறுப் பினும்ராமராமவென நண்ணுநாமங்
கவினுறமச்செயலினைக்கண் டியாவர்களுமிறும்பூதுட் கதித்தாராகி
யிவிதவொருகாதையுங்கேட் டிடற்குரியமலேமியாமென் றிதயத்துன்னிச்
சவிவிண்ணிலிவனனைய ரின்றெனின்மண்ணிடத்தெவனியாஞ் சாற்றலென்றார்.

தந்திரமேமிக்கதெனச் சாற்றிடுமெச்சமயத்தைச் சார்ந்தோரேனுஞ்
சந்திரஞ்செஞ்சுடரணைந்தாற் போலுருகமனமிறைவன் றாளைப்போற்றி
யிந்திரவியியக்கமறுந் தலத்திலநுமனையிணைய விருந்துசெப்பு
மந்திரமேமந்திரமாக் கொண்டவரேபத்தசிகா மணியாவாரே. (உக)

பத்தசிகாமணியாகி விளங்கிடுசீரநுமன்முனம் படைத்தகீர்த்தி
யத்தனையுமுரைக்கவெனி லறிவினுநாத்தொகைதனிலு மதிகனுன
வித்தகச்சேடனுமுளத்தில் வெருவுவனேற்புவியின்மிசை விளம்பென்போலு
மைத்தவிளமதிச்சிறுபுன் பாவலரோவிரித்துரைக்கும் வன்மையோரே. (௨௨)

வேறு

விண்பராவி ராமனேடு வீறுசுக்கி ரீவனு
நண்பராதல் கண்டதுந்த ணுனவார்கு மூற்பெருந்
திண்பராவு கற்பின்மிக்க சீதையைத்து ரீஇயதும்
வண்பயோத திப்புறத்தை வாவியேய டைந்ததும். (௨௩)

மிக்கசிதை தேராமன் விரல்கொளாழி யீந்துளத்
துக்கநீத்த தும்மசோகு தோய்வனந்தொ லைத்ததும்
புக்கவட்ச குமரனுவி பொன்றுமாபு ரிந்தது
மொக்கலங்கை தன்னைவன்னி யுண்ணவேசெய் திட்டதும். (௨௪)

மீண்டிசைந்திராமனேடு விண்டிலங்கை மேவுவான்
சேண்டிகழ்ந்த வாரிமீது செய்பசேது செய்ததும்
வேண்டிடுந்து ரோணமாவி லங்கல்கொண்டு மேயது
மேண்டிகழ்ந்த சீரிலக்கு மணனைரட்சை செய்ததும். (௨௫)

மன்னிராக வன்றயாம விந்தசிந்தை மீதிலே
துன்னிரக்க வாகுலந்து ரக்கவேயெி யற்றலு
மென்னிலக்க வாடலியாவு மெண்ணில்பன்மு னூல்களி
னிந்நிலத்து ளோர்கொள்வானெ டுத்தியம்பி யுள்ளவே. (௨௬)

வேறு

இனியநுமன் செய்துளதா மற்றொருமான் மியச்சீ
 ரெடுத்தியம்பு கின்றனனஃ தெண்ணிடுவார் தமக்கு
நனிபெறுமாச் சரியம்விளைத்திடலாயு மகந்தை
 நாசமுறப் புரியுநல நண்ணியது மாகுங்
கனிவுடைத்தச் செயலெதெனின் முன்னொருகா லத்திற்
 கனவளஞ்சான் மலர்ப்பொழிலார் கவின்றுவரைப் பதியிற்
புனிதமவி கிட்டிணன்றன் போகிதனைச் செயித்துப்
 பொலிபாரி சாதநறும் புட்பமண்மேற் கொணர்ந்தான். (௨௭)

எண்ணுறுமென் மங்கையரு ளிணையறுமின் பமைந்த
 வெழினிறைசத் தியபாமைக் கினிதளித்த போதில்
நண்ணுறுபன் மங்கையர்க ளியாவரினு மெத்த
 நாமேசிட் டிணற்கின்பார் நங்கையெென மனத்திற்

கண்ணுதலுற் றனளாகக் கவின்றிடுமக் காலங்
கருடனுல கத்திலெனைக் கடுத்திடுவே கத்தை
யொண்ணுரத்தை யுற்றவர்க ளொருவருமின் றென்றே
யுள்ளமிசை மதித்திருமாப் புற்றிருந்தா னன்றே. (உஅ)

சுதரிசனப் பெயர்பெறுசக் கரந்தானும் வாணு
சுரன்றனது கரங்களறத் தொலைத்ததுவே முதலா
மிதமறுமற் புதச்செயல்கள் விளைத்தநமைப் போல்வார்
விண்ணிடத்து மண்ணிடத்தும் வேறிடத்து மின்றென்
மதமிகக்கொண் டுற்றசெயல் யாவையுமே பத்த
வற்சலனு கியபகவன் மனத்தினிடை மதித்தே
பதமுறமூ வர்களுளத்துங் கொண்டகரு வத்தைப்
பங்கமுறச் செய்தருட்சிர் பதிக்கநினைத் தானே. (உகூ)

மிக்கவநு மன்கொள்பெரும் பத்தியின்வை பவத்தை
விளங்கிடக்காட் டிடவுடி விளம்புமொரு தினத்திற்
றக்கபுகழ் மருவியகிட் டிணபகவ னெழிலார்
சத்தியபா மாவருகிற் சார்ந்திருக்கும் போதிற்
புக்கமன வுற்சாகஞ் சற்றுமில னாகிப்
புண்கொடுநெஞ் சினிற்றுக்கம் பொங்கிவழி பவர்போற்
பொய்க்கபடங் காட்டினன்சேர் சத்தியபா மையுமுட்
பொருவருந்துன் புடனழுங்கிப் புகுந்ததொன்றென் னென்றாள். ()

சுவாமீநுந் திருவுளத்தி லேதோவோர் பெரிய
துக்கமணைந் துளதாகத் தோற்றுகின்ற தும்ம
துவாமதிநேர் முகஞ்சாம்பி யுற்றதித னுண்மை
யுமதடிமை தேறும்வண்ண முரைப்பீரின் றெனிலோ
தவாதுயிர்விட் டிடுவேனீர் துயர்படக்கண் டுள்ளஞ்
சகிக்காதோர் கணமென்மனஞ் சகிக்காது கண்டீர்
திவாகரனு யெனதுளப்பங் கயத்தைமலர்த் திடுமெந்
தேவர்துயர் கண்டெவனுஞ் சிந்தைபொறுத் திடுமே. (௩க)

என்றுபரி வுடன்புகன்ற சத்தியபா மையின்பா
லிணையில்கரு ணைக்கடலா மிறையவன்மீண் டிசைக்குங்
குன்றுபுரை யென்பனத்திற் சஞ்சலமிஞ் சிடவே
கொண்டிடக்கா ரணம்விளங்கக் கூறுவன்கேட் டுணர்வாய்
நன்றுநிறை தருமெனது பத்தனொரு வன்மே
னான்கொண்ட விரகமிவ ணலிவுறச்செய் ததுகா
ணென்றுமென துளத்தினுக்குப் பிரத்தியுநனேனு
மொளிகொளெனதுடலேனு முவப்பளிப்பதின்றே. (௩உ)

அளவாமெப் பத்திமைச்சீ ரமைந்தவுளத் தினனு
மவன்மேனுன் கொள்விழைவே மூர்கலியிற் பெரிதே
வளமாரன் னவனையெதிர் காண்பதெப்போ தெனவே
மனக்கவலை யுற்றதல்லான் மற்றதொன்றின் றென்றே
யிளகார்வப் பத்தர்தமக் கானபரா தீன
வியல்புறுமெய்ப் பகவனெடுத் திசைத்தமொழி கேட்டே
தளவோடு முருந்தனைய மூரல்பெறுஞ் சதியாஞ்
சத்தியபா மாவுளங்தோய் சலனமறச் சாற்றும். (௬௩)

என்னையிவண் டாமுரைத்த திருவார்த்தை யுளத்தி
லெண்ணுதொறு மென்றனக்கீண் டியல்வதிறும் பூதாத்
தன்னைநிகர் பத்தனமக் கொருவனுள்ளா னென்னிற்
றக்கவவ னிடம்போய்நாஞ் சார்ந்திடலா மின்றேன்
முன்னையுற வவனையிவண் வரச்செயலா மன்றே
முறையிதைவிட் டுளத்துயரின் மூழ்கிடலென் னேவென்
றன்னைபுகன் றன்னவனன் னுமமெவ னவன்று
னநுதினம்வா ழிடமேதோ வென்னவிறை யன்றியும். (௬௪)

உற்றவென தன்புநிறை சத்தியபா மைப்பே
ரொண்டொடியாங் கவனும முயரநும ணுகு
மற்றவனுற் றுறையிடந்தான் மஞ்சினினந் தணிய
வளர்ந்த மாதனமாமலைமுகட்டி லாகுஞ்
சற்றகலா தென்வடிவ நெஞ்சகத்தி லிருத்தித்
தவாதுதவம் புரிதருமெய்த் தன்மையினிற் றிறம்பான்
முற்றசர தன்சேயா யானிருந்த போதின்
மொழியுமவன் றுணைகொடிரா வணனையற முடித்தேன். (௬௫)

இலக்குமண னிராவணனே வியசத்தி யேறுண்
டிறந்திடயா னெண்ணியெண்ணி யேங்கிடுமக் காலந்
துலக்கமுற வவன்பிழைக்கச் செய்திரகு வமிசந்
தோமறப்பூ மியிற்பொலிவான் சுகஞ்செய்திட்டா னதன்பின்
கலக்குறுசீ தையைக்கூட்டி யிலக்குமண னுடனே
கடிகொளயோத் தியிற்சேரக் கண்டதுமன் னவன்கா
ணிலக்குறுமன் னவற்கொருநன் னிட்டைபுண்டே தென்னி
லிராமனெடு சீதையல்லா லியாவரையு மெண்ணன். (௬௬)

இராமனருட் பணியலதெங் கேனுமகல் கில்லா
னியான்காண வுள்ளமிசை யிச்சையமைந் தாலும்
விராவுமிரா கவனுருக்கொண் டாலலது காணும்
விதியமையா தெவணமவன் மேவிடுத லன்னே

னூராவுமன்போ டெவ்வணமீண் டுற்றிடுத லென்ன
வுன்னியுன்னிக் காண்டுயர வுததியிடைப் படிந்தே
னிராகவன்பே ருருத்தரிக்கும் வன்மையெனக் குண்டா
லெழிற்சீதை வடிவெடுப்பா ரியாவர்களென் றுன்னு. (௩எ)

இரங்கினனியா னின்னுனு முருக்குமணி யானு
மேய்ந்திடுமற் றவரானு மெடுப்பதரி தென்னுந்
திரங்கிளர்சிந் தையனுகி யிருக்கின்றே னென்னச்
செப்பலுஞ்சத் தியபாமை சேர்ந்திடுமோ கையினே
டரங்கிதயத் துயரொழிவீர் சானகியி னுருவ
மமைகின்றே னியானநுமன் றனையழைப்பீ ரென்னக்
*குரங்கிநிகர் †வத்திரச்சத் தியபாமை கூறிக்
கோதிலருட் சிதையுருக் கொண்டிடச்சென் றனளால். (௩அ)

வேறு

தனதானன தந்தன தந்தன.

உடனேகரு டன்றனேமுன்பினி லுறுமாறுபு ரிந்திடவங்கவன்
மடலார்கம லம்புரையும்பத மனமீதுநி னேந்துவணங்கல்செய்
தடனீள்பணி யிங்கெவனென்றனு மருள்வாரியி னேந்திடுகண்களொ
டுடலேப்பக வன்கருவங்கெட வுரமோடிவ ணஞ்சொலுநன்கரோ. (௩௯)

தந்ததானன தனனதத்தன.

கந்தமாதன பருவதத்தெனது கந்தவாரிச மனையநற்கழல்க
ளெந்தவேளேயு மனதினத்தியரு ளின்பவாரிதி யிடைமுழுக்கமையு
மந்தமேவிய வநுமநற்பெயர மைந்தமேலவ னமர்தலுற்றனன்மு
னிந்தவேளைக டிதினிலெட்டினேயி வண்டுவாரகை நகரிடத்தினிலே. (௪0)

தனதன தானதான.

சனகிசமேதனுன தசரதராமசாமி
மனமகிழ்வோடுமேவி மருவுனேநேருமாறு
கனமிகுமார்வமோடு கடவினனுலிவேளே
யுனதிடமேவெனேடு முறுமதிவேகமாயே. (௪௧)

தனதனத் தனதனதத்தன.

எனவுரைத் தவனிலுமுற்பட விவிடமெட் டுபுவருநற்செயன்
முனமெனக் கறியவுரைத்திபின் மொழியின்மற் றவனேவிடுக்குதி
பனன்மனத் திடைபதிவித்தனே படரெனச் சொலியகலுற்றபின்
இனனிணேச் சுதரிசனப்படை யெதிர்வரக் கருதலுமுற்றதே. (௪௨)

---

* குரங்கி - சந்திரன் † வத்திரம் - முகம்.

தானன தானத்தானன.

நீதலைவாயிற்காவலை நேருதியாலிப்போதிவ
ணாதரவாரிக்கேயிணை யாமநுமான்முற்காணுவன்
மேதகெனோடுற்றோதியுண் மேவிடவேசொற்றாறுட
னேதமிலாமற்காணுற வேசெயநீமுற்சார்வையே. (௪௩)

தந்ததன தானதய்ய.

என்றிவணமோதுமெல்லை யின்பமொடவாறுசெய்வ
னன்றெனுரையோடுமெல்லை நங்குபடைபோயதொல்லை
சென்றுவணமானபுள்ளொர் சிந்தனைசெய்கோடுவவ்வி
மன்றவநுமானைவெஃகி வந்தனைசெய்தேதுவிள்ள. (௪௪)

தத்தனதாத்த தானதன.

அற்கியபாக்கியாமிருத வச்சொலையேற்றுளோகையுட
னற்கியபாத்தியாதியுட னர்ச்சனைதோத்திராதிகள்செய்
தெற்கிவனேற்றமானநல விச்செயல்சாற்றுசீலமிகு
நிற்கிவணுற்றலாவதிலை நிச்சயவார்த்தையாகுமிதே. (௪௫)

தனதனதானன தனதனதானன தனதன தானதனா.

எனமுழுமாமதி யுதயநிலாவலு மெழுதிரைவார்கடல்போ
லனகவிசாலித பணிநிறைபூசைசெ யநுமனதாதரமே
மனதிடைநாடின னளவறுமோகையுண் மருவினனீள்வலிசால்
பனகவிரோதிபி னெழில்கொடுவாரகை படர்தரலாயினரே. (௪௬)

தனதத்தத் தனனதனத் தனதானா.

கரணக்கட்டறவுதறிச் சனகிக்கிற்புதவுதிருக்
கமலக்கட்கணவனருட் கடலேநேர்
சரணத்தைச் சரணமெனக் கருதற்புப்பொலியநுமச்
சயனொற்றைக்கணமதன்முற் படவேவா
யரணப்பொற்புறுதுவரைப் பதியெட்டப்பொழுதின்முகப்
பமையப்பெற்றுளவடவைக் கணலேநேர்
கிரணப்பத்திகொளுருவுற் றவிர்பொற்புச்சுதரிசனற்
கெழுமுற்றித்தகைவினவுற் றிடுவானால். (௪௭)

தனனதனத் தானதனத் தனதானா.

எனதிதயக்கோயிலைவிட் டொருகணமப்பாலகலற்
கிசைவறுநற்கோகனகப் பதமேசே
ரிரகுபதிச் சாமியிருப் பெவிடமதைத்தேறவெனக்
கிசைமதிபிப்போதெனவப் புகல்கேளா

வனகனெழிற்ருசாதித் திருவுருவுற்ருன்முனுறுப்
பமைவனெனப்பேசியசத் தியபாமா
வழகியமெய்ச்சீதையருட் படிவமெடுப்பான்முயல்வுற்
றாண்மணமுற்ருேடியிளைத் தனளாஞ
னினசெயலைத்தேறியுருக் குமணியையக்கோலமொடுற்
றிலகிடநற்சாமியுளத் திடைநாடா
வெனதருகிற்சேர்வையெனப் புகலலுமப்பான்மையையுற்
றினிதமரப்போதுமுகப் பினிலேதோ
யினதிகிரிக்கோவநுமற் கிவணமிருப்பாய்நின்வரத்
திறைவனிடத்தோதுபுனைக் கொடுபோவே
னெனநுவலப்போதுசெயத் தகைகொள்படைச்சேதியொர்சற்
றெனுமிதயத்தேகொளலற் றநுமானே. (சஅ)

தந்ததனத்தானதனத் தனதாஞ.

கங்குலறச்சாடுமெழிற் செங்கதிரொப்பார்படையுட்
கன்றவிறற்சீர்கொள்கரத் திடைதாயோர்
கங்கணமொப்பாகவெழிற் செங்கையிடைச்சூடியகக்
கண்குலவித்தேடிடுமக் கணைநீரார்
துங்கமுகிற்சாமளமெய்ப் பண்பும்வளத்தாமரையிற்
றுன்றும்விழிச்சீருமொளிக் கரமீதார்
சுந்தரவிற்பாணமும்விற் றங்கவுடைச்சீலமுமெய்ச்
சொம்புமருட்டோய்முறுவற் சுவையோடே
தங்குமெழிற்சீதரனைப் பொங்கருணற்சீதைதனைத்
தன்கணின்முற்காணின்முகிற் றிரள்போலே
தண்டறவப்பாவரச் சிந்தனையற்றேயொழியத்
தம்பமெனப்பூமிசையுற் றகலாதே
பொங்குசுகச்சாகரமுட் டங்கிநெடித்தாயபினர்ப்
புந்திபடைத்தேபுவிவிட் டெழுபோதே
புண்டரிகத்தாண்மலர்கட் கென்பணியிப்போதுசெயப்
புஞ்சநகைத்தேமொழிசெப் பிடுவாயே. (சகூ)

வேறு.

என்றுரைத்தடங்காப் பெருமகிழ்வினஞ யிருகையுஞ்சிரமிசைகூப்பி
நின்றுளவநுமன் பரிதிநேர்கஞ்ச நேரெழிலானனநோக்கிக்
குன்றுருக்கருணை பொங்குபுவழியுங் குறுநகைகாட்டுபுபகவ
னன்றுறுபத்தி யநுமமெய்ச்சுகநீ நண்ணிவாழ்ந்துளகொலென்றுசாவி. (ருo)
தாதவிழ்செங்கேழ்ப் பங்கயமலரிற் றழைத்ததன்றிருக்கரமொன்ரு
லோதநுமான்கை பற்றுபுதன்னே டொன்றுறவருகினிலிருத்தி
மாதயவுடனே முதுகினைப்பலகான் மற்றெருகரங்கொடுதடவப்
போதவின்பளிக்கு மன்புமேன்மேலும் பொங்கவீற்றிருந்தனன்மாதோ. (ருக)

மெத்தியல்வேத கோடிகட்கறியா விமலமெய்ப்பகவனேயநும
னத்தியவடிவம் பெற்றனேனென்வருகை நாடுபுவந்தவன்றெழுநு
மொத்தியன்றிடத்தன் னருகினிலிருத்தி யுவப்புடன்றழுவிநலத்தைப்
பத்தியல்லாதொன் றளிப்பதீண்டுளதோ வுளதெனிற்பகர்மினேபாரீர். (௫௨)

அன்னபோதனையாஞ் சனகியின்கோல மமையுருக்குமணியுள்ளன்பாற்
பன்னருஞ்சுவைத்தாய்ப் பிறர்க்கமைவரிதாம் பட்சணம்பரிந்தளித்திடலு
மன்னருளநும னன்னதையன்பான் மகிழ்வுடனருந்தின னிருந்தான்
முன்னமையத்தி லாஞ்சனேயன்பான் முதல்வனிவ்வணமொழிவானல். (௫௩)

ஆர்த்துலாந்தரங்க நிரைமலிதருமே மூர்கலிமிகச்சிறிதென்னச்
சீர்த்துறுபத்தித் திறங்கொண்மாருதிநின் சிறந்தபேருருவினைக்கண்ணுற்
பார்த்துவற்சரங்கள் பலகழிந்தனவாற் பரிவுடனழைத்ததையன்றிப்
பேர்த்துமற்றேது வொன்றிலையென்னப் பேசுபுவிடையளித்தனனே. (௫௪)

வங்கணத்தகைசான் மாருதிகந்த மாதனநோக்கினன்செலுங்காற்
கங்கணமெனத்தன் கரத்திடைகிடந்த கதிர்ச்சுதரிசனமாப்படையை
யங்கணற்காவ லாயிருந்திடவைத் தகன்றனனச்சமயத்தி
னங்கணக்கருடன் வந்திறைபவனை நாணிவந்தனைசெயாநின்றான். (௫௫)

தன்னடிவணங்கி முன்னுறநிற்குந் தார்க்கியன்கவிழ்முகநோக்கி
யென்னகாணநுமன் றிறம்புகலென்ன விறைநகைத்துசாவுதலோடு
மன்னசொல்கருடன் றனக்குமூக்கறையற் காடிகாட்டிடுசெயல்போன்ற
தின்னவோர்செயனம் மகந்தைதீர்த்தாள்வா னிறைசெயலென்றுணர்ந்து வந்தான்.

பிரிவிலாவிடைகொண் டகன்றமாருதிதான் பேரியற்கந்தமாதனவான்
கிரிமிசையமர்ந்திட் டனவரதமுந்தன் கிளர்மலர்ப்பதமுளத்தெண்ணு
முரிமைசால்பத்தர் தங்குறையாவு மோவறமுடித்துலகேத்தப்
பெரியதோர்தெய்வ மாமெனவிருந்தா னெனிலவன்பேறுரைப்பதுவே. (௫௭)

வயம்பொலிபுருடா மிருகநேர்படுவான் வந்ததன்றம்பிவீமனுக்குச்
செயம்பொலியுரோமந் தந்தவைமுழுதுஞ் செப்பருஞ்சீர்ச்சிவலிங்க
மயம்பொலிதரக்கண் டிடுமநுமான்றன் வளர்பெரும்புகழ்வகுப்பனவோ
கயம்பொலிசமய வாதரையிஃதோர் கனலெனச்சுட்டிடுமன்றே. (௫௮)

கண்ணுறவொருகாற் கண்டபேர்தமக்குங் கருதருசிற்சுகப்பொலிவார்
விண்ணுறவளிக்கும் பகவனைக்கணமும் விலகிடாமேன்மைமிக்கமைந்து
பண்ணுறுமவன்றன் மேனியையென்றும் பரிசனந்தெரிசனம்புரியு
மொண்ணுதற்கயற்கட் சத்தியபாமை யுயர்ச்சியாமுரைத்திடற்பாற்றே. (௫௯)

அத்தகுநலந்தோய் சத்தியபாமை யணங்கையுமகத்தவாவியவா
வித்தகச்சீதை வடிவெடுத்திடுவான் விடுத்திடாத்திறல்பெறுமகந்தை
பித்தரொத்துழலு மபக்குவர்தம்மைப் பெறுததும்பெற்றதாக்காட்டி
யொத்தசிற்றறிவும் போக்கியாழ்நிரயத் துய்த்திடற்கையமொன்றுளதோ. (௬௦)

நிறைவலியுடைய மியாமெனநினைந்த நீர்மையாலம்பரத்துலஞ்
சிறைவலியடைந்துங் கருடனல்லதுமன் றிறல்கொளப்பெற்றிலனிதனுன்
மறைவலிவலியல் லதுவிணையுடல மலிவலிவலியதன்றெனப்பன்
மறைவலிந்துரைக்கு மொழியினுக்கிஃதோர் மாணிலக்கியமதாமாதோ (௬௧)

கிரணமிக்கவிரு மாழியம்படையுட் கெருமிதமுற்றெழிந்ததுவா
யாணமுற்றியன்மெய்ப் பத்தியின்வலிமை யமைந்துளதேனமைச்சிறிய
திரணமுமெளிதிற் செயம்பெறுமிந்தத் திறத்தினுற்கிஞ்சியற்சீவ
காரணமெய்த்திறலை யெண்ணுநர்கயவ ரெனவுளங்கருதியதன்றே. (௬௨)

மாணவப்பொலிவார் சனகனந்தனிதன் வடிவெடுக்கின்றனனியானென்
றுணவப்பொலிவாற் கிளத்துபாமைதனக் கமைவுருமைபுமுருக்குமணி
யேணவப்பொலிவார் வடிவுகொண்டிறைபா லெய்தியல்பிணையுமெண்ணுபுதன்
கிணவப்பொலிவை முற்றறுத்தரிதன் கிருபையேகருதிவாழ்ந்தனளால். (௬௩)

அனுமனன்னும மோர்பொழுதுரைப்பா ரகத்துறுகுறையெலாமகற்றி
மனுநெறிதிறம்பாப் பரிதிவங்கிசஞ்சான் மன்னவர்மணியெனவயங்குந்
தனுவிலங்கியகை யிராகவனின்பந் தருமெனிலிராகவன்றனக்கீண்
டனுமன்பேரினிற்கொலனுமன்பேரினிற்கொலுற்ற துள்ளுவகையோதுமினே.

வேறு

கண்ணன்விரும்பி யிராமனுருக் காட்சியளிக்கும் படியவன்றன்
கருணைக்கிலக்காய் விளங்கியகங் கவினுமனத்துக் கருடனெல்க
நண்ணந்தரவீ தியில்விரைவாய் நடந்துசுதரி சனப்படையை
நலஞ்சேர்காபூ டணமாக்கி நாடுமுருக்கு மணிசீதை
வண்ணம்பொலிகோ லஞ்சமைந்து வழங்குமுணவு புசித்துவக்கு
மகிமையநுமப் பெயர்ப்பெரியோன் வாழ்வெற்கமையப் பணிப்பாயோ
வெண்ணம்பொலிமெய்க் கவுமா ரினஞ்சேர்சிரவ ணப்பதியா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௬௫)

அநுமார்கதி முற்றிற்று.

ஆ கவி ௨௬௫.

---

மூன்றுவது

# விபீடணகதி

சீருருத்திரன்ற னங்கிசங்கறங்குந் தெண்டிரைக்கருங்கடலுடுத்த
பாருருக்கொண்ட மானிடரெவர்க்கும் பத்தியின்றிறங்கொளப்பயிற்றப்
பேருருவநும ஞவிளையாடும் பெற்றியிம்மட்டினிற்பேசிக்
காருருவமைந்த விபீடணன்பத்தி கண்டிடுகாதைசொல்வேனே. (க)

வேறு

இலங்கையிறை யிராவணனுக் கிளையானு மிராகவன்றாட்
டலங்கையகல் பத்திகொடு தாழ்ந்திறைஞ்சித் தண்ணருட்சீர்
நலங்கைவரப் பெறுமாசை நண்ணித்தன் முன்னோனை
விலங்கைய மறுஞ்சிந்தை விளக்கமுளான் விபீடணனே. (உ)

அராக்கதம்பின் னிடுஞ்சீற்ற மமைந்தவிரா வணன்பின்னு
யிராக்கதவெங் குலத்திலுரு வெடுத்துமிக லைம்புலஞ்சால்
பராக்கதஞ்செய் தியானைபுளப் பயமகலப் பற்றியவோர்
கராக்கதந்தீர்த் தருள்பகவன் கழல்கருத்தி லமைத்தோனே. (ங)

தன்குலத்தின் றருமமொடு சார்பந்து வருக்கமெனும்
வன்குலவு பகையெல்லாம் வகைபடவே சுட்டொழித்துப்
பொன்குலவு மிராகவன்றன் புண்டரிகத் தாட்டுணையே
நன்குலவு துணையென்ன நம்பிமகிழ் வடைவானே. (ச)

கொடுஞ்செய்கை புரிதருவெங் குணத்தினையோர் காலையினும்
விடுஞ்செய்கை புரியாராம் விறல்ராவ ணாதியரைப்
படுஞ்செய்கை புரிந்தநலம் பார்த்தவருக் கன்னதுவே
யடுஞ்செய்கை யாவதென வழுங்கிலதின் படைந்தானே. (ரு)

செவ்வியமேற் குலத்தோராய்ச் செகத்தினிடை யுதித்துமிரு
ளவ்வியபுன் குலத்தர்செய லமைபவர்போ லறமகன்ற
வெவ்வியபாழ்ங் குலத்துதித்து மேதகைசா ஞெண்டர்களிற்
றிவ்வியனும் வீடணன்றன் செயலளக்குந் திறத்தினவோ. (சு)

தலங்காணு மிராக்கதர்க டம்பங்குக் குறலான
நலங்காணுங் குணங்களெலா நனிதிரண்ட வுருவுடையா
னிலங்காதி பத்தியத்தை யேய்ந்தவனுச் சிரஞ்சீவி
துலங்காவான் மாக்களெலாஞ் சுகமுறநன் றூற்றினனே. (எ)

வான்மீதுள் ளார்சொலவன் வண்புகழ்ச்சீ ரத்தனையு
மூன்மீதாம் பற்றனைத்து மொருங்குதறி யிராகவன்றன்
கான்மீதி லமைத்தொருமுக் காலமுமோர் காட்சிபெறும்
வான்மீகி மெத்தவிரா மாயணத்தில் வழுத்தினனே. (அ)

நன்றொருவா வவனுளத்தி னண்ணுபெரும் பத்திமையுஞ்
சென்றொருவா வணஞ்சீர்த்தி சேரருட்சித் தியின்பெருக்கு
மின்றொருவா றுலகினிடை யிலங்கிடவன் னவனாற்று
மொன்றொருநல் லாடலினை யுலகுணர வுரைப்பேனே. (க)

வேறு

செப்பின்னது நிற்கமுற்காலத்தொர் தேயமுள்ளா
னெப்பல்லவி வற்களகைப்பெய ரூரனென்னத்
துப்பண் ணுறு செல்வமும்மீகையுந் தோயவாழ்வோன்
கப்பன்னிறை பொன்கொடுசெட்டுக் கருதிச்சென்றான். (கഠ)

பொங்குங்கடன் மேற்சிறி தேபெறப் போந்துகப்பன்
முங்குஞ்செய லுற்றதுகண்டு முதல்வனுவோ
னிங்குந்திய வாம்பலுயிர்த்தொகை யாவுமொன்று
மங்கும்படி யுற்றதுநாடி மருட்சிகொண்டான். (கக)

அளவாதவி தங்கண்முயன்றுமங் கானவெல்லாம்
பளகினர்தங் கைப்பொருள்போன்றிடு பண்புகண்டு
தளர்வோடுறு நாய்கன்மற்றுற்றவர் தம்மைநோக்கி
யுளவோதுமி னுேவிதற்கொன்றென் றுசாவுமெல்லே. (கஉ)

உருகுற்றிடு நாய்கன்முகங்கண் டுளந்தளர்ந்தே
யருகுற்றிடு வோருளொருத்த னறைகுவானல்.
பெருகுற்றிடு மிக்கடற்கோர்நரற் பேணியீந்தா
லருகுற்றிடு வான்வருமாபத் தகலுமென்றான். (கங)

அவனச்சொல றைந்திடக்கேட்டலு மந்தநாய்க
னெவரைப்பலி யீந்திடநாடிடு வேனென்றுன்னிக்
கவலைக்கடன் மூழ்கிப்பல்வாறு கருதிப்பின்னர்
திவலைக்கடன் மூழ்குவன்யானெனச் சிந்தைகொண்டான். (கச)

எனக்குந்திய நற்றுணையாமென வெய்துமுங்க
ளினக்குந்துய ராகுமெல்லீருமின் பெய்தயானே
கனக்குங்கட விற்பலியாதல் கருதினேனென்
றனக்கும்புக ளென்புதல்வற்குத் தருதிரென்றான். (கரு)

இட்டங்கொடவ் வாறுரைத்தோன்றனக் கிட்டனுய
குட்டங்கொள்வ யோதிகச்சேவகன் கூறுவான்யாங்
கட்டங்கொள நீமடிவெய்திலென் காவலாவி
நட்டங்கொள வீடுவனென்ன நவின்றுமாற்றி. (கசு)

மூப்புற்றிழி குட்டமுமிஞ்ச முயங்கினேன்மெய்
காப்புற்றிருந் தென்பயனியானினிக் காண்பதஃதாற்
கோப்புற்றிய னீங்களெல்லாஞ்சுகங் கொள்ளும்வண்ண
நீப்புற்றிடு வேனுயிரிங்கென நேர்ந்திட்டானே. (கஎ)

சாமாறுது ணிந்துகடற்கிடை சாடுமன்னோன்
கோமானென தின்னுயிரைப்பலி கோடிகப்பல்
சேமாதர மெய்திடநீடருள் செய்தியென்றே
ராமாநம வென்றகத்தன்பி னவின்றிட்டானே. (கஅ)

அன்போடிவ னின்னணமோதலு மந்தமில்லாப்
பொன்போடிருங் கப்பலெழுந்தது போய்த்துபல்லோர்
துன்போடிட வேயுளநாடினன் றெல்லுயிர்தா
னென்போடியை வாங்தொடர்பெய்து மியற்கையுற்றான். (ககூ)

மலங்குங்கடல் வீழ்ந்தவனைத்திரை மாலைகொண்டே
யிலங்கைப்பதி சேரவிடுத்தது மெய்தன்னேனைப்
பலங்குன்றலி லாதவரக்கர்கள் பார்த்துமிக்க
நலங்கொண்டவெர் பட்சியம்வாய்த்தது நன்றென்றார்த்தார். (உ0)

எங்கட்கொரு பட்சியமீங்குற வெய்திற்றென்றே
தங்கட்கிறை யாயவிர்வீடணன் றன்முற்சாற்ற
வெங்கட்கொடி யார்தமைநோக்கி விடுத்திரென்றே
யங்கட்பொரு ளாதியன்னோர்கட் களித்திட்டானே. (உக)

அன்னேன்மிசை யேபெருங்காத லகத்துட்பொங்கப்
பொன்னேங்குசிங் காதனத்தேற்றுபு பூசையாற்றி
மன்னேங்குமி ராமனைப்பாரன் மனிதனென்றே
கொன்னேங்குமெய்ப் பத்திமிக்கின்பிற் குளித்திட்டானே. (உஉ)

ஈண்டேசுக மேவினையென்று மிருத்தியையா
மாண்டோய்ந்திடு மானிடனீமுன் மருவலாலே
சேண்டோய்விலி ராமனன்பென்னுட் செழிப்பதால்யா
னுண்டேவரு நாடுமளிப்ப லகலலென்றான். (உங)

சித்தத்துவந் திவ்வணம்வீடணன் செப்புகாலை
யொத்தப்பதி யுற்றவர்தங்களை யுன்னியுன்னிச்
சத்தப்பொலி வாரிடியோசைகொள் சர்ப்பமென்ன
மெத்தப்பய முற்றனனிவ்வணம் விள்ளுவானல். (உச)

ஒப்பற்றுயர் வீடணநாம முடையகோவே
செப்பற்கரி தாமுனிராச்சியச் சீலம்வேண்டே
னெப்பற்றுமு ளத்திடையெய்தில னென்னையின்னே
கப்பற்புகு வான்விடினெஞ்சங் களிப்பனென்றான். (உரு)

அதுகேட்டுவி பீடணனெண்ணி லரதனங்கள்
புதுமைச்செழும் பட்டுடைகொண்டு பொதிந்துமிக்க
மதுரப்பொலி வார்திருராமநா மம்வரைந்து
கதுவுற்றிட வேயரைநெற்றியிற் கட்டினானே. (உசு)

கடலுக்கரு கேகினனன்பிற் கழறுவானியா
னிடலுற்றதி ராமநன்னமவி லச்சினைகா
ணடலுற்றிடு நீயெவணேக வவாவினாலும்
விடலுற்றிடு மாங்கெனவிண்டு விடுத்திட்டானே. (உஎ)

வேறு

குணம்பொருந்திய விபீடணன்கரத்திடை குட்டன்
சணம்பொருந்திய பான்மையாலன்னவன் சடலங்
கணம்பொருந்திய ரோகங்கள்பற்றறக் கழிந்து
மணப்பொருந்திய திப்பியமடைந்தது மன்னே. (உஅ)

கடநிலாவிய கல்வினைப்பெண்ணுருக் கண்ட
மடனிலாவிய வாரிசமலரடிக் கன்ப
னிடனிலாவிய கைக்கிளைக்கணப்பய னிதுவே
லுடனிலாவுசீர்ப் பத்தர்மாண்பெவர்களே யுரைப்பார். (உகூ)

ஓர்கணத்தினி லோடுகப்பற்கரு குற்று
வூர்தல்கொண்டவ ரியாவரும்பார்த்துள முவந்தே
யார்கொன்மானிட னொருவன்வாரிநிடு விங்ஙன்
பேர்தலுற்றுளா னெனமனத்த யிர்த்தனர்பெரிதும். (௩0)

உடனணைந்தனன் கண்டுநீயாரென வுசாவ
மடனணைந்திடு பித்துமைமருவின தோநும்
மிடனணைந்திருங் கடற்பலியாமெனை யாரென்
றிடல்வினேதமா நன்றெனநகைத்துரைத் திட்டான். (௩க)

பேசுமாற்றமீங் கிதுகொடுபெரிதவ ரிசைப்பா
ராசுலாங்கொடுங் குட்டரோகத்தின னவனீ
தேசுலாவிய திப்பியப்படிவினை சிந்தை
கூசுறுதிவண் பேசலென்யாமருள் கொள்ள. (௩உ)

கோதுசேர்நிர யத்தையேகாணியாக் கொடுக்குந்
தீதுசேரபத் தத்தினையாமெலாந் திகைப்ப
வேதுவேதுமில் லாமலேசாற்றுநிற் கிதனாற்
போதுமோர்பய னியாவதேதோர்கிலம் புந்தி. (௩௩)

இருமைத்தன்மையுங் கெடுத்திடும்பொய்மையை யிங்ஙன்
பெருமைதாங்கொளப் பேசுவர்சிலவரப் பீடா
ரருமைகொள்ளநீ யறைந்தனையேகொலஃ தன்று
லொருமைகொண்டநின் பொய்க்கெதுபய னுரை யென்றார். (௩ச)

செப்பலாவது சாதமியான்சாட்சியென் சிந்தை
யொப்பவோதுவ னென்கதையாவரு முணர்வீ
ருப்பமைந்தவா ரிதிபுகுமென்னையுள் ளுவப்பத்
தெப்பமொத்தெழி லிலங்கைசேர்த்ததுநெடுந் திரையே. (௩௫)

இலங்கைசேர்தலு மவ்விடைமேவிய விகல்சார்
விலங்கைநேர்குணத் தரக்கரெற்காண்டலும் வியந்து
நலங்கைவந்ததோ ருணவெனவிறைமுன்போய் நவிலப்
புலங்கைவீடண னெனைக்கொலாவணமவர்ப் போக்கி. (௩௬)

விரவுமானிட னுமெனைக்காண்டலும் வியந்தே
யிரகுநந்தனன் போலுளத்தெண்ணின னென்றுற்
பரவுமன்னவன் செய்புபசாரஞ்சொல் படித்தோ
தரமிலாதவன் சேடனுமவனலஞ் சாற்ற. (௩எ)

அவன்றிருக்கரப் பரிசமென்னுடலமை தலுமே
கவன்றிடச்செயுங் குட்டநோய்வேறறக் கழிந்த
துவந்தன்னேன்புகல் வார்த்தைகட்கேட்டலு முளத்தி
னிவந்ததாலிரா கவன்பத்தியாஞ்சுக நிலையே. (௩அ)

கடலையொப்பென யான்பலபிறப்பினுங் கண்ட
விடலரும்பெரும் பவமெலாமன்னவன் விழியிற்
படர்தலுற்றபே ரருட்டிருநோக்கெனப் பகரும்
வடவைசுட்டதா லம்மவன்னவன்புகழ் வரம்போ. (௩௯)

விராவுஞானமுற் றுள்ளவர்தம்முளம் விரும்பு
மிராமநாமத்தின் மகிமைசற்றன்றெனு மியல்பை
யுராவுவீடண னருளினுலின்றுசற் றுணர்ந்தேன்
பராவுமென்னுயிர் நேயர்காளிதன்றிறம் பாரீர். (௪0)

கனைத்தவெண்டிரைக் கடன்மிசையுற்றயான் கருத்தி
னினைத்த தெவ்விட மவ்விடத்தெனைநிறுத் திடுமேல்
வினைத்தரங்கநீள் பவப்பெருங்கடலினை விடுத்திட்
டனைத்துமாயவன் கழற்கரை சேர்க்கவே தையம். (௪௧)

ஓடுகின்றவிக் கப்பலுட்டாழ்தலு மொல்லை
கேடுவந்தது நமக்கெனக்கொண்டயான் கிளர்ச்சி
மூடுறும்படி யின்னலம்பெற்றனன் முன்னோர்
கேடுகண்டிரங் கினவர்கடாங்கெடு வாரோ. (௪௨)

என்றுகூறியுள் ளடங்கிடாவுவகைமிக் கேய்ந்திட்
டொன்றுமோர்கில துலகில்வீணேயுழல் வேனை
நன்றுநீடிய விராகவனனிவலிந் தழைத்துத்
துன்றுமின்பெனக் கீந்தவாறென்னெனத் துதித்தான். (௪௩)

அளவிலாதவா ருயிர்களின்பெய்திட வவாவிக்
களவிலாதுதன் னுயிரினைக்கொடுக்குமுட் கனிவோன்
விளவிலாநலம் பெற்றிடல்பிறப்புவே றின்றிப்
பிளவிலப்பவத் தேயெனலாகுமெய் பேணீர். (௪௪)

இவணமன்னவ னளக்கொணுவிதம்பட வியம்ப
விவரமுற்றுறக் கேட்டபேர்களுமுளம் வியந்தே
யவரைக்கண்டவ ரவரைக்கண்டவர்களு மமரர்
தவமெச்சும்புகழ் தோய்வரென்றிடுநிலை சார்ந்தார். (௪௫)

அல்லன்மெய்யரு ளாள்பவர்க்கில்லை யேயாகு
மல்லன்ஞாலமே கரியெனவழுத்தருமறையின்
சொல்லன்போடியா வருநிசமேயெனச் சூழ்ந்து
வல்லவாமுயன் றிடற்கிஃதோர்சாட்சியா மதிக்கின். (௪௬)

கண்டபேர்கடங் கண்ணினையக்கணங் கழுவிக்
கொண்டகோதொழித் திடமுயல்பவவுருக்குட்ட
னண்டரும்புகழ் தொண்டர்மாட்சிமைபுற வளித்த
வொண்டரும்புகழ் விபீடணன்மாண்புரைப் பதுவோ. (சஎ)

மன்னுயிர்கொள்வான் மீகிபார்தேர்வுற வகுத்த
பின்னுமெத்தனை யியற்றியுள்ளான்கொலோ பேச
வின்னுமெத்தனை யோசிரஞ்சீவியா யின்றுந்
துன்னும்வீடண னுற்றருளாடலின் றொகையே. (சஅ)

பொழிவிலேந்துகை யிராகவன்பொன்முடி சூட்ட
வழிவிலாச்சிரஞ் சீவியாயிலங்கையாண் டமருங்
கழிவில்சீர்விபீ டணைப்பெயர்ப்பத்தியங் கடலோ
னொழிவில்வான்கதி பெறுவதற்கையமொன் றுளதோ. (சகூ)

வேறு

சீதாபதியா மிராகவன்றன் றிருத்தாமரைத்தாட் டுணையிறைஞ்சித்
தீயகுணரா வணனுறவு சிறிதுமுதவா தெனவகற்றி
மாதாவனைய கருணைமிக மருவித்தொழுநோ யினன்கடலின்
மரணமுறவெண் ணுபுவிழ்கான் மகத்தாமிராமப் பெயர்சொலலாற்
றிதாராம லலையிலங்கை சேர்க்கவவணை யுபசரித்துச்
செங்கையிணையாற் றொட்டன்னோன் செயிர்நோயகலத் தீர்த்தனுப்பி
யேதாலுந்தன் புகழழியா வெழில்வீடணன்போ லெனைப்புரப்பா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருo)

விபீடணகதி முற்றிற்று.

ஆ கவி ௩சஉ.

---

நான்காவது

## சபரிகதி

நீடருந் தவவான்மீகி நிகழ்த்தருட் பெருக்கஞ்சான்ற
வீடணன் சரிதமென்யான் விளம்பினன் விற்கைவாய்ந்த
வேடர்தந் தவப்பேறென்ன மேதினி மீதிற்றோன்றும்
பீடமை சபரிபத்திப் பெருக்கினிற் சிலசொல்வேனே. (க)

வேறு

அண்டகாரணி யணிந்தய னம்பிகா பதியென்
றெண்டகாரணி யருந்தவர்க்கொண்டுல கெல்லா
முண்டகாரணி யச்சுதனிணையெனவோங்கித்
தண்டகாரணி யப்பெயர்த்தவவனந் தயங்கும். (உ)

மாலவாமனம் பெற்றியல்வாம்பில்சீர்ப் பத்தர்
சாலவாழ்ந்திடுந் தூலவோருடலெனத் தழைக்கு
நூலவாமனப் புலவர்களேத்துமந் நோன்கா
மேலவாம்வளம் விளங்கிடும்விண்ணவர் வியப்ப. (௩)

பரங்கவின்றவத் தண்டகவனங்கொடா பதர்க்குக்
குரங்கினங்கனி யுதவியன்னவர்பணி குயிற்றி
வரங்கவின்றவன் னவர்களுக்கெய்தலின் வான்றே
யுரங்கவின்றமா யோகசாதனம்புரிந் துறங்கும். (௪)

கொள்ளைமாதவர் கூடுபுதினந்தொறுங் கூறிற்
சள்ளைதீர்த்தரு ளிராமநாமம்பெறுஞ் சால்பை
வள்ளையங்கொடி சுலவுதாருவின்மிசை வதியுங்
கிள்ளைபூவைகேட் டுவந்திடக்குருவெனக் கிளத்தும். (௫)

புல்லும்வன்புலப் பகைவராமுனிவர்தம் புணர்ப்பால்
வில்லும்வாளியுங் கைவிடாவேடரும் விருகங்
கொல்லும்வன்செயல் கோதெனக்கொண்டவ ராகி
யொல்லும்வான்கனி கந்தமூலங்களே யுண்பார். (௬)

உழுவையாவின மோர்துறையிடையற லுண்ணுங்
கழுகுமென்புற வினங்களுங்கலந்துற வாடுங்
கொழுமைபார்தட மீன்கொளாகொக்கின மென்றாற்
செழுமைதோயுமவ் வனத்துளார்கருணைசெப் புவதோ. (௭)

ஐந்துமூன்றெனப் படுமழலவிர்தரு புகையும்
பைந்தண்சோலையி னின்றுகுந்தேறலின் பனிப்பு
மைந்தருமலெப் போதினும்வழக்கமார் தவினாற்
கந்தரம்பொழி வதுமொழிவதுமவண் காணா. (௮)

அருவருக்குமைம் புலன்வழிச்சுழன்றிடு மவர்முற்
கருவருத்தொழி வான்கதிகருதுந ரீறுஞ்
சருவருக்குமன் னோர்மதியளவின்பந் தரலாற்
குருவருக்கமொப் பாகுமக்குளிர்நறுங் கானம். (௯)

பரம்பிறங்குதா ரகம்பொருநெஞ்சகம் படைத்த
வுரம்பிறங்குமெய்த் தவருவந்துற்றவக் கானம்
வரம்பிலண்டமா மறைபெறும் வான்மனை தனக்கோர்
தரம்பிறங்குசீர்ச் சரக்கறையென்றிடத் தயங்கும். (௧0)

தராதலத்தினெப் புவனபோகத்தொடு தயங்கும்
விராவுமெத்தனு வாதியெய்திடவிழைந் தாலும்
பராவுமப்பத முடன்பெறநல்கிடும் பண்பா
லிராசதானியா விளங்குமவ்விணையில்சீர்க் கானம். (௧௧)

பூத்தருங்கடி கொண்டசைந்தளியினம் பொருந்தி
மீத்தவழ்ந்திடு காற்ருெடின்சுவைக்கனி மேவக்
காத்தலந்தனை மேவிடிற்ககனமேற் கவினுங்
காத்தலத்துளா ருளத்துறுவார்பெருங் கவலே. (கஉ)

பூணுலாமுலே யார்தருமைம்புலப் போகச்
சேணுலாவிடு மிகச்சிறுபுண்ணியஞ் சேர்வே
மாணுலாந்தவப் பெரியர்தம்மகிமைசால் சேவை
காணுமோர்தவம் பெற்றனமின்றெனக் களிப்பார். (கங)

சாதுசங்கத்திற் சார்ந்தருட்பகவன்ருட் சலச
மீதுசங்கமங் கொண்டிடாவிதியின ரன்ருே
போதுசங்கமென் னிதிகளைப்பொருளென நினைந்தே
யோதுசங்கட மின்னதோய்ந்துலேதன்மா லேயரே. (கச)

இக்கரைத்தலே யியன்றவாற்றங்கரை யிருந்தோர்க்
கக்கரைப்புல்லின் பசுமைபோலாகும் விண்ணவிர்சீ
ரிக்கரைத்தரு கடவுடாளெண்ணிடு ஞான
வக்கரைப்பணி வார்தமக்குறுங்கொலிவ் வவிச்சை. (கரு)

ஊனஞ்சேர்ந்திடு சுகங்களையுதவுவ தன்றி
ஞானஞ்சேர்ந்திடு மின்பமுநல்கிடு மிந்தக்
கானஞ்சேர்ந்திட வெண்ணிடாதுளத்திடை கதிதீர்
வானஞ்சேர்ந்திட வெண்ணுநம்மதிகெடு மதியே. (கசு)

மற்ருெப்பற்றவிச் சுகந்தனைக்கண்டுமா னிடர்நா
முற்றல்லற்படு முலகைவேட்டுழல்வர்க ளென்னே
பெற்றதைச்சிறி தாக்கிமற்றதைப்பெரி தாக்குங்
குற்றமாருயிர் தமக்கெலாம்பொதுமையாங் குணமே. (கஎ)

மயிர்கொல்லாப்பெருஞ் சீவகாருண்ணிய மருவிச்
செயிர்கொல்லான்மஞா னிகளிவண்சேர்தர லன்றித்
தயிர்கொல்லாணவ மத்தாய்த்தாஞ்சுகம் பெறவேற்
றுயிர்கொல்வேள்விசெய் துழல்வரீண்டுறப்பவம் விடுமோ. (கஅ)

மறைவகுத்திடுஞ் சீவகாருண்ணிய மறந்து
தறையின்மற்றுயி ருடல்களைத்தழலிடைப் பெய்த
முறையினுலறைக் கடவுளுண் முனிவமைந் திட்ட
சிறையென்போமலாற் சேணைநாமென்னெனச் செப்பல். (கசு)

பீடருந்தநு வசத்துழன்றெய்க்கும் பிறப்பி
ஞடருந்தவர் கடைக்கணுக்குறப்புடை நண்ணுங்
கோடருந்துவா னரங்களும்பட்சியின் குலமும்
வேடரும்பெறும் பிறவிமேன்மேலெனத் தகுமே. (உ0)

என்றுபற்பல விதம்படத்தேவரு மிசைக்கு
நன்றுமேவுமத் தண்டகவனப்புகழ் நவிலற்
கொன்றுறுமையிற் சேடன்பாதலத்தொளித் தானேற்
கன்றுசிற்றறி வுடையவர்கழறிடப் போமோ. (உக)

கொண்டல்வண்ணனற் றுணைப்பதநெஞ்சகங் கொண்ட
தொண்டர்தம்புகழ் சொன்முடிவன்றெனிற் றுைகதீர்
மண்டருந்தவர் தமைத்தனுண்மருவிடக் கொண்ட
தண்டகப்பெயர் வனப்புகழ்சாற்றிடுந் தரமோ. (உஉ)

இனிமைதங்கருட் பத்தர்சீரிசைப்பதை யிகந்து
கனியளிந்திழி யிரதமும்பூவுகுங் கள்ளு
நனிகலந்துகா னுறெனநடந்திடுங் காவின்
றனிவளஞ்சொலி னன்பிலார்க்குவகையுட் டதும்பும். (உங)

விதங்களெண்ணில கொண்டவம்மேதகு வனத்தற்
புதங்கவின்றதன் பொன்னடிதுணையெனப் போற்றும்
பதங்கவின்றமெய்ப் பத்தர்கட்கன்னையிற் பரிவார்
மதங்கநாமமேய்ந் தவிரொருமாதவன் வதிந்தான். (உச)

மயலகன்றவம் மாதவனுச்சிர மத்தி
னயலமைந்தொரு வனசரன்குடிசையிட் டமர்ந்தான்
புயலமைந்தமெய்ப் பொருந்துமன்னவன்முனம் போத
முயலருந்தவத் துதித்ததொர்பெண்ணல முதிர்ந்தே. (உரு)

முந்தைநற்றவக் குறையறவந்தவம் முதியா
டந்தைதாய்முத லோரையெவ்விதங்கொடோ தணந்தா
ணிந்தைதோபுல கைம்புலச்சுகமற நீத்துச்
சிந்தையாகுல மின்றியவ்வனத்திடை திகழ்ந்தாள். (உசு)

அன்னகாலைநல் வினைப்பயனவட்கணு கிடலாற்
பொன்னவாம்புகழ்ச் சிதேந்திரியத்தகை பொருந்து
மன்னயன்புரை மதங்கமாமுனிவன்வை கறையி
னன்னர்நானமா தியமுடித்துறுகைநா டினளால். (உஎ)

மானமிக்கவிம் மாமுனியிருக்கையில் வைகி
யானநற்பணி புரிந்துளம்வியப்புற வமையா
வீனசாதியிற் பிறந்தனனென்செய்வே னென்றுட்
டானமைந்துள கீழ்மையைநாடுபு தளர்வாள். (உஅ)

மாணிலாவிய மாமுனிவந்திடுந் தோறுஞ்
சேணிலோடிநின் றம்முனிவரன்பெருஞ் சேவை
கோணிலாதுகண் டறுதினநெஞ்சகங் குழைந்தே
யேணிலாவமுன் னின்றுசேவிப்பதென் றெண்பாள். (உகூ)

சீர்த்திமிக்கமா முனிவரன்றன்றிரு விழியாற்
பார்த்திடற்குமா காப்பவம்பெற்றவிப் பாவி
யார்த்தியோடரு கமைந்தரும்பணிசெய வவாவல்
பூர்த்தியாவதோ வீணவாவீதெனப் புலர்வாள். (கூo)

யாவர்நெஞ்சகம் பதைத்திடத்தீங்கிழைத் தேனோ
பாவமன்னது பெரும்பகையாகியே பத்தர்
சேவனங்கிடை யாதநீசக்குலஞ் சேர்த்த
தாவவின்னினி யென்செய்வேனியானென வழுவாள். (கூக)

ஆயபூமிசை யரும்பவம்புரிந்துளா ராரும்
பாயவல்வினைத் தொடக்கறவேண்டிமெய்ப் பரிவாற்
சேயபத்தர்கள் பணிசெய்துதீர்ப்பர்கள் சிறியேன்
மேயவிப்பவ மாற்றலெவ்வாறென வெருள்வாள். (கூஉ)

மேவறம்புரிந் திட்டவர்க்கன்னது மீட்டு
மாவதாகுமோர் முயற்சியில்லாமலே யல்லாப்
பாவமேவினர் புண்ணியஞ்செயப்பரிந் தாலு
மோவலின்றியஃ தேவருமென்றிட லுண்மை. (கூகூ)

உம்மையிற்பெருங் கொடும்பவமேதுளற் றினனோ
விம்மையித்துய ரெய்திடவிடுத்ததீண் டின்னஞ்
செம்மைநற்செயல் செய்திடேனுயிடிற் சேரு
மம்மையின்பிறப் பல்லலுக்குளதுகொ லளவே. (கூச)

யாதுநான்புரிந் தாயினுமுற்பவத் தியற்றுங்
கோதுவேறக் களைவதையன்றியுட் குமைக்குந்
தீதுசொற்பனத் தாயினுஞ்செய்திடே னென்ன
மாதுதன்னுளங் கொண்டனள்பெருத்தவை ராகம். (கூரு)

கோதியற்றிடும் வேடர்தங்குலத்திலங் குரித்தும்
வாதியற்றுமைம் புலச்சுகந்திரணமா மதித்துத்
தீதினற்றவர் பணியொடுகதியவாந் திறஞ்சான்
மாதியற்றுமுற் றவஞ்சிறிதேகொலா மதிக்கின். (கூசா)

போதுநற்றவ முற்பிறப்பூடுறப் புரிந்து
மேதுவேதுகொ டோபிழைபாவதொன் றியற்றம்
மாதுளிவ்வண மாதுயர்கொண்டிட வருமேற்
றீதுநாடொறுஞ் செய்பவர்சேர்வதெத் திறமே. (கூஎ)

என்னயாமிவற் கியற்றிடத்தகுபணி யென்னத்
தன்னதுள்ளமீ துசாவினளாகவத் தருணை
முன்னருந்தவக் குறைபறமுடிப்பவந் தவளு
ளின்னதான்முனி யுவக்குமென்றெழுந்ததொ ரிசைவே. (கூஅ)

வென்றவைம்பொறி மதங்கமாமுனியுளம் விரும்ப
நன்றதாம்பணி யேதவள்செயலெனி னூரு
நின்றசீர்முனி புனல்குடைந் திடச்செலு நெறியிற்
றூன்றலுற்றகன் முள்ளறச்சிக்குநற் றெழிலே. (ஙகூ)

செப்புமப்பணி விடைதினந்தொறுந்திறம் பாதே
துப்புறும்படி செய்துமாச்சிரமத்திற் றூயக்
கப்புறும்விற குந்தரின்முனிக்குளக் கருணை
தப்புறுநம் மேல்வருமென்றுளந் தழைத்தாள். (சO)

இந்தவாறருண் முனிவருமுன்னரே யெழுந்து
ளந்தமின்றெழு மன்புடன்வழியல கமைத்துப்
பைந்தண்கோமயந் தெளித்தலுமிந்தனப் பணியுஞ்
சொந்தமோடுசெய் தாளிங்ஙனுள்சில தொலைந்த. (சக)

வேறு

நிகழுநாளையின் மதங்கமாமுனிவ னீடருட்கொடு சீடனைநோக்கித்
திகழுயானதி காலைநீராடச் செல்லுந்தாரியைச் சித்துறத்தெளித்து
மிகநலம்பெறச் செய்துளதன்றி விறகுமாச்சிர மத்தில்வைத்துளதாற்
றகவியற்றுநரியாவரேயென்னச்சரிதமோர்ந்தனைதெரிவியென்றுரைத்தான் ()

இணையில்சற்குரு வாணையின்படியன் றிரவிலாயிடைக் காவமைந்திருந்தா
னணையகன்றபே ரன்புடைச்சபரி யமைபுமிந்தனச் சுமைமடத்திட்டே
யணைதலாம்வழி யலகிடுஞ்சமய மார்கொனீயன வாதமுமிவ்வா
றுணைவிலாதியற் றேதுவேதெனவே யுற்றதன்கதையுரைத்தனளன்றே. (சங)

ஆதலாற்குருபரன்றிருச்சமுக மடைதியென்றனே னறைந்திடச்சபரி
மாதராண்மிகப் பயமடைந்தவளா வந்துசற்குரு மலரடிபோற்றிப்
போதநீடுமன் புடனுளத்தச்சம் பொருந்திநிற்றலு மருந்தவனவட்பார்த்
தோதலுற்றன னம்மதாச்சிரமத் துலர்ந்தவிந்தனமுய்ப்பதெற்றினுக்கே. (சச)

வழியைத்துப்புர வாக்கியேதெளிக்கும் வண்ணமியாதுநின் மனவிருப்பியாது
மொழிதியென்றலுஞ் சபரிமின்மதங்க முனியருட்பதங் கனிவுடன்வணங்கிப்
பொழியவின்பநீ ரிருவிழிநின்றும் போதவோதுவ ளுதயான்புரைதோ
யிழிகுலத்தினிற் பிறந்தவணன்மை யேதுந்தேர்கலாக்கோதுறுகொடியேன் ()

பாமரக்குலத் தினிலுடலெடுத்திப் பாருக்கோர்பெரும் பாரமாத்திரிவே
ஞமதேயமோ சபரியெற்றையுமிங் நல்வனத்திடை நண்ணுறுதிறத்தேன்
சேமமுற்றிட வோர்தினந்தம்மைத் தெரிசனம்புரிங் தேனதுமுதலாத்
தாமரைப்பதத்துணை துணையென்னச் சரணடைந்திடத்தழைத்தனனசையே()

தழைந்துமீனவெங் குலத்துடலெடுத்ததன்மையோமெங்ஙன் சார்ந்திடலென்றே
குழைந்துநொந்துதங் திருவுளமகிழ்ச்சி கொள்ளவிப்பணி குறைவிலன்புடனே
விழைந்துசெய்தனன் றன்மைமற்றதனல் விமலநும்பத கமலமுன்னடைந்தே
னுழைந்தவென்குறை தீர்ந்திடநுங்கண் ணோக்கியென்னையா ளாக்குவீர்மாதோ ()

உம்மையேகதி யெனச்சரணடைந்தே னுலகமீதெனக் கிலேதுணையாரு
மம்மையப்பனு மான்றசற்குருவு மரியதெய்வமு முரியவொர் நீரே
செம்மைநன்னெறி யாவதொன்றறியேன் செயிரிழைக்கினுந் திருவுளம்பொறுத்திட்
டம்மைதீர்கதி யடையுநல்வழியை யருளியாளுகென் றறைந்தடிபணிந்தாள். ()

வன்மைதோயும்வேட் டுவக்குலத்துதித்து மாதுருக்கொடெவ் வனமிகவாய்ந்தும்
புன்மைதோயுல குவக்குமைம்புலங்கொள் போகவாசனை புந்திகொள்கிலளாய்ப்
பன்மைதோய்ந்தவ ரெய்தருமகிமைப் பத்திநன்னெறிபடிந்துளாளிவடா
னன்மைதோயுமுற் பவத்திலெத்தகைய நற்றவத்திற நவிற்றினளேயோ. ()

என்றுமெய்ச்சிதேந் திரியனுயுயிர்மீ திதங்குலாவிய மதங்கமாமுனிவ
னன்றுதன்னருகமைந்தமாணுக்க னன்முகத்தினை நாடுபுநவில்வான்
றுன்றுமின்னவள் புன்மைதோயுலக சுகத்தையிற்றெனவகத்தினுந்தெரியா
ளொன்றுமெய்க்கதி வாஞ்சைமிக்குடையா ளோதரும்பெருஞ்சாதுவுமாவாள்()

நம்மையேசா ணயினளதனு னன்குகாத்திட னம்பரமன்றே
செம்மைசேர்குணத் திவடனைநமதாச் சிரமத்தோர்புறஞ் சேர்தரவிருத்தி
வெம்மையார்துயர் மேவுறுதுளத்தில் வேளைதோறனமிசையநல்கிடெனு
வம்மைநாணருண் மதங்கமாமுனிவ னறைதற்கேட்டன ளருந்தவச்சபரி. (ருக)

கேட்டலும்புவி மிசையுறப்பணிந்து கிளர்ந்ததன்கரமுளம்பொரக்குவித்து
வாட்டடங்கணீர் வாரநன்கிவணம் வழுத்துமென்பிழை மனத்திடைமதியீர்
வேட்டதன்னமன் றும்மதுகடைக்கண் விளங்குநோக்கமே வளங்கொளஃதளிக்கிற்
கோட்டமேவிய மாயையின்வலியைக் குமைத்துமெய்க்கதி கொள்ளுவனென்றாள்()

நூன்முழுக்கவு மளந்தறிந்தவற்றி னுண்மையாம்பொரு ளுனித்தறிந்தவந்தீர்
நோன்முயற்சிசான் மாதவர்தம்பா னுழைந்துளோரையு முழைந்திடவுழக்கு
மான்முபக்கிடு மாயையன்னவடன் மட்டில்வேருடன் மாய்ந்ததுகொல்லோ
வேன்முதுக்குறை வியல்புறுஞ்சபரி மேன்மையென்னென விள்ளுவதம்மா ()

அன்னவாசகங் கேட்டலுமதங்க வருந்தவன்றனுட் பொருந்தருளினனுக்
கோன்னமைந்துள சபரிநீயுளத்திற் கொஞ்சமுந்துயர் கொண்டிடவேண்டா
மன்னலம்பெறு நம்மதாச்சிரம மாடெக்காலமும் வருதியென்றுரைத்துப்
பன்னருந்திருவருட்பெருநிட்டை பயிலுநற்றவச்சாலையிற்பதிந்தான். (ருச)

சபரியுந்தன திருக்கையிலிருந்தே சந்ததம்புரி தன்பணிதணவாள்
சுபமிகும்படி செய்துபிற்பகலிற் றுகளின்மாமுனி துணைப்பதம்போற்றி
யுபரிகொண்டபே ரன்புதன்னுருவா வுற்றிருந்தனண் மற்றிதுசெயலைத்
தபமுயன்றுவாழ் தண்டகாரணியஞ் சார்ந்தமாதவர் தாந்தெரிந்தறைவார். ()

மாசகன்றுயர் பெருந்தவம்படைத்த மதங்கமாமுனி மானமனந்திரிந்து
நீசமங்கைபா னேசமுற்றவன்ற னிலைமைவிட்டன னெனப்பலவாறு
பேசலுந்தன்பா லியாவரும்பேசாப் பெற்றிதன்னையு முற்றுறத்தெரிந்துங்
கூசலின்றியந் நிந்தையோரணியாக் கொண்டுசாந்தனக் குலவினன்மாதோ. ()

தந்தையும்புதல் வியுந்தனையீன்ற தாயுமைந்தனுந் தனித்துறக்காணிற்
சிந்தையுட்டுணிந் தங்கவர்மீதுந் தீதுதோய்பழி யோர்தவுளஞ்சார்
பந்தைநேர்தனச் சிறுமியம்முனிவற் பணிந்துவாழ்திறம் பார்த்துறப்பழித்தல்
விந்தையாமென வெண்ணிடற்பாற்றே மேதினிக்குள மிகுவழக்கமிதே. (ருஎ)

எல்லையற்றபே ரின்பினைப்புகழை யினிப்பிறந்திடா வியல்பினைத்தவர்பொய்ச்
சொல்லையஞ்சுபு சபரிவிட்டனளேற் றேன்றுமின்னெனச் சொல்லவும்போகா
வில்லையாஞ்சுகம் பொருளெனக்கருதி யிம்மையம்மையு மின்னன்மிக்குழக்கு
முல்லைதீர்மட வார்கொளின்பத்தின் முற்றுசிற்சுகஞ் சற்றெனப்படுமே. (ருஅ)

காண்பெண்வேதனின் னமுமொருசடலங் கண்டிடாதுமெய்க் கதியிடைவிரவு
மாண்பெண்வேட்கையல் லாற்றன்மெய்யினைபு மதித்திடாத்திறன்மாதவச்சபரிக்
காண்பெண்வேற்றுமை தோற்றிலதென்று லவரலர்ச்சொல்கொ ளர்த்தமெங்ஙனமாங்
கோண்பெண்வேள்பத்தர்க் கோதுமெஞ்ஞானக் கூற்றம்போன்றதான் மாற்றமற்றதுவே.

இன்னவாறிகழ் நாளையின்மதங்க விருடிதன்னுட லிகந்திடுமேல்வை
துன்னவன்னதுள் ளுணர்ந்தொருதருப்பைத் தூயவாதனந் தோயவீற்றிருந்தான்
மன்னலாஞ்செயல் கண்டமாணுக்கர் மனத்துலப்பிலா வருத்தமுற்றிருந்தார்
பன்னருந்துயர் மிகையுடன்சபரிப் பாவைமாமுனி பார்வைநேர்வந்தாள். (சூ0)

சபரியஞ்சலி கொண்டுசேண்மையினிற் றன்முனின்றிடுந் தன்மையைநோக்கித்
தபவுருப்பெறு மதங்கமாமுனிவன் சற்றடுத்தென்பாற் சார்தியென்றோதி
யபமிகத்துய ரடையனீவாழி யயோத்தியிற்றச ரதனருஞ்சேயா
விபவநீடுமா தவனுதித்துள்ளான் விரைந்தன்னுனிவண் மேவிடுவானல். (சூக)

மகத்துவம்பொலி யிராமநாமங்கொள் வள்ளலின்றெரி சனமருவுவையேற்
சகத்துவந்துவங் கழிந்திடுமுத்தி சார்வையந்தநாள் சார்தரும்ளவுஞ்
சுகத்துவந்தரு மந்தநாமத்தைச் சோர்விலாமலே சொற்றிவணிருத்தி
யிகத்துவேறிடத் தெய்தலைநலங்க ளியாவுமெய்துகிற் கெனவிசைத்தனனே. ()

அருகினின்றிடுஞ் சீடர்கடமையு மன்புடன்றெரிந் தவர்துயரகல்வான்
பெருகிடும்படி யவரவர்க்கேற்ற பெற்றியாநெறி பற்றிடப்பேசி
முருகியற்குழ லார்மணிப்பூணுர் முலையருந்திடா நிலைபெறவுயிரைப்
பருகிடுந்திரு மாலருட்பொலிவார் பரபதத்திடை விரவினன்மாதோ. (சூ௩)

வேறு

அதுமுதற் சபரிநாமத் தணங்கிராப்பகலாய்ஞான
மதுரமா ரிராமநாம மதித்துரு வேற்றிநாளுங்
கதுமெனக் கந்தமூலங் கனியிவை புசித்திராமன்
பதுமநற் பாதங்கண்டு பணிதலென் றென்றுனைந்தாள். (சூச)

அடுத்திடாச் சேணிற்காணி லரக்கெனச் சிவந்துகண்ணுட்
கடுத்திடு முனிவரானுர் கருணைரா கவனெய்தாமற்
றடுத்திடு வார்கொலன்னோர் தடையையெண் ணினனுயென்னை
விடுத்திடுங் கொல்லோராமன் மேல்விளை வறியேனென்னும். (சூரு)

தாரதலம் புகழுஞ்சீர்த்தித் தசரதன் றவப்பேருகு
மிராகவன் றனதுமேன்மை யெண்ணின ளுகியென்னைக்
கிராதன்புன் மாதென்றன்பாற் கிட்டிடக் கூசியுள்ளம்
பாராமுகஞ் செயுங்கொலென்னும் பதைத்துவீழ்ந் துருகிச்சோரும். (சுசு)

தபத்தகை மதங்கநாமச் சற்குரு பரன்றன்மாற்ற
மபத்தகை யோர்காலத்து மமைதரா தன்னநீராற்
சுபத்தகை பொருந்திராமன் ரூேன்றிடுஞ் சாதநந்தம்
விபத்தறற் கையமில்லை மெய்யெனச் சிந்தைதேரும். (சுஎ)

என்றுநங் கண்களன்ன ரெனழிலுருக் காணலென்னு
மென்றுய ரமுதமாற்ற மென்செவி பருகுமென்னு
மென்றுநாங் கனிகளன்னேற் கிந்துணக்காணலென்னு
மென்றுமீ தெண்ணலன்றி யேனையுட் கருதாளானள். (சுஅ)

நனிமகிழ்ந் திராகவற்கு நாங்கொடுத்திடவுண்கின்ற
கனிவகை முகையோபூவோ காய்கொலோ பழமோ வென்னு
மினியவென் பத்திப்பண்பி லிலங்கிடு மவைகளென்னும
புனிதமா மவிர்ச்சியின்றும் புலப்படக் காணேனென்னும். (சுகூ)

சருவநா யகனுமுத்தி சார்ந்திடற் கேற்றதாய
பருவமெய் திடவரத்துப் பாணித்துளான்கொலந்தப்
பெருமிதச் சிறப்புமன்னே னவித்திடப் பெறுவதன்றி
மருவுநம் போதங்கொண்டு வாய்ந்திட லாங்கொலென்னும். (எ0)

அருந்திடக் கனிகள்கொள்வா னதரிடை யர்த்தஞ்சென்று
திரும்பிச்சா லைக்கணெய்துஞ் சேர்தராத் தன்மைகண்டு
விருந்திலிப் பொழுதுற்றுனு மிசைந்திடக் கனியின்றென்ன
வருந்துபு விரைந்துசெல்லும் வந்திடுங் கடிதிலம்மா. (எக)

பலங்கொள்வான் கானத்தூடியான் படர்பொழு தெல்லாங்காணு
நலங்கொள்வான் சகுனமாவீர் நான்றிரும் பிடும்போதென்றன்
புலங்கொள்வான் காணிலோர்காற் புகுங்கொலோ வுமக்குத்துன்ப
முலங்கொள்வா கிராமற்காணி லுமக்குமுண் டின்பமென்னும். (எஉ)

கன்றியல் புறுமென்போலக் கவினிரா கவன்கற்றுச்சீ
ரொன்றியல் புடையனுகி லுறுதிருப்பான்கொலென்னு
நன்றிரா கவன்பாற்பத்தி நம்மினு மிகையாக்கொண்டு
துன்றிரும் பத்தர்கட்கோர் தொகைசொலப் போமேவென்னும். (எங)

கொன்றிக ழிராகவன்றன் கோலமே யுன்னியுன்னிக்
கன்றிடுஞ் சிந்தைமாது கணந்தொறும் வழியைப்பார்க்குந்
துன்றிய பலமூலங்க டுய்த்திடுங் காலமெல்லா
நன்றியல் சுவையகாணி லிராமனுக் கென்றுவைக்கும். (எச

பொலனணி யிராக வன்றூன் புலரியில் வருங்கொலென்ன
வுலவிராக் காலந்தன்னி லோங்குமாச் சிரமந்தன்னை
நலமுற வலகிட்டன்பா னூடொறு மெழுக்குஞ்செய்பு
மிலகொரு கடிகைதுஞ்சு மென்றூயின் றிருந்தேனென்னும். (எரு)

நடுநிசி யிற்புறத்தி னண்ணுநாற் றிசையுநாடுங்
கடுகியான் றூயின்றசெய்கை கண்டகன் றனன்கொலென்னு
மடுமிந்த வண்ணமாக வரைக்கணப் பொழுதானாலும்
வடுவில்சீ ரிராமன்சேவை வாஞ்சைமா ரூதாளானுள். (எசு)

இன்னவா றியலுநாளி லிணையில்சீ ரிராகவன்றூ
னன்னலத் தண்டகாரண்ணியத்திடை நண்ணினனென்
றுன்னரு முனிவர்மைந்த ருரைத்தசொற் கேட்டலோடும்
பன்னரு மகிழ்ச்சிபொங்கிப் பரபரப் புற்றூளாகி. (எஎ)

கனிகந்த மூலமாதி கானகம் புக்குத்தேடி
யினியவாச் சிரமந்தன்னி லெவருங்காண் பரிதாவைத்துப்
புனிதநீர் கொணரும்வண்ணம் புக்கின டடத்துக்கங்கோர்
முனிவனீ ராடியெய்தன் முன்னுறக் கண்டாண்மாதோ. (எஅ)

காண்டலு நெஞ்சுதுட்கக் கடிதுதூ ரத்துற்றூளா
லாண்டவ ணீழறன்கா லமைதலு முனிவன்சீறிக்
கோண்டரு மனத்தனுகிக் கொடுஞ்சொல்பற் பலவாப்பேசி
மீண்டறல் படிவானெண்ணி மேவினுன்வாவிமாடே. (எகூ)

மருவிய முனிவன்றெண்ணீர் வளங்கெழு வாவிநோக்கத்
திருவிய லுதகமுற்றுஞ் சேறுறக் கலங்கலோடு
கிருமியு முடைத்தாய்முன்னங் கெழுமினோர் வெறுக்குந்தன்னோர்
திருகிய வெகுளிநெஞ்சிற் றீம்புறக் கண்டானந்தோ. (அ0)

முன்னவிர் கடிகைதன்னின் மூழ்கியான் சென்றகாலை
நன்னலஞ் சான்றவிந்த நாண்மலர்க் குளமிதற்கு
ளின்னவா ரூதலேனோ வெனமனத் தெண்ணிமூழ்கான்
றன்னடி மட்டுமண்ணித் தகைகொளாச் சிரமஞ்சார்ந்தான் (அக)

அக்கணஞ் சபரிநீர்கொண் டாச்சிர மத்தினுக்குட்
புக்கன ளருளிராமன் புகலிலக் குமணனோடுங்
தொக்கசீர் மதங்கமேலோன் ரேயுமாச் சிரமஞ்சார்ந்தென்
மிக்கசீர்ச் சபரியெங்ஙன் மேவின ளெனவினுவி. (அஉ)

வேறு

கோலமேவுமாச் சிரமமுற்றத்திற் கூடிநிற்றலுங் குறுகுபுசபரி
நீலமேகசா மளவொளிநிறமு நீடுவிற்கணை நிலவியகாமுஞ்
சீலமார்சடா மகுடமுமுறுவற் சிறப்புமேவருட் சோபிதந்திகழச்
சாலமெய்யருள் பொழிவிழியமைந்து தன்முனுற்றதாசரதியைக்கண்டாள். ()

தனைமறந்திடு பரவசமடைந்து தட்டமிட்டுக்கூத் தாடல்செய்பவளா
யினைய தின்னவர்க் கியாஞ்செயலென்னு மெண்ணமற்பமு மெய்துகிலாளாய்ப்
புனைதருங்கலை தரைமிசைவிழுந்த பொழுதுமங்கது புந்திதேர்கிலளா
யனையகூத்தினை நிறுத்திலதின்புற் றயர்ந்திட்டாளுளத் தன்பதிகரித்தே (அச)

பொறிபுலன்கர ணங்களின்சேட்டை பொருந்திடாதுளந் திருந்தினளாகி
மறிதருந்திரை யற்றபேரின்ப வாரிமூழ்கினள் சீரியசபரி
செறிவுகண்டவ ணவிரிலக்குமணன் சிந்தையோகைமேய்ச் சிரித்தவட்பார்த்திட்
டறிதிநீர்த்தரீத் துன்னிராமன்று னடைந்துளானிதோ வென்றறைந்திட்டான்.

வேறு

சபரியிது கேட்டலுந்தன் கூத்தைநிறுத் தினளாய்த்
தரைமிசைவீழ்ந் திராகவன்பொற் றாட்டுணைகள் வணங்கி
விபவமலி தருதருப்பா சனங்கொணர்ந்திட் டிருவர்
வியன்மலர்த்தாட் டுணைபுனலால் விளக்கியவர்க் காகச்
சுபமுறவே தான்மறைத்து வைத்திருந்த வான
தூயகனி வகைகளெலாஞ் சுசிபெறக்கொண் டணைந்தே
யுபமையறு மவைகளைத்தன் பற்களினாற் கறித்தே
யுயர்சுவைமிக் கவைகளையாங் கவர்களுணக் கொடுத்தாள். (அரு)

பத்தபரா தீனனெனு மிராகவன்று னவடன்
பத்திரசத் துடனமைந்த பலங்களையங்கருந்தி
யித்தகைய மாதுரிய புஞ்சமரு வுணவை
யானிதுநாள் வரைபுசித்த தில்லையில்லை யில்லை
மெத்தநல முடையவெனச் சபரியன்பின் சுவையை
மெச்சிமுடி துளக்கியுளம் வியந்துயரின் பமைந்தா
னித்தகைப்பே ரன்பினளாஞ் சபரிதவப் பேற்றை
யென்னெனயாம் வியந்துரைப்ப தெவர்க்குமரி தாமே. (அஎ)

எல்லளவு மமைந்தசுவை யுண்டியதானாலு
மின்னுச்சொல் கூடியதே லேதுசுவை யுடைத்தோ
சொல்லளவா முபசாரங் கொண்டவுண, வினமுந்
தோய்சுவையைத் துய்க்குநர்க்குத் தோன்றவளித் திடுமேற்
கல்லளவு மனமனல்சேர் மெழுகையிணைந் துருகிக்
கடியகர ணங்களெலாங் கழன்றிடுமன் புருவாள்
பல்லளவு கனிவகைகள் படைத்திடுமோர் சுவையைப்
பகவனுள மறிவதலாற் பகர்தகைமைத் தேயோ. (அஅ)

வரையறத்தான் கொணர்ந்துவைத்த பலங்களனைத் தினையும்
வாய்ந்தபத்தி வடிவாந்தன் வாயினிலிட் டதுக்கி
விரைவுடனே கொடுத்திடுந்தோ றன்னவற்றை யெல்லா
மிகைபடுபே ரருளுருவர் மிசைந்தனர்வீற் றிருந்தார்

கரையிலவா மிவர்செயலிங் ஙனமாகத் தண்ட
காரணியத் தினிலிலகு கவின்முனிவ ராருந்
தரைபுகழ்சீர் மலிராம சந்திரனைக் காண்பான்
சபரியினுச் சிரமமிசைச் சார்ந்தனர்கண் மாதோ. (அகூ)

சீராம சந்திரன்மற் றவர்வரக்கண் டெழுந்தே
திருந்தியவந் தனஞ்செய்தவர் திருமுகத்தை நோக்கி
யாராருஞ் சுகங்கொலென வினவிடலு மன்னோ
ரிருஞ்சுகமே யாவருநின் னின்னருளா லுனது
சீராருந் தெரிசனங்கா ணுறப்பெறலா லெமது
சிந்தைபெறுந் துயர்தானுந் தீர்ந்துய்ந்தோ மெனவே
தாராள மானவுளத் தன்புடனே சாற்றிச்
சந்தோட சாகரத்துட் டழைத்திருந்தா ரன்றே. (கூ0)

அத்தருணத் தாண்டமைந்தார் தம்முளொரு முனிவ
னருளிலகு மிராகவன்ற னணிமுகத்தை நோக்கி
யித்தகைசால் சபரியொரு மாசுமிலா டாளே
யிவள்சகவா சத்தினிலே யிழிந்துகெட்டா னெனவே
மெய்த்தவஞ்சான் மதங்கனையாம் வெறுத்துவிலக் கினமால்
வியன்பெறுமித் தினத்திலிவண் மேவியவாச் சிரமத்
தொத்தவிரு மிராகவநின் றிருவுருவை யன்பா
லுபாசனையு முஞற்றிடுவே முறுசெபனன் றென்றான். (கூக)

பின்னுமொரு முனிவனெழுந் திராகவனை நோக்கிப்
பிரபோவீண் டுற்றதொரு பிரசமலர்க் குளத்திற்
பன்னுமொரு காரணமு மில்லாதே புழுக்கள்
பரவியிரத்தத்தினிறம் படிந்துமிருக் கிறதான்
மன்னுநல முற்றிடவோ ருபாயமுரைத் தெமது
மனக்கவலை தீர்த்தியென வழுத்தலுமாட் டமர்ந்த
கொன்னிலவு மிலக்குமணன் புன்முறுவல் காட்டிக்
கூண்டுளமா முனிவர்கொளக் கூறிடுவான் மாதோ. (கூஉ)

வேறு

சத்தியவுத்தமத்தவஞ்சான் முனிவீரீண்டியானென்று சாற்றக்கேண்மின்
பத்திநிறைவமைந்துதபோ பாராயணுதினம் பயின்றுமாயா
வித்தியலைம்புலபோக விடயானந்தங்களெலாம் வெறுத்துநீக்கி
மைத்திரடோய் பொழில்சுலவும் வனத்தினிடைபின்பமுற வாழ்வீரன்றோ. ()

சராசரப்பிரபஞ்சமெல்லா மும்மதருள்கொண்டன்றோ தங்கியுள்ள
வராவுமன்பார் நுங்கூட்டத் தொருவனன்றோமதங்கமுனி யுற்றவன்னோற்
பராவுநலம்பெற்றபண்பா விச்சபரிப்பாவையுமெய்ப் பத்திமார்க்கத்
தராமுடிமேல்விளங்குமணி யினையனையபெருமையினை யடைந்தாளன்றோ. ()

பத்தியெனும்புனல்படிந்த தன்மையினுலிச்சபரிப் பாவைதானுஞ்
சுத்தியடைந்தனளன்றே யின்றெனநம்முளத்திலையந் தோற்றலுண்டோ
வொத்திடுமீங்கிதற்கொர்கரி நான்காட்டுகின்றனனீ ரொருங்குநாளு
நத்திமுழுகிடுங்குளத்திற் கிருமியடைந்திடற்கேது நவிலக்கேண்மின். (௬௫)

கனிந்தவுளம்பெறுசபரி நீழலொருமுனிவனது கான்மேற்றேய்கான்
முனிந்தளவினிந்தைமொழி யறைந்தனன்மீண்டுங்குளத்தின்மூழ்கப்போனன்
குனிந்தசிலையிராமபத்தா பராதியின்கட்பார்வைபட்ட கோளாலன்றே
யினிந்தலங்கெட்டதவ னுடலபிமானக்குணமே யேதுவாமே. (௬௬)

நீங்களெலாமதங்கமுனி தன்னேபுளத்தன்பினுட னினைத்துப்போற்று
மீங்கிவர்களுளமகிழும் படிபுரிந்தீராயினுட னிந்தமாது
பாங்கணைந்துதன்கரத்தா லக்குளநீர்ப்பரிசிக்கிற் படிந்ததோட
நீங்கிடுமாலிதற்கையஞ் சிறிதிலையென்றவர்கள்கொள நிகழ்த்தினுல். (௬எ)

சிறந்தியல்கானகத்திருந்து தவமுபன்மாதவரினமுந் தேறவொண்ணு
விறந்திடுகாலத்தினுட னெதிர்காலத்தன்னவர்க ளியற்றவேண்டு
மறந்திகழச்சாற்றுநனே யேனையரசர்கள்சுதரொப் பானென்றேதி
நிறந்திகழ்நன்மதியமையாக் கயவரைமானிடரென்று நிகழ்த்தலாமோ. (௬அ)

இலக்குமணன்புகன்மொழிகேட் டத்தண்டகாரணியத் தியல்வோரியாருங்
கலக்குமனத்தையமுழு தகன்றவராய்மதங்கமுனி கழல்கள்போற்று
நலக்குறியாராஞ்சீட ருளமுவப்பசெயவிசைந்தார் நவைகளியாவும்
விலக்குமனச்சபரியிரா மன்றனக்குப்புனல்கொணரவேண்டிச்சென்றாள். (௬௯)

சென்றுகுளத்திறங்கியவ டிருக்கரத்தாலன்பினெடு தீண்டும்போதே
யொன்றுறுமாசறவொழிந்திட் டியர்பூர்வநிலையமைந்த துணர்ந்தெல்லோரு
நன்றுநன்றுசபரிதனைப் பழித்ததுநம்பிழையென்ன நவின்றாஞர்
குன்றுறழுமனம்படைத்த மயிலுறழும்மகளுதகங் கொணர்ந்தீந்தாளால். (க௦௦)

நித்தியமெய்த்துணைபகவ னடித்துணையென்றன்பின்மிக நெஞ்சினுடிச்
சத்தியமெய்த்தவம்புரியுந் தக்கோர்கடிருவருட்சோ தனையின்சீரான்
மெத்தியதுன்பெய்துகினும் புகழமைந்துபகைத்தோரும் வேறுற்றேருந்
துத்தியஞ்செய்வாழ்வீற்றிற் றேய்வரெனற்கிதொர்கரி சூழின்மாதோ. (க௦க)

நிரந்தரனுமிராமபிரான் சபரியைப்பார்த்தன்பினுட னிகழ்த்துவானின்
றுரந்தரபத்திப்பெருக்கம் பார்த்தெனுளத்துவகைமிகத்தோய்ந்தேனெப்பில்
வரந்தரவிச்சித்தனனிற் கெதுவாஞ்சைபாவததை வழுத்தாயென்னப்
புரந்தரனுதியதேவ ரேத்திடுசீராமனுடன் புகல்வதானுள். (க௦உ)

நீசகுலத்துதித்தனரு ணெறியறியாதுழன்றழியு நிலைமையேனியான்
ருசதிப்பெருமானின் றிருவடிகண்டன்பினுடன் றரிசித்தேத்து
மாசகன்மெய்ப்பெரும்பேறு பெற்றுய்ந்தேனுலிதனி லதிகமாகத்
தேசவிரப்பெறத்தக்க துள்ளதுகொலொன்றுலகத் திரயத்தூடே. (க௦௩)

ஆயினுநின்றிருவடிக்க ணகலாமெய்த்திடபத்தி யளித்திட்டிந்த
மாயிருஞாலத்தினியான் பிறவாதவண்ணமருள் வழங்காயென்னத்
தோயிரும்பத்திப்பொலிவார் சபரியுளக்கனிவினுடன் சொல்லலோடுந்
தாயினுமிஞ்சன்புடைப விராகவனவ்வாறுவரந் தந்தானம்மா. (கo௪)

உடனேயச்சபரிதன துடனீங்கிச்சீராம னுருவங்கண்டே
மிடலேபுமுனிவரெலாங் கண்டிடப்பாரதிமான விமானத்தேறித்
திடமேவுபத்தர்கள்வாழ் வைகுந்தப்பெரும்பதத்திற் சேர்ந்தாளன்னுள்
சடமேனியிராமவிலக் குமணர்கடாம்விறகுகொடு தகித்தாரன்றே. (கoரு)

ஆசகன்மேற்குலத்தாணுப் பிறந்துளவெத்தகையபரைபு மவசானத்தி
னீசர்கரத்திடையளித்துத் திரும்புபெருவழக்கமைந்த நிலத்தின்மீதே
யேசமைபுன்குலத்துதித்தாட்கிராகவனங்கித்தொழில்செய்திட்டானென்றாற்
பாசமகற்றுயர்பத்தி மான்மியமித்தகையதெனப் பகரலாமோ. (கoசூ)

பத்தவசீகரனுய விராமனுதகத்தொழிலும் பரிவிற்செய்தா
னித்தகையபெருமிதச்சீர் கண்டதண்டகாரணியத் தியல்வோரியாரு
மெத்தவிறும்பூதமைந்த வுளத்தினராய்ச்சபரிபுகழ் மிகக்கொண்டாடித்
தத்தமுளத்தடங்காப்பே ருவகையினுலிவ்வாறு சாற்றுகின்றார். (கoஎ)

நீசகுலத்திற்பிறந்த சபரியெங்கேயவடனக்கு நேர்ந்ததான
மாசகன்மெய்க்கதியெங்கே யற்புதமற்புதமென்ன மகிழ்ந்திட்டின்பார்
நேசமலிபத்தியிலா தாரேகீழ்க்குலத்தரென நிகழ்த்தியொப்பி
றேசவிருமிராமவிலக் குமணர்களைத் துதித்திருக்கை சேர்ந்தாரன்றே. (கoஅ)

மாமாயைத்தொடர்பொழிந்திட் டுதிப்பறுவான்பெறுஞ்சபரி மாதின்சீர்த்தி
யாமாதரச்சரித மிதையுள்ளத்தன்பினுட னறைவோர்கேட்போர்
காமாதியாம்பகைவே ரறக்களைந்தன்பின்பநெடுங் கடலின்மூழ்கிச்
சேமானந்தப்பெருக்கார் வைகுந்தப்பெரும்பதத்திற் சேர்வார்மாதோ. (கoகூ)

வேறு

விண்ணார்பொழிற்றண் டகவனத்தின் வேடர்தவப்பே றுங்குருந்தாய்
வியனார்மதங்கற் கரும்பணிகண் மிகுபேரன்பாற் புரிந்தவன்மெய்க்
கண்ணாரருள்பெற் றன்னதருட் காட்சிபெறக்கா தலித்தினிய
கனிகள்சுவைத்தீந் தவ்வனத்திற் கவின்றமுனிவர் தம்முளத்தும்
பண்ணார்குளத்தும் பொதிந்தநவை பாற்றியொருதாய் பாலருத்தாப்
பரமபதத்திற் புகுஞ்சபரிப் பாவைபெரும்பத் திமைபெறுவா
னெண்ணார்வத்தோ டுன்சமுகத் திரவாநின்றே னீந்தருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும்பெருமாளே. (ககo)

சபரிகதி முற்றிற்று.

ஆகூ கவி (சருஉ)

---

ஐந்தாவது

# அசாமிளகதி.

சபரிமினிராகவன் றரிசனங்கொடு
விபவவான்கதியிடை மேவல்சாற்றினே
னபமருணாரண னுமச்சீர்தெரீஇத்
தபமுறுமசாமிளன் சரிதமோதுவாம். (க)

மிடியன்வந்திடத்தெரீஇ வீட்டுண்மேவினர்
கடிதுவந்திடுமுனங் ககனப்பொன்னகர்
முடியுறுதன்கையான் மோதிப்போற்சிதர்
கொடியெனநல்கிடுங் கொடியமாடமே. (உ)

அன்னமேந்தியல்புறு மாவியோவிய
வன்னவண்டாமரை மலரும்வெண்ணிற
வன்னமேந்தியல்புறு மாவியோவிய
வன்னவண்டாமர்கைம் மலரும்வண்டவே. (௩)

வளம்பொலிவாயுமா லடைந்துவாழ்த்திபு
முளம்பொலிமுல்லைகாத் துற்றுச்சாபத்தாற்
குளம்பொலிசதக்குமா ரிகள்குலாவலிற்
கொளம்பொலிகன்னியா குப்சப்பேர்நகர். (௪)

ஆயசீர்நகரிடை யருமறைக்குல
மேயவன்செல்வத்தின் மிகைபெற்றோன்கொடுந்
தீயவருறவுகொ டிறத்தினலரு
ணேயமாரறமெலா நெகிழவிட்டவன். (௫)

அசாமிளனெனும்பெய ரமைந்தவன்பனால்
விசாரமுற்றவர்புவி மீதிற்றோய்தரு
பசாசெனவெறுத்திகழ் பரத்தைமாதரும்
பிசாசெனவெறுத்திடும் பெற்றியுற்றவன். (௬)

கைபெறும்பொருளினைக் காயந்தன்னையுள்
வைபெறுமுயிரினை வழங்கினான்றே
வைபெறுவானிடைப் பரத்தையார்தரு
மெய்பெறுமன்பினை மேவற்பாலரே. (எ)

பின்னவடுணைபெறு பிராமணன்றனக்
கன்னவளாதனத் தாளமைந்தனர்
முன்னவடுணைபெறு முறைமைகாண்டலு
மன்னவளாதனத் தாளமைந்தனர். (அ)

தானரும்பொன்கொடு சார்ந்தகாலையில்
வானரமகளிரா மாற்றம்வாய்ந்தனர்
தீனமுற்றவரிடஞ் சென்றகாலையில்
வானரமகளிராமாற்றம் வாய்ந்தனர். (௯)

வேறு

பொன்னற்போடு பொழிந்தவக்காலையிற்
கன்னற்பான்மையெனச் சொற்கழறினு
ரின்னற்றூரித் திரியமெய்துற்றுழி
கன்னற்பான்மை யெனச்சொற்கழறினர். (௧0)

பொன்னறப்பறித் துக்கொடுபோவென
வின்னல்வெஞ்சொ லிசைத்தனரோட்டலும்
வன்னக்கஞ்சத்த மாலமருவுநீ
ரென்னத்தன்ன திதயங்கலங்கினன். (௧௧)

காசையேபொரு ளாக்கருதுற்றபல்
பூசைபோன்றவ ரும்மிவண்போக்கலு
மாசைநாயகி யன்னவொர்பற்றமை
வேசைபாற்றன் விரகம்விளம்பினன். (௧௨)

அன்னள்கேட்டறை வாளசனுதிக
ளென்னெடுற்றுண் டிருக்கவியைதியே
லுன்னவாவொத் தொழுகுவனென்றிடப்
பன்னஃதாரமு தென்னப்பருகினன். (௧௩)

மதுவரக்குடன் மாமிசமாதிய
பொதுமடந்தையி னேடுபுசித்துயர்
முதுமறைக்குலத் தோர்செயன்முற்றறப்
புதுமைமிக்க புலைப்பிறப்பாயினன். (௧௪)

பற்றற்றுந்தம் பழமைப்பாராட்டிடுஞ்
சுற்றத்தார்துறக் கத்துறந்திட்டனன்
மற்றன்னோர்கண் மருவுநெறிக்கிக
லுற்றதன்மை யுணர்தலினலரோ. (௧௫)

நாற்புறக்குல நங்கைதன்மையவி
ஞர்ப்புறத்தகு நெஞ்சமமைந்துளான்
சீர்ப்புறத்தகு செல்வமனையொரீஇ
யூர்ப்புறத்தொர் குடிசையுஞற்றியே. (௧௬)

புரத்தைவிட்டுப் புலையரையொத்திடுந்
தரத்தைமேவினன் றூரமெனப்படும்
பரத்தையைப்பரி பாலனஞ்செய்திடுஞ்
சிரத்தைமேவித் திரிந்தனனென்பவே. (௧௭)

## வேறு

இன்னவ னிந்தவண்ண மிருந்திடு நாளினந்தக்
கொன்னகர்க் கருகில்வாழ்வோன் கொண்டல்வண் ணன்ருட்பத்தன்
கின்னமுற் றெழிக்குஞ்சாளக் கிராமங்கைக் கொண்டமேலோன்
பொன்னவிர் செக்கரந்திப் போழ்திலவ் வூரிற்புக்கான். (கஅ)

வந்தவ னங்குற்றுள்ளார் மாட்டியா னிரவினூடு
பந்தமுற் றமர்தற்கேற்ற பண்புறு மிடம்யாண்டுள்ள
திந்தவே ளேயினிற்காட் டீரென்றன னுசாவுமேல்வை
வெந்தகைக் குணத்தொர்துட்டன் விளம்புவ னிவணமாதோ. (கக)

வளங்கொளிந் நகர்ப்புறத்தில் வதிபவ னசாமிளப்பேர்
விளங்கொளி மதிமிக்கேய்ந்தோன் மிகைபடு தருமசீலன்
களங்கொளின் மனைமாதோடுங் கவின்றன னவன்பாலெய்தி
லுளங்கொளியா வைபுநிற்கியு முறுமதி கடிதிலென்ருன். (உ0)

கொல்வினை முதலாச்சொல்லுங் கொடியபா தகங்களென்னும்
புல்வினை முழுதுமாற்றும் புந்தியி லசாமிளன்றன்
பொல்வினைக் குலங்களியாவும் போக்கியின் புதவத்தக்க
நல்வினை வடிவாம்பத்த னண்ணின னவன்வீட்டம்மா. (உக)

சென்றவ னசாமிளன்ருன் சேரக வாயிலெய்தி
நன்றவ ணுமதேய நவின்றழைத் திடுதலோடுந்
துன்றகத் துள்ளவன்னேன் ருேய்தரு பரத்தைமாது
நின்றவன் முன்வந்தார்நீர் நேர்ந்ததென் னிகழ்த்துகென்ருள். (உஉ)

மொழியுமற் றவள்சொற்கேளா முதியவ னுரைப்பன்யானோர்
வழிசெல்வோ னுகுமிங்கு வதியவோ ரிடங்கேட்டேனவ்
வுழியுளா னெருவன்சில முறுமசா மிளப்பேர்ப்பார்ப்பான்
கழிநல முடையானென்னக் காட்டவீண் டடைந்தேனென்ருன். (உ௩)

அசாமிள மறைச்சிரேட்ட னகன்றதெங் கெனலுமந்தப்
பசாரிமா தவன்ருன்யாண்டோ படர்ந்தனன் வரினிற்குற்ற
விசாலநற் பணிகளன்பால் விரைந்துசெய் குவனென்றன்னேற்
கசாகச மின்னுடன்ன தகத்திலோர் பாகமீந்தாள். (உச)

ஆங்கவ னுறைந்தான்வேசி பந்தவே தியனுக்காகப்
பாங்கய லுற்றவூரிற் படர்ந்தவ லாதிவாங்கித்
தீங்கறு மன்பாலீந்து தேவரீர்க் குரிமையோடு
மீங்கற லுதவத்தக்க வேற்றமற் றவள்யானென்றே. (உரு)

செப்பியங் கருகிலுற்ற செழுங்கிண றதனைக்காட்டி
யொப்பிய தனதுவீட்டு ளொருபுற மெழுக்கமைத்துத்
திப்பிய மாக்கிநல்கச் சென்றதி லரிதாட்போற்றும்
விப்பிரன் பூசையாவும் விதிப்படி முடித்துப்பின்னர். (உசு)

அவடரு மவன்முன்னுன வருந்தினன் றுயின்றுனப்போ
தவமலி யசாமிளப்பே ரந்தண னர்த்தசாமத்
துவகையின் மதுபானஞ்செய் தூறுலகி ரியினேடுற்றுன்
பவமலி கொடியோன்றன்னைப் பரத்தையுட் கூட்டிச்சென்றுள். (உஎ)

அதிதியங் குற்றசெய்கை யனைத்தையு மறைந்துபின்னர்
மதியுட னீசென்றன்னேன் மலரடி வணங்கிப்போற்றிக்
கதியளித் திடநமக்கோர் கான்முளை யீதியென்னத்
ததியிதில் வேண்டிலங்ஙன் றந்திடுஞ் சரதமென்றுள். (உஅ)

பாரியாம் பரத்தைசொல்லின் படியன்ப னருகிற்சென்று
சீரிய வனசப்பூந்தாள் சென்னியிற் றேயத்தாழ்ந்தா
ஞரிய வுளங்தோய்பத்த னனிமகிழ் வடைந்துன்மீதிற்
பேரியற் கிருபைகூர்ந்தேன் பேசுக வேட்கையென்றுன். (உகூ)

அம்மொழி வினவலோடு மசாமிள்ன் மகிழ்ச்சிகூர்ந்து
செம்மொழிப் பாலனின்றிச் சிந்தைநொந் துள்ளேன்கண்டாய்
மெய்ம்மொழிப் பகவனன்பு வேலையுட் படிந்தோயுன்சொல்
சும்மொழி யாமலின்சொற் றேன்றலொன் றருளவேட்டேன். (௩௦)

வேற்றெரு வரமுமிங்ஙன் வேண்டிலே னென்னச்சொன்னுன்
கூற்றெரு வியமையுண்கட் கோற்றெடிக் கோதைமாது
சாற்றெரு மாற்றப்பான்மை சற்றுமா றுதுள்ளன்பிற்
போற்றெரு தொழிலேகற்ற புந்தியி றார்த்தனம்மா. (௩க)

இன்னவா றசாமிளன்று னிசைத்திடப் பத்தன் கூறு
மன்னரு மந்தமைந்தன் வாய்ப்பனுந் தமக்கன்னேற்கு
நன்னலம் பொலியநீர்நா ராயண நாமதேயந்
துன்னவைத் திடுமினென்சொற் சோரலி ரென்றுசொன்னுன். (௩உ)

உடனநு மதிகொடன்ப னுன்னிய நகரஞ்சார்ந்தான்
விடனுடன் றன்னில்லாளாம் வேசிபா லடைந்துசாற்ற
மடமகள் கேட்டுள்ளோகை மலிதரப் பெற்றுள்சின்னுட்
கடவுபு விழைந்தவாறே கனிவுறு கருப்பம்வாய்ந்தாள். (௩௩)

தசமதி கடந்தொப்பில்லாத் தனயனைப் பயந்தன்னேனுக்
கிசைகொள்பத் தன்சொற்போனு ராயண னென்னநாமந்
திசைகொளச் சாற்றிமுன்னைத் திங்கள்போல் வளர்த்துவந்தார்
வசையறு பாலனுனன் வாலிப திசையுற்றுனல். (௩ச)

வழுத்துநா ளசாமிளற்கு வார்த்திகப்பருவம்வாய்ந்தும்
விழுத்துகட் காமமாதி விட்டிலன் மிசைந்தேவந்தான்
வழுத்துதை பிணிமேன்மேலும் வளர்தா வாற்றுணுகி
முழுத்துயர் கொண்டான்வேசி முன்பிருந் தழுங்கலுற்றுள். (௩௫)

சாற்றசா மிளனவ்வாறு சரமபக் குவத்தனைக்
கூற்றனுங் குரியசொந்தக் கொடியகிங் கரரைப்பார்த்துச்
சீற்றமிக் குரைப்பான்பாசந் தெண்டுகை சேரக்கொண்டே
யேற்றகன் னியாகுப்சப்பே ரிரும்பதி யெய்துவீரால். (நகூ)

பதியதி லசாமிளப்பேர் படைத்தமா பாவியுள்ளான்
றுதிசெய்நான் மறைக்குலத்திற் ரேற்றின னேனுந்தீய
பதிதர்கட் கரசாப்பற்பல் பவமிகப் புரிந்துள்ளானன்
மதியிலி தனைமுற்கொண்டு வந்துதீ நிரயத்துய்மின். (நஎ)

என்றுறுத் துரைத்தலோடு மிருளுடற் றூதரானோர்
நன்றுநன் றவனையற்றே நாம்புரிந் திடுதுமென்னு
வன்றுதை பாசந்தண்ட மருவிய கையராகிப்
பொன்றுறப் புரிவானன்னோன் புக்கவீட் டடைந்தார்மன்னோ. (நஅ)

அடைந்தவர் பாசத்தாலன் னவன்றனைப் பிணித்தலோடு
மிடைந்தவர் பான்மைகண்டு மிகுவெருட் சியனுய்நெஞ்ச
முடைந்துநா ராயணவென் றுரியதன் மகற்கூயாரோ
விடைந்தயர் தரவெற்பாசத் திறுக்குகின் றுரென்றுனே. (நகூ)

வேறு

நாராயண வித்துன்பற ரட்சித்திட வென்முன்
வாராயிவர்க் காணுந்தொறு மனநொந்தயர் கின்றே
னாராயண நாராயண நமைக்காத்தரு ளெனக்கிங்
காராதர வுள்ளாருனை யல்லாலறி கிலேயோ. (௪0)

என்றேபல காற்கூவிடு மியல்பாரசா மிளன்முன்
குன்றேலென வரிபத்தர்கள் குலவுற்றன ரியாரு
மென்றேய்த்திகி ரிசங்கத்துட னெழிலார்துள வாரந்
துன்றேருட னின்றேயம தூதர்க்கிவை புகல்வார். (௪க)

வெங்கோரகிங் கரரன்பனை விடுமின்விடு மினெனப்
பொங்கோதைகொண் டுரைசெப்யவப் போதேமகிங் கரர்க
ளெங்கோனது விரையாக்கலி யாநீங்கல நீவி
ரிங்கோதுசொல் விடுத்தும்புரத் தேய்மின்கடி தென்றூர். (௪உ)

தமப்பண்புள ருயிர்கொண்டிடத் தண்டத்தொடு பாசஞ்
சுமக்குந்தொழி லலதொன்றுளஞ் சூழாததுற் குணந்தோ
யமப்பையலோர் தூதாகினி ரென்னேதினி ரென்னு
நமக்கின்பரு ணாராயண னன்பாளரும் வெகுண்டார். (௪ங)

அரிதூதரு மரிதூதரு மமர்செய்திட முயன்றூர்
விரிவெஞ்சம ரதனூடயர் விண்டன்பர்கை மிகுந்தே
யிரியச்சம னதுதூதரை யிகலிச்செயங் கொண்டே
டீரிவுற்றவ னுயிரைக்கொடு வைகுந்தம டைந்தார். (௪௪)

செறிவுற்றிடு சமரத்திடை திருமால்கணந்தாக்க
முறிவுற்றவங் கத்தோடெமன் முன்றூதர்கண் மொழிவா
ரறிவுற்றிடு நீசற்றுமுள் ளாராய்குத வின்றி
வறிதுற்றிய லெமையிப்படி மடியச்செயன் முறையோ. (சரு)

கூரார்மதி பெறுசித்திர குத்தன்றனைக் கூவி
யாராய்கில தெமையிவ்வண மடிபட்டிட விட்டாய்
பாராரசா மிளனைக்கொடு படர்வேம்பட ருறவே
நாராயண னடியாரிங்ங னனிதுன்புறப் புரிந்தார். (சசு)

வீங்கும்பவப் பொலிவாரசா மிளனைப்பெரும் புனித
ரோங்குந்திரு வைகுந்தமுற் றிடவேகொடு படர்ந்தா
ராங்குந்தின ராழிப்படை யங்கங்களை யறுத்த
தேங்குந்துய ரேமின்னினி யென்செய்குவ மென்றூர். (சஎ)

இனியித்துயர் வேலைக்கிடை யெமையேவலை யென்றே
நனிசெப்புபு துயரத்துட னண்ணுற்றனராகக்
குனிவுற்றிடு மரிசித்திர குத்தன்றனைக் கூவி
யுனியிங்கசா மிளன்செய்திற மொருங்கோது தி யென்றுன். (சஅ)

குலவுற்றிடு நலசித்திர குத்தன்னசா மிளன்று
னுலகிற்புரி செயன்முற்றவு முள்ளத்திடை யுணரா
நிலவுற்றிடு சமன்முற்பட நின்றேயவன் புவியி
லுலவுற்றிடு வரைபுண்ணிய மொன்றுற்றிய தின்றால். (சகூ)

துயர்சான்மர ணக்கோன்னம தூதாகினர்க் கண்டுட்
பயமுற்றவன் சுதனேடெனை நாராயணபாரென்
பெயர்சொற்றவ னைக்கூவிய பெற்றித்தல தயருங்
கயமுற்புக ஞாராயணக் கடவுட்குறித் தன்றே. (ரு0)

எனச்சித்திர குத்தன்சொல வெமன்கிங்கா ருடனே
மனத்துட்சின மிகக்கொண்டுயர் வைகுந்தம டைந்தே
கனத்தைப்புரை திருமேனிகொள் காகுத்தனைக் கண்டு
மனப்பத்திமை யொடுதாட்டுணை வணங்கிப்புகல் வானல். (ருக)

அரிகேசவ நாராயண வடியேன்முறை கேளாய்
பரிவோடுன தடிபேணிடு பண்புற்றிடு கணங்கள்
விரிவானவென் விரையாக்கலி வீண்செய்தன ரிதனைத்
தெரிவானுரைத் திடப்போந்தனன் றிருமுன்னெனப் புகல்வான். (ருஉ)

விள்ளும்பவப் பொலிவாரசா மிளனென்றிடு நாமங்
கொள்ளுங்கொடி யனையாண்டுறக் கொணரும்படி படர்பால்
விள்ளுந்தின னவர்கொண்டிடும் வேலையுன தடியார்
நள்ளும்பட ரைச்செய்திற நவிலற்கரி தாமால், (ருங)

நைகும்படி யென்றூதரை நனியாற்றிமிக் கவமே
செய்கும்பவ சண்டாளனைச் சீலத்தவப் பெரியோர்
வைகுந்தகை மருவுற்றநின் வைகுந்தமுட் சேர்த்தார்
மைகும்பியுட் புகுவானிதோ மருவுற்றன னென்றான். (௫௪)

காலன்புகன் முறைமுற்றவுங் கருணைத்திரு வுருவார்
மாலன்புடன் கேட்டன்னவன் மனந்தேறிடும் வண்ணஞ்
சாலன்புகொ ளூனதின்னுரை சரதம்மசா மிளன்று
னீலன்புனி தச்சொப்பன நேராதவன் றானே. (௫௫)

என்றாலுமன் னவன்மாரண மெய்துஞ்சம யத்தி
னன்றாருமென் னூராயண நாமம்புகன் றுளதாற்
குன்றாமெனப் புரியும்பவக் குழுவங்கிகொ டுப்போ
லின்றாகிய ததனாலென துலகெய்தின னன்றே. (௫௬)

மாபாவிக ளானாலுந்தென் வைவச்சுத மருவுன்
கோபாணையிற் படியாருளர் குறியேவர்க ளென்னிற்
காபாலிபார் வதியென்பெயர் கழறுற்றவ ராகு
நீபாசமங் கவர்மேல்விடு நினைவைக்களை வாயே. (௫௭)

அன்னார்புரி பாவங்களை யாராய்ந்தவர் தமக்கே
யின்னாநிர யத்துப்த்திட வின்றின்றனக் காணை
யென்னாமம்வி ளூபுதம்முட லிகப்பாரையுங் கங்கை
முன்னாவுடல் விடுவாரையு முன்னேன்மதி யென்றான். (௫௮)

அரியிவ்வணம் புகலுத்தர வனைத்துங்கனிந் தேற்றுச்
சரியவ்வணம் புரிவேனெனத் தாட்டாமரை தொழுதே
தெரியும்படி யமன்றூதர்தந் திரளோர்தரத் தெருட்டி
மரியுந்தகை யோரெய்துதன் வளமைப்பதி யடைந்தான். (௫௯)

பரத்தைத்துணை கொடுபற்பல பவங்காணசா மிளன்றான்
பரத்தைத்துணை பெறுபத்தனற் பணியோர்தின மாற்றிச்
சிரத்தைப்பெருக் கினர்தேர்ப்திரு வைகுந்தமடைந்தே
தரத்தைக்கடந் துளசிற்சுகச் சலதிக்கிடை படிந்தான். (௬0)

சாவுற்றிடு காற்கிங்கரர் தமக்கஞ்சுபு மகனைக்
கூவுற்றிடு கொடும்பாவிகைக் கொள்பேறிது வென்னி
னூவுற்றிடு நாராயண நாமஞ்செபித் தவன்றாண்
மேவுற்றிடும் பெரியோர்பெறல் விள்ளும்படித் தாமோ. (௬௧)

கானப்பெரு மறையின்றிரள் கழறுந்தகை மருவு
ஞானப்பெரு நாராயண நாமம்பல விருந்துங்
கானக்கொடு விலங்கொத்திழி கயமைக்குண மனித
ரீனக்கொடும் பேய்ப்பேர்மகர்க் கிடுவார்மதி யென்னே. (௬௨)

அகரஞ்சகத் திரமந்தணர்க் களித்தாவதென் னணியார்
சிகரஞ்சகத் திரமன்பினிற் செய்தேமுடித் திடிலென்
பகருந்தவ யோகிக்கொரு பகலூண்பல னுக்கே
நிகரில்லைநிச் சயமென்மறை நிசமாக்கின னிவனே. (௬௩)

வேறு

சீரார்மறையோர் குலத்துதித்துந் தீமைக்கொருபெட் டகமாகிச்
சேருஞ்சரமத் தெமபடர்க்குச் சிந்தைகலங்கித் தன்சுதனை
நாராயணவென் றிடவுனரு ளுமம்புகன்று னெனவைகுந்த
நாட்டிற்புகுத்த வருள்பொழியு நளினமலர்க்கண் ணாயகனே
பாராருன்று ளுடிநிதம் பலவாநின்சீர் பகர்வேனைப்
பாராமுகங்கொண் டிவ்வணமிப் படிமீதலையப் பார்த்திடலுன்
னேராருளமொக் குஞ்செயலே லெளியேனுரைப்ப தென்னுளதே
யிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. ()

அசாமிளகதி முற்றிற்று.

ஆகூ கவி (௫௧௯)

---

ஆறுவது

# சடாயுகதி

நாராயண நாமஞ்சொல லுவின்பய னென்னப்
பாராயணஞ் செய்வோருளப் பயமற்றிடப் புரிந்த
சீராரசா மிளன்சேர்கதித் திறஞ்செப்பின னினிமேற்
பேரார்சடா யுவினற்புகழ் பேசத்துணிந் தேனே. (௧)

வேறு

அண்டரினம் புகழ்சீர்சா லணிராம சந்திரன்று
னெண்டருமன் பினிற்சிறந்த விலக்குமணன் றுணையுறவே
திண்டகுகற் பின்றிறந்தோய் சீதாபி ராட்டியுடன்
றண்டகமா வனத்தினிடை சஞ்சாரம் புரிநாளில். (௨)

வஞ்சகமு முடல்வலியும் வாய்ந்தவிராக் கதர்தினமு
மெஞ்சலற வந்திடுதோ றீறடையக் கொன்றுமுடித்
தஞ்சவினங் கண்படைகொ ளணிக்கோதா வரிக்கருகார்
பஞ்சவடிப் பெயர்த்தலத்திற் படர்ந்துபரி வுடனமர்ந்தான். (௩)

அகோரகொடுந் தீவினைமிக் காற்றுகா தூடணரின்
சகோதரியாஞ் சூர்ப்பநகைத் தையலா ளோவியரு
மகோவெனச்சொற் றெழுதரிய வதிசவுந்த ரியத்துடனே
* சகோடமெனு மொழிபுகன்று தாசரதி யிடமடைந்தாள். (௪)

---

* சகோடம் - யாழ்.

அங்கடைந்தா ளிராகவன்ற னணியுருவங் காண்டலுமே
செங்கனன்மீ தூறுமெழுகின் செயலடைந்த சிந்தையுட
னங்கவன்றாட் டுணைபணிந்திட் டங்கசவே ளங்கனையா
லங்கமிளைத் தேற்குனரு ளம்புயநல் கெனவிரவா. (ரு)

நின்மிசையான் கொளுநசைக்கு நிகரலவே மூழியுமா
லென்மிசைநீ யருள்பொழிதி யெனலுமிரா கவன்புகல்வான்
சென்மிசைதோன் றியபொழினேர் திகழளக மயிலனையா
யென்மிசைதோன் றியவிளைய னிருந்தனனுண் டடையென்றான். (சு)

புன்னகையோ டிராகவன்றான் புகன்மொழிமெய் யெனநம்பி
யின்னலற விலக்குமண னிருக்குமிடத் தினிதடைந்து
தன்னதுசங் கற்பமொடு தகுராம னுஞ்ஞையையுஞ்
சொன்னபொழு தினிலிளையோன் றாநகைகொண் டியம்பிடுவான். (எ)

வாசமலர்த் திருவும்விழை மாதர்சிகா மணிகேட்டி
தேசவிருந் திருமேனிச் செம்மலிரா கவன்றிருத்தாட்
காசகன்மெய்ப் பணிவிடைக ளருந்தவமாக் கொண்டியற்றுந்
தாசன்யா னெனைவேட்ட றக்கதன்றுன் றரத்தினுக்கே. (அ)

கோதைநினை நான்வேட்டுக் கொள்ளுவனே னீயுடனே
சீதையுள மகிழேவற் சேடியென வவள்பணிக
ளேதையுமீண் டியற்றவரு மிராகவன்பத் தினியாமோர்
மேதையுறி லென்நலமு மேவிடுமோர்ந் தியற்றென்றான். (கூ)

என்றிசைத்த விலக்குமண னினியமொழி கேட்டலுமே
நன்றிதுகா ணிராமனுக்கு நாமிளைய மனையாளா
யொன்றிடிற்சீ தையினுமிக வுள்ளுரிமை பெற்றிடலா
மின்றிலக்கு மணன்பணிக ளியற்றிடவும் பெறலாமால். (க0)

என்னினைவு கொண்டனளா யிராகவன்மாட் டுற்றிளைய
மன்னினைய வாறுரைத்தான் மற்றதனு லெனையேன்றிட்
டென்னினைவு தீர்த்தருள்க வெனலுமிரா கவன்புகல்வான்
மின்னிகர்சிற் றிடைவாட்கண் மெல்லியலோ திடல்கேளாய். (கக)

அன்னமொரு வெழினடையா ரணிச்சீதைப் பேருடையாண்
முன்னமொரு மனையுடையேன் மொழிநினையுங் கொள்வேனேற்
பின்னமொரு வாத்துயரம் பெற்றுழல்வ தல்லாது
தன்னமொரு சுகம்யாருஞ் சார்ந்திடுதல் கூடாதால். (கஉ)

வருமனையொன் றின்றியவன் மனையில்வதி பவனேனு
மருமனையில் லான்றனக்கு மனையாகிற் சுகமன்றித்
தருமனையொப் பென்றேது தகைமருவுற் றவனேனு
மொருமனைமுற் கொண்டானு லொண்டொடியார்க் கின்புண்டோ. (கங)

ஆதலிலென் றனக்குமனை யமைந்துள்ளாண் மற்றெனைநீ
காதலினல் விரும்புவது கடனன்று லென்னுடைய
சோதரனோர் மனையின்றித் துலங்குகின்றான் மற்றவனுக்
காதரமார் மனையாத லதினலமா மஃதன்றி. (கச)

ஆதரமார் முன்னவனோ ரணிமணங்கண் டதன்பின்னர்
சோதரனுக் கத்தகைய தொழின்முடியா தாசையினான்
மாதர்பலர் தமைத்தானே மணம்புரிந்து கொளன்மாண்பார்
வேதவிய லுலகியலென் வியனெறிகட் கிலாமால். (கரு)

நால்வருந்துன் பெய்தாம னன்னலவின் பப்பெருக்கஞ்
சால்வகையை நானுரைத்தேன் றையலுணர்ந் தியற்றென்னக்
கோல்வயங்கு கையுடைய கொற்றவனோ திடலோடு
மால்வகைநெஞ் சினள்சரத மாற்றமிதென் றுளமதித்தே. (கசு)

இலக்குமணன் பாலுமைத்திட் டிசையாதோர்ந் திராகவன்வாழ்
தலக்குமணத் தாசையினாற் சார்ந்தனளிவ் வணம்பலகாற்
கலக்குமனத் துயரோடுங் கடலிலிடுஞ் சுரையேபோற்
றுலக்குறத்தன் மனப்பான்மை தூலத்துந் தோற்றினளால். (கஎ)

உற்பலநேர் விழிமடவா ளுபயர்களி லொருவரிரு
வெற்பனதோட் டோய்ச்சிபெறும் வேட்கையினல் வெறுப்பின்றிப்
பற்பலகா லங்குமிங்கும் படர்ந்துமங்ஙன் பலியாதா
னற்பயனெய் தாள்வெகுண்டுண் ணுடுவளிவ் வாறம்மா. (கஅ)

அமைநிகர்தோட் சீதையெனு மணங்கின்று மெனிலணியார்
தமையனெனத் திகழழகன் றணவாம லுள்ளன்பி
னமைமணந்து கொள்வனென நாடினளாய்ச் சானகியைக்
குமையவெடுத் துண்பனெனக் கொண்டருகிற் படர்ந்தனளால். (கசூ)

மடுத்திடுவன் யானெனத்தன் மனங்கொண்டு சானகிபா
லடுத்திடுமோ ரரக்கிநிலை யறிந்திலக்கு மணனுனன்
கடுத்திடுவெஞ் சினமிக்குக் கடுகியடைந் தணிவாளால்
வடுத்திகழ வன்னவடன் வார்நாசி யறுத்தெறிந்தான். (உ0)

மணங்காணப் பொறியரிய மாட்சியவ யவமுற்றே
கணங்காண வின்னலத்தைக் கைத்தாக்கக் கருத்தமைந்தாள்
மணங்காணப் பொறியரிய மாட்சியவ யவமுற்றே
கணங்காண வின்னலத்தைக் கைத்தாக்கக் கருத்தமைந்தாள். (உக)

நாசியறுப் புண்டலுமே நனிபுலம்பி யவமவியும்
வேசிகரன் றாடணன்பால் விள்ளுவளிவ் வணங்கானின்
மாசிறவ வேடமுள மானிடரோ ரிருவருடன்
றேசிலகு மலர்மகணோர் தெரிவையொருத் தியுமிருந்தாள். (உஉ)

அன்னவடன் பெருமிதஞ்சா லதிசவுந்த ரியப்பொலிவை
யென்னெனச்சாற் றுவலம்ம வேந்திழையாம் வடிவமைந்த
வென்னதுநெஞ் சமுங்காத லெய்தியதான் மற்றவடான்
பொன்னனையா ளன்றவளைப் போல்வாள்பொன் னெனலாமால். (உ௩)

கண்டவளை யுமக்குரிய காதலியாக் கிடுமாறுட்
கொண்டருகுற் றெடுத்தனுமக் குமரரென்னு சியையரிந்தே
தண்டருமாச் சிரமநின்றுந் தள்ளவிவ ணடைந்தனனீர்
மண்டமரிற் கொன்றவரை மற்றவட்கொள் ளீரென்றாள். (உச)

குணங்குலவு நல்லார்தாட் குறியாரைக் குறியாரை
யணங்குலவு வானகத்தி லமைக்குமறம் பூண்டார்போற்
குணங்குலவு நல்லார்தாட் குறியாரைக் குறியாரை
யணங்குலவு வானகத்தி லமைக்குமறம் பூண்டனரால். (உரு)

புவாத்தகைதோய் புருடர்கள்சை யோகமுறத் தன்னகமு
ளவாத்தகைதோ யாதுதமக் கானுவின் பீந்தருளுந்
தவாத்தகைப்பத் தினிக்குமுய றங்கைபுகன் றிடலோடுஞ்
சுவாத்தகையோர் பெருஞ்சேனை சூழ்தரப்போர் குறித்தடைந்தார். (உசு)

சென்றவர்தா மிராகவன்பாற் செருத்தொடங்க வக்கணத்திற்
கொன்றழித்தா னிச்செயலைக் கூறிடக்கேட் டன்னவடான்
கன்றலகி றுக்கமுடன் கலுழ்ந்திலங்கை மாநகர்ப்பாற்
பொன்றலியற் றுங்கலதி போற்புகுந்தாண் மூக்கொழிந்தே. (உஎ)

வேறு.

புக்கசூர்ப்பநகை மாதிராவணன்முற் பொங்குவெந்துயர்கொடுபுகலுந்
துக்கமிக்குறவென் காரணந்தங்காய் சொல்லுதியென்றலும்புகல்வாண்
மிக்கசீர்த்தண்ட காரணியத்தின் மேவினேனவ்விடையிருவர்
தக்கசிரிராம விலக்குவநாமந் தாங்கினர்தசரதன்மைந்தர். (உஅ)

சாபமோடம்புந் தழைத்திடுகரத்தர் தம்புடைச்சானகிப்பேர்சால்
ரூபலாவணிய மமைந்தமாதுறுத னோக்கினேனோக்கலுமுனது
ஞாபகமமைந்துன் றனக்கவட்கொணர்வா னுடினன்முயறலுமிளையோன்
கோபமுற்றவன்கை வாளினலெனது நாசியைக்கொய்தனன்பின்னும். (உகூ)

சோதரராகித் திகழ்கரனுடன்றா டணைபும்படையுடன்றொலைத்திட்
டேதமற்றெழிலார் தண்டகாரணியத் திருந்தனரென்றவளியம்பச்
சாதலெட்டியரா வணனுடன்மாரீ சன்றனைச் சகாயனுக்கொண்டு
சீதளப்பொலிவா ரந்தமாவனத்திற் சேர்ந்தனன்றீவினைச்சிமிழ்ப்பால். (௩0)

சேர்ந்தவன்மாரீ சன்றனைச்சுவணத் திறம்பொலிமான்வடிவாக்கி
யார்ந்ததைப்பிடிப்பா னிராகவனகல்கா லவனழைத்திடுதலிற்கூவப்
பேர்ந்திடாதிளையோ னிருந்திடச்சீதை பேசுமாற்றக்கொடுமையினை
யோர்ந்திராகவன்பா லேகினனிளையோ னுற்றனனுடனிராவணனே. (௩க)

கொடியராவணன்பொய்த் தவசியாநெருங்கிக் கோலமார்சீதையைக்கொண்டே
நெடிய தன்னிலங்கை நோக்கினனடந்தா னேரிழையிராமலக்குமணர்க்
கடியவோர்துயரங் கொண்டழுதழைத்த கம்பலேகாதுறக்கேட்டான்
படியறுதசர தன்றனன்னேயன் பகரிராகவனடிப்பத்தன். (௩௨)

சடாயுவாநாமந் தரித்தவனுடனே தன்விழிகொண்டுநோக்குதலும்
விடாதவன்பினனுச் சீதையைத்தேரின் மிசைக்கொடுபடர்ந்தனன்வெய்யோன்
கெடாதநன்னலஞ்சால் சடாயுவாண்டுடனே கெழுமிநிந்தனைபலகிளத்தி
யடாதுனக்கிஃதென் றன்னவனுணர வன்புடனின்னனவறைவான். (௩௩)

தனன தானதன தத்ததன தத்தன.

செயவி ராவணனெ னப்புகழ்பொ றுத்துளாய்
செழிய மூவுலகி னுக்கிறைமை பெற்றுளாய்
வயமுலாவுபிர மக்குலமு தித்து நீண்
மகிமை தோய்தருபு லத்தியன்ம கிழ்ச்சிகூர்
வியனி லாமகனெ னக்குலவி மெத்தவே
விரியு மாரணமு ழுக்கவறி வுற்றுளாய்
கயவ ராய்மலவி ருட்டின்முழு குற்றபேர்
கருது மோர்செயலி தைப்புரிதல் பெட்பதே. (௩௪)

தனன தத்ததன தானதன தானன.

இராம லக்குமண ராகுமிரு வோருமே
யிலாத வச்சமய மாசிரம மேவிநீ
துராசை மிக்குமக சாலையிடை சார்நெய்தாழ்
* சுவாவெ டுத்தகலு மோர்செயலே மானவே
விராவு கற்புடைய சானகியை மால்கொளா
விசார மற்றிவித சோரமுயல் பான்மைதோ
யிராவ ணக்கொடிய பாவியுன தாவிதா
னிலாம லற்றிடவி தோபுரிவன் யானென. (௩௫)

தன்ன தந்ததன தானதன தத்தன.

என்னு டன்கடிது போரினையி யற்றுவா
யின்ன வன்கிழவ னேர்படைகை பெற்றிலான்
மன்னு றும்பறவை யானகுல முற்றதோர்
வன்மை யின்றியவி லேசனென வுட்கொளேல்
துன்னு மென்றனுயிர் தூலவுட லிற்புல்கா
றன்ம தங்கொளுனே யூரடைய விட்டிடே
னென்னும் வன்சொல்கள்ச டாயுநவி லுற்றனே
னின்னன்மிஞ்சமிடலார் சிறையிலெற்றுரு. (௩௬)

* சுவா - நாய்,

தனன தத்ததன தத்ததன தய்யன.

சிரசி னுற்றமகு டத்தைவிழல் செய்தகா
திருட னுக்கிரசி னத்தொடுதன் மெய்கொளோ
ருரம தித்துறசி ரிப்பினுட னெல்லைநீ
டியர்த னுக்குனிய வைத்ததனி லெல்லைதீர்
சாமு கைத்திடனு மற்றவைக ளெய்தவே
தனது ளத்தின்மச கத்தகையி லுள்ளியே
கரவ னுட்பெரிது மச்சம்விய னெல்லவே
கடிதொ டித்ததுயர் விட்புலர்க டுள்ளவே. (ருஎ)

தனன தானதன தானதன தானன.

தனது கால்களுட னேசிறையி னுண்மைதோய்
தசகி ரீவனுறு தேரதனை நூறியே
பனக மாமுடிகள் பாரின்விழு மாசெய்கால்
பதக னீடுசின மாயளவில் வாளிதூய்
வினதை பாலகனை மூடினன தாலனேன்
வெருவு ரூதிருப தானகர மேலெலா
மினல்செய் சோரிமிக வேபெருகி யோடவே
யிலகு நீடலகி னுலமர்செய் தானரோ. (ருஅ)

தனன தத்ததன தத்ததன தத்தன.

சடாயு வித்தகையி யற்றலுமு ளத்திலே
தசான னக்கொடியன் மெத்துதுய ரத்தன
யடாபு ளித்தகையு ஞற்றவலி மிக்கநா
னசாமி குத்தலழ குற்றதென வுட்கொளா
நடாவ லுற்றனன னற்படையை மற்றதா
னலோனெ ழிற்சிறைக ரித்தகைமை பட்டதா
லெடாவெ டுப்பைமிகு பத்தியினெ டுத்துளா
னிறேல்வை பெற்றனனி லத்தின்மிசை யுற்றரோ. (ருகூ)

வேறு

கயவனேவனற் படைபடச்சிறகு கரிந்துவீழ்தலுங் கலக்கமிக்கடைந்து
நயனநோக்கற மூர்ச்சிதனுகி நவிலிராகவன் பானடந்திட்ட
செயலெலாஞ்சொலுங் கருத்தமைந்தவனுத் தேகம்வீந்திடாத் திடத்துடனிருந்தான்
வயமுலாவுதன் னுயிர்மிசைக்கோபம் வைத்தமூர்க்கன்றன் மாநகரடைந்தான்.

இன்னபோதிரா கவவிலக்குமண ரெழில்கொள்சீதையெங் கேயெனத்தேடி
யின்னன்மிக்குறு மனத்தினராகி யிருவரும்விரைந் தெய்திடுமேல்லை
மன்னரும்பரு வதச்சிகரியைப்போல் வழியமைந்துறுஞ் சடாயுவைநோக்கித்
துன்னரும்புக ழிளையகோவையத் தோடிராகவன் மாடிசைத்திடுவான். (சக)

நாமடைந்திடும் வழியடைத்தங்ங ணண்ணுகின்றதியா தெனாவின்றெல்லை
யாமவன்றனக் கருகமைந்தாய்கா லன்பிறக்கட்புன லாறெனப்பெருக்கி
ராமநாமமெல் லெனச்செபித்திருந்தா னவில்கைகேட்டலு நனிபருகமைந்து
சாமளத்திரு மேனிகொளிராமசந்திரன்றய வாய்வினவிடுவான். (சஉ)

யார்கொனீயெவ ணின்றிவணடைந்தா யேய்ந்தநின்சிறை தீந்ததேனிவிதச்
சோர்வுநீயுறப் புரிந்ததியார்யாவுந் துலங்கிடும்படி சொல்லுதியெனலுஞ்
சார்தலுற்றிடு நீவிர்யார்நுந்தஞ் சரித்திரத்திறந் தெரித்திரென்றிட்டா
ணூர்மிகுத்திடு மனத்திலக்குமண னடந்தயாவுமாங் கடைந்தமட் டறைந்தான்.()

கேட்டபோதுளத் துவகையுந்துயருங் கிருத்திரத்திறை கிடைத்தனனுகி
வாட்டமிக்கறை வானிராகவப்பேர் வள்ளல்யான்மிக வார்த்திகனன்றிக்
கோட்டமேவிய விராவணனுகைத்த கொடுமைசாலனற் படைதுளைத்தலினு
லேட்டைசார்மர ணப்பெருமூர்ச்சை யெய்தியுங்கிடந் தேன்றகையிதனுல். ()

ஏற்றவென்மனத் துள்ளவெண்ணங்க ளியாவுநின்புடை யிசைத்திடத்தக்க
வாற்றலின்றெனக் கென்னினுநீதா னறிந்திடச்சுருக் கிச்சிலவறைவேன்
சாற்றுமென்பெயர் சடாயுவென்காதிற் சனகனந்தனி தன்னுளத்துயரத்
தூற்றவார்த்தநா தந்தெரிந்தவமிக் குளவிராவண னுடனமர்புரிந்தேன். (சரு)

தீவினைக்கொடி யோனனற்படையாற் சிறைகரிந்தனன்றறைமிசைவீழ்ந்தேன்
பாவிதன்னகர்க் கேகினனதுகாற் பரிவிற்சீதைபெற் பார்த்திதுசெய்லை
மேவிராமலக் குமணர்களிடத்தில் விள்ளுகென்றெனை வேண்டுபுவிளம்பிக்
காவிநேரிரு விழிப்புனலுகுத்துக் கலுழ்ந்தகன்றனள் காதையீ தாமால். (சசு)

தண்டகாரணி யப்பெருந்தவத்தர் தம்முளோர்ந்திடா விம்மிதமுணர்ந்து
விண்டகாரண ருமக்குநான்றெரிக்க வேண்டுகின்றவோர் விடயமற்றிலையா
லண்டர்கட்கரி தானநுஞ்சேவை யந்தியத்தினி லடைந்துயும்பேறு
கொண்டுளேனிது கிடைப்பதேபட்சிக் குலத்திலாமுடல் கொண்டவென்றனக்கே.()

வீணிலிவ்வுடற் காத்தவம்பெருக்கி வீந்திடும்பவ விகங்கமாந்தகையேன்
வாணிலாமுகச் சானகியின்ப மருவிடத்தகு வான்பணிவயக்கி
மாணிலாவுநின் றிருவருட்சேவை வாய்த்திடப்பெரு மாட்சியுற்றதனு
லேணிலாவுநின் பத்தருளொருவனென்னுமின்பமோ டிசைபுமேய்ந்தனனே. ()

இராமசந்திரப் பிரபுநீயென்பா லெய்திலுன்றரி சனம்பரிசனங்கொண்
டுராவுமென்னுடல் விடுவதற்குள்ளத் துன்னினேனென வுரைத்திடலோடும்
பராவுபத்தர்க டம்பராதீன பகவனன்பினுற் பனித்திருகண்ணீர்
விராவுமன்னவ னுடற்றழுவுதலும் வினைகண்முற்றறும் விமலமேய்ந்தனனே.()

கருணைராகவன் கரந்தன்மேற்படலுங் கரையிலின்பமக் கணத்தின்மேவினனுய்
மருவுடற்சுமை யொழித்துவைகுந்த வான்பெருங்கதி சேர்ந்திடலானன்
றிருவருட்கட லாமிராகவனச் செயலுணர்ந்துளத் துயரமிக்கடைந்திட்
டொருவுமவ்வுடலினைத்தகித்தன்பா லுதகதானமு முஞற்றினனம்மா. (ருo)

பெருகுமன்புறு சடாயுவினுள்ளப் பிரீதிக்காயருட் சிரீதாணுன்
விருகவேட்டஞ்செய் தங்குலவிடம்பல் விகங்கந்துய்த்திட விருந்துசெய்திட்டான்
மருவுமிச்செய லோர்ந்ததண்டகமா வனத்தின்மேவிய மாதவராருஞ்
சுருதிபற்பல கொண்டிராகவனைத் துதித்துத்தம்மிடந் தோய்ந்திருந்தனரே. ()

தனயனுப்பெறும் பெருந்தவஞ்சான்ற தசரதன்பெறுத் தகனமாதியவு
மனவசம்பெறும் யோகியர்விழிமுன் வந்துருத்தரி சனமக்த துவமும்
வனமுறும்புள்ளாஞ் சடாயுபெற்றமைந்த மகிமைதன்னையுண் மதித்தறிவார்க்கே
யனகபத்தியின் மாட்சியிற்றெனநன் கறிவதாகுமே ஊயர்க்கறிவரிதே. (ருஉ)

எத்திறத்தனு வெய்துயிரேனு மெய்திறபத்திமிக் கிருஞ்சுகமெய்து
மத்திறங்கொளா வுயிர்தனுவெதன்பா லடையினுஞ்சுக மடைவதின்றின்றே
யித்திறத்தினுற் சுகமுறவிழைபு மெண்ணமேய்ந்திடு மியல்புறும்பெரியீர்
பத்தியாகிய சுத்தசன்மார்க்கம் படர்மினேபவ விடரினேவறவே. (ருங)

வேறு

தளப்பங்கயத்தண் பணைப்பெருக்கஞ் சால்கோசலநா டாட்சிபுரி
தகைபார்தசர தன்றவத்திற் றனயனெனவந் தவதரித்தே
சளப்பண்புறுவா னரங்கரடி சாற்றும்பறவை யினங்களையுந்
தகுதொண்டியற்றப் புரிந்துகதி சாரப்புரியுந் தனிப்பொருளே
வளப்பண்புறுசற் குருவடிவா வந்துன்றிருத்தாண் மலர்கருதும்
வாஞ்சைதழைப்பேற் குன்கணருள் வழங்காய் வாளாங் கிருக்கிலருட்
கிளப்பமிகவுண் டென்றடியே னிசைப்பதென்னீ யறியாயோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருச)

சாடாயுகதி முற்றிற்று.

ஆ. கவி ருஎ0

---

ஏழாவது

# அம்பரீடகதி

வானிடத்தினிற் றிரிதருபறவை வருக்கமாகிபு மாநிலத்தமைந்த
மானிடப்பிறப் பினர்க்கருங்கதிச்சீர் மருவிடுஞ்சடா யுவின்றிறமுரைத்தேன்
வானிடத்தரும் புகழ்பெருஞ்சீர்த்தூர் வாசனுள்ளமு மருளுறபுரிந்த
வேனியற்றிடு மம்பரீடன்றன் மிக்கமாட்சிமை விளம்பிடுவேனே. (க)

வேறு

உம்பரீடல ரென்னுமுரத்தின
னிம்பரீடணை யாவுமறுத்தவ
னம்பரீடத் தளவுண்டுகாக்குநோன்
பம்பரீடனென் னுமமமைந்தவன். (உ)

நயோத்திகொண்டவிர் நாலெனவோங்கிய
மெயோத்தினந் தெரிமேலவர்மெச்சுசீர்த்
தயோத்தியாமாந்தா தாவழித்தோன்றலா
யயோத்திமாநக ராட்சி செய்மன்னவன். (௩)

உதாரசீலமு முற்றநன்னீதியுஞ்
சுதாகரற்கிணை சொல்லருட்டன்மையுஞ்
சதாகதித்திற லுந்தகுவன்மையும்
விதாவிதம்படு மேன்மையும் வாய்ந்துளான். (௪)

விண்டுபத்தி விளங்கொருபேருருக்
கொண்டுவந்தது கொல்லெனுமாட்சியான்
மண்டுதன்னகர் மக்களெல்லாமரி
தொண்டுகண்டிடத் தோற்றிடுதூய்மையான். (௫)

சீர்த்தமாநக ரிற்சிறுமைந்தரும்
வார்த்திகத்தகை யோருமற்றேவருந்
தீர்த்தனேகா தசிவிரதத்தினை
யார்த்தபத்தியி னாற்றிடவாற்றினன். (௬)

திரவொரேகா தசியிலுபவசித்
திரவுநித்திரை யின்றியிருந்துபின்
வருதுவாதசி வைகலின்யாற்றினொ
டிரவிற்பூசையு ளன்பினுளாற்றினன். (௭)

அன்னகாலை யரனிகர்சீர்த்திசான்
மன்னருட்டுரு வாசமகாமுனி
துன்னமற்றது காண்டலுந்தோன்றலுட்
பன்னருங்களிப் பவ்வமுட்டோய்ந்தனன். (௮)

பாவுநீடர்க் கியபாத்தியாதிய
யாவுமேவிடப் பூசையியற்றியே
யோவுறுவரு ளீரும்மடிமைசெய்
மேவுநற்பணி யுண்டெனில்விள்ளுவீர். (௯)

என்றுமன்னன்வி னவவிருடிதன்
றுன்றுநெஞ்சத் துவகைதுளும்பிட
நன்றுரைக்குவ னானுமென்சீடரு
மொன்றுமேகா தசியுபவாசத்தேம். (௧0)

பன்னரும்பசி கொண்டுபடர்ந்துளே
மன்னநாடி யணைந்தனமென்றலு
மன்னன்பாக்கிய மாபாக்கியமென
மன்னகத்தின் மகிழ்ந்தனனேகையே. (௧௧)

கரவிலோகைகொள் காவலனன்னரை
விரைவினுன விதிமுடித்தெய்துவீர்
வரவுநாடி வதிதருவேனெனப்
பரவியேவப் படர்ந்தனரென்பவே. (கஉ)

ஒத்தகாலை யவர்க்குணவாதிய
சித்தமாகச்செய் தேயெதிர்நோக்கினுன்
புத்திமிக்க புரோகிதன்மன்னன்மு
னத்தியின்ன நவிலலுற்றுனரோ. (கங)

மன்னர்மன்னது வாதசிநற்றிதி
தன்னமேயுள தன்மையினுலதன்
முன்னர்பாரணை நீமுடியாயெனிற்
பன்னலாம்விர தம்பெறும்பங்கமே. (கச)

என்றபோதிறை வன்றனுளெண்ணுவா
னன்றுபாரணை நான்செயலெவ்வணங்
குன்றுறுத்தவங் கொண்டதுர்வாசனை
யொன்றுசீடரை யோவித்தனித்தெனு. (கரு)

ஆனமாதவ ராருங்கடிதினி
ஞனமாதி நயந்தெய்துவாமெனப்
போனதாலவர் தாம்புசியாமுன
நானயந்துண னன்றலவாதலால். (கசு)

என்னசெய்குவன் யான்செயல்சாற்றுதி
யென்னவன்னவ னீசொலியல்புநன்
றின்னநல்விர தங்கெட்டிடாதரி
பொன்னடிப்புன றுப்பொதுவாயென்றுன். (கஎ)

ஆயவண்ண மரசனற்றீர்த்தத்தை
வாயகம்பெயும் வேளைதுர்வாசனுந்
தூயமாதவத் தோன்றறன்சீடர்க
ளாயமோடு மடைந்தனனுண்டரோ. (கஅ)

மண்டசீர்த்துரு வாசநன்மாதவற்
கண்டபோதுட் கலங்குபுகாற்றழ்இத்
தொண்டனேன்புரி தோமுளஞ்சூழ்கலை
தண்டருந்தயை செய்யெனச்சாற்றினுன். (கசு)

தத்தனத்தனத் தனதானதானன

அக்கணத்தினிற் றுருவாசமாமுனி
யக்கரக்கையொத் திடவேசிவீரென
மிக்கருத்திரத் தகைமேவிநாசியில்
வெச்செனப்புகைத் திரள்காலநீடிய

செக்கர்பெற்றநற் சடைபாரின்மோதிய
செற்றமைக்கிருத் திமமேவியாவலொ
டிக்கணத்தினிற் செயுமேவலோதுகெ
னத்தவத்தனப்பொழு தேபிதோதுவான். (உ0)

தந்ததானனத் தனதான தானன

அம்பரீடனைத் தெறுநீயெனுநுவ
லந்தவோர்சொன்முற் றடையாமுனேமிக
வெம்பகோரவுக் கிரநீடுபாரிடம்
வென்றியோடுகிட் டியவேளைநீடிய
வம்பயோதரத் திருமேனிமாயவ
னங்கைவேவுகொற் றநிலாவுபேரொளி
பம்புமாழிபற் பலகோடியாதவர்
பண்பினேடுமுற் றதுவேகமாயரோ. (உக)

தனத்தனத்தனத் தனதானதானன

அதிர்ச்சிபெற்றவட் புகுமாழிநாயக
மரைக்கணத்தினிற் குறள்பாறமோதுபு
முதிர்ச்சிபெற்றசெற் றமுலாவுமாதவ
முனிக்குவெப்புறச் சுடுகாலனேனுடல்
விதிர்ப்புமிக்குறப் பிரமாமுன்மேயிதை
விலக்கெனச்சொலக் கணம்வேதனீள்படை
யெதிர்ப்பிலுற்றதைத் தடைகாணுமேன்மைய
தெனக்கிலைத்தடுப் பவனேரின்மாயனே. (உஉ)

தந்ததத்தனத் தனதானதானன.

என்றுசொற்றெழிற் றுருவாசமாமுனி
யிஞ்சைமெத்தவுற் றிடுகோரமார்கிலை
குன்றுறப்புறத் தினின்மேவிநீடுவை
குந்தமெட்டியச் சுதவாதிதாண்முன
நன்றுறப்புவித் தலைமேல்விழாமிக
நன்குதுத்தியத் திரள்பாடுபோதரி
யொன்றுமத்தமெட் டுடையானைநாடல்செய்
தும்படர்ச்சியெற் றெனவோதும்வேதனே. (உ௩)

தனனதந்தனத் தாத்தானதானன.

திசைநிறைந்தமெய்ச் சீர்த்துருவாசனேர்
றிகிரியம்படைக் காற்றுதென்மாடுற
விசையொடண்டியெற் காப்பாயெனுவெனேர்
மிடலொழிந்துன்முற் றீர்த்தாளவேகின

னிசைவுகொண்டுகட் பார்த்தாளுவாயென
விறைவிளம்பிடக் கார்த்தூயமேனியன்
வசையர்தங்குலக் கூற்ருகுநேமியை
மறியல்கண்டிடற் காற்றேன்மெய்நானுமே. (உச)

தானதந்தனத் தாத்தானதானன.

காரணஞ்சொலக் கேட்பீர்களியானெரு
காலம்வெம்படைக் கோப்பாலொர்சூளுரை
நாரமைந்திடச் சாற்ருவுளேனது
ஞாலவங்கணெற் போற்ருேகைமேவிய
வீரவன்பினர்க் கூற்ருனதீவினை
யார்புரிந்திடற் கூக்காளராயினு
மாரணம்படத் தாக்காயெனுவிளொர்
வாசகந்தனைப் போக்கேனிதாணையே. (உரு)

தந்ததானனத் தந்தனதானன.

ஒன்றலேனுநற் றந்திரமியானிவ
ணென்றையோதலுட் கொண்டனிராகியொ
ரென்றனுதுபிற் சென்றுறில்யான்முழு
விந்துவேங்கிர்க் குந்தையமேயெனை
யன்றியாதுமுட் சிந்தைகொளாவென
தம்பரீடன்முற் சென்றிடிலாயவன்
மன்றவோதிடிற் பின்புயலாமென
மன்றன்வாயிலீற் சென்றனரியாருமே. (உசு)

தய்யதானனத் தந்தனதானன.

இவ்வெலாநடக் கின்றதுகாறும
னெள்ளைமானுமப் பும்பருகாதுயர்
செவ்வைநீடருப் பைந்தவிசேறபு
தெய்வநாடிநிர்ச் சஞ்சலனுயுற
நவ்வன்மானுமைச் சுந்தரமேனிய
னள்ளுமாமுனிப் புங்கவன்வேதனெ
டொவ்வின்மாணருட் கண்களினேருற
வொல்லுமேல்வைமிக் கின்பிடைமூழ்கியே. (உஎ)

தாத்தனத்தனன தாத்தனதானன.

நேத்திரத்தினெதிர் பார்த்திடுகாலையி
னீர்ப்பெருக்கமிக வாற்றினில்வீழிய
தோத்திரத்திரள்கள் சாற்றுபுதாளிணை
சூட்டியுச்சிமிசையாற்றரிதாகிய

வாத்திரத்திஞெடெ னேர்ப்படல்போலெவ
ஞர்க்களித்தனேயி வேற்றமெலாமென
நாத்தழுக்கவுடல்வேர்த்திடவோதுபு
நாட்டமுற்றுமிறை மேற்படலாயரோ. (உ.அ)

தனனதத்தன தானனதானன

படியளிப்பரிய தாயமஞேலய
பரவசத்திஞட ஞடியுஞதிரு
வடிகளுக்கடிய ஞகியவேழையை
யருமைபெற்றமக வாமெனவேபெறு
நெடியநற்புகழ்கொ டாதைமுன்மூவெழு
நிலைமைபெற்றுளர்க ளியாவருமேனிலை
கடிதுபெற்றனரு ஞதடியான்வளர்
கடிமனைத்தலையின் மேவியதாலரோ. (உகூ)

தந்ததத்தன தானனதானன.

என்றளப்பரிய தாயலைவாரியி
னின்பமுற்றவர்கண் மூவருமேவிட
நன்றமைப்புறுபொ ஞதனமீகுபு
நன்பொடிப்பொடுயர் பூசைசெய்தேமுடி
கின்றவப்பொழுதி ஞரணனீடிய
கெம்பிரத்தகைகு லாமகராசஞெர்
மன்றன்மிக்கமுக நேருறநாடியுண்
மங்களப்பொலிவி ஞேடுசொல்வானசோ. (௩0)

வேறு

அம்பரீடநா மம்புனையரசமா முனியே
தெம்பமைந்துநீ செய்யுமேகாதசி விரதம்
வம்பமைந்திடக் கெடுத்துனைமுடித்திட வந்த
மொய்ம்பமைந்தகோ பத்துருவாசமா முனிபால். (௩க)

என்னடித்துணை யேத்திடுமன்பின ரிரங்க
வின்னலாற்றுந ரெத்தகையார்களே யெனினு
மன்னரைக்கடிந் திடுகென்றியானுரைத்தவா ணேயி ஞற்
கன்னலொன்றின்மு னுற்றதாற்சக்கரங் கதழ்ந்தே. (௩உ)

மிடலமைந்துறு மாழியம்முனியுடல் வெதுப்ப
மடலம்போருகன் புடைசெலவன்னவன் மாட்டா
துடனன்ஞேஞெடு நமதுவைகுந்தமா டுற்றென்
னிடநடந்தவா சொற்றனரோலமிட் டிரங்கி. (௩௩)

இன்னகாரணங் கொண்டிவனிடரொழித் திடுவான்
மன்னநின்புடை வந்தனமித்துரு வாசன்
மின்னகோரமெய்த் தவமுளனுயினும் வினய
நன்னலந்தவிர்ந் தவனதாலவன்பிழை நாடேல். (௩௪)

இக்கணத்தினிம் முனியுடறகித்திட வெண்ணுஞ்
சக்கரப்படை யகன்றிடும்படியொர்சொற் சாற்றிப்
புக்கமாதவன் பசிகெடப்புரியென வருளான்
மைக்கவின்றிரு மேனிகொண்மாதவன் வகுத்தான். (௩௫)

உன்னிமித்திர னெனவெனையுற்றுலப் பருமிந்
நன்னிமித்தமித் தனையுநானண்ணிடப் புரிந்தா
ரென்னிமித்தமித் துயருழந்தனர்கொலென் றிரங்கிப்
பன்னி *மித்திர னனையவாழியையிறை பணிந்தே. (௩௬)

ஆழிநாயக மேயென்னொர்மனைபிடத் தமைந்த
பாழிமாதவத் தோன்படருறப்பட ராதே
யூழிநாயகன் கரமிசையுற்றமைந் தருளாய்
வாழிநின்னடி யேன்மிசைக்கருணைநீ வைத்தே. (௩௭)

என்றுமன்னவன் றுதித்தலுஞ்சினமுளத் திகந்தே
யென்றுறழ்ந்தவான் படையரியிடத்திலெய் தியதாற்
குன்றுறழ்ந்தமெய்த் தவன்றருக்கச்சமுங் குலைந்தே
நன்றுறைந்தனன் றவிசின்மேலுளமிக நாணி. (௩௮)

அன்னகாலையி லம்பரீடன்முக நோக்கிப்
பன்னகப்பெரும் பாயலிற்றுயிலருட் பகவன்
மன்னர்மன்னவ மாதவன் பசிகெடவல்லே
யன்னமாதிமிக் கன்புடனளித்தனை யாகி. (௩௯)

பின்னர்நீயுமாந் தினைபுவிமுழுவதும் பேணி
யொன்னலார்களென் றுற்றவர்மணிமுடி யுருட்டிப்
பொன்னகர்க்கிறை போற்பலபோகமும் புசித்திட்
டின்னலின்றிவாழ்ந் தீற்றிலெம்பதத்திலெய் திடுவாய். (௪௰)

மருமலர்ப்பிர மாவுனதுளத்தில்வாஞ் சித்த
வருவரங்களே வையுந்தருமாசைகொண் டடைந்தான்
கிருதகிர்த்திய மன்னநீ விரும்பிய கேளா
யொருமைசான்ற வுள்ளத்தினுலினிதென வுரைத்தான். (௪௧)

பத்தவற்சல னுங்கருணைக்கடல் பகர்ந்த
வித்தகைத்திரு வாக்குகட்கேட்டலு மெரியில்
வைத்தவெண்ணெயின் மனமுருகிடச்செயன் மாய்ந்து
மத்தனுமெனப் பரவசமடைந்திவை வகுப்பான். (௪௨)

*மித்திரன் - சூரியன்.

அல்லையோவுமெய்த் தேவயான்றன்னிய ஞகி
யெல்லைதீர்நல மெய்தினனுலிதி லதிகங்
குல்லைமாலிகை யாயுளதொன்றெனக் குறியே
னில்லைவேறொரு வரங்கொள்வானெனதுளத் திச்சை. (சங)

நரவுருக்கொள்யா னென்னிருகண்ணயர் திடவென்
னரண்மனைத்தலை வலிந்தருளாலெழுந் தருளும்
பிரமவிட்டுணு வாமுமோர்தரிசனம் பெற்றேன்
வரமிதிற்பெரி தேதினியான்வழுத் திடவே. (சச)

கொடையருக்கரத் தெந்தைபாலோர்வரங் கொள்வா
னடையருதவென் மனமிகவாஞ்சைநண் ணியதாற்
படையருக்கரத் தண்ணலுன்பாதபங் கயத்தி
னிடையருதபே ரன்பளித்தாள்கவென் றிரந்தான். (சரு)

மன்னர்மன்னநின் மனப்பெருவாஞ்சைபோ லென்னன்
பின்னமும்பெருக் குறவெழுவாரியி லென்றே
யன்னவாகனத் தயனுடனுதியுந் தமது
கொன்னமைந்துள தலங்களிற்குறுகின ரன்றே. (சசு)

ஆயகாலையி லம்பரீடன்பரி வமைந்து
தூயமாதவத் தூருவாசன்கழ றொழுது
நேயமோடன மருத்திநற்றுதிபல நிகழ்த்தி
மேயமாதவற் குவகை செய்தளித்தனன் விடையே. (சஎ)

விடைகொண்மாமுனி வரனுளத்திடைக்களி மிகுந்து
படைகொண்மன்னவன் குணமுமன்னவன்சயப் பண்புஞ்
சடைகொண்மாதவத் தன்னொருதன்மையு முன்னி
நடைகொண்டான்சினத் தாற்கெடாத்தவநடை கொண்டான். (சஅ)

செப்பருஞ்செயன் முற்றியபின்னர்நற் சீலத்
துப்பமைந்தமன் றுப்பமைந்துற்றதூர் வாசன்
றப்பமைந்ததுஞ் தான்சயித்ததுமெணித் தருக்கா
தொப்பமைந்திடாப் பத்திமெய்யுருவுகொண் டுற்றான். (சகூ)

சிவன்றனேடுகிட் டினன்மிசைமுன்னைநாட் சினந்து
நுவன்றசாபமாற் றம்பலிதப்பட நோக்குந்
தவன்றன்மாட்சிமை யம்மவோசிறிதுகொல் சாற்று
மவன்றளர்ந்திடச் செயுஞ்சினம்பிறர்க்கெனுற் றுதே. (ருO)

அன்னநற்றவத் தூருவாசப்பெய ரமைந்தோ
னின்னலுற்றிடப் புரிதருமாழியை யிகப்பான்
பின்னர்வந்துவேண் டிடுதலும்பிரித்திடும் பீடார்
மன்னன்மாட்சிமை மதித்தலாம்வரம்பின தேயோ. (ருக)

வலிதுவந்துதன் னேன்பினுக்கிடர்மிக வயக்கிப்
பொலிவுறுந்தன ருயிரையும்போக்கிட முயல்வான்
மெலிவுதீர்த்திடத் தன்னிடமேவிய வேலே
மலியுமன்பினூற் பூசைசெய்வான்வடி வெதுவே. (ருஉ)

மெத்தியற்றவ முடித்ததன்பயனதா விண்ணே
ரத்தியற்புதத் தகையதென்றுளத்ததி சயிக்குஞ்
சித்தியற்றுமெத் திறத்தினராயினுந் திறஞ்சால்
சத்தியப்பெரும் பத்தர்பாற்பெறுவர்கொல் சபமே. (ருந)

செற்றமீடுரு வாசமாமுனிவரன் றிறலுங்
கொற்றமிக்கவம் பரீடமன்னவனுறு கோட்புந்
தெற்றெனத்தமொர் சிந்தைபுட்டேர்ந்துணர் வார்க்கே
துற்றபத்தியின் மகிமையிவ்வாறெனத் துலங்கும். (ருச)

அராவினத்திறை சுமந்திடும்பார்மிசை யமைந்த
சராசரத்தொகை யாவைபுஞ்சலசலோ சனன்றன்
விராயமெய்வடி வென்றுணர்மெய்ந்நிலை தேர்ந்தோ
ரிராகம்வன்றுவே சங்கடந்திடுவர்க ளினிதே. (ருரு)

வேறு

மன்னுசீ ரம்பரீட மன்னவன் செங்கோ லோச்சுங்
கொன்னுலா மயோத்திநாட்டிற் குடிகளிற் றலைமையோனுப்
பொன்னுறு மளகையானிற் பொலிபொருள் வளமைசான்றேன்
மின்னுறு சீர்த்தியோடு மேதக வாழ்ந்தான்மாதோ. (ருசு)

அத்திரு வாளன்முன்செய் யருந்தவப் பயனேபோன்றோர்
புத்திரி பிறந்தாளன்னுட் புதல்வனின் மிகக்கொண்டாடி
மெத்தியற் சிறப்புமல்க மேதக வளர்த்தானந்தச்
சித்திர முயிர்த்தாளன்னுள் சேர்ந்தன ளெவன மன்றே. (ருஎ)

கலேவரம் பமைந்ததிங்கட் காண்டரு பொழுதின்மோது
மலைவரம் பகன்றுதோற்று மார்கலித் தகையேபோல
விலேவரம் பறுமாணிக்க விளக்கமார் புதல்விதன்சீர்
நிலேவரம் பறிந்துதந்தை நேர்ந்தன னுவகைமாதோ. (ருஅ)

வினத்தினிற் பொலிகின்றாரின் மிக்கபே ரெழிலினல்ல
குணத்தினிற் சிறந்ததன்னோர் கோற்றொடிக் கோதைமாதை
மணத்தினிற் கொள்ளத்தக்க மாட்சியோன் யாவனந்தங்
கணத்தினி லென்னவெண்ணிக் கருத்தினிற் றெளிந்துதேறி. (ருகூ)

மெய்க்கவி னிற்செல்வத்தின் மேதகு குணத்திற்றன்னே
யொக்குமாண் புடையோனீன்ற வொருமகற் கில்லாளாகப்
புக்கதன் மாதைநல்கப் புந்தியுட் கொண்டானுகித்
தக்கநன் மணத்திற்கேற்ற தகுநலம் பலவுங்கண்டான். (சூ0)

தந்தைதன் மனத்தைபுன்னித் தகுமதி யூக்கத்தோடு
விந்தையுற் றிடச்செய்கின்ற மிக்கவச் செயல்களெல்லா
முந்தையின் குறைத்தவத்தை முடித்திட மூளத்தமாது
சிந்தையுட் கொண்டிவ்வாறு சிந்தைசெய் திடுகின்றாளால். (சுக)

பேணல முற்றதந்தை பிரியமுற் றிடத்தற்காசை
காணல வரனைக்கோடல் கற்பதா மகளிர்க்கோர்வ
ணுணல மமைந்தபின்ன ரன்னவன் றன்பான்முற்கொ
ணுணல மழிந்துபாழ்த்த னலமலி கற்பன்றன்றே. (சுஉ)

யாக்கைகற் பினரிற்கொண்க னேவன்மீ தியற்றவுட்சார்
ரூக்கமுன் வரித்துள்ளானைச் சூளையிற் றேயாநிற்பத்
தூக்கிரு நிலேயுமற்றுத் துயரிரு மையுந்தோய்மான
மீக்கிளர் போர்வைமாதர் விதிமறை முறைமையாமோ. (சுஙு)

என்றகத் துன்னியன்பா லீன்றதன் றாதைமாடே
சென்றனள் சிந்தையூடே சிறிதிலச் சையுமிலாளா
யென்றனி மணச்சீருன்னி யியற்றுநின் செயல்களோர்ந்து
நன்றக மகிழ்ந்தேனென்னு ணசைத்தவா றியற்றுகென்றாள். (சுச)

என்னைநீ வாஞ்சைகொண்ட திசைத்தியென் றியம்பத்தந்தை
பொன்னைநேர் புதல்விசொல்வாள் பொருந்துநந் தேயந்தன்னை
யன்னையிற் காக்குஞ்சீர்சா லம்பரீடனையே கொள்வேன்
பின்னையர்க் கொள்ளேன்கொள்வேன் பிரமசரியமென்றாளே. (சுரு)

சாற்றுமென் மொழிபொய்யன்று சரதமே தவறிடேனல்
வேற்றுளார்க் கீவானுன்னுள் விரும்பிடே னிர்ப்பந்தித்திட்
டாற்றுவா யேனோர்க்கென்னி லத்தவென் னுவிபோக்குங்
கூற்றுவ னுவாயென்னக் கூறுபு தீர்த்தாளன்றே. (சுசு)

புத்திரி புகன்றமாற்றம் புரவலன் போல்வான்கேட்டு
ளத்தியாச் சரியமுற்றந் தப்புறத் தமைந்ததன்னோர்
மைத்திரி நெடியவாட்கண் மனைவியை விரையக்கூய்நின்
னத்திரித் தனப்பாலுண்டாட் கமைந்தது வன்பித்தென்ன. (சுஎ)

தோன்றிய நகையென்சொல்கேன் றெல்லுல கொடுபாதாளம்
வான்றிகழ் புவனமூன்றும் வழுத்துசீ ரம்பரீடற்
கூன்றியன் மனைவியாதற் குற்றன ளுளத்திலிச்சை
யேன்றிடோர் கனவிலேனு மீதிவள் பெறுவதாமோ. (சுஅ)

அத்திற விதிபுநந்த மருமகட் கமைவதேனு
மித்திற மரசன்றன்பா லெய்தியீண் டிசைப்பார்யாரே
நத்திற முனியுங்கண்ட நங்கைநின் மகளிவ்வாஞ்சை
வைத்திற வாதவண்ண மறுபிடி வாதமென்றான். (சுகூ)

கேட்டகன் றிடுமில்லாடன் கிளர்தவத் திரணேர்மங்கை
மாட்டனு குபுதன்கேள்வன் வகுத்தவா றெல்லாஞ்சாற்றி
வாட்டடங் கண்ணுயுன்றன் வாஞ்சைமுற் றுததாகுங்
கோட்டகு பொருளிலாசை கொள்வதே யறிவாமென்றுள். (எ0)

அன்னைசாற் றிடுதல்கேளா வறைகுவண் மகளென்றந்தை
முன்னையான் சரதமாற்ற மொழிந்திலன் கருணைப்பண்பாற்
றன்னூரே ரன்னைநின்முற் சாற்றுவ னம்பரீட
மன்னையல் லான்மன்றூரைக் கனவினும் வரையேன்மெய்யே. (எக)

குணம்புரி யம்பரீடக் கோமகற் கல்லாலென்னை
மணம்புரிந் தயலார்க்கிவான் மதிப்பிர்க ளாயினுக்கை
பிணம்புரி விப்பேன்மாற்றம் பிழைக்கிலன் யானுன்னுணை
யெணம்புரிந் தன்றிநீயி ரியற்றலிர் செயல்களென்றுள். (எஉ)

நகக்குடை கொடுபசுக்க ணலிவுறு தளித்தோற்கின்ப
மகட்பயந் துதவியொப்பின் மாமியாந் தவச்சீர் தோய்வாள்
செகக்கொடு நெறியேமேலாச் சிந்தைசெய் தந்தைதாய
ரகத்துறு சங்கற்பத்துக் கமைந்தடங் கிடுவள்கொல்லோ. (எங)

மாதுரை கேட்டமாதா மனத்தில்விம் மிதத்தளாகிப்
பேதுற லோடுந்தன்னோர் பிரியநா யகன்பா லெய்திப்
போதுமின் வதுவைக்காற்றும் புனைதலென் றுளஞ்சலித்திட்
டோதுமோர் மாற்றங்கேட்டா னுளத்தினு குலமிக்குற்றுன். (எச)

ஏகபுத் திரியின்காட்சி யென்றுநான் காண்பனென்னுஞ்
சோகமே லிட்டானுகித் துயிலுண வைப்பும்வெறுத்திட்
டாகமிக் கிளைத்துத்தன்னே ரகத்துவ கையிலாதுற்று
ணுகரீ கர்களாலிச்சொ னராதிபற் கெட்டிற்றன்றே. (எரு)

கேட்டலு மம்பரீடன் கிளர்ச்சிமிக் குற்றுனுகிப்
பேட்டன மனையாட்பெற்ற பிதாவினைத் தனதுகோயின்
மாட்டழைத் தின்னவாறு வழுத்துமெற் கில்லாண்மைந்த
ரீட்டமுண் டெனக்குங்காட்சி யிச்சைசற் றுமின்றின்றே. (எசு)

ஆயினு நினதுசெல்வி யன்பினு லெனைமணப்பான்
மேயின ளிச்சையென்ன விளம்பினுரதனு னின்னைக்
கூயினன் மணப்பானுள்ளங் கொண்டன னுன்னுளத்தி
னீயினி யிரங்கல்வாழி நிட்டையொன் றென்பாலுண்டால். (எஎ)

என்னிடத் தெவர்யாதொன்றீண் டிச்சைகொண் டிரந்தாரேனு
மன்னிட வதையீந்தன்னோர் மனத்துவப் பெய்தக்காண்டல்
பன்னிய விரதம்யான்கொள் பலவற்று மிக்கதானீ
நின்னிடத் தெய்திக்காட்சி நிகழ்வெலாஞ் செய்தாயாகி. (எஅ)

அடைதரு முகூர்த்தமாதி யாவுநிச் சயித்தபின்னர்
கடைமுறை யொற்றன்பாங்கர் கவின்றிரு முடங்கலுய்க்கிற்
றடைபடா துனதிற்பாங்கர் சார்வன்யான் சாதமென்று
விடையளித் திடலுஞ்செல்வன் வியன்கழல் பணிந்துவிள்வான். (எகூ)

நிருபநின் னடியனேன்யா னீயென தகத்தின்மாடே
வருவது சால்பன்றென்னோர் மகளைநின் கோயிற்பாங்கர்
மருவிடச் செய்வனென்ன வழுத்தலுஞ் செல்வனப்போ
தருணிறை வமைந்தசிந்தை யம்பரீ டன்சொல்கின்றான். (அ௦)

மருவுமா னுபிமான வழக்கிலெள கிகத்துள்ளார்
கருமமற் றதனைபுன்னேல் கருணைசால் பகவனெல்லாத்
தருமமு மோர்ந்துங்கோபித் தையலா ரிச்சையான
தெருண்மலி யன்பினல்வ சீகரம் வாய்ந்தானன்றே. (அக)

உற்றவர் மருவுமாடத் துழியமைந் தவர்கள்வேட்ட
பற்றதா நலங்களியாவும் பரிந்தளித் திட்டானன்றோ
மற்றது போலன்றோநின் மகளென்மேல் வாஞ்சைகொண்டாள்
கொற்றமிக் குற்றுன்மாதைக் கொள்வன்யான் முறையின்மாதோ. (அஉ)

நீதனத் தாலென்றன்னை நேர்கிலா யென்னிலென்றன்
மாதன மெல்லாமுன்றன் வசமுற நல்குகின்றேன்
போதரு காலையென்னைப் புரைகுவை யன்றோ நீயும்
பூதலத் தாரிச்செல்வம் பொருந்தியே யிருந்தார்மன்னோ. (அ௩)

நல்வினை வந்தகாலை நாந்துறந் திடினும்போகா
பொல்வினை யுறுங்காலெவ்வா புரக்கினும் போயேதீருஞ்
சொல்வினை யிரண்டும்யார்க்குஞ் சொந்தமா யுள்ளவின்ன
வெல்வினை யாரெஃதூடும் வெறுப்புவப் படையாரன்றே. (அச)

மலைப்படு பெருக்கஞ்சான்ற வான்பொருட் குவைகளென்று
நிலைப்படுந் தன்மைத்தாகி நேர்கினு மதனின்மோக
வலைப்படு கின்றோரின்ப மருவிடக் கேட்டதுண்டோ
தலைப்படு குணங்கொண்டன்றோ சார்வது மேன்மையோரின். (அரு)

கரியவுண் ணின்றதெய்வ கடாட்சநோக் குற்றுள்ளாரே
பெரியர்க ளாதலாவியான் பேசுசொன் மறுக்காதுன்ற
னுரியவீட் டெய்திமன்றற் குறுவன புரிதியென்னப்
பிரியமிக் குரைக்கச்செல்வன் பெரிதுதன் மனம்பூரித்தே. (அசு)

பெருநிதி கிடைக்கப்பெற்ற பிறவிநல்குரவோனென்னப்
பொருவரு முவகைபூத்துப் பொருக்கென மனைக்கணுற்றான்
றிருமுக நோக்கியில்லாள் சிந்தைவிம் மிதமுற்றுளாய்
மருவிய தென்னீரீண்டு மலர்ந்திட வதனமென்றாள். (அஎ)

மன்னன்மு னடைந்தவாறு மகிழ்ந்தவ னுரைத்தவாறுஞ்
சொன்னபோ தில்லாளின்பத் தொடுகேட்டற் கரைகாணுளாய்
நன்னரவ் வாறுவல்லே நடத்துதி ரென்றுள்செல்வன்
பன்னருஞ் சிறப்புச்செய்து பலபொருள் களையுஞ்சேர்த்தான். (அஅ)

குணமிகுத் திட்டபந்துக் குழாம்புரோ கிதரைக்கூட்டி
மணவினை முடங்கநீட்டி வண்புரோ கிதன்பாலீந்து
நிணவடி வேலாற்கோத நிகழ்த்தினு னதுகண்டேந்த
றணவரு முவகையோனுத் தருமணக் கோலங்கொண்டு. (அகூ)

பந்துவர்க் கங்கள்சூழப் பயிறருஞ் செல்வன்மேய
வுந்துசீர் மனைக்கணுற்றுங் குலப்பிலுற் சாகத்தோடு
மிந்துநேர் முகமின்னுளை யியன்மண முடித்துப்பின்னர்
கந்துசீ றுவாமன்றன்பொற் கவினரண் மனையிற்சேர்ந்தான். (கூ0)

வேறு

கண்டோர்க ணனிவியக்குங் காட்சிமிக வமைந்தெழிலார்
விண்டோய்மா ளிகையொன்று மிளிர்வித்து வேணபொருள்
கொண்டோங்கச் செய்ததிற்றன் கோலமனை வியையிருத்தி
வண்டோகை மயிலனையாண் மகிழ்வுறநன் கியற்றினனே. (கூக)

இன்னணமாங் கியனுளி லேந்திழைப்பூங் கொம்பனையாண்
மன்னவனு டொறும்பூசை வயக்கிடுகோ யிலையடைந்தாங்
குன்னரிய சவுந்தரிய முடையவரி விக்கிரகந்
தன்னையெதிர் கண்டுவகைச் சலதியின்மூழ் கினள்விள்வாள். (கூஉ)

கடிநகரிற் குடியாவோன் காதன்மக ளாகுமெனைப்
படிபுகழ்சீர் மன்னவற்கோர் பாரியெனப் புரிவித்துன்
னடிமலர்த்தொண் டாற்றிடுபே ரன்பெனுளத் தமைவித்த
நெடியவனே கைம்மாறு நினக்கெதுநான் புரிவேனே. (கூங)

என்றுதனக் கருண்மாய னீந்தநல மத்தனையு
நன்றுதன தகத்தினிடை நனிவியந்து நாடோறுங்
குன்றுதலி லன்பென்னுங் குரைகடலின் மூழ்கினளா
யொன்றுமல காதியதொண் டுவப்புடன்செய் தனளம்மா. (கூச)

பூசனைக்கேற் புடைத்தாகிப் பொருந்துமுப கரணமெலா
மாசறவே சீர்ப்படுத்து மற்றவைகள் சேகரித்தும்
பாசமுற வைத்தொருதன் பயின்மனைபுக் கரியிருதா
ணேசமுறத் தொழுதமைவா ணிகழ்செயன்மன் னவன்கண்டான். (கூரு)

செயலுணர்ந்த நரபதிதன் சிந்தைபுள்விம் மிதனுகி
யியலுறுமிச் செயல்புரிவா ரியாரேயென் றையமுறீஇ
யயலுறுகா வலற்கேட்க வவனுவல்வான் றம்புதிய
நயமனைவி யார்செய்ய நான்கண்டே னெனச்சொன்னுன். (கூகா)

அம்மொழிகேட் டலுமன்ன னார்வமுற்று நம்மனையார்
தம்முளெலா மிக்கன்பு தழைத்தவளின் னவளென்ன
விம்முபெருஞ் சந்தோட மிக்கமைந்த மனத்தினனா
யம்முதல்வி வாழ்மனைக்க ணடைந்திவ்வா றோதிடுவான். (கூஎ)

நீயினியுன் னகத்திடையே நிசவடியார்க் கெளியானுந்
தாயிலினி யானுருவந் தாபித்துப் போற்றுதியான்
மேயியல்பூ சாக்கிரகம் வேறாக்கித் தந்ததன்பான்
மாயிரும்பூ சனைவயக்க வருவனன வரதமென்றான். (கூஅ)

மன்னவன்சொற் கேட்டலுமே மதிப்பருமார் வத்தினளா
யென்னடிகள் சாற்றிடினு மியற்றுவலவ் வாறென்றாள்
கொன்னமையு மிறையவட்குக் கூறியவா செய்தளித்தா
னின்னமுத மொழியிறைவ னேவலுவப் புடன்புரிந்தே. (கூகூ)

கணவனதுத் தரவின்வழி காகுத்தன் றனதடியு
மணமலிபூ சனைபுரிந்து மனமகிழ்ந்து வாழ்நாளிற்
குணமலிநன் மனையன்பிற் குயிற்றுபணித் திறநாடித்
தணவரிய மகிழ்ச்சியிறை தன்னகத்திற் கொண்டானே. (க00)

மாற்றாளா வுறுமனையாள் வாரிசநன் னாபிபெறு
மாற்றாளா தாவினுடன் வணங்கடியார் தம்மிலுயர்
மாற்றாளா விளங்குவதான் மன்னம்ப ரீடனசை
மாற்றாளா யிலங்குசெயன் மனைவியர்மற் றையர்கண்டார். (க0க)

சிரோசத்திற் றைலமிட்டுச் சிங்காரஞ் செய்தொழிலி
லரோசமிகப் படைத்தவரா யவிரிழையாள் செயற்பார்த்திட்
டுரோசமிகுந் தவ்வவரு மோங்கெழிற்றம் மாளிகையிற்
சரோசநா பியனுருவந் தாபித்துப் பூசித்தார். (க0உ)

விரோதத்தோ விடம்பத்தோ வேட்கைகொடோ மேவலர்பாற்
குரோதத்தோ மற்றுளதுற் குணங்கொண்டோ வரியிருதாட்
குரோதத்தாழ் வடையாம லோங்கிடுமன் புற்றவர்க
ளரோதத்தா னவைகளகன் றானந்தம் பெறுவாரால். (க0ங)

இவ்வாறுங் கியனுளி வினையாளாஞ் செல்வன்மகள்
செவ்வாரி சத்திருமின் சிவனொருபுத் திரிபயந்தா
டெவ்வாகு மன்னவர்க்கோர் தென்றிசைமன் னாமிறைவ
னெவ்வாத பேருவகை யுததியின்மூழ் கிடமன்னோ. (க0ச)

கந்தரநேர் மணிவண்ணக் காகுத்த னடிமலர்கட்
கந்தரங்க பத்திபெறு மரசனதங் கிசமாகி
யந்தமலி கற்பொடரிக் கன்பமைந்தாள் வயினுதித்த
நந்தனிதன் பெருந்தகைச்சீர் நாமுரைக்கு மளவினதோ. (க0ரு)

மேதகுமன் புருமன்னன் வியன்பெறுமப் புத்திரிக்குச்
சாதகன்ம முதலாகச் சாற்றிடுபல் சுபச்சடங்குங்
காதலற்குச் செய்திடுமோர் கடப்பாட்டி னினிதாற்றி
மாதவப்புத் திரிக்கவிர்சீ மதியெனமெய்ப் பேரிட்டான். (க0௬)

தாக்கணங்கு மாணவார் தன்மைபுறு பெண்மைநல
மீக்கவின்ற வருட்செல்வி வியன்கொள்குணக் குன்றனைய
வாக்கமிகுந் தெவ்வனச்சி ரடைந்தவிர்நா ளருந்தவஞ்சா
ணேக்கமிகப் படைத்தோரு நோக்குநலங் கொண்டமைந்தாள். (க0௭)

வருநாளி லேழிசைசான் மகதியாழ் கொண்முனியும்
பொருவாச்சீர்ப் பருவதப்பேர் புனைமுனியு மரசனிட
மருவாவீண் டுனதுதிரு மகளைத்தந் தருடியெனப்
பெருவாஞ்சை யுடனிரப்பப் பெரிதவர்தா ளிறைபணிந்தே. (க0அ)

மிகுவினயத் துடனன்பாய் விள்ளுவனீ ரிருவோரு
நகுமுகமா தினைக்கொள்வா னண்ணினீ ரீண்டெனக்குத்
தகுமொருமா தேயுளதாற் றருவதுமக் கெவ்வாறியா
னெகுமன்பிற் சுயம்வரத்தை நிச்சயிக்கப் போகின்றேன். (க0௯)

அந்நாளி லென்மகடா னுரைவரித் திடுவாள்கொ
லன்னார்க்கென் மின்னாளை யணிமணஞ்செய் தீவனென்ன
மன்னர்வத் தோடுரைப்ப மற்றதுபோன் முடித்தியெனச்
சொன்னா யிருவர்களுந் தோய்ந்தனர்வெவ் வேறிடமே. (கக0)

தேன்பெறுமின் னமுதமொழித் திருவினையெவ் விதத்தேனு
நான்பெறுவ னுன்பெறுவ னெனவிரும்பிச் சென்றவர்தாம்
வேன்பெறுந்தம் முட்கருத்தை வெளிப்படுத்தாக் கரவமைந்தார்
வான்பெறுமா தவத்தோர்க்கும் வாஞ்சைமிகக் கொடிதந்தோ. (கக்க)

எண்ணமென வெவ்வேறு மிருவர்களுந் தனித்தனியே
தண்ணளினக் கட்பகவன் சார்வைகுந் தத்தடைந்திட்
டண்ணலம்ப ரீடனிவ்வா றறைந்தனன்மற் றதுபெறுவான்
வண்ணமணி மேனியநின் மாட்டடைந்தே மெனவகுத்தார். (ககஉ)

அம்மகணின் னடிமலர்மே லகலாப்பே ரன்புடையாள்
செம்மலுனை யல்லாற்றன் சிந்தையின்மற் றென்றறியாண்
மைம்மலிநின் றிருமேனி மருவியெதி ரணைந்தார்க்கே
நெய்ம்மலர்மா லிகைசூட்டு நிட்டையுளத் தமைந்துற்றாள். (ககங)

ஆதலினென் வடிவத்தை யடிகடிரு மேனிநிகர்
மேதகுபான் மையதாக விளங்கவருள் புரிதிரென்ன
வாதரமுற் றிருவோருந் தனித்தனியே யடைந்திரப்ப
நாதனிரு வருக்குந்த னல்வடிவ மமைத்தானே. (ககச)

அன்னவர்தம் வத்திரமட் டவிர்குரங்கின் முகமாகத்
துன்னவமைத் தனனதன்பின் றுகளறுசீ மதிமாதி
னன்னலஞ்சால் சுயம்வரத்தை நாடுபுசென் றனரணைந்தார்
பன்னதுகா லரியவடன் பத்திவலைப் பட்டோனுய். (ககரு)

ஒருமனித வடிவினுட னுவமையறு சவுந்தரிய
மருவியருண் மாதவன்றன் வயங்கடையா ளங்களெலாந்
திருவனையாள் கொள்க்காட்டி மற்றையர்தே ருதுற்று
னிருமுனிவோர் களுநமக்கே யெய்திடுமென் றிருந்தாரே. (ககசு)

வேறு

அன்னகாலையி லம்பரீடன்றரு புதல்வி
மின்னலங்கொடி யென்றிட வவைபிடைமேவி
நன்னலம்பெற வாண்டுளாரெவரையு நாடிக்
கன்னல்வில்லிதன் றுதைமேவிடுஞ்செயல் கண்டாள். (ககஎ)

வேலையொத்ததன் விழிவிருந்தாகமுன் மேவு
மாலைமுற்படக் காண்டலும்பரவச மருவி
நூலைநேரிடை காந்தளங்கைபெறு நோன்சான்
மாலையிட்டனண் மாலையிட்டனள்கள மாடே. (ககஅ)

அந்தவேலையி லம்பரீடன்றன தவையில்
வந்தமைந்துளா ரனைவருமதிமறந் தவரா
யந்தமின்றிய தானகோலாகல மடைந்தா
ரந்தரத்தின ரகமகிழ்ந்தலர்மழை பொழிந்தார். (ககசு)

காமர்மிஞ்சுகா யாமலர்கடுத்திடு மேனித்
தாமரைத்தடங் கண்கொடாமோதரன் சலச
மாமகட்கிணை யாகியேவயங்கெழிற் சீர்சால்
சீமதிப்பெயர் மகட்கொடுவைகுந்தஞ் சேர்ந்தான். (கஉ0)

ஆனகாலையி லவன்குரங்கானனங் கொளலான்
மானனுணமக் கேயிடுமாலையென் றிருந்த
நோனலம்பெறு மாதவர்தம்மிய னேக்கித்
தேனருத்துழாய் மாலையார்மாலையுட் சினந்தார். (கஉக)

ஈனமேவிய வானரமுகமெமக் கீந்து
கூனல்வாணுதற் சீமதித்தெரிவையைக் கொண்டே
தேனர்போலரைக் கணத்தினம்மோடொன்றுஞ் செப்பான்
போனமால்செய னன்றுநன்றுலெனப் புகலா. (கஉஉ)

பண்டைநாட்சுரா சுரர்களுக்கின்சுதை பகிர்வான்
கெண்டைவாள்விழிப் பொற்சிலைமுலைகொண்மோ கினியாய்ச்
சண்டைமூட்டியங் கசுரர்தற்சாடல்செய் முறைபோற்
றண்டையுற்றிட நமைப்புரிந்தெய்தினன் சயமே, (கஉங)

வாய்ந்தவோர்பொருட் டன்றுணைவனையுமுள் வஞ்சித்
தாய்ந்துதான்பெறற் காம்பெருமுயற்சிமிக் காற்றுந்
தேய்ந்தபுன்மதி யாளர்கள்செப்புமப் பொருளை
யேய்ந்துமற்றவன் கொளத்துயர்வாரெனன் மெய்யே. (கஉச)

தூலமேவிய முகமெனத்தோன்றிடா தேனைக்
கோலமேவிய வவரவர்கொள்கையுங் கூறி
யாலகாலமும் வடவையுங்கலந்தென வழன்று
சீலமேவுவை குந்தவான்பதத்திடைச் சேர்ந்தார். (கஉரு)

ஒழுக்கறுத்திக விருமுனிவோர்தமி லொருவற்
கிழுக்கறுத்தியல் சீமதிமாலையிட் டிருந்தா
லழுக்கறுத்திகன் றனந்தமாந்தீமைமிக் கடைவார்
வழுக்கறுத்தவன் கொளவொழிந்ததுசின மட்டில். (கஉசா)

சென்றமாதவர் தம்முளங்கொண்டவெஞ் சினத்தான்
மன்றலந்துள வன்முகம்வல்லையி னேக்கிக்
குன்றவெந்தமைக் குரங்குவத்திரங்கொளக் குயிற்றி
மின்றயங்கிடைச் சீமதித்திருவையுள் வேட்டு. (கஉஎ)

கொண்டுவந்திடு பான்மையானின்குடும் பினிபைத்
திண்டிறற்பெறு மிராக்கதன்திருடுபு செல்க
வண்டுமெந்தமக் குக்கவிமுகமமைத் ததனுற்
றெண்டுசெய்பவா னரர்களைநீகொளத் துணையே. (கஉஅ)

பராவவைக்கணீ மானிடனுப்படர்ந் ததனுற்
றராதலத்திடைத் தசரதன்மகனெனச் சார்கென்
றராவுமச்சுறுஞ் சாபவாக்கின்னண மறையக்
கராசலத்துயர் களைந்தவன்களிப்புடன் கழறும். (கஉகூ)

தகையறுஞ்சினங் கொடுசபித்திடுதவர் தம்மை
நகைசெய்தெம்பிரா னேக்கிநற்றவத்தினுன் ஞான
மிகைகொண்மெய்ப்புகழ் முனிவர்காளியாமினி மேலிவ்
வகைசெய்வாமென மதித்தனமற்றதே வகுத்தீர். (கஙு0)

மின்னிலங்குவே லம்பரீடப்பெரு வேந்தன்
கன்னியானவிச் சீமதிகருதுதன் னன்னை
முன்னியம்பிய வண்ணமென்முதிரொளி வடிவ
முன்னிமாறுருத் தியானமிக்குஞற்றின ளன்றி. (கஙுக)

என்னையேவர னுக்கொள்வானிதயமீ திச்சை
முன்னையேகொடு வரித்துளாளாகுமம் முறையான்
மின்னைநேரிடைச் சீமதிமேவுநந் தமக்கோ
ரன்னையாயின ளவளைநீர்விரும்புவ தடாதால். (கஙுஉ)

இனையபான்மையென் னுளத்திடையெண்ணியே யிவளை
மனையெனும்படி கொண்டுவைகுந்தமா டுற்றேன்
முனைவர்கட்கிறை யாயவிர்முனிவிர்காள் சினந்துள்
ளினையலீர்பொறுத் தருண்மினேபிழையுள தென்னில். (௧௩௩)

சார்வதானநுங் கவிமுகமாயின தணைந்து
பூர்வநன்னிலை யெய்துகவெனக்கருப் புணர்ந்த
கார்வணப்பெரு மாளருளாற்சொலக் கரையி
லார்வமேவுபு வணங்கிமாதவரகன் றனரால். (௧௩௪)

பாபவல்லிருட் டொலைத்தருட்பதந்தரும் பதும
நாபவச்சுதத் தேவைபுநனியுளஞ் சினந்து
சாபமோதிய வாபயன்சார்த்திடு மென்னின்
மாபலம்பெறு தவப்பெருவன்மையார் வகுப்பார். (௧௩௫)

ஞானமிக்கசீர்ப் பருவதனுரத னென்னு
மானமிக்கசீர் முனிவர்சீமதித்திரு மாதின்
பானசைத்தலிற் கவிமுகம்படைத்தன ரென்றூற்
றீனர்தம்மையென் செய்திடாதேடணைத் திரளே. (௧௩௬)

மாமதிக்கிணை யாயவிர்திலகவாள் வதனச்
சீமதித்திரு மாதுலகேவைபுந்தெரித்த
தாமரைப்பொகுட் டுறைபவன்றுதைமங் தரநேர்
காமருற்றபொன் னம்புயங்கலந்தனண் மாதோ. (௧௩௭)

மறந்தழைத்திடு மரையரைவேரற மாய்த்திட்
டறந்தவாதுகோ லோச்செழிலம்பரீ டன்றூன்
றுறந்தமாதவ முனிவருந்துதித்திடத் தொகைமை
யிறந்தபற்பல வாடல்களெண்ணின ளியற்றி. (௧௩௮)

வேறு

விண்ணுலாவு விபுதரும்யாவரு
மெண்ணும்ராச விருடியென்றேத்திட
மண்ணுள்வாழ்ந்தரி வாய்ந்தவைகுந்தவான்
கண்ணுளேகிக் கலந்தனனென்பவே. (௧௩௯)

வேறு

அன்னையுடன்புத் திரியாகி யவிர்ந்தவிருவர் தம்முள்ளத்
தாசைப்பெருக்குற் றிடும்வண்ண மன்பான்முடித்திட் டவர்தம்மை
மன்னையருளால்வைகுந்த மாடேயடையப் புரிகருணை
வள்ளாலுனது பதப்புகழே மாறாதேத்த நினைவேனை
மின்னைநிகரிவ் வுலகியலின் மீளாவண்ணம் வீழ்த்தியருண்
மேவாரெனச்சோ தனைபுரியில் வெம்பித்தளர்வ தல்லான்மற்
றென்னைபுரிவே னருட்சோதி யிறைவாகடைக்க ணேக்கருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. ()

அம்பரீடகதி முற்றிற்று.

ஆக கவி ௭௧௦

## எட்டாவது

# விதுரமங்கைகதி

பதுமநாபன்மெய்ப் பத்தியுருப்பெறு
மதுலமிக்கசீ ரம்பரீடன்பெறு
மதுரச்சீர்த்தி வழுத்தினன்மேலினி
விதுரமங்கை வியன்புகழ்விள்ளுவாம். (க)

வேறு

சதுரமைந்தநான் மறையின்மேலெந்தெனத் தயங்கு
மதுரமிஞ்சுபா ரதத்திடைமாலடிப் பத்திச்
சதுரமைந்தவர் தம்மின்மேலாமெனத் தழைக்கும்
விதுரமன்னவன் சரித்திரம்விரிவுற விளங்கும். (உ)

அன்னமன்னவன் பாரியாயன்னமன் னவியன்
மென்னடைச்சிகிச் சாயலண்மேதகு கற்பிற்
றன்னருந்ததிக் கிணைபவளரியிரு துணைத்தாட்
குன்னரும்பெரும் பத்திமைநிறைந்தபே ருருவாள். (ங)

குடம்பொருந்திய விளக்கெனக்கோதைதன் னுளஞ்சேர்
திடம்பொருந்திய பத்தியித்தரணியிற் சிகரி
யிடம்பொருந்திய விளக்கெனவிலங்கிடப் புரிவான்
கடம்பொருந்திப் துயரறக்காத்தமால் கணித்தான். (ச)

இயலுநாளையி லிருந்தவவிதுரனு மேந்தன்
முயலுமெந்நிமித் தங்கொடோமுயங்குதன் னிலநீத்
தயலடைந்தன னுகவக்காலைசெவ் வதரத்
கயலைநேர்விழி மாதராண்மனையகங் கவின்றாள். (ரு)

ஆயபோழ்துகிட் டிணப்பெயரமலனுண் டெய்தி
நேயமோடுமுன் வாயிலினின்றுபத் திமைசா
றாயசீர்விது ரன்மனையிற்றுதைந் துளன்கொன்
மேயதில்லைகொ லென்றுசாவினனருண் மிகுந்தே. (சு)

மெய்க்கிருட்டிணப் பகவனவ்வணம்வின விடுங்கா
லக்கிரத்தகை பெற்றுயர்விதுரன தாட்டி
புக்கிரும்புன லாடியுற்றுள்செவி புகலும்
* நக்கினத்தகை யொடுபகவன்முனண் ணினளால். (எ)

ஐதிலேகுபு பகவனதடியிணை வணங்கி
யெய்திடுங்கணப் போழ்தினில்விதுரனென் றியம்பி
மைதிகழ்ந்திடு மேனிமாதவன்றனை வல்லே
மெய்திகழ்ந்ததன் மனையிடையழைத்து மேயினளால். (அ)

---

* நக்கினம் - நிருவாணம்.

சென்றகாலையி லாயினுந்தான்றிகம் பரியா
நின்றவச்செய றன்னையெள்ளளவுமுண் ணினையாண்
மன்றமெய்ப்பக வன்பதத்தன்புதன் மயமா
யொன்றலாலுல கோடுதன்னைபுமுண ராளாய். (கூ)

படைத்திடும்பொறி புலன்முதற்கரணங்கள் பலவு
மடைத்திருந்தவ மாற்றிடுமாற்றலுற் றவர்க்குங்
கிடைத்திடற்கரி தாம்பெருங்கிட்டிண சேவை
கடைத்தரத்தினேன் பெற்றவாநன்றெனக் கணியா. (க0)

பரவசத்தின ளாஞ்செயல்பகவனேர் பாரா
வுரமிசைத்திகழ் விலைவரம்பற்றவுத் தரியம்
விரவவன்னவண் மீதுறவீசலு முடனே
காமுடுத்ததா லுடுக்கைவீழ்பவர்செயல் கடுப்ப. (கக)

காங்குநேர்திரு மேனிகொள்கண்ணனம் புயமே
லோங்குமுத்தரீ யந்தனைத்தன்னதோ ருடைபோ
லாங்குடுத்திருந் தாடனதுள்ளமவ் வுருவந்
தாங்குமோர்செயல் பிறர்கொளக்காட்டுமோர் தகையில். (கஉ)

உயிரினுக்குயி ராயுளனிச்செய லுணர்ந்து
செயிரின்மாதரா ணிலைபுலகோர்தரத் தெரிப்பான்
மயிலியற்சசி முகம்பெறுபொன்னனுய் வந்தேற்
கயிலவோர்பொருள் யாவதேனுங்கொடென் றறைந்தான். (கங)

புரந்தரன்முதற் றேவர்யாவரும்புலப் படுவா
னிரந்தரந்தக முயன்றுமன் னவர்கண்முன் னேரா
னிரந்தம்மின்புடை வலிதுகையேற்றன னென்றூற்
பரந்தபத்தியின் மேலொன்றுண்டாங்கொன்முப் படியுள். (கச)

பகவனேதுசொற் கேட்டலுமாதுளம் பரிவாய்
மிகவருந்தின ளாகியேவிளம்பிடு முன்ன
முகமனேடளித் திலனெனத்தன்னைபுண் முனியா
வகமணைந்துள கதவிவான்கனிகள்கொண் டணைந்தாள். (கரு)

ஒகையோடதன் றொலியினைவல்லையி லுரித்தே
மீகைசேர்பர வசத்தினள் பழங்களைவீசி
யீகைசெய்தன டோலெலாமினிதினி தென்னத்
தோகைசேர்முடி துளக்குபுதுய்த்தனன் றேன்றல். (கசு)

அலகிலாவுவப் பொடுகனிப்புரணிமுற் றருந்திச்
சலசலோசனன் றனமைந்திருந்தவத் ததியில்
விலகிடாதமெய் யன்புருவிதுரனின் மேவி
நிலவுமச்செயல் யாவையுங்கண்ணுற நேர்ந்தான். (கஎ)

ஆலகாலமு மூழிவெந்தீயுமே யனைய
கோலமாகிய வெகுளிமேற்பொங்கவுள் கொதித்தே
மாலருமனத் துலகினர்க்காமறை வகுத்த
மேலதாம்விதி கடந்ததன்மனைக்குவிள் கின்றான். (கஅ)

எதுமோர்சிறி தானமெய்புணர்ச்சியு மில்லாப்
பேதையென்செய்தாய் பெருமறைகாணுணப் பெரியோன்
மீதைமைந்தபீ தாம்பரந்தனைமிசை விசித்தாய்
மாதுரக்கனி யெறிந்துதோலினைவழங் கினையால். (கக)

என்னகாணு னக் குப்பெரும்பித்தமெய் தியதோ
பன்னியென்னவே பன்னிடப்பயமுளம் பதிந்து
தன்னதானவோ ருணர்ச்சியுள்ளடைந்துளந் தளர்ந்து
மின்னனுடனைச் சினந்துநிந்தித்தனண் மிகுந்தே. (உ0)

வேறு

அந்தப் புரத்தி லமைந்தா ளரிதனது
சொந்தப்பீ தாம்பரத்தைத் துண்ணெனவே நீத்தொருதன்
சந்தப் புடவை தரித்தன் னதனைமிக
வந்தித்து வந்து மலர்க்கண்மிசை யொற்றினளால். (உக)

அக்காலே யன்பெ னணிசூ டியவிதுர
னிக்கார் கனிவகைக ளியாவுங் கொணர்ந்தொளிசான்
மைக்காள மேனியருள் வள்ளற் களித்திடலு
மெய்க்கார ணன்கை மிசைகொண்டு விண்டிடுவான். (உஉ)

காதுரி மைக்கட் கனங்குழைசேர் காரிகைநம்
மீதுரிமை கொண்டு வியந்தளித்த வப்புரணி
மாதுரிய மின்ன மருவியெமக் கில்லையெனச்
சாதுரியமென் னகைபுட் சார்ந்திடவே விண்டனனால். (உங)

என்புலவும் பொய்விடக்கை யானென் றிறுமாந்து
புன்புலன்கொ ளின்பம் புசிக்கின்றோர் கட்கெனது
முன்புலவு வான்கனிகண் முற்றினிதா மற்றதிலென்
னன்புலவு நெஞ்ச ரளிப்பதெனக் கின்பாமால். (உச)

என்றே யுரைத்துலவா வின்பச் சுவைப்புரணி
நன்றேய் தரவளித்த நங்கைதனைக் கூவிடலுங்
குன்றேய் தருமிலச்சை கொண்டாளா யச்சமுடன்
றன்றே சுருப்புறத்திற் சார்த்தாண் மறைத்துற்றாள். (உரு)

மைப்புரையு மேனியருள் வள்ளல்வியக் குந்தகைசா
லொப்புயர்வி லன்போ டுளுற்றும்பணி தனிலுங்
தப்புளுற்றி னேனெனவே தான்மறைந்துற் றாளுலகிற்
செப்புமித னேனையர்சொ றெய்வசெயற் கேட்டறியாள். (உசா)

நன்றுஞ் செயன்முழுது நானியற்றி னேனென்னச்சொற்
றன்று னவைகளெலா மாண்டான் செயலென்றே
குன்று நரகக் குழிமூழ்கு வார்பதகர்
பொன்றுமெய்ப் பத்தர் புகலுமத னேனையரே. (உஎ)

வேறு

ஈதுநின்றிடக் கிட்டிணபகவன்ற னிணையடித்துணைநெஞ்ச
மீதுநின்றிடக் கொண்டபாண்டவர்களின் வெஞ்சினக்கொடுங்கோர
வாதுநின்றிட வருளினலத்தின மாபுரத்திடையென்றுங்
கோதுநின்றிட வரசுசெய்திடும்பணிக் கொடியவன்புடைசென்றான். (உஅ)

சென்றுபேரருள் வாரியாங்கிட்டிணச் செம்மலோதிடலான
நன்றமைந்துள நீதிகளனைத்தையு ஞாலமீதமைந்துள்ளார்
மன்றவோதப கீர்த்தியேசுமந்தற வந்துதித்தவனனை
னென்றுமேகொளா திகழ்ந்தவமதித்தன னூழ்வினைவலிதம்மா. (உகூ)

பண்பகன்றதுர் யோதனன்மாட்டருட் பகவனுற்றறைகாலை
நண்பகற்பொழு தாயதாலன்னவ னலங்கொளப்பிரான்றன்னை
யெண்படுந்தன தில்லிடையமுதுசெய் தேகிடவிரந்திட்டான்
கண்படுந்திரு தராட்டிரப்பேர்பெறு காவலோனுமற்றேதும். (௩௦)

அல்லையோவுகிட் டிணப்பெயர்பெற்றுய ராண்டகாபுருமியாங்க
டொல்லையோங்கிய தகைபெறுசுற்றமாந் துல்லியத்தர்களேகாண்
வல்லையோதுமென் மொழிமறுத்தேகலை மகிழ்ந்தருந்துதியென்னுஞ்
சொல்லையோவுரு விலச்சையோடறைந்தனன் றேய்தனுண்ணகவன்றே. (௩க)

அன்னகாலையெம் பிரான்சொலுநீயிரீண் டறைதல்சத்தியமேனுந்
துன்னலுற்றவோர் சாதிசம்பந்தத்திற் றுல்லியத்தரேயன்றி
நன்னலம்பெறு தருமமாதியவற்றி னமக்கிணையாவீர்கொல்
பன்னலுற்றசந் தோடமுஞ்சினேகமும் பதிதலுற்றவரன்றே. (௩உ)

உற்றநற்பெருஞ் சுற்றமானவர்களென் றுலகெலாம்பாராட்டு
மற்றசீர்த்திசால் குணம்படைத்தோர்களே மருவுறவெனத்தக்கார்
சொற்றதுயர்தம் பக்கலுற்றவரிடந் துய்த்தலேநலமாகு
மற்றநண்பின ருதவலாரமுதமே யாயினும்விடமன்றே. (௩௩)

முற்பகர்ந்தசந் தோடமேசினேகமே யெனமொழிந்தவற்றாடொன்
றற்பமுங்கொளீ ரென்னயானுணருமக் கறைந்திடன்மிகையன்றே
தற்பமியானுரைத் திடலெனின்மறுத்துநீர் சாற்றுமினெனலோடுந்
துற்பயன்கொள்வார் தாம்புரிசெயலுனித் தூங்கினர்சிரமாதோ. (௩௪)

தமதுநெஞ்சக மறிதல்பொய்த்தவர்தலை சாய்ந்துமூகையராக
விமலமேவருட் பகவனக்கணந்தனில் விதுரனிற்புகலோடுங்
குமரிவல்விருட் குலைத்திடுமுவாவெதிர் குரைகடற்புரைந்துள்ளக்
கமலமானனத் துடனென்முன்விரிந்தெனக் கரையிலன்புருவானன். (௩ரு)

ஆம்பதத்தினிற் பத்தர்கட்கருளுநல் லண்ணலோதுவன்வல்லே
யாம்பசித்தில ணுற்றதாற்புசித்திடற் கேற்றவுண்டருவீரென்
ருேம்பலின்னிசை வாய்திறந் தறைதலு மளப்பிலார்வமுற்ருன்றன்
காம்புறழ்ந்திடு தோள்கொளில்லாண்மனக் களிப்புரைத்திடலாமே. (கூ௬)

பரித்திடற்கரி தாந்துயர்வகையெலாம் படச்செயுங்கொடுங்கோரத்
தரித்திரத்தகை தோய்ந்தங்நாள்விதுரமன் ருன்புசித்திடும்வண்ண
முரித்துடன்புரி யிலைக்கறியேயமைந் துற்றதாலிது தன்னைப்
பரத்தின்மேம்படு மெந்தைதுய்த்திடவெவண் பரிவினல்குவனென்றே. (கூ௭)

ஆகுலக்கடன் மூழ்கிநெஞ்சழிசெய லானதுதெரிகுற்றே
கோகுலத்துயர் நீத்தவனருளினுற் கொம்மெனவவற்பார்த்து
வாகுலத்தைநேர் விதுரவேன்றுயரென்ருன் வகையெலாமெடுத்தோதிப்
* பாகுலம்பெறு பிறையணுப்தாமதப் பண்புசற்றுறின்மன்னே. (கூ௮)

அன்னமாதிய வமைத்திடுவேனென வன்பிஞேடிரந்திட்டா
னின்னவாசகங் கேட்டலுமெம்பிரா னியம்புவனகைத்தொல்லை
பின்னமற்றபே ரன்ப்யான்சாகையிற் பிரியனென்பதுந்தேர்வா
யின்னதன்றியும் பத்தர்களிடுவன யாவுமெற்கினிதாமால். (கூ௯)

சடுரசத்துடன் பத்தியில்லாதவர் தரும்விருந்தினுநீவி
ரிடுமிலைக்கறி யானதுசாலவெற் கின்பமீகுவதஃதாற்
சடுதியிற்படைத் திடுதிரென்ருேதுபு சலங்கொடுதாண்மண்ணி
யடுபுலம்பெறு மியோகர்நெஞ்சுறமுவ னகத்தின்மேயினன்மாதோ. (௪0)

இல்லின்மாடொரு புறத்தினின்மெழுக்கமைத் திட்டவான்றவிசெய்திப்
புல்லிடும்பெருங் களிப்பொடுசினேகமும் பொருவில்பத்தியும்பொங்கச்
செல்லிருந்துவீழ் மழையெனவிழிகளிற் றெளிக்கவின்பக்கண்ணீர்
சொல்லிடன்புரு வாந்துதிமாற்றமுந் துணைச்செவிபெறத்துய்த்தே. (௪௧)

பத்த்வற்சல ஞங்கருணைக்கடல் படைத்திடுங்கறியுண்டே
மெத்தவுங்களி யடைந்தனன்முன்றரு மென்பழத்தோலேபோற்
சித்தமீதிலின் பளித்ததீண்டெனக்கெனத் திருத்திபுற்றனனென்ன
வித்தகங்கொளப் பற்பலவிதம்பட விண்டனன் விரித்தம்மா. (௪௨)

நிவேத்னம்பெறு முடிவிற்றும்பூலநன் னேயமோடளித்தன்பால்
விவேகநீடிய விதுரமன்னவனிடம் பிரிதலில்விடைகொண்டே
சுவேதவாகனன் ருேழனேகியபினர் துய்த்தனன்பிரசாத
முவேழ்பிதிர்த்தொகை களுமுய்ந்தாரின்றென மூழ்கினன்சுகவாரி. (௪௩)

கிருதகிர்த்திய ஞகியேமனமுதற் கிட்டிணன்கழற்காக்கிப்
பொருவில்பத்தியிற் கற்பினிற்றனைநிகர் பூங்குழன்மனைமாதோ
டருமைபெற்றமா யோகினராயின ரணைதரும்புகழ்சான்ற
திருமிஞபகன் மேவுவைகுந்தமாஞ் செழும்பதம்புக்குப்ந்தான். (௪௪)

---

* பாகுலம் - கார்த்திகைமாதம்.

ஆதலாலிலக் குமிபதியாயகி லாண்டகோடிகட்கெல்லா
நாதனுங்கிருட் டிணனெனங்கேவிதுரனு நல்குரவோனெங்கே
யாதரங்கொடன் னவ்னிலைக்கறிநக ரவத்தையாவதுமெங்கே
யீதனைத்துமெய்ப் பத்திவைபவமெனு திசைப்பதென்னெனவம்மா. (சரு)

வேறு

சீலத்தகைசா னுன்னதருட் டிருவாக்கமுதஞ் செவித்துணையிற்
சேரக்கணமே தேகமுடன் செய்புஞ்செயலு மறந்தவளாய்ச்
சாலத்தழைத்த பேரன்பா டந்தகதலிப் பழத்தினிடை
சாரும்புரணி தானுமிகச் சான்றசுவைத்தென் றுண்டருள்வோய்
தூலத்தமைந்த வன்படியேன் றெண்டிங்குனக்கின் புதவாதாந்
தோற்றமுணர்ந்து நின்வடிவாந் தூயர்தமைப்போற் றுதித்திடுவே
னேலத்தகைமை யென்மனத்தா மெண்ணப்படியீந் தருள் புரியா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (சசு)

விதுரமங்கைகதி முற்றிற்று.

ஆகூ கவி எருசூ

---

ஒன்பதாவது

# குசேலர்கதி

பதுமநாபனற் பத்தியங்கடலிடைப் படிந்த
விதுரமன்னவன் சீர்மனைதிறத்துடன் விண்டேன்
மதுரமாமறைத் திரளுணர்ந்திடுமதி சான்ற
வதுலமிக்கசீர்க் குசேலமாதவன்றிற மறைவாம். (க)

* பசேலுகன்புரி பண்டமொன்றினைப்பல காலும்
விசேடமிக்கதா லிஃதெனமிசைதரும் வேலைச்
† சுசேலகப்புவி யினர்கொளப்புலவர்முன் சொற்ற
குசேலனற்கதி புகல்வதன்பினர்களி கொளவே. (உ)

உவாமதிக்கரு கோங்கியவரமியத் தும்பர்
சுவாகதங்கொளக் கிளத்துபொற்றொடியினர் சொல்லை
யாவாவிவானவ ரனுகுறுந்தண்டலை யமைந்து
துவாரகைப்பெயர் பெற்றுயர்திருநகர் துலங்கும். (௩)

சீரியைந்தவங் நகர்க்கருகாகியே செழுமைக்
காரியைந்திடும் படிமிகநீண்டுகா னவருஞ்
சூரியைந்திடத் துலங்குமால்வரையயற் சூழோர்
சேரியைந்தவித் தவர்திரள்வதிதரத் திகழும். (௪)

---

* பசேலுகன் - சமையற்காரன். † சுசேலகம் - புடவை,

விசேடமென் றியற் புலமையுற்றோரெலாம் விளம்ப
லசேடமெய்திடக் கொண்டவத்தனிநக ரதன்கண்
* பசேலிமன்பகை தூக்குமந்தணர்தவப் படிவாய்க்
குசேலநாமமா தவனலங்கொள்ளவங் குரித்தான். (ரு)

உதித்தபாலக னுற்றநற்குணமெலா முடனே
கதித்துநாடொறும் வளர்ந்திடவளர்ந்துநற் கலையின்
முதிர்ச்சிசான்றசாந் தீபனிமுனிவர னிடத்திற்
பதித்தசிந்தையோ டருமறையாதிய பலவும். (சு)

சுருட்டிருந்திரை மேய்ந்தொளிர்புயனிகர் சொருபக்
கிருட்டிணப்பக வன்சகபாடியாங் கேண்மை
விருத்திகொண்டுசந் தேகமாதியவற விமலக்
குருப்பிரானுவப் பெய்திடத்தெள்ளிமை கொண்டான். (எ)

குருபரன்களித் தனுப்பிடும்படிவிடை கொண்டே
யிருவருங்களிப் போடுதந்தந்நக ரேய்ந்தா
ரொருவனுகியகுலேன்மாமறையுச்சி மேய
நிருமலப்பொரு ளாமரிபத்தியுண் ணிறைந்து. (அ)

அகத்துடன்புற மென்றிடும்பேதமற் றவனுச்
சகத்துவந்துவங் கழிந்தரிதாளுளிற் ருபித்
திகத்துமாலறு முளத்தனுப்பகலுட னிரவுஞ்
சுகத்துவந்தரு பூசைசெய்துவகையுட் டோய்ந்தான். (கூ)

இடும்பைமுற்றவுந் தருங்கலிவாதைமிக் கியலுங்
குடும்பவாரியின் மூழ்கினுங் குறைவிலச் சுதன்ற
னெடும்பதத்துணை பற்றினேர்நிலைகலங் காரென்
றிடுந்திறம்பெறு மொழிபுலகிடைதுலக்கிடவும். (க0)

தக்கசீர்க்குசே லப்பெயர்பெற்றிடுந் தபனன்
மிக்கசீர்த்தியாங்கிரணமெங்கணும்விரித் திடவு
மைக்கவின்புயனிகராருண்மேனிகொண் மாயன்
புக்கபேரரு ளுளத்திடையுன்னிடும் புணர்ப்பால். (கக)

கற்பினிற்கதிர்ச் சாலியொப்பெனவியல் காந்திப்
பொற்பினிற்றிரு மகளெனப்போந்தவோர் பொறுமை
வற்பினிற்புவி மகளெனவயங்குமோர் மாதை
யற்பினிற்றிரு மணங்கொடில்லறத்திடை யமைந்தான். (கஉ)

தனக்குள்வாஞ்சைசற் றின்றியுந்தாரமாச் சமைந்த
புனக்குயிற்றிரு மொழிமனைமாதரார் பொருந்து
மனக்குறிப்படி யேயருண்மாதவன் வரத்தா
லினக்குழாங்கொண்மூ வொன்பதுபுதல்வனர யீந்தான். (கங)

* பசேலிமன் - சூரியன்,

சிறுமையுற்றது மேருவென்றிரவியக் குவையோ
ருறுகணீங்கவோர் புத்திரனுதவிடா வொருவன்
வறுமைவாரிதி மூழ்கியகுசேலமா தவன்பாற்
பொறுமையுற்றிடச் சேய்க்குழாந்தரல்புது மையதே. (கச)

சலசைதங்கெழிற் றுழாய்புனையுரப்பாந் தாமன்
குலவுபொன்னடி யல்லதுபொருளெனக் குறியா
னுலகில்யாரையு மொன்றெனக்குதவென விரவா
னிலவுகானிடைப் புல்விதைகிள்ளியின் னேர்வான். (கரு)

தனதுநாயகன் றினந்தொறுந்தந்திடு வதனை
மனதுவப்புடன் சமைத்தவன்மகிழ்வுற வழங்கி
யினமுறுஞ்சுத ருடனதிதிகடமக் கீந்து
புனலுடன்கலந் தெஞ்சியதான்புசித் தமைவாள். (கசு)

சங்குக்கந்தரம் பெற்றிடுந்தாயவ டருமோர்
பங்குக்கஞ்சிகால் வயிற்றுக்கும்பற்றிலாப் பால
ரெங்குகஞ்சியன் றையெனக்கீந்திலை யென்ன
வங்குபொய்புகன் றேப்த்துமீட்டுங்கொண்டே யயில்வார். (களா)

சுட்டியன்னையா னவள்பரிவோடொரு சுதனுக்
கொட்டியீந்திடும் பங்கினையுற்றவன் னவன்கை
தட்டியேபறித் துண்டிடுஞ்செயல்கண்டு தங்கை
கொட்டியேசிரித் திடுஞ்சிலகுழவிக ளம்மா. (கஅ)

அணியெனச்சில வழுதிடுமமைபுனைந் திடுவான்
றுணியெனச்சில துயர்ந்திடுஞ்சுடுங்கொடும் பசிநோய்
தணியெனச்சில தளர்ந்திடுந்தாங்கருங் கொடிய
பிணியெனச்சில பேதுறும்பிள்ளைகள் பெரிதும். (கசூ)

அன்னையேயயல் வீட்டினுற்றிடுஞ்சுத ரான
ரென்னையன்னநும் மகத்தினிலித்தினத் தென்றே
யென்னைநோக்கியே வினவினரவரிசைத் திடுத
றன்னையான்பெற நல்கெனச்சாற்றுபு தளரும். (உ0)

பெருவரைக்கிணை யாநிதிபெற்றுளார் தமக்கு
மருமையோர்சுதன் விருப்பமீந்திடலமை யாதே
யிருபதோடெழு புத்திரர்ப்பயந்தவ ரெய்தும்
பருவரற்கிணை கடலலாதெதனையே பகர்தல். (உக)

ஆலகாலமும் வடவையங்கனலுமே யனைய
கோலமேவிய பசித்தழறற்கொளுந் திடவும்
பாலரியாவருங் கூழிலராகியே பதைத்துச்
சாலவாடுறுந் தன்மையாங்கறிந்து முட்சலிப்பால். (உஉ)

ஒருதினந்தனி லாயினுமிச்செய லுள்ளிற்
கருதியோர்மொழி தன்னுடன்கழறில ளுகித்
திருமினயகன் சேவடிக்கேமனஞ் சேர்த்த
பொருவினயகன் மேற்சலிப்புளத்தினும் புணராள். (உங)

நிறையின்வன்மைக்கு நெஞ்சகத்தின்கணே நிறைவார்
பொறையின்வன்மைக்கும் புகலுமெப்பொருளேயும் பொறுத்த
தறையின்வன்மையுந் தனக்கிணையாமருந் ததிமின்
முறையின்வன்மையு மன்றியொப்பாரையே மொழிவாம். (உச)

மல்விளைத்திடுந் தீவினையானவன் பகையாற்
பல்விதத்துய ருழந்திடும்பாலர்க டமக்கு
நல்வினைத்திற நுகர்ந்திடுங்காலநண் ணிடலாற்
செல்வியாமனைக் கெழுந்ததோர்நினைவுசிந் தையினுள். (உரு)

காலமற்றதிற் குசேலமாதவன்கரத் தணிந்த
நூலவிர்ந்திடு களம்பெறுநுண்ணிடை மடவாள்
சாலவுங்கிழிந் துறுபழங்கந்தையைத் தரித்தாள்
சீலமாதவன் முன்னணைந்தின்னன செப்பும். (உசு)

தஞ்சமென்றுதற் கடைக்கலமானவர் தம்மை
மிஞ்சபத்தொழி லியற்றிபாயினுந்துயர் மேவா
தஞ்சலீந்திரட் சித்தலேயறமெனத் தாங்கள்
செஞ்சவாய்கொடு செப்பநூலினமுறை தேர்ந்தேன். (உஎ)

இன்னவாறியா னுரைத்திடவியாவுமீண் டெனது
நன்னலங்குறித் தென்றுளங்கொள்ளலிர் நமது
மென்னடைச்சிறு ருற்றவெந்துயாமு நுமது
மின்னவிர்ந்திடு மேனிகொண்மெலிவையுங் குறித்தே. (உஅ)

பொற்பமைந்தொளி குலவியநும்முடல் போதத்
துற்பலத்தகை யடைந்ததாலீதுயிர் தோய்ந்து
நிற்பதாமொரு நிலைமையைநோக்கிடி லெனக்கே
யற்புதத்தகை யடைவதாகுல மகன்றென்ன. (உகூ)

இனையவாசக மமுதமாமழைபொழிந் தென்ன
மனைவியோதிடக் கேட்டலுமாதவக் குசேலன்
றனைநிகர்த்திடு மாதுநீசாற்றுதல் சரத
நினைவுமற்றிதென் னெஞ்சினுநேர்வதுண் டுண்டால். (௩0)

நந்தரந்தெரிந்தேமிடிகெடப்பொரு ணல்கு
மந்தரங்கநண் புற்றவரியாரையு மறியே
னந்தவாறெமக் கீபவரிருப்பரா ஞனு
மெந்தவாறெம தயாசிதவிரதநீத் திரத்தல். (௩க)

காயமீங்கிது சுகம்பெறும்விதத்தினைக் கருதி
மாயமாம்பொரு ணிலையெனவெண்ணியே மயங்குந்
தீயர்வாயிலிற் போந்துளந்திகைப்புறு செயலின்
மேயவன்மிடி யாற்றுயர்படுதன்மேன் மேலே. (௩௨)

பரந்தவான்றிரை சுருட்டிடுகடலுடைப் பார்மே
னிரந்தவாந்தொழி லெவற்றினுநீசமுற் றதுதான்
கரந்திடும்பொருட் செல்வர்தங்கடைத்தலை குறுகி
யிரந்திடுந்தொழி லல்லதிங்காய்ந்திடி லெதுவே. (௩௩)

மெத்தவேதமா முடிபெறவிளம்புமெய்ப் பொருளுஞ்
சித்தமூடுணர் தெள்ளிமைபடைத்துயர்ந் தேற்கு
மைத்தநெஞ்சுடைப் பாவியராயினர் மருவு
மத்தகைத்தொழி லமைவதோவறிவுடைக் கோதாய். (௩௪)

கற்பகத்தரு வொத்தடிகருதுநர் கருது
நற்பயன்களியா வையுமுறநல்குநா ரணனு
முற்பவத்தியற் றியவினைக்கிசைந்திவண் முடித்தா
னுற்பலக்கணுய் தீர்தரிலுதவுவ னுயர்வே. (௩௫)

பாவமுன்புரிந் திட்டதாலித்துயர் படைத்தே
மேவலுற்றதை நற்றவத்தால்விலக் காதே
யாவர்பாலினு மிரந்தொழிப்பேமெனி லிடுவார்
பாவமுஞ்செறிந் தெத்துயர்படுத்திடா பாராய். (௩௬)

மக்களாயுல கத்திடைவந்துளா ரார்க்குந்
துக்கமெய்துத றுன்மையேயஃதறத் தொலைப்பான்
மிக்கமாதவஞ் செய்புமேலோர்நெறி விடுத்துப்
புக்கிழ்மையோர் தந்தொழிற்புரிந்திடப் போமோ. (௩௭)

ஆதலாற்றகு நலமெலாமளித்திடு மனைநே
ரீதலாற்றிடா தேற்றிடப்புகுவது மிசைவோ
சாதலாற்படுந் துன்பமுஞ்சற்றதா மதனாற்
போதலாற்றல னிரப்பதிலிறப்பது புகழே. (௩௮)

என்றுபகற்பல விதம்படுநீதிக ளியம்புங்
குன்றுறழ்ந்திடு மனம்பெறுமிருந்தவக் குசேலன்
றன்றுணைப்பத மிக்கபேரன்புடன் றாழ்ந்து
நன்றுறப்பினு மனையொருவாசக நவில்வாள். (௩௯)

சேருநந்தரந் தெரிந்தவர்செகதலத் திடையீண்
டாருமில்லையென் றெண்ணவிர்முன்னொ * ரானியத்திற்
சாருநுஞ்சரித் திரக்குழாந்தன்னினும் முயிரி
லாருமோர்சக பாடியுற்றுளனென வறைந்தீர். (௪௦)

---

* ஆனியம் - நாள்.

நவிலன்மற்றதென் னென்றிடிலவந்திராச் சியத்திற்
சவிநலங்கொள்சாந் தீபனியாமபி தான
மவிருந்தேசிகன் பான்மறைபயிலுமா னியத்திற்
புவியுளார்புகழ்ந் திடும்வசுதேவனற் புதல்வன். (சக)

கிட்டிணப்பெய ரமைந்தவோர்கேளுள னவன்றன்
மட்டிலாதவிற் பத்தியிற்புயப்பெரு வலியி
லொட்டியுற்றயா வரினுமிக்குயர்ந்தவ னுததி
யுட்டிளைத்துயிர் போனபாலகனையுய் வித்தே. (சஉ)

குருபரற்குறு தெக்கிணையாமெனக் கொடுத்தா
னருளினுற்றனை யொப்பவனெதிருற வணைவார்
கருதலேவையு மின்றெனதளித்திடுங் கனவான்
பருவமீங்கிதிற் றுவாரகாபதிப்பதி யானன். (சங)

என்றறைந்ததீன் டெனதுஞாபகத்திருந் துளதா
னன்றவன்புடை யன்பினனன்னுவீ ராயின்
மன்றநம்பெருந் துயரெலாமாற்றிடு மென்னக்
கன்றலின்மனக் கற்புருவாயினள் கழற. (சச)

வேறு

மனைகிளவி கேட்டருடோய் குசேலன் சொல்வான்
மற்றவன்றன் பெருஞ்செல்வ வளமிக்கேய்ந்து
தனைநிகரின் றுய்விளங்குந் தன்மை யாலென்
றனதுபெருங் கேண்மையெலா மறந்துற் றன்கொ
னினைவிடைவைத் துள்ளான்கொ லெற்றானனு
நேசமுடனியானவனை நேர்போய்க் காண்பான்
புனையிழைமிக் காவலுற்றே னவற்கு நல்கோர்
பொருளிலது வறிதெவணம் போவேன் மாதோ. (சரு)

மஞ்சனைய மேனியனெற் காணி லன்பான்
மாந்துபொரு ளேதுகொடு வந்தா யென்பான்
மிஞ்சுவகை யோடவற்கே தீவேனஃதால்
வீட்டிலுளதேதெனுங்கொணராயென்று
னுஞ்சவிருத் தியிற்கொணர்ந்து நெல்லீர் நாழி
யொப்பில்சுவை யவலாச்செய் துதவ லோடும்
புஞ்சமுற யானெதனிற் பொதிந்துகொண்டு
போவனென மனைவியொடு புகன்றானன்றே. (சகூ)

தோன்றுமகங் கையளவு கிழியாதுற்ற
துணியொன்று கிடைப்பதுந்துல் லபத்ததாக
நான்றுளதோ ரணம்போன்ற வுடையினூடோர்
நற்கையள வேதுளைநன் னுமைநோக்கி

யான்றமகிழ் வடைந்தவளா யதனிற்கட்டி
யருந்தவன்ருள் பணிந்துமகிழ்ந் தனுப்பலோடு
மூன்றுகோற் கொடுபிறைபோல்வளைந்ததன்னே
ருடல்வருந்தத் துவாரகைமாட் டுற்ருனன்றே. (சஎ)

அணிநீடு துவாரகைப்பா லளக்கொண்ணுவா
யமைந்துளவீ திகடோறு மமரர்நச்சு
மணிமாட மாளிகைக ணிறைந்தசீரை
மறைமுனியாங் குசேலனுள மதித்துநோக்கிப்
பணிநீடி யொன்றெனவே பலவுமோங்கும்
பான்மையினு லீண்டெவ்விற் பாங்கேயானுட்
டுணிவோடுஞ் செல்வனெவோர் வாயின்மாடுந்
துவாரபா லகர்காவற் றுதைகின்ருரால். (சஅ)

எவ்வணமியா னிவற்றையெலாங் கடந்திட்டப்பா
லியன்ற கிருட்டிணன்சேவை யெய்தலென்றே
செவ்வணஞ்சான் முனிவனுளத் தெண்ணியெண்ணிச்
சென்றனனப் பாலிறைவன் சேரிற்சேர்கா
லிவ்வணமென் றேதருந்தே சுடையராகி
யேய்ந்துளபா லகரிருவ ரியல்புநோக்கி
மெய்வணங்கள் வினவவுமுள் ளச்சங்கொண்டு
மேவினனன் னேர்களிட மெலிந்துமாதோ. (சகூ)

மற்றதுகாற் றுவாரமிசை யுற்றோர்முன்ன
மருவுதரித் திரத்தொடுவார்த் திகனுமெத்த
விற்றதுணிக் கந்தையினை யிடையிற்சுற்றி
யிரைந்தவுயிர்ப் புடனிளைத்துற் றேனைநோக்கி
மற்றிவனெப் பாகிடுமோர் மனிதன்ருனும்
வளம்பெறுநந் துவாரகையின் மாட்டுள்ளானே
வுற்றனனேன் மிக்கவிறும் பூதேயாகு
முவனையொப்பா ரந்தணர்க ளுள்ளின்றின்றே. (ருO)

வதெவண மாயினுமா குகவென்ருயா
தியாமிருத்த னந்தகுதிக் கேலாதென்றம்
மாதவனைப் பார்த்துனது பதிப்பேரியாது
வந்ததெவ னின்னுளத்தின் வாஞ்சையாதே
யோதுகெனப் பரிவோடுங் கேட்டகாலை
யோங்குதவக் குசேலனுளத் துன்னுகின்ருன்
மாதவனுட் பொருட்செருக்குற் றில்லானென்கை
வாயில்கா வலர்மதியால் வயங்கிற்றன்றே. (ருக)

என்னவியர் தன்னவர்பாற் றன்விர்த்தாங்கு
மிசைத்திடுவான் குசேலனென்பா ரெனதுநாமங்
கின்னமில்சி ரயற்பதியில் வாழ்வேனென்றன்
கேண்மைகொள்கிட் டிணன்சேவை கிடைப்பான்வந்தே
னின்னதலாற் பின்னசையொன் றில்லேன்கண்டீ
ரென்றவுட னேதவத்தை யீதென்றோதிப்
பன்னரும்விம் மிதராகிப் பரந்தாமன்றான்
பயில்விளையாட் டாரளவுட் பட்டதென்னு. (ருஉ)

தீனர்களை யகதிகளைக் காணிலெந்தை
திருவுள்ளத் திரக்கமிகச் செனிப்பதன்றோ
வானசெய லேதெனினு மாகயாம்போ
யரிசமுகத் திச்செயலை யறிக்கைசெய்வாங்
கோனவிங்தோர்க் காணிலரைக் கணத்தன்னோரைக்
கொணருதிர்தா மதஞ்செயக்கூ டாதென்றுணே
வேனமைய விட்டுளதாற் செல்வாயென்றோர்
விருத்தனையோ டிடவிரைவில் விடுத்தாரன்றே. (ருங)

சென்றவன்றான் மகராச போற்றியென்னத்
தெண்டனிட்டுக் கைத்துணைகள் சிரமேற்கூப்பி
நின்றறைவான் பிரபோவோர் மறையோன்வாயி
னோர்முகப்புற் றுள்ளான்வார்த் திகத்தினோடு
மன்றமிடி யனுமானுன் வினவிலென்னுன்
மாநிகர்கிட் டிணற்காண வந்தேனென்று
னன்றமையுங் குசேலனுஞ் சமுகமெய்து
நசையினொடு விடைவேண்டி நண்ணுகின்றான். (ருச)

வேறு

என்றிடு மாற்றந்தூத னிசைத்திடு மெல்லைதன்னின்
மின்றிக ழுருப்பிணித்தாய் வியன்கழற் புறத்தின்மேவித்
தன்றிருக் கரங்கொண்டன்பாற் றைவரப் பள்ளிமீதி
னன்றரை விழிகள்சாத்தி ஞானநித்திரைகொண் டுற்றான். (ருரு)

ஓதுபேர் கேட்டலோடு மொல்லென வஞ்சதுளி
மீதுநின் றெழுந்தெங்கெங்கென் வேட்கைசால் குசேலனென்னப்
போதுறழ் துணைப்பொற்பாதம் பூத்தொடப் பொருக்கென்றெய்திப்
போதுறு குசேலற்கண்டான் பொருவிலா வுவகைமிக்கான். (ருசு)

கரையறு மன்போடாலிங் கனம்புரிந் தத்தந்தன்னற்
புரையில்கைப் பிடித்திட்டந்தப் புரத்துறக் கொண்டுபோந்து
நிரைமணி யிமைக்குஞ்சிங்கா தனத்தினீ டன்பினேற்றித்
தரைபுகழ் குசேலன்செம்பொற் றாட்டுணை விளக்கப்புக்கான். (ருஎ)

வணங்குறுப் பிணியைநோக்க மாழையங் கலத்திற்கொண்டு
மணங்குலாந் தூநீர்வார்ப்ப வயங்குதன் கரத்தான்மண்ணிப்
பணங்குலா முடிமேற்கொண்டான் பகவன்மெய்ப் பத்தர்தம்பா
லிணங்குமெய் யுரிமைத்தன்மை யென்னென விசைப்பதம்மா. (ருஅ)

பின்றன தங்கமேற்சார் பிறங்குமுத் தரியத்தன்பா
னன்றரு மறையோன்செய்ய நாண்மலர்ப் பாதமொற்றி
மென்றழைப் பள்ளியேற்ற மேவுருக் குமணிபாமை
மின்றழை கவரியாதி வீசிமிக் குபசரித்தார். (ருகூ)

அத்ததி தனிற்கோபால னறைகுவ னேசகாநின்
னுத்தமக் கற்பார்ப்பன்னி யோகைமிக் கெனக்கென்னீந்தா
ளத்தகு பொருளையீண்டியா னுர்தர நல்காயென்னச்
சித்தமுட் குசேலமேலோன் செப்பரு மிலச்சைகொண்டே. (கூ0)

நாகமே லிறைவன்றானு நறுமொறுத் திடவெப்பார்க்கு
மேகநா யகமாயுற்ற விவன்றனக் கேழைநாமிம்
மாகதோ ரணநேர்கந்தை மாட்டறச் சிறிதாயுற்ற
பாகமா ரவலைநல்கும் பண்பெவ னெனக்கரந்தான். (கூக)

ஆனது கண்டுமாய னவன்பழங் கந்தைதன்னின்
வானவ ரமுதமென்ன வைத்தவோர் முடியைக்கையாற்
றானவிழ்த் ததனிற்சான்ற தனியவல் விரன்மூன்றாற்கொண்
டானனை தனிலுநெஞ்சத் தார்வமுற் றார்தலுற்றான். (கூஉ)

மறுதரந் தனதுகையான் மாயனள் ளிடலுமாடே
யுறுமுருக் குமணிமாற்றி யோர்பிடி யுண்டபோதே
யிறுதியில் வளங்கண்மன்ற வெய்தின விஃதுந்துய்க்கிற்
குறுகிரணத்த ராவோங் கொள்ளலை வள்ளாலென்றாள். (கூங)

வேறு

அன்னையீ தறைந் திடக்குசேலனையரி பார்த்தே
முன்னைநாளியல் வர்த்தமானங்களை மொழிவான்
றன்னைநேர்சக வொப்பில்சாந்தீபனி தன்பா
லென்னையாமுறுஞ் செயனினைந்துள்ளகொ லின்னம். (கூச)

தினமொன்றிற்குரு வானசாந்தீபனி மனைக்கிந்
தனமெடுத்துநா மிருக்கையிற்சார்ந்திட வருங்கா
லினன்மறைந்திருண் டிடித்துவான்பொழிதரு காலை
மனமயர்ந்துநின் றிடுஞ்செயன்மனத்திலுற் றுளதோ. (கூரு)

ஆந்ததிக்கணோர் தாருவின்கீழுற வங்கோர்
பாந்தளூற்றிட லாற்பயத்தோடுநாம் படர்காற்
சாந்தமிக்கசாந் தீபனியாண்டுச்சார்ந் தனரென்
றாய்ந்துகானகத் தடைந்ததுமறிதியோ வன்றி. (கூகூ)

நனைத்துற்றுமெய்ந் நடுங்குபுவீட்டுறு நமக்குச்
சினைமுதிர்ந்தசேற் கண்கொள்சாந்தீபனி மனையாள்
புனையவாடைவே றுதவலுமத்தொழிற் புரியா
தினைவொடாரியன் றடுத்ததுமுளத்திருந் தனவோ. (௬எ)

என்றுபற்பல விதம்படக்குருவித் தியல்போ
தொன்றுறுஞ்செயல் களையெலாமொன்றொழி யாதே
நன்றுறப்புகன் றுளத்தினினனிமிக வியந்து
துன்றுபோனக மின்புடனிருவருந் துய்த்தே. (௬அ)

உரியவென்னுயிர் நண்பநின்னுத்தம மனைநின்
பிரிவையாற்றலள் வருகைநாடுறும்பெற்றி யாளுன்
புரியினெல்லைநீ யெய்துதியாலெனப் புகன்றான்
கரியனுயிர்க் கரியனுக்கலந்துறுங் கரியன். (௬௯)

புனிதமார்துவா ரகையினுந்தன்னகர் போது
முனிவனுண்டுறுங் கிருட்டிணன்செயலெலா முன்னித்
துனிபொருந்துதன் மனைநினைவெண்ணியுட் டுளங்கி
நனிகிருட்டிணன் வாயுபசாரமே நவின்றான். (எ0)

அற்பமும்பொரு ளீந்திலனீரவ ணடையி
னற்பயன்கடந் திடுங்கிருட்டிணனென நவின்ற
கற்பகம்பெறுங் காதலிகளித்திட யானெச்
சொற்பகர்ந்துதேற் றிடுவனென் றுளமிசைச் சூழ்ந்தே. (எக)

இன்னறோயிலம் பாட்டினுன்மெலிந்தநா மெய்தப்
பொன்னளித்திலன் வறிதுறப்போகெனப் புகன்றா
னன்னசெல்வமெய் திடிற்பெருமோகம்வந் தடையு
மென்னவுன்னிக்கொல் கிட்டிணனீந்தில னேமம். (எஉ)

என்றநிச்சயங் கொடுநடைகொண்டன னிப்பான்
மன்றலங்துள வோனருளாலவன் மனையின்
மன்றவானவ ரழுக்கறுத்திடப்பல வளமுந்
துன்றலுற்றதான் மனைவிவாரிசமினிற் றுதைந்தாள். (எ௩)

வேறு

தன்னதந்ததன தானதனதானனா

நனமைதங்குதன தூர்வயினிலாவியே
நண்ணிடுந்தன்மனை மாடணுகிநேடவே
தின்மைதங்கலகி லாதமிடிநாமமார்
செம்மறந்திடனை யாகியுளவீடுதா
னின்மைகண்டுதிசை நாலினையுநாடியே
யென்னவிந்ததகன வேகொனனவேகொலோ
தன்மையிங்கிதைமு ணர்பவர்முனேகியே
சம்மியம்படவு ளோர்வமெனமேயினன். (எ௪)

தய்யதந்ததன தானதனதானா

துய்யனென்றுமனே சேர்வயினின்மேருநேர்
சொல்லிடும்பெரிய மாளிகைகுலாவலா
லயமின்றெவர யோகமிட்டமோவியே
பைதிலிங்கொர்மனே யேசெய்ததின்மேவினர்
மெய்ப்திங்குளபொன் வாயில்வதிபாலரான்
மெல்லவிங்குதெரி வோமெனவும்மேவுபோழ்
தையபொன்றடிகை மேவுமெனிலாதபே
ரஙகலின்றிமகிழ் காரியர்களாகியே. (எரு)

தன்னதானதன தானதனதானா.

எண்ணிலாதபல வேவலர்களாயுளோ
ரின்னலோடுபணி காணுறவுலாவுசீர்
கண்ணிணுடியிவர் பாலதுவினுவினேர்
கண்ணியேவிடைசொல் வார்கொனமொட்டேயெனு
வுண்ணிலாவுபய மோடுதலைவாயிலூ
டொண்மைசான்மதியன் மேவமனைமீதிலே
பண்ணிலாவுசல சாசனியின்மேயவோர்
பன்னிநாதன்வர லானதெரிவாயினுள். (எசு)

தனத்ததத்ததன தானதனதானா

அரைக்கணத்திலெதிர் போய்நமிறைமேவினு
ரழைத்திவட்கொணரு வீர்களெனவோதுகா
விரைச்சன்மிக்கபடை நான்மைபுடைசூழவே
யிரத்தினக்கனிரை பாவுமொருதேரின்மேல்
விரைத்தநெய்க்குழன்மி னர்கவரிவீசுரு
வியப்புறப்பவிசை பாடிநடமாடவே
வரைப்பில்பற்பலர்பொ னர்தடிகொள்வோர்களாய்
வழிக்கணுற்றவர்க ளியாவரையுமோவியே. (எஎ)

தனனதந்ததன தாத்ததனதானா

நிலாவுகின்றசெயல் பார்த்துவெருண்மேவியே
நிட்டதமென்பவைக ணீத்தமறையோனேர்சார்
குலாவவங்கவன்மு னுப்பலருமேவிநீள்
குசேலவின்றவ பாக்கென்மொழியோதியே
சுலாவியன்பினெடு தாட்டுணைகள்பேணியே
சுவாமிதங்கிடுவிர் தேர்க்கணெனவோதலால்
விலாசமிஞ்சிரத மேற்குலவுபோதின்மா
விநோதமிஞ்சியதி யாக்கையரிமானவே. (எஅ)

தய்யானதந்ததன தானதனதன்னு

அவ்வாறமைந்தமைகு சேலனுளமுன்னுரு
வல்லேய்முகுந்தனரு ளாடலெனவெண்ணியி
டொவ்வாவியன்குலவு மாளிகையுண்மன்னுபோ
தொய்பாரமிஞ்சுபல மாதர்பணிபண்ணவே
செவ்வாரிசங்குலவு மாவணையபன்னிநீள்
சில்லோதியின்கணடி சூடியெழின்மின்னனேர்
வெவ்வாளியின்பிடர்கொ ளோர்தவிசி னண்ணியே
மெய்யோனுடன்குலவி னுள்சுகிர்தமன்னவே. (எகூ)

வேறு

சிங்காதனமேற் கணவனுடன் சேர்ந்துவிளங்கும் பெருந்தேவி
பொங்காதரவிற் றவனிருதாள் போற்றியுவகைப் பொலிவினுடன்
மங்காவளஞ்சா றுவாரகையின் மாட்டுநடந்த விபவமெலா
மிங்கார்வத்தோ டியானறிய வியம்பியருள்வீ ரெனவிரப்ப. (அ0)

மின்னைநிகர்சிற் றிடைமனையாள் வினவலோடு மெய்த்தவன்றன்
றன்னைமறந்து பரவசமுட் டழைத்தாங்கியன்ற தன்மையெலா
யென்னையெனநான் சாற்றிடுவ னென்னப்பரிவோ டாண்டியல்சீர்
தன்னையுரைப்பக் கேட்டனுமே தையலுவகை தழைத்தனளால். (அக)

வேறு

தாங்கருமிடியாற் றளர்வுறுங்காலந் தானறியாதுறுஞ்செயல்போ
லோங்கருஞ்செல்வம் பெற்றகாலையினு முளமிசைபுணர்கிலனுகிப்
பூங்கரும்பனையீன் றவனருள்வடிவாம் புண்டரீகப்பதத்துணைக்க
ணீங்கருநெஞ்சம் படைத்தறம்பெருக்கிநிலமிசைவாழ்ந்தனன் குசேலன். (அஉ)

பொய்த்திறமாயா புன்புலபோகம் பொருளெனக்கொண்டிடாராகி
மெய்த்திறப்பகவன் றிருவடித்துணையே மெய்த்துணையாமெனக்கொள்ளு
முத்தமப்பத்திப் பரவைபுட்படித லுற்றிடுமியோகியரானு
ரெத்திறமுறினு மோரிடையூறு மெய்தலர்சரதமாமாதோ. (அங)

சமலவல்வினையின் றொடக்கனுவளவுந் தன்னுளஞ்சார்கலனுகிக்
கமலவான்றளஞ்சால் புனலெனப்புவியிற் கலந்துறுகுசேலமாதவன்றன்
விமலமெய்க்கற்போ டரியுவந்துண்ணும் விருந்தளித்திட்ட தன்மனையோ
டமலவானந்த வடிவனுமரிதா ளடைந்தன னமரரேத்திடவே. (அச)

வேறு

பொய்யாமுலகந் தனையுளத்தோர் பொருளாக்குறியா துன்றனிரு
பொன்னங்கமலத் தாட்டுணையே புந்தித்தலத்திற் புணர்த்துறுமோர்
மெய்யார்தவத்துக் குசேலனைநேர் மேன்மைபொருந்தும் பெரியோரே
மேவுன்பெருஞ்சோ தனைசகிக்கும் விறல்பெற்றுடையோ ரல்லாமற்
பையாடரவ மனையபுலப் பகையாலுள்ளம் பதைபதைத்துப்
பார்மேலுழலு மென்னனைய பருவர்க்கியலா தாதலினுள்
ளெய்யாவண்ண முன்னருட்பே றீந்தென்வினைக ளிறப்புரியா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (அரு)

குசேலர்கதி முற்றிற்று.

ஆகூ கவி அசக.

பத்தாவது

# சந்திரகாசகதி

மாற்றுயர்ந்தசெம் பொன்புரைந்திலங்கிய மனத்தி
னேற்றமேவிய குசேலமாதவன்கதி யிசைத்தேன்
கோற்றழைந்தகை வேந்தெனக்குலவியே யரியன்
பேற்ற சந்திர காசனற்கதியியம் பிடுவாம். (க)

வெருட்டத்துப்நசை கருதுபுவீரசொர்க் கத்துற்
கிருட்டத்துப்நலங் கிடைத்திடாக்கிழ்மைதோய் மன்னர்
பிருட்டத்துய்த்திடாப் படைபெறுபிரபலத் தகைதோய்
திருட்டத்துப்நன் ஞமமன்னுட்சிதோய் தேயம். (உ)

வளமைமெத்திய லத்திருநாடதன் மாடே
யுளவொர்மாநகர் தன்னிடை*வேளிரா யுற்றோ
னளகையாதிப னிகர்பொருள்வளமைமிக் கமைந்தோன்
களவில்கற்புடைக் காதலியுடன்கலந் துறுநாள். (ங)

மிச்சச்சிர்கொடக் கார்தகவிலரெனன் மேவு
மெச்சத்தாற்கொளப் படுமெனவிசைக்குந்தென் மறையின்
மெய்ச்சத்தார்த்தச்சொற் படியவன்குலத்தினை விளக்கு
முச்சச்சிர்கொள்கான் முளையவன்மனைவயிற் றுதித்தான். (ச)

உதித்தமைந்தனல் லுருவெழிலாதியுய்த் துணர்ந்து
கதித்ததேசவிர் சந்திரகாசனென் கவின்பேர்
விதித்துமாமறை முறைச்செயல்வியத்தக வாற்றி
மதித்தரம்பட வளர்த்தனன்பெயரிடு மரபில். (ரு)

அன்னமைந்தனுக் காண்டொரைந்தமைந்திடு மமைய
நன்னலம்பெறு தந்தையைநண்ணல ராஞேர்
வெந்நமைந்திடாப் பெருஞ்சமர்விளைத்தவின் விண்ணோர்
மன்னலம்பெறு நாடுறப்புரிந்தனர் மன்னே. (சூ)

மற்றவ்வேலையன் னவன்மனையவண்மிக வருந்தி
யுற்றநற்றுணை யொருவருமின்மையி னுயங்கிப்
பெற்றபாலனைப் பேணலர்செகாவணம் பேணக்
கற்றவுரைவிட் டேகினள்கரவரி னந்தோ. (எ)

எண்ணிடற்கரி தானசெல்வத்தையு மீணேதீர்
தின்னியத்தகை பெற்றநாயகனையுஞ் சேர்ந்த
பெண்ணிமைப்பொழு திற்றுயரீதுறப் பெறிலிம்
மண்ணிடத்துறம் வாழ்க்கையை யென்னென மதிப்பாம். (அ)

---

*வேளிர் - குறுநிலமன்னன்.

இருளிராவிடை யாவருங்காணுரு வியல்பிற்
றிருடரிற்செலு மொண்டொடி திருட்டத்துய் நன்றன்
பொருவின்மந்திரி மேயவோர்மனையிடைப் புகவே
யருளுளம்பெறு மவனவட்பார்த்திஃ தறைவான். (கசு)

பொன்சரித்தடங் கைபெறுபூவையர்க் கரசே
நின்சரித்திர மியாதெனநடந்தவா நிகழ்த்த
மன்சரித்திடு நீதிசொன்மந்திரி வருந்தி
மின்சரித்தநுண் ணிடைக்குவீற்றொருமனை விதித்தான். (க0)

பெற்றவோர்சுதை யாமெனவவடனைப் பிரிய
முற்றவேபரி பாலனஞ் செய்துகான் முளையா
யுற்றசந்திர காசன்மேலுவகைமிக் கோங்கி
மற்றவன்வளர்த் திட்டனன்கருணையின் மலிவால். (கக)

பொருவிலாதவம் மங்கைபுத்திரன்றனைப் புரந்தே
சருவரட்சக காரணனுமரி சலசத்
திருவடித்துணை யேதுணையாமெனச் சிந்தித்
திருளுறுந்துய ரொழித்தெமையாளென விரந்தாள். (கஉ)

காலமன்னதி லிளங்குருந்தாமதி காசன்
சீலமிக்கமந் திரிகுமரன்றனைச் சேர்ந்து
கோலமேவுட லுயிரினைந்திடுநசை கொண்டு
சாலவாழுநா ளினிலவன்முன்புரி தவத்தால். (கங)

பொருவில்சீர்கொளோர் மாதவனவனிடம் புக்குக்
குருவெனுமொர்சா ளக்கிராமம்பெறக் கொடுத்துப்
பருவமொத்திடப் பூசைசெய்முறையையும் பகர்ந்தே
பொருவினன்மிகச் சிறியதாயுற்றிடு மதனை. (கச)

மற்றியாவருங் காணுருவண்ணந்தன் மலர்வா
யுற்றிலங்கிடக் கொண்டுதன்னுளத்தெழு மன்பாற்
றிற்றியாதிய தானுணுமுனநிவே தித்து
முற்றிலங்கிய பத்தரின்முதுக்குறை வமைந்தான். (கரு)

இயலும்வேறிடத் தீங்கிதைவைத்தன மென்னி
னயலுளார்கவர்ந் திடுவர்களென்றுளத் தஞ்சி
மயலுறுததன் வாயினுள்ளமைந்திட வைத்தான்
வியனிலாவுபாற் கடற்றுயில்வோனையுள் விழைந்தே. (கசு)

கருதுமோர்தினத் தினிலுயர்சந்திர காசன்
மருவுமந்திரி சுதனுடன்மன்னவன் மனைசால்
பெருமிதங்களியா வையுமிகநோக்குபு பெயர்ந்தே
நிருபனீடுமத் தாணிமண்டபத்திடை நேர்ந்தான். (கஎ)

அங்கவ்வெல்லையி லுற்றவ்வரசன தவையிற்
புங்கமிக்கசா முத்திரீகத்தினி புணராய்த்
தங்கலாயினர் சிலவரித்தனயனைக் கண்டே
பொங்ககங்கொளோ கையொடிறைக்கின்னன புகல்வார். (கஅ)
கிளர்தலுற்றவிப் பாலகனதிபராக் கிரம
முளவிவேகியா வானதுமட்டல வுன்றன்
வளமையார்மரு காகியிப்பதிக்குமன் னுவான்
கிளவிமற்றிது சாதமைபுறலெனக் கிளந்தார். (ககூ)
சோதிடத்தர்சொற் கேட்டுமன்னுத்தரஞ் சொல்லான்
மாதிரக்களி ருமெனவிருந்துபின் மறையோர்
போதுமென்றுள மகிழ்தரப்பொருண்மழை பொழிந்தே
யோதிடுஞ்செய லினைத்தனதகத்திடை யுன்னி. (உ0)

வேறு

பருவரன் மிக்குற்றோனுப் பலபல விதங்கடன்னுட்
கருதியிக் குழவிதன்னைக் காதலே நன்மையென்னத்
திருகுதன் வெகுளிநெஞ்சிற் செய்திடு முடிவோனுகி
மருவவொர் *குணுங்கற்கூவி மற்றவன் பாற்சொல்கின்றான். (உக)
காசினி தனிலாரேனுங் காணொ வண்ணமிந்தத்
தேசியல் குமரனுவி செற்றிடு வாய்நீவண்டு
மூசியற் கானந்தன்னின் முடித்ததற் கோர்சான்றுகப்
பேசிடுங் குறிகைக்கொண்டு பெயர்மதி கடிதிலென்றான். (உஉ)
தன்வினை தன்னைக்கொல்லு மென்றரு டழைத்தசான்றோர்
முன்விளம் பிடுசொல்லோடு முடிவது மிற்றென்றோரா
மன்விளம் பிடுசொற்கொண்டு †மதங்கன்மற் றந்தவாறே
துன்வினை முடிப்பனென்றான் சுவசமுற் றவன்போன்றன்றே. (உங)
ஏவினையனையபுந்தி யிபைந்தசோ திடர்சொற்கேட்டு
மேவிய மகிழ்ச்சியின்ப வேலைபுட் புகவிடாது
கோவினைப் பழிபாவந்தோய் கொடுஞ்செயற் கோட்டத்தாழ்த்துந்
தீவினை வலிமைதன்னை யிற்றெனச் செப்பலாமோ. (உச)
கிளத்தித நிற்கமைந்தன் கேடில்சா ளக்கிராமத்
தளக்கொணுப் பத்திமிக்கா ராதனை யியற்றலாலே
குளக்கணூர் கயத்தைக்காத்த கொண்டல்வண் ணங்கொளெம்மா
னிளக்கமில் குணுங்கனெஞ்சை யிவ்வணந் திருப்பினுனல். (உரு)
ஆவவிக் குழவிசால வகதியாத் தோற்றுதந்தோ
பாவமிங் கிவனைப்பெற்ற பாவையின் னவனைக்காப்பான்
மேவரு முயற்சிக்கோரேழ் வேலையு நிகராங்கொல்லோ
கோவமார் மலடர்தாமுங் கொடுந்தொழி விதுசெய்யாரால் (உசு)

---

* குணுங்கன் - சண்டாளன் † மதங்கன் - சண்டாளன்,

தருகன்மிக் குடையனுன தராபதி யாம்பேருள்ளான்
மறுவுறுஞ் செயலொன்றேனும் வயக்கிலா னுமிச்சின்னஞ்
சிறுவனைக் கொல்வானுன்னுந் தீமைமற் றென்னென்பேன்யான்
குறுகுமின் னவன்மன் னற்கெக் குற்றமே குயிற்றுவானே. (உஎ)

மைந்தனைக் காணுளாகி வயிறுளேந் தீன்றவன்னை
சிந்தன கண்கணின்றுஞ் சிந்தெனச் சிந்துங்கண்ணீர்
வெந்தகைக் குணஞ்சான்மன்னை வேரறக் களேவதன்றி
நந்தமோர் குலத்தைத்தானு நசித்திடச் செயற்கேதையம். (உஅ)

கதித்துவர் திகற்போராற்றுங் கடும்பகை வனேயுமங்கோ
சதித்துவஞ் சகத்தினுலே சாடிடும் வண்ணந்தன்னுண்
மதித்தன்மன் னவர்கட்கேற்ற மரபல வென்னிலிந்த
விதிப்பிழை செய்மன்கும்பி வீழ்ந்தபி னெழுவதுண்டோ. (உ௯)

காட்டகத் தொளித்துத்தன்முற் காண்பவர் தமதுமெய்யிற்
பூட்டணித் திரள்களியாவும் பொருக்கெனப் பறித்துத்தன்ன
நீட்டமார் குடும்பமோம்பு மியற்கையிற் றரியாரான
வேட்டுவ ரறவரன்றே வேந்தன்மற் றிவனிலம்மா. (௩0)

யாவதெத் தன்மைத்தாக வியலினு மியல்கமற்றியான்
ருவரு மெழில்சான்மைந்தன் றனைக்கொலே புரிகின்றில்லேன்
மேவருங் குழவிதன்னை விழிகொடு நோக்குந்தோறென்
கோவமுன் னுவதுந்தீர்ந்து நெஞ்சகங் குளிர்வதம்மா. (௩க)

காணிவன் விரலிலொன்றைக் களேந்தனன் கடிதிலெய்திக்
கோணியல் பிறைக்குக்காட்டிக் குளிர்தரப் புரிவனென்ன
மாணிலா மரியுட்டேண்ட மனத்திடை கொண்டானுகிச்
சேணியல் கானந்தன்னுட் சிறுவனைக் கொடுசென்ருனல். (௩௨)

சென்றவன் சிறுவற்பார்த்துன் செழுங்கரத் தொன்றை நீட்டா
யென்றன னவ்வாருற்ற விருந்ததால் விரலோராறு
மன்றவுண் மகிழ்ந்தானுகி மற்றதைக் கொய்தானுகி
மன்றன்முற் காட்டலோடு மடிந்ததாக் கொண்டின்புற்ருன். (௩௩)

உற்றவோர் விரன்மதங்க னெடித்திடத் துணிவுநெஞ்சிற்
கிற்றவக் காலேவல்லே கிளேத்தெழுந் திட்டதேகொன்
மற்றதை யுன்னிமுன்னே மலரயன் சிருட்டித்தான்கொ
லெற்றதா யினுநன்கோரி லோரிறும்பூதாமன்றே. (௩௪)

செயலிவா ருகமைந்தன் செறியிருட் கானத் தூடே
யயலொரு துணேயுமின்றி யழுங்கியாண் டமைந்தானுக
வியனர சொருவன்காட்டில் வேட்டஞ்செய் திடுவான்புக்கா
னியலிருங் குழவியுண்ணுேந் திரங்குமப் பான்மைகண்டான். (௩௫)

கண்டவேந் தணுகிநீயார் கானமற் றிதனினின்று
தண்டருந் துயர்மிக்கேய்ந்து தளர்வதென் சாற்றுகென்ன
வண்டருங் குழவியான்யார் மகனெனத் தேர்கின்றில்லேன்
மண்டழை திருட்டத்துய்நன் மந்திரி மனையில்வாழ்வேன். (௩௬)

யார்கொலோ வொருவனென்னை யிப்பெருங் கானத்துய்த்தென்
சீர்கொளோர் விரலைக்கொய்து சென்றனன் யாண்டோதேரே
னேர்கொளென் சரிதந்தன்னி லீதுமட் டுணர்வேனென்னத்
தேர்கொளவ் வேந்துவப்பச் செப்பினன் சிறுவன்மன்னோ. (௩௭)

விளம்புசொற் கேட்டுமன்னன் மிக்கவிம் மிதமுற்றுண
யுளங்களித் துரைக்குஞ்சொல்லி னூக்கமும் பிறவுந்தேர்ந்திவ்
விளங்குருந் தோர்மன்சேயே யென்பதற் கையமில்லை
வளங்கொள்புத் திரனில்லேற்கு மாதவன் றந்தானென்ன. (௩௮)

நிரம்பிலக் கணச்சீர்வாய்ந்து நேர்ந்தவோர் குழவிதன்னை
வரம்பிலா வுவகையோடு வாகனத் தேற்றிச்சென்று
தரம்பயி லில்லாட்கூவித் தந்தனன் கையிலிந்த
வரம்பயில் சேயுன்மைந்தன் வளர்மதி மகிழ்வொடென்றான். (௩௯)

கிளத்திடு மகிணன்மாற்றங் கேட்டலுந் தனதுநெஞ்சி
லளப்பில்பே ரார்வத்தோடு மையிருதிங்க டாங்கி
வளப்படப் பெற்றதாயில் வாஞ்சைமிக்கடைந்துநாளும்
விளக்கமுற் றிடச்சேய்தன்னை மேதக வளர்த்தாண்மாதோ. (௪0)

தொகைப்பெரு மறைகளெல்லாந் தொடர்ந்திளைத் தறிதறேற்றாச்
சிகைப்பரம் பொருளாயுற்ற சீதரன் செம்பொற்றாளின்
மிகைப்படும் பத்திசான்ற மேலவ ராயினர்க்குப்
பகைத்தவ ராற்றுந்தீங்கே பாக்கியம் போலுமம்மா. (௪௧)

தாமமார் * வியங்கொண்மார்பச் சந்திர காசனென்னோன்
காமவே ளுருவுற்றன்ன கட்டழ குடையனாகிச்
சேமமே யிலகும்பான்மை திருட்டத்துய்நன்றான்கேட்டு
நாமமா ருளத்தினோடு நாடியிவ் வணஞ்செய்வானால். (௪௨)

சதித்தவன் றனையெவ்வாற்றுஞ் சாடிட வேண்டுமென்றுண்
மதித்தவ னுமற்றோன்வாழ் வளநக ரிடத்திலேதோ
பதித்தகா ரியமுள்ளானிற் படர்ந்துநேர் படலுமுள்ளங்
கொதித்தன னழுக்காறன்ன கொடும்பகை யாதேயம்மா. (௪௩)

குறுகுமுன் றனக்கடங்குங் குறுநில மன்னனீன்ற
சிறுவனு மவனைக்கூவித் திகழுமோர் முடங்கலீந்திட்
டுறுபல்கா ரியமுடித்தற் கொழிந்திடுந் தினநான்கஃதான்
மறுவிலிம் முடங்கலென்சேய் மதனனுக் களித்தியென்றான். (௪௪)

* வியம் - பெருமை.

மன்றர வருமோலைக்கண் வர்த்தமா னங்களெல்லா
மொன்றற வரைந்திற்றின்க ணுற்றவிம் மகனுக்கொல்லை
பொன்றனேர் விடநல்கென்னப் பொறித்தனன் பொருக்கென்றீந்தான்
குன்றநேர் மதிகாசன்கைக் கொண்டவ்வூர் குறுகலுற்றான். (௪௫)

கடுநடை கொண்டுமைந்தன் கயவனூர் புகுதலோடு
நடுமுக டினன்றேயுச்சி நண்ணலின் மதனனேன்
சடுரசத் துய்ப்பமைந்து சயனமீ துற்றானைகப்
படுசெய லறிந்துதானும் பருவர லொழிப்பான்முன்னை. (௪௬)

அருகமை யுத்தியானத் தமைந்தன னுறக்கங்கொண்டான்
பருவமாங் கதனின்மிக்க பாவியாந் திருட்டத்துய்நன்
றருமகள் விடையெனும்பேர் தரித்தவள் சகிகளோடு
மருமல ருப்பானத்தின் மாலருட் செயலால்வந்தாள். (௪௭)

கெழுமினுள் பெருவிருட்சக் கீழுறக் கிடந்துறங்குங்
கழுவிய மணிநேரிந்து காசனைக் கண்ணுற்கண்டா
ளுழுவலன் புடன்சமீபித் துறங்குமோர் செயல்கண்டின்பாய்ச்
செழுமைசால் புருடர்மெச்சுஞ் சிகாமணியாவான் யாரே. (௪௮)

இங்கணைந் துறங்குகின்ற தியாதுகா ரணமோவென்னுஞ்
சங்கைகொண் மனத்தோடாய்கான் மற்றவன் றலைப்பாகைக்கண்
டுங்கமார் முடங்கலொன்று தோன்றிடச் சகியாயுற்ற
மங்கையர் தம்மைநோக்கி வகுப்பளிவ் வாறுமாதோ. (௪௯)

அயினுறழ் கண்ணீர்நம்முள் யாவரே யத்தருக்கீழ்த்
துயில்பவ னுணராவண்ணந் தோய்தரு முடங்கலென்கை
வயினுறப் புரியுமொப்பில் வன்மைசான் றுள்ளீரென்ன
வெயில்விரி மணிப்பொற்பூணர் வேந்தன்மா துரைத்தலோடும். (௫0)

செப்பைநேர் தனத்தரீதோ செய்திடற் கரியதென்னுஞ்
செப்பையோ துபுமின்னேர்வட் செலுத்தின ராகவன்னாள்
பைப்பையச் சென்றன்னேன்பொற் பாகையார் முடங்கல்கொண்டு
கைப்படக் கொடுத்தாள் வாங்கிக் கடிதவிழ்த் துணர்தலுற்றாள். (௫௧)

இவனுண விடங்கொடுத்தி யென்றுதன் றாதைகையா
லவமுற வெழுதலோர்ந்தே யகத்தினுட் சினந்துநிந்தித்
துவமைதீர் காமதேவ னுருவுகொண் டணைந்தாலன்ன
நவமலி புருடர்தங்க ணாயக னிவனையந்தோ. (௫௨)

கொடுவிட மளித்தெவ்வாறு கொல்வது தாதையானேன்
கெடுமதிக் கொடியோனிந்தக் கிடைப்பரு மணியன்னானை
யடுவது செய்வானெவ்வா றமைந்தன னவனெஞ்சச்சோ
கடுமைசால் கல்லிரும்பிற் கடியது கடியதாலோ. (௫௩)

பதியிவன் சதியானீண்டியான் பகர்மொழி தவறேனென்ன
மதியினிற் சிறந்தமாது மனத்தினிச் சயித்தாளாகித்
ததியதிற் றனித்துக்கூடஞ் சார்ந்துதன் ருதைதீட்டும்
விதிவிடம் விடையையாக மென்கையாற் றிருத்தினளால். (ருச)

முடங்கல்கைக் கொண்டுமின்னர் மொய்த்தமை சூழல்புக்காள்
விடம்புரை கண்ணுறென்ன விசேடமென் றிடவன்னேர்பாற்
ருெடங்குபுன் முறுவலோடுந் தோயுமிற் காரியங்கண்
மடங்கனேர் மதனனேர்வான் வரைந்துளான் சிலவற்றென்ருள். (ருரு)

பண்டுபோ லவன்றன்சென்னிப் பாகையிற் றெரியாவண்ணங்
கொண்டுபோய் வைம்மினென்னக் குயிற்றின ரவ்வாறப்பான்
மண்டுபே ருவகையோடு மாதுதன் மாடஞ்சேர்ந்தாள்
விண்டுவுட் கருதுமந்த விதந்தெரி பவர்கவள்யாரே. (ருசு)

சோகநித் திரையையொப்பில் சுவைகொள்பாற் கடலினூடே
நாகநித் திரைகொண்டுள்ள நாரண னருளினீரால்
யோகநித் திரையாக்கொண்ட யுவாவுடன் றீர்ந்தானுகி
வேகநித் திரைதீர்ந்துற்ற வேந்துசே ரவைக்கட்சென்ருன். (ருஎ)

சென்றமை மதனன்றன்பாற் சேர்தரு முடங்கலீந்தா
னென்றலாம் விடயமோர்ந்திட் டுலப்பிலாவுவகையோடு
நின்றசந் திரகாசன்ரு னிவாசமுற் றிடவீடீந்து
மன்றவே வலர்பூணுதி வசதிமுற் றளித்திட்டானல். (ருஅ)

மற்றதன் பின்னரின்பார் மதனநா மங்கொண்டுள்ள
கொற்றவன் குமரன்வல்லே புரோகிதற் கூவித்தங்கைக்
குற்றநல் வதுவைக்காம்ப லுபகர ணங்கள்கூட்டிப்
பொற்றமா நகரமெல்லாம் புனைந்தனன் புலவர்போற்ற. (ருகூ)

மொய்த்துள சுற்றத்தோடு முயங்குநா கரிகரானேர்
மெத்துபே ருவகைபொங்க விடையெனுந் தங்கைதன்னை
நத்துசந் திரகாசப்பேர் நாயகன் றனக்குநல்கித்
தத்துபே ரார்வமென்னுஞ் சலதியின் மூழ்கினனல். (கூ0)

திருமணச் செயல்கண்முற்றுந் தீர்ந்தபின் மதனப்பேரோன்
பொருவரு முடங்கலொன்று போக்கினன் றந்தைபானீர்
தருமொராக் கினைபோலென்னேர் தங்கையைப் பிற்றைவைகன்
மருவுசந் திரகாசற்கு வதுவைசெய் தளித்தேன்மன்னே. (கூக)

மற்றுள வேவல்செய்வான் மகிழ்ந்தெதிர் நோக்குந்தம்மோர்
பற்றுள மதனநாமப் பாலனென் றேலையொன்று
முற்றுமச் சமுமிக்கன்பு முதிர்தரப் பொறித்துய்த்திட்டான்
கிற்றுள முடங்கனீட்டிக் கிளர்ச்சியிற்படிக்கலுற்றுன். (கூஉ)

கூர்தலிற் பொறித்தசெய்தி குறித்துணர் கொடியோன்வாளி
பாய்ந்தவோர் புனிற்றுமானிற் பதைபதைத் துள்ளநொந்து
போந்தவோர் கிணறுவெட்டப் பூதம்வந் துற்றகாதை
யாந்தகை யமைந்ததந்தோ வழகிதென் செயலென்றேய்ந்தான். (சுங)

மன்னுயிர்க் கெல்லாமின்பம் வயக்கிட'வேண்டுமென்ன
வுன்னுளம் பெற்றமேலோர்க் குரியதா கியவோரின்பந்
தன்னுறு சுகத்தைநாடித் தவப் பிறர்க்கிடுக்கணுற்ற
முன்னுமஞ் ஞானத்தாமு மூடரெய் திடலாங்கொல்லோ. (சுச)

உளத்துய ரடைந்தமன்ன னுடனவண் விட்டுநீங்கி
வளத்தனோர் நகரிற்புக்கு மைந்தனைக் கூவிவல்லே
கொளத்தகு விடைமின்மன்றற் குறித்துனக் கனுப்பலான
விளக்கமார் முடங்கற்கொண்டு மேவுதி யென்முனென்றான். (சுரு)

வஞ்சகச் செயலொன்றோரா மதனநா மங்கொண்மைந்தன்
மிஞ்சயர் வுற்றதாதை மென்கரத் தீதலோடுஞ்
செஞ்சமற் றதனைத்தேர்ந்தான் சிந்தைவிம் மிதத்தனுகிச்
சஞ்சய மின்றுநங்கை தருமெழுத் தென்றேகொண்டான். (சுசு)

விழுமமிக் கியற்றவன்றி விடையையீங் கிவற்குநல்க
வெழுதக்கை வருமோநெஞ்ச மெண்ணவு மிசையுங்கொல்லோ
கெழுமிய தெவ்வாறென்னக் கிளத்துவ னென்றுண்ணடி
யிழுதையா மிறைவன்வாளாங் கிருந்தனன் * முள்காந்தன்றே. (சுஎ)

நன்மையாம் பொருள்கடானே நற்றவ மில்லார்தம்பால்
வன்மையா யெய்திற்றேனு மற்றது கொள்ளாராகிப்
புன்மைசால் பொருள்கண்மீதே புரிகுவ ரிச்சையன்றே
தன்மையாங் கதுகொண்மன்னன் றகையிது வெறுத்தான்மாதோ. (சுஅ)

சந்திர காசப்பேரோன் றனையைதன் கொண்கனுகை
வந்திடு திறத்தாலெந்த வண்ணமாங் கவனைக்கொல்வே
னந்திடக் கொல்லேனுயி னட்டினைக் கவர்வான்றிண்ணந்
தந்திரத் தெவ்வாற்றேனுஞ் சாடலே நலமென்றோர்ந்தான். (சுகூ)

செம்மைநற் றவத்தாற்பெற்ற செல்வியாம் விடைநாமப்பெண்
கைம்மையாய்த் துயரத்தாழல் கண்டுநான் சகிப்பேனந்தோ
சும்மையார் முரசமுதூர்த் தோற்றிடற் கிசையேனென்றான்
வெம்மையார் குணஞ்செய்முன்னூழ் வினைவழி வேந்தன்மன்னே. (எ0)

பாவியக் கணஞ்சேயோடு பகர்கின்று னம்பதிக்கட்
கோவில்கொண் டருளுநம்மோர் குலப்பெருந் தெய்வமான
தேவியைப் பூசைசெய்வான் செப்புதி கடிதிலென்ன
வேவின னிந்துகாசற் கிதுசெயன் மதனன்சொன்னன். (எக)

---

* முள் சாத்தல் - மௌனமாயிருத்தல்.

வேறு

இன்னசெயன் முற்றியபி னேந்திலைவை வேலோன்
கொன்னவையி யற்றிடுகு னுங்கனைய் மைத்தே
துன்னலுறு மின்றிரவு தூயமதி காச
மன்னடைகு வன்குலதெய் வத்தளியின் மாதோ. (எ௨)

எய்தமைய நீகரவில் யாருமறி யாமே
கைதவமொ டுற்றுமதிகாசனுறின் மன்னே
வைதவழும் வாட்படையின் வல்லைதலை வீழக்
கொய்திடுதி யானுவகை கொள்ளும்வண மென்றான். (எ௩)

செய்கையிது முற்றும்வரை செல்வநகர் மீதே
வைகைபெறும் யாரையும்வ ராவகைசெய் வேனென்
றுய்கையறி யார்தலைமை யுற்றவனு ரைப்பக்
கொய்கைபுரி வாள்கொடுகு னுங்கனவ னுற்றான். (எ௪)

யாருமறி யாதவகை யிவ்விதமி சைத்தே
சாருநக ருற்றுளர்த மக்குமரு கன்னேன்
பூருவமு தற்கொடுயர் பூசைபுரி காருஞ்
சீருலவு கோயிலிடை செல்லலிரென் றோத. (எ௫)

நாகரிகர் தாமிறைந விற்றுமுன மேகி
யாகரம டைந்தனர்க ளாகவது காலை
சாகரமெ னன்புமலி சந்திரகா சன்று
னேகமன தோடுதளி யெய்திடல்வ லித்தான். (எ௬)

மற்றவமை யத்தின்மத னப்பெயர்கொண் மைந்தன்
கொற்றவனு ரைத்தமொழி கொண்டிலன்ம றந்தே
மற்றவன்மு னுகமக தேவிநிய மத்திற்
குற்றனன்மு குந்தனுள முன்னலெல்வ ரோர்வார். (எ௭)

மன்பதைகள் யாருமரு வாத்தளியின் மாடே
முன்படைத்த லான்மதன மொய்ம்பனைம தங்கன்
றன்படையின் வீசியுயர் தார்முடியை வீழ்த்தான்
கொன்பயின்மெய் கொண்டமதி காசனெனல் கொண்டே. (எ௮)

ஏற்றம்வி நன்மையொடி ழிந்தநவை யென்னச்
சாற்றவையு ளேதுதன்னோர் தந்தைமுபல் வர்னே
வேற்றவது மைந்தர்புடை யெய்துமெனு முன்னோர்
மாற்றமது நிச்சயம தித்துணர்ப வர்க்கே. (எ௯)

உண்ணுவழிய வெண்ணுமதி காசனுற லோர்ந்தே
நண்ணுறுகு னுங்கனையொர் நற்கைகொடு பற்றிப்
புண்ணுறவ வன்றிணிபு யந்தனைவி சித்தே
துண்ணுறவ வண்கடிது சூழ்பவர்கை யீந்தான். (அ0)

வேறு

தவிசேறியம்பொன் முடிசூடநின்ற தலைசோரிபொங்க வறிதே
புவிமீதுருண்டு விழல்காணமுன்பு புரிபாவமென்கொ லவநீள்
பவியானதந்தை மகனாகிநின்ற பரிசேயிதென்று பலவா
றவர்தேயமைந்தர் மிகவேபுகன்ற வவையான்விளம்ப லவமே. (அக)

வேறுென்றுதுக்க மார்சம்பவத்தை வேகங்கொடொற்றர் புகலக்
கூறுென்றுவிற்கை யார்மன்கடுக்கொள் கூரம்புதைத்த வுழைபோ
லுறுென்றுளத்தி னினையக்கருத்தி னடுநின்றதெய்வ மிகலாய்த்
தாறுென்றுனுற்றல் யான்வாடியிங்கு தானேயிறக்க வென்றே. (அஉ)

மலையிற்பணைத்த திணிதோள்கொண்மன்னன் மதனப்பெயர்த்தன் மகனார்
நிலைபுக்களக்க வரிதானதுன்ப நிறைவுற்றறற்றிமிகவே
தலையிற்பொறித்த விதியாவரிங்கு தவிர்வார்களென்று சகியான்
சிலையிற்சிரத்தை யுறமோதியங்கு செத்தான்விடத்தை யொத்தான். (அங)

திண்பெற்றகற்பி னிலைமாதளப்பில் சிந்தாகுலத்துண் முழுக
வண்பெற்றநன்ம ருகனைத்தடிந்தோர் மகனுட்சிகாண நினைவோன்
புண்பெற்றிறந்து தொலைவுற்றகாதை புகவோதினுலு மவமே
மண்பெற்றசெல்வ மகனெய்தல்வேட்ட மடவோர்க்குறுது மதியே. (அச)

இச்சம்பவங்கண் முற்றுங்தெரிந்த விறையிந்துகாச னுளமேன்
மிச்சம்பொருந்து துயர்கூடியிந்த விதிதந்ததென்றன் மனமே
யெச்சஞ்செய்சோக மதனுலிறைக்கு மெய்திற்றிறப்ப தவனு
முச்சங்கொளோகை யொடனுற்றனுவி யீருற்றெழிந்த னனரோ. (அரு)

என்னப்பல்வாறு மெண்ணித்தனுள்ளி லின்னற்கொடிம்ம தனனை
மன்னக்கொடன்றி யிங்கற்பதிக்குள் வண்ணப்படச்செல் கலன்யா
னென்னக்கொடுள்ளின் மின்னற்கொள்கொண்ட லென்னத்துலங்கு மரிபொன்
வன்னப்பதங்க ளுன்னிச்சிறப்பின் மகிழ்பூசைசெய்த னனரோ. (அசு)

அங்கத்தியொன்று துயர்தீரும்வண்ண மவிராதிமூல மெனவே
பொங்கப்படச்சொல் பொழுதாவிகாத்தல் பொய்யற்றமெய்த்த கதையே
லிங்கற்பனுவி விடுமுன்னமெண்ண மெய்தப்புரத்தி யெனவே
சங்கற்பமோதி மதனன்றனீடு தலைகாயமொன்றல் புரியா. (அஎ)

கோயிற்பொன்வாயின் மூடச்செய்தாவி கூடுற்றெநாளு மணியார்
வாயிற்கண்மேவி யாபத்தெலாமெய் வாழ்வொக்குமாற ருளவே
தாயிற்பலோர்க ளேயொப்ப நீடு சாளக்கிராம வடிவை
யாயிற்றன்மாடு தாபித்துளீர மார்ர்ச்சனுதி புரியா. (அஅ)

கண்மூடியேக மனதோடுகாதல் கனிவோடுநல்கி லையெனிற்
புண்மூடியாக்கை விடன்மெய்மையென்று புலவோாருந்து சுதைநேர்
பண்மூவுருத பலதோத்திரங்கள் பகராவுளின்ப மயமார்
கொண்மூவென்மேனி யுடையானதொப்பில் குளிர்தாளுறுது குறியா. (அகூ)

இவ்வண்ணமாக மதனன்றனத்த னிதயத்தையொப்ப தெனவே
தெவ்வண்ணநீடு திமிரத்திரட்சி தீரத்தெளிந்த மனமார்
செவ்வண்ணவிந்து காசன்றனுட்கொ டிருமால்கரங்கொள் படைபோற்
றுவ்வண்ணநீடு சுடர்கிழெனுசை தோய்வெற்பின்மேவி யதரோ. (சூ0)

அக்காலையந்த மதனன்றனுவி யாகத்தினூடு மருவுற்
றிக்காலைபிங்க ளுமேகனுகி யெய்துற்றசெய்தி யெனெனப்
புக்காய்வமென்று தெளிவோடெழுந்து பூட்டுற்றசெய்கை மதியா
விக்காரியஞ்செய் தவரார்கணத்தி னிடைகாப்பகற்று திரென. (சூக)

மதனன்கிளத்து மொழிகேட்டபோதின் மதிகாசன்மிக்க மகிழ்வாய்
மதனன்றெழிந்தொ ரிரதிக்குமட்டும் வடிவாகமேயி னனிஞேன்
மிதமிஞ்சுவப்பொ டெவர்காணுமாறும் விரவுற்றுளான்மெ யிதனு
லதிகங்கொலென்ற வமுமாதவன்ற னருளின்பெருக்க மும்மரோ. (சூஉ)

என்றூர்வமெத்து துதிபாடியாடி யெரிவெண்ணெயென்று ளுருகிக்
குன்றூதசின்ம யானந்தனுன கோவிந்தனம்பொ னடியே
யொன்றூலயத்தை நிகராமுளத்தை யுடையானுவப்பி னுடனே
நன்றூரணிக்க ணெட்டங்கமேவ நனிதாழ்ந்தெழுந்த னனரோ. (சூங)

முத்தானபற்கொண் மடவார்களாதி மூவேடணைத்தொ டர்புமற்
றித்தாரணிக்க ணியல்கானகத்தி லிசைவுற்றியோக முயலு
மெய்த்தாபதர்க்கு மரிதேயெனப்பல் வேதங்கண்மெச்சுமென்னிற்
செத்தாரைமீட்டு திறனல்குபத்தி செய்யாததேது தெளிமின். (சூச)

வேறு

கிளத்திது நிற்கமைந்தன் கிளர்நகர் சேரக்கண்டோ
ரளப்பிலா வார்வம்பொங்கி யதிகவாச் சரியரானூர்
வளப்பெரு மனைக்குட்சேர்ந்தான் மரித்ததா தையினைக்கண்டே
யுளத்துறு துயரமிக்கீண் டுற்றதெ னுரைமினென்றான். (சூரு)

அற்றமற் றதனிலிந்து காசனு மறிஞன் சொல்வான்
கொற்றவ னீமரித்த கொடுந்துயர் சகியானுகித்
துற்றபுத் திரசோபத்தாற் றுணிந்துதன் சிரத்தைக்கல்வி
னெற்றுபு மடிந்தானென்ன வென்னைமாய்த் தவாரென்றான். (சூசு)

உடன்மதி காசன்றும்பா லுறப்பிணித் தாண்டுமேய
வடன்மலி மதங்கற்கூவ வணைந்தவிர்த் தாந்தமெல்லா
மிடன்பட மதனன்கேட்ப விசைத்திடு கின்றுனின்னேன்
மடன்மலி குழவியாக வதிதரு காலையென்னை. (சூஎ)

மன்னவர் மன்னனுனேன் மறையிடத் தழைத்துச் சென்றிட்
டின்னவன் றன்னைக்கொன்றே யானறி குறியாயன்னேன்
மன்னவ யவத்திலொன்றென் மாட்டுநீ கொணர்தியென்னச்
சொன்னதா லுடனுபாயச் சூழ்ச்சியாற் காட்டிற்சேர்த்தே. (சூஅ)

கொன்றிடத் துவக்குங்காலென் கோதுசா லுளத்தின்மாடு
நன்றியல் கருணைமெத்த நண்ணலா லாறதாகத்
துன்றிய விரலைவல்லே துணித்தனன் கொணர்ந்துகாட்டிப்
பொன்றிடப் புரிந்தேனென்னப் பொய்ம்மொழி புகன்றிட்டேனால். (கூகூ)

ஈதுமுன் னியன்றதாகு மிப்பொழு தியலுஞ்செய்தி
யோதுறக் கேட்பீரென்னை யுடையவேந் தின்றுகூவிப்
போதுவன் மதிகாசன்றாய் பொருந்துகோ விலுக்கன்னானைக்
காதுதி வாள்கொண்டென்னக் கரைந்துபி னிதுவுஞ்சொன்னான். (க௦௦)

மற்றது காலையாண்டு மற்றவ ரெய்தாவண்ணஞ்
சொற்றவண் செய்கின்றேன்யான் றுணிந்தவ ணமர்தியென்றான்
றற்றவா ளோடவ்வாறே துதைந்தனன் பூசைக்குற்றான்
மற்றவ னுமென்றும்மை வாள்கொடு வதைத்தேன்மன்னே. (க௦க)

செயல்களிம் மட்டுமேயான் றேர்குவ னென்னமிக்க
பயமுடன் புகன்றிட்டென்ன பணிக்கினும் பெறுவனென்ன
நயமுற முடித்தலோடு நாடுமந்திரியின் னேன்சொ
லியமுழு துண்மையாகும் யானுமுற் றுணர்வன்மாதோ. (க௦உ)

வேந்தன துளமிவ்வாறே விடைமகள் விதவைத்தன்மை
யாந்தகை பெற்றுத்தன்பா லமைபினு நன்றேயாகுப்
போந்தவின் னவனைவீயக் கோறலே பொருளென்றுற்றான்
பாந்தநன் மகனீதன்னிற் பாக்கியத் திறந்தாயந்தோ. (க௦ங)

மற்றிது செயலாற்றந்தை வந்திவண் சிரத்தைக்கல்வி
லெற்றினன் மடிந்தான்செய்கை யீதெலாஞ் சரதமம்மா
முற்றிது காலையன்பின் முதுக்குறை விந்துகாச
னுற்றிவண் மதலனுய்ந்தா னுயிருடனிருப்பேனன்றி. (க௦ச)

இல்லையேல் யானுமீண்டே யிறப்பது சரதமென்று
வல்லைமா தவன்மாதேவி மலர்க்கழல் போற்றவன்னே
ரெல்லையி லருளினீரா லெழுந்தனை நீயிதாகு
நல்லைநீ யறிகிலாவி ரகசியச் செயல்களம்மா. (க௦ரு)

இத்திரக் குமான்றன்னை யீன்றதா யெல்லையில்லாப்
புத்திர சோகந்தன்னாற் புலர்ந்துதுற் பலத்தளாகி
நித்திரை யுணவுநீத்துநெட்டுயிர்த் திரங்கியேங்கி
யித்தினத் தினுமுற்றுள்ளா ளென்னதோர் மனைக்கண்மாதோ. (க௦கூ)

இனிநடை பெறுவவுன்ற னிட்டமொத் தியற்றுகென்னக்
கனிமதி யமைச்சன்கூறக் கழறுமிச் செய் திதேர்ந்துண்
ணனிமகிழ்ந் தனன்யானென்ன நவிலுபு மதனனன்னே
யினியசந் திரகாசற்கின் டென்னுயி ரிணையாகாதால். (க௦எ)

அன்னவ னீந்ததேயென் ளுருயி ராதலாலின்
றென்னதா னுடற்பெற்றுரை யிவற்கிணை யென்னலாங்கொ
லின்னவன் றனக்குக்கைம்மா றியானியற் றிடவொன்றுண்டோ
கொன்னமை நாட்டிற்பாதி கொடுப்பதென் னிச்சையென்றான் (கoஅ)

எனக்கிராச் சியத்திற்பாதி யேசரி யாகுமீன்றோன்
றனக்கினி யாற்றவேண்டுஞ் சடங்குகள் புரிவேனென்ன
மனக்கிலே சத்தோடாற்றி மருகனுற் றலேக்காணின்ப
முனக்கில்லை விதியாலென்றுள் ளுன்னுபு முடித்தானன்றே. (கoகூ)

பின்புதன் மனையிற்புக்குப் பேரறம் பலபெருக்கி
யன்புடன் மதிகாசற்குப் பாதிநா டாள்வானீந்து
வின்புட னிருந்தானாக விந்துகா சன்றனீன்று
டுன்புறு தழைத்துவந்து சுகமுறப் போற்றிவாழ்ந்தான். (ககo)

பின்மதி காசப்பேரோன் பெருவனத் துற்றகாலை
தன்மக னென்னக்காத்த தராபதி தன்னையன்னோ
னன்மனை யுடனழைத்து நல்கிரு குரவரேபோற்
பன்மலர் தூய்ப்பணிந்து படர்நெறி பணித்திரென்றான். (ககக)

பத்திமிக் கமைந்துநிற்கும் பண்புகண் டின்புற்றோரெம்
புத்திர செல்வம்யாவும் பொருந்திநீ வாழியென்ன
மெத்திய லன்போடாசி விளம்பிமார் போடணைத்து
ளத்தியற் புதத்தானு ரவர்க்கிசைந் தாட்சிசெய்தான். (ககஉ)

தன்னையீன் றெடுத்ததாதை தனைவதைத் தொருதன்னுடாண்
மன்னையுஞ் சயித்தன்னோன்பான் மருவுமந் நாடுங்கைக்கொண்
டன்னையி லுயிர்களெல்லா மார்வமெத் தாட்சிசெய்து
*பின்னைகோன் சாருபத்தைப் பெற்றவ னுத்திகழ்ந்தான். (ககங)

பூத்திக மூந்தியான்செய் பொருவினற் றொழிலதான
காத்திடு தொழிலையன்பிற் கைக்கொடு பன்னாளாற்றிக்
காத்திக மூலகுள்ளோருங் காதன்மிக் கடைந்துள்ளன்பா
லேத்திடக் கமலக்கண்ண னெழிற்பதம் புகுந்தான்மன்னோ. (ககச)

இவ்வகை மதிகாசன்று னியம்புசா ளக்கிராமச்
செவ்வகைப் பூசையாற்றுந் திருத்தகு செய்கைதன்னாற்
றெவ்வகை படவேசெற்றுத் தேசமுற் றவுங்கைக்கொண்டே
யெவ்வமா ராபத்தெல்லா மின்பமாப் பெற்றான்மாதோ. (ககரு)

இகமிசைத் தோன்றலான வின்னலாஞ் செயல்களெல்லாஞ்
சுகமெனப் புரியுந்தன்மை தூய்மைசால் பத்திக்கன்றி
மகமுதற் செய்யுங்கன்ம வகைகளுக் கமையாதஃதாற்
றகவுளார் தங்கைக்கொள்ளத் தக்கதிஃ தெனன்மெய்யாமே. (ககசு)

---

* பின்னை - இலக்குமி

பத்தியா லெய்தத்தக்க பகவன தருட்பேருகு
மத்திஞன் முடிந்திடாவொன் றகிலமற் றெவற்றுமில்லை
சத்திய மேமுக்காலுஞ் சகத்துளீர் பத்தியில்லார்
நத்திகத் திஞுமோரின்ப நண்ணிட முடியாதன்றே. (கக௭)

வேறு

திருவார்புகழ்ச்சந் திரகாசன் செப்முற்றவத்தின் பயனுகச்
செய்யசாளக் கிராமமெனத் திகழ்ந்தன்னவன்பூ சனைகொண்டு
மருவாபத்தெல் லாமின்பா வயக்கிமணங்கண் டுயிர்துறந்த
மதனன்றன்னை யெழுப்புமுயர் மாட்சியமைத்த செயலறிந்துங்
கருவூடிருந்து காத்துயிர்செய் கன்மத்தளவின் பொடுதுன்பங்
கலக்கவருள்செய் நின்பெருமைக் கருணைத்திறத்தைக் காணேஞ
யிருளாணவத்தின் ஞெடக்குழந்தே னெவ்வாறுய்வே னெனைவலிதா
ளிராமானந்தப் பெயர்கொடெேன திதயத்திலங்கும் பெருமாளே. (ககஅ)

சந்திரகாசகதிமுற்றிற்று

ஆ கவி கூருகூ

---

பதிஞென்ருவது

# சிபிச்சக்கரவர்த்திகதி

செந்திரு யகிணன்வாழ் சிந்தைமேவிய
சந்திர காசனற் சரித மோதினேன்
றந்திரந் தேர்சிபிச் சக்ர வர்த்தித
னுந்திய காதையை யுரைப்பன் மேலரோ. (க)

நபிநல விளக்கமார் ஞானமாதிய
வபிநலவின்பெலா மருளட்டாக்கரஞ்
செபிநலப்பத்தர்தாட் சேர்த்துசென்னியான்
சிபியென வுலகெலாஞ் செப்புபேரிஞன். (உ)

சக்கிரவர்த்திப்பேர் தழைத்துமன்னவர்க்
கக்கிரகண்ணிய னுயமைந்துளான்
வக்கிரத்தடங்கலர் மடங்கலேறெனு
முக்கிரம்வாய்ந்தவ ஞரத்திலொப்பிலான். (௩)

தானதன்மம்பொறை தயைமுதற்சொல
லானநற்குணந்திரன் டீனயமேனியான்
கானமைதுழாய்முடிக் கடவுளோகைக்கா
யூனமையுயிரையு முதவுஞ்செய்கையான். (ச)

கிருட்டிணபகவன்றன் கிருபையாற்றனே
வெருட்டியறச்சத்துரு மேவுறுதலே
சுருட்டிருங்கடலுடை தோய்ந்தபாரினை
யருட்டிறத்தால சாட்சியாற்றினன். (௫)

ஆனநன்னாள்களி லரசனோர்தின
நானமாற் றியச்சுத னலத்தபூசைசெய்
தீனமில்பத்தர்க்கின் னமுதமீந்துதான்
போனகசாலேயுட் புகுதுமெல்லேயில். (௬)

ஓர்புருவரசன தொண்கரத்தினிற்
சோர்புமிக்கச்சமுட் டோய்வதின்றியே
சேர்வுறுவிறைவநீ சிறியனேன்றனே
யேர்புறக்காத்தரு ளென்றுவேண்டியே. (௭)

நோன்பருந்தொன்றெனே நுங்குமாறிதோ
வான்பறந்துறுவது மற்றிச்செய்கையா
ஞன்படர்ந்துனேச்சர ணண்ணினேனெனே
யூன்பதிவேலகாப் புஞற்றவேண்டுமால். (௮)

என்றிசைத்துப்புரு விருக்குமேல்வைபில்
வன்றிறற்பருந்தவண் மருவித்தாக்குவா
னென்றிடமன்னவ னெழித்தபோதினிற்
பின்றிரிந்திட்டது பெறவுண்ணுடியே. (௯)

பசிமிகுத்தடைந்தவப் பருந்துகோபமோ
டசிபுடைமன்னவ னருகின்மேவிபு
ளொசிவுறுதின்னன வுரைக்குமன்னநீ
கசிதன்மவானெனக் கழறக்கேட்டுளேன். (௧௦)

அன்னமாட்சிமைகொணீ யதன்மமாகிய
வின்னபுன்செய்கையை யியற்றவெண்ணுத
னன்னலமன்றுகா ணன்புறுவினேத்
தின்னவாவுட்கொடு சேர்ந்துளேனரோ. (௧௧)

அரசகேண்மானிட ருரும்பசிக்குண
விரவுநெல்லாதிய வித்துநல்கிப்
பிரமனெம்பசிக்கிவை பெரிதுநல்கினன்
சரதநீபுணர்தராத் தன்மைத்தன்றிதே. (௧௨)

நீபசித்தருந்திட நேர்ந்தகாலேயிற்
பூபமற்றவரிடர் புரிகுவாரெனிற்
கோபமிக்கவர்களேக் கொல்லுவாயன்றோ
பாபமியானுணத்தடை படுத்தனீதியோ. (௧௩)

மானிடராமுரு மருவப்பெற்றவர்
வானிடமார்புளின் வருக்கமேவிய
வூனினைப்பருகுவா னுளத்தினூக்கிடிற்
கோனிரட்சித்தல்செங் கோன்மனீதியோ. (கச)

உங்குலமுறையினை யுளத்திலுன்னிநீ
யெங்குலமுறைக்குமஃ திசைக்கவெண்ணியோ
விங்குறுபுறவினை யிறைவநீகொடு
நங்குவான்புகுமெனை நடங்கக்கண்டனை. (கரு)

நெடும்பகலாயிரை நேடிக்கண்டிலேன்
கொடும்பசியால்வலி குன்றிச்சோர்ந்தியா
னிடும்பைமிக்கெய்தல்கண் டிரங்கித்தெய்வமின்
றிடும்பலியிதனைநீ யிரட்சிக்கின்றையோ. (கசு)

தயவொடுதெய்வம்யா னருந்தத்தந்திடு
நியதியாமுணவினை நீமறுத்தெனைத்
துயல்வுறக்காணுமித் தோடமன்னநி
னயனுரு தப்புறத் தகன்றுபோகுமோ. (கஎ)

மன்றநானிலமுறை வயக்குமன்னவர்க்
கொன்றனைப்புரந்துமற் றொன்றினுக்கிட
ரொன்றவாக்கிடுதனல் லூழதாமென
நன்றருமறையெது நவிலலுற்றதே. (கஅ)

நான்முறைதவிர்செய னவிற்றுவேனெனிற்
கோன்முறைதவறிடாக் கொள்கையாற்றுத
னூன்முறையிதனைநீ நுனித்துத்தேர்தியேல்
வேன்முறையிச்செயல் வெறுப்பையல்லையோ. (கக)

துன்னுறுதம்முயிர் துறத்தற்கஞ்சியாந்
தின்னுயிர்த்திரளுனைச் சேருமென்றிடிற்
கொன்னுறுமிறையவை களைக்கொடாமலெம்
மன்னுறுகுலமெலா மாய்ப்பைபோலுமால். (உ0)

இன்னதைவிட்டியா னிறைவகானிடை
பின்னொருபுள்ளினைப் பிடிக்கநாடிடின்
மன்னதூஉநின்கர மருவினீயெனக்
கன்னதுமீந்திடா தகற்றிடாய்கொலோ. (உக)

கரமுறுபுறவினங் காத்திட்டெம்மதோர்
மரபெலாமுலகிடை மாய்க்கத்தோன்றிய
புரவலன்போலுநீ புவியிலுன்னிக
ரரசர்வாழ்ந்திருந்தசீ ரறிந்துளாய்கொலோ. (உஉ)

புன்புருவுனக்கெதோ புரிந்ததோர்நலம்
வன்புறுமிடரேனே வயக்கினேனியான்
முன்புநாளேயினிகழ் முறையொன்றுண்டெனின்
மன்புகன்றருள்கயான் மதியிற்றேரவே. (உரு)

திருந்திதுசெயனிற்க செல்வமன்னநின்
பெருந்திருவளமிகப் பெறுமின்மாட்டியான்
விருந்தெனவந்தனன் வேட்டுளேனின்கை
யிருந்திடுபுறவினை யீதியெற்கரோ. (உச)

வீட்டறமாவது மேவினோர்க்கெலாம்
வேட்டவாம்பொருள்களை வெறுத்திடாதனோர்
வாட்டமெய்தாமுன மகிழ்வொடீதலே
சேட்டனுமிறைவநீ தேர்ந்திலாய்கொலோ. (உரு)

தாங்கரும்பசிகொடுன் றருமநீடுமிற்
பாங்கர்யான்றுயர்மிகப் பதைத்துவேண்டல்கண்
டாங்கதைப்புரந்தனை யமர்தியேலெனே
ரோங்கரும்பழியெவ ணொழித்தற்பாலையே. (உசு)

பன்னளவற்றசீர் படைத்துளாயென
முன்னளவற்றபேர் மொழியக்கேட்டுளே
னுன்னளவவற்ருென்று முன்கட்கண்டிலே
னென்னளவற்றனை யேகொலின்றரோ. (உஎ)

நிருபவில்லறங்கொடு நிற்றறன்மனை
மருவினர்தம்பசி மாற்றற்கல்லவோ
தருமவானெனப்பெயர் தாங்கிநின்றநீ
யொருவவப்பேரிகா ளொழித்திபோலுமால். (உஅ)

கானவாவுற்றுழல் கரணப்புட்கொண்மெ
னூனவாவுற்றிவ னுறுமெனக்குயர்
கோனவாவுற்றவா கொடைபுரிந்திலாய்
வானவாவுற்றவர் வழக்கிஃதன்றரோ. (உகூ)

வனத்துறுபுட்களா மருவுவீர்கணும்
மினத்துறுசெயலேயொத் தியற்றிக்கொள்ளுதி
ரெனக்கிது தக்கதன் றென்றுநீவிடி
லுனக்கொருபழியுமீண் டுறுதவில்லையே. (௩0)

யானுனோர்பொருட்டினு விழப்பனேனுயிர்
கோனுனக்கப்பழி கூடுமெப்புறுத்
தானுயிர்விடிற்குல தருமமாகுமா
லீனுறுபழியெவ ரிடத்துமில்லையே. (௩க)

இன்மையாயுன்புடை யெய்திடாததாம்
புன்மையார்பழியயற் போக்கிடாதுநீ
வன்மையாத்தேடியேன் மயங்குகின்றனை
நன்மையான்கூறினே னமக்கென்றோதிற்றே. (ஙஉ)

பருந்தினபலபல பகரக்கேட்டலுந்
திருந்தியற்புரவலன் செப்புவானறம்
பொருந்தியநீசொலல் பொய்யன்றுண்மையான்
மருந்தியன்மநுநெறி மதியிற்றேர்ந்துளேன். (ஙங)

திசைமுகனுமக்குணச் சிட்டித்தானென
விசையினுமென்றனை யிரட்சிப்பாயென
நசையுடனெனைச்சர ணண்ணிற்றுலிதன்
றசையைநிற்கெவ்வகை தருவனையகோ. (ஙச)

எத்திறத்தருமமு மினிதுதேர்வனை
னித்திருநாட்டுட னெனையுமீவனென்
புத்திரற்கொடுப்பனிற் பொருக்கென்றீவன்யான்
மெய்த்திறமீதுநீ வேண்டிற்றேர்திபால். (ஙரு)

தருமசிலங்கொளெஞ் சத்தர்தஞ்சரண்
மருவினோர்தமையொருக் காலுமாற்றிடார்
கருமமீதுன்னியான் கைவிடாதிதைப்
புரவுசெய்வேனுடல் போக்கியும்மரோ. (ஙசு)

மாற்றமீங்கிதனைநீ மதித்துவன்பசிக்
காற்றுறாதடைந்தனை யேலவாவிய
வேற்றுணவெதன்மிசை வேட்கைகொள்ளினு
மாற்றநல்குவனுணர்ந் தறைதியன்றியும். (ஙஎ)

விளம்புவன்பின்னரும் வேட்டஞ்செய்திபான்
வளம்படக்கொணர்ந்துள மாமிசங்களுங்
களம்படுமென்மனைக் கண்ணுற்றுள்ளவா
லுளம்படுகளிப்புடனுண்ணு கென்றனன். (ஙஅ)

சிறுபொருளாயினுஞ் சிந்தைகொண்டதை
யுறவளித்தால்வரு மோகைமேன்மைய
பெறவளிக்கினுமுளம் பெற்றிடாதஃதாற்
புறவையேயான்கொளப் புரிதியென்றதே. (ஙகூ)

மாற்றமீங்கிதுகொடு மனக்கிலேசமிக்
காற்றருந்துயர்க்கட லாழ்ந்துநானிதை
மாற்றலெற்றுலென மாயன்பொன்னடி
போற்றருளென்றுளம் பொருமினனரோ. (சO)

நடைபெறுகாலையி னராதிபற்றெரீஇப்
புடைபெறுபருந்திது புகலுமன்னவுள்
ளுடையலுன்பொருட்டினே ருபாயமோதுவன்
றடையறச்செயிலுடன் றணக்குந்துன்பமே. (சக)

கோனுனதுடலிடைக் கொள்ளுமாமிசங்
கானுறுபுறவெடை கடிதிலீவையேல்
யானுகர்ந்தகல்வனுன் னிதயத்தெண்ணுமோர்
வேனுறுவிரதமும் விலகிடாதரோ. (சஉ)

என்றுவன்பருந்திசைத் திடலுமன்னவ
னன்றுநன்றயற்பட நண்ணலானவற்
றென்றுமேற்காதென தூனிச்சித்ததா
வின்றுநான்செய்கைமா றேதிதற்கரோ. (சங)

மரித்தபினீமமேன் மருவும்புட்களு
நரித்திரள்களுந்தின னங்கண்காணுமோ
வுரித்திதற்காமுண வுதவிக்கண்களாற்
றெரித்திடுவேன்புருத் தியக்கநீங்கவே. (சச)

மறிதருபின்னுகர் மாமிசத்தினைச்
சிறிதுமுன்னீதலாற் சிறந்தசீர்த்தியுஞ்
செறிபுறவினையிரட் சித்தநன்மைபு
மறிதிரைக்கடனில மிசைமணக்குமால். (சரு)

என்றிசைத்திறையவ னிப்பருந்துதான்
கன்றியபசிகொடு கலங்கிற்றஃதறு
நன்றியன்மருந்துகை நண்ணலுற்றுமீண்
டின்றுபாணித்திட வியல்பதல்லவே. (சசா)

எனவுனிமன்னவ னேதிகொண்டெறீஇத்
தனதுடற்றசையெலாந் தராசிலேற்றியுங்
கனபுறவெடைபெறக் காண்கிலானுடன்
மனமகிழ்ந்துவணமெய் வழுத்துநன்கரோ. (சஎ)

அறுத்திடுமொருதொழி லறும்படிக்கிவ
ணிறுத்துதிநிறுத்துதி நிருபநீயுளம்
பொறுத்திடுநிலையினைப் புவனியாங்கணு
முறுத்திடயாமிவ ணுற்றதாமரோ. (சஅ)

பருந்தவயவங்கொள்யான் பாகசாதனன்
றிருந்தவனக்கினி தேவன்யாமுயர்
பெருந்தகாய்நீயுளம் பெட்டதாம்வரம்
பொருந்தவோதுதியருள் புரிதுமென்றனன். (சகூ)

மகபதியோதுசொன் மன்னன்கேட்டுள
மிகமகிழ்ந்தவரடி விருப்பிற்ருழ்ந்தெழுந்
திகமிசையாரெனக் கிணையுளார்கணீர்
தகவலிந்துயர்வாந் தாமுன்னுற்றதால். (ருo)

மட்டிலாதோங்கெழு வாரியாமெனக்
கிட்டினான்ருண்மிசைக் கிளர்மெய்ப்பத்தியா
னெட்டிடுபிறவிக ளெவற்றினும்பெறுந்
தட்டிலாவொருவரந் தருதிரீதலால். (ருக)

ஒன்றொருபொருளையு முளத்தவாவிலே
னென்றொருவருந்தனக் கிணையிலான்சொல
நன்றொருவரமங்ங னல்கினேனெனக்
குன்றொருவிடச்சிறை கொய்துளோன்சொனன் (ருஉ)

அக்கினிதேவனு மவணமாகெனச்
சக்கினிலருள்கொடு சாற்றியாவர்க்கு
மிக்கினியாயருள் விடையெனக்கொடே
புக்கிருந்தனர்தத்தம் புரங்களுடரோ. (ருந)

தன்னதூன்றந்திசை தழைத்துச்சார்தரு
மன்னதூன்ருநல மடையக்கண்டுநேர்
பின்னதூன்ருஞ்சுகம் பெறப்பெய்தங்கியின்
மன்னதூனுடற்கொள்வார் மடமையென்னையே. (ருச)

அந்தமிலாருயிர்க் கன்னைபோன்றவிர்
சந்தநீடியசிபிச் சக்ரவர்த்திதா
னிந்தமாநிலம்பனு ளியற்றியாட்சிவை
குந்தவான்பதத்திடை குறுகினனரோ. (ருரு)

வளர்சிபிச்சக்கர வர்த்திமாக்கதை
கிளர்வியாசன்மிகக் கிளத்தினனதால்
விளர்வறச்சிறிதியான் விளம்பினேனுளத்
தளர்வறுபத்திமை சார்தல்வேண்டியே. (ருசு)

வருசிபிச்சக்கர வர்த்தியின்கதி
மருவியகேள்வியர் மாதவன்பதத்
திருமைசால்பத்திமெத் திகபரத்தினு
மொருவிடாநலமுற லுண்மையுண்மையே. (ருஎ)

வேறு

தன்னைப்புசிப்பான் வருபருந்து தனக்குட்பயந்து தன்காத்திற்
சார்ந்தபுறவின் பொருட்டாற்றன் றசைமுற்றளித்த சிபிநாம
மன்னைப்புரையும் பேரருளுன் மாட்டின்றெனச்சாற் றிடலாங்கொன்
மறையோன்காமன் மறலியெனு மாற்ருர்தமக்கு மனநடுங்கி

புன்னைச்சரணென் றடைந்தனனு ளுள்ளன்பொருசற் றேனுமிலா
னேவாக்கொடுமை பற்பலசெய் துள்ளானெனநீ யுளத்தெண்ணி
யென்னைப்பரிசோ தனைபுரியி லியாரேயெனைக்காப் பவருள்ளா
ரிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருஅ)

சிபிச்சக்கரவர்த்திகதிமுற்றிற்று.

ஆகூ கவி ககஎ

---

பன்னிரண்டாவது

## பாஞ்சாலிகதி

சாலியற்சீர்ச்சிபிச் சக்ரவர்த்திமுன்
கோலியசரித்திரங் கூறினேனினி
மேலியற்கற்பணி மேவிவாழ்ந்தபாஞ்
சாலிதன்சரித்திரஞ் சாற்றுவேனரோ. (க)

வேறு

சாலியொப்பெனத் திகழ்ந்தபாஞ்சாலியின் சரித
மேலியற்புல மைத்திறன்மேவுசீர் வியாசன்
பாலியற்பெறு பாரதத்திடைபகர்ந் துள்ளா
ஞலியற்புல வருமுலகருங்கொள நனியே. (உ)

ஐவர்கட்குமோர் நாயகிதானென வமைந்து
மெய்வளம்பெறு கற்பகங்கொண்டுமே வியதாற்
பொய்வளம்பெறு முலகிலுள்ளார்களும் போற்றத்
* தைவமாவிளங் கினடனக்கொப்பில்பாஞ் சாலி. (ங)

போதமேன்மைசால் பொறைமலிதருமபுத் திரன்முன்
றீதமைந்தபாழ் வினைநுகர்ந்திடவரு திறத்தாற்
றூதகத்திரு மனப்பெண்டிர்கள்ளினற் றுணையாஞ்
சூதவாவினன் விதிவலியாவரே தொலைத்தார். (ச)

சிதன்மயக்கபோ தனைகொண்மாணுக்கர்தந் திரளின்
முதன்மைபெற்றியல் சுயோதனனுதிய மூர்க்க
ரதன்மத்தாற்சய மடைந்தனராகமற் றதனாற்
சுதன்மனுகிய தருமபுத்திரனெலாந் தோற்றான். (ரு)

வைப்பதற்குமற் றொருபொருளின்மையின் மாழ்கிக்
கைப்படும்பொரு ளாவதீண்டைவையெனக் கருதி
மைப்படுங்கட்பாஞ் சாலியைப்†பணையமா வைத்தா
னெய்ப்பளித்திடுங் கவர்தாத்துன்பமற் றெதுவே. (சு)

---

* தைவம் - பாக்கியம். † பணையம் - அடகு.

இணைதனக்குமற் றவரிலாதிலங்கிடுந் தருமன்
றுணைவராயினர் தமக்கெலாம்பொதுமையாத் துலங்குந்
துணைவியானவட் சிறிதுமெண்ணுதுளந் துணிந்து
பணயம்வைத்தன னெனிற்பிறர்க்கென்கொலாம் பகர்தல். (எ)

அணைதரும்பொழு தினில்விளக்கணைதரு மவிர்ச்சி
யிணையத்தீவினை மற்றவர்க்கேசெய மியற்ற
வணைகடந்தபே ரார்வமாங்கடலினு ளமிழ்ந்தா
ருணைவளிக்கும்பி னிதுநமக்கென்றுளத் துணரார். (அ)

நன்றியைந்தவொன் றெருபொருணண்ணிடா முன்பே
குன்றியைந்தபே ராணவங்கொண்டிழி கொடியோர்
வென்றிதம்புடை மேவிடினுளஞ்சகிப் பாரோ
துன்றிடுஞ்செயல் காண்டலுநெஞ்சகந் துணிந்தே. (கூ)

வேறு

துற்சாத னப்பெயர்கொ டீட்டரிறை யானே
னுற்சாக மிக்கிகலி னேடுகடிதோடி
யிற்சார்து ரோபதையை யெண்ணமிலனுகி
யற்சார் குழற்குலைய வங்கைகொடு பற்ற. (க0)

நவையான விச்செயலை நாம்புரியி னம்மா
லவையாரும் வீட்டுமன்மு னுமவர்ப லர்க்குங்
குவையார்ப ழிச்சொல்வசை கூடுமென வுன்ன
னெவைபாவ மார்செயினு மெற்கவைநல் கென்பான். (கக)

அடாதேசெய் சாதனவ வற்பனவ மிஃதை
நடாவேல்வை பாஞ்சால நாயகிதன் மீதோர்
படாமோடு மற்றவர்கள் பற்றலறு மாத
விடாயாயு மேவினள்வி லைக்கிசையு மாறே. (கஉ)

இப்பாவ மோடுபழி யெய்துசெய றன்னை
யொப்பாவி யற்றிடவு ளத்துணிவு கொண்டோ
னப்பான்மை கண்டருவ ருத்தகல்வ னேயோ
மைப்பாவி முன்னிலும கிழ்ச்சியடை வானே. (கந)

நன்றாமி யற்கைபெற நாடிமுயன் மேலோ
ரென்றாரு ளெண்ணினல மெய்தில்வலி தன்னோர்
குன்றாவு ளத்துவகை கூடுகில ரேகொ
லன்றான வர்க்கிலைகொ லத்தகைய பண்பே. (கச)

வேறு

அன்னகாலைவீட் டுமன்றுரோணனசுவத் தாமா
மன்னவன்றிரு தராட்டிரன்கிருபன்மா விகர்னன்
கன்னன்புன்மைதோய் சகுனி*காகோதரக் கொடியோன்
கொன்னமைந்தபாண் டவர்மற்றோர் கூண்டிறுங் குழுவில். (கரு)

---

* காகோதரம் - பாம்பு.

யாருங்காணுறச் சிகைபிடித்தீர்த்துவன் துடையை
யிருங்காற்சினே கங்குரோதந்தன்ம மிதயஞ்
சேருங்காரண ராய்முள்காந்தவராவர் தீரந்
தீருங்காரண ராயமைந்தார்கள்கித் திரம்போல். (கசு)

பாழ்த்தபுன்சபைப் பாலமைந்ததோமுகம் படைத்துத்
தாழ்த்ததன்மையர்ப் பார்க்கநாணிக்கொலோ தன்னை
மூழ்த்தநாணத்தி னுற்கொலோதானுமம் முறைமேய்
வீழ்த்தகட்புன லுடன்கிருட்டிணனையுள் விரும்பி. (கஎ)

கொண்டல்வண்ணநா ராயணகோவிந்த மாயா
புண்டரீகவட் சாகருடத்துசா புவனி
யுண்டவாயமா தவவொர்தாமோதர வுந்தி
முண்டகத்தவ விருடிகேசாவரி முகுந்தா. (கஅ)

ஆபற்பாந்துகிட் டிணவாமனுவிவ ணழுமென்
சோபக்கூட்டமுற் றெழித்தருணின்னடி தொழுதேன்
றாபச்சீர்கொள்வை குந்தவாசாதுழாய் மௌலீ
பாபத்தால்வருந் துயரமீதகன் றிடப்பாராய். (கசு)

வீட்டுமன்முத லாவுளாரென்றுயர் மிகைச்சொற்
கேட்டுங்கேள்வியில் லாரிலுட்கிருபைசற் றின்றிக்
கோட்டுசென்னிய ராய்வறிதேயிடங் கொண்டார்
நாட்டுளார்கொலித் துயர்களைந்திரட் சிக்குஞ்சையோர். (உ0)

பத்தவற்சல மாண்மலிபன்னக சயனு
வித்ததிக்கணீ யன்றிக்காப்பவர்களீண் டில்லை
கத்தமானநீத் தெவணமென்னுயிரினைக் காப்பே
னித்தநீயிரங் கிலையெனினுவிநீப் பேனே. (உக)

தீனபந்துவே புவனரட்சகசக தீசா
நானபம்படக் காண்டலுன்றனக்குநன் னலமோ
வானபந்துவிங் கொருவருமெனக்கில்லை யறிந்தேன்
வானபங்கமுன் மாற்றினுயிரங்குதி மனமே. (உஉ)

இத்திறந்துரோ பதைபதை பதைத்திரங்கிடலுஞ்
சித்திரம்புரைந் தசைவறவிருந்தனர் செறிந்தார்
குத்திரங்கொடுற் சாதனனவளிடை கொண்ட
வத்திரங்களை தொழிற்செய்தானுக்கமுண் மருவி. (உங)

துரோபதைப்பெயர் மாதவணைத்திய துதிகேட்
டரோவருட்கட லாகியபுண்டரீ காக்க
னிரோதமின்றியீர்த் திடுங்கலையோவற நீண்டே
விரோதமுற்றவன் மெலியவுன்னினனுள மிசையே. (உச)

கிளர்ந்தவன்மனக் குரோதநீள்கெடுமதிக் கிறியோன்
றளர்ந்தரு திழுத் திடுந்தொறுந்தாங்கமுன் றகைமை
வளர்ந்ததாலரு ளச்சுதன்வாரிச மலர்த்தா
ளுளர்ந்தநெஞ்சகத் தவள்பெரும்பத்திமை யுறழ்ந்தே. (உரு)

உலைவகன்றுதுற் சாதனனுரிந்தவவ் வுடைதான்
மலைமலைந்திடக் குவிந்ததான்மற்றது கண்டுங்
கலைகவர்ந்திட னிறுத்திலான்கயவர்க ளருண்மெய்
நிலைமைகாணினுந் துறப்பரோதங்கொடு நெறியை. (உசு)

வேறு

அரிதான தெய்விகமி தாகுமென வுன்னுன்
பெரிதாடை நங்கையிடை பெற்றனமென் றுன்னிப்
பரிகாச மாமொழிப கர்ந்திகலி னேடு
முரியோர்தொ ழிற்றனைபு வப்பொடுசெய் தானே. (உஎ)

பரிவோட யற்கணுறு தூதர்முகம் பாரா
விரியாடை யிங்கிதனை வீட்டிடுதி ரென்றே
துரியோத னன்கருணன் றுற்சாத னன்றூழ்
நரிநேர்கு ணச்சகுனி நால்வருமு யன்றூர். (உஅ)

இன்புற்ற வுண்டிவகை யீந்திடினு ஞாளி
யென்புற்ற காலையிதி கந்ததைந சைக்குந்
துன்புற்று மூல்சிறுமை தோய்பவரு மற்றே
நன்புற்ற தெய்துகினு நாடுகில ரம்மா. (உகூ)

அக்காலை வத்திரம மைத்தவிடை முன்பின்
மிக்கான தம்பொருளும் வெய்தினின்ம றைந்த
தக்கார்பொ ருட்கவர்பு தம்வறுமை தீர்ப்பான்
புக்கார்நன் மாட்சிமைபொ ருந்திடுவ ரேயோ. (௩0)

வேறு

களத்திது காலைதன்னிற் கிட்டிணன் றேன்றக்கஞ்சத்
தளத்தியல் புனலிற்சோருந் தையலெம் பகவற்கண்டே
யளக்கொணுத் துயரத்தோடு மழுதுநெட் டுயிர்த்திரங்கித்
துளக்கமெய் திடுஞ்சீர்கண்டுட் டுக்கமுஞ் சினமும்பொங்கி. (௩க)

இக்கணத் தித்தீங்காற்று மிவர்கள்யா ரையுமொருங்கே
தெக்கணம் புகுவித்தென்னுட் சேர்சினந் தணிவேனென்ன
மைக்கணம் புரத்தின்மீதே மலையரு வியைப்போல்வீழ
மெய்க்கணன் கணிந்தபீதாம் பரத்தினைமேலிட்டோதும். (௩உ)

பரிவில்யா னிட்டபீதாம் பரத்தினை யென்கண்பார்க்க
வுரிதரு வன்மைசான்று ருரிகவன் னவருடம்பை
நரிகொடி சேனஞாளி நல்விருந் தெனவுண்டாடப்
புரிகுவ னிச்சொலச்சம் புகவுமக் குரைபொய்யன்றே. (௩௩)

ஐயமுற் றவ்வுரும்வன்மை யதிகமொன் றினருமைதிற்
செய்யமுன் வரலாமென்னச் சீதான் செப்பலோடும்
வெய்யதுற் சாதனாதி வீரர்மெய் வியர்த்தயர்ந்தார்
மையதி ரிடிவிஞவு மாசுணத் திரளொத்தம்மா. (கசு)

கோட்டுறு சிரத்தினேடா குலமிகுந் துற்றோரான
வீட்டும ஞதியோர்கள் விளம்பிடுபகவன் மாற்றங்
கேட்டுளங் கலங்கியின்றே கெடுங்குரு குலமென்றுன்னி
மாட்டுறு கொடியன்றுற்சா தனற்கிவை வகுப்பதானர். (கரு)

மதியிறுற் சாதனநின் வழுவிய செயலைமாற்றாய்
வதியிவத் திரங்களெல்லாம் வந்தியாண் டிருந்தென்றோராய்
புதியவிச் செயல்கணின்கட் புலனெதிர் காணப்பெற்றும்
பதிதநல் லறிவுசற்றும் பதிந்திலை பாவமந்தோ. (கசு)

பகவனீண் டீந்தபீதாம் பரத்தினைப் பறிப்பாயாகிற்
புகல்குரு குலந்தானின்றே பொன்றிடு மடியோடஃதாற்
சுகமுறக் கருதிலிப்புன் றொழிலினை விடுத்தியென்றார்
பகர்மொழி கேட்டகந்தை தீர்ந்துளப் பயமிக்குற்றான். (கஎ)

பத்தவற் சலனாநின்ற பகவனிச் செய்கையாலே
மைத்தபுன் குணத்தோர்தம்மை வகைபட மாய்த்திட்டானு
வித்தர ணியினல்லோர்க்கோ ரிடுக்கணேர்ந் திட்டகாலை
சித்தமீ தவனையுன்னிற் றிதித்தருள் புரிவானன்றே. (கஅ)

புராதன நூல்கடம்மிற் போதமிக் குணாத்தலாலே
விராவுமிக் காதைதன்னை மிகச்சுருக் குபுசொற்றிட்டேன்
பராவுசீர்ப் பகவன்கொண்ட பத்தவாற் சலியத்தன்மை
தராதல மிசையிக்காலுந் தழைத்திடக் காண்கின்றேமால். (கசு)

மெய்த்தகை நலந்தோயன்பர் மீதருட் கமலக்கண்ணன்
வைத்தபே ரார்வத்தன்மை வழுத்தலாம் வரம்பிற்றேகொ
லெய்த்தபோ தடியார்தம்மை யிடரொழித் தாளவேண்டி
வைத்தவைம் படைகைக்கொண்ட வண்மையால் விளங்குமன்றே. (சo)

வேறு

மற்றோர்காலந் தனிற்சினத்தான் மாட்சித்தவங்குன் றுவலிமை
பெற்றோனை துருவாசப் பெயர்கொண்முனிவன் பெருங்கலைகள்
கற்றோர்சீட ராயிரமாங் கணிதமுடையோர் சூழ்ந்திடப்பின்
மற்றோரிணையில் சுயோதனமன் வதியுமனைக்கண் வந்தானே. (சக)

காலாக்கினியிற் சொலிப்பமைந்த கடினதவத்தூர் வாசன்றன்
பாலாக்கிருபை யுடன்வருமப் பரிசுதெரிந்து பரிவில்கொடுங்
கோலாக்கினைசே ரவுயர்த்தோன் கும்பிட்டேத்திக் கோதகன்றோர்
போலாக்கிளர்ந்து பணிவிடைகள் புரிந்தானன்பிற் பரிந்தரோ. (சஉ)

துரியோ தனனன் பாற்புரியுந் தொண்டுக்குவந்து தூர்வாசன்
பரிவோடிவற்கு வேண்டுவரம் பாலித்தகல்வோ மெனநினைத்து
விரிவாரருளாற் கூவியுன்மேன் மிக்கமகிழ்ச்சி மேவினன்யான்
பெரிதாம்வரம்யா துன்னுளத்திற் பெட்டாயதனைப் பேசென்றான். (௪௩)

எந்தவரம்வேண் டினும்பெறவீண் டீவேனெனும்பே ரருண்முனிவன்
கந்தவரவிந் தப்பதங்கள் கருதிநலங்கா தலியானைப்
பந்தவரவக் கொடியோனப் பான்மையடைந்தியான் பகர்ந்திடலா
மந்தவரமோர் தடையின்றி யருள்வேனென்னி லறைவனென்றான். (௪௪)

முனியன்புடனன் றேதீதோ மொழியெப்பொருளா யினுமுனக்கு
நனிதந்தருள்வேன் சாதமென நவிலத்துரியோ தனன்புகல்வான்
கனிசிந்தைபெறும் பாண்டவர்தாங் காட்டிற்றிரிந்தா ரவர்தம்பாற்
றுனிதீரேகா தசியன்று துவ்வாவிரதந் தொடங்கியே. (௪௫)

மற்றாநாட்சார் துவாதசியின் மன்பாரணைசெய் திடமேற்பா
லெற்றாழ்பொழுதி னின்சீட ரெல்லாஞ்சூழ வினிதேகி
முற்றாதரப்பாஞ் சாலியுமூண் முடித்தபொழுதிற் கணத்தெமக்குப்
பற்றாதரப்பா ரணைக்கன்னம் படைப்பீரெனக்கேட் டருளென்றான். (௪௬)

தனக்கோர்நலமுட் கருதாதே தரணிக்குழைப்போ னுத்தமனுந்
தனக்கேபயனு முயற்சிசெயுந் தன்மையுடையோன் மத்திமனுந்
தனக்காஞ்சுகநா டுபுபிறரைத் தவிக்கப்புரிவா னதமனுந்
தனக்கும்பிறர்க்கு மிடர்புரிவான் றன்னையாமென்னென்பதே. (௪௭)

கண்ணிலான்றந் திடுஞானக் கண்ணிலானுஞ் சுயோதனன்றன்
றண்ணிலாவன் பியல்வடவைத் தழனேர்மாற்றந் தூர்வாச
னுண்ணிலாவின் புருவான வுவகைக்கடலை யறப்பருகி
விண்ணிலாவெஞ் சினக்கொடுந்தீ மேவப்புரிந்திட் டதுமாதோ. (௪௮)

பொய்பட்டிடுமொன் றேதானும் புனைபூண்டிடுமாற் புனிதநெறிக்
கையதறியாப் பேதையொரு கருமமேற்கொண் டிடிலென்னுந்
தெய்வமறைக்கோர் சான்றாகித் திகழ்ந்தானந்தோ சினமுனிவன்
றுய்யமறையின் விதியையகஞ் சூழ்ந்திவ்வாறு துணிகின்றான். (௪௯)

கயவனுமின் னவன்வாயாற் கழறும்வரத்தைத் தருதுமெனத்
தயவினோடு சொற்றதுநந் தவறேயென்றுட் டனைநிந்தித்
தியலும்பிராணு பத்தெனினு நீசர்க்கிரங்க விழிவென்னு
நயமார்வேத மொழிச்சரத நாமீண்டிவனு னன்குணர்ந்தோம். (௫0)

வஞ்சத்தாலீண் டிவனம்மை வசியஞ்செய்திட் டனனன்றே
நஞ்சத்தாவா கொடியனென நாமுனுணர்கில்லாதே நின்
னெஞ்சத்தாவ லளித்துமென்றே நினைத்தென்னதையென் றுட்கருதி
நஞ்சத்தார்த்தப் படியுனக்கு நல்கினேனென் றுரைத்தகன்றான். (௫௧)

சென்றமுனிவன் சுயோதனன்றன் செப்பும்வகைபோற் றினகரன்சா
யொன்றச்சமயம் பாஞ்சாலி யுண்டிவினைகண்முடித்தவுடன்
மன்றன்மலர்த்தா ளன்புமலி மாணுக்கரொடும் பாண்டவர்தாந்
துன்றவ்வனத்தை யடைந்திட்டான் றுவரப்பசித்துச் சோர்ந்தவன்போல். (௫உ)

பெருவன்சினத்தூர் வாசன்றன் பிரமதேசு பிறங்கிடவே
மருவுஞ்செயலைக் கண்டறத்தின் மைந்தனெழுந்து வல்விரைவிற்
றருமர்க்கியபாத் தியமாதி தழைக்கப்பூசை தகவியற்ற
வருநன்முனிவ னுதிட்டிரன்றன் வளமார்பூசைக் குளமகிழ்ந்து. (௫௩)

அறத்தின்மைந்த நின்பால்யா மதிதியாக வடைந்தனமித்
திறத்தினலெற் சூழ்ந்தமையென் சீடவருக்கத் துடன்யானு
மறத்தபசியான் மெலிந்திங்ஙன் வந்தோங்கணத்தின் னமுதருளாய்
புறத்திலணைந்து நீராடிப் புகுவேம்விரைந்தென் றகன்றனே. (௫௪)

எந்தம்பெரும்பாக் கியமெனவே யிசைத்துத்தரும னேகியபின்
கந்தம்பொருந்து மலர்க்குழற்பாஞ் சாலியிடத்துக் கடிதேகி
வந்தங்ககன்ற தூர்வாசன் வரலாறுரைத்து மற்றவன்ற
னுந்தங்கியினிற் சினமுடையா னுயர்சீடர்களோ டுறுங்காலை. (௫௫)

நாம்பராக்கொன் றின்றியன்ன நல்கவேண்டு நல்கிலமேற்
சாம்பராக்கு மித்ததியிற் றையால்செய்வ தென்னென்று
தேம்பராமெய் விரதனவண் செப்பப்பயந்து பாஞ்சாலி
தாம்பராவுங் கிட்டிணன்பொற் சரணன்றியிலஞ் சரணென்ன. (௫௬)

வேறு

பாபத்தாலோ வேழைகளெம்மாற் படலாமோர்
தாபத்தாலோ வொன்னலரானுர் தாஞ்செய்த
கோபத்தாலோ வெவ்வகையாலோ கொள்ப்ரம்ம
சாபத்துக்கா ளாகவுளஞ்சித் தளர்வுற்றேம். (௫எ)

நாங்களரக்கு மாளிகையின்பா னணுகுற்றுத்
தீங்கடையாமே காத்தருளெந்தாய் தினமீதிற்
றுங்கறவோன்கோ பத்திடுசாபத் தழலாலே
யீங்கடலைப்பா டுற்றழியாது மிரட்சிப்பாய். (௫அ)

தாயறியாவோர் சூலுளதேயோ தரணிக்க
ணீயறியாவோர் செயலுளதென்ன நினைப்பேங்கொன்
மேயதறிந்துந் துயருறவெம்மை விடுப்பானே
னுயகநீதாழ்க் காமல்விரைந்தரு ணல்காயே. (௫௯)

மாதவனேகோ விந்தமுகுந்தா மதுசூதா
சீதளகஞ்சன் சிட்டிசெயான்மத் திரள்யாவுந்
தீதணையாமே காத்தருள்செல்வத் திருமாலே
சூதயராதா ளின்றெமையென்னத் துதிசெய்யா. (௬0)

ஊனவினுவுங் கண்டமுமிக்கே யுலர்வெய்த
வேனின்மயிற்கொத் தேயுடலுள்ளமும் வெம்புற்றுத்
தானமுதேங்குது ரோபதைமாதவ டன்கண்முற்
கானடைகொண்டுயர் கிட்டிணன்வந்தான் கடிதாயே. (சுக)

வேறு

துளவலங்கலான் றுவரையம்பதியிடை துவர்வாய்த்
தளவவாணகை யுருப்பிணிமாதுடன் சார்ந்தே
யளவளாயகாற் றுரோபதையார்த்தநா தங்கேட்
டுளமலிந்தவோர் துயர்கொடாங் குளவெலாமறந்தான். (சுஉ)

உடனெழுந்தன னடந்திடத்துவக்கின னுவணற்
கடவலெண்ணிலன் றன்மிசைகவின்றபொன் னுடை
யுடலினின் றுகிழ் வீழ்ந்ததுந்தன்னுளத் துணரான்
படபடத்தெழுங் காற்றினும்வேகமாப் படர்ந்தான். (சுங)

ஆத்திரத்தொடாங் ககன்றதுமடைந்தது மரைக்கான்
மாத்திரைப்பொழு திலையெனும்படியவண் வரலும்
பார்த்தறத்தின்மைந் தனுந்தகைசேர்துரோ பதையு
மேத்திமெத்திறும் பூதராயளவிலின் பேய்ந்தார். (சுச)

வந்தகிட்டிண வள்ளல்யான்வன்பசி வருத்த
நொந்தடைந்தன னுதலினுகரயா தேனுந்
தந்தயர்ச்சிதீர்த் திடுமின்முனதன்பினர் சாற்று
நந்தமாகுலங் களைவனென்றருளினு னுவன்றான். (சுரு)

பழையவன் னமெற் கிடுமின்முனுமக்குப்பின் பசிதா
னுழைதராவரங் கொடுப்பனென்றுங்கென நுவல்சொற்
பிழைபடாதுநம் மிடையிவண்பேசினுன் பெய்பு
மழைமுகிற்றிரு மேனியனின்றெ்றன மதித்தே. (சுசு)

பத்திநீடிய துரோபதைசொல்வண்மெய்ப் பகவ
மத்தியானமுங் கழிந்ததுபோசன மாந்திச்
சுத்தியாங்கலத் தோடுறல்கண்டுநீ துன்ப
மெத்தியாம்வருந் திடப்புரிந்திடல்பெரு வியப்பே. (சுஎ)

யாங்கடுன்பினுட் டுன்புறக்காணுமிவ் விச்சை
யோங்கருட்கிட னுகுநின்றிருவுளத் துதிக்கை
பாங்கதோபக ராயெனப்பகவன்யா தேனு
மீங்களிக்குதிர் வன்பசிவருத்துவ தென்றுன். (சுஅ)

இன்னகேட்டபாஞ் சாலியானென்செய்வ னென்ன
வன்னசாலையுட் புக்கனள்கவிழ்த்தியாண் டமைந்த
பன்னரும்பல பாத்திரங்களைபெலாம் பார்த்தா
ளன்னவற்றுளொன் றிலையெனுதிலையொன்றுற்றதுவே, (சுகூ)

ஆங்கதைக்காத் தேந்தியாகுலத்துட னரிதன்
பாங்கடைந்திது மாத்திரமுள்ளது பகவற்
கீங்களித்திட விதையெங்ஙனிசைகுவ னிதய
மாங்களிப்பன்யா னென்னினுமாவதே தென்றாள். (௭௦)

மாதுசொற்கொடு மாதவன்மற்றதை வழங்கிற்
போதுமிக்கனத் திடுதியென்கண்செவி புலன்க
ளேதுமோர்தரா வண்ணமெற்கிடும்பைமிக் கியற்றிக்
காதும்வன்பசி களைந்திடக்கண்ணிநீ யென்றான். (௭௧)

சாற்றுமித்திறஞ் செவியிடைக்கொன்டபாஞ் சாலி
மாற்றுயர்ந்தபொன் புரையவன்மலர்ப்பத மனத்துட்
போற்றுபிவ்விலை யானுனுட்புக்கவன் பசியை
மாற்றுவாயெனச் சங்கற்பித்தேயுடன் வழங்க. (௭௨)

மனதுவப்புட னருந்துபுகிட்டிணன்மதிக்கு
நினதுசங்கற்பஞ் சித்திப்பதாகென நிகழ்த்திப்
புனலிற்கைகழன் மண்ணியேயிரத்தினப் பொலிவார்
கனகபீடமேல் வீற்றிருந்தனனுளங் களித்து. (௭௩)

பாண்டுமைந்தனன் முகத்தினைநோக்குபு பகர்வா
னீண்டுவந்ததூர் வாசனெங்கெய்தில னின்னம்
யாண்டுளான்கொணர்ந் திடவொராளனுப்புதி யிறையிற்
கூண்டுளாருட னென்றனனுயிர்தொறுங் குயின்றோன். (௭௪)

விசித்தவார்முர சத்துசனனுப்பவே வாவோன்
வசித்தமாதவர் பாலுறவயிறுவாய்த் திட்ட
வசித்தடங்கணு ராமெனவவரமை யந்த
விசித்திரந்தனைக் கண்டுளம்வியந்திவை விள்வான். (௭௫)

நுழைத்தவெம்பசி யான்மிகநொந்துறு நும்மை
யழைத்துறச்சொனு றெனையிறைநீயிர்முன் னறைசொற்
பிழைத்திடாதுவந் தொல்லையிலருந்திநீர் பெட்ட
வுழைச்செல்வீரென வோதினனெற்றென வுற்றோன். (௭௬)

அடக்கமிக்கதூ துரைகொடுமுனிவர னறைவா
னடக்கவிங்கிய லாமையினமெலாந் தறைமேற்
கிடக்கைகண்டுநீ யிவ்வணங்கிளத்தினை கிற்கிற்
கடப்புறுதிவ னுறுவமோகருத்தினுட் கருதாய். (௭௭)

என்றுரைத்தனர் பைப்பயவெழுந்தனரேக
நன்றுதம்முளங் கொண்டுவேறதரிடை நடக்க
வொன்றுதூதுரைப் பானிறையுமையெதிர் நோக்கிக்
கன்றுநெஞ்சுட னுற்றுளானிம்மொழி கருதீர், (௭௮)

இசித்திடும்பசி மிக்குவந்திட்டன மிமைப்பிற்
புசித்திடற்கமை வேமெனப்புகன்றக னீவிர்
பசித்தமட்டருந் துபுநுமைநோக்கினர் பாங்கர்
கசித்தசிந்தையின் விடைகொடுநடத்தலே கடனும். (எகூ)

இன்னசெய்விரே லவர்க்குநாமியற்றப ராத
மென்னவென்றிறை யெண்ணிடநேருமீ தன்றிச்
சொன்னநும்மொழி பொய்ம்மொழியாகுமாற் றுனிவோ
டென்னுடன்வாக் கருதுமினேற்றநீ ரென்றான். (அ0)

கேட்டமாமுனி யோதுவன்வாழிகிங் கரவெம்
மாட்டமைந்துநீ வருத்தலேவருத்துவெம் பசியெங்
கூட்டமுற்றுளார்க் கில்லையம்மட்டல குமட்டு
நீட்டசிரண மும்பொதிந்துள்ளதிந் நிகழ்ச்சி. (அக)

அபம்பொருந்திய சுயோதனன் வேண்டிடு மதனு
னிபம்பொருந்தியா முற்றனமீதுநிச் சயமெய்த்
தபம்பொருந்தியா மோகையுட்சார்தரு தகையாற்
சுபம்பொருந்துவன் றருமனெம்மாசிநீ சொல்லாய். (அஉ)

என்றுசொற்றதுர் வாசனிவ்வாறுளத் தெண்ணும்
புன்றகைக்குணத் தரவகேதனத்தவன் புந்தி
யொன்றலீதலால் வருபயனீதென வுன்னி
நன்றுகொண்டன னற்றவப் பெரியனுணைம். (அங)

இலையயின்றிடற் களிக்கவென்றிரங்கின ரீந்த
விலையயின்றிடக் கிருட்டிணனிருந்தவத் தோர்கட்
கிலையயின்றிட விடமெனவியற்றிய தரிதா
ளிலையயின்றிட பத்திநெஞ்சினர்க்கரி தெதுவே. (அச)

எலையருந்தவத் தோர்பசியகன்றிட வெனவூண்
மலையருந்தினன் மாதவனொருவன்மா தவனோ
ரிலையருந்தியாங் கியற்றினன்சதுரரு ளேற்ற
நிலையருந்திறல் வாய்ந்தவரார்கொலோ நிகழ்த்தீர். (அரு)

மருவுதாய்வயி றுற்றதுர்வாசமென் றகன்ற
பெருமையாளனுஞ் சிற்றினஞ்சேர்ந்தவோர் பிழையாற்
றருமனேருறற் கிலச்சைகொண்டனனெனிற் சாருந்
தெருளிலென்னனை யார்திறமென்கொலாந் தேரின். (அகூ)

சினமுனிக்குள முவப்புறப்பணிபல செய்தும்
பனககேதன னற்பயனல்கவும் பரியான்
கனவிடுக்கணுற் றிடவருமவனிடங் கனிவா
ரனகவாசிபெற் றனறனளித்திடு மைந்தன். (அஎ)

அறிவுளாரெலா முடையவராவரஃ தறியாச்
சிறியரென்னுள ராயினுமிலரெனச் செப்புங்
குறியவாரணந் தான்பொய்யாமொழியெனல் கொண்டாஞ்
செறியுமவ்விரு வோரிலக்கியம்படு செயலால். (அஅ)

பித்தியைந்திடு கயவர்கடாம்பெறும் பேற்றி
னத்தியைந்திடு மாதவன்றுணைப்பத நளினம்
வைத்தியைந்தநெஞ் சத்தராபத்துமா நன்ரும்
புத்தியில்லவர்க் கின்பமுந்துன்பமாப்பொலியும். (அகூ)

ஒற்றெனுவுறு மறையவன்முனிவரு ருழிசார்
மற்றெலாநிகழ் வையுந்தருமன்கொள வழுத்த
விற்றெலாங்கிருட் டிணப்பெயரிறைசெய லென்றே
பற்றெலாமவன் கழற்கமைத்தோகையுட் பதிந்தான். (கூ0)

பின்புகிட்டிணப் பெயர்பெறும்பெருந்தகை தன்று
ளன்புசான்றவர் பாற்புரியாடல்க ளனைத்து
முன்புசான்றவ ரியாவருங்கேட்டுய மொழிந்தா
னின்புசான்றவிர் சாந்தமாம்வடிவு கொளிறையே. (கூக)

இத்திறம்படத் துரோபதை யிதயமீதெழுந்த
பத்திகொண்டுகிட் டிணன்றுவாரகைப்பெரும் பதிநின்
றெத்தனம்புரி தினந்தொறுமவர்கண்முன் பெய்திக்
கைத்திறம்பெறு பாண்டவர்துயரொரீஇக் காத்தான். (கூஉ)

இயலுமித்திறத் தாற்றமக்கிடருறு மெல்லை
செயமுலாவுமே காக்கிரசித்தமுற் றன்பாற்
றயவுலாவு நாரணனடிசரணெனச் சாரிற்
பயமுறுதருள் புரிகுவன்சதமே பாரீர். (கூங)

சீலமேவருட் கிட்டிணன்றன்னொடு செறிந்து
ஞாலமேவிடு நற்றவம்பெற்றபாண் டவருஞ்
சாலமேவருட் கற்பியல்சார்துரோ பதையுங்
கோலமேவுவை குந்தவான்பதங்குறு கினரே. (கூச)

வேறு

மற்சாதனஞ்சால் பாண்டவர்க்கோர் மனைவியாகும் பாஞ்சாலி
மானங்குலையச் சபையினிடை மானங்குலையச் செயமுயலுந்
துற்சாதனனு தியர்வெருவத் தோன்றிக்காத்தன் னவர்துண்டுந்
தூர்வாசப்பேர் முனிசினத்தாற் றொலையாதளித்தாண் டருள்புரிவா
யற்சாதனஞ்சா லவர்களா லல்லன்மிகுத்துன் னடைக்கலமா
மடியேன்றுயரம் பார்க்கவுனக் காசையுளத்துற் றதுகொல்லோ
யிற்சாதனந்தந் தின்றேயென் னின்னலொழித்தாண் டருள்புரியா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கூரு)

பாஞ்சாலிகதிமுற்றிற்று.

ஆக கவி ககஉ

பதின்மூன்றாவது

# வான்மீகர்கதி.

அரிதன்பத்தியு மிணையின்மெய்க்கற்புமிக் கமைந்த
வரிவையானபாஞ் சாலிதன்சரித்திர மறைந்தேன்
விரிகடத்துளா றலைத்துவாழ்ந்திட்டவான் மீகன்
சரிதமோதுவன் யாவரும் பெற்றிடத் தவமே. (க)

வேறு

இன்ன வூரிடத்தமைந்தோ னின்றுளார் தம்பேரின்ன
வென்னநான்றேரேன்முன்ன மிசைத்தவ ரியம்பினாரின்
றென்னோர்கற் பனையாற்பொய்யொன் றிசைக்கவு மிசைகின்றில்லேன்
கொன்னமை வான்மீகப்பேர்க் குலமறை யவன்றன்சீரே. (உ)

சிரித்திகழ்ந் தருவருக்குஞ் செயற்கெலா மிறைமைத்தன்மை
பரித்திரந் திடற்குமொல்காப் பான்மையு நல்குந்தீய
தரித்திரத் தொடர்புண்டன்பார் தாய்மனை சேயரென்ன
விரித்திடுங் குடும்பபார மிக்கவு முடையனானன். (ங)

கொடும்பவம் பிறவிதோறுங் குயிற்றுயி ரிகத்தின்மாட்டு
மிடும்பைகொண் டலையும்வண்ண மியற்றிய நிரயமென்னுங்
குடும்பவன் குழாங்கொண்டுள்ளான் குலவவர்க் காக்கவேண்டி
யடும்பக ரூறுமேற்ற லாற்றலே தொழிலாக்கொண்டான். (ச)

இழிதொழிற் கரசாயுற்ற யாசக முயன்றுமுற்றார்
குழிநிரம் பிடக்கண்டில்லான் கொடையுளா ரையுங்கண்டில்லான்
பொழியறல் விழியனாகிப் புலம்புறு வானுளேற்ற
தொழினமக் கிதுநன்றென்றுட் டுணிந்தன னிவ்வாறந்தோ. (ரு)

உக்கிரத் தகையினோடு மோங்குபாழ்ங் கடத்தின்மேவி
யக்கிர மத்தினாற்றா லாறலைத் திடுவேனென்னப்
புக்கிரந் தனுத்தோன்றன்னோர் புந்திகொண் டொற்றையான
சக்கிரத் தேரோன்கிழ்பாற் சார்முனங்கடத்திற் சார்வான். (சு)

* பதிகரா யுறுவார்த்தட்டிப் பறித்திருள் பரவுமெல்லை
வதிமனை புகுந்தங்குள்ளார் வன்பசி தணிப்பானின்ன
திதியினிர்ச் சனவனத்திற் றிரவியப் பொருட்டாற்கோடிக்
கதிகராம் பதிகர்க்கொன்றிட் டாலமொத் திருந்தானந்தோ. (எ)

மறுமைசால் கதியையெண்ணு மதியினை யறவேமாற்றிக்
கறுமைசேர் நரகபூமி காணியாக் கொடுக்கும்பாவச்
சிறுமைநா மஞ்சேர்பிள்ளைத் திரண்மிக வீனுந்தாய்நேர்
வறுமைநல் காத்துன்புண்டு வையகத் தென்னலாமோ. (அ)

* பதிகர் - வழிச்செல்வோர்.

இன்னணஞ் சின்னுட்செல்கா லிழிதொழி லினனிடேற்ற
நன்னலம் பொருந்துங்கால நண்ணலின் வசிட்டனுனேன்
மன்னதரதன்கணெய்த மற்றவற் கடுத்துவல்லே
யுன்னதாம் பொருள்கண்முற்று முதவுதியுதவிடாயேல். (கூ)

உன்னதா ருயிர்மீதிச்சை யுன்னுளத்துறுதல் பொய்யா
மின்னவிர் வடிவாளென்கை மீதிருக் கின்றதோரா
யென்னநின் னுள்ளக்கோட்பா டிசைத்தியென் றிடவசிட்டன்
புன்னகை கொண்டிவ்வாறு புகன்றிட வலித்தான்மாதோ. (கப)

அடுங்தொழில் புரிதிபின்னு னஞ்சிடே னின்னைக்கேட்கப்
படுங்கடா வினுக்குத்தக்க பணிமொழிபகர்தி முன்னிக்
கொடுந்தொழிற் பவமஞ்சாது குயிற்றினை நினக்கோவன்றிக்
குடும்பவீட் டத்தினர்க்குங் கூடவோ கூறுயென்றான். (கக)

கேட்டபோ தவன்சொல்கின்றான் கிரகமீ தெனக்கின்பார்த்து
நாட்டமார் மனைவிமைந்தர் நல்குதா யாதியாய
கூட்டமுண் டவர்கட்கன்னங் கொடுத்திடும் பாரமென்றன்
மாட்டமைந் துளதுகாக்க மற்றொரு துணையின்றென்றான். (கஉ)

முனிதுவ லுவனியார்க்கா முயன்றதிக் கொடியகன்ம
மினிதவர் தம்பாலெட்டி யானிவ னுமக்காவேண்டி
யனியகா ரியங்கள்செய்தே னவைதரும் பாவராசி
நுனிதல்செய் தெனக்கோவன்றி நுங்கட்குமுண்டாங்கொல்லோ. (கங)

என்றுநீ யன்பாற்கேட்பா யிதற்கவ ரென்னுத்தார
மின்றுசொற் றிடுகின்றார்கொ லியம்புமற் றதனைக்கேட்டு
நன்றுற வென்பாற்சேர்தி நானது வரையுமிங்ங
னென்றுறு கின்றேன்பொய்மை யுரைக்கலன் சரதமென்றான். (கச)

போதவின் பெய்துங்காலம் புணர்தலாற் புனிதஞான
மாதவ னருளாற்சாற்று மாற்றநன் குணர்ந்தானுகிப்
போதலுற் றுங்குள்ளார்பாற் புகன்றனன் வினவுமெல்லை
யேதறி விவனுக்கின்றீண் டெய்திய தெனவியந்தே. (கரு)

பெற்றதாய் சொல்வாண்மைந்தர் பின்னுத விடுவாரென்னச்
சொற்றன ருலகுளார்நிற் றேய்தர லாம்பாவந்தான்
மற்றென திடத்தின்மேவின் மைந்தநீ காத்ததேது
துற்றவச் செயல்களென்பாற் றேய்தர ஞாயமின்றே. (கசா)

உன்னையின் றதுமுதற்கொ டோங்குமெவ் வனமாங்காறு
மன்னையா யுற்றயான்கொ ளல்லலுக் கெல்லையில்லை
முன்னையான் பெற்றதுன்ப முயக்கமுண் டுனக்கீண்டென்னி
லென்னைநீ செய்யும்பாவ மெய்துதற் கையமின்றே. (கஎ)

புத்திர வளற்றினீக்கிப் புகத்திர கதியுட்சேர்ப்பார்
புத்திர ரென்னுநாமம் பொருந்திடு மைந்தராவ
ரித்திரமுணர்கிலாயா யேற்றினை யென்மேற்பாவஞ்
செத்திறந் திட்டபின்னி செய்நல மதிப்பதென்னே. (கஅ)

அன்னையா மெனக்குப்பாவ மளித்திடு மறிவொன்றில்லா
ருன்னைநேர் புதல்வர்பல்லோ ருதவின ருகினுன்ருன்
பின்னைவெந் நிரயம்விட்டுப் பெயர்ந்திட ஞாயமுண்டோ
நின்னைநொந் தாவதென்னென் னீடலை விதிவிட்டந்தோ. (கசு)

எழுபிறப் பிணிஹுந்நிமை யெய்திடா ரறிவறிந்த
பழுதறு மகப்பேறெய்தும் பாக்கிய முடையாரென்னில்
வழுவலா னன்மைகாணு மடமையோய்ச் சுதனைக்கொண்ட
விழுதையான் பாவமன்றிப் புண்ணிய மெய்தலாமோ. (உ0)

கவினுமாண் மகப்பெற்றேமென் களிக்கடன் மூழ்குன்ருதை
யவிருநின் மதிச்சிறப்பு மாற்றுமோர் தொழிலின்சீரும்
புவியிடத் திருந்துகாணுன் போயின னந்தோபாவ
நவில்கன விடத்திலெய்தி னல்குவாய் போலுமாதோ. (உக)

என்றுபற் பலவாறன்னை யிசைத்திரங் கிடுதலோடுங்
கன்றுநெஞ் சுடையனுகிக் கடிதவண் விட்டுநீங்கி
யொன்றுயி ரிரண்டுமெய்யென் றுள்ளமீ துன்னவாழ்ந்த
தன்றுணை வியின்பாற்சென்று சாற்றிடச் சாற்றுகின்ருள். (உஉ)

அவரவர் புரியும்பாவ மவரவர்க் காவதன்றிக்
குவலயத் தினின்மற்றோர்பாற் கூடிடக் கேட்டதுண்டோ
விவரமற் றிதுநீர்தோரா விதங்கொலோ வெனக்குவேண்டு
நவவுடை யூண்களாதி நல்கனுங் கடனேயன்றே. (உங)

மற்றவை கொண்டியான்ருன் வளமனை மீதுவாழ்வேன்
குற்றமார் செய்கையொன்று குயிற்றிலென் பாலும்வந்து
சொற்றவப் பாவந்தோயுந் தோய்தரா தெனக்கென்பேன்கொ
லற்றயர்ந் திலனுனென்று மடைவதெவ் வழியென்பாலே. (உச)

பாரியென் றுற்றயானீர் பசித்துவந் துற்றகாலைத்
தீரிய வன்னநல்கென் செயற்கையிற் றிறம்பகில்லேன்
சீரிய செயலோவன்றித் தீமைகொள் செயலோசெய்திர்
காரிய மொன்றிண்டெய்தக் கடவதென் றனக்கின்றின்றே. (உரு)

கற்புடை தனத்துமாதர் கன்மமுங் கணவற்கென்ன
நற்புல னமையுமேலோர் நவின்றன ரதனைவிட்டுப்
பொற்புறு முமதுபாவம் புணர்ந்திடு மென்பாலென்றீ
ரற்புத மிதனைத்தங்கட் காருணர்த் தினர்கள்சாற்றீர். (உசு)

நலமலி தொழினீராற்றி நல்கிய தாதலாலிப்
பொலனெனக் காகாதென்று புறத்தில்யா னெறிந்திட்டேன்கோ
லலமரப் பதிகர்தம்மை யாறலைத் திடுதிரென்று
புலனுற வுமக்கோர்நாளிற் போதனை புரிந்ததுண்டோ. (உஎ)

என்னகத் துமதுபாவ மெய்திடு மென்னநீவிர்
சொன்னதற் கேதுவேது சொல்லுதி ருமதுபாவம்
பன்னியா யுற்றவென்பாற் படர்ந்திடி லெனதுபாவந்
துன்னிட லெவர்தம்பாலிற் சூழ்ந்துளத் தெனக்குணர்த்தீர். (உஅ)

பசித்துநா னுற்றகாலைப் பதியென வுற்றநீர்தாம்
புசித்திடிற் பசியென்பாலிற் போந்திடக்காண்பதுண்டேல்
விசித்தமுற் பவப்பழக்க மிக்குநீ ருயிர்கடம்மை
நசித்தவப் பாவமென்பா னண்ணிடுமையமின்றே. (உகூ)

ஒருயி ரியற்றும்பாவ முண்டொழித் திடுவான்வேண்டி
லாருமுற் பவமனந்த மடைந்திட வேண்டுமென்றுற்
சேருயிர் மற்றொன்றுற்றுஞ் தீமைபுஞ் சேருமென்னிற்
தீருமோர் வழியுமுண்டோ தெளிந்துநீர் புகல்வீரையா. (கூ0)

நாயகன் றுட்டனாகி னற்குணத் தவன்மற்றோன்பான்
மேயவன் பணிகளாற்றி மேனலம் பெறலாமென்னத்
தூயநான் மறைகளொன்றுஞ் சொற்றிட வில்லைமாதர்க்
காயதோர் செயலாலென்பாற் பாவம்வந் தணுகிடாதால். (கூக)

தற்சுதந் தரங்கொண்டில்லாத் தையலர் தமதுபாவந்
தற்சுதந் தரங்கொண்டுள்ள தலைவரைச் சாருமன்றித்
தற்சுதந் தரங்கொண்டுள்ள தலைவர்க ளாற்றும்பாவந்
தற்சுதந் தரங்கொண்டில்லாத் தையலர்ச் சாராதன்றே. (கூஉ)

துட்டனும் புருடனானேன் றுணிந்துளந் தீதொன்றுற்றற்
கிட்டமாந் தகையுள்ளோர்ந்திட் டில்லவண் மறுத்துமூக்கிச்
சட்டவங் கதைமுடிக்கிற் றவன்பிழை யோடில்லாடன்
சட்டமாஞ் சொற்றிறம்பாத் தகைபகற் பியல்பும்போமே. (கூங)

நிரையினுட் டனது தாயை நேடியே பாலருந்தும்
புரையில்சீர்ப் பசுவின்கன்று போலமுன் றும்புரிந்த
வரையுள வினைகள்யாவும் வந்தவ ரவர்பாற்சேருந்
தரைமிசைப் பிறர்பாற்சேரத் தள்ளினும் போகாதன்றே. (கூச)

தன்வினை தன்னைச்சாரு மெனவரு டழைத்தமேலோர்
முன்விளம் பினர்களந்த முறையினு லென்பாலாகா
துன்வினை யுமதெண்ணத்திற் றோயுமிங் கென்பாலென்னின்
மன்வினை மாய்வானும்முன் மதித்திரால் வழக்கின்றென்றாள். (கூரு)

தன்னிய வுயிரின்மிக்க தகையுளா ளெனத்தான்கொண்ட
பன்னியா யுற்றுளின்ன பலபல பகரக்கேட்டே
யன்னியர் போலநெஞ்ச மழுங்கிநொந் தப்பாலேகி
யின்னிய மைந்தர்தம்பா லின்னன புகலலுற்றான். (ங௬)

பற்றென தன்பார்சேயிர் பகர்வதொன் றுளதுகேண்மி
னுற்றவென் னுயிருமக்கீண் டொப்பதன் றுஞ்சுகத்துக்
கிற்றென வியலாப்பாவ விழிதொழி லியற்றினேன்யான்
மற்றதிங் குமக்கு மின்றோ வழுத்துமினென லுஞ்சொல்வார். (ங௭)

தந்தையா லுதவுமன்னந் தனைச்சிறு பாலருண்ணி
னிந்தையார் பாவம்வந்து நேருமென் றெந்தைசொன்னீர்
முந்தையா ருலகில்யாரு மொழிந்தில ராலிம்மாற்றம்
விந்தைதோய் வான்மீதுள்ளா மேதகு வழக்குப்போலும். (ங௮)

எம்மறை யிடத்திற்சொற்ற தித்தலை விதிதான்மற்றைச்
செம்மறை வல்லோர்தோர் செடியகாட் டகத்தினீர்கொண்
மெய்ம்மறை சாற்றுமேலாம் விதியிது போலுமெங்கட்
கம்மறை விதிதலைப்பா டாகவீண் டறைந்தீர்போலும். (ங௯)

பற்பல புதல்வர்ப்பெற்றுப் பாலனம் புரிவான்பைம்பொன்
வெற்பல வுவமையென்ன மிகைபடு பவங்களாற்றி
யுற்பல விழிமின்மைந்தர்க் குதவியீண் டும்மைப்போன்று
நற்பல னடைந்தா ருண்டே னுமுணர்ந் திடச்சொல்வீரால். (௪0)

நத்தமுற் றிரவினூடு நத்தமுற் றுறலைக்குஞ்
சித்தமுற் றுத்திவாவிற் செடியகாட் டிருந்துசேர்வார்
வித்தமுற் றறப்பறித்து வீட்டுதீ வினைகைம்மிக்குப்
பித்தமுற் றியதுபோலும் பிதா நுமக் கந்தோவென்றார். (௪௧)

இத்தகை யன்னைபன்னி யின்சுத ரியம்பக்கேட்டுண்
மைத்தவன் றுயரமென்னும் வாரியுட் படிந்தானாகி
மெய்த்தவ வசிட்டன்றன்பான் மேவியன் னவர்கண்மாற்ற
மத்தனை யுஞ்சொற்றிட்டா னந்தணப் பிறப்பார்வேடன். (௪௨)

பறித்திடும் பொருள்பங்குண்டுன் பவமிலை யெனத்தம்பண்பை
யறித்தன ரவனில்சேய ராருயி ரென்னவென்னைக்
குறித்தவென் மனைசேயோரக் குணத்தரன் றென்பார்பித்தை
முறித்திடப் பத்தியல்லான் மொழிதரு மருந்தொன்றின்றே. (௪௩)

கேட்டவன் மொழிவசிட்டன் கிருபைமிக் கடைந்தானாகி
நாட்டகத் துன்னேர்மூர்க்கர் நாடில்பார் மறைகளோதுஞ்
சேட்டவிப் பிரகுலத்திற் செனித்துநல் லொழுக்கந்தீர்ந்து
கூட்டவன் குடும்பங்காப்பான் கொடுந்தொழிற் செய்தாயந்தோ. (௪௪)

செறியுமற் றவர்களெண்ணர் தெரிந்தனே யன்றோநீ தான்
வறிதுவெம் பவமேற்றிட்டாய்மனிதனே காங்கியன்றோ
வெறிதிரைக் கடல்சூழ்பார்மீ தெய்துகால் வினைதுய்க்குங்கா
லறிவறு மாணப்போதி லார்துணை யடைந்திட்டார்கள். (சரு)

தருமமோ டதன்மமென்னச் சாற்றிரு பொருளையன்றி
மருவுயிர்த் துணையாயெய்து மற்றொரு பொருடானுண்டோ
வருமனி தத்திரட்குண் மறுமைசால் சுகத்தைநாடி
யொருவரு நலஞ்செய்கின்று ரொருவரு முலகத்தின்றே. (சசு)

தான்புரி நன்மைதீமை தான்சுக துக்கமீத
னூன்புரி கணவனுவோ னுயிருட னுற்றகாலை
வேன்புரி நட்போடில்லாண் மேவியா விங்கனுதி
தான்புரி கின்றுணீங்கிற் சவமெனப் பயங்கொள்கின்றாள். (சஎ)

கணமய லகலினுள்ளங் கலங்கிடுங் காதற்றன்மை
தணவரு மன்புசான்ற தனையருந் தமதுதாதை
பிணமெனக் காணிற்கிட்டப் பெரிதுமச் சுறுகின்றாரிக்
குணமுடை யார்பொய்நட்பைக் குறிப்பவர் குணமுள்ளாரோ. (சஅ)

தன்னிய லான்மலாபந் தனைமதிக் கலனுய்த்தாங்க
டுன்னிட நலஞ்செய்திட்டான் றாலமெய் யதனைக்கண்டு
மன்னியர் போலத்தீண்டற் கச்சமுற் றுவர்ப்பார்காணு
மன்னிய மானனுக்கெவ் வரிசையே செய்வாரந்தோ. (சக)

அவர்சுகங் குறித்து நீயீண் டலகில்பா தகஞ்செய்திட்டாய்
தவறிதற் கிணையாவேறு சாற்றவொன் றுளதோயான்றன்
விவரமுற் றிடவுனக்கு விளம்புசொன் மெய்மையோர்ந்துட்
பவநெறிக் கஞ்சிவாழ்தி படரெனப் பகர்ந்திட்டானல். (ருo)

மங்குலிற் கைமாறுன்னு வசிட்டமா தவனுளத்திற்
பொங்குபே ரருளாற்சொற்ற புதுமொழி செவியிற்கேட்டு
நங்குதோய் மறையோன்முன்னு ணவிற்றுபாக் கியத்தினுலுங்
தங்குசற் சனசஞ்சர்க்கஞ் சாருநன் னலத்தினுலும். (ருக)

கிஞ்சித்தாம் போதநெஞ்சிற் கிளர்தலாற் கெழுமுங்கேட்டுக்
கஞ்சித்தாழ்ந் துரைப்பான்றுமீண் டருளினு னுரைத்தவாய்மை
நஞ்சித்தாந் தங்களோது நான்மறை முடியாக்கொண்டே
னிஞ்சித்தாம் பாவத்துக்கியா னினியிட மீயேன்மெய்யே. (ருஉ)

கூவியாட் கொண்டோயுன்றன் குறைவில்பே ரருளினீராற்
பாவியேன்சர்வசங்க பரித்யாகச் சீரேய்ந்திட்டே
னுவியை யுனதுபாதத் தடைக்கல மாக்கினேனெற்
பாவிய பவந்தீர்ந்துய்யும் பரிசுதந் தருடியென்றும், (ருங)

சற்குரு பானீயேநின் சரண்சர ணென்றடைந்தே
னற்குணச் சீடனுக நன்கருள் புரிநீயல்லா
லெற்குறு துணேவேறில்லே யிகதலத் திச்சொன்மெய்யென்
றற்குண முன்னியெந்தாய் சுழியலே யருடியென்றும். (ருச)
கூறுசொன் முனிகேட்டோதுங் கொன்னவங் கழித்தற்கேலா
வேறுகா ரியமுண்டெற்குன் வீட்டின்மே வுபுநீவேறோர்
வீறுசற் குருவைச்சார்ந்துன் விழுமநோய் தீரவன்னே
ஞறுபொற் பதத்தொண்டாற்றி நலம்பொருந் துதியென்றனே. (ருரு)
மற்றது காலேசொல்வான் மறையவ னின்கனேக்கப்
பெற்றயான் பயனென்றின்றிப் பெயர்கலன் பயனீதின்றே
லுற்றவுன் றனேயுங்கொன்றென் னுயிரையுந் துறப்பேனென்னப்
பெற்றதாட் டுணேமுறுக்கிப் பிடித்தனன் பெரிதுமன்னே. (ருசு)

வேறு

காளேப்பிடித்திட் டடுங்கால னனிநல்லவனென் றுலகுரைப்ப
வாளேப்பிடித்திட் டவமாற்றும் வன்கணவன்றன் மறுமைகொணற்
கோளேப்பிடித்திட் டமைற்றுங் குணத்திஞெடுதன் குளிர்கமலத்
தாளேப்பிடித்த நலங்தேறித் தவத்தன்றயவிற் சாற்றுகின்றன். (ருஎ)
பரிவானம்மைப் பெருந்துணேயாப் பற்றுமிவனேப் பதைத்திடவிட்
டிரிவோமென்னி லிவன்சாத மிறத்தலெனவுள் ளஞ்சினஞ
யரிதாமுபதே சம்புரிதற் கருகனல்ல னென்றகத்திற்
பெரிதாலோசித் திராமனருட் பெருமந்திரத்தைப் பிறழ்த்தியே. (ருஅ)
மராமராவென் றெருகணமு மறவாதன்பின் வழுத்துகெனப்
பராவுகருணே முனியன்பிற் பகர்ந்தபோதிற் பரவசனுய்
விராவுமினனேர் கஞ்சமென விரியவகமு முகமுமிகக்
*கராளமுடையோன் முனிவனிரு கால்விட்டகத்துட் பற்றியே. (ருசு)
அட்டாங்கம்பஞ் சாங்கமதா யடிவீழ்ந்தெழுந்தே யன்பிஞெடுஞ்
சிட்டாங்கத்தோ டெதிர்நிற்குஞ் சீடற்கிங்ஙன் செப்பிடுவா
னிட்டாங்கனிவான் மறையிதனே யிரவும்பகலு மெண்ணுதியேற்
பட்டாங்கருணன் னலமுழுதுன் பாலாமென்னப் பகர்ந்தானே. (சுo)
வேதமொழியிற் சற்குரவன் விளம்புமாற்ற மேலெனுநற்
போதமுடன்கே வலசகலம் பொருந்தாதுள்ளப் புலத்தினிடைச்
சோதிநாளில் வீழுமழைத் துளிகொள்ளிப்பி யிணேயெனக்கொண்
டாதரங்கை மிகுத்தவனு யளவிலின்ப மடைந்திட்டான். (சுக)
வருமகோராத் திரத்துமிக மராமராவென் மறையினேயே
கருதிக்கருதிக் கசிந்துள்ளங் கந்தமூல மன்றறலும்
பருகிலதுநித் திரையினேயும் பாற்றிக்காலம் பலகழிய
மருவுதவஞ்செய் தனனுடலே வன்மீகம்பொத் திடவம்மா. (சுஉ)

* கராளம்-தீக்குணம்,

காலம்பலவிங் ஙனங்கழியக் கருணைப்பொலிவார் வசிட்டமுனி
சீலம்படவங் கடைந்தான்முற் றிரள்வன்மீக மறைத்திட்ட
கோலம்படைத்தோற் பார்த்தவன்கொல் லோவென்றுவகைகொண்டாவிச்
சாலம்படைக்கும் பிரமாவைத் தன்முன்வருவா னுன்னினன். (சுங)

உரமார்வசிட்ட மாமுனிவ னுன்னலுணர்ந்திட் டடன்கமலப்
பிரமாவாணி சமேதனுப் பிரத்தியக்க மாகமுனி
சிரமேற்குவித்த கரமோடுந் தெண்டன்புரிந்து செப்பிடுவான்
றிரமார்மனங்கொ ளின்னவனென் சீடன்றவசி காமணியே. (சுச)

இன்னேனெவ்புவிமீ தேவராலு மியற்றநினைக்க முடியாத
வன்னேன்புனுற்றி வதிகின்றான் வரமீந்திடயாம் வலிதடைந்துங்
கொன்னேனெவ்புந்தி யிடைதேரக் கொண்டானிலையச் சோகூவி
நன்னேனெவ்புனித வரங்கண்மிக நல்கவுளத்தி னுடினனல். (சுரு)

என்றுவசிட்ட முனிபுகல விசைக்கும்பிரம னிவன்றவம்போ
லின்றுபுவியிற் புரிந்தவர்க ளிவற்குவரங்க ளீந்திடநா
னன்றுகருதக் கணமீயு நாடினுயா னசைத்தவர
மின்றுதருவான் வலித்தனனென் றியல்வன்மீக முடைத்தெறிந்தே. ()

பதுமன்கமலத் திருக்கரத்தாற் பரிசித்திடலும் படியிறவன்
கதுமென்றெழுந்து பரவசனுய்க் கரையவுளங்கண் ணீர்வார
மதுரத்துதிகள் பலபுகன்று வசிட்டனுடன்வா ரிசவாசற்
பொதுமைபடத்தாழ்ந் தின்பநெடும் புணரியிடையிற் பொருந்தினன். ()

பிரமாவுடனே யினியிவன்மெய் பிடிக்கத்தனக்குக் கிடைக்காதாந்
தரமேவினதென் றித்ததியிற் றூன்றொட்டிடவெண் ணினன்போல
வரமார்தனதெண் கரத்தாலும் வாரிவாணி மாதணைபு
முரமீதணைத்தா னவள்சீல மோங்கப்புகழ்மா தவனையரோ. (சுஅ)

ஆனற்பிரம ரிடிவிசுவ னுமென்றறைந்த வசிட்டமுனி
வோனுற்றலைகொ ளயற்பார்த்தீண் டுவமைபறுமெய்ப் பெருந்தவங்க
டானுற்றிவற்கப் பிரமரிடிப் பதவிதனைத்தந் தருளுகெனத்
தேனுற்றிடுசெம் பதுமமலர்த் திசைமாமுகவன் செப்புவான். (சுசு)

மான்மீதமையப் பெற்றவொரு மாதாவளித்த மாசுபடு
மூன்மீதமைத்த பேரென்று மொன்றாதாக வுலகினிடை
வான்மீகந்தந் திடத்தவத்தின் மாட்சியோடு வருமிவற்கு
வான்மீகப்பேர் புகல்கவுயர் வானுமென்ன வழங்கினன். (எ0)

சகத்திற்றுணையாத் தாரமகார் தம்மையபிமா னித்துழல்வோ
ரிகத்திற்பலரு மோதுபழிக் கிலக்காச்சுழல்வா ரிதைநீத்திட்
டகத்திற்றுணையா மொருவனிடத் தன்புசான்றோ ரகன்றுயர்வா
னகத்திற்பலரு மேத்தெடுப்பா னமைதற்கிவன்சான் றுகுமே. (எக)

வன்மீகந்தந் திடுமுடலும் வனசாதனத்தோன் றரும்பேருந்
தன்மீதமையப் பெற்றுயருந் தவத்த னின்பச்சலதிபடிந்
தென்மீதமையுங் கதிரெனத்த னிசையெவ்வுலகத் தினுமென்றுங்
கன்மீதெழுத்திற் படைத்திட்டான் காணுந்தவத்திற் பெரிதுண்டோ.()
மாட்சிப்பிரம குலத்தர்சிகா மணியாவிளங்கும் வான்மீகன்
சேட்சியுறுபே ரியாகமொன்று செய்தானதனைத் தெரிசிப்பான்
காட்சிபொருந்து முனிவர்களுங் கடவுளாரு மன்றவர்க்குச்
சாட்சிபொருந்து மறைமிருதி சாத்திரங்கள் யாவுமரோ. (எங)
ஆசாரம்மெக் கியந்திருதி யறஞ்சிரீகிர்த் தியொடிலச்சை
தேசார்சாந்தி கமைதயவு சிரத்தைபுட்டி மதியென்னப்
பேசாநின்ற நன்மையெலாம் பிரத்தியக்க மாகியரோ
மீசார்தவத்தா லும்பிரமன் வரத்தினாலும் விளங்கியே. (எச)
இலங்கும்பிரம ரிடிசத்த மன்வான்மீக னெனவிசைக்கு
நலங்கொண்டவிர்ந்தா னுடன்வசிட்ட னுலானனத்தான் விடைகொண்டே
துலங்குதான மடைந்திட்டார் தூயன்கிருத கிருத்தியனுப்
வலங்கொள் சுரர்மாதவர் வணங்க வதிந்தான்றவங்கள் பொதிந்தானே. ()
விசுவாமித்தி ரற்கரிதா மிக்கபிரம ரிடிப்பதத்தை
விசுவாசத்தோ டயன்வசிட்டன் விளங்கித்தரக்கொள் வான்மீக
னுசுவாசந்நி சுவாசத்தோ ருனுற்றுஞ்சித்தி செயலரிதோ
சிசுவாந்தரந்தீர் மால்பதத்திற் சேர்ந்தான்பிறவி தீர்ந்தானே. (எரு)

வேறு

எதிர்படுங் காலந்தன்னி விராகவன் றோன்றுமென்று
மதிர்கட லுலகத்தின்ன வாடல்க ளியற்றுமென்று
முதிர்தன தறிவாற்றேறி முடித்தன னிராமகாதை
கதிர்விடு வாணிவாக்கிற் கலந்துரைத் திடலின்மாதோ. (எ௬)
இத்திற விராமநாமத் தியன்றமாட் சிமைபுமொப்பில்
பத்தியின் பெருமைதானும் பகர்ந்திடும் பான்மைத்தேயோ
மெத்தியற் றவச்சீர்கொள்வான் மீகன்றன் விரிவார்காதை
சத்தியப் படமுற்றோதுந் தகைமைசே டனுக்குமின்றே. (எஅ)
என்னிலென் னனையர்நாக்கொண் டிசைத்துமுற் றுவிக்கலாங்கொ
லென்னினு மவன்கணேக்கா லிகத்தர்தேர்ந் தின்பமெய்தப்
பன்னின னெருசற்றின்னும் பாக்கிதே ராசைபுள்ளா
ருன்னிடி லவனன்னும மூளத்தினுட் டுலக்குமன்றே. (எகூ)

வேறு

பராவுமறையோர் குலத்துதித்தும் பற்றுமொழுக்கா தியவிடுத்துப்
பதிகர்ச்சாடிப் பொருள்கொடுதன் பாரிமுதலோர்ப் பாலனஞ்செய்
தாராவையனைய கொடுங்குணத்தோ டமலவசிட்ட மாதவன்பா
லகிதத்திறத்தோ டுபதேச மடைந்துன்னு மதைப்பிறழ்த்தி

மாமாமாவென் றுருவேற்றும் வன்மைபடைத்தோ னெஞ்சத்தின்
வரம்பின்றெழுந்த வாருமை மடமையேற்கு முறவளித்திட்
டிராவும்பகலு முன்பதமே யெண்ணப்புரிவ தென்றறியே
னிராமானந்தப் பெயர்கொடென நிதயத்திலங்கும் பெருமாளே. (அ0)

வான்மீகர்கதி முற்றிற்று.

ஆ கவி ககசுஉ

---

பதினான்காவது

## உருக்குமாங்கதகதி.

திருக்குலாந் தனதுநாமஞ் செபித்திடு வார்தமக்கும்
பெருக்குலாம் புலமையாதிப் பேறருள் பெருக்கஞ்சான்ற
மருக்குலா வியவான்மீகன் வான்கதை முடித்திட்டன்பா
ருருக்குமாங் கதனன்மாட்சி யுரைத்திடத் துவக்கினேனே. (க)

வேறு

மருக்குலாமதிதியர் வடதிக்கோனெனச்
செருக்குலாமன்னவர் தென்றிக்கோனெனப்
பெருக்குலாஞ்சீர்த்தியின் பிரபைவாய்ந்துளா
னுருக்குமாங்கதப்பெய ருடையமன்னவன். (உ)

தாயிணையாப்பிர சைகளையோம்பித்தன்
சேயிடையூறென்று செயினுமன்னவற்
காயிலைவேலினாற் காதவொல்கிடாத்
தூயியன்மனுநெறித் துறையினின்றுளான். (ங)

நலக்குறிமேயதன் னுடெனச்சொலு
மிலக்குமிதன்னைவேற் றிறைவர்தம்புய
பலக்குணங்கொடுகரம் பற்றிடாவணம்
விலக்குபுகாத்தனன் மிகைகொள்காலமே. (ச)

சக்கரவர்த்தியா ளிராசதானிக்கு
மிக்கணித்தாகியே வியன்மிக்கேய்ந்துவா
னக்கடவுளர்களு மாசைகொண்டிடத்
தக்கவோருத்தியா னந்தழைந்ததால். (ரு)

பொழுதுகளைந்தினும் புகுமகாருது
முழுதினுமாறுரு முருகமைந்துவண்
டுழுமியற்பூநிறை வுற்றவவ்வனஞ்
செழுமைகொடன்னலந் தெரிக்கும்பின்னரோ. (சு)

பூமருவிருவரைப் புணர்ந்தகார்முகிற்
சாமளநிறங்கொண்மா தவன்றன்சேவடித்
தாமரையிடமெனச் சாருந்தொண்டரொப்
பாமலர்வனப்புக மூறைதற்பாலதோ. (எ)

அரியடியவர்பிறர்க் களிப்பதன்றிவேற்
றொருவர்தம்பொருள்பெறு வுண்மைகாட்டுமால்
தருமதுநீரெனத் தான்சொரிந்துர
மருமலரெனக்கொடு வயங்குநந்தனம். (அ)

பாகவதர்களுமெய்ப் பகவன்றானுமெற்
கேகமேயென்றவ ரெதிர்வருந்தொறும்
வேகமிக்குறக்கண்ணீர் விடுத்துத்தாள்கட்கன்
பாகவர்ச்சனைபுரிந் தழுத்துஞ்சென்னியே. (கூ)

தன்மகார்செயலினுற் றயங்குவார்களே
யன்மழைமேனிய னருளிக்காத்தலி
லின்மதுவாற்றிடு மிழுக்கன்முற்றறத்
தொன்மலர்வீழுபு சுவற்றுநன்கரோ. (க0)

வளங்களின்னனகொளவ் வனத்தின்மாடுறத்
துளங்காதனங்களாற் றுதைந்திலங்கிய
தளங்கவின்றிடுபடித் தலத்தையேய்ந்தவோர்
குளங்கவின்றுளதலர்க் குடியர்வேட்கவே. (கக)

உரவியற்சீர்கொளவ் வுத்தியானத்தில்
விரவியமலர்களின் மேன்மைகண்டவாய்
வரவியல்வானர மாதரானவ
ரிரவியறுெருந்தொறு மெடுத்துச்செல்வரால். (கஉ)

கற்பகங்கொண்டவிண் கவின்றமங்கைய
ரற்பகங்கொண்டிர வதிற்கொண்டேகிடும்
பொற்புறுநறுமலர் பொதிந்தநந்தனத்
தற்புதமிற்றென வறைவதாங்கொலோ. (கங)

அனவரதமுமிய லலர்கள்போஞ்செயல்
கனகமாமுடியிறை கருதிநோக்கியோர்
தினமனத்திடைமிகு சினஞ்செய்திட்டெழில்
வனமளிப்பவனிடம் வருத்தன்மேயினன். (கச)

அளித்திரளுலவுநம் மலர்வனத்திடைத்
தெளித்திடுமதுமலர்த் திரடினந்தொறு
மொளித்திருந்தெடுப்பரியா ருணர்கிலாய்கொனீ
யளித்திடுஞ்செயன்மிக வழகிதாலென்றே. (கரு)

யாரெடுத்தேகுக ரென்னவாய்ந்தனை
சீரெடுத்திடுமென்முற் செப்பிடாயெனிற்
கூரெடுத்திட்டவாட் கொண்டுவெட்டியுன்
வேரெடுத்திடுவன்மெய் வெருட்டினேனன்றால். (கசு)

எனக்கடுகடுத்துமன் னிசைத்தவேல்வையில்
வனக்கடிபூண்டுளான் மதிமயங்கியே
யெனக்கடுத்திட்டதோ விறுதியென்றுதன்
மனத்தளவறுதுயர் மருவினனரோ. (கள)

திருமலர்திருடுபு தினஞ்செல்வார்தமை
யொருதினந்தனிலுமீண் டுறுதற்கண்டிலேன்
வருபன்னட்டிருடனோர் வைகற்காண்பனென்
னருமைசால்கிளவிய தபத்தம்போலுமால். (கஅ)

கான்செய்பூப்பிற்றைநாட் காண்கிலானெனிற்
ஞன்செய்சூளவம்படத் தப்பிடானிறை
யான்செய்வதேதெதன வெண்ணியேங்கியோர்
வேன்செய்பெளராணிக வேதியற்கண்டே. (கசு)

தெண்டனிட்டெழுந்திலன் சிந்தையாகுல
முண்டவனுயெனக் குற்றதாம்பெருங்
கண்டமீதகற்றுபு காத்திடாயென
முண்டகத்தாட்டுணை முறுகப்பற்றினன். (உ0)

வேறு

நால்பிடித்திட்ட மறைவிதிமுழுது நன்குணர்தருமவன்றனது
கால்பிடித்திரங்குங் காவலற்பார்த்துக் கலுழ்வதற்கேதுவேதெனலுஞ்
சேல்பிடித்திட்ட வாவிநந்தனஞ்சால் செய்திகண்முழுவதுமொருசெங்
கோல்பிடித்திட்ட மன்னவன்வகுத்த கூற்றைபுங்கூறவுட்குறிப்பான். (உக)

வயக்கமார்நந்த வனமலர்கவர்வார் மானிடரன்றவர்புகவுந்
தியக்கமெய்துவர்மன் பயங்கொடிவ்வாறு செய்பவரார்கொலோதேரி
னியக்கர்கந்தருவ ரிராக்கதரென்னு மிவர்களிலொருவரேயெனத்த
னியக்கமாருளத்திற் றேர்ந்தனனிசைத்திட்டிய லுபாய முமியம்பிடுவான். (உஉ)

தீயவிச்செயற்கா நீயுளமஞ்சே றேவநின்மாலியந்தன்னை
யாயநந்தனமுற் றிலும்பரப்பினையாண் டல்லிடைமறைந்தமைந்தனையேன்
மேயவோர்கள்வன் கட்டியதென்ன விடியலின்வெளிப்படுமென்னத்
தூயனேதிடக்கா வலன்களிப்புடனே சொற்றவாறியற்றினனன்றே. (உங)

சொற்றவங்கிசியிற் காவலன்றாக்கந் துறந்துகாத்திடுதலும்வைக
லுற்றதாண்டொளிகொ டிப்பியப்படிவத் தொருமகணின்றிடற்கண்டா
னற்றமெய்தினர்கின் மாலியமிதியா ராயகன்றனர்களிவ்வரிவை
மற்றதுசெயலாற் றன்கதிக்கூறு மருவுபுதிகைப்புடன்வதிந்தாள். (உச)

கண்டகாவலவன் மண்டவோர்களிப்பாங் கடலிடைமூழ்கினனுகி
விண்டமைமடவா டனையெதிர்கண்டும் வேட்கைநெஞ்சிடைகொளானு
னெண்டமைழத்திடுதன் னுயிர்க்கொராபத்தீங் கொல்லுமென்றுள்ளவாறுணர்வார்ப்
பெண்டமனியமண் ணுதியாவோதும் பேய்மயக்காது மெய்பேசின். (உரு)

நின்றிடுமகளைக் கண்டகாவலன்ரு னிருபன்சந்நிதிபுகூஉவணங்கி
வென்றிவேலிறைவ நமதுநந்தனத்தின் வெறிமலர்த்திருட்டினைக்கண்டே
னென்றியசெயல்செய் தவளொருபெண்ணு னுவளுருவச்சவுந்தரிய
மென்றியங்கலிலெத் திசையினும்பிரபை யெறிப்பதான்மனிதமாதல்லள். (உசு)

எனவனம்புரப்பான் சொலப்புவிபுரப்பா னெல்லையில்விம்மிதமெய்தி
மனதுவப்புடனெல் லையிலெழுந்தேகி மாதுமற்றவடனைக்கண்டான்
கனவிறும்பூது கொண்டிவண் மனிதக் கன்னியன்றென்றதுசரத
மெனவகத்துன்னி யவளைநேர்கூவி யாவளீயியம்புதியென்றான். (உஎ)

யாண்டுளாய்நீதா னீண்டடைந்திட்ட தேதுமற்றிவணிற்பதேது
வேண்டுவதேது நின்செயன்முழுதும் வெருளுறுதுரைத்தியென்றிடலும்
பூண்டுலங்கிடுமா துரைப்பளியான்சுவர்க்கப் புரங்கொளப்சரமகளாகு
மாண்டுலங்குனதுத் தியானத்திற்சகியா மாதரோடாடுவான்வந்தேன் (உஅ)

ஆவலென்சகிக ளாயினுர்சுவர்க்கத் தடைந்தனரியானறியாமற்
றேவநின்மாலி யந்தனைமிதித்த செய்கையினுற்ககனத்திற்
போவதற்கிசையாக் கனத்தவிக்கினந்தான் பொருந்தினேன்சரிதமீதெனலுங்
காவலனிரங்கி நீசுவர்க்கத்திற் கலந்திடவுபாயமேதென்றான். (உசு)

மணங்குலவுருவச் சுந்தரப்பொலிவும் வயங்குபூணுடையுமார்வானத்
தணங்குதன்கண்மு னுற்றுமால்வெகுளி யமைதராதன்னவளுள்ள
முணங்குறுதுயர்நீத் திடவுபகரிக்கு முருக்குமாங்கதப்பெயரிறைநெஞ்
சிணங்குமிந்திரிய வடக்கமும்பொறையு மென்னெனப்பேசுவதம்மா. (௩௦)

எதுபாயத்தால் வானநாட்டினைநீ யெய்திடலாகுமெற்கதனை
யோதியென்னு லாவதேலதனை யுஞற்றுவனெல்லையிலென்னு
மோதுவேலிறைசொற் கொண்டவப்சரமின் மொழிகுவண்மூதருளிறையே
கோதுதீரேகா தசிவிரதங்கைக் கொண்டவருண்டுகொலீண்டே. (௩௧)

அவ்விரதத்தோர் பலத்தினையெனக்கின் றளித்திடுவாரெனில்யான்ருன்
செவ்வியசுவர்க்கத் தடையலாமற்றெச் செயலினுமெய்தரிதெனலு
மோவ்வியவரசன் றன்னகர்முழுது மொற்றரையேவியேயரிதன்
றிவ்வியவேகாதசிவிரதத்தோர்த்தேர்ந்துமுற்கொணர்திரென்றுரைத்தான் ()

சென்றவொற்றர்கடா மிராச்சியமுழுதுந் தேடுபுதிரும்பினராகி
நன்றமைவிரத முடித்தவர்தம்மை நாங்கடேர்ந்திலமெனநவின்று
பொன்றழைத்திடொர்வை சியன்மனைதாசி புரைவிபசாரியாயதுகொண்
டன்றகற்றிடலாற் றுக்கமிக்கூனு மனந்தலுமகன்றமைந்தயர்ந்தாள். (௩௩)

செய்திமற்றதனு லன்னவளேகா தசிவிரதஞ்சிறந்தனளென்
றெய்தினர்கூறக் கேட்டமாதற்றே லீண்டவட்கொணர்ந்தவள்பலனை
யைதிலெற்களிக்கப் புரியில்யான் சுவர்க்கத் தடைவலென்றகங்களித்தறைய
வுய்திதோய்மன்ன னவள்பலன்வான வொண்டொடிக்குதவிடப்புரிந்தான் (௩௪)
பலத்தினைக்கொண்ட வப்சரமடந்தை பாவிய மூலவாணவமா
மலத்தினைக்கொண்டு வருந்துநரி ராமானந்ததேசிகன ருணைக்க
நலத்தினைக்கொண்டு ஞானமெய்வீட்டி னண்ணிடுந்தன்மைபோல்வானத்
தலத்தினைக்கொண்டாண் மற்றதுகண்ட தாரபதிக்கன்புளந்தழைய. (௩௫)
நானிலத் தினிற்கௌதமன்மனை கல்லா நவைபுறத் தன்னுடன்முழுதும்
யோனியாயிரங்கொள் வானவிந்திரன்கொ லியோசனைகமழுடற்போக
வானிலமடவா ளிடர்தவிர்த்தரிதன் மாண்கொளேகாதசிவிரத
மேனிலைதெரிந்துப் யுருக்குமாங்கதன்கோன் மேதகையார்விளம்பினனே. (௩௬)

வேறு

விபசாரதோசி யிவளென்றுநாய்கன் வெளியேதுரத்துமிகையா
ரபசாரமிக்க மடமாதுதன்னு ளறியாதியற்றவவளுக்
குபசாரமிற்று நாமோதநேரி லுணர்வோடுளுண்மைபுறவே
தபசாரவந்த நஞ்ஞென்பியற்று தகையோர்கொண்மேன்மைதரமோ. (௩௭)
எனமன்னனுன்னி யிங்நோன்பியற்று மியல்பின்றடைந்தனனெனு
மனமன்னுமோகை மிகைகொண்டுதன்னெனர் வளநாட்டிடத்தின்மருவுங்
கனமன்னுமானி டர்களன்றிநான்கு கான்மாவொடும் புளினமு
மினவன்மைமிக்க விரதங்குயிற்றி வினிதெய்துமென்றுளெணியே. (௩௮)
அவ்வாறியற்றும் வணமெவ்வெவர்க்கு மாஞ்ஞாபனஞ்செய்தறமீ
தொவ்வாதுதின்று துயில்வார்கள்சிட்சை யுறுவார்களென்னவுரையா
வவ்வாவினம்புண் முதலானவுஞ்செய் வனவாவியற்றினனிதா
லெல்வாறுமன்ன னவ்வாறுமாக்க ளெனல்வாய்மைபட்டதினிதே. (௩௯)
பெற்றிட்டவன்னை யொப்புற்றபண்பு பெற்றிட்டமன்னர்பெருமான்
சொற்றிட்டநன்மை யக்கட்டளைச்சொ றுற்றிட்டசென்னிவிழிமீ
தொற்றிட்டராகி யொப்பற்றவார்வ வுததிக்குண்மூழ்கிபுரைபோற்
பற்றிட்டவாவி னிற்பட்டினத்தர் பலரும்புரிந்தனர்களே. (௪௦)

வேறு

இன்னவாறுபல் பகலுருக்குமாங்கத விறைவன்
கன்னல்வில்லிதன் முதையேகாதசி விரதந்
தன்னகர்க்கணுள் ளாரெலாமாற்றுபு தழைப்பப்
பொன்னகர்க்கிறை வனுமிகப்புகழவாழ்ந் தனனால். (௪௧)
ஆயகாலையிற் றன்னருமைச்சுதை யானு
ணேயமேவுதன் கணவனு நிருபனு மேவத்
தூயசீருருக் குமாங்கதன்றுன்னக ரடைந்தாண்
மேயகாலையே காதசிவிரதமே வியதால். (௪௨)

கோமளத்தகை சான்றவோருருவினைக் கொண்டோ
னுமவற்குமெய் யுருக்குமாங்கதனரு ளரிவை
நேமமிக்கதன் றுதையினுக்கினை நெறிக்கு
ணுமமுற்றவ ளாய்த்துயருழந்தன ளனியே. (சங)

அன்னையத்தனீங் கிவர்கள்கட்டளையெவா றகல்வேன்
றன்னையொத்தநா யகர்பசித்தரைக்கணஞ் சகியா
ரென்னைசெய்குவ னியானெனுமெண்ணமெய் தினளாய்
மின்னைநேரிடை யவள்செய்வதறிகிலள் விழித்தாள். (சச)

போதுகாலையின் மருகனுமிராசபுத் திரன்றான்
மாதுயர்ப்படப் புரிதலின்வன்பசி மயங்கி
யாதுசெய்குவன் யானிசையேனெனி லிரங்கி
யேதுநம்பசிக் கூணிடாரிவரென வெண்ணும். (சரு)

ஆனவிப்பெரும் பதியிடைநரர்களே யன்றிக்
கானமுற்றுவாழ் விலங்கினங்களு நலங்கவின்ற
வானமார்சிறைப் புட்களுமற்றுமுள் ளனவும்
வேனமைந்தவே காதசிவிரதமே வியவால். (சசா)

சகலவாருயிர் களும்விரதங்கொடு தழைப்ப
விகலும்வேற்றிறை வற்குவெங்கிடாதவற் கினிய
மகனெனப்பிறந் திட்டயான்மாதளித் தவன்பாற்
புகல்வதெவ்வித மெண்ணவுமானமேற் பொதியில். (சஎ)

தீனம்விட்டற வான்பொருள்சேர்வதா யிடினும்
வானம்விட்டிழி நரகிடைநண்ணிட வரினுந்
தானம்விட்டகன் றிடவருமாயினுந் தக்கோர்
மானம்விட்டிட விசைவர்கொலெனப்பல வாறே. (சஅ)

எணம்புரிந்திருந் தவனுடனுடன்முத லெவையுந்
தணந்திடுந்தவப் பெரியர்களாயினர் தமையும்
பிணந்தினப்புரி பசியிலோமால்செய்பெற் றியிலோ
குணந்திரிந்தவ னுகியுள்ளிவ்வணங் குறிப்பான். (சகூ)

கனித்தமானநாங் காத்திவணிருந்திடக் கருதி
லினித்தவாருயிர் நீத்திடநேருமென் றெண்ணித்
தனித்தனித்திரு மாதுலன்மாமிதன் னிடத்திற்
பனித்தமெய்யினன் றுயர்மிகைபகர்ந்திட லானான். (ருo)

மெச்சுமெய்த்தவ விரத்திகொண்மேலவர் தாமு
மச்சுதத்திரு நாரணன்றன்னதோ ரகத்து
ணச்சுமச்செயல் கடந்திடற்கரிதெனி னவிலு
மிச்சுதன்குணந் திரிந்திடலோரிறும் பூதோ. (ருக)

நண்பகற்பொழு துங்கழிவுற்றது நான்ரு
னுண்பதற்றிது வரைசகித்துற்றன னினியு
மெண்பதத்தினைக் குறித்தசொலிசைப்பரீண் டிலையிப்
பண்பசத்தனு மியான்செயற்பாலதன் றன்றே. (ருஉ)

அன்னவாகனற் றந்தருணுபியம் புயன்றன்
கொன்னமைந்தமெய்க் கோலமேமனத்தினுட் குறித்துப்
பொன்னடித்துணை துணையெனப்போற்றியர்ச் சனைசெ
யன்னரல்லரோ விவ்விரதஞ்செயற் கருகர். (ருங)

அன்னமென்றபுட் பெயர்சொலிலன்னவன் விரதம்
பின்னமெய்திடு மென்றுநூல்பேசிடு மென்ரு
லின்னபான்மையிற் றுயருழுந்தலமரு மியானீண்
டென்னவோர்பயன் பெற்றிடுவேனுணர்ந் திசைப்பீர். (ருச)

சுகமுமற்றது விரதமுமற்றதாற் சூழு
மிகமுமற்றவிர் பரமுநாமற்றன மென்றென்
னகமுமற்றதைத் துணிவுடன்பிடித்தில தமையு
மகமுமற்றதீண் டாதலினீரருள் கூர்ந்தே. (ருரு)

இக்கணத்திலென் வன்பசியகலவே தேனும்
பக்கணந்தரு வீர்சிறுபோழ்துபா ணிக்கிற்
றெக்கணம்புகுஞ் சரதமென்னுவிறுஞ் செல்வி
மைக்கணம்புகுத் திரங்கினும்விரதமு மாறும். (ருசு)

நான்புரிந்தில னுயினுமீயிர்க ணவிற்று
நோன்புதானுமென் காரணமாநுடங் கிடுமேல்
வான்புரிந்திடு மாலபாரதனுய் வரம்பி
லூன்புகுந்துனுற் றினுந்தவமொழித்திடற் பாற்ரு. (ருஎ)

ஆவலோடுநம் பதியகத்தடைந்திடு மடியேன்
றேவதேவனே காதசியும்முடன் செய்தே
மேவரும்பய னெய்தவேண்டியதில்லா விடினும்
பாவமேவுறு தேனுமெற்பார்மினென் றிசைத்தான். (ருஅ)

மன்னவன்றிட விரதனுப்மால்பத மதித்தே
பன்னலுற்றவைக் கோர்மறுமாற்றமும் பகரான்
சொன்னதென்மரு கோனெனத்தன் னுளஞ் சூழா
னின்னல்சற்றில னுயருட்பூசைசெய் திருந்தான். (ருகூ)

நிசியிற்பாதியுங் கழிந்ததுநிருபனோர் மருகன்
பசிமிக்காருயிர் நீங்கினன்பண்பிது தேறிச்
சசியொப்பாமுகச் சதியுடன்சாற்றுமிவ் வேகா
தசிமட்டேயிவற் காயுளாமெனச் சாற்றி. (சுo)

பூவகத்தினி லுற்பவம்பொருந்தினோர் தம்மிற்
சாவதற்றவ ரியாவரேதருப்பொலி யுலகத்
தேவருக்குமுண் டஃதெனிற்பிறர்க்கென்கொல் செப்ப
னேவதற்பர்கள் செயலிதற்குன்மன நடக்கல். (சுக)

பிறப்பதின்றொரு வர்க்குளதென் றிடிற் பேசு
மிறப்பதுந்தொடர்ந் தேயுடனிழலென விருக்குந்
துறப்பதன்றிவை யொன்றுமற்றொன் றினைத் தோகா
யுறப்படும்பக லுடனிரவெனுமிரண் டொத்தே. (சுஉ)

திறப்படும்பக வன்பதஞ்சேருதற் கன்றி
மறப்பவப்பய னுகர்ந்திடமாநில மீதிற்
பெறப்படும்பவத் தோர்க்கெலாம்பிறிதராப் பொதுவே
சிறப்பதாமிது மற்றிவற்கென் றுநீ திகையேல். (சுங)

உறங்கிடுந்தொறுங் கலுழ்வதுமுற்றசாக் கிரந்தான்
பிறங்கிடுந்தொறு மகிழ்வதும்பேதையர்க் கிலேபோ
லறங்கிளர்ந்திடு நெஞ்சினராயின ரமையித்
திறங்களுக்குளந் தியங்கலாலுளந் தேர்வாய். (சுச)

அவத்தையாஞ்செய லாமிதென்ருருபி ரகன்ற
சவத்தைநீற்றுமி னென்றனன் றணந்திடற் கரிதா
மெவத்தையுந்தரும் பகவனேகாதசி யெனவத்
தவத்தையேபொருட் படுத்திடுந்தன்மைசா றலேவன். (சுரு)

மிரதத்தாதப மணிமுடிமீதினில் விளக்கும்
பாதத்தாட்டுணைக் கேமனம்பதித்திடு பத்திச்
சரதத்தாட்சிமன் றன்மருகோனிரந் ததுதான்
விரதத்தாலென்றுள் ளத்துமெண்ணனன்பென் வியப்பே. (சுசு)

இரதத்தார்வமீந் திடுமரிபத்தியில் லாராய்ப்
பரதத்தாலிடம்பத்தினுற்பண்ணுந ராயிற்
சுரதத்தாஞ்சேய் விதியினுற்றம்முயிர் துரக்கில்
விரதத்தானதி தென்றுநீத்தேவர்க்கும் விள்வார். (சுஎ)

நவமுறும்பய னல்லதுநன்கியற் றிடலாந்
தவமுமுற்றவ முடையவர்க்காந்தமிழ் மறைதா
னவமதையஃதி லார்கண்மேற்கொள்வதென் றறைசொற்
குவமையற்றசி ருருக்குமாங்கதன்கரி யுணரின். (சுஅ)

அற்புமிக்கருக் குமாங்கதமன்னவ னளித்த
கற்புமிக்கபூங் கொம்பனுள்விழிகொணீர் கனக
வெற்புமிக்கதன் றெனுந்தனத்தருவியில் வீழ்த்திப்
பொற்புமிக்ககொன் கனேடெரிபுகுந்திடத் துணிந்தாள். (சுகூ)

காண்டிடுந்துவா தசிதனிற்கணவனே டொன்று
மாண்டிடும்படி துணிவுகொடன்னரு மகடான்
வேண்டிடும்பொரு ளியாவையும்விரைவினி லளித்தான்
கூண்டிடுஞ்சனம் பின்னுறவீமமேற் குறுகி. (எ0)

அதைரியத்தகை சிறிதுமற்றுருபி ரகத்திற்
புதைதலுற்றவோர் நாயகன்றன்னது புரத்தைச்
சிதையிலேற்றுபு தன்கரத்தாலழல் சேர்த்துத்
துதையுமாறுளத் துன்னினளத்தகு துணையில். (எக)

கரியனுகியு மாருயிர்த்திரடொறுங் கலந்த
கரியனுகியு நின்றிவ்வெல்லாம்புரி கரிய
னரியவைணவ சின்னமுற்றமைந்தவர் தனனுத்
தெரியநின்றிவன் றனைத்தகிப்பிக்கலே தெரிவை. (எஉ)

மரித்துளானல னின்னவன்வன்பசி மலிவுற்
றெரிக்கமூர்ச்சித னுயினனென்பதை யார்க்குந்
தெரிப்பன்யான்கணத் தென்கரத்தன்னமோர் சிறிதீண்
டுரித்தினல்குதி யென்றனன்மாயைமிக் குடையான். (எங)

சொற்றவாசகங் கேட்டலும்விரைவிலோர் தூதன்
சற்றவற்கொடு வந்துதந்தனனவண் சார்ந்த
நற்றவக்கப டப்பிராமணன்கையி னயந்து
பெற்றறற்கொடு கலந்தவன்வாயிடைப் பெய்தான். (எச)

உறக்கநீங்கினே னெனவவன்மூடிபுற் றிடுங்கண்
டிறக்கமற்றதைக் கூண்டுளாரியாவருந் தெரிந்தே
சிறக்கும்விம்மித ராயின்பவாரியுட் டினைத்தார்
விறக்குங்கற்புடை மங்கைகொளோகையார் விள்வார். (எரு)

அன்னகாலேயி னுணர்ச்சிதன்னகத்தமைந் திட்ட
மன்னவன்குமா ரன்புகல்வானிவண் மருவ
லென்னகாரண மோதுதியென்றிட விசைத்தா
ளின்னவோர்செயல் சரதம்யான்பசியினு லிறந்தேன். (எசா)

பெரியரீங்கிவ ரருள்புரிநீர்மையாற் பிழைத்தே
னுரியவின்னவர்க் கியான்செய்கைமாறுள தோவென்
பரிவினேடவற் பணிந்துநின்றிடு திறம் பார்த்தா
ரரியவோர்சிவி கையிலமைத்தரண்மனே யணைந்தார். (எஎ)

அளவிறந்தவுற் சாகராயவர்செலு மமையங்
கொளவிறந்தவ ரோடுதானெருவனுக் குலவுங்
களவிறந்திடக் கொண்டவன்றன்னுருக் கரந்தா
னுளவிறந்தவ ரியாருமங்குணர்ந்திடா தொல்லே. (எஅ)

அரண்மனைக்கடை யார்வமிக்கவர்களா யாவி
புரண்மகட்கொரு கொண்கனைக்கொண்டவண் போந்த
திரண்மனித்தரைக் கண்கொடுபார்த்தனன் றிருமால்
சரண்மனத்தக லாதுகொளிறைவனுந் தலைவன். (எசு)

காண்டபோதுறுஞ் செயல்களென்னெனவவர்க் கடாவ
வாண்டமைந்திடு செயலெலாமொன்றறு தறைந்தார்
மாண்டவென்மரு கனுக்குயிர்வழங்கிய வரதன்
யாண்டையானவற் காணயான்காட்டுதி ரென்றான். (அ0)

மாதுகொண்டநா யகனுயிர்த்தே தன்முன் மருவு
மேதுகொண்டகத் துவகைசற்றேனுமெய் தில்லான்
போதுகொண்டவற் றந்திடுநாபியன் பொற்றாண்
மீதுகொண்டபே ரன்புதன்னுருவமாம் வேந்தன். (அக)

நிருபனேதுசொற் கேட்டலுமருகுற நின்றோர்
பொருவிலோகையோ டாங்கமைந்தார்களுட் புகுந்து
துருவினாங்கு கண்டிலராகியே துதையு
மருகுசார்ங்கர் தொறும்புகுந்தளவில ராய்ந்தார். (அஉ)

கிராமம்யாவினு மவற்றுளவாயபல் கிரகத்
தாமந்தன்னிலெண் ணுசையிலதர்கண்மற் றவைபுட்
ரோயறிந்தில ராயகத்தோடடல் சோர்ந்தே
யிராசன்முன்படைந் தவனையாங்காண்கில மென்றார். (அந)

ஞானக்கண்கொடு பார்த்திடுவார்க்கவர் நயந்த
தானக்கண்கொடுத் திடுதரிசனைப்பரந் தாம
னூனக்கண்கொடு தேடுநர்க்குலகிதை யொழிந்து
வானக்கண்கொடு தேடினும்வயங்கிடு வானே. (அச)

ஆகமீதிலார் நிலையினையறிதரத் துவக்கில்
வேகமாமன மடங்கிடவேண்டுமிங் கென்றான்
மாகசிவசாட் சிப்பொருடன்னைத்தம் வன்கா
னேகவேபுறத் தோடுநர்காண்பரோ நுவல்வீர். (அரு)

அத்தலந்தனின் மேவுதேவருண்மிக வமைந்து
கைத்தலங்கொளா மலகத்திற்கடிதரு ளுவதென்
றெய்த்தலந்திடுங் கன்மத்தினிறுதியெய் தினரே
மெய்த்தலங்கொண்மெய் தெரிவர்கள்வியன்குரு வருளால். (அசு)

களவியாங்கது கேட்டலுங்கேடில்சக் கிரியுள்
ளளவிலாத்துய ருற்றிவணடைந்துளா ரார்க்கும்
பளகிலாவருட் சேவையீந்தடியனேன் பார்வை
கொளநல்காததென் பாவமோவென்றுளங் குமைந்தே. (அஎ)

அரிசனம்விடே னுயிர்விடுவேனென்பா ளயர்சார்
விரிசனத்தொகை யார்க்கெலாம்விழியெதிர் விளங்கிப்
பரிசனம்பெற வும்புரிந்திட்டோன் பார்க்கத்
தரிசனந்தராய் மாதவவீதறந் தானே. (அஅ)

அண்டமேவினோர் தங்கனவினுமறி வரிய
கொண்டல்வண்ணனற் கரத்திடையவலினைக் கொடுத்தான்
வண்டரும்புன லிடைக்கலந்தளிக்கவாய் மடுத்தான்
கொண்டமுற்பவத் தின்றவங்கூறிடற் பாற்றே. (அகூ)

என்றுபற்பல விதம்படமன்னவ னியம்பிக்
குன்றுருதமெய் யன்பினாற்பூசனை குயிற்றித்
துன்றும்வேதியர் தமையெலாம்போனகந் துய்ப்பித்
தொன்றுமோகையோ டிரணியதானமு முதவி. (கூ0)

மன்னுயிர்த்திர ளியாவையுமாகமுண் மருவுந்
தன்னுயிர்க்குமே லாக்கொள்வோனவருடன் சார
வின்னுயிர்க்குயி ரானநாராயண னிலகு
மின்னுயிர்த்திடு சீர்கொள்வைகுந்தமே வினனே. (கூக)

ஞாலநீள்புக ழுருக்குமாங்கதவிறை நயந்த
சீலநீடிரு நாட்டில்வாழ்ந்திடுமுயிர் யாவுங்
கோலநீளவை குந்தமுட்குறுகிடக்குயிற்று
மூலமாயநந் தனப்புகழெவர்சொலின் முடிபும். (கூஉ)

வேறு

வானோர்சுரமின் றன்கணெதிர் வாய்ந்துஞ்சிறிதுள் வியவாதே
வரம்பில்புகழே காதசியின் மாட்சிபுணர்ந்து கருணையினாற்
கானோர்விலங்கா தியும்புரிந்து கதிபெற்றுய்வான் கருத்தமைந்து
காதன்மருக னிறந்துயிர்த்த கணக்கோர்ந்துள்ளங் கலங்காது
வேனோர்பதஞ்சால் பத்தியெனும் வேலையிடத்தின் மூழ்கியவோர்
வேந்தனுளங்தோய் நிலையடியேன் மேவப்புரிந்தோர் மெல்லியலா
வீனுதுனது பதஞ்சேர்ப்ப தெந்நாளந்நா ளிசைத்தருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கூ௩)

உருக்குமாங்கதகதி முற்றிற்று.

ஆகூ கவி கஉஅ௫.

---

பதிஜனந்தாவது

# மயூரத்துவசகதி

இருக்குமாங்கதன் முடிவுமோராதவோ ரிறைவ
னிருக்குமாங்கவண் டன்னகருயிர்முழுதி சைக்கு
முருக்குமாங்கதன் சரித்திரமுடித்தினிீயுடலீர்
திருக்குலாமயூ ரத்துவசன்கதை தெரிப்பாம். (க)

வேறு

பாயசீர் படைத்துவாழ்ந்த பாண்டவர் தம்மிற்சீர்த்த
நாயக மாகவன்னோர் நடுவிலுற் பவித்துவன்மை
மேயபூ தங்கடம்மின் விறல்கொளக் கினிக்கொப்பென்ன
லாயசீர் படைத்துளான்மெ யர்ச்சுனப்பெயரோனம்மா. (உ)

விசயனுண் டொழின்மைந்தன்சவ் வியசாசி விறலின்மிக்க
வசகாய சூரனென்று மதிரத வீரனென்றும்
புசபல பராக்ரமத்திற் பொருவிலா னென்றுமியாரு
நிசமுற வழுத்தன்னோன்சீர் நிலமிசைத் தேரார்யாரே. (ந)

அத்தகை யருச்சுனன்ரு னவனியோர் வியக்குந்தன்னோர்
மெய்த்தகைச் செயல்களெல்லாம் வியந்துபா ராட்டிநெஞ்சின்
மைத்தகைக் கருவச்சிந்தை மலிதரப் பெற்ருனுன
னெத்தகை யினர்க்குமுண்மை யெளிதினி லமையாதன்றே. (ச)

அருட்டின கரனயென்ற னகம்புற மகலாதோங்குங்
கிருட்டிணற் கன்புசான்ருேர் கிளர்ந்தனர் பல்லோரென்போற்
றெருட்டிறம் படைத்தோரிந்தச் செகத்திலின் றுண்டேலன்னோர்
பொருட்டிலெங் நாமங் கொண்டான் புணர்ப்பிது விளக்குமன்றே. (ரு)

கூர்மிசைக் கொண்டவாய்தக் குலம்பல தாங்கியென்முற்
போர்மிசை வந்தோர்தேகம் புவியில்வீழ்த் துயிரைவிண்ணே
ரூர்மிசை யிருத்தும்வெற்றி யுடையயா னூர்தலுற்ற
தேர்மிசை யிருந்துபார்த்த சாரதித் திருப்பேர்கொண்டான். (சு)

மேதைசான் மிக்கோர்நெஞ்சில் விரும்பிடு முத்திவீட்டின்
பாதைபா யிலங்குமுண்மைப் பரமாா சியங்கள் சான்ற
கீதைமுன் னிலைச்சுட்டாகக் கிருட்டினன் கிளத்தக்கேட்டோ
ரூதையா ருலகந்தன்னி லெனையலா தொருவருண்டோ. (எ)

வாசவன் மதலையாகி வயங்கிய வெனையல்லாம
னேசமுற் றுயிர்களின்ப நேர்ந்திடக் காக்குமொப்பில்
கேசவன் ருேழனென்னக் கிளத்துமெய்க் கீர்த்திபூண்டோர்
வீசலை யுடைப்பார்மீதில் விண்ணினில் விளம்பவுண்டோ. (அ)

மன்னுபுண் ணியங்கண்மிக்க மலிவுபெற் றிலகநின்ற
முன்னுகங் களிலென்போல்வார் முளைத்தில ரொருவரென்னி
லுன்னுநற் செயல்களெல்லா மொடுங்கியக் கிரமமிஞ்சும்
பின்னுக மிதனிலோகோ பிறப்பர்க ளென்னலாமோ. (௯)

நிகழ்தரு காலந்தன்னி னீங்கிய காலத்தின்மேற்
றிகழ்தரு காலந்தன்னிற் றிரிவித வுலகத்தூடும்
புகழ்தரு கிருட்டிணன்செம் பொற்பதத் திடையொப்பில்லா
நெகிழ்மனத் தன்பானம்மை நேர்பவர் யாருமின்றே. (௧௦)

இனையன பலவுளுன்னி யெனையனு ரின்றென்றெண்ணித்
தனைநனி வியந்து பார்த்தன் றருக்குறுஞ் செயல்களெல்லா
நினைவிற்கு வித்தாயுற்ற நின்மல னெஞ்சினுடி
வினையிது தவிர்த்தாட்கொள்ள வேண்டுமென் றுன்னினுனல். (௧௧)

உடலினை யீன்றோர்தஞ்சேய்க் குற்றதிங் கோர்நோயென்னிற்
றிடமருத் துவற்கூய்வல்லே சிகிச்சைசெய் வார்களென்றுற்
றொடர்தன்மெய் நேயமாரர்ச் சுனனுயிர்க் கோர்நோய்தோயிற்
கடனிகர் கருணைவள்ளல் கண்டரைக் கணந்தாழ்ப்பானோ. (௧௨)

உடனவற் குணர்ச்சிநெஞ்சத் துறுத்துவா னுள்ளங்கொண்டு
திடவருச் சுனற்பார்த்தொன்று செப்பிடு கின்றுன்பூவி
னிடமம ரெனதுபத்த ரிருஞ்சிகா மணியாயென்ற
னுடனில வுயிரின்மேலா வோங்கிடு நண்பகேளாய். (௧௩)

இன்றுநா னோர்திசைக்க ணெய்துவா னுள்ளங்கொண்டே
னன்றுநீ யெனதுபின்னு நடந்தனை வருதியென்னக்
குன்றுரு வலிமைசால்பற் குனனுடன் றொடர்ந்தானப்பாற்
பொன்றுதை துவாரகைப்பேர்ப் புரப்புறத்தானுர்மாதோ. (௧௪)

மார்க்கமத் தியினிற்போந்து மாதவ னருச்சுனன்றன்
சீர்க்கவின் முகம்பார்த்தொன்று செப்பிடு வானியானின்றென்
னுர்க்கட லாமயூரத் துவசனென் னண்பன்றன்னைப்
பார்க்கவுள் ளாசைகொண்டு படர்தரு கின்றேன்மன்னோ. (௧௫)

தக்கவென் காரியத்தின் சாத்தியத் தினுக்காநீதான்
மிக்கவோ ருதவிசெய்ய வேண்டுமென் றுரைத்துன்னுள்ளிற்
புக்கவஃ தென்னென்றச்சம் பொருந்தலை பன்னீராண்டு
மெய்க்கவி னுர்சேயாதி விருத்தனு கிடுவன்யானே. (௧௬)

என்னது பின்னேநீமன் னிருஞ்சபைக் கெய்துகென்னப்
பன்னலுற் றதுபோல்வேடம்படிந்தனர் படர்தலானுர்
கொன்னதி னடுவழிக்கட் கொடுவரி யொன்றுதோன்றிப்
பன்னருஞ் சீற்றம்பொங்கிப் பாய்ந்ததாற் பகுவாய்காட்டி. (௧௭)

பாலனுங் கிரீடிதன்னைப் பற்றிடத் துவக்கக்கள்ளக்
கோலமா தவன்றடுத்திக் குமரனைவிடுத்திட் டென்னை
யேலவே யுண்டியின்றே னெனக்கதி பிரியனென்னச்
சாலவோ தியபோதந்தத் தாக்குரை செய்புமாதோ. (கஅ)

விருத்தனு முன்னையுள்யான் விரும்பிலே னுன்றனுள்ளக்
கருத்திதே லொருபாயங் கழறிடக் கேட்டிநின்பா
லருத்திமிக் குளமயூரத் துவசனு மாசன்றேக
மருத்திசெய் தேயெனக்கின் டருத்துமா புரிவாயஃதும். (கசு)

அவனது மைந்தனில்லா ளாமவ ரகத்துட்சற்றுங்
கவலையெய் தலாயுள்ளக் களிப்பொடன் னவன்றாலத்தைக்
கவரிரு கூறதாக்கிக் கவின்வலப் பாகநல்கிற்
றவவதைப் புசித்துன்சேயைத் தணப்பன்யா னெனச்சாற்றிற்றே. (உ0)

அவ்வணஞ் செயவுனக்கின் டசாத்தியப் படுமேலுன்றன்
செவ்வணப் பாலன்றன்னைத் தின்னவெற் களிப்பேனென்ன
வெவ்வமில் சாதமாற்ற மியம்பிநீ யிறைவன்மேய
துவ்வண நகர்க்கட்போதி சுகமுட னென்றதன்றே. (உக)

தூயசீர் பெறுமயூரத் துவசனு மாசனின்பா
னேயமிக் குள்ளானென்னு நிலையறிந் துரைத்தவந்த
மாயசார்த் தூலந்தானு மாயன்கொல் வனப்புலிக்குத்
தூயமெய் யுணர்வீந்தான்கொ றாய்த்தவ ருணர்தற்பாற்றே. (உஉ)

கிளத்துமவ் வாறேகள்ளக் கிழவனே தினனுயோகை
யுளத்துடன் சிகித்துசன்று றுறுமரண் மனைப்பாற்சேர்ந்தான்
விளத்துணைப் போதுச்சிக்கண் விரோசனன் சேர்ந்தான்பத்தி
வளத்துள வரசன்றன்னுன் மார்த்தபூ சனைவயக்கி. (உங)

அதிதியர்க் கன்னமீத லாதிநித் தியகன்மங்கள்
விதிமுறை யாற்றித்துய்ப்பான் வியன்கொள்போ சனசாலைக்குட்
பதிதா லானனக்காற் படர்ந்தவர் வாயின்மேவி
வதிபவற் பார்த்தியாமீண்டு வருஞ்செய லிறைக்கோதென்றார். (உச)

வேறு

வழுத்துசொற்கேட்ட வாயில்காவலவன் வல்விரைந்தோடுபுபத்தி
பழுத்தியலிறைவற் கோதிடலோடும் பரவசம்பெறுமுளத்தினனுச்
செழுத்தகைக்கரங்கள் சிரமிசையேறச் சிந்தைபாரழன்மெழுகாக
விழுத்தகைப்பெரியோ ரெனைப்பொருட்படுத்தி மேவலென்மெய்த்தவமென்றே
விரைவுடனெழுந்து மேயவர்க்கண்டு விரைமலர்த்திருவடித்துணைமுன்
றரைமிசைவிழுந்து வணங்கியன்பில்லேன் றன்னிடம்வன்மையாய்நீவிர்
கரையிலாக்கருணை கொண்டெழுந்தருளுங் காரணமுணர்த்துவீரென்ன
வரையிசைபமுதந் தேக்குவாய்விண்டு வழுத்துவன்வார்த்திகன்மாதோ. (உரு)

அருணிறைமுகினேர் கிருட்டிணப்பிரீதி யாமொருபொருளினைவிரும்பி
நிருபநின்மனைப்பால் வந்தனன்யான்று னிகழ்த்துவதெதுபொருளேனுந்
தருகுவன்றடையி லாதெனவாக்குத் தானஞ்செய்திடுவையேற்புகல்வே
னிருதயக்கிடக்கை யோதெனப்பத்தி யிருங்கடலனையமனிசைப்பான். (உஎ)

யாவரெப்பொருளை விரும்பினுந்தடைசற் றின்றியேநல்குவனதினுந்
தேவதேவாங்கிட் டிணற்குளப்பிரீதி செய்வதேயாகிலென்னுடலைத்
தாவருமனையை மைந்தனைப்புயிரைத் தந்திடத்தடைபடேன்சாத
மாவலோதுதிரென் றிடவயோதிகன்று னறைந்திடத்துவக்கினனன்றே.(உஅ)

காவலநின்னைக் காண்பதுகருதிக் கான்வழியான்வருங்காலை
மேவதர்நாப்ப ணோர்சினப்பகுவாய் வியாக்கிரங்கண்டுளம்வெருண்டே
னுவமற்றதுதா னென்னருகடைந்தென் னரும்பெறற்பாலனை நுகர்வான்
றுவவிக்குழவி தனைவிடுத்தென்னைத் தகநுகரென்றிடச்சாற்றும். (உகூ)

விருத்தனுமுனைவேண் டிலன்மகன்றன்னை விடுக்கிலன்விடுத்திடவேண்டிற்
றிருத்தனுமயூரத் துவசனதுடலைச் சேயனுநாயகிதானும்
வருத்தமுட்சிறிதற் றரிந்ததிலுற்ற வலதுபாகத்தையீந்தென்னை
யருத்திசெய்திடுதி யின்றெனின்மகவை யளிக்குதியென்றதவ்வாறே. (௩௰)

சாதவாசகஞ்சொற் றடைந்தனனீதென் சரித்திரமாகுமென்மாற்ற
மிரதமற்றொழிய விடுகிலனிறைநீ யிட்டமொத்தியற்றுதியென்ன
வரதனுமிறைவன் வாக்கியங்கேட்ட மன்னவன்வரம்பிலோகையனுப்ப்
பரவசமடைந்து வலிதுறமெனது பாக்கியமென்னெனப்பகர்வேன். (௩க)

சராமரணத்தின் றுவக்குறுமவஞ்சா றசைப்போதியாகுமென்றனுவைக்
கிராவமாங்குடைகொண் டாவினம்புரந்த கிருட்டிணப்பிரீதியாக்கிடவோர்
பிராமணன்யாசித் திடுநலம்பெற்றேன் பேறிதன்மேலுளதோவென்
றுராவருங்களிகொண் டிறைமனைசேயை யுறவழைத்தலுமுடன்வந்தார். (௩உ)

வேளினைப்புரையு மகற்குமாவென்ன விளங்கிடுமனைக்குமோர்தன்னுட்
கோளினையொன்றுங் கூறுகில்லானுய்க் கொம்மெனத்தன்கரத்தியலீர்
வாளினையன்னோர் கரத்திலீந்தன்பால் வழுத்துவன்வரையிணையான
தோளினையுடையீ ரீதினுலெனது தூலமீர்பிளவுறச்செய்தே. (௩௩)

கிளர்வலப்பாகந் தனையருட்கடலாங் கிருட்டிணப்பிரீதிபெற்றிடவே
தளர்வில்சந்தோட சித்தமோடீண்டு சார்மறையோர்க்கிடுதிரெனப்
புளகமிக்கவரா யவனுயிர்த்துணையாம் புதல்வனுமனைபுமோதிடுவா
ரிளகுநெஞ்சுடைய தலைவர்நீரெம்மை யீந்திசைபெறுவதேயியல்பால். (௩ச)

தலைவனுத்தரவைத் தணந்திடாதில்லா டனையன்மற்றவற்றடிந்தாலு
மலையுடைப்பாரிற் பழியபகீர்த்தி யல்லதுநன்மையுண்டாமோ
மலைநிகர்தோளீர் கிட்டிணப்பிரீதிக் கெம்வலப்பால்வழங்கினிரே
னிலையுறுபுகழும் புண்ணியப்பயனு நேருமின்னமுஞ்சொலக்கேட்பீர். (௩ரு)

மைந்தனற்றுதை யனையவனென்று மனைவியுமனையளேயென்றுஞ்
சந்தமாமறைகள் சாற்றிடமற்றத் தன்மையாலெம்மிருவரையும்
வந்தவேதியர்நெஞ் சுவந்திடவிர்ந்து வலதுபாற்றந்திடன்மரபா
மிந்தவோர்முறை லௌகிகவைதிக மிரண்டினுக்கும்மிசைந்ததுவே. (கசு)

அன்னைநேருமையிர்க் றந்தனன்பெறுமா றளித்திடுவேமெனில்யான்றன்
பின்னைமங்கலந்திர் கைமையாகுவன்சேய் பிதாவிலோர்தன்மையைப்பெறுவ
னென்னைமைந்தனையிர்க் கிடுதிராயினிநீ ரெய்திடலாமிருவரையும்
பின்னையிவ்வகையா லெம்வலப்பாகம் பெறவிவர்க்களிப்பதேமுறையால். (க.எ)

என்னவில்லாளு மைந்தனுமிறைபா லிசைத்த சொலியாவையுங்கேட்டு
முன்னமைகபட வந்தணக்கிழவன் முதிர்பிணக்குடன்சினமேவி
யன்னபான்மையினை மறுத்துநம்முடன்மீ தாசைசற்றெனக்கிலையரசன்
றன்னதுவலப்பாற் றருதிரின்றேற்றந் திடுதிர்சீர்விடையெனச்சாற்ற. (க.அ)

இனிவறிதாஞ்சொற் பகர்ந்திருந்தனமே லிறைமொழியபம்படுமென்னக்
கனிவுறுசிந்தை யுவப்பொடன்னவரக் கபடவந்தணக்கிழவனுக்கு
னனிமகிழ்வளிக்குந் தொழில்பரவசரா நடந்தினராகவத்தருணம்
புனிதபத்திமைசா லிறையிடக்கண்ணிற் புனல்பொழிந்திட்டதுபுயல்போல். ()

கண்டனன்விருத்த னன்னபான்மையினைக் கடிதுளப்பிணக்கமுற்றவனு
யொண்டகைமன்னற் பார்த்துரைத்திடுவா னுனதுடனுன்கொளற்கிசையேன்
மண்டருந்துயர்கொண் டழுங்குநின்குறிப்பை வாய்ந்தநின்வாமபாகக்கண்
கொண்டதோர்வெள்ளம் வெளிப்படுத்ததெனக் கூறிடக்கொற்றவனோதும். ()

மறையவர்தெரிவீர் கானழுங்கிலனென் வாமபாகச்சரீரந்தா
னிறைபெருந்துயர்கொண் டழுங்கியதேது நிகழ்த்துமிவ்விதம்விசாரித்தே
தறைமிசையொன்று யுதித்தனம்வளர்ந்த தன்மையுமத்தகைமையதே
யுறைசமபாகங் கிட்டிணைப்பிரிதி யுறுபெருநலமடைந்ததுவே. (சக)

அன்னதன்றேநற் பாக்கியத்ததுநா னதனுடன்றேற்றியும்வறிதே
யென்னவோர்பயனு மெய்திலேனந்தோ வேன்பிறந்தேன்புவிச்சுமையா
யென்னவுட்கொண்ட துக்கமேயல்லா லேதுமற்றென்றிலையெனவே
மன்னவனரியுங் காற்சிரித்தின்ன வாசகம்வழுத்தினனச்சோ. (சஉ)

ஒல்லரும்பேராச் சரியமாஞ்செயலீ துற்றிடுகாலையிலுதகச்
செல்லதிர்ச்சியிலா காயவாக்கியாருஞ் செயற்கருஞ்செய்கையென்றுவந்து
நல்லதுநல்ல தென்றுரைத்ததனை நரரெலாங்கேட்டுளங்களித்தார்
மல்லலாகாய வாணியுமிற்றை வரையிதொத்தறிகிலள்போலும். (சங)

வியனிதுகண்ட சுரரெலாம்பிறரால் விளம்பவுங்கேட்கிலாவிந்தை
நயனநேருறக்கண் டனமிதன்றேவிங் நாட்டினுனம்பெறும்பயனென்
றியலுமற்புதத்த ராகியைந்தருவி னிணர்களேமாரியிற்பொழிந்து
செயசெயவெனவைங் கருவியாகாயஞ் செவிடுறவதிர்த்தனரன்றே. (சச)

உரித்துயிர்க்குறுஞ்சேய் மனையுளத்தோகை யோடரிபோதன்பர்ச்சுனற்குத்
தெரித்திடவரிசொன் மொழியினைக்கேட்டுட் டிடுக்குடன்யானழுங்கிலன்யான்
பரித்திடும்வாம பாகமொர்தன்னிற் பாக்கியங்குறித்தழுவதெனச்
சிரித்திசைத்திட்ட மன்னவன்றனையாஞ் செப்புவதாரெனவம்மா. (சரு)

நம்முடன்வருமோர் பாகங்கிட்டிணற்கு நற்பிரீதிப்படவதற்குச்
செம்முடன் றுணையா வந்தகாமவமாஞ் செயலடைந்திட்டனமென்ன
விம்முமாகுலங்கொண் டுபெரிப்பிரீதி மேன்மைமுற்றவுமுணர்ந்துள்ளிற்
பெம்முறுபாலோ வறிதுறுபாலோ பெரியதேதரிதனக்கம்மா. (சசு)

பற்பலவாறு யெம்முறுவலப்பாற் பகவன்மெய்ப் பிரீதிக்கிந்துலவா
நற்பலனடைதி ரென்றிறைக்குரைத்தோர் நான்கொளேனெனவரியிறைவன்
சொற்பலனற்ற தாகுமென்றுள்ளந் தோய்தருமோகையோடரியிவ்
வுற்பலவிழிசே யிறையிவர்தம்மி லுயர்ந்தவரியாவரென்பதுவே. (சஎ)

பொய்க்கனிவுடையா ரென்றிடிற்றமது புரத்தினையியமுன்னிசையார்
மெய்க்கனிவுடையா ரென்றிடிலிந்த விதஞ்செயற்கிசைகலர்மேவு
முக்கனியினத்து ளுபர்ச்சியோதிடுவான் முன்வருகின்றவருண்டே
லிக்கனிவுடையோ ரகநிலைபெளிதி விற்றெனக்கிளத்திடலாமே. (சஅ)

மாதிடபத்தி யினினிகரின்றி வயங்கிடுமென்னவர்சில
மோதிடி லிராமானந்ததேசிகன் றனுள்ளிய திருவடித்துணைச்செம்
போதிடத்தன்பு கொண்டவரின்பிற் பொங்கிடுந்தரத்தவைபுகலற்
கீதிடமன்று னுடன்கிருட்டிணனுங் கியற்றருளாட்டிசைத்திடுவேன். (சகூ)

உடனருட்கடலாங் கிருட்டிணபகவ னொளிகொள்பீதாம்பரமிலங்கு
மிடன்மலிநீல மேகசாமளமார் மேனியோடீரிருபுயனு
யடன்மலிசங்கு சக்கரத்தொடுதண் டம்புயந்தரித்திடுகரத்தாற்
றிடமலிபத்தி வடிவுளவிருவர் திருக்கரங்களைப்பிடித்தகற்றி. (ருO)

கடனிகர்பத்தி பெறுமிறையவன்றன் கவின்சிரத்தினைத்தனற்கரத்தாற்
றொடலுமக்கணத்திற் பழமையிற்சிறந்து துலங்கியதுடன்முழுவதுமே
நடவதுகாலை பகவனன்னவன்ற னன்முகம்பார்த்திவைநவில்வான்
றிடமலிமயூரத் துவசநின்செய்கை தேர்ந்தளவறமகிழ்ந்திட்டேன். (ருக)

உன்றனக்களியா வொருவரமில்லை யுன்னுளத்திச்சைகளெல்லா
நன்றறைந்திடுதி யளிப்பனென்றரிதா னவின்றிடவிறைபுகல்கின்றுன்
றன்றனைநிகர்த்த தனியனுங்கிருதார்த் தனுகியுந்தயங்குசான்றுண்மை
துன்றடியேன்பெற் றிடத்தகும்பேறித் தொல்லுலகிடத்தின்மற்றெதுவே. ()

பொய்த்தினைவளித்துக் கனவெனநீங்கும் புன்புலப்போகமாம்பொருளி
லெத்தினைப்பெரிதா விரும்பிநின்சமுகத் திசைக்குவன்யாவையுமுதிக்கும்
வித்தினையமர ராதியர்தாமு மேவரிதாகியவிமலச்
சத்தினையென்கண் முன்னுறப்பெற்ற தவத்தினையுடையவன்யானே. (ருங)

இப்பெரும்பேற்றை யடைதரப்பெற்றே னிதனினுமதிகமென்றிசைக்கு
மெய்ப்பெரும்பேறுளன் றுளதுகொலுண்டேல் வேண்டுவன்யானெனவிளம்பிக்
கைப்பெரும்பேறு மரியுடன்வரமீ கனிந்தளித்திடவிழைந்தனையேன்
மைப்பெருவாரி யுலகில்யாரையுமிவ் வன்கொடுஞ்சோதனைபுரியேல். (ருச)

என்னமன்னவனன் கிசைத்திடவவ்வா மீந்தருட்கிட்டிணபகவன்
பின்னரும்வரங்கள் பற்பலவளித்துப் பெருமயூரத்துசகீதான்
பன்னருங்கால மிவ்வுலகெல்லாம் பாலனம்புரிந்தனைசுகமுற்
றுன்னருமகனில் லாளொடெம்பதத்தி லுற்றிடுவாயிஃதன்றி. (ருரு)

எத்தனைகால மென்றிருநாம மிவ்வுலகத்திலங்கிடுமோ
வத்தனைகாலம் வரையுநின்சீரு மழிவிலாதிருந்திடுமென்ற
நித்தனைமன்னன் பரவசமடைந்து நிலமுறப்பணிதலுமெடுத்துப்
பத்தனையாசீர் வதித்தருச்சுனன்பின் படர்ந்திடத்துவாரகைசேர்ந்தான். ()

நற்குணமயூரத் துவசனதுளத்தி னயந்தமெய்ப்பத்தியின்பெருக்கு
மிற்குணமனைவி மைந்தனென்றியல்வோ ரியற்றருஞ்செயல்களாயினவும்
பற்குணனுள்ளத் தலைவிரிந்தெழுந்து பாவியபேரகங்கார
வற்குணக்கடலை முற்றறப்பருகு மவிரொளிவடவைபோன்றனவே. (ருஎ)

உவமைதீர்பகவன் பத்தியினம்மை யொப்பவரின்றெனச்சிலத்
துவமலிதருமர்ச் சுனனகத்துடே தோன்றகங்காரக்கொடு நினைவு
நவமலிமயூரத் துவசனற்கீர்த்தி ஞாலமேல்விளக்கியதென்னிற்
றவமலிபெரியோர் கொண்டதீக்குணமுந் தாணியோர்க்கின்பமாம்போலும். ()

அருட்டினகாரு யோர்கணமகலா தகமிசையமர்ந்தருள்புரியுங்
கிருட்டிணன்பிரீதி பெற்றிடவுடலுங் கிளர்ந்தளித்தவன்புகழ்கேட்டு
மிருட்டினவளிக்கு மனைவியாதியர்கட் கின்புறவுழைத்திறத்தொழியுங்
குருட்டினமனிதர் தம்மின்மாப்புள்ளின் குலமிகநலமமைந்தனவே. (ருகூ)

வேறு

உயிரொன்றாகித் திகழ்மனைவு முற்றசேயன் றானுமனத்
துவகையுடனே யரிந்திடுங்கா லோர்பாகங்கிட் டிணற்குவப்பாஞ்
செயிரில்பிரீதி யாகிலமென் றியக்கமிகவே யழுஞ்செயலைச்
சிரித்துப்புகன்மன் னவன்பத்தித் திறங்கேட்கவுமுட் டியங்குகின்றேன்
குயிலுேத்தவிருந் திருவருண்மெய் கொண்டாயுனது திருக்கடைக்கண்
கொழிக்குங்கருணை யாலெனையாட் கொண்டாலுண்டின் றேலின்றே
யெயில்வானளவுஞ் சிரவணவூ ரின்பக்கவுமா ரர்க்குவப்பே
யிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமானே. (கூ0)

மயூரத்துவசகதி முற்றிற்று

ஆகூ கவி கஙசரு

---

பதினொருவது

# பிரகலாதகதி

கருமுகினேரருட் கடவுண்மெச்சுசீர்த்
திருமயூரத்துசன் றிறல்சற்றேருதினே
னிருதர்மெய்த் தவத்தினு னிலத்தின்மைந்தனு
வருபிரகலாதனன் மாட்சிசெப்புவாம். (௧)

தரணியைக்கவ்வுபு சலத்துண்மூழ்கிய
வியணியாக்கன்றனை யிறுதிசெய்ததா
லிரணியகசிபன்ற னிதயமீதினின்
முரணியசினமிக முராரிமேற்கொளா. (௨)

இரணியகருப்பனல் கிடும்வரத்தினுற்
றரணிவிண்பாதலந் தாட்படுத்துளார்ச்
சரணிணைதாழ்த்தபி தானமாகிய
விரணியமந்திர மியம்பக்கண்டனன். (௩)

இன்னவாறியன்றிடு நாளவன்றனக்
கன்னவாகனன்றனை யளித்தமாலருட்
பொன்னடித்துணைமிசைப் போதவன்புசான்
மன்னருந்தவத்தொரு மைந்தன்றேன்றினன். (௪)

பிறந்தநற்சேய்க்கியற் பிரகலாதனென்
சிறந்தபேரிட்டனன் செல்வத்தோடள
விறந்தசந்தோடமுற் றிருக்குநாளையி
லறந்தழைமைந்தனுக் காண்டைந்தாயவே. (௫)

குரவனைமனையிடைக் கூவியோகையிற்
பிரபலவரிசைகள் பெருகச்செய்துபின்
பிரகலாதப்பெயர் பெறுந்தன்மைந்தனுக்
குராமுறுகல்விமுற் றுணர்த்துகென்றனன். (௬)

மன்னவன்வழுத்தலின் மகிழ்ந்துமைந்தனைத்
தன்னகத்தேகொடு சார்ந்துசேயனு
மின்னவற்புலமைமிக் கிசையச்செய்வமே
னன்னலமுழுவது நமக்குண்டாகுமால். (௭)

என்றுதன்னகத்திடை யெண்ணியாரியன்
குன்றுறுமுயற்கியுட் கொண்டவன்றனக்
கொன்றிரணியநம வோதிற்பாலக
னன்றுநாராயண நமவென்றேதுவான், (௮)

குருப்புதல்வன்பகர் கூற்றந்தேர்வுறீஇ
நெருப்புவைத்திட்டபோ னெஞ்சழிந்தியல்
விருப்புடனினியசொல் விளம்பிமைந்தனைத்
திருப்பியநினைந்தனன் சிறுவனென்றரோ. (கூ)

சருவலோகத்தையுந் தாட்படுத்திய
நிருபனுமுந்தைபேர் நிகழ்த்திடாயெனக்
குருமுனமுரைத்திடிற் கூறிடாதரி
மருவுநாமம்பல வழுத்துநன்கரோ. (க0)

கற்றுளவலங்கலா னுமமந்திரஞ்
சற்றுமோவறச்சொல்வான் றன்மட்டன்றியே
மற்றுளபாலரும் வகுக்கவாங்கது
பெற்றுளமகிமைகள் பெரிதுமோதுவான். (கக)

தனைநிகர்பிரகலா தன்சொற்கொண்டுளா
ரனைவருமவ்வழி யமையும்பான்மையை
வினைநிகர்வோன்றெரீஇ வெறுப்புற்றின்னன
நினைகுவன்றன்மரு ணெஞ்சினூடரோ. (கஉ)

நான்படிப்பிப்பதை நழுவவிட்டொரு
தான்படிக்கின்றதே தாபிக்கின்றனன்
வான்படித்தலமெலாம் வழுத்திடாததாம்
வேன்படிப்பெயரெவர் விளம்பித்தந்தனர். (கங)

எனவியந்துறுகுரு விறைவன்மைந்தனைத்
தனதருகழைத்துயர் பிரகலாதனு
தினமுனக்கேதுநான் செப்புகின்றன
வினதுநாக்கொண்டெது நிகழ்த்துகின்றனை. (கச)

பெற்றநின்னுரிமைசால் பிதாவிஃதோர்ந்திடிற்
செற்றமிக்குனைப்பல சிட்சைசெய்வனு
லற்றமையாமுன்யா னறைந்தவண்ணநீ
சொற்றனையேல்வருஞ் சுகமுனக்கென்றான். (கரு)

சுகங்கொடுக்கின்றது தோன்றுமிப்பெருஞ்
சகங்கொடுத்திட்டவன் றுதைநாமமே
யிகங்கொடுத்திடுஞ்சுக மென்னுமீனர்த
மகங்கொடின்னதன்றிற மறியக்கூடுமோ. (கசூ)

குரவனென்றெனக்குநீ குலவும்பான்மையைச்
சாதம்யானுணர்ந்துளேன் றன்மையிங்கிதா
லுரகதிபெறவெனக் குரைப்பதன்றியிவ்
விரகிலார்புகன்மொழிவிளம்பலாகுமோ. (கஎ).

எலேயகன்மறைபுரா ணங்களென்றிடு
கலேயெலாநாரணக் கடவுணுமத்தி
னிலேமையயல்லவோ நிகழ்த்துகின்றவி
துலேவுறுமனத்தின ருணர்தற்பாலரோ. (கஅ)

எந்தையோர்கிலனெனக் கிசைக்குநீயுநின்
சிந்தையுட்டெளிந்திலே செப்பியாவதென்
முந்தைநற்றவச்செயன் முடித்திலாப்பவத்
தந்தைமந்தைகட்கிஃ தமைதற்பாலதோ. (க௯)

ஆதலின்யானரி மந்திரந்தனே
யோதருந்தவச்செய லொழிகிலேனிது
வேதசாத்திரமெலாம் விளம்புஞ்சாரமா
வீதறைவார்க்கெளி தெய்து மின்பமே. (உ0)

நீங்களுங்கொடும்பவ நீங்கியுத்தம
மாங்கதிபெறற்குளத் தாவல்கொள்விரே
லோங்கரிமந்திர முரைமினும்மது
போங்கமையேற்குவீண் புந்திசாற்றன்மின். (உக)

என்னெறிப்புகவுமக் கிசைப்பதன்றிநும்
புன்னெறிப்பாழிடைப் புகுவனல்லன்யான்
மன்னெறிவாள்கொடு வதைப்பனுயினு
நன்னெறியீங்கிதி னழுவிடேனரோ. (உஉ)

எனப்பிரகலாதன்ரு னிகலிச்சொற்றசொன்
மனத்திடைக்கொடுகுரு மன்னவன்றனோர்
சினத்தினுக்கஞ்சியிச் சிறுவன்ருனவ
ரினத்தினரிகலவற் கினியனுயினுன். (உ௩)

கொன்னமைமைந்தனேக் கூவிமன்னவ
னென்னநீகற்றுளா யிசைத்தியென்றிடி
வின்னநாமஞ்சொலி னிரணியப்பெயர்
மன்னனும் பயிற்றலா மனத்தினுன்னுவான். (உச)

எண்ணிடுமென்னவ னெமையெத்துன்புறப்
பண்ணிடுங்கொல்லெனப் பயந்திப்பாலக
னண்ணிடுநமையலா னயந்தவேந்தையு
மெண்ணிடுவானலனென்றுளுன்னுரு. (உரு)

தந்திரத்தாலிவற் ருனவர்க்கிறை
மந்திரத்திடையினு மருவச்செய்திவன்
புந்தியின்றிறத்தினேப் புகல்கைநன்றெனு
வுந்தியற்குருநினேங் துற்றவேல்வையில், (உ௬)

இரணியகசிபுவந் தினியமைந்தனை
யரண்மனைமாடுற வழைத்ததாலுடன்
பிரகலாதப்பெயர்ப் பிள்ளைசென்றனன்
குரவனதுளமிகக் குளிர்ச்சியெய்தவே. (உஎ)

சென்றிடுமினியதன் செல்வமைந்தனைத்
தன்றிறலுருவிற் றூங்கியுச்சிமோந்
தின்றுநீபடித்ததெ னிசைத்தியென்றலு
நன்றிவாறவன்கொள நவிலும்பாலனே. (உஅ)

வேறு

வானவரமுதும் யாழ்குழலிசையும் வடித்தெடுத்தெனமதுரித்த
பானல்வாய்க்குதலை மழலையந்தீஞ்சொற் பாலகனனந்தமாப்பரந்த
கானமாமறைகொள் பரமாசியமாக் கவின்றிடுசாரமந்திரமா
மோநமோநாரா யணுயவென்றுரைத்தா னுடனிரணியற்குவப்பொழிந்து. (உகூ)

தன்னருமைந்தன் குதலைவாய்விண்டு சாற்றருமறைப்பொருளான
வன்னமந்திரந்தா ஞணவவிருளி லமிழ்ந்திடுமிரணியன்றனக்குக்
கன்னகுலத்திற் புகுந்தளவில்லாக் கதத்தினைமூட்டியதந்தோ
வின்னன்முற்றளிக்குஞ் செருக்கினுக்கிணையா மிகலுயிர்க்கேதுலகிடத்தே. ()

உவமையின்மகன்றூன் முத்தியேகண்ணி லொற்றியுச்சியின்மிசையமைக்குந்
தவமறுபாவி யிரணியன்சேயைத் தரைமிசைத்தள்ளுபுவெறுத்தே
யவமலிமூர்க்க வென்சொனுயெனத்தற் கமைதருபட்டமாங்கதனை
நவமலிபுதல்வன் பெறவளித்திட்டான் ஞாலமேல்வழக்கினைநயந்தே. (௩க)

தானவர்குலத்தி லுதித்தனையன்றித் தலைவனுமெனக்கொருதலைமை
யானநற்சுதனு மாகிநங்குலத்தை யழிக்கவேயரிப்பெயர்கொண்டோன்
மானவண்புகழ்சொற் றனையலாலவன்றன் மகத்துவம் பலவழுத்தினையா
லீனமிக்கவனுக் கேதுகண்டச்ச மிதயமீதெய்தினையிளையோய். (௩உ)

எதுனையன்னேன் செய்குவன்மற்றை யிமையவரென்றுவாழ்பவர்தாம்
யாதுசெய்திடுவ ரென்றுமஞ்சலைநீ யானுளவரையிலுமியான்றூன்
போதுளான்றந்த வரத்தினுலென்றும் பொன்றிடுகின்றதேயிலையால்
பேதுறலொன்றே கண்டதல்லாதென் பெருமைசற்றுணர்ந்திலைபிள்ளாய். ()

திடமலிதினது சிறியதாதையினைச் செற்றெனுேர்சினத்தினுக்கஞ்சிக்
கடனடுவொளித்த கள்வனையேகொல் கடவுளென்றெண்ணினைகருத்தின்
மடமலிபேதா யுன்னையல்லாலிம் மண்ணுெடுமாகநாகத்தி
னிடமருவினருள் யாருனைப்போன்றூர் யார்க்குநீமிக்கவன்போலும். (௩ச)

அன்னையும்பிதாவு முன்னறிதெய்வ மாமெனவருமறைகிளக்கும்
பொன்னையொத்திலகு மொழிசிறப்புனக்குப் பொதுமையா மேனையர்க்கிதனுற்
பின்னையுள்ளவர்கள் விடினுமென்மொழிநீ பேணவேவேண்டுமற்றன்றி
யென்னைமற்றவர்போ லெண்ணுதியேனு மிதயமெக்களிப்பனுலேந்தால். (௩ரு)

என்றுபற்பலவா யிரணியன்புகன்றிட் டென்னைநின்கருத்துரையென்ன
நன்றுநின்கருத்துக் கிசைந்தவாநவின்றாய் நானறியாததொன்றில்லை
யொன்றுமிவ்வவிச்சை விட்டுபுநெறியை யுளங்கொளாயென்னினுமுனைப்போ
லென்றுணிபினையுந் தேரநிற்குரைப்பே னென்மதியென்றிசைக்கின்றான். ()

மட்டறுகருணை வடிவனுயுயிரின் வகையெலாம்புரந்திடும்பகவற்
சட்டவிங்கசுரர் குலத்துவேசனெனச் சாற்றுதல்பேதையர்மாற்றந்
துட்டரைமாய்த்துச் சிட்டரைப்புரக்குந் தூயதன்னீதிகொடுயிர்க்குக்
கட்டமிக்கியற்றுன் றம்பியைக்கொன்றான் காரணமறந்திதுகரைந்தாய். (கள)

சாட்சியாநீயிம் மண்ணெடுவிண்பா தலமெனச்சாற்றுமூன்றினையு
மாட்சிசெய்கின்றா யாண்டுளோர்தம்மி லநீதியொன்றொருவனுற்றுவனேன்
மாட்சிசெய்கின்றா யதுகொடுன்றன்னை மறவனென்றோதுதன்மரபோ
காட்சிகொண்டுணர்ந்து சாற்றுதியுனது கருத்தில்வந்தவையெலாங்கழறேல். ()

மாதவன்றனக்குள் ளஞ்சியன்னவன்பேர் வழுத்தலென்றெனக்குரைத்திடுநீ
போதவன்றனக்குப் பயந்துகொனேன்பு புரிந்தனைநாரணனளித்த
காதலற்கருதி யுடல்வலிபெறுநீ கருதவன்றாதையைத்துதித்துப்
போதமெய்திடுவான் புகுமெனக்குரைத்தாய்புதுமையீதன்றியொன்றுண்டோ. ()

அன்னையும்பிதாவு முன்னறிதெய்வ மாமெனவருமறைப்பாடஞ்
சொன்னையன்றேவம் மொழியிருபொருளாத் தூலசூக்குமம்படத்துலங்கு
முன்னறிதெய்வ மன்னையும்பிதாவு மென்றிடல்சூக்குமமுறையா
முன்னைநீயுரைத்த மொழியிலெளகிக முறைபினோர்கொள்வதாமுதியோய். ()

சருவபூதத்தும் வியாபியாய்ச்சீவ சாட்சியாய்நின்றிடுந்தலைவன்
பருவமொத்திலகும் பண்புடையவனுற் பகையெனக்கருதுமுன்றனைநே
ரிருளுமாணவத்தின் றொடர்புளார்தங்கட் கியமனேயென்னவுமிலகுங்
கெருவவாரிதிநீ யுய்திவேண்டுதியேற் கிளத்துமென்மொழியுளங்கொள்வாய். ()

உடலபிமானங் கொண்டுநீயென்பா லுரைத்திடும்பிராந்திமுற்றொழித்தே
திடவறிவுருவாய் மாதவன்பொற்றாட் டெப்பமீதேறுதிபந்தக்
கடலினைக்கடக்க மற்றொருபாயங் கருதுமூன்றுலகினுமில்லை
கெடவுரைத்தனனன் றெந்தையுன்பாற்கொள் கேண்மையாற்கிளத்தினன்மாதோ. ()

விரோதியென்றென்னை மதிக்கலைநினக்கு மிக்கநன்னேயமார்சுதன்காண்
சரோசநாபியனங் குலமறக்களையுந் தறுகணுற்றுளானுமன்றன்றே
குரோதமுற்றகன்றியான் சொன்னெறியினைக்கைக் கொள்வையேலுய்குவைசரத
முரோசமீக்கொள்ளி லழிதல்சத்தியநின் னுள்ளமொத்தியற்றுதியென்றான். ()

மைந்தனோதியசொற் கேட்டிரணியன்றான் மானமுஞ்சினமுமீக்கொண்டு
தந்ததாய்முலைப்பான் மணஞ்சிறிதகலாத் தந்தமுற்றுளசிறுபால
னந்தமக்குணர்ச்சி நல்கிடும்பான்மை நன்றுநன்றாலெனநகைத்துச்
சிந்தவக்கினிக்கண் கொண்டெரித்திடுமோர் திறத்தனுய்மைந்தனைப் பார்த்தான். ()

ததியதிலகராக் குரவன்வந்தன்பாற் சயசயவாசிகள்சாற்றி
யதிபயம்பொருந்தி நின்றிரணியற்பார்த் தறைந்திடுகின்றனனரசே
மதியறமிந்தப் பிரகலாதன்றான் வளர்சுதந்தரமிகவாய்ந்தோன்
வதிதருமெனையோர் பொருளெனத்தனது மனத்திடைமதித்திலான்மாதோ. ()

அத்தியான்மிகசித் தாந்தமொன்றினையே யகமிசைக்கொண்டுளானன்றிப்
புத்தியான்மிகமற் றுள்ளபாலகரும் பொருந்திடப் போதனைபுரிவா
னித்தியான்றன்னு லமைந்துளசிறுவ ரியாவருங்கொடியராயினரென்
றுத்தியான்மிகவு முயர்ந்தவரனைய வுபாத்தியாயன்புகன்றிட்டான். (சகூ)

வியாகுலக்கடலுண் மூழ்கிரணியன்றான் விரைவிலந்தப்புரத்திருந்த
கயாதுவென்பேர்கொண் மனைவியைக்கூவிக் கடுகடுத்தின்னனபுகல்வான்
வயாவமைந்தீன்ற வுனதுபாலகன்றான் வழுத்திடுங்கல்வியைமதித்துத்
தயாவுளத்தொருசற் றெய்திடாதேற்ற தண்டனைபுரிமதியென்றான். (சஎ)

அன்னைதன்மகனை யுடனழைத்தந்தப் புரத்திலுற்றப்பனேகுழந்தா
யென்னையுன்றாதை வெறுத்திடுஞ்செயலை யிழைத்தனையிதுநினக்கழகோ
பின்னைகோனும முனதுநாக்கொண்டு பேசலைபெற்றவுன்றாதை
தன்னைநேரின்றி மூவுலகினுக்குஞ் சார்வபூமனெனத்தழைத்தான். (சஅ)

தகுவரெவ்வளவு கவுரவங்கொண்டு தழைத்துளாருனதுசம்பத்தோ
மிகுவளமுடைய திதையுபேட்சித்தேன் விண்டுநாமம்விளம்புகிறாய்
நெகுமனமுறநின் றாதையார்க்காவிந் நிகரிலாவாழ்க்கைவைத்துள்ளான்
சுகுணநற்குழந்தா யரிபெயர்நாவாற் சொல்லலைநீயெனச்சொன்னாள். (சகூ)

அன்னைசொற்கேட்ட பிரகலாதனன்றா னன்புடனறைகுவன்றாய்நீ
யென்னைசொற்றிடினும் பயன்படாதவத்தி லேன்பிரயாசைகொள்கின்றாய்
பின்னைகோனும மோர்பொழுதினும்யான் பேசிடாதிருக்கிலன்கண்டாய்
தன்னைநேர்யானை கொதுகினுக்கஞ்சித் தானரண்மனைவிடுத்தகன்மோ. (ரு0)

நீசனுமிரணி யன்வலியெற்றந் நிகரிலாவரிவலியெற்றால்
யோசனையிதுட் கொண்டிடாதரிதாள் யோகமந்திரம்விடுப்பேன்கொ
னேசநெஞ்சரியை யுன்னநாத்துதிக்க நீள்செவியவன்புகழ்கேட்க
மாசறுசென்னி வணங்கிடவத்த மலர்பெயவலம்வரக்காலே. (ருக)

இன்னமென்னவய வங்களெல்லாமவ் விறைபணிக்கேசமர்ப்பித்திட்
டுன்னருமவன்றன் திருவருட்பெரும்பே றெய்துவானுளத்திடைவலித்தே
னென்னவந்திடினும் வருகயானதற்கோ ரெட்டுணையச்சமெய்துகிலே
னென்னவோதிடத்தாய் தாதைபால்விடுத்திட் டெனக்கசாத்தியனிவனென்றான்

இன்மடமாது சொன்மொழிவினவி யிரணியனெரியெனவெகுண்டு
நன்மதியமைச்சர்க் கூவிமந்திரிகா ணங்குலமழிக்கவோர்நெருப்பு
துன்மதிமகனென் றுற்றதாலிவனைச் சுசிவிடம் படைபுனற்றுணையா
லின்மையெய்திடச்செற் றிடலலதுயிரோ டிருக்கவைத்துறலியல்பன்றால். ()

விடமனையவன்வின் டுவைவிடுவான்கொல் விரவுயிரினைவிடுவான்கொ
லடமதைத்தெரிவோ மெனவமைச்சர்கள்பா லரசளித்திடலுமற்றவர்தாங்
திடமலிதண்ட லாளர்தம்வசத்திற் சேர்த்தனர்சேகுறுநெஞ்ச
மடமலிகயவ ராயினோருரைத்த வாறியற்றிடத்துணிந்தனரே. (ருச)

வன்மைசால்கயிற்று லிறுகிடக்கட்டி மலைமுடிமீதுவைத்துருட்ட
நன்மைசால்பிரக லாதனப்பொழுதி னாரணனுமமுச்சரித்து
மென்மைசால்பதங்கண் மனத்திருத்துபுதன் மெய்ம்மறந்திட்டவனுகிப்
பொன்மைசால்புவிமீ தமைந்தனனுடலிற் புன்கணோர்சிறிதுமற்றம்மா. (ருரு)

இத்தகைப்பேராச் சரியமாஞ்செயலை யிதயமீதெண்ணியாயினுமம்
மைத்தகைக்குணங்தோ யிரணியனுளத்தின் மாதவன்பத்தர்மான்மியங்தேர்
மெய்த்தகையுணர்வு பிறந்திலதங்தோ வெய்யவாணவவலியெளிதோ
பைத்தகைப்பணிதீண் டிடச்செய்தேமடிப்பான் பாவியுள்ளெண்ணினன்மன்னே

அட்டமாநாகங் களைவருவித்துள் ளஞ்சலிர்நம்மதாக்கினையாற்
றுட்டனிங்கிவனைக் கணத்தினும்விடத்தாற் றொலைமினென்றிடவிறைக்கஞ்சிக்
கிட்டியவ்வண்ணம் புரிந்திடக்கருட கேதனன்மறைகணித்தவன்றன்
மட்டவிழ்கமலத் திருவடிகருதி வரம்பிலானந்தமுற்றிருந்தான். (ருஎ)

திடமலிபத்திப் பிரகலாதனன்மெய் தீண்டிடும்பணித்திரள்கொண்ட
விடமலிபற்க ளன்றியேனையவும் விரைவினிற்பொடிந்துகீழ்வீழ்ந்த
சுடருணர்வுடையோர்த் தரிசனம்புரிந்த துட்டர்கடொடர்ந்ததீவினையி
னிடரொழிந்தின்ப மெய்தல்போலியனஞ் சிழந்துநற்றகைமையேய்ந்தனவே.()

உடனரவினஞ்சென் றிரணியற்பணிந்தாங் குற்றனசொற்றுளமுலைந்தெங்
திடமலிபற்க ளொழிந்தமட்டன்றெஞ் சென்னிசான்மணிகளும்பொடிந்த
வுடலுறுதோலும் பதனழிவுற்ற வொன்றுமிச்செயலெலாம்பத்திக்
கடனிகர்பிரக லாதனன்மெய்யைக் கறித்ததாலுற்றனகாணுய். (ருகூ)

தன்மைமற்றதனு லெம்மையிக்கட்ட சாத்தியத்தேவலையெனவே
வன்மைதோய்நிருதற் பணிந்துதம்மிடத்தை வல்லையின்மருவினபாவப்
புன்மைதோயவுண னிவ்வெலாங்கேட்டுப் புவியினைநோக்குபுமுள்காங்
தன்மைதோய்வெகுளி சகிக்ககிலானு யகத்திலோருத்தியையடைந்தான். ()

மதம்பொழிந்திடுமே முயரிபமொன்றை வல்லையில்வருத்துபுவலிசால்
பதங்கொடுமிதிப்ப வேவியகாலை பலமலி*குவலயாபீட
மதம்படப்புரிந்தோற் கருதுபுமைந்த னன்புருவாயினனிருந்தான்
†நிதம்பெறும்யானை மிதித்திடவிடலை தேகநின்றெழுந்ததொரொளியே. (சுக)

அத்தகுவெப்ப மத்தியின்காலை யழற்றலாற்பற்பமாகியதான்
மத்தமால்யானை பிளிறுபுவீழ்ந்து மரணமூர்ச்சிதங்கொடுமெடிந்த
தித்தகைகண்டு முணர்விலாதவனு யிவன்றனைச்சிலையுடன்பிணித்துப்
பைத்தகைவாரி யாழ்த்துமினென்னப் பகர்ந்தனன்பதகர்தந்தலைவன். (சுஉ)

* குவலயாபீடம் - ஓர்யானை. † நிதம் - நிலை.

அவ்வணங்கொடியோ ரியற்றினராக வருட்டிறற்பிரகலா தன்றூன்
செவ்வணவனச வாசைதன்கொழுநற் றிருந்திபசிந்தையுண்டி
மைவணமேனி யோன்றிருவருளால் வாரிதிமேன்மிதந்துள்ளத்
தெவ்வமோர்சிறிது மின்றிவாழ்ந்திட்டா னிவ்வணஞ்சிறிதுநாளிறந்த. (கூங)

சிலபகல்கழிந்து பிரகலாதன்றூன் றிப்பியவடிவுடன்றிரும்ப
மலவிருள்வடிவா மிரணிய ன்கண்டுள் வரம்பில்வெஞ்சினமிகக்கொண்டு
பலமலிமாணங் தானுமிக்கொடிய பாவிக்குப்பயந்ததுகொல்லென்
றலமருசிந்தை கொண்டுபாலகனை யங்கியிலிடமனம்வலித்தான். (கூச)

அக்கினியெந்த வாற்றினுமிவனை யதம்படுத்திடுமெனத்தனது
செக்கிடுமுசலக் கழுந்துறமுணர்விற் றீர்க்கசித்தாந்தமுற்றவனுப்ச்
சக்கிரியொருவற் கூவிநீகலங்க டகித்திடுசுள்ளையிலிவனைப்
புக்கிடவமைத்து நீற்றுகிலங்கள் பொறும்பொன்யானுதவுவனென்றூன். ()

அத்திறமிசைந்து சக்கிரிபிரக லாதனையடுக்கிடுங்கலங்கண்
மத்தியிலமைத்தக் கினியைமூட்டிடலு மைந்தன் வத்திரத்தெரியோனுப்ப்
பொத்தியபஞ்ச பூதகர்த்தனுமாய்ப் பொருந்திடர்போக்குபுரக்கு
நித்தியன்றிருத்தா ளினைதலுமவன்க ணேருறவந்தரிநிகழ்த்தும். (கூகூ)

யாதவன்செயினு நீயுளத்தஞ்சே லெரியுனக்காற்றவுமினிய
சீதளமுடைத்தாய் விளங்கிடுமென்னச் செப்புபுகட்டவிழ்த்துள்ளப்
போதமைந்துற்றூன் பிரகலாதனுமுட் போதமைந்துற்றவன்பாதப்
போதமைந்தின்பத் தேனுகர்ந்துறுதற் போதமைந்தற்றவனுனன். (கூஎ)

மற்றைநாளரச னுணையாற்றூதர் மட்பகைவன்வயின்மருவிப்
பொற்றைநேர்சுள்ளை பிரித்துநோக்கிடுகாற் பொருவில்சீர்ப்பிரகலாதன்றன்
பற்றையுற்றமைந்த கலங்கடாமுன்னிற் பசுமைசான்றுற்றனவவண்சார்
செற்றையுஞ்சிறிதும் வெந்திடாதுறுமச் செயலினைக்கண்டுளம்வியந்தார். ()

எல்லையிலுவகை யோடுதூதர்கடா மிரணியன்பாலடைந்திறைவ
தொல்லைநீருமது மகனுவப்புடனே தோய்ந்தனனீண்டெனப்புகலச்
சொல்லையேற்றலும்வன் னஞ்சயின்றவரிற் சோகமிக்கெய்தினனுகி
யில்லையேலிவற்கு மாரணமினியானென்செய்வேனெனப்பெரிதிடைந்தான். ()

தபத்திரங்கொண்டிம் மூவுலகினையுந் தனியரசாட்சிசெயெனக்கோ
ருபத்திரவமதா யுற்றனனிதனுக் குளுற்றுதல்யாவதென்றுன்னிச்
சுபத்திரம்பொருந்து முணர்விலாப்பாவி தொலைவிலாத்துன்புடனவற்கு
விபத்தினைநாடி யுற்றனன்றனக்குத் தானேர்தீவினையனுனந்தோ. (எ0)

முனிவுமிக்குறுந்தா தையின்முகநோக்கி மொழிகுவன்பிரகலாதன்றூன்
கனிவுறுசிந்தை யெந்தையிங்கிட்ட கட்டளைகளைமறுக்காதே
நனியுவகையினே டநுபவித்தும்பா னண்ணினேனெனன்மிசைக்கோப
மினியுநீர்வறிதே கொள்விரேலடியே னென்செய்வேனென்றிசைத்தனனே. ()

விரியுமெய்ப்பத்திப் பிரகலாதன்ருன் விளம்புசொலிரணியன்றனக்குப்
பரிகசித்திடலிற் சினக்கனலினுக்குப் பவனமொத்திடத்துணையியற்ற
வுரியமந்திரரைக் கூவியீங்கிதற்கா முபாயமேதெனவுசாவிடலும்
பரிவினுலிவனை வசஞ்செய்வதன்றிப் பார்க்கில்வேறின்றெனப்பகர்ந்தார். ()

காரிடித்தகையிற் றாரியங்கலிப்பக் கனகமாமேருவொத்திலகுந்
தேரிடத்தமைத்து நகருலாவருவான் செய்துசிங்காதனத்தேற்றிச்
சீரியனுபசா ரத்திரளனந்தஞ் செய்துளமகிழ்வுறப்புரிந்தார்
நாரிலோகமோநா ராயணுயவெனு நாமமாத்திரம்விடுத்திலனல். (எங)

சுத்தஞானிகளா யினருலகிடைச்சார் சுகதுக்கங்களுக்குளஞ்சுழன்றே
நித்தமார்தன்மெய்ந் நிலேவிடாரென்னு நிகமமாற்றத்திலக்கியமா
முத்தமனுளத்தி லிவற்றுளொன்றேனு முவகையீந்திலவுளற்றிடுமேற்
பித்தராமவர்தா முன்புரிதுன்பம் பீழைநல்காதுறுங்கொல்லோ. (எச)

தந்திரக்கபடச் செயற்கெலாமைந்தன் றன்வசப்படாமையிற்றளர்ந்தே
மந்திரிகுமரர்க் கூவிநீர்தந்தை வாக்கியபாலன ருமைப்போற்
புந்தியற்றிடுமென்மகனுமெய்புணர்ச்சி பொருந்திடப்புகன்மினேவென்ன
வந்தியாவிடைகொண் டிறைமகற்கொண்டோர் மறையிடத்தெய்தினர்வகுப்பார்.

பின்முறையரசு புரிந்தெமைப்புரக்கும் பிரகலாதப்பெயர்க்கோவே
பன்முறைநின்றாள் வணங்கியாமொன்று பகர்ந்திடவிச்சைகொண்டனமெஞ்
சொன்முறையதனைக் கேட்டவ்வாறொழுகிற் சுகமுனக்குண்டுமற்றதுதா
னென்முறையென்ன மயங்கலேயுனக்கீண் டொழுகுதற்கெளியதாநெறியே. ()

விந்தைசேர்வேத விதியதாநெறியே விலக்கியபுகல்கிலங்கண்டாய்
சிந்தைகொள்விதியிற் றலைமைபெற்றுளதாற் செப்பிடிற்சேயெனவீன்ற
தந்தைவாக்கியபா லனம்புரிந்திடல்காண் டகையலாதுனக்குரைப்பேங்கொ
ணிந்தைசெய்திதனை மறுக்கலெம்முயிரி னேயநின்னுணையென்றிசைத்தே. ()

தாதைநின்மீதிற் கோபமெய்திடநீ சரித்தலாலொருசுகமுளதோ
பேதையரன்றோ வூதியம்விடுத்துப் பெருநவைகொள்ளுதற்குரியார்
மேதையாமுனக்கியாம் விரித்திவண்விளம்பும் வேறொருசெய்தியுமுளதோ
போதைமேவினன்றன் றாதைபேர்விடுத்துன் பிதாவபிதானமேபுகல்வாய். ()

இப்படிநடப்ப தெங்களுள்விருப்ப மிசைந்துநீபடிந்தனையாயின்
முப்படியினரும் கைதொழுதேத்து முதல்வனுமுந்தைநீயெண்ணு
மப்படிபுரியு மிளவரசாட்சி யளித்திடுமறைந்தனமுன்னு
ளெப்படியறியோ மெம்முறையிசைத்தோ மிட்டமொத்தியற்றுதியென்றார். ()

வேறு

மந்திரி குமாரின்ன வழுத்திடக் கேட்டுமேலாம்
புந்திகொள் பிரகலாதன் புகன்றிடு கின்றானீவிர்
நொந்தியான் கொள்ளும்வண்ண நுவன்றிடு மாற்றமியாவும்
பைந்திரைக் கடலுடுத்த பாருளோர் கொள்ளற்பாற்றே. (அ0)

மிக்கமெய் வேதந்தன்னில் விளம்பிய தேகைக்கொள்ளத்
தக்கதே சொன்னீர்நுஞ்சொற் றனப்பரி தெனினும்வாய்மை
புக்கநித் தியவுணர்ச்சி பொருந்திலிர் நீயிர்பொன்றும்
பொக்கமா ருலகைநம்பும் புந்திகொண் டுள்ளீர்மாதோ. (அக)

காலதன் மத்தையென்றுங் கடந்திடற் கியன்றிடாத
ஞாலதன் மத்தைமெய்யா நாடிமற் றதற்கிசைந்த
நூலதன் மத்தினூடே சுழலுவீர் துவந்துவந்தீர்
சீலதன் மத்தைச்சற்றுஞ் சிந்தையிற் குறிக்கிலீரால். (அஉ)

உலகைநித் தியமென்றுள்ளத் துன்னியைம் புலன்வாயோடு
மலகைநேர் குணைஞ்சானீர்மெய் யறிகலி ரெனினுமென்னு
ளிலஙசித் தாந்தந்தன்னை நிகழ்த்திடு கின்றேனும்மு
ளலமெனத் தெரியிற்கோடிர் நவையெனில் விடுதிர்மாதோ. (அங)

தந்தையார் தாயார்மைந்தர் சகோதரர் யாவரன்றி
விந்தையார் மனைவியாவள் விரும்புமித் திரர்தான்யாரே
சிந்தையி னுணரினின்னோர் தேகபோ கத்திற்கல்லான்
முந்தையா முத்தியீவான் முன்வரு செயலுள்ளாரோ. (அச)

மாலையிற் பறவையாவும் வந்தொரு மரத்திற்சார்ந்து
காலையி லவைகளெல்லாங் கலைந்துபோம் பலதிக்கன்ன
போலவித் தந்தைதாயார் புணர்ப்புமென் றோதுகின்ற
நூலைநீ ரறிந்திலீர்கொ னுவல்வதென் கண்கூடதே. (அரு)

எத்தனை யாண்டாயிற்றீண் டெய்திநீ ரிதற்குமுன்ன
மெத்தலத் திருந்தீரக்கா லீன்றருள் குரவரான
வத்தனைத் தாயைக்காப்பா னிடத் தளித்துவந்தீர்
பித்தனென் றென்னையுன்னும் பேய்மதிப் பெரியீர்நீரே. (அசு)

பேயர்நுந் தந்தைதன்னைப் பெற்றிடு குரவராவோ
ரேயவெத் தலத்திலுள்ளா ரீங்கிவர் தினமன்னோர்பாற்
போயவர்ப் புரக்கின்றீர்கொல் புகலோர்சொப் பனத்திலேனு
மாயவர்க் காண்கின்றீர்கொ லையுறிற் றெளிந்துசொல்வீர். (அஎ)

உந்தைக்கு மூதாதைக்கு முற்றசம் பந்தமன்றோ
தந்தைக்கு முமக்குமீங்கு சார்ந்திடு மிதனைநுந்தஞ்
சிந்தைக்கு ளூற்றுநாடித் தேர்ந்திடு வீர்களானு
லெந்தைசொற் கிசைந்துபுத்தி யெனக்கிசைப் பீர்கள்கொல்லோ. (அஅ)

காயசம் பந்தமீது கன்மபோ கந்துய்ப்பித்து
மாயசம் பந்தச்சென்ம மறுவலும் வழங்குமன்றே
பேயசம் சாரந்தன்னி லிஃதலாற் சுகம்வேறில்லை
நேயமார் கனவாமீது நிசமென நினைக்கப்போமோ. (அகூ)

எல்லிய னனவிற்காண்ட விரவினிற் கனவாமற்றே
யல்லியல் விடயந்தானு மாகின்ற பகலிலென்றாற்
சொல்லிடு கனவியாதே தோற்றுசாக் கிரந்தான்யாதே
வில்லிடு மதியாற்றேர்ந்து விளம்பிடு வீர்கண்மாதோ. (௬௦)

விட்டிதை நீங்களெல்லாம் விண்டுவின் பத்தியுள்ளி
னட்டிடு வீர்களாயி னற்கதி பெறுகைதிண்ண
மொட்டிடு முலகைமெய்யென் றுழன்றிடு வீர்களாயிற்
கட்டிடு மியமபாசத்தாற் கலங்கிட நேருமெய்யே. (௬௧)

செல்லைநேர் மேனியண்ண றிருவருட் போகமென்னு
மெல்லையில் லாதவின்ப மெய்திடா விடினுமிந்த
மல்லலம் புவிமீதிந்த வண்ணநா மிருப்பதாகு
நல்லவோ ருறுதியேனு நாங்கொளி விருக்கலாமே. (௬௨)

இறந்திடே மியாமெந்நாளு மிருத்தல்சத் தியமென்றீறு
மறந்திருந் திடுமென்றாதை வாழ்ந்திருக் கின்றதுண்டோ
சிறந்திடு வரமன்றீந்த திசைமுகத் தொருவன்றானு
மறந்திகழ் பிறப்பிறப்பை மருவுவ துண்டாமன்றி. (௬௩)

தந்தைதன் றந்தைமற்றோர் தந்தையை நாடிச்சென்றான்
முந்தையன் னையருமந்த முறைமையை யடைந்தாரீது
விந்தைசேர் புதிதன்றிந்த மேதினிவழக்கான்மற்றிந்
நிந்தைசே ருலகவாழ்வை நிசமென்போ ருணர்வுள்ளாரோ. (௬௪)

அருவமாய் நித்தமாகி யறிவதா கியவுயிர்க்கு
முருவமா யநித்தமாகி யோங்கசே தனவுடற்கு
மருவவோ ரேதுவுண்டோ மற்றது வினைவயத்தா
லொருவுறு திருப்பதன்றி யோரினட் புளதோசொல்லீர். (௬௫)

இருமுது குரவராணோ ரெத்தனை காலநம்பா
லருமைசால் புதல்வராக வவதரித் துள்ளாரன்பான்
மருவிடு மனையென்றுற்றோர் மாதுரு வாகிநம்மை
யுருவுடை மகனென்றாட்டி யூட்டுபாற் களவுமுண்டோ. (௬௬)

கடலுறு மணலுக்கெல்லை காணினு நாமுன்கொண்ட
வுடலள வுரைக்கப்போங்கொ லொவ்வொரு காலந்தோறு
நடலைசே ருடலைமெய்யா நாமென நம்பிநாளு
முடைபுண வீந்துகாத்தாங் குறுதுயர்க் கவதியுண்டோ. (௬௭)

ஓதையார் கடல்சூழ்பாரி லுற்றுநோக் கிடினமக்குத்
தாதையா காதசீவன் றானிலை மகவாத்தோற்றித்
தாதையா நமையெண்ணாத சீவர்க டாமுமில்லை
யீதைநோக் கிடில்யாநட்போ டிகலெவர்க் காவதோதீர். (௬௮)

இவையெலாங் கன்மபந்தத் தியன்றிடு கின்றமாயா
நவையுறு செயல்களாகு நாம்பவம் புரிவேமென்னிற்
குவையுறு நிரயத்தேய்க்குங் கோதில்புண் ணியஞ்செய்வேமேற்
சுவையுறு சுவர்க்கபோகந் துய்த்திடத் தோய்க்குமன்றே. (கூகூ)

புண்ணியம் பவமிரண்டும் புரிந்திடு மான்மவர்க்கந்
திண்ணிய மனிதனென்னச் செகதலத் துதிப்பவாகு
மெண்ணிய விரண்டுமேற்ற தென்றிடி லிறப்புதிப்பில்
கண்ணிய முத்தியின்பங் கையினு மலகமாமால். (க00)

கன்மநா சத்தையீண்டு கண்டவர் தாமேதுன்பச்
சென்மநா சத்தைக்கண்ட திண்ணிய ராவரீதின்
மன்மநா சத்திதோடோய் மலரயன் றுதைதாட்கே
யுன்மநா சத்திமுற்று முற்றவர் பற்றற்பாற்றே. (க0க)

அரிபதத் தன்பாலன்றி யார்தலாற் பரிகாரத்தாற்
பிரிதருங் கன்மமேனும் பின்னுள வின்பநல்கா
வரியவெவ் வழியாலேனுங் கன்மமீங் கொழித்தார்க்கன்றிப்
பெரியபஃ றுன்பநல்கும் பிறப்பிறப் பறுதுமாதோ. (க0உ)

அழுக்குறு துணியில்வன்ன மமைந்திடா தந்தவண்ண
மிழுக்குறு மனங்கொள்வார்கட் கின்புதோற் றுதுடற்கண்
வழுக்கபி மானத்தாற்கொண் மனத்தழுக் கரிமெய்ப்பத்தி
யொழுக்குறு செயலலான்மற் றொன்றினு மொழிவுறுதால். (க0ங)

மூர்க்கர்க ணீயிரென்ன மொழியினு முதியோர்கொள்ளுஞ்
சீர்க்கதி நெறியையுள்ளந் தேர்கலி ரெனதுதாதை
மார்க்கமே யுங்கட்கின்ப மருவிடச் செய்புமற்றுற்
போர்க்களி றனையீரெற்கும் புந்திசாற் றுதுபோமின். (க0ச)

நித்திய மறியீரான்ம நிலையிதென் றறியீர்பொன்றுச்
சத்திய மறியீர்மேலாஞ் சாத்திர நெறியுந்தேரீர்
பொத்திய மலக்கூடோம்பிப் பொய்சுமந் துழல்வீருஞ்சொற்
கொத்திய லேன்மால்பொற்று ளுரகதி பெற்றேன்யானே. (க0ரு)

நீங்கள்போந் தெந்தையோது நிகமசா ராம்சமாற்றப்
பாங்கதிற் பிழையீராகிப் பத்தியிற் புரிந்தெங்நாளுந்
தாங்குட லோடுமைந்தர் தாரமா தியரையோம்பி
யீங்குளார் யாருமெச்ச விருந்திடப் போமினென்றான். (க0சு)

மன்வசப் படுமமைச்சர் மைந்தரின் னவன்சேர்ந்தாரைத்
தன்வசப் படுமோர்மாற்றஞ் சாற்றிடு கின்றதல்லாற்
பின்வசப் படலாம்பெற்றி பெற்றில னென்றுமாய
மின்வசப் பட்டோர்வல்லே மீண்டிறைக் கிசைக்கின்றால். (க0எ)

திருப்பயி லரசர்கோறுந் திருமக னுணர்ச்சிகொள்வான்
விருப்பமோ டியாங்கள்பற்பல் விதம்பட வுரைத்துமெம்மைத்
திருப்பிடு போதமாற்றஞ் செப்புவ தல்லாலெஞ்சொற்
பொருட்படக் கொள்ளான்யாவர் போதமுங் கொள்ளான் போலும். ()

என்றுதன் னமைச்சர்மைந்த ரியம்பிய மாற்றங்கேளாக்
கன்றுவெஞ் சினத்தீயுள்ளங் கவர்ந்தெழுந் திறத்தனுகி
யொன்றுமக் கோபந்தன்னை யொளிர்தரக் காட்டாதன்பாய்
நன்றுதன் னருகிற்சேயை நண்ணிட வழைத்துக்கூறும். (க0கூ)

கெடுமதி கொள்ளேலென்சொற் கேள்பிடி வாதந்தன்னை
விடுமதிமைந்தபாரின் மேவினோர் விண்டுபத்தி
கொடுபெறு செல்வமெல்லாங் கொண்டனை யிதனின்மேன்மைப்
படுபய னுண்டோமுற்றும் பற்றினை யென்னுலின்றே. (கக0)

அரியுனக் கென்னையல்லா லன்னிய ஞெருவனுண்டோ
விரிசுரா சுரர்கந்தர்வர் மிக்கமா முனிவர்நாகர்
பரிவுட னென்வசத்திற் பட்டன ரானூரான்றி
யரியவெவ் வுலகுமென்ற னுட்சியுட் பட்டவன்றே (கக்க)

நவிலுநிக் கிரகாநுக்கி ரககமர்த் துடையனுயு
மவிருமென் றன்னிற்சீர்த்தொ ரரியென வுள்ளான்யாவன்
புவியிலென் றனைவிட்டேநீ புகன்றிடு மவன்யாண்டுள்ளான்
கவினவன் னவனையெற்குக் காட்டிடு வாய்கொனீயே. (கக௨)

சேயநீ யிளையனுன திறத்தறி யாமைநீரா
லேயவென் றனைச்சேவிக்கா தெனக்குமேற் பட்டோனுகி
மாயனு மொருவனுண்டென் மாயமே கொண்டுழன்ருய்
மேயபே ருணர்ச்சிதோன்றில் விடுமுனக் கிப்பித்தென்றே. (கக௩)

இன்னன சொற்றதாதை யிரணியன் றன்னைநோக்கிப்
புன்னகை கொண்டுமைந்தன் புகல்வனே தைத்தியாவோ
துன்னிர ணியயானென்று சொல்குவன் கேட்டிநானே
மின்னரி யென்ருய்நாணுய் வேறுபா டுரைப்பக்கேளாய். (கக௪)

அரிக்குமுன் றனக்குமேற்றத் தாழ்வுக ளதிகமுள்ள
விரத்தினம் பருக்கைக்கல்லை யியல்குபின் மண்டூகத்தை
விரைத்தசாந் தங்கணத்தை வெகுளியோன் சாந்தன்றன்னை
யருக்கன்புன் பதங்கந்தன்னை யருமறை பயனில்கூற்றை. (கக௫)

பொன்னயங் தன்னையாக்கள் புன்மைசால் பன்றிதன்னை
மன்னவொப் பெனிலாமென்னு மதியிலா ருண்டிங்கென்னி
னின்னைநீ யரியென்ருேதி னிசமெனக் கொண்டுதாழ்வா
ரென்னிடத் திவ்வாருேதி னென்பய னுணர்விலாதாய், (கக௬)

அவனருள் வடிவனீயாங் காரிவீன் கெருவிபாபி
யவமனி காமிநிச னநித்ததே காபிமானி
துவந்துவ முளைமற்றேரைத் தாடனம் புரியுந்தோசி
நவங்கொளிந் நினைவான்மேலா நற்கதி பெறுவைகொல்லோ. (ககஎ)

காணிலாய் விண்டுநாமக் கடவுளைற் றிறத்தைக்கண்டு
பேணிலாய் பிரமனீயப் பெற்றதோர் வரத்தாற்சொக்கி
நாணிலாய் விண்டுவென்ன நவின்றனை யன்புசற்றும்
பூணிலாய் வறிதிருந்தாய் பொன்றினை போவுமாதோ. (ககஅ)

ஆணவ விருளாற்சென்னி யடியிதென் றறியாயாகி
வீணவச் செல்வமென்னு மின்னினை மெய்யாநம்பிக்
காணெறும் பியுண்விளாவின் கனியெனக் காட்சியற்றாய்
நாணமச் சமுமுள்ளின்றி நானரி யென்னக்கூசாய். (ககக)

அடாவிர ணியப்பேர்வாய்ந்த வறிவிலா யளவுசொல்லப்
படாதபல் காலமிந்தப் பார்முழு தாள்வோமென்று
கெடாதசீர் வாய்ந்தமேலாங் கேசவன் சீர்மேலோரைக்
கடாவுபு தெரியாதேகொல் கடாவென விருந்தாயந்தோ. (கஉ௦)

உன்னகத் தறவேமூடு மோரறி யாமைப்பண்பை
யென்னகத் துன்னுந்தோறு மிரக்கமு நீயிங்கோதுங்
கின்னமார் தெய்வநிந்தை கேட்டிடு தோறுமந்தோ
வின்னல்வெஞ் சினமுமுள்ளத் தெழுவதால் புழுவைநேர்வாய். (கஉக)

மலையெனப் பொலிந்திருக்கும் வல்வினைப் போகக்கூட்டை
நிலையெனக்களித்திருக்கு நீசநின் னுயிரையந்தோ
கொலையயிற் கரந்தோயேமன் கொண்டிடப் பிடர்மீதுற்றான்
றலையுறு தூண்டிலுண்டி தனைநத்து மீனமொத்தாய். (கஉஉ)

அரிபுகழ் மறைகளெல்லா மறைந்திளைக் கின்றவுன்னில்
விரிபுகழ் வாய்ந்தோர்தங்கள் வெற்பன வுடல்கண்முற்று
நரிகொடி தின்னவன்னே னவிற்றிய செயல்களியாவும்
பெரியகா தைகளாற்றோய் பித்தரிற் பேதுற்றாயால். (கஉங)

சிற்றறி வுடையார்மிக்க செருக்குள ராவரென்னு
முற்றறி வுடையார்சொற்கோர் முதிரிலக் கியமாய்நின்ற
கற்றறி வணுவுளில்லாக் கயவரிற் சிறந்தாய்நீதான்
சற்றறி வுடையாயென்னிற் சாற்றிடா யரியென்றந்தோ. (கஉச)

நித்தியா நித்தியத்தி னிலைமையி தென்றுள்ளோராத்
தைத்தியா வுலகுக்கெல்லாந் தலைவன்யா னேயென்றுன்னும்
பைத்தியா வுனக்கும்விண்டு பகவற்கு முள்ளதான
வித்தியா சங்கள்கோடி விளம்பிய கொண்டுதேராய். (கஉரு)

மூத்திடு மூவாத்தேவா முராரிதன் ஞபிதன்னிற்
பூத்திடும் பிதாமகன்றன் புரிந்திடும் வரத்தாற்றேவ
ரேத்திடச் சிறிதுகால மித்திரி யுலகந்தன்னைக்
காத்திரந் தொழிநின்பாலிக் கருவம்வந் தடையலாமோ. (கஎசு)

வீண்படு கருவத்தானீ மேலெனக் கொண்டாயித்தான்
மாண்பரத் துவநின்பாலின் மருவிட மாட்டாதோர்தி
சேண்படு தேவர்க்கெல்லாந் தேவனு மரிதாள்சென்னி
பூண்பதா லுண்டாமவ்வா புரிமதி புந்தியில்லோய். (கஎஎ)

மேயபல் லுயிர்க்குமெய்தா மேன்மையா தடைந்துளாய்நீ
யாயவர்க் கெல்லாம்பூமி யாம்பொது வுனக்குமற்றே
காயமு மதுதீர்கின்ற கடவநா ளுனக்குமுண்டா
லேயவோ ரகந்தையன்றி யாதுன்பா லதிகமோதாய். (கஎஅ)

இருளுமா ணவத்தால்யாப்புண் டியற்றுவ தறியாயாகி
மருளுறும் பேதாய்நிற்போன் மற்றுள ராயினருஞ்
சருவமு மெம்மதென்னத் தம்முளத் துன்னுவாரேன்
மருவுமன் னவர்க்கெவ்வூறே வந்திடும் வழுத்துவாயால். (கஎகூ)

அன்னிய மாய்ச்சம்பந்த மறும்பொரு ணமதென்றேயா
முன்னிய தாலேசொந்த முற்றிடு நமக்குக்கொல்லோ
மன்னிய நமதுயிர்க்கண் மருவியோர் கணநீங்காது
பின்னிய தரிதாளலைதப் பேணுதி யுய்வான்மன்னே. (கஅ0)

பன்னக சயனன்பொற்றாட் பரவுமன் பமைவாயாயி
னுன்னையான் பெரியனென்ன வுரைக்கிலே யெனினுமுள்வே
னன்னதுள் ளமையாயாயி னணுவினுங் கடையாக்கொள்வே
னென்னைநீ செயினுஞ்செய்க வென்னையா னஞ்சிடேனல். (கஅக)

திரிமதம் பொழியுமேன்மைச் சிந்துரந் தனைவிடுத்து
நரியையூர் கின்றோருண்டோ நயப்பருண் டெனினுந்தீமைக்
குரியநின் னுமமேத்தி யுவணகே தனங்கைக்கொள்ளு
மரிபுகழ் விடுக்கிலேனு லவிச்சையிற் சிறந்தபேதாய். (கஅஉ)

* வனத்திரு மாலையண்ணன் மலர்ப்பதம் வழுத்துநீரேன்
மனத்திடை மறவேன்வாய்மை மற்றதா லென்னைவல்லே
யுனக்கெது செய்யச்சத்தி யுண்டதைப் புரிதிவந்த
சினத்தினை வறிதாக்கேல்யான் சிறிதுமஞ் சேனென்றுனே. (கஅங)

மைந்தனே திடுசொற்கேட்ட மன்னவன் வடவையஞ்சும்
வெந்தகைச் சினங்கொண்டென்னை வெருவுறு தெதிர்சொற்கூறுஞ்
சிந்தைநீ கொண்டதியாவர் திறங்கொடத் திறலோனின்னை
வந்தளிக் கின்றபான்மை வல்லையான் றேர்கின்றேனல். (கஅச)

---

* வனம் - துளசி.

என்றுரைத் தடங்காக்கோபத் தோடும்வா ளெடுத்தோர்கையி
னன்றுறு மகற்பிடித்துன் னாரண னெங்கேயோதா
யின்றுநா னவனைக்காண்பா னிச்சைமிக் குற்றேன்காட்டா
யின்றெனி லென்கருத்துக் கிசைந்தினி நடத்தியென்றான். (கஙரு)

இடியெனக் கனைத்திட்டின்ன விரணிய னியம்பலோடு
நெடியபே ரவையிலுள்ளார் நெஞ்சகம் பதைப்புற்றார்கள்
படிமுழு ததிர்ந்தவோங்கல் பக்குவிட் டனவினன்றான்
பொடியினின் மறைந்தான்சேவம் புரிந்தன சத்தமாதோ. (கஙசு)

மன்னவன் மனைவிகண்ணுந் தோளதும் வலந்துடித்த
வின்னவோர் செய்கைகண்டோ ரியாவரு மிரங்கியேங்கி
யென்னதுன் பெய்திடுங்கொ லென்றுசித் திரிகன்றீட்டு
மன்னுமோ வியங்களேபோன் மௌனமுற் றிருந்தார்மன்னோ. (கஙஎ)

ஆயபல் சகுனங்கண்டு மிரணிய னமையானுகிச்
சேயனை நோக்கியேட செபிப்பதியார் நாமமன்னோன்
மேயவோர் விறலின்றன்மை வெளிப்படக் காட்டாயின்றே
லேயவென் கரவாட்குன்னை யிரைபடப் புரிவனென்றான். (கஙஅ)

நிருபனோ திடுசொற்கேட்டு நிகழ்த்துவன் பிரகலாத
னருளுரு வுடையாற்காட்ட வறைந்தனை யன்னவன்றான்
சருவபூ தத்துமுள்ளான் றன்மைநின் னறிவாற்காண்டி
தெருளுமத் தகையாற்காணிற் றேறலா மெவற்றுமென்றே. (கஙகூ)

எப்பொழு தினுமேயெந்தப் பொருளினு மிசைந்துள்ளானை
யிப்பொழு திப்பொருட்க ணியைந்துளா னென்னப்போமோ
மெய்ப்பொரு ளலதின்றெல்லாம் விண்டுவின் மயமேயாகும்
பொய்ப்பொருள் குறிப்பார்கண்ணிற் புலப்படற் பாலதன்றே. (கச0)

உலகினிற் காணுகின்ற சமுத்திர மோங்கலுரு
சலதாஞ் சேதனசே தனப்பொரு ணதிகிராம
மிலகுநா டலரியிந்தோ டெழில்வன மயானநீநான்
றலமிசை யுறையுன்கையிற் றுங்குவா ளிடத்திலின்னும். (கசக)

தூலசூக் குமங்களென்னச் சொல்பிர பஞ்சந்தன்னி
லேலவே நிறைந்திருக்கு மிறைவனஃ தன்றிமுன்பின்
மூலமா ரடிநாப்பண்ணின் முடிவினு மெக்காலத்துஞ்
சாலவே நிறையுமன்னோன் றன்மையான் சாற்றப்போமோ. (கசஉ)

வளப்படு மறைகளெல்லா மற்றவன் பெருமையெம்மா
லளப்பரி தென்னநாளு மறைந்திளைக் கின்றவென்றாற்
சளப்படு மாயைமூழ்குன் றனயனென் றுற்றயான்கொல்
விளப்பவ னறிவிலாதாய் நீகோலாங் கேட்போனென்றான். (கசங)

பீடமை பிரகலாத னிவ்வணம் பேசக்கேட்ட
வாடகன் கோபவெந்தீ யகத்திடைப் பொங்கிச்சொல்வா
னேடாநீ யோதுநாரா யணனெனப்பா னிந்தத்தூணின்
மாடமைந் துள்ளான்கொல்லோ வழுத்துதி சாதமென்றான். (கசச)

மெய்யனே திடுவான்சர்வ வியாபியா நாரணன்றான்
றய்யவித் தூணினூடுந் தோய்ந்துளா னகத்துட்சற்று
மையமெய் தலேநீபேதா யறிகுதி கணத்திலென்ன
வெய்யனு மவன்சற்றேனு மேல்வருஞ் செயலோரானாய். (கசரு)

தூணமீங் கிதினின்மாயன் றோய்ந்துளான் சாதமென்னிற்
காணவன் றனக்குப்பூசை கடிதியற் றிடுவேனென்ன
வீணனுட் கோபமிக்கு மென்றிதழ் துடித்து மீசை
வாணலித்தி டவத்தூண்மே லோச்சினன் வல்லமாதோ. (கசசூ)

அன்னவோர் பொழுதிலோங்க லாயிடை யசனிவீழ்ந்த
தென்னவோ ரோசைகிண்ணென் றெழுந்ததத் தூணினின்று
மின்னவி ரரிமார்த்தாண்டன் மேல்கடற் றமுமெல்லை
யொன்னல ரஞ்சியோட வுக்கிரத் தோடுவந்தான். (கசஎ)

வேறு

தனதானதத்ததன தனதந்ததாத்ததன

வருநார ணக்கடவுள் கடலின்கு மூாத்தைநுகர்
வடவான லத்தைநிகர் மிதமிஞ்சு சீற்றமுட
னொருபாதி மக்களுரு வுறவொன்று பூட்கைமத
மொழிசீய மொத்திலக நரசிங்க மூர்த்தியென
விருளாண வத்தைவெளி விடுபண்பி னுக்கையுட
னியருன வப்பயல்க ளெதிர்கண்டு ளேக்கமுற
விருவாய்பி லத்தைநிக ரெனவிண்டு நீட்சிமிக
வியனுவ டித்தவடை மிசைதொங்க வாக்கியரோ. (கசஅ)

தந்தான தத்ததன தனதான தத்ததன

பொங்கோதை மிக்கபிர ளயகால மைக்குநிகர்
புஞ்சாமி சத்திநெடு பிடர்மீதி னிற்கொண்மயிர்
தங்கார மூற்செலுடை செயநாத மட்டதிசை
தண்டேற நெற்றியன லசுர்மாளு றக்கனல
வுங்கார சத்தமசு ரமினுர கட்டினிடை
யுண்டான கர்ப்பநிரை புவிமேல்வி ழப்புரிய
வங்காழ வச்சிரம தெனநீண கத்திநெடு
மண்டார்வ னைத்தெரித குவர்நீள்வெ ருட்சியராய். (கசகூ)

தனதனத் தத்ததன தனதனன தத்ததன.

கிரியையொத் திட்டவுடல் விபர்வருவி கொட்டிநனி
கிடுகிடுப் புற்றசைவு பெறவுளம்வெ ருட்சிகொடு
பரிபவப் பட்டவர்க ளிரணியனு ரைத்தபடி
படுசமர்க் குத்துணிவு கொடுவருப தத்தினர
வரிதன்முக் குற்றவளி விசையிலத முற்றனர்க
ளரைநொடிக் குட்டருவ ரனைவருமி றக்குநிலை
தெரிதலுற் றற்பமதி யிரணியனு ளத்தினிடை
சினமிகுத் துச்சமர்செய் திடுநினைவு பெற்றுடனே. (கருO)

தனதந்த தாத்ததன தாத்ததன தானன.

கதிர்மிஞ்சு வாட்படைவை வேற்படைகை மேவியே
கதமிஞ்சு மூக்கமொடு போர்த்தொழில்செய் போதிலே
நதிதங்த தாட்குலவு தீர்த்தர்புகழ் தேவனு
நரசிங்க மூர்த்திரவி மேற்கொழிய நாடுரு
விதிதந்தி மேற்குலவு நாட்டவுட லோன்முனோர்
வெருள்கொண்டு பார்த்திடவு மாற்றரிய ராயினர்
வதிகின்ற பார்ப்படிவ மேற்றவொரு தேவிநீண்
மருள்கொண்டு பேர்த்துமுன மேய்த்தமைய வாடினள். (கருக)

தத்தத்த தத்ததன தத்ததன தத்தன

கொட்புற்ற மச்சவின மிக்கவுல வுற்றவேழ்
குப்புற்ற மைக்கடல்க லக்கமிக வுற்றவா
னட்சத்தி ரத்தொகைபு விக்கண்விழ லுற்றவா
னத்தெட்டு வெற்புவகை பக்கெனவெ டித்தவே
பட்பிற்றை பெற்றிடமு குர்த்தநிலை யொற்றைபோர்
பற்றிப்பலப்படவி யற்றுபொழு தத்திலே
விட்புக்கொ ளிக்கதிர்வி ரிக்குமின னெப்பின்மேல்
வெற்புற்றெ ளிக்கநிக ழத்தமன முற்றதே. (கருஉ)

தத்தான தாத்ததன தனதந்த தாத்ததன

அக்கால நோக்கியரு ணரசிங்கமூர்த்திமிக
வச்சோவெ னப்பலரு மழுதுன்ப மூட்டிமகிழ்
மைக்காள மேய்க்குமிர ணியனென்ற மூர்க்கனுயிர்
வைக்காதி யாக்கமிசை யறவங்கண் மாற்றமறை
யொக்காத சீர்த்திபெறு முயர்தம்ப மாத்தவிசி
னுட்கார்த லாற்றியிரு துடையின்க ணேற்றிநுதி
மிக்கான வாற்றன்மிகு நகமென்ற சீர்ப்படையின்
வெற்பான பூட்சியிரு பிளவொன்ற வாக்கினனே. (கருங)

வேறு

வின்மைசா லெயிறிலங்க வீரகர்ச் சனைசெய் தன்னோன்
வன்மைசால் குடரைவாங்கி மாலையாத் தரித்துநின்றான்
றன்மைதேர் தேவரின்பந் தழைத்திர ணியனீறுகு
நன்மையித் தினமேமிக்க நற்றின மெனக்கொண்டாடி. (கருச)

அகன்றன மசுரோபாதி யடைந்தனஞ் சுகாமென்னப்
புகன்றவிர் பாரிசாதப் பூமழை போற்சொரிந்து
பகன்றையி னரசிங்கப் பண்ணவற் புகழ்ந்துபோற்றி
யகன்றபே ருபசாரங்க ளாற்றினர் களிப்பின்மிக்கார். (கருரு)

அமரர்க ளிவ்வாறூர்வத் தளவறி யாராவாழ்காற்
சமரகத் தெஞ்சிநின்ற தானவர் பீதியுள்ளத்
தமைதரப் பெற்றாராகி யவனிவிட் டகன்றாரானு
ரமருல கெங்குந்துன்போ டசுரரு மறலாயிற்றே. (கருசு)

எங்கணு மேயசிவ ரினங்களி னுள்ளமெல்லா
மங்கள மார்சந்தோட மலிதர லான தின்ன
பொங்கள வற்றகோபம் பொலிநர சிங்கந்தன்னை
மங்களா தேவிகண்டிவ் வண்ணமுண் ணினைபுமாதோ. (கருஎ)

கோமள மிக்கமேனி கொண்டநீர் வன்மைசான்ற
பாமர வசுரர்தம்மைப் படுப்பதெவ் வாறேயென்ன
நாமகத் தையமுற்று நாதனை வினவினோமா
லாமதைக் காட்சியாவின் றறிந்தன மென்றமைந்தாள். (கருஅ)

இரணியன் மடியக்கண்ட வில்லவள் கயாதுவென்பா
டிரணிறை துக்கமிக்குஞ் செயல்புறங் காட்டாளாகிப்
பிரகலா தனுக்குட்சாந்தம் பெறமுயல் வாளிலேங்கிக்
கரவுறு மாதருள்ளக் கருத்தினைத் தெரித்திட்டாளால். (கருகூ)

பிரகலா தனனுளத்திற் பேருவப் புற்றானாகிச்
சரததன் னியனுமோர்நற் றன்மையீங் கடைந்தனெப்பில்
வரதன்மெய் நாரசிங்க மாகிமுன் வருதலானு
மிரணியக் கொடியோனீறெய் திடுதலி னானுமந்தோ. (கசூ0)

கட்டமா நிவிர்த்தியோடென் கருத்தினுட் குறித்தவாறு
மிட்டவான் பிராத்திதானு மெய்தலி னோர்காலத்திற்
சட்டமெய்த் தகைகொளென்னைத் தகைபவ ரியாவரென்ன
மட்டறு களிப்பினோடும் வரதனைத் துதித்துநின்றான். (கசூக)

ஆர்த்திமிக் கின்னோனின்ப மமைந்துற நாரசிங்க
மூர்த்தித னன்பற்றுன்பின் முயக்கிய பாவியான
பார்த்திபன் றன்னைக்கொன்றும் பத்தவாற் சலியநீராற்
பூர்த்திபெற் றிலதுகோபம் பொங்குபு பொலிந்தானன்றே. (கசூஉ)

## வேறு

அன்னநிலைகண்டிருந்த தேவர்முதலானவருள் ளாற்றாகி
யென்னதுயரிவ்வெகுளி நமக்கியற்றுங்கொல்லெனவே யேங்குற்றா
ரின்னல்கொடுற்றான்றி நரசிங்கமூர்த்தியிடத் தெய்தியன்பிற்
பன்னரும்பஃறுதிபாடிக் கருணைமிகப்பெறுநீர்மை பதியாரானர். (௧௯௩)

தேவர்களெளாவ்வொருவருநீர் போநீர்போமெனப்பிறரைச் செப்பினரா
யாவர்களுமுன்போன னமக்கெதுதீங்கெய்திடுமோ வெனத்தம்முள்ளத்
தோவறுமச்சத்தினராய்த் தங்களுக்கெல்லாந்தலைமை யுற்றோனுந்தந்
தாவளமால்வாகனனை யேகும்வணமன்பின்மிகச் சாற்றுமேல்வை. (௧௯௪)

இந்திரன்சொல்வானீவிர் வத்திரமீதேயிருக க்ஷிசையக்கொண்டீ
ருந்திடுமிவ்வெருட்சியடைந் துழன்றனிரீண்டெனைப்போனும் முடலமுற்றும்
பந்திபடுங்கண்படைக்கி னீர்பொருந்துந்துயரினையான் பகரப்போமோ
வெந்திறலீதாயிரங்கண் ணுற்பார்த்தும்வெருள்கிலன்யான் வீரன்போலும். ()

பார்த்திடுதோறென்றனுளம் பதைப்பதுமெய்வியர்ப்பினெடும் பனிப்பதென்னுற்
பூர்த்திபடுஞ்செயலிதன்று கையிலன்னவனுபிப் புண்டரீகத்
தார்த்தியொடுதோற்றுமலர் மேற்கடவுளேயிதனை யகலும்வண்ணந்
தீர்த்திடுவல்லமையுடையோ னெனவுரைத்ததாலயன்பாற் செப்புகின்றார். ()

கடலுடுத்தபூமுதற்ப லுலகிடத்துங்கவினுமுயிர்க் கணங்கட்கெல்லா
முடலமைக்கும்பிதாமகனே வாணிதனக்குவடமூத்து முரமுள்ளானே
நடலையறயாமெல்லா நரசிங்கமூர்த்தியின்பா னண்ணுங்கோப
மிடலொழித்தீங் கெமைக்காக்குந் துணையுனையல்லாலுளர்கொல் விளம்புவாயே.()

எத்திடுமெம்முறைசெவியேற் றுள்ளமிசைக்கருணைமிகுந் தின்னனீக்கிக்
காத்திடினுமன்றிநர சிங்கவுருப்பெருங்கடவுள் கதத்தாலெம்மை
மாய்த்திடினும்பரமுனக்கென் றன்புகொடுதேவரெலாம் வழுத்தலோடுந்
தேத்தவளக்கமலைபுணர் செங்கமலவாசனிவண் செப்புகின்றான். (௧௯௮)

புறந்தோன்றுநாவுடைத்தாம் பகுவாயைவச்சிரமே போலும்வன்மை
சிறந்தோங்குநகங்களைநேர் காணவுமுண் ணடுங்குபுமெய் சிலிர்க்குமென்றான்
மறந்தோய்ந்தகோபவனற் றுனுங்கூடித்ததியான் மருவுவேனேன்
மறந்தோய்ந்துபோமெனுட னுமமுமென்மிசையுமக்கென் வயிரமந்தோ. ()

பருவரலீதகன்றிடவோ ருபாயமுளதாலமரர் பகரக்கேண்மின்
சருவவுயிர்க்குந்தாயா யரிப்பிரியையெனுநாமந் தாங்கப்பெற்ற
திருவருட்சத்தியாமிலக்கு மியையனுப்பிலிச்சினந்தீர்த் திடுமென்றிட்டான்
மருவனசக்கோயில்வள ரிந்திரைமுன்சென்றிவணம் வழுத்துகின்றார். (களo)

பின்னையெனவுலகரெலா மேத்திடநாரணன்றனக்க பினையாயார்க்கு
முன்னையுமாய்ச்செங்கமலத் தோடரிமார்பிடத்தினிலு முயங்குந்தாயே
யன்னையெனுமுன்னையலாற் சேயரெமக்கிண்டடைந்த வல்லறீர்க்கப்
பின்னையொருதுணையுளதோ வெம்முறைநின்றிருச்செவியிற் பெரிதேற்றாளாய்,

மனந்தனிலெண்ணிடுந்தோறும் வெருட்சிமிகப்பகவனிவண் மருவலான
சினந்தணியப்புரிந்தெமது துக்கமொழித்தாளுகெனச் செப்புகாலை
கனந்தகுபூங் குழற்றொடிச்செங் தளிர்க்கரச்சிற்றிடைவேற்கட் கமலைதானு
முனம்பொருந்துஞ்செயலெனக்கித் ததியிலுதவாதெனவே மொழிந்தாளன்றே.()

இன்னன்மிகுந்தேவர்களு முனிவர்களுமெண்ணிடுவார் யாவரேனு
முன்னமைந்துதுத்தியஞ்செய் திடினன்றியிச்சினந்தான் முடிவுறுதா
லென்னவுளத்தெண்ணினரா யிச்செயற்குக்காரணனு யிலங்குஞ்சீர்சா
றன்னனையபத்திமலி பிரகலாதன்றனிக்கத் தக்கானென்னு. (கஎங)

பிரமன்முதற்றேவரெலா மன்பதனுலேவரினும் பெரியோனுன
பிரகலாதனற்கூவி யுக்கிரமார்நரசிங்கப் பெருமாள்கொண்ட
வுரமிகுவெஞ்சினந்தணியப் புரிந்திடலுன்கடனேயென் றுரைத்துவேண்டச்
சுரர்வேண்டுகோட்கிசைந்து மற்றவர்பாற்பத்திமிகுந் தோற்றத்தன்னோன்.()

வாய்ந்தவருணரசிங்க மூர்த்தியருகமைந்திருதாள் வணங்கிப்போற்றிச்
சாந்தமுறவேண்டுமெனப் பிரார்த்தனைசெய்திடவுவகை தழைத்துள்ளன்பாற்
போந்தவிருகரத்திலெடுத் தேந்துபுநாவாற்சுவைத்துப் புண்டரீகப்
பூந்தவிசாரணன்முதலாந் தேவரெலாமுவக்கவிவண் புகலுமாதோ. (கஎரு)

நன்றிநிறைதருமெனது பத்திவடிவாம்பிரக லாதநீதா
னின்றுவரையிரணியனு முந்தையினுற்பெருந்துயர மெய்திச்சோர்ந்தாய்
துன்றுமினிமேலுனக்குத் துயரொழிந்தசுகிர்தமெனச் சொல்லியன்பாற்
குன்றுறழுமார்பினிடைச் சேர்த்தாலிங்கனஞ்செய்து கொண்டானன்றே. ()

குத்திரஞ்சேர்கொடும்பாவி யிரணியனுலென்றன்மனங் கொதித்ததன்னோன்
புத்திரனுத்தோன்றுமுனைத் தழுவியதாலுளங்குளிர்ந்து பூரித்தேனு
வித்திரநீயுன்மகனை யாலிங்கனம்புரிந்துள் ளின்பமிக்குப்
பௌத்திராதியர்தமையுந் தழுவியெனைப்போற்சுகமே படைத்து வாழ்வாய்.()

எல்லையற்றநெடுங்கால நீயிவரசாட்சியினை யியற்றியொன்னு
ரில்லையெனும்படிசயங்கொண் டெழிற்சார்வபூமனென விருப்பாய்வாசக்
குல்லையணிந்திடுமெனக்கும் பத்திமலிநினைச்செயங்கொண் டிடலாகாதா
னல்லையுனக்கொப்பெவரு மில்லையெனவோகையொடு நவின்றான்மாதோ. ()

வாய்ந்தவரிப்பிரியையெனும் பொன்மனையுங்குளிர்நாபி வனசநின்றும்
போந்தசுதனுமயனு நடுநடுங்கியாமியற்றப் போகாதென்றே
யோய்ந்தடங்குமோர்செயலைப் பகையசுரக்குலத்துதித்த வொருவனுற்ற
லாந்தகைநல்கிடும்பத்தி மான்மியத்தையிற்றெனயா மறையப்போமோ. ()

உத்தமனுகியபிரக லாதனைமிக்கிரணியன்செ யுறுகண்யாவுஞ்
சித்தமிசையுன்னுதொறு மவற்றடிந்தும்வெங்கோபந் தீராதாகி
மெத்தவியல்காற்பிரக லாதன்வேண்டலுமுவகை மேவிற்றென்றாற்
பத்தர்க்ண்மீதரிகொடுள்ள வாற்சலியப்பெருமையெவர் பகர்வதம்மா. (கஅ0)

முறுகுகொடுஞ்சினமொழிந்து சாந்தமிகுநரசிங்க மூர்த்தியன்பாய்
மறுகுமனங்கொடுநிற்கும் பிரமாதிதேவர்களை மகிழ்வாற்பார்த்திட்
டுறுபிரகலாதனெனக் கத்தியந்தபத்திநிறை வுற்றோனுகுங்
குறுகியதியானிவன்பொருட்டல் லாதேதுமற்றென்று கொண்டனறன்றே. ()

சுபத்தகைசாலின்னவன்சொற் பிழையாதவண்ணமிருந் தூணிற்றோன்றி
யபத்தறுகணுற்றுயிர ணியன்றனைச்சாடியுமெனக்கீண் டடங்காக்கோப
நிபத்தாந்திரிவன்பரிசம்பட்டவுடன்முற்றொழிந்து நிவந்ததின்பந்
தபத்தகைதோயிவனெனதான் மாநிகர்க்கும்பெருந்தகைமை சான்றான்மாதோ.()

என்னருமைப்பத்தர்மெலி வுறயாராணவத்தாற்றீங் கிழைக்கின்றார்க
ளன்னவரல்லாலெனக்குச் சத்துருவாந்தகையுடையா ரகிலத்தில்லை
யென்னநுவலுபுபிரக லாதனதுச்சியைமோந்து வின்பமெய்திக்
கொன்னமைபற்பலவாசி புகன்றுபின்னுமமரர்கொளக் கூறுகின்றான். (கஅரு)

கொடும்பாவியிரணியனு னீவிரெலாம்பெருந்துயரங் கொண்டிரிங்நாட்
படும்பான்மைபுரிந்தனமா வினியாவர்களுஞ்சுகச்சீர் படைத்தீராகி
நெடும்பாராதியவண்டத் தொகைபுரியும்பிதாமகன்று னிகழ்த்தும்வண்ணந்
தொடும்பான்மைபடைத்தினிது வாழ்ந்திடுவீரென்றருளாற் சொற்றுமன்னே. ()

பிரகலாதனன்றேவ ராதியரான்புடன்வணங்கப் பேசியாசி
வரநிலவும்வடதிசையிற் போந்துமறைந்திடத்தமதுண் மகிழ்ந்தாராகி
யுரநிலவுபிரகலா தனைப்பலவாறுப்புகழ்ந்திட் டுவப்பினேடுந்
தாநிலவுதத்தமுல கடைந்திமையோரெவருமின்பந் தழைத்துவாழ்ந்தார். ()

சதுர்முகனுதியதேவர் சென்றவுடன்பிரகலா தன்றானன்பிற்
கதுமெனவாடகன்றனக்குச் செயவேண்டுமபரநெடுங் கடன்களாற்றி
மதுவருந்தும்வண்டேபோற் பரமானந்தப்பெருவா ரிதியின்மூழ்கி
விதுவியல்வெண்குடையொடுமா தவநிலையிலமர்ந்துசெங்கோன்மிளிர்த்துகின்றான். ()

வேறு

பெருக்குலாம் பத்திச்சீர்சால் பிரகலா தப்பேரேந்தல்
வெருக்கொளா துயிர்களின்ப மேவிடச் செங்கோலோச்சி
யிருக்குநா ளநித்தபோக வியல்பினைத் தன்னதுள்ளிற்
சுருக்கிலா விசாரஞ்செய்து துணிகுவ னிவ்வாறம்மா. (கஅள)

என்னது தாதைமுன்ன வென்குலத் துறுமெல்லோரும்
பொன்னக மனுவென்றோதப் பொருந்துமெய் வலிமிக்கேய்ந்தோ
ரன்னவா கனன்பதத்தை யகற்றிமீட் டளிக்கவல்லோர்
பன்னக சயனனுழிப் பரிதியா விருள்போன்மாய்ந்தார். (கஅஅ)

அவர்கணே ரசுரர்பல்லோ ரனற்படு பஞ்சுத்துய்போற்
சவமென வீந்தார்பான்மை சலதியின் மறைக்குமேலா
முவமைதீ ரரிக்கஞ்சாதா ரொருவருண் டென்னப்போமோ
திவளொளி யாழிமாயற் செயிக்கவுன் டுபாயமொன்றே. (கஅகூ)

ஈதலா லவற்செயித்தற்கெண்ணிலோ ருபாயமில்லை
தாதவி ழவன்பொற்கஞ்சச் சரணலாற் சரணின்றென்னப்
போதநா ரணன்றுட்டஞ்சம் பொருந்தவிக் கணந்தொடங்கி
யாதரத் தவனேநானு மபேதமெய் துகவென்னெஞ்சே. (கக௦)

நச்சிய நல்குநாரா யணயநமவென நண்ணு
மூச்சித மறையென்னுள்ளத் துறுமணி யொளிபோலென்றும்
பொய்ச்சிடா தொளிர்கமாயற் பூசனை புரிவானுள்ளத்
திச்சிக்குஞ் செயலான்மேன்மே லின்பலாற் றுன்பமுண்டோ. (கககூக)

செயலிதா லரிநாணுகச் செய்குவ னவன்றன்பூசை
யியலுட லவன்சொரூப மிதனிடை யியக்கமில்லா
வியல்பரா பரமேதோன்றும் வெளிவளி யியக்கத்தானே
நயவிரண் டென்னநாரா யணனென நண்ணுமன்றே. (கககூஉ)

அசைதரு பவனந்தானே யற்றெடுங் கிடுமேனுனே
யிசையுமன் னவனுய்நிற்றற் கெள்ளள வையமில்லை
மிசையிதீண் டெவ்வாறென்னில் வெளியசைந் திடிற்காற்றின்றேல்
விசையிலா காயமாக விளங்கிடும் பான்மைத்தன்றே. (கககூங)

போதமற் றிட்டகாலம் பூரணப் பதியேயென்றும்
போதமுற் றிட்டபோதிற் புன்மைசால் பசுவேயென்று
மோதொரு பொருடானென்பா லுபயமா யோர்காலின்று
மாதலின் மனமடங்க வாற்றுவன் பூசையென்றான். (கககூச)

நாதமா முடிமேலோங்கு நாரண னுவக்கும்வண்ண
மோதள விலாப்பொருட்கொ டுன்னுப சாரப்பூசை
யாதரத் தியற்றுவேனென் றகத்திடைப் புறமேபோலச்
சோதிமா மணிக்கலன்க டேதீ பஞ்செறித்து. (கககூரு)

மணியணி பைம்பொன்னுடை வாட்டமின் மலரோடன்னங்
கணிதமில் பொருள்கொண்டேதன் கருத்தினு ராதித்தபோற்
றணிவரு மன்பினேடோர் தலமிசைப் பகிரங்கத்தும்
பணியணை யவற்பதிட்டை பண்ணுபு பூசித்தானல். (கககூசு)

அகத்தினிற் கண்டவாறே யகண்டவான் பரத்தைக்கண்டு
சகத்தினும் பூசைசெய்வோன் றன்மைதேர் தகுவர்யாரும்
முகத்ததீக் குணம்விட்டன்பான் முகுந்தனைப் பூசைசெய்தார்
மகத்துவ விறைபண்பன்றோ மற்றுளார் பெறுவதம்மா. (கககூஎ)

திதிபுதல் வருநற்கோவுஞ் சினந்தவிர்ந் தரிதாட்போற்றும்
புதியமெய்ப் பத்தராகும் புதுமைதேர் வலாரிதானுந்
துதிபெறுஞ் சுரருங்கண்டுட் டுணுக்கமெய் தினர்களாகி
யதிபவ ரடிமையெம்மாற் காவதென் னெனவயிர்த்தார். (கககூஅ)

ஐயபாற் கடன்மேல்யோக வனந்தல்செ யரிமுற்சென் றிட்
டையரு மரசுமன்பா லடிதொழு தறைகின்றார்கள்
வெய்யரா மசுரருன்னை விரும்பிநின் வடிவமானர்
பொய்யவஞ் சகமென்றோர்ந்தேம் புந்திமீ தீதென்னென்னே. (கசுசு)

கொடியவெங் கொலைத்தைதேயர் குணங்களெங் கேமேலான
முடிவதாம் பிறப்பதெங்கே முகுந்தன்பத் திப்பேறெங்கே
கடியவன் கயவர்கட்கு நற்குணங் கலவாதென்று
னெடியமா லுனதுபத்தி நேருமோ நீசர்க்கன்றே. (உ00)

பயன்பெறு வாரென்மாற்றம் பகர்வது பயனில்கூற்ற
நயன்படு தவந்தான்முற்செய் தவத்தர்க்கேநண் ணுமென்றாற்
கயம்படு மிவரிங்ஙோன்பாற் காணலாம் பயனுமுண்டோ
வியன்படு செயலீதல்லால் வேறுமுண் டென்னலாமோ. (உ0க)

என்றவின் னவர்கட்கெம்மா னிறுக்குவ னஞ்சன்மின்னீ
ரொன்றருட் பிரகலாத னுதித்தலி னுதிப்புற்றுள்ளார்
வென்றமா யையினுன்ஞான விழியினல் வீட்டைக்காண்பார்
மன்றவென் கிளவிக்கைய மருவவேண் டியதின்றின்றே. (உ0உ)

நல்லவர் தீயோர்யார்க்கு நல்கிடுஞ் செயல்பயன்க
ளல்லவென் றுரைத்தலுண்மை யறிவிலார் கொள்கையானீ
ரெல்லவ ரும்போமென்றிட் டெம்பிரான் மறைதலோடும்
புல்லருஞ் சுரர்தைதேயர்ப் பொருந்தினர் தமரென்றம்மா. (உ0ங)

என்புரு கிடுமெய்ப்பத்தி கொண்டிறை யிடையீடின்றி
யன்புமிக் கரிதன்பொற்றா ளசுரர்வேக் தருச்சித்திட்டான்
வன்புமுக் காணங்கொண்டும் வயக்கிடும் பூசைப்பண்பா
லின்புணர் வொடுவிராக மிதயமீ தெழுந்தவன்றே. (உ0ச)

சாதன முதற்குணங்கள் சாலவுற் றிறைவனெஞ்சிற்
காதல்செய் போகாபேட்சைக் கட்டமுற் றறக்கழிந்த
சித*மச் சிகையின்முன்போற் சேர்ந்திடா வெண்ணெய்போல
மேதகு செயலினுள்ளம் வேறுறப் பிறிந்ததன்றே. (உ0ரு)

பூரண வடிவத்துடும் போதவான் பொருள்கண்மீதுஞ்
சாரலின் றாகிமேலோன் றன்னுளங் திரியும்பான்மை
சிரவிர் சிவசாட்சித் திருநெடு மாலோர்ந்தன்னே
ஞரதி செய்யுமொப்பி லாலயத் தடைந்தான்மன்னே. (உ0சு)

வேறு

தண்ணோர்கருணைச் சலதியிடைத் தரங்கநிரையுண் டெழுந்திடுங்கார்
விண்ணோர்கதிர்கான் மணிவண்ண விமலனருள்சால் விழியொடுந்தன்
கண்ணோர்பொருந்து மொப்பில்பெருங் காட்சிதெரிந்து களிமதுரப்
பண்ணோர்பலதுத் தியத்திரள்கள் பிரகலாதன் பகர்கின்றான். (உ0எ)

---

* மச்சிகை - மோர்.

சிருட்டிமுதலாந் தொழிலியற்றுந்தேவர்க்கரிய தேவமல
விருட்டிற்கிடந்து செய்வகையீ தென்றேயறியா திழிவேன்றன்
பொருட்டினிரங்கிச் சுரர்காணப் போகாவருட்சே வையையடியேன்
றிருட்டிகாணப் புரிந்தாய்க்கியான் செய்யுங்கைமா றென்றுளதோ. ()

மூலமறையா கமங்களெலா மொழியாவருமைப் பெருஞ்சத்தே
ஞாலமிசையி லுதித்தொடுங்கா ஞானபானு வாஞ்சித்தே
சாலவுணரு முயிர்கடொறுந் தழைத்தபேரா னந்தமே
போலவுரைத்தற் கொன்றில்லாப் பொருளேபோற்றிபோற்றியே. (உ0கூ)

மாயைப்பொருளைப் போற்றிடுவார் மதியிற்றெளியாச் செம்பொருளே
வேயைப்பொருந்தோ ளியர்கண்வலை வீழ்வோரறியா மெய்யின்பே
சேயைப்பெறலான் முத்தியென்போர் சேராத்தனிவீட் டியனிறைவே
பேயைப்புரைவேற் கருளளித்த பெரியோய்நின்றாள் போற்றியே.(உக0)

பத்திக்கடலி னின்றெழுமோர் பரமானந்தத் தெள்ளமுதே
தித்தித்துண்ணுந் தொறுமின்பந் தெவிட்டாதோங்குஞ் செழுங்கனியே
நத்தித்தொழும்பே ரன்பினர்தந் நாட்டத்திரைகொ ணன்மணியே
முத்திச்சுகமீந் தருளவரு முதல்வாபோற்றி போற்றியே. (உகக)

மாயமனமா மிரும்பினைப்பொன் மதியாப்புரியும் வேதகமே
காயகரணங் கடந்தபொருட் காட்டும்பெருஞ்சித் தஞ்சனமே
மூயமலவல் லிருளறவே முடிக்குஞானசூரியனே
மேயவருள்பொங் கிடுங்கமல விழியாய்போற்றி போற்றியே. (உகஉ)

வேறு

என்பதாந் துதிகள்சால விசைத்திடக் கருணைபொங்கி
யன்பநீ பிறப்போடீறின் றும்வரங் கோடியென்ன
முன்பனே தனுமனைத்துண் முளரிவாழ் முதன்மைத்தேவே
துன்பமில் பதமேதஃதிற் றேய்த்தருள் சோத்தமென்றான். (உகங)

சித்தவி காரந்தீர்ந்துட் டிகழ்பர சுகத்தைப்பெற்று
மெத்தவி காரத்தன்மை மேல்விசா ரத்தைமேவென்
றத்தமத் தகஞ்செய்தங்க ணரிமறைந் திடுதலோடு
புத்தலர் தூவிப்பூசை புரிந்தனன் பொருவிலாதான். (உகச)

கடலெழுந் திரையேபோலக் காகுத்தன் மறைந்தபின்னர்
மடல்கொள்பத் மாசனத்தின் மருவிநா ரணனைப்போற்றி
யுடலுறு நிலைமையீந்தா னுற்பவ மொழிக்குமூர்த்தி
நடலைதீர் நமையாரென்ன நாடுது நாமென்றுன்னு. (உகரு)

யான்முன ளெவனுனேனின் றிச்சகா டம்பரத்தி
லூன்முன நின்றிருந்திட் டோடியின் பொடுதுன்புற்றேன்
மான்முனஞ் சகமல்லேன்கன் மலமரம் புன்மண்ணென்னத்
தான்முனஞ் சடமாமிந்தச் சகத்தைநா னென்னலாமோ. (உகசு)

இல்லதி னுதித்துமுட மாயியங் குவதாய்க்காற்றிற்
சில்லநா ளினினசிக்குந் தேகமாஞ் சடங்கொல்யான்று
னில்லரும் பொய்க்கேதோன்றி நிர்ாகார மாயோர்வின்றிப்
புல்லறி வார்காதூணைப் பொன்றுலி தானுனமோ. (உ௧௭)

தோலிலன் றிக்காணுதாய்த் தோற்றமாத் திரையிற்பொன்று
மேலிய துணர்வலாதுன் மேவறு பரிசநானே
காவினி லசைந்தசத்தாய்க் காதன்மிக் கிறையின்மாயுந்
தாலினா ணும்பதார்த்தந் தருஞ்சடச் சுவைநான்கொல்லோ. (உ௧௮)

கணத்திறு ளேயந்தன்னிற் காட்சிதன் னிற்பற்றுகிப்
புணர்ப்பில்காண் பான்கட்பொன்றும் போதமி லொளிநானேகொல்
குணக்குமூக் கசேதனத்தாற் குறிப்பதாய்த் தனக்கோர்வின்றி
மணக்குநொய் தாமியற்கை மயற்சடக் கந்தநானே. (உ௧௯)

எனதுட னினைவெலாமற் றிளைப்பொடைம் பொறிமாலற்றே
யனகஞா னமாய்த்தொழிற்றீர்ந் தறிதரீர் ஞானமேயாய்க்
கனவகம் புறத்துமோர்கிட் களச்சத்தாந் தன்மைத்தாகிச்
சனனமீ றில்லாவென்னைச் சரதமாய் நான்கண்டேனே. (உ௨0)

ஆவவிப் பொழுதிலென்னை யறிமுறை மையினன்கோர்ந்தே
னேவறு விகற்பந்தீர்ந்தோ ருள்ளிய வுண்மையீதே
தாவற நிறைந்தநானுந் தத்துவத் திற்பல்பாரு
மேவரி யெழுவாயாகக் கடம்வரை விளக்கமேய்ந்த. (உ௨௧)

உள்ளொளி யிடைப்புலிங்க மொளிர்தல்போற் பொறிகளைந்தும்
விள்ளொரொன் றுணைகொடன்றே விசித்திரத் திகழ்ச்சிசான்ற
கள்ளொழு கம்புயத்தோன் கற்பத்தின் முடிவிற்சீவர்
துள்ளொழி காலமீதுந் துலங்குமென் சொருபமம்மா. (உ௨௨)

இவனவ னனென்றுட்பற் றெண்ணமெங் கேயெண்ணில்லாப்
புவனமூ டுந்தோய்தேசாம் போதமெய் யுறுமெனக்குக்
கவர்மனே பாவமுண்டோ கருதிடத் தீறிலின்பத்
துவமைதீ ருபசாந்தப்பே ருணர்வதாங் கண்ணேயெங்கும். (உ௨௩)

நோக்கப்பட் டநோக்கமெல்லா நுண்மைஞா னத்தோர்நோக்கே
யாக்கப்பட் டசிவருள்ளா யறிதலி லறிவேயாகித்
தாக்கப்பட் டதொன்றிலாவோர் தத்வமாய்த் தன்னையன்றிப்
போக்கப்பட் டதில்லாவுண்மைப் பொருளையன்பொடுதுதிப்பாம். (உ௨௪)

அறநொய்தாய்ச் சமமாய்மிக்க தீதமாய் விகாரமின்று
யிறவுட னிகழ்வெதிர்ப்பென் றியம்புகா லமிலதாகிப்
பிறவுனு நினைவொன்றின்றிப் பேதமி லுணர்வினாலே
நிறைதரு சத்தியெல்லா நேர்செயப் பட்டவன்றே. (உ௨௫)

வேறு

ஆசையொன்றி லறிவினுக்கீண் டான்மாவொழிந்து காட்சியிலே
பேசுமுரைக்க திதசமம் பிதற்றுமொழியாற் றேன்றுது
தேசுநிறைவாய்ப் பொய்ப்பொருள்போற் சிறிதாயழியா நிராசையெனுந்
தூசுபுனேயிற் சமந்தானே தோன்றுமேனே தோன்றிடல்போல். (உஉசு)

தொழிலுந்தொழிலி லாமையுமாய்த் துயங்குந்தொழிலிற் றேயுமறி
விழியும்வலேயிற் பட்சியிற்பற் றெய்தியிளக்கு மாதலினுன்
மொழியிராகத் துவேசத்தான் முளைக்குந்தொந்த மபக்கத்தா
லொழிவிலுயிர்க ளெல்லாமை யுறுமீப்போலீண் டுழலுமே. (உஉஎ)

மன்னுந்தகைசா லுயிரனேத்தின் மனத்திலுறைவாய் நெடும்பகற்பின்
றன்னுந்தகைபெற் றேனுனேயித் தூயபதத்தை யார்பெற்று
ருன்னுந்தகையா யுணர்வித்தா யுணரநின்றுய் விகற்பமறப்
பின்னுந்தகையா யாவையுமாம் பெற்றியாய்நிற் பேணுவனே. (உஉஅ)

நானேதாஞ மத்துவித ஞானவடிவா யீறின்றித்
தானேயாகி யகண்டமதாய்த் தழைக்கும்பரதத் துவமாமெங்
கோனேயுன்னேத் தொழுகின்றேன் கொண்டன்மறையாக் குளிர்மதிபோ
லூனேர்மனத்தான் மறைவுபடா வொளியாமுருவே நினேப்பணிவேன்.()

நினேவென்றிலகு மறைப்பென்று நேராச்சுத்த வெளியாகி
யனேயவின்ப வடிவினிற்று ஞகப்பிரகா சித்தமையென்
னினேவில்வடிவை யான்பணிகே னிருந்துநடந்துஞ் சாந்தமுற்று
மனேயதனேய திலதாகு மனேத்தும்புரிந்தும் பற்றிலதாம். (உகூ0)

வேறு

தளிர்களே யசைக்குங்காற்றின் றன்மைபோற் கரணமுற்று
மொளிர்தரு ஞானமாகி யோங்கிடும் புமானசைக்கு
மிளிர்வது வன்னடத்தும் வேகவா சியினிற்றன்னேர்
நளிர்துயர்ப் பொறிகளெல்லா நனியவன் பரிக்குமென்றும். (உகூக)

தேடப் படுகிற்போன்றுத் தியஞ்செயப் படுகிற்போனுண்
ணுடிடப் படுகிற்போனிந் நாதனே யிவனுனசை
மோடிய தின்னேனேநன் கோர்கிற்பே னெளிதிற்சேர்வோன்
கூடிய விவனேயெல்லோர் குளிர்மனக் கமலவண்டே. (உகூஉ)

மேவரு மெய்போகத்து மெனக்கிலே விருப்புவர்ப்பீண்
டியாவதெய் துவதஃதேய்க யாதுபோ குமதுபோக
பாவவஞ் ஞானத்தெவ்வாற் பழுதறுவி வேகமென்னு
மேவமில் பொருளிழுந்தே னின்றறி வாற்பெற்றேனுல். (உகூகூ)

துனேமனத் தாலஃதோவித் துயர்செயாங் காரந்தீர்ந்தென்
னினேவினு லதைமாய்த்தாடா நிலேயொர்கே வலத்தினின்றேன்
வினேநினே வகந்தையற்று மனமற்று வினேயொன்றின்றித்
தனேநேர்கே வலத்தொடர்ச்சித் தத்துவத் தென்மெய்மேவும். (உகூச)

காதலாம் யாப்பறுத்துக் காயமென் கூடந்தீர்ந்து
வீதலாங் காரமென்னும் வீயெவ ணேடிற்றேகொ
லேதமி லீனாணீ யென்னவொன் றிரண்டதாக
வோதலான் மீண்டுமொன்று யுயர்ந்தவத் துவிதமானேம். (உகரு)

ஊழியுல கிற்சிரெல்லா மேய்ந்துநீ யொருவனின்றேல்
விழியிலார்க் கெழில்கூர்மின்னுர் வியனென விளங்கிடாதாற்
கழியொளி சயமெய்ச்சாந்திக் கண்ணவசயநால்வேத
மொழிமுடி சயவவ்வேத மூளையிடஞ்சயச யென்று. (உகசு)

பிறப்பவ சயவஃதில்லாப் பெரியவசய வெந்நாளு
மிறப்பவ சயவெக்காலு மிறப்பிலாய் சயவென்றன்பிற்
சிறப்புறு மனத்தாற்சிந்தை செய்திர ணியன்றவற்சேய்
பறப்புறும் விகற்பந்தீர்ந்த பரசுகச் சமாதிதோய்ந்தான். (உகஎ)

நிருவிகற் பசமாதிக்க ணேவிய நிலைமைபெற்று
வருடமை யாயிரங்கன் மாய்ந்துமா றுநோக்கானுன்
குருமணிப் பாதலத்திற் கோவிலா மையிற்றைதேயர்
கருடனு தியபுட்கொள்ளக் கலங்குமீ னினத்திலெய்த்தார். (உகஅ)

ஆவதோர் காலந்தன்னி லகிலாண்ட வியல்பனைத்துங்
காவல்செய் திருமால்யாவுங் கண்டறி துயில்செய்பெம்மான்
றாவலார் கார்காலத்திற் றுயங்குபா தலத்தின்றன்மை
சேவல்கூ ரருளுள்ளத்திற் சிந்தனை செய்தான்மன்னோ. (உகக)

பேதமில் சாந்திபாதம் பிரகலா தன்பெற்றோங்க
வேதனர் சிருட்டியற்ற வெய்யவாட் படைகைப்பெற்ற
வேததை தேயர்தங்க ளிகலிலை யாகிலும்பர்
போதமார் சாந்திதோய்ந்து பொருவில்வீ டெய்துவாரால். (உச0)

தேவரத் தகையராகிற் செந்தழன் மகந்தவச்சீர்
போவதாய்ப் பயன்களொன்றும் பொருந்திடா தெவையும்பொன்று
மோவவில்கிரியைமாயு மாய்ந்திடி லுலகொடுங்குங்
கேவலத்துலகொடுங்கிற் கேடுறுஞ் சிருட்டியன்றே. (உசக)

இன்னநற் சிருட்டியின்றே விரவியிந் தொடுங்குமற்றுற்
பின்னர்நம் வடிவுந்தீர்ந்து பேதமில் பதத்தைச்சார்வேஞ்
சொன்னபோ தன்றிநாப்பட் டொல்லுல கெல்லாமாயி
லென்னவோர் பயனிங்குண்டா விதற்குா முபாயந் தேர்ந்தாம். (உசஉ)

தானவர் செழிக்கவற்றுற் சமருண்டாஞ் சமருண்டாகில்
வானவ ருள்ளாரர்வர் மகந்தவ மவராலுண்டா
மானதாற் சிருட்டியுண்டா மன்றெனி லின்றுமஃதா
லூனமில் பிரகலாத னூழியும் வாழி வாழி. (உசங)

பரமமா மீசனன்பிற் பரித்திடுங் கடவுணீதி
திரமுற விவ்வாறுள்ளஞ் செய்தருள் செங்கட்கோமா
னரவணை துறந்திறைக்கு ளசுரர்கோ னட்சிசான்ற
பரவுபல் வளம்பழுத்த பாதல வுலகஞ்சேர்ந்தான். (உசச)

கருடவா கனத்தின்மீதிற் கவரிசால் கமலச்செங்கைத்
திருமகள் வலத்தின்மேவத் திறல்கொளேம் படைசிறப்பத்
தருமரு வுலகுள்ளார்க டவமுனி வரர்கள்போற்ற
மருவினன் பிரகலாதன் மனத்துணர் வுறவென்றுன்னி. (உசரு)

வலம்புரிச் சங்கம்வாய்வைத் ததிர்த்தலும் வானத்தோடு
நிலம்பிளந் திட்டவங்க ணேர்கிரி யினங்கள்போழ்ந்த
பலம்பயி லோதையத்தைப் பைப்பைய வறிந்தானம்ம
நலம்பயி றற்பதத்தி னண்ணிய வசுரர்கோமான். (உசசு)

பிரமரந் திரத்தினின்ற பிராணசத் துப்பெயர்ந்து
விரவுநா டிகளிற்போந்து மெய்யெலா மேவலோடும்
பரவகண் டாகாரப்பேர்ப் பதியிடைப் பதியாநின்ற
பிரகலா தன்கொள்கின்றான் பெற்றமுற் றேற்றமிற்றால். (உசஎ)

அறிவுதோன் றியதான்மாவெ னுடியி னீழலென்ன
வறிவதாம் பொருள்கடம்மை யறிவது நோக்கலோடும்
பிறிதுறு பொருள்களாலே பெற்றது மனமாந்தன்மை
பிறிவிலா னனமிரண்டு பெறுதல்போன் *முகுரத்தாலே. (உசஅ)

உள்ளமங் கற்பந்தோன்ற லும்முடன் முகைவிரிந்த
கள்ளவி ழுற்பலம்போன் மெல்லெனக் கண்மலர்ந்த
வள்ளசிங் கம்பொறிப்பா லுணர்வுற்று நிறைதலாலே
துள்ளிய பிராணபானந் தோய்தரு பவனமாதோ. (உசகூ)

அமைதென்கா லுற்றகஞ்சத் தலரென வசைவுகொண்டா
னிமையிடை யளவைதன்னி லெழுந்தது தடித்துநெஞ்சஞ்
சமைவுறத் தெரிபிராணன் கண்மன முடறயங்கக்
கமைவுளான் விளங்குந்தன்மை கண்டனன் கமலக்கண்ணன். (உரு0)

விகசிதப் பார்வைசான்ற விழிகளன் னவன்றனுள்ளஞ்
சகநிலே தோய்ந்ததாமத் ததியின்மற் றவனேமாய
னகநிறை யருளானேக்கி யருள்புரி கின்றான்றாயோய்
மகபதி புகழுநின்சீர் மனத்திடை மதித்துநோக்காய். (உருக)

உடலைநோக் குதிகாலத்தல் லாதிடை யுன்னுடம்பை
விடநினைத் திடலாங்கொல்லோ விடுதல்பற் றுதல்சங்கற்பம்
படர்கிலா வுனக்கபாவம் பாவமுமுடலி டத்திற்
றொடரிலென் சேதந்துயோ யெழுதியா விருத்தியானீ. (உருஉ)

---

* முகுரம் - கண்ணாடி.

சீவன்முத் தனுகிநீயித் தேகத்தினேடுஞ் செங்கோற்
காவன்மேய்ப் பாரந்தீர்ந்து கற்பமட் டிருந்துவாழ்வாய்
பாவக னேடொரு பரிதிசுட் டிடவண்டங்கள்
யாவதுங் கெடாதிருப்ப விறப்பதென் வாளாங்கையா. (உருங)

ஓங்குமா சாபாசத்தி லுறப்பிணிப் புண்டெந்நாளும்
வீங்குமுள் ளுணர்வதன்பால் வேகமுற் றோடிநொந்து
தாங்குமச் செயலானெஞ்சஞ் சலிப்பவர் தங்கட்கன்றோ
தீங்குசெய் மாரணந்தான் சிறப்பது மிகச்செகத்தில். (உருச)

அகங்காரத் துடனேபற்றென் பவைகண்முற் றறுத்தனைத்துஞ்
சுகந்தரு சமமாக்கொண்டோர்க் காயுளேசுகமதாகு
முகந்தரா கத்துவேச மோவிகன் மதியினாலே
செகங்களின் கரியாநின்றோர்க் காயுளே சிறப்பதாகும். (உருரு)

பற்றுவான் பற்றுகின்ற பொருளிவை பந்தமாகு
மற்றபோ துபசாந்தந்தா னடைந்திடு மதையகத்திற்
பெற்றபோ ததுவீடென்னும் பெயர்பெறு மதனையேய்ந்த
வெற்றிசால் வீரசிங்கா தனத்தனு விளங்கிமாதோ. (உருசு)

ஒலிசெய்பாஞ் சசன்னியத்தி னேசைகேட் டிங்கடைந்த
மலிபுகழ்ச் சுரர்களெல்லா மங்கலப் பணிசெய்தேத்தப்
பொலிமுடி யுனக்குவல்லே புனைந்திடு கின்றேன்யானே
மெலிதரா தாழிமட்டும் வேந்தனுப் வாழ்தியென்றே. (உருஎ)

மங்கலப் புனல்கொணர்ந்து வாசமஞ் சனஞ்செய்வித்துச்
சங்கவி ராழியேந்துந் தன்திருக் கரத்தாற்றானே
புங்கவத் திரள்கள்போற்றப் பொன்முடி சூட்டியன்பாற்
செங்கண்மால் பிரகலாதன் றேரவின் னனசொல்கின்றான். (உருஅ)

பொன்னுலா மேருவெற்பும் புவனமுமினனுமிந்து
மன்னுநா ளளவுநீயிம் மன்னர சியற்றிவாழ்ந்து
பின்னுலாம் பிறப்பிறப்புப் பெற்றிடா தகண்டாகார
மென்னுநா டாள்வாயென்ன விசைத்துடன் மறைந்தான்மன்னே. ()

தான்பெறும் பேறெல்லோருந் தாங்கிடத் தண்மைமிக்க
கான்பெறுந் துளவமாலைக் கடவுடன் னுசிகொண்டு
வேன்பெறுஞ் சீவன்முத்தி மேவிவாழ் பிரகலாதன்
வான்பெறுஞ் செய்திக்கோர்பா வழுத்திடன் மிகையாமன்றே. (உசு0)

### வேறு

பகையாரசுரக் குலத்திலுடல் பரித்துநினது பதுமமலர்ப்
பாதத்துணையாந் துணைகொண்டு பாவியாகு மிரணியன்றான்
மிகையார்கோபங் கொடுபுரியும் வெய்யசெயற்கு வெருளாதுள்
விரும்பும்படிநின் றிருக்காட்சி மேவும்பிரக லாதனிகர்

தகையார்பத்தி பெற்றிடநின் சரணஞ்சரண மாகினேன்
றவமில்லவனென் றகற்றிலருட் சலதியெனும்பே ருறுங்கொல்லோ
விகமோடுயர்மெய்ப் பரமுமன்பர்க் கினிதீந்தருள்வான் றிருவுருவா
யிராமானந்தப்பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உகூக)

பிரகலாதகதிமுற்றிற்று.

ஆ. கவி ககூ0கூ

---

பதினேழாவது

# நிம்பாதித்தியகதி

கம்பாழி யேந்தியகைக் காகுத்தன் கஞ்சமலர்ச்
செம்பாதத் துணையகத்திற் சேர்பிரக லாதனருட்
டெம்பார்நற் சரிதத்திற் சிறிதுநுவன் றேனினிமே
னிம்பாதித் தியன்றனரு ணிலையினிற்சற் றுரைப்பேனே. (க)

தரங்குலவு புராணங்கள் சாற்றிமுடித் திடவமையா
வரங்குலவு பத்தர்பெரு மான்மியங்க டமைக்கன்ன
பரம்பரையா வுணர்ந்தனவும் பகர்கின்றேன்பார்மிசைவா
ழுரங்குலவு மன்பினர்க ளுவகைமலிந் திடுமாறே. (உ)

இலகுகலி யுகத்தினிடை யியலடுத்த காலத்தி
னிலவருட்சீர்ப் பத்தர்கதை நிகரில்வியா சத்திறலோன்
குலவுபவு டியநாமங் கொண்டபுரா ணத்தின்க
ணலமுறச்சொற் றிலன்பனுவ னண்ணும்விரி வஞ்சியரோ. (ங)

பகருமிது போழ்தினுமப் பான்மையருட் பத்தரின
நிகழ்தருகின் றாரினிமே னேருமெதிர் காலத்துஞ்
சகமிசைமா னிடரானுர்ச் சன்மார்க்க நெறிப்புகுப்பான்
றகவுதிப்பா ரெனன்மேலோர் தாமறுக்காச் சத்தியமே. (ச)

விசேடித்துப் பத்தியினை வேதவியா சப்பெரியோ
னசேடித்து மலத்தொடர்பா லார்ப்புண்டு ளறிவிழந்து
நிசேதத்தீத் தொழிற்புரியு நிலையரையும் பவங்கடத்திச்
சுசேடித்த பரிபாகந் தோய்தருவான் றேற்றிடவே. (ரு)

சபரிகசேந் திரன்சரிதந் தனைத்திருட்டாந் தப்படுத்தி
விபவமுறச் சொற்றுளதான் மேதகுவன் னுச்சிரமச்
சுபவழிச்செல் வார்க்கெல்லாந் தோய்பத்தி மாத்திரத்தா
னபமுறுமெய்க் கதியின்ப நண்ணுமெளி தினின்மாதோ. (சு)

ஆதலின்மெய்ப் பத்திநிலை யவாச்சியமென் றிடலல்லா
லோதளவைத் தன்றதனு லுற்றிடுதங் தருமத்தின்
காதலருக் கன்னதுவே கற்பகத்தா ருவுக்கிணையால்
விதனுறி னுந்தருமம் விடாரறிவின் மிக்கோரே. (எ)

சிறப்புறுதங் தருமத்திற் றேகம்விட நேரினுட
னிறப்புறுவார்க் கிவ்வுலகி னிசையுமறு மையினின்பம்
விறப்புறுவான் கதிதானு மேவுமத னுன்மெய்யுயிர்க்
குறப்படுநற் றுணையாகு மொழுக்கமிக வுயர்வாமால். (அ)

துன்னியவெத் தருமமுமெய்ச் சுகமளிக்கு மென்னவற
மன்னியவா ரணங்களெலா மதித்துரைக்கும் வாய்மையினு
லன்னியமேற் றன்மம்புக் கமைவானி லமைந்திடுதன்
மின்னியற்றன் மங்கைவிடான் மேலென்றுன் பகவனரோ. (கூ)

ஓட்டியதன் குலவொழுக்க முபேட்சித்து மேனிலையி
லெட்டியநற் றகையனையு மெழின்மலியு மிராகவன்றுன்
றட்டில்குல தருமத்தைத் தணவாதன் னவன்றலையை
வெட்டியதாஞ் சரிதமுமிம் மேதினியின் மீதுளதே. (க0)

ஆச்சிரம தருமமெலா மறிவுடையோ ராருயிர்கண்
மீச்செலவேற் படுத்துளதான் மேதையொரு வன்பிறழிற்
பேய்ச்சரியா மற்றவரும் பிழைத்துமுறை தீர்குவரென்
றோச்சிடுசெங் கோன்முறைகொண் டுஞற்றினனி ராகவனே. (கக)

பண்டழைநா ரதன்சனகன் முதலாகப் பகர்கின்ற
விண்டழைசீர் பெற்றதவ வித்தகரும்வேதநுவல்
வண்டழைதங் தருமத்தின் வழுவாது வாழ்ந்தனரேன்
மண்டழைமா னிடர்தணப்பின் வழுவல்லான் மதியாமோ. (கஉ)

தன்குலஞ்சா றருமத்திற் றாழ்வொன்று கண்டிடுமேல்
வன்குலவு குணத்தொருவன் வயக்கியதென் றதைநீத்து
மன்குலவு நன்னெறியின் மற்றையருஞ் செலவுய்ப்போர்
நன்குலவு மதியரென னுன்மறையின் றுணிபாமால். (கஙு)

யாவர்சுய கன்மத்தி னிழுக்காத வியல்பினரோ
வாவரிடம் பத்திநிலை யமையும்வலி தினிலிதனுன்
மேவருமன் னவர்பாவ புண்ணியமு மேனியுட
னேவருபந் தங்களறச் சீவன்முத்தி யெய்துவரால். (கச)

எத்தகையார் தாம்பத்தி யேய்ந்தவங்கோ லத்தியலும்
வித்தனைய தன்மைபெற மேவுகில ரன்னவர்க்கிப்
பத்தருண் மான்மியமாப் பகர்தருகற் பகத்தருவே
பொத்தமையப் புரிந்திடுமா லோரைய மிதற்கின்றே. (கரு)

சேல்வடிவா னுன்சமய சித்தாந்தக் கருத்தாக்க
னல்வர்களுண் டவரேயிஞ் ஞாலமிசைப் பத்திநலஞ்
சால்வகைசெய் தாரவர்பேர் சாற்றிடில்விட் டுணுசாமி
வால்வகைநிம் பாதித்தன் மத்துவா சாரியனே. (கசு)

காரவதைத்தோன் றூட்பத்திக் கனவயிரா கம்படைத்திட்
டாரகிகர்புன் சமயிகட மாற்றலற மாற்றுமிக
விராமானு சத்திருப்பே ரேய்ந்தவிர்ந்தோ னின்னேரே
பாரவுபுகழ்ப் பாகவதர் பாரம்பரைக்கு முதலானர். (கஎ)

விட்டுணுசா மியின்சீடன் விளங்குகிருட் டிணதாசன்
கிட்டுறுமற் றவன்சீடர் கில்காக்கி ரப்பெயரார்
கட்டுறுதே வகேமன்கங் காகல்யா ணகந்தரனே
விட்டுணுதா சன்னிரங்கன் மேவுபுகழ் வாமனனே. (கஅ)

வல்லபா சார்யனிவன் வங்கிசத்தில் வந்துதித்தோன்
மல்லவிரா மானுசன்மா ணுக்கர்தே வாசார்யன்
வல்லரிய மானந்தன் மகாமகிசன் மாட்சிமைசா
னல்லவிரா மானந்த னுருமிவர் நால்வர்களே. (கசு)

இராமானந் தன்றனக்கன் பியலனந்தா னந்தனலம்
விராவுபவா னந்தனன்பு விரிசுதபத் மாவதியே
பராவுகபீர் சுகவாசு பகருநர கரிபீபா
வுராவியறேய் ரவிதாச னுறுசீட ராவமைந்தார். (உ0)

தயாமலியன் னவர்சீடர் தரணியின்மற் றவர்புகழில்
வியாபகமுற் றுளரிவரின் மேதகையோ னுத்துலங்கு
நியாசவா தித்தியனே னீள்புகழோ னன் னவன்செய்
சுயானுபவ வாடலொன்று சொல்வன்முதற் படமாதோ. (உக)

வேறு

செம்பாவைக்குரா மீந்தருண்மாவிரு சேவடிநற்றுணையா
நம்பார்வக்கடன் மூழ்குபர்பத்தர்த நாயகமாநிகழு
நிம்பாதித்திய நாமனகர்க்கிடை நிலவுற்றிடுநாளின்
மொய்ம்பார்வேதவி லக்குவிலக்கொரு முனிவனவண்வந்தான். (உஉ)

வந்திடுசெய்தியை யாண்டையர்வாய்பகர் மாற்றங்கொடுதேறி
யுந்திடுமன்புட னன்னவன்வாழ்வயி னுற்றன்பொடுதாழ்ந்தே
நொந்திடுமாறுசெய் வன்பசிதீர்தர நுகரச்செயுமாறே
முந்திடுசீர்திகழ் தன்மனைமாடுற முறையிற்கொடுபோனன். (உங)

இல்லையடைந்தொரு தன்னடியானுட னிவர்நுங்கிடுமாறே
வல்லையினிற்றிரு வமுதுவயக்கென மாணக்கன்கனிவோ
டொல்லைபல்சாதன சேகரமாற்றியு வக்கும்படிசெய்தா
னெல்லையிலாதவன் மேல்கடல்வாயுறு மெல்லியுமைந்ததுவே, (உச

திருவமுதச் செயன் முடிவுறுமத்ததி சேர்முனிவன்பான்மேய்ப்
பருகவழைத்திடு காலையில்த்தம பதமுற்றிடுநீரான்
மருவுணவுட்கொள றவவிரதத்தினர் மரபன்றதனலே
பருதியுதித்திடு பிறகுபுசித்துறு பசிதீர்குவனென்ருன். (உரு)

வேதவிதிக்கனு மாறுதலற்றமை மேன்மைபடைத்துளதோர்
மாதவனேதுசொ னிம்பாதித்தியன் வார்செவிசார்தலுமே
போதமனத்தில்வ ருத்தமிகுத்துறு புவனத்துயிர்யாவும்
வேதனையற்றுயு மாதிதியைப்புரி விமலன்பதநாடி. (உசு)

சக்கரமொன்றுகை பெற்றிடுகிட்டின தாமோதரமாயா
மிக்கபசிப்பிணி யுற்றெேன்மனைப்புடை மேவும்பெரியார்தாம்
பக்கணமொக்கிடு தற்கிகலாவெனர் பாவந்தனைமானப்
புக்கவிருட்டற மோதுபுநீயருள் புரிவாய்கடிதென்ன. (உஎ)

ஓதியமுற்படு வெண்ணெயினெஞ்சுரு கிப்பஃறுதிபாடிப்
போதமிறந்துதி யானமுயன்றிடு போழ்தின்புருவார்தன்
பாதமனத்திலெ ணுதிகழ்பெற்றிகொள் பாதகர்கட்குமரு
தாதரமுற்றுண வீயுமருட்கட லாதுபொறுத்திடுமோ. (உஅ)

உடனருளச்சுதன் மரைமலரொத்தந ளிர்கரமேற்றிகழு
மிடல்கெழுசக்கர முணர்தரவித்தகை விள்ளுவனென்மிசையே
கடனிகர்பத்திகொ ளடியனிடத்திது கணமெட்டினையாகிச்
சுடர்செய்பனிப்பகை நிகர்கதிரைக்கொடு துன்றுதியின்புறவே. (உகூ)

வன்பசியோடவண் வந்துளமாமுனி வன்சுவையூணயிலா
வின்பமுறுஞ்செயல் கண்டெனதன்பனி ருங்களிகொண்டபினீ
யென்புடையெய்துதி யென்றலுமன்படை யிம்மெனவேகியரோ
வன்பன்மனைக்குட திக்கிலினற்கிணை யாகியவிர்ந்ததுவே. (௩0)

அப்பொழுதன்பன நிம்பமரத்தின தும்பரவிர்ச்சிமிகு
மெப்பொழுதைத்தெரி வுற்றுவகைப்பெரு வேலையின்மூழ்கினனுய்
மெப்பொருளாகிகழ் விண்டுவைநற்றுதி விண்டுவிழித்துணையூ
டப்பொழுகின்புடன் மாதவன்மாடெய்தி யன்புடனேதுவனல். (௩க)

ஒளிவிடுசெங்கதிர் நிம்பமரத்தின தும்பரின்மேவிடுசீர்
களிகொடுகண்டுது தித்துவணங்குபு கடிதுதரத்திடையே
கொளுவனலின்றிற லறவமுதின்பொடு கொண்டிடுவீரெனலும்
வெளியினணைந்தின னைத்தொழுதுண்டிமி சைந்துகைமண்ணினனே. ()

அத்தமலம்பிமு டிங்கிடுமக்கண மச்சுதனன்பிலர்தஞ்
சித்தமிணைந்துது ணங்கறலையிரு திக்கையுமூடியதா
லத்தகுபோழ்திவி ருக்கையணைந்திடு மாறறியாதவனுய்
மெத்தமருட்சியும் விம்மிதமுங்கொடு மேலவனேதுவனல். (௩௩)

அரவணையிற்றுயி லும்பகவன்பத வம்புயமாமலரில்
விரவியபத்திகொ ளன்பவிஃதென்னைவி ளம்புதியென்றிடலும்
பரவசமுற்றுவி ழித்துணைகான்றிடு பாட்பமுராத்திடையே
தரமிசைநின்றிழி யருவியெனக்கொடு சாற்றுதன்மேயினனே. (௩௪)

தோமறியாதவு ளம்பெறுபத்தர்கள் சூடிடுபொற்பதமார்
தாமறியாதவொர் செய்தியிதென்றித யத்திடையானினையேன்
யாமறியும்படி யிங்கிதனுண்மையி சைத்திடுவீரெனலுந்
தீமறிகின்றவ னேதியனுனிரு சேவடிதாழ்ந்தனனே. (௩௫)

போதமிலாதவர் யாவுமொர்தந்தவ மென்றுபுகன்றிடுவா
ராதரமிக்கவ ரியாவையுநாரண னுடலெனப்பகர்வார்
மாதவர்யாவரு மாதவனென்னம னத்தின்மதித்தொருதற்
போதமிறந்திடு மேலவரேதுபு கன்றிடுவார்களரோ. (௩௬)

பன்னகமீதின டித்தருளச்சுத பகவனடித்துணைக
டன்னகமீதினி னைத்தலினீடரி சக்கரமேவியதா
நன்னலமுற்றுமு ணர்ந்துமுளங்கொடு நானறியேனெனவே
சொன்னவன்மேன்மையு ணர்ந்துமகிழ்ந்துயர் தூமுனியோதுவனல். ()

இப்பொழுதெல்லியெ னப்புகலற்கணு வென்னவுமையமிலை
மைப்பொருமேனியன் பத்தர்கண்மாட்டமை வாற்சலியத்தகையாற்
பப்பொருநின்றரு மம்பொலிவெய்திடு பான்மையைபுன்னியரோ
கைப்பொருவற்றமை சக்கரமேவிய காரணமாகுமிதே. (௩அ)

அன்னதுவேபகல் போலொளிவீசிய மைந்ததுதன்மையிதாற்
றுன்னிருளெல்லியி னிற்பருகுற்றதொர் தோடமடைந்திலன்யா
னன்னமருந்தநி னன்பிலமைந்தெம ருட்கடலாமிறைவ
னின்னதொராடலி யற்றினன்யாமவற் கேதுசெய்மாறுளதே. (௩௯)

ஆதலின்மெய்ப்பக வன்புவிமீதுள ராரையுமேபவமார்
தீதமைகின்றநெ றிப்படுமாறுசெ லுத்துகிலான்மெய்மையா
லாதாமிஞ்சுநி னக்கிணைபூமிசை யாரையுரைப்பனெனு
மாதவன்மெத்துவ கைக்கடன்மூழ்கிவ குப்பனிவ்வாசகமே. (௪0)

நீயிரவாகிய காலமிதூடியர் நிம்பமரச்சிகையின்
மீயிலகுற்றிட வாதவனைத்தெரி வித்தவியப்பதனுன்
மேயினிம்பா தித்தியனென்னும்வி யன்பெறுகாரணமாக்
கூயினுமம டைந்தனையென்றிசை கூறியகன்றனனே. (௪௧)

நவையறுசீர்திகழ் நிம்பாதித்திய நாமமடைந்தவனுட்
குவைபெறுமின்பருள் பத்தியெனுங்குளிர் கடலிடை மூழ்கிநறுஞ்
சுவைபடநாரண னைப்பலவாறுது தித்துயர்பூசைபுரீஇத்
துவையமுதுண்டடி யார்குழுவேத்திய சுகமுடனுற்றனனே. (௪௨)

இப்படிமாலரு ணீடநுபூதியி சைந்தளவாகலனுற்
றிப்படிமீதுப ரம்பரையாரடி யார்பலரேத்தவயன்
கைப்படியோருடல் புக்குழலாதுக டற்புனலுண்டவிரு
மைப்படிவத்தன டிக்கமலங்களென் வானிடைமேயினனே. (சங)

நம்பிடுமன்பினர் தம்புடைதோய்துயர் நாசமுறப்புரிவான்
கம்பிடுமங்கைபொ ருந்திடுமெங்கரு ணைக்கடலாமிறைவன்
பம்பியுமங்கவ னைத்துதியாதிழி பார்மிசையெப்பொழுதும்
வெம்பியுண்மாயையி டைச்சுழல்வார்கள்வி வேகமின்மூடர்களே. (சச)

வேறு

வருத்தும்பசியா லன்பனுளம் வாடுஞ்செயலுஞ் சகிக்காது
மயங்குமிருட்போ தினிற்பரிதி வடிவாயாழி வரப்புரிந்தே
யருத்தியுறவே யருத்துமள வமையாவருட்சி ரமைந்துளநீ
யகலாத்துயர்செய் பவப்பிணியா லந்தோமெய்யா மறிவழிந்து
கருத்துண்மயங்குஞ் செயல்சிறிதுங் கண்டாயிலையோ காலமதிற்
கணிதமிலதா மாடல்செயுங் கருணைபடைத்தாய்க் கென்னையுன்ற
ளிருத்துஞ்செயல்செய் திடச்சோம்ப லியல்போநின்னு ளெண்ணிடுவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமானே. (சரு)

நிம்பாதித்தியகதிமுற்றிற்று

ஆ. கவி கசுருக

---

பதினெட்டாவது

# சாமாதகதி

இரவினைப் பகலதா யியற்றுஞ் சீர்திகழ்
திரநிம்பா தித்தியன் றிறமை செப்பினேன்
வரவைகுந் தப்பதி மாத வன்றொண்டர்க்
குரவமு தருள்பவ னுயர்ச்சி யோதுவேன். (க)

வேறு

பூமாதுரந் தோய்குற்கரும் புயனேர்மணி வண்ணக்
கோமானடி யார்கட்கொரு கோமானெனத் திகழு
மிராமானுசன் மாணுக்கரு ளெண்ணுந்திறல் சான்ற
சாமாதனென் பெயரோடிசை தரையெங்கணுந்தழைப்போன். (உ)

சிராமசந் திரன்வாரிசத் திருத்தாட்டுணை யுள்ளம்
பேராமல கோராத்திரம் பேரன்பினுட் புறத்து
மாராதனை புரிந்தோவறு மானந்தமெய் திடுவான்
யாராயினு மரிபத்தர்க ளென்னிற்பணி புரிவோன். (ங)

படிமீதுத யஞ்செய்தவிர் தருபத்தர்க டமையே
நெடியோனெனச் சிறிதையமி லாதேநினைத் தவர்கட்
கடியானெனவின்புற்றவ ரருளேவல்க ளவையுங்
கடிதேமனத் தொடுவாக்கினிற் காயத்தினிற் புரிவோன். (௪)

அம்போதியை நிகர்மேனிய னடியார்தமைக் காணிற்
பம்போகைமி குத்தர்க்கிய பாத்யாதிக ளுதவி
யம்போருகத் தாட்பூசனை யன்பிற்றினம் புரிவோன்
வம்போதுபுன் மதியாளரை மதியோரென மதியான். (௫)

சாற்றும்பணி யன்போடுயர் சாமாதநன் ளுமன்
போற்றுந்தகை யுடன்செய்தியல் போதோர்தினந் தன்னி
லாற்றுந்தனெர் பூசைக்கென வலர்கொய்திடச் செல்லுங்
காற்றுன்றுதன் னகரின்புறங் கண்டானொரு சவமே. (௬)

அந்தப்பிரே தத்தின்மிசை யரிபத்தர்கொ ளணியார்
சந்தத்துட னேகோபியுந் தகைசால்வனத் தொடையு
மந்தப்படப் புனைந்துள்ளவொ ரலங்காரமுற் கண்டான்
சிந்தப்புனல் விழியின்னன சிந்தித்திடு கின்றான். (௭)

சகச்சூனியம் பில்லிப்பெயர் சார்வித்தைமிக் கியற்றி
யிகச்சூனியத் துடனேபரத் தினிற்சூனிய மாக்கு
மிகச்சூனிய மார்க்கத்திடை மேவும்பவ மிகையார்
முகச்சூனிய ரன்றேவிதி முறையீதுறற் குரியார். (௮)

ஆவாநம தரிகேசவ னருணாரண நாமக்
கோவாழ்வமைந் தோங்குந்திருக் கோயிற்றகை குலவி
மேவாகம நாதத்திற மேவுந்தகை கொண்டே
வீவாவிவண் கிடக்குஞ்செயன் மிகநன்றுநன் றென்னா. (௯)

பரிவோடத னருகேயுறப் படர்ந்தேமனம் பதைத்தே
விரிவாகுமெய் யன்பிற்சிர மிசையேற்றுபு தாங்கற்
கரிதாமிகு சுமைகண்டுமு ளபிமானமிஞ் சிடலிற்
றரியாதறக் காட்டெய்துபு தகிப்பித்தன னம்மா. (௧௦)

ஆண்டுற்றதொர் செயலைக்கண்கொ டறிவைணவர் சிலர்தா
நீண்டுட்சின மளவற்றப னிந்தைத்திற நிகழ்த்திக்
கோண்டுற்றதொர் பித்தின்னவற் கூடுற்றது கரியா
யாண்டுற்றவ னுடலோவிதை யெடுத்தேகிட லானன். (௧௧)

அம்மட்டில்வி டாதேதக னமுமாற்றினன் முடித்தான்
வெம்மட்டியிங் கிவனங்குல மேலாமொழுக் ககன்றான்
கும்மட்டியொப் பானைக்கண்கள் கொடுபார்க்கவுங் கூடா
திம்மட்டினிற் சாலுந்நமக் கிவனேடுற வென்றே. (௧௨)

ஊரார்தம தினத்தோர்களை யொருங்குற்றிடத் திரட்டி
யாராயினுஞ் சாமாதன மினமானவ னென்னச்
சாராதிரன் னவன்றான்சமு தாயப்பிரட் டனிதைப்
போமறுப் பவரேய்வரப் பிரட்டத்துவ மென்றார். (கங)

மருவுற்றிடுந் தன்னோடொரு மாற்றம்பக ராரா
யொருவச்செயல் சாமாதன்ற னுள்ளத்திடை தேறிப்
பெருகுற்றிடு சிந்தாகுலப் பேராழியின் மூழ்கிப்
பருகுற்றிலன் றுயிலுற்றிலன் பகர்நாற்றின மம்மா. (கச)

இடையீடற வரிதாட்டுணை யிதயாலயத் தமைத்தே
கடைநோக்கியென் றுயர்போக்குபு காத்தாளென விரந்தா
னடையார்தின மிவ்வண்ணமோர் நான்கேகலு மோரைம்
படையாரரி யவனெஞ்சுளிப் படியோர்நினை வளித்தான். (கரு)

சீராரடி யார்க்கன்புடன் றிருந்துஞ்சுவை யமுதிட்
டாராதனம் புரியோர்செய லரிதூண்டவுண் முதிர்ந்தே
யோர்தன்கை யுறுபொற்றிர ளவையுங்கொடு போந்து
தாராளமுற் றிடப்பல்பொரு டகச்சேகரித் துவந்தே. (கசு)

அளவற்றபல் பண்டங்களு மகத்திற்கொடு நிறைத்துக்
களவற்றிடு மனத்தான்மிகு களியெய்தின னாகி
வளமுற்றவை ணவரிற்றொறு மருவுற்றவர்க் கூவப்
பளகுற்றவ ரொன்றொத்திகழ் பலநிந்தனை பகர்வார். (கஎ)

நீயாவனெச் சாதிக்கிடை நேர்ந்துற்பவ மானுப்
மாயாவொரு சண்டாளன்கொன் மற்றெக்குலத் தான்கொல்
தோயாகங்கண் டுடனேயதைச் சுடலைத்தலை சேர்த்தே
தாயாதிய ரென்னத்தக னமுமாற்றினை யதனால். (கஅ)

நீசத்துவம் பெறுநீயெம்மோர் நீடுந்திரு மனைமுன்
வாசற்கல துண்முன்பென வரலாங்கொல்வ ரற்கும்
பேசத்தகு மிதற்குஞ்சொல்பி ராயச்சித்தம் புரிந்தே
மாசற்றிடக் குறித்துள்ளவெம் மானுன்னுள மதியாய். (ககூ)

உட்கஞ்சுதல் சற்றின்றியின் றுன்வீட்டிடை நுகர்வான்
வெட்கஞ்சிறி தில்லாதிவண் மேவிக்கனிந் தழைத்தாய்
நிட்கம்பெறு மொழுக்கத்தினை நின்வீட்டிலெ மனமார்
புட்கண்ணுபு நுகராதெனிற் பொருந்தியாங்கொள ளுளதோ. (உ0)

நனிபேசலென் பலவுன்னுட னமராயின ராரு
மினிமேனின்கை தொடும்பச்சைகொ ளிலைக்கீரையுங் கொள்ளா
ரெனினின்மனை புக்கங்கடு மியலுண்டிகொள் வாரோ
கனிவோடுவந் திடுமோர்வழி கண்டேகுதி கடிதே. (உக)

பொருந்துற்றவவ் வழியூடெதிர் போந்தோர்களைக் கண்டே
விருந்துக்கழைத் தனையேலவர் வெஞ்சொற்பல விளம்பித்
திருந்தோர்விர தமுமற்றுனெர் சிந்தைக்கிடை மிகவும்
வருந்தும்படி யுஞ்செய்குவர் வாளாங்கக லுதியால். (உஉ)

நீயற்றையி லெடுத்தன்புட னீற்றுங்களை வரத்தின்
றூயத்தவர் யாரேயெனச் சார்ந்தோர்ந்தனை யாகி
நேயத்துட னவர்பாலுனெர் நிகழ்ச்சித்திற நிகழ்த்தி
யேயற்புடன் விருந்திட்டவ ரினமாகுதி யென்றார். (உங)

சாலத்தவ முற்சார்தரு சனனந்தொறு மாற்றுஞ்
சீலத்தவ ரல்லாலநித் தியமார்மல பாண்டத்
தூலத்தபி மானங்கொடு சுழலும்புன லளிநேர்
ஞாலத்தினர் சாமாதன லந்தேர்குத லரிதே. (உச)

இவ்வாறுட லபிமானிக ளெல்லாமிகழ்ந் தோதச்
செவ்வாய்மைகொள் சாமாதனுட் சிந்தாகுல மிகுந்தே
யொவ்வாவளத் தன்வீட்டிடை யுற்றேயரி யிருதாட்
செவ்வாரிச மெய்யன்பொடு சிந்தித்திரக் கின்றான். (உரு)

கொற்றத்தினர் யாமென்றுளங் கொண்டேகெரு விதராய்ச்
சுற்றத்தின ராறுரெனைச் சோரப்புரிந் திட்டார்
மற்றெத்தன மியான்செய்தது வாளாங்கொழி யாதே
முற்றத்தின மிதனிற்புரி முகுந்தாசரண் சரணே. (உசு)

வேறு

என்றுபற்பல விதம்படப்பன்னிமிக் கிரங்கிக்
கன்றுசோகமெய் திடுமியற்பத்தனற் கனவிற்
குன்றுருமலா வினம்வரைகுடையதாக் கொண்ட
நன்றுநீடிய கேசவனண்ணுபு நவில்வான். (உஎ)

படிதலென்பதத் தன்புசால்பத்தநின் மனத்தி
லொடிதலாற்றிடு சோகமுற்றெழிந்தனை யெழுதி
விடியலிற்பல வைணவரிங்ஙன்மே விடுவார்
கடிதிலன்னவர் துய்த்திடவிருந்துநீ காணுய். (உஅ)

குலவுமற்றவர் யாவருங்கோதில்வை குந்தத்
தலமதூடிருந் தியானனுப்பவினிவண் சார்வா
ருலவுறுப்பெரும் புகழ்மலியுத்தமப் பெரியோர்
நிலவுமன்னவர் பலருநின்மனையிடை நேர்வார். (உகூ)

திருந்துமாதவ் ராருநின்மனையிடைச் சேர்ந்து
விருந்துகொண்டக லேல்வையில்வியனக ரிடத்திற்
பொருந்தும்வைணவ ரேவரும்வலிதுறப் போந்திட்
டருந்துமாவன்மிக் குன்புடையமைந்துகேட் பாரால். (ஙo)

என்னவோதுபு மறைந்தனன்றன்னடி யெண்ணு
நன்னலம்பெறு பத்தர்கடம்முள நலிவைத்
தன்னமுஞ்சகி யாதவோர்தயாவுருச் சமைந்து
பன்னகத்தறி துயில்புரியச்சுதப் பகவன். (௩௧)

வம்பிடுங்குணத் தார்சொலான்மனமிக மாழ்கி
வெம்பிடுந்தகைப் பத்தனக்கணந்துயில் விடுத்துக்
கும்பிடுந்தனோர் கடவுளைக்குறுக்குநேர்ந் தாரிற்
பம்பிடும்பர சுகப்பெருங்கடலிடைப் படிந்தான். (௩௨)

கடிதுதன்மனை யலகிடேமெழுகுபு கங்குல்
விடியுமுன்னரே நானமாதியசெய்து மேகப்
படிவமெய்யருட் பகவனற்பூசனைப் பணிகண்
முடிவுசெய்துநை வேத்தியச்செயலெலா முற்றி. (௩௩)

அரம்பைநெட்டிலை யனந்தமீர்வாய்வல மமையப்
பரம்பிடச்செய்திட் டிலைதொறும்புனற்பெய்பாத் திரங்கள்
வரம்பிலாதன வைத்தவர்வருகையை மதித்திட்
டிரம்பிறங்குதாள் மண்ணுநீர்பிடித்தன னுற்றான். (௩௪)

பெற்றிமற்றது கண்டவைணவரிளம் பித்த
முற்றிவிட்டது முன்னிலிப்போதென முன்னிப்
பெற்றிடுந்தமக் குற்றதாகியபெரும் பித்தை
நற்றிறம்பெறு பத்தன்மீதேற்றுபு நவில்வார். (௩௫)

மடையனம்முட னென்றியுற்றானெனின் மறுத்துத்
தடைசெய்வேமஃதின் மையின்மனம்போனவா சரித்தான்
கடையமைந்திஃதென் னெனக்கடாவுநர்களுண் டாயின்
விடையென்சொல்வன்கொல் சூனியனமவி வேகன். (௩௬)

விரியவித்தகை பெற்றிடப்பற்பல விதமாய்ப்
புரியிலுற்றுளா ரெவர்களும்வாய்கொடு புகன்று
பரிகசித்திவ னின்னமென்பண்ணுவ னதனைத்
தெரிகுவாமென விருந்தனர்செவ்விமற் றதனில். (௩௭)

காரிணங்குரு மோதையும்வண்ணவான் கவியிற்
சேரியற்றொனிப் பெருக்கமுந்திறனர சிங்கத்
தாரிகற்பெறு வீரகர்ச்சனையுமோன் றாகிச்
சாரிகற்கையி லெழுந்ததாற்சங்கவான் றழக்கம். (௩௮)

வதிர்ச்சிசான்றவ ராயினருள்ளமு மருள
வதிர்ச்சிசான்றவெண் ணத்தியன்றிட்டபே ரமலை
முதிர்ச்சிசான்றமெய் யன்பனோர்செவியிடை முயங்க
விதிர்ச்சிசான்றிடு முடலினன்மறந்தனன் மெய்யே. (௩௯)

படியிலாதமெய்ப் பத்தனைப்பலபடப் பழித்த
கடிகொண்மாநகர் மேயவரிச்செயல் கண்டே
யிடிவினவிய பார்தனொப்பாமென வேங்கி
முடிவிலாதபே ராச்சரியத்தின்மூழ் கினரால். (௪0)

காலமற்றதிற் கருணைநீர்வாரியார் கமஞ்சூன்
மாலையன்னகா யாமலர்க்கதிர்மணி வண்ண
ஞாலையப்பொலி வோங்கிடுமணிகொள்வை குந்தப்
பாலையோர்கள்சா மாதனிற்றேடுபு படர்ந்தார். (௪௧)

வண்ணதுழாய் மாலையான்றனதுமா யையினு
லெண்ணுறும்படி வெடுத்துவந்தனன்கொலென் றெண்ண
நண்ணருந்தவர்க் காண்டலுநனிமகிழ்ந் தவனு
யெண்ணருந்தவங் கொண்டசாமாதன்முன் பெய்தி. (௪௨)

தரையில்வீழ்ந்திடத் தன்னுடலார்வமாந் தரங்கக்
கரையிலன்பெனுங் கடலிடைக்கருத்துவீழ்த் தெழுந்தே
விரைவிலன்னவர்க் கொண்டுதன்மனையிடை மேவி
யுரைசெயர்க்கிய பாத்தியாதிகளுவந் துதவி. (௪௩)

விருத்திகொண்டபே ரன்புடன்விளைத்திடு மமுத
மருத்திகொண்டருத் திடவுளமகிழ்ச்சியி னூர்ந்து
திருத்தியெய்தியா சீர்வதித்தன்பராந் திரளோர்
தெருத்தலைக்கணுற் றூர்முனிந்திகழ்ந்தவர் தெரிந்து. (௪௪)

பரிவினோடடி யவர்க்கருகாகவே படர்ந்தும்
விரிவதாஞ்சரித் திரந்தெரிப்பீரென வினவக்
கரியநாரணக் கடவுணற்கணங்களி லொருவர்
புரிதலுற்றபுன் னகையுடனின்னன புகல்வார். (௪௫)

சாதியாரபி மானமாந்தளையில்யாப் படைந்தே
யாதிதன்னடி யாரிடந்துவேசமிக் கமையு
நீதியற்றவஞ் ஞானியர்ப்பொருளென நிகழ்த்தேம்
போதிரென்றரு ளாற்பிணக்கிறைதந்து போனர். (௪௬)

அன்னகாலையில் வைணவராருநெஞ் சழிந்து
மன்னருந்தவம் பெற்றசாமாதனோர் மகிமை
தன்னமுந்தெரி யாதவன்றன்னைநாந் தணந்தோ
மின்னவன்பிழை தீர்ந்துயும்வழிநமக் கெதுவே. (௪எ)

இறந்தவன்றன தினத்தையாய்ந்தவருட னிசைந்து
சிறந்துவாழ்குதி யென்னநாஞ்செப்பிய முறையா
னிறந்தழைத்தமா தவனடியாரின நேர்ந்தா
ரறந்தவாதசா மாதனன்னிலையறிந் திலமால். (௪அ)

மற்றவன்றனை நாமகற்றியதொரு வழுவாற்
பற்றறுத்தமே லவர்கொள்வைகுந்தவான் பதத்தி
னுற்றமாதவர் நமைப்பிரட்டர்களென வுன்னிச்
செற்றமிக்கொரு விடையளிக்காமலே சென்றார். (சகூ)

நத்தமைந்தகை நாரணற்காற்றெருரு நவையைப்
பத்தராயினர் தாம்பரிகரிப்பர்மெய்ப் பத்திச்
சித்தமேவினர்க் கியற்றிடலாவதோர் தீங்கை
நித்தனுலகற் றிடமுடியாதெனு நிகமம். (ருo)

ஆதலாலியா மாற்றிடுகுற்றமீண் டகலப்
போதமேவுசா மாதன்றன்பொன்புரைந் திலகும்
பாததாமரை சரண்புகலல்லது பார்க்கின்
மாதராதலத் தோர்துணையின்றென மதித்தே. (ருக)

உடனெழுந்தவ ரியாவருமொன்றுறக்கூடி
யிடலமைந்தசா மாதனன்மனையிடை மேவி
மடனமைந்தவெம் பிழைமனத்திடைமதி யாதே
கடமைபாமெனக் காப்பதுன்றனக்கெனக் கரைந்தே. (ருஉ)

ஆங்கவன்றுணைப் பதங்கண்மிக்கன்புட னிறைஞ்சி
யாங்கடுத்திட வருள்புரியாயென விரப்பப்
பாங்கணைந்துளார் தமையெலாமன்புடன் பணிந்தே
தீங்ககன்றுயர் பத்தனுங்கவர்கொளச் செப்பும். (ருங)

கோங்கரும்புறழ் பொன்முலைபுணருரங் குலவுங்
காங்கணைந்திடு மேனிகொணாரணக் கடவு
ளோங்கருட்டிரு வுளம்பெறுமுத்தமப் பெரியீர்
நீங்களெற்கொரு குற்றமும்புரிந்திலிர் நிசமே. (ருச)

படவராமிசைத் துயில்பவன்பத்தர்கள் செய்யக்
கடவதாகிய செயலெலாங்கருணையா லன்றி
மடமையாலென வெண்ணுகர்மதியுடை யாரோ
வடருமவ்வறி யாமையெற்கின்றும தருளால். (ருரு)

என்விருப்பினுக் கிணங்குபுநீவிரெல் லீருந்
தென்விளங்குமென் மனையிடையமுதுசெய் திருக்கிற்
பொன்விளங்குமார் பினனனுப்பிடவிவண் போது
மின்விளங்குமே னியர்தரிசனைபெறு வேங்கோல். (ருசு)

ஆதலாலிவ ணீயிரென்மிசையரு ளமைந்து
போதவாற்றிய செயற்கொர்கைமாறெனப் புரிதற்
கேதுமோர்கில னெனக்களிப்பெய்தியன்புடனே
யோதல்கேட்டவர் யாருமன்னவன்றனன் புவந்தே. (ருஎ)

பகைத்துவிட்டனம் பரமபாகவதனை யென்னத்
திகைத்துநிற்பவர் தமையெலாமன்பினாற் றெரிந்துட்
டுகைத்துநிற்பதென் வந்தமெய்ப் பத்தர்க டுய்த்து
மிகைத்துநிற்பன வும்மதன்றோமிசைந் திடுவீர். (ருஅ)

என்றறைந்திடக் கேட்டவருவகைமிக் கெய்தி
நன்றமைந்தவந் நகருளார்பலரையுங் கூட்டி
மன்றவுண்டிடுந் தொறும்பொருள்யாவையும் வளர்த்த
துன்றருட்கொள்சா மாதன்மெய்ப்பத்திமைத் துணையால். (ருகூ)

கடலுடுத்தபார் மிசைக்கவின்றிட்டபல் லுயிரும்
படருறுதரு ளாற்றிதித்தருளுமெம் பகவன்
மடல்கொள்வாரிசத் துணையடிவழுத்துமா தவரோ
ரிடர்பொருந்திடக் கண்டுதான்சகிப்பன்கொ லிதயம். (கூ0)

இன்னவோர்செயல் கண்டவரளவிலின் பெய்திப்
பன்னரும்புகழ் கொண்டசாமாதனைப் பகைத்த
னன்னலத்தது போலுமானாம்புரிந் திலமே
வின்னவற்புதந் தேர்ந்திடுவேங்கொலென் றிசையா. (கூக)

ஞாலவாழ்க்கையை மெய்யெனச்சுழலுநா மெங்கே
யேலருட்கொள்பத் தர்கள்பிரசாதவூ ணெங்கே
சாலவன்னதை நுகர்ந்திடுந்தகையமைந் தனமான்
மாலருட்கொள்சா மாதனற்றரிசன மாண்பால். (கூஉ)

உரத்தின்மிக்கவ னொருவனோர் குலத்திலுற் பவிக்கின்
மரத்தின்மேவினர் தமைபுநல்வழிப்படுத் துமெனத்
தரத்தின்மிக்கவர் சொலனிசமிங்குசா மாதன்
புரத்தின்மேவினர்க் கின்புசெய் தவினெனப் புகன்றார். (கூங)

விதங்களெண்ணில விளம்பியாவருமிக வியந்தற்
புதங்கொள்சிந்தைய ராகியேபுய்னிகர் வண்ணன்
பதங்கொளன்புத வின்பவான்கடலிடைப் படிந்தார்
திதங்கொள்பத்தியா லடைந்திடாப் பயனெதுதேரின். (கூச)

பழுதிறொண்டர்க டம்மைமாலென்றடி பரவும்
வழுவின்மெய்யறி வமைந்தருண்மெய்கொள்சா மாத
னுழுவலன்பர்க ளாகயாவர்களையு முனாற்றிக்
குழுமினோருடன் சேர்ந்தனன்கோதில்வை குந்தம். (கூரு)

மண்டழைத்தநீ சக்குலரெனினுமா லடியார்
தொண்டர்தந்திருத் தொண்டர்யாந்தொழுங்கட வுளென
விண்டசீர்க்குரு கூரன்வேதத்திலக் கியமாந்
தொண்டனானசா மாதன்மாண்புரைப்பதென் சொல்லோ. (கூகூ)

வேறு

சின்னம்புனைந்த சவங்தெருவிற் றிக்கற்றுறக்கண் டுளங்கனிந்து
சீலத்தகனம் புரிந்திடுபத் திமைமிக்குறுசா மாதனுள
மின்னல்பொருந்தச் சகியாம லெண்ணில்பாக வதரையவ
னிடத்தேயனுப்புந் திருவருட்பே ரின்பவுருக்கொ ளிறையோனே
நின்னதருட்சந் நிதிமுனவர் நிகர்பேறருள நிகழ்த்திலன்யா
னிமலம்பெறுமன் னவர்க்கடிமை நிலையீந்தருள வுனையிரந்தே
னின்னதருள வேனுமனத் திரக்கஞ்சிறிதுன் றனக்கின்றோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௬௭)

சாமாதசரிதமுற்றிற்று

ஆகவி ௩௪௬௮

---

பத்தொன்பதாவது

# சீமார்க்கசரிதை

சீமார்க்கத் தோர்களையுஞ் செந்நெறிக்க ணேற்றுமுயர்
சாமாதன் சரிதத்திற் சற்றறிந்த வாறுரைத்தேன்
சீமார்க்க நாமமுறு தேசிகனோ டவன்சீடன்
போமாற்றற் சரிதமினிப் புகலுவேன் சிறிதம்மா. (௧)

வேறு

பூமகடனக்குறும் புதல்வராகிய
பாமரர்தமைபுமெய்ப் பவித்திரம்பெறு
மாமகத்துவம்பொலி வரம்பிலின்பமாஞ்
சேமவான்கதியிடைச் சேர்த்தற்குன்னியே. (௨)

தன்னுயிர்நாயக மாய்ச்சராசர
மன்னுயிர்க் குடலருள்வாரிசன்றனைப்
பொன்னுயர்நாபியம் போருகத்திடை
முன்னுயிர்த் தருளருண் முகுந்தநாயகன். (௩)

அருமறைக்கணிமுடி யாத்துலங்கிடுந்
திருவடிகளைத்தனற் றிருக்கரங்களால்
வருடுபுதுதித்தலின் வழிந்துபொங்குபே
ரருளெனவந்ததா லமலக்கங்கையே. (௪)

விண்டருட்பதப்பெரு வெளியினின்றுருக்
கொண்டகிலத்துளார் கோதுதீர்த்துமெய்த்
தொண்டரல்லாரையுந் தோய்ந்தகம்புறத்
தொண்டழைதரச்செயு முயர்ந்தகங்கையே. (௫)

கொண்டன்மேனியனெனக் குவலயத்தரும்
விண்டமைத்தவர்களும் விளம்புந்தன்மையாற்
கொண்டவங்நாமம்பொய்க் கூற்றுருதருள்
விண்டளித்திடவரும் விமலக்கங்கையே. (சு)

மைவளம்பெற்றகான் மருவியற்றகாற்
பொய்வளம்பெறுநதித் திரள்கள்போன்றுரு
துய்வருளரிபதத் தூடுதித்தலிற்
றெய்வவானதியெனச் சிறக்குங்கங்கையே. (எ)

உந்திநின்றுதித்தவ னூர்தியின்குலம்
பந்திகொண்டாடமெங் நதியின்பாங்கரின்
மந்திவாவிடுந்தொறு மதுவைவாரியிற்
சிந்துபூம்பொழிலதி சிறப்புற்றோங்குமால். (அ)

அளியினம்பண்டர்த மமுதகீதங்கேட்
டளியினம்பண்டமிக் களிக்குநீர்மையி
லளியினம் பண்டார வார்வமெத்துநீஇ
யளியினம்பண்டமுற் றுரநல்குமே. (கூ)

அருக்கன்மாமதிகளி னவிர்ச்சிசால்கரந்
துருக்கமாம் வனத்திருள் சோதித்தாருநீத்
திருக்குமாதவர்கட மிதயத்தன்மையைப்
பெருக்கமற்றவர்கொளப் பிறக்குநன்கரோ. (க0)

அத்தகைவனத்திருச் சிரமங்கொண்டபல்
வித்தகப்பெரியரும் வியக்கவாழ்ந்துளான்
மைத்தகைமேனிகொள் வள்ளல்பொன்னடி
வைத்தவிருளங்கொள்சீ மார்க்கநாமனே. (கக)

அமைதவன்றனக்குடற் காவிபோல்விழிக்
கிமைநிகர்த்துசிறா லென்னவின்புசால்
கமைமுதற்குணமெலாங் கவின்றருட்பெருஞ்
சிமையமொப்பாமொரு சீடன்வாய்ந்தனன். (கஉ)

கோதுதீரவனுடற் குறித்திடும்படி
மாதுருவாதியர் வைத்தவோர்பெயர்
போதுமுக்காலமும் புந்தியிற்றெரிந்
தோதுமாதவருள முணர்தற்பாலதே. (கரு)

நவம்பொலிகுருவுள நாடலாகிய
தவம்பொலிபணித்திறஞ் சாலவாற்றுபு
துவம்பொலிசீடன்றுன் றுலங்கல்கண்டருட்
சிவம்பொலிகுருவுளத் திருத்தியெய்தியே. (கச)

அயலுறச்சிடனை யழைத்துவற்சயா
னயமலிதருசகந் நாதகேத்திர
வியனகர்காணவுள் வேட்கைமுற்றினே
னியறரிசனம்புரிந் திலேசத்தெய்துவேன். (கரு)

வேறு

மீண்டியானிவண் மேவிடும்வேலையி னளவு
மீண்டிலங்குநம் மாச்சிரமத்திருந் தெனக்குக்
காண்டிடும்பணித் திறமெலாங்காலங்க டோறு
மாண்டிகழ்ந்திடுங் கங்கைபெற்றிடவயக் குதியால். (கசு)

மேன்மைதோய்தரு கங்கையைவீற்றுள வாற்றின்
பான்மைமேயதென் றெண்ணலைபகருமற் றெவைக்குங்
கோன்மைமேவிய தாத்ததாலதன்புகழ்க் குலங்க
ளோன்மைமிக்கதா பதரினநுனித்தறி தகைத்தால். (களை)

அகிலலோகமுற் றூர்க்கெலாமன்னையா யடைந்தோ
ரகிதமுற்றவு மனற்படுபெஞ்சென வழற்றிச்
சுகிர்தநல்கிடுந் தன்மையுற்றதுசுரா சுரரும்
விகிதபத்தியாற் பூசைசெய்மேன்மைமிக் கதுவே. (கஅ)

பலவிதம்படப் பகர்வதெனச்சுதப் பகவ
னலகிலின்புரு வாயவிரடிமலர்த் துணைநின்
றுலகின்மானிடர் பவமொழித்திடப்புன லுருக்கொண்
டிலகுமன்னதன் பெருமையானிசைப்பதன் றன்றே. (ககூ)

ஆயபான்மையா லெனக்குநீயன்புடன் பணிக
ளேயவாற்றுமத் தன்மையிலியன்முறை வழாதே
தூயபூசனைத் தொழில்புரிந்தென்னையே துணையா
மேயகத்துனிச் சுகமொடாச்சிரமத்தின் மேவாய். (உ0)

என்றனந்தமாம் போதமொடாசிக ளியம்பி
நன்றமைந்தபத் திமைகொள்சீமார்க்கநன் ஞமன்
பொன்றழைத்தவிர் தருசகந்நாதநற் புரிக்க
ணென்றவேகின னதுமுதலுத்தமச் சீடன். (உக)

தேசிகன்றிரு நாவினின்றெழுக்குதே னமுத
வாசகந்தனைத் தன்செவிக்கரங்களால் வாங்கி
மாசகன்றதன் மனவயிறமைந்திட மாந்திப்
பாசவெம்பவப் பசியறாஉப்பரவசம் படைத்தே. (உஉ)

மெச்சருட்டகைக் கங்கையைமேதகு குருவா
நிச்சயித்தொர்தன் னடிகளைமற்றத னீரில்
வச்சிடாதுநா னம்புனல்வீற்றினில் வயக்கிப்
பிச்சைசெய்தன மாதியபொருள்களும் பெற்றே. (உங)

வரநதித்தடந் தீரமீதன்புடன் மருவிக்
குரவனைப்புரைந் திடத்தினம்பூசனை குயிற்றி
மரபிலன்னதி வேத்தியமன்புடன் மாந்தி
யிரவுடன்பக லுங்குருபதநினைந் திருந்தான். (உச)

இன்னவாறொரு வற்சரங்கழிதலு மிணைதீர்
நன்னலங்கொள்சீ மார்க்கதேசிகனொரு நாளின்
மன்னுசந்தியாம் போதிலாச்சிரமம்வந் தெய்தத்
துன்னுசீடன்மை நோக்கியெனக்களி துளும்ப. (உரு)

தெண்டனிட்டெழுந் தர்க்கியபாத்தியா தியவா
மண்டபல்லுப சாரமார்பூசனை வயக்கி
யெண்டரும்பணித் திறமெலாமின்புட னியற்றித்
தண்டருந்திரு வடிவருடுபுதழைத் திருந்தான். (உசு)

காலமற்றதிற் கங்கையந்தீரமேற் கவின்றோர்
சீலமேவுசீ மார்க்கதேசிகன்செகந் நாத
மேலவேதரி சனம்புரிந்தெய் திடும் பான்மை
சாலவோதல்கேட் டவற்றரிசனஞ்செய்வான் சார்ந்தார். (உஎ)

ஆங்கமைந்தபல் வளங்களுமன்புடன் சொலக்கேட்
டோங்ககக்களிப் படைந்தவன்றன்னுட னுரைப்பார்
தீங்ககன்றநின் சீடனீதிருச்செகந் நாதப்
பாங்ககன்றநா ளேமுதலிதுபரி யந்தம். (உஅ)

அனகமிக்கபா கீரதிப்புனலிலா டில்லான்
சினமிகுந்தியா மியாதுரைசெய்யினுந் தன்னோர்
மனதிலோர்பொரு ளாக்கொடுத்தாம்வழுத் தில்லான்
வனமமைந்தவன் குரங்குநாணுறும்பிடி வாதன். (உகூ)

மூர்க்கமிக்கவ னிவனெனப்பலர்களு மொழிய
மார்க்கதேசிக னுண்மையையமனத்திடைத் தேறிப்
பார்க்கமேலினி யவ்வணம்படிகுவ னென்ன
வார்க்குமோதுபு விடையளித்திடவவ ரகன்றார். (௩0)

சூக்குமம்பெறத் துலங்கிடுந்தூயமெஞ் ஞான
நோக்கமைந்தவர்க் கல்லதுநூழையொத் திலகும்
யாக்கைமீதினி விசைந்தகண்ணிரண்டையுங் கொண்டு
நோக்குவார்தெரி வார்கொலன்னவனரு ணேன்மை. (௩க)

வைகறைப்பொழு தெய்தலுமார்க்கதே சிகன்றான்
மெய்கவின்றசீ டனும்வரக்கங்கையின் மேவிப்
பொய்கவின்றநெஞ் சினர்க்கவனிலைபுலப் படுத்த
நெய்கவின்றதன் றூட்டுணைநெஞ்சிடை நிறுவி. (௩உ)

வழுத்துசீடனைக் கரைமிசையமைந்திட வருத்தே
பழுத்தநெஞ்சரு ளாரியன்பகிரதிப் பயத்துட்
கழுத்தழுந்திட விரங்குபுசீடனைக் கண்டென்
செழுத்தகைப்பரி வட்டமீகுதியெனச் செப்ப. (௩௩)

அன்னகாலையிற் சீடன்மிக்ககம்பதை பதைத்தே
யென்னநாஞ்செயக் கடவதிங்கிதற்கென விதயத்
துன்னலாங்கணத் தங்கணம்போருக முதிக்கை
தன்னருட்டடங் கண்கொடுத்தருணநோக் கினனே. (௩௪)

வரநதிச்செழுந் தீரநின்றருள்கொள்சி மார்க்கக்
குரவனின்றுள வெல்லைமட்டேய்ந்தகோ கனகத்
துரமிகுந்துள மலர்களோரடியள வுடைத்தாய்
விரவுமிக்கதிப் பியங்கொடும்விளங்கின வம்மா. (௩௫)

உரவுநீரதன் மிசைக்குசேசயமல ருதிப்பான்
குரவனெஞ்சகத் துன்னினனேவவன் குளிர்தாட்
பரவுசீடனுன் னினன்கொலோ வெனப்பகுத் துணர்வார்க்
குரநிலாங்குரு பத்தியினுயர்ச்சிதோன் றிடுமே. (௩௬)

நத்திடும்படி யேபுவிமீதினி னடக்கச்
சித்தியற்றினர் பலர்களுண்டென்னினுஞ் சித்தத்
தெத்தனம்புரி யாதியற்றிடுங்குரு பத்திச்
சத்தியத்திருத் தொண்டுடையார்கவர் சரியோ. (௩௭)

பத்தியெக்கட வுளர்கள்பாற்புரிநரும் பழிதீர்
சித்திமுத்திபெற் றுய்கைசத்தியமதா னனு
மொத்திருந்துதற் கருள் செய்வான்புவியிடத் தொன்று
முத்தமக்குரு பத்தர்கட்கவர்களொப் பாகார். (௩௮)

சிடனங்கது காண்டலுஞ்சிந்தையின் மிகுசந்
தோடமெய்தியாண் டுற்றதோடகப்பெருந் துணர்கண்
மாடமைந்திடத் தன்றிருவடிமலர் வைத்திட்
டாடகைக்குரு வுவப்பவத்திரமளித் தனனால். (௩௯)

ஆன்றசற்குரு பத்தியிற்சிறந்தவ னடிக
ளூன்றத்தெய்விக மலர்களுமவாவியே யுதிக்கிற்
றோன்றலாமுரு வத்தினரெவர்களே தோயார்
சான்றபாரனோர் பொருட்டன்றேபலரையுந் தாங்கல். (௪0)

வேறு

ஆயவரு ளாடலைய றிந்ததுக ணத்திற்
றாயநக ரோடருகு தோய்நகர்கண் மாடே
மேயவரு மெய்தியுள்வி யந்தலகி லார்வந்
தோயருண வத்தினிடை தோய்ந்தவர்க ளாகி. (௪௧)

ஆச்சரிய மாச்சரிய மென்னவஃது ணார்ந்தே
மாச்சரிய மோடுமதி யீனனிவ னென்ன
நாச்சரிய முன்வசைந வின்றவர்க ணுணிப்
பேய்ச்சரிய நாம்புகல்பிழைத்தகைய தென்றே. (சஉ)

மந்தமதி யானுனது மாட்சியறி யாதே
முந்தநுவலும்பிழைம னத்தினிடை முன்னே
லந்தமலி நின்சரண மாயினமென் றன்னேன்
சுந்தரவ டித்துணைதொ ழுந்தகைய ரானர். (சஙு)

ஆனதொரு காலையில ருட்குரவ ளுனே
ஞனவினை முற்றுறந விற்றியுயர்தீர
மேனணுகி யன்புமிக மேவியவென் வத்ச
வானவர்கொ ளாச்சரிய மாட்சியிதெ னென்றே. (சச)

நீயடிய மைக்கநிக ரற்றவன சப்பூ
வாயசெய லோதெனலு மன்புருவ மாகுஞ்
சேயநிலை பெற்றிலகு சீடனரு ளாசான்
றாயபத மாமலர்தொ ழுஞ்செயல்பு ரிந்தே. (சரு)

உச்சிமிசை கூப்பியிரு கையுருகி யுள்ள
மெச்சியல்கொ ளெங்குரவ வேதமுடி மீதா
முச்சிதமி லங்குமுன தொண்பதமு ளன்பா
னச்சியவி னல்லதுமெய் நாடிடிலொன் றின்றே. (சசு)

யானறிதி சானவியெ ஞதுருவ மென்ன
நானறிய விண்டுசெகந் நாதபுரி யிற்றும்
போனதுமு தற்கொடுயர் புண்ணியந திப்பா
ஞனமுத லானவினை நான்முயல்கி லேனல். (சஎ)

ஆண்டருள்கு ருப்படிவ மானவுயர் கங்கை
யாண்டடிமை யாகுநம டித்துணைக ளாலே
தீண்டன்முறை யன்றெனவென் சிந்தைகொட தன்பான்
மாண்டமைய வாடுகைம றுத்தயல்பு ரிந்தே. (சஅ)

பூத்திரள்கண் மீமிசைபொ ழிந்துவகை யோடு
தோத்திரமு ழக்குபுசு வைத்தவுண விட்டுக்
காத்திரவி னேடுபகல் கற்பினுயர் பூசை
மாத்திரமி யற்றுபுவ திந்தனன்ம கிழ்ந்தே. (சகூ)

இத்ததியில் வத்திரமெ னக்கருளெ னத்தாம்
வித்தகமி குத்திடவி ளம்புதலு மென்றன்
சித்தமிசை யெந்தவழிசென் றிடுதல் காலான்
மெய்த்தகைகொள் கங்கையைமி தித்தலெங னென்றே. (ருo)

சங்கடமு ளத்துறுத நிக்கிடையி லேகாண்
பங்கயம தென்னெதிர்ப வித்ததுட னேயான்
மங்களமி குத்தவைகண் மல்கவடி வைத்தே
தங்களிடை யான்கலைகை தந்ததுள வீதால். (ருக)

வேறு

அவிருட் குரவநின்னெ ரநுக்கிர கத்தினாலே
சவிபுகழ்க் கங்கையென்றன் றன்மரட் சணஞ்செய்தாள்வா
னவில்சரோ சமலர்தன்பா னண்ணிடப் புரிந்ததிந்தப்
புவிபுகழ் கங்கைதம்மில் வேறெனப் புகலலாமோ. (ருஉ)

ஞாலமேற் புருடன்மாதர் நயந்திடும் புணர்ப்பினாலே
பாலனுண் டாயின்மாதர் பயந்தன ரென்னப்போமோ
போலநும் மாற்றப்பிந்து போங்கெதனோர் மனவயிற்றி
லேலவாஞ் செய்கையின்ன தென்செய லன்றன்றன்றே. (ருங)

தந்திரு வருளினீராற் றமியனே னீதுமட்டென்
புந்தியி னுணர்வேனுண்மைப் புணர்ப்புநீ ரறிதற்பாற்றென்
றுந்திரு விழிகள்பாட்ப முகுத்தெதிர் நின்றானீர்மை
செந்திரு மார்பனன்னான் றேறியா சிகளியம்பி. (ருச)

இல்லமீ தியல்வோர்தங்க ளிருந்தவ வடிவாத்தோற்று
நல்லறி வுடையமைந்தர் நலங்தெரிந் துவக்குமாபோற்
சொல்லரும் பரமானந்தச் சுகக்கடல் படிந்தானனை
னெல்லனை வரும்புகழ்ந்திட் டுவந்துகொண் டாடினாரால். (ருரு)

மாதவப் பொலிவுறுஞ்சீ மார்க்கனே டன்னவன்பொற்
சீதளக் கமலபாதஞ் சிந்தைசெய் சீடன்றானும்
வேதனைங் கணைவேளென்னும் வெம்பகை துறந்தோர்சேரு
நாதவான் மீதாமாய னுண்மல ரடிசேர்ந்தாரே. (ருசு)

வேறு

மந்தாகினியை யாசான மதித்தன்னதிற்றுள் வைக்காதே
மன்னுந்தகைச்சற் குரவனருண் மகிமைதுலக்கக் கூவிடலுஞ்
செந்தாமரையுற் பவஞ்செய்தவன் றீமாயையின்சென் னியைமிதித்த
திருத்தாட் டுணைகடாங்கவருள் செய்தகருணைப் பெருங்கடலே
நொந்தாகுலஞ்செய் திடுமாயை நொடிப்பின்மயங்கு மடியனேக்கண்
ணோக்கிலெனது மையலரை நொடிக்குட்டொலைப்பேனின்றேல்யா
னெந்தாய்கொடுவல் வினைத்தொடக்குண் டிளைப்பதல்லா லென்புரிவே
னிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருஎ)

சீமார்க்கசரிதமுற்றிற்று.

ஆகவி கஎஎரு

---

## இருபதாவது

# இராமாநுச கதி

சீமார்க்க தேசிகனுஞ் சீடனும்வெம் பவமொழித்து
மாமாயன் றிருவடியின் மன்னுமுயர் கதிவகுத்தேன்
றீமாயை வயத்தர்களுந் தேரவுப தேசநவில்
ராமானு சன்கதியி னன்குணர்ந்த துரைப்பேனே. (க)

அராமீதி லறிதுயில்கொ ளச்சுதன்பொ னடித்துணைகள்
பராவடியார் சென்னிமிசை பதித்தருள்பொற் பதும்வாய்ந்தோன்
பிராமணவான் குலத்தினர்செய் பெருந்தவமா முருச்சமைந்தோ
னிராமானு சத்திருப்பே ரேய்ந்தவா சாரியனே. (உ)

அன்னவனை யீன்றருளு மன்னைபிதா வாதியர்பே
ரின்னவென முன்னூலி னிடைவிளங்க வியம்பவிலெ
பன்னகத்திற் றுயில்கொளரி பகவனொடன் னவனூரந்தோய்
மின்னபிதா னத்தொவொன்று மேவினே னெனலாமே. (ங)

நுண்மைபெறு மதியுடையார் நுவலுமிரா மானுசப்பே
ரொண்மையன்றன் மதிக்கோல்கொண் டுளவேத சாத்திரஞ்சொல்
வண்மைபெறு பொருளெல்லா மதித்தறிந்து பூரணமார்
தண்மைபெறு மதியனைய தன்மைகொடு நிலவினன். (ச)

கற்பியல்பூங் கொம்பனையார் காதல்பெறுங் காதலர்தம்
வெற்பிணையும் புயக்கலவி வேட்டுருகுஞ் செயலேபோற்
பொற்பினிரா மானுசன்றற் போதமறத் தடுத்தாளு
மிற்பியல்சற் குரவன்வர லெந்நாளென் றேங்கிடுநாள். (ரு)

ஆரணங்க டேடியிளைத் தயரவவற் றின்முடிமேற்
பூரணசச் சிதானந்த போதமய மாகியுமோர்
வாரணத்துக் கெளிதாகும் வரம்பில்கரு ணைப்பெருமா
ளாரணவும் பத்தனுள நவியமனஞ் சகிப்பானே. (சு)

வேறு

தேட்டந்தி ரண்டருளாந் தேசுருவங் கொண்டவன்ற
னாட்ட மறிந்திடமுன் னண்ணலுமின் னேன்மாயைக்
கோட்டமறு மின்பக் குளிர்கடலுண் மூழ்கினனுப்
வாட்டந் தவிர்குரவன் வாரிசத்தாள் போற்றியே. (எ)

வெம்பிறவி யாங்கடலின் மிக்ககரா வாய்ப்படுமோர்
தும்பி யெனமாழ்கிச் சோர்கின்றே னெங்களரு
ணம்பி யுனதுதிரு ஞானவரு ளேக்கமெனு
மம்பி யுதவி யருள்வா யெனவிரப்ப, (அ)

சிரியவுள்ளச் செழுங்கடலிற் சேருணீர்
வாரி யுருக்கு மழைபோ லருள்பொழியுங்
காரியனு மேனிபெறு காகுத்த னனவரு
ளாரிய னன்னே னதிதீ விரங்கெரிந்தே. (கூ)

கையா மலகக் கனிபோற் கதிகாட்டு
மெய்யா ரணத்தின் மிளிர்சார மாத்துலங்குஞ்
செய்யா தாமந் திரமுபதே சஞ்செயனு
மெய்யா ரழல்போல நெஞ்சமிசைப் பற்றினனே. (க0)

கணத்திற் பலித்தின்பங் காட்டுமறைச் சீலம்
விணத்திற் பொலியும் விபுதர்களு மோரார்
குணத்திற் சிறந்திடுநீ கொண்டமைவா யென்னப்
பணத்திற் பரதம் பயில்குரவன் சொன்னன். (கக)

அம்மந் திரத்தை யகத்திற் பதித்துடனே
செம்மலிரா மானுசன்றான் சிந்தனைசெய் தேத்திடனு
மெய்ம்மந் திரமூர்த்தி மிக்கவவன் சிந்தையிடைப்
பொய்ம்மந்தர் காணப் புதுச்சேவை யீந்ததே. (கஉ)

மந்திரஞ்சான் மூர்த்தி மகிமைபெறு சேவையினைத்
தந்திடத்தற் போதத் தனைதீர் பரவசனு
யுந்தியவின் போங்கி யுடலோ டுளங்குளிர்ந்தே
முந்தி டருளின் முறையா லிதுபுரிவான். (கங)

நாம்பெற்ற வின்பமிது ஞாலமிசை யாள்வாரில்
லாம்பெற்றம் போல வறிவுசற்று மேயமைபாத்
தீம்பெற் றமத்ச் சிமிழ்ப்புண் டுழல்வாருந்
தாம்பெற் றமையுந் தகைமருவச் செய்வனென்றே. (கச)

இழுதையர்க ணெஞ்ச மெனவிருண்ட வந்நாட்
கழுதி னினந்தானுங் கண்படைகொ ளல்லின்
முழுமகருந் தேறு முறையிற் றெழித்தே
யிழுமெனச்சொற் றிட்டா னிணைதீ ரருளான். (கரு)

அன்ன மறைகேட் டனந்தலொழிந் தியாவர்களு
மென்னவொலி யோவிஃதென் றெண்ணிரா மானுசன்றான்
சொன்னமறை யுள்ளுணர்ந்து தூயவருண் ஞானசம்
பன்னர்க ளானர் பகருங் கணத்தம்மா. (கசு)

பயன்மா முள்ளூர்ப் பழுத்தற்றூற் செல்வ
னயனுடையான் கட்பதினென் றூன்றூர் நவின்ற
செயலைவிளக் குங்கருணை சேர்ந்தானைக் கண்டே
புயலெனவே கண்ணீர் பொழிந்துதொழு தாரே. (கஎ)

ஈராறுண் டன்பா யிரவும் பகலுமிகச்
சோரா வுணர்வொடுமெய்த் தொண்டின்வழி நின்றார்கட்
காராய்ந் தருட்டே சிகனளிப்ப தாம்பொருளைத்
தாராநின் றுன்பெருமை சாற்றுந் தகைத்தேயோ. (கஅ)

என்றே பலரு மிசைத்தேத் தருள்வடிவக்
குன்றே புரைவான் கொளுங்கதையி னோர்பெருமை
நன்றே யுலகி னவிலா ததுபுகல்வே
னின்றேழை யேனுக் கிசைந்தபயன் பெற்றிடவே. (கக)

வேறு

ஆயதோர் கருணைநீரா லருளிரா மானுசன்றன்
மேயபல் பத்தர்கட்கு மேதகு குரவனானை
னேயவன் னவனோர்காலத் திருந்தவச் சீடரான
தூயரா யிரவர்தன்னைச் சூழுபு துதிக்குமாறே. (உ0)

செய்யநீ லாசலத்திற் றிகழ்சகந் நாதசாமி
துய்யபொற் பாதங்கண்டு தொழுதுவீற் றிருக்குநாளிற்
கையகத் திற்கம்பாழி கவின்றிடும் வள்ளற்பூசை
செய்யருச் சகர்களானர் செய்திமுற் றுற்றாராய்ந்தான். (உக)

ஆங்கவ ராருங்காண்போ ரகத்தரு வருக்கத்தக்க
தீங்கநா சாரத்தன்மை சேர்ந்தவ ராயெச்சாதிப்
பாங்கமைந் துள்ளாரோடும் பதிந்துணவயில்வாராகி
யோங்கபே தத்தொர்தன்மை யுணர்ந்துளாச் சரியமுற்றே. (உஉ)

மன்னிய நகரினூடு வதிந்துளா ரேவருந்தா
மன்னிய் குலத்தோரென்னு தனைவரு மொன்றாக்கூடித்
துன்னிய வுண்டியாதி துய்த்தன ரிவர்கடம்மை
நன்னிய மத்தராக நானியற் றுவனென்றுன்னி. (உங)

அருமறை புகல்சதாசா ரத்தினை நிலைசெய்தல்லா
லொருவலன் பதிவிட்டென்ன வுன்னிரா மானுசன்றன்
பெருமைசால் சீடரானர் பெரிதுதற் சூழவேகி
மருவுபூ சகரைப்பூசைத் திரவிய வகைகளோடும். (உச)

அறக்கரு ணையொர்சற்றின்றி யதிவலோற் காரமாகப்
புறக்கணித் திட்டுத்தானே புகல்சகந் நாதத்தெம்மாற்
றிறக்கவின் பூசையன்பாற் செய்துமா சாரத்தோடு
நிறக்கவி னிவேத்தியாதி நிகழ்வித்து முடித்தபின்னர். (உரு)

பெருந்தகைச் சீடரோடு தானுமப் பிரசாதத்தை
யருந்துபு துயின்றகாலை யங்கிரா மானுசன்றன்
றிருந்துசொற் பனத்தினூடே திருச்செகந் நாதமூர்த்தி
பொருந்துமெய்ச் சேவைகாட்டிப் புகன்றிடு மிவ்வாறம்மா. (உசு)

மெத்தவென் பதத்தினன்பு மேவிரா மானுசப்பேர்ப்
பத்தயா னுன்பாலீண்டு பகர்வதொன் றுளதுகேட்டி
யித்தலத் தநாசாரத்தி லெனக்கதி விருப்பமன்றிச்
சித்தமேற் பத்தியுள்ளார் செயலெலாந் திருத்தியாமே. (உஎ)

பொத்திய மலக்கூடாகும் பூட்சியி தறலைக்கொண்டு
சுத்திசெய் துளதேலின்பந் தோய்த்திடு முலகுளோர்க்கியா
னெத்திய வுளமாங்கோயி லுண்மைசால் பத்திநீராற்
சுத்திபெற் றுளதேலெற்குட் சுகிர்தமிக் களிக்குமன்றே. (உஅ)

பத்தியங் கடலினெஞ்சம் படிந்தவ ரெவரானாலு
மெத்தினை யவர்தந்தாலு மெனக்கதி லிச்சையுண்டா
மித்திறங் கொண்டென்றன்னை யினிதுபூ சிப்பார்தம்மை
நத்தியீங் கெய்தும்வண்ண நவிலுதி கணத்தின்மாதோ. (உகூ)

ஆங்கவ ரென்னைவிட்டோ ரரைக்கணஞ் சகியாரற்றே
நீங்கல னவரையானோர் நிமிடமு மதனானீதா
வீங்கமைத் துள்ளபூசா சாதன மெல்லாங்கொண்டு
நீங்கரைக் கணத்திலுன்ற னியமமீ தெனக்கொவ்வாதால். (௩0)

நம்பத்தி சிறிதுநெஞ்சி னண்ணிடா துலகமாயா
வெம்பித்த மேவிமெய்யை மெய்யென வெண்ணிவாடும்
வம்பர்க்கு வைத்ததாய வழியெனு சாரக்காதை
யும்பர்க்கு மேலாயிங்க னுறுவர்பாற் சிறிதுமோதேல். (௩க)

பன்மய மாகவோடிப் படிகமொத் தெவைபும்பற்றுங்
கன்மய மனத்தோர்க்குன்றன் கதைகண்மிக் கினிதாமன்றித்
தன்மயங் கழன்றுபோதத் தாக்குறு தென்னைப்பூசித்
தென்மய மாகிநிற்போர்க் கியாதினி தெதுதீதம்மா. (௩உ)

அலகையாற் பிணிப்புண்டோர்க ளாற்றிடுஞ் செயல்களெல்லா
நிலவதன் செயலேயாக நிகழ்தல்போ லுனிலத்தி
லிலகுமென் பத்தராவா ரியற்றிடு கின்றவெல்லாங்
குலவுமென் செயல்களாகிக் கொடுத்திடு முவப்பெனக்கே. (௩௩)

என்றளப் பரும்பல்போத மிணையில்சீர்க் கருணைவள்ள
னன்றிரா மானுசன்ற னற்கன விடைநவின்றுந்
துன்றரு மறைகளோதுந் தூயவா சாரச்சில
மொன்றகற் றிடற்குந்தன்னெ ருள்ளமீ திசையாஞ்கி. (௩௪)

மாயவ னநாசாரத்தோர் மாட்டருண் மிகுந்துவாஞ்சித்
தேயதைப் போக்கும்வண்ண மெண்ணுமென் மீதிற்கோப
மேயவோர் செய்கைசால வியப்பளித் திடுவதெற்கித்
தேயமே னுற்குலத்தர் சேர்ந்தொன்று நுகர்கின்றாரால். (௩௫)

தீங்கிது கண்டோனென் சிந்தையெவ் வண்ஞ்சகிப்பேன்
காங்கியல் வடிவாற்கின்னோர் தாங்கடப் பாட்டின்றே
யோங்கியற் பத்திசெய்யி னுள்ளமொப் பாதலென்னே
தாங்கியற் பத்திக்கேற்றந் தாழநா சாரம்போலும். (௩௬)

மற்றவர் தாமாசாரம் வாய்ந்தநா சாரமிக்க
குற்றம தென்னநம்போற் கொள்ளினங் கவர்கண்மீது
செற்றமிக் கியலும்போலுஞ் சிந்தையி லரிக்கிதோர்ந்தோ
விற்றநா சாரப்பான்மை யிப்பதி யினர்கொண்டாடல். (௩௭)

நானுட லொழியுங்காறு நான்மறை யுக்தமாய
வேனுறு சதாசாரங்கை விடுகில னிவரோடொன்றுத்
தானுகர் தற்கோர்சற்றுஞ் சம்மதங் கொள்ளேனென்ன
மேனுவல் விரத்தியோடு மேவின னங்குமாதோ. (௩௮)

இத்தகை நிகழுமெல்லை யினிலர வணையிற்றுஞ்சும்
பத்தவற் சலனும்வள்ளல் பன்னகப் பகையைநோக்கி
மெத்தரு ளோடுசொல்வன் மேவிரா மானுசன்பா
லித்தலத் துனதாசார மெனக்கவ சியமின்றின்றே. (௩௯)

எனதருச் சகரைப்பூசை யியற்றிடச் செய்யிலென்றன்
மனதுவப் பெய்தும்மன்னோர் வாடிலோர் கணஞ்சகிக்கே
னினதொரா சாரச்சீல் நிரந்தர பத்தியாதி
யனகநற் குணங்கண்டுள்ளத் தளவிலின் பமைந்தேன்மெய்யே. (௪0)

மந்திரத் தியானங்கொண்டு வசமுனக் கானேனேனு
மிந்தில்வாழ் பவர்க்கென்மீதி லிணையின்மெய்ப் பத்தியுண்டா
லுந்தியற் பத்திதன்னு லுவராநா சாரப்பண்பு
நந்திரு வுளத்துக்கின்ப நண்ணிடப் புரிவதாலோ. (௪௧)

பொன்பதி யுரங்கொளென்னைப் போலவிந் நகருளார்பா
லன்பதி கரித்துவாழு மாசைநின் னகத்திலுண்டேற்
கொன்பதி யிதனில்வாழ்தி கோதெனத் தோற்றில்வல்லே
நின்பதி யேய்தி யுன்ற னெஞ்சவர் வுற்றவாறே. (௪௨)

தூயநற் சதாசாரத்தின் றுறைபிழை யாமலென்னைப்
பாயபே ரன்பினோடு பாசனை புரிந்துவாழ்தி
சேயவென் னுமந்தன்னைச் செபித்தலொன் றுலேநிற்கின்
டேயசர் வாபீட்டங்க ளீகுவஞ் சரதமம்மா. (௪௩)

என்றிவை பலவும்யாமீண் டியம்பிய வாகச்சாற்றித்
துன்றிடு மவனோடன்னேற் றுதிக்குமா ணுக்கராக
வொன்றினர் தமைபுமோக முறப்புரிந் தரைக்கணத்தி
னின்றிய லவர்மனைக்க ணண்ணிடப் புரிதியென்ன. (௪௪)

பகவனுத் தாவிட்டேவப் பன்னக வைரிவல்லே
யகமகிழ் வோடிராமா னுசன்புடை யடைதலோடு
முகமனே துபுகொண்டாடிப் புகுந்தவா மொழிதியென்ன
நிகழ்செய லோதக்கேட்டு நெஞ்சமிக் குவந்துமாதோ. (சரு)

எதுபொருள் பெறுவானுன்னி யானிவ னெய்தினேன்கொல்
கதுமெனப் பொருண்மற்றஃதென் கைவரக் கடைக்கணித்தான்
முதுமறை தேருமூர்த்தி முன்னுமாத் திரத்திலென்மேற்
பொதுவற நோக்கியாண்ட புதுமைக்குக் கைமாறேதே. (சசு)

கருமணி வண்ணத்தெம்மான் கரையில்பே ரருளால்யானுட்
கருதிய வரங்களெல்லாங் கடிதளித் தருளன்மெய்யேற்
றிருநக ரிதுவும்யான்வாழ் தேயமுஞ் செல்லன்மிக்க
விருணக ரொடுதுறக்கம் யாவுமெற் கினிதாமன்னே. (சஎ)

சாதமென் னகர்க்கணேல்லே சார்ந்திடு கின்றேனென்னப்
பிரமசொ ரூபியாகப் பிறங்கிய கருடன்றன்பாற்
றிரமுறப் புகன்றுதன்னற் சீடரோ டுறக்கங்கொண்டான்
வரவியற் கருடமூர்த்தி மாத்திரை யொன்றுமுன்னே. (சஅ)

மற்றவர் தம்மையன்னோர் மனேதொறு மனேயவாற்றிக்
கொற்றமார் சகந்நாதத்திற் குறுகலும் பதியதன்பா
லுற்றவர் குழுவிராமா னுசனகன் றிடுசீரோர்ந்திட்
டற்றமி லின்புகைம்மிக் கருச்சகன் றனேயழைத்தே. (சகூ)

எல்லேயில் லாதவன்பு மின்பமும் பொங்கிவாசக்
குல்லேபு மலர்மின்செம்பொற் குசயுக ளமுந்தோய்மார்பத்
தல்லேகேர் மேனியண்ண லருட்பதம் பணிந்தாரந்த
வெல்லேயாங் கதிலிராமா னுசன்விழிப் பெய்தினுல். (ருo)

நோக்கிடு காலேதன்னி னேன்மைசான் மனேயதன்பா
லாக்கிளர் தன்மைநாடி யளப்பிலா வியப்பின்போகை
மீக்கிள ருளத்தனுகி விண்டுவாம் பகவன்விண்ட
பாக்கியக் கனவையன்பிற் பலிதமெய் திடக்கண்டானல். (ருக)

இத்தகை யாடன்மாய னியற்றிடற் கேதுதன்செம்
புத்தலர்ப் பதங்களன்பிற் போற்றுமெய்ப் புந்திசான்ற
பத்தர்பாற் கொள்வாற்சல்யப் பண்பலால் வேறென்னென்பே
னுத்தமப் பத்திக்கொப்ப தொன்றுள தென்னலாமோ. (ருஉ)

பொருந்தா சாரந்தன்னேப் போக்கியங் கவரையெல்லாந்
திருந்திய லெய்தயான்கொள் சிரமமு மவர்களுள்ளம்
வருந்துமோர் செயலுந்தன்னேர் மனத்திடைச் சகிக்கலாற்றான்
கரும்புயன் மேனிவள்ளல் கருணேயென் னென்பதம்மா. (ருங)

மற்றமை நெறியெவற்று மருவதி காரத்தன்மை
சற்றமை யில்லார்தாமோ தானடி பிரிதலில்லாப்
பற்றமை பத்தியுற்ற பண்பினாற் பகவற்கோகை
பெற்றமைந் தாரேற்பத்தி மான்மியம் பேசலாமோ. (ருச)

என்றுபற் பலவாப்பத்தி யிரும்புகழ் மிகக்கொண்டாடிக்
குன்றுறழ் மனங்கொள்சீடர் கூட்டமுங் குவலயத்தி
னன்றுற வுதிக்கின்றாரு நாரணன் பதஞ்சேர்ந்துய்வான்
மன்றமெய்ப் பகவன்பத்தி மார்க்கமே தாபித்தானால். (ருரு)

புறச்சம யத்துள்ளாரும் போதநா ரணன்பொற்றாளிற்
றிறப்படு பத்தியெய்தச் செய்யபா டியஞ்சொல்சீரோ
னறத்தகை வழுவாச்சீட ராயமோ டவனியெய்தாச்
சிறப்புறு மாயன்பொற்றாட் சின்மயத் தணைந்தான்மாதோ. (ருசு)

வேறு

சதுமாமறையின் முடிக்கணியாந் தாட்டாமரைக டம்முளத்திற்
சாரும்பத்தர் தம்மதநா சாரமோடா சாரமிதன்
பொதுவாயிலங்கி யவ்வவர்தம் புந்திவருந்தச் சற்றெனினும்
பொருதன்னவர்தங் கொள்கையிடை பொருந்திநிற்கும் பொதுமுதலே
யிதுநாளடியர் தமக்குயரன் பீந்தாலுனக்கத் தகைவருத்த
மெய்துமெனவோ வுளக்கருணை யில்லார்போல வினிதிருந்தா
யெதுவானாலு நின்சித்த மெம்பாக்கியமியா னிசைப்பதென்னே
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருஎ)

இராமாநுசகதிமுற்றிற்று.

ஆகூ கவி கஅருஉ

---

இருபத்தோன்றாவது

# ஸ்ரீரங்கபத்தகதி

சாரங்கமேந்து தா மோதரன்பத
வாரங்கொளணியிரா மாநுசன்றிருப்
பேரங்கமார்கதி பேசினேனினிச்
சீரங்கபத்தனற் றிறல்விள்வேனரோ. (க)

புட்கரவளமிகப் புணர்ந்தகன்றில்கம்
புட்கரண்டங்குரண் டம்புறாமுதற்
புட்கரவாவணி பொருந்தியான்றியற்
புட்கரதீர்த்தம்விண் புகழவோங்குமால், (உ)

அன்னதன்மேற்றிசை யினிலமைந்தது
பொன்னகலாநலம் பொருந்துமேன்மைய
தெந்நகர்களுக்குமிக் கேற்றமுற்றது
தன்னனபுகழ்கொடெள சாக்கிராமமே. (௩)

வேறு

ஆயநன்னகர் மேவிடும்வைசிய னருக
னேயமார்மதத் தொடர்புளானிதிசிறி துடையா
னேயசிரங்க னென்றிசைத்திடுமியற் பெயரான்
மேயவில்லற நெறியிடையமைந்துறும் வேலே. (௪)

அமையுமற்றவன் றனக்கொரேவலனென வமைந்தோன்
சுமைசெய்வல்வினை நல்கும்வாணுடொலேந் தவன்செய்
சிமையமொத்திடும் பாவகன்மத்தினோர் சிமிழ்ப்பா
லமைநிகர்த்தமெய் கொளுநமகிங்கர னுனன். (௫)

அருமைநற்றவ முற்றவரான்பர்கூட் டுறவாற்
பொருவில்வைகுந்த மேயுமற்றவர்ப்புகுப் பதுபோ
லிருள்கொள்வன்பவத் தொடக்கினன்யமனடி யானுப்க்
கருமிகட்கொடு செல்கொடுந்தூதெனக் கலந்தான். (௬)

இங்குவாழ்வதெற் றுயிரற்றேமறுமையென் றியம்பு
மங்கும்வாழுமென் றருமறையினமறைந் திடலா
லெங்குதங்குமெய் பொருள்களுமரியென வெண்ணி
யுங்குவாழ்ந்திடு பவரலார்வரவுபோக் குளரே. (௭)

அன்னதோர்நம தூதனுனன்றனை யடிமை
யென்னமுன்பெறு வைசியனில்லமீ தெய்தித்
தன்னதோர்சொரூ பந்தனையவன்றரி சிப்பித்
தின்னவாறுசில் விவரமன்பாலெடுத் திசைப்பான். (௮)

தெரிதியென்னைமுன் னுளெனக்கொண்டவை சியனே
யுரியயானிதன் முன்னநின்குலத்திடை யுதித்துக்
கரியவேழ்கட லோமலையோவெனக் கணித்தற்
கரியவெம்பவம் புரிந்தனன்றன்மைமற் றதனல். (௯)

பாவவெவ்வுரு வாரெமதூதனுப் பவித்தே
னுவநின்னதா ளாயுனதனமயின் றதனன்
மேவருந்துய ரம்புரிதூதனு மேயுஞ்
சாவருந்தவம் புரியநிற்குணர்த்துவான் சார்ந்தேன். (௧௦)

சொந்தமேவினர் மனைசுதர்சுற்றமா னவரென்
பந்தமேவிமற் றவர்ப்பரிபாலனம் புரிவா
னுந்தனந்தவன் கொடும்பவம்புரிந்துழ லொதியோ
ரெந்தவோர்பய னுங்கொளாரிருமையு மந்தோ. (௧௧)

'தவமியற்றிடுந் தன்மையரேதம துயிரை
நவமியைந்தபே ரின்பவீட்டிருத்திடு நலத்தர்
துவமியைந்தபுண் ணியம்புரிவார்கொள்வார் துறக்க
மவமுயன்றிடு பாவர்கொள்வார்நர கதனை. (௧௨)

தவந்தருஞ்சுக மொருபடித்தாயினன் றகையுந்
துவந்துவந்தரும் புண்ணியஞ்சோமனைத் துணையு
மவந்தரும்பவ மோவிருட்டினுக்கிணை யாகிச்
சிவந்தவுள்ளமா கியசரோருகங்குவித் திடுமால். (௧௩)

தாரகப்பொரு ளாமரிதாணினை தவந்தான்
வாரமிக்கதன் னுறவினர்க்குஞ்சுகம் வழங்குஞ்
சோரமிக்கபுண் ணியமுடற்போகமே தோய்க்குங்
கோரவெம்பவந் தரிசனர்க்குந்துயர் கொடுக்கும். (௧௪)

ஓரின்மூவகை யாகயானுரைத்திட லுற்ற
சீரியற்றவம் புண்ணியம்பவமெனுந் திறந்தான்
சேரினத்தின லெய்திடுந்தெற்றெனத் தேர்ந்திட்
டேரியைந்தமே லவர்தமைத்துணையென வெண்ணாய். ௧௫)

ஏரமைந்திடு மத்தகைப்பெரியர்யா ரென்னிற்
சீரமைந்திடு நாரணன்றிருவடித் துணைக்க
ணாரமைந்திடு பத்தரேயவர்புடை நண்ணிற்
காரமைந்திடு பவமரைக்கணத்தின்முற் கழியும். (௧௬)

மெய்திகழ்ந்திடு பத்தரைத்துணைகொண்மேன் மையின
லெய்திடாதவோர் பயனுலகெவற்றினு மில்லை
யுய்திவேண்டுதி யேலெனதுரையைநின் னுளங்கொண்
டைதிலாற்றுதி யானுனக்கருள்கொடீ தறைந்தேன். (௧௭)

மானிடப்பிறப் புற்றரிபத்தராய் மாறுள்
வானிடத்தமை யாதுதெக்கணத்தினின் மருவெங்
கோனிடத்தமைந் தலமருவார்களிற் கொடிய
கானிடத்தமை விலங்குபுண்மேலவாங் கணிக்கின். (௧௮)

நிற்பதற்றரைக் கணத்தொழிகரும்புய னிழலைச்
சொற்பனத்தினை நிகருடல்சதமெனச் சூழ்ந்தே
துற்பலன்றருந் தொழில்செயேலவைதருந் துன்ப
மற்பமன்றுகா ணலைகடலேழினு மதிகம். (௧௯)

மாட்சிகொண்டவென் னுரைவழிமனமமைந் தனையேற்
சேட்சிகொண்டவை குந்தநீதடையின்றிச் சேர்வாய்
காட்சிகொண்டருண் முகுந்தநாயகன்பதங் காணார்
நீட்சிகொண்டவெந் நிரயமேய்ந்திரங்குத னிசமே. (௨௦)

29

ஓதுமென்மொழிக் கொருகரியாகநீ யுள்ள
மீதுணர்ந்திடக் காட்டுகின்றேனது வினவிற்
போதுமற்றிதி லுன்னதுவன்மைசால் †புல்லத்
தாதுமொய்ம்புள கொம்பிடையான்கலந் தமைந்தே. (உக)

முன்புநின்றிடும் பொன்செய்கொல்லன்றனை முடித்துத்
தென்புலம்புகுக் கின்றனன்றோர்திநீ யென்றே
வன்புறுந்தன துருவுதோற்றுவகை மறைத்தான்
கொன்புணர்ந்தசேப் பாய்ந்ததாலன்னவற் கொம்பால். (உஉ

ஆனவாச்சரி யச்செயல்கண்டகத் தஞ்சி
மானமிக்கசி ரங்கநாமங்கொளவ் வணிக
னீனமிக்கபுன் சமண்சமயத் தொடக் கிகந்தே
ஞானமிக்கவோர் பாகவதன்புடை நண்ணி. (உங)

பத்திமிக்கவன் சீடனுயவனருட் பணிக
னத்தியேபுரிந் தவனநுக்கிரகநன் னலங்கொண்
டெத்தினத்தினு மாலடிப் பூசைமிக் கியற்றி
யத்தியோதுமந் திரத்தொடன்னவனேயுள் ளமைத்தே. (உச)

பகவன்மெய்யடி யாரொடுபசிகொடுற் றூர்க்கு
மகநிறைந்தபே ரன்புடனன்னமா தியவுந்
தகவளித்துவாழ்ந் திருந்தனனிறந்ததட் டானைத்
திகழெமன்றனூர் சேர்த்தனன்றா தனுந் திறலோன். (உரு)

அன்னகாலையன் னவனமனுக்கினை யதனன்
முன்னமேயதன் னுரிமைசான்முதுநக ரிடத்தி
லின்னன்மிக்கெதிர்ந் தாரெலாமிதயமீ தச்சந்
துன்னவோர் * வியந் தரவுருவங்கொடு துதைந்தே. (உசு)

கரியகாரணக் கடவுடன் னுருவினிற் கலந்தோ
ருரியபத்தர்கள் பால்விளையாடுத லொப்பப்
பெரியபொய்வடி வாகினேன்பேய்வடி வாகிப்
புரியிலுற்றதன் னனையர்பாலாடல்கள் புரிந்தான். (உஎ)

ஒருதினத்தினிற் றனக்கதிபிரியனு யுறுந்த
னருமைமிக்கபா லகனதாதனிடை யணுகக்
கருமைமிக்கதன் னுருவினைக்காட்டினன் கண்டான்
மருவுமற்றத னுருவமேமனத்திடை மதித்து. (உஅ)

எண்ணமேனையோன் றின்றியேபகலுட னிரவு
நண்ணலாம்பய மிக்குடன்மெத்தவு நலிந்தான்
மண்ணவாவுமைந் தன்றனதுயிர்வடி வையுந்தன்
வண்ணமாம்பிரே தஞ்செய்வான்வந்ததோ ரிரவில். (உகூ)

* வியந்தரம் - பிசாசம். † புல்லம் - எருது.

அன்னதன்மைகண் டவற்குரித்தாமனை யானு
ளென்னபேட்சையுட் கொண்டெனேர்மகன்றனை யிருப்பா
னின்னகத்திடை யுன்னிவந்தாய்நிகழ்த் தெனலும்
பன்னலானது பதியெனவுற்றபை சாசம். (௩0)

கயலைவென்றவிர் குழைபொருங்கூர்நெடுங் கண்ணு
யயலெனக்கரு தலையெனையுனக்குமிக் கன்பார்
நயனமைந்துள நாயகனுகின னுன்காண்
வியனுறுஞ்சுத னிவன்சுகிர்தம்பெறல் வேண்டி. (௩க)

ஞாலமீதுமற் றவர்பொருள்களைமிக நயந்து
சாலவின்னவற் கேயுரித்தாக்கிய தகையாற்
காலவெவ்விட மன்னவெம்பவமெனைக் கலந்து
தூலநீக்கியிவ் வுடலளித்திட்டது தோகாய். (௩உ)

தராதலத்திடைப் புண்ணியதீர்த்தநற் றலங்கள்
பராவிநீக்கிட நினைத்திடின்மற்றைய பாங்கர்
விராவிடற்குவி டாதுழற்றுவதிது வீயும்
பிராயச்சித்தமின் னவன்செயிற்சுகிர்தம்யான் பெறுவேன். (௩௩)

என்றுசாற்றலும் வினவியன்னவண்மன மிரங்கித்
துன்றுசோகமே விச்சுதன்றேழிலெது புரியி
னன்றுசான்றமெய்ச் சற்கதிநீநணு கிடுவா
யின்றுரைக்குதி யெனவியந்தரமிசைத் திடுமால். (௩ச)

காலமற்றிதில் யானுன்மெய்யிடைக்கலக் கின்றேன்
கோலமிக்கமெய்ச் சீரங்கேசன்குயிற் றிடலாஞ்
சீலமிக்கபூ சையிற்பகவன்பத தீர்த்த
மேலவேகொடு வந்தெனக்கீந்தன னென்றால். (௩ரு)

இணையிறிப்பிய வடிவமேய்ச்சற்கதி யிடையா
னணைகுவேன்சர தம்மெனச்சாற்றலு மரிவை
யுணைவகன்றவ ளாகியவ்வாறுளுற் றுதலும்
பிணைதரும்பிரே தத்துருவத்தினிற் பிரிந்தே. (௩சு)

திருந்துதிவ்வியத் தெய்வதச்சுந்தர தேகம்
பொருந்திநல்விமா னத்திடையூர்ந்துவான் புகுந்தான்
வருந்தியெய்த்திடு மைந்தனுஞ்சுகமிக மருவி
யருந்தவங்கொள்சீ ரங்கபத்தனைத்துதித் தமைந்தான். (௩எ)

ஒருதினந்திரு மாலருட்பதம்படி யுதகம்
பருகினேன்பவம் பொலிபிரேதத்துருப் பாற்றித்
தருவுலாவுல கோர்புகழ்தகைமையெய்த் தனனேற்
பொருவில்பத்தர்கண் மாட்சியென்னுற்சொலப் போமோ. (௩அ)

அருகமைந்துளார் தம்மதத்தொடக்கினின் றகன்றே
திருவைகுந்தமா கத்திறைபுளங்கொள்சீ ரங்க
னருகமைந்துளார் தம்மதத்தொடக்கினின் றகன்றே
திருவைகுந்தமா கத்திறைபுளந்திகழ்ந் தானே. (௩௬)

வேறு

கடமேற்சிலையைப் பெண்ணுக்குங் கருணைமயப்பொற் கழற்றுணைகள்
கலந்தவபிடே கப்புனலைக் கழுதோதிடுதற் கடைப்பிடித்தோர்
மடமாதருந்த மருவிடும்பேய் வன்பாதகவவ் வடிவகன்று
வானத்தமரர் கொண்டாடும் வாழ்வைப்பெறுதன் மெய்யாமேற்
றிடமாருனது திருவடிக்கே சிந்தையளித்த பெருந்தவத்தோர்
சிலம்பரவ விழைந்திடுவேன் சிந்தையிவணந் தியக்கமுற
விடமேதுரையா யென்னளவி லிரக்கஞ்சிறிதுன் றனக்கின்றோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௪0)

சீரங்கபத்தகதிமுற்றிற்று.

ஆக கவி கஎஉ

---

இருபத்திரண்டாவது

# கிருட்டிணதாச கதி

மாதவன்றிரு மறைமுடிக்கணியென வயங்கும்
பாதமேத்துசீ ரங்கபத்தன்கதி பகர்ந்தே
னேதமற்றதன் னடியரைவைகுந்தத் தேற்றும்
போதகிட்டிண தாசனற்கதிபுகல் வேனே. (க)

வேறு

அருட்டின கரனையன்ப ரகமல ரகலாதோங்கு
முருட்டிய லாழியங்கை யுடையநா யகன்பதத்திற்
றெருட்டிக ழன்புசான்றோர் தஞ்சிகா மணியாஞ்சீர்சால்
கிருட்டிண தாசன்மேன்மை கிளத்தலாந் தகைமைத்தன்றே. (உ)

கீர்த்தியாங் கிரணம்யாண்டுங் கிளர்கிருட் டிணதாசப்பேர்த்
தீர்த்தன்பா வர்களேத்தன்னோர் சிந்துறழருட்கண் ணோக்கி
யார்த்திமிக் கபேட்சித்தான்கொ லன்னவ ரிகபரத்திற்
பூர்த்தியார் போகந்துய்த்துப் பொருந்துவ ரிதாண்மன்னோ. (௩)

ஞானசம் பத்துற்றோங்கு நாபதா சன்கதிக்க
ணானகிட் டிணதாசன்ற னருட்பெருக் கியல்பும்வீறார்
மானசிங் கப்பேரேந்தன் மாட்சியுஞ் சிறிதுதோன்றும்
வானவர் புகழுஞ்சீர்த்தி மருவியன் மானசிங்கன். (௪)

கிட்டிண தாசவாசான் கிருபைநோக் கமைந்தவன்பா
லொட்டிய வுபதேசப்பண் புற்றமாண் பாற்கொற்றத்தோ
டெட்டிக லாகியுற்று ரியாரையுஞ் செயங்கொண்டென்று
மட்டில்பல் வளங்கடன்பான் மலிதரப் பெற்றானன்றி. (௫)

மற்றவன் றேரிற்பூட்டும் வாம்பரித்திரள்கடானும்
விற்றரு மணிகள்காலும் வியன்பிரமாதந் தன்னைக்
கொற்றமோ டகலுந்தன்மை கொண்டவன் னதுகொடப்பா
லுற்றபல் பகைமுருக்கி யோங்கவர் திறையுங்கொண்டான். (௬)

மானசிங் கப்பேர்வேந்தன் மனங்கொள்கிட் டிணதாசற்கு
வானவர் வழுத்துமேன்மை மருவுமாச் சிரமமொன்று
தானவிற் றுபுகொடுத்தான் றுஙமற் றதுமுன்னுளி
லான*காலவன்வாழ்ந்திட்ட வருந்தவச் சாலையாமால். (௭)

தாதைவாழ் மனையுமீட்டுந் தனங்களுந் தன்னையொப்பா
மேதைசால் புதவர்க்கன்றிவேற்றுளார்க் குதவிடாதா
மோதையார் கலிசூழ்பாரி லுற்றதோர் முறைமைபோலக்
கீதையி னெழுக்கஞ்சான்ற கிட்டிண தாசற்காய்த்தால். (௮)

காலவ முனிதவச்சீர் கண்டவவ் விடத்திற்கின்றுஞ்
சீலமார் கலதாவென்னச் செப்புமோர் பிரசித்தப்பே
ரேலவாய்ந் துள்ளதங்க ணிறைவனன் பினுக்கிசைந்து
சாலருட் கிருட்டிணப்பேர்த் தாசதே சிகன்வதிந்தான். (௯)

அக்கிர கண்ணியச்சி ரமைகிருட் டிணதாசா
னக்கிரன் கீல்கஜப தாசனு தியரமைந்தே
யுக்கிரத் தவஞ்செய்சாலை யுதவிமெய்ப் பணியுஞ்செய்யுஞ்
சக்கிர வர்த்திமுன்செய் தவநலஞ் சாற்றப்போமோ. (௧௦)

கிளத்திடு காலைதன்னிற் கிருட்டிண தாசதீர்த்த
னுளத்திடைத் தலசஞ்சார முளுற்றவெண் ணங்கொடன்பின்
வளத்துள மானசிங்கன் மாட்டியல் விடைகொண்டேகிச்
சளத்தியக் கறுத்தோர்போற்றத் தலம்பல சூழ்ந்துமாதோ. (௧௧)

திருமிகப் பொலியுங்கலை தேயத்திற் கருகாயுற்ற
பருவத மொன்றிலெய்திப் பார்முழு தளந்தமாயன்
மருவலர்க் கமலப்பொற்றாண் மனத்திடை மதித்துப்போற்றிப்
பொருவறு நிருவிகற்பம் பொருந்தியாண் டமைந்திட்டானல். (௧௨)

காலமற் றதனிலந்தக் கலைதே யத்தினைச்செங்
கோலர சியற்றுமொப்பில் கொற்றவன் குதலைத்தீஞ்சொற்
பாலனின் மையினுனெஞ்சிற் பருவரன் மிக்குநாட்டின்
சீலமா தியவெல்லாந்தன் சிந்தையி லுவர்த்தானாகி. (௧௩)

* காலவன் - ஒரு முனிவர்

ஓவிய ரமைத்தற்கொண்ணு வுயிர்கொள்சித் திரமேபோலுங்
தேவியை நோக்கிமன்னன் செப்பிடு கின்றுனங்காய்
தீவினை யாதுநாமுன் செய்தன மோவஃதாலே
பூவினை யாள்வானேர்நற் புத்திர னமக்கின்றுய்த்தால். (கச)

அரம்பையின் கிழ்க்கன்றேபோ லழிவிலதுற்ற நந்தம்
பரம்பரை யானதின்றியாம் பாலனம் புரியுநாளில்
வரம்பயில் புதல்வனின்றி மாய்ந்திடு கின்றநீயென்
னாரம்பயி லுள்ளத்துன்னி லுடலையு முடற்றுந்தீயே. (கரு)

மிகைபடு சேனையோடு வெஞ்சமர்க் களத்தினேற்ற
பகைபடு மரையர்மெய்யைப் பாற்றுண வாகவீந்து
திகைபடு மெனதுசீர்த்தி செல்வனின் மையினுலொன்னர்
நகைபடு செயலாய்த்தெற்று லுனெவண் சகிப்பதந்தோ. (கசு)

சிவத்தெழில் படைத்தவின்பார் *செம்மலைத் தாங்கத்தக்க
தவத்தெழில் படையாதேசித் தசனிர திமையொப்பென்ன
வவத்தெழில் படைத்தநந்த மாக்கையை யோம்பன்மாய்ந்த
சவத்தெழிற் கொடுபுதைக்கார் தன்மையே போலுமாதோ. (கஎ)

மைத்திபள் பொதியுங்கான மருவிமா தவமிக்காற்றிப்
புத்திரப் பேறுற்றின்பம் பொலிதரப் புந்திகொண்டே
னத்திற விதிநமக்கின் டமைந்தில தேலக்காட்டிற்
செத்திறந் திடுவாமெனன்றன் சிந்தையின் மதித்துள்ளேனல். (கஅ)

எனப்பல வாறுபன்னி யிதயமீ துரைப்பன்னி
மனத்துணி வோடுந்தன்னுெர் மந்திரி தனைவிளித்துக்
கனத்ததன் றுயாமுற்றுங் கழறியான் புதல்வற்கோரி
வனத்தமைந் தருந்தவங்கள் வயக்கிடுந் துணிவமைந்தேன். (ககூ)

தெய்வக டாட்சத்தாலோ சிலமா தவத்தோர்தங்கண்
மெய்வள ரருளினலோ மேதகு புதல்வனெந்தங்
கைவரப் பெறினேமீண்டிக் கடிநகர் காண்பேமின்றேன்
மொய்வளர் கானகத்தின் முடிவது சரதமாமால். (உ௦)

மீண்டியா மகப்பேற்றோடு மேவினு டீதிபின்றேற்
பூண்டிக ழின்பமாகின் புத்திரர்க் குரிமையாக
மாண்டிகழ் பதியீதாட்சி வயக்குபு வாழ்தியென்றே
யேண்டிகழ் மன்னனில்லோ டேதிலர் போலச்சென்றுன். (உக)

மற்றது கேட்டலோடு மந்திரி மனமாழ்ந்து
கொற்றவன் றன்னதுள்ளக் குறிப்பையுத் துணர்ந்துவேறு
சொற்றவற் றடுக்கவுள்ளந் துணிகில னுகிச்சோர்ந்து
பெற்றபெற் றத்தைவிட்டுப் பிரிந்தயர் † கொற்றிபோன்றுன். (உஉ)

---

* செம்மல் - புதல்வன். † கொற்றி - இளங்கன்று.

குருகமை காந்தட்செங்கைக் கோலன செவ்வரிக்கட்
டிருநிகர் மனையொடுந்தன் றேயமீத் தகன்றமன்னன்
கருமுகிற் படாங்கொண்டேமின் கான்றுகா குத்தனென்ன
மருவுமோர் பருப்பதத்தை மாடுறக் கண்டான்மன்னே. (உ௩)

அம்மலைத் தாருவின்கீ ழாதிமூ லப்பேரோதுங்
கைம்மலைத் துயரந்தீர்ப்பான் காாவதைத் தருளுஞ்சீர்சான்
மைம்மலை மேனிகொண்ட வள்ளலை மனத்தமைத்துச்
செம்மலை போலமர்ந்த செம்மலைத் தரிசித்தானால். (உ௪)

அரசன்ன நடைமின்னுளொ டாங்கருள் பொழிகட்பார்வைப்
பிரசன்ன முகங்கொண்டுற்ற பெருந்தவற் கண்டுளன்பாற்
பரசன்ன போதிலன்னோர் பாக்கிய வுருவாவுற்றோ
னரசன்ன வீரமன்ன னுட்குறிப் புணர்ந்துரைப்பான். (உ௫)

வருந்தலி ரும்மதுள்ள வாஞ்சைமுற் றுணர்ந்தேன்யான்முன்
றிருந்தநுந் தமக்குளன்பாற் செப்பிடு மனுவைபுள்ளம்
பொருந்துபு செபிக்கினுந்தம் புந்தியில் விழைந்ததாய
பெரும்பயன் றன்னைவல்லே பெற்றிடு வீர்கண்மன்னே. (உ௬)

கணத்தயல் பொருந்தாநின்ற கவின்பொலி தடத்தின்மாடே
மணத்தநீர் படிந்தெம்முன்னர் வருதிரென் றுரைத்தானன்புக்
குணத்தகை யுடையோராடிக் குறுகலுங் கருணைகூர்ந்து
பணத்திர ளாதிசேடப் பள்ளியோன் மனுவையீந்தான். (உ௭)

சிறப்பதா மந்திரத்தைத் தேசிக னுரைக்கநெஞ்சு
ளுறப்பதித் தன்புகைமிக் கொருகணப் பொழுதானு
மறப்புறு துவகையோடு மதித்துரு வேற்றிநாளும்
பறக்குமோர் கொடிகொண்டில்லாப் பகவனோர் குருதாள்போற்றி. (உ௮)

பணித்திறம் பலசெய்தங்ஙன் பயிலுநாட் பத்தருள்ளங்
குணித்திடும் பொருள்கள்வல்லே கொடுத்தரு ளன்புசான்ற
தணிப்பருங் கருணைமேனி தாங்குகிட் டிணதாசன்று
னணித்தகை யரையற்கோகை யமைபவின் னனசெய்கின்றான். (உ௯)

ஒருதினத் தாசன்றன்னொ ருத்தமக் கற்பின்மிக்க
மருமனை வியைப்பார்த்தன்பான் மகிமைகொ ணமதாசாற்குப்
பொருவிலா ரமுதமன்ன போனகங் கொணர்தியென்னத்
தருநிகர் மனையின்மேவிச் சடுரசப் பொலிவாரன்னம். (௩௦)

கொடுவரு பதத்தின்மேடுங் குழியுமாம் வழியினூடு
கடுநடை கொடுபடர்ந்த காரணத் தாற்கரத்திற்
படுகலங் களிலமைந்த பதார்த்தங்க ளிடைசில்பாகம்
விடுசுடர் மணிமேற்பாரின் மீமிசை வீழ்ந்தவன்றே. (௩௧)

பூமிசை மருவுமாக்கம் போன்றவிர் பொற்புவாய்ந்தாள்
பூமிசை வீழ்ந்தவற்றைப் பொருக்கென வெடுத்துத்தன்னோர்
நாமிசை வைத்துண்பான்மை நன்னலர்க் கிடியேறென்ன
நாமிசை புலவுவேற்கை நராதிப னுளத்திற்கொண்டே. (௬உ)

தண்மதி யுதவுமுள்ளந் தழைத்ததா மோதரான்று
ளெண்மதிச் சான்றோர்யாரு மேத்தெடுக் குஞ்சீர்சான்ற
வொண்மதிப் பெரியோர்க்கீமு னுண்டன ளமுதமந்தோ
பெண்மதி கொண்டாள்செய்த பிழைக்கெது கழுவாயென்று. (௬௩)

கொடுஞ்சினந் திருகிவாள்கைக் கொண்டவ டன்னைவல்லே
யடுஞ்செயல் புரிவேனென்ன வணுகமா தவன்றெரிந்து
கெடுஞ்செயல் புரியன்மன்னீ யென்றுகிட் டினதாசன்றான்
றடுஞ்செயல் புரிந்தன்பார்ந்த தராதிபன்கொளவுரைக்கும். (௬௪)

குற்றமொன் றியற்றிலாளாங் கோற்றொடிக் கோதைமீதிற்
கொற்றமொன் றியகோலேந்துங் கொற்றவ கொடுமைமிக்க
செற்றமொன் றியல்பு சாலுஞ் சீலமன் றென்றுசெப்பி
யற்றமொன் றியமிருட்டான் னத்தைத்த னங்கைக்கொண்டு. (௬௫)

நால்வகை யாப்பகிர்ந்து நண்ணுமோர் பங்கினைத்தன்
பால்வயங் கிடவைத்தேனைப் பாகமொன் றினைமாணூர்செங்
கோல்வயங் கிறைக்களித்துக் குலவிரு பாகந்தன்னைச்
சேல்வரி விழியாட்கீந்தான் செய்கைமற் றதைமன்றேர்ந்து. (௬௬)

என்னையிவ் வண்ணந்தாமீண் டியற்றிடற் கேதுவென்னு
மன்னைமிக் கருளானோக்கி மாதவன் வழுத்துகின்றான்
பொன்னனே ரிவள்கருப்பம் பொருந்திய பான்மையாலே
யன்னைசே யிருவர்கொள்வா னளித்தன னிருபங்கன்றே. (௬௭)

குரவமை யோதிமங்கை கொண்டதோர் சூலினின்றும்
பரமபா கவதனுமோர் பாலக னுதிப்பானுண்மை
யரசநின் பாக்கியத்தி னளவைபா ருரைக்கவல்லார்
புரமனைத் திருமைச்சீரும் பொருந்திவாழ் கெனமன்சொல்வான். (௬௮)

கருணையங் கடலேபுன்மெய்க் சுடைக்கணேக் கமைந்தமாண்பான்
மருவுல குள்ளோர்பாவி மலடனென் றிடும்பேர்மாய்ந்து
பொருவில்பா கவதனுஞ்சற் புத்திரற் பெற்றேன்கற்பத்
தருவினிற் சிறந்தோய்ப்பெற்றேன் றாழ்வடை கின்றதுண்டோ. (௬௯)

வளங்கொள்வெண் குடைநிழற்கீழ் வாளரித் தவிசின்மீதே
களங்கொணெஞ் சகத்தினேடு தங்கிடு வாழ்க்கைதானே
விளங்கொளி சான்றள்ளூறு மேதகின் பார்நின்றாட்கீ
முளங்கொளும் வாழ்வோமிக்க துறைத்தியா னுணரமாதோ. (௭0)

எதையடைந் திட்டபோதி லென்னுளத் தின்னல்கட்கோர்
விதையென விருந்தவொன்று வெந்ததோ வென்னுளத்திற்
புதையல்கா ணிலம்பாட்டோனைப் போலுமின் பெதுநல்கிற்றே
வதையகன் றுலகினுயே னடைதலாம் பயன்மற்றியாதே. (சக)

ஆதலி னடிகள்செம்பொ னடிகளை யகன்றுநாயேன்
பூதல வாழ்க்கையென்னு நிரயமுட் புகேன்புக்கேனேற்
போதவின் பருள்கழைக்கட் பொருந்துசாற் றினைக்கைவிட்டுக்
கோதனைத் தையுந்தன்செங்கைக் கொண்டவ னுவனன்றே. (சஉ)

என்றுபற் பலவாமன்ன னிசைத்திடக் கேட்டருட்சீர்க்
குன்றுறழ் மனங்கொண்மேலோன் கூறிடு கின்றானீதா
னின்றுளத் தெமைப்பிரிந்தீண் டிருப்பதென் னிசைவுமன்று
னன்றரைக் கணமானுலு நமைப்பிரி யாதுள்வாழ்வாய். (சங)

யாமுநிற் பிரியாதென்று மிலங்குவ மெய்மையாமான்
மாமுர சதிரும்வாயின் மன்னவ மழலையஞ்சொற்
றேமுதிர் கின்றவாய்கொள் சிற்றுரு வமைந்தஞானச்
சீமுத வடிவோனன்பற் சேயெனப் பெற்றுவாழ்வாய். (சச)

எனக்குரு பரன்றானன்பா லிசைத்தவ னீங்கவேந்தன்
மனத்துய ரொடுமிக்கின்ப மருவின னுகிச்சூலார்
கனத்தினை யனையகூந்தற் காரிகை மடமாதோடு
வனத்தினின் றகன்றுதன்னூர் வயினுற வழிக்கொண்டானால். (சரு)

செயலிது தெரிந்தமைச்சன் சிந்தையு ளுவகைபொங்கிப்
புயல்படி மாடவீதி புனைந்திடப் புகன்றுநாட்டி
வியலுமே தகையரோடு மிடியென வியங்கலிப்ப
நயமலி சேனையான நான்மையுஞ் சூழவேகி. (சகூ)

பொருத்துமஞ் சனத்தின்மாண்பாற் புதையலைக் கண்டுளத்திற்
றிருத்தியுற் றிடுமோர்சென்மச் செல்லனல் குரவோனென்னக்
கருத்தினுள் ளோகைமிக்குக் கண்டடி பணிந்தியன்ற
வருத்தமா னங்கேட்டின்ப வாரியின் மூழ்கினுனால். (சஎ)

வண்டமை நகரதன்பான் மன்னிவாழ் மாந்தர்யாருந்
தண்டமை மன்வனத்திற் சார்ந்துமா தவத்தினீராற்
கொண்டவோர் வரத்தின்பான்மை சிந்தையுட் குறித்துச்சேயைக்
கண்டவர் போன்றேயின்பக் கரையினைக் காணானார். (சஅ)

காலமற் றதிலோர்பத்து மாதமுங் கடந்துமைதோய்
கோலன விழியாள் செய்ய கும்பிநின் றகன்றிட்டாதி
மூலமெய்ப் பொருளாயுற்ற முகுந்தனன் பேதிரண்ட
பாலக னுருவங்கொண்டு பரமபா கவதன்வந்தான். (சகூ)

சுபமிக வுதித்தமைந்த னுவாமதித் தோற்றமெய்தித்
தபமிகுந் தான்கொள்பேறே தரணியுற் றோர்கைக்கொள்ள
நபமுறு முலகுள்ளாரு நறுமொறுத் திடக்கோலோச்சி
விபவசிற் சுகவமோக வேலேயுட் படிந்துவாழ்ந்தான். (ருo)

தன்னமி சத்திலொன்றைச் சரண்சர ணெனப்புகுந்த
கன்னவில் குவவுத்திண்டோட் கலேதேய த்தையாளு
மன்னவற் கொருசேயாக வழங்குகிட் டிண தாசன்று
னன்னவா கனன்றன்றுதை யவிர்தலம் பலகண்டேத்தி. (ருக)

சசிவர வேயுண்ணுடஞ் சகோரபட் சியையொப்பாகி
நிசியுடன் பகலுமன்பா னிணைந்துநெக் குருகியுள்ளங்
கசிதரு மானசிங்கன் கடிநக ரடையமைநேர்
பசியமா மயிலினெஞ்சம் பரவச மடைந்தான்மன்னே. (ருஉ)

அன்னதன் பின்னன்னேனு மடிமையாஞ் சீடர்தாமும்
பன்னள வற்றவாடல் பாரிற்செய் திருக்கலாகு
மின்னவென் றவ்விர்த்தாந்த மிலங்கிட வில்லேயீற்றிற்
பன்னக நடனத்தாளிற் படிந்ததற் கையமின்றே. (ருங)

இத்திறத் தான்மாயன்பொ னிணையடி தொழலிலன்னேற்
பத்திசெய் யடியார்தம்பொற் பதம்பணி வார்களிட்ட
சித்திமுற் றெய்தியுள்ளத் திருத்தியுற் றழியாவுண்மை
முத்திபெற் றுய்வாரென்னு முறைதுலங் கியதுமாதோ. (ருச)

வேறு

வானும்புகழும் பெருஞ்சீர்த்தி வாய்ந்தவருட்கிட் டிணதாசன்
மனத்திலமைந்து வையகத்தின் மருவும்பத்தி யடியர்தமை
வேனுந்தியமெய்ப் பரமபத மேவப்புரியும் பெருங்கருணே
வேலாவலய மனகடைக்கண் வீட்சண்ணியங்கொள் வித்தகனே
தேனுந்திடுசிற் சுகமயமாய்த் தெய்வமணங்கொண் டிருக்கின்முடி
சேருங்கமல மலரடியென் சென்னிவிழியுட் பதித்திடுவான்
யானுன்சமுகத் திரக்கின்றே னீந்தாண்டருள்வ தென்றறியே
னிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருரு)

கிருட்டிணதாசகதிமுற்றிற்று.

ஆகு கவி கக௲உஎ

---

இருபத்துமூன்ருவது

# கீல்காக்கிரதாசகதி

ஆர்த்தியோடுத னடிதொழுமன்பரைக் கதியிற்
சேர்த்தியாள்கிருட் டிணப்பெயர்த்தீர்த்தன்மாண் புரைத்தேன்
பூர்த்தியாயவன் றன்சரண்சரணெனப் புகுந்த
கீர்த்திகொண்டகீல் காக்கிரபத்தர்சீர் கிளப்பாம். (க)

வேறு

கேசவனருட்டிறங் கெழுமுகிட்டிண
தாசனதடிமலர் சரணமென்றமை
மாசகன்மனங்கொண்மா ணுக்கன்வானவிர்
கீசனிற்றேசியல் கீல்கதாசனே. (உ)

நாகசாதனத்துறை நாயகத்திறற்
பாகசாதனன்சுதைப் பக்கணம்பெறு
மாகசாதனந்தமை யன்றுமேகெடா
யோகசாதனம்பெறும் யூகவன்மையான். (ஙு)

கேடறியாவுடல் கிடைத்தகில்கனு
நீடருணலமலி நிமலமாதவன்
வீடருடலங்களுண் மிக்கமாட்சிசான்
மாடநீடியன்மது ராபுரித்தலே. (ச)

பன்னகமேனடம் பயிலுந்தாட்டுணே
தன்னகத்துன்னுபு தலேவருஞ்சுக
நன்னலவின்பரு ணூலேமூழ்கியே
தன்னனமாதவன் சரிக்குநாளேயில். (ரு)

வேறு

தரியலாரெனப் பொருந்தியற்ருனகுஞ் சரங்கண்
மரிதரப்பொருந் திறமைசான் மானசிங் கன்ருன்
பிரியமிக்ககீல் கதாசன்மெய்ப்பிரிவினை யாற்ருன்
றரிசனம்புரி வான்புகுந்தவனிடந் தங்கி. (சு)

கிரித்திறம்பெறு கிருபைசால்கிருட்டிண தாசன்
சரித்திரத்திற மாதியவளமெலாஞ் சாற்றி
யுரித்தினேடுறு மேல்வைமுச்சாமமா குற்ற
பரித்தவேலேயிற் கீல்கனந்தாத்திணேப் பார்த்தே. (எ)

வேறு

நல்லதுநல்லடுதெ ஞநவின்றனன்
சொல்லதுமன்செவி தோய்ந்துவப்பொடேன்
கொல்லதுதெரிதரக் கூறுகென்றனு
மொல்லதுமன்கொள வுறுவனேதுவான். (அ)

கோட்டிருன்மலிபொழிற் கூர்ச்சரத்திரு
நாட்டினையாட்சிசெய் நராதிபன்வினைக்
கூட்டினின்றகன்றொளிக் கோலமேவிவிண்
மாட்டிலேகுற்றனன் மானமூர்ந்தரோ. (கூ)

சென்றிடமத்திறந் தெரிந்துகண்ணிடை
நன்றுநன்றெனவிவ ணவின்றுளேனவ
னென்றியலென்புடை யுற்றபத்தியா
னன்றியுமெனக்கதி பிரியனனவன். (க0)

மேருதேவப்பெயர் விரவினேன்மண்விண்
ணூருளார்களும்விதந் தோதிடும்பெருஞ்
சீருளானுணரெனச் செய்பமாதவன்
பேருவாவடுமரிப் பேரற்கோதினன். (கக)

வேறு

தபத்தகைக் கில்கதாசன் சாற்றுசொற் கேட்டுமன்னீ
தபத்தமோ மெய்கொலோவென் றறிகுவன் யானென்றுன்னி
விபத்தறு மெய்த்தவன்பால் விடைகொடு விரைவிற்றன்ன
திபத்திர ளுலவும்வீதி யிலகுநா டெய்திமன்னே. (கஉ)

ஒற்றனொன் றொருவற்கூவி யொல்லைநீ கூர்ச்சரப்பேர்
நற்றகை நாட்டிற்புக்கு நராதிபன் றன்னைக்கண்டாங்
குற்றவாச் சரியச்செய்தி யுளதெனி லுரைப்பாயென்னச்
சொற்றனுப் பிடலுமவ்வூர் தூதனோர் கணத்திற்றேய்ந்து. (கங)

ஆயநாட் டியலுமன்ன னமைச்சர்பா லறையவங்கு
மேயவர் மானசிங்க வேந்தற்கோர் கூந்தலீந்தார்
போயவன் கொடுவந்தீபப் புரவலன் விரித்துநோக்கி
மேயவோர் செயல்கண்முற்று மெய்யென விதயங்கொண்டான். (கச)

ஆனதன் மாற்றநம்பா தகத்தினி லையமெய்தி
மானசிங் கன்பரீட்சை வயக்கிடுந் தன்மைமுற்று
மீனமில் கில்கதாச னிதயமீ துணர்ந்துமொப்பில்
வேனமை யருள்கொடன்னோன் மிசைச்சினஞ் செய்திலானல். (கரு)

திருவருட் செயலால்பாவுந் திகழ்வதுஞ் சினத்தினாலே
மருவுநற் றவங்களெல்லா மாய்ந்திடு மென்னுநீருந்
தெருளினு மமையத்* திங்கு சேர்கலம் போல்வர்பல்லோர்
பொருவறு கில்கதாசன் பொறுமையென் னென்பதம்மா. (கசு)

---

* இங்கு - பெருங்காயம்

கிருட்டிண தாசனெப்பில் கிருபைநோக் கத்தினீராற்
றெருட்டிக மூன்பார்மான சிங்கவேந் துள்ளந்தானு
மருட்டிய லையப்பேயான் மலைந்திடு மென்னின்மைய
விருட்டிக யத்தார்க்குற்ற மியம்பிட விடமின்றின்றே. (௧௭)

கிருபையங் கடனேருள்ளங் கிடைத்திடு கில்கதாசன்
மருவலர்க் கிடியேறுபு மாதவன் பத்தர்கட்கோ
ரருமைநற் றெண்டனுபு மமைந்தசீர் மானசிங்கன்
மருவிடு மையமாதி மாசகற் றுளங்கொண்டுற்றான். (௧௮)

பொருந்துபுண் ணியத்தால்விண்ணம் புகுந்தவர் தருப்பாலொன்றை
விரும்பிய பின்கைக்கொள்ள வேண்டுமோர் குறையுள்ளாராற்
றிருந்தியற் றுய்பல்கோடி சேர்ந்துரு வெடுத்தாலன்ன
பெருந்தவத் தொண்டர்கூட்டம் பெற்றவர்க் கின்னலுண்டோ. (௧௯)

சிறிதுநா ளகன்றுகில்க தாசனோர் திவசந்தன்னிற்
பொறியுரத் தெம்மான்பத்திப் பூணணிமானசிங்கன்
செறியரு கமைகாலன்னேன் றோர்தாத் தனதுரங்கொள்
வெறிமலர்த் தொடையலங்ஙன் மேவுபெட் டகத்தமைத்தே. (௨௦)

கன்னலோ ரிண்டொழிந்த காலையிற் கில்கமேலோன்
மன்னனைப் பார்த்தப்பெட்டி வயினுற நான்வைத்திட்ட
கொன்னவிர் மாலைதன்னைக் கொணர்கெனக் களித்தியென்ன
வன்னது கேட்டமன்ன னதைத்திறந் தெடுப்பான்போந்து. (௨௧)

திறந்திடப் பெட்டகத்துட் சீற்றமிக் கமைந்ததாய
மறந்திகழ் புயங்கமொன்று வயங்கிடக் கண்டமன்னன்
விறந்திடும் வெருட்சிமிக்கு விரைவிலங் கதனைமூடி
நிறந்திகழ் கில்கதாச னேரணைந் தலங்கலின்றால். (௨௨)

பெரியகா கோதரந்தான் பெட்டகத் திருப்பதென்னக்
குரிசிலோ திடுசொற்கொண்டு கோலமார் கில்கதாசன்
பரிவுட னணைந்துதன்கை பற்றிமே லெடுத்தகாலை
விரியல ரலங்கலாக விளங்குசீர் வேந்தன்கண்டான். (௨௩)

மறுதரம் பெட்டகத்துள் வைத்துமன் னவனைநோக்கி
நறுமலர்த் தொடைகொணர்ந்து நல்கென நவிறலோடுங்
குறுகிமன் றிறந்துநோக்கக் கொடுவிடப் பற்கள்சான்ற
தறுகண்வா ளரவமேவத் தன்மையப் பொழுதுங்கண்டான். (௨௪)

திவசமோர் மூன்றிவ்வாறத் தியற்புதச் செய்கைதன்னைப்
புவனிகா வலனுட்டோர்வான் புலப்படப் புரிந்தொப்பில்லாத்
தவமலி கில்கமேலோன் றன்வறி திருந்தானுக
நவமலி யிறைவன்றன்மு னவிற்றிடுஞ் செயலுள்ளோர்க்கே. (௨௫)

முன்னொட் கில்கதாச முனிவர னுரைத்தமாற்றந்
தன்னைநம் பாமலையஞ் சார்ந்துநாஞ் சோதித்திட்ட
புன்மைசால் செயலினலே புணர்ந்ததீ தென்றுமன்னன்
றன்னையு ணெந்துநிந்தைக் கிளவிகள் சாலச்சாற்றி. (உசு)

ஒப்பறு கில்கதாச னொளிமலர்ப் பதம்வணங்கித்
தப்புள பொறுத்தருட்கண் சாத்தியாண் டருடியென்னச்
செப்பலு முனிவனுன்றன் சிந்தையு ளஞ்சலென்று
னப்பொழு தத்தவன்பா லையமி லன்பனுனன். (உள)

வேறு

அக்கிரகண்ணியத்தகைமிக் கமைகில்கதாசனுக்கோ ரநுசனுய
வக்கிரதாசனைக்காண்பான் மானசிங்கப்பேரிறைவ னன்பினேகி
வக்கிரமார்தனதுபரி சனங்களையன்னவன்சாலை வாயின்மாடே
தொக்கிடுமாநிறுவியிறை மட்டவன்மட்டவிழ்பாதந் தொழுவான்போந்தான்.

அன்னபொழுதக்கிரதா சன்பன்னசாலைமுகப் பமைந்ததாய
வன்னமலர்வனப்பணிசெய் திருந்தனன்வேந்துவப்பொடுமுன் மருவிநோக்கத்
தன்னனசிர்படைத்துளவக் கிரதாசனுங்கமைந்த தவிசின்மாடே
துன்னவுணர்ந்தேத்தியன்பிற் பணிந்தெழுந்தோரேவலன்போற் றெழு துநின்றன். ()

தொழுதருகினிற்குமெழின் மானசிங்கன்றன்னையருட் டேயோனேக்கிப்
பழுதில்குணக்குன்றனையாய்சுகங்கொலிருந் திடுதியெனப்பகர்ந்தன்னேன்பாற்
செழுமதுரமொழிகொடவன் விருத்தாந்தங்களைவினவிச் சீர்த்திசான்ற
விழுமியதன்கதைகளெலாம் விளம்பியவணிருந்தானவ் வேலைதன்னில். (கூO)

உண்மையுருவம்படைத்த வக்கிரதாசன்றனவ் வுத்தியான
மொண்மைபெறப்புரிந்துதன தாச்சிரமமெய்தவுளத் துன்னிவாயிற்
கண்மைபெறவணைதலுமாண் டமைந்தபிருத்தியனுண்மை யறியாஞகி
வண்மைபெறுமரசுள்வதி தருதலின்யானுன்னைவிட மாட்டேனென்றன். ()

பொன்னைமதித்தளவறவே தேடியிறுமாந்தெவரென் போல்வாரென்னத்
தன்னைமதித்திடுகின்றர் பலர்தினம்வந்தடிவணங்குந் தன்மைசான்ற
மன்னைமதித்தகட்டுறுந்தீ யவித்திடும்புன்மையர்தேறும் வலியுள்ளாரோ
பின்னைமதித்திடுவானுன் மதித்திடுமெய்த்தொண்டாருட் பெருமையம்மா.

சடந்தனின்மிக்கபிமான மலிந்துவெளிப்பகட்டமையச் சடைகணீட்டி
யிடம்பமுறவணியொடுதோற்கொண்டலகைமருட்டியல்போறென்னிற்றம்போன்
மடம்படுவோர்தாம்புகழத் திரிகுவாருண்மையுள்ளார் மருவுந்தங்நேர்
திடம்படுமுத்தமருணரத் திகழ்வதல்லான்மற்றையர்பாற் றெரிப்பார்கொல்லோ. (கூகூ)

சேவகர்தாந்தடைப்படுத்தக் கண்டுமுண்மையவர்தேரச் செப்பானுகி
மாவமையுமுரங்கொடிரு மால்கமலச்சேவடிதன் மனத்திலுன்னி
யோவருமானந்தமய மாயமர்ந்தான்செயலிதுணர்ந் தோவாளாங்கோ
தாவருமெவ்விடத்திருந்தோ நாபதாசன்றனச் சமையத்துற்றன். (கூச)

தன்னருமைச்சற்குரவன் பூவின்மிசைமேவியவத் தன்மைநோக்கிப்
பன்னரியவாருமை மீக்கொடுதேசிகனருகிற் படர்ந்துள்ளன்பான்
மின்னவிர்தாட்டுணைவணங்கி யீண்டமைதலேனெனவே வினவவன்னோன்
மன்னவன்சேவகரெனையுட் போகலெனவறியாராய் மறுத்தாரன்றே. (௩௫)

அன்னவர்தஞ்சொற்கிணங்கி யானிந்தவிடத்திலின்புற் றமைந்தேனீதா
லென்னவொருதாழ்வுநமக் கெனநாபதாசனுளத் தெரிபோற்பொங்கிப்
பொன்னவிர்தாட்கடிமைதனைக் கொண்டகுருபரற்கொண்டு போனனக்கான்
மன்னவனக்கிரதாசற் கண்டுளத்தன்போடுதுதி வழுத்தித்தாழ்ந்தான். (௩௬)

அக்கணத்தவ்வாதனமீ தவிர்பதியாமக்கிரதா சன்றான்வான்சான்
மைக்கணவிர்மின்னெனவன் னவர்காணத்தன்னுருவ மறைத்தானுண்டைப்
புக்கதொராச்சரியவருட் செயன்மானசிங்கநற்பேர்ப் பூபனோக்கித்
தக்கவுயரற்புதமென் னெனவினவவருணபதாசன்சொல்வான். (௩௭)

மித்திரனொத்துலகமெலா மெறிக்குமிசைமானசிங்க வேந்தனேநின்
பத்திவிபவங்கொடிவ்வா றெங்குரவன்றான்புரிமெய்ப் பணிவழாது
நத்தியிவணடைந்திடுநீ யுள்ளமிசையொருசிறிது நலிவுறாதுஞ்
சித்தியற்றன்னருணீரால் வேற்றுருவங்கொண்டிவனுந் திகழ்ந்தான்மெய்யே.

தானடையுமக்கணத்திற் றானமிதின்முன்னுறுந்தன் சகளந்தன்னை
வானடையும்படிபுரிந்தா னிச்செயலல்லான்மதிக்கின் மற்றொன்றில்லை
யூனடையுமபிமான மலிந்துழல்வோர்தம்மறிவா லுணர்தறேற்றா
வேனடையுமெங்குரவற் கிச்செயலசாத்தியமா விளம்பொண்ணாதே. (௩௯)

செயலிதற்குள்விம்மிதமென் னெனநாபதாசனன்பிற் செப்புகாலை
வியனச்சமுடனுவகை யொருங்கமைந்துமானசிங்க வேந்தனுனை
னயமறியாவெனதுபரி சனமானர்தாம்புரிந்த நவைகள்யாவுந்
தயவுபொருந்துளமுடைய வள்ளானீபொறுத்தாளத் தக்கதென்றே. ()

நெருப்பணைந்தவிழுதேபோ லுளமுருகித்தொழுதிரக்கு நிருபற்பார்த்துப்
பொருப்பனையமனநிலைசா லக்கிரதாசன்கனிவிற் புகல்கின்றானெம்
விருப்புலவாமானசிங்க நின்மிசையாஞ்சந்தோட மிகக்கொண்டேமா
லொருப்படுநெஞ்சுடையவுனோர் சேவகரென்னீர்மையுளத் துணர்கிலாராய். ()

அபிமானத்தோடமறி யாமைமிகத்தடுத்தலினன் னவரைச்சீறிச்
சபியாமேவிட்டிடும்யா னின்மீதிற்றவறுளதாச் சாற்றுவேன்கொ
றபியாதியித்தோட நின்னுடைவர்கட்குமின்று சரதமாகு
மபிரூபனயன்புரைவாய் சுகிர்தமுழுதெய்துகென வாசிசாற்ற. (௪௨)

மானசிங்கப்பேர்வேந்த னக்கிரதாசனைமீண்டும் வணங்கியேத்தித்
தேனவிழ்செந்திருமருவுங் கோகனகப்பூவனதன் றேயஞ்சார்ந்தே
வானவரும்புகழ்கீல்காக் கிரதாசர்தம்மகிமை மனத்துட்டேறி
ஞானவடியார்க்கடிய னாகியுலகரசாட்சி நவிற்றிவாழ்ந்தான். (௪௩)

மருட்டியக்கார்புவிமாயை வழக்கொழிவார்வழுத்துமுயர் மகிமைசான்ற
கிருட்டிண தாசற்குநந்தம் முடலாதிகொடுத்ததன்மெய் கிடைத்தோரான
தெருட்டிகழ்கில்காக்கிரர்தா மிம்மையிடைப்பிரியாவோர் திறம்போன்மாய
னருட்டிருப்பொற்பதவெளியிற் புக்குய்ந்தார்பிறப்பொடிறப் பகன்றுமாதோ.()

வேறு

தூலம்பிரிந்தா ருயிர்துறக்கந் தோய்தலுணர்ந்துந் தன்னூரத்திற்
சூடுந்தொடைய லரவமெனத் தோன்றப்புரிந்துந் தன்னனைய
கோலம்பலகொண் டாடியுநற் குணஞ்சால்கில்காக்கிர தாசர்
குலவப்புரியுங் கடைக்கணருள் கொழிக்குங்கருணைக் குன்றமே
ஞாலம்பொருந்த நிதவாழ்வை நம்பிப்புலந்தோ றங்காடி
நாய்போற்சுழல்வேற் குன்றனரு ணாட்டிற்புகவென் றருள்புரிவா
யேலம்பொருந்துங் குழலியர்மா லெய்தாருளங்கண் பெறும்விருந்தே
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (சரு)

கீல்காக்கிரதாசகதிமுற்றிற்று

ஆகூ கவி ககூஎஉ

---

இருபத்துநான்காவது

# சங்கராசாரியர்கதி

வெங்கரா வதைத்தோன்பத்தி மேவுகிட் டிணதாசன்றன்
இங்கரா தரஞ்சால்கில்காக் கிரகதி சிறிதுரைத்தேன்
பொங்கரா வணியினன்றன் பொருவிலங் கிசமாத்தோன்றுஞ்
சங்கராசாரியன்சீர்ச் சலதியிற் சிலசொல்வேனே. (க)

கோரமிக் கமைந்தவஞ்சக் கொடியருக் கின்பநல்குஞ்
சோரமிக் குமைந்தவஞ்சால் கொடுங்கலி தோன்றலாலே
வாரமிக் கமைந்தநெஞ்ச மருவியன் மேலோர்போற்றுஞ்
சாரமிக் கமைந்தவேத சாத்திரா திகண்மறைந்த. (உ)

மற்றவை மறைதலாலே மாட்சிசா னெறிகள்யாவு
மற்றன வதனுற்பூமீ தமைந்தமா னிடர்களானுர்
குற்றமார் சைனசித்தாந் தங்கள்கைக் கொண்டறத்தீ
துற்றநாத் திகர்களாகி யுயரற நிந்தைசெய்து. (ங)

தானசி ரார்த்த மேலாந் தவவிர தங்களென்ன
மேனவி லறங்கடம்மை வெய்தென வெறுத்தாராயு
மானநற் சாதியாசா ரங்கணீத் தகன்றூராயு
மானவாச் சிரமச்சீலம் வழுவென மறுத்தாராயும். (ச)

மேன்மைசால் பனுவற்கூட்டம் விலக்கென வெறுத்திட்டேனைப்
பான்மைய நூல்கடம்மைப்பரிந்தநுட் டானஞ்செய்து
நோன்மைசான் மகங்கடம்மை நுடங்கிடப் புரிந்தாரஃதால்
வான்மையூர் போகிமுன்னோர் மகத்தவி யிழந்தாராகி. (ரு)

தேன்முகம் பிலிற்றும்பைந்தாட் செய்யதா மரைக்கண்மேய
நான்முகக் கடவுடன்பா னண்ணிமிக் கன்பினேடு
மேன்முகத் துதிகள்சால விளம்பியேத் தெடுப்பவேதா
வான்முகத் தவரைநோக்கி வழுத்துவ னிவ்வாறன்றே. (சு)

வானவ ரெதுகுறித்தென் மாட்டுவந்த டைந்திட்டீரோ
வானவச் செயலையானன் கறிந்துளே னதற்குபாய
நானவின் றிடுகின்றேனீர் நயந்தென்பி னடைதிரென்றே
வானமை சிகரிசான்ற வளப்பெருங் கயிலைபுக்கான். (எ)

ஆண்டருட் கடலாயுற்ற வரியுட னம்பொன்வெற்பை
நீண்டதோர் சிலைபாக்கொண்ட நின்மலனிருக்கக் கண்டே
பூண்டபே ரன்பினோடு போற்றிமுன் னின்றன்னோர்பான்
மாண்டமை பிரமன்வந்த வகையெலாம் வகைபாச்சொல்வான். (அ)

சிவனரி யாகுமுந்தந் திருவருட் டுணைகொண்டெண்ணில்
புவனமுஞ் சிருட்டிசெய்தேன் போதிங்நாட் புணரிசூழ்ந்த
வவனிவாழ் மக்கள்யாரு மவமலி சைனமாதிப்
பவநெறி பொழுக்கங்கொண்டு மகமுதற் பாற்றலாலே. (கூ)

அமரர்கள் யாரும்யாகத் தவியுண வடையாராகித்
தமராமார் முறையிட்டென்னைச் சரண்புகத் தமியேனும்பொற்
கமலபா தங்கடம்மைக் கதியெனக் கலங்கேனெம்மை
விமலநீ ரருள்செய்தாள வேண்டுமென் றயன்புகன்றான். (க0)

மற்றவை கேட்டவண்சார் மாதவன் வகுக்கின்றானீ
சொற்றகா ரியமுமீண்டு தோன்றிடு செயலும்யானுட்
டெற்றெனத் தேறிமுன்பிச் சிலம்பிடைச் சிவன்பால்வந்தே
னுற்றமாந் தர்களெல்லோரு முயர்நெறி பொன்றும்வண்ணம். (கக)

ஏதுரைத் தனையானும் யானவ்வா றியற்றுகின்றே
னோதுதி யென்றன்போடச் சுதன்சொல வோங்கனல்கு
மாதுறை பாகன்றானு மவ்வணம் வழுத்தக்கஞ்சப்
போதுறை வாணிகேள்வன் புகன்றிடத் துவக்கினானல். (கஉ)

அரவணிப் பெருமபூமீ தமைபவர் சுகிக்கவேண்டிற்
றரணியி னீயும்யானுஞ் சலதர மேனிமாலு
முராமுறு கலைகடன்னை யுதித்திடச் செய்யினல்லாற்
பாவிரு ளொழியாதஃதால் யாமறைப் பாலராகி. (கங)

வேதசாத் திரங்களாதி மேதகு நெறிகடம்மைப்
பூதல மீதிலென்றும் பொலிந்திடப் புரிந்துபுன்மைக்
கோதமை சைனமாதிக் கொடுநெறி யாவும்போக்கி
னுதமெய் யின்பம்பூமே னரரெலாங் கைக்கொண்டுய்வார். (கச)

வேறு

என்னப்பிரம னிசைத்திடலு மிலங்குகாள கண்டனுமை
வன்னத்திருமே னியனுமந்த வாறேபுரிவா மெனத்தவள
வன்னத்தவனன் னவர்கள்விடை கொண்டேயமரர் தமக்களித்துத்
தன்னற்பதியிற் புக்குளத்திற் சூழ்ந்தான்புவியிற் சனிக்கவே. (கரு)

சூழ்ந்துவளமிக் கமைந்திலகுந் தூயமிதிலைத் தொன்னகர்ப்பால்
வாழ்ந்தமறையோர் தவச்சிசுவா வயங்கியேமண் டனமிசிரக்
காழ்ந்தநாமங் கொடுதிகழ்ந்தான் கருணையுருவா ரச்சுதனு
மாழ்ந்தகிடங்கப் பதியினிடை யுதயனசா ரியனானேன். (கசூ)

நீலகண்டன் றனதுகலை நிகரில்புகழ்க்கே ரளநாட்டிற்
சீலமிகைபெற் றிடுராச சேகரன்ற னமைந்திலகுங்
கோலநகரி னயலாற்குக் குபிற்றுந்தளியி னருகீசன்
காலடிக்கட் பொருந்தலிற்கொள் காலடிப்பேர்க் கடிநகரில். (கஎ)

மறையோர்தமக்குட் சிறந்தசிகா மணியாவிளங்கிக் கல்விநல
நிறைவேய்தலால் வித்யாதி ராயனெனவே நிகழ்த்துபெயர்
தறைமீதமையக் கொண்டான்றன் றவத்தாலொப்பி றனயனு
முறைசார்ந்திலகுஞ் சிவகுருப்பேர் முதல்வனில்ல மருவியே. (கஅ)

ஆண்டுபலவே கியுந்தனக்கோ ரருமைப்பால னின்மையினு
னீண்டுட்டுயர மிகுமன்பா னிமலனடியார் பணிபுரிந்து
பூண்டுன்றியநன் மனைவியுடன் பொருவில்விரதா திகண்முயன்று
வேண்டுதலுமங் கவர்க்கருள்வான் விமலன்றிருவுள் ளங்கொண்டே. ()

கனவிற்றுலங்கிப் பின்விழிகள் காணும்படியாத் தெய்வமன்பர்
நனவிற்றுலங்கு மெனமறைக ணவிலுந்தகையிற் சிவகுருவின்
மனமொத்திலகுங் காதலிதன் கனவில்விருத்த வடிவாகி
யனகத்தகைதோய் திருவாய்கொண் டருளாலிவ்வா றறையுமால். (உ0)

மூர்க்கமுடன்றீர்க் காயுண்மிக முதிர்ச்சிசான்ற மக்கள்பலர்ப்
பார்க்கண்விழைகின் றனையோவொண் பரிதியனைய பண்பமைந்து
தீர்க்கமிலதற் பாயுள்கொளோர் சேய்வேட்டனையோ செப்பிடெனக்
கார்கண்டமுளான் வினவலுமக் கன்னியின்ன கழறுவாள். (உக)

முன்னேதியவா ரணத்தின்முதன் மொழிக்காம்பொருளை மொழிதியென
முன்னேதிமனைப் புடைத்தருள்செய் முருகன்றந்தாய்முருகமைந்த
பின்னேதிபெறு முமையையிடம் பெற்றபெற்றப் பெருங்கொடியாய்
பின்னேதியவோ தியதமையும் பிள்ளையருடி யெனவிரப்ப. (உஉ)

முன்னைநாண்மும் மூர்த்திகட்கான் முளையாப்பொருத்து முதிர்தவஞ்சா
லன்னைதழுவு மத்திரித னுத்திரேய கோத்திரத்திற்
பொன்னையனைய சிவகுருவைப் பொருந்துமனைக்குத் தனதமிசந்
தன்னையளித்தா னன்பருக்குத் தன்னையளிக்குந் தலைவனே. (உங)

சீலமலியுஞ் சிவகுருவின் செய்யமனைதன் கனவினிடை
யேலவுரைத்த படிசேயா வேய்ந்தான் ஞானமயமான
பாலனுருவம் பொருந்துபுநேர் பார்ப்பார்தமக்கின் பருள்செயலாற்
சாலவெவரு மேத்திடச்சங் கரனன்னுமஞ் சார்ந்தரோ. (உச)

நெடுநாண்மகப்பே றின்றிமிக நெஞ்சம்வருந்தித் தவம்விரதந்
தொடுதாய்தந்தை யின்பநெடுந் துறையின்முழுகுந் தகையாடற்
கொடுவானமிழ்த மனையவருட் குதலைமொழிகள் புகன்றவிர்நா
ளொடுவானடைந்தான் சிவகுருப்பே ரோங்குமுயர்மெய்த்தந்தையே. ()

தந்தைவிண்ணம் புகமறையோர் தமைக்கொண்டுரிய சடங்குபுரிந்
திந்தையனைய கருணைநிறை யீன்றாடன்னை யிதயமிசை
முந்தைத்தெய்வ மெனக்கொடுவே திபர்கட்குரிய முறைச்செயல்கள்
சிந்தைமகிழ்விற் புரிந்தெவரும் வியக்கும்வண்ணந் திகழ்ந்தாரே. (உ௬)

ஆண்டோரைந்தே கிடுமுன்னே யரியகாயத் திரியுரைக்கு
மாண்டோயுபந யனமாற்று விக்கப்பெற்று மறைபொழுக்கம்
பூண்டோராசா ரியனிடத்திற் புக்குவேத மோதல்புரிந்
தேண்டோய்பிட்சா டனவிரத மின்பிற்பூண்டு விளங்கினர். (உ௭)

வேறு

ஒருதினந் தனிலோரேழை மறையவ னில்லினுற்றுத்
தருகுதிர் பிட்சையென்னச் சாற்றவங் கவண்சார்ந்துள்ள
மருமலர்க் குழற்கொம்பன்னாள் வருமவர் தமக்களிப்பா
னொருபொரு டம்மனைப்பா லுருமையி னுள்ளுடைந்தே. (உ௮)

எய்தரும் விருந்தாயுற்ற விம்மகான் றனக்குளன்பிற்
பெய்தரும் படியேதேனும் பொருளொன்று பெற்றிலேமென்
றைதகத் தடைந்தவாவி லாயவா மலகமொன்று
கைதனிற் கிடைப்பவுள்ளக் கனிவொடாங் கதனையிட்டாள். (உ௯)

வணங்கியா மலகங்கொண்டு வந்தளித் திட்டமாதின்
குணங்களை வியந்துளோகை கொண்டுபே ரருளினீரான்
மணங்கமழ் பதுமபீட மன்னுமா தாவினேக்க
மிணங்கிடக் கனகதாரை யென்றோர்துத் தியம்விண்டாரால். (௩0)

அத்துதி கேட்டுமேலா மரியுரத் தகலாதோங்கும்
வித்துரு மத்தையொத்த வில்லுமிழ் மேனிச்செய்யா
ளத்துணைப் போதிலம்மா தவிர்ச்சொல் கிரகமுற்று
நத்துபொன் னெல்லியான நறுங்கனி மழைபெய்வித்தாள். (௩௧)

இத்திறத் தளவின்மாட்சி யிலகுமற் புதச்சீர்சான்ற
சித்திக ளிளமைத்தன்மை தீருமு னியற்றும்பான்மை
யத்திரு மூலகின்மேலோ ராருநன் கறிந்தாராகி
மெத்திறும் பூதரானர் மேயதெட் டகவையம்மா. (௩௨)

ஆயகாற் சங்கரப்பே ரவிர்தரு தருத்தான்றர்க்க
ஞாயம்வ்யா கரணம்வைசே டிகநவி லுருமீமாஞ்சை
தோயறு சாத்திரங்கட் டுதைதரு வேராக்கொண்டு
மேயபல் கலைபுராண மாமடிக் கட்டைமேவி. (௩௩,

அருமறைக் கிளைவாய்ந்தங்க மாந்தளி ரமைந்திட்டங்கட்
டருமமே பிரமமென்னச் சாற்றுசூத் திரப்பூத்தாங்கிப்
பொருவின்மந் திரக்காயோடு புராணமெஞ் ஞானமென்னு
முருசிசால் கனிகண்மேவி யோங்கிய துலகமுண்ண. (௩௪)

இன்னண முலகின்மேலோர் யாருமேத் தெடுக்கும்வண்ணந்
தன்னன பிரமசாரி யாச்சிர மத்தைத்தாங்கி
நன்னல மிலகவாழ்கான் ஞாலமேன் முறையினின்றே
றென்னரு மகளைநின்சேய்க் கீகுவ மெனத்தாய்க்கோத. (௩௫)

சாதகம் பலகொன்டன்னை தான்கணித் திருக்குமேல்வை
போதமிக் கியல்சந்யாசம் புணர்த்திட வுன்னிக்கும்ப
மாதவன் கணிதனுகி வந்திவற் காயுளெல்லை
போதவுஞ் சொற்பமேதான் பொருந்திய தென்னச்சொன்னுன். (௩௬)

கற்புறு கணிதராகிக் கலந்தவ ராருமொப்ப
வெற்புறழின்னுற்காயுண் மிக்கவற் பமதேயென்ன
வற்புறுத் துரைத்துமற்றவ் வாசக மதியாப்பண்பாற்
பொற்புறு மகளைநல்கும் புந்தியிற் றிறம்பாராகி. (௩௭)

மாண்டிக ழிமயவேந்தை மலையவான் றுவசனுன
பாண்டியன் றன்னைநெய்தற் பரவனை யொப்ப தான
வேண்டிகழ் தவத்தோர்நம்மி லேவரே யென்றுநாளுங்
கூண்டியல் பல்லோர்தம்முட் கூறிடுந் தகையரானுர். (௩௮)

மின்னியா சங்கொடில்ல மேவிடு கின்றநீர்மை
வெந்நியா சங்கொள்காய்போல் வெறுத்தன ராகிமேலாஞ்
சந்நியா சத்தையின்பிற் றூங்கிடன் மேலாமென்ன
வுன்னியா சத்திகைமிக் குறுசெய றாய்க்குரைத்தார். (௩௯)

பரிந்தனை யோடிவ்வாறு பகர்ந்திட மாதாவானுள்
விரிஞ்சனற் சிரத்திற்றீட்டும் விதியினை மிகவெறுத்துப்
பிரிந்திடற் சகியாளாகிப் பின்றனக் கபரச்செய்கை
புரிந்திடற் கின்மையாகும் புணர்ப்பெலா மனத்திலுன்னி. (௪0)

அழுதுநெட் டுயிர்க்கும்பான்மை யறிந்துசங் கரப்பேர்மேலோ
ரிழுதன மொழியாற்றன்று யிசையவின் னனசொல்கின்றுர்
வழுவிலென் னன்னைநெஞ்சம் வருந்திநொந் திரங்கல்யான்மெய்
தழுவியல் பதியாயெங்குஞ் சஞ்சரித் திருந்திட்டாலும். (௪௧)

ஈன்றரு ளன்னையுன்னை யென்றும்யான் மறவேன்மெய்மை
யேன்றவெப் போழ்தினீதா னெனைநினைத் திடினுமேய்வே
ணுன்றநின் னிரியாணத்தி லருகிருந் திடுவேன்பின்னை
வான்றழை கிரியையாவும் வயக்குவன் சரதமம்மா. (௪௨)

இதுகுறித் துன்னுள்வேறுென் றெண்ணலை சந்நியாச
முதுநெறி யாவற்றுள்ளு முதன்மைசான் றிட்டதென்னச்
சதுர்மறை யாதிநூல்கள் சாற்றிடுந் தன்மையீதால்
விதுநிகர் கருணைத்தாய்நீ விடையளித் தருளல்வேண்டும். (௪௩)

இல்லற நெறியினிற்போ னியற்றிடுங் கிரியைதன்ன
லொல்லருட் குரவராவோ ரும்பர்பா லுறுவர்மேலா
நல்லற மாஞ்சங்பாச நண்ணினேன் றவத்தான்முன்னே
ரெல்லவ ரும்பேரின்ப மெய்திடல் சரதமாமால். (சச)

இருவினை வயத்ததாகு மில்லற நெறிநின்றோர்க்கு
மருமனை தன்பாற்றோன்று மைந்தனன் மதியில்லானே
வருகினு மேற்கநேரும் வான்றுற வறத்திற்புக்கார்க்
கிருமைதோர் மைந்தர்பல்லோ ரெய்துவர் சரதமம்மா. (சரு)

ஒன்றுமில் லறத்திலில்லா ளுதவிடு மைந்தராவோர்
பொன்றுபொய்ப் பொருளாற்கீர்த்தி பெருந்துவ ரின்றேலின்று
மென்றுறழ் ஞானச்செல்வ மேய்துற வறத்தர்சேய
ரென்றுமே யழியாமெய்ச்சீ ரெய்திடற் கையமின்றே. (சசு)

பொருந்துமில் லறத்தோன்ஞானம் பொருந்திவாழ்ந் திடினுமற்றஃ
திரும்பினின் மணிபதித்த தேய்க்குமல்லான் மற்றன்னன்
அரும்பென வுலகந்தன்னைத் துறந்தமா ணுக்கரானோர்
விரும்பியேத் தெடுக்குந்தன்மை மேவிடான் மெய்மைபாமால். (சஎ)

அறமிய வில்லமீதி லமைந்துளோன் றனதுகீர்த்தி
முறவினர் சிலர்கள்சாற்று முக்கையை யொப்பதாகு
நறவென வுலகாரு நமரெனு மாட்சிசான்ற
துறவிய லுடையோன்சீர்த்தி சுடரென வெறிக்குமன்றே. (சஅ)

பரம்பரை யழியாவாறும் பயந்திடு முன்னோர்யாருந்
திரம்பெறு கதியினூடு சேர்ந்திடு மாறுநீநின்
னுரம்பெறு முள்ளத்தன்னை யுன்னினை யதனின்மேலாந்
தரம்பெறப் புரிவேனுண்மை சற்றுமஞ் சலையால்வாழி. (சகூ)

எனப்பல விதமாமைந்த னியம்புமாற் றங்கடன்னோர்
மனத்தினுக் கிசையாவாபு மறுத்திடற் கிசையாவாயுந்
தனக்கிருந் திடலாமெனஞ்சுட் சம்மத மோடின்றுவாழ்
தினத்தினீ ராடச்சூர்ணிப் புழைநதிப் பாங்கர்சேர்ந்தார். (ருo)

நதிபிடத் தமிழ்ந்துமேலோ னனமாற் றிடுமக்காலை
யெதிகளா வார்கள்சென்னி யிருத்துபொற் றுளையாங்கட்
பதிதரு முதலைதன்னோர் பவமொழிந் துய்வான்பற்ற
மதிநிக ரருள்சாலன்னை மனமிக வுளைந் தெய்த்தாளால். (ருக)

ஆயதோர் செவ்விதன்னி லருளுரு வமைந்தமேலோர்
சேயதஞ் சங்கற்பத்தைப் பூர்த்திசெய் திடுதற்கேற்ற
நேயமார் பதமீதென்ன நெஞ்சகத் துன்னினாராய்த்
தாயருண் முகம்பார்த்தாபத் சங்யாசமிரந்தார்மாதோ. (ருஉ)

அன்னைமற் றதுகேட்டுற்ற வாபத்தி தொழிவான்மற்றஃ
துன்னைநீத் திடுமேலவ்வா றுளுற்றுதி யெனவவ்வாறே
தன்னைநேர் முதலைதானுஞ் சம்மதித் திடுதலாலே
பின்னையக் கணந்துரீய வாச்சிர மத்தைப்பெற்றார். (ருங)

புதுப்பிறப் பானதக்காற் பெறுதலாற் புனைவான்கங்கை
மதுக்கமழ் கொன்றைத்தாரான் வான்கலை விளக்கஞ்சான்றார்
விதுக்குறை நிகர்பற்பேழ்வாய் முதலைவிட் டிடவகன்று
முதுக்குறை வுடையர்தாயை முறையிற்சூழ்ந் தடிவணங்கி. (ருச)

நீடிய லருமைத்தாயா நின்னிரி யாணப்போதியா
னேடிவந் துனக்குவேண்டு முத்தர கிரியையெல்லாங்
கூடிய வுவகை பொங்கிக் குறைவறப் புரிவேனென்னப்
பாடியன் மறைவாய்விண்டு பகர்ந்துதாய் விடைபெற்றால். (ருரு)

தாய்விடை பெற்றாருள்ளந் தழைத்திடு தாபந்தீரக்
கூய்விடை யருளானல்குங் குருபரன் யாண்டுளானென்
றோய்விடை யில்லாராகி யுந்தியி னெடுபொதும்பர்
வேய்விடை யழைக்குமுல்லை வெற்பினுந் தேடலுற்றார். (ருசு)

வேறு

சாற்றுமற்றது நிற்கமுன்னொருகந் தன்னின்
மாற்றுயர்ந்தசெம் பொன்புரைவனசமா மலர்மின்
வீற்றிருந்தரு ளூரமுடைவிண்டுவாம் பகவன்
போற்றுசேடன்மீ தறிதுயில்புரிந்துறு போதில். (ருஎ)

மனத்தமைந்துள தன்மையிலிலகுவாய் மருவுங்
கனத்தமைந்துள மேனிகொள்காகுத்தன் வடிவங்
கனத்தமைந்துள தாகியேகவின்றிடுந் திறமோர்
தினத்தமைந்ததாற் றத்தளித்தனன்பெருஞ் சேடன். (ருஅ)

நெட்டுயிர்த்திய வுடன்விழிமிக நீண்டுண்
மட்டுறுப்பெருந் துயருறுசேடன்மா தவற்பார்த்
தெட்டுகாரண மேதிதற்கியம்புதி ரெனலும்
விட்டுணுப்பெயர் பெறுமிறையிறையுடன் விளம்பும். (ருகூ)

வாயுநின்றிடும் வண்ணமென் மனத்தினை மடக்கிக்
காயும்வல்விரும் புறழ்சிவகாமிநா தனையான்
றோயுமாயையவன் றிரையினைத்துறந்ததற் கப்பா
லாயும்வேலையா வாபெறும்வியப்பெங்க னறைவேன். (கூ0)

மற்றஃதென்னென மயங்கலைவழுத்தக்கேள் வரம்பி
னற்றவத்தர்தோர் நித்தியானந்தமா நடன
முற்றவன்னதன் மகிமையென்னென்பன்யா னுணரப்
பெற்றபேருள முடனுருகிடச்செய்பெற் றியதால், (கூக)

உளமிறந்தவ ரேயுணர்ந்திடத்தகு மொப்பி
லளவிலின்புரு வமைந்தவவ்வானந்த நடத்தைச்
சளமிறந்துணர்ந் திடுவதல்லாமல்வாய் சாற்றுங்
கிளவிகொண்டுசொற் றுணர்வதோகேள்வியான் மன்னே (௬உ)

புளிக்கண்டோன்றன்வா யிற்புனலூறுமா போலக்
களிக்குமத்திருக் கூத்தினைக்கண்டவர்க் கெல்லாந்
துளிக்குங்கண்கணீர் சோருமெய் நெஞ்சகத் திருளு
மொளிக்குமானந்த மாமமுதூறுமுள் ளுணர்வால். (௬௩)

ஒன்றிடுங்கருத் தமைந்தவருள்ளமென் றோது
மன்றிலாடிடு பெருமையாலுரைப்பதோ வலக்கை
யொன்றிலிவ்வுல குதித்திடற்கேதுவா யுற்ற
நன்றியன்றிடு முடுக்கையாநாதம்வைத் துள்ளான். (௬௪)

போந்திடுங்கர மொன்றினிற் புரணமெஞ் ஞான
சாந்தியின்றகை தெரித்துளானிடப்புறந் தன்னில்
வாய்ந்தவோர்காத் தங்கியைத்தாங்கியான் மாவின்
காந்தியைத்தெரித் தானெழிகுருத்துவங் காட்டி. (௬௫)

மாணவிர்ந்தமற் றொருகையான்மனமெனு மானைச்
சேணகன்றிடத் தளியகங்கரச்சினப் புலியைக்
கோணசிந்திடக் கொன்றதன்றோலுடை கொண்டு
தாணரற்றமா மாயையாமுயலகற் சவட்டி. (௬௬)

நான்றமற்றொரு தாளினைநண்ணிடு மவத்தை
மூன்றறுத்ததன் மேலுறுந்துரியத்தின் முயக்கந்
தோன்றவைத்திடுந் தகைதெரித்திடமிசைத் தூக்கி
யான்றதன்மையு மகற்சியுங்காட்டுகங் கையினை. (௬௭)

சோதியோடுசிற் சுகத்தையுமிற்றெனத் துலக்கும்
பாதிமாமதி தனைச்சடைமீமிசைப் பரித்து
மீதினோக்கரும் பரமதத்துவவியல் விளக்குஞ்
சோதிமாநடம் புரிந்திடும்யாவர்க்குந் தொல்லோன். (௬௮)

அன்னவற்புதக் காட்சிமற்றதையறிந் தேற்கு
மின்னதன்மைய தென்றிசைத்திடவிய லாதேன்
மன்னடப்பெரு மையையெவரிற்றென வகுப்பார்
சொன்னபேர்கள்கண் டிலர்கண்டோரில்லைசொல் வதுவே. (௬௯)

பொருவின்மாநடந் தனைச்சிவயோகம்யான் பொருந்தி
யருமைசான்றிடக் கண்டநுபவித்தன னமைந்தேன்
மருவும் வேளையென் னுடல்கனமிகைபட வாய்ந்து
தெருமரும்படி யுனைவருத்தியதென்றூன் றிருமால். (௭௦)

வேறு

என்றுபகவ னிசைத்திடக்கேட் டியலுஞ்சேட னிதயமிசைத்
துன்றுநடங்காண் டருமாசை தோய்ந்துபகவற் றொழுதன்பா
னின்றுதாமின் றுணர்ந்தருளு நிமலானந்தத் திருநிருத்த
மின்றுகாண்பான் கடைக்கணரு ளெளியேற்கருடி யெனவிரப்ப. (எக)

சேடனுரைத்த மொழிக்கிரங்கித் தேவதேவ னத்தகைய
வாடல்புவியிற் றில்லையென வவிருஞ்சிதம்ப ரப்பதியின்
மாடுகாண்போ ருளமின்ப மருவக்காட்டு மற்றதனை
நீடுமன்பின் போங்கவவ ணீசென்றுவப்பிற் றரிசித்தே. (எஉ)

பின்புபாணி னிப்பெயரோன் பேசும்வியாக ரணத்தினுக்கு
வன்புதவிர்காத் தியாயனன்றுன் வகுத்தவார்த்தி கத்தினுக்கோ
ரின்புதருமா பாடியத்தை யியற்றிப்புவியு ளேவரையுந்
துன்புதவிர்பே ரின்பநலந் தோயப்புரிந்தீண் டடைவாயால். (எங)

என்னப்பகவன் புகன்றருள வாதிசேட னிதயமிசைப்
பன்னற்கரிய வின்பமிகப் பணிந்துபுவியிற் பதஞ்சலியா
யன்னப்பணைசூழ் தில்லையடைந் தருமைத்தவஞ்செய் தானருளான்
மன்னற்புதமார் திருநடன மன்றிலியற்றத் தெரிந்துவந்தே. (எச)

எல்லையகல்பே ரின்பமிக வெய்தித்திக்கு மேல்வையினிற்
கொல்லைவிடையார் திருவருட்கண் கொண்டுநோக்கிப் பதஞ்சலிநீ
வல்லைமாபா டியம்புரிந்து மருவுன்னிடத்தென் றிடப்பரமன்
சொல்லைமுடிமேற் கொண்டியற்றித்தோய் தன்னிடம்புக் கமைந்தானே. (எரு)

அன்னபோதவ் வியாகரண வரும்பாடியத்தை யன்னவன்பாற்
கின்னமகல வுபதேசங் கிடைக்கும்படியோ ராயிரமா
மன்னுந்தகைசான் மாணுக்கர் வந்துவேண்ட மனதிரங்கித்
தன்னதுருவ மவாறியாத் தன்மைபொருந்தத் திரையமைத்தே. (எசு)

ஆயதிரைக்குப் புறஞ்சீட ராமாயிரரு மிருக்கவமைத்
தேயதிரையை நீத்தெனைப்பார்த் திடுவாரெனக்கன் பிலசொன்னத்
தூயவருளால் வற்புறுத்திச் சொல்லித்திரையி னுள்ளாக
மேயதனதா யிரமுகமும் விளங்கவிருந்தன் னவர்க்குரைத்தான். (எஎ)

சிறிதுகால மிவ்வண்ணஞ் செல்லமாபா டியபோத
மிறுதியடையுந் தருவாயி லேககாலத் தெல்லவரு
மறியவுபதே சித்தருளு மாசாரியரெத் தனைமுகங்கள்
பெறுவதாளு ரென்பதுபார்த் திடுவோமெனும்பே ராசையராய். (எஅ)

சீடராளு ருடன்றிரையைத் தீரவிலக்கிப் பார்த்திடலுஞ்
சேடனோரா யிரமுகத்தி னின்றுஞ்செனித்த தீவிடத்தா
னீடவிருந்தார் யாவர்களு நீறானர்சற் குருசொல்கொளாத்
தோடமுடையா ரித்தகைமை தோய்வாரெனக்காட் டுநர்போன்றே. (எகூ)

தன்மையிதனைத் தெரிந்தாதி சேடன்மிகவுஞ் சலிப்பெய்தித்
தின்மைபெறுமச் செயல்குறித்துச் சிந்தாகுலங்கொள் போதப்போழ்
தின்மைபெறுமோர் சிடனுமீஇச் சலமோசனஞ்செய் தியான்வருமுன்
பன்மைபெறுவோ ரிதுபுரிந்து பற்பமானு ரெனப்பரிந்தே. (அ௰)

யான்செய்பிழையைப் பொறுத்தருளி யிரட்சித்தருடி ரெனவியம்பிக்
கான்செய்மலர்த்தா டொழுதிரப்பக் கதமிக்குள்ளங் கொடுசேட
னுன்செயுபதே சத்தையுபேட் சித்தப்புறமீ நழுவியதா
லூன்செய்பிரம ராக்கதனு யுழலென்றுரைத்திட் டனனந்தோ. (அக)

மன்றுடியரோர் குருச்சாப மாற்றங்கேட்டு மதிகலங்கிப்
பொன்றுண்மிசைவீழ்ந் தடிமைபிழை பொறுத்துக்காப்பீ ரெனமிகவு
மன்றுடுபுகேட் டிடச்சாந்த மருவிபருள்சால் பதஞ்சலியாய்க்
குன்றுவருளோ டவற்பார்த்துட் குளிர்ந்தஞ்சேலுட் கொஞ்சமுமே. (அஉ)

தாணிதனிற்கன் மக்கதியைத் தடுத்தாரின்றத் தன்மையினுல்
விரவிற்றுனக்குன் னுள்ளமிசை வேறென்றெண்ணே னீயிந்தப்
பிரமாக்க தப்படிவம் பெற்றேயிருந்துன் னெதிராகும்
பரவுபுகழ்ப்பண் டிதரையெலாம் பச்சென்றிடுமோர் பகுதிதான். (அங)

நிட்டைதனிலெவ் வுருவமாய் நிற்குமெனக்கேட் டனையானு
விட்டமுடன்பக் குவமென்ன வெவன்சொல்கின்று னேவவற்கியா
னிட்டபெரும்பா டியவுரைக ளெல்லாமுரைப்பா யெனிலுன்னைத்
தொட்டபாவத் தொடர்பகன்று தொன்மைவடிவாய்த் துலங்குவையால். (அச)

என்னவுரைத்துப் பதஞ்சலிதன் னிடத்திலடைந்தா னச்சீட
னன்னபடியே பிரமாக் கதனுயோரான் மாத்தமைந்தே
தன்னதருகார் புலவரையத் தருமாமொழிகொள் பொருள்வினவி
லின்னசொற்கொள் பொருள்பசித மென்றேதிடிலன் னவர்க்கொன்றே. (அரு)

தின்றுவாழு நாளிலொரு தினத்தின்மற்றம் மரத்தினடி
யொன்றுமறையோன் றனைவினவ வுயர்பக்குவமென் றுரைத்திடலு
நன்றுபெறுங்கா லந்தனக்கு நணுகிற்றென்ன வுவகையுட
னின்றுவருநீ யாவனிவ ணேதுவிருப்புற் றெய்தினையால். (அசு)

பாணினீய வியாகரணம் பயிலும்விருப்ப முனக்குளதேற்
பாணியாது பதஞ்சலிமா பாடியத்தைப் பயிற்றுவனென்
றேணிலாவச் சாற்றமறை யோனெனன்பெயர்சந் திரகுத்தன்
மாணிலாவுச் சினிநகரேன் மாபாடியங்கேட் பான்போந்தேன். (அஎ)

என்றுகூற வரக்கன்மகிழ்ந் தெல்லாம்பயில்வித் தானவற்றைத்
துன்றுமறையோ னம்மரத்திற் றேயுமிலைகளின் முழுது
மொன்றுதனது கைநகத்தா லுவகைமிகக்கொண் டொல்லைபெற
நன்றுவரைந்தா னிருமாத மட்டுந்துயிலு னயவாதே. (அஅ)

திங்களிரண்டின் முடிவடையச் சேடன்சீடன் சாபமொழிந்
தங்கணகன்று வானுலக மடைந்தானுயர்சந் திரகுத்தன்
பொங்கமுறத்தன் னகங்கொண்டு பொறித்தவிலைக டமைத்தொகுத்துத்
துங்கமுறுசிப் பமதாக்கிக் கொண்டோர்புருவான் றொடங்கினன். (அசுக)

தேகம்வருந்தச் சென்றவனோர் தெளிவார்தீர்த்த மருங்கணைந்து
தாகந்தணியப் புனலருந்திச் சலிப்பான்மூட்டை யருகமைத்துச்
சோகந்தணிவான் கிடந்தவண்மெய்ம் மறந்துதுயின்று னக்காலை
மோகம் பெறுமா டொன்றிலைகள் பலதின்றதுமூட் டையின்மன்னே. (சுo)

துயில்விட்டெழுஞ்சந் திரகுத்தன் றேயுமிலைபோஞ் செயலுணர்ந்து
வெயிலிற் பொருந்தும் புழுவெனவுள் வெம்பிச்சிதறி வீழ்ந்துளவா
மொயில்பெற்றுள்ள விலைக்குறைக ளொருங்குசேர்க்குங் காலையவண்
மயிலிற்றிகழுஞ் சாயன்மட மாதர்நால்வர் மருவினரால். (சுக)

நாலுகுலக்கன் னியருருவ லாவண்ணியங்கண் டவர்கண்மிசை
மாலுள்ளமைந்தா னதுகண்ட மடமாதர்களு மற்றவனைப்
போலுநிலைமை படைத்துமணம் புணர்ந்தாரக்காற் பொன்றிலைகட்
சாலுந்தகைய பொருள்களெலா மொழுங்குபெறவே சமைத்திட்டான். (சுஉ)

அன்னபோழ்தன் னவனொருநா லானமனைவி யருஞ்சூலாய்
வன்னமருவும் வருசியை மறையோன்பெண்விக் கிரமார்க்க
மன்னவனைச்சத் திரியப்பெண் வளர்பட்டியையை சியமாது
துன்னுமுயர்பத் திரகிரியைப் பின்னுமாது தோற்றுவித்தார். (சுங)

மைந்தராவோர் நால்வருக்கும் வயதுவரலு மற்றவர்க்கு
முந்தவியன்மா பாடியத்தை முற்றுமுபதே சித்தறவோன்
சிந்தைதெளிந்து சுகப்பிரமத் தினதுசீட னும்புரைதோய்
பந்தமகற்று மாண்டூக்யோ பநிடகருத்தா வானவனும். (சுச)

ஆனகௌட பாதரிட மடைந்துஞானோ பதேசமடைந்
தீனமகன்ற நான்காமாச் சிரமமருவி யெண்ணில்பல
வானதீர்த்தங் கேத்திரங்கண் டதன்பின்பதரி காச்சிரமத்
தானமருவிக் கோவிந்த சாமியெனும்பேர் தாங்கியே. (சுரு)

நவமாராதி சேடன்றான் மீட்டுமிந்த ஞாலமிசை
யவதாரஞ்செய் துள்ளானென் றவனிமிசையோ ரேத்தெடுப்பத்
தவமாதியநன் னலங்களெலாந் தாங்கித்தனக்குத் தானல்லா
துவமானமிலா திலங்கின னும்பருவக்கும் படிமாதோ. (சுசு)

வேறு.

கூறிது நிற்கமுன்சற் குருபரற் றேடிச்சென்ற
வீறியல் சங்கரப்பேர் வித்தகர் விலங்கல் கானஞ்
சாறிய நலங்கள்சூழ்ந்து தக்கநன் னருமதைப்பே
ராறிடத் தழைந்துள்ளார்பா லாய்ந்தவர் புகலத்தேறி. (சுஎ)

உவந்துகோ விந்தசாமி யொட்டைசால் குகையின்மேவித்
தவம்புரி கின்றதானஞ் சார்ந்துமும் முறைசூழ்ந்தன்பா
னவம்பொலி வாயினேரே நமக்கரித் திருகைகூப்பித்
துவங்கொளுள் ளத்தொடன்பாற் றுதிக்கின்றா ரிவ்வாறம்மா. (கூஅ)

கொண்டன்மே னியற்கனந்தல் குயிற்றுபே ரணையாய்நீல
கண்டனுக் கணிபூணாகிக் கவின்றுதா ரணியினோடு
தண்டரு மம்புராசி சைலமுற் றவும் பொறுத்த
வண்டமை யாதிசேட னுமுமை வணங்குகின்றேன். (கூகூ)

முன்னைநாட் பத்துநூறு முகத்துட னிலங்குமேனி
தன்னைநேர் கண்டசிடர் சாம்பரா தற்கிரங்கி
யன்னைநே ரருளாலோர்வத் திரத்தவ தரித்துச்சிடர்
தன்னையா தரிப்பான்வந்த பதஞ்சலி தாங்களன்றோ. (க00)

என்றுபற் பலவாத்தன்னை யின்னவ னெனமெய்தேர்ந்து
முன்றுதித் துறுவார்தன்மை முற்றுநன் குணர்ந்தாராகிக்
குன்றுறழ் தவச்சீர்சான்ற கோவிந்த பகவத்பாத
ரொன்றுறு சமாதிநின்று மொருவினர் வினவுகின்றார். (க0க)

ஈண்டடைந் திட்டநீர்யா ரெனப்புகன் றிடவதற்கு
மாண்டமை தசசுலோகி யெனப்பெயர் வாய்ந்தபத்து
நீண்டவான் பொருட்சுலோக நிசவிடை யளித்தாரஃதைத்
தாண்டவம் பெறுநிர்வாண தசகமென் றியம்பாநின்றார். (க0உ)

பரவுவே தங்களாலும் பகருப நிடங்களாலும்
பிரமசூத் திரத்தினாலும் பேசவுன் னிடவெட்டாத
விரவுமெத் தத்துவச்சீர் விவகரித் துளதோவத்தைத்
தரவா லாஞ்சுலோகந் தசங்கொடு பூர்த்திசெய்தார். (க0ங)

அன்னவை கொள்ளுமாண்பு மமைதரும் யாப்பின்சீரு
மன்னுசொற் சுவைச்சிறப்பும் வயங்குதாற் பரியச்சால்பு
மின்னவை தானென்றேநன் கியம்புதற்கினியஞான
முன்னவ னருட்சீர்சான்ற முறையினு லலதெய்தாதே. (க0ச)

இன்னநூற் குவமைநூலொன் றில்லையென் றிடலேசால்பாஞ்
சொன்னவின் னவைகேட்டாதி சேடனற் றோற்றம் வாய்ந்த
கொன்னமை தெருட்சிசான்ற கோவிந்த பகவத்பாதர்
தன்னகம் வியந்தாரென்னிற் சாற்றலென் னவற்றின்மாண்பே. (க0ரு)

இன்னவா றுலகெவற்றி னிடத்திலு மிசைந்த வொப்பின்
மன்னுயிர்த் திரள்களாற்று மாதவப் பெருக்கினாலே
தன்னது வாய்கொடெல்லாச் சாத்திரங் கட்குமேலாப்
பன்னுமாத் துமஞானநு பவத்துக்கோர் பளிங்குபோல. (க0சு)

நிருவாண தசகமென்ன நிகழமு தத்தையன்பாற்
றிருவாயான் மலர்ந்ததன்மை தெளிவுறக் கேட்டபோது
குருவாகு மேன்மைசான்ற கோவிந்த பகவத் பாதர்
தெருணீடன் னவற்றைக்கேட்டுச் சிந்தையிற் றிகைப்புற்றாராய், (க0எ)

அத்துவி தானந்தப்பே ரலையறு கடலின்மூழ்கித்
தத்துவங் கழன்றுமேலாந் தகைப்பிர மத்திலொன்றிச்
சித்துருச் சமாதிதன்னிற் சிறிதுநாட் பொருந்தியப்பா
லொத்துறு சமாதிநீங்கிச் சங்கரர்க் கோதுகின்றார். (க0அ)

தேவரீர் தமையான்ஞான திருட்டியா னன்குணர்ந்தேன்
மூவருண் முதன்மைசான்ற முக்கண னன்றோநீயி
ராவல்சா ருலகர்தம்மை யநுக்கிரகிப்பானன்றோ
மேவரு மனிதரேபோன் மேனிகொண் டுற்றீர்மன்னோ (க0கூ)

ஆயநுந் தன்மையென்னு ளையமற் றறிந்தேனிந்தத்
தூயமெஞ் ஞானசீலந் துலங்கருட் பெரியரானுர்
தோயநு பவத்தாற்காணுஞ் சூக்குமந் தனைக்கணத்தி
லேயருள் வீர்க்குமேனோ ரிசைப்பதோ வுபதேசந்தான். (கக0)

ஆயினு முலகத்துள்ளா ரனைவரு மறியும்வண்ணந்
தாயினு மினியீர்கேட்கத் தக்கதே யென்றருட்சீர்
தோயியற் கோவிந்தப்பேர்த் தூயவர் குகையினெப்பில்
வாயிலிற் றமதுபாத வாரிசந் தெரிசிப்பித்தார். (ககக)

ததியதிற் றன்னைத்தானே தகைதரு சங்கரப்பேர்
பொதிதரு கருணைக்குன்றம் பொங்குபே ரன்பினாலே
யெதிகளா னர்கள்யாரு மிணையில்சற் குரவன்பொற்றாள்
விதிமுறை பணிதன்மேலாம் விதியெனும் விதியைத்தேற்ற. (ககஉ)

பரபரப் புறுபேரன்பாற் கோவிந்த பகவத்பாதர்
சரணவா ரிசங்கடம்மைத் தகுமுறை பூசையாற்றி
விரவியற் பணிகள்பின்னு மேதகப் புரிந்துதஞ்சற்
குரவனதுள்ளந் தன்னைக் குளிர்தரப் புரிந்தாரம்மா. (ககந)

நிரப்புளோ னொருவன்சேம நிதிதனைப் பெற்றபண்பிற்
றாத்தகை யன்பாற்செய்புஞ் சங்கரர் பணிக்குவந்து
பரப்புபே ரருட்சீர்சான்ற கோவிந்த பகவத்பாதர்
பரப்பிர மோபதேசம் பதிந்திடப் புரிவித்தாரால். (ககச)

சங்கர ரன்பினாலே சற்குரு பணிசெய்தின்ப
மங்களா நுபவத்தோடு வைகுநா ளையிலோர்நாளி
னங்கவர் கவிபோன்மேக மளவறப் பொழிந்ததாலே
தங்குமேற் றிசையினின்றுஞ் சார்ந்தது வெள்ளமாதோ. (ககரு)

நருமதை நதிதன்பாங்கர் நண்ணிய வூர்கடம்மை
மருமலர்ச் சோலைதன்னை மரங்களை மாடாதிப்
பொருள்களைக் கையரித்துப் புவியின்மீ திருகுரோசு
மருவிவே கத்தினோடும் வருசெயன் மற்றோர்தேறி. (௧௧௬)

அச்சமிக் கமைந்துகாப்பா ராரையு மறியாராகி
மிச்சமா முயிரனந்தம் வீந்துறும் பான்மைகாணு
வெச்சமாற் றிடுவான்புக்க விருபிறப் பாளரேனோ
ருச்சமார் தெளிப்பினோடு மோலமிட் டாற்றிவந்தார். (௧௧௭)

மற்றவ ரோலங்கேட்டு வான்பெருஞ் சமாதிதன்னி
லுற்றசங் கார்தாமிட்டை யொழிந்தன ராசான்யாவுந்
தெற்றெனத் தம்முளத்திற் றெளிந்துமேற் செயலையுன்னிச்
சற்றறி கிலர்போலுற்றார் சங்கர பகவத்பாதர். (௧௧௮)

ஒப்பறு சமாதிதன்னி லோங்குமா சிரியர்க்கின்றியா
மெப்படி விண்ணப்பஞ்செய் திடுவதென் றிதயத்துன்னிக்
கைப்படி கமண்டலத்தைக் கடிதபி மந்திரித்து
மைப்படி வெள்ளத்துள்ளில் வைத்தனர் மகிழ்ந்துமன்னோ. (௧௧௯)

ஆனவக் கணத்தில்வல்லே யாருயிர்த் திரள்கண்மாய்த்து
வானளந் தடைந்தவெள்ளம் வயங்குமக் கமண்டலத்துட்
பானமார் தீர்த்தமொத்துப் படிந்தது மலையமேலோன்
றனகங் கையிற்கொண்ட சாகர மென்னமாதோ. (௧௨௦)

செயலிதை யறிந்தோர்யாருஞ் சிந்தைவிம்மிதத்தாகித்
தயவுரு விவரேபோலுந் தகுபர மாம்சரென்ன
வியன்மிகத் துதித்திருக்கை மேவின ரானுரொப்பி
னயமலி செயலோர்ந்தாசா னண்ணுவப் புரைக்கலாமோ. (௧௨௧)

குருவெனக் குலவுஞ்சீர்சால் கோவிந்த பகவத்பாத
ரொருதினந் தனினீராட வுயர்நரு மதையிற்போந்து
வருபொழு துருமவெய்யின்மற்றவர்த் தீண்டும்பான்மை
திருவுளஞ் சகிக்கிலாராய்ச் சீடருட் பரிவுகூர்ந்தே. (௧௨௨)

இடையினிற் புனர்ந்தகாவித் துண்டைமீ தெறியவான்மேற்
குடையினி விழல்செய்தன்மை குறித்துநோக் கினர்கள்யாருந்
தடையில்சங் கரியற்றுஞ் சற்குரு பத்திச்சித்தி
யடைவினைப் புகழ்ந்திட்டின்ப வாழ்மூழ் கினர்களானர். (௧௨௩)

கொங்கலர் வனசப்பூந்தாட் கோவிந்த பகவத்பாதர்
சங்கர ரன்பின்மேன்மை தனைமிக வியந்தாராகி
யிங்கிவ ரேவியாச ரெமக்குமுன் னிசைத்தவாறு
மங்களப் பிரமவித்தை மரபினை விளங்கக்காண்பார். (௧௨௪)

எனமனத் துன்னியின்புற் றினியசங் கரர்க்கூப்ச் சொல்வார்
மனமுவந் தையமுன்யான் வதரிகாச் சிரமத்தின்பா
லனகவத் திரிதன்யாகத் தவைக்களத் தருட்சீர்சான்ற
வினயவி யாசர் செம்பொன் விரைமல ரடிகள்போற்றி. (கஉரு)

பரவுமெய் யருட்சீலந்தோய் பகவரீர் முன்னுவன்ற
பிரமசூத் திரக்கருத்தைப் பெருக்குஞ்சித் தாந்தமாகுந்
தரமுள பாடியந்தான் றரையிலொன் றுள்ளதென்னிற்
பரமத வாதர்தம்போர் பாறிடுமென்றேன்மன்னே. (கஉசா)

விளம்புமென் மாற்றங்கேட்ட வியாசர்தா மரைக்கணப்போழ்
துளந்தனிற் சூழ்ந்துதாமுன் போங்கெழிற் கயிலைமேவித்
தெளிந்துள செயல்சில்வற்றுற் செப்பதன் கருத்துமற்றோ
ரளந்தறி வித்தற்காகா ததற்கர னருளேவேண்டும். (கஉஎ)

என்வழித் தோன்றலாகி யிலங்குநீ யிதனைக்கோறிப்
பொன்வரை வில்லான்பாதம் போற்றிமா தவஞ்செய்வாயே
னின்வயிற் சீடனுமோர் நின்மலன் றன்னுனின்னு
ளுன்வரை முடியுமென்று ருரைத்தவம் மாற்றங்கேட்டு. (கஉஅ)

நானதெக் காலத்தாகு நவிலதை யறிதற்கேற்ற
தானமுற் குறியென்னென்ன வவாய்வின விடுதலானேன்
வானவில் சீர்த்திமேவும் வாலசந் நியாசந்தாங்கி
மானவே தாந்தபின்பான் மற்றெவ னறிகின்றானே. (கஉகூ)

கடல்புரை வெள்ளம்யாவன் கைக்கமண் டலத்தினுக்குட்
படல்பெறும் யோகசித்தி படைத்துளா னுவானன்னோ
னடல்பெறு பிரமசூத்தி ராதியா ரணங்கட்கெல்லா
மிடல்பெறு முரைசெய்தேகம் பரம்பரை விளங்கக்காண்பான். (கஙO)

என்றுரைத் திட்டாரச்சொற் கிசைந்தவாஞ் செயல்கள்யாவு
நன்றுறும் பாலறிந்தே னுனதா னீவிர்காசி
சென்றுயர் வியாசரின்பத் தெரிசனம் பெற்றுப்பின்ன
ரொன்றுநற் செயல்களாற்றி யுறுதிர்மெய்ச் சுகத்தோடென்றே. (கஙக)

கோவிந்த பகவத்பாதர் குளிர்ந்துளா சீர்வதிக்கக்
காவிந்தி ராதியோருங் கணிக்குமெய்ச் சீர்த்திகொண்டார்
மாவிந்தை பொருந்துமாசான் மலர்க்கழல் பல்காற்றாழ்ந்து
தாவிந்தி லருள்சான்றுரைத் தணந்திடச் சகியாராகி. (கஙஉ)

சற்குரு பரன்றாளுள்ளத் தலங்கொடு கரையின்பாங்கர்
விற்குல மணிகள்காலும் விரிதிரைக் கங்கைசூழ்ந்த
பொற்குவ டனையமாடம் பொலிதரு காசிசார்ந்தார்
தற்குவ மானந்தானுஞ் சங்கர பகவத்பாதர். (கஙஙு)

பராமம்ச மென்னமேலோர் பகர்ந்திடு நாமமிந்தத்
தாமார்ந்த சங்கரர்க்கே தகுஞ்சமு சாரரீல்
விரவார்ந்த பராமன்மாப் பான் மேவியத் துவிதப்பட்டுக்
கரவார்ந்து பன்னுளாயுங் கனத்தினிற் பிரித்ததம்மா. (க௩௪)

நானக மாம்பதத்தி னண்ணிலக் கியமேதச்சொ
லானதீண் டெந்தவத்து வானதைக் குறிப்பதீன
வூனதை யோபிரானன் றன்னையோ வுளத்தையேயோ
தானவில் புத்தியானந் தத்தையோ வெனப்பல்வாறே. (க௩௫)

ஐயமுற் றனந்தவண்ணை மறைந்திடு மனர்த்தமாற்றப்
பொய்யனைத் தையுநீத்துள்ளம் புணர்பிர மத்தையேயென்
றுய்யறி வுடையார்யாரு முணர்ந்திடப் புரிந்தாரிஃதான்
மெய்யறி பராமம்சப்பேர் மேதகப் பெற்றானன்றே. (க௩௬)

இன்னவா றியலுநாளி லிணையில்சீர்ச் சோழநாட்டின்
மன்னிரு கரையினுந்தே வாலய மலியக்கொண்டு
தன்னிக ரின்றிமேலாத் தழைவளப் பொலிவுசான்று
பொன்னிநன் னுமங்கொண்டு பொருவில்கா விரிதுலங்கும். (க௩௭)

வளங்கொளந் நதிக்கரைக்கண் மருவுமோ ரகரந்தன்னில்
விளங்கியன் மறையோர்கட்கோர் வேந்தெனக் குலவுமேலோன்
கிளர்ந்திடு வேதமாதி கிளத்துபல் கலைகளெல்லா
முளம்பெறு முரவோன்முன்னு ளுளுற்றருந் தவத்தின்மாண்பால். ()

அருமைமிக் கமைந்தமைந்த னொருவன்வந் தவதரித்தான்
றருமகற் கேற்றவாறு சநந்தன னெனப்பேரிட்டுப்
பெருமறை முறையினுற்றுற் பேசுபல் சமக்காரத்தோ
டிருமுப நயனமாதி யீன்றுளோ ரியற்றவாய்ந்து. (க௩௯)

வாலிபந் தவிர்முனெல்லாக் கலையினும் வல்லோனுகி
மேலிய லெவ்வனந்தான் மேவுநா ளுறவோர்யாருஞ்
சாலியல் வதுவைக்கேற்ற சாற்றிடத் தான்கொள்ளானுய்ப்
போலியாம் போதஞ்சொல்வார் புலங்கொளத் தெருட்டுகின்றான். (க௪0)

உடம்பெனு நாமப்பெண்ணு னுறுபுலப் போகநீத்துத்
திடம்பெறு துணிவினேடுந் திருவருட் சத்திதன்பா
லுடம்படு போகமென்னுமொழிவிலின் பெய்தப்புக்கேன்
மடம்படு மாயைப்பெண்ணை மணந்தழிந் திடற்கொவ்வேனல். (க௪க)

பெண்ணெனும் பேர்கொண்மாயைப் பேயெனைப் பற்றுமாகின்
மண்ணெனப் பொன்னெனப்பேர் மருவிரு பேய்கள்வல்லே
துண்ணெனப் பற்றுமஃதாற் றேய்தலாந் துயரினுக்கோ
ரெண்ணெடுத் துரைக்கப்போங்கொ லிதனைநீ ரறிந்திலீரோ. (க௪௨)

மற்றவர் தம்பாலின்ப மருவிய தென்னிலுள்ளிற்
சற்றறி வில்லாமூகர் சரியெனக் கொள்வரன்றிப்
பற்றகன் ஞானஞ்சற்றுட் பதிந்தவ ரொப்புவாரோ
வுற்றகத் துணரினீரெற் குணர்த்திடத் துணியீர்மன்னே. (கசங)

தையலோ மையலோதான் றருகுவ தின்பமென்னின்
மையறுன் பல்லாலின்பம் வழங்கிடா தாகுமந்தத்
தையலு மையலில்லார் தமக்கின்பந் தருவதுண்டோ
மெய்யறி ஞருக்குத்துன்பாய் வெறும்பொய்யாய்க் கழியுமீதே. (கசச)

அப்பதோ வெப்பதோதா னளிப்பது சுகமென்றாயின்
வெப்பமப் பிணக்கைப்பற்ற விரும்பலாற் றுன்பேயாகு
மப்பும்வெப் பில்லார்க்கின்ப மளித்திடா தின்னபோலுந்
துப்புளார்க் கரிவைமார்தோ டோய்தரு மின்பமன்றே. (கசரு)

குட்டமோ வங்கிதானே கொடுத்திடு மின்பமென்னிற்
குட்டநோ யங்கியின்றேற் கொடுந்துயர் விளைக்குமங்கி
குட்டநோ யில்லார்க்கற்றாய்க் குலவுந்தீ வினையுள்ளார்க்கே
யிட்டமா மடவாரின்ப மீந்திடு கின்றாராவர். (கசசு)

குன்றவே கடலைமாந்தும் வடவையைக் குளிரப்பண்ணுந்
தென்றலு மமுதநல்குஞ் சீதளத் திங்கடானு
மென்றழை குயிலுமங்கி வேம்பென விளம்புவார்கண்
மன்றவீ தின்பமென்னின் மதியுளா ரொப்பதாமோ. (கசஎ)

வன்பவ வுடற்கொண்டென்றும் வாட்டமுற் றிளைக்கின்றான்றன்
றுன்பமென் றுள்ளுடம்புந் துறப்பது நலமாமன்றி
யின்பமெய் திடுவான்மற்றோ ரேந்திழை யாளைக்கொள்ளிற்
பின்படுந் துன்பினுக்கெண் பெயர்கொடுத் தோதவுண்டோ. (கசஅ)

மாதரார் வயிற்றகத்தின் மாதமோர் பத்துநின்றீண்
டாதலா லுடம்பாலுண்டா மல்லலுக் களவின்றென்னிற்
கோதமை துன்பினுக்கோர் கொள்கல மானார்தம்பா
லாதரங் கொண்டுவாழ்வோ ரடைதுய ரறையலாமோ. (சககூ)

அன்னவ ருதிரபுஞ்சத் தமைந்துள வாக்கையால்யா
னின்னலுற் றிரங்கும்பான்மை யிகந்திடத் தக்கதாய
நன்னல முணர்ந்தோருண்டே னவின்மின்மற் றதையான்கொள்வே
னின்னமுந் துன்பில்வீழ்த லெனக்கிசை யாததன்றே. (கரு௦)

ஐம்புலன் வழியேயோடி யழிகுவர் மாந்தரென்னப்
பம்பியன் மறைகளாதிப் பற்பனூல் பகரக்கேட்டுந்
தெம்புட னவைபோமார்க்கந் தேடுகி லாதுட்சிக்கி
வெம்பிட விழைவாரன்றி வேறெவர் மடமையோரே. (கருக)

மைம்மலி குழலார்தம்மை மணம்புணர் செய்கைதன்னு
லம்மவோர் பயனையாமீண் டடையலாஞ் சரதமென்றுட்
சம்மத மொடுநீரென்பாற் சாற்றுதி ராகில்வல்லே
நும்மனத் திச்சைதன்னை நடங்கிடப் புரிகிலேனல். (கருஉ)

உடலினுக் கமைந்தநோயொன் றொழிந்திட வேண்டுமென்னிற்
புடவிவாழ் மாந்தர்மின்னார் புணர்ப்பொழிக் கின்றாரென்றாற்
றொடருயிர் பெற்றசென்மத் தொன்மைநோய் தொலைப்பானெண்ணுந்
திடவறி வுடையோர்கொள்ளத் தக்கதோ தெளிந்துசொல்லீர். (கருங)

பற்றகன் ஞானசீலம் படைத்தமே லோர்களேனு
மற்றவர் தம்மைப்பார்க்கின் மாட்சிமை யகல்வரென்னிற்
பொற்றொடி மடவாரோடு பொருந்திவாழ்ந் திடுகின்றோர்க
ணற்றவம் பெறுதலுண்டோ நாடினு நடுக்கமாமே. (கருச)

அகத்திலுற் றமைந்தநெஞ்சொன் றரிவைய ரலவனெக்கு
முகத்தினைக் காணிற்றீமை முகந்தொரைம் புலன்களான
சகத்தினைச் சாருமென்னிற் சாற்றுமங் கையரைத்தங்கை
நகத்தினிற் றொடுவரோமெஞ் ஞானமுள் ளமைந்தோர்மாதோ. (கருரு)

முன்பருந் தவத்திற்சற்று முயன்றில ராகியென்றும்
புன்புலன் களுக்கேயின்பம் புணர்த்துபுல் லறிஞர்க்குந்தம்
வன்புறு போதமேலா மறைமொழிக் கினியவாகு
மென்புடை யோதுவீரே லென்பயன் பெறுவீரின்றே. (கருசு)

துறந்தவர்க் குலகமெல்லாஞ் சொந்தமா மல்லதில்லத்
தறந்தவா துறைவோனுக்கு மஃதிசை யாததாகு
மறந்தழை பந்தமாதர் மக்கண்மேன் மருவிப்பின்னும்
பிறந்தவ ரோடுவாழப் பிணித்திடு மிச்சையன்றே. (கருஎ)

துறந்துளோ னுண்மைத்தன்மை தோயறி வுருவனில்லத்
திறங்கினோன் பெண்மைத்தன்மை யியன்மனத் துருவன்மற்றோற்
கறந்தவ ரூமலேவு லாற்றுபு கற்புமின்னிற்
சிறந்தவோர் பயன்கைக்கொள்ளுந் திறமிது தெரிக்குமன்றே. (கருஅ)

உற்றிடு மில்லநீத்தோ னேங்கியற் றெய்வத்தன்மை
பெற்றியல் குரவரானும் பேணிடற் குரியனுவன்
அற்றிடு மில்லறத்திற் றோய்பவன் றன்னதங்கை
பற்றிடு மனைவியோடொப் பவனெனப் பகரும்வேதம். (கருகூ)

பரவமெய்த் தவர்கட்குண்ணப் படுமுண வாதியீந்து
புரவுசெய் வானிற்றன்மம் பூண்டுளே னென்பான்றன்மை
கரவினை வேந்தன்கூவிக் கடிமுறை புரிகானிற்கியா
னுரகதி யீவானுன்னி யுளுற்றினே னென்கை யொக்கும். (கசுO)

புத்திரப் பெறுதல்வேட்டுப் பொற்றொடி மாதர்தம்மை
நத்தியே மணப்பதென்னி னல்கிடு மைந்தரானு
மித்தரை மீதெண்ணில்லாத் துன்பநா மெய்தலன்றி
யெத்திறச் சுகமேமைந்த ரீந்திடப் பெறுகின்றேமால். (௧௬௧)

புத்திர னுவான்செய்யும் புன்மைசால் கிரியைதன்னுன்
முத்திபெற் றிடலாமென்ன மொழியின்மூ துணர்ந்தோர்சொல்லுஞ்
சத்திய ஞானபோதச் சாத்திரத் திரள்கள்யாவு
மெத்திபற் பயனில்லாவாய் வெறும்பொய்யாய் முடியுமன்றே. (௧௬௨)

தந்தைதாய் புதல்வர்மீதிற் றழைத்திடு மாயாபாசப்
பந்தமேய்ந் தவர்தவச்சீர் பண்ணவு முடியாதற்றேல்
வெந்தகைப் பவமேயென்றும் விளைந்திடும் விளையுமாகின்
மைந்தர்கள் பாவராகி மற்றதே நமக்குமீவார். (௧௬௩)

மைந்தர்கண் மேலாமுத்தி வழங்குதல் சரதமாயிற்
றந்ததாய் தந்தையானோர் தாம்பிணி மூப்புறும
விந்தமா நிலத்தின்மீதி லேன்சுக மீவதில்லை
பிந்தவாம் பிறப்பிலின்பம் பெறப்புரி வார்கள்போலும். (௧௬௪)

தானிரு வினையினின்றுந் தணந்தவன் றனேமற்றே
ரூனிரு வினையைநீக்கற் குரியவ னுவனென்னின்
மானிடு வினையானம்பான் மைந்தனு வோனமக்கு
வானினை யளிப்பானென்னின் மதியுளோர் நகைத்திடாரோ. (௧௬௫)

நடைகொளில் லறத்தினின்றே னல்குபுத் திரர்க்குவேண்டு
முடையுண வாதிதேடற் குள்ளநாள் போதாதென்னி
லுடையதன் றந்தைதாய ருயர்கதி சேர்தற்கெண்ண
விடையுமோர் சிறிதுண்டேகொ விருக்கிலுன் னுநருமுண்டாம். (௧௬௬)

தனக்குறும் பிறப்பிறப்பாற் சார்தருதுன்பந்தன்னை
மனத்திடை யுன்னியின்ப வாரியாம் வீட்டிற்றோயக்
கனத்தபே ரிச்சைதன்னோர் கருத்திடை யுதியாதென்றாற்
பனத்தகு மைந்தர்நாங்கொள் பயனினைப் பதுமுண்டாமோ. (௧௬௭)

கேடிலாச் சுதரால்வீடு கிட்டலா மெனத்தவச்சீர்
நாடிலா தொழியுமுண்மை ஞானசூ னியர்தங்கொள்கை
வீடிலா னொருவன்றன்னோர் மிடிகளைந் திடுவான்கையி
லோடிலான் றன்னைநம்பி யுற்றதோர் கதையாமன்றே. (௧௬௮)

மைந்தர்க ணல்குமுத்தி வரம்பிலின் பேய்ந்துநீயி
ருந்தமோர் பிறப்பிறப்பை யொழித்துவாழ் குதிரெனக்கிண்
டந்தவோர் முத்திதோயு மாசையு நீயிரோதும்
விந்தையார் போதங்கொள்ளும் விதியுமின் றின்றுமன்னே. (௧௬௯)

ஆணினாற் பெண்ணும்பெண்ணா லாடவர் தாமுந்தம்முண்
மாணிலா மின்பமோங்கும் வாய்மைசற் றுணராராகி
வேணிலாஞ் செயலான்மோக வெறிமிகுத் துறுமோர்தீமை
தோணிடா ராகித்துன்பத் தொடுகடற் படிகின்றாரால். (கஎ0)

இலகுமிச் செயல்களெல்லா மிறைவனா கியவொப்பில்லான்
மலவயப் படுமான்மாக்கண் மதிநலம் படைப்பான்வேண்டி
வலமறக் கருணைகொண்டு வயக்குசீ ருணர்ந்திடாதா
ருலகிய லாமெனக்கொண் டுறுபிறப் பிறப்புற்றேய்வார். (கஎக)

ஊன்மலக் குகையைநானென் றுன்னுணர் விலர்க்கும்போத
நான்மறை முறையிற்றேன்று நமக்கிசை யாதுநான்று
ஞன்மவித் தையைநன்கோர்தற் காவல்கொண் டுள்ளேனீயி
ரேன்மயல் கொண்டும்போத மெனக்கிசைத் தெய்க்கின்றீரால். (கஎஉ)

என்றவர்க் குரைத்தன்னோரை யிருமினோ நீயிர்யான்று
னன்றருட் குரவன்சேவை நாடுபு செல்கின்றேனென்
றென்றவர் தமதுபாச மொருவியே திலர்கள்போலச்
சென்றன னுலகையோர்புன் றிரணமா மதிக்குந்தீரன். (கஎங)

அணிகொளாச் சிரமமெங்கு மாற்றியல் கரைகளெங்கு
மணிகொளா லயங்களெங்கும் வனமலைக் குகைகளெங்கும்
பணிகொளா சிரியன்றன்னைப் பகலிர வினுமேயாய்ந்துந்
திணிகொள்வன் பவந்தீர்த்தாண்மெய்த் தேசிகற்காணுனகி. (கஎச)

மணியலைக் கரங்கொடீயும் வரநதிப் பொலிவார்காசி
யணிநக ரடைந்தபோதி லாண்டருட் சுகனேபோலுங்
கனிதமி ழுறவர்பல்லோர் கருதுமத் துவிதவேதத்
துணிபினைக் கைக்கொண்டோங்குந் தோற்றநேர் கண்டான்மன்னோ. ()

காண்டவப் பொழுதேயின்பக் கடலின்மூழ் கினனுய்நீயி
ரீண்டிவ்வா றிருத்தற்கேது வேதென வினவலோடு
மாண்டமை யறவோர்சொல்வா ரன்பகே ளிந்நாட்டாரை
யாண்டருள் புரிவான்றென்னாட் டினிலவ தாரங்கொண்டே. (கஎசு)

வேறு

அத்துவித சித்தாந்த மாகியது மன்பதனு
லொத்துமுன்னு ளினில்யாங்க ளுஞற்றுதவ முந்திரண்டே
மெத்துருவ மெடுத்ததென மேவுமெம்பாக் கியமான
சத்துருவ மொன்றீண்டு சங்கரப்பேர் தரித்துளதால். (கஎஎ)

எனத்தவத்தர் யாவர்களு மெடுத்துரைத்த வாய்மைதனை
மனத்தின்மிக மதித்தளவில் வாஞ்சையுட னடைந்திட்ட
கனத்தபெரும் பயன்றனது கைவரப்பெற் றவனேபோற்
சினத்தரவப் பணிபுனையாச் சிவனிகர்வார் தமைக்கண்டான். (கஎஅ)

கண்டவுட னன்னவற்குக் காசிவிசு வேசுரன்றன்
வண்டழையுந் திருவடிவா வயங்கிடக்கண் டடிகண்மிசைத்
தண்டமென வீழ்ந்தெழான் றன்மைதெரீஇச் சங்கரர்தம்
புண்டரிகக் கரங்களினாற் புவிமேனின் றெடுத்தணைத்தே. (கஎசு)

அஞ்சாதி யுனதாசை யறைதிவழங் குதுமென்ன
மஞ்சாருங் கருணையுரு மருவினரன் பொடும்வழுத்தச்
சஞ்சாரக் கடல்கடத்துந் தன்னிகரத் துவிதநிலை
நெஞ்சார வருடிரென நிலமிசைமீட் டும்பணிந்தான். (கஅ0)

அவ்வாறு தமைச்சரண மடைந்தான்றன் சரிதமெலாஞ்
செவ்வாய்கொண் டுரைக்கவுளத் திருத்திமிகப் பெற்றவரா
யொவ்வாத பேருளா னுள்ளமுணர் சோதனைகள்
வெவ்வேறு செய்துமிக வெருளாமை யாற்களித்தே. (கஅக)

மற்றவற்குப் பிறப்பிறப்பின் மருவாப்பே ரருணிலையை
யிற்றெனக்கண் கொண்டுணர்த்தி யிலங்கவன்பத் திமைக்குவந்து
முற்றமது பாலடைந்தார் யாவரினு முதுக்குறைவு
பெற்றவனென் றவன்மீதிற் பெரிதுமகிழ் வமைந்தாராய். (கஅஉ)

கிரமமுறு சந்யாசக் கேடில்பெரும் பதந்தன்னைத்
தரமுறுமற் றவற்கீந்து தயைமிகவும் பொருந்தியதா
னுரமுறமுன் னுள்ளார்கட் குள்ளமிசை யழுக்காறு
குரவனரு ளிவன்பத்திக் கொற்றமென வளர்ந்ததுவே. (கஅங)

ஆனசெய லுள்ளமிசை யறிந்தமையுஞ் சங்கரர்தா
மானமலி சநந்தனன்பான் மலிகுருபத் தியின்மகிமை
யானதையுள் ளார்க்கெல்லா மறிவிப்பா னுளங்கொண்டு
சானவியிற் பூரணமாச் சலம்பெருகுந் தருணத்தில். (கஅச)

சீடர்கள்யா ரையுமிப்பாற் செழுங்கரையின் மிசைநிறுத்தி
யாடலினாற் சநந்தனனை யருகணையக் கூவிடலு
நீடருட்சற் குருபத்தி நிறைமனங்கொள் சநந்தனன்றான்
றேடவிழுங் குருபாதந் துணையென்ன மனந்துணிந்தே. (கஅரு)

மாயாசஞ் சாரமெனும் வாரிதிநீந் திடத்துணையாத்
தோயாசா ரியன்பதமிச் சொற்பமுறு நதிகடத்தற்
காயாச மடையாதென் றகத்துணிவி னெடும்வல்லே
மேயோர்கள் பற்பலரும் வியந்திடவுண் மேவினனே. (கஅசு)

கடந்துவரும் வெள்ளத்திற் கலங்காத சித்தமுட
னடந்துவரு மன்னவன்ற னுண்மலர்த்தாட் டுணையூன்றத்
தொடங்குமிடந் தொறும்புதுமைத் தோடகமா மலர்த்தொகுதி
கடங்கொள்கரி யோன்றனது கண்களெனக் கவின்றனவே. (கஅஎ)

இத்தகைப்பே ரற்புதங்கண் டிசைந்திடுமுன் சீடர்கணஞ்
சித்தமிசைத் தம்பிழையைத் தேர்ந்திலச்சை யார்ந்தவனை
யொத்தவருட் டேசிகனைப் பாவனைவே யுளங்கொண்டா
ரத்தகைய செவ்வியிற்றம் மருகணைந்த சநந்தனனை. (கஅஅ)

சங்கரப்பேர்ப் பெருந்தகையுட் சாற்றரிய வுவகையுடன்
மங்களவா சிகள்புகன்று மார்பிலணைத் தின்பமைந்து
பங்கயமா மலர்த்தலையிற் பாதமமைத் திட்டவனே
பங்கமினிற் கினிப்பற்ப பாதனென்பே ரளித்தேமால். (கஅகூ)

என்றுகுரு பரனன்பா லிட்டபெருங் காரணப்பேர்
துன்றுபுநெஞ் சுவந்திட்டான் றற்குணத்தோ ராற்பெரியோ
ரென்றுமொழி யாக்கீர்த்தி யிசைவரெனுங் கூற்றினுக்குக்
குன்றுபுரை சநந்தனன்றன் குளிர்சரிதை கரியாமால். (ககூ0)

வேறு

இன்னவாறனந்தஞ் சிடர்கட்கருளி யினமெனனச் சீர்த்திமிக்கிசைந்து
மன்னருட்டிறஞ்சால் சங்கரத்தகைதான் வாரணசித்தலமருவிப்
புன்னெறியொழுக்கஞ் சார்ந்தவர்தம்மைப் புனிதவானெறி யிடைப்புகுத்தி
நன்னலம்பொருந்தி வாழுநாளையிலோர் நாட்பெறுங்காட்சியைநவில்வாம். ()

தனக்குவமானந் தானலதில்லாச் சங்கரப்பெருந்தகைவள்ளன்
மனக்குகையிடைத்தந் திருவடிகருது மகிமைசால் சீடர்களுடனே
கனக்குழுவயிலுந் திரைமலிசலதி கடுத்திடுமணிகருணிகையின்
வனத்திடைமுழ்கி நித்தியகன்ம வகையெலாமாசறமுடித்தே. (ககூஉ)

வந்திடுமதரி னிடைமிகநீண்ட வடிவமுற்றிலகொர்சண்டாள
னுந்திடுசிரமேன் மதுக்குடந்தாங்கி யுரிமைநாய்நான்குபின்சூழ
முந்திடுகதிசான் றுயர்ந்தசங்கரப்பேர் முதல்வர்தமருகுறவணையத்
தந்திருக்கரங்கொண் டகல்கவென்றன்பாற் சைகைசெய்திட்டனர் மாதோ.

ஆங்கதுதெரிந்து குறிகுணஞ்சிறிது மமைந்திடாவபத்தமார்வடிவ
னீங்கலனஞ்சா னின்றுணர்த்திடுவா னிகரில்சற்குருசிகாமணியே
தாங்கண்மற்றவர்கட் கோதுமத்துவிதத் தன்மைசற்சீடருக்கன்றி
யோங்கனேர்தகைதோய் தமக்கொருசிறிது முதவுகின்றில்லதுபோலும். ()

என்னகாரணத்தா லெதன்பொருட்டியாரை யெங்ககன்றிடச்சொன்னீரோரி
னன்னமாமயகோ சப்படிவத்தை யதற்கணுகாதகற்றுதிரோ
பின்னமிலறிவை யதற்கணுகாது பெயர்ந்திடப்பேசினீர்கொல்லோ
மன்னலையறுசா கரம்புரைந்தியற்கை மருவறிவின்புருவான்மா. (ககூரு)

நீக்கமற்றெங்கு நிறைந்தெதுபொழுது நின்றிடவதையுணராதே
மீக்கவின்மறையோ னிவன்சண்டாளனெனும் வேறுபாடேனிருவினைபா
ராக்கையின்றடையா லென்பிரேன்மண்பொன் னூற்புரிகுடங்களுண்மேவுஞ்
சுக்குமாராகா யத்தைவெவ்வேறுச் சொல்லிடுதற்கிசைந்திமோ. (ககூசு)

கங்கையிற்புலையர் முற்றமார்நீரிற் காணுறுமிரவிவிம்பத்துக்
கிங்கமைவேறு பாடென்னைவேற்று விம்பமெண்ணிறந்திலகிடினுந்
தங்கிடுமுதல்விம் பத்திற்குவேறு பாடுகொல்சாலும்வேற்றுமையு
மங்கிடுசெயற்கைத் தன்றியீண்டியல்பா வழுத்திடும்வாய்மையதாமோ (ககூஎ)

சுழுத்தியினனவுங் கனவும்யாமெய்திற் றோற்றிடுமிப்பிரபஞ்சம்
வழுத்திடவுளதோ பழுதையைப்பாம்பா மதித்துளமருண்டவன்றெளியின்
விழிக்கதுபாம்பிற் றோன்றினுமுன்போல் வெருளுறுகின்றதுமுண்டோ
செழித்தவத்துவித நம்முளத்துணர்ந்தீ ரென்னிலித்திறமயக்குறுமோ. ()

ஞானியென்றுலகத் துள்ளவர்சொல்ல நடித்தகத்தினிலொழுக்கற்று
நானிலவழக்கத் துவிதபாவனையை நனிவளர்த்துலகைவஞ்சிப்பான்
போனிலமீதிற் கொடியரின்றச்சீர் புணர்ந்துநீரிருத்தலினுமக்கு
மேனிகழுலக குருவெனப்புவியோர் விளம்புபேர்பொருத்தமாகியதால். ()

என்றிணையில்லா னகைநிலாத்தோற்றி யிசைத்தசொல்லமுதிருகாதிற்
றுன்றவத்துவிதா னந்தவநுபவச் சுகப்பெருங்கடலலைவிரித்து
நன்றெழுந்தகைபோற் சங்கரப்பெருமா னற்றிருவாய்மடையுடைத்திட்
டொன்றிகத்தணைந்த தன்மையின்மனீடா பஞ்சகமுதித்ததிவ்வாற்றால். ()

எறும்பெழுவாய்கொண் டோதிமனீறு விசையுடலொடுபிரபஞ்சந்
தொறும்புண*ரோதப் பிரோதமேபோலத் தோயறிவாம்பொருளொன்றே
செறிந்துளததுவே தன்வடிவன்றாந் திறத்தின்வேற்றுமைமயக்கெல்லா
முறுங்கனவனைய பொய்மையென்றாசா னுணர்த்திடவுள்ளவாறுணரும். ()

பெரியவன்றான்சண் டாளனாயினும்வான் பிரமவங்கிசத்தனானு
முரியவென்குரவ னென்பதேயென்ற னுளங்கொள்சித்தாந்தமதாமென்
விரிவமைந்திட்ட பஞ்சகந்தன்னை வினவியேவிச்சுவநாதர்
கரியமாலிடைத்தோன் றியதடித்தேபோற் கரந்தனர்கரவமையுருவம். (உ0உ)

கரந்தவருடனே மெய்யறிவின்பக் கவினுருவமைந்துமால்விடைமேற்
சிரந்துலங்கியவெண் மதிமுதற்பிறவுந் திகழ்தரத்தெரிசனமளித்தார்
தரந்துலங்கியகட் குடம்வரநதியாத் தயங்கியதன்னவர்பிற்சா
ருரம்பிறங்கியஞா னிகளருமறையா முருவமைந்தேத்திநின்றனவே. (உ0ங)

அடையலர்புரங்க ணீறெழநகைத்த வரன்றிருமேனிகண்டன்பான்
மடையுடைத்தகலும் வெள்ளமொத்திருகண் வார்ந்துநீரரனைநேர்காணத்
தடைபடுத்திடவன் னதைத்துடைத்துறுநாத் தழுதழுத்திடுபரவசராய்
நடைபெறுசிவோக மகுடம்வாய்ந்துள்ள நற்கவிமழைபொழிந்திட்டார். ()

திகழ்சிவவேவ நாநியத்தென்னச் செப்பிடுதோத்திரங்கொண்டு
நிகழ்சிவம்ஞானம் பூரணமத்து விதமானந்தந்நிர்த்துக்கமொடும்
புகழ்நிருபாதி கந்நிச்சங்கமெனப் புகலுமெண்வகைமறைமுடிவாய்
மகிழ்வருள்சிவான்ம பூரணாநுபவ மஞ்சரித்தோத்திரம்வகுத்தார். (உ0ரு)

---

* ஓதப்பிரோதம்-குறுக்கு நெடுக்கிழை.

அத்துதிகேட்டுக் கருணையங்கடலா யவிர்தருவிச்சுவநாதர்
மெத்துபொருள்கொண் டவிர்வலக்காத்தான் மேன்மைசால்சங்கரர்தம்மை
யொத்துளாரெனுஞ்சி ரகிலமீதெவர்க்கு முணர்த்திடவிடைமிசையேற்றித்
தத்துவாதீத மெய்ம்மறைச்சாரத் தாரகப்பொருளினையருளி. (உ0சு)

நளினநான்மலர்க்கை தனைச்சிரத்தமைத்து நாமுனக்கநந்யமாகி
மிளிர்வமெய்யின்ப வடிவமைந்துளநீ வேதமாமுடிப்பொருள்விளங்க
வெளிதருட்பிரம சூத்திரக்கருத்துக் கிசையமாபாடியமியற்றி
வெளியுறப்புரிந்து வியாசனுட்களிப்பாய் வினவிடவெற்றிமிக்குரைத்து (உ0எ)

வாதியாவெதிர்ந்தார் தமையுடன்படுத்தி மறுவில்வீடவாவினர்யார்க்கு
மோதியீந்தழியாப் பரம்பரையாற்று லுலகுளார்க்குணர்த்தினையாகித்
தீதிலதெம்மை யடைதியென்றருளாற் செப்பிடுமத்ததிதன்னி
னீதிசால்காசித் திருநகரெங்கு நிகரில்பூமழைபொழிந்ததுவே. (உ0அ)

தேவதுந்துபிக ளார்த்தவிற்றென்னச் செப்பிடாவின்பநுபவரா
யாவருங்கண்ணீ ருகுத்துமெய்புளக மெய்தினரருணிலையறியாப்
பாவர்கடமக்கு மின்புடனச்சம் பதிந்தனபராபரத்தகைதோய்
தேவனுர்விண்ணின் மறைந்தனரின்ன திகழ்ச்சிசாலற்புதந்தெரிந்தே. (உ0கூ)

சனந்தனுசிரியர் முதற்சொன்மாணுக்கர் தாமெலாமீதுறுநனவோ
மனந்தருகனவு தான்கொலென்றைய மருவினராய்மதுவுண்ட
வினம்பெறுவண்டொத் திருந்தனரக்கா லெழில்பெறுசங்கரரிறைவன்
வனந்திகழ்பரிசங் கொண்டருண்ஞான வடிவராயாலயத்திணைந்து. (உக0)

தரிசனம்புரிந்து நிற்குமத்ததியிற் றுணுவின்சிவக்குறிநின்றும்
விரிசிவச்சத்தி யஞ்சத்தியமத்து விதமெனவிரண்டுவாக்கியங்கள்
பரிசனமெனச்சூழ்ந் தவர்கள்பற்பலரும் பரவசமுறவெளிப்பட்ட
வரியவன்னவற்றைத் தினசரியையிலா னந்தபூடிகையெனவறைந்தார். (உகக)

அன்னதன்பின்னர் சங்கரர்சநந்த னாதிமாணுக்கர்களோடு
வன்னமாளிகைசூழ் காசிவிட்டகன்று வடதிசையாத்திரைகொண்டே
யின்னன்மிக்களிக்குங் குளிர்மழைவெய்யி லிவைசெயுந்துயர்க்கிளையாதே
பொன்னவிர்பாத சாரியாத்தட்பம் பொருந்திமாசலங்கண்டுபோற்றி. (உகஉ)

வதரிகாச்சிரமம் புக்கவண்வதியு மாதவப்பெரியர்களோடு
மிதமறுவேத சிரப்பொருட்சில விசாரணைபுரிந்துபகிடதப்
பதமுறுபொருளைக் கேட்டல்சிந்தித்த றெளிதலாதியினிலைப்படுத்திச்
சுதர்கிர்சநந்த னாதியரொடுநூற் றொகைகளையங் ஙனந்துறந்தே. (உகந)

தனியராய்வேத வியாசமாமுனிவர் தரிசனம்பெற்றிடவிரும்பிப்
பனிமலர்ப்பொழில்சூழ் வதரிகாச்சிரமப் பாங்கெலாந்தேடியும்பெறுதே
நனியவண்டவஞ்செய் தமர்நராரா யணர்களாச்சிரமமேனண்ணி
யினிதவர்பதங்கள் வணங்கமற்றவர்தா மிதயமேற்பெருங்களிப்பெய்தி. (உகச)

புக்கநும்மிச்சை யாவதேதத்னைப் புகன்றருள்வீரெனப்புகல்வார்
தக்கமெய்ப்புலஞ்சால் வியாசமாமுனிவர் தகைபெறுபிரமசூத்திரத்தை
யெக்கருத்தமைய விசைத்துளார்கொல்லவ் விராசியமவர்வயிற்றெரிந்து
தொக்கவங்கதிற்சா றுணிபுலகினர்க்குத் துலங்கமாபாடியம்புரிய. (உகந)

எண்ணியானீண்டெய் தியதலான்மற்றென் றிலையெனச்சங்கரரியம்ப
நண்ணியபெரிய ருரைகொடுநாரா யணமுனிநனிமகிழ்ந்தவராய்த்
தண்ணியலன்பா லன்னவர்தம்மெய் தழுவியுள்ளுவந்துசாற்றிடுவார்
புண்ணியமைந்தர் நீருணராத புதுமையொன்றுண்டெனப்போமோ. (உகசூ)

வேதவியாசர் தங்கருத்தேநும் மெய்க்கருத்தாகுமாலனுவும்
பேதமின்றுயர்தூர் வாசர்வியாசர் பிறங்குநீர்யாமும்வேறன்றுன்
மீதயலாகப் பார்த்திடிலந்த வியாசர்தங்கோள்வெளிப்படுத்தா
தாதரத்துடனீர் வெளிப்படுத்ததன்பி னவர்கருத்தினைச்சொலக்கருதி. ()

ததியிதினுமக்குத் தரிசனமருளாத் தன்மையராய்மறைந்துற்றூர்
மதிமுடிப்பரம னறிவினுக்கரிபு மாதவ னறிவினுக்கானும்
விதிமுறைசாட்சி யாயிருக்கின்று ராதலினீர்விரித்தியற்று
முதிர்சுவைபெறுமா பாடியக்கருத்தே மொழிதருவியாசர்மெய்த்துணிபே. ()

நிகழ்த்துநீரிருவ ராயுமியானுற்ற நீர்மையானும்மனக்கருத்தை
யகத்துளோர்சிறிது மையமற்றறிவே னரனருட்கலைபெறுநீரு
மகத்துவமுறுமெய்ச் செயலெலாந்தேர்ந்து மானிடர்க்குயர்வழிகாட்டச்
சகத்துதித்துளவோர் தன்மையினன்னோர் தகையிலெற்கடாவினிர்மன்னே.()

இணையிலாநுமக்கு விச்சுவநாத ரினியவாக்கிணையிடவிலையோ
துணையிலதாமித் தருமநும்மல்லாற் றுணிபுடன்முடிப்பவருளரோ
பிணைபெறயாமு முமையிரந்தனநீர் பேசிடவேண்டுமால்வியாச
ரணைபெறவெதுநீர் புகலினுமைய மற்றுடன்படற்கிலையையம். (உஉ௦)

என்றிசைத்துயர்சந் நியாசதன்மத்துக் கியைதருபிரணவசெபம
தொன்றினற்சுத்த சைவமாகாம லும்மதுபரம்பரைதன்னி
லொன்றினர்பலரு மரியரன்வேறென் றிகன்றிடாதுவணகேதனத்த
னன்றியல்வழிபா டும்புரிந்திடுமா நவின்றிடவேண்டுமென்றினிதே. (உஉக)

இத்தகைவிடயம் பலபடப்பன்னி யினிதுதந்தவவலிமையுந்தங்
துத்தமநாரா யணமுனியாசி யுரைபுகன்றனுப்பிடலானர்
முத்தர்கட்கரசாஞ் சங்கரமுனிவர் முனிவர்கூட்டத்தினுட்புகுந்து
சித்தமேற்றுணிபிற் பிரமசூத்திரஞ்சொல் செம்பொருட்பாடியஞ்செய்தே. ()

பரவியற்றசோப நிடங்கட்கும்பஞ்ச ருத்திரோபநிடங்கடமக்கும்
பிரபலநாசிங் கதாபினிகௌடீ தகிபிரமாண நூலினுக்குங்
கிரணமார்சீருத் திராத்தியாயஞ்சீர் கெழுமியற்பகவற்கீதைக்குந்
தாமுறுசனற்சு சாதியம்விண்டு சகத்திரநாமமாதிகட்கும். (உஉ௩)

பீடியல்பிறபன் னூலினங்கட்கும் பெருஞ்சுத்தாத்துவிதசித்தாந்த
பாடியமியற்றி யாத்துமபோதம் பளகறுதத்துவாலோகம்
வீடியலபரோட் சாநுபூதியத்து விதமுடனேயுபதேசங்
கூடியவுபய சகத்திரமாதிக் குறியநூலினம்பலகுயிற்றி. (உஉச)

சூதசங்கிதையா தியபலநூல்க டுணிபொருட்கோர்சிறிதேனும்
பேதமுற்றிடாது பன்முறையாய்ந்து பேசுநூலினங்களையெல்லாஞ்
சீதளப்பதவா ரிசஞ்சரண்புக்க சீடர்பல்லோர்க்குரைத்தமர்ந்தார்
போதருதகியிற் பன்னிரண்டாண்டு போதகாசாரியற்கமைந்த. (உஉ௫)

ஆறிரண்டாண்டு பூர்த்திபெற்றிடுமு னருமைசானூல்களுக்கெல்லா
மாறில்பாடியங்கண் டடியவர்க்கருளி மாநிலத்தமைகதிரவன்போல்
வீறியல்கீர்த்தி யுலகமுற்றெறிப்ப வியன்கொளாசாரியபீடத்
தேறிவீற்றிருந்தா ரகிலமீதமைந்தா ரெவர்களுங்குரவனென்றேத்த. (உஉ௬)

அன்னகாலையினில் வதரிகாச்சிரமத் தமைந்தமாதவர்களாயிரருந்
தன்னனபுகழ்தோய் சங்கராசிரியர் தாட்டுணைபோற்றுசீடர்களாய்
மின்னவிர்வேதாந் தத்துணிபாகி விளங்குபாடியப்பொருள்வினவி
மன்னிடும்பிறப்போ டிறப்பெனப்புகலு மருட்சிபோய்த்தெருட்சிசான்றிருந்தார். ()

வதரிகாச்சிரமத் திடைச்சின்னாளிருந்து வயங்குசீர்ச்சநந்தனுதியரோ
டிதமுறுசாத்தி ரத்தொகைகைக்கொண் டிலங்கவிமுத்தமெய்திடப்புக்
கதரிடையுளவாம் பற்பலதலங்கண் டங்கெதிர்ந்தவரெவர்களையு
மதமறச்சயங்கொண் டெருமத்துவித மார்க்கமெய்திடும்படிபுரிந்தே. (உஉ௮)

எம்மதத்தமைந்தார் மீதினுமுள்ளத் தெட்டுணையிகலமையாரா
யம்மதங்களிற்சார் குற்றமட்டகற்றி யவர்மதத்தவரவரமைவான்
செம்மதாதீத வான்பொருளுண்மை தெளிதரத்தேற்றியாவருமுட்
சம்மதத்தொடுதங் குரவனென்றேத்தத் தக்கசீர்க்காசியையடைந்தார். ()

வாரணசிப்பேர்த் திருநகரடைந்து வரநதித்தீரமேன்மருவி
வாரமிக்கமைசீ டர்க்குபர்பிரம சூத்திரவான்பொருடுலக்குஞ்
சீரவிர்பாடி யத்தையோதிடுமோர் தினத்தினினண்பகற்பொழுதிற்
சாரமார்பாடஞ் சாந்திசெய்தெழுமத் தருணமிக்கொளியுருச்சமைந்த. (உ௩0)

விருத்தவேதியனுண் டெய்திரீயாரை மேவுமின்னவர்கள்பற்பலருங்
கருத்தறிதரவே துரைத்தனையென்னக் கடாவலுஞ்சீடராயமைந்தோர்
திருத்தகுமிவரெங் குருபரனரிய திறல்கொள்வேதாந்தபாடியத்தைப்
பொருத்தமிக்குறவே கண்டவர்பிரம சூத்திரம்போதனைபுரிந்தார். (உ௩க)

என்றபோதினிலங் கெய்திடும்விருத்த ரினியசங்கரர்முகநோக்கி
நன்றிவர்கூறும் வண்ணமெய்தான்கொ னயந்தபாடியம்புரிந்துளையே
லொன்றுநானறியச் சூத்திரப்பொருள்சற் றோதுதியென்றுசாவிடலுங்
குன்றுறழ்தகைசால் சங்கரர்மகிழ்வாய்க் குறுகும்வேதியர்தமைப்போற்றி.

மகத்துவஞ்சான்ற பிரமசூத்திரச்சீர் வபக்குபாடியம்புரிந்தனமென்
றகத்திடைக்கொண்டே னல்லன்யானெனினு மருளினீரெதுவினுவிடினுஞ்
சுகத்துவம்பொருந்துஞ் சூத்திரக்கருத்துட் டோன்றுமட்டுரைசெய்வேனெனலுந்
தகத்திரியத்தி யாபமுற்பதத்திற் றதந்தரப்பிரதிபத்தவ்வாம். (உகங)

ஆதிசால்சூத்தி ரப்பொருள்வினவ வதற்குயர்சங்கரமுனிவ
ரோதிடுமான்மா வேறுடம்படைபோழ் தொன்றுசூக்குமந்தழீஇபுறுமென்
றீதியற்றுண்டிச் சுருதியிற்கோத மன்சயிமினிவினுவிறையிற்
போதருமென்றும் புகன்றிடவியாதம் பொருந்திடும்வியாதன்மாறமைந்தே. ()

அடைவுடனூறு வகைவினுவிடவாங் கதற்கொராயிரம்வகைபடவே
விடையளித்தனர்சங் கரப்பெயரமைந்த வித்தகரிவ்விதங்கார்கோண்
மடைவிடுந்திறம்போற் புகன்றுபஃறினங்கண் மாறியும்வாதமாறிலது
நடைபெறக்கண்டோர் யாவரும்வியந்து நவில்விடயந்தெரிகிலராய். (உகரு)

முடிவிலதியலு மித்தருக்கந்தான் முடிவதென்றெவ்வகையீண்டுப்
படிதருமறையோன் யாருணர்த்திரெனப் பதுமபாதனைவினுவிடலு
நொடியின்மற்றவன்றன் றியானநோக்கத்தா னேக்குழியரனரியாகும்
படிவராத்தோற்ற மற்றவர்க்குரைப்பான் பத்தர்காணமதுசற்குரவன். (உகசு)

சங்கரனேயென் றறிமினேமறையோன் சலசலோசனனுருவியாச
னிங்கிவர்வாதம் புரிவரேற்றேல்வி யேற்பவரியாவரென்பேனென்
றங்கவர்கேட்க வறைந்தவர்க்கணுகி யடிகணீர்வாதுசெய்வீரேற்
றங்களோரடிமை யென்செய்வனென்னச் சங்கரர்தாம்வறிதமைந்தே. (உகஎ)

சீர்த்திமிக்குறுசற் குரவனும்வியாசன் றிருவடிகளைவணங்கிடலு
மார்த்திமிக்கவன்றன் னிசவடிவன்னே றறிதரப்புரியவுட்கொண்டு
கார்த்திருமேனி யுந்தடித்தேபோற் கவின்றபுன்சடைகளுநீண்ட
தார்த்திருத்தோள்க ளுந்தடமார்புஞ் சலசவாள்விழிகளுந்தயங்க. (உகஅ)

கமண்டலந்தண்டத் தோடுமான்றோலுங் கவின்மலிநீறுகண்டிகையுஞ்
சுமங்களஞ்சாலப் பொலியுருவமைந்து துலங்கலுமிதயநெக்குருகிக்
கமங்கொளானந்தக் கடலிடைமூழ்கிக் காரெனவிழிகணீருகுப்பச்
சமந்தவிர்பரமா சாரியன்பெருஞ்சீர் சாலவாழ்த்துபுபணிந்தின்பாய். (உகசு)

தவமலிபதும பாதனங்கரத்திற் றங்குமாபாடியப்பெயர்சால்
சுவடியைவாங்கி வியாசன்முன்வைத்துத் துலங்கருட்பிரமசூத்திரமாம்
பவமறுசூரி யன்றனக்கெனது பாடியவிளக்கினைக்கொண்டே
யுவமைதீர்தீபா ராதனையன்பி னுஞற்றிடுகின்றனன்யானே. (உச0)

மறைகளைப்பகுத்துச் சாகைசெய்தன்பார் வைசம்பாயனர்பைலர்சுமந்து
முறைபெறுசூத ராதியர்க்கொண்டு மூதுலகினர்கொளவிளக்கித்
துறைபெறுபதினெண் புராணங்களியற்றித் தூயவேதங்களின்சார
நிறைபெறும் பார தங்கணபதியா னிகரின்மேருவினிடத்தமைத்தே. (உசக)

பரமராசியமா மெவைக்குமேலாகும் பான்மையார்பிரமசூத்திரத்தைத்
திரமுறவெளிசெய் தவிர்கலைமகடன் செல்வமுற்றிலுந்திகழ்வித்த
வரமுறுதேவ ரீர்முனமடியே னுள்ளமொல்காதுபாடியஞ்செய்
பாவுபுல்லறிவாண் மையைப்பொறுத்தருளிப் படிந்தகுற்றங்களைகென்றார். ()

சூத்திரக்கருத்தா வாம்வியாசனுக்குத் தோல்விசற்றடைகிலராகி
நாத்திரங்கொண்டு பலதினம்வாத நவிற்றிப்பின்சநந்தனனுரைத்த
மாத்திரத்தொன்று மறிகிலேனென்ன வழுத்தியேவேதமாமுனியைத்
தோத்திரம்புரியுஞ் சங்கரர்மகிமை சொல்லிடின்முடிதரத்தினதோ. (உசரு)

சொற்றநூல்வியாச முனிவனதுளத்திற் றேய்கருத்தமைத்துமங்கதனிற்
குற்றமுற்றுளதேற் றிருத்துதிரென்னக் கூறினரென்னனுரென்னிற்
சிற்றறிவதனுற் சொற்றதேவேதச் சிரப்பொருளென்றுவாதிடுவர்
றுற்றவாந்துலையிற் சரக்கினதாழுந் தூக்கிடும்வறிது தான்மாதோ. (உசசு)

நின்றுவிண்ணப்பஞ் செய்தருகமைந்த நிமலசங்கரர்முகநோக்கி
நன்றுநன்றுனது செய்கையென்றெல்லா நன்கறிஞானமெய்வடிவ
மொன்றுயர்வியாசன் பாடியங்கைக்கொண் டொருமுகூர்த்தம்வரையோர்ந்து
குன்றுறழ்தனது மார்பிடையணைத்துக் கொண்டுசங்கரர்க்கியம்பிடுவான். ()

ஐயசங்கரநீ பொப்பறுகயிலை யங்கண்வாழ்சங்கரனேகாண்
மெய்யதின்றேலென் கருத்துறுமுண்மை வெளிப்படுத்திடவெவ்வாறியலுஞ்
செய்யவிங்கிதனைப் பார்த்தலுமெனது சிந்தைகொளையமுற்றொழிந்த
துய்யவிங்கிதற்குற் றஞ்சொலப்புகில்யான் சோர்வெனதாமுனதன்றே. ()

குலவுகோவிந்த பகவத்பாதனுக்கோர் குணமலிசீடனுவாய்ந்த
நலமருவியற்கை யறிவுசானுன்ற னுவினுகவைவருங்கொல்லோ
விலகுநின்செய்தி யாவையுநன்று யிருந்தனகயிலையினின்சீர்
வலமுறத்தெரிந்து பாடியந்தன்னைக் காணவேவந்தனன்மாதோ. (உசள)

பிரமசூத்திரஞ்செய் திட்டதாலெய்தும் பேறிதுநாளினிற்பெற்றேன்
வரமலிதருநன் மணிகளொப்பெனயான் மறைத்துவைத்துளவிராசியங்கள்
பரவுபாடியவஞ் சனங்கொடியாவர்களும் பளிங்கெனத்தெரிதரவமைத்தாய்
விரவுநானு னீயுளக்கருத்தும் வேற்றுமைசிறிதுபெற்றிலதால். (உசஅ)

வீறுபட்டுள்ள நம்பரம்பரைதான் மேதினிமீதணுத்துணையும்
வேறுபட்டதிலை சுகனெனக்குள்ள மேற்களிப்பீந்திடும்விதம்போன்
மாறுபட்டிடாது நீயுமெற்குள்ள மகிழ்ச்சியீந்தருளுகின்றனையாற்
கூறுபட்டிடலி லியற்கைசால்விளக்கங் கொள்பொருட்கேதுக்கோர்விளக்கே. ()

மெய்யறிவியற்கை யமைந்துளநினக்கு வேறுநான்புகல்வதொன்றுளதோ
வையகின்செயல்கண் டளப்பிலின்படைந்தே னென்றுரைத்தகன்றிடத்துவக்க
மையன்முற்றகன்ற சங்கரன்பின் மாதுரியத்துதிவழுத்தி
மொய்பருட்குன்றேப் பீருள்கூர்ந்து முகூர்த்தமொன்றீண்டுவைகுதிரால். ()

தேவரீர்திருமுன் வாநதிக்கரையிற் சேருமிவ்வுடலினையொழித்தே
மேவரும்பரமா னந்தநன்னிலையில் விரவுவனெனவிளம்பிடலுந்
தாவரும்வேதங் களைமுறைப்படுத்தான் சற்றகத்திற்றியானித்திட்
டாவநின்செய்தி யறிவன்யானியாவு மறிந்தநீயென்னையேமாற்ற. (உருக)

இவ்விதநடிக்கின் றனைநல்லதுனக்கீண் டிப்பிறப்பிடையடைந்திட்ட
செவ்விசேராயு ளாண்டொரெட்டொருநீ தேடியதத்தொகையாகு
மவ்விதவாயு ளின்றுதீர்கின்ற தாதலினின்னுமீரெட்டென்
றெவ்வியவாயுள் கொண்டுலகத்தி னுலவயானுனக்களித்தனனே. (உருஉ)

பேசுமென்மொழிக்கொத் திருந்துநீயுற்ற பிரமவித்தையைமிகவிளக்கித்
தேசுறுபிரம ஞதியராமிசாச் செகத்துதித்தவர்ச்செயங்கொண்டு
நேசமிக்குறுமத் துவிதநன்னெறியை நிலைபடப்புரிந்துவன்கலியான்
மாசுறீஇமகிமை குறைந்துறுதெய்வ வளம்பதிகளிற்கலையேற்றி. (உருந)

சைவம்வைணவமா தியவறுசமய தருமமுமுறைப்படிவகுத்திட்
டுய்வகையறியா துழன்றழிவார்க ளுயர்கடவுட்டரிசனஞ்சான்
மெய்வகைபெறவே கன்மமெய்ப்பத்தி மேனிலைஞானமுந்தமது
கைவயின்மருவ வுதவுநூலினங்கள் கழறிநம்மரபினைவிளக்கி. (உருச)

சற்குருபீடங் களைவகுத்தென்னுற் சாற்றியவாண்டுபன்னுறு
நிற்குலவுறுங்கா லத்துடலோடு நீட்சிசால்கயிலையின்மருவிச்
சிற்குணத்தகைய சிவசொரூபமதாய்த் திகழ்தியென்றுரைத்தனனிவர்தாஞ்
சற்குணக்குன்றே தம்முரைப்படியான் சரிக்கவென்பாடியஞ்சிறக்க. (உருரு)

கனத்தநும்மருட்சீர் வேண்டுமென்றிடலுங் கவின்பெறுவியாசர்புன்னகைகொண்
டுனக்குமென்னருள்வேண் டுங்கொனின்விருப்புக்கிசைந்தவ்வாறுதவிடுகின்றேன்
வனப்புறுநின்பா டியஞ்சுருதியுத்தி யநுபவம்வாய்ந்திருப்பதெனு
மனத்துளாய்பவர்க்குத் தோன்றிடுந்தானே வயங்குமென்கருத்துமற்றதுவே. ()

என்னதாணையைநீ காத்தலினினதே யென்றுமேவெற்றிபெற்றிலகுங்
கின்னமார்கலியிற் கௌதமரேனோர் கிளத்துசாபத்தினுலழிந்து
புன்னெறியொழுக்கிற் பொருந்தும்வேதியர்கள் புரையுரைவேறுவேறோதி
யன்னகாலத்துக் கேற்றவாசெய்வ ரன்னதுங்கடவுளாக்கினையால். (உருஎ)

ஆனவற்றுள்ளுஞ் சிற்சிலதரும மமைந்திடுமழிவிலானருளான்
மேனவிலவைக ளிதைப்பிழைபெனினும் வியன்புடமிட்டபொன்போல
வூனமற்றொளிரு மல்லதுன்னுரைதா னெழிவுறாதொவ்வொர்காலத்தும்
வானவில்சீர்கொ ணினதுமாணுக்கர் மருவுநின்கோள்விளக்கிடுவார். (உருஅ)

சங்கிரகத்திற் பிறந்திடுகங்கை தானனைவரையுமூழ்குவித்திட்
டங்கண்மாஞாலத் துலகபாவநிப்பே ரமைந்துறுந்தன்மையேபோலச்
சங்கரநின்னுற் கண்டபாடியப்பேர் தாங்குசூத்தியும்பவங்கடத்திப்
பங்கமாருலகத் தெவ்வுயிர்களையும் பாவனம்புரிந்திடுமென்றே. (உருகூ)

செப்பிரண்டினுக்கு மூலமாகியது திகழ்சிவஞானமேயாகு
மொப்பின்மற்றதுவே பாசிவன்சடிலத் தோங்குகங்காதாத்தன்மை
பப்பியன்ஞான வின்பமேமற்றிப் பாடியத்தின்படிவாயு
மப்பியல்கங்கை யாகியுமுலகத் * தாடவர்களைச்செயுமமலம். (உ௬0)
வாநதியுலகிற் றுலங்கிடுங்காலம் வரையுநின்பாடியந்தானுந்
தாமுடனென்றும் வெற்றிபெற்றுறுநீ தான்சந்நியாசியன்றன்றே
ராசெனச்சிறப்பா யுனக்குறுநாம மன்றியேகாரணப்பெயர்கள்
வாமலிவியாக்கி யானசிம்மாச ஞதீசுவரனென்றுமற்றும். (உ௬௧)
தரைமுழுதேத்துஞ் சடுத்தரிசனமெய்த் தாபனுசாரியன்சீர்த்தி
வரையில்பூமண்ட லாசிரியன்சர் வதந்திரசுதந்தரனென்ன
நிரைபடவுனக்கின் றியானருள்விருதிந் நிலமலாற்பிரமலோகத்தும்
வரைமுடிச்சுடர்போ லிலகுகேயிலே மலேபுகும்யாத்திரைப்போதில். (உ௬உ)
பிரமன்றனுன்கு முகங்கொடுமிந்தப் பெயர்களுன்கையுமுரைத்தன்பிற்
பாவுவனீயு முனதடிமைகளாம் பரம்பரைச்சிடர்கடாமு
முரவுநீர்க்கடல்சூ ழுலகுளார்யாரு முரிமைசால்குருவெனக்கொள்ள
விரவுகவென்ன வாசிவிண்டங்கை மேவிடுகமண்டலப்புனலால். (உ௬௩)
சங்கரர்க்கபிடே கம்புரிந்தன்பாற் சயமுடன்வாழியென்றிடும்போ
தங்கண்வானிடத்தி லிருந்தசரீரி யப்படியேயெனவறையக்
கங்கைசூழ்காசி விந்துமாதவருங் காலபைரவர்முதற்றேவர்
சங்கமுமந்த வாறெதிரொலியாச் சாற்றியாசிர்வதித்திட்டார். (உ௬௪)
அன்னசொல்சநந்த ஞதியரன்றி யணியவிமுத்தநன்னகரின்
மன்னனேவருங்கேட் டுவமைதீரின்ப வாரிதிமூழ்கினராஞ
ரின்னபேரருட்சீர் கொண்டசங்கரர்தா மினியநற்சிடர்களோடு
தன்னனபுகழ்சான் றுயாவிமுத்தத் தலத்தினுட்புறமெனவிருந்தார். (உ௬௫)

வேறு

நிறைந்தபேரரு ளால்வருமுனிவரர் நிலைமையிலெழுமின்போன்
மறைந்தகன்றன ரகலலுஞ்சங்கரர் மனத்தினுட்டிகைத்தன்றே
ரறைந்தமாற்றமு னினைந்தளப்பரியபே ரார்வமுற்றவனிக்க
ணுறைந்துளார்கட்கத் துவிதநன்னெறியினை யுணர்த்துவானுளத்துன்னி. ()
வழுத்துமெய்ச்சநந் தனுதியருடனெழில் வாரணுசிவிட்டேகி
விழுத்தகைப்பிர யாகைநற்கேத்திர மேவினரதன்மேன்மை
பழுத்திலங்கியற் புலமைசால்புலவர்பற் பலர்முனம்பகர்ந்துள்ளார்
செழுத்தகைத்திருப் பொலிநதியேழனுட் சிறந்தமூன்றுென்றுகும். (உ௬௭)
அன்னவற்றின்மெய்ப் புகழினிமேற்பல ரறையினுமுற்றுவிக்
கொன்னமைந்தகா வியஞ்சொலின்மற்றென்று விரித்தகுற்றமுமேற்கு
மன்னமன்னவெண் சத்துவக்கங்கையு மவிரிராசதச்செம்மை
துன்னும்வாணியுந் தமக்கறுப்பணிகொடு துலங்கெமுனேயுமூன்றுய். (உ௬அ)

* ஆடவர்களை - ஆள்தவர்களை - ஆடு அவர்களை எனப் பிரித்துக்கொள்க.

ஞானமிச்சைவன் கிரியையாஞ்சத்தியா நண்ணிடுந்திரிவேணி
யானபிங்கலை யிடையுடன்சுழுமுனை யவைகொள்சங்கமமாகும்
வேனமைந்துள புருவமத்தியிலமை வெளிநிலாந்தகைசான்ற
மானமார்சிவ தீர்த்தமொப்பானதான் மற்றவணடைந்தின்பாய். (உசுகூ)

தன்னைமெய்க்கதி சேர்த்திடவுன்னிமுன் றவமுழந்தரிதீன்ற
வன்னைதன்னையுண் ணுடுபுமூழ்கின ரறிவறிந்தமைசீர்சால்
பொன்னைநேரருட் புதல்வனைப்பெற்றிடும் புனிதமாதவத்தோர்கட்
கென்னையெய்திடற் கரியதொன்றுளதென விசுத்துளார்களுந்தேற. (உஎ0)

மெச்சியற்புனல் படிந்துசெய்கடன்புரீஇ மேலதீரமுற்றோங்கும்
பச்சிலைத்தரு வடியினிற்சங்கரர் பதுமபாதனேயாதி
யுச்சிதங்கொண்மா ணுக்கர்மத்தியி லுளத் துவகையோடுறுங்காலை
நச்சியற்பெறு பட்டபாதர்துடா னலத்தின்மூழ்கினரென்றே. (உஎக)

சாற்றுமோரச ரீரிவாக்கியந்தனைச் சங்கரருளங்கொண்டே
யேற்றசீடரோ டாண்டுறவெந்துகொண் டிருக்குமப்பெரியோர்தற்
போற்றுசீடர்க டமைக்கொடுசங்கரர்ப் பூசனைபுரிவித்தென்
னீற்றிற்சங்கரர் சிவனெனத்தரிசன மெனக்களித்தனரம்மா. (உஎஉ)

பரவுமற்றவர் செய்தவேதாந்தமா பாடியந்தனைக்கேட்டே
விரவுபூர்வமீ மாஞ்சமாஞ்சாபார மேவுபாடியத்துக்குத்
தரமிகுந்தவெண் ணுபிரங்காரிகை விவரணஞ்சமைத்தாற்போ
லுரமுடன்புரிந் திடற்கெனதுளத்திடை யொழிவில்வாஞ்சைகொண்டுற்றேன்.

புண்ணியப்பய னுகும,ற்றதையிவண் பொருந்திலேனெனவோதுந்
திண்ணியத்தகை யோருரைசங்கரர் செவிகொடன்னவர்ப்பார்த்திட்
டெண்ணிடுஞ்செயன் முடித்திடாதேன்விரைந் திங்கொடுஞ்செயலாற்றிப்
புண்ணியைந்தனை யென்றிடமற்றவர் புலங்கொளப்புகல்கின்றார். (உஎச)

பெருமைமிக்கவே தியனெனயானிவண் பிறந்தவோர்நிலைகேற்ப
வருமைசான்மறை நிந்தைசெய்நாத்திக ரழிதரப்புரிந்தென்று
மொருவிலாப்புகழ் பெற்றிடும்வாஞ்சையென் னுள்ளிளமையிற்கொண்டே
மருவிமச்செயற் கேற்பவாத்திகத்திரு மறைக்கருத்தெலாந்தேர்ந்தேன். ()

நாத்திகக்கொடு நூலையுங்குருபர னல்கவேற்றிடல்சால்பென்
சாத்திரத்தரு மப்படியதைபுமோர் ததாக தன்புடைசார்ந்திட்
டேத்துசீடரிற் சேர்த்துநானியலுகா ளிகல்கொளன்னவர்மேலா
மோத்துநிந்தைமிக் கியம்பினர்கேட்டவென் னுள்ளம்வெந்ததுமிக்கே. (உஎசு)

அடக்கொணுத்துய ரடைந்தனன்வசமகன் றறல்பொழிந்தனகண்கள்
தொடக்கமேவுமற் றதைமறைத்தேனயிற் றேற்றினேனவர்நம்பா
திடக்கனுமிவ னந்தணனேயென விதயமேற்றுணிந்தோர்ந்தே
முடக்கமார்மறை யோர்மகக்கொலைநன்றென் முறைமையாமுறைபோன்றே.()

பழியினம்மதங் காப்பநாங்கொலைசெயல் பாவமன்றெனவுன்னிச்
செழியசாலையைத் தாமடுக்கினின்றெனைச் சினந்திரும்புவிமேல்வீழ்ந்
தழியத்தள்ளினர் கீழ்விழும்போதில்யா னாரணமெய்யென்னி
னெழிவுறுதுயிர் பிழைக்கவென்றற்றமைந் தூரனுடனெழுந்திட்டேன். ()

அன்னகான்மறை யுண்மையேலென்றுநா னையமுற்றிடுமாற்றம்
பன்னலாலொரு விழிமறைந்திட்டது பகருமத்தினந்தொட்டே
துன்னலுற்றதென் றனக்குமற்றவர்கட்குஞ் சொல்லொணுப்பகையற்று
லன்னபுத்தரைக் குருவுடன்வேரற வழித்திடவகங்கொண்டேன். (உஎகூ)

இந்திரன்கலை யாஞ்சுதன்வப்பெய ரிறையவரினமென்னத்
தந்திரங்கொடென் னவருடன்கலந்துறு ததியறிந்தியான்சார்ந்திட்
டந்தின்மேயதா ருவில்வதிகுயில்புரி யரியவின்னிசைகேட்டே
சுந்தாஞ்செறி குயிற்பிள்ளாய்நீயிசை சுருதிக்கேற்றிலதான. (உஅ0)

கடினவன்குணக் காக்கையிறெடுகல வாதிருந்தனையாயிற்
படியின்மேற்சிறப் பாயெனவங்கியா பதேசப்பாப்பகர்ந்திட்டே
னெடியவுட்பொரு ளக்கவிகேட்டனு நீசராஞ்சடபிஞ்ஞ
ரடிசவட்டுறு மாவெனக்கொதித்தெழுந் தாற்றினர்பலதர்க்கம். (உஅக)

ஓதுகாலைபன் னவர்கணூற்கிளைகளை யுத்திக்கோடரிகொண்டு
காதுபன்னதன் கட்டைபுந்தீய்ந்திடக் கனன்றனனதுபோதிற்
கோதுமேவினர் பலவினுவிடவெதிர்க் கூற்றுமோதினனக்கான்
மோதும்வன்சிறைக் கருடனோரரவென முறனெழிந்தனர்நின்றூர். (உஅஉ)

அன்னபோதிறை யுளவுணர்ந்துந்தன தாட்சியின்முறைக்கேற்பப்
பன்னலானவா தியர்க்கலான்மதங்கட்குப் பலமிலையெனத்தேர்வேன்
மன்னுநம்முள்யார் வரைமுடிநின்றுதம் மதசித்தாந்தமதோதிக்
கொன்னுறும்புவி மேற்குதித்தாருயிர் கொண்டிடுந்தகையோரோ. (உஅங)

அவர்கைக்கொண்மத மேபெரிதென்னநா னறிந்தவர்பாற்றேய்வே
னவமுறப்புரி வீரெனப்புத்தர்க ணடுநடுங்கினர்யான்றூன்
சவலமோர்சிறி தின்றிவீழ்ந்தொருதுயர் சார்தராதிருந்தேன்பின்
புவனிகாவல னுடனவர்தம்மிசைப் புந்தியுளுவர்ப்புற்றூன். (உஅச)

அரசனுட்குறிப் புணர்ந்துடன்புத்தர்க ளரண்மனைத்தலைச்சார்ந்து
விரவுமிச்சேபன் மணிமந்திராவிழ்த வெற்றியேமதஞ்சான்ற
சரதமன்றெனக் காட்சியச்செயலையுந் தகுதியற்றதாமென்னப்
புரவலன்சினந் தும்மையோரிராசியப் பொருள்வினவிடுகின்றேன். (உஅரு)

அறைந்திடாரைக்கற் காணத்தினுள்ளூறுத் தாட்டிடுகின்றேன்யா
னிறைந்தபேரவை சாட்சிபெற்றிடவென நிகழ்த்தியாவருங்காண
மறைந்தவோரிடம் புக்கொருகுடத்தினுண் மாசுணம்புகுத்தீது
ளுறைந்ததாம்பொருள் விண்மெனப்புத்தர்க ளுரைத்திலதிசைக்கின்றூர். ()

பிற்றைவைகல்வை கறைப்பினோதுவமெனப் பிறங்குசெங்கோலேந்தும்
பொற்றைநேருரத் திறையற்றுருகவென்றான் போந்திடுமற்றோர்தா
மொற்றையாழித்தே ரவனிலோர்வாவியி னுட்கழுத்தளவாழ்ந்தே
யற்றை*யாமினி முழுவதுமருந்தவ மாற்றினர்பரிந்தம்மா. (உஅஎ)

சூரியோதய மாதலுமவனரு டோற்றிடப்புரிநீரார்
றேரினுருள வரசன்முனடைந்தனர் செப்பிநின்றனரக்காற்
சீரியோருளங் களிப்பயான்மாதவன் சேர்ந்துளானெனச்செப்ப
வாரியோதையிற் கலித்தகங்களித்தனர் மன்னவனுளமாழ்கி. (உஅஅ)

சிறிதுதாமதித் திருத்தலுமாற்றலர் செவ்வியீதுயர்மேலோ
ரறியவோதுசொ லுண்மையானதையவ ரங்கையாலெடுத்தீண்டு
செறியுமேலவர் தெரிதரக்காட்டிடிற் றெளிகிலதுரைத்திட்ட
சிறியரேமிறை நீசொல்சூண் முறைப்பெருந் தெண்டனைபெறுகின்றேம். ()

என்றுதற்பழித் துரைத்திடுமேலவ ரெனப்பரிகசித்துள்ளிற்
றுன்றுமாணவக் கசட்டுடனிகலவன் றெருலைந்தனனுமெல்லா
நன்றுதோய்தரு தினமிதுவேயென நனிமகிழ்ந்தனர்நின்றார்
பொன்றுகாலைமிக் கவிர்ச்சிசால்விளக்கினைப் போன்றுபுன்மைபரன்றே. ()

சாற்றிடேல்வையான் குடத்தைபுட்பூசனை சமைத்தனன்வலஞ்சூழ்ந்து
போற்றியேயத னுட்கரமிட்டுயர் புயங்கமேற்றுயில்கின்றான்
மாற்றியைந்தவிக் கிரகமேலெடுத்தவண் மருவினோர்கட்கெல்லாந்
தோற்றிடப்புரிந் தங்கவர்தம்மைபுந் தோற்றிடப்புரிந்தேனே. (உகூக)

அன்னபோதர சன்மறைசரதமென் றவைபுண்மேவினர்க்கோதப்
பன்னல்கேட்டலும் புத்தர்களுனக்குமெய்ப் பட்டியன்மறைதன்னி
லின்னலோருயிர்க் கியற்றலாகாதென விசைத்தசொற்றணப்பாய்கொ
லென்னவோதிமன் றனைமலைவித்தன ரியம்புசொலுளங்கொண்டு. (உகூஉ)

மன்னவன்றனு ளையமுற்றியற்றிடும் வகையறிகிலனுகி
யின்னலுற்றயர் போழ்தில்யானிறைவற்பார்த் தேற்றநற்றருமந்தான்
மன்னவாற்றிடுங் கொலைத்தண்டத்தாற்பவ மருவிடாதுமெய்தேர்தி
யொன்னலார்கள்போர் வேட்டமாதியிற்பவ முற்றதோவுனக்கன்றே. (உகூ௩)

விளைதரப்புனத் திடைப்பயிரிட்டவன் மேவிடுபுல்லாதி
களைதரானெனிற் பயிரினமிறைவனைக் களைபவம்பெறுவான்போற்
றுளைகொணச்செயிற் றரவுறழ்கொடுங்குணத் துட்டராயினர்தம்மைக்
கிளையுடன்றெறு மன்னரல்லாதப கீர்த்தியேற்பவர்யாரே. (உகூச)

என்றபோதினில் வானசரீரியொன் றிணையில்செங்கோல்வேந்த
நன்றுநீநவிற் றிடுபிரத்திஞ்ஞையை நனிமுடித்துன்னுவான்
மன்றவோதுசத் தியம்புரந்திசையுடன் வாழ்தியென்றிடக்கேட்ட
வென்றிவேலிறை புத்தர்தம்வங்கிச வேரறப்புரிந்திட்டான். (உகூரு)

* யாமினி - இராத்திரி

ஏயயான்மறை மானத்தாற்றேரரொ டெனக்குநூலுரைத்தோனு
மாயவேபுரி தலிற்குருத்துரோகியா வயங்கினனிதுதன்னை
நேயமோடுளத் தெண்ணிடுதோறுமு ணெருப்பெனச்சுடுகின்ற
தாயதீச்செய லீதலாலின்னமொன் ருற்றினன்றுணிந்தந்தோ. (உகசு)

தருக்கவுத்தியாற் கடவுளுண்டென்றுமுன் ருபனம்புரிந்தப்பா
லிருக்கமைந்துள கன்மகாண்டந்தனை யிருநிலத்திடைநாட்ட
வுருக்கமோடுசை மினிமதம்புக்குமீ மாஞ்சருத்திகைக்கொண்டு
தருக்கர்தோற்றிடக் கன்மமேபரமெனச் சாற்றுபுநிறுத்தேனல். (உகஎ)

ஆனபான்மையி னீசுரத்துரோகமா மதிகொடும்பவந்தானு
நானமைந்தன னிவ்விரண்டுங்கெட நவில்பிராயச்சித்தங்
கானமாமறை விதிவழாதிப்பெருங் கடினநோன்பினையாற்றி
யீனமாருட லொடுபவங்கழித்திடற் கெண்ணினன்றுணிந்தையா. (உகஅ)

பாவமீதமை வேனும்வேதாந்தமா பாடியத்தினுக்கான
காவலம்பெறு விவரணஞ் செய்யதி காரமெங்ஙனந்தோய்வேன்
மேவருங்கழு வாய்செயக்கருதிப்பின் விடுதல்புன்மையர்செய்கை
யாவதுன்னியே யாசைவிட்டெணைமுடி வாக்கிடவிரைந்திட்டேன். (உகக)

என்னவோதிய பட்டபாதரின்மொழி யினியசங்கரர்கேட்டே
பன்னுமந்தணர் தலைவவீயருமறைப் பத்திமிக்குறுபண்பா
லின்னவின்னல்கொண் டுளையலாலுன்பொருட் டியாதுமேபுரிந்தில்லா
யன்னதன்றியா ரணப்பெருமந்திர மனைத்துநன்கறிந்துள்ளாய். (௩00)

ஆற்றிடுஞ்செயல் களைக்குறித்துளத்தநு தாபமுமமைந்துள்ளா
போற்றுநூலுணர் நல்லறிவுடையமெய்ப் புலவனுமாய்நின்ரு
யேற்றவித்தகை யேதுவினுலுனக் கெட்டுணைபவமில்லை
நீற்றுஞானத்தீ யவம்பஞ்சுமலையிடை நேரழற்பொறிபோன்றே. (௩0க)

குருவருட்டுணை கொண்டதெய்தாமலிக் கொடுவழக்கிடைசேறல்
பெருமைசானினை யொத்துளோர்செய்திடும் பெற்றியன்றின்பாரு
மருமறைத்துணி பறிகிலதிவ்வகை யசடுறுஞ்செயல்கொண்டாய்
மருவினும்பிழை யின்றெனற்காத்திடை வதிகமண்டலநீரால். (௩0உ)

வெந்தபாதிநின் னுடம்பையும்பண்டுபோன் மிளிர்ந்திடப்புரிகின்றே
னந்தமுற்றநின் விற்பனம்பாழ்த்திடா தவனிமேலவர்தேர்வான்
விந்தைமிக்கவென் பாடியத்துக்கியல் விவரணம்புரியென்ன
வந்தவேலையிற் குமாரிலபட்டர்தம் மாகம்பாதிதான்வெந்தும். (௩0௩)

சிறிதுமுட்கவ லாதுதம்மகத்திடைச் சிந்தனைசெய்போதிற்
செறியுமன்னவர்க் கருண்மலிசங்கரர் சிவனுருவாத்தோற்ற
நறியவேதமந் திரங்களாற்றுதிபல நவின்றுரைத்தொழிற்றுனு
நெறிகொளிச்சையிற் புரிதருவீர்க்கிது நெடியதென்றிடப்போமோ. (௩0ச)

படியினுந்தெரி சனம்புரிவார்க்குறு பவத்தொடுகழுவாயே
தடிகளொன்றும்வேண் டியதிலையேனும்யா னவதரித்திதுகாறு
மொடிவுறுதுவை திககருமங்களை யுஞற்றிவந்திதுகானுங்
கெடிகொள்பாடிய விவரணஞ்செய்திடுங் கீர்த்தியினசைகொண்டு. (௱௦௫)

கன்மகாண்டமே பூமிசையாவருங் கைக்கொள்வான்செயுமாறு
சன்மமுற்றயா னேயதனொழுக்கினைத் தணந்தயலாவுற்ற
தன்மமேவிடி விதுவரைமுயன்றவை தாம்பயனிலவாகி
யென்மனம்புரிந் திடுநகைக்கேயிவண் யானிலக்காவேனல். (௱௦௬)

ஓதியாவையு முணர்ந்துந்தாமவ்வழி யொழுக்கமற்றுலகோர்க்குப்
போதியாநிற்போர் தமையலாற்பேதையர் புவியின்மீதினிலுண்டோ
நீதியோவினு ரிருப்பின்மேலிறப்பெனு நிகமமாதலின்யான்பார்
மீதில்வந்துள செயன்முடித்தனனினி வேலையற்றிருக்கில்லேன். (௱௦௭)

ஞானமார்க்கதா பனஞ்செய்வானெந்தைநீர் ஞாலமீதினில்வந்தீ
ரானபான்மையால் யானிருத்தற்கடா தமைவனேலவனிக்கண்
மேனடந்திடு செயற்கிலாகிடும் விமலரிங்கதனாலே
வானடைந்திடற் கென்னுளத்திச்சைபோல் வரமளித்திடுவீரால். (௱௦௮)

அழியுடம்பவா யென்விரதத்தினை யழித்திடவிசைகில்லேன்
செழியவங்கியில் வேகினுமென்னுடல் செய்தவத்திறலானீர்
மொழியும்பாடியத் தின்கருத்தறிதரு முதுக்குறைவமைந்துள்ளேன்
பழியில்பேரருட் குன்றனீர்தாம்புரி பாடியத்திருநூலை. (௱௦௯)

பங்கமற்றவென் சீடனாயமைபிர பாகரன்கரத்தீயி
னங்கங்காஞ்சிறப் பானபாகங்களை யன்புடன்கேட்டுப்பின்
றுங்கமேவுமென் கருத்துணர்த்துவனெனச் சொன்முறைப்படியாற்ற
மங்களம்பெறத் தாமுணர்நூற்களின் வாய்மையாவுமொத்தோர்ந்தே. (௱௧௦)

அருமைசான்றவே தாந்தநுண்பொருளெலா மமைந்துளதெண்ணான்காம்
பொருவிலாவுப நிடதவண்பொருள்புலப் படவிலையிஃதேயிப்
பெருமைசான்றபா டியத்தியானுணர்ந்துள பேதமாவதிஃதிற்சா
லொருசொலாற்றலுக் குலகெலாமீயினு மொப்பதாம்பரிசன்றே. (௱௧௧)

இதனுக்காற்றிடில் விவரணங்கிரந்தமோ ரிலக்கமும்போதாதான்
மதமற்றேதிரு வருள்வழிநிற்பர்நுண் மதியினோர்தருபான்மைப்
புதுமைசான்றதிங் கிதைவினுப்மனத்தியான் பொருவிலின்பமிக்கேய்ந்தேன்
மதுரமாரிதற் கியல்விவரணஞ்செய்வார் மகிதலத்திடையின்றே. (௱௧௨)

விளங்குமென்றன்மா ணாக்கனன்மண்டன மிசிரனென்றிடும்பேரோன்
வளங்கொளாரியா வர்த்தவிற்பனங்கொண்மா ணாக்கர்பற்பலர்சூழச்
சளம்பெறுமறைக் கன்மகாண்டத்தினைத் தரணியினிலைசெய்து
தளங்கொள்வாரிசன் றானெனவுலகெலாஞ் சாற்றிடத்திகழ்கின்றான். (௱௧௩)

பன்னியாயவற் கமைந்தனளுபயபா ரதியெனும்பெயர்வாய்ந்தா
டன்னியற்பெயர் காரணமாகவுந் தழைத்துளாடவனுவோன்
றன்னினுஞ்சிறப் பமைந்தபேரறிவின டனக்கிணை தானென்ன
மன்னிடுந்திறத் தாடெளியாச்செயன் மகிதலத்தின்றின்றே. (௩கச)

அத்திறத்தனை வென்றிடனுமக்குஞ்சற் றரிதெனச்சொலலாகு
மெத்திறங்கொடா யினுமவர்தமைச்சய மெய்துவீரெனிலந்த
ணத்திசூழ்புவி மீதிலாரையுஞ்செய மடைந்த தன்மையேபோலாஞ்
சித்தியைந்தரும் பாடியவிவரணஞ் செய்யவுமவன்வல்லோன். (௩க௫)

செய்கைமற்றது முடிப்பிரேலிமமுதற் சேதுவின்வரைநுந்த
மெய்மைசான்றபா டியத்தொடும்புகழ்ச்சியு மேவுமெற்கினிப்பூமேல்
வைகுதற்கமை யாதருட்டாரக மறையளித்தருணுக்கஞ்
செய்திரென்றனு மபயவான்கரத்தொடத் தீயுட்சங்கரர்போந்து. (௩கசு)

மைந்தவஞ்சலி யெனக்கையாற்றொடுதலும் வாய்ந்தவப்பரிசத்தால்
வெந்தகைத்துடாக் கினிநிலவொடுசுதை வெள்ளமூழ்கலிலின்பந்
தந்ததங்கிலை யிற்றன்சீடர்க்குபர் சங்கரர்தகையோதிச்
சொந்தராமிவர் மரபருக்குறவராத் திகழ்திரென்றுஞ்சொல்லி (௩க௭)

பொருவில்சண்முக முத்திரையான்மனம் புருவமத்தியிற்போக்கி
யருமைசால்பிர மரந்திரநாடியி லணைந்துடலகன்றிட்டார்
மருவுமக்கணந் தன்னிலோர்யோசனை மணங்கமழ்ந்திகஞ்சான்ற
சருவவாருயி ரையுஞ்சுகசாகரந் தனிலமிழ்த்தியதம்மா. (௩க௮)

இலங்குகாலையவ் வங்கியினின்றுமொப் பிசைத்திடற்கரிதாய
நலங்கொள்பேரொளி யொன்றவண்சார்ந்துளார் நயனமெலாங்கூசத்
துலங்கிடும்பர வெளியெனுங்குகன்பதந் தோய்ந்ததுவானோர்கள்
வலங்கொடுந்துபி முழக்கியைந்தாருவின் மலர்மழைபொழிந்தார்த்தார். (௩க௯)

இன்னவாறுயர் சங்கரமுனிவர்த மிணையடிதொழுதேத்து
மன்னுமெய்ப்புகழ்ப் பட்டபாதருக்கருள் வழங்கிமாதவர்சூழத்
துன்னுகங்கையின் மூழ்கிமாதவப்பரத் துவாசராச்சிரமத்திற்
கொன்னுலாவுமட் சயவடிவாலடிக் குருவெனக்குலவுற்றார். (௩உ0)

கூரியற்றனி வேலனதமிசமாங் குமாரிலரிகலாகிப்
போரியற்றியே புன்னெறிபயிற்றினேன் பொன்றலுற்றதனாலே
யாரியன்றுரோ கம்புரிந்தேனென வாற்றிடிற்பரிகாரம்
பாரிற்சிற்றறி வினர்குருவிடம்புரி பவம்வறிதினிற்போமோ. (௩உக)

வேறு

பின்புகுமா ரிலபட்ட ருரைத்தவண்ணம்
பெருமைமலி தருபதும பாதனுதி
யன்புறுமா ணுக்கர்புடை சூழ்ந்துபோற்ற
வணிப்பிரயா கைத்தலம்விட் டகன்றாராகிக்

கொன்புணரு மிரேவாநன் னதியின்பாங்கர்
குலவுமகி டமதிநக ருப்பானத்தி
லின்புடன்சார்ந் ததின்மூழ்கிச் சீடரோடு
மினிதுறுநித் தியகன்ம மியற்றினாராய். (௩உஉ)

சனந்தனனு தியரைவிடுத் தேகராகிச்
சகம்புகழ்மண் டனமிசிரன் றன்னைக்காண்பான்
மனந்தழைபு முவகையுடன் செல்வார்முன்ன
மருவினர்பா லவன்மனையை வினவுபோதி
லினம்படுமெற் றவரிசைப்பார் யார்வாயிற்க
ணெழின்மலிபஞ் சரக்கிளிக ளிருக்குந்தன்னை
வனம்படுபூ வைக்குரைத்து ளையமுற்று
மாற்றுவவோ மற்றதவர் மனைபாந்தேரீர். (௩உ௩)

என்றமொழி வினவியசங் கராண்டுற்று
ரேல்வையிலா திததனுச்சமெய்த்தினைக்
குன்றனைய மனைவாயின் மூடப்பட்டுங்
குலவிடுதம் வரவவர்க்குக் கூறவங்க
ணென்றொருவர் தாமுமெய்தாத் தன்மைதேர்ந்தா
ரோங்கிடுதம் யோகவலி யுரத்தினாலே
நன்றுறமேற் கிளம்பிவிறற் கொடிகள்சால
நண்ணிடுமேன் மாடநிரை நயந்துதாண்டி. (௩உ௪)

மனைமுற்றத் திழிந்தவணேக் கிடுமப்போது
மண்டனமி சிரன்றவத்தின் வலிமையாலே
தனைநிகர்வே தவியாசர் சைமினிப்பேர்த்
தாபதரைப் பிதுர்கரு மந்தனக்காவேண்டி
வினைபெறவே நிமந்தரஞ்செய் தவர்க்குப்பூசை
விதிமுறைசெய் காற்றருண மிதுவேயென்னு
நினைவுடையா ராயரியா தனத்திற்றர்ப்பை
நிறுவியதற் குயர்பூசை நேரும்போதில். (௩உ௫)

ஆண்டருட்சங் கரமுனிவர் துணைப்பாதங்க
ளமைத்தனரன் னவனைவலிந் தாள்வான்வந்த
நீண்டவரு ணிலைதேற்ற வதைக்கண்டேசந்
நியாசிசிரார்த் தத்தமைத னியமமன்றென்
கோண்டகன்ம காண்டவிதி கொண்டோன்வந்த
குருமுதல்வர் தமைச்சினந்து கொதித்துவன்பாய்
மாண்டவியப் போந்திடுமா ணவக்கசட்டின்
வடிவாகி நின்றனனிவ் வண்ணஞ்சொல்வான். (௩உ௬)

குதோமுண்டி சந்யாசி யெங்கிருந்து
கூறுகென மழித்தலெனக் கொண்டுகண்டத்
துதோபாகத் திருந்தெனவா களான்முண்டியென்
றோதவழி தனைக்கடா வினன்யானென்னு
மதோபந்தாந் தேபுருச்சி தேமயாவென்
மாற்றங்கேட் டதரென்னை வழுத்திற்றென்னப்
புதோகையுடன் சங்கரர்கேட் டிடலுமங்கே
பொங்குசினங் கொடுமறையோன் புகலகின்றான். (௩௨௭)

நின்றாய்தான் முண்டையெனக் கூறிற்றென்ன
நிகழ்தேமா தாரண்டா வென்றபோதுன்
றன்றாயைக் கூறிற்றன் றோதுவம்மா
தாரண்டேத் தியாவகிமண் டனுவென்றோதி
யொன்றாசி யஞ்செயக்கட் குடிக்கப்பட்ட
தோவெனச்சு ராபிதா வாவென்றோத
வன்றாது பச்சைநிறம் வெண்மையேயென்
றமைமங்கிசு ராசுவே தராவென்றால். (௩௨௮)

அதுகேட்டன் னவனேகோ வதன்வண்ணந்தா
னறிவைகொலெ னகோசாநா சிதவ்வண்ணம்மென்
றதுவினவிச் சங்கரர்யா னிறந்தேர்வேனீ
யறிவைரச மெனச்சினமிக் கமைந்தானுகிக்
கதுமெனவோய் கொடுமைமனத் துறவிநீதான்
கர்த்தபந்தாங் கற்கரிதாங் கவந்திதன்னைப்
புதுமைபெறக் கொண்டுளைக்குக் குடுமியோடு
பூணநூ லும்பாரம் பொருந்திற்றேயோ. (௩௨௯)

எனவினவச் சங்கரர்நின் னப்பனுலு
மெடுப்பரிதாங் கவந்திசுமந் திடுகின்றேற்கு
வினவுமயி ரொடுநூலும் பாரமென்னல்
விதியன்றான் வேதத்தின் விதிக்குமெத்தக்
கனமான தெனவிடக்குச் சலம்விரோதா
பாசவுரை யணிக்கடா விடைகள்விண்டார்
வினயமது தேர்ந்திடுசை மினியும்வேத
வியாசருமண் டனற்கினிது விளம்புகின்றார். (௩௩௦)

நியமமுட னீபுரிகன் மங்களெல்லா
நிட்பலனெய் தியதிவணி நிகழ்த்தலான
பயனிலுரை யாலெனச்சொற் றிங்குவந்தோன்
பண்பொர்சிறி தறிந்திலையால் வேதாந்தங்கட்

கியனுடன்பா டுறுசந்நி யாசிபிச்சை
யேற்கவடைந் தனனெனிலில் லறத்துற்றுய்நீ
பயபத்தி யோடிடல்பாங் கதனினுஞ்சீர்
பரவுசிரார்த் தத்தடைந்தாற் பாற்றலாமோ. (௩௩௧)

ஆதலினெம் மோடிவரை யுஞ்சிரார்த்தத்
தமைந்தவுண்டிப் பொருட்டுநிமந் தரணஞ்செய்து
மாதவன்று னத்திருத்திப் பூசியென்ன
வழுத்திடமண் டனமிசிரன் வன்கோபந்தீர்ந்
தேதமறப் பூசைபுரிந் தடிகள்பிட்சைக்
கெழுந்தருள வேண்டுமென விரத்தலோடுஞ்
சாதபிட்சைப் பொருட்டன்று வாதபிட்சை
தனைப்பெறயா மடைந்தனமென் றுரைசெய்தாரால். (௩௩௨)

என்னுமொழி வினவுதலும் விசுவரூப
னெல்லையில்லாப் பெருங்களிப்புள் ளெய்தினுறு
யென்னுடனின் றிவ்வுலகில் வாதிப்பாரு
மிருக்கின்றூர் கொன்னெடுநா ளெதிர்பார்த்தெய்த்தேன்
முன்னுறவந் தழைக்கில்விடு கின்றதுண்டோ
முதியீரப் பிச்சைபின்னுண் முறையிலீவேன்
றுன்னுமிது தினம்பிதுர்தன் கன்மமற்றுற்
சோற்றுப்பிட் சையையருளாற் றுய்ப்பீரென்ன. (௩௩௩)

சங்காரற்றுகவென விசுவரூபன்
றுனுவனிந் தைக்குயர்விட் டுணுரூக்காதி
மங்களமா மறைச்செபத்தாற் பிராயச்சித்தம்
வயக்கிவியா சரைவிசுவே தேவத்தானந்
துங்கமுறு சைமினியைப் பிதுர்தானத்துந்
தூயவரைமாயவன்றேய் தானமீதும்
பொங்கமுற வமைத்துறுகன் மங்களெல்லாம்
பூர்த்திசெய்தா னவர்போச னுதிமுற்றி. (௩௩௪)

இன்புடன்மூ வருந்தனியா மிடத்தினெய்தி
யிருக்கந்த விராசியம்விண் டிருக்குமேல்வை
மன்புரைமண் டனனவர்பான் மருவியாங்கள்
வாதிக்கி லெங்கள்குணங் குற்றந்தேர்ந்து
தென்படுகல் வித்திறத்தாற் செயாசெயஞ்சொல்
செப்பமுளா ரில்வழியாஞ் செய்வதாய
கொன்பயிலும் வாதுபய னிலதாய்வீணுய்க்
கூாலுலர்ச்சிக் கேதுவதாய்க் குலவுமன்றே. (௩௩௫)

என்றுரைத்து மண்டனனீர் நடுவாக
விருந்தருள வேண்டுமென விரத்தல் கண்டு
குன்றுறமு மனம்படைத்தார் சிறிதுதம்முட்
கூர்ந்தாய்ந்து மேனடக்குங் கோள்கடேர்ந்து
நன்றுபுகல்வார்விசுவ ரூபரேநுங்
நற்றரும பத்தினியா வையுந்தேர்ந்துள்ளா
ளொன்றுபக்க வாதமின்றித் துலாநேராஞ்சீ
ருாமுடையாண் முற்றுமுணர்ந் தவளுமாவாள். (கூகசு)

அன்னவளே நுந்தருக்க வெற்றிதோல்வி
யளந்திசைக்கு மாற்றலுளா ளவளையல்லாற்
பன்னவல்லார் மூவுலகத் தினுமின்றென்னப்
பகர்ந்துமறைந் தனருடன்சங் காருமக்கா
னன்னலஞ்சார் மதியோக வன்மைதன்னு
னபவழிக்கொண் டிரேவாநன் னதியின்பாங்க
ரின்னலுடன் றமைபெதிர்பார்த் திருக்குஞ்சீட
ரிடமருவி நடந்தவித மியாவுஞ்சாற்றி. (கூகஎ)

பிரமநிட்டா பாரானுர் திவாகரன்முன்
பிரபலஞ்சான் மண்டனற்குஞ் சங்காற்கு
முாமுடன்பின் னுடைக்குந் தருக்கச்செய்தி
யுரகபதிக் குணர்த்திடுவா னேடுவான்போற்
றிாமுறுமே லைக்கடலின் மூழ்கினனத்
திறந்தேவர்க் குணர்த்திவெழுந் திறத்தனேபோல்
விரவியசந் திரனதுதான் றேர்கிலாவோர்
விதியுணர்ந்துள் வெட்கினரிற் றலைசாய்த்தானல். (கூகஅ)

இரவெப்போ தகன்றிடுநாந் தருக்கமெப்போ
திடுவோமென் றெண்ணிடுமவ் விருவருந்தன்
வரவைப்பார்த் துறுஞ்செயலைச் சகியான்போன்று
வந்தனனு தவன்வருமுன் கடன்களாற்றி
வரமலிசங் கார்குலமா ணக்கரோடு
மண்டனபண் டிதன்மனையின் மருவியாண்டு
விரவுதருக் கத்தினுக்கேற் படுத்ததாய
வியன்மணிப்பீ டத்தினில்வீற் றிருந்தார்மன்னே. (கூகசு)

உற்றசெயல் கண்டருண்மண் டனன்றுன்முற்று
முணருபய பாரதியா முரிமையில்லாட்
கொற்றமுறுஞ் சபைத்தலைமை வகிக்கவாற்றிக்
குறைவிலுாத் தோடுவப்புட் கொண்டானுகி

விற்றமையும் வாதபீடத்திினேறி
வீற்றிருந்தா னக்காற்பா ரதிதானன்னோர்
கற்றமையுந் திறத்திினைத்தேர்ந் திடுவான் சொற்போர்க்
களம்வகுத்து முரசார்ப்பா தியசெய்வித்து. (௩௪0)

வாதித்தா னம்பிரதி வாதித்தானம்
வயங்குநடு நிலைசாட்சி வரிசையாதி
பேதிக்கா தமைத்தவர்க ளியற்றவேண்டும்
பிரசங்க வெழுத்துமுறை முதலவாற்றி
நீதிச்சீர் வாதமுடன் றேல்வித்தான
நிலவிலக்க ணஞ்சமயக் கட்டுப்பாடு
மீதிற்றோர் தோல்விவெற்றிக் குறிப்பொடொட்டம்
விளம்புமிவை பற்பலவும் விதியிற்கண்டே. (௩௪௧)

தருமதே வதைசமுகத் தந்தணளர்
சங்கமா சவையெதிர்சா திக்கத்தக்க
பொருளிதுவென் றேவகுத்துக் கொண்டுவாதம்
புரிதரமேற் கொண்டனரக் காலைதன்னிற்
சருவகலை வடிவாகி யெழுத்துந்தோன்றுந்
தானமாய் ஞானவின்ப நிலையாய்வாக்கின்
மருவிடுசெல் வமதாயுந் திகழ்சரச்சு
வதியுபய பாரதியா வருங்காணுத. (௩௪௨)

தெய்விகப்பே ரொளிப்பிழம்பாய்த் திகழ்ந்தாளந்தத்
திறத்தாலாண் டுற்றவர்சித் திரமொத்தன்பாய்
நெய்விரவு குளமெனவன் னவரோய்வின்றி
நிகழ்த்திடுவா தத்தைவினைய் நிலவினர்கண்
மைவிரவு குழல்வாணித் தாயேசான்றாய்
மருவவையின் மந்திரவா வாகனத்தான்
மெய்விரவு முனிவர்சுரர் சித்தர்வான
மேலிடத்துற் றியல்வாதம் வினவினால். (௩௪௩)

தேவர்கலை சால்யோக சித்தர்பல்லோர்
செழுமறையோ ராகியங்கட் சேர்ந்தார்வான
மேவரமங் கையர்கள்பணிப் பெண்களாகி
வெண்கமலைக் குபசாரம் விதியிற்செய்தா
ராவலுடன் மண்டனன்மெய்ச் சீடாரு
மவையுமைவோர்க் கேற்றபணி யாற்றினர்க
ளோவரமை சுவர்த்தலங்கொ ளுருவினொடாண்
டுற்றவரு முருவினையா லொத்தாரம்மா. (௩௪௪)

மலர்மணிமா லைகளமைந்து மணமிக்கேய்ந்த
மலயக்கா றவழ்ந்தின்ப மருவியங்க
ணிலகிருவா திகள்பிரசங் கத்தினீற்றி
லிளைப்பொழியும் படிபுரிபல் லியங்களோடுங்
குலமறையோர் புகல்சாம கீதத் தோடுங்
குலவுமவை யெகினநெடுங் கொடிகைக்கொண்ட
மலரவன்சத் தியவுலகு மவனைக் கண்பான்
வந்ததுகொ லெனவயிர்ப்ப வடங்கிற்றன்றே. (௩௪௫)

காலையதிற் சவைத்தலைமை சால்வாணித்தாய்
கட்டளையாற் றருக்கமுர சார்த்தலோடு
வேலைநிகர் விற்பனர்க ளம்மிற்றேல்வி
மேவினர்தம் மாச்சிரமம் விடுத்தேனோர்க்குச்
சீலமுறு மாணுக்க ராதலென்னச்
செப்புமொட்டத் தினுக்கிசைந்தா ரானு ரந்த
வேலையிற்சங் கரர்சிவேச் சுரரொன்றென்னும்
வியன்சித்தாந் தத்தையள வையொடும்விள்வார். (௩௪௬)

பரமார்த்த சொரூபமாய் மலமற்றோங்கும்
பான்மையதாம் பிரமமொன்றே நிபிடமாயும்
விரவுமநா தியதாயு முளவஞ்ஞான
மேன்மறைப்பாற் கிளிஞ்சில்வெள்ளி யாத்தோற்றுங்கு
திரமாக வகிலமெல்லாந் தானுய்த்தேசு
செய்கின்ற தித்திரிபுக் கெழுவாயான
பிரமசொரூ பத்துணர்வா லவிச்சையோடும்
பெறுகாரி யப்பவஞ்ச மும்போந்தீர்வால். (௩௪௭)

பிறவாமே தன்வடிவாய்த் தானிருத்தல்
பெறுமென்னு முத்தியா கின்றதென்று
திடமாக வுடன்படப்பட் டிருப்பதிங்கே
திருமறையீ றெனவேபு பநிடந்தாமே
யறநீடு மளவையா மிதுவேயென்ற
னகத்துணிவென் றிடும்போதில் லறத்தார்க்கெல்லாஞ்
சிறவாநின் றிடும்விசுவ ரூபன்சொல்வான்
றிகழ்ஞான மயப்பரமான் மாவிடத்தில். (௩௪௮)

எயமறை முடிவுபிர மாணமாவ
தில்லையதே னெனிலவ்வத் துவுண்டேயென்ப
தாயபிர சித்தியல்ல வலதுகன்ம
வசம்பந்த வப்பொருட்கட் சத்தச்சத்தி

மேயடையா தாகையா லந்தவேத
வியன்முடிவு கட்காயி னுங்கண்கூடாத்
தோயுலக சம்பந்தப் பொருள்கடேற்றுஞ்
சொல்லாய வழக்கமைந்த சொற்களாலே. (௩௪௯)

இயலுலக காரியங்கட் குண்மையுண்டா
யிருப்பதுபோ லும்வேதத் துள்ளும்பூர்வ
நியதிபெறு காண்டவாக் கியங்களாலே
நேர்ந்துதெரிக் கப்படுமெக் கருமமும்மென்
வியன்பொருட்கண் மறைகள்பிர மாணமாக
மேவுகின்ற தவ்வகைய கருமந்தம்மா
லுயர்வீடு பேறுமுண்டா கின்றதென்றே
யுடன்பட்டுள் ளதனு னீக்கொண்ணுதென்றான். (௩௫௦)

இற்றாக வவரவர்சா திக்கவேண்டு
மியன்மதங்க டமைவரம்பு செய்துநாளும்
பற்றுகும் வைதிகநித் தியகன்மங்கள்
பயினுணவா தியவொழிந்த காலமெல்லாஞ்
சற்றுயா சமதின்றி வருத்துக்கொண்ட
தம்வரம்புகடவாது வெற்றிநாடிக்
கற்றார்கள் போற்றுமுயர் வாதஞ்சர்ப்பங்
கைக்கொண்டு பொழிந்தனர்கார் மேகமொல்க. (௩௫௧)

உற்றிடுகா லையிலவைக்குத் தலைமைபூண்ட
வுபயபா ரதியாவு முணர்ந்தாளாகிச்
சற்றினையா தேபிரம வாதமென்னுஞ்
சமரினுக்குத் தீக்கைபுரிந் திருக்கின்றோரா
மற்றிணைதீர் வாதிபிர திவாதியானோர்
வண்களத்திற் றேல்விவெற்றிக்குறிய தாக
நற்றிருமந் திரத்தொடைய விட்டாள்வாத
நன்குணர்ந்து பரிசுருணன்னலமேபோன்று. (௩௫௨)

யாவர்களத் தமைந்திடும்பூ மாலையெப்போ
தினில்வதங்கி யுலர்ந்ததப்போ தவர்தோற்றிட்டோ
ராவரதை யாருமெளி துணரலாமென்
றச்சபைமே வின்ரெவரு மறியக்கூறித்
தாவருந்தென் புலத்தர்தெய்வம் விருந்தோடொக்க
ருனெனுமைம் புலத்தாறோம் பிடுதலானுண்
மேவரும்வா தியர்தருக்கத் தினுக்குவேத
மேவுபிர மாணமதா வெடுத்துக்கூறி. (௩௫௩)

தாமேற்கொண் டுள்ளபொருட் கருத்துக்கேற்பத்
தருக்கம்வியா கரணமறை முடிமீமாஞ்சை
யாமேற்ற நூல்களுடன் பாடுஞாய
மமையெடுத்துக் காட்டுகளு மழகிற்காட்டித்
தேமேற்ற விடைகளெனக் கழகமேலோர்
செப்பலினுத் தமகுணமும் புலமைதானும்
பூமேற்சந் திரன்கலைபோல் வளர்ந்தவந்தப்
புதுமையுணர் வான்புலவர் பொருக்கென்றுற்றார். (௩௫௪)

தினமுபய பாரதியுச் சியிற்போய்க்கொண்கன்
றிருமுனுண்டி வினைக்கால மாயிற்றென்று
மனகவருட் சங்கரர்முன் பிட்சைக்கால
மாயிற்றென் றுங்கனிவா லழைக்கிலொன்றும்
பனவர்குழாத் துடன்கடன்க ளாற்றித்துய்த்துப்
பண்டெனவா தத்தமைவா ரிவ்வாறுகக்
கனதருக்க வளவைகட வாதார்நெஞ்சக்
களிப்பின்முக மலர்ச்சியினுற் கடப்பாரன்றே. (௩௫௫)

வியர்வைநடுக் கந்தலைமே னேக்கியாய்தல்
விடைபகரத் தாழ்த்துநிற்றன் மறந்துகூற
லயர்வதனுற் குற்றமொன்று கூறிப்பின்ன
ரதைத்தாமே தெரிந்துதிருத் திடற்றன்னுள்ள
நயனமதி லெதிரியுட்கோ ளதுதேருமை
நவின்முன்மொழிக் கெதிர்முரண்பி னவிலன்மாசா
மயல்பெறுமப் பிரமாணம் ப்ரமாணமென்ன
வழுத்தல்பொரு ளல்லதையும் பொருளாக்கூறல். (௩௫௬)

சினந்திடுதல் சலம்பேசல் விடைதேருது
தியங்கிமுள்காங் திருத்தன்முதற் றூடம்யாவு
மினம்படுவார் தமக்குமெய்தா தொவோர்நொடிக்கு
மினியகுண மேலிடவொவ் வொருவருந்தாங்
கனம்பொழிந்தாங் கெனப்பிரசங் கித்துவந்தார்
கரைந்தவைமுற் றெழுதுபுபூர் வஞ்சித்தாந்த
மனங்களிந்தேற் படுத்துவிப்பா ளொப்புப்பார்ப்பாண்
மலைவிலது தன்கருமஞ் செய்துவந்தாள். (௩௫௭)

இவ்வாறைந் தாறுதின நூலெவற்று
மியன்றிடுருக் குமம்ப்ற்றி யிருவர்தாமுஞ்
செவ்வாய்மை பெறவாதித் திட்டதாலே
திகழ்ந்ததவர் தங்கல்வித் திறமையார்க்கு

மொவ்வாச்சீ வேச்சுரவைக் கறிலேப்பேற்றுக்
குயர்மறையுச் சியினுரைக ளளவையாவ
தெவ்வாறென் பதுதொடங்கி யாகாதென்ன
விசைத்தனன்மண் டனமிசிர னினிதாமாதோ. (௩௫அ)

சங்கரர்வா திட்டுவரும் போதின்மற்றேன்
றருமவைக்குப் பேதஞ்சா தித்துவந்தா
னங்கதனைச் சங்கரர்தா மறுத்தாராகி
யறைதுவிதம் விவகார பேதந்தேற்றும்
விங்களமி லத்துவிதச் சுருதியன்ன
மேவுமபே தங்கடமை விளக்குமென்றுஞ்
சங்கையிலத் துவிதசுரு திவிவகார
சம்பந்தபேதங்கள் சாற்றுமன்றே. (௩௫௯)

அப்பிரக ரணத்திலுல கெனுமநாதி
யாம்பாவாஞ் ஞானமுங்கா ரியமாத்தோற்றும்
பப்புவிவ காரசம்பந் தமானபூத
பௌதிகபே தப்பவஞ்ச மும்பொய்யென்ப
திப்பிரம ஞானத்தான் முழுதும்பொன்று
மெனவும்விசே டங்குணங்குற் றமற்றதாயு
மெய்ப்படுஞா னமாய்நிறைவா யுளசுத்தாத்து
விதப்பிரம மொன்றேமெய் யெனவுந்தேற்றும். (௩௬0)

அஞ்ஞான வொழிவுமுத்தி யதுவுமிப்போ
தாம்பவத்திற் சீவன்முத்தி யாயெய்தும்பின்
மெஞ்ஞான முறச்சகுண நிற்குணங்கண்
மேவுமுபா சனைகள்பத்தி விதிகளாகுஞ்
சுஞ்ஞானச்சிவயோக சமாதிதானே
தோய்கருவி யெனவுமதற் கேவைராக
விஞ்ஞான விலக்கணமாம் ப்ரம்மசர்ய
விரதமுடைச் சந்யாச மிக்கதாமால். (௩௬௧)

வேதநான்கோதிடுமா வாக்கியஞ்சால்
விரிவுண்மை நோக்குடைச்செம் பொருளையாசான்
நீதகல வநுக்கிரகஞ் செய்யக்கேட்டல்
சிந்தித்த றெளிதலிற்சாத் தாபரோட்ச
மீதமையும் புறப்பிரமக் காட்சியுண்டாய்
மேற்சச்சி தானந்த சொருபந்தன்னு
ளாதல்பெறு மத்துவித சித்திதானுண்
டாகிறதென் றேமுடித்தா ரருளாலம்மா. (௩௬௨)

மற்றதன்பின் மண்டனன்றன் பக்கமெல்லா
மறுக்கப்பட் டுரையற்ற காட்சிகன்மத்
திற்றழுவா வறிவுபிர மப்பேறு தி
திகழுத்து விதவார ணூந்தசாரம்
பெற்றவிட யங்களெல்லாஞ் சங்கரப்பேர்ப்
பெருந்தகையாற் சித்தாந்தஞ் செய்யப்பட்டே
யுற்றகன்ம காண்டபிர மாணங்கட்கு
முரையத்து விதமோதப் பட்டதன்றே. (௩௬௩)

வழுத்திருவர் வாதுமுறை வரையப்பட்டு
மகாவாதா வளிநாமம் வாய்ந்திராறு
செழுத்தகையா யிரங்கிரந்த மாயிற்றஃதைச்
செவிமடுத்தோ ரெண்ணாறுநூற் றெருட்சிசான்று
ரழுத்தியற்சங் கார்வலிசா லுத்தியாவு
மத்துவித சித்தாந்த நிலைசெய்புங்காற்
பழுத்தவற்றை யளவைவழக் கநுபவத்தாற்
பரிந்துடைக்கா மண்டனபண் டிதன்களத்தே. (௩௬௪)

## வேறு

வாய்ந்தவோரறி குறியதாந் தெய்வத மாலை
தீய்ந்துடன்சரு காகிடச் சிறந்தபே ரவையோ
ராய்ந்தசங்கரர் வெற்றிபெற்றிட்டன ரணிமிக்
கேய்ந்தமண்டனர் தோல்வியெய்தினரென விசைத்தார். (௩௬௫)

ஆனகாலையில் வாணிதனங்கிச மாகு
மானமிக்கசீர்ப் பாரதிசபையிடை மருவித்
தானவின்றுள சத்தியப்படியுறுந் தருக்கத்
தானமேவுப யரையும்பிட்சைக்கழை தனளால். (௩௬௬)

அன்னதன்மைதான் மண்டனரபசய மடைந்தார்
முன்னவின்றசொற் படிதுறவாதலே முறையென்
றன்னவான்சபை யிடத்தமைந்தாரெலா மறியப்
பன்னல்போன்றதிங் கிதத்தவளுரைத்தவப் படியே. (௩௬௭)

சங்கரர்க்குரைப் பாள்செயத்தாபதத் தலைவீ
ரங்கண்மாநில மீதுமானிடமக ளாகத்
துங்க மிக்கதூர் வாசர்முன்சொற்றுள சாபந்
தங்கள்வெற்றியின் றரிசனத்தாலொழிந் ததுவே. (௩௬௮)

மிக்கதொல்லிடம் யானினிமேவுவ லென்றே
யக்கமாலைபுத் தகங்கிளிவீணையா தியதோய்
தக்கநாற்கரந் தயங்கிடவெண்ணிறச் சசியை
நக்கபேரொளித் தெய்வதவுருவினை நண்ணி. (௩௬௯)

ஆண்டுளார்கெலாந் தான்றிருமகட்டுணை யமைந்த
மாண்டுலங்கிட வளமிகுந்தரிசனை வழங்கிச்
சேண்டுலங்குசத் தியவுலகெய்தல்சிந் தித்தாள்
கோண்டுலங்குமென் ஞமிசையினுங்குதி கொண்டாள். (௩எ0)

அத்திறந்தம துளத்திடையறிந்தவ ராகி
யுத்திமந்திர லயவடாசயோ காதிச்
சித்திமிக்கசங் கமர்வனதுர்க்கைமந் திரத்தாற்
சத்தியப்பதி புகாதுவாணியைத்தடை கண்டார். (௩எக)

மட்டுப் பட்டிடாப் புகழ்பொலிசங்கரர் மறைக்குக்
கட்டுப்பட்டுடன் வானினுமிழிந்தவைக் களநேர்ந்
திட்டுப்பட்டிடா தடியவனியின்மிசை யினியீர்
பெட்டுப்பட்டதெவ் வரம்வழங்கிடுதுமாற் பேசீர். (௩எஉ)

என்றகாலையிற் சங்கரர் தாமிரு நிலத்தின்
முன்றழைத்திடப் புரிந்தவத்துவிதநன் முடிவை
மன்றவன்மையா நிலைநிறுத்திடமனங் கொண்டு
நன்றமைந்தவா கீச்சுரியருட்டுதி நவின்றே. (௩எ௩)

என்னம்மேதேவ ரீரியற்சத்தியோ சாத
நன்னலங்கொண்மூர்த் தியின்றிருமுகத்தினு நண்ணும்
வன்னத்திற்குபர் தாயகஞானமெய் வடிவீ
ரென்னத்தம்மவ தாரவுண்மையையறிவேன்யான். (௩எச)

நிசம்படும்பர தெய்வமா நீயிரன் பினர்க்கு
வசம்படுந்தகை மேவியேவதிதரல் வேண்டுஞ்
சுசம்படுந்தமி யேன்விடையளித்திடுந் துணையுங்
குசம்படுஞ்சுதை யீர்ததியெதினுமுன் குறுகீர். (௩எரு)

என்னவேண்டிடு சங்கரர்க்கிணையிலெம் மன்னை
யன்னதாகென வழுத்தியவ் வாறமைந் திடலுங்
கொன்னமைந்துள சங்கரர்மண்டனன் கொள்கை
யென்னவாறுள தறிவமாலென்றுளம் வலித்தார். (௩எசா)

அவாவுமத்ததி தன்னின்மண்டனனவ ணடைந்து
சுவாமிதேவரீர் தோய்சித்தாந்தந்துலக் கியதா
லுவாவையொத்துறு மதமொழிந்துண்மையோர்ந் துறினுஞ்
சுவாநுபோகமெய் தாமையுட்டோய்ந்ததோ ரையம். (௩எஎ)

அன்னதேதெனிற் சைமினிப்பெயர்கொளா சிரியர்
மன்னருந்தவ மிக்கமைமகாவிரு டியன்றோ
வன்னர்கன்மகாண் டத்தைமுக்கியமென வறைந்த
பன்னரும்பல்சூத் திரங்களும்பயனில வாமோ. (௩எஅ)

அற்றனுமந்திடா வாகுமன்னவர்கருத் தடியேன்
முற்றகத்துணர் வரையுநம்பேனெவர் மொழியுஞ்
சொற்றவென்மொழி மெய்யெனச்சங்கரர் சொல்வா
ருற்றசைமினி பிரமமீதுள்ளமுள் ளோனே. (௩௭௯)

எனினுமிவ்வுல கத்திய லுணர்த்துவா னெண்ணிப்
புனிதஞேயா மறைபற்றியங்ஙனம் புகன்றுன்
மனிதர்தம்மதி விடயவின்பாற்றுறும் வழக்கா
னனியன்னோர்கண்ஞா னதிகாரம்பெற னசைத்தே. (௩௮௦)

விதந்துகூறினன் கன்மத்தான்மிக்கமெஞ் ஞான
பதம்பெறத்தடை படுத்திடும் பாவத்தி னெழிவுங்
கதங்கொணெஞ்சபி மானத்தால்விடயத்திற் கனவாத்
திதம்பொருந்திடு சித்தமெய்ச்சுத்தியுஞ் சேரும். (௩௮௧)

புண்ணி யக்கன்மம் போகமெய்க் குருதெய்வ பத்தி
நண்ணிடச்செயுங் குருபத்திநல்குமெஞ் ஞானங்
கண்ணியக்கட வுட்பத்தியருணிலை காட்டு
மண்ணிவற்றினத் துவிதமெஞ்ஞானமுண் டாகும். (௩௮௨)

நவம்பொருந்திய வத்துவிதங்கொண்ஞா னத்தா
லவம்பொருந்திய வவிச்சைகாரியத்துட னழியுந்
தவங்கொள்சச்சிதா னந்தசொரூபந்தா னுக
விவம்பெறத்துலங் கிடுமிதன்பெயரருள் வீடே. (௩௮௩)

முடிவதாகுமிவ் வீட்டினுண்முயங்குதற் பொருட்டே
படிகளேற்றலின் மறுமைபுண்ணிம்பவ முண்டென்
றெடிவினற்பயன் பெற்றிடப்பேதமோ டுற்ற
படியில்புண்ணிய கன்மமோதிப்பவம் பாற்றி. (௩௮௪)

பயன்விருப்பொழித் தக்கன்மநிலையினைப் பகர்ந்து
வியன்பெறும்பிர மதத்துவத்தினையுணர் வித்து
மயம்படச்சகு ணநிர்குணேபாசனை வழுத்தி
யுயங்குமெய்யையா னென்றுழன்மானமுற் றெழித்தே. (௩௮௫)

அதன்பின்பேதமற் றவிருமத்துவிதவுண் மையினை
விதந்துரைத்திது வேதுணிவாமிதை விட்டு
விதம்பொருந்தொரு மார்க்கமின்றென்றியல் வேத
மிதங்கொடாய்மகார்க் குரைத்தல்போலுலகினுக்கிசைக்கும். ()

வழுத்தும்மின்னவை மறைக்கருமம்பிர மகாண்ட
முழுக்கவாய்ந்தவர்க் கையமில்லாதமெய்ம் முடிவாம்
பழுத்தகோட்கிசை சான்றமைசுருதியான் பகர்ந்திட்
டொழுக்கச்சைமினி கருத்திதென்றுண்மையா வுரைப்பேன். ()

உரவர்தங்கருத் தெற்றுணர்வீரெனி னுவர்தங்
குரவர்தம்பிர மசூத்திரத்திற்கொழித் துள்ளார்
பரவுசீடரா ரியர்கருத்திகல்பட வாகும்
விரவுசீடர்கோட் கொண்டுகொட்டாக்கினர் வியாசர். (ஙஅஅ)

என்பவாமிரா சியம்பலசங்கர ரியம்ப
வன்பமைந்திடு மண்டனன்சைமினி யற்றேற்
கொன்பயின்றிடக் கன்மமேபயன்கொடுக் குமெனு
வின்பருட்கட வுளைநிராகரிப்பதென் னிதனை. (ஙஅகூ)

மொழிதிரென்றலுஞ் சங்கரர்முறுவலித் தறைவார்
கழியநாத்திகர் கடவுளின்றெனக்கழ றிலரோ
வொழிவுறுத்தருக் கர்கவொருவகையிலுண் டென்று
ரிலகுமத்தகை யிலக்கணக்கிசையுமீச் சுரனே. (ஙகூ0)

கருதலாற்கொள்வ தன்றிமெய்க்காட்சியாற் கடவு
ளுருவமோடஃ துணர்ந்துபாசிக்குமோர் வழியு
நிருமலாரண வீறலாலேனிச் சயிக்கா
கருமமீதுணர் சைமினிகருமமே நிறுவ. (ஙகூக)

உத்திவாதமொன் றேகொணேயாயிக ருட்கோ
ளொத்திடாதுதர்க் கரினுடன்பாட்டினுற் போலுஞ்
சித்தி யற்கட வுளின்றெனநிராகரித் திட்டா
ரித்திறத்தினின் னோர்நிரீச்சுரவாதி யின்றே. (ஙகூஉ)

என்னவேயிள வற்றனசங்கர ரிசைத்துந்
தன்னகத்தைய மேகொண்மண்டனன்றனு சானு
மன்னருட்டகைச் சைமினிதன்னைபுண் மதிக்க
நன்னலத்ததென் றேதன்னுலினைப்பனு ணம்பும். (ஙகூங)

சீடனுனமண் டனபண்டிதன்றனைத் தேற்றக்
கூடலாந்ததி மிகநலத்தெனமனங் கொண்டு
நாடலுற்றவன் முன்னுறீஇமறைக்கன்ம நம்பி
நீடகஞ்செறி பயமுடன் குருபத்தி நிறைந்து. (ஙகூச)

மேவலான்ஞானு திகாரியாம்விச்சுவ ரூப
காவன்மேவுசங் கரர்மொழியென்மனக் கருத்தே
தாவரும்புகழ் வியாசர்கோட்கின்றுசாற் றிலரென்
றேவல்கொள்குரு விதுவரையானினி யிவரே. (ஙகூரு)

இச்சந்யாசியென் கருத்தெவ்வாறுணர்வரென் பாயே
லச்சவான்கருத் தொன்றலவகிலமீ தமைவோ
ருச்சவான்கருத் துக்கண்முற்றிற்றென வுணரு
மிச்சமானபே ரறிவுளாரெனப்புகல் வேலே, (ஙகூகூ)

முடிவிலன்புறு மவர்க்குயர் தட்சிணு மூர்த்தி
வடிவமேயுறச் சங்கரர்சைமினி மதித்து
நெடியயோகக்கண் ணுற்றெரீஇத்துதிபல நிகழ்த்திப்
படியிலோகைமிக் கிசைப்பன்மண்டனன்கொளப் பரிந்தே. (௩கூஎ)

கன்னியம்பொலி மண்டனநீமுனங் கண்ட
புண்ணியர்திர ளுருவரையென்னனுர் போல
வெண்ணிடேனுல கின்புறத்தோன்றுமீச் சுரன்கா
ணண்ணுவாருகத் திறுக்கொராசிரியரா நால்வர். (௩கூஅ)

கரைதருங்கிரு தத்திடைக்கபிலர்மற் றதனி
னிரைபெறுந்தத்தாத் திரேயர்மூன்றுவதி னிறையுங்
கரையில்வான்புல வியாசமாமுனிவரிக் கலியிற்
றரையுளார்க்கெலாஞ் சங்கரர்ஞானசற் குரவர். (௩கூகூ)

என்றுமாட்சிசால் சிவபுராணங்கணன் கிசைக்கு
நன்றுதேர்குதி யன்னவரேயிவர் நலமிக்
கொன்றுநீயுஞ்சா தாரணியன்றரி யுந்தி
நின்றுதோன்றிய பிரமனேர்கூறென நினைவாய். (௪00)

நீயருட்குரு வாகுமிச்சங்கரர் நிமலச்
சேய பாதவந் தனைத்தொழிற்சிடனு வமைந்து
தூயமெய்க்கதி சேரெனத்துலங்குமெஞ் ஞான
மேயநோக்களித் தகன்றனன்றவங்கொள்சை மினியே. (௪0க)

பின்புமண்டனன் பெற்றதன்ஞானநோக் கத்தான்
முன்புநின்றசங் கரர்தமைநோக்கலு முதிர்பே
ரின்புசான்றனு ஞனந்தவடிவரா யிலகுந்
தென்புசான்றகல் லாலடிக்குருவெனத் திகழ்ந்தார். (௪0௨)

மையலற்றரு ளாரியற்கண்டமண் டனன்றுன்
மெய்புணர்ச்சிசால் சநந்தனு தியர்க்கருள் வியன்றேய்
செய்யதாமரை வாழ்சதுமுகனெனத் திகழ்ந்தான்
றுய்யவுண்மைதேர்ந் தவரெலாங்களிக்கடற் றேய்ந்தார். (௪0௩)

பின்னர்மண்டனன் பொருளெலாந்தன்சுதன் பெறவீந்
தின்னலோடுதா னீட்டல்கொண்டறம்பல வியற்றி
மன்னருட்குரு பரனைமெய்யன்பினுல் வணங்கி
மின்னமைந்தசந் நியாசியாச்சிரமமே விழைந்தான். (௪0௪)

வேறு

ஓங்கருட் குன்றன்னர்பி னுபயபா ரதியைத் தம்மோர்
திங்கமை யாதநெஞ்சிற் சிந்தனை செய்தபோதே
யாங்கடைந் திட்டாளேக்கி யடியனேன் வெற்றிப்பாட்டிற்
றுங்களுட் கோண்டவாய்மை சாற்றிட விழைந்தேனென்றூர். (௪0௫)

உடனகக் களிப்பினேடு முபயபா ரதிசொல்கின்று
ணடவுமென் னிளமைதன்னிற் றுயிட நண்ணுமெல்லை
படர்பொடி மணிசால்பாசு பதவிர தக்தராகிச்
சடைமுடி யுடைத்தேசோங்கோர் தாபதர் வந்தார்மன்னே. (ச0கூ)

அடைந்தவர்க் கன்பாலென்றுய் விதிமுறை பூசையாற்றி
மிடைந்தவென் றனையுந்தாழ்த்து மெய்த்தவர் பாற்சொல்கின்றுள்
கடைந்தவேற் கண்ணுளென்றன் கன்னியீங் கிவடன்வாணு
ளிடைந்திடா தடைபோாதி யாவுமெற் கிசைத்திரென்றுள். (ச0எ)

வினவுழிச் சற்றேயோகர் விழிகண்மூ டிபுதியானித்
தெனதுமுற் கதையும் பின்னு ளியற்கையு மிசைத்தாரன்னுர்
கனமொழி யிங்காள்காறுங் கமலனேர் விதியேபோலு
மனமுவந் திடச்சற்றேனும் வழுவற நிகழ்ந்தவன்றே. (ச0அ)

அவற்றிர க்சியமொன்றுண் டஃதெவ னெனினின்செல்வி
நவச்சர சுவதிகூற்றி ஞனிலத் துதித்தாளாகுங்
கவற்சிசால் கலியிற்புத்த ராதியர் கதித்துவேதத்
தவப்பெரு மார்க்கமெல்லாந் தவிர்ந்துதுன் பெய்துங்காலை. (ச0கூ)

கடவுளாக் கினையாற்செவ்வேள் கலைபட்ட குமாரனுகி
யடல்பெறும் புத்தர்தம்மை யதம்படப் புரிந்தபின்னர்
மடல்கொள்வா ரிசத்தோன்கூறு மண்டன மிசிரனுகித்
திடமுறு மற்றவற்குச் சீடனுய் மறைமுற்காண்டம் (சக0)

ஆனசை மினிநூன்முற்று மறிந்துயர் வேதமார்க்கந்
தானழி வறத்தாபித்த சற்குரு வெனுஞ்சீர்வாய்ந்து
வானவர் கலையாற்றேன்று மறையவ ரிறையென்றேத்த
மேனவி றிக்குப்பாலர் வியன்கலை மேயவேந்தர். (சகக)

வணங்கிவான் புலவரென்ன வழுத்திடும் பேரின்னர்க்கே
யிணங்கிடு மேனேர்க்கொவ்வா தென்றிட விருப்பனன்னேன்
குணங்கிளர் மனைமாதாகக் குலவுவ ளிவளதன்பி
னுணங்கிய மறைப்பின்பாக நுவன்ஞான பாகநாட்ட (சகஉ)

சிவன்கலை சங்கரப்பேர் திகழ்ந்துசந் நியாசியாகித்
தவங்கொண்மா ணுக்கரோடுஞ் சார்ந்துவா தபிட்சையேற்று
நவங்கொண்மண் டனனைவெல்வர் நண்ணுமக் கானின்செல்வி
தவன்றனேர் பாதியாகிச் சார்தலால் வாதுசெய்வள். (சகங)

என்னவோ துபுமறைந்தா ரித்தகை யாற்றருக்கந்
துன்னவென் பாலாற்றீரேற் றேய்ந்திடா துமக்குவெற்றி
யென்னலு மாண்சந்யாசிக் கேந்திழை யோடுவாது
மன்னவாற் றிடுதல்சாலு மரபுகொ லெனவையுற்றுர். (சகச)

உள்ளிய துணர்ந்துவல்லே யுபயபா ரதிசொல்கின்று
டெள்ளிமை படைத்தீரின்ன சிந்தைசெய் திடுதிரேல்யான்
விள்ளுவ தென்னைபெண்சன் டாளன்புள் விலங்கானுலு
மொள்ளிய வறிவோவன்றி யுடல்சிறந் துளது தானே. (சகரு)

விரத்தர்க டமக்குவாதேன் வியனுல கோபகாரத்
தர்ச்சம யந்தாபிப்பார் தாமதி காரத்தோரே
சிரத்தைமிக் கேற்ற செய்யார் பால்வெற்றி சேருமோர்வித்
திரத்துரை யுலகர்கூற்றியான் றெரிவனீர் சிவனென்றம்மா. (சகசு)

வாதிட விருதிட்டோர்யார் வரினும்வா திட்வேவேண்டு
மாதிடக் கார்க்கியென்னு மாதிடம் யாஞ்ஞவற்கர்
கோதிலாச் சுலபைநாமக் கோதைபாற் சனகமன்னன்
வாதிடுந் திறத்தாற்றம்மொர் மாட்சிமை குறைந்திட்டாரோ. (சகஎ)

குலவிடும் வித்தையொன்றிற் குறைவுபட் டிருக்கில்யான்று
னிலகுநும் மோடுவாத மியற்றிடுந் தரத்தளல்லே
னலகிலா வித்தைகொண்டு மாற்றுவன் வாதமற்று
னிலவருட் குன்றன்னீர்தா னெஞ்சிசைந் தருளவேண்டும். (சகஅ)

என்றிடச் சபையிலுள்ளா ரிசைவுகண் டிசைந்தேற்றிட்டார்
நன்றியல் வித்தைவித்தா நாதனு கியதாதைக்கு
மொன்றியல் வித்தையின்ப வுருவுடைப் பாரதிக்கு
மன்றியல் வாதத்தன்மை யரவிறை குருவேர்வாரோ. (சகசு)

ஓய்வின்றிச் செப்பமுண்மை யுறவற வழக்கறுமே
தோய்தரு மளவையோடு துலங்கறு பவங்களொப்ப
வாய்பொருட் சொற்சுத்தத்தோ டமைதியி னடந்தவாத
மேப்பல வித்தையூடு மிறுதிசால் விசாரமுற்றாய். (சஉ0)

அவிரும்வா ணியினுள்ளங்கொ ளையமுற் றொழியும்வண்ண
நவிலுமீ ரெட்டோடோர்நா ணடந்தது வேதமங்கங்
கவினுமா கமம்புராணங் கலைகள்சூத் திரங்களாதி
விவிதமார் வித்தைகொண்டு விளங்கிரா சியமெவற்றும். (சஉக)

அலகிலா வுணர்ச்சிமேவி யவிர்ந்தசங் கரர்தம்பான்மை
நலனிறை வாணியுன்னி நாணமிக் கமைந்தாளாகி
யிலகுமிங் கிவ்ரைவெல்ல லெவ்வகை யினுமுற்றாதாற்
குலவுயுத் தியினாற்றோல்வி கோடலிற் புரிவன்யானே. (சஉஉ)

என்றுளத் துன்னியின்னே ரிளமையிற் சந்நியாசத்
தோன்றியல் விரதத்துடோ ரூறுறு தாற்றுநீராற்
றூன்றியற் காமநூலிற் றேய்ந்திலர் பயிற்சிஞானத்
தின்றுணை கொண்டுநூலி னியல்கொடுஞ் சிலசொன்னாலும். (சஉங)

பயின்றவாச் சிரமத்துக்குப் பகைபடு முலகார்க்குங்
குயின்றிடு குருவாய்ப்பூசை கொண்டுளா ரவற்றிற்கேட்கி
னயின்றிலா ததினளிக்கார் விடைபொய்மை யறையாரற்ருற்
றுயின்றுளார் போன்முள்காந்து தோல்வியேற் றவராகிற்பர். (சஉச)

நூற்றுணை கொண்டுசற்றே நுவலினுந் தந்தரத்துக்
கேற்றிடா முரணுமல்லா திழுக்குமா சிரியத்தன்மை
தேற்றமி லிதனுக்கென்செய் திடுவர்கொல் பார்ப்பேனென னுங்
கூற்றமுள் ளமைத்ததற்காங் கூற்றுரை செய்கின்றுளால். (சஉரு)

எத்தனை சித்தசன்ற னியற்கலை யவையெவ்வாறு
பொத்தமெவ்விடங்களூடே யுள்ளசுக் கிலம்பூர்வத்தி
லெத்தகை பெவ்வாறேபு மேந்திழை புருடர்தம்பா
லத்தவுற் றுள்ளசெய்தி யனைத்துமெற் கறைதிரென்றுள். (சஉசு)

சங்கர ரிதுகேட்டொன்றுஞ் சாற்றில ராயுள்ளோர்வா
ரிங்கறை யேனேற்றேற்பே னிசைத்திடிற் றருமம்போமென்
றுங்ககத் துன்னிவாணிக் கோர்மதி பெல்லைசாற்றி
யங்கவ ளிசைவுகொண்டா ரகன்றதீ ரொன்பானுளே. (சஉஎ)

வேறு

பின்னருண்மிக்கமை சங்கரர் பிரசமலர்க்கழ லன்புமிக்
குன்னடிமைத்திற மாணவ ரோடுயர்யோகவி றற்கொடே
யுன்னதவானிடை யேகுகா லோர்வளநாட்டய லுள்ளதாங்
கொன்னமையாரணி யத்திடைக் குலவொருபாதவக் கீழரோ. (சஉஅ)

எல்லியிலோர்பிண மிட்டரு கெண்ணறுமங்கைய ரேனையோர்
சில்லியலுங்குழல் சோர்தரச் சிந்தைமெலிந்தழு தெய்த்தன
ரொல்லியல்புய்த்துணர் சங்கர ருற்றருகோங்கிய வோங்கலி
லல்லியலுந்தகை மேய்ப்பிற ரறிவரிதாங்குகை யுள்ளுறு. (சஉகூ)

தயாமலியோகருட் பார்வையாற் சந்தனற்பார்த்தறை கின்றனர்
கியானமிகுத்தச நந்தன கிளத்துவதின்பொடு கேட்டியால்
வயானமிகப்பொலி மன்னவன் மன்மதவான்கலை வல்லவன்
கியாதிமிகுத்திடு மமருகன் கேளிகொளில்சத முள்ளவன். (சங0)

மனைவியரோடுமுய் யானமேய் மற்றவணின்றுமா வேட்டவல்
வினைசெயப்போந்தவன் றன்னிரு வினையொழிவாலொழிந் திட்டன
னனையவனுக்கையு ளியான்புகுந் தன்னவன்மூர்ச்சையுற் றெழுதல்போன்
றினையவர்துன்பமுற் றொருவியே யியல்வளநாட்டிடைப் புக்கரோ. (சஙக)

அவன்மகற்கொண்மகு டம்புனைந் தரிவையர்நூற்றுவ ரோடணைந்
துவமைபின்மன்மத நூலுள் வுள்ளமிசைத்தெளி வாயுணர்ந்
தவமறும்யோக்தி றத்தினு லனந்தரமென்னுட லண்ணுவா
னவமுறவுட்குறித் திட்டன னுனறுகாறுமெய் காப்பிரால். (சஙஉ)

என்றனுமன்புறு சுகந்தனனெழுந்துவணங்கிநின் றோதுவ
னன்றருண்ஞானவு ருப்பொலி நாயகர்தாமுண ராச்செய
லொன்றகிலத்திலே யேனுமென் னுள்ளுறுபத்தியு ரைப்பதா
லொன்றமிதென்னென் றிடின்முன்னேர்நா ளொப்பின்மச்சேந்திர யோகியே. ()

குலவியதன்னுடல் சிடனுங் கோரக்கனைப்புரப் பான்புகன்
றிலகவண்மாய்ந்திருந் திட்டதோ ரிறையுடலிற்பிர வேசமேய்
நிலவவனுடா சாண்டன னிகழ்பொழுதகத்தகு தேயமே
னலமலியறமுத லாநுவ னன்மையெலாமலிந் திட்டவே. (சஙச)

அறிவுமிகப்பெறு மந்திர ரங்கதுதேர்ந்துளத் தையுமீஇ
மறிதருநம்மிறை யன்றிவன் மாதவமிக்கொர்ம கான்றன்மெய்
பிறிதாலாயிறை மெய்புகும் பெற்றியினுக்கிலை யையமென்
றறிதானுற்றவர் மற்றவ னகல்கிலதிவ்வண மாற்றுவார். (சஙரு)

எவ்வனமோடெழின் மிக்கமை யெண்ணறுமங்கையர்க் கூட்டியே
வவ்வருண்மாதவன் மாதவர் வசமுறுமாறுசெய் வித்தலு
மவ்வணிமாதர்க ளிங்கித மாடல்கள்பாடல்க ளான்மருண்
டொவ்வருனல்லுணர் வற்றிகத் துள்ளவொர் மன்னனி லுற்றனன். (சஙசு)

அன்னதன்பின்னவன் மாணவ னுகியகோரக்க சித்தன்றன்
றன்னருளாரியன் மெய்யினைத் தகுமுறைசேமமு றப்புரீஇ
யின்னன்மிருத்துள மீதிதற் கென்புரிவேனெனச் சூழ்ந்தியற்
கொன்னமைநாடகா சாரியன் கோலமமைந்தவண் கூடியே. (சஙஎ)

அரசனற்றேவிக ளாயினுர்க் காடல்பயிற்றிடு வானந்தப்
புரமணேந்தெய்திடுந் தோறுமப் புரவலற்காண்டுறும் போதுபார்த்
தூமுடன்வாழ்தினத் தவன்றனித் துற்றிடுசெவ்வியை யோர்ந்தருட்
குரவனுக்குண்மையு ணர்த்துமோர் குரவனிலுண்மையு ணர்த்தினன். (சஙஅ)

கவிலதுகாலையின் முன்னிலை ஞாபகமெய்திட லால்விரைந்
தவிருடல் புக்கியதாங்கதை யவனியுளார்சொலக் கேட்டுளே
னிவிதமியற்றிடு மாதர்கண் பெவரையுமீளவி டாதுதாங்
கவினுறும் வீரியம் விட்டிடாக் கனவிரதங்கொடு நிலவினீர். (சஙகூ)

பயில்விரதங்கெடுத் துக்கொளிற் பாவமுறுது கொலைஃதலாற்
சயிலமெனத்திகழ் தம்பெருந் தரமெவனூலின மிக்கிகழ்
மயில்புரைசாயல்கொண் மங்கையர் மாட்டமைகாமமெங் கேயருள்
வெயிலவனேர்தம துள்ளமேன் மேவுமிஞ்ஞாபக மெய்துமேல். (சச0)

தம்மையிலக்கிய மாக்கொடித் தாரணிமாந்தர்கள் யாவரும்
பொய்ம்மைநெறிக்கலை மேலெனப் போந்தொழிதற்கிலை யையமே
மெய்ம்மைகொள்சந்நியா சத்தகை விளக்கிடவிருதுகட் டிப்புகுஞ்
செம்மைகொள்வீர்க்கடி யேனிவண் செப்பியதேமிகை யாகுமால். (சசக)

நண்புகொடியானுவல் கூற்றினு ணவைபுளவேற்பொறுத் தாற்றிடும்
பண்புளநற்செய ருஞ்செயற் பாலதெனச்சநந் தனன்சொல
விண்புரமேவினர் தங்குரு மெச்சுநலந்திகழ் சங்கரர்
தண்புணரன்பினி னீசொல றக்கதன்றென்றிவண் சாற்றிடேன். (சசஉ)

வேறு

அறிவகே ளுடலையானென் றவாவிப்பற் றிடுஞ்சம்சாரச்
செறிவமை யுயிர்கட்கேநீ செப்பிடுங் காமவெண்ணா
மறிதருதடையாமன்றி மாணமை யோகசித்திக்
குறிபெறு ஞானியானுர்க் கூடுமோ விதிநிடேதம். (சசங)

கின்னமில் சிவயோகஞ்சால் கிருட்டிண ன் கோபியர்த்தோய்ந்
தின்னதீங் கடைந்திட்டானென் றிகஞ்சொலக் கேட்டதுண்டோ
வென்னருண் மைந்தவச்சி ரோலியென் யோகமென்பாற்
றுன்னலி னெதுசெய் தாலுஞ் சுக்கிலங் கலித்திடா தால். (சசச)

அன்னபான் மையினெனக்கீண் டடைந்திடா விரதபங்க
மன்னகத் தெண்ணமன்றே வாஞ்சனைக் கோர்வித்தாகுந்
துன்னலைதென் பாற்சற்றேனுந் தோய்ந்துள தேகொல்காமன்
றன்னுட லெரித்தாற்குண்டோ சற்றவ னுணையச்சம். (சசரு)

மதியில துடனுனென்ன மதித்துழல் வார்பாலன்றே
நுதிபெறும் விதிநிடேத நூல்கடந் தொழில்களாற்றும்
பதிபெறும் பிரமந்தானும் பண்புளேற் குறுவன்னுதி
பொதிதரு துன்பந்தானோர் போதினு மெய்தாதன்றே. (சசசு)

பேதநோக் குடையோர்கட்கே பிரபஞ்ச மெய்யாத்தோற்று
மேதகத் துவிதநோக்க மேவினோர்க் குலகுபொய்யா
மாதலிற் பயத்தினோடோ ரல்லனு மில்லைபற்று
லோதலாம் பிரமகத்தி யோடய மகஞ்செய் தாலும். (சசஎ)

திண்ணிய பரிதியேபோற் றிகழுமெஞ் ஞானந்தன்னுற்
புண்ணியம் பாவமென்னப் புகன்மதி யிருளும்பொன்று
மெண்ணிடுந் தொழிலிற்றன்ன தெனுஞ்செருக் கின்மையாலே
யண்ணிரு வினைச்சம்பந்த மவனைவந் தடைவதின்றே. (சசஅ)

இந்திரன் பிரமஞான மில்சந்யா சிகள்சதத்தர்
பந்தியார் தலைகள்போக்கிப் பயினரி களுக்கீந்திட்டான்
வெந்திறற் சிரமூன்றுற்ற விச்சுவ ரூபன்றன்னைச்
சிந்தினன் வயிரவாளாற் றேவர்யா வருங்கொண்டாட. (சசகூ)

செய்திடும் பவங்கண்ஞான சித்தனை மன்னவன்மீ
தெய்திடோர் சிறுரோமத்துக் கேனுமூ றியற்றிற்றின்றென்
றுய்திசா லிருக்குவேதத் துரைத்தது விதேகஞான
மெய்திகழ் சனகமன்னன் மிகுபொருட் கொடைபுரிந்தே. (சரு0)

பெருமக மனந்தஞ்செய்தும் பிறங்குபுண் ணியமன்னனைத்
திருமலி சுவர்க்கபோகந் துய்த்திடச் செலுத்திற்றில்லை
பெருமைசா லவன்றோய்ந்துள்ள பிரமஞா னமதன்னேனுக்
கொருபய மில்லாமுத்தி யின்பவீட் டுய்த்ததென்னு. (சருக)

சுக்கில யசுர்வேதத்திற் சொல்லிடப் பட்டதற்றே
யிக்கியற் றிருவினைப்பற் றெமக்குமின் றுண்மையஃதாற்
புக்கிடு முடலிற்சான்ற பொறிகள்கொண் டின்பநூல்சொன்
மிக்கியல் விடயபோக மிசையினுந் தோடமின்றால். (சருஉ)

ஆயினு முலகின்மேலோ ரறம்பிழை யாமைவேண்டித்
தூயியற் சிட்டாசாரத் துறைமுறை விரதபங்கந்
தோயியற் றாலமீது தோய்தரா தேனையொன்றின்
மேயிய லோர்வனென்ன விளம்பிட விசைந்தானன்றே. (சருங)

அன்னதன் பின்னரொத்த தாமொரு பாறைமீதின்
மன்னியா னிதனிலெய்தோர் மாதமட் டிவ்வுடம்பைப்
பன்னருஞ் சிரத்தையோடு பாதுகாப் பீரென்றோதி
மன்னவன் காயந்தன்னின் மருவினர் மறுவொன்றில்லார். (சருச)

அனந்தர மமருகன்ற ணுக்கையில் வலித்திருந்த
தனஞ்சய னென்னும்வாயு தளர்ந்தது சூடுண்டாய்த்து
துனம்பெறு நெஞ்சம்வல்லே துடித்ததுள் ளிரத்தமோடிற்
றினம்பெறு மூச்சுண்டாயிற் றிணைவிழி திறந்தவம்மா. சருரு)

விழிதிறந் துடன்கைகால்கண் மெல்லென வசைத்தெழுந்தான்
செழியவச் செயலைக்கண்ட தேவியர் பரிவாரத்தோர்
கழிமகிழ் வெய்தினராய்க் காவலன் மயங்கிமூர்ச்சை
யொழிதலுற் றானேயென்று ரொழிவிலா னுற்றதோரார். (சருசு)

பயமுட னுபசாரங்கள் பலபுரிந் திருந்தாரக்கா
னயமலி சங்கரப்பேர் நாயக னடாள்கின்ற
வியனறிந் திடற்கவாவி மேலெழுந் திறத்தனேபோற்
சயமுறு மிரவிகிழ்பாற் சயிலவான் முகட்டிற்சார்ந்தான் (சருஎ)

ஆமது காலைமன்ன னுண்டமை வாவியின்கட்
காமர்பூங் கொம்பேபோலுங் காதலி யாரோடாடி
நேமமார் கடன்கண்முற்று நிரப்புபு நிகரில்செல்வச்
சேமமா நகரம்புக்கான் றேவர்கள் விழையமாதோ. (சருஅ)

வேறு

இன்னவாறுதன் னகர்புகு மமருக விறைவ
னுன்ன மைச்சர்கள் புரோகிதர் பரிசன ரோடு
மன்னலங்கொள்சாந் தித்தொழிலாதிய வயக்கி
யுன்ன தங்கொள்பட் டத்தியானையின்மிசை யூர்ந்தே. (சருகூ)

கார்வயின்பொலி யுருமெனப்பல்லியங் கலிப்ப
வூர்வலம்புரிந் துயாருமறையுணருரவோர்
சீரவளங்கெழு மங்களவாசிகள் செப்பச்
சார்வபூமனு யோங்கரித்தவிசின்மீ தூற்றே. (சகூ0)

மருவுசத்தியந் தருமமோடுலகியல் வழக்கு
மொருசற்றுயினுங் கோடிடாதுயர்மனு நெறியிற்
சருவவாருயிர் கட்குமிக்கின்புளந் தழைப்பக்
கருவமைந்துயிர்த் திட்டதாய்கடுத்திடக் காத்தான். (சகூக)

நவங்கலந்திடு மெய்பெறுமமருக நாமன்
றவங்கலந்திடு பெருமையாற்கடைபடச் சாரு
மவங்கலந்திடும் யுகங்கிரேதத்தையொத் தவிர்ந்த
சிவங்கலந்திடு நலமமைச்சராதியர் செறிந்தார். (சகூஉ)

சதுரப்பாடுகூக் குமம்புத்திவிறல்வலி தான
மதுலக்கல்வியாற் றன்முதற்குணமிக லானும்
புதுமைகாலதே சம்பெறுபுணர்ப்பத னானும்
விதுவொப்பாமிறை யிறந்துபினெழும்விய னானும். (சகூங)

முதுவராருமுன் னரசிவனன்றுமுற் றிஃதோர்
புதுமைபோலுமென் றையமினிச்சயம் பொருந்தி
முதுமைசாறவச் சித்தியுற்றிலகொரு முனிவன்
கதுமென்றேந்தன்மெய் யிற்கலந்தனனெனக் கணித்தார். (சகூச)

நமதுபாக்கியத் திரட்சியிலீண்டமை நாதன்
றமரவாரிரு முலகினரோடுநந் தமையும்
விமலமேவிட வாண்டெதுகாலையு மேவற்
கமைவதாமுபா யத்தைநாந்தேடுத லமைவாம். (சகூரு)

ஆயமாதவன் முனிதன்முற்பட வமைந்த
காயமானதை விட்டிதனுட்கலந் திருப்பான்
மேயவவ்வுட றன்னைநாந்தகித்திடு வேமே
லேயமன்னனே யென்றனைவருங்கொள்வா னிருப்பான். (சகூகூ)

என்றுதம்முளஞ் சூழ்ந்துபலேவலர்க் கூவி
யொன்றுநந்திரு நாட்டுண்மூச்சற்றிய வுடம்பு
துன்றுமேற்கணத் தஃதறச்சுட்டொழித் திடுதி
ரென்று போக்கின ரன்னகாலையிலரு ளிறைவன். (சகூள)

அரசியற்கையை நிலைபெறச்செய்தமைச் சர்களைப்
புரவுசெய்திடப் பணித்தந்தப்புரத்திடைப் புக்காங்
கரசமங்கையர் நூற்றுவருடனணைந் தநங்கன்
விரவுநூன்முறை விடயவின்போர்ந்திட விரும்பி. (சகூஅ)

கண்ணன்முன்னேநாட் கோபிகாத்திரிகள்பாற் கலந்தே
யெண்ணறுஞ்சுக மெய்தியதன்மைபோ லியற்கைத்
தண்ணமைந்துள பிரமசாரியந்தண வாதே
விண்ணர்வெட்கிடச் சலிப்பறநுகர்ந்தனர் மேலோர். (சகூகூ)

சேமவாச்சியா யனர்புரிசூத்திரத் தினையுங்
காமவான்கலா பாடியத்தினையுநன் காராய்ந்
தேமமேவமு ருகசதகமென்பெய ரெய்தோர்
காமவாரிதிக் குவாவுறழ்நூலொன்றுங் கழறி. (சஎ0)

அரசமங்கையர்க் கணம்பிரிகின்றில தமைந்தார்
விரவுமாதர்கள் யாவருமேவுமே லவர்தஞ்
சுரதநூற்பயிற் சியையுடற்றேய்ந்தசுந் தரத்தை
நிரல்கொணூதனப் புதுமைசான்றிட்டலீ லைசளே. (சஎக)

வாக்கமைந்தசா துரியத்தைமனவுற்சா கத்தை
யாக்கைமேவியற் காந்தியையறிவினுட் பத்தை
நோக்கியோகையிற் படிந்தவராயபரை நொடியும்
பாக்கியத்தரைப் பிரிகிலர்சுகக்கடல் படிந்தார். (சஎஉ)

அமையமற்றதிற் சநந்தனனுதியர் கண்ணுக்
கிமையிலுட்புறத் தாரியன்மெய்யிகவாதே
கமைகொண்மேலவர்க் காத்தமங்கையரெனக் காத்தா
ரமைவர்சொல்பச கோவிந்தமெய்த்துதி யறைந்தே. (சஎந)

ஏற்றவன்னதை மோகமுற்கரமென்று மிசைப்பார்
சாற்றலாவதி லரியவேதாந்தமெய்ச் சாரந்
தோற்றயாவர்க்கு மெளிதினின்மாரணந் தொலைக்கு
மாற்றலில்லன வியாகரணதிநூ லென்றும். (சஎச)

ஆத்ரங்கொடன் னவைகற்போரோர்பய னடையார்
சாதலும்பிறப் புங்கெடக்கோவிந்தன் றன்பொற்
பாததாமரைத் துணைகளேப்பரவுதி ரென்னும்
போதமெய்ச்சுலோ கந்துவாதசங்கொளப் புகன்றார். (சஎரு)

இன்னதோதுபு சீடர்கண்மாதமொன் றிகந்து
மன்னருட்குரு பரன்வராமையின்மனம் வாடி
யின்னன்மிக்குமே லைந்துநாட்டுதித்தவ னிருந்து
மன்னபோழ்துமெய் திடாமையிற்றேடுவா னகன்றார். (சஎகூ)

இன்னிசைப்பெரும் புலவராங்கரிடத் தெய்தி
முன்னிலைப்புறமொழியதா*மொய்க்கும்யோகிக்குஞ்
சென்னிலைச்சிலே டைப்பொருட்செய்யுளொன் றியற்றி
மன்னிடுந்தத்து வமசியையடியில்வைப் பாக்கி. (சஎஎ)

---

* மொய் வண்டு.

இன்பமெய்திடப் பாடுபுவேந்தன்முன் பெய்தத்
தென்புமைந்தவக் கவிதைகேட்டியல்வகை தேறி
யன்பமைந்துசோர் தலினடித்தம்மெய்விட் டகன்றூர்
கொன்பயின்றம னிறத்தலுமலிந்தகூக் குரலே. (௪௭௮)

புலவர்வந்தகோண் முற்றமுற்றுரெனப் போந்தா
ரிலகிடுந்தி தன்னின்மந்திரிகளே வலர்தா
நிலவுசங்கரர் மேனியையிட்டனர் நெருப்பிற்
குலவுணர்ச்சிவேங் கடத்திடையக்கணங் கூடி. (௪௭௯)

தீத்திறங்கெட வுடன்சுவாலாநர சிங்கத்
தோத்திரம்புரி தலுந்தணிந்திட்டதாற் றெழுதம்
மாத்திரத்திலக் குமீநரசிங்கம் தேகி
மீத்திரக்கரா வலம்பமெய்த் துதிபுகல்வேலே. (௪௮0)

கருணைநாயகன் காகுத்தநாயகன் கமலை
மருவுநாயக னுடனவர்கண்ணெதிர் வந்து
தருணபங்கயக் கரங்களாற்றூக்கிமெய் தழுவி
யருளியேமறை தலுமருட்படிவமா யிற்றால். (௪௮௧)

ஆனகாலையிற் சநந்தனனுதிமா ணுக்கர்
தானமற்றதின் மருவியுட்பெருங்களி ததும்பி
ஞானமெய்த்துணைப் பதந்தொழுதிடலுமுண் ணயந்து
வானமேற்கொடு மருவினர்மண்டனன் மனைமேல். (௪௮௨)

வேறு

திருவருட்கட் லானசங்கரர் செய்யதன்மனை யெய்தலும்
பொருவின்மண்டனன் றன்னடித்துணை போற்றுசீடர்களோடெழுந்
தொருவிலன்புட னர்க்கியாதிய் வுதவியர்ச்சனை செய்தெழின்
மருமலர்ப்பத பங்கயங்கள்வ ணங்கியோர்புடை நின்றனன். (௪௮௩)

அந்தவேலையி லுபயபாரதி யங்கணைந்தவ ணுற்றுளோர்
வந்தனுதிகள் கொண்டுமுற்றுணர் வண்மையாலருட் சங்கர
ரந்தமேவம ருஈனுடற்புகுந் தாற்றிலீலைகள் யாவையுஞ்
சொந்தமாயுணர்ந் தேவியந்தருட் டோத்திரம்பல செய்தரோ. (௪௮௪)

நானுமக்கியற் றோல்விபெற்றதி னவையெனக்கிலை வானுலாம்
பானுமிக்கொளி பெற்றிருத்தலிற் பனிமதிக்கொரு தாழ்வுண்டோ
மானுடத்தர்பு கழ்ச்சியிற்றம்முன் மருவிகழ்ச்சிநன் மாட்சியே
கானுடைக்கிருட் டிணன்மிதித்தலிற் காளிங்கன்புகழ் மிக்கதே. (௪௮௫)

தாணுவங்கிசத் தீர்வயக்கப சயமதைப்புகழ் நாமமார்
பூணுற்ழ்ந்திடக் கொண்டுளேனெனப் போற்றுமேல்வையிற் சங்கரர்
மாணுறுந்தமெய் மந்திரப்பெரு வன்மையாலம ருகமெனக்
காணுநால்வர நெஞ்சினூடுக ணிக்கவான்வழி யெய்தியே. (௪௮௬)

அவையிடத்தின்வி ழுந்தபான்மைய றிந்துமற்றவண் மேவினோர்
குவைகொள்சொற்சுவை யொடுபொருட்சுவை கொண்டவன்னதையுய்த்துணர்ந்
துவகைமிக்குமெய் யின்பவாரிதி யுண்ணணைந்தவ ராயினர்
விவரமோரருள் வாணிபூரண வெற்றியோதுபு விண்ணிலாய். (சஅஎ)

முளரிவானவ னுலகமெய்தமு யன்றபோதருட் சங்கரர்
வளமலிந்திடு ஞானசாரசு வதவியற்றுதி யோதலா
லுளமகிழ்ந்துநும் மிச்சையாவதிங் குதவவோதுதி ரென்றலும்
பளகறுந்தவருன்னு போதன பாதநாதரி தோதுவார். (சஅஅ)

எத்தலத்துமை யந்திரத்தினி யைந்ததாபனை செய்வன்யா
னத்தலத்துமை வாணிமாவென வருண்மெய்கொண்டமை வீரெனச்
சித்தமீதிலி ணங்கியாண்டையர் சிந்தைவிம்மித மெய்தவே
சத்தமாமறை யோதையோவறு சத்தியப்பகி புக்கனள். (சஅகூ)

மேவிடுஞ்செயல் கண்டமண்டனன் மிக்கவேள்விநற் றீயினைத்
தாவிடும்படி யுட்கலந்துயர் சந்நியாசம ரீஇயுளக்
கோவில்கொண்டரு ளாரியன்புகல் கோதிலத்துவி தப்பெரும்
பாவியற்றனி நூல்கடேர்ந்துப லர்க்குமிக்கவனுகியே. (சகூ0)

பெருமைமிக்கச மாதிவானிலை பெற்றருட்பிர மானந்த
மருவிடுந்தகை கண்டுசங்கரர் மண்டனற்குறு காரண
வருமைமிக்கசு ரேசுராசிரி யன்னென்யோகபட் டப்பெய
ரிருநிலத்தொடு வானுளோருமி யம்பியேத்திட விட்டனர். (சகூக)

அன்னபோழ்தவன் சீடராகிய மைந்தவந்தணர் மன்னவ
ரென்னவாழ்ந்தப லோருமத்துவி தத்தையெய்திடு மிச்சைகொண்
டுன்னதப்புகழ் மேயசங்கர ரொப்புசீடர்க ளாயினு
ரன்னபான்மையி னுருமத்துவி தத்தராயமைந் திட்டனர். (சகூஉ)

வேறு

அன்னபின் சங்கரப்பே ராண்டகை சீடரோடும்
பன்னருந் தலங்கள்புக்குப் பரப்பிமெஞ் ஞானநூல்கண்
மின்னவிர் சிசைசலத்தின் மேவிப்பா தாளகங்கை
மன்னறல் படிந்துநித்த வரன்முறைக் கடன்களாற்றி. (சகூ௩)

பிரமராம் பிகைசமேதம் பெறுமல்லி கார்ச்சுனேசன்
சரணிணை யன்பிற்போற்றித் தகைகொள்சொன் மாலைசாத்திச்
சிரசிக ரகலாயந்தி ரப்பிர திட்டைசெய்து
வரமலி கிருட்டிணப்பேர் வானதிக் கரைக்கண்மேவி. (சகூச)

வருபாசு பதர்சாத்தேயர் வைணவ மதத்தர் பேதக்
கருவபங் கஞ்செய்தன்னோர் களிற்பரி பாகமேவி
மருவினோர் தமக்கதீத வான்பொரு ளுணர்ச்சிநல்கி
யருளுரு வமைந்தார்சின்னு ளாண்டையோர்க் கருள்செய்துற்றார். (சகூரு)

எயகா லயிலாண்டுற்ற வீராறு நூறெண்சான்ற
பேயன மதவாதோரைப் பெருஞ்சுரே சுரன்சநந்த
னுயமா ணுக்கர்க்கொண்டே யபசயப் படுத்தியப்பான்
மேயவெவ் வுலகருந்தம் மெய்நிலை நம்பும் வண்ணம். (சகசு)

சத்திய மத்துவைதந் தானெனச் சாற்றுசொல்லந்
நித்திய சைலமேய நின்மல விலிங்கவாயிற்
பத்திமிக் கவர்கைக்கொள்வான் பகர்ந்திடப் புரிந்ததல்லாற்
சத்தியோர் பாகன்கோலஞ் சைலமேற் பலர்க்குங்காட்டி. (சகஎ)

வேறு

ஞானநன்னெறி விளக்குபுவதி தருநாளி
லீனமிக்ககா பாலிகர்தமக்கெலா மிறைவ
னுவுக்கிர வைரவனும்பெய ரமைந்தோன்
ஞனமைந்துள மதத்தினைமறுத்திடுந் தகைபால். (சகஅ)

மானமீக்கொடு வாதமந்திரம்வலாற் கார
மானபான்மையால் வென்றிடச்செலுத்திட வழிக்க
வீனமிக்கநம் மான்முடிவுற்றிடா தெனினுந்
தீனமிக்கவஞ் சகங்கொடுசெறுவன்யா னென்றே. (சகசு)

மிக்கவும்பரி பாகமுற்றுள்ளவன் விறப்பத்
தக்ககண்மணி யோடருணீறுமெய் தயங்கப்
புக்கசத்துவ குணத்தொடுபத்தியும் புறத்தேய்ந்
தொக்கமெய்த்தவத் துவிதநூலினைப்புகழ்ந் தோதி. (ரு00)

உண்மைவேடமொல் வாருடனுண்மைகொள் வேட
னெண்மைமேவியே யேற்றதாமேல்வைபார்த் திருந்தா
னண்மைமேயவன் வாழொருதினந்தனி லாருந்
தண்மையார்புன லாடுவானுற்றிடைச் சார்ந்தார். (ரு0க)

கள்ளவஞ்சகன் மெய்யடியாருடன் கழலா
துள்ளமொத்திடத் தனித்தவணிட்டைசெய் துற்ற
வள்ளன்மேவிய வறைத்தலைவாயின்முன் மருவி
யள்ளல்வெங்கிர யங்கொள்வான்றேத்திர மறைந்தான். (ரு0உ)

பாவியோதிடுந் துத்தியங்கேட்டுளம் பரிவுற்
றேவியம்புரை நிட்டைநீத்தறையினின் றெருவி
நீவிரும்பிய தேதளித்குதுமென்றார் நிலவு
மாவிக்காவியாந் தலைவர்சொற்கேட்டவ னறைவான். (ரு0௩)

தேவரீர்முற்றும் வெறுத்தனிர்தேகமீ தேனு
மாவதாமபி மானமற்றீரிரந் தவர்கட்
கியாவதேனுநல் கிடுமருண்மிகமனத் தியைந்தீ
ராவலொன்றுமிக் கும்புடையடைந்தன னடியேன். (ரு0ச)

வருடம்பன்னிரண் டளவுநான்வைரவ பூசை
பருவரற்கொடு புரிந்தனனவனென்முற் படர்ந்தோ
ரருமைசானர பலியெனக்கீதியஃ தல்லா
தொருபொருட்கணெற் கில்லேயுட்பிரீதியென் றுரைத்தான். (ரு௦ரு)

சார்வபூமனு மோரரசன்றலே யேனுஞ்
சீர்வயங்கொர்மெஞ் ஞானியானவன்சிர மேனு
மேர்வயங்கெனக் கிடிற்பலிபலிக்குநின் னிச்சை
யார்வமேவயா னிடுதிநீகடிதிலென் றறைந்தான். (ரு௦சு)

அன்னவாறரசன்றலேகிடைப்பதெற் கரிதா
னன்னலம்பெறு தமையலாற்பிரமமெஞ் ஞான
மன்னருந்தவ மருவினரில்லேயிவ் வகையா
லின்னலெய்துபு தேவரீர்தமையிரங் திட்டேன். (ரு௦எ)

ஈந்திடிற்றலே தமக்கதானட்டமொன் றில்லே
வாய்ந்தமற்றது கொண்டியான்வளமிகத் தோய்வே
னேந்தல்வேட்டவென் குறைமுடித்தருளுதி ரென்னச்
சாந்தமோருரு வாகியசங்கரர் மொழிவார். (ரு௦அ)

யாவர்கானலி னீர்குடித்தகன்றிடி லென்னே
யாவாதாலொரு குறைவெனக்கில்லேயுன் னகத்தி
னுவலின்படி புரிந்துகொள்ளுதியென வறைந்தே
மேவருட்சமா தியில்விழிமூடிவீற் றிருந்தார். (ரு௦கூ)

மன்னுமிந்நிலே யோர்புகலகம்பிர மான்மி
யென்னுமாற்றத்தைத் தம்மதாக்கையிலொர்சிற் றெறும்பு
துன்னுறச்சகி யார்களுஞ்சொற்றிறு மாப்ப
ருன்னுமிந்நிலே யவர்தொழிற்கொப்பில போலும். (ருக௦)

அன்னகாலேயக் கபாலிகனுகிய பதக
னன்னலங்கொண்மெய்ச் சநந்தனுதியர்கணண் ணிடுமுன்
றன்னகத்தினுட் குறித்தவாறுற்றுவான் சதியாற்
கொன்னவின்றவாள் சூலமாதியகொடு போந்தான். (ருகக)

ஆமதற்குண்மெய்ச் சநந்தனனவ்விடை யண்மித்
தூமநாசியின் மேவிடப்பெருஞ்சினந் தோய்ந்து
நாமமுற்றுமுங் காரவான்றெனியொன்று நவிற்றிச்
சேமமார்நர சிங்கவென்றேதிச்சிந் தித்தான். (ருகஉ)

மதித்தகாற்பது மபாதனுச்சியிலொர்சு வாலே
கதித்தெழுந்ததக் கணத்தினிற்கோசைப்பற் களுமுள்
விதிர்ப்பளித்திடு காளவத்திரமும்வாள் விழியுங்
கொதித்தவாரழற் கேசமுங்கூர்மைசா னகமும். (ருகங)

துலங்குவுக்கிர நரசிங்கமூர்த்திமுற் றேன்றி
வலங்கொளாடகற் கிழித்தலிற்பதகனே மாய்த்தா
னலங்கொள்சீடர்க ளாண்டணைந்தந்நர சிங்கத்
திலங்குபேரொளி யான்மடத்துட்புக வெய்த்தே. (ருகச)

வெளியினின்றருட் சநந்தனன்றனேவினு விட்லு
மளிகுலாமலர்ப் பொதும்பர்சூழகோபல வாங்க
ணெளிகுலாந்தவம் புரிகையி னரசிங்க முற்றுக்
களிகுலாய்வரங் கொடுத்தருள்காதையைக் கரைந்தான். (ருகரு)

இயம்புகானர சிங்கமூர்த்தியின்முகத் திருந்து
புயங்கவேந்துமுட் கலங்கிடப்போந்தவோர் தொனியர்
னயங்குலாவியற் சங்கரர்சகநிலை நண்ணி
வியங்குலாவுப நிடங்களாற்றுதித்தனர் மிகவே. (ருகசு)

வரமலிந்தசங் கரர்துதித்தலுஞ்சின மாறிப்
பிரகலாதனிற் றழுவிமிக்கோகையுட் பெற்றுப்
பரவுமேலவர்க் கருளுபுபடர்ந்தனர் பகவன்
சரணவாரிசச் சரணரைச்சாருமோ தயக்கம். (ருகஎ)

நாத்திகத்துறை புக்கமாவினுமிழி நாரைக்
காத்திடும்பெருங் கருணையெம்மான்றனேக் கனிவி
னேத்திடும்பெரு மையினுடனிகத்தர்நன் றெய்தப்
பூத்திடுந்தகை யருக்கருள்செயலிறு ம்பூதோ. (ருகஅ)

செப்புமேல்வையிற் சுரேசுராசிரியரா தியரா
யொப்புமேலவர் யாவருமோகைமிக் குற்றுப்
பப்பு பேருட் குரவனேப்பதுமபா தனேமிக்
கெப்புமின்பமாப் புரிசெயற்கேத்தினின் ரூர்த்தார். (ருகக)

போதுமத்ததி சங்கர ரரியருள் பொழிய
வோதுதோத்திரந் தன்னேயிக்காதையை யுள்ள
மீதுகொன்டபத் தியிற்றுதித்தேவின விடுவார்
தீதுசாலவ மிருத்தெலாமொழிந்தின்பஞ் சேர்வார். (ருஉ0)

வேறு

ஆமதுபின்னர ருட்பொலிசங்கர ரன்புகொண்மாணவரோ
டேமமணித்திர ளோடெறியுந்திரை யெய்துநதிப்பொலிவார்
சேமமிகுத்தத லம்பலவேதெரி சித்தருளாடல்செய்தே
பாமரரெட்டரு கோகரணப்பதிப் பால்விரவுற்றனரே. (ருஉக)

முத்தினமங்கணி ருந்தும்மகாபல மூர்த்தியையன்பதனுற்
றுத்தியமோதிடு போர்தருளாலெதிர் தோன்றியருட்செயலும்
பத்தியினேத்துபு தாழ்ந்தரியோடர கேத்திரப்பாற்படரா
வொத்திருவோருரு வாகுமிலிங்கவு ருத்தெரிசித்தினிதே. (ருஉஉ)

அவ்விருமூர்த்திக ளுக்கோர்சிலேடைய தாத்துதிவிண்டருள்பெற்
றவ்விடம்விட்டுமு காம்பிகைகேத்திர மாயவிர்கொல்லூர்மேய்த்
திவ்வியமிக்கந கர்த்தெருவின்புடை சென்றிடுசெவ்வியினிற்
செவ்வியரூேயொர்வ யோதிகவேதியன் சேர்மனைமாதுடனே. (௩௨௩)

தங்கள்குலத்தைவி ளக்கவுதித்தவொர் சந்ததிபொன்றிடலா
லங்கமதற்கயல் கூடியிரங்கிடு மச்செயலைச்சகியார்
பொங்கருளுற்றனர் சங்கரரத்தகு போதினில்வானிடையே
சங்கையறப்புரக் குந்திறலில்லவன் றன்றனைவீணெனவே. (௫௨௪)

ஓசரீரியு ரைத்திடல்கேட்டரு ளோடொருமூவுலகும்
வாரமுறப்புரப் பாய்நினக்கேயது மாத்திரந்தக்கதெனப்
பேரருளாளர்வி ளம்பலுமாண்டமை பிணமுயிர்பெற்றெழவக்
காரணமோர்பல ரும்வியப்போடுக ளிக்கடன்மூழ்கினரே. (௫௨௫)

செத்தவனுக்குயிர் நல்கிடுமொப்பறு சித்திபடைத்தவர்தா
முத்தமர்தேர்தர நான்பிரமம்மென வோதுபதேசமதை
யுய்த்தறிவுற்றவ ரிற்கலவாதுத மொல்லுயிர்பிரமமெனும்
பித்தரினும் புகலாதமைவுற்றிடு பேயுயர்வுற்றதுவே. (௫௨௬)

வேறு

அன்னபின்னருட் சங்கார்சோலைநீ டணிகுலாவிய வாலயத்தோங்கருள்
வன்னமந்திர ரூபமுகாம்பிகை வாரிசத்திருத் தாட்டுணைதாழ்ந்தன்பிற்
கொன்னமைந்தகா லாரோகணப்பெயர் கொண்டதுத்தியம் விண்டருள் பெற்றயற்
பின்னைமேவுசி வல்லிபுரத்திடைப் பிட்சைகொண்டுமுத் திங்கள்வதிந்தனர். ()

கரையுமவ்வக் கிராமத்துண்மேவிடுங் கன்மகாண்ட நிட்டாபரராகிய
நிரைகுலாவுமீ ராயிரவந்தணர் நிருபனென்னநி கழ்த்தும்பெருமைசான்
றுரைசெயும்பிர பாகரபட்டனென் றேதுபேர்கொ ளொருவன்கலையெலாங்
கரைகண்டோன்பூ சுரர்தங்குருவெனக் கைதொழும்படி சைமினிநூலையே.

ஆசரித்துறு பூர்வமீமாஞ்சவா சார்யனாகிய விர்ந்தனனன்னவன்
மாசறுந்தவ மேதிரண்டெனனவோர் மைந்தன்றோன் றினன் மற்றவன்சுந்தரத்
தீசனுலெரி மன்மதன்மீட்டுரு வெய்துற்றான்கொலென் றெண்ணவிளங்கினு
னாசறும்பிர பாகரன்சேய்மனை யாதியாருடன் யாத்திரைபோந்தனன். ()

யமுனையெய்திடும் போதவனில்லவ ளிளமைமெத்தக் குழவியையாண்டருட்
சுமுகமோடுதி யானமுயன்றமை தூயயோகிதன் பாலொப்புவித்தய
லமுதமாடின ளத்ததியுண்மைநோக் கமைந்தியோகி யதனைமறத்தலுங்
குமுதவாய்கொள்குழவியங் காடவாற் குடிஞைதன்னிடைக் கொம்மெனவீழ்ந்தே. ()

வீழ்ந்திறந்த மகற்கொடியோகிபான் மேவிச்சுற்றத் தினருடனன்னவற்
சூழ்ந்திரங்கினர் கூக்குரல்கேட்டலுந் தூயன்றன்னேர்ச யாதிநிலைக்கணே
யாழ்ந்தசிந்தை பகிர்முகப்பட்டுட னணைந்ததன்மை யறிந்தருண்மிக்குமேய்
வாழ்ந்ததன்னுடல் விட்டிளைபோனுடன் மருவியன்னோர் மனத்துயர்மாற்றினன்,

இறந்துயிர்த்திடு பாலனைக்கண்டட னெல்லையில்களிப் பெய்தினராகித்தஞ்
சிறந்ததொல்பதி புக்கியனுளினிற் சேயினுக்கோரைந் தாண்டுமருவலு
மறந்தவாக்கலை யோதிடிலோதிடா னுரென்னேதினு மாமதற்குத்தர
மறந்தொன்றெச்சம யத்தும்வழுத்திடான் மற்றெதேனும் வழங்கவுங்கேட்டிடான்.

பகலிராவுந் தியானிப்பர்போன்றுற்றான் பாலசேட்டையொர் சற்றுமியற்றிலான்
மகன்பைசாசவயப்பட்டனன்கொலோ வல்வினைகொ லியற்கைகொனோய்கொலென்
றகமுளையமிக் கென்புரிவோமென வாகுலங்கொ டருமறையின்முறை
யிகவுறும உபநயனஞ்செய்தா ரியாண்டொரெட்டிவ் வணங்கழிந்திட்டதே. ()

அன்னசெவ்வியிற் சங்கரர்தந்நக ரணைதலும்பிர பாகரபட்டன்றான்
மன்னுநாகரி கர்புலவாறவர் மகிமையோதிடக் கேட்டம்மகானிடந்
தன்னருஞ்சுத னைக்கொடுசென்றவர்த் தரிசனம்புரி வித்திடின்மற்றவர்
நன்னலத்திரு நோக்கங்கொடேனுமிந் நந்தனன்சடந் தான்விடுங்கொல்லென.

உன்னியேகனி யாதிகைக்கொண்டட னேங்குபாலனே டாங்கமைந்தன்னவர்
பொன்னிருங்கழல் சென்னியிற்சூடுபு புதல்வன்றன்னையும் போற்றிடச்செய்தலு
மன்னிரும்புவி வீழ்ந்தவன்மீண்டெழும் வகைமறந்தனன் மண்ணிற்கிடத்தலுந்
தந்நிகர்த்தமெய்ச் சங்கரர்தூக்குபு தம்மைநோக்கத் தனயற்குச்சாற்றினர். ()

அன்னகாற்பிர பாகரன்சொல்லுவா னைபவின்னவற் காண்டிருநாலின்மேற்
றுன்னலுற்ற துபநயனுதியுந் துலங்கச்செய்துமெய்த் தொன்மறையோதிலா
னென்னநிந்திக் கினும்வெகுளானுல கியற்குவே றுபட் டேயிருக்கின்றன
னின்னவன்சடத் தன்மையினேதுவை யினிதுதாமின் றியம்புதிரென்னலும்.

அருட்பெருங்கட லாகியசங்கர ரன்னபாலனை யன்புடனோக்கியே
தெருட்டுநீயாரிவ்வாறேன்சடனென த்திகழ்ந்துளாயென த்தேன்மழலைச்சொலா
விருட்டிறங்கொள் சடனல்லன்யானென தெதிரினிற்சட மெய்துநடையென
வருட்கொள்சச்சிதா னந்தசொரூபவத் துவிதசித்தி யனுபவந்தன்னையே. ()

பன்னிரண்டு வடமொழிச்செய்புளாற் பகீரதிப்புனல் கொண்டவொர்வேகமும்
பின்னிடும்படி யொப்பிலிலக்கணப் பிழைபுருதுடன் பேசிடக்கேட்டலு
மின்னதென்றெழுத் தோர்கிலன்வாயினு லெட்டரும்பிர மப்பொருளுண்மையை
மன்னங்கையா மலகத்துணர்த்துமம் மகிமைதேர்ந்தெவ ரும்வியப்பெய்தினர்.

ஆயபான்மையைக் கண்டருள்சங்கர ரகத்துளார்வத் தளவறிகின்றிலர்
மேயதங்கர மற்றவன்சென்னிமீ மிசையமைத்துய ரத்தாமலகனென்
றேயநாமம் வழுத்திக்கண்டீர்கொலோ விவன்றன்மேன்மையெழிற்பிரபாகரர்
சேயவின்னவ னேசடன்மேலினிச் சேயனுவுமக் கேபுதவானரோ. (௫௩௧)

உம்பிடத்தமை யும்பல்பொருள்களி லொன்றுமின்ன வனுக்குமுதவிடா
தும்மைநற்றவத் தாலியல்பாகவே யுண்மைஞான முடையவனுகினு
னெம்மைபுந்தெரிந் தான்வேறுலகமென் றெண்மருட்சிவிட் டேறினனென்றலுஞ்
செம்மைசேர்சிறு வன்னருளண்ணலே தேவரீரரு ளென்புடைசேர்ந்ததும். ()

தவத்தர்சூடுநின் ருட்டுணையென்னுர்நற் றலையிற்றீண்டப் பெறுவதுமாகிய
விவற்றினுஞ்சிறப் பாமுபதேசமொன் றிருப்ப தாகவு மெண்ணிடுவேன்கொலோ
வெவற்றினுக்குமேலாநின்பொற்ருளென்னையெனக்குணர்த்தியதென் றுவணங்கலும்
பவத்தின்வேர்களைந் தாள்சங்கரர்பிர பாகரற்குப் பகர்ந்திடுகின்றனர். (௩௬௪)

உமதுபாலக னுவிவன்றுேன்றலி னும்மொடேயும் மரபினுற்றுரெலாம்
விமலவான்கதி பெற்றவராயினர் வேறுமற்றிதன் மேலுள தாங்கொலென்
றமலரன்னவற் கோதிவிடையளித் தன்னவற்குக் கிரமசந்யாசமீந்
தமரர்மெச்சுதஞ் சீடருண்மிக்கவ னுகும்வண்ண மருள்பொழிந்தாரரோ. ()

வேறு

அன்னதன்பின்சங்கரப்பே ராண்டகைதனன்படிய ராருஞ்சூழக்
கொன்னமைமூகாம்பிகைதன் றிருவடிகள்வணங்கிவிடை கொண்டுபோந்து
தென்னமைவிபாண்டகைநற் றவச்சேயாகியவிருடி சிருங்கமேலோன்
மன்னருண்மெய்த்தவமுயன்று மேயவிபாண்டகதபோ வனத்தைச்சார்ந்தார். ()

காசிபனல்வசிட்டனுடன் பராசரனுதியமுனிவர் கலந்துமேவு
மாசிரமம்பொலிந்துவிசு வாமித்திரன்றவஞ்செய் தந்தந்தன்னி
லேசில்பிரமத்துவத்தை யெய்திடமாய்ச்சத்துவமெந் நாளுஞ்சான்ற
மாசில்வளம்பலகொடியல் சிருங்ககிரிப்பெருமையெம்மால் வகுப்பதன்றே. ()

ஆங்கமையும்விலங்கினமுந் தாங்கொள்சுபாவப்பகைமை யற்றவாகி
வேங்கைபசுவினம்புரக்குங் குரங்கினந்தஞ்சேட்டையற விடுத்தக்காவின்
பாங்கமைபுந்தவத்தருணக் காய்கனிகளீந்தங்ஙன் படர்தலுற்ற
மூங்கைகுருடோடுபங்கா னவர்கரம்பற்றுப்நெறியின் முறையிற்சேர்க்கும். ()

தூயதவவசிட்டனைச்சோ திப்பான்முனேர்நாளிற் றூர்வாசன்றுன்
மாயையினுற்பலகோடி சீடரையுண்டாக்கியவர் மருங்குசூழச்
சேயவனமேவுபியா மயின்றுதினமோர்நாலேழ் சென்றதற்றுன்
மேயவரைக்கணத்தெமக்குப் பிட்சையிடவேண்டுமென வேண்டவங்கே. ()

கேட்டவசிட்டன்பரிவுற் றுடன்மருங்காருந்ததியைக் கிருபைசான்ம
நாட்டமதானேக்கலுமக் கணத்தேதன்பதிவிரதா நலத்தினுலே
மாட்டமைந்தோரேவர்கட்கும் விருந்தளித்தாளாங்கதனை மாந்திச்சற்றுங்
கோட்டமிலானந்தமுட னருந்ததிசீர்புகன்றகன்றூர் குலவக்காதை. (௩௬௭)

நாரதன்சாற்றிடக்கேட்டுக் கேசவன்பேரருளோடு நளினையோடுந்
தீரவசிட்டாச்சிரமம் புக்கவர்செய்யுபசாரத் திறத்தாற்கொண்ட
சோரவுருநீத்துநிச வடிவமுடனன்னவர்முற் றுலங்கியன்னேர்
கோரவணமாங்கவிர்துங் காநதிதீரத்திலணிக் கோவில்கொண்டார். (௩௬௮)

வியனிதுகேட்டருண்மிகையாற் பரமனுமையிவர்சால விருத்தராகி
நயனிறையாச்சிரமமணைந் தருள்வசிட்டன்றனைப்பார்த்து நவில்வாரெங்கட்
குயரிமையோர்பருகிடுமா ரமுதுசிறிதளித்தியென வுரைத்தபோது
சயமலிமெய்வசிட்டன்மனை வியைநோக்கநோக்கினள்வா சவனைமன்னே. ()

ஆங்கதுதேர்ந்திந்திரனு ரமுதகலசத்தினைக்கொண் டன்பினல்கப்
பாங்கமைந்தோர்க்குடனளிக்கக் களிப்புமிகைபெற்றுநிச படிவமேவித்
தீங்கறுபேரருளளித்தாங் கமைந்தாரிவ்வாறுசிவன் விண்டுவின்னே
ரோங்கருளாட்டியற்றுபுனி தத்தகையத்தலப்பெருமை யுரைப்பதாமோ. ()

நாரணன்றனருண்மேனி வடிவாகிவிளங்குதுங்கா நதியுநஞ்சக்
காரணவுகந்தரத்தன் வடிவாம்பத்திராநதியுங் கலந்ததாகுங்
காரணந்தன்னுற்றுங்க பத்திரையாநதிக்கிணையாக் கழ்றலாமோ
தாரணவுந்துளவணிவான் கழலிடத்திற்றேன்றுகங்கை தன்னைமாதோ. ()

விண்ணவர்க்குமாசொழிக்கு மந்நதியின்மூழ்கினர்க்கு மெய்கொணேயோ
டுண்ணவர்க்குட்பொருந்துமயற் பிணியுமறவொழிக்குமத னேங்குதீரக்
கண்ணவர்க்குமருள்புரிமுக் கண்ணவராமலவானி கரரைக்காணுங்
கண்ணவர்க்குப்பொதிந்துளமும் மலங்கழன்றுமெஞ்ஞானக் கண்ணுமன்றே. ()

கயிலையினின்றகன்றுலகி லுள்ளபலதலங்களையுங் கண்டுமீண்டு
வெயிலவனிற்றிகழ்தருசங் கரர்தாமுமத்தலத்தின் மேவுமேல்வை
பயிறருமாச்சரியமுடன் பற்பலவாறதன்மேன்மை பகர்ந்தாரென்றுற்
குயினணைபூம்பொழில்வளஞ்சால் சிருங்ககிரிப்புகழெவரே கூறித்தீர்ப்பார். ()

இனையவளம்பலபொலியுஞ் சிருங்ககிரிப்பெருந்தலத்தி னியல்புநோக்கித்
தனையனையசீடரெல்லாம் விளம்பரியபேருவகை தழைத்தாரக்கா
லனையிலருள்பொழிசரசு வதியினைத்தாபித்திடுதற் கணிமிக்கோங்கி
யினைவகற்றித்தலஞ்சிறந்த தென்றொரசரீரியுமாங் கெழுந்ததன்றே. (௫௫௪)

செவ்வியவம்மொழிகேட்ட சங்கரர்தமுளத்துவகை சிறந்தாராகித்
திவ்வியவிருடிசிருங்க ருனகலைக்கோட்டவனுச் சிரமந்தன்னி
லொவ்வியவந்தணர்க்குத்தஞ் சூத்திரபாடங்களன்பி னுணரவோதி
யெவ்விடையாலயமமைப்ப தெனத்தம்முளெண்ணுபுவீ ற்றிருந்தார்மாதோ. ()

இயலொர்தினந்தனிலுச்சிப் போதுதுங்கபத்திரையி னிடைநீராடி
முயறவக்காசிபன்வசிட்டன் விசுவாமித்திரனுதி முனிவரோடு
வியனுறச்சம்பாடித்துக் கொண்டிருக்குங்காற்றவளை வெயிலால்வெம்பப்
புயகமொன்றுதன்படத்தை மேல்விரித்துநீழல்செயற் புதச்சீர்கண்டார். ()

கவினுறுமற்றவ்விடமே சிறந்ததெனக்கொண்டுகலைத் தெய்வமாகி
யவிர்தருபாரதியினைச்சக் கரத்தொடுதாபித்தென்று மணிமிக்கோங்க
விவிதவருட்பூசைவிழா வாதியகுன்றுதியலும் விதஞ்செய்தப்பாற்
சவிசாரதாபீட மொப்பில்வியாக்கியானசிங்கா சனத்தினேடே. (௫௫௭)

பாரதீசம்பிரதா யம்மிவற்றையவ்விடைதா பனஞ்செய்தன்பா
லாரணந்தேர்சுரேசுரா சாரியற்காசார்யவபி டேகமாற்றிப்
பாரகஞ்சாலத்துவித மதத்தருளிப்பீடமெவன் பழித்தானன்னேன்
கோரநரகுறுகபத்தி செய்திடுவோர்ஞானசித்தி கூடமாதோ. (௫௫அ)

எனவருளானிக்கிரகா நுக்கிரகமிரண்டினையு மியம்பியங்கட்
கனமருவுசுரேச்சுரனே முதலாவப்பரம்பரையிற் கவின்றோரா
மனமகிழ்விற்சகற்குருவா வயங்குகவென்றுசிவரம் வழங்கினரத்
தினமுதற்சார தாம்பையவண் மேவியன்பர்க்கநுக்கிரகஞ் செய்கின்றுளால். ()

வேறு

திருமலிசங் கார்சிருங்க கிரியின்மாடே
திகழ்தருநா ளையினிகரில் சீடராகி
மருவினருட் சிறந்தவனைக் கேட்போர்வேட்கு
மதுரபுஞ்ச நயமாற்ற மருவினேனைக்
குருபரன்பொற் றிருவடிக ளகம்புறத்திற்
குலவொர்கணம் பிரியானு யுடனீழற்போன்
மருவுசுத்தம் பொறுமையறி வாதிமேவி
மகிமையருட் குருபணிசெய் தொருவன்வாழ்ந்தான். (௫௬௦)

இலக்கணமாஞ் சீடாசா ரத்தினுக்கோ
ரிலக்கியமா யெல்லையில்லாப் பத்திமைச்சீர்
துலக்கமமைந் தாசிரியன் கடைக்கண்ணேக்கந்
தோயொருசற் பாத்திரமாந் தூய்மைசான்று
நலக்குறிதோய் தொண்டுபுரிந் திருந்ததல்லா
னண்ணுமற்றோர் போற்கல்வி நயவானுனன்
மலக்கமுற வெவரெதைச்சொன் னுலுஞ்சாம்பான்
மறுமொழியோ துகிலாதோர் மலைபோலுற்றான். (௫௬௧)

ஆனசெயல் கண்டளவில் கிருபைமேவி
யருட்டகைச்சங் கரானநந் தகிரியென்ன
வேனமைகா ரணநாம மிட்டாரோர்நாள்
வீற்றுளர்க்கு வேதாந்த சாந்திபாடந்
தானவிற்றுங் காலானந்தகிரிமேலோன்
சற்குருவத் திரஞ்சுத்தஞ் செயவாற்றுக்குப்
போனபொழு தாங்கமைந்தார் பாடம்வேண்டிப்
பொருவில்குரு பரன்சமுகம் போந்துநின்றார். (௫௬௨)

மற்றதுகா லவன்வரட்டு மென்னவாசான்
வழுத்திடக்கேட் டுடன்பதும பாதன்றீர்த்தன்
பொற்றிருத்தாட் டுணைவணங்கி யவர்தம்வேலை
புரிந்திருக்கின் றனரவர்தாம் போதாப்பண்பா
லுற்றவெம்பா டத்தினுக்குத் தடையோவென்ன
வுரைக்குமவ னுளங்கொள்கல்விச் செருக்கையோர்ந்து
முற்றருளா லவற்கொருநோ யனுகிடாது
முதிர்கல்விச் செருக்கொழிதன் முன்னிச்செய்வார். (௫௬௩)

கல்வியின்றிப் பத்தியொன்றே கைக்கொண்டுள்ள
கவிஞனந்தகிரிநெஞ்சிற் கலைகளெல்லா
மொல்விதஞ்செய் தனருடனுண் டுற்றானங்க
னுள்ளவர்க்குத் தனதுளத்துண் டாயஞானச்
செல்வமதை வெளிப்படுத்தத் தோடகப்பேர்
தோய்விருத்தங் களிற்குருவைத் துதிசெய்திட்டான்
சொல்விநயம் பொருட்சிறப்பின் சுவையவாகத்
தூயமறைக் கருத்தனைத்துந் தொகுத்துமாதோ. (ருசுச)

கூறிடுமத் துதிகேட்டோ ரதன்மாண்போடு
குருபணியின் மகிமையுமுட் குறித்துநோக்கி
வீறியற்ச நந்தனனு தியராஞ்சீடர்
மேவியதஞ் செருக்கொழிந்து வெட்கமிக்கார்
மாறில்குரு பத்தியினன்னவன்றன்வாயில்
வயங்கியற்றோ டகவிருத்தம் வந்ததாலே
தேறியற்சீர்த் தோடகா சிரியனென்னச்
செப்பிடுமற் றொருபெயருந் திகழ்ந்ததன்றே. (ருசுரு)

அதுமுதன்மற் றவனுமொரு சிறந்தசீட
னுவிளங்கி னனருட்சங்கரர்மாணக்கர்
பொதுவுறுபல் லாயிரருட் சிறந்தசீர்த்தி
பொருந்தினர்சுரேசுரனற் பதுமபாதன்
விதுநிகரத் தாமலகன் றோடகப்பேர்
வித்தகனின் னவர்நான்கு திசைவெல்வோராய்ச்
சதுர்மறையோன் முகமுத்தி புருடார்த்தங்க
டகைந்தருட்சற் குரவனியற் பணியினின்றார். (ருசுசு)

செகத்துளமாந் தர்களகத்திற் செறிந்தமாயா
திமிரமகற் றுபுபரிபா கத்தையுற்ற
மகத்துவஞ்சான் மெய்த்தவராஞ் சகோரப்புட்கள்
வாய்ந்தபர மானந்த மமுதமாந்த
முகக்களங்கஞ் சுக்கிலகிட்டி ணபக்காதி
முயக்கமொழிந் திலங்குமுழு மதியேபோலப்
புகழ்ச்சுதைபல் புலவருக்கு நல்கிப்போதம்
புரிதருதே சிகர்சிருங்க கிரியில்வாழ்ந்தார். (ருசுஎ)

வேறு

அவிர்போதிலோர்நாளி லன்பார்சுரேசு
ராசாரியன்றேசி கன்றாள்வணங்கி
நவில்சாரீரகபாடி யத்துக்குவிர்த்தி
நவிற்றும்படிக்காசை நனிநெஞ்சுண்மேவிச்

சவிமெய்ப்புகழ்க்கொண்ட தேவேமெய்யன்பு
தாங்குத்தமச்சீடர் தாம்வாழுநாளிற்
புவிமீதுசெய்தக்க பணியென்கொலதனைப்
புகன்றேயெனைத்தக்க புனிதஞ்செய்வீரால். (௩௬அ)

எனவோதுசீடன்சொல் கேட்டொப்பிலருடோ
யிறைவிள்ளுவாரென்னி யற்பாடியத்தின்
கனவார்த்தி கஞ்செய்தி யென்ருேதல்பெற்றே
கரைதர்க்கமொடுவ்யாக ரணமாதிநூல்யாப்
பினமேவியுறினுந்தா மிடுகட்டளையினு
லெட்டாதவொன்றிங் கெனக்கின்றெனத்தான்
மனமீதுரங்கொண்டு தீர்த்தன்றனுசீர்
வாதத்தொடிசையாணை மருவுற்றகன்ருன். (௩௬௯)

நவிலீதுதேர்பற்ப பாதற்குமிக்க
நண்பாகிடுஞ்சிற்சு காசாரியன்னே
டவிர்சீடராசாரி யன்ருன்றனித்தே
யமையேல்வைதனி லொவ்வொருவராமுன்மேவிக்
கவின்மிக்கமைசுரே சுராசிரியனுக்குக்
கனசந்நியாசத்தி னேடுற்றகன்மந்
தவிர்மிக்கசெயலிற்க ருத்தில்லையவைதாந்
தகுமாரணத்திற்கு டன்பாடன்றென்றே. (௩௭௦)

தான்மேயமனைமாடு பிட்சைக்கணேந்த
சந்நாசிகளையோவி டற்காளமைத்தோன்
மான்மேவிடும்பூர்வ மீமாஞ்சைதன்னின்
மட்டற்றவபிமான மருவக்கொடன்ருே
வான்மேவிடுஞ்சந்நி யாசநுவனூல்கண்
மருவுமலிகுருடுசெவி டுமையொடுபங்கா
மூன்மேவிடுங்குறையு றுப்பினரதென்றே
யோதுற்ற மீமாஞ்சையுரையிலெழுதிட்டான். (௩௭௧)

ஆசாரியற்றேடி வந்தடைகிலாதா
னபசயமடைந்தேயு மக்கடிமையானுன்
றேசாருமத்துவித தத்துவவிளக்கந்
தெளிவாகவுளமீது தோராநவீனன்
மீசார்நும்மெய்ப்பாடி யத்துக்கியற்றும்
விருத்தியெவர்கட்கும் முடன்பாடுருதா
னேசாநுசாரத்தொர் ஞானதிகார
நிறைபற்பபாதனுரை யார்க்குமுடன்பாடே. (௩௭௨)

என்றொருகருத்தாகி யாவர்களுமோத
வியல்பதுமபாதனத் தாமலகனுை
னன்றெழுதினுலணிய தாகுமெனவோத
நாதனதுமேதகைய தேனுமவனுண்ணேக்
கொன்றொழிவுபெற்றுடைய னுற்றபுறநோக்க
மோவினவர்வாதவுரை நூற்குதவிடாரால்
வென்றிகொள்சுரேச்சுரன்மெய்ம் மேன்மையறிவேன்யான்
வேதனவனன்றியுரை விள்ளுநர்களின்றே. (ருஎ௩)

எனுமொருகாரியம திற்பலவிரோத
மேற்படுபட்சத்திலதை யான்புரிகிலேனென்
றூனுயர்கொடிப்பரம னங்கிசமதாகு
மாசிரியரோதலும டற்பதுமபாதன்
றூனுவலநன்கருள்செய் வீரெனவிரப்பத்
தக்கபடிவேற்றுரை சமைத்திடுதலன்றி
வானுவலுமென்னதுக ருத்துளபொருட்கொள்
வார்த்திகமுரைத்திடுமெய் மன்னுகிலையென்றூர். (ருஎ௪)

துங்கமுறுசங்கரர்த முட்கிடைகள்யாவுந்
துலக்குநர்சுரேச்சுரனை யன்றியிலரென்றும்
பங்கமகலும்பதும பாதனுரைவேறு
பட்டிடுமெனத்தெளிவு பட்டிடவுரைத்துந்
தங்கள்பிடிவாதமணு வாயினும்விடாமே
தக்கதவமிக்கவர்க டம்மையுமலேக்கும்
பொங்கமலியெளவியம தென்னனேயர்தம்மைப்
புன்கணுறவைத்தல்புது மைத்தகையதன்றே. (ருஎரு)

வேறு

சொற்றவைகேட்டருட் சங்கரர்தாஞ் சுரேச்சுரற்கிட்டவத் தொண்டொருவிப்
பற்றறுசநந்தனற் சூத்திரநற் பாடியத்துக்குரை பண்ணவமைத்
தற்றமுன்மற்றவற் குபநிடத மாம்பெரும்பாடிய வார்த்திகநீ
நற்றகைபடப்புரிந் தேபுதுநூ னவிற்றுதியென்றுந வின்றனரே. (ருஎசு)

அவ்வணஞ்செய்துசு ரேச்சுரன்ரூ னணிகொணிட்காமிய சித்திமுதற்
செவ்வணநூல்பல செய்துமியற் றேசிகன்றற்கிடு மோர்பணியை
யெவ்வமுறத்தடுத் திட்டவர்மே லெய்திடும்வெஞ்சின மாறிலனுய்த்
தவ்வறுசநந்தனன் வார்த்திகமுந் தான்விளங்காதறச் சாபமிட்டான். (ருஎஎ)

ஆங்கதுபோதுமுன் சநந்தனன்ரூ னேந்துபாதங்கட்கு வார்த்திகஞ்செய்
தோங்கருட்சற்குர வன்சமுகத் தோதலுமுற்றுணர் சங்கரர்தாந்
தீங்ககலுஞ்சுரே சுரன்றனைக்கூய்ச் செப்பிவைபஞ்சபா திகைப்பெயரோ
டீங்ககிலத்தில்வி ளங்கினுநான் கேபிரசித்திமி கப்பெறுமால். (ருஎஅ)

பொருந்தியற்பாடிய வார்த்திகஞ்செப் புண்ணியமின்றெனப் புந்தியினீ
வருந்தலைபாலிந்த வாக்கையுடன் வையகத்தெண்சுத வருடநிலாய்த்
தரும்புனருற்பவந் தரணியில்வா சற்ப தியாமபி தானமரீஇத்
திருந்தியற்பேருரை சூத்திரசித் தாந்தமாச்செய்திடு வாயெனவே. (௫௭௯)

சிறந்திலங்கிடுமது செய்கையினுற் சிந்தையுளாகுல மெய்தலையென்
றறந்திகழ்சங்கர ரோதுதல்கேட் டகமிசையோகையுற் றூனதுகாற்
றிறம்பெறுசாபம கற்றவெனிச் செய்யசநந்தனன் றேசிகனூர்
நிறம்பெறுகட்டளை பெற்றருளா னிலமிசையாத்திரை சென்றிடுவான். (௫௮௦)

விசயடிண்டிமப்பெயர் கொண்டிடுநால் விளம்புபுசங்கரர் பாற்சமர்ப்பித்
தசலநிகர்த்தவ னேகிடலு மருட்பொலிதேசிக னன்பதனுற்
சிசுருடைபுரியானந் தகிரிமுனுஞ் சீடரையத்துவி தசித்தாந்த
நிசம்விளக்கிடுபனூல் விள்விரென நிகழ்த்தலுமன்னவர் நிலையளவே. (௫௮௧)

பற்பலநூல்கள்ப கர்ந்தினிதே பரமசற்குருபரன் பாலிடலு
மற்பமைந்தவைகளைக் கண்டுளத்தி லருட்கடலோகைமி குத்தவர்த
மற்பயில்கல்விவ ளம்படவே மாணருளாசிவ குத்தனர்போம்
பற்பபா தன்பல கேத்திரங்கள் பணிந்தன்பிற்சீடர்பல் லோருடனே. (௫௮௨)

அணிமலிபூம்பொழில் சூழரங்கத் தணித்துறுதமதுபூர் வாச்சிரமத்
தணிவிலன்புற்றுள மாதுலனிற் சார்ந்தவன்கொள்பிர பாகரனூற்
றுணிமதத்தோருடன் வாதுபுரீத் தூயவத்துவிதமெய் சொற்றிடலுந்
திணிகன்மநூல்கொளம் மானுவல்சாத் திரமமைபுஞ்சுவை தேர்ந்துவந்தும் ()

மருவியதன்மதக் கொள்கையினை மறுத்திடலோர்ந்துளத் துக்கமுறீஇப்
பெருமிதநூலதை மேல்வியந்து பேசிடக்கேட்டுடன் சநந்தனன்று
னருமைகொள்பனுவலைப் பழுதுபடா தளிக்குதியென்றன னளித்தகன்றுன்
வருகிளிபார்ப்பினைப் பூனையிடம் வைத்தகலுங்கதை யொத்திடவே. (௫௮௪)

மதத்துவேசங்கொளம் மாதுலனூர் மருவினர்தம்பழி மேவலுறு
திதத்துடன்வேண்டிய பொருள்வெளிசெய் தேய்ந்துள நூலுடன்றன்மனையிற்
கதத்துடனங்கிமிட் டென்பொருள்கள் கழியினுஞ்சங்நியா சியின்பொருடா
னதப்படற்கிரங்கலி னயற்குரைத்தே யகககமிசையழு திருந்தனனல். ()

சென்றசநந்தனன் பற்பலவாஞ் சேத்திரதெரிசனஞ் செய்தவண்சான்
மன்றல்கொள்புண்ணிய நதிபடிந்து வாய்ந்ததென்னட்டமை வாதிகளை
வென்றுசக்கிராங்கவை ணவத்தைமறாஉ வியன்சுத்தவைணவாத் துவிதநிறீஇ
நன்றமைதருப்பச யனமடைந்து நறுந்தமிழ்மாமுனி முன்வரவே. (௫௮௬)

மூன்றுதினந்தவம் புரிந்திடக்கண் முன்னமையகத்திய முனிவரனு
லான்றபற்பலவிர கசியமுணர்ந் தணிகொளிராமனுக் கறைந்தவெலாந்
தேன்றுளித்தெனப்பகர்ந் திராமலிங்கத் திறம்பொலிமான்மிய மூந்தெருட்டத்
தோன்றருண்மாதவ னுசிகொடே துலங்கிராமேச்சுரத் தலங்கிடைத்தான். ()

அங்கமைவாதிய ருடன்வாதித் தணியிராமேச்சுரச் சொற்பொருளைத்
துங்கசித்தாந்தஞ்செய் திருவகையாத் துலங்கிடுசேதுநா னம்விளக்கி
யங்கணிராமலிங் கந்தரிசித் தாங்கமிசைப்புகுந் தாற்றியநூல்
வெங்கனனுங்குதல் கேட்டலுமே மேவியதுக்கம்வி ளம்பரிதே. (ருஅஅ)

பெருகிடுவெள்ளத்த னையவிடும்பை பேரறிவுடையனுள் ளக்கெடுமென்
றிருமறைமொழிப்படி யுடனுரமேய்த் திகழுரைசெய்திடத் துவக்கிடலு
மருவிடுமாதுலன் போந்தசனி வந்ததுமீண்டுமென் றுட்சதியான்
மருண்மருந்திடுசெய் திட்டதனுல் வாய்ந்தநுண்ணறிவும லந்ததுவே. (ருஅசு)

வருத்தமுடன்சிறி தெழுதியுடன் வளங்கெழுசையவ ரைப்புடைசார்
திருத்தனற்சேவடி கண்டுவப்பாற் றெரிசனைசெய்திடு செவ்வியினிற்
கருத்தமைமையலொ ழிந்துமெய்ந்நூல் கண்டிடும்வன்மைக லந்திலதாற்
குருத்தகைபாலியல் சம்பவங்கள் கூடிடுமேதுக டாவிடலும். (ருகூ0)

சங்கரர்சொல்வர்சு ரேச்சுரன்வில் சாபத்திலாகிய தீங்கிவைக
ளங்கமைநூலைநின் மாதுலனே யங்கியிலிட்டனன் மருந்திட்டான்
மங்களமேயநின் னுண்ணறிவு மழுங்கியதினிவரும் பொழுதினிலுந்
துங்கமெய்ப்பாடிய வார்த்திகநீ துவக்கினுமுற்றுவ தரிதரிதே. (ருகூக)

என்றுபர்சங்கரர் தாமுனங்கேட் டிருந்தளவிற்பஞ்ச பாதிகைநூ
னன்றுரைத்தன்னவர்க் கொண்டெழுது வித்தவிர்நாண்மலர்த் தாட்புனலா
லொன்றுறுபிரமைமொ ழித்திடலு மோகைமிகுத்தவன் முன்னிலுயர்ந்
தென்றுறழ்கீர்த்திபொ டிட்டசித்தி யெய்தியின்பக்கடன் மூழ்கினனே. ()

வேறு

வாதுற்றிடுமைம் புலவெம்பகையை வயங்கொண்டுவிளங் குசநந்தனனீள்
சேதுற்றிடுகா லையின்மாட்சிமிகச் சேர்சங்கரர்ஞா னதிருட்டியினுற்
றுதுற்றிடுதா யுடனீத்திடுமோர் தருவாய்பெறுதன் மையுணர்ந்தருளான்
மீதுற்றிடுவான் வழிகேரளமாம் வியனுட்டிடைவல் லையின்மேவியரோ. ()

பூர்வாச்சிரமத் தியன்மேனிதரும் புனிதத்தவநன் குபுரிந்துளவோர்
சீர்வாய்த்திடுதாய் முனமேப்பரிவிற் சிந்தைக்கனிவோ டுவணங்கிடலுங்
கார்வானமுறக் களிகூர்மயிலிற் கரையற்றிடுமோ கைகருத்திடைமேய்ப்
பேர்வாய்த்திடுமைந் தகணேரமையப் பெற்றாய்கொலெனப் பெற்றாயெனவே.()

விழைவுற்றிடுமெய்ப் பயனைத்ததியின் மேவுற்றனனித்தி னமீதெனலு
மழையொத்தவிர்சங் கரர்நின்னுளமேல் வாஞ்சித்தல்வழங்கிடவோதெனலும்
பிழைசற்றறியா ளுனையென்விழிநேர் பெறலிற்பெரிதா கியபேறிலையெற்
புழையுற்றிடுமே னியினின்றுருவிப் புனிதக்கதிபுக் கிடநல்கெனவே.(ருகூரு)

கூறுஞ்செயல்கேட் டலுமன்னையுளங் கொள்ளும்படிமிக் கெளிதாநடையா
லீறுந்தியமா மறையுச்சியின்மீ திலகத்துவிதப் பேருண்மையதாம்
பேறுந்தியநிர்க் குணமானபராப் பிரமத்தினுபா சனைபேசிடலும்
வீறுந்தியவென் சுதவென்னறிவான் மேலாகியநிர்க் குணமேவரிதால். (ருகூசு)

ரு கசு

அற்றுனபழக் கமுயற்சியுமெற் கமைவில்லையதா லவிருஞ்சகுணப்
பற்றுனவுபா சனையிற்பெரிதாம் பதமேவிடுவான் பணியென்றலுமே
யற்றுரெவரும் பணியத்தகுமோ ராசாயவிர்சங் கர்சங்கரன்மேற்
பொற்றுதமைகொன்றையையொத்தொளிர்சீர்ப் புசங்கப்பிர்யா தவிருத்தமதால்.

துதிசெய்திடுகொ லரனேவிடலாற் சூலம்பொலிகைக் கணநாதர்பலோ
ரதிர்வானுருமின் றெனிமிற்படாீ டாவோசையுடன் றெரிவாகிடலு
மதிநேர்பவள்வாள் விழிமூடினளாய் மகனேமகனே யெனநாமகிலா
யெதிர்வாருடனே கலன்யானெனவே யிதுவுங்கிடையா மலொழிந்ததுவோ.

என்றுன்னுபுதா யிவளுக்கினிதா யியல்பேறிதுவே யெனவெண்ணினராய்ப்
பொன்றுன்றியமார் பொடுநாற்புயமும் பொலிசக்கரசங் கபயம்வரத
மொன்றுங்கரமம் புயமீள்விழியு முறுமாதவத்பா னமதோதிடலுந்
துன்றுங்கனிவோ டரிநாரணவச் சுதனேசரணு கதரட்சகென. (ருகூகூ)

பகவானிருசே வடிமேன்மனதைப் பதியாவுடனீத் தனளப்பொழுதிற்
புகழ்நீடியசங் கார்விட்டுணுவைப் புசங்கத்துதிசாற் றுபுபோற்றிடலு
மகமேவியவை ணவதூதர்பலோர் மருவுற்றுவிமா னமிசைக்கொளவைத்
தகல்வானவர்பூ மழைபெய்திடநீ டாண்மேவுவைகுந் தமமைத்தனரால். ()

திகழ்காலவிர்சங் கார்தம்மதருட் டிருமேனியளித் திடுதாயுடலைச்
சகமேலவர்கொண் முறையொத்திடவே சமக்காரமியற் றிடவுன்னினராய்ப்
புகலாகியசுற் றமதாயினர்பாற் புக்காரணவேள் விசெய்வோர்மனையி
னகமேவியதா ய்வழற்றருகென் றுசற்றவர்வேண் டவதற்கறைவார். (கூ0க)

வேறு

இவன்புகுந்தசந் நியாசமாநெறிக்கிக லாகு
மவமுயன்றன னென்றுஞ்சாதாரண னல்லன்
றவமிலங்குயர் யோகசித்தியர்கொள்வான் சரிதங்
குவலயத்துளார் தம்மதியாற்குணிப் பதுவோ. (கூ0உ)

நிந்தையுற்றசா மானியர்கொள்விதி நிடேத
பந்தமற்றவற் கில்லைநாமிகற்படு பண்பா
லெந்தவோர்நல மேநமக்கெய்திடு மிதனாற்
சிந்தையொத்தவற் கிசைந்திடிற் றீங்கியா தென்றும். (கூ0ரு)

தக்கமேலவ ரென்பவர்நூன்முறைத் தருமம்
புக்கபேர்களன் றேவென்றுந்துறவறம் பூண்டு
கைக்கணின்றபே ரென்னினுந்தாய்க்கியல் கன்ம
மொக்கவாற்றலா லொருபிழையவர்வயி னுறுமோ. (கூ0ச)

மாதவப்பா சிரமன்றன்றுயினை வதைத்தும்
பாதகத்தினை யெய்தியதுண்டுகொல் பார்க்கி
னேதமற்றவின் னவன்குறைந்தவனெனப் படுமோ
வீதலாற்புக ழல்லதுமக்கிகழ் வின்றே. (கூ0ரு)

இறந்தவர்க்குமில் வாழ்பவனே துணை யென்னச்
சிறந்தவேதமா தியபலநூல்கள்செப் பிடலா
லறந்தவா தநம் மினத்தர்க்குமதுபுரி யாதே
புறம்படுத்திடி னுமறத்தினரெனப் போமோ. (சு0சு)

என்றுபற்பல வாப்புகன்றிறுதியில் யாரு
மொன்றுமக்கினி யுதவிடா தவர்களா யொழிந்தார்
குன்றுறழ்ந்தசங் கரருடன்கொடியரை நோக்கிக்
கன்றும்வெஞ்சினங் கொண்டுசாபங்கழ றிடுவார். (சு0எ)

பில்குபாவிகாள் சந்நியாசிகட்குநீர் பிச்சை
நல்குமேற்றமற் றவர்களாகுகமெய்ஞ்ஞான் மறைகட்
கொல்கிடும்புறம் பானவராகுக வுமது
மல்குமிற்கணே யீமமாகுகவென்றும் வகுத்தே. (சு0அ)

கிருபைமிக்கதா யுடற்சுமந்தேகுநர் கிடைக்கா
திருகரங்களைத் தேய்த்தருள்வலக்கரத் தெரியை
மருவவாக்கிமந் திரவிதிப்படியந்த மனையைப்
பொருவிலாவிற கொடுமயானமதுறப் புரிந்தே. (சு0கூ)

இலங்குகைக்கமண் டலப்புனன்மந்திரித் திறைத்தே
நலங்கொள்கங்கையைப் பிரார்த்தித்தத்திகாரணி நாம
வலங்கொ டீர்த்தமுண் டாக்கிவேதியர்வரா மையின்விட்
புலங்கொள்புட்களைப் பூசுரராப்புந்தி கொண்டே. (சுக0)

முனைவர்சேகரர் தாய்கன்மம்யாவையு முடித்திட்
டினையகேரள தேசஞ்சந்நியாசிகள் யாரு
நினையவுந்தர மற்றதாகுகவென நிகழ்த்தி
வினையின்மேலவர் வான்வழிக்கொண்டுடன் மீண்டார். (சுகக)

சையபர்வதத் தடைந்தனர்கேரளத் தலைவ
னையராசசே கரப்பெயரமைந்தவன் றனது
தையலார்சர சுவதிபண்டாரமாஞ் சாலை
வெய்யவங்கியா லெரிந்தொழிவிதத்தி னுக் கிரங்கி. (சுகஉ)

தன்கவித்துவ நூல்கள்போஞ்செயற்குளந் தளர்ந்து
மின்கவின்றசங் கரரிடம்விண்ணப்பஞ் செய்ய
முன்கவின்றவா நூல்களையவன்கொள மொழிந்து
பின்கலந்துப ஸிராசியப்பொருள்களும் பேசி. (சுகங)

விடையளித்துடன் சீடரோடவ்வயின் விட்டே
யடையுமிந்திர னமிசமாயவனியிற் றோற்று
மடையலார்க்கெம னஞ்சுதன்வப்பெய ரரசன்
படைகளோடுமே விடத்திக்குவிசயம்பண் ணிடவே. (சுகச)

வெளிப்பட்டாதியி லிடைமருதூரிடை மேவிக்
களிப்புடன்சிவ தரிசனம்புரிந்தவண் கவின்ஞேர்க்
கொளிப்பிழப்ப தாஞ் சிவலிங்கவாயினின் றுணர
வளிப்பதாயினர் சத்தியமத்துவி தமென்சொல். (௬௧௫)

அம்பிகாப தி குறிபினின்றறைந்தவம் மாற்ற
நம்பியாவரு மைவகைபெற்றிட நவிலும்
பம்பியாகங்க டவுளருச்சனைமுதற் பயிற்றித்
தம்பவத்துவி தான்மசந்தானர்க ளாக்கி. (௬௧௬)

விவிதமாமத வாதர்களாகியும் வேத
நவிலுமாற்றநம் பாதவராகியு நண்ணு
மெவிதக்கொள்கையர் களுமவணெய்திய வேல்வை
சவிபுகழ்க்கொள்சங் கரர்சமரசம்படப் புகல்வார். (௬௧௭)

இலிங்கதாரண சைவநீத்தேனைய திகவோம்
புலிங்கசக்கிராங் கவைணவரல்லரைப் புகழ்வோ
மலிந்தவென்புவே ணியில்காபாலிகர்களை மதிப்போ
நலிந்தவாமசாத் தேயரல்லார்களெங் நமரே. (௬௧௮)

இரதசந்தன மொழிந்திடுசௌரரெம் மினத்தர்
விரவுச்சிட்டநீத் திடுங்காணபத்திய மேவு
முரவர்யாம்புக முறவரின்னமுமுன்னு ளுதித்த
குரவர்தம்மொழுக் கொழிந்த தாமதக்கொடுங் குற்றம். (௬௧௯)

எவைபுநீத்தியற் சத்துவவெண்ணத்தி ஞேடே
குவைபெறுந்தயை சத்தியங்குருதெய்வ பக்தி
சுவைபெறும்பொறி புலனடக்கிடுதன்மெய்ச் சுத்த
மிவைகடோய்ந்தரு மறையருட்டாய்கருத் திசைந்தே. (௬௨௦)

சிரத்தைபத்திமெஞ் ஞானம்யோகந்தியா னம்விரா
வுரத்தைமேவின ராய்ச்சிவனரிசத்தி யோடம்
பரத்துலாவுசூ ரியன்கணபதிகுகன் படிவாய்ப்
பரத்தவெவ்வுல கத்தையுமாள்பவ னுயும். (௬௨௧)

சாற்றுவார்கள்சாற் றிடுதெய்வம்பாவுந் தானுயு
மேற்றமிக்கசிற் குணக்கடலாகியு மெல்லா
ஆற்றமாருயிர் கட்கெலாமுள்ளொளி யாயெவ்
வாற்றலும்பொலிந் தியாவையுமுணர்ந்தெங்கு நிறைந்தே. (௬௨௨)

பகரும்வேதவீற் றுரையுணரப்படு பவனுப்
புகறனிச்சைமெய்ச் சத்தியாற்புவனகோ டிகளைன்
னிகரின்ஞானநா டகங்கொளுமொருவனு நிகழும்
பகவனும்பர சிவனலாற்பரம்பொரு ளில்லை. (௬௨௩)

என்றெவ்வேதவந் தத்திஞலுஞ்சித்தாந் தஞ்செய்
தன்றியுஞ்சுரு தியுத்தியநுபவமூன் ருலும்
பொன்றிடாப்பர சிவானந்தமயவநு பூதிக்
கின்ருெழிந்திடு பேதநோக்கிகலத ஞலே. (௬௨௪)

சிந்ததன்னிலான் மலிங்கவுபாசனே செய்தே
யுந்ததன்புடை தானவாவியதெய்வ மொன்றைச்
செந்தகைக்குரு மொழிப்படியோகதி யான
மந்திரத்துபா சனேபுரீஇப் பூரண மருவ. (௬௨௫)

சகளவித்தையா லத்துவிதத்திறந் தன்னே
யகமிசைந்திட வநுசந்தானம்புரிந் தன்பு
திகழ்தரும்படி விரதம்யாகந்தவஞ் செய்து
புகரின்மெய்த்தன்ம மூர்த்தியைப்பூசனே புரிந்து. (௬௨௬)

பாவவேர்களேந் தறத்திஞலாத்திகப் பான்மை
மேவியேகுரு தெய்வபத்தியின்மிக மேலா
யாவல்யோகநன் முயற்சியாற்சித்தசுத் தமடைந்
தோவிலாரணுந் தம்விஞப்விரத்தியோ டுணர்வாய். (௬௨௭)

சகளபாவனே யாற்றெய்வவருள்கொடு தன்னேர்
பகவஞங்குரு வருட்டுணேகொண்டசி பதமாஞ்
சுகசமாதிநிட் டையினிலான்மாஞுப வந்தோய்ந்
திகபரத்துளா ரேத்துசீவன்முத்தி யிசைந்தே. (௬௨௮)

செய்யசுத்தவத் துவிதசித்திகொடுவி தேக
கைவல்யச்சிவா நந்தசின்மாத்திரக் கவிஞர்
தெய்வமாவிளங் குதலெஞ்சித்தாந்தமா மென்னக்
கைவருஞ்சுரு தியுத்தியநுபவத்தாற் காட்டி. (௬௨௯)

வாதியாயிஞர் தமையுடன்படுத்தருள் வழங்கித்
தீதில்சீடர்க ளாக்கினர்சங்கர தேவர்
வேதிதிக்குவி சயப்பொருட்டிராகத்து வேசக்
கோதியைந்துவித் தையின்மதங்கொடுவென்ற தின்றே. (௬௩௦)

கேடிலாருயி ரிடத்தெலாமபேதவான் கிருபை
கூடிடுஞ்சிவ யோகசித்திக்குரு லீலை
கோடிவாதிடு பவர்களுநலமெனக் கொள்ளப்
பீடிலங்கவிவ் வகைநடைபெற்றதை யன்றே. (௬௩௧)

தெய்வவான்மபே தத்தொடுதேகசம் பந்தப்
பொய்வழிச்சுகப் பிரபஞ்சமுளதெனப் புந்தி
செய்வதாற்றெய்வ வுயர்வுதாழ்வோதிடுந் திறத்தா
னேவளித்தரா கத்துவேசாதிய நவையும். (௬௩௨)

வழுச்செய்தாமதங் கலகங்கெடுறுமபி மானம்
பழுப்பதன்றிநற் சித்தசுத்திப்பயன் பற்று
திழுக்கறுஞ்சிவ ஞானமொன்றுயிருத் தவினன்
முழுத்ததாரகப் பொருளேயெவ்வகைமுயன் றேனும். (சுஙங)

பிரிகிலாவுபா சனைபுரிகின்றிலர் பிறப்பு
மரிதலுந்தருங் குற்றமார்மலமகல் கிலரென்
றுரிமைமிக்குப நிடதமாதியவுடன் பாட்டாற்
பெரியமுத்திபெற் றிடும்வகைபிறக்கினர் மாதோ. (சுஙச)

இன்னதன்பொருட் டிவ்வகைசங்கரரிகமேன்
மன்னவாற்றிய சரிதமும்வாதவி வரமும்
பன்னிடற்கரி தாவிரிந்துள்ளவோர் பண்பாற்
றன்னமோதினன் சகமுளார்தாமுணர்ந் திடவே. (சுஙரு)

வேறு

சங்கரர்பின்னரி ராமேச்சுரநற் றலத்தின்புடைமேவி
யங்கருண்மிக்கவி ராமலிங்கத்தினை யன்பிற்றெழுதேத்தித்
தங்கவமெத்தியல் வாமசாத்தேயர்க டம்மைமறுத்தின்பார்
மங்களசுத்தசாத் தேயமதத்தைவ யங்கப்புரிந்தப்பால். (சுஙசு)

செப்பருமாடல்வ ளங்கெழும்வேளமர் செந்திற்பதிமேவித்
திப்பியமூர்த்தியா வாகனம்யாவருந் தேரும்படிசெய்தே
யெப்பறுசேயருட் கையிடைநாடியி யக்கம்பெறல்காட்டிச்
சுப்பிரமண்யபு சங்கவருட்டுதி சொற்றன்பொடுபோற்றி. (சுஙஎ)

பின்புசிதம்பர மெய்துபுசிற்சபை பேணித்தினமோரே
யன்புமிகச்சிவ யோகநிலைக்கணமர்ந்தேசிவகங்கை
யின்பொடுண்டாக்கித்த ஞானமெய்வித்தையை யாருங்கொளத்தேற்றிக்
கொன்பயில்சிற்சபை வாணனிடம்விடைகொண்டவ்வயினீங்கி. (சுஙஅ)

காவிரியாற்றிடை யார்திருவானைக் காவின்புடைபுக்குத்
தேவியையேத்துபு முன்னமையூர்பல தீயுந்தகைதேர்ந்து
நீவிடயானைமு கத்தனையம்பிகை நேரிற்றுபித்தே
காவிமலர்ப்பணை மேயவளம்பொலி காஞ்சிப்பதிசேர்ந்தார். (சுஙகூ)

திருவருண்மிக்கவே காம்பரநாதரைத் தெரிசித்தருச்சித்துப்
பொருவில்காமாட்சிதன் சந்நிதிமேவுபு போற்றிக்கனிவோடுந்
தருமமெய்க்காம கோடியந்திரத்தினைத் தாபித்தவண்மேய
சருவதேவாலய சிரஞ்ஞோத்தாரணந் தகவாற்றினராகி. (சுசO)

கோலமிகப்பொலி யம்பிகைகோயில்கொள் குகைபுட்புகுந்தங்கட்
டாலமதித்திடு கோவிந்தபாதருந் தமிழ்மாமுனிவோனுஞ்
சாலவுரைத்துள வித்தைகள்யாவையுந் தாமுன்னுபசித்தி
மேலனைவுற்றருள் யோகதிறற்கொடு மிளிர்வேங்கடம்புக்கார். (சுசக)

மாடமைசுப்பிர மண்யமென்றேகவு மாரத்தினர்போற்ற
நீடருள்வேங்கட நாதனையேத்தியர் நிலையத்திடையன்பாற்
ஞூடருமாட்சித்த னகலாயந்திரந் தாபித்தவனேங்கு
மாடன்மலிந்தபல் கேத்திரத்தும்புக் கருச்சித்துமிக்கேத்தி (௩௪௨)

பாண்டியன்சோழனன் ஞட்டின்றலங்கள் பலவும்பணிந்தன்பா
யீண்டும்விதர்ப்பநாட் டின்புடைபுக்கவ ணேய்ந்தார்களைவென்றே
யாண்டியலாந்தர வேதியராரையு மணிச்சீடர்களாக்கித்
தாண்டியற்சிருத் திரத்துடனேலவி தாபாடியஞ்செய்தே. (௩௪௩)

நன்னலமிக்கமை யும்விதர்ப்பப்பெரு நாடாண்மகராசன்
பின்னடன்மிக்கதன் சேனைகளோடடி பேணிக்கொடுசூழக்
கன்னடதேயம டைந்திடவாண்டிகற் காபாலிகர்போற்ற
மன்னரசன்னகி ரகசப்பேர்புனை மாபாவியுற்றனே. (௩௪௪)

சுடலைகொள்சாம்பலைப் பூசியென்பாரந் துலங்கும்படிபூண்டே
படர்சடைநாலவி ரித்துத்தனேர்கரப் பான்மண்டையோடேனை
யடல்கொள்கரத்தினி டைக்கண்டகோடரி யார்ந்தேநரர்சென்னி
மடல்கெழுதாமரை யால்வைரவற்குவப் பாம்பூசைவயக்கி. (௩௪௫)

வேறு

நரமேத பசுவேள்விக்கு நன்குகாப் பணிந்துதற்போல்
விரவாசா ரம்படைத்து விறற்படை தரித்தாராகு
மரவினிற் கொடியபன்னீ ராயிரஞ்சீடரோடு
வரைகளில் வசித்தூர்மேய மாந்தர்கட்சீடராக்கி. (௩௪௬)

பயமுறுத் தன்னேர்த்தாழ்த்துப் பயிலுமா னிடர்மேற்சற்றுந்
தயவின்றி வைரவற்குத் தகப்பலி யிடும்வழக்கா
னயமலி மறையோராதி நாட்டியன் மாந்தர்கைக்கொள்
வியன்மறை யொழுக்கம்யாவும் வெயின் மஞ்சளா னவன்றே. (௩௪௭)

எங்கணும் வைரவாக மத்தியல் பியைந்ததக்காற்
சங்கரர் வரவுஞ்சீடர் தம்பெருக் குஞ்செங்கோற்கை
மங்கள வரசன்சேனை மலிவுஞ்சித் தாந்தநூலின்
பொங்கமு மலிதலாலே பொன்றிற்று மற்றதன்றே. (௩௪௮)

ஒன்றியல் கிரகசப்போ ருடையனேர்ந் துள்வெகுண்டு
வென்றியா யுதங்கைக்கொண்டு மேவுதன் சீடரோடு
நன்றியற் சங்கரப்பேர் நாயகர்க் கொல்வான் சூழ்காற்
றுன்றியன் மறையோரச்சந் தோய்ந்தநாற் றிசையரானர். (௩௪௯)

வேறு

சம்பவமு ணர்ந்திடுசு தன்வன்மனதூடே
தண்டருசினங்கொடு சமர்த்தனனவ்வேலை
வெம்பவவுருக்கிரக சன்கடிதுதன்னேர்
வெந்திறமிகக்குலவு மந்திரவலத்தான்

மொய்ம்பமையு மொப்பிறைப வன்றனதுசேனை
முற்றுமறவட்டடன்மு துக்குறைவுளார்தஞ்
செம்பதமிறைஞ்சடிபர் தங்கண்மிசைவீழச்
சீடர்களுளத்ததிக திப்பிரமையுற்றார். (௬௫0)

தந்தான தத்ததன தந்ததன தய்யா

அங்காகு மச்செயல றிந்தருளி வல்லே
யைம்பாண வெற்றியும டங்கமுனி வல்லோ
ருங்காரசத்தமிட வங்கதனி லேதே
யுண்டாம முற்றிரண்மு ரண்கொளவனல்லார்
சங்கார பற்பவடி வஞ்செய்திற மைதேர்
சண்டாள னுற்றவைர வன்றுதிசெய் தொல்வோர்
தங்கார ணப்படிவை யிங்கொர்நொடியுள்ளே
சந்தேக மற்றெறிவ னென்றுவரு மவ்வாய். (௬௫௧)

தய்யதன தானதன தானன தானதன

வைரவர்த மாதுருவ மாமான்ம யோகிதனை
வைரமிக வூறுபுரி வானுடு தீயவன்மு
னைதிலெகி ராகிமிக வேகோப மேவியவ
னல்லனுற வேதலையை வாள்வீசி யேமுடிவு
செய்தருணி லாவுமுயர் மேலோர்ப ராவிணையில்
செய்யதுதி சூடிமகிழ் வோடேகி னாறிவில்
வெய்யாருணீடியுயர் தேவேமு னேருகினும்
வெல்வினை கொளார்கள்கரி காபாலி காதையிதே. (௬௫௨)

வேறு

அதுமுதற்காபா லிகமதமுற்று மழிதலாற்றன் மகன் மகாண்ட
முதுநெறியுலகெங் கணுமவிர்ந்ததுபின் முறிதிரைமேற்கடலருகாம்
புதுமைசால்கோக ரணமுதற்றலங்கள் போற்றியாண்டரதத்தாசிரியர்
முதலமாணுக்கர் குழவாழ்சைவ முதுசித்தாந்தத்தினை விளக்கும். (௬௫௩)

கவின்றபாடிபகற் கருத்தாரீல கண்டசிவாசிரியருக்கு
நவின்றசங்கரர்க்கும் பெரியவோர்வாத நடந்திட்டத்துவிதசித்தாந்த
மவிர்ந்தயுத்திகளுக் கியல்விசிட்டாத்து விதயுத்திகண்மறுப்புறினுந்
தவிர்ந்திடாச்சிவசா மரசியமுண்மைத் தங்கருத்தொருமைபெற்றிடலால். ()

அவரனைவரையு மத்துவிதத்த ராக்கியேயவ்வயினீங்கி
நவமலிகூர்ச்ச ரத்தின்மேய்த்துவரை நண்ணுபுபேதவைணவரைத்
தவமுறவென்று பாகவீயப்பேர் தழைத்தநாடடைந்தவண்சார்ந்த
பவமலிதருநாத் திகமதமுற்றும் பாழ்படுத்துபுசயம்படைத்தே. (௬௫௫)

பச்சிமதிசைபுக் கனர்மற்றங்காட்டைப் பாலனம் புரிந்திடுமிறைவ
னச்சியல்புறுநாத் திகத்தொடுமூர்க்க நண்ணியுற்றுனவனெறியே
யுச்சிதமெனக்கொண் மாந்தர்சங்கரரா லோதுசொலேற்கலராக
மெச்சியற்பெரியோர் நாத்திகமதத்தின் வேர்களைவானுளங்கொண்டே (கூருகூ)

தமதுநூல்களைக்கொண் டிறையவையணைந்து தக்கவாபோதனைபுரிந்தங்
கமருநாளையின்மன் னுடற்கொள்பிரார்த்த வநுபவம்மறுதிபெற்றதனுற்
சமனுலகடைந்தா னச்செயலுணர்ந்த சங்கரரோகைமிக்கவாராய்
விமலமேவியதன் சீடர்கட்பார்த்திவ் விதம்விளம்பிடவுளம்வலித்தார். (கூருஎ)

நீவிர்யாவரும்யா ருந்தெரியாத நிலையில்யானிலவுமிவ்வுடலை
மூவிருமாத மளவுந்தைலத்தின் முழ்குவித்தளிக்குதிரவதி
மேவிடிலிதனுட் புகுவன்யாவெனன்ன விளம்பியேயவ்வுடற்குள்ளோ
பாவியானவர்தம் மையுங்கதிநெறியின் பாற்படப்புரிகுவான்புகுந்து. (கூருஅ)

கணத்தரசுடலிற் கலந்தனரச்சீர் காண்டலுமனைவியாதியரும்
பிணத்தமையரச னுயிர்த்தனனென்றுட் பெருமகிழ்வெய்தினரக்காற்
குணத்தகைப்பெரிய ராமரசுடனே குலவுமந்திரிகளைக்கூவித்
தனத்தமன்னவனே தானெனவெண்ணத் தக்கவாறிவ்வகைபுகல்வார். (கூருகூ)

அமைச்சர்காள்யானென் னுடலகன்றியம ன்விர்சபையடைந்துமுன்னுறுகா
லிமைத்திடாநோக்கத் தந்தகன்சினமிக் கியன்றகிங்கரர்தமைக்கூவி
யமைத்தவின்னவனுக் கின்னமுஞ்சின்ன ளாயுளுண்டாதலின்வல்லே
சுமைத்தனுவழிக்கு முன்னுறவிடுத்துத் தோய்திராற்கணத்திவணென்றான்()

கேட்டவரரைமாத் திரைக்குளென்னுடலங் கிடைத்திடவிடுத்தனரியம
னுட்டயற்சிறிது தாமதித்துறுங்கா ளுன்கண்டவதிசயம்பலவுங்
கோட்டமற்றெவரு மின்புறும்வண்ணங் கூறுகின்றனனெனக்கிளப்பான்
சேட்டருமறையா திகளைமெய்யன்பாற் சிறந்தபூசனைபுரிவாரை. (கூகூக)

முதுமறையொழுக்க முடையபரையாக முதற்புரிகின்றவர்தம்மை
யதுலசத்தியந்தன் மாதிகொள்வாரை யந்தகன்சௌமியவுருவாய்
மதுரமென்மொழிகொண் டுபசரித்தோகை மருவியுள்ளக்கனிவோடும்
பதுமநாண்மலர்த்தாள் வணங்குபூசை பண்ணிவானுறவிடுக்கின்றான். (கூகூஉ)

மறையநுட்டான மிலரைத்தெய்வீக வான்கன்மங்களைநிந்திப் பாரைக்
கறைகொளுத்திகரை மூடரைக்கூற்றன் காண்டலுங்கரியமெய்யினனுப்
நிறைபெருங்கோப மிக்கமைந்துளத்தி னினைதொறுநடுங்கிடும்வண்ண
முறைதருகண்க ளனற்பொறிசிதற வுருட்டிநாசிகள்புகைகால. (கூகூந)

வக்கிரதந்த மிருகடைவாயின் மன்னுறவதரத்தைக் கௌவி
யுக்கிரமிகநோக்கருமுகத்தினனு யோங்குதண்டங்கொடுமோதித்
துக்கிதக்கும்பி பாகம்ரௌரவமுற் சொன்னரகங்களுட்டோய்த்தான்
புக்கியனிர்ய மலத்தொடுசெந்நீர் புழுக்களாதியினிறைந்துளவால். (கூகூச)

இவ்வகையாவு மெனதுகண்கூடே யிலையிதிலையமெள்ளளவு
மொவ்வியநமது மதமொருபயனு முள்ள தன்றவ்வளவேகொ
லெவ்வமிக்களிக்கு மிழிவுமுற்றுள தா லின்பமார்சுவர்க்கமுண்டென்னத்
தவ்வறுவேத மாதிநூல் சாற்றல் சரதமேயம்மயா னுணர்ந்தேன். (௬௬௫)

முதுமறையாகஞ் சத்தியந்தவசு முழுதுநம்முயிர்க்குறுற் றுணையா
விதுதெரிந்திடுநா னிம்மதப்பிணிப்பற் றிருக்குரைத்திடமதத்தியைவேன்
கதுமெனநகரத் தமைந்தவர்பலருங் கைக்கொளுத்திகம்விடுத்தெனைப்போற்
புதுமைபெற்றியல்சன் மார்க்கமுற்றுய்வான் புரியவென்னுளம் வலித்தனனல்()

இன்னவாக்கினைக்குட் படிகிலர்தம்மை யிராச்சியத்தகற்றுமினின்றேன்
மின்னவிர்வாளால் வெட்டுமின்வேத வித்தகர்தமையழைத்திடுமி
னன்னவர்க்களவி றிரவியம்பசுக்க ளரதனநல்குமின்யாண்டும்
பன்னகசயனன் பரசிவன்படிவம் பலபிரதிட்டைசெய்திடுமின். (௬௬௭)

ஆத்திகநெறிபுக் கவரெலாந்தம்ம தாருயிரிற்பெரிதெனக்கொள்
சாத்திரமுறையிட் டுளவெலாமொருங்கு தபக்குமினென்றருண்மிக்க
வேத்திசைத்திடக்கேட் டலுங்கடிதச்சம் விவேகமேவமைச்சரேவலரா
லேத்தியல்வளங்கள் பலவுமோதியவா றியற்றிடக்கண்டிறைமகிழ்ந்தே.(௬௬அ)

விதிமுறைநான முடித்தன்பினோடும் விட்டுணுபரசிவனுருவம்
பதிதரப்புரிந்து பூசனைகுயிற்றிப் பபின்மறையோர்க்கெலாமெண்ணி
னிதிசொரிந்துளத்துற் சாகமிக்கமைந்து நிலவுகான்மதிபெறுமமைச்சர்
நுதிகொள்வேலிறைவற் பணிந்தனர்நின்று நவலுவரிவ்வணமாதோ. (௬௬௯)

நவைபுரிதெம்மைக் காத்தருளரசே நமதுநாட்டகத்தினுன்மறையின்
சுவையுணர்ந்தவற்றி னொழுக்கமைதரும்பூ சுரர்கள்வான்சுரர்களேயேனை
யெவைபுமாற்றினம்யா கந்தவந்தான மின்னவென்றெவருமோர்ந்தில்லா
ரிவைநிகழ்வெதிர்யா மியற்றவேண்டுவவோர்ந் திசைக்குதிரென்னமன்னியம்பும்.

அயலிலென்சாமி யானசங்கர்த்தா மளவிலாச்சீடர்களுடனே
தயவுமிக்குற்று ரவரைமாணுக்கர் தமைக்கொடுபோதனைபுரிவா
னியலுமென்முன்னந் தம்மினென்றிடலு மியல்வலாரவரிடமேகிச்
சயமலிசிட ராரையுமரசன் சந்நிதிமுன்னுறத் தந்தார். (௬௭௧)

எதிருறுஞ்சீடர் தம்மைநோக்குபுநீ ரிந்நகர்மாந்தர்கட்கெல்லா
முதிர்மறைமகஞ்சாத் திரந்தவந்தான முதலநன்னெறிகளைமுற்றும்
புதுமைபெற்றிடவென் முன்னுறவிருத்திப் போதனைபுரிகுதிரென்னக்
கதியருள்குரவ னுமிறைசொற்போற் கற்பித்தார்துற்பித்தோவுறவே. (௬௭௨)

இன்னவாறினையி லந்நகரெங்கு மியலும்வைதிகதருமங்க
ணன்னலமுடன்சம் பூரணமுறுங்கா னுதனுட்களிமருவினனுத்
துன்னருமகிழ்வாற் பொன்னவமணிகள் சோனையிற்பொழிந்துவந்திருந்தா
னன்னகாலையினுத் திகம்விடார்சிலவ ரனைந்தவர்நாட்டைவிட்டகன்றார்.(௬௭௩)

மன்னதுகாலை சங்கராருரைத்த வண்ணமூவிரும்தியகன்று
முன்னவிர்மேனி யடைந்திலரந்த முறையினற்சிடரிலொருவன்
மன்னவன்பாற்போந் திராசியத்தாறு மதியமுங்கடந்ததுதமது
மின்னமைமேனி தயிலத்துற்றுளதான் மேற்செயலறிகிலமெனலும். (கூஎச)

இத்தினமுற்றும் பாதுகாத்திடுதி ரெய்திடுபிற்றைநாளதன்பா
லொத்தியன்றிடுவே னென்றவற்போக்கி யொல்லைமந்திரர்தமைக்கூவிப்
பொய்த்தியக்கினர்க்கத் தகைமைதோயிறைவன் புகலுவனின்றிரவிடையென்
னித்திரைக்கனவின் மாந்தராருயிர்கொ ணிகரில்காலன்றனைக்கண்டேன். ()

மேதகுமெனதா ருயிருடலகலும் வேலையிப்போதெனத்தெரியேன்
போதநான்முயன்றும் வாயுவென்வசத்திற் போந்திலதாகையினலென்
ஞதரச்சேட்ட குமாரனுக்குவப்பி லணிமுடிசூட்டுதுமவனைக்
காதலிற்செங்கோன் முறைதிறம்பாது காத்தனுங்கடமையாமாதோ. (கூஎகூ)

என்றுரைத்தபிடே கத்தினுக்குரித்தா மெல்லையில்சாதனமெல்லா
நன்றுகூட்டுதிரென் றேவவக்கணத்தே நவிற்றினரன்னகாலையிற்றன்
மின்றிகழ்முடியன் னவன்மிசைக்கவித்து வேந்தியல்விதியெலாம்விளம்பிப்
பின்றைவைகறையி லெழுந்துநாளுதி பிறக்குபுபூசனைபுரிந்தே. (கூஎஎ)

முன்னுறவமைவார் தமக்கெலாமரிதன் முளரியந்தாட்டுணைப்பத்தி
மன்னுமெய்புபதே சத்திறம்பலவா வகுத்தரிநாரணவென்னப்
பன்னுபுமன்மெய் நீத்தருண்முன்மெய்ப் பாற்புகுந்தெண்ணெயினெழுந்தார்
கொன்னுறுசெயறோர் சீடர்களின்பக் குளிர்கடன்மூழ்கினர்மாதோ. (கூஎஅ)

இன்னவாறியனுட் சங்கரர்மறுநாட் டிடையினுத்திகருறுஞ்செயல்கேட்
டன்னதேயம்புக் குசாவுகான்மன்ன னவர்குருவாநிகழ்தலின்ற
பன்னரும்வாத மிட்டவர்த்தோல்வி படப்புரிந்திட்டுமற்றவர்தா
மன்னபசெயமெய் திலமெனத்தாங்கொண் மதம்விடாமதத்தினரானர். ()

ஆயகாலையிலம் மன்றனதூர்நீத் தயற்பதிமேவினனு றுங்காற்
சேயசங்கரராண் டெய்தநாத்திகர்தந் தேசிகன்கேள்வியுற்றடைந்து
தூயர்பால்வாதிட் டாற்றலனுகித் துலங்குமந்திரத்தில்வெல்வேனென்
றேயமன்னவற்பார்த் தீண்டொராச்சரிய மெய்திடும்வருகணத்ததனை. (கூஅ௦)

என்னுயர்ஞானங் கொண்டுணர்ந்தனனஃ தென்னையென்றெனைவினவுதியேன்
மன்னுபார்பிளக்கு மதிற்பிரவாகம் வரம்பறப்பெருகுபுமனைமுற்
றுன்னுமெய்ப்பொருளு மமிழ்தரப்புரியுந் தோயமற்றதனிலோர்தோணி
முன்னுறமிதந்து வருமதன்மிசைநா முயங்கிடிற்கடப்பமவ்வெள்ளம். ()

இன்றெனிலொழிவோ மென்றுமாயையினுங் கியற்றியிவ்வெள்ளத்தெவ்வணநா
நின்றிடலென்று மிதந்ததோணியின்மே னேர்ந்திடுவோமெனப்புகல்போ
தொன்றுசங்கரர்தா மவன்முதலிடைநீ யூர்வன்யான்கடையிலென்றிறைபா
னன்றுரைத்தனர்மன் னந்தவாறேத நாத்திகன்முன்னுறவூர்ந்தான். (கூஅ௨)

மன்னவனூர்வான் புகலுஞ்சங்கரர்தாம் வலிதவன்கரம்பிடித்தீர்த்துத்
தன்னருகமைத்தார் நாத்திகாசிரியன் சலத்திடைச்சேணுறச்சென்று
பின்னவனியில்வீழ்ந் தம்மதம்பிடித்த பேயரெய்திடுங்கதிதெரித்தா
னன்னவன்காயத் துறுப்பொரெண்ணூன்கு மகன்றன தனித்தனிசிதைந்தே. ()

ஈனனேறியதோ ணியும்புவிவீழ்ந்த திரும்பிரவகமும்வறந்த
தானபான்மையினைக் கண்டமன்னளவி லாச்சரியம்படைத்தவனுப்
ஞானநாயகரை வினவிடச்சொல்வார் நாத்திகன்றனதுமாயையினு
லூனமுற்றென்னை மரிதரப்புரிவா னுன்னியிவ்வகைபுரிந்திட்டான். (ருஅச)

நானதையுணர்ந்திட் டெனதுமாயையினு ஞசமங்கவனுறப்புரிந்தே
ஞனபான்மைகனி யறிந்திலைபவன்ரு ஞற்றியதிங்குதற்கழிவு
தானவிற்ருதென் றுன்னிநின்மொழியைத் தடுத்திலன்மானத்தாவிறந்தான்
மேனிகழ்செயல்க ளறிந்துநானுன்னை மேலிவராதிழுத்திட்டேன். (ருஅரு)

எம்மதத்தவர்க்கு மம்மதத்தரமொத் தேபிறப்பிருப்பிறப்புறுமென்
மெய்ம்மகத்துவஞ்சான் மேலவருரைக்கு மெய்ம்மைசால்சான்றுநானென்னச்
சம்மதமொடுந்தற் சரண்புகுஞ்சீடர் தமக்கெலாந்திகழிலக் கியமாக்
கைம்மருவாம லகத்தினிற்றெரித்தான் களேபரங்காண்டியான்மன்னே. ()

தராதிபரென்றிவ் வுலகையாண்டிடுநின் ருதைமூதாதையாதியர்கொள்
புராதனமேலா நன்னெறியெங்கே புன்மைசானுத்திகப்பெயர்தோய்
நிராதரமதமெங்கேயதைநீத்து நீயிதின்மேவினைமரபோ
விராசனெவ்வழியவ் வழிகுடியென்ன வியம்பிடும்பான்மையினுலே. (ருஅஎ)

காவலன்கொடுங்கோ லுடையனுய்ஞானக் கண்ணமைந்திலனெனிநாட்டின்
மேவனைவரும்பாழ் நெறிபுகநேரும் விதிவழிச்சென்றிடுமதிபோ
லாவதாலன்னே ராற்றுவெம்பவங்க ளனைத்துமன்னவர்புடைவருமா
னீவகைமறந்தாற் றியசெயல்செங்கோ னீதிமன்னவர்க்கிசைந்ததன்றே. ()

என்றுபற்பலவாச் சங்கரர்சாற்று மிணையில்போதங்கொடுவேந்த
னன்றுதன்னுளத்தச் சங்கொடுநான்ரு னவிற்றுதீவினைகழிந்திடவு
மென்றுறழ்ஞான மெய்தவுங்கடைக்க ணின்பநோக்கருடிரென்றிரப்ப
மன்றுயரொழியும் படியரிநாம மந்திரோபதேசமீந்திட்டார். (ருஅகூ)

பிறங்குசங்கரர்தம் பானுபதேசம் பெற்றுமாணுக்கனுமன்னன்
மறங்குலவியதன் னுடைந்தவன்சார் மாந்தரையாத்திகராக்கி
யறங்குலவியல்வை திகதருமத்தோ டரிபத்திமேவிடப்புரிந்தான்
றிறங்குலவியசங் கரருடனந்தத் தேயநீத்தயல்கொனுடைந்தார். (ருகூ0)

இன்னணமுலகெங் கனும்புகுந்தாங்காங் கியன்மதபேதமுற்றெழித்தே
நன்னலக்குருசம் பிரதாயநெறியே ஞாலமுற்றமைத்தனர்ஞான
மன்னருளிராமானந்தசற்குரவன் மலரடித்துணைகொடத்துவிதந்
துன்னருட்சமயா தீதகௌமாரத் தொண்டர்நெஞ்சொத்திலங்கிடவே. (ருகூக)

வேறு

பற்றற்றவர்தாழ் சங்கரமுனிவர் பாகீரதிதீரத்
துற்றற்பொடுவே தாந்தவிசார முஞற்றித்திகழ்நாளிற்
குற்றப்பொலிவா ரபிநவகுத்தப் பெயர்கொண்டுளகோரன்
றற்றர்க்கமதால் வென்றமைபுன்னித் தன்னுட்சகியாஞய். (௬௯௨)

மூவுற்றிடவே யதர்வணவேத முறையின்படிதேவை
யேவுற்றனனஃ தெய்தவுளஞ்சி யிரிவுற்றிடலோர்ந்து
பாவுற்றிடுகோட் டியிலவமானம் படவேபுலவோரை
நாவுற்றிடுவன் மையின்மிகவுள்ள நலிவுற்றேதோல்வி. (௬௯௩)

அடைவான்செருக்குக் காட்டிடன்மெத்த வதிபாதகமென்னூ
னடைமெய்யென்னப் புவியினர்தேர்வா னடித்தற்குளங்கொண்டு
விடையோனமிசாஞ் சங்கரரதனை மேவும்படிதன்பாற்
றடைதீர்த்திடலு மூலமடைந்து தரலுற்றதுசெந்நீர். (௬௯௪)

தூயவராடை கங்கையின்மாடே துவைப்பான்கொடுசென்ற
நேயமிகுந்த வானந்தகிரியிந் நிலைமைதனையோர்ந்து
மேயமனஞ்சற் றுஞ்சகியாஞ விரைந்தெய்துபுதேவே
சேயநன்மேனிப் பாற்பிணியேதோ சேர்ந்துள்ளதுபோலும். (௬௯௫)

சீக்கிரமாக வோர்பரிகாரஞ் செயவேணுமென்றேத
நீர்க்குமிழிக்குப் பூண்கட்டிடவுண் ணினைவுற்றனைகொல்லென்
றாக்கமுடன்சொற் றிடுதலுமேலோ னுவமானமதற்றீ
ராக்கையின்மான மற்றுளிரேனு மந்தத்திருமேனி. (௬௯௬)

சுகமுடனுறிலென் னனையவரின்பந் தோய்தற்கினிதாகுந்
தகவிதுளங்கொண் டெங்கண்முறைக்குத் தாமொத்தருள்வீரென்
றகமலியன்பா லானந்தகிரிதா னறைசொற்செவியேற்றே
புகலுவர்சுதகே ளூழ்வினைவடிவாம் பொய்புற்றிடுமெய்க்கே. (௬௯௭)

வன்மைகொள்பிணிதா னிருவகையாக மருவுமவற்றைக்கேண்
முன்மையதாகு மிருவினைதன்னுன் மூள்வாமற்றென்று
தன்மையதாதுக் குற்றமதாலே சார்முன்னுகர்வாற்போந்
தின்மைகொளேனைக் கோர்பரிகாரஞ் செய்வானிசைகில்லேன். (௬௯௮)

வேறு

ஏலவெப்பொழு தேனும்வீழ்ந்திடுவதாம் யாக்கை
காலம்வந்திடி லொழிகின்றதன்னது கடப்பான்
சாலவேபரி காரமாதியபுரி தந்து
ஞாலமீதுவைத் திருந்திடநசையெனக் கில்லை. (௬௯௯)

தண்டரும்பசி யான்மிகத் தளர்ந்தவ னன்ன
முண்டபின்னிலை தனைப்புறத்தோச்சல ஞகி
யெண்டருங்கிழ கத்துள்வைத்திருப்பது முண்டோ
விண்டதன்மையே யெனக்கியானமைதரு மேனி. (எ00)

காரியப்பொருட் டயற்பதிபுக்ககா வலன்றன்
கோரியுற்றது முடிந்தபின்னுந்தனோர் கோயி
லூரிடத்திலெய் தாதவனுறைகின்ற துண்டோ
சீரியற்பெறு மைந்தநீதேர்ந்திசெப் புதியால். (எ0௧)

நானிலத்துளார் யாவருநாத்திக மாதிச்
சூனியக்கொடு மதத்துழலாதொராத் துவித
மேனிலைப்பெருங் கதிப்பிரவேசமுற் றிடுவா
னியானினைத்துவந் தனனவ்வாறியற்றுபு முடித்தேன். (எ0௨)

வந்தகாரிய முற்றுவித்தபின்மரு வாக்கை
யெந்தவாறினி யிருக்கினுமதுகுறித் தெனது
சிந்தையூடொரு சிறிதுமாகுலமிலை தேரென்
மைந்தவிங்கிது குறித்துநீயுன்னுளம் வாடேல். (எ0௩)

என்றுகூறலுந் தோடகன்றமக்கிலா விடினு
நன்றெம்மோர்பொருட் டாற்செயத்தக்கநன் னலங்க
ளின்றுநாம்புரி குவமெனமௌனமுற் றிருந்தா
ரொன்றுமோதில தேவிடையென்றுநெஞ் சுவந்தே. (எ0௪)

ஆன்றசீர்மருத் துவர்பலர்களைவர வழைத்தே
யேன்றவாம்பரி காரமிக்கியற்றியும் யாதுந்
தோன்றலின்மையின் வைத்தியநாதனைத் துதிக்கச்
சான்றவீசுர னசுவினிதேவரைத் தந்தான். (எ0௫)

வேதியப்படி வோடுமேயவர்பிணி விசாரித்
தேதுவாதன்மாற் றலர்கடம்மேவலே யாமென்
றோதினர்களக் கணமறைந்திட்டன ருணர்ந்து
கோதின்மெய்த்தவப் பதுமபாதன்சினங் கொண்டு. (எ0௬)

அடுத்ததாமபி சாரகன்மத்தையாண் டவன்மேல்
விடுத்தவன்மிசைச் செலுத்தியென்சினம்விடுப் பனெனத்
தொடுத்தவாகரு மம்புரிதரத்துவக் கிடலுந்
தடுத்ததாலருட் சங்கரப்பெயர்புனை சலதி. (எ0எ)

தாய்க்கழற்றரா மையிற்சினந்துறவரைச் சகத்தா
ரேய்க்கவேசபித் தாரிவரெனுமறி வீனர்
வாய்க்குமிச்செயற் காரையிங்குவமையா வகுப்பார்
வாய்க்குநாக்கொடு பதமிடுஞ்செயலினை மறந்தே. (எ0அ)

சங்கரப்பெயர்க் குருபரன்றடுக்கவுஞ் சகியான்
பங்கயப்பதன் மந்திரவேவல்பண் ணியதாற்
றங்கலாங்கன்ம தேவதையவருடற் றணைந்து
பங்கமாரபி நவகுத்தற்பற்றிப்பாற் றியதால். (எ0௯)

அன்னதோர்தரு மந்திரவாதி களாரு
நன்னலங்கொண்மெஞ் ஞானிகள்பெருமைநன் குணரா
தின்னலாற்றினர் தமக்குறுநாசமென் றெளிதோர்ந்
தன்னபுன்றொழில் விட்டனர்சாந்தமிக் கமைந்தார். (௭௧௦)

சாற்றுமேலவர் தாமலாற்றம்பத வழிபா
டாற்றுவார்களைக் கொண்டுமற்றவர்க்குமா றுகி
யேற்றுளார்களைக் கொண்டுமிவ்விருநிலத் திருப்போர்க்
காற்றுவார்கணன் கெனற்குறுகதைகரி யாமால். (௭௧௧)

இற்றவிர்ந்திடு திருவருட்சத்தியை யிகழ்ந்து
கற்றநூற்பரோட் சத்திற்றும்பிரமமாக் கணித்திட்
டுற்றவாதிடு வாரவனுய்க்குமே வலினைக்
கொற்றமாயையின் செயலெனக்கூறுவர் போலும். (௭௧௨)

வேறு

மற்றோர்நாட்சா னவிதீர மருவுங்குகைபுட் சங்கர்தா
முற்றோவறுமா ணுக்கரையாண் டுறுத்தியோக சித்தியினன்
மற்றோய்குருநா டடன்சித்தி புரத்தின்மாடு மருவியெதிர்
பெற்றோர்தமக்கு மயறீரப் பிரமவித்தை போதித்தே. (௭௧௩)

வாமாசார சாத்தேப மறுத்துமகாசத் திகள்பொருந்து
நாமாசார வெகுளியெலா நவிலுந்துதிக ளாலொழித்துத்
தேமாசாரச் சௌந்தரிய லகரித்திருநூல் செப்பியணிப்
பூமாகயிலா சத்தலத்திற் போந்துபூசை முதற்புரிந்தே. (௭௧௪)

துலங்குசீர்ச்சந் திரமோலீச் சுரப்பேரிலிங்கங் கொண்டணைந்திட்
டலங்குபொழிற்கிம் புருடகண்டத் தணைந்துபிரம ராக்கதற்கு
மலங்குந்துயர்செய் பிரமகத்தி மாற்றியந்தப் பூதத்தை
யிலங்குசீடர் மடங்காப்பா யிலக்கநான்கு கலியிலென்றே. (௭௧௫)

தூயமுனிவர் பற்பலர்க டுதிக்கவருள்செய் தவணீங்கி
யேயசுவாலா முகிபகளா முகியோடிரேவ ணகிரிமுத
லாயதலங்கட் சார்ந்தவண்சா ல்டிபார்பலர்க்கு மருள்வழங்கிச்
சேயமகிமை பலகாட்டித் தீமைபொழித்திட் டுணர்வளித்தே. (௭௧௬)

சீடரினம்வாழ் வரநதியின் றீரமடைந்தார் மற்றொருநாட்
சேடனனைய சநந்தனன்றான் றிகழ்பூகோள ககோளநிலை
கூடவடியேற் களித்திரெனக் கும்பிட்டிரப்பவுளமிரங்கி
நாடவவற்றையோகத்தா னபமேற்சென்றெங் கணுமணைந்தே. (௭௧௭)

மேருசிகரங் துருவநிலை மேற்கொள்கிரக மண்டலமுற்
சாருங்ககனத் தியல்வவெலாஞ் சாற்றிக்காட்டிப் பூகோள
மோரும்படியங் கைக்கனியி லுணர்த்திக்கணித விராசியமும்
பாருந்தியவெவ் வித்தைகளும் பயிற்றிப்பாகீ ரதிசேர்ந்தார். (௭௧௮)

* சச்சம்பொருந்துஞ் சங்கரர்செப் தக்கவிளையாட் டோர்ந்துளத்தி
லச்சஞ்சிறிதற் றவ்வண்ண மாற்றுஞ்சிட ராஞர்க்குக்
குச்சம்பொருந்தும் பவமகலக் குறித்துமகிமை பலகாட்டிக்
கச்சம்பொருந்துஞ் சாபம்விமோ சனமாங்காலங் களும்புகன்ருர். ()

நிகழோர்நாட்சங் கரர்தெளிவா நிட்டைகூடி யுறும்போதின்
முகமார்விழிகொண் டவர்ப்பார்த்து மூவாவின்பம் பெறவுன்னிச்
சுகர்சிடர்மெய்நா ராயணீ சொருபமோடு சிரஞ்சீவித்
தகைதோய்கௌட பாதர்விண்ணந் தனிற்போந்தளித்தார் தரிசனமே.()

கோலம்பொலிதங் குரவருட் குரவரானர் கருணையினுன்
ஞாலம்பொலிய வரக்கண்டு நனிவாழ்த்துபோற் றினர்நிற்பச்
சீலம்பொலியன் னவர்மைந்த திகழுன்சரிதங் கோவிந்தன்
மூலம்பெறவப் போதப்போ துரைத்தான்காண்பான் முன்வந்தேன். ()

எல்லென்ருளிர்வோய் நீயிதன்மு னிசைத்தநூல்கள் யானுணரச்
சொல்லென்றிடவு மவற்றினுட்பந் தோயுமிடங்க டொறுங்காட்ட
வொல்லென்றுகடீர் மாண்டூக்கி யோபநிடத முரைத்தியெனச்
செல்லென்றுவப்பிற் பொழிந்திடலுஞ் சிந்தைமகிழ்ச்சி மிகக்கேட்டே.()

தமதுட்கோள்வேற் றுமைசிறிது சாராவண்ணம் வெளிப்படுத்த
வமலத்தகைசால் சங்கரர்த மாற்றலறிந்துட் டிருத்தியரா
யெமதுமரபை விளக்கிடுநீ யென்னிலறிவிற் சிறந்தனையாற்
கமமார்பாவக் கலியிலரக் கரைநேர்வாருங் கதிபெறவே. (எஉ௩)

புரியுநின்னை ரறிவாற்றல் புந்தியிடைநா டிடுந்தோறும்
விரியுமோகை பெறுகின்றேன் வேண்டும்வரங்கள் கேட்டியெனப்
பரிவிற்பரமா சாரியர்நும் பாதாம்புயநற் றெரிசனத்திற்
பெரியபேருன் றிலையதனைப் பெற்றேனினியென் பெறுவதுவே. ()

எலையில்கருணை புரிந்தமையா லெப்போதினுமென் மனம்பிரம
நிலைகொளுணர்ச்சி தனின்மாரு நிலைமைபடைப்ப வருடிரெனத்
தலையிலவர்தாள் சூடிடலுந் தந்தோமவ்வா றென்றுமொழிந்
தலையில்பிரமா னந்தமடைந் தகன்ருர்வான வழிமாதோ. (எஉ௫)

நம்புமடியார் தமைத்தேற்ற நானேபரமமென் றோதிநலம்
பம்புபெரியோர்க் காணில்வழி பாடாற்றடிய னென்றுநுவல்
தெம்புபொருந்துஞ் சங்கரர்தஞ் சீலமனைய ரறிவதன்றிக்
கும்புபொருந்து நூலுணர்வு கொண்டோருரைப்ப தன்றன்றே (எஉ௬)

சிலக்கௌட பாதமுனி சென்றவுடன்சங் கரர்களிப்பாய்
ஞாலத்துடன்றா லமுமறந்த ஞானசமாதி பொருந்தினராய்ச்
சாலத்தினங்கள் கழித்தோர்நாட் சகமாருணர்வுற் றனரந்தக்
காலத்தருகார் மாணக்கர் கணங்கள்பரவிக் களித்தேத்த. (எஉஎ)

---

* சச்சம் - மெய்.

மற்றோருணர வெதிர்கால மன்னும்பரம ரகசியங்கண்
முற்றோ திடக்கேட் டவருவப்பின் மூழ்கியெல்லா முணர்ந்தவரென்
றுற்றோதுபுதோத் திரஞ்செயலு முளதோர்குறையிங் கெமக்கென்னச்
சொற்றோர்பதும பாதன்முதற் சூழ்மாணுக்கர் திரளுடனே. (எ௨அ)

வேறு

திருமலி காஸ்மீரப்பேர் திகழுமண் டலத்தின்மேவிப்
பொருவில்சீ நகரநாட்டிற் பொலிசர சுவதியின்பச்
சருவஞ்ஞ பீடமீதிற் றமிருந் திடமுயன்றார்
பொருபவ ராருமில்லாப் பொருவறு புனிதர்மாதோ. (எ௨௯)

இயலுமவ் விடத்திற்றேவ விருடிக ளாலமைத்த
வயமலி வித்யாபீடம் வாணிதன் கோயிலொன்று
பயிலுமற் றதனுண்மேய பத்திர மண்டபத்திற்
கெயில்கொணாற் றிசைபுமொவ்வொர் வாயில்க ளிசைவமன்னோ. (எ௩0)

மூடிய வாயிறோறு மொய்த்துவித் தைச்சொரூபப்
பீடிய லமரரன்பிற் பேணுபு வாழ்வரெல்லா
நாடிநன் குணரவல்லா னவில்கத வந்திறந்து
மாடியல் சருவஞ்ஞச்சிம் மாதனத் துறலாமென்றே. (எ௩க)

அத்தகா தனங்கொண்மேலோர்க் கபிராமி யருட்சீர்மல்கு
முத்தரங் கிழக்குமேற்கென் றோதுமுத் திசைசால்வாயி
லொத்தவத் திசையின்மேலோ ருறுதலாற் றிறக்கப்பட்ட
வித்தக னொருவன்றெற்கி னின்றுமே விடாததாலே. (எ௩௨)

மூடுறு தெற்குவாயின்மு ன்னுமீஇப் புலவர்பல்லோர்
கூடுபு திறப்பான்சென்றுங் கூண்டுள வித்தைத்தெய்வப்
பீடுறு மருமைசாலோர் பிரசினைக் கிறுக்கலாற்றார்
வாடுபு திரும்புஞ்செய்தி சங்கரர் மனத்துட்டேறி. (எ௩௩)

மாயிரும் புகழ்சால்வித்தை மண்டபம் வலஞ்செய்தப்பால்
வாயிலைத் திறப்பான்றம்முண் மதித்தறு பானன்கெண்கொண்
டேயியல் படியொவ்வொன்றி லேறிடத் துவக்குதோறு
மேயிய றெய்வமொவ்வொர் புலவனுய் வினவவாங்கே. (எ௩௪)

சூக்கும மறைபொருட்டாய்ச் சொல்லரும் விடையவாகித்
தாக்குறு வினக்கட்கெல்லாஞ் சரதமாத் திருத்தியாகி
நோக்குமாட் சேபமில்லா நோன்மைசால் விடைகளோதி
லேக்குறு தெளிதினேதி யெவ்வித்தை நிறைவுங்காட்டி. (எ௩௫)

தலங்கொள்சே பானம்யாவுந் தணந்தருட் சநந்தனன்ற
னலங்கொண்மெய்க் கரம்பிடித்து நண்ணலும் வாயின்மாடே
யிலங்கத னுட்கூடாவு மியலசரீரிக்குந்தாம்
வலங்கொண்மெய் விடைநல்கக்கால் வாயிறுனே திறக்க. (எ௩௬)

மிக்கவா யினுட்புகுந்து மிளிர்சர்வஞ் ஞபீடமேறிப்
புக்கவவ் வரசையெய்திப் பூரண பிடேகராகித்
தக்கபூ மண்டலாசா ரியகுரு தலைவரென்ன
வொக்கவெங் கெவருமோது மொருவிரு துடையரானார். (எ௩எ)

புகலுமெக் கலைகளுந்தேர் புலவர்கண் முன்னமங்கண்
டிகழ்தரு தேவராருஞ் செப்புமெய்ப் புகழோரானார்
நிகழ்தரு காலைவிண்ணோர் நிகரில்பூ மழைபெய்தன்பான்
முகமனோ டினர்கள்பஞ்ச துந்துபி முழங்கமாதோ. (எ௩அ)

சங்கா ரவணீத்தப்பாற் சந்தன தியர்களோடு
துங்கமா ரிமயச்சாரற் றுலங்குகே தாரமேவி
யங்கண்வாழ் தவத்தரார்க்கு மரியவே தாந்தபோதஞ்
சங்கையற் றிடவேசாற்றித் தங்கினர் சின்னாளங்கண். (எ௩௯)

அயலமை சீடரோடு மங்குவாழ் தவத்தரார
மியல்குளிர் வாதைதன்னா லின்னன்மிக் கிரங்கநோக்கி
வியனுல கோபகார விரிபெருங் கருணைவள்ளல்
குயமிடப் பாற்கொண்டுள்ள குழகனைத்துதித்து ளன்பால். (எச௦)

காமுகர்க் கின்பநல்குங் கன்னியர் குசயுகம்போற்
றேமுதி ரன்பர்க்கின்பந் தேக்குசங் கரர்தம்பொற்று
ளாமுள ரியினும்வெந்நீ ராற்றென்று தோற்றுவித்தார்
வேமுள ரியிலணைந்து வீழ்ச்சிசால் புனலொத்தம்மா. (எசக)

சூழிமக் கட்டிநான்கு திசையினுந் துதைந்தவங்கண்
வாழிவெந் நீராற்றென்று வயக்கிய பான்மையொன்றே
கேழியற் சங்கரப்பேர்க் கிருபையங் கடலின்மேன்மை
தாழியன் மாந்தர்கட்குந் தபனனைத் திலக்குமன்றே. (எசஉ)

இணங்குமத் தீக்குண்டந்தா னியறலங் கண்டுளன்பால்
வணங்கிடு வார்கட்கன்றே வன்பவஞ் சீதநோயுங்
குணங்கொண்மெய்த் தொண்டர்தம்பாற் குறுகினோர் வினைகண்மானத்
தணந்திடு மெனிலக்குண்டத் தன்மையார் சாற்றவல்லார். (எச௩)

வேறு

கருணையங்கடலாஞ் சங்கரர்பின்னர் காசினிமாந்தர்களின்ப
மருவிடச்செயுமத் துவிதசித்தாந்த மரபினைவிளக்கிடும்வண்ணந்
தருமம்வானணையும் வதரிகாச்சிரமந் துவாரகையுடன்சகந்நாதத்
தருமைநன்மடந்தீர்த் தந்தளிசெய்தங் கவிர்குருத்தானமேற்படுத்தி. (எசச)

அன்பினானந்த கிரிசநந்தனனத் தாமலகற்குநன்முறையா
லின்புடனபிடே கம்புரிந்தவரை யியற்சகத்துக்குருத்துவஞ்சால்
கொன்புனரவர்க்குச் சாரதாபீடங் குலவிடக்கட்டளையிட்டுப்
பின்புதாமணைந்த செயல்கண்முற்றமைந்த பெற்றியோர்ந்துவகையுட்பூத்தார்,

அன்னகாலையிற்சங் கரப்பெருந்தகைக்காங் காண்டொரெண்ணுன்குழுற்றிடலாற்
பன்னகாபரணன் றன்னருளாணைப் படிபிரமாதிதேவர்களும்
பின்னமிலருணந் திசருமற்றைப் பிரமதகணங்களும்வானுண்
மன்னனுதியராந் திசைகொள்காவலரு மாதவமுனிவர்களாரும். (எசசு)

வந்துபற்பலவாத் துதித்தலுமுடன்றம் மகிமைசாறிருவுருவமையச்
சிந்தைசெய்தனர்சங் கராதுததியிற் றெய்வவெள்விடையெதிர்தோன்ற
முந்துதம்முருவைச் சிதம்பரவெளியின் முயங்கிடப்புரிந்தருட்பரமன்
சொந்தநல்வடிவம் பெற்றனைவர்களுந் துதித்திடக்கயிலையிற்றேய்ந்தார்.(எசஎ)

பொக்கமில்சிவபு ராணசித்தமதாப் பொருந்துமிப்புண்ணியசரித
மிக்கமெஞ்ஞான யோகர்பற்பலர்முன் விரித்துரைத்துள்ளதாலவைமுற்
றிக்கவின்காவி யத்திலும்விரித்த வியல்பலவுணரவாவுடையார்
தக்கவன்னவர்க்கே தனித்துரைத்துளவாஞ் சரிதைகொண்டுணர்ந்திடத்தகுமால்.

சகற்குருவாகி விளங்குமெய்ப்புகழ்சால் சங்கராசாரியராடன்
மகத்துவச்சரித மாமிதுமுற்று மனதுறுபத்தியினுவப்பாற்
றகப்பகர்ந்தவர்கேட் டவரிகதலத்திற் சகலபோகங்களுநுகர்ந்தே
சுகத்துவவானு மடைந்திறுதியினிற் றேய்வர்சங்கரன்பதத்துணையே.(எசகூ)

வேறு

வேதாந்தஞ்சித் தாந்தமிது மேன்மற்றதுதாழ் வென்றுரைத்து
மேவுந்தமது நூலொழுக்கம் விட்டுவீண்வா திட்டுழலும்
பேதாந்தகருஞ் சமரசச்சீர் பெற்றுக்கதியுற் றிடப்புவியிற்
பிறங்கும்புகழ்ச்சங் கரமுனிவர் பேசும்பனுவற் பொருள்கொளுநின்
பாதாம்புயத்திற் கலந்திடுமெய்ப் பத்தியளித்துப் பண்ணவரும்
பரவும்பெருஞ்சித் தியினுடனுற் பவந்தீர்கதிநீ பாலிக்கி
லேதாந்தடையிங் கதனையெனக் கிசைத்தியலதின்னருள்புரிதி
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே.(எரு0)

சங்கராசாரியர்கதிமுற்றிற்று

ஆகூ கவி உஎஉஉ

இருபத்தைந்தாவது

## உதயணாசாரியர்கதி.

புதனிகர் புலமைசான்றோர் போற்றுசங் கார்தம்மாட்சி
யதிலைக் கடற்பார்தேர வறிந்தமட் டுரைத்தேனிப்பான்
மிதிலைமா நகரினூடு விண்டுவி னமிசாத்தோன்று
முதயணு சாரியன்சி ரோதுவன் சிறிதுமாதோ. (௧)

வேறு

கருணைவாரியின் முகந்துசூலமைந்தெழு காருறழ்திருமேனி
மருவுமச்சுதன் கலைகொடுவதரிக வனத்தின்மேயினனேபோற்
பெருமைமிக்கவி ருதயணசாரியன் பெருமைசான் மறையாதி
சருவவான்கலை களையுமாசிரியனுந் தருப்பணங்கொடுகண்டான். (௨)

தருக்கசாத்திரங் களிற்கர்த்தாவாநிகழ் தவங்கொள்கோதமனென்னப்
பெருக்கமிக்கவிற் பத்திகொண்டுலகுளார் பேதமைக்குணமிக்குக்
கருக்கடற்புகுத் திடுபுத்தநெறியிடைக் கலந்துபாழ்படுமாயைத்
திருக்ககன்றிட வும்புலவோரினந் திருத்தியுற்றிடுமாறும். (௩)

கீர்த்திமிக்கவிர் தருகிரணவலிக் கிரந்தமொன் றுண்டாக்கி
யார்த்தியோடதன் பெயரையொத்துலகமுற் றவிர்ந்திடச்செய்துள்ளிற்
பூர்த்தியின்பமெய் திடுவதென்றென்றெனப் புந்திகொண்டுறுங்காலை
சீர்த்திசான்மிதி லையிற்புத்தனொருவனுட் செருக்குமிக்கடைந்திட்டே. (௪)

தனதொரேவலன் றனையருகன்ழைத்துநீ தராதிபன்வயிற்சென்று
மனதுளோர்சிறி தஞ்சிடாதியானுவல் வண்ணமோதுதிமன்னீ
யனகமாமறை நூல்களென்றுன் னறி வறுபிராந்திமிக்குற்றாய்
வினவுகின்றலை யெமதுநூற்றிறத்தைநல் விதியுனக்கிலதாலே. (௫)

புண்ணியப்பயன் வலிதுவந்தெய்தித போதிலாயினுந்தாழ்க்கா
துண்ணிரம்பிய வோகைமேய்க்கொண்டுல குற்றமாந்தர்கடம்மைக்
கண்ணியம்பெறத் திருத்துதியின்றெனிற் கவின்றநும்மறையாதி
திண்ணியத்தொடு தாபனம்புரிதரு தீரனிங்காட்டின்கண். (௬)

உற்றுளானெனி லழைக்குதியிக்கணத் தோங்குவேதவிசாரஞ்
சற்றெம்மாரிய னேடுசெய்திடவெனச் சாற்றியெய்துதியென்னச்
சொற்றனுப்பலு மற்றவனேதிடத் துணிவின்மன்புகல்கின்றான்
மற்றுநுங்குரு பிராந்தனேவலதக மருவியுற்றனன்கொல்லோ. (௭)

என்றவாய்மையிப் போதறிவித்திட வெனக்கிலையவகாச
நன்றடுத்தநாட் டெரிக்கு வனின்குரு நாதனைச்சபையின்க
ணென்றவைத்தனின் கடன்பிழையாதுநா னேதியபடிசொல்லா
யென்றனுப்பிடக் குருவயினடைந்திறை யிசைத்தயாவையுஞ்சொன்னான். (௮)

கொற்றவன்புகன் றனுப்பியகேட்டுக்கை கொட்டுநகைசெய்து
மற்றவன்பெருஞ் செருக்கடைந்துற்றனன் மன்னவனுடனே தன்
னற்றகைத்திரு நாட்டில்வாழுதயனு சாரியன்முதலானோர்க்
கொற்றமோடமைத் தன்னவர்மனங்கொளக் கூறுவன்வகை மாதோ. (௯)

நமதிராச்சியத் திடைத்திவிற்பன நண்ணுபுத்தாசார்யன்
மமதைமிக்கடைந் துள்ளனனவனுடன் மறுவில்சாத்திரவாதம்
விமரிசம்பெற நீயிரெல்லாஞ்செய வேண்டுமற்றவன்வெற்றி
யமைவனேலியா மனைவருமவன்மத மடையநேர்ந்திடுமன்னே. (௧௦)

கொடியவன்றனைச் செயித்திட னுங்கடன் கொம்மெனக்குற்றேவ
லடியனுகிடப் புரிதலேன்கடனென வரசனேதுசொற்கேட்டே
முடிதலிற்றெனத் தேர்தலில்புலவர்முள் காந்திருந்தனரக்கா
னெடியமால்கலை பெற்றவனுலைவுறு நிருபற்கோதிடுகின்றான். (௧௧)

வேல்விளங்குமன் னவநின்சொற்சரதம்பான் விண்டிடுமொழிகேளாய்
தோல்விவெற்றிமா னுடர்செயலில்லைபீச் சுரேச்சையாகும்யாங்கள்
சால்விதங்களி லுத்தரிக்கின்றனங் தராபதிநீயுன்னுண்
மால்விராவலை யென்றுரைத்தவரவர் வாழ்மனைப்பாலானார். (௧௨)

ஆயகாலையி லுதயனுசாரிய னளவிலின்பமைந்தோனுச்
சேயநங்கிர ணுவலிநூலினைச் செகத்திடைப்பரப்பற்குந்
தீயவஞ்சகப் புத்தர்தம்மதமதஞ் செய்தற்குந்ததியீதென்
றேயபிற்றைநாள் வரவுபார்த்திருந்தன னெய்தியதான்மாலை. (௧௩)

மாலைவந்திரு ளிடைமறைந்திடல்புத்தன் வன்கரங்கொடுகட்டு
நூலைமஞ்சளை விட்டுவைதவ்விய நோன்புகொள்கிலனென்ன
வேலையன்னகூர் விழிபெறுமவன்மனை வேலையினிடைத்தோன்று
மாலமன்னவன் மெய்யிடைக்கலந்தொன்று மன்னதன்மையதாமால். (௧௪)

காலமற்றதிற் சசியுதித்திடுந்திறங் கவின்மறைமுதலாய
நூலனைத்தையு மாற்றுபுபுத்தன்றன் னெய்யபுன்மதந்தன்னை
ஞாலமீதமைத் திடவருமலவலி நன்றுநன்றெனவெள்ளிச்
சால்வம்பர மடர்ந்தயன்னவனகந் தவநகுந்தகைத்தன்றே. (௧௫)

முற்றுமவ்விர வீற்றினிலாற்றல்சான் முருகவேள்கொடியார்த்தல்
குற்றநீடுபுத் தனதுளமன்னகங் குலினுடனதற்குற்ற
சுற்றமாய்க்களி தூங்குதீயவர்தலை தூங்கினரடல்கொள்வா
னுற்றமெய்ப்புல வீர்விரைந்தெழுதிரென் றுரைத்தல்போன்றதையன்றே. ()

அனையகாலையி லுதயனுசாரிய னட்கக்குன்றன்ன
வினையினற்குணத் தான்மறைஞானந்தான் மேதினிகொளப்போந்தாங்
கனைவர்கட்குமோர் தாரகமாநிக ழருணனம்பொற்குன்றந்
தனைவலங்கொடு பாரின்மேலவர்க்கெலாந் தரிசனமளித்தானால். (௧௭)

காலையன்னதின் மன்னவனித்தியக் கடனெலாந்தகவாற்றி
வேலைநேர்விழித் திருமகண்மருவிய வேலைநேர்வடிவத்தின்
மாலையந்துள வணிதருகருணையெம் மாலையன்பொடுபோற்றி
யாலையந்திரை தனைப்புரைதனதுநெஞ் சாலயத்தினிதேற்றி. (௧அ)

காரிபைந்தபே ரமலையென்றரவிறை கவின்பிலம்புகத்தாக்கும்
பேரிகைத்தொனி யோவறமுழங்குதன் பெருஞ்சபையிடைமேவி
வீரியம்பகர் ததாகதன்றன்னொடு மிக்கநன்னகர்மேய
சீரியைந்தவே தியர்க்குந்தானவைபுகுஞ் செயறெரிவித்திட்டான். (௧௯)

துலங்குகாற்பவுத் தாசிரியனுக்கிடத் தோள்விழிதுடித்திட்டு
மிலங்குவெற்றிநம் வயத்ததேயென்றுளத் தெண்ணினன்வரன்மாயா
மலங்கெடக்கடைக் கண்ணருள்செய்திடு மாட்சியாரியற்காண்பான்
புலங்கொள்வார்கொளுஞ் செலவையொத்திட்டதாற் புந்தியில்லவன்றன்மை.()

உதயமின்றரு ணன்கொளவுலகுண ருதயனுசிரியன்றுன்
மிதமறும்பெரும் பத்தியோகையினுடன் வேதியப்புலவோர்க
ளிதமுறுங்குழு விடையினிலுடுக்குலத் திடைகொள் சந்திரனேபோற்
சதமகன்முத லாம்புலவருங்களி ததும்பிடும்படிசார்ந்தான். (உ௧)

வந்தவவ்விரு திறத்தரைத்தரம்பட வலமிடமாவைத்திட்
டுந்தகந்தைகொள் வான்றனைநோக்கிநீ யுனதுசாத்திரவாத
மைந்தமைந்திடச் சாற்றுதியென்னமன் மற்றவன்வகுக்கின்று
னந்தமேவுநன் மதத்தால்லார்க்கியா னறைவதென்னுளதன்றே. (உஉ)

என்றபோதினி லுதயனுசாரிய னினனுங்கொடும்புத்த
னென்றவங்கொள்புன் மதமறுத்திடுதனு லோதினனதுகாலை
வன்றகைக்கரி போல்பவன்றன்மதம் வகுத்தனனிவ்வண்ண
மன்றநாட்கழிந் திட்டனகழிந்தில வாதிடுஞ்செயன்மன்னே. (உ௩)

தருக்கமிவ்வணம் புரிபொழுதுதயனு சாரியன்கேள்விக்குப்
பொருத்தமாம்விடை யீந்திடவறிகிலாப் புத்தபித்தன்றன்னுட்
செருக்கொழிந்துமற் றதுவெளிப்படுமுனஞ் சேர்தருசபையோருட்
பெருக்கவாச்சரி யம்பெறமாயையின் பெற்றியுன்னுபுசொல்வான். (உ௪)

மன்னவின்னவ ரெனக்கிகலாகியென் மதமறுத்திடலேகொண்
டென்னதோர்மொழி தன்னையும்பொருளென வேற்றிடாதவரானுர்
பின்னர்யாருட னென்மதப்பெருமையைப் பேசுவேன்யானீதா
லின்னர்போற்றுசா ளக்கிராமத்திவ ரிறையமைந்துளதாலே. (உ௫)

எண்டிக்கும்புகழ் மன்னவவன்னதை யென்மறைவலிகொண்டு
கண்டிக்கின்றன னென்மதமெய்யெனிற் கல்லதுபுனலாக
வண்டித்தர்க்கஞ்செய் யுதனுசாரிய னவ்வணம்புரிவானேன்
மண்டித்தர்க்கம்விட் டவன்மதந்தன்னையுஞ் சரதமாமதிப்பேனுல். (உ௬)

என்னவோதமன் னுதயணசாரிய னெழின்முகந்தனைநோக்க
மன்னவீங்கிவ னினிப்புரிகின்றது மாயையானுணர்வேறு
லன்னதியானுஞ்செய் கின்றனனெனக்கதொ ரரியசெய்கையுமன்றுற்
சொன்னவாறிரு வருமியற்றிடில்வெற்றி தோல்விகாண்பரிதாமால். (உஎ)

சத்தியத்துட னசத்தியமீதெனச் சபையுளார்நன்கோர்வா
னுத்தியொன்றுநான் புகலுவனவ்வண முவனுளமிசைவானேற்
பித்தியைந்தவ னென்புகன்றிடினும்யான் பெரிதுமொப்புவனென்ன
மத்தியானமன் புத்தனைநோக்கிட மற்றவனுரைக்கின்றான். (உஅ)

தன்னையொத்திடு முதயணசாரியன் சாற்றிடுசபதங்க
ளென்னையாகிலும் யான்புரிகின்றனனிதற் கொன்றுமிலையைய
முன்னையான்பகர்ந் திடும்படியன்னவன் முடித்திடல்கடனென்றான்
மன்னனேதேயோர்வன் சாளக்கிராமத்தை மாழையங்கலத்திட்டு (உகூ)

தனதுபோலவை நாப்பண்வைத்திடுதலுந் ததாகதன்கனிவோடுங்
கனமிகுந்ததன் மந்திரமனத்தினுட் கணித்தனன்கபைப்போதி
லனகசாளக்கி ராமமீராயுட னதுவும்வற்றிடக்கண்டோர்
கனவுகொன்னன வேகொலென் றுன்னுபு கணிப்பில்விம்மிதரானார். (௩0)

அன்னகாலயி லுதயணசாரிய னவன்மதங்கண்டிக்குந்
தன்னதோர்மறை யோதலுமக்கணந் தனிற்புனனிறைவுற்று
மின்னவிர்ந்திடு சாளக்கிராமமு மேன்மிதந்ததாலொப்பி
லின்னவாச்சரி யச்செயல்கண்டவர் யாருநன்றுநன்றென்றே. (௩க)

வேறு

அன்னைநிக ராமுதய ணசிரியன் மேன்மை
தன்னைமிக மெச்சிடவா சாரியனு ரைப்பான்
மின்னைநிகர் புத்தன்மதம் வெற்றியுள தாக
வென்னைவறி தேதுதியி சைத்தனர்க ளென்னே. (௩உ)

புத்தனுரை செய்ததுபு ரிந்தனனிஃ தாலே
யொத்ததிரு வோரமைத லுற்றமத மீதி
லுத்தமமி குத்தமத முய்த்துணர்கி லாதுஞ்
சித்தமிசை யித்தகுதி ருத்தியுற லாமோ. (௩௩)

என்னவவை யோர்கொளவி சைத்தெதிர்ப வற்பார்த்
துன்னதுமொ ழிப்படியு ஞற்றினனி வற்று
ணன்னலம தத்தையிவ ணுமுணர்தல் வேண்டி
யென்னதுரை யின்படியி யற்றுவைகொ லென்றான். (௩ச)

ஏதுபகர் வாயெனினு மேந்தன்முனம் யான்முன்
னேதுமுரை பொய்க்கிலனென் னேர்மகிமை காணென்
றீதுவரு மென்றறிகி லாதிருண்ம லந்தோய்
கோதுமவி புத்தனிகல் கொண்டுபுகல் வேலை, (௩௫)

ஆசிரிய னக்கணம மைந்துளப வுத்த
மாசிரித லுற்றதென்ம கிழ்ச்சியொடு மன்னன்
றேசிலகு வாயிலிடை சேணடைப வைத்த
காசில்வழி யொத்தமைக ரும்பனைம ரத்தின். (௩௬)

உச்சியில ணைந்தவணின் றுற்றபுவி மீதி
னச்சிவிழு வோமதனி ளுசமடை கில்லார்
மெச்சியமை கின்றமத மேலதுமுன் யான்று
ளுச்சிதவே தங்கொள்பிர மாணமென வோதி. (௩௭)

அவனிமிசை வீழ்குவனீ யன்றெனவு ரைத்தே
நவமொடுபு வித்தலையி னண்ணிடுதி யென்ன
வவமிலரு ளாருதய ளுசிரிய னேதத்
தவமறுத தாகதனுஞ் சம்மதம டைந்தான். (௩௮)

அன்னவர்கள் சாற்றிடுச மர்த்தினைய றிந்தே
மன்னவன்ம னத்திடைவெ ருட்சிமிக வாய்ந்து
நன்னலமி குத்தனிர்க ளுசமுற வாற்று
மின்னதல தேதெனுமி யற்றிடுதி ரென்றான். (௩௯)

தராதிபனு ரைத்தமொழி தன்செவியி லேற்றே
யராமிசைந டித்தவன தானகலை யாகி
விராவுதய ளுசிரியன் விண்டிடுவன் வேந்தர்
பராவுபுக ழோயிதனிற் பாவமிலை நிற்கே. (௪௦)

அவ்வவர்ம தத்தவர மைந்துளவெ ரன்பா
லெவ்வமிலெ ழுச்சிகொடு மிட்டமொடு மாற்ற
விவ்வகைமு ரண்டகைய தென்னவுள முன்னேல்
தெவ்வர்நிண மாலைபுனை தேசிலகு வேலோய். (௪௧)

இதுபொழுதி லெம்மதமி சைந்துறினு நீமன்
கதுமெனவ யம்பெறும தத்திடைக லந்தே
கொதுகனைய புன்மதியர் கொள்பனுவல் யாவு
மதுமலர்கொள் வாரியிலெ றிந்திடுதி மாதோ. (௪௨)

நீமருவு நாட்டிடைநி லாவினரை யெல்லாஞ்
சேமமத மெய்தியசெ லுத்திடுதி செல்லாத்
தாமதகு ணத்தவர்க டம்மையுறு தண்ட
மாமதுரெ றிப்படிவ யக்கிடுதி மாதோ. (௪௩)

இன்னபடி நீபுரிகி லாயெனிவி றந்தோன்
றன்னதுயிர் கொன்றபிழை தன்னையடை வாயென்
றின்னலறு மாரியனி சைக்கவிறை யானேன்
முன்னவிர்த தாகதன்மு கங்கடிது நோக்க. (௪௪)

ஒப்புமுள மோடுதய ஞசிரிய ஞனேன்
செப்பும்வழி செய்திபிர திக்கிணைய தானிற்
கெப்பவமு மில்லைநல மும்பெறுவை யென்முன்
மைப்புரையு மாணவம லத்துணைய மைந்தான். (சரு)

* துரும்பனைம தங்கொடுறு துட்டமத நீக்கான்
றுரும்பனைய தென்றுயிர்து றக்கநினை வானுங்
கரும்பனைய ளித்தவரி தன் கலைகொள் வானுங்
கரும்பனை மரத்தயல்க லந்தனர்க ளன்றே. (சகூ)

கிளையின்மர வுச்சிமிசை கிட்டவலி தான
முளைகளைய மைத்ததன்மு கட்டினில ணைந்தே
விளைவதறி யாதவனும் வித்தகனு மாந்தர்க்
குளைவகலு முண்மையை யுணர்த்திடன்மு யன்முர். (சஎ)

தேசிலகு மேலவனேர் தெய்வமறை தானே
மாசில்பிர மாணமெனு மாற்றமது ரைத்துட்
கூசிலது பூமிமிசை கொம்மெனவி மூந்தா
னேசில்பிர மாணமல வென்றுரைசெய் தீனன். (சஅ)

மேதினியில் வீழ்ந்தனன்முன் மேவனகன் மேலா
மாதிமறை தாங்கிவிடு மன்னவகை யாலுங்
தீதிலுல கம்புரவு செய்தவரி பொற்றுண்
மீதினினை வாதவினு மென்மெல வடைந்தே. (சகூ)

மிக்கசுக மோடுபுவி மீதினிலி ருந்தான்
பொக்கமலி புத்தன்விழு போதுதலை கால்கை
சக்கரமென் வட்டணைகொள் சாரியுடன் வீழ்ந்தான்
புக்கவுவ மைக்கவனேர் புந்தியல தின்றே. (௫0)

விண்ணியன்ம ரத்தினுமுண் மெத்துதுய ரோடு
மண்ணினிடை வீழுமவன் வன்பரல்கொள் பாறைக்
கண்ணெறியு மாம்பிபெறு மோர்நிலைக லந்தா
னெண்ணிலைமை மேயவுட லெண்ணிலைமைமேவ. (௫க)

அன்னசெயல் கண்டரச ஞதியப லோரு
முன்னரிய வாச்சரிய முற்றவர்க ளாகிக்
கன்னன்மறை யாதியக லைத்திரள்க டம்மை
மன்னருள்கொ டெய்வமென நெஞ்சினுண்ம தித்தே. (௫உ)

அன்பினெடு பூசனைக ளாற்றியவை யோதுங்
கொன்பயில்சன் மார்க்கநிலை கொண்டவர்க ளாகி
வன்புமலி பித்தர்தம தப்பனுவ லெல்லா
மின்பொடற விற்புகவெ றிந்தனர்க ளன்றே. (௫௩)

* துரும்பல் - தூர்உம்பல் எனப் பிரித்துக்கொள்க,

புத்தநெறி யைக்களைகி லர்ப்பொருவி றண்ட
மெத்தவுமி யற்றிநகர் மீதினுமு ருமே
யுய்த்துதய ஞசிரிய னுற்றகுரு வென்னச்
சித்தமிசை நம்பியுப தேசநல முற்றே. (௫௪)

மன்னருணை லங்கொள்குரு மாணவர்க ளோடு
மின்னலற வாழ்மடமி யற்றுபுகொ டுத்தே
யன்னதணி மிக்கவிர்த ரும்பதியு ளன்பாற்
கின்னமறு சிற்சிலகி ராமமும்வி டுத்தான். (௫௫)

வேறு

பின்பு சிற்சின ளுதயன சாரியப் பெயர்மேலோ
னின்புலாவிய மிதிலைமாநகர்வயி னிருந்தேபின்
பொன்புணர்ந்திடு திருச்சகந்நா தநற் புரிமேவி
யன்புடன்திரு மால்பதந்தொழும்விருப் பணைந்தானே. (௫௬)

தக்கசீர்ப்புரு டோத்தமப்பேர்கொளத் தலஞ்சார்ந்து
புக்கதீர்த்தத்துள் விதிமுறைமூழ்குபு புனிதஞ்சான்
மிக்கமார்க்கண்ட தீர்த்தத்தைத் தரிசித்துள்வியப்போடு
மைக்கவின்திரு மேனியனலைய வயிற்போந்தான். (௫௭)

தரம்பிறங்குதன் கலைபெறுமுதயன சார்யன்முன்
பரம்பிறங்குதற் றெழுவருந்திறந்தெரீஇப் பயில்வேதச்
சிரம்பிறங்குதாண் மாதவனைகையுட் செறிந்தோன
வரம்பில்பேரரு ளால்விளையாடுவான் மனங்கொண்டான். (௫௮)

கிழக்குவாயிலிற் போந்தனனரியன் கிட்டுங்கான்
முழக்கமாரொலிக் கதவந்தானேவந்து மூடிற்றுற்
சழக்கின்மற்றுள வாயிலொவ்வொன்றினுஞ் சார்தோறும்
வழக்கின்மூடிய புதுமைகாண்டியாவரும் வந்தோர்ந்தார். (௫௯)

ஒல்லுமேல்வையி லுதயனசாரிய வரவோன்முன்
வில்லுலாமந்த காசமோடரிகழன் மிகப்போற்றி
யெல்லையின்றெழு பத்திசாலகங்கர மிசைவுற்றே
யல்லையோபுரு டோத்தமாவைசுவ ரியங்கண்டே. (௬௦)

மிக்கவும்மதோன் மத்தனயீண்டுமே வினராருங்
கெக்கலித்திட வெளையபமானிக்கின் றனைகொல்லோ
தொக்கபுத்தர்கண் மேயபோழ்துன்றுரைத் தனமென்பா
லொக்கமேவிய தன்மையையுளத்தினுன் னுதிமன்னே. (௬௧)

என்றுதாட்டிகத் தோடுமாசிரியனே திடுஞ்சொற்கள்
பொன்றுவர்த்திரு வாயினின்றிருசெவி புகட்டின்பந்
துன்றுமாற்றமொத் துடலமுமுருக்கவச் சுதனன்பிற்
பின்றுலங்கெழிற் கதவந்தானேதிறப் பித்தானல். (௬௨)

அன்னபேரருட் செயறெரீஇநகரிடத் தமைந்துள்ளார்
பன்னரும்வியப் பெய்தியாசாரியற் பணிந்தேத்தி
யின்னமுண்டுகொ ளுந்தெரிபுதுமைக ளெனநின்ருர்
துன்னுமத்ததி கேசவன்பூசனைத் தொண்டேய்வார். (௬௩)

பலருமங்கணைந் ததிவினயத்துடன் பணிந்தன்பாற்
குலவுமாலயத் துள்ளழைத்தரியருட் கோலத்தை
யிலகிடத்தரி சனம்புரிவித்தலு மிருகண்ணீர்
மலையினின்றுவீ ழருவியில்வழிந்திட மனமாய்ந்தே. (௬௪)

சலசலோசனன் வடிவமாயவிர்தருந் தனைத்தானே
யுலகின்மேலவ ருணர்ந்திடப்புரியவுன் னினனேபோ
லலகிலன்பமைந் தருச்சனையாதிய வாற்றிப்பின்
னிலகுமின்புகொண் டிவ்வகைதோத்திர மிசைக்கின்ருன். (௬௫)

ஒளிசெய்தாருயிர்க் குயிரதாக்கலந்துமு ளுணர்கில்லார்க்
கொளிசெய்தேயவர் வினையொழிவுற்றிட வூட்டும்பே
ரளியனேயுன தளக்கொணுப்பெருவிளை யாட்டின்சீ
ரளியனேனறி வாலுணர்ந்துரைத்திடு மளவிற்ருே. (௬௬)

உள்ளமாயவ ருள்ளமாயரைக்கண மேவாதே
யுள்ளமாயவான் கருணையினெழிவின்றி விளையாடுங்
கள்ளமாயநின் பொருவறுதிருவுளங் கருதெண்ணங்
கள்ளமாயவைம் புலன்வழிச்சுழலும்யான் காண்பேனே. (௬௭)

பேதமாயுணர்த் தபேதமாய்நின்றிரு மைகொள்பேதா
பேதமாய்ச்செலுத் துபுவிளையாட்டயர் பெருமாளா
நாதநாதமா முடிபுளாய்நின்னரு ணலந்தானிங்
காதனேனறி வாலுணர்ந்துரைத்திடு மளவிற்ருே. (௬௮)

என்னவன்பினுற் றுதித்துளம்பிரிதலில் விடையெய்தி
யன்னமாநகர்ப் பாற்சிலநாளிருந் தவிர்தன்னூர்
மன்னவுன்னுகா லையிற்செகந்நாதனு மணிவண்ணன்
றன்னதர்ச்சகர் கனவின்மேய்த்தனித்தனி யருள்கின்ருன். (௬௯)

என்னதுத்தரீ யங்களுளேற்றமிக் கதுதன்னை
மன்னருட்டிற லுதயணசாரியன் மகிழ்வெய்தப்
பின்னைநாள்வழங் குதிரெனக்கவனதி பிரியன்கா
ணன்னவன்புதி யனுமல்லனெனதமி சானுனே. (௭௦)

புத்தசாத்திரத் தினின்மறைந்திடுமெனைப் புதைநின்று
முத்தரிப்பித்த துதயணசாரிய வரவோனென்
னித்தகைக்கன வணைந்தயாவருமுட னெழுந்தொன்ருய்த்
தத்தமக்குற லோதியொற்றுமைபடு தகைதேர்ந்தே. (௭௧)

அளப்பிலார்வமுற் றரிதன்பீதாம்பரத் தரிதாகும்
விளக்கமிக்கதைக் கொண்டுபல்லியம்பொலி விபவத்தோ
டுளத்தைமால்பெற வளித்தவனுருவளித் திடப்பேற்றோன்
கொளக்கொடுத்தன ரன்னதையவன்கரங் குவித்தேற்றே. (எ௨)

வேறு

திரசாதனங்கொள் பவர்காணுரு தசெகநாதனுன பெருமாள்
பிரசாதமாக வருள்செய்தவொப்பில் பீதாம்பரத்தை மகிழ்வாற்
சிரசானதின்க ணேசுற்றியண்ண றிருவாலயத்தின் மருவிப்
பரசாதரத்தி னுடனேயளப்பில் பரிவோடுபோற்றி மிகவே. (எ௩)

உண்ணெக்குநெக்கு ரோமாஞ்சிதங்கொ டுரைவந்திடாது குளறக்
கண்ணைப்புறும லானந்ததாரை கரையற்றிடப்பொ ழிதர
வெண்ணெட்டிடாத வெல்லைக்கண்மேவி யின்பச்சொரூப நிலையு
ணண்ணைக்களிப்பின் மருவுற்றவன்ற னலமாரளந்து நவில்வார். (எச)

அலைபெற்றமங்கை யகலாவரங்கொ ளரிநாரணன்றனெருநற்
கலைபெற்றதொண்ட னதுமேன்மையிம்பர் கவினுற்றமாந்தரெவரு
மலைவற்றறிந்துய் வுறுமாறுதன்பொன் மலையொத்தமார்பி னிடையே
நிலைபெற்றிலங்கு கலைநல்கவுங்கொ ணிலையோனுணர்ச்சி மருவி. (எரு)

செறிவாயசென்னி தசநூறுகொண்ட சேடன்றன்மீது கடன்மீ
தறிவோடனந்தல் புரிமாதவன்ற னடிதாழ்ந்துபோற்றி யருளாற்
பிறிவேயிலாத விடைகொண்டுளன்பு பெறுசீடர்யாரு மகிழ்வான்
பொறிநீடுமொப்பின் மிதிலைக்கண்மேய போதாருமார்வ மிகவே. (எசு)

அடியற்றபெண்ணை யெனவற்றிடாத வகமுற்றபத்தி நிறைவாற்
படியிற்பணிந்து கனிவோடெழுந்து பாடிச்சுகத்து ளோடி
மிடியுற்றவன்கொள் பொருளென்னமுன்ன மேவுங்குருக்க ளடியைக்
குடிவைத்தசித்த முடையோர்களாயொர் குறையற்றுவாழ்ந்த னர்களே. (எஎ)

மிகைபெற்றவன்பி னெடுபேணுமன்பர் மிசைமட்டிலாத வருண்மேய்த்
தகைபெற்றவேத மாறங்கமாதி சாற்றுங்கலைத்தி ரளெலாம்
வகைபெற்றிடச்சொ லுபுதேயமேய மாந்தர்க்குரைத்து மறையின்
சிகைபெற்றதன்ம வகைதாபனஞ்செய் திடுமாறனுப்பி னனரோ. (எஅ)

வளமிக்கமைந்த மிதிலைப்பதிக்கண் மருவுற்றகால மிதினுஞ்
சளமற்றவிண்டு கலைமேய்விளங்கு தயனப்பெயர்க்கு ரவனோர்
பளகற்றவங்கி சத்துற்றுளார்கள் பலருங்கலைத்தெ ளிஞரா
யுளமுற்றுபத்தி முதலாநலங்க ளொடுவாழ்கைசத்தி யமதே. (எகூ)

வேறு

மலைநெடுங் குடைகைக்கொண்டு மருவுமா வினம்புரந்தோன்
கலைகொடு வந்தோனின்பங் கலந்துயிர்த் திரள்கள்வாழ்வா
னிலைபெறு மாடலின்ன நிலத்திடை யாற்றியீற்றி
லலைபொலி காசிக்கங்கை யணைந்துசின் னாள்வதிந்தே. (அ0)

உ

குருவே துணை.



ஸ்ரீ பாண்டுரங்கன்



இரகுமாயி

திருமணி கன்னிகைப்போத் தீர்த்தத்துண் மூழ்கியொப்பி
லுருவினை மாற்றித்தன்னொ ரொளிவடி வமைந்துதேவர்
மருமலர் பொழிந்துபோற்ற வானதுந் துபிகளார்ப்பப்
பொருவில்சீர் பொலிவைகுந்த புரத்திடைக் கலந்தான்மன்னே. (அக)

வேறு

அலையார்கலிசூ ழுலகினர்க ளாரும்பவுத்த முதன்மதநீத்
தறம்பெற்றுய்யும் படியுதய னாசாரியனா யவிர்ந்திடவோர்
கலையானதைமுன் னளனுப்புங் கருணைக்கடலே கடையாகுங்
கலியானதிலிக் காசினியிற் கவின்சன்மார்க்கப் பெருநெறியே
நிலையாவிளங்கக் கண்டுவப்பா னெஞ்சத்தவாவி னேனிவண
நீபுநினைக்க வேண்டினனின் னெஞ்சிற்கருதின் முடியாவொன்
றிலையா தலினாற் றமதஞ்சற் றேனும்புரியா திரங்கியரு
ளிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (அஉ)

உதயனாசாரியர்கதிமுற்றிற்று
ஆ கவி உஅ0ச

---

இருபத்தாறுவது

# விட்டலபுண்டரீககதி

சலசைகோன்கலை பெற்றவிருதயனா சார்ய
னுலகருய்ந்திடப் புரிகதைபுணர்ந்தவா றுரைத்தேன்
புலவர்யாவரும் போற்றுசீர்ப்பண்டரி புரத்தி
னிலகுவிட்டல புண்டரீகன்கதி யிசைப்பாம். (க)

பண்டரிக்குரித் தானதானங்கள்பற் பலவுட்
பண்டரிக்குட னமுதெனப் பழமறை பாடும்
பண்டரிக்குலப் பெயர்பெறுதலத்தினற் பண்பைப்
பண்டரிக்குநற் பதுமபுராணத்திற் பகரும். (உ)

குயினிலாவிய திருக்கயிலாயவண் குவட்டின்
வெயினிலாவிய செம்மணிவிளங்குமண் டபத்தி
லயினிலாவிய சூலமேந்தியவரன் றன்பான்
மயினிலாவிய சாயல்கொளுமைமன மகிழ்ந்து. (௩)

வீற்றிருந்தருள் காலையில் விண்டுவின் பதங்கள்
போற்றிருந்தவம் புவியின்மேலவரெலாம் பொருந்த
வேற்றிருந்துமுண் கட்சிவைபுவப்புடன் விமலன்
மாற்றிருந்தசெம் பொற்பதம்வணங்குபு வினவும். (ச)

சிமையவான்பெருஞ் சிலேயினுயிச்செகத் தின்பா
லெமையளுகிய நாரணற்கெண்ணில்பஃ றலங்க
ளமைவதாகவு மவற்றெலாமதிநலத் தினதா
யிமையில்வான்புல வோர்புகழ்பண்டரி யிலங்கும். (ரு)

தீதுதீர்நல மெய்தியத்தலஞ்சிறந் தியல்கைக்
கேதுவின்னதென் றுலகுளார்தேர்தர வெனக்கின்
டோதுவாயென விரத்தனுஞ் சிவனுவப் புற்றுக்
காதுலாங்குழை பொரும்விழியுமைகொளக் கழறும். (சு)

சிமையவேந்தன்மெய்த் தவப்பயனுத்திரு வுருக்கொ
ளமைமென்றேளினு யகிலமுற்றவுமளித் தருணின்
றமையனுகிய நாரணன்பண்டொர்நா டன்னி
லமையுமொப்பில்சீர் வைகுந்தக்கொலுவிடை யமர்ந்தான். (எ)

ஆனகாலேயிற் புலோமசையவ்வயி னணேந்து
கானமைந்தகா யாமலர்க்கவின்றிருக் கோல
மானயந்தகண் ணும்பெருவாயினின் மாந்தி
மேனயந்துள விருப்பினுலுவப்பினல் விதந்தே. (அ)

ஆனந்தப்பெரு வாரியினின்றெழு மலேபோற்
கானந்தப்பெரு மறைகொடுதுதிபல கழறி
மானந்தப்பெருங் கண்கணின்றன்புநீர் வழிய
வானந்தத்துணேப் பதந்தொழுதிவ்வணம் வகுப்பாள். (கூ)

அடியர்வேண்டுவ வனைத்தையுமுடனுட னளிக்கும்
படியிலாப்பெருங் கருணைசான்முகிலுறழ் படிவத்
தடிகள்பேதையேன் விண்ணப்பஞ்செவியினேற் றருளிக்
கடிதுநல்கிய வேண்டுமோற்கடிதாா தின்றே. (க0)

நெடியமாலென மறைபுகல்சொன்னிசம் பெறவே
நெடியமாலடி யேன்றனெஞ்சகத்திடை நிறைத்தீர்
படியில்யானவா மவ்வாமேதெனிற் பதிநும்
மடியின்மீதமைந் திருத்தலாமறைக்கரு மறையீர். (கக)

என்னவேண்டிடுஞ் சசிமுகநோக்கியே யெழின்மை
வன்னமேனியன் மந்தகாசத்தொடு வகுக்கு
மன்னமன்னநின் னவாமுடிவாகமன் னடைந்து
நன்னலத்தவம் வருடமாறயுதநீ நவிற்றின். (கஉ)

கண்ணனும்பெயர் மருவுபுதுவாரகை கலந்துன்
னெண்ணமொத்திட மடிமிசையிருத்துவ னென்றுன்
வண்ணவொண்பத மலர்மிகுமகிழ்ச்சியின் வணங்கி
மண்ணணேந்தறு பான்சகத்திரந்தவம் வயக்கி. (கங)

கோகுலத்திடை யிராதையாம்பெயர்கொடு குறுக
வாகுமத்ததி கண்ணனுமவ்வயி னடைந்தா
ஞகுலங்கெட வங்களவளவியாட் டயர்ந்து
வாகுலம்பொரு கண்ணன்பின் பிரிதலின்மாழ்கி. (௧௪)

வருந்தியாற்றினண் மாதவமற்றது கண்ணற்
பொருந்திடத்துவா ரகையிடைப்புரிதலு மிராதை
திருந்தியற்பெறு வேற்றுருவங்கொடு திருட்டி
விருந்தியற்பெறு கண்ணன்வாழ்கோயிலே மேவி. (௧௫)

காமகோடிசுந் தரனருட்கவின்றுணைக் கமலத்
தேமலர்ப்பதந் தொழுதலுஞானதிட் டியினுற்
காமர்மெய்மறைத் துறுமியலிராதையைக் கண்டு
மாமகத்துவ மிக்கதன்மடிமிசை வைத்தான். (௧௬)

செய்கைமற்றது கண்டுருக்குமணிதன் சிந்தை
நைகைமேவுபு கண்ணன்மேற்சினமிக நண்ணி
மைகைதூவுறுங் காலைசோர்மயிலென வாடிப்
பொய்கைவாரிச மெல்லிகண்டெனமுகம் புலர்ந்து. (௧௭)

எவ்விதத்தினு மாற்றலளாயவ ணிகந்து
திவ்வியத்தகை லோகதண்டப்பெயர் சிறக்குஞ்
செவ்வியற்கொடிண் டீரமாவனத்திடைச் சேர்ந்திட்
டொவ்விலாவருட் கண்ணனைபுள்ளகத் தமைத்தே. (௧௮)

மிக்கமாதவம் புரிந்துவாழ்ந்தனளது வேலை
மைக்கவின்றமே னியனுருக்குமணிதா னீங்குந்
துக்கமோடுதிண் டீரன்மாதவமுமுட் சூழ்ந்து
தொக்ககானக முழுவதுமாடலாற் றுருவி. (௧௯)

ஆன்குலங்களை யோட்டுகோறண்டமா யவிரும்
வேன்குலாவுசங் கங்கமண்டலமென மிளிரக்
கான்குலாந்துழாய்த் தொடையொடுகுண்டலங் கவின
வான்குலாவுசங் யாசியாயவ்வயின் வந்தான். (௨௦)

வான்றழைத்துறு காவினிற்பன்மடங் கமைந்தக்
கான்றழைத்துறு தன்மையுங்கனமீ னிடம்பாய்
மீன்றழைத்துறு வாவியுமதில்விண்மண் விழிபோற்
றேன்றழைத்துறு மலர்களும்விளங்குசீர் தெரிந்தே. (௨௧)

பூவின்மீதமை பொலங்கொடிவளமிகப் பொலியிக்
காவின்மீதுறற் கையமின்றென்றுளங் கருதி
யாவியோவிய மேயெனதுயிர்க்குயி ராகுந்
தேவியேயெனக் கூவியேசோலையுட் சேர்ந்து. (௨௨)

தவம்புரிந்துறு பான்மையைக்கண்டுளந் தளர்ந்து
நவம்பெறுங்கம லாலயமேவிய நங்கா
யுவந்தவென்னூரத் திஹுமிந்தக்கானநிற் குபர்வோ
யிவண்டனித்துநீ யுற்றிடற்கேதுவிங் கெதுவே. (உ௩)

பஞ்சுறுத்துநின் னடிக்குறுபரல்கடா பதர்கட்
கஞ்சுறுத்தலி னுறுத்திநின் றுயர்பொரு வகத்தை
நஞ்சுறுத்தலிற் சோர்வளித்திட்டகொ ஞடென்
னெஞ்சுறுத்தலி னுறுத்திய நின்றுகொ னினக்கே. (உ௪)

தனம்பிரிந்தயர் செல்வரிற்றழைத்திடு மணியெவ்
வனம்பிரிந்தயர் விடலையரிற்கடன் மாந்துங்
கனம்பிரிந்தயர் மயிலில்யான்கலங்கிட நீயேன்
மனம்பிரிந்திவண் வந்ததென்றலும்வளர் தேவி. (உ௫)

எம்பிரான்றனை நோக்கிநீயாரெதற் கேய்ந்தாய்
கம்பிலங்குகை யுடனெனக்கண்ணனே திடுவா
னம்பிலங்குகூர் விழியுனைத்தேடியே யடைந்தேன்
றெம்பிலங்கிய நின்பதியாவென்னச் செப்ப. (உ௬)

பதுமநேர்விழிப் பச்சைமான்மேனியெம் பதிக்கு
வதுவையாற்றிற்கொண் மங்கையர்பலரினி மருவும்
புதுமைசான்றுள மாதருமனையாற் போந்த
முதுமைசான்றவெற் றேடியிவ்வயின்முயங் காரால். (உ௭)

ஆதலாலவர்ப் பிரிந்துவந்தருமறை யறியாப்
பாததாமரை கலந்திடத்தவம்பயில் வேன்பாற்
காதன்மேய்ச்சிறி தச்சமற்றுனதுகா தலனென்
றோதலாயினை நின்னையீண்டுள்ளமீ துணரின். (உ௮)

கள்ளவஞ்சக ஞத்தெரிகின்றனை கவின்மிக்
குள்ளகற்புடை யார்தனித்துற்றவோ ருழையின்
மெள்ளவந்தனை கடிதுபோபோவென விளம்ப
வெள்ளனுப்பிரிந் தறிகிலனிமைத்தில னிருந்தான். (உ௯)

காவிடைத்தடி யிடுக்குபுகைகளை யிடையின்
பாவியைந்திட வைத்திருபார்வைக ஞசி
மேவியைந்தருட் டேவிதன்விழியெதிர் விருப்பி
ஞவியைந்தவிக் காலத்துநின்றன னளக்கின். (௩௦)

இருபத்தெண்டுவா பரயுகமளவின தென்னக்
கருணைநாயக ஞேதலுமுமைமனங் கனிவாய்ப்
பெருமைமிக்கவக் கானந்திண்டீரவான் பெயரை
மருவுமேதுவோ துதியெனவரன்சொல வலித்தான். (௩௧)

இமயமங்கைகே ளசுரன்றிண்டீரனென் போன்முன்
றமமகற்றுமா தவனெடுந்தேரினைத் தடுத்து
நமனெனப்பல வுயிரைபுநாசமுற் றிடச்செய்
தமரார்தாமுமிக் கச்சமெய்திடும்படி யமைந்தான். (௩௨)

அசுரனுற்றவெங் துயர்பொறு தமரார்மா தவர்கள்
பசுநிறக்கட வுளின்பதஞ்சரணமாப் பகர
விசுவமுற்றமுண் டமிழ்ந்தவன்கருணையால் விளம்பும்
வசுமதித்தலை யான்மல்லிகார்ச்சுன னுகி. (௩௩)

துயரொழிப்பனென் றுளித்தனனுகுமத் துணையில்
வயமிகுந்தசீ சந்திரனென்றொரு மன்ன
னியமமிக்கமைந் திரேதகுண்டத்திடை நின்றே
மயலறத்தவம் புரியயானவன்முன மருவி. (௩௪)

விருப்பமேதென வினவெனுமின்னெனக்குலவுந்
திருப்பயின்றிடு முரத்தனேர்சேயரு ளென்ன
மருப்பிருந்தைகொள் கண்ணனேவருவனென் றறைந்திட்
டுருக்கரந்தன னந்தவாறரிகலை யுதித்து. (௩௫)

மல்லிகார்ச்சுனப் பெயர்கொடெவ்வன திசை மருவி
யல்லிலங்குதிண் டீரமாவனத்திடை யணையச்
செல்லிலங்குமே னியற்றெரிந்தசுர னுட் சினமேய்
வில்லியைங்தெனோர் வனத்துணீமேவிடத் தகுமோ. (௩௬)

தகர்தனுபுணுண் முற்றவெம்புலியுழைச் சார்ந்தாங்
கிகலிநின்வினை யென்னிடத்துய்த்தலி னேய்ந்தாய்
புகல்வதென்னினி யுள்ளதென்பாற்சமர் புரியென்
றகநிறைந்தவா ணவத்தினன்முறுவலித் தறைந்தான். (௩௭)

வேறு

தனனதான தனனதான தனனதான தனதன

தகுவனீடு விறலினேடு தனதொராண்மை யுரைசெய்கான்
முகிலைமானு முடல்கொண்மாயன் முறுவல்கூடி யுனதுதோள்
புகுவதாய திமிரமீது பொழுதிலேகும் வகைசெய் தேவ
னெகிழ்வுறுதென் முனம்விராவி நெடியபோர்செய் திடுதியால். (௩௮)

எனமுராரி யறைசொரீய னிதயமேவு சினமெனீ
டனலின்மீது சொரிநெய்போல வமையமேரு வனையதோர்
கனம்விராவு சிலையிலேகர் கவலையோகை மருவவே
மனதைமான வளைசெய்தேவென் மழைபெய்தான வளவிலே. (௩௯

தந்ததந்த தந்ததான தந்ததந்த தந்தன.

கொண்டலென்றி லங்குமேனி கொண்டவன்கை கொண்டகோ
தண்டமண்ட லஞ்செய்தேய தண்டலன்கை யம்பெலா
மண்டமொன்று குன்றின்மீத றைந்தவம்பி யென்றரோ
கண்டதுண்ட மொன்றுமாறு கண்டுமைந்து மிஞ்சவே. (௪0)

தனனதான தந்ததந்த தனனதான தந்தன.

சமையொராயி ரஞ்சினந்து சமர்செய்போதி னும்பொலா
னமைவுறுதி ருந்தபண்பை யகமுணடி யெம்பிரா
னிமையுலோக தண்டமுந்தி யிறுதிகாண வங்கமே
குமைதைதேய னெஞ்சிலங்கு குறைவிலாமை யன்பொடே. (௪௧)

வேறு

நாரண வரீயென்றோதி ஞாலமேல் வீழ்ந்தான்கண்டு
பூரண வருளாரெம்மான் பொறுப்பன்கொ லுடனேதன்னோர்
காரணமேனிச்சேவை காட்டியஞ் சலேயென்னன்ப
நாரமை யுளத்தின்வேட்கை நல்குது மிசைத்திபென்றான். (௪௨)

அருட்டகைச் சேவைச்சிரு மஞ்சலென் றோதுஞ்சொல்லுந்
திருட்டிக்குஞ் செவிக்குமின்பந் தேக்கவா னந்தமேவித்
தெருட்டிகழ் தவசீலர்க்குந் தேகநா சப்போதெய்தாப்
பொருட்டகைச் சேவைகண்டேன் புனிதமிக் கடைந்தேனம்மா. (௪௩)

யானிதிற் பெறும்பேறென்றீண் டிசைத்திட விமையோர்மேய
வானிடத் தில்லையென்னின் மண்ணிடை வழுத்தவுண்டோ
கானிய முளவமாலைக் கண்ணவென் கண்ணகண்ணின்
மேனிகழ் மணியேநீல மணிநிகர் மேனியானே. (௪௪)

நின்கதை யாலென்னுவி நீக்கலி னிவ்வனந்தா
னன்கதன் பெயராம்லோக தண்டமென் னுமமேவப்
பொன்கவின் மற்றிதன்பாற் பொலிநக ராக்கிநீயு
மின்கவின் கோயில்கொண்டு வீற்றிருந் தருளவேண்டும். (௪௫)

ஈங்கவிர் பானுதீர்த்த மென்றொரு தடமுண்டாக்கித்
தீங்கற வெனைச்செகுத்த திவ்விய தண்டந்தன்னை
யாங்கதன் கரையிற்றூபித் தறல்படிந் ததைத்தழீஇப்பி
னோங்கரு ளுருக்கொணின்னை யோகையிற் சேவைசெய்வோர். (௪௬)

முன்னைநா ளியற்றும்பாவ முழுதொழிந் திகபோகந்துய்த்
தென்னையொத் தீற்றிலின்ப மெய்துமா றருடியென்னப்
பின்னைகோ னவ்வாறீந்து பெருந்தவம் பெறுதைதேயன்
றன்னிவா னமரர்வாழ்த்தத் தகையவை குந்தஞ்சேர்த்தான். (௪௭)

ஆங்கது முதற்கொடந்தக் கானமப் பேரமைந்து
தீங்கவல் வளங்கண்மல்கித் திகழ்ந்ததவ் வரநகர்க்க
ணோங்கனை வோரும்பாவ ரகிதரா யுவணமூர்வோன்
பூங்கழற் கன்பராகும் பொருவில்சீர் படைத்துள்ளாரால். (௪௮)

ஆயநன் னகரின்மேலோ ரனைவர்க்கு மிக்கோனானன்
றாயவந் தனகுலத்திற் றோன்றினன் சன்னுவென்ன
மேயநா மங்கொண்டுள்ளான் விளங்குசாத் தியகிப்பேர்கொ
ணேயமார் மனைவியோடு நிகரிலில் லறத்தினேய்ந்தான். (௪௯)

மலங்கவைங் கணைத்தொடக்சான் மருவிடிற் பெறுஞ்சேயாவோன்
விலங்கன தன்மைமேவி வாழ்ந்துபின் வீவன்றெய்வ
நலங்கிளர் வரத்தாலுண்டா நந்தன னமரரேய்ப்பான்
குலங்கிள ரிவர்க்குச்சேய்நாங் கொடுப்பமென்ற ரியுட்கொண்டான்.(ருo)

அன்னதோர் பண்பாலன்னோர்க் கருமக வமையாதாக
வின்னன்மிக் கமைந்துபன்னு ளிரணிய கருப்பன்றூதை
மின்னமை பதங்கணுடி விரதமா தவங்களாற்றப்
பன்னக சயனன்றன்னோர் பத்தனை மகவாத்தந்தான். (ருக)

கருமணி வண்ணத்தம்மான் கருணையாற் றூேற்றுமைந்தற்
கருமறை முறையினின்பா லவிர்பல சடங்குமாற்றி
யிருமைசால் புண்டரீக னெனும்பெய ரிட்டுளன்பாற்
பெருமறை யாதிநூல்கள் பிறங்கிடப் பயில்வித்தானல். (ருஉ)

வேறு

கலைகளினிரம்பிக் கலைகளினிரம்புங் களங்கமின்மதியிலெண்ணிரண்டா
நிலைபெறுமகவை யடைந்தவிர்மகவை நிகரினற்றவத்தினுற்பெற்ற
தலைபெறுமன்பா ரிருமுதுகுரவர் தாங்தெரிந்துளங்களிதழைத்துச்
சிலைநுதற்றடங்கட் டிலகவாணுதலோர் செல்வியைத்திருமணம்புணர்த்தார்.

மணம்பெறுபுண்ட ரீகன்றூன்முன்னுள் வயக்குதீவினையிலோ வன்மைக்
குணம்பெறுமாயை வலியிலோவீன்ற குரவரைப்பரமெனக்கருதிற்
கணம்பெறுபாவ மறுமெனப்புவிக்குக் காட்டிடவோமதுகரமார்
மணம்பெறுவனசை மைந்தர்தாம்புரியும் வரம்பிலாச்செய்கைகாட்டிடவோ.

எத்தனைவீர விரத்தியுற்றவர்க ளென்னினுநாரணக்கடவுள்
சித்தமேனினைக்கிற் றீமையுமேனைத் திறமுமெய்திடுதறேற்றிடவோ
பத்தர்கட்கோர்வைப் பெனக்குலவணியார் பண்டரிமான்மியம்வரைமேல்
வைத்தவொண்சுடரில் வயங்கவோவங்கு மாறினன்குணமுழுதன்றே. (ருரு)

பஞ்சபாணங்கொண் மதனனந்தந்தை பான்மிகுபத்திவாய்ந்திவன்றூன்
வஞ்சமாமாயைத் தொடக்கில்பேரின்ப மருவுவன்பின்னதன்முன்னு
மெஞ்சலினமதின் பீகுவமென்ன வெண்ணியங்ககரினுக்குரித்தாய்
விஞ்சலர்க்கணைகள் பாழ்படாவண்ணம் வில்வளைத்தளப்பிலேவுய்த்தான்.(ருசு)

பஞ்சபாதகங்கட் கோர்விதையாகிப் பயின்றிடுகாமனைங்கணைக
ளெஞ்சலற்றிரவும் பகலுமோவறமீ தெய்தலின்மணந்தமர்தன்றி
வஞ்சமாமனங்கொள் வேசையர்பாலு மருவியவ்வாநகர்மேலோர்க்
கஞ்சுவெம்பவங்க டிரண்டுருக்கொண்ட தனையபான்மையனெனவுற்றூன். ()

பரத்தைவாஞ்சனைகொண் டடல்பொருளாவி பரிவுடனல்குவோருடனம்
பரத்தைவாஞ்சனைகொண் டடல்பொருளாவி பரிவுடனல்கிடுவோர்தந்
தரத்தையும்பின்னெய் துவர்நமர்காளென் சரிதையாற்றேர்மினென்பவன்போற்
சிரத்தைமிக்கவர்தம்ப ணியின்முன்னின்றூன் செயலினைத்தந்தைதாய்தேர்ந்தே.

அருகுறமகனைக் கூவியெம்மாவிக் காவியாயருமறைமுழுதுந்
தெருளுறுநீவெந் நிரயமேற்செலுத்துந் தீவினைவயப்படலாங்கொ
லருமையெம்மைந்த வித்தகைபுரியே லரிபதத்தாணையென்றிடலு
மிருமுதுகுரவர் சொற்செவியேற்றோ னிதயமேற்கதமிகவெய்தி. (௫௯)

மிக்கதண்டனைசெய் துமைபடக்காத விதத்தினால்விருத்தராமீயிர்
புக்கவெம்பித்த வலிகொடென்றனக்குப் புத்திபற்பலபுகன்றிடுத
றக்கதேமகஞ்சார் சனியெனவின்னுஞ் சாவுறு திருப்பிரோவென்னத்
தொக்கபன்னிந்தை சாற்றுபுபுடைத்தே தோகையோடயலகத்தேய்ந்தான்.

தனயனுங்கியற்றுங் கொடுமைகளுன்னித் தளர்ந்திடுமிருமுதுகுரவர்
மனமுவர்த்திவற்கண் டிருப்பதிலயல்போய் மடிந்திடன்மரபெனமதித்துக்
கனவிசாரங்கொண் டமைந்துளவேல்வை காசியாத்திரைசெய்வோர்சிலர்தம்
மனையகத்தணைய மற்றவரோடு வருத்தமுங்களிப்புமுற்றடைந்தார். (௬௧)

தந்தைதாய்போந்த தன்மைதேர்ந்தடைந்தார் தம்முடன்றானுமேகிடுவான்
சிந்தையுட்கொண்டு மனையிடம்புகல்வான் றேன்மொழிச்சிற்றிடைக்கயற்கட்
பந்தைநேர்தனப்பொற் பாவையான்காசிப் பதியணைந்தாங்குளவாம்பல்
விந்தைநோக்கிடவுள் வலித்தனனீயு மேவுதியென்னுடனென்றே. (௬௨)

குதிரையோரிரண்டு கொண்டிருவருமேற் கொண்டுசென்றேமுனம்போந்த
முதியராந்தாய்தந் தையர்தமைக்கண்டு முனிவுமிக்கேதிலரெனநீத்
ததிமகிழ்வுடன்போ மவாவிமுத்தத் தருகினிலமைந்தகுக்குடப்பேர்
பொதிதருமுனிவ ராச்சிரமத்துட் புகுந்திரும்பூதுகண்டிருந்தார். (௬௩)

தேவர்மாதவர்க ளாருமம்முனிவர் தெரிசனங்கொண்டுதம்பாற்சேர்
பாவநீங்கிடுவ ரென்னின்மற்றவர்தம் பண்பினையாவரேபகர்வார்
தாவரும்புகழக் குக்குடர்தம்மைத் தந்ததாய்தந்தையரல்லான்
மேவருந்தெய்வம் வேறிலையென்றுள் விருப்பினாற்பூசனை புரிந்தே. (௬௪)

இரவுடன்பகலு மவர்பணியியற்றி யினியசாத்திரபுராணங்கள்
பரவிமுன்னிருந்து படிப்பரீன்றவர்தம் பாததீர்த்தத்தையொப்பதன்று
வரநதியென்னு முரமடைந்ததன்பான் மருவிடார்மற்றவந்நதிகள்
விரவியபாவ மறும்படியவர்தம் மெய்ப்பணிபுரிவவைகலுமே. (௬௫)

இத்தகைநலம்பற் பலகொள்குக்குடர்முன் பெய்துபுண்டரீகன்றான்
சுத்தமாதவத்தீர் காசியெவ்வளவிற் றேய்ந்துளதுரைத்திரென்றிடலு
மத்தனைத்தாபை யலதுதீர்த்தந்தே வறிகிலரறிகிலனெனலுஞ்
சித்தமுணைத்துக் காசிகாணுநின் சென்மமோர்சென்மமன்றென்றே. (௬௬)

மீண்டயலுற்ற சத்திரந்தன்னின் மேவினனள்ளிரவதனி
லேண்டகைக்கங்கை வாணிகாளிந்தி யெனும்பெயர்தோய்நதிமூன்றுந்
தீண்டருங்கோரப் புலையுருமேவிச் செய்யகுக்குடர்மடமேவக்
காண்டபுண்டரிகன் பேய்கொலென்றச்சங் கலந்துளமிகக்கலங்கினனே. (௬௭

அழுக்குமெய்புடன்போந் தவர்கள்குக்குடர்தம் மாச்சிரமம்புகுந்தலகு.
மெழுக்குடன்கோல மிட்டொளித்தெய்வ மேனிபெற்றுடன்வெளிப்படலு
மிழுக்குவன்பவந்தீர் தின்டுறுங்கால மெய்துபுண்டரிகன்றனன்பாய்
விழுத்தகையவரைக் கண்டுளம்வியந்து விரைந்தெழுந்தேத்துபுவினவும். (சுஅ)

மலினவெங்கோர வடிவுடன்மடத்துண் மருவினீர்மற்றரைக்கணத்துட்
பொலிவுறுதெய்வ வுருப்படைத்தென்முற் போந்தனிர்நீயிர்யாவர்களென்
னலிவறவுரைத்தி ரென்றுவேண்டிடலு நயத்தகுகங்கையாமங்கை
மலிபவத்துரான்மா வாகுநீயெம்முன் வந்திடத்தகாதுபோவென்ன. (சுகூ)

கேட்டபுண்டரிகன் கங்கைதன்பொற்றாட் கீழ்விழுந்தங்கையாற்பற்றிக்
கோட்டமுற்றிடுமென் வினைகெடக்கருணை கூர்ந்தருள்புரிதிரென்றிரப்ப
வாட்டடங்கண்ணார் வரநதிபுகலு மதியிலியெனதுதாள்விடுதி
கோட்டகுமிச்சென மத்தினிற்சாலக் கொடுமையேபுரிந்துளாயெனினும். (எ0)

முற்பவத்தனந்த் தவமுடித்துளையம் முறையினுற்குக்குடப்பெயர்சால்
பொற்பமைமுனிவர்க் கண்டனையந்தப் புண்ணியத்தாலெமைக்கண்டாய்
வெற்பலைவாரி யென்னநீசெய்த வினையொழிந்தினித்தவம்படைப்பாய்
கற்பமைகங்கை யானிவர்வாணி காளிந்திகாண்டியான்மன்னே. (எக)

புவிக்கண்மேவியவெம் பாவிகளாரும் புனலுருவாமெம்பாற்றோய்ந்து
பவித்திரமடைத லாலவர்பவமெம் பாலுறிற்புலையுருமேவிக்
குவித்தநெஞ்சுடையார் தமதுகுற்றேவல் குயிற்றிநாடொறுநலங்கொள்வேங்
கவித்தவெம்பவமும் போக்குமாதவர்சீர் கழறிமுற்றிடுந்தரத்தினதோ. (எஉ)

என்றவர்மொழிகேட் டலும்புண்டரீக னிதயமேலுணர்ச்சிபெற்றவனுத்
துன்றருள்வடிவங் கொண்டநும்பாற்றோய் தோட்டுமெமாருவுமாதவச்சீர்
நன்றவரடைதற் கேதுவீதென்ன நவின்றருள்புரிதிரென்றிரப்ப
மன்றலார்கங்கை யோதுந்தாய்தந்தை மகிழ்பணியன்றியொன்றின்றே. (எங)

கோடிமாமகங்கள் செயும்பலன்புவியைக் கோதறவலம்புரிநலனு
மீடில்சீர்க்காசி தன்னையீரிலக்க மெண்படவலஞ்செய்புண்ணியமும்
பீடியலன்னை தனைவணங்கிடுமோர் பேற்றினுக்கொவ்வுறு தந்தை
யேடியன்மலர்த்தா ளோர்தரம்வணங்கி லெய்திடுஞானமிவ்விரண்டும். (எச)

பத்தியிற்புரியு மவர்கண்முன்விண்டு பகவன்வந்தருளல்சத்தியமென்
றுத்திசான்மேலோ ருரைப்பர்மற்றதுகொண் டொப்பிலம்மாதவர்பரிவா
னித்தியமவர்மெய்ப் பணிபுரிந்துள்ளார் நேரனைபிதாவைநிந்திப்பான்
பொத்தியபாவப் புலைபுருவமைந்து புழுநரகிடையமிழ்வானல். (எரு)

மற்றவந்நிரயங் கற்பவீற்றினுந்தன் வாய்திறந்தவன்றனைவிடாதாற்
குற்றமார்பாவி மீண்டுலகத்திற் குறுகினும்பிணிவறுமைகண்மிக்
கற்றமிறுயரே கொண்டுமுன்போற்றீ தாற்றியேயமபடர்வசப்பட்
டுற்றவந்நிரயம் புகுவன்மற்றவனின் புறுவதெக்காலத்துமிலையே. (எசு)

தீங்கமைந்துழலக் கொடியபாவியின்மெய்த் தெரிசனம்பரிசனம்புரிவோர்
தாங்களும்பாவம் படைப்பரேயவன்கொ டன்மைசாற்றிடுவதோவென்ன
வாங்கவர்மொழிகேட் டிடுபுண்டரீக னையகோவமைவருஞ்செனன
மீங்கமைந்திருந்துந் தவஞ்சிறிதியற்றா திழிகொடும்பவங்கண்மிக்கிழைத்தேன்.

இருமுதுகுரவ ருவப்புறத்தகுதொண்டியற்றிலனென்னினுமவரை
யருவருத்திடாது மிருந்தனனில்லை யாற்றினேனளவிறுன்பச்சோ
மருவுமிப்பவங்க ளெவ்வகையால்யான் மாற்றுவனென்றழுதன்னோர்
திருவடிகளில்வீழ்ந் தயருமன்னவன்மேற் சிந்தையுட்கருணைமிக்கெய்தி (எஅ)

அகிலலோகத்து முள்ளவாருயிர்கட் கன்னையாயவர்பவமுழுதுஞ்
சிகியுறுதுய்ப்போற் றகித்தருள்புரியுஞ் சுரநதிசெப்பிடுந்தீயோய்
மகிழ்வுடனினியா கினுமுனையீன்றோர் மாலிலக்குமியெனமதித்து
நெகிழ்வுடன்பூசை புரிபுரிந்தனையேனெடியபாதகமெலா நீங்கும். (எகூ)

ஆழியங்கரங்கொண் மாயவனருட்பேற் றாக்கமுநின்புடையமையும்
வாழியஞ்சலையென் றோதுபுகங்கை மற்றைமங்கையருடன்மறைந்தா
ளாழிநேர்கருணைக் கங்கைசொன்முழுது மகத்துளாரணமொழியெனக்கொண்
டேழிசைமறைதேர் குக்குடமுனிவ ரிணையடிபணிந்துநின் றேத்தி. (அ0)

தூயமாமுனிபால் விடைகொடுகுரவர்த் துருவிநேர்பெற்றவராடிக
ணையமாரன்பிற் றொழுதறிவிலன்செய் நெடும்பிழைபொறுத்திரென்றிரப்ப
வாயவருள்ளங் கனிந்திதுமுதனீயருள் வரநதிமொழிபுரக்கின்
மேயவெம்பவங்க ளொழிவை யென்றாசி விளம்பலின்மிகுமகிழ்வடைந்தான்.()

உடனவர்தம்மைப் பரிமிசையேற்றி யோங்கவிமுத்தமுற்றவண்சார்
மடலவிழ்கஞ்ச மலர்மலிதாங்க வரநதியாதியிற்படிந்து
திடமனப்பத்தி மிகமனைவியுடன் சிறிதுமுட்சோர்விலதின்பா
யடல்கெழுகுரவர் தம்பணியாற்றி யணைந்தனன்றன்புரத்தன்றே. (அஉ)

ஊரகத்தினுந்தன் னாகத்தினுஞ்சற் றேவுறு தவர்களையிருத்திப்
பாரகத்தன்னோர் வேண்டுவவளித்துப் பகலிரவினுமுவப்புடனே
பூரணத்தவக்குக் குடப்பெயர்த்தவனே போற்பணிபுரிந்தனனிருந்தான்
காரணத்தகைப் பண்டரிபுரந்தோன்றக் காரணமானபுண்டரிகன். (அங)

மற்றிதுநிற்க முன்னுகந்தன்னில் வலாரியைவிருத்திராசுரன்றான்
வெற்றிபெற்றெந்த விதத்தினுங்கொல்ல வேண்டுமென்றெண்ணுபு விடஞ்சால்
பற்றிகழ்நாகர் வைப்பெனக்குலவும் பாதலவுலகிடைச்சார்ந்து
விற்றிகழ்தவஞ்செய் துற்றனனக்கால் விண்ணிறையவ்வயின்மேவி. (அச)

தனதுவச்சிரத்தா லன்னவன்சென்னி தடிந்தனன்றடிதலுமசுரன்
சினமடைந்துயர்நோன் பியற்றுமென்றனக்கித் தீங்கிழைத்திட்டதோடத்தாற்
கனமுறுசெங்கல் லாய்மண்ணில்வீழக் கடவையென்றிடலுமற்றதன்முன்
கனகநாட்டிறைவ னரிபதங்கருதக் காகுத்தன்றேற்றுபுகழும். (அரு)

புண்டரீகன்ற னுச்சிரமத்திற் பொருந்திபோந் தியான்கன்மெய்
கொண்டநின்மீதென் பதமமைத்துனது கோலமே வவும்புரிந்தென்றுண்
முண்டகந்தாங்கி யமையவும்புரிவே னெனமொழிந்திடலுமவ்வாறே
திண்டிரவனத்திற் றன்னினன்மாயன் றிருவிளையாட்டினிப்புகல்வாம். (அசு)

எழிலுருக்குமணி தன்பிரிவாற்று திராதையைவிடுத்திணர்த்திரளார்
செழியதிண்டீர வனம்புகுந்தூட நீரமுன்னின்றமாலன்பின்
வழிதனைக்குரவ ருருவிடைப்பூசை வயக்குபுண்டரிகனுக்கருள்வான்
மொழியுருக்குமணி தனைப்பிரிவானேற் பத்தர்சீர்மொழிந்துமுற்றுவதோ. ()

வேறு

செங்கல்வடிவாக்கிடக்கு மிந்திரன்மேலமைந்திடுவான் செல்லும்பாத
பங்கயங்கள்சேர்ந்தசிலம் பொலித்திடுசீர்வானிறைவன் பண்புதேர்ந்து
துங்கமுறவெமையடைமின் சரணமுமக்கோர்துயரஞ் சேராதென்ன
வங்கணிலத்துற்றவுயி ரத்தனையுமறியவுரைத் தழைத்தல்போன்ற. (அஅ)

நம்பதியாவிளங்குமதி தனையளித்தவிருதயப்பா னண்ணிச்சார்ந்து
பம்பருக்கன்மதியானு மொளிமழுங்குந்தன்மையினைப் பாற்றியோடாத்
தெம்பமைந்துவாழ்துருவன் றனைப்போலும்வரங்கொண்டு திகழ்வேமென்னப்
*பம்பலவுஞ்சேர்திறத்திற் சிலம்பிடுகிண்கிணி யிடையின்பாற்றுலங்க. (அகூ)

அண்டரிறைவன்றனைத்து ரோபதியைக்கசேந்திரனை யனையாருள்ளங்
கொண்டதுயரகலவிழி யெதிர்தோன்றிவேண்டுவரங் கொடுப்பேம்யாமென்
றண்டகிலத்துள்ளவர்கட் குணர்த்திடுவான்றுலக்கிடுபே ரருளினாற்றன்
முண்டகப்பொற்கரத்துணைகள் பூண்டவிர்கங்கணங்களொளி முதிர்ந்துவீச. ()

உதிப்பினுடன்மரிப்பணைந்து வாடாமலன்பர்களை யுலவாவின்பக்
கதிப்பரமசுகமளித்துக் காத்தருளும்பகவ னருட் கரங்கண்மேய்நங்
கதிப்படர்ச்சியொழிந்துநிலைப் படுவமெனக்கதிரிரண்டுங் கலந்தாலென்னத்
துதிப்பமைசங்காழியிரு பங்கயச்செங்கரங்களிடை துலங்கித்தோன்ற. (கூக)

வண்டகுமோரயுதமெண்கொள் கோபியர்தம்முயிரினுமிக் கினிதென்றுவல்
கொண்டணைந்தகொண்டன்மணிக் குன்றனையகோபாலற் பிரிதலாற்று
தொண்டழைதங்கோலம்விடுத் திச்சையிற்றம்முயிரையுரத் திடத்தில்வைத்த
பண்டகமாநவமணியா ரம்புயத்தின்மிக்கவொளி பரந்துமேவ. (கூஉ)

மாசுவிரித்திடுமாயா வுலகினையுண்மதியாத மதிப்பதின்மர்
பாசுவிரித்திடுமேனி யமைந்திடுதன்கேள்விகளே பருகப்பெய்த
தேசுவிரித்திடுங்கவிக ளணிமைபெறத்திகழ்ந்தென்னத் தெரிவோர்கண்கள்
கூசும்வகைதோளருகாய்க் குண்டலங்களிருசெவியிற் குலவிமன்ன. (கூ௩)

இருணிறைவார்மும்மலத்தின் கோட்பட்டுக்கறங்கேபோ லென்றுஞ்சுற்று
மருணிறையுங்கயவரையுங் கண்டவுடன்பேரின்ப மயமாச்செய்மெய்
யருணிறையும்பங்கயலோ சனமுமுலகத்தனையு மவற்றுள்ளார்பல்
பொருணிறையுமளித்திடினும் போதாதென் றிலங்கிடுபுன் முறுவல்வாயும். ()

---

* பம் - நட்சத்திரம்

செருகுமயிற்பீலியெனுங் கண்ணியெழில்சேர்ந்திலங்கச் சேர்த்துச்செவ்வி
மருவுமயிர்முடிவயங்கச் சென்னியினீனிறங்கொண்ட வண்டுபோலச்
சுருள்சுருளாய்மயிர்த்தொங்கன் மதிவகிர்போலிலங்குநுதற் றுவண்டுமொய்ப்பப்
பெருகொளிவார்ந்தொளிர்மணிச்சுட் டியும்பட்டமும்பெரிதுபிறங்கித்தோன்ற ()

விடையென்னச்சியமென்னக் களபமென்னநீலமணி வெற்பேயென்ன
நடைகொண்டுபூமகடன் மார்பிடைவைத்திட்டநகக் குறியேபோற்பூ
விடைவனசத்தாள்பதித்த விடங்கொறுஞ்சங்காழியிலச் சினைகடோன்ற
வடையன்பிற்பூசைபுரி புண்டரிகன்றெரிதரப்பின் னணைந்தான்மாதோ. (௯௬)

முன்னறிதெய்வப்பணியின் முன்னின்றபுண்டரிகன் முன்னுநீல
வன்னமணித்திருமேனி யருட்பிரபைவீசலுமுண்மகிழ்ந்தென்னேயென்
றுன்னருமன்பினிற்றிரும்பிப் பார்த்தலுமாதவனருளோ டுறுதனோக்கித்
தன்னனையகங்கைவரம் பலித்ததின்றச்சோவென்னத் தலைவணங்கி. (௯௭)

நெஞ்சுவப்புற்றருகமைந்த செங்கலெடுத்தெறிந்திதன்மே னிற்றியாலென்
னெஞ்சுபணிமுடியும்வரை யெந்தாவென்றேபணிக ளியற்றினன்கார்
நஞ்சுபொதிகண்டனும்போற் றும்பெருமாளிந்திரனு நண்ணுங்கன்மேன்
மிஞ்சுமின்போடவன்பணிகண் டிருகரங்களிடையமைந்து மிளிரநின்றான். ()

அன்னைதந்தைபணிமுடிந்த பின்புபுண்டரீகன்விரைந் தணிப்பொன்னுடை
மின்னைநிகர்த்திலங்கிடவா னுகைத்திடுகோற்சானுவிடை மேவவைத்துத்
தன்னைநிகர்செங்கன்மிசைச் சமசரணம்பொலியநிற்பான் றன்னதொப்பில்
கொன்னைவிழிகளிற்பருகி யானந்தவாரியினுட் குளித்துநின்றே. (௯௯)

பண்டமைமாமறைகளினுற் றுதித்திடமாதவன்களித்துப் பத்தருன்போல்
விண்டலத்துங்கண்டிலன்யான் புண்டரிகாவேண்டுவரம் விளம்பாயென்னப்
புண்டரிகக்கண்ணனீ மும்மூர்த்திவடிவமுமாய்ப் பொலிந்தென்போலுந்
தொண்டரையும்புரக்கின்ற தன்மையினுனாளுமிந்தச் சொருபத்தோடே.(௧௦௦)

விட்டலநாமம்புனைந்தீண் டமைந்துனதுதிருவடியை விரும்பிநாளுந்
தட்டறுமன்புடன்றொழுவோ ரிடர்களைந்துவேண்டுவரந் தருதல்வேண்டு
மட்டறுசீரித்தலமென் பெயர்ச்சார்பாற்பண்டரியா வயங்கவேண்டு
மிட்டதலப்பெயர்ச்சார்பாற் பாண்டுரங்கப்பெயர்கொடுநீ யிருத்தல்வேண்டும்.

தலமிதன்கணைத்தீர்த்தத் தினுஞ்சிறந்ததொன்றியற்றிச் சாற்றுமந்த
நலமலிதீர்த்தம்படிவோர் பாவமெல்லாமன்றோடு நசித்தல்வேண்டுஞ்
சலசவருட்கண்ணவென் றிரத்தலுமவ்வாறேமுச் சகத்துமுள்ள
வலகறுதீர்த்தங்களெலா மித்தலத்தினண்பகற்போ தமையுமென்றும். (௧௦௨)

என்றருளினனந்த வாறெதிர்காலத்துமவ ணியல்வதாகுங்
குன்றரையன்பெற்றவருட் கொடியேநான்முன்னுலகைக் குலைக்குந்தீமை
துன்றழியாத்திரிபுரத்தைத் தகனஞ்செய் தலினடைந்த சோபந்தீர
நன்றமைபீமாசங்கா ரித்தலத்திற்றவம்புரிந்து நண்ணுமேல்வை. (௧௦௩)

என்னுடலில்வியர்வைபுண்டா கிப்பெருகியேபீமா வெனப்பேர்பூண்டு
துன்னுமதென்ஞானசத்தி தனைக்கொண்டுபேரமலை துதைவதாகி
யுன்னுபுண்டரீகன்மனை வாயிலலையெறிந்துவர வூங்குமேய
கொன்னுறுபீமசேனபைர வன்றுழனிகேட்டலுமுட் கொதித்தானாகி. (௧௦௪)

மேகவண்ணனீண்டமைதல் கண்டுமிந்தநதிசிறிதும் வெருட்சியற்றிவ்
வேகமுடன்வரத்தகுமோ வெனக்கரஞ்சால்கதையையவண் வீசிச்சொல்வா
னுகமலைத்துறுநதிநீ யித்தலத்தில்வேகமொலி நண்ணிடாமன்
மூகரெனச்சேறியென வவ்வாறுய்த்தன்னிடத்தின் மூழ்குகின்றோர். (௧௦௫)

பாவமுழுதொழித்துயர்பா கீரதிபோற்கண்ணனிடம் படர்ந்திடப்பா
லாவளைந்துபிறைபோலத் தெற்கணைந்துகீழ்த்திசையா றேகலாலே
தாவருட்சந்திரபாகை யெனும்பெயர்கொண்டொப்பதின்றிச் சகத்தையெல்லாம்
பாவனமாய்ப்பொன்சாபஞ் சசிக்ககற்றும்பாநுதீர்த் தத்தின்முன்னாப். (௧௦௬)

புண்டரிகனிட்டகன்மே னின்றருளுங்கண்ணனடிப் போதைப்போற்றி
யண்டனகம்பெறவேட்ட பான்மையினிற்றெளிந்தினிமை யமையவோடு
மண்டமலநதிமூழ்கி விட்டலனைத்தழீஇப்பணியின் மற்றப்போதே
பண்டைவினைத்தொடர்பொழிந்து கண்ணனருட்பதத்தன்பும் பதியுமாதோ.

நேராகப்பலயுகங்க ணிற்பவுந்தாளலதுமுக நிமிர்ந்துசற்றும்
பாராமனிற்பவளைப் பிரியாதுநின்றகண்ணன் பரிவாயீன்றோர்க்
காராதனம்புரியும் புண்டரிகற்காப்போஞ்சீ ரறைந்துநீங்கிற்
றூராளப்பத்தர்கடம் மான்மியமித்தகைத்தெனநாஞ் சாற்றலாமோ. (௧௦௮)

ஊடியநம்முளந்தேறும் வண்ணமணிவண்ணனம்பா லோர்சொல்லோதா
னேடினனன்னவன்பின்னர் நாம்போதன்முறையலவென் றுளத்துன்னாளாய்
நீடியன்மெய்ப்பத்திபெறு புண்டரிகற்கருள்புரித னிகழ்த்திச்செல்வாற்
றேடியணைந்தனளுருக்கு மணியெனிலன் னவள்கருணை செப்பற்பாற்றே. ()

சக்களத்திபெற்றிடநன் றென்றுற்றினக்கணத்துட் சகிக்கொண்ணாத
துக்கமுடன்றலைவனிடத் தூடலுற்றுத்தம்முயிரிற் றுலங்குமொப்பின்
மக்களுக்கின்பொன்றுசெயி னுடன்மகிழ்ச்சியான்மறந்து மகிணனுள்ள
மெக்களிக்கப்பணிபுரியு மடவார்போலுருக்குமணி யிகந்தாளூடல். (௧௧௦)

புண்டரிகற்கருள்புரிவான் போகின்றேனென்னவரி புகன்றசொல்லே
மண்டகத்திற்கொண்டபுல விப்பிணிக்கோர்மருந்தாகி வயங்கலாலக்
கண்டனசொற்செவிப்புலத்தி னுண்டனமொத்திடுநடையாள் கடிதினேகி
வண்டமைகற்பகம்படருங் காமவல்லிக்கொடியிலிட மருவிநின்றாள். (௧௧௧)

வேறு

ஆயகாலையிற் றன்னுருவமைந்தவிந் திரன்று
னேயமாமறைத் திரளறியாவண நீண்ட
மாயனுண்மலர்ச் சேவடிபன்முறை வணங்கி
மேயவின்பினு லத்தலம்பிரிகிலான் மேவி. (௧௧௨)

*கோபுரந்தனிற் கொண்டவன்றச்சனைக் கூவிக்
†கோபுரந்தனை போற்றிகழரியுளங் குளிரக்
‡கோபுரந்தனைத் தொடொர்விமானத்தையுங் குலவொர்
கோபுரந்தனை புஞ்செய்துநகரொன்றுங் குயிற்றாய். (௧௧௩)

என்றபோதில்விச் சுவகன்மனுட்களிப் பெய்தி
நன்றறிக்குறித் தாம்பணிநானியற் றுவலென்
றென்றுரைக்கணத் திற்றிரிவிதவுல கத்தி
லின்றிதற்கிணை யென்றிடவாற்றின வினிதே. (௧௧௪)

ஆனநற்பணி கண்டவிந்திரனகங் களித்து
ஞானவிட்டலற் கன்பினாற்பூசனை நவிற்றக்
கானமைந்ததன் பதியிடைக்கவின்றபல் பொருளும்
வானதூதராற் கொணர்ந்தகலோகையுண் மருவி. (௧௧௫)

அருணனுச்சியின் மேவியகாலையாண் டமைந்த
சருவதீர்த்தமுஞ் சார்தருபானுதீர்த் தத்தின்
மருவுதீம்புனல் கொண்டுகாயாமலர் வண்ண
னருணிலாவுமே னியின்மிசைமஞ்சன மாட்டி. (௧௧௬)

பொருவில்பொன்னுடை சாத்துபுமணிப்பணி பூட்டி
மருநிலாவுமைந் தருமலர்மாலிகை சூட்டி
யுருநிலாவுகண் ணனையுருநிலாவுகண் ணனைத்தும்
பருகநெஞ்சக முருகவின்றுத்தியம் பகர்வான். (௧௧௭)

சக்கரத்தின்மேற் றிகழ்பண்டரியினடுத் தன்னிற்
றக்கபிந்துதீர்த் தத்திடைத்திரிகுட ரூப
மிக்கமைந்ததி லர்த்தமாத்திராபீட மேற்கற்
புக்கமைந்தவிட் டலநின்றாட்டாமரை போற்றி. (௧௧௮)

விருத்திராசுரன் சாபத்தாற்கல்லுரு மேவிக்
கருத்திழந்துழல் வேன்றுதிகருத்தினுட் கணித்து
விருத்திமிக்கபே ரருளினால்வினையனைத் தாட்கீழ்ப்
பொருத்தியாண்டவிட் டலபாண்டுரங்கனே போற்றி. (௧௧௯)

ஆற்றுபுண்ணியத் தமரர்மன்னுயழி போகச்
சேற்றுண்மூழ்கிநின் னருண்மறந்துட்டிகைப் பேனை
மாற்றுவன்பவப் பெரியருமகிழ்வுட னன்பிற்
போற்றுமாறுசெய் விட்டலநின்பதம் போற்றி. (௧௨௰)

பற்றுவெம்பசி தனக்குநீரும்பரு கிலராய்ப்
புற்றுமாய்மர மாயருந்தவமிகப் புரிவார்
பெற்றுவந்திடற் குரியநின்பெருமறை முடிதோய்
பொற்றுணைப்பத மெனக்கருள்விட்டல போற்றி. (௧௨௧)

* கோ-கண்-புரம் சரீரம். † கோ-பசு-புரந்து-காத்து. ‡ கோபுரம் - பசுலோகம்.

விரிந்தமாமறை தெரிந்திடாதோங்குநின் மென்றுட்
பிரிந்திடாதுதாங் கிடும்பெரும்பேறுபெற் றிடற்கே
திரிந்தவிப்பவத் தாற்றிலன்றவமுன்னைச் செனனம்
புரிந்துளேன்கொன்மெய் யருண்மலிவிட்டல போற்றி. (கஉஉ)

என்றுபற்பல வாயருட்டோத்திர மியம்பி
மின்றுலங்கிருந் தவப்புண்டரீகன்பான் மேவி
நன்றுநின்றவத் திறமதானுன்பெறு சாப
மின்றுபோக்கியின் பெய்தினேன்வாழிநீ யென்றே. (கஉ௩)

பெட்புறுங்கரு மையெனப்பிறங்குமே னியெலாங்
கட்புலம்பெறு மிந்திரன்புண்டரீ கன்பா
னட்புமிஞ்சுபு வலிதுபற்பலவர நல்கி
விட்புலம்புகுந் தானமரர்கள்களி மிகவே. (கஉ௪)

புரந்தரன்பரி வால்விடைகொண்டுபோந் ததன்பி
னிரந்தரம்பெறு பத்திசானிமலபுண் டரீக
துரந்தரன்கனி வான்முன்போற்றூற்றுவித் தவரை
வரந்தருந்திரு மாலிலாரதிசெய்து வந்தான். (கஉ௫)

ஒப்புமற்றிலாப் புண்டரீகன்றனு னுண்டாம்
பப்புசீர்மலி பண்டரித்திருநகர் பார்மேல்
வெப்புறுவளங் குலவுகௌதமிகண்ண வேணி
யிப்புறத்துமப் புறத்துமேய்தரவிடை யிலங்கும். (கஉ௬)

காணுமங்நக ரிடைசயவிசயர்காப் பமைந்து
மாணுலாவுபொன் மணிகளால்வயங்குறுந் தளியிற்
சேணுலாவிமை யோருமாதவர்களுஞ் செறிந்து
வேணுலாவுகை யாற்றொழுவேலைபார்த் திருப்பர். (கஉ௭)

நசையறுந்தவத் தும்புருநாரதர் நயப்பா
லசையுங்காலகம் புறத்தினுமேயசை யாம
விசையக்கண்டமும் வீணையுமொன்றென விசைய
விசைமயம்பெற மால்புகழேத்தின ரிருப்பர். (கஉ௮)

இயக்கர்வித்தியா தரர்கள்பல்லியமுழக் கிடுவார்
தயக்கநுண்ணிடை யரம்பைதிலோத்தமை முதலோ
ரியக்கவானவிர் மின்னெனவெதிர்பவர் யாரும்
வியக்கமாநடம் வயக்குவர்விட்டலன் றிருமுன். (கஉ௯)

தெருடதும்பிய பரமபாகவதர்க டிரண்டே
யருடதும்புகண் விட்டலற்கண்டுளா னந்தப்
பொருடதும்பிமேற் பொங்கலிலிருவிழி பொழியக்
கருடகம்பத்தி னேர்ந்தரிபசனைகண் டிடுவார். (க௩0)

புதுமைப்பல பிறங்குபண்டரிபுரத் தளியே
மதுரநீர்த்தடம் விட்டலன்றாமரை மலரா
மதுலமாரவன் றிருவடியமைந்தவின் பேதேன்
மதுகரங்களப் பண்டரித்திருநகர் வாணர். (௧௩௧)

நோக்குதோறுமின் பாக்குபண்டரிப்புகழ் நுவல
வாக்குக்கெட்டிடா மனத்துனிற்பரவச மருவித்
தேக்குமௌனவா னந்தமேலெவருரை செய்வர்
நாக்குநாற்பதைம் பானுளசேடனே நாணின். (௧௩௨)

மலையளித்தருண் மங்கையப்பண்டரி புரத்தி
லலையளித்திடு மாரகுமாயியாம் பெயர்மேய்த்
தலையளித்துல கத்தையாளரியிடஞ் சார்ந்து
கலையளித்திடு மங்கையுமேத்திடக் கவினும். (௧௩௩)

வேறு

பன்னரும் பெருமிதம் படைத்த பண்டரி
யின்னல மிசைக்கரு மியல்பிற் றூதலின்
மன்னகர் நலமவண் மருவி னோர்கள்சீர்
தன்னமோ துவன்றுதித் தகைமை யாலரோ. (௧௩௪)

இகப்பெரும் போகமு மீற்றிலோர்புரம்
புகப்புரி யாதுமால் பொன்ன டித்துணைச்
சுகப்பெரு வீட்டினுட் டோய நல்கலான்
மகத்துவப் பண்டரிக் குவமை மற்றதே. (௧௩௫)

கொன்பயில் புண்ணியர்க் கொண்டு தீர்ந்துழி
முன்புறழ் தரப்புவி முயங்கத் தள்ளும்விண்
வன்புளார் தம்மையு மால்ப தங்கொள்பே
ரன்பர்க ளாக்குபண் டரிக்கொப் பாகுமோ. (௧௩௬)

பெண்ணசை யேமுதற் பேசு மூவகை
யெண்ணசை யற்றுய ரியல்பு ளார்களும்
பண்ணசை மறையொலிப் பண்ட ரிக்கணேய்
மண்ணசை பெறிலதன் மகிமை யார்சொல்வார். (௧௩௭)

*திரிநசை யமையுமிச் செகத்தின் மேவியுந்
*திரிநசை சேர்ந்தபண் டரிபு ரத்தரோ
*திரிநசை யொன்றையுஞ் செயித்தி டாதுபின்
*திரிநசை யமரரோ சிறப்பு ளார்களே. (௧௩௮)

தான்பெறும் பேற்றினைத் தரணி யிற்றன்போ
லூன்பெறு மவர்கட்கூ யுதவு வார்களை
வான்பெறுந் தம்பதம் வாஞ்சிப் பார்கடம்
†மான்பெறங் கரவரோ மானு நீர்மையார். (௧௩௯)

*திரி: மூன்று. மாறுதல், டெண். திரிதல். என முறையே கொள்க. †மான் - குதிரை.

தண்டருஞ் சலதியோர் தவனுண் டானென
விண்டன ருலகுளோர் வியந்து மேன்மைசால்
பண்டரி புரங்கொள்பா லகரு மண்டமுற்
றுண்டவன் றன்னையுண் டமிழ்கி லார்களே. (௧௪0)

விட்டலத் துருச்சுதை வேட்டுண் பார்க்குத்தெ
விட்டல தென்றுகை விட்டு நாடொறும்
விட்டல விட்டல வெனவி ளம்புதல்
விட்டல தொன்றங்கண் மேவினோர் சொலார். (௧௪௧)

எட்டல வேழல விரண்டொ ராண்டினுட்
பட்டல மருஞ்சிறு பாலருங் கெடத்
திட்டல தோடுவாழ்த் திடுந ருஞ்சொல்சொல்
விட்டல னருட்டிரு வியன்கொ ளுமமே. (௧௪௨)

மற்றின்பத் தலைவரு மாத ருந்தழால்
பெற்றின்பார் காலையும் விட்ட லப்பெயர்
சொற்றின்ப மேயவன் சொருபங் காண்டலிற்
சிற்றின்பன் றவர்கொளல் சிற்றின் பாகுமே. (௧௪௩)

கோதியல் வன்பவக் கொடிய ராயினும்
போதியல் பண்டரி புரியின் மேயமை
யாதியைத் தழுவலு மமல மேய்தலின்
வேதியாம் விட்டலன் விமல மேனியே. (௧௪௪)

பாவரும் புண்ணியப் பரப்ப மைந்துள
தேவரு மிச்சிரச் செயல்கு லாவிய
பூவரு மின்புறப் புரக்கு நீர்மையாற்
றுவரும் பண்டரி சலச நாபனே. (௧௪௫)

விதிவழி முன்னுடல் விட்ட வாவிக்குக்
கதிபெறப் புத்துருக் கனிவி னீந்தருண்
முதிரரி திதிபெற முயக்கும் பண்பினாற்
பதிதரு பண்டரி பதும வாசனே. (௧௪௬)

மலவுடற் பட்டுற வாடுஞ் சீவர்க
ளலமருந் துயரற வகற்றிக் கேவலத்
தலமிசை வைத்தலிற் றங்கைகொள் பண்டரி
யுலவுரப் புயவுருத் திரனை யொக்குமே. (௧௪௭)

தன்மைசார்ந் தவர்கட்குத் தானெ னப்புணர்ந்
தன்மையா முடலுயி ரனைத்துந் தோர்தரா
தின்மையாம் படிமறைத் திடுமொர் நீர்மையால்
வன்மைசான் மகேச்சுரன் மானும் பண்டரி. (௧௪௮)

திரையதத் துவத்தினிற் றிரிகூடத் துருப்
*பிரைபயின் மாத்திரா பீடச் செங்கன்மேற்
றிரையற மால்பதந் தெரிசிப் பித்தலாற்
றரைபுகழ் சதாசிவந் தயங்கு பண்டரி. (௧௪௯)

நாரணன் மனையென நயந்த பூமகட்
காரணப் பண்டரி யணிகொண் மாமுகங்
காரணத் திருத்தளி கவின்ற சுட்டியே
லாரதன் மகிமைமுற் றளந்து ரைப்பவர். (௧௫0)

பாவுவார் வேட்கைநல் கரிநற் பண்டரி
புரநிவா சந்தரு புண்ட ரீகனைக்
குரவரைத் தன்னருட் குளிர்பொற் றாள்களில்
விரவவைத் திடல்சொலன் மிகைய தாகுமே. (௧௫௧)

வேறு

பரந்தோங்கியலா ரணவிதியிற் பயின்றபுண்ட ரீகனைவெம்
பாவத்தொழிலின் மிகமுயலப் பண்ணியதன்பின் பண்டரிப்பேர்ப்
புரந்தோன்றிடற்கோர் காரணமும் புனிதமுறவும் புரிந்ததனுற்
போதமுறுமே லோர்கணுமென் போலுங்கொடியர் மீதுமிக
வரந்தோயருட்சி றுடைமையென மதித்துன்சமுகம் போந்தின்ப
வாரிமுகந்து பொழிமுகினேர் வனசமலர்கண் முன்னடைந்திட்
டிரந்தேனெனக்கு நீயருள வில்லைவழக்கென் றிடில்விலகே
னிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (௧௫௨)

விட்டலபுண்டரீககதிமுற்றிற்று.

ஆகவி ௨௯௪

---

## இருபத்தேழாவது

# சமர்த்தராமசுவாமிகதி

தமக்கொண்முநி கர்த்தமெய்த யங்குமச்சு தன்றனக்
கமர்ச்சிசால வூர்கொள்பேர ளித்தபுண்ட ரீகன்மெய்க்
கமழ்ச்சிமிக்க பேருட்கொள் காதையோதி னேனினிச்
சமர்த்தராம சாமிதன்ச ரித்திரஞ்சொல் வேனரோ. (௧)

குலவுசான விக்கொள்ரந்து கோசுதார முள்ளதாய்
நலமெலாநி றைந்தசாம்பு நகரிடத்தி ஞன்மறைக்
குலமதிற்பி றந்துநற்கு ணங்களோடு கலையெலா
மிலகுறத்தெ ரிந்துளார்க ளிருவிழிக்கி ணைந்துளான். (௨)

---

* பிரை-பாதி அதாவது அர்த்தமாத்திரா பீடம்.

சூரியாசி யென்பவன்று லங்கிரேணு பாயியாம்
பாரியோடு மில்லறம்ப யின்றுசாது சேவைசெய்
தேரினோடு வாழுநாளி லெண்ணில்கால மெய்தியும்
பாரின்மீது பேர்விளக்கு பாலரின்றி வாடியே. (௩)

கற்பமைந்த மனைவியோடு கதிருதிக்கு முன்னெழுந்
துற்பலங்கொள் வாவிநீரி னுட்படிந்து பானுவை
யற்பமைந்து சோடசோப சாரபூசை யாற்றியே
யெற்பராவா தித்தியன்ற விருதயத்தை யோதியே. (௪)

வந்தனங்க ளாயிரம்வ யக்கியீரா றுயிர
மந்திரஞ்செ பித்திவாறு வருடமீரா றுதலு
முந்தருட்கொள் பானுமூர்த்தி யொப்பிலார்செய் செயலுணர்ந்
தந்தமிஞ்சு கோலமுற்ற னோர்கண்முன்பு மேவினான். (௫)

அன்னபான்மை கண்டுசூரி யாசியின்ப மமைவுறீஇத்
தன்னகங்கொ ளோகையிற்று திக்கவாதித் தன்மகிழ்ந்
தென்னவேட்ட வாறிசைத்தி யென்றபோதி லொப்பிலா
னின்னருட்கொள் சேவைபாலென் னெஞ்சுவந்த தாயினும். (௬)

என்மனைக்கு மைந்தர்வேட்கை யெல்லையின்றி யுற்றதா
னன்மகப்ப யக்குமாறு நல்கவேண்டு மென்னலுந்
தன்மமெத்தி ரேணுபாயி தாளில்வீழ்ந்து வேண்டினா
ளன்மயற்பு றத்தகுத்த கற்றுமாத வன்சொல்வான். (௭)

உந்தமக்கி ரண்டுமைந்த ருண்டுமுன்னு திப்பனென்
சொந்தவங்கி சத்தனிற்று தைந்துஞான மெய்துவா
னந்தமான மைந்தனஞ்ச னேயனங்கி சத்தனைப்
பந்தமுற்ற கன்றுலோகர் பரவுஞானி யாகியே. (௮)

அலகிலாடல் செய்வனென்ற றைந்தகன்று போதலு
மலடரென்றி கழ்சொல்பேரை மாற்றினோமென் மகிழ்வுடன்
குலவுபூசை முன்பினுஞ்சி றப்பவேகு யிற்றியே
விலகிலன்பொ டிரதசத்த மித்திதிக்க னேழுநாள். (௯)

விரதமோடு துயிலுறாது விரிவினுற்ச வஞ்செய்தே
சரதவேதி யர்க்குவந்து தானமாதி யுஞ்செய்தார்
விரவுகாலி ரேணுபாயி மென்கருச்ச மைந்தினன்
வரநிலாவு கலையமைந்த மைந்தனைப்ப யந்தனள். (௧௦)

வேறு

மறைவிதிச் சடங்குமுற்றும் வயதினுக் கிசையச்செய்து
துறைபுகழ் மகற்குக்கங்கா தரனென நாமமிட்டா
ருறைபுநா ளிரேணுபாயி யொளிமணி வயிற்றினின்றுங்
கறைதவி ராஞ்சனேயன் கலைகொள்சே யுதித்ததம்மா. (௧௧)

உதித்தசேய்க் கிறைவாலெய்த லோர்ந்துபாற் கரன்வரத்தை
மதித்தய லறியாவண்ண மறைத்துநா ரணப்பேர்சூட்டிக்
கதித்தபே ரெழில்சான்மைந்தர்க் கண்டுகண் களித்துவாழ்காற்
கதிர்க்கலேச் சேய்க்கைந்தாண்டு கதுவக்கல் லூரிசேர்த்தார். (கஉ)

ஆனகா லேயினிற்பின்சே யடன்மிக வமைந்தானுகித்
தானரைக் கணமில்லின்கட் டங்கிடான் றனியனுகிக்
கானமா தியினிற்புக்குக் களிப்புடனுலவத் தாய்தன்
பானல்வாய்ச் சிறுவனச்சம் பதியவிவ் வாறுசொல்வாள். (கங)

அளிமிகு சிறுவநீதா னடிக்கடி யகத்தஞ்சாமல்
வெளியினிற் றனித்துச்செல்லின் விறல்கொள்பூச் சாண்டிநின்னைக்
களியுடன் பிடிக்குமங்கோ கலங்கிடே லென்றபோதிற்
றெளிதரே னவனையானீ தேர்தரக் காட்டுவாயால். (கச)

வருமெனிற் கையாலெற்றி வாய்பெறும் பற்களெல்லா
மிருநிலத் துகுத்திருப்ப னென்றபோ துவகைகைமிக்
கருளுருத் தாய்சேய்தன்னை யன்பினுன் முத்திமார்பின்
மருவிட வணைத்தாளொப்பின் மாதவத் தயர்வின்பாக. (கரு)

வழக்கம்போற் பின்னுங்கான மருவியாட் டயரக்கண்டு
சழக்கறுந் தாய்சினந்து தானச்ச முறவெருட்டின்
மழக்கனி வின்சொற்கொண்டு மனங்கனி வித்துவப்பாய்
முழக்கமார் சதங்கைகொஞ்ச முன்முறை புரியும்பாலன். (கசு)

இன்னவா றியலுநாளில் யாண்டொரைந் தெய்தவக்கா
னன்னலக் கலைவல்லோன்பா னண்ணுவித் தனராண்டொன்றின்
மின்னவிர் கலைகள்யாவு மேதக வுணர்ந்தானுண்டேழ்
துன்னறூன் மணஞ்செய்திட்டார் தூயநா ரணற்குமன்னே. (கஎ)

காலமிவ் வண்ணஞ்சில்ல கழியக்கங் காதரப்பேர்ப்
பாலகற் கெவனந்தோயப் பரிவினல் விவாகஞ்செய்தார்
சீலகற் குணங்களெல்லாந் திரண்டென வவிர்ந்தான்பெற்றோர்க்
கேலவே வல்கள்புரிந்தே யிமையெனக் காத்துவந்தான். (கஅ)

வேறு

கார்மணித்திரு வுருவுளபெருமான் கவின்றுணைக்கழல் கணமறவானுச்
சோர்விலாதகம் புறத்தினும்பூசைத் தொழில்புரிந்துகீர்த் தனங்களுமிசைத்தே
யேர்கொள்வேதவத் தியாயனத்துடனே யில்லறத்தினுக் கியைவனவியற்றி
யார்தருந்தின மொன்றிலச்சுவத்தத் தடியிலுற்றிரா கவனடிபோற்றி. (கசு)

உற்றகாலேயி ராமசந்திரன்று னெளிகுலாவுகி ரீடகுண்டலங்கள்
பொற்றகைக்கலே யாதியதுலங்கப் பொருவில்கோதண்டங் கையிடைத்தாங்கி
நற்றகைச்சன கன்றவமங்கை நயப்பலக்குவ னேடுமாருதியும்
பிற்றயங்கிடத் தரிசன்ந்தாலும் பெருகுமின்பமைந் தருகநெஞ்செழுந்தே. ()

சிரமிசைக்குவித் திருகரமன்பிற் றேறன்மாரிபெய் திடுந்திறமென்னப்
பரவசங்கொடு வலம்புரிந்தாடிப் பாடியானந்த பாட்டங்கண் பனிப்பச்
சரணவாரிசத் துணைபணிந்தெழுந்தான் றன்மைநாடியி ராமசந்திரன்றன்
வரசரோருகக் கண்ணருள்வழங்கி மாடமைந்தமா ருதியுடன்வழுத்தும்.

தயிலதாரையி லென்னடித்துணையிற் சற்றுமேயிடை யீடறவொன்றிப்
பயிலுமின்னவற் கிராமிராமதாசப் பட்டப்பேரளித் திட்டனன்யானென்
றுரெயினிலாவிரா கவனுரைத்தபய முதவிப்போயின னுடன்விரைந்தன்னோ
னெயில்கொள்வீட்டுறத் தாதைபாணித்த தென்கொலோவென வியன்றவாறிசைத்தான்.

மாற்றமற்றது கேட்டலுந்தாதை மகிழ்ந்துசேயைத்தன் மார்புறத்தழுவி
யாற்றன்மைந்தனுக் காசிகூறிடலு மத்தன்மெச்சிடப் பத்திரசமெனு
மேற்றமிக்கவின் கிரந்தமொன்றியற்றி யெய்திராமந வமியினுற்சவத்தைச்
சாற்றரும்பிர பலம்படநடத்தித் தக்கவாவிருந் தந்தணர்க்களித்தே. (உரு)

தசமிநாளினிற் றிருவுலாச்செய்துற் சவமுடித்தியற் றன்மனைப்பான்மேய்
நிசபரத்திடை மனமமைத்தன்பி னிமலசிற்சுக மருவினனிருந்தா
னசலமொத்தவ னிளையவனுகு மாஞ்சனேயன்மெய் யங்கிசமமைந்தான்
* விசனமாவனம் புக்குபர்தருக்கண் மீதிற்கீழுற நான்றிடலாதி. (உச)

ஆனபான்மைதோய் பற்பலவிளையாட் டயருநாளனை யச்சுதற்பார்த்து
மானமின்றிநீ யித்தொழில்புரிந்து வறிதலைந்திடன் மரபலதனமுந்
தானியங்களுந் தேடினன்றேமெய்த் தகையகற்புடைத் தையலினக்குக்
கானமாமறை முறையின்விவாகங் காணலாமெனுந் தாய்மொழிகேட்டே.

அன்றுவைகறைப்போதெழுந் தவ்வூர்க் கயலமைந்தநெற் களத்திடையடைந்தாண்
டொன்றுநெற்பொதி களிற்பெரிதொன்றை யுரத்திற்றூக்குபு வாயுவேகமதாத்
துன்றுவீட்டுத்திண் ணையிற்கொண்ர்ந்திட்டுத் தூயதாயிடஞ் சொற்றிடுவானீ
யின்றுரைத்தவா முடித்தனனெனுமவ் வேல்வையிற்குடி யானவன்வந்தே. ()

அனகரேணுபா யியிடஞ்சொல்கின்று னம்மைநின்சுத னுள்பலர்தூக்குங்
கனமமைந்தநெற் பொதிதனைத்தூக்கிக் காற்றும்பின்னிடக் கடிதிவணடைந்தா
னெனவிள்காலைநா ராயணசாமி யேனிவண்செக்கி விரைந்திடுகின்று
புனதெனிற்கொடு போகுதிதடுப்பா ருண்டெனிற்பிதற் றிடுதியென்றிசைத்தான்.

துணையுறச்சிலர்க் கொடுகுடியானோன் றாக்கமற்றதன் கிழொன்றுதுதைய
விணையுமற்றதை யெடுக்கமற்றதன்கீ ழினைந்திதொன்றிவ்வா றெடுத்திடுதோறு
மணையிலாதுவந் தெழலுணர்ந்தவர்க ளஞ்சியோரவ தாரர்மற்றிவரொன்
றுணைவுடன்பிழை பொறுத்தருள்வீரென் றேதித்தாள்பணிந் தெடுத்தகொண்டகன்றார்.

அவ்வாகன்றபின் கீழுறும்பொதியை யன்னைமேயதம் மகத்தினுள்ளமைத்தா
னவணவ்வேல்வையிற் றந்தைவந்திடலு மன்னைபுற்றவா றறைந்தவதார
நவமிலங்கின னமதுசேயென்ன நவின்றுவந்திட நற்றவத்தாதை
புவகைவாரியிற் படிந்துவிவாக முஞற்றவெண்ணங்கொண் டுத்தமப்பெண்ணை.

* விசனம் - சனமின்மை.

தேடிநன்மணம் புரிந்திடத்துவக்கஞ் செய்துமண்டப மாதியபிறவும்
பீடியன்றிடக் குயிற்றித்தேவர்கடம் பெருக்கஞ்சான்றபூ சனையெலாமுடித்துக்
கூடிலக்கினத் திற்பொன்னுண்புனைந்து குலவுதம்பதி நடுத்திரையிட்டுப்
பாடிமங்களாட் டகமினத்தவர்கள் பயன்பொருந்தவக் கதைகளையிட்டார். ()

தகுபுரோகிதர் மங்களாட்டகத்திற் சாவதானமென் றடிக்கடியோதச்
சுகுணமேவுநா ராயணசாமி சொல்வதியார்க்கிவ ரெனவினவிடலு
நகுமுகங்கொண்மைத் துனர்பரிகசித்து நவில்கின்றாரின்றுதொட்டுநுங்காலின்
மிகுதிதோய்பவ பந்தவன்றளைதான் விழுந்ததான்மனஞ் சோர்வுறேலென்று.

உமதுநெஞ்சந்தே றிடவுபதேச மிசைக்கின்றார்கண்மற் றென்றுமின்றெனலு
மமலமேவுநா ராயணசாமி யகத்தினுண்ணடுக் கங்கொடுதன்னைக்
குமரனென்றன்பில் வளர்த்திடுகுரவர் கொடியபந்தத்தில் வீழ்த்திடத்துணிந்தார்
நமர்களாஞ்சுற்றத் தோடிருந்திதனை நான்கொளேனரி நாரணராம. (௩௨)

முன்னைநாளுனை யோர்தராமாதி மூலமென்றழைத் திடுகசேந்திரன்சொற்
றன்னையெண்ணுபு காத்தருணீநின் சலசமாமலர்த் தாட்டுணைசரணு
மென்னையிப்பவ சலதியின்மாத ரென்னும்வன்கராப் பிடித்திடவிடுத்த
லன்னையிற்சிறந் தமையுநினருட்சீர்க் கமைவதோவுனக் கடைக்கலமபயம்.

என்றுபற்பல கவியினாரணன்சீ ரேத்திவல்விரைந் தவ்வயினீங்கித்
துன்றுமெண்குவன் புலிகொடுஞ்சீயந் தும்பியாதிய செறிதருச்செறிவு
ணன்றொளித்தன னமர்களென்றுற்றார் நாமதேயநண் ணிடுமுறைதன்னு
லென்றுமெவ்விடை யுந்துரீஇத்திரிந்து மெட்டிலானநு மன்கலையோனே. ()

தக்கமெய்ச்சிரஞ் சிவியாமநுமன் றன்னதொண்கலை சமைந்துறுமவன்றான்
புக்கவந்நம ராம்பெயரினர்கள் பொருத்துபாசமாம் பூவையர்வலைப்பட்
டிக்கரைக்குமா லையினிடைப்படனே ரின்பமாம்பெருந் துன்பமைவானே
பக்கமால்பதத் தமைந்திலரன்றோ பாடிகாவலிற் பட்டழுங்கிடுவார். (௩௫)

இகத்தையுங்கொடுந் துக்கமாயதன்மே வியைந்திடும்பல பொருளையுமிழிபுன்
சுகத்தையும்பொரு ளென்னவுன்னினராய்ச் சுற்றுசுற்றமும் பெற்றவர்தாமு
மிகத்துயர்ந்தழு தேங்கிடவதனை மேன்மைசான்றகங் காதரநாம
மகத்துவத்தவத் தன்றெரிந்தன்னோர் மனந்தெளிந்திட வழுத்திடுகின்றான்.

போந்தநாரண சாமிமாருதிதன் பொருவிலங்கிசம் பொருந்தினனவ்னுக்
கேய்ந்தநன்மண மாற்றிடத்துணிந்தீ ரெண்ணிடாதுநீ ராதலினவன்றான்
வாய்ந்தநும்புடை யிருக்கவுள்ளஞ்சி வனத்துளெங்ஙனே மறைந்தியல்கின்றா
னேய்ந்தவன்னவற் கோரிடரணுகா தவனியுத்தரித் தற்கவதரித்தோன். (௩௭)

சிந்தையுட்டுயர் சிறிதடையேன்மின் சிறிதுநாளிற்சேர் குவனிவணென்னத்
தந்தைதாயொரு வாறுளந்தேறித் தயங்குசுற்றமே கிடவிடையளித்து
முந்தைநாளினா ராயணசாமி முயன்றவற்புதங் களைமுன்னிமுன்னிச்
சிந்தையாகுலங் கொண்டனரிருந்தார் சென்றவன்செயல் செப்பிடுகின்றாம். ()

வலையிற்பட்டயர் மான்றனைப்பிடிப்பான் மருவுமேல்வையின் மற்றவவ்வழியி
னுலைவறப்புகுந் தோடல்போற்கானத் தோடுநாரண சாமிமிக்குவப்பாய்க்
கொலைபுரிந்தெதிர் தின்றுளங்களிக்குங் கொடுவிலங்குகட் கண்டுசற்றுமஞ்சா
நிலைபெறுந்திட மனத்திடையரிதா ணிணைந்துநெக்குநெக் குருகினனிருந்தான்.

இளமைப்போதினு மெதற்குமஞ்சாச்சீ ரெய்தியே பல ரெடுக்குநெற்பொதியை
வளவிலிட்டுடை யானடைந்தெடுக்க மல்கச்செய்தருண் மாட்சிமைசான்ற
பளகிலாஞ்சனே யன்கலைவாய்ந்தோன் பயந்துளேமணம் பரவுகானடையி
னுளங்கொளாவலின் மணங்கொளேனையர் தமூக்கமற்ற வனுற்றிலன்போலும். ()

அன்னியத்தகைத் தாயழிவதுடம் பானதென்றுதம் மநுபவங்கொண்டும்
பன்னிடுந்தகை வேதசாத்திரங்கள் படித்துணர்ந்துமா தவப்பெரியோர்கண்
மெய்ந்நிலைத்திறஞ் சிறிதறிகிலராய் மேதினிக்கண்மே வினரிலுட்டுணிவு
துன்னிலாரெவ ரேயபிமானந் தோய்ந்துளார்துறந் தார்கணன்கோரின். (சக)

சீலநன்றறி வார்களிற்கயவர் திருவுளாரெனுந் தெய்வமாமறைச்சொன்
ஞாலமேலவர்க் குணர்த்திடவந்த நாரணப்பெயர் நண்ணியபெரியோன்
சாலவும்விரத் தியினுடன்பசிவெந் தாகசோகங்க டவிர்ந்துமெய்ப்பகவ
னீலமாமுகிற் படிவநேர்கண்டு நிகரின்மஞ்ஞையிற் களிப்பதென்றென்றே. ()

உள்ளமீதிலா ருமைபொங்கிடவே யொப்பின்மாருதி யெதிர்வரவுன்னிப்
பள்ளமார்புனல் போலிருகண்ணீர் பனிப்பப்பற்பல பாக்கொடுதுதித்துங்
கொள்ளமுன்வரா மையின்மிகுவிரகங் கொண்டெனுதுட லைச்சுகத்திருத்தி
யுள்ளதாற்கொலோ வந்திலரென்மு னுலவைநல்கிய வுத்தமத்தோன்றல். ()

என்றுளுன்னியாண் டமைகொடிகளறுத் தியல்பரட்டின்மீ தறப்பிணித்தங்கண்
டுன்றுதாருவிற் கட்டுபுதலைய தோமுகம்படத் தொங்கிமாருதியை
நன்றுணுடுபு தோத்திரநவில்வா னரலையைக்குளப் படிச்சலமென்னச்
சென்றுசீதையைக் கண்டிலங்கையினிற் றீயிட்டட்சய குமாரனைச்செகுத்தே.

இலங்குபேரடல் சால்சிரஞ்சீவி யியைந்துசஞ்சீவி யெழில்வரைகொணர்ந்து
துலங்கிலக்குவ னுதியர்க்காத்த தோன்றலேவளித் தோன்றலேநம்மை
யலந்தமெய்யடி யார்தமைக்காக்க வல்லவோவிரா கவனமைத்திட்டா
னலங்கொளன்னதை மறந்தனிரேகொ னுன்வருந்துத னுடிவிர்தானே. (சரு)

அடியராயினர் வருந்துறிற்சிறிது மாற்றுறுவரு ளமைந்தநும்முள்ளங்
கொடியனென்றெனைநீத்ததோவென்னகோபமோவெனுெர்பாபமோவறியேன்
கடிதிலென்விழி காணமுன்னணைந்து கருணைகொண்டுகாத் திடிலுய்வேனின்றேன்
மடிதனிச்சய மினிச்சிறிதாற்றேன் வள்ளனும்மடிக் கபயமானேனே. (சசு)

உயிரினேடுநான் வாழ்ந்துறுஞ்செய்கை யுமக்குச்சம்மத மேலெதிர்வருவீர்
பயிலுநும்மருட் கிலமைந்துறுமெய்ப் பாரங்கொண்டுநான் பாரில்வாழ்கலனென்
றயிறலுந்துயி றலுந்தணந்தன்பா யல்லுடன்பக லுந்துதித்துருகி
வெயிலுறும்புழுப் போற்றுடிப்பவன்றூன் விளம்புசோத்தங்கேட்டுளம்பரிவமைந்தே

நாடுநாரண சாமிமுன்னணைந்து நண்ணுகாற்றனை கண்டுளமுவந்து
நீடுமார்புறத் தழுவியஞ்சலென நிகழ்த்திக்கைகளாற் றடவலுங்களிப்பாய்ப்
பீடுதோயபங் கக்கவிகளினாற் பெரிதுதுத்தியஞ் செயவதுகாலை
வாடுமற்றவன் றேறிடவின்ன வழுத்துமஞ்சனை மாதவச்சிங்கம். (௪அ)

உரியவென்கலை கொண்டுலகுய்வா னுதித்துளாய்க்கருள் கதித்தராகவன்றன்
றரிசனம்பெறப் புரிகின்றேனென்பிற் சார்தியென்றுபஞ் சவடியிற்சாரப்
பரிதிவானவன் மறைந்தனனக்காற் பரிந்திராமகுண் டத்திடைமூழ்கிப்
புரிவினித்திய கன்மங்களாற்றிப் போதிராமந வமிப்பொருட்டன்று. (௪௯)

ஆலயத்திடை யமைதருந்தொண்ட ரகலுங்காறுமற் றவணறியாதோர்
பாலமைந்தவ ரகன்றபின்பத்தி பழுத்தநாரண சாமியினோடு
கோலமார்கர்ப்ப கிரகத்துண்மேவிக் குலவிராகவற் றொழுதுமுன்னிற்பச்
சீலராகவனருளுடனீதான் சேதுவிட்டிவண் சேர்ந்தேதெனலும். (௫௦)

எனதுநற்கலை கொண்டவின்னவனை யிணையிலுன்னிணை யடிக்கடிமைபெறுங்
கனமமைந்திடப் புரிதரவென்னக் கழறுமாற்றந்தன் காதிற்கேட்பதலா
லனகமாரிரா கவன்றிருக்கோல மதனைக்கண்டில ஞாணசாமி
சனனவேர்களைந் தாண்டருள்குரவன் றன்கணேக்கமை யாமையின்மாதோ.

மண்ணிலாவுமே டணையெலாமொழித்தே வனத்தடைந்துவா யுவினருட்சுதன்றன்
றண்ணிலாவுரு வுனித்தலைகிழாய்த் தவஞ்செய்மாருதி கலையமைந்தானு
மண்ணிலாவருட் குருபணிபுரிந்து மற்றவன்வழங் கிடுந்தனிஞானக்
கண்ணிலாதிரா கவனைக்கண்டிலனேற் காசினிக்கணர் காண்பதுமுண்டோ. ()

ஆயகாலையி லஞ்சனைசேய னருளிராகவ னடித்துணைவணங்கிச்
சேயநின்றிரு வருட்பெரும்பேறிச் சேயமைந்திடச் செய்தருளெனலுந்
தூயராகவன் கரமவன்சிரத்திற் றூயவைத்துப தேசமுஞ்செய்தே
யேயநல்லறி வெய்துகவின்னேற் கென்றுவாழ்த்தித்த னிடையமைந்திலகும்.

முஞ்சிப்போர்வையை யவற்களித்தன்பின் முதிரிராமதா சன்னெனப்பேரிட்
டஞ்சிநிற்குமா ருதியைநோக்கியிவ் வனவிமீதிலென் சம்பிரதாய
மெஞ்சிடாதுகொண் டாடியாவர்களு மேற்றமெய்திட வாற்றுவனெனலு
நெஞ்சிலோகைமிக் கநுமன்றாழ்ந்தேத்தி நேயமார்விடை பெற்றனராகன்றூர்.()

சென்றுகங்கையிற் படிந்தருளமலன் சேவடித்துணை சிந்தையுட்பதித்தே
துன்றிநாசிகப் பெயர்ப்பதிக்கீழ்பாற் றூயிடாங்களிக் கேயுறும்பொழுதிற்
பின்றுதைந்திடு மிராமதாசன்றான் பெரிதுந்தேம்பித்தேம் பிக்கலுழ்ந்திரங்க
வொன்றுமாருதி யருளினனீதுன் புறுகைக்கேதுவென் னுணர்த்தெனக்கென்றான்

வேறு

பரிவுட னிராகவன்றன் பாதபங் கயங்கள்ன்பிற்
றெரிசனம் புரியும்வண்ணஞ் செய்தனிர் தேவரீர்பின்
பிரிதலாற் றுதென்னெஞ்சம் பேதுற லெப்திற்றென்னைக்
கரியமான் மேனியான்முற் கடித்தமைத் திடுவேனே. (௫௬)

என்றவன் றனதுபத்தி யெல்லையில் லாமைகண்டு
நன்றமை யநுமன்பின்னு நண்ணிப்பஞ் சவடியின்பான்
மன்றலா ரிராகவன்றாண் மலர்பணிந் தேத்திநிற்பச்
சென்றணைந் தாரைநோக்கிச் சீலரா கவன்வினவும். (௫௭)

அகன்றநீர் மீண்டுமிங்ங னணைந்ததென் னறைமினென்னச்
சகம்புக ழிராமதாசன் சாற்றிடு கின்றானென்கண்
ணகங்கவர்ந் திடுமெஞ்ஞான வமலமெய்க் கருணையுண்மைச்
சுகம்பொருந் துனதுகாமர்ச் சொருபத்தைப் பிறிதலாற்றேன். (௫௮)

சார்ந்தன னின்மெய்க்காமர்ச் சகுணரூ பத்தின் சேவை
பேர்ந்திடா தகம்புறத்தும் பிறங்கிட நல்காயென்ன
வார்ந்தமெய்க் காதல்கைமிக் கட்டகத் துதியாலோத
வீர்ந்தய வமையிராம னிதயமேன் மகிழ்ந்துசாற்றும். (௫௯)

எண்ணிய வெண்ணியாங்கே யெய்துநீ யஞ்சேல்வாழி
கண்ணிய வநுமனோடு கலந்துசெல் லுதியென்றோதித்
திண்ணிய வநுமற்பார்த்திச் சீலனாந் தாசனெப்பே
றுண்ணினை வுறினுமுன்னோர்ந் துதவுதி யென்றுசாற்றி. (௬0)

விடையளித் திடவிராமன் மென்மலர்ப் பதங்கள் போற்றி
நடைகொண்டா ரிடாங்களிக்க நண்ணியாஞ் சனேயனெல்லிற்
கொடையரு ளிராமன்காதை கூறிடு மிரவுமுற்றுந்
தடையற விராமசங்கீர்த் தனமுரைத் திடுவன்றாசன். (௬௧)

இவ்வண நகரினுள்ளா ரிருந்தவப் பயனேபோலுஞ்
செவ்வணம் பெற்றார்ப்போற்றித் திவாவிர வறுமிடத்தே
யொவ்வரு ளநுபூதிச்சீ ருடையரிற் றுலங்கியென்று
மெவ்வமில் பரமானந்த விருங்கடல் படிந்தாரானார். (௬௨)

வேறு

இன்னவாறியல்கா லோர்தினத்தநும னிராமதாசற்குரைத் திடுவ
னன்னலத்தன்ப நானுன்பாலடைந்து நாள்பலகழிந்தவா லினியான்
மன்னருட்சேது விடையுறவிடைநீ மகிழ்வுடன்வழங்குதியென்னப்
பன்னநுமான்பொற் பதம்பணிந்தெழுந்து பகருவன் றாசனிவ்வண்ணம். (௬௩)

நானுமைப்பிரிந்தோர் கணந்தரிக்கிலன்மெய் நன்மைசால்பஞ்சவடியிலெங்
கோனுமதிடத்தன் றோவெனையொப்புக் கொடுத்தனனன்னவாறாக
மீனுயர்கொடியாற் செயங்கொணீரெனைக்கை விட்டுப்போகுதன்முறையோவென்
றானுறுகன்றி லயர்ந்திடுகின்றா னகங்கொளவோதுவனநுமான். (௬௪)

என்னைநாடுதுன் பெய்தனீயானென் னிட்டமொத்திருப்பவனல்லேன்
றன்னைநேரிலங்கை வீடணன்வேண்டுந் தன்மையாலிராகவனென்னை
முன்னைநாட்சேது காத்திடப்பணித்தான் முறையதுதவிர்த்திடன்முறையோ
பொன்னையொத்தியனெஞ் சுடையைநீயுன்னும் போழ்தெலாநானடைவேனால்,

துன்புறுதுன்னைச் சரண்புகுமுண்மைத் தொண்டர்கட்கநுக்கிரகிப்பான்
றென்புலமணைதி யிராகவனடிகள் சிந்தையுளரைக்கணமறவே
லென்புகல்வதுமற் றுனக்கியானேகை வீகுதிவிடையெனவியம்ப
வின்புடன்பணியுந் தாசனையநுமனெடுத்துமார்புறத்தழீஇயகன்றான். (௬௬)

அதுமுதலிராம தாசர்வைகறையி லறல்படிந்திராகவனருடோய்
மதுமலர்க்கமல விணையடிப்பூசை வயக்குபுபிட்சையேற்றயின்று
கதுவுறுமிரவு தொறுமரிபசனை கண்டிருந்தனரதுகாலை
ப்புதுமையார்காசி கப்பதியினரும் புறத்துளநகரினுற்றாரும். (௬௭)

நன்மைசாலிராம நாமசங்கீர்த்த னத்தின்மெய்ந்நசையுளரானார்
பன்மையுற்றவர்க டமிற்சிறப்பமைந்த பக்குவனுத்தவப்பெயரோன்
மென்மையாரிராம தாசர்தாட்பணியின் மிக்கவனையவர்நோக்கே
யன்மையாமூல மலமொழித்தருள்வீ டளிப்பதென்றுன்னுரமமைந்தோன். ()

தினைத்துணைப்பொழுதுஞ் சற்குருபான்மெய்ச் சேவைமாறாதுசெய்தியல்கால்
வினைத்தளையறுத்தா ரவற்குபதேசம் விண்டுவெம்பவமயலொழித்திட்
டனைத்தகையருண்மா ருதியுருவமைப்பா னகத்தினுன்னினருட்னேயந்
நினைப்புணர்ந்தெழிலஞ் சனையருமைந்த னிமிடமொன்றகன்முனங்கணைந்தே.

சிறக்குமிம்மூர்த்தந் தனைப்பிரதிட்டை செய்தியென்றதிற்பிரவேசித்
தறத்தகையநுமன் விளங்கிடத்தாச ரந்தணர்க்கொண்டுபூசித்துப்
பெறச்சமாராத னம்புரிந்திரவிற் பேரருளிராகவனநுமன்
றிறத்தகாதைகட்சங் கீர்த்தனத்தமைத்துச் செப்பியேபரிதிதோன்றுதலும்.

ஆரதிபுரிவா ரிந்தவாறுக வனவரதம்புரிந்திடலா
லாரமைந்தவர்பற் பலருமாலயத்தி லுற்றுமாருதிபதம்வணங்கித்
தீரமெய்ப்பத்த ராயினரிவணந் திகழ்தருநாளினிற்றாசர்
பேரருளுடனுத் தவன்றனைக்கூவிப் பேசுவரிவ்வகைமாதோ. (௭௧)

இன்றுதொட்டுதய நானஞ்செய்தியான்செய் திடுமுறையனுமனைப்பூசித்
தொன்றுமூரிடைநீ பிட்சையேற்றடியர்க் குதவிப்பினுண்டுநின்சரணந்
துன்றுமெய்யடியர் தமக்கருள்புரிந்து தூயபத்திமைநெறிதுலக்கி
நன்றுவாழ்குதியென் றுசிசொற்றிடலு நாயகன்றன்னடிவணங்கி. (௭௨)

தாயனகருணை தாங்கினிரென்னுட் டங்கிநீர்நடத்திடினன்றி
நாயனையேன்வன் மையினொருசெயலை நவிற்றிடுந்தரமிலேனென்னத்
தூயவரவ்வா றுகவென்றிரவிற் றுயில்பவர்போன்றிருந்தகன்றா
ரேயவுத்தவன்பின் னெழுந்துசற்குவ ரின்மைகண்டெங்கணுந்தேடி. (௭௩)

காணுறாமையினுள் வாடியாசிரியன் கட்டளைப்படியமைந்திருந்தான்
மாணுறுதென்சார் வனத்தமைதாசர் வன்பசிக்குதிர்கனிசருகு
மேணுறவயின்று கீர்த்தனங்கொண்டே யிரவெலாமிராகவற்றுதிப்பார்
பேணுமன்புடையார் புசனைகேட்டங்கட் பிறங்குபுன்மாவுமன்பமைந்த. (௭௪)

பசனைசெய்தன்பிற் றலம்பலகடந்து பகர்சாரட்டெனும்பதியடைந்தாங்
கசலநேர்சிகரி கொண்டவிரனும ணலயத்தடைந்துதாழ்ந்தருளா
னிசவிடைகொண்டு மாவுலிநகரி னேர்ந்துகிட்டிணாநதிபடிந்து
வசமனமுடனித் தியக்கடன்முடித்து மாருதியெதிர்வரமதித்தார். (௭௫)

உடனநுமான்முன் றோன்றிடவுள்ளத் துவகையாற்பன்முறைவணங்கி
யடலிராகவனற் சேவையின்விருப்ப மமைந்ததென்னெஞ்சமென்றிடலு
நடலைதீர்பன்மூன் றக்கரமறையை நவின்றுநீ தனித்திருந்திதனைத்
திடமனத்துடனே மூன்றரைக்கோடி செபித்திடிற்றருந்தெரிசனமே. (௭௬)

என்றுரைத்தகன்று ரவ்வகைதாசரிராப்பகலூண்டுயிலிகந்து
நன்றுசாலிராகவன்வடிவுளத்தி னுடிவன்றவம்புரிந் திடலுந்
துன்றுமாதவத்தின் மகிமையுட்டேர்ந்து சுராதிபனச்சமிக்கெய்தி
முன்றுதைகுரவற் பார்த்துவன்றவசீர் முயல்வதாரெதற்கெனமொழிவான்.

உலகமுய்ந்திடுவான் மாருதியுதித்திட் டுளத்திராகவன்பதமுன்னி
யிலகுமெய்த்தவஞ்செய் தமைந்தனனென்ன விந்திரனஞ்சியித்தவஞ்சால்
பலனடைந்திடிற்றீங் கேதெனுநமக்குப் பண்ணிடுங்கொல்லெனநினைத்தான்
கலகவல்லசுரர் புரிபெருந்தவத்தாற் கணிதமிறுபாடைந்தோனல். (௭௮)

வேறு

தானதன தத்ததன தனதானன

மோகினியை யப்பொழுது கூவியுட் லிற்கண்மலி
மூடனுள முற்றநினை வினையோதுவான்
மூவுலகி லுற்றவர்கள் யாரையும யக்குதிறன்
மூளுமுயர் சத்தியமி சுறுவாயினா.

ளேகியகி லத்தினிலி ராமனுரு வைக்கருதி
யேகமன முற்றுரமொ டிதுகாறுமே
யாவருமி யற்றரும கோரதவ சைப்புரியு
மோரமைத லுற்றவனுண் மயலாகவே

நீகிருபை வைத்தென்மன மேர்கைபெற மற்றவனை
நேசமுன்மி சைப்பெறுதல் புரிவாயெனு
( ) நேர்பெறவி டுத்துமத வேளினைய ழைத்துனது
நீலம்வரை யுற்றகணை மழைதூவியே

யோகின்முய லுற்றவனை மோகினிவ யப்படுசை
யோகவலை யிற்சுழல விடுவாயெனு
யோனியுட லத்தன்மொழி யாணையினை யிக்கனுபர்
யோசனையெ னக்கொடுறு வனமேவுவான். (௭௯)

ஆரமலை யிற்குலவு காலெனிர தத்தினிடை
யார்வமொடு பொற்புளவி ரதிகூடவே
யாமைநடை யிக்குமொழி மாதர்புடை சுற்றிவர
வாரமுது குக்குமதி குடையாகவே

சேரவலை யெற்றுகட லானமுர சத்தினொடு
தேர்மதுக ரத்துமுனி மிகநீடவே
தேமருவி சைக்குயில்கள் காகளமெ னக்கமழ்வு
சேர்மடிம டற்குலவு வடிவாளொடே
நீரமரு விக்கழைய தானசிலை பற்றிமிகு
தேன்மலிக ணைத்திரள்க ளூரமேவவே
சிரநும னற்கலைகொ டாசர்முன முற்றெறிது
நேறியகிழ் விற்கரமெய் திடும்யாழிலே
காரனைய பொற்புமத னுகமவி யற்குலவு
கானமதி சைத்துவிட மொடுபாலைநேர்
காமர்விழி சுற்றநகை வாய்கொடுத னத்தசைவு
காணவெதி ருற்றனள்செய் கைகடேறியே. (அ0)

தனனதன தானதன தனதானனு

தனுமகர ராசியிடை யிரவிபுகு மேல்வையிம
சயிலமுறு பான்மையினை மறைதேர்வலோர்
தகுதரும மேன்மைகள்சொல் பொழுதினிலு லோபரிரு
தயமனைய நீர்மைதனை யிணையாகவே
யனுமனமி சாயுலக மிலகவரு தாசர்டின
மதிகடின மானநிலை தனைமேவியே
யவிர்முறுவ லோடசைகி லதுகுலவு மேன்மைதனை
யமைமதனு மோகினிபு முளநாடியே
தனுவுகுனி நாணிதனை மனதிடைவி ராவல்செய்து
சதமகன்மு னேகினர்மெள னிகளாகியே
தனுவுகுனி வாகியெதிர் நிலவவவர் போலுநிலை
தனைமருவி னுனமர ராசாகினன்
முனிவர்புடை சூழுமத னதுதமைய னுனவயன்
முதலினர்க டாசர்நிலை யதையோர்வுறு
முருகுகமழ் பூமழைபெய் தனர்களது போதநுமன்
முனமெய்திட நாடிடனர்சு குணதாசரே. (அக)

தந்ததன தத்ததன தனதான்னு

அங்கதையு ளத்துணர்தல் கொண்டருண்மி குத்தவெழி
லஞ்சனைய ளித்ததிரு மகவாகினு
ரன்பர்முன முற்றிடலும் வந்தனைசெய் துற்றசெய
லந்தமடை யச்சொல்பொழு தகமோகையாய்
மங்களமி குத்தாகு நந்தனை ருட்பொலிவு
வந்துசுக முற்றிடுதல் பெறுவாயெனு
வங்கணமி கச்சொலுபு மொய்ம்பினிறு கத்தழுவி
மங்கலில்க ளிக்கடலி னிடைமூழ்கியே

தங்கவர்கள் பற்பல்கனி யுண்டுபின்ம லர்த்தவிசு
தன்புடையி ருக்குநிலை பெறுமேன்மையார்
தண்டருமணைப்புடைய டைந்தனர்நி லைத்தொளிசெய்
தங்கவரை யொத்திலகு மனமேவினோர்
துங்கமிகு மொப்பிறவ முன்பின்முய லப்பனிரு
தொந்தவரு டத்திறுதி பெறுபோதிலே
துன்பமக லச்செய்மறை யந்தமுற வொப்பிலிறை
தொண்டர்மகி ழத்தெரிச னமதீகுவான். (அஉ)

தானதந்ததன தானதந்ததன தானதந்ததன தானனா

வேலையுண்டுகரு வாயமஞ்சனைய மேனியின்கண்மரு வார்துழாய்
மேவவைம்படைகு லாவமிஞ்சுமொளி வீசுகுண்டலநி லாவவே
காலையம்பரிதி போலிலங்குமுடி காமர்துன்றவருள் சாலவே
காலுமுண்டகவி லோசனங்களெதிர் காணுநெஞ்சமமை யாதுநீண்
மாலையொன்றவிடு மூரலும்பிறவு மாதவஞ்செய்தரு டாசர்நேர்
வாழ்வெனும்படிகு லாவினங்கவர்கொண் மான்மியம்புகல லாவதோ
மாலைமுன்றெரிசி காவளம்புரைய வாயபங்கதுதி பாடவே
மார்பிலின்பவறல் பாயவின்புருவ வாரிசங்கள்பணி போதிலே. (அங)

தானனதத்தன தானனதத்தன தானனதத்தனனா

தாசரதிப்பெரு மாண்மனமுற்றிய தாவிலுவப்புடனே
தாடொழுபத்தரை யோவிலருட்கொடு தாவியுரத்தணையா
நேசமிகுத்துன தாவலளிக்குது நீவிரைவிற்சொலெனா
நீடுகரத்துணை யாலவரொப்பில்ச ரீரமதைத்தடவா
வாசகமற்றது தேர்தருநற்றவர் வானமிழ்துக்கிணையா
மாசில்கவித்திர ளாலுளமுற்றவ வாவையுரைத்திடுவார்
தேசமையொப்பினி னுதுருவத்தை*மை சேர்களனெத்தவர்நேர்
சேவைப்படைத்துனை யேதுதிசெப்பிடு சீலமளித்தருளாய். (அச)

தனதனதானன தனதனதானன தனதனனாதனனா

வினவிதலாலொரு பொருளிலெனாதக மிசைநசைமேவிலனால்
விமலதயாநிதி யெனுமதுகாலொளி விரிமணிமேனியனீ
ளனகவிசாவித தனதருண்ஞானம தருள்செயலான்மகிழ்வா
யணிதிகழ்தாரக மிசைபொருளாயவி ரடிமலர்தாசர்தொழா
கனநிகர்வோனவர் மனவெளியாநிகழ் கவினிறைகோயிலிலே
கலவல்செய்தானது பொழுதினிலேவிழி களின்முனிராகவனே
நனவுடனேகன வெதினுமருதிய னலமருவோர்செயலா
னடலையில்போரு ளுருவுடன்வாரியு ணதியெனமேவினனே. (அரு)

---

* மைசேர்களன் - நீலகண்டன்

## வேறு

* அனந்தாஞ்சீர்மலிராம தாசர் † கண்ணவேணியற லாடியன்பாற்
றினந்தொறுமிராகவன்ருட் பூசைபுரிந்தயல்கொணகர் சேர்ந்துபன்னென்
றினம்பெறுவீட்டடைந்துசய ரகுவீரசமர்த்தவென வீற்றிலோதிக்
கனம்பெறுமற்றவர்கொடுக்கும் பொருள்களைமுன் னடியவர்க்குக் கனிவினீந்து

மிகுதியைக்கொண்டடைசெய்து தாசரதியடைந்தின்பாய் மிசைந்தபின்னர்
நெகுமன்பிற்பிரசாத மருந்தியருட்சீராம னீட்சிக்காதை
தகுதிபெறவிலையில்வரைந் தாற்றிவிட்டுவதிவரங்காட் சாதார்மேய
சுகுணநிறைமன்னவன்சி வாசியென்பான்வேட்டைசெயத் துதைந்தக்கானில்()

யாமமொருமூன்றுவரை திரிந்ததனுற்பசிமிகவு மெய்திப்புண்மா
வாமவற்றுென்றுங்கிடையா தயர்ந்துவரும்போதவைக ளனைத்துமொன்றாய்ச்
சேமமுடனேரிடத்திற் றங்கிடவுமவைகாப்பட் சிறந்ததாசர்
காமர்மலிதிருவுருவோ டிராமநாமஞ்செபித்துக் கதிர்ப்பக்கண்டே. (அஅ)

பரிபாகம்படைத்தமன்னன் றெவிட்டாதுதாசருருப் பார்த்துப்போற்றி
விரிவாம்பேராச்சரியங் கொண்டிவர்தந்திருவடிக்கே மீளாவாளாய்ப்
பரிவோடுநான்பணிசெய் நாளென்றேவின்றிவர்தம் பக்கமேவ
வரியாதிமாவினங்கள் செறிந்துளவாலென்செய்வே னச்சோவென்றே. (அகூ)

அலைதருவெம்பவக்கடலாழ்ந் தருந்தல்பொருந்தலிற்களிப்பா ரனைவோருக்குந்
தலைவனெனப் பிறந்துழல்வே னிக்கவின்கானத்தினிடைச் சார்ந்தவான
கொலைதவிர்மாவாயிருக்கின் மற்றவர்நோக்கமைந்தருட்சொல் குளிரக்கேட்டே
நிலைபெறப்பின்றிரிதரும்பாக்கியம்படைப்பேனென்புரிவேனெறியற்றேனே.()

காட்டமைந்தவிலங்கினமுங் கருணைபொலிகுருபரன்செங் கமலப்பொற்று
ளூட்டமமைந்துள்ளனவா னூட்டமையுநரவுருவ நண்ணினேன்யான்
காட்டமைந்துகோட்டமுறும் வேட்டமுயன்றனனென்னைக் காணிலின்சொல்
கேட்டமையுமவையுளத்தின் மாட்டமையும்வெருட்சியதாற் கிட்டிடேனல். ()

மணிமகுடம்புனைந்துசிங்கா தனத்திருந்திங்காட்டமையு மாந்தர்சில்லோர்
பணியவிருங்கானடைந்து வேட்டமுயன்றெய்ப்பேனுன் பரவைபோலுந்
தனிவிலருட்குருபரன்றூண் முடிபுனைந்துதத்துவமாச் சாடிவானோர்
பிணியவிழ்மாமலர்தூவ மோனசிங்காதனத்தமைதல் பெறுவேன்கொல்லோ.

கண்ணமைந்தபெருவிருந்தா மிவரருட்பொற்றூண்முளரி கண்டபோதென்
புண்ணமைந்தவுடற்றுகசோகமெலாந்தவிர்ந்தவறப் புளகம்போர்த்துத்
தண்ணமைந்தவுயிர்தானு மென்பையழல்சேர்மெழுகின் றன்மைசாலப்
பண்ணமைந்தபான்மையினன்‡முளரியென்சொற்கிரண்டுபொருள்பரித்தவம்மா

---

* அனந்தரம் - அதன்பிறகு † கண்ணவேணி - கிருஷ்ணநதி
‡ முளரி - தாமரை, அக்கினி.

ஈண்டியல்பேரருளுருவார் சற்குருநாயகர்சேவை யிருகண்முன்னுன்
காண்டிடுமித்தினமேநற் றினமரிதாம்பேறிதனைக் கைக்கொள்ளற்கு
மூண்டிடுமுற்பவத்தனந்த தவஞ்செய்திருப்பேனந்த முறையிற்பொற்று
டீண்டிடவும்பெறுவேனோர் தினத்திலஃதொல்லையிலெய்தச் செய்வேனென்றெண்டன்()

எனமனதோகையிற்பலவா றியம்பினன்போற்றினனகர்ப்பா லெய்தியுண்ணுன்
கனதுயில்கொள்ளானவர்தம் பதமலர்க்காளாகிடலெக் காலமென்னு
மனநினைவுற்றிருந்திரவு முற்றவுடனெழுந்துகடன் வயக்கிமுன்போற்
றனதுபடைசிலகொண்டு தாசரொதிரொருசாமந் தானின்றேத்தி. (௯௫)

உலகளந்தவருட்டுணைத்தாண் மாதவவீண்டுற்றவர்குற் றேவலாற்றிச்
சலசமலரடிதலைமேற் சூடியவரடிமையெனத் தாங்கும்வாழ்வை
யிலகவென்னாளருள்வையெனத் துதித்துருகுமேல்வையினி லிலைகைக்கொண்டு
குலவுமொருவனைக்கண்டாங் கதிலமையும்பொருளறிந்துட் குதூகுலித்தே. ()

அந்நதியில்வருமிலைகள் யாவையுங்கொண்டணைதிரென வாள்கட்கோதி
யன்னவர்கொண்டளித்தவெல்லாம் புத்தகமொன்றினில்வரைந்திட் டன்பினொடு
மன்னவன்வாசித்துவருங் காலத்தீற்றமைத்தபெயர் மதித்துநோக்கி
யின்னபெயர்புலிகரடி யோடிருப்பார்தமதேயா மிதற்கின்றையம். (௯௭)

இத்தகையோரருட்சீரெய் திடலேநாமிப்புவிமீ தெய்தும்பேறென்
றத்தமிகும்புவியாட்சி தன்னிலணுவளவும்விருப் பமையானாகி
யுத்தமசற்குருபரன்மு னனவரதமுகூர்த்தமொன்றேய்ந் துவந்துபோற்றிச்
சித்தமிசையின்பொடுதுன் பமுங்கலந்தானாகிமன்னன் றிகழுநாளில். (௯௮)

அமைச்சர்களாயினர்புகல்வா ரையபிராகிருதத்தி லமைத்தபாட்டிற்
றிமைத்தவுவப்பினிராயெச் சாதியருந்துதையானைச் சென்றுபோற்றி
னுமைச்சகத்தர்மதிப்பர்கொலோ நமக்குமிழுக்கன்றோநீ ருபதேசத்தி
லமைத்தவிருப்புறிற்றேவ பாடையில்விற்பத்திகொளந் தணர்களாகி. (௯௯)

எத்தனையோமடபதிக ளுள்ளார்மற்றவர்களின்மிக் கேற்றஞ்சான்ற
வித்தகர்பாலடைந்துபதே சம்பெறலாம்வனத்தினனை விடுகவென்னப்
பித்தமைந்தார்பலவாறு யரசன்வசப்படுமாறு பேசக்கேட்டும்
வைத்தவடிவேலிறையன் னவரையுரையினைப்பொருளா மதியானாகி. (௧௦௦)

தான்கொண்டபெருவிரதந் தவறுமனடத்திவந்தான் றகுமோர்நாளில்
வேன்கொண்டமாருதியைத் தாசர்பணிந்திருந்தனரவ் வேலைமேவிக்
கோன்கொண்டவிழிகளிற்கண் டநுமனுடற்றேசதனாற் கூசிமுடித்
தேன்கொண்டவனத்தின்மறைந் தவரகன்றபின்கரங்கள்சிரமேற்கூப்பி.(௧௦௧)

வழக்கமுறத்தெரிசனஞ்செய் திருந்தனனிவ்வாறுதினம் வந்துவந்து
சழக்கறப்போற்றிடுமன்மிசை கிருபைமிகுந்தருகமையத் தாசர்கூவ
முழக்கமலிகழற்காலா னுவப்புடன்சென்றடிபணிந்து முன்னின்றேத்தி
யுழக்குபவசலதிகடந் துய்யவருளுபதேச முரைத்திரென்ன, (௧௦௨)

சேயவருணிலேவேட்டோன் றனைப்பார்த்துத்தாசரன்பிற் செப்புகின்றார்
நீயகிலமன்னவன்பேய் வடிவுடையேனெனைக்குருவா நெஞ்சிற்கொள்ளின்
மாயவுலகத்தினுள்ளார் மதிப்பர்கொலோநின்சபைப்பான் மருவில்யானீ
யேயவர்முன்வணங்குவைகொ லெனவணங்கவிலச்சையுளத் தெய்துவாயேல். (க0௩)

பாமார்த்நீயடைத லாகாதவ்வகையானின் பண்புக்கேற்ப
வுரமேற்றசற்குருவைச் சரணடைந்திட்டுலகநெறிக் கொத்துவாழ்வாய்
மரமேற்றகாவணத்திற் றரையானபள்ளியிற்கோ வணத்தினோடு
தரமேற்றவானரமொப் பேன்புடைநீவருவதுவுந் தக்கதன்றே. (க0௪)

என்றுபலவுரைத்திடவுட் பரிவுகொடுமன்னனுவந் திறைஞ்சியேத்தி
நன்றுணருஞானசிகா மணியேயென்னெனுப்பில்குரு நாதனேநான்
றுன்றுதிரிகரணசுத்தி யடைந்துமதுசரணடைசீர் சூழ்ந்திலீர்கொல்
பொன்றுறினுநும்மைவிடே னுயிருடன்மற்றோரிடத்திற் புகுவதுண்டோ. ()

எனப்புகலுந்தீவிரங்கண் டிவன்சான்றபரிபாகி யென்றுட்கொண்டுன்
மனத்திலுக்கொத்தின்றுகுருவாரமுஞ்சேர்ந்ததுநானம் வயக்கியெய்தென்
றனத்தமில்சற்குருசொலக்கேட் டானந்தமிகவாரி யாடப்போந்தான்
கனத்தவநுக்கிரகங்கொண் டினியின்பவாரியிடைக் கலப்பான்போந்தான். ()

சித்தவிராகத்தினொரு கலையுடனுற்றோனுடரோய் தெண்ணீர்மாற்ற
வத்திரம்வேறின்றியொன்றை யிரண்டுபடுத்ததுபுரிந்து மகிழ்ந்துடுத்துப்
பத்தியிற்பன்னிருநாம மணிந்துநித்தக்கடன்புரிந்து பழங்கள்கொண்டே
யுத்தமசற்குருபூசைக் காத்தொன்னையிடைச்சலங்கொண் டொல்லைமேவி. ()

அஞ்சலியத்தத்தொடெதிர் நிற்பவன்மேற்றுசாரு ளமைந்தாராகி
யெஞ்சலில்பன்னொருமுறைவந் தனம்புரிதியென்றிடவு மியற்றியவ்வா
றுஞ்சனன்யானென்றுதன துடல்பொருளாவியைக்குரவற் குதவியன்பிற்
றஞ்சமுறுகஞ்சமலர்த் தாட்பூசைபுரிந்துகண்ணீர் ததும்பிநின்றான். (க0அ)

நின்றவனைப்புடையிருத்திக் காஞ்சிரஞ்சேர்த்துபதேச நிகழ்த்திமன்னீ
நன்றமையித்தினமுதற்கொண் டிஞ்சைவிடுத்திரக்கமிக நண்ணியன்பிற்
றுன்றரிபூசனைசாது சேவ்வபுரிந்தரிதினத்தில் விரதந்தோய்ந்தே
யன்றனந்தலொழித்திரவு தொறுமாஞ்சனேயதரி சனஞ்செய்வாயால். (க0௯)

என்னவருளாரியன்சாற் றிடக்கேட்டமன்னவன்று மிசைத்தவாறும்
மன்னருட்கொடியற்றுவனென் றுரத்தொடுரைத்தவர்திருத்தாண் மலர்விளக்கி
யன்னபுனல்யின்றுவன் மாலைகள்த்திட்டகத்தி லாற்றிப்பூசை
வன்னநறுங்கனிகணிவே தித்தவருண்டபின்சேட மாந்தினுனல். (கக0)

உண்டுமுன்னிற்பவற்பார்த்துத் தாசர்சொல்வார்நீகரத் துற்றேயாட்சி
கண்டுவதியெனப்பணிப்பப் பணிந்துமன்னன்பொருளுயிர்மெய் களைநமக்கே
மண்டுமன்பாலளித்தனன்பின் மற்றவற்றையென்னதென மதியேனற்றாற்
றொண்டேடயிராளதுந்தாட் குற்றேவல்செய்திடவுட் சூழ்ந்தேன்மன்னே.

எனவுரைத்தமன்னவற்பார்த் தோதிடுவர்தாசர்முன்ன ளிகத்தையாண்டே
சனகனுருக்குமாங்கதனம் பரீடன்முதலோர்ஞானந் தழைத்துவாழ்ந்தா
ரனகனருட்டுணைகொடவ்வா றுற்றினினக்கொருகுறையு மடையாதற்று
லெனதுமொழிமறுத்தறையா தொல்லையரசியற்றிடநீ யேகென்றாரே. (௧௧௨)

பெருந்தகைச்சற்குருமொழிகேட் டொப்பிலவர் திருவடிகட் பிரிதலாற்றான்
மருந்தனகட்டளைமறுக்க மாட்டான்மன்னவனிதய மருண்டுவாடிப்
பெருந்தடங்கண்ணீரிறைப்ப வருட்பதபங்கயங்கண்முடி பிறங்கச்சூடித்
திருந்தணிமாநகரணைந்து வைகறையின்முன்பெழுந்து தீர்த்தமாடி. (௧௧௩)

பத்திரபுட்பம்பனிநீர் சந்தனமென் றுகில்வின்மணிப் பணிகளாதி
மெத்தியல்சாதனங்களுடன் மங்கலதூரியங்கலிப்ப மேவச்சேனை
பைத்திரையார்நதிபடிந்து தன்கரத்தாற்கனிகளலர் பறித்துநாத
ரொத்தியல்சந்நிதியணைந்து பரவசத்திற்பணிந்துவப்பி னுற்றயாவும். (௧௧௪)

குருமுதல்வர்திருமுனமைத் திடக்கண்டுமன்னனிடங் கூறுகின்றார்
நிருபவிவற்றுவப்பெனக்கின் றினியிவ்வாறியற்றிடநீ நினையல்வேண்டேன்
மருவியநின்பதிக்கணுறைந் தின்னவெல்லாமிராகவற்கு வ்யக்காயென்னத்
திருமலிமன்னவன்புகல்வான் யான்செய்யத்தக்கதுவே செய்திட்டேனல். ()

துறவறத்தினெனையமைக்கி னதற்கேற்பநுமதுதிருத் தொண்டுசெய்வே
னறமருவும்பூசனைகொண் டருளீரேல்யானுணவார்ந் தமையேனென்னுந்
திருமலியன்புறுமன்னன் றீனமொழிக்கிசைந்துளத்திற் றிருத்தியின்றி
விறல்குலவுமன்னனுகற் கரிதாகுஞ்சேனுளதோர் வெற்பின்மேவி. (௧௧௬)

வேறு

சீராம சந்திரனற் கமலப்பொற்றாள்
சிந்தையுள்வைத் தோவின்றிப் றிளைத்துவாழ்ந்தார்
பாராண்மன் னவன்வழக்கம் போலச்சென்று
பார்த்தவண்கண் டிலனவசம் படைத்துத்தான்மு
னாராத னம்புரிந்த பொருள்கள்யாவு
மாண்டுறக்கண் டகம்வருந்தி யணைந்தாரோடுங்
காராரும் வனமுழுதும் பகலிராவுங்
களைப்பறமுத் தினமாய்ந்துங் கண்டிலானய். (௧௧௭)

கண்கலங்கி யென்றுகொல்சற் குரவன்சேவை
காண்பதெனமிகவேங்கிக் காணுங்காறு
மண்கவின வாட்சிசெய்யே னுண்ணேன்றுஞ்சேன்
மற்றெவையும் பொருளாக மதியேனென்னத்
திண்கனவி ராகமுற்ற சீடன்றன்மை
தேசிகர்தேர்ந் துடன்விழிமுற் றிகழ்ந்ததாலே
யெண்கணடங் காமகிழ்வுற் றடியில்வீழ்ந்தா
னெபூலறியான் றேப்பிடச்சண் டிரக்கங்கொண்டே. (௧௧அ)

தேசிகர்தங் கரங்கொடெடுத் தஞ்சேலென்னத்
திருமார்பி னிடையணைத்துத் திருட்டிநின்றும்
வீசிடுநீ ரைக்கரத்தான் மாற்றிமன்னன்
மெய்தடவ வுடன்பாதம் விளக்கிப்பூசித்
தாசில்பதப் புனல்பருகி யிந்தவாறெற்
கநுதினம்பூ சிக்கவர மருடிரென்னப்
பேசிடுவா ரிலையிடையான் வரைந்தவற்றைப்
பேணிடலென் சேவையெனப் பெருவாயன்றி. (௧௧௯)

எத்ததியென் சேவைபெற விரும்பினுனு
மெய்திடுவே னீகருக் கெய்துகென்னச்
சித்தமகிழ்ந் தடிவணங்கிச் சென்றான்றசர்
திகழ்வனம்விட் டணிமலிமா வுலிப்பேரூர்மே
யத்தமணி யலர்தரங்கக் கரங்கொண்டியு
மணிக்கண்ண வேணியின்றீ ரத்தின்பாங்கார்
புத்தலர்தோய் தருதருக்கண் மீதூர்ந்தங்கட்
போந்தசிறு பாலர்களி பொருந்துமாறே. (௧௨௦)

ஓடுவர்கீ ழிருந்துமரத் தும்பரேய்வ
ருற்றசுதர் கல்லடியுண் டனன்னோர்மேற்
காடுறையும் புலியாதி கொடுவந்துய்த்துக்
கலக்குவரக் காவுளகாய் கனிகண்மாந்தி
மாடுறுபா லகர்கண்மிசை கற்போலுய்த்து
மனமகிழ்வர் கவிநிகர்ப்ப வதிவார்செய்கை
நாடுவர்முற் பிறப்பிலிவர் கவியேயென்ன
நவின்றிடவற் புதச்செயல்க ணடத்திவந்தார். (௧௨௧)

ஐயத்தின் பொருட்டுநக ரணையிற்கண்டோ
ரணியுளனை யைந்தாண்டே யமைந்தானந்தோ
வையத்தார் பெற்றசுதன் கொல்லோபிச்சு
மருவினன்றாய் தந்தையுள மறுகும்வண்ணஞ்
செய்யசுதர் கல்லடியுண் டிவண்டிரிந்தான்
சித்தசன்போ னின்னவன்கொள் சென்மம்வீணொன்
றுய்யறிவில் லார்பழிக்கப் பன்னேரில்லேற்
றுவப்பொடிரா கவற்போற்றி யுற்றார்மாதோ. (௧௨௨)

இவ்வாறுங் கியனுளி லோர்நாளைய
மேற்றடைகண் மூன்றட்டா ரிசையவக்காற்
செவ்வாத ரங்கொண்மன்னன் றேடியெய்தித்
திருவடிகள் போற்றிநிற்பத் தீர்த்தர்மானுக்

கொவ்வாப்பூ சனைபுரிந்தோன் நீந்துதானென்
றுண்டாசன் பெற்றிடவொன் றுதவலானுர்
தெவ்வானுர்க் கேறனையான் கையேற்றுண்டு
தெரிசனஞ்செய் தனனகரஞ் சேர்ந்திட்டானல். (கஉ௩)

பெற்றியிது கண்டவர்க ளாருமற்றிப்
பித்தனநுக் கிரகமன்னன் பெற்றுனென்னச்
சொற்றிகழ்ந்தார் சுதர்களுட ஞடும்போதுஞ்
சுகராம நாமமன்பிற் சொல்லச்சோம்பா
ரிற்றியல்கா லொருவனுதன் மேற்கல்லோச்ச
வெய்த்தவனி மேல்விழுந்தா ரிறந்தார்போன்றுர்
துற்றியல்பா லகர்நாசி யுயிர்ப்பு நோக்கிச்
சோர்ந்த செயல் காண்டலுமுட் டுணுக்கமெய்தி. (கஉச)

நராதிபன்றேர்க் கிடினம்மை மடிப்பானென்ன
நதிமணலுட் பொதிவித்து நகரஞ்சேர்ந்தார்
விராவியவேல் வையிலிறைவன் குரவற்றேடி
வெறிமலர்க்கா வுடன்குகைவெற் பிடங்களெல்லா
முராவியறி யாதெதிர்சார் பதிகர்தம்மை
யுசாவிடமற் றவர்புகல்வா ருலகர்யாரும்
பராவியல்சா லெதியொருவர் தம்மையாடற்
பாலர்கொன்று நதிமணலுட் பதித்திட்டாரால். (கஉரு)

என்றமொழி கேட்டுமன்ன னவசமேவி
யெழுந்தஃதெங் கென்றிடமா வுலியிலென்னக்
கன்றலகி றுக்கமுடன் கடிதுசென்றுன்
கடிநகருள் ளார்சுதர்செய் கன்மந்தேர்ந்திட்
டொன்றகத்துள் வெருவினராய்த் திவசமோரே
ழுற்றசடத் தினையெரியி லுய்த்துநீரி
லின்றமையப் புரியேமே லிறைவன்றண்டம்
யாமடைதற் கையமின்றென் றெண்ணினுராய். (கஉசு)

பொதியுமிடத் துறுமணலைத் தோண்டித்தாசர்
பொறப்பருண்மே னியைக்காணும் போழ்திலன்னேர்
மதிமருளும் படியொருகர்ச் சனைசெய்தாராய்
வல்லையெழுந் திடக்கண்ட மாந்தரியாரு
முதிருருமி னெலிவினவும் பைங்காகம்போன்
மூர்ச்சித்து வீழ்ந்துதெளி வுற்றுேராகி
யதிசயமிக் கிறந்தேழு திவசஞ்சென்றுே
னதிரொலியோ டெழுந்தனனுச் சரியமாமால். (கஉஎ)

பித்தனென நினைத்தனம்பா மின்னேன்வானிற்
பிறங்கிமையோர் களினுநலம் பெற்றேனம்ம
வெத்தன்மை யடைகினுநா மிறைவன்றண்ட
மெய்தாது புரிந்தளித்த தேற்றமென்னச்
சித்தமுவந் திறையையெதிர் தேடிச்சென்று
தெண்டனிட்டுச் சற்குரவர் திறலினேடு
மொத்தமையு மிடங்காட்டத் தாயைத்தேடி
யுற்றகொற்றித் தன்மையின்மிக் குவகையோங்க. (௧௨௮)

திருவடியில் வீழ்ந்தெனெரு பெருவாழ்வாகுந்
தேசிகசி காமணியே தேவதேவே
பொருவிலருட் கடலேமெஞ் ஞானவின்பப்
பொருப்பேயென் னுளத்தமைந்த விருப்பேமேலாந்
தருவமரர்க் கெட்டலின்மெய்ச் சுகநாயேற்குத்
தந்தருளுஞ் சுந்தரக்கஞ் சமலர்த்தாட்சற்
குருவேயென் றன்பில்வழி கண்ணீர்கொண்டு
குளிர்பதமஞ் சனஞ்செய்தெழான் கொற்றந்தேர்ந்தார். (௧௨௯)

செம்பதுமத் திருக்கரத்தால் வாரிமார்பிற்
சேர்த்தணைத்துத் தடவியுற்ற சிறுவர்செய்கை
தம்பவள வாய்மலர்ந்தா சிரியர்தாமுஞ்
சாற்றிடக்கேட் டயர்ச்சியின்பந் தழைத்தானுகி
யும்பரின்மிக் கவர்க்கமுதட் டுதவித்தான்பி
னெப்பில்பிர சாதமயின் றமதுநாட்டுக்
கெம்பரனே யெழுந்தருள வேண்டுமென்ன
வினிதவண மெய்திடுநா ளிதுவன்றென்றே. (௧௩௦)

உதிக்குமினன் மதியிணையீண் டமைதிரென்ன
வோங்கலவா விடிலுறுவ துண்டோவற்றே
மதிக்குமன்பர்க் கநுக்கிரகஞ் செய்யவந்தேன்
மாண்பதிக டொறுமேவு மாந்தரார்க்குங்
கதிக்குமியற் பேரின்பந் தருதல்வேண்டிக்
கலந்திடுவே னீயென்னைக் காணவேண்டி
நிதிக்குவைதோய் நகர்நீத்தேழ் தினமாயிற்று
னேர்தியெனத் தொழுதேத்தி நிருபன்சென்றான். (௧௩௧)

அரசனகர்க் கேகிடலு மிராமதாச
ராரணியத் திடையமைந்தா ரன்னவேல்வை
*பரணியின்பின் வருநாளின் பெயர்க்குலத்துற்
பவித்தவன்றத் துப்பெயர்தோய் பவன்பொய்மாயை

---

* பரணியின் பின்னுள் - கார்த்திகைப்பெயர், நாவிதன்.

விரவுபந்த முற்றொழிந்தோன் றனியனாகி
வினைதவிர்த்தாள் குருசேவை விழைவோனன்பிற்
பரவவவன் பக்குவஞ்சின் னுள்சோதித்துப்
பகவனருணாமமறைத் தீக்கையாற்ற. (கக௨)

ஆசிரியற் குடனிழல்போ லகலாதேவ
லாற்றியநுட் டானத்தி லமைந்துவாழ்ந்தான்
மாசிலவர் தத்துவுடன் கூடிச்சாதார்.
மாநகரெய் திடவுளத்தின் மதித்துச்சென்றோர்
கோசியறா ரத்தமைந்து தீர்த்தமாடிக்
குலவுநிவே தனம்புரிந்து பூசைசெய்கா
லாசிபெறு தத்துமிகப் பசியால்வாடி
யருகமைசோ ளக்கதிர்கொய் தருந்தல்வேட்டே. (கக௩)

ஆரியன்பா லோதமற்றோர் பொருளாகாதென்
றறையவுந்தன் குலம்பசிக்கொத் தவாவிற்செய்தான்
காரியமற் றதுதேறி யுடையானெப்பில்
கடுஞ்சினமிக் கிழிசொல்பல கழறிவந்து
வீரியத்தி னுடன்கரங்கொள் கோலாற்சோளம்
வெதுப்பிடுவானைக்குருவா விளங்கினரைப்
பூரியனெண் ணன்சாலப் புடைத்தகன்றான்
புனிதருள மகிழ்ந்துநகை புரிந்தாராகி. (கக௪)

தன்னருகார் தத்துவைப்பார்த் தறைகின்றார்மா
றன்னடியார்க் கின்பதுன்பஞ் சமமாமற்றாற்
சொன்னலங்கொல் லையிற்கதிர்க ளொடிக்கும்போது
தோய்ந்தசுக மடிக்குங்காற் றுறக்கப்போங்கொ
லின்னலிங்கே னடைந்திரங்கு கின்றாயென்றா
ரிணையடிகள் வணங்கியிசைத் திடுகின்றான்யான்
சொன்னதுகே ளாமையிற்றுன் படைந்தேனென்றன்
றுணையாற்றும் பெறனுடித் துயர்ந்தேனென்றான். (கக௫)

அன்னதுகேட் டிதுசெயலை மற்றோர்தேர
வறையலையென் றுரைத்துநடை யமைந்தாரக்கான்
மன்னனெற்றர் தேசிகர்நல் வரவுதேர்ந்து
வல்லையிறை பாலோத மகிழ்ந்தானாகி
நன்னலம்பெற் றிடநகரைப் புனைதிரென்று
நால்வகைச்சே னைகளொடெதிர் நண்ணித்தாசர்
வன்னமலர்ப்பதம் பணிந்து சிவிகையேற்றி
மந்திரிக ளுடன்மருங்கிற் கவரிவீசி. (கக௬)

திருமாட வீதிவலஞ் செய்துபின்னர்
செல்வவரண் மனையமைந்து சிங்கந்தாங்கும்
பொருவிலணை யமைத்துச்சோ டசோபசார
பூசையுளம் பொங்குமன்பிற் புரிந்துபோற்றிக்
குருநாதர்க் கமுதமைத்துத் துய்த்தபின்மெய்
குளிரவருட் பிரசாதங் கொண்டுபின்னர்
மருவாருஞ் சந்தனந்தாம் பூலமாதி
வழங்கியருட் குருவுவப்பின் வதியுமேல்வை. (கருஎ)

உடன்வருதத் துவைத்தனியோ ரிடத்திற்கூவி
யுசாவிடுவா னெப்பிலருட் குரவர்தம்வெங்
நிடமமையுந் தடிப்பேது மறையாதுண்மை
யிசைக்குதியென் றிடக்குரவ ரியம்புநீதிக்
கடமைகெடுஞ் செயற்குள்வெருண் டோதானுய்முள்
காந்திருப்பக் காவலனீ கழறிலாயே
லுடனெனுயிர் துறப்பேனென் றனன்கொள்ளிக்க
ணுறுமெறும்பே யென்னமனமுழன்றுமாழ்கி. (கருஅ)

கூறினன்கேட் டடன்மன்னன் கொதித்துச்சோளக்
கொல்லையுடை யானையிவண் கொணர்திரென்ன
வீறியற்றா தரையேவிக் குரவரன்பால்
விளிராம கீர்த்தனங்கள் வினவியுற்று
னீறியன்முன் கொணர்ந்தவர்மன் னவன்பாலோத
விடுதிர்சிறைச் சாலையிடை யென்றபோதி
லாறிதயம் பெறுதாசர் சோளக்கொல்லை
யளித்தோனே யேயெனத்தம் மகத்திலோர்ந்தார். (கருகூ.)

மன்னனைப்பார்த் தவற்சிறைநின் றகற்றியென்முன்
வரவழைத்தி யெனவந்த வாறுசெய்கா
லன்னவற்கிட் டளதனைதீர்த் தாசன்றம்மீ
தமைத்துளவே காசமவனணியநல்கி
யின்னவன்பா வின்றுமுதற் கடமைகொள்ளே
லென்றுமன்னற் கோதியெதி ரிரங்கிநிற்குஞ்
சொன்னலங்கொல் லையினனை யஞ்சேலின்பங்
தோய்ந்திருத்தி யென்றுசிசொல்லலானர். (கச0)

உடனிருபன் றனைத்தாசர் தமைவணங்கி
யுயிர்பொருளின் பெய்தினனென் றுவந்துசென்று
னடவுமதி சயமுணர்ந்தார் தாசர்மேன்மை
நன்குணர்ந்து பலதுதிக ணவின்றுதாழ்ந்தார்

கடமுறுகல் வினுக்கெழிற்பெண் ணுருவநல்கும்
கமலமல ரடித்துணைகள் கருத்துணிங்கார்
திடமனமன் னவனிடமுத் திவசம்வைகித்
செறியிரவிற் றத்துவுடன் கானஞ்சேர்ந்தார். (கசக)

புலரியின்மன் னெழுந்தமைந்த குரவற்காணான்
பூணுடைக ளூறக்கண்டான் பொருவில்கானத்
தலமணைந்தா ரெனத்தேடிக் கண்டுபோற்றத்
தன்முனிற்கு மன்னவன்பாற் சாற்றுவாரியா
னலதிரியம் பகந்தரிசிப் பானுள்ளாவ
னண்ணினனென் றிடவிறைவ ளுனுமெய்தற்
கலகிலவா வடைந்தனனென் றிடமன்னியாண்
டடைந்திடிலங் கமை * யவிந்த ரமர்செய்வாரால். (கசஉ)

சுகத்தொடா சியற்றினையீண் டிருத்தியான்போந்
தூயதலத் தமைந்துளமெய்த் தொண்டரார்க்கு
மகத்துவகை மிக்களிக்கப் பொருணல்கென்ன
வானந்த மெய்திமன்ன னசுவமொட்டை
நகத்தகையா னைகளின்மணி யவிர்பொன்னுடை
நனிசுமத்தி யனுப்பியரு ளுதர்சீக்கின்
மிகத்தளர்ந்தான் செயலுணர்ந்து தாசர்சொல்வார்
வெதும்பிடனீ யானிங்ஙன் மேவுங்காறும். (கசங)

அடல்பெறுமா ருதியைபிரா கவனையன்பா
லாராத னஞ்செய்தவர் சேடமார்ந்து
நடலையொழிந் திருத்தியென வாசிசாற்றி
நான்மறையோ ருடன்சென்றார் நராதிபன்றான்
மடல்கொள்குரு மலரடிகள் வணங்கிப்போற்றி
வயங்குதன்கோ யிலையடைந்தான் மலரோனென்ன
மிடலமைந்தா ரரசனல்கும் பொருளாலெய்தும்
வேதியருக் குண்டியறம் விளைவித்தாராய். (கசச)

வழக்கமொத்துத் தாமைய மேற்றிராமன்
மலரடிகள் பூசித்து மடங்கலென்ன
முழக்கமுறா சமைதிரியம் பகத்தின்மேவி
மொய்த்தவர்கட் கறந்தான முகில்போற்பெய்தார்
† குழக்கமறை யோர்வபன மெம்மில்லின்கட்
கோடன்முறை யென்றிரந்துங் கொள்ளாராகிச்
சழக்கறுமா லடியரில்விற் புரிந்தன்னோர்க்குத்
தம்மகிமை தெரித்தகந்தை தவிர்க்கவேண்டி. (கசரு)

*அவிந்தர்-மிலேச்சர். † குழக்கம்-பயிலல்,

ஒருதினந்தத் துவைக்குறியொன் றமைக்கச்சாற்றி
* யுபலங்கொண் † டிலச்சினைமீ தோச்சக்கண்டு
மருவுமறை யோர்வியந்தா ருடன்மற்றென்றால்
வானுலவும் புள்ளொன்றை மாய்த்துளத்திற்
பருவரலற் றந்தணரை நோக்கியிஃதைப்
பாரில்விழக் கொன்றனன்யான் பார்மினென்னப்
பெருநகையோ டெம்புகல மறையோர்தேர்ந்து
பிறங்குயிர்மேற் கருணைசற்றும் பெற்றிலானாய். (௧௪௬)

உயிர்க்கொலைசெய் திடுமிவனை யதியென்றுள்ளத்
தொப்புவதெப் படியெனவை துவர்த்தாரீது
குயிற்றினர்கொண் டணைந்துரைப்பா ரருள்சற்றில்லேன்
கொன்றுவிட்டேன் கருணைமெஞ்ஞா னங்கொண்டுள்ளீர்
பயிற்சிமறை யொழுக்கமைந்தீ ரிறந்தபுண்மேற்
பாசமுள்ளீ ருமதுதவப் பலன்சற்றீயி
னுயிர்த்தெழும்புள் யானறியா தியற்றும்பாவத்
தொழிவமைவே னருளிரவ்வா றுனுற்றீரென்றார். (௧௪௭)

செத்தவுயி ரிணையெழுப்ப விராமனாலுஞ்
செய்யமுடி யாதெனில்யாஞ் செய்யப்போமோ
பித்தவிண்மீ தியல்ககத்தை வீணேகொன்ற
பேயவெனத் தாசர்சொல்வார் பேதையீர்காள்
சித்தருண்மெய் யுருவுடைச்சீ ராமன்றன்னாற்
செயற்கரிதொன் றிருப்பதெனச் செப்பலென்னே
பத்தர்விளம் பிடுராம நாமமேன்மை
பார்மின்க ளென்றுகைப்புள் ளினைமேல்வீச. (௧௪அ)

பறந்தோடிற் றங்கதனைக் கண்டபார்ப்பார்
பயந்துமிக வியந்திவன்பண் ணவர்கட்கெல்லாஞ்
சிறந்தோனே ரவதார புருடனென்னச்
செப்புபிரா மதாசனென்னுந் திருநாமந்தா
னறந்தோயு மிவற்கேசால் புடையதென்ன
வறைந்தவர்தாட் டுணைபணிந்தா ரதன்பின்சித்தித்
திறந்தோயுந் தாசரங்கோர் திங்கள்வைகித்
திருமலிபஞ் சவடியிடைச் சேர்ந்தார்மாதோ. (௧௪௯)

வேறு

சென்றதாசர்தா சரதிதன்பங்கயச் சேவடிபணிந்தன்பு
துன்றவெண்ணிரண் டாமுபசாரமுந் துலங்குபூசனைசெய்தே
யொன்றறங்கள்பற் பலவுஞ்செய்தந்தணர்க் கோதனந்தனநல்கி
யன் ‡ றல்கற்றனி விராமகீர்த்தனம்புரிந் தமைந்தனரதுகாலே. (௧௫௦)

* உபலம் - சிறுகல். † இலச்சினை - குறி. ‡ அல்கல் - இரவு.

இராகவன்றிரு வுளமகிழ்ந்தெழி லுரு வியைந்துற்றோர் தெரியாதே
பராவுதாசர்கண் ணெதிரணைந்துவப்புறப் பற்பலாசிகள்சாற்றி
விராவுமின்னென மறைந்திடத்தாசருள் விம்மிதமிகக்கொண்டே
யிராமநாமத்தின் மகிமையைத்துதியினில் விதியினிலெடுத்தோதி. (௧௫௧)

சபதபங்களா தியவெலாமிராமசங் கீர்த்தனந்தனின்மேலாம்
விபவரீடிய வன்றெனவிரவெலா மிகவிளம்புபுபோற்றித்
தபனநாயக னுதிக்குமுனின்பரீர் தனினணைந்தருட்டாசர்
சுபமல்கார தி புரிந்துநிவே தனஞ் சூழ்ந்துளோர்க்களிப்பாரால். (௧௫௨)

கணிதமில்புகழ் சாலிராமதாசர்தாங் கழறுபதேசத்தா
லணிமிகும்பஞ்ச வடியின்மேவினரெலா மருளிராமநன்னுமங்
கணிதரும்புகழ்ப் பத்தர்களாயினர் கண்டருண்மலிதாசர்
மணிவண்ணப்பெரு மாளடிபோற்றுபு வாழிவாழியென்றேத்தி. (௧௫௩)

ஒப்பில்சீரிடாங் களிபுகவாண்டமை யுத்தவரூர்மேலோ
ரப்பிழிந்திடு கட்புலன்பரவச மடைந்திடக்கண்டேத்தக்
குப்பியைந்துடன் வந்தவர்படாநெடுங் குடிலிடைப்புறத்தாசர்
தப்பிடாதவ்வூர் புக்குளாரிடுமையந் தனைபுவப்புடன்கொண்டே. (௧௫௪)

ஆஞ்சனேயர்தம் பூசைசெய்தன்பினிலட் டடையுமிராமன்
பூஞ்சரண்டொழு தருத்துபுவேதியர் புசித்தபின்றுந்துய்த்து
வாஞ்சைமிக்கிர வூடசங்கீர்த்தனம் வழுத்திமேவினரார்க்கு
மாஞ்சலங்கெட முத்தினங்கருணையா லநுக்கிரகஞ்செய்தே. (௧௫௫)

அருந்தவம்பல புரிந்துயிர்த்திட்டதம் மன்னைதந்தையர்க்காணப்
பொருந்தணிச்சுர நதிவழிச்சம்பெனப் பிறங்கவ்வூர்க்கணித்தாக
விருந்தவோர்தலத் தனிகமோடிறங்கின ரிதுதெரிந்தவ்வூர்வாழ்
தருந்தரங்குலா வினரெலாமன்குரு சார்ந்தனர தனலே. (௧௫௬)

எதிர்கொண்டேத்துபு தொழுதவாருள்பெற லேற்றமாஞ்செயலென்ன
முதிருமன்பினு லெதிர்கொடுகாணிக்கை முதலமுன்வைத்தாராய்ப்
பொதிதரும்பய மிக்கதிதூசத்திற் பொருந்திநின்றையுற்றே
யதிகணெற்றிசேர் மறுவுளார்நாரண சாமிகொலெனவுன்னு. (௧௫௭)

ஆயவங்கவர் தம்முளோரந்தண னவனுளார்களைநீக்கி
நேயமெய்த்தவத் தாசர்பாலணைந்துநீர் நிருபன்றேசிகரேனுந்
தூயவெத்தலத் தினர்செல்வதெங்ஙனஞ் சொல்லுதிரெனக்கேட்பச்
சேயபஞ்சவ டியினின்று நமையெலாந் தேரவேயிவண்வந்தேன். (௧௫௮)

என்றுபுன்னகை கொண்டுசாற்றிடலுமுன் னியைந்தவேதியனுனன்
றுன்றுமெய்த்தவ வேடத்திர்நீரியற் சூரியாசிதன்பால
ரன்றுகொன்னரா யணசாமிச்செல்வரென் றறிந்தனனுமையென்ன
நன்றுதேர்ந்தன ரெனமனத்துன்னுபு நகைத்தனரிருந்திட்டார். (௧௫௯)

அளித்ததந்தைதாய் வரப்புரிவேனென்ன வதுவினவுபுதாசர்
விளித்தன்னோர்தமைக் காணனன்றன்றவண் மேவுவன்யானென்றுட்
களித்தணைந்தனர் கானடைகொண்டதைக் கடிதவ்வூர்க்கிறையன்னோன்
றெளித்தனன்முன்போந் தளித்தவரவசமுட் டீளத்திடும்படிமாதோ. (௧௯௦)

சாற்றுகாலையி லனிகமோடணைந்திடு தாசர்தம்முன்னோன்றன்
மாற்றுயர்ந்தபொன் னடிதொழவாரித்தன் மார்புறத்தழீஇயன்பா
லூற்றுறழ்ந்திரு விழிபுனல்பொழிந்திட வுவப்பினுசிகள்சாற்றப்
போற்றுமன்னைதாள் வணங்கலுமற்றவள் பொழிதருங்கண்ணீரால். (௧௯௧)

அன்றுபெற்றவள் போன்றுமஞ்சனம்புரிந் தருமைசாலென்மைந்த
வின்றுகாறுமிக் கன்பமையெனைமறந் தெங்ஙனமிருந்திட்டாய்
நன்றுநன்றுகோ சாயிதன்வடிவுட னுனைக்கண்டேனு
லென்றுபற்பல புகன்றுமிக்கிரங்கிட வேகினர்பிதாமுன்போய். (௧௯௨)

வணங்கவேர்கையி னெடுத்தனன்றழுவினன் வகுத்தனன்பலவாசி
யிணங்குதந்தைதாய் முன்னவன்றம்மிசை யிகப்பின்மாலுடன்மொய்க்குங்
குணங்கருத்தினுட் டேறிமற்றவருளங் குதூகுலித்திடும்வண்ண
மணங்குலாவபங் கக்கவிபற்பல மழையெனப்பொழிந்திட்டார். (௧௯௩)

அன்னபான்மைதேர்ந் திட்டவர்மூவரு மதிசயமிக்கெய்தி
யின்னவன்குல மொன்றல வுயிர்க்குலம் யாவுமுய்ந்திடவந்தோ
னென்னவுட்கரு தினர்களாய்மட்டறு மின்பவாரியிலாழ்ந்தார்
பன்னரும்புகழ் படைத்தவர்முறைமையிற் பயிக்கமேற்றிடச்சென்றூர். ()

பன்னெனன்றுகுமெண் பெற்றியன்மனைபுகப் பார்த்தவரெல்லோரு
மன்னெனன்றுங்குரு வெனப்பணிந்தேத்தவு மற்றச்சீர்மதியாதே
யென்னெனன்றும்பெரு நங்கிரகக்கணு மிரந்திடவந்திட்டார்
மின்னெனன்றின்னவர் விராகமேலேனைய விராகமென்றிடலாமால். (௧௯௫)

என்றுகண்டவர் யாவருந்துதித்திட விருந்தவப்பெரியோர்தாஞ்
சென்றுகண்டமட் டுங்கறுத்தான்புகழ் செங்கண்மாயனதோங்குங்
குன்றுகண்டமா ருதிபுகழ்சேவடி குளிரப்பூசனையாற்றி
நன்றுகண்டன துதிபுகன்றின்பவா னாலையினிடைதோய்ந்தார். (௧௯௬)

அன்னசெவ்வியிற் றந்தைதாய்மைந்தரோ டணைந்தவந்தணர்க்கெல்லா
மென்னறுஞ்சுவை யாறமையுண்டிகண் மிசைதரும்படியிட்டுப்
பொன்னவாவறத் தக்கணைபொழிந்துதாம் பூலமாதியநல்கித்
தன்னருந்தவச் சுதரொடுமின்பொடுந் தாமமுதயின்றூராய். (௧௯௭)

இன்பவான்கடற் கெல்லைகாணுதவ ராயிருந்திடுமேல்வை
மன்பராவிடு சற்குருபரரெனு மைந்தர்மன்னவன்மேய
கோன்பராவுசா தார்நகருறவிடை கொடுக்குதிரெனப்போற்ற
முன்பர்தந்தைதாய் தாசர்பாலிவ்வண மொழிகுவர்நசைத்தம்மா. (௧௯௮)

உனதுசிட னு மன்னனைக்காணநின் னுடன்வருகுதுமென்னுந்
தனதுதாதையைத் தம்முனையத்திமேற் ருயையானமேஹூர்வித்
தனகர்போற்றின ரனிகமோடடைதா வரசனெற்றாற்றேறி
மனமகிழ்ந்துசே னையினுடனெதிர்கொண்டு மகிழ்வுடன்பணிந்தேத்தி. (கசுசு)

முதுவர்மூவரை யும்பணிந்தியானித முயன்றமாதவந்தன்னு
லதுலமிக்கநுந் தெரிசனமடைந்தன னரிதெனக்கின்றென்றே
விதுவைநேரருட் குரவரைச்சிவிகையூர் வித்துச்சாமரைவீசிக்
குதுகுலத்துட னகர்வலம்வந்துதன் கோயிலிற்கொடுசென்றே. (கஎ0)

தக்கவாறுப சாரபூசைகள்செய்து சதுரர்மிச்சிலைபுண்டு
மிக்கவெல்லிக டொறுங்கங்காதரர்கதை விளம்பக்கேட்டின்புற்றான்
புக்கவோர்மதி யிவ்வணங்கழித்தலும் புனிதர்மன்னவற்பார்த்துன்
பக்கமேவுமு வரையுஞ்சாம்புப்பெயர்ப் பதிக்கனுப்புதியென்ருர். (கஎக)

உவமைதீரருட் டேசிகரானைதன் னுளங்கொடுபூபால
னவமணிக்கலன் பொலந்துகிலிரணிய நால்வகைப்பெருஞ்சேனை
யுவகையோடவர்க் களித்துவாழ்சாம்பெனு மூரையுங்கொடையாக்கி
நவநிலாவுப சாரங்களனந்தமு நவிற்றுபுபணிந்தன்பால். (கஎஉ)

இலங்குமூவரு முவந்துசாற்ருசிகொண் டெழில்கொண்மாநகர்சேர்த்து
நலங்குலாவுதன் பதிபுகச்சற்குரு நாதர்தத்துவினேடு
மலங்குமெல்லியில் யாவருங்காணுரு வண்ணமாவனஞ்சார்ந்தார்
விலங்குநாடென விலங்குபுவிலங்குடன் மேவிடும்விருப்புற்ருர். (கஎ௩)

வேறு

விராவுகான்மா வுலிப்பதிக்கண் மேவும்பார்ப்பான் வெள்ளறிவ
னிராமதாசர் யாத்திரைசெய் திடுதன்முதற்கா னுறுவரையு
நராதிபன்கோ யிலில்விருந்து நன்குபுசித்துக் கைகண்டான்
பிராமணுபோ சனப்பிரியா வென்னுமொழியைப் பிறப்பித்தோன். (கஎச)

அன்னக்கொடியோன் பிரமனென்பா ரவன்பாலடையி லகலாமே
தின்னக்கிடைக்கு மெனுநினைவான் சிலம்பொத்திடுபே ராக்கையுளான்
* வன்னத்துருவொன் றறிபாதான் வாய்த்தவிருந்தெங் குண்டெங்குண்
டென்னத்திரிவான் † கொடிக்கொடிகொள் கொடியாளிருக்கை யெனவுற்றான்.

‡ உவாவிற்சரிப்பான் விலாப்புடைக்க வுண்டுசெமிக்கா நிலைமேவிச்
சுவாசந்தடுமா றிக்கிடக்குந் துணையில்விருந்தென் றிடிற்றுடித்தே
யவாவியெழுவா னெட்டுயிர்ப்புக் குறேக்கையேப்பத் தமலையுறன்
விவாகமில்லா னயனெழுதும் விதியின்வலிமை யடைந்துள்ளான். (கஎசு)

இராமதாசர் கானடைந்தா ரென்செய்குதுநா மினியென்ன
வுராவியவரைக் கண்டோது முபதேசம்பெற் றிடிலன்பார்
நராதிபன்கோ யிலிலென்று நாமின்புறத்துய்த் துறலாமென்
றாவில்விழுங்கு மிரைமறையோ னவர்மேவிடுங்கா னடைந்திட்டான். (கஎஎ)

---

* வன்னம் - எழுத்து. † கொடிக்கொடி – காக்கைக்கொடி. ‡ உவா - யானை.

கண்டான்முசர் தமைச்சுற்றிக் காடிபுலிகள் கலந்திடலா
லண்டாததிரா ரத்திலமைந் தன்பின்வணங்கித் துதித்திடலுந்
தண்டாமரைத்தாட் டுணைதொழுவார் தமதுவிருப்பீந் திடும்விருது
கொண்டார்கண்டந் தனவஞ்சேல் குறுகென்புடையென் றலுஞ்சென்றான். ()

என்னைவிழைந்தென் புடையடைந்தா யென்றபோதும் மநுக்கிரகந்
தன்னைவிழைந்தென் றுனெனரு டன்னுனுக்கென் வருமென்ன
* முன்னையடியான் பொன்னுடைநன் மூரல்கிடைக்குந் தினமுமென்ன
வன்னையனையார் நகைத்திவன்மெய் யருளுக்கருக னன்றென்றே. (௧௭௯)

உண்டிப்பிரிய னீயருளுக் குரியையல்லை போவென்னக்
கண்டித்தியம்பக் கேட்டவன்றன் காதன்முடியா மையிற்றளர்வு
கொண்டித்தநிரீ ருபதேசங் குயிற்றுவிடின்மாய் குவனென்னுஞ்
சண்டித்தாத்தன் மாற்றத்தைச் சமர்த்தராமர் தாங்கணித்தே. (௧௮௦)

தேவருடனே கயவருந்தாஞ் சிந்திப்பனசெய் திறலுடையார்
பாவமுடையான் றன்மாற்றம் பலிதங்காண்பா னெனப்பயந்து
தேவதேவன் றிருநாமத் தீக்கைபுரிந்து செப்பிடுவார்
பாவவின்று தொடங்கியவாப் பாற்றிக்கருணை மிகப்படைத்தே. (௧௮௧)

இன்பதுன்ப நன்றுறுதீ தென்னாடேல் சமமடைந்திட்
டன்பர்சேவை புரிந்துதயத் தறலுண்மூழ்கி நியமமுட
னென்பதுடனீ ரின்மேவி யுதவும்பிட்சை யதிதிகட்கு
முன்புகொடுத்தெஞ் சலையடையா முடித்திராமன் றனக்கருத்தி. (௧௮௨)

உனக்குநான்சொல் லியமறையை யுருவேற்றினைபின் னடைதன்னை
மனத்தவாவற் றுண்டனையேற் பலிக்குமறைமா றிடின்மாறு
மெனச்சொற்றிடநன் றென்றிருந்தா னிருக்குமேல்வை தாசரெது
தினத்துஞ்செயல்போற் பிச்சைகொடு செய்யும்பூசை வினைமுடித்தே. (௧௮௩)

தாசரதிக்கோ ரடைநல்கித் தானும்புசித்துத் தத்துவுக்கு
நேசமுடனீந் தனரிருக்க நிருபனவண்மேய்த் தொழுதுகொணர்
வாசமலிநல் லுணவையெலாம் வைகுங்கவிகட் கிட்டருளாற்
றாசரளித்த மிச்சிலப்பந் தன்னையருந்திக் களித்திருந்தான். (௧௮௪)

ஆகுஞ்செயல்கள் கண்டவன்சா ரன்னப்பேயா மந்தணன்றான்
வேகுஞ்சிந்தை யடைந்துசற்று மிசையத்தனக்குக் கிடைத்திலதென்
றேகுஞ்செயன்மன் னவனிலைகண் டிறும்பூதுடனின் னவரிறைக்கே
யீகுஞ்சரக்கி தென்னினமக் கென்னேயளிப்ப ரிதிற்பெரிதே. (௧௮௫)

இன்னார்பாலேய்ந் திடினமக்கு மிறைவன்கதியே நேருமென
வுன்னுவுலகி னல்லுண்டி யுதவாருடைய வநுக்கிரகம்
பின்னாளின்பந் தரலுண்டோ பேயரிவர்பா லெங்கடைந்தே
னென்னுநினைத்து மிகவருந்தி யிவர்சொல்லுபடே சப்படியே. (௧௮௬)

---

* முன்னை - மூதேவி.

மூன்றுதினமே விடிற்பசியான் முடிதறிண்ண மல்லாலெஞ்
ஞான்றுமேற்றுத் திரியும்வினை நம்மான்முடியா தாவதன்றென்
றான்றுமுபதே சியைப்பணிந்தீண் டுறுவதெனக்கொவ் வாதயலிற்
ரேன்றுநகர்க்கே கிடவலித்தேன் றுரையேயருளீர் விடையென்ன. (௧௮௭)

நன்றுநன்று நாஞ்சொன்முறை நழுவேல்போதி யெனவிடுக்கக்
கன்றுமறையோன் போதுமெனக் கடிதுகடிகொ ணகர்புகுந்திட்
டின்றுவிருந்தெங் கென்றுவினு விடலுமெதிர்தோன் றினன்சொல்வான்
றுன்றுநகர்ச்செல் வன்றினமோர் தூயர்க்கமுதம் படைக்கின்றுன். (௧௮௮)

அவனின்மேவி லாறுசுவை யன்னங்கிடைக்கு மெனவடைந்தான்
றவர்களுடன்றுய்த் திதுசுதினந் தக்காரிவரே சற்குருவா
மிவர்சொல்லுபதே சம்பெறினல் லுண்டிகிடைக்கு மெனநினைத்தங்
கவர்பாலிரப்ப நின்சரிதை யறைதியெனச்சாற் றிடுகின்றுன். (௧௮௯)

இல்லமில்லேன் மாவுவியே னிராமதாச ரருள்பெற்று
னல்லவுண்மன் கொடுக்குமென நண்ணினேன்மற் றவருப்பு
மில்லதாமப் பஞ்சிறிதுண் டிருத்தல்கண்டெற் கிசையாம
லல்லலறநுஞ் சரண்சரண மானேனருள்செய் குதிரென்றுன். (௧௯0)

யதிமற்றதுகேட் டுலகமெல்லா மீடேறிடமா ருதியமிசாய்ப்
பதிமன்னவற்குங் குருவானுர் பாதஞ்சரண மடைந்துமுயும்
விதியற்றனனென் றவனையற வெறுத்தோதிடுவார் முன்னெருவர்க்
கதியென்றடைந்தாய்க் குபதேசங் கழறேன்காப்பா யதையென்ன. (௧௯௧)

உபவாசத்தோ ருபதேச மொவ்வாதெனக்குப் போருளீ
ருபதேசிப்பீ ரெனவொருவ வுன்னியதையொப் பித்தடையிற்
சுபமேவிடச்சாற் றுதுமென்னச் சோற்றுன்றுச ரிடமேய்தும்
மபமார்மறைகொண் டிடுதிரெனக் கன்னக்குருவாய்த் தனரென்ன. (௧௯௨)

செப்பக்கேட்டோ ருனைப்போன்ற சீடருலகிற் கிடைப்பர்கொலோ
துப்பற்றவநீர் வாய்நிறைத்துத் துப்பிப்பாறை மீதெனவஃ
தொப்பப்புரிந்தான் ருசரன்பா லுரைத்தபன்மூன் றக்கரமுங்
கைப்பற்றிடுவார் தேறவின்றுங் கதிர்போலொளிவீ சிக்கவினும். (௧௯௩)

பொருவில்குருவோ தியமறைகொப் புளித்தெய்தியபா வியையவரு
மருவலெம்பா லெனவாயு வழங்கும்பிணம்போன் றவனுழன்றுன்
கருணையிராம தாசரன்பிற் காட்டிற்சரிக்குங் காலத்திற்
றருமப்பண்ட ரிச்செலவோர் தரித்தாரங்ஙன் படாங்குடிவில். (௧௯௪)

இரவிற்றுக்கா ராமரன்பா லிசைத்தபண்ட ரிப்புகழைச்
சுரமார்வீணை யியந்தாளத் துணைகொண்டமித முறப்பாடத்
தரமார்தாசர் கேட்டுவந்து தவத்தீர்செல்வ தெங்கென்ன
* வரவோரிவர்தம் முகநோக்கி மாயோகமுள்ளா ரிவரென்றே. (௧௯௫)

* வரவோர் - வந்தவர்கள்,

வேறு

புண்டரிகக் கழல்வணங்கிப் போதுகவெம் மோடெனவும்
பண்டரிவாழ் பகவனெவன் பத்தரெவர்க் கென்புரிந்தான்
றெண்டரிசைத் திடுதிரென்னச் சொல்கின்றார் கண்ணபிரான்
புண்டரிகன் பொருட்டமைந்தான் புரிந்திடுமாட் டளவிலவால். (கசுகூ)

நீவிருமெம் முடன்போந்து நீலமுகி லுறழ்படிவற்
சேவிதஞ்செய் குதிரென்னச் செப்பிடுவார் தாசரென்ன
தாவிநிகர் சானகிகோ னல்லாலெத் தெய்வமென்முன்
மேவிடினு மெனதுநெஞ்சம் விரும்பாதென் செய்வெனென. (கசுஎ)

இற்றேமற் றிவர்கருத்தென் றேத்தியகன் றிடவவர்பின்
புற்றோர்கூ வவிராம னுண்டெனிலெப் துவனென்ன
மற்றேனே கண்ணனுரு மருவினனென் றுரைத்துமிசை
வற்றோரே யெனவிருப்ப வகன்றார்கற் பரிவையென்றே. (கசுஅ)

மாதவன்மற் றிதுதேர்ந்து மறுவிலருட் டாசருளப்
பேதமறுத் திடவுடிப் பிராமணவே டங்கொண்டு
தாதவிழ்பூங் கானடைந்து தாசரடை தாசரதிக்
காதரத்தோ டருத்தினர்தா மயில்போதாங் கணைந்திடவும். (கசுகூ)

தாசர்பணிந் திதையருந்திற் றூசாதிக் குவப்பதெனப்
பேசமறை யோனிதையே பெட்டடைந்தே னெனமூழ்கித்
தூசதனோ டாறிருநா மந்துலங்கப் பலாசிலைதைத்
தாசணையார் முன்னணைய வளித்தனர்துய்த் தருளிரென்றார். (உ00)

உண்டகண்ணன் சுராமுதிலுவட்டாம வினிப்பதியா
னுண்டனந்த நாளாயிற் றுதவிமறத் தற்கரிதென்
றெண்டகச்சாற் றுதல்கேட்டோ ரியார்நீரெவ் விடத்திரென்பேர்
விண்டருளீ ரெனக்கேட்ப விண்டருளால் விளம்புகின்றான். (உ0க)

பண்டரியிற் குடும்பமுடன் பன்னாளாய் வாழ்பவன்பே
ரண்டர்புகழ்ந் தேத்திடுவிட் டலனென்பார் யாத்திரைசெய்
தொண்டர்தமக் கெதிரணைந்து தோய்க்குவன்வற் சரந்தோறுந்
தண்டழையா டியிலேகா தசியணித்தா தலினணைந்தேன். (உ0உ)

விராவியென துடனீரு மேவுதிரென் றிடத்தாச
ரிராமனையல் லாற்றெய்வ மேதையுமெண் ணலனென்னப்
பராவருமா னுண்டமைந்தான் பார்த்தன்பா லேத்தவுனக்
கிராகவனைக் காட்டுவனென் றிசைத்திடவுள் ளுவப்பெய்தி. (உ0௩)

சென்றிடுகான் மழைபொழிந்து சேறணையத் தாரியிடைத்
துன்றிடுமுட் டைத்திடலாற் றூசர்துய ரணையாமே
தன்றிருக்கை கொடுதவிர்த்தான் றருமறைபெட் டரிதாந்தன்
பொன்றிருத்தாட் டொண்டர்பணி புரியுவகை யருண்மாயன். (உ0௪)

தன்றிருத்தாட் டுணையிலன்பு தழைத்திடுமெய்ப் பத்தர்கடம்
பொன்றிருத்தாட் பணியன்பிற் புரிந்தென்று முறலாற்கொன்
மின்றிருத்தாங் கியவருணீர் மேகவண்ண னைப்பகவ
னென்றிருக்கா தியபனுவல் யாவும்விதந் தேத்துவதே. (௨௦௫)

முட்பிடுங்கி முன்செல்கள்ள முகுந்தமறை யோன்பின்னர்
நட்பியைந்து தாசர்பசு நல்குகன்று போற்றெடரப்
பெட்பியைபண் டரிக்கணித்தாய்ப் பெயருமன்ப ருடன்கூட்டிக்
கொட்பியைவார் தனைக்கூவக் குறுகுவனென் றனனகன்றான். (௨௦௬)

வேறு

தனனதந்தன தனனதந்தன தனனதந்தன தனதான

வழியூடொன்றிய பலபேரும்பெரு மகிழ்வாயின்பொட ளவளாவா
வதிவாகுந்தமோர் பதியாரிங்கிவர் மறுதேயங்கொள்வ ரெனநாடார்
விழிநேரொன்றின ரெவரேனும்பழ விசுவாசம்பொலி பவர்போலே
விரவாகங்கொளெ முயிராநுந்தமுள் விழைவேதங்கது தருவேமான்
மொழிவீரிங்குற வொளியாதென்றுள முதிரார்வங்கொடு புகல்வாராய்
முனமேய்கின்றவ ரடிதோயும்பொடி முடிமீதன்புட னணிவார்மா
ணிழிவோரிங்கிவர் பெரியோரென்கில ரெவரேனும்பணி தருவாரா
விவிதானந்தமல் கினரோடுந்தவ ரிணைதீர்பண்டரி புகலானார். (௨௦௭)

தானதந்தந்ததந்த தானதந்தந்ததந்த தானதந்தந்ததந்த தனதானன

வாசவன் செங்கலென்று பூமியின் கண்கிடந்து
மாதவன் றன்பதங்கண் மிசைதோய்தலால்
வானிடந் தங்குமுந்தை மேன்மையங் கம்பொருந்து
மாநலங் கண்டுவந்து திருமாலுணீள்
நேசமிஞ் சுந்தவங்கு லாவுதுங் கங்கொள்புண்ட
ரீகனென் றுங்கலந்த பதியீதையே
*நீவநெஞ் சந்துணிந்தி டாமலென் றுந்தெரிந்து
நீணலங் கொண்டிலங்க மனமீதவாய்
வாசமென் றும்பெறுந்த னூரினின் றுந்தெரிந்து
வாழவென் றும்பரின்க னுறுமாசெய்சீர்
வாய்தல்கொண் டண்டமொன்று மாதவன் றிங்கள் †பங்கண்
மால்படிந் தந்தமிஞ்சு சிலைதாவியே
கோசலந் தந்தமைந்தர் கோலமென் றுங்கவின்ற
கோபுரந் தன்கண்முன்பு தெரிவாகவே
கோதினெஞ் சம்பிறங்கு தாசரின் பம்பதிந்து
‡கூவிடந் தண்டமென்று தொழுதேகினர். (௨௦௮)

* நீவ - துறக்க. † பம் - நக்ஷத்திரம். ‡ கூ - பூமி.

தய்யதந்ததன தய்யதந்ததன் தய்யதந்ததன தானா.

பல்லியங்களொலி மல்கவன்பினொடு பல்லவங்களினி தோதியே
பள்ளமென்றுவிழி வெள்ளமொன்றடியர் பல்கிநெஞ்சுவகை நீடியே
புல்லியின்பமிகு மெய்யறிந்துமருள் பொய்கடிந்துகடன் மீதிலே
புள்ளிகொண்டவனை யில்லுறங்குகிற புள்ளூருந்துவசன் மானுவார்
வில்லியின்கண்வரு செல்வியென்றரியை வெஃகிமங்கையர்கள்வேழமா
வில்லினன்கடவு மைவிதங்கொள்கணை வெல்வரிந்தவகை யாகவே
யொல்லிடும்பலபல் வைபங்களையு முள்ளமொன்றியறி தாசர்தா
முள்ளபண்டரியை மெய்வைகுந்தபுர மொவ்வுமென்றுவகைமேவினர். ()

தனனதாந்த தந்ததத்தன தனதானா

விராவிவான்ப ணிந்திடத்தகும் *வயானவேந்து கம்பமுற்றமை
விநோதமாய்ந்து ளங்களிப்புட னனுமானைநேர்
விசேடமேய்ந்து வந்தனித்துட னிராமன்யாண்டி லங்கலுற்றனன்
விசாலமாந்த ரம்பெறச்சொலு மெனவேசொல்வார்
துராசர்மாண்ட றம்பெருக்கிடு மிலேகர்வாழ்ந்தி டும்படிக்கருள்
சுவாமிதான்ச கங்கொள்பத்தர்க ளுயநாடியே
துவாபராந்த ரந்தனிற்றயை குலாவியீண்டி லங்குகற்புடை
துரியபாண்டு ரங்கவிட்டல னெனமாறநான்
விராகமாய்ந்தி டுந்தரத்தருண் மெஞானம்வாய்ந்த கங்களித்துடன்
விடாதுகாண்டு லங்கலுற்றன னெனைமானநீ
விரோததீங்கி னங்கண்முற்றறு மதீதமாண்ப டைந்தமுத்தர்கொள்
விசாலவான்ப ரங்கொணிச்சய மறிவாகியே
பராவுவான்கு லந்தனிற்புகு மெனேடுகூண்ட டைந்துளத்திடை
பகாதுபூண்டி லங்கிடத்துதி யெனவோதினர்
†பசேலிமாஞ்சர் பின்புதித்தவர் விமானமாங்கு செங்கலிற்பொலி
பராகவான்ப தந்துதித்தனர் தொழுதாரரோ. (உ௧0)

தனனதனதந்த தனனதனதந்த தனதத்ததானா

இரவிகுலதுங்க சனகிமகிழ்கொண்க
வெனவளவிறந்த துதிவகைகள்விண்டு
னினியசகுணந்த னையென்விழிகள்கொண்டு தெரிசிக்கநாடினே
னெனவிசைவுகொண்டு சனகியொடுதம்பி
சிலைவிசிகமொன்ற நிலவியுறுதொண்ட
ரிதயமருளின்கண் முழுகும்வகையன்பொ டருளக்காடவே
பரவசமடைந்து மொழிகுழறவென்பு
ளுருகவிழியொன்று மருவிபடியன்பர்
படியினுணர்வொன்று பொழுதிலுயர்பண்ட ரிகொள்பத்தர்தாசர்தாள்

*வயானவேந்துகம்பம் - கருடகம்பம். †பசேலிம அம்சர் - சூரியாம்சமுடைய கங்காதரர்.

பாவிமுனமொன்றும் வகைசெய்குதி றென்று
பகரவுடனன்பர் துதிசெய்தலு முன்கொள்
படிவமுறல்கண்ட * பதிகொள்பலருந்த முளமெத்தவோகையாய்
விரவுமவரங்க மகிழ்வுமிகைகொண்டு
தழுவியரிகொண்ட பெயர்பலவும்விண்கொள்
விபுதர்செவியின்க ணடைதரவனந்தம் விசைசெப்பலால்வினை
விரைவினவர்கண்கள் குளிரும்வகைகண்டு
முருகுமிகைகொண்ட மலர்மழைபொழிந்து
மிசைகுலவுமண்ட முகடுகிழிபண்பின் மகுடத்தையோதவே
வரமல்கியபண்ட ரியினருறுதொண்டர்
கரமலர்கடங்கள் கரமருவல்கொண்டு
வரதனடியன்பின் வழிபடுதல் † கண்டு தளிவிட்டுளாவலாய்
மழைமையமர்கின்ற சிகரியயல்பொன்கொ
டொளிர்கருடகம்ப மணுகியணிதங்கு
மறுகைவலமொன்று நினைவுகொடுதொண்டரொடுசுற்றினாரோ. (௨௧௧)

தனதானதானதன தனதத்ததத்தன

திருமாடவீதிவலம் வருதாசர்பாகவதர்
திரள்வீணைதாளமுத வியமிக்கொலிக்கவே
செவிவாயினாரமுத மென ‡ வாருமாறுநவல்
செவிதானகீதவகை பருகிக்களிப்பொடே
கருமாலைநீவவுய ருண்மாலையீகுமொளிர்
கருமாலைநேர்படிவ னடியிற்றிளைத்தரோ
கவிமாலைதூவவய லமைவோர்களோகைகொடு
கரமான தாளமிகு மகிழ்விற்புடைக்கவே
யருணீடுகோயின்முன மமைவாகியாரதிசெய்
தணிநாமதேவர்வதி மணல்வெற்பிடத்தின்மே
யவரோதுகீதமிர வினிலீரொர்சாமவரை
யகலாமலேவினவி யதுமுற்றமற்றைநா
ளிரவூடுபாகவதர் கதையோதுவீரெனமெ
யிசைதாசர்நானிளமை தனின்மைக் ¶ கடத்தின்மே
யிதராமநாமநுவ றவமேசெய்தேனிசையி
னியல்யாழிராகசுர மொடுசெப்பல்கற்றிலேன். (௨௧௨)

தனதானனத் தாந்ததந்தன தனனத்தனத்தன

எனவோதிடக் கூண்டதொண்டர்க ளகமூடுவப் பேய்க்துபண்டரி
யிதின்மேவருட் பாண்டுரங்கனு மனதுட்குறித்தவா
றிசைவாமுருப் பூண்டவிர்ந்தன னெனிலாமெமைப் போன்றதொண்டரு
மெளிதாகிடச் சேர்ந்துவிண்டிடு மிசையொத்திசைத்தலோர்

* பதி - பண்டரி. † கண்டு - செய்து. ‡ ஆருதல் - உண்ணல். ¶ கடம் - காடு.

கனமாமெனத் தாம்பகர்ந்திடி னிசமாகவொப் பேந்தமன்புள
கனிவாயினிற் ரேய்ந்தவண் * கிள விகளற்பமுற்றவோ
கழமீரெனக் கோண்டிடுஞ்சிலை கொளிராமனற் பூஞ்சரண்டுணை
கருதார்வமுற் ரேங்குபண்டரி யுளவிட்டலப்பெமான்
மனவாதரத் தான்றதொண்டர்க ளிடமாடுவிர்த் தாந்தமொன்றற
மகிழ்வோடுரைத் தாண்டவன்பெயர் † மறையைக்கனித்தபேர்
மருவோர்சிறப் பாந்தரங்களும் விரிவாயருட் டேன்பொழிந்தென
வகையாவுளத் தூன்றல்கண்டவர் மிகுபத்திமுற்றியே
யனுமார்கலைத் தோன்றல்செம்பத முடிமீதுறப் பூண்டுபண்டரி
யரியாரதிப் பாந்தமன்பொடு புரிகுற்றுவப்பரா
யருணேதயத் தார்ந்தசந்திர ‡ நதிபாகையிற் ரேய்ந்துவிண்டுவி
னடிவாரிசத் தோங்கிநின்றனர் மருண்முற்றறுத்தரோ. (உகடு)

வேறு

பிற்றைநாட்பூரணேயி லியங்கலிப்பபாண்டரங்கப் பிரானேமேருப்
பொற்றைநிகர்தேரிலெழூந் தருளுவித்துக்கோபால புரத்தின்மேவி
யுற்றவியற்கோபாலா காலாவுற்சவத்திலன்ப ருவப்பாற்பாடிக்
கொற்றமுறுங்கண்ணனட் டியற்றுபந்துதும்பிகொம்மி கோல்கோணங்கி. ()
ஆதிவிளையாட்டியற்றி வெண்ணெய்பொரிநிவேதனஞ்செய் தன்பினேடு
நீதிநிம்பராசருள் பிரசாதங்கொளச்சுரர்மா னிடராமேவி
மேதினியில் வீழ்ந்தவற்றை யெடுத்தருந்தக்கண்டிகத்தின் மேவுமாந்தர்
கோதில்கரங்கொண்டெடுத்துண் டுறிநெய்ததிபாற்கலங்கட் கோலாற்குத்தி.
உண்டன்முதலாயபல விளையாடல்செய்துகண்ண னேடுமீண்டு
பண்டரியாலயத்தமைந்தா ரதிபுரிந்தர்ச்சகர்கதவம் பந்தித்தாராய்
மண்டனேவோருடனிடஞ்சேர்ந் திட்டபின்னரிராமனடி மனத்துட்கொண்ட
தொண்டர்விடைபெறக்கண்ண னுலயத்தின்கதவருகிற் ரேய்ந்தவேளே. ()
உடன்கதவந்திறக்கவுட்போந் தடிகளிற்றஞ்சிரம்படிய வுவப்பிற்ருழ்ந்தென்
னிடம்பெருக்கார்பத்திமலி சிவாசிமன்னனெடுநாளென் றனைக்காணுதுள்
ளடங்கருந்துன்படைந்திருப்பா னவன்பாற்போந்திடவிடைநீயருளுகென்னப்
படங்கொளராமிசைநடித்த பகவனென்பாலெங்ஙாணீ படர்வாயென்றான். ()
உன்னருளுள்ளத்தினினைத் திடும்போதென்றனர்மீட்டு முவப்பாற்போற்றி
யென்னகத்தும்புறத்துமரைக் கணம்பிரியாதெற்றையுநீ யிருத்தியென்ன
வன்னபடியமைவனென வணங்கிவிடைகொண்டுதத்து மமையவூரை
நன்னர்வலம்வந்துபணிந் தேத்திநரசிங்கபுர நண்ணியன்பாய் (உகஅ)
பிச்சைகொடுவந்தடைசெய் திராமனுக்கூட்டினருண்ணப் பெட்டபோதி
லிச்சையின்விட்டலன்மறையோ னுப்பசிமிக்கெய்த்தனனெற் கீதியென்னச்
செச்சைமலரதாமலர்ந் திரத்தனுமுப்பில்லடைநீ தின்பாய்கொல்லென்
றச்சைமறைத்தெய்தினரைத் தாசர்வினவிடவுவப்புற் றரைகின்றானல். ()

---

* கிளவிகள் - சொற்கள். † மறை - மந்திரம். ‡ நதிபாகை - பாகைநதியென மாற்றுக.

தவிடுகொண்டுசமைப்பதுமுண் பேன்றனக்குநீருவப்பிற் றருமப்பந்தா
னவியினுமிக்கினிதாமென் றயின்றிவ்வூராலயத்தி னணைந்துநீர்தாங்
குவிகரத்தர்கேட்டுவப்ப விராக்கதைசெய் திடுதிரெனக் கூறிச்சென்று
னவிதமிசைத்தாரதிசெய் தருள்கொடுமாவுலிக்கானத் தணைந்துவாழ்ந்தார். ()

செய்திபிதுசிவாசிமன்னன் றேர்ந்தணையப்பண்டரிக்குச் சென்றுளன்பான்
மைதிகழ்மேனியன்சேவை செய்தடைந்தேனெனைத்தேடி வைகல்பற்ப
லெய்திபுண்ணு திருந்தனையூர் சேர்ந்துமகிழ்ந்துண்டிருத்தி யிராமன்செம்பொன்
மெய்திகழ்தாள்வணங்கியென்னக் குருசொலக்கேட்டலுந்தாழ்ந்தார்மேவினனே.

குருபரர்தாள்போற்றிமகிழ்ந் துண்டிருந்தானந்நாளிற் குலவுந்தில்லி
மருவியபாட்சாவளவில் சேனையுடன்றென்புலத்தில் வாய்ந்துமன்னர்
பொருண்முழுதுங்கொள்ளைகொண்டு கோயிலின்விக்கிரகங்கள் போக்கிக்கோக்கொன்
றருமறையோர்க்கிடர்விளைத்திட் டணிக்கண்ணாநதிதீரத் தமைந்தான்மன்னே.

அப்பொழுதம் மன்னவன்சே னுபதிசோலையிற்குறிவைத் தம்பாலெய்ய
மெய்ப்பொருடேர்தாசரறிந் திதுசமர்த்தன் றம்பதனை விட்டுப்பின்போய்க்
கைப்பொருந்தப்பற்றுதல்வீ ரியமென்னவவனைத்துக் கடுகவோடு
*மப்பொடுசென்றதைப்பிடித்த லார்க்குமரிதானசெய லாற்றுவாயேல். ()

எவுவன்யான்பற்றிடுநீ யென்றலுஞ்செய் திடுதியென வெய்தானன்னோன்
மாவுரங்கொண்டவருடன்சென் றங்கையிற்பற்றினரவன்பால் வழங்கக்கண்டு
காவலகோரும்புகழோ ரவதாரர்நீயிரெனக் கழறியஞ்சிப்
பாவுமிந்துவிற்பெரிய பகீரென்றே தினனன்பிற் பணிந்துநின்றான். (௨௨௪)

தாசருடன்னவன்கைத் தனுவினைத்தங்கைக்கொடொரு சரத்தையேவி
வாசமலர்ப்பொதும்பருறு மிலைகளெலாந்துளைத்தனரவ் வன்மைதேர்ந்தான்
பேசரியவிம்மிதனு யிவரொரம்பானமர்நாசம் பெறுதறிண்ண
மாசமர்த்தரிவர்க்கம்பேன் மனத்துன்னிற்சேனைமுற்று மடியும்போலும். ()

எனநினைத்துநடுங்குபுதாழ்ந் திறைபாலோதலும்பயந்தா ரெய்தினன்பின்
பனகர்சாம்பளகடெனு மூரிலிராக்கதைசெயக்கேட் டவரெல்லோரு
மனமடங்கவிம்மிதமுற் றவசமுடன்றாசர்திரு மலர்த்தாள்போற்றிச்
செனனமரணத்திடைபட் டுழலாதின்பெய்தவருள் செய்திரென்று. (௨௨௬)

வேண்டவவர்க்கநுக்கிரகம் புரிந்தகன்றுசகபூரின் மேவியன்பா
லாண்டமைந்தார்மனந்தெளியக் கதைபுரிந்துமேவிடுங்கா லங்குதாச
பாண்டியருந்தவச்செல்வி யக்காபாயிப்பெயர்தோய் பாவைதாசர்
நீண்டவருட்கழல்வணங்கி யான்றேறவுபதேச நிரப்புகென்றாள். (௨௨௭)

அன்னவடன்பக்குவந்தேர்ந் தநுக்கிரகஞ்செய்துதம்பா லமைந்தவாய
வின்னருட்சாகித்தியமுற் றளித்துப்பாராயணஞ்செய் திருத்தியென்ன
நன்னலங்கொள்வாள்வேண்ட லாற்சின்னாளங்நகரி னண்ணிநீங்கிப்
பொன்னமையுஞ்சுராபுரஞ்சேர்ந் திடவினவிச்சீடரெல்லாம் பொருந்தினரால்()

* அப்பு - அம்பு.

அங்கரிற்கருணீக குலத்தனருண்மைந்தர் தத்தோ பாவம்பாசி
யென்னபிதானம்படைத்தா ரிவரிலிளையோன்சித்தப் பிரமையெய்தித்
தன்னதுதாய் தந்தைமுயல் பரிகாரங்களிற்றீராத் தன்மையோடு
நன்னர்மணமின்றியுற்றான் குரவருட்டாசர்புகழ் நவிலக்கேட்டு. (உஉ௯)

ஞானவடிவாந்தாசர் பதம்வணங்குயித்திடினன் றெய்துமென்னக்
கானலர்பூந்திரள்கொடுவந் தருச்சனையாதியபுரிந்து கவினுர்சேயை
மேனலமெய்திடத்தாளிற் பரிசிப்பித்திவன்பிரமை மேலோய்நீங்கற்
கானபரிகாரவகை புரிந்திளைத்தோம்யாமற்றஃ தகன்றதின்றே. (உ௩௦)

என்னவுரைத்திடக்கேட்டோ ருடனரியகவியோரா றியம்பித்தீர்த்து
மன்னருட்கண்வழங்கிடலுந் தேசிகர்சேவடிபிரிய மாட்டேனென்னப்
பன்னலுந்தாய் தந்தையுவப்படைந்திவர் தாட்பணியிலென்றும் பதிவாயென்று
சொன்னவர்தேசிகரிடத்தி லொப்புவித்துத்தம்மிருக்கை தோய்ந்தார்மன்னே.

விவாகமுடித்துறுமைந்தர் தமைத்துயரக்கடல்படிய விடன்மேலென்னுஞ்
சுவாபமடைந்துறுந்தந்தை தாயிவனைச்சற்குரவன் றெண்டிற்றேய்கென்
றவாவியுரைத்தகன்றனரன் னவராற்றும்புண்ணியத்தி னளவுமின்னோன்
றவாதுமுடித்துளமுன்னைத் தவப்பெருக்குஞ்சாற்றிடிலாந் தகையவன்றே. ()

வின் * னியாசம்பெறுங்கை மதனலர்ப்பூங்கணைக்குமிக வெருவினோர்கொ
ளின் † னியாசக்தனைவிட் டருட்குரவன்பணிதவறு தியற்றியென்றுஞ்
சந்நியாசித்தகையாய் மேவுகெனச்சாற்றுதந்தை தனினுமன்னோன்
பன்னியாசித்தகைவிண் டேகிடன்மேலவள்பெருமை பகர்வதன்றே. (உ௩௩)

துறந்திடெனச்சாற்றுதந்தை தாய்க்குமகவெனவமைந்த சுதன்றானின்பிற்
சிறந்திலங்கினனெனச்சாற் றுதன்மிகையாயினுமவன்சீர் செப்பவாவா
லறந்திகழச்சாற்றுகின்றே னன்னவன்பத்திவிராக வமலஞானத்
திறந்திகழ்ந்துசற்குருதாட் டுணைக்கொருபெட்டகமாகிச் சிறந்தெச்சீரும். ()

எய்தியருட்டேசிகரன் பாலருள்செய்கீர்த்தனங்க ளெல்லாம்பாடஞ்
செய்தினிமைபெறக்கிளத்திக் கதைபுரியுந்திறமையையுந் தேர்ந்துதாசர்
மெய்திகழன்பவன்மிசைகொண் டிலங்கிடுநாட்கோசாமி மேருத்தேவ
ருப்திபெறுமாதேர்பூ சுரேசர்வாசுதேவர்முத லுற்றார்பல்லோர். (உ௩௫)

அன்னபொழுதினிலக்கா பாயியைமெய்யருட்டாச ரன்பானோக்கிப்
பன்னுவர்கன்முட்கடுக்கக் காடிபுலிமுதல்விலங்கு பயின்றுவாழுந்
துன்னடவியிடைதிரியு மென்னுடன்போந்தலையாமற் சுகமோடுர்போய்
மன்னகத்திலிருத்தியென்றா ருடல்பொருளாவியுமுமக்கே வழங்கினேன்யான்

பானிறையுஞ்சுடுசாமு மும்முடன்போந்திடி லெனக்குப் பஞ்சுபோலுங்
குரவவுமைப்பிரிந்துடற்குச் சுகஞ்செய்திடுதொழினிரயக் குழியேபோலுந்
தரமமையுமென்னுமுயர் நிலைமையுணர்ந்தருள்குர வர் சாருமன்னு
ளூரமதித்தோர்குன்றடைந்தார் சீடர்களிற்சிலர்பிச்சைக் கூர்ப்பாலுற்றார். ()

---

*நியாசம் தொடுதல் - வேம்பு

சிலர்குரவன்பணிசெய்துற்று ரவ்விடத்திற்பாதலத்தின் சென்னிநீண்டிக்
குலவுதூரவொன்றமைந்த ததன்மிசைபற்பலதருக்கள் குலவலாலே
* பலமுமிலைப்பழுப்பும்விழுந் தத்துவிதம்பட்டிருண்டு பாகுபோலச்
சலமமைதற்கண்டதனைச் சீர்திருத்தஞ்செயத்தாசர் தமதுட்கொண்டு (௨௩௮)

மரநிழலிலமைந்துறும்பல் கிளைகளையுமொழித்திரென வழுத்தக்கேட்டோ
ருரமுடன்மேற்போந்துசினை வெட்டிடவெண்ணினர்நுனியி னுற்றுக்கொய்யிற்
றூரவில்விழுவோமடிக்கண் வெட்டிடிலாரியர்மீதிற் றேயுமென்னத்
திரமனமற்றவர்நீட்டித் திருந்தனரக்காலைகர் சென்றோர்சேர்ந்தார். (௨௩௯)

அன்னவரிலம்பாசி யருட்குரவர்க்கோதுவனஃ தாற்றப்பற்பல்
கன்னலமைந்திடுந்தேவ ரீர்புனலாடிடுங்காலங் கலந்ததென்ன
மன்னதனைத்துணித்தன்றி யாதொன்றுநான்புரிய மாட்டேனீபோய்ச்
சொன்னபடிபுரிதியெனக் கோடரிகொண்டுயர்தருமேற் றேய்ந்தம்பாசி. ()

வெட்டவருஞ் சினைசிரமேல் விழாதபடிதேவரீர் விலகுகென்ன
விட்டகலேனிவ்விடம்யா னென்மிசைவீழாதபடி விலகிவெட்டென்
றட்டபுலத்தினர்சொலவவ் வாறுநுனிக்கொம்பரணைந் தடியைவெட்டப்
பட்டகிளையோடுதூ விடைவிழுந்தானம்பாசிப் பத்தனம்மா. (௨௪௧)

அம்பாசிவீழ்தரக்கண் டவணமைந்தசீடரெல்லா மாவாவென்ன
வம்பாயிற்றென்றுவருந் தினரிரங்கிநின்றிட லு மகிமைஞானத்
தெம்பார்மெய்யருட்சித்தித் தாசர்புனல்படிந்துள்ளத் திருத்தியோடு
செம்பாவைபோலுமக்கா பாயியைக்கூய்விரைவிலமு திடுதியென்ன. (௨௪௨)

உடனக்காபாயியருட் டேசிகர்தந்தாண்மிசைவீழ்ந் துவந்துபோற்றித்
திடமனங்கொளம்பாசி தூரவில்விழக்கண்டுமது தெரியீர்போன்றீர்
மடனணையென்மனம்வருந்து கின்றதெனுமாதரசின் மாற்றங்கேட்டுண்
மிடலணைந்தாரவனுளீண் டுனக்காகவேண்டுவதென் வெதும்பேலென்ன. ()

மற்றொருமாற்றம்பகரா ளமுதுபடைத்தனள்யாரு மாந்திவாழ்காற்
பற்றொருவுஞ்சிவாசிமன்னன் படர்ந்தருளாரியர்பதங்கள் பரவிவாழ்த்தி
விற்றொழின்மன்மதற்கொழித்தாள் வதனமிகச்சாம்பியுற்றவிதமுண்ணைக்கிப்
பொற்றொடியீண்டுற்றநிகழ் வென்னோநான்றேரவுண்மை புகல்வாயென்றான். ()

வேந்தனிடமுரைத்தனள்சற் குருவிடமன்னவனதனை வினவவஞ்சிப்
பூந்தண்மலர்ப்பதம்வணங்கி விடைகொடுசென்றுனிதனைப் புவியின்மேய
மாந்தர்தெரிந்தவம்பலசொற் றரசனறிந்தும்வினவ மாட்டானுகிப்
போந்தனன்றன்னூர்க்கென்னி வியாம்புரிவதேதெனவுட் பொங்கினார்கள். ()

தூரவடைந்துசோதித்தம் பாசியைக்காண்கிலர்பூதந் துய்த்ததேகொன்
மரம்விரவுபொந்துவிழுந் கியதோவன்சலசரங்கண் மாந்திற்றேவென்
றூரமழிந்தாரக்காலந் தாசர்மற்றோர்பொழிலடைந்தா ருவகையாலே
பரவுமன்பருடனுறு தினம்வதிந்தத்தூரவுறுங்கான் படர்ந்தாராகி. (௨௪௬)

* பலம் - பழம்.

பைக்கமுயன் றமுதட்டுப் படைத்துறவுண்பான்யாரும் படருமெல்லை
கைக்களிறுபோன்றசிவா சியுமடைந்துபோற்றிநிற்பக் கனிவினீயுந்
துய்க்கவெம்மோடடைதியென வமைந்தனனேரிலைமிகலாற் றூரவுள்ளோனை
மெய்க்கருணைக்கருத்தாம்பா சியெனக்கூயவன்பதிற்சொல் விளம்பக்கேட்டு. ()

கலியாணமீயமைந்துள் ளாய்கொலென்றார்தமதுகடைக் கண்ணோக்காலப்
பொலிவேபெற்றுளனெனநம் மிடம்வருகென்றாருகிற் போந்துள்ளின்ப
மலிவோடுதேசிகர்தாள் வணங்கிநிற்பக்கண்டவர்கண் மகிழ்ச்சியோடார்
கலிநானுமார்ப்புடன்றூத் திரம்புகன்றுகுரவரடிக் கமலம்போற்றி. (௨௪௮)

களித்தமுதுண்டனர்குரவர் கலியாணமாவென்னக் கருணைவாரி
குளித்தமைந்தான் றனையன்ப ரதுமுதற்கலியாணகோ சாமியென்ன
விளித்தவனுண்ணிறைபத்திப் பெருக்கினைச்சற்குரவருட்சார் வேலைபோலு
மளித்தகையைமிகவும்வியந் தெடுத்தோதியானந்த வாழியாழ்ந்தார். (௨௪௯)

நவத்தகைச்சற்குரவருளத் தருளாலிப்பேறமைய நமக்கன்றீந்தும்
பவத்தகையோம்வறிதிருந்தோ மூரடைந்துபிச்சைகொடு படர்ந்தானுள்ளத்
துவப்புடன்செய்தருளாழி மூழ்குபுகாரணப்பெயர்கொண் டுற்றானிஃதாற்
றவத்தளவேயாகுந்தம் பேறெனச்சாற்றருமறைச்சொற் சரதங்கண்டேம். ()

என்றுபலதமைப்பழித்துற் றூரொருநாள்சிவாசிமன்ன னெய்தியன்பி
னன்றுகுருவைச்சோட சோபசாரப்பூசை நயந்துமாவின்
றுன்றுகனிநிவேதனஞ்செய் தமைந்துளமாணுக்கரொடுந் துய்க்குமெல்லை
குன்றுபுரைதாசருந்துய்த் திவ்விடநாமரசாட்சி குயிற்றும்வண்ணம். (௨௫௧)

ஆதனமொன்றியற்றிடுதி ரெனக்கேட்டசீடர்மண்ணு லமைத்துஞான
நாதர்தமையிருத்தியொரெட் டமைச்சர்சதுரங்கமுத னவில்வயாவு
மாதவத்தொண்டர்களாகி வயங்கவநுமத்துவசம் வரைந்துகட்டிப்
போதமிகுசிவாசிமன்னன் வேண்டியவாறலங்காரம் புரிவித்தானல். (௨௫௨)

தீர்த்தர்முனக்காபாயி வேணுபாயிப்பெயர்கொ டெரிவைமார்கள்
கீர்த்தனமுங்கதையுமுறை யேபுகலக்கேட்டங்குக் கிளர்பல்லோரு
மார்த்தியுடனரிநாமம் புகன்றிருக்கச்சிவாசியபி தானம்வாய்ந்த
பார்த்திபனிச்சீருணர்ந்தோன் றறிகிலன்பேரின்பவருட் பரவைமூழ்கி. ()

இருதிவசம்வசமிழந்து மன்னனிருத்தலைத்தாச ரிதயத்துன்னி
நிருபனிவ்வாறுறிலரசெங் ஙனம்வழங்குவிப்பதென நிகரினீதி
மருவியமெய்த்தாசபோ தக்கிரந்தமென்றொருநூல் வழுத்தவஃதைப்
பெருமைமலிகலியாண கோசாமியெழுதமுன்னுள் பேசுமந்நூல். (௨௫௪)

பிற்றைநாளுதயம்வரு முன்முடிந்ததெழுதசகம் பிறங்குநூலிற்
பொற்றைநிகர்தோள்வேந்தர் நீதிகண்மிக்கமைந்துறலாற் பூபாலற்கீந்
திற்றைமுதலிப்பனுவ லினைநீபாராயணஞ்செய் திடுதியென்ன
விற்றைவரும்புயமுடையா னுங்கியற்றலாலறிவின் மிக்கோனனன். (௨௫௫)

அரையனெனத்திகழ்வார்பின் னரிநாமகீர்த்தனங்க ளனந்தஞ்சாற்றிக்
கரையின்மறையோர்க்கன்ன மீந்திராமூண்டிவணங் கழித்தோர்நாளிற்
புரையில்சிவாசியைப்பார்த்துன் னாரணேதியென்றேதாம் புகன்றவாய
திரைநிகர்பஞ்சீகரணங் குருகீதையிராமகதை திகழுமற்றும். (௨௫௬)

கொடுத்தாசன்றனையனுப்பித் தாம்வேறுகானடைந்தார் குரிசிலன்று
தொடுத்தருளாரியன்றருநூல் களைப்பாராயணஞ்செய்தான் றுலங்குநாளி
னடுத்தகைமன்னவன்சபைப்பு ராணிகனரியப்பயிற்சி நண்ணினோன்வெங்
கடுத்தகையாணவமிகையோன் காகாவென்பவன்றன்பேர்கடுக்குமாறே. ()

நிருபன்பாராயணத்தை விரோதித்துத்தாசர்தமை நிந்தைசெய்வா
னொருதினந்தன்னிலிராம தாசர்மன்பாற்கீர்த்தனங்க ளுரைத்துமேவ
மருவியகாகாகேட்டுப் பரமானந்தத்தொடவண் வதியுந்தாசர்
திருவுருவைப்பார்த்தனன்மா ருதிவடிவாத்திகழவச்சஞ் செனித்தானுகி. ()

சென்னிமிசைகரங்குவித்துட் பத்திமிகுந்தன்னவர்சே வடியில்வீழ்ந்து
மன்னியபேரின்பமுட னெழுந்துபலபலதுதிகள் வழுத்தத்தாசர்
பன்னியதுத்தியங்கேட்டுள் ளுவகைமிகத்தழுவியருள் பாலித்தின்பந்
துன்னிடவாரதிபுரிந்து பிரசாதமீந்துவனந் தோய்ந்தார்மன்னே. (௨௫௯)

வேறு

அருள்பொலியிராம தாசர்பின்சாம்ப ளகடெனுமூரினுக்கணித்தாம்
பருவதமிசையோர் மடமமைத்தங்கட் பலதினமேவினரன்ன
திருநிலத்தின்று மியைந்துளதவண்விட் டெழிற்சகபூரடைந்தங்கண்
மருவுமாருதிதாள் போற்றுபுதாசர் வழுத்துவர்கீர்த்தனம்பகலில். (௨௬௦)

இரவுகடோறுங்கல் யாணகோசாமி யினியதாசபோதநற்கிரந்தம்
பிரபலம்பெறயா வரும்வினவிடுமா பேசுவன்பேசுமக்கவிசா
விரதனன்குணரோர் வேதியன்ருச ரிணையடிபோற்றியேழையினேன்
விரவியபாசக் குடும்பபீடிதத்தால் வெம்பினேன்வெறுத்துநான்றனே. (௨௬௧)

விடினும்விட்டிலதென் றனைக்கொடுந்துயர வேலைநின்றெடுக்குதிரென்ன
வடிமிசைவிழுந்தான் றனக்கொருபதிலு மறைந்திலர்தாசரன்பார்தன்
னடியவருடனுண் டமைதருவாவி யருகணைந்தவன்முகநோக்கி
யொடிவறுவிராக மோடசற்குரவ னோதுரைக்குட்படுவாயேல். (௨௬௨)

குடும்பபாரத்துன் பொழிவையென்றோதக் கூறியவாறியற்றுவனென்
றிடும்பையுற்றிளைத்தோ னுரைத்திடத்தாச ரிபலுமிம்மரத்தின்மீதேறித்
தொடும்புனல்வாவி மீதுறுகொம்பிற் றோய்தியென்றலுமன்னன்செய்தா
னுடும்புபோற்கையாற் பற்றுபுகாற்கீ ழுற்றிடத்தூங்குதியென்றார். (௨௬௩)

குருமொழிப்படிசெய் திடுதலுந்தாசர் கூறுவார்கோடுகொனீகொன்
மருவியதென்னக் கோட்டினையேயான் மருவினனென்றலுமிற்றே
யொருவிலாய்க்குடும்பந் தன்னைநீபற்றி யுற்றவாறென்றிடரொழிக்கக்
கருதினையேற்கோட் டினைவிடுத்திடெனக் கழறினர்கருணைதோய்தாசர். ()

மாயவன்பந்த வாரிதோய்ந்துழலான் மாவைவான் கதிவழிப்படுத்தத்
தாயநன்மனேசே யாதியர்த்துறந்துஞ் சரண் சரணெனப்புகிலெனது
காயமுஞ்சலத்து ளாழ்த்தவெண்ணினிரென் கற்பகந்தானுங்காஞ்சிரங்காய்
தீயவல்வினையோர்க் களித்திடுமென்னச் செப்புசொல்சா தம்யான்றேர்ந்தேன்.

என்றமுழுங்கிடுவான் றன்முகநோக்கி யிணையில்சீர்த்தாசர்சாற்றிடுவார்
குன்றமுங்கடன்மேன் மிதந்திடும்வண்ணங் குயிற்றுவானெருவனுண்டஞ்சேன்
மன்றநானுன்னைக் காப்பனென்மாற்றம் வழுவலவென்றலுநம்பி
நன்றமைகால மடுத்தவன்விடுத்தா னடுக்குளத்தாழ்ந்துமீண்டில்லான். (உசுசு)

உள்ளுறத்தன்கண் டிறந்துநோக்கிடவோ ரூருமோர்மடமுமற்றதன்க
ணள்ளுறுதாசு போதவான்கிரந்த நவில்பவர்கேட்பவர்தாமுங்
கள்ளுகும்பஞ்ச தருக்களுங்காம தேனுவுங்கனிமலர்வனமும்
விள்ளுமன்னவற்றின் மத்தியின்மணிபொன் விரவுமாதனமுங்கண்டதன்மேல்.

வீற்றிருந்தருளு மிராமதாசரையும் விழிமனங்குளிர்தரக்கண்டு
மாற்றிருந்திடுசெம் பொன்னடிவணங்கி மனங்கசிந்துருகியங்கைகண்
மேற்றிருந்திடக்கூப் பினன்றிருவருட்சீர் மேவுமாறருடிரென்றிரப்ப
வூற்றியலருள்சால் குரவரவ்வண்ண முதவலுஞ்சுகக்கடற் படிந்தான். ()

அன்னகாலையில்வா விக்கரைமேயோ ரழைக்கவந்தருணிறைதாசர்
பொன்னடிதொழுது நிற்றலுமென்னே புகுந்தவாறுரையெனவங்கண்
மன்னனைவரும்விம் மிதமுறக்கண்ட வகையெலாம்வகைபடவழுத்திப்
பன்னகவரசோ திடற்கருநமது பண்புநான்பகர்ந்துமுற்றுவதோ. (உசுசு)

என்றுவந்தன்பா லடிதொழுமறையோ னின்பமுற்றிடவருள்புரிந்து
துன்றுமூமொருவிச் சாம்பளகட்டூர் தோய்வரைமீதுறவதனை
நன்றுதோய்சிவாசி மன்றெறிந்தொல்லை நண்ணியூர்பரியினின்றிழிந்து
குன்றுருவுவப்பாற் குன்றின்மீதணைந்து குருபார்திருவடிபோற்றி. (உஎ0)

அருணிறையக்கா பாயிபாற்றுக மதிகமென்றங்கையாற் காட்டத்
திருவனுடேறி யீண்டுநீரில்லை சிடர்பிட்சைப்பொருட்டகன்ரு
ரொருவருமின்றென் செய்குவன்யானென் றுரைத்தலும்யாவருமுற்ருர்
மருவினர்தம்பா லோதவன்னவர்நீர் வரையிடத்தகப்படாதென்ருர். (உஎக)

மாற்றமோர்ந்தருளா ரியரிவரினிப்பார் மருவிநீர்கொணர்ந்தளித்திடுமட்
டேற்றவன்ருகங் கொற்றவன்சகியா னென்றெருகோலையங்கூன்ற
வூற்றமிக்கொலிநீ ரெழுந்திடமன்னே டுண்டவண்மேயினபலருஞ்
சாற்றருஞ்சுவைத்தென் றுவந்துதேசிகர்பொற் றூட்டுணைபோற்றினர்துதித்தார். ()

இன்றுமந்நீர்குன் றிருந்தொருபடித்தா யிருந்தவருணிகர்த்துறலா
லொன்றுநர்பலருந் தாசரையரசை யுற்றதாகத்தினைப்புகழ்ந்து
நன்றுமுழ்கினருண் டின்படைகின்ருர் நவிலுமத்தீர்த்தமற்றவர்சீ
ரென்றுபோலென்று மிலக்கிமாநிலமீ திழிவதால்கழிநலமிசைந்தே. (உஎங)

காரணம்விளக்க வந்தமன்குரவர் கழல்பணிந்தகலலுமற்ரோ
ராரணியப்பா லடைந்தனர்தாச ரன்னகான்மாரிமிக்குறலாற்
சாரணேவோருங் குளிருபாதியினுற் றளர்ந்துறும்போதக்காபாயி
பூரணமதியிற் றிகழ்முகநோக்கிப் புகலுவர்புனிதசற்குரவர். (உஎச)

பசிமிகுத்துளதெற் குணவருளென்னப் பகர்மொழிகேட்டலுமுள்ளக்
கசிவுடன்மாது பதைபதைத்துடனக் கானிடைநனேவிறகெடுத்து
விசிதருதுகிலாற் *சுல்லிமேன்மாரி விழாவகைமூடுபுவிரைவிற்
சுசிபெறப்பாய சம்புரிந்தன்பிற் றுய்த்திடவழைத்தலுந்தூயர். (உஎரு)

கொஞ்சமும்பசியின் றென்றுமற்றொருகான் குறுகினர்பசியடைந்துள்ளேன்
புஞ்சமார்மதுரப் பூரிசெய்தெனக்குப் பொருக்கெனத்தருதியென்றிடலு
மஞ்சுறுச்சோனே தன்னின்முன்னுட்போல் வல்விரைந்தியற்றினள்கூவ
மிஞ்சுமாரியினுங் காலதாமதத்தால் விலகியதென்பசியென்றார். (உஎசு)

இன்னவாறனந்தஞ் சோதனைதம்மீ திதயத்தில்வெறுப்படைந்தில்ல
மன்னவாற்றினரன் னவைகளேத்துன்பா மனத்திடைநினேக்கிலளானுள்
பொன்னனுர்பலரைத் தலைவியென்றுழல்வார் புணருருவுவர்த்தொருவனேயே
தன்னதுதலைவ னுக்கொள்வார்மேனி தனிற்புகுந்திகத்தவரித்தாள். (உஎஎ)

சுடச்சுடரணேயும் பொன்னெனக்குரவர் சோதனேபுரிந்திடுந்தோறுந்
திடக்கருத்தமைந்து பணித்திறந்திறம்பா டிருவருட்பொலிவுமிக்கெய்தி
யுடற்குயிர்போன்மா னித்துக்கட்கிமைபோ லோவறக்காத்துநூலுசித்
தொடர்ச்சியிற்பின்னே கிடலிலாரியருட் டோய்கருத்துக்கிசைந்திருந்தாள்.

நீடுசீர்க்குரவர் பின்னொர்கானத்தி னேர்ந்துகல்யாணகோசாமி
யோடுவில்லெனக்கொன் றியற்றிநல்கென்ன வுடன்†வரையாற்செய்தீந்தனனக்
கோடுகானெங்கு மாடல்செய்திருந்தார் கோளிதுபலர்சொலக்கேட்டுக்
கூடுசீர்ச்சிவாசி மன்னகரிடத்திற் குலவிடுமடபதியானோர். (உஎகூ)

உடனரசன்பான் மேவியாமெல்லா முலகிற்பாரம்பரியமதாய்
மடபதியாய்முன் னுற்றவர்தம்முண் மதித்ததிபதிகளாய்வைக்கத்
திடமுறுதேவ பாடையாதிகளுந் தேர்ந்துபற்பலர்க்கருள்புரிந்து
மடமொழித்துயர்ஞா னப்பொலிவெய்த வழங்கிடுஞ்சீரெலாந்தெரிந்தும். ()

பெருமைமிக்கெம்மை மதித்தருட்குருவாப் பேணிடாதிருள்வனத்தென்றும்
வெருகமொத்தவற்றோ டுந்திரிவானே மேதகுகுருவெனக்கொண்டு
பருவரலமைந்தன் னவன்பிறகவமே பரனிறைகான்றொறுமுழன்றுய்
நிருபநீயெம்மை மதித்திடாத்திறத்தா னேர்ந்ததாலிக்கொடுந்துயரம்.(உஅக)

எனப்பலபலவோ துபுமயக்கிடவு மிறைவன்மற்றவர்க்கிசைகிலனுப்
மனத்திடமுடனென் றேதலனிருக்க மற்றவர்தமதுசீடரைக்கூய்
வனத்தினனிலைமை தெரிந்திவண்வல்லே வருதிரென்றேவலுமன்னோர்
கனப்பொலிவார்கா னுறலுணர்தாசர் ககங்கணக்கற்றகொன்றிருந்தார். ()

* சுல்லி - அடுப்பு. † வரை - மூங்கில்.

மற்றதுகண்ட சீடரோடுபுதம் மடபதிகட்குரைசெய்யக்
கொற்றவன்றன்பா லவரடைந்தனது குரவனைத்தரிசனம்புரிவான்
பெற்றனம்யாமிக் காவலெம்மொடுநீ பெயர்கெனச்சாற்றியாண்டணைகா
னற்றவர்சீடர் தமையழைத்தம்பா னுகுத்திடுககம்பலவும். (உஅங)

வல்லையோர்மரக்கி ழிடுதிரென்றேத மற்றவரதுபுரிந்துறுங்கா
லெல்லைதீர்மகிழ்ச்சி யுடன்மடபதிக ளேந்தலைநோக்கினரிசைப்பார்
செல்லைநேர்கருணை மெத்துநின்குரவன் செய்புமாட்டோர்ந்தனைகொல்லோ
தொல்லைதீரிவன்போற் றெல்லைதொட்டமைந்த தூயருளெவர்களேபுரிந்தார்.()

நல்லசற்குரவ னுனக்குவாய்த்தனன்மெஞ் ஞானசிகாமணியச்சோ
வல்லவனிவன்றன் றிறந்தெரிந்தேகொன் மருவினைகுரவனென்றிணைதீர்
பல்லவமொன்று லீங்கமைதரும்பல் பட்சியின்றிரளெலாம் படுத்தான்
றுல்லபமெமக்கித்தொழில்ககத்திரள்கள்சுமக்குமெய்த்தொண்டருட்டோயாய்

எனப்பலபலவா சியங்கள்சொற்றருகேய்ந் திடங்கொள்வான்மேற்பறந்தணியார்
வனத்திடைகனிதின் றமைதரும்விகங்க வகைகளைமானிடர்தமக்கு
மனப்பதைப்பகலப் போதனைபலவா வகுத்துறுநீவதைத்திடலென்
பினத்துநின்னுரைநம் பினர்பணிநீகொல்பிணங்களைச்சுமத்தல்கொல்பேதாய்.

சிவகாருணிய மீசுரபத்தி திருந்தியதுறவுமெஞ்ஞான
மாவதேகுரவ னுருவெனமறைக ளறைந்திடுமதற்கெதிர்மறையாய்ப்
பாவவெங்தொழில்செய் தேகுருத்துவமும் பற்றினைநின்சரணர்கடா
மேவநீநிரயம் புகுந்திடுநின்மேல்வீழ்வதோகதிபுகல்வெறியோய். (உஅஎ)

குற்றமீதியற்றுங் குணமிதுவென்றுட் குறித்தறிகின்றிலையதன்முற்
கொற்றவன்றேறும் படியுபதேசங் கொடுத்தனை கெடுத்தனையென்னச்
செற்றமிக்கமைந்து மடபதியானுர் செப்பிடத்தஞ்சிரந்துளக்கி
நற்றவப்பெரியோர் சாந்தமாப்பைய நவிலுவரவர்மனந்தேற. (உஅஅ)

நன்றுதீதென்னுஞ் செயல்கண்முற்றவுமி ராமனுனண்ணிடலாகு
மென்றுரைத்திடவோ துவர்கணீவிற்கொண் டெண்ணிலாருயிரினம்படுத்துத்
துன்றுமிராமன் செயலெனவஞ்சாய் துணிந்துசொற்றனைநின்க்கேற்ப
தன்றுரையீதுன் றனைநிகர்பதக ரறைந்திடத்தக்கதுமன்றே. (உஅகூ)

என்றவருரைப்பக் கேட்டடன்றுச ரியானறியாதுசெய்திட்டே
னன்றறிவீர்நல் லொழுக்குளீர்கருணை நனியமைவுற்றுளீரென்னுற்
கொன்றவாருயிர்கள்பிழைக்கநும்மருட்சீர்கொண்டுநோக்குதிரவ்வாறியற்றின்
மன்றயானறியா மையிற்புரிந்திட்ட வன்பவமுந்தொலைந்துய்வேன். (உகூ0)

எனச்சொலவெகுண்டு மடபதியானு ரேடபாதகவென்சொன்னுய்நீ
கனத்தவெங்கொலைசெய் திதுதகாதென்னக் கழறிநன்மதிசொல்வார்தம்மை
யினத்தவாருயிர்க டமையெழுப்புதிரென் றேளனஞ்செய்தனைமதியோ
வனத்தமெய்திடக்கா லனையுதைத்தாற்கு மரிதென்றூறிவுளார்போன்றூர். ()

மடபதியானுர் புகன்றசொற்கேட்டும் மனத்துணிவீ துகொலென்றே
யுடனிறைவனைப்பார்த் திந்தனங்கொணர்தி யெனவவ்வாறுனுற்றலுந்தாசர்
சுடாதிற்பொருத்திப் பறவையினுடல்க டோய்தாவிடுதியென்றிடலு
மிடல்கொண்மன்செய் தானுடன்ககவினங்கள்விண்மிசைபறந்துபோயினவால்

ஆங்கியல்செயலோர் மடபதியானு ரனைவருமதிசயமகமேய்த்
தூங்கியசிரத்த ராகியோதிடுவார் தூயர்நும்மகிமைதேர்கில்லே
மீங்கிசைத்திடுமெம் பிழைபொறுத்தருடி ரென்றவரிணையடிவணங்கித்
தாங்கியநகரெய் திடவிறைமுதலோர் தணப்பருமுவகைகொண்டிருந்தார்.

வேறு

காலமற்றதில் வளங்கொள்கோலாபூர் கலந்தவேதிய னலம்பெறுதாசர்
சீலமுற்றுணர்ந் தடைந்தடிவணங்கித் தேசிகோத்தமர் நான்மருவூரின்
பாலமைந்துளா ரியாருஞ்சத்தியினு பாசனைத்திடப் பற்றமைந்தவராய்க்
கோலமாரிரா மன் றிருநாமங் கூறுவாரிலை கூறில்யாரேனும். (உ௯௪)

மாணபக்குவத் தோதுமிம்மொழியை வாழுநாளிலோ திடத்தகாதென்றே
யிரதமிக்கபோ தனைபுரிந்தச்ச மெய்தவேமறுத் திடுகின்றாரிதற்குக்
குரவரேபுரிந் திடுவதென்னெனக் கூறத்தாசர்தாங் குறுநகைகொண்டு
புரமதிற்புகுந் திராமநாமங்கள் பொலியக்கீர்த்தனம் பலபலபுகன்றே.(உ௯௫)

வீதிமுற்றவுஞ் சென்றுசென்றோத வினவினோரெலா மனமிகவுருகி
மீதியானபே ரன்பராயிராமன் வியன்கொளுமமே நயந்திடப்புரிந்து
கோதில்சீர்க்கர்க்கா டாகுமூர்மேவிக் குலவிராமகீர்த் தனந்தினம்புகன்று
நீதியன்பராப் புரிந்தனர்சிலவர் நின்மலக்குரு வின்பதம்பணிந்து. (உ௯௬)

வேண்டிடப்பரிந் தநுக்கிரகித்து விளங்குநாளிலவ் வளம்பதிமருவும்
பாண்டியாத்தான்றந் திடுமகளிளமை பயிலுநாளையிற் கயினியாகினவ
ளேண்டிகழ்ந்தவி ரேணுபாயிப்பே ரியைந்துளாளிவர் நயங்கொள்கீர்த்தனங்கேட்
டாண்டிடும்படி யிரத்தலுந்தாச ரவள்குணந் தெரிந்தகமிகமகிழ்ந்து. (உ௯௭)

இன்றுளன்பினீ மறைவல்லோர்க்கன்னமிடுதியென்றனரியற்றினளங்ஙன்
சென்றுதேசிக ரடிமலர்போற்றித் தேவரீர்மனைக் கெழுந்தருடிரென
வொன்றுமன்பில்வேண் டிடவணைதலுமுப் பரிகைமீதமை விரிமணித்தவிசி
னன்றுமேவிட வமைத்துபசார நலமெலாமிக நவிற்றலுந்தாசர். (உ௯௮)

அருளநுக்கிர கம்புரிந்தங்க ணஞ்சனேயரை யகத்திலுன்னிடலு
மருவியாண்டிருந் தனரதுகாலை மாதராள்பரி மாறவாண்டடைந்தாள்
பருதிசீடர்தந் *தேசுகண்டயர்ந்துப் பரிகைமேல்விழ விரியருட்டாச
ரிருகரங்கொடு தாங்கிரீயஞ்ச லெதுகண்டென்றலு மிதுபுகன்றிடுவாள்.(உ௯௯)

தேசுலாவருள் வடிவரோர்புருடர் சேயவாவினர் மேயகோவணர்வில்
வீசுமுப்புரி நூலர்பேரழகர் விளங்கவென்றுளந் துளங்குபுவிழிகள்
கூசுறுவிழுந் தனனெனக்கூறக் குருவுளத்தினுட் பெருமகிழ்வடைந்து
பேசுவாரென்சீ டருளொருவருநீ பெற்றபாக்கியம் பெற்றிலரம்மா. (௩00)

*பருதிசீடர் - ஆஞ்சனேயர்

உனதுபாக்கிய மென்சொல்வேன்வந்தோ ருலவைநல்கிய வுத்தமத்தோன்றன்
மனதுவந்துநீ கொண்டமைந்திடுமுன் வகையெலாம்பரி மாறுதியென்னத்
தனதுளங்கனிந் தன்னவள்படைப்பத் தயைகொண்மாருதி யய்த்தகன்றிடலு
முனமருந்திமே வியமறையோர்க்கு முறையிற்றக்கணை முதலியவழங்கி. (௩௦௧)

மாருதிப்பெயர் வள்ளல்சற்குரவர் மாணருட்பிர சாதந்துய்த்தனளா
யாருமொப்பறு வேணுபாயியின்வீட் டணிகொடாசர்முத் தினமமர்ந்திராமன்
சீருறும்பல்கீர்த் தனம்புரிந்திருந்தோர் திவசமெல்லியிற் சீடர்களுடனே
காருறும்வனத் திடைச்சோலாதடைந் தார் கன்னிவைகறை காண்கிலள்கவன்றே.()

மேவுவோருட னணைந்துகண்டன்பான் மென்மலர்ப்பதம் விருப்புடன்வணங்கி
யோவுறுதும துடன்றொடர்ந்தேவ லுஞற்றுவேனென வோதுவர்தாசர்
மூவுருவியற் சிறுமிநீயனிச்ச முயங்குபூவினிற் கயங்குறுந்தகையை
காவுதோறுலா மென்னுடன்றொடாக் கருதன்முற்றுறுக் காரியமாமால். (௩௦௩)

உனக்குநானரு ளாலுரைத்திடுஞ்சொ லுறுதியாகநின் னுளத்தினுள்ளமைத்துன்
*றனக்கடற்புரைவீட்டியைந்தருட்கோ தண்டபாணிமென் றாட்டிணைபோற்றி
மனக்களிப்புடன் வாழ்தியென்றாசி வழுத்தவவ்வண மருவினளதன்பி
னனத்தமில்லவ ரயற்சகாபூரி லடைந்ததோர்ந்துபோய்க் காதைகள்வினவி. ()

தனதின்மேவின ளீதுணர்கணவன் றந்தையன்னவ டந்தைபான்மேவி
யுனதுகாதலி யின்செயலொன்று முசிதமல்லவென் றுவர்ப்பொடோதிடலும்
வினவுபாண்டியாத் தான்மகடன்பான் மேவியுக்கிரத் தோடுநின்னியற்கை
மனதுபோற்றினந் தோறுமொவ்வோரூர் மருவியேதிரிந் திடுதல்கொல்வழுத்தாய்.

இசைவுறுஞ்சிறு போதினிற்கைம் மெய்துநின்றிற மெண்ணுபுவருந்தித்
தசையுறுஞ்சட மேல்வெறுப்பெய்திச் சஞ்சலக்கடன் மூழ்குமெந்தமக்கு
வசையிதொன்றுமுண் டாகுமேலுன்னல்வாழ்வதோமடிந் தொழிவதோவழுத்தென்
றிசைநிலாவிய தந்தைசொற்றிடவாண் டிருந்தவன்னையும் பொருந்துமாறிசைப்பாள்.

உத்தமத்தரத் தினர்தன்னாயகன்றா னுயிரகன்றிடற் கேட்டுடன்விடுவார்
மத்திமத்தர்தன் மகிணனோடொன்றா மயானக்கட்டைமேன் மருவினர்மடிவார்
மெய்த்தநாயகன் மடிந்தபின்விதவா விரதத்தோடய லோரறியாமே
செத்ததன்மையி னாயகன்வடிவே சிந்தைகொண்டுறல் கடையவர்செயலே. ()

ஓதுமிச்செய றன்னுண்மற்றெதைநீ யுள்ளமீதுகொண் டனையுரையெனத்தன்
மீதுதாயுமுட் சலிப்புடனோத வினவியோதுமி ரேணுபாயியெனோர்
தாதுறுஞ்சட நாயகனிறந்த தன்மையாலுடற் சாரபிமானம்
யாதுநீத்துயிர் ஞானநாயகனா யிலங்குசற்குரு விணைச்சரணானேன். (௩௦௮)

தூலநானென மதித்திருந்திடினீர் சொன்னவற்றுளொன் றிற்றுதைந்திருப்பேன்
மேலதாகிய சூக்குமவுணர்ச்சி மேவியானறி வென்றுணர்ந்ததனான்
ஞாலமேவிய பொதுநெறிவிடுத்து ஞானசற்குரு சரணமாயினன்மெய்ந்
நூலறிந்துளோர் மதிக்குநன்னெறியே நுனித்தியற்றினே னிதிற்பழியெதுவே.()

* தனக்கடல் - பொருட்சமுத்திரம்.

அன்னையுளத் துணருலகியல்பை யறையல்யான திலமைவுறேனென்மெய்
தன்னையானென மதித்துறினும்மைத் தந்தைதாயெனக் கொண்டுநுஞ்சொல்லைப்
பொன்னையொத்திடப் போற்றுவனெனக்குப் பொருவிறந்தையிராகவனன்னை
மின்னைநேரிடைச் சீதையேயென்னு மெய்யறிந்தன னினிவிடுவேனோ. (௲௧௦)

இதுபவத்தென துயிர்நுமதகட்டில் யாக்கைகொண்டத னுலெனதுடற்கு
முதுமையும்முடற் படைத்திடுந்திறத்தான் முற்றுணர்ந்தவர் யாமெனமுன்னிக்
கதுமெனுமெவனக் குமதுபதேசங் கழறன்மேவினீர் கலந்துளவுயிர்ப்பண்
பிதுவென்றும்முளத் தோர்ந்தனிராயி னெனக்குப்புத்திசொற் றிடவுளத்தெண்ணீர்.

தோமின்மெய்ந்நெறி பிடித்தருட்சுகத்திற் றோயவெண்ணுமென் சுகுணபுத்தியினைப்
பூமிமீதுளார் நெறிபிடித்துழலப் புரியவெண்ணிடும் புன்மதிப்பெரியீர்
போமினும்மைநும் மொழிதனையானோர் பொருட்படுத்தல னென்னுலுந்தகப்பன்
சாமியாயின ளிவளிகத்திருக்கிற் சாருநங்குலந் தனக்கொருவடுவே. (௲௧௨)

வசைபொருந்திய மக்கள்பூமீதில் வாழ்வதிற்சுக மாள்வதேயாகு
மிசைவிலிங்கிவ டன்னைக்கொன்றிடலே யாமியற்றிடு காரியமென்னத்
தசையுடற்றரு குரவர்கணஞ்சூண் டந்திரத்தினுற் சதிசெய்தீந்திடவு
மிசையிரேணுபா யிக்குடன்மயக்க மேவச்சற்குரு மென்பதனினைத்தே. ()

ஈதுகாலையா னமைந்துளவிபத்தா லிறந்திடாதுதா மிங்கெழுந்தருளிப்
பாதுகாத்தருள் வீரெனவேண்டிப் பாவையோதுபு பதைபதைத்திறப்பப்
போதுசம்பவ மறிந்துடன்றுசர் பொருக்கென்றுண்டமைந் தருட்கணுனோக்க
மாதுகண்விழித் தெழுந்துசற்குரவர் மலர்ப்பதந்தொழு தனள்வழுத்திடுவாள்

விடத்தைநல்குபு மடித்தவரென்னை வேண்டிடாரெனன் மெய்மையாதவினிம்
மடத்தைமேவினுர் தம்மைநீத்தும்மை வழிபடற்குளம் விழைவுபெற்றனன்யான்
*கடத்தையஞ்சல னென்றுடன்சாம்பள் காட்டெனும்பதி மாட்டமைந்திட்டா
ளிடத்தைமேவுமி ராமதாசரவ ணியையிராமாசி முசளருத்திரனே. (௲௧௫)

தேவதாசசு வந்தகோசாமி திவாகரப்பானு சீமுதலாக
மேவலானமா ணுக்களூர்புகுத விடுத்துத்தாமள காவதிமேவி
நாவலம்பெறு சீடரோடிந்தி ராயணீநதி படிந்தருண்ஞான
தேவர்சுந்தர சமாதிபோற்றுபுமுத் தினஞ்சங்கீர்த்தனம் பூசனைபுரிந்தே. ()

சுரநதிப்புடை சார்ந்தேகநாத சுவாமியின்பதத் துணையமைத்திலகு
மரசுநீழலின் முத்தினமருவி யணியிராமகீர்த் தனங்களோதிடவும்
விரவுமற்றவர் தாசர்முன்னிலவி விழைவுடன்றமு வினர்விடையளிக்கத்
தரமிலங்கவு ரங்கபாத்தடைந்து தங்கிராமிரா மதாசராம்பெரியோர். (௲௧௭)

தமதுசீடரோ டெதிர்கொளப்போற்றித் தணந்தவ்வூரய லுறுஞ்சிவூர்மேவி
யமலர்நற்கதை புரிந்திடக்கேட்டு ளாசறும்பயி னுபாயியென்பாள்
கமமுறும்பத்தி விராகமெஞ்ஞானங் கலந்துதாசர்தாள் கனிவுடன்வணங்கி
யமர்தன்னூர்புக வேண்டியங்கமைகா ளளவிலன்புடன் பூசனைபுரிந்தே.(௲௧௮)

* கடம் - வனம்.

எனக்கநுக்கி ரகஞ்செயவேண்டு மென்றுவேண்டலு மவணிலேக்குவந்து
மனத்தருள்வேட்டவா வழங்கியன்னவடன் மனையிலொன்பது நாள்வதிந்தருளிக்
கனத்தகாதைசெய் திடாங்களிநகர்போய்க் கண்டுமாருதிகழற்றுணைபோற்றி
வனப்புறீள்பஞ்ச வடித்தலமருவி மகிழ்ந்திராமகுண் டத்திடைமூழ்கி. (௩௧௯)

சுகவிராமமூர்த் தியின்றளிமேவித் தூயசோடசோ பசாரபூசனைசெய்
தகமகிழ்ச்சியி னளவில்சுலோக மமைத்துக்கீர்த்தனங் களுமிகப்பாடித்
தகநெருங்கினர் வினவுபுபரவ சந்தழைத்திடத் தரணிகிழ்ச்சலதி
முகடுமேவவா ரதிபுரிந்துளமா மோதராய்ப்பிரசாதமீந்திட்டார். (௩௨௦)

இன்னவாறுமுத் தினம்புரிந்திராம னெழில்கொண்மெய்யினைத்தழுவுபுவிடைபெற்
றன்னநீர்வெறுத் தேதணைத்தேடு மன்புடைச்சிவா சிமன்புரமடைந்து
வன்னவுத்தியா னத்திடையமைந்தார் மாருதிக்கொடி யுடனியம்வயங்க
வன்னதோர்ந்தமன் னுவகையுட்பொங்கி யளவிலாடம்ப ரத்தொடங்கணைந்தே.

வேறு

அருளார்குருபா ரிருதாண்முடிமிசை யணியாவளவறு முபசாரம்
பெருகாதரமிக வுறுபூசனைவகை பிழையாமுறைமையி னினிதாற்றிக்
கருமாலினம்வெளி றுறவேபுமிழ்தரு கடமாமிசையுறு தவிசேற்றி
யுருமோதையிலதி ரியமோ*டிருசது †ருழையோரொடுகவரிகள்வீசா. (௩௨௨)

மணிமாடநிரைகொ டவிர்வீ தியைவலம் வருமாறுசெய்தரண் மனைமேவி
யணியார்பொலன்மணி விரவாதனமிசை யமையாநிறையுப சாரங்கள்
பணிவோடுசெய்தலு முறுதேசிகர்மறை பயில்வேதியருட னமுதுண்டே
தணியாவுவகையொ டிரவூடரிபுகழ் தனையோதுபுகதி ருதயத்தில். (௩௨௩)

அமைபூசனைசெய்து பிரசாதமுநல்கி யதுபோதரணிய மருவுற்றே
கமைமேவினபொரு சில்நாள்வனமிசை கழியாவயலமை சாம்பள்கோ
ரமையாவவனெழின் மலிராகவனுரு வதுதாபிதமுறை செயனுடி
யிமையோர்புகழ்தரு மறுமார்தமைவிழி யெதிராகிடநினை தாலானர். (௩௨௪)

தனனதனதன தனனதனதன தனனதனதன தனதான

உடன்மாருதிதரி சனமாகிடுதலு முளநீடுவகையி னடிதாழ்போ
திடமேவியநக ரினுநீளமருவு மெழுகோசணிநக ரதன்மாடே
யடன்மேவியதச ரதனர்குமரன லணியாருருவுள தனைநீபோய்
மிடலோடுகொடிவ ணணைவாய்நகரிதன் மிசைதாபிதமுறல் புரிவாயால். (௩௨௫)

எனவோதினருடன் மறைவர்கிடவரு ளியலாரியரிர வதனூடே
யனமாநகர்மரு வினராலயமிசை யமைராகவனெழின் மலிசீதா
வனமாரநுசனெ னிவர்மூவர்களையு மருவூரிடைகொணர் தாலானர்
தனமாரதுநகர் வதிவோர்விடிதரு ததியாலயமரு வினர்காணர். (௩௨௬)

---

* இருசதர் - எட்டு. † உழையோர் - மந்திரிகள்,

தத்தாதனதன தத்தாதனதன தத்தாதனதன தனதானு

அப்போதினினக ரெப்பாலினுமள வற்றோர்துருவின றறியாதே
யொப்போதருதவ முற்றூர்புடைபுக வுற்றூர்தமதரு குறல்காணு
வெப்போகையுமுள மிக்கார்துயரொரு வித்தாபதர்முக மதைநாடா
மெய்ப்போதனையர சுக்கோதிடுநல மிக்கிரிதுசெயன் முறைதானே. (௩௨௭)

தந்தாதனதன தந்தாதனதன தந்தாதனதன தனதானு

என்றேவினவினர் தம்பாலொருசொலி யம்பார்வதிதனு முடனேய்வோர்
குன்றேய்பவரொர்சொல் விண்டாரிலையெது கொண்டோவெனமனதிடைநாடார்
நன்றேதவிர்செயல் கண்டேமெனவுனி நம்பாலொருமொழி சொலநாணு
நின்றூரிவரென வந்தார்மனதினி னைந்தாருலகியல் புடையாரே. (௩௨௮)

தனந்தாதனதன தனந்தாதனதன தனந்தாதனதன தனதானு

இனந்தாமதமென வுறுந்தேவுருவுக ளொடுங்கோணகரிடை கொடுபோய்நா
மனஞ்சோர்வுடனவ ணிருந்தாரகமிக மகிழ்ந்தேதரிசனை செயுமாறே
கனந்தோய்தளியிடை முனம்போலமைதரு கனஞ்சார்தரும்வண மகலீதே
தினந்தாபனைசெய்வ மெனுங்கோளுடனவர் திடங்கூடியவரை முயல்போதே.

தனதானதத்ததன தனதானதத்ததன தனதானதத்ததன தனதானு

சிறிதேனும் விக்கிரக மசையாதிருக்குமொரு செயனுடிமெய்ப்பகவ னுளமீதே
செறிமாதவப்பெரியர் மனமேனினைத்தபடி திகழூரிதிற்குலவ நினைவானு
னறியாமைமிக்கிவரை மிகவேவைதிட்டனமி வபராதமற்றுநல முறுமாறே
சிறியேமிசைக்கருணைபுரிவீரெனத்தொழல்செய்திடுவேமெனிற்சுகமெய்திடுவோமே.

எனவோதிநற்றவர்த மடிபேணியொப்பிலவ ரிசையாசிபெற்றுநகர் புகலானூர்
மனமோர்நிலைக்கணமை தவசீலரக்கிரம வகையேயியற்றிடினு மிகுமேலா
மினமார்புலத்தினிடை யுழல்வார்நலத்தைமிக விசைவாயியற்றிடினு மதுதீதா
மினபான்மையிற்றவசு தனின்மேன்மையுற்றசெய லிலையாமெனத்தெளிவ ரறிவோரே.

அவரூர்புகக்கருணை மலிதாசரப்பதியி லமைமேவாரியற்றுதளி யதன்மாடே
சிவமார்தினத்திலியன் முறையேபதிட்டைசெய்து திகழ்கோலமுற்றமகிழ்வொடு *மாடா
நவமார்மறைப்பனவர் குழுவோடுதுய்த்திடவு நடவாவியற்றுதளி யதன்மாடே
யுவமானமற்றிலகு ரகுநாதனெப்பில்வடி வுளமாதிருட்டிகுளிர் தரநாடா. ()

தனதனந்தததன் தனதனந்தததன தனதனந்தததன தன்தானு

பரவசங்கொண்டுபலதுதிபகர்ந் தன்பினொடு பணியநெஞ்சங்கொளருண்மிகையாலே
யிரவிமைந் தன்கனிவு மிகுபெருந்தொண்டரரு கினிதுவந்தங்கைகொடு தழுவாநீள்
வரமனந்தம்பெய்திடவணை தலுந்தொண்டர்பெறுவளமிதேன்றின்றுரைசெய்திடலாமோ
விரவிலன்றுந்துமிய வியமுழங்கும்பசனை யினிதுகண்டென்றுதயமுறுபோதே.

* ஆடா - செய்து.

தந்தனதன தான தந்தனதன தான தந்தனதன தான தனதான

மங்களாரதியேசெய் தின்பமார்பிரசாதம் வந்துளோர்பெறுமாறு தவினரா
யங்கணுளொருநாலு தங்கியோகைவிராவி யண்டர்பேணும்விழாவொடுமுலாவே
பொங்கமேவிடவேசெய்தங்குளோருயுமாறு புந்திகூறியிராமன் விடைபோடே
துங்கமார்கணவேணிகொண்டநீள்கரைமாடுதுன்றுசோலையின்மேவியுறுபோதே.

வேறு

உளம்பெறுமாஞ்சனேயபரைமு னிடாங்களியிற்பிரதிட்டை யுஞற்றலேபோல்
வளங்கொணகர்பன்னென்றிற் புரியவுளங்கொடுநவகா மலைமரூரே
விளங்குசிங்கனுபுரஞ்சாம் பளகாட்டிறெடுடேம்பி வியன்சராடா
களங்கொண்முமரடியூர்ண பாகுசாதாராபத் திசகாபூரே. (௩௩௫)

சுசிராளேயென்றிலங்கு நகர்களிற்றங்கைகளினுற் றுதைவித்தன்பின்
வசியமுறவெந்திரதா பனம்புரிந்திட்டுபசார வகைகளாற்றிக்
கசிவுடனிப்பதினெரிடத் தெவ்விடத்தாயினுமனுமார்க் கண்டுநாளுஞ்
சுசியுடன்போற்றுநர்விரும்பு பேறடைகவெனக்கவியாற் றுதித்துப்போற்றி.()

தம்மதுசீடர்களிலிவ ரிவரிவ்வூரமைகவெனச் சாற்றியன்னோர்
சம்மதங்கொண்டவணமைய விடுத்தருளிராமனருட் டகையநாமந்
தும்மல்சரமத்தினிலுஞ் சொல்லாதார்வாழ்க டோறுந்தோய்ந்து
மைம்மணிவண்ணப்பெருமான் பத்தியுறக்கீர்த்தனங்கள் வழுத்தித்தேற்றி.

சாம்பளகாட்டிரடைந்து தங்கிநாட்சிராம நவமிசார
வாம்பதத்திற்சிவாசிமன் னன் றேடியடைந்தன்பினடி வணங்கிப்போற்றத்
தாம்பரிவிலாசிவிண்டு விண்ணோருமெச்சவிழாத் தழைக்கவாற்றி
மேம்படப்பத்தாந்தினத்தி லாரதியோடந்தணர்க்கு விருந்துசெய்து. (௩௩௮)

சீடருடன்வதிதருநா ளனுமந்தசயந்திவரச் சிந்தையோகை
யோடதனைச்சிறப்பாக நடத்திடவேண்டுமெனத்த முள்ளங்கொண்டு
நீடருளாற்பிரதிட்டை செய்தபன்னென்றூரார்க்கு நிகழ்த்தித்தாமே
யாடலினுற்பதினெரிரா மதாசர்வடிவாயூர்முற் றமைந்தாராகி. (௩௩௯)

நாளுமொவ்வொரிடத் தினுஞ்சங்கீர்த்தனம்புரிந்தி ராமநாம
மாணருந்தெரியவதன் பெருமையெலாம்வகைபெறவே வகுத்துளன்பி
னீணுதன் மறைபுகல்வோர் தொழில்செயினுஞ்சமாதியரு ணிட்டராகு
மூணருங்கவளந்தோ றுரைப்பவர்நித்தியவுபவா சத்தோராவர். (௩௪0)

இராமநன்னமத்தைவிடாச் செபத்தோரேமுமூட்சுக்க ளியம்புநாமம்
விராவுசெபம்புரிவதற்கு மிராமனருள் பெறுவதற்கும் வியந்தன்னோன்றுள்
பராவியன்மாருதியருண்முன்பெறவேண்டுமன் னதுகைப் பற்றூர்கட்குத்
தாதலத்தெப்பேறமெய்தா தெனவிலக்கியங்கள்கொடு சாற்றியன்பால். ()

குறைவறவாரதிபுரிந்து பிரசாதமன்பர்கட்குக் கொடுத்தகன்று
தறைபுகழ்கோலாபூரின் மேவியரிக்கைபுரிந்து தருக்கள்சால
நிறைதருசந்திரகிரிமீ தணைந்துகதைமூன்றுதிங்க ணிகழ்த்தியங்க
ணுறைநளனுங்கவியுடன்கோல் காசுரனைவதைத்திடுபொன் னுருக்கண்டேத்தி.

பகுளதலம்போற்றியிரங் காளபதுமாளபொய்கை படிந்துநீங்கித்
தகுவடதிக்கணைந்துபஞ்ச கங்கையின்மூழ்கிமார்க்கண்ட சயிலமோடு
மிகுநலஞ்சாலிமயமிரத் தினகரப்பேர்க்கிரிகளன்பின் மேவிப்போற்றித்
தொகுதிகொடென்றிசைத்தலங்கள் பணிந்துறுமாணுக்கரினஞ் சூழ்ந்தபேண.

கானமொன்றிலமைந்தனரக் காபாயிகுருபரர்தாள் கனிவினைத்தி
மேனலஞ்சாலமுதமைக்கும் வேலைதனின்மாவுலியின் மேவுஞ்சீட
ரானவுத்தவகோசாமி வீணைமுதற்பல்லியங்க ளமையவன்பிற்
கானமலிகீர்த்தனஞ்செய் காலையௌரங்காபாத்தின் காவலோன்றன். (௩சச)

அனிகபதியங்கிருந்து கேட்டிட்டானுத்தமமா மந்தப்பாட்டிற்
கனிவுடனெம்மிராகவனே தனித்தபரம்பொருளாதி கருத்தாவென்ன
நனியுறுதிபெறமொழிதலுணர்ந்தவனுட்பொருணகி நவிலின்னோனை
முனிவுடன்கொண்டிறைசமுகத் தடைதிரெனவீரர்கள்பான் மொழிந்துசென்றான்.

அவ்வாறுங்கவரியற்ற மன்சினந்துதங்குருவை யழைத்துநீதிக்
கொவ்வாததங்கிரியை செய்திடச்சாற்றிடுதலுமுத் தவனுள்வாடிச்
செவ்வாதரத்தொடிரா மதாசர்தமைநாடியென்பாற் சேர்ந்ததீதா
மிவ்வாபத்தினையொழித்துக் காத்தருள்வீரெனத்துதிசொற் றிரங்குந்தன்மை.

தமதுதிருவுளத்துணர்ந்து கொம்மெனவாண்டெழுகுரவர் தம்மைப்பார்த்துச்
சியமநிகர்குணம்பொலியக் காபாயிய திசயித்துத் தேவரீர்தா
மமரிக்கையொழிந்தெழுந்த தேதெனமாவுலிநகர்கொ ளவிந்தரானோர்
நமதுத்தவனைவருத்து கின்றனர்மற்றதைநீக்க நான்செல்கின்றேன். (௩சஎ)

எனவுரைத்திட்டுடன்றமது வடிவைமறைத்துடனங்கு னெய்தியன்னோர்
மனமொடுலகெலாநடுங்க மாருதிதன்வடிமைந்து வலிமிக்கேய்ந்த
வநியமமன்னுயிர்போகா விதமூர்ச்சைசயுறக்கைகொண் டறைதலாலே
நனிமயங்கிக்கீழ்வீழ்ந்தங் கறிவுசிறிதமைந்தெழுந்து நடுங்கிநின்றே. (௩சஅ)

பாவியறியாமையினாற் புரிந்தபிழைபொறுத்தருளாற் பாலியீரென்
ணுவியுமக்கடைக்கலமென் றோதுபுசலாம்புரிய வருடோய்தாசர்
தீவினைமிக்கவன்றெரியத் தமதுருக்காட்டலுநீயிர் தெய்வத்தன்மை
மேவினரென்றறியேனென் றன்பொடுதாட்டுணைசிரத்தில் விரவத்தாழ்ந்து. ()

தாசரெதிர்நின்றிடலுங் கருணையுடன்சாற்றுகின்றார் தந்தோமாவி
நீசவினிநீமறையோர் கோவினங்கடமைவருத்தே * னியமந்தன்னை
நாசமுறப்புரியேலென் றருளினிதோபதேசங்க ணவின்றுபோக்கி
மாசறுமுத்தவகோசா மியினுழியோர்நாளிருந்து மற்றோர்சூழ. (௩௫0)

* நியமம் - கோயில்.

சாம்பள்கோர்நகர்மருவி யிராகவன்றாள்போற்றியங்குத் தங்கினோர்பாற்
றாம்பரிவினோதுவர்நீர் யாவருமிவ்வுலகமுற்றுஞ் சரித்திராமன்
றேம்பயில்கீர்த்தனம்பாடிக் கதைபுரிந்துசடமூடத் திரள்களெல்லா
மேம்படுபேறுறப்புரிதி ரென்றுரைத்துத்தாமூரூர் தோறுமேவி. (௩௫௧)

பற்பலவாமடங்கணிய மித்தனைவோரையுநல்வழிப் படுத்துநாளில்
விற்பயிலுமணிமாடப் பாகாநன்னகரினிடை மேவுந்தூயன்
வெற்பனவைராகத்த னன்பிலிருங்கடல்போல்வான் மெஞ்ஞானத்தன்
றற்பலமார்மெய்புடைய னிராமதாசரின்புகழ்ச்சித் தொகுதிகேட்டு. (௩௫௨)

மிக்கபயபத்தியமைந் தவரிடம்போய்த்தரிசிக்க வினையார்காயந்
தொக்கபலவினத்தோ மென்புரிவோமெனப்பலவா சூழ்ந்துதன்பாற்
புக்கவொர்சிடனைப்பார்த்துச் சாம்பள்கோர்நகரினிடைப் பொருந்துந்தூயர்
பக்கமணைந்தியான்றரும்விண்ணப்பமளித்தென்பணிவும் பகர்தியென்றே. ()

முடங்க லொன்றீந்தவன்செலவுக் கரைப்படிதண்டுலமளிக்க மூவைந்தாநா
ளடங்கவணைதருநகரோன் சென்றிராகவன்றளியி லமர்வார்ப்போற்றித்
தடங்கரத்திற்பத்திரமீந் திடக்கொண்டாருன்சரிதை சாற்றுகென்ன
நடந்தவிதமுழுதோத வினவிவிண்ணப்பத்தினிய னாடினாராய். (௩௫௪)

வந்தவனைமுந்நாளாண் டமைதரச்செய்தவனுவப்ப மணிப்பூணாதி
தந்தருளாற்கேசவசா மிக்கெதிராமுடங்கலொன்று தாமுநல்கி
வந்தனமற்றவர்க்கோதி யொருவேளையூணளித்தூர் மருவென்றன்பா
லுந்தவவன்குருவிடம்போந் துளவுரைக்கமுடங்கலுங்கண் டுவகைமிக்கான்.

வேறு

ஆனகாலையிற் றாசர்தம்பேரரு ளமைகிருட்டிணா சிப்பெயர்பெற்றவ
னானமாருடன் *மஞ்சிகர்தங்குலத் துற்பவித்திடக் கொண்டவன்றாலமெய்
மானநீத்தைய மேற்றுண்டுதாசரால் வழுத்துபோதக் கிரந்தபாராயணங்
கானமோடுசெய் வானந்தயோகிசீர் கண்டன்னோன்மிசை கொண்டனனன்பரோ.

அந்தணக்குலத் தோன்சயராமப்பே ரமைந்துளானவன் றன்புடைமேவியே
வந்தனஞ்செய்தெ னக்குபதேசநீர் வழங்கவேண்டுமென் றேத்தலுமற்றவன்
றந்தரத்திற்கென் பாலடைந்தென்னைவந் தனஞ்செய்பண்புந் தகாதெனில்யானினி
நுந்தமக்குப தேசிப்ப தாகுமோ நொய்யசாதி யிடையுடற்பெற்றுளேன். ()

எனதுசற்குரு நாயகர்நுந்தமக் கெவ்விதத்துந் தகுந்தவரந்தண
ரனகமாருதி யின்னவதாரரென் றனந்தமாயவர் சீலமறைந்துஞ்சால்
பனவனும்மிற் சிறந்தவரில்லையிப் பாரிலென்றுளம் பற்றினன்யானினிக்
கனவிலேனுமற்றுரையும்வேண்டிடேன் கடிதிற்செய்திர் கருணையென்மேலென.

அனந்தவண்ண மிரக்கவுமற்றவ னகத்துட்சற்று மமைந்திலனாகித்தன்
கனந்தழைத்த குருபார்சந்நிதி கலந்துதாழ்ந்து கதைமுழுதோதினான்
முனந்தழைத்திடு மந்தணற்பார்த்தருண் முறைகெடாசர் மொழிந்திடுகின்றனர்
மனந்துணிந்தந் தணர்குலத்தோன்றனீ மரபிற்றாழ்ந்தவன் வாயுபதேசச்சீர்.

---

* மஞ்சிகர் - நாவிதர்.

பெறுதல்சாலவு நன்றன்றுலகமை பெரியரோடிகல் பேயனையாரெலா
முறுவலித்திகழ் வாரெனப்பற்பல மொழிந்தும்பார்ப்பான் முரண்விடுகின்றிலா
னுறுமிராமதா சர்பதம்போற்றிநீ ரோதின்மற்றவ ரெற்குபதேசிப்பார்
மறுவிலீரரு ளீர்கட்டளையென மற்றவன்கொண் மனத்திடநாடியே. (௩௯0)

தாசரன்பிற் கிருட்டிணசிப்பெயர் தாங்குசீடற் குரைப்பரின்னேனுப
தேசநல்கியல் லாதுனைவிட்டிடான் செய்திபோதியென் றேதவிற்சேர்ந்தரி
பூசனைத்திற முற்றிநன்மந்திர போதஞ்செய்திடப் புந்திமகிழ்ந்தவன்
றாசனுப்பணி செய்துறுநாளையிற் சார்ந்திட்டான்மெய்க் கதியருட்சற்குரு. ()

விரியருட்குரு மெய்க்கதிசேர்தலும் வேதியச்செய ராமன்மெலிவுடன்
கிரியைமுற்றமு டித்துச்சமாதிதான் கிளரிடத்திற் றுளவவனம்புரிந்
துரிமைமிக்கவர் பாதுகையாங்கமைத் துவகையோடருச் சித்தையமேற்றன்பிற்
பெரியதாங்குரு பூசைபுரிந்திடப் பெட்டிராமதா சர்புடைமேவியே. (௩௯௨)

வணங்கியென்குரு வுக்குத்திதிசெயும் வண்ணமாணை வழங்குதிரென்றலுங்
குணங்கிளர்ந்திடு தாசர்சொல்வாரிது குயிற்றிற்பார்ப்பார் வயிற்றெரிவொன்றியே
யிணங்கிடார்நிந்தை யும்பலவோதுவா ரேனும்ராம னருளின்முற்றெய்திடு
மணங்கொணின்னன்பினாற்செயுமச்செயல்வழுவறச்செயென்றார்தொழுதேகினான்.

ஐதின்மேவி மடைத்தொழில்யாவையு மாற்றியந்தணர்க் கூவவனாருட
னெய்தினாரது காற்செயராமன்றா னின்பிற்சற்குரு முன்புறப்பூசனை
செய்திடப்புகுஞ் செய்தியறிந்தவண் சேர்ந்தவேதிய ரிற்சிலர்செப்புவார்
மெய்திகழ்ந்திடு ஞானகுருவுயிர் மேவிவாழவி வன்றிதியார்க்கெனா. (௩௯௪)

மயிர்வினைக்குலத்தோனுபதேசமுன் மருவினானிவன் மற்றதனாலவ
னுயிர்விடுத்தவி டத்திற்றிதிசெயற் குன்னியேகினன்போலுமென்றுன்னியே
செயிர்கொளீன னமையுணக்கூவிய செய்திநன்றிவண் சேர்கைபிழையெனா
வயிலவந்தவ ரேகலும்வேதிய னன்பிற்றாசரைத் தன்னகத்தெண்ணினான். ()

உடனிராமதா சர்முன்பணைதர வுற்றவேதியர் சொற்றிடுகின்றன
ரிடமிதிற்பிர மக்குலந்தோன்றிய விவன்செய்பூசை யினிதுகொலோவருட்
டிடமமைந்துள நீர்புகல்வீரெனச் சினமொடோதியித் தீயவன்றன்புடை
மிடலொடியாமுணக்காரணமொன்றெங்கள் விழிகள்காண விளக்கிவிசைவமால்

என்னும்வேதியர் தம்மையிருமென்றி ராமதாசருட் போந்தவற்கூப்ப்புறந்
துன்னுமேல்வை யவன்மேவிராக்வன் றேயத்தாசர்பான் மாருதிமேவிட
மன்னுமச்செயல் கண்டவர்தாம்பர வசமடைந்து மயக்கமுற்றேவியே
கொன்னுலாந்திதி கண்டுண்டுதக்கணை கொண்டகன்றனர்விண்டன்பராயினார்.

வேறு

பின்பருளிராம தாசரங்ககன்று பெருவனமொன்றிடைமேவி
யன்பமைந்திராம நாமகீர்த்தனஞ்செய் தமருநாட்பங்குனிமதியிற்
பின்பயில்பக்கச் சதுர்த்தசித் திதியிற் பிறங்குமுன்வாரவைகறையின்
முன்பறல்படிந்து லந்தவர்பின்பு மூழ்கவக்காப்ாயி வினவும். (௩௯௮)

தேவரீர்மீண்டு மூழ்கியதேது செப்புதிரெனவிள்வாரென்முன்
னுவருமன்ன னிராகவன்பொற்ற ளடைந்தனனன்னபான்மையினுன்
மேவருமறையின் விதிவழாதிர்த விதந்தினம்பத்துளுற்றிடுவே
னேவருசூத கப்பொருட்டென்ன வோதுகாற்சிவாசிமன்னுற்றே. (௩௬௯)

வணங்கிமுன்னிற்க வோதுவர்தாசர் மன்னவென்னண்ணனிராமன்
மணங்கிளரடிசார்ந் திடவின்யான்பத்து வைகல்சூதகமமைந்துளனற்
குணங்கிளர்மீயிக் கணத்தினிற்சாம்பள் கோர்நகரடைந்திராகவற்கன்
பிணங்கியநவமி யுற்சவம்புரியா னீற்றுறுந்தினத்தடைகின்றேன். (௩௭௦)

எனவுரைத்தருளால் விடையளித்திடமன் னெய்திநாணுளுமுற்சவமும்
பனவர்கட்குணவு மியற்றியன்புடனே பயிலுநாளிறுதியிற்றசர்
மனதுவப்புடனே சார்ந்துபசார மருவிடப்பூரணப்படுத்தி
யனகவாசிகள்சொற் றிறைவனேச்சாதா ரணேந்திடவிடையளித்திடலும். ()

கவினகரடைந்த மன்னவன்பரளி கட்டேனுமலேமிசைமடமொன்
றவிர்தரப்புரிந்து தேசிகர் தம்மை யதிலமைந்திடவழைத்திடலுஞ்
சவிபுகழ்த்தாசர் வனத்துறுமாவ றழைத்துளேற்கணிநகர்மடஞ்செய்
திவிதவாதிடனன் றேயெனவிறையென் னிச்சையீந்தருளிரென்றிரப்ப. ()

இசைந்தனர்தாசர் களித்துமன்னவன்ற னியற்றுசிங்காதனத்தமைத்து
நசையுடனுபசா ரம்பெறுபூசை நவிற்றியேயிலக்கமந்தணர்கண்
மிசைதாவிருந்திட் டிரவினிற்சூரவர் மென்மலர்க்கழல்வருடுங்கா
லிசைமலியரசற் பார்த்தருட்டாச ரியம்புவர்சீயன்பருடனே. (௩௭௩)

எதிர்கொடுதக்கா ராமரைவரவேற் றிடுகெனமுன்னனுப்பினரென்
றதிர்கழற்கான்மன் னவனிருந்தனனக் காலைமற்றவருமின்னவரை
முதிர்தருமார்வத் தோடுகொண்டரவுண் முன்னினரணைதலுமன்னன்
வதிதருபன்ன லடியரும்பிறரு மருவிடவெதிரணேந்தேத்தி. (௩௭௪)

தக்கவாறுபசா ரம்புரிந்திராம தாசர்பாலழைத்துமேவிடலு
மிக்கவர்க்கண்ட வுடன்றரைமீது வீழ்ந்துபோற்றிடவெடுத்தணைத்தார்
புக்கவிவ்வகையாங் கணேந்தசாதுக்கட் புல்லியேபுகழ்ந்தவணணேந்தார்க்
கொக்கவின்னமுதிட் டிறைவனேயவர்பார்த் துரைத்திரீகீர்த்தனமென்றார். ()

மன்னவனுவப்புற் றனந்தநாளமையென் மனக்குறைமுடிந்ததாலின்றென்
றன்னருமகிழ்வோ டமைந்ததொண்டர்கடா ளுச்சியிற்புனேந்தியம்பொலியத்
தன்னதுகாலிற் சதங்கைகள்கலிப்பத் தகுமுறைபாடிநின்றாட
வன்னவற்புதங்கண் டணேந்துளார்பலரு மவசமுற்றிடக்குருவறிந்தே.(௩௭௬)

வேந்தனேயங்ங னிருந்திடவமைத்து வேணுபாயியைக்கதைபுரியென்
றுந்தவர்புகல வியற்றினள்கேட்டோ ரவசமுற்றிடவிடிந்ததுடன்
பாந்தவாரதிசெய் தமைபிரசாதம் பற்பலர்களுங்கொளவழங்கி
வாய்ந்தமற்றநா ளெல்வியிலக்கா பாயியைவழுத்திடப்புரிந்தே. (௩௭௭)

வினவியானந்தக் கடலின்மூழ்கினர்பின் வியன்பயிணுபாயியுடனே
மனநிலைபெறுவா மனகோசாமியையும் வழுத்திடச்செய்துவைகறையிற்
கனமுறமங்க ளாரதிமுடித்துக் கவின்றிடுமற்றைநாளங்ங
னினமுறவிருந்தார்ப் பாடுவித்தீற்றி லிசைதுக்காராமரைப்பார்த்தே. (௩எஅ)

நீவிர்நற்கதைசெய் குதிரெனத்தாசர் நிகரினற்றுணையடிவணங்கி
யோவியத்தமைந்து பாடிடக்கேட்டோ ருள்ளமேற்பரவசமருவிக்
கூவிரவொற்றை யாழியங்தேரோன் குறுகலுமறிந்திலரக்கான்
மாவியைந்திடுமார் புடையனேர்தோற்றி வதிதுக்காராமரைத்தழுவி. (௩எகூ)

வேறு

தனனதாத்ததன தனனதாத்ததன தனனதாத்ததன தாத்தன

உனதுகீர்த்தனைகண் மிகவுமேற்றமுள வுவைவினுய்க்களிகொண் மாட்சியா
லனகபாற்கரன துதயமார்க்குமறி வரியதாய்த்தெனுர மேற்குலாம்
வனசைபாற்குலவு மெனதுவேட்கையுமுன் மதுரவார்த்தையின மாற்றுமா
லெனுமருக்கருணையுடையன்மாற்றமுண ரெவருமார்த்தனர்கள் போற்றியே.

தந்ததானதன தந்ததானதன தந்ததானதன தந்தன

மங்களாரதிபு ரிந்துதாசரடி மண்டுகாதலின்வ ணங்கவே
வங்கணுதரமி குந்தனேருளம கிழ்ந்துளாசிகள்வி ளம்பியே
தங்கலாயினரு ருந்தசீர்துளவு தங்கையானனிவ மூங்கியே
துங்கமாரித னின்பபூசனைதொ டங்கினுரெவரு மன்பொடே. (௩அக)

தானதானதன தானதானதன தானதானதன தானன

ஆனகாலைமுத லாவிராவுதொறு மார்வமேவியுயர் தாசரே
வானமேவுசுர ராதியோருவகை வாரிமூழ்கும்வண மேர்குலா
ஞானநீடுகதை யோதியேழ்பரிகொ ளுதன்மேவுதய வேல்வையே
மீனமாம்வடிவு மேவினுனுவகை மேவவாரதிசெய் தோகையாய். (௩அஉ)

தத்தாதானதன தத்தாதானதன தத்தாதானதன தத்தான

எற்றேய்காலைதனி லற்பார்பூசனையி யற்றுவூண்வினைமு டித்தேசீர்
துற்றேயாமகிழ்வுண் மிக்காராயருள்கொ டுக்காராமர்கதை யைக்கேளா
விற்றேவாதசுக முட்டோய்மாதவசை யெப்போதேபுரித லுற்றேமா
லற்றேய்வோடுபக லைக்காணுமெயுயி ரற்றேமானிகருமற்றேமே. (௩அ௩)

தனனதானதன தனனதானதன தனனதானதன தனதான

எனநீளார்வமொடு பெரியோர்பேசுமொழி யிறையூடாடியின நினைவேய்வான்
மனதோடோடியுல கினின்மாய்வார்பரிவின் மகராசாவெனம மதையாயே
கனநேரோதிபெறு மடவாரேவல்புரி கடைநாயேன்மெயரு ணிலையேதோ
யினமாபாகவத ருடனுமாறருள்செ யிறைசீர்யாவதென மொழிவேனே.

தனதானதத்ததன தனதானதத்ததன தனதானதத்ததன தனதானு

எனவேதவத்தரச னுளநீடுவப்பினெடு
மெழின்மேவுசற்குரவ ரளவேதி
ரியல்பாருட்செயலை மனமீதுமெச்சியவ
ணிசைமாதவப்பெரிய ரிணைசாலா
வனமார்பதத்துணைகண் முடிசூடியற்புமிக
மலிபூசனைப்பணிசெய் தொளியேதோய்
மணியார்பணித்திரள்க ளுடையாதிசுற்றிமிகு
மகிழ்வோடுநற்றுதிகள் புகல்வானு
யினமேன்மையைக்கொடல மிதுதான்முனுற்றபெய
ரிலதாயொர்சற்சனக டெனுமோர்பே
ரிணையேய்கெனச்சொலின னுருமாதமித்தகைமை
யினிதேகவுற்றவர்கள் செலலானு
ரனவேலைகொற்றவனெய் துமிராமருக்களவை
யறுசீர்தரற்குணசை பெறலானு
னதுதேருமப்பெரியர் தரினுமறுத்தலிசை
வலவாலதைப்பெறலு முறையாகா. (௩அ௫)

எனவேதமுட்கருதி யிறைபாலிசைத்தலில
திசை*தேகுநற்பதியெய் திடலாலே
யிடைசார்வழிக்கணமை தருகோனவர்த்தெரித
விலனுப்மிகுத்ததுய ருடையோனுப்
வனசாதனத்தனிகர் குருநாதர்முற்குறுகி
வழிபாடியற்றிநுவ லுவன்யானே
†வருராமருக்களவி னிலம்வாகனத்திரள்கண்
மகிழ்வோடளிக்கமிகு நசையானேன்
மனனேயென்முற்பகர்த விலர்தேகுவுற்றனரென்
மனமாகுலப்படுவ தெனுமோர்கா
வலனேடைருட்குரவ ரவர்சீலமெச்சினர்நு
வனுவார்பல்சித்தியையு முடிவாமோர்
கனமானமுத்தியையு மதியாதுவிட்டலன்மெய்
கவினீள்புகழ்த்தொகுதி புகன்மேலோர்
கனவானபொய்ப்பொருள்கள் விழைவார்கொல்சித்தமிசை
கவலேலெனத்தொழுது நகர்போனுன். (௩அ௬)

வேறு

தரணிகாவல னகர்புகத்தாசர்தாஞ் சற்சனகட்டோவி
யாணியத்தடைந் திடலுடனவ்வயி னடைதலாயுறுங்காலை
விரவுசற்சன கட்டெனுமலைமுடி மீதமைந்திடுங்காளி
யிரவொன்றாடருட் டாசர்நேர்நிலவநீ யாரென்றுரிசைக்கின்றாள். (௩அஎ)

* வருராமர் - இக்ராமர், † தேகு - ஒரூர்,

மருவுமிம்மலை மீதுறுங்காளியான் மதிகலம்பொலிவீர்தாம்
பருவதத்தின்மீ தனந்தநாளமைந்துமெற் பார்த்திலிர்நும்வாயாற்
பொருவிலின்சுவைப் பாடலென்மீதினிற் புகன்றிடப்பெறுமார்வம்
பெருகலாலுமை யிரந்தனனென்னுளம் பெட்டவாறிசைவீரால். (௩௮௮)

என்றுவேண்டநா வலர்புகல்வார்நின தெழிற்களத்திடைமேய
நன்றுசான்மணி மாலையிற்கல்லொரு நான்குகொண்டென்கேள்வி
துன்றுமாகடுக் கன்புனைந்தணிதியேற் சொல்வன்யானெனப்பின்னு
மொன்றுமாறுசெய் வேனென்றுமறைந்தன ருரைத்தவாறிவர்சென்றார். ()

கரங்குவித்துமுன் னிற்றலுங்காளிதான் கவின்றநாவலர்காது
நிரம்பவிட்டவர் முன்னின்றுகவிகொடு நெஞ்சுவப்பொடுசெல்ல
வரங்கவின்றவர் விடைகொடுமடத்துற வைகலர்ச்சகர்வந்தே
தரங்கவின்றமா லையின்மணிநான்கிலாத் தன்மைகண்டுளஞ்சோர்ந்து. (௩௯௦)

மன்னிடஞ்சொல வவனிவர்மேலைய மருவிக்காவலர்தம்மை
யென்னிசம்புகல் வீரின்றேலொறுப்பனென் றிடலுமவ்விரவூடே
மன்னிடும்புகழ்க் காளிமன்னவன்கன மாட்டுவந்தருட்டாசர்
பன்னிடுங்கவி வேட்டவர்கேட்டவா பரிசெனக்கடுக்கன்யான். (௩௯௧)

அவர்தங்காதிலிட் டென்செவிகுளிர்தர வவர்புகல்கவிகேட்டேன்
புவனிகாவல வர்ச்சகர்க்காவலர்ப் புண்படுத்திடலென்னும்
விவரமோர்ந்தமன் களிப்புடன்வைகறை வேலையவ்விடமேவி
யவமறுங்குருநாதர்தாங்கடுக்கனே டமைதருஞ்செயல்கண்டே. (௩௯௨)

பணிந்துதன்கன வுரைத்திடக்கேட்டவர் பரவசமிக்காரா
யணிந்தபூணுறுஞ் சரித்திரமிதுகொலென் றதிசயித்திடமன்னன்
விணிந்திரர்க்குமெய் தாச்சுகந்தனக்கருள் விமலர்பூங்கழல்போற்றித்
தணிந்திடாவுவப் போடுகாளியினருட் டரிசனங்கொடுமீண்டான். (௩௯௩)

துதித்தெனக்கிது நல்கெனும்பாவலர்த் துயர்க்கடல்படிவித்தே
மதித்திடாதவர் பாலிச்சையீந்துபா மாலையேற்றணிபண்பு
விதித்திறங்கடந் திட்டதேவருக்கெலாம் விரவுமோர்குணம்போலுங்
கதிர்த்தலைப்பயிர் வாடிடமுகிலினங் கடலிற்பெய்திடல் போன்றே. (௩௯௪)

தாசரோர்தினத் தன்பர்க்கிராமன்சீர் தனைப்புகன்றுறுகாலை
நேசமிக்கசீ டன்சௌதாகிரிப்பெயர் நிலவுவாணிபனேனோன்
வீசலைக்கடன் மீதுவர்த்தகஞ்செய்து விரவுபொன்கலத்திட்டே
வாசமார்பதி புகவருங்காலையில் வாயுவின்றிறலாலே. (௩௯௫)

கலங்கவிழ்ந்திட நாய்கன்றன்னுடனெடுங் கடலின்மூழ்குமுனுட்சஞ்
சலங்கவிழ்ந்தமூ டுபுதிகைப்பாயுடன் றன்னைவெம்பவமாயா
மலங்கவிழ்ந்திட வாண்டருள்குருபரன் மலர்ப்பதந்தொழுதின்ன
விலங்கவிழ்ந்திடப் புரியிற்பொன்னுன்கிலோர் வீதநல்குவனென்றான். (௩௯௬)

பொங்குமாழிமேற் றன்னுயிர்பொருளெலாம் போந்திடுந்தியின்க
ணிங்குவந்தேனைக் காத்திடினுந்தமக் கீகுவனுன்கூடோர்
பங்குதானென வோதிடுசெட்டியின் பன்புதேர்ந்திடுவார்க்கே
தங்குசற்குரு பாற்குமெய்பொருளறத் தருமுயிர்த்தவந்தோன்றும். (உகூஎ)

வணிகன்வேண்டலுந் தாசரக்கணத்தவண் மருவினர்கலந்தன்னை
மணியிருங்கட லாழ்தரா தியற்றிரீர் மருவும்வத்திரத்தோடுந்
தணிவில்பொரு ளோடுநின்றிடுந்திறந் தனையுணர்நாய்கன்றான்
கணிதமின்றிய பரிவுடனின்றவர் கழன்மலர்பணிந்தேத்த. (௩கூஅ)

ஒருகணத்தின்முன் மறைந்தனரிருப்புற வொழுகறலுடையோடு
மருவுசற்குரு நாதரைக்கண்டுடன் வாமனசாமிப்பேர்ப்
பொருவில்சீடன்றாழ்ந் தேதுநுந்துகிலறப் புனல்படிந்துளதிச்சீர்
தெருளவோதுதி ரென்றலுநடந்துள செய்தியாவையுஞ்சொன்னர். (௩கூகூ)

நவிலக்கேட்டவர் யாவருமின்பவா னரலையிற்படிந்திட்டார்
கவினுமற்றைநாள் வணிகன்வந்தென்கலங் கவிழ்தராவணங்காத்தீர்க்
கவிர்தலானகை மாறிலையென்றுபொன் னறைந்தவாறுமுன்சேர்த்துப்
புவியின்மேல்விழுந் திடக்கண்டாரிவர்பெரும் புகழ்வரம்பிலதென்றே. (ச00)

வியந்துதுத்தியம் புரிந்துபோற்றிடுதலும் வியனருட்பெருந்தாசர்
நயந்துநாய்கன்றந் தவற்றைச்சன்மார்க்கத்தி னண்ணிடச்செலவிட்டே
வயம்பொருந்துமுன் பொருள்கொடினமுங்கொடை வழங்குதியெனிற்செல்வங்
கயம்பெறுங்கதிர் கண்டவாரிதியெனக் கதிக்குமென்றலுந்தாழ்ந்தே. (ச0க)

சென்றனன்சினுட் சென்றவராங்கபாட் சாவின்சேனையின்வெள்ளம்
பொன்றயங்குசற் சனகடென்மலையினைப் பொருந்தத்தம்பாலாக்க
வொன்றனந்தவு பாயங்கள்செய்துமுற் றுறுமையிற்கபடத்தாற்
றுன்றயம்பெறு வெடிகுண்டுபலமலை தோய்முகட்டினிலேற்றி. (ச0உ)

உருமினங்கள்பல் கோடிசேர்ந்ததிர்த்தபோ லொலிபெறவெடிப்பிக்க
மருவிடும்புகைப் படலம்விண்வாயுற மற்றவற்றமைதீயாற்
பருவதத்தின்மீ தமைதரும்பலமனை பாறியபுணர்ப்பின்ன
தருள்வளம்பெறு சமர்த்தராமருமுணர்ந் தாஞ்சனேயரையெண்ண. (ச0௩)

குரங்கினங்கள்பற் பலவணைந்திராவணன் கொடுங்கணைகளைத்தேய்த்த
கரங்கள்கொண்டுகுண் டுகளின்வாய்முழையெலாங் கணத்தினுள்ளறத்தூற்றி
யிரங்கவன்னவர் மிசைமலைத்திரள்களை யெடுத்துவீசிடவாற்று
றாஞ்சிரங்காஞ் சிதைந்தனரெஞ்சின ரோட்டெடுத்தனரானர். (ச0ச)

மற்றிச்சம்பவந் தெரிந்தசேனதிபர் மனந்திகைத்தனராகி
வெற்றிவேல்கொடம் மன்னவன்றனக்குறும் விதமெலாம்வரைந்தேயீண்
டுற்றிருந்தன ரிந்துபகிரேனு முளவையுந்தெரிவித்தார்
பெற்றியீதுணர் மன்னவனவரடி பேணிமீளுதிரென்றே. (ச0௫)

அறிக்கைசெய்தனு முணர்ந்தவர்தாசர்பொன் னடியில்வீழ்ந்தனரேத்திக்
குறிக்கலீரறி யாமையின்யாமிவண் குயிற்றுதீவினையென்றே
நெறிக்கொடேகின ரிஃதுணர்சிவாசிப்பேர் நிருபனோகையுட்பொங்கி
வெறித்துழாயணி வானடியார்தமை வியந்துபோற்றினன்மிக்கே. (௪0௬)

போற்றுமன்னனைக் கனிவுடனோக்கியப் பொதுவிடந்தனைநீத்து
வீற்றுறுந்தனி யிடத்தமைந்தருள்செய்வார் வேந்தநீசீராமன்
மாற்றுயர்ந்தபொன் னடிபுகவவாவுநாள் வாய்ந்ததால்விவகார
மேற்றுழன்றிடேல் பற்றறுத்துரமுட னிராகவன்பதநெஞ்சில். (௪0௭)

தரித்துநானுவன் றிடுபன்மூன்றக்கரத் தருமறைசெபியென்ன
விரித்துரைக்குமுன் மன்னவன்சிற்சுக வேலைமூழ்கினனாகி
யுரித்துடன்குரு பரர்க்குடலுயிர்பொரு ளொப்புவித்தறையாமுன்
சரித்துளேனும தாணைபோல்யான்பர தந்திரம்படைத்தென்றே. (௪0௮)

நலத்தசற்குரு பரனடிவணங்கியூர் நண்ணிமிககறஞ்செய்தே
குலத்தமைந்தனுக் காரியரோதுநாட் குலமணிமுடிசூட்டிப்
புலத்தமைந்திடா நிலைபெறுமன்னவன் புனிதமாரேகாந்தத்
தலத்தமைந்திரா மனைநினைந்தவன்கழற் றலத்தமைந்தனன்வாழ்ந்தான். ()

அரசனானசம் பாசிதனத்தனுக் கபரவான்றொழிலாற்றிக்
குரவர்சந்நிதி யடைந்துதன்றந்தையைக் குறித்திரங்கிடவாங்கே
கரவுதோயுல கியல்பையுஞ்சிற்சுகக் கடலுண்மூழ்குசன்மார்க்கச்
சரதவானிலை யையும்பெறச்சொற்றவன் சஞ்சலங்களைப்போக்க. (௪௧0)

தெருளமைந்தவன் றன்னதுதந்தையாஞ் சிவாசிமன்னவன்போலக்
குருபரர்க்குமிக் கன்பனாய்வணங்கியுட் குறையொழிந்தனனாகி
மருவுதன்னக ரடைந்தனனன்னகான் மாசில்சற்குருநாத
ரருளினாற்றன்மா ணாக்கராரையுமரு கழைத்தனரறைகின்றார். (௪௧௧)

மருவுமாகநாட் டேய்மதிநவமியின் மத்தியானப்போதிற்
றிருவுலாவுசீ ராமன்பொற்றாளில்யான் சேர்குவனதன்பின்னர்
பெருமைசாலண்ணன் பேரன்கங்காதரப் பெயர்கொள்கான்முளைதன்னைப்
பெருகுமன்புடன் கொணர்ந்துநீர்தேசிகா பிடேகமாதியுமாற்றி. (௪௧௨)

எனதுசம்பிர தாயத்தைவிளக்குதி ரென்றறைந்திடக்கேட்டோர்
கனமிகுந்தசாம் பூரிடத்தண்ணன்றன் கவின்மனையிடமேயார்க்
கனகரோதிய வாவரைந்தொற்றரை யனுப்பினரிதுதேர்ந்தே
யினமெனப்பொலி வாரெலாஞ்சற்சன கோருறவேய்கின்றார். (௪௧௩)

ஈதுநின்றிடச் சமர்த்தவிராமர்த மெதிரிலன்புடனிற்குஞ்
சாதுசற்சனர்க் கோதுவர்நீரரி தனதுநாமம்விடாதே
தாதுலாமுட லுளவரையிராகவன் சகுணநற்றிருமேனி
மீதுபத்திமிக் கன்புடன்பூசனை வெளியகத்தினுமாற்றி. (௪௧௪)

பிச்சைகொண்டடி யவர்தமக்கிட்டன்பிற் பின்பருந்தினிராகி
யிச்சையோடுசீ ராமநன்னவமியு மெழில்கொளஞ்சணைநல்கு
மச்சைமேவினர் செயந்தியும்பிரபல மமைதரும்படிசெய்து
விச்சைமேவருட் டொண்டரீண்டெய்துறில் விருப்புடனமுதிட்டே. (சகரு)

ஆவியாகம்விட் டகல்வரைவிராகஞ்சற் றகன்றிடாதரிகீர்த்தி
மேவியார்சொலி னும்பரிவோடதை வினவிச்சீவர்கண்மீதி
லோவிலாவரு ளமைந்துமுக்கரணத்து முறுமிடர்களைப்போக்கித்
தாவிலின்பரு டாச்போதக்கிரந் தந்தனைத்தினந்தோறும். (சகசு)

ஓதியுட்பொருள் களைத்தெளிவாகநும் முள்ளமேற்பதித்தென்றுஞ்
சாதியாச்சிர மங்களிற்றவறிடாத் தன்மைகொண்டுறைவீரேன்
மேதினித்தொடக் கறுத்தருளிராமன்றாண் மேவுவீரெனக்கண்கண்
மீதிலின்பதுன் பங்கொணீர்வாரநும் மிகையபேரருட்பண்பால். (சகஎ)

நன்றவ்வண்ணமே புரியவைத்தெம்மைநுங் நளினநாண்மலர்த்தாளி
லொன்றவைக்குதி ரெனப்பணிந்தேத்தின ருற்றவேல்வையிலங்கண்
மன்றலார்கரு நாடதேயத்தினு மருவினரொருபத்தர்
மின்றயங்கிடைச் சீதைராகவன்றம்பி வியன்கொண்மாருதியின்னோர். (சகஅ)

பொலிவமைந்தமூர்த் தங்களைத்தருதலும் பொங்குகாதலுற்றாராய்
மலிவமைந்தபே ரருட்குருநாதர்தாம் வணங்கியின்னவற்றன்பாற்
சொலிதமாரொரு பெட்டியிற்பந்தனந் தோயவைத்திருப்பீரேற்
பலிதமேவிப்பின் பயன்படுமென்றலும் பண்ணினரவ்வாறே. (சகக)

உடன்கல்யாணகோ சாமியைநோக்கின ருரைத்திடுகின்றார்நாந்
திடங்குலாம்பரந் தாமமெய்தியபின்யான் சேர்ந்திடும்வடிவத்தை
யடங்கிடும்படி சமாதிசெய்யாதிரா ரழற்கொடுதகித்தந்த
விடந்தனிற்றளி செய்துபெட்டகத்தினுள் ளியைந்தமூர்த்திகடம்மை. (சஉ0)

பதிட்டைசெய்குமி னென்றறைந்தமரபக் கத்தின்முற்றிதொட்டே
மதிப்பரும்பிரா மணர்க்கன்னமாதிய வழங்கியட்டமிகாறுங்
கதிர்த்தநல்விழா வரிகதையெய்திடுங் கங்குறூறு மிக்காற்றி
யுதித்தமாநவ மித்திதிக்காலையி லுவப்புடனீராடி. (சஉக)

அவிர்தருஞ்சகாத் தஞ்சகத்திரத்தின்மே லாறமைசதமெய்தக்
கவினுமாகந வமியிற்சம்பாசிப்பேர்க் காவலன்றெழுதேத்தச்
சவிமணித்தவி சிடம்பதுமாதனந் தயங்கவீற்றிருந்தன்பாற்
கவிதைகொண்டிரா மனையென்கண்ணோர்திருக் காட்சிதந்தருளென்றே. ()

துதிசெய்போதிலி ராகவன்சானகி சோதரனநுமாரோ
டதிநலம்பெறு தரிசனமளித்தலு மானந்தக்கடன்மூழ்கித்
ததியதிற்கனி வுடன்சயரகுவீர சமர்த்தவென்மொழியோதி
விதிதனென்கரங் கொண்டொர்மெய்சமைத்திட விடாவருட்பதந்தோய்ந்தார்.

அன்னகாலையி னமரரைந்தருக்களி னலர்பொழிந்தனர்மீ த்தோர்
பன்னரும்பல்வாழ்த் தோதினர்வானமேற் பஞ்சதுந்துபியார்த்த
வின்னபான்மைதே ரடியவர்தம்பொருட் டிருநிலத்திடைவிட்ட
மன்னருட்டிருத் தாசர்தம்மேனியோர் மங்களத்தவிசேற்றி. (சஉச)

வேறு

அற்றாகியகா லையிலன்படிபா ராருந்துபர்மிக் கவராயினிமேற்
கற்றாவெனுமன் புடனம்மையெலாங் காக்குங்கருணைக் கடலாகினர்தம்
விற்றாவருண்மே னியிதைத்தமியேம் விழிமுன்றெரிசித் திடலுண்டுகொலோ
செற்றாரியே றெனவொன்றுசிவா சிப்பேர்பெறுமன் றிருமிக்கவனே. (சஉரு)

முடிசூடியமன் னவனுபுமனோன் மும்மைக்கரணங் களினுங்குரவ
ரடிபோற்றுதல்வாழ்த் துதலுன்னுதலோ டடியார்க்கடியே னெனநம்மதுதாட்
பொடிபுச்சியின்மீ தமையப்பெறுமோர் புனிதன்றுயர்கொள் ளுவனேகொலியாம்
படியோர்தொழுதா பதரென்கருவம் படருற்றிவிதப் படருற்றனமே. (சஉசு)

எனவேபலவா யடியார்புகல்போ திறைபாயவிர்சம் பாசிப்பெயரோன்
றனதாருயிர்நே ரத்தன்கதிசேர் ததியிற்குருநா தருமேகியதான்
மனதாகுலமிக் கென்றாதையின்மேல் வைத்திட்டவருட் டமியேன்மிசைபு
முனிவீர்பெறுவீ ரெனவெண்ணுமெனை முனியாவகல்வீர் முறையோமுறையோ.

என்றாதரமிக் கவனோதிடுபோழ் தெல்லோருமகத் துவதாசர்தமீ
தொன்றாதரமிக் கருளாடல்களிலொன்றொன்றையுமோ தினர்வாழ்த்தினராய்க்
குன்றாததில்வீ ழுருவித்தகையிற் குன்றாவிருகண் கொட்டப்பினராய்
முன்றாமிதைநன் கறிவித்துறவு முன்னுதிநனின் னுவுற்றனமே. (சஉஅ)

எனவேபலவா றவண்மேவியுளா ரெல்லோருமிருந் துயருற்றவராய்
வனமே வியசந் தகிலாதியவாம் வாசம்பெறுமிந் தனமீதிலருட்
கனமேவியதே சிகர்மேனிதனைக் கவின்மிக்கவமைத் தழலிட்டொருமுத்
தினமீதொளிர்மந் திரவக்கரங்க டிராயோதசம்பா துகையோடவிர்ந்த. (சஉகூ)

தம்பாதுகையப் படியேயமையத் தசையென்பவைசாம் பருறப்புரிவார்
தெம்பாருண்மே னியைவிண்வடிவஞ் செய்யாததுநம் மிசைவைத்துளவேர்
பம்பாதரமே யெனவுன்னினராய்ப் பரிவித்தகையெம் பான்மேவியநீ
ரெம்பாவமொடெம் மையும்விட்டகல்வா னேகுஞ்செயலென் னெனவோதினராய். ()

கவினீடியபா துகைசென்னிகொடே கலியாணசுவா மிகலங்கவுடன்
றவிரப்பொலிபூ தியிலங்கமைவோர் தாமின்புறுமா றெவியென்றனுடற்
புவிமீதிலையா னுலகுள்ளளவும் பொலிவேன்றுயர்நீர் புணர்காரணமென்
னவிருசவொர்போ தமிராமனரு ளுமத்தைபுமோ தினிரின்புறுவீர். ()

என்றோதுகவிப் பொருடேறினரா யிலகுங்கலியா ணசுவாமிமுத
னின்றோர்பலருங் களிமிக்கெவரு நிகரற்றவருட் பொலிதேசிகர்தங்
கொன்றாளமைபா துகையைப்பரிவிற் கும்பிட்டுமிகக் கொண்டாடிடுகாற்
கன்றாமெனவா ரியர்கொள்ளுரிமைக் கங்காதரன்கண் ணுநதிக்கணுறல். (சஙஉ)

தன்றா தருரைப் பவினுவினனுஞ் சம்பாசிநரா திபனங்கமையு
நன்றாயகல்யா ணசுவாமிமுத னண்பானவர்நாற் படையோடமையச்
சென்றாதையினிற் பணிவுற்றவரைச் சிவிகைக்கிடையேற் றியியம்பொலியக்
குன்றாடணிவித் துயர்தாசர்கவின் குலவாதனமுன் புபுகுத்தலுமே. (சஙங)

கங்காதரநா மமுளான்கருணைக் கடலாகியதா சர்தினம்பொலிவிற்
றங்காதனநேர் படநெஞ்சமிருந் தழனேர்மெழுகிற் குழைவாய்விழிநீர்
பொங்காதரவிற் பணியாவவர்தம் புரம்வெந்தமையும் புடைமேவியவண்
சிங்காவளமார் தளிசெய்தநுசன் சீதாமணவாளனைமாருதியை. (சஙச)

பிரதிட்டைபுரிந் துபசாரவினம் பெரிதுந்தினமும் பரிவோடுசெய்தேழ்
சுராமுற்றருமா மறையோர்மறையோர் துய்க்கப்பகன்முற் றவுமாற்றினனு
யிரவுற்றிடிலா ரியபரோதியபே ரின்பார்தருகீர்த் தனமோதியிவன்
பரவுற்றிடுமைந் துதினம்விபவம் பாவுற்சவமா திமுடித்தனனே. (சஙரு)

கரையற்றசிறப் பமையத்தவரீள் கங்காதரனைத் தவிசின்புடைவைத்
துரைமங்கலவே தமுழக்கமைய வுற்றாரபிடே கமியற்றினராய்
விரையார்தருவா னவரும்புகழ மிளிருற்சவமா திமுடித்தணியார்
தரைமீதுவிழுந் தெவருந்தொழுதே சந்தோடசமுத் திரமூழ்கினரால். (சஙசூ)

வேறு

சாற்றுபத்தி வைராகஞானமா தி தழைத்தருட்கங் காதரன்றான் றசரென்னப்
போற்றுமன்பர்க் கருள்புரிந்து சீராமற்குப் புகனவமி யனுமந்த சயந்தியாதி
யாற்றுபுவாழ் காலரச ஞஞ்சம்பாசி யவர்க்குமட மமைத்துநிபந் தங்கணல்கித்
தேற்றமிரா மதாசர்குரு பூசையாதி செய்துமருள் கொய்தருளிற் றிளைத்திட்டானே. ()

வேறு

தபனன்வரத்தா லநுமகலை தாங்கியுலகத் தவதரித்துத்
தவத்தாலாஞ்ச னேயனுடன் றசாதிமெய்த் தரிசனங்கொண்
டுமையறுபல் சித்திகள்செய் துலகிற்பலர்க டமைப்பகவ
னுண்மையன்ப ராக்கவிர வுடனேபகலு மிகமுயலும்
விபவச்சமர்த்த ராமசுவா மிகள்பேறடியேற் கருள்செயது
மேவத்தவநிற் கில்லையென விளம்புவாயே லத்தகைசா
லிபமொத்திலகு முயர்திறமெற் கெய்தும்வணமீங் கியற்றிடுவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (சஙஅ)

சமர்த்தராமசுவாமிகதிமுற்றிற்று

ஆ கவி ஙககூ0

---

இருபத்தேட்டாவது

# நாமதேவர்கதி

அன்னோரே ராஞ்சனேய னங்கிசத் தாலுதித்த
தன்னோநேர் சமர்த்தராம சாமிதன் சரிதஞ்சொன்னேன்
மின்னோரே ருலகவாழ்வை வெறுத்துவிட் டலன்சொரூபக்
கொன்னோநன் குணர்ந்தநாம தேவர்சீர் கூறுவேனே. (க)

அறநக ரனைத்தையுந்தற் கவயவ மென்னக்கொண்டே
யுறநகர் மற்றொன்றின்பா லுய்த்திடா துயிரைத்தாங்குந்
திறநகர்ப் பண்டரிச்சீர் தேர்தா வருகமைந்த
புறநகர்ப் பெருமைசற்றே புகலுது முணர்ந்தவாறே. (உ)

ஏனமா நகர்களின்பா லேற்றமா னிடரென்றோது
மூனமே யன்பிற்றன்ம முளுற்றிடு மவரேமேலாம்
வானமே வியபூங்கொம்பர் மருவிப்பண் டரிக்கணித்தாங்
கானமே வுபுவான்ருருக் கவின்வடி வாவர்போலும். (ங)

இடத்தினுற் பிறவியேற்ற மென்பதல் லாமலுற்ற
சடத்தினு லன்றென்றோதுஞ் சாதத்தை விளக்குமன்றே
திடத்தினுற் சிறந்தபத்தர் சேரயா சிதத்தின்பான்மை
கடத்திடா தவர்மடிக்கட் களிதருந் தருக்களம்மா. (ச)

ஒக்கரேக் கெறிந்துதம்பா லுறினுமாங் கவர்க்கேயூட்டிப்
பக்கமெய் தன்பர்கட்கோர் பருக்கைபு மீயாமாந்தர்
புக்கதாம் பிறப்பைநக்க போன்மலர்ந் தவரைநாடித்
துக்கமிக் கிரங்கலேபோற் சொரிந்திடுங் கண்ணீர்மன்னோ. (ரு)

பயன்மர முணவாருள்ளூர்ப் பழுத்தற்றூற் செல்வச்சீல
நயனுளான் கண்ணுண்டாகி னெனமறை நவிலுமென்னி
னயனகர்ப் பாலுணுவற் றடைந்தவர்க் களிக்குமெம்மை
யியலுவ மானமாக்கற் கொருவரின் றென்றிலங்கும். (சு)

செம்மைவா னகத்தையெட்டித் தேன்றுளித் தலர்ந்தசைந்து
சும்மைவா ரளிகண்மொய்த்துத் துலங்குமத் தருக்கள்சாலும்
வெம்மையார் கதிரிளைப்பு விலகிடச் சிவிறிவீசி
மெய்ம்மையார் கீதம்பாடி விரைப்பன்னீர் வீசலேய்க்கும். (எ)

மருவுமா னிடர்க்கேயல்ல வானுலாம் பறவைகட்கும்
விருகங்க டமக்குமுண்டி வீசிவிட் டலநன்னுமத்
திருமறை போதித்தன்பர் திரளிடைக் கூட்டலாலே
சருவவா ருயிர்களுக்கு மடமத் தண்டலையாமாதோ. (அ)

தொண்டர்முன் பெய்துந்தோறுந் தூயதன் றலைவணங்கி
முண்டகத் தாள்கண்மீதின் முருகலர் தூய்ப்பைங்கிள்ளை
கொண்டுப சரித்துநீழ லுடன்கனி கொடுக்குமேன்மைத்
தண்டலைத் தகைமைவேற்றார் மானிடர் சார்கிலாரால். (கூ)

தொண்டர்போற் சுகங்கள்பாடுந் தோகைமா மயில்களாடும்
பண்டழை குயில்கடந்தி பயின்றிடு மோசைகாட்டுந்
தண்டரு வும்பர்வாழ்கீ சகந்தலை துளக்கியன்பான்
மண்டலர் மாரிபெய்யும் வழக்கமார்ந் துளதக்கானம். (க0)

அசேதன மென்னநூல்க ளறைந்திடு தருக்கடானும்
விசேடமன் றெனும்பிறப்பை மேவுபுள் விருகந்தானுஞ்
சுசேயவிச் செயல்கண்மேவித் துலங்கிடு மென்னின்மானச்
*சசேலமா னிடர்தஞ்சீலஞ் சாற்றிமுற் றுவிக்கலாமோ. (கக)

வேறு

ஆயும்புகழ்ப்பண் டரிபுரத்தி லமைந்தோன்வாம தேவனெனத்
தோயும்பெயரோன் சூத்திரர்தங் குலத்திலுதித்த தோன்றல்பின்னே
பாயும்புலிபோ லறமாதி பயிலாதேமம் பருவதம்போ
லேயும்படியீட் டுதலேதா னியற்றுந்தொழிலென் றுளந்துணிந்தோன். (கஉ)

தன்னோடுதித்தா ருடன்வாழ்வான் றனக்குமுதுமைப் பருவமுற்று
மன்னோர்குழவி யில்லாமை மதித்துமுளங்கொள் வாஞ்சையினாற்
பொன்னேவறவீட் டிடுதல்விடான் புணர்ப்பைமனையா ளுவர்த்தாளா
யென்னேவிவண்டாம் வறிதலைந்தீர் யார்க்கேயிவணீட் டுதிர்மாதோ. (கங)

பித்தனெனவே நும்மையுடன் பிறந்தாரெண்ணிப் பேயனையான்
செத்தபிறகன் னவன்பொனெலாஞ் சேருநமக்கென் றுற்றனரென்
றொத்தமனைவி யோதிடக்கேட் டலுமேயவண்மிக் குவப்புறத்தன்
சித்தமிசையுட் கோளைநறுந் தேன்போற்செவிவாய்ப் பெய்திடுவான். (கச)

வன்மையெனதாக் கைக்கமையும் வரையும்யான்செய் திடுந்தொழிலை
யின்மைபெறவே விடுத்துவறி திருக்கேனின்னர் பொருளையின்னர்
நன்மைபெறத்துய்ப் பவரெனவா னுட்டாரறியா ரெனிலிவர்தம்
புன்மைமனக்கோண் முற்றுறுமோ புந்திதளரே லென்றனே. (கரு)

தாரித்திரியப் பெருங்கொடுநோய் தம்மையரிப்பத் தளர்மனை சேய்க்
கோரித்திகையா தமலனருட் குறியிற்றிறம்பார் தமைக்கண்டும்
வாரித்திறத்திற் பொருளமைந்து மைந்தர்ப்பெறவுந் தவமாற்றார்
பூரித்திரடே டுபுமடிவார் புருடர்போலும் பலர்மாதோ. (கசு)

சினைச்சேலனைய விழியாயென் செல்வநுகர்ந்திட் டெனக்கிறுதி
நினைத்தார்நினைப்பை நிட்பலமாக் கிடுவோநீநித் தியஞ்சுகிர்த
வினைப்பாலோகை யொடுபுரியின் மேவுஞ்சேயென் றலுமதியந்
தனைக்காண்டரும்வா ரிதியிலுளந் ததும்புமுவகை படைத்தனளாய். (கள)

* சசேலம் - உடை.

தலைவன்றுணைத்தாள் வணங்கியன்பிற் ருமென்சொலினுந் தவருதே
நிலைபெற்றிடுமா தரவுடன்யா னிதஞ்செய்குவனென் றனள்சொல்வான்
கலையின்றெருட்சி சார்கிலன்சற் கன்மத்திறமோர் கிலனேனு
மலையொத்தவிரென் னருட்குரவர் வகுத்ததொன்றென் மனத்துளதால்.(கஅ)

செப்புமஃதென் னெனிற்சாது சேவைபுரித லாமிதனுக்
கொப்புற்றிடுமோர் கருமமிலை யுரைத்ததாமிச் செயலினைநீ
தப்புற்றிடாம லியற்றினலஞ் சாருமென்றோ தினரிதைநீ
யெய்ப்புட்புணரா தியற்றிலுளத் தெண்ணம்பலிக்குஞ் சாதமே. (கசு)

இன்றுதொடங்கி நீமதில் லெய்துஞ்சாதுக் களினுளத்திற்
றுன்றும்விழைவார் பொருளளித்தி யொருவரிவண்டோய் கிலரென்னி
னன்றுபொலிசந் திரபாகா நதியின்கரையி னண்ணியவ
ஞென்றும்பெரியோர் விருப்பமளித் துவப்பிற்பணிதல் புரிவாயே. (உ0)

செய்கையிதிலெத் தனைபொருள்கள் செலவாகிடினு மிகநன்றே
நைகைபெறுமென் னுள்ளமென நாடேலனவ ரதம்யானு
முய்கைபெறப்பீ மநதியின்பா லுறுமாதவர்க்குப் பணிபுரிந்து
மெய்கைவரவை கறைதோறு மேவிவேண்ட லளிப்பேனல். (உக)

என்னுந்துணிவு படைத்தவர்தா மியன்றவுடல்வார்த் திகரெனினுந்
துன்னுஞ்சாது சேவையினிற் றுணைவோரின்றி விளங்கினர்
மன்னுமன்பர் பணிபுரிவார் மருவாப்பொருளுண் டெனலாமோ
பன்னுமவரா சியிலோர்நற் பாவைதனைப்பெற் றனரானர். (உஉ)

மாவைநிகர்பே ரெழிலமைந்த மகட்பேற்றுளுட் களித்தன்பர்
சேவைபலித்த விதந்தெரிந்தார் சிந்தைக்கனிவி னெடுமுன்னின்
மாவைபவம்பெற் றிடநடத்தி மருவுந்தவத்தால் வந்துதித்த
பாவைதனக்குச் சுமதியெனப் பகர்பேரிட்டு வளர்த்துவந்தார். (உ௩)

பருவமருவக் கண்டுமணம் பல்குசிறப்பி னெடுமுடித்து
மருகன்றனைத்தம் மைந்தனென் மனையிலமைத்து வார்த்திகர்தாம்
பெருகுங்களிப்புற் றியல்காலம் பிறங்கும்வாம தேவன்முய
லருமைத்தவத்தின் மாட்சியுல கமைந்தாரறிய வுணர்த்திடவும். (உச)

அன்பர்பணிசெய் திடுவார்கட் கல்லலுறினு மதுகுறித்துத்
துன்பமடையா துற்றபணி சோராதாற்றி னெழியாப்பே
ரின்பமுடன்மெய்ப் புகழாக விசையுமெனப்பின் னுலகில்வரு
மன்பதைகட்கோர் வித்திடவு மாயனுளத்தெண் ணினனந்தோ. (உரு)

தூயசுமதி மணவாளன் சுரத்தான் மடிந்தா னஃதுணர்ந்து
மேயமூவர் களுந்துன்ப வேலைக்கரைகாண் கிலதிரங்கத்
தேயமிசையோ ரன்பரினந் தேற்றத்தெளிந்து தாமியற்று
நேயவடியர் பணியையுள நெகிழ்விற்புரிந்தார் நீடரத்தார். (உசு).

ஆன்றவமா ரூண்சுவைசற் றறிந்தோனுண்காற் றவறிடினு
மேன்றவதனைப் பெறவிச்சை யிசைவதன்றி முன்னுகர்ந்து
கான்றகூழுண் மிசையாவல் கலப்பதுண்டோ வதுகடுப்பச்
சான்றவாம தேவனன்பர் பணியிற்சலிப்பற் றமைந்திட்டான். (உஎ)

மெய்கண்டமைதொண் டர்கள்பணியான் மேவாதொன்றின் றென்றடைந்து
கைகண்டவர்மு வருமுயலுங் காலம்வாம தேவன்றன்
மைகண்டவிர்வேல் விழிமகடான் வயதுபன்மூன் றினிற்றுலி
கொய்கண்டமுட னிரங்கிடுதற் குறித்துமிகவு மாற்றானுய். (உஅ)

மனைவியிடத்தின் மகட்குமறு மணஞ்செய்திடத்தன் மனத்தெழுந்த
நினைவையுரைப்ப மற்றவளு நெஞ்சமிசைந்தா ளாயீன்ற
தனையையிடத்திற் சாற்றலுமுட் டளர்ந்தென்றலைவன் மாண்டதினு
மினையமொழிசுட் டிடுகின்ற தென்னெஞ்சினையென் றிரங்கினளாய். (உகூ)

ஆண்டானுவான் பலர்க்குரிமை யடைதலாகு மலதடிமை
பூண்டாடலைவ ரெனவிருவர்ப் புணர்தன்மரபோ புவியிடத்தின்
மாண்டான்கணவ னென்றவுடன் மடியாதுடலை வைத்திருப்பே
னுண்டானுஞ்சொற் கமைந்திறப்ப நாடுஞ்செயல்கைக் கொள்வேனே. (௩௦)

என்னமிகவே தன்னைவெறுத் திசைத்தாள்பின்னு மியம்பிடுவாண்
முன்னமியான்செய் தீவினையான் முயங்குஞ்சடநா யகன்றன்னைச்
சின்னவயதிற் பிரியினுமென் சீவநாத னுனவரி
பொன்னங்கமலத் தாட்புணரும் புந்திநசையால் வாழ்ந்திருந்தேன். (௩க)

இசையென்னுடற்குக் காந்தனுட னிருக்கும்வினையின் றின்சுதர்க்கா
மிசையுமணஞ்செய் திடுவதெனின் வேட்டோன்றனக்கு மின்சுதர்க்கு
நசைகொளுமக்கு மென்றனக்கு ஞாலத்தென்று மழியாத
வசையுண்டாகு மிசைக்கன்றோ மாந்தர்மக்கட் பெறுவதுவே. (௩உ)

நீதியொழுக்க முதலாநன் னெறியிற்றிறம்பா நீயிர்களென்
மீதிலிருக்கு மபிமான மிகையான்மறந்தீர் பழிபாவங்
கோதினமது குலத்தினுக்கென் பொருட்டிற்குற்ற முறச்சகியேன்
சேதிபிறர்க்கோ தாதிருத்திர் தெண்டன்கோடி நமக்கென்றாள். (௩௩)

மாதுபுகன்ற மொழியையில்லாண் மகிணற்குரைப்ப மற்றவன்றா
னேதுநினைவற் றனனமைந்தா னுற்றசுமதி தாய்தந்தை
சாதுசேவை தனிற்சிறந்து தக்கமறையோர் கன்னியர்போற்
றீதுதவிர்நன் னியமநிட்டைத் திறங்கொண்டிணையற் றிலங்கினள். (௩௪)

வேறு

மற்றிவ்வாறு நிகழ்தருநாளிலோர் மாசிமாதத் தினின்மழைபெய்திருண்
முற்றிராவிற் சுமதிபீமாவினீர் மொண்டணைந்திடப் புக்கவொரேல்வைகண்
பெற்றிடாதவன் கிட்டினன்றூண்மலர் பேணுமன்புடை யான்பிரமக்குலத்
திற்றிரேகமெ டுத்தவன்மாரியா லெய்தும்வன்பசி யான்மிக்கிளைத்தனன். ()

ஆறறிந்தில ளுகித்தளர்வுட னங்குமிங்கு மலைந்துடன்முற்றவுஞ்
சேறணைந்து கிருட்டினனேயிரட் சித்திடாயெனச்செப்பிடுகொலையில்
வீறணைந்த சுமதியருகுற மேவியோவிப் பிரகுலமாதவ
ரூறணைந்துவ ருந்தலிரென்னரு குற்றிடீரென் னுறையுளணைகிரால். (௩௬)

பேதையேன்சூத் திரகுலத்திற்சடம் பெற்றுளேனெனைப் பெற்றபெருந்தகைத்
தாதைசாதுக்கண் மீதன்பமைந்துளான் தம்மைக்காணிற் றகுமுறைபூசிக்கு
மேதையீரத னுக்குடன்பாடுநீர் விருப்பினல்கிட வேண்டுமென்றேதனு
மூதையான்மெலி வுற்றிடுமந்தண னேசுதாயெனை யுன்மனைசேர்த்தியே. (௩௭)

என்னதாருயி ரைப்பரிபாலியா யெனக்கஃதிட்டமெ னச்சொலக்கேட்டலுந்
தன்னகத்தில ளப்பிலுவப்புடன் றலையின்மீதமைத் துக்கொடுவீடுசேர்த்
தின்னலார்குளிர் வாதையறத்தழ லிட்டுநல்கியின் பால்பலமூலங்க
டின்னவீந்துறங் கற்கணையாதியுஞ் சித்தஞ்செய்தன்னை சேரிடமேயினள். ()

சூரியோதய மாகுமுனந்தணன் சுமதிதன்னை யழைத்துப்பரிவுடன்
வீரியங்கொளு ளுதத்தன்யாண்டையான்விளித்தியான்விடை பெற்றிடவென்றலுங்
கூரியன்மதி யாள்குரவன்றனைக் கூவிவந்துகும் பிட்டுமுன்னிற்றலுஞ்
சீரியற்றவன் மற்றவண்மீதிற்றன் சிந்தையோகைமி குந்திதுசெப்புவான். ()

இன்றிராவிற் பெருமழையூடியா னெய்த்தபோதி லெனைநீயிரட்சித்த
நன்றியான்மற வேனுனக்கோகையி னல்குவேனோர் வரமஃதியாதெனிற்
குன்றிருங்குடை கொண்டவன்பத்திமெய் கொண்டிலங்கு குமாரனையீன்றுநீ
மின்றிகழ்ந்திடு வானவர்மாதவர் மெச்சவாழ்குதி யென்றுவிளம்பினன். (௪௦)

மாற்றமற்றது கேட்டலுந்துக்கமேய் வாமதேவனம் மாதவற்போற்றியே
யேற்றமாதவத் தந்தணச்செல்வர்நீ ரிசைத்தவார்த்தை யுசிதமன்றின்னவ
ளாற்றனுயகன் றூன்மரித்தாண்டின்மே லமைதலாயின தானும்மதாசிச்சொ
லூற்றமேவிப் பலிப்பதெவ்வாறென வுற்றமாதவ னேதிடுவானரோ. (௪௧)

கிட்டிணன்ற னருள்வலத்தாலியான் கிளத்துமாற்றம பத்தமுறுதென்சொற்
கெட்டியாயுன் னுளத்திடைநம்புதி கெழுமுபீமா நதிக்கரைமேவியான்
மட்டில்பேரருட் கோவிந்தமூர்த்திதன் வாரிசத்தாண் மனத்திடைநாடியே
தட்டின்மாதவஞ் செய்வனென்னுசியைச் சரதமாக்கித் தரவெனவேகினன். ()

அன்பர்தம்பணி செய்திடவென்னையா ளாக்கிவிட்டுவிட் டாலரிதானபே
ரின்பமெய்ந்நிலை தானேவந்தெய்திடு மென்றுமேலோ ரிசைத்திடும்வண்ணமே
துன்பமோடிவர் தாம்வறிதேயுறச் சுமதியொப்பில் சுதனைப்பெறும்படி
பொன்பயின்றவு ரத்தனளித்திடப் புரிவனென்றந் தணன்பிணைநல்கினன். ()

போந்தவந்தணன் றூனதிதீரத்திற் பொருந்தொராச்சிர மத்திலிருந்துபொன்
காந்தனல்லுரு வுள்ளமைத்துண்டிபுட் கரமுநீத்துக் கடுந்தவமாற்றியே
வாய்ந்தவென்சொல்பழுதுறச்செய்வையேன் மடிவனென்னு மனத்துணிவுற்றன
னேய்ந்தநித்திரை சற்றுறவன்னபோழ் துற்றதாலோர் கனவவனேரவே. ()

வெள்ளைவத்திர முந்துளவாரமு மேவிமாலவன் றன்னுள்வெளியிடை
தள்ளைநேரரு ளோடெதிராகிநீ சஞ்சலத்திற் றளர்வதெற்றுக்கெனக்
கள்ளைநேர்மொழி கொண்டுவினவலுங் கருதுமாவன் மறையவனோதிட
வெள்ளைமேய தயிலமென்றெங்கணு மேய்ந்துளானரு ளாலிசைக்கின்றனன். ()

நீட்சிமாதவ நீகருதும்படி நிகழ்வதாகு நிகழ்த்துமதற்கொரு
சாட்சியாகப்பின் னாளருணோதயந் தன்னைக்கண்டு களிக்கநினக்கிலாக்
காட்சிதோன்றுமவ் வண்ணங்கிருட்டிணன் காதலன்வடி வாகியவட்புணர்ந்
நாட்சிசான்றமெய் யன்புருவச்சுத னடையக்கர்ப்பத்திடையமைப்பானரோ.()

வாய்மையீது கபினிமகப்பெறும் வண்ணங்கண்டு பழித்தவரியாவருந்
தோய்மறுக்குட்ட ராயந்தகர்களாய்த் துக்கமேய்வர்க டோன்றுங்குழவிக்குத்
தூய்மைசாரும தேவனெனப்பெயர் சூட்டச்சாற்றுதி யென்றுரைத்தக்கணஞ்
சேய்மையார்பக வன்மறைவாதலுஞ் சிந்தையோகை மிகைகொடுவேதியன்.()

புலரிநோக்கியி ருந்தனன்மற்றது பொருந்தலும்புறம் போந்தனனோக்குழி
யுலகுமுற்ற பொருள்களுங்கண்டவ னுலப்பிலின்பம் படைத்தவனாத்தவ
முலவையுண்டு புரிந்தல்லிற்றான்பெறு முதரவெம்பசி யும்முளத்துன்னிலா
னலகிலோகையு டன்வாமதேவனில் லணுகிக்காட்சி யனைத்துமறைந்தனன்.()

விடைகொண்டேகினன் மற்றதுகேட்டலும் விருத்தர்பத்தி விநயமருவிக்கற்
குடைகொண்டான்குலங் காத்திடும்பேரருட் கோவிந்தன்வடிவத்தைத்தமில்லிடை
யடைவுடன்றாபித்|தன்பினிற்பூசைசெய் தாவின்பானன்னிவேதனஞ்செய்துதுய்த்
திடைவிடாதடி யார்பணியாற்றினா ரிவ்வணஞ்சில நாள்கழிந்திட்டவே. (௪௯)

வாய்ந்தநாளொன் றினிற்சுமதிப்பெயர் மங்கைசொற்பனத் தில்வரன்போலரி
தோய்ந்ததாற்கரு வாயினளக்கணந் துயிலுணர்ந்து துயர்மலிந்தையகோ
வேய்ந்தவிக்கன வால்வருஞ்சம்பவ மேதுகொல்லென் றிரங்கியுற்றாளிதை
யாய்ந்ததாதை வினவலுஞ்சென்னிய தோமுகங்கொடு மௌனமருவினாள். ()

ஏயசெய்கை யுணர்தருமன்னைதா னேதொர்காரண மும்மிலதேவறி
தேயகத்திற் றுயர்கொடிரங்கினா யென்றயற்கொடு போய்வினவும்பொழு
தாபசொற்பன மோதலுங்கேட்டுட னன்னைதந்தை யகமகிழ்வாகியே
மேயவேதியன் மாற்றமகளிடம் விளம்பலாலுண் மிகுமுவப்புற்றனள். (௫௧)

கடிபிடித்த துழாய்முடித்தீர்த்தன்றன் காமர்மிக்க கமலமலர்த்துணை
யடிபிடித்ததொண் டர்க்குவப்பாம்பணி யாற்றுவாடன் னகத்தினத்தாமலே
படிபிடித்தவர்க் கெய்தருமிப்பெரும் பாக்கியத்தைப் பரிவுடனன்னவண்
மடிபிடித்தளிப் பானெனிற்பத்தர்தம்மான்மியஞ்சொல்வரம்பினதேகொலாம்.

அருண்மெய்த்தொண்டர் பணிபுரிவாடிய ரடைபநாயக னைக்கொன்றுமற்றவ
னுருவமேவிக் கனவிற்கலந்துய ரும்பர்மெச்சு முணர்வுடைப்பத்தனைத்
திருவனாள்வயிற் றின்மகவாகிடச் செய்புமொப்பி றிருவிளையாட்டுடைத்
திருடனுள்ளக் கருத்தமையுஞ்செய றேவருக்குந் தெரிவரிதாகுமே. (௫௩)

---

உலவை-காற்று

தொண்டர்சிலத்தைக் கோவிந்தன்றன்னருட் சூழ்ச்சிதன்னையுட் சூழ்ந்துணர்மூவருங்
கொண்டவோகை மிகையுடன்பூசையுங் கோதிலன்பர் பணியுங்குயிற்றியே
மண்டலத்தில் வதிதருங்கான்மகண் மாதம்பத்துங் கடந்துசுதற்றாக்
கண்டவாமதே வன்களிப்பாய்ச்சுதை காதலற்றன் சுதனிற்கருதியே. (ருச)

ஆவலோடு மறையவர்க்குப்பைம்பொ ஞதிநல்கி மனைக்குப்புரோகிதற்
கூவமற்றவ ஞேடமைந்தார்கள்கை கொட்டியேநகைத் தார்திட்டிநீங்கலும்
பாவமோர்ந்தனர் யாரும்பயத்துடன் பாலற்சென்றுபரிவுடனேக்கியே
தேவதேவ னருட்செயலோர்ந்தனர் சிந்தைவிம்மித மேவினர்போயினர். (ருரு)

வாமதேவன் மறையவர்சுற்றத்தார் மகிழும்வண்ணம் வரிசைவழங்கியே
காமதேவன்றன் றந்தைபொற்றாட்டுணை கருதுமன்பன் கழறலிற்சேய்க்குயர்
நாமதேவ னெனப்பெயர்சூட்டியே நனிவளர்த்தனர் நந்தனன்றுன்றுமாய்த்
தாமதேவன் பெயர்பலவோதிமண் டன்னின்மாலுரு வஞ்சமைத்தேத்தியே.

கூடியாடு சிறார்க்குந்தன்போதமே குயிற்றியோர்சற் குருவினிலாவலு
நாடினர்கள் பலருஞ்சுமதியை நாம்பழித்தது நந்தவறேயெனப்
பீடிலங்கிய மைந்தனுணர்ச்சிமெய் பெற்றதோற்ற முணர்ந்தனர்மெச்சின
ரீடில்சேய்க்கிங்ங னேழ்வயதாதலு மிலங்குவாமதே வன்களிப்பாகியே. (ருஎ)

கனமிகுஞ்சுதற் கோதுவன்யானொரு காரியப்பொருட் டாப்புறத்தெய்துவேன்
றினமொர்மூன்றி விவணணேவேனீதான் றினமுநான்செய் திடுமுறைதப்பிடேல்
மனமகிழ்ச்சி யுறப்பசும்பாலினை வைகுகோவிந்த மூர்த்திக்களித்துப்பின்
னனகநற்பிர சாதத்தைநீபுசித் தமர்தியென்னவற் றேபுரிவேனென்றுன். ()

வாமதேவ னகரினுநீங்கினன் மற்றைநாளருண் மாதவப்பாலன
நாமதேவன் விடிதருமுன்னெழா நன்னவாவிலே யிற்றெுன்னைசெய்தருட்
காமதேனுவொப் பாயபசுவிற்பால் கறந்துகோவிந்த மூர்த்திமுன்மேவியே
சேமமிக்கசு வாமீயெ ன்னத்தன்றுன் சேய்மைசேரொரு தேயமடைந்தனன்.

பகருமற்றவ னுணையின்யானிதோ பால்கொணர்ந்தன னீபசிதீர்தர
நுகர்தியென்றருண் மூர்த்திதன்கண்கொடு நோக்கக்காட்டுபு வாயருகாக்கியுந்
தகவம்மூர்த்திப ருகிலதோர்ந்தனன் றுள்வணங்கிநல் காமையினம்மிசை
யகவருத்த மடைந்தனன்போலுமென் றவனிமீது விழுந்துவணங்கியே. (சுo)

பருகுகென்றுமுன் காட்டவுண்ணுமையிற் பலதரம்புவி மீதிற்படிந்தெழுந்
துருகுமன்பிற் பிரார்த்தித்துமுன்பென வுற்றபான்மை யுணர்ந்தனனெண்ணுவா
னுருசிசால்பஞ்ச தாரையிடாமையை யுன்னியோவென் றதுபெய்துளன்புட
னருகிற்காட்டியு மார்ந்திலன்பாலக னனந்தமாமுப சாரங்களாற்றியும். (சுக)

பருகக்காண்கில தாற்பின்னுமெண்ணுவான் பகவனம்மையின் ஞனெனத்தன்னுளந்
தெருளுகின்றலன் போலுமென்றன்பின்முன் சென்றுபந்தந் திகழ்தாச்செப்புவான்
றிருவுலாவுரக் கோவிந்தநான்வாம தேவன்றந்திடு புத்திரிபாலகன்
மருவுநாமதே வப்பெயர்வாய்ந்திந் மனையினன்கு வளர்பவன் காண்டியால். (சுஉ)

உன்னைநான்றினந் தேர்குவனுலெனை யுன்னுளத்தி லுணர்கின்றிலைகொனீ
யென்னைநாடி யருளுதியென்றுபா லெடுத்துக்காட்டியு மேமடுக்காமையிற்
பின்னையும்பின்னை யுந்தொழுதேத்துபு பிள்ளைவேண்டியும் பெற்றயிலான்றிறந்
தன்னைநாடிச் சகிக்கிலன்போன்றொளித் தபனநாயகன் மேற்கடலாழ்ந்தனன்.

ஆனசெய்கை யுணர்ந்திடுபாலக ஞருலக்கடன் மூழ்கினனுன்னுவா
ஞனமாதி முடித்திடலின்றியே நானசுத்தத் துடனுற்றதாற்கொலோ
பானபாத்திர சுத்தியின்ருகிய பண்பிற்கொல்லெது பற்றிக்கொலோர்கிலே
னீனமீதென் றிசைத்திடிலக்கணத் தியற்றுவேனென் றிசைத்தலுஞ்செய்கிலான்.

நாளைவைகறை யிற்சுசிமேவயா ஞனமாதி முடித்துக்குளங்கொள்பால்
வேளைதன்னிலளித்திடிற்கோவிந் தன்மிசைபுமையஞ்சிறிதுமின்றென்றன்பிற்
காளைமெய்ப்பசு வன்பசியோடுறுங் காலையானும் புசிக்கலனென்றனன்
வாளைநேர்விழி யன்னையழைக்கவு மாந்திலான்சல பானமுஞ்செய்கிலான். ()

புலருமுன்னெழுந் தேயருட்கோவிந்தன் பொருந்துகோயிற் றிருந்தலகிட்டுத்தா
னலமுறப்புன லாடியான்பாலிடை நனிசருக்கரை யிட்டுடன்மூர்த்திசார்
தலமடைந்தினி யேனும்பருகெனத் தான்பிரார்த்தனை செய்துமுண்ணுததா
லிலகத்தான்புன லாடிலதாற்கொலென் றெண்ணியேயபி டேகஞ்செய்தன்பினுல்.

வத்திராபர ணங்கள்கொண்டொப்பிலா வரதனுக்கலங் காரஞ்செய்திற்றையு
மத்தியான மடைந்ததுநென்னலு மாந்திலாய்வன் பசிக்கனல்வாட்டலா
லெய்த்திளைத்திடுநின்னெழின்மேனிதான் யானுமெத்தப் பசிகொடிளைத்துளேன்
புத்தியில்சிறு பாலகனுனிவண் புரிதரும்பணி யிற்பிழைசேரினும். (௬௭)

நெஞ்சங்கொள்ளே றிருத்திடநாடிடி னிகழ்த்துவாய்மெய்ந் நெறியிதைவிட்டுநீ
வஞ்சங்கொண்டு வருத்தலையின்னமும் வறிதிருக்கின் மதுரமிகுந்தபா
னஞ்சங்கொண்டிடு மென்றனைச்சோதிக்க நாடினீபுசித் திட்டுனடியிணை
தஞ்சங்கொண்டிடு மென்னளவிற்செயிற் சற்றுநான்றள ரேனெனவோதியே.

பாலைநல்கின னுண்டிடக்கண்டிலான் படியிறுன்பப் பரவையிலாழ்ந்துள
மாலையொத்திரு கண்பொழியப்புனன் மைந்தனன்பிற் கலுழ்தலுமற்றது
வேலைமாலுஞ் சகிக்கின்றிலானிரு விழியினீருகுக் குந்திறநாடியே
வேலையொத்தவிர் பத்திகொளுத்தம விடலைநீயழு கின்றதென்னென்றனன்.

பாலருந்துதி யின்றெனினின்மிசை பழிசுமத்தியெ ஞதுயிர்பாற்றுவேன்
சாலநீட்டித் திருக்கலையென்றுடன் றனதுகைகளிற் பாலினைவாயரு
கேலவைத்திட லுங்குடித்திட்டதா லிளையன்சால மகிழ்ந்திசைக்கின்றனன்
மூலகாரண நான்றரும்பாலினை முற்றுநீபரு குற்றனையேகொலாம். (௭௦)

எனக்குச்சற்றும்வைத் தாயிலையுன்னுடன் யானும்வெம்பசி மேவியிளைத்துளேன்
கனக்குநின்பிர சாதமென்னத்தன்ருன் கவினுமெங்கட் கெலாமளிப்பானெனத்
தனக்குத்தானினை யாமச்சுதன்சுதன் சாற்றல்கேட்டு முறுவலித்தன்புட
னுனக்குநல்குவன் பாலருந்தென்றுதன் னுலகமுண்டமிழ் வாய்நின்றுமிழ்தலும். ()

இசிக்கும்வன்பசி யோடுதுயர்மிகை யெழுபிறப்பு மிறப்புமடியுட
னசிக்கும்வண்ணம் புரியருணாண னன்கருந்தி யுமிழ்தருமுச்சிட்டஞ்
சசிக்குநாயகன் றனலர்த்துந்துணர் தகைவதாயவிர் தன்கைகளிற்கொடு
புசிக்கும்பேறிச் சிறுமையினெய்திடும் புண்ணியன்றன் புகழ்புகல்பான்மைத்தோ. (எஉ)

பகவனுண்டருள் பாலுண்டுசத்திநி பாதமேவிப் பகலொடிரவினு
மகமிசைக்கோவிந் தன்புடையோவில்பே ரன்படைந்திட் டறுதினமூர்த்திபா
னுகரநல்கிவந் தானிவன்பத்தியை நோக்கிவாமதே வன்களிப்பாகினு
னகலின்மேவினர் யாவருமோர்ந்தரு ணமதேவ னலம்புகன்றேத்தினர்.

வாமதேவனுள் ளார்கலிபோன்றமை மாதவன்மெய் யடியவர்பத்திதா
ணமதேவப் பெயர்கொள்சுதாகர னரணன்கலைப் பூரணமேய்தலிற்
சேமமோடுபொங் கித்த.தும்பித்திகழ் தேகமாஞ்சிறை தீர்ந்தயலெய்தலிற்
பூமகட்கொரு நாயகன்றுண்மலர்ப் புண்டரீக புரத்திலணைந்தனன். (எச)

முதிருமன்பில் வளர்த்தநற்றுதைதான் முகுந்தன்பாத மடைதலும்பாலக
னிதிகொள்கப்பல் கவிழ்ந்திடுநாய்கனி னெஞ்சிலாகுலங் கொண்டிந்துபாகைமா
நதிகொடீரத் தினிற்சிதைமீதினி னண்ணவைத்தனு நாயகியன்புசால்
பதியின்றேகந் தனையழற்கீந்துடன் பாய்ந்திட்டாள்கற்பு வாய்ந்தவப்பேய்ந்தரோ. ()

நாமதேவனுந் தாயுந்துயர்மிக நண்ணிச்செய்கட னன்குமுடித்திய
லேமமாதிய தானமறையவர்க் கீந்துசுற்றத் தினருடனுண்டன்பின்
மாமகத்துவச் சாதுக்கள்சேவையு மாதவன்றிருப் பூசையுமாற்றியே
நாமரூப வுலகொடுதம்மையு நனிமறந்தரு ணன்னிலைதோய்ந்தனர். (எசு)

தாதைதன்றனங் கொண்டவணெய்திடுஞ் சாதுபூசை தகுமுறையாற்றியே
மேதையாகிய வன்னையுந்தானுமூண் வினைமுடித்து விளங்கிடுநாளருட்
போதைதமேவிய நாமதேவன்சரம் பொருந்துசாதுக்க ளேபுனமார்வனக்
கோதைசூடிய நாரணனென்றுளங் கொண்டுபூசை குயிற்றியுற்றனரோ. (எஎ)

இன்னவாறிய ணளிலேகாதசி யெய்தச்சந்திர பாகைநதிக்கரை
துன்னருட்பாண்டு ரங்கன்றன்கோயிலிற் றொண்டர்கூண்டு துயிலற்றிரவினி
னன்னயப்பல் லியங்கண்முழங்கிட நன்குகீர்த்தனம் பாடினராடினு
ரன்னபான்மையை நாமதேவன்றெரிந் தானந்தங்கொடு தன்னையறிகிலான். ()

காலமைந்த செருப்பினைக்கீழ்விடிற் கள்ளர்கொண்டுசெல் வாரெனவஞ்சித்தன்
மேலமைந்தவே காசத்தமைத்தனன் விரைந்துகோயிலுண் மேவிநடக்கவப்
பாலமைந்தவர் தம்முளொருவனப் பான்மைகண்டுமூர்க் காபாதரட்சையை
மாலமைந்த தளியினுளேகொடு வந்ததென்னென வைதடித்திட்டனன். (எகூ)

சம்பவத்தை யுணர்ந்துடன்மற்றொருத் தன்களத்திற்கை யிட்டயலுய்த்தனு
நம்பவத்துக் கிதுகழுவாயென நாமதேவனுண் ணடித்தளியின
தும்பர்மேவிப் பரவசத்தோடுபாட் டோதியின்ப நடனமுஞற்றப்பூ
கம்பமேவிய தேகொலென்றுண்டுளார் கலங்கிக்கோயில் கவிழுமென்றஞ்சியே.

வெளியின்மேவின ரன்னதொரேல்வையில் விளங்குபாண்டுரங் கன்றனதாலயங்
களிகொடாடிடு நாமதேவன்விழி கண்டுபோற்றக் கணத்தமைந்துற்றதுந்
துளிகொள்கண்ணுட னன்னவனின்பொடு துள்ளியாடிடுந் தோற்றமுங்கண்டவ
ரெளியரேம்புரி தீமையைநம்முளத் தெண்ணலீரென்றிணையடிபோற்றினர்.

யான்புரிந்திடு குற்றத்தைநாடிநீ ரேற்றதண்ட மியற்றினதாலன்றோ
கான்புரிந்திடு தண்டுளவம்புனை கண்ணனித்தகைக் காட்சியளித்தனன்
வேன்புரிந்திடு மித்தகுபேறுறும் விதமெனக்கருள் வீர்க்கும்மடிமையா
நான்புரிந்திடு மாறென்றிலையென நாமதேவர் நவின்றிடக்கேட்டலும். (அஉ)

அமையும்பத்தர்க ளியாவருமற்றவ ரருகிற்போந்து தழுவினராய்மகிழ்ந்
துமையொப்பாகிய பத்தர்கண்மண்ணிலு * மும்பர்மீது முருரெனவோதியே
சிமையமாங்குடை கொண்டவன்றன்னருட் டிருவுளத்திற்றித் திக்குமதுரிதஞ்
சமையுங்கீர்த்தனம் பாடுதிரென்றன்பிற் சாற்றக்கேட்டின்ப சாகரத்தாழ்ந்தனர். ()

விட்டலன்றன தொப்பிலேகாதசி விரதமாற்றிய மேன்மையின்யாமெலா
மட்டகன்றபத் திப்பொலிவுற்றநும் மகிமைதேர்ந்தன மென்றவர்யாவரு
மிட்டமொத்ததத் தம்மனேயேகலு மியலுநாமதே வர்பாண்டுரங்கன்றன்
மட்டவிழ்பொற் பதந்துதித்துற்றதம் மனையின்மேவி வதிதருநாளையில். ()

வேறு

மற்றங்காட்டினை யாட்சிசெய்மிலேச்சகா வலனிடஞ்சிலர்மேவி
யுற்றபண்டரி யாகுமெம்மூரகத் தோங்குநாமனெனும்பேர்
பெற்றதுற்குண மிக்கவனுளனவன் பெருகிடம்பமுள்ளானுப்
நற்றவத்தரொப் பாகயாமயங்கிட நாடகம்பலகாட்டி. (அரு)

பாண்டுரங்கவிட் டலப்பெம்மாற்கொப்பறு பத்தன்யானேயென்று
மாண்டுலங்குதன் பூசையிற்பாலவன் மாந்துகின்றனனென்று
மீண்டுமிழ்ந்திட வவன்பிரசாதத்தை மிசைந்தனன் மெய்யென்றும்
வீண்டுராடம்ப ரம்பலகாட்டிமே வினர்ப்பசப்பிடுகின்றான். (அசு)

ஆயபான்மையிற் கொற்றவநீவலி தானசோதனைதன்னன்
மாயவஞ்சகன் றனைப்பரீட்சித்தவ மானமுற்றிடச்செய்தி
மேயநின்சகா யஞ்சிறிதெமக்குறில் வேண்டியபடிசெய்வேந்
தீயன்பின்னரி பூசனையெவ்விதஞ் செய்குவனறிவேமால். (அஎ)

என்னவோதினர் வேண்டலுமவருள மிசைந்திழிகுலத்தோனு
மன்னனீர்சொலும் வகைபுரிவேனென மனமிகமகிழ்ந்திட்டா
ரின்னதாற்பழி பாவநந்தமக்குறு மெனவுணராராகிப்
பன்னருந்துய ரிம்மைகொண்டுமிழ்தவில் பாழ்நரகுறவந்தோர். (அஅ)

பகவனன்புசான் றவர்கொள்வைகுந்தமாம் பண்டரிபுரத்தின்கண்
டிகழறங்கொளந் நாளினமதேவர்க்குத் திருமினையகனல்கும்
புகழ்பொருமலிவ் வகைபுரிந்திடுபொலார் புவியிடத்திதுநாளிற்
சுகன்மமாதவ மியற்றுநரலமரத் துயர்செயல்வியப்பன்றே. (அகூ)

* உம்பர் - மேற்புறம்.

அபத்திறங்கொண்மன் னுண்பெற்றவர்கள்கூண் டமையுநாமன்றன்னை
யுபத்திரஞ்செயற் கேற்றவாறேதென வுன்னுபுதமக்குத்தாம்
விபத்துநாடின ருற்றுழியொருபசு வீந்துறுந்திறங்கண்டா
ரபத்தமோதவஞ் சாருடன்மற்றிதை யல்லிலாண்டெடுத்தேகி. (௬0)

நாமதேவர்தம் முன்றில்கொள்கதவத்தி னண்ணிடநிறுத்திப்பின்
ஞமனந்தனீத் தவண்வதிந்துதிக்குமுன் னடையவன்றிறப்பானேற்
கோமற்றோன்மிசை வீழுமப்பொழுதுநாங் கொம்மெனவருகேய்ந்து
பாமரன்பசு வினைவதைத்தனனெனப் பதியுளோர்பலர்காண. (௬௧)

சாலநிந்தனை புரிந்துமன்னவனிடஞ் சார்ந்துரைத்திறந்திட்ட
மேலதாம்பசு வினையெழுப்புதியின்றேன் மிலேச்சனுகுதியென்னச்
சீலமன்னவ னிசைத்துளனென்றுநாஞ் சேவகருடனெய்தி
னீலனென்புரி வானறிகுதுமென நெஞ்சகத்துவந்தாராய். (௬௨)

ஆமவ்வாறுசெய் தமைந்தனர்வைகறை யன்னவரெழுந்தன்பிற்
பூமகட்கிய னுபகன்றுண்மலர் போற்றிமுன்றிலின்மேவித்
தாமணிக்கத வந்திறந்திடுதலுஞ் சார்தருபசுவீழ
நாமதேவர்மற் றதுதெரிந்துணர்வற நண்ணுமோவியத்துற்றார். (௬௩)

இன்னவாறியல் போதினிற்றுட்டர்க ளியாருமேவினர்தம்முட்
பன்னலாயின ரிவன்மிகுதூர்த்தன்மெய்ப் பத்தர்போலருட்சின்ன
மன்னமேலணிந் திட்டதுநமையெலாம் வஞ்சிக்கும்படியேகா
ணென்னகோபமெய் திடினும்பூரியர்செய வியற்றிடன்முறையன்றே. (௬௪)

ஏடவென்றரு கமைந்துநீபசுவினை யேதுகொண்டடித்திட்டாய்
வீடமைந்துநின் பொருளிலொன்றின்னது மிசைந்ததோமெலிவுண்டுன்
மூடமைந்தவா யிவினருகிற்பசி மூண்டுநின்றதுதன்னை
வேடனேவறி திற்கொன்றுய்ப்பசுவினை வேடன்மாய்க்கிலனந்தோ. (௬௫)

என்றுபற்பல பகர்ந்திருந்தனரப்போ தியைந்தவர்தங்கூட்டத்
தொன்றுகின்றவ னொருவனுவாவென வுடையவோர்பசுதன்னைக்
கொன்றுவிட்டன னென்றுவாய்புடைத்தனன் கூவெனக்கலுழ்ந்தேங்க
நின்றுளாரெலா மஞ்சலைசெயவிதை நிருபன்மாட்டுரைசெய்வோம். (௬௬)

போதிமுன்னென விசைத்துளாரவனுடன் போதலுமுன்னுற்றோன்
மாதிரக்களி றனையமன்சபையிடை மருவிப்போற்றுபுநின்றே
நீதிவேந்த வென்பசுவினைநாமனி ரேதுவாக்கொன்றிட்டான்
சேதியீதுமா நகருளார்பலர்களுந் தெரிந்தநிச்சயமாமால். (௬௭)

இறந்தவென்பசு வவன்மனைவாயிலி லிருந்ததன்ன தனுலே
யறந்தவாதவேல் வேந்தவன்னவனீ யருந்தண்டமியற்றென்னத்
திறங்குலாவிய சேவகர்க்கூபிறை சினத்துடனறைகின்றான்
சிறந்தநாமதே வன்புடைசென்றுநீர் தேனுவேன்கொன்றிட்டாய். (௬௮)

எனவினவியப் பசுவினையவனிட மீந்திதைபெழுப்பின்றே
வினமிலேச்சரிற் சேர்தியென்றிசைக்குதி ரிவ்விரண்டுமொப்பானே
னுனதுதீத்தொழிற் கிசையமன்னவனுன துயிர்வதைப்பனென்றேதிக்
கனவினும்புறத் தேகவிடாதவற் காவல்செய்குதியென்றான். (கூகூ)

சென்றசேவகர் நாமதேவர்மனை சேர்ந்திறையிடுமாணை
யொன்றருதுசொற் றிடுதலுஞ்சுமதிப்பே ருடையவன்னைவினவி
நின்றருந்துய ரோடுண்மெய்நடுங்குபு நீள்விழிபுனல்பாயத்
தன்றனித்திரு மைந்தனைநோக்குபு சாற்றுவளிவண்மாதோ. (க00)

வேறு

திரணகமுற்று மமைநாகுவன்ன திறன்மேவுகாய முடனே
முரணார்மிலேச்ச குலமீதுதித்த முனிவார்குணங்கொ ணிருப
னிரணங்கணங்கொள் பலியாகநின்னை யிடவையமில்லை யவனைச்
சரணாகியுன்ற னுயிர்வைத்திசாதி தனையெண்ணிவீணின் மடியேல். (க0க)

எனமட்டகன்ற துயரத்தினோடு மிணையற்றதாய்சொல் பொழுதின்
மனதிற்றமன்னை துயர்கண்டிரங்கி மருவோகையோடு புகல்வா
ரினபெற்றம்யான்கொல் கிலன்வீணிலென்னை யிவரோதுகின்ற னர்கணீ
யெனைநத்திநெஞ்சி னையல்விட்டலன்ற னிருதாள்கொளாய்ச ரணனு. (க0உ)

மலைபோலடைந்த துயர்யாவுமென்று வருகாலையொன்று பனிபோ
லிலையாகுமெந்த விதவாகுலங்க ளிசைவாகினுந்த னடியே
நிலையாகநம்பி யுடன்மானமின்றி நிகழ்வார்கடுன்பெ றியவே
சிலையாதிகொண்டு திருமால்விளங்கு செயனீயறிந்த திலையோ. (க0ங)

உயிர்தோறுறைந்த வைகண்மேயதுன்ப முடனேகளைந்த ருளவே
செயிர்தீர்முகுந்த னகலாதுளங்கொ டிறநாடியுந்து யரொடே
யயில்வேலவிந்த னடிபேணுகென்று ளயர்வோடறைந்த னைபனாய்
வயிராகமிஞ்சி யவன்மாரணஞ்செய் மனமேவிலென்செய் குவதே. (க0ச)

உடலைப்புரக்கும் விதநத்தியற்ப வுயிர்கட்கடைக்கலமுற
றிடபத்திசித்த மிசையற்றவற்பர் செயலச்சுதற்ச ரணமாய்த்
தொடலுற்றவெச்சி லிலையொக்கவிப்பொய் தொடர்சட்டகத்தை விடிலோ
நடலைப்பெருக்கில் கதிபெற்றுலப்பி னலமுற்றிருக்க வருமே. (க0ரு)

மரணம்பொருந்த வருமேனுமின்ப மயமானமாத வனருட்
சரணம்பராவும் யான்மிஞ்சுபாவ சடனுமவிந்த னிடைமேய்ச்
சரனென்றுபேச வாய்வந்திடாது தலையொத்திடாது பணிய
முரனென்றுமிந்நி னைவைவிட்டுமால்பொன் முளரிப்பதங்கள் கருதாய். (க0சூ)

எனநாமதேவ ரனைதேறவோதி யியம்வீணையாதி கொடுசற்
சனரோடிறந்த பசுமேயவெல்லை தனின்மேவியன்பி னுடனே
கனமானுமேனி யனையோர்கையோடு கருதாவனேக துதிகள்
வினவாவிரங்கும் வகைபாடியிந்த விதமோதுவார்பின் முறையால். (க0எ)

மிகுதீனனுன வெனையொப்பிறுன்ப வேலைக்குண்மூழ்க விடுமீ
நெகுமன்பினேடி ரட்சிக்கவேண்டி நினையேத்துமென்றன் முறைக
டகுதொண்டரோது மொழிகேட்டிராங்கு தகைமேயகாது களிலே
புகுதாமைகொண்டு கொலிரங்கிவந்து புரவாதிருக்கு மியல்பே. (கoஅ)

அல்லாதுருக்கு மணியோடுகூடி யளவற்றவின்ப மயமார்
சல்லாபமேவி யெனைமறந்தனைகொலோ தவங்கொ ளடியார்
சொல்லாதரங்கொள் கவிகேட்டிசைந்த சுகமூடமிழ்ந்த னைகொலோ
வில்லாருமியோக ரிதயத்தலத்தின் மேவப்பதித்த னர்கொலே. (கoகூ)

கரைபற்றபத்தி யடியாரையைது காத்தற்கடைந்த னைகொலோ
வரைபெற்றகான சுரமோடமைந்துன் மனநின்றதேகொ லரவிற்
றிரையிற்செயோக துயின்மெய்மைகொண்ட திறமோவெனித்தி னமிது
வரையிற்பராமு கங்கொண்டிருந்த வகைபத்தவற்ச லசொலாய். (கக0)

வேகத்திலென்கண் முன்னுற்றழற்றும் வெயில்பட்டவென்பில் புழுவிற்
சோகத்திறங்கொ ளெனையாள்கவென்று துதிசெய்திருக்க மறுநாண்
மாகத்தினுச்ச மினனெய்தும்வேலை மடிவுற்றகோவெ மூதலும்
பாகத்தினேடு பாடுற்றதொண்டர் பார்த்தின்பவாரி படியா. (கககை)

ஓவாதுகண்க ளிடையின்பவாரி யொழுகப்பரிந்து கனிவோ
டாவாவிறந்த கோமேலெழுந்த தன்பால்வணங்கி னரிதை
மேவாவுளீர்கொ டேகுங்களென்ன விண்டாரவ்வேலை தனிலக்
கோவானதென்னு டையதென்றுபொய்மை கூறுற்றபாவி தனையே. (ககஉ)

மிகுவெஞ்சினத்தி னுடுபாய்ந்துபாரின் மிசைவீழ்த்தமூர்ச்சை யடையா
நகுநெஞ்சமோடு முன்னீர்வடித்த நயனங்கொடீய னலிவுற்
றுகுமம்புடன்று டிதுடிக்குநீர்மை யுணர்நாமதேவ ரருகாய்த்
தகுமன்பினங்கை கொடுவாரியொப்பி றம்மூருமீதி லமையா. (ககங)

அறனல்கியன்ன வனசோகமாற்றி யாவோடுநீசெய் ததுநல்
லறமன்றெனச்சொ லினர்கோவுடன்ற னணிபெற்றகன்றையழையா
வுறவோடுபானல் கியபான்மைகண்ட வூராருமங்க ணமையுந்
திறமன்னுசேவ கருமற்புதத்தோர் செயல்கண்டுளோகை மிகையால். (ககச)

உடனேபிருத்தி யர்களோடிமன்ன னுடனேதவார்வ மிகவே
கடமேவுகற்கு யிரளித்தபாத கமலங்கணுடு மடியா
ரிடமேவியொன்று செயனுடிமன்ன னிதயக்களிப்பி னுடனே
திடநாமதேவர் நீர்சாதுவென்று செப்புந்தகைக் குரியரே. (ககரு)

செத்திட்டபேர்க டமைமீண்டுமுற்ற செகமீதழைக்கை பலவாஞ்
சித்திப்பெருக்கின் மிகுமேன்மையுற்ற செயலேனுமிக்கி தலியே
கைத்திட்டபேர்க டியர்கண்டிரங்கு கனிவோர்கணும்மை யலதீண்
டொத்திட்டபாரி னுடிவிண்ணிடத்து முளரோவுணர்ந்தி லனரோ. (ககசூ)

---

ஊரு - தொடை.

என்னுனுமக்கே னேயாகவேண்டு மிசையீரெனச்சொ லிடுவார்
மன்னுவெ னக்க ருட்பாண்டுரங்கன் மாந்தற்குணுநல் கியுளான்
பொன்னுலெனக்கோர் பயனின்றெதேபு கலுவேனெனக்கோர் குறையின்
றென்னுவுரைத்த லுங்கேட்டமன்ன னிதயங்கவன்று ரைசெய்வான். (ககள)

ஒப்பற்றிலங்கு மோராதனத்தை யுதவிக்கனிந்தென் மிசைநீர்
மெய்ப்பற்றியைந்து கொளவேண்டுமென்று வேந்தன்பரிந்துதொழலுங்
கைப்பற்றியாற்றி னிடைவீசியோவில் களியோடுமூழ்கி யரிதன்
றப்பற்றபூசை வினைசெய்தயின்று சந்தோடமிக்க மையுநாள். (ககஅ)

ஒருநாளின்மன்ன னிடமேயொருத்த னுயர்நாமதேவர் நீதந்
தருளாதனத்தை மதியாமலோடு மாற்றாடெறிந்த னரெனத்
திருமாறனன்பர் தமைமேவுமாறு செய்தேநுமக்கு முனம்யான்
றருமாதனந்த ருதிர்யாணர்கொண்ட தவிசீவனென்றபொழுதே. (ககக)

என்னேடுநீயெய் துபுமுன்புநல்கு மெழிலாதனத்தை விழியான்
மன்னேதெரிந்து கொள்ளென்னயாற்றின் மாடேகிநீரி னிடைநின்
றன்னேனுவக்கும் வகையாதனங்க ளளவில்லபாரி லிடலுந்
தன்னேர்கொடைத்த லிசுதேர்கிலாது தரைவேந்துள்விம்மி தமுரு. (கஉ0)

அச்சங்கொடஞ்ச லிக்கையணுகி யடியேன்செய்குற்ற முளமேல்
வச்சன்பருது கருணைக்கடைக்கண் வைத்தாளவேண்டு மெனலுஞ்
சச்சங்கொளன்பு பெறுநாமதேவர் சற்றஞ்சலேகு கவென
மிச்சம்பொருந்து வகையோடுமன்றன் வீட்டின்கண்மேவி னன்விள்வான். ()

இயனுட்டிலுற்ற பலபேரையுந்த னெதிரெய்தவோதி யவர்பா
னயநாமதேவ ரெனதிட்டரன்னர் நலியும்படிக்கி கல்செய்வோர்
வயமேற்றவென்கை வாளுண்டியாகி மடிவார்களென்ற லுமுடன்
பயமேவியாரு மவரைப்பணிந்து பயபத்திமேவி னர்களே. (கஉஉ)

குடமுட்பொதிந்த சுடரொத்திலங்கு குலநாமதேவர் புகழை
மடமிக்கமைந்த கொடியோருமீது வருகாலமீது முணரத்
தடவெற்புறுஞ்சி கரிமேலமைத்த தகைமேவுமற்ற வர்தமை
விடமொத்தபாவ ரெனவையநெஞ்ச மிசையான்றுணிந்தி லேனே. (கஉங)

நீலத்தையொத்த திருமேனிமாய னிகழ்கின்றகால மிதினுஞ்
சீலத்திறங்கொ ளடியாரொடாடல் செய்தேவிளங்கி னன்முனு
ஞாலத்தினிற்பல் கொடியோர்பொருந்த னவில்காவியங்கள்சொலலாற்
காலத்தைமுற்று மிகழார்களுண்மை காணுந்திறத்தி னர்களே. (கஉச)

வேறு

இன்னவாறுநா மதேவர்பண்டரிக்க
ணிலங்குநாளிலோர் நாளிலன்னவர்தம்
வன்னமாளிகைக் கருகமைவீட்டை
வன்னியுண்டிவர் மனைக்கணுஞ்சாட

வன்னதோர்ந்தனர் பலரதையவிப்பா
னணையவன்னவர் தமைத்தடுத்துட்போய்க்
கொன்னமைந்தபாண் டரங்கன்விக்கிரகங்
கொம்மெனக்கொடு புறத்தினிலணைந்தே. (கஉரு)

பனிக்கவானந்த நீரிருவிழிகள்
பாக்கியம்மகா பாக்கியமரிதா
மனித்ததேகத்தைப் பெற்றிடுமடியேன்
மருவத்தக்கவான் பொருளினைப்பெற்றே
னநித்தமாயினஞ் சிற்சிலநாட்சென்
றழியும்வீடிப்போ தழிந்ததென்னகத்து
ளினிச்சற்றுயினுங் கவலையின்றதனை
யிரட்சிக்குங்கருத் தின்றுடனெழிந்தேன். (கஉசு)

என்றுரைத்தொரு தாருவினிழலி
லினியபாண்டுரங் கன்வடிவமைத்தே
நன்றுமத்தள முதலியபொலிய
நாமகீர்த்தன நவின்றகத்தெழுந்த
துன்றுமானந்த மிகைகொடுநடித்துத்
துலங்கினாது சாம்பராகுதலு
மொன்றுமங்கதை வாரியேபுறத்திட்
டுற்றவவ்விடை யன்னையோடுறைந்தார். (கஉஎ)

இவ்விதஞ்சின்னாள் கழிந்திடவன்னை
யில்லமைத்தியென் றனுமுடனிசைந்தே
யொவ்விடம்பல சென்றனர்மரமு
னேதுசாதனஞ் சேகரம்புரிந்து
வவ்விடுஞ்சுவ ரமைத்ததன்மீது
மரங்களிட்டனர் வேய்ந்திடவைக்கோற்
கெவ்விடத்துமே வினர்கிடைத்திலதா
லெண்ணமற்றதி விருந்தனருவந்தே. (கஉஅ)

அன்பினேடுபாண் டரங்கவிட்டலன்ற
னணிகொண்மூர்த்தத்தை யதிலமைத்தொழிவி
லின்பினேடுபூ சனைபுரிந்திருப்பா
ரியல்புகண்டன்னை யியம்பிடுகின்று
டுன்பியற்றிடும் வெயின்மழைபனிகா
ரேயும்வீட்டினிற் றுதைவதெவ்வாறே
கொன்பிறங்கவேய் குதியெனவைக்கோல்
கொணரச்சேன்பெறக் குறுகினர்பெற்றார். (கஉகூ)

வன்மைசால்பெருஞ் சுமைபெறக்கட்டி
வருத்தத்தோடுதன் றலைமிசையமைத்தே
மென்மைசால்பத மாதபஞ்சுடலால்
வெய்துயிர்த்தொரு விடபிநீழலிற்சார்ந்
தன்மைமேனிய னடியவர்சுமைநீ
முமைத்துவிட்டல னருட்டுயிலணைந்தார்
தன்மையீதுணர் விட்டலப்பெருமான்
றனதுதொண்டர்கொ டுயர்சகிக்கலனாய். (௩௯0)

நாமதேவர்தம் முருவமைந்தங்ங
னண்ணியோகைமிக் கச்சுமையெடுத்தே
சேமமாநகர் மேவிவேய்ந்திடுவான்
சென்றபோதுதாய் சிந்தைநொந்துரைப்ப
ணேமமிக்கவென் சுதவிடிவதன்முன்
னீசென்றேபல விடங்களிலலைந்தாய்
வேமழற்கதி ரினன்முகடணைந்தான்
வெய்யதாகசோ கம்படைத்துளையால். (௩௯௧)

கனிவினோடமு தயின்றுவேய்கென்னக்
கள்ளநாமதே வன்புகன்றிடுவா
னனிபெறுந்துய ருடன்றுயராக
நான்முடித்துப்பின் னனமாதியசெய்
தினிதடைந்திடு வேன்கணத்ததற்கு
ளெனக்குணவமைக் குதியெனவிசைத்தே
புனிதனக்கணத் தினின்முடித்தெஞ்சும்
புல்லுடன்கயிற் றையுமெடுத்தேகி. (௩௯௨)

அம்மையீங்கிதை வீட்டில்வைக்குதியா
னுற்றுக்கேகிநீ ராடியேய்குவனென்
றம்மையப்பனு மரிமறைந்திட்டா
னன்னபோழ்துறங் கினரெழுந்தருகார்
சும்மைகாண்கிலர் யார்கொலோதுயில்காற்
சோரஞ்செய்தன ரெனத்துணிந்தவராய்த்
தம்மையேகவர்ந் தொளித்துறுங்கள்வன்
றன்னைபுட்சிறை சார்த்தினர்வந்தே. (௩௯௩)

அன்னையோடுரைத் திடுவர்வைக்கோல்கொண்
டணைந்தயர்ந்தொரு மாத்தடியினிலிட்
டென்னைநான்மறந் தனன்றுயில்போதி
லெவர்கொலோவெடுத் தகன்றனரென்னத்

தன்னேரனை யோதுவளுண்டி
தணந்துவெய்யிலிற் சரித்திடும்பண்பா
லென்னைபித்தமுற் றதுகொலோவில்வேய்ந்
தென்னிடம்வைக்கோ லுடன்கயிறளித்தே. (௧௩௪)

விரைவினுற்றினீர் படிந்திடச்செலுநீ
மீண்டுவந்திங்ஙன் விளம்பலென்னென்னக்
கரையுமன்னைசொற் கேட்டுவிம்மிதமுட்
கலந்துநாமதே வர்கனிந்தன்னை
விரைமலர்ப்பதத் துணைதொழுதெழுந்து
மிகவுந்தம்மையுள் வெறுத்துரைத்திடுவார்
புரைகொளென்சன்மம் வீணருட்பகவன்
புகழ்ச்சிகேட்டதல் லாதறிந்திலனே. (௧௩௫)

நீயறிந்தனை யுனதுபாக்கியமே
நிகரில்பாக்கிய மெனநிகழ்த்தினராய்
மேயசங்கட மமைந்துறுமேல்வை
மிக்கதாயுணு மிசைந்திடவழைப்பத்
தூயருண்டியில் விருப்பகன்றெழுந்து
தோயமாடிப்பூ சனைவினைநிரப்பித்
தாயகங்களித் திடவமுதருந்திச்
சலசலோசனன் சரண்டுதித்தமைந்தார். (௧௩௬)

ஓர்தினத்தினி ளுமதேவர்மனைக்
குன்னும்வைணவ சின்னமுற்றணிந்தே
சீர்திகழ்ந்தவோர் மாதவனுருக்
திருவுருக்கொடு மாதவன்சேர்ந்தே
நார்திகழ்ந்திடு முத்தமனேயா
னனியருந்திநாள் பலகழிந்திளைத்துச்
சோர்திறங்கொடுன் புடையடைந்தனன்யான்
றுய்க்கவல்லையி னமுதிடென்றோத. (௧௩௭)

செப்புசாதுசொற் கேட்டருணம
தேவரோதுவர் தினமிதுமாய
னெப்புமாட்சியே காதசிவிரத
முண்ணனன்றல வுமக்கவாவுளதேற்
றுப்புறும்படி தண்டுலமளிப்பன்
சுவையுணுவமைத் தயிலுதிரென்ன
வெப்புமிக்கடைந் துள்ளநானவ்வா
றியற்றிடேன்புரிந் திடவுநானறியேன், (௧௩௮)

விரதமொன்றெனக் குண்டெதுமனைக்கண்
மேவினுலும்யான் மேயவவ்வில்லில்
விரவுவாருட னல்லது தனிக்து
மிசைதரும்வழக் கிசைகலன தனுன்
மாபகன்றிடா தென்னுடனீயு
மாந்திடாய்கொடும் பசிமலிதலினுற்
சிரமமிக்குனை யிரந்தனனீயுன்
சிந்தைமீதிலென் மேலருள்சார்ந்தே. (கஙக)

அன்னநல்குக வென்றனுமன்ப
ரணைந்தமாயமா தவன்மொழிகேட்டு
மன்னகத்துள்விம் மிதம்பயங்கொண்டு
வகுப்பரின்றரி வாசரமதுதா
னென்னதாருயிரிற் சிறப்பெனக்கொண்
டியற்றினேனுயி ரீகுவனதனைப்
பின்னமெய்திடக் காண்கலனென்மேற்
பெரிதுநீர்தயை பெற்றெனோர்பொருட்டால் (கச0)

தமதுகொள்கையை மாற்றியூணமைத்துத்
தனித்தருந்திட வேண்டுமென்றன்பிற்
கமலமாமலர்ப் பதங்தொழுதிசைத்துங்
கள்ளமாதவ னுள்ளமொவ்வானு
யமர்தலாயின னுமதேவரகத்
தல்லன்மிக்கமைந் தொருசெயலறியார்
விமலவிட்டலன் பதங்தொழுதிருந்தார்
மேலைவேலையின் மேவினன்வெய்யோன். (கசக)

அன்னவேலையி லன்பர்செய்கடமை
யாற்றியன்றிரா வனந்தனீத்தன்பி
னன்னயம்பொலி நிருத்தகீதங்க
ணவிற்றிவைகறை நண்ணலுங்களித்தே
யன்னவேட்கைமிக் கயர்ச்சியோடங்க
ணமைந்தமாதவன் றன்புடையணுகி
மன்னருட்கொள்வை ணவசிகாமணிநும்
மனத்தினெண்ணமித் தினத்தின்முற்றியதால். (கசஉ)

புலரியெய்திய தெழுதிரென்னுடன்மேப்
புனல்குடைந்தரி பூசனைநிரப்பி
யிலகுமன்னமென் னுடன்புசித்திடவென்
றியம்புமன்பர்சொற் கெதிரிசைத்தில்லா

னிலவுமேனிமேற் பொதிந்தபோர்வையினை
நீக்கிநோக்கமாய்த் தவனெனத்தோற்றக்
குலவுதந்திருக் கரங்கள்கொண்டெடுத்துங்
குவலயத்தினின் றெழுந்திடாமையினல். (கசங)

செப்பரும்பெருந் துயர்கொடுநாம
தேவர்தேம்பித்தேம் பிக்கலுழ்ந்திரங்கப்
பப்பணித்திரு நகரிடைமேயோர்
பலரும்விம்மிதம் படைத்தவராய்நீ
ரிப்படித்துயர் கொண்டழற்கேது
வேதுரைக்குதி ரெனவினவிடலு
மொப்பருந்தவர் சரிதமுற்றவர்பா
லோதியின்னவர்க் கொன்றவோர்பாவம். (கசச)

ஐயமின்றியென் பாலடைந்திடுநா
ளுவிகொண்டுறி லாதலினிவரோ
டுய்யவங்கியில் யானும்வீழ்ந்திறத்தற்
குன்னினேன்றடை யுஞற்றலிரெனவே
துய்யரோதிடக் கேட்டவரியாருந்
துக்கசாகரத் திற்படிந்திருந்தார்
செய்யதாயங்ங னியற்றலென்றுள்ளத்
தியக்கமிக்கஎ வறப்பிரார்த்தித்தும். (கசரு)

நாமதேவருள் ளிசைகிலிருப்ப
நகரின்மேவினர் மரணமுற்றவனை
யீமமாட்டமைத் துச்சிதைமீதி
விருத்தநாமதே வருமதன்மிசையுற்
ருமழற்கொளுத் திடமுயல்போதி
லதிதியென்முகத் திடையழலமையே
னேமமிக்கநிற் சோதனைபுரிவா
னெஞ்சிலுன்னியிவ் வாறமைந்தனனல். (கசசு)

நினதுபத்திகண் டகமிகமகிழ்ந்தே
னிகரிலாயுன தகவிருப்பறைதி
மனதுவப்புட னருள்வனென்றெப்பின்
மந்தகாசத்தி னெடுவகுத்திடலு
மனகநாமதே வர்வினவுவர்நீ
ராரையெவ்விடத் திருந்தணைந்திட்டீர்
கனமுலாவுநுஞ் சரித்திரச்சாதந்
கழறுவீரெனக் கட்டுரைத்திடுவான். (கசஎ)

சிறந்தவென்றனக் கொருமனைவன்னுச்
சிரமமாதிய வின்றுமெய்ப்பத்தி
யறந்தவாதநின் விரதமாட்சியைக்கண்
டளவிலின்பமென் னகத்தின்மேவினன்மெய்த்
திறந்திறம்பிடா நினதுளத்திச்சை
செப்புவாயெனச்செப்பிடுகின்றூர்
பறந்தசெம்புள்வா கனத்தவநீகண்
பார்க்குவந்ததிற் சீர்த்ததொன்றின்றே. (கசஅ)

எனப்பல்வாறுதோத் திரித்துடன்றெண்ட
னிட்டெழுந்துநி னிணையடிமலரிற்
கனத்தபத்திமிக் கமையவுநீயென்
கடிமனைக்கணுற் றமுதுசெய்யவுமென்
மனத்தவாவின னென்னவவ்வாறே
வழங்கியன்னமங் குவருடன்மாந்தி
யினைப்படும்பத்தர் மனமகிழ்ந்தேத்த
வின்பப்பாண்டுரங் கன்மறைந்திட்டான். (கசகூ)

இன்னவற்புத வருட்பெருஞ்செயலை
யியலுமாநக ரினர்சொலக்கேட்ட
மன்னனுமதே வரினிறைபத்தி
வைபவத்தினை யுணர்ந்துகொண்டாடித்
தன்னதாமதக் கொள்கையுங்கடந்து
தகைகொளன்னவர் தாள்வணங்கினனேன்
மன்னருட்கொண்மெய்த்தொண்டர் பத்தியின்சீர்
வகுத்துமுற்றிடும் வரம்பினதாமோ. (கரு0)

வேறு

நராரிதன் பத்திசா னுமதேவர்சீர்
விராவுபன் மறையினம் விதந்துரைத்திடு
மிராமநா மத்திற மிலக்கியம்பெறத்
தராதலத் துணர்த்திய தன்மை சாற்றுவாம். (கருக)

வேறு

காமர்மிகப்பொலிநாம தேவர்பண்டரியிற்பகவன் கழல்கள்போற்றி
மாமகத்துவம்பெறுபல் திருவிளையாடற்புரிந்து வயங்குநாளி
லேமமலியளகையர்கோ னிகர்செல்வவைசியனுண் டெய்தியன்பிற்
சோமதுண்டநதிபடிந்து பாண்டரங்கவிட்டலன்ரு டொழுதுபோற்றி. (கருஉ)

விட்டலனுக்கபிடேகா ராதனைகண்மிகச்சிறப்ப மிளிர்வித்தன்னேன்
மட்டவிழ்சேவடிப்பூசை புரிதருமந்தனர்களுக்கு மாடையாடை
மட்டறுபன்மணிக்கலன்க ளுதவுபுதன்கண்ணெதிர வருவோர்யார்க்கு
முட்டதும்புமோகையுடன் வேண்டுவவெல்லாம்புயல்க ளொல்கப்பெய்தே ()

இரப்போரின்றளிப்பவர்க ளென்னுமொழிபொய்படவென் னிருகண்முன்வந்
திரப்போரின்றளிப்பவென வெதிர்நோக்கியெங்குலத்தி லிசைவோர்போலக்
கரப்போரின்றளித்திடுவான் றுவக்கினரேற்காசினியின் கண்ணொன்றில்லா
நிரப்போரின்றெனப்புரிவோ மென்றிடுதந்நிலைகாட்டி. நின்றான்மாதோ. ()

நனிவருவார்தமைநோக்கி யினிவருவாருண்டென்னி னவில்வீரொப்பில்
பனிதருதாரித்திரியம் பண்டரியினற்றொழியும் படிசெய்வேனென்
றொனிதருவைசியன்சொலைக்கேட் டவணமைந்தார்பற்பலருஞ் சொல்வரீண்டு
கனிதருபேரன்புடையார் திருநாமதேவரென்பேர் கலந்தாருள்ளார். (கருரு)

மற்றவர்பாண்டுரங்கவிட்ட லன்றனையல்லாலொன்று மதியாரன்பின்
மற்றவர்மற்றொருபொருளை வலிதுதருகினுங்கொள்ளார் மகிமைசாலப்
பெற்றவர்யாண்டுங்குறுகார் விட்டலனைத்தமதில்லிற் பிரதிட்டித்தே
சற்றகலாதருட்பூசை புரிகுவரன்னவரீண்டுச் சார்கிலாரால். (கருசு)

என்றுபுகன்றிடுமவர்தம் மொழிவினவிவணிகனுளத் திறும்பூதெய்தி
நன்றுதனதருகமைமைந் தனைப்பார்த்துவிட்டலன்றா ணளினத்தன்பார்
குன்றுபுரைநாமதே வப்பெயர்கொள்வாரிடம்போய்க் கும்பிட்டேத்தி
யொன்றும்வினயத்துடனென் னிலைமைமொழிந்தனையழைத்தீண் டுறுதியென்ன.

சென்றிடுமைந்தன்பணிந்தெ னத்தனுமதருட்பொலிவார் சேவைக்காவ
லொன்றியுளான்பாலிக்கவேண்டுமெனத்தொண்டர்சொல்வாரொருவர்பால்யா
னின்றிசைதலற்றாக வெனைக்காணவிச்சித்தான் யாவனேகாண்
பொன்றிரண்மிக்கமைந்தெனக்கொன் றீந்திடவுள்ளாவன்மிகப்பொருந்தற்றானேல். ()

பொன்னலவெப்பொருளினுமெற் காசையில்லையெனதாவி புரத்தற்கன்னை
தன்னகட்டிலுற்றவுயிர்த் திரள்களுக்குமூட்டியின்பந் தழையச்செய்யு
மென்னதருட்பிரபுவுள்ளா னென்பொருட்டாநின்றந்தை யெய்க்கவேண்டா
நின்னகத்தாலோசனையொன் றெய்தலையானுரைத்தவண்ண நிகழ்த்தாயென்ன

சென்றவன்சாற்றிடவணிகன் வியந்துபின்னுமைந்தனைநீ சென்றன்னோரை
மன்றவிரந்தெழுந்தருளப் புரிதியெனமீண்டுமவண் மருவிப்போற்றிக்
குன்றவில்பேரருட்கடலே குணக்குன்றேமீண்டுமிவண் குறுகினேனா
னன்றமையென்றந்தைசெயும் விண்ணப்பந்தனையருளா னயந்துகேட்பீர். ()

தேவரீர்தமைமனைக்கண் டரிசனஞ்செய்தன்றியொன்றுஞ் செய்கிலேனென்
றாவலுடன்பிரதிஞ்ஞை செய்துடனென்றனைத்தம்பா லனுப்பினான்றா
மேவலின்றேன்மரித்திடுவான் பகவற்பத்தரிற்சால மிக்கீர்வேண்டுஞ்
சீவர்மிசைவாற்சலியம் படைத்தீரென்றுணர்ந்திங்ஙன் சேர்ந்திலானால். (கசுக)

விரித்தினியான்றமக்குபசா ரம்புகலக்கற்றில்லேன் மிக்கீரெம்பா
லுரித்தமைந்தென்றந்தைபெறச் சேவைவழங்குதிரின்றே லுயிர்த்தோன்சோர்ந்து
மரித்திடக்காலனைப்போல விழியின்முனம்யானடைய மாட்டேனாவி
பிரித்திடுகின்றேனுமது முன்னென்னப்பரிவின்மைந்தன் பேசுமேல்லை. ()

ஆண்டமைந்தார்பலர்களும்வேண் டிடநாமதேவரரு ளமைந்தாராகிக்
கூண்டவர்களுடன்வணிகன் மனைபுகக்கண்டவன்மகிழ்விற் கும்பிட்டேத்தி
நீண்டவுபசாரமிகப் பூசைபுரிந்தன்புடனென் னிதிகைக்கொண்டியா
னேண்டகுமாதவம்பொருந்தப் புரிந்தருள்வீரெனப்பரிவா யிரக்குமெல்லை.

அருணாமதேவருன தன்பின்வசியத்திவணா னடைந்ததன்றிப்
பொருணாடிவந்தனனன் றெவற்றினுமெற்காசையில்லை புகுவார்க்கேணி
தருமாடையேற்கலனென் றுளம்வருந்தலென்விரதந் தணவேனென்னும்
பெருவாய்மையார்மொழிகேட் டலும்வணிகன்றுக்கமிகப் பெற்றானனன். ()

அன்பர்திருவடிமிசைவீழ்ந் தெழாதுபிடித்திரங்குநன்சீ ரகத்துண்ணாடித்
துன்படையேலெழுதியுன திட்டமொத்துக்கொள்வனென்றோர் துழாயிலைக்க
ளின்பமிகராமவென் றெழுதியெனக்கீந்திடநிற் கிச்சையுண்டேற்
பொன்பயிலிப்பத்திரத்தி னெடைகொள்பொருடரிலெனக்குப் போதுமென்ன

வணிகனுமதடியேனை யிவ்வாறுபரிகசித்தன் மரபோவீண்டியான்
றுணிவினுடன்றருவனமுற் றினுங்கொள்ளவேண்டுமெனத் தூயர்சொல்வார்
பணிதருநின்றனையாணா சியஞ்செய்யவில்லையிப்பத் திரத்துக்குன்றன்
கணிதமில்வான்பொருளையெல்லா மிடினுமவற்றினுமிதுவே கதித்துநிற்கும்.()

சகத்திலிதற்குச்சமமா மொருளின்றெனத்தொண்டர் சாற்றக்கேட்டே
யகத்தில்வியப்புடனப்பன் றராசுகொளோர்தட்டிற்சற் றம்பொன்வைத்து
மகத்துவஞ்சாலிராமநா மங்கொடுழாயிலையினைமற் றோர்தட்டேற்றச்
சுகத்துவஞ்சாலிலைத்தட்டே பூவின்மிசையக்கணத்திற் றோய்ந்ததம்மா. (கசுஎ)

அலகிறிரவியமமைத்துஞ் சமமடையாமையின்வலிமை யாந்தராசொன்
றிலகவமைத்ததுவுமெடை யெய்தாமையாற்பெரிதொன் றியற்றியேற்ற
நலனுறுமற்றதுவுமெடை கொள்ளாமைதனைநாம தேவர்நாடிப்
பொலனமையும்வைசியனே யாச்சரியச்செயலிதைநின் புலன்கொண்டாயோ.

நலம்பெறநீபுரிந்ததரு மந்தானந்தவம்விரத நதிநானாதி
பலங்களையுஞ்சங்கற்பித் தறல்பொழிந்துபார்த்தியென்றார் பார்க்கிற்றொண்டர்
மலங்களைந்தா ளிராமானந்தப்பெருமான் வடிவமைந்த மனமேபோற்சஞ்
சலஞ்சிறிதுமடையாதே யமைந்ததுழாயிலைதுலங்குந் தட்டைக்கண்டே. ()

கூண்டுளரியாவருமளவை தீர்ந்திடுபேராச்சரியங் கொண்டாராங்கான்
மாண்டுலங்குதிருநாம தேவர்சொல்வாரிதுகாணென் மதிப்பில்செல்வம்
பாண்டுரங்கனித்தகுசீ ரெனக்களித்துள்ளானிந்தப் பண்புதேர்ந்தே
யீண்டுவினைதருபொருளை யெனதெனுமாங்காரிகள்பா லேற்றிலேனால். (கஎ0)

சிங்கமுறுபசிகெடவத் தியைவிடுத்துத்தேரையிரை தேர்வதுண்டோ
வங்கதுபோனினைத்திடிற்கண் டிடிற்கேட்கிற்பேரின்பத் தாழ்த்தியென்றும்
பொங்கமுறச்செய்பகவ னருள்விடுத்தெத்தனைவரினும் போதுமென்னாச்
சங்கடங்கொடரித்திராஞ் செல்வரிடையானிரக்கச் சார்கிலேனால். (கஎக)

என்றுபகர்ந்தருணும தேவர்மொழிகேட்டவர்கள் யாருமின்பாய்
நன்றுநன்ருச்சரியமிவர் கருத்திதுகொலென்றுவகை நண்ணிஞராய்
மின்றுதையுமிராமநன்ஞ மம்பெறுமான்மியமுணர்ந்து விதந்துபோற்றி
யொன்றுமுலகத்திலரி நாமசங்கீர்த்தனத்துயர்ந்த தின்றெனன்றோர்ந்தார். ()

இத்தகுசீர்நாமமான் மியங்கள்புராணங்கண்மிக விசைத்துமுள்ள
மத்தகயமானகசேந் திரன்முத்தனுயினனேர் வைசியப்பெண்
ணுத்தமவான்கதியடைந்தா ளசாமிளனேமனைச்சயித்தா னெருகாலன்பிற்
சித்தமிசைக்கிருட்டினனு மம்புகல்வார்க்கதுகாறுஞ் செய்பாவம்போம்.(களஙு)

என்றளவின்மிருதிகளில் வியத்தமுறவிருடிகளா லிசைக்கப்பட்ட
மன்றவதனுற்றவம்யோ கம்விரதமுதலான வகைகடாமு
நன்றமைகன்மங்களுமந் திரசுத்தியின்றிநல மருவிடாதால்
வன்றகைக்காமியகன்மங் களிற்கிரியாலோபமுறின் மருவுந்தீதே. (களச)

நாமமறைபுருச்செபிப்போர்க் கத்தகைய தீமையொன்று நண்ணிடாதாற்
சேமமிகுமற்றதுவே சாதனமற்றெவைகளினுஞ் சிறந்ததென்னப்
பாமார்கடாமுநல மருவமுன்னோரொற்றீர்க்கப் படுத்தப்பட்ட
தாமமறையைநம்பியுளத் துச்சரிப்போர்க்கரிதெனுஞ்சொல் லரிதாமன்றே. ()

வேறு

இன்னவாநாம தேவர்விட்டலன்ற னிணையடியிடைவிடாதேத்தி
நன்னலம்பெறுமெய்ப் பத்தர்கட்கெல்லா நாயகமாகியற்புதஞ்சால்
பன்னருமாடற் றெகைபுரிந்தியல்காற் பத்திமிக்கமைகோராகும்பார்
மன்னருட்பாக வதர்களியாவரையு மனமகிழ்வாற்பணிந்தேத்தி. (களசூ)

அனைவருமடியேன் மனைக்கெழுந்தருளி யன்பின்யானுற்றுபூசனைகொண்
டெனைக்கிருதார்த்த னுக்குதிரென்ன விசைத்தலுமிசைந்துமற்றவர்தம்
மனையடைந்தவர்செய் பூசையேற்றமுத மாந்திச்சந்தனமலர்வழங்க
வினைதவிர்நிவர்த்தி தேவர்ஞானதேவர் வியன்சோபானதேவர்முத்தாபாய். ()

நாமதேவருடன் சாமந்தராதி நற்றவப்பத்தர்கள்கூண்டு
சேமமிக்கருட்பாண் டரங்கனற்கதைகள் செப்பினரிருந்தனரக்கான்
மாமகத்துவஞா னதேவர்கோராகும் பார்தமைமகிழ்வுடன்கூவிக்
காமர்சாநும தேவர்க்குஞானக் கண்ணளித்திடவுளங்கொண்டு. (களஅ)

மாண்டமெய்ப்பத்தர் சிகாமணியாகி வயங்குகோராகும்பார்நீமண்
பாண்டமுண்டாக்குந் தொழிலினையிங்ஙன் பந்திபெற்றிடவமைகடத்து
வேண்டகவெந்த பாத்திரம்வேகா தியைந்தவைகளைத்தெரித்திடென
நீண்டபேருவப்பிற் பணிந்துலகோர்கொ ணிகரில்பாத்திரத்திறந்தெரிவேன்.

சேதனகன்மங் கொடுபகவானுற் செய்பஞ்சபூதபாத்திரங்கொண்
மேதகைதீமை யறிந்துநன்குணர்த்தும் விச்சைபுள்ளேனலனெனினு
மாதாமுடன்றங் கட்டளைசிரமீ தமைத்துணர்ந்துள்ளவாறறைவேன்
காதலர்மொழியேற் றிருமுதுகுரவர் களித்தல்போற்பெரியிர்காள்கணிப்பீர்.

காரணமூன்று கொண்டலதுலகிற் காரியநிகழ்வதின்றவைதா
மோமைநிமித்தந் துணையுபாதான மிவற்றின்மண்ணே முதனிமித்த
காரணங்குலால னேனையதுணையாங் கவின்றகாரியங்களேயீசன்
சாரமார்விசிட்ட வேடத்தான்முதலாய்ச் சங்கற்பவிசிட்டவேடத்தால். (கஅக)

நிமித்தமாய்ஞான மாதியதுணையாய் நிகழ்தரச்சிருட்டிசெய்கின்றான்
றமித்தகைபொருந்துங் கடவுள்சிட்டியினாற் சார்ந்தசேதனபஞ்சபூத
சிமிழ்ப்புறுகன்ம வசம்பெறுபாண்டத் திறம்பாண்டரங்கனுமொப்பில்
கமித்தகைபொருந்துந் தம்மனையருமே கண்டுசாற்றிடுவதல்லாதே. (கஅஉ)

மந்தபுத்திகொளென் னனையர்களெங்ஙன் மதித்தறிந்துணர்த்துவதெனினுந்
தந்தபாநோக்கத் திறல்கொடீங்கிவைகட் சங்கைபற்றிடப்பரிட்சித்தே
யுந்தகங்கைநெல் லியிற்றெரிப்பனென்ன வோதிமட்பாண்டங்களடிக்கு
மந்தமார்பலகை கொண்டவர்சிரமீ தடித்துவந்தனர்முறைபடவே. (கஅ௩)

அன்னகாலையிலாண் டுற்றவரியாரு மாக்கைமானங்கழன்றவராய்த்
தன்னனவதீத நிலைகொடசேத னத்தையொத்திருந்தனர்நாமர்
மன்னவர்கட்கெல் லாஞ்சிறந்தவராய் வயங்கியுங்குருகுலவாச
நன்னலமமையா மையிற்சிறிதகண்ட ஞானமுட்குறைவுபெற்றதனுல். (கஅச)

அடித்தணைவாரைப் பார்த்தெனையெற்றுக் கடிக்கிறீரென்றுபின்னெதுங்கித்
துடித்தல்கண்டிந்த வரிசையிலிதுவே சுடாதபாண்டம்மெனக்கேட்டே
பிடித்தகைப்பலகை யடிபுடையாராய்ப்பிரான்படைப்பெவைபுமேயிகழ்ந்து
நொடித்திடாதவரா யாண்டுளோர்பலரு நோக்குபுகைபுடைத்தாரால். (கஅரு)

நாமதேவருள நாணிலேயுண்மை ஞானமெய்துவரெனநகைத்தார்
பூமகணிகர்சிர் பொருந்துமுத்தாபாய் புந்தியுளோகைமிக்குநகைத்
தாமகத்துவஞ்சா றாலகுக்குமங்க ளானபாண்டத்தையுந்தேர்ந்தீர்
காமர்மிக்கதுநுஞ் செயலெனவிதந்து கழறிடக்கண்டுநாமதேவர். (கஅசு)

அலகறுதுயரத் தோடுவிட்டலன்பா லடைந்துதாட்டுணைதொழுதெழுந்தே
யிலகுகண்டுன்பப் புனரரத்தேம்பி யிறைவனேயின்றுநானடியர்
பலருமிக்கிகழ மெத்தவமானப் பட்டனனென்றலும்பகவ
னலமுறமந்த காசஞ்செய்தன்பி னுமதேவரையுரத் தணைத்தே. (கஅஎ)

மைந்தவின்றுன்னை யாரவமானம் வயக்கினரென் னுயிர்க்குற்ற
சொந்தமார்நண்ப னென்னினீவாய்மை சொல்லுதியெனமுற்றுமுரைத்தா
ரந்தவாய்மைகண்முற் றுணர்ந்தமாலவர்சொல் வியதுமெய்நீதுயரடையே
லந்தமார்ஞானேச் சுரர்முதலோர்நிற் ககண்டஞானம்பொருத்திடவே. (கஅஅ)

விசனநின்னுளமீ தமைதரப்புரிந்த விந்தையல்லாதுவேறிலைநீ
திசைபுகழ்குரவற் றேடிஞானேப தேசம்பெற்றுய்தியென்றுரைப்ப
நிசநிலைதோரார் விட்டலவென்பா னீயுஞானேச்சுராதியர்போ
லசதியாடுதிகொ னீவிடிலெனக்கிங் கார்துணையென்றிரங்குதலும். (கஅகூ)

வறிதுநீதுன்ப மருவிடல்வாழி மைந்தநீயேமுமைையடையே
லறிவருட்குரவர் தமையடைந்தல்லா லகண்டமாஞானநிற்கமையா
தெறிதிரையுடைப்பா ருலகர்நன்றுறயா னிராமன்கிட்டிணனெனவுதித்து
நெறிவழாதவந்தீர் வசிட்டர்சாந்தீப னியைக்குருவெனவுபாசித்தேன். ()

சரித்திரத்திறநீ யறிந்திலேயேகொல் சாற்றிடுமென்மொழிகொண்டு
மரித்திடாவுண்மை தேர்தரக்குரவன் மாட்டமைந்தொழுகுதிபலவா
விரித்தியம்புவதெ னிதுபுரிந்தனேயேன் மிக்கஞானேசுரருள்ளந்
தரித்திடுமகண்ட ஞானமுமுத்தத் தகைமையுநீயடைவாயால். (௧௯௧)

பரமுத்திமான்க ளேதமதுயிரைப் பற்றியபவமிறப்பென்னுந்
திரமுற்றபிணியை வேரறக்களைந்து சின்மயவீட்டினுட்டிளைப்பார்
பரவுற்றபத்தி கொள்ளுநன்னேரிளமைப் பக்குவருடலைநானென்று
சிரமுற்றவடிக்குப் பயந்தபிமானஞ் செறிந்துனைப்போற்றிகைப்பாரால். ()

என்றுபற்பலமால் புகன்றிடநாம ரினியதாய் தந்தைசற்குரவ
னன்றுறுதெய்வ மியாவுநீயெனவே நம்பிமற்றெவரையுமதியா
தொன்றுமென்றன்னை யுன்னதுசிருட்டிக் குட்படுமானிடன்றன்பா
லின்றுய்வான்சரண மடைதியென்றுரைத்தா யார்புடையடைதல்சொல்லென்ன.

விகண்டமார்நாம தேவருள்ளிசைந்து வினவமால்களித்தஞ்சேன்மைந்த
வகண்டமெஞ்ஞான பூரணத்தன்மை யமைவிசோபகேசனுள்ளானீ
யுகந்தவற்சரண மடைதியேயுன்னை யுடனவனெத்திடப்புரிவா
னகங்களித்தவன்பா லடைதியென்றுரைப்ப வன்னவற்றேடுபுபடர்ந்தார். ()

நாட்டகத்தமைவார் சொல்வழிநாக நாதர்கோயிலெய்துபுநாடக்
கோட்டமுட்சிவலிங் கத்தின்மேற்றமது குளிர்மலர்ப்பதங்களைவைத்தே
வாட்டமோர்சிறிது மின்றிராப்பகன்மெய் மறந்துதூங்கிடுமவர்தமைத்தந்
நாட்டநேர்கண்ட நாமருள்வருந்தி நல்லசற்குருவிவனம்மா. (௧௯௫)

பப்பருஞ்ஞான வுருக்கொள்பாண்டரங்கன் பதந்தொழும்யானுணர்வமைவா
னெப்பருசிவலிங் கத்தின்மேற்கால்வைத் துறங்குமிப்பிராந்தன்பாலனுப்பல்
செப்பனசுரந்த முலையுடன்செல்வச் சிறுமகன்பசியறநாடிக்
கைப்படுமுச்சிற் சிறுமிபால்விடுத்த கதையையேயொத்ததாலந்தோ. (௧௯௬)

எனப்பலவாறு யெண்ணுபுநாம ரின்னமின்னவன்றிறமெல்லா
மனப்பதைப்பறநா டுதுமெனத்தம்முண் மதித்தருகமைந்துகைகொட்டிக்
கனப்பரஞான மமைந்தவராருங் கைதொழுமணியமைந்துளநீ
வனப்பமைசிவலிங் கத்தின்மீதடிகள் வைத்துறங்கிடனன்றுநன்றால். (௧௯௭)

கொடியபாதகமா மிச்செயலினைநீ குயிற்றிடற்கேதுவேததனை
யடியனேன்றேரப் புகலுதியென்ன வமைந்தமாதவர்விளம்பிடுவார்
நெடியபேருறக்க மயக்கினுலுணர்ச்சி நீங்கியெனுதவிச்சையினுற்
கடியவிச்செயல்செய் தேனென்றாலமிகக் கனத்தெனுதீனவம்பெறலால். ()

* ஆதீனவம் - கீழ்ப்படியாமை.

ஆதலினென்மேற் கருணைவைத்திலிங்க மூர்த்திமேலமைந்துள்வான
பாதநீயெடுத்தஃ தின்றியவிடத்திற் படியவைத்திடுதியென்றன்போ
டோதநன்றென்று தங்கையாலெடுத்திட் டுற்றபூமியின்மிசைவைக்கப்
போதலுமங்கோ ரிலிங்கமுற்பவிக்கப் பொருக்கெனவேறிடத்தமைக்க. ()

துவக்கனுமங்கு முளைத்திடவிலிங்கந் தூயரிவ்வணமமையிடந்தோ
றுவக்கமாவிலிங்க முளைத்தலினுள்ளத் துவகைமிக்குற்றகோயிலெலாஞ்
சிவக்குறியாக நிகழவற்புதமுட் செறிந்துதற்பார்த்திடத்தாமுந்
தவக்கவினமைந்தார் தொழுமிலிங்கவுருச் சமைந்துறுந்திறந்தினைக்கண்டே. ()

பாததாமரையோ ரிலிங்கமீதமைத்துப் பரபரப்புடன்றுதிபலசொற்
றூதரவருட்சற் குருபராவென்னை யாட்கொளவருதயாநிதியே
மாதவன்றிருமே னியைப்பலகால மருவியுங்கண்டிலனின்றுன்
றூதவிழ்பாதப் புணைபரிசித்த சணத்தினிலகண்டனுய்த்தீர்ந்தேன். (உ0க)

தக்கமெஞ்ஞானேச் சுரர்முதலாகத் தழைத்திடுபரமபாகவதர்
மிக்கவென்மேற்கொண் டுளவருட்கோரேழ் வேலையொப்பன்றதையறியேன்
றுக்கமிக்கடைந்து வருந்தினேனதுதான் றூயவானந்தவாரிதிநின்
பக்கமெய்திடச்செய் சேமவான்கலத்திற் பயின்றதாற்பரிபவந்தீர்ந்தேன். ()

ஓடுகைக்கொண்டிற் றொறுமிரந்துழல்வா னொருவனைவன்மையாயும்பர்
நாடுகொடருக்கண் மாடுறப்புரிந்த நன்மைபோன்மதியிலேன்றன்னை
நீடுமெய்யருளாற் புராணமெஞ்ஞான நிமலசச்சிதானந்தநிமல
வீடுதந்தருணின் பாலுறப்புரிந்த விட்டலற்கேதுகைம்மாறே. (உ0ங)

பரமசற்குரவ நின்றிருப்பாத பரிசமாத்திரத்தினுலென்முன்
விரவியயாவும் பரசிவவடிவாய் விளங்குமேலுனதருட்டிருவாய்
தரவருமணிவாக் கமுதமென்கேள்வி தனிற்புகுமென்னில்யான்பவப்பாழ்ஞ்
சுரமுறுதாகசோகநீத்தின்ப சொருபவீடடைகுவன்றிண்ணம். (உ0ச)

பாம்பறியும்பாம் பினதுகாலென்னும் பழமொழிபோன்றுபாண்டுரங்கன்
மேம்படுநின்சீர் தெரிந்திடலன்றி விவேக சூனியன்றெரிவேனே
தீம்பனேன்றேற நின்றிருவாயுச் சிட்டமீந்தருடியென்றிரப்பத்
தேம்பலைநாம தேவவென்னுபதே சத்துபதேசமெய்திடுவாய். (உ0ரு)

வினைகொள்சீவான்மாமாயையாக்கையின்பான்மேவல்போற்சராசரமெவற்றுந்
தனைநிகரீசன் றழைத்துளான்மாந்தர் பாலன்விர்த்தாப்பியனுனென்
றினைதருதேக தன்மத்தைப்பந்த மியைந்துசிவான்மாவின்மிசையே
புனையுறச்சொல்வ ருயிர்க்குமெய்யினுக்கும் புகலிற்சம்பந்தமின்றின்றே. ()

சராசரம்யாவை யும்பகவன்றன் சரீரமாக்கொண்டுறுந்தகையாற்
பராவுசிரகண்ட ஞானியாவையினும் பகவனைக்கண்டுகொண்டெல்லாம்
விராவுமெய்ப்பகவன் செயலெனச்சித்த மீதுநிச்சயங்கொள்வானதனு
லிராகதுவேச மிருவினையவன்பா விடர்விளைத்திடும்வலியிலவாம். (உ0எ)

சூத்திரதாரி செயலைப்பாவையதாச் சொல்லல்போலங்தரியாமி
யாத்திகழீசன் செயலைச்சீவர்கண்மே லாக்குருர்மூடரேயாவர்
நேத்திரத்திரவி நோக்கிவெய்யிலிடை நின்றவர்க்கேனே தோன்ருபோன்
மீத்திகழ்பிரம நிட்டருக்கின்ப மல்லதுவேறுதோன்ருதே. (௨௦அ)

ஞானதேவரின்மெய்க் கடைக்கணேக்கத்தா னுனிற்ருமகண்டஞானத்தை
யூனமற்றிடப்பெற் றனனீவிட்டலனீண் டுய்த்திடவந்திடுதிறத்தா
லானவெப்பொருளு முன்விழிக்கவன்ற னருள்வடிவாகவேதோன்று
மானலையென்ன வுரைத்தசற்குருவின் மாற்றங்கேட்டானந்தமருவி. (௨௦கூ)

பலமுறையவர்தந் திருவடித்துணைகள் பணிந்துபல்விதம்படப்புழிச்சி
நலநிறையருட்சற் குருசிகாமணிமெஞ் ஞானவாரிதியுனக்கடியேன்
புலவுடலாவி பொருளுனதாகப் புரிவதல்லாற்கைம்மாறென்றை
நிலமிசைகாணே னெதுபகர்ந்திடினு நிறைமகிழ்வுடன்புரிவேனல். (௨௧௦)

இனிமனத்தைய மொன்றிலைநின்னேக் கினிற்கிருதார்த்தன்யானுனேன்
புனிதவென்றுரைத்து வணங்கிடக்கருணை பொங்கிமேலெழுந்துசற்குரவர்
கனிவுடனுமர் சிரமிசைதமது கஞ்சமாமலர்க்கரமமைத்து
நனியகண்டபரப் பிரமசொரூப நன்குபதேசித்துவிடுத்தார். (௨௧௧)

மின்பயில்குருதாள் வணங்குபுபிரியா விடைகொடுசென்றிடுநாமர்
மன்பயிலருட்பாண் டுரங்கவிட்டலன்றன் மங்களவிக்கிரகத்தி
லன்பமைந்தவிர்தன் மனமிலயிப்பித் தன்னியபொருள்களையுவர்த்தே
முன்பரைக்கணமும் பிரிகிலதமைந்த முறையகன்றருள்விசோபகேசர். (௨௧௨)

தமதியற்பிரமோ பதேசம்வாய்ந்திடுமெச் சணமுதற்சராசரமெல்லாம்
விமலபாண்டுரங்க விட்டலனுருவா விளங்கலினவனைவேறறியா
ரமலமெய்த்தொண்ட ருடன்பரிபூர ஞானந்தானுபவமுற்றமைந்தா
ரமயமற்றதனிற் பத்தவற்சலனு மரியடியார்கண்முன்பவிர்ந்தே. (௨௧௩)

நாமதேவரைத்தன் மார்புறத்தழுவி நந்தனஞானசற்குரவன்
சேமமெய்யுபதே சங்கொணுண்முதலென் றிவ்வியசந்நிதியின்பா
னீமருவாத காரணமென்ன நிகழ்த்தெனவிருகரங்கூப்பிச்
சாமளவன்ன நாதபாண்டுரங்க சாமிவிட்டலபெருமாளே. (௨௧௪)

நானுனைமுன்பண் டரியினிற்பீமா நதிக்கரைத்தளியிற் செங்கண்மேற்
ருனுவப்புறக்கண் டிருந்தனன்குரவர் தம்முபதேசத்தான்ஞான
பானுவில்விளக்கம் வாய்ந்தஞ்ஞானமெனப் பாவிருணீங்கலின்முற்சா
ரூனுயிர்ப்பாவனையை யொழித்தெவையு முன்னுருவாத்தெரிகின்றேன். ()

தன்னுருவொன்று பொன்னுருவாகிற் றன்றரிசனபரிசனங்கண்
மன்னுருவனைத்தும் பொன்னுருவாகி வயங்குமென்றேதிடுமொழிபோற்
கொன்னுருவமைந்த பொன்னூரத்தமைத்த கொற்றவநாயடியேன்மெய்
நின்னுருவமைந்த பான்மையாலெங்கு நீயலதொன்றுங்காண்கிலனல். (௨௧௬)

எங்கிருப்பினுநின் சந்நிதிதன்னி லிருப்பவனாகின்றேனுலகிற்
றங்கியபொருள்க ளெதனைநோக்கினுநிற் றரிசித்தேனாகின்றேன்செயல்யா
திங்கியற்றினுநின் பணிசெய்தேனாகின் றேனெதையிசைக்கினுமுனது
மங்கிடாநாமஞ் செபித்தவனாகின் றேனென்செனம்மம்பலன்வாய்ந்த. (உகஎ)

எனக்கியாவையுநீ யேயிதுமுதலா யின்பலாற்றுன்பிலையெனினுந்
தனக்கிணைதானும் பகவவோர்வரநீ தந்திடவேண்டுமென்னென்னின்
மனக்கிலேசமறச் சற்குருவெனக்கு வழங்குஞான தீபநின்றன்விலோ
சனக்கிருதங்கொண் டென்றுமேன்மேலுந் தான்மிகப்பிரார்த்திக்கின்றேனே.

என்றுவேண்டிடலு மரியுளங்களிப்புற் றிணையினுமதேவர்கைபிடித்தே
யன்றுமெய்த்தொண்டர்ப் பார்த்தினியெனது தோழனையாவர்களேனு
மொன்றுபக்குவமில் பாத்திரமென்ன வுரைப்பிர்களோவெனவிசைப்ப
நன்றுறுஞானேச் சுரர்முதலானோர் நகையுடன்முடிதுளக்குதலும். (உகக)

மைந்நிகர்வடிவன் மின்னிகரென்ன மறைந்துமற்றொருதினநாம
ரன்னியபொருள்க ளெவையுந்தானெனத்தே ரகண்டஞானம்பொருந்திடுசீர்
மன்னியவுலகத் தவர்க்குணர்த்திடத்தன் மனங்கொடோர் ஞாளியாம்வடிவுற்
றின்னிசைப்பாக வதரினந்துய்க்கு மிடத்துறவெருட்டியோட்டுதலும். (உஉ0)

பட்டிமைப்படிவார் ஞமலியேமாந்தோர் பாகசாலையுட்புகுந்தங்ங
னெட்டியபதார்த்தங் களைமிச்சிற்படுத்த வுற்றவாடித்திடத்தொடர்ந்தார்
மட்டிலாமறைக்கெட் டரு*சுவானமென வயங்கியசுவானமானிடர்கை
பட்டிடுகோலி னடிக்கப்படுமோ பரிவுறுநாமர்பாற்புகுந்தே. (உஉக)

மற்றவர்காத்தி னமைந்தவப்பத்தை வாய்கொடுகௌவியோடியது
நற்றவருடனோர் கலத்தினெய்கொடுபின் னடந்துசுவாமியங்கதுதான்
வெற்றடைகடினத் தகைத்தருந்தேனெய் மேவியதென்கையிற்றுவைத்துக்
கொற்றமோடுனக்கே யளிப்பனவ்வாறு குபிற்றின்மெத்தெனவிருந்திடுமே. ()

எனவருகழைத்தென் னப்பனன்றோநீ யென்றுதம்மடிமிசையிருத்தி
மனமகிழ்வுடனெய் கொடுபசைப்படுத்தி வாயினூட்டுபுமிசைதடவச்
சுனகன்மற்றதையுண் டெனருணமர் தூலந்தன்னுக்கொடுசுவைக்க
வினசெயலறிந்தோர் பலருந்தந்நிலைமைக் கேற்றவாபகர்ந்தனரிருந்தார். ()

மற்றதுகாலை ஞமலியினுருவம் வாய்ந்தவிட்டலனெவ்வாறெனைநீ
யுற்றறிந்தனையென் றிடவிசோபகேச ருன்னுளவனைத்தையுமறியு
முற்றருண்ஞானம் வழங்கினரென்ன முகுந்தநாயகன்பண்டரியினிற்
பெற்றமைவடிவங் காட்டிநல்லாசி பேசியேமறைதரக்கண்டோர். (உஉச)

நாமதேவரின்சீர் பலபடவிளம்பி நாமுணர்வுளத்திலதந்தோ
சேமவிட்டலனன் பால்வலிதடைந்துஞ் சிறிதுணவளித்திடேமாகி
நாமமேவிடக்கோல் கொடுதுரத்தினமென் னலிவுடனவன்புசித்திட்ட
தாமருட்பிரசா தம்புசிக்குதுமென் றருந்தியேத்தெடுத்தனரிருந்தார். ()

---

* சுவானம் - சுகவெளி,

பின்னரும்ம தேவர்பத்தர்களைப் பிறிகிலாய்ப்பலதலம்புக்
குன்னதம்பெருமால் புகழ்களைப்பலவா றுவந்துதுத்தியம்புரிந்தின்ப
மன்னருட்பண்ட ரியிலணைந்தரிதாள் வணங்கிப்பாண்டுரங்கவிட்டலநின்
கொன்னமைந்தியல்சீ ரனந்தகல்யாண குணங்களைப்பற்பல்விதமாய். (உ௨௬)

பாடிடுந்தோறு மென்னுளந்திருத்தி படைத்திலதாகிமேன்மேலு
நீடிடுகின்ற தெனக்கவாவதுதா னிறைவுறநூறுகோடியெனக்
கூடிடுவிருத்தங் கூறிநிற்றுதிப்பான் கொண்டனன்கருத்தின்மற்றதுகை
கூடிடும்வண்ண மருள்புரிந்திடெனக் குலவுபாண்டுரங்கவிட்டலன்றான். ()

மந்தகாசங்கொண் டுரைப்பனுமதேவ மனிதர்மெய்சாலவுமநித்த
மிந்தவாறுணர்கின் றிலைகொனீயதனை லெனைச்சதகோடிபாட்டோதி
வந்தனம்புரியக் கருதவாவெந்த வகைமுடிவுறுநரர்க்காயு
ளந்தநூறநனி னித்திரைதன்னு லகன்றிடுமைம்பதுவருடம். (உ௨அ)

பாதியிற்பாலம் வார்த்திகம்விசனம் பல்பிணியாமிவற்றிடையின்
மீதியாங்காலஞ் சொற்பமற்றதனில் வீதலாமவதியோர்வரிதிச்
சேதியாருடலை நம்பியிவ்வணநீ சிந்தைசெய்திட்டதெனென்னு
மாதிதாள்வணங்கி நாமரென்பலமெய் யதைநம்பிபிற்றவாவிலனால். (உ௨௯)

பத்தர்வேண்டியவா றளித்தருள்செயனின் பரமன்றேமுன்புபாரதத்தின்
யுத்தத்தினோர்கா லையினுமியானோரா யுதமெடுக்கலனெனச்சாற்றி
யுத்தமவீட்டு மன்செய்சத்தியந்தா னெழிவுறுதுன்சொலுபேட்சித்
தத்தமேற்படைகொண் டிடுதிறமகிலத் தறிதாரியாவரேயன்றி. (உ௩௦)

எனதுபத்தர்களுட் குலவியானவர்த மிச்சைமுற்றீகுவனென்ன
முனமுரைத்துளதா லுனதுபத்தனென முயங்கியயானின்னோர்பலத்தை
மனதிலுய்த்தறிந்தே யிவ்விதவாஞ்சை மருவினேன்வரம்பிலாவாற்றற்
கனமருவியநின் னடிமையென்னெண்ண மேன்கைகூடாதுபோங்கழறாய். ()

எனப்புகனும தேவர்தம்மொழிகேட் டெம்பிரானுளமிகக்களித்தே
வனப்புளவென்மெய்த் தொண்டனின்விருப்பம் வழங்குதுமென்றுரைத்துடன்றன
மனப்புடைமருகி யானநாமகளை வரக்கருதலுமவண்மருவி
வனப்பரிமளப்பொற் பதந்தொழுதேத்த வருதியான்ஞானசொரூபீ. (உ௩உ)

நாமதேவன்றன் னுவின்மேவுபுநீ நவில்சதகோடிபாவென்னப்
பாமகணினது வைபவப்பொலிவைப் பழிச்சிடப்பிரமனுதியருந்
தாமயங்கினரா ரணங்கணின்னனந் தத்தினைச்சாற்றிடப்போந்திட்
டாமனுடானந் தம்முதற்பிரமா னந்தமட்டறைந்ததன்மேலார். (உ௩௩)

பரப்பிரமானந் தமெட்டிலவாகிப் பணிந்தவென்றூற்பகவாநின்
வரப்பிறிப்பியசிற் குணங்களையடிமை வகுக்கவெற்றியன்றிடுமேனினுந்
தரப்படுமுனது கட்டளைசிரமேற் றூங்கிநாமதேவனுமிசைமேய்ப்
பரப்பியனூறு கோடிபாக்கொடுநின் படியில்சீர்பழிச்சிடுகின்றேன். (உ௩௪)

கார்பொழிந்தெனயான் பாடிடுவிருத்தங் களைவிரைந்தெழுதிடு திறத்தர்
யார்கொலோ துதியென் றனுமுடன்பத்த வற்சலன்மடலெழுத்தாணி
சீர்பொருந்தியற்கைம் மலர்கொடியானேயத் திறவினனென்றெழுதிடலு
நார்பொருந்திடத்தொண் ணூற்றுநான்குகோடி நாற்ப திலக்கமுற்றியவால். ()

அத்ததியினிறு மதேவர்தம்மேனிக் கந்தமார்காலமெட்டுதலி
ஞெத்தமைதேக சம்பந்தமெத்த வுபத்திரவப்படுத்திடலும்
வித்தகக்கதிபெற் றிடவவரான்மா விரைந்திடவிட்டலனேக்கி
யுத்தமநீதுக் கித்திடேலிச்சை யொத்தருட்பதத்திலெய்திடுநீ. (உகூகூ)

சிறிதுநாட்சென்று பின்றுக்காராமத் திருப்பெயரமைந்துநீயுதித்தே
செறிதருமைந்து கோடியேயறுபா னிலக்கமுஞ்செப்புதியென்னப்
பிறிவறுநாம தேவர்வைகுந்தப் பேருலகடைந்தனரிவர்தம்
மறிதிரையனைய திருவருளாடல் வகுத்துமுற்றிடுந்தகைத்தவன்றே. (உகூஎ)

சித்தியற்புலமை சான்றமேலவர்தந் திரளில்யாவருமிதுகாறு
நத்திடாத்தகைத்தொண் ணூற்றுநான்குகோடி நாற்ப திலக்கம்பாவினத்தா
னத்தியல்காத்தாற் றுதித்துமற்றவன்றன் னற்கரங்கொண்டெழுதவுஞ்செ
யத்தியற்புதத்தர் காதைகேட்டவரு மன்பராய்வைகுந்தமடைவார். (உகூஅ)

வேறு

அன்பாலான்பா னினக்கருத்தி யார்வத்துடனீ யுமிழ்ந்ததனை
யருந்திப்பண்ட ரியின்றளியை யமைந்தவடிய ரகம்வியப்பப்
பின்பாலாக்கி யுயிரகன்ற பெற்றந்தனைமீண் டெழப்புரிந்து
பிறங்கிராம நாமம்வரை பிருந்தைப்பெருமை தனைவிளக்கி
யின்பாரடியர் சுடாப்பாண்ட மெனலால்விசோப கேசரிட
மெய்தியகண்ட ஞானமுறு மிணையினம தேவர்நிலை
யென்பாலமைக்க நின்கடைக்கட் கிலேயோவலிநீ யிசைத்தருளா
யிராமாநந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே.(உகூகூ)

நாமதேவர்கதிமுற்றிற்று

ஆ கவி ௩கூ௩.

---

இருபத்தொன்பதாவது

# செயதேவர்கதி

காமதேவனற் றூதைதாட்பத்தியிற் கடலேநேர்
நாமதேவர்தஞ் சரித்திரமுணர்த்துமா நவின்றிட்டேன்
காமர்மிக்கவா தராயணமுனிவரன் கலைமேய
சேமநீள்செய தேவர்சீர்செப்புவன் சிலமாதோ. (க)

பிரமனைத்திரு நாபியம்புயத்தினுட் பிறப்பித்த
வரதனன்பர்கட் கநுக்கிரகம்புரி வான்வாய்ந்த
திரமுறும்பதி கட்கெலாமிக்கசீர் சேர்பண்பாற்
றரமிகுஞ்செக நாதமாம்பெயர்கொணற் றலச்சார்பாய். (உ)

தந்துலாயமுட் டாள்கொடாமரைமலர் தன்மீதி
னந்துயிர்த்திடு முத்திணைச்சினையுட னயப்போடுஞ்
செந்துகிர்த்திற லடியனமடைபுரந் திடும்வாவிப்
பிந்துபில்வப்பேர் பெறுநகரொன்றணி பெற்றேயும். (௩)

வேறு

வளங்கொணகர்வாழ் மறையொழுக்க மறையாமறையோர் சிகாமணியாய்த்
தளங்கொணளின தனத்தவனைத் தன்னுந்தியினீந் தவன்றிருத்தாள்
விளங்கொளுளத்தன் பமைநாரா யணசாத்திரியாம் வியன்பெயரோன்
களங்கொணூல்கற் பமைகமலா பாய்தன்னோடுங் கலந்துறுநாள். (ச)

காலம்பலசென் றுந்தனக்கோர் காதலின்மை யெண்ணுனைப்
மாலம்புயத்தாட் கதிக்குறியே மருவிபுற்றான் மனையாளுள்
கோலம்பொலிகா தலற்பெறுதல் குறித்துப்பகவன் றனையிரந்தாள்
சீலம்பொலிகா லத்திடைமால் செகத்தோர்பத்தித் திறங்கொளவே. (ரு)

மதித்தன்னவர்தஞ் சொற்பனத்தில் வயங்கிவேத வியாசன்றன்
கதிர்த்தகலைநும் பான்மகவாக் கவினுமென்றே தினன்மறையத்
துதித்தவுவகை யுடனெழுந்தே தூய தவத்தின் றுறைநின்றார்
விதித்தமால்சொற் படிமறைகள் விதித்தோன்கலைசேய் வடிவுற்றே. (சு)

பத்துமதிசென் றுயர்கமலா பாயினகட்டி லுதித்துமதி
யொத்துவளர்ந்து முன்கலைக ளொருங்குமடைந்த திறமேபோன்
மெத்துசாந்த முதற்குணங்க ளுடனேயரிதன் விரிமலர்த்தாட்
பத்திவயது பொரவளரப் பன்னறகவை யெய்தினன். (எ)

அன்னகாலத் தப்பதிபி லமைந்தமறையோன் றேவசர்ம
னென்னவோதும் பெயரினன்சே யில்லாமையினுற் சககாதன்
பொன்னங்கமலத் தாட்டுதித்தென் புந்திக்குறைதீர்த் தருள்வாயேன்
முன்னமுதிக்கும் பிள்ளைதனை முறையிலுனக்கீ குவனென்றே. (அ)

கோரிமனைக்கண் மேவிடலுங் கூர்வேனிகர்கண் குலவிடுந்தன்
பாரிவயிறு வாய்த்தெழிற்செம் பாவைநிகர்மா துடன்சிலசேய்
பாரில்விளங்கத் தந்தாண்முன் பயந்தமாது பருவமுற
நாரியுடன்விப் பிரன்கொள்சக நாதமடைந்தா னையவணங்கி. (௯)

உனதுவாத்தி னாலடியே னுள்ளக்குறைதீர்ந் தனன்மகிழ்ந்தே
னெனதுசபதப் படிமுன்ன முதித்தமகளா மிவடன்னை
மனதுளோகை யுடனினக்கே வழங்கினேன்கைக் கோடியென்றே
தனதுநகர்சேர்ந் தனன்றளியிற் றையல்பதுமா வதிவதிந்தாள். (௧0)

வேறு

அன்றிராவினி டைச்சகநாத னவள்பிதாவர்ச்ச கன்கனவின்கட்
சென்றியான்மகிழ் வெய்தினனிந்தச் செல்விதன்னை மெய்த்திறற்செயதேவற்
கின்றில்லாகவ ளிக்குதிர்மற்றோ னெற்குநண்பனே னாதமிசேய்ந்தோ
னென்றிமாற்றத்தி னிற்சிறிதைய முட்கொளேன்மினென் றோதவுவந்தே. ()

தாமனந்தற ணந்துடன்றேவ சர்மனிற்புடை சார்ந்தனர்சாற்ற
நேமமிக்கவன் றன்கனவொன்று நீர்மைவிண்டுநெஞ் சக்களிப்போடு
மாமகத்துவ வர்ச்சகன்பாத மலர்கள்போற்றித்தன் மாதுபிற்சாரச்
சேமமாநக ரின்புறத்தாமாச் சிரமத்தார்செய தேவர்கட்சென்றே. (௧௨)

தேகபோகத்தி னைக்குறித்தொன் றுஞ் சிந்தையின்றிச் செழுங்கலையோதி
மேகவண்ணன் றுணைக்கழலெந்த வேளையுந்தங் கருத்திலமைத்தே
வேகமார்திரை யற்றுவிளங்கும் வேலையொத்தநெஞ் சம்விழியோடு
மாகமாமணி கண்டவிழ்கஞ்ச மானுமானன மேவினர்க்கண்டே. (௧௩)

பரிவிற்போற்றிவிள் வானிவளென்னற் பாவைபேர்பது மாவதியெம்மா
னுரிமைமிக்குமக் கொப்பில்விவாக முனாற்றிநல்கிடென் றோதவடைந்தேன்
பெரியமாதவத் தீர்கொளீரென்னப் பேசலுஞ்செய தேவர்சொல்கின்றா
ரிதனன்பகேள் யான்மிடியென்னு மாழிமூழ்கினன் வாழ்மனையில்லேன். ()

எய்துநின்னெழிற் கன்னியைத்தான மேற்கும்பாத்திர னல்லன்விவாகஞ்
செய்துகொள்ளுமோ ரிச்சையுமில்லேன் செப்பலென்செக நாதங்கொளம்மா
னைதுசொற்றனன் சொற்பனத்தென்ன வபத்தமோதிய னாப்பினையென்னை
மைதுவைத்தகண் மாதுடன்வந்த வழிச்செல்கென்ன வழுத்திடக்கேட்டே.

தன்னுளாகுல மிக்குறுதேவ சர்மனர்ச்சகன் றன்னையழைத்தே
மன்னுசொப்பன வைபவமுற்றும் வழுத்தியுஞ்செய தேவர்மறுக்கத்
துன்னுபுத்திரிக் கோதுகின்றானித் தூயரேநின்றன் றுணைவரின்னோர்வாய்
பன்னுமெப்பணி யும்பயபத்தி பல்கவாற்றியுண் மல்குவப்பெய்தி. (௧௬)

ஈண்டிருத்தியென் றோதுபுதன்னில் லெய்திடப்பது மாவதியன்பு
நீண்டிருந்தவர் தம்விழிமுன்பு நிற்றலும்புகல் வார்நினையீன்றோர்
மாண்டிகழ்ந்திடு மிற்புடையுற்றார் மங்கைநீதனித் திக்கொடுங்கானி
னாண்டிகழ்ந்திடு முன்னமென்னோடு நாண்டுறந்துற னன்றலவென்ன. (௧௭)

சுவாமியென்னுட லீன்றவர்நீரே துணைவரென்றுரைத் திட்டனர்சென்று
ருவாதருட்சக நாதனுமவ்வா றேதினனது கொண்டினியானுந்
தவாதவோருடை மைப்பொருளானேன் சுற்றுமோரப ராதமியற்று
தவாவுடன்றம்ப ணித்துறைநிற்பே னடைக்கலப்பொருளாயினனுளீர். (௧௮)

வேறு

எள்ளினிற்சிறு பாகமுநம்முளத் தென்பொருட்டிலி ரங்கிலிரின்றெனைத்
தள்ளிடாதொ ரடிமையென்றுள்ளமேற் றுமுகந்திடிற் சாலுமெனக்கென
விள்ளியற்பது மாவதியின்குண மேன்மையுஞ்செக நாதன்விளம்பலு
முள்ளியேசெய தேவரிவளைநாமுவர்த்துநீத்திடி லொன்றும்பழிய தால். (௧௯)

ஈன்றுளார்சுற்ற மாயினரின்புட னீயக்கோட லினிதெனவுன்னியே
நான்றுணிந்தன னிவ்வகையுன்னுள நண்ணுமெண்ண நவிலுதியென்னலுந்
தேன்றுளித்தன சொற்கொடுகற்புருச் செல்வியோதுவ டேவரீர்தம்முளம்
போன்றவாழவெ னத்தனுரைத்தசொற் போக்கிடேனுயிர் போயினுமெய்ம்மையே. (௨௦)
சாலவுங்களிப் பெய்தினனென்றுமுன் சார்ந்துநிற்பச் செயதேவரின்புடன்
கோலமேவிய தேவசர்மன்மனை குறுகித்தம்முளக் கொள்கைவிளம்பலு
மாலருட்டிறந் தன்னைவிபந்துள மகிழ்வினேடு மகளையளிக்கக்கொண்
டேலவார்குழ லாளொடு கானமீ தேய்ந்தபர்னசா லைப்புடைபெய்தினர். (௨௧)

நாடியாக மிரண்டுயிரொன்றென நயந்துநற்சக நாதன்மெய்த்தாண்மிசை
நீடியாதர மெத்தருட்பூசனை நிரப்பிபின்ப நிறைவுளராயினர்
பாடிநாம்பக வற்குவப்பெய்திடப் பண்ணவேண்டு மெனப்பத்திமிக்கவர்
கேடிலின்பத் துறைகணிரம்பிய கீதகோவிந்த நூல்பகர்ந்தோதியே. (௨௨)

பாரியோடு பகவன்முனடொறும் பரதநாட்டியஞ் செய்குவரோர்தினங்
கூரியற்கொ ளிராசகிரீடையைக் குறித்துவன்னிக்கும் போதினிற்கிட்டினன்
சீரியற்கொ ளிராதைதநின்றாளையென் சென்னிமீதணி யாப்புனையென்பதா
வேரியற்கவி யொன்றுதிப்பச்சக தீசனைக்குறித் தங்ஙனம் பாடவே. (௨௩)

துணிவுறுதுண்மற் றோர்பதமொத்திடச் சூழ்ந்துமொன்றமுட் டோன்றுதலின்மையி
னணிகொள்புத்தகத் தைத்தவச்சாலையி லமைத்தியோசித் தறல்படியச்செல
மணிவண்ணன்செய தேவரைப்போலவண் மருவியேடு கொணர்கெனவோதலும்
பணிவுடன்பது மாவதிநல்கவப் பாடலந்தப் படிமுடித்தேகினன். (௨௪)

உற்றமெய்ச்செய தேவர்புனல்படிந் தொப்பில்பூசை யுஞற்றியருந்தியே
துற்றவப்பதந் தன்னையெழுதிடத் துவக்குவார்வரைந் துற்றமைகண்டன
ரிற்றமைத்தவர் யாரிதைநாமுன மெழுதினேமின் றெனுந்துணிவோடுதம்
மிற்றலைவி தனையழைத்தியாரிதை யெழுதினர்முனம் யான்வரைந்தேனிலேன்

இன்னதென்கை யெழுத்துமன்றென்றிட விணையில்சீர்ப்பது மாவதிசாலவுந்
தன்னகத்துள் வியந்துயிர்நாதர்நீர் சாலைமேப்புத் தகங்கொணர்கென்றலு
மன்னநல்கினன் வாங்கியெழுதிப்பின் வல்லைநானம் வயக்கிடச்சென்றனிர்
பின்னணைந்திவண் கேட்கிலென்னுன்விடை பேசுவேனென வற்புதம்பெற்றரோ

காரணந்தனைத் தம்முளாலோசித்தா காரநித்திரை செய்திலருற்றிட
நாரணன்கன வூடடைந் திச்செயனுன்புரிந்தன னென்றுநவின்றன
ரூரணஞ்செய் வியாசன்கலைகொள்வா ரதிசயித்துட னேபதுமாவதிப்
பேரணங்கைப் பகவனைக்காண்டரும் பெருமைபெற்றனை நீயெனமெச்சியே. ()
அலகிலின்பக் கடலிடைமூழ்கின ரன்றுதொட்டுச் செயதேவர்தம்மகத்
துலவிலன்புமேன் மேலும்வளர்ந்ததா *லுவாவைநேரு முவாவினைமானவே
யிலகுகீதகோ விந்தத்தைப்பூர்த்திசெய் தின்புடன்சக நாதனுக்கர்ப்பித்தே
யுலகர்போற்றிடு சீருடன்மேவின ரும்பர்தாமு முணர்தலின்மாட்சியார். (உஅ)

வேறு

காலமற்றதி லந்தநாடாட்சிசெய் காவலன்செயதேவர்
சீலமேவியற் கீதகோவிந்தநற் செழுந்துதிதனையோர்ந்துட்
சாலவுங்களிப் பெய்தியத்தகையதாத் தானுமொன்றிசைத்திட்டே
கோலமேவுதன் பாடலேயாவருங் கூறிடப்புரிந்தப்பால். (உகூ)
இந்தவாறுசெய் யாதவர்த்தண்டனை யியற்றுவனெனலாலே
பந்தமாநகர் மேவினரிறைசொற்கீழ்ப் படிந்தனரிசைத்துற்று
ரந்தவாறிய ருட்சகநாதன தடிதொழுமன்செல்கால்
விந்தைசால்செய தேவர்தங்கீதகோ விந்தமோதிமிக்கின்பாய். (௩0)
ஆடல்கண்டுமன் னவன்பொருணுகியே யந்தணநான்சொன்ன
பாடனீயங்கி கரித்திலதென்னெனப் பயமிகுத்தவர்போனின்
பீடமைந்தபா வோதினன்மாற்கியான் பேசுபாடலைப்போன்று
நீடகத்துவப் பளித்திலவதுகொடு நீத்தனனிசமன்னே. (௩க)
ஐயநின்னுளத் துறுவதேற்பரிட்சைசெய் தறிதியிப்போதென்ன
வையமன்னவ னிருவர்புத்தகத்தைபு மாயவன்முன்வைத்தே
மைபருட்டிரு மேனிமாதவபத்த வற்சலவிவைதன்னிற்
றுய்யநிற்குவப் பாவதைமேற்படத் துன்றவைக்குதியென்றே. (௩உ)
அன்றிராவினிற் பூசையாதியமுடித் தணிக்கதவடைத்தேகீழ்க்
குன்றிலாதவ னணைதருமுன்னரி கோயிலைத்திறப்பித்து
நன்றியைந்துளா ரியாவருமகிழ்வுட னுடிடச்செயதேவர்
மென்றிருக்காத் தமைத்ததைமாதவன் மேற்படுத்தியுமன்னன். (௩௩
தனதுநூலினைத் தாழ்த்தியும்வைத்திடு தன்மைகண்டிறைசால
மனதுளாகுலங் கொடுதளியகல்கிலான் மருவலுமரிமன்னன்
கனவின்மேவிநீ வறிதுதுக்கங்கொளேல் காரணசெயதேவ
னனகநூலிலெற் குவப்பளித்திடும்பொரு ளகிலம்யாவினுமின்றே. (௩ச)
மன்னநீயுமெற் கன்பனேநீயென்மேல் வழுத்திடுதுதிதானு
மென்னகத்துவப் பளிப்பதேயென்னினு மிணையில்சீர்ச்செயதேவன்
றன்னலத்தகைப் பாடல்போலுவப்பெற்குத் தந்திடாதிதனுனீ
யன்னவன்செய்பா டலைபுமோதுபுசெகத் தவரெலாஞ்சொலச்செய்வாய். ()

---

*உவா - பூரணை - கடல்,

மேயபுத்தக மிரண்டுமென்புகழையே விண்டவென்னினுமொப்பின்
றுயசிர்ச்செய தேவனென்றன்னைமுன் னிலைமையாக்கியேசொன்
னீயவன்றனூற் கண்டுலகோர்புகழ் நிலைமைகொண்டிடவிண்டாய்
தூயமன்னவ விரண்டுமொப்புடைத்தெனச் சொல்வதெவ்வகையானே. (௩௬)

உற்றமெய்ச்செய தேவனூனலமென வுன்னுளுன்னுதியேனீ
சொற்றநூலையங் கிகரிப்பேனுளந் துயரலையானென்னுங்
குற்றமேவினர் செயல்களெற்குவகையுட் கொடுத்திடாதனவாகுங்
கொற்றவாமொழி யாவையும்பிறப்பிடங் கொண்டுமேன்மைபவாமால். (௩௭)

கூரிருட்கிறை யாமுடுப தியகங் கொண்டுதிவாவூடே
சூரியன்றனை வென்றிடவடைந்துதான் றோற்றிடுசெயல்போலும்
வாரியால்விளக் கொளிபொருத்துநரிலு மன்னநீபுகழெய்தக்
கோரியிவ்வகை யாந்துயர்வறிதிவண் கொண்டுலேந்தனைமன்னே. (௩௮)

என்றுபற்பல விதஞ்செகநாதன்று னிறைகனவிடத்தோத
நன்றுநானறி யாமையிற்செய்தவிந் நவைபொறுத்தருளென்றே
யொன்றுறுந்துபி னீத்தரியடிபணிந் துவகையிற்றன்கோயில்
சென்றுநற்செய தேவர்கீதகோவிந் தஞ் செப்பயார்க்குஞ்சொல்லி. (௩௯)

தானுமோதின னிருந்துழியந்நகர்ச் சமீபமுற்றியவூரிற்
கானுவந்திடு காய்வகைவிலைசெயோர் காரிகையிரவூடே
மானுவந்திடு பூரணைத்தினத்தினில் வழுதுணைக்காய்கொய்வாள்
வேனுறுஞ்செய தேவர்செய்கீதகோ விந்தமோதியாண்டெங்கும். (௪௦)

சென்றுதன்றொழி லாற்றிடப்பத்தவ சீகரனவள்பின்னே
நன்றுறுஞ்சுவைப் பாடல்கள்கேட்டுட னடந்துறுசெயலாற்றன்
மின்றுதைந்தபீ தாம்பரத்தினை*வங்க மேவுமுள்ளவைபீற
வொன்றுமங்கைதன் வினைமுடித்திற்புக வுடையன்கோயிற்புக்கான். (௪௧)

வைகறைப்பொழு தணைதலுமர்ச்சகர் மன்னவனபிடேகஞ்
செய்கவென்றுதம் முடனுறவாலயந் திறந்துநோக்கியபோதின்
மைகவின்றமே னியன்கலைகிழிந்துறும் வண்ணமோர்ந்திரும்பூதுற்
றெய்கதிர்ப்படை மன்னனைக்கொண்டணைந் திருவிழிகொளக்காட்டி. (௪௨)

இன்னதோர்செய லெண்ணுதோறற்புத மிசைந்துளதிரவூடே
கன்னமாதிய வின்மையிற்சோரர்செய் கன்மமன்றுபிராந்தர்
சின்னவோர்குழ வியின்செயலென்றுநாஞ் செப்பவுந்துணிவில்லை
யென்னகாரணந் தேர்துமென்றன்புட னினியபூசனையாற்றி. (௪௩)

பற்பல்வாறுளஞ் சூழ்ந்ததுதினத்தன்ன பானமாதிகொள்ளாராய்த்
தற்பரன்பத நாடியாகுலத்தினுட் டளர்ந்தயர்ந்திடுகின்றார்
சொற்பனத்தின்மா றோற்றிநீர்துயர்சற்றுந் தோய்கவிரென்றுற்ற
†வுற்பனந்தனை யோதலும்வியப்புமிக் குறக்கநீத்தவர்யாரும். (௪௪)

* வங்கம் - கத்தரிச்செடி. † உற்பனம் - உண்மை.

தத்தமக்குறுங் காட்சிசொற்றொருத்தமை தரத்தின்மிக்குவந்தார்கள்
வித்தகங்கொண்மன் னவன்செயதேவர்காய் விற்குமின்னிவர்ச்சாலச்
சித்தமேல்வியந் தவட்குவேண்டியபடி திரவியமிகநல்கி
யுத்தமத்தகைக் கீதகோவிந்தநீ யுவப்புடன்செகநாதன். (சரு)

களிபொருந்திடத் தினமுமோதுதியெனக் கட்டளையிட்டேபின்
றாளிபொருந்துகண் ணொடுசெகநாதனைத் துதிபுகன்றடிபேணித்
தெளிவுசால்செய தேவர்பாற்சென்றன்பிற் றெண்டனிட்டருண்ஞான
வொளியமைந்துளீர்க் கிணையெனவுன்னியா னுஞற்றுதல்பொறுத்தாள்வீர்.()

என்றுபோற்றிய மன்னவனுவப்புற வினியவாசிகள்சாற்றக்
குன்றுறழ்ந்திடு புயங்கொண்மன்களித்தனன் குலவரண்மனையெய்தப்
பொன்றுதைந்தமார் புடைச்செகநாதனற் பூசனைபுரிந்தன்பி
னின்றுதித்திரள் பாடியின்பக்கட லிடைப்படிந்தனர்வாழ்ந்தார். (சஎ)

அன்னகாலத்தி லன்னவர்சீடனா யவிர்தருமொரு நாய்கன்
மன்னருந்தவஞ் சால்செயதேவர்பான் மருவியன்புடன்போற்றித்
தன்னகர்க்கழைத் தேகினானன்குப சாரபூசனையாற்றிப்
பன்னருங்களிப் போடொருமதிமனைப் பாலமைந்திடவேண்டி. (சஅ)

தினமுஞ்சற்குரு நாதனைப்பூசித்தோர் தினத்தினிற்றேர்மீதிற்
கனகம்வத்திரா பரணங்களமைத்தருட் கவின்மலிசெயதேவர்
வனசமாமலர்ப் பதந்தொழுதுமைமற வாவரநல்கீரென்
றனகரைத்துதித் திடவவற்கருள்புரிந் தணைந்தனர்தேர்மீதே. (சகூ)

வணிகனன்னகா லையினிற்றேர்கடவிடு வலவன்பாலுரைக்கின்றா
னணிகொளின்னவர் பொருணசையற்றவ ராதலினிவரின்மேய்க்
கணிதமில்பொரு ளோடிரதத்தையுங் கனிவில்விட்டடியேன்றன்
பணிவைச்சற்குரு தேவியர்க்குரைத்திவண் படர்திவல்லையிலென்றே. (ருO)

விடையளித்தருட் சற்குருபோந்திசை மிக்ககாதலிற்றாழ்ந்தா
னிடைவழிக்கண்போய்ச் சாரதிதனக்கொர்கா ரியமிருப்பதென்றோதித்
தடையிலாதெனக் கருள்விடைதருகெனத் தவவிரந்திடத்தூயர்
நடைகொளென்றுதாங் தனிச்செலவழியிடை நண்ணினாரொருநால்வர். (ருக)

கோரமிக்கபே ருருவுடன்படைக்கலங் கொண்டகையினராகித்
தேரதற்கிருபுறமருவலுமவர் செய்கையுட் டெளிந்தோராய்ச்
சாரமாதுரி யச்சொற்கொடெங்ஙனஞ் சாருவீரெனக்கேட்டுச்
சோரர்சாற்றுபொய்ம் மொழியுணர்ந்தவனிமேற் றூயவர்தாமேவி. (ருஉ)

வித்தமீங்கிவற் றையுங்கொடாருயிர்க்கிடர் விளைக்குமுனிவர்கட்கே
தத்தகன்றிடத் தத்தமாக்கொடுத்துநாந் தப்பிடனலமென்னச்
சித்தமேனினைந் துத்தமர்கொள்ளுதிர் தேரையுமெனக்கேட்டோ
ரெத்தனீங்கிவன் றனைவிடினம்முயிர்க் கிறுதிசூழ்குவனென்றே. (ருங)

ஏதிலாரெனச் செல்பவர்க்கொன்றிட வெண்ணினருகுற்றே
நீதிமாதவ னருளினுற்கழல்கர நீக்கியோர்புதர்ப்பாலிட்
டுதியம்விடுத் தேதமேகொளவந்தா ரொருவிடச்செயதேவர்
வாதிடும்புலக் குரம்பையாமுடலபி மானம்விட்டவராகி. (ருச)

ஆதிமூலமா யவிர்சகநாதன்பொ னடிகளைத்தமதுள்ள
மீதிருத்திமெஞ் ஞானவானந்தவே லையிற்படிந்தனரன்ன
போதினிற்கிர வுஞ்சநாமம்புனை புரவலன்வேட்டஞ்செய்
தோதிமிக்கவர் பாலணைந்தவர் நிலை யுணர்ந்துவிம்மிதனுகி (ருரு)

ஞானமிக்கமைந் தீர்க்கிதுசம்பவ நவிற்றினுரெவரென்ன
வீனமிக்கவென் றீவினையென்றல்கேட் டிதயமேற்றுயர்கொண்டே
யானமீதவர்க் கொண்டுதன்னுட்டிடை யெய்திமிக்குவப்போடுந்
தானலாற்றனக் கிணையிறேசிகர்பணி தன்கரங்கொடுசெய்தே. (ருச)

மிக்கசீர்ப்பது மாவதிதன்னையு மேவிடப்புரிந்தேந்தல்
பொக்கமின்றிய வன்பின்யானும்பதம் போற்றுநன்னலம்வாய்ந்துந்
துக்கமிக்கவிச் செயல்செயேனுந்திருத் தொண்டுசெய்திடும்வண்ணந்
தக்கபேரரு ளீர்பணிப்பீரெனச் சாற்றுவர்செயதேவர். (ருஎ)

மாதவன்பதத் தன்புசான்மாதவர் மலரடிக்குற்றேவ
னீதகப்புரிந் திடுவையேலன்னதென் னெஞ்சுவப்புறச்செய்யும்
போதநீமுய லென்னமன்னந்தவா புரிந்தனனிதுகேட்டுப்
பாதகர்க்கர சாகினர்பொருள்கொளப் பரமபாகவதர்ப்போல். (ருஅ)

வெளிகொள்வேடரா யணைந்தவர்க்காண்டலு மிக்கசீர்ச்செயதேவர்
களிகொணெஞ்சுடன் பலவுபசாரமுங் கண்டுளன்புடனின்பத்
துளிகொள்கண்ணரா யுடன்பதுமாவதித் தோகையையழைத்தின்னோர்க்
களிகொள்சிந்தையோ டறுசுவைப்போனக மருத்துதிகணத்தென்ன. (ருகூ)

அந்தவாறமைத் திடுதலும்பாவிக ளயின்றனரதுகாலை
குந்தவேற்கா மன்னவற்கூவிடக் கொடியவர்மிகவாடி
யந்தமார்கொலைப் படுமவர்தமக்கர சளித்திடுகொடைபோலு
மிந்தவோருப சாரமென்றெணிவலை யிசைந்தமானினையொத்தார். (கூ0)

செம்மைநற்றவத் தினர்தம்வாய்திறந்துமெய் செப்புவரெனின்மன்ன
னம்மையெவ்விதத் துங்கொலைசெயுமென நடுநடுங்கியேநாஞ்செய்
வெம்மையார்கொடுந் தீவினையேயிவண் விடுத்ததென்றுளஞ்சோர்ந்தா
ரெம்மையுந்துய ரேகொளத்தம்முயிர்க் கிகலமைந்துறுதீயோர். (கூக)

பொருவிலாரழைத் திடுதிறமொற்றர்போய்ப் புகலலும் பொருக்கென்ன
நிருபன்மேவித்தாள் பணிந்துமுன்னின்றிட நிகழ்த்துவரிவணம்பா
லருளினெய்துமிப் பரமபாகவதர்க ளடியனேன்குருவன்ன
பெருமையாளர்க ளிவர்பணிபுரிந்தடி பேணுதியெனப்பேச. (கூஉ)

அரசன்மெய்ச்செய தேவர்கட்டளைக்கிசைந் தளவறுமுபசாரத்
திரள்களாற்புபு பூசைசெய்தேயவர் திறமனத்திடைநாடிக்
கரவர்வஞ்சகர் வன்கொலையாளரிற் காணுகின்றனரென்னக்
குரவர்ஞானிக டிறமிதென்றெவர்களே குறித்தறிதரற்பாலார். (சுஙு)

நல்லரென்னவு மல்லர்களென்னவு ஞாலமீதினிலெல்லாம்
வல்லரென்னவு மில்லர்களென்னவு மருமனைபலர்த்தோயு
மில்லரென்னவுந் துறவர்களென்னவு மிலங்குவாரவர்சீலஞ்
சொல்லவல்லன்யா னல்லன்வான்கலைகளின் றொருகுதியுமற்றுமால். (சுச)

தறையின்மேற்றம திச்சையின்படியெங்குஞ் சரித்திடுமவர்தம்மை
யிறைவரீயுன தகம்விடுத்தகல்கிலா திருந்திடப்புரிநீராற்
சிறையிற்பட்டவர் புட்கள்போலாகுலஞ் செறிந்தனரவருள்ள
நிறைவுபட்டிட வேண்டிய வளித்தனேர் நெஞ்சமொத்தனுப்பென்ன. (சுரு)

சென்றுமன்னவ னவரைவந்தனைத்தொழில் செய்தருட்குன்றன்னீ
ரொன்றுமென்பணி கொண்டுவப்போடிவ ணுறைதிரென்றிடவஞ்சர்
நன்றுமன்னநின் குறைவின்மெய்ப்பணிக்குள நனிமகிழ்ந்தனமேனுந்
துன்றுமெம்மதென் ணம்படிவலம்புரி தொழிலுவந்ததான்மாதோ (சுசு)

எமக்குநீபுரி பணியின்மிக்கதுவிடை யீவதேயெனமன்ன
னுமக்குளாவலாம் பொருளெவையளிப்பன்யா னுவன்மினென்றிடக்கேட்ட
தமக்குணம்பெறு கள்வர்கடேர்நிறை தமனியமருளென்ன
விமக்குன்றேயிர தங்களிற்பொன்னிறைத் தேவுவாரையுமீந்தான். (சுஎ)

செவ்விமற்றத னிற்கரவடர்செய தேவர்பால்விடைகொண்டே
யொவ்விலாதபே ருவகைமிக்கின்றுநம் முயிர்பிழைத்தனமென்னத்
திவ்வியத்தகைத் தேரிலூர்ந்தேகுகாற் செலுத்துநர்செயதேவ
ரிவ்விதம்பட யார்க்குஞ்செய்திலர்நமக் கியற்றியதேதென்ன. (சுஅ)

என்னுண் மேயவா ருயிரைக் கற்பாந்தத்தும் யான்விடேனெனுமாற்றம்
பன்னுமான்றவா யுடையபாழ்நிரயத்தின் பாற்புகுத்திடுதா
மன்னுதீவினை தருங்கொடுங்குணத்தைத்தம் மதியெனக்கொண்டார்தம்
* வெந்நுறுஞ்சனி யசைத்தலினிவ்வகை விள்ளுகின்றனரந்தோ. (சுகூ)

கன்னடப்பெரு வேந்தன்பாலியாமுறுங் காலையிலிவனெப்பி
னன்னலக்கவி பலநிருபன்மிசை நவின்றுவந்திறைவன்பால்
மன்னுறத்தகு தகுதியின்மையின்மனம் வாடியோர்பிரபில்விற்
சொன்னம்வவ்வலிற் றெரிந்தவன்மன்சபை தோய்தரக்கொணர்ந்தானுய். (எ0)

மன்னவன்புடை யோதவேந்தறிந்திவன் மறையவனெனக்கூறச்
சொன்னமீந்தவ னிவன்பிராமணனன்று சோரனேயென்வீட்டிற்
கன்னமிட்டமை கண்டுநான்பிடித்துநங் கண்முனங்கொடுவந்தே
னென்னவோதமன் சினங்கொடுகுணுங்கன்பா லிவற்கொலென்றீந்திட்டான்.

* வெந் - பிடரி.

அன்னவேலையாங் குணுங்கன்பாலருளின லந்தணனிவற்கொல்லேன்
மன்னயற்கொணட் டுய்த்திறையவன்றன்னோர் மனத்தினம்பிடும்வண்ண
மின்னவன்றனே ருறுப்பினைக்கொய்துகாட் டிடுதியென்றிசைத்தோமிபாஞ்
சொன்னவாறிவன் கழல்கரந்துணித்தனன் றோன்றலுக்குணர்த்துற்றான். ()

தன்னதாருயிர் காத்திடுந்தகைமைக்குந் தன்சரித்திரமன்பா
லின்னவாறெனவ யாஞ்சொலாதிருக்கவு மெண்ணியிவ்வகைசெய்தா
னென்னவோதலும் பொறைப்புவிதானுந்த னிதயமேல்வெகுண்டைதிற்
பன்னலானபா விகள்பிலத்தேதபுகப் பக்குவிட்டதுமன்னே. (எ௩)

பாவர்பாதலத் தமிழ்ந்திறத்தேர்விடும் பாகர்மாய்குதலின்றித்
தேவதேவன நாரணக்கடவுடன் றிருவருட்செயலுன்னி
யாவதியாஞ்செயற் பாலதென்றறிகில ரிரங்குபுபதைப்புற்றுக்
காவலற்குரைக் குதுமென்றோடினர்செய தேவர்பாற்கழறுற்றார். (எ௪)

செப்புசொற்செவி புகுந்திடுமுன்செய தேவராற்றலாகி
யப்புகுத்திட விணைவிழிவாய்புடைத் தலறித்தங்குறைகைகட்
பப்பூமிசை யெற்றியேகறங்குபிற் படவுருளுபுசெந்நீர்
கொப்புளித்திடச் சென்னியைமோதினர் கோவிந்தற்றுதிக்கின்றார். (எ௫)

தகைகொணாரண கேசவபத்தவற் சலமுகுந்தாவேதச்
சிகைகொடாண்மல ராலுலகளந்திடுஞ் செல்வவாவிகண்முற்று
மிகைகொள்பேரரு ளாற்புரந்திடுகொண்டன் மேனியாயெனக்குற்ற
பகைவராயினர்க் கீழுலகத்துறப் பண்ணிடன்முறைதானே. (எ௬)

ஆதிமூலமே யென்றுனைக்கூவிய வானையைப்பிடித்திட்ட
தீதியைந்தக ராவைக்கொன் றுன்னருட் டிருவைகுந்தஞ்சேர்த்தாய்
வாதியைந்துநின் னேடெதிர்த்தமர்செய்த வல்லரக்கருக்கெல்லா
மீதியைந்தநின் பதமளித்தாண்டருள் விதிமறந்தனைகொல்லோ. (எஎ)

செம்மைபெற்றநின் னன்பனன்றேகொலியான் றீயவெற்கிடர்செய்தார்
தம்மைமேலுல கெய்தவிட்டிடலியற் றன்மமன்றென்றோதா
னம்மையப்பநீ யவர்க்கருள்கின்றிலை யருள்கிலையெனில்யானும்
வெம்மைமேயகீ ழுலகடைவேனென மிகத்துதித்தயர்போதில். (எஅ)

கருணையங்கடல் பாற்கடன்மேலறி கண்படைகொடுநீல
வருணமால்வரை வரையிசைபொழிந்திடு மணிமுகிலன்பென்னு
மருணனாழ்த்துகண் ணம்புனம்புயத் தலர்மகள்குபமாகுந்
தருணமாமலர் சூட்டினேன்சூட்டினோர் தமக்கருளருள்வள்ளல். (எகூ)

மருவினுட னேசெயதேவர்க்கு மனத்துளோகையுங்கஞ்சம்
பொருகரங்களுந் தாள்களுந்தோன்றின பூரியர்பிலநீங்கிப்
பெருகொளித்திரு விமானமூர்ந்தமரர்தேன் பில்கலர்மழைபெய்யக்
கருவியைந்துமிக் கொலித்திடவானிடைக் கலந்துவாழ்ந்தனரம்மா. (அ0)

வந்தமாதவன் மாதவப்பெரியரை மார்புறத்தழீஇயானென்
சிந்தைமீதள வறமகிழ்ந்தனனின்னோர் செய்கைகண்டுனையொப்பா
ரந்தரத்தினு மில்லையென் றுவகைமிக் காசிகள்பலசாற்றிக்
கந்தரத்தின்மின் மறைந்தெனமறைந்தனன் கந்தரத்தினையொத்தோன். (அக)

ஆனபான்மைகள் கண்டமன்னவனுளத் தளவில்விம்மிதமுற்றே
ஞானநாயக வுமையலாதுறவினர் நண்ணலாரொரு
மேனலம்பெறப் புரிநரைமண்ணல விண்ணகத்தினுங்காணே
னீனனேனுமக் கடிமையாநலம்பெற்றே னெனக்கொருகுறையின்றே. (அஉ)

என்றுபற்பல விதம்படத்துதித்துமுன் னியன்றகாதைகள்கேட்டுத்
துன்றுசோகமும் வியப்புமெய்திடக்குரு துணையடிதொழுதன்போ
டொன்றுதன்னரண் மனையடைந்தகத்தெழு முவகையான்மனைசேயர்
நன்றுதோயமைச் சர்களிடம்விண்டின்ப நாலைமூழ்கினனாகி. (அங)

கொடியபாவிக ளென்றுசோரர்கடமைக் கோபித்தேனவரெற்கு
நெடியபேருப காரிகள் குருவைமுன் னேர்ந்திடக்காட்டிப்பின்
னடிகடன்மையும் விளக்கினரியானவர்க் காற்றியபணிதன்னாற்
படியில்பேறடைந் திட்டனனென்பெரும் பாக்கியம்யார்பெற்றார். (அச)

சாதுசங்கத்திற் சிறந்ததாம்பேறென்றித் தரணிவிண்மிசையில்லை
மீதுவேடமிட் டணைந்துளார்களுமன்றோ மேலவர்விழிமுன்மேய்க்
கோதுதீரியற் பரமபாகவதராக் குறித்தவோர்தகைதன்னாற்
றீதுதீர்கதி பெற்றனரெனிலன்பர் சேர்கதிசொலற்பாற்றோ. (அரு)

இனியென்கண்ணிவர்த் தெரிசனஞ்செய்கவென் னிருகை கூப்புதலாக
கனிவொடென்மன நினைகவாய்துதிக்கவென் கால்வலஞ்செயலாக
மனிதசன்மமேய்க் கிடும்பயனிதுமுதன் மருவினேனெனமன்ன
னனிவியந்தனன் விதந்தனன்குருபரர் நற்பணித்தலைநின்றே. (அசு)

மனதுவப்புடன் றனதுபாரியைப்பாது மாவதிபணிசெய்தி
யெனவுரைத்தவ்வா றியலுநாளொருதினத் திறைபுறவாமன்னன்
றனதுநாளுலக் திறந்திடமனைவியுந்தழலின்மூழ்கிடச்சென்று
ளினசெயற்றெரிந்திறைமனையவள்கற்பி னியல்பினைவியந்தோத. (அஎ)

பெருமைசால்பது மாவதிபாசண்டப் பிரவிர்த்தியீதன்பா
ருமைநாயக னிறந்தபினுபாயங்கொ டாவிபோக்கிடுந்தன்மை
மருவுதுலபங் தத்திடம்பங் கற்பாவழுத்திடப்படாதன்ப
னொருவல் கேட்டுளத் துற்றசோகாங்கியா லுடறகித்திடலாகும். (அஅ)

என்றுமெய்ப்பது மாவதிசாற்றக்கேட் டிறைமனையிறும்பூதுற்
றென்றுமிம்மொழிப் படியியற்றுநர்களு முளார்கொலோவெனப்பின்ன
ணன்றுறப்பரீட் சித்தறிவாயென நவிலுபுதலையன்பு
துன்றுவாடனின் மேவினளிங்ஙனந் தொலைந்தனசிலநாள்கள், (அகூ)

ஒருதினத்திறை வனுஞ்செயதேவரு மொப்பில்சீர்ச்செகநாதன்
மருமலர்க்கழல் பணிந்திரவினுமனை மருவிலிருந்திட்டார்
தருணமற்றதி விறைமனைபுகல்பது மாவதிதன் வாய்மை
தெருளவெண்ணின ளழைத்திருவிழிகணீர் சிந்திடக்கலுழ்ந்தோதும். (சுo)

றென்னல்காறுமே யான்குருபரர்தமை நேரினிற்றரிசித்துப்
பன்னலாமுப தேசவாக்கியங்கொளும் பாக்கியம் படைத்துற்றே
னின்னலீதலா லும்மதுதுக்கமோர்ந் தெவ்வணஞ்சகிப்பேனுன்
மன்னனேடுநேற் றேகினரின்றுமான் மலரடியடைந்திட்டார். (சுக)

என்றுபூங்குழ லவிழ்தரமார்பிற்ற னிருகரங் கொண்டெற்றிக்
கன்றுநெஞ்சின ளாகிச்சேவகன்பகர்ந் தாளெனக்கரைந்தோத
நன்றுசால்பது மாவதியாவென நவின்றுமற்றுன்றே தாண்
மென்றுணர்ப்பொலங் கொம்பனுள்பார்மிசை வீழ்ந்துதன்மெய்நீத்தாள். (சுஉ)

விழுந்திடுஞ்செயல் காண்டலுமிராணிபோய் மேலெழுமுயற்சித்தா
ளெழுந்திலாளிறந் தமையுணர்ந்தச்சமிக் கிரங்கினளிதுதேறிக்
கொழுந்துவிட்டெழு துயர்கொடேனையர்களுங் கூண்டிரங்கிடுகாலை
செழுந்திருச்செக நாதர்சேவடிதொழச் சென்றவரவண்மேவி. (சுந)

அணவுசம்பவ மேதெனவினவமன் னவன்மனைநடுக்குற்றே
மணநிலாம்பது மாவதிமுன்றன்பால் வழுத்தல்சொற்றிவடானக்
குணமமைந்துளாள் கொல்லெனச்சோதனை குயிற்றினனிறந்திட்டா
ணிணநிலாவுவே லோயெனத்தான்புரி நிகழ்ச்சியாவையுஞ்சாற்ற. (சுச)

மன்னன்விம்மித முடன்கடுஞ்சினமிக மருவிநீவறிதேபொன்
னன்னசீர்ப்பது மாவதிதன்னதா ருயிரகற்றினைநாத
ரென்னவாறினி யிருப்பர்மற்றவர்முக மெவ்விதத்தியான்காண்பே
னின்னன்மற்றது காண்கிலனுருயிர் யானுமீங்கொழிக்கின்றேன். (சுரு)

பின்னைநீசிறி தச்சமற்றுன்னுளம் பெட்டவாசெய்யன்றி
புன்னைநான்வதைத் திடுவனேற்பெண்பழி யொன்றுமென்றயர்வொன்று
மன்னைமெய்ச்செய தேவர்பார்த்திறைவநின் மனைவிநிரபாதி
தன்னைநீவெறுத் திடல்வியந்தோர் பொய்யே சாற்றினள்பிறிதின்றே. (சுசு)

ஓதலாந்துய ரொன்றடியாரிடை யுறுதருள்செயக்கார்நேர்
மாதவன்கரத் தைம்படைகொண்டுறும் வண்மையுன்னுளத்தோர்ந்தும்
பூதலத்துறு நாத்திகர்போன்மனம் போந்தவாபுகன்றிட்டாய்
போதமெய்ச்சக நாதனைத்துதியெனப் புகன்றருட்செயதேவர். (சுஎ)

வீணைதந்திருக் கரங்கொடுகீதகோ விந்தமன்புடன்பாட
வேணையிற்கிடந் தாற்றுசேய்க்கிரங்குதா யெனப்பொருதுலகெல்லா
மாணையிற்புரந் தருள்செகநாதன்மெய் யருளினாற்செயதேவர்
நாணையேய்ந்தவிர் களத்தினுளெழுந்துட னவிற்றினளருட்பாடல். (சுஅ)

ஆனவற்புதக் காட்சிகண்டவரெலா மளவில்விம்மிதராகி
ஞானமிக்கபே ரருட்செயதேவரை நலங்கொள்கற்புருவாளைத்
தேனளாவுபன் மலர்சொரிந்தன்பினிற் றெண்டனிட்டறியாமே
யாநவிற்றுகுற் றம்பொறுத்தாடிரென் றவர்சொலாசிபெற்றிட்டார். (கூகூ)

பின்புசில்பக லிருந்துமன்னிடம்விடை பெற்றருட்செயதேவர்
கொன்புணர்ந்ததம் மாச்சிரமத்தின்பாற் குறுகினரிதனலே
பொன்புணர்ந்திடு மாதவன்றிருவடி பொருந்துபத்திமைதானே
தென்புகாதருண் மிருதசஞ்சீவினித் திருப்பெயருடைத்தாமால். (க00)

வேறு

வியாசர்தங்கலைகொண் டுறுசெயதேவர் விருத்தராகியுந்தினம்புரியு
நியாயசௌசாதி கிரியையுளொன்று நீவிடாராகி நாடோறும்
வயாவுடன்பாகீ ரதிப்புனலாடி வந்திடும்வழக்கம்வாய்ந் திருந்தார்
தயாளரோர்தினங்கங் கைக்கிடையிடையே தங்கியேகினருடற்றளர்வால். ()

சென்றுநீராடிச் சிறிதருந்தினராச் சிரமமேவினர்சிரமத்தாற்
பொன்றுநர்தம்மிற் கிடந்திடக்கண்டோர் புனன்முகத்தமைத்துறுசோபங்
குன்றுறப்புரியு மவ்வமையத்திற் கொற்றவன்புனல்படிந்துற்று
னன்றுறுசெயதே வரைச்சிவிகையின்மே னண்ணுவித்தவரிடஞ்சேர்த்தே. ()

மன்னவன்செயதே வர்க்குரைக்குவனும் வடிவமெத்தவுந்தளர்ந்ததுதா
மின்னமும்பாத சாரியாக்கங்கைக் கேகலிர்யானம்யானீவேன்
மன்னமற்றதிலூர்ந் தேகுதிரென்ன மறுத்துநான் கானடைகொண்டே
யன்னமார்கங்கை யாடுசங்கற்ப மமைந்துளேன்றடைசெயேலென்ன. (க0ங)

அரசனஞ்சுபுசே வடிதொழுதேத்தி யரண்மனையடைந்தனனற்றை
யிரவினிற்கங்கா தேவிவெண்கலைவாய்ந் திலங்குசெம்பங்கயமலர்தன்
கரமிசைக்கொண்டு மன்கனவினிலக் கடிநகர்மறையவர்கனவி
லுரமுடன்குலவி யான்செயதேவ ருற்றவாச்சிரமஞ்சார்குளத்தில். (க0ச)

பரிதிதன்னுதயத் தணவனீர்மேவிப் பார்மினும்முளத்தையமறவே
விரிமலரிதனை யென்னுடன்றேற்று வித்திடுவேன்செயதேவன்
பிரியவென்பத்த னவன்மனவிரதம் பின்னமுறுதிஙன்செய்வே
னுரியவன்னவனக் குளத்தின்மூழ்கிடிலென் னுட்படிந்திடுபலனுறுவான். ()

ஐயமிக்குடையார் தேர்தரவின்னு மறைகுவனோர்குறியறிமின்
செய்யசீர்ச்செயதே வன்குளித்திடுமச் செவ்வியிற்குட்டரோகமுளான்
றுய்யவக்குளத்தின் மூழ்கிடின்வல்லே தூய்மைபெற்றிடுவனென்றேத
வுய்யறிவுடைய ருடன்றுயிலொழிந்தே யுற்றசொற்பனகலமுன்னி. (க0கூ)

கிராமமுற்றவர்கள் யாவருந்தவச்சீர் கிளர்செயதேவரின்மேவிப்
பராவியுற்றிடுசொற் பனமுரைத்திட நும் பாக்கியம்பதுமைபொத்திடுசீ
ருராவியற்பாகீ ரதிதனைக்கண்டீ ருலகமாதாவுக்கீதரிதோ
சுராசுரர்தாமும் பணியுமன்னவட்குத் தூல்லபமாஞ்செபவின்றே. (க0எ)

ஆதலாலிந்தக் குளத்திடைவருத லமையுமென்றே நியுற்றிடுகாற்
பூதலம்புரப்பான் மனைமகாரோடும் புனல்குடைந்திடுவ தற்கான
சாதனத்துடன்பா கீரதிபதுமா வதிசயதேவர்பூசனைக்கா
மேதகுபொருள்க ளுடன்கடிதங்கண் மிளிர்குளக்கரைமிசையுற்றான். (கOஅ)

மாதவச்செயதே வரும்புகழ்ப்பதுமா வதியுடன்வாநதிதன்னை
யாதரப்பூசை புரிந்துளத்தன்பி னகமருடணமறைசாற்றிக்
காதலின்மூழ்குந் ததியினிற்கங்கை களிப்புடன்வெண்டிரையெறிந்து
சீதளக்கஞ்ச மலருடன்றோன்றத் திரண்டுளோர்களிக்கடற்படிந்தே. (கOகூ)

வரநதிதன்னைத் துதித்தனரருட்சீர் வளர்செயதேவரன்பமைந்து
பரவுபூசனைசெய் திடவவணமைந்த பார்த்திபன்றான்குறித்துளவா
றாரமுடன்மூவ ரையுமர்க்கியாதி யுதவுபூசனையுளுற்றித்
திரமுறுகங்கை யினிலவருடனே திளைத்திட்டசித்திகள்பெற்றான். (ககO)

அதுமுதல்வாவி யிடைச்செயதேவ ரறல்படிந் திடுந்தொறுங்குட்டங்
கதுவினரணைந்து மூழ்கினரின்பங் கலந்தகன்றனரிடர்வறுமை
யெதுகடந் திடவேண் டுநருமெய்ப்பொருளை யெய்துமாவிழைந்தவர்தாமும்
புதுமைசாலதனின் மூழ்கியிட்டசித்தி பொருந்திவாழ்ந் திட்டனர்மாதோ. ()

தாணிவாழுயிர்யா வையுஞ்செகநாதன் றன்பதத்தன்புபெற்றுய்வான்
விரவுகாருணியம் பத்திவைராகம் விளங்குமெஞ்ஞானமுந்துலக்கும்
வரவியாசர்கலை பெறுஞ்செயதேவர் மனையுடன்மாலருள்வனசப்
புரணவானிடைச்சேர்ந் தனர்தமதருட்சீர் புலங்கொள்வார்களுநலம்பெறவே. ()

சுட்டிடச்சுடரும் பொன்னிலெந்தவிதத் துயரமெய்தினுந்துளங்காதே
தொட்டொருமூர்த்தி யைத்தியானித்துச் சுகமுற்றுவீட்டிற்றோய்குதிரென்
றிட்டுரைமறைச்சொற் கிசைந்துபாசனைசெய் திடுதவம்பெற்றவர்க்கெல்லாஞ்
சட்டமெய்ச்செயதே வரின்பெருஞ்சரிதஞ் சாட்சியாமிலக்கியமாதோ. (ககங)

துணிதனைமண்ணிற் பொன்னினைநெருப்பிற் றேய்க்குநர்தமைச்சுளிவார்க
ளணியுடைநலம்வாய்ந் திடாமைபோற்றனுவி லமைந்திடுதுரபிமானத்தாற்
பணிதருதெய்வ சோதனைக்கஞ்சிப் பதைபதைப்பமைந்திடுமவர்கள்
விணின்மகபதியு மெச்சிடத்தகுசீர் மேவிடலரிதரிதாமால். (ககச)

வேறு

வேதவியாசர் கலைகொடுபார் மீதிற்றோன்றிக் கீதகோ
 விந்தமிசைத்துத் தன்கைகால் வெட்டுங்கொடியோர்க் கருளியுயிர்
வீதலுறும்ப துமாவதியை மீட்டுக்கங்கை தனைக்குளத்தின்
 மேவப்புரியுஞ் சயதேவர் விறப்பவினையிற் றடித்திட்ட
வாதமுதன்மூ வரினுட்சி வாய்ந்ததேகந் தானெழிய
 வரினுஞ்சலியா துன்சரண வனசங்கருதும் வரமடியேற்
கீதல்புரிந்து பின்சோதித் திடினுமிசைநிற் கிசைந்திடுமா
 விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ககரு)

செயதேவர்கதிமுற்றிற்று

ஆ கவி ஙஎசஅ

முப்பதாவது

## ...தரசுவாமிகதி

வேதவியா சன்கலைகொண் மிக்கசய தேவர்கதை
யோதமதி லன்பரின முணர்ந்திடச்சற் றுரைத்திட்டேன்
மாதவன்மான் மியமுலகில் வழங்கவெளிப் படுத்தியருள்
சீதரசா மியின்சரிதஞ் செப்பவினித் துணிந்தேனே. (௧)

வேறு

சீதர னென்றுநாமந் திகழுரு மறைக்குலத்தோன்
சாதமுற் றிடுமூரன்னூற் றந்தமா தாபிதாபேர்
போதமுன் னூலிற்காணேன் புகன்றதா னலமுங்காணேன்
வேதமா றங்கமற்றை வியன்கலைகளுந்தேர் மிக்கோன். (௨)

இல்லறத் துறையிற்சின்னா ளியைந்துதற் கிணைந்தமாண்டோய்
வல்லபுத் திரர்கள்சில்லோர் வாய்ந்துமற் றதைத்துறந்து
மல்லலார் காசிமேவி மறைவிதிப் படிசந்யாச
நல்லறம் பெற்றுமாய னுண்மலர்ப் பதத்தன்பேய்ந்தான். (௩)

செப்புமற் றவனேயாருஞ் சீதர சாமியென்ன
விப்புவி யிற்கொண்டாட விலங்குவோ னங்கண்மேவிப்
பப்புசீர் மறைகள்பாரா யணம்புரிந் தயலோர்தம்பா
லொப்புமோர் பொருளும்யாசித் திடாநல முடையனானன். (௪)

வேறு

மருவும்பிரபஞ் சமெலாமரிதன் மயமென்றுதனுள் ளமதித்திடுவோ
னொருவைகலிலொப் பருபாகவகத மோதும்பொழுதுற் றவியாசமுனி
நிருமித்தகலைத் திரளின்மயமாய் நிகழ்வுற்றவவ்விண் டுவின்மான்மியநீ
தெருளுற்றனன்மிக் கவியங்தொருதன் சிந்தைக்கிடையிவ் வகையெண்ணிடுவான்

கரையற்றதுயர்ச் சமுசாரநெடுங் கடலைக்கடரும் படிகண்டிடுமோர்
புரையற்றியலம் பிபுரைந்திடுமிப் புனிதப்பனுவற் பொலிநுண்பொருளைத்
தரையிற்றனையொத் தியல்விற்பனருந் தாந்தேர்வரிதா கையினாலெவரு
நிரையுற்றிடவோ துதலின்றிநவ நீதத்தைவிடுத் துநெய்நேடினரே. (௫)

அரிநாரணகே சவனெப்பிலரு ளடியேன்மிசையுண் டெனிலன்புடன்யான்
விரியார்கலிசூ ழுலகோர்தருமா வியாக்யானமியற் றிடுவேனெனவே
பரிவோடுமனத் தினினைத்துமிகு பரிதாபமடைந் துறுமோரிரவிற்
பெரியோனதுசொப் பனமீதிலருட் பெறுபிந்துநன்மா தவன்மேவிவிள்வான்.

என்மான்மியமா கியபாகவத மினைதீருமெனன் பவுனிச்சையினிற்
பன்மானிடருந் தெளிவோடுதினம் பாராயணமே புரியும்படிநீ
நன்மாட்சியுடன் வெளிசெய்தியுனோர் நாவிற்பிழையொன் றும்வராதுலகூ
டுன்மாட்சியென்று மமுறுந்துணையு முலவாதெனவோ தியொளிர்ந்திடலும்.()

உடனேயருட்சீ தரசாமிவிழித் துலவாவுவகைப் பெரலிவோடரிதன்
மடலார்பதமன் பொடுபோற்றிடுமோர் மலிமங்களநீ டுசுலோகமுரைத்
தடலோடுதனித் தியகன்மமுடித் தல்லாதபதந் தொறுமல்கலு
மிடன்மேவுமருத் தம்வரைந்தெவரும் வியக்கும்படிமுற் றவியற்றினரோ. (௯)

அவிமுத்தநகர்க் கிடைவாழ்புலவோ ராருக்குமனுப் பலுமற்றவரிற்
குவிவுற்றமனத் தினர்தங்கள்கரங் கொடுகண்களிலொற் றிமையின்றுணையாற்
புவியிற்பொதியும் பொருள்கண்டவரிற் போதப்பொலிவுற் றியல்சீதரரை
விவிதம்படவேத் திமகிழ்ந்தனரிவ் விதமோர்ந்திடுதூர்ச் சனர்சிற்சிலபேர். ()

விரியன்பமைசீ தரசாமிகள்சீர் மிகைகண்டுசகிக் கிலாயவமே
சரியன்றிதுவென் றுதநெஞ்சிசையுந் தரமாருரைசெய் துலகோர்தரவே
பெரிதும்பிரசித் திசெய்தேயவரைப் பிழையொன்றிடநிந் தைபுரிந்தொருநா
னரியாகியபிந் துநன்மாதவனு லபமேவியனோர் களுசாவினராய். (௧௧)

விரவுற்றிடுநம் மதநூல்களெலாம் விமலன்றிருமுன் பமைவித்தினிதே
யிரவிற்கதவந் தனைமூடியெலா டியைவுற்றெதுவே யிறைவன்றனருட்
சரணத்திசைவுற் றதுமற்றதுவே தரமிக்கதெனச் சகமுற்றவுமே
பிரசித்திபெறப் புரிவித்தயல்கட் பிழைபட்டவெனு விடல்பெட்பெனவே. ()

சித்தாந்தமியற் றுபுசீதரர்தந் திருநூலுடனங் கடையப்புரிவான்
முத்தாந்தரவொற் றனையேவவனோன் முதியோர்வயின்மே வினனேதிடலு
மெய்த்தாந்தரெனக் கெனதாகியநூன் மேலாகிடவே ணும்விருப்பிலையா
லெத்தாந்தரமே விடினுஞ்சரியேயிறையேற்றதையேற்றமென்றேற்றிடுவேன்

நானங்கடைகின் றிலன்மாதவனு நண்ணும்பெரியோர் களுமொத்திடுதீர்
மானந்தனையன் பொடுகொண்டமைவேன் மறுவேனெனவோ துபுநூறரவே
வேனங்கதுதேர் தருதூதவர்பான் மேவிச்செயல்யா வையுமோதிடலு
மானன்றெனநூன் முழுதுந்திருமான் மகிவாளுடளந் திடுதாளமைய. (௧௪)

அன்போடுறுபூ சனைசெய்தமலா வரிநாரணபிந் துநன்மாதவனே
நின்போதனதாண் மிசைவைத்தனமா னிறைவுற்றபனூல் களிவற்றுளெல்லாம்
பொன்போலுனுளத் திடையோகைசொலும் புதுமைத்தகைமேயதைநின்பதமீ
தின்போடமைவித் திகல்பட்டவைமுற் றெறியப்புறமென்றுதுதித்தயல்போய்

நின்றாரதுகா லையிலோரொலிதா னிகழக்களிமே வினர்கோயிலுளே
சென்றார்கனிவோ டவணூடிடலுந் திருமேவியசீ தரர்நூறிருமான்
மென்றாளிடைமே விடல்கண்டவர்தம் மிசைமேயவரு மையனீவின்ராய்
நன்றாகியதிங் கிதுவென்றுளமே னனிமெச்சினர்நூ லைநமக்கரித்தே. (௧௬)

செறிபேரருணீ டியசீதராராச் சிரமத்திடைபுக் கவரைப்பணிவுற்
றறியாமையின்யா நுவனிந்தைகளும் மகமீதமையா தருள்வீரெனலும்
பொறிமேவியமார் புடையானடியே பொருளாகமதித் தவர்மற்றவர்சொற்
குறியாதிதுவுஞ் சரியாவதுமால் குயிலாடல்களென் றுநுவன்றிதனில். (௧௭)

சினமோகைநமீ தொருசற்றிலேநீர் சிந்தைக்கிடைதோ ணியசெய்திரெனக்
கனமேவியசீ தரசாமிநிலே கண்டன்புளநீ டுபுதொண்டர்களாய்
மனவோகையினே டவர்நூலினேயே வழிபாடுசெய்தோ தினர்காணிதனற்
கனவேய்புகழோ டிகழ்வானுலேவார் கனமார்திருமா லடிகாணலரே. (௧அ)

ஒளியார்கதிரா யிரநீள்சவிதா வுலகூடுசுமா வுறுமேனுநரு
வளியார்தரவே தருவாரிசவீ யவிழ்வாயலிமூ டிடல்போலடியா
ரளியாரெனமே வினுமாதவநீ டருளாரரிதா ளடியாரெனவோ
விளியாரரிதா ளடியாரெனவோ விளையாமலிரா திதுவாய்மையதே. (௧௯)

வேறு

போதுநாளையிற் சீதரசாமி பொருவருஞ்சுர மருவினராக
வாதுதோய்சரீ ரங்கொள்பிராத்த மாந்திடும்வினே போந்திடுதிறத்தான்
மீதுறுந்துயர் கொண்டுறுமேல்வை மேவுசீடனு மாதவப்பெயர்தோய்
சாதுதானிர வும்பகலினுமெய்ச் சலிப்பிலாமனுட் சொலிப்பமையன்பால். ௨௦)

அருகமைந்துமெய்ப் பணிசெய்தானிவ்வா றைந்துநாள்வரை மைந்துறுகுரவர்
பருகலின்றியுற் றனர்மறுநாளிற் பரிதிமேற்றிசைப் பரவைமூழ்கியபின்
மருவுமாதவன் றன்னிடமொருவன் வந்துன்றூதைதான் மரித்தவர்போன்றான்
பருவாற்கொடுன் றூய்தனித்தயர்ந்துன் பாலுரைத்தியென் றிடவிவண்படர்ந்தேன். ()

வல்லேயெய்துதி யென்றலுமபங்கி மாதவன்குரு மலரடிதாழ்ந்தச்
சொல்லேயோதியென் றந்தைவார்த்திகநோய் தோய்ந்துளான்மோகா லசியமிக்குற்றான்
றெல்லேமிக்கென்றூய் துணையிலளாகித் துனேவதாக்கலுழ்ந்தெனேயழைக்கின்றூ
ளெல்லேதீரருள் பொருந்தினிரவத்தை யீதமைந்துளிர் யாதுநான்செய்கேன்.()

இருக்கவுந்துணி வில்லேவிட்டகங்க னேகவுந்துணி வில்லேமத்தியினிற்
பெருக்கமார்துயர் கொண்டெனெஞ்சகந்தான் பீதிவாய்ந்ததா லீதியற்றென்றே
யருக்கனெத்துளீ ரருளிதிரென்ன வன்பபோதிநின் னனேதனித்தழுதாள்
வருக்கமார்துணே யொன்றிலள்பெண்பால் வயோதிகத்தளென் வயக்குவளந்தோ.

என்றுபற்பல விதம்படக்குரவ ரேகவோதலின் மாதவன்வல்லே
சென்றுதாதையைப் பரிசரித்திருந்தான் சீதார்க்கக்காற் போதருஞ்சுரந்தீர்ந்
தோன்றும்வன்பசி யும்பெருந்தளர்வு முறுதலாலெழுந் திடவுரமிலராய்க்
கன்றுநெஞ்சுடன் றெய்வமேயானிக் காலத்தென்புரி வேனெனக்கரைந்தார். ()

அன்னகாலையிற் றன்னடித்துணே த னகங்கொளாதுமிக் கிகழ்ந்தொழிவார்க்குந்
தின்னலாதிய வளித்தருள்கருணேத் திருவுருக்கொளுங் கருமுகில்வண்ணன்
றன்னதுள்ளமேற் சகிக்கலனுகித் தக்கமாதவ னெக்கவாண்டமைய
நன்னலங்கொள்வா ராரெனவினவ நயங்கொள்பத்தவற் சலனவின்றிடுவான்.

சாமிநும்மது சீடன்மாதவன்யான் றகைகொணும்மரு ளாலென்றூதைக்குத்
தோமியைந்தவன் பிணியொழிந்ததுநந் தூலமேவிய கோலநோக்கிடுவா
னுமிகும்விரை வோடடைந்திட்டே னுற்றலாவது சாற்றவேண்டுமெனத்
தாமியம்புவர் தளர்ச்சியும்பசியுஞ் சகிக்கிலேன்சணத் தமுதுநல்கென்ன.(௨௯)

விரைவினிற்புரிந் தளித்தனனுண்டி மிசைந்துகையலம் பிடவிலையெறிந்து
தரையைக்கோமயந் தெளித்துநின்றிடுகாற் சார்ந்திட்டானிச மாதவன்றிருடன்
கரைதலாயின னுடனணைந்தவன்மெய்க் கருணையாரியன் றிருவடிவணங்கி
வரைகொள்வன்பிணி நிலைமையெற்றென்ன மகிமைச்சீதரர் மனத்திடைவியந்தே.

மைந்தநீயென்னை யென்னுடனிருந்த வண்ணவாசியம் வழுத்திடத்துணிந்தா
யிந்தவேளையி னீயன்றேவெனக்கீண் டினிபபோனக மீந்திரட்சித்தாய்
பிந்தவொன்றறி கின்றிலனேபோற் பேசினுப்பிராந் தியெய்தினைகொல்லென்
றந்தமார்குரு வோதிடக்கேட்டோ னகத்துள்விம்மித மிகத்துதைந்தவனுப்.

ஒப்பிலீர்தம்பா லாசியமடியே னேதுவேன்கொலோ திடினுமித்ததியிற்
செப்பிடத்துணி வேன்கொலீங்கிதன்முற் சேர்ந்திலேன்மெய்சத் தியமெனவோதத்
தப்பில்சீடன்சொன் மெய்யுணர்ந்திங்கு சார்ந்துளான்பிந்து மாதவனேயென்
றெப்பியென்மிசை யித்தகுகருணை யுற்றுளாய்கொலென் றிசைத்திசைக்கின்றார்.

துச்சிலாமுட னுனெனமானந் தோய்ந்துவெம்பிணி துதைந்துழல்வேன்மு
னுச்சிதத்திரு மறைகளெட்டரிதா முபயதாட்புவி யுறுத்திடவடைந்து
செச்சைமாமலர் வாய்திறந்துனது சீடன்மாதவ னென்றமுதிட்டெ
னெச்சிலுந்தெளித் தாய்பரந்தாமா வீதுநின்முறைக் கிசைந்ததாமோ. (௯0)

என்றுபற்பல சீதரசாமி யிசைக்கக்கேட்டலு மிருந்தவச்சீட
னன்றுநன்றருண் மாதவவடியே னண்ணுகோலமு நலங்கொணின்னுள்ளத்
தொன்றுமாறுபெற்றனனுய்ந்தேனென்ன வுவந்துதோத்திரித்துற்றனன்சாமி
யன்றுதொட்டியற் பலமடைந்திட்டா ரன்னசீருணர்ந் தனைவரும்வியந்தார்.

யாவுமால்வடி வென்றுளங்கொண்டா ரின்னலுற்றரியென் றிரங்கிடலு
மாவுரங்கொளெம் மானடைந்தன்ன மாந்தநல்கிநல் வாழ்வளித்திட்டா
னீவுபொய்ப்பொருள் களைப்பொருளாக நெஞ்சிலுன்னுவார் நீடுயர்கொண்டு
சாவுநாளரி யென்னிலப்பெயர்தோய் சண்டனல்லதார் கண்டிடவருவார். (௯௨)

இன்னவாறிய லுளிற்சீதரரை யினியயாகமொன் றியற்றுநனழைக்கத்
தன்னதூரமுற் றுளதலஞ்சார்ந்து தந்ததக்கிணை யாதிகைக்கொண்டு
நன்னலங்கொடந் தானமேவிடுவா னண்ணுகாலதை நாடியேகள்வ
ரன்னவற்றைக்கொள் வானடைந்திட்டா ரஃதுணர்ந்தருட் சீதரானுர். (௯௩)

விறல்குலாவிரா மகவசந்தன்னை விளம்புபோதில்வில் லம்புகொண்டுடனே
திறல்குலாவிரா மனுமிலக்குவனுஞ் சீதரப்பெயர் மாதவர்மருங்காய்
மறல்குலாவிய கள்ளரைவெருட்டி வந்திடுந்திற மந்திரர்காணு
வறல்குலாம்வினை பெற்றிடுங்கள்வ ரவரருட்கொண்மே னியிலகமகிழ்ந்தே. ()

பொய்ப்பொருட்கள வாற்றிடுந்தமது போத நீத்தருட் சீதரர்தம்மை
யெப்பொல்லாங்குஞ்செய் திலரவர்வடிவத் தியைந்தசௌந்தரியத்தினைக்கண்டே
துப்பொடன்னவர் பிறகுவந்திடலுஞ் சுவாமிதந்தவச் சாலையிற்றேய்ந்தா
ரப்பொருட்கள வாளிகள்பின்னு மகன்றிலாரணைந் தோருடன்மறைந்தார். ()

கள்ளர்பேரருள் வீரர்தம்வடிவங் காத்தலும்பெருங் கவலையுற்றவரா
யுள்ளமேலவர் விரகமிக்கன்ப ருடையவாயில்விட் டொருவிலரிருப்ப
விள்ளரும்புகழ்ச் சிதார்கள்ளர் விலகிலார்நீட்டித்திருந் திடல்கண்டே
மெள்ளநீயிர்கள் யாவரென்னுடனே மேவினீர்களன் றேநெடிதிருந்தீர். (௩௬)

காரியங்களே தேனு முண்டோநீர் கலந்திங்ஙன்வசித் திடக்கருதினிரேற்
சீரியைந்தவிற் பாலடைதிரெனச் செப்பக்கள்ளர்கள் செப்பிடுகின்றார்
நீரியைந்தவிவ் விடத்துறுநசையெங் நெஞ்சிலில்லையா னும்முடன்போந்த
வீரியச்சுகு மாரரைக்காண்பான் விரகமிக்கடைந் தேமடியேமே. (௩௭)

விழிவிருந்தென வந்தவர்தாமெய் வெண்மையும்பசு மையுமுடையவர்கை
யுழிவில்லம்புகொண் டிருப்பவர்காண்டோ றுவட்டுறுச்சவுந் தரியமிக்கவரா
லொழிவுறுதவர் மீதியாம்விரக முற்றுளோமின்ன மொருமுறைகண்டெந்
தொழின்முயன்றிடச் செல்கின்றேமென்னுஞ்சோரர்தம்மொழிசிதார்வினவி.

விளம்பலென்னைநீர் சாற்றிடுஞ்சொற்கண் மிகவும்விம்மித மாயிருந்தனவால்
வளம்படுஞ்சத்தி யச்சொற்களோநீர் வருத்தலெப்பதி யீர்வினையாதியார்
சளம்படாதுரைக் குதிரெனில்வீரர்த் தரிசனம்பெறப் புரிவனென்றோத
வுளம்படுங்களிப் புடன்றமதுண்மை யுத்தமன்கொள வுரைத்திடுகின்றார். ()

கள்ளர்யாம்பிரா மணகுலத்துதித் தோங்கவின்றவத் தொழில்விட்டிருங்கானத்
துள்ளமைந்துசோ ரத்தொழில்புரிந்தே யுதரவெம்பசி யொழித்திடுகின்றே
மெள்ளநுங்கரப் பொருள்பறித்திடப்பின் மேவுகான்மற்றவ்வீரரைக்கண்டே
யுள்ளமஞ்சிநும் பின்னுற்றேமும்மை யுபத்திரஞ்செயா மையுமதுகொண்டே.

மனையுட்டாம்புகு தலுமவருட்போய் மறைந்துவிட்டன ரெனவழுத்திடலும்
வினையில்சிதா சாமிமற்றவரை விரைவிற்பார்மிசை விழுந்துதாழ்ந்தெழுந்தே
நனையவின்பநீ ராற்றமதுடல நனிவியந்துநீர் தன்னியரென்ன
வனையர்சாமிநீ ரென்னெமைப்பணிந்திட் டளவறப்புகழ்ந் திடுகின்றீர்மன்னே.

தாமறைந்தசொற் பலித்திடவீரர் தம்மையாந்தரி சித்திடக்காட்டீர்
மாமகத்துவத் தவத்திரென்றிரப்ப வகுப்பர்சிதார் மற்றிருவருந்தான்
சேமமாரிரா மவிலக்குமணர்நீர் திரவியங்கொடென் றனைவதைத்திடுவா
னேமனுற்றுற நானுளத்தஞ்சி யிராமனற்கவ சத்தையோதுற்றேன். (௪௨)

அன்னபண்பினுற் பத்தவற்சலரா மவரெனில்லமட் டடைந்துடன்மறைந்தார்
பன்னருந்தவ முடையிர்நீரவரைப் பார்த்துளீர்கடன் னியர்கள்பாக்கியத்தி
ரென்னவோதுசி தார்மொழிகேட்டோ ரியைந்ததம்படை களையயலெறிந்தே
மன்னருட்கொண்மா தவரடிவணங்கி மகிழ்ந்திராமலக் குமணர்கடமையே. ()

வயங்குதம்விழி கொடுதரிசித்த வண்ணமேமனத் தெண்ணுபுதியான
மியங்கவாற்றிமெய்ப் பத்தர்களானு ரீனமார்கொடுந் தேனர்களேனு
மயங்கும்வன்கலி யிற்கணபத்தி மருவிற்பேறுறன் மறுக்கொணுநிசமாற்
ப்பயங்குலாவுமித்திறத்தின்மானிடர்க்குப்பத்தியிற்சுகம் பயப்பதொன்றிலையே

மாதராதலப் பொருளெலாம்விண்டு மயமென்றோர்ந்ததி சயமிகப்பொருந்து
சீதரப்பெயர் மாதவர்தமது சிந்தையூடுணர் விந்தையொத்திடவே
மேதகைப்பிர்து மாதவனுருவ மேவிவானவர் விரைமலர்பொழியப்
போதமேவினர் பொருந்துவைகுந்த புரத்தின்மேவினர் புரத்தின்மேவாதே.

வேறு

சீதரருக்கன் னவர்விழைவிற் செய்யவுரைசெப் வித்திகலோர்
சிந்தையுவக்கும் படியவர்தந் திருந்துமுரைப்புத் தகத்தினைநின்
பாதமமைத்துச் சீடனெனப் பரிவிலன்ன மளித்துறுபொன்
பறிப்பான்பின்செல் கள்வர்கட்கும் பகலூடுன்சே வையையளித்தாய்
போதநினைப்போற் றுதலினுநின் புனிதத்தொண்டர்த் துதித்திடுவுன்
புந்திக்குவகை பொருத்துமெனும் புனிதர்மொழிகொண் டதுபுரிந்தே
னேதமடையச் செய்திடலுன் னிதயத்திசைவே லெனக்குவப்பே
பிரமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (சகூ)

சீதரசுவாமிகதிமுற்றிற்று

ஆகூ கவி ௩௭கூச

---

முப்பத்தோன்றுவது

# வில்வமங்கலகதி

வாள்வியன்பெறு விண்டுமான்மிய மாவியாக்கியா னத்தைமா
ருள்வியந்துகொ ளச்செய்சீதர சாமிமெய்ப்புகழ் சாற்றினேன்
வேள்வியந்திடு தொண்டனாகிவி ளங்கிமற்றவன் றுதைபின்
னுள்வியன்பெறு வில்வமங்கல னணிகொள்சீர்சிறி தறைகுவாம். (க)

நல்வளம்பொலி கண்ணவேணியெ னுமமார்நதி தீரமேற்
றெல்வளம்பொலி தாக்கினுத்திய தூய்மையார்குல வுற்பவன்
செல்வமிக்கவ மைந்துளானியல் சித்தசன்புரை யேருளான்
வில்வமங்கல னென்னுநாமம்வி ளங்குவேதியன் றனரோ. (உ)

மற்றவன்றனை யீன்றவன்பொன்ம விந்துறுந்தகை யானும்வே
றுற்றபாலர்க ளின்மையானுமு வன்றனைச்செல்வ மாகவே
சற்றயற்பிரி யாமலோகைத மைத்தனன்வளர்த் திட்டதாற்
கற்றலாதியி னிற்சிரத்தைக லந்திலான்மெய் தடித்தனன். (ங)

அந்தநாளினி லன்பொடன்னவ னுக்கைதன்னைவ ளர்த்திடு
தந்தையந்திய காலமேவினன் றன்மையங்கத னற்சுதன்
சிந்தைமீதெழு நினைவுபோலுறு திரவியஞ்செல விட்டனன்
பந்தைநேர்தன வேசிமாரொடு பாடியாடுத லாயினன், (ச)

அன்னகாலேசிந் தாமணிப்பெய ரரிவையாருயிர்ச் சித்திர
மென்னநீடுவ னப்பினுள்குணம் யாவுமேயவ ளென்றுளோர்
பன்னல்கேட்டட னதியினக்கரைப் பால்குலாவுமவ் வேசைவாழ்
வன்னமாளிகை நாடியுற்றனன் மானமுற்றவு மற்றனன். (ரு)

அணவுசுற்றமு ளார்தடுத்தும னந்தரீதிக ளோதியுங்
குணமெனக்கொள்கி லான்மனத்தவர் குன்றவெவ்வுரையோதியே
மணமிருங்குழன் மேயவப்பொதுமகட்குடல்பொரு ளல்கியோர்
கணமயற்பிரி கின்றிலானியல் கணமயற்கிணை கொண்டுளான். (சு)

சுழிபறித்திடு நீரினிற்றன்னோர் *சொதைபறித்தும னத்துடன்
விழிபறித்திடு வாடனுசைவெ றுத்திடாதவ னுய்த்தினம்
வழிபறித்திட லாதிசெய்துள மகிழும்வண்ணம்வ ழங்கினன்
பிழிபறித்திடும் வண்டுபோன்மெய்ப்பி ரஞ்ஞைகொண்டிடு வாட்கரோ.

சிறிதுநாளிவ ணங்கழித்தொர்தி னம்பிதாதிவ சம்வர
லறிவின்ஞாபக மெய்தியன்னவ ளோடறைந்துனை யித்தினம்
பிறியநேர்ந்தமை பற்றியாருயிர் பிறிதலிற்றுய ருற்றுளேன்
பொறியனுயென வவள்வருந்தலிர் போந்துபிற்றைவ ருதிரென (அ)

விடையடைந்தகல் வில்வமங்கலன் விரைவுடன்மனை மேவியே
புடைவிராயினர்க் கூய்முடித்தவர் போனகங்கொடு போனபின்
னடைவினுண்டது பகலெலாமவ ளதுவிசாரம மைந்தனன்
குடையமேற்கடன் மாலைவந்தனை குயிலவேணிய டைந்தனன். (கூ)

வேறு

தந்ததானன தந்தாதனதன தந்ததானன தந்தாதனதன

மஞ்சுதோய்தரு சிந்தாமணிமனை மன்றநேர்பெறல் கண்டானுடன்மத
னஞ்சுநேர்மல ரைம்பாணமும்விட நன்குகாமமி குந்தேயவளது
மஞ்சுலாமுக முங்கூர்விழிகளு மந்தகாசமு மென்கோகிலமுறழ்
கொஞ்சுதேமொழி யுந்தோகையைநிகர் கொண்டசாயலை யுங்காணுகிலதே ()

தந்ததானனத் தாந்தனதனதன தந்ததானனத் தாந்தனதனதன

எந்தவாறிருப் பேன்பெருகிருநதி யெந்தவாகடப் பேன்சிறிதிடையற
வுந்துசோனைசற் றேய்ந்திலதினியிவ ணென்றுவோமெனிற் காண்டனரிகழ்வரென்
முந்துமானமிக் கேய்ந்தனனமுதுள மொய்ம்பொடேமனைப் பாங்கரின்மருவின
னெஞ்சுளேமிகப் பூஞ்சயனமிசையி னுந்துவேள்கரப் பூங்கணைபொரவரோ ()

தந்தாதனதன தந்தாதனதன தந்தாதனதன தனதானு

சிந்தாமணியைநி னைந்தேமதிபெதிர் சிந்தேபெனமயன் மிகலாலே
திண்டாடியிரவு றும்போதினிலுறு தெம்போவி—விபன் மதவேடா
னந்தாரணிவரு டுந்தாண்மிசையினி யன்பாவன்மறுதி னமதால்பா
னம்பேவையுமற வின்றேவிடுவனெ னண்டார்நிலைமைகொள் செயலாலே

* சொதை - ஐசுவரியம்.

சிந்தாகுலமிகை கொண்டானவளிடை சென்றேவிடுவனெ னூமேயே
சிந்தார்கரையிடை யொன்ருபெருகறெ ரிந்தோர்சிறிதவ னூறுபோதே
சந்தார்மினலொளி கொண்டேவருமொர்ச வந்தோணியதென நினையாவா
சந்தோய்கணையின்மெ லிந்தான்மிசைகொடுசம்போமறுகரை புகலானன்.
அங்கேகலுமனை முன்பார்தருகத வந்தாளிடுசெய லுணர்வான்யா
னங்தோபுரிவதெ னென்றேகுலையவ வண்காலிவிகயி றெனுமாறே
தொங்காநிகழும கிழ்ந்தான்மிசையிரு டார்ந்தேறுபுமனை யதன்மாடே
துன்பார்மிடியனெர் சிந்தாமணிபெறு துங்காதரமிகு செயல்போன்மேய்
நங்காயறிகுதி வந்தேனகலவி னைந்தாய்கொலெனுரை யொடுபேய்போ
னஞ்சரமயல்வெறி கொண்டானுறலினு ணன்ருலெனவதி சயமோடே
யிங்காரிருண்மழை கொண்டாறுபெருக வின்றேவழியெதி லடைவானு
யின்ருளிடுமனை யின்பாலெவணமி சைந்தாயறைகுதி யெனல்கேளா.

தனனதத்தத் தனதானதத்தன தனனதத்தத்தனதானதத்தன

நதிகடத்தற் கொருதோணியுற்றது நனிமனைக்குட் புகநீயமைத்திடு
நலகயிற்றைப் பரிவோடுபற்றியொர் நடலையற்றுற் றனன்யானெனச்சொல
வதிசயப்பட் டுடன்வேசிமற்றவை யறிதாற்கிச் சைபுளேனெனப்பிற
கணையெனச்சொற் றுமுனேகிவிப்பிர னரவிணைக்கட் புலனேர்படுத்தனு
மதியிலற்பக் குணமூடவுற்றது மலிவிடச்சர்ப் பமெனுவுரைத்தகல்
வகைசெய்திட்டுப் புகுதோணியெற்றென மடையவெற்குத் துணர்வானுணர்த்தென
வதிகரைக்கட் குறுகாவுணர்த்தனு மருவுயிர்ச்சித் திரநேர்பாத்தைதன்
மனதின்மெத்தச் சினமேயளப்பறு மயல்வெறித்துற் குணனேடுரைப்பளால்.

வேறு

காமமோ கிதனுச்சென்னி காலிதென் றறியாதெய்க்கும்
பாமர சவமீதன்றே பார்த்திநன் குன்சிரத்திற்
பூமரு வியவேதன்கை பொறித்தவோர் விதிவலத்தா
னீமர ணங்கொள்ளாது நின்றனை யங்தோவந்தோ. (கரு)

தராதல மாந்தர்யாருந் தங்கரங் கூப்பிப்போற்றும்
பிராமண குலத்திற்றேன்றிப் பிழையினு லினங்கள்கற்றுந்
தராதர மறியாய் மூர்க்கர் தம்மைப்போ லிருந்தாய்தந்தை
சிரார்த்தநற் றினத்திலின்ன தீத்தொழிற் புரியலாமோ. (கசு)

புண்ணிய மறைக்குலத்திற் புதல்வனுப் பிறந்தநீதான்
றண்ணிய குலத்தரேனுந் தமனியந் தரிலன்னோர்த்தோய்
பெண்ணியல் பமையுமென்னைப் பேயெனப் பற்றியிவ்வா
றெண்ணிலுள் ளருவருப்பா மித்தொழி லியற்றலாமோ. (கஎ)

பாவிநின் முகத்தைக்கண்ணுற் பார்த்திடு கின்றேருட்சா
ராவியுங் கும்பிபாக மாதிய வளற்றிலெய்துந்
தாவிறுற் கன்மமஞ்சாய் சாலவாற் றினையாலந்தோ
நீவிநீ யினியேனுந்து நெறிச்செல நெஞ்சினுன்னய். (கஅ)

ஈசுரன் படைப்பினுற்ற வெப்பொரு ளேயும்பழிக்கக்
கூசுறு மேன்மைசால்சற் குணம்பொலி மேலோர்தாமு
மாசுறும் பரத்தைமார்க ளெனிலுடம் பெல்லாம்வாய்கொண்
டேசுவ ரென்னிலெந்த மிழிவினை யுரைக்கலாமோ. (கசூ)

யாதுகண் டென்மீதிச்சை யெய்தினை யுத்தமாங்க
மீதுகொண் டுற்றஞானேந் திரியங்கள் வெளிப்படுத்துந்
தீதுகொண் டிடும்பொருட்கள் சிந்தையூ டுவர்ப்பளிக்கிற்
கோதுகொண் டிடுகன்மேந் திரியத்திறங் கூறலாமோ. (உ0)

புண்ணிய மியற்றுப்பாவர் பொருந்திடு நிரயம்போலும்
பெண்ணிடத் தெதுவிசேடம் பிறங்கியுற் றுளதுத்தோராய்
நண்ணிடு மென்புன்றேன்மே னசையுனக் களித்தகாமக்
கண்ணினை மூடிஞானக் கண்டிறந் தென்மெய்நோக்காய். (உக)

பட்டுடை நீளக்கட்டிப் பரிமளம் பூசிப்பொற்பூ
ணிட்டியாம் வருதன்மேலோ ரிகழ்ந்துரைக் காமைக்காகு
மெட்டுமெய் யுணர்வில்லாரெம் மிழையுடை மஞ்சளுக்குட்
பட்டிகத் தளறுபோலும் படுகுழிப் படுகின்றூரால். (உஉ)

ஊடிடு பொழுதுந்துன்ப முளமுவந் தெமதுமெய்யைக்
கூடிடு மரைக்கணத்திற் புருடர்கொண் டிடுதுயர்க்கு
நாடிடி லுவமையோரேழ் நரலையு மொப்பவாமோ
பீடிய லுன்மெய்த்தேசு பீதக மாதியெங்கே. (உங)

பற்பல காதநாறும் பண்புகொ ளெனதாக்கைக்க
ணற்பமாஞ் சுகங்கொள்வானீ யமைத்தவோ ரிச்சைதன்னை
வெற்பல கடலேபோல மிக்கபே ரின்பநல்கும்
பொற்பருண் மணங்கொள்கண்ணன் பொன்னடிக் கண்ணிருத்தாய். ()

எனச்சிந்தா மணிபல்போத மிசைக்கவில் வமங்கலன்று
னனத்தவல் வினைதீர்கால மாதலின் ஞானஞ்சற்றே
மனத்திலுற் பவிப்பவங்கண் மௌனமோ டுசாவிநின்றே
வனப்பமை வேசையோடுன் மனைப்புடை யடைதியான்றூன். (உரு)

இவ்விடை யியைந்துவைக லெய்தனு மென்மனத்திற்
கொவ்விடம் போவேனென்ன வுரமுடன் புகல்சொற்கேட்ட
வெவ்விடம் புரையுங்கண்ணாண் மிருகிலே சத்திஞேடு
செவ்விநீர் தேர்கிலாதாற் சினத்துரைத் தன்பொறுப்பாய். (உசூ)

என்மிசை நீயெவ்வாறுள் ளிச்சைமிக் கமைந்துள்ளாயோ
வின்மிசை கொள்வேனேருன் மீதுநான் கொண்டுள்ளேனுற்
பொன்மிசை வாஞ்சைகொண்ட பொதுமக ளெனக்கொள்ளாதுன்
னின்மிசை வாழுமாதென் றெண்ணிநன் கடைதியென்ன. (உஎ)

வேயெனத் திகழுந்தோளாய் விழைந்தெனை யொன்றுசெப்பே
னீயெனக் குண்மைஞான நிகழ்த்தலிற் குருவாக்கொண்டேன்
றூயெனக் குறித்தேயுன்னைத் தண்டமாற் றிடுகின்றேனென்
றேயென வகன்றான்வேசை யென்னிசைத் தனன்யானென்றே. (உஅ)
நெஞ்சகத் தளவிறன்பு மன்புநீண் டவன்பின்போந்தே
யஞ்சநேர் நடையாணிற்க நிற்கவென் றழைக்கவுந்தன்
கஞ்சநேர் முகந்திரும்பிக் காட்டலன் விரைந்துசென்று
னஞ்சன விழியாணெஞ்சத் தாகுல மிக்கில்புக்காள். (உகூ)
*சாவுதுஞ் சிரவின்மாரி தனினதி தாண்டிவேசை
மேவுமிற் புகுவாற்குப்பிற் கணத்தவள் விரும்பிப்பின்போய்க்
கூவுகாற் றிரும்பி நோக்காக் குணமளித் தருளுங்கள்வன்
யாவும்வல் லவனெச்சீவ ரிடத்துமுற் றெளித்துள்ளானல். (ஙo)
நள்ளிர வூடுசெற்றே நடந்தன ஞேரிடத்திற்
பள்ளிகொண் டிருந்துவைகல் படர்தலு மெழுந்துசெல்வா
னுள்ளிலன் புடையனுகி யாரையாஞ் சரணமெய்த
றெள்ளியற் கதியெவ்வாற்றுற் சித்திக்கு மெனவுள்ளெண்ணி. (ஙக)
மனிதனுப் பிறந்திட்டிற்றை வரையுமோர் சுபகன்மத்தை
யினிதுற வாற்றிலேன்யா னெவ்வகை கிருட்டிணன்றன்
பனிமலர்ப் பாதங்கண்டு பணிதலென் றுளத்தினூடே
நனிபச்சாத் தாபமோடு ணடுங்கிமெய் வாடினனய். (ஙஉ)

வேறு

உளநீடுவிசா லமுடன்சடலத் துறுவன்பசிமிக் குநடைத்தளர்வால்
வளமார்தருவின் னிழன்மேவிடுகான் மருவோர்பதிகன் வில்வமங்கலனை
யுளவோதுதியென் றிடவன்றுவரை யுளதானசரித் திரமத்தனையுங்
கிளவாவிதுபோ தினில்யான்கருணை கிளராரியற்றே டிநடந்தனனல். (ஙங)
என்றோதலுமப் பதிகன்றுயர்சற் றெய்தேலருகிற் றவமேயகுணக்
குன்றேவெனுமாட் சியன்மிக்கவருள் கொண்டானுறுசோ மகிரிப்பெயர்தா
னன்றேறுதிகோ ரணமாக்கொள்பவ னல்மார்தருவா னபிரத்தநிலை
நின்றோனவனைச் சரணுற்றிடினீ நின்றேடமொழிக் குவனென்றலுமே. (ஙச)
விரிவார்ந்திமீ துறுதோணியென மிதந்தெய் துகளே பரமோமனையுட்
பரிதாபமறப் பழுதைக்கிணைநேர் பாம்போதழுவா துடன்போதமுறப்
புரிதோகைகொலோ குருநாதனிடம் புகுமோர்நெறியைப் புகலிவ்விவனே
பெரிதாமுபகா ரிகள்யாவரெனப் பெரிதுந்தனுளெண் ணினனேகினனே. ()
சென்றானுயர்சோ மகிரிப்பெயர்சால் சீலன்கழல்போற் றினனஞ்சலியா
நின்றானையருட் பொலிசோமகிரி நீயாரெவணின் றிவணெய்தினையா
லென்றாகமுளாய் புகலென்றிடலும் யாவுஞ்சொலியென் னையளிக்குதிரென்
றென்றாகநிலம் படியப்பணிபோ துறுவன் சிறிதுந் துயரெய்தலனீ. (ஙரு)

* சாவு – பேய்.

சுகமோடிவண்மே வுதிநின்பவநோய் தொலையும்படியோர் மறைதன்னைப்புறப்
புகல்வேனெனவின் டெதையேயிவனுட் போதம்பெறநல் கலெனச்சிறிதே
யகமூடுநினைத் துளவேல்வைதனி லவிர்வுற்றதொரோப் பில்சுலோகமது
நகைமேவுகிருட் டிணவென்றெவர்வாய் சாற்றிற்றவர்பா வமெரிந்திடுமே. ()

தாரித்திரம்பூ தமுதற்றொடர்பாற் சாருந்துயரங் கள்கிருட்டிணவென்
பேரித்திரநா மமுரைத்தவுடன் பேருஞ்சுபமுற் றனசேருமென
மாரித்திரமீ டருட்சோமகிரி வல்லோனுண்மதித் துமகிழ்ந்துபவ
வாரித்திரமார் வில்வமங்கலனை வளர்கண்ணநதிக் கண்வரக்கொடுபோய்.(ஙஅ)

நானம்புரிவித் தியல்சென்னிமிசை நளினக்கரம்வைத் துவலச்செவியிற்
கானங்கொண்மறைப் பொருளானவருட் கண்ணன்திருநா மமுரைத்திடலு
மானம்பொலியுங் குருகைப்பரிச மருவுஞ்செயலா லுநன்மாமறையின்
வானம்பொலிமான் மியத்தாலுமிகு மாண்புற்றவிர்கூ விளமங்கலன்பின்.(ஙகூ)

கிளர்சற்குருசே வடிதாழ்ந்தடியேன் கிருபைக்கிலக்கா யினனென்றுதுதித்
துளமுற்றிடுமோ கையுடன்புரியு முயர்மெய்ப்பணியோ திடுவீரெனலும்
வளமிக்கியல்சோ மகிரிப்பெரியோன் மறைசெப்புசன்மார்க் கமமைந்தினிநீ
தளர்வற்றிதுமந் திரமோதியுளந் தான்வேட்டதலத் தில்வசித்தியென. (ச0)

காருற்றிடுசோ லைகொள்கானிடையோர் களைகண்ணிலதேங் கிடுகான்முளைதான்
சீருற்றிடுமெல் லிடைமாநகரிற் சேர்தாய்மடிமேல் வதியுஞ்செயல்போ
லேருற்றிடுசற் குரவன்பணிக ளிதயக்கனிவோ டுமியற்றுபுமூன்
றீருற்றிடுமா தமுளேகலைக ளெல்லாமுணர்வோன் றிவிராகமுறு. (சக)

தனையொத்தவிர்சீர் கொள்கிருட்டிணனைத் தரிசிக்கவவா வுபுமங்கலன்று
னனையொத்தகுருப் புடையாசிகொடா மமைமாகிடமா மதியூரிடைமேய்
வினையற்றிடுமந் திரமானதனை மிகவேயுருவேற் றிவிளங்கொருநாட்
பனையொத்தவொராச் சரியஞ்செய்தனன் பகர்நன்மதையாற் றிடைசூழ்கிடுவோன்

சென்றுனதுகா லையொரந்தணமின் செத்திட்டதனு தொருசேயையெடுத்
தொன்றுகுலமிக் கழுமாதுதுய ருளமீதுசகிக் கிலனுற்றவிடம்
பொன்றுதரநீன் மகவாரதெனப் புகல்வாளனுர்சே யிவனுற்றதுமே
நன்றுகுமென்று யகன்வீந்தனன்யா னற்பாலகனுற் றமைநம்பியரோ. (சங)

இருந்தேனிவனிப் படியாகினன்யா னெங்குற்றெதுசெய் வலொர்திக்குமிலேன்
மருந்தேநிகர்பா லகனேடுயிரை மாய்க்கும்படிநெஞ் சம்வலித்தனனென்
றருந்தேன்மொழியோ தியெனத்தனைநே ராவீரைவணங் குவனீற்றிலென
வருந்தேலெனவோ தியச்சேய்தனைத்தன் மடிமீதிலமைத் தருட்கிட்டிணனை.

சிந்தித்திதுகா லுறுபாலகனைச் சீவித்திடநீ யருள்செய்திலையேல்
வந்தித்திடுநா னுமின்னேருடனே மடிவேனெனவே தன்மனத்திடைநிர்ப்
பந்தித்திடுபத் தனுணத்தியவா பகவன்சிறுசே யையுயிர்த்தல்செயப்
புந்தித்தியக்குற் றிடுபூவைமிகப் பொங்கோகையின்மற்ற வற்போற்றினளாய்.

உடனேவில்வமங் கலன்சேய் தனை யுயிர்த்திட்டவளங் கையிடந்தானு
மிடலேய்தருமிச் செயல்கண்டவர்தா மிகுவிம்மிதமுற் றவனைப்புகழா
கடலேயருண்மிக் கவனைப்பலருங் கடவுட்டகையென் றுபணிந்தனர்க
டிடமார்நிலேதோய்மறையோன்மறையைச்செபித்தங்குசின்னாள் வதிந்திட்டனனே.
இவ்வாறுவதிந் திடுநாளினுடற் கினமாகினர்யா வருமெய்திமனக்
கொவ்வாதவிதங் கள்சொலித்தவசுக் கூறுற்றிடுபோன் மையுணர்ந்துடனே
செவ்வாதரர்சால் பிருந்தாவனத்தைச் சேரப்புகுவான் வழியூடரமா
தொவ்வாநிகழ்வை சியமாதுவன முறுநன்மதையூ டுகுளித்தகல. (சஎ)
*இங்குற்றிடுபாண் டமிணைந்திடமுன் னியல்வாசனைதன் னிதயத்தடையப்
பொங்குற்றிடுமா வலொடன்னவள்பின்போனான்செயல்பூ வையறிந்தவளாய்த்
தங்குற்றிடுமிற் புடைவல்லேவிராய்த் தன்னுயகனோ டுசொலக்கனிவா
யிங்குற்றிடுநீ யவரெய்திவுட னிட்டத்தைமறுக் கலேயாற்றுதியால். (சஅ)
நானேதியவண் ணமியற்றலினு னழுவாதுனெர்கற் பெனநாய்கன்மனே
மானேடுவிளம் பிடுகாலேயவண் வந்தேவில்வமங் கலன்மௌனமுடன்
றுனேர்புடைநின் றிடநாய்கனடி தாழ்ந்தேதநுமொர்தா சன்மினுளடிமை
யேனேவயனின் றனிரில்லமிசை யெய்தீர்தமியேன் பயனெய்தவென. (சகூ)
வணிகன்றனைமெச் சினனிற்கவவன் மனையாளேயழைத் தகலென்றிடலுந்
துணிவொன்றியமங் கைநுமக்கடியாள்சொல்கின்றதொன்றுண் டிவண்டோய்திரென
வணிதங்கியமங் கையுரைத்துடனே யந்தப்புரமே கவவட்பணியா
வணிகொண்டிடுமூ சியிரண்டருளென் றவணல்கவிழிக் கணழுத்தியரோ. (ரு0)
உடனேவெளியா கவிழித்துணைநின் றுதிரம்பெருகுஞ் செயல்கண்டுளமேற்
கடலேநிகர்துன் பொடுதம்பதிகள் கலுழ்ந்தேபின்வரும் பொழுதங்கவரைத்
திடமேவியபத் தியுளீர்சிறிதுஞ் சிந்தாகுலமெய் தன்மினின்மினுமக்
கடலேய்பகவன் றனருட்குலவ வகமிக்கமகிழ்ந் தனனுசிசெய்தேன். (ருக)
காமப்பெருமோ கிதனுகினனிக் கண்கட்கொடுகற் பமைபுந்தெருளார்
கேமத்திருவொத் தவண்மேனசையார் நீசத்தகைமே வியபான்மையினு
லாமத்தகுபா வமறற்கெனுளே யாவற்கொடிவா றுபுரிந்தனன்யான்
றேமற்றிடவே குவனீயிர்பெருஞ் சுகமுற்றிவண்மே வுதிரென்றுரையா. (ருஉ)

வேறு

கோதில்புகழ்மதுரையிராச் சியஞ்சேர்ந்திட்டெமுனேயிடைக் குடைந்துதீர
மீதிலிருந்தருட்பகவன் றிருவடிபோற்றிப்பசியான் மிகவும்வாடித்
தீதியல்வேற்கெவரன்னங் கொணர்ந்தளிப்பாரெவ்விடையான் செல்வேனந்தோ
சோதிமணிவிழியில்லே னிருந்துபயனென்னிந்தத் தூயதேயம். (ருந)
கண்ணபிரான்றிருவவதா ரஞ்செய்ததிசைந்தவர்க்குக் கனிவார்மோக்க
நண்ணவளித்திடுவதுமற் றதனுலீண்டிறத்தன்மிக நன்றுமென்னுந்
திண்ணமமைந்திருதிவசம் யமுனேயினுமறல்பருகாத் தீரமேவி
யண்ணல்பதமனத்திருத்தி யமைந்தனன்மூன்றுந்திவசத் தரையிராவில். ()

* இங்கு - பெருங்காயம்-

அருட்கடலாங்கிருட்டிணனோ ரந்தணனாயமரர்கட்கு மகப்படாத
தெருப்பொலிவார்பரமான்னங் கொண்டுவில்வமங்கலன்பாற் சேர்ந்துளன்பான்
மருக்கமழ்தன்செச்சைமல ரதாமலர்ந்தெழுகவரு மறையோய்நீதான்
பெருக்கமுறுபசியான்மிக் கிளைத்துளைநின்றகைசகியாப் பெற்றிமேவி. (௫௫)

உருசிமிகுமன்னமுட னெப்பி*லமுதமுங்கொடுவந் துள்ளேனென்பால்
வருதியெனப்பசியறிந்துங் கண்ணிலதோராத்திருடன் வழுத்தவன்னோ
னிருவிழியுமில்லேன்யா னென்னருகேய்ந்தீதியென்ன விசைப்பமாய
னருகணைந்தன்னவன்கரத்தி னல்கவருட்கரப்பரிச மமைதலோடும். (௫௬)

தெய்விகப்புத்துணர்ச்சியுமின் பமும்வில்வமங்கலன்றான் சேர்ந்தானாகி
மெய்விதிர்ப்புற்றுடன்முறுகப் பற்றுபுநீயாருண்மை விளம்பாயின்றேற்
கைவிடநான்மாட்டேனென் றலுமன்பநானுங்கை விடமாட்டேனென்
றைவிரல்கொண்டீர்த்தொளியா நிற்றலும்வில்வமங்கலன்றா னறைவான்மன்னோ. (௫௭)

அளியாரின்புறவருளா மளியாருந்தண்டுளவத் தரசேநீதா
னொளியாநிற்கினும்புறத்துள் ளொளியாநிற்பாயென்று முணராவஞ்ச
வெளியாநிற்கினுமென்னுள் வெளியாநிற்பாயென்று மெய்மைகண்டேன்
†விளியாநிற்கினுமென்னுள் விளியாதென்மேற்கோபம் விள்ளுவாயே. (௫௮)

வனப்பிடிநன்னடையுருக்கு மணிகாந்தவுன்னதுதோள் வலிகொண்டென்கைக்
கனப்பிடியைப்பிடுங்கிவிறல் கொண்டனமென்றுவக்கலைநின் காலையென்றன்
மனப்பிடிநின்றும்பிடுங்கிக் கொண்டுபின்னேமகிழ்தியென மகிழ்ந்துசால
வனப்பிடியார்முகினிறமே னியன்வில்வமங்கலன்பால் வழுத்துகின்றான். ()

அந்தணநீயென்னையுள்ளத் தறிந்ததனானீயெனன்ப னாகினாய்நீ
மைந்தர்பொருண்மனைபந்து களத்திரமாதியவற்றில் வாஞ்சைநீத்தென்
சந்தமலரடிகளையே சரணமெனப்பற்றியவொர் தன்மைதன்னா
லெந்தவொருபொருளுமெனக் குன்னிலுவப்பீந்திடுவ தின்றின்றின்றே. ()

செப்புமொழியீதுசாத மென்றுனக்குப்பிரதிஞ்ஞை செய்தீகின்றே
னெப்புமெனக்கிலக்குமியு மென்பத்தர்போலு முவப்புதவுகில்லாள்
பப்புமெனதன்பருக்கு நானிதுசெய்வேனென்னும் பண்பேயில்லை
யுப்புறுகோகுலத்திலவ தரித்தவருச்சிட்டமெல்லா முண்டேன்மன்னோ. (௬௧)

நிசாபதியொப்பெனமோகங் கொண்டுகணிகையரிடத்தி னேசமிஞ்சு
மசாமிளனையென்பிரிய பத்தனெனக்கொண்டனனிஃ தனையபற்பல்
விசாலமலி யாடல்புரிந் துள்ளனனேக்குதியந்த விதத்தினாலே
பிசாசனைபவுலகமயன் முற்றொழிந்தாய்நீயெனது பிரியபத்தன். (௬௨)

கஞ்சமலர்புரைந்துபகற் பொழுதில்விண்மீன்காண்டருநற் கண்ணிற்குண்டாந்
தஞ்சமுறுமெனதன்ப வல்லையிலென்சொரூபதரி சனநீகாண்பாய்
செஞ்சவுடலீதெனது திருவுருவிலைக்கமுறுஞ் சித்தானந்த
புஞ்சமுறுமென்சொருபங் காணமெஞ்ஞானக்கண்ணும் பொருத்தினேனால். ()

* அமுதம் - சலம். † விளி - இறத்தல், அழைத்தல்.

என்றுபகவன்புகன்றாங் கமர்பொழுதிற்கண்ணிரண்டுமெய்தத்தன்மு
னொன்றுமறையோன்வடிவா யோங்குபகவன்றனைக்கண் டோகைமிக்
கென்றுமறியாப்பரமா னந்தநெடுங்கடன்மூழ்கி யிருகண்ணின்றுந்
துன்றுமழைபோலா னந்தக்கண்ணீர்பெருகிடத்தாட் டுணைகள்போற்றி. (௬௪)

தண்டமெனப்பார்மிசைவீழ்ந் தவசமுற்றுக்கிடத்தலுமா றயவினாற்றன்
புண்டரிகத்திருக்கரங்கொண் டெடுத்துரமீதுறத்தழுவிப் பொங்குமின்பாற்
றொண்டனதுசிரமிசைத்தன் கரமமைத்துக்கருணைவிழித் துணையானோக்கி
வண்டழைவில்வமங்கலநீ சுகமுடனிவ்விடத்தென்றும் வாழ்குவாயால். (௬௫)

நீமனத்திலுன்னிடுதோ றியானமைவேனுண்டியிங்கே நிதமுங்கிட்டு
நாமமுனக்கினியின்றுன் னாமமுரைப்பவர்க்குமின்ப நண்ணுமென்று
மாமருவும்புயத்திருமா லருளினுரைத்தொளியவில்வ மங்கலன்றான்
சேமவருளமுதநுகர்ந் தணைந்தருள்வேதியனுருவைத் தியானஞ்செய்தே. ()

திரையெறியுங்காளிந்தி தீரத்தினின்றெழுந்து திவாவினூடே
கரையறுபேரின்பமுடன் யானிரவிற்கண்டனனை வோகனாவோ
தரையுறுமானிடற்கருட்கிட் டிணன்சம்பாடணைகிடைக்குந் தரத்ததாமோ
புரையுறுநந்தமக்கின்ன பேறுறுங்கொல்லோவுறிலற் புதமேயாமால். (௬௭)

என்றுபலபலநினைந்து பித்தனைப்போற்றன்போத மிழந்தானாகி
யொன்றுநதிதனின்மூழ்குங் காற்பகவனுரைத்திடுசொ லுளத்துட்டோன்ற
நன்றுறநீநினைத்திடுதோ றுன்முனெய்துவேனெனமா னவின்றதாலே
துன்றுமிதுகாணினைக்கின் முன்னுறின்மெய்யின்றேற்சொற் பனமேயென்னா.

கண்களைமூடிக்கருத்தி னினைத்திடலுமறையோன்போற் காட்சிநல்கித்
திண்கவினெனன்பவிதோ வந்தனன்யானெதற்கெனைச்சிந் தித்தாயென்ன
வுண்கணுடைப்பரத்தையைக்கண் டானந்தித்திட்டகண்கொ டுற்றுநோக்கி
விண்கலந்ததேவர்கன வினுமறியாக்கோலமதை வியந்துபோற்றி. (௬௯)

ஒப்பிலருட்கடலேநின் காட்சிபெற்றுஞ்சந்தேகித் துழன்றவென்றன்
றப்பிதமுற்றும்பொறுக்க வேண்டுமெனவென்பிரிய சகீயுன்னுட்
கப்பிடல்சந்தேகமொர்சற் றுன்னகத்தும்புறத்துமரைக் கணமுமோவா
தொப்பியருகமைந்துநீ யுன்னுதொறுமென்காட்சி யுதவுவேனால். (௭௦)

ஐயமுற்றுமொழிதியென மீண்டுமருளாற்கண்ண னறைந்துநீங்க
வையமிசையோடுகொண்டேற் றுழல்வாற்கோர்பூமனருண் மகளாமேக
தையல்வலிந்தணிமாலை சூட்டியெனக்கண்ணபிரான் றடுத்தாட்கொண்ட
மையன்மறையவனின்ப மையனிறமாயவன்றான் மதித்துப்போற்றி. (௭௧)

ஊன்மயமாத்தானின்ற காலத்திற்றன்னதுகண் ணுணரும்வண்ண
மான்மயமாய்நின்றிடுமிவ் வுலகமெலாங்கண்ணனெதிர் வயங்கித்தன்னொர்
வான்மயமாகியசொருப முணர்ந்திடஞானக்கண்ணை வழங்கலாலே
மான்மயமாக்கண்டுபர மானந்தமேய்ந்துடலை மறந்துவாழ்ந்தான். (௭௨)

இவ்வண்ணம்வில்வமங்க லன்கண்ணன்றேழுனென்ன வியைந்தானுஞ்
செவ்வண்ணம்பெறச்சம்பா டணேபுரிந்துவந் திடுமோர் திவசந்தன்னின்
மவ்வண்ணம்பெறுந்தான்சிந் தாமணிபாலுற்றதுமற் றவண்மாற்றங்கொண்
டெவ்வண்ணத்தேவர்கட்கு மரிதாம்பேறுற்றதுவு முவந்துகூற. (௭௩)

அறைந்திடுசெவ்வியிற்கண்ணன் புன்னகைசெய்தருளியென் தன்பார்தோழ
நிறைந்திடுமென்புடையவன்சிந் தாமணியீண்டெய் துமெனநிகழ்த்திமின்போன்
மறைந்திடவுட்கண்டுவில்வ மங்கலன்வாழ்ந்தனன்சிந்தா மணியாம்வேசி
யுறைந்திடுநாயகனனையான் பிறிந்ததுமுட்டுக்கமிக வுற்றாளாகி. (௭௪)

ஆவாமெய்த்தெய்வமே யச்சாதுமறையோன்யா னறைசொற்கொண்டே
தாவாநின்றிடுமுடல மானமுநீத்துடன்றேசாந் தரம்போந்தன்பிற்
றேவாதிதேவாங்கிட் டிணற்சரணமாவனெனச் சென்றான்யாண்டு
மேவாநின்றெவ்விதத்துன் பெய்தியுற்றான்கொலோவென்னும் விசாரத்தாளாய்.

அந்தோநான்மிக்ககொடும் பாதகியென்பாலளவி லாசைகொண்டு
சந்தோடமுடனணைந்தாற் கிடர்விளைத்தென்குலவொழுக்குந் தவறினேனிவ்
வெந்தோடமற்றிடவே தியற்றிடுவேனெனக் கருதிவிவேகத்தான்முன்
பைந்தோகைநிகர்வேசி யொருத்திகிளிக் கிராமமொழிபயிற்றலாலே. (௭௬)

உத்தமவான்கதியடைந்தா ளெனப்பெரியோர்சாற்றிடக்கேட் டுள்ளேனஃதா
லொத்தமகாபாவியாம் யான்கிருட்டிணத்திருப்பே ரோதியன்பா
வித்தகுபாவக்கடனின் றேறுவனிக்கலிகாலத் தினிற்கண்ணன்றன்
மெய்த்தகைநாமோச்சார ணம்பவவேர்களையுமென் னும்விரத்தியுற்றே. (௭௭)

கிருட்டிணன்மெய்ப்பணிக்கேதன் றிரிகரணங்களேயும்விட்டுக்கிளர்ந்தாள்க்கான்
மருட்டிறந்தோய்தன்பந்து வருக்கத்தாரென்புகன்று மாறிலாளா
யிருட்டியலார்தொழிலலவென் மனத்தொழிலும்புரிகில்லே னினியெந்நாளுந்
தெருட்டிகழ்வார்கிருட்டிண னுள்ளுவப்புறுமெய்த்தொழிலேயான் செய்வேன்மாதோ

என்றுதன்பந்துக்களிடஞ் சாற்றிமைந்தர்பொருளிவையெல் லாமறந்து
குன்றுபுரைகிருட்டிணனு லயமடைந்தன்னவன்றுதிகள் கூறியாடிக்
கன்றுதலின்மனத்துடன்வாழ் காலமற்றநகரத்திற் க்வின்றோர்சில்வோர்
சொன்றுகிருட்டிணசேவைக் கென்றுமதுராபுரிப்பா லுறநேர்ந்தாரால். (௭௯)

மற்றதனையறிந்தசிந்தா மணிதானுமவர்களுடன் மருவிக்கண்ண
னுற்றபெரும்புகழ்பாடி யாண்டடைந்தேயமுனைபடிந் தோங்கல் போலுங்
கொற்றமலிகண்ணன்வளர் கோயிலிற்போய்வீணைகரங் கொண்டுபாடி
யற்றமில்பத்தியிலெழுந்து கண்ணனடிதொழுதுநட மாற்றுகாலே. (௮௦)

பொங்கிவழிந்திடுமின்பக் கண்ணீரானனேந்துடலம் புளகம்போர்ப்ப
வங்கியலுமன்பரெல்லாங் கண்டுநன்றுநன்றெனவவ் வமையந்தன்னிற்
றங்கிடுபூசகனிருத்த நிறுத்தவருட்பிரசாதந் தரக்கையேற்றே
யிங்கிதவத்தொழில்புரிய வவர்கோயின்முடினர்தம்மில்லத்துற்றார். (௮௧)

அன்னபொழுதிற்சிந்தா மணிகோயினின்றெமுனை யாற்றின்மேவி
நன்னலஞ்சால்பிரசாத மயின்றுவில்வமங்கலன்று னண்ணுமொப்பில்
பன்னகசாலையின்வழிவந் திடுவாளாண்டிருந்தொளியார் பரிதிபோலு
மன்னருட்டேசமைந்துதவம் புரிவாற் கண்டணிவாயின் மாட்டுநின்றாள். (அஉ)

மருவியசிந்தாமணியைக் கண்டுவில்வமங்கலனவ் வயின்போந்தொல்லை
யிருகைகுவித்துன்னுபதே சங்கொடிப்பேறெய்தியிவ ணிசைந்தேனென்ன
மருமலர்ப்பூங்கொம்பனசிந் தாமணியுள்வரம்பிலின்ப மருவினளாய்ப்
பொருவிலருட்சீவன்முத்த னுத்துலங்குற்றான்பதங்கள் போற்றியோதும். ()

உண்மைவிரத்திகொளுனுரு வோவறநாடியமாண்பா லுலப்பில்பாவப்
பெண்மையுருவமைந்துளமா பாதகியானும்விரத்தி பெற்றேனுகித்
தண்மையுருவமைகிருட்டி ணன்சரணஞ்சரணமெனச் சார்ந்தேனென்ன
வெண்மையுருமாரனிற்றம் முருவையுஞானக்கினியி லெரித்திட்டோராம். ()

இருவருமுற்றத்திடைநின் றொருவரைமற்றொருவர்புகழ்ந் திருக்குமெல்லை
திருவமைவில்வமங்கலற்குப் பிரசாதமனை தரச் சிந்தாமணிக்கும்
பருகவளித்துண்டிவினை முடித்தவன்மாதவனெடொன்று பகரத்தன்னுட்
கருதலும்வில்வமங்கலனே துவனீகிட்டிணன்றன்மிசைக் கடல்போலன்பு. ()

வாய்ந்தனையாற்றன்னியைபாக் கியவதியென்றிடற்கைய மதிக்கினில்லை
போந்தவொர்பண் பாலிவ்வாச் சிரமத்திலோவருகாம் புறத்தினூடோ
பாந்தமுடன்சிலகாலம் வாழ்தியெனவவள்பகர்வாள் பகவயானு
மாந்தகைதம்முடனேதத் துவக்கினன்றுமேவிடையீந் தருளினீரால். (அசு)

இவ்விடத்தியானிருத்தறமக் குள்ளிசைவன்றெனினுமிவ ணெய்துமென்னை
யெவ்விதமப்புறத்தமையச் சாற்றலெனவெண்ணவிர்யான் புறத்தேய்வேனென்
றெவ்விதயத்துடனடுத்த மனையொன்றில்வதிந்திருநா ளுண்டிநீத்துச்
செவ்வியரேய்கிருட்டிணன்முன் சென்றாடிப்பாடியன்பிற் றிகழ்ந்திட்டாளால். (அஎ)

அன்னதுகண்டுடன்பத்த வற்சலனுகியபகவ னகம்பொருனாய்த்
தன்னதுபூசகன்கனவிற் றின்ஞ்சிந்தாமணிக்கன்னந் தருதியென்னப்
பன்னவிழித்துடனமிர்த துல்லியமாம்பிரசாதம் பரிவினீந்தா
னன்னலந்தேர்ந்தவள்பகவன் முன்றினந்தன்பணிசிறப்ப நவிற்றினளாய். ()

வில்வமங்கலப்பெயர்தோய் சாமியிருசேவடியும் வியப்பிற்போற்றி
வில்வலிக்கைமாரனடி யார்தமிற்சீர்த்திகத்தவிர்ந்த விதமேபோல
நல்வளஞ்சான்மாறனடி யார்பலருமெச்சுநல நண்ணினாராய்க்
கல்வரையாங்குடைகொள்கிருட் டிணன்றாளிற்பேதமறக் கலந்தார்மாதோ. ()

பாசமகன்றிடிஇயுயிர்க்குப் பதியிடமென்றேதிடநற் பண்புபோல
நீசமலிதருபரத்தை யானசிந்தாமணியுலகை நீத்துக்கண்ண்
னேசவ்ருட்டிருநாமந் துதித்தவன்பொற்சரண்சரண நிலைமைதன்னன்
மாசகன்மெய்க்கதியடைந்தா ளாதலிற்பத்திக்கிணையா மற்றொன்றின்றே.

வேறு

சிந்தாமணிவே சியின்பணிசெய் சிரத்தையோற்கன் னவண்மொழியாற்
றிரமளித்துக் குருவாகிச் செத்ததெழுப்புந் திறல்வழங்கி
யந்தாமரையின் னிகரொருபெண் ணுசையாற்கண் ணிழந்துறமுன்
னணைந்துஞானக் கண்ணுமளித் தம்பொற்றுளிற் கலந்தனைநீ
முந்தாகியகா லத்தியலோர் முழுப்பூரணனு தலினுன்முன்
முறைமைப்படியெங் தமைத்துன்பின் முழுகப்புரிந்துள் ளனைகொல்லோ
வெந்தாய்பின்செய் திடுகருணை யின்றீந்திடினிற் றடுப்பவரா
ரிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கூக)

வில்வமங்கல கதி முற்றிற்று

ஆ. கவி ௫அ௮ரு

---

முப்பத்திரண்டாவது

# விட்டுணுசர்மகதி

மட்டுணுங் குழல்கொள்சிந்தா மணியெனும் பரத்தையின்பாற்
பட்டுழன் றிடுமனத்திற் பத்தவற் சலனுங்கண்ணாற்
கட்டுணப் புரிந்தவில்வ மங்கலன் கதியுரைத்தேன்
விட்டுணு சர்மனுடல் வியனினி விளம்புவேனே. (க)

தக்கசீர் மிதிலைநாட்டிற் றாவுனி யெனுநகர்க்கண்
மிக்கவே தியன்றன்சேயாம் விட்டுணு சர்மனென்பான்
புக்கமா மறைகளாதி புலங்கொடு பிரமசர்ய
மொக்கவே யநுட்டித்தப்பா லோங்குமில் லறங்கைக்கொண்டே. (உ)

சீரிய மைந்தர்ப்பெற்றுத் திகழுநாண் மடமைமிக்க
பாரியுன் மதியாளாகிப் பகர்ந்திடுங் குரூரச்சொற்கள்
கூரியன் மதியோனுள்ளங் கொண்டிடு மாயாபாச
வேரிறப் புரிந்தபண்பால் விரத்திமிக் குடையனுகி. (௩)

அக்கினி கோத்திராதி யாயகன் மங்கடன்னுட்
புக்கிடச் சந்நியாசம் பூண்டுசங் கரன்றுளுன்னி
யுக்கிரப் பெருந்தவஞ்செய் தோர்சிவ தலத்திலுற்றுன்
மிக்கியல் குடுமிபூணுன் மாத்திரம் விடானுய்மாதோ. (௪)

வேறு

உற்றபான்மைதனை யுணர்ந்துடனகரத் துற்றவர்பலருமாங்கெய்தி
மற்றவற்கனந்தம் போதனைபுரிந்தார் மனைவியுமணைந்தியானியற்றுங்
குற்றமொன்றிதனைப் பொறுத்திர்மேலினிநங் குறிப்பிசைந்தொழுகுவனென்னச்
சொற்றனள்விழுந்து பணிந்தழுதிரந்துந் தூயனுட்சிறிதிரங்கானுய். (௫)

எழுந்தனனடந்தா னன்னபோதில்லா ளீன்றதம்புத்திரர்க்கூட்டிச்
செழுந்தவமறையோனுடன்றொடர்பொழுதூர்திரும்பிமற்றவரைநோக்கானுய்த்
தொழுந்தகையரன்றாட் டுணைமனத்துன்னிச் சுட்டபாசத்தனுச்செல்கா
லழுந்தகப்பந்த முடையசுற்றத்தா ரகம்வெறுத்தில்சுதர்க்கூவி. (௬)

வாய்ந்தமற்றவர்தம் மனையிடையிருத்தி மருவுதம்மனையகத்தடைந்தே
காய்ந்தசிந்தையராய் விட்டுணுசன்மன் கவின்றவில்லறந்துறவறமென்
றேய்ந்தவிவ்விரண்டி னும்பொருந்தாத வியல்புறுபிரட்டனென்றிகழ்ந்தா
ராய்ந்தநூலுணர்வோ னவைபொருட்படுத்தா னாற்றினன்கன்மசந்நியாசம். ()

ஆங்கமைசிலாநா தப்பெயரமைந்த வரன்றனைப்பூசைசெய்திருந்தா
னோங்கானங்க ணுற்றகாரணத்தை யோதுவன்முன்னொர்காலத்திற்
றேங்கமழ்கொன்றை வேணியன்சதிதே வியின்மிசைத்தேங்குகாதலுடன்
றீங்ககன்றிடப்பூ தலமெலாமவள்பிற் சென்றுயர்மிதிலையின்மேவி. (௮)

சனகமன்னவனி ராசதானியயற் சார்பிந்துசரசுயர்கமலா
வெனநுவனதியின் றென்றிசைப்பாங்க ரெழின்மலிநாபிதோயுதாங்
கனமுறவீழ்த்தக் கண்டரன்றனது கவின்மலியுடலைவீழ்த்திடத்தன்
மனமுறக்கருதும் போதின்மால்பிரம னாதிவானவரவண்மருவி. (௯)

வணங்கிநின்றின்ன வழுத்துவர்நாத மருவுநின்மேனியையிங்ங
னிணங்கிடப்பதிப்ப தேதுகாரணநிற் கியற்கையிற்றேகமொன்றில்லை
குணங்கிளரான்ம கோடிகட்காப்பான் கொண்டனைகோலமற்றதனைப்
பணங்கிளர்பார்மே லொழிக்கவெண்ணியதைப் பகர்ந்திடவேண்டுமென்றிரப்ப.

மந்தகாசங்கொண் டரன்வகுத்திடுவன் வானவர்கேண்மின்யான்கொண்ட
விந்தவாக்கையினைப் பதிப்பதுமுலக ரின்புறல்கருதியேயாகு
மந்தமிக்கிவண்சார்ந் துளபிந்துசரசீ ததிநலமுற்றுளதருளார்
செந்தகைபொருந்தெம் மேனியேய்தலினாற் சிறப்புறுமுன்னினுமாதோ. ()

சாற்றியபிந்து சரசினுங்கமலா நதியினுமூழ்கிவந்தென்னைப்
போற்றிடுமவர்க்குப் பிரமகத்தியாதி பொன்றிடுமையமொன்றிலையா
லாற்றியலன்போ டொருமதிபூசை யுஞற்றுவார்க்கவருளம்விரும்பும்
பேற்றினையருள்வே னிச்சரசமலம் பெறுமணிகருணிகைபுரையும். (௧௨)

இணையில்சீர்விசுவ நாதனேயானீண் டிறந்திடுகின்றவர்தமக்கும்
பணைதருமுத்தி யளிக்குவன்சரதம் படியிலிச்சித்திகேத்திரத்தி
லுணவறத்தவஞ்செய் திடுமவர்க்கொல்லை யொப்பின்மெய்ச்சித்தியுண்டாகு
மணைதருமிந்த வகையறிகுதிரென் றரன்றிருமேனியாங்கொளித்தான். (௧௩)

அவ்விடத்தினின்மா தவனுநான்முகனு மவரவர்பேரமைதரவே
செவ்வியற்சிவலிங் கம்பிரதிட்டை செய்தகன்றனரின்னமாட்சி
யொவ்வியற்சிலாநா தத்திருமூர்த்தி யுவப்புறவிட்டுணுசர்மன்
வல்வியலன்பி னேடொருவருடம் வயக்கவோர்கனவினிற்றோற்றி. (௧௪)

பொருவிலென்னன்ப நினதுபூசனைக்கென் புந்தியுண்மகிழ்ந்தனனுனக்குச்
சருவசித்திகளுந் தருமிரிமறையான் சாற்றுவனீயதைச்சபிக்கின்
மருவுமிச்சனனத் தளவறுபோகம் வழங்கிப்பின்கதியுமீந்திடுகிற்
கிருமைசாதீர்க்கா யுளுண்டுவிவாக மின்னமொன்றியன்றிடுமன்னே. (௧௫)

வங்கிசவிருத்தி யின்பொருட்டொப்பின் ணைமந்தருந்தோன்றுவரென்றே
பொங்கியலருளாற் றுவாதசாக்கரஞ்சால் புனிதமந்திரமுறைத்தொளிப்பத்
தங்கியன்மனங்கொண் மறையவன்றாக்கந் தணந்துதன்கனவினையுசாவி
மங்கியலுலகைத் துறந்துமெற்கின்ன மணம்விளைவதுகொலோவென்று. (௧௬)

விசனமும்வியப்பு மேவினனாகி விண்டுவின்சின்னமுற்றணிந்திட்
டசலமொத்தவனம் மறைகளித்தொப்பி லயாசிதவிரதமொன்றுபுசேத்
துசமுடைப்பரமன் றன்பிரசாதந் துய்த்தொருவேளையாண்டமைந்தா
னிசமறைபவனிற் றமைதருநாளி னேர்ந்ததாற்சிவநிசிமாதோ. (௧௭)

அதுகுறித்தங்ங னெய்தியவூரா ரவற்கொடுசென்றயலகத்தில்
வதுவைசெய்தமைத்தார் சிவபிரானளித்த வரப்படிமைந்தருமுதித்தார்
மதுரமென்கிளவிச் சுசீலையோடில்ல மருவிமாதவனடியாரி
லதுலம்வாய்ந்தவிர்பத் தரத்தினுவலிப்பே ரமைதருகிரந்தஞ்செய்திட்டே. ()

அனகநற்சொநா தப்பதிபுக்காங் கமைபுருடோத்தமன்களிப்பாய்
வினவிடவரங்கேற் றிச்சுவடிதனை விமலன்முளிற்சமர்ப்பித்திட்
டனமுலாங்கங்கைக் காசிசார்ந்தமைநா ளவிர்சகநாதனர்ச்சகர்மன்
கனவினிற்றோன்றி விட்டுணுசர்மன் கழறுபத்தரத்தினுவலியை. (௧௯)

என்னதுகழுத்தி லணிமின்மற்றதுகா றியாவொருமாலையும்வேண்டே
னென்னவோதலுமன் னவருடன்விழிப்பு மிணையிலாச்சரியமுமெய்தி
மன்னவன்பாலோ திடவிறைவனுமவ் வண்ணமெய்தியகனவகுத்தே
தன்னனபகவற் றரிசனம்புரிவான் றளியிடையாருமேவினராய். (௨௦)

பத்தவற்சலனை நோக்குகாற்களத்திற் பயின்றிடுமரதனமாதி
யொத்தவிர்தொடையல் பலவுமாகிலமீ துகுத்தெறிந்திட்டபோற்கிடப்ப
வைத்தவேலிறையா திபர்கள்கண்டுள்ள மலியுமற்புதத்தராயுடன்மன்
கைத்தலங்கொண்டோர் கூந்தலிற்பொறித்துக் கடிதுதூதரைச்செலுத்திடலும்.

அன்னவர்கடிதிற் காசிபுக்கோலை யருள்பொலிவிட்டுணுசர்மன்
றன்னதுகரத்தீ தலுமவன்விரித்துட் சமைந்தவிம்மிதச்செயலுணர்ந்தே
பன்னரும்பரமா னந்தமிக்காடிப் பாடியோலையைவிழியிலொற்றி
முன்னமைதூதர்ப் பூசைசெய்திருத்தி ரெனமொழிந்திடவவர்மொழிவார். ()

கணப்பொழுதிங்கு தாமதித்திடமன் கட்டளையெமக்கிலையதனாற்
குணப்பொருப்பனையிர் சுவடியும்விடையுங் கொடுத்தருள்வீரெனவிரப்பப்
பணப்பொலிவமையுஞ் சேடனேர்தெருட்சி படைத்துளான்பரிவினாலாற்று
மணப்பொலிவமையுஞ் சுவடியைத்தூதர் வசமளித்தலுமவர்விரைந்தே. (௨௩)

மன்னவன்சமுகத் தளித்திடவிறைவன் மாலருட்சந்நிதியணைந்தே
நன்னகர்மருவு மந்தணர்புலமை நண்ணுமேதகையினர்க்கூவித்
தன்னகத்துவந்து பற்பல்கான்முறையிற் சாற்றிடக்கேட்டிடப்புரிந்தா
னின்னவாறியனுட் பத்தவற்சலன்றா னிறைவனர்ச்சகர்கனவிடைமேய் (உச)

வித்தகப்பக்த ரத்தினவலியை மிகவிளம்பினிரதுகேட்டென்
சித்தமீதெழுந்த விரகமோர்சிறிதுந் தீர்ந்திலதாகையாலதனி
லொத்தமைசுலோகங் களையெல்லாமோவ்வொ ருண்டையாகப்புரிந்தவற்றை
மொத்தமார்மாலை யாக்கிபென்களத்தின் முபங்கிடவணிதிரென்றிசைப்ப. ()

கடனிகர்கருணைப் பத்தவற்சலன்றான் கழறியபடிசெய்துகளத்தி
லிடமகிழ்ந்தனன்யானித்தினமெய்யென் றிசைத்தலின்யாவருமகிழ்ந்தே
படலைமற்றதனை மாலுளமுவக்கும் படியனவரதமுமணிந்தார்
வடமிசைத்துயில்வோன் பத்தர்மேற்கொண்ட வாற்சலியத்தையாரளப்பார்.

பாசிவற்குற்ற சீடனாய்த்தனக்குப் பத்தனும்விட்டுணுசர்மன்
பாசுதன்னடியர் மான்மியநிறைத்த பக்தரத்தினவலி நூலை
விரவுறமார்பிற் றரித்துத்தன்விரகம் விலகியவிமலன்மற்றவனை
வரமலர்க்கழலிற் றுய்த்திடாதுறுந்தன் வாய்கொடுண்டிருப்பன்மெய்மாதோ.

வேறு

முன்னாளினில்விட் டுணுசர்மன் மொழிபத்தரத்தி னவலியின்
முதுபோர்வ மடைந்ததனை முயங்குஞ்செவிகொண் டமையாதே
பொன்னூராத்தின் மாலையெனப் புனைந்துவிரகந் தணிந்தகுணம்
பொருந்திந்நாளுங் கொண்டமையென் புந்தியறிந்த சத்தியமான்
மன்னுயிரகோ டிகொட்டாயர் மருவுங்கருணை திரண்டொருநல்
வடிவாமுனக்குக் கைமாறுன் மலர்த்தாள்வணங்க லன்றியிலே
னென்னுயகனே சிரவணவூ ரின்பக்கவுமா ரர்கள்வைப்பே
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உஅ)

விட்டுணுசர்மகதி முற்றிற்று

ஆ கவி ருகூகரு

---

முப்பத்து மூன்றாவது

# திரிலோசனகதி

கருணையங்கட லாஞ்சகநாதன்றன் களத்திடையணிசீர்சால்
பொருணயம்பொலி பக்தரத்தினவலி புகன்றவிட்டுணுசர்ம
னருணனைத்தவ் ராழிமாதவன்பதத் தணைந்தவாறறைந்திட்டேன்
றெருணலத்திரிலோசனன்சரிதமேற் செப்புவன்சிறிதம்மா. (க)

பிராமணக்குலந் துதித்துஞானேசுரர் பிரசமாமலர்ப்பாதம்
பாரவுசீடனு கியதிரிலோசனன் பங்கயத்தளமீதில்
விராவுவீரென வில்லறத்திடைக்கற்பு மேவியமனையோடு
புராதனங்கொள்பொ ன்னின்மையினிலங்தொறும்போய்ப்பிட்சாடனஞ்செய்தே

உச்சியம்பொழு திற்புகுமன்பருக் கூட்டிப்பின்றுன்றுய்த்தே
சச்சிதானந்த பரம்பொருளரியெனத் தன்னகந்திகழன்பி
னச்சினாடொறும் பூசைசெய் தானந்த நாலையிற்படிந்தல்லி
னச்சிலொன்றிடு துயிலினுநாரண னன்மறைசெபிப்பானல். (௩.)

இன்னவாறியன் றிடுதிரிலோசன னினியபத்திமைகண்டே
பன்னகத்தறி துயில்புரிந்தருளருட் பகவனுள்ளுவந்தோர்நா
ளன்னவன்முன மந்தர்யாமிப்பெய ரமைவயோதிகனுகி
நன்னலங்கொள்வீ டடைதரக்கண்டுள நனிமகிழ்வடைந்தின்பாய் (௪)

நுழைந்தவந்தனக் கபடவார்த்திகற்றிரி லோசனனுடன்மேவ
விழைந்தமைத்திரு வரும்பிச்சைக்கேகுவர் விருத்தனன்பன்கையிற்
றழைந்தபாத்திரந் தான்கொடுமனையிடைச் சார்வித்தன்னவனில்லா
ளுழைந்திடாதடி யவர்பணியுவப்புட னுஞற்றுவன்விரைந்தம்மா. (௫)

வேனமைந்தவந் தனன்றிரிலோசனன் மிசைதருவதன்முன்னந்
தானருந்திடா னவனருந்தியவுடன் சார்தருமுணவெல்லா
மானமார்திரி லோசனன்றிருமனை மகிழ்ந்தவனுணநல்கு
மானகாலையண் டங்கொள்வாய்கொண்டவை யனைத்துமுண்டிடுவானல். (௬)

போதுமெற்கெனச் சாற்றிடானுணவின்றேற் போதுமென்றெழுகிற்பா
னேதுமித்தகை தினமொர்மூன்றியற்றியு மொப்பில்கற்பன்பார்ந்த
மாதுநாயகன் றன்னுடனுறுசெயல் வழுத்திலளமைந்துற்றூண்
மீதுசார்தினத் திற்றிரிலோசனன் வியன்மனைக்குறவானுள். (௭)

ஆண்டமைந்தவ ளுடன்மெலிந்துறுஞ்செய லறிந்தகத்துயர்மிக்கு
நீண்டமைந்தவென் சகிபிணியுடலிடை நினக்கணைந்துளதேகொ
லீண்டறத்தளர்ந் திருந்தனையுளதெனக் கிசைத்திடிற்பரிகாரங்
காண்டகப்புரி குவனெனக்கற்பினள் கழறுவள்சகிகேளாய். (௮)

எனக்குவன்பிணி யொன்றிலைமறையவ ரினியகாதலராலு
சினத்தொடுண்டபி னீங்கியலந்தரி யாமிமற்றுளவெல்லாங்
கனக்கவுண்டிடு கின்றனன்சரியெனக் கழறிலனுறுமூன்று
தினத்துமிந்தவா றுற்றினனெனச்சகி திகழுவன்யார் மன்னே (௯)

யாண்டிருந்தடைந் திட்டவனுன்பதிக் கெந்தவாறுளத்தன்பு
பூண்டிடும்படி நீடுறவாயினன் புகலுதியெனவாற்றிற்
காண்டின்மாடுற வழைத்துவந்தனரவன் கதையையாரறிவாரென்
றேண்டிகழ்ந்திடச் சாற்றக்கேட்டந்தரி யாமியத்தகையேய்ந்தான். (௧௦)

அன்னகாற்றிரி லோசனன்மனையுட னந்தர்யாமியைக்காணே
னென்னகாரியப் பொருட்டயற்போந்திட வேவினைசொல்லென்ன
வன்னமென்னடை யாள்புறத்தேவில னகலிடத்தையுந்தேரே
னன்னருண்டன னதன்பிறகவன்செய ஞனறிகிலனென்றாள். (கக)

வினவிடுந்திரி லோசனன்புறத்திற்போய் மிகுதெழிப்புடன்கூயுந்
தனதுமுன்வரக் கண்டிலானனரைக்கணந் தான்பிரிகிலனுகி
யனகவாருயிர் தொறுங்குலாயவையெலா மறியொணுதமர்கள்வ
னினசெயற்றெரி தருதிரிலோசன னிதயமேற்றுயர்கொண்டே. (கஉ)

சந்தியாவந்த ஞதிகண்முடித்துளத் தளர்ச்சிமிக்கயிலானுய்ச்
சிந்தியாவமு துறங்கலுமற்றவன் செழுங்கனவிடைமேவி
யந்தரியாமியோ திடுகின்றானந்தண வகத்துயரடையேனீ
வந்தியாவெனத் தொழுநின்னன்புகண்டியான் மனமிகமகிழ்வுற்றே. (கந)

அந்தரியாமியென் றுருக்கொடுன்புடையமைந் திட்டவன்யானேகா
ணெந்தவேளையு மப்பெயர்ப்பொருள்கொடுன் னில்லினுள்ளிற்றேய்வேன்
சந்தநீடுமென் னன்பநிற்பிரிந்தமை சத்தியெற்கிலைமெய்மை
பந்தமுற்றுநீ பிற்றைநாண்முதலயற் பயிக்கமேற்றிடச்செல்லேல். (கச)

மெத்தவும்பல வினனீயுளத்துயர் மேவல்கண்டென்னெஞ்சம்
பத்தசாலவும் வருந்துவதமுதிடல் பயின்றநின்மனைப்பானீ
நத்தலானவெப் பொருள்களுங்கலங்களி னனியமைவனவாகு
மெத்ததிக்கணுங் குறைதராதட்சய மெய்துநின்னன்பொத்தே. (கரு)

இனிநின்னிட்டமொத் தருமறையவர்முத லெய்திடுமெவர்க்கெல்லா
நனியருத்திநின் னுயுண்முற்றவுஞ்சுக நண்ணிவாழ்ந்தீற்றின்க
ணினியவென்பதத் தெய்துதியென்னமா விசைத்தலுங்களிப்புற்றே
கனியுமன்புளம் பெறுதிரிலோசனன் கண்விழித்தனன்பார்க்க. (கசு)

நீலமேகவண் ணன்றனதகத்தினு ணிறைந்தவிருளேபோற்
கோலமார்மனை மேற்பலபொருள்களுங் குவிந்துறுந்திறங்கண்டே
சீலமேவியற் பத்தினியிடத்திலத் திறமெலாஞ்சொலக்கேட்டாள்
சாலவும்பரி வுற்றரியறிகிலேன் றுசனென்றுளங்கொண்டே. (கஎ)

பலபலேவல்கள் சாற்றினனருணிறை பத்தவற்சலமாயா
நிலவுமுண்டியிட் டனவெலாமருந்தியு நீயெனவறிகில்லே
னுலகமுண்டருள் வாயிலன்பற்றயா னுதவுமன்னமுந்துய்த்தாய்
சலசலோசன வுய்ந்தனமியாமுனைத் தரிசனஞ்செயலாலே. (கஅ)

எனப்பல்வாறுறப் பன்னிடும்பன்னித னினியநன்மொழிகேட்டோன்
றனக்கியற்றிய பணியெலாஞ்சாற்றினன் சாலவும்புகழ்ந்திட்டே
மனக்கிலேசமற் றியன்மனைமாடுற வந்திடுமெவர்க்கெல்லாந்
தனக்கவன்னமுஞ் சொன்னமும்பொழிந்தனன் கார்நிகர்த்தவனன்பன். (ககூ)

வெம்மதக்கொடும் பிணக்குளாரியாவரும் விரும்பியேத்திடுமோர்சால்
செம்மலர்த்திரு மகட்குமாருயிரெலாஞ் சிறந்ததந்தாயென்றுட்
சம்மதங்கொடு சாற்றுபூமகட்குமோர் தலைவனுயழைத்திட்ட
கைம்மலைத்துயர் களைந்தவனன்புளங் கலந்தவர்க்கிடருண்டோ. (உ0)

இன்னவாதிரி லோசனனிகம்பொலிந் திட்டவாருயிரெல்லா
நன்னலம்பொருந் திடவறமியற்றிப்பன் ஞளிகத்தமர்ந்திற்றிற்
கன்னலின்சுவை மொழிமனையோடுமால் கழன்மனைபுகுந்திட்டா
னின்னவான்கதை வினவுவோர்துயரகன் றிகபரம்பெறுவாரே. (உக)

வேறு

அன்பாரடியார்க் கிரந்தமுத மளிக்குந்திரிலோ சனன்வருந்தற்
காற்ருதந்த ரியாமிப்பே ரடியனுகிப் பணிசெய்தவன்
கொன்பாரியிடு மனமுழுதுட் கொண்டன்னவன்றுன் பமையாதே
குறைவற்றியனன் ளிதியமிகக் கொடுத்தகருணைக் குளிர்கடலே
முன்பார்மிசையன் பருக்கேவன் முயன்றசலிப்பி னுற்கொலிந்நாண்
முதிரன்பவர்க்கும் வழங்காது முழுமாயைபினு டுழன்றிடவிட்
டின்பார்நீதித் துயில்கொண்டா யினியவ்வருள்கொண் டென்றெழுவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உஉ)

திரிலோசனகதிமுற்றிற்று

ஆ கவி ௬௯௬

---

முப்பத்துநான்காவது

# குலசேகரகதி

அந்தரியாமியோர் தோழனின்மெய்ப்பணி யாற்றிடுபத்திமைசா
லந்தணனுந்திரி லோசனன்மாட்சிய றைந்தனன்மேனுவல்வேன்
கந்தரமானுமி ராகவன்மீது கடற்புரைபத்திபெறுஞ்
சுந்தரமெய்க்குல சேகரனுட லுலங்கியமட்டுமரோ. (க)

மாலாவியல்பூம் பொழிலோடெழினீண் மாலாலபமேவு
நீலாசலநன் னகரத்தனில்வாழ் நிருபன்றகைபார்செங்
கோலானியல்சீ தாராமனருட் *குரவைக்கழலாரு
மாலானவனு மமொர்மாத்திரையு மறவாநிலைமேயான். (உ)

மணக்குந்துளவா தியநாடொறுந்தன் மலர்க்கைகொடுகொய்தே
வணக்குந்தளமின் னெனக்கற்புரியும் வனசத்தினிற்பெய்திட்
டிணக்குந்துளநெக் குறுபூசைபுரிந் தேத்துந்தகைசான்ற
குணக்குன்றனையான் புவியிற்கமழுங் குலசேகரநாமன். (௩)

---

* குரவை - கடல்.

காட்சிக்கெளியா னுமன்னுச்சிக் காலம்வரையுந்தன்
னுட்சித்தொழில்செய் தியல்பிற்பகரோ றன்பார்புலமைச்சீர்
நீட்சித்தகையார் பௌராணிகன்று னிகழ்த்துந்தனையொத்த
மாட்சித்தகைதோய் ராமாயணமுண் மகிழ்விற்றினங்கேட்பான். (ச)

மருவும்பவுரா ணிகன்மன்னவனுண் மலிபத்தியினீர்மை
தெருளுந்தகையால் வனவாசமுடன் சீதைபிரிநீர்மை
யொருநாளினுமோ துகிலானவன்றன் னுடனேய்பெறுபண்பாற்
றருசேயினையே வியதாலவன்சீ தையைராவணன்கொண்டு. (ரு)

போகுஞ்செயலா தியெலாமுறையிற் புகலத்திருமன்னன்
வேகுந்தகையா ருளமேவியுடன் விரைவிற்புறத்தேகி
மாகுந்தமுதற் கொடுவெம்பரியை வல்லேகொணர்கென்றே
வாகுந்தியயா னுயிரோடுறவென் மாதாவாஞ்சீதை. (சு)

தனைராக்கதன்கொண் டேகினன்யான்கொள் சனனம்வீணந்தோ
வனையுட்சிறிதஞ் சேலிப்பொழுதே யடியேன்விரைந்தெய்தி
வினைநேர்தருரா வணற்கொன்றுன்னை மீட்கின்றேன்யானென்
றினைவோடிவுளி மேற்கொண்டுததிக் கிடையேகிலதெய்ப்ப. (எ)

அடித்துக்குதிரை தனைநீடிரையா ராழிப்புடையேவத்
துடித்துப்புவிமே லேகுஞ்செயலிற் றுரகம்பாய்காலை
கடித்தண்கமலப் பதப்பத்திகொள்கா வலன்றன்செயல்கண்டே
தடித்துற்றமைமை புரைராமன்சா னகிதம்பியினோடும். (அ)

மெய்ப்பற்றகன்மெய்ப் பற்றமைமன்னன் விழிமுன்பரிவோடே
மைப்பற்றறலா ரக்கடனடுவோர் மாண்டோணியின்மீதே
யொப்பற்றமைகாட் சியளித்திடுசீ ருய்த்தோர்கிலனேகச்
செப்பற்றமதிற் றேணிசெலுத்துந் திறலோன்கேட்கின்றான். (கூ)

இலங்குங்கதிர்வேன் மன்னவரேநீர் யாண்டேகுதிரென்ன
விலங்கைப்பதிபுக் கமைராவணனை யீறுற்றிடச்சாடி
நலங்கொண்டவிர்சீ தையைமீட்டிடுவா னேகுவனென்ன
விலங்கன்னவனைச் சாடியிராமன் மிதிலைப்பதிமாதை. (க0)

மீட்டுத்தன்றம் பியுடனயோத்தி வியன்மாநகரேய்ந்தா
னுட்டுட்புகுவீ ரெனமன்விணிற்றன் னயனங்கொடுநோக்க
மாட்டுத்திகழ்புட் பகமானத்தின் மாடேகிடல்கண்டா
னீட்டுக்கடனின் றுங்கரையெய்த நின்றாடிபோற்றி. (கக)

மற்றோருடனென் றோதிலன்மன்றன் வளநாட்டிடைச்சார்ந்தே
கற்றோர்தருபௌ ராணிகனோடே கழறக்களிகைமிக்
கிற்றோவிறைவன் பத்தியின்மாண்பென் றிரவிகுலத்துங்கன்
பொற்றோடகமா மலரடிகண்டே போற்றிப்பணிநீரால். (கஉ)

மன்னன்றனைப்பல் வாறுபுகழ்ந்தே வள்ளற்றகைசான்ற
வுன்னன்பினையா னென்னென்குவனீ யுதிக்கிடையாழா
தின்னன்குறக்காத் திடச்சிராம னியற்காட்சியளித்தா
னந்நன்பமைந்தா யாதலினீதன் னியனுகினைமாதோ. (௧௩)
எண்ணில்கால மாதவமாற்று மியல்போருந்தங்கள்
கண்ணிற்காணச் சாத்தியமெய்தாக் கடவுட்டனிச்சேவை
மண்ணிற்றிகழ்வோர் போற்றிடுமன்னு வாழ்வீதெரிசித்த
தெண்ணிற்பத்தி மான்மியமதனை யென்சொல்குவனென்று. (௧௪)
பற்பல்வாறே பௌராணிகன்றான் பகருந்திறங்கேட்டுப்
பொற்பவிர்மன்னன் பச்சாத்தாபம் பொருந்தித்துயரோடு
வெற்பனவுள்ளத் திற்சினமிக்கிவ் விதமெண்ணிடுகின்றான்
கற்பமைசிதா பதிதனைநேரே கண்டும்பயனற்றேன். (௧௫)
அந்தோவந்தோ வென்சௌரியவீ ரியத்தாலகமீதே
கந்தோடுஞ்சீ றுங்கரிபோலே கதித்தேன்மதமென்றுண்
ணொந்தோர்தன்னை நிந்தைக்கூற்றம் பலவாறுவன்றேபின்
சிந்தோடுறழன் பினன்றன்கடமை செய்தேமகிழ்ந்துற்றான். (௧௬)

வேறு

மன்னர்மன்னன்குலசேகரன் மாநகராட்சிசெய் வைகலி
றுன்னருட்காதைசொல் வேன்*மைசால்சுக்கிலபக்கச்சதுர்த்தசி
தன்னிலருட்டகை நரசிங்கந் தானவதாரஞ்செ யுற்சவ
நன்னலப்பத்தியுற் றார்கொள நாடகமாகந டத்தினன். (௧௭)
மிக்கவிசேடங்கொள் சபைநிரு மித்தவண்பிரகலா தன்பொன்ன
னெக்கவமைந்திடு வேடங்க ளொன்றினரிருவர்மற் றொருவன்றான்
புக்கவச்சபைகொளோர் தூணின்பின் புறமறைவாகியி ருந்தனன்
றொக்கவப்பொழுதிர ணியனுடன் சுதற்கியன்றிடுகடா விடைகளும். (௧௮)
அக்கினியுடனலை யிடையிட லரவினையேவிட லாதியா
மிக்கினிதானபு ராணத்துள் விரித்துவிளம்பிய வண்ணஞ்செய்
துக்கிரமிக்கிர ணியன்காத் தோர்வடிவாள்கொடு மைந்தனை
யக்கிரமத்தொடு கைப்பிடித் தாரரியான்கொளக் காட்டுதி. (௧௯)
இன்றெனிலென்மொழி கொண்டிடா திகன்றிடுமுன்னது மெய்யையு
மொன்றெனமேவிட விடுகல னேதரியெவ்விடத் தானெனக்
குன்றெனப்பொலியுடற் பெற்றநீ கூறிடுசொற்சரி யன்றவ
னென்றெதுபோழ்தினு மெங்குமே யிபைந்தசர்வாந்தரி யாமியே. (௨௦)
என்றிடவுடனிர ணியனுட னித்தம்பத்துற்றுள னேவென
வொன்றிலையையமென் றிடக்காத் தோச்சினனேச்சவாண் டுற்றிடு
நன்றியனரசிங் கத்துரு நண்ணினனன்னவன் மேல்விழா
வென்றிகொணகங்களாற் போழ்தலு மெய்ப்படமடிந்தனன் வேடத்தான். ()

* மை - மேடம் சித்திரைமாதம்.

மீண்டுமெந்நாரசிங் கத்திரு வேடமிட்டாற்குள்வெ குட்சிதா
னீண்டுறக்காண்டலு மன்னவ னெஞ்சமிசைப்பயந் தன்பினுன்
மாண்டுலங்கும்படி பூசனை வயக்குபுபிரகலா தன்றனை
யீண்டுறவிடுத்தலுங் கோபமுற் றிரிந்தனன்சாந்தமிக் கெய்தினன். (உஉ)

இன்னதொர்பான்மையைக் கண்டவர் யாவருமிரணிய கசிபுபோற்
றுன்னலுற்றுற்குமா நரசிங்கத் தோற்றமுற்றுற்குந்து வேசந்தான்
முன்னமிருந்துள' தாகுமம் முனிவிதுகான்முடித் திட்டன
னென்னவிளம்பின ருய்த்துணர் வுடையரொப்பாஞ்சில கடையர்கள். (உங)

மற்றவர்சொன்மொழி கேட்டுமன் மனத்தினுண்மாலரு ளாடலென்
றுற்றனன்சில தினஞ் சென்றணி யோங்குசீராமந வமிபுற
நற்றகையுற்சவந் துவக்கியி ராமலக்குமணர்க ளாதியாச்
சொற்றபல்வேடமிட் டனைவருந் தோய்நரசிங்கமா னன்றனை. (உச)

தசரதவேடம்பு னைந்திடச் சாற்றுதலாலணிந் திட்டனன்
வசமுறுகாதையுற் பவமுதல் வனம்புகுமட்டுந டாத்துகா
னிசமுறுந்தசரதன் போலவே நீத்தனனுடகத் தானுயி
ரசலநிகர்த்தமை நெஞ்சுகொ ளன்புகண்டேவரும் வியந்தரோ. (உரு)

மன்னவன்றன்னுள மேவிய வரம்பிலன்புடன்விசு வாசமே
யின்னவற்றிற்கோரே தென்னவே யெண்ணிமகிழ்ந்தனர் முன்னைநாட்
டன்னனகோபிகள் கிருட்டிணன் றன்புரிலீலை டித்தலின்
*மன்னவன்கோலமுற் றுற்பத்தி மான்மிய மேமிகு மான்மியம். (உசா)

இராகவன்றன்வனத் தெய்தின னென்றிடக்கேட்டலுந் தன்னுயிர்
விராவிடவானிடை விட்டவன் மெய்த்தசர தனிலை மேவினன்
பராவியனெஞ்சொரு மாத்திரை பற்றினனித்தகை மேவிடி
லிராவுநன்பகலுமி ராமன்று ளெண்ணுநர்மாட்சியி சைப்பதோ. (உஎ)

இன்னணமாநகர் மேவினோர் யாவருமால்பதத் தன்பரா
நன்னலமாரர சாட்சிசெய் நராதிபனுங்குல சேகரன்
பன்னருங்காலமோர் குறையறப் பார்மிசைவாழ்ந்தவ சானத்திற்
கொன்னமையன்பர்கண் மேவுவை குந்தபுரத்தணைந்தானரோ. (உஅ)

வேறு

சீதைதனைரா வணன்கொண்டு சென்றானெனப்பௌ ராணிகன்சேய்
செப்புங்காதை கேட்டலுமுட் சினந்துசேனைத் திரள்களுட
னேதையுவரி மேற்குதிரை யுகைக்குங்குலசே கரன்காண
வும்பர்மிசைகோ சலம்புகல்போ லுண்மையருட்சே வையுமளித்தாய்
பேதையேனின் றனைக்காணப் பெற்றுமெய்யன் பற்றருளாம்
பேருதியங்கை விட்டவமே பித்தவுலக மயக்கடைந்திட்
டேதமிகக்கொண் டுழன்றனன்மெய் யின்பம்பெறுவ தென்றறியே
னிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உகூ)

குலசேகரகதிமுற்றிற்று

ஆகூ கவி நகூகூச

* மன்-அவன் எனப்பிரிக்க.

முப்பத்தைந்தாவது

# இ ர தீ ம தி க தி

மேலதாகு மிராமாயணம்வினுப் மீட்பன்சிதையை யென்றத்திமீதுபோய்க்
கோலமேவு மிராமன்றெரிசனங் கொண்டிடுங்குல சேகரன்சீர்சொனேன்
பாலகோவிந்தன் றன்னையசோதையிற் பரிவினேடு வளர்த்திடுமென்னையாஞ்
சிலமீடிர திமதிமெய்யருட் சீர்த்திதன்னிற் சிறிதுவிளம்புவாம். (க)

தெக்கணத்திற் றிகழொர்நகரிடைச் செல்வவேதியர் தங்குலச்செல்வியாய்ப்
புக்கமாதிர திமதியென்றபேர் புனைந்துளாண்மிக் கிளமையிற்கைமையாய்த்
தொக்கசுற்றத் தினர்முதலாகினர் துணைபெருதுதன் றெல்வினையெண்ணுபு
மிக்கதன்பொற் றிரள்களைப்புண்ணிய மெய்ந்நெறிக்கட் செலவிட்டிருந்தனள்.

தூயதொண்டரைக் காணில்வணங்கியே துய்க்கும்வண்ணஞ் சுவையமுதிட்டவண்
மேயகாலை யொருதினமாலையில் விண்டுபூசை விதிப்படிநாடொறு
மாயகாலந் தொறும்புரிகின்றமெய் யன்பரன்னு ளகத்திடைமேவிடப்
பாயபத்தி மிகுத்தவர்ப்பூசித்துப் பரிவில்வேண்டு பதார்த்தமளித்தலும். (ங)

அன்பர்சந்தியா வந்தனமாதிய வாற்றிக்கைகொ டமுதமமைத்ததன்
பின்பணிப்பெட் டகத்தமைபேரெழில் பிறங்குபாலகோவிந்தநன்மூர்த்திக்குக்
கொன்பயின்றிடு பூசனையன்பினிற் குயிற்றிநெஞ்சங் குளிர்ந்துநெகிழ்ந்திட
வின்பமார்பல துத்தியமோதியே யிருகணின்பநீர் பாயவிருந்தனன். (ச)

மற்றன்னேர்நிலை யும்பாலகோவிந்த வள்ளல்பேரெழி லுங்கண்டுமாதுதா
னற்றவத்திறப் பேறுறுபக்குவ நன்னலாலருட் கண்ணன்றன்மீதருட்
பற்றமைந்தவர் பூசைமுடித்துறு பாலகோவிந்த னைப்பெட்டியுள்ளமைத்
துற்றநைவேத் தியம்புசித்துற்றபின் பொப்பின்மாதவர் பொற்பதம்பேணியே.

தனதுபான்மை முழுவதுமோதியான் சன்மமுற்றது தொட்டிதுகாறுமென்
மனதறிந்தொரு பாவச்செயல்களும் வயக்கிலேன்மெய்ச் சன்மார்க்கமுந்தேர்கிலே
னெனதுயிர்க்கெப் பதவிகிடைத்திடு மென்பதுந்தெரி யாதுமிக்கெய்த்துளே
னனகநாயகன் புத்திரனின்மையா லாகுலக்கட லூடுபடிந்துளேன். (சூ)

அகதியெற்கொர் தருமமியற்றிடு மாற்றலில்லை யடிகடம்பாலமை
மிகவுங்காமர் படைத்துளபாலகோ விந்தமூர்த்தியைக் காண்டலுமென்மனம்
பகலவன்றனைக் கண்டவிழ்பங்கயப் பண்பமைந்ததப் பான்மையினலது
தகவொர்மூர்த்தி யமைத்தெப்பொழுதும்பூ சனைசெயற்கு ணினைவடைந்திட்டனன்.

பூசைசெய்யு முறைமையுமந்திர போதமும்புகல் வீரடியாளுயர்
மாசைகொண்டருள் விக்கிரகஞ்செயு மட்டுமிங்஡ன் வதிதரல்வேண்டுமென்
றாசைகொண்டுவின் னப்பிக்கமாதவ ரருள்கொடோதுவ ரந்தணிமுற்பவத்
தேசெய்வன்பவத் தாற்றவன்பாலக னின்மையெய்தினை யேனும்பவமிதில்.()

பாலகோவிந்தன் மீதளவின்றிய பத்தியேய்தலிற் பாக்கியமெய்திஞய்
மாலருட்பிர சாதம்பூசோபக ரணங்களோடுயர் மந்திரங்கொண்டல
சாலவுண்ணிறை பத்திகொண்டேயவன் சர்வாபீட்டங் களையுஞ்சாதிக்கு நீ
பாலகன்றனைப் போலுபசாரங்கள் பண்ணிலேதருள் பாலிப்பன்மெய்மையால்.

என்றுசாற்றியவண்மனநம்புமா றினியபூசை முறையுடன்மந்திர
நன்றுபோதித் திடவிக்கிரகமு நயந்தபூசைத் தனிமனையுஞ்செய்தே
துன்றுநன்முகூர்த் தத்தினிற்பூசனை துவக்கித்தூயர் மகிழும்பொருளளித்
தொன்றுமிச்சையி னில்விடையீந்துசேய்க் குற்றதாய்மிக் குபசரிக்கும்பண்பில்.

அருட்டிறம்பொலி பாலகோவிந்தனுக் கணிகள்பற்பல பூட்டியயலுளார்
திருட்டிதோடமெய் தாதானத்தின்மைத் திலகமிட்டுறு சீதளகாலத்தி
*லருட்டியெய்தா துடையூணமைத்துவெப் பாயபோதத னேனைபுரிந்துமுத்
தெருட்டிகழ்ந்த கரணங்கள்கொண்டுமச் செல்வனுக்குவப் பாம்பணிசெய்குவாள்.

துயிலுங்காலையின் மார்பிலணைத்துத்தன் றுகிலேப்போர்த்துவள் வைகறையெய்தலுந்
தயிலமாட்டிநி வேத்தியநல்கிப்பின் றனையனேகை தழைத்திடுசாதனம்
பயிலநல்கிக் களிப்பளிவ்வாறவள் பவஞ்சமோடுதன் மெய்புமறந்தரோ
வொயில்கொள்பாலகோ விந்தனைப்பாலனென் றுள்ளமீதுற நித்தகைவாய்ந்தனள்

காலையன்னதி லோர்தினம்பாங்கிற் கவின்மெய்ப்பாகவ தத்திடைகிட்டிண
லீலேகேட்கச்சென் றுள்கிட்டிணன்றுனநீதசோ ரம்புரிந்திடலானெடுங்
கோலேநேர்கண் யசோதையுளச்சினங் கொண்டுகிட்டிணன் றன்பிறகோடுபு
மாலையங்கையிற் பற்றியடித்தூான் மாடுகேட்டிப வாதியகேட்டலும். (கசு)

தன்னுட்புத்திர வாற்சலியத்தகைச் சங்கடஞ்சகிக் காதமுதேங்கியே
மன்னுபூமிசை வீழ்ந்துயிர்நீத்திடும் வண்மைகண்டவண் வைகியமாந்தர்க
டுன்னுபத்திர தீமதிதன்புடை சூழ்ந்தெடுத்தனர் சூழ்ந்தவடன்னுள
மன்னுமெய்ப்பிரே மைத்திறங்கண்டுள மகிழ்ந்தசோதையின் மாட்சியுற்றுளென்றே.

வந்தனஞ்செய்தன் பிற்கிரியைத்தொழில் வபக்கினுரிர தீமதியாருயிர்
சுந்தரம்பொலி தூயயசோதைதான் றேய்தருங்கதி தோய்ந்திட்டதன்னவட்
கந்தமார்தவ மின்றுதியானமின் றமைபும்யோகமெஞ்ஞானமின்றின்றருண்
மைந்தமைந்தபி ரேமாபத்திப்பெரு வைபவங்கொடு மெய்ந்நலமெய்தினுள்.

பகவன்வாமன நல்வடிவாகிமா பலிமனைக்கட் படர்ந்திடுகாலவன்
மகள்கண்டிச்சை மலிந்தச்சுதன்றன்ம னேகரத்தின் மயங்கியிப்பாலகற்
றகவளித்தரு டாய்தன்னியையிவன் றன்னைமானுஞ் சுதன்றனைப்பெற்றுநா
மகமகிழ்ச்சியு டன்மடிமேலமைத் தணிமுலேப்பா லருத்துவமென்றென.

தனதுளத்திற்சங் கற்பித்திடலிற்பூ தகியெனச்சன னங்கொடுபூமிசை
யனகன்மேவியற் கோகுலமாடடைந் தகத்தின்மிக்கது வேசம்பொருந்துபு
வனமுலேப்பா லருத்துபுமாய்ந்தருண் மலியசோதை பெறுங்கதிபெற்றன
ளினவரக்கிக் கருட்கதிகிட்டிற்றே வின்புலாமிரதீமதிபேறெதே. (கஎ)

---

* அருட்டி - நடுக்கம்,

நலஞ்சுமந்திடு சிரிரதிமதி நண்ணும்பாக்கிய நானிலமீதினிற்
புலஞ்சுமந்திடு போகம்விழைந்துழல் புல்லற்காதல னென்றவன்பூட்டமங்
கலஞ்சுமந்துறு பொன்வெள்ளிதாரமண் கலஞ்சுமந்து கருப்பஞ்சுமந்துமும்
மலஞ்சுமந்திடு பாலரைப்பெற்றனோர் மலஞ்சுமந்திடு மாதர்கள்கொள்வதோ.

வேறு

பிரமக்குலத்தின் பெண்ணாகிப் பெதும்பைகழியு முன்கைமை
பெற்றுப்பால கோவிந்தற் பிள்ளையெனப்பி ரேமையினாற்
பாவிக்கிருட்டி ணன்லீலை படிக்குங்காலை யசோதைதண்டம்
பயிற்றற்கேட்டுட் சகிபாதுன் பதஞ்சேரிரதீ மதிமனத்தில்
விரவுஞான சூரியனா விளங்கும்போன் பினையென்மன
மீதிலமைத்துப் பிறப்பிறப்பில் வீழுமயக்கு மாமாயை
யிரவுவிடியும் படிநின்னேக் கெந்நாளருள்வா யறிகில்லே
னிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ககூ)

இரதீமதிகதிமுற்றிற்று

ஆகவி ௩கூஅ௩

---

முத்பத்தாறுவது

# கன்னிகாத்துவயகதி

செல்லுறழ் மேனியண்ணற் சேயெனப் போற்றிமாட்சி
யொல்லுமா தாரதீம தியின்சரித் திரமுரைத்தேன்
சில்லுடன் பில்லுந்தங்க டெய்வமென் றெப்பில்சித்தி
புல்லுகன் னியர்கள்சிலம் புகன்றிடத் துவக்கினேனே. (க)

ஊருயிர்த் திடுதாய்தந்தை யுறுமிவ ருடற்கமைந்த
பேருமின் னவெனமுன்னால் பேசிட வில்லைமற்றோர்
சாருமன் னவனீன்றிட்ட தையலு மதிகாரத்தோன்
சீருயர் மகளுமாவர் தேகமா ருயிர்நேர்நேசர். (உ)

பூர்வசன் மத்தினூடு பொருந்துமெய்ப் பழக்கங்கொண்டு
சார்தரு முறவாயுற்றார் தாம்விளை யாடும்போது
மேர்தரு கடவுட்பூசை யினிதுசெய் தேயுவப்பா
ரோர்தின மரசனிற்பா லொருவிண்டு பத்தனெய்த. (௩)

மன்னவன் மனைவியுற்ற மாண்குழ விகளொடுஞ்சென்
றன்னவற் போற்றிப்போத மடைந்துதன் னிடத்திலெய்தக்
கன்னலங் குதலைச்சொற்கொள் கன்னியர் மீட்டும்பத்தன்
றன்னய லடைந்தவன்பொற் சரணமன் பொடுவணங்கி. (ச)

தேசவிர் குரவயாங்கள் சிந்தைகொ ளன்பினாளும்
பூசனை புரிந்துய்வானின் புனிதமார் திருக்கைகொண்டோ
ரீசனை யளித்தியென்ன விரப்பவன் னவனகைத்திட்
டாசிய முடனோர்கல்லை யங்கையா விரண்டு செய்தே. (௫)

திகழ்ந்தமூர்த் திகடந்நாமஞ் சில்லுடன் பில்லாமென்னப்
பகர்ந்தளித் திடலுமற்றோர் பரிவுட னவன்றாள்போற்றிப்
புகழ்ந்துட னவரின்மேவிப் பூசனை புரிந்துவந்தார்
நிகழ்ந்திடு பகவனன்னோர் நிட்காம பத்திகொண்டே. (௬)

அவரது பூசைதன்னை யாதரத் தோடுவந்தா
னிவணமாங் கியலுநாளி வியல்கிரா மாதிகாரி
நவமலி வீட்டினன்னோன் ஞாதிகள் பலருங்கூடித்
தவநெடும் பூசலிட்டத் தலைவனைப் புறத்திற்றள்ளி. (௭)

சார்ந்திடு முடைமைமுற்றுந் தம்வச மாக்கிக்கொண்டார்
பேர்ந்திடு மவரோடுற்ற பேதையும் புறத்தினெய்தி
யார்ந்திடு மன்பிற்பூசை யாற்றுதன் மூர்த்தியுள்ளிற்
சேர்ந்திடும் பான்மைதன்னாற் சிந்தையா குலமிக்குற்றே. (௮)

கனத்ததன் பொருள்களெல்லாங் கவர்தலிற் றாயத்தார்தன்
மனத்தள வறுதுன்பெய்தி மன்னவன் றன்பாற்சாற்றி
யினத்தர்பாற் கொள்ளும்பான்மை யெண்ணுகான் மணியிழந்த
சினத்தர வேபோன்மாது தின்னலா தியவுநீத்தே. (௯)

தேம்பிமிக் கழுதிரங்குஞ் செய்திதேர் தாயர்தந்தை
யாம்பிள்ளை மதிச்சீரோரா ரழல்பிள்ளை மதியாலென்றே
தாம்பிறி பிறிபொருட்க டம்மைமே லெனவுட்கொள்ளுங்
கோம்பிநே ரினத்தரோடுங் கூறுபு தேற்றினால். (௧௦)

மயிர்ப்பிறி தற்கிரங்கு மதியிலா ரனையர்மாற்ற
முயிர்ப்பிறி தற்கிரங்கு முணர்வுளார் மெச்சுஞ்சீர்சால்
செயிர்ப்பிறி பத்திமாது சிந்தையுண் மதியாளாகித்
தயிர்ப்பிறி மத்துழக்கத் தயங்கல்போற் றளர்ச்சிமிக்காள். (௧௧)

பண்பது தெரிந்துமேய பந்துவர்க் கத்தானார்
நண்பமைந் தவர்கடம்பா னண்ணிநீ கேட்டியென்னத்
திண்படு பத்திமாதோர் சேயிழை யோடன்னார்பாற்
புண்படு சிந்தையோடு போந்துமுன் றிற்பான்மேவ. (௧௨)

இகலவன் றடுத்தென்னிற்பா லெய்தலை யாண்டுவந்தாய்
புகலுதி யில்லுணின்னைப் புகவிடே னென்னமாது
பகர்வளா னுன்மனைக்குட் படர்ந்திட வந்தேனன்றென்
பகவனுள் ளமைந்துள்ளானீ புரிந்தெனக் களித்தியென்ன. (௧௩)

இரக்கமோர் சிறிதுமில்லா திகலவ னும்பராய்கொ
டிரக்கனு வனையசிந்தைத் தீயவன் சினத்தினோடு
முரக்கநின் மித்தியச்சொ லொன்றுமென் புடைநடக்கா
சரக்கவப் புறத்தில்வல்லே சார்தியான் மூடமென்பால். (கச)

இனியொன்று மிரத்தல்வார்த்தை யிசைத்திட வியைந்தசன்மச்
சனியென வென்மனைக்கட் டங்கிடல் போபோவென்ன
முனிவுமிக் குரைத்திட்டுன்றன் மூர்த்திசத் தியத்ததாகி
னனியமைக் குதியடைந்தா னன்குகொண் டேகாயென்ன. (கரு)

கொடியவ னீரமின்றிக் குலைத்தவாங் கொடுஞ்செற்கேட்டு
ளிடிவிறு வியசர்ப்பத்தி லிதயமே னடுக்கமுற்றும்
பிடியிடை மூர்த்திதன்னைப் பிறிந்துசென் றிடவாற்றுளாய்ப்
படியறு பத்திசான்ற பாவைமற் றவனைவேண்ட. (கசு)

தறுகணஞ் சேமூழம்வேகந் தலைக்கொண்டா னென்னவன்னேன்
முறுகுவெஞ் சினமிக்கொன்று மொழிகிலன் வறிதிருப்பச்
சிறுமிதன் பத்திச்சீலஞ் செகத்தர்தே ரவுமன்னுள்சீர்
நிறுவவுங் கருணையெம்மா னினைவுகொண் டமைந்தகாலை. (கஎ)

தன்னைநா டன்பர்துன்பாற் றளர்ந்திடும் போதிற்பொன்னு
மன்னைமார் பயையவின்பா ரறிதுயில் புரியுமாயன்
றன்னைமெய் யடியர்கண்முற் சார்த்திடு மகிமைசான்ற
பொன்னைநேர் பதங்களைதிற் பொருதடைந் திடுவபோன்றே. (கஅ)

ஆயபெட் டகந்தான்மெல்ல வசைந்தசைந் தவள்பாலெய்தப்
பாயபே ரன்புசான்ற பாவைமுன் னடையக்கண்டே
மேயநற் கன்னியுள்ள மீதெழு முவகையோடு
நாயகன் றன்னைக்கொண்டின் னண்ணிடத் துவக்குமெல்லை. (ககூ)

கால்வழுக் கஞ்சார்ந்திட்ட களேபா மனையானின்ப
மால்வயக் கிடுபோரடன் மாட்சியுன் மதியானுக்கிச்
சேல்வரி விழியாட்கூவிப் பெட்டகந் திறத்தியென்றுள்
ளால்வதி சிறுகற்கண்டா னதைக்கொடு செலற்கிசைந்தான். (உo)

அருணிலை யிற்றென்றோரா தறுவகைச் சமையச்சார்பின்
மருவிடு கின்றூர்தாமு மற்றதன் றிறந்தேராரே
விருவினைச் சடத்தையோரா னெனமதித் தநித்தமாயப்
பொருளினைப் பொருளாக்கொள்வோன் புந்தியிற் றெரிவன்கொல்லோ.

பெட்டகத் தோடுதெய்வம் பெயர்ந்திடக் கைக்கொண்மாது
மட்டறு களிப்பொடுந்தன் மனைவயி னடைந்திட்டாசான்
கட்டளைப் படிபூசித்துக் கனவமு தயின்றிட்டான்பிற்
பட்டவ ளருளார்மாயன் பதமல ரடைந்தாண்மெய்யே. (உஉ)

வேறு

இனியிராசன் மகண்மெயின்ப மிசைசரித்தி ரஞ்சொல்வே
னனியனுள்சின் னுமமேய நாதனைக் குருப்பிரான்
கனிவினேது தூயமந்தி ரங்கணித்து ளன்பினுற்
புனிதபூசை செய்திலங்கு போதிலெவ்வ னம்புக. (உங)

தாதைதற்கி ணைந்தசீர்த் தராதிபன்சு தற்கியன்
மாதைநல்க மற்றவன்வளங்கொணுட்டின் மேவியே
யோதையார்தன் மனையகத்தொ ருத்தர்காணு ருவணங்
கோதைபூசை யன்பினிற்கு யிற்றினுள்சி னுளரோ. (உச)

ஓர்தினத்த வண்மணுள னுற்றபூசை செய்தமை
சீர்தெரிந்து ளற்புதந்தி கழ்ந்துதெய்வ மென்பதா
மோர்பொருட்சி றந்திலங்க லுண்டெனச்சொ லோர்மொழி
யோர்வுறுத கேள்வியா னுகந்தமாதை வினவுவான். (உரு)

பிரியைநீயி வண்செய்கின்ற பெற்றியாவ தென்னெனத்
தெரிவைநாய கன்றிறந்தெ ரிந்துபுன்சி ரிப்புடன்
புரிவில்யானி யற்றதெய்வ பூசையென்ற லும்வனந்
திரியுமாவி னத்தினிற்சி றந்தவன்க டாவுவான். (உசு)

தெய்வமென்ப தென்னவென் றிடச்சிறந்த மாதுளே
வைவடைந்து சாற்றுவாளிந் நானிலத்தி னுமெலாஞ்
செய்வவான நன்மைதீமை யாவையுந் தெரிந்தவைக்
கெய்வவான வின்பதுன்ப மீதலாற்று மொருவனுல். (உஎ)

ஒழியுமெய்யை யானெனக்கொ டொருதொழிற்செய் வேமெனி
லொழிவதான வின்பதுன்ப மோவுறுது வந்திடு
மழிவிலாத தெய்வமீதி லன்பொடேது செய்யினு
மழிவின்மாத வச்சிறப்ப மைத்தருவின் பாகுமால். (உஅ)

திண்ணியங்கொள் வீட்டிடைச்செறிந்துளார்கள் பத்தரே
புண்ணியஞ்செய் திட்டபேர் புரந்தராதி யோர்பவம்
பண்ணினேர்க ணரகினூடு பாய்ந்துளோர்க டேர்விரா
லண்ணுமிவ்வி ரண்டையும் மடைந்துளோர்க ளவனியோர். (உகூ)

மிசிரமூடு புண்ணியம் மிகுத்துளோர்மண் வேந்தரே
நிசிகொள்பாவ மிகுதியாய் நிகழ்த்தினேர் தரித்திர
ரொசியவிவ் விரண்டுமற் றொழிந்தபேர்கண் முத்தராஞ்
சுசிகொள்பூசை யாகுமித் தொழிற்கொடுக்கு முத்தியே. (ஙo)

நங்கையின்ன வோதல்கேட்ட நாத்திகன்சி னஞ்செய்தே
யங்கைகொண் டெடுப்பதற்கு மருகனுகி டாதவன்
சங்கையின்றி யடிகள்கொண்டு தட்டினனு டன்கனேர்
கொங்கைமங்கை நெஞ்சகங் குலைந்தரற்றி னுளரோ. (ஙக)

அலகிறுக்க மேயபாரி யழுதாற்றல் காண்டலுங்
குலவுநாத்தி கன்பொருது கோரமேவி மூர்த்தியை
யிலகுதன்ம னைக்கயற்கொள் யாற்றினூடெ றிந்திட
விலகிடாத பத்திமாதும் வீழ்தரத்து ணிந்தனள். (௩௨)

அன்னபான்மை கண்டடைந்து ளார்தடுத்துன் மூர்த்தியை
யின்னதீர நல்குவோ மிறக்கனீ யெனச்செலா
மன்னனுதி யோரெடுக்கும் வண்ணமூக்கி னூர்சலந்
துன்னகாத மெய்தலிற் றுவண்டயர்ந்து போயினர். (௩௩)

புரண்டுமங்கை யங்ஙனே புலம்புகொண் டிருந்தன
ளிரண்டுவைக லேய்ந்துமுண்டி லாடயின்றி லாடனோர்
சாரண்டுலங்கு மூர்த்தியோடு சாவனென்ற போதவண்
முரண்டலங்கு நாயகன்முன் றுவதான நாளிலே. (௩௪)

எதிகைக்கொ டெய்திமூட மேயெழுந்து னின்மிசைப்
போதியான்பு கன்றசொற் புரந்திலாயெ னிற்கையின்
மீதிலங்க லென்னெனு விரைந்துநோக்கி டாயெனப்
பீதியெய்து மாறுரம் பிறங்கவோதி னனரோ. (௩௫)

செத்திடத்து ணிந்தமாது சிறிதுமச்சமின்றியே
நித்திலம்பு ரைந்தபற்க ணிலவெறிக்க வேசிரித்
தித்திறந்த மாதுகையி னுலியற்று வீரெனிற்
சத்தியந் தமக்குமிக்க தன்மமெய்து மாறலிர். (௩௬)

ஆவனீடு மெனதுதெய்வ மாவதைக்கொ டன்றியான்
சிவனோடு பாரின்மேற் சிரித்துமோடு வாழ்கிலே
னேவமன்ன வென்மெய்கொண் டுமக்குமும்மெய் கொண்டெற்கு
மாவதொன்று மில்லையென்னை யடுதிரென்று சாற்றலும். (௩௭)

கொற்றவன்கு மாரன்யான் குயிற்றலாவ தென்னின
னூற்றகற்கி டைத்திலென்னி லுயிர்விடத்து ணிந்துளான்
மற்றதென்கை கிட்டலெந்த வகைகொடென்று சாவியே
நற்றவங்கொள் பாரியோடு நயமிருந்து சாற்றுவான். (௩௮)

முனிவில்யானி டுங்கலப்புண் மூழ்கிவிட்ட தாழிடத்
தினியெவ்வாறு கிட்டுமேற்ற திணைகலொன்று நல்குவே
னனியென்மீது கிருபைசெய்தி யென்னநாய கன்சொலப்
புனிதைசற்று மஞ்சிடாது புகலுநாத னேடரோ. (௩௯)

வீவதற்கெ னுதுளத்தின் மெய்ம்மைபான்று ணிந்துளே
னுவதற்கு நீர்சகாய மருளமைந்து செய்திர் நுங்
கோவம்வீண்ப டாமலேதி கொண்டுகொல்லு வீரலாற்
றேவனெக்க வென்னையுஞ்செய் திடுதிரென்ன வோதியே. (௪0)

இனிநம்வீட்ட கத்தில்யானி ருந்திடேனெ னச்சொலக்
கனிவின்மன்ன னிற்கொல்வான் கருத்திசைந்திலே னாணீ
நனிவிரும்பி டத்திலெய்து கெனநவின்ற கன்றிட
வனிதைசில்லு பில்லுமூர்த்தி வடிவைநெஞ்சு ளுன்னியே. (௪௧)

அகாதவெள்ள மூடிரங்க வன்னகாலை மாதுளத்
துகாதமைந்த பத்திகண்டு வந்துமெய்ய ருட்கட
லிகாதனுள்பெட் டிபதுகாலி விடறுமாசெய் திடுதலுஞ்
சுகாதரத்த ளங்கைகொண்டு தூக்கிநோக்கு போதிலே. (௪௨)

தனதுதெய்வம் வைத்தபெட்டி தன்னொடொன்ற னோக்கினாண்
மனதிடத்த ளப்பிலோகை மன்னியுற்ற துன்பினாற்
கனமெனப்பொ ழிந்தகண்கள் களிமிகப் பொழிந்திட
வனகைதேவை வாகனத் தமைத்தன்பன்முன் மேவியே. (௪௩)

விளம்புவாளி றப்பவேணி வெள்ளமூழ்கு காலையென்
சளம்படாத சில்லுமூர்த்தி தாளிடத்த மைந்ததென்
றுளம்பரந்த வோகைமிக் குரைத்துநோக்கி டீரிற்றால்
வளம்பயின்ற தெய்வபத்தி மாட்சியென்ன வோதலும். (௪௪)

மன்னவன்கு மாரனெஞ்சின் மட்டிலற்பு தம்படைத்
தன்னவேல்வை தொட்டகத் தமைந்தநாத்தி கம்விடுத்
துன்னருந்தெய் வத்தொரன்பு ளத்தின்மேன்மே லுங்கொடே
மன்னருட்கொள் பத்தனென்ன வையமேத்த நின்றனன். (௪௫)

ஏலவார்கு ழற்கொண்மாதி னினியசேர்க்கை யாலிறை
பாலனன்ப னாகிமாய பாசமேம பாசந்தன்
மேலமைந்தி டாநலத்தை மேவினானிஃ தானரர்
மாலடிக்கண் மனமமைக்கின் மருவிடாத தில்லையே. (௪௬)

சில்லுபில்லு வென்னவாசி யங்கொடுற்ற தேசிகன்
சொல்லுமந்தி ரத்தினோடு துணிபடுத்தி யீந்திடுங்
கல்லுமன்பு ளார்கண்முன்பு காட்சிதந்த தோர்நரே
வில்லுலாவு பத்திமான்மி யத்தையோரும் விரகரே. (௪௭)

நாமரூப ரென்றுதம்மு ணன்கறிந்து ளார்களே
நாமரூப வண்மைதேறு ஞானமெய்து வாரிலோர்
காமரூப தெய்வமெய்மை கண்டிடாது மாயைதோய்
காமரூப தையலார்மெய் கண்டவத்தின் மாய்வரே. (௪௮)

ஆணெனப்பி றந்துதெய்வ மானதொன்றெ னக்கொளன்
மாணெனத்தெ ருண்டிடாது வாதியற்று வார்பவம்
வீணெனத்தெ ளிந்துபத்தி மேன்மையெய்து மாறுகா
தூணெனத்தி கழ்ந்தகாதை யுலகுளோர்க்கு ணர்த்துமே. (௪௯)

வேறு

சிலையொன் றினைக்கண் முன்னெடித்துத் தெய்வமென்றுஞ் சில்லுபில்லு
திருமந்திரமென் றும்பரிக சித்துத்தருந்தே சிகன்மொழியை
மலையொப்பெனநம் புபுபூசை வயக்கிப்பேறுற் றவரையிள
மதிசால்சிறுமி யர்களெனவுண் மதித்துப்பத்தி மார்க்கம்விடுத்
தலையுங்கடல்போற் பலகலைகற் றமையுநாம ரூபநிலை
யறியா துழல்புன் மதவாத ரறைமாயக்கூற் றின்வழிப்போங்
தெலையில்பெருந்துன் புற்றிளைத்தேற் கெந்நாளருளின் னிலையருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருo)

கன்னிகாத்துவயகதிமுற்றிற்று

ஆ. கவி ௪0௬௩

---

முப்பத்தேழாவது

# கருமாபாயிகதி

மன்னிலத்துளா ரியாவரும்பத்திநன் மான்மியந்தனைத்தேறக்
கன்னிகாத்துவ யரின்சரித்திரந்தனைக் கழறினனினிவிள்வேன்
றன்னிகர்த்தசீர் பெறுசெகநாதனுட் டழைமகிழ்வுடனேற்க
நன்னிவேதனம் புரிகர்மா பாயித னற்சரித்திரமாதோ. (க)

வளங்குலாவியற் புட்கரதீர்த்தத்தின் மருங்கமைநகரின்பால்
விளங்குவிப்பிர குலத்துதித்திட்டவோர் மின்கருமாவென்னுந்
துளங்குநாமமுள் ளாடலைவன்சுதர் சுற்றமொன்றில்லாதாள்
களங்குறுவித யத்தவண்மிக்கவுங் கலிப்பிணிப்புற்றுளே. (உ)

தனதுநற்குலத் தினுக்கிசைந்திடுசுயா சாரமோவிலளாகித்
தினமும்பிச்சைகொண் டுண்பவளிவ்வணந் திகழுங்காலத்தோர்நாண்
மனதுவப்புடன் பிச்சையேற்றிடச்செலவ் வழியிடைச்செகநாதக்
கனமகத்துவக் காதையோர்கவிவலோன் கழறினனிவன்மாதோ. (௩)

மாதவன்செக நாதநற்புரியிடை மன்னியோர்தினம்போற்றி
யாதரத்துட னேபுருடோத்தமற் கமைநிவேதனநல்கிற்
போதவும்பிர சன்னனுபிகத்திடை பொருந்துபோகமீந்தீற்றின்
மேதகைப்பர மபதமுந்தருமென விதந்துரைத்திடக்கேட்டே. (௪)

சுற்றமாதிய வின்மையிற்றுயர்ந்தனந் தூயசீர்ச்செகநாத
நற்றலம்புகற் கவுருநிற்பந்தமா நண் ணுமீண்டின்றெய்தப்
பெற்றதன்னவன் றிருவருளேயெனப் பெருமகிழ்வடைந்தாளாய்த்
தற்றவத்தலத் தேயடைவேனெனுந் துணிவடைந்தியாசித்தே. (ரு)

அன்றுதொட்டுத்தற் ககப்படும்பொருளெல்லா மருட்செகநாதற்கு
நன்றுளக்களிப் பொடுநிவேதனஞ்செய்து நனியுவந்தனளத்தே
குன்றுறுமனத் துடன்செகநாதத்திற் கூடிடத்துணையாவ
ரென்றுநாடியுற் றுளதுகாற்சில ரேகிடவுடன்சென்றே. (௬)

வரம்பிலோகையி னுடன்செகநாதனை வணங்கியன்னவரீந்த
தாம்பிறங்கிய வாரமிழ்துறழ் நிவே தனம்புசித்தின்பெய்தி
வரம்பிறங்குமா லயத்திலோர்முத்தினம் வைகினளன்காநா
டிரம்பிறங்குதான் கொண்டுளவிரதந்தன் சிந்தையுண்ணினைவெய்தி. (௭)

துவக்குநல்விர தம்பங்கமெய்தலிற் றுக்கமிக்குளமீதி
லவக்குணம்பொலி தனைமிகநிந்தைசெய் தையகோசெகநாத
னுவக்கநன்னிவே தனம்புரியாதுநா னுண்டனன்வறிதிந்தப்
புவத்தினுக்கெது வேகமுவாயெனப் பதைபதைத்தனளாகி. (௮)

பத்திமிக்கவோர் மறையவற்போற்றினள் பயின்றதன்செயல்சாற்றி
யித்திறத்தவ றறப்பரிகாரமே திசைத்திரென்றிட வன்னோன்
மெய்த்திறங்கொள்பத் திமைசெகநாதன்கண் மேவிநீபுறும்பண்பா
லொத்திடுஞ்செய விதனிலோர்தோடநிற் குற்றிடாதினிமேலே. (௯)

பிச்சைகொண்டமு தாற்றினைகடவுட்கர்ப் பித்துணுஞ்செகநாதற்
கிச்சையாவது பத்தியொன்றேயிதற் கில்லையெட்டுணையைய
*மொச்சைசெல்கெனக் களித்தவாறியற்றின ளொருதினந்தளிமேவிப்
பச்சைமாலடி தொழும்பொழுதறுசுவைப் பதார்த்தங்கள் குன்றேபோல். ()

பகவன்மெய்த்திரு வுருமறைத்திடமிகு பரிவுடனமைத்துற்றூர்
விகசிதம்பெறப் பூசைசெய்திடுந்திறம் விழிகொடுபார்த்தாடன்
னகமுளிவ்வணஞ் சொல்கின்றாளித்தகை யமைந்தவாரமுதுண்டு
நிகழுமாதவ னறிவிலேன்கேவல நிவேத்தியங்கொளலுண்டோ. (௧௧)

அன்றியித்தனை யுணவுகொண்டிடமரிக் கியானளித்திடலாய
சொன்றிகொண்டிடப் பசியுமுண்டாங்கொலோ சுவாமிக்குப்பசிசால
வொன்றிடேல்வைவை கறையதேயப்பொழு துறுபொடி †யரிவைத்தே
நன்றின்போடுணப் புரிவனென்றுதிக்குமு னனமாதிசெயாளாய். (௧௨)

துயிலுணர்ந்தெழுந் துடன்பொடியரிசியோர் தூயபாத்திரத்திட்டே
யயில்வுறச்செக நாதற்குநிவேத்திய மாற்றிப்பின்மனையூடே
பயிலுமற்றைய தொழிற்புரிந்தாலயம் பணிந்துபின்றானுண்பாண்
மயிலியற்கொள்பத் திமைகண்டுபத்தவற் சலன்மனமகிழ்வாகி. (௧௩)

அவளமைத்திடு நிவேத்தியம்பரிக்கிர கித்தனனமைந்திட்டா
னிவணமுற்றியல் காலொருதினத்தவ் ளியைதருமனைப்பாலோர்
தவமிகுத்திடு மறையவனெய்தவத் ததியவணிவேதித்தா
ளவனறிந்துபே தாயென்செய்தாயென வதட்டியோதிடுகின்றான். (௧௪)

* ஒச்சை - உற்றுக்கேட்டலுடையவள். † அரி - அரிசி.

விழுப்பமேவிய வாம்பலசெயல்கட்கும் விழுமியதோருங்கா
லொழுக்கமல்லவோ வுயிரினுமற்றதை யோம்புகவெனநாளும்
பழுத்தமாமறை யினமுரைத்திடுமது பான்மையுள்ளுணர்கில்லா
யிழுக்கமைந்துநீ செய்நிவேதனமரி யேற்றுவப்புறுங்கொல்லோ. (கரு)

இறந்திடுஞ்செயற் கிரங்கலையினி யேனுமுன்மனைமெய்யைச்
சிறந்திடச்சுசிப் படுத்திநிவேத்தியஞ் செய்தியென்றனன்போந்தா
னறந்திகழ்ந்திடு பத்தன்மாற்றங்கொள்வா ளகக்கிலேசமிக்குற்றே
நிறந்திகழ்திடு பத்தியாடனைப்பல நிந்தனைபுகன்றுளாய். (கசு)

நான்புரிந்திடு நிவேத்தியத்தினைச்செக நாதனுட்கொளாதன்றி
மான்புரிந்திடு மிச்செயற்குட்சின மருவியுமுறுமந்தோ
வேன்புரிந்தன னிச்செயல்வறிதிருந் திடாமலென்றியங்குற்றே
* கோன்புரிந்திடு மெனதுகுற்றத்தையுட் கொள்ளலையெனப்போற்றி. (கஎ)

பிற்றைநாண்முத லவ்வணம்புரிந்தனள் பிரியமிக்கணிநீலப்
பொற்றைநேர்செக நாதனுண்டமைந்தனன் போந்தனசிலநாள்பின்
னெற்றையாகினள் வார்த்திகமணைதலி னுரமிலாள்புலராமுன்
னெற்றையும்புரி யும்பணிவருத்தமுற் றியற்றினளொருநாளில். (கஅ)

வைகறைப்பொழு தருச்சகர்கோயிலின் மருவுபுசெகநாதன்
மைகவின்றமெய்த் திருவுருநோக்கினர் வதனமேற்சிறிதன்னம்
வைகல்கண்டிதென் னெனத்தம்முள்ளோர்கிலர் மயங்குபுதினம்போலச்
செய்கடன்புரிந் தருந்திலரல்லிடைத் திருத்தளியிடத்தெய்தி. (கசு)

கவலைமிக்கயர் வடைந்திடுமருச்சகர் கனவிடைச்செகநாத
னிவணமோதுவ னீண்டுகர்மாவென்பே ரிசைந்தவந்தணியுள்ளா
டிவசந்தோறும்வை கறையினிற்பொடியரி சிவைத்துநிவேதிப்பா
ளவணிவேதனம் பிரியமிக்கயின்றுநா னமைந்தனனொருநாளில். (உ௦)

ஒருவனன்னள்பா லடைந்தனுசாரமிக் குடையையுன்னதுபூசை
நிருமலற்குவப் பளித்திடாதெனச்சொலி நீங்கினனதனாலே
மருவிடுங்கிழப் பருவத்தள்பாசகம் வயக்குபுசுசியாகிப்
பொருவில்யான்பசி மிக்கமைவைகறைப் பொழுதின்முற்புரிதற்கே. (உக)

வருத்தமிக்குறும் பண்பெலாநாடியென் மனத்திடைமிகுதுக்க
விருத்திகொண்டவ ளமுதயின்றலம்பிடும் விதமறந்தனன்பின்னீ
ரருத்தியோடருத் தியநிவேதனமுமவ் வாகுலத்தினுண்டில்லேன்
றிருத்திமேயவென் றெண்டர்காணீயிர்மேற் செய்வகையீதாகும். (உஉ)

பத்திமிக்கமை தருங்கருமாமுனம் பயின்றதோர்முறையேபோ
னித்தியம்புரிந் திடிலதுவேயென்ற னெஞ்சினுக்குவப்பாகு
மொத்திடென்பொருட் டாலவடியருறி னுளஞ்சகிக்கலனன்னாள்
வைத்திடும்பொடி யரிசியைமுன்னர்நான் மாந்துவேனதன்பின்னே. (உ௩)

---

* கோன் - முன்னிலைப்பொருட்டு

நீயிராற்றிடும் பூசைகொள்வேனின்று முதனியமமிதாகுந்
தோயிங்நீர்மையை முன்னமாசாரத்தைச் சொன்னவனுடனன்னாள்
வாயின்மேவிமுன் போலியற்றுதியதே மாதவற்குவப்பென்றவ்
வாயினாற்சொல்வித் திட்டபினும்பணி மகிழ்வினேற்றிடுவேனால். (உச)

என்றுமாதவன் கூறவர்ச்சகரெலா மெழுந்ததிசயமிக்கு
நன்றுவந்துமெய்ப் பகவன்றாள்பணிந்துட னடந்தவட்காசாரந்
துன்றுகாதைசொற் றவனுடனவண்மனை தோய்ந்தனர்பணிந்தன்பா
லொன்றுமெய்ப்பக வன்மொழிந்தனவெலா மோதியின்னவனுன்பால். (உரு)

அறிவிலாதுமுன் சாற்றுமாசாரங்க ளன்பிலார்தாங்கொள்ளு
நெறியதாம்பத்தி யுள்ளவர்செயலெலா நியமமாநீதுக்கஞ்
செறிதரிற்சகிக் கிலனருளாழியாந் திருவுளச்செகநாத
னறியநின்னிவே தனங்கொடேபின்னரெங் நலத்தபூசைகொள்வானால். (உசு)

தன்னியத்தகை மேவினையெம்பிரார்த் தனைகொள்வாயெனவோத
மன்னிடும்பிரா மணியவர்மொழிகொடுள் வரம்பிலோகையினோடு
நன்னிமித்தமோ தியவருச்சகரடி நன்குதாழ்ந்தெழுந்தேத்தி
யுன்னிடுங்கல்வி யறிவிலேன்பெண்மையே னுடன்மிகத்தளர்ந்துற்றேன். ()

ஒழுக்கமொன்றுமோர் கிலனருள்கொண்டுநீ ருரைத்தவாசெகநாதன்
விழுத்தகைப்பதப் பூசைசெய்வேனென விடைகொடன்னவர்போன
ரிழுக்கறும்பத்தி மிக்கவளன்னவா றியற்றினள்சென்றோர்தாஞ்
செழுத்தகைப்பெரும் பூசைசெய்தார்செக நாதனேற்றருள்செய்தான். (உஅ)

ஆயபான்மைகண் டவரெலாமளவிலின் பமைந்துகர்மாநாம
தேயமுற்றபார்ப் பனிபத்தியுடனரி திருவருட்பெருக்கத்தை
நேயமெந்துபு துதித்தின்றுமவள்புரி நிவேதனம்புரிகின்றார்
தூயவன்னபத் தியினலமூலகெலாந் துலங்கிடும்படிமாதோ. (உகூ)

அநித்தியம்படு பொருள்கண்மேற்காதல்வைத் தரைக்கணச்சுகமின்றி
யனித்தராப்பிறந் திட்டுளோர்களிற்பலர் மாயையிற்பிணிப்பெய்திச்
செனித்திறப்படை கின்றனர்மாதவன் செழும்பதத்துளமூன்றி
வினித்தமெய்ச்சுக மும்புகழும்பதிந் தென்றும்வாழ்ந்திடலாமால். (ஙo)

இன்னவாகர்மா பாயிநாடொறும்புரி யினியபூசனைகொண்டே
பொன்னவாவிய மார்புடையானவள் புரிநிவேதனந்தன்னைத்
தின்னவாவியல் வாய்கொடனன்னவளுட றிருத்தியொடயின்றிட்டா
னன்னவாகனன் பின்னுமோருடலவட் களித்திடானிசமாதோ. (ஙக)

## வேறு

செகநாதச்சீர் வினவியவண் சேர்ந்துநிவேத்தி யம்பூசைத்
திறங்கண்டுவந்து நீபசிக்குஞ் செவ்விபுலரு முன்னெனத்தேர்ந்
தகமார்பத்தி யான்மெய்மறந் தந்தக்கரண சுத்தியுட
னருள்கர்மாபாய் பொடியரிசி யார்வமுடனுண் டருள்செய்தா

யிகலார்புலநா கப்புற்றை யானென்றெண்ணிச் சுத்திசெய்தே
யியம்புமாசா ரத்தினையே யிலக்காக்கொடுநிற் கருதாதே
யிகமேலிடம்பப் பூசனைசெய் திருப்பேறகன்பென் றீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கூஉ)

கருமாபாயிகதி முற்றிற்று

ஆகூ கவி சOகூடு

---

முப்பத்தெட்டாவது

## சாத்வீகராஜகதி

திருமாலுட் களித்தயினுஞ் செழியநிவே தனஞ்செய்திருட்
கருமாயை யைக்கடந்த கருமாபா யின்புகழ்ச்சி
யொருவாமெய்ச் சரித்திரத்தை யொருவாறோ தினனவ்வூர்ப்
பெருமானுஞ் சாத்துவிகன் பெருமையுஞ்சற் றிசைப்பேனே. (க)

இருடோயுஞ் சோலையிற்பாம் பினமணியு மேலகறுங்
குருடோய்மீ லத்தைமின்னார் குளிர்முகமு மாந்தர்கடம்
மருடோய்கச் சளத்தையருண் மால்பதமு மாற்றும்வளப்
புருடோத்த மப்பதிச்சீர் புகன்றுமுடித் திடலாமோ. (உ)

செகநாதத் தமர்ந்தருளுஞ் செகநாதப் பெருமாடன்
னகனுத மெட்டருந்தா ளகலாத விருதயத்தான்
மகநாத னேத்துமியன் மகத்துவம்பெற் றோனரிசீர்
புகனுதச் செழுங்கவிகள் புயலென்னப் பொழிநாவான். (ங)

அருளினாற் கடலனையா னவிர்குணத்தி லசலமொப்பான்
பொருளினால் வடதிசைமன் புரைகுவா னுற்றகல்வித்
தெருளினாற் சேடனெனத் திகழ்கின்றான் வேற்றரைபர்
வெருளினாற் றிறைகுவிக்கும் வியன்கொண்முன்றி லுடையானே. (ச)

பத்தியினின் மெய்த்திறலிற் பார்த்தனிக ராந்திறலோ
னித்தியமால் பிரசாத நேர்ந்துண்ணு நியதியுளா
னித்திறமன் னவனுறுநா ளியலொர்தினத் தன்னவன்றன்
மெத்தியபத் தியின்பெருமை விளக்கிடமால் கருதலினே. (ரு)

போதுநல மெல்லாமும் பொருந்தியுருக் கொண்டனரொன்
றோதுபுகழ்ச் சிலரையு மொருகணத்தி லுணர்வழிக்குங்
கோதுமலி வேசையுடன் கொடுங்கள்ளின் றுணையாய
சூதுமுயல் காற்பூச கன்றொடையல் கொணர்ந்தீந்தான். (சு)

அவனியுளார் பொருட்சார்போ டாயவுயிர்ச் சார்பனைத்துங்
கவருதலாம் வலிமையினாற் கடையினில்வல் லினம்பெற்ற
வவமுலவு தொழிற்குத்தன் னறிவதனைப் பறிகொடுத்தா
னவமலர்மா லிகைகொள்வா னன்னிடக்கை நீட்டினான். (எ)

மற்றதுதேர் பூசகன்கை மாலையிறைக் களியானுய்க்
கொற்றவன்றான் செல்வமதங் கொண்டுசக நாதனருட்
பொற்றடந்தோண் மாலைகொளப் பொருந்திடக்கை நீட்டியதா
லெற்றவன்செய் திடினுமவற் கிகலன்யான் மாலையென்றே. (அ)

வேறு

கோவின்மேவினன்பூ சகனதுகணத்திற் கொற்றவன்றன்னுணர்வமைந்தே
பாவியென்செய்தே னையகோசூதாற் பறித்திடுமுணர்ச்சியேனுயென்
னுவியாயாவிக் காவியாயமையு மருட்செகநாதனுமொப்பி
றேவியற்பிரசா தத்தினைமதியாச் செய்கைக்கேதாற்றுவனென்றே. (கூ)
மலிதருபச்சாத் தாபமேவினனுப் மயக்குமப்பொருள்கண்முற்றெறிந்தே
நலிவுடனினியென் செய்வன்யானென்ன நனியுளாலோசனைபுரிந்தே
பொலிவுறுசெகநா தப்பெருமாடன் புகற்பிரசாதமேற்காநம்
வலிமலிவலக்கை தடிதலேசெய்யும் வகைப்பரிகாரமென்றுன்னி. (க0)
விசனமிக்குற்றான் போன்றிருந்திடமன் விவேகமிக்கமைமுதலமைச்சன்
வசமடைந்தே*கோப் பியம்பலவுசாவி மனவியாகுலம்படும்வகையை
நிசமுறவெளியேற் குணர்த்துதிரெனமன் னிகழ்த்துவனென்னையெப்பொழுது
மசதிமிக்குறப்பை சாசமொன்றடைந்திட் டச்சமிக்குறப்புரிகிறதால். (கக)
அல்லினிற்சாலப் பயமுறுத்துவதா லனந்தலற்றனந்தமுள்ளெண்ணி
நல்லியற்சுகமின் றுற்றனனின்று நள்ளிரவூடுநான்சயனத்
தொல்லிடத்தொளித்தேய் குவையெனிலப்போழ் துணர்த்துவனென்றுயரெனமன்
சொல்லியவண்ண மமைச்சன்வாளோடுந் தோன்றன்மேவியவயினடைந்தே.
நவிரமேந்துபுநின் றான்கழுதுறங்கு நள்ளிரவூடுசற்றயர
வவிருமன்னதுகாற் றனதுமஞ்சத்தி லாடைகள்குவித்துமேன்மூடிப்
புவிமிசைதன்றா ளமைத்தன்மந்திரிதன் புலங்கொளாவணம்வெளிப்போந்து
கவின்வலக்கரத்திற் றடிபிடித்திறையைக் கடிதடித்திடுதல்போற்றுவக்க. ()
மந்திரியதனை யுணர்ந்துகைவாளால் வலக்கரத்தினைத்துணித்திடலுஞ்
சிந்தியகுருதி யோடமன்னின்ற திறத்தினைக்கண்டகந்தளர்ந்து
கந்தினின்றிடமன் னுடனவற்பார்த்துக் கலங்கலையிச்செயலானிற்
குந்தியபாவம் பழியெய்தாவிதனை யொழிக்கவுட்கொடேபொய்சாற்றினனுல்.
ஓங்கியற்செகநா தப்பெருமாடன் னுயர்பிரசாதத்தையன்பால்
வாங்கிடாக்குற்றந் தீர்ப்பதற்கேயிவ் வாறியற்றினனெனச்சாற்றித்
தீங்கிலென்பிரிய வமைச்சநீயிந்தச் செயற்கொர்சிந்தனைசெயேலென்று
பாங்கினிற்பள்ளி கொண்டிடப்புரிந்து பரவசமடைந்தனன்மன்னன். (கரு)
அன்னகாற்செகநா தப்பிரான்றன்ன தர்ச்சகன்கனவிடைமேவி
மன்னவன்கிரீடா சத்தனுயெனது வான்பிரசாதமேற்காமை
தன்னகத்துன்னிக் கைதடிந்திட்டான் றருமவனெனக்கதிபிரிய
னின்னபண்பானீ நாளைமற்றவன்பா லெய்தியென்மாலையீந்திடுவாய். (கசூ)

---

* கோப்பியம் இரகசியம்.

முருகலராலங்கற் பெற்றிடவலக்கை முளைக்குமுன்றுணித்திடுகரத்தைத்
தருநமதுத்தி யானமீதமைக்கிற் றமனரொன்றிடுமலர்த்தருவா
மருமலரிஃதெற் குவப்புளதென்ன மனத்தினுள்வியந்துபூசகன்முன்
கருமணிவண்ணன் பூசனைமுடித்துக் கவின்பிரசாதங்கொண்டெய்த. (௧எ)

கண்டமன்விரைந்து தெண்டனிட்டெழுந்து கண்கனீரிறைப்பநின்றிடலு
மண்டருச்சகன்கண் டிடுகனவோதி மாலையீந்தனனதுகொள்வான்
றண்டமைகரநீட் டிடவலக்கைதான் றழைத்திடக்கண்டவணமைந்தார்
விண்டமைபுகழ்மன் பத்தியைச்செகநா தன்விரிகருணையைவியந்தார். (௧அ)

அருச்சகனுடன்மன் னவனரிவலக்கை யதைச்சிவிகையின்மிசையமைத்துத்
திருச்செகநாத புரிவலஞ்செய்து திப்பியநந்தனத்தமைக்க
மருச்செறிதமனர்த் தருவதாய்வாச மலர்கொடின்றுஞ்செகநாதன்
றிருச்செறிபுயத்தி லணிதரும்வண்ணந் திகழ்ந்ததன்னவன்புகழ்தெரித்தே. ()

கோதுதோய்தொழில்பற் பலவுளுந்தலைமை கொண்டனைவருமிகவெறுக்குஞ்
சூதுமெய்ப்பத்திச் சாத்துவிகற்குத் தொடுகடற்பாரொடுவிண்ண
மீதுவாழ்பவரும் புகழ்ந்திடுநலத்தை வியனுறவளித்திட்டதென்று
லேதுசாற்றிடுதல் பத்தியின்பெருமை யிசைப்பரிதென்பதையொழிந்தே. ()

குற்றமுற்றதுவென் றிறையரிந்திடுங்கைகுளிர் மலர்த்தருவெனப்புரிந்து
பொற்றடந்தோண்மீ தணிசெகநாதன் புரையிலதென்றுகைக்கொண்ட
மற்றவன்னவன்றன் னுருவினைத்தனது *மனையருந்திடவிடுவானே
வுற்றவண்டங்க ளுண்டவாய்கொண்டே யுண்டனன்ருெண்டர்போற்றிடவே.

விதிநிடேதமென வேதமாகமங்கள் விளம்பிடலாமிருளினைவெண்
மதியினையறவே கெடுத்திடுமெருணன் மானுமிப்பத்தியாற்பல்லோ
ரதிநலமடைதற் கண்டுமற்றதைவிட் டயனெறிப்பட்டுழல்வார்தம்
மதியினைக்†குகுவின் மதியென்பதல்லான் மற்றெதற்கிணையெனன்மாதோ.

வேறு

சதுரங்கத்தின் மோகித்துன் றடந்தோண்மாலை கொளவிடக்கை
தானீட்டியகுற் றங்கெடவே தடிந்தான்மீண்டு முனதருளான்
மதுவார்மாலை கொளவளர்த்து வாளாற்றுணித்த கைதமன
மாமாச்செய்தம் மலரணிந்து மன்சாத்துவிகன் புகழ்வளர்த்தாய்
‡ பதுமம்பெறநா டொறும்பிழைகள் பண்ணியவைதீர் பரிகாரம்
பயிலாதேமீண் டும்புரியப் படருமனக்கோட் பட்டுழல்வே
னெதுகொண்டன்ப ரெய்துநரு ளெய்தக்கடவே னிசைத்தருளா
யிராமானந்தப் பெயர்கொடெனை திதயத்திலங்கும் பெருமாளே. (உ௩)

சாத்வீகராஜகதிமுற்றிற்று

ஆ கவி ச௦அஅ

---

* மனை - பூமி. † குகு - அமாவாசை. ‡ பதுமம் - கோடாகோடி.

முப்பத்தோன்பதாவது

# பாஞ்சாலராஜகதி

குற்றமுளதெனத்துணித்த காஞ்செகந்நா தனுக்குவகை குலவும்பூவா
ரற்றமில்சீர்த்தமனர்மர மாக்குசாத்துவிகமன்ன னரூட்சீர்சொன்னேன்
விற்றமைமெய்யன்பர்பத்தி யிற்றனையொப்பாகியவிர் வியன்பாஞ்சாலக்
கொற்றவன்மெய்ச் சரித்திரமு முணர்ந்தபடியொருசிறிது கூறுவேனே. (க)

சாந்தமருணீதியறந் தன்மமுதற்சற்குணங்கள் சலதியென்ன
வாய்ந்தவரிபத்திபெறு பாஞ்சாலமன்கற்பில் வடமீனென்ன
வேய்ந்தமனைவியொடடியர் பூசனைசெய்திருந்திடுநா ளிணையில்சீலந்
தோய்ந்தவொருபத்தசிரேட் டன்பலமாணுக்கருடன் றேய்ந்தானங்கண்.(உ)

அதிகடினமானமழைக் காலமகன்றிடுமட்டு மணிப்பாஞ்சாலப்
பதியமைந்துதீர்த்தவுடன் சஞ்சாரம்புரிசங்கற் பத்தராகி
மதிபெறுமன்னிடமடையக் காண்டலுநெஞ்சகமகிழ்ந்து வணங்கியேத்தி
வதியவொராச்சிரமம்வகுத் தளித்தவர்கள்வேண்டுபொருள் வழங்கிவந்தான்.

மிக்கசிரத்தையினொடுநா ளுளும்வந்துவணங்கியவர் மிசைதற்கான
பக்கணங்களும்பிறவு மளித்துவந்தானிருபன்செய் பணியுமுள்ளந்
தொக்கபெரும்பத்திமையின் பொலிவுமுணர்ந்துவப்பினுடன் சுகிர்தமேவிப்
புக்கமழைக்காலமொழிந் திடுங்காறுமாண்டமைந்து போனகாலை. (ச)

குருபரன்மாணுக்கருடன் கொற்றவன்பாலடைந்தன்பிற் கூறுகின்று
ணிருபவிதுகாறுமியா நின்பணிகொண்டேசுகமா நிலவினேமேற்
றிருமலிகேத்திரசஞ்சா ரம்புரியுஞ்சங்கற்பஞ் செறிந்தேமஃதாற்
பொருவில்விடையீதியென்னக் கன்னசூலத்திலவர் புகல்சொற்கேட்டு. (ரு)

தன்னுளத்தன்னவர்பிறிவாற் றலனேனுமற்றவர்க டாஞ்சந்தோட
மன்னும்வணஞ்சாற்றுகின்றான் றும்பிறிதலென்னுளச்சம் மதமன்றேனூர்
துன்னுமின்றைக்கேகவிர்பின் னாளேகலாமென்னச்சொல்லவன்னோர்
மன்னுரைத்தவாறமைந்தார் சாதுக்கள்பிறிவையெண்ணி வாடியேந்தல். (சு)

தன்மனைப்பாலெய்தமன்னன் றேவியிறைமுகஞ்சாலச் சாம்பியுற்ற
தன்மையறிந்துசாவிடமன் சாற்றுகின்றானீண்டமைசா துக்களானூர்
மின்மலிகேத்திரசஞ்சா ரம்புரிவானசைத்தென்பால் விடைபெற்றிட்டா
ரென்மருவுகாலையகன் றிடுவார்களிதற்கைய மில்லைமாதோ. (எ)

மற்றவர்போந்திடிலரிநா மங்கதைகீர்த்தனந்தினமும் வகுப்பார்யாரென்
றற்றமிறுக்கங்கொடுள்ளே னெனக்கேட்டமனையுமன மயர்ந்தாளாக
வெற்றவரேகாதவண்ண மியாம்புரியும்பான்மையெனு மெண்ணத்தோடுங்
கொற்றவனந்தப்புரத்தா னுகினனுளிரண்டடியார்குறுகிக்காணூர். (அ)

முன்றூநாண்மன்னனைநேர் கண்டுவிடைதருதியென மொழிவானுளே
தோன்றுதபன்வருமுன் போதிரின்றுகதைசெய்திவண் டுதைவீரன்பால்
யான்றூமதப்படுத்தும் பிழைபொறுக்கவேண்டுமென விரக்கக்கேட்டுத்
தேன்றூர்மார்பினன்பத்தி வசத்தினராயத்தினத்துஞ் செல்லார்வாழ்ந்தார். ()

பத்தர்கண்மீதுறுவிரகத் தான்மன்னன்வசமிழந்து பயிலுமுண்டி
நுய்த்தலிலனுகியுறக் கண்டவன்பாரிவிசாரந் தோய்ந்தாளாகிச்
சித்தமிசைநினைகின்றாண் மன்பத்தர்நீங்கிலுயிர் தீர்தறிண்ண
முத்தமக்கற்பினர்க்கன்ப னிறந்திடிலோர்பயன்சேய்பொன் னுயிராலுண்டோ.

பத்தர்கள்யாத்திரையொழியும் படியேதேனும்புரிவேன் பயிற்றினஃதா
லொத்தகணவன்சுகமுற் றிருக்குமிதற்கையமின்றென் றுன்னினளாய்
மைத்தகையன்றிரவிற்றன் சுதற்குவிடமூட்டிவிடின் மடிவானப்பாற்
செத்தவனையெழுப்பவெவ ராலுமியலாதுமன்னன் றிகைப்போடேய்வன். ()

தநியதின்மற்றவர்விடைபெற் றகன்றிடவொண்ணுதிங்ஙன் றங்குவாரென்
மதிகொடவ்வாறியற்றியிறந் திட்டபின்னர்தெழித்தழ வவ்வண்ணமோர்ந்து
பதியுடனப்பதியினரும் பத்தர்குழாங்களுமைதவண் படர்ந்துதேர்கான்
மதிநிகர்சேய்மறித்துறக்காண் டலுமன்னில்லோடேது வகுத்தியென்றான். ()

நான்புரிந்தபிழைபொறுப்ப தாகநீர்வாக்களிக்கி னவில்வேனென்னக்
கான்புரிகுந்தளத்தாய்நீ யேதுபிழைசெய்துறினுங் கமிப்பேனென்னத்
தான்புரிந்தசெயல்கண்முழு தோதினண்மன்னவனுளத்திற் சந்தோகொண்டங்
டியான்புரிகைமாறுனக்கே துள்ளதெனமெச்சினனில் லவளைமன்னே. (கங)

ஏகவாசிளங்குமரன் மறித்தசெயற்கோர்சிறிது மிரங்கிடானுய்ச்
சோகமுழுதற்றுமனை வியைப்புகழுமன்னவனுட் டுனிவைநோக்கி
மேகவண்ணனடியாரித் தகையபெரும்பத்திமைசால் வேந்தனுள்ள
நோகவயலடைவதுநன் றென்றுதன்சிடர்க்குளவு நுவன்றபோதில். (கச)

மற்றவர்யாவருமிறந்த மைந்தனைநோக்குபுமிகவும் வருந்தினரா
யுற்றபொழுதிற்குரவ ராண்டையர்யாருங்கேட்க வுரைசெய்கின்றார்
கொற்றவன்மெய்ப்பாரியெம்மீ துள்ளபிரேமாபத்திக் குணத்தால்யாவு
மற்றவருங்கடப்பரிதாம் புத்திரற்குஞ்சளித்திட் டமைந்துற்றாளால். (கரு)

தன்மையிதாலிச்சுதனை யுயிர்த்தெழுமாறரிபுரிந்தாற் றான்யான்பூமே
னன்மைபெறவாழ்வனின்றே லங்கியில்வீழ்ந்தொழிவலென நவின்றுளன்பாற்
பொன்மைதிகழரியிரு தாட் டுணைமனத்துணிறுத்திமிகப் போற்றுகாலை
யென்மையவானமையும் போதுசுதன்பையவிணைக் கண்டிறந்தே. (கசு)

ஆச்சரியத்தோடவண்மே வினர்களெல்லாமிகக்களிப்ப வணியார்பாலன்
மூச்சடையக்காண்டலுஞ்சற் குரவருளமகிழ்ந்துமைந்தன் முகத்தைமண்ணி
யோச்சயில்வேற்கரவிறைபாலளித்திடக்கொண்டுரைப்பனெனக்குறுசேயாதி
பேச்சமையும்பொருள்களிலோர் பயனின்றுதங்கடைக்க ணினியநோக்கே. ()

கொடும்பவவன்பிணியறுத்திட் டெந்நாளுமோவிலின்பங் கொடுத்தேயொன்றுங்
குடும்பவலைகடற்கடக்கப் புரிவதெனக்கேட்டலுமுட் குளிர்ந்துநாத
ரடும்பகையாம்புலங்களின்கட் டறுத்தமன்னனன்பின்வலைப் பட்டாராகி
நெடும்பதத்தொண்டன்பர்களை நோக்கியருளோடிவண நிகழ்த்துகின்றார். ()

யானெனுயிரகலும்வரை யிம்மன்னவன்றனைவிட் டிரியேனுற்ற
வானெனநின்றிடுமுளங்கொள் பத்தனைநீங்கிடிற்பாவ மருவுமென்னத்
தேனெனத்தித்திக்குமொழிக் குருநாதர்செப்பிடலுஞ் சீடரெல்லாங்
கோனெனநின்றிடுமாயன் வாழ்தலம்போற்றிடவழிக்கொண் டார்களாக. ()

மற்றவர்போவதற்குள்ளஞ் சகியாதன்னவரடிகள் வணங்கிப்போற்றி
நற்றவத்திரடிமைமுறைக் கிரங்கியமுதயின்றகன்மி னுளையென்ன
வற்றமைவேமெனப்புகன்று மறுதினமன்னன்விடைபெற் றகன்றார்சீட
ரற்றகலவ்வேல்வைகுரு பணியுவகையுடனரச னுற்றிவாழ்ந்தான். (உ0)

ஒப்பிலருட்குருபணியின் மகிமையின்மன்பாவமுற்று மொழிந்தானுகித்
தப்பிலன்பர் மேவுவைகுந்தம்புகுந்தான் மனைவிசககமனந்தன்னு
லொப்பியதன்னுயிர்துறந்து மன்னிடமேவலுங்குரவ ருய்த்தசேய்க்குப்
பப்பிறைமைநல்கியுத்தே சப்படிநாரணற்றொழுவான் படர்வதானார். (உக)

வினைவடிவாமுடனுனெ னுணவமேகூற்றமென்றும் வேட்கைமிஞ்ச
மனைவிமகார்மீதுவைத்த லேமாயாபாசமென்று மற்றோர்க்காக
வினைவுறுகன்மத்துழல்வ தேநிரயமென்றுமிதை யிகந்துமாயோ
னனைமலர்த்தாளன்பர்பணி புரிவார்க்குவைகுந்த நணியதாமால். (உஉ)

வேறு

தன்னுடடைந்த பாகவதர் தம்மைப்பிரியச் சகியானுத்
தளர்கான்மனைதேர்ந் தவர்த்தடுப்பத் தறையாண்மகற்கு விடமளிக்கக்
கொன்னர்குணங்கேட் டுவந்தவர்தங் கோலப்பணிசெய் தில்லுடனே
கொம்மென்றருள்வை குந்தமுறக் குணப்பாஞ்சால விறைக்கருள்வாய்
மின்னுருனதன் படியவர்போல் வேடம்புனைந்து வினையுருவா
மெய்யையபிமா னித்ததற்கு மேவுஞ்சுகதுக் காதிகள்கண்
டின்னுவுடனின் புற்றுழல்வேற் கெந்நாளுள்ளன் பீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உங)

பாஞ்சாலராஜகதிமுற்றிற்று

ஆகவி சகககக

---

நாற்பதாவது

# இராஜகன்னிகதி

அராவணையி லறிதுயில்கொ ளச்சுதனன் பர்கடிருத்தாள்
பராவுபுகழ்ப் பாஞ்சாலன் பரகதிசேர்ந் தமைபகர்ந்தேன்
விராவியநாத் திகர்தமையும் விண்டுபத்த ராகமுய
விராசகன்னி யின்சரித மிகமுணரப் புகல்வேனே. (க)

வேறு

வறந்திடாவளப் புட்கரதீர்த்த மருங்குதோய்நகர் மருவிடுமன்னன்
சிறந்திலங்குநற் குணந்திரண்டனையான் செல்விமார்புடைச் செல்வனற்பதங்கண்
மறந்திடாதகம் புறத்தினுநாளும் வணங்குந்தன்மையான் மாலடியவர்தந்
திறந்திகழ்ந்திடு பூசனைதன்னிற் செசத்திலொப்பிலாச்சிறப்பமைந்துற்றான். ()

இன்னவாறிய னுளவற்கெழிலா ரிலக்குமிக்கிணை நலத்தகைசான்ற
நன்னலத்தவ மகளுதித்துற்ற நற்குணங்களோ டும்வளர்ந்தன்பார்
தன்னதத்தன்மெய்ச்செயலறிந்துவப்பிற்றானுமிக்கமெய்ப்பத்தியொன்றினளாய்
மன்னருட்டவத்தொண்டரைப்பூசை வயக்கிப்பாதமார்வண்புனல்கொண்டே.

சிரசின்மேற்றெளித்துட்கொடன்னதன்பின் றினமயின்றிடு மனவரதமிற்றும்
விரதமோவறப் புரிந்தனளெவன மேவுநாளிறை வன்றனன்மகளைப்
பரவுசீர்கெழு தன்னையொத்தமையோர் பார்த்திபன்சுதற் களித்திடமகடான்
வரனதூர்புகுந் திட்டநாண்முதலோர் வைணவற்றன்கண் மகிழ்தரக்காணாள்.

விதனமிக்கவ ளாய்மகிணனுடன் விண்டுபூசனைத் தொண்டுளுற்றிடச்சம்
மதமளித்திட வேண்டலுமன்னோன் மனத்திலற்புத மருவினனாகி
யிதமொழிக்குயி லனையைநீசொல்வ தென்னைவிண்டியார் பூசனையென்ன
வெதனைச்சொல்வது நாங்களித்தகுசொல் லிசைக்கக்கேட்டதுமின்றெனவியம்ப

மாதுசங்கட மிகமருவினளாய் மற்றொர்மாற்றமும் வழுத்திலணின்றே
யோதுதன்பதி சுற்றமாயினர்கொ ளொழுக்கநோக்குகா லுற்றவர்யாருங்
கோதுதோய்கொடு வனத்தில்வாழ்விருகக் குழாங்கொள்வன்னெறி கொண்டுறும்பண்பா
லேதுமற்றிவர்நாமென்சொன்னாலு மேற்றிடாரென விதயத்தெண்ணினளாய்.

விருகமொத்தவ ருடனுறச்சென்னி மீதமைந்ததன் விதிவெறுத்தனளாய்
மருவிடும்பதி விரததன்மத்தை மனத்தினுடிமற் றொன்றுமெண்ணுகிலா
டிருமினுயகன் றிருவருணடித்தினங்கழித்தனள் சிறிதுநாட்சென்றோ
ருருவமாரனேர் புதல்வனையீன்றா ளொப்பில்பாலற்கண் டுவந்தனர்பலரும் (எ)

மன்னனுதிய பலருந்தம்முயிர்போன் மதித்திடுந்தன்னோர் மகற்குமூவாண்டு
துன்னவத்ததி யாண்டுளார்க்கறிவுச் சுடர்கொளுத்துவான் றோகையுட்கொண்டே
தன்னதாருயிர்த் தோழியொடோர்நாள் சாற்றுவாள்புறத் தேற்றமாநகர்க்க
ணன்னலம்பொலி விட்டுணுபத்தர் நண்ணினா ரெனினன்றுரைத்தியென. (அ)

ஓதமற்றவ ளாய்ந்தனவ்ரத முற்றநற்றவர்ப் பெற்றிலளாகிப்
போதநாடொறு மோதுசொற்கொண்டு புந்திவாடுபு புரவலன்மகடான்
மாதவன்பத மிகத்துதித்தரும் வைகலொன்றிலம் மாநகருள்ளா
ராதரம்பெறு காலமெய்தலின்மா லருளினாற்சில வடியவரடைந்தே. (௯)

மற்றம்மாநக ரிடத்திரவூடே வைகவோரிடம் வழங்குதிரென்றே
யுற்றமாந்தர்கள் பலரையுமிரந்து முதவிடாமையி னூர்ப்புறத்தமையப்
பெற்றவண்குளக் கரையுறுந்தருக்கீழ்ப் பெரிதும்வன்பசிப் பிணியுடனிருக்க
நற்றவத்தரைத் தேடியுற்றிடுவா னனிமகிழ்ந்தங்கு நண்ணுபுவினவும். (௧௦)

யாவர்நீரெவ ணின்றிவணடைந்தீ ரெங்ஙனேகுவீ ரெனவிளம்பிடுவார்
மாவனாய்விண்டு பத்தர்கள்யாந்து வாரகாபதி வயினின்றுமணைந்தோந்
தேவதேவன்மே வியசெகநாதஞ் செல்லுவோமெனச் சிலதியுள்ளுவந்தே
காவலன்மக ளிடமணைந்தன்னோர்க் கடாவலாதிய விடாதறைந்திடலும். ()

வினவுமன்மகள் சுதற்குநஞ்சூட்டி வீதலாங்குழ வியைமடிமிசைவைத்
தனலுறும்புழு விற்பதைபதைத்தே யாற்றக்கேட்டட னரசனாதியரு
மனமயர்ந்தவ ணடைந்துசாவிடுகோன் மாதுநான்றெரிகிலனெனவழுத்தித்
தனதுகாதல னாதியருளச்சஞ் சலம்புணர்ந்திடப் புலம்பினடெழித்தே (௧௨)

கண்டுளோர்வின வினர்களுந்துன்பக் கடலுக்கோர்கரை காண்கிலரானார்
மண்டுமத்தகி மன்மகளங்ஙன் மருவினோருடன் வழுத்துவளென்பின்
னண்டுசோதர னிங்ஙனமுன்னு ளாவிநீங்கின னதுகொடெனத்தன்
விண்டுபத்தரை யழைத்தவர்க்கன்பால் விளம்புபூசனை வளம்படவாற்றி. (௧௩)

நயந்தவன்னவர் பாததீர்த்தத்தி னானமாற்றுவித் தனனதுகாலை
வியந்துபத்தர்கண் மாதவன்றன்னை மிகத்துதித்துயிர் மேவிடப்புரிந்தா
ரியந்தழைத்தவென் றுதைநாட்டிவ்வா றெண்ணில்லார்பய னண்ணினரிதனால்
வயந்தழைத்தவிந் நாட்டின்மாலடியார் வந்துளாரெனில் வல்லையீண்டழைத்தே

மைந்தனாருயிர் பெறப்புரிமினெனா மங்கையோதலு மன்னனாதியரு
மிந்தநாள்வரை விட்டுணுபத்த ரென்றுசாற்றிடு மிச்சொல்கேட்டறியோ
மெந்தவாறவரிருப்பர்மற்றவர்சீ ரிசைத்தியென்றிட வென்சகிதேர்வள்
சந்தமேவுமென் றந்தைபூசனைசெய் தகவுந்தேர்வளென் றவடனையழைத்தாள்.

யாதுசெய்பணி யெனவினவிடமன் னிசைப்பனீவிண்டன் பரையறிவாயா
லோதுநம்பதி மீதவரணைந்துள் ளாரெனிற்கணத் துறப்புரிதியெனப்
போதுபத்தர்வந் துளதிறமன்பாற் புகன்றிட்டம்மகள் பொருவருகளிப்பாய்ச்
சாதுவாமரி யன்பர்பாலேகித் தாழ்ந்திறைஞ்சியங் கழைத்துவந்திட்டாள். ()

பரிவினால்வர்ப் பூசனைபுரிந்து பாததீர்த்தத்திற் பாலனையாட்டி
யுரிமைமிக்கவர் பதம்பணிந்திறைவ னுற்றசெய்திகண் முற்றறைந்திடலு
மரிதனன்பர்விண் டுவின்பதநாடி யமைத்தசித்திரத் திமைத்திலரிருப்ப
விரியுமன்பர்மற் றவர்களிற்பத்தி மிக்கவோர்விருத் தன்விளம்பிடுவான். (௧௭)

பத்தர்காளிறை வன்மகளுள்ஞ்சால் பத்திநோக்குமின் பாவையுட்களிப்பச்
செத்தபாலனை யெழுப்பியல்லால்யாஞ் சேருமிவ்விடந் தீர்தலாகாநாஞ்
சித்தமேயசங் கற்பமுற்றிடவே சென்னிறங்கொளெம் மான்புரிந்திலனே
லொத்தநம்முயிர் துறத்தலேவிதியென் றோதவுற்றவ ரொருங்குசம்மதித்தார்.

அரசிளங்குருந் தினைப்பிறர்பார்க்கா தாடைகொண்டுமூ டினாருகமைந்தே
பாசுபாணிபோற் றிடும்புகழ்ப்பகவன் பாழிமான்மியம் பாடியேத்தினராய்
விரவுமானந்த வேலையுட்படிந்தார் வேலையன்னதில் வேலையேந்தியகை
யரசனாதியர் மரித்தலினிருந்தா ராதவன்குடக் காழியிற்படிந்தான். (ககூ)

அன்னகாற்குழ வியினவயவங்க ளசைவுகொண்டன வன்னதையறிந்த
மன்னனாதியர் துயர்க்கடற்கரையை மருவுகண்களிற் றெரிகுநர்போன்றார்
கன்னலொன்றகன் றிடுமுனம்பாலன் கடிதெழுந்திடக் காண்டலுமவரு
ளின்னவாறென வோதருங்களிப்பு மெழுந்ததாலுளன் புடன்றொகமாதோ. ()

தனைமறந்திடு பாவசமுடன்மன் சார்ந்தமாதவர் தாண்மிசைவீழ்ந்தெந்
தனையனாருயிர் பெற்றனனென்னச் சாற்றமாதவர் தம்விழிகொடுபார்த்
தனையிலன்புசான் மாதவன்றிருத்தா ளன்பிற்றுத்திய மாற்றினரக்கா
லினையவற்புதங் கட்கொர்வித்தாகு மிறைவன்மாதன்ப ரிணையடிவணங்கி. (உக)

இறந்தபாலக னுயிர்த்தலிற்பெரிது மின்பமேவியா ழியின்வழிப்போந்த
சிறந்தகப்பல்வான் கரையினையடைந்த செய்கைபோலருட் டிரையின்மூழ்குற்றுன்
மறந்தழைத்தவே விறைகளிசிறந்து மாயனன்பரைவந்தனாதிகள்செய்
தறந்தழைத்திடத் திருவமுதயில்வித் தங்ஙன்மேவிட வடிதொழுதிரந்தான்.

அன்பர்யாஞ்சக நாதனைவணங்கி யடைகுவோமது காறுமன்னவநீ
பொன்பயின்றிடு மாலடியன்பிற் பூசைசெய்துபுன் னெறியெலாம்போக்கி
நின்பதிக்கண்மே வினர்களாரையுநன் னெறிப்படும்படி நிறுவிமாதவன்றன்
மின்பயின்றதாட் பத்தியில்லாரை வியன்கொணின்னக ரினும்விலக்குதியால்.

என்றுசாற்றிமன் னவற்குபதேச மியம்பிப்பின்னிவ ணேய்துமென்றகன்றார்
நன்றுமேவிய விறைமுதல்யாரு நயந்தமன்மக னற்குணம்வியந்திட்
டொன்றுமன்புமேன் மேலுமோங்கினரா யுலப்பிலின்பமிக் குற்றிருதிதனின்
மின்றுலங்குகார் நிகாருண்மாயன் விளங்குவைகுந்த வளம்பதியடைந்தார். ()

வேறு

சீலமிகுமன் புதல்வியெனச் செனித்துநாத்தி கங்கொணரா
 திபற்கோர்மனையாய்த் தான்புகுமத் தேயத்தமைவா ருய்ந்திடுவான்
பாலன்றனக்கு விடமருத்திப் பத்தர்பாதோ தகத்தெழுப்பிப்
 பயின்றநாட்டைத் திருத்திடவப் பாவையுளமொத் தளித்தாயாண்
டுலமளித்துன் னடியிணைக்கோர் தொண்டனெனவும் புரிந்தினிநின்
 றாயவருட்பே றீந்தாளாய் சும்மாவிருக்கி லுனக்கிளப்ப
மேலவருமற் றதுகுறித்திட் டேனும்போன் பீந்தருள்வா
 யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உரு)

இராஜகன்னிகதிமுற்றிற்று

ஆ. கவி சகஙகூ

---

நாற்பத்தோன்றுவது

# சொன்னகாரகதி

நாத்திகக்கொடு நெறிபுகுநாட்டின ரரிதா
ளேத்திடப்புரி யிராசகன்னியின்கதை யிசைத்தேன்
மாத்திகழ்ந்திடு முராமுளாற்காலயம் வகுத்து
மீத்திறக்கதி பெறுசொன்னகாரர்சீர் விள்வாம். (க)

காண்டரும்பொரு ளெவற்றிற்குமுதலெனக் கவின்மார்த்
தாண்டன்வங்கிசந் தனில்வருதகைமைசால் சோழ
ராண்டகாவிரி நாட்டிடையணிவைகுந் தமென
மாண்டயங்குசீ ரங்கநற்பட்டினம் வயங்கும். (உ)

உபயகாவிரி மத்தியிலோங்குமத் தலத்தில்
விபவமிக்கமை சேடணுகியபள்ளி மீதிற்
றபம்விராவிய லன்பர்கட்கொப்பில்வான் றருவிற்
சுபம்விராவருட் டுயில்செயுங்கருணையச் சுதனே. (௩)

அனந்தமாம்புற நகர்கொளன்பருமனந் தழைத்த
வனந்தழைத்திடு பணிகொளவ்வளநகர் மருவிக்
கனந்தழைத்திடு மேனிமா தவனடி கருதி
மனந்தழைத்திடு சித்திபெற்றுவப்புடன் வதிவார். (ச)

அன்னமாநகர்க் கணித்துளதாம்பதி யமையுஞ்
சொன்னகாரர்க ளிருவர்மாதுலன்மரு கனெனத்
துன்னலானவோர் முறையினரிவரின்மேற் றுதைகா
னன்னலங்கொளோ ரன்பன்சீரங்கநண் ணிடுவோன். (ரு)

வேறு

அந்திமே வலினுமற்றோ ராற்றுநற் றவமன்னானை
யுந்திடு திறத்தினாலு முவர்மனைப் பால்விராவ
முந்தியற் பத்தியோடு முதுவனைப் பணிந்துபோற்றிப்
பந்தியா ருபசாரங்கள் பலபடப் புரிந்தார்மன்னோ. (சு)

ஆங்கவ ருபசாரங்கண் டகமகி ழன்பனானோ
னேங்கரு ளாலன்னோர்க ளுய்ந்திட வுவணமூர்ந்தோன்
பூங்கழற் றுணைதோய்பத்தி மான்மிய போதமாற்றத்
தேங்*கமு தலைநேர்பத்திச் சிந்தைமாற் குரித்தாத்தந்தார். (எ)

காருறக் கண்டுளோகை கதித்திடு மயிலேபோலக்
காருறழ் படிவன்றன்னைக் கருத்தினுட் கண்டுகண்டு
பேருவப் போடுவாழ்காற் பிறங்குவார்க் கேககாலத்
தோருதிப் புற்றதெம்மா னியக்கலில் வியக்கமன்னோ. (அ)

---

* அமுதலை - பாற்கடல்,

தூலமீ தழியாச்சிர்த்தி தோயவுஞ் சூக்குமந்தான்
ஞாலமேற் புண்ணியத்தை நண்ணவு நம்மதான்மா
மேலதாங் கதியினூடு விரவவு மொப்பிலெம்மாற்
காலயம் பலருமுய்ய வாற்றிடல் வேண்டுமென்றே. (கூ)

அரியசங் கற்பமன்பி னளவளா வினர்கள்பேசி
யரிதிருப் பணிகாமாற்ற லாவதே யெனினுந்தீமை
விரிதரித் திரங்கொள்வேம்யாம் விரும்பிடல் விபினமேய
நரிசிவ லோகமெய்த நாடிடுந் தகையதாமால். (கo)

என்றுளங் கொண்டுமோவா தெழுந்தபே ரார்வந்தன்னுற்
கன்றுமுள் ளங்கொடின்ன கருத்தினுட் டுணிவார்செல்வ
நன்றுதோய் தருநம்மூர்வாழ் நாத்திகன் றன்பாலாளா
யொன்றுபு சோரமாற்றி †யுரைகொடிஃ துளுற்றல்சால்பாம். (கக)

வேறு

எனவுன்னினரா யன்னவன்பா லெய்திவணக்கத் துடனிசைப்பர்
கனமன்னியசீர்ப் பிரபுமற்றோர் கதியின்றும்ம தடைக்கலம்யாந்
தனமன்னியநும் பணிசெய்து தருதல்பெறல்வேட் டடைந்தனந்தம்
மனமன்னருளாலெமையாள வேண்டுமென்ன வழுத்திடலும். (கஉ)

அவ்வாறமைதி ரெனவமைந்தா ரவன்பொன்வைக்குந் தானமதே
யெவ்வாறதனை நாங்கொளலென் றெண்ணிமுயன்று மறிந்தில்லா
ரொவ்வாவிலைதீர் பொற்பதுமை யொன்றேயந்திடக்கண் டங்கதனை
வவ்வாவேகல் கடனெனத்தம் மனங்கொண்டமைந்தா ரோர்நாளில். (கங)

யாருமயின்று துயின்றிடுநள் ளிரவிற்பதுமை யமையறைக்குட்
சாரும்வழியின் றியொர்கிளிவாய் தலைக்கண்டம்மா னுண்ணுழைந்து
சேருந்திடுபொற் பதுமைதனைச் சீலமருகன் கரத்தளித்தா
னேருந்தியபே ரார்வத்தால் யாக்கைமிகவும் பூரித்தான். (கச)

புறந்தோய்தருவான் மிகமுயன்றும் போகாமையிற்சாற்றிடுவானீ
நிறந்தோய்பதுமை யிதுகொண்டுன் னெஞ்சுட்சிறிதுங் கவலாதென்
சிறந்தோங்கியசென் னியையறுத்துச் செல்லின்றேற்கண் டிடிற்சால
மறந்தோய்கொடிய னிருவரையு மாய்ப்பானையமின் றிதற்கே. (கரு)

இருவர்தாமு மாய்ந்திடினம் மெண்ணமுடியா திகபரத்து
மொருநற்பயன்கொள் ளாதுவறி தொழிவோம்பழிபா வங்கொடுநீ
பொருவில்பணிசெய் திடில்யானும் புனிதமுறுவே னீதன்றித்
தருணமிதிலோ ருபாயமிலை தாழ்க்கேல்வல்லை யியற்றென்றான். (கசு)

மருகனதுகேட் டடனங்கன் வயக்கிப்பதுமை தனைத்தனிலத்
தொருவரறியா வகைமறைத்திட் டுற்றவிடஞ்சார்ந் துறங்கினன்
பொருவின்மருகன் போந்திடலும் பொன்னுருரங்கொ ளச்சுதன்றன்
றிருபையாலம் மானுக்குத் தலைமுன்போலக் கிளைத்ததுவே. (கஎ)

---

† உரை-பொன்.

தான்முன்னுறங்குந் தானத்திற் சார்ந்துதுயின்றான் புலரியிலம்
மான்முன்னுறக்காண் டலுமருகன் வரம்பிலின்புற் றரிபருட்சீர்
வேன்முன்னுபுபத் தியோகையுள மேன்மேலமைந்து வினவிநெடு
மான்முன்னின்று முடித்தசெயல் வழுத்தித்துதித்து வைகினர். (கஅ)

தமதுபணியிற் றலைநின்றார் தமதுபணியின் றலை நிற்ப
மமதைதமிகுநாத் திகனெழுந்து வயங்கும்பதுமை தனைக்காணு
னமரும்வாயி றிறந்துறக்கண் டவசமிகப்பூ மியில் வீழ்ந்து
தமரவாரி நிகர்துக்கஞ் சார்ந்துசாலப் புலம்பியே. (கக)

சுற்றந்தேற்ற வெழுந்தவன்றான் சுளிவுதலைக்கொண் டுணர்வழிந்திட்
டுற்றகருமத் தினுக்கிதுநா முஞற்றவேண்டு மென்றுன்னன்
கொற்றமலியா ளாயினர்க் கூவியுரைப்பா னுமையாளாப்
பெற்றசெயலா லொருபயனும் பெற்றேனிலனென் றான்பெற்றும். (உ0)

கோண்டமனத்து நாத்திகன்முற் குயிற்றுமறமு மிவர்தவமுந்
தூண்டலானீ ரீண்டிருப்பிற் சுகிர்தமெனக்கின் றகன்மினென
நீண்டவருண்மா யவனருட்சீர் நினைந்துவியந்து நெஞ்சகத்துட்
கூண்டகள்வன் றனைக்கண்டார் குருடனறியீ ரெனநீப்ப. (உக)

அந்தோசெயலொன் றறிகிலம்யா மயர்ந்துதுயிலும் யாமத்தே
வந்தோகையினிற் கள்ளர்கொள வறிதிங்கிருப்பே மெமைவாளா
நொந்தோதிடிலென் புரிவேமா னுமக்கெம்மீதி லருளின்றேற்
சந்தோடமெமக் கிங்கியற்றத் தக்கதண்ட மிதுகொலென. (உஉ)

நீங்கிச்சிலநாள் வறிதிருந்து *நிதானப்பதுமை தனைமாற்றிக்
காங்கிற்பொலிமே னியற்குமனோ கரமார்கோயி றம்முளத்தின்
பாங்கிற்புரிந்து மாயனருட் பரவை படிந்து பாமரர்க
டாங்கிட்டரிய வரிபதத்திற் சார்ந்தார்வினைக டீர்ந்தாரே. (உங)

நகமேவுபுசெய் தவமல்ல நன்றாமொழுக்க மகமல்ல
விகலார்நாத்தி கன்பணிசெய் திருந்தார்க்கரிந்த தலைபொருத்தல்
சுகமேவியவான் பணிமுடித்தச் சுதன்றாளடையச் செய்தலன்னோ
ரகமேவியமெய்ப் பத்தியெனி லாரேயதன்மாண் பறைவாரே. (உச)

வேறு

பத்தியுடனின் னணியரங்கப் பணிசெய்திடநாத் திகன்மனைப்பொற்
பதுமைகவர்ந்து பூரித்துப் பலகணியின்மெய் நுழையாதா
லொத்தின்புடனென் சென்னிதடிந் தோங்கும்பணிசெ யெனமருகற்
கோதுவான்போந் தலைமீட்டு முதவியவாமுற் றுறப்புரிநீ
நத்தியுனது திருப்பணியு நலன்சாலடியர் பூசனையு
நசையிற்புரிந்து கொடியவர்க்கு நன்மைபொருத்த நாடுமெனை
யெய்த்திவ்வுலகத் துழலவிட லியல்போவருட்பே ரீந்தாளா
யிராமானந்தப் பெயர்கொடெனை திதயத்திலங்கும் பெருமாளே. (உரு)

சொன்னகாரகதிமுற்றிற்று

ஆகவி சகககக

* நிதானம் - பொன்.

நாற்பத்திரண்டாவது

# அன்னவியாதகதி

அன்னமார் கழனி மன்னுகாவிரி யரங்கனாலய மமைத்திடுஞ்
சொன்னகாரர்சரி தத்திலோர்சிறிது சொல்லினேனினிவி கங்கமாத்
துன்னலானவெகி னங்களோடுணர்வு தோய்தராதவன வேடனும்
பொன்னருவுரமொ லண்ணல் பேரருள் பொருந்துமாட்சிபுகல் வேனரோ. (க)

அணிநிலாவுமது ராபுரிக்கணமை வாயமன்னவன்மு னுள்செயுங்
குணிதமின்றியப வத்தினன்மிகைகொள் குட்டரோகமரு வுற்றரோ
மணிமுதற்சொல்வகை களைமிகச்செய்தனன் மற்றதோவும்வகை கண்டிலான்
பிணிசெய்வெந்துயர்ச கித்திடாதொல்பிர யாகைவீழ்ந்துமடி. வேனென. (உ)

மனதினுன்னினன கன்றபோததிச மர்த்தனுகுமொர்ம ருத்துவன்
முனமடைந்துடலை நீமடித்திட முயன்றதேதுபிணி யாலெனி
லினசெயற்புரியின் மூன்றுவைகலிலிஃ தோவுமாறுசெயல் வாய்மையா
லெனதுசொற்றிறமு ணர்ந்துபின்னினதொரெண்ணமொத்துமுய லென்றலும்

மன்னனன்னவனு ரத்துரைத்தசொன்ம தித்து மிக்குவகை யெய்துபோ
தன்னவன்புகல்வன் மற்றிதற்குயிர மைந்தவன்னமளி யாயதா
லின்னவன்பிணித னக்கொரௌடதமி யற்றுவேனெனமன் வேடனைத்
தன்னரண்மனையின் மாடமைத்திதுச ணத்தினல்கெனவ னுப்பினன். (ச)

கிராதனுற்றிசையு மேகிகாடுபுகி டைத்திடாதுதுய ரத்துடன்
விராவுமூர்புகவ ருந்ததிக்கண்வள மிக்கவாவிகொள்க ரைக்கணே
யுராவியன்னமுப யங்குலாவிடலு ணர்ந்துபற்றமுயல் போதினிற்
பராவவானிடை யடைந்ததான்மிகைபருவரற் கடல்படிந்தனன். (ரு)

அன்னகாலையரை யன்வியாதனைய ழைத்தமூன்றுதின மூன்றினுட்
கொன்னமைந்தவெகி னங்கொணர்ந்தனைகொ டுத்திலாயெனினி னைக்குலந்
துன்னலாருயிரை வென்றிவாட்கொடுது ணிப்பனென்னவெருண் மிக்கவன்
முன்னடைந்தருள மேவிநோக்கிடமு குந்தனன்பனவ னுற்றனன். (சு)

அன்னவன்றனரு கிற்பயஞ்சிறித மைந்திடாமலெகி னங்கடோய்
நன்னலந்தனையு ணர்ந்துவிம்மிதமு ணண்ணியிந்தவகை யுன்னுவான்
மின்னவிர்ந்தவருள் வைணவப்படிவ மேவிலின்னவைவெ ருண்டிடா
தின்னலின்றியரு கெய்துமப்பொழுதி லெளிதுகொள்வனென வுன்னுறா. (எ)

நாளையந்தவகை செய்வனென்றுமனை நண்ணினனுயுந லங்கொணல்
வேளையெய்தலின்வில் வேளைநல்கினன்மெ யன்பர்வேடம்விர வுற்றரோ
வாளைபாய்தருவ ளக்குளக்கரையின் மன்னிராமகிருட் டிணவெனத்
தேளைநேர்குணமு ளானுரத்தினெடு செப்பியேமகிழ்வி லுற்றனன். (அ)

உறும்வியாதனெர்வி யாசவேடமவை யுள்ளுணர்ந்திவன ணமக்கொள்வான்
பெறுபொய்வேடமென வருகுறற்கதிக பீதியாணெகின மேய்பெடைக்
கிறதிரூழவரு மவனுளக்கிடையி சைப்பவோதுமுபர் பேட்டனங்
குறுகணுளனிவ ணம்மைவவ்வும்வகை சார்ந்துளானெனினு மஞ்சியே. (கூ)

இன்றுமோடன்முறை யன்றிதற்குமுனி ரண்டொர்வைகனமை யேகொள
வென்றுமேவினனு ளஞ்சியோடினமவ் வியல்புதேறிவயி ணவனெனு
வொன்றுவோமெனில கன்றிடாவெனவு ளூறுதிகொண்டிமன ணேர்ந்துளான்
றுன்றும்வேடம்வறி தன்றிராமனுயர் தூயநாமமுமி சைத்தனன். (க0)

ஆதலாலவன்வி ருப்பமீதலற மாகுமஞ்சுபுப றந்துநாம்
போதனன்றலவி வன்பிடித்ததிக புன்கணுற்றுவனு தித்துளோர்
சாதலற்றமைவ தில்லையீதுசர தம்மெனப்பெடையி சைத்தலுங்
காதலாணெகின முந்தனுட்டிறல்க லந்தவ்வாறுபுரி வேமெனு. (கக)

அசைகிலாதவண மைந்தபோதவன டைந்துசேவறனை வெளவலு
மிசைகுலாவுபெடை நாயகன்கொளிடை யூறெழிந்திடவ வன்கையின்
மிசைவிழுந்திடவி யாதன்மற்றதைபு மிகுமகிழ்ச்சியொடு பற்றியே
நசைகொடன்மனைய டைந்துபஞ்சரந விற்றியிட்டிறைகை நல்கலும். (கஉ)

பார்த்திபன்களிமி குந்தவற்களவில் பரிசளித்திடம ருத்துவன்
பூர்த்திபெற்றிடவிந் நோய்தொலைந்ததுபூ பாலநானவினை யாற்றிசீ
யார்த்தியோடெனரு கணைதியன்னவுட லமைவதானகுரு தியின்விராய்
நேர்த்தியாரவுட தத்தைபுன்னுடலி னேர்ந்துதேய்க்கவென வோதலும். (கங)

குட்டநோய்செய்துய ரத்திஞன்மதிகு லைந்தகொற்றவனவ் வண்ணமே
யிட்டமோடுபுன லாடிடச்செலவ வேல்வைவைத்தியனெ னப்புகுந்
துட்டனங்கவைக ளைச்கொலும்படிது வக்கவத்ததித னன்பரோர்
கட்டமெய்துறிலொ ழிக்கவேவிருது கட்டியுற்றகரு ணைக்கடல். (கச)

பத்தவற்சலன தைச்சகிக்கிலனென் பத்தர்போலும்வடி வத்துடன்
மெத்தவென்றனரு ளுமமோதியுறும் வேடனைத்தமுள றிந்துமென்
னுத்தமத்தகைமை யன்பர்பத்தியையு ளுன்னியிந்தவெகி னங்கடா
மொத்தவாருயிரு நல்குதன்மையினு கந்தபத்தியவெ னக்கரோ. (கரு)

ஆதலாலவைக ளைக்கொலாவணம ளிப்பன்யானெனவு ளங்கொடே
சீதரன்கடித வண்மருத்துவவெோர் திருவுருக்கொடுது லங்கியே
மேதகுந்திறல்ப டைக்கும்வேந்தனைவி ளுவுமன்னிவெகி னங்களைக்
காதலேதுகொடு நோய்தணித்திடல்க ணித்தெனிற்கொடிய தொழில்செயேல்.

சாருமென்னிடம பூர்வமாகியவொர் தைலமுள்ளதது தடவிடிற்
றீருமெந்தவித குட்டரோகமுமெய் சிறிதுமையமில யென்றலுங்
கூருறுங்கதிர யிற்கைமன்னுவகை கொண்டவாறுபுரி குதியெனச்
சீருறும்புயன ளித்ததைலமது செங்கையேற்றுமனு ரைத்தனன். (களா)

என்பகர்ந்திடுவ தக்கணத்தவன்மெ யேய்ந்தகுட்டமுழு திரவிதன்
முன்பணைந்தபனி யென்றெழிந்ததுடன் முன்பினுங்கதிர மைந்ததா
லின்பமைந்தவண மைந்தமானிடர்க ளியாரும்விம்மிதமி பைந்தன
ரன்பமைந்துடன்மன் முன்பமைந்தபவ வாரியன்கழல்கள் போற்றியே. (கஅ)

மருத்துவர்க்கொருசி காமணித்தகைவ யங்குநின்கிருபை கொண்டியான்
மிருத்துவெய்திடவ டர்ந்திடும்பிணியை மின்னிமைக்குமுனம் விலகியே
யுருத்துலக்கமுன முற்றதிற்பெரிது மொவ்வினேனெனெருசென்மமுந்
திருத்துசாபலிய மெய்தலாயதெதிர் செய்வதிங்கறிகி லேனென. (கக)

இட்டமானபொரு ளோதிடிற்றடைய தின்றியீவனென மன்சொலச்
சிட்டர்பத்திரசு முண்டொளிர்ந்துதுயி றிருடன்மென்னகைசெய் தருளியே
மட்டறும்பிரிய மன்னநீபென்மிசை வைத்தியேலிவெகி னங்களைத்
திட்டமோடருடி பின்புமொப்பருவி சேடமாம்பொருள்க ளுண்டெனில். ()

எனைதுசற்குரவ னுக்குநல்கிடுதி யிந்தவைத்தியசி ரேட்டனே
முனமெனைத்தெரிகு வானிந்நாண்மறதி மூடலுற்றனனி னேரிலிற்
றனயனைத்துவெகு நாள்கலைத்திரட சுப்பயின்றுளனெ னப்புகன்
றனகனன்னவனெர் தந்தைதாய்மனைய மைந்துறும்பெயரு மோதினன். (உக)

வினவினேர்பலரு முவகைவிம்மிதமி குந்துதம்முடிது ளக்கினர்
மனதிலையமிக மருவியுற்றனனவ் வைத்தியன்புவனி காவலன்
றனதுள்க்கனிவொ டனமிரண்டையுமு தவவியாதவம ருத்துவன்
வனமிருந்தநக ரங்கடந்துறும ராளமேகிடவி டுத்தலும். (உஉ)

ஓதிமங்கள்பக வன்றனைத்துதிசெய் தொப்பில்பத்திமுனை நாளினு
மீதிகொண்டவவை கட்பிடித்திடும்வி யாதனுந்தெளிவுநீடியே
கோதிலங்கிடுவியாசவேடமிது கொண்டதாலெகின மெய்துமேன்
மாதிறச்சரத வேடமேவிடில்வ ராதநேதெனவுளுன்னியே. (உ௩)

வேடமற்றதுக ளைந்திடாதுமெய்கொள் வேடனுற்றமெய்கொள் வேடனுய்
வேடனத்தனடி நாடுமன்பர்கள்வி யக்குமந்திரவு ருச்செபித்
தீடறும்பரம பத்தனுயரித னின்பமெய்த்தரிச னங்கொடே
பீடமைந்தவெகி னங்களோடரிபி றங்கிடும்பதம டைந்தனன். (உச)

விகங்கவர்க்கவெகி னங்களுக்கும்வன வேடனுக்குமறை யாயிர
முகங்களிற்றுதிசெய் திட்டுமெட்டருமு குந்தநாயகனன் முண்டகச்
சுகங்கலந்தவடி யிற்புகுத்துமிய ரேய்ந்தபத்தியிதை விட்டய
மகங்களாதியபு ரிந்துபின்விருக வடிவமாவர்சில மந்தரே. (உரு)

கற்றுளார்களதை யற்றுளார்களொடு கான்விலங்குபுளெ னப்புகன்
மற்றுளாருயிர்க ளுக்குமாதுருவை மானுமொப்பிலுயர் பத்தியைப்
பெற்றுளார்களும னேர்களுக்கடிமை பெற்றுளார்களுந லம்பெறச்
சற்றுமோவறவ னேர்களுக்குறுகை தாங்குமியானெனரி மொழியினல். ()

அரிதனின்பவுருவைக்கணத்தினடி யார்பெறச்செய்தவர் கட்குமிக்
குரிமைமேயவுட லாதியன்னவனு வந்துதாங்கும்வண முற்றிடும்
பெரியபத்தியினு மிக்கதொன்றிலைமெய் பேசிலென்றுணரு மேன்மைதான்
முரிவினற்றவமு றும்பவந்தொறுமு யன்றுளார்பெறுவ தாகுமே. (உஎ)

வேறு

வேடமிசையுள் ளன்பமைந்து வேடனிடஞ்சா ரெகினங்கள்
வீயாதருளான் மருத்துவனு மேவிமதுரா புரிமன்னன்
றேடமிசையுங் குட்டமறத் தொலையக்கணத்திற் புரிந்தவத்தந்
தோயும்வேடன் றனக்குநிசந் துலங்கவருளிப் புட்களுடன்
கூடவருட்பொற் பதமளித்த கோவேயெளியே னளவிலருள்
கொள்ளார்போன்று மாயையிடை குமையவிடுத்தா யிதுமுறையோ
வேடவிழும்பூந் தடம்பொழில்சா லின்பச்சிரவ ணப்பதியா
பிரமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உஅ)

அன்னவியாதகதிமுற்றிற்று

ஆக கவி சகஅகூ

---

நாற்பத்துமூன்றுவது

# வைசியபத்திகதி

இன்னமாநில மிசைமனிதப்பவ மெடுத்துளார்நலமெய்த
வன்னம்வெவ்வன வேடனற்கதிபெறு மற்புதமறைந்தேன்மேன்
மன்னருட்டிறற் பத்தர்தம்பணிகொடு மாணலமிகவாய்ந்த
கின்னரர்பிரா னிகர்த்தவைசியனருட் கீர்த்திசற்றுரைப்பேனே. (க)

குடக்கிராச்சியத் தமைதரும்வைசியன் குறைவிலாச்செல்வத்தா
னிடக்கிலாமுதற் கற்புடைமனையுட னில்லறத்துறைநாளிற்
றுடக்கியைந்தநன் மகவிலாமையினுளஞ் சோர்ந்துதன்னுள்ளத்தி
னடக்கிடற்கருந் துக்கமேவினனுற வவன்றனல்வினைதன்னால். (உ)

கருணைவாரியார் மேகநேர்திருவுருக் காகுத்தனிருபாத
வருணவாரிச மலர்ந்தருட்டேன்பொழி * யாவியொத்தமையுள்ள
மருவுமொப்பிலோர் மாதவனவன்மனை வயினுறவுள்ளன்பிற்
பொருவில்சோடசோ பசாரபூசனைசெய்து புனிதமாரமுதூட்டி. (ங)

சேவடித்துணை தாழ்ந்துமா தவனிடஞ் செப்புவன்முன்யான்செய்
பாவபுண்ணிய மிகையினன்மைந்தனில் பண்புநற்பொருட்பேறு
மேவலுற்றன னெனதுசம்பத்தெலா மெல்லியலுடன்யானுஞ்
சாவதானபின் னுகர்வர்யாரருள்கொடோர் தனயனீந்தருள்கென்ன. (ச)

---

* ஆவி - குளம்.

வணிகனோதுசொற் கொண்டருண்மாதவன் வகுப்பனீசொலல்வாய்மை
யணிகொள்பாலக னின்றெனிற்பூமிசை யார்க்குமோர்சுகமில்லை
தணிவில்சேயிலா வில்லறத்தினர்கடஞ் சன்மம்வீணேயாகும்
பணிவினென்புடை யிரத்தலின்யானொரு பாயமோதுவனிற்கே. (ரு)

கடைப்பிடித்ததை யியற்றின்மாலருணின்பாற் கலந்திடுமதனாலே
கிடைப்பதற்கரி தாம்பொருளொன்றிலை கிளத்துவதியாதென்னிற்
படைப்பியற்றுவோன் றாதைதொண்டன்பர்தாட் பணியிதுமுதனீயங்
நடைப்படாயென வோதமுக்கரணத்து நனியுவப்பொடுசெய்தான். (சு)

அறமியற்றுயிர்க் கடுத்துறுபதத்தினி லளிக்கும் பண்டாரத்திற்
றிறமமைந்துள பத்தர்தம்பணியினாற் றிகழ்தராப்பொருளுண்டோ
வுறவரின்பதுன் பங்கொளமனையவ ளுயிர்த்தனளொருபெண்சே
யறவொன்றில்லவ னதனையோர்ந்துவகைமிக் கானெனவளர்த்திட்டான். (எ)

இருளும்வெம்பவத் தொடக்குறுமாருயி ரிதயமேன்மிகநாடிப்
பருவாற்பெறி னுங்கிடையாப்பொருள் பகருமற்றது தானே
தெருளும்புண்ணிய மாற்றிடிற்சிந்தையிற் சிந்தனைசெயுமுன்ன
மருவுமென்றரு மறையினம்பகருண் மாற்றமங்கவர்தேற. (அ)

பின்னர்வற்சர மூன்றுசென்றினையனாண் பிள்ளையொன்றையும்பெற்றே
நன்னலங்கொள்பே ருவகையங்கடலிடை நனைந்துமுன்னையிற்சாலப்
பொன்னமர்ந்தமார் புடையன்பத்தர்கள்பணி புரிந்தமையடியார்க
ளென்னவேண்டினு மீந்தவர்களிக்குமோ ரேவலன்போன்றுற்றான். (கூ)

இன்னவாநிகழ் நாளின்மிக்குரோகமெய் திடுமோர்பத்தனவன்பான்
மன்னவன்னவற் காயுள்வேதியற்கொடு மருந்துகண்மிகநல்கி
யன்னபானமா தியபத்தியந்தவா தளித்தலினோய்தீர்ந்தே
யன்னவன்வணி கன்கொளவோதுவ னகதியாகிடும்யான்றான். (க0)

உன்னதாரரு ளாற்பிழைத்தேன்குல வுற்றவைசியனேகாண்
பன்னலானவென் னிளமையிலீன்றவர் பாறினரெனைப்பத்தர்
மன்னருட்கொடு வளர்த்தனர்யானின்னோர் மனைவிடுத்தினியேகே
னன்னவத்திர மெற்களித்திடுமெதி யெனவவன்றொழுதோதும். (கக)

இந்தநன்மனை பொருளெலாமரிபத மேத்துமெய்யடியார்தஞ்
சொந்தமானவீங் கிவற்றையான்காத்தவர் * தொத்தெனாவமைகின்றே
னுந்தமக்கியன் றிட்டவாதனையற நுகர்ந்தமைதிரென்றோத
வந்தமின்றிய வுரிமைமிக்கமைந்தன னவன்சுதன்பிதாவென்னும் (கஉ)

முறைமையன்புட னேபத்தற்பிரிகிலா முறையுடன்வாழ்ந்திட்டா
னிறையுமார்வமிக் கமையுநாளோர்தின நிகழ்நகருள்ளாரும்
பொறைகொள்வைசியன் மனைவியாதியர்களும் போந்தொருவனத்தின்கண்
ணுறைகிருட்டிண கேத்திரதரிசன முனாற்றிமீண்டனர்மன்னோ. (கங)

* தொத்து - அடிமை.

அத்தகைச்செய லுணர்ந்துவைசியன்றன தருமந்தபாலன்றான்
பத்தன்பால்வினா வுவனிவர்யாங்ஙனம் படர்ந்தனராண்டெய்தச்
சித்தமீதவா வினனெனவங்ஙனந் தெரிசனைபுரிவிக்க
நித்தமவ்வயி னமைக்கச்சேய்பத்தனை நிர்ப்பந்தித்திடலாலே. (கச)

அன்னவாறன வரதமுங்காட்டிவந் தணைந்திடுமவனோர்நாள்
கன்னலங்குத லைச்சொற்கொள்பாலனைக் கானிடைகொண்டேய்கா
லின்னன்மாயையின் வலிகொடோவைசிய னிரும்புகழன்பின்சீர்
மன்னமால்செயா டலிற்கொலோபத்தன்றன் மனம்பிறழ்ந்தனனானான். (கரு)

குழவியைப்படுத் தணிகவர்ந்துடலினைக் குழியிலிட்டனன்மூடி
யிழைகளைத்துணி கொடுசிப்பமாக்கியோ ரிடைவைத்துக்கரவன்போல்
விழலன்பிற்றைவை கறையின்மேவிடவெணி விவித்தமாயமர்ந்திட்டான்
மழவுகாண்கிலா வைசியன்மனைநகர் மாடெலாமிகத்தேடி. (கசு)

கண்டிலான்வருந் திடுந்ததிபத்தனுங் கள்வனவ்வயினெய்த
மண்டிருந்துய ரவன்வினவிடப்பராய் மரமுறழுளத்தானுள்
ளண்டிடுந்துய ரடைகிலன்கண்டில னவனையென்றிடவன்னான்
றொண்டியின்புடை யோதவன்னவளிடந் தோறுந்தேடினள்காணாள். (கஎ)

திரும்புவாடன்மு னுற்றவொர்சந்நியா சியைவினாவினள்சொல்வா
னிரும்புநேர்மனங் கொண்டன்னோரில்லிடை யியைந்தவோர்பத்தன்றா
னரும்புநேர்குழ வியைக்கொன்றுபுதைத்தசீ ரறிந்ததுண்டியானென்னக்
கரும்புநேர்மொழி யாளவணடைந்தெற்குக் காட்டுதிரெனவேண்டி. (கஅ)

துறவியங்ஙனங் காட்டவவ்வயினெலாந் தோய்செந்நீர்மயமாகி
யுறவுடன்குழி தோண்டிநோக்கிடச்சுத னுடல்சிதைந்துறனோக்கி
யறனறுங்குழல் சோர்தரக்கோவென வழுதிரங்கினளின்மேய்த்
திறமுரைத்திட வைசியனங்ஙனஞ் சேர்ந்துசேய்தனைப்பார்த்தே. (ககூ)

மாண்டசேயைமுன் பெனப்புதைத்துவப்புடன் மனையடைந்தியற்கற்பி
னீண்டமாதராள் பாலுரைக்கின்றன னிமலன்மெய்த்தவர்க்கன்பு
பூண்டநங்குறை முடித்திடவளித்தனன் புதல்வனைவிளித்தானின்
றேண்டயங்குமெய்ப் பத்தன்மேற்றோடமின் றொன்றெண்ணேனீயென்று.

இனியென்னெஞ்சக மொன்றவாவியதுமற் றென்னெனிற்குலங்காட்டுங்
கனிவமைந்தசேய் மடிந்ததாலில்லமேற் கலந்ததாற்பயனில்லை
யினியநம்புதல் வியைப்பொருள்களைப்பத்தற் கீந்திமாசலமேவி
நனிதவஞ்செய்வோ மெனமனையிசைந்திட நாய்கன்பத்தனைக்கூவி. (உக)

உவகையோடுசாற் றுவனுஞ்சேவைகொடெனக் குதித்தபாலகனானை
னவமிகுந்தவெங் கன்மதோடத்திறந் தனனதாலடியேம்யாந்
தவவிருந்தொழி லாற்றவெண்ணினநுமோர் தயவுவேண்டினமென்னச்
சவமுயிர்த்தன தன்மையான்றான்புரி தருங்கொடுஞ்செயலுன்னி. உஉ)

ஒன்றறைந்தில னிற்கவைசியன்பல்கா லோதியுமரமென்ன
நின்றனன்பின்னு நாய்கனேதிடுகின்ற னீயரிக்கதிபத்த
னன்றமைந்தவென் குலத்தினன்மற்றதை நாடியேநானுன்பால்
மன்றவென்மனத் திச்சையின்படியுட்சம் மதிக்கவே பிரார்த்தித்தேன். (உங)

மகனிறந்தபின் யாமினியில்லமேல் வசித்தலிறபயனில்லை
தகாவார்குழ லோர்மகளுண்டவ டனையுனக்களித்தன்பர்
மிகநெருங்கிமா சலத்தின்மேய்த்தவஞ்செய வேட்கையுற்றனமிங்ஙன்
றகவமைந்துள பொருள்கள் கொண்டெமக்கினிச் சார்பயனென்றேதே. (உச)

மற்றவான்பொருள் களினுடனெந்தவ மகளையுங்கொண்டெந்தம்
பற்றனைத்தையு மொழித்தியன்மாதவம் பண்ணிடப்புரிநின்னுட்
குற்றமாஞ்செயல் புரிந்தனமெனத்துயர் கொள்ளலையொருதோட
முற்றநிற்கிலை யெவற்றிற்குங்கருத்தன்று னேங்குநாரணன்மன்னே. (உரு)

என்றனந்தமாப் பகர்ந்துமப்பத்தன்று னேதுமேற்கலனாகிக்
கன்றகத்தொடு முகத்தொடும்வெளியிடங் கலந்துவாழ்வதிலாவி
பொன்றலேநல மென்றதுதொடங்கிடும் போதுநாரணனுசா
னென்றவேடங்கொண் டவன்றனைக்காத்திட வெண்ணிவந்தனனம்மா. (உசு)

நலத்தகைக்குரு பரனெதிருறுதிற நாடிடுபத்தன்று
னிலச்சைமிக்கியற் றிடுதுற்கன்மஞ்சொலி னென்சொல் வானென்றேசஞ்
சலத்தொடும்பயத் தொடும்பணிந்தனனது ததியினுய்கனுந்தாழ்ந்தே
பலத்ததன்மனக் கோள்சொலச்சற்குரு பகர்வனன்னவன்றேற. (உஎ)

பூகமிக்கவை சியநின்யோசனைசம யோசிதத்தகைத்தானீ
யேகவெண்ணுமித் ததிகன்னிகாதான மீந்துசென்றிடுவாயே
லேகநாயக னுமரிநின்னுளத் தெண்ணமுற்றுறச்செய்யுஞ்
சோகமற்றியற் றெனப்புரோகிதனைக்கூய்த் துவக்கினன்மணமன்றே. (உஅ)

அன்னவேலையி லாசவோமச்சடங் கணைதாக்குருசொல்வா
னின்னதோர்கிரி யைசகோதானியற் றிடுவதன்னவனுண்டோ
வென்னவேவினு விடவவனுறவின ரிரங்கிடத்தடைசெய்தான்
பன்னலாந்ததி பகவனுங்குருவவன் படர்வனிப்போதென்றான். (உகூ)

கூண்டுளார்பலர் களுமிகவிம்மிதங் கொண்டுநாடினரக்கான்
மாண்டுலங்குமந் நகருளானொருவன்கான் வயின்மலர்க்கெனச்சென்று
னுண்டுமேவிய குழவியைக்கண்டனு மகமகிழ்வுடன்வல்லே
மீண்டுவைசிய னில்லிடையுய்த்தனு மேவினர்வியப்பெய்தி. (௩0)

குருபரன்பதம் பணிந்துபோற்றினருடன் குறைக்கிரியையையாற்றிப்
பெருமணச்செயன் முடிந்தகால்வைசியன் பெருகும்விம்மிதத்தோனாய்
மருவுமிச்செயல் கனவுகொனனவுகொ லெனமதித்துணர்வுற்றே
பொருவில்சாதுசே வைப்பயனீதெனப் புந்தியுட்டுணிந்திட்டான். (௩க)

ஆயகாலமெய்ப் பகவனுங்குருபா னவரிடம்விடையேற்கப்
பாயபோன்பிற் பூசைசெய்தனுப்புபு பழமைதன்னினுமிக்கு
மேயவோகையிற் சாதுசேவனஞ்செய்து விளங்கினன்பத்தன்றன்
றீயகன்மமோ திடவணிகன்றனோர் சிந்தையுட்கவலாதே. (௩௨)

உனதுமீதொரு தோடமின்றியாவையு முவணகேதனனுற்று
மனகமார்விளை யாடலென்றனைவரு மரியருள்வழிநின்று
ரினசெயற்றெரிந் தவரெலாம்பத்திமிக் கியைந்தனர்வாழ்ந்திட்டார்
கனன்மெய்தீண்டலாற் பத்திமெய்ப்பத்தரைக் காண்டலாலுறுமெய்யே. ()

இன்னவாறுயர் பத்தியுநிச்சய புத்தியுமிசைநாய்க
னன்னவாகனன் றுதைதன்கிருபைகொண் டவனியின்மிசையாடல்
பின்னரும்புரிந் தனன்கொலோவின்றுகொல் பேசிடக்கேட்டில்லே
னன்னலங்கொண்மெய்ப் பத்தர்தோய்வைகுந்த நாடடைந்தனன்மெய்யே. ()

பாந்தண்மேலரி துயிலும்வைகுந்தமெப் பாலதென்கிலிர்நெஞ்ச
மோய்ந்தவவ்விட மேயிருவினைவடி வுற்றகற்பனையோவிச்
சாந்தமிக்கமைந் துறிலரிதனதுமெய்த் தரிசனம்பெறலாகு
மாந்தர்காள்பத்தி விட்டவத்தினி லுடல் வருத்துதல்வன்பாமால். (௩௫)

மருவுஞாலமேன் மலரினுக்கேற்றவா மணந்திகழ்ந்திடுநீர்போ
லொருவிடாதவ ரவர்தவம்பவமற மொத்திடவுணர்வீந்து
பெருமைசாலரி யபேதம்பேதம்பேதா பேதமாயியைந்துள்ளா
னருமைமெய்யுணர் வார்க்குவையத்தினு மவனிலையணித்தாமே. (௩௬)

வேறு

சாதுசேவை யாற்பெறுமோர் தையலின்பின் னுண்மகவைச்
சார்ந்தபத்தன் கொன்றிடலாற் றந்தார்வாங்கிக் கொண்டாரென்
றோதுந்துணிவி னேடவனுக் குற்றமகளை யொண்பொருளை
யுதவித்துறக்க நினைந்திடுகா லொருதேசிகனு யணைந்தக்
கோதுபுரிந்தோன் றனக்குமணங் குயிற்றிக்குமான் றனையெழுப்பிக்
குளிரப்புரிந்தா யருளையெல்லாங் கொள்ளைகொடுத்தாய் போலிங்கா
ளேதுமியற்றுய் வறிதுறலா லியலுநலமியா தோவிசைப்பா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௩௭)

வைசியபத்திகதிமுற்றிற்று

ஆ கவி ௪௨௨௬

---

நாற்பத்து நான்காவது

# காமத்துவசகதி

சேமத்துறைசேர்த் தருள்சாது சேவைபுரிநாய் கன்றுளவத்
தாமத்தூஞ்சா லரியுலகஞ் சார்ந்தகதைசொற் றனனினிநன்
னேமத்துடன்சி ராகவன்ரு ளெஞ்சினிறுத்திக் கதியடைந்த
காமத்துவசன் பெருஞ்சீர்த்திக் காதையுணரக்கழறுவனே. (க)

தேனூர்பொழில்சூ ழுதயபுரச் செங்கோன்மன்னற் குபிரனைய
சேனாபதிசத் திரியகுலச் சென்மமுடையா னெருக்கான்மன்
னூன்சமரேற் றழியண்டார் பொருநன்றன்னை யரசன்முன்வைத்
தூனுருயிர்போக் கினர்சமர மொழித்துமன்ன னூரடைந்தே. (உ)

ஆவிக்கிணைதன் படைத்தலைவ னளித்தமைந்தர் நால்வரையுங்
கூவித்தன்னுட் டயரமெல்லாங் கூறித்தேற்றிப் பிதாநிலையின்
மேவிச்சிறப்பப் பாலித்தான் விளங்குமூவர்க் கிளையோனுப்
பூவிற்றேற்ற முறுங்காமத் துவசன்புவியி னியல்வெறுத்தே. (ங)

சருவாண்டங்கட் கோரிறையாத் தயங்குமிராம சந்திரன்பொன்
மருவார்தாளன் பமைந்துபுவி மன்னன்றேண்டை மதியானுய்த்
திருவார்பருதி யுதித்திடுமுற் செழுங்கானகமே யியிராமன்
றெருளார்மறையை யுருவேற்றி யுச்சிப்போதிற் சேருவான். (ச)

உண்டிவினைதீர்ந் துடன்கானத் துற்றோர்மரநீ ழலிலமைந்து
மண்டின்புடன்மெய்த் தவம்புரிவான் வழக்கமிதனைத் தேர்ந்திறைவன்
றெண்டிலமைந்த மூத்தோருஞ் சுற்றமானூர் களுஞ்சினமுட்
கொண்டியாக்கை மானத்தார் கூறுவார்தம் மதிமாதோ. (ரு)

மூர்க்கநீசந் ததம்புலரு முன்னமெழுந்து கானகந்தோய்
மார்க்கம்பிடித்துச் சியினில்ல மருவியுண்டி யயின்றுடனே
தீர்க்கமுடன்செல் கின்றனைபொன் றேடுந்தொழிலை யறத்துறந்தா
*யார்க்கமுன்ன துடலின்க ணமைந்ததின்றே வறிவில்லாய். (சு)

புத்தியுடையாய்க் கித்தகைய போதம்புரிந்தா ரெவர்நாந்தா
நத்திச்சிவித் திடச்செய்தொழி னராதிபன்றன் சேவையன்றே
வொத்தியாமு வரும்புரித லுணர்கின்றிலைகொ லுணர்ந்தனையே
லெய்த்திடாது கானடைத லெம்மைமதியாச் செருக்கன்றே. (எ)

இறைவனுன்செய் கையையுணரி னென்செய்திடுங்கொ லறத்தகைமை
நிறையுமவனந் தந்தையின்பா னிகழ்வாற்சலியங் கொண்டன்றே
குறைவினுவப்பிற் பொருள்சாலக் கொடுத்துப்புரக்கின் றனனீயுன்
முறையில்செயலை யினியேனு மோசித்தெம்போன் முயன்றிடுதி. (அ)

* ஆர்க்கம் - இரத்தம்.

இன்றேன்மன்ன னெம்மையுநீக் கிடுவானென்ன விசைத்திடனு
நன்றேய்காமத் துவசன்மிக நகைத்துப்புகல்வா னீர்புகன்ற
தொன்றேனும்பொய் யன்றுநமை யுடையமன்னன் சேவகத்தி
னின்றேபிழைத்த லறமென்ன நெஞ்சிலுணர்வேன் யானுமே. (கூ)

நீங்களுமது காயத்தை நிலையென்றும்யா னென்றுநினைத்
தாங்கதனைக்காத் திடலேநா மாற்றுந்தொழிலென் றறமளித்த
வோங்கலனைய பொருடனதென் னுன்னிநம்மொத் திடுமிறைவன்
பாங்கர்சேவ கம்புரிந்தும் பருவத்தளவி லமைந்தீரால். (க0)

யானேவழியா வுயிரின்ப மெய்தனுடி மண்ணவர்க்கும்
வானோர்களுக்கு மேலாகி வயங்குமிராசேச் சுரத்தகையாங்
கோனேர்சேவ கத்தனிச்சீர் கொண்டுவிளங்கி னேனவற்றீர்ந்
தேனோர்மனிதன் சேவகனா யிசையேன் சரதமீதரோ. (கக)

அத்தன்முன்ன மவனடிமை யாகிவிளங்கி னுனதனை
யொத்தன்புடனீர் நின்றிட்டீ ரும்மீதருண்மற் றவற்குளதேற்
பித்தத்தகையே னென்மீதிற் பெறுங்கோபத்தாற் பயனென்னே
சித்தமிலதேற் பொன்னெனக்குத் தேர்வேந்தளிக்க வேண்டிலனே. (கஉ)

என்னைக்குறித்து நீவிர்துய ரெய்தலீர்தே டிலனென்று
பொன்னைக்குறிப்பீ ரெனினும்பாற் புகேன்யானென்றூன் புகன்றிடக்கேட்
டன்னைக்குரித்தா மன்புடையா ரவ்வாறகங்கொள் ளேன்மனைப்பாற்
பின்னைக்குரித்தா னவனடிகள் பேணுய்தனித்துக் கானடையேல். (கந)

சிங்கமுதலா மிருகமவண் சேர்ந்துள்ளனநீ மரிக்கினுன
தங்கமவைதின் றிடிற்கிரியை யாற்றுந்தாமுந் தீருமெனத்
துங்கனுரைப்பான் சரதநீர் சொற்றதேனும் யானெவனுக்
கிங்கண்சரண மாயினன்கொ லவனேயதுவு மியற்றிடுவான். (கச)

ஒப்பில்பிரபு வாமவனுக் குற்றவடிமை யெனைச்சீற்றத்
துப்பினவுண ருபத்திரவஞ் சூழமுடியா தெனிற்பின்னை
யொப்பின்விருகா தியைக்குறித்தீண் டோதலென்னே யுலகத்தி
லப்பிரபுவுக் காளானு ராருந்துயரா ரெனவுணர்மின். (கரு)

சேமத்தகைகொ ளெனைக்குறித்துட் டியக்கமெய்த லீரென்று
காமத்துவசன் சாற்றிமுன்போற் கமலக்கண்ணன் றிருவடிக்க
ணேமத்தகைசா லன்புகொடு நெடுங்கானடைந்து தவம்புரிந்திட்
டாமத்தியான மிற்றேய்ந்தூ ணயின்றுபினுங்கா னடைந்தவிர்ந்தான். (கசு)

சின்னளிவணங் கழிதரவோர் திவசங்காமத் துவசனருட்
கொன்னூர்சீரா மன்றனையுட் குறித்தன்னவன்றூட் டுணையடைந்தா
னுன்னுடலைச்சமக்கார மாற்றச்சீரா மன்செலுத்தத்
துன்னூகஞ் சிலவவன்மெய் தூயநதிதீ ரத்தமைத்தே. (கள)

சிலம்பெறவிந் தனங்கொணர்ந்து சிதைசெய்தேகா மத்துவசன்
றாலந்தனைவைத் தங்கியிடத் துவக்குந்தருணஞ் சோதரர்தாங்
காலந்தனிலில் லெய்தாமை கருதிக்கடிது தேடுங்கான்
பாலண்டினர்நோக் குழிகவிகள் பண்ணுஞ்செயல்கட் பார்த்தரோ (கஅ)

அருகெய்திடற்குள் ளஞ்சிமிக வழுங்கிநகரத் திடையணேந்தே
மருவுஞ்சுற்றத் தினருடன்போய் மலியுந்துயர்கொண் டாற்றியவர்
வெருள்கொண்டதிது ரத்தமையும் விதமோர்ந்தருள்வா னரமுழுதுந்
தெருள்கொண்டகல வனைவர்களுஞ் சிதையினருகே கினரிரங்க. (கக)

கணத்திற்காயத் துவசனெழிற் காயஞ்சாம்ப ராகிடலுங்
குணத்திற்சிறந்த சோதரர்சேண் குறுகிநோக்குங் காலயலிற்
றணத்தகவிகளணேந்துநதி தன்னிற்படிந்து சலக்கிரியை
மணத்திற்புரிந்து மறைந்திடுஞ்சீர் மதித்துண்மிகுவிம் மிதரானர். (உ௦)

இல்லமடைந்து கிரியையெலா மியற்றியன்னம் பொற்றூனம்
வல்லவாறு செய்தவன்றன் மாட்சிமதித்துக் கொண்டாடி
யெல்லவரும்பத் தியின்மகிமை யிற்றென்றுணர்ந்திட் டவனடையு
நல்லபேறான் காத்துழலு நமக்கெய்துவதன் றெனவிதந்தார். (உக)

இன்னவாகா மத்துவச னியற்பத்தியில்வ சிகரனுய்த்
தன்னதருண்மெய்ப் பதமுமுடற் சமக்காரமுஞ்செய் வித்துலகின்
மன்னத்தனது வாற்சலியம் வயங்கவிளக்கி னானிதனு
ளுன்னன்புடையார் தமக்கொர்குறை யுண்டோவின்ப மல்லாதே. (உஉ)

வேறு

சேனபதியாந் தந்தைசமர் செய்துமடிந்த திறந்தேர்ந்தியான்
சிராமனுக்கா ளாவனெனுந் தெம்போடிடையி டறவன்பாற்
கானர்பொழிற்பாற் றவம்புரியுங் காமத்துவசன் றனைத்துணைவர்
காயப்விடினின் கிரியையெவர் காண்பாரென்னக் கழறிடலான்
மேனட்கவியின் குலத்தையவன் விடுத்துப்புரிவித் தேபத்தி
மேன்மைகாட்டி னுபின்று வெறிதுற்றுய்நின் றிருவருளுக்
கினுவான்கொல் பவராண்மைக் கிருக்கும்வலியின் றெனப்போமோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உங)

காமத்துவசகதிமுற்றிற்று

ஆகூ கவி சஉசகூ

நாற்பத்தைந்தாவது

# ஜயமல்லகதி

அனுமனற் பரிவாரங்க ளாற்றுமெய்க் கிரியைகொள்ளுந்
தனுவினை வாய்ந்தகாமத் துவசன்சீர் சற்றுரைத்தேன்
மனுமுறை திறம்பாச் செங்கோல் வாய்ந்தனைத்தையுமாற்காக்கு
மனுபவச் சயமல்லன்சீ ரறிந்தமட் டறைகுவேனே. (க)

சற்குணத் திரட்சிசான்ற சயமல்ல னெனும்பேர்மன்னன்
பொற்குவ டனதன்னெஞ்சிற் புறத்தினிற் பசுக்கட்காமுன்
கற்குடை கொண்டகண்ணன் கருமணி வடிவந்தாபித்
தற்குறப் பூசையாற்று மருங்கடப் பாட்டினின்றான். (உ)

விளங்குதன் னாட்டிவில்வில் விசேடவோர் பொருளைக்காணில்
வளங்கொளன் னதைக்கண்ணற்கு மகிழ்வுடன் சமர்ப்பித்தன்பா
ருளங்குளிர் வான்மால்பூசை யுளாற்றியல் லாலேனோர்கட்
கிளந்திடல் காணலாதி கிரியையொன் றுஞ்செய்கில்லான். (௩)

இவ்வண நிகழுநாளி லியற்சய மல்லன்சீர்தேர்
தெவ்வர்க ளிராச்சியத்தைத் தெட்டுவான் றம்முட்கொண்டே
யொவ்வகத் தாலோசித்தென் றுதித்தொரு சாமமட்டுஞ்
செவ்வகைப் பூசையன்றிச் சிந்தைமற் றொன்றினாட்டான். (ச)

ஆமது காலையாகம் மனிகமோ டடைந்தன்னோனைச்
சேமமா வீரசொர்க்கஞ் சேர்த்திராச் சியங்கொள்வேமென்
றேமவைப் பினைக்கண்டாரி லின்பமிக் கொருதினத்திற்
றாமரு ணோதயத்திற் சயமல்ல னாட்டைச்சூழ்ந்தார். (௫)

சம்பவ முணர்ந்தமைச்சர் தயங்குபு சயமல்லன்றன்
பம்பணிப் பூசையிற்பாற் படர்ந்தனர் பகர்ந்தார்மன்மா
லம்பது மத்தாட்பூசை யாற்றுதன் னிட்டையோவாத்
தெம்பமைந் தவர்க்கொர்மாற்றஞ் செப்பிலன் வறிதிருப்ப. (௬)

மந்திரர் வாளாவிங்ஙன் மருவலாற் பயனின்றென்னப்
புந்திகொண் டனிகந்தன்னைப் போர்க்கெழப் புரிந்துபின்னும்
வந்திறை யவன்பாலோத மாற்றமொன் றுரையான்றன்னு
ளுந்தியற் பொருள்கள்யாவு மொப்பில்கிட் டிணனதாமால். (எ)

மற்றவன் காப்பனென்ன மதித்திருந் தனனக்கான்மால்
கொற்றவன் றிடமெய்ப்பத்தி குறித்தியற் படைகடாங்கி
யற்றவர்க் கற்றோன்வெண்மை யச்சுவத் தூர்ந்துமேய
பற்றலர் சேனைநாப்பட் படர்ந்தழித் தருளவெண்ணி. (அ)

முயன்றிடுங் காலையொன்னார் மூரிவெம் படைகண்மாயன்
வியன்றிரு மேனிதோள விடுக்கினு மவைகண்மூர்க்க
மியன்றிடு கயவர்க்கோது மினியவோர் போதம்போலோர்
பயன்றிகழ் கிலவாப்போமப் பான்மைகண் டயர்ந்தாரானர். (கூ)

அண்டல ரேர்பாணந்தம் மளவறு சேனைவெள்ளங்
கண்டனம் புரியுந்தன்மை கண்டிறும் பூதுற்றூராய்
மண்டமர் செய்வானம்முண் மதித்திவ னினியேய்வேமேற்
கெண்டனம் மோலைதானுங் கிழிதரப் புரிவா னென்ன. (கo)

நான்முகன் விதிபுரப்ப நாடுவார் திசைகணுடி
வேன்முதற் படைகளெல்லாம் விட்டெறிந் தொளித்தார் போரிற்
கான்முத லியவுறுப்புக் கழிந்தவர் மெய்ம்மைவீரர்
போன்முரி கிலரமைந்தார் போயது சமருமாதோ. (கக)

யாமமொன் றகன்றதக்கா லிறைவனுஞ் செயமல்லன்ற
னுமம்வீன் படாமலொன்னர் நாமகத் தடையத்தாக்கச்
சேமவான் படைகளேந்திச் செருநிலத் தமையக்கோட்டை
யாமரண் கடந்துநோக்க வண்டல ரொருவர்க்காணன். (கஉ)

கணிதமில் சேனைமாண்டு கிடப்பதுங் கழற்காலத்தந்
துணிபடத் துடித்துச்சிவன் றுறந்திடார் தெழித்திரங்கி
யணிநரி நாய்க்குப்பின்னு ளமைந்தவோ ருண்டியாகுந்
துணிவுட னிருப்போர்தன்மை தோன்றல்பார்த் தமைச்சர்க்கோதும். ()

திண்ணிய வமைச்சர்யாரே செயலிது புரிந்தீரா
ரெண்ணிடி லிதயத்தச்ச மெய்திடு கின்றதென்றன்
கண்ணினிற் காணிலாக்கை கம்பமுற் றிடுவதம்ம
மண்ணின னன்றுற்றூனேன் மற்றவன் சார்வபௌமன். (கச)

எனவியந் துரைப்பமன்ன னெண்ணர்சாற் றிடுவார்யாநும்
மனகவுத் தரத்தைநோக்கி யமைந்தன மறியேமென்னக்
கனகமா முடிபொறுத்த காவலன் கடிதயற்போய்த்
தனதுகை யிழந்துசாலத் தயங்குமோர் நரன்பாற் கேட்பான். (கரு)

போர்முகத் துமையிவ்வாறு புன்கணுற் றிடச்செய்வீரன்
யார்முறை படயான்றேற விசைக்குதி யென்னச்சொல்வான்
பார்முறை யிறைவரெந்தம் படர்சொலக் கேட்டிர்நுந்த
மூர்முக நின்றோர்வீர னொளிகொள்வெண் பரிமேல்வந்தான். (கசு)

அன்னவன் சுந்தரச்சி ரறிந்தவர்க் கன்றிவாயாற்
பன்னவாங் கதைக்கேட்டோருட் பதிவதன் றெனினுமம்ம
வென்னகத் துவப்பாற்சற்றே யிசைக்குவ னீலமேக
மன்னபே ரொளியார்மேனி யமைந்துளான் றுளவத்தாரான். (கஎ)

மின்னலை யுலையிட்டென்ன மிளிர்ந்தபீ தாம்பரத்தா
னன்னவன் விழிகட்கொப்பென் றறைகுவதெதனைச்செம்மை
வன்னவா ரிசமற்றில்லை மனோகரம் வாய்ந்தவன்னோன்
றன்னருட் கரங்கண்மாடே தனுமுதற் படைகடாங்கி. (கஅ)

*அம்புவ மானம்பண்பு வினையினு லானோன்செய்த
வெம்புமுக் கிரப்போரெண்ணின் மெய்ந்நடுங் குகின்றதன்னோன்
பம்புருவச்சீர்நாடிற் பார்க்கக்கண் விழைவமன்னீ
நம்புமற் றவனேயெம்மை நலிவிங்ங னுறக்கண்டானல். (கசு)

விடாமழை யெனயாமெல்லாம் வீசுமம் பவன்றன்மெய்யிற்
படாதயல் வீழ்ந்துதாங்கொள் படையெனும் பேருமாய்ந்த
கெடாதமொய்ம் புடையாற்கண்டுட் கிலியமைந் திறைவர்தாம்வெந்
நிடாநக ரடைந்தார்போரி னினைப்பினி யொழிவர்பொனும். (உ0)

பயங்கரச் சமரிவ்வாறு பண்ணிய வீரனீற்றி
லியங்கவி னினதுகோட்டைக் கிடைபுகக் கண்டேம்யாங்கண்
முயங்கமர் தன்னுலாவி முடிந்தில மோடற்காற்றேங்
கயங்கினங் கன்னலிற்சார் கனுவையொப் பென்னமன்னோ (உக)

அடல்கெழு மமரின்மாய்ந்தா ரணைந்தனர் வீரசொர்க்க
முடல்கெழு மானத்தார்தம் மூர்புகுந் திட்டார்பேய்போற்
குடர்முதற் குறைந்துகூற்றார் கொள்ளுறுப் பாவராகிப்
படரென வந்தேஞ்சாலப் படருழந் தெய்த்தேமென்றான். (உஉ)

பசியினு லவயவங்கள் பறிதலாற் பதைபதைத்துட்
கசிவுட னுரைத்தார்மாற்றங் காதுறக் கேட்டுவல்லே
சசிநிகர் கருணையன்பு சால்சய மல்லமன்னன்
விசிகநேர் பரியினின்று மேதினி மீதிற்பாய்ந்தே. (உங)

நன்னிய மத்தன்னோரை நமக்கரித் தொப்பில்சீர்தோய்
தன்னிய ரானீர்சற்றுந் தளரவிர் நும்மையென்ற
னின்னிய வரண்மனைப்பா லிசைவித்தின் பமைப்பேனென்னத்
துன்னிய வாவியோரைத் தொகுவைய மாதியேற்றி. (உச)

நகரணை வித்தன்னோர்க்கு நன்மருந் தாதிநல்கிச்
சுகமுறச் செய்துவேண்டுஞ் சொன்னமா தியவழங்கி
யகமுற விடுத்திறந்தா ரனைவர்க்குஞ் சாதிக்கேற்பத்
தகச்சமக் காரமாற்றத் தகுவன யாவுமீந்தான். (உரு)

இன்னதே ரமைச்சர்மன்ன னிடம்வினு வுவர்நமக்கீண்
டொன்னலர்க் கனிகமாகி யுயிரொழிந் தார்க்கிருந்தார்க்
குன்னரு முபசாரங்க ளுஞற்றலென் னுரைப்பீ ரென்னத்
தன்னன பத்திமிக்க சயமல்ல மன்னனோதும். (உசு)

*அம்பு - மேகம், பாணம்.

என்னிரட் சககர்த்தாவா யிலங்குகிட் டிணனேயிங்ஙன்
மன்னினூர்த் தொலேத்தானன்னேன் மங்களத் திருக்கோலத்தைத்
தன்னிய ரிவர்களெல்லாந் தரிசிக்கும் பேறுபெற்ருர்
பன்னிடு மிவர்களொப்பில் பாக்கிய வான்களானுர். (௨எ)

மற்றத ஞலின்னேர்க்கிவ் வகைசெய்தே னென்றுவப்பிற்
கொற்றவன் சாற்றக்கேட்டோர் குரிசிலுட் டோயுமன்பைப்
பற்றற்ருேர் பற்றுநின்ற பகவன்வாற் சலியப்பண்பை
யுற்றதம் மகத்துவந்திட் டொப்பின்மெய்ப் பத்தானுர். (௨அ)

மழைத்தகை மன்னன்முன்னில் வான்பெரும் பத்திச்சிலந்
தழைத்தருட் செங்கோலோச்சித் தரணி மன்னவர்மாணிக்க
மிழைத்தமர் முடிகடோயு மிணையடி யோனுவாழ்ந்து
குழைத்தநெஞ் சடியர்தோய்வை குந்தநா டடைந்தான்மன்னே. (௨௯)

கிருட்டிணன் பொருள்கடம்மைக் கிளரவன் றனதென்மெய்ச்சொற்
றெருட்டிகழ் தரவின்டன்பர் சிற்சுக முறற்கண்டாலு
முருட்டியன் மாயைக்கோட்பட் டுழல்வரென் றனதென்பொய்கொண்
டிருட்டிய னரகத்தெய்தற் கெண்ணுவார்மதியென்னுமே. (௩0)

வேறு

தனக்குச்சிறப்பாம் பொருளேயெலாந் தயவார்கிருட்டி ணற்கெனவே
சமர்ப்பித்துருகுஞ் சயமல்லன் றனதுபொருளைக் கவர்ந்திடவே
கனக்கும்பகையா யடைந்தவரைக் கதுமென்றெழித்துப் பத்தனைமுன்
காத்தகருணைக் கடலாநின் கவினூாடற் றிறமுணர்ந்து
நினக்குப்பணிசெய் துயிராதி நின்பாலளித்துச் சுகமயமா
நிலைத்துத்திகழு மறிவின்றி நிலையிலுலகப் பொருள்சிலவற்
றெனக்குச்சொந்த மெனக்கொடுவேட் டெய்க்குமனத்தா விளக்கின்றே
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௩௧)

சயமல்லகதிமுற்றிற்று

ஆகூ கவி ௪௨அ0

---

நாற்பத்தாறுவது

# கிருட்டிணபத்தகதி

தனதுமெய்ப்பொரு ளியாவுங்கிட்டிணற்குறச் சமர்ப்பித்
தனகமெய்ப்பயன் பெறுசயமல்லன்மாண் பறைந்தேன்
வனசைகோன்பதத் தன்புங்கற்பும்பெறு மனைசால்
பனவனுகிய கிருட்டிணபத்தன்சீர் பகர்வாம். (௧)

மதுரையம்பதிக் கணித்ததாநகரிடை வாழ்வோன்
சதுமறைக்குலத் தோன்கிருட்டிணப்பெயர் தரித்தா
னதுலமார்கலை வல்லவனறவழி நின்றான்
விதுவைநோரு ளன்னைகாத்திடவிளங் கிடுவான். (௨)

மணம்புரிந்துசின் னாட்டன்மாதுலன்வயின் மருவிக்
குணம்புரிந்திடு மனையுடன்றன்னகர் குறுக
விணங்குகாற்சிவி கையிலிவர்ந்தியாருமெட் டரிதா
மணங்கொள்கான்வழி வாய்ந்தன னமையமற் றதனில். (௩)

கூரமைந்தவெம் படைகரங்கொண்டவ ராகுங்
கோரமாருருச் சோரர்கடுணைவர்போற் குறுக
நாரமைந்திடு வேதியன்கண்டுள நடுங்கி
மாரணஞ்செய்வார்ப் பிழைத்திடுஞ்சூழ்ச்சியுண் மதித்தே. (௪)

வேறு

சிவிகைநின்றிழிந் தவர்க்கிதமொழிபல செப்பியாமிவண்டங்கிக்
கவினுறப்புனல் படிந்தயனித்திய கடன்புரிந்திளைப்பாறி
நவிலெம்மூர்புக வெண்ணினநீயிர்முன் னடமினென்றிடக்கேட்ட
பவிகளந்தண நிர்ச்சனக்கானிவண் கரவர்கள்பயில்வாரால். (௫)

இன்னநாமிரு நாழிகைவழிகடந் திடுவமேலவணுைப்பில்
வன்னநுண்மலர்த் தடமிடமாதிய வசதியுண்டங்கெய்தி
நன்னலம்பெறு பூசையாதியசெய னவிற்றுகென்றிடக்கேட்டோன்
றன்னகத்துளச் சங்கொடுநும்முடன் சார்தரற்கிசைகில்லேன். (௬)

நீவிர்முன்படர்ந் திடுதிர்யாம்பிற்பட நேர்குதும்பயிற்சிச்சீர்
மேவிடாதவ ருடன்றனிவழிச்செலல் விவேகிகட்கடாதென்ன
நாவியிற்கொடும் பாவிகளுனக்கியா நன்னலம்புகன்றிட்டே
நீவிதிர்ப்புளத் தெய்தலைவிப்பிர னினக்கிடர்விளைப்பேமோ. (௭)

நம்முளச்சரோ ருகமலர்தொறுமாறு நறுமணத்துணர்வெய்த
மெய்ம்முதற்றகை யாங்கிருட்டிணபிரான் மேவினன்மாறுன
வெம்முரண்டொழில் பிறர்க்கியற்றிடிலுடன் விளக்குவன்பெருந்தண்டந்
தம்முயிர்க்கிடர் வேண்டுநரல்லரோ தகாதசெப்திடுநீரார். (௮)

என்றுபற்பல நீதியத்திருடர்க ளிசைக்கமெய்யெனக்கொண்டு
நன்றுகிட்டிண னுளன்றுணையென்றுள நாடுபுமறையோன்றான்
றுன்றுவஞ்சகர் தம்முடனளவளாய்ச் சொற்பதூரஞ்செல்கா
லொன்றுமற்றவ ரந்தணற்கொன்றனே னுடைமைமுற்றவுங்கொண்டே. (௯)

சிவிகைதாங்குநர்ப் பார்த்தியாம்போதரு திசைவருகுதிரின்றேற்
கவினுறும்பிரா மணனையொத்தும்மையுங் காதுவமெனவஞ்சி
நவிலுமாற்றினி னடந்தனர்கணவனை நாசமாக்கியதாஞ்சொல்
செவியினூடுவே னுழைந்தெனப்பாய்தலுந் தேவியுள்ளயர்வெய்தி. (௧௦)

ஆவியோவிய மன்னவடன் னதோ ராவியோவினளென்ன
மேவியேசிறி துணர்வமைந்துடனருண் மேகமேனிகொண்மாயற்
கூவியேழைபங் காளனே துரோபதை கொடுந்துயர்களைந்தோனே
கோவினந்துய ராதுமால்வரை தனைக் குடையெனக்கொண்டோனே. (௧௧)

நாதநின்னடிக் குழுவலன்பமைந்தவெந் நாயகன்றனைவஞ்சப்
பாதகத்தர்கொன் றிடுமிது நிறத்தைநீ பார்த்திலாய் கொல்லெங்கன்
போதலாயினை கண்டுநீயறிந் திடார் போலிருப்பது சால்போ
மாதவாநினை நம்பியன்றோவிவர் வழியமைந்தனனன்பன். (௧௨)

துற்றதொண்டரைக் காத்தருள்செயனின்னோர் சுபாவமாங்குணமன்றோ
வுற்றநின்பதத் தன்பனையேதுகொண் டுபேட்சைசெய்தனையென்னப்
பற்ற மாதழு தழைத்தலுங்கருணைசால் பத்தவம்சலனான்
கொற்றமிக்கநால் வீரனுப்வாள்கொடு குதிரையின்மிசைதோன்றி. (௧௩)

சென்மிதம்படு முருவமும்வேகமுந் *தெழிப்புமேவிடப்பல்கா
னின்மினின்மினென் றோதிமற்றவர்புடை நேர்ந்துதங்கைவாளா
லன்மிடைந்தவர்த் தொலைத்துவண்சிவிகையை யமைநகர்வழிபோக்கித்
துன்மிதம்பெறு மவளையற்பமுமனந் துயரலையெனத்தேற்றி. (௧௪)

வேதியன்கிடந் திடுமிடத் தெய்தமின் வீந்தகொண்கனைக்கண்டே
யோதிசோர்தர வாய்புடைத்தாற்றலு முறுநரிலொருவீரன்
கோதின்மாவினு மிரங்கிவேதியன்றலை கொம்மெனவுடற்சேர்த்து
மீதிலோர்துகின் மூடுபுநால்வரு மின்னெனமறைந்திட்டார். (௧௫)

அக்கணத்தில்வே தியன்றுயின்றவ னுணர் வமைதலிலெழக்கண்டே
மிக்கமாதுடன் சிவிகைகாவுநர்களும் விளம்பருங்களிப்பெய்திப்
புக்கசம்பவ முணர்த்தவேதியனுளம் பொங்குமற்புதனாகித்
தக்கபத்திமிக் கமைந்துகிட்டிணற்குத்தன் றனுமுதற்சமர்பித்தே. (௧௬)

இல்லடைந்துதாய்க் குற்றவாறோதலு மின்னன்மிக்கழுதேங்கி
யொல்லருந்தன தாவிநேர்சுதற்குயி ருதவிடுந்தகைதன்னால்
வல்லவாறுகிட் டிணற்றுதித்தன்பருள் வாரியின்முழுகுற்று
ளல்லறீர்கிருட் டிணபத்தனுழுவலன் பமைந்துபூசித்தேத்தி. (௧௭)

அந்தியத்தினிற் கற்பினிற்பத்தியி லறிவினிற்சிறந்தோங்குஞ்
செந்திருப்புரை மனையுடன்கிருட்டிணன் திருவடியினிற்றோய்ந்தா
னிந்தியங்கொடு காண்டருகனவை நேரிகமயக்கொழித்தேமா
லுந்தியற் பதத்தன்பமைவார்க்கரி தொன்றுளதெனலாமோ. (௧௮)

வேறு

கள்ளர்கிருட்டி ணத்திருப்பேர் கழறப்பத்தரெனநம்பிக்
கானிலவர்பின் னடைந்தவர்கள் காதல்புரியக் காதன்மனை
புள்ளம்வருந்திக் கூவவுட னொருநால்வடிவுற் றடைந்தவரை
யுருட்டியிறந்தோ னுடற்றலைசேர்த் துயிர்ப்பப்புரியு மொப்பில்லாய்

---

* தன்மிதம் - வருத்தம்.

கொள்ளற்கரிய துயர்கணத்துங் கொடுத்தென்றனைக்கொல் லாமலே
கொல்லும்புலவே டருக்கயர்ந்து கூவுமுறைகேட் டிலேயோகேட்
டெள்ளல்புரிந்து நீவிடிலிங் கியாரே துணையென் னுயிர்க்கிசையா
யிராமானந்தப் பெயர்கொடென திசயத்திலங்கும் பெருமாளே. (கசு)

கிருட்டிணபத்தகதி முற்றிற்று

ஆ கவி சஉகசு

---

நாற்பத்தேழாவது

# அரிபாலகதி

பட்டிகள் கொய்தசென்னி பதித்துநாரண னெழுப்பக்
கிட்டிண பத்தனுகிக் கீர்த்திசான் றவன்சீர்சொற்று
மொட்டிய பொருள்கள்பத்தர்க் குதவிமா தவன்பதத்தி
லெட்டிய வரிபாலன்ற னிசையினிற் சிலசொல்வாமே. (க)

உத்தர தேயத்தின்க ணுற்றவோர் மறையோனங்நாட்
டொத்தகா வலனேபோலு முலப்பிலாச் செல்வம்வாய்ந்தோன்
வித்தக மறைதேர்வல்லோன் விளங்கரி பாலப்பேரோன்
மைத்தட விழியாளோடு மனையறம் புரந்துவாழ்ந்தான். (உ)

பலங்கொடன் னுடற்குநாலாம் பருவமெய் தியுந்தனக்கோர்
குலங்கொள்புத் திரனெய்தாமை குறித்துளங் குமைந்துவாடி
யிலங்குபுத் திரகாமேட்டி யாகமொன் றியற்றியஃதா
னலங்கொளோர் சுதற்பெற்றேறு நாண்மதி யெனவளர்த்தான். (ங)

பாலனைப் பிரிதலாற்றுன் பயின்மறை யாதியாய
நூலறி வுணர்த்திலான்றன் னேன்மைசால் புதல்வனுள்ளம்
போலமைந் தொழுகச்சேய்தன் போங்கினிற் பத்தராய்த்தன்
பாலமைந் தவர்களிச்சைப் படிதடை யின்றியீவான். (ச)

தவத்தினு லுதித்தமைந்தன் றுன்கிருட் டிணற்குப்பூசை
யுவப்புட னாற்றியன்ப ருளத்தவாம் பொருள்கணல்கு
நவத்தகை தேறிச்சிந்தை நனிமகிழ்ந்திசைந்திருந்தா
னவத்தையாற் றினுந்தடுத்தற் ககம்பொருத் தந்தைமாதோ. (ரு)

பருவமெய் தியகான்முந்நூல் பரித்திட மணமுமாற்றி
யருமைபா ராட்டுந்தாதை யந்திய முற்றுன்றாயும்
புருடனைப் பிறிதலாற்றுள் பொருந்தினள் சிதையின்மைந்தன்
பொருவருந் துயரத்தோடு புரிவன யாவுஞ்செய்தே. (சு)

அண்டமுற் றளந்தபொற்ரு ளகத்தினுள் ளமைந்தமேன்மைத்
தொண்டர்கட் கேவலன்போற் றாயவாம் பணிகளாற்றி
யொண்டகைக் கற்பன்பேய்ந்த வொண்டொடி யுடனேவாழ்நாள்
விண்டன செல்வந்தீர்ந்து மிடித்தகை மேயதம்மா. (எ)

உலகியல் பதனைத்தன்ன துடலினைப் பொருளென்றுன்னுப்
புலனமை மேலோன்சாது பூசையா லொருவிற்றென்ன
நலனிறை பணியையோவா னவின்மனைக் கலங்கடன்பொற்
கலனுடை யாதிவிற்றுங் கவின்பணி புரிதலானுன். (அ)

வேறு

அன்னவைமுற்று மொழிந்தபின்கடன் கொண் டாற்றினனதுவுங்கிட்டிலதா
னன்னகர்தோறும் பிட்சைகொண்டியற்றந் நாளவன்சுற்றமாயினர்கள்
பன்னரும்பரிகா சம்புரிந்திட்டார் பத்தியங்கடலின்மூழ்குற்ரேன்
பொன்னனிதேடிக் காத்தவத்தொழியும் பூதர்சொற்பொருட்படுத்தானுப். ()

அன்பர்மெய்ப்பணியின் மாலடியிணையி லகம்விழிபதித்தவனுகி
யின்பமிக்கமையு நாளிலன்னவனை யாருநிட்கிஞ்சனனென்ரூர்
பின்பவன் றனக்கு மால்செயாடலினுற் பிட்சையுங்கிடைத்திலதாலுட்
டுன்பமிக்கினியென் செய்குவனென்னச் சூழ்ந்திவ்வாறுளத்துணிவமைந்தான்.

காவுசெய் திடுத லேயினியாற்றக் கடவதென்றத்தகுதொழிலி
லிரவொடுபகலு முயன்றுகிட்டியதை யில்லவள்பாலளித்தன்பர்ப்
பரவுமாறுரைத்தப் பொருள்களையாலப் பான்மையின்மதித்துத்தாமுண்ணு
விரதமேவுபுகை யினிற்படைபற்றி வெருட்டியெய்துநர்பொருள்பறிப்பான். ()

தடையின்மெய்யன்பர் பத்தியும்பூத தயையுமிக்கமைதரும்பண்பாற்
படையினல்வெருட்ட லன்றிமற்றதுதான் படைத்தபேர்ப்*பலிதங்காண்கில்லா
னடைதரில்விண்டு பத்தராங்கவர்கட் கடிமையாயறம்புரிந்திடுவா
னடைபெறுங்காலத் தோர்தினத்தந்தி நண்ணுமட்டொன்றுங்கிட்டிலதால். ()

விதனமிக்கில்ல மேவுபுமனைபால் விளம்பிவைகறைதனிற்கடமேய்
மதமலைக்கருள்வோன் றிருவடித்துணைகண் மதித்தினனுச்சியிலணையும்
பதம்வரையிருந்துங் கிருட்டினனருட்சீர் பாலிக்கநினைந்துறும்பண்பா
லதரிடையாரு மணைந்திலரிதய மயர்ந்துதனில்விடத்தடைய. (கரு)

பரமபாகவதர் பற்பலர்மனையின் பாலுறக்காண்டலுமன்பிற்
பரவிநன்முகம னேதுபுமனைபாற் படர்ந்துநம்பாக்கிபந்தொண்டர்
திரளணைந்தனர்சா லப்பசித்துள்ளார் சிலர்கட்களிக்கவொன்றிலதால்
விரதமற்றெழியா தென்னுயிர்துறக்க விழைந்தனளின்றெனவிளம்ப. (கச)

கற்பணிமலரும் பத்தியின்கனியுங் கவின்றபொன்கொம்பனுள்கணவன்
சொற்பரிவுடன்கேட் டென்மனத்தமையுந் துணிவுமஃதேயதுபுரியு
முற்படப்புரிவ தொன்றுளதானம் முன்றிலார்தொண்டரையெல்லா
முற்பலத்தடநீ ராடவுய்த்திடுதி ருறிலருளினர்நமைத்தடுப்பர். (கரு)

* பலிதம் - கொல்லல்,

என்றுமெய்வாழ்க்கைத்துணையிசைத்திடல்கேட் டிசைந்தலாதியம்பி யுள்ளேஇப்
பொன்றுறத்துவக்குங் காலருட்கடனீர் பொழிபுயல்வண்ணனுங்கண்ண
னன்றுருக்குமணி பாலுரைத்திடுவா னங்கையாறலைத்தடியவர்கட்
கென்றுநல்விருந்து புரிதருந்தகைசா லென்னடிப்பத்தனுண்டொருவன். ()

விளம்புமற்றவற்குச் சிறிதுபொன்னளிப்ப மேவுவன்யாவெனவிளம்ப
வுளம்பொலிகருணை நாயகனவனையு முடன்வரப்பணித்திரென்றிரந்தாள்
வளம்படுமிச்சை யுண்டெனில்வருதி வரிலவனினதுபூடணங்கட்
டுளங்கிடப்பிடித்துப் பறிப்பனக்கானின் சுந்தரக்கைவிறற்றேய்ந்த. (௧௭)

முத்திரைமோதி ரத்தைமட்டறியா முறைமறைத்திடுதியென்றோதி
யொத்தியறமதா ருயிர்விடத்துணிவுற் றுள்ளவர்மனையிடையாவிச்
சித்திரமனைய வுருப்பிணியுடன்வை சியனெனத்திருவுருக்கொண்டு
பத்தியாரணிக டுலங்கிடவணிந்து பயிலுமுன்றிற்புடைநின்றே. (௧௮)

தெழிப்புடனிட்கிஞ் சனன்றனைக்கூவச் சீக்கிரமவர்புடைசேர்ந்து
விழிக்கெதிர்நின்று ராடையாபரண விதமெலாங்கண்டுளமகிழ்ந்தே
செழிப்புறுசெல்வ நாய்கரேயான்றன் செப்புமப்பேரினனெனனீ
ரழைத்தகாரணமென் னோதிரென்னு லாவதேதற்புரிவனென்றோத. (௧௯)

கபடவைசியனோ திடுவன்யாஞ்சேணூர் கடிநகரணைந்திடுந்திறத்தோ
மிபமுலவிக்கா னிடைகரவடர்க ளியைவதாய்ப்பற்பலரிசைத்தார்
சுபமிகுபணியா தியபொருள்சாலத் தோய்ந்துளவெம்புடையதனு
லபமுறுதெம்மை நகர்புகப்புரியி லாக்கநிற்குதவுவனென்றே. (௨௦)

சிறிதெமக்கருண்மிக் குதவிசெய்யென்னச் செப்பருமகிழ்ச்சிமிக்கானுய்ப்
பொறிவலிதடையிற் றடுப்பனோவென்றான் பொறியரியடைந்தமையோரா
னறிவமைவணிக சிகாமணிசற்று மஞ்சலையானுமக்குற்ற
நெறியமைதுணையா வேனென்றானிருண்ம நெறித்துணையாகவந்தார்க்கே. ()

என்னுடன்வருதி ரேலுமக்கிடையூ றியாருமேபுஞற்றிடாரென்றான்
றன்னுளத்துவகை மிக்குமின்னுள்பாற் சாற்றுபுவிரைந்துவந்தவர்தன்
பின்னுறவணையக் கானமத்தியிற்போய்ப் பீதியுற்றிடமிகவெருட்டிப்
பொன்னுடைவணிக நுமக்கிடையூறு புரிகலனணிகளீகுதிரால். (௨௨)

இக்கணமென்சொன் மறுத்திடாதனைத்து மீந்திடில்விதியுளீரின்றேற்
றெக்கணம்புகுப்ப னென்றிடவவன்றன் றேகமுற்றிலுங்கவர்ந்தோனுய்த்
திக்கறியிரவுத் திருடர்தங்குருவாஞ் செட்டிவேடம்புனைந்தவிர்ந்தோன்
மிக்கவுட்பயமெய் துநனின்மெய்ந்நடுங்கி வேதியக்குலத்துதித்திடுநீ. (௨௩)

நம்பிநற்றுணையென் றடைந்திடுமெமையிந் நடுவழியிற்கொணர்ந்திங்ஙன்
வெம்பிடவருத்தன் முறையலவென்ன வேதியனோதுவன்யானென்
கும்பியின்பொருட்டு மன்றலதெனது குடும்பக்குழாங்கட்குமன்றாற்
சும்பிதப்புதல்வர்க் கீட்டிவைத்திறக்குந் தூர்த்தனுமியானன்றுமன்னே. ()

பாலியமுதலோர் விரதமுண்டெனக்கிற் பாலுறும்பரமபாகவதர்க்
காலிநோமுத மிட்டடைந்தார்க ளவாவியபொருளளிப்பதுகாண்
வாலியவிரதங் காத்திடற்பொருட்டால் வன்பவமியற்றிடவரினு
மாலிதயத்திற் பொறுக்குமென்பாவ வகைகுறித்திரங்கலிர்மன்னே. (உரு)

வல்லேநும்பொருள்கள் யாவையுமகிழ்வில் வழங்குதிர்வன்கடத்தியைந்த
கல்லேமாதாக்கும் பதத்துணையுளத்திற் கலந்தமெய்யன்பர்காத்திருப்ப
சொல்லேநும்பணிகண் மாறியேயவர்சட் குணவமைத்திடுதல்வேண்டுமவர்
தொல்லேவெம்பசிகொண் டகவிலென்னுவி துறக்குவன்விரதம்விடேனல். ()

கற்பணியொருவி யென்மொழிகடவாக் கற்பணிவாய்ந்தடியவர்தங்
நற்பணிமுயனு மென்மனேயாளு நானுமித்தொழிலிலாம்பொருள்கட்
டுற்பணிவிடமொப் பெனமதித்தணுவுந் துய்த்திடேஞ்சூன்முகிலனேய
பொற்பணிமேனிக் கிருட்டிணன்பிரீதி பொருந்தவேயித்தொழிற்புரிந்தேன்.

பலபலவோதித் தாழ்க்கலிர்விண்டு பத்தர்கள்பசிமிகுத்திருப்பர்
குலவுபொன்னணிக டருதிரின்றேல்யான் கொல்லுவனுமையெனச்சாற்ற
நலனிறைவணிகன் றன்னிடத்துள்ள நல்கிடவுருப்பிணித்தாயு
மிலகுமுத்திரைமோ திரமலாப்பொருள்க ளியாவையுங்களிப்புடனீந்தாள். ()

பொருவினிட்கிஞ்ச னன்கரத்தமைந்த பொங்கொளிமோதிரந்தனேயுந்
தருதியென்றேதக் கொடுத்திலளுடனே தாய்கரந்தன்கையாற்பற்றிக்
கருணேயோர்சற்று மின்றிமாலுள்ளங் களித்திடவிரலுடன்றுணித்திட்
டருமையப்பணிகொண் டமுதுறாறன்பர்க் களிக்குவன்சரதமாமாதோ. ()

நின்கரமிசையீ தமையுமேற்பயனென் னிகழ்த்தெனச்சாற்றியாவையுந்தன்
னன்கமைவத்தி ரந்தனிற்கட்டி நனிமகிழ்ந்தனன்செலத்துவக்கப்
பொன்கவின்மேனி மாலருடதும்பிப் புகலுநிட்கிஞ்சனவிணேதீர்
மின்கவினிம்மோ திரஞ்சிந்தாமணியின் மிக்கதாலெளிதெனமதியேல். (கூo)

ஒத்தியலெனதா ருயிர்புரைநேய னெருவனெற்களித்தனனிதனேப்
பத்திரப்படுத்தி வைத்தியேனினக்கும் பரமபாகவதர்சேவைக்கு
நித்தியம்வேண்டும் பொருள்கணல்குமென நிகழ்த்துபுமறைந்தனன்மனேயோ
டெய்த்திவன்மாலென் றறிந்துதாழ்ந்தில்லா ளிருக்கும்வீடடைந்தெலாமிசைத்தான்.

பெண்ணின்மற்றெருருவ னடைதருமருமைப் பேறிலேயெனமறைவிளக்குந்
திண்ணியற்கற்பு மாதுமோதிரத்தைச் சிறக்குமோர்மறையிடத்தமைத்திட்
டண்ணியதொண்டர்க் கமுதளித்தவர்க ளேயமேற்றருந்தியாழியிற்சால்
கண்ணியப்பொருள்கள் கொண்டுமெய்யடியார் கருதியதங்குபூசித்தார். (கூஉ)

புருடவாகனனிற் றிகழ்ந்தவன்சாது பூசையாற்பொன்னெலாங்கழிந்து
மருவுசுற்றத்தா ரேசிடற்சிறிது மதித்திடாதிரந்துமாறலேத்தும்
பொருவருவிரதந் துறந்திடாதாற்றப் புரிந்தமாதவத்தினுமிணேதீர்
திருவணுண்மனேயாப் பொருந்திடும்வண்ணஞ் செய்தமாதவஞ்சிறந்ததுவே.

மரிதராதுயர்நிட் கிஞ்சனற்குப்பொன் வழங்கவைசியனெனவாடற்
புரிதலினுயிரொத் தியலுருப்பிணியைப் பொற்கைமோதிரநல்கேலென்றிட்
டுரிமைமிக்கன்னோன் விரலொடுங்கொளக்கண் டொப்பில்பேரார்வமெய்தியதே
பிரியபத்தர்கள்பான் மால்கொள்வாற்சலியப் பெருமைநன்குணர்த்திடுமாதோ.

அலகைபொத்திடப்பொன் னளவிலகாத்திட் டறமியற்றிடவறியாமா
முலகுளோர்தாநிட் கிஞ்சனனென்ன வோதுபேர்பூண்டுதொண்டடியார்க்
கலகறுநிதியின் றென்றிடாதென்று மளிக்கும்பேரருள்கொளந்தணன்று
னிலமிசைபன்னா ளிருந்தில்லாளுடனே நிகழரிபதம்புகுந்தானே. ()

வேறு

தனக்காம்பொருள்கண் முற்றுமன்பர் தமக்கேயளித்தன் னவையொழிந்துஞ்
சலியாதுடைபூண் விற்றளித்துந் தடங்கானகத்தி லாறலைத்து
மனக்காதலின்மெய்ப் பணியாற்றி மற்றதுவுங்கிட் டாமையினன்
மடியத்துணிவான் முன்வணிக வடிவாயுருக்கு மணியுடன்போய்
வனக்காதலிதன் விரலரிய மகிழ்வோய்நின்னுட் கொளும்பத்த
வாற்சலியத்தை யிற்றெனவே மதிப்பாரெவரவ் வளப்பத்தி
யெனக்காம்படிநின் னருளுள்ளத் தெண்ணுபிரந்த விண்ணப்ப
மிராமானந்தப் பெயர்கொடென திதபத்திலங்கும் பெருமாளே. (௬௬)

அரிபாலகதிமுற்றிற்று

ஆ கவி சஙஙடு

---

நாற்பத்தெட்டாவது

# சாக்ஷிகோபாலகதி

ஆட்சிசான்றதன் னுடல்பொருளாவியை யன்பர்க்கீந்தருட்கண்ணன்
காட்சிபெற்றநிட் கிஞ்சனனருட்பெருங் கதியுரைத்தனன்வன்னி
மாட்சிசான்மணப் பொருட்ட ணிமதுரையின் மருவியகோபாலன்
சாட்சிரீடரித் துவாரத்தின்மேவுபு சாற்றியபடிசொல்வாம். (௧)

வளங்குலாவியற் கௌடதேயத்தமை மாநகர்களின்மேலா
விளங்குசீரரித் துவாரமென்றுலகெலா மிளிர்திருநகரின்பாற்
குளங்குலாவிய வின்னிசைமறையவர் குலத்துதித்துளதூயோன்
களங்குறுமதி கடுப்பவன்விண்டுவின் பத்தியிற்கடல்போல்வான். (௨)

அளகையாதிபன் புரைபெருஞ்செல்வன்பே ரறத்துறையிடைநின்றோன்
வளநிலாவுமில் லறத்தியைந்துந்தனோர் மனத்திடைபற்றாதே
குளநிலாவிய பங்கயத்தளம்பொலி குளிர்புனற்றகைவாய்ந்தோன்
சளமில்சீர்க்கவி யாணசுவாமியாச் சாற்றிடும்பேர்கொண்டோன். (௩)

ஆர்த்தியோடுபுண் ணியநதிகளிற்புன லாடியாங்காங்கோங்கு
மூர்த்திகட்டெரி சனம்புரிந்திடுமவா முதிர்ச்சிமிக்குபிரேபோற்
சீர்த்திலங்குதன் னன்பனோடோ திடச் செப்புவனவனின்மெய்
வார்த்திகத்தகை யுறுதலிற்றனிச்செலன் மாபலவெனச்சாற்றி. (௪)

நமதுநாட்டில்வா ழொருமறையவனரி நலத்தபத்திமிக்குள்ளான்
றமர்கள்யாருமில் லான்விவாகமுமில்லான் றனியனுத்திகழ்கின்றான்
சமதமாதியுள் ளானுறினலமெனச் சாற்றினனுறுமேல்வை
விமலனாரு ளாலவன்சுயேச்சையா மேவவிப்பிரன்கண்டே. (௫)

செப்பருங்களிப் படைந்துரைத்திடுவன்யான் றீர்த்தயாத்திரைசெய்வான்
* வெப்பமிக்கியைந் துற்றனன்சாலவும் விருத்தனுகியபண்பா
லொப்பருந்துணை யின்றெனநின்னையே யுன்னியுற்றனனீயு
மப்பனாரு ளாலடைந்தனையென்னோ டடைதியோவெனக்கேட்ப. (௬)

† வன்னிசாலவு மகிழ்ந்தெனதுளத்தினும் வாஞ்சைமிக்குண்டெற்குப்
பன்னிடற்கொரு சுற்றமுமின்றுடன் படர்வனென்றலுமேலோன்
பன்னிமைந்தரா தியருடன்யாத்திரை பன்னிநீடவிமுத்த
மன்னிக்கங்கைமூழ் குபுபிரயாகையின் மருவியோர்மதிதங்கி. (௭)

வாமிலங்கெழின் மதுரைசார்ந்திரண்டொரு வைகலன்புடன்கண்ணன்
சரணமேத்திவை கினரதுகாற்கலி யாணசாமிக்காற்றச்
சுரம்விராவிய தால்வன்னிவன்னியிற் சோர்வறக்களிப்போடுந்
தாமுறப்பணி விடைபுரிந்தனனறு மதிதகுமருந்தீந்தே. (௮)

அயனமொன்றகன் றிடுதலுமுதுவன்று னரோககாத்திரனுகித்
தயவமைந்துள பிரமசாரியினேர்சான் றுண்மையையுளத்தோர்ந்து
வியனமைந்திவற் கொருகைம்மாறியற்றிட வேண்டுமென்றுளங்கொண்டே
யயலமைந்தவற் பார்த்தெனேர்பெண்ணைநிற் களித்தனனின்றென்றான். (௯)

பிரமசாரியன் னவன்மொழிகேட்டலும் பீதிமிக்குற்றோதுந்
தரமில்வாசகம் பன்னலிருறவுடன் றந்தைதாயருமில்லேன்
பிரபுவானநும் மகட்கொளல்சாலவும் பிழையாமெனக்கன்றி
யுரனிலாவுநும் மனைசுதாதிய ருமக்கிகற்பவோரால். (௧0)

அன்பின்யானுமக் குப்பணிபுரிந்ததை யன்றியோர்கைம்மாறு
பின்பியைந்திட வுன்னிலேனும்முளம் பெறும்விருப்பொழிவீரென்
றின்பின்வன்னியோ திடலுமேலோன்றளி யிடங்கொடுபோய்க்கண்ணன்
முன்பினின்றிவற் கென்மகட்கொடுப்பனீ முறைகொள்சான்றென்றோதி. (௧௧)

வன்னிகையினீர் வார்த்தெம்மூரடைந்துடன் மணம்புரிவேனென்னப்
பன்னியாண்டுசின் னுள்வதிந்தரிபதம் பணிந்துதம்மூர்புக்கு
மன்னிடுந்தன்னோர் சரிதைமுற்றோதுபு மகண்மணச்செயலோதப்
பன்னியும்புதல் வருமிழிகுலத்தற்குப் பாவையீகலமென்ன. (௧௨)

* வெப்பம் - ஆசை. † வன்னி-பிரமசாரி.

விருத்தனுக்குடன் படாதுமற்றவனையு மிகவெறுத்தனராய்மீ
யருத்தமீட்டுதன் மறந்துதீர்த்தங்களி லாடப்போந்ததுமல்லாற்
றிருத்தமுற்றநங் குலத்தினுக்கேற்றிடாச் செயலியற்றவுஞ்சாலக்
கருத்தமைந்தனை வறிதமைபித்தறக் கதித்தவார்த்திகவென்றே. (கங)

சாற்றவேதியன் மனையுடனேதுவன் றைபலென்றனக்கன்பி
னூற்றவும்பணி புரிந்தனனீயுன தகத்திசைந்திடாயென்னக்
கூற்றமோதுவ ளிழிகுலத்தவனன்றி குயிற்றிடிலதற்கும்பெண்
பாற்றரும்படி யெண்ணிடன்மரபுகொல் பாருள்யாரிதுசெய்தார். (கச)

மதுரைநாயகன் முன்புகன்மாற்றநீர் மாற்றிடற்கிசைபீரேல்
வதுவையொன்றுசெய் தேமகட்பெற்றுப்பின் மணமுடித்திரென்றேதப்
பதுமைநேரணங் கிவன்கிருட்டிணன்பதப் பத்திமிக்கானென்சொற்
கெதிர்மொழிந்திடே லென்னவிச்சொற்கணீ ரென்முனேதுதிரென்னில். ()

தன்னைநேர்சுதை தன்னைபாழ்கிணற்றினிற் றள்ளுவன்பானென்னு
மன்னையொத்துமைந் தருஞ்சொலமுதுவனென் னூற்றுவனாமீதிற்
பொன்னைவைத்தமா லடிதொழுதிருந்தனன் புத்திரருறும்வன்னி
தன்னைவைதடித் திடலுமற்றவனுடன் றராபதிபாற்சாற்ற. (கரு)

உடன்றராதிப னகரின்மேலவர்களை யுற்றதன்புடைகூவி
நடந்தவாறெலா மோதிடப்புரிந்துநீர் நடுவராய்ப்பகர்கென்று
னிடங்குலாவினர் சாதியின்முறைமையா லீந்திடன்மரபன்று
திடங்கொள்வாக்குத்தா னம்புரிந்ததுமெய்யேற் றீர்ந்திடலிசைவன்றால். ()

இதனுக்கோருபா யம்புரிவாங்கலி யாணசாமியின்னூற்குச்
சதமுறச்சுதை கொடுப்பனென்றேதுகாற் சான்றெனவமைந்தானைத்
திதமுறச்சபைக் கழைத்துவந்துறுகரி செப்பிடச்செயில்வன்னிக்
கிதமுறச்சுதை தனைமணம்புணர்த்திட லேற்றதென்றிடக்கேட்டே. (கஅ)

வன்னிதுக்கமிக் கருள்கொள்கோபாலன்றன் வாரிசத்துணைத்தாளே
மன்னிருந்துணை யவனெதுசெய்யினும் வாழ்வெனக்கென்றேதிப்
பன்னிடுஞ்சபை யார்கட்கோதிடுவன்யான் படர்வனுன்மதிக்குண்முன்
கன்னிதன்னைமற் றெருவருக்கீந்திடக் கருதுகின்றிலமென்றும். (கசு)

கடந்துகொண்டவன் வன்பிரமக்கொலை கண்டவன்றனைப்போலுந்
திடம்பொருந்துமா பாவியாகுகவென்றுஞ் செய்விரேற்பிரதிஞ்ஞை
படங்கொள்போகிமே னடித்தவன்றனையிவண் படரச்செய்குவனென்னப்
புடஞ்செய்பொன்னுறழ் மனத்தவர்யாருநீ புகன்றவாபுரிகின்றேம். (உ0)

மதியொர்நான்கொழிந் தைந்தெனுமதிமுதல் வைகலிலப்பெண்ணைப்
பதிமற்றோற்களித் திடிலிதுசூளவன் பாலுறுதெனவுட்சம்
மதிகொடொப்பில்கிட் டிணன்றிருவடிகடன் மனத்திடைமிகநாடிக்
கதிகொர்டோர்மதி தனின்மதுராபுரிக் கவின்றிருத்தலத்தெய்தி. (உக)

பத்தவற்சல னனகோபாலன்பொற் பதம்பணிந் திசைக்கின்று
னத்தனேயகி லாண்டநாயகவுபி ரனைத்தினெஞ்சகமீது
மொத்தவோர்கரி யாயமைந் திலங்கிடு மொருவ னேநின் கண்முன்
பித்தனேன்காத் தந்தனைனீர்பெயும் பெற்றி கண்டிடுபன்பால். (உஉ)

மன்றமேவினோர் காணநீசாட்சிபா வந்திடும்படிவாய்த்த
தின்றறைந்திலை யேற்பிரமசாரிசம் சாரியென்றிரண்டும்போய்க்
கன்றலாவனி யெய்திலையேலவண் கலந்திடேனின்கண்முன்
பொன்றலாவது மெய்புனல்கொடுமணம் புரிகிலதமைகில்லேன். (உங)

என்றுசாற்றியூ னுறக்கநீத்தமைந்தன னிவன்மயக்குறும்போதி
னன்றுகிட்டினன் மேவுபுசாற்றுவ னன்மறையவனீயுள்
ளொன்றுமஞ்சலை நின்னுடன்வந்துன துரைப்படிகரிசொல்வே
னென்றுதிக்குமுன் னெழுந்தனைதுய்த்துமுன் னேகுதிபின்னேய்வேன் (உச)

எனதுகாற்சிலம் பொலிவினுயேகுதி யெனைத்திரும்புபாரேன்
மனதயர்ந்துபார்த் திடுதியேலங்ஙனே வதிகுவன்பின்னெய்தே
னெனவிளம்பிடக் கேட்டவ்வாறியற்றின னெழின்மணிச்சிலம்போதை
தனதுகேள்விகொண் டிடுவதெப்போதெனத் தளிப்புறத்தமைந்துற்றான். ()

நள்ளிராப்பொழு தினிலருணுபுர நாதங்கேட்டலும்வன்னி
துள்ளிமேலெழுந் தனன்பின்னேக்கிலனடை துவக்கினனொருதிங்கள்
கொள்ளிருந்துப ருடனடந்திடும்வழி கொண்டல்வண்ணன் பொற்று
ளொள்ளியற்சிலம் பொலிகொண்மாட்சிமையின லொருதினத்தினிறசென்றான்

சென்றவன்னிதன் னகர்க்கருகமைதலுந் தினகரன்மகிழ்ந்தன்னோன்
மன்றல்காணுநா ளூளமென்றதையுடன் வரவழைத்திடப்போத
*லொன்றமேல்கடற் படிந்தனனுடனவ னேகையாற்சொற்பொச்சாந்
தின்றளங்கொடா மரைக்கணெஞ்சலர்த்தரு ளினனைப்பின்னுறநோக்க. (உஎ)

கல்லுருக்கொடாங் கமைந்தன னமைந்தவன் காமர்நீடுருக்கண்டே
பொல்லுமோகையங் கடலிடைமூழ்கின னுடன்முதன்மறந்தானுப்
வில்லுலாங்கதிர் வரும்வகையோகையின் மிகத்துதித்தனனுற்றான்
செல்லுறழ்ந்திடு மேனியற்பிரிதரச் சிந்தையொப்பலனுறன். (உஅ)

அன்றிராவின்மா லங்கநகர்மேவினோ ரனைவர்கள்கனவூடுஞ்
சென்றிம்மாநகர்ப் புடைவன்னியோடியான் சேர்ந்துளன்விருத்தன்றான்
றன்றிருச்சுதை தன்னையென்முறப்படச் சத்தியமிவற்கீவே
னென்றிசைத்தனன் சரதம்யான்சான்றிவ ணெய்தியெற்காண்பீரால். (உகூ)

என்றுரைத்தரு ளற்புதக்கனவுகண் டிறைமுதலியர்யாரு
நன்றுநன்றென விபந்தனர்துதித்தின்ப நாலைமூழ்கினரானு
ரொன்றுமத்ததி தனிலவணெய்திடு மொருவன்மாமணிநீலக்
குன்றுறழ்ந்தகோ பாலனும்வன்னிபுங் குலவுமற்புதங்கண்டே. (ஙo)

* ஒன்ற - ஒப்ப.

அருகமைந்துகை கூப்பிமாதவத்திற லந்தணகோபாலற்
பொருவில்சான்றுரைத் திடக்கோணர்ந்தனைகொனீ புண்ணியன்ருனென்ன
வருமையார்துதி சாற்றினன்போய்நக ரறிந்திடப்புகன்றிட்டா
னிருபனுதிய யாவருநெஞ்சக நிறைமகிழ்வுடனெய்தி. (கக)

சாட்சியாமெனத் தனதுபேரருள்கொடு சார்ந்திடுகோபாலன்
காட்சிகண்டடி யற்றிடுபனையெனக் கான்மிசைவீழ்ந்தேத்தி
மாட்சிமிக்கவன் னியின்றுணைத்தாள்களும் வணங்கிமன்னவனின்ப
நீட்சிபெற்றுனக் கியான்செய்கைமாறிந்த நிலத்தொடம்பரத்தின்றே. (கஉ)

என்றுரைத்துட னேகல்யாணசாமித னிருந்தவத்திரளேபோ
லொன்றுமங்கைபை மணம்புரிவித்தவற் கொண்பொன்னுதியநல்கி
நன்றுசாட்சிகோ பாலற்குவிசித்திர நற்றளிபுரிவித்தா
னென்றுநழ்ந்திடு சீர்த்தியைவன்னிதா னென்றுமேற்றவிர்ந்திட்டான். (கங)

மதுரையம்பதி மேவினர்மூர்த்திபோம் வகையறிந்திலருள்ளங்
* கதுவிவாடுநா ளரித்துவாரத்தினுங் கலந்தவனுளவோதப்
புதுமைமிக்கவ ணடைந்துகோபாலனைப் போற்றினர்கொடுபோதற்
கதுலமாமுயற் சிகள்செய்தும்பயன்கொளா ரயர்ந்தனர்துயிலுற்ருர். (கச)

ஆயகாலருட் சாட்சிகோபாலன்ரு னவர்கனவிடைமேவிச்
சேயநன்மது ரைக்குநீர்யாவருஞ் சென்மினும்வினையாற்றேய்
காயவன்மைகொண் டெனையெடுப்பரிதிபான் கனிவுளம்பெறும்வன்னி
பாயபேரன்பி னுல்வசமடைந்திவண் பதிட்டைசெய்திடப்பட்டேன். (கரு)

நீயிர்வேறுரு வமைக்கில்யானதினுஞ்சாந் நித்தியப்படுகின்றேன்
போயியற்றுமி னெனவெழுந்துடன்கடன் புரிந்தமுதயின்றப்பா
லாயிலன்புசால் வன்னிபொன்னளித்தனுப் பிடமதுரையின்மேவி
வேயிலங்குகை யானுருத்தாபித்து விபனுறப்பூசித்தார். (கசு)

இன்னவற்புதங் காண்டலும்வன்னிமீ திறையுடனகர்மேயார்
நன்னலத்தபி மானமிக்களப்பரு நலமிகப்புரிந்திட்டார்
கொன்னமைந்திடும் வன்னிதான்சாட்சிகோ பாலனுக்குள்ளன்பாற்
பன்னரும்பணி புரிந்துவாழ்ந்தரிதிருப் பங்கயப்பதஞ்சேர்ந்தான். (கஎ)

புண்டரீகனுக் காகமால்பண் டரி புரத்தின்மேவியதேபோல்
வண்டழைத்தவன் னியின்மணப்பொருட்டவன் மனங்கொள்பத்திமைநன்றற்
றெண்டரியாவரு மேத்திடுமாறரித் துவாரத்தின்மிசையுற்ருன்
கண்டழைத்தவர் யாருந்தன்பத்தவாற் சலியங்காணுறவம்மா. (கஅ)

அதுமுதற்கொடுத் தாத்தரித்துவாரந்தெற் கமைந்தபண்டரிமேற்கிற்
பொதுவர்சூழ்துவா ரகைகிழக்காசையிற் பொருவில்சீர்ச்சகநாத
மதுலமிக்கபூ மங்கையுண்மகிழ்தர வாசைநான்கினுமாயன்
புதுமைமிக்கவா லயங்கொடன்பரையெலாம் புரந்தமைகின்ருனல். (கசு)

---

*கதுவி - கலங்கி.

வாரியொத்தியல் வன்னியின்பத்தியு மாதவனருளின்பப்
பேரியற்கையு மமையுமிக்கதியினைப் பேசினர்கேட்டோர்கள்
பாரிடத்தும்வா னிடத்துமேவியவியற் பயன்முழுதடைந்தீற்றி
லேரியற்பெறு பத்திவாய்ந்தச்சுத னிணையடியடைவாரே. (௪0)

வேறு

தன்கையிடைநீர் வார்த்துமகட் டருவேனென்ற விருத்தன்மனை
தனையரிசையும் படிமுன்னாள் சாட்சியாகிற் கூவிடலும்
வன்கைவேழ நிகர்மன்னன் மகிழமதுரா புரிவிடுத்து
வளமாரித்து வாரநகர் மன்னிவன்னி மணமுடித்தா
யுன்கையிடையா ரமுதமென வுற்றவருள்வெவ் வினைச்சூரத்தி
லுழலென்னனையார்க் குரித்தஃதுனக் குதவும்பொருளன் றென்பார்க
ளென்கைநிசமே லீதியுனக் கெவரேசாட்சி யிசைத்திடுவா
ரிராமானந்தப் பெயர்கொடென திதபத்திலங்கும் பெருமாளே. (௪௧)

சாக்ஷிகோபாலகதிமுற்றிற்று

ஆகூ கவி ௪ஙஎ௪

---

நாற்பத்தோன்பதாவது

# இராமதாச கதி

பராவுசீர்கொள்கோ பாலனை மதுரையம் பதிநின்
றுராவுதன்னகர் சேர்த்தவன்னியின்றிற முரைத்தேன்
முராரியைத்துவா ரகைவிடுத்தில்லிடை முயக்கு
மிராமதாசன்சீ ரறிந்தமட்டியம்புவ னினியே. (௧)

துவரைமாநகர்க் கிழக்கினிற்றுலங்கிடாங் கூரி
னவமறைக்குலத் துதித்தவர் நற்குணந் திரள்பொற்
குவடுபோல்பவர் பத்தியிற்குளிர்கட லொப்பா
ருவமைதீர்கற்பு மனையுடனில்லறத் துறைவார். (௨)

தணிவிலன்புடன் மதிதொறும்வருமேகா தசியி
லணிகுலாந்துவா ரகைபுகுவாரபி மானப்
பிணியிலாதவர் வழியிடைபெயர்ந்திடும் பொழுதுங்
கணிசமால்புகழ் பாடினராடினர் கலப்பார். (௩)

துவரையம்பதி புக்குமால்விடைபெறுந் துணையு
நவமுறுந்துள வாதிகொண்டருச்சனை நயந்து
பவமிறப்பொழித் தருள்கெனப்பரவுபு பிற்றைத்
திவசந்தந்க ரெய்துவரித்திறஞ் சிறக்க. (௪)

வேறு

இருபத்தைந்துவற் சரமுடித்தனர்தம தியாக்கைக்குநாலான
பருவமெய்தலி விறுதியிற்றளர்வுடன் படர்ந்துகண்ணனைப்போற்றிக்
கருணைநாயகவென்னுடன்மூத்தலிற் கலந்தினியுனைக்காண
வருவதற்கமை யாதெனினுந்தயை வைத்தெனைக்காப்பாயால். (ரு)

என்னவோதுகாற் சகிப்பருந்துயர்மிகுந் திருவிழிபுனல்கொட்ட
வின்னன்மிக்கழு தினியுனைக்காணுவ தெப்பொழுதோவீறு
துன்னலாகிய சேவையீதொருமொழி சொற்றெனையாளென்னப்
பன்னகத்தின்மே னடித்தருள்பங்கயப் பதமலர்கைப்பற்றி (சு)

துதிக்குமன்பர்தந் துயர்பொறுக்கிலனரி துடிதுடித்தறல் கண்ணிற்
குதிக்கவைம்படை துலங்குநாற்புயநிரை குலவிடமதியென்ன
மதிக்குமானன மண்டலமிலங்கிட வயங்கியன்பரைச்செய்யாள்
கதித்தபொன்முலை தோயுரத்தணைத்தவர் கட்புனலறமாற்றி. (எ)

என்னைநீபிறிந் திடச்சகியாமைபோ லெனக்குமுண்டுரமேய
பொன்னைநீப்பனின் றனைப்பிறிதற்குளம் பொறுக்கிலனிதனுனீ
பின்னையீண்டுறிற் சகடமோடணைந்தெனைப் பெயர்த்தணைகெனுமாற்றந்
தன்னையோர்ந்தங்ங னடைந்துநள்ளிரவினிற் றளியினுள்ளடைந்தாராய். (அ)

வாய்ந்தசீரிர ணசூமகிட்டிணன்மிசை வயங்கெழிற்பணியெல்லா
மாய்ந்தவண்பெற வமைத்துவிக்கிரகத்தை யைதுதன்சகடேற்றிப்
போந்தமானிடர் காண்பர்கொலெனப்பயம் பொருந்துநர்விரைவாகத்
தோய்ந்தமாநக ரடைந்தனர்விடிதரு துணையிலர்ச்சகரெய்தி. (கூ)

வயங்குகிட்டிண மூர்த்தியைக்காண்கிலர் வாட்டமிக்கடைந்தங்ங
னியங்குவார்களை யுசாவுழியெய்திய விராமதாசரைக்காணூர்
தியங்குமற்றவர் செய்கையேயீதெனச் சிந்தைகொண்டவூரைக்கான்
மயங்குநள்ளிர விற்செலக்கண்டனம் வாய்மையென்றனர்மேயோர். (க0)

உடனருச்சகர் யாவருஞ்சினமிகுத் தோடியேயிடாங்கூரி
னிடமணைந்தசீ ருணர்ந்தருட்டொண்டர்தா மெழில்கொள்விக்கிரகத்தை
மடல்குலாவுபூந் தடத்துள்வைத்தஞ்சிமெய் வகுத்திலர்வறிதுற்று
ரடல்கொளர்ச்சக ரின்முழுதாய்ந்தன ரறிகிலராதுகாலை. (கக)

அவருளுய்த்துண ரொருவனேதுவனிவ னலர்த்திடையினிற்போய்மீண்
டிவணடைந்திடக் கண்டனனதனுளிட் டிருப்பன்கொலாய்வேமென்
றவணமைந்துநோக் கிடுதலுமூர்த்தியுள் ளமைந்துறுஞ்செயல்கண்டார்
தவமுயன்றுமஃ தசைகிலதறிந்தவர் தாமிகவியந்தாராய். (கஉ)

ஒருவனுமிரா மதாசன்கொண்டுவந்தவிவ் வொப்பின்மூர்த்திநாம்பல்லோர்
பருவரற்கொடு முயன்றும்வந்திலதருட் பகவன்றுனிவண்மேவக்
கருதியுற்றனன் போனுமற்றேவிவண் கலப்பம்யாமுமென்றோதிப்
பருகலின்றியுற் றூரவர்கனவிடை பகவன்மேவுபுவிள்வான். (கந)

புண்டரீகன்மெய்ப் பத்தியாற்பண்டரி புரத்தின்மேவியதேபோற
றெண்டனுமிரா மதாசனேப்பிறிகிலன் றேய்ந்தனனிவனீவிர்
கொண்டவென்னுரு வத்தெடைபொன்னவன் கொடுப்பதைக்கொண்டேகி
யொண்டகைத்திரு வுருச்செய்திரும்பொருட் டுாவன்யானதிலென்றே. (கச)

இராமதாசர்தங் கனவினுற்றெனதுரு வெடைபொலனவர்க்கீந்து
பராவியேவுதி யென்றவர்மனேவிபாற் படர்ந்துநின்செவியின்கண்
விராவுபூடணத் துடன்றராசிடையெனேர் விக்கிரகமுந்தூக்கி
லிராதுபோதமற் றவைகொடுத்தனுப்புதி யெனப்புகன்றெளித்திட்டான். ()

உடனருச்சகரிராமதாசரைப்பொல னுதவுதியெமக்கிது
கடவுளாணையென் றேதனும்விம்மிதங் கலந்துநுஞ்சொன்மெய்யென்
னிடமுமோதினன் வறியனென்செய்வனென் றிடருழந்திடுமேல்வை
சுடர்செய்கற்பணித் தோகைசொப்பனத்திறஞ் சொற்றணியளித்திட்டாள். ()

அன்னபோழ்தினி லிராமதாசரின்மனத் தையமிக்குற்றாராய்ப்
பன்னவாயெழார் நின்றனரத்திறம் பாரிதேர்ந்திசைக்கின்றாள்
கின்னமின்றியா யிரரெடுப்பரியவிக் கிரகங்கொண்டணேந்தீர்க்கு
மின்னவையமெய் துவதுகொல்மால்பத்த வற்சலனெனலோரீர். (கஎ)

சாதமீங்கிவை சமப்படுமெனமனே சாற்றலும்பெருந்தொண்டர்
வரதன்விக்கிர கங்கொடுதராசிடை வைத்துமற்றெருதட்டிற்
றாமிலங்கவைத் திடமனேசெவியணி தனேக்கொடுவரக்கண்டே
விரவினேர்காம் புடைத்துநக்கனருடன் மேவுபூசகாரும். (கஅ)

சினமிகுத்தறி வற்றவோர்பித்தநீ செய்வதியாதசலத்திற்
கனமிகுத்தமை மூர்த்தியினெடையிதோ காணுவமெனத்தொண்ட
ரனகர்காள்சின மையமுறேன்மினீ ராயிரர்கொளமாட்டாக்
கனகவிக்கிர கத்தைவார்த்திகங்கொள்யான் கடிதெடுத்துறலோரீர். (கசு)

வாய்ந்திடுங்கன மிலகுவென்றேதிடல் வைபகக்கதையாகு
மோய்ந்தநெஞ்சருட் டோய்பத்தவற்சல னுள்ளம்யாவரேயோர்வா
ரேய்ந்தவிக்கிர கத்தெடைபொன்றரி லெனக்களிக்குதிரின்றேற்
றேய்ந்தமூர்த்தியைத் துவாரகாபுரியில்யான் னுதையவைக்குவனென்றார். ()

* தீர்க்கமுற்றவர் யாருமாச்சரியமுட் செறிந்தனராவருள்ளோர்
மூர்க்கன்யானது வேண்டிலன்கிட்டின மூர்த்தியைக்கொண்டேகம்
மூர்க்கண்மேவுவ னெனவகம்பாவமிக் குடற்பலங்கொடுதூக்கப்
பார்க்கனின்றெரு சிறிதசைந்திலதம்பொற் பருவதமெனமாதோ. (உக)

அனேயகாலையாண் டமைந்தவர்யாவரு மவனேயாசியஞ்செய்தவ்
வினேயினின்றகற் றிடுதலுமன்பர்தாம் விண்டவாறெடைகாட்டத்
துணேயுமர்ச்சகர் கண்ணனிவ்வாறரு டோய்ந்துறினம்வன்மை
யெனேபதாமெனப் பதிட்டையாதியவினே யியற்றுபுவிடைகொண்டே. (உஉ)

* தீர்க்கம் - தெளிவு.

அதிட்டமிக்கவர்ப் புகழ்ந்துபோய்த்துவாரகை யடைந்துமற்றுருமூர்த்தம்
பதிட்டைசெய்தன ரிற்றையுந்துவரையிற் படர்பவரிடாங்கூரிற்
கதித்தபேரருள் பொலிரணசூரனுங் கண்ணனைப்பணிந்தொப்பில்
சுதிட்டமெய்ப்பயன் பெறுவரிராமதா சரின்புகழ்துதித்தம்மா. (உங)

புண்டரீகபத் தனைப்பிரமசாரியைப் போன்றழியாச்சீர்த்தி
கொண்டசீரிரா மதாசர்தாமந்தியங் குலவுமட்டருட்கண்ணன்
றெண்டயர்ந்துதன் செவிபுனைபணியினாற் றுவாரகைத்திருமூர்த்தி
கண்டமங்கையி னோடுவைகுந்தத்திற் கலந்தனர்சுரர்போற்ற. (உச)

விரித்தியம்புவ தென்னகப்பத்தியில் வினையருக்கிதுசான்மோ
வுரித்துறுந்துவ ரையையுருப்பிணிதனை யுபேட்சித்துக்கண்ணன்றான்
றரித்திரப்பிரா மணன்மனையின்புடை சார்ந்தமைந்தனனென்றாற்
றரித்தமானிடர் கொள்வதிஃதொன்றலாற் சாற்றின்மற்றெதுமன்னே. (உரு)

வேறு

விருத்தாப்பியத்தாற் றுவாரகைப்பான் மேவச்சகியார் மேவாது
விடவுஞ்சகியா ரழுதிரங்கும் விதனஞ்சகியா தவர்மனைசேர்
கருத்தாலடைந்து துவாரகையோர் களிப்பராம தாசன்மனை
காதினணியாற் றிருவுருவங் கவின்றுவிளங்குங் கருணையுளாய்
கருத்தாதமையு முடற்பொறிவாய்க் கறங்கிற்சுழலென் சிறுமனத்தைக்
ககனத்தமரர் தமக்கரிதாய்க் கவின்றநின்றாட் டுணையின்க
ணிருத்தாயுனக்கீ தரிதாமோ வியல்வதொளிப்ப தேற்பதன்றன்
றிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (உசு)

இராமதாசகதிமுற்றிற்று

ஆகூ கவி சசOஉ

---

ஐம்பதாவது

# பத்திராசலராமதாசகதி

குத்திரம்புரை கண்ணன்றன்மூர்த்தங் குலவிடுந்துவ ரைப்பதிநின்றுஞ்
சத்தியத்தம்வீட் டுறக்கொளிராம தாசர்காதைவிண் டேனினிராமற்
கைத்திறம்பெறு தம்பியினொடுபோய்க் காவலன்கடன் கட்டிடச்செலுத்தும்
பத்திராசல ராமதாசன்றன் பாழிமான்மிய மோதிடுவேனே. (க)

மூன்னொர்காலந் தனில்வரைக்கெல்லா முதன்மைசான்று விளங்கிடுமேருத்
தன்னொர்கற்புடை யில்லவளோடுந் தாமரைத்தவி சின்புடைமேயோன்
பொன்னொளிப்பத நெஞ்சிலிருத்திப் போதமாதவ மாற்றிடவன்னோன்
மின்னொருங்கும டைந்தவொர்பண்பின் மேவினோர்தம்முன் மேவவுணர்ந்தே.

அனந்தமாகத்து தித்துவணங்க வன்னவன்பிர சன்னமுகந்தோய்ந்
துனந்தரங்கபத் திக்குவப்புற்றே றேதுவேட்கை யுதவுவனென்ன
மனந்தழைத்தவு வகையினேடும் வாணிகேள்வ வரப்பிரசாதா
கனந்தழைத்தவி ராமன்மெய்ப்பத்திக் கண்ணியங்கொளோர்சேயருளென்ன.

அன்னவாகன னத்தகுசேயோன் றருமென்றேதி யகன்றிடச்சின்னுட்
பின்னர்மேரு மனைகருவுற்றுப் பெற்றிட்டாளொரு புத்திரன்றன்னை
நன்னலச்சுதற் குப்பத்திரப்பேர் நவின்றழைத்தனர் நண்ணிடுமன்னேன்
சின்னவோர்பரு வத்திலிராமன் சேவடிப்பத்தி யிற்சிறந்துற்றான். (ச)

மிக்கமைந்தனவ் வாறமைதற்கு வேறுகாரண முண்டெதுவென்னிற்
புக்கதாகுந் திரேதாயுகத்திற் பொருந்திராம னிலக்குவன்சீதை
தக்கதண்டக மாவனத்தூடே சஞ்சரித்துத் திகழ்தருமேல்வை
யக்கநேரில்வி சாலவொர்பாறை யமையக்கண்டதன் மீதிலமர்ந்தார். (ரு)

அன்னகாலை யகலிகையென்ன வமையுங்கல்லினுக் காவியளித்த
பொன்னடித்துணை ராகவனின்பம் பொருந்துபாறையை நோக்கியுரைப்பா
னன்னலம்பெறு நீயெமிளைப்பை நசிவித்தின்பகல் குந்திறந்தன்னு
லின்னமுஞ்சில நாளினின்மேரு வேற்றபுத்திர னென்னவுதித்தே. (சு)

எந்தமக்குப்பி ரீதியுள்ளானு யேய்வையென்ன விசைத்தகன்றிட்டா
னந்தவோர்வரத் தாற்சடரூப மானபாறையி ராமனருட்கா
மைந்தனென்னவு தித்தமட்டன்றி வாய்ந்தபூர்வ வுணர்ச்சியும்வாய்ந்து
முந்தவோதுப தேசமுமோதி முதிர்தவஞ்செய மூலமதானேன். (எ)

இராகவன்றிரு மேனியொடெய்தி யேற்றபத்திர நின்றவங்கண்டு
விராவினேனுளத் தோகை நினக்கு வேண்டுமோர்வரம் விள்ளுதியென்னப்
பராவியானந்த மிக்கிருகண்ணீர் பனிப்பக்கண்கடி றந்தனன்பார்க்கச்
சராசனங்கொடு நீலநன்மேக சாமளத்தனு மேவினனுகி. (அ)

கோடிமன்மத துல்லியமாகிக் குலவமங்குலின் மத்தியின்மின்போ
லீடியற்பெறு சானகியோடு நிகரில்சுந்தர மேவியதம்பி
கூடிமேவவி ளங்குதல்கண்டான் குறைவிலோகை யுளத்திடைகொண்டே
பாடியாடிய னந்தமெனத்தாட் பங்கயங்கள் பணிந்துசொல்கின்றான். (கூ)

சானகிரம ணுசடரூபந் தாங்கினேனெனைத் தள்ளிவிடாதே
மேனலந்தரும் வண்ணமென்கண்முன் மேவினுய்ப்பிர மாருத்திராதி
வானவர்க்குங் கிடைப்பரிதாய வரதனேநின் றரிசனந்தன்னு
லீனனேன்கிரு தார்த்தனுமானே னெனினுமோர்வரத் திச்சைகொண்டேனல்.

இங்கவிர்ந்தருள் வண்ணமேசீதை யிலக்குவன்சமே தம்படவொப்பின்
மங்களத்தகை மேவியென்சென்னி மாடியைந்தருள் வீரெனவேண்டப்
பொங்கருட்கொளி ராகவனன்பு பொருந்துபத்திர நின்விருப்பம்போற்
றிங்கள்சூரிய னுள்ளமட்டுன்றன் சென்னிமீதியைந் தன்பரைக்காப்பேம். ()

பத்தியிற்பிர தக்கணநின்னைப் பண்ணினோர்க்கும் பரிந்துகண்டோர்க்குஞ்
சித்தியெய்திடு மிச்சைபதல்லாற் சேர்பகிரதன் வானதிபூவி
லொத்தியைந்திடக் கொண்டணைந்திட்ட தொப்பக்கௌதமன்*றென்மலைவின் றுந்
தத்தியற்கொள்கோ தாவிரிவேணி தன்னைக்கொண்டிவண் சார்குவன்மாதோ.
அன்னமாநதி கௌதமியென்றீண் டமிதமாய்ப்பிர வாகித்திருக்கு
மன்னதன்கண் முழுகினர்பாவ மாற்றலால்விர சாநதியாகுந்
தென்னவிர்ந்திடு மென்னொனிவாசஞ் சேருநின்சிர மேன்மெய்வைகுண்ட
மென்னநம்புபு நானுநுட்டான மியற்றுவோர்சுகித் தென்பதமேய்வார். (கரு)
என்றுசீராமன் பத்திரற்கோதி யேய்ந்தவான்சிர மீதிலியைந்தா
னன்றுதொட்டுக் கலிவைகுந்தப்பே ரமைந்துலோகத் தருணனிற்சீர்த்தி
மின்றுதைந்ததிவ் வீற்றுகந்தன்னின் மிக்கவுந்தரு மங்கள்குறைந்தே
யொன்றுமேனை பொலிந்துநால்வன்னத் துற்றுளோர்தம் மொழுக்கமுற்றற்றே.
நாத்திகத்தகை மேவியற்பாயு ணண்ணியேமந்த பாக்கியராகி
மூத்திறந்திடு வார்க்கெளிதாக முத்தியின்ப முயங்கிடநல்க
வேத்தியற்கொ ளபயவத்தத்தோ டேய்ந்ததாரகத் துட்பொருளாகி
மீத்திகழ்பத்தி ராசலக்கோயின் மேவிராகவ மூர்த்தியையன்பால். (கரு)
மண்டிராம நவமித்தினத்தில் வாய்ந்துபோற்றி மருத்துளவாதி
கொண்டிணைப்பத மீதருச்சித்துக் கும்பிட்டேநாம கீர்த்தனமோதிக்
கண்டிறந்தொ ரிராவுறின்முன்னைக் கவின்புகங்க ளிடைதவம்யோக
மண்டியாக விரதங்கள்செய்து மடைவதற்கரி தாம்பலனெய்தும். (ககூ)
இராகவன்றனல் லாணையிற்றீர்த்தம் யாவுந்தேவர்கள் யாரும்விளங்கு
முராவுநாரதன் முன்பிரமன்பா லுற்றவத்தல மேன்மையுணர்ந்து
கராவதைத்தவன் வாழ்தருமங்கட் கலந்துகௌதமி தீரமதன்கண்
விராவிராமக தைகானஞ்செய்தே மிகைகொள்கால மிருந்தகன்றிட்டான். ()
இன்னவாறுபன் மாதவரங்க ணெய்திராகவன் சேவைசெய்கின்றார்
பன்னருங்கொடும் பாவிகளேனும் பத்திராசல மேவியிராமன்
பொன்னடித்துணை போற்றிடிற்பாவம் போக்கிமெய்ப்புனிதத்தகைதோய்வா
ரின்னசீர்ப்பத்தி ராசலமேன்மை யிசைப்பச்சேட னு மேண்மையில்லானால். ()

வேறு

ஆயசீர்ப்பத்திரா சலமேன்மையுலகத் தறைந்தனர்பலோர்களேனு
மேயகாதையினிமித் தஞ்சிறிதியானிவண் விளம்பினேனினிமெயன்ப
ராயவர்தமிற்சீர்த்தி பெறுராமதாசர்கதை யறைகுவேனதாபாத்
தேயபெயர்மேயநக ரந்தன்னையரசுபுரி யிறைமிலேச்சக்குலத்தன். (ககூ)
தானிசாவென்றோது நாமமுடையான்மிலேச் சக்குலத்தவனுகிலு
நானிலத்துயிர்யாவு மின்புறச்செங்கோ னடாத்துவான்மற்றவன்பா
லூனிலைதெரிந்தவிரு மந்திரிகல் விப்பிரர்த நோன்குலத்திடையுதித்த
மேனியுடையாரவர்ச கோதரியையயனகர்கொள் வேதியற்குக்கொடுத்தார். ()

* தென்மலை - பொதியை.

அன்னவன்சிராமன் மிசையன்பமைந்தகத் தகலாதுசிந்தைசெய்தே
மன்னருட்பத்தர்களை யன்போடுபூசனை வழாதியற்றினன்வாழுநாட்
கொன்னமைதன்மனைவயிற் றினினின்றுகடலிலெழு குளிர்மதியமொப்பென்னவே
தன்னனையவொருமைந்த னற்சுபமுகூர்த்தந் தனிற்செனித்திட்டனனரோ.

கொன்னார்குழந்தைக் கியற்சடங்காற்றியியல் கோபன்னாவென்னநாமம்
பன்னாவழைத்தனர்லிங் கன்னாவென்றாதைதொற் கொண்டபல்லைத்தலத்தா
னின்னான்வளர்ந்துமறை நாலங்கமாறுடனி ரொன்பான்புராணமுழுதுந்
தன்னாதரத்தந்தை தாய்மகிழவோர்ந்தவைக டம்மிற்றெளிந்திலகினான். (உஉ)

திகழுநாளங்கரின் மேயபௌராணிகர்கள் சிலர்பாலராமாயணந்
நகவோதினாதனை வினவிநானுமிராம தாசனாந்தன்மைமருவுற்
றகமீதினானிரா கவனவதரித்திலகு மானியத்தவனிமீதி
னிகழ்சனனமொன்றிலே னந்தோவெய்திற்கண்க ணோர்கண்டிருப்பேனரோ.

வேறு

ஆஞ்சனே யன்சுக்ரீவ னாதியரெனவிராமன்
பூஞ்சரண் பணிகள்சாலப் புரிந்திருப் பேனேயாவா
வாஞ்சனை மிகுமன்னோர்மா பாக்கிய வான்களென்னச்
சாஞ்சலி யப்பொய்வாழ்விற் றள்ளிடே றீனபந்தூ. (உச)

போரு ணிறைசிராமப் பிரபுநின் னடியேனின்னைக்
காரணைந் திடக்களிக்குங் கலாபமாமயிலிலென்கண்
ணேரமணைந் திடக்கண்டின்ப நிறையுநாளென்றோசாற்றாய்
தாரகப் பிரமமாநிற் சார்வகை தெரியேனெய்த்தேன். (உரு)

எனப்பல வாறுதன்னு ளெண்ணியி ராமனுக்கே
மனத்தினைச் சமர்ப்பித்தொன்றும் வைகலிற் றாதைராமன்
வனத்திரு வடியிற்சேர்ந்தான் மனைவியுள் வாட்டமிக்குக்
கனத்ததன் கணவனோடு சககம னத்தளானாள். (உசு)

மைந்தனுங் கவர்கட்கின்ப மருவுவான் கடன்களாற்றித்
தந்தவன் பூசையாற்றுந் தகைகொள்சீ தாமனாள
னந்தமார் மூர்த்தந்தன்னை யன்பினிற் பூசைசெய்வான்
சந்ததங் குளத்திற்கொண்டு தான்படிந் தவண்முடித்தே. (உஎ)

மீண்டுதன் னில்லத்தேய்வான் விளங்குகா லத்தோர்நாளி
லீண்டுறு குளக்கரைக்க ணினியரா கவமூர்த்திக்கு
மாண்டுலங் கபிடேகாதி வயக்கிப் பட்டாடைசாத்திப்
பூண்டுதை வித்துவாசப் பூந்தொடைத் திரள்கள்சூட்டி. (உஅ)

வத்திர மிசைகத்தூரி வயங்குபொட் டிட்டுவாச
மெத்திய திரவியங்கண் மேனியிற் பூசித்தூப
மொத்திய றீபநைவேத் தியஞ்சமர்ப் பித்துளத்தை
மைத்திரு மேனியண்ணல் வடிவினி லிலயிப்பித்தே. (உகூ)

இருவிழியமைந்து சிந்தித் திருக்கையிற் காசிதன்னின்
மருவிய கபீராண்டெய்தி மன்னுசீ ரிராமதாசன்
றெருளுமா னனத்தைக்கண்டுட் சிறிதுபக் குவமுற்றானென்
றருகமைந் திவன்மெய்ப்பத்தி யறிகுவ னெனவுள்ளுன்னி. (௩0)

இராமதா சன்முன்பாக வியைந்துள பெட்டகத்தை
விராவிய குளத்துளிட்டு மீதொரு பாங்கர்நிற்பப்
பராவியுற் றான்விழித்துப் பார்த்தனன் பெட்டிகாணா
னாராவிநாற் றிசையும்பார்த்தா னுற்றிடு கபீரைக்கண்டான். (௩௧)

மருவுமிம் மிலேச்சனுக்கு வாய்ந்தநம் பெட்டகங்கொண்
டொருபய னில்லையென்னா வுன்னினன் றுக்கங்கொண்டே
பொருவினம் பரம்பரைக்கட் பொருந்தினோர் யாரும்போற்று
மருமைசான் மூர்த்திபோய்த்தென் றழுதவ சமுற்றுவீழ்ந்தான். (௩௨)

கண்டது செயலைவல்லே கபீரரு கோடிவந்தே
யெண்டகு மறையோயெற்றுக் கிரங்கினை யிசைத்தியென்ன
விண்டன னதுகேட்டன்பின் மிகுகபீர் தாசன்பெட்டி
கொண்டமூர்த் தியின்பேரென்னை கூறுதி யென்னச்சொல்வான். (௩௩

வேறு

சனகியிலக்குமணபர தசத்துருக்கனனுமான்ச மேதனாகு
மினகுலதிலகனான சீராமமூர்த்தியென வியற்கபீர்நீ
தினமியற்றும்பூசைமெய்யேன் மூன்றுதரமழைக்கிலிவண் சேருமென்னக்
கனமுறவேமூவிசைசீ ராமசந்திராவெனக்கூய்க் கண்டானில்லை. (௩௪)

பின்னுமழக்கண்டுகபீர் தாசர்குருவுபதேசம் பெற்றிலானென்
றுன்னுபுதாரகமறையை யுபதேசித்தினிச்சிலநா ளொழிந்திராமன்
மன்னுபெருஞ்சேவையுனக் கெய்துமினிமூவிசைகூ வாயென்றோதப்
பன்னுதலும் பெட்டிவரக் கண்டனன்பேரானந்தப் பரவைதோய்ந்தே. (௩௫)

பெட்டியைத்தன்கரத்திலுடன் கொண்டனன்மெய்யன்புடன்க பீர்தாசர்தா
ளட்டியறவணங்கியெனை யாட்கொள்ளவலிதிலெழுந் தருளுந்தேவே
யெட்டியநும்பெருஞ்சேவை யென்றுபிரசாதிப்பீ ரென்னநின்னு
ளொட்டியுன்னும்போதென்னச் சாற்றிவெளிப்படவிடைகொண்டொருவினாரே.

பின்னரிராமதாசன்றே வாரானதப்பெட்டி யோடிராம
னன்னலந்தோய் தாரகமந் திரோபதேசம்பெறுஞ்சீர் நாடிச்சாலத்
தன்னகத்துளோகைமிகுத் திடையறமற்றதினாட்டஞ் சார்ந்துசுட்டா
மின்னபிரபஞ்சமெலா மித்தையெனும்போதமுட னிலங்கினானே. (௩௭)

இற்றாகநிகழ்நாளி லிராமதாசற்கோர்துணை யின்றின்மீதென்
றுற்றாராயினர்பலருங் குணமிகுமோர்பெண்ணைமண முஞற்றினார்க
ணற்றாரமோடொருமை மனதுறவில்லறதரும நயந்துவாழ்நா
ளற்றார்தம்மகட்டனலோ வுவளகட்டினின்றோர்மைந்த னவதரித்தான். (௩௮)

உற்றகுழவியைமனைணை யோம்பியிராகவபூசை யுஞற்றிநாளும்
பற்றகன்மெய்ச்சாதுசே வையும்புரிந்துவாழொர்தினம் பற்பலன்ப
ரிற்றலையெய்தினர்மனைவி யவர்க்கமுதமமைத்தனளவ் வேல்வைதன்னி
னற்றவச்சேய்வெப்பமிகு குழிக்கஞ்சியிடைவீழ்ந்து நசிக்கக்கண்டே. (௩௯)

மிக்கவிரைந்தோடியெடுத் தனண்மைந்தன்வீந்தசெயல் விளம்பிலீண்டு
புக்கபெருந்தொண்டரெலாம் புசிப்பொழிவாரிறந்தொழிந்த பொருட்குவீணே
துக்கமுறலாற்பயனின் றெனுந்தெளிவொன்றினள்பாயாற் சுதனைமூடித்
தக்கபடியடியவர்பூ சனைகுயிற்றியமுதருத்தித் தணந்தவெல்லை. (௪௰)

தனையனிறந்தமைராம தாசனுடன்வகைபடவே சாற்றக்கேட்டுன்
மனைவியருங்குணங்கண்டு சாலமகிழ்ந்தனனாகி மரித்தசேயை
வினைதவிர்த்தாள்சிராம னாலயத்தின்முன்கிடத்தி மிகுபேரன்பிற்
றனையனையசிராம சந்திரனைத்தனையனுயிர் தருதியென்றே. (௪௧)

கனிவினுடன்பாடிடத்தன் றொண்டர்துயரஞ்சகியாக் கமலக்கண்ண
னனியருள்கொண்டுயிர்த்திடச்செய் தனும்யாவுமிராகவனல் லருளென்றேத்தித்
துனியறத்தம் மனைவிகரத் தீந்தன்பர்பணிபுரிந்து துலங்குநாளிற்
குனிசிலைக்கையருட்சிரா மன்சேவைபெறுமாவல் கொண்டார்சால. (௪௨)

ஒருதினத்திற்றங்குருவா வுற்றகபீர்தாசரையுள் ளுன்னவைதின்
மருவினர்கண்டடிவணங்கி நிற்கநினக்கேதுகுறை வழுத்துகென்னத்
திருவருட்பேருருக்கொளுமைக் காண்டலுமிராகவன்றன் சேவைகாண்டல்
பொருவமிகுகளிப்படைந்தே னெனினுமச்சேவையினாவல் போதக்கொண்டேன்.

தாம்பலகாற்கண்டுளதா யுலகுறுமானிடர்பலராற் சாற்றக்கேட்டே
னும்பன்மலர்வாவியிடை நும்மாற்றங்கொண்டடியே னழைத்தபோதென்
மேம்படுபூசனைப்பெட்டி கொண்டமைத்ததன்மையையென் விழியாற்கண்டேன்
றேம்பதுமக்கண்ணுடையான் றொண்டர்தமக்கெளியனென்கை தெளியார்யாரே.

அடியேற்குஞ்சிராமன் றெரிசனங்காண்பித்திடுவீ ரடிகளுன்னின்
முடியாவொன்றில்லையெனப் பலவாறேத்திடக்கபீர் மொழிவாரன்ப
கடியாருந்துளவலங்க லிராமனைக்காண்டரல்சாலக் கடினமாகும்
படிமீதுபத்திவர லெளிதன்றப்பாக்கியநீ படைத்திட்டாயால். (௪௫)

இன்னமுஞ்சின்னாள்பகவற் பத்தியொடுபூசனைசெய் திருத்திபின்யா
னுன்னகவாஞ்சனைமுடியப் புரிவேனென்றோதிடவு மொவ்வாராகி
யென்னருட்சற்குருவேயித் தேகமநித்தியமாவி யிதனைவிட்டுக்
கன்னலெதிலகன்றிடுமென் பதையாருங்காணன்மிகு கடினமாமால். (௪௬)

தேகமிதில்யானுறுங்கா லையிற்சிராமனைக்கண்டு தெரிசியேனேற்
பாகமனிதப்பிறப்பை யடைந்ததனாற்பெற்றுளதோர் பயனேதந்தோ
மேகநிகரருளுடையீர் தாநினைக்கிலிதுபெரிதோ விளம்பீர்நாயேன்
றாகமறவெவ்விதத்து மித்ததியிற்சாதித்துத் தருவீரென்றே. (௪௭)

அழுதருகித்தொழுதிரப்பக் கண்டகபீர்தாசருளத் தருண்மிக்காராய்ப்
பழுதில்புகழிராமதா சாநீயுன்னுட்டியரப் படுதல்வேண்டாந்
தழுவுபின்னுட்பதினெழுநா ழிகையிலிராமன்றரிச னந்தந்தாளும்
விழுமமறத்தெரிசித்துய்ந் திடுதியென்றுகூறியுடன் விடைபெற்றிட்டார் ()

வேறு

தனதனந்தனதான தானதன தனதானதத்தன

குருவிளம்பிடராம தாசர்தனேர் மதிமறந்தவராகி நாளைவிழி
குளிர்தரும்படிராம னேரில்வரு மெனவேமனக்கணே
குலவுமங்களமாவி சேடமிகு மணிபொருந்திடுமோசெய் வானிரவி
குலம்விளங்கிடமேவு தாசரதி யமர்வானெர்கட்டின்மேன்
மிருதுவொன்றியகோசி காவமளி* யுபதையங்கமையாப டீரமுடன்
மிகுசுகந்தநிலாவ லாவனவுண் மிகவேதெளிப்புறு
மிளிர்தருந்துணர்தோய்ப னீரெதிரி னிலவிடும்படியேசெய் தானறுநெய்
விரவுசுந்தரதீப மாடிலக வமையாவுருக்கமாய்
மருவிடும்பொழுதேகபீர் தனது மனதிலன்பொடுராம னேரில்வர
மதுரமிஞ்சிபபாட லோதிடலு மகிழ்வாகிமெத்தவே
மழைபொருந்திருமேனி ராமனெதி ரணைதல்கண்டுகபீர்ப ராவவுடன்
மலிபெருந்தயவோடி ராமன்வின விடுவானெனட்பனே
கருதியென்றனைநீவி சாரமொடு துதிபுரிந்திடலேத வாவினது
கழறுகென்றிடுபோதி லோதிடுவர் சகதீசவெட்கணே
கசிவுகொண்டிடு† நேய மானவிய னுலகமெங்கணுமேவி யாபகமொல்
கடவுளென்றனதோர்ம னோரதமு ளறியாய்கொல்செப்பவோ. (சகூ)

தனனதான தனனதான தனனதான தானன

எனதுசீட னெனநிலாவு மினியராம தாசனீ
டெழில்குலாவு நினதுசேவை யினிதுகாண வாவினன்
மனவியாகு லமொடெனேடு மறுகியோது நீர்மையான்
மருவுநாளை யொருபனேழென் வரவுநாழி யூடென
வனகவோதி னனெனெர்வாய்கொ டறைதல்பாழ்ப டாமலே
யணிகுலாவு நினதுசேவை யருள்செய்வாயெ னவிள்கால்
சனகிகேள்வ னினதொர்வாய்மை தவறிடாதி நாளையே
தகவிராவி யவனெர்பூசை தடையிலாதொல் வேனென. (ருo)

தனதானதானதன தனதத்ததத்தன

பதினேழுநாழிகையெய் திடுமேல்வைராகவனெர்
‡ பகடாகியே || வதியுண் முழுகிக்களிப்பொடே
பரிவாயொவோர்கணமொர் யுகமானவேயெதிர்கொள்
பணிராமதாசனவிர் மனைபுக்களப்பிலா

* உபதை - தலையணை † நேயம் - தயிலம். ‡ பகடு - எருமை. || வதி - சேறு.

விதிபோலும்வேதியர்க ணடுவாகியோடியவண்
விரவேர்கொள் * பாரிமிசை யமைபட்டுமெத்தைமேன்
மிதியாவுலாசமொடு புரள்போதுதாசருள
மிசைகோபமீடியொரு தடிகைக்கொடெட்டியே
கதிர்வீசுகாளமுகி லுறழ்மேனியோடுவிழி
களினேர்விராவின்முய லலகற்றவற்புதா
காபூசைபோலவுடன் முழுதேகமாகவடி
கடையோடராமனினி வருமற்றதற்குளே
புதிதாகவேசெய்குவ னெனவேமுன்மானவியல்
பொருள்யாவும்வேகமுட னமைவித்துளற்பொடே
பொருவாரிருசாதி கனிவோடுகாணவெது
பொழுதேகுலாவுமென விமைகொட்டலற்றுரு. (ருக)

தந்தத்ததானன தனனதன தனதானதத்தன

சென்றிட்டசீராம னதிவிரைவி லொன்றிக்கபீர்தாச ரிடமுனது
செஞ்சொற்கொடாவாறு குறுகவுன தடியானெனைக்கைதோய்
தெண்டத்தினுன்மோதி யளவிறுய ரொன்றச்செய்தான்மாய் வினைகொளுறு
செங்தொக்கினுன்மீள்வ திலையவிடை யினின்மாய்வன்மெய்ச்சொலே
நின்றிட்டியானுடி டுதியெனுட லென்றக்கபீர்காணும் வகைபுரிய
நெஞ்சத்துளேசாலவிசனமொடு வியனீடியொப்பிலா
†நிம்பைக்குமாலீயு மிறைவவவன் முன்பிற்செல்போதாகும் வடிவெதுநி
சஞ்சொற்றிடாயானு னுணரவென வினவேல்வைசெப்பினன்
வென்றிக்கபீர்தாசர் மகிடமென வொன்றித்தகாவாறு புரிபிலவன்
வெங்திற்றுமோதாம லெதுபுரிவ னெனராமன்மெய்த்தவா
மிஞ்சிச்சைதோய்தாச னதுகொளவி னம்பத்திபோதாது சிறிதினம
விங்தற்குளேசோக முறும்விதிய னெனவோதிமுற்றவே
யென்றத்தமாம்வேலை வரையுமெதிர் கொண்டுற்றுமோராமன் விழிமுன்வா
லின்றிப்பல்வாறுன நினைவுகொடு ளயர்வாகுபத்தனே
ரின்பக்கபீர்தோய் நினைகுதலு முன்புற்றபோதார்வ மொடுதொழுதி
ரங்கிப்பனேழ்நாழி கையில்வருவ னெனநீர்கிளத்தலே. (ருஉ)

வேறு

பாவியேனதுநிர்ப் பாக்கியத்தாற்பொய் பட்டிடநேர்ந்ததென்றோதி
யாவிசோரிராம தாசர்பாற்கபீர்தா மறைகுவார்பகவன்மேதியென
மேவியகாலை தண்டினாலடித்து விலகவன்றேசெய்தாயென்னத்
தேவியலறியார் பகவனீயெனைவஞ் சிக்கைகொல்செய்தனையென்னு. (ருங)

---

* பாரி - கட்டில். † நிம்பை - இலக்குமி.

இத்தனைபுத்தி யில்லவன்யானு யினனன்றோ வினனேனென்னை
யொத்தவோர்பாவ ருலகெவற்றேனு முண்டுகொலெனப்பலபன்னி
மெத்தவுந்தம்மை நிந்தைசெய்திரங்கு மேலவர்தமைக்கபீர்நோக்கிப்
பத்தனீயிரங்க லிராகவற்காணும் பருவநிற்கின்னமுற்றிலதால். (ருச)

அதுகுறித்துள்ள மயரலேபகவற் கன்புசெய்தமைந்திருப்பாயேன்
முதுமைசால்பருவ மெய்துமப்போதுன் முன்னியவாமுடிந்திடுமென்
றதுலமிக்கக்பீர்தாசிராம தாசராகுலமுழுதகலப்
புதுமைவாசகம்பற் பலகொடுதேற்றிப் போந்தனரவர்விடைபொருந்தி. (ருரு)

பின்னரிராம தாசர்முன்போலப் பெருமைசாலிராமபூசனையு
நன்னலத்தன்பர் பூசையுமாற்றி நண்ணிடுநாளத்தனீட்டும்
பொன்னனைத்துந்தீர் தலிற்றமக்குண்ணும் போனகங்கிடைப்பரிதாக
வென்னசாற்றுதல்பூ சனைக்குறுபளித மெய்தலுமரியதாயிற்றால். (ருசு)

இராமதாசரிங னிடருறக்கண்டோர் யாவருமின்னன்மிக்கேய்ந்தார்
விராவுநாளன்னுர் சொற்பனத்திராமன் மேவிநீவீண்டியரடையே
றாதலம்புகழ்சி ைதராபாத்திற் சார்தானீசாவிடமெய்திற்
றாதாஞ்சாலுத் தியோகமெய்துமது தாங்கிடென்றுரைத்துடன்மறைய.

நவிலுமக்கணமே யெழுந்தகிலாண்ட நாயகனனசீராமன்
சவியருட்டிருவாய் மலர்ந்தவர்க்கென்னத் தானுணர்ந்தைதராபாத்திற்
கவினுறுமன்னுந் தானிசாவினையான் காண்பனம்மாதுலர்தாமு
மவிடமேவினரென் றற்றையேபங்ங னடைந்துமாதுலர்தமைக்கண்டே. (ருஅ)

உற்றதந்நிலைமை சாற்றிடக்குளிப்பித் தூணுடைநலம்பெறவுதவிக்
கொற்றவனிடநின் னிச்சையோதென்னக் கூறுபுதம்மிடத்தமைந்தார்
சற்றகன்றிறைவ னவைபுகக்கண்டு சலாம்புரிந்திடலுநீயாரை
துற்றவூரெதுநின் பெயரெவனென்னத் தொழுகுலத்தவனயலூரேன். (ருகூ)

இராமதாசன்பேர் வறுமையாற்றளர்வுற் றியலுமோருத்தியோகத்தை
நராதிபநின்பாற் பெற்றிடவிரும்பி நண்ணினனென்றலுமவர்பால்
விராவியசுசீலம் வினயமுமோர்ந்துள் வியந்துமிக்கோகையுற்றுனுய்த்
தராபதியமைச்சர்ப் பார்த்திவற்கியத் தகுமுத்தியோகமேதென்றான். (கூ0)

அமைச்சர்கள்பத்தி ராசலத்திதுகா லமையதிகாரின்றென்னக்
கமைத்தகையிராம தாசனையமைப்பக் கட்டளையிட்டனனென்றே
யமைத்திரட்பத்தி ராசலநகரை யணிபெறவாட்சிசெய்தெய்துஞ்
சமைத்தவணைகளின் முன்னியதிப்பொன் றரினின்மேற்பிரீதிமிக்கமைவேன்.

ஆங்கணேகென்ன முத்திரையர்தி யளித்துச்சேவகர்கணுல்வரைக்கூய்த்
தீங்ககலிராம தாசனைப்பத்தி ராசலஞ்சேர்த்தடைதிரென
வோங்கலொப்பாநெஞ் சுடையர்மன்விடைபெற் றுற்றமாதுலர்புடையோதித்
தேங்கருட்கடலா மிராகவனுற்றுந் திருவிளையாட்டிதென்றெண்ணி. (கூஉ)

பகவன்மெய்யருளை வியந்தியபத்தி ராசலம்படர்பவர்வழியி
லகமிசைபிரமாண் டப்புராணத்தி லறைதரபத்திராசலத்தின்
புகழ்களையுன்னி யிராகவனருளாற் பொருவினன்னகர திகாரந்
தகநமக்கமைந்த தாலெனவியந்து தனைமறந்தனருவகையினல். (சுங)

தம்படர்ச்சியினு லெய்திடுஞ்சலிப்புச் சற்றுமுட்கண்டிலர் முன்றேய்
செம்பவளம்பொன் றிரைக்கையானல்குஞ் செழுமைசால்கௌதமிகண்டே
தெம்பமையுளத்தர் படிந்தெழவவர்தஞ் சிந்தைபோற்பத்திராசலத்தி
னும்பர்நீள்சிகரி தோன்றிடக்கண்டா ருடன்பரவசமடைந்தவராய். (சுச)

அடியருபனையிற் பார்மிசைவீழ்ந்தட் டாங்கபஞ்சாங்கமாப்பணிந்தே
நெடியபேரன்பின் மலைமிசையிவர்ந்து நிகரில்சீதையிலக்குவனுடன்
முடிமிசையவிர்சீ ராமசந்திரனன் மூர்த்தியைக்கண்டுவந்தித்தென்
குடிமுழுதாட்கொண் டிடக்கொனீயென்னைக் கூவினையிராகவாவென்றே. (சுரு)

பலபடத்துதித்துத் தந்தொழிலேற்றுப் பகலிரவினுமிடைதோறுங்
குலவரையிவர்ந்து சீலராகவற்கண் குளிர்தரத்தரிசனம்புரிந்திட்
டலகில்பேருவப்பிற் றந்தொழின்முறையி லாற்றியேயரசிறைப்பொருளை
யிலகுமற்றவர்கள் கொடுத்திடுமுன்ன மிறைகளிப்புறவளித்திருந்தார். (சுசு)

இன்னவாறியலு மானியத்தொருநா ளிராமதாசர்வரைமிசைபோய்க்
கொன்னமைதளியுட் சென்றுநோக்கிடுகாற் கோதண்டபாணிபிராட்டி
மின்னவிரிலக்கு மணன்முதலானோர் விக்கிரகங்கள்வாகனங்கள்
வன்னமண்டபங்கண் மதில்களாதியவுஞ் சீரணமருவிடக்கண்டார். (சுஎ)

இன்னவான்றளியெப் போழ்தின்மெய்யன்பா லெம்மகாபத்தனுற்றினனே
பின்னமுற்றிதுகா லத்தெவர்தாமும் பேணலற்றழிதகைவாய்ந்த
பன்னரும்பழமை பெற்றிடக் கண்டும் பார்த்தெவருஞ்செயாதுற்று
ரின்னமுமிதனைப் புதுக்கிடச்செல்வ ரெண்ணிலரொருவருமந்தோ. (சுஅ)

இருவினைதன்னு லானசீவான்மா வியைந்தழிவுற்றிடுகடத்தை
யருமைபெற்றிடவே காத்துநோயதற்கோன் றணுகிடின்மருத்துவர்க்கூவித்
தருமருந்தயின்றேம் பினர்கள்சீராம சந்திரனமர்தருந்தூலம்
பொருதிருத்தளியின் சீரணோத்தாரம் புரிதரயாருமெண்ணிலரால். (சுகூ)

ஐபகோமாந்த ரனைவர்க்கும்பத்தி யகத்திலாதிற்றெழிந்ததன்றே
துய்யதாயடைதற் கரியமானிடராத் துலங்கியுமற்றதுகொண்டு
மெய்யருட்பேற்றை யடையவெண்ணிலர்கள் வினைகொள்சம்பந்தத்தில்டைந்த
மையலார்மனைசேய்க் காத்தனருயிருய் வகைநினைத்திலரொருவருமே. (எ0)

கானமீதமையும் விலங்குபுள்ளினத்தைக் கடப்பர்களிவரெனிலவையு
மானதம்பசியின் பொருட்டிரைதேடி யமைதரிலமைந்துறுகின்ற
மானமானிடராப் பிறந்தவராசை வரம்பினிலடங்கிலதந்தோ
வினமார்பேயொப் பாரெனிலதுமே லிச்சையற்றளித்துளதமைந்தே. (எக)

மைந்தரைக்காப்பா னீட்டுதுமென்னின் மற்றவனல்வினையுளனேற்
றந்தவன்பொருளை யோர்பொருட்படுத்தான் ருங்குதிவினைமிகையானேல்
வந்தவோர்பொருளாற் பவம்விளைத்திவரை மாநரகிற்புகுத்திடுவா
னந்தமார்வினைகள் சமமடைந்துளனே லனைத்தையுந்திரணமாமதிப்பன். ()

கொடியுறமுயிர்வான் படர்ந்திடவறமாங் கொழுகொம்பைநட்டிலர்பாவப்
படிவுளபுலன்கட் கேவிருந்தூட்டிப் பாழின்மாய்ந்தியமனூர்புகுவர்
படிமிசையுறுங்காற் கொண்டுவந்தார்யார் பற்பலகோடியீட்டினு
முடிவினிற்கொண்டுபோந்தவரெவரே முறையிதைமாந்தருன்னலராய். (எங)

மித்தையாமனைபொன் சுதரெனும்பாசம்விரவிமாயாசெகசால
வித்தையின்மயங்கி யிருந்தனரியமன் வெங்கொடும்பாசத்தாற்கட்டிப்
பித்தையுற்றுழல்சீ வனைக்கொடுபோங்காற் பெண்டெங்கேபிள்ளைகளெங்கே
மெத்தைவீடரும்பொன் னெங்கவராற்று மிகுமறம்பவந்துணையல்லால். (எச)

ஆதலினுலக மெனுந்திரைகடன்மீ தாக்கையென்றிடுகலனிவர்ந்து
மேதகுபுண்ணி யப்பொருளீட்ட விரைந்ததென் னுளமிதாலாக்கை
சாதலெய்திடினு மெய்துகவிதற்குச் சற்றுமஞ்சலனருட்கடலா
நாதனூர்கோயிற் றிருப்பணிதன்னை நானியற்றுவனெனத்துணிந்தார். (எரு)

தீனபந்தோபத் தவற்சலாகோயிற் றிருப்பணியெவ்விதத்தேனு
நானவிற்றிடவுட் டுணிந்தனனேது நண்ணினும்பாரநிற்கென்னத்
தேனலர்க்கமல பதந்தொழுதனரூர் சேர்ந்துளார்க்குளத்துணிவுரைத்திட்
டானசகாய மியற்றுமினென்ன வனைவருமிகமகிழ்ந்தவராய். (எசு)

விற்பனராம தாசரைவியந்தார் வேலையங்கதனின்மேதகைசால்
சிற்பரைவருவித் திப்பணிபூர்த்தி செய்வதற்கெத்தனைதொகைய
பொற்பணம்வேண்டு மென்னவாறிலக்கம் பொருந்திடும்விராகனென்றோத
வெற்மனமனத்த ருடன்பண்டாரத்தின் மேவியெண்ணெடுக்கவற்றமைந்த.

ஆங்கதுகண்ட ராமதாசருளத் தளவிலானந்தமுற்றவராய்
நாங்கணக்கிட்ட வாறும்பொக்கிசத்தி னண்ணியதொகையுமொத்துறலாற்
றேங்கருட்கடலாய் விளங்குமென்பிரபு செய்கையீதாநிசமிவைமுற்
றோங்கனேரிராமாற் பணமென்றுரிறையை யொருபொருளாகவுள்ளுன்னூர்.

நவிலகிலாண்ட ரட்சகனுஞ்சீ ராமசந்திரனுளத்தமையப்
புவியுள்யார்க்கேயஞ் சிடுவன்யானென்னப் புந்தியுட்டுணிந்துபண்டாரத்
தவிர்பொருண்மிகைகொண் டுயர்பணியாரம் பித்தணிச்சிகரிமண்டபங்கள்
கவினும்விக்கிரகம் வாகனங்கருட கம்பமாதியுமமைத்தனராய். (எகூ)

இராமலக்குமண சீதைவிக்கிரகங் கட்கிரத்தினப்பணியினமுந்
தாரதரமமைப் புரிந்துவிப்பிரர்க டமைக்குடியேற்றுபுபூசை
பராவியனித்தி யோற்சவாதிகண்மெய்ப் பரிவுடன்புரிந்தவணெய்தும்
பிராமணரதிதி யாயினர்க்கன்னம் பீதகதானமும்பெய்தார். (அ0)

இனையவைபவங்க ளுணர்ந்துமாநகரத் தியைந்தவரிராமதாசரைப்போற்
கனைகடலனைய கருணைவாய்ந்தவர்கள் காசினிக்கண்ணிலையென்ன
நினைதொறும்புகழ்ந்தின் பமைந்தனரிருந்தார் நிகழ்செயல்பலர்சொலக்கேட்டே
வினைதவிர்சாது சனர்திசையெதினு மேவினர்கடல்கொளுமுகில்போல். (அக)

வந்தசாதுக்கள் பலர்க்குமற்றவருள் வாஞ்சைகள்வழங்கினருறுங்கா
லந்தமார்தாசர் பந்துவாஞ்சிலர்க ளறைகுவர்நீயிறைபொருளைச்
சொந்தமிக்கெடுத்தன் றேவிவைசெய்யத் துணிந்தனைதருமநன்றேனும்
வெந்தகைமிலேச்சன் சம்மதிப்பானோ விபத்திதால்பாதுநிற்குறுமோ. (அஉ)

அன்னகாலயினிற் காருபகார மாற்றுவராசனேகொடிய
னென்னவுள்ளயர்ச்சி மிக்குரிமையினு விசைத்தலுமிராமதாசருளங்
தன்னமுமஞ்ச லீருறவினர்கா டானிசாவின்பொருள்கொண் டே
யென்னகச்செலவொன் றுற்றிலேனவைக ளியாவும்ராமார்ப்பணஞ்செய்தேன்.

அவிர்பிரமாண்டங் களைச்சிட்டித்தளித்தே யழித்திடும்வல்லபனுகிக்
கவினுமென்பிரபு வுள்ளபோதெனக்கென் கவலையொன்றுக்குமஞ்சேன்யான்
குவியுளத்தொண்டர்க் காத்திடும்விரதங் கொண்டுளான்மாலெனற்கியல்பேர்
நவில்கசேந்திரனைக் காத்ததாதியவா நற்கதைசாட்சியாநாடின். (அச)

ஆதலினென்னைக் குறித்துநீர்விசன மடையவேண்டுவதிலையென்னப்
போதமிக்கவர்க்குச் சாற்றுபுகலங்காப் பொற்குவடனையநெஞ்சினனு
யாதரத்துடன்சி ராமனைப்போற்றி யன்பர்மெய்ப்பூசனையாற்றி
நீதமார்பணிகள் யாவுமுற்றியசிர் நினைந்துவகையிற்படிந்திருந்தார். (அரு)

காலமற்றதனி லதராபாத்திற் கடமைகொளுத்தியோகத்தர்
சாலவெங்கரத் துள்ளயாவர்களுந் தம்மிறைகொடுத்தனரகன்றூர்
கோலமார்பத்தி ராசலத்திறையைக் கொண்டணைந்திலரெனவமைச்சர்
பாலறைந்திடவன் னவர்கள்சேவகரைப் பார்த்துறவேவமற்றவர்போய். ()

வேறு

இராமதாசரைக் கண்டுமாதுலரிசைத் திட்டயாவையுஞ்சாற்றி
விராவுமற்றுளார் யார்க்குமுற்படத்திறை விரைந்தளித்திடுநீவிர்
தராதுதாமதித் துறுசெயற்காரணஞ் சணத்திசைத்திடக்கேட்டே
யிராசதானியெய் துதிரெனவமைச்சர்க ளியம்பினாதனுலே. (அஎ)

பதிலுரைத்தனுப் புதிரெனவுடனவர்ப் பத்திராசலத்தேற்றி
யதிநயம்படத் தாம்புரிந்துளபணி யனைத்தையுங்காண்பித்தே
நிதிகள்யாவுமியா னிராமனுள்ளுவக்குநன் னெறிதனிற்செலவிட்டே
னதிலொர்சற்றும்யான் கொண்டிலேன்மெய்மையென் றறையமற்றவர்கேட்டே.

தொழுதுசாற்றுவர் சாமிநீர்செய்தது தூயமெய்யறமென்ன
விழுமியோர்கட்கே தோன்றுமென்றாலும்பார் வேந்தனீள்பொருள்கொண்டு
பழுதறுஞ்செய லிதுசெய்திருமக்குறும் பழிபெருந்துயரென்ன
வுழுவலன்பர்சி ராமனுற்றுள்ளபோழ் துறுகணென்றுறலுண்டோ. (அக)

அதுகுறித்துள மஞ்சன்மினிதுசெய லமைச்சர்க்கோதுதிரொன்ன
மதுரவாசகஞ் சொற்றனுப்பிடவன்னோர் மந்திரிகளுக்கோத
முதுவர்தாமிராமதாசன்றனேதுயர் முயங்கிடப்புரிந்திட்டான்
கதுமென்றன்னவ னினிப்படும்பெருந்துயர் கடவுளேதெரிகிற்பான். (௬௰

என்னவுன்னின ரமையுகாளொன்றினி யிறைவனுந்தானீசா
தன்னதுத்தியோ கரினிடம்யாவருந் தந்தனரேயோபொன்
னென்னவன்னவர் பத்திராசலமொழிந் தியாவும் வந்தனவென்று
ரென்னகாரண மெனவினவினனுள வேவைபுமுரைத்தாராய். (௬௧)

அனையன்பொன்னெலாஞ் செலவழித்திட்டது மன்றிமன்பொன்னென்ன
நினைகிலன்றயி ரியத்துடன் சுகிர்தனு நிலவினனிலேசத்திற்
புனைகழற்கழன் மன்னவநின்முனம் போதுவித்தவனெண்ணந்
தனையுசாவுதி யென்னலுமன்னவன் றணிப்பருஞ்சினமெய்தி. (௬௨)

கொடியராமிரு வீரரைமுன்னுறக் கூவினன் விரைவாய் நீர்
படிபுகழ்ந்திடு பத்திராசலத்திடை படர்ந்திராமதாசன்பா
லொடிவில்கட்டளை யீதுகாண்பித்தவ னுதவிலாறிலக்கம்பொன்
கடிதில்வாங்கிவந் திடுமினின்றேற்பலர் காணக்கட்டினிரெய்திர். (௬௩)

எனவுரைத்திடக் கேட்டுடன்றுசர்பா லெய்திநிட்ரேத்தோ
டனலுறழ்ந்தமாற் றங்கொடுவ்ராகனீ யாறிலக்கமுமெம்பாற்
கனமுறத்தரு திகொல்வருதிகொலிறை கட்டளை மரியாதை
மனதில் வேட்டனை யேலிரண்டினிலொன்று வழுத்துதிவறிதுற்றால். (௬௪)

ஏமதூதரி லடைந்தவெங்கரங்களி லிருந்தனகசைபோராய்
தாமதித்திடே லெனத்தொண்டர் சிராம சந்திரப்பிரபோவென்
றமவண்கொடன் சேவகர்க்கூப்பல்லக் கைதிற்கொண்டுறுமென்னத்
தூமகேதுவன் னார்பொன்னீந்ததற்பினே துதைபல்லக்கருகின்றேல். (௬௫)

பாதசாரியா யெம்முடன்படர்திமன் பகர்ந்தகட்டளையீதென்
றேதவன்னவா றியற்றுவனெனவவ ருடனடந்துறுமேல்வை
போதமிக்கதம் மனத்திடையிவ்வணம் புகன்றனரணேகின்றார்
மேதகைச்சர்வ லோகசரண்யனு விளங்கருட்சிராமன். (௬௬)

சித்தமெவ்வகை தேர்கிலேன்பயங்கரஞ் செறிந்தவிவ்வாபத்தி
னுத்தரிப்பிக்கு மோவன்றிமன்காத் தொப்புவித்தவன்றண்டந்
துய்த்தமைந்திட விடுக்குமோவாசியஞ் சொற்றவமுடையாரு
மெத்தவேசச்செய் யுங்கொலஞ்சேலென விளம்பிக்காத்திடுங்கொல்லோ. ()

பத்தனெற்கிவ னல்லனென்றேபுறப் படுத்துமோவல்லாற்றன்
னுத்தமப்பெரும் பத்தர்கணடுவுற வுஞற்றுமோவெனப்பல்வா
றுத்தசிந்தையி னினைத்துவியாகுல முற்றனரதுபோதின்
மெய்த்தவத்திருத் தாசர்தாணடக்குமொர் விறலொழிந்தயர்வெய்த. (௬௮)

ஆயகாலேதம் மனத்துமெய்யுணர்வமைந் தையகோ நானென்னே
காயமாயையிற் சுழலறிவினரிற் கலங்கினனித்தேக
நேயமிக்கென்மன் காக்கினுந்தினமொன்றி னீங்கனிச்சயமேகன்
மேயவோர்குகை தனிலொளிக்கினுஞ்சுக துக்கம்விடாதன்றே. (கூகூ)

முற்பவத்தியற் றியவறம்பாவத்தின் முறைக்கியைந்தருவாகி
யுற்பவித்திடு சுகதுக்கங்களேயிவ ணுளித்து நீத்திடப்போமோ
கற்பகத்தினைச் சார்கினுந்தீயர்கள் காஞ்சிரங்காய்கொள்வார்
நிற்பவல்லவென் றும்மிவைபுசித்தலா னீப்பவுமன்றன்றே. (சOO)

என்றுதம்மனத் துட்டுணிவமைந்தரு ளிராமசந்திரன்றன்னை
நன்றுணடிமிக் கோதையோடைதரா பாத்தினண்ணுபுவீரர்
குன்றுறழ்ந்தநெஞ் சுடையமைச்சக்குழாங் குலவுமில்லிடைசேர்ப்பத்
துன்றுமாதுலர் தாசரைக்கண்டதி துக்கமேவினர்சொல்வார். (கOக)

ஆற்றுமித்தொழி லாற்பின்னெய் திடுகமக் களவிறுன்பென்றுள்ள
மேற்றுணிந்திலே மனத்துணிவமைந்திவன் விதியறுசெயல்செய்தாய்
பாற்றுறுஞ்செயல் குறித்தியாமிரங்கலிற் பயனிலையினிமேல்யான்
சாற்றுமாற்றநீ யிணங்கினைசெய்தியேற் றப்பலாம்விபத்தென்றார். (கOஉ)

ஓதுமாதுலர் சொற் கொடுதாசர்நீ ருரைக்கை நன்னலமேலிப்
போதுசெய்குவ னெனவவர்மிகப் புலமைசான்றனை மன்னன்
மீதுபாடுதி யேற்சினந்தணிந்துனை விட்டிடுமெனத்தாசர்
போதுநும்மொழி சூழ்ச்சியேமிகுநலம் பொருத்தலேயானாலும். (கOங)

இராமசந்திரற் றுதிக்குமென்னாக் கொடீண் டிருவினைவடிவுற்ற
துராகமேவிய துராகனைத்துதித்திடேன் சொற்பனத்தினுமென்னை
விராவுகாரிய மிதுசெய்வானினியென்பால் விளம்பலிர் நீரென்ன
விராகமேவினர் துவேசமிக்குன்விதி யிசைந்தனுபவியென்றும். (கOச)

கருவமிற்றுளத் தமைந்தநின்பாற்றுயர் கலந்திடாதுறுங்கொல்லென்
றுருமினைந்துறு வீரர்பானுளேமன் னுறுமவைப்பாற்றம்மின்
மருவுகாலேமட் டும்பத்திரம்பட வைத்துக்காக்குதிபென்றே
மருகனுகிய தாசரைச்சேவகர் வசமனுப்பினரானர். (கOரு)

அவரவ்வாறுசெய் தாரியற்றுசர்தா மல்விடிதருங்காறுந்
தவவிராகவற் றுதித்துற்றார்பகலின்மன் சபையின்மற்றவருய்க்கக்
குவடுநேர்மனத் தாசர்தானிசாவின்முற் குறுகுபுசலாஞ்செய்யப்
புவனிகாவலன் மிதிபடுமரவெனப் பொங்கினன்புகல்கின்றான். (கOசு)

இராமதாசயா னுனக்குரைத்தனுப்புசொல் யாவையுமறந்திட்டாய்
நிராகரித்தத னுலபராதியா நின்றனைநீசெய்த
துராகதத்தினின் னுத்தியோகத்தையுந் தொலைத்தனையெனைச்சற்றுட்
பராமரித்திருந் தனையெனிவித்துயர் படநினக்கமையாதால். (கOஎ)

---

* துராகன்-மிலேச்சன்.

இனியேனும்பொரு டருதியேனின்னைவிட் டிடுவனென்றிடக்கேட்ட
புனிதர்தானிசா பிரபுநான்சடமதம் பொருந்திவீண்செய்திலலே
னினியவென்மனை மீசய்பொருட்டழித்திலன் யானுங்கொண்டனனில்லை
ஈனிநுஞ்சிருல கப்பிரசித்தமா நற்பதியறஞ்செய்தேன். (கoஅ)

என்னவோதிடக் கேட்டதானீசவே யிராமதாசாபார்மே
னன்னலங்கொடு தாஞ்சம்பாதித்தவா நாணயங்களைக்கொண்டு
மன்னறம்புரிந் திடிற்குணம்புகழ்மிக மன்னுமற்றவர்பொன்கொண்
டின்னவாறுசெய் திடினலமென்றுனக் கெவனிசைத்தனன்மன்னே. (கoகூ)

செலவழித்ததென் பொன்னன்றோவருந்திநீ தேடியதன்றன்றிப்
பலநினக்குறத் தாதைமூதாதைசம் பாதித்திட்டதுமன்றே
புலமிலாச்சிறு பாலனுமன்றுநீ புந்தியுமிக்குள்ளாய்
தலமுறும்பல வுத்தியோகத்தரிற் சமர்த்துமிக்கமைந்துள்ளாய். (ககo)

உனதிட்டப்படி செய்ததானினைத்தண்ட முஞற்றவேண்டுவதென்றன்
மனதுவப்புறும் பாத்திரனுகநீ மன்னலின்மன்னித்தே
னெனதுபொன்றரி னினைவிடுவேனென்று னிவர்சொல்வார்பூபால
வினவுமற்றிது நினக்கொருதினச்செல விற்குமேபோதாதால். (ககக)

உமதுபொன்னைநான் கொண்டெனூர்மற்றவ ரூர்ப்பொருட்டழித்தில்லே
னுமதுபத்திரா சலத்தலக்கோயிலி னூதனப்பணிசெய்தே
விமரிசைத்திறம் பெறுதன்மப்பிரபுவா விளங்குநுங்நாட்டின்கட்
சிமயமொத்தவா லயமழிந்துறு தனுஞ் சீர்த்திக்கோர்குறையென்றே. (ககஉ)

சிரமமிக்குநான் பணிசெய்தேனதற்குநீர் சீற்றமிவ்வாறெய்த
றமன்றென்னலுந் தானிசாவஞ்சக சற்றுமஞ்சலையென்றன்
றிரவியங்கொடு செலவெனக்கின்றென்றோ செய்தனையிதுசெய்யிற்
சிரமகன்றிடு நமக்கென்றுன் னலைவிசித் திரமிதுவலதுண்டோ. (ககங)

தரித்திரப்பிரா மணவுத்தியோகத்தாற் றருக்குமிக்கமைகுற்றாய்
விரித்தியம்பலெ னென்பொருட்கென்னைநீ விளம்புதியெனமன்னே
வுரித்தியைந்துள விவ்வுடலநித்திய முள்ளதாலிதுவீணே
மரித்திடிற்பின்னும் பெறுதனுப்நரிகொடி வடிவுகொன்மற்றேதே. (ககச)

அறிந்திடற்கரி தாமவதியுந்தெரிந் திடற்குமிக்கரிதேயாய்ச்
செறிந்திடும்பிறப் பையும்பெறுநாமிது சென்மமொன்றியபோதே
பிறிந்திடாச்சுகப் பரகதியாமுயர் பேறுறனலமென்ன
மறிந்திடாமறை யாதியநூலினம் வகுத்திடுமதனுலே. (ககரு)

பத்திராசல ராமமூர்த்தியினலம் பயின்றதாசனுந்தங்கீ
மூத்தியோகமாற் றுநனுமாம்யான்கில மொன்றிடுந்தளிசெய்தேன்
வித்தியாசமொன் றியற்றிலேனென்றிட வினவியதானீசா
பத்திநீடிய ருசர்தம்முளத்தூரம் பார்த்ததிசினமேவி. (ககசு)

* அவதி- எல்லை.

அரைக்கணத்திலுன் மதத்தைநானடக்குவ னறிதிநிற்கெனக்கண்டு
தரைக்கணேபய மில்லையாகினுமெனேர் சாதியைநினைந்தேதனு
முரைக்கவஞ்சின யில்லைபொன்றருதியோ வுரைக்குமென்சிட்சைக்குட்
டிரைக்குமட்டமைந் திங்ஙனேயொழிதியோ செப்பென்றனுடன்றசர். (ககள)

பிரபுநான்சபை யோரெலாந்தெரிதரப் பேசிடுகின்றேனெற்
குரமுறத்தரு முத்தியோகத்தைமிக் கொழுங்குறநடத்துங்காற்
றாமியைந்தசீ ராமசந்திரற்கியற் றளிசெயதிட்டனன்மற்றஃ
தாசனுகுநந் தருமமேயெனக்கதி லனுவெனும்பலனின்றே. (ககஅ)

உவகையோடெனை விடுத்திரேற்பயனுமக் குண்டெனைத்துயர்செய்யி
னவமுறும்பல னெனக்குறுமெனமன்ன னன்குசற்றுண்ணடி
யிவன்புரிந்தது சுகிர்தமேயென்றுமு னிசைபவத்தவத்தாலே
தவவுணர்ந்துநாந் தயவினலிவன்றனைத் தணந்திடிற்பிறர்தாமும். (ககக)

இன்னவாறுசெய் வாரதாற்பொன்னமக் கெய்திடுமிகுநட்ட
மன்னபான்மையி னிவனையச்சுறுத்திநம் மரும்பொருள்கொள்வேமென்
றுன்னகத்தனு யவையுளோர்வினவுமா றரமுடனுரைக்கின்ற
னன்னலங்கொளின் னவற்கொருவாசகல் கினனிடையதனுள்ளே. (கஉ0)

குறைவிலாதுவ ராகனுறிலக்கமுங் கொடைசெய்தானெனிவின்னேற்
பொறையுடன்விடுத் திடுவன்மற்றதுவரை பொருவில்காவல்கண்மேய
சிறையிடத்தமைக் குதிரெனவன்னவா செய்திடமெய்த்தொண்டர்
நிறைபெருந்துய ரோடிராகவற்றுதி நிகழ்த்துபுகல்கின்றர். (கஉக)

வேறு

சிராமராம சிதாமணுள செகதீசசெய்கை யிதுவென்
னுராதனஞ்செய் நினதன்பர்சங்க மவிர்பத்திராச லம்விடுத்
தோராவவிந்த ரிடைமேவவைத்து முனதாலயத்தை வலமா
ரோானகாலி னெடுபூசைசெய்பு மிருகைவிலங்கிசைவதே. (கஉஉ)

அருளாழிநீநி னடியார்கண்மீதி லமைபத்தவாற்சல் யமிதோ
பொருவாநின்முன்பு நாயேனிரந்த பொருளீதுகொல்லிஃ தலவே
வருதாசர்வேண்ட லருள்வள்ளலென்று மறைநின்னையோதல் வறிதோ
மருவார்கசேந்தி ரன்சிஞ்சுமாரம் வெளவப்பெருந்துயரொடே. (கஉந)

தன்னைப்புரக்க வெனவாயிரங்கொள் சம்வற்சரம்பஃறேவர்
முன்னைப்பொருந்தும் வகைகூவியுந்தன் முறைகேட்டிடாதமுறையாற்
பின்னைப்பரிந்து பின்னைக்கியைந்த பெருமானினுதிமூல
மின்னைப்புரைந்த பெயரோதவல்லை மேவிப்புரந்தனையலோ. (கஉச)

துற்சாதனன்ற னுடைவெளவுகாலை துயர்மிக்குனைச்சரணெனு
வுற்சாகமிக்க கொடியோர்கள்வாட வுடனேதிரோபதிமுனம்
விற்சாருமம்பு பிற்சாரும்வண்ண மேவுந்தயாளனலையோ
வற்சார்சுயோத னன்சொற்கொடைவ ரழியச்சினந்துமருவும். (கஉரு)

துருவாசனுள்ள மிகநாணவொல்லை துதைவுற்றவள்ளலெவனே
பொருவாவடற்று ரோணன்றவங்கொள் புதல்வன்படைத்திரளிஞ
லொருவாதுபாண்ட வரையேபுரந்த வுரவோனெவன்சர்வமுமே
யருளாற்சிருட்டி முதலாற்றியாவி னகமேற்புறங்கொள்பவனர். (கஉரு)

உயிர்தோறுறைந்து வினையொத்தபோக முண்பித்துறக்குமிணைதீர்
குயின்மானுமேனி பெறுராமமூர்த்தி குலவுஞ்சரண்கொளடியேன்
செயிர்தீர்த்தளித்தன் முடிவுற்றிடாத செயலோநினக்கறிகிலே
னயில்வேலவிந்தன் முனம்யானெனெஞ்ச மயர்வொன்றிநிற்கையறமோ. ()

இவ்வாறுதொண்டர் சீராமனம்பொ னிணைவாரிசங்கள்கருதி
யொவ்வாமெய்யன்பி னூற்றுத்தியங்க ளோதிக்குலாவியுறுகால்
வெவ்வாளராவை நிகர்தானிசாமுன் விள்ளெல்லைதீரவரணு
வவ்வாள்கடம்மை யழையாவவன்சொல் வகையென்னவென்றுவினவ. (கஉஅ)

இறையேநினக்கி ரணமீயுமெண்ண மெள்ளிற்றனுள்ளமிலனுய்ச்
சிறையூடுதானெய் தியதாழ்மையான செயலுக்குணுனுகிலனுய்
நிறையார்வமோடு பகலெல்லியெந்த நேரத்தும்ராமவெனுமா
மறையோதியேதன் னுடன்மீதுமான மருவானிருந்துளனரோ. (கஉகூ)

இரணந்தனைத்த ருதியென்றுெறுக்கி விறைதுன்பமெய்துமவர்போற்
கரவொன்றமேன டித்தப்புறஞ்செல் காலந்தனுள்ளினியான்
வரமொன்றிராம மறையோதிமெய்ம்ம றந்தின்பமிக்கெய்தியுளான்
விரவும்பொனல்கு மவனென்றுநம்பல் வீணெண்ணமென்றுபுகல. (கங0)

மன்னன்சினந்த வன்றுய்க்கவுப்பு மருநாழிதண்டுலமுடன்
றுன்னக்கலந்து தருவீர்களென்று சொல்லச்செய்தார்களதனை
மன்னன்பினுலி ராமற்கமைத்து மதுரிக்கவுண்டமைதனு
மென்னென்றுசால்விம்மிதராகிவீர ரிறைவன்கணேதவறைவான். (கஙக)

அங்காடிசந்தை முதன்மாந்தர்மேய வவிடங்கடோறுமிவனை
நங்காவெலோரு மிகழச்சட த்தைநாண்கொண்டுகட்டிமிகவுஞ்
சிங்காரமாகும் வகையீர்த்தணைந்து சிறிதஞ்சலீர்கசையினுற்
சங்காதடித்தி ரெனவீரராற்று சமையத்திராமதாசர். (கஙஉ)

அன்போடிராம னடிநாடியொன்றெ ரடிமீதுதோய்தலிலரா
யின்போடிருக்க வக்காலடித்த விகல்வீரர்தங்கைசலியா
முன்போற்சிறைக்க ணமைவித்துமன்னன் முன்போயுரைக்கவுமுளே
நன்போதமேவு கிலனுகிமேலி னுஞ்செய்வதேதெனவுசாய். (கஙங)

உற்றுனெர்நாளில் வழிமீதுமுட்க ளூறுவித்ததன்கணவனைப்
பற்றுகவோடி டச்செய்திரென்று பகரச்செய்திட்டபொழுதின்
மற்றுருமொப்பி லார்தங்கருத்தின் மானேரிராகவனெழிற்
பொற்றுண்மதித்தொர் துயரின்றியேகு புதுமைக்குவிம்மிதமுறு. (கஙச)

இயலுஞ்சிறைக்க ணமையச்செய்தார்க ளிறையீ தறிந்துதுயர்மிக்
கயர்வொன்றியேசெய் வகைநாடியொன்று மறியாதிருந்தனனிதாற்
புயலென்றமேனி யமைநெஞ்சகத்தோர் புண்பாடுறுதுபுவியின்
மயலொன்றுளத்தி னுக்கின்புறுதென் மாற்றந்துலங்கியதரோ. (௧௩௫)

அரசாகினன்பி னேதாற்றினனு மம்பொன்கிடைக்கைசாலப்
பிராயாசையான செயல்போலுமென்று பெருவீரரோடுபுகல்வான்
காவோனேமிக்க கூரானகத்தி களைநாட்டியோட்டுதிரென
மாமானும்வீர ரவ்வாறியற்ற வருதாசர்தாசரதிஙய. (௧௩௬)

மனமீதமைத்து மிசையேகவன்மை மருவும்படைத்திரளெலாங்
கனலுனருந்து வாராற்றுநன்மை சுளையொத்தவத்தினமிழ
வினவிம்மிதத்தை யறிவுற்றுவீர ரிதயத்துளாச்சரியராய்
வனராமதாச யாமாற்றுசிட்சை வகையானவற்றுளொன்றும். (௧௩௭)

துன்பொன்றுனக்கு நல்காததேது சுபமந்திரத்தின்மிகவும்
வன்பொன்றினுய்கொ லெனவீரர்காளோர் மறைதேர்கிலேன்மெயிணைதீ
ரின்பொன்றிராம னெனையோவிலானி ரட்சித்திருக்குமியல்பா
லன்பொன்றுமியானிவ் வுலகத்துளாரி லார்க்குப்பயந்தகுடியே. (௧௩௮)

புவியைச்சிருட்டி புரிவேதனெற்கோர் பொருளல்லவென்னில்விழிமுன்
னவிர்கின்றநும்மை யரசாகினனை யனுவென்னவுன்னவருமோ
பவிகாளுமக்கு ளேகோபமொன்று பருவத்திலென்மெய்தனைநீர்
விவித்ங்கொள்சிட்சை செயலன்றியென்னை வேறேதுசெய்யமுடியும். (௧௩௯)

எற்றுனதுன்ப நீராற்றினனு மிதயங்கலங்கிடேன்மெய்
பற்றுனவாவி கழிவாகவேசெய் பண்பன்றியேனையவெலாம்
வற்றுதகோப மிகைகொண்டியற்றி மனநொந்ததன்றியெனையே
சற்றுயினும்ப ருவரற்கொள்பண்பு தகவாற்றுமாற்றலுளிரோ. (௧௪௦)

எனவோதுதாசர் மொழிகேட்டவீர ரிவன்விண்கொடேவர்புகழுங்
கனவானெனத்த முண்மெச்சியுற்ற கதைமன்னிடஞ்சொலவவன்
வினவாவியந்து மன்னிக்கவென்னை வேண்டிக்கொடென்விடைகொடே
மனவாஞ்சையிற்செ லுறுமாறவற்கு மதிநீயிரோதுதிரென. (௧௪௧)

அவர்சென்றுதாச ருடன்மன்சொலோத வறைவாரிகத்தினானுய்ப்
பவமொன்றிலின்ப துன்பங்கடுய்த்தல் பண்டாற்றலாம்வினைகளி
னவமொன்றுசம்ப வத்தன்றியேனை யவராற்றலன்றதுகொடேன்
னவமொன்றுளத்தி லொருதுக்கமில்லை நான்மானிடற்றுதிசெயேன். (௧௪௨)

மன்னிப்புமன்ன னைக்கேட்கும்வண்ண மதியெற்குரைத்திர்பிழையொன்
றென்னிப்புவிக்கண் யானுற்றல்யானி ராமற்றுதிப்பதல்லாற்
றுன்னிப்புன்மன்ன வற்கஞ்சிடேன்மெய் துணிவீதுதோன்றலிடநீர்
பன்னிப்புகன்ற படிசெய்மின்வல்லை படர்வீரெனப்பகரலும். (௧௪௩)

வினவுற்றவீர ரரசன்கண்மேவி விள்ளச்சினந்துபலவாங்
கனமுற்றசிட்சை புரிவிக்கவுற்ற கனவொப்பவென் னநினையா
வினனுற்றகாலே யுறுகஞ்சமென்ன விதயத்தினேடுமுகமும்
வனமன்னுமந்த காசத்தொடேம லங்காமலுற்றனரரோ. (கசச)

இவ்வண்ணமொன்றி ரண்டல்லவாண்டொரீராறகன்றபொழுதிற்
செவ்வண்ணநெஞ்சு பெறுதாசரின்ன சிந்தித்தலாயினரெனேர்
மைவண்ணமேனி பெறுதாதையான்செய் வன்பாவமுற்று மொழியத்
துவ்வண்ணநெஞ்சி னினைவுற்றியற்று தொழிலாகுமிங்கிவைகளே. (கசரு)

நீதிக்குணங்கொ டாதைக்குமின்ப நிறைவுற்றதாயிடையருண்
மீதித்தகைத்தெ னுவோதல்பாரின் மிசையாம்வழக்கமதனற்
சோதிக் கொடிக்கு நிகராயிலங்கு சீதைக்கெனேர்துயரெலா
மோதித்தெரிப்ப னெனநெஞ்சொடென்பு முருகத்துதித்தனர்விள்வார். ()

அன்னேயிவ்வீரர் செய்துன்பம்யாவு மகமேனினைக்கவுமெனேர்
நன்னேயநெஞ்ச மயர்கின்றதற்ப நாளுற்றிடற்கமைகிலே
னென்னேயிராறு வருடங்கடாதை யிடமோதியேத்தினன் விழி
முன்னேயடைந்த ருட்செய்திலார்நன் முறையோமெய்மாய்ப்பனினியே. ()

இனியேனுமென்னை யாட்கொள்ளும்வண்ண மிணையற்றதாதையிடநீ
தனியோதிடெந்த வுயிர்கட்குமுற்ற தாயாகுநீயிவ்வடியேன்
றுனிகாணும்வண்ணம் விழைவெய்தலான துணிவேதறிந்திலேகொலோ
வநியாயமிவ்வொ ருசுதன்கணிற்கு ளருளற்றதென்னைபுல்வாய். (கசஅ)

எனவெண்ணிலாத துதிசாற்றுபோது மெய்தாதிருந்தவியல்பான்
மனதுட்சலித்து நமைராமனுளன் மருவிப்பவத்திலேயினிக்
கனமுற்றதேக மிதைவைத்திருந்து கவலைக்குண்மூழ்குவதலா
லனகப்பயன்கொ ளவொணுதுவல்லை யழியச்செய்வேனெனவெணி. (கசகூ)

விடமோர்கலத்தி லமைவித்திராமன் மளிர்கந்தரங்கொள்வடிவைத்
திடமானபத்தி கொடுபூசைசெய்து தீர்விற்புசிப்பனென்வே
யுடனேகளங்க மறுநெஞ்சிடத்தி லொண்பீடமிட்டதன் மிசை
கடனீரருந்து புயல்போலுமேனி கவினீளிராம னைநிறீஇ. (கரு0)

அவிரர்க்கியாதி யுதவிப்புனற்கொ டபிடேகமாற்றியமைபொற்
கவினுடைசாத்தி யியனூலணிந்து கந்தந்திமிர்ந்து கடியார்
விவிதங்கொள்புட்ப வகைசாத்தியின்ப மிளிர்தாளினிற்றுளவமுன்
னவில்பற்பல்பூக்கொ டர்ச்சித்துளத்தி னனிதூபதீபமமையா. (கருக)

கற்பூரதீப நைவேத்தியாதி காண்பித்தியங்கள்பொலிய
வெற்பூடியங்க ருவியொப்பமார்பின் மிசைகண்கணீர்பொழிதரப்
பொற்பூர்நிருத்த கீதங்களாதி பொலிவித்துளின்பமிகவே
மற்பூதரத்தை நிகர்மேனியோவர் வரைசித்திரத்திலமைய. (கருஉ)

வேறு

இவ்வாறியலன் பர்சமாதியிடத் திசையத்திகழ்பத் திரமாமலைமேற்
செவ்வானைநிகர்த் தருண்மேனிகொளுஞ் சீர்சால்சனகிக் கொடிராமனிட
மொவ்வாவணைவுற் றுநமோரடியா னெழியாதபெருந் துயரத்துடனே
தவ்வாதியல்பத் தியுடன்பலநா டமைநாடினனுற்றருள்வீரினியும் (கருங)
அருளாமலிருந் தனமேலொழியா வபவாதமடைந் திடுமென்றிடலுங்
கருமானிகர்மே னிபெறுங்கமலக் கண்ணன் கடிதங் ஙனமாற்றுதுமென்
றருகேயநுசன் புடையோதுவனம் மன்பன்றனையெவ் வகையாள்வதெனத்
தெருளாருளமீ துநினைந்துகடன் றீர்த்திட்டிரசீ துகொள்வேமெனவே. (கருச)
சிராமனிலக் குவனும்புவிமேற் றிகழ்மானிடரிற் றிருமேனிகொடே
காராரிரவிற் றுனீசாவாழ் கடிமாமனைவா யிலடைந்துகையாற்
றூராளமுறும் படிதட்டியழைத் தலுமேவினன்வா யிறிறந்துடனே
கூரார்சரம்வார் சிலையோடமையுங் குமரப்படிவத்தினர்க்கண்டனனே. (கருரு)

வேறு

மனக்கண்கொடு கண்டவன்மாயை யுளங்கலக்கவி னென்றுணரானுப்
கானக்கண்ணியல் பாதவமேபோற் கன்னலொன்றரை நின்றவரோடெத்
தானக்கண்ணியைந் துள்ளவரென்னத் தானிசாமன்ன கௌதமிநதிப்பால்
வானக்கண்ணியை தேவரும்புகழ்சீர் வாய்ந்தபத்திரா சலத்தினில்வதிவேம்.
என்றிராகவன் சாற்றிடமன்னன் யாவரேவலர் யாரிவண்விடுத்தார்
நன்றியம்புதி ரென்றிடவிராம னலங்கொள்ராமதா சனுக்கியாமாட்க
ளின்றிராவினி லவனனுப்பவினீண் டெய்திேனுமென வேதுவங்கிசத்திர்
துன்றியன்முறை யாதுளீரென்னச் சூர்யன்வங்கிசஞ் சோதரரென்றான். ()
நாமமியாவென யாமிராமோசி நண்ணிலக்கும ணோசியென்றிட்டான்
சேமவெம்மத மனுட்டிப்போரென்னச் செய்யராமானு சன்மதமென்றான்
காமர்நீடுநீ ரிராமதாசன்பாற் கலந்ததெத்தனை காலமாயென்ன
யாமவர்க்குமுத் தலைமுறைநேய ரென்னச்சம்பள மென்னெனக்கேட்டான்.
நேயமல்லது மற்றிலையென்ன நீங்கள்வந்ததெற் றினுக்கெனவினவச்
சேயதாந்திறை தந்தனுப்பினனென் றிறமுரைக்கமுற் றுங்கொணர்ந்தீரோ
வேயவோதுமினென்னவாமெனக்கேட் டிருமினும்மொழி யமுதமொப்பதென
மேயயாமிருந் திடும்படிதவந்தான் விளைத்ததின்றென விராகனீவீரேல். ()
தருவன்யானிர சீதெனராம சந்திரன்புவி மீதினிற்கொட்டி
திருபவொல்லையொப் பந்தருகென்று நிற்கவப்புது நாணயங்கண்டு
பெருகும்விம்மிதம்படைத்திவைகொண்டு பெயரவொட்டையா னைகள்வேண்டுமென்றே
விருவரெவ்வணங் கொணர்ந்தனரென்னவெண்ணினன் பிரமித்தியல்போதில்.
அற்பமாகுமிப் பொருணிமித்தத்தென் னடிமைதன்னையுள் ளருட்குணமின்றி
வெற்பலைக்கடல் போற்றுயர்செய்த வீணனென்றுதன் னுள்வெகுண்டிராம
னற்பனுனதா னிசாவைநேர்நோக்க வமைகிலாததோ முகத்துடனின்றே
சற்பவீதிகை யொப்பம்வீணேநீ தாமதஞ்செயேலென்றுசாற்றிடலும். (கஈக)

வல்லையீந்தன னிராகவன்கரத்தின் மற்றவன்முகநிமிர்ந்துபார்த்திலா
யெல்லையங்கதின் மறைந்தனரச்சி ரிருகண்கொண்டுணர் தானிசாமன்னன்
கல்லநேர்மனங் கசிந்திடத்தன்கை கடிதுகூப்பினன் சலாம்புரிந்தவனு
யெல்லையின்றிய விம்மிதமுளத்தி லேய்ந்தில்லாடனைக் கூவினனிசைப்பான்.

ஈண்டிப்போதுவந் தவர்நரரன்ரு லெனதஞ்ஞானத்தா லறிந்திலனந்தோ
காண்டிருப்பனேல் வணங்கிமற்றவர்தாட் கமலம்பூசித்துக்கருணைவாய்ந்திருப்பே
னீண்டிராவிலேய்ந் தவர்களைப்பகலி னேர்திரென்றுசாற் றவுமறிந்திலனே
சேண்டிகழ்ந்தவென் பள்ளியினிடத்திற் சேர்ந்தவாற்றையுஞ் சிந்தைசெய்திலனே

வந்துமீண்டவர் வைகுந்தவுலக வாசரோபத்தி ராசலத்தவரோ
மைந்துலாவினேர் சொருபமெத்தகைய மனோகரம்வழுத் தருசவுந்தரிய
முந்துகண்களுக் குவமையேதம்ம வோதுசொற்கள்விண் மீதுறுமமுத
முந்துதிவ்விய புருடர்கட்கேற்ற முகமனோதில னுபசரித்திலனே.

பூவின்மீதெனை யொத்திடுமந்த புத்தியுள்ளவர் பாவிகளெவரே
யேவிலங்கைகொ டிவ்வியர்தம்மை யினியென்கண்கொடு காணுநாளுளதோ
நாவியன்னபொன் வாஞ்சையாலெனது ஞானமுற்றவு மீனமுற்றதன்றே
தேவியற்றகை யாருடனெனைரட் சிக்கவேண்டிலேன் குக்கலிலிழிந்தேன். ()

நன்றிராமதா சன்றனைக்காப்பா னண்ணுசீராம சந்திரனன்றே
நின்றியான்கடா வியவனைத்திற்கு நிகரின்மாவிடை யீந்தனருடனே
வென்றிசால்சிம்மா சனமளித்தில்லேன் மிக்கமாயையின் மயங்கினனந்தோ
பொன்றிலேன்வறி துற்றனனினியான் புரிவதேதெனப் பலபலபுகன்றான்.

தானிசாவின்முன் மறைந்தனர்தமது தாசன்வாழ்சிறைச் சாலையுண்மேவி
மேனியோடுல கினைமறந்தவர்தாள் விலங்கமைந்துகை விரனகங்களுடன்
வேனியைந்துகண் டவருளஞ்சால வெருட்சியெய்தநீள் வேணியுமழுக்காற்
றுனிறைந்துள தேகமுந்தன்மெய் சாருமாறில யங்கொணெஞ்சகமும்.

பிரமதேசமை முகமுநஞ்சருகிற் பெய்துவைத்துள கிண்ணமுங்கண்டே
யிரகுநந்தனற் குப்புனல்கண்ணின் றிழியத்தம்பியி னிடமிசைக்கின்றான்
பரமபாகவ தற்கருகமைந்து]பயின்றநச்சுறு கலத்தினைக்கவிழ்த்து
விரவுமிவ்விர சிதியைவைத்து மேவுவாயென்ன வாற்றினன்மறைந்தார். ()

உடனிராமதா சர்விழிதிறந்திட் டுறுவிடக்கலங் கவிழ்ந்துளசீரு
மிடவிராகவன் றெரிசனமளிக்கா விதமுமெண்ணியொன் றறிகிலரிருப்ப
வடல்கொணெஞ்சகத் திற்சிறையிடத்தி லார்கொல்வந்தவ ரென்றுநோக்குதலுங்
திடநிலாவுதா னீசாமுத்திரைதோய் சீட்டறிந்தனர் பரவசமடைந்தார். ()

இன்னதென்னருட் பிரபுவாயிலகு மிணையில்சீராம சந்திரன்மாயை
யென்னநிச்சயித் தருட்பிரபுவனக் கீதியற்றிட முடிந்திடுமென்றே
முன்னகத்தினு னினைத்திருந்தனனீ முன்னனேகரை யாண்டனையென்னப்
புன்னரும்புரா ணம்பலசொல்லும் பாவியேனெனைப் பாலனம்புரிய. (கஎ0)

தாமதித்ததென் பாவத்தினாலோ தகைகொணெஞ்சகந் தான்பரிபாக
மாமகத்துவநிலைகொளாமையிலோ வந்திலாயறி கின்றிலேனுந்தித்
தாமரைக்கணே தோற்றுவான்முதலோர் தாமறிந்திடற் கரியநின்மாயை
பாமரத்தகை யேனறிகுவதோ பகவவென்றுபற் பலதுதித்திருந்தார். ()

இன்னவாறியல் போதினிலிரவி பிராமதாசர்த மின்னலுக்கிரங்கிப்
பன்னருந்துய ரொடுபலவருடம் பாற்றினேமின்று பரவசமருவி
மன்னன்முன்புறல் காண்பமென்றைது வந்தபான்மையின் மருவலுமாசு
னன்னலம்பொலி தாசரைச்சிவிகை நண்ணியேற்றினிர் வருதிர்களென்றே.

தனதமைச்சர்பாலோதமற்றவர்க டக்கவாறலங்காரங்கள்புரிந்தே
மனதுவந்துசம் பிரமமிக்கமைய மன்சபைக்கணுய்த் தனுமெதிர்மருவிக்
கனமிகுஞ்சிங்கா தனத்தின்மீதேற்றிக் களிப்புடன்முனி சாசலாம்புரிந்தே
யனகதாசர்நீ ருத்தமருமக்கா யவிராமலக் குமணர்முன் னணைந்தே. ()

ஆறிலக்கமாம் வராகனுந்தந்தே யகன்றுபோயினர் தாங்களித்தகைய
வீறியைந்துளீ ரென்றுணர்கில்லேன் விவிதமாந்துயர் விளைத்தனனவற்றை
யாறியற்கொடுள் ளத்தனுபவித்தீ ரகமெவ்வாறுதத் தளித்திருந்ததுவோ
சீறியற்கொளென்பிழையறப்பொறுத்துத் தெளிவிலேன்மிசை யளியமைந்தருள்வீர்.

கொடியவெம்மிலேச் சக்குலத்துடலங் கொண்டுதுர்ச்சனர் தம்முடன்றிரியும்
படியினாலென தற்புத்திகொடு பலபஃறுன்பியற் றினனவைமுழுது
நெடியசற்குணக் குன்றமொத்திடுநுங் நெஞ்சமேனினை யாதருள்புரிவீர்
முடியநுங்கடன் றீர்த்ததென்றிடலு முகமலர்ந்துடன் மொழிகுவர்தாசர். ()

தானிசாப்பெயர் மன்னவர்நீரே தக்கபாக்கிய ரிராமசந்திரனை
யூனியன்றகட் புலன்கொடுகண்டி ருடையநாயகன் றன்னையெவ்விதமா
நானிதந்துதித் தும்பிரார்த்தித்து ஞானவானந்த சேவைநல்கியிலா
மானிறைந்தமா பாவியென்றெனக்கு வழங்கிலானிரா கவன்றரிசனமே. ()

என்னவோதிடத் தானிசாவுரைப்பா னிராமதாசரே யுமக்குநான்பலவா
மின்னலாற்றின னதைத்தவிர்த்திடமுன் பெய்தலன்றியுள்ளன்பினாலெனக்கு
நன்னலத்தரி சனமளித்திலர்மெய் நல்லபாக்கியர் நீரவரளித்த
சொன்னமாறிலக் கமுந்தங்கட்குரித்தாற் றூயர்கைக்கொடென் றனக்கருள்புரிவீர்.

பத்திராசல ராமமூர்த்திக்குப் பரிவுமிக்கநற் றுசராநீயிர்
நத்தியத்தலக் தனைப்புரந்தருள்வீர் நவிலிலின்னமும் வேண்டியதளிப்பே
னித்தியம்பல பணிபுரிந்தங்ங னிலவுவீரென யாதுநான்வேண்டேன்
சத்தியத்தகை பொருந்துசிராம சந்திரன்றயை யமையுமென்றிடலும். ()

மன்னனேதுவன் பத்திராசலத்தை மதியினன்றிகழ் வரையிராகவற்கே
நன்னலம்பெற வளித்துளேன்றுங்க ணண்ணிப்பத்திரா சலராமதாச
ரென்னவோதுசீர் மேவிச்சன்மார்க்க மியைந்தவாழ்திரென் றிசைத்தனுப்பிடலு
மன்னருட்கொள்சி ராமனல்கியவவ் வராகனறிலக்கத்தையும்பெற்றே. (களசூ)

பத்திராசல சேத்திரமேவிப் பணிகள்பற்பல குயிற்றினரணிந்து
நித்தியத்துட னைமித்திகாதி நிறையவுற்சவம் பலபடவியற்றிப்
பத்திமிக்கருட் டுத்தியத்திரள்கள் பரவசங்கொடு பாடியாடினராய்
மெத்தியற்பெருஞ் சாதுபூசனையும் விருப்பிலாற்றினர் விளங்கிடுநாளில். ()

ஓர்தினத்தினி லிராகவன்முன்புற் றுலப்பிறுன்புட னின்னமுமடியேற்
கேர்திகழ்ந்தநின் றெரிசனமருளா தென்னையிவ்வணந் தளர்த்தலேதென்னச்
சீர்திகழ்ந்திடு தாசர்துன்புறத்தன் சிந்தையாற்றலன் சீலராகவன்றுன்
கார்திகழ்ந்தவா னிடத்தசரீரி கவினிராமதா சாதுயரடையேல். (கஅக)

இணையிலாதநின் பத்திகண்டுவந்தே னின்னஞ்சிற்சின ளனைத்துதித்திருக்கி
னணையுமோர்விமா னங்கடிதேறி யடைதியென்றலு மற்புதமுடனே
கணைகொள்கையிரா கவனைநேர்காணுங் காலமின்னமுங் கலந்திலதென்றே
யணைகடந்தபே ரன்புடனன்பர்க் கானபூசையா தியபுரிந்திருந்தார். (கஅஉ)

வேறு

நனிராமதாசர்முயன் றுஞ்சீராகவன்சேவை நல்கிடாமற்
றுனிகொண்மிலேச்சன்விரும்பா திருக்கவுந்தந்தாண்டருள்சீர் சூழ்ந்துநோக்கிக்
கனியுளங்கொள்சீதைவின விடாக்வன்முனைநாட் கதைகடன்னை
யினிதுலகோர்தேர்தரச்சாற் றிடுகின்றுன்றன்னருட்சீ ரிலங்கமாதோ. ()

கங்கைக்குத்தரதிசையிற் கவினொர்கிராமத்தின்மறை களோநன்கோர்ந்து
மங்கைக்குத்தன்னிடப்பா லீந்தருள்வாற்றுதித்தமையு மறையோர்தம்மிற்
றுங்கப்பண்புளனொருவன் சாற்றுவ னந்தணர்காணந் தோன்றலானே
ரிங்கட்டமூர்த்திவடி வாகியவிரிச்சிவலிங் கத்தின்மீதின். (கஅச)

தினஞ்சகத்திரங்குடந்தொண் ணூறுநாள்வரநதியின் றீர்த்தங்கொண்டு
மனங்களிப்பவாற்றிடிலிந் திரனுவானென்றிடவோர் மறையோன்கேட்டுக்
கனம்படவவ்வாறுற்றி வந்தவன்றெண்ணூறுநாட் காலேதன்னி
லினம்படத்தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்பான்குடம்விட் டியாஅங்காணன்

பொய்யோபிராமணன்சொல் வியதென்றுயிரமாகப் பொருந்தும்போதில்
வெய்யோன்வெஞ்சினமிக்குக் கடைக்குடத்தைச்சிவலிங்க மீதுவிட்டா
னையோமற்றக்குடந்தான் சிவலிங்கமேற்பொருந்தி யழியவைதிற்
றுய்யோர்க்கின்பருளரனுக் கிரத்தொடுமற்றவனெதிரிற் றோன்றக்கண்டே.

செய்வகையொன்றறியாதாள் றிகைத்துநின்றுசிவபெருமான் றிருத்தாள்போற்றி
யுய்வகைதேர்கிலன்செய்பிழை பொறுத்தருளாயெனப்போற்ற வுவந்துசொல்வான்
மெய்வகைபிராமணன்முற் றும்புரிந்தபிறகோதீர் வின்முன்போகிற்
கெய்வகலிந்திரபட்ட மெய்துமென்றதுரைத்தியென விசைப்பான்பார்ப்பான்

பூர்த்திபெற்றபிறகேயென் றுரைத்தான்யானென்னற்ப புத்தியாலே
யார்த்தியுடன்செய்தீற்றுக் குடமபிடேகிக்காம லவசரத்தான்
மூர்த்தியின்மேற்சினந்தோச்சி னேனென்னச்சிவபெருமான் மொழிவானீறு
பார்த்திடுமுன்வெகுட்சிபெற்ற தன்மையினீமிலேச்சனெனப் பாரிற்றேற்றி.

அரசாகிப்பூவினைகன் மனுநெறியிலாட்சிசெய்யி லருட்சீராமன்
றாமேவுந்தரிசனைபெற் றவனருளாற்சதமகனுச் சனிப்பாயென்ன
வரனேநிமறைந்தவண்ணந் தானிசாவாப்பிறந்தா னம்மாற்றத்தா
லுரமேவுதரிசனந்தந் தனனினிநந்தாசனியல் போதக்கேளாய். (கஅசு)

இராமதாசன் மூன்னைப் பவத்தினிற்பிராமணனு யிருந்துமேலோர்
பாராவியற்சற்குணங்களெல்லா மமைந்துகொடியோருறவு பாற்றியின்பம்
விராவியியல்காற்கிளியொன் றைப்பிடித்தொர்கூண்டிலிட்டு விநோதமாக
விராமநன்னுமஞ்சொலக்கற் பித்தன்பாற்பால்கனியீந்தனன்வளர்த்தான். ()

பூர்வசென்மவாசனையா லிப்பவத்துமென்பத்திப் பொலிவோனுனன்
சீர்வயங்குகிளியைநிர்ப்பந் தித்தடைத்தபவத்தாலிச் சிறைக்காளாகிச்
சார்வழுமுற்றறவொழிந்தா னினிவைகுந்தப்பதத்திற் சார்வானின்னேற்
கேர்வயங்குதரிசனமீ யாததற்குச்சானகியி தேதுவென்ன. (கசுக)

சீராமசந்திரனே திடக்கேட்டுச்சீதைமகிழ்ந் துற்றுளந்தோ
தாராளபத்திமுன்சென் மத்திலுமிப்பவத்திலுமே சார்ந்திராமன்
சீரார்கோயிற்பணிசெய் துங்கிள்ளையடைத்ததனுற் சேர்ந்தபாவம்
போமாமலித்தகைத்துன் படைந்தாரேற்பிறர்செயல்யாம் பேசலாமோ.

வேறு

தன்னனபத்தி தழைத்தவிரிராம தாசரிவ்வகைதிகழ்நாளிற்
பொன்னனபாதந் தனிற்பிணியொன்று பொருந்தலிற்பத்திராசலமேன்
மன்னருளிராக வன்றனைச்சென்று வணங்கிடவியன்றிடாததனுற்
பன்னருந்துயரத் தோடிராகவனைப் பயின்மனையிடத்தினும்போற்றி. (கசுங)

அன்னகாற்சுற்றத் தினர்களப்பிணிதீ ரவுடதஞ்செய்குதிரின்றே
லின்னன்மிக்களிக்கு மென்றிடத்தாச ரியானுரௌடதத்தையும்வேண்டே
னென்னவோதுபுசி ராமனைப்பிரார்த்தித் தியலுநாட்பிணிமிகவளர
வுன்னருந்துயர்க்கோர் பெட்டகம்போலு முடலிதைவிடனலமென்னு. (கசுச)

திடவயிராக மடைந்துமானிடசென் மங்கொடெத்தனைதினஞ்செகத்தி
னிடமிருக்கினுமென் பயன்வறிதேயா னிவ்வுடற்பட்டளவில்லா
நடலைகொன்டுழன்றே னிராகவனெப்பி னற்றெரிசனமொருக்காலுந்
தடவிழிமுன்கண் டிலனினிமுயலச் சத்தியுமுடலிதற்கிலையே. (கசுரு)

இளமையாங்கால முழுவதும்வறிதே யிகதலவாழ்க்கையிலொழித்தேன்
றளர்வுறுங்காலமிது தனிலிராம தாசனுனேனினியேனும்
பளகறுமிராம னுற்பவமரண பரவைநின்றெனையெடுத்தருடோய்
தளமுறுமுயர்பங் கயக்கழற்றுணையிற் சாரவைத்தருள்புரிந்திடுமோ. (கசுசு)

அல்லதுசமுசா ரக்கடலிடைதோ யல்லலார்மனைமகவென்னச்
சொல்லலாஞ்சலசந் துக்களென்றன்னைத் துய்த்திடப்பார்க்குமோவென்று
செல்லனமேனி யிராகவாவின்னந் திகைப்புறச்செயல்சகிக்கில்லேன்
கல்லரிவையெனப் புரிந்தநின்றுளிற் கலத்தியாலெனக்கழறிடலும். (கசுள)

அம்பரத்திருந்தோர் விமானமாங்கவர்முன் னணைந்திடப்பரவசமடைந்தே
தெம்பமைந்தயற்போய் வந்தனைபுரிந்தென் செல்வனையருச்சனைபுரிவா
னம்பகத்துடன்மே வுவனெனமனைப்பா னண்ணியில்லாடனைக்கூவக்
கொம்பனுள்பணிசற் றுண்டதைமுடித்துக் கொம்மெனவணாவனென்றேத ()

பாரிசொல்வினவு வார்நிற்கிவ்வளவே பாக்கியமுளதெனப்பகர்ந்து
சீரியவிமான மூர்ந்தனர்செல்லத் தேயமேலவர்நன்றூநன்றென்
றேரியல்பினரை வணங்கிடவில்லா ளிற்புறத்தெய் திமேனடிக்
காரியல்பினிற்கண் ணீர்பொழிந்திடியிற் கதறியின்னனகழறிடுவாள். (கக௯)

பன்னருங்கால மிம்மகானுவக்கப் பணிபுரிந்தொருவிலதிருந்து
மென்னதுநிர்ப்பாக் கியந்தடுத்திட்ட தெனினும்யானரைக்கணமிகத்திற்
றுன்னலனென்று பத்திராசலத்திற் றேய்ந்துசிராமனுலயத்தின்
முன்னமைந்துடன்சாட் டாங்கமாவீழ்ந்து முதிர்துயருடன்கிடந்தாற்ற.

அம்மையின்றிடபத் திபையறிந்திராம னருளசரீரியாயருளாற்
கொம்மெனவுனக்கு வைகுந்தபதத்தைக் கொடுப்பனிக்கோயிலிலமையுஞ்
செம்மைசேர்தரும காரியநடத்தச் சிறியநின்சேயனுக்கமையா
சும்மையங்கவன்மே லமைக்குமட்டிங்ஙன் றெண்டுசெப்திருத்தியென்றிடலும்

இராகவன்மொழிகேட் டிராமதாசர்மனை யேற்றநாயகரழைத்திடுகால்
விராவியபணிசற் றுண்டெனநாமுன் விளம்பியதிராகவனருளென்
றிராவுநன்பகலும்பகவன்மெய்ப்பணிசெய் தீற்றில்வைகுந்தமேய்ந்திட்டாள்
பராவியற்கதையின் சாரமோர்சிறிது பகர்ந்தனன்முடித்தனன்மாதோ. ()

வேறு

மேருவரையின் றவச்சுதனு விளங்கும்பத்தி ரன்சிரமேன்
மிளிருமுனதா லயப்பணிசெய் மிகுசீராம தாசர்முன்னுட்
சாருவினைக்கூட் டடைத்தபவந் தணப்பத்ராதி பன்செய்சிறைச்
சாலையிடைவைத் தொருதுயரஞ் சாராதருளா னீயேற்றுக்
கோரும்படிபொன் னேடருள்வை குந்தமுறவுங் கொடுத்தருளுங்
குறைவில்கருணைப் பெருங்கடனின் கோலவடியார் பணிபுரிவே
னீரும்வினைக்கூ டாஞ்சிறைநின் றேறும்படிசெய் திடுவெதெந்நா
ளிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே.(உ0௧)

பத்திராசலராமதாசகதி முற்றிற்று

ஆ கவி சகூ0ச

---

ஐம்பத்தோன்றாவது

# கபீர் தாசகதி

கேசவன்மெய்ப் பத்தர்களிற் கீர்த்திமிகக் கிளர்ந்துபத்தி
ராசலத்திற் பொலிராம தாசர்புகழ் நவின்றிட்டேன்
நேசவிர்மெய்ச் சுகரமிசந் திகழ்ந்துசெக தலத்துதித்த
நேசகபீர் தாசாரு ணிலைமைசிறி துரைப்பேனே. (க)

வைகுந்தத் தோங்குதயா வாரிதியா கும்பகவன்
பொய்குன்று மாயையிடை புந்தியுழன் மானிடர்தா
முய்கும்பண் படைவிப்பா னுளங்கொண்டு தன்னருகில்
வைகுதவச் சுகமுனியை மனிதவுருக் கொள்கென்ன. (உ)

வேதாதன் கரங்கொடொரு மெய்சமைத்து மேதினிக்கண்
மாதாவின் வயிற்றடைக்கா வண்ணமருள் வழங்கென்றான்
சீதாம ணாளன்முத்துச் சிப்பியில்வைத் தேகங்கை
மீதாக விட்டிடலு மிதந்தமுது வரக்கண்டு. (ங)

தந்துதுவைத் தங்கமையுந் தமாலெனும்பேர் மிலேச்சகுலத்
துந்துமுடற் பெற்றவன்று னுவகையுடன் கொடுபோந்து
கொந்துகுழற் றன்மனைக்குக் கொடுத்தனன்மற் றவள்கொளலு
கொந்துபெரு மகற்கருத்த நோன்முலைப்பால் சுரந்ததனல். (ச)

அருத்தியருத் தியிற்றம்பா லணைசேய்க்குக் கபீரென்பேர்
பொருத்தியிள மதியென்னப் போற்றிவளர்த் திடுநாளில்
விருத்திபெற வரிபத்தி விளக்கவவ தரித்திட்டோன்
றிருத்திமிகச் சீராமன் சேவடிகண் மனத்தமைத்தே. (ரு)

பிரமஞா னம்பதிந்து பிரபஞ்ச மித்தையெனு
முரமுடனே தானெனன்றி லொட்டானுத் தன்றுதை
சிரமமுழு தகன்றுமனஞ் செழித்திடநெய் தற்றொழில்செய்
திரவுபக லிராகவன்று ளிடையறச்சிந் தித்துவந்தான். (சு)

அந்நாளெவ் வனப்பருவ மமையமுன்னுட் சுகர்தமைநேர்
துன்னுமை யற்பொருந்து சுரருலகத் தரம்பையுற்ற
மின்னுகி யுறழ்வினர்பால் விளங்கவவ ளைப்பரிவா
னன்னுளின் மணம்புணர்த்தார் ஞாதியர்யா ருங்களிப்ப. (எ)

புளிபினுறு பழமேபோற் புரத்தமைக பீர்தாச
னளிமலரிற் றேன்றேடு மன்னபண்பி லருட்குரவற்
றெளிவுடன்றே டினனெவரே தேசிகர்நந் தமக்கருட்பே
ரொளிதருசற் குருவின்றி யுலகமயல் கடப்பரிதால். (அ)

என்றுபல நினைத்தடியா ரினம்புகுந்து பணிவாற்றித்
துன்றுமிலேச் சக்குலத்திற் றேன்றினனேர் துணையில்லே
னென்றுமெனைக் காத்தருள்வ துங்கடமை யெனவோதி
நன்றுமலி தருராமா னந்தரருள் பெறவிழைந்தே. (கூ)

ஈங்கடைந்தே னெனக்கேட்டோ ரிகழ்ந்துமிக நகைத்தாராய்த்
தீங்கமையு மிலேச்சர்தருஞ் சேயாநீ யெங்கருட்பே
ரோங்கனிகர் தேசிகர்தம் முயர்வெங்கே மற்றவர்தம்
பூங்கமலத் தாடொழவும் போதாய்பே தாய்மேலோர். (க0)

உன்றனைக்கண் டோர்மாற்ற முரைத்திடற்கு மிசையாரே
னன்றமையுஞ் சீடனென நனியேற்ப துண்டுகொலோ
குன்றனைய வுன்னுளத்திற் கொண்டவவா முற்றுதா
லொன்றலினி யீண்டென்ன வோட்டமனை யடைந்தாராய். (கக)

தனித்தனியன் படியரிடஞ் சார்ந்துவணங் கிப்பரிவா
லினித்தமொழி கொடுவினவி விடக்குரைப்பார் சிலர்சிலவர்
சனித்தகொடுஞ் சினத்தொடிவண் சாரேலென் பாரொருநாட்
டனித்தணைந்த வொருசாது தனைவணங்கி வேண்டிடலும். (கஉ)

பரிவோடு நீநமது பரமகுரு நாதரிடத்
தரிதான வுபதேச மடைதரவாஞ் சித்ததனாற்
பெரிதோரு பாயமிவண் பேசுவனவ் வாறுற்றில்
விரிவான பேரருட்சீர் மேவவைய மிலையதுதான். (கங)

வேறு

திருமடத்தின்புறத்தலைவா யிலினிடத்தினெல்லியிடை சேர்ந்துநீதா
னொருமைமனதுடன்படிக்கன் மீதிற்சென்னியையமைத்திட் டுறக்கநீத்து
மருவுதியேல்வைகறையிற் றேசிகர்கங்கைக்கணேவார் மற்றப்போதிற்
றிருவடிநின்சென்னிமிசை வைப்பாரக்காலையெது செப்புவாரோ. (கச)

அன்னவருள்வாக்கியத்தை முக்கியமந்திரமெனவுன் னகத்தமைத்திட்
டின்னலகலுதியிவகை யன்றியெதுகொண்டுமுனக் கிசையார்போத
மென்னவருட்கபீர்தாசர் மற்றவரைவணங்குபுநீ ரிசைக்குஞ் சூழ்வா
னன்னலங்கொளென்னதவா முடிந்ததுபோலும்மெனவே நவின்றுநீரே. ()

எனதுமுதற்குருவெனச்சொற் றேகினரவ்வாறியற்ற விராமானந்தர்
வனசமலர்ப்பதங்கபீர் சிரத்திலமைத்தெவர்மேற்கால் வைத்தோமென்ன
மனமருவுகருணையினி ராமராமாவென்ன வழுத்தக்கேட்டே
யனகபரமானந்த மடைந்துகபீர்தாசர்தொழு தகன்றூர்மாதோ. (ககூ)

ஆனசெயலுணர்ந்தருள்சற் குருநாதர்பிராந்தனென வகன்றூரில்லம்
போனகபீர்தாசர்குரு வுபதேசங்கொண்டதனாற் புளகித்தங்க
மீனமிலேச்சக்கோலந் தணந்தருட்சற்குருநாத ரியைவதான
மானமுறுதுளவலங்க லார்த்துவபுண்டரஞ்சால வயங்கப்பூண்டார். (கஎ)

ஆங்கதுகண்டவணமைந்த மிலேச்சர்பலருஞ்சினமிக் கமைந்தாராகி
யோங்கனிகர்கபீர்தாசர் மாதாபிதாக்களுட னாடிச்சொல்வார்
நீங்கண்மிலேச்சக்குலத்தி லுதித்துநஞ்சித்தாந்தமிக நிந்தைமேவ
வீங்கரிராமாவெனவை ணவர்போலக்கூவியிவ ணிருக்கொண்ணுதால். (கஅ)

இந்துக்களிடமேபோய்ச் சேர்மினெனக்கேட்டவிரு குரவர்தம்முள்
வெந்துக்கமுற்றமையக் கபீர்தாசர்நீர்வறிது விளம்பிற்போகேம்
பந்துக்களாவீர்நுங் கட்கிராம்ரயிமினெனும் பதமுமுற்ற
செந்துக்கட்கோர்சாட்சி யாம்பரமுமொன்றெனத்தேர் தெளிவின்றஃதால். ()

கோதுபுரிந்திடுமுணர்வு கொண்டுள்ளீர்நுங்கெருவங் குன்றும்வண்ணம்
வாதுபுரிந்திடத்துணிந்தே னென்னதுசித்தாந்தத்தை மறுப்பீராயி
னேதுபுரிந்திடினுமுடன் படுகின்றேனெனக்கேட்டங் கியைந்தோர்யாரு
மீதுபுரிந்திடுசெயலென் னெனவாய்ந்துதம்மறைதேர் மிக்கோனுன. (உ0)

காசிதனைக்கூவுபுபல் வாதாற்றமற்றவன்றான் கபீர்தம்மோடு
பேசிடமாட்டாதவனு விழிப்பமிலேச்சர்கள்யாரும் பெருஞ்சினங்கொண்
டாசிபகர்நும்மரியை யழைப்பியடாபார்ப்பேமென் றங்கைதோறும்
வீசிடுகற்கொண்டுநிற்குந் திறம்பார்த்துக்கபீர்தாசர் விளம்புகின்றார். (உக)

வாதமிடற்காற்றும லுடற்பலத்தாற்சமர்புரிவான் மனங்கொண்டுள்ள
பேதமதிகாளுமக்கிண் டரிதனைக்காட்டிடமுயலல் பிழைபாமன்றேன்
றுதவிழ்பங்கயத்துணைக்கன் பானதொண்டர்தாமணியத் தக்கதாய
கோதறுதுழாய்மாலை கண்டிவணின்றிடிற்பின்னே கூறல்செய்வேன். (உஉ)

என்றுரைத்துமாலையினைப் பிரயோகித்திடவங்கி யெரித்துச்செல்ல
வொன்றுறுகாசிப்பெயரோ னுதியர்காசிப்பதிவிட் டொருவலானர்
துன்றுகபீர்மிக்கவுமந் திரவாதியாகையினித் துட்டனம்மைக்
கொன்றுகளைவானெனவஞ் சினர்தாம்வேறிடத்தின்மனை கொண்டுவாழ்ந்தார்.

அலகிலின்பமோடுகபீர் தாசர்வயிணவசின்ன மணிந்துவப்பிற்
றிலகமெனவிளங்குமிரா மானந்தசாமிகடஞ் சீடரானோர்
குலவுமவைபுகக்கண்ட மறையவர்யாவருஞ்சாலக் கொதித்துநீசக்
குலமகவாவந்திடுநீ யெம்மையேளனம்புரியக் குறித்திவ்வாறு. (உச)

வந்தனையோவல்லதுமற் றொருவகைவேறிருக்கினுண்மை வழுத்திடென்ன
வுந்தடியார்பலரும்வினு விடுதலுநங்தேசிகர்பா லுபதேசம்யான்
சொந்தமுடன்பெற்றுள்ளே னுமக்கையமிருக்கிலருட் டொண்டரேநஞ்
சந்தமுறுகுருநாதர்க் கேண்மினெனவவர்கள்குரு சாமிபாற்போய். (உரு)

கோதுறுமித்துலுக்கன்றும் வைகறையிலுபதேசங் கொடுத்தீரென்ன
வோதுபுவைணவசின்னம் பூண்டமைந்தானுண்மைகொலென் றுசாவவாசான்
பேதுறலெய்துபுகபீர் தமையழைத்துவினவவுண்மை பேசினுனுண்
மீதுவகைகொண்டங்ஙன் செய்ததுநீயோவெனவுள் வியந்தாராகி. (உசு)

இன்னவன்சாற்றியமுழுது முண்மையதனுலடிய ரினத்துட்கூட்டி
நன்னலமாருரிமையொடு வாழ்திரெனவகுயைபுற னுடிநாதர்
நின்னகத்திலிருத்திசின்னுள் பருவமுறிற்றிருவருளா னேருமென்ன
வன்னவண்ணமியைந்தாசா ரியபருட்சீர்தாய்தந்தைக் கறைந்துவாழ்ந்தார்.

நிகரில்கபீர்தாசரிங்ங னிரவுபகலிடையாசா னிகழ்த்துமாற்ற
மகமிசைமாறுதுதியா னித்தருட்சற்குருநாத ரடிகளன்பான்
முகவிழிகளுங்குளிரத் தெரிசிப்பதென்றெனவுண் முன்னிவாழ்நாட்
ககனமுளார்களும்புகழ்கோ ரக்கசித்தன்சிடருடன் காசிசார்ந்தே. (உஅ)

விரவுமிராமானந்த சாமிகடன்மடத்தருகே மேவியங்கண்
பரவுதொண்டர்கூட்டமுறும் பான்மையையுமடமமையும் பரப்புமன்பர்
திரள்களிப்பிற்கீர்த்தனமா தியகொடவர்தம்புகழ்ச்சீர் செப்பும்பண்பு
முரமுடன்கண்டுங்கேட்டு மாச்சரியமாச்சரிய முளத்துற்ருனுய். (உகூ)

தனனதானு தந்ததான தனனுதத்த தனதானு

வியனிராமா னந்தர்மேவு மடவாயிற்க
ணிலகியோர்சூ லம்பராவு புவிமேனட்டு
விரவுகூர்மே லொன்றவாச னமிடாமற்ற தனின்மேலே
விரையமேவா நின்றுளாண வமொடேயற்ப
குணவிராமா னந்தநீயென் விழிநேர்சற்று
வெளியின்மேவா நின்றபோம கிமைகாணச்செய் திடுவீணே
மயனிலாவீ னங்கொள்வார்கள் பலர்பேணப்பொ
யுலகின்மேலே டம்பமாக நடியாநிற்கு
மடையநீவாழ் வொன்றலான மடமோடிற்றை யினிநீரும்
வகைசெய்வேன்யா னென்றுகூவு சொல்லினுவுற்ற
மறைவலோர்தா மிஞ்சுகோப முடன்வாயிற்கண்
மருவிநீள்சூ லந்தன்மேனி லவுகோரக்க னிலேநடா
வயமுளீர்யார் நுந்தநாம மெதுவோசெப்பு
மெனவனேன்யா மெங்கணேர்நி லவிவாதுக்கு
வலியிலாதே வென்கொள்வார்சி றையின்மேவச்செய் விறலாலே
மகியின்மேலே யென்றுநேர்பு கழ்கொள்கோரக்க
ரெனவிள்பேரே மிந்த்ரசால மிகவேகற்று
மருவிராமா னந்தன்மேவு மிடமோதிச்செ லுதிரானீர்
கயவராவீ ரென்றபோதி லுளமேலச்ச
மவியவோடா நின்றுதேசி கர்முனேயுற்ற
கதையெலாமே விண்டுசோர்வ டைதலாமற்றம் வினையிதோர்
கறையில் சீர்தோய் வன்கபீர்ம ருவியேயொப்பில்
குரவர்சிபா தங்கள்பேணி யடியேன்மெத்து
கருவமோடே வந்தமூட முறுகோரக்கன் வலியீர்வான். (௩0)

வேறு

இக்கணத்தும்மருள் கொண்டோ னினிதுவெல்வேனெனத் தேசிகர்
மிக்கடுங்குபுகோரக்கன் விறன்மிகவுற்றவ னவனுடன்
புக்கமர்செய் திடாதிடேல் போமனையின்புடைபென்றலுந்
தக்கநும்மாணவன் யானுறத் தாம்பயமுற்றிடல் சால்பதோ. (௩௧)

சற்குருதேசிகர் நீர்விடை தந்திடிற்கோரக்க சித்தனைத்
தெற்குறுமியமன கர்க்கிடை சேர்தரச்செய்குவன் யானென்றே
நிற்குறுமானிடர் குழுவினு ணோர்ந்துறுகோரக்கற் பார்த்தடா
பொற்குவடசைத்திட லூக்கிடும் புன்புழுவனையகோ ரக்கநீ. (௩௨)

கெடுமதிகொண்டிவண் வந்தனை கிருபைகொடோதின னேடிடா
யுடுநிகர்நின்றிறல் யாவையு மொளியருண்ஞானமெய்ப் பானுவாம்
வடுவிலிராமானந் தப்பெரு வள்ளன்முனென்றுந டந்திடா
கடுநிகர்வஞ்சகச் சாலத்தைக் காட்டிமயக்கிடு கோரக்கா. (௩௩)

சணத்திலென்முன்வரு கின்றியோ சாபமடைந்திடு கின்றியோ
நினைச்சுவராமுட னுனெனு நீசவெனச்சித்தனோதுவான்
பிணத்தின்மண்மீதுற நின்றிவண் பிதற்றுவதென்விறற் றேய்தியோன்
விணத்திலெய்தின்றெனிற்காசியை விரைந்தெரித்திடுவனென்றோதவே. (௩௪)

மேவியகோரக்க சித்தன்றன் வெஞ்சினமஞ்சிய யாவரும்
பாவிகபீரிவனுலுறும் பட்டணத்தோடிவண் சேர்ந்தநம்
மாவியொழிந்தவ ராயினோ மையகோதெய்வமே யென்னவே
கூவினராய்க்கபீர் தம்மையக் கோரக்கன்முன்புற வுய்த்தரோ. (௩௫)

இன்னவனேயுமை வைதவ னென்றிசைத்தன்னவர்க் குட்டலுந்
தன்னனகோரக்க சித்தனீ தான்கொலிவ்வாறுரைத் தாயடா
நின்னதுன்முகந் தன்னையென் னேருறக்காட்டட நீயொரு
சின்னத்துரும்பெனக் கிக்கணஞ் சின்னபின்னம்புரி வேனென்றான். (௩௬)

வினவுகபீர்புகல் வாரட விவேகமில்கோரக்க சித்தனே
யனகராமானந்த சாமிக ளனுப்பவடைந்திடு தூதடா
வுனதுமனத்திடை நீண்டெழு மொப்பிலகந்தையி னேடுனை
யனகவிக்காசியின் மேவினோ ரனைவருங்காணத்தொ லைக்குவேன். (௩௭)

தாபதரெண்ணில்ப லோர்களைத் தருக்குடனேசிறை யிட்டவன்
பாபமுமெய்பிரா மானந்த பரமசற்குருபா னரிடுஞ்
சாபமும்வறிதுப டுங்கொலோ தவமதமேவிய கோரக்கா
சோபமுறும்படி செய்தலாற் றொலைதரவின்றட பாவியே. (௩௮)

என்றசொற்கேட்டிரா மானந்த ரிவரையானென்றுச பித்தனன்
புன்றகைதோயுமி லேச்சநீ யொப்புகன்றீங்கமர் மூட்டினை
யென்றறைந்தவனைவ ணங்குவா னேகராமானந்த சாமியை
நன்றமைகின்ற கபீரெனோர் நல்லமாணக்கன்றான் றேவரீர். (௩௯)

வணங்கல்சால்பன்றென்று கோரக்கா வாய்ந்தவென்சற்குரு தாழநீ
யிணங்கியிருக்திடல் சாலவு மேற்றதன்றன்றென வோடியே
துணங்குமனங்கொள்கோ ரக்கன்றோய் சூலத்தைத்தங்காத் தெற்றியே
மணங்கிளர்பூமிசை வீழ்த்தித்தம் வண்கரநூலைமேல் வீசியே. (சo)

மற்றதனுச்சியின் மேவியே மதியறுகோரக்க வன்மைநிற்
குற்றதுமெய்யெனி லென்னெதி ரொன்றிடவருதியென் றழைத்தலு
மற்றவன்வெட்குபு விண்மிசை வாதிடில்யார்சயங் காண்பர்கள்
சற்றவனிப்புடை போந்துநின் சமர்த்தினைக்காட்டுதி யென்னலும். (சக)

மேல்வரச்சத்தியற் றம்புவி மேல்வரவென்றனைக் கூவினை
சால்வகைசெய்வனென் றெய்தலுஞ் சற்குருவாமிரா மானந்தர்
மால்வனசப்பதம் போற்றுபு வண்கபீர்தாசனுக் கின்னமு
மேல்வகையருடியென் றேத்தலு மெண்மடங்குற்றது முன்னினும். (சஉ)

உடனருட்சற்குரு சேவடி யுவந்துகபீர்தொழு தேத்தலு
மடமலிகோரக்க சித்தன்றான் மகிமைராமானந்தர் வடிவுறத்
திடமலிமெய்க்கபீர் தாசர்மச் சேந்திரர்தம்வடி வுற்றடா
வடன்மலியென்னுருக் காண்டியென் றறையவன்னவனரி போலுற்றே. (சந)

மிக்கநின்றேவுரு மேவெனை வென்றிடநீமுடி யாதுனைப்
புக்கநின்குருவினைச் சக்கரப் பொருபடையாற்கொல்வ னென்னலும்
பொக்கவொர்கோரக்க நீயுனோர் புன்மைகொண்மாயையைக் காட்டலென்
றக்கணத்தானுரு வாகித்த மக்கினிக்கண்கொடு நோக்கியே. (சச)

குலவியபாசுப தாத்திரங் கொண்டுனைக்கண்டதுண் டம்பட
விலகரைமாத்திரை யிற்செய்வே னென்னருகெய்துதி யென்றனன்
கலகமியற்றுநன் சிங்கமாய்க் கர்ச்சித்திடக்கபீர் தாசர்தா
நிலவிடும்யாளியாய் நேர்தலு நிகழ்சித்தனங்கிச்சு வாலையை. (சரு)

வீசினன்யாரும்வெ ருண்டிட மேவிடுநாற்றிசை யெரித்தலு
மாசில்கபீர்புய லாய்க்கயத் தந்துதிக்கையென மாரிபெய்
தேசிடயாரும வன்றனை யெண்ணருசூரியர் தேசுடன்
காசியன்மெய்யினை வாட்டலுங் கண்கலக்கங்கொடு கோரக்கன். (சசு)

தப்பறுசிரிரா மானந்த சாமியுமக்கபயம் மெனச்
செப்பலுமெய்க்கபீர் தாமப செயமடைந்தார்கொலென் றேங்கியே
யிப்பதிதானழி வுற்றிடு மென்றுனுமேல்வைக பீர்செய
மெய்ப்பறப்பெற்றனன் யானென்றே யாதுரைக்கின்றனை கோரக்கா. (சஎ)

என்றசொற்கேட்டிடு கோரக்க னெய்த்திராமானந்த சாமிபா
னன்றடைக்கலமெனைக் காக்குதிர் நாதவெனத்தொழு தேத்தலுந்
துன்றருண்மெய்க்கபீர் தேசிகர் துணையடிதாழ்ந்தருள் செய்திரே
லொன்றவக்கோரக்கன் பற்பமா யொழிந்திடச்செய்வனென் றோதலும். (சஅ)

அவிர்மடத்துற்றெனை வென்றிடி லல்லதுசெயமுறு தென்றவு
மெவிதமினிச்செய லாமென வேற்றராமானந்த தேசிகர்
கவினுறுசிர்க்கபீர் தம்புடை கலந்துகையாற்றமு விக்கொடு
குவிமனத்தோய்சிரஞ் சிவியாய்க் குலவுகென்றுசிகள் கூறியே. (சகூ)

குலவுநின்றன்றிறந் தேர்ந்திலேன் கோரக்கனுக்கிளைப் பாயெனச்
சலனமிகுத்திருந் தேனருட் சற்குருபத்தியுண் மேவினர்க்
குலகெவற்றாடரி தானதொன் றுள்ளதென்றேதவுண் டோவென்றார்
புலனுறுமானிடர் வானிடர் பூப்பொழிந்தார்கள்க பீர்மிசை. (ரு0)

அன்னகாலையிலிரா மானந்த ரணைந்துளகோரக்கற் பார்த்துநீ
ரென்னதுசிடனை வெல்லுதி ரெவ்விதத்தேனுமெனச்சொல
வன்னவன்மெய்க்கபீர் தாசரை யாயுளென்னென்னவி னுவிடப்
பன்னருங்கோடியா முருத்திரர் பட்டனரென்முன மாகையால். (ருக)

என்னதொராயுளென் னுற்கணக் கிடமுடியாதெனக் கோரக்கன்
பன்னருந்தடவையான் காசியிற் படர்ந்தனனுன்றனைக் கண்டிலே
னென்னநீநின்னையே கண்டிலா யெனிலெனைக்காண்பதெவ் வாறுகாண்
மன்னருமுலவன் மலமறு மதியுளா ரென்றனைக்காண்பரே. (ருஉ)

என்றுபல்வாதமிட் டீற்றினி லெய்தியகோரக்கன் றோல்வியேற்
றென்றுதன்னுச்சிர மத்திடை யுற்றுககபீரைவெல் வேனெனக்
கன்றுநெஞ்சோடுத வஞ்செய்தான் கவினிராமானந்தர் நற்கபீர்
துன்றுமாணுக்கனு கத்தவந் தொன்றுசெய்தேனெனப் புல்லியே. (ருங)

தந்தைதமாலிட மவரவ தரித்திடுகாதைகள் கேட்டுநின்
விந்தைகொள்பாக்கியமேதகு விண்ணவர்க்கெய்தரு பாக்கிய
முந்தையியற்றிடு மென்றவ மொழிவதன்றன்றெனவோதியே
சிந்தைமகிழ்ந்திருந் திட்டனர் சிலக்கபீர்புக ழோர்ந்தரோ. (ருச)

வேறு

விந்தைதோய்கபீர்தன் மணமுடிந்ததற்பின் விருந்தினுக்கவர்சிறு தந்தை
தந்தைதாய்மனையா தியர்தமையழைத்துத் தம்மையங்கழைத்திடா மையினற்
சிந்தையுணினைத்துத் தாமங்குபுகுங்காற் சேர்ந்துளார்தாம்பசுங் கன்றை
நிந்தைதோய்தரக்கொன் றிடத்துவக்கிடுசீர் நிகரிலார்கண்டுவர்த் தாராய்.

கொன்றிடத்துவக்குங் கிழவனைக்கபீர்தாங் கொடிறுடைதரும்படி புடைக்கத்
துன்றிடுமவன்மூர்ச் சித்துவீழ்ந்திடலுந் துராகதர்மிகுசினஞ் செய்தே
யொன்றியதமது மதசித்தாந்தத்தை யோதிடக்கபீரதை மறுத்து
நன்றியல்பசுங்கன் றின்மிசையவர்தங் நாண்மலர்க்கரத்தினை யமைத்தே. ()

உன்னதுபூர்வ நிலையுரையென்ன வுரைத்தலுங்கொற்றிதன் றலையை
நன்னலக்கபீர்தம் பதத்திடையமைத்து ஞானநீள்சுகப்பிர மமுனி
யின்னவதாரர் கேட்டிரென்சரிதம் யான்முன்னொளோர்மறை யவனுப்
பன்னலர்தினமொன்றினிலிமாசலத்தின் பாலொர்காரியமுறப்படர்ந்தேன்.

அங்குறுமிலேச்சர் பலர்களோர்மானை யதம்புரிந்தன்னதன்றசையைப்
பங்குசெய்துறக்கான் டலுமதன்மீதிற் பற்றமைந்திடலுமென்னறிவு
பொங்குபோதனைகண் மனதுடன்பலவா புகன்றுகொண்டுறவதைத்தெரிந்த
வெங்குணத்தவர்கள்கருணையுற்றங்கே தாவிவேகமற்றிதைக்கொன்றேமென்றே.

மிக்கிரங்கினராய் வேதியரீயுள் விரும்பியபடிநுகரென்றே
புக்கிடுமென்மே லெறிந்துபோந்தனர்யான் பொருவருமருவருப்புடனே
துக்கிதனாகி நிற்குங்கான்மான்றன் றுணையினைக்கொன்றவன்யானென்
றுக்கிரமுடன்கொம் பாற்குத்திவீழ்த்தி யோடியதாற்றிநொந்ததன்பின். ()

நடந்திடச்சத்தி யற்றொருகுகைப்பா னண்ணலுநள்ளிரவூடே
தடந்திகழதனி னின்றொர்மாயோகி சார்ந்தென்மேலுதிரமுற்றிடப்பார்த்
திடங்கொணீயார்நிற் கித்தகுதுயர மெய்துதற்கேதுவேதென்னத்
திடம்பெறுதவர்பா னடந்தவென்சரிதை செப்பவெஞ்சினமவாடைந்தே. ()

பாவிநீகுகையின் மேவிடிலெனக்கும் பாவம்வந்தணைதருமென்ன
மேவியசூலத் தாற்குத்தியென்னை மிக்கசேணிடையெறிதாலும்
வாவியபெருமுட் புதரினுள்வீழ்ந்து வருந்தினனயர்ந்துசீக்கிரத்தென்
ஞவிதீவினைநீங் கிடவருளுதிரென் றறைந்தழுதலுமுனியடைந்தே. (௬௧)

உன்னைநான்முனிந்த தன்மையினின்பா லுற்றபாவத்தினிற்பகுதி
யென்னைவந்தடைந்த தினியுனக்குபாய மிசைக்கின்முற்றும்புகுமென்றே
பொன்னைநேருளத்த ரதையொழித்திடயான் போகுவன்காசியென்றுமினி
நின்னையான்றிரும்பிப் பார்த்திடேனென்று நிகழ்த்துபுவிரைந்துசென்றிட்டார்

விளம்பதுகணத்தில் யானும்வண்காசி விசுவநாதரைத்துதித்தந்தச்
சளம்படுமெய்நீத் திப்பதியிடத்திற் சார்ந்தனன்கொற்றியாயின்றுட்
டுளங்கவின்னவர்கைப் பட்டெனொர்தவத்தாற் றாயநுங்கைபடப்பெற்றேன்
வளங்கொளந்தியத்துந் தெரிசனம்பெறலான் மகத்துவச்சுகமுனிவரனே. ()

மேப்படுபேறெய் தினனதனானீர் மிக்கபாதகர்களுக்குமது
பூம்பதமளித்தி டாதிரென்றேதிப் புயல்கொண்மின்னெனமறைந்திடலுந்
தீம்பர்கள்கபீர்தா சரினுபதேசஞ் சிந்தையினெப்பினரிருந்தா
ராம்பதத்தினிற்ற மால்கபீரெனுந்தன் னருஞ்சுதன்மொழிகொடின்படைந்தான்

இவ்வகையுலக முய்ந்திடத்தோன்று மிணையில்சீர்க்கபீரிராகவன்றன்
செவ்வனசத்தா ளன்புமெய்க்கருணைத் திறமெவர்களுங்கொளப்புரிந்தே
யொவ்வருளாட வியற்றுபசாது சேவைசெய்துற்றிடுநாளி
லெவ்வமில்பொருண்முற் றொழிந்துநெய்தலினாலேற்குமூதியங்கொடுண்டமைந்தார் ()

ஒருதினத்தினில்வத் திரமொன்றும்விற்கா தூண்பெறும்விதியிலராகிப்
பருவரலுடனப் பகலெலாங்கழித்தார் பகருமத்தினத்தினற்பகவன்
பொருவருகபீரைச் சோதனைபுரிவான் பொருந்துநூறடியவராகி
மருவியாமின்று வைகறைமுதலா மனைதொறும்புகுந்திரந்திட்டோம். (௬௩)

புக்கவெந்தமக்கூண் கிடைத்திலதும்பாற் போந்திடிலெய்தலாமென்ன
மக்கள்சாற்றிடக்கேட் டெய்தினம்வல்லே வழங்குதிரெனவழுத்திடலு
மிக்கதம்மனைபாற் சென்றுதாய்தந்தை மிசையவூட்டிடாமையிற்சாலத்
துக்கமெய்திடுநம் பாற்சதசாது தோய்ந்தனரென்புரிவேமால். (சுஎ

இல்லையென்றுரைத்த லெவ்வகைநின்பா லியல்கைவிற்றிடுதியென் றிடுமச்
சொல்லையேற்றவனம் மணியுடைமுன்பே தொலைந்தனநாமமைந்திடுமிவ்
வில்லைவிற்றிடவு மமைதராதடகா யேய்ந்ததாலென்செய்வோமெனுமவ்
வெல்லையிற்சுந்த ராவுளத்திடையோ ரெண்ணமுற்பவித்திடவிசைப்பாள். ()

நாதர்கான்றெருவிற் போந்தொறுமெனையோர் நாய்கன்பார்த்தியல்கண்மீதெறிந்தே
யாதரமுடனேர் தினமென்பானீவந் தணைதியேலளவறுபொருள்கள்
காதலிற்றருவே னென்றனனென்னுங் காதலிமொழிகொடுகபீர்தாம்
போதவுமகிழ்ந்தன் னவனிடமணைந்திப் பொன்னனுளென்மனையாகும். ()

இவளையோர்நாணிற் களிப்பனூறடியா ரினிதுணப்பொருணல்கா யென்ன
வுவகையினவ்வா றளித்தனன்கொடுபோ யுறுபணியொல்லையின்முடித்து
நவமுறமனையை யலங்கரித்தவன்பா னண்ணுபுவிடுதலும்வணிகன்
றவமகிழ்ந்துடனேர் மோகனமாலை தந்திடக்கபீர்மறுத்தோதி. (எ0)

உத்தமசாதுக் களுக்கிலையென்னு துண்டிநல்கிடப்புரிந்திடுநின்
மெய்த்தகைச்செயலுக் கோர்கைமாறறியேன் வேறினியேற்றிடேனென்றிட்
டொத்ததம்மனைபுக் கன்பர்கட்கேவ லுஞற்றுகால்வணிகன்றூளிட்டே
முத்தவாணகைதன் னருகமைதாலு முகுந்தனவ்வூர்த் தலைவனைப்போல். ()

வந்துநின்றடதுன் மார்க்கனேசற்று மதியறுமூர்க்கனேபவத்தின்
முந்துறுபாத்தி ரீகமனஞ்செய் மூடனேகதவினைத்திறவென்
றுந்துறுமொலிகொண் டதட்டினன்கதவை யுதைத்தலுமதிமயங்கினனு
யிந்துநேர்முகச்சுந் தராவைக்கட்டிலின்கீ ழிருந்திடவிசைத்துடன்றிறந்தே ()

பார்த்திடக்கண்டி லான்மறுவலுமைம் பாணமேறுண்டவன்மின்போற்
சீர்த்தியல்சுந்த ராவிடமணுகத் திகழ்ந்தவன்பின்னருமணுகி
யார்த்தியற்கதவை யுடைத்துட்போய்வணிக னவசமுற்றிடும்படிபுடைத்துக்
கூர்த்தியல்விழியாட் கொண்டுகபீர்தங் குளிர்மனைப்பால்விடுத்தகன்று. (எங)

பெருமழையுடன்காற் றியைந்திடப்புரிந்து பிரான்மறைதலுஞ்சுந்தராவுட்
பருவரலடைந்து வணிகனம்பொருட்டிப் படியுறநேர்ந்ததென்றெண்ணித்
திருவனுளமையக் காண்டலுங்கபீருட் சினந்துநிந்தித்தணுகிடலு
மருமலரடியிற் றாழ்ந்தியன்றிட்ட வாறெலாமோதினளிரங்க. (எச)

வினவிடுகபீர்தா மிகுசினங்கொண்டென் வேட்கையார்மனைபிறர்க்கீயிற்
கனதுயரீ தூர்த்தலைவன்றூன்செய்யக் காரணமேதெனவவண்போய்க்
கனமொலித்தென்னத் தண்டினலவனிற் கதவொடித் தென்மனைதனையான்
மனதுகந்துறுவர்த் தகற்களித்திடினீ மறுத்தவற்புடைத்தெனில்லாளை. (எரு)

என்மனைப்பால்விட் டிடவதிகார மேதடாவல்லையெய்தின்றே
னின்மகார்சுற்ற மாயினர்தமையென் னீண்டதண்டாற்கொல்வேனென்ன
மன்மமோர்சிறிது மறிந்திலான்றியங்கி மாதவர்ப்பணிந்தென்மேலென்ன
வன்மம்யானென்று மறிகிலேனென்று னவனுடன் வணிகனின்மருவி. (எசு)

உபசரித்தெழுப்ப வூர்த்தலைவனைக்கண் டடன்வணிகன்மிகநடுங்கி
யபமுறவென்னைக் கொன்றிடமீட்டு மணந்தனையோவெனவயர்ந்தான்
விபரமற்றதுதேர் கபீர்வருமவனை விரைந்தடித்திடப்புகப்பகவன்
விபவமார்கபீரின் னவன்வணிகனைமுன்வெருண்டிடவடித்திலன்யானே. (எஎ)

அடித்தனனென்னை யடித்திடென்றுடன்ற னம்பொன்மாமணிமுடிதாழ்த்தப்
பிடித்ததண்டெறிந்து வணங்கியேத்துபுக பீர்நினேர்திருக்காந்தன்னுற்
றுடித்தயர்ந்திடுமோ றடித்திடவணிகன் றாயமாதவமென்செய்தானின்
றொடித்தடங்காங்கொண் டெனையடித்திடினென்றுரிசறவொழிந்திடுமன்றே.

சுந்தராவினைக்காத் தவள்காத்தினைநின் றாயமெய்க்காங்கொடுபிடித்துச்
சொந்தமார்மனைப்பால் விடுத்தனையந்தத் தோகையாற்றியதவமெளிதோ
வந்தமாருனது வணங்கிடாமுடியுன் னடிமைமுன்றாழ்த்திடப்போமோ
விந்தவாறுனது பேரருட்பேற்றை யெய்தினேற் கேதரிதுளதே. (எகூ)

என்றுபற்பலவாத் துதிசெயப்பகவ னிசைக்குவணிகத்திலாடவர்க
ணன்றுறுமனையைப் பிறர்தொடிற்கொல்வர் நயந்தரீமிலேச்சர்தங்குலத்தி
லொன்றுமாண்டகையாப் பிறந்துகற்பமைந்த வுன்மனைதனைப்பிறர்வீட்டிற்
சென்றுதவினைதா னியப்பொருட்டுன்போற்செகத்துள்யார்புரிந்தனர்மன்னே.

நிறையினில்வடமீ னனையளாயடியார் நிகரினற்பணிசெய்வாடனையிம்
முறையறுசெயல்செய் திடறகாதென்ன மொழிந்திடப்பகவனை நோக்கிக்
குறையுறுநீநா னெனனின்மாயையிடை குப்புறுவார்க்குரித்தன்றே
நிறையுன்ஞானனந் தப்பெருஞ்சேவை நேர்ந்தவர்க்கேதபிமானம். (அக)

அருச்சுனற்குடன்றேன் றினளேமுன்னவன்று னறிதாமற்கொடுத்ததுவு
முருக்குகாமங்கொண் டிடச்சுபத்திரையுல் லாசமாற்றியதுநன்றுகொலோ
பெருக்கநின்செயல்கள் யாரறியாதார் பெரிதுசாதுகட்கன்னமளித்த
வருத்தகன்றனையேன்வீணினிற்புடைத்தென்மாற்றம்பொய்யாக்கினையென்ன

நின்மனைவியைத்தொட் டுயிரொழிவானை நீதியிற்றண்டனைபுரித
றன்மமன்றேநீ யடியவர்க்கன்னந் தந்துமெய்ப்புகழ்பயனடையத்
துன்மதிவணிக னிரயமெய்திடனற் றுணிபுகொலெனனுநின்கமலப்
பொன்மலர்க்கையா லடிபட்டோற்கின்னல் பொருந்துமோபெருந்தவனவனே

ஆயினுமெனது வார்த்தைபொய்த்தொழியா தருளுதியெனக்கபீர்தாச
தோயியல்புறுநின் முத்திகாந்தையினைச் சுகமுறவவற்கருளென்று
தாயினுமினியான் சாற்றுபுமறையத் தவறுசெய்வணிகன்றாழ்ந்தேத்தி
நாயினுங்கடையேற் கருளுதியென்றே நயந்தசுந்தராவையும் வணங்கி, (அச)

என்னையின் றருடாய் கற்பினிற்பொறையி லிணையுனக்கியாவரேயுள்ளா
ரன்னைநின் றனைநோக் கியவெனக்கங்க ளவிந்திலவாச்சரியமரோ
நின்னைநாடியவோர் பாவியேற்கந்த நிமிடத்தினிருமலன்சேவை
தன்னையெய் திடுமா றளித்தனைநின்சீர் சாற்றிமுற்றிடுவ தன்றன்றே. (அரு)

பாவியேன்பிழைக ளுளங்கொளா தன்பிற் பாதுகாத்தருளுதியடியே
னுவியுன்னடைக்க லமெனப்பற்பலவா றழுதுவேண்டலுமகங்கனிந்து
தேவிநீபாம பத்தனுகவெனச் செப்புமனுளனுப்வந்து
மேவியசுதனு மிவர்சருளுகென வேண்டிடக்கபீருளமிரங்கி. (அசு)

தாரகவாக்கி யத்தையன்னவனுத் தலத்தெழுதுபுநிட்காமியனுய்த்
தாரமாமோட்ச வனிதையைக்கூடிச் சுகித்திருந் திடவருள்வழங்கிச்
சேரவன்னவன்றன் னகமயல்களைந்து செய்யதம்மனைபுகவங்க
ளாதாதியரோ டிருந்தருள்பகவ னுண்மலர்ப்பதந்தொழுதானல். (அஎ)

ஒப்பில்சீர்க்கபீர்சென் னியிற்காமமைத்திட் டுற்றவில்லறதருமங்க
டப்பிலநியற்று கின்றசீர்தன்னைத் தரணியோர்க்குணர்த்திடவேண்டித்
துப்பியனின்னில் லாளையேனையற்குத் துணிந்துதந்திடப்புரிந்தவற்கு
மொப்பியென்றரிச னங்கொடுத்தனனின் னுழியமைந்துள்ளபேருவப்பால்

என்றுரைத்துடன்ற மால்சிச்சாபீபி யெனுமிரு முதுகுரவர்களை
நன்றுநீரினியிந் நாடகன்றருங்கா னண்ணிமெய்த்தபம்புரிந்தென்று
ளொன்றுதிரென்று மறைதலுந்தமாறம் முயர்சுதராங்கபீர் தம்மைத்
துன்றுதம்மடிமீ திருத்தியேயளவி றாயபோதனைகளைச்சொல்லி. (அகூ)

வித்தகக்குரவ னன்றியோர்தெய்வம் வேறிலைபன்னவமெனதனுச்
கொத்தவனென்னி லெம்மைவன்கானத் துற்றநுந்தவஞ்செயச்சொலுந்தா
யொத்தவனென்ன வோதிடக்கபீர்பின் னுறுஞ்சீதாராமனைக்கண்டே
சித்தமேன்மகிழ்ந்திப் பகவனையல்லாற் றிருந்துவீடாரளித்திடுவார். (கூ0)

அங்குமிங்கெங்குந் தங்கிடுமிவனை யன்றியோர்பொருள்பிறிதுளதோ
வெங்குவாழ்ந்திடினு மென்னெனுஞ்சுதன்சொல் லேற்றதுநிச்சயமேனுங்
தங்குறுமிகத்துக் கும்பரத்துக்குந் தாரதம்மியம்பெறல்போல
விங்குநாட்டினுக்குங் காட்டுக்கும்பேத மிருப்பதென்றெழுந்துபோகுங்கால்

மைந்தனுங்கபீர்தன் மேற்கொளும்வாஞ்சை மானவேபிதாவுமுற்றிடலாற்
சிந்தனைமகன்மீ துஞ்சடஞ்தவமீ தினுஞ்செல்பான்மையிற்பையவேக
வந்தமார்கபீர்பின் னேடுபுதழுவி யழச்சிச்சாபீபியைமனைவி
சொந்தமாத்தழுவி யழப்பகவானுந் தாயலட்சுமியுமம்முறையே. (கூஉ)

இனப்படவழக்கான் டலுஞ்சராசரங்க ளியாவுங்கண்ணீர்விடுத்திரங்க
வனப்பமையீச ருமையுடனங்ஙன் மருவிமாயாவென்ன மாய
மனப்படுதுயர மிவர்க்களித்துள்ள மயங்கியேபிரங்கிடப்புரிந்து
கனப்படுநீரு மிரங்கியதன்றிக் காசிமுற்றவுங்கலக்கினிரால். (கூங)

என்றுபற்பல வாவிலக்கவும்பேசா திருக்குமாயவன் றனேவிலக்கி
நன்று நிராசை யிற்சிறந்திட்ட ஞானமார்சாதுவாரீயு
மொன்றுறுதாய்தந் தையர்க்கிரங்கிடுத லுசிதமோநின்னுடன்பகவன்
றுன்றுறநீட்டித் தழுதனனெமக்காச் சோபநீங்குதியெனச்சொன்னுன். ()

விழிகளைத்திறந்து நோக்கலுங்கபீர்தம் மிக்கதாய்தந்தையின்மையினு
லொழிவருந்துயர்கொண் டழுதிடப்பகவ னுன்னிருமுதுகுரவர்கடாம்
பொழிமதுக்கானத் தமைந்திலருபர்வான் பொருந்தினர்தாதைநான்ருய்பொன்
கழிதருமவரை மானிடரென்னக் கருதலேநினைவளர்த்திடவே. (சுரு)

முன்னமைந்தனமின் னமுங்தெரியென்று முராரிபொன்றந்தைதாயாகுங்
கொன்னருட்சேவை வழங்கிமின்னெனத்தங் கோலநீத்திடக்கபீர்தாச
ரன்னவாகனன்ருய் தந்தைநந்தமக்கீண் டமைந்தனரவர்களைநாடி
யின்னன்மிக்கிரங்கி வாடியதவிச்சை யென்றுளத்துக்கமுற்ருருவி. (சுசு)

விந்தைதோய்விசுவே சரைவிசாலாட்சி தனைவிரைப்பதத்துணை தொழுதே
சந்தைநேருலக வாழ்க்கைமெய்யெனக்கொ டாரணிமாந்தரேபோலத்
தந்தைதாய்பந்தத் தழுந்துவேன்றனக்குந் தரிசனமளித்தனிரென்னச்
சிந்தையாரழல்சேர் மெழுகெனவுருகிச் செழுந்துதிபலமொழிந்திடலும். (சுஎ)

அம்மையப்பனும்ப லாசிகள்கூறி யன்பநீசிவன்முத்திகொடே
செம்மைசான்ஞான திட்டிபெற்ருழிவில் சிற்சுகோததியின்மூழ்குதியென்
றம்மைதோய்மின்னின் மறைந்தனர்பின்னு ளருளிராமானந்தகுரவன்
மெய்ம்மைநற்சேவை யகம்புறத்தினுமே விரவியானந்தமுற்றிருந்தார். (சுஅ)

வேறு

இன்னவாறிய ஞளினிற்சுந்தரா வெழின்மணிவயிற்றின்க
ணன்னலம்பெறு நாரதனமிசமார் நந்தனனுதித்திட்டா
னன்னவன்வய தேழுறத்தந்தையி னடியிணைதொழுதேத்திப்
பன்னரும்பல தீர்த்தகேத்திரந்தொழப் பரிந்தனன்யானென்னு. (சுசு)

வேண்டலுங்கபீர் தாசர்தாமுவகையுண் மேவியிச்சிறுபோதி
னீண்டவன்றலந் தீர்த்தங்காண்டருநசை நெஞ்சமைந்திடுநின்னை
மாண்டகுஞ்சுத னெனப்பெறலென்றவ மாட்சியென்றுரைத்தன்பாற்
கூண்டசாதுக்க ளுடன்சென்றுசுகமுடன் குலவுதியிவணென்ன. (க00)

முதிருட்பொலி தாயடிவணங்கினன் மொழிந்திடப்பிறிவாற்ரு
விதியினுற்சிறு துயரமுமைந்தன்றன் விவேகத்தாலுவப்புங்கொண்
டதிமகிழ்ச்சியின் முத்தமிட்டுச்சிமோந் தனுப்பலுமதிர்கங்கை
நதியிடத்தணைந் தனன்பலதோத்திர நவிற்றினன்கடலேபோல். (க0க)

ஆழ்ந்தகங்கையி லிறங்கினன்கண்டவ ரடகமால்கங்கைக்கண்
வீழ்ந்தபேர்கண்மீள் கின்றதுசாலவும் விம்மிதமோடத்திற்
சூழ்ந்துளோர்கள்போ லேறினைசெல்லின்றேறற் சுரநதிக்கிரையாவாய்
வாழ்ந்தநின்றனித் தாதையும்பழியெய்து மைந்தனுமுன்னுலே. (க0உ)

எனப்பலோர்கள்சாற் றிடுமொழிதன்மனத் தெண்ணிடாதன்போடும்
வனப்பமைந்தகங் கையைத்துதித்தோடு வாய்ந்தயர்வுற்றேனாய்
மனத்தகத்தினை டிடுதனுங்கங்கைமுன் வந்தென்கைகளின்மேனின்
வனப்பதங்கள்வைத் தேகுகென்றனளுடன் வைத்துமற்றவர்க்கோதும். ()

கங்கையின்றுணை கொண்டுதோயக்கரை காண்பனென்றுட்போய்ப்பின்
சங்கைகொண்டுமீண் டிடிற்கபீர்தாசர்தந் தனயன்யானுவேனே
வங்கைதாங்கிடு மன்னையாங்கங்கைதன் னருட்டிறமறியாதே
மங்கையத்தர்கட் கல்லவோவோடங்கள் வாய்ந்தவாறுணர்வீரால். (கOச)

என்றுகூறுபு கமானதிதீரமே லெய்தினன்செல்போதி
னன்றுசாதுவே டங்கொடுமாலரு ளாதாதியர்சூழ
வொன்றுமற்றவன் புடைகலங்தேகிநீ யுவந்துசெல்வதெங்கென்றான்
பொன்றுணைப்பதந் தாழ்ந்தரித்துவாரமுற் புண்ணியத்தலமெய்தி. (கOரு)

பகவன்றன்னுட னேயவனின்றிய பரமபத்தர்கள்பாதந்
தகவணங்கிமெய்ப் பரிசுத்தனுகவுட் டழைத்தவெண்ணத்தோடு
மகல்கின்றேனெனக் கேட்டருள்பகவன்மெய் யன்பரோடறைகின்று
னிகழுமிச்சிறு வனைத்தெரிவீர்கள்கொ னீயிர்களென்றேதும். (கOசு)

இன்னவன்மிலேச் சரிலிந்துக்களிற்புகா திரண்டுமினடுநாட
னென்னவாழ்கபீர் புத்திரனவன்றனை யீன்றவர்மனையாவார்
மன்னலாகுமி லேச்சராசானிரா மானந்தன்மதமிந்து
துன்னலானவே டந்துருக்கொழுக்கமோ தூயவேதியர்பண்பால். (கOஎ)

பகர்வதுண்மையார் பிரமஞானஞ்செயல் பகவன்பாததியானம்
புகலமைந்தசீ டர்க்குரைத்திடுவது பொருவிலத்துவிதந்தன்
னகமமைந்திட றுவிதமிவ்வாறென்றி லமைதராப்பிரட்டற்குத்
தகவுதித்திடு சேயிவன்பிள்ளைமை சாருமித்ததியின்கண். (கOஅ)

தேயமெங்கணுஞ் சென்றுவாதிடுநரைச்செயித்தத்துவிதந்தன்னை
நேயமோடுதா பனம்புரிந்திடத்தனு னினைந்தனன்படர்கின்றான்
மாயமாமிது செயல்கலிகாலத்தின் மகிமையன்றேவென்றே
மாயனேதுபு நகைத்திடக்கமால்சின மருவினேனெனச்சொல்வான். (கOசு)

கழறுநம்மொழி யினமுண்மையொடுபரி காசமுங்கலந்துள்ள
கிழமையுற்றவெங் கடவுள்போலெங்கட்குங் கிளத்துமந்நியமி
யழகுசான்மச்ச கந்தியின்குமாரனு யவிர்வியாசன்சேய்தன்
பழமைசான்மனை யிந்திரற்கூடுபு பயந்தவர்ச்சுனனுக்கு. (ககO)

ஆயர்தங்குலத் துதித்தவெம்பகவன்பெண் ணளித்தனனியல்சாதி
மேயபேதமுள் ளாரெனிற்கொடுப்பர்கொ லெனவினவியகண்ண
னேயசத்திரி யன்விந்துமச்சத்து னோர்ந்துமச்சகந்திப்பே
ரேயமாதுபின் வலைஞர்கள்வளர்த்தலா லிழிகுலத்தவளாமோ. (கக

வாய்ந்தசீர்வசு தேவர்சேயாங்கண்ணன் வளர்ந்ததால்வளமுல்லை
தோய்ந்தமாக்கள்சே யேகொலென்றிடக்கமால் சூலபாணியினம்சு
மேய்ந்தவான்சுகப் பிரமமன்றேவெந்தை யிரம்பையென்னனையன்றே
போந்தயான்சிவ சுப்பிரமண்ணியன் புனிதமார்க்லையன்றே. (ககஉ)

கோலச்சுந்தரி தனையபிமன்னற்குக் கூட்டியேகொடுத்திட்ட
நீலக்கண்ணனீ யல்லையோவிவரெலா நிகழுநாரதராதிச்
சீலத்தாபத ரல்லரோவயன்றருந் தெண்டிரைக்கடலாடை
ஞாலப்பாவையை மணம்புணருன்செய னவின்றுமுற்றுவதேயோ. (ககங)

கபடநாடக னருநின்மகிமையைக் காண்பவரெவரென்ன
விபரமாயெடுத் தெடுத்துரைக்கக்கண்ணன் மிகுமகிழ்வமைந்தோனு
விபவமார்கரு டன்மிசைசானகி,வியனிலக்குவனுதி
சுபமிகக்குல வும்பெருங்காட்சியைத் தூயனேர்பெறநல்கி. (ககச)

விந்தைசால்கமால் சிரமிசைதன்கர மிளிர்தரும்படிவைத்தே
தந்தைதேசிக னயவிர்கந்தனிற்றழைத்தரின்றந்தைக்குஞ்
சிந்தைதேர்தரும் படியுபதேசிக்குந் திறலுனக்களித்திட்டே
னிந்தைதோய்புறச் சமயவாதிகடமை நீசெயத்துடன்வென்றே. (ககரு)

சிலவத்துவி தத்தினைநிலைபெறச் செய்தியென்றேதித்தன்
கோலநீத்தலுங் கமாலளவறுதலங் குறுகியாரையும்வென்றே
மாலமைந்தபஃ றலந்தொழுதேத்துபு வாரணசியைச்சார
வேலவேவரும் வழியிலோர்பட்டினத் தெய்தவவ்வூர்மாந்தர். (ககசு)

அளவறக்கமா லினைப்புகழ்ந்தவனிட மணைதல்கண்டொருநாய்க
னிளவலானக மாலினுலபீட்டங்கள் யாவர்களெவைபெற்று
ருளதெனிற்பகர் மின்னெனவவரிட முற்றவர்க்கரிதுண்டோ
வுளமிசைச்சிறி தையமுண்டேலுனக் குறுகவெம்முடனென்றூர். (ககஎ)

எனக்கமைந்தநோய் தீர்க்கிற்பொன்னுயிரம் பெறுமிணையில்பச்சை
மனக்களிப்புட னீவன்யானென்னவம் மாத்திரத்ததுமாற
வனப்பமைந்தபொற் றட்டின்மற்றதைவைத்து வண்கமான்முன்னேகித்
தனக்குளத்தடங் காவுவப்புடனடி தாழ்ந்தந்தவணிகன்றூன். (ககஅ)

பழுதிலிப்புதல் வனைப்பெற்றூரல்லரோ பாக்கியத்தவரென்ன
வெழுதுமோவியம்போனின்றுநோக்குவா னியல்பினையிவனோர்ந்து
செழுமைசால்வருத் தகநின்னைப் நீங்கிற்றே சேயனென்றெனைக்கொள்ளின்
வழுவின்மெய்ப்பயன் வாய்ந்திடாதோவென மதிமறந்தவனுகி. (ககசு)

உற்றவோகையிற் றழுவினன்முத்தின னுச்சிமோந்தடியேன்றன்
கொற்றவிற்கண்மே வுதிரெனவெய்துபு கூறுவன்கனவானே
பெற்றதாதைநிற் கெனச்சிலபச்சைகள் பிறங்குமிவ்விடைவைத்தான்
மற்றவற்றைத்தொட்டெடுத்தியென்றிடக்கண்டான் மகிழ்வொடுதுயர்கொள்ள,

பச்சைகிட்டலி னுவகையுந்தனக்கியற் பானல்வாய்ச்சேய்மேற்கொ
ளிச்சைபாற்றுய ரமும்பெற்ருன்வணிகனென் றெழிற்கமாலெனுமோலோன்
விச்சையார்சிறு சேயுருக்கொண்டுவாய் விண்டழுதிடநாய்கன்
* மிச்சையன்புதை யற்கண்டாங்குவந்துதன் மென்கரத்திடையேந்தி. (கஉக)

அலகிலார்வமிக் கில்லிடத்தளித்தமு தருத்துகென்ருனன்னு
ளிலகுபூண்முலே சுரந்தளித்தனள்கண்டார் யாவரும்வியந்தார்ப்ப
மலடராகினுர் விரும்பிடப்பலபல வடிவமாயிலகுற்றே
சலனமாற்றினன் காசிக்கேகிடும்படி தன்னுளங்கொடுசென்ருன். (கஉஉ)

வருத்தகன்பிறி வாற்றலன்வருந்தக ளுகவக்கமால்கண்டு
திருத்தகுஞ்சிறு பாலனுயுன்னிடந் திகழ்ந்துநீயழலாமோ
கருத்தமைந்தெனே டுறுதியேலென்கலே கலந்தவற்காப்பார்யார்
திருத்தமாரெனேர் மொழிமறுக்கேலெனத் திகழ்ந்தபச்சையைநல்க. (கஉ௩)

வேண்டிலேனென வெறுத்தனன்பின்னர்போய் விளங்குமுத்தரியத்தி
னீண்டிருந்தவோர் பான்முடிந்திட்டபின் னிகழ்விடைபெற்றிட்டான்
காண்டிலான்கமா லதிவிரைவாய்மனைக் கண்ணுறக்கபீர்கண்டே
யேண்டிகழ்ந்தபா லனேத்தழுவினர்முடி யியைந்தபச்சையைப்பார்த்தே. ()

நடுநடுங்கினர் பூசைசெய்வீட்டிடை ராகவன்றனைநோக்கித்
தொடுமணற்கொள்கே ணியிற்கண்ணீர்பெருகிடத் துக்கமிக்கழக்கண்டு
படுசெயற்றெரி யார்கமால்சுந்தரா பரிவுடனழராம
னெடுவைதேகிதம் பியர்கண்மூவருமவ ருடற்றழுவினர்மாதோ. (கஉ௫)

செயலிதோர்ந்திரா மானந்தரக்கணஞ்சிடர்களுடன்மேவி
நயமுறக்கபீர் கதவடைத்திரங்கலென் ளுனழைத்ததும்வாராய்
வியனிதென்றலு முள்ளழைத்தேகினர் மிக்கவன்பசப்போத
நயனநீர்பெரு கிடவிராமானந்தர் நால்வரைத்தொழுதேத்தி. (கஉ௬)

இன்றுநானுமைக் காணுறப்பாக்கிய மெதுசெய்தேனெனப்போற்றிக்
கன்றுநெஞ்சராய்க் கபீருடனிரழுங் காரணமேதென்ன
நன்றுகாம்புனே பதக்கத்திற்பதித்திட நாயகமாம்பச்சை
யொன்றுமுருதுவாஞ் சித்திருந்தனன்கமா லுற்றயாத்திரைபோங்கால். (கஉஎ)

சொல்லியானனுப் பிடலின்மற்றதுகொடு துதைந்தனன்கபீர்கண்டே
செல்லிசைந்தபே ரொலிகொடுகட்புனல் சிந்தினனழயாமும்
புல்லியேயிரங் கினமிந்தப்பச்சையைப் பூணிடத்தணிவீரே
னல்லிரென்றுநுஞ் ஞாபகமென்னுளே நண்ணுமென்றிடுமெல்லே. (கஉஅ)

விரிபுகழ்க்கபீர் குரவர்க்குக்காட்டியிவ் வியன்கற்கொண்டுறலான்மால்
பரிகசிக்கின்ற னன்கமாலினையிவன் பழுதில்சிரிராமன்றன்
பெரியமந்திரம் விற்றிதைக்கொணர்ந்தனன் பித்தனிங்கிவன்றன்னைப்
பரிவிலாதில்விட் டகற்றுதியெனக்கபீர் பாரியினிடமோத. (கஉ௯)

---

* மிச்சையன்—தரித்திரன்.

வினவிடுங்கமா லெந்தைநுஞ்சொன்மிகு விந்தையிக்கற்றன்னே
யெனதகத்தவா விக்கொணர்ந்தனனென்றுள் ளௌளளவெண்ணுதிர்
மனவிராகமிக் கேய்ந்தநானிதைச்சற்று மதித்திடேன்வணிகன்முன்
றனதவாவினின் முடிந்திருப்பானிதாற் சம்பவமிஃதாய்த்தால். (கங0)

என்றுவர்த்தக னாரடைந்துறுசெய விசைத்தவன்பாலீந்திட்
டொன்றுதந்தைபாற் பச்சையீந்தடைந்தன னுந்துயர்தவிர்கென்னப்
பொன்றுதைந்தமார் பினனெனேர்திருத்தியிற் போந்தநும்மைவராக
நன்றுசால்வதோ வெனக்கபீர்நசைத்திரே னுனளிக்குவனென்றூர். (கஙக)

எனக்குவேண்டிய திலைநுமைச்சோதிப்பா னிசைத்தனனுமதொப்பின்
மனக்கண்மேவிய பத்தியேயின்பென்று மறைந்துபோயினனக்கா
லினப்படும்பன்மா ணுக்கரோடிராமானந் தப்பெயரிசைநாதர்
கனக்கும்விம்மிதஞ் சால்கபீர்தாசரிற் காட்சிமெச்சுபுசென்றூர். (கஙஉ)

மற்றக்காலைக பீசிறந்திட்டதோர் மகனுயிர்த்ததுபோல
முற்றகக்களிப் படைந்துனேநான்பெற முயன்றிடுந்தவமேதென்
றுற்றநற்றிருத் தொண்டர்தஞ்சேவைசெய் தொருகுறையில்லாராய்த்
துற்றவண்டங்க ளளந்தமாலிணையடி துதித்துவாழ்ந்தனர்மாதோ. (கஙங)

வேறு

ஓர்தினத்திற்கபீர்தாச ராடைவிற்பானங்காடி யுறவப்போதிற்
கார்வண்ணன்கிழமறையோன் வடிவுகொடுமிகுநடுக்கங் கலந்தானுகி
நார்மிகுமெய்ப்பத்தமழைக் காலத்திலுடையிலதியா னலிந்தேனென்றன்
சோர்வகலநல்குதியென் றலுந்தாசிரக்கமிகத் தோய்ந்தாராகி. (கஙச)

இன்னவர்க்கியாதிருப்ப தெவ்வாறீந்திடிற்பசிமிக் கில்லாள்சேயு
மின்னலடைவார்பாதி யீவேனென்றூர்கிழித்தற் கிசையவுற்றூ
னன்னலவத்திரம்பாதி போதாதெற்கறத்தரிவி ராகவன்றன்
மன்னருணிற்குண்டாமற் றதுகுறித்துநீதுயர மருவேலென்றுன். (கஙரு)

வினவுகபீர்மகிழ்ந்துமறை யோர்க்களித்துவறிதேதம் வீட்டிற்கேக
மனதிசையாதங்காடிப் பாலமைந்தார்மனைவிசுதர் வரவுநோக்கிக்
கனதுயர்கொண்டறப்பசியால் வாடியெழுந்திடலாற்றூர் கலங்கியுற்றூர்
தினமொருமூன்றகன்றனவக் காற்பத்தவற்சலனுஞ் சீதாராமன். (கஙசு)

பீதகஞ்சற்றங்கைகொடோர் பத்தன்வடிவுடன்றிகழ்ந்து பிறங்கிப்பொன்னே
யாதரஞ்சால்கபீர்க்களித்தி யெனவவன்பத்தினிகரத்தி லளித்தொளித்தான்
காதலனேடப்பொருள்கோண் டுணவமைத்துண்டிருந்தாளக் காலங்காடி
மீதமைபுங்கபீர்தாசர் தமையவண்மேவினர்வலித்து வீட்டிலுய்த்தார். (கஙஎ)

மனைவிமகனிற்புடையின் பமைந்துறக்காண்டலுமுவகை மருவிவாழ
வெனைநடந்தசெயலென்னவினவி மனைசொலக்கேட்டுள்ளிறும்பூதெய்திச்
சினைமுகினேர்கருணைகொளென் சீராமசந்திரன்றன் செயலேயாகு
மனையனைநீர்கண்கொடுகாண் டிடும்பாக்கியம்படைத்தி ரரியீரென்ன. (கஙஅ)

சிராமசந்திரனல் கிடும்பொருளுமேயுன்னா றிறமன்றென்றே
தாராளமுடனதிதி பத்தரினங்கட்களிக்குந் ததியில்யாரு
மோராளமானபொருள் கபீர்தாசர்க்கிராகவன்ருனீகின்ருனச்
சொல்வந்தவர்வேண்ட லளிக்கின்ருரவரென்னச் செப்பக்கேட்டே. (கஙௌ

அலகிலடியவரணையக் காண்டலுங்கபீர்தாச ரவருளெல்லா
மிலகுமந்தரி யாமியாய்ச் சிராமசந்திரனே யிருக்கின்ருனென்
றுலவில்பரிவோடவரைப் பூசனைசெய்துறப்பொருண்முற் ருெழிந்ததக்கா
னிலவுதமக்குண்டியில தயரோர்காண்மனையிலன்பர் நிறையக்கண்டே. (கச0)

யாதினிச்செய்வோமென்று கபீர்தாசரொளித்திடலா லெய்தினோர்க
டிதிலன்பர்மனைபுகுந்து வறிதேகுஞ் செயல்சகியான் சிராமன்ரு
னீதிபொலிகபீர்தாசர் திருவுருவங்கொண்டளவி னிதிகைக்கொண்டு
போதியவாறளித்தனுப்பிப்பின்பவர்பான்மறையவன்போற்போந்து சொல்வான்.()

வடகபீரென்னேனீ யொளித்துற்ருய்நின்சுதன்ரு னெய்தினோர்கட்
காடகமாதியவளித்துற் ருனின்னிற்பத்தியகத் தமைந்துள்ளானச்
சேடனிகர்மதியுடையாற் குன்னைப்போலொளிக்கும்விதி சிரத்திலில்லை
வீடடைதியெனக்கபீர் தாசர்மனத்திலச்சைகொடின் மேவினராய். (கசஉ)

அருந்தவச்சேய்தனைவாரி யெடுத்துமடிமீதிலமைத் தகத்துளார்வம்
பொருந்தியென்னோர்குலத்தைவிளக் கிடவுதித்தமணிவிளக்கே புகலுமென்கண்
விருந்தனையதன்னியனே நீயன்றேபாக்கியவான் மெய்மைப்பத்தர்
விருந்தணையப்புறத்திலொளிப் பேற்கொருநற்சுதனுகி விளங்குற்ருயால். ()

என்றுபலபடச்சுதனைப் புகழ்ந்தருட்சிரிராகவன்ருளிதயத்தெண்ணி
நன்றுதுதித்தானந்தத் தாடியுன்மத்தனெனிகர்த்து நண்ணினர்பின்
னென்றுபலர்களும்புகழப் பத்தர்சிகாமணியாகி யுலப்பிலின்பந்
துன்றுமிராகவன்புகழே பாடியுலகவிசாரந் தோயாதுற்ருர். (கசச)

ஒப்பில்கபீர்தாசர்சங்கி தத்தினிபுணத்துவமிக் குடையராகப்
பப்பியற்சிர்க்காசிநக ரத்தமையும்வேசையர்பற் பலருந்தாசர்
விப்பிரமமனையணைந்து பாடிடக்கபீரவர்த மென்கைபற்றித்
தப்பிலருளிராகவன்சீர் பாடியாடுந்திறத்தைச் சார்வார்கண்டே. (கசரு)

பித்தனைந்துவிட்டதிவற் கெனவெறுத்தார்துர்ச்சனர்கள் பெரிதுநிந்தித்
தத்தவர்தம்மனைக்கொருவ ரணுகாராய்மன்னனிட மறிவித்தார்க
ளொத்தசெயலுணர்ந்துகபீர் தாசர்மின்னுரொடுநிருப னுறையுளெய்த
வத்தகுசிருணர்ந்தரசன் பிராந்தனுக்கபீர்தாச னெனத்திட்டானே. (கசசு)

என்னவுரைத்தவராடல் பாடல்கள்கண்டிருந்தானவ் வேல்வைதன்னின்
மன்னருட்சிர்கபீர்தாசர் சிறிதுவறிதவணின்று மலர்க்கைகொண்டே
யின்னலறப்புனல்கொடுபார் மேற்றெளிக்கமன்னனகைத் தேகபீர்நீ
யென்னபுரிந்தனையென்ன வின்னசெயனீயுணர வெண்ணங்கொண்டால். ()

செகநா தத்தினுக்கோர்தூ தனையனுப்பித்தேர் தியென்று செப்பியே தம்
மகமேவமன்னன்விரைந் தாளனுப்பித்தேர்தரவாண் டருச்சகன்றான்
பகவானுக்கமுதமைக்கு மேல்வையுலேர் தாண்மேற் படிந்துசோரச்
சுகமேவக்கபீர்தாச ரடைந்ததனைத்தீர்த்தருள்சீர் செப்பவோர்ந்து. (கசஅ)

முடங்கலொன்றுகொண்டணையப் பார்த்துமன்னன்விம்மிதனுய்முதவரோடு
மடங்கனிகர்கபீர்தாசர் பெருமையுரைத்துடனவர்தம் மனையின்மேவப்
புடங்கலந்தபொன்னிகர்நெஞ் சத்தரிறைவன்மனைப்பாற் போதக்கண்டே
யடங்கலர்க்கேறனையாயீண் டணைந்ததென்னீயழைத்திடில்யா னடைந்திடேனே

யானுனதுதாசனன்றோ வென்றிடமன்னவன்பயமிக் கிறைஞ்சியேத்தி
வேனுறுமெய்ப்பத்தர்சிகா மணியாநும்பெருமையுணர் விவேகமில்லேன்
பானுநிகர்மெஞ்ஞானத் திருமைப்பிராந்தனை னப் பரிகசித்தே
நானுவல்குற்றம்பொறுப்பீ ரெப்பொருள்வேண்டினுநல்கு வேனென்றேத.

மிக்ககபீர்சாற்றுவர்நீ யார்நானுர்பொருளென்ன விளம்பலென்ன
புக்கதொர்சீவனமென்ப தென்னபிறப்போடிறப்பாப் புகல்வதென்ன
தக்கவிவற்றினையானென் னவிச்சைபினுற்றேர்ந்தில்லேன்சாற்றுமஃதா
லொக்கவொன்றிலிச்சையிலேன் பிரபஞ்சவிசித்திரநீ யுய்த்துள்ளோராய்.

தனந்தேடிவைத்ததனைக் காத்திருப்பாரிறக்கின்றார் சற்றுமஃதை
மனந்தேர்கிலாதுபக வனைத்துதிப்பார்பிரளயத்து மடிகிலாரிக்
கனந்தேர்யானதையாசிக் கின்றிலன்வேண்டுநர்க்கீதி களிப்பினென்ன
வினந்தேரச்சாற்றிடமன் வணங்கியரண்மனைமேவி யிசைக்கின்றானல். ()

ஞானமலிகபீர்தாசர் நான்வணங்குந்தகையுடையர் நவிலன்னோரை
யீனமுறவிகழ்வாரென் னிகலவர்மற்றவர்த்தண்ட மியற்றுவேனென்
றானபலர்களுமறியப் பிரசித்தப்படுத்தலினு ரமைந்தாரியாரு
மேனலமெய்தினர்க்கன்ப ராய்விளங்கியிகபரச்சீர் மேவினரால். (கரு௩)

வேறு

இன்னணஞ்சின்னுட் சென்றருட்கபீர்தா மினியபாகவதர்களுடனே
நன்னலத்தலசஞ் சாரஞ்செய்வார்மு னன்மதுராபுரிமேவிப்
பின்னரத்தினகற் புரத்தமைந்தவிந்தர் பெரிதுவாழ்டல்கியிலெய்த
மன்னகரதின்மே வினர்கபீர்தாசர் மருவல்கண்டகம்பொறுதவராய். (கருச)

தங்குலத்திறைவன் பாலடைந்தேகஞ் சாதியிற்றேன்றினனொருவ
னிங்குவைணவவே டத்துடனுற்ற னியாரையும்வஞ்சனைபுரிவான்
றங்குமவ்வினத்தோ டடைந்தனனென்னச் சாற்றலுஞ்சீற்றமுட்பொங்கி
வெங்குணத்தவன்சே வகருடனவனை விளித்திரீண்டெனவனுப்புதலும். ()

சென்றவர்கபீர்பா னினையழைத்தறமன் செலுத்தினனணைந்திடாயாயிற்
கன்றலுற்றிடக்கட் டுபுவருகென்னக் கழறினனெனவவர்நகைத்து
மன்றவங்கணைந்து கட்டுதிரிங்கு வறிதழைத்தேகுதிரென்றே
மன்றழையவைமுன் னணைந்தனர்நிற்ப மருவினேர்வணங்குதியென்றார். ()

தேங்கருட்டாசர் சிறிதுளத்தஞ்சார் சிரித்துநின்றன்னவன்பாவ
னீங்களார்வணக்க மென்பதென்னீயிர் நிகழ்த்தலொன்றறிகிலனென்னப்
பாங்கமைமன்னன் சினந்திவன்றன்னைப் பலங்கொள்சங்கிலிதனிற்பிணித்தே
யீங்கமைகங்கைப் புனலிலாழ்த்துதிரென் றியம்பலுமியற்றினர்கரையில். ()

நின்றிடக்கண்டா ரிந்திரசால நிறைவுபெற்றவனிவன்முன்மிக்
கொன்றியமந்தி ரவாதியாதலினு லுடன்கரையெய்தினனென்னச்
சென்றிறைக்கிசைப்ப வங்கியிலிடுமா செப்பினனவ்வணம்புரியத்
துன்றியவங்கி சாம்பராயினபின் சுகமுடனிருந்திடக்கண்டார். (கருஅ)

அக்கினித்தம்ப மறிவன்மற்றதனு லாவிபோந்திலனெனவரசன்
சக்கினிற்பொறிசிந் திடச்சினந்தானைத் தாளிடறிடவிடுமென்னப்
புக்கினரியற்ற யானைபாகருடன் புன்கணுற்றோடிடத்தாச
ருக்கிரச்சிங்க வுருவுடனமைந்தா ருணர்ந்தவர்யாருமோடினரால். (கருகூ)

செயலிதுகண்ட மன்னவனஞ்சித் தெண்டனிட்டென்பிழைபொறுத்துத்
தயவுடன்காப்பீ ரென்னநீயெனக்கென் றவறிழைத்தனையெதைப்பொறுத்தல்
வயமுலாம்வடிவே லிறைவவென்றிடுகான் மன்னவன்சிலையெனநிற்ப
வியனிலாந்தாச ரன்பர்களுடனே மேவினர்காசிமாநகரம். (கசூ0)

மேவினர்மனைவி மைந்தனோடிரிதாண் மிகத்துதித்தன்பர்பூசனைசெய்
தோவிலின்புடன்வாழ்நாளின்மெய்க்கபீர்தமுளத்தமையொப்பில்பேரன்பைப்
பூவில்வாழ்பவரார்க் கும்புலப்படுத்தப் புந்திகொண்டரிவைகுந்தத்திற்
றூவின்மெய்ப்புகழோ டமையுநாரதனுத் தவன்பிரகலாதனுதியரை. (கசூக)

விளித்துநாமோர்கா ரியநிமித்தம்பூ மிசைநராயடைதுமெனக்
களித்துமற்றவரவ் வாறுபின்றெடரக் கையினில்வீணையாதியகொண்
டளித்தகையன்ப ரெனக்கபீர்மனைப்பா லர்த்தயாமத்தினிலணைந்து
வெளித்தலைவாயி னின்றுகபீரை விளித்திங்ஙன்விளம்பிடுகின்றார். (கசூஉ)

அன்பயாமதிதூ ரத்திருந்தணைந்தோ மறப்பசித்துற்றனமைதெந்
துன்பநீங்கிடவூ ணளித்தியின்றேன்மெய் துறத்தனிச்சயமெனவோத
வின்பமார்கபீரின் னவர்க்கிடமனைக்க ணேதுணவுளதெனக்கேட்டார்
மின்பயிலிடையா ளிலையெனத்தாசர் விரைவின்மைந்தன்றனைவிளித்தே. ()

சம்பவமுழுது முரைத்திடமைந்தன் சார்ந்துளார்பலர்க்குமிவ்விரவின்
மொய்ம்பமைதரவூ ணளித்திடநம்மான் முடியுமோவாயினுமிறைவன்
செம்பதுமத்தாட் டுதித்துவீதியிடை சென்றுநோக்குதுமெனவுள்ளத்
தெம்பமைந்திலைத்தா ளங்கொடுபாடித் தெருவிடையுலவினர்மன்னே. (கசூச)

நள்ளிரவான பான்மையின்யாரு நண்ணிலரேதுசெய்துமென
வொள்ளியர்மகனே டுசாவிடுமெல்லை யுரைக்குவனம்மதுவிழிமுன்
வெள்ளிவெற்பென்ன விளங்குமிம்மனைதான் மிக்கசெல்வங்கொளோர்வணிக
னள்ளியதிதனிற் சுரங்கம்வைத்துள்ள நகைத்தலாம்பொருள்கொள்வோமன்றி

உபாயமற்ருென்று முணர்கிலேனென்னவோ துமைந்தன்சொல்கேட்டருளார்
சுபாவமார்கபீரந் தோகளவென்னச் சொல்லினும்பாவமேல்யாமிவ்
விபாவரியிடத்தெவ் வகைபுரிவதென விளம்புவன்மைந்தனம்பொருட்டா
லபாயவத்தொழில்செய் திடிற்பவமன்பர்க் காக்கிடிலனுகிடாதென்ருன்.

தாசர்நீசென்றுட் சாதனமெடுத்துச் சார்தரில்வணிகன்றண்டிக்கி
னேசமார்சிறுவ வேதுசெய் திடுவை நிகழ்த்தெனமற்றதுகுறித்துட்
பாசமோர்சிறிது மெனக்கிலையமைந்த பத்தர்கள்பசியையெவ்விதத்து
மோசனம்புரிவாம் பின்னரெவ்வாறு முடியினுமலமெனமொழிந்தான். (கசுஎ)

வினவியதாச ரலகிலாவின்ப வேலையின் மூழ்கிநின்ஞெத்த
வனகர்களுலகில் யாருளார்நின்னை யருமையார்மைந்தனுக்கொண்டே
னெனதுபாக்கியம்பாக் கியமெனுந்தாதை யிருபதந்தொழுதுகைத்தாளந்
தனதுகைக்கொண்டு சுரங்கமுண்டாக்கித் தானுழைந்துறும்பொருள்கவர்ந்தே

தந்தைதன்கரத்தி லளித்திடச்சாலுஞ் சாலுமென்றனன்வணிகன்பால்
விந்தைதோய்நின்வீட்டினுட்சுரங்கத்தின் மேவிநின்பொருண்முழுதெவரோ
சிந்தையுட்டுணிந்து கொண்டகல்கின்ருர் தெளிதியென்றுரைத்தனனேடி
முந்தையுட்புக்க துளைவழிசெல்ல முயன்றனனுடல்புகுந்திலதால். (கசுகூ)

தாசரோடுரைப்பா னுற்றவிவ்வுடலிற் றலைபிரதானமற்றதனை
நேசமிக்கரிந்து கொடுமறைத்தன்பர் நீள்பசியாற்றுதிரென்னப்
பாசமற்றவர்மற் றவ்வணம்புரிந்து பலவுபகரணங்களுடன்றம்
மாசகன்மைந்தன் சிரத்தையுங்கற்பார் மனைவிதன்கரத்தளித்திட்டார். (கஎ0)

மைந்தனற்சிரமோர் கலத்திலுள்ளமைத்து வைத்தமுதமைத்துவந்தவர்க்கு
ளந்தமின்றியவின் புடனிட்டாரிவ்வா றமைந்திடவெழுந்திடுநாய்கன்
சந்தமாரொலிகேட் டுளம்பதைபதைத்துத் தன்னதாட்களையெலாங்கூவி
யந்தமார்விளக்குக் கொண்டுதன்மனைப்பா லாய்ந்தனன்பித்திகையிடத்தில். ()

மானிடனெருவ னுடலுறக்கண்டு வலித்தெடுத்திடச்சிரமிலதாற்
றூனிதயத்துட் கலங்கினன்வல்லே தராதிபற்குணர்த்தச்சேவர்க்கூய்
மேனியைமன்றத் தமைத்துடையார்கண் மேவுவாரென்னவைத்திருந்தா
னூனினைக்கருதி வருநரின்மையினு லூருளோர்யாவருங்காண. (கஎஉ)

சந்தியிலொருபா தவத்தினதும்பர் தனைந்தனன் மெய்க்கபீர்தாச
ருந்தியல்வணிகன் பொருள்கொடன்னவர்கட் கூட்டுபுமுத்தினமரிதாப்
பந்திகொண்மாயா மானிடருடனற் பசனைசெய்தின்பமிக்கிருந்தார்
செந்திருமகிணன் றனனேன்மனத்தின் றிடபத்தியோடிரங்கண்டு. (கஎங)

அருட்பெருங்கடலாந் தன்னுளமீதி லடங்கிடாவுவகையுட்பொங்கித்
தெருட்கபீர்தாசர் தம்முகநோக்கிச் சேர்ந்தநாமனைவருங்காசித்
திருத்தலம்வலஞ்செய் திடுவமென்றன்பர் செங்கரந்தொறுங்கருவிகள்கொண்
டுருக்குகீர்த்தனங்கள் புகன்றயலமைய வுற்றவன் னவர்மனைசுதன்றன். ()

சென்னிகைக்கொடுபோர்த் திருந்தனளக்காற் சென்றிடுமவர்கமானுடலந்
துன்னிடமணையத் தொண்டரைக்கண்ட தூலந்தன்றணைக்கரங்கொண்டு
பன்னிடுகீத மிசைதரத்தாளம் படியிலாவுவனகயிற்புடைப்ப
மன்னியசெய்கை கண்டவர்யாரும் வசம்பில்விஸ்மிதத்தர்களாகி. (களரு)

நின்றனரக்கான் மாயமானுடனு நிகழுரிகபீர்தமைநோக்கிப்
பொன்றலாமுடல்கூத் தாடுகின்றதியார் பொருந்தியதூலமென்றிடக்கேட்
டொன்றலாவதியா ருடையுடலெனல்லா னுணர்கிலேனெனவரியவர்தம்
மன்றன்மாமனைகை யிடத்துறுசென்னி மருவிடத்திருவுளங்கொண்டான். ()

அக்கணத்தவ்வா றமைதரக்கமானுள் ளலகிலின்பமைந்துபாடுபுதன்
மிக்கநற்கரங்கள் புடைத்திடக்கண்டோர் விம்மிதமிகமருவினராய்ப்
புக்கவண்கட்டை யவிழ்த்துவிட்டிடுகாற் போதமிக்கடியருட்புகுந்து
மக்கள்பற்பலரும் பரவசமருவ வயக்கினனுனந்தநடனம். (களஎ)

கண்டவர்களிற்சிற் சிலர்விரைந்தோடிக் காவலற்கிச்செய லுணர்த்த
மண்டலாதிபன்சே வகர்பிடித்தணைய வருத்தலின்மாயமானிடனுங்
கொண்டல்வண்ணனுமாங் கவனுடனேகிக் கொற்றவன்விசாரணைபுரிகாற்
கொண்டதாம்பொருளே திவன்கரியாவர் கூறுகென்றிடவிறையிசைக்கும். ()

இன்னவன்சுரங்கஞ் செய்தபித்திகையே யேற்றசான்றென்னயான்றேர
வன்னதைத்தெரித்தி ரென்றனன்செய்கா லஃதிலாமையிற்றலைதாழ்த்தி
மன்னனேவோருந் தம்மனையடைய மாயவனுடன்கபீர்வயின்போய்
நின்னதுபுதல்வ னிவனெனயாரு நிகழ்த்தினர்நின்னைமுன்வினவ. (களசு)

ஆர்கொலோதேர்கி லேனெனப்பொய்மை யறைந்தனைநின்னையொத்தியலுஞ்
சீர்கொளுத்தமர்க ளன்பர்பாற்பொய்மை செப்புவாரோவதுநிரையஞ்
சேர்கொடுந்துதன் றேவெனக்கபீர்பொய் செப்பிடேன்கனவினுமென்சொ
லேர்கொள்சத்தியமே யெனவிவனுள்ளார் யாவருங்காணப்பொய்யிசைத்தே.

சத்தியவந்தன் யானென்றுமழுவைத் தாங்குவேனென்றுமோதிடலீண்
டொத்தியல்வோர்யா வருமுளததகூயை யுறுவரென்றுன்னிலையென்னச்
சித்தியற்கபீர்செப் புவரான்மா வுக்குந் தேகத்துக் குஞ்சம்பந் தமிலை
சத்தியலான்மா வொருவிடிற்றேகந் தானிலையற்றுவீழ்திறத்தால். (கஅக)

வினைகொடுண்டாமெய் மற்றதனுழிவில் வீற்றுடற்புகுந்திடுமான்மா
வினையவெல்லாமி ரணபந்தமவன்றன் னிரணத்தினுக்கிவணடைந்தா
னினைதரிலவற்கு மெனக்குஞ் சம்பந்த மென்னிகழ்காலத்தின்முன்பின்
றனையனென்றுதித்தா னுதிப்பவன்றனையென்றனையனென்றெவணறைவேனே

நிச்சயித்தறையத் துணிகிலேனென்னை நீபுரட்டுடையனென்றுன்னல்
சச்சனேயென்ன வினவியபகவன் ருடைங்காவுவகையனுப்
பிச்சமாகியபே ரன்புடன்றனது மெய்யருட்சேவைதந்துற்ற
வச்சனைப்புதல்வ னேடுதன்கரத்தா லிங்கனஞ்செய்துடனெளித்தான். ()

வேறு

விளங்குநாளையிற் கோரக்கசித்தன்றான் மீண்டுங்காசியின் மேவித்தருக்குடன்
களங்குறுப்புகழ்க் காசிப்பதியிடைக் கங்கைபாதி வறந்திடச்செய்தலும்
வளங்குலாங்கபீர் மாந்தர்தந்தாட்புவி வைக்கினீருள்வரும்படிசெய்தலா
லுளங்குலாங்கரு வத்தொடுமெய்க்கபீ ருடையமுன்குயில் காககளேபரம். ()

கொண்டுவந்துவைத் துக்கபீர்தாசரைக் குயிலின்மேனிபுகச்செய்துகொல்வனென்
றண்டியேள னஞ் செய்திடத் தாசர்தா மந்தவண்ணஞ் செயலெற்கரிதல
மண்டுமிச்சிறு வன்செய்வனென்றெதிர் வாய்ந்தவோர்சிறுமைந்தனைக்காட்டித்தம்
வண்டுலங்குக ரஞ்சிரத்தின்மிசை வைத்துக்கோகிலத்திற்புக்குச்செல்லென்றான்

அன்னவாறுபு குந்துககனமீ தமையக்கோரக்கன் காக்கையுடற்கணே
துன்னலாகிக் குயிலைத்துரத்தினன் சோர்ந்துமெய்க்கபீர் தாசரைத்தாழ்ந்தன
னன்னலம்பெறு தாசர்குயிலிடை நண்ணுமாவியைக் கோரக்கன்மெய்புகப்
பன்னவன்னவ னவ்வணஞ்செய்தனன் பறந்திளைத்துறு காகமாங்கோரக்கன்.

நாணமெய்திக் கபீரைச்சரண்புக்கா னற்றவன்சிறுவற்றன்மெய்நண்ணச்சொற்
றுணவம்பெறு கோரக்கசித்தனுக் காக்கையோடருட் கண்ணும்வழங்கினன்
மாணலம்பொலி யும்விளையாடலின் வண்மைதேர்ந்திராமானந்தநாதரும்
காணலாகிய காசியுள்ளோர்களுங் கவலைதீர்ந்து களிக்கடன்மூழ்கினர். ()

காலமற்றதின் மெய்க்கபீர்தாசர்பாற் கானநாட்டியத் திற்சிறப்புற்றமை
ஞாலமேவிய வேசியர்கட்கொரு நாயகம்புரை வாள்வந்துபோற்றியே
சீலர்நும்மனைப் பால்வதிந்தொப்பினுஞ் சிந்தையோகைமி கப்பணிசெய்திடச்
சாலவேட்கை யடைந்தனனென்றலுஞ் சௌந்தர்யங்கொ ளவளிடஞ்சாற்றுவார்.

உறுநின்னிர்த்தகீ தஞ்சுகமாதிய வொன்றுநானறி யேனுண்பெண்ணலன்
வறுமைதோயொர் *கிலீபமென்றுன்னுதி வாய்ந்தநின்பெரு வாஞ்சைமுற்றும்படி
யுறுதிசாலொரு பாயமுணர்த்துவ லுற்றவென்மனை யின்புடைவாழரி
பெறுமிராகியும் போகியுமானவோர் பிரபுவன்னவன் முன்கீதநிர்த்தங்கள். ()

புரிதிபோகத்தி னிற்கிச்சையுண்டெனிற் பொருவிலான்மற் றதுந்தருமென்றன
ரரிவைகேட்டுளத் தின்பமெய்திப்பக லானதிற்பகவன்முற்றுதித்திரா
வரிதன்னேடு கலந்துவப்பாளிவ்வா றுற்றினுள்சில காலங்கழித்தபின்
புரிவின்மாத வனைக்கலந்தேபர போகந்துய்க்கப் புரிந்ததவத்தினுள். (கசுo)

திவசமொன்றில் யதேச்சையிற்கானிடை சென்றுமானிடர்க் குத்தெரியாதுத
னவயவத்தி னெடுசுகவானிடத் தணைந்ததன்மை யனைவருந்தேர்ந்துளத்
துவகைமிக்கமைந் தாரொருநாளரி யொளிர்கபீர்முன் றெரிசனமீந்தரு
ணவமிகுஞ்சுந்த ராமெய்க்கதியுறநல்கி நீபின்னென் னற்பதத்தெய்தென்றே ()

மறைந்தனன்பின் னருங்கபீர்தாசர்தா மண்ணின்மீதமைந் தார்பலர்தேறிட
நிறைந்தபேரரு ளாடல்செய்தார்முற் று நிகழ்த்திடுந்திறம் பெற்றவர்யாவரோ
வறைந்தமட்டின்மு டித்தினிமற்றவ ரந்தமெய்தியவண்ணமறைகுவேன்
குறைந்தசிற்றறி வாளருங்கண்டுளங் குதுகுலிக்கப்புரிதரு வெண்ணினர். ()

* கிலீபம் - பேடு.

ஒருதினத்திற் கபீர்தாசர்சீடர்க ளோடுநான்பிர மத்தினுள்வேறற
மருவிடற்கின் றுளங்கொண்ட னனிதை மாநகர்க்கண் வயங்குநர்யாவர்க்குந்
தெருளுறப்புரி வீரெனவன்னவர் திக்குளார்பலர்க் குந்தெரிவித்திடக்
கருதரும்விம்மி தந்தெரிவான்மணி கன்னிகைக்கட்டத் திற்கலந்தார்களே. ()

அன்னகாலை கபீர்சுதன்சீடரோ டாங்கணைந்திட் டறைகுவர்மாந்தர்கா
ளன்னலங்கொள் பரப்பிரமத்தினி னுனயிக்க நலம்பெறுகின்றனன்
மன்னருட்பெரும் பத்திப்புணையெனை மாயையங்கட லைக்கடத்திச்சுகந்
துன்னலாகுமிம் மோட்சப்பதத்திடை தோய்த்ததம்முளத்தூடையந்தோன்றுமேல்.

காட்டுகின்றனன் வேதபுராணங்கள் காயம்பொய்யெனக் கூறியபண்பினைக்
கேட்டுளார்களல் லால்விழிமுற்படக் கிளத்துமற்றது கண்டிலர்யாவரு
நாட்டுதேகந் தனிற்பெறுதத்துவ நன்கறிந்துள நான்பஞ்சபூதங்கள்
கூட்டுதேக மவற்றிலொடுக்கியென் கோலவான்மாப் பிரமத்தொடுக்குவேன்.

பார்மினென்னப் புகலலுங்கேட்டவிற் பனர்கடாம்பர மானந்தராகியே
சீர்மிகுந்த கபீருகெய்தத்தஞ் சீடரோடென்மெய் மேல்வத்திரமொன்றைப்
போர்மினென்று புகன்றிருநாழிகை போந்திவ்வத்திரத் தைக்கொடுநும்மகஞ்
சேர்மின்பத்தி நெறிவழாதீரெனச் செப்பமைந்தனுஞ் சீடருந்தேம்பியே. ()

சிறிதுநேரங் கழிந்தபின்வத்திரஞ் சீடர்கொண்டிடச்சென்றனர்மாந்தர்க
ளறிதுநாமரு கேகிக்கபீருட லமைந்தவண்ணமென் றுவன்மிக்கோர்களாய்ச்
செறிவமைந்தனர் பார்த்திடவாங்கவர் செய்யவத்திரத் தைக்கொளுமவ்விடம்
வறிதமைந்திடக் கண்டுவியந்தனர் மலர்பொழிந்து புகழ்ந்தனர்வானுளோர் ()

இன்னவாபுவி யிற்சுத்தமார்வெளி யிடத்தினிற்கலப் பார்மிக்கரியரே
மன்னருட்கடல் போலுங்கபீரிடை வாய்ந்திடுந்திரை போன்றவிராடல்கள்
பன்னவல்லவர் மூன்றுலகத்தினப் பாலுமின்றெனப் பன்னிடல்சால்பதாங்
கின்னமில்சுகப் ரம்மக்கபீர்கதி கேட்பவர்க்குங் கிளைக்குஞ்சுகமரோ. (௧௯௮)

ஆனபான்மையி னுற்பத்தவற்சல னுகுமெம்பெரு மானைவசஞ்செய
மேனலம்பெறு பத்தியையொப்பதா மிக்கவோர்வழி வேறிலைபத்தர்தம்
பானயந்தவோர் வாற்சலியங்கொடு பரந்தபேரரு ளார்பகவற்செயற்
கானதன்றெனுங் காரியஞ்செய்தலி னன்பலானரர்க்காந்துணையாவதே. (௧௯௯)

வேறு

கடலிற்பொழியும் புயலேபோற் கவின்றசுகப்பி ரமத்தமிசங்
கலந்தகபீர்தா சர்க்குனருட் காட்சிபலகா லளித்துலகி
னடலைக்கலியா லுளம்வருந்தி நலமாரரியன் பருக்கமுது
நல்கமனையைப் பிறற்களித்து நலியாதருளா லுயச்செய்து
விடலைச்சுதன்சென் னியைப்பறித்தும் விசனமுறும லரிபசனை
மேலோருடன்செய் திடவெழுப்பி மெய்தோய்மனைவி யுடன்கதியெய்
திடநீயருள்செய் தனையெனக்கென் றிசையப்பெருவாழ் வளித்திடுவா
யிராமானந்தப் பெய்ர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௨௦௦)

கபீர்தாசகதிமுற்றிற்று

ஆகவி ௪௮௦௪

ஐம்பத்திரண்டாவது

# முராரிபத்தகதி

கரையில்வான்சுகப் பிரமத்தினமிசமாங் கபீர்செயாடல்களாகுந்
திரையிற்சிற்சில விகங்கொண்மானிடரெலாந் தெளிதாத்தெளிந்திட்டேன்
புரையின்மாதவன் பரமபாகவதர்தம் பொருவின்மான்மியசீலந்
தரையின்மானிடர்க் குணர்த்துமுராரிதன் சரித்திரமினிச்சொல்வாம். (க)

பிலந்தழைத்தவர் தாமும்வானகத்தரும் பெட்டிடும்வளஞ்சான்ற
விலந்தநாமமார் பதியின்முராரியாம் வியன்பெயர்கொடுவாழ்வார்
சலந்தணந்திடு முளத்தர்பொய்மாயையின் றளையறக்களைந்திட்டார்
நலந்தழைத்திடு குணமெலாந்திரண்டென நண்ணியவுருவுள்ளார். (உ)

ஆயமேலவர் தங்குணப்பெருமைகண் டங்ககரிறையாதி
மேயமாந்தர்கள் பலருமற்றவர்தமை வியத்தகுகுருவென்று
ணேயமோடுபூ சனைவினைநாடொறு நிரப்புவரவரோர்நாட்
டேயமாநதி படிந்துதம்மிருக்கையிற் றுதைந்திடவருமெல்லை. (ங)

வழியிலோர்மனை யின்புடைதுளசிக்கீழ் மணிவண்ணப்பெருமாடன்
செழியசாளக்கி ராமம்வைத்தாரதி செய்திடுமொருபத்த
ரொழிவினிற்புற நோக்கமைந்தன்பர்க ளுண்டெனின்மால்பொற்றாள்
வழிதரும்புனல் கங்கையொத்துளதிதை வாங்குமினெனச்சாற்ற. (ச)

மாற்றமங்கது வினவியமுராரிதா மகிழ்ந்தவராருகெய்தி
யேற்றமால்பத தீர்த்தமெற்களித்திரென் றிரப்பவன்னவர்நீர்செங்
கோற்றழைத்தகை மன்னவன்வணங்குசற் குரவரந்தணராவீர்
சாற்றலாகுமென் பிழைபொறுப்பீரெனத் தாழ்ந்துபோற்றினர்மாதோ. (ரு)

ஒப்பிலன்புசான் முராரிபுன்முறுவல்செய் தும்முளத்தஞ்சாதீர்
தப்பின்மாலடிப் பத்தியினிகரிலாத் தகைமைபெற்றுளீரஃதாற்
செப்பிடும்பல்சா திகளின்மிக்கீரருட் டிருநெடும்மால்பொற்றாள்
வைப்பியைந்திடு முமக்குவானவரலான் மனிதரொப்பாவாரோ. (சு)

கணத்தவாகிய மாமறையினமுயிர் கலந்திடாதொருவுற்ற
பிணத்தினைத்தம்முள் வாஞ்சித்தார்தம்மையே பீடில்பஞ்சமரென்னுங்
குணத்தின்மிக்கநீ ரிரக்கமாசாரமெய் குலவுசற்செயல்வாய்ந்தீர்
நிணத்தகாயமா னஞ்சிறிதுங்கொளீர் நீசர்நீரன்றன்றே. (எ)

உடலைநானெனு முலகுளார்க்குப்புலா லுண்பவரேநீசர்
மிடல்கொள்பேரறி வமைந்தரிதிருவடி மிசைகொளன்பினர்கட்குச்
சடமிசைப்பொருந் திடுமபிமானிகள் சாற்றருங்கொடுநீசர்
நடலையாருல கியல்பைமெய்யென்றுளார் நராரியன்பர்களன்றே. (அ)

உலகியற்கைவிட் டொப்பில்பத்தர்கள்பணி யுஞற்றிடுமவர்தாமே
சலசலோசனற் கினியவரென்னோமா தவன்விழைந்திடிற்போது
நிலவுமற்றவர் பொருளன்று தருதிர்மா னிகரின்மெய்ப்பததீர்த்தஞ்
சலனமெய்தலி ரெனவலிதேற்றனர் தாமருந்தினராகி. (கூ)

மனையடைந்திடக் கண்டவர்யாருந்தம் மனமிசையுவர்த்தாராய்
முனைகொள்வேலிறை யிடமொழிந்திடவவன் முன்னுறம்படிகூவி
யினையசம்பவ முண்மைகொலெனச்சொல்வா ரில்லதுண்டாமோவென்
றனையவாறெலா நிகழ்த்தமன்னவனுளத் தருயைமிக்குற்றுனுய். (க0)

யாதுநானினிச் செய்குவன்குரவரை யெப்படித்தனைப்பேனென்
றேதுமோதலன் மௌனமோடொருசிறி திருந்தனனுட்போக
மோதுவேலிறை வன்றனுட்குறிப்பினை முராரிநன்குணர்ந்தாரா
யோதுமக்கணத் தப்பதிதனைந்துசே ணுளவொருபதிசேர்ந்து. (கக)

பகவனம்புயத் தாள்கொளின்பமுதுளிற் பருகினரிருந்திட்டார்
சகலசற்குணக் கடல்புரைகுரவர்தாந் தன்னகர்தனைந்தேகு
நிகழ்வினுனிரு பன்றனதகத்தினு ளிறைபெருந்துயர்கொண்டே
குகராமாயைசே ரிருதயபங்கயங் கூம்பினனிருந்திட்டான். (கஉ)

சாற்றுகாலைசி ராமநவமியினுற் சவங்தொடங்கினன்செய்ய
மேற்றுவக்கிமன் னுறங்குகாற்கனவிடை மேவியோர்பத்தன்றூன்
கூற்றுறழ்ந்திடு சினமொடென்பத்தனுங் குணமுராரியின்சொற்கொண்
டாற்றுமுற்சவ மீதவனின்றிநீ யாற்றிடக்கூடாதால். (கங)

தப்பில்சற் குரு வாமவன்றன்னைநீ தணந்ததாலவனன்பாற்
செப்பிடும்படி நீபுரிபூசையுஞ் சிறிதுமென்னுளமீதே
பொப்பிலேனினிப் புரிதியேலாபத்தே யுறுமெனச்சொலக்கேட்டோன்
வெப்பியைந்தகோல் புண்மிசைபாய்ந்தவர் விறப்பவாகுலமிக்கு. (கச)

நடுநடுங்கின னுடனெழுந்தமைச்சரை நண்ணிடவழைத்தைதிற்
படுகனுத்திறஞ் சாற்றினனுசாவலும் பரமசற்குருநாதற்
கடுகநேடுபு சரணடைந்திடுதலே காரியமெனச்சாற்றச்
சுடுமனத்தன்று னையினுடன்குரவரைத் துருவினனறிந்தன்பால். (கரு)

திருமுன்மேவினன் வணங்கத்தேசிகர்புறந் திரும்பியுற்றிடமன்னன்
குருபராகுணக் குன்றமேநாயினேன் குற்றமுங்குணமாக்கொண்
டருடயாநிதி யேயெனப்பஃறுதி யறைந்தெனைக்காத்தாள்வீ
ரருவருத்துநீ ரகற்றிடிலென்னையா தரிப்பவராருள்ளார். (கசு)

என்றுபற்பல வேண்டயான்பத்தியி லீனர்தம்முகம்பார்க்கேன்
றுன்றுநின்னக ரெய்தெனத்தேவரீர் துற்குணக்கொடியேனை
யொன்றுமெய்ச்சன்மார்க் கத்திடைசெலுத்துதி ருணர்விலேன்யானென்று
நன்றுறுஞ்சர ணுயினேனுதவி னனிதிருத்தினிராள்வீர். (கஎ)

பிடித்ததைப்பெரி தெனக்கொளல்பேதைமைப் பிள்ளைகள்குணமற்றோர்க்
கடித்துப்புந்திகற் பித்திடல்குரவர்கட் கான தாங்குணமன்றோ
தடித்தமாயையின் கைப்படுவேனைநீர் தண்டித்துச்சன்மார்க்கப்
படித்தலத்தமைத் திடுதனும்பாரம்யான் பதத்தடைக்கலமானேன். (க௯)

ஏதுசெய்யினு மெனைக்கைவிடா திரென் றிரப்பமெய்பருட்பத்தர்
கோதுமிக்கவெம் மூர்க்கனீசாதியிற் கொண்டுளவபிமானந்
தீதுமிக்கவி வேகவீனங்கொடே காபிமானிகட்கன்றோ
போதுதேகமா தியிலபிமானமில் புனிதரேயென்பத்தர். (கக)

என்றுமெய்ப்பக வன்புகன்றுள்ளதை யெண்ணித்துரபிமான
மொன்றுநின்சக வாசமாகாதெனை வுவர்த்திவணடைந்திட்டே
னன்றுவேண்டுதி யேல்வருகின்றன னகரினண்ணுதியென்னச்
சென்றுசிராம நவமியுற்சவம்வனஞ் சேர்தருமட்டன்பால். (௨௦)

பாடியாடின ரிராகவன்வனம்புகும் பாடலோதிடுபோதிற்
கேடில்சீர்த்தச ரதன்புரைதரவுளங் கெழுமுசோகஞ்சாலக்
கூடிராமலக் குமணசானகியெனக் கூறுசொல்லுடன்மேனி
வாடிமாநிலத் தேவிழவைதினின் மன்னனுதியர்சூழ்ந்தே. (௨க)

சோர்ந்துளாரென வெடுத்தனர்வைகுந்தந் தோய்ந்ததாற்பிறிவுன்னிச்
சார்ந்ததுக்கமோ டற்புதமருவினர் தமக்கியன்றனசெய்தா
ரார்ந்தபத்தியின் மான்மியமிற்றென வறைந்திடவெவர்வல்லார்
தேர்ந்திடிற்புமனி தர்க்குமெய்ப்பத்தியிற் சிறந்தவான்றுணையாதே. (௨௨)

வேறு

படியிற்பிரம குலத்துதித்துப் பார்த்திபனுக்குக் குருவாகிப்
பத்திமிகப்பஞ் சமனிடமால் பாததீர்த்தங் கொடுபருகிக்
கொடியவபிமா னம்பொருந்துங் குரிசின்முகத்தைக் காணவுளங்
கூசியயலூர் புக்கவன்பின் கோலராம னுத்தரவா
லடிமையாய்வந் திரந்திடமீண் டணைந்திராமன் கானுறக்கேட்
டாவியொழியுந் தசரதன்பே றமையுமுராரிபத்தனைப்போ
லிடியுஞ்சுவர்நேருடலாசை யிகந்துன்னிசைபோற் றியல்பளித்தா
ளிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமானே. ()

முராரிபத்தகதிமுற்றிற்று

ஆ. கவி ௪௮௨௭

---

ஐம்பத்துமூன்றாவது

# சூ ர நா த க தி

சிராம நவமியருட் டிருவிழாக் கொண்டாடித்
தாரார்தோட் டசரதன்சீர் சார்ந்தவர்சீர் சற்றுரைத்தேன்
பேரார்வத் தொடுகண்ணன் பிறக்கியலீ லைகள்பகருந்
தாராளச் சூரநா தரின்சரித மினிச்சொல்வாம். (௧)

அன்னமலி தண்பழன மலிர்டல்கி யாட்சிபுரி
மன்னனிட முதலமைச்சா மருவுவார் கிருட்டிணன்றன்
வன்னமலர்ப் பதப்பூசை வயக்குபுகீர்த் தனம்புகன்று
மன்னகர்க்கா ரியங்கண்மன்னன் மகிழ்தாமுன் முடித்திடுவார். (௨)

மற்றவர்தஞ் சற்குணங்கண் மதித்தறிந்து கொற்றவன்ஞ
ஹற்றவுவகையிலவருக் குரிமைபெறத் தன்னதுகீழ்ச்
சிற்றரசாக் குலவவைத்தான் சீலரதி லெய்திடும்பொன்
கொற்றவற்கீந் தனர்சேடங் கொடுசாது சேவைசெய்தும். (௩)

கிருட்டிணனுக் கனவரதங் கிளர்தருமுற் சவங்கள்செய்துந்
திருத்தியடை வாரொருநாட் டிகழ்தருதன் னிராச்சியத்திற்
பெருக்கமுறச் சுவைமலிவு பெறும்பஞ்ச தாரையுறக்
கருத்திஹவந் திதுகொடப்பங் கண்டுசெக நாதனுக்கு. (௪)

தக்கநிவேத் தியம்புரிதல் சால்பென்று ளுன்னியுடன்
ஜொக்கபல சகடத்திற் றுதைவித்துத் தன்குரவற்
கொக்கவொரு முடங்கலுமீந் துய்த்திடமற் றவரந்தி
புக்கபதஞ் செகநாத புரியிடத்தின் மேவினராய். (௫)

குரவருடன் றன்சீடர்க் கூவியுள்வைத் திடுமின்கவ
ளிரவணைத லாற்பின்னு ளியற்றிடுது மெனவற்றே
பரவடியார் கடன்புரிந்து பதியுணவா தியமுடித்தே
சிரமமறத் துயின்றிடுகாற் சீடர்கடங் கனவிடத்தில். (௬)

செகநாதன் றோற்றியுற்ற தித்திப்பார் சர்க்கரையி
னிகழுடைசெய் திப்பொழுதே நிவேதிப்பி ரெனக்கேட்டும்
புகல்பகவ னுரையுணரார் புரண்டுகிடந் தனருறங்கப்
பகவனருட் சற்குரவர் பாலடைந்திங் ஙனஞ்சொல்வான். (௭)

வே று

விருத்தியார் பத்தியென்பான் வேவுசீர்ச் சூரநாத
னருத்திமிக் கனுப்புகன்ன லதுகொடிப் போதேயப்பந்
திருத்தியா னெய்தச்செய்து நிவேத்தியஞ் செய்மின்சற்றுந்
தரிக்கல னென்னக்கேட்டுச் சற்குரு பாரனெழுந்தே. (௮)

ஆயவப் பொழுதேயப்ப மாற்றிப்பஃ றேண்டர்க்கூவிச்
சேயசீர்ச் செகநாதற்குச் சிறப்புற நிவேதித்துற்ற
தூயவான் பிரசாதத்தைத் துதைந்துளார் பலர்க்குநல்கி
மாயவ னுளங்கொள்பத்த வாற்சல்ய மதித்துவாழ்ந்தார். (கூ)

பின்னருட் சூரநாதர் பிதாமகன் றுதைபேரிற்
கன்னலம் பாகேபோலக் கனிதுதி பலசொற்றிட்டா
ரன்னவற் றேர்சுலோக மன்பர்தாட் பாதரட்சை
யென்னது சிரமேற்றாங்கி யிகமயல் கடப்பேனென்ன. (க0)

சாற்றலாஞ் சுலோகங்கண்டார் தங்களி லொருவனிந்த
மாற்றமெய் தானேசோதிப் பேனென மனத்துட்கொண்டே
யேற்றமார் சூரநாதன் யாண்டுளா னெனவுசாவி
யூற்றமார் குரவரிற்பா லுற்றுளா ரெனத்தேர்ந்துற்றான். (கக)

மருவுகாற் சூரநாதர் வாயின்முன் னமையக்கண்டு
குருவகத் துளரோவங்கட் குறுகியா னெய்துங்காறு
மொருவுமென் பாதரட்சை யோம்பியீண் டுறுதியென்ன
வரும்வரை காப்பேனுந்தம் மனத்திலிஃ துன்னலீராய். (கஉ)

பையமீண் டிடுதிரென்னப் படர்ந்தவன் குரவர்ப்போற்றி
யையனே சூரநாத னமைந்ததியாண் டெனவினவச்
செய்யவா யிற்படிக்கட் சேர்ந்ததின் றேவென்றோத
வையமிக் கமைந்தோன்வல்லே யழைத்தன னகத்துளொய்த. (கஙு)

சாற்றுகால் சூரநாதர் தங்குபா தரட்சைசென்னி
மேற்றுதை தரக்கொண்டாசான் மேவிட மடைந்துவிள்வார்
போற்றுசீர்க் குரவர்நுந்தம் பூரண கடாட்சந்தன்னாற்
றாற்றுறு மென்மனோர தந்நிறைவேறிற்றன்றே. (கச)

அச்சுலோ கத்தைநானுண் டாக்கிப்பின் னுற்றுப்பண்பான்
மெச்சுதன் மைப்பொருட்டால் விளம்பினன் கொல்லென்றார்க்கு
நச்சுசந் தேகந்தோன்றி நவிதரா வண்ணநாயேற்
கிச்சுப தினத்திலெய்திற் றியான்சபலம்பெற்றேனால். (கரு)

என்றுரைத் திடப்பரீட்சை யியற்றுவான் புகுந்தபத்த
னன்றுநீ ருரைத்தவண்ண நடப்பிர்கொ லெனச்சோதிப்பா
னின்றுவந் தேனென்குற்ற மிதயமேற் பொறுப்பீரென்னு
வொன்றுமெய்ச் சூரநாத ருபயதாண் மிசைவீழ்ந்தேத்தி. (ககூ)

இத்தனை விராகநம்பா லியைவதென் றுணரேனென்ன
வுத்தம ரென்றானனு முன்னுமென் னெண்ணமுற்றிற்
றொத்தநும் மாவிங்கென்ன வோகையிற் புகலக்கேட்டோர்
சித்தமீ தமைந்தவையந் தீர்ந்தவர்ப் புகழ்ந்துவாழ்ந்தார். (கஎ)

இன்னவா நிகழுங்காலத் தியலருட் சூரநாதர்
மன்னவற் கிறுக்கவேண்டு மாண்பொருள் யாவுந்தம்பாற்
றுன்னலா நாளங்காட்டிற் றுற்பிட்சந் தோய்தலாலே
யன்னமற் றயர்வோர்யார்க்கு மப்பொருண் முழுதளித்தார். (கஅ)

புரவலன் சூரநாதர் பொன்றவ ணையிலெய்தாதால்
விரவுதூ தனையனுப்ப மேலவர் வேந்தன்பொன்னைக்
கரவுசெய் தில்லேன்பஞ்சங் கலந்ததாற் குடிகட்கீந்தேன்
றரவிய லாமல்யாருந் தராதிப னுணைக்கஞ்சி. (கசூ)

நகரினின் றகன்றூர்யானு நரபதி தனக்குள்ளச்ச
மிகவமைந் தனன்வேந்தன்பான் மேவல னுத்தியோகச்
சுகமும்வேண் டலனிதோமுத் திரையையுந் தோன்றற்கீதி
நிகழமற் றொருவன்றன்னை நியமிக்கப் பகர்தியென்றே. (உ0)

தூதன்பா லீந்தனுப்பத் துதைந்தவ னிறைபானல்கிப்
போதலாம் விடயமுற்றும் புகன்றிட வேந்தன்சீறி
யாதரத் தாசர்தம்மை யவண்கொணர் தருமாசெய்திட்
டேதமார் சிறைக்கூடத்தி லிட்டன னருளற்றம்மா. (உக)

சிறைத்தனிக் கூடத்துற்றூர் செகவிசா ரஞ்சற்றின்றி
மறைச்சிரத் தோங்குமாயன் வரம்பில்பே ரருளாட்டெல்லா
முறைப்படக் கானஞ்செய்து முகுந்தனே யெனையிப்பாவத்
துறைக்கணின் றெடுத்தனின்பிற் றோய்ப்பதெக் காலமென்னு. (உஉ)

மழைமுகில் வரவுண்ணுடி வாடிடும் வனப்புள்போலக்
குழைபுநா ளன்பர்துன்பங் கொண்டிடச் சகியாக்கண்ணன்
விழைதலின் மன்கனுவின் மேவிநின் சிறையின்மேய
பிழையிலன் னன்பன்றன்னைப் பெயரவிட் டிடுதியின்றேல். (உங)

வருநிற்கா பத்தென்றோதி மறையமன் னவனுள்ளஞ்சி
மருவுமே வலரைக்கூவி மற்றவர்க் கொணரச்சாற்றித்
தெருள்கிலே னுற்றுந்தீமை சிந்தையுட் பொறுத்திர் நும்மாற்
கருமணி வண்ணத்தெம்மான் காட்சிபெற் றனன்யானென்ன. (உச)

வணங்கினன் றிரவியங்கள் வழங்கமற் றவைகைக்கொண்டே
மணங்கிளர் வளப்பிருந்தா வனத்திடை மருவிக்கண்ணன்
குணங்கிளர் கீர்த்தியாவுங் கோதறப் பலவாச்சாற்றி
யிணங்கிவாழ்ந் தனரன்னோர்த மின்னிசைக் கீதங்கேட்டே. (உரு)

அருத்தியார் மனிதரன்றி யமைதரு பறவைமாவுந்
திருத்திமிக் கமைந்தவென்னிற் சிலர்சீர் செப்பலாமோ
மருத்திகழ் வளப்பிருந்தா வனத்திலிந் நாளுமன்னோ
ரருத்தியார் கீதம்பாடி யன்பரின் பமைந்துள்ளாரால். (உசூ)

பைம்முகி லனையகோலப் பகவனம் புயத்தாள்வாய்ந்த
தம்முளப் பத்தியென்னுஞ் சலதியை வாக்கால்வாரிச்
செம்முயிர்த் திரளாம்பைங்கூழ் செழித்திடப் பெய்கின்றார்கட்
கம்முத னல்கிடாப்பே றகிலமீ துளதுகொல்லோ. (உஎ)

மண்டுபே ரண்டமெல்லாம் வாரியுண் டிடுமாறன்னை
யுண்டுதேக் கெறிந்தாலென்ன வுவமைதீர் துதிகளோதுந்
தொண்டுகொள் வாரைப்பன்னு டொல்லுல கத்தில்வாழ்வித்
தொண்டுதி வினவியார்வத் தொப்பில்வை குந்தஞ்சேர்த்தான். (உஅ)

அருவமெய்ப் பத்திதன்னை யாக்கையோ டரிபொற்றாளின்
மருவிடக் கொடுசெல்வார்கண் மாண்பாத் தகையராரும்
பருகிடப் பாக்களாக்கிப் பாரின்மேல் வைத்துச்செல்வார்
திருவருட் சத்திமேவித் திகழ்குரு வனையாரம்மா. (உகூ)

வேறு

வளமாரிந்தி ரப்பிரத்த மன்னனமைச்சாய்த் தன்னகரின்
மலிசர்க்கரைகோண் டுனக்கடைகள் வயக்கியருத்தி யடியர்பதத்
துளவாம்பாத ரட்சைதன துச்சிக்கணிந்து பஞ்சத்தா
லுலேவோர்க்கிறைவன் பொன்னளித்திட் டுவர்த்தன்னவன்செய் சிறையடைந்து
குளமார்நறும்பால் போதுனருட் குலவும்புகழ்த்துத் தியஞ்செயுஞ்சீர்
குறையாச்சூர நாதருக்குக் கோதில்கதியீந் தனையெனக்கின்
றிளகாத்திருவுள் ளங்கொளலென் னெழிலார்சிரவைப் பொற்சபையா
யிராமானந்தப் பெயர்கொடெனை திதயத்திலங்கும் பெருமானே. (ஙo)

சூரநாதகதிமுற்றிற்று.

ஆகூ கவி சஅருள

---

ஐம்பத்துநான்காவது

# துளசிதாசகதி

நாரணன்செவி பருகுதுத்திய நாளுமோதிடு பத்திசால்
சூரநாதர்வை குந்தமேவிய தூயகாதைசொ னேனினி
வாரமிக்கவன் மீகிவான்கலை வாய்ந்துதித்திர மாயணஞ்
சாரமேவவி டுளசிதாசர்ச ரித்திரம்புகல் வேனரோ. (க)

சங்கமுந்துத ரங்கவங்கைச மைந்தகங்கைய முனையுடன்
சங்கமம்பெறு கின்றசீர்ப்பிர யாகைநாமத லத்தயன்
மங்களம்பொலி யந்தர்வேதியெ னுமமாநக ரந்தணர்
துங்கமாதவ ரோங்கையோடுது தைந்திலங்கிய தன்னதில், (உ)

மறைதெருண்டவிர் மறையவர்க்கொரு மணியனன்வட மீனிகர்
நிறைபொறுத்தவிர் மனைவியோடற நிறையுமில்லிட மேவுவோ
னறைகொளுந்தியம் போருகத்தினு நான்முகற்றரு மாதவ
னுறையநல்கிய சீரசாகர மொத்திலங்கும னத்தினன். (௩)

பலபகற்கழி வுற்றுமொப்பிலோர் பாலனின்மைபி லன்புடன்
சலசலோசன சாமிதன்புடை சாற்றிவேண்டின னாளதி
விலகுசீர்கொள்வை குந்தமீதிலி யைந்தவொப்பில்வன் மீகிதான்
குலவுகேசவன் முன்படைந்திவை கூறுவானரி நாரண. (௪)

வேறு

கனத்தநின்னிரா மாயணம்பலவாக் கானஞ்செய்துமேழ் கடலெனவினுமென்
மனத்தவாவமைந் திலதெழுவதென வகுப்பக்கேட்டருண் மாதவன்மகிழ்வா
வனத்துழாய்முடி துளக்கிவான்மீகி மாதவாபுவி யிடத்தினீமருவி
யனத்தவன்பவக் கடலுளாழ்மாந்தர்க் கம்பியொத்தறைந் தனைவருகென்றான்.

தவம்புரிந்திடு மறையவர்மகவாச் சனித்தூநற்றுள சிப்பெயர்தாங்கி
நவம்பொருந்திட வளர்ந்துமுன்றவத்தா னுன்குவேதமா றங்கநன்குணர்ந்தா
னுவந்துதாதையெவ் வனமருவுங்கா லொப்பில்சுந்தர முற்றவொர்மின்னாட்
டுவந்தமுற்றிட மணஞ்செய்தான்சின்னா டொலைந்ததன்வினைத் தூலநீத்திட்டான்.

கற்புமிக்கநன் மனைவியுந்தனது கணவனோடுமாய்ந் திடுதலிற்றுளசி
யற்புமிக்கநன் குரவர்வான்புகுதற் ககத்தினுட்டுய ரமைந்தவர்கட்குப்
பொற்புமிக்கவா ரணமுறைச்சடங்கு புரிந்துதன்மனப் போங்கனுயிளமைக்
கொற்புணர்ந்துள மனைவிமேற்கடலுங் குன்றுங்குன்றிடக் கொண்டகாமுகனாய்

அன்றிலும்பெடை யுந்தகமனையையரைக்கணப்பொழுதும்பிரியானா
யென்றியைந்திடு பகலுடனிரவு மிக்கனுடலிற் புக்கியைந்திருந்தா
னன்றிலங்குநாண் மனைவயிற்றொருசேய் நண்ணக்கண்டனனனிமகிழ்வமைந்தே
குன்றிடாவுவ கையன்மனைசேய்தன் கோலங்கண்டகங் குளிர்ந்தனனுறுநாள்

கணமபற்பிறி கின்றிலனுகுங் கணவன்றானொரு காரியப்பொருட்டா
னிணநிலாவுவேன் மன்னிடமமைய நீங்கவ்வேல்வையிற் பூங்கொடிபோல்வா
ளணவுமிக்கரு கானதன்றாய்வீ டணைந்திடும்படி யறைந்திலள்செல்கான்
மணமிகுந்தபூ வாளிகடூளந்த மகிணனுந்துள சிப்பெயர்மறையோன். (௬)

மாமிவீட்டுறக் கண்டவர்யாரு மங்கைதன்னையே ளனமிகச்செய்தே
காமிவந்தன னேகெனச்சிரிப்பக் காந்தைநாணமுட் கலந்தவளாகிப்
பூமித்தவிர் மண்ணைபோன்றவன்றான் போதலுந்தன்னேர்மனையினுட்போந்து
நேமியுண்டிடும் வடவையிற்சினமுண் ணிறைந்திவ்வாறவன் கொளநிகழ்த்திடுவாள்.

எதுகொண்டுநீ ரில்லிடத்தமையா திங்ஙனெய்தினி ரொருவருமில்லை
போதுமென்றிட நகைத்தெனுருயிர்நேர் பூவைநீபொருந் தாமையின்மனை தா
னேதும்வெஞ்சுட லையின்மிகத்தவ்வென் றுற்றதாலவ னுறுநிலனினது
போதுநேர்முகங்காண்கிலதொரிமைப்போதுநானிருந்திடப் பொறுக்கிலனால்,

என்னவோதுசொற் கேட்டலுமின்ஞ ளெரிகொள்புண்ணில்வே லேறிய திறம்போற்
றன்னகத்துள்வா டுபுவிதியேயித் தலைவற்கொள்ளவென் றலையினில்விதித்தாய்
மின்னனுர்பல ரும்பரிகசிக்க மிக்கவாடின னென்செய்வேன்றலைவன்
பன்னலாகும்வாக் குக்கெதிர்மாற்றம் பகரிலென்னிறை பங்கமுற்றிடுமே. ()

என்றுபல்வித நினைந்திரங்கு மில்லா ளின்முகந்தனைக் காமுகனேக்கி
யொன்றுமென்பிறி வாற்றளர்ந்தனைகொ லுரைத்தியென்னமா வட்சிலைம்பொங்கி
நன்றுபூமிசை தம்பதியானர் நாமலாதில யோமனத்தோரீர்
துன்றுபேயுமக் கினிதுருவமைந்து தொல்லைமாநிலத் தோரிகழ்கிலதால்.(கங)

காமன்வாளிகட் கிலக்கமைந்துள்ளங் கலங்கிநாணறக் கையிகந்திட்டீர்
மாமன்வீட்டினுக் கெனைத்தொடர்ந்தோடி வரினும்மாட்சியற் றிடுமெனமதியீர்
தூமம்விட்டெழு காமவக்கினிதான் றாயமாமதி துய்த்திடுமரவாம்
பாமரப்பெயர் தாங்கினேர்காமப் பாற்பட்டாரலாற் பாரிடத்தெவரே. (கச)

சத்தமாதவர் தாங்கிடச்சிவிகை தனிலிவர்ந்துசென் னகுடனைப்பாம்பா
யுய்த்ததுஞ்சுர ருக்கிறையானேற் குடவிலாயிரம் பகமளித்ததுவு
மெய்த்தவக்கலைக் கோட்டுமாமுனிதன் வீறழித்ததுஞ் சிவனனைமுந்நூ
ஞெத்தவெம்பவ மெடுத்திடச்செயலு மொழிவில்காமமற் றேதுகொலுணரின்

சத்ததாதுக்க ளல்லதுமானர் தனுவின்மிக்கதொன் றுளதுகொலிதனை
யுய்த்தறிந்திடா தாடவர்மடவா ரொருவர்மீதினிலொருவர்மால்கொண்டு
பித்தரொத்துவெங் காமபாணத்தாற் பீழையெய்துபு பெருநரகடைவார்
தத்தமக்குளாஞ் சச்சிதானந்தத் தனிப்பரத்தினை நினைப்பதையொழிந்தே.(கசு)

காணினெஞ்சகத் துன்னிலப்பொழுதே கடக்கருந்துயர்க் கடலிடையழுத்தும்
பூணிலாமுக மாதர்தஞ்சேர்க்கை புந்தியூடனிற்காண்டரிற்கேட்கின்
மாணியைந்தபே ரின்பருளிராமன் மலர்ப்பதங்கண்மற் றவைகளிலதனி
லேணியைந்தகோ டியிலொருபாக மியைவிரேனுமக்கெய் தரிதெதுவே. (கஎ)

எய்துதற்கரி தாநரசென்மத் தெவ்வனஞ்சிறு போதினிலொழியு
மைதுமற்றது தீர்வதன்முன்ன மறிவுளோர்நலமடைவரேனையர்கள்
பொய்துதைந்தவெங் காமமாமாயைப் புலியடித்தலிற் புந்தியற்றவராய்
மைதுவைத்தகண் மாதர்சேய்காவன் மருவியேயம னுலகிடையேய்வார்.(கஅ)

மாமத்தாலலைப் புண்டிடுதயிர்போன் மன்மதன்கணை யான்மிகவாடித்
தாமத்தாழ்குழன் மங்கையர்பாவத் தனுவின்மேனசை தாங்கிடப்புரியுங்
காமத்தாற்றிரி காலத்துமின்பங் கருத்தினுடிடி விலையெனமமதை
நாமத்தாள்புகன் றிடுதலுந்துளசி நற்றவத்தர்க்கு ஞானஞ்சற்றெய்தி. (கசு)

மனைவிதன்முக நோக்கியுன்சுகத்தை மதித்தவென்னதோராருயிரின்பந்
துனையவித்தகு போதமோதுனக்குத் துயர்கொளில்லறத்துறையிடைபதித்த
வனையையெவ்வண முவமையென்றிசைப்பேனரியன்றகைபமைந்துளாயென்று
முனைவர்வல்விரைந் தேகிடக்கண்ட மொய்குழல்பிற கோடுபுவணங்க. (உ0)

என்னைநீவணங் கிடுதகாதுன்னை யிபற்றுவேன்றண்ட மென்றுசெய்தேக
மின்னைநேரிடை யாளுநம்பிறகு மேவுவேனென மேலவர்வினவி
யென்னைநீயுரைத் திடுதனுயகன்யார் யாவரேகுரு ருண்பவர்யாவர்
பின்னையான்வரு வேனெனு நீயார் பேசுநம்மனை யாவதியாதே. (௨௧)

ஆயசஞ்சல போதமுற்றுன்ன தருள்கொண்மாற்றத்தி னுலறப்பெற்றேன்
றாயநீமிகு பாக்கியவதிநின் சொற்கொடியானுறு துபாமூற்றெழிந்தேன்
மேயநிற்கோர்கை மாறிலையென்று விரைந்துபோமவர் தன்மையை நோக்கி
மாயவாரிதி கடந்தனரினிநம் வயமுறுமென மனையடைந்திட்டாள். (௨௨)

சென்றவந்தண ரயோத்தியிலெய்திச் செழுமைதோய்சர யூநதிமூழ்கித்
துன்றருட்சீதா ராமமூர்த்தியின்று டொழுதுநாமுத்திதோய்வதெவ்வாற்றென்
றென்றவண்டுயின் றிடுமிரவதனிலுதவுதாதைசொப் பனத்திடையுற்றே
நன்றமைந்தசெய் துயரிலையினிய ராமநாமமெய்ச் செபம்புரிவாயால். (௨௩)

இன்னமந்திரத் திற்சிறந்துளதொன் றில்லைமூவுல கிடத்தினுமிதுதா
னன்னலப்புரு டார்த்தங்கள்யாவு நல்கும்பேரின்ப நற்றருவாகும்
பன்னலாகுமட் டாக்கரத்தினும்பஞ் சாக்கரத்தினும் பயன்கொளிராம
வென்னலாகுமிம் மந்திரமேகா னீசுரன்பரை யிவர்செபித்திருப்பார். ()

தலங்கொள்சேவைதி யானம்புண்ணியதீர்த் தத்தின்மூழ்குத லூனமாதியவு
நலங்கொளிம்மறைக் கொப்பலவென்ன நான்மறைக்குல மாதியநவிலுஞ்
சலங்கொள்சிந்தையி லிராகவற்குறித்துத் தைலதாரையிற்றுன்செபம்புரியிற்
புலங்கொண்மெய்ப்பர போகமீந்தீற்றிற் புனிதராமசாயுச்சியப்பொருத்தும்,

பிற்றைவைகலி னினக்கொருபத்தன் பிருந்தைமாலையுந் தருமெனப்பேசி
யெற்றையுந்துய ரெய்தலையென்றிட் டேகலும்விழித் தின்பமிக்கவராய்ப்
பொற்றைநேர்மனத்திராகவற்கருதிப்பொருவின்மந்திரஞ்செபித்துநெக்குருகி
யொற்றையாழியந் தேரவன்வருமு னுதகமாடிரா கவற்றொழுதேத்தி (௨௬)

இரவிற்கண்டசொப்பனத்திறங்கருதி யிருக்குமெல்லையோர்பத்தனுண்டெய்திச்
சுரருமெச்சுசீர்த் துளசிதாசருக்குத் துளசிமாலைநல் கிடுதலிற் களித்து
விரவுசீர்கொளே காக்கிரசித்த மேவியாண்டுசிற் சிலதினம்வதிந்து
வரநதிப்பொலி வாரவிமுத்த மருவியேயசீ நதிவடபாலில். (௨௭)

ஆஞ்சனேயரா லயத்தின்றென்பாலா யமையுமத்தியி லாச்சிரமமொன்று
தாஞ்சமைத்தமைந் திடுமுனிவருந்தித் தவம்புரிந்தமைந் தார்தலமதன்கட்
காஞ்சமால்வரை புரையுமிராம காவியம்பக ரிடந்தினஞ்சென்று
வாஞ்சனைப்பொலி வுடன்வினவுவரிவ்வண்ணமெய்த்தவம் வயக்கினிருந்தார்.

காலமற்றதி லிராகவன்பொற்றுள் கருதியாரியம் பிராகிருதத்திற்
சாலவும்பல காவியமியற்றித் தழைபுகாளிற்சி ராமசந்திரன்று
னீலமேகசா மளநிறத்தொடவர் நித்திரைக்கன வின்கணேர்ந்தன்பாற்
சீலமிக்கநற் றுளசிதாசநின் சிறந்தபத்தியாற் றிருத்திமிக்குற்றேன். (௨௯)

உலகருய்க்திடும் பொருட்டியானுன்பா லுரைப்பதொன்றுள தற்சங்கிருதத்
திலகுசீரிரா மாயணந்தன்னை யியல்பிராகிரு தத்தியற்றுதியிக்
கலகவெங்கலி யுகத்தின்மானுடர்கள் கபமைதோய்ந்தவ ராகிபாரியத்தின்
புலமையற்றமை வார்கண்மற்றவர்க்குப் பொருந்தவென்றும்வான் மீகிகாவியத்தில்.

துளசிராமாய ணம்பிரசித்தி தோயுமற்றதை யன்புடன்படிப்போர்க்
குளமவாவிய பேறுமுற்றெளிதியா னுதவுவேனென்று மோதலின்விழித்தே
சளமறுந்தொண்ட ரிராகவன்றன்னைத் தரிசித்துப்பவ சபலமெய்தினனென்
றளவிலின்புடன் கணேசனைவாணி யம்மையைத்துதித் தாரம்பித்தாராய். ()

பகலிராவினுந் தங்கடனெழிந்த பதமெலாமிகப் பரிந்துபாடியஞ்செய்
தகமகிழ்ச்சிபி னுடன்மிகுபுலமை யமைந்துளார்க்கெலா மனுப்பிடக்கண்டார்
மிகமகிழ்ச்சியுற் றனரக்காவியந்தான் மேதினிக்கணெங்கனும்விரவியதாற்
சுகமிகப்படித் தாரிதுபோதுந் துளசிராமாய ணந்துலங்குவதே. (கஉ)

தக்கபத்தருட் சிறந்தவிர்துளசி தாசரிவ்வணந் தழைத்துறுநாளின்
மிக்கசீரசி நதியின்றென்பாலில் விசர்ச்சனஞ்சௌச மாதியமுடித்துப்
புக்கதங்கமண் டலத்துளநீரைப் பொருந்துமோர்விருக் கத்தடிகவிழ்ப்பார்
தொக்கநாள்பல கழிந்தொருநாளிற் றாயர்நீரவண் சொரிந்திடுமேல்வை.

அலகையொன்றவர்முன் னுறத்தோன்றி யருந்தவத்திர்நீ ரறவெகுகாலம்
புலருமென்றனக் குச்சலதானம் புரிந்தநீர்மையாற் புந்தியுட்களித்தே
னிலவுறும்முள வேட்கையாம்வரநீர் நிகழ்த்தினல்குவ னெனவுளஞ்சாராய்க்
குலவுமிவ்விடம் வசிப்பதென்னீயார் கூறுகென்றிடக் கூளிசாற்றிடுமால். ()

பூர்வம்யானொரு மறையவனிறைக்கோர் புரோகிதன்பெரு குலோபனும்மறையோர்
சீர்வயங்கியற் கன்மங்கணிந்தை செய்துமந்தணர் மாதவர்தம்மை
யார்வமோடுது வேசித்தும்பிறரை யாணவத்தினு லறமதிக்கலனு
யேர்வயங்கிறை மறைபவர்க்குப்பொன் னீயவென்புடை யீந்திடிற்கொண்டே.

நாலிலொன்றவர்க்களித்துமுக்கூறு நான்கொண்டேனிங்ங னண்ணினனுச்செங் ()
கோவிலங்குகை மன்னவன்றமுங் குலைத்தனன்றின மொன்றிலானுலு
மேலிலங்குப காரமொன்றியற்ற விழைந்திலேனொரு நாளிலென்வீட்டின்
பாலியைந்ததா கத்துடனடைந்தோன் பதைபதைத்திடப் பற்கடித்துருமி. ()

சிறிதுநீரளித் தேனதனுஞ் செங்கரப்புன லுங்கவாய்ந்ததெனும்
வெறியைநோக்குபு துளசிதாசரிவண் மேவுகாரணம் யாதெனவினவ
வறிவயானெனோர் சீடனுமிறைவ னவிமுத்தம்புக வவனுடன்பானும்
வறிதவன்பொருட் கேர்டைகொடுவந்தேன் மருவியீண்டுமா சுணந்தொடமடிந்தேன். ()

என்னைக்கொண்டுபோந் திடயமதூத ரெய்தக்காலப்பை ரவரவருடனே
சின்னைவானதிக் காசியூடிவன்ருன் சிந்தையின்றியா யினுந்துதைந்ததினும்
மன்னைக்காண்கிலா னென்னதுதண்டம் வாய்ந்துவன்பசி தாகமிக்கமைந்திக்
கொன்னைமேவியற் காசியின்புறத்திற் கூளியாச்சில தினங்குலவினனேல். ()

பின்னிராமபத் திப்பெருக்கமையோர் பிராமணன்புன றமகிழ்ந் துண்டே
கொன்னிலங்குமுத் தித்தகையெய்துங் குறுகுவீர்கணும் மிடமெனச்சென்று
றென்னியற்சரித் திரமிதுநீருள் ளிச்சையாம்வர மிசைத்திறென்றியம்ப
மன்னிடும்புகழ்த் துளசிதாசரவா மற்றொன்றில்லா மனக்கணங்களுடன். ()

தரிசிக்கும்படி விழைந்தனனங்ஙன் சாத்தியம்படத் தருதிபென்றிடலு
முரியபேயென்னுன் முடிவுறுதெனினு முபாயமொன்றதற் கோதுவன்கேட்பீர்
விரியுமெப்புக ழநுமனுலயப்பான் மிக்கசிரிரா மாயணம்படித்த
றெரிவிர்மற்றது வினவிடவநுமன் றினந்தொறுங்கதை தொடங்குமுன்னணைவான்.

பிறியுங்காலையா வர்க்கும்பின்செல்வான் பிராமணத்திருமேனிபெற்றுள்ளான்
வறியனுகியுங் குட்டமெய்ம்மீதின் மருவியுந்திகழ் வானவனேகாண்
செறியும்பத்தசி காமணியாகித் திகழுமாருதி யகத்திலுய்த்தறிந்தே
நெறிகொள்போதுபின் றொடர்ந்துபோயவனை நெஞ்சுவந்திட வணங்கியேத்தினிரேல்.

அருளமைந்துநும் மெண்ணமுற்றுறுமா றுற்றுமவ்வறு மானிபாகவன்றன்
றெருளமைந்தபத் தருக்கெலாமுதல்வன் சிந்திக்கின்முடி யாச்செயலிலையென்
றொருவுபேயகி முத்தமாநகர்புக் கொப்பில்விச்சுவ நாதரைப்போற்றிப்
பொருவின்முத்தனுய்த் திகழ்ந்ததுதொண்டர் புனல்படிந்திரா கவன்பதம்போற்றி.

இராகவன்கதை நடத்திடுதானத் தியாவர்கட்குமுன் பெய்தினரிருப்பப்
பராவுசீரநு மான்மறைவிருத்தப் படிவமேயுறப் பார்த்திடுதொண்டர்
விராவுமற்றவர் பதம்பணிந்திரங்கி விளம்புவார்தமை * வியந்தரவாக்கா
லுராவிராக்கதாந் தகவநுமாறென் றுணர்ந்தனன் மிக்கவே மையாமென்னை.

கிருபைவைத்திரட் சிக்கவேண்டுமெனக் கெஞ்சிமிக்கிரத் தனுமனமுவந்தே
யருமைமாதவ மிக்கவான்மீகி யாமுன்னுவலென் னறைகுதியென்னப்
பொருவின்மாருதி தனைப்புவகையுடன் போற்றிராமனைக் கணங்களினேடு
மிருகண்முன்றெரி சித்திடும்வாஞ்சை யெய்தினேனருள் வீரெனவிசைத்தான்

அணிகொள்சித்திர கூடமெய்துதியே லந்தவண்ணமா மென்றறைந்திடலு
மணிகொள்வாலுடை யானடிமலர்கண் மறுவலுங்கனி வுடன்றொழுதேத்திக்
கணிதமற்றபே ரின்புடனடனங் காணவாயுவின் காதலன்மறைந்தான்
றிணியுளம்பெறு மாதவர்விரைவிற் செய்யசித்திர கூடமெய்துற்றார். (சரு)

ஆண்டமைந்தனர் வாழுநாளினிலோ ரற்புதப்பெருங் காட்சிநேர்கண்டார்
மாண்டயங்குமா னிடர்பலரன்பின் மருவியொப்பருமிராகவலீலை
யேண்டகப்புரி கின்றதாத்தோற்ற மெய்திமற்றதி லிராகவன் சீதை
நீண்டசிரிலக் குவன்சுக்கிரீவ னிகழ்விபீடண னநுமனுதியர்கள். (சகூ)

புடைகுலாவிடப் புட்பகமானம் பொருந்திச்சித்திர கூடமால்வரையி
னிடைகொள்வான்சிக ரியின்வழியயோத்தி யெய்துசீர்தெரிந் திட்டுமாயையினு
னடைகொளுண்மைதேர் கிலதுமானிடர்செய் ராமலீலையீ தண்மையாஞ்சேவை
யடைகிலேனெனத் துயருடன்காசி யடைந்திடும்படி யகத்தினுட்குறித்தே.()

---

* வியந்தரம் - பைசாசம்.

சிறிதுதூரம்போந் திடலுமாருதியோர் சிலவேதியன் வடிவுடனணையச்
செறியுமந்தணற் றுளசிமாதவர்நீர் செல்வதெங்கெனச் சித்திரகூடத்
தறிஞர்போற்றுசீ ராமலீலையினை யறிதற்கென்றலு மதுகழிந்ததன்றோ
வறிதுசெல்லலிர் நானதுகண்டு மற்றுஞ்சிலதினம் வதிந்திவண்போந்தேன்.()

என்றுசாற்றிட வநுமன்புன்னகைகொண் டிம்மதிக்கணன் றோடந்திடுமஃ
தன்றுகண்டன னெனவிநோதத்தோ வறிதராதுகொ லறைந்தனிரென்ன
வொன்றுதாசர்மா ருதிபிறகெஃதி யூருளார்தமை வினவலினகைத்தே
துன்றுபித்தனிங் கிவனெனயாருந் துளசிதாசர்மா ருதிசொலனினைந்தே. ()

மிக்கசங்கட மருவுபுபார்மேல் வீழ்ந்திராமசந் திரவடியேனைத்
தொக்கவஞ்சனை யோசெய்தாய்விழிமுற் றோற்றியுந்திக ழிராமலீலையெனப்
புக்கமாயவெம் பிராந்தியன்றோவென் புந்தியிற்பொருந் தினனதுவுமுனோர்
சிக்கமாயையின் றொழிலன்றோநின்னைத் தெரிசனம்புரிந் திடப்பலகாலம். ()

பித்தனொத்தலைந் தனனெனக்குற்ற பிதாவுந்தாய்மூதற் பேசுமெப்பொருளு
மத்தநீயென வேமதித்திருந்தே னடியனேனைவஞ் சித்தனன்றோவென்
னுத்தமத்திருத் தொண்டர்சோர்ந்திரங்க வுற்றுளார்களுன்மத்தனென்றகன்றார்
பத்தர்கட்கோர்தா யானமாருதியும் படிவமாறிவிண் வடிவமாயினரே. (௫௧)

நிகழுமேல்வையிற் றசர்தம்மைத்தா நிந்தைசெய்துகா சிப்பதியெய்தி
யகவிராகமிக் கூண்டுயிலொழிந்தே யமையுநாளொன்றி லவரயர்போதிற்
புகழ்குலாவுமா ருதியொருகனவிற் போந்துதாசநீ புந்தியுட்டளரே
லிகதலத்துனைப் போன்றபாக்கியர்யா ரிமையவர்க்குமெட் டரியராகவனை. ()

சாக்கிரத்தினிற் கண்டனையன்றோ சஞ்சலங்கொடேற் றினுக்குளந்தளர்ந்தாய்
பாக்கியங்கொளச் சேவைநேர்கண்ட பண்பெனப்பக ரவினும்பரிவாய்
நோக்கியேயகக் கண்ணமைந்துற்றோ னுங்கண்மூற்பின்ன ணேக்கலாகுமென
வூக்கியற்றிரு வுளத்திடைதாச ருற்றகோதண்ட மம்புகொண்டவனாய். (௫௩)

நீலமேகசா மளநிறத்தவனாய் நீண்டவண்சடா மண்டலத்துடனே
சீலமேவுசா னகியிலக்குவனாற் சேவிக்கப்படு பவனுமாயொப்பின்
மாலமைந்தசுக் கிரீவன்பாலோதும் வாக்கியத்துடன் மந்தகாசனுமாய்க்
கோலமேவுபா துகைசிரமீதிற் கொண்டமைந்துறு பரதனைக்கண்டே. (௫௪)

அலகிலாவியற் பிரேமைபொங்கிடல்போ லானந்தக்கண்ணீர் ததும்புநனாகி
யிலகுபேரன்பிற் றொழுமனுமானை யெல்லையில்லரு ளாற்கடாட்சித்து
நிலவுகின்றவ னாகிமுன்னிற்கு நிகரில்பத்திசால் வீடணன்றன்னைக்
குலவுபேரானந் தத்தினேக்கிக் கொண்டிருப்பவ னாகியயோத்தி. (௫௫)

தோயவாமிகுந் துற்றவானரராற் சுற்றப்பட்டவ னாகிநற்றேவர்
தூயமாமலர் சொரிந்துளத்தன்பாற் றுதிக்கப்பட்டவ னாகிமுற்றுலங்கு
நேயசீராம சந்திரன்றன்னை நெஞ்சகத்தினுட் பதித்துவப்புடனே
மேயராமாய ணந்தினங்கேட்டே விசுவநாதர்சந் நிதியிடைவதிந்தார். (௫௬)

வேறு

இன்னணந்துளசி தாசர்காசியிடை யிலகுநாளொன்றினண்பகலி
னன்னலத்தவர்பால் விப்பிரனொருவ னண்ணியானறப்பசித்தனன்சற்
றன்னமீகுதிர்யான் பிரமகத்தியுளே னங்கமைகின்றிலனென்ன
மன்னருட்டாச ரவனருகமைந்து மனஞ்சிறிதஞ்சலேயென்றே. (நுஎ)

நீயமைபிரம கத்தியின்குறிக ணீக்குதியான்புகன்மறையை
நேயமொடொருமூ விசையுரைத்தலேயி னிரைபொலிகங்கையின்மூழ்கி
மேயவென்னிடஞ்சேர்ந் தொருமைபட்டிடவே மிசைதியென்றேசீதாராம
வாயநன்மறையோ தினானுப்பிடனு மவ்வணம்புரிந்தடைந்திட்டான். (நிஅ)

உடனவனங்கை பற்றியீர்த்தனர்சென் றுடனருந்தினரிதையுணர்ந்தே
யிடமகல்காசி நகர்மறையோர்கள் யாருமாண்டெய்தியென்செய்தீர்
படர்தருபிரம கத்திசெய்தவன்ற னேடுபக்கணம்புரிந்தீரோ
பிடர்பிடித்தகற்றீ ரின்றெனிற்சாதிப் பிரட்டராவீரெனப்பேச. (நுகூ)

ஒப்பில்சீர்த்துளசி தாசர்புன்னகைசெய் துவணேயிவ்விச்சுவநாதர்
தப்பிலாலயத்துட் சென்றுபரீட்சை தகப்புரிவீரெனவுற்று
ரிப்பிராமணன்கை யிடைபசுபுல்லுண் டிடுவதேலொப்புவமென்று
செப்பிட்தாச ருயிர்ப்பசுவன்றிச் சிலைநந்தியுண்டிடப்புரிவாம். (கூ0)

என்றவன்காத்தி லன்னமும்புல்லு மீந்தொருபசுவையுண்பித்துப்
பின்றளியிடைப்போய்த் தாசர்நந்தியின்பாற் பேசுவரோநந்தீச்சுரனே
யொன்றலாம்பிரம கத்திசெய்யிவன்று னுயர்சீதாராமமந்திரத்தா
னன்றமைந்ததுசத் தியமெனிலின்னுனல்கிய நீயருந்தெனலும். (கூக)

முகத்தினைத்தாழ்த்தி நந்தியெம்பெருமான் முன்னுறுமறையவன்காத்திற்
றகத்திகழ்கலஞ்சா லன்னமும்புல்லுந் தான்விரைந்தருந்திடுமொப்பின்
மகத்துவச்செயல்கண் டவர்கள்பற்பலரும் வரம்பிலானந்தமுற்றவராய்ச்
சுகத்துவச்சிதா ராமமந்திரத்தைத் துளசிதாசரைமிகத்துதித்தார். (கூஉ)

அந்தநான்முதற்கா சியிலுளோர்பலரு மருந்தவர்சீடராயணிசால்
சந்தமார்மடமொன் றவர்திருப்பேராற் சமைத்துவீற்றிருந்திடப்புரிந்து
சொந்தநற்பணிக ளியன்றவாபுரிந்தார் தோடநீத்துய்வுறுமறையோன்
பந்தமுற்றொழிந்து மற்றுளார்யாரும் பணிந்திடபத்தனுய்ச்சிறந்தான். (கூங)

மறங்குலாம்பிரம கத்திதோய்கொடிய மறையவன்மூவிசைவழுத்தி
லறங்குலாம்விசுவ நாதராலயத்தி லமைந்தகன்னந்தியைதசைந்து
பிறங்குமன்னவன்கை யன்னமும்புல்லும் பெரிதருந்தியதெனிற்சிறந்த
திறங்குலாஞ்சீதா ராமநன்மறையைத் தினஞ்செபிப்பார்திறஞ்சிறிதோ (கூச)

திருவருட்பெருக்கார் துளசிதாசரின்மெய்த் திருவளர்மடத்திடையலகில்
பொருணிறைந்தமைந்தார் யாவருமருந்திப் பொலிவுடன்வாழ்வதுகண்டு
திருடவெய்தொருவன் பித்திகைதுளைத்துத் திட்டியினேக்கமத்தியத்திற்
பொருவில்சீராமன் றனுவுடனம்பு பொருந்திநின்றுளதிறங்கண்டான். (கூரு)

காண்ட லுநெஞ்சங் கலங்கினன்புறத்திற் கலந்துசின்னுழிகைகழித்தே
மீண்டமைந்தனனேக் குழியுறங்காதே விளங்கிடக்கண்டிரவெல்லா
மாண்டமைந்தனனேக் கிடுதோறுமுன்போ லமைதரக்கண்டனனஞ்சிக்
கோண்டதன்னெஞ்சம் வெருண்டனன்மனையிற் குலவிநாற்றினங்கடந்தணைய

மீண்டுமவ்வாறே விளங்கிடக்கண்டு விம்மிதமிகமருவினனு
யாண்டுறுதுளசி தாசர்பான்மேவி யடிதொழுதடிகணும்மடத்தி
லீண்டுமெய்ப்புருடோத் தமன்றனைப்பகலூ டிருவிழியுடனுளங்குளிரக்
காண்டுபோந்திடுமா செய்திரென்றிரப்பக் கழிமகிழ்வுடன்வினவிடுவார். (சுஎ)

உற்றநீயாவ னெந்திருமடத்து ளோர்புருடோத்தமனிருப்ப
தெற்றறிந்தனைசொல் லென்னயான்கள்ள னிரவினிற்சுராங்கமிட்டுறுகா
விற்றெனவியலாச் சுந்தரபுருட னிருந்திடக்கண்டனன்பலகாற்
சற்றவனுனந் தத்திருவுருவந் தரிசிக்கும்வேட்கைமிக்குடையேன். (சுஅ)

நவிலுமச்சேவை விரும்பியேயீண்டு நண்ணினேனன்பகலிலென்றிடக்கேட்
டவிருமெய்த்துளசி தாசர்சீராம னருளினைவியந்துகொண்டாடிப்
புவியினிற்கள்வர் தொழில்கெடும்வண்ணம் புரிந்திடுமீமுன்னுள்வறிதே
கவினுறுமாய்ப்பா டியிற்றயிர்வெண்ணெய் களவயர்ந்தனையதுமரபோ. (சுகூ)

என்றுபற்பலவாத் துதித்துமாமறைகட் கெட்டருமுனதடிமுடிக
ணன்றுதோய்மடத்தின் வாயிலின்கீழ்மே னண்ணியதற்புதமென்று
முன்றுதைகள்வன் றனக்குவேண்டியபொன் முகமனேடீதலுமவன்யா
னென்றும்வேண்டலனென் றதுமுதற்றூசர்க் குற்றமெய்ச்சீடனுயமைந்தான்.

அறிகிலதங்கிப் பாலணையினுமற் றதுசுடும்பான்மையேபோலுஞ்
செறியுவர்ப்போடுண் ணினுமவுடதநோய் தீர்த்திடுஞ்செய்கையையொத்தும்
பொறியுரங்குலவும் பகவனம்புயத்தாள் போற்றடியாரிடைபுகிற்புன்
னெறிகொள்பாவியர்க ளேனுமெய்க்கதியி னிலவுதற்கையுறவுளதோ. (எக)

திடத்தகைத்துளசி தாசரிவ்வண்ணந் திருவிளையாடல்செய்தியல்கான்
மடத்தயலமையோர் மறைச்சிறுன்பைங்கண் வாளராத்தீண்டலின்மாய்ந்தான்
சடத்தினைமறையோ ரீமமேற்கொடுசெ றதியினிலவன்மனையான
மடக்கொடிகணவ னுடன்மடிந்திடத்தன் மனந்துணிந்தனள்பிறகமைவாள் ()

எதிர்வருதுளசி தாசரைக்கண்டா ளீற்றின்மாதவர்பதம்போற்றிப்
பதியுடன்மரிக்கி னன்றுறுமென்னப் பரிவுடன்வணங்கிமிக்கிரங்கி
முதிர்துயருடன்முன் னிற்பவாங்கவண்மேன் மூதருண்மிக்கமைந்தவராய்
மதிமுகத்தணங்கே நீசுமங்கலியாய் வாழியென்றுசிபேசிடலும். (எஉ)

அன்னகாலவடன் றலைகவிழ்த்தொன்று மறைகிலளழுங்கிநின்றிடவம்
மின்னனுளுறவோ ரடிகளிப்பொழுதிம் மெல்லியனுயகன்வீந்தா
னின்னவளுடன்கட் டையிலிவர்ந்திடுமா றேகுகின்றனளதனுீர்
பன்னலாமாற்றம் பலிப்பதெவ்வகைவிண்பயனில்சொல்லாய்முடிந்ததென,

வினவியதுளசி தாசரென்மாற்றம் வீண்பட்டதின்றிதுவரையுங்
கனநிகர்மேனி யிராமசந்திரன்மெய்க் கருணைசெய்திடுமெனக்கழறிப்
பனவரோடிம மடைந்துகளேப ரத்தினைத்துணியினுன்மூடி
யினவுயிர்த்திரண்முற் றளிக்குமாற்கிவனை யெழுப்புதலோவரிதென்று. ()

திப்பியசீதா ராமமந்திரத்தைச் செபித்திராகவனிடமிரப்ப
வொப்பியமுகூர்த்த மகனுமுன்றுயின்றே னெத்தெழுந்திட்டனன்றன்முன்
குப்பியமனிதர் தம்மைமீமத்திற் குறுகியசெயலினைத்தேரான்
விப்பிரர்தம்மை வினவிடவுண்மை விண்டுணையெழுப்பியமேலோர். (எசு)

நின்றனரீண்டென் றிடலுமார்வத்தா னிலமுறப்பணிந்துநின்றேத்தி
நன்றமைதேவ ரீர்க்கறிவில்லே னவிற்றுகைம்மாறிலையென்னத்
துன்றரியாடல் யாவுமென்றுசி சொற்றனர்மடத்திடையெய்த
வொன்றருமறையோர் நகருளோர்தாச ரொப்பின்மான்மியம்புகழ்ந்துவந்தார்.

இன்னவாறியனுட் டுளசிதாசரின்சீர் யாவுமோர்ந்திந்திரபிரத்த
மன்னனுமக்ப ரெனும்பெயர்மிலேச்சன் மனத்தில்விம்மிதமிகமருவிக்
கொன்னமைதாச ரிடத்துவந்தன்பிற் கும்பிட்டோரிடத்தினிலமைந்து
நன்னலவருத்த மானம்வினவ நண்ணினேனென்றுசர்பானவில்வான். (எஅ)

அரியமாதவத்தீர் தாம்புவிமாந்த ராற்றிடற்கசாத்தியமாகும்
பெரியகாலப்போக் குகளெளிதாகப் பிறக்குவீரெனப்பலர்தாமுந்
தெரியவோதலின்யா னென்றுகாண்டரவென் சிந்தைமீதவாவினன்வந்தேன்
புரியவேண்டுமென வேண்டலுந்தாசர் புன்னகையுடன்புகன்றிடுவார். (எகூ)

எனக்கொருசாமர்த் தியமிலைகாலப் போக்கியற்றிடவும்யானறியே
றனக்கிணைதானு விளங்குசீராம சந்திரனன்றிமற்றறியேன்
பனத்தகுமாற்றஞ் சாதமென்றேதப் பார்த்திபனுனவம்மிலேச்சன்
சினத்துடன்பிடித்துக் கட்டியின்னவனைச் சிறையிடைசேர்த்துமினென்றும்.

களிப்புறவிவனி ராகவன்வந்து காலப்போக்கொன்றுகாட்டிடிற்பின்
வெளிப்படவிடுமி னென்றுஞ்சேவகர்பால் விளம்பமற்றவரவ்வாறியற்றி
யளிப்பொழில்வளஞ்சா லிந்திரபிரத்தத் தமைத்தருஞ்சிறையிடத் தாச
ரொளித்தகையிராம னிருக்கவென்றனையென் னுளுற்றுவரிவரெனவுன்னி.

ஆயினுங்காலப் போக்கிறையவனுள் ளாவலின்படிபுரிதுமெனத்
தாயினுங்கருணை பழுத்தியல்வாயு தனயனைத்துதித்திடுகின்றார்
தூயியலஞ்ச னைக்கொர்புத்திரனே துட்டராமிராக்கதர்பலரைத்
தோயியல்வாலா னசிப்பித்தாயுனது தொண்டனேன்காணவொன்றியற்றாய்.

இராவணன்சத்தி யேற்றிலக்குமண னிறந்துறுங்காற்றுரோணப்பேர்த்
தராதரங்கொணர்ந்து நீயன்றேபிழைப்பித் தனையருட்சீதாநிதய
சரோருகமலர்த்து மிரவியேயளப்பி றபனனெத்திலகுதேசுடையாய்
விராவிலங்கையின்றே வியைச்செயித்திட்ட வீரனேயுருத்திரனுவாய். (அந)

உனைச்சரணடையென்மிசையருள்சற்றே யுற்றுநின்னதுபராக்கிரமந்
தினைத்துணைகாணக் காட்டுதியென்னச் சிலர்தோத்திரித்துறுமளவிற்
கனைத்துறுங்கவிசுற் றிடநகர தனிற் கலந்தனர்தாசர்முன்னிற்பத்
தனைப்புரையருண்மா ருதியிருசரணந் தாழ்ந்திறைகோள்விளம்பிடலும். ()

கவிகளைநோக்கி யிந்நகரார்க்குக் காட்டுதிர்காலப்போக்கென்ன
நவிலலுங்கணத்திற் புறநகர்முழுது நாசமுற்றிடப்புரிந்தங்க
ணவிர்தருதருக்கள் வேருடன்பிடுங்கி யமையியற்றுளியர்புருடர்
கவினுறுமிடையா நகரினுண்மேயார் கலங்கிடப்புகுந்தன கணத்துள். (அரு)

வேறு

தனனந்தனதன தனனந்தனதன தனனந்தனதன தனதய்ய

*புளினங்குலவிடை புனல்கொண்டிடும்வகை புரியும்புனலிடை திடர்செய்யுங்
களிகொண்டவரிவர் மலைகொண்டிசைபயில் களிவண்டமைதட மிசைபெய்யுங்
கிளிபைஞ்சிகியின முழுதுந்திகழ்பல கிரியின்புடைபுக விணிலெய்யுந்
தெளிவின்றியவிடர் களுமங்கையர்நகை தெளியும்படியெறி தருமைதே. ()

தனனத்தனதன தனனத்தனதன தனனத்தனதன தனதானு

நகரத்திடைபொலி கிரகத்தொகைகளை நவில்கைத்தலமவிர் தருவாலே
தகரப்புரிதரு மிசைகுப்புறுமமை தருபித்திகைகளை யடியோடே
நகமுற்றிடுகைகள் கொடுதொட்டயலமை நகமொத்தவிர்மனை மிசைவீசா
வகமுற்றிடுமவர் குடுமித்தொகைகர மமையக்கொடெறியு மெளிதாயே. (அள)

தனனந்தனதன தனனந்தனதன தனனந்தனதன தனதானு

இவணங்கணமொழி வதன்முன்பிடைநக ரெழில்குன்றிடும்வகை புரிநீர்தே
ரவமிஞ்சினர்பலர் களுமொன்றவயவ மறுபண்புறுதவி னகலாதே
தவமொய்ம்புடையவ ரெனவங்கமைதல்செய் தனர்புண்படுகில ரொளிவானுர்
குவடென்றியல்கவி யெதிர்கெண்டமைகிலி கொடுதுஞ்சிடுநிலை யருமானுர். ()

தனனுதனதன தனதந்தனதன தானத்தாத்தானனு

உடனேகவியின முழுதுந்திரள்கொடு மதிதீரிறையவன்மனைசென்றவையிடை
யுறுசேவகரெதிர் படலுங்கடிதுயர் சேனைப்போய்ச்சேரவே
யுரமார்கரநிரை கொடுபங்தெனவவ னியின்மீதுறவில துவியந்தரமென
வுயர்வானிலநடு வினிலொன்றிடும்வகை சாலத்தாக்காவைதே
மடநீடியநர பதிசுந்தரமலி மடமாதர்களொடு குலவுந்தனிமனை
வயின்மேயவண்வதி தருமங்கையர்கர மேதொட்டீர்த்தாடியே
வலமோடிடமுரு டருபம்பரமென மிகவேசுழலுறும் வகைகண்டகல்வெளி
வழிவாயுவிலலை திரணந்தனைநிக ராகப்போக்காமுனேர்
கடமாநிகரென வதியும்புரவல னுடனேவடவையை நிகர்வெஞ்சினமொடு
கடையோயெதுவகை புரிகின்றதெதிர்கொள் காலப்போக்கோதெனு

* புளினம்-மணற் குன்று.

கடிதேயவன்மணி மகுடம்புனைசிரமிசைபோய்முடிபுவி யினிலொன்றுதல்செய்து
கரம்வால்கொடவன வயவங்களைமுறி யாவிட்பாற்றேயவே
திடமோடெறிதல்செய்தவனம்புவிமிசை யடையாதுகைகளின்மிசைசம்பளங்கர்
திறமேவிடும்வகை யுதிரம்பிழிதல்செய் தாசற்றூர்ச்சாலைசேர்
திருடாவெனவெகுவிதநிந்தைகள்புரி தரலாலமைதருமவன்மந்திரிகண்மெய்
திகழ்தாசரையுறு சிறையின்புடையிட லாலச்சீர்ப்பாளரே. (அகூ)

தனதனதனதாத்த தனனத்தனத்தன

தமதுபாசனைமூர்த்த மெனநிலாவியசீர்த்தி
தழையிராகவமூர்த்தி தனையுட்டுதித்தலால்
விமலராமநன்மாற்ற மிடைவிடாதிவைசாற்றி
விரவலாயவெனுத்த மனதுட்குறித்தைதே
மமதைதோயுமிலேச்ச னருகுபோய்மிகுமாட்சி
மருவுதாசரையேட்டை செயவிற்றவிப்பிவர்
நமதுநாடிதில்வாழ்க்கை பெறுமெலோர்களுமாற்ற
நவியநேரிடலாச்சி தகலக்கணத்திலே. (கூ0)

தனதனதந்ததந்த தனதானதானன

இராமநாமம்பகர்ந்து நிலாதுபோயண்டமொன்று
மிலேகர்பேணுந்தவங்கு லவுதாசர்தானையே
பராவியாநென்றுபுந்தி யிலாமலேகண்டனன்கொள்
பயோதிநேரென்றுபொங்கு தயைமேவுதெவரீர்
துராசனேதங்களொன்று மெணுதிர்தாடஞ்சமென்று
சொலாயெனுநன்குமந்தி ரிகள்போதமோதவே
யராவணனன்றுநன்றென் விவேகமோடங்கண்மங்கை
யரோடுபோயன்பர்செம்பொ னடிபேணியோதுவான். (கூக)

வேறு

அறிவிலேன்பிழையைத் திருவுளங்கொள்ளா தருள்செயவேண்டுமென்றிரப்பச்
செறியருளன்பர் காலப்போக்கனைத்துந் தேர்ந்தனைகொல்லிவையாவு
நெறிபெறுக்கயவர்த் திருத்துசீராம னீண்மறக்கருணையென்றியம்ப
வெறிகொள்வான்பின்னும் பற்பலதுதிகள் விண்டனன்றாசர்தாள்வணங்கி. ()
வானரக்குலங்கட் கண்டுமிக்கச்ச மருவினன்றாசர்பின்பொளிப்ப
ஞானமார்துளசி தாசரக்கணத்தி னயனநின்றின்பநீர்வடியத்
தேனனதுதிபற் பலபுகன்றன்பிற் றெண்டனிட்டருச்சனைபுரிந்து
வானவைகுந்தத் தடைமினென்றேத மற்றவையுடன்மறைந்தனவே. (கூங)
உடன்மனமகிழ்ந்து மன்னவன்செம்பொ னுலப்பிலதாசர்தாண்முன்வைத்
தடன்மலிதாசர்த் துதித்திவையடியே னாற்றியபிழைக்கபாரதங்
கடனிகாருளீர் கைக்கொடெற்பாது காத்தருள்வீரெனவணங்கத்
தொடர்முழுதறுத்தா ரீதுவேண்டலன்யான் றேய்ந்தனன்றிருத்தியுன்மீதே

பொன்னிதுகொண்டுன் ஞட்டிடையிராமன் பொருவில்கேத்திரம்புரிந்தன்பான்
மன்னியற்சாது பூசைசெய்தின்ப மருவிவாழ்கென்றுமெய்ப்போதம்
பன்னினர்பிருந்தா வனமடைந்தியல்காற் பத்தர்கள்பலரவண்மருவித்
துன்னியகண்ணன் றளியிற்போந்தன்பார் துளிசிதாசரைப்பரீட்சிப்ப. ()

உன்னினரவரி லொருவரவ்வவர்தம் முபாசனுமூர்த்தியல்லாம
லன்னியதெய்வம் போற்றுநர்கணவ னல்லனையன்பனுக்கொள்ளுங்
கன்னியையனைய ரென்றலுந்தாசர் கண்ணன்முன்போந்துசீராம
விந்நியமத்திவ் வுருக்கொடோவதிந்தா யிதைத்தொழுகின்றிலன்றுளசி. ()

சிலையுடனம்புங் கண்டிடில்வணக்கஞ் செய்திடுமென்னவக்கணத்தி
னிலைபெறுகண்ணன் கைக்குழலம்பாய் நீண்டவில்லொன்றமைந்திடலு
மலைவறக்கண்டார் யாவருமின்ப வாரிதி மூழ்கிமெய்த்தாசர்
தலைவரும்பெருமை யுணர்ந்தனர்தொழுதார் தாசர்தாசரதியைக்கண்டே.(கூஎ)

தனைமறந்தெழுந்த பரவசத்தினராய்த் தட்டமிட்டாடல்செய்திட்டார்
முனைவர்வேண்டலின்முன் னமைந்தவாறுக மொழிந்துகோவர்த்தனமுதலாம்
வினைதவிர்தலங்கள் போற்றினர்யமுனு வேணியின்மூழ்கியோர்மாதஞ்
சினைமுகிலனையா னன்பர்களுடனே செறிந்துபேரின்பமுற்றிருந்தார். (கூஅ)

ஆண்டருட்பிரிய தாசரென்றமைபே ரந்தணரரிபதத்தன்பு
நீண்டவர்கலியி லுலகருய்ந்திடுமா நீண்டவனிடுநியமனத்தான்
மாண்டமெய்ப்பத்தர் சரித்திரமனைத்தும் வழுவில்சீர்த்தேவபாடையினு
லேண்டகவரைந்தோ ரிருப்பதுவினவி யெய்தினரிவரவண்மாதோ. (கூகூ)

பத்தர்மெய்ச்சரிதம் வினவுபேராசை படர்ந்திவண்வந்தனமெனலும்
வித்தகப்பிரிய தாசர்மெய்த்துளசி தாசர்சீர்விண்டிலேமென்னச்
சித்தமீதுன்னுங் காலைபேரருள்சால் சீதரன்யானமைத்தனனென்
றெுத்தசீர்த்துளசி தாசர்சீரமைந்த வொருசுவடியையளித்தகன்றான். (க00)

அளவில்பேரானந் தப்பெருங்கடலி லமைந்தனர்தந்நிலைமருவித்
துளசிதாசரியற் பிரியதாசருடன் சொல்லுவர்சீரகுப்திறும்
முளநினைத்திடுதோ றிலகுறும்பெருமை யுரைப்பரிதென்னநும்பெருமை
வளமலர்க்கரங்கொண் டிறைவனேயெழுதின் மற்றியார்மதிப்பரென்றேுதி. ()

அளவிலின்பத்தோ டளவளாயமர்நா ளவிமுத்தமாநகர்மறையோன்
றுளசிதாசரைக்கண் டடிதொழுதன்பிற் றுதித்துத்தாமகலாற்காசி
வளநகர்தவ்வென் றிருந்ததாலங்கண் மருவுதிரென்னலுந்தாசர்
பளகறுபிரிய தாசரைவேண்டப் படர்ந்தனருடனவிமுத்தம் (க0உ)

வந்தவருடன்சின் ஞளவிமுத்த மாநகர்மருவிக்காளிந்தி
யுந்தருட்டலஞ்சேர்ந் தனரதன்பின்ன ரொப்பறுதுளசிதாசரென்பார்
பந்தமார்பலமா னிடருமெய்ப்பத்திப் பரவைமூழ்கிடப்புரிந்தீற்றி
லந்தமிலன்ப ரோடுகீர்த்தனஞ்செய் தருள்வைகுந்தம்புகுந்தனரே. (க0௩)

வேறு

இல்லாண்மொழியால் விரத்தியுற்று னிணை தீர்திருநா மஞ்செபித்தே
யிராமாயணஞ்செய் தலைகையினு லெழிலஞ்சனையீன் றருள்சுதனும்
வல்லாளனைநேர் கண்டவன்சொன் மாற்றத்தாற்சித் திரகூட
மருவியிராமற் றெரிசித்து மாபாதகனைப் புனிதஞ்செய்
தல்லார்கண்டன் கோயினந்திக் கழுதீர்ந்துற்ற கள்வனையா
ளாக்கியவிந்தர்த் திருத்தியிரா கவனுக்கண்ணன் றனைப்புரிந்தே
யெல்லாதபச்சி ரியைதுளசி தாசர்பெறும்பே றெனக்கருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௧௦௪)

துளசிதாசர்கதிமுற்றிற்று

ஆ கவி ௪௬௬௧

---

ஐம்பத்தைந்தாவது

# பிம்பாசிபத்தகதி

போதனைத்தரு தாதைகையெழுதிடும் புகழ்தோய்
மாதவம்பொலி துளசிதாசரின்கதி வகுத்தேன்
மாதவன்றிரு வருள்கொடுவரம்பிலாட் டியற்றும்
போதமேவுபிம் பாசிசீரறிந்தவா புகல்வாம். (௧)

வளங்குலாவுமத் தினபுரிதன்னையாண் மன்னன்
களங்குறுமனத் தான்குணத்தால்வரை கடப்பா
னுளங்குலாவன்பிற் சத்தியையுபாசனை புரிவான்
விளங்குநாளவன் பத்திகண்டவளருண் மிகுந்து. (௨)

கானகங்குலா மியோகர்க்குங் கலப்பரிதாமெஞ்
ஞானமீந்தன ளன்னதாற்காண்டரு ஞால
மீனமாமித்தை யென்றறிந்திட்டன னெனினுங்
கானுறுத்துழாய் மாலையான்காட்சிவேட் கையனுய். (௩)

வேறு

அனவரதந்தன்குலதெய் வதமாகுங்காளியிட மறைந்துவேண்டத்
தினமொன்றின்மன்கனவி லம்பைபுகல்வாளரிதன் சேவைஞான
வனகவருட்கண்பெற்றூர்க் கன்றிவிண்வாழமரர்கட்கு மரிதாமென்னிற்
கனவன்னபொய்வாழ்வின் மயங்கியுழன்மானிடர்தாங் காணற்பாற்றோ. (௪)

ஆயினுமன்னேன்மெயரு ளவதாரவருண்மூர்த்த மாயகண்ணன்
றூயியன்மெய்ச்சேவைபெறு வாய்நாளைநின்விழிமுற் றுதைவார்சில்லோர்
தூயியல்கொளவர்நின்விருப் பினைச்சாதிக்கப்புரிவார் துயரேலென்னத்
தாயிசைத்துமறைந்திடமன் களிப்பொடெழுந்தனன்றேவி தனைப்பூசித்தே. ()

அத்தாணிமண்டபத்தி லெய்தவிராமானந்த வடிகட்கன்பார்
கொத்தாயசீடர்சிலர் குறுகலுமன்னவன்கண்டுட் குதுகூலித்தே
மெத்தாதரத்தொடவர் தாள்வணங்கிப்பூசனையுள் விருப்பினூற்றி
மெய்த்தாபதர்கனுகர வமுதூட்டிமற்றவர்பால் விளம்புகின்றான். (௬)

தண்ணருட்பேரன்புடையீர் யானுமிராமானந்த சாமிதன்பொன்
வண்ணமலர்ச்சேவடிகட் காளாகிநும்பணிசெய் வாழ்வுவேட்டே
னெண்ணமுடிவுறவடியே னியற்றும்வகையருள்புரிவீ ரென்னவேண்ட
விண்ணவர்போற்றுங்குரவன் சந்நிதிப்பாற்பின்னுணீ மேவுவாயேல் (௭)

பரிபாகநினக்கமையிற் சீடனெனக்கொள்வரெனப் பகரமன்ன
னரிதானமெய்த்தவத்தீர் பின்னுள்யானடைவனென வன்பிற்சாற்றிப்
பெரியோர்கடமையனுப்பிப் பின்னுண்மந்திரிகளிடம் பேசுகின்றான்
விரிநூனுண் ணுணர்வுடையீர் வெருட்சிமிகுங்கனவிரவில் விரவிற்றன்றே. (௮)

எண்ணுதொறுமுண்ணடுங்கு கின்றதொர்பேயென்னுடைம ரியற்றயான்று
ளண்ணும்பசெயமடைத்தே னப்பயந்தீர்தரக்காசி நகரத்தெய்தற்
குண்ணுதலினேனெனச்சொற் றுடன்சேனைசிலகொடவ னுற்றுளன்பால்
விண்ணுலகுள்ளார்களும்போற் றிராமானந்தரின்மடத்தின் மீதுமேவி. (௯)

தன்படையைமுன்றிலமைத் துட்போந்துசீடர்களைத் தாழ்ந்துசாமிக்
கென்படர்ச்சியோதுகென விரப்பவவர்சற்குரவர்க் கிசைத்தானன்னோர்
கொன்பயிலிராசசின்னங் களைந்திடச்செய் திவணணையக் கொணர்திரென்றா
ரின்படியாரதுபுகலக் கேட்டலுமன்கிளர்ச்சியுளத் தெய்தினனே. (௧௦)

உடனணிமுற்றுங்களைந்திட் டுத்தரியமிடையில்விசித் துவப்பினோடு
நடலைதவிர்த்தாண்டருள்சற் குருநாதன்சேவைகொள நடந்தானக்காற்
படர்தருதொண்டரிலொருவ ரச்சமிலதிக்கினூற்றிற் பாய்தியென்ன
மிடல்கொண்மன்னன்பாய்தரவெண் ணிடவடியார்காம்பிடித்து விலக்கிச்சொல்வர்

இவன்மிக்கபரிபாகி யாகுமென்றுதேசிகர்பா லினிதுகூட்டத்
தவமிகுமன்சற்குருநா தன்கமலத்தாட்டுணைக டாழ்ந்துபோற்றிப்
பவமொழித்தென்றனையாள வேண்டுமெனவிரங்கிமெய்ப் பண்புதேர்ந்து
ளுவகையுடன்சீராமன் மறைபையவன்வலச்செவியி லுபதேசித்தே. (௧௨)

மனமொடுங்குநிலையுமுளங் கொளத்தேற்றிநின்னகரின் மருவியன்பாற்
கனமனையவருண்மேனி பெறுகண்ணன்சேவடிகள் கருத்துளூன்றித்
தினமன்பர்பூசனைசெய் திருத்தியெனுங்குரவருட் செம்பொற்பாத
வனசமலர்மிசைவீழ்ந்து தொழுதடியேற்கின்றோர்வரம் வழங்குவீரால். (௧௩)

தேவரீர்க்கென்மெய்பொரு ளாவியெல்லாமறத்தத்தஞ் செய்தேனத்தாற்
காவனகர்நும்மதென யான்கருதும்படியாண்டுக் கலத்தலென்ற
னுவலதுசாத்தியமெய் திடப்புரிதிரென்றிரப்ப வருளாலொப்பி
மேவமன்னன்பரவசமிக் கடியவர்யார்க்கும்பணிகண் மிதப்பவாற்றி, (௧௪)

மணிமுடிமைந்தனுக்களித்துத் தொண்டரொடுகளித்திருக்கு மன்னற்கண்ட
வணிகர்மாந்தர்கள்யாரும் பித்தமைந்தரசனுக்கென் றறைந்தாரக்காற்
பணிகொள்குருபரர்மூன்று தினம்வதிந்துகாசிபுகப் படருங்காலை
தணிவறுபேரன்பினுட னளவறுபொன்றக்கிணையாத் தந்துபோற்றி. (கரு)

அருளமுதக்கடலிலெழுந் தரங்கநிகர்தம்மாற்ற மடியேன்கேள்வி
பருகவிழைந்தனவால்யா னுந்திருத்தொண்டர்களோடு படரும்வண்ணந்
திருவருள்பாலித்திடுதி ரிராச்சியமைந்தன்புடைதந் திட்டேனென்ன
நிருபனிலைதேர்குரவர் வருதியெனப்பற்றனைத்து நீத்துமன்னன். (கசு)

குரவருடன்போந்திடக்கண் டவன்மனையாம்பன்னிரண்டு கோதைமாரு
மூராமுடன்பின்றொடரவர சனுங்குரவரும்போத மோதிநாட்டில்
விரவவந்தப்புரத்தனுப்பிச் சீதையெனுமொருமாது விலகிலாளா
யரசனெனைவிடுக்கிலுடன் மெய்விடுதன்மெய்யென்ன வறையக்கேட்டே. (கஎ)

கருணைமலிசற்குரவர் நிருபனுடன்சாதுவாங் கன்னிதன்னை
யருமைமகள்போற்கருதி யுடன்கொடணைந்திடுதியென வவ்வாறேற்பி
யொருமைமனமமைந்தரம்பற் பலபுரிந்துகுருபரரோ டொப்பில்காசி
மருவியருட்கிருட்டிணனைத் தொழவடியாரோடுதுவா ரகையில்வாய்ந்தான். ()

கண்ணனடித்துணைபோற்றிச் சின்னுளாண்டமைந்துதிருக் காசிமேவு
மெண்ணமமைந்தன்பர்புறப் படமன்னனிப்போதியா னெய்திலேனென்
றெண்ணகைச்சீதையினுடனுண் டமைந்தனன்சின்னுளொழிந்திட் டெதிமீதே
தண்ணமைகப்பலினிவர்ந்து காசிபுகுவானிடையிற் சாரும்போது. (கக)

அணிமலிதுவாரகையைப் பிறிந்துவரச்சகியாதங் கணையும்வண்ணம்
பணிமொழிச்சிற்றிடைச்சீதை காணுமனுததியிடைப் பாய்ந்தானக்காற்
றிணிதருகப்பல்கரையெய் திடவவர்சீதையையிறங்கச் செப்பும்போதிற்
றுணியுளமன்னனைத்தேடிக் காண்கிலடீரத்தினிடை சோர்ந்தாளாகி. (உ0)

துணையிழந்தவன்றிலெனத் தளர்ந்துமிகத்தேம்புற்று டுணிவாற்கார்கோ
ளணைதருமன்னனைப்பத்த வற்சலனுங்கண்ணனணித் துவரைமேயோ
ரிணைதருமானிடரூப மருவிபமிழாதுகையா லெடுத்துளன்பாற்
பணைபொலிதுவாரகையைக் காணவிச்சையுனக்குளதேற் பார்த்தியென்றே ()

வாரிநடுக்காட்டிடலும் பரவசமுற்றிறைவன்மதி மறந்துநிற்பப்
பாரியன்மானிடனேபோற் றிகழருட்கிட்டிண னன்பிற் பகர்கின்றான்யான்
சீரியசங்காழிநன்முத் திரையமைக்கின்றனன்கரைப்பாற் சேர்தியென்னப்
பாரிதனித்தமைதல்சற்றுமெண்ணிலான்கரையினிடை படரேனென்ன.

மரபன்றுநீபகர்த லித்தகுவன்பிடிவாத மருவேன்மாந்த
ருரமன்னுவிண்டுபத்தன் றுவாரகைபோய்க்கடலிடைவீழ்ந்தொழிந்தானென்னத்
திரவபவாதம்புகன்றங் கேகிடவுள்ளச்சமிகச் சேர்வார்பார்மேல்
விரவுதிகண்களைமூடென் றுரைத்தனனக்கணங்கரையின் மேவச்செய்தான்.

மன்னனுடனணைந்துகரை மேலணுகக்காண்டலும்வாழ் மாந்தர்யாரும்
பன்னரும்விம்மிதரானார் குளிர்மிகையானடுங்கியுறும் பர்த்தாவைக்கண்
டின்னனெடுங்கடலில்விழுந் தழுங்கியசீதைகொளின்ப மிசைப்பதாமோ
தன்னதுயிர்நாயகனா நாயகன்றாடொழுதின்பச் சலதியாழ்ந்தாள். (௨௪)

உடனவிமுத்தம்புகுத வுன்னிவரும்வழிநாப்ப ணோர்மிலேச்சன்
படர்தருமோவியமனைய சீதையைப்பற்றிடவணுகப் பாவையன்பா
விடர்தவிர்த்தாள்கண்ணனடித் தாமரையையுன்னுதலு மிறைவனுற்ற
படனுருவங்கொடுகரத்தில் வாள்பிடித்து மிகவிரைந்தூர் பரியையுந்தி. ()

எடமிலேச்சாநீயென் செய்தனையென்றிடியுறழ்சொ லிசைத்தாங்கெய்த
மூடன்விரைந்தகன்றனன்சீ தையைக்கொண்டுபரவசனாய் முன்போமேந்தன்
மாடமையவிடமிகுதன் னியன்காட்டிற்றனியாகு மாதைக்கள்வன்
றோடமமையாதளித்தா யெனப்பகவனஞ்சலிசெட் டுணையுமென்ன. (௨௬)

ஓதிமறைதலும்பகவன் பத்தவாற்சலியமுளத் துன்னியுன்னி
மாதினொடுபோமன்ன னினியேனுமாநகர்க்கண் மருவாயென்பின்
னீதிகைப்பினொடுபடர்தற் கண்டுசகிக்கிலன்றுயர நேராவண்ணந்
தீதினினையிரட்சிக்கும் வழியுமில்லேனெனத்தேவி செப்புகின்றாள். (௨௭)

நாதவென்பாற்பலகாலுஞ் சாற்றலிர்நுந்தமைவிட்டு நான்போகில்லேன்
றீதமையாதெனைப்பகவன் காப்பனிப்போதாற்றியசீர் தெரிந்திலீரோ
வாதரஞ்சால்கண்ணனன்ப ரல்லலுறுகின்றதுண்டோ வறைமினென்ன
மேதகைமன்னவன்வறிது சென்றிடவோர்புலிவழியின் மேவக்கண்டே. ()

பகுவாயோடதரிடைநின் றுளபுலியைச்சீதைகண்டு பயந்துமுன்பிற்
புகுநாயகற்றடுப்ப வஞ்சேலென்றதனருகிற் போந்துசொல்வார்
தகுமாந்தர்புகும்வழியி னீயமைந்ததெதற்கீண்டு சார்வார்க்கொன்று
தொகுதசையுண்டிடலெதற்குன் றகையவுயிர்களைக்கொல்ல றோடமன்றோ. ()

காண்டவர்கணடுநடுங்கு மிப்புலியாமுடலிடைநீ கலத்தன்முன்செய்
நீண்டகொடுந்தீவினையா லன்றோவிப்போதுமிகு நிந்தைத்தன்மை
பூண்டகொடுங்கொலைபுரிவா யென்னிலிவ்வாகா மியமும் பொருந்திலென்று
மீண்டவனிமேலமைய விட்டிடுங்கொனினதுயிரை விழுங்குமள்ளல். (௩௦)

எத்தனையோனிகளின்முன்னீசெனித்தாயெத்தனைதரமேந் தல்களாய்வாழ்ந்தா
யெத்தனைசென்மங்கள்பசு பட்சிகளாய்வாழ்ந்தாயோ ரெல்லையுண்டோ
வத்தகையவுயிர்வடிவா நீவினையாற்புலிவடிவின் றமைந்தாயீதுன்
சத்தமையாருயிர்க்குற்ற கனவல்லாதியனிலைபாச் சாற்றலாமோ. (௩௧)

வருகணத்திலொழிதருமந் நியவுடலைச்சொந்தமென மதித்தெந்நாளு
மருவுநமதாருயிரைக் கொடுநரகில்வீழ்த்தும்வினை வயக்கலாமோ
விருகவரசெனப்படுநீ யினியேனுந்தீவினைகள் விடுத்திட்டின்பந்
தருசமதமாதியகைக் கொண்டிறந்தவுடலிலுறு தசைதின்றன்பால். (௩௨)

இன்றுமுதலென்சீட ஞத்திகழென்றருட்கண்ணு லினிதுநோக்கி
யொன்றுவனமாலையதன் களத்தினிலிட்டுயர்கருணை யொன்றிவாழ்தி
யென்றுபுகன்றிடுதலும்வெம் புலிசாந்தமிக்கவரை யெழுந்துசூழ்ந்து
நன்றுவணங்குபுகானத் தெய்தியதுகொலைப்புலைஞர் நாணுமாறே. (௩௩)

செத்தபிணந்தனையருந்தித் திகழ்ந்ததுபின்னதன்சரிதந் திகழுமந்தத்
தொத்தலர்பூங்கானகத்திற் நாள்வதிமாவினமுமுயிர் தோய்தலானர்க்
கெத்தகையோரிடையூறு முளுற்றுது திகழ்ந்தனவே வீணதீர்மால்பொன்
ஞெத்தபதத்தன்புமலி பிம்பாசிப்பத்தர்திற முரைப்பதாமோ. (௩௪)

கிளர்தருமக்கான்வழியே சிறிதுநடந்தாரொர்கில மனைக்கணின்ப
வளமலிபத்திப்பொலிவார் சௌதரப்பேர்மாதவன்றன் மனைவியோடு
முளது தெரிந்தாரணையக் காண்டலுமன்னவனளவி லுவகைமேவிப்
பளகறுமெய்யன்பினுடன் புனல்கொணர்ந்து மற்றவர்தம் பாதமண்ணி. ()

மாதவஞ்சால்பிம்பாசிப் பத்தர்கரம்பிடித்தவிர்தன் மனைக்கண்மேவி
யாதரத்தினெடுபூசை புரிந்துமனையுடனின்னோர்க் கமுதுநல்கச்
சாதனமுள்ளனகொலென வுசாவலுமெய்க்கற்பினுயர் சாவிபோலு
மாதரசியொன்றுமிலை யெனதுகலையுமாதிதனை மாற்றினையதில். (௩௬)

மற்றவர்கட்கமுதளித்தி ரதுவரையானறையுண்மறைந் திருப்பேனென்னச்
சொற்றமனைவியின்மொழிகேட் டானந்தமிகுந்தவடன் றுகில்கைக்கொண்டு
விற்றரிசியாதியவாங் கினனணைந்தானிவருடல்செய் விதிக்குப் பார்மேன்
மற்றபிசாசனையபுரு டரைமடவாரைச்செய்விதி வாய்ந்ததென்னே. (௩௭)

சாதனங்கட்கொணர்ந்துறுசி தையைப்பாகஞ்செய்திடுவான் சாற்றியுற்ற
மாதவற்குநிவேதனஞ்செய் தனருமதுமனையாண்டு வதிந்தாள் கூவி
லோதனம்யாமொன்றுபட நுகர்தரலாமெனப்பத்தி யுருவங்கொண்டா
ரோதலுறநடந்திளைத்திர் முன்புசித்திர்பிற்படயா நுகர்துமென்றான். (௩௮)

அதுவினவுசீதையுடன் சௌதரபத்தினியெங்கென் றுரப்காலங்கட்
பதுமையன்ன *னக்கினையா யோரறைக்குட்பதுங்கியுறும் பண்புதேர்ந்து
புதுமையுடனிவ்வாறு நீயிருக்குங்காரணமென் புகல்வாயென்ன
மதுரமொழியுடனடந்த விருத்தாந்தஞ்சொலச்சீதை மனம்வியந்தே. (௩௯)

தன்னுடையிற்பாதியவட் களித்துள்ளங்களித்துவெளி சார்ந்தியாருந்
துன்னுமமுதருந்தியுறுங் காற்சீதைநாயகன்பாற் றுதைந்தோர்பான்மை
பன்னுதலும்பிம்பாசி பத்தரவர்பத்திமைச்சீர் பலவாப்பேசி
மன்னுகொடுந்தரித்திரத்தாற் றுன்புற்றுஞ்சற்றதையுண் மதிக்கிலாராய். (௪௦)

ஒப்பிலருண்மலிசாது சேவையளவறுமுவப்போ டுளுற்றியுற்றார்
செப்பிடுமின்னவர்கொள்பத்தி யென்னேயின்னவர்களைச்சிந் திக்கினம்பாற்
றுப்பியல்பத்தியினிலே சந்தானுமுள்ளதெனச் சொல்லலாமோ
பப்பியல்பத்தினிபுருடர் தமில்யாரேமேலவராப் பகர்வதம்மா. (௪௧)

---

* நக்கினை - நிருவாணி.

இன்னலிவ்வாறடைந்துநமக் கித்தகுபேருபகார மியற்றுமின்னோர்க்
கென்னகைமாறுள்ளதியாம் புரிதரவொன்றின்றேனு மேன்றமட்டி
னன்னலஞ்சால்பத்தர்கட்கே தேனுமியற்றிடவெனுள்ள நசைத்தேனென்னத்
துன்னருட்கற்பன்புமலி சீதைதஞ்சொற்படியானுந் துணிந்தேனென்றாள். ()

கூலிமுயன்றாயினும்யான் கொடுக்கவலித்தேனினக்குங் கூடமாற்றாற்
சாலியனையாய்முயல்க வென்னவுடனங்காடி சார்ந்துசீதை
மேலியற்றும்வகையறியா ளங்குமிங்கும்வறிதுலவும் விதங்கண்டுள்ள
மேலிரக்கமமைந்தொருவர்த் தகன்கூவிச்சீதைதனை வினவுகின்றான். (௪௩)

நீயார்காண்டரிவிறைவன் மகளேபோற்றோன்றுகின்றாய் நெஞ்சமீதிற்
றோபாவலேதுவறி துலவுவதென்பகர்தியெனச் சொல்லொன்றோதா
ளாயாசமிக்கேழை போலநிற்கவர்த்தகன்மிக் கருள்கொண்டோனுய்த்
தாயானுட்கரிசியும்வத் திரமுமளித்திடப்பரிவிற் றன்கைக்கொண்டே. (௪௪)

பத்திமலிசௌதரற்கீந் தனளிவணம்பிம்பாசிப் பத்தர்தாமு
நித்தியமும்பிட்சைமுயன் றெய்தியதுகொண்டளிப்பர் நிகழுநாளிற்
*சித்திரகாயத்தினுக்கு மெஞ்ஞானமளித்திட்டார் தீர்த்தமாட
நத்தியணைந்திடும்போதி லெவ்வகையிற்பொன்னிவர்க்கு நல்கலென்றே. ()

எண்ணிநடந்திடுவார்முன் மாதவன்பேரருணீரா லினிதுசெம்பி
னண்ணியபாத்திரந்தோன்றக் கரத்திலெடுத்ததைத்திறந்து நாடுங்காலை
கண்ணியமாரொளித்தங்க நாணயங்கணிறைந்திருப்பக் கண்டாரீது
மண்ணிலெவர்பொருளோவென் றையுற்றார்மூடியவண் வைத்துச்சென்று (௪௬)

புனல்படிந்தாச்சிரமமுற்றுப் பூசைமுடித்தனரமுதம் புசித்துமேய
கனமலிசௌதரனுடன்பத் தர்கள்சரிதம்பகர்ந்துகளிக் கடலின்மூழ்கித்
தினகரன்மேல்கடலடையக் கடமைமுழுதாற்றியெழிற் சீதையோடு
கனநிகர்மேனியற்கருதித் துயில்போதிற்பகல்காண்டல் கருத்துட்டோன்ற.()

மற்றதனைச்சாற்றியஃதந் நியருடைமையென்றவண்வைத் தகன்றேனென்னச்
சொற்றமையுமமையத்தி லாச்சிரமப்பின்புறத்திற் றோயோர்கள்வன்
றுற்றபெருங்களிப்புடனுங் கணைந்தெடுத்துநோக்கிடுகாற் றுதைந்தவஃதுட்
செற்றமிகுமொருநாகஞ் சீறியெழக்கண்டுடன்வெஞ் சினமிக்கானுய். (௪அ)

உடனதைமூடினன்றன்னு ளாலோசித்தீங்கிவண்பொய் யுரைத்துநம்மை
விடவரவங்கடித்திடல்செய் திடநினைபொய்ச்சந்யாசி மீதில்வீசி
நடலைகொடுமரித்திடச்செய் வேனென்னக்கொண்டவர்க ணண்ணும்வீட்டி
னிடமணுகிப்பித்திகைமேல் வைத்தனனுத்திரமிகக்கி ழிசையத்தள்ள. (௪௯)

கலகலெனக்கலம்விழப்பிம் பாசிபத்தருடனனந்தல் கலைந்தாராகிக்
குலவியற்றீபங்கொடுநோக் கிடப்பகலிற்காண்பொருளாக் குலவலாலே
யிலகுசவுதரனையழைத் திதுபகவனுமக்குவலிந் தீந்ததாகு
நிலவுமிதுகொடுசாது பூசைபுரிந்தின்னலற்று நிகழ்திரென்றே. (௫0)

* சித்திரகாயம் - புலி.

பாத்திரத்தையங்கவர்க்கு நல்கியுறங்குபுவைகல் படரமாயற்
றூத்திரித்துச்சங்கற்ப முடிந்ததென்றுபுறப்படுகாற் றாய்மைசான்ற
கோத்திரநேர்மனங்கொண்ட சௌதரனும்பத்தினியுங் கும்பிட்டன்பா
லேத்திமறுத்திடவிசையார் சூரசேனத்திருநா டெய்தியங்கண். (ருக)

தினமொருமூன்றமைதரவந் நாட்டரசனுத்தமமெய்த் தெய்வத்தொண்டர்
தனதுநகரணைந்தவிர்சீர் மாந்தர்சொலவினவியவர் தாள்கள்போற்றிக்
கனமலிசெங்கோலேந்து மைந்தனைப்பெற்றிடுவனெனக் கருதிமுன்போந்
தனகர்திருவடிவணங்கித் தனையடிமைகொள்கவென வறைந்துவேண்ட. (ருஉ)

யானுவன்றபடிநடக்கி லவ்வாறுகொள்வனென விசைத்தார்கேட்ட
கோனுவகையுடனெதுசாற் றிடினுமியற்றுவனென்றான் கோதிலன்பர்
வேனுறுநின்னாட்டினையுற் றுளபொருளோடுதவுகென்றார் வேந்தனல்க
மானுறழ்கணின்மனையை வழங்குகென்றார்கொடுத்தனனார் மாந்தர்யாரும் ()

வெஞ்சினமிக்கமைந்தாராய் மன்னவன்பித்தமைந்துமனை வியையீந்தானு
நெஞ்சிலோர்சற்றிலச்சையிலா திவனேற்கலாங்கொலென நிந்தித்திட்டார்
மஞ்சியன்மேனியன்றொண்டர் மன்னவனிட்களங்கபத்தி மதித்துமெச்சி
நஞ்சியல்வெம்பவங்கடத்துஞ் சுதைமறைகேள்வியிற்பருக நல்கியப்பால். ()

பத்தியமொத்தவிர்தரும்பல் சதாசாரவொழுக்கினையும் பகர்ந்துநீதா
னெத்திறக்காரியஞ்செயினுங் கிருட்டிணார்ப்பிதமாச்செய் திருத்திமாந்தர்ப்
புத்திரர்போலக்கருதிப் புரத்தியுயிர்க்காபத்துப் பொருந்துமேனு
மெய்த்திறத்தன்மத்தைநடு நிலையைவிடேலொழுக்கமுயி ரினுமேலாமால். ()

சிறப்புறுசற்சனசகவா சஞ்சாதுசேவையென்றுந் திறம்பாதாற்றி
மறப்பிலதுகிருட்டிணன்பொற் சேவடிக்கேமனமமைத்திம் மறையுட்சிந்தித்
திறப்புதிப்பாஞ்சகலகே வலத்தமையா திருத்திதன்ம வில்லாட்கொள்ளென்
றறப்புரவலற்களிப்ப வளவில்பொன்மன்காணிக்கை யாகவைத்தே. (ருசு)

வழிபடநிட்காமவுளப் பிம்பாசிப்பத்தரதை மறுத்தாராகிக்
கழிதகைப்பொன்னிவற்றையன்பர் தமக்கிடிலெற்குவப்பாகுங் கைக்கொள்ளென்ன
மொழிதலுமன்சற்குரவர் சேவடிதாழ்ந்தாரியர்சொன் முறைதப்பானுய்ப்
பொழிபுயனேர்மேனியன்மெய் யன்பரைப்பூசித்தின்பம் பொங்கிவாழ்ந்தான்.

வேறு

சூரசேனமா நகரிற்பிம்பாசித் தூயர்தோயுநாள் வர்த்தகனொருவன்
றூரதேயமுள் ளான்பசுவாங்கத் துதையவங்கண்வாழ் துட்டர்கள்சிலபே
ரூரணைந்தவன் னவனொடாசியமா யுறுபிம்பாசிபத் தரின்மனைகாட்டி
வாரமிக்கவ ரிடம்புகில்வேண்டு மாடுநல்குவர் மருவுதியென்றார். (ருஅ)

நண்ணும்வர்த்தக னவர்சொன்மெய்யென்று நம்பிமாதவர் நன்மனைமேவி
யெண்ணுநீர்பசு வினங்குறைவிலகொண் டெகுவீரென விசைத்தனருளவேற்
கண்ணுமெற்களிப் பீரெனமேய்ச்சற் கானடைந்தன கதிரவன்மறைகா
லண்ணுமப்பொழு தீண்டுதியென்ன வங்கமைந்தன னணைந்தவர்த்தகனே. ()

ஆயகாலையி லொப்பில்பிம்பாசி யன்பர்மாதவ னருணினைந்தமர்ந்தார்
மாயனீடரு ளாலடியவர்சொல் வாய்மையுற்றிட மாலையெய்துதலு
மேயவன்மைசால் விடையினங்களையோர் விண்டுபத்தன்கொண் டணைதலுமன்பர்
பாயவின்பமிக் கணைந்தவர்த்தகற்கூய்ப் பரிந்துவேண்டிய தெரிந்துகொள்கென்ன.

தக்கவாம்விடை யினங்களைக்கண்டான் றனைமறந்தசந் தோடமிக்கவனாய்
மிக்கபொன்னளித் தனன்கொடுசெல்கான் மேயபத்தனைத் தூயவர்பரிவாற்
றொக்கபேருப சாரஞ்செய்தனுப்பிச் சொன்னமுற்றவு மந்நகர்மேய
மக்களுக்கறஞ் செய்திவைவிடைகண் மாறலால்வரு மாழையென்றோத. (௬௧)

உற்றமாந்தர்கள் பலரும்விம்மிதமிக் கொப்பிலார்தமைத் துதித்தனருறுகா
னற்றவங்கொள்பிம் பாசிப்பத்தரொரு நாளிற்றூரமார் நகர்மருவிடுவா
ரற்றமில்புகழ்ச் சீதையோடிங்ங னடைந்ததொண்டர்க்கென் னூற்றியுநீதான்
றுற்றவெம்பசிக் கமுதருளென்னச் சொல்லியேகினர் துதையுமுச்சியினில் ()

அதிதியாயினர் சிலருறவவர்கட் களிக்கவொன்றிலா ளறல்சிறிதளித்து
விதிகொளன்பர்விச் சிரமமுற்றமைமின் விரையவன்னமீந் திடுவவென்றோதிப்
பதிசொன்மாற்றமுள் ளெண்ணியங்காடிப் பாலடைந்தொரு வணிகன்முன்மேவி
வதியென்வீட்டிடை மிகப்பசித்தவராய் மாயனன்பர்கள் சிலர்மருவினரால் ()

அவர்கட்கன்னமீந் திடப்பொருளொன்றென் னகத்தின்றுதலி னரிசியாதியநீ
தவவளிக்குதி யென்றலும்வணிகன் றக்கசுந்தரந் தொக்கசீதையின்மே
லவமிகும்விர காதுரனாகி யணிகொணீயிற்றை யல்லிலென்மனைக்க
ணுவகையோடடை வேனெனச்சாத மோதில்வேண்டுவ வுதவுவேனென்ன ()

சாதநின்மனைப் பாலிரவணைவேன் றவறிடேனெனச் சாற்றினள்களித்தே
விரவுசித்தச னடிமையாய்ப்பின்பு விண்டுபத்தனும் விதிபொறுத்திடுவோன்
குரவவார்குழற் சீதைவேண்டுவன கொடுப்பவேற்றமு தமைத்தவண்கூண்ட
வரதனன்பர்கட் கிட்டனளுண்டு வாழ்த்தியேகினர் மருவுமெய்த்தொண்டர்.

அந்தியெய்தலு மொப்பில்பிம்பாசி யணைந்துதாமமு தயின்றமையேல்வை
தந்தியின்பிடி நேர்நடைச்சீதை சம்பவங்களெல் லாமொழிந்திடலும்
புந்திமிக்கசீ தையின்செயற்குவந்து பொருவில்பத்தர் நீவர்த்தகன்றன்பான்
முந்தியற்சா தம்புகன்றமைதன் முறையையன்றுநீ விரைவிலேகெனலும் ().

புறப்படும்பொழு தினிலளவின்றிப் புயல்பொழிந்திடக் கயல்விழிகலங்கிச்
சிறப்பமைந்தவிர் பத்தர்பாற்செப்பச் சீலர்சீதையைச் சேலையான்மூடி
நிறப்பதங்கள்சே றமைதராதெடுத்து நிகழ்த்தும்வர்த்தக னகத்தினுள்விடுத்திற்
புறப்படிக்கணின் றனர்தன்மாளிகையுட் புக்கசீதையை வர்த்தகன்கண்டே ()

சாலவும்புகழ்ந் திப்பெருமழையிற் சார்ந்திட்டாய்கனைந் திலதுடைதானுங்
கோலவாள்விழி யெற்றணைந்தனைமெய் கூறுகென்னவென் கொண்கன்மேன்மூடி
மாலமைந்தநின் வீட்டுளுய்த்தனர்முன் வாயிலின்புடை வதிந்தனரென்ன
வாலமன்னமால் கொண்டவன்புறத்தி லணைந்துபார்க்கத்தன் னத்தன்போனின்றார்.

விம்மிதத்தொடா சங்கைகொண்டைதில் வீட்டுண்மேவினன் சீதையைநோக்க
வம்மிருந்தத னன்னைபோனிற்க வையவாழியி னீந்திடும்வணிக
னம்பியற்றனு வின்றவரிறந்து நாள்கழிந்தன சாலவற்றாக
விம்மிபோலும்வேற் றுமையிலதிங்ங னியைந்தவின்னவர் யாவர்கொலென்றே

இன்னவாவெளி யெய்தியுட்போய்மிக் கிளைத்தநாய்கனு ளையமுற்றொழிந்தே
துன்னலாம்பயமிக்கடைந்த னன்மெய் துளங்கிச்சீதையின் றுணையடிதொழுதே
யென்னதோரறி யாமைகொண்டடியேனியற்றிடும்பிழைபொறுத்திரென்றிரப்ப
வன்னவேல்வைபிம் பாசிபத்தரவ ணடைந்துன்பாலிவ ளறைந்திடுமாற்றம்.

பொய்த்திடாதிவண் வந்தனனீயென் புந்தியுட்பயம் பொருந்தினைபுமன்று
பித்தியைந்தவ ரெனவவட்பணிந்து பிழைபொறுத்திரென்றிரக்கின்றாயென்னச்
சத்தியத்திருத் தொண்டர்வினவத் தவர்பொற்சேவடி தாழ்ந்தனன்புகல்வா
னத்திரோரு ளீரடைந்துளிரென் னன்னையத்தனிற் றுன்னலாற்பயந்தேன்.

மைந்தனுகுமென் பிழைபொறுத்திடுமாவணங்கிவேண்டினேன் மற்றதனுனீர்
பந்தமோடிரட் சிக்குதிரென்னப் பரிந்துவேண்டியென் பாலுறுபொருள்க
ளுந்தமக்குரித் தேயெனக்கருளி நும்மனைக்கண்மே வுதிரெனநுவலச்
சொந்தமார்மனை புக்கமைந்தார்நா டோறும்வர்த்தகன் றாயர்பாலமைந்து. ()

வேண்டுறும்பொருள்கொண்டுவைத்தவர்தாள்விருப்புடன்பணிந்தேத்துபுசெல்வா
னீண்டுவெம்புலி தனக்குபதேச மிசைத்துச்சீடனி லேன்றுகொண்டார்தம்
மாண்டுணைப்பதம் வழுத்திடுவணிகன் வயங்குமன்பர்கண் ணருள்கொடுபத்தி
நீண்டுமாநிலத் தவரெலாம்புகழு நிகரில்பத்தனு நிலவினனம்மா. (எங)

வேறு

திகழுமித்திறம் யாவையுஞ்சூர சேனமன்னன் செவிப்புலத்தெய்த
வகமிசைக்கொதித் துத்தன்னகர்ப்பா லமைந்தமாந்தர்க ளாரையுங்கூவி
நிகழ்பிம்பாசிப் பெயர்ப்பெரியோரென் னேசநற்குரு சீதையென்னம்மை
பகருமிச்செய லாலனைவோரும் பத்திமிக்கவ ணரப்பணிந்துய்மின். (எச)

என்னதானைக் கிகல்படுவாரை யேற்றசிட்சை யியற்றுவனென்ன
மன்னனோதிடக் கேட்டவர்யாரும் வயங்கன்னோரை வழிபடல்செய்தா
ரின்னவாறிய னுளினிற்பத்த ரிறைவனில்லத் தணைந்திடக்கண்டே
வன்னமாமலர்த் தாட்டுணைபோற்றி வயங்கொராதன மீதமைவித்தே. (எரு)

அஞ்சலிக்கரத் தோடுமுன்னிற்ப வன்பர்வேந்தை யருளுடனோக்கி
மஞ்சனின்றிய நின்மனையாளை வல்லையென்முன் வரப்புரியென்ன
வுஞ்சனன்றமி யேனெனவோதி யொண்டொடிக்குரைத் தொல்லையிலெய்தத்
தஞ்சமாமியற் சற்குருநாதர் ததியினிற்றம் படிவுதணந்தே. (எசு)

கோரமானவி யாக்கிரமேனி கொண்டமைந்திடக் கொற்றவன்முன்னும்
பேரவைக்கட் பொருந்தினராரும் பீதிகொண்டு பெயர்ந்தனரானுர்
நாரமைந்திடு மன்னவனுண்மெய் நடுங்கிநிற்க விராணிசற்றஞ்சாத்
தீரமோடுவி யாக்கிரமுன்பு சென்றுதாழ்ந்து துதித்தனணிற்ப. (எஎ)

அன்னகாலமன் னன்மனைகையி லணிமிகுந்தவொர் பாலனமைந்தான்
பின்னர்தேசிகர் தம்வடிவெய்திப் பீதியோடு பிரீதியுமுற்றே
முன்னர்நிற்குமன் னற்குரைப்பார்நின் முல்லைசான்றவிம் மூத்தமனைக் குத்
துன்னணிச்சுத னின்மையின்வாட்டந் தோய்ந்ததன்மையைச் சூழ்ந்திடுதோறும். ()

என்னுளத்தும் வருந்தியிருந்தே னின்றெழுித்தன னெம்பெருமானீர்
துன்னுபுத்திரற் கைக்கொடுநம்முட் சோபந்தீர்கவிச் சற்குணமைந்தன்
பன்னுநம்வமி சத்தவனென்னப் பன்னமன்னனும் பாரியுமுள்ள
மன்னுமோகையிற் சற்குருநாதர் மலர்ப்பதம்பல காற்றொழுதேத்தி. (௭௯)

பெருமைசால்குரு நாதர்வரத்தாற் பெறுதுசற்குணப் பாலனைப்பெற்ற
பெருகுமார்வத்தி னுனகர்முற்றும் பெரியவுற்சவஞ் செய்துமகிழ்ந்தார்
மருவுபிம்பாசி பத்தர்தம்மில்லம் வாய்ந்துசீதைநன் மாதுடன்கண்ணன்
றிருவடித்துணை நாடுபுசாது சேவைசெய்து திகழ்ந்தனர்மன்னோ. (௮0)

இன்னவாறருட் பிம்பாசிபத்த ரென்றுநேரிசை யொன்றிவிளங்க
வன்னக்கோகன கம்புரைநெஞ்சம் வாய்ந்துளோர்கண் மகிழ்ந்துதுதித்தார்
கன்னல்வில்லிவி ழாவயர்வேசை கள்ளரல்விகூ கைக்கிணைநெஞ்சந்
துன்னலானசில் லோர்களசூயை தோய்ந்துதொண்டரைச் சோதிப்பவுன்னி.

தூயர்மெய்ப்புகழ் தன்னிகரில்லாத் துட்டருக்குந் துலங்கிடச்செய்வா
னேயமோடவர் சீர்த்தியைமுன்னி னீட்சிசெய்ய நினைத்தவனேபோன்
மாயன்மெய்யடி யாரெனவேடம் வாய்ந்துசந்திப் பொழுதினிலன்னோர்
மேயவிற்க ணடைந்தரியன்பர் வேட்டநல்கும் விரதமெய்துற்றீர். (௮௨)

இன்றிராவெனக் கும்மனைமாதை யீதிரென்னவுளெள்ளளவேனுங்
குன்றியைந்ததந் நெஞ்சகத்தொன்று குறிக்கிலாருடன்சீதையைக்கூவி
நன்றியைந்தவிப் பத்தர்பினின்றி ராவின்மேவி நவில்வனயாவுங்
கன்றிடாதுசெய் தெய்துதியீதென் கருத்திசைந்திடு கட்டளையென்ன. (௮௩)

தன்னதாவிமெய் நாயகனுவார் சாற்றுமாற்றந் தவாதடைந்திட்டோன்
பின்னரேகினள் வஞ்சகன்றன்னிற் பெரிதுநேடிப் பெயர்தருகாலை
துன்னலாமனை யெய்திடுமார்க்கந் தோற்றிடாது சுழன்றனன்கற்பார்
மின்னனுரை நசைத்தவருற்ற வீடுகூடலிலாமை விளங்க. (௮௪)

இன்னவாறறி வற்றிடுதூர்த்த னிரவெலாகக ரெங்கணுஞ்சுற்றக்
கன்னல்வில்லி யிபங்கெடப்பாயும் *காளியொப்பக் கதிருதிப்பெய்த
மனனருட்கொள்பிம் பாசிமெய்ப்பத்தர் மனையின்வாயின் மருவினனிற்ப
வன்னமென்னடைச் சீதைபொய்மூடா வருணனெய்த லறிந்திலைகொல்லோ.

இரவின்மாத்திர நின்னுடன்மேவ வெனதுநாயகர் கட்டளையப்போல்
விரவிநின்பின் னடந்தனனென்றன் வீடுசேர்குவ னேகுதியென்னக்
கரவில்சீதை விளம்பிடக்கேட்ட கபடவஞ்சகன் கண்கலங்குற்றே
புரவு†பூரணி யைப்புரிகிள்ளை போலிலச்சை பொருந்தினனிற்ப. (௮௬)

---

* காளி - சிங்காரம். † பூரணி - இலவு.

சீதைநாயகர் பாலணைந்துற்ற செய்திமுற்றவுஞ் செப்பிடமேலோர்
பேதைமுன்னை தணைந்துநீயென்னை பெரிதுமாகுல மிக்கிவணின்றாய்
கோதைநின்சொற் படிநடந்தாள்கொல் கூறுகென்னத் தலைகுனிந்தன்பர்
போதைநேர்பத மீதுவணங்கிப் புன்மையேன்செய் பிழைகுறியாதே. (௮௭)

அருள்செய்வீரென மேலவர்நீபெற் காற்றினாயின் றொருபிழைநெஞ்சில்
வெருள்கொளாதக லென்னவிளம்ப விடனுளத்திடை வெட்கமிக்கானா
யிருள்கொளுள்ளத் தொடுதனையேவு மீனர்பாற்சென் றியன்றனசெப்ப
மருள்கொடன்னவர் தம்முட்குரோத மருவிப்பின்னுமிவ் வண்ணஞ்செய்கின்றார்

மாலைதன்னின்மெய் யன்பரின்மாடே வயிணவப்பெருஞ் சின்னமொடுற்று
மேலையோருட னும்மனைதன்னை விரவெமக்களிப் பீரெனப்பத்தர்
கோலைநேர்விழிச் சீதையொடுன்னைக் கூடும்வண்ணங் குறித்திவணுற்றார்
*காலையென்சொற் கடக்கலையின்னோர் கருதுமாறு களித்திசையென்ன. (௮௯)

உத்தமக்கற் புருவுளசீதை யுள்ளமேன்மறுப் பெள்ளளவெண்ணாள்
பத்தவற்சலன் பொற்பதநாடிப் பகவநின்செயல் யாவையுமென்றே
பித்தமைந்தவர் தம்மிடையெய்தப் பெய்வளைக்கை யவர்விழிக்கெல்லா
நித்தனீடரு ளாற்புலிபோல நிகழ்தலாற்பய நெஞ்சின்மிக்குற்றே. (௯0)

ஆசைமிக்கமைந் திட்டவரெட்டா மாசைதோறுமுள் ளஞ்சினரோடக்
காசைமாமலர் வண்ணன்மெய்ப்பத்தர் காதலித்திடு சீதையைக்கண்டே
யோசையிட்டவத் தோடலென்னஞ்சா துறுதிரென்றிட வோதல்வினாவிப்
பூசைநேர்குண வஞ்சகர்தூரம் போந்துநோக்கினர் புந்திகொண்மாலால். (௯௧)

நாடும்வேலையி னீண்டுவளைந்த நகங்களும்பகு வாயுமமைந்து
கோடுதண்குடை யாமிசைதூக்கிக் கோவினம்புரந் தானருட்பண்பா
னீடுபாவர் விழிகொளத்தோற்ற நெஞ்சமஞ்சி நிகரறுபத்தர்
மாடுமேவி யுமைப்பரிட்சிப்பான் மதியிலேமடைந் திட்டனமந்தோ. (௯௨)

பாவியேஞ்செய் பிழைபொறுத்தெம்மைப் பாதுகாத்தருள் வீர்சரணானே
மாவியீந்தரு ளீரெனக்கீழ்வீழ்ந் தரற்றத்தொண்ட ரறைந்திடுகின்றா
ரோவியம்புரை சீதையும்யானு முற்றபத்தர்தந் தாசர்களற்றா
னீவிர்சோதனை செய்ததுசால்பே நிகழ்ச்சியாற்றன் னியத்தகைதோய்ந்தேன்.

சற்றுமற்றிதற் கெய்க்கலிரென்னத் தயையினாற்சமா தானமுரைப்ப
முற்றுதுட்டர்பிம் பாசிபத்தர்சீர் முற்றுணர்ந்துதம் மேன்முனிந்தாரா
யிற்றுனாற்றின பத்தருக்கன்பா லீன்றதாயிணை சீதைதற்கென்றென்
றெற்றுநெஞ்சத் தினரவர்சீல மேத்தித்தந்தமி லெய்தினரானார். (௯௪)

கற்புமாதர்கள் காக்கினஃதன்னோர்க் காக்குமென்னுங் கவின்மறையின்சொல்
வெற்புறும்பெருந் தீபமொப்பெய்த விளக்கும்வண்ண விலக்கியமாகும்
பொற்புமேவிய சீதைதற்கண்டு பொங்குமால்பெறு புல்லர்தமக்கு
மற்புதம்பெறு மெய்யுணர்வீந்தே யனகவேதியொப் பாகியவிர்ந்தாள். (௯௫)

---

* காலை - சமயம்.

இன்னவாறருட் பிம்பாசிபத்த ரிக்கலிக்க ணிணை தவிர்கண்ணன்
வன்னமெய்ப்பதப் பத்திகொடெல்லாம் வல்லசித்தனும் பத்தர்கட்கெல்லா
நன்னலம்பொலி மன்னனுமாகி ஞாலமேல்விளை யாடனவிற்றிப்
பன்னகத்தி னடித்தபொற்றுளுட் பாரியோடு படர்ந்தனரன்றே. (௬௬)

ஆதலான்மெய்த் திருவருட்சத்தி யமையுமந்தப் புரத்திடைமேவிக்
காதலானபல் சித்தியுமின்பக் கலப்புமெய்திடக் காதல்கொண்மேலோர்க்
கோதலானமெய்ப் பத்தியையல்லா லுற்றநற்றுணை மற்றிலையென்னும்
போதமேவிய மாதவர்சொற்குப் புகன்றகாதை பொருந்தியற்சான்றே. (௬௭)

வேறு

அணிநீடியவத் தினபுரத்தி னுட்சிதுறந்துன் சேவைபெற
வமையுந்துவரை போய்மீண்டங் காழிக்கலமே லமைந்துறுகாற்
றணிபாவிரகத் துனைமீண்டுந் தரிசித்திடவே லையில்வீழுந்
தசியிலெதிர்வந் தருட்டுவரை தனைக்காட்டுபுமுத் திரையமைத்துட்
கணியேல்வையின்முற் றோன்றியெதிர் கானுர்புலிக்கு ஞானமுறக்
கணிக்கப்பிம்பா சிக்கருளுங் கண்ணுகண்ணுர் மணிநின்று
ளெண்ணியார்வப்பே ராழியின்மூழ் கிடவென்றெனக்கு னருள்புரிவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௬௮)

பிம்பாசிபத்தகதிமுற்றிற்று

ஆகவி ௩0௬௬

---

ஐம்பத்தாறுவது

# கணுபத்திகதி

பரவுபெருஞ்சீர்ப் பிம்பாசி பத்தர்சீதை யெனுமனையோ
டரவினடித்த பதம்புகுது மணியார்கதைசொற் றனனினியோர்
பிரமகுலத்தோ னுபதேசம் பிடித்துப்பால கோபால
வாதனருட்சீர் பெறுகணு பத்திசரிதம் வகுப்பேனே. (௧)

மதுவார்செழும்பங் கயத்தடஞ்சூழ் மதுராபுரியிற் பொதுவர்புரி
முதுமாதவத்தா லுதித்திட்டோன் மொழியுங்கணுவென் றிடுபெயரோன்
விதுநேர்மனையோ டில்லறத்தின் மேவுந்தகையோன் றனையீன்ற
முதுமைத்தாய்தந் தைபர்ப்பேணி முறையிற்பசுக்க டமைப்புரந்தே. (௨)

திவசங்கழித்தா னிஃதன்றிச் செயலொன்றறியா னிவ்வாற்றி
னவமாராயுள் பாதிவரை நழுவவிடுத்தா னோர்நாளி
லிவன்முற்றவத்தா லொருமறையோ னெய்தியிவன்முற் றத்தினிடை
சிவமார்சாளக் கிராமம்வைத்துச் செழும்பூசனைசெய் திடக்கண்டான், (௩)

முருகார்பூசைத் துவக்கமுதன் முற்றுந்துணையும் பேருவப்போ
டருகேய்ந்திமையா நாட்டமுட னதுகண்டமைந்தான் முடிவுறுங்கால்
வருவேதியன்ருள் பணிந்தடிகள் வயக்கும்பூசை காண்டலுமுட்
பெருகாதரம்பொங் குவதால்யான் பேணச்சாமி தருவீரால். (ச)

யானுமுமது கருணையிற்பே ரின்பக்கதிபெற் றுய்வனென்றன்
மானுந்தியநெஞ் சதிலிலய மருவியுளதெற் கெவ்வாற்ரு
லேனுமீர்தந் தேயயற்க ணேகவேண்டு மென்றுளன் பால்
வேனுந்தியவே தியன்ருளில் விழுந்துபலகால் வேண்டுதலும். (ரு)

நனியுட்கருணை கொடுமறையோ னகைத்தோர்மேதி யின்கொம்பி
னுனியையளிப்பப் பரவசனு நுவலுமவனைக் குரவனெனக்
கனிவிற்பணிந்து வாங்கியதைக் கண்ணிலொற்றி யுரத்தமைத்திட்
டினியமறையோன் போற்களத்தி னிடம்வத்திரத்தி லமைத்தணிந்தான். ()

உற்றகுருவா மறையோனை யுவந்துபணிந்து செலவிடுத்தா
னற்றமறுமெய்த் தவம்பல்பவத் தாற்றுங்கனுபத் தன்சாமி
பெற்றவுவப்பாற் றுயிலுணவிற் பிரியஞ்சற்றும் பெறுதவனுக்
கொற்றமுறுபூ சனைபுரியும் விதமேதனுட் குறிக்கொண்டு. (எ)

புலருங்காலை பசுக்கடமைப் புனத்தில்விடுத்தாண் டமைநதியி
னிலவுமறையோன் றனைப்போலு நியமத்துடனீர் படிந்துகளத்
திலகுமூர்த்தி தனையவிழ்த்தோ ரிலையிலமைத்தாண் டமைவாச
மலர்கொய்தருச்சித் தினியகனி வகைகொய்தக்கோட் டருகமைத்தே. (அ)

மிசைவத்திரத்தை மூடியருள் விமலாவிக்கா னகத்தினிடை
யிசையும்பொருண்மற் றிவையல்லா தில்லைவல்லை நுகர்திடியென்றே
நசையிற் பணிந்து சிறுபொழுது நழுவத்திறந்து நாடிடுகான்
மிசையக்காணுன் சாமியிதை விரும்பிப்புசிக்கின் றிலைகொல்லோ. (கூ)

அன்னம்பெறவேட் டனைகொலென வயலார்வயலிற் சென்றுவப்பாற்
றன்னம்பெறநெற் கொணர்ந்துகுத்திச் சமைத்தோரிலையி னிடையமைத்தே
முன்னம்போர்வைத் துத்துகிலான் மூடிப்பணிந்து மிகவேண்டி
மன்*னம்பரத்தைச் சிறிதெடுத்துப் பார்த்துப்புசியா மையின் வருந்தி. (க0)

பாலுந்தயிரு மின்மையினுற் பட்சித்திலைகொன் மற்றவைதா
மேலுஞ்செழுங்கா னத்திடையா னெண்ணிற்கிடைக்கா தாகையினென்
மேலுந்தருள்வைத் தயின்றிடுதி மெத்தப்பசிமிக் கிளைத்தனைமேல்
பாலுந்தினன்செங் கதிரவனும் பகவநுகர்தி யெனப்பலகால். (கக)

வணங்கிமிகவேண் டியுமருந்தா வகையுண்மதித்துப் பகவன்ரு
னிணங்கிரா டமையிற்கொ லுண்ணுதிருப்ப தெனமதித்து
மணங்கொண்மலரா தியகலந்த வாரிகொணர்ந்து மஞ்சனஞ்செய்
தெணங்கொளிறைவன் றனைமுன்போ லியற்றியுண்ண விரந்திட்டான். (கஉ)

---

* அம்பரம் - வத்திரம்.

வாளாவமையக் கண்டுளத்தில் வரம்பிறக்க மருவினனு
நீளாதாத்தோ னிவ்வண்ண நிகழ்த்துவானீ யருந்திலேயேன்
மாளாநிற்பேன் பழிநின்மேல் வைப்பேன்சரத மெனப்புவியின்
மீளாவொருமை மனம்படைத்தான் மிகவுந்தியானித் தமைந்திடலும். (கங)

செம்மைபெறுமெய்ப் பத்தபரா தீனனுங்கிட் டிணபகவன்
சும்மைதன்மீ தேற்றியுயிர் துறக்கநினைவாற் கருள்புரிய
*வம்மைநிகர்ம ஞேகரமிக் கமையும்பால கோபால
மெய்ம்மைவடிவங் கொண்டியல்கோட் டகத்தினின்றும் வெளிவந்தே. (கச)

அமைத்தவமுதார்ந் தன்னவற்கு மளித்துட்களிப்போ டறைந்திடுவா
னிமைத்தகுணஞ்சால் கோபநினை யிணைபாஞ்சாந்த விதயமுளார்
தமைத்தவாது கொண்டவர்தாந் தருதலேதா யினுங்கொள்வேன்
றிமைத்தவகங்கா ரிகளிடம்பச் செய்கையாவு மெனக்குவர்ப்பே. (கரு)

என்றுபலசொற் றமுதருந்தி யிறைவன்மறைப முற்றவத்தா
னன்றுமறைகட் கெட்டரிய நர்தன்றனைத்தன் விழிகளெதி
ரொன்றுமிகுமங் களசொருபத் துடனேவிழியோ டுள்ளமிசை
யென்றுமமைத்தா னுலகவத்தை யேதுமறியா னுயினன். (கசு)

தன்னைமறந்த பரவசத்தாற் றட்டமிட்டுக் கூத்தாடிப்
பின்னைகேள்வன் விக்கிரகம் பிறங்கக்கழுத்தி னிடைகட்டி
முன்னைமுறையிற் பசுக்கடமை முருகார்கானத் திடைமேய்த்துப்
பொன்னைநிகர்மா லேயினவற்றைப் பொலியுமிற்பா லமைவித்தே. (கஎ)

பெற்றோர்மனையா தியர்க்குமிது பெற்றியுரையா னுகியுளத்
திற்றேவெனவெட் டரியசுக மெய்தினுை யிரவுபகன்
மற்றேதுவவெல் லாங்கனு பத்தன்கனுவா மதித்தன்பிற்
பிற்றேய்நாள்க டமிவிரதம் பெறுஞ்சாதனங்கண் மிகத்தேடி (கஅ)

மூளும்பெருங்கா தலிற்பூசை முயல்வான்பால கோபால
ஞளுந்தனது பெருங்காட்சி நல்கிக்கனிவோ டமுதுகொடு
மீளுமிவ்வா றியனுளின் மிக்ககுருவாம் வேதியன்மெய்ந்
நீளுங்கனுபத் தன்மனைப்பா னேர்ந்தானொருமா லேயின்மாதோ. (கக)

குரவன்றனைக்கண் டுவகைமிகக் கும்பிட்டுமது கருணையினல்
வரதவிணைதீர் தன்னியனு மாபாக்கியனு மாயினனீர்
தரலாமூர்த்தி மிகுகுண்முந் தயவுமுடைய தாங்கதனுள்
விரவும்பிரபு தினமன்ன மென்னேடொன்ருய் மிசைதருமால். (உ0)

யானல்கிடுமெய்ப் பொருள்களேபு மிதயக்களிப்பி னெடுபுசிப்ப
தானவருண்மூர்த் தியையடியேற் களித்தீர்க்கொருமா றிலேயேனு
ஞானவருட்சற் குருபரர்நீர் நயப்பதெதுவா யினுமளிப்ப
னீனமொழித்தாண் டருள்வீர்சாற் றிடுதல்வேண்டு மெனவிரந்து. (உக)

* அம்மை - நீருண்டமேகம்.

விளம்பமறையோன் றனதுளத்தின் மிகுவிம்மிதனு யிவ்வாறு
முளதாங்கொல்லோ வெனவைய முற்றேனுகிப் பத்தனுடன்
சளமிலெனது வேட்கையைநீ தருவேனெனச்சத் தியம்புரியி
னுளவோதுவனென் றிடவுரைத்த துதவுவேனும் மாணையென்றான். (௨௨)

உன்னேடமுதுண் டருள்பால கோபாலனையோர் தரம்விழிநேர்
மன்னேகாணப் புரிபிதலால் வாஞ்சையெனக்கொன் றிலையென்னத்
தன்னேர்குருமெச் சிடுபெருமை தழைத்தகனுபத் தன்கனிவாய்ப்
பின்னேதுவன்யான் விடையெனருட் பிரபுதன்பால் வினவியன்பால். (௨௩)

எற்றாயினுநீர் காண்டருமா றியற்றுவேனீ ரிதுகுறித்துட்
சற்றாகுலமெய் தலிரென்னஞ் சாற்றப்பின்ன எடைவனெனச்
சொற்றூரியனே கினன்பத்தன் சூழும்பசுக்க ளுடன்கான்போந்
தற்றூர்க்கற்றேன் றனைப்பூசை யாற்றவவன்முன் போந்திடலும். (௨௪)

வணங்கியெனது குருபரர்நின் மகிமைச்சேவை வேட்டனர்நீ
யிணங்கியருள வேண்டுமென விறைவனிதுசெப் பலையான்றான்
குணங்கொளுன்பால் வந்திடல்போற் கூடேனெருவர் பாலுமவ
னிணங்கொள்யாக்கை யபிமானி யஞ்ஞானங்கொ ணெஞ்சத்தான். (௨௫)

மன்னுஞ்சாளக் கிராமத்தின் வடிவாயெனைப்பா விக்குமவன்
றுன்னும்பத்தி தமோகுணத்திற் றேய்ந்ததவனென் றனைக்காணற்
குன்னுமதிகா ரியன்றென்ன வுரைக்கவினவிக் கனுபத்தன்
பின்னும்புகல்வான் குருவிடம்யான் பிரதிக்கினைசெய் துற்றேனால். (௨௬)

சாதந்தவறிற் பெரும்பாவஞ் சம்பவிக்கு மற்றன்றிக்
குரவன்பாற்சொற் பிழைக்கிலந்தோ கூடுங்குருத்து ரோகமுமித்
திரமார்பாவி யேனுலகிற் சீவித்திருந்து பெறலென்னே
பரமாநீயென் குருகாணும் படிநின்காட்சி தாராயேல். (௨௭)

நின்கண்ணெதிர்யான் மடிவனென நிர்ப்பந்திக்கப் பகவனது
நன்கன்றேதா யினுமிறக்க நாடேலுனது குருவாவான்
றன்கண்களிப்பத் தரிசனம்யான் றருவேனக்கா லவன்றூரத்
தின்கண்ணின்று தெரிசிக்க வியம்புகென்றே தினன்மறைந்தான். (௨௮)

இன்பமருவிப் பத்தன்ற னில்லமடைந்து குரவனுடன்
கொன்பராவு கானமிசை கூடிபுச்சிப் போதணைய
வன்பன்பூசை செயத்துவக்கி யாரியன்பா லறைகின்றா
மின்பத்தியில்யான் பூசைபுரி வேலைபகவன் வந்திடுவான். (௨௯)

வேறு

அன்னகாலையிற் சேய்த்திருந்தறிகுதி ரென்னப்
பன்னல்கேட்டடன் குரவனப்பான்மைய னுக
நன்னர்கோபனி வேத்தியப்பூசனை நயந்து
முன்னரெய்தினன் பாலகோபாலனு முதல்வன். (௩௦)

சாலவுஞ்சிறு குழவியாய்க்கோபன்முற் சார்ந்து
சீலநன்னிவே தனஞ்செய்வானவ்விடை செறிந்த
கோலமிக்கசா தனங்கடானயின்றுகோ பனுக்கு
மேலவாயிடை யளித்தவணியைந்துள மலரை. (௩௧)

தன்களத்தினுஞ் சிரத்தினுந்தரித்துநீ ரமைந்த
மென்கலத்தினைக் கரத்தெடுத்தருந்திமெய்ப் பத்த
னன்கருந்திட வாயினின்றுமிழ்ந்துள நயந்து
கொன்கவின்றபற் பலவிளையாடல்கள் குயிற்ற. (௩௨)

கிளத்துமத்ததி மறையவன்மாயைமோ கிதனு
யுளத்துளிவ்வகை யுன்னுவனுற்றவிக் குழவி
வளத்தகோபன்றன் மைந்தனுயிருக்கும்வான் மறைகட்
களத்தலெய்திடாப் பகவனீங்கிவற்கெளி தாமோ. (௩௩)

பத்திகொண்டொருக் காலிவன்பாற்படர்ந் திடினு
மித்திறம்பெற விவனுடனுடுமோ வென்றும்
பொய்த்திறம்பெறு மானிடன்றந்தபுத் திரனே
லெத்திறங்கொடிக் கானிடையெய்துறு மென்றும். (௩௪)

காணிற்கண்களை யயங்கவர்காந்தமே போல
வேணிலங்கிட வசீகரித்திடுதிற மிதனுன்
மாணிலங்கெழிற் கண்ணனேயாமென்று மதித்துத்
தூணினின்றனன் செயலொழிந்தத்தகு துணையில். (௩௫)

வேறு

மையமைந்திடு மின்னெனமறைந்திட வாய்ந்தசீர்க் கனபத்தன்
றுய்யபூசனை நிரப்புபு குரவன்பாற் றேய்ந்துதாடொழுதேத்தி
மெய்யருட்பக வன்பெருங்காட்சியை மேவினீரோவென்னப்
பையனுகிவந் துன்னொடாடினன்கொலோ பகவனென்றிடவிள்வான். (௩௬)

வந்தமற்றவன் காண்பகவன்றயை வாய்ந்துதாமடியேற்குத்
தந்தகோட்டினின் றனவரதமுமிங்ஙன் றரிசனந்தந்தேமெய்ப்
பந்தமோடுநல் கிடுமமுதயின்றுநான் பருகவுநல்கிப்பின்
னந்தமேவுகோட் டமைந்திடுமென்னல்கேட் டந்தணன்வியப்புற்றே. (௩௭)

மாயனுமரி யெனதபக்குவத்தினுல் வஞ்சித்தேகினனின்றேன்
மேயவென்றனக் கித்தகையவிச்சைபு மேவிடாதுனதோர்நற்
சேயனேகொலென் றெனதிழியுளத்திடை சிந்தைசெய்தனனந்தோ
தூயமெய்யுணர் வில்லர்கண்மெய்ப்பொரு டோற்றினும்பயனென்னே (௩௮)

ஞானசற்குரு பான்றிருவாக்கினை நம்புமுற்றவத்தோர்க்கே
கானமாமறைக் கறிவருமெய்ப்பொருள் கைநெல்லிக்கனியாகு
மான்தன்மையற் றிடுமறிவீனர்க ளளவில்வான்கலைகற்றுந்
தானடங்கிடா துலகர்க்கோதுவதலாற் சார்தரும்பயனின்றே. (௩௯)

தூலநானெனக் கருதினேரொத்தகு தொழிலியற்றினும்வீணே
சீலமேவுஞுக் குமவுணர்வுடையரே சிறந்தநற்பயன்கொள்வார்
கோலமேவுசா ளக்கிராமத்திற்குக் குலவுபூசனைசெய்து
ஞாலமீதொரு பயனுமியான்பெற்றிலே னல்குமேதியின்கொம்பை. (௪0)

நம்பிப்பூசனை செய்தலிற்கண்ணனை நயனநேருறக்கண்டே
வெம்பித்தாமுல கக்கொடுமாலினை வேரறக்களைந்திட்டாய்
வம்பித்தேயரி தன்னுடன்சேவைநீ வழங்குமாசெய்திட்டுந்
தெம்பிற்கண்டரு கமைந்துபோற்றிடுமுளத் தெளிவிலனானேனே. (௪௧)

சத்தியப்பெரும் பத்தியோரரிதனைச் சராசரத்தெலாங்காண்பார்
மத்திமத்தாத் தினர்கள்போற்றுருவத்தின் மாத்திரங்காண்கிற்பர்
பித்திபைந்தலென் னணையர்கல்செம்பையே பேணிநாள்பலபோக்கிப்
புத்தியிற்றெளி வடைவர்நின்முற்றவம் புகலலாந்தரமன்றால். (௪௨)

வற்சமீமிகு தன்னியனெப்பின்மா பாக்கியவானின்னல்
விற்சமைந்துள பகவனையென்னிரு விழிகொடுகண்டேன்யா
னிற்சந்தித்ததா லெய்தரும்பயன்பெற்றே னிட்களங்கம்பெற்ற
சற்சனர்த்தெரி சித்தவர்க்கரிதெனச் சாற்றுமோர்பொருளுண்டோ. (௪௩)

அன்பநின்புடை யின்னமூநலமெலா மமைதரு மிவ்வாறே
பொன்பயின்றமார் பனையடியார்தமைப் பூசைசெய்தெந்நாளு
மின்பமிக்கமைந் திருத்தியென்றுசிசொற் றிடுகுருபாற்போற்றி
நின்பதாம்புயச் சரண்புகுமெனக்கெதே நேர்ந்திடற்கரிதென்று. (௪௪)

ஆன்றசற்குரு பரனடிப்பூசனை யாற்றிவேண்டியநல்கித்
தோன்றலுட்பரி வொடும்விருப்புறத்தகச் சூழ்ந்தவாவிடையீந்தே
சான்றசற்குரு மொழிவழியதுமுதற் சாதுபூசைபுஞ்செய்தா
னென்றதன்மனைக் கியாரணையினுமமு திடும்விரதமுங்கொண்டான். (௪௫)

இயலுநாளிலோர் நாள்வயலிடைவிதைத் திடநற்கோதுமைதந்தே
நயமலிந்தபி தாவனுப்பினன்கனு நடந்துபோம்வழியின்க
ணயர்வுடன்பசித் தேகுமன்பர்கள்சில ரடியரேம்பசிதீர்க்க
வியலுமோவென வினவிடக்கோபன்று னிருங்களிப்புற்றோதும். (௪௬)

சற்றுநீயிரீண் டமைமினும்பசிக்குண தருதுமென்றுடனேடிப்
பற்றுகோதுமை யரைத்தடைசெய்தவர் பசிகெடக்கொடுத்துள்ள
முற்றுமன்பின லறனுமீந்தனுப்பலின் முகமனேதினர்சென்றார்
புற்றுமண்கொடு தந்தையையஞ்சுபு புலத்திடைவிதைத்திட்டான். (௪௭)

இரண்டொர்வைகற்பி னங்கர்மீதினி லியைந்தகோளர்கள்சில்லோர்
திரண்டுகோபன்றன் றந்தைபாலிச்செயல் செப்பவன்னவன்கூவி
யரண்கொள்பண்ணையிற் புற்றுமண்விதைத்திடி லாவதென்னெனக்கோபன்
முரண்கொள்புற்றுமண் வயலிடைவிதைத்திடு முடாருமிகத்துண்டோ. (௪௮)

அத்தநீயெவரேனுமேதொன்றினை யறைந்திடினிசமென்னச்
சித்தமீதுநம் புவதுநன்றன்றெனச் செப்பிடவறிதுற்றிட்
டொத்தசம்சய நீங்கச்சின்னுள்கழித் துறுவயலினைப்பார்த்தான்
பைத்தகோதுமைப் பயிரரியரிவிழி பறித்தலின்முளைத்துற்ற. (௪௯)

வித்துமிட்டிட வேண்டுங்கொல்விருந்தோம்பி மிச்சிலுண்பான்செய்க்கென்
சத்துமாமறைச் சொற்கிலக்கிதலாற் சான்றுவேண்டுவதுண்டோ
பைத்துறும்பயிர் கண்டுவார்த்திகன்மனைப் பாலமைந்துவந்துற்றான்
முத்துநேருளம் பெறுகனுவடியர்தம் மூதருளெனக்கொண்டான். (௫0)

குத்திரம்பெறு முளத்தர்கோதுமைதலை குனிதலிற்குனிவுற்றே
மெய்த்திறங்கொள்க னுபத்தி புத்தியை மெச்சினர்வியந்துற்று
ரொத்தியைந்தநெல் லறுத்துநோக்கிடவரு குறும்வயல்களின்மிக்குப்
பத்திரட்டிபங் கேற்றமுற்றியல்வியன் பார்த்துக்கோபன்றுதை. (௫௧)

ஒப்பில்பேருட் பகவனற்செயலென வுண்மையுள்ளுணர்ந்தன்பிற்
பப்பியற்பெரு மைந்தனைபுவகையிற் பலபடப்புகழ்ந்துற்றான்
செப்பிடுங்கனு வரிபத்தியுடன்சாது சேவையுஞ்செய்தீற்றிற்
றிப்பியத்திரு வைகுந்தபதத்திடை சேர்ந்தனன்சுரர்போற்ற. (௫௨)

வேறு

உலகவியல்பிற் பாதிவய தொழித்துமறையோன் பூசனைகண்
டுள்ளமுவந்தோர் மூர்த்தியெனக் குதவென்றெருமைக் கொம்பினைப்பெற்
றலகிலன்பாற் பூசைபுரிந் தணியார்பால கோபால
னுவுன்னுருக்கண் டமுதூட்டி யாசாரியற்கும் பெறக்காட்டிக்
குலவும்பத்தர் பசிக்குவிதைக் கோதியடையாச் செய்தளித்துக்
குவிமண்விதைத்துப் பயன்மிகக்கொள் கோதில்கனுபத் தன்றனுளத்
திலகுமுயர்நிட் களங்கபத்தி யெளியேன்பெறவென் றீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௫௩)

கனுபத்திகதிமுற்றிற்று

ஆ கவி ௫௧௧௨

---

ஐம்பத்தேழாவது

# வேசியாபத்திகதி

பெருகுபத்தியி னுலரியின்பிர சாதம்
பருகுசீர்க்கனு பத்தியின்சரித்திரம் பகர்ந்தேன்
முருகுலாந்துழாய் முடிமிசைமுடியரு கமைந்த
குருகுலாங்கரத் தாற்புனைவேசைசீர் கொழிப்பாம். (௧)

மணியும்பைம்பொனு மலர்களுங்கரங்கொடு வீசித்
தணிவில்பேரறம் பெருக்குகாவிரிநனர் தலேயிற்
பணியணைக்கணு ராயணன் பள்ளிகொள் பரிசா
லணியரங்கமா நகர்வைகுந்தத்தின்மிக் கவிரும். (௨)

ஆன்றசீர்கொள்சீ ரங்கத்தினலயத் தருகிற்
சான்றநாரண பத்தியுட்டழைத்தவ ளாகி
யேன்றநிர்த்தகி தங்களிலிணையிலா தவளாய்
வான்றழைத்ததே வருமருள்வடிவின்மிக் காளாய். (௩)

கணிதமின்றிய செல்வத்திற்காமசாத் திரத்தின்
றுணிவிலன்பர்தம்பத்தியிற்கடலெனத் துலங்கித்
தணிவிலின்சொலா மின்கொடெய்துநருளந் தழைப்பக்
குணிதமற்றவின் புடன்பொருளேயுநிதங் கொடுப்பாள். (௪)

இன்னணஞ்சதா சாரமிக்கவளியைந் திடுகா
லன்னமன்னவண் மனையிலோர்தவங்கொளந் தணன்று
னன்னலம்பெறு தானத்தில் வெயில்வழிநடந்த
வின்னமீருமா றிருந்திளைப்பாறிடு மேல்வை. (௫)

வேறு

சதுமறைக்குல மாதவன்வலிதிற் றன்னிற்சார்ந்திளைப் பாறுதல்கண்ட, பொதுமடந்தைமிக் களவிலன்புவகை பொங்கிவெள்ளியந் தட்டிற்பொற்காசு, கதுமெனுவமைத் தவனெதிர்வைத்துக் கனிவிற்போற்றுபு தொழுதுமுன் னிற்ப, மதுரமென்மொழி கொண்டுநீயாவள் வழுத்துகென்றிட மாதுசொல் கின்றுள். (௬)

பாவியேனிது நகரத்தில்வாழ்நிர்ப் பாக்கியம்பெறு பாத்தையென்றி டலு, மோவியப்புரை வாய்நின்கைப்பொருளெற் குகந்தவல்லவா யினுமுவந்த னனென், றேவிணைந்தெழுந் தேகினனவள்பின் பெய்திமீண்டுமன் னவனடி பணிந்திட், டோவில்பொருட் டேவரீர்க்கென்றிவ்வுரைகொணர்ந்தன னுவந்து கொள்வீரால். (௭)

மனத்துமக்கெனக் கொணர்ந்தவிப்பொன்னை மறுத்துநான்மனே யிடத் தமைப்பேனேல், வனத்துமேவிய வேடரிற்றாழ்வேன் மகிமைமிக்கமா தவம றையீர்நும், மினத்துக்கேற்றதன் றென்பொருளெனின்மாற் கெங்ஙனம்பிரீ திப்படுமென்னத், தனத்துமாலறு மறையவன்புகல்வான் றையனீபொருட் கணிகையானுலும். (௮)

சாதுசேவையார் வழுஞ்சதாசாரத் தன்மையும்பெறுந் தவமுமுள்ளதி னின், மீதுசீரங்க நாயகன்கருணை மிக்கமைந்துளா னிச்சயமெனக்கிப், போதுநல்கிய பொன்கொடுமெளலி புரிந்தரிக்கணி கென்றலுங்கணிகை, மாது வேதியர் மலரடிவணங்கி மருவுநீருரு வருக்குமென்பொன்னை. (௯)

அரங்கநாதனெற் பான்கொலென்றோத வருந்தவத்தர்சாற் றிடுவரொன் றினையும், வரங்கமழ்ந்தமால் விரும்பிடானெனினும் வாய்ந்தபத்தவாற் சலி யத்தின்மாண்பாற், றரங்கவின்றமெய்ப் பத்தரோகையினுற் றருதல்யாதெனி னுந்தகக்கொள்வா, னிரங்கலென்மொழிப் படிசெயென்றோதி யேகமாது பொற்கொல்லனைக்கூவி. (க0)

அதனொடாடகம் பின்னருங்கூட்டி யாதனங்கண்மிக் கழுத்தியற்புத மாய், விதரணம்படப் புரிந்திறுதியிற்றன் விமலனாலய மேவிநல்கிடுவான், றிதமுறுந்தனுண் மதித்தனளமையச் சீதரன்றன்பூ சகன்கனவமைந்திவ், விதம்வழுத்துவ னாளவைகறையில் வேசையெற்கொரு மௌலிகொண்டணை வாள். (கக)

உற்றமாதெனைக் காண்டலுமளப்பி லுவகைமேவலி னுடன்விடாயாவ, ளற்றமன்னவள் கொணர்ந்திடுமுடியீண் டமைத்துப்போவளன் னவள்கரந் தன்னாற், றுற்றமாமுடி புனைந்திடும்வண்ணஞ் சூழ்ச்சிசெய்தியத் தோகை யெற்களவில், பற்றமைந்தவ னெனவுரைத்தகலப் பனவனத்திறம் பலர்கட் குஞ்சாற்றி. (கஉ)

பூசைசெய்திட வாலயத்தணைந்தான் பொதுமின்வைகறை புனல்படிந்த லகி, லாசையோடுடை பூணணிந்தினத்த ராருஞ்சூழப்பல் லியமுழங்கிடவே, காசைமாமலர் வண்ணனாலயத்திற் கலந்தபோதர்ச்சகன்கனுநினைந்து, வேசை யோடுசாற் றிடுதலுமுவகை வேலைமூழ்கினள் விண்டுவுக்கணிய. (கங)

அருகுசென்றருண் மாதவற்கண்டே யன்பினாலிரு கண்கணீர்பனித்து, மருவுமென்புநெக் குருகிமெய்ப்புளகம் வாய்ந்துகம்பமுற் றனள்வசமழிகா, விருதுமேவலிற் பயந்தனணிற்ப விணையில்பூசக னிற்பதெனிங்ஙன், வருதி பொன்முடி தனையரிமுடிமேல் வைத்தியென்னலு மாதுரைத்திடுவாள். (கச)

வனக்கொண்மூநிகர் பகவனைத்தொடுமோர் மாண்பிலேனென மறையவ னகைத்தே, நினக்கொர்தோடமின் றெனப்பலவுரைத்து நியமநீத்துநா னிய மமேவலனென், றினக்கொன்மாமணி முடியவணமைத்திட் டில்லமேவிநீ ராடிமீண்டணைந்து, வனக்கொந்தார்முடி மீதமைத்திடுவான் மனத்திலெண் ணினன் மான்முடி பார்த்தாள். (கரு)

அரங்கனீண்முடிக் காற்றுபொன்முடிதானறச்சிறுத்துற லாலகமயர்ந்தே தரங்கணித்திடா தென்செய்தேனந்தோ தழைத்தவென்மனோ ரதமுடிந்தில தென், றிரங்கவத்தி யரங்கநாயகன்ற னெழில்கொண்மாமுடியிளகுபுசிறுக்க, வரங்கவின்றதன் கண்கொடுகண்டாள் வைக்கமௌலியின்வண்ணமாயமைய.

கண்டமைந்துளார் யாவருமின்பக் கடலின்மூழ்கினர் கண்டகையனை யாள், விண்டமைத்துள முகில்பொழிந்தெனத்தன் விழியிலின்பநீர் மேனியை நனைப்பப், பண்டமைத்தபன் மதுரகீதங்கள் பாடியாடினள் பரவசமடையத், தொண்டமைந்துளார் யாவருங்கணிகைத் தோகைபண்பினை யோகையிற்று தித்தார். (கஎ)

பத்தியங்கடற் படிந்திடுமன்னுள் படைத்ததன்றிர வியமெலாம்பரிவி, னத்தியங்குகை யானடியவர்க்கு நாரணன்றனக் குஞ்சமர்ப்பித்தே, பித்தி யங்குதன் விருத்திமுற்றெழிந்துப் பிரான்முனிர்த்தகீ தம்புரிந்தரிக்கே, தொத்தியைந்திருந் தீற்றில்வைகுந்தத் தூயமெய்ப்பதந் தோய்ந்தனளம்மா.

ஆதலானுயர் கதிபெறற்கெளிய தானமார்க்கந்த னகங்கொள்பத்தியலா, தோதவேறிலை சாதியின்பிரட்ட ரோங்குபாவிக ளூறுமைம்பாதகரு, மாதரங் கொடுசீதரன்பொற்று ளரைக்கணப்பொழு தகத்தமைத்தனரேற், பூதலத் தருந் தேவரும்புகழப் புனிதரற்கதி பொருந்துவர்மெய்யே. (கக)

குடத்தினுட்பொதி சுடரெனவிவளுட் குலவுபத்திமை குவலயத்தொடு விண், ணிடத்தினுந்துலங் கிடப்புரிந்திடமுன் னிவடனில்லகத் தெய்திய மறையோன், றடத்திற்கூவிய கசேந்திரற்காப்பான் சார்ந்தமால்கொலன் னவன்சரோருகத்தாட், டிடத்திலேத்திடு மாதவன்கொல்லோ தேவர்மாதவர் தெரிதாற்பாற்றே. (உ0)

வேறு

வேனிற்கிளைத்து முன்றிலின்கண் மேவுமறைச்சந் நியாசிபெற
மிக்கபத்தி யுடன்றரும்பொன் வேண்டேனிதனை யளித்திடிலெம்
மானிற்கருளு மென்றேக மகுடம்புரிந்து போந்தவளை
மாதவிடாயா கிடப்புரிந்து மடமாதவளை யென்முடியின்
பானிட்களங்க முடனணியப் பண்ணென்றருச்ச கன்கனவிற்
பகர்ந்தவ்வணஞ்செய் கான்மௌலிப் பண்பிற்சென்னி யுறப்புரிநீ
யேனித்ததியி லருளொருசற் றில்லாரெனவா ளாங்கிருந்தா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உக)

வேசியாபத்திகதிமுற்றிற்று

ஆ கவி ருகஙஙு

---

ஐம்பத்தேட்டாவது

# இரவிதாசகதி

ஊனமைந்தபாக் கையினைச்சிங்காரித் தொழியுமாதரு மோங்குமன்பமைய
மானம்விற்றுண்பார் குலத்துடலெடுத்த மாதுவைகுந்த மருவுசீர்வகுத்தேன்
கானமாமறைக் குலத்தவதரித்துக் கடையரேவல்செய் கருவமிக்கமைந்தா
ரீனரேயெனத் தெரிக்குமாட்சிமைசா லிரவிதாசர்சீ ரினியிசைப்பேனே. (க)

இகத்தும்வானத்து மினன்கதிரேபோ லிசைவிளங்கிரா மானந்தசாமிக்
ககத்துண்மிக்குவப் பளித்திடுஞ்சீட ரைவரைம்பெரும் பூதமொப்பவராய்
மகத்துவச்சாபா நுக்கிரகச்ச மர்த்தராயிகத் தவரைப்பத்தியினுற்
சகத்துவந்துவங் களைந்துமெய்க்கதியிற் சார்வித்தாரவர் தம்மிலேற்றவராய்,

தவவிளக்கமார் புகழ்மலியிரவி தாசராமறை யவருபநயன
நவமுறக்கொடு பிரமசாரியராய் நற்றவத்திரா மானந்தசாமிக்
குவகைமிக்கமை சீடராய்ப்பணிசெய் துற்றநாளினிற் சற்குருநாதர்
நுவலுவார்பிட்சைக் கேகினீசடரு லோபர்தம்மனைக் கேகலைமறந்தும். (ரு)

நற்குணச்சிறப் போடரிபத்தி நண்ணுவார்மனைக் கண்ணமைந்தேற்றே
யெற்குநல்குதி யெனப்பகர்ந்திருந்தா ரிரவிதாசரு மிசைத்தவாறியற்றிப்
பொற்குன்றன்னவா ரியர்கரத்தளிக்கிற் பொருவிலாவரி பூசனைபுரிந்தே
சற்குணங்கொண்மற் றவருடன்புசிப்பர் சரிக்குநாளிலோர் நாள்புறத்தணைய.

முத்தமிழ்ச்சர பன்றண்டபாணி முருகதாசன்றின் வண்ணவான்கவிதை
யொத்ததிர்ந்திடி மேனிபோன்மின்ன லொளிவிதிர்த்துல குள்ளவாருயிர்மேன்
வைத்தமெய்யரு ளெனப்புயல்பொழிய மாந்தர்தம்விவ காரம்விட்டின்பிற்
றத்தம்வீட்டகத் தமைந்தனரானுர் தணந்தசஞ்சலத் தவர்களாய்மன்னே. ()

ததியதிற்பிட்சைப் பொருட்டணையிரவி தாசரோர்மனை தன்னிடையமைந்தார்
வதியுமம்மனைத் தலைவன்றான்மூர்க்கம் வன்சினம்பெரு குலோபமுமுள்ளான்
மதிகொண்மெய்ரவி தாசரைக்கண்டே மாணிலங்கிரா மானந்தசாமி
கதிநல்கும்பதத் தொண்டரென்றினிமை கழறிப்போற்றித்தன் காதலார்மனைபால்

கடிதுபிட்சைகொண்டிடுதியென்றேதக்கவின்ற*வன்னிசாற்றிடுகின்றான்வேண்டே
னொடிவிலென்குரு பரன்றன்கட்டளையா லுலோபர்மூர்க்கர்க ளுடமைகொள்கில்லே
னிடிகொள்வன்மழை யொழிந்தபினயல்யானேகுவேனெனவிசைந்திருத்திட்டா
னெடிதுபின்னரு மாரிவிட்டிலதாய் நிகழவாதவ னுச்சியினேர்ந்தான். (எ)

அரிதன்பூசனைக் கானகாலமுமீண் டகலுமாரிய ரும்பசித்திருப்பார்
புரிவதென்னிதற் கியானெனத்துயரும் போதுலோபனும் பொழிந்திடுமழைதா
னரிதுமாறுத லித்தினமடியே னரிசிகொண்டமு தமைத்தயில்கென்னப்
பெரிதும்வேண்டலின் வெறுநிவிர்த்தி பெற்றிடாமையின் மற்றதுகொண்டே

கணத்தணைந்தமு தமைத்தருட்குரவன் கண்ணளித்திடக் காலஞ்சென்றதென
மணத்தபூசனை விதிப்படிபுரிந்து வாய்ந்தவந்நிவே தனம்புரிந்திடுவான்
றணத்தலற்றசீ ராமசந்திரனைத் தம்மனத்தினுட் டகத்தியானித்து
மெணத்தணைந்திலான் பின்னரும்பலகா லெவ்விதங்கொடெண்ணியுமமைந்தில்லான்

ததியிற்சாமிதம் விழிதிறந்திரவி தாசற்கூவியி ராமசந்திரன்றான்
விதியிலிந்நிவே தனங்கொண்டானிலையார் வீட்டிற்பிட்சையேற் றணைந்தனையென்ன
மதிகலங்குபு நடைபெறுசரிதம் வகுப்பவாரியர் வன்சினம்வாய்ந்து
வதியுமெற்குநீ யன்புமிக்கமைமாணுக்கனேனுமென் மாற்றமாறியதால். (க0)

கடைக்குலம்பெறு மங்கைதனகட்டிற் கலந்துநீபிறந் திடுகென்றுனிதயத்
திடைக்கலங்கியம் புருவிடுமிளமா னெனத்தளர்ந்துசற் குருவடிமிசைவீழ்ந்
தடைக்கலந்தமி யேனெனப்போற்றி யழுங்கிநும்மொழி போலயானீசர்
புடைக்கலந்திடற் கையமொன்றில்லை போதுநம்பத புண்டரீகத்தில். (கக)

* வன்னி - பிரமசாரியான ரவிதாசர்.

நீங்குறுத்திட பத்தியெய்தவுமிந் நிமலக்காசியி லேபிறந்திடவு
மாங்குநான்பிறந் துறுததியங்ங னணைந்தருட்கட லாயநீரடியேன்
பாங்குவாழ்கடை மாதிருதனப்பால் பருகிடாமலென் செவிபருகிடவே
தீங்குதீர்மறை புகன்றருளிடவுந் திருவுளஞ்செய வேண்டுமென்றிரந்தே. (;

புறத்தணைந்துயிர் துறந்தனனக்காற் பொருவில்சீரிரா மானந்தசாமி
சிறப்புமிக்கதங் குழவிநேர்பிரிய சிடனைச்சபித் திட்டதாற்றமைத்தோய்
மறத்தகைச்சினத் தினுக்குளஞ்சால வருந்தியாகுல மருவினரிருந்தா
ரிறத்தலெய்திய சிடனுருயிர்தா னியமன்வாழ்நக ரத்திடையெய்தி. (கரு)

காலன்முன்னுறச் சித்திரகுத்தன் கலந்திவன்மிகு புண்ணியவானே
சீலமார்குரு சாபமொன்றேதான் சேர்ந்துளானெனச் செப்புமற்றதனை
யேலமுன்பனு பவிக்கட்டுமென்றே யியமனந்தவா ருயிருடனிசைப்பான்
கோலமிக்கநீ குருசொற்போனீசக் குலத்துதித்துமுன் குயிற்றுபுண்ணியத்தால்

அரிதன்பத்திகொ டழிவில்வீடடைவா யமைந்தமுற்சென னங்கொளாரியன்றன்
விரியருட்பிர சாதத்தான்மாயை வேலையுங்கடப் பாயென்றான்சமனைப்
பரிவிற்போற்றியக் கணத்தினிற்காசிப் பதிக்கடைக்குலப் பாவைகர்ப்பத்திற்
பெரியமாதவன் புக்கொர்பான்மதிபோய்ப் பிறந்தனன்றவச் சிறந்ததேசமைந்தே

அரசர்மைந்தரிற் றேசுடன்பிறந்த வணிகொள்சேயினை யறிந்தவர்யாரும்
விரவும்விம்மித மடைந்தனர்சேய்வாய் விண்டாற்றிலன் பால்பருகில்லான்
றிரமுணர்ந்துதாய் வருந்திமேவினர்பாற் செப்பினுண்மனந் தியங்கினளமுதா
ளூாமுறுஞ்சிறு குழவிவாடுகிலா துற்றதாற்பல ரும்புகழ்ந்திசைப்ப. (கசு)

பரவுசீரிரா மானந்தநாதன் படைத்தமெய்ப்புகழ் போற்பதியெங்கும்
விரவலுற்றது மாந்தர்கண்மாற்றம் வினவுதேசிகன் மிக்கருளமைந்தே
தரமிகுந்தனேர் சிடனுடைங்கட் சார்ந்தகத்தினுட் போந்தவர்ப்போக்கித்
திரநிலாஞ்சுதன் றனைமடிமீதிற் சேர்த்திராமமந் திரத்தினைச்செப்ப. (கஎ)

குழவிபுன்னகை செய்திடக்குரவர் கூறுவாரிராம மந்திரப்பாலை
யழகமைந்திடப் பருகினைசுகமிக் கமைந்துவாழ்தியென் றறைந்தவன்னியினைக்
கிழமைமிக்குளத் தெண்ணினரமுதக் கிரகநின்றயற் புறமணைந்திடலு
மழவிளங்குருந் தருகுதாய்போந்து மால்கொடேதனப் பால்கொடுத்திட்டாள்

தனங்கொள்பாலருந் துதலின்மேயவர்க டம்முளத்திடைவிம்மிதமுற்றோ
கனங்கொளாரிய ரருளினாற்சேய்பாற் கலந்ததீதறக் கழிந்ததென்றுவந்தார்
வனங்கொள்சேய்வளர்ந் துற்றபூர்வங்கொள் வாசனைப்பெரு வித்தைகளெல்லா
மனங்கொண்ஞாபக மெய்திச்சீராம மந்திரத்தைமா ரூதருவேற்றி. (கசு)

பிறந்தசாதியின் முறைப்படிசெருப்புப் பிறக்கிவிற்றுறு மூதியமெல்லாஞ்
சிறந்தசாதுக்கட் கீந்தனரிவர்தஞ் செய்கைகண்டுதாய் தந்தைசோதரர்கண்
மறந்தழைத்தவெஞ் சினங்கொடுபுறத்தின் மருவவோட்டினர் மாதவரிதுவு
மறந்தழைத்ததெய் வச்செயலென்றே யயலிலோர்குடி லமைத்திலமைந்தார்

இனத்தைப்போன்றின மல்லவர்கேண்மை யியைந்தனண்பொரெள்ளளவுமின்மகளிர்
மனத்தைப்போலமா றுபடுமென்றேது மறைச்சொற்போன்றுயர் மாதவப்பெரியார்
கனத்தைப்போலருண் மேனிகொள்பகவன் கழற்கட்டோய்ந்துகே வலசகலந்தீர்ந்
தனத்தைப்போலநித் தியச்சுகம்பருகி யசித்தியத்தொடர் பற்றையமுயன்று.

மாந்தியேசெருப் புத்தொழிலியற்றி வருமிலாபத்தைச் சாதுகட்கீந்து
தாந்தினங்கழித் திருந்தனரொருநா டன்னிற்பிட்சைக்கன் னியநகர்சார்காற்
போந்திடும்வழி யிடையிலுத்தமச்சீர் பொருந்துசாளக்கி ராமமொன்றமைய
மீந்திடுங்களிப் போடெடுத்தணைந்து மேவிடுங்குடி லிடையமைத்ததன்பின்.

வயங்கிடுங்குடின் முன்னுறத்துளசி மாடமொன்றுசெய் ததிற்றுழாய்வைத்தே
யியங்குநீழலிற் சாளக்கிராம மியலவைத்துப்பூ சனையியற்றினராய்த்
தயங்குமத்தினந் தொட்டுறுசெருப்புத் தைத்திடுந்தொழி லைத்துறந்தன்பி
னபந் நலாந்துழாய்மாலைமுற்சின்ன நன்கணிந்துவை ணவரெனத்திகழ்ந்தார்.

இயலுநாட்கிர மத்தரியன்ப ரிரவிதாசர்பா லெய்திடலானார்
நயனிலாவடி யாருறிலுண்டி நல்கியேபகற் போதெலாம்பிட்சைக்
கயல்கொளூர்களுக் கேகுவரிரவி லன்பரோடள வளவியேயரிதான்
றயவினுற்புரி யாடலுஞான சாத்திரங்கொள்வி சாரமும்புரிவார். (௨௬)

திகழுநாளவர் தங்குடிலுக்கோர் சித்தராகிய பத்தர்சின்னுடம்
மகமகிழ்ச்சியின் மேவியன்னவர்தம் மன்பையுத்தம குணங்களைநாடி
மிகவியந்திர கசியமாயென்பான் மிக்கதாஞ்சிந்தா மணியுளததனைத்
தகமறைத்துவைத் திருத்திர்வேண்டியபொன்றருமவற்றினைத் தாங்கைக்கொள்ளுதிரால்.

யான்புவிப்பிர தக்கிணம்புரிந்தோர் யாண்டிலிவ்விடை யீண்டுவனென்றார்
யான்புரிந்திடு முலகினைமதியா மதியுளோர்துழாய் மாடத்தினுள்ளே
வேன்புரிந்திடு மணியினைப்பதித்து மேவுவீரென வவ்விதமியற்றி
நோன்புசால்சித்த ரேகினர்தாசர் நோக்கினுரிலை நுவலுமம்மணியை. (௨௯)

தனமுமாதர்தந் தனமுமொன்றதனைச் சற்றுநோக்கிடிற் பரிசிக்கிற்மம்மெய்க்
கனமுமாதவ மாதியுந்தொலையுங் காசினிக்கண்ணே ரிதைவிழைந்தன்றே
சினமும்வன்பெரு மதமுங்கொடொழிவில் சீதான்றுணைச் சேவடிமறந்தே
வனமுலாம்விரு கத்தினுந்தாழ்ந்து மடிகின்றார்செய்யும் வகைமறந்தந்தோ. ()

தரையின்மேற்கிடப் புங்களபீனமுங்கை தாங்குமோடுமெய்த் தவத்தர்கைக்கொள்ளுங்
குறைவில்செல்வமென் றின்பொடுதாமுன் குயிற்றுபிட்சையே கொண்டுவந்திட்டா
ரறையுஞ்சித்தர்பூ வலம்புரிந்தோராண் டகன்றுமேவின ரன்புடைத்தாச
ருறைதருங்குடின் முன்புபோலியன்ற துடுக்கைதானுமொன் றேற்கலரமைய,

கண்டசித்தர்மற் றிவாதுவறுமை களைந்தின்பெய்திடக் கண்ணியேயிருமை
கொண்டமாமணி வைத்தனனகன்றேன் கொடுத்ததைக்கைகொ டெடுத்துநோக்கில்லார்
தொண்டரின்னவர்க் கெவ்வகைவறுமை தொலையுமென்றவாருகுபோந்தன்பீர்
பண்டமைந்தவா றேதுயர்சாலப் படிந்துளீரெனப் பத்தர்சாற்றிடுவார். (௨௬)

எனக்குத்துக்கமுன் னுளினுமில்லே யின்றுமின்றுநீர் தயாளுவாகையினுற்
கனக்கும்வன்றுய ரெனக்குளதென்னக் காண்கின் றீர்புவிக்கண்ணருளமைந்த
மனக்குமற்றுள சிவர்கடியரால் வாடுகின்றவாத் தோன்றுதல்வழக்கந்
தனக்குவைச்சிந்தா மணிகொளீர்வைத்த தானத்தேயமைந்துளதெனச்சாற்ற.
சித்தனம்மணி கொண்டுதாசர்முனஞ் சேர்ந்துநான்சில தினமிவணமையச்
சித்தமீதவா வினனெனத்தாசர் திகழுமிம்மனே நும்மதேயிட்ட
மொத்தமைந்திடு வீரெனமணியிலொண்பொன்கொண்டுபூ சைத்திருமனேயை
மெத்தவும்விசேடப்பணியியற்றி வெள்ளிசெம்பொனுல் வியன்கலமமைத்தான்.
இரவிதாசர்தம் மடத்திடையதன்பி னெல்லேயின்றிய பத்தரெய்திடினும்
விரவுமின்பமிக் கமைதரமிக்க விசாலநற்பணி புரிந்தனனதனேப்
பரவுசிர்பெறு தாசர்தாந்திரும்பிப் பார்த்திலார்தினம் புலரியிலெழுந்து
கிரமமோடறல் படிந்துறுசாளக் கிராமபூசனே கிளர்ச்சியிற்புரிந்தே. (௯௨)
கடிநகர்க்கணே பிட்சையின்பொருட்டாக் கலந்துசந்தியிற் கவின்மடத்தமைந்தே
யடியவர்க்கெலா நல்குபுதாமு மயின்றிராவினி லரிகதைபுகல்வர்
படியின்மற்றவர் புகழ்வினுயளப்பில் பத்தர்கூண்டனர் பகர்வதென்னவர்தங்
குடில்சின்னுளினிற் பத்திமெஞ்ஞானங் குலவிடுஞ்சரக் கறையதாயிற்றுல். ()

வேறு

இன்னவாறிரவி தாசர்வைபவமிக் கியலுநாட்சதுர்வன்னத்தவருங்
கொன்னருட்பத்தர் மீதழுக்கறுத்துக் கொற்றவனிடைபுகன்றிடுவார்
கன்னவிறிரடோ ளிறைவநங்கர்ப்பாற் கடைக்குலத்துதித்திடுமொருவன்
கின்னமார்தனது மனேயிடைசாளக் கிராமம்வைத்தியற்றுநன்பூசை. (௯௪)
பலருமேன்மயங்கும் படியரிக்குற்ற பத்தரொத்திடநடித்தூர்க்க
ணிலவுசாதிகொளா சாரமுற்றெழித்தா னிகழ்ச்சியிதற்புதமென்னக்
குலவுமன்சினஞ்செய் துடனவன்றன்னேக் கொணர்திரென்றேவலர்க்கிசைப்ப
வுலகிதென்றுணரார் தமைப்பிடித்திறைபா லுய்த்தடித்திட்டனரந்தோ. ()
கிளரிறையுருமி யேடநீசாலக் கிராமபூசனேசெய்கின்றனேயோ
பளகறுமதனேத் தொட்டிடத்தக்க பாக்கியமுனக்குண்டோ கணத்திச்
சளமறுமறையோற் களித்தியென்றிடவுந் தாசர்தாமிகவிரங்கினராய்க்
கொளவருபூட்டீங் தினித்தொடுகில்லேன் கொள்ளுதிர்பிறர்க்கொடென்றிசைப்ப.
புரவலனிசைவா லந்தணன்மடத்துட் போந்தெடுத்துற்றதன்மனேயில்
விரவினன்புண்ணி யாங்கஞ்செய்தைங்கௌ வியமுதற்கொடுசுத்தியாற்றித்
தாமுறப்பூசை புரிந்தனனிரவி தாசர்மன்னவன்றனேவணங்கிப்
பரவுதம்மடத்துற் றன*ரிரசனியிற் பயின்மறையவன்மனேக்†கிராமம். (௯௭)
இரவிதாசர்மடத் தமையவிம்மிதமுற் றியாவருமன்புடைபோந்தத்
திருமுரைத்தெவ்வா றகன்றதுகொல்யாந் தெரிகிலேமெனச்சிலரவன்று
னுரமிகுமந்தி ரவாதியாவையுந்தன் னுழிகிரகிக்கும்வன்மையுளான்
விரவுமன்னதையாங் கியற்றினனென்ன வேந்தன்முன்பொத்திடவியற்றி. ()

* இரசனி - இரா. † கிராமம் - சாலக்கிராமம்.

இரவிதாசரைக்கட் டுபுசிறைச்சாலை யிடையமைத்திடப்பணித்திட்டான்
பரவியற்றுச ரிராமசந்திரன்பொற் பதந்துதித்தவ்வயினமைய
விரவுசீர்ச்சாளக் கிராமமுன்போல வியன்மடத்தமைந்ததன்றிரவிற்
புரவலன்கனவின் மறையவனொருவன் போந்துறுத்திவைபுகல்கின்றான். (௩௯)

வறிதுநீயென்னே யிரவிதாசன்றன் வயின்கொள்சாளக்கிராமத்தை
யறிவுசற்றின்றி யந்தணன்மனைக்க ணமைத்தனைபலவிசையரிதா
நெறிபெறுபத்திப் பிரியன்காணிரவி தாசனந்நிலைபொறுத்துளதாற்
பிறிகிலதமைந்தா னவன்மடத்தரியே பிரியமிக்குறைதருவானேல். (௪௰)

சாலக்கிராமம் பற்றியானுனக்குச் சாற்றலென்புவனரட்சகற்கு
ஞாலக்கண்மேவா ருயிரெலாஞ்சமமே நான்மறைபவர்கணீசரென
றாலக்கண்ணஞ்ஞா னிகள்வழக்கியாவர் துகளில்பத்திமையுளாவர்க்குக்
கோலக்கார்வண்ணன் வசியனின்னதையுட் கொண்டுனுட்டோய்சழக்கொழிந்தே

இன்பமுற்றிருத்தி யென்னமன்பயமிக் கெழுந்துபிற்றையிலவைமேவிக்
கொன்பயின்மறையோர்க் கூவிவிர்த்தாந்தங் கூறிச்சாளக்கிராமந்தான்
மின்பயினும்வீட் டிருந்ததோவென்ன வினவவின்றெனவுடன்றுசர்ப்
பொன்பயிலவைப்பா லழைத்துபசாரம் புகன்றுசீராமசந்திரன்றான். (௪௨)

நின்மிசைபிரசா தித்துளானன்ப நீமடத்தமைகெனவனுப்ப
மின்மிசையிலகு முகிலனதிருமால் விரைமலர்ப்பதத்திருத்தொண்டர்
மன்மிசைசிறிதும் வெறுப்புவப்பின்றி வைகுதம்மடத்திலெய்துபுதங்
கொன்மிகுபூசாக் கிரகத்தினுடக் குலவிற்றால்சாலக்கிராமம். (௪௩)

கண்டுடன்பரமா னந்தமெய்தினராய்க் காலைசெய்கடனெலாமுடித்துத்
தொண்டுறுமன்பர்க் கூடிராமன் றொல்புகழ்பாடினரமைந்தார்
மண்டுபேரன்பா ரடியவர்க்கிருடோய் மாந்தர்விக்கினம்புரிந்திடினும்
பண்டுறுதலின்மெய்ப் புகழுநீணலமும் பரந்துவாழ்ந்திடுதல்சத்தியமே. (௪௪)

இன்னணமிரவி தாசர்வாழ்நாளி லிறைமனையாங்கடசித்து
மன்னருமகண்மெய்த் தாசர்சீர்பலரும் வழுத்திடக்கேட்டுளமீதிற்
பன்னரும்பத்தி படைத்துவத்திரமும் பட்சணசாதனத்திரளுந்
தன்னதோர்தாதி கொடுவரமடத்திற் சார்ந்துதாசரைபன்பின்வணங்கி. (௪௫)

ஆசிபெற்றுடன்வீட் டணைந்தனடான்செய் யனந்தமுற்பவங்கொள்புண்ணியத்தான்
மாசின்மெய்ப்பத்தர் மீதுபேரன்பு வாய்ந்தனவரதமுமேகிக்
கூசிலள்வணங்கி யவருபதேசங் கொண்டுவீட்டெய்தினளிச்சீர்
காசிவாழ்மறையோர் தெரிந்துமற்றவண்மேற் கருத்திலகூவையெய்தினராய்.

என்னமன்மனைவி யிவள்கடைக்குலத்தோ னில்லணைந்தவன்றனைவணங்கித்
தின்னலாதியவு மளித்தனனிந்தைச் செயலிதுகுறித்துமன்னவனுந்
தன்னகமிசைந்தா னுமினியின்னார் தருமுணவுண்டிடன்மாபன்
றென்னவோதினராங் கமைதிறமிராணி யிதயமீதறிந்தனளாகி. (௪௭)

அந்தணர்தம்மை யமுதுசெய்திடுமா றழைக்கவன்னவரணைந் தறைவார்
நுந்தம்வீட்டிடையாந் துய்க்கிலமெமக்கு நுவன்றிடும்பொருளளித்திரென
மந்தகாசத்தோ டரிபதங்கருதி மற்றவராகங்கொளுமகந்தை
சிந்தமெய்புணர்ச்சி யுந்தவோராடல் செய்தியென்றேத்தினளீந்தாள். (சஅ)

எலையில் சாதனங்கொ டெய்துபுதாமே யியற்றினரமுதுசெய்திடுவா
னிலையிடவொன்றி லிரவிதாசரும்வந் திருந்திடக்கண்டனர்மருண்டே
யுலையிடுமெழுகிற் கொதித்தனரவரு ளொருசிகாமணியெழுந்தேட
புலையவென்செய்தாய் நீமறையோருட் போந்ததென்னெனப்பலபுகன்றே.

களத்தினிற்கையிட் டனன்புறத்தமைத்துட்கலப்பமுன்போன்றிடவாங்கோர்
*தளத்திடையமைந்துண் டிருந்திடக்கண்டார் தாம்வசமிழந்தவராகி
யுளத்திலொன்றறியார் நின்றுபின்னிவ்வா றுரைப்பர்மேற்சாதியில்வித்தை
வளத்தினுஞ்சிறந்தே மென்றுறுமதத்தான் மகிமைதோயிராணியையிகழ்ந்தேம்-

நம்மகத்தமைந்த தருக்கொழிதரச்சீ ராமனுற்றுடலேயாமென்
றம்மதமறையோ ருணர்ந்தவர்களையொன் றறைதல்கூடாதுதற்கூவுங்
கைம்மலைதுயரங் களைந்தருள்பகவன் கருணையோர்வரம்பினதாமோ
பைம்மறித்தறியு முணர்விலேமது பாடுபார்த்திடல்கடனென்றே. (ருக)

நிலைபெறுமவரோ டுண்வினைமுடித்து நெஞ்சகத்திலச்சைமிக்காராய்த்
தலைமைசாலன்பார் மன்மனைபுடையோய்த் தந்தலைதாழ்ந்துநின்றிட்டார்
விலைவரம்பறியா மணியனுளுளவு வினவுபுதக்கணையளிப்ப
மலைவும்விம்மிதமு மேவினர்தத்த மனையகத்தணைந்தனர்வாழ்ந்தார். (ருஉ)

இன்னவாறியனு ளொன்றினின்மறையோ ரிரவிதாசர்மடத்தாற்றி
லன்னமார்கங்கை படிந்திடச்செல்கா லவர்களிலொருவன்றுசரிட
மன்னருட்கங்கை யாடுவான்போந்தேம் வருதிகொலெம்முடனென்ன
நன்னலப்பிரம குலத்திர்நும்முடனே நான்வரத்தகுங்கொலோவெனினும்

தகவெனைநீயி ரழைத்ததான்மிக்க தன்னியனுயினேனுளர்ச்சி
மிகவிலியானடத்தற் கியன்றிடாததனுன் மிகப்பிரார்த்தித்தொருமாற்றம்
புகலுவனங்ஙன் புரிதிர்கொலென்னப் பூசுரனியற்றுவேனெனலு
முகளபூகக்கா யினிதளித்திவற்றை யொளிர்வரநதிக்களிப்பீரால். (ருச)

நல்குகாலிரவி தாசன்முப்பதனு னடங்கிடச்சத்தியற்றருட்சீர்
மல்குநிற்கிந்தா னென்றுரைத்திரென வாங்கியமறையவனதனை
யொல்குநெஞ்சுடன்கங் கைக்களித்தில்லா னொருவலுஞ்செய்திலான்வறிதே
பில்குநீர்படிந்து தன்மனையடைந்தான் பிறங்குமன்றிராவவன்கனவில். (ருரு)

தகைகொளோர்பத்தர் தோன்றிநீயிரவி தாசரீந்துளதுவர்க்காயை
வகைபெறச்சேமப் படித்தினைகொல்லோ மற்றவனீசனென்றெண்ணேன்
மிகைபடுபத்த சிகாமணியாகும் விடியவிற்கங்கைபாலீந்து
நகைபெறுகங்கை யீவதையவர்பா னல்குதியெனவியப்படைந்து. (ருசு)

---

* தளம் - இலை.

உடனெழுந்திரவி தாசர்மேற்றனக்கு ளுற்றவவ்வசூயைமுற்மொழித்தே
யுடனுறங்கிடுவோர் யாரையுமெழுப்பி யுணர்ந்தவிர்த்தாந்தமோதிடலு
மிடல்கொள்சொப்பனத்தி லுண்மைகாண்டருமா விடியனுடினரிருந்திட்டார்
கடனிகர்கங்கை போந்துதாசரின்சொற் கழறுபுபாக்கைநல்குதலும். (ருஎ)

கங்கைமாநதியி னின்றரதனப்பொற் கங்கணம்புனைந்துதேசவிருஞ்
செங்கைதோன்றுபுகொண் டவிர்ந்தகங்கணத்தைச் சீலவேதியன்காத்திடலுஞ்
சங்கையற்றிடக்கண் டவரெலாநன்று நன்றெனச்சாற்றிவிம்மிதராய்
நங்கையைக்கண்டே மிரவிதாசரினு ளுமெலாமென்றவர்த்துதித்தார். (ருஅ)

இரவிதாசரின்பே ரருட்டிருநோக்குக் கிலக்கமைந்தேவராநதிதன்
கரசரோருகத்தேற் றிடும்பொருளளித்த கண்ணியமறையவன்களிப்புற்
றரமுறதாசர் பாலடைந்தியன்ற வுளவெலாமுரைத்திடக்கேட்ட
பரமபாகவதர் கங்கைகங்கணந்தங் கைக்கொடுதஞ்சிரத்தமைத்தே. (ருகூ)

தட்டமிட்டாடிப் பரவசமடைந்த ததியினில்வழக்கமொத்தாச
னிட்டமார்மனைவி யடைந்துகங்கணந்த னிருவிழிகொடுதரிசித்தே
மட்டறுமுவகை விம்மிதமருவி மாதவர்ப்பணிந்துவாழ்த்திடலு
முட்டதும்புவகை யுடையர்மன்மனைக்கஃ துதவினர்தன்கரத்தேந்தி. (சுO)

மனையிடைமேவிப் பொங்குபேருவப்பின் மன்னவன்றெரிதரக்காட்டி
வினையவிர்த்தாந்த முழுதுமோதிடமன் மிகக்களித்துற்றகங்கணத்தை
நனைமலர்த்தூப தீபமார்பூசை நவிற்றியன்பான்மிகவணங்கி
மனைபுடனீபா கீரதிதேவி மலர்க்கரத் தணிந்தகங்கணத்தை. (சுக)

பரமபாகவத சிரோமணியாகிப் பயின்றிடுமிரவிதாசரின்கை
தரவருபேறு பெற்றனைசௌபாக் கியவதிதன்னியைநின்னோர்
தரநராகித் தழைத்தவரெவரே சார்ந்தனரென்றனனன்பாய்ப்
பரவுபுதரித்தா ளதுபுனைதலின்விண் பாவையரிற்சிறந்தவிர்ந்தாள். (சுஉ)

சிறிதுநாள்சென்றக் கங்கணத்துணையாத் திகழவொன்றுளத்திடையவாவி
நறியமென்கூந்த னுயகனிடத்தி னவிலமன்னவனகைத்தேநீ
யறிவிலதிங்ஙன றைசெயல்சால வற்புதமிரவிதாசருக்குட்
செறிபுவப்பாற்பா கீரதிதேவி திருக்கரங்கொண்டருளியதால். (சுங)

மற்றதன்றுணையா மண்ணிதிலன்றி வானிடத்திலும்பெறலரிதா
மிற்றடம்பிடியே லேனையபொருணி னிச்சையிலீகுவனென்ன
விற்றவடிருத்தி யெய்திலாள்பின்னு மிசைத்தனள்பலவிசைமறுத்துக்
கொற்றவன்கூற விறுதியிலூடல் கொண்டிவணப்புகல்கின்ருள். (சுச)

துணைகொள்கங்கணம்பெற் றல்லதுபுனலுந் துய்த்திடேன்சாதமென்றியல்பூ
வணைகொள்வாளியற்பூ வணைக்கிடந்தாற்ற வரசனுமனையளுயெற்ரு
விணையின்மற்றதுகொண் டிடலெனத்துயரோ டிருதினமமையமூன்ருநாள்
கணைநிகர்மதிகொ ளமைச்சனேரமைந்தென் காரணமெனக்கடாவுதலும். ()

சம்பவமுரைப்ப மந்திரியிரவி தாசர்பாலடைந்திடினல்லா
லும்பர்பாலுறினும் பெறலரிதென்ன வுடனணைந்துளவவர்க்குரைப்பத்
தெம்பகத்தாசர் சங்கடமிதற்கென் செய்குவன்கங்கணமிரப்பிற்
கம்பதிர்க்கங்கை தருங்கொலென்றையங் கலந்துதங்கருத்திலுன்னிடுவார். ()

எத்தனைபொருள்க ணமக்களித்துள்ளா ளெத்தகையன்புவாய்ந்துள்ளா
ளத்தகையவளித் துயருறக்காண்ட லணியலவென்றோர்பாத்திரத்தி
லுத்தமர்புனல்கொண் டணைந்துகங்கையினை யுட்டியானித்தனரமைய
வொத்தவக்கடத்தி னிடைநுரைதோன்ற வுவகைமிக்கமைந்தனரதுகால். ()

வானிடத்திருந்தோ ரொலிமனச்சுத்த மருவினோர்தமக்கறலெல்லாம்
வேனியல்கங்கை யாகுமென்றதிர வினவினோர்யாரும்விம்மிதாய்
மேனிகழ்செய்கை நோக்கினருமவவ் வேலையக்கடப்புனனின்று
தேனியன்மலர்க்கை கங்கணத்துடனே திகழ்ந்துதாசர்க்குநல்கியபின். ()

சற்றவணமைந்தோர் காண்டரவிளங்கித் தான்மறைந்திடலுநேர்காணு
நற்றவம்படைத்தார் தாசரைப்புகழ்ந்து நனிவியந்தனர்கொள்கங்கணத்தைப்
பற்றகல்பெரியோர் கொற்றவற்களிப்பப் பார்த்திபன்றிருவடிவணங்கி
யுற்றபத்தியுளோ ரெய்தரும்பொருளொன் றுலகெதனிடத்துமின்றென்றே.

சேமமார்பத்தர் திருவடித்துணைகள் சென்னியிற்றீண்டுபாக்கியஞ்சால்
காமதேனுவினற் கன்றிணையாமென் காதலியாநுங்*காதலிதன்
னேமமாருளத்தி னினைத்திடாப்பொருளே நேர்வரிதெனப்பகர்ந்தொருதன்
கோமனையடைந்து மனைவிதன்கரத்திற் கொடுத்திவைகூறிடுகின்றான். (௭0)

புஞ்சமாமேரு வுச்சியிலிருந்தும் பொன்னவாய்த்துயர்ந்திடுவோன்போற்
றஞ்சமென்றெமையாண் டிடவமையிரவி தாசர்சீர்மதிக்கிலனிருந்தே
னஞ்சனக்கண்ணீ கங்கணமிச்சித் தல்லல்செய்திடுதிறந்தன்னு
லஞ்சனமிட்டுப் புதையல்காண்பாரி லவர்திறமறிந்தனனடியேன். (௭௧)

இனியவரேயென் சற்குருநின்னு லெய்தினேனற்பயனென்ன
நனிவியந்தில்லா ளோடுமற்றவர்பா னண்ணிநாடொறும்பணிந்தேத்திப்
புனிதபத்தரிற்சீ ரியனெனவிளங்கிப் பொய்யுலகாசை முற்றொழித்தே
பனிமலர்தேவர் பொழியவைகுந்த பதமமைந்திட்டனர்மாதோ. (௭௨)

தறையினர்தவமாத் திகழ்தருமிரவி தாசர்பன்னுள் வதிந்தநித்தத்
துறையிடைமேயோர் பலருமெய்ப்பத்தித் துறைபுகத்திருத்தியீற்றனின்மா
னறையருட்பதத்தோன் றினரிதாற்பகவ னல்லருள்சாதிவித்தைகள்பொன்
னிறைவுகொடெய்தா தொப்பில்பத்தியினு னேருமென்றேதனிச்சயமே. ()

வேறு

ஒப்பிலிராமா னந்தகுரு வுற்றசீட னுகியவ
ருரைத்தமாற்றந் தனிர்ப்பினழுத்திட் டுலோடனிடபேற் றமுதிடலாற்
செப்பியருள்சா பப்படிகீழ்ச் செனனங்கொண்டும் விரத்தியுடன்
றிகழ்சாளக்கி ராமத்தின் சீலப்பூசை புரிந்துகங்கை

---

*காதலி - மகள்

துப்பின்றிருக்கங் கணமிறைவன் றுணைவிபெறநல் கிக்கலஞ்சேர்
தோயத்தொருசங் கணம்பெறுசீர்த் தூயவிரவி தாசர்நிக
ரெய்ப்பின்றியபுத் தியொடுபத்தி யெளியேற்கென்னா ளீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடெென திதயத்திலங்கும் பெருமாளே. (௭௪)

இரவிதாசகதிமுற்றிற்று

ஆ கவி ௫௧௮௬

---

ஐம்பத்தோன்பதாவது

# நரகரிபத்தகதி

உரவியற் றுறவின்சீல முலகுளோர்க் குணர்த்துஞ்சீர்சா
லிரவிதா சரின்மெய்ம்மாட்சி யினிற்சிறி திசைத்தேனிப்பாற்
பரமபா கவதர்பத்திப் பரவையிற் படிந்தசிந்தை
நரகரி பத்தன்பூமே னடத்தரு ளாடல்சொல்வாம். (௧)

மிக்கசீர்க் காசிமேய விப்பிரர் தவச்சேயானோன்
றக்கநற்சதா சாரத்திற் றலைநின்ரு னிராமானந்தன்
செக்கரம் புயத்தாள்பேணுஞ் சீடனுந் தகைமைவாய்ந்தோன்
புக்கமெய்ப் பத்தர்தம்மைப் பொருவிலு ரணனென்றுள்வான். (௨)

நரகரி யென்னுநாம நண்ணினே னுனிலத்தோர்
பரமபா கவதனென்னப் பரவிடும் பண்புசான்றோன்
கரவுறு சகசாலத்திற் கட்டுறு விரத்திமேவி
வரநகர்ப் புறத்தோர்சாலே வயக்கியங் கதில்வசித்தே. (௩)

சீராம பத்திரன்பொற் சேவடி யுகம்புறத்தி
லாராத னஞ்செய்தென்று மகத்துவப் போடுவாழ்வோன்
யாராகி னுலும்பத்த ரென்றவ ணடையிலன்னோர்த்
தாராள வுபசாரங்க டகப்புரிந் தமுதுநல்கும். (௪)

இன்னணந் திகழுங்காலோ ரேல்வையாச் சிரமத்தின்கண்
மன்னருட் டொண்டர்சில்லோர் மருவிட வுணவுசெய்வான்
றன்னமும் விறகில்லாமே தளர்ந்துமா ணுக்கனுசான்
பொன்னடி போற்றியன்பிற் புகன்றிடப் பத்தன்வல்லே. (௫)

தன்னதாச் சிரமத்தின்பிற் சார்ந்துநோக் குபுகொளற்கா
மன்னவை முழுதுந்தீர்பண் பறிந்துள மயர்ந்துசெய்கை
யின்னதென் றறிகிலானுச் சிரமநீத் திரக்கமோடு
துன்னலா நிசியாற்றூரந் தோய்தாற் கமையானுகி. (௬)

இளரு கமைவதாமக் கிராமதே வதையாந்துர்க்கை
வளர்தரு மாலயப்பான் மருவிச்சாக் கிரசொரூப
முளவவட் பணிந்துளன்பா லுரைப்பர்மெய்ச் சகன்மாதாவென்
வளமிகு சாலேயின்கண் மருவினர் தொண்டர்சில்லோர். (எ)

அன்னவர்க் கமுதமைத்தற் கமையுமிந் தனமொன்றில்லே
யென்னருந் தவச்சாலேக்க ணியைந்துள கருவிமுற்று
முன்னமே யொழிந்தவின்று முதிரிர வாகையானின்
சந்நிதி யடைந்தேன் முன்னூர் தளிகிலஞ் சார்ந்ததம்மா (அ)

இத்ததி யதனில்வேண்டு மிந்தனங் கொடுசெல்கின்றே
னுத்தமீ யெனதுகுற்ற முளங்கொளே லென்றுசாற்றிப்
பத்தன்வேண் டியகொடின்பிற் படர்ந்துபத் தர்களுக்குண்டி
சித்தமாக் கினனளித்தத் தேவதை யாலயத்தின். (கூ)

விறகுகொண் டமைத்தவுண்டி மிசைகில னுறங்கத்துர்க்கை
திறநர கரிகனுவிற் றிகழ்ந்துசாற் றுவண்மெய்யன்ப
வறமலி யெனதுகோயி லமைந்தவிந் தனங்கொள்பண்பா
னிறமலி நின்மேலென்ற னெஞ்சினிற் சினமின்றின்றே. (க0)

அற்றல துன்மேனெஞ்சு ளதியுவப் பமைந்துமுள்ளேன்
மற்றதா னின்சாலேக்க ணிந்தனம் வைகரூறு
முற்றமை தருமதற்கா வுளம்வருந் தலேயெனுது
நற்றளிப் பாற்கொள்வானீ நண்ணிடே லெனச்சொற்றிட்டாள். (கக)

வேறு

பத்தனுள் ளுவந்துவைகல் படர்தலு மெழுந்துநோக்க
வொத்தவாச் சிரமமுற்றத் துணங்குமிந் தனத்தின்கற்றை
வைத்தமை செயலோர்ந்தம்மை வகுத்தசொல் வாய்மையென்னச்
சித்தமீ துன்னினன்மா றிருத்தொண்டர்க் கரிதொன்றுண்டோ. (கஉ)

சம்பவ மிதுகாசிக்கட் டழைத்துளார் யாருங்கேட்டுப்
பம்பதி சயத்தரானர் பான்மையீ துணர்ந்தோர்மூர்க்கன்
மொய்ம்பமை நரகரிப்பேர் முயங்குமா தவனேப்போல
விம்பரில் விறகுகொள்வேன் யானுமென் றிதயத்துன்னி. (கங)

இருந்திய னிறத்தாலன்ன மிசைகுவ மென்றுநீர்ப்பா
லருந்திட முயல்கொக்கன்ன வறிவிலா னன்றிராவிற்
பொருந்திய துர்க்கைகோயில் போந்துறு மரமொடித்து
வருந்தலே வலியுங்கொண்டு வருந்தின னிற்பாற்சோர்ந்தான். (கச)

வேறு

அந்நாண்முதலொரு கணமாயினுமிக வகலாதுறுபிணி வளர்பண்பா
லின்னுவுறுமறி வில்லான்றனதுள மெண்ணுவிறைவிதன் முனமெய்தி
மன்னுதாமுட னென்னேர்பிழையையுண் மதியாதருளுதி யெனவேண்ட
வன்னனதுகன வின்மாடருணிறை யம்பாணிலவின ளறைகின்றுள். (கரு)

எனதாலயமுக டறுமாபுரிதலி னினரோப்மருவினை யிஃதன்றி
யுனதோர்குலமற வடுவேனினபிழை யொருவோர்நினைவுகொ ளுதியாயிற்
கனமார்புறநகர் மிசைவாழ்நரகரி கனிவாகிடும்வகை விறகீவாய்
தினம்யாவினுமுய லுதியோவிடிலது தினமேதுயரிது தருவேனல். (கசு)

எனவோதுபுமறை தலும்வைகறைதனி லியனல்வினைதொடர் வுறுமன்னோன்
மனவோகையினொடு கடமேவுபுகன மருவிந்தனமவை கொடணைந்தே
கனநேர்திருவுரு வுளமாலடியவர் கவினீண்மடமிசை யிடலோடு
முனநேடியவிறகுடனேவருபிணி முழுதோவியதிடும் விறகோடே. (கஎ)

சீராகவனடி யாரைக்குறிகொடு தீமைப்படுவினை புரிவோரு
மேரார்நலமுறு வாரென்றியன்மறை யினமோதிடுமொழிக்கோர்சான்றாய்த்
தாராதிகள்சுக மாமாறிகல்வினை தானுற்றிடமேவ னுடோருந்
தாராளமதுறு பேரன்புடனரி தாசர்க்கியல்பணி முயலுற்றான். (கஅ)

குறையொன்றறநர கரியிங்ஙனமரி குளிர்தாமரைமல ரடிமீதே
நிறையன்புடன்வதி தருநாளவனிடை நிகழும்பதுமனெ னியல்பேர்சான்
மறைகொண்டவிர்குல மிசைவந்தவனடி மையெனுநிலவின னவன்மாடே
யுறையுங்குணமுழு மையுநன்குளமிசை யுணர்ந்தருணர கரியானோன். ()

மனதிற்பெருகுவ கையினன்மடமிசை வதியப்பகர்தலு முறுசீடன்
கனபத்தியினொடு குரவற்கியல்பணி கனிவிற்புரிதரு நாளின்கண்
ணனகக்குருவசா மிளனுதியபல ரார்க்குங்கதியரு ளேற்றஞ்சால்
வினயத்தரியருண் மறைசெப்பினர்கதி விரவுற்றிடுசேரி தைகள்விண்டே. ()

அமலம்பெறுமரி மறையின்செபமதி லரிதாநலமிலை யதுதானே
சமரம்புரிபவ வலையார்வடவையொர் தாமோதரனடி சாரன்புக்
கமலக்கமைசுக வுதவிக்குவகைசெப் கலைமுற்றியகதிர் மதியென்றே
தமமற்றிடவுப தேசித்திடவிடை தானற்றிடமிக வேசெப்பி. (உக)

இரவும்பகலினு முயர்தேசிகர்பணி யிதயக்கனிவுட னேசெய்து
பரவுந்தொழில்கொடு நிலவும்புகழ்மலி பதுமன்புனல்குடை தருமாறே
விரவுஞ்சுரநதி யிடையொன்றிடவவண் மிகுபொன்றிரண்மலி வுறுநாய்கன்
றிரமுன்பழவினை வலிகொண்டுடன்மிசை தெரிகின்றவர்வெருள் குட்டத்தான்.

அதனால்வருதுயர் சகியான்வரநதி யதின்மூழ்குபுமடி வேனென்னுந்
திதமார்மனவுறு திகொடேகளமிசை சிலையொன்றுபிணிசெய் திடுமேல்வை
விதமங்கதுதெரி பதுமன்வணிகனை மிகுபேரருள்கொடிவ் வணமாற்ற
லெதனாலெனவுறும் வகையோதிடவறி தினினீமடிகுத னலமன்றால். (உ௩)

எனையாள்குருபரன் முனமெய்திடிலுட னினனேரிமமென வுனைமேவும்
வினையார்பிணிமுழு தறுமாறருள்செய்து மிகுதிப்பியவடி வுறவாற்றும்
பினைநீயுனதுயிர் விடுவானசைபெறு பிரமேயமதிலை யன்றன்றென்
றனைநேர்பதுமன்வின் மொழிகேள்விகளிடை யமுதொத்திடும்வகைபருகுற்றே

உவகைக்கடலிடை முழுகிப்பதுமன துகளப்பதமிசை பணிவுற்றே
தவமெய்க்கருணையி னிகரற்றிலகுவிர் தமியற்கருள்புரி குதிரென்ன
நவமிக்கமைகுரு பரன்வாழ்மடமிசை நாய்கன்றனையமை தரவைத்தே
யவனுற்றிடுநிலை மைகள்சொற்றிடவுட னருளாரியனவ னைக்கொண்டே. ()

வளமார்திரிபத கையினீள்கரைமிசை மருவாமணிகனி கையின்மூழ்கிப்
பளகோவிடுபுன லிடைநின்றருணிலை பதிராமநன்மறை தனையன்றனேன்
கொளவோதியதனை யொருமூவிசைபெறக் கூறும்படிசெய வதுபோதிற்
சளமாருடல்பெறு பிணியோடுளமிசை சாரும்பவவினை யதுமாய்ந்தே. (௨௬)

குருவாயவிர்நர கரிதாண்மிசைகளி கொண்டேபலபல தெண்டஞ்செய்
தருவாமதனில மிசைமேவினனென வுன்னும்படிதிகழ் தரலானன்
மருவோர்நிலையுணர் தருவோர்நரகரி மாண்போதினரதி சயமிக்கார்
தெருளார்நரகரி வணிகன்மனையிடை சேரும்படிவிடை தரவுற்றான். (௨௭)

செல்லுந்தனிகனும் மல்குங்களிகொடு செல்லென்றியவுரு வங்கொள்வோன்
புல்லுந்திருமறை யுள்ளங்கொடுநிகழ் பொய்யின்றியநிலை யொல்லுற்றான்
சொல்லுந்தவன்மறை யொல்வல்லமைகொடு துய்மங்களவிளை யாடற்செய்
தெல்லுந்தியபுகழ் வைகுந்தமதனி லெய்தின்பமருவு மெய்கொண்டான். ()

மண்ணைத்திரள்களு நண்ணப்பயமுறு மண்ணைத்துயர்மிக வேகல்கும்
பெண்ணைச்சதமுறு பொன்னைக்கருதுபு பின்னப்படுமன மிசைபன்பர்
கண்ணைக்கவர்தரும் வண்ணத்துருவுள கண்ணற்கருதினன் மறையோதில்
விண்ணைத்தருமிது கண்ணற்றதிதுயர் விம்முற்றுழனரர் வினையென்னே. ()

வேறு

அடியார்க்கமுது செய்திடத்தன் னாச்சிரமத்தின் கூரைவிற
 கறவேயொழிந்த பண்பதனா லருகிலமைபத் திரகாளி
குடியார்பழைய கோயிலிடை கொண்டுந்தன்போற் கவருமொரு
 கொடியோன்றார்க்கை சாபத்தாற் கொண்டசிரநோய் முற்றறுத்து
மொடியாக்குட்ட ரோகத்தா லுயிர்நீத்திடப்போம் வைசியனுக்
 குறுநோய் தீர்த்து முன்மகிமை யுலகிற்பரப்பு நரகரிபோ
லடியார்முகிலி லுயிர்த்தொகைகட் கின்பீந்திடவென் றெனக்கருள்வா
 யிராமானந்தப் பெயர்கொடெனை திதயத்திலங்கும் பெருமாளே. (௩௦)

நரகரிபத்தகதிமுற்றிற்று

ஆ கவி ௩௨௧௬

---

அறுபதாவது

# தத்துவாசிசீவாசிகதி

நத்துலாவுகை நாரணனன்பர்தம் பத்தி
மெத்துசீர்மலி நாகரிபத்தர்சீர் விண்டேன்
றத்துவாசிசீ வாசியென்பெயர்ச்சகோ தரர்க
ளொத்துமால்பதப் பத்திகொண்டுய்ந்தசீ ருரைப்பாம். (க)

வளமைமிக்கதெக் கிணத்திடைமன்னவர் குலத்திற்
சளமின்முற்றவத் தாற்சகோதரர்களாச் சனித்தா
ரிளமைசான்றிடு காலையேயிகத்துமா லிகந்து
துளவலங்கலான் றெண்டராய்க்குலத்தொழி றுறந்து. (உ)

வயிணவப்பெருந் தன்மத்தின்வகையிதென் றுணரார்
வெயிலவன்புரை தருபுகழ்க்குரவனை விரும்பிப்
பயிலுமில்லறத் தமைந்தணைந்திடுமரி பத்தர்க்
கயிலவுண்டியா திகடந்துபூசனை யாற்றி. (ங)

விளங்குநாளொரு பத்தனன்னவர்மனை மேவக்
களங்குறுமனத் தார்வழிபாடுகள் கண்டு
துளங்குநெஞ்சுடன் வினவுவரெம்மையித் துயர்தோய்
சளங்குலாஞ்சமு சாரசாகரத்தினுந் தாங்கி. (ச)

அருள்செய்சற்குரு வெய்துவேங்கொன்மதி யமைந்த
பருவமுற்பல திசையினுந்தேடுபு படர்ந்தே
மொருவரெய்தில ரெனப்பகர்ந்திடவவ னுரைப்பான்
வெருவலீர்நும்மின் மேவுபத்தர்கள்பதம் விளக்கி. (ரு)

உற்றபாததீர்த் தத்தினையுலர்ந்தவிம் மரத்தின்
பற்றமைந்தவேர் மிசைவிடிற்றளிர்த்திடப் பண்ணுங்
கொற்றமேய்ந்ததா ளுடையன்யாரவனுமைக் குடும்பக்
குற்றநீக்கிநல் வழிப்படுத்தாண்டருள் குருவாம். (சு)

நீங்களெவ்விதத் தாயினுமன்னவ னிமலப்
பூங்கழற்றுணைக் கடிமையாகுதிரெனப் புகன்று
நீங்கவன்னசொற் கடைப்பிடித்தியற்றியு நோா
ரோங்கனேர்மனந் தளர்ந்தனருற்றநா ளொன்றில். (எ)

தக்கசீர்ச்சுகப் பிரமவங்கிசக்கபீர் தாசர்
திக்கமைந்திடு தேசசஞ்சாரஞ்செய் தன்பு
புக்கதொண்டர்தம் மனைபுகவன்னவர் புகழ்ச்சீர்
மிக்கமுன்வினை யுருதலிற்பத்தியுண் மிகுந்தே. (அ)

பாதபூசனை புரிந்துநீர்பாதவப் பால்விட்
டாதரத்துட னுணவளித்தரிகதை வினவிப்
பாதவத்தினைப் புலரியிலெழுந்தனர் பார்க்கச்
சீதளம்பெறத் தளிர்த்தல்கண்டோகையுட் சிறந்து. (கூ)

வேறு

பிறதலம்புகப்போந் திடுகபீர்தாசர் பிரசமாமலர்க்கழல்வணங்கி
யறநிறைபத்தன் முன்மொழிந்துள்ள வாம்விர்த்தாந்தங்களையறைந்தே
விறன்மலிதாச ரிடந்தமையாள வேண்டுமென்றிரந்திடவிள்வார்
திறமுறு நமக்கு நானுபதேசஞ் செய்திடற்கேற்றவனல்லேன். (கo)

மிக்கசத்திரிய ராகுநுந்தமக்கு மிலேச்சன்யான்றேசிகனுத
றக்கதன்றுமது மரபினுக்கேற்ற சற்குருவினையடைதிரெனத்
துக்கமிக்கவர்யாஞ் சாதியாசாரந் துறந்துளோந்தொல்லுலகுடனுஞ்
செக்கரங்கமலத் தாட்டுணையல்லாற் செகத்தெமக்கொருதுணையிலையால். (கக)

உமதடைக்கலமா மேமையொருவலிரென் றுளங்கசிந்தன்புடனிரப்ப
விமலமெய்த்தாச ரவர்நிர்ப்பந்தித்து வேண்டிடுமதற்குளமிரங்கிச்
சிமயநேரிராம மந்திரமுபதே சித்தருதிதையுருவேற்றி
னுமதகத்திச்சை முடிவுறுநான்கா நுவல்புருடார்த்தமுமெய்தும். (கஉ)

தூயவிங்கிதுவே பெருஞ்சமுசாரத் துறையினுமுத்தரிப்பிக்கு
நேயர்நீரெனது சீடராந்தகையா னிலவுநுஞ்சுற்றமாயினர்கண்
மேயநும்மிசைகுற் றம்புகன்றவரில் விலக்குபுமிக்கிடர்விளக்கி
லேயகாசியில்யா னமைகுவனங்ங னெய்துதிரெனவிசைத்தேக. (கங)

சித்துருவுடைய விராமமந்திரத்தைத் தினமனங்கொண்டுருவேற்றி
மெத்துவகையினோ டிருவருமனையின் மேவுநாள்சுற்றமாயினர்க
டத்துவாசியுஞ்சீ வ்ாசியுங்கபீர்தா சருக்குமாணுக்கராந்தகைதேர்ந்
தொத்துளசாதியினிற்பிரட்டர்களென் றோதுக்கிநீர்மிலேச்சரோத்துறுதிர்.()

உம்மதுதரிச னம்பரிசனமு முற்றவெந்தமக்கொவ்வாதென்னும்
வெம்மதத்தினராய்ப் பற்பலநிந்தை விளம்பிவேறோதலாராகி
விம்மகச்சினங்கொண் டியலுநாளுள்ள மிகக்கலங்கினர்தத்துவாசி
செம்மலுக்குறுசீ வாசிகன்னிகைக்குத் திகழ்மணஞ்செயும்வகையின்றி. (கரு)

குரவனோதிடுஞ்சொன் னினைந்துகாசியின்கட் குறுகினர்துபர்முழுதோத
வரமலிகபீர்நீ ரிதுகுறித்தும்முண் மயங்கலிர்நும்மகன்மகட்கு
விரவுகாதலிகா தலனோநேடாது விவாகமங்கவர்கட்கேமுயலிற்
சரதராகவன்ற னருளினலவரைத் தாம்வலிந்தேற்பரென்றுரைத்தார் (கசு)

சற்குருமொழியைச் சிரத்தமைத்தனரூர் சார்ந்துற்சாகத்துடன்சாற்றிப்
பொற்குவடனைய மனத்தராய் விவாகப் பொருள்கள்சேகரித்திடலுணர்ந்த
துற்குணத்தவரன் னவர்மனையடைந்து துவக்கலென்சிவசிவபாவம்
புற்குறுதொழில்செய் தனிர்சகோதரரைப் புருடபாரியெனச்செய்குதிரோ.

உற்றநுஞ்செயலி னுஞ்சகோதரர்க ளுடன்படலிம்பிதமென்னச்
சொற்றனுமிருவர் புகல்வர்நீரெம்மைத் துருக்கரென்றகற்றியமுறையான்
மற்றவர்முறைமை யுற்றனமென்ன மருவினோரின்றிரவிடையாங்
குற்றமார்செயலுய்த் துணர்ந்துபிற்றையினிற் கூறுதுமுடிவெனவகன்றார். ()

கூண்டுசாவினரான் னவரைநங்குலத்திற் கூட்டிடன்முறையலவெனத்தங்
கோண்டதைமனத்தின் முடிவுசெய்தனரிற் குலவினருறங்கிடுமேல்லை
மாண்டுலங்கநும னவர்கள்சொற்பனத்தில் வந்துதத்துவாசிசீவாசி
நீண்டுளசிலைக்கை யிராமனன்பர்களந் நிகராமுமந்திரந்தனையே. (௧௯)

தவமலிகபீர்தா சரினிடமுபதே சம்பொருந்தினர்தகையதனு
லவமுறுபிரட்டத் தன்மைபெற்றிலர்நீ ரனைவரும்பிற்றைநாளன்னோர்
நவமனைபுகுந்து னுகர்திரவ்வாறு நவிற்றிடார்தமைக்கொல்வேனென்னக்
கவலைமிக்கெழுந்தார் திரண்டுடனவர்தங் கடிமனைப்பாற்செலவலித்தார். (௨௦)

சென்றவர்தம்மைப் புகழ்ந்தியற்பத்த சிரேட்டர்நீரிக்கொடுங்கன்ம
மின்றயர்கலிர்நும் மகனுடன்மகளை யாங்கொள்வோமித்தகைபுரிதற்
கென்றகந்துணிந்தீண் டெய்தினோநும்மீ தின்றொருதோடமோராதே
முன்றவறுரைத்தேம் பிழைபொறுத்தொன்று முயங்கியூணுகர்திரென்றிசைப்ப. ()

பிழைபிலார்புகழ்வார் முன்னைமைச்சாதிப் பிரட்டரென்றீரதானும்மு
ழுழைதராதுற்றே மின்றுவந்திங்க னுவன்றனிரிதற்குநெஞ்சிசைந்து
பழைமையிலமைவே நும்மதாக்கினைக்கீழ்ப் படிந்துளேம்யாமெனப்பகர்ந்து
விழைவுடனமுது மமைத்தனரொன்று மிசைந்தனரவருடன்விள்வார். (௨௨)

உற்றவெஞ்சுதனை மகளைநுந்தம்பா லொப்புவித்தனமிதுமுதலாக்
கொற்றமாரிவர்நும் பிள்ளைகளாகிக் குலவினர்விவாகமாதியசீர்
மற்றவர்தமக்குப் புரிதனும்பார மெனவகுத்தனரகன்றிடலுஞ்
சுற்றமாயினர்பிள் ளைகளிருவருக்குஞ் சுபகுலத்திடைமணம்புணர்த்தார். ()

பற்றகன்மனத்தத் துவாசியுஞ் சீவா சியுப்பரப்பிரமத்தைத்தம்மு
ளுற்றமெய்ச்சீவ சாட்சியையிராம னுருவமாக்கருதுபுகுரவன்
சொற்றமந்திரத்தைச் செபித்தளவறுசிற் சுகக்கடன்மூழ்கினரீற்றி
னற்றவத்தொண்டர் மேவுவைகுந்த நாடடைந்தனர்பவநசித்தே. (௨௪)

குரவனேதிடுஞ்சொன் மறைமுடியென்னக் கொண்டொர்மூர்த்தியையுபாசிக்குஞ்
சரதருக்குலக ரிகழிடர்பலவாச் சாரினுந்தாம்பொறுத்துளவோர்
விரதம்விடாதாற் றிடிலிகபரச்சீர் மேவிவாழ்குவரெனுமொழிக்குக்
கரவறுதத்து வாசிசீவாசி கதியொருசாட்சியாமாதோ. (௨௫)

வேறு

சீலக்குருவைப் பெறவொர்பத்தன் செப்புமொழிபோற் சேருமன்பர்
திருத்தாட்புனலை யுலர்ந்தமரஞ் செழிப்பப்பெய்து கபீர்தாசர்
கோலப்பதநீ ராற்றழைப்பக் குருவாக்கொண்டு தம்மினத்தார்
கோபித்தோதுக்கக் குருவருளாற் குலவுமநுமற் கொண்டவரைச்

சாலக்குணத்த ராப்புரிந்து தனயன் மகளை யவர்தம்பாற்
றந்துன்பதத்தி லணைந்திடுஞ்சீர்த் தத்துவாசி சீவாசிக்
கேலப்புரிந்த வருளொருசற் றெனக்கும்புரிய வெண்ணிடுவா
யிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமானே. (உ௬)

தத்துவாசிசீவாசிகதிமுற்றிற்று

ஆ௲ கவி ௫௨௪௨

—–

அறுபத்தோன்றாவது

# மாதவதாசகதி

பற்றற்றுயர்தா ரகமோதிடுசீர் பதிதத்துவனோ டுசீவாசியெனுங்
கொற்றத்தினர்நா ரணன்மேவிடுவை குந்தம் பெறுகா தைபகர்ந்தனன்மேற்
சுற்றத்தினர்தாந் துணையன்றென்னத் துறந்தேயருணீ டுமிலக்குமிதான்
பொற்றட்டினிலா ரமுதீந்தருளப் புசித்தின்புறுமா தவனீர்புகல்வாம். (க)

வளமிக்கவிருற் கலமாநகரின் மன்னந்தணன்மா தவநாமுளான்
கிளர்வெஞ்சினமெத் தெதிர்பாயும்வியாக் கிரமொத்துவயோ திகமேவியுந்தான்
கொளலுற்றகளத் திரமைந்தர்பொன்மேற் கூடுந்தன திச்சைகுறைந்திலனுய்ச்
சளமிக்குவதிந் திடுநாளிலுறுந் தன்னுடதணந் தொருகாரியமாய். (உ)

மிகுதூரமமைந் துளதேசமுறு மீண்டேவருமத் ததிமிக்கதவம்
புகுகாலமணைந் திடலாலுலகப் பொய்யற்றுயர்மெய் யுணர்வீந்தருளத்
தகுமாதவனுண் ணினைபுஞ்செயலிற் சார்மாதவனுக் குவயிற்றிடையே
வெகுவாகவருத் திடுவேதனைதான் மேவுற்றதவா வினைவேரறவே. (௩)

மோகாலசியம் பெறுதன்மைகொடோர் முகிறேய்தருநீ ழலில்வீழ்ந்தனனுன்
டேகாங்கிமிகுந் துயரெய்திடுபோழ் தெவருந்துணையா கவிசைந்திலதான்
மாகாந்தன்மலர்ப் பதநாடிடலால் வல்லேதுயர்மா றவுள்விம்மிதனுய்
வாகாந்தனதுட் சிறிதேயுணர்வு வாய்ந்திவ்வணமா கமதித்திடுவான். (௪)

எனக்கித்ததியெய் தியதியாதிதுபோழ் தெவருந்துணையா கவியைந்திலரே
சனக்கும்பறுமிவ் வனமூடெனுயிர் தவிக்கும்பொழுதிற் கருணைக்கடலாம்
வனக்கண்ணியனிந் தபிரானருளே மாட்சித்துணையா கவதிந்ததலா
லினப்புத்திரர்மா தர்கடேடியபொன் னியலுந்துணையா கவிசைந்திலவால். ()

விரவுற்றனரா யினும்யானனுப விக்கத்தகுதக் கவினைத்தொடரைச்
சிரமத்தொடுநா னுகர்வுற்றலது தீராததனைத் தவிரச்செயுமோர்
தரமற்றவர்மற் றவர்மற்றவர்பாற் சாருந்துயர்யா னுமக்ற்றிடுமோ
நூரமற்றவன்யார்க் குமனேர்கண்முய லுறுமாவினைதுக் கசுகந்தருமால். (௬)

அவர்செய்வினையின் பயனார்தருமா றவனிக்கிடைவந் துளபோர்கடமை
நவமுற்றியநம் முறவோரெனநா நம்புற்றதுபந் தமதாலலவோ
விவாஞ்சிறிதோர் கிலதாசையினால் வீணேதுயரங் கொடுவெம்பினனால்
கவமிஞ்சிடுமோ ரணமெய்திடுமக் காலத்தெவர்கா லனலாற்றுணையே. (௭)

வதிவாகியபா ரியைமாமறையில் வாழ்க்கைத்துணையென் றுவகுத்ததலாற்
கதிதோய்துணையென் றுநவின்றனவோ கண்ணுற்றுமிநன் குழிவீழ்ந்ததுநம்
மதியீனமெனக் கொளலன்றியவர் மாடேதொருதோ டமதித்திடிலிப்
பதியோடுறுநற் றுணையென்றுளமேற் பாவித்தவையா விபினுக்கெவையே. ()

சம்பாத்தியமெவ் வனமேவிடுமாற் றருசுற்றமுமைந் தருமற்றெவருஞ்
செம்பாத்தியராய்த் திகழ்வார்நரைநந் தேகத்திடைமே விடிலாருயிரொத்
தம்பாத்திகழ்கண் மனையாதியர்சொல் லாம்பாற்றுதையா ருயிர்நீக்கிடுமோ
வெம்பாத்திரரா குவரீதுலகின் மேலாகும்வழக் கம்வியப்பலவே. (௯)

கருத்துற்றிடுநாண் முதலித்துணையுங் கனகக்குவையீட் டியுமோர்சிறிதுந்
திருத்திப்படுகின் றிலர்மைந்தரெனோர் திறல்குன்றலிலன் புகுறைந்தனரால்
வருத்தந்தரும்வார்த் திகமிக்குறிலோ மதியாதுவெறுக் குவரத்ததியில்
விருத்திப்படுதுன் புறுவோர்நமதூர் மிசைபற்பல்விருத் தர்கண்மேவினரே. ()

சாருங்கதியெய் திடுமுன்விசனத் தலமேவுபுசற் கதிபெற்றிடுவா
னீருந்தியகார் நிறமாயவனன் னிமலக்கழல்பே ணுவனென்றுதுணிந்
தேருந்தியதன் மனைபுக்கமுதார்ந் தினமைந்தர்கள்சுற் றமெலாம்வருவித்
தாருந்தெளியப் புகல்வானிவண்யா னறைகின்றதையங் கிகரித்திடுவீர். ()

நானித்தனைகா லமுநும்மையெலா நலமார்துணையா னவரென்றுளமேன்
மானித்தவமே துயரும்பயனின் மையும்வெம்பவமும் மலியுந்தொழில்க
டானித்தமுமாற் றினனன்னவையென் சனிநேர்மனமா பையினாலினிமேன்
மேனித்தலமே யவெனாருயிர்மேல் வீடுற்றிடவோர் விபினத்திடைபோய். ()

செகநாதனருட் கமலப்பதமே சிந்தித்ததனுட் செறிவுற்றிடுவா
னகமீதிலவா வினன்வார்த்திகநீ ரமைவுற்றவெனா ருயிர்நீங்கிடுமேற்
சகமீதினுமக் குமெனக்குமியல் சம்பந்தமகன் றிடுமிப்பொழுதிற்
புகநீவினையிங் கொருவற்கடையிற் புலம்புந்தொழிலல்லதெதேபுரிவேம். (௧௩)

துயர்கொண்டுழலேன் னுயிரென்றுமறாச் சுகமுற்றிடமா தவநற்றொழிலின்
முயலும்படியே குவனீருமெனோர் முறைபற்றிடிலோர் தடைசெப்பலனென்
றயலாரெனவே மனைவிட்டகல்கா லனைவோருமழுங் கினர்பின்றொடரா
மயனீடுமெனோர் முகநோக்கிலனாய் மனவூக்கமொடே கினன்மாதவனே. (௧௪)

பந்தப்பிணியுற் றுளசுற்றமெனும் பாசத்தினர்மற் றவனாடிலனாய்
முந்தப்படர்வுற் றதனாற்றளவான் முடியாதுமடங் கினர்மாதவனீள்
கந்தப்பொழிலார் செகநாதவயற் கவின்மிக்கமைவுற்றநீலாசலமே
லந்தத்தகைசால் குகையூடமைவா யறலாதிநுகர்ந் திடலற்றவனாய். (௧௫)

* விசனத்தலம் - மனித சஞ்சாரமின்றிய இடம்.

செகநாதனருட் கமலப்பதமே சிந்தித்தவிர்பத் திவிரத்தியுடன்
சுகமேவினன்முத் தினமுற்றொழியத் தோன்றுஞ்சதுரா னதினத்திரவிற்
பகவான்முனருச் சகர்பொற்கலமேற் பதிவுற்றநிவேத் தியமாற்றினரோத்
தகவாற்கொலெடுக் கலராகியுறுந் தளிபூட்டினர்தம் மனையெய்தினரால். (௧௯)

உடனேயுலகத் துளவாருயிரின் புறுமாறுபுரந் தருளும்பெருமாண்
மடலார்வனசத் தொடமொர்புறையு மாவோடுசொல்வா னீலாசலமேன்
மிடலோடெனைநா டிடுபத்தன்முந்நாண் மிசைகின்றிலன்மெய் யசைகின்றிலனுய்ப்
படர்மேவினனுற் றுளன்வல்லையினிப் பலகாரமளித் தணைவேனெனவே. ()

இசைத்துக்கரமீ துகலத்தையெடுத் திடுபோதிலிலக் குமியாகியதாய்
நசைத்துக்கொடுபோ குவன்யானெனவே நவின்றோர்நரமா துருவாகினள்பார்
மிசைத்துப்புறழ்தாள் கொளவேகுபுமுன் விரவிக்கலம்வைத் தியலந்தணனே
விசைத்துண்டமையென் றுரைவிண்டடனேமின்போலமறைந்தனண்மின்புரைவாள்

உடன்மாதவதா சனெழுந்தமுதுண் டுறுபாத்திரமுன் பமைவித்தரிதன்
மடன்மங்களகஞ் சமலர்க்கழறன் மனமீதினினைத் தனனுற்றிடலு
மடன்மேவியவர்ச் சகர்வைகறையூ டரியாலயமே வினர்கண்டிலராய்
மிடன்மேவியகள் வர்கொடேகினர்கொல் வியன்வாயிறிறந் திலதொன்றுமெனு

பலவாறுளுசா வினர்தேடினராய்ப் பகர்காரணமொன் றுமறிந்திலதே
நிலனாளிறைபா லுரைசெய்திகோ னிருபன்பலபேர் களைநேடவிடச்
சிலதூதர்கடா நீலாசலமேற் சென்றுற்றகுகைக் குணுழைந்திடுகான்
மலர்நேர்விழிமூ டியுளான்முனமம் மாழைக்கலம்வைத் துறுநீர்மதியா. (௨௦)

திகழின்னவனே தளியூடியல்பாத் திரமானதனைத் திருடுற்றவனென்
றகமீதுசினந் திகமான்முழுதற் றவரைப்புரிகொண் டுபிணித்திறைமுன்
புகவேகொணர்வித் திறையேவிடலாற்பொல்லார்கசைகொண்டுபுடைத்திடலுஞ்
செகநாதனருட் பெறுமாதவர்வாய் திறந்தொன்றுரையார் சிலையொத்தனரே.

அவருட்டயைமிக் கவன்மற்றவரை யடிக்காதிர்களென் றுசிறைப்புடைமா
தவரைப்புகவிட் டனர்வைகறையிற் சகநாதனருச் சகர்கோயிலின்மேய்
நவமிக்கவிர்மூர்த் தியைநோக்கிடுகா ணுதன்முதுகூ டுதிரம்வரல்கண்
டவர்யாவருமா குலமிக்கறுவை யான்முற்றிலுமொற் றினர்நாடிடலும். (௨௨)

ஊற்றிற்பினும்வந் திடல்கண்டவர்தா முளமஞ்சினர்பூ சைமுனும்வினைக
ளாற்றித்துயர்மிக் குணவாதியுநீத் தல்விற்றளியின் கணமைந்துறமால்
தோற்றிக்கனவூ டுநீலாசலமேற் றோயுங்குகைநின் றிறைதூதர்கடாங்
கூற்றிற்றுயரங் கள்குயிற்றியிவண் கொணர்மாதவதா சனெனன்பினனால். ()

பசிமிக்கவனுற் றிடலாற்கலமார் பலகாரமளித் தனன்யானவன்று
னிசியிற்கவர்ந்தா னலனன்னவனை நிருபன்படர்சா லவடித்ததனாற்
கசிவுற்றதென்மீ திலிரத்தமெனக் கருணைக்கடலோ திடவர்ச்சகர்தாஞ்
சுசிபட்டபுண்மீ தயில்பட்டவர்போற் றுணுக்கென்றுதுடித் துமருட்சியராய்.

சீர்மாதவதா சர்முன்வல்லையினிற் சென்றேசிறைச்சாலையினின்றொருவிப்
பார்மீதடியற் றவிழும்பனையிற் பரிவோடுபணிந் துறுபைம்புனல்கொண்
டோர்மேவருட்டா சர்தமைக்குடைவித் தெழிலாருடையீந் துணவிட்டுறுகெய்
தோர்தோய்புணறற் குமருந்துதவித் துதித்தேமுகமன் பலசொல்லுதலும்.
அரிநாரணனுஞ் செகநாதனரு ளல்லாற்பிறிதொன் றுமகத்தறியார்
பரிவோடுபணிந் துமுனிற்பவரைப் பார்த்தேபகவன் றனருட்செயலைத்
தெரியாதிதுநாம் புரிந்தோமெனநீர் சிந்தாகுலமே வலிரென்றுரையா
விரிவாகியபத் தியின்மாதவனை வியன்மாதவதா சர்பணிந்துறுநாள். (௨௬)

வேறு

ஓரிரவிற்றாசர்தளி யிடைசெகநாதப்பெருமா ளுபயப்பொற்றாள்
வாரிசதியானமுயன் றுறலுணராதருச்சகர்தாம் வாயின்மூடிச்
சீரியதம்மனையடையத் தாசர்விழித்தனர்நோக்கிச் செறிந்தார்க்காணார்
சேரியல்வாயில்களெவையு மூடியுறக்கண்டுவகை சிறந்தாராகி. (௨௭)
கோயிலினுள்ளொருபுடைமா தவனருட்சீருணர்ந்துதுயில் கொண்டாரக்காற்
பேயினமுந்துஞ்சிடுநள் ளிரவூடுகுளிர்நடுக்கப் பெரிதும்வாடத்
தாயிலினியான்சகியா னுடன்றன்மிசையமைபொற்பீ தாம்பரத்தைத்
தூயற்றாசரின்மீது போர்த்தனனர்ச்சகர்விடியற் றுதைந்துநோக்க. (௨௮)
பகவனெழிலேகாசம் புனைந்துதொண்டர்துயின்றிடுமெய்ப் பண்புதேர்ந்து
புகழ்மலிமெய்த்தாசரென வோர்கிலர்வன்சினமிகவும் பொருந்தியங்க
ணிகழ்தருமேவலர்க்கூவிப் பிடித்தெழுப்பவர்ச்சகர்பா னிகழ்த்துகின்றார்
திகழ்முனிரவிடைநீர்பூ சனைசெயுங்காற்பகவனையான் றியானித்துற்றேன். ()
நீயிர்புறம்போந்ததறி கின்றிலன்காப்பிட்டிருந்த நிகழ்ச்சி தேர்ந்து
கோயிலினுள்ளிவணுறக்கங் கொண்டேனள்ளிரவிடையான் குளிரால்வாடத்
தூயியலோர்வைணவனே காசமென்மீதிட்டொன்றுஞ் சொல்லான்போனான்
றேயிருந்தூக்கங்கொடியா னவனையின்னானென்றுளத்திற் சூழ்ந்திலேனால்.
என்றுரைப்பக்கேட்டலுமர்ச் சகருளத்திலச்சமிக வெய்தினாராய்க்
குன்றுடரைதாசர்பதத் துணைகளைமிக்கன்புடனே கும்பிட்டேத்தி
யின்றுணராதியாமியற்று மபராதம்பொறுத்திரென வியம்பிமாய
னன்றுபொலிபேரருட்சீர் பெற்றநுமக்கரிதெதுமண் ணகத்தென்றே. (௩௧)
மாதவதாசரைப்பூசை புரிந்திடப்பீதாம்பரத்தை மறுத்தங்கீந்திட்
டாதரஞ்சாலன்பர்புறத் தணைந்தனரோர்தினந்தூரத் தமைந்தாரக்காற்
கோதமைவன்கொடுஞ்சூலை நோய்வரச்சங்கடமிகவுங் கொண்டாரானார்
போதருமத்ததியில்விரே சனமுமமைந்ததுபுண்ணிற் புகும்வேலேபோல். ()
வார்த்திகமார்காயத்தி லுணர்ச்சியிலார்துணையோர்மா னிடருமில்லார்
கீர்த்திமலிதாசரொரு பகன்முழுதும்புரீடணமேற் கிடந்தெய்த்தேழ்மாத்
தேர்த்தினகரன்பச்சி மத்திசையார்கடலாழுஞ் செவ்விதன்னி
லார்த்தியருட்டொண்டர்சிறி துணர்ச்சிபடைத்தயன்விதிநா ளாயிற்றென்றே.

செகநாதப்பெருமாடன் றிருவுருவச்சேவைமிகத் திகழும்வண்ண
மகமீதுநாடியமைந் தனரதுகாற்பத்தர்துய ராற்றுக்கண்ணன்
சகமேவுமானிடன்போல் வடிவுகொடுதாசர்புடை சார்ந்துளன்பான்
மகவானுதியர்விதியுந் துடைத்தருள்கைகொண்டவரை மலத்தினீக்கி. (௩௪)

புனிதமுறும்புனல்கொணர்ந்து தேய்த்துமிகக்கழுவியன்பர் புசிக்கும்வண்ண
நனிமதுரம்பொலியமுத மீந்துசகநாதவணி நகர்ப்பாலுய்ப்பக்
கனியுளப்பேரருட்கடலாம் பகவன்முயன்றிடுதிறத்தைக் கண்டுதாசர்
துனிபெறுநம்பணிபுரிவான் பகவான்கொலென்றுளத்திற் சூழ்ந்தாராகி. ()

பத்தியின்மிக்காருமை யமைந்துளத்திற்பதைபதைத்துப் பகவநீதான்
மெத்தியதுன்புடனெதற்கெ னசுத்தவுடற்பணிசெய்தனை விளம்பாயென்ன
வத்திநிகர்கருணையுரு வன்புகல்வானென்னுன்மா வேநின்னுன்மா
வொத்தியலென்னுடலேநின் னுடலவர்தம்முடற்பணிக்குள்ளுவர்ப்பார்யாரே

எனவிளம்புசெகநாத னருண்மொழிகேட்டலுந்தாச ரிசைப்பரென்மே
லனகநினக்கித்தகுபே ரருள்மையிற்றுக்கமிங்ங னளிப்பானேனென்
றனதுகன்மமேனீயென் செய்குவையென்றலுநீமுன் சன்மந்தன்னிற்
கனமுறச்செய்திட்டபிரா ரத்தமிதுகாறுநின்பாற் கலந்ததாகும். (௩௭)

மேலினியோர்துக்கமுனக் கெய்தாதென்பின்னுநீ மேவுகென்ன
மாலியம்பவுடனுடற்கொ டுர்ப்பலமுற்றெழுந்துமன மகிழ்வினோடுஞ்
சேலியல்பூந்தடச்சகநா தத்தருகாவிருவர்களுஞ் சேர்ந்தாரக்கான்
மாலியறன்னுருமறைத்தான் மாதவர்மாதவனிறைவாற் சலியமோர்ந்தே. ()

உடல்புளகமரும்பிடநாத் தழுதழுப்பக்கண்கணீ ருகுப்பத்தாசர்
படவரவமிசைநடித்த பெருமாள்பொற்கோயிலிடை படர்ந்துள்ளன்பாற்
கடல்பருகுமுகில்பொழிந்தா லெனத்துதிகள்புகன்றுபெருங் களிப்பினோடு
மிடல்கொள்செகநாதபுரி மீதமைந்தோர்நாள்பிட்சை விரும்பிச்செல்வார். ()

மிக்கதனவதியாமோர் பெண்வதியும்வீட்டின்முன்றின் மேவியன்பிற்
பைக்கமிடக்கூவினர்தற் சுதந்தரியாய்த்தானுமறு பவியாளாயிற்
புக்கவர்க்கொன்றுதவாளாய்க் கொடியகுணம்பற்பலவும் பொருந்தினாளாய்த்
தொக்கமறச்சினங்கொதிக்கு முகத்தினளாய்மாநிலந்தோய் சோகொப்பாளாய்

நிலவுதன்மையாற்புவிசால் யாசகரன்றம்பரத்தி னேரும்புள்ளின்
குலமுமவண்மனைசார வஞ்சவதட்டிடுங்கலதி கொடிநேர்சொல்லா
ணலமலிமாதவதாசர் கூவிடுசொல்வினவியொன்று நவிலாள்வீட்டு
ணிலமெழுகியுற்றனள்பின் னுங்கூவச்சினமிகவு நிறைந்தாளாகி. (௪௧)

விழிகள்சிவந்தனற்பொறிக ளுகுத்திடநாசியிற்றாம மேவநோக்கிப்
பழிபவவெங்கொடிகள்படர் கொழுகொம்பாய்நின்றிடுமா பாவியாளுள்
செழியதவத்தொண்டரைக்கண் டேறிடுங்கைபெறும்பத்திச் சிரத்தையோர்போ
லொழிதரமேற்பவந்துடைத்தற் கறிகுறியாப்புடைத்திடக்கை யுயர்த்திநேரில்

---

புரீடணம் - மலம்

பற்றவரும்பெரும்பூத மொத்துவிரைந்தோடிவரும் பண்புதேர்ந்து
நற்றவர்மிக்கஞ்சினரோ டிடத்தொடர்ந்தோடிடும்வன்மை நண்ணிலாளா
யுற்றபெருஞ்சினஞ்சகியாள் கோமயத்தின்றுணியவர்மே லோச்சுமக்கான்
மற்றதுசென்றவள்பொருட்டாற் றுசர்சரண்சரண்புகுதன் மானவீழ. (௪௩)

கருணைமலிதாசரதைக் கைக்கொடரைக்கணந்தரியார் கடுகியோட
வருமமிகக்கொலவரும்பே யனையாள்வெஞ்சினமுளத்தின் மாறுளாகி
வெருவரப்பற்கறித்தகன்று டேயரவண்மீதுதவை மிகவாய்ந்தாராய்த்
தெருண்மிகவன் னவளுளத்தின் மருவிடவேண்டுமெனத்தாஞ் சிந்தைசெய்து.

அவளெறிசாணத்துணியைப் பரவையிடைசென்றுநன்று யலம்பிச்சால
நலமுறவெய்யிலிலுலர்த்திக் கிழித்துமிகத்திரியாக்கி நணுகந்திப்போழ்
துவமையறுசெகநாத னுலயத்திற்றிருவிளக்கிட் டுளத்தினூடே
தவமலிமாதவர்சகநா தப்பிரபுவஞ்ஞானுந் தகாரத்தாழ்ந்து. (௪௫)

துட்டகுணம்பெறுமவளித் தீபதானப்பலத்தாற் சுகுணமேவிச்
சிட்டர்பணிபுரிந்துனது திருவருட்காளாகும்வண்ணஞ் செய்தியென்னச்
சட்டவுளம்பெருகிடுபே ரருளால்விண்ணப்பித்துச் சாமங்காறு
மட்டறுமாதவர்புரிந்த திருப்பணியான்மடமைமலி மடவாளானாள். (௪௬)

உண்டுறங்கப்போந்தருண மிவ்வண்ணந்தன்னுள்ளத் துன்னுகின்று
ளண்டுமின்றுபகலிலையப் பொருட்டணைந்தவிண்டுவிறே ரன்பன்றன்னைத்
திண்டுமிண்டுபடவைதிட் டடித்திடவும்பின்னர்துரத் தினன்யானந்தோ
மண்டுபெரும்பாவிகளென் னனையர்கண்மூவுலகிடத்து மதிக்கினுண்டோ.

கிட்டரிதாமானிடநற் செனனமொடுபெருஞ்செல்வங் கிடைத்துமந்தோ
துட்டகுணத்தலகைபிற்காத் தநுபவியேன்பிறர்க்கிடவுந் துணிந்தேனில்லை
சிட்டர்கட்கீந்திடற்கொவ்வா வென்பாவக்கரங்கடமைச் சினந்துவாளால்
வெட்டலன்பூமிக்கொர்பெருஞ் சுமையானேனென்சனனம் வியர்த்தச்சோ.

எனைக்கொடும்பாழ்நிரயத்தி லெய்துவிக்குமுலோபத்தை யிகலென்றுள்ளி
னினைத்ததனைத்துரத்துகில்லே னெனதுயிர்நற்றுணையாக நேர்ந்தமேலோன்
றனைக்கொடுஞ்சொலுரைத்தகற்றி னேனெனையல்லாமலிந்தச் சகத்தின்மேல்வல்
வினைக்கொருநற்றுணையாகும் பாவிகள்யாரென்றுபல விளம்பினாளாய். (௪௯)

பஞ்சணைவெம்பரலணைபோ லுறுத்திடநித்திரையணையாள் பதைபதைத்து
நெஞ்சமனலுறும்புழுவிற் றுடித்தெழுந்துவிடிவதன்முன் னீரிற்றோய்ந்து
செஞ்சமனையலகுசெய்து மெழுக்கிட்டுமுன்றிலின்கட் சேர்ந்துளன்பாற்
றஞ்சமெனச்சாதுக்கட் பணிந்தழைத்துவேண்டுபொரு டந்துவாழ்வாள். (௫௦)

தன்மனத்துண்மாதவதா சரைவெறுத்தவெம்பிழையைச் சகியாளாகி
வன்மமிகுமெனதுநிந்தை யேற்றகன்றார்வருவர்கொல்லோ வரிலன்னோர்தம்
பொன்மயநன்மனமகிழப் பணிசெய்துதிருத்திபுறப் புரிவேனென்னக்
கன்மனப்பொன்மனமாகிக் கசிந்துருகுங்காரிகைதன் கருத்திலுன்னி. (௫௧)

முன்றிலிணைந்தாவனுட னெதிர்நோக்கியுற்றிடுகோன் முகுந்தனன்ப
ரொன்றிவடன்செய்கையறி குதுமென்றவ்வீதியில்வந் துலவக்கண்டாண்
முன்றினங்கோபத்தடைந்த முறையேபோற்கரஞ்சிரமேன் முகிழ்த்துக்கூடிப்
பொன்றிருத்தாண்மிசைவீழ்ந்து தயாநிதியான்புரிந்தபிழை பொறுத்துளன்பால்
கருணைமிகுந்தென்மனைப்பா லெழுந்தருளவேண்டுமெனக் கரைந்திரங்க
மருவிடுமாதவரீது தீபதானத்தியன்ற மகிமையென்றே
பொருவருபேருவப்புடனன் னவண்மனைபோந்தவள்புரியும் பூசைகொண்டு
தருபொருள்யாவையுமகிழ்வா லேற்றவடேறிடவின்ன சாற்றுகின்றார். (௫௩)

நீயினியாகிலுஞ்செகநா தப்பெருமான்றிருவடிக ணிதமும்போற்றித்
தூயியற்சாதுக்கடமைப் பூசித்தியாசகர்க்குத் துகிலூணல்கி
மாயிருஞாலத்திலினிப் பிறவாதுவைகுந்த மருவாயென்னத்
தாயிலினியார்சொலக்கேட் டவளெழுகிவெம்பவத்தின் சார்புதீர்ந்தாள். (

கோபதாபங்களுக்கே தன்னெஞ்சைப்பறிகொடுத்துக் கும்பிடேதாயும்
பாபவுருவானவளு மெய்த்தொண்டர்த்தெரிசித்த பண்பினாலுந்
தீபமவரிடுந்திறத்தி னாலுமிற்றும்பெருவாழ்வு சேர்ந்தாளாகின்
மாபயன்சால்பத்தரைப்பூ சித்துவிளக்கிடுவார்சீர் வரம்பிற்றேயோ. (௫௫)

வேறு

திருவருட்பொலிவார் மாதவதாசர் திருச்செகநாதம்விட்டன்பிற்
பொருவருகங்கை படிந்திடக்காசி புக்கவண்வாழ்தருநாளில்
விருதுபற்பலகொண் டதிகவிற்பனஞ்சால் வேதியனொருவனாண்டெய்தி
மருவருட்காசி மேயவிற்பனரை வலிந்துவாதஞ்செயவழைத்தே. (௫௬)

மெத்தியகருவத் தோடுவாதிடுமின் விறலுமக்கின்றெனிற் றோல்விப்
பத்திரமெழுதித் தருமினிவ்வாறியான் பலதிசையினும்புரிந்தடைந்தே
னெத்திரண்டினிலோன் றியற்றுமினென்ன வுரைக்கக்கேட்டவணுளார்நகைத்தே
யித்திருநகர்க்கண் மாதவதாச ரென்னும்விற்பனரொருவருளார். (௫௭)

நவிலுமற்றவர்மா சித்தியுஞ்சர்வஞ் ஞத்துவமுங்கலந்துள்ளா
ரவிருமன்னவரை யபசெயப்படுத்தி லனைவருந்தோற்றனமெனவே
புவிபுகழ்நினக்கி யாமெலாந்தோல்வி பொருந்துபத்திரமளிப்பமென்றார்
குவிகைமாணாக்கர் குழுவுடன்கருவங் கொண்டவன்றுசர்பாற்றுறுகி. (௫௮)

புவியெலாஞ்செயங்காண் டதுமவிமுத்தம் புகுந்ததுமாண்டுமேயவர்க
ணவிலலும்பிறவுஞ் சாற்றியென்னுடனீ நவிற்றுதிவாதின்றேலெனக்குக்
கவினுறுசெயபத் திரந்தருகென்னக் கருணைதோய்தாசர்நின்னுடன்யான்
விவிதவாதிடவல் லேனலேனென்று மிளிர்செயபத்திரந்தரலும். (௫௯)

கெருவவாரிதியா மந்தணன்காசி கிளர்ந்தவிற்பனரிடங்காட்ட
மருவுமன்னவர்நோக் குழியிவன்றன்னை வாதில்யான்செயித்தனனென்னப்
பொருவில்பேருவப்புற் றிதனிடையென்னே பொறித்துளதெழுத்துணர்குவையேற்
றெருளறுமூட படித்திடென்றோதிச் சிரித்தவமதித்துநல்கினரே. (௬௦)

பார்த்துவெஞ்சினங்கொண் டொல்லைமாதவர்கை பற்றியிவ்வணம்பகர்ந்திடுவான்
வார்த்திகனீயென் செய்தனைசால வஞ்சகனேதுதைரியத்தாற்
சீர்த்திகொளென்னைச் செயித்தனனென்னச் செங்கைகொடெழுதினையிதனு
லார்த்தியிற்செயித்துச் சிட்சைசெய்தல்லா லகல்கிலேனென்றுளார்கேட்ப.

வீரவாதஞ்சாற் றுவனம்முட்டோற்றூர் வேசரியின்மிசையூர்ந்து
வாரணசியினைச் சூழவேண்டுமென மாதவதாசரொப்பினராய்ச்
சீரவிர்கங்கை மூழ்குபுபூசை செய்திவணணுகுவனென்றே
நாரணன்றிருத்தாள் கருதுபுசிந்தை நலிவுடன்கங்கையெய்திடலும். (௬௨)

பத்தவற்சலனு மாதவன்றூசர் பணிசெய்மாணுக்கனதுருவ
மொத்தவணடைந்து பண்டிதர்யாரு முடனணைந்திடவவைமேவி
மெத்தகங்கரித்தெய் தியபுலவோனை விவிதவாதங்களால்வெலலால்
வித்தகப்புலவர் நன்றுநன்றென்ன வியந்துசாத்திரப்பிராமணனே. (௬௩)

அவனுரைப்படிகர்த் தபமிசையாரோ கணித்திடவமைதருதருணந்
தவமலிதாச ரணைந்தருண்மிகுந்தென் சங்கடஞ்சாத்திரநலந்தேர்
நவமலிமறையோன் றனையவமான நண்ணிடப்புரிதியோவென்ன
வுவமைதீர்சீடன் றனைவினுவிடலு முடன்புறம்போந்தனன்மறைந்தான். (௬௪)

அகங்கரமறையோற் கரத்தின்மீதிவா தகற்றிநின்றனரதுகாலை
மகங்கொள்காசியில்வாழ் மாந்தர்பற்பலரும் வந்தனரன்னவருடனே
சுகங்கொண்மாதவர்தஞ் சீடனுமங்கண் டுதைதாவிம்மிதப்பெருக்கா
ரகங்கொள்வார்பலருஞ் ச்ாத்திரியுடனீ யாற்றுவாதஞ்சிறப்பென்றூர். (௬௫)

நகைத்தவனீயி ரென்பிராந்தரைப்போ னவின்றனிர்யான்மறைதானித்
தகைத்தெனவுணரேன் சருவசாத்திரப்பண் டிதத்தகைசான்றவின்னவனைப்
பகைத்துவாதிடவல் லேன்கொலோவென்னப் பகர்ந்திடயாருமொப்பினராய்
மிகைத்தவத்தாசர் மான்மியமென்ன விளம்பினர்துதித்துவீடடைந்தார். ()

தன்னகத்தெழுமா ணவத்தைமாதவனுற் றரிசனங்கொடுசெயமடைந்த
வன்னவேதியனுந் தாசர்மெய்ப்பத்தி யமைந்தமான்மியந்தெரிந்துவந்தே
பன்னருந்துதிகள் புகன்றுதன்னுட்டிற் படர்ந்தனன்மெய்ச்சகநாதன்
மன்னருட்டாச ருட்பொலியன்பால் வசியனுயேழ்வயதமைந்த. (௬௭)

பாலனும்வடிவங் கொண்டனேரறியாப் பண்பினிற்கணமகலாதெக்
காலமுந்தொடர்ந்தான் றூசர்தாமதுரை காணச்செல்வழியிடைவெய்யிலாற்
சாலவுந்தளர்ந்தோர் தருவினீழலின்கட் டங்கினாத்ததியங்கண்
மாலடிக்கன்பு வாய்ந்தவோர்விருத்த மாதுதண்ணீர்ப்பந்தர்வைத்தே. (௬௮)

பதிகருக்கறனல் கிடுபவடாகம் படைத்தயர்தாசரையவர்பா
லதிசவுந்தரியத் துடனமர்சேயை யறிந்துசங்கடமிகுத்தவளாய்ப்
பதிதருதாச ரிடம்விரைந்தறலும் பக்கணங்களுங்கைக்கொடடைந்தே
விதிமுறைவணங்கித் தாசரேயிந்தவியன்கொள்சே யாரெனவினவி. (௬௯)

மிகுமனேகர்ம்வாய்ந் துள்ளவிச்சுதன்றன் மேவிடத்தவமுனுள்செய்துந்
தகுதிபெற்றிடக்கண் டுறத்தவஞ்செய்யாத் தள்ளைநிர்ப்பாக்கியையந்தோ
சுகுணமிக்கிவன்ரு யிவற்பிறிந்தாவி துறக்கிலள்வாழ்ந்துளாளோவென்
றுருகுபுனல்விழிய ளிரங்கிடத்தாச ரோவிருத்தாவெவற்குறித்தே. (௭௦)

வினவுபுதுக்கிக் கின்றனையறிய விளம்புதியெனவிங்ஙன்வதியு
மனகவிப்பாலன் றன்னுடனின்னே னன்னையைக்குறித்தெனவறைந்தாள்
கனதவரிவள்வார்த் திகத்தினுற்பித்தங் கதித்தறைந்தனளெனக்கணித்தா
ரினனிகர்விருத்த ஞானநற்கண்கொ டெளிதுதேர்ந்தனளெனவெண்ணூர்.

ததியதில்விருத்தை யளித்தபக்கணசா தனங்களைத்தாசரோர்கலத்திட்
டதிமகிழ்வுடன்மெய்த் திருச்செகநாதற் கருக்கியமாதியீந்தன்பால்
விதிமுறைநிவேதித் திடவதைப்பாலன் மிசைந்தனன்றுசர்பின்பவள்பான்
முதிர்சுவையமுது கொண்டபின்றனரம் முறையுணர்விருத்தையுட்களித்தே.

பத்தரீங்கிவர்சா லவும்பெருங்கருணை படைத்தவர்பண்பிதாலன்றே
வொத்தவிப்பாலன் றுயைவிட்டிவரோ டொன்றினன்குழவியுந்தேவு
மெத்தவுங்கொண்டா டுநரிடத்தென்று மேவுமென்றோதுசொன்மெய்மை
யித்தவர்குழவி துய்க்குமுன்றுமுண் டிலரெனவோதுதல்கேட்டும். (௭௩)

மாதவதாசர் தம்மனத்துண்மை மதித்திலர்போசனமாந்திச்
சீதவார்பொழில்சூழ் மதுரைநோக்கினர்சென் றிட்டனர்பின்றிவசத்தி
லாதவனுச்சி யணையவோரூர்ப்பா லணைந்துவாவியிலறல்படிந்து
மேதகுமோர்வீட் டமுதுகொண்*டாவி யின்கரைமீதமைந்தன்பாய். (௭௪)

அருட்செகநாதன் றனக்குநிவேதித் தமையுமத்ததியிலங்கர்தோய்
பொருட்செறிவுறுமோர் வைசியனங்குப் போந்துதாசரின்பதம்போற்றித்
தெருட்செறிதவத்தீ ரீண்டயில்கவிரென் செல்வமாளிகைக்கணேதிரென
மருட்செறிவறுத்தா ரவன்பினேகிடுகால் வழியிலோர்சேவகன்மருவி. ()

மன்னழைத்தனனென் றோதநாயகன்றன் மனைபைமாதவர்க்கறிவித்துக்
கொன்னமையிறைபா லெய்திடத்தாசர் குலமனைப்பாலடைந்திடலு
மின்னவிர்நாயகன் மனைவிதாழ்ந்தில்லுண் மேவவுய்த்தேவலர்தம்பான்
முன்னமெய்தன்ப ரன்றுமற்றொருவர்முபங்கினரெனவவர்மொழிவார். (௭௬)

இத்தலத்தொருவ ரன்றிமற்றவரை யிருத்துதலியல்பலவென்ன
முத்தவாணகைதன் மனம்பதைபதைத்து முதிருட்பத்தர்பாலிசைப்பா
ளொத்தவிவ்விடத்தி லியைந்தரிபூசை யுஞற்றுபுதுய்த்திரென்றிரப்ப
வுத்தமரெனக்கூண் விருப்பிலைபால்சற் றுதவிடிற்போதுமென்றோதி. (௭௭)

வணிகனில்லவளங் கனமளித்திடலு மாந்தினர்தம்பெயர்வழுத்தி
யணிமலிமதுரை நாடியேகிடுவா ரகமகிழ்ந்தறைவர்நம்மிசையான்
றணிவருமுவப்பெய் தினனதாலோர்நற் றனயனீரெய்துவிரென்று
பணிதருவணிக மாதுபாலோதிப் படர்ந்தனர்சிறிதுறவக்கால். (௭௮)

---

* ஆவி - குளம்.

மன்னவைசெலும்வை சியன்மனையடைய மனைவிவிர்த்தாந்தமுற்றுரைதப்
பன்னருந்துயாத் தோடுதனிற்றேய் பத்தனோடுங்தொடர்ந்தோடி
மன்னருட்டாசர் புடைபடைந்தன்பில் வணங்கியிற்பானுமவிரப்ப
நின்னகத்திதுகா லெய்திடேனென்வாய் நிகழ்த்திடுமோர்வரப்படியே. (எகூ)

புத்திரனுதித்த பின்னரேமதுரா புரிவிடுத்தெய்துவேனென்ன
மெய்த்திறத்தாசர் புகன்றுவைசியனை விடைகொடுத்தனுப்பினரேகி
மைத்திருமேனிக் கண்ணனைப்போற்றி வைகினர்மாதவர் சொற்போற்
சித்திரநிகர்த்த வந்தியாம்வணிகச் செல்விக்கோர்செல்வனுற்பவித்தான். ()

மாதவதாசர் மதுரையம்பதியில் வாழுநாண்மாதவன்பான்மிக்
காதரம்பொலியும் வைணவன்வறுத்த கடலைகொண்டவ்வயினடைந்து
கோதறுமன்பர்க் களித்துமாதவர்க்குங் கொடுத்தனன்றாசர்மற்றதுகொண்
டோதமார்யமுனை தீரமேய்க்கண்ணற் கோகையினிவேதனம்புரிந்தார். (அக)

ஆங்கது நுகரு மேல்வையாலயத்தி லருச்சகர்நிவேதனம்புரிய
மீங்கடலைகளை நிவேதனக்கலங்கண் மிசையிட்டான்போந்தருச்சகன்றன்
றுங்ககத்தையுற் றுண்டுளார்க்கூவிச் சம்பவமுரைத்துணர்த்துதலுந்
தேங்கருட்கடல்செ யாடலென்றுணரார் செப்பவொன்றறிகிலர்நின்றார். ()

அன்றிரவிடையர்ச் சகன்கிருட்டிணன்பொன் னடிநினைத்தனனுறங்குதலு
மின்றிகழ்முகினேர் மேனிமால்கனவின் மேவிநீவறிதுதுன்படையே
லென்றிருத்தொண்டன் மாதவதாச னிலங்குநீலாசலத்தமைவோ
னென்றியயமுனை தீரமேற்கடலை யோகையினிவேதனம்புரிந்தான். (அ௩)

சுவேதவாகனனி லெற்குவப்புறுமெய்த் தொண்டனிட்டதை நுகருங்கா
னிவேதனம்புரிந்தீ ரென்காத்தெஞ்சி நின்றதையான்கலத்திட்டேன்
வெவேறெணிவருந்த லென்றுரைத்திடலும் விழித்தெழுந்தர்ச்சகனுவந்தே
விவேகமிக்கவர்கள் யார்க்குமோதிடலின் விம்மிதமிகப்படைத்தவராய். ()

மாதவதாசர் தம்புடையடைந்து மலர்ப்பதம்வணங்கிமிக்கேத்தி
யாதரத்துடனன் னவர்கள்பற்பலரு மவர்மனைதொறுமழைத்தேகிப்
போதவுள்ளுவப்பிற் பூசனைபுரிந்து பொருவி லூணளித்தனர்நுகர்ந்து
மேதகுகிருட்டி ணன்வடிவென்ன வியந்தனர்பணிந்தனர்வாழ்ந்தார். (அரு)

திருவருட்டகைசா லன்பரிவ்வண்ணந் திகழுநாளொன்றினின்மதுரை
யருகமைகானத் தெய்தினரங்ங னமைந்தபாண்டீர தாருவின்கீழ்
மருவியபேமா வெனும்பெயர்ச்சித்தன் மகிழ்வுடன்மிகவுபசரிக்க
விருவருமளவ ளாவினர்வாழ்கா லினிதழைத்தருகினிலமைந்த. (அசு)

பாத்திரந்தனைக்கண் டன்பரித்தகைய பத்திரப்படுத்தியவிதனு
ளாத்திகழ்பொருளொன் னெனப்பயிக்கங்கொ ளன்னமல்லூணெனப்பகர
வேத்தியற்றாசர் நீயினியிவ்வா றியற்றிடலின்னதைப்பகலின்
மாத்திரநுகர்ந்து மீந்ததையிங்ஙன் மருவுமன்பருக்களித்திடுவாய். (அஎ)

ரீயுணக்குறித்து மறைத்துவைத்தனையே னிறைபுகழுவாகுநிற்கையந்
தோயுமென்றிடினேக் குதியெனவங்ஙன் றுதைதரக்காண்டலுஞ்சித்த
ஞயுணர்வின்றித் தான்புரிசெய்கைக் ககமிகவருந்தினனாகித்
தாயுறழ்வார்சொற் படியதுமுதலாச் சற்சனர்க்கிட்டயின்றமைந்தான்.

வெற்பனபுகழ்தோய் மாதவதாசர் மேதினிமீதிலிவ்வாறுப்
பற்பலர்பிரேமைக் கும்பெரும்பத்திக் குந்தகுபாத்திரமாகிப்
பொற்பமைமதுரா புரியிடைசிலநாள் பொருந்திப்பின் பலதிசையினும்போய்
விற்பயில்கிருட்டி ணன்சரித்திரங்கள் வினவியின்பக்கடற்படிந்து. (அகூ)

வளமலிநீலா சலம்புகும்வழியில் வைசியன்மனையடைந்தன்னோ
ருளமகிழ்பூசை கொண்டுபாலகனோ டுறுமவர்க்காசிகள்வழங்கிச்
சளமறுநீலா சலத்திலுற்றங்கட் சார்சகநாதனைவணங்கி
யளவறுமாடல் பயிற்றிவாழ்ந்தீற்றி லருள்வைகுந்தத்தடைந்தாரே. (கூ0)

இவ்வணம்பத்தி கொண்டுமாதவர்தா மிமையவர்வியக்குமெண்ணரிய
செவ்வகையாடல் புரிந்துவைகுந்தஞ் சேர்ந்தனர்செய்கைமற்றதனை
லொவ்வருபுருடார்த் தப்பெரும்பலங்க ளுதவிடுதருவுறழ்பத்தி
யெவ்வகைகொண்டு மெய்திடிலன்னோர்க் கெய்திடற்கரியதின்றின்றே. (கூக)

வேறு

நீலாசலஞ்சால் குகையிடத்தி னிகரில் பொற்றட் டமுதளித்து
நிருபன்றாத ரடிபலவுன் னிமலத்திருமே னியிற்கொண்டுஞ்
சாலாலயத்திற் குளிர்சகியாத் ததியிலேகா சம்போர்த்துஞ்
சாணத்துணியா லெறிகோபத் தையற்கவர்வைத் திடுவிளக்காற்
கோலாகலமெய் யுணர்வளித்துங் குலவுசாத்தி ரியைச்செயித்துங்
குலவுமாத வரின்பின்னே குழவியுருவாய்த் திரிந்துமன்பா
லேலாப்பணியும் புரிந்தவரு ளிந்நாள்சிறிது காட்டிடுவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. ()

மாதவதாசகதிமுற்றிற்று

ஆக கவி ௫௩௩௬

---

அறுபத்திரண்டாவது

# இரகுநாதகதி

மாதவப் பெருக்கமைந்த மாதவ தாசர்மாய
னாதரங் கொடுமால்பொற்று ளடைந்தவான் கதையறைந்தேன்
பூதலத் தரசுவர்த்துப் பொருவில்வை குந்தமெய்துங்
காதரோய் ரகுநாதன்றன் காதைசற் றுரைசெய்வேனே. (க)

பொற்கவின் மாடத்தோதி புலர்த்தகிற் புகைகளூட்டுங்
கற்கட கக்கைமாதர் கவின்முக மிடைகண்டும்பர்
நற்கதிர் மதியுமின்னு நாணிமைக் குள்ளொளிக்கும்
விற்கவின் கற்புமின்னூர் மேவுமுற் கலநன்னாடு. (௨)

ஆயநா டாளுமன்ன னருளினு லரிதாளன்பா
லேயசா கரமொத்துள்ளா னீன்றருள் சேட்டனுய
சேயனி ரகுநாதப்பேர் சிறந்துளான் கரணமூன்று
மாயவன் றிருத்தொண்டின்கண்வைத்தவன் வளருநாளில். (௩)

காளையம் பருவமெய்துங் காலையிற் றுதையானுன்
வேளைநேர் தன்புயத்தின் மேதினி புணர்த்தவுன்னுங்
கோளைமா லடிக்கே தன்னைக் கொடுத்தருண் மைந்தன்றேறி
யிளையா ரரசின்வாழ்க்கை யிதயமீ துவர்த்தானுகி. (௪)

கிருபைவா ரிதியாமொப்பில் கிருட்டிண நாமமாகுந்
திருவரு ளமுதந்துய்க்குஞ் செழுங்கனி வாய்மலர்ந்தே
நிருபனுந் தாதைதன்பா னிகழ்த்திடு கின்றுனென்னை
யிருநில மன்னனுக்க விதயமே லெண்ணேலையா. (௫)

பகற்பெருங் கனவாய்த்துன்பப் பலந்தரு தருவாயொன்றுஞ்
சகத்தர சாட்சியாசை சற்றுமெற் கில்லைவேறு
மகற்களித் திடுகென்றுரெல்லை வளநகர் துறந்துகண்ணன்
மகத்துவச் சகநாதச்சிம் மத்துவா ரத்தணைந்தே. (௬)

உன்னுதோ றன்பரென்பு முள்ளமுமுருக்கியென்றுங்
கொன்னுறு புலன்கண்முற்றுங் கொள்ளைகொண் டின்பந்தேக்கி
முன்னுறுஞ் செகநாதன்றன் முளரியந் துணைப்பொற்றாள்க
ளுன்னுபு வசிக்குநாளி லுறுகுளிர் காலத்தோர்நாள். (௭)

கடுங்குளிர் சகியான்றன்னெர் கருத்திழுந் தவசமுற்று
நடுநடுங் குபுபார்மீதில் விழச்சக நாதப்பெம்மான்
கடுகவை ணவன்போலங்கட் கலந்துதன் மீதமைந்த
விடுசுட ரேகாசத்தை மீதுபோர்த் தனன்மறைந்தான். (௮)

வன்பனிக் குளிரனந்த லவசன்மான் மாயைதன்னு
லன்பனே காசமீந்தா ராரெனவினவான்றூங்க
மின்பயில் புலரிதன்னின் மேவிய மாந்தர்கண்டே
யின்பமா ரிரகுநாதன் றனைத்துயி னின்றெழுப்பி. (௯)

திருவருட் செகநாதன்மேற் சேர்ந்தவுத் தரியநீகொண்
மருமமோ தெனநகைத்து வழுத்துவ னன்பன்யானின்
றிருளிடை குளிர்மிக்கெய்த்த வேல்வைவை ணவனெருத்தன்
கருணைமிக் கென்மேலிட்டுக் கரந்தன னென்னக்கேட்டோர். (௧௦)

மெத்தருட் கடலாயோங்கும் வியன்செக நாதத்தெம்மான்
பத்தவாற் சலியந்தன்னுற் பயிற்றுபே ராடலென்னச்
சித்தமீ துன்னியன்பன் றிறத்தினை மிகக்கொண்டாடி
யுத்தமன் றன்னைப்போற்றி புவகையங் கடற்படிந்தார். (கக)

வேறு

கருணைநிறைசெகநாதன் றனையிரகுநாதனன்பிற் கலந்துபோற்றி
மருமலர்த்தண்டலைப்பொலிவார் மதுரையடைந்திராதாகுண் டத்தின்வைகிப்
பொருவருமன்பாற்கிருட்டி ணன்றனையந்தரங்கத்திற் பூசையாற்றி
மருவுபரமானந்தக் கடற்படிந்துவைகுமொரு வைகறன்னில். (கஉ)

தன்மனத்தாவாகித்துச் சோடசமாருபசாரந் தகப்பூசித்து
நன்மதுரப்பாலொர்கல நிறைத்துநிவேதித்ததனை நாதன்கொண்ட
பின்மகிழ் விற்பிரசாதந் தானுகர்ந்ததாச்சங்கற் பித்ததன்பி
னுன்மனப்பூசனைமுடித்து நாமசங்கீர்த்தனங்கள்புகன் றுற்றபோதில். (கங)

வயிற்றின்மிகுவேதனைகொண் டன்பன்வருந்திடக்கண்டோர் வல்லபோந்தோர்
வயித்தியனைக்கொண்டணைந்து காண்பிக்குங்காலவன்ருன் வயிற்றைத்தொட்டே
செயிர்ப்படப்பாலதிகநுகர்ந் திடுதலினசீரணந்தான் சேர்ந்ததென்னக்
குயிற்றியபூசனைமறந்து ரகுநாதனுச்சரியங் கொண்டானுகி. (கச)

இன்றிரவிலொன்றுமயில் கிலதமைவேற்கசீரணிப்ப தெற்றென்ருேத
நன்றியல்வைத்தியன்புகல்வா னுச்சரியச்செய்கையைநான் காண்பிக்கின்றே
னென்றியவௌடதமிதனை நுகர்திரெனப்பொடியொன்றை யுதவமேலோன்
கன்றிடச்சீரணமாகாப் பாலறவாந்தியதான செயலைக்கண்டே. (கரு)

கூண்டுளர்யாவரும்வியந்தித் தனைபால்கிட்டியதெங்ஙன் கூறீரென்ன
நீண்டுளத்தா லோசித்தி ரகுநாதனென்ருேதா னிகழுங்காலை
யாண்டுகிருட்டிணபத்த னவயோதிகனடைந்திட் டறைவானீதா
னீண்டுறுமின்றிரவிலருட் பகவனுக்குநீள்பூசை யியற்றுமேல்வை. (கசு)

கலநிறைபானிவேதித்துப் பிறர்க்கொருசற்றுதவிடவுட் கருதிடாதே
குலவியமுற்றும்பருகி லாய்கொலதாலசீரணங்கூ டிற்றென்ருேதச்
சலனமுறுரகுநாதன் வினவுபுநுஞ்சொன்முழுதுஞ் சரதமென்பா
னிலவியலோபங்கண்டு கிருட்டிணனுற்றிய தண்ட நிகழ்வீதென்றே. (கஎ)

மேலிவணமாற்றுகிலே னெனப்புகன்றுரகுநாதன் விருத்தன்றன்னை
வாலியபேரன்பினுடன் வணங்கவுற்ருேரிருவரையும் வணங்கிச்சென்ருர்
சாலியலன்பன்பின்னுஞ் சகத்தர்தவமாநெடுநாட் டழைத்தீற்றின்கண்
மாலியல்வைகுந்தமடைந் தனன்பிறப்போடிறப்பினையு மாற்றிமாதோ. (கஅ)

இத்திறத்தாற்பத்தியுடன் பகவனையாராதனைமிக் கியற்றுவார்க்குச்
சித்தியுருததிலையுயர் தெய்வமன்பர்க்குப்பிரசா திக்கும்பான்மை
மெத்தியவித்தங்கொடன்றே காக்கிரசித்தப்பத்தி விளைவென்ருேர்வீ
ரொத்தியன்மாவுடன்விகங்க வினங்களுமோர்சான்றிதனுக்கோரின்மாதோ. ()

வேறு

அரசைவெறுத்துத் துறந்தனரு ளணியார்செகநா தப்புரியி
னருகார்சிம்மத் துவாரத்தி லமைபுமிரகு நாதன்று
னிரவிற்குளிரால் வருந்திடின தேகாசம்போர்த் தனையன்பா
லிதயத்துனக்கர்ப் பித்திடுபா லீயாதுணலா லசீரணந்தான்
விரவப்புரிந்து பின்னதனை வெளியாகிடவுஞ் செய்தனையால்
வினையேற்கவிர்மா னதவுணவு மிசையப்புரிந்து மேதினிப்பா
லிரவற்றிலங்கும் படிசெய்தென தின்னற்றொகைமுற் றொழித்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௨0)

இரகுநாதகதிமுற்றிற்று

ஆக கவி ௫௩௫௪

---

அறுபத்துமூன்றாவது

# கிருட்டிணசைதன்யப்பிரபுகதி

அருட்டிறல்கொள் கண்ணனரு ளம்பரம தைக்கொ
டெருட்கொள்ரகு நாதனுறு சீர்த்தியுரை செய்தேன்
மருட்டிறல்கொண் மாயவினை மாயவருண் மேய
கிருட்டிணசை தன்யனுயர் கீர்த்திபுகல் கிற்பாம். (க)

சீலமலி யுங்கவுட தேயமிசை மேவுங்
கோலமறை வேதியர்கு யிற்றியத வத்தான்
ஞாலமிசை யாயரிடை நற்றிறல்பெ றுங்கோ
பாலன்வரு பான்மையிலொர் பாலனுள னானன். (உ)

சாற்றிடுகி ருட்டிணசை தன்னியனெ னும்பே
ரேற்றிலகு சீர்கொளவ னேகவுட தேய
மேற்றிகழ மாயவன்வி யன்கொளுபர் பத்தி
யேற்றியனை வோருநல மெய்தியசெய் திட்டான். (௩)

தக்கமுறை யிற்பிரம சர்யமுட னில்லம்
புக்கவற மேவியரி பொன்னடிகொள் பத்தி
மிக்ககில மீதினில்வி ளங்குயிர்களெல்லாந்
தொக்கவுயர் கிட்டிணசொ ரூபமெனவுன்னு. (௪)

சாற்றுமது மட்டலச ராசரமுந் தானும்
போற்றுமுயர் கண்ணனது பொற்புருவ மென்றன்
பாற்றுநிலை மேவிபள வற்றசுக மென்னு
மூற்றுறமு ளங்குலவுன் மத்தநிலை யுற்றான். (௫)

சிரீதரனெ னக்குலவு செம்மையுரு வுற்றான்
பிரீதிகொடு மாதர்பல பேர்களைம ணந்தே
யிரீதிபெறு கண்ணனையி னைந்திலகி ராசக்
கிரீடைசெய நெஞ்சிடைகி ளர்ந்தநசை மிக்கான். (௬)

கிளர்ந்தநதி தீரமிசை கேளிமனை செய்தே
வளங்கொள்பக லோடிரவு மாறுதலி லாதே
யுளங்கனிய வேணுகுழ லாதிமனை மாரோ
டளந்திடுத லற்றசுக மார்ந்தனன மைந்தான். (௭)

இன்னவகை யின்னலற வெண்ணரிய காலந்
தன்னனைய கிட்டிணசை தன்யமுறு மேலோன்
மன்னவவ னெப்பிலருண் மாட்சியையு ளோரார்
பன்னரிய நிந்தைகள்ப கர்ந்தனர மைந்தார். (௮)

துட்டரா சாயசிலர் தூர்த்தநடை தோயுங்
கிட்டிணசை தன்னியன்கி ரீடையெது போது
மட்டறுமி னாரொடுவ யக்கினனி ருந்தான்
சட்டவுண வுன்னிடுதல் சற்றெனினு மில்லான். (௯)

யாவர்களி டத்தினுமொர் யாசகமி யற்றான்
றேவர்களும் வெட்குறுசி றப்புளசு கத்தோ
டாவன்மட வார்களுள மாவலுறு பூண்க
ளேவையுமளித்தனனிஃ தன்றிவிய னுண்டோ. (௧௦)

தேடிலதி வற்கிவகை செல்வமுறும் வண்ண
நாடியறி யச்சிறிது நாமுயல்வ மென்றார்
மூடியசி றைத்திமிர மூலமல மூடே
வாடியுட னாரெனம திக்குமதி யீனர். (௧௧)

அங்கர்கோண் மன்னவன யற்குறுகி யோகோ
வின்னவகை கேட்டிநி னிராச்சியமி தற்குப்
பன்னரிய தீமையினி மேற்படர்வ தாகு
மன்னதணு காவகைய றிந்துமுறை செய்வாய். (௧௨)

வேறு

சீர்த்திபொலி வேந்தநநாட் டிடைமருவு மறையோன்
கிருட்டிணசை தன்யனெனக் கிளத்திடுபேர் பெறுமோர்
தூர்த்தன்மிகு பத்தனென நடித்துலகை மருட்டித்
தோகையர்பற் பலரையென்றுந் தோய்ந்துமகிழ் கின்றா
னார்த்திமிகப் பலரவனைப் பூசைபுரி கின்றா
ரத்தநசை யாற்சிட ராப்பலரைக் கொண்டான்
வார்த்திரள்பூண் முலையாரோ டவனுடல் செயுங்கான்
மற்றவரே கினுமனத்தின் மதித்தறிகின் றில்லான். (௧௩)

உன்மத்தன் போன்மதமிக் குற்றனனன் னவனை
யுன்முனழைத் தனைதண்ட முளுற்றுகிலா யென்னிற்
சென்மத்தி லுற்றசனி போனகர்மே வினரைத்
தீமையிலாழ்த் துவனென்னச் செப்பலுமன் மற்றேன்
மன்மத்தை முன்வினவி யுள்ளோன்கிட் டினன்மேன்
மலிதருமெய்ப் பத்திமிக மருவினனென் றுரிக்
கன்மத்தை யுடையவனென் றறிகிலனின் றிரவிற்
கழறுநும்மி லொருவனென்பாற் கலந்ததுகாட் டுதிரேல். (கரு)

செவ்வியவென் சிந்தையிற்சோ தித்தறிந்தன் னதன்பின்
சிட்சைகொலோ விரட்சைகொலோ செய்குவனென் றேதி
யெளவியஞ்சொற் றவரிலொரு வன்றுணைபோந் திடவே
யதிசெளரி யங்கொள்பட னுமொருவற் கூட்டித்
திவ்வியஞ்சால் கிருட்டிணசை தன்யபிர புதிகழ்
திருமனைப்பான் மறைந்துநின்று தீயவனேக் கிடுகாற்
செவ்வியநாற் புயமுடனீ ரிருகரத்தின் பாலுந்
திகழ்சங்கு சக்கரந்தண் டம்பதுமந் துலங்க. (கசு)

சினங்கொடுதன் னைப்பார்க்கக் காண்டலுங்குண் டுணிதன்
சித்தமிசை மருண்டிறைபாற் செப்புவன்மன் னவனே
கனம்பெறுமற் புதமிதனை யென்னெனச்சாற் றிடுவேன்
கலந்தபிரா கிருதனெனக் காண்டருமோர் மறையோன்
வனங்குலவு கண்ணபிரான் வடிவமைந்தா னவன்கொள்
வண்ணமெந்த வண்ணமென வகுப்பனென்றே திடுகான்
முனங்குலவன் னவன்றலைமீ திடித்துவிழ லாகு
முழக்கமுங்கேட் டிறைவனவன் மூடிந்திடவுங் கண்டான். (கள)

கிருட்டிணசை தன்யனெங்ங னுள்ளனனென் றோர்காற்
கிளரிரண்டு கரங்களில்வேய்ங் குழல்பிடித்தா தினனைப்
மருட்டிரலை விழியினர்மத் தியிலருட்டே சுடனே
மலர்ந்தமுகத் துடன்கருணை வழிதருசெங் கமலத்
திருட்டிபொலிந் தவிர்தெய்வச் சிறப்பமைந்து திகழச்
சேவகனு மன்னனுமுன் செய்தவத்தாற் கண்டே
யருட்டியுடன் சேணிடைநின் றனந்தமுறை வணங்கி
யானந்த வாரிதியி லாடிவியந் தனராய். (கஅ)

இறந்தவனை யெடுத்துக்கொண் டரண்மனைப்பா லடைந்தா
ரேதமிகுங் கொடியோன்ற னீற்றினிற்கிட் டினன்றன்
சிறந்தவருட் டிருவுருவங் கண்டனன்மெய்ப் பத்தர்
சேவைபெறு வார்க்கரிதொன் றுள்ளதுகொ லவனு

லறந்தழைமா தவப்பெரியோன் சேவைபெறு மிறைவ
னகத்தளவா விம்மிதத்தா லனந்தலெய்தா தவனுய்
நிறந்தழைதன் மனேவியின்பா னடைந்தவிர்த்தாங் தமெலா
நிகழ்த்தியன்றி ராவினேயோர் நிமிடமெனக் கழித்தான். (கசு)

சராசரமாம் பொருளனைத்துந் தன்னுருவந் தானுந்
தசுகண்ணன் வடிவமெனத் தன்விழியிற் கண்டே
நிராமயனுய் விளங்கொருவற் காண்டருமன் வேறு
நினைவிலனுய் விடிந்தவுட னிகழ்கடன்களாற்றிக்
கிராமமுறு விற்பனரை யமைச்சரைமே லோரைக்
கிளத்துமறை தேர்ந்தபுரோ கிதரையுமுன் னழைத்தே
விராவியவிர்த் தாங்தமெலா மிருகளிப்பாற் சாற்ற
வினவியவர் வியந்தின்ப வேலேயின் மூழ்கினராய் (உ0)

சித்திரமொத் தமைதரக்காண் டலுமிறைவ னவர்பாற்
செப்புவன்யான் கிருட்டிணசை தன்யவருட் பிரபுக்
கொத்தியன்மா ணுக்கனென விளங்கிடவென் னுள்ளத்
துலவாப்பே ரிச்சைகொண்டே னுமக்கிசைவோ வென்றுன்
மெத்தியசங் தோடமென யாவர்களும் விண்டார்
வேந்தனமைச் சர்களுடனே மிக்கவர்பான் மேவித்
துத்தியஞ்செய் தன்பினுடன் வணங்கிபிர விடையே
தோய்தருசம் பவமுரைத்துத் தொழுதுநின்று சொல்வான். (உக)

குருவேயென் றனைவலிந்தாட் கொள்ளவருங் கருணைக்
குளிர்கடலே யெண்குணப்பொற் குன்றேயெண் ணருஞ்சீர்ப்
பெருவேத வான்றடத்தின் மிசைமலர்ந்து சுகத்தேன்
பில்கருட்கண் ணுவன்பர் பெட்டனமுற் றளிக்குந்
தருவேநே ரிருகழற்று மரையாய்வெம் மாயைச்
சனனமர ணப்பிணியாற் றளர்ந்திடுமென் னுயிர்க்காந்
திருவேநின் னருட்கடலின் மூழ்கிடச்சோ தனையாஞ்
சேற்றிலடைந் தெய்த்தனன்யான் செய்பிழைதீர்த் தருளே. (உஉ)

என்றுபல வகைதுதித்தென் னிராச்சியத்தை மனையை
யீன்றபுதல் வரைப்பொருளை யென்னையன்றியா வையுமே
நன்றுறுநுந் துணையடிக்கே சமர்ப்பித்தே னென்ன
நவின்றுமன்னன் றேசிகர்தந் நாண்மலர்த்தா டொழலு
மொன்றமமைச் சரும்வணங்கக் கிருட்டிணசை தன்ய
ரோதுவர்பார் மிசைகுருசீ டரெனும்விவ காரந்
துன்றுமுப சாரவழக் குயர்பரமார்த் தத்திற்
றேய்கிலதுன் னுளத்தமனீ சூழ்தரிற்செய் தியென்றே. (உங)

திருவருள்சால் கிருட்டிணமந் திரமுபதே சித்துச்
செப்புவர்நீ யெனக்களித்த செழும்பொருளியா வையுமே
மருவுதந்தை பொருடனையன் பெறவளிக்கு முறைபோல்
வழங்கினனீ யிவைகொடாரண் மனைமருவி மெய்மைத்
தருமமுறை யுலகபரி பாலனஞ்செய் தன்பிற்
சதாகால முங்கண்ணன் றனைமிகச்சிந் தித்தே
மருளுறுதே காதியபி மானமுற்றும் விடுத்து
மன்னுயிர்க ளவைக்குமுய ரன்னையெனத் துலங்கி. (உச)

இரவலர்கள் வேண்டுபொருள் யாவையுமீந் தின்புற்
றிருத்தியெனை வேவவிறை குருமொழியொத் தியைந்தான்
றரநிகராங் கிருட்டிணசை தன்யரிறை யளித்த
தமநியஞ்சா துக்கள்பெறத் தந்தொர்குறை யிலராய்
விரவுபர மானந்த வேலைபடிந் தமைந்து
மேதினிமே லெடுத்ததிரு மேனியிடை வாழ்ந்தே
திரமுறுகிட் டிணன்சாரூப் பியநிலையைப் புவியோர்
தேறும்வகை திட்டாந்த மாகவிளங் கினரே. (உரு)

அன்னவர்தாம் பின்னுலகத் தெத்தனைநா ளமைந்திட்
டாருயிர்க ளின்புறப்பே ராடல்விளைத் தாரோ
முன்னமைந்தார் மட்டில்விளை யாடிமறைந் தனரோ
முகுந்தனுளத் தொடுமுக்கா லமுந்தேர்ந்தோ ரோர்வா
ரின்னவருட் பேறவருக் கீந்ததுல கெவையு
மிறைவடிவா நோக்குபத்தி யன்றியில்லை யில்லை
மன்னருட்கிட் டிணசைதன் யப்பிரபு தன்னோர்
மரபினரிக் காலத்து மருவினர்கெள டத்தே. (உகூ)

வேறு

உலகத்திலகுஞ் சரமசர மொக்கநின்ன துருவமென
வுன்னியுன்மத் தனைப்போல வோங்குமின்பக் கடல்படிந்திட்
டலகின்மடவா ரொடுமோவா தமையிராசக் கிரீடைமுயன்
றவமிக்கவற்கு விண்டுவென வவிர்ந்துமடியப் புரிந்தணைந்த
தலமன்னனுக்குக் குருவாகித் தகைசாலுபதே சம்புரிந்து
தழைநின்பதந்தோய் கிருட்டிணசை தன்யனிகர்த்தென் றுமிகத்தி
விலகுஞ்சாரூ பத்தகைதோய்ந் தியலக்கருணை புரிந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உஎ)

கிருட்டிணசைதன்யப்பிரபுகதி முற்றிற்று

ஆகூ கவி ருகூஅக

---

அறுபத்துநான்காவது

# சூரதாசகதி

கண்ணனல்வடி வாகவேயுலகெலாங் கருதியதிறந்தன்னா
லெண்ணமொத்தவிர் கிருட்டிணசைதன்ய னிசைசிறிதிசைத்திட்டேன்
விண்ணாராமு தறழ்கிருட்டிணன்புரி விவிதலீலைகள்பாடுந்
திண்ணமிக்கசீர்ச் சூரதாசன்சரித் திரமினிப்புகல்வேனே. (௧)

அருணிலாவுகண் ணன்மதுரையின்புடை யவதரித்திடுமந்நாண்
மருவும்யாதவன் சூரசேனப்பெரு வங்கிசத்துதித்திட்டோன்
பெருகுமாதரத் தாற்கிருட்டிணற்கணம் பிரிதாத்தகைவாய்ந்தோன்
பொருவின்மாதவன் மதுரைவிட்டெழிற்றுவ ரைப்பதிபுகுங்காலை. (௨)

ஒருவிடாதுபோங் தேகிருட்டிணனவனுற்றமைதரும்பண்பாற்
பருவரற்கொடு தாமுனமதுரையிற் பயின்றிடுஞ்சுகமுன்னிப்
பெருகிடும்பிரி யத்தனாய்க்கண்ணன்பாற் பேசுவன்றுவரைக்கண்
மருவலாற்சுகஞ் சிறிதுமென்மனத்திடை வாய்ந்திடலின்றின்றே. (௩)

நன்றுதோயுமென் மனமெதுகாலையு நனிமதுரையின்மாடே
யொன்றுமாறவா வியதெதுபோழ்தியா மொருமைபட்டவனேக
லென்றுநாம்பிருந் தாவனம்பாண்டீர கத்தருயமுனைப்பேர்
துன்றுதீர்த்தமீங் கிவற்றினைக்கண்டின்பந் தோய்ந்தனம்விளையாடல். (௪)

விளங்குமென்னுயிர்ச் சகவிவைகாண்டரும் விரகமேழ்கடல்போலென்
னுளங்குலாவிய திதைச்சகிக்கின்றபே ருரமிலேனெனவோதித்
துளங்கும்யாதவன் சங்கடங்கண்டரு ளும்புகண்ணன்றான்
வளங்குலாவுமின் மொழிகொடுதேற்றியு மனத்திருத்தியுற்றில்லான். (௫)

மதுரைமேல்விர காதுரனாய்த்துவா ரகையிடைமருவுற்றான்
கதுவுநாளிற்பூ பாரநீக்குபுகண்ணன் கவின்மறையோர்சாபப்
புதுமையால்யது வமிசமாய்த்தவருடன் பொருந்தினன்வைகுந்தன்
பொதுவனங்குமா லுடன்மதுராபுரி புகநிர்ப்பந்தித்திட்டான். (௬)

யாதவன்பெருந் துயர்சகியாதுமா விளநகைதகக்காட்டிக்
காதலன்பயா னினிமதுரையின்புடை கலந்திடற்கிசையாதான்
மாதவங்கொணீ யேகில்யானவண்பரி வாரமோடமைந்துள்ளேன்
போதலாமிராத் தொறும்பிருந்தாவனம் பொருந்தியன்மனைதோறும். (௭)

சீலமாரிரா தையொடுசல்லாபம்யான் செய்தியல் வேறினுப்பில்
கோலமார்மது ராபுரியெனக்குவை குந்தத்திற்சிறப்பாகு
மூலவத்தல விரகமென்னுள்ளத்து மூண்டுளதிப்பண்பாற்
சாலவங்கணென் றனதருட்பெருந்தகை சாருமெக்காலத்தும். (௮)

நிலத்தின்முத்திகேத் திரமதாயீசற்கு நிலவுகாசியைப்போல
நலத்தகைத்திரு மதுரையெற்குவப்புள நண்ணிடுந்தலமாங்கோ
குலத்துதித்தியற் றியவெலாமிற்றையுங் குலவுமென்மனத்துண்டத்
தலத்திலெய்தியா டிடுவதென்றென் றெனுட்சஞ்சலமிகவுண்டால். (கூ)

அத்தகைத்திரு மதுரையிலெனதரு ளாடல்யார்நடிக்கின்று
ரத்தகைத்திருத் தொண்டர்க்கென்வைகுந்த பதத்தையானளிக்கின்றே
னெத்தவென்சன னேற்சவத்தசோதைபி னுருவமைந்திடுவாரென்
மெய்த்தகைப்பதத் தெய்துவரீதலால் வியன்கொளத்தலத்தூடே. (க0)

ஏதுகொண்டுமென் பாலசொரூபத்தை யெண்ணிடுபவர்யாரும்
போதுமெற்கதி பிரியர்கணீயவண் போதவுண்ணசைத்தாயேன்
மீதுறுங்கலி யுகங்கொள்சந்தியினிடை வியன்மதுரையின்பாங்க
ரோதும்வேதிய மைந்தனுய்மதுரையி லுற்றெனீள்விளையாடல். (கக)

திறங்களைப்பல விதம்படக்கீதபத் தியங்களாய்நிருமித்தே
யறந்துலங்குமுன் பொருந்தியபெருஞ்சுக மநுபவித்தனைவாழ்தி
விறந்திடுங்கலி யுகத்திலென்னுடல்கள் வினவிமாந்தர்களாருஞ்
சிறந்தபத்தர்க ளாகுகபாரினீ செனித்துயாயையினூடே. (கஉ)

அகப்படாவண மந்தகனுயவ தரிக்குகவதனலே
சகத்தின்மானுடர் சேர்க்கையற்றிடுவர்பின் சார்நசைமுழுதற்றே
மகத்துவத்திரு வைகுந்தமாமவண் மருவென்றபடிகால
மகத்துணுடியவ் வகையருமறையவ னகத்திடைமகவானன். (கங)

கண்ணிழந்துதித் திட்டவக்குழவியைக் கண்டுதாய்களிப்பற்று
ணண்ணிநாடினர் யாவருமுவர்த்தனர் நல்கினர்வளர்த்துற்று
ரொண்ணிலாவுசேய்க் கெண்வயதடைதலு முபநயனஞ்செய்தே
வண்ணிலாவியற் சூரதாசப்பெயர் வகுத்தனரந்நாளின், (கச)

திருவுலாமது ராபுரிக்குற்சவத் தெரிசனஞ்செயச்சென்றார்
பொருவில்பாலனுண் டமைதலுங்கிருட்டிணன் புகழ்த்திறம்பலசெப்பி
மருவுமாரமு தெனத்துதித்திட்டனன் வயங்குமுற்சவமுற்றித்
தருபிதாவனை நகர்புகற்குன்னுமத் தருணத்திலுறுமைந்தன். (கரு)

நீயிரூர்புகு மின்கள்யானிவ்விடை நிலவுவன்கண்ணற்ற
சேயினுலுமக் கேதுபகாரம்யான் சேரினும்பயனின்றால்
சேயியற்பெறு மதுரைமுத்திப்பெருஞ் சேத்திரமிவண்கண்ணன்
றாயியற்கொள்சா நித்தியத்தகைகொடு துலங்கினனதனலே. (கசு)

பத்தவற்சல னெனையிரட்சிப்பனீர் படர்மினென்றனன்பெற்றோர்
புத்திரன்மிசை கொண்டகாதலின்மிகப் புலம்பிக்கண்ணறுநின்னை
யெத்திறத்தின்விட் டேகுவம்பெற்றவெம் மிதயமெற்றமைவெய்து
மித்திறம்புக லேலெனச்சாற்றின ரிரங்குமத்ததியின்கண். (கஎ)

வார்த்திகம்பெறு மொருமறையோனவண் மருவிமிக்கருளோடு
சிர்த்திமிக்கீர் நம்பதிக்கேகுதிர் சேயிவன் றனையான்மிக்
கார்த்தியோடென்வீட் டமைத்தனன்காப்பனென் றறையமற்றவர்போன
ரோர்த்திகழ்ச்சிசான் மைந்தனையந்தண னில்லினுய்த்தனன்காத்தான். (கஅ)

ஆண்டுகிட்டிண லீலைகள்பத்தர்க ளணைந்துபாடிடக்கேட்டே
தூண்டுருவிளக் கனையனும் பாடிடத் துவக்கினனிவ்வாறுய்
மாண்டுலங்கியற் பாடல்கேட்டனுபவ மனத்தின் ஞாபகமெய்தி
மூண்டுறும்பசி தாகமொன்றறிகிலான் முன்னிலீலைகள்பாடி. (கசு)

யமுனையங்கரை யுடன்பிருந்தாவனத் தெய்திக்கண்ணபிரான்ற
னமுதலீலைகள் பாடிவினவின ரகங்கவர் தகைவாய்ந்து
சுமுகனுநிகழ் வான்பிருந்தாவனந் துதைலதாக்கிருகத்திற்
*குமுதமுற்றிடச்சாற்றிடிற்கிருட்டிணன் குலவிடுந்திறம்போலும். (உ0)

சூரதாசன்பா டிக்கொடுநடக்குமத் துணையினில்வினவுற்று
நாரமைந்துறு புன்மிருகாதியு நனிமனேலயமெய்து
மோரமைந்தவ னேனுபத்தியங்களை யியம்பிமாந்தர்கள்யாருந்
தீரபத்தர்க ளாயினரவனிசை திசைகளெங்கணும்வாய்ந்த. (உக)

பத்திமிக்கவன் கிதங்கள்பாடினன் படர்ந்திடுந்திசையெங்கு
நத்தியோகையி னேடுபத்தவற்சல னனிபிறகணைந்திட்டான்
பித்தியைந்துளா னெனவுளக்கண்ணின்மாற் பிரத்தியக்கமதாக்கண்
டத்தியாருடன் முதலபிமானநீத் தருட்சுகக்கடலாழ்ந்தான். (உஉ)

வேறு

இன்னவாறருட்கண் ணன்பிறகமைந்தே யின்னிசைக்கீதங்கள்வினவத்
தன்னனசூர தாசன்முன்பாடிச் சஞ்சரித்திடுமொரு தினத்திற்
கொன்னமைபிருந்தா வனத்தியல்கிணற்றிற் குப்புறுந்ததிகரம்பற்றிப்
பின்னமைதரவீர்த் ததுகிணறென்னப் பேசினன்றிருப்பியாற்றுய்க்க. (உங)

பகவனற்பரிசம் படவுடன்பரமா னந்தவாரிதியிடைபடிந்திட்
டகமனன்மெழுகி னுருகமெய்புளகித் தானந்தவறல்விழிபொழியச்
சுகவருட்பகவன் றிருக்கரங்களைத்தன் றுணைக்கரத்திறுகிடப் பற்ற
நகமுயர் குடையாக் கொண்டதன்கரத்தைநனிவலித்தனன்பிடுங்கிடலும் ()

பத்தவற்சலனுங் கிருட்டிணமிகுதுர்ப் பலங்கொளென்கைப்பிடியகற்றி
வித்தகமுடனீ யகன்றிடன்மேலாம் வெற்றியென்றுன்னலையெனது
சித்தமீதமைந்த வுயிர்ப்பிடியகற்றிச் சென்றிடிலாண்டகையென்றுன்
மெத்தவுள்ளோகை பொலிந்தருட்கண்ணன் விழித்துணையவன்பெறவழங்கி.

தனதுமாயையின்மோ கம்பெறப்புரிந்தான் றசன்றன்விழிகொடுநோக்கக்
கனபசுநிரைமேய்த் தருகொர்கோபாலன் கவின்றிடக்கண்டுடன்வணங்கி
யனகநீயடியேன் கிணற்றுள்வீழாவா றருளினுற்றடுத்துநீக்கியதா
லுனதருட்கிபெற்று மோர்கைமாறறியே னுவந்துனைவணங்கிடலல்லால். (உசு)

---

* குமுதம் - பேரொலி.

என்றனனுலக மாயையென்றோது மிருட்கிணற்றினில்விழாவண்ண
நன்றருட்கரத்தாற் றூங்கியுள்ளமையு நாதனென்றோர்கிலனவன்செய்
வன்றகைமாயைத் திறங்கொடுகண்ணன் மலர்க்கரப்பரிசமேய்ந்தவனோர்
துன்றருட்பத்த னிவ்வகைமயங்கிற்றாயன் மாயையையெவர்தேர்வார். (உஎ)

உலகுணர்வமைந்த தாசனன்னவனை யுசாவுவன்யாவனீயெங்ங
னிலவுவைபேர்யா தெனநகைத்தெம்மா னிகழ்த்துவன்யானோர்கோபால
னிலகுயர்மதுரை யிடத்தமைகுவன்கோ வினம்புரந்திவணடைந்திட்டேன்
குலவுகண்ணறுநீ கிணற்றருகமைந்து குப்புறுதன்பநிற்றடுத்தேன். (உஅ)

நீயுனதிட்ட மொத்தகன்றிடுகோ நிரையுடன்யான்செல்வேனென்னத்
தாயுறழ்கண்ணன் புகலவிந்திரமா சாலமாயையின்மருட்சியினாற்
றோயுணர்வொழிந்தா னேக்கினனமையத் துலங்கருட்சுதன்மறைந்தனன்பின்
வாயுவேகங்கொண் டோடினன்பார்க்க மருவியபசுக்களுங்காணான். (உகூ)

வழியமைந்தவர்பா லதிகசுந்தரந்தோய் மைந்தனேகிடுந்திறத்தினைநும்
விழிகொடுபார்த்தீர் கொல்லெனயாரும் வியந்துநீயென்பிராந்தனைப்போன்
மொழிதலாயினையிக் கானிடைபசுவு முன்னுகோபாலனுமிலைநின்
னுழியமைகென்னச் சூரதாசன்கோ பாலனையுசாவினனுழன்றே. (௩௦)

சிறிதுசென்றயர்ந்தி ராவணைந்திடவோர் செழுமரத்தடியினிற்கிடந்து
செறிதருதாக சோகமிக்குறக்கஞ் சேர்தரச்சொப்பனத்தினின்முன்
னறிதருகோபா லத்திருவுருவோ டரியவிர்ந்தனன்பகவனெனக்
கிறியில்பேரன்பன் பலமுறைவணங்கக் கிருட்டிணன்கிளத்திடுகின்றான். ()

கூவலில்வீழா வகைபுரந்துனக்கென் கோலங்கண்டேத்திடும்வண்ண
மாவலிற்கண்க ளளித்தவன்யான்கா ணரணியமிதனிடைபசுவுங்
கோவருமிலைநீ கண்டவெல்லாம்யான் குயிற்றியமாயையேயெழுந்து
காவளர்மதுரை புகுந்துமுன்போலென் கவின்றலீலைநன்கிசைத்தே. (௩உ)

சுகமுடனிருத்தி யென்றிடவணங்கிச் சூரதாசன்சொல்வானுதை
சுகமிசைநின்னைத் தெரிசனம்புரிந்து தன்னியனுகினனினியெற்
கிகமிசையிச்சை யொன்றிலையுன்ற னினியநாமஞ்சொரூபமெனோ
ரகமிசைமாறு திசைந்திடவரமொன் றளித்துன்மாயையிற்படாதருள்வாய்.

திருவருள்வடிவா முனதுசொரூப தெரிசனங்கண்டகண்கொண்டிம்
மருள்செறியுலகப் பொருள்கள்கண்டிடவென் மனத்தவாவில்லைமற்றதனான்
மருவுமென்முகக்கண் ணொழிதரமுனம்போல் வழங்குகவென்றிரந்திட்டா
னிருள்செறியுலகை யோர்பொருளாத்தன் னிதயமீதெண்ணிடாவுரவோன்.

கிளரருட்சூர தாசன்சொல்வினவிக் கிருட்டிணன்மிக்குவப்படைந்துன்
னுளமிசைவிரும்பும் வண்ணமாகுமெனப் பொதுப்படவுரைத்தனன்மறைந்தா
பளகறுபத்த னெழுந்துநோக்கிடுகாற் பழைமையிலிலங்கிடக்களித்தே
யுளவிலானந்த பரவசனாகி யாதவனுதித்தபி னகன்று. (௩௫)

அணிபொலியமுனை நீரமேய்த்தான்முன் னூற்றுகீதங்களைக்கொண்டு
கனிசமாமுகினேர் கண்ணனைத்துதித்துக் கவின்றிடவவனுறும்பத்தர்
துணியுணவாதி யளித்துபசரித்தார் தூயனிவ்வணம்வதிந்தீற்றின்
மணிபுனையுரமா தவன்குலவியமெய் வைகுந்தவான்கதிவாய்ந்தான். (௩௬)

ஆதலிற்புறச்சார் பொன்றினைநாடா தலரவரகத்தலர்மணம்போற்
போதருமுண்மைப் பத்தியேசித்தி புத்திமுத்திகளெலாங்கொடுக்கு
மேதகையுடைய தஃதிலார்மனித மேனியின்மேவினுங்கான
மீதமைவிலங்கு புட்களிற்கடையா மிக்கவர்ப்பழித்தழிதிறத்தால். (௩௭)

வேறு

நினக்கோர்துணையாம் யாதவன்று னிகரின்மதுரா புரிகாண்பா
 னெஞ்சிலவாவ லாற்கண்க ணிலவாமறைப்பா லகனுக்கி
மனக்கோயிலின்பா லுறைந்தென்று மாறுவின்ப மீந்துமுன்செய்
 வளமார்லீலை களைப்பாட வைத்துப்பிறகு திரிந்த*தசும்பி
லினக்கோ விலன்வீழ் தரப்போம்போழ் தீர்த்துக்கண்ணீங் துறுமாயை
 யியற்றிவேண்டக் கண்ணொழித்திட் டெண்ணிலருளா டல்கண்முயன்று
பெனக்கோராட லியற்றினனை பெவரேதடுப்பா ரிசைத்தருளா
 யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௩௮)

சூரதாசகதிமுற்றிற்று

ஆக ௹௪௧௮

---

அறுபத்தைந்தாவது

# அரிவியாசகதி

கண்ணனோடு கலந்துமதுரையின் கண்முன்னாளிற் கவின்றிடுதன்மையி
னெண்ணமொத்துப்பின் னாளினுங்கண்டருளெய்துசூரதாசன்றிறமோதினேன்
றண்ணருட்பெருக் காற்பத்திரகாளித் தாயைவாமசாத்தேயமறுத்தமு
துண்ணவாற்று மரிவியாசன்றிற லோர்ந்தமட்டினி லோதிடுவேனரோ. (௧)

மிக்கசீர்மது ராபுரிமீதினின் மேவும்வேதியர் மெய்த்தவத்தின்பயன்
றெக்கபேருருக்கொண்டுவந்தாலெனத் தோன்றுசீர்கொ ளரிவியாசப்பெயர்
புக்கவுத்தமன் மன்னுயிர்மீதெலாம் பொங்குபேரருள் வாய்ந்தவன்யாவையு
மைக்கவின்றிரு மேனிகொள்விண்டுவா மதித்துளானந்தமன்னிவிளங்குவான்.

காலமொன்றினின் மாலமைகேத்திரங் கண்டுதீர்த்தங் களிற்படியத்தனுட்
சாலவாஞ்சை தழைத்துமாணக்கர்கள் சாரவேகித் தலம்பலகண்டொர்நாட்
கோலமார்சடை யாவதியென்றபேர் கொண்டவூரிற் குறுகினனன்னகாற்
சிலன்மிக்க பசியுந்தளர்ச்சியுஞ் சேர்ந்தவ்வூரிலன் றேய்ந்துறவெண்ணியே. ()

---

* அசும்பு - கிணறு

சீடரோடுரைப் பானின்றுவைகிடச் சிறந்ததானந் தெரிந்தணைவீரென
நாடலாயினரோ ருத்தியானப்பா னண்ணவாண்டி ரமணியமாய்க்ககம்
பாடமீடிய சோலையுங்கான்மிகப் பரந்தபுட்ப நிரந்தவனங்களுந்
தோடகங்கண் மலர்ந்துவிண்மன்னவன் றாலமொத்துத் துலங்கிடும்வாவியும்.

ஆதவஞ்சுட லாவிளைத்தெய்திஞே ரக்கணத்தி லதைச்சுகமென்றுளக்
காதலெய்தப்புரிதரத்தக்கதாய்க் காய்த்துப்பூத்துக் கவின்றமைகாவைக்கண்
டாதரம்பொலி சீடர்குருவினை யழைத்துவந்ததன் பாலமைவித்தலுஞ்
சீதவார்பொழில் சூழிராமாநந்தச்செம்மன் மன்றத்தெரிசனர் போன்றரோ.

தூலமாதி யுடற்றிரயங்களுஞ் சுகம்விராவி யரிவியாசன்சொல்வான்
சாலவாடித் தளர்ந்தநந்துன்பறத் தணியவிவ்விடந் தக்கதென்றோதியே
நீலமேக நிறத்தவன்பூசனை நிரப்புவாமதற் கேற்றநிவேத்திய
மேலவேபுரி தற்குறுசாதன மேவையுங்கொண்டெய் தீரெனவேவிப்பின். (௬)

திகழிடப்புற நாடிடவவ்விடை சிலைகொள் பத்திர காளிதன்கோயிலா
நிகழவங்கட் பலியிடவுன்னியே நேர்ந்துபற்பல ராடுடன்கோழி கொண்
டகமகிழ்ந்தடை வாரும்பலியிடு வாருமாகி யமைதரக்கண்டுடன்
றகநிறைந்த கருணையரிவியா சன்கணத்தவண் சார்ந்தனன்சாற்றுவான். (௭)

நண்பர்காணமை யொத்துளவாருயிர் நடலைகொண்டு பதறிக்கதறிடத்
தண்படுந்தலை சற்றுமில்லாமனீர் சாடுகின்றது தக்கதன்றன்றிழி
புண்படுந்தூர்க்கந் தப்பிணமிங்கிவை புன்மைபார்புள் விலங்குகட்கல்லது
பண்பமைந்த நரர்க்குமொப்பாதருள் பரந்தபத்திர காளிகொள்கிற்பளோ. ()

நறுமணங்கமழ் வுஞ்சுவையுந்தக நண்ணுபாயச மாதியும்வாழைமுற்
பெறுபலங்களு மம்மைதன்னுள்ளருள்பெறநிவேதனஞ் செய்துமெய்ப்பேற்றினை
யுறுமின்சீவ வதையிதனுற்பவ முறுவதல்ல துயர்ச்சியொன்றுற்றிடா
திறுதியோருயிர்க் காற்றிடினம்முயிர்க் கிறுதியல்லதொரின்பமுண்டாகுமோ.

ஆதலாலிக் குரூரகன்மங்களை யகற்றிச்சுத்தமெய்ப் பூசனையாற்றுமென்
றோதவன்மிரு கக்குணமானிட வுருவொடெய்து முணர்ச்சியில்லாரெலா
நீதமோது மரிவியாசன்றனை நிந்தையும்பரி காசமுஞ்சாற்றியே
போதமேவுமெய் யன்பன்முனொடொன்றைப்பொருக்கென்றீர்த்துப் புரிந்தனர்கோறலே.

ஆங்கதைக்கண் டரிவியாசன்மனத் தளவில்கோப மமைந்தரமோடுதன்
பாங்கர்தோய்மாணுக் கர்க்குரைப்பானிந்தப் பாவவெந்தொழில் பாற்றியல்லாலியா
னேங்கலாங்குடை கொண்டவன்பூசனை யுஞற்றுகின்றில னென்றுமுஞற்றலிர்
தீங்கமைந்த தொழிலிதையம்மைதன் றிருவருட்கொடு தீர்த்தலதுண்டிடேன்

என்றுபத்திர காளியைப்பூசனை யியற்றிச்சீவ வினங்கட்குத்தாயெனத்
துன்றுநீயின் றுடன்பலியேற்குமித் துற்குணத்தை விடுத்துச்சுவைமிக
வொன்றுபாயச மாதியகொண்டுன துட்டி.ருத்தி யுறுதியின்றேலெனோர்
நன்றுறுந்தலை கொய்துனக்குப்பலி நல்குவேன்பழி யோடுகொணீயெனு.

ஓதிமாதவன் சேவடிபோற்றியே யொன்றயின்றில ருற்றனனன்கா
னீதிமிக்க வரிவியாசன்றுயர் நீண்டுவாடு நிலைசகியானெனச்
சோதியாதவன் மேல்கடலாழ்ந்தனன் றுட்டர்நெஞ்சிற் றுதைபவம்போன்றுபார்
மீதினீடிரு டோய்தலும்பத்தனுள் வெருளுருதவண் மென்றுயில்கொண்டனன். ()

சீடர்தம்மையு மங்குறங்கும்படி செப்பினுன்முச்சா மங்கடந்தீற்றினி
வீடருட்பொலி பத்திரகாளிமுன் னேர்ந்துபத்த னிடம்புகல்வாள்சுத
தோடமார்தொழி லின்னதையெண்ணிநீ துக்கமுற்றிட ரேயிதுநாண்முதற்
கேடமைந்த வுயிர்ப்பலியொன்றுங்கொள் கின்றிலேன்சத் தியமதையுன்னியே

மன்னிவ்வூரினர்க் கோர்கட்டளையிடும் வண்ணமேகுகின் றேன்மகிழ்வாகிநீ
பன்னிடென்மொழி யூடையங்கொள்கலை பரிந்தெழுந்திங்ங னேபெற்பநாட்பற்கு
நன்னிவேதனப் பூசைசெய்துண்கென நவின்றுதேவி கிராமத்தினண்ணியே
துன்னிடும்பல பேர்தங்கனவினுந் தோன்றியிவ்வகை சொற்றிடுகின்றனள்.

இன்றுதொட்டுநான் சீவபலியெது மேற்கிலேன்வடை பாயசமாதிய
நன்றுமீதாய்பதார்த் தங்கணிவேதன நவிற்றிலோகைபி னல்வரமீகுவே
னென்றுமென்கட் டளைமறுப்பார்களை யொப்பிறண்ட முளுற்றிடுவேனரி
தன்றுணைப்பதம் போற்றுமரிவியா சன்றனேடு சாதநவின்றுளேன். (௧௬)

என்னக்காளி யிசைத்திடவிம்மித மெய்தியாரு மெழுந்துதத்தம்புடை
துன்னலான கனவினையோதியே சூழ்ந்துபத்தன் றுணையடிபோற்றுரு
நன்னலங்கொண் முகமன்பகர்ந்துமுன் னுங்கள்செய்பிழை நாடலிர்யாமினி
யின்னலாரிக் கொடுந்தொழிலெங்குமே யியற்றுகின்றில மென்றுமிவ்வாறுநீர்.

செய்ததான சுகிர்தத்தின்யாமெலாஞ் சீலராயினஞ் சுத்தமெய்ப்பத்தர்நீ
ரெய்தலெந்தவம் யாஞ்செய்கைமாறுமக் கேதுமின்றென் றியம்பிடக்கேட்டலு
மைதழைத்திடு மேனியனன்பனுண் மகிழ்ச்சிகொண்டு கிராமமருவினர்க்
குய்தலாமுப தேசமுரைத்தரி யொப்பில்பூசை யுளுற்றிபுண்டேகினன். (௧௭)

அன்றுதொட்டவண் மேவியமானிட ராரும்வாமசாத் தேயமறுத்தரிக்
கொன்றுமன்பின ராய்ப்பத்தனேதுப தேசமெய்தின ருத்தமராயினர்
பொன்றுறும்பிணப் பூசைகொள்பேய்த்தகை போக்கும்பத்திரகாளிபுகழ்நலந்
துன்றுதெய்வத் தகைமருவுற்றன யேபத்தர் தொடர்ச்சிகொணன்மையால். ()

இன்னவாறுயர் சிவகருணையு மெழில்கொண்மாதவன் றன்னியற்பத்தியுந்
தன்னதாமுடன் மீதபிமானமோர் சற்றுமற்றியல் பாசவிராகமும்
பின்னமற்றுள யாவுமரியெனப் பேணுமொப்பில் பிரமக்கியானமுந்
துன்னலாமரி பத்தன்மெய்யீற்றினிற் றாயவைகுந்த மேபமைந்தானரோ. ()

சுத்தபூசை நிவேதனந்தோய்தலந் தோறுந்தெய்வந் துதைந்தருள்செய்திடும்
பித்தர்பல்லுயிர் கொன்றுவெறிப்புனல் பிணநிணங்கொடு பூசைசெய்தானத்தின்
மைத்தகைக்கொடும் பேயினஞ்சேருமிவ் வாய்மைதேர்கவு மாரர்வழுத்துசீர்
முத்தனுமிவ் வரிவியாசப்பெயர் முதல்வன்றன்மை மொழிவரிதாமரோ. (௨௧)

இகத்தில்யாரெது செய்யிலெனக்கெனென் றியம்பித்தான்பயனெய்திடவேண்டலே
மிகப்பெருந்தவ மென்றுகொள்சிற்சில விரதசீல ருறுகதிதன்னிலுஞ்
சுகத்துடன்புவி யிற்பலர்நன்னெறி தோயக்கண்டுபின் ஞெல்கதிசேர்வனென்
றகத்துள்வாஞ்சித் துழைத்திடுவோன்றர மதிகமென்பதறிஞர்தங்கொள்கையே.

ஒப்பகன்ற பரப்பிரமத்தினுக் குற்றசத்திப்பண் பாம்பலமார்க்கத்துட்
பொய்ப்பமைந்த புறப்பொருட்பாலுறப் புணர்த்துமார்க்கம் புகுமவர்யாவரு
மெய்ப்பமைந்த விபசாரமங்கைய ரேய்க்குவார்க ளியலுடலாதியுங்
கைப்பகன்றவின் பந்தருபத்தியாற் கடவுட்டோய்குநர் கற்பினர்போல்வரே.()

வேறு

சீடருடனே சஞ்சாரஞ் செய்புமரிவி யாசன்றான்
சேரோரிடத்தி லருகமைபத் திரகாளியினோர் கோயிலிடை
வேடருறழ்வார் சோழிதகர் மிகவேகொல்லக் கண்டவரை
விலக்கநில்லா மையினுண்டி வெறுத்துத்தளரு மத்தியிற்
கோடலான காளியினுற் குறித்தவாறே பலியொழித்துக்
குணமெய்திடுமா றியற்றிடுநீ குலவுமொருவற் கிந்நாளி
லீடற்றிடுமப்பேறருளி விரைபுங்கடற்பார்க் கிதமன்றோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உ௪)

அரிவியாசகதிமுற்றிற்று

ஆ. கவி ௫௪௬௪

---

அறுபத்தாறுவது

# விட்டலதாசகதி

நரியொப்பாநிகழ் நார்களேஞாலமா னிடராப்
புரியுமொப்பில்சீ ரரிவியாசன்கதி புகன்றே
னரியுவப்புறு நிருத்தகீதத்தில்வல் லவனும்
பிரியவிட்டல தாசன்றன்பெருமைசற் றுரைப்பாம். (௧)

வேறு

மட்டவிழ்பூம்பொழிலுடுத்த திருமதுராபுரியில்வரு மறையோனெப்பில்
விட்டலநாமம்புனைந்தோ னிருத்தகீதத்துறழ்வார் மிக்காரில்லான்
மட்டறுபேரண்டமுற்று மளந்தருண்மாதவன்பதவா ரிசத்திருத்தா
ளுட்டழைவித்தானந்தத் தேனுகர்ந்துபாடிநட முஞற்றுமேலோன். (உ)

ஆவியருட்டுணையான நாரணனல்லாலறியா னன்னையோடு
மோவியநேர்பேரெழிற்கற் பெவ்வன்மாதியநலங்க ளொருங்குவாய்ந்த
தேவிதுணைபெறவாழ்வோன் காணகளேபரங்கண்முற்றுந் திருமாலின்ப
மேவியமெய்ப்பணிக்கேவிட் டுலகநிலைசிறிதறியான் விளங்குநாளில். (௩)

அணிகொள்சடகரப்பெயர்சா னகரிடத்தின்மிகவிளக்க மமைந்ததாகு
மணிகொடிருக்கருடகோ விந்தனதாலபத்தொருநாண் மருவியன்பிற்
றிணிபடுசித்தம்பெறுவிட் டலதாசன்சிஞ்சிரிகை சேர்த்துமான்முற்
றணிவறுமனோகரஞ்சால் கிதமிசைத்தொப்பறுநிர்த் தஞ்செய்திட்டான். (௪)

ஆங்கதுகண்டவணமைந்த பத்தரெலாமோவியமொத் தமைந்தாரக்கா
லோங்கருணாரணன்றனதர்ச் சகருவப்பாலாரதிசெய் துதவலான
தேங்கமழ்நிவேத்தியந்துய்த் தாங்கமைந்தானிவ்வண்ணந் தினமுமாற்றி
நீங்கருமானந்தத்தோ டவனீங்கான்மனையனையை நினைவிற்கொள்ளான். (௫)

கருடகோவிந்தனையோர் கணம்பிரியச்சகியானுக் களிப்பினோடு
மருவுபகலிரவினுமற் றொன்றறியான்றேகமுதன் மானநீத்தே
பொருவறுநிர்த்தங்கீதம் புரிந்தமைந்தானன்பனிங்ஙன் பொலியுநாளிற்
றருமன்னையுடன்மனையா ளன்பனைக்காணுதுள்ளந் தளர்ந்துவாடி. (௬)

பலதிசையுந்தேடிப்பறி யார்கருடகோவிந்தன் பயில்கோயிற்க
ணிலவினரக்காற்றரசன் றனைமறந்துபரவசனுப் நிர்த்தஞ்செய்து
குலவுதிறங்கண்டீன்றாள் வெஞ்சினமிக்கமைந்தாளாய்க் கூவிச்சொல்வா
ளிலகுகொழுகொம்பற்ற கொடியேபோலெமைத்துயர மெய்தவைத்தே. (௭)

மனத்திடையோர்சற்றுமுன்னு யீண்டுற்றுயெமக்குணவு வழங்குவார்யார்
புனத்தமைபூங்குயின்மொழியோடில்லொழுக்கம்பூண்டெனையும்புரந்துமாயன்
வனத்தருட்பங்கயபதத்தன் பும்பொருந்திரமதுமது ரையின்பாலுற்ற
வினத்தருடன்வாழவரு வாயெனத்தாயழைப்பவுள மிசையானுகி. (௮)

கருடகோவிந்தனையோர் கணம்பிரியேனீயிர்நகர் கலப்பீரென்னும்
பொருவருவிட்டலதாசன் சொற்கொடுதாய்துன்பமிகப் பொருந்தினளாய்
மருகியுடன்சாற்றுவள்கா தலனைவிடுத்தவணமைந்து வயக்கலொன்றின்
றிருவருமீண்டமைவேமென் றிருந்தனளுணின்மையின்மிக் கெய்த்தாரானர்

விட்டலதாசன்பத்தி பரவசனுய்ச்சுகதுக்க விளைவுள்ளோரான்
றட்டறுமன்பிற்றினமு நிர்த்தகிதம்புரிந்து தழைத்தானக்கான்
மட்டறுபேருட்கருட கோவிந்தன்கனவினிடை வயங்கிச்சாற்றுஞ்
சிட்டர்புகழெனதன்ப நீயிவண்மேவிடுசெயலாற் றிகழ்தாயில்லாள். (௧0)

மிகைபடுசங்கடங்கொடுண வின்றியெனைநாளும் வேண்டுகின்றார்
தகையிதனுலவர்விருப்பொத் தமைந்தெனைப்போற்றுதியானித்தலத்தேனல்லன்
றொகைபெறுமன்படியரித யக்கமலந்தொறுநிறைந்து துதைவேனென்ன
வகைபடவோதியும்பிரிய மாட்டானனங்ஙனம்வதிய மால்பின்னுளும். (௧௧)

கனவிலடைந்தங்ஙனமோ தியுமேகான்வதிதரப்பிற் கங்குலூடு
மனகனுரைத்தலினுளஞ்சி யினியமையின்மாயன்வெறுப் படையுமென்னப்
பனவனுறுதாய்மனைவி யுடன்மதுரைப்பதியினிடை படர்ந்தன்னோர்தா
முனமமையுமனைபாழ்பட் டிடுந்திறங்கண்டுறவுறவின். முறையார்மேவி. ()

நீயிரிதுநாள்வரையாண் டமைந்தனிரென் மேரூர்ந்திலமங் நிகழ்ச்சிதன்னுற்
றாயியலெம்மொடுவதியத் தகாதுபுறத்தேகுமெனச்சொல்லத்தாசன்
ருயியல்பாரியினெடுமுன் னண்பமையோர்தட்டானிற் சார்ந்துவைகிக்
கோயில்கொடுள்வதிகருட் கோவிந்தன்றனைத்துதித்துக் குலவுநாளில். (கங)

விட்டலதாசன்மனைவி வயிறுவாய்த்தனண்மனைப்பின் மேவியன்னுண்
மட்டறுபேரருட்கருட கோவிந்தன் செயலாற்கால் வதிநகத்தா
விட்டமுடன்கிளைத்தனள்பொன் னெளிர்ந்ததுபின்னுந்தொட்டா ளினிதுநோக்கக்
கிட்டரியவொருசுவணக் கலசமிருந்திடக்கண்டாள் கிளர்ச்சிமேவி. (கச

கரங்கொடுமேலெடுத்தனள்வல் லையின்மாமிகணவனிடங் கலந்துசெப்ப
வரங்கொளவர்மருவினர்பொற் கலசத்தைத்திறந்துணர்கா லொப்பொன்றில்லா
வரங்குலவுகிருட்டிணவிக் கிரகமுடன்வரம்பறுபொன் மருவநோக்கித்
தரங்குலவுதாசன்மிக வியந்தருட்கோவிந்தனன்பிற் றந்ததென்றே. (கரு)

மனங்குலவுகளிப்பினெடு தாம்வதியமனையொன்று வயக்கியொப்பில்
வனங்குலவுகிருட்டிணனைப் பதிட்டித்துப்பூசைசெய்து மகிழ்வினேடுங்
கனங்குலவுமழையென்னப் பேரறம்பற்பலபுரிந்து கவின்றானக்கான்
முனங்குலவுபொன்குறையா தட்சயம்பெற்றமைந்தவன் முதிரன்பேபோல்.

இலக்குமியையுரத்திலிருத் திய திருமாலினைத்தமுளத் திருத்தினோரா
நலக்குறிதோய்பத்தர்தமக் கிகபரத்திலோர்குறைதா னண்ணுங்கொல்லோ
புலக்குறிதோயலகையுல கினைமதியாத்தாசனின்பம் பொங்கியாவுந்
துலக்குகதிரவனைய ஞானமுமெய்ப்புகழ்ச்சிறப்புந் துதைந்துவாழ்ந்தான்.

அத்தருணத்தவன்மனையம் போதிபொலிந்திடத்தோன்று மலவனேபோ
லுத்தமசற்குணநிறைகான் முளைபுதவினுள்சுதற்கண் டுவகைமேவி
யொத்தமைந்தன்றனக்கிரங்கி லாலனென்பேரிட்டழைத்தா னுற்றபாலன்
மெத்தவிளமைப்பருவத் தேநிருத்தகீதத்தின் மிக்கோனானன். (கஅ)

இளமைகழிதருமுன்னந் தன்னின்மிகக்கிருட்டிணன்பா லியைந்தவன்பும்
வளமைமலிதருகான ஞானமுஞ்சால்சுதற்றாதை மகிழ்விற்போற்றி
யளவறுபேரின்பமுட னிருவரும்வாழ்ந்திடுதகியி லரமின்னுரு
முளமிசையாவற்பொலியுங் கணிகைநிர்த்தகீதத்தி லுயர்வொப்பில்லாள். (கக)

விட்டலதாசன்மனைக்க ணடைதரமிக்கோகைகொடு விள்வானீதான்
மட்டறுபேரருட்கிருட்டி ணன்முனிர்த்தஞ்செய்தியென மனோகரஞ்சா
னட்டமியற்றிடக்கண்டுள் வியந்தனையணிமணிக ணனியீந்துந்தன்
னிட்டமிசைதிருத்தியுரு தினியென்னேநல்குவனென் றெண்ணிபின்பால். ()

தன்னருமைச்சுதனுகு மிரங்கிலாலனையவட்குத் தரக்கைக்கொண்டு
மன்னருண்மெய்ப்பாலகன்றற் கெய்தியதாற்கணிகையவள்வையமீதிற்
பன்னவருமாற்றத்திற் கெதிர்மறையாவரம்பிலின்பம் படைத்தாளாகித்
துன்னகத்தெய்தினள்வியனூர் சம்பவத்தைநாகரிகர் சொல்லக்கேட்டு. (உக

அங்காட்டுமன்மனையாச் சரியமிக்கவ்வேசிதனை யழைத்துவேண்டும்
பொன்னுடையாபரண நினக்களிப்பன்கொடுநல்கப் புதல்வன்றன்னை
யென்னுவேண்டிடக்கணிகை சாற்றுவள்விட்டலதாச னென்மீதோகை
மன்னுநின்றெனக்களித்தா னெனக்கங்ஙன்புரிவார்க்கு வழங்கலன்றி. (௨௨)

தனங்கொண்டுநல்குகிலே னிவனென்மனமகிழ்தாநிர்த் தனஞ்செய்வானேன்
மனங்கொண்டபேருவப்பிற் றருவனெனமன்மனையுண் மகிழ்ந்தாளாகிக்
கனங்கொண்டதிருவுருவார் கிருட்டிணன்முன்னடம்புரியக் கழறக்கேட்டு
வனங்கொண்டதிருவுருவச் சுதன்மிகுபேரின்பநடம் வயக்கக்கண்டு. (௨௩)

வரம்பகன்றபரவசத்தா ளாய்க்கணிகைபாலனைத்தன் மடிமேல்வைத்துக்
கரங்கொடணைத்தனண்முத்தி விழியிலின்பநீர்பெருகக் கழறுவாளித்
தாம்பெறுபாலகன்றன்னைக் கண்ணபிரான்கொளயான்முன் சமர்ப்பித்துள்ளேன்
வரம்பெறப்பின்னெவ்வகைநிற் கிவனெனமன்னன்மனை வாஞ்சையோங்கி. ()

எழுந்துபிடித்திடமுயல்கா விரங்கிலாலன்புகல்வா னிராணீநீயெற்
செழுந்தகையத்தங்கொடுதீண் டற்கவிந்தவேசையெனைச் சீதாற்குள்
ளெழுந்தகையோகையினளித்தாள்யான்கண்ணன்றனதுடமையினியன்னேன்றன்
றெழுந்தகைச்சேவடிபுகுவேன் காணுதியென்றோதிநடங் துவக்கியாங்கே. ()

பத்திமிக்கானந்தநட மியற்றினன்றன்றேகத்தைப் பார்மேனீத்தே
யத்தியருட்டிருவுருவப் பெருமான்பொற்சேவடியி லடைந்தான்கண்டோர்
மெத்திறும்பூதுற்றனரப் பாலகனற்றரிசனவி சேடந்தன்னு
லொத்தியல்வேசையுமிறைவன் மனைவியுமிவ்வுலகசுகத் துவர்ப்புற்றாராய். ()

கண்ணபிரான்றிருவடிப்பொற் புணைபற்றிச்சமுசாரக் கடலைநீந்தி
நண்ணருமுத்தர்களானு ரிணையறுவிட்டலதாச னரர்தம்வாழ்வா
மண்ணகத்தில்வாழ்ந்தீற்றில் வைகுந்தமருவினனிவ் வாய்மைதன்னாற்
புண்மைபாகங்கொளுயிர்க் குற்றதுணைபத்தியலாற் புகலிலின்றே. (௨௭)

வேறு

இதநிருத்தந் தனிற்சிறந்துன் கிளராலபந்தோய் விட்டலனைக்
கேதமிகுதாய் மனைவியின்பங் கெழுமமனைமீ துறப்புரிந்து
போதப்பொருளு நின்னுருவாம் போதப்பொருளும் பொருவில்லாப்
புதல்வற்பேறுந் தந்துமனை புகும்வேசியினோர் நிருத்தங்கண்
டாதரத்தி னெடுசுதனை யளிப்பவவனை யவளுனக்கே
யர்ப்பித்திடலாற் றிருவடியி லணையக்கொண்டா யிகதலமே
லேதமுழக்குந் தமியேற்கன் பென்றீந்தன்பா லுறப்புரிவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௨அ)

விட்டலதாசகதிமுற்றிற்று

ஆக கவி ௫௪௬௨

---

அறுபத்தேழாவது

# உரூபசனாதனகதி

சாலவரி பத்தி தழைவிட் டலதாசன்
பாலனுடன் கண்ணன் பதம்புகுந்த வாறுரைத்தேன்
ஞாலமிசை ரூபன்ச னாதனனுஞ் சோதரர்கண்
மாலருள்கொண் டாடும் வகைசற் றுரைப்பேனே. (க)

வேறு

சீலத்தகைமிக் கவிர்கௌடமெனுந் தேயத்திலுதித் தவர்முற்பவமேற்
சாலத்தவமாற் றுமுரூபசனா தனநாமமமைந் தவர்மற்றவரை
ஞாலத்திலளித் திடுமன்னைபிதா நலமோர்சிறிதோ திலதுற்றமுனால்
பாலத்தகைமே வினராடலெலாம் பத்தித்துறையூ டுபடிந்தனவே. (உ)

பரிதிக்குமதிக் குநிகர்த்திடுசீர் பதிவுற்றியலோ ரிருசோதரரும்
விரிவுற்றவருட் பொலிகண்ணபிரான் மீதோவறநெஞ் சமமைத்தனரா
யுரிமைத்தகைமிக் குடலாருயிர்போ லொருவாதுவளர்ந் தெவனம்புகலும்
பரிவிற்பிருந்தா வனமுற்றணியார் பகவன்றளியின் கண்வதிந்தனராய். (ந)

இயலூணுடையிச் சைகொடார்புடையு மேற்காதவயா சிதராகிபணிப்
புயகத்தினடித் திடுதாட்டுணையே பொருளென்றுமதித் தமர்போதிலோர்நாண்
மயலற்றசனா தனுமநுசன் மாலொன்றுதலங் கள்வணங்கவவாய்
நயமிக்குரூரூ பனெனண்ணன்விடை நல்கக்கொடுசென் றனனாளதனில். (ச)

மிகுவிற்பனமே வியரூபனருள் விரிகிட்டிணலீ லைவிதம்படவே
தகுபத்திகொளன் பர்கண்மெச்சும்வகை சாற்றிச்சுகவா ரிதியூடுபடிந்
துகுமஞ்சுறழின் பவறற்பொழிகண் ணுபயத்திடைகண் ணனுருத்தெரிசித்
*தகுணஞ்சிறிதின் றியயாசிதமென் றமைவாம்விரதங் கொடமைந்தனனே.

அவனற்குணமுந் திகழ்கிட்டிணன்மே லமைபத்தியுமற் புதமிக்குமனங்
கவரத்தகுபா டல்சொனீர்மையையுங் கண்டொன்றியமாந் தர்கள்பற்பலருந்
தவமெச்சிவியந் தவனேற்றிடனந் தவமென்றுணவா திகடந்தனர்க
ணவமிக்குரூரூ பனவண்குலவு நலபத்தர்கணா யகமாயவிர்ந்தான். (ரு)

தவரூபனிவா றமைபோழ்துதலச் சஞ்சாரமியற் றுசனாதனனீள்
குவடேநிகரண் ணனைக்காணும்வணங் குலவும்பிருந்தா வனமேவுபுகண்
டுவகைப்பொலிவோ டுபுகுந்ததலத் துளவானவிசே டமுரைத்தமைகா
லுவமானமகன் றமைரூபனொர்தன் னுள்ளத்திடையிவ் வகையுன்னிடுவான்.

தவநாள்கள்பிரிந் தரிமேவியபஃ றலமுந்தெரிசித் திவணெய்திடுபொற்
குவடேநிகர்நெஞ் சுறுசோதரனுட் குளிநம்படியா துகொடுப்பனென
நவநீடுமுரூ பனுண்டியவ னவில்விந்தைவினா வுபுபால்சிறிதிங்
கிவணுண்டெனிற்பா யசமாற்றியரு ளியல்கண்ணனுவக் கநிவேதனியா. (அ)

---

* அகுணம் - குறைவு.

அவிர்சோதரனின் புடனுண்டிடுமோ றருள்வேனெனுமத் ததியாக்கமிகர்
கவினீடிடுகோ பிகைபாலொடுசேர்க் கரைதண்டுலமா திகொடுற்றவர்பா
லிவிதம்புகல்வா ளேனோர்நற்பசுவின் புடனீன்றிடிலீங் கிவையீவனெனச்
சவியென்மனமீ தினின்மிக்கபிரார்த் தனைசெய்தனனவ் வகையீன்றதுவே. ()

என்னோர்பசுமுற் றருபாலிதைநீ ரேற்பீரெனுமேல் வையில்ரூபனுளே
மன்னோகைமிகுத் தவைகொண்டகல்கான் மருவுற்றசனு தனன்மாதவடன்
கொன்னோக்குபுமிக் கவியந்துதெய்வக் கோலம்பொலிமா தைவினவிடுவான்
பொன்னேறெழ்கோ பிநினன்னைபிதா பொருந்தும்பெயரென்னெனவேபுகல்வாள்.

பாரோர்புகழ்ந்தேத் திடுசீர்விருட பானுத்தருபுத் திரியென்றுபகர்ந்
தேரோதிமமுட் கிடுமாநடைகொண் டேகுந்ததியொப் பில்சனுதனனுட்
பேரோகையின்யோ சனைசெய்தமைகாற் பெரியானிபல்பா யசமாற்றியருட்
காரோவெனுமே னிபடைத்தவிருங் கண்ணற்குநிவே தனமாக்கியபின். (கக)

விரைவோடுசகோ தரனுண்ணும்வணம் விளியாநகரேல் வையிலோகையுடன்
கரைபாகுளபா யசநிற்குதவக் கருதுற்றவொர்போழ் திலெதேச்சையதா
நிரைமேவுபதார்த் தமொர்கோபிகொடு நேர்ந்தாளெனவுற் றசனுதனனுட்
கரைதீர்துயர்கொண் டுசொல்வானிமனீ கருதுற்றதுலோபகுணங்கொடன்றோ

ஒப்பற்றவிர்சங் யாசம்பெறுவோர்க் குறுலோபமொர்கா லையினுந்தகைபன்
றிப்பற்றுயர்மா தவமானகடற் கெரியார்வடவைக் கனலாகுமுபர்
மெய்ப்பத்திதனக் குமிஃதாலிடர்கண் மேவும்பலவா றென்விளம்புவன்யான்
றுப்பற்றவர்கைக் கொளுலோபமிதே தோடக்குழுவுக் கொர்குருத்துவமே. ()

இனியோர்பொழுது டமிவ்விச்சைதனக் கிதயத்தினைவிற் கலையீண்டிதுகாற்
புனிதப்படுபால் கொடுவந்தவடான் புவிமேவியகோ பனோர்புத்திரியன்
றினிதாநெடுமா லுாமீதிலகு மெழினீடுமிரா தைநினெண்ணமதைக்
கனிவோடுமுடிக் கவடைந்தனளிக் கமழ்பாயசநுங் கினைகாண்டியென. (கச)

மிகுதிப்பியபா யசமார்ந்துளமேன் மிச்சம்படுமோர் வமுமையமுமேய்த்
தகுநந்தகிரா மமணைந்தவண்முன் சாற்றும்பெயரோ திவிளவிடலும்
புகுவோர்பலர்தா முமிநாமமுளார் புரமீதினிலின் றெனவோதினராய்
வெகுவாயவர்மேன் மைபுகழ்ந்திடலும் வியன்மிக்கவர்தம் மிடமேவினரால்.()

அமைவுற்றசனு தனன்மீண்டுமுய ரண்ணன்பெறவோ துநினைசையினுற்
சிமையக்குடைகொண் டவனின்பமுறத் திருமார்பில்விளங் குலகுக்கொருதாய்
சுமைமிக்கவெடுத் துபர்தாட்டுணைபார் தோயும்படிவந் திடலெண்ணுதொறுங்
கமையுற்றவெனெஞ் சமிடிந்துமிகுங் கட்டப்படுகின் றதெனக்கழற. (கரு)

மேலிவ்வகையா னதுராசையுனுண் மேவேலெனவிண் டுசனுதனனீண்
மாலின்புடன்வாழ் தலசேவைசெய்வான் மதித்தேகிடரூ பனவண்டிகழ்நா
ளாலின்புடையோ கவனந்தலுளா னகிலம்பொலிவார் களுப்வானருளாற்
கோலின்பவிரா சவிலீலையினைக் கூண்டுங்கனமாற் றினர்மாந்தர்களே. (கஎ)

தவரூபனவண் டுதைவுற்றிலகுந் தளியின்சுவர்தன் னிடைசாய்ந்துறுவா
னவமேவுதனெஞ் சுகிருட்டிணன்மே னண்ணும்படியா கிலயப்படலாற்
சவமானவிளங் குதல்கண்டுடனர்ச் சகன்மேவியுயிர்ப் புளனேகொலெஞ
வுவமானமிலா னுயர்நாசியரு கோரத்தமமைத் தனனுடிடலும். (கஅ)

அழலொத்தவனத் தமதைச்சுடல்கண் டனேவோர்களுமற் புதமிக்கவராய்க்
கழலன்பொடுபோற் றினரேகினரக் காலத்தினுரூ பனதோர்கனவிற்
குழல்வைத்தவிர்கிட் டிணன்மேவியிவண் குயினந்தகிரா மபுறக்கடமே
லழகுற்றபசுக் குலமேய்தருமங் கவனோர்பசுபால் சொரியுந்தினமே. (கசு)

பின்னுளவனுற் றனையெற்கொடுநீ பெரிதின்பொடுபூ சைசெய்வாயெனலுங்
கொன்னூர்தருரூ பன்வியந்துநகர் குலவுற்றவரோ டுபுகன்றுவனந்
துன்னுமிகநே டினனோர்பசுபால் சொரிகின்றதுகண் டுகளிப்புடனே
மன்னுதரமோ டுறுமண்டொடுகோன் மருவுற்றதொர்கிட் டிணவிக்கிரகம். (உ0)

பெருகோகையின்யா ருமெடுத்தணிசால் பிருந்தாவனமீ துபதிட்டைசெய்தே
முருகோவருமா மலராதிகொடுண் முதிரன்பிலுரூ பன்வணங்கினன்பின்
வருகேசவமூர்த் தியைக்கோரமிக மருவுற்றமிலேச் சர்தமாட்சியினிற்
றருகோரமறிந் துபயந்துயச் சயசிங்கமன்றன் னகர்மீதமைத்தான். (உக)

வேறு

அன்னமூர்த்தியிப் போதினுஞ்சயபுரத் தமைந்துளதிக்காதை
பின்னடந்தது ரூபதாசன்றினம் பிறங்குபூசனையாற்றிப்
பன்னரும்பரமானந்தமொடுபிருந் தாவனப்பால்வாழ்நா
ணன்னலச்சஞ தனன்றமையன்புடை நண்ணுகால்வனத்தின்கண். (உஉ)

நுதிகொண்முண்மரச் செறிவினுட்குனிந்தன னுழைந்துறமிகநீண்டு
வதியும்வேணியை முட்கள்பற்றிடவிதென் வள்ளலின்செயலென்றே
கதிகொளானவ னின்றனனிருதினங் கழிந்தனமூன்றுநாட்
டுதிகொள்பத்தவற் சலத்தகையாகியே துலங்குபேரருட்கண்ணன். (உங)

தவமனோகரம் பெற்றகோபாலநற் றனையனுயவனோகி
யுவகையோடுபா லருந்திடநல்கின னுறுசடைப்பிணிப்போவக்
குவடுநேர்மனச் சஞதனனுங்கவன் கோலநோக்கினனுள்ளங்
கவருமன்னவன் றன்னைநீயாரெவண் கலந்துளாய்நினக்குற்ற. (உச)

துணைவரெத்தனை பேரெனவினவிடச் சொல்லுவன்றிறன்மாயன்
பணைகுலாவுநந் தக்கிராமத்தில்வாழ் பவனோர்கோபாலன்யா
னணைதருந்துணை வர்களொருநால்வரெற் கமைவரென்றறைந்தொல்லை
கணைகொள்வேகத்தி னகன்றனன்சஞதனன் கழறுமங்கர்மேவி. (உரு)

உற்றசெய்திமுற் றோதினனுசாவவாண் டுள்ளவர்பலர்தாமுஞ்
சொற்றபாலனீண் டின்றெனச்சஞதனன் றோன்றியதரியேயென்
றற்றமற்றவா குலங்கொடுன்றனைக்கண்மு னுத்தரிசனஞ்செய்து
மிற்றயர்ந்தன னெனப்பலவிதம்பட வேத்தியேங்கினனுகி. (உசு)

தமையனுமிக முரூபன்பாலடைந்தியல் சம்பவங்களைச்சாற்றி
யமையுமேல்வைரூ பன்னிராதையைவன்னித் தணிகொடுத்தியஞ்சொல்காற்
சமைதருஞ்சடை தனக்குவமங்கருஞ் சர்ப்பமென்றுளத்தூன்னு
மமையமுற்றச ஞதனனன்னதே யறைதியென்றிடக்கேட்டே. (௨௭)

சாலவுந்தனு ளதிசயித்தநுசனைத் தழுவினன்குளத்தேகிக்
காலலம்பியுற் றனையற்றருவினைக் கட்புலங்கொடுநோக்க
மேலருட்டுணைப் பதமுறக்கண்டுளம் வியந்தெனென்றறிகில்லான்
மாலமைந்தன ளுச்சிரமம்புக வளர்சனுதனன்சொல்வான். (௨அ)

பித்தரொத்தெவன் பேதுறலெப்தினை பிறங்குமத்துணைத்தாணின்
சித்தமீதமைத் தனையுவப்புடன்சதா சிந்தனைசெய்கென்ன
மெத்தவிம்மித முடன்சகோதரன்றனை மிகவுவந்தன்போடு
நித்தநாண்மலர்த் துணைப்பதங்களைத்தனைர் நெஞ்சகத்தமைத்திட்டான். ()

இன்னவாறவ ரிருவருமமாரு மிதயமேல்வியப்பெய்தும்
பன்னரும்பல திருவிளையாடல்கள் பாருளோர்கொளவாற்றி
மன்னவிர்ச்சிசால் சந்திராதித்தர்வாழ் வரைநிகழ்புகழோராய்ப்
பன்னகத்தின்மே னடித்தருள்கிருட்டிணன் பாதபங்கயந்தோய்ந்தார். (௩௦)

இத்திறம்பட லூபசனுதனர்க் கினியமால்வசனுகிச்
சித்தியற்புதம் பலபடப்புரிவித்துச் செனிப்பிறப்பறுமேலா
முத்தியும்பெறச் செய்தனனுதலின் மூவுலகப்பாலும்
புத்திமிக்கவர் கோடல்பத்திமையலாற் பொருள்பிறிதொன்றுண்டோ. (௩க)

வேறு

பத்தியுடனே பிறந்ததுவே பல்கும்விளையாட் டயர்ந்திகந்தோய்
    பற்றிலுரூப சனுதனர்க்குப் பதுமையாற்பா யசப்பொருளீந்
தெய்த்துத்தளர்காற் கோபால னெனப்போந்தின்பா னல்கியொப்பி
    லினியவுருவ மமையிடஞ்சொற் றிருதாள்விருக்க மிசைகாட்டிச்
சித்திப்பெருக்கம் பலவுமவர் சேரப்புரிந்தாய் சிறியேன்மேற்
    சிறிதுன்கடைக்கண் ணேக்கிலுடன் றீரமருவிப் புன்புலனு
யெத்துங்கொடுமோ யையின்பிணிப்பை யினன்முன்பனிபோ லொழித்திடுவே
    னிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (௩௨)

உரூபசனுதனகதி முற்றிற்று

ஆ. கவி ௫௫௨௪

---

அறுபத்தேட்டாவது

# உச்சவியாசகதி

தக்கமெய்ப் புகழ்தோய்ரூப சனுதனப் பெயர்கொண்மேலோர்
மிக்கபத் தியினுலின்ப மேவிய சரிதம்விண்டேன்
பைக்கவி னரவப்பாயோன் பத்தரைப் பரமென்றுன்னி
மெய்க்கதி பெறுவியாசன் மேன்மைசற் றினியுரைப்பாம். (க)

நலம்பொலி யுச்சநாம நண்ணிடு கிராமத்தின்கண்
வலம்பொலி மறைக்குலத்தின் மைந்தனு வந்தோன்செம்பொற்
கலம்பொலி மாதோடில்லிற் கலந்தனன் வாழ்வானேனுஞ்
சலம்பொலி விடயவின்பந் தனின்மிகு விரத்தியுற்றோன். (உ)

தக்கசீர் வியாசநாமந் தரித்தவன் சகத்திலுற்ற
வொக்கலுந் துணையுந்தேவு மோங்குமா தவன்றுளன்பு
புக்கமெய்ப் பத்தரேயென் றுன்னிடும் புந்திகொண்டோன்
றெக்கபா ரியல்புதோய்தன் சுயநகர் வாழ்வுவர்த்தே. (ங)

அருணலப் பத்தரென்று மவிர்பிருந் தாவனக்கண்
மருவிமால் பூசையாற்றி மாதவன் றெண்டரேவல்
பெருகுமா தரத்திற்செய்து பிறங்குநா ளங்கண்வாழ்வோர்
பொருவரு வியாசன்பத்திப் பொலிவுநற் குணமுந்தேர்ந்தே. (ச)

சாலவும் புகழ்தருஞ்சீர் தனையுணர்ந் தவ்வூராள்செங்
கோலமை மன்விஞவிக் கொண்டபே ருவகையோனுய்ச்
சீலமார் வியாசன்றன்னைத் தெரிசனம் புரிவான்றன்னோர்
கோலமா ரரண்மனைப்பாற் கொணரச்சே வகரையுய்த்தான். (ரு)

மற்றவர் சென்றுகூவ மகிதலந் திரணமென்ன
வற்றவன் புகல்கின்றுனெற் கரசைக்கொண் டாவதொன்றின்
றுற்றவி ரிராதைகண்ண னுறவுமீண் டொருவர்தம்மைச்
சுற்றமென் றுன்னேனென்மன்பாற் றேயொரு நலம்வேட்டில்லேன். (சு)

மச்சையா தியதோய்மெய்யை மதித்தழி யுலகைநம்புங்
கொச்சைமா னிடர்கட்கன்னேன் கொற்றவ னுவதன்றிப்
பச்சைமா முகினேர்மேனிப் பகவனைக் கருதிப்பார்கொ
ளிச்சையற் றமையுமெற்கோ ரிறையவ னன்றுதேர்மின். (எ)

வல்லைநீர் சென்றென்மாற்றம் வகுப்பிரென் றோதிவாசக்
குல்லைதோய் மாலைத்தன்னுட் குறித்தரு மறைசெபித்திட்
டெல்லையி வின்பமேவி யிசையுநா ளவண்வாழ்மாந்தர்
செல்லைநேர் மேனியண்ண றிருத்தளி யதன்பான்மேவி. (அ)

இராசகி ரீடையன்பா லின்புட னடிக்கும்போதி
விராதைவே டத்தடன்ரு ளியைந்தகின் கினியுடைந்து
தாரதல மீதில்வீழத் ததியினில் வியாசமேலோன்
விராவுபே ரன்பினேடும் விரைவிலன் னதையெடுத்தே. (௯)

தக்கசி ரிராதையெற்குத் தருதலீ தெனக்களத்தின்
மிக்கவி ரெக்கியோப வீதமீ தணிந்துவப்பிற்
புக்கவர் பலருந்தேரப் புகல்வனிப் பூணூறன்னைப்
பக்கமிக் கணிந்துகாலம் பலபய னிலதொழித்தேன். (௧௦)

உற்றவித் ததிபயன்பெற் றுய்ந்தன னென்னுமாற்றஞ்
சொற்றமை வதன்முன்மேன்மை தோயுநற் பூணூலொன்றுங்
கற்றவர்க் கற்றகண்ண னருளினு காயநின்று
மற்றவன் களத்தில்வீழ மாந்தர்கண் டுவகைமிக்கார். (௧௧)

வேறு

வியந்தனர்து தித்தனர்வி யாசனுள மீதே
முயங்கியவொர் பத்தியைமு குந்தனரு டன்னே
நயந்தனர்பு கழ்ந்துமனே நண்ணிடலு மேலோன்
சயங்குலவு மோகையெவர் சாற்றிடுதல் வல்லார். (௧௨)

விண்ணவரு மேத்திசைவி யாசனெரு நாளிற்
கண்ணனேயு ளன்பொடலங் காரமுயல் போதிற்
பண்ணமைசி ரத்தினிடை பாகைபல காலு
மெண்ணமொடு சுற்றினனி சைந்திலது கண்டான். (௧௩)

மட்டிறுயர் பத்திமைம விந்தசின மேவிக்
கிட்டினனெ டிவ்வகைகி ளத்துவனெ னில்கால்
கட்டினன மைந்திலது காமர்பெற நீயே
யொட்டியவு வப்பினிலு ஞற்றிடுதி யென்றே. (௧௪)

வெளியணைய மஞ்சுநிகர் மேனிபெறு கண்ணன்
றளிரனைய தன்கைகொடு தரும்வகைசெய் தற்றுன்
மிளிர்தருவி யாசனுறு வெஞ்சினமொழிந்தே
துளிபெறுகண் மேவியின சொல்விடுவன் யானே. (௧௫)

யார்மிசைது வேசமிவ னெய்தியது கெட்டேன்
கார்நிகர ருட்டகைகொள் கண்ணன்மிசை யன்றோ
சோர்வுபெறு மற்பமதியால்வருமோர் தோடந்
தீர்தாவி யற்றுமுயர் செய்கையெது வென்றே. (௧௬)

என்றுதனே யேபலப னிந்தைகளி சைத்துத்
துன்றுமொரு பத்தனெடு தூயதளி யுட்போய்
நன்றுபொலி கிட்டினனே நாடுதலும் வண்ண
மொன்றும்வகை கட்டியுற லோகையொடு கண்டான். (௧௭)

சிரமிசைய மைத்தவிரு செங்கையொடு கண்ணீ
ருரமிசையு குத்தழலி லுற்றமெழு கேபோல்
விரவியவெ லும்பொடுள மிக்குருகி யன்பிற்
பரவசம டைந்துபுகழ் பாடிநனி யாடி. (௧௮)

காமருற வென்கைகொடு கட்டிலமை யாதென்
றேமகிமை மிக்கிலகு முன்கைகொடு செய்தாய்
மாமருவு ரத்தநினெர் மாயைவலி தன்னைச்
சேமமலி யோகர்சுரர் தேர்ந்திலர்க ளென்றால். (௧௯)

அவிச்சையிடை கோபமுத லாவனவ றேனின்
விவித்தமறி வேன்கொலென விண்டுயர்வி யாசன்
குவித்தகர னுநிகழொர் கொற்றமஃது ணர்ந்தோ
னவிற்றரிய வற்புதமு ணண்ணுபுது தித்தான். (௨௦)

மிக்கவுயர் பத்திமைகொண் மேதகுவி யாசன்
றக்கபிர சித்திகொடு தங்கிடுமொர் நாளிற்
றுக்கபல பத்தரொடு துய்த்தமையு மேல்வை
பக்கமனை யன்னமுத லானபரி மாறி. (௨௧)

பரிவொடுவி யாசனிலை மீதுபசு வின்பால்
சொரியவுள மேல்வெகுளி தோய்ந்தறிவில் பேதா
யுரிமைமலி பத்தரொரு வர்க்குமுத வாதே
விரிதருமெ னுதிலையின் மாத்திரம்வி டுத்தாய். (௨௨)

பற்றமைம னுளனெனெர் பந்தமதி னன்றே
வுற்றவொரு பந்தியினிவ் வஞ்சமுய லுற்றாய்
பற்றமிகு பாவமிது பாழ்நரகி னுய்க்குங்
குற்றமுள தென்றுணர்வு கொள்பெரியர் சொன்னர். (௨௩)

ஆதவின்மா பாதகம ணைந்தனைய ருட்டோய்
சீதான்மெ யன்பர்பணி செயவருகி யல்லை
மேதகுமெ னுதுகண்முன் மேவலைக ணத்திற்
போதரிச னம்பரிச னம்*புலவு தோய்க்கும். (௨௪)

என்றுபுக லக்கவலை யெய்தியய விற்பா
லொன்றுபுக லுழ்ந்தறனு முண்டிலள ழுங்கித்
துன்றுமிரு நாடுயிறு றந்தனளி ருப்பக்
குன்றுகுடை யென்றுகொடு கோவினம ளித்தோன். (௨௫)

மூன்றுபடு நாளிரவின் மொய்ம்புறுவி யாச
னூன்றுகன வுடணைத லுற்றொரப ராதந்
தான்றுணிவி னுற்றிலட வித்தயரும் வண்ண
மேன்றுறவு செய்தனைநி னேரிலையி னிற்பால். (௨௬)

* புலவு-நாகம்.

எடுத்தவள்வி டுத்திலளெ தேச்சையின ணைந்த
தடுத்தவகை யாலவளை யங்கிரி யென்சொற்
றடுத்திடினி ளுதுணைவு தன்னைநுக ரேனென்
றுடுத்தகட லாடையின ளொண்கணவ னோத. (உஎ)

விழித்துடனில் லாள்புடையின் மேவுபுநின் மீதிற்
பழித்தகையி லென்றுபக வன்பகர்தி றத்தாற்
செழித்தமனை சேர்தியுண ராதுசெய்தி யேனுங்
கழித்துநல மெய்துபரி காரமுய லென்ன. (உஅ)

கணவனுவல் சொற்கொடவிர் கற்புமலி கோதை
தணவருமு வப்பினொடு நாட்டுணைவ ணங்கிக்
குணமுடன்முன் போற்பணிகு யிற்றினள மைந்தா
ளணவுமுயர் பத்தர்செயல் யாவும்விளை யாட்டே. (உகூ)

அவாவறும்வி யாசனத ரும்பெறன்ம கட்காம்
விவாகமதி லெய்தினர்மி சைந்திடுபொ ருட்டாற்
றுவாரசன முற்றியது ணைக்கணரி பத்தர்
தவாதபசி கொண்டுபலர் சார்ந்தனர்வி னுவ. (௩0)

மிக்கமகிழ் வோடருள்வி யாசனவண் மேய
பக்கணமு முக்கவும னோர்பருக நல்கப்
புக்கவர்ம கிழ்ச்சிகொடு போந்தனர வேல்வை
தொக்கனர்வி வாகமுபல் சுற்றமென லானோர். (௩க)

காண்டலும்வி யாசனது காதலியு ளத்தின்
மூண்டதுய ரத்தள்கண வன்றன்முன முற்றே
யீண்டமைப வர்க்கெவகை யீதலுண வென்ன
வாண்டமையு முண்டியவ ரார்ந்திடவ ளிப்பாய். (௩உ)

கிருபைமய னுகியவிர் கிட்டினன ளிப்பான்
பருவரலுண் மேவலைப டார்ந்தறிதி யென்னப்
பொருவிலுயர் கற்பினள்பு குந்தவிடை நாடப்
பருவதமெ னக்குலவு பண்பினைய றிந்தாள். (௩௩)

மிக்கவும னத்திடைவி யந்தனள்க ளிப்பிற்
புக்கவர்ப லோர்க்குமுயர் போசனம ளித்தா
டொக்கவர்கள் யாருமுறு தூயர்நிலை தேர்ந்தே
தக்கவச னங்கொடுத போபலமென் றூர்த்தார். (௩ச)

இவ்வகைவி யாசனரி யின்றகைகொள் பத்திச்
செவ்வகைகொ டுற்றபிர சித்திநல மேவி
யவ்வயின மைந்துமுடி வானததி யின்க
ணெவ்வருமின் மாதொடரி யொண்பதம டைந்தான். (௩ரு)

வேறு

வானப்பிரத்தாச் சிரமத்தின் மருவிப்பிருந்தா வனத்தடைந்து
மன்னன்றனையுண் மதிபாதுன் மலர்ப்பொற்சரணஞ் சாணுகி
வானத்திருந்து வரும்பூணுான் மருவியொப்பில் பாகையுன்றன்
மலர்க்கைகொடுகட் டிடத்தெரிந்து மனைவிபிழைகண் டொழித்தொருவின்
கானப்பெருமா மறைமொழியாற் கலந்துமகண்மன் றவிவன்னங்
காதலன்பர்க் களித்தருளாற் கண்டவியாச னுளத்தன்பை
யீனப்புவிமீ துழனுயேற் கியச்சிறிதுன் னுளங்குறியா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௩௬)

உச்சவியாசகதிமுற்றிற்று

ஆகூ கவி ௫௫௬௦

—

அறுபத்தோன்பதாவது

# அரிதாசகதி

கற்புமன்புமிக் கமைதருமனையுடன் கலந்து
பொற்புநீளரி பதம்பெறுவியாசன்சீர் புகன்றேன்
வெற்புறழ்ந்தசீர்ச் சியாமானந்தச்சுவா மிகட
னற்புமிக்கசீ டன்னரிதாசன்மாண் பறைவாம். (௧)

சற்குணப்பொலி வமையருட்சீரரி தாசன்
பொற்குவட்டையொப் பாமனம்புணர்சியா மானந்
தற்குடற்குயிர் கட்கிமையூசிதோய் தந்தி
னற்குணஞ்சிறந் திடப்பணிவினடமிக நவிற்றி. (௨)

பொருவில்சற்குரு பானடித்துணையகம் புறத்து
மொருகணப்பொழு தோவுருதுபாசனை யுஞற்றி
மருவுநாள்பல வதிந்துதேசிகனரு மதியாற்
கருதுதன்மனத் தினுக்கிசைவாமொரூர்க் கண்ணே. (௩)

அணிகொள்பன்னக சாலையொன்ருற்றியாண் டமைந்து
மணிகொள்வண்ணனைப் பூசைசெய்தொப்பின்மந் திரத்தைக்
திணிகொள்சிந்தையி லோவறச்செபித்தவண் சேர்மால்
பணிகொள்பத்தரைப் பணிந்துபரானந்தம் பதிந்து. (௪)

தெய்வமுங்குரு பானுமொன்றெனுமகத் தெளிவுற்
றுய்வதற்கமை சீடர்பக்குவமியைந் துரைக்கு
மெய்வழக்குடன் குலவுநாள்சுரர்மலர் விரைபோற்
கைவரும்பல்சித் தியின்வலியாலிசை கமழ்ந்தான். (௫)

இன்னவாறிய ஞானியிலிவனருட் குருவாங்
கொன்னமைந்தசி யாமானந்தப்பெயர் கொண்டோன்
றன்னணித்திரு மடத்தின்மானியநிலந் தன்னை
யன்னமார்பணை யத்தினபுரியினை யாளும். (சு)

அரையனீந்திடு மைந்தனுமிளவர சானே
னுரைசெய்தம்பிலேச் சக்குலத்துறுங்குணத் தோடு
கரையில்வன்மதத் துவேசமுமெவனமுங் கலந்தோன்
கரையமைச்சரா தியர்கள்சொற்கொண்டிலன் கவர்ந்தான். (எ)

நண்ணுசம்பவத் தைச்சியாமானந்தர் நலமிக்
கண்ணுசீடனன் கோர்தரமுடங்கலொன் றனுப்ப
வெண்ணுமிம்முடங் கல்கிடைத்திட்டபின் யாதும்
பண்ணுறுமலை தென்புடைபடரெனப் பகரும். (அ)

முடங்கலன்னவன் புசித்தெழுமுடிவினி லெய்த
விடங்கொள்கைக்கொடு கண்ணிலொற்றுபுசிரத் தேற்றித்
தொடங்கலாங்கரங் கழுவிடுதொழிலையுந் துறந்து
நடந்துதேசிகற் கண்டுபோற்றினன்செய னுடி. (கூ)

என்னையிவ்வகை வந்தவாறெனக்கடா விடலும்
பொன்னையொத்தவிர் திருமுகப்படிபுரிந் தனனென்
றன்னையொத்ததே சிகன்புடையோதவற் புதனு
யுன்னையொத்தமா னுக்கர்யாருலகிலென் றோதி. (க0

மனமகிழ்ச்சியிற் றழுவினன்வாய்கர மண்ணி
யனகதேசிகற் பணிந்துசென்றவனப கரித்த
கனமுறும்பொருள் யாவையுமீட்டிவண் கலப்பே
னெனவிளம்பியா னத்திவர்ந்திறைபவை யெய்த. (கக)

அமையமன்னதி லவண்குலாவியமதி யமைச்சர்
கமைகொள்சிரரி தாசனைக்கண்டுகை கூப்பிக்
குமைவினேடுரைப் பாரிறைமுன்குறு காதீர்
சமையமோர்ந்துரைத் தேமுடித்துத்தரு குவமால். (கஉ)

வெய்யகோலிறை துவேசன்வெஞ்சினத்தவி வேகன்
பையவாற்றுவ மவையினுட்படாலி ருமது
செய்யவாச்சிர மத்தணிவீரெனச் செப்பத்
துய்யனுட்புக றதலியதுணிவினைச் சூழ்ந்து. (கங)

முன்னணைந்திறை ப்ராலிரிதாசர்கோண் மொழிய
வன்னவன்றிறஞ் சோதனைசெய்வனென் றமையுந்
தன்னதோரர சுவாவைவாய்தலினிறுத் தச்சொற்
றென்னசெய்குவன் காண்டுமென்றரமியத் திவர்ந்தே. (கச)

களியகத்தினுண் மிக்குநாடினனது காலை
யளிகொடாசனூர் யானம்வாயிற்புடை யணுகக்
களிறுவன்சினங் கொடுபிளிறியததைக் கண்டே
யெளியர்காவுவா ரஞ்சினர்நிலத்தில்வைத் திரிந்தார். (கரு)

பொறிகளின்வழி திரிமனமானபோ தகத்தை
யறிவதானபே ரங்குசத்திறமைகொண் டடக்கிக்
குறியதாநிகழ் குருபதத்துணையிடை கூட்டி
மறிதராச்சுகத் தமையரி தாசனுண் மகிழ்ந்து. (கசு)

அன்பினலரே கிருட்டிணவரேகிருட் டிணவென்
றின்பினேடுதன் மனத்திடைசெபித்தியம் பினனுய்
முன்பியைந்தவத் தியைவிளித்திடச்சென்று முறையிற்
கொன்பிறங்கரி தாசன்றன்குளிர்மலர்ப் பதத்தில். (கஎ)

தனதுமத்தகந் தாழ்த்துடன்வணங்கிடத் தாசன்
மனதுவப்பொடங் கதுகொளக்கிருட்டிண மறைபைக்
கனமுறப்புகன் றேதுழாய்மாலையுங் களத்திட்
டனகனின்பெயர் கோபாலதாசனென் றறைந்தே. (கஅ)

இன்றுதொட்டோர்தூர்க் கிருத்தியநீயியற் றூதே
யென்றுமன்பர்தம் பணிபுரிந்தமைகென விபந்தா
னன்றுநன்றெனச் சிரந்துளக்குபுநடந் திடலுந்
துன்றுமற்புதங் கண்டுளத்துட்களி துளும்ப. (ககூ)

மாடமேவிய மிலேச்சமன்னவன்புவி மருவி
யீடகன்றதா சற்குநன்முகமன் மிக்கியம்பிக்
கோடலானபூ மிகளைநல்கியதலாற் கொண்ட
தோடநீங்கிடப் பின்னுமீந்திடும்வகை சொன்னான். (உ0)

அன்னவாறிய லமைச்சர்சாசனம்புரிந் தளிப்பக்
கொன்னமைந்தசற் குருபரன்றிருமுன்பு குறுகி
மன்னவைப்புடை நிகழ்ந்தசொற்றளித்தடி வணங்கித்
தன்னதாச்சிர மத்திலெய்தினனரி தாசன். (உக)

வேறு

பகர்கோபாலதா சப்பெயர்பெற்றவிர் பகடன்றுமுதலாக
நிகழும்பாகர்கீழ்ப் படிதராதிட்டம்போ னெறிபடர்ந்ததுவாகித்
திகழுங்காடிபுக் கரிசிகோதுமைமுதற் செப்புபல்பொருள்கொண்டு
துகளில்சாதுக்கட் களித்துமற்றவர்தமைச் சுமக்குமாதொடங்கிற்றால். (உஉ)

ஆனபான்மைகண் டமைவியாபாரிக ளதிகசங்கடத்தோராய்
மேனலம்பொலி தருமரிதாசன்பால் விண்டிடவுடன்கூவி
கானவிற்றுப தேசம்விட்டிவரெலா நலிவுறச்செயும்பண்பாற்
றீனர்சாலவும் வருந்தினரிவர்க்கிடர் செய்தறஞ்செயனன்றே. (உங)

இனியிவ்வாறியற் றலையெனவவ்வகை யியைந்துமெய்யடியாரைக்
கனிவுடன்சுமந் தேகுறூற்பணிசெய்து கவின்றதிச்செயல்கேட்டே
னனிவியந்தத்தி ஞபுரிமன்னனல் வாயைமுன்கொணர்வித்தே
யினிதுபக்கண முதவினனென்றுண திருந்திடுஞ்செயனோக்கி. (௨௪)

ஐயமிக்கநெஞ் சினன்பினுளீந்தன னன்றுமார்ந்திலதுற்ற
மெய்யறிந்திட வவாவிப்பின்னுளினும் வியப்பொடீந்தனனன்றுந்
துய்யகோபால தாசனென்றுயினுந் தொட்டுறுமையின்வாடிச்
செய்யகங்கையி லாட்டுவித்திங்ஙனஞ் சேர்க்குதிரதன்பின்னே. (௨௫)

உற்றவின்னதன் செய்கைதேர்ந்திடுதுமென் றுரைத்துப்பாகரையேவ
வற்றமைத்தனர் வரநதிபடிந்தபி னத்தியங்கரையேறிப்
பற்றமைந்ததன் மாயையாக்கையினிடை படியச்செய்வினைப்பாச
முற்றறுத்தவிர் கிருட்டிணன்பதமெனு முத்திவான்கரைசேர்ந்த. (௨௬)

அதனைக்கண்டமை மாந்தர்பற்பலர்களு மகத்திலெல்லையிலாவற்
புதமிக்குற்றுயர் புதனைத்தந்தவன்றனைப் பொலிவுறுகுடையாக்கொண்
மதனைத்தந்தவ னடியவர்தம்பெரு மான்மியம்விதந்திட்டா
ரிதனைக்கேட்டுடன் மிலேச்சமன்னனும்பத்தர்க் கினியனுய்வாழ்ந்திட்டான்.

வன்பராயினு ருறவர்க்குந்தம்புடை மருவியசரக்காகுந்
துன்பமேதரும் வழக்கெனக்கிருட்டிணன் றுணையடிதொழுதேத்து
மன்பராயினு ரிகல்பொருந்தினர்க்குந்தா மடைதருபொருவில்லா
வின்பமேயருள் வாரெனும்பெரியர்சொற் கிக்கதைகரியாமால். (௨௮)

கணம்பொருந்துகூட் டுறவினன்மதம்பொழி கடகரிதனைக்கண்ணன்
மணம்பொருந்துவான் கதிபெறவைத்திடு மலியநட்குருபத்திக்
குணம்பொருந்தரி தாசன்மற்றோர்தனுக் கொண்டிடற்கமையாதாம்
விணம்பொருந்திடுஞ் செயற்கொருபாவிங்ஙன் விண்டிடன்மிகையாமால். ( )

மதம்பொழிந்திடும் யானையுஞ்சற்குரு மந்திரஞ்செவிபேற்றே
யிதம்பொருந்துமெய்ப் பத்தர்தம்பணிசெய்திட் டிறைபதமுறக்கண்டுஞ்
சதம்பொருந்துநற் றுணைமனைசுதரெனச் சகத்துழன்றுழிமாக்கள்
கதம் பொருந்துவல் விலங்கென்பேமல்லது கழறவொன்றமையாதே. (௩௦)

வேறு

கருணைக்குரவன் றிருமுகத்தைக் கண்டகணத்தி லுண்டகாரங்
கழுவாதோடிக் கைதொழுது கழறுமேவல் சிரத்தமைத்தே
மருளுந்தியவம் மிலேச்சமன்னன் மனைபோந்தணிவா யிற்கணமை
மத்தகசம்பத் திமைபொலிய மாண்கிட்டிணமந் திரம்வகுத்துத்
திருமானியங்கொண் டிபம்வைகுந்தஞ் சேரச்செயரி தாசனுளந்
திகழுமுண்மை நிலையென்னுட் சிறப்பக்காட்டி மூலமல
விருளைக்கடந்து பேரின்ப மெய்தப்புரிய விசைந்தருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௩௨)

அரிதாசகதி முற்றிற்று

ஆ கவி ௫௫௯

---

எழுபதாவது

## சதனபத்திகதி

மிதமில்பேருட் சற்குருபத்தியில் வேலைநோரிதாசன்
கதமிகுந்திடு மியானையினேடருட் கதிபெறுங்கதைசொன்னே
னிசமில்வெம்மிலேச் சக்குலத்துதித்தரிக் கினிபபத்தனுவாழ்ந்த
சதனன்பத்தியின் பெருமையுமாந்தர்க டவங்கொளப்பகர்வேனே. (க)

இகலும்வெம்மிலேச் சக்குலத்தினிலுட லெடுத்தவனவன்மேலாம்
பகடுணர்ந்தரு ளாதிமூலப்பெயர்ப் பகவன்பத்திமைபாநற்
றகவமைந்திடற் காற்றுபுண்ணியத்தினைச் சாற்றுவன்முன்னுளி
லிகமிசைப்பிரா மணவுடற்கொண்டுநல் லியமமாதியநீத்தே. (உ)

உறங்கிடாப்பக லிற்செயுங்களவென வுறும்வியாபாரஞ்செய்
தறங்கணுவினு நினைத்திடாதமைந்தன னுயினுமவனுள்ளி
னிறங்குலாவுமெய்ச் சாரமாய்நிலவொரு நியமங்கொண்டிலகுற்றான்
றிறங்குலாஞ்சாளக் கிராமபூசனைவினை செய்திலதொன்றுற்றான். (ந)

இன்னவாறியல் வான்மிகுவட்டியெய் திடுமெனநினைத்தானுப்
பொன்னவண்கொளோர் மாமிசவிற்பனை புரிமிலேச்சனுக்கீந்தா
னன்னவன்பொரு ளுரைத்திடுதவணையி லளித்திலனீட்டித்தான்
சொன்னமீந்திடு மறையவன்வயோதிகந் தோய்ந்துயிர்துறக்குங்கால். (ச)

துருக்கன்றன்னையெண் ணுபுமரித்தனனது தொடர்பிறைலவனுக்குப்
பெருக்கவாவுள மைந்தனுத்தோன்றினன் பிறகவன்றனவானுத்
திருக்கவின்றிடு பாலற்குச்சதனப்பேர் செப்பினனிவனல்லால்
வருக்கமார்சுதர் பிறிதிலான்மிக்கவாற் சலியமேய்வளர்த்துற்றான். (ரு)

பொன்னமைந்திடி லுயர்பதி புண்ணியம் புரிவருத்தமரன்றித்
துன்னலாம்பசு புண்ணியத்தழிக்குநர் சொல்லுமத்திமருற்ற
தன்னதோர்சுற்றப் பொருட்டொழிப்பவர்கள தமர்கள்பத்தியிலாதே
யின்னவாறிழுப் பவரதமாதம ரென்றுசாற்றிடலாமால். (சு)

இன்னவாவளர்ந் திடுஞ்சதனன்றனக் கீரறுவயதெய்த
முன்னவிற்றுசா ளக்கிராமபூசையின் முதிரவாவமைத்தோனுத்
துன்னலாஞ்சிறு பாலரொடாடல்க டொடங்கினன்வாழ்நாளி
னன்னலங்கொளோர் சம்புடஞ்சாளக்கி ராமத்திற்றெடுகிட்ட (எ)

கடவுடன்னைநம் பினவர்கைவிடப்படா ரெனக்கழறிடுஞ்சொன்மெய்ப்
படவுமின்னதென் றெய்வமென்றுவப்புடன் பத்திகொள்பவன்முன்னுட்
டிடவுபாசனை செய்தவனென்பதுந் திகழமற்றதைநாடிக்
கடவுளுதித கிட்டலாற்பாக்கியங் கலந்தனன்யானென்றே. (அ)

கழுத்தணிந்துதன் மனைக்கனுற்றேகையங் கடலிடைப்படிந்தானைப்
பழுத்தபத்தியிற் பூசனைபுரிந்துதன் பரம்பரைத்தொழிலாகும்
வழுத்ததைந்தமா மிசவியாபாரத்தை வயக்கியுந்தயைசாலச்
செழுத்தகைத்தனெஞ் சமைந்துயிர்செகுத்திட றின்னலாதியிலானைப். (௯)

விளங்குநாளன்னை தந்தையுமிறத்தலின் வித்தமேனசையற்றே
களங்குலாந்தொழி லதைவிடுத்தன்பர்தங் கனபணித்துறைநின்றான்
வளங்குலாமவன் செய்கைகண்டன்பர்கண் மருவலாயினரோர்நாட்
டுளங்குறுமனத் தோடவன்பூசிக்குந் துணையினிலொருதொண்டன். (க0)

மருவிவிம்மித மிகக்கொடுமிலேச்சர்தம் வங்கிசத்துதித்தாய்க்குப்
பொருவில்சாளக்கி ராமபூசனைசெயப் புகல்விதியின் றற்றால்
வருவதாம்பய னென்றிலேதோடமே மருவிடுமதனாலெற
கருடியென்றலுஞ் சதனனஞ்சினனவற் களிக்கவுட்களிப்பெய்தி. (கக)

கொண்டணைந்தவ ரொடுசகநாதத்திற் குறுகியானைந்தாட்டிப்
பண்டகச்சுத்தி செய்துமாமறைவிதிப் படிவழாதாராதித்
துண்டகங்களித் திருந்தனனிரவிடை யுறங்குகாலையின்மாலோர்
தொண்டனைத்தவன் கனவிற்றோன்றுபுசினந் தோய்ந்துரைத்திடுகின்றான்.

அறிவின்மூர்க்கவென் றனையம்மிலேச்சன்பா லளித்தியின்றேனிற்குச்
செறியும்பற்பல துயர்களென்றலுமுளந் திகைத்தெழுந்திதுநம்முள்
வெறிகொளும்பிராந் தியெனுமெண்ணங்கொண்டு மீளவுந்துயில்கொண்டான்
பொறிகொண்மார்பன்பின் னும்புகலவுமஃது பொருட்படுத்திலன்றாங்க. ()

அன்னகாலவன் குருபரன்றனக்குமிக் கச்சமார்கவெய்த
வென்னகாரண மென்றுசீடனையழைத் தியாவர்சாள்கிராம
மன்னவாங்கிவர் தனையதையவர்புடை வல்லையீந்தணெகென்னப்
பன்னலாமொழி கேட்டுடன்சதனன்பாற் படர்ந்துநல்கினன்சொல்வான். ()

பத்தரிற்பெரி துத்தமனீயதாற் பரிவின்மற்றிதுகொண்டுன்
சித்தமாருவப் போடுபூசனைசெய்தி திருந்ததிகாரந்தோய்
மெய்த்தவத்தனீ யல்லதுபார்மிசை வேறொருவருமின்றென்
றத்தமீதளித் தேகலுஞ்சதனனுள் ளதிமகிழ்வுற்றோனைப். (கரு)

பகவன்றன்மிசை யமைந்தவாற்சல்லியப் பண்புணர்ந்துவப்புற்றே
யகநிலாவுதன் பொருளெலாஞ்சாதுக்கட் களித்துயிர்த்துணையாகு
நிகரில்சாளக்கி ராமங்கைக்கொடுநகர் நீத்துடற்பற்றற்றே
சுகமுடன்றிரு மால்வளர்தலமெலாஞ் சுற்றியோரூர்மேவி. (கசூ)

இசிக்கும்வன்பசி சகிக்கிலன்பிட்சையேற் றிடவொரிற்புகவங்கண்
வசிக்குமங்கையம் பருவத்தள்சதனன்றன் வளர்சவுந்தரியத்தை
யசிக்குநேர்தடங் கண்களாற்பருகின ளக்கணத்தகல்வான்றோய்
சசிக்குடைத்திரு மகன்கரங்கொண்டுள சரமவ ண்மிசைபெய்தான். (௧௭

நாணமாதிய காவன்முற்றொழிந்தன ணவில்வளிங்ஙனம்வாழ்தி
மாணவிர்ந்தநின் வடிவுகாண்டலுமெனோர் மனநின்றன்வசமாயிவ்வயின்
றாணன்றிம்மனை யோடுநானும்முன துடைமையேயுன்மீதிற்
பூணலாம்பெருங் காதல்கொளெனைவிடேல் பொருந்திவாழ்ந்திடுகென்ன. ()

பள்ளமார்புன விற்சிறிதுந்தடை பட்டிடாதெழுங்காம
வெள்ளமீதுழல் பேயனுள்புகன்றசொல் வினவுபுசதனன்று
னுள்ளமேல்வருந் தினனன்னையசப்பிய வுரைகளோதினைநன்று
கொள்ளலாநின்னுற் றிரவியமனையினுற் கொள்பயனெனக்கில்லை. (ககூ)

உற்றநாயகன் றேய்வினுன்மாதருக் கோர்கணச்சுகமாகு
மற்றநாயகர்ப் புணர்தரிற்றுன்பலால் வருசுகஞ்சிறிதில்லை
துற்றநாயக னோடறம்புரிந்தனை சுகமுடன்வாழ்கென்னச்
சொற்றல்கேட்டலும் பாவவல்லரக்கியாந் தோகையிவ்வணமுன்னும். (உ0)

நமதுநாயகற் கஞ்சியிவ்வகையிவ னவின்றனனென்றுன்னிக்
குமரர்தம்முயிர் கொள்ளைகொண்டிடவரு கூற்றனுண்மனைபுட்போ
யமர்தலானநா யகனயர்ந்தனந்தல்செய் தமைதல்கண்டுடன்வாளாற்
சமனதூர்புகுத் தனள்புறஞ்சார்ந்துறுஞ் சதனன்பாற்பகர்கின்றாள். (உக)

எனதுநாயகற் கொன்றனனிதுகொடுன் னிடமெனக்கமைவுற்ற
கனபிரேமைதேர் குதியிதுகுறித்துனுட் கலங்கலையிவண்டோயில்
வினவுவாரிலை வருதியென்றிடவிடி வினவுமாசுணமேபோன்
மனமுடன்றன்மெய் நடுங்குபுசதனன்றுன் மறலியன்னவட்பாரான். (உஉ)

ஓடலுங்கொடும் பாவிமற்றவற்றொடர்ந் தோடியன்னவனுவி
யோடகன்றிடச் சசிக்கிலள்வஞ்சகி யோவெனக்கரைந்தாளாய்
நாடமைந்துள மாந்தர்காளெனக்குறு நடலைவந்தறிமின்கூ
டோடமிக்கமா பாவியென்னுயகற் றொலைத்தெனைத்தொட்டீர்த்தான். (உங)

என்னவோதிட வினவினரிவள்சொன்மெய் யேயெனச்சதனன்றன்
பின்னணைந்தனர் பிடித்தடித்*திரச்சினிற் பிணித்திறைபாலுய்ப்ப
மன்னவன்சினந் துறுபொய்வேடங்கொடு மாந்தரைவஞ்சிப்பா
னின்னவன்கரங் களைத்துணித்தயனக ரெய்திடவிடுமென்றான். (உச)

வேந்தனேதிய வாபடர்புரிதலு மிக்கசீர்ச்சதனன்றான்
போந்தமுன்வினை யீதெனக்கொண்டுதன் புந்தியுட்சகித்தானுய்ச்
சாந்தமார்மனத் துட்சகநாதனைத் தரிசனம்புரிந்தன்பால்
வாய்ந்தசீர்ச்சக நாதநற்புரிக்கயன் மன்னினனிரவெய்த. (உரு)

தலமொன்றிற்கிடந் தருட்கிருட்டிணனடித் தாமரைநினைத்துற்று
னலமொன்றன்றிர வினிலருச்சகர்தங்க னுவிடைசெகநாத
னிலவிநாளையீண் டெனக்கதிபிரியனு நிகழ்தருமொருபத்தன்
குலவுகைகளற் றெய்துமீயிர்களெதிர் கொண்டுபசரித்திட்டே. (உசு)

* இரச்சு - கயிறு.

யானமீதமைத் திவண்கொணர்ந்திடுதிரென் றியம்பலுந்துயினீங்கி
மேனலம்படு விபவமொடுற்றனர் வேலையன்னதிற்பத்தன்
வானமேவினர் புகழ்வளம்பதியதின் மருவிடவுவப்பாகிக்
கானமாமறை முழக்கொடாசிகள்பல கழறினரெதிரெய்தி. (உள)

ஒப்பில்போருட் பத்தர்சீர்யானமீ தூர்திர்மெய்ச்சகநாதன்
செப்பிடும்பெருங் கட்டளையென்னவத் திறம்வினவிமிக்கஞ்சித்
தப்பின்மெய்த்திருத் தொண்டனத்தகையநற்றரமெனக்கிலையென்றே
யெய்ப்பிற்பார்மிசை வீழ்ந்தனன்வணங்கலு மெழுந்தமெய்காமாதோ. (உஅ)

அன்னபான்மைகாண் டலும்பரவசத்தரா யனைவருமவற்றூழ்ந்து
மின்னருட்பெருந் தொண்டர்பத்திமையையும் விளங்குசீர்ச்செகநாத
னன்னலங்கொள்பே ரருளையும்வாழ்த்தினர் நனியவற்சிவிகைக்கண்
மன்னவேற்றினர் நகர்வலம்புரிந்தருண் மாயனாலயத்தெய்த. (உகூ)

கருணையங்கட லாஞ்சகநாதனைக் காண்டலும்பெருந்தொண்டன்
பெருகிடும்பர வசத்தனாயடியறு பெண்ணைபோனிலமேல்வீழ்ந்
துருகுமன்புட னிருகணீரிறைத்திட வுடல்புளகங்கொள்ளப்
பருகுமாரமு துறழ்துதிபலபல பாடியின்பமைந்தானே. (௩0)

பற்பனுட்செக நாதநற்பதியிடை பரிவில்வைகுபுபின்னு
ளுற்பலச்செழுந் தடப்பிருந்தாவனத் துற்றவண்வதிந்தீற்றிற்
கற்பகச்செழு மழைபொழிந்தும்பர்கள் கனிதுதிபலசாற்ற
வுற்பவங்கெடுத் தருளுமெய்ப்பரபதத் துற்றனன்வினையற்றே. (௩க)

பத்திமான்மிய மென்மிலேச்சக்குலப் பாலனுஞ்சதனற்கு
நத்தியோகியர்க் கெய்தரும்பெரும்பத நல்கியதிதனாலே
நத்தியைந்தகை மாற்குளப்பிரீதியை நண்ணிடச்செயலுள்ளச்
சுத்தியல்லதின் டியர்குலத்துதித்திடு தூலசுத்தியன்றன்றே. (௩உ)

வேறு

கொலைசெயவிந்தற் குக்கடன்பொன் கொடுத்தபாவத் தான்மறையோர்
குலநீத்தவன்றன் சேயாகிக் குலவிமுன்செய் தவப்பயனு
னிலையார்சாளக் கிராமத்தை நேர்ந்துபூசை புரிந்துலகை
நீத்துச்சஞ்சா ரம்புரிகா னீசத்துவஞ்சா லலகையினும்
விலைமாதினுந்தாழ்ந் தாளாற்கை வெட்டுண்டேசெய் பிராரத்த
வினையென்றுளத்துட் சகித்துனருண் மிகையாற்கரங்கள் கொடுகதிசே
ரெலைதீர்சதன பத்தனுளத் திசையும்பத்தி ஞானநல்கா
யிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (௩௩)

சதனபத்திகதிமுற்றிற்று

ஆகூ கவி ௫௬உ௫

---

எழுபத்தோன்றுவது

# சோசீபத்திகதி

பொருவில்சா ளக்கிராம பூசையாற் சகநாதன்றுண்
மருவிய சதனன்பத்தி மாட்சிசற் றுரைத்தேனிப்பாற்
குருபரன் பரமென்றேத்துங் குணமலி சோசீபத்த
னிருநிலத் தாற்றுமாட லேன்றமட் டியம்புவேனே. (க)

துலங்குசீர்க் கௌடநாட்டிற் றேய்தருசோசீநாம
மிலங்குமெய்ப் பத்தன்றுன்ப மில்பிர மசாரியாகி
நலங்குல வோராசான்பா னண்ணியன் னவனைபன்பிற்
புலங்குளிர் கண்ணனென்னப் போற்றினன் பணிசெய்துற்றுன். ()

உடையவக் குரவனென்று மெரப்பில்யோ கப்பயிற்சி
நடைகொடு மனேலயச்சீர் நண்ணிடும் படிநாடோறு
மடைவுடன் பிராணுயாம மாதிய வுளுற்றிவர்தான்
றடைபடா திவ்வாறுற்றுந் ததியினிற் றிவசமொன்றில். (ந)

வேறு

தன்னுடைச்சீட ஞனசோசீபத் தனையழைத்திங்ஙனம்புகல்வான்
மன்னுமென்யாக்கைக் கினியவசான மருவிடும்வல்லையானிதுமட்
டுன்னுயர்யோக சாதனைபுரிந்து முற்றதோரென்மனந்தூய்மை
துன்னுமேகாந்த பரமசாந்தியினைத் துதைந்திலதூழ்வினைத்தடையால். (ச)

கருதுமென்மனமே காக்கிரத்தன்மை கலந்திடாமையின்மறுசென்ம
மருவிடுமென்கை மறுக்கொணுநிசமால் வகுத்திடுதானமாயோகம்
பொருவின்மெய்ப்பத்தி யாகஞானமுதற் புகன்றசற்கன்மங்கள்யாவும்
வருமனேலயமெய் திடற்பொருட்டமைத்த மார்க்கங்களாகுமென்றுணர்வாய்.

இத்தனைமார்க்க மமைத்ததெற்றினுக்கென் றிடுதியேலீன்றிடுகுரவர்
மெய்த்தகைச்சுதர்தம் பருவமொத்துண்டி வினைகளையமைத்திடுஞ்சீல
மொத்தருட்பகவ ஞன்மபக்குவங்கொண் டுளுற்றியவாமெவர்க்கெதனிற்
சித்தமீதாவ லமைவதோவதனைச் செய் திடவேண்டுமிங்கிவற்றில். (கூ)

எதுகொடாயினுமம் மனேலயமெய்தி லெப்திடானவன்பிறப்பிறப்பி
லதுலமாரன்ன செயன்மிகமுதிரு மறிவுளார்க்குரியதென்றுலும்
புதுமைதோய்தெய்வ பத்திவிராகம் பொருந்தினேர்க்கெளிதிலெய்துமென
முதுமைசால்யோக சாதனர்பலரு மொழிந்துளாரெனக்கியோகத்தில். (எ)

நசைமிகவமைந்த தன்மையாலதனி னனிமுயன்றனனெனதுடலுக்
கிசைதருமவசா னப்பொழுதினிலே காக்கிரசித்தமெய்தியதேன்
மிசைபொலிபரம பதங்கிடைத்திடுமெவ் விதமுருதுலகபந்தமுறில்
வசைபொலிபுவியிற் பின்னருஞ்செனிக்க வருமிதனுன்மதியுடையோய். (அ)

அத்தகியென்ற னருகமைந்தறிவா லறிந்தெனக்குத்தமபதவி
சித்தியாகிடற்கேற் றிடுபிரவிருத்தி செய்தியென்னுயிர்கதியெய்தி
லொத்தயாவருங்கேட் டிடக்கண்டாநாத முறுமிலதேலின்றுமப்பா
னுத்தமநீயென் னுயிர்நலமுறுஞ்சீ ருஞற்றிடவேண்டுமென்றுரைத்தே (கூ)

குருபரன்யோகத் தமர்ந்தனனச்சீர் குலவுமாணாக்கர்யாவருங்கேட்
டுருகிடுமுளத்த ராயினரிவ்வா றொழிந்தனசிலதினமொருநாள்
பொருவிலாரியன்சோ சிபத்தன்றன்னைப் பொருந்தொருகாரியப்பொருட்டாய்ப்
பெருகுசேனுளவோர் நகர்க்கனுப்பிடலிற் பெயர்ந்தனனத்தகுதுணையில். ()

குரவனுக்கிறுதி கூடலிற்றுன்பங் கொண்டயர்ந்தனனதுபோதிற்
பரவியற்பலரு மிக்குபசாரம் யண்ணினரவைகளாற்சாந்தம்
விரவிடாதாகி மீண்டுமேன்மேலும் விருத்தியெய்திடலினுள்ளயர்ந்தே
யுரமிகுந்திடுமுட் டினஞ்சமப்படுமா றேங்குமாச்சிரமநின்றொருவி. (கக)

வெளியிடத்தணையிட் டதிற்குருபரனை மேவவைத்தனரதுகாலை
விளிதரப்புரிவே தனைசகிக்கிலது வெளியெலாம்புரண்டுமோல்கமலக்
குளிர்மலர்ப்பாத தியானபத்திமையுட் குறித்திடாதேநடைபொருந்தும்
வளியினைக்கொண்டன் னவனவண்பொலிமா மரத்தடியினின்மல்லாந்தமைந்தே

ஆங்குறுகனியின் மேனிலைவமைத்திட் டாவிநீத்தனனதுகாலை
யேங்குறுசீடர் நாடினர்கண்டை யின்னொலிகேட்டிலர்குரவ
னீங்குறுசெயலாற் றளர்ந்தழுதிரங்கி நிகழ்திருமேனியைப்பூசித்
தோங்குறுசமாதி யியற்றினர்பின்னு ளுற்றனன்சோசிமெய்ப்பத்தன். (கங)

சம்பவமுணர்ந்துட் சகித்திடான்றரைமேற் றூலமொத்தயர்ந்துவீழ்ந்திடலுங்
கும்பலாரடியார் பலவுபசாரங் குயிற்றிடச்சோகநீங்கினனு
யெம்பரனகன்ற தெவ்விதத்தறிய விசைத்திரென்றனன்செயலிசைத்தார்
தெம்பமைகண்டா னாதமார்த்ததுவோ செப்புதிரெனவில்லையென்றார். (கச)

உடன்மரத்தடியிற் படுத்தனனேக்க வுச்சியிலொருகனிகண்டான்
றிடமனத்துடன்சென் றதைப்பறித்தரியச் செழுங்கனியினின்றொருகிருமி
புடவிமேல்விழ்ந்து மரித்ததக்கணத்திற் பொருவில்கண்டாமணியொலிப்பக்
கடலெனவார்த்துப் பத்தர்கள்வினவக் காரணமுரைத்திடுகின்றான். (கரு)

குருபரனுடனீத் திடுந்ததிவிழிநேர் கோசரமானதிக்கனியான்
மருவியகன்ம பலபோத்தாவாகு மனமிதைவாஞ்சைகொள்பண்பாற்
கிருமியாயிதனை நுகர்தரும்படியுட் கிடைத்தப்புழுவிதோவாவி
யொருவுபுகிடந்த தொப்பில்சற்குரவ னுன்னியபரபதத்தடைந்தான். (கசு)

ஆதலிற்கண்டா நாதமெய்திற்று ருயிர்க்கிரளாக்கைவிட்டகல்காற்
காதலித்திட்ட பொருளெதோவதுவாய்க் கலப்பவென்றோதிடுமறைச்சொற்
போதருசெயலின் பிரத்தியக்கமதாய்ப் பொருந்துதிட்டாந்தமாயிற்றூன்
மேதகுமனித ருடல்விடுங்காலை வேட்டவாறமைவர்களென்ன. (கஎ)

கருணைமெஞ்ஞானக் கடலருட்கண்ணன் கவின்றவேதாந்தசாத்திரத்தின்
மருவியசார பூதமாகியகீ தையில்வகுத்துள்ளனனதனு
லருமைமானிடர்யா வருமனேலையப்பே றடைதலேகன்மையாமீது
சருவசாத்திரசம் மதமிதனுலே சார்தராப்பொருளொன்றுமின்றே. (௧அ)

மனமுதித்திடலே பந்தமற்றிடலே மாண்புறுமுத் தியாமிதனுற்
கனதுயர்ப்பட்டு மனேலயப்படுத்தல் கருத்துளார்செயுஞ்செயலென்று
வினவினர்க்குரைத்துச் சோசிபத்தன்றன் மேதகைக்குருபிறிவாற்ரு
னனகபுண்ணியதீர்த் தந்தலங்காண்பா னகன்றனனவ்வகைமுடிந்து. (௧௯)

பின்னியல்கருணைக் கடலுறழ்மாயன் பெய்கழலிடைகலந்தமைந்தான்
றன்னியற்குரவன் சகுணநாட்டத்தைத் தணந்துகாற்றினைப்பிடித்ததனுன்
மன்னியற்சிட னுருவினுலொப்பில் வான்கதிபெறவந்ததிதனுற்
கொன்னியலாசான் றனைத்தெய்வமொன்றைக்கொள்ளுதலறிவுளோர்குணமே

வேறு

முதிர்போருளா சான்யோக முயன்றுமொப்பின் மனேலயச்சீர்
முடியாதுடனீத் திடுகாலை முன்னுர்மாங்க னியிற்புழுவாய்
வதியுந்தரங்கண் டடன்புகன்ற வண்ணம்புரிந்து கதிநிலையின்
வாய்ந்தொப்பறுகண் டாகாதம் வயங்கவியற்றுஞ் சோசிதன்
மதியிலெழுமெய்ப் பத்திநல மருவவழங்கி மனமாயை
மயக்கமுழுதுந் தவிர்த்தின்ப மயமாயடியே னிருவிழிக
ளெதிர்நின்வடிவே கண்டுகளித் திருக்கும்பெருவாழ் வளித்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௨௧)

சோசீபத்திகதிமுற்றிற்று

ஆ௲ கவி ௫௯௪௫

---

எழுபத்திரண்டாவது

# சூத்திரதம்பதிகதி

கருணைநீள்குரு பரன்றனைக்கண்ணனென் றுன்னு
மருமைமிக்கசோ சீபத்திசரித்திர மறைந்தே
னிருமைநற்றுணை விமலநாதன்பத மென்னக்
கருதுசூத்திர தம்பதிசீர்கழ றிடுவாம். (௧)

பத்தர்வைப்பெனக் குலவருட்பண்டரி புரத்தி
லுத்தமத்தகைச் சூத்திரகுலத்தினி லுதித்தோன்
கைத்தமாயைவன் பிணியைவேரோடறக் களைந்தோன்
மைத்தகைத்திரு மாலடித்துணைகண மறவான், (௨)

இரங்கனென்றிடு பெயரினனில்லறத் துறைவான்
றரங்கவின்றமெய்க் கற்புமால்பத்தியுந் தழைத்த
வுரங்கவின்றநன் மனைவியுமிரங்கவென் றோதும்
வரங்கமழ்ந்தபே ரென்னத்தன்மனமுமொன் றுனள். (௩)

அற்பமுந்தனத் தாசையில்லார்களா டகமா
வெற்பதாங்குண மீதிலெந்நாளும்வீற் றிருப்பா
ரெற்படர்ந்திடிற் கானணைந்திந்தன மெடுத்து
விற்பதாம்பொருள் கொண்டன்பர்க்கிட்டனர் மிசைவார். (௪)

இரவினும்பக லினுமிடையினுமிடை யின்றி
விரவுபோருள் சால்விமலேசனை விமலென்
னுாமுறுந்திரு மந்திரமுரைத்தன ருளத்திற்
பாவிடுந்தியா னத்தினர்படியிலாப் பத்தர். (௫)

காணுறும்பிர பஞ்சமெல்லாமுமெய்க் கண்ணன்
மாணுறுந்திரு வடிவெனக்கொளுநிலை வாய்ந்தா
ரேணுறுஞ்சடத் துற்றிடுசாயையே யென்ன
நாணுறுங்களத் தவள்பிரியாதுநண் ணிடுவாள். (௬)

வேறு

திருந்துமுத்தமச்சீர் பொருந்தியின்னவர்தாந் திகழுநாளையினுமதேவர்
மருந்துறழிவர்கொண் டுளசதாசார வண்மையாதியமதித்திரங்கிப்
பெருந்தயாநிதியா கியவிமலேசப் பிரபுவின்பாலறைந்திடுவார்
வருந்திரிலோக ரட்சகநின்றுண் மனத்திலோர்கணமறப்பறியார். (௭)

ஆனசூத்திரதம் பதியிவர்மிடியா லறத்துயரடைந்துளாரிவர்தந்
தீனமற்றிடப்பொன் சிறிதருளென்னச் சீதரனன்றிரவதனில்
வானவர்புகழு நாமர்தங்கனவின் மருவிநீவைகறைப்பொழுதின்
மேனலம்பெறுமோர் பத்தனெடியல்கான் மேவினைவதிதருவாயேல். (௮)

நானவர்க்குப்பொன் னல்கிடுந்திறத்தை நன்கறிந்திடுவையென்றோத
மானவின்மொழிபோ லமைந்தனரக்கான் மருளில்சூத்திரதம்பதிகளு
மானகானடைந்தா ரவர்வருமதர்க்க ணணைந்தொருபத்தனுமருடன்
றீனராமிவருக் களித்திடும்வண்ணஞ் சிறிதுபொன்யான்கொடுவந்தேன். (௯)

என்றுரைத்தவரெய் திடுமுனம்வழிக்க ணிட்டுநாமறைந்துநோக்குவமேற்
பின்றுதைந்திடுமென் னவரகத்துற்ற பெற்றிநன்கோர்தாலாமென்
றென்றுமாறியற்றி யொளித்துறவருகி லுற்றனருபயருமவரின்
முன்றுதையிரங்கன் பொன்னதைத்தரும்பின்முன்னிக்கான்மண்கொடுமூட.

பின்னணைமனையென் செய்தனிரறியப் பேசிடவேண்டுமென்றிரப்பத்
தன்னவிரிரங்க னிவண்சிறிதேபொன் றயங்கியதீங்கிதைக்காணி
னன்னலமாந்தர் தமக்குமிக்கிச்சை நண்ணிடுமென்றுளம்வெருவி
யன்னதைக்கான்மண் கொண்டுமூடினனென் றறைந்திடவில்லவள்வினவும். ()

தனமெனிலென்னை யிதனையோமனிதர் சகத்திற்கொண்டாடிடுகின்றார்
கனமுறுமதனை யான்றெரிதரவே காட்டியாங்கதனி லுண்டாகு
மனகநற்பயனை யுஞ்சொல்வீரென்ன வருகணேந் திட்டமண்ணீக்கி
வினவுகாதலிபா லீதுகாண்டனமே வினர்பெறுந்தன்மையும்விள்வேன். (கஉ)

அர்த்தநாமங்கொ ளீதனர்த்தங்க ளடங்கியபொக்கிசமாகுந்
துர்த்தகையிதன்மேற் சற்றவாவடையிற் றேய்ந்தசற்சுபாவங்கண்முற்று
நிர்த்தகையடையு மிதனையிச்சித்தே நிலத்தின்மானிடர்கள்கண்ணில்லாக்
கர்த்தபம்போன்று தாமிகபரத்திற் கலந்திடுசுகமறந்துழன்றார். (கங)

பாரிடத்தினின்மண் பெண்ணவாதுயரப்படுத்திடாதிதனிலாஞ்செல்வப்
பேரியன்றிடுமீ தவாவினர்க்குறுந்தான் பெற்றசாரூபமீந்தவரை
யோரிடத்தமைய விடாதுபின்றொடர வோடியோர்கணத்திலாயிரர்கை
சேரியல்பமையு மிதன்மிசைபாசஞ் சேர்ந்தவர்பசாசமேயாவர். (கச)

பெட்டியிலுறுங்கா லையினுமற்றன்றிப் பிறனொருவன்கையிற்பெருகும்
வட்டியிலுதவும்போழ்தினுமன்றி மற்றெவர்க்கும்வழங்காதே
கொட்டியில்லிடையே புதைத்துறுகாலுங் கொண்டுளசெல்வர்தம்மனத்தை
யொட்டியிற்றுக்க முறப்புரிவதலா லோரிறைசுகமளிக்காதால். (கரு)

தேடிடுங்காலை துக்கமங்கதுகை சேர்தராவிடின்மிகுதுக்கங்
கூடிடுங்காலை காமமாதியதுற் குணங்களாலளவறுதுக்கங்
கேடியறனமீங் கிதனிமித்தத்தாற் கிளர்மகடன்பிதாவினையு
நாடிடுமனைவி தன்கணவனையு ஞாலமேற்றுயர்புரிந்திடுவார். (கசு)

மரித்திடிலுடனே யிறந்திடத்துணியு மனம்பொருந்தியசகோதரர்கள்
பரித்தபொன்னிமித்தங் குரூரமிக்கவராய்ப் பஞ்சபாதகங்கட்குட்படுவ
ருரித்துறுசினேக ரிதுகொடுபகைமை யுறுவரீதியலுடற்பொலிவைப்
பிரித்திடுபாண்டு ரோகம்போற்குணத்தின் பெருக்கெலாமறவபகரிக்கும். ()

உன்னதபதத்தி லுள்ளபேருணர்ச்சி யுள்ளவனுயினுமிதனைத்
தன்னகத்துன்னி லக்கணத்தவனைச் சகத்துறுமாந்தரிற்சால
வின்னலுற்றிடச்செய் திடுமிதுபத்தி யென்னுமார்க்கத்திடைமாந்தர்
மன்னவிடாம லடைக்குமுள்வேலி மானுமான்மான்பொருங்கண்ணாய். (கஅ)

பலபலவிரித்துப் பகர்வதென்னனர்த்த பாசனமாந்தனமிதனைப்
புலனிலாருறவைப் போல்வெறுத்திட்ட புண்ணியரேயிகபரத்தி
னலனுறுமமரர் தாம்பணிந்திடுசீர் நண்ணினரென்றிரங்கன்றூ
னல்கறவிரித்தோ திடவினவினடா னணைபுலிகண்டுளஞ்சினள்போல். (ககூ)

இரங்கன்றன்கரம்பற் றினள்விரைந்தவண்விட் டேகலும்பேருணமர்
வரங்கமழவர்தங் குணநலம்வியந்து மகிழ்ந்தவர்தமக்குமுன்னேகி
யுரங்கலந்திடுமன் னவர்கொளக்காட்ட மொடித்துவைத்திட்டனரதனைத்
தரங்கலந்திடுதஞ் சிந்தையிற்கருதார் தாமொடித்தனர்கொடிலணைந்தார். (உ0)

பின்னருணும தேவர்பத்தனெனப் பிறங்குவிட்டலப்பெருமானே
டன்னவர்மனைபோந் திரங்கனைக்கூவி யறைவர்நீயிர்வறுமையின்மிக்
கின் னல்பன்னளுங் கொண்டுழல்வதைக்கண் டிரங்கிநுந்தமக்களித்திடுவான்
றன்னம்யாம்பாருள்கொண் டணைந்தனமிதனைத் தயவொடேற்றிடுதிரென்றுரைப்ப

வினவியவிரங்கன் பரமபாகவத சிகாமணிவெம்மிடித்தொடர்பான்
மனமயர்வேற்கு மகான்களாநுமது மாணநுக்கிரகமல்லாலித்
தனமிசையாவல் சற்றிலேயிதனுற் சார்தருபயனைநன்குணர்ந்த
வனகராநுமக்கு மெய்யுணர்வமையே னறைந்தறிவித்திடன்மிகையே. (௨௨)

எனப்புகன்றுறுங்கான் மனையினுள்ளமைந்த விரங்கிவெஞ்சினத்துடனவனுற்
றனர்த்தபாசனமாந் துட்டவித்தனத்தை யடியரேம்வீட்டினுக்கெதற்கா
மனத்திரக்கமிகுந் தவரெனக்கொண்டு வங்வனிர்வல்லேயிற்கொண்டே
வனப்புறுநுமதிற் புகுமினின்றேல்யா மறுமனைதோய்வமென்றிசைத்தே. ()

இரங்கனற்காம்பற் றுபுவிரைந்தயலி லெய்திடவீர்த்தனளேக
வரங்கமழ்நாம தேவர்தாமறுத்தும் மனைப்புடையாம்வலிந்தடைந்தே
யிரந்தறப்பிரார்த்தித் திடுதலினீரொன் றேற்றிடுவீரெனவருந்தி
யுரம்பெறுமன்பர் சொலல்வறிதாகா தோருடையதனிடைகொண்டார். (௨௪)

வாய்ந்தவன்னவர்சற் புத்திமெய்ப்பத்தி மான்மியம்பலபடவிதந்து
போந்தவிட்டலனு நாமதேவருமுட் புதுமையார்பெருங்களிப்பினராய்ப்
பூந்தளியமைந்தா ரன்னவர்பத்தி பொருந்தியிங்ஙனம்வதிந்தீற்றிற்
பாந்தண்மேற்றுயின்மால் குலவுவைகுந்த பதம்பொருந்தினருளம்பொருவ.()

மருவியபேய்விட் டிடிற்குலதெய்வம் வருமெனுமாநிலமொழிபோற்
கருவுடன்மானம் விடிலுடனுண்மைக் காட்சியுட்டோன்றுமாமாயைப்
பருவரலார்மு வேடணையகலிற் பத்திவாய்ந்திடுமெனும்வழக்குக்
கிருளறுதவச்சூத் திரதம்பதிகடம் மியற்கதைசாட்சியாமம்மா. (௨௬)

வேறு

உலகைப்பொருளாமதியாதுன் னுருவேகருதிக் கருதிமிக
வுருகன்புடனிந் தனங்கொடுவிற் றுற்றவடியார்க் கிட்டுண்டு
நலமார்நாம தேவருன்பா னவில்சொற்படிபொன் னெதிர்வைத்து
நாமப் புலியைக் கண்டாரி னடுங்கியோடி மனையின்பா
னிலவித்தாவும் வேண்டாதுந் நிமலவருட்சீர் நல்குகென
நிகழ்த்துமுழுவுத் தமகுணங்க ணிறைசூத்திரதம் பதிகணிகர்த்
திலகுகிராசை வாழ்வளித்தென் னின்னலெலங்நா ளொழித்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (௨எ)

சூத்திரதம்பதிகதிமுற்றிற்று

ஆக கவி ருகூஎஉ

---

எழுபத்துமூன்றுவது

# கோவிந்தசாமிகதி

சராசரப்பிர பஞ்சம்யாவையுமரி தன்மயமெனக்கண்டு
நிராசைமேயசூத் திரதம்ப திகளரு ணிலைமைசற்றுரைத்திட்டேன்
றாதரக்குடை கொண்டமெய்ப்பகவனைத் தன்சகனென்றன்பு
விராவுகோவிந்த சாமியின்சரித்திரம் விள்ளுவனினிமாதோ. (க)

மருக்குலாம்பொழிற் றிருமதுராபுரி மருவுமாதவற்கின்பப்
பெருக்குலாவுபூ சனைபுரியர்ச்சகப் பிராமணன்பலசென்மத்
துருக்கமோடுசெய் மாதவப்பயனெலா மோருருக்கொண்டென்ன
வருக்கனுெத்திய லொருசுதன்சகமுய்வா னவதரித்திட்டானே. (உ)

பிறந்தபாலகன் றனக்குக்கோவிந்தப்பேர் பேசினன்வளர்காலை
யறந்தவாமகன் பாலியத்தரிதனக் காற்றுபூசனைகண்டே
நிறந்தழைத்தவன் னவன்மனமொருபொரு ணிலத்திடைவிரும்பாதே
சிறந்தகோவிந்த சாமியினுருவமேற் றிகழ்பிரேமையெய்திற்றால். (ங)

அன்னபாலகன் கோவிந்தசாமிதன் னபாரமான்மியசீலந்
தன்னகத்துளோர்ந் திலனிவனமக்கொரு சகாவெனமதித்தானுய்
நன்னலம்பொலி பாலரொடாடல்க ணவிற்றிடுந்திறமேபோ
லுன்னன்பாளருன் னிடும்வடிவுடையவ னுடன்விளையாட்டாற்றும். (ச)

சத்தமாமறை யினமறைந்தெட்டொணுத் தனிச்சுகப்பொருளாகும்
பத்தவற்சலன் கோவிந்தன்மீதுகொள் படியில்பேரருணீரா
லொத்தபாலகன் போலவன்கண்கண்முன் புற்றன்பின்விளையாடுஞ்
சித்தமாசிலார் தமக்கரிதாம்பொருள் செகத்தில்விண்ணினிலுண்டோ. (ரு)

இன்னவாறியல் போழ்திலோர்நாளிலாட் டியற்றிடக்கோவிந்தன்
பொன்னவாவுர முடையகோவிந்தனைப் புறத்திலெய்திடக்கூவ
வன்னவாறொரு பாலனும்வடிவுகொண் டடைந்தனனதுபோதிற்
கொன்னமைந்தகோ லும்புள்ளுங்கொடுவிளை யாடல்கள்குயின்றாரால். (சு)

பாலனானகோ விந்தனைமுதற்படப் பகவனுங்கோவிந்தன்
சாலவேயிரு மூவிசைதோற்றிடச் சயங்கொண்டானதன்பின்னர்
மூலகாரண னபசெயம்பெறச்சுதன் மூவிசைசெய்திட்டான்
கோலநீள்பிர மாண்டநாயகனெனக் குலவருட்கோவிந்தன். (எ)

யாவராலுமெக் காலத்துமபசய மெய்திடாதவனேனு
மேவரும்பத்த வாற்சல்லியத்தினன் மிக்கவுஞ்சிறியோனு
யாவனீடுகோ விந்தனுக்கபசய மடைந்துள்ஞ்சினன்போலத்
தேவதேவன்கைக் கோல்கொடுதளியினுட் சென்றனன்மறைவாக. (அ)

அன்னசெவ்விகோ விந்தனும்பின்றொடர்ந் தரிசனைப்பிடிப்பானுப்
பின்னணைந்திடத் தளிபுகாவணஞ்சுதற் பிடித்தனர்தடுத்தங்கண்
மன்னருச்சகர் புறத்தகற்றிடுதலு மைந்தனுட்சினத்தோடென்
முன்னமெய்திலோ தவனெனவீரத்தின் மொழிந்தழுங்கினனின்றான். (௯)

அந்தியெய்துகாற் றுய்சுதன்றனைமனைக் கழைத்தகன்றனளக்காற்
புந்திதோய்சுத னென்றயில்சிலன்றனெர் பொருவிறேழனெஞ்சிற்
சிந்தியாவழு தறங்கினனத்ததி சிதானவன்றந்தை
யுந்தியற்பெறு கனவினிலிங்ஙன முரைப்பனின்றவமைந்தன். (௧௦)

சாலவெற்கதி பிரியன்யானியற்றிய தவறுகொண்டுண்டில்லான்
சீலனுமவ னுணுமையின்யானுமே திருவமுதயின்றில்லேன்
கோலவைகறை யூடவற்கேற்பவை கூறியுண்பித்தேபின்
னாலயத்தினெய் திடன்முறையாகுமங் கடிதற்குயர்பிரசாதம். (௧௧)

எனப்புகன்றிடு மால்சொற்கேட்டர்ச்சக னெல்லைதீர்களிப்பெய்தி
வனப்புறுஞ்சுதற் கூவிவான்சுவையுறழ் மாற்றம்பற்பலவோதி
மனப்பிரீதியி னுகரவைத்தனுப்பலு மால்கொளாலயத்தெய்தக்
கனத்தைநேர்திரு மேனியன்பாலனுக் காத்தமைந்திடக்கண்டே. (௧௨)

அளவளாய்க்களித் தனர்விளையாடின ரமைதருமொருநாளில்
வளமிலாவுநிர்ச் சனவனத்தின்புடை மருவியாடிடும்போதாண்
டுளவெருக்கின்காய் தனைப்பறித்தொருவர்மே லொருவரோச்சினராகிச்
சளமறக்களித் திருந்தனரத்ததி தன்னிலோர்பெருங்காயால். (௧௩)

பாலகோவிந்தன் வலிகொடுமான்மிசை படவெறிந்திடுகாலை
சாலவுங்களித் ததைக்கரங்கொடுதளி சார்ந்தனன்மறைவாகச்
சீலமேவுகோ விந்தன்பத்தவற்சலன் றிருவுருக்காணுதா
லோலமிட்டழு திரங்கிடமாலையி லுயிர்த்துளாளவண்மேவி. (௧௪)

மைந்தனைக்கொடு சென்றனள்பக்கண மாந்துகாலையிலம்மே
சந்தமார்கழ லலம்பிலனெனையவன் சதித்தகன்றதனாலே
யுந்தகத்துயர் கொடுமறந்தனனெனன வோங்குமற்புதமென்றே
பந்தமார்நகை யோடறல்கொணர்ந்திரு பதமலம்பிடத்துய்த்தான். (௧௫)

ஒருதினத்திற்கோ விந்தனாலயமுகப் புழியமைதருமேல்வை
மருவுபூசக னொருவனைத்தடுத்திங்ஙன் வழுத்துவனன்னத்தை
யருமையார்தளி யுட்புகுந்தன்னவற் களிக்குமுன்னெனக்கீயிற்
பருகியன்னவ னுடன்செல்வேனவன்முதற் படவுண்ணில்விட்டேகும். (௧௬)

என்றமாற்றம்வி னவியர்ச்சகன்சின மெய்தியன்னவன்றாதை
துன்றவண்டுதைந் தோதவுள்வெகுண்டுறு சுதன்மருவுழியெய்தி
யின்றணைந்திடு மருச்சகன்றனைத்தடுத் தேதுசாற்றினையென்ன
வொன்றலாமழு தவற்குமுன்னிடிற்புசித் தொல்லையோடிடுகின்றான். (௧௭)

பின்னர்யான்புசித் திடற்கியலாமையிற் பெரிதும்வாடிடுகின்றே
னென்னவர்ச்சகன் பின்னருஞ்சொலப்பிதா விதயமஞ்சலேயான்முன்
சொன்னமைந்தவா லயத்தினுணிவேத்தியங் கொடுப்பனிற்கென்றோதி
யன்னவாறளித் திடத்துவக்குந்ததி யானபூசனைமுற்ற. (௧௮)

ஒப்பில்கோவிந்த சாமியோர்பாலக னுருக்கொடுவெளியெய்தத்
தப்பில்கோவிந்தன் றாதைநல்கிடுநிவே தனத்தினையயல்வீசி
யெப்பினேடிதோ வேகினனவனென்னை யெண்ணிடாதெனவோடக்
குப்பியைந்திடு மானிடர்விம்மிதங் கொண்டிங்ஙன்புகல்கின்றார். (௧௯)

கம்பினேசைகொள் ளாளனென்னேயென்பினைக் கடித்துளானெனல்போலப்
பம்பியற்பெரும் பத்தனைஞானமெய்ப் பார்வையில்லவர்தாங்கொள்
வெம்பிராந்தியா லென்னிவன்செயலென விண்டனரின்மேவித்
தும்பியொத்துடற் கமைந்துறுமுணவினைத் துருவினர்நடந்திட்டார். (௨௦)

அதுமுதற்கொடு பூசகர்கோவிந்தற் காதியிலமுதீந்து
மதுவருத்துழாய் முடியினன்பூசைபின் வயக்கிடும்வழக்கேய்ந்தார்
பொதுமைதோயருட் புனலினைமுகந்தெழிற் புவியுளோர்கொளப்பெய்யும்
புதுமையார்புயன் மேனியற்கன்பனும் புண்ணியமறைப்பாலன். (௨௧)

பருவமொத்திடப் பத்தியுஞானமும் பல்கியெளவனமெய்திக்
கிருகத்தாச்சிர மத்தினின்றியாவையுங் கிருட்டிணார்ப்பணமாக்கி
யிருவிதப்பெரும் போகமுமிகத்திடை யேய்ந்தரிபதஞ்சேர்ந்தான்
றிருவருட்கட லானமாலன்பர்க்குச் சித்தியாப்பொருளுண்டோ. (௨௨)

வேறு

தந்தைபுரிபூ சனைகண்டுட் டவாப்பேரன்புன் மிசைகொண்டு
சகனென்றெண்ணுங் கோவிந்த சாமியாம்பா லகன்றனது
சிந்தைமகிழ வுடனுடிச் சீராட்டமைந்துண் ணுதுறுகாற்
சிறுவற்கூட்டி யெனக்குநிவேத் தியஞ்செய்யென்று புகன்றருளான்
முந்தைநாளாட் டியற்றருட்சீர் முதிருங்கருணைப் பெருங்கடலம்
முறையிந்நாள்காட் டிடிலென்வினை முன்வந்துன்னைத் தடுத்திடுமோ
வெந்தையருள்சற் றேனுமுளத் தில்லார்போனீ யிருந்திடலென்
னிராமானந்தப் பெயர்கொடெனை திதயத்திலங்கும் பெருமாளே. (௨௩)

கோவிந்தசாமிகதிமுற்றிற்று

ஆ. கவி ௫௬௬௫

---

எழுபத்துநான்காவது

# குஞ்ஞாமாலிகதி

வயதுக்கேற்றநற் றுணையெனவரதன்வந் தாடும்
வியனமைந்தபத் திமைகொள்கோவிந்தன்சீர் விண்டேன்
புயல்வண்ணன்றனைப் புழுதியினுற்புதைத் துய்ந்த
நயமலிந்தகுஞ் ஞாமாலிசரித்திர நவில்வாம். (க)

சிகரிபற்பல திகழ்தருகுடக்கிராச் சியத்தின்
முகமெனத்பொலி யிலாடகாப்பெயர் மூதூர்
சகமிசைப்புகழ் பொருந்திடவந்தவ தரித்தோன்
மகரவாழியொப் பாம்பொருள்வளக்குஞ்ஞா மாலி. (உ)

சகத்தின்மேலிலக் குமியருண்மிகத்தழைத் துறல்போ
லகத்தினாரணன் பத்தியங்கடலிடை யாழ்ந்தோன்
சுகத்தைநேர்மொழி மனையுடனில்லமேற் றேய்ந்து
மகத்துவத்தறம் பலபெருக்கினன்வதி நாளில். (ங)

திவ்வியத்தகைச் சுதனுதித்தேகலைத் தெருட்சி
யொவ்வியெவ்வன மெய்திடுகோன் மணமுஞற்ற
வெவ்வினைத்தொடக் காற்சிலநாளினில் வீந்தா
னவ்விதந்தெரிந் துடன்குஞ்ஞாமாலியாற் றுனப். (ச)

பொக்கமாருட லுட்கொளரோசிகப் பொருள்கட்
டொக்கமைந்துமேற் சுந்தரங்காட்டிட றுணைப்பப்
புக்கவில்லறத் துட்பொருளாங்கடல் புரையுந்
துக்கம்யாவுந்தீ வினைச்சுகப்படாத்தினுட் டோயும். (ரு)

புண்ணின்மொய்த்திடு மீயினைத்தீயிடை புகுவா
னெண்ணிடும்பதங் கத்தினையிணைந்திடு ஞானக்
கண்ணின்மானிடர் தோயுமில்வாழ்வினைக் கருத்திற்
கண்ணிடாதிவண் கண்ணிவீழ்ககத்தினைக் கடுத்தேன். (சு)

குடம்பைவிட்டகல் புள்ளெனவினையினுற் கொண்ட
வுடம்பைவிட்டகல் போதெமக்குறுதுணை யாவான்
றடம்பதாம்புயஞ் சரண்புகுவேனெனத் தன்னுட்
டிடம்படும்விரத் தியினுடனிவ்வகை செய்வான். (எ)

தனது செல்வத்தை யிரண்டுபங்காக்கிகா தலிக்குந்
தனயன்பாரியா மருகிக்குமன்புடன் றருங்கான்
மனநலம்பெறு மருகியுட்டுணிவுடன் வழுத்துந்
தனமிதாலெனக் கொருசுகமுளதுகொல் சகத்தே. (அ)

பொருள்கொடெய்தலாஞ் சுகாநுபோகத்ததி கார
மொருவினேனித னைப்பரிபாலன முளுற்றும்
பொருவில்சத்தியும் புத்தியுமிலைபுரிந் தானு
மருள்குலாவிய பேய்கிகர்த்துலகிடை வதிவேன். (சூ)

எந்தைநீரெவ ணெய்தினிர்யானுமாண் டியைந்து
சிந்தையோகையி னும்பணிசெய்வனென் றியம்ப
வந்தைநேர்மன பாகமீந்துறுமரு கியுடன்
விந்தைநீடிய மதுரையம்பதியின்மே வினரால். (க0)

வேறு

மதுரையம்பதியு ளுழைதலுமங்கண் மருவுமோர்சீரணத்தளிக்க
ணதுலமிக்கமைகிட் டிணனருளுருவொன் றமைந்திலங்கிடுதல்காண்டலுமே
புதுமையார்பத்தி யிருவருள்ளத்தும் பொருந்தலினுலயத்தருகிற்
கதுமெனக்குடிலொன் றியற்றியாண்டமைந்து கண்ணனைப்பூசைசெய்துற்றூர்.

பத்திசால்குஞ்ஞா மாலிதன்மருகி பரிமளமிகுபரமான்ன
மொத்தியல்கண்ணன் றனக்குநிவேதித் தோங்குமிற்புகுந்துநோக்கிடுகா
லத்திருவமுதின் மிசையருட்கண்ண னங்கைதோய்விரல்கடோய்ந்துறலான்
மெத்திறும்பூதுட் கொண்டுகண்ணன்மேன் மிகப்பொலிபத்தியரானார். (கஉ)

நாளுமிவ்வண்ணம் பூசைசெய்திடுங்கா ணயந்துகண்ணன்புரிதலினன்
மூளுமெய்யருட்சீர் பெற்றனமென்ன முடிவில்பேருவகையெய்தினரா
யாளுடைப்பெருமான் பணிசெய்தாண்டமைந்தா ராங்கியனுளிலங்நகர்க்கட்
கோளுறுசிறுவ ராடிடவங்கட் குறுகினருட்களருவப்பால். (கங)

புழுதிகொடரிவிக் கிரகத்தைமூடிப் பொலிவுடனுடினரமைகா
லுழுவலன்புறுகுஞ் ஞாமாலிமருகி யுற்றவர்தமைமிகவெருட்டிக்
குழுவுடனப்பாற் படுத்துபுதூய்மை கொளவபிடேகமாதியசெய்
திழுதயில்பெருமாற் கன்புடன்பூசை யியற்றினள்புறத்தினிலணைந்து. (கச)

திகழ்நிவேத்தியத்தை நாடினள்கண்ணன் றிருவிரலமைத்திடாமையினு
லகம்வருந்தினளம் மானிடமோத வனலுறும்புழுவினிற்றுடித்துப்
பகவனுலயப்பான் மேவினன்விவிதப் படவுரைத்தனன்பிரார்த்தித்துந்
தகவருட்கரத்தாற் றொடாமையின்வருந்தித் தாமொன்றூர்ந்திலரவண்வதிந்தார்.

இரவணைதரநை வேத்தியங்கண்ண னெதிரமைத்தனருறங்கிடுகாற்
கரவறுபத்தர் கனவின்மான்மேவிக் கழறுவனுங்நிவேதனத்தை
விரல்கொடுபரிசி யாததற்கேது விளம்பில்வேறென்றிலைபகலில்
விரவியசிறுவ ரெனக்கதிபிரியர் மிக்கவர்களைத்துரத்தினிரால். (கசு)

அன்னவர்களைச்சந் தோடமுற்றிடச்செய் தழைத்திவணெய்தின்மாத்திரமே
நன்னலமிகுநுங் நிவேத்தியந்தன்னை நான்கொள்வேனெனநவின்றிடலுங்
கின்னமார்குஞ்ஞா மாலியுளின்பங் கிளர்ந்தனனெழுந்துகிட்டிணன்பாற்
பன்னலாயினன்மெய்ப் பகவநின்பிரிய பாலரைப்பகலிடையழைப்பேன். ()

புழுதியினினக்குப் பிரீதியேல்யாமும் புரிவம்பிள்ளைகளுடனங்ஙன்
விழுமியதுனக்குப் பூழியாதலினல் விரவுமிந்நிவேத்திய நுகரென்
றழுதுநெக்குருகி யிசைத்திடப்பத்த ரன்பினுக்கெளியனும்வள்ளல்
செழுமைசாலன்ன மருந்தறிகுறியாத் திருவிரலழுத்தவோகையராய் (கஅ)

பலபடத்துதித்துத் தட்டமிட்டாடிப் பரவசமடைந்தனர்வணங்கி
யலமரப்புரிவன் பசிப்பிணியொழிய வரியருணிவேதன மருந்தி
யிலகுபிற்றையினிற் பிள்ளைகட்கொணர்ந்தாண் டெய்திமற்றவருடன்கண்ண
னிலவுமூர்த்தத்தைப் பூழியான்முடி நிசிதொறுமபிடேகமாற்றி. (ககூ)

பத்தியினிவேத னம்புரிந்தயில்வார் பயிலுமிவ்வகைதம்மாயுளின்மட்
டொத்தியல்கண்ண னுவப்புறப்பணிக ளுஞற்றிவாழ்ந்தீற்றில்வைகுந்த
மெய்த்திருநாடெய் தினரிதால்யானை மேவிடுமிடமெலாம்வழியென்
றுத்திசால்பெரியோ ரோதல்போற்பத்த ருன்னல்யாவையுங்கதிவழியே. ()

வேறு

மைந்தனிறப்பக் கண்டுலக மயன்முற்றொழிந்து மருகியுடன்
மதுரையெய்தி நின்பூசை வயக்குங்குஞ்ஞா மாலியிடுஞ்
சொந்தநிவேத்தி யந்தொட்டுந் துலங்குன்னுருமண் ணுன்மூடுஞ்
சுதரைவெருட்ட லாலுண்ணுய் சும்மாவிருந்தன் னவர்க்கூவிப்
பந்தமுடன்மண் கொடுமூடப் பரிவின்மகிழ்ந்துட் கொண்டனைமெய்ப்
பத்தர்குற்றஞ் செய்யினுமுட் பரிந்துகொள்வாயன்பில்லே
னெந்தவகைசெய் துன்னருட்பே றெய்துவேன்கோ னுணர்கில்லே
னிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. ()

குஞ்ஞாமாலிகதிமுற்றிற்று

ஆக கவி ௩௭௧௯

———

எழுபத்தைந்தாவது

# இலசாபத்தகதி

புழுதிகொடுகண்ண னுவப் புறநாளும்போன்பிற் பூசையாற்றி
வழுவில்கதிபெறுகுஞ்ஞா மாலிமருகியின்சரிதம் வகுத்தேனிப்பால்
விழுமியசீர்ப்பாகவதர் பூசனைமுட்டாதரியால் விருப்பினல்குஞ்
செழுமையினட்சயப்பொருள்கொ ளிலசாபத்தன்பெருஞ்சீர்செப்புவேனே. ()

மருமலர்த்தண்பொழின்மனுதே சத்து தித்தோனிலசாநா மந்தோய்ந்திட்டோன்
கருமணிவண்ணப்பெருமான் றிருவடியோவறவென்றுங் கருத்துள்வைத்தோன்
பெருமைமிகுகற்புளத்தன் மனையினுடன்பிட்சைசெய்து பிறங்குந்தொண்டர்க்
குருகுமன்பிற்பூசைபுரிந் தவர்க்கமுதீந்தெஞ்சியதுண் டுவந்துவாழ்வான். ()

விண்டுபத்தர்க்கருத்தியல்லாற் ரூனயிலாதோங்குபெரு விரதமுள்ளங்
கொண்டுபுரிந்தனன்வாழுங் கான்மழையின்மையிற்பஞ்சங் குறுகலாலே
தொண்டுடையாற்குரியபிட்சை கிட்டாமையாமெனஞ்சந் துளங்கிவாடி
மண்டுமென்பிற்கிடைத்தவற்றை மாலடியார்க்கிட்டுந்தா மாந்தாராகி. (ங)

கற்புமியற்பத்தியுஞ்சான் மனையுடனின் னணுஞ்சிலநாள் கழித்தோர்நாளிற்
பொற்புறுமில்லவளொடுளங் கலங்கினனேதுவனீண்டு பொலிந்துபஞ்சம்
வெற்புறழநாளும்வளர் தலினதிதிபூசைசெயும் விதியுந்தீரும்
புற்புதநேர்கொங்கையினி வேறுபதியடைந்தன்பிற் புரிவோமென்ன. (ச)

மனைவியுரைப்பாளுத வுலகினையுண்டாக்கிய தின் மருவான்மாக்கட்
கினைவகலவூட்டுதனு ராயணன்றன்கடமையவ னெதுநாண்மட்டும்
வினைவழிநந்தமக்கூணல் கிடுமதுகாறும்மிங்ஙன் மேவித்தொண்டர்
மனையடைந்துவறிதேகக் காணினிற்றீயிட்டுளிணு மடிவோமென்ன. (ரு)

இல்லவள்சொல்வினவியங்ங னிபற்றுதுமென்றனன்றுயிலு மேல்வைதன்னிற்
செல்லணைய திருவுருக்கொள் பகவனவர்கனவினிடை திகழ்ந்துசற்று
மல்லலுட்கொள்ளலிர்நாளை வைகறையிலிந்நகரத் தாசனன்பான்
மல்லல்பொலிமேதியொன்றுங் கோதுமையைம்பதுபறையும் வழங்குவானல்.

கோதுமையையோரறையி லிட்டதனிற்றுவாரமொன்று குயிற்றிநாளும்
போதும்வரைகொள்ளுகவஃ தட்சயமாயெந்நாளும் பொலியுமற்றுற்
சாதுசனர்தமக்கிட்டு நீயிருந்துய்த்தனைமினெனன்னச் சாற்றப்பத்தன்
மாதுடனேதத்தனது கனவுமுரைத்தனண்மகிழ்ந்து வைகுமேல்வை. (எ)

எய்தியவந்நகர்மாந்தர் பலர்க்குமிசைத்தூரமைந்தார் யார்க்கும்பஞ்சத்
துய்திறநாடுபுவருந்த லீர்சேமமெய்தும்வரை யுணவளிப்பேன்
செய்தியிதுமற்றெவர்க்குந் தெரித்திரெனச்செப்பியுறுஞ் செவ்விதன்னில்
வைதிகழ்ீவன்மன்னவன்மா லருள்கொடுசொற்பனத்தியம்பும் வண்ணநல்கி.

பத்தசிகாமணியிதனைக் கோடிசெலவாகியபின் பகரிலின்ன
மெத்தவளிக்குதுமென்ன விலசாபத்தன்கனவில் விண்டுவிண்ட
புத்தமுதமனையமொழி தனைநினைந்துட்களித்தெனக்குப் போதுமீது
சித்தமிசைமன்னென்சே மங்குறித்துக்கவலாமே செப்புகென்று. (சு)

சேவகற்கோதினன்செலுத்தி மாலுரையின்படிபுரிந்து தினமுங்கொண்டுள்
ளாவலின்மெய்ப்பத்தர்கட்கும் யார்க்கும்வழங்குந்தொறுமெய் யன்பர்நெஞ்சிற்
றுவருபேரருள்கொ ளிராமானந்ததேசிகன் றுடரு மின்பேபோ
லோவறமேன்மேலும்வளர்ந் தியாருமுவப்புறும்படிமிக் கோங்கிற்றன்றே. ()

இவ்வகைதுற்பிட்சமகன் றிடும்வரையும்யார்க்குமுண்டி யீந்துபின்னர்
செவ்வகைசாரிலசாபத் தன்செகநாதத்தலத்தைத் தெரிசிப்பான்சென்
றெவ்வணிப்பொற்கோபுரங்காண் டலும்பரவசத்தினெஞ்சன் புருகக்கீழ்வீழ்ந்
தெவ்வமிலானந்தவருட் கடன்மூழ்கித்தனைமறந்திட் டெழுந்திலானல். (கக)

அன்றிரவிற்சகநாத னருச்சகன்சொப்பனத்தவிர்ந்தென் னன்பனுன
மின்றிகழிலசாபத்த னிவ்விடையெற்றெழுதன்பின் வீழ்ந்துள்ளானுண்
டொன்றியளவில்விபவத் தோடுசிவிகையிலேற்றி யுறுவீரென்ன
நன்றுரைத்தபடிபோந்து சகநாதன்கட்டளைபை நவின்றுவேண்ட. (கஉ)

சிவிகைதனைவணங்கினனூர்ந் திடத்தளியி னணைந்தரிதன் றிருமுனுப்பக்கக்
குவிகையுடன்பேரின்பக் கடலெழுந்தவலைபோனுக் குழறப்பாடிக்
கவினுறுபூசகன்மனையி னமுதயின்றுமிக்கசுகங் கலந்துவாழ்கா
னவில்செகநாதன்பத்தி மிக்கவந்நாட்டிறைகனவி னண்ணிச்சொல்வான். ()

என்னதருச்சகன்மனைக்கண் மேயவிலசாபத்தற் கெழின்மிக்கேய்ந்த
நின்னருமைக்கன்னிகையை யளித்தியையஞ்சிறிதுனது நெஞ்சிற்கொள்ளே
லென்னலுமுத்தமபத்திக் கொற்றவன்மிக்குவகையுட னெழுந்துகன்னி
கொன்னமைமன்றலுக்கேற்ற சாதனங்கண்முற்றுமைதிற் கூட்டியன்பால். ()

அருச்சகன்வீட்டிபைந்தவில சாபத்தன்றனையழைத்திட் டடியேனீன்ற
மருத்துறழ்மாமொழிக்குயிலைக் கோடியெனநிராசையினுன் மறுப்பமன்னன்
றிருச்செகநாதப்பெருமான் கட்டளையோ தலிற்சம்ம திக்கவார்வந்
திருத்தியினன்மணமுடித்து வேண்டியபொன்சீதனங்கள் சிறப்பநல்க. (கரு)

தன்னதுநாட்டடைந்துமன்னன் றரும்பொருள்கொண்டறம்பலவுந்தழைப்பவாற்றி
நன்னலஞ்சாலரிபூசை சாதுக்கள்பூசையன்பி னவிற்றிவா மேன்
மன்னமரர்தாமும்வியந் திடவிகத்தில்வாழ்ந்தீற்றின் மனைகளோடுங்
கொன்னமைவைகுந்தமெய்தி னுன்பத்தர்க்கரியபொருள் குறிக்கினுண்டோ.

வேறு

முதிர்பஞ்சத்தா லன்பர்பணி முட்டச்சகியா துயிர்துறக்க
முன்னுமிலசா பத்தனுக்கு மூவா தியல்கோ துமையீந்து
மதிதோய்செகநா தத்தளியின் வயங்குசிகரி கண்டின்ப
வாரிபடிந்து கிடந்திடுகோன் மானமிசைகொண் டணைதரச்செய்
ததிபேரெழின்மன் மகளைமண மாற்றியீற்றில் வைகுந்த
மடையப்புரிபே ரருட்கடலே யல்லற்புலக்கூட் டிடையெய்த்தேற்
கெதிர்காலத்தி லாயினுநி னின்பவருட்பே றீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கஎ)

இலசாபத்தகதிமுற்றிற்று

ஆ கவி டுளஎ௩௩

---

எழுபத்தாறுவது

# நரசிம்மபத்தகதி

திகழருட் கொண்டலாகுந் திருச்செக நாதனன்பா
விகபரத் தினுமின்பேய்ந்த விலசாபத் தன்சீர்சொன்னேன்
ககனமே லமரர்வாழ்வுங் கனவெனக் கண்டுவேர்த்த
புகழ்நர சிம்மபத்தன் புரிசெயல் சிறிதுவிள்வாம். (க)

மருக்கமழ் மலர்ப்பொதும்பர் வளங்கொள்சூர்ச் சரநாட்டின்கட்
பெருக்கமா ரசாவெனும்பேர் பிறங்கெழி னகரின்பாங்க
ரிருக்கரு நாகாஞ்சா லியற்பிரா மணகுலத்தி
லருக்கனைத் துதித்தமைந்த னருணர சிம்மன்மாதோ. (உ)

பாலியப்போதின்முந்நூல் பதியுப நயனமாற்றி
மேலிய வுலகம்புக்கார் விளங்குநா ளவன்றன்முன்னோன்
சாலிநேர் கற்புமங்கை சகோதர னுடனவ்வூர்நீத்
தேலியற் றுவரைமேல்பா லெட்டுநாழிகையார் சேய்தில். (ங)

பரவுபல் வளங்கள்சாலப் பழுத்தரை வதக்குன்றப்பால்
விரவுபூ ளுடப்பேரூர் மேவினன் வாழுநாளிற்
றரணியிற் பிறவாச்சன்மந் தாங்கிய நரசிம்மன்று
னூரமுறு கல்வியாதி யுணர்ந்திட வுளத்துளுன்னன். (ச)

திகழுமந் நகரின்மேய சிறுர்கள்பாற் கூடியென்றும்
பகலிர வினுமேயாடற் பயின்றனன் பசித்தகாலை
யகமிசை யடைந்தயின்றிட் டக்கணத் தகல்வானிவ்வா
நிகழுநா ளொன்றிற்சால நிறைதாகங் கொண்டின்மேவி. (ரு)

அண்ணிதா கத்துழன்றே னறல்கணத் தளித்தியென்னப்
பெண்ணியல் சிரத்தைமிக்கிற் பிரவிருத் தியிலமைந்தா
ளுண்ணிறை சினத்தளாயென் னுளுற்றினை விடாய்த்துவந்தாய்
நண்ணிடு மனையின்வேலை நான்முபன் றனன்செய்கின்றேன். (சு)

வீணதாஞ் செயல்கள்கற்று வெறும்விளை யாடல்கொண்டு
நாணமா தியகுணங்க னழுவவிட் டினிதுபார்ப்போர்க்
காணழ குருவமைந்தா யறிவுசற் றில்லாய்கல்வி
பேணலா தியவுநீத்தாய் பேதைமைக் குறையுளானய். (எ)

பசிக்கினிற் புக்கயின்று படர்கின்றாய் பார்த்தோர்யாரு
மசிக்கவெம் பித்தரேபோ லலைந்தனை யுடல்வளர்ப்பாய்க்
கொசிக்குந்தா கத்துக்கியானீ ருதவிடேன் பணிவிட்டென்ன
வசிக்கண்கள் சிவந்துநோக்கி யயலிற்போ யருந்தென்றோத. (அ

தமையன்றன் மனைவிமாற்றத் தழல்செவி வழிப்போந்துள்ளத்
தமையுடன் மாயாபாச மறுத்துக்கே வலமலத்தி
னிமையினில் விடச்சகிக்க வியன்றிடாத் துயரத்தோடு
சுமையுட னீப்பானுள்ளந் துணிந்திவ்வா றுன்னுகின்றான். (௯)

இடிபுரிந் தெள்ளுஞ்சொற்கேட் டீண்டிருப் பதிற்கானிற்போய்
மடிதனன் றென்றுசேணின் மருவுகோ பநாதனென்னப்
படிபுகழ் சிவன்கோயிற்பாற் படர்ந்தெமோர் பெருவாழ்வாகுங்
கடிகமழ் கொன்றைவேணிக் கண்ணுதல் பாதம்போற்றி. (௧௦)

நின்மல மனத்தினோடு நிராகார னாகிபன்பிற்
பன்மலர் தூய்ப்பணிந்துன் பதத்திற்சேர்த் தருளாயென்னக்
கன்மமொன் றெண்ணான்சாலக் கடினவை ராகமேவி
யன்மணி கண்டற்சிந்தித் தேமூநா ளவண்வதிந்தே. (௧௧)

அனந்தனீத் தியல்வான்றன்னை ரண்ணியின் குரூரச்சொற்கண்
மனந்தனி லெண்ணியாற்றான் வாய்ந்தமுற் றவத்தினீராற்
கனந்தழைத் திடுகற்கொண்டு கடிதுபோய்ச் சிவலிங்கத்தின்
வனந்தழைத் தியறன்சென்னி வைத்தன னுடைக்கவுன்ன. (௧௨)

வேறு

ஆங்காகு மத்ததியி லன்னையொரு பாலென்று
நீங்கா தமையு நிமல னடியவர்க
டாங்கா குலமுட் சகிப்பரிய தண்கருணை
தேங்காழி யாயவிர்முக் கண்ணன் சிவபெருமான். (௧௩)

வாத்திரன்கனல்கோர் மறையோன் வடிவாப்
பிரத்தியக்க மாகிப் பெருகும் பரிவால்
விரத்திமிக்க நாரசிம்ம பத்தன்கைக் கல்லை
யுரத்தினுடன் கொண்டுபுறத் தோச்சி யுரைப்பான். (௧௪)

அன்பவென்னீ மூர்க்கனைப்போ லான்மகத்தி செய்தழியாத்
துன்படைய வெண்ணினைநீ சூழ்முற் பவத்தினிடை
கொன்படருங் கானிற் கொடுவரியாய்ப் பிம்பாசி
யின்பமுறக் கண்ணன்மறை யீந்திடப்பெற் றுயன்றே. (௧௫)

ஏதுனகத் திச்சை யிசைத்தியருள் வேனென்ன
வோதுமொழி கேட்டோ னுளத்துவகை யோடான்றாட்
போதுமிசை வீழ்ந்தன்பிற் போற்றிப் பொருப்பரையன்
மாது மகிழு மணவாள மைக்கண்டா. (௧௬)

வேறு

அறிவற்றபால னிதுவேசிறந்த தாமென்றியம்ப வறியேன்
செறிவுற்றவொப்பி லருள்வாரிநின்னோர் திருவுள்ளமீதிலென்றும்
பிரிவுற்றிடாம லமைகின்றதான பிரியப்பதார்த்த மெதுவோ
குறியுற்றவஃதை யடியேன்மகிழ்ந்து கொள்ளப்புரிந்த ருளென. (௧௭)

வந்தித்திரக்கு நரசிம்மபத்தன் மனமோகையெய்த நுவல்வான்
புந்திக்குளெற்கு வகைநீடுமொப்பில் பொருள்விண்டுவன்ன வனீ
சந்திக்குமாசெய் குவனின்விலோச னந்தன்னைமூடு தியெனுச்
சிந்தித்திமைக்குண் மதுரைக்கண்மேவல் செய்தேவிழித்தியெனலும். (கஅ)

நாடுந்ததிக்க ணிரவூடுகண்ண னனிராதையாமி ருவருங்
கூடுங்கிரீடை செய்துற்றதன்மை குழகன்றெரிந்து குறுகும்
பீடுந்துபத்த னுடனேதுமியான்கொள் பிரியப்பதார்த்த மிவனே
நீடுங்கிருட்டி ணனிஞனிராதைநிகழ்மங்கையோர்தியெனவே. (கக)

வினவுற்றகண்ண னிவன்யாவனீண்டு மேவச்செய்திட்ட தெனெனக்
கனமிக்கநின்பி ரியபத்தனெப்பில் கருணைக்கணடி யிவனை
யனகப்பதத்தி லமைவிக்கவிங்கு னருளாலடைந்த னனெனு
வனமுற்ற சென்னி யானேதல்கேட்டு மகிழ்வோடுகண்ணன்மொழிவான். ()

பிறிவற்றநின்னெ ரடியாருமென்பி ராணப்பிரீதரெனையே
செறிவுற்றபத்தி கொடுநாடுகின்ற திறமுற்றதொண்ட ரெனினும்
வெறிமிக்கதுற்கு ணர்களாகிநின்னை மிகநிந்தைசெய்த னரெனி
ல்றிவற்றமூடர் மிசையானுளத்தி லருள்கொள்கிலேனஃ தான்று. (உக)

நனிகோபமுங்கொள் வேனன்னர்கோடி நரகத்தினூடுமமிழ்வார்
கனிவுற்றவீங்கி வனின்மீதிலன்பு கடலொத்சமைந்த வனெனி
னினிதெற்குறும்பி ரியபத்தனென்ன வியல்கண்ணனேது மளவிற்
பனிவெற்பின்மங்கை கணவன்கனிந்து படர்பத்தனீள்செ வியினில். (உஉ)

இராதாகிருட்டி ணன்மந்திரத்தை யினிதோதினன்ம றைதலு
மராமீதிலாடி டும்பாதகஞ்ச மமைகண்ணனேது வனெனைப்
பராவாதரங்கொ ணரசிம்மபத்த பரமன்புகன்ற மறையை
யிராவோடெலூடு மறவாமலோதி யென்னெப்பிலிவ்வ டிவையே. (உங)

மனமீதுகண்டெ னிசைபாடியாடி மலியின்புகோடி யிகமார்
கனமானபோக வகைமுற்றுமீந்து கருதுற்றபோதில் வருவே
னுனதாக்கையந்தி யத்தென்பதத்தி லுறுமாறுசெய்வ னெனவிண்
டினமானவொப்பில் பரிவாரமோடு மியலோர்கணத்தின் மறைய. (உச)

நரசிம்மனுற்ற துயினின்றுணர்ச்சி நண்ணுற்றவன்பு ரைதரக்
கரவற்றசிந்தை யமைபாவெழுந்து காணங்குகோப நாதன்
விரவுற்றசந்தி தியதாவிளங்கும் வியனோர்ந்துவிம்மி தமுறு
வானற்பொடோது மறைசெப்பியண்ண லடிபோற்றியின்ப மயனுப். (உரு)

அணிமிக்கதன்ன் கரிலெய்தவங்கு னமையோர்தவங்கொண் மறையோன்
றணிவுற்றபத்தி கொடுபோற்றியொப்பி றன்கன்னியைக்கொடுத்தே
பணிமிக்கதன்னின் மிசைவைக்கவுண்மை பதிநெஞ்சகங்கொள் பத்தன்
றிணிகற்பமைந்த மனையோடரன்சொ றிருமந்திரச்செ பம்விடான். (உகூ)

மனையோடுகூடி வாழ்நாளிலாண்பெண் மகவெய்தியுஞ்ச கமுடன்
றனையேமறந்து தினமன்பரோடு சார்ந்தின்னியங்கள் பொலியச்
சினைமானிகர்த்த திருமேனியண்ணல் செய்லீலைபாடி விழிநீர்
நனைமார்பனாகி யுறுசெய்கைகண்டு நரசிம்மபத்த னுறவோர். (உஎ)

அகளங்கபத்தி யுடையானொர்செய்கை யதுதங்குறிக்க மைவுரு
திகலொன்றல்கண்டு ளவமானம்வெஞ்சி னம்விராவியேற்ற குலநின்
றகலும்படிச்செய் தனர்கீடமன்ன வவர்செய்கைகண்டு சினவா
னகமொன்றில்வம்மி னெனவோதிநீக்கி னவரைக்கணித்தி லனுற. (உஅ)

ஒருநாளிலோர்த னிகன்மெத்துபொன்கொ டுறுமங்கர்க்கண் மருவி
யருகாகுமாந்த ருடன்யான்வளங்க ளமையுந்துவார கைசெல்வேன்
பெருகாடகங்கொ டுதனிச்செல்பண்பு பிழையென்றுமிங்க கரிடை
வருமானமிக்க வரிடங்கொடுத்து மருவுண்டிகைகொ டுறுதல். (உகூ)

நலமென்றுமுன்னி வங்கேதனிருப்பி னவின்மின்களென்று வினவச்
சிலதுட்டராசி யத்தோடுநார சிம்மப்பெயர்ச்செல் வனுளா
னிலவன்னவன்க ணுறினின்மனங்கொ ணினைவொத்தியற்றி டுமென
வலகற்றவோகை யொடுபத்தன்மேய வகமுடடைந்து புகல. (௩0)

வினவிப்புரத்தி லுறைதுட்டரோதும் விதநாடியுட்கவலையாய்க்
கனமொத்தமேனி யனையுன்னியுற்ற கருமம்புரிந்து தனிகன்
மனதிற்கொடுன்ப மொழியச்செயென்று வழிபட்டுரைப்பனின்பா
லினமுற்றபொன்னெ வளவுள்ளதென்ன வேழாயிரத்தொ கையென. (௩க)

நரசிம்மபத்த னவைகொண்டுசாம ளனெனுவிணும மருவு
முரமன்னுமுண்டி கைச்செட்டியற்று மொருவன்குலாவி னனவன்
கரமீதினுற்ற விச்சீட்டறிந்து கணமேநின்மாடை முழுதும்
விரவோகையோடு தருமென்றுரைத்து விடையீந்துபொற்றி ரளெலாம். (௩உ)

நகரின்கண்மேய வனைவோர்க்குநல்கி நரசிம்மபத்தனிலக
மகநீடுவார கையின்மன்னுசெல்வன் வதியும்பலோர்க ளிடமும்
புகல்சாமளன்ற னைவினவுகாலை புரமுற்றபற்ப லர்களு
மிகவிம்மிதங்கொ டியாமீதுபேரும் வினவுற்றதில்லை யெனலால். (௩௩)

தனிகன்கவன்று புரநின்றகன்று சாரவ்வழிக்க ணுறுகா
னனிசுந்தரங்கொ ளொருவண்டிவெண்மை நயவச்சுவங்கள் பிணியா
வினிதொன்றவங்க தனுடைவொப்பி லெழின்மேவுமாண்ட கையுறப்
புனிதற்கடாவு பொழுதோகையோடு புருடோத்தமன்சொல்வனரோ. (௩ச)

யானேயந்நாம முடையேனெனச்சொ லியபோதுசெல்வ னறல்கொண்
மானேர்பொருந்து மயிலென்னவோகை மலிவுற்றியன்ற வகைசொற்
றூனேறுகொண்ட வன்சீடனல்கு மணிமிக்கசீட்டை யருள்கா
லூனேர்கணன்மு னோர்சொற்பனத்து முணர்தற்கொணாத வொருவன், (௩௫)

விரிகஞ்சமொஞ்சு தயைபொங்கிடுந்தன் விழியின்கணேற்றி யுயிருட்
கரியென்றுநின்ற கரியன்சொல்வான்ம காஞரசிம்மநாமத்
துரிமைக்குணங்கொ ளென்னண்பனேவ லொன்றீதுகாறுமெனிடைப்
பெரிதுங்கொள்கில்லன் யானீதுகாலை பெறுபாக்கியத்த ஞனேன். (௩௬)

என்றேபல்வாறு புகழாமகிழ்ந்தி தனிலேகுறித்த படியே
குன்றேநிகர்த்த பொன்கொள்கெனக்கொ டுத்திட்டபின்னு நுவல்வா
னன்றேயெனண்ப னரசிம்மபத்த னல்குந்தொறுந்தொ றுமிபா
னின்றேய்தரப்பொ னருள்வேனெனச்சொ லினன்பானெனுவுரைசெய்வாய்.

எனவோதியோலை யொன்றுங்கொடுத்தி கப்பச்செல்வன்றுவரைபோய்த்
தனதானகாரி யம்பூர்த்திசெய்து தவநாரசிம்மனிடமுற்
றினநேர்தமொப்பி லுயர்சேவைகொண்ட வென்பாக்கியத்தினுக்கும்
வனீடுசேவ கனைவாய்ந்தநும்மொர் மகிமைக்குமெல்லையிலையே. (௩௮)

பொருவற்றசாம ளன்மேனிகொண்டு பொலிகாமரென்பு கல்வன்யான்
மருவன்னவற்கு நிகர்வார்மணன்றி வானத்துமில்லை யம்மா
கருணைத்திறங்கொள் விழியோடுமந்த காசந்துலங்கு முகமு
மிருண்முற்றறுக்கு மணிகொண்டகுண்ட லமுமென்னெனச்சொலிடுவேன். ()

கதிர்விட்டியன்ற பீதாம்பரங்கொள் கண்கட்கவர்ந்து விடுமேற்
றுதிகொண்டவன்ன வன்மேனிமீது துதைபேரெழிற்சொல் பவர்யார்
பதிகொண்டகண்ணன் மணிவண்ணனேமெய் பார்த்திட்டவன்ன வனெனோர்
மதிகொண்டியைந்து குதிகொண்டனன்கண் மனமேன்மறைந்தி லானல். ()

காயாமலர்க்கு நிகர்மேனிநாடு கண்வண்டுகட்கி லனெனப்
போயாரிடத்து மிரவாமலீகை புரிகின்றசெல்வ ருறமழத்
தோயாதரத்தொ டபலங்கநோக்கொர் துணிவீந்திடாத முறையால்
வேயார்கரத்த னருண்மேனிமுற்றெ விதநாடுகின்ற தச்சோ. (௪௧)

ஒப்பற்றவன்செய் திடுமாயையான்மு னுற்றுங்தெரிந்தி லேனுப்ப்
பொய்ப்பற்றமைந்த பொருண்மோகமோடு புலன்வாயமைந்து சுழலுந்
துப்பற்றவென்புன் மதியென்னையென்று சொல்வேனெனக்க னிவோடே
மெய்ப்பற்றமைந்த தனிகன்புகன்று விமலன்சொன்மாற்ற மிசையா. (௪௨)

தரலானவோர்தி ருமுகங்கொடுத்த தியன்பனேற்றநுமறைச்
சிரநேர்சிரத்தின் மிசைவைத்திலங்கு திருலோசனத்திலொற்று
தரமேவியின்ப வறல்பாயவுற்ற தனிகற்றுதித்து வலமாய்த்
தரணிக்கண்வீழ்ந்து தாழத்தெரிந்த வனுமஞ்சினன்றெழுதனன். (௪௩)

செயலீதறிந்த நகரத்தினூடு செறிதூர்த்தர்சென்னி குனியா
வியனச்சநாண மிகமேவினுரெ விதவிம்மிதந்தெ ரியினுங்
கயவர்க்குஞான மருவாதுயர்ந்த கதிநாடுதொண்டர் கட்கே
* மயலொத்துளோர்கள் செயல்கொண்டொர்தீமை மருவாதுசாட்சி யிதுவே.

---

* மயல் - பிசாசம்

தனையொத்திலங்கு கண்ணன்றனைத்த ரிசனஞ்செய்துற்ற தனிகற்
கனையொத்திலங்கு நரசிம்மதாச னகமீதின்மூன்று திவசம்
பனையொத்திலங்கு மன்போடமிக்கு பசரித்தனுப்பி னனனேன்
மனைபுக்கருட்க ணனையேத்தியின்ப மருவிச்சிறந்தனனரோ. (சரு)

இருளோதிமாதர் நகையாதிரீத்தி ருங்கானம்வெற்பி னிடைமேய்ச்
சருகாதிதின்று முயல்யோகர்கண்க டரிசித்திடற்க ரியவன்
பொருளோகையோடு தாமுன்குலாவு புதுமைத்திறந் தெரிநரே
யருணீடுபத்தி யடியார்கண்மேன்மை யறிவார்கள்பாவரலரே. (சசு)

வேறு

இன்னவாறிய னரசிம்மபத்த னினியகண்ணன திசைமிகப்பாடிப்
பன்னரும்பர மானந்தனுகிப் பயிலுகாளையிற் பயந்தபுத்திரிக்கு
நன்னலம்பெறு திருமணமுடித்தா னங்கைகர்ப்பமுற் றியன்றனளக்கா
லன்னமாதினைக் கண்டவண்மாமி யாகுலங்கொடி வாறறைந்திடுவாள். (சஎ)

கருப்பமுற்றிடு நீமகப்பயக்குங் காறுஞ்செய்திடுங் கடன்கண்முற்றவுமே
விருப்பமிக்கநின் றாதைசெய்திடுதல் வேண்டுமிங்கர் மேல்வழக்கீதாங்
திருப்புரைந்தவுன் றந்தையோதாரித் திரியவாழியுட் பெரிதுமூழ்குற்றுன்
றெருப்புகுந்துழல் பிட்சைகளுடனே சேர்ந்துகையில்வாத்தியமுதற்கொண்டே.

பார்த்தபேரெலா நகைத்திடவாடிப் பாடியேதிரிந் திட்டனனினக்குச்
சீர்த்திபெற்றிடச் செய்சடங்கினுக்கென் செய்வன்யானகர் சேர்ந்தசுற்றத்தா
ரார்த்தியம்பிடு மலர்க்கொர்பாத்திரமா யமையநாண்மல ராதனத்தியலு
மூர்த்தியென்சிரத் தமைத்திடிற்பிறரை முனிந்துவைதிட முறைபுளதேயோ.

என்றுபற்பல விதம்படத்தன்னை பேசல்போனர சிம்மதாசன்மேற்
குன்றுறழ்ந்திடு பெருஞ்சினங்கொண்டு கூறப்பாவையு ளாறலளாகி
யொன்றுமோர்முடங் கலினிடைபுமைபிவ் வூரின்மேவினர் யாருநிந்தித்தார்
துன்றுமற்றதால்யான்மிகவிலச்சை தோய்ந்துளேன்றனஞ்சொற்பம்வாய்ந்துளிரேல்

திகழுமிங்கு ரணந்தியல்கிரியை செய்தகன்றிட ரெனவரைந்தனுப்ப
மகடன்வீட்டிடை மேவுவான்கையின் வாத்தியங்கொடு மாதவன்புகழ்ச்சீர்
மிகநுவன்றன னெய்திடக்கண்டார் விவிதவாசியம் விளம்பியிக்காலை
நகரினீங்கிவ னெய்தலினங்க னண்ணிற்சாலவு நன்மையாமென்றார். (ருக)

விரவிடுஞ்செயல் கண்டபுத்திரிதான் வெந்தபுண்ணிடை வேனுழைந்தென்னப்
பரவிலச்சைமிக் கனண்மனையந்தர்ப் பாலழைத்திவன் பகர்ந்திடுகின்று
டாமிகுத்தநீ ரெங்கணேந்தனிர்மேற் றரித்தவேடம்பார்த் தனர்பாலர்தாமுஞ்
சிரமசைத்தனர் நகைத்திகழ்கின்றார் திரவியங்கொடு சேர்ந்தனிரென்னில்.

என்னதங்கையில் வழங்கினிர்நகருக் கிக்கணத்திலே குதிரெனப்பாவை
பன்னநீசற்றுந் துயரலைவிரும்பும் படிகிருட்டிணன் பாலிப்பனினது
நன்னலம்பொலி சீமந்தத்தினுக்கா நாடுமெப்பொருள் களையுநின்மாமி
சொன்னவாறளிப் பேனவளிடம்போய்ச் சூழ்ந்துநீகுறித்தனைசொலென்றேத

மாமிதன்புடை சென்றனள்வழுத்த மனதிலாசிய மிகமருவினளாய்ப்
பூமிமேற்பெருஞ் செல்வமிக்கவர்கள் புரிதல்போற்பிரா மணசந்தர்ப்பணைக்குந்
தோமின்மங்கையர்க்களிக்கும்பூணுடையின்றொகைக்குந்தன்னுளஞ்சூழ்ந்தனளொழுதி
நாமிங்ஙன்மறந் தவையெவையென்ன நனிபடித்துள நகையமைந்தீற்றில். (௫௪)

இரண்டிடங்கழி யும்வரைந்தருகி லியைந்ததன்மரு கிபின்கரத்தளிப்பக்
குரண்டநேர்மனத் தினள்பிதாவின்பாற் கொடுக்கவாங்கியேகாந்தமாந்தலத்து
ளரண்டமைத்தகண்ணன்மறையோதி ய்மைபுமேல்வையிலளப்பில்பேருளே
திரண்டகார்முகில் வண்ணனுங்கண்ணன் றெய்விகத்திருமறையவன்வடிவாய்.

சீட்டிற்கண்டபற் பலபொருள்களையுந் திருத்தமார்சுவ ணத்திடங்கழியு
மேட்டிமைப்படப் பண்டிபிற்கொணர மிக்கமாதவ நரசிம்மபத்தன்
மாட்டின்போடளித் தனன்மறைந்திட லு மகளுவந்திட வழங்கினன்கண்டார்
தாட்டிகம்பொலி பத்தனைப்புகழ்ந்து தாழ்ந்துவந்தனர் மாமிநாணினளாய். ()

சென்னிகோட்டியுள் வியந்தறியாமேசெய்தவென்பிழைபொறுக்குதிரென்னப்
பன்னியேத்தினள் வைபவம்பொலியப் பரிவிற்செய்கிரி யைகண்முடித்திட்டார்
பின்னிருந்தவம் பெற்றியல்பத்தன் பிள்ளைதன்மனைக் கட்பிறங்கியருண்
மன்னியற்கிருட் டிணன்புகழ்பாடி வானுளார்களும் வாழ்த்திடவமைந்தான்.()

சிலதினங்கழித் தருமந்தமகளோர் சிறப்பமைந்தசே யினையுயிர்த்திட்டா
ளிலகுபத்தன்றன்ன கரமைந்திட்டா னினியபுத்திரி யீன்றதன்சுதன்று
னலமுறப்புறத் தாடிபெருவ நண்ணுமேல்வைநா யகன்மனையினைவிட்
டலகின்மெய்ப்புகழ்த் தாதைதன்மனைசே ரமையந்தன்னிளை யாள்பிதாவுடனே. ()

இகமுறுஞ்சுகங் களைத்திரணமதா வெண்ணிடும்பெருவிரத்தியெய்தினளாய்ப்
பகவன்மெய்த்திறம் பாடிபானந்தப் பரவையிற்படிந் துறுஞ்செயனேக்கி
யகம்வியந்துதா னுஞ்சடமான மனைத்தும்விட்டரி பசனைசெய்தின்ப
மிகவமைந்தன ளிருந்திடும்போதோர் வேசைநிர்த்தகீ தங்களின்மிக்காள். ()

ஓங்குசீர்நர சிம்மபத்தனிற்பா லுற்றுமற்றவ ருபர்ச்சிகண்டுவந்து
தீங்குதோய்தனோர் குலத்தொழில்விடுத்துச் சீலரொத்தரி பசனைசெய்துற்று
டாங்குமன்னவர் செயலறிந்தன்பர் தமதுமாமனு மந்நகரிறைவன்
பாங்குமந்திரி யாகவுமமைந்தான் பகர்தன்னோர்மருகன்செய லுணர்ந்தே.(௬௦)

மனத்துவேசமிக் கிறைவன்பாலெனது மருகனுகிய நரசிம்மனகத்தாற்
கனத்தவெம்பிரா மணகுலத்துக்கோர் களங்கமாயமைந்துள்ளனன்றனதெவ்
வனத்தணிச்சுதை தனைக்கணவன்றன் மனைக்கனுப்பிடான்மகிழ்ந்தவளுடனே
யினத்தர்நாணிடப் பாடியாடுகின்று னிதுவலாலினு மியம்பவொன்றுளதே. ()

நகரில்வாழொரு வேசையைமனைக்க ணண்ணவைத்துளா னுணமொன்றில்லான்
சகநிலாவினர் சாற்றுவெம்பழிச்சொல் சகிக்கிலேனவன் றனைவரவழைத்துத்
திகழூர்ப்புறத் தாக்குதியென்னச் செப்பமன்னன்சே வகரிடமவனை
நிகழென்முற்கொணர் கென்றனனுய்த்தார் நேர்ந்தபேரருணின்மலப்பத்தர்.()

தமதுபுத்திரி களும்விலைமாதுந் தாளமாதிகைக் கொண்டுகிட்டினன்றன்
விமலலீலைகள் பாடியாடிடமன் விளங்கிடுஞ்சபைமேவிடக்கண்டான்
சமரவேற்கர மன்னரசிம்ம தாசரோடுநீ யென்னினேர்குலத்துக்
கமைவுறுத்தொழி லியற்றினையென்ன வருட்டிறங்கொண்மெ யன்பர்சாற்றிடுவார்

எனக்கோர்சாதியுங் குலமுமின்றுடலை யெனதென்பார்கொளும் விதியதுதேர்தி
யினத்தாராமறி வினர்களெனைமுன் பிகந்திட்டாரவர் தம்மையானிகந்தேன்
மனத்துளையமுற்றிடில்வினயறிதி மனுமுறைத்துறை மன்னவனுநீ
பினத்துதுட்டர்சொற் கொண்டகற்றுதியோ பிரபலத்தகை பெற்றபாகவதம்.

வினவியும்பகர் தன்மங்கண்முற்றும் வீணர்சேர்க்கையின் மறந்துவிட்டனைகொன்
மனதிலுய்த்துண பென்னமன்பாங்கர் வதிபுராணிகன்வ தனநாடிடலும்
விநயமிக்கவ னுரைப்பனிங்கிவர்தா மேன்மையார்பர பத்தரென்றோதிக்
கனமிகுந்தபா கவதத்திலோதுங் கவினிலக்கணக் கணமுழுதிவர்பால். (௬௫

பொருந்தியுள்ளவென் றோதமன்மகிழ்ந்து பொருவிலன்பரைப் போற்றினனனுப்பத்
திருந்தியற்பெறு பத்தர்தாமுன்போற் சின்மயானந்தத் திற்றிளைத்திருந்தார்
விருந்துதோய்கிருட் டிணனருள்வடிவை வீட்டிற்றுபித்து வியத்தகப்பூசித்
தருந்துமாரமு துறழ்துதிபாடி யரும்பெறற்சுதைகளுடனுட்டயர்வார். ()

விளங்குமன்பரோர் நாளிற்கேதார வியன்பொருந்திரா கம்பகர்ந்திடுகால்
வளங்குலாவதன் மதுரமும்பத்தி மாண்புங்கண்டருண் மாதவன்றனெ
ருளங்குலாவுவாற் சல்லியஞ்சகியா னுவந்துதன்களத் துற்றமாலையினைக்
களங்குறுநர சிம்மமெய்ப்பத்தன் களத்திலிட்டிடக் கண்டவருவந்தார். (௬௭)

சீலமிக்ககே தாரராகநர சிம்மபத்தரோ திடுந்தினமெதினுங்
கோலமிக்ககண் ணன்றிருக்களத்திற் குலவுமாலைவீழ்ந் திடும்வழக்கமைசீர்
சாலயாவரு முணர்ந்துளேவிதந்து சாற்றலாலெவண் சார்ந்துளார்தாமு
மேலதாஞ்செய லுணர்தரவடைந்தார் மெய்மையன்பர்தம் வீடமைபலர்க்கும்

உண்டியாதிதங் துபசரித்திடுவ ருற்றநாளொன்றி லுச்சியம்போதெண்
கொண்டிடாதன்ப ரணைதரவவர்க்கூண் கொடுத்திடற்கொரு பொருளமையாம
லண்டியற்றிருத் தொண்டர்தம்பூசை யாற்றித்தம்மனை யினும்புறம்போந்தே
மண்டியற்பெருஞ் செல்வன்பாலுண்மை வழுத்தியாயிரம் பொன்கடன்வாங்கி

மதுரகேதார ராகத்தையடகா வைத்துச்சீட்டொன்றும் வரைந்தனர்நல்கிச்
சதுரமைந்தநின் பொருளளித்தேகே தாரராகம்யான் பாடுவனெனச்சொற்
றதுலரேகின ரவர்நிலைதேர்ந்து மருத்தவாஞ்சையி லாழ்ந்திடும்வணிகன்
கதுமென்றென்கொடை யீதெனச்சொலவுங் கருத்தளித்தில தாற்கடுவினையே

புண்ணியத்தரெத் தகுதுயருறினும் புனிதநல்லறம் புரிகிலதமையார்
மண்ணிடத்துலாம் பேயனுர்செல்வ மலிவுற்றுலுந்தம் மனந்துணிந்தொன்று
பண்ணிடாரகிற் சுடினுந்தற்குரித்தாம் பரிமளங்கெடா தெட்டியென்செயினு
மண்ணிடுங்கசப் பறுததுபோன்மெய் யறிஞர்க்காந்தன்ம மஞர்களுக்காமோ.

கதிநல்கன்பர்மெய்ப் பூசனைக்கென்னிற் கடனுநல்கிடாக் கயவரைக்கருதி
னிதிநல்*கிப்பனை யளகையர்கோனு நிகழ்த்தலாம்வினை நீள்வலியென்னே
மதியிலார்பெறும் பொருளுமண்பாவை வன்கைவாளுமங் கலந்தவிர்மடந்தை
யதிசவுந்தரி யமுமுடைபூணு மங்கமார்நிழ லனையவாமன்றே. (௭௨)

பத்தரேகுகால் வைசியனிளைய பாரிகிட்டிணன் பத்திமிக்கமைவாள்
சித்தமீதெழு முவகையனார சிம்மபத்தர்பொற் றிருவடிவணங்கி
மெய்த்தகைக்கிருட் டிணற்றெரிசிக்க வேட்டபான்மைவிண் டிரப்பமெஞ்ஞான
சித்தர்பின்றரு மென்றுரைத்தில்லிற் சேர்ந்துபத்தர்தந் திரளுணவழங்கி. ()

வழக்கம்போற்றுதித் தமைந்தனருற்ற வணிகற்கோதிய வாக்கொழியாதே
முழக்கமிக்ககே தாரராகத்தை மொழிந்திலார்தொடை யனுமொழிந்திடலாற்
பழக்கமாயினர் பார்த்திவன்சாலம் பயின்றுளோனுண்மைப் பத்தனன்றென்றே
சழக்காராகின ருவந்துமன்புடைபோய்ச் சாற்றியன்னவன் றனைப்பரீட்சியென

பார்த்திபன்பத்தர் தமையழைத்தேநீ பாடும்போதருட் பகவன்றன்களத்திற்
சீர்த்திலங்கிய மாலைநின்களத்திற் சேர்வதாப்பலர் செப்பிடக்கேட்டே
னூர்த்தியோடுகாண் டாவவாவினனென னாண்மனைத்தலையமைகிருட்டிணநன்
மூர்த்திமுன்னிர்த்த கீதஞ்செய் திடுதிமுருகுலாந்தொடைநின்களத்தமையில்.

சாதநின்செய லென்றுகொண்டுனது தாசனகுவ னசத்தியப்படுமேற்
காவனென்றுநிச் சயிப்பனென்றேதக் கவின்றதொண்டர்தங் கையில்வீணைகொடே
வாதன்முன்றுதித் தாடினரக்கால் வண்மைமிக்ககோண் மாற்றமோதினர்கள்
விரவுமாலைக டமைக்கிருட்டிணனன் மேனிமேலுரமுறமிகப்பிணித்தார். (௭௬)

நரசிம்மப்பெருந் தாசர்கேதார ராகமன்றிய யாவையுநவின்றார்
வரதன்மீதுறு மாலைதன்களத்தின் மருவக்கண்டிலார் மற்றதைபுணர்ந்து
விரவுதுட்டர்கண் மிகமகிழ்ந்திட்டார் வீழிற்றுமுயிர் விடுவர்கொலந்தோ
பரவுமௌவியர் கட்கதுசாலும்பகைவேண்டாவெனும் பழமறைக்கிலக்கர். ()

அன்னகாலையி னரசிம்மபத்த ரருட்கிருட்டிணன் பாலறைந்திடுவ
ரின்னதாலெனக் கோர்குறையில்லை யிளப்பநின்புகழ்க் கெய்திடுமென்று
பின்னருந்துதித் திருந்தனரக்காற் பிறங்குபத்தவற் சலப்பெயர்ப்பெருமா
னன்னலம்பொலி பத்தர்தம்முருவ நண்ணிநாய்கன்ற னன்மனையெய்தி.(௭௮)

பத்திமிக்கவ ளானவைசியன்றன் பாரியோடுன்பர்த் தாவுளனேகொ
னத்திமுன்கொள்பொன் பலிசையினுடனே நல்குமாறிவ ணன்னினன்கொண்டே
பத்திரத்தையீந் திடப்பகர்கென்னப் பாரியோதக்கண் படைபெறுநாய்க
னத்திரோர்விதி யாளுடன்பொன்கொண் டடகைநல்கென வங்ஙனங்கொணர்ந்தாள்

நரசிபத்தரிற் றிகழ்தருகண்ண னளினநாண்மலர்க் கரத்திடையளித்திட்
டிரணியங்கொளும் போதருட்கடலா மிறைவனற்கரப் பரிசமெய்துதலும்
விரவுமெய்ப்பர மானந்தங்கொண்டாள் விரைந்துகொண்கன்பான்மேவினள்விள்வா
ளிரணமின்றளித் திடவிங்ஙனணைந்தா னேற்றசீர்நர சிம்மபத்தனலன். (௮௦)

---

* இப்பன் - வைசியன்.

ககனர்தங்கன வினுமறிவரிய கண்ணனேயவன் கவின்கொண்மேனியுந்தோய்
விகசிதம்பெறு திருமுகப்பொலிவும் விள்ளொணாவசா தாரணத்தகைத்தியான்
மிகவும்வேண்டலிற் கண்ணனின்விழிமுன் மேவுவானென்றார் விளம்புசொற்படியே
பகவன்மேவின னெனவவர்விதந்த படிவிரித்துநாம் பகரிடமிதன்றே. (௮௧)

காண்டவவ்வுருக் கருதிநாய்கன்மனை கரையில்பேரின்பக் கடன்முழுகுற்றாண்
மீண்டகிட்டிண னரசிம்மபத்தர் மேயவெல்லையி லடகுறுசீட்டன்
றாண்டமைந்தவர் வியப்புறக்கீழ்விட் டருவமாதலு மன்பர்மற்றதுகண்
டேண்டழைத்தகே தாராகத்தை யிசைப்பக்கண்ணன்மீ தியைந்துளதொடையல்.

தரையில்வீழ்ந்துட னரசிம்மபத்தர் தங்களத்திடை தானுறக்கண்ட
விறைவனேமுத லாயினர்பலரு மெல்லையில்களிப் போடுவிம்மிதராய்க்
குறைபுகன்றிடு கொடியரைத்தண்டங் குயிற்றியன்பரைக் குலவுமோகையுட
னறைமலர்த்திரள் கொண்டருச்சித்து ணயந்துதுத்திய நனிநவிற்றினரே. ()

தோன்றலோதுவன் மடமைகொளிராச துட்டனேன்புரி சோதனையெண்ணா
தான்றபேரரு ளாற்பொறுத்தருள்வீ ரடிகண்முன்புவீழ் சீட்டதன்விவரந்
தோன்றவோதுவீ ரென்றலுமுண்மை சொல்லக்கேட்டிறும் பூதுமிக்கவனாய்ச்
சான்றவர்க்குறு தக்கிணையாகச் சங்கையற்றபொன் றந்துவேண்டிடலும். ()

இந்திரன்பெரு வாழ்வையுந்தாழ்வென் றெண்ணுமாதவ ரேற்கலராகித்
தந்திருக்கரத் தின்னிசைவீணை தாங்கிங்கிட்டிணன் றன்புகழ்பாடி
மந்திரத்திலெய் தினருலகுடனு மறந்துபேரின்ப வாழியின்முழுகி
யிந்திலங்குநீள் வேணியன்சீட ரினிதுவாழ்ந்தன ரிங்ஙனமியனாள். (௮௫)

வேறு

புகலுமங்கரி னருகமைசாம புரத்தியறிரிபுராந்தகப்பேர்
திகழ்பெருஞ்செல்வ மறையவனீன்ற திருவுறழ்கன்னிகைதனக்குத்
தகவொருவரனைத் தேடிடும்வண்ணந் தனக்கதிநட்புளோனாகி
நிகழ்கிருட்டிணபட் டன்றனையனுப்ப நேர்ந்தனனவனிவர்நகர்ப்பால். (௮௬)

வந்துசாவிடுகான் மாந்தர்பற்பலரு மாட்சிசானரசிம்மபத்த
ருந்துமெய்ச்சீர்த்தி பலபடவுரைப்ப வோகையோடிவர்மனையெய்தி
மைந்துறுசேய்நற் குணமுருவாதி மதித்துவந்தன்பர்பால்வகுப்பான்
கொந்துறுகுழற்செல் வன்மகட்குமது குமரனைக்கொண்கனாக்குறித்தேன். ()

நும்மனத்திசைவு சாற்றுதிரென்ன நுவல்வரத்திரிபுராந்தகன்றான்
செம்மலர்த்திருவின் கடைக்கணோக்குற்ற செல்வன்யான்றரித்திரமிகையே
னம்மவோவவற்கு மெனக்குஞ்சம்பந்த மாவதெவ்வாறமைதரும்யான்
சம்மதிக்கில்லேன் றக்கவோர்வரனைச் சார்ந்தறிகுதியெனச்சாற்ற. (௮௮)

கிருட்டிணபட்ட னீயிர்மற்றொன்று கிளத்தலிரம்மகடனக்குந்
தெருட்டிகழ்மைந்த னல்லதுபுவிமேற் றேடினுங்கிடைப்பரிதநித்தப்
பொருட்டிரளினை நங்கடைக்கணோக்க மைந்தர் பொருட்படுத்தலர் கிருட்டிணன்பே
ரருட்டிருவமைந்தீர் நிச்சயித்தனனென் றமைந்ததாம்பூலமீந்திட்டான். (௮௯)

நகரிடைமருவித் திரிபுராந்தகன்பா னம்மகட்கேற்றநல்வரன்விண்
டிகழிமையோரும் வழுத்துசீர்நார சிம்மபத்தரின்சுதனவர்தம்
மகமிசைதாநிச் சயம்புரிந்திங்ங னணைந்தனனென்னலுஞ்செல்வன்
மிகவெறுத்தவனுப் மூடநீயென்னே விளம்பினையஞ்சிடாதென்முன். (கூ0)

இரவலரினத்துட் சேர்த்துழனரசி யெவ்விடத்தானுயரிலக்கப்
பிரபுவாகியயா னெங்ஙனமெண்ணுப் பேதைசம்பந்தஞ் செய்திட்டாய்
புரமுளார்கேட்கி னகைப்பரென் னுடனே புகன்றசொல்லினிப்பகரேலென்
றரவெனச்சீறி யிசைத்திடக்கேட்டோ னகஞ்சிறிதுவர்த்தனனறைவான். ()

செயலிதுநினக்குட் சம்மதமின்றேற் றேவரேத்திசைநரசிம்ம
ரயலமைந்துரைத்து வருவன்யானெனவொன் றறைந்திலன்வறிதுறநினது
நயமகளதுசா தகமிவ்வாறமையி னடலைகொள்வதிற்பயன்யாதென்
றியலுறவினர்க ளோதிடச்செல்வ னிதயமேற்சலிப்புடனிசைந்தான். (கூஉ)

விவாகமுகூர்த்த நிச்சயித்ததனை வியன்மிகுநரசிம்மபத்தர்க்
குவாவுறழ்செல்வ னனுப்பினன்வறிஞ னுறுவதாற்சிறப்பொன்றுமுளுற்றான்
சுவாகதமொழியாட் கமையும்பாக்கியத்தைச் சூழ்ந்திடான்றுக்கமிக்குற்றான்
றவாவருட்புகழ்சா னரசிம்மபத்தர் சார்ந்திடுமுடங்கல்கைக்கொண்டே. (கூங)

முதிருணலஞ்சால் கிருட்டிணமூர்த்தி முன்புவைத்தனர்துதித்தமைந்தார்
திதிவரக்கண்ண பிரானிராதையுடன் சேணிலாமன்னவனேபோல்
விதிமுதற்றேவ ரினங்கண்மானிடரா மேவநால்வகையசைனியங்க
ளதிர்கடலெனவார்ப் புடன்புடைசூழ வருணரசிம்மரில்லணைந்தான். (கூச)

காண்டலுமன்ப ருலைமெழுகென்னக் கருத்துருகிடத்தொழுதேத்தி
மூண்டகண்ணன்றன் பத்தவாற்சலிய முறையிதென்றுன்னினர்வியந்தா
ராண்டநாயகன்றன் கொணர்ந்துளபொருள்கொண் டங்கர்மாந்தர்பற்பலர்க்கு
மேண்டகவிருந்து புரியவார்ந்திட்டார் யாவருமிகவுவந்தனராய். (கூரு)

இத்தகையுணவு நாமுணளயின்ற தின்றெனவினவினர்மேலும்
பித்தர்காள்கிடைப்ப தரிதருட்சீலம் பெறுநரசிம்மபத்தர்செயு
மெய்த்தவப்பயனீ தென்றனர்மிசைந்தார் வினையதுமுற்றுறப்பத்தர்
மைத்தகைக்கருணை மேனிகொள்கண்ணன் மாட்டிஙன்வழுத்துவர்மாதோ.

பகர்மணத்திற்கியா னெய்துகிலேன்சம் பந்தியின்கிரியைகள்யாவும்
விகசிதம்பெறநீ நடத்துதியென்ன விமலனுள்ளிசைந்தனன்படர்ந்தா
னகமிசைநினைவார்க் கின்பமிக்கீந்திட் டவர்பொறையாவுந்தாங்கிடினும்
பகவனைக்கருத விடாக்கொடும்பாவப் பண்பினையென்பகர்வதுவே. (கூஎ)

இன்னணமிங்ங னியலுங்கான்மகளை யீன்றிடுதனிகனுமறையோன்
கொன்னமைநரசி பத்தருமகனுங் குறுகிலரெனப்புரோகிதனே
டென்னகாரணமின் னமுமணைந்திலா ரியான்மகடன்னையீவதினு
மன்னவர்வரவு நாடியெய்த்திடுமா றமைவிதியறக்கொடிதாமால். (கூஅ)

இரவலருடனே பாடியாடிக்கொண் டேற்றிடவகன்றனர்கொல்லோ
பிரபுவாகியநா னவர்வரவறியப் பெயர்ந்திடிற்சுற்றமாயினர்கள்
பரவுறுபரிகா சம்புரிவாரிற் பாலுறவுந்துணிகிலனென்
றாவுறழ்சினமும் விசனமுமெய்தி யறையக்கிட்டிணபட்டன்புகல்வான். (௯௯)

உத்தமத்தகைசா னரசிம்மபத்த ருரைத்தமாற்றந்தவறுகிலார்
சித்தமேலையமெய்நலையென்னத் தேற்றினனிற்புறத்தமைகாற்
றத்தலைவாரி யுறழ்முழக்குடனே சதுரங்கசேனைபுமதன் முன்
மெத்தணியமையோர் தேர்மிசையொப்பில் விசித்திரவிளவரசுடனே (க00)

நரசிம்மபத்தர் சேயனுமமைசீர் நாடுபுகிருட்டிணபட்டன்
பிரபுவாமறையோன் றன்னெடோதுவனின் பெருந்தவச்செல்விதற்குற்ற
வரனிதோவந்தா னரசிம்மபத்தர் வறுமையைநன்றுநோக்கென்ன
வரவின்மேனடித்த தாளுடைப்பெருமா னன்பர்சீரறிகிலானம்பான். (க0க)

வெஞ்சினமிகுத்தென் றனைத்தரித்திரற்கு விரவுசம்பந்தியாச்செய்து
நெஞ்சினிலஞ்சா யாசியமாற்ற நிகழ்த்தினையேகொலற்றின்றேன்
மிஞ்சியபித்துன் றனக்கமைந்ததுவோ மிக்கவென்னகரினுக்கணித்தாய்க்
கஞ்சியற்றுழலு நரசியின்கதியான் காதுறக்கேட்டிலன்கொல்லோ. (க0உ)

இத்தகையரசர்க் குரியசீரன்னோற் கெங்ஙனமமைந்திடுமமையிற்
பித்தனீயன்று நானெதுசெய்தும் பெண்சுகமுற்றெனோர்தகுதிக்
கொத்தசம்பந்தி யெய்திடிற்சாலு மென்னிலுமுயர்ந்தவனகிற்
சித்தமேன்மகிழ்வே னுன்னையென்னுயிர்க்காஞ் சிறப்புறுநட்பெனமதிப்பேன்.

என்றுபற்பலவாச் செல்வனேதினனுண் டிருந்திடுமேல்வையிலனிக
மொன்றுதன்மனைப்பா லெய்திடக்கண்டா னேடினனுறவரோடுரைப்பா
னன்றுநானினியென் செய்குவனெய்து நரசிம்மபத்தரைவறுமை
தூன்றமேழையென மதித்தனன்மணத்தின் றுவக்கமொன்றுற்றிலன்றுதைந்தேன்.

உற்றவிச்சேனைத் திரள்களையொருநா ளுபசரித்திடச்செருக்குடையேன்
பெற்றசெல்வங்கள் போதுறுவிவற்றைப் பெரிதெனவெண்ணியமதத்தாற்
கொற்றமார்நரசி பத்தர்தம்பெருஞ்சீர் கூர்ந்தறிகின்றிலனச்சோ
வெற்றயர்ந்திடுவேன் யானென்றுசிரத்தி லெரிபற்றிக்கொண்டவன்போன்றே

உணர்ச்சியற்றங்கு மிங்கும்பித்தனைப்போ லோடியொன்றறிகிலனுழல
மணப்பொருட்டமைந்த சேனைமுன்வாயின் மாட்டமைந்தனகிருட்டிணனுங்
குணத்தகைமறையோற் கூவிநன்முகமன் கூறிநீநரசிம்மபத்தர்க்
கணத்தின்மேவினைதாழ்ந் தியான்புரிபிழையைக்கமைத்தியான்பெற்றகன்னிகையை

அருளினலங்கி கரித்தடியேன்மே லநுககிரகஞ்செய்வான்புகல்வாய்
மருவியசேனை களையுபசரிக்க வல்லவன்யானலேனெனனும்
பொருவருமறையோன் பிரபுநீயிங்ஙன் புகன்றதெனின்குலந்தனச்சீர்ப்
பெருமையெற்றெண்ணுப் பேசினையிலச்சை பெயர்ந்ததெத்திசையினென்றிடலும்

செருக்குறுமறையோன் றரையினைநாடுஞ் சிரத்தினனுப்பினும்வேண்டப்
பெருக்குமெய்யன்பார் கிருட்டிணபட்டன் பெயர்ந்தடிவணங்கினனேத
மருக்குலாந்துளவத் தாரினனெப்பின் மணமகடாதையாண்டழைத்தி
நெருக்குறுசேனை யோடெமைக்குறித்து நெஞ்சிடைசிறிதுமே கவலீர். (கoஅ)

மணவினைமுடியுங் காறுமிந்நகர்க்கண் மருவியபற்பலர்தமக்கு
முணவுடையாதி கொணர்ந்துளமென்ன வுடனவன்செல்வன்பாலோதிக்
கணமுறுமுன்ன ரழைத்தனனமையக் களிப்புடனவன்றெழுதன்பிற்
றணவறுமுகம ணேதினன்மகட்குத் தான்கொணரிழையுடையீந்தான். (கoகூ)

மன்னவர்தமக்கு மெய்தரிதாமவ் வரிசைகட்காண்டலுஞ்செல்வன்
பன்னரும்வியப்பு மிலச்சையுங்கொண்டான் பார்த்துளார்பலர்களும்வியந்தார்
பின்னருட்கடலாம் பகவனன்மணத்தைப் பிரபலம்பெறமுடித்திட்டா
னன்னசீர்நகரு ளார்சொலலாதி யறையப்பாவாயிரம்போதா. (ககo)

நகருளார்பலரு மீங்கியல்செயல்க ணனவுகொல்கனவுகொலென்றே
யகமிசையைய மருவினராகி யருட்கடலாங்கிருட்டிணன்றன்
சுகவருட்சொருப தெரிசனம்பெற்றுச் சுரர்க்குருவின்பினராகித்
திகழ்தருநார சிம்மபத்தரின்சீர் செப்பியோகையிற்றிளைத்திருந்தார். (கக௧)

மங்களமணமுற் றுறுதலுங்கண்ணன் வதூவரர்தமைநரசிம்மர்
துங்கமார்மனைசேர்த் தவர்புரிபூசை சுகமுறக்கொண்டுடன்மறைந்தான்
பொங்கமார்பத்தி யன்பரிவ்வண்ணம் புவியுறுபோகமுற்றயின்று
புங்கமார்திருவை குந்தமெய்ப்பதத்திற் பொருந்தினர்விருந்தனையுடனே. ()

ஆதலினரரா யினர்பெறும்பேறன் பல்லதொன்றிலையிதுசரத
மேதகுபகவன் கீதையிலனைத்தும் விட்டனனியசரணர்களாய்ப்
போதமாரெனது சொருபராயெவரெற் பூசைசெய்யன்பர்களவர்போற்
பேதமிலிலக்கு மியுமெனக்குற்ற பிரியையன்றீதலாலெனையும். (ககங)

மறந்தனோர்வயப்பட் டிடுகின்றேனென்னின் மற்றினியுரைப்பதென்னென்னச்
சிறந்தமெய்ப்பத்த வாற்சலியத்தாற் செப்பியுள்ளானிதுதிறத்தா
லறந்தவாத்தொண்டர்க் கோர்தருவாகி யவிர்ந்திடுபகவன்மெய்யன்பே
பிறந்தமானிடர்கொள் பேறெனவசலம் பிறங்கொளிபோல்விளங்கிடுமே.

நலமலிமுனிவ ரினங்களுமலரி னறுமணம்போற்கனியிடத்திற்
குலவியசுவைபோ லுற்றமெய்ப்பத்தி கூடிலதேதற்கன்மஞானத்
திலகிடுபயனின் றெனவிதந்திடலா லியாருமன்னையிற்சிறந்தவிரும்
பலமுறுநடுநா யகமதாமொப்பில்பத்தியைக் கோடலேசால்பாம். (ககரு)

வேறு

அண்ணன்மனைவி சொற்சகியா தாவிதுறக்க முயன்றிடுகோ
லானத்தோற்றி யாண்டுநின தருளிலாழ்த்தி நரசிம்ம
னெண்ணப்படிசா மளனுப்பொன் னேழாயிரமீந் தீன்றசுதைக்
கேற்றசீத னமும்வழங்கி யினியகேதா ரம்பாடில்

வண்ணத்தொடையல் களத்திலிட்டு வணிகன்கடன்றீர்த் துற்றசுதன்
மணத்துக்கிராதா தேவியுடன் மன்னன்வடிவா யுற்றுமிங்ங
னெண்ணற்றிடுபே ராடல்செய்தா யெளியேற்கொருசற் றிரங்காதே
னிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (ககசு)

நரசிம்மபத்தகதிமுற்றிற்று

ஆகூ கவி ருஅசசு

---

எழுபத்தேழாவது

## சதுர்ப்புசகதி

விண்டலத்தரும் புகழருணரசிம்ம ஃமதா
தண்டழைத்தமால் வைகுந்தஞ்சார்ந்தசீர் வகுத்தேன்
மண்டலத்திய றொண்டரைமாலென மதிக்குந்
தொண்டமைந்தமெய்ச் சதுர்ப்புயன்புகழினிச் சொல்வாம். (க)

பமரமார்மலர்க் காவுந்தண்பழனமும் பைம்பொற்
சிமயநேர்மணி மாடமுந்திகழ்கரோ லியென
வமரர்மெச்சுசீர் நாட்டினையரசுசெய் மன்னன்
றமரவாரிதி நிகருட்சதுர்ப்புயப் பெயரோன் (உ)

பைத்தமாசுணப் பாயலான்பத்தரிற் பெரிது
முத்தமன்றிரு மாலடியார்மிசை யுளத்தில்
வைத்தகாதலின் வரம்பிலான்றனதுமா நகரி
ஞெத்தநான்குவா யிலினுஞ்சேவகர்தமை யுறுத்தே. (ங)

வந்ததொண்டரை யுபசரித்தழைக்குமா வழுத்தி
யுந்தகக்களிப் புடனவர்ப்பூசனை யுஞற்றிக்
கந்தரத்திரு மேனிமாலென்றுளே கணித்து
முந்தகத்தவாம் பொருள்குறிப்பிற்றரு மொய்ம்பன். (ச)

வேறு

இன்னவாறிய லுட்சதுர்ப்புயன்றன தியலுணர்ந்தயலுடாண்
மன்னனுமொரு வன்வியந்துற்றதன் மாண்பௌராணிகனோடுங்
கொன்னமைந்துள சதுர்ப்புயன்றருமமென் குறித்திடிவிரும்பூதா
யென்னகந்தவ நகைப்பதாற்றருமமொன் றிங்ஙனமுளதாமோ. (ரு)

அவன்றனக்கறி வில்லைகொல்பாத்திர மபாத்திரமறிகில்லா
னுவன்றவிச்செய லாற்பயனுறுமென நூலுணர்தருமேலோ
ருவந்துசாற்றின ரின்றதால்வீணென வுன்னுகின்றனனென்னத்
தவங்குலாவுபௌ ராணிகனிளமைதோய் தராதிபற்கிசைக்கின்றான். (சு)

மன்னவின்னவா றேதலையன்பறு வகைப்படுமெவையென்னிற்
பன்னலாகிய பீதபாவஞ்சாமி பாவஞ்சர்வபாவத்தோ
டின்னறீர்சக பாவம்வாற்சல்யநண் பியைந்தகாந்தாபாவஞ்
சொன்னவற்றுட்டுன் பினுக்கயர்ந்திட்டவன் றுவக்குதன்முதலாமால். (எ)

தலைவன்றாசனாய் வழிபடுஞ்செய்கைதான் சாமிபாவம்யாவு
நிலைபெறும்பக வன்சொருபங்களா நினைந்துதன்மனத்தூடே
யுலைவுறாப்பெரும் பத்தியிற்றொழுவதே யுரைத்திடுஞ்சர்வபாவ
மலைவினண்பனென் றுனல்சகபாவமா மைந்தனிற்கொளும்பண்பே. (அ)

உரைசெய்வாற்சல்ய பாவந்தன்மனையிடத் துள்ளதாம்பெருங்காத
னிரையரிக்கணே யமைத்தல்காந்தாபாவ நிகழ்த்தியவிவையொன்றாக்
கரையவொன்றுமேற் படுமன்புசற்றகத் தமைகிலாநரர்கட்கே
தரையினூடுபாத் திரமபாத்திரமெனுந் தன்மஞ்சாற்றியதோர்வாய். (கூ)

ஒப்பில்சீர்ச்சதுர்ப் புயன்பத்தரிற்பெரி துத்தமனுளத்தூடே
பப்பிடம்பஞ்சற் றேனுமில்லாதமா பாக்கியனபிமானப்
யொய்ப்பிராந்திமுற் றொழிந்தவனித்தகை பொருந்தினோர்களைத்தாமே
துப்பியைந்தவான் கலையினம்பத்தராத் துதித்தவென்றிடக்கேட்டே. (க0)

மன்னனுணமு மச்சமுமோகையு மனத்தமைந்தானாகித்
தன்னதோர்பிருத் தியனைமுற்கூவிமா றன்னடியவர்கொள்ளுஞ்
சின்னமேற்புனை வித்துநீசதுர்ப்புயன் றேயமேலடைந்துன்னை
யன்னவன்றெரிந் தியற்றிடுதிறமெலா மணைந்தென்பாற்புகலென்றே. (கக)

ஏவினானவ னெய்தலுஞ்சதுர்ப்புய னிவனமைச்சோதிப்பான்
மேவினானென்றுஞ் சேவகனென்றுந்தன் மெய்யுணர்வதனாற்றேர்ந்
தாவிநேர்தனோர் மனைவியையழைத்தன னன்புடன்பூசித்தே
யாவல்கொண்டவா பொன்கொடுத்தாடக வணிகொள்சம்புடமொன்றில் (கஉ)

பொடிகொளும்பல கறையமைத்ததன்மிசை பொருந்துபட்டுடைசுற்றிப்
படியில்சீரபூர் வப்பொருளென்றதைப் பார்த்தவர்தாமெண்ணும்
படிசெய்துற்றவன் பாலளித்திடவவன் பரவுமோகையனாகி
முடிகொண்மன்னன்முன் னணைந்தனன்புரிசெயன் முற்றுறமொழிந்தப்பால்.

அளித்திடும்பொருள் களினுடனரிதென வமைந்தசம்புடந்தன்னைக்
களிப்பினோடிறை கரத்தளித்திடவுளே கலந்திடும்பொருளென்னென்
றொளித்தகைப்பட்டு வத்திரமவிழ்த்தன னுற்றுநோக்குழியுள்ளே
நளிர்த்தகைப்பொற்சம் புடந்திகழ்தரக்கண்டா னனிவியப்பமைந்தன்பாய். ()

திறந்துநோக்குகாற் சிதைந்துளபலகறை செறிவுறத்தேர்ந்துற்ற
திறந்தெரிந்திலன் விழித்திடவவையிடை சேர்ந்துளார்பலர்தாமு
நிறந்தழைத்தபே ருவப்புடனிறையய னேர்ந்துநோக்கினர்நிற்ப
வறந்தழைத்தபௌ ராணிகன்காரண மவர்கொளவறைகின்றான். (கரு)

இனையனிக்கவ டியைநிகர்த்தோன்பத்தி யிதயமேற்சிறிதில்லான்
வினைசெய்சேவக னென்றறிந்தேன்மெய்சால் வேடமேய்ந்தமைபண்பாற்
சினைமுகிற்புரை மால்பத்தர்ப்பூசிக்குந் திறத்துபசரித்திட்டேன்
முனைகொள்வேலநீ காண்டியென்றோதிய முறைமையிதுணரென்றே. (கசு)

போதநிற்குரைத் திட்டதென்றோர்கெனப் புராணிகன்சொலக்கேட்டே
மேதகைச்சதுர்ப் புயனிலைதேர்ந்திறை விம்மிதமுற்றோது
மாதரம்பொலி நீயவண்புகுந்தவ னன்பின்மான்மியமுற்றுஞ்
சோதனம்புரிந் துறுகெனப்புராணிகன் றாயன்பாலுறக்கண்டு. (கஎ)

களியுமன்புமிக் கமைந்துபூசனைசெய்து கனகமீந்திடுகாலவ்
வுளியமைந்துள கிளிகளிலொன்றெனக் குதவுதியெனக்கேட்ப
வொளிகொண்மன்னளித் திடவிடைகொண்டு தன் னுடையமன்னவன்பாற்போந்
தளிகொண்மன்னவன் பெருமையுமவன்றனக் களித்தபண்பைபுஞ்சாற்றி. ()

அருமைசால்கிளி தன்னையுங்காட்டமன் னளவிலின்புற்றோனய்
வெருளுறுதமை கிளியைநீயாரென வினவிடவதுகாலை
பொருவிலின்சுவை பொலிமொழிகொண்டது புகலுநீநானுமென்
றெருளில்பேதமாற் றஞ்சமுசாரத்திற் சிக்கியுண்மபக்குற்ற. (ககூ)

மூடபுத்திகட் கேயுளதாகுமியான் முன்னிலைப்பொருளெல்லா
நீடருட்கிருட் டிணன்சொரூபமதென நிச்சயித்துள்ளேனீ
பீடமைந்தமன் னவனெனக்கொண்டுள பேதமைப்பெருக்கற்றே
வீடமாலரி கிருட்டிணமுகுந்தகோ விந்தவென்றுரைப்பாயால். (உ0)

மனிதசென்மத்தாற் கொளத்தகுஞ்சிறப்பதா மாட்சியிஃதேயாகு
மினின்விரைந்தழி யுடலையோம்புதலவி வேகிகள்செயலென்னக்
கனிவிற்கிள்ளையோ திடுமுபதேசத்தைக் காதுறக்கொளும்வேந்தற்
கினியமால்பத பத்தியுண்டாய்ப்பின்னு ளினியநற்றகைவாய்ந்தான். (உக)

கொள்ளையன்புசால் சதுர்ப்புயமன்னவன் கூட்டரவதனுமேல
கிள்ளையின்குலம் பத்திஞானங்கொடு கிளர்தல்கேட்பினுமாயைச்
சள்ளையாருல கத்திடையொழிதலில் சத்தியமதிவைத்துப்
பிள்ளைபெண்டுகட் பேணிநோனெனும் பித்தர்களுணர்வென்னே. (உஉ)

பஞ்சரத்துள்வாழ் கிளிகளுமுலகெலாம் பகவன்மெய்வடிவென்ன
நெஞ்சகத்துனும் பேறுபெற்றனவெனி னிகழ்சதுர்ப்புயமன்னன்
றஞ்சமாநரர் தாம்புவிமீதினிற் றயங்குவாரோமாயன்
கஞ்சநேர்பதப் பஞ்சரத்திடைசுகங் கலந்தவராமன்றே. (உங)

இன்னபேறுயர் பத்தர்தஞ்சிரவணத் தெய்துமேலன்னோர்தம்
மன்னருட்பெருஞ் சேவைசெய்பவர்க்குறு மாட்சியொன்றுளதாமோ
பன்னலாந்தகை யானராரம்பவம் பற்றினோர்செயத்தக்க
நன்னலப்பத்த ருறவுடனவர்திற நவிலலல்லால்யாதே. (உச)

வேறு

பத்தர்களைநின் வடிவென்றுட் பரிவாற்பூசித் தவரிச்சைப்
படிபொன்னளித்தல் கண்டேனைப் பதிவாழரசன் சோதிப்பச்
சித்தநிலைமை தேற்றியவண் சேர்ந்தபௌரா ணிகற்பணிந்து
செம்பொனளித்தன் னவன்வேண்டச் சீலக்கிளியுந் தந்ததனு
லுய்த்தவரசற் குபதேச முரைப்பித்துலகப் பித்தொழித்த
வொப்பில்சதுர்ப்பு யன்கிளியை யொத்துத்துலங்கும் படியேனு
மெய்த்தவடியேற் கித்ததியி லினிதுனருட்சீ ரீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொட்டென திதயத்திலங்கும் பெருமாளே. (உரு)

சதுர்ப்புசகதிமுற்றிற்று

ஆக கவி ருஅஎச

---

எழுபத்தேட்டாவது

# மீராபாயிகதி

மஞ்சன மேனியண்ணல் வடிவினை மனத்துள்வைத்துத்
தஞ்சமென் றதனுண்மேய சதுர்ப்புபன் சீர்த்திசொன்னேன்
கிஞ்சமா ருலகைநீத்துக் கிரிதர மூர்த்திதாடோய்
மிஞ்சருண் மீராபாயி யின்கதி யினியிள்வேனே. (க)

காரணை பொழிலுங்கஞ்சக் களேமலி பணையுஞ்சூழ
மேரதாக் கிராமந்தன்னின் மேவிடு சயமல்லப்பேர்
சாரர சன்றவத்தாற் சகத்தின்மேல் வந்துதித்தாண்
* மீரநே ரன்புமீரா பாயியாம் வியனுமத்தாள். (உ)

கிளத்துமன் கிரிதரப்பேர்க் கிருட்டிண மூர்த்திதன்னை
யுளத்துவ கையிற்பூசிப்போ னுற்றவம் மனைக்கண்மேய
களத்திர மாதியாகக் கவின்றவர்யாருமன்பின்
வளத்துடன் கண்ணன்பூசை வபக்கியல் லாலொன்றுற்றூர். (ங)

விரதமுற் றவராய்வாழ்ந்த விதத்தினன் மீராபாயி
காவில்சீ ரிளமையெய்துங் காலையே பசுமைமிக்க
மரமிசை வயிரவாணி மானமெய்க் கிரிதரன்பாற்
சரதமெய்ப் பிரேமாபத்தி தழைத்தவுள் ளத்தளானுள். (ச)

வேறு

கிளரறிவிச்சை செயலெலாமொப்பில் கிரிதரற்கேபமைத்துலகை
யுளமிசையறியா டிகழுநாளெவன முற்றிடத்தாதையுட்பரிவால்
வளமலியிராணு மன்னவன்மகற்கு மணம்புணர்த்திடமதித்துற்றான்
சளமெனத்தேர்ந்துந் தாதைசொற்கடவா டானிசைந்திடுதலான்முடித்தான்.

---

* மீரம் - கடல்

மன்னவன்குமரன் மனையொடூர்புகுத வலித்தனன்மற்றதுகாலை
பொன்னனுள்கிரித ரன்பிரிவாற்றாள் புலம்பினள்வீழ்ந்தயர்வமையக்
கொன்னவில்வேற்கைத் தாதையுந்தாயுங் கொம்மெனவெடுத்தனர்தேற்றி
யென்னகக்கோள்சாற் றுதியெனக்காத லென்மிசைசீர்கொளன்மெய்யேல். ()

என்னுயிர்க்குயிராங் கிரிதரன்றன்னை யெற்குதவுதிரெனவிரப்ப
மன்னுமன்னவர்க்கம் மூர்த்தியைத்தருதன் மனத்திசைவறுசெயலேனு
மின்னுளத்துவகைப் பொருட்டளித்திடலான் மிக்கவின்புளத்திலெய்தினளாய்த்
தன்னுயர்சிவிகை மிசையருட்பகவற் சாரவைத்தன்பனூர்சார்ந்தாள். (எ)

மகனகரணைய வினவியமன்னன் மனைவியாதியரெதிர்போந்து
தகவணங்கியதம் பதிகளுக்காசி சாற்றுபுதங்குலதேவாத்
திகழ்தருதுர்க்கை யாலயத்தழைத்துச் சென்றுபுத்திரன்கரங்கொண்டு
மிகவுபசார பூசைசெய்வித்து மிளிர்தருமருகியைநோக்கி. (அ)

மாமியுண்மகிழ்வாய் நீயுநின்கரத்தால் வயக்குதிபூசனையென்னத்
தோமில்சீர்மீரா பாயிதுர்க்கையைக்கை தொழுதுரைப்பாணமகதேவீ
பூமிசைகிரித ரன்றனையல்லாற் புந்தியுன்னுதுகைபூசை
தாமியற்றுதென் சென்னிமற்றொருவர்த் தாழ்ந்திடாதெனச்சொலமாமி. (கூ)

மறுவறுநின்கொண் கன்சுகமாக வாழநீபாக்கியவதியா
யுறும்வகையருளச் சம்பிரதாய மொத்தனைவணங்குதியெனவு
மறுவறுமென்பர்த் தாமரித்திடலும் வயங்கென்சௌபாக்கியத்தகைமை
யறுவதுமில்லை சரதமித்துர்க்கை யடிதொழின்மகிணன்மாயானேல். (க0)

இலகுமிங்காட்டி னூலிழந்திட்டா ரெண்ணிலர்க்கண்டனனன்றிப்
புலவுவேலிறைவற் கஙனமருட்சீர் புரியுமென்றிடினின்னுயகற்கு
நிலவியதாதை யெவணமைந்துள்ளா னிகழ்த்துதியெனமிகச்சினந்து
திலகவானனம்வேர்த் தனள்கடிதுருமிச் சென்றுகாதலனிடஞ்செப்பும். (கக)

இத்தருதுட்டை யானகர்க்கசையை யில்லவளென்னமைந்தன்பா
லொத்தமைதரக்கொண் டணைந்தனிரவளில் லுற்றிடாதிவ்விடைவழியி
லுத்தமத்தகைசா ர்துர்க்கையைவணங்கென் றோதிடமறுத்தெதிர்மாற்றஞ்
சித்தமேலெண்ணாள் புகன்றனண்மனைப்பாற் சேரிலென்னிபற்றுவடெரியேன்

நானினிபிட்டா னிட்டமொன்றிவள்பா னவில்கிலனுடிலனென்னக்
கோனிதயத்திற் கொண்டபோரார்வங் கொம்மெனவொழிந்தனன் கொதித்தே
யானியற்றுவதென் னிதற்கவட்கொல்வி னெய்துறும்பெண்பழியல்லா
நானிலத்துள்ளார் நிந்தையுமுறுமா னமக்கவளொத்தமையாளேல். (கங)

இல்லம்வேறமைத்திட் டுணவுடையாதி யீவதேதகருமமற்றவடான்
வல்லவாறியல்க வென்றவ்வாறியற்றி வயோதிகர்க்காவலாயமைத்தான்
* வில்லியாண்டாளின் மதன்றனக்கனையா விளங்குமீராபாயிமனத்தொ
ரல்லலற்றொருப்பில் கிரிதரனருளென் றன்பினிற்பூசைசெய்தமைந்தாள். (கச)

* வில்லியாண்டாள்-சூடிக்கொடுத்தாள்.

கணவனையவன்றாய் தந்தையைமனத்துட் கருதிலளதான்றுபூவுலகு
முணர்கிலண்மறந்தா டாளொருமன்ன னுடையபுத்திரியெனக்கருதா
ளணவுதனிற்பா லெய்துறும்பதிக ராயபத்தர்களுடனின்பாய்
மணமலிதுளவன் கீர்த்தனம்பாடி மலிபரவசம்படைத்தாளாய். (௧௫)

நிருத்தமாடினள்வை கினளதுகண்ட நிருபன்வங்கிசத்துளார்பலருங்
கருத்தினுளுவர்த்தா ராகியின்னவள்சாக் காலமெப்போதெனத்துக்க
விருத்திபெற்றமைந்தா ரிவ்வணந்திகழ்நாள் வேந்தன்மாமகண்மீராபாயி
யருத்தியோடமையு மனையிடைமேவி யகத்தினுணயந்துறைகின்றாள். (௧௬)

ஒப்பில்சீர்மன்னன் மனைவியாநீயென் னுலகரோதிடும்புகழுவர்த்தே
தப்பியநெறிகொண் டாய்பரிசயமோர் சற்றுமில்பத்தர்களுடனே
பப்பியல்கீத நிர்த்தஞ்செய்திட்டாய் படியின்மன்மகளெனவுதித்தா
ரொப்பிடுசெய்கை யேகொலோநின்போ லுஞற்றினர்யாவர்முன்னோதாய். (௧௭)

கீர்த்திமிக்கமைநின் றாதையிச்செய்தி கேட்கிலென்கிளத்துவனினது
பூர்த்திதோய்துராசா ரச்செயலுணர்ந்துன் புருடன்றாய் தந்தையர்துக்கங்
கூர்த்திடுமுளத்த ராயினரென்னக் கூறமீராபாயிநகைத்தே
நேர்த்திநின்மாற்றஞ் சரதமேபூவி னிருபர்மங்கையர்கொணீதிகளே. (௧௮)

யானெனோர்குலத்தை யீன்றுளார்தம்மை யிசைந்தநாயகனையன்னவன்பா
லானெனவுரிமையமைந்தவீன்றவரை யறிகிலனென்னுயிர்க்குயிராய்
கோனெனநின்ற கிரிதரன்றனையே குலவுமென்னுளத்திலோர்ந்துள்ளே
னானென நின்ற வென்னுடன்மான மொழிந்தவன்சரணமாயுற்றேன். (௧௯)

கிரிதரமூர்த்தி மிசைதிடபத்தி கிளர்ந்தவென்மனமெதுபோதம்
புரியினுமேனைப் பொருள்களினிடத்திற் போந்திலதியாதுநான்செய்வேன்
றிரிவிலென்னெஞ்சம் பித்தடைந்தார்தஞ் செய்கைபெற்றொழிந்ததென்றோத
விரிதருசினத்த ளீன்றவர்தம்பான் மேவிவிர்த்தாந்தமுற்றிசைத்தாள். (௨௦)

பரிசயமில்லார் தம்முடனாடிப் பாழிலேபழிவிளைத்திடுவாள்
விரிதருபித்தை யொழித்திடுமருந்து விடமலதில்லையென்றுன்னிக்
குரிசிலொல்லையிற்பொற் கடத்தினில்விடத்தைக் கூட்டியோர்சேவகற்கூவி
யரியருட்பாத தீர்த்தமீராவுக் களித்தியென்றிடவங்ஙனளித்தான். (௨௧)

மலிபரவசத்த ளெழுந்துபோந்தொல்லை வாங்கியானந்தமிக்குண்டா
ளொலிதருகழற்றாட் கிரிதரனருளா லொருசிறிதேனுமெய்மனத்தின்
மெலிவடைந்திலளஃ தான்றதுமுதலா மிக்கதெய்விகவருட்டேசும்
பொலிதரலானாள் பத்தர்பால்விடமும் புகல்பரிசுத்தமாமன்றோ. (௨௨)

காரணமிதுதேர் மன்னன்விம்மிதமுங் கவலையுங்கொடுவிடமயின்று
மாரணமெய்தி லாளினியிவட்கொல் வகையெதென்றுசாவினனுற்றான்
மாரனைவென்றா ளருணிலைதேரா மன்னனோர்தினத்தமைகாவற்
காரனைக் கூவி யோதுவன்மீரா கரியமாலன்பனொடகத்துள். (௨௩)

வதிதருமேல்வை யெனக்குணர்த்தென்ன வகுத்தனனவ்வணங்காப்போன்
றதியெதிர்நோக்கி யுற்றனனொருநா டனின்மனையடைத்துண்மேவிடுகாற்
பதிதருமன்னன் றன்செவிக்கொருவன் பாற்கிளந்துறுதலிற்றோன்ற
மதியறுமன்பா லோடினனுரைப்ப வல்லையின்மனையகத்தெய்தி. (உச)

வாயிலின்மறைந்து நின்றனனோக்க மன்னற்குமவ்வகைதோன்றக்
காயிதயத்தொ டொல்லையின்மீரே கதவினைத்திறத்தியென்றோதி
மேயினர்யார்நின் னுடனகத்தென்ன வினவவல்லையினடைதிறந்தே
தூயியற்புவிநோக் கினள்வறிதிருப்பத் தோன்றனின்பாற்சம்பாடித்தார். ()

யாவர்சொல்லென்ன வம்மையுட்சிறிது மிலச்சையில்லாதுபோய்நாடன்
றேவவுட்சென்று ணுய்ந்திடக்கண்ண னன்றியாவருமிலாமையினு
லோவருநாணத் துடன்மனைப்புறத்தி லுற்றனன்மனையமைந்துறுதன்
னுவனுயகிபா லம்மைவிர்த்தாந்த மனைத்துமோதினன்வியந்திருந்தான். (உகூ)

இன்னவாறியனு ளம்மைபேரெழில்கண் டிளகிதயங்கொளோர்தூர்த்தன்
கொன்னமைபாக வதருருக்கொண்டு குறுகியேசுந்தரிமதனு
லின்னன்மிக்கிளப்பேற் கிரதிதானஞ்செய் திடுதியென்றிரந்திடச்சினவா
னன்னலப்பத்த நுகர்தியிக்கானின் னசையிராவெய்தினல்கிடுவேன். (உஎ)

என்றுணவளிக்க வுண்டவனிரவெய் திடுவதெப்போதெனவிருந்தா
னன்றுறுமீரா பாயிசந்தியினி னவிற்றிடுங்கடனெலா முடித்துக்
குன்றுருவுவப்பிற் றனையலங்காரஞ் சூயிற்றுபுகிரிதாமூர்த்தி
முன்றுணர்ப்பள்ளி யமைத்தடியவர்போன் முயங்கியதுட்டனைக்கூவ. (உஅ)

அலகறுமோக மாசைசந்தோட மமைந்தவணணைந்துநோக்கிடுகா
னலமலிதனது தாயுருவாக நண்ணவினடுநடுங்கினனு
யலமருமுளத்தன் வல்லையம்மையின்பொன் னடிமிசைவீழ்ந்தாற்றினனுய்ப்
புலமிலேன்பிழைபைப் பொறுத்தருளுதிநின் புனிதமாட்சிமையுணர்ந்திலனல்

எனப்பலபடவே புகன்றிடுமவற்பார்த் திணையில்சீரம்மைசாற்றுவணீ
மனப்பதைப்பமையல் வாழியென்னருமை மைந்தனீயேகுதியென்னக்
கனப்படுமீரா பாயிதன்மகிமை கண்டவர்யாரும்விம்மிதரா
யுனப்படுமசூயை முற்றொழிந்துண்மை யுணர்வமைந்துவந்தனர்வாழ்ந்தார். ()

பரிசனம்புரிந்து விடத்தையுமமுதப் பான்மையிலயின்றருளம்மை
தரிசனம்புரிந்த தன்மையாற்றூர்த்தன் றூனுந்தனகத்திடையெழுந்த
வரிசடுவர்க்க முழுதுமற்றன்ப னுகினனெனிற்பத்தரேவல்
விரியுமெய்யன்பிற் புரிதருமன்பர் மேவுசீர்விளம்பிடுந்தகைத்தோ. (௩க)

வரம்பில்சீர்மீரா பாயிதன்மகிமை மாந்தரால்வினவினன்வியந்து
தாம்பெறுடல்கி யரசனுமிலேச்சன் றரிசனம்புரிதல்வேட்டவனுய்
நிரம்புசிரிராணு ராச்சியத்தின்பா னேர்ந்துதன்கோணிகழ்த்திடலு
முரம்பொலியம்மை புறம்படாதாலி லுள்ளமைந்தனன்றரிசிப்ப. (௩௨)

இணையில்சீரம்மை கிரிதரனுருவா யிலங்கிடக்கண்டனன்வியந்தே
யணையறுமன்பு மச்சமும்வியப்பு மமைந்தொருசுலோகத்தினிங்ங
னுணவுறுமறைகட் கோசரனாகி யுறுபரப்பிரமமாங்கண்ண
னணவுறுமெனது கண்முனங்கண்டே னதிசயமென்றறைந்தேத்தி. (௩௩)

அனகமார்மீரா பாயிமெய்ப்புகழ்யா னறிந்துரைத்திடற்கரிதென்று
வனசமாமலர்த்தாள் பணிந்தனனகன்றான் மற்றதன்பின்னருளம்மை
யினனிகர்சீவ கோசுவாமிகட மிசையருட் பத்தரால்வினவிக்
கனமிகுபிருந்தா வனத்தின்மேய்க்காணக் கருத்தினுட்பெருந்துணிவமைந்தே

பத்தர்சிற்சிலரைத் துணைக்கொடாங்கணைகாற் பாவையர்தம்முகநோக்கா
வுத்தமநயிட்டி கப்பிரமசரி யாச்சிரமத்துறுமவர்க்கு
வித்தகமீரா பாயியீரெட்டா விளம்புமாண்டுடைப்புருடனைப்போ
லொத்ததம்விழிக்குத் தோற்றலினுள்ளத்துவகைமிக்கெழுந்தெதிரேகி. ()

அம்மைதன்கரத்தைப் பற்றினர்தாந்தோ யாதனத்தினுக்கருகிருத்திச்
செம்மைபெற்றிடநோக் கினரதுகாலை தெரிவையாயிருத்தலின்வியந்து
கொம்மைவெம்மாதர் தம்முகநோக்காக் கோலமார்விரதம்வாய்ந்துள்ளே
னெம்மைநீபெண்ணா யினுமபிமானமின்மையிற்பெண்மையையன்றால்

எனப்புகல்சீவ கோசுவாமிகளை யெழின்மீரா பாயிபோற்றிடலும்
வனப்புறுமவரு மம்மையைவணங்க மற்றவரிடைவிடைபெற்று
மனப்புரையறுமா தவர்குலாந்துவரை மாநகரணைந்துகிட்டினன்றன்
கனப்பதுமத்தாட் கருதியானந்தக் கடலிடைமூழ்கினள்வதிந்தாள். (௩எ)

மூடராம்பந்துக் களின்பிரவிருத்தி முன்னிமிக்குவர்ப்படைந்தாளாய்
நாடணைதரவுள் ளிசைகிலளிருக்கு நாளிராணாநகர்மன்னன்
பீடமைமீரா பாயியாண்டென்னப் பெரிதுதேடினிர்கொணர்திரெனப்
பாடமையுளத்தன் மறையவர்சிலரைப் பதிதொறுஞ்சென்றிடவிடுத்தான். ()

சென்றவரோரெண் டிசையினுந்தேடிச் செழுந்துவாரகைநகரணைந்து
நன்றமைமீரா பாயியைக்கண்டு னனிதுயர்மிகப்புலம்புநாட்
டொன்றவேண்டினர்யான் வருகிலனீயி ரும்பதிசேர்திரென்றுரைத்தாண்
மன்றநின்னுடனல் லதுதனித்தியாமூர் மருவிடேஞ்சரதம்வாராயேல். (௩௯)

உன்னுடன்யாமு மீண்டுவாழ்ந்துடலை யொழிப்பமென்றோதுசொல்வினவி
மின்னுறழம்மை யவரையாலயப்பான் மேவிடவழைத்தனளேகிப்
பன்னுவள்யானென் பிரபுவைத்தொழுங்காற் பத்தவற்சலன்புரிசெயலைப்
பின்னுளத்துணர்தி ரென்றுசாற்றினளுட் பெயர்ந்துதுக்கம்பெருகினளாய். ()

கண்ணனைத்துதிப்பாள் கருணைவாரிதியே கைவிடாதென்கருத்திடைபா
ணெண்ணல்போலருள்வா யெனுந்துணிவுடனீண்டிகங் கொண்மான்முற் றொழித்தனது
தண்ணருட்பாதஞ் சரணமாயினனின் றாசியாமெனக்கருளிலையேன்
மண்ணகத்தியாவர் பாற்சரணடைவேன் மாதவமுகுந்தகேசவனே. (௪க)

முன்னைநாள்கணிகை சபரிபாஞ்சாலி முதிர்கிருத்திரங்கப்ந்தனைப்பு
மன்னைநேரருளிற் காத்தனைமயங்கு மதிநிர்ப்பாக்கியவதியாகு
மென்னையாண்டருள்கை நிற்கியலாத தென்றிடப்போங்கொலோகண்ண
மின்னைநேருலக வாழ்க்கையிலின்னம் வீழ்ந்திளைத்திடவிடேலென்ன. (சஉ)

அலகில்போன்பிற் றுதித்திடவங்க ணசனியொத்தோரொலிவிம்மக்
குலவுமாலயமுற் றுங்கிடுகிடெனக் குலுங்கவக்கணத்தினிலம்மை
யிலகுடனின்று மின்னிகர்த்தொளியொன் றியலருட்கண்ணன்மூர்த்தத்தி
னிலவினர்விழிகள் கூசிடக்கலப்ப நின்றவர்மதிமறந்தவராய். (சங)

விசனமும்வியப்பு மருவியம்மையின்பொன் மேனியையெடுத்தனரகன்றே
நிசமறைமுறையி லியல்சமக்கார நியதியாற்றினருவந்தமைந்தார்
பிசகில்சீர்மீரா பாயிபெண்சென்மம் பெற்றுமெய்ப்பத்தியின்பெருக்கால்
வசமனயோகர் தமக்குமெய் தரிதா மாண்பதம்பெற்றனண்மன்னே. (சச)

ஆனபான்மையினெய் தருநரசன்ம மமைந்துளோர்யாவரும்பொய்யாங்
கானனீர்விரும்பி யுழன்றிடுமானிற் கனவனவுலகபோகத்தின்
மானமற்றவத்தி லலைந்தொழியாதே வாஞ்சைமுற்றுதவருட்கண்ணன்
ஞானவானந்த விணையடிப்பத்தி நண்ணியின்பெய்திடனலமே. (சரு)

வேறு

ஓங்குங்கிரித ரத்திருப்பே ருறுமுன்றனையே போற்றிமற்றொன்
றுன்னுநிலையுற் றிறக்கவிட முதவநுகர்ந்தோ ரூறின்றிப்
பாங்கரடைந்த காமுகன்றூய் படிவாவிளங்கி மிலேச்சமன்னன்
பணியக்கிரித ரனும்மடவார்ப் பாராச்சீவ கோசாமி
யாங்கண்புகுந்தாண் வடிவாகி யவிர்ந்துதுவரை புகுந்துநகர்க்
கழைப்பவணைந்தார் வியப்பநின தடியிற்புகுமீ ராபாயி
யேங்கலறக்காத் திட்டதுபோ லெனையெப்போழ்துன் னிடைகலப்பா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (சகூ)

மீராபாயிகதிமுற்றிற்று

ஆகூ கவி ருகூஉ0

---

எழுபத்தோன்பதாவது

## சகூசியாமகதி

பொய்ப்பிறப்பிறப் பொன்றியல்பிணியறப் போக்கும்
பப்பியற்கொண்மீ ராபாயிசரித்திரம் பகர்ந்தே
னெய்ப்பிலாதுமெய் யன்பர்பூசனைமிக வியற்று
மொப்பில்சீர்ச்சகூ சியாமன்றன்சரிதமே லுரைப்பாம். (க)

அறந்தழைத்திய லந்தர்வேதிப்பெய ரமையுஞ்
சிறந்தமாநக ரிடையுள்ளான்குலமுதற் றேரேன்
பறந்தபுட்பரி யான்பதத்தன்பர்க ணெல்லை
யிறந்தபத்தியா னியல்சசூசியாமப்பே ரேய்ந்தோன். (௨)

தருதன்றுதையீட் டியதனஞ்சற்றுமில் லாதான்
பொருவிலோர்விடை யேயுளானதுகொடு புவியின்
மருவிடும்பயிர்த் தொழில்செய்தெய்தூதிய வளத்தா
லருள்கொளன்பர்தம் பூசைசெய்தின்புட னமைநாள். (௩)

அன்னவன்றனுட் பொலியுந்தனன்பரன் பின்சீர்
பொன்னவாவியீட் டிப்புதைத்தவத்தினிற் பொன்று
மின்னன்மானிடர் போன்றவர்தேர்ந்தறி வெய்த
வன்னவாகனன் றுதைபுட்கொளுந்திற மதனுல். (௪)

காவனெல்லியிற் சேவிணக்கவரவை கறையிற்
சாதபத்தனு டினன்றளர்ந்திடபம்போந் தகையால்
விரவிடும்பயிர்த் தொழில்செயும்விதியிலே யதனுல்
வாதனன்பரைப் பூசைசெய்வகையுமற் றதுவே. (௫)

வேறு

சாதுசேவைசெய் திடற்கமையாநா சன்மமானதிற்கான
மீதுமேவுபுண் மாக்களுமிக்கதாம் விநயமற்றதனுனங்
கோதுசேருயிர் துறப்பதேநலமெனுங் கொள்கையினுடன்புல்லம்
போதுமாநக ரெங்கணுந்தேடியிற் போந்திடுநிலையின்கண். (௬)

பத்தவற்சல னுகுமாலவன்றிட பத்திகண்டகல்சேவை
யொத்தமைந்தவோர் விடையவன்முன்னுற வுஞற்றவிலஃதென்னச்
சித்தமேனிணைந் தனன்மகிழ்ந்திற்புடை சேர்த்தனன்முன்போல
வுத்தமத்தொண்டர் பூசையினெடுதொழி லுஞற்றினன்குறைவற்றே. (எ)

இன்னவாறுராண் டேகமுன்னிடபங்கொண் டேகிடுமக்கள்வ
னன்னவாற்றிடை யேகுகாற்பத்தன்சே வதுகொடுவயலின்க
ணன்னலத்தொழில் செய்திடக்கண்டுளே நனிவியந்திப்புல்ல
முன்னமியாங்கவர்ந் தேகல்கொலென்றுள முன்னிநம்மனையின்கண். (அ)

கட்டிவைத்தன்றோ வந்தனமற்றிவன் கைப்படலெவ்வாறென்
றுட்டிகைத்திற்போய் நாடினனூறுதலி னுளம்வியந்தனனுகிப்
பட்டிமீண்டுஞ்ச சூசியாமன்வயற் பாலணைந்தனனோக்கி
மட்டிலாச்சரி யத்தினுடையமுண் மருவியின்மறுத்தும்போய். (௯)

நாடியேபினும் பணையிலெய்தினனுள நனிகலங்கினனுகி
மூடிடும்பயங் கொடுசசூசியாமன்றன் முண்டகப்பதமேல்வீழ்ந்
தீடினும்புல்லந் தன்னைமுன்காவயர்ந் திட்டவன் யானேநும்
மாடியைந்தவிம் மாடுமற்றதனையே மானுமோர்பண்பாலே. (௧0)

எனதுநெஞ்சினுட் சாலவுங்கவற்சியெய் திடுவதாலதுகொண்டென்
மனதினுகுலந் தீர்த்தெனையாட்கொள மதித்தருளுதிர்யானித்
தினமுதற்கொடு சோரமாதியதொழில் செய்கிலன்றஞ்செம்பொன்
வனசமாமலர்ச் சாண்சரணுமெனை மறையுபதேசத்தால். (கக)

கிருதகிர்த்திய னுக்குதிரெனக்கள்வன் கிளத்துமாற்றங்கேட்டே
யருண்மிகுஞ்சரு சியாமன்பத்திமைபொலி யருமைமந்திரஞ்சாற்ற
வுருகுமன்புட னேற்றவனங்கியி லுருக்கிடு பொன்னேபோற்
பெருகுபாவவன் களிம்புமுற்றொழிந் தருட் பிரபைமெய்த்தவனுனன். (கஉ)

அனந்தரங்கள்வன் றன்றொழிலொழித்துப்பா லரிட்டமாதியவிற்றுத்
தினங்கழித்தருண் மலிசருசியாமனைத் தேசிகனுக்கொண்டு
மனங்கனிந்துசே வித்தருட்சுகங்கொடு வதிந்தனன்சிலநாளிற்
கனம்பொருந்துமெய்த் தொண்டனென்றுலகுளார் கழறொழுஞ்சிறப்புற்றான்.

ஒப்பினன்மருந் துவந்துகொ லுவர்த்துக்கொ லுண்டிடுமவர்கட்குத்
தப்பிடாதுதன் பயன்றருஞ்செய்கைபோற் றவம்பொலிபெரியோர்தம்
வைப்பியைந்தவர் துட்டர்களாயினு மறுவில்கூட்டுறவாலே
பப்பவிச்சைநா சினியெனச்சாற்றருட் பத்தியெய்திடுமன்றே. (கச)

ஆதலாலுயிர்க் குத்துணைபகவன தருளதையடைதற்குப்
போதருப்பன்மார்க் கத்தினுட்பத்தியே பொருந்துசாதனமென்று
மேதகைப்பத்தி பெறுதல்சாதுக்கள்பான் மேவலாலவர்சில
மோதலாலெளி தெய்துறுமென்கைமெய் யுணர்வுளோர்துணிவாமால். (கரு)

அரியமானுடப் பிறவியாற்பெறும்பய னரியருட்பெரும்பூசை
புரிதலன்பர்தம் பணிசெய்தலேயது புரிதாரதிகமீதி
னுரிமைமிக்குடற் புரந்துவாழ்கலனெனு முரச்சருசியாமன்றான்
றிரிவிதக்கர ணத்தினுமியற்றிப்பின் றிருவைகுந்தஞ்சேர்ந்தான். (கசு)

வேறு

பழனம்விளைவித் தன்பர்கட்கே பாரிலமுதிட் டுறுங்காற்சேப்
பறிபோந்திடலால் யானெனுயிர் பாற்றுவேனென் றுணிவமைகா
லழகார்புல்லந் தந்துகள வயர்ந்தானையுமெய்த் தரிசனத்தா
லகிலம்புகழ்நற் பத்தனென வாற்றிச்சருசி யாமனுடன்
விழவார்திருவை குந்தத்தின் மேவப்புரிந்த வருட்கடலே
வினையாருடலை யானென்றுண் மிகவுமபிமா னித்துணர்வை
யிழவாநின்றே னன்பர்கள்பே றெய்தச்செயலென் றிசைத்தருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கஎ)

சருசியாமகதிமுற்றிற்று

ஆகவிருகூகஎ

———

எண்பதாவது

# சகந்நாதகதி

சேவினைக் கவர்ந்தகள்வற் சீடனுப் புரிந்தருட்சீர்
மேவிடப் புரிசகுசி யாமன்சீர் விண்டேனிப்பான்
மாவிய லூரத்தன்செம்பொன் மலரடி போற்றிக்கங்கா
தேவியை யழைத்தபத்திச் செகநாதன் சீர்சொல்வேனே. (க)

கந்தமா மலர்ப்பொதும்பர் கவின்றசீர்ச் சிலௌனியூரிற்
சந்தமா மறைக்குலத்திற் சனித்தவன் சகந்நாதப்பேர்
தந்தவர் சூட்டக்கொண்டோன் சதுர்மறை யங்கம்வல்லோ
னுந்தள கையிர்கோனென்ன வுலப்பரு செல்வம்வாய்ந்தோன். (உ)

மட்டிலாச் செல்வம்வாய்ந்து மதிமயக் கமைந்துநாளும்
வட்டியிற் பெருக்கும்வாஞ்சை மனத்தோர்சற் றில்லானுகி
யெட்டிய பொருள்கண்முற்று மீசுரார்ப் பிதஞ்செய்தன்பாய்த்
தட்டின்மெய் யறவழிக்கட் சாலவுஞ்செலவுய்த் திட்டான். (ங)

இன்னவா நிகழுநாளி லிணையில்சீர் வாசபேய
நன்னல வேள்வியொன்று நவிற்றும்வாஞ் சையுட்பொருந்தித்
தன்னகர்க் கருகமைந்த சந்தன புரப்பேரூரிற்
கொன்னமை குண்டமாதி குயிற்றிச்சா தனங்கள்சேர்த்தே. (ச)

ஊக்கமா தவரோதாக்க ளுற்காத்து வாக்களத்து
வாக்களா தியரைமாண்பார் வாரணு சியினுங்கூவி
யாக்கமார் மகப்பொருட்டா லமையவேண் டுநர்களோடு
தேக்ககத் திருத்திமேவிச்செயல்செயத் துவக்குமெல்லே. (ரு)

மாரியின் மையினூற்றெண்ணீர் வளமிலா மையினற்காசி
யூரினு மணைந்தபார்ப்பா ருரைத்திடு கின்றாரிந்நன்
வாரியோர் கிணற்றிற்சற்றே மருவிய ததனூற்கங்கை
சேரியற் றீரவாசஞ் செயுமெங்கட் கிசையாதென்ன. (சு)

பத்திசால் சகநாதப்பேர் படைத்தவிர் வுற்றோன் றன்னுண்
மெத்திய துயரங்கொண்டு விளம்புவ னஞ்சன்மின்னீர்
நத்திய வாறுவல்லே நானளிக் கின்றேனென்று
ணத்தியல் கரந்தோயெம்மா னுண்மலர்ப்பதங்கணுடி. (எ)

பொங்குபே ரருளானின்பாற் பொருந்திய விரல்கடே ாறுங்
தங்குசீர்க் கங்கையெற்கித் ததியினி லுதவிலுன்னை
மங்குறுத் துணையென்றுள்ளின் மதித்திடு மன்பனுவே
னிங்குசெய் வேள்விபூர்த்தி யெய்திடப் புரிதியென்றே. (அ)

போற்றினன் வணங்கியன்பிற் பொருவில்கங் கையினைப்பூசை
யாற்றிடச் சாதனங்க ளளவில கொண்டணைந்து
ளூற்றிய வுவப்பிற்பூசை யுஞற்றின ளேதுகின்றான்
கூற்றினைப் பொழியவாவிக் குலங்களை யினிதாட்கொள்ளும். (கூ)

திருவருள் வடிவக்கங்கா தேவியண் டங்களெல்லா
மொருவுறு தளர்ந்துதொண்ட ருள்ளத்துள் ளொளியாநின்று
கருவுறு தருளுமாயன் கமலபா தாம்புயத்திற்
பெருகருட் டேன்போற்றோன் றும் பெருமைமிக்கமையுந்தாயே. (க0)

உன்னடிக் கடியேனுன்பா லுழுவலன் புடையேனிந்நா
ணன்லலம் பெறச்செய்வேள்வி நவையுறு தினிதுமுற்றக்
கொன்னமை சாலையின்கட் குறுகினை யருடியென்னப்
பன்னருந் துதிகளோதிப் பயிலிடத் தினிதுற்றன்பாய். (கக)

மகந்துவக் கினனடத்தி மருவிர விடையுற்றார்கள்
சுகம்பெறத் துயிலும்போதிற் றூய்மைசால் சகந்நாதன்று
னகந்தனின் மால்பொறபாத மமைத்தனன் வேண்டுமெல்லை
யுகந்தபே ரருள்சால்கங்கை யொலித்தெழுந் திடத்துயின்றோர். (க௨)

பலரும்விம் மிதமுஞ்சாலப் பயமுமுள் ளமைந்தெழுந்தே
நலமுறும் வேள்விச்சாலை நண்ணிநோக் கினரக்காலை
யலகில்கோ லாகலத்தோ டணித்திரை மாலைகொண்டு
குலவுசா லைக்கோர்தீங்கு குயிற்றிடா தேகக்கண்டார். (கங)

கனவுகொ னனமேவாவென்னக் கருதுபு பதியோரெல்லா
மனதுவ கையினிற்றெய்வ வரநதி யினிற்படிந்திட்
டனகமார் பூசையாற்றி யன்புறு சகநாதன்றன்
கனமலி பத்திமேன்மை கழறினர் வாழ்த்தித்தாழ்ந்தார். (கச)

பின்னருட் சகநாதன்றான் பிறங்குசீர் வாசபேய
நன்னலம் பெறமுடித்து நண்ணின ரனைவோர்கட்கும்
பொன்னள வறப்பொழிந்து போக்கியம் மகசேடங்கட்
டுன்னருட் கங்கைமீதிற் றோய்தர விடுத்துமூழ்கி. (கரு)

உலகமா தாவாங்கங்கை யோங்குமெய்ப்பகீரதன்பாற்
குலவுபே ரருள்செய்தாங்கு கொடியனேற் குஞ்செய்திட்டாய்
திலமுற முன்பிலேன்செய் சிரமமுட் கொள்ளேலென்னப்
பலபடச் சகநாதப்பேர்ப் பத்தனேத் தினகன்றான். (கசு)

இன்றும்வான் வளஞ்சால்காலத் திணையில்சீர்க் கங்கையங்க
ஞென்றுவ துண்டிக்காதை யோங்குமத் திசையின்மேயோர்
நன்றுரைத் திடுகின்றார்க ணவில்சக நாதன்காலா
நின்றுளார் சந்தனப்பேர் நிகழ்நக ரினில்வாழ்கின்றார். (கஎ)

கானிய றுளவமாலைக் கண்ணனு மருளாந்தன்னை
நானிலத் துருவாத்தோன்ற நவில்சக நாதன்றன்னை
மேனிகழ் தனதுதன்மை மேவிடப் புரிந்தோர்மாதா
வூனிட ரளியாவண்ண முகந்தது முடிவில்கங்கை. (க அ)

அத்திசெங் ணீர்நரம்பா லாமநித் தியவுடற்கண்
வைத்திடு மாசைதன்னை வாம்பில்பே ரின்பநல்கு
நத்தியல் காத்தெம்மான்றூ ணண்மலர்ப்பதத்தமைத்தல்
பத்தியா மதனுலெய்தப் படாதவொன் றின்றின்றே. (கக)

வேறு

தருமப்பொலிவார் சகநாதன் முன்செய்வாச பேயமகந்
தனக்காவேண்டி யுன்கமலச் சரணம்பணிய வத்தினமே
பெருகுற்றிடுகங் கையையுலகர் பெரிதுங்காணத் தோற்றிடச்செய்
பெரியகருணைத் தடங்கடலே பேயேற்கவ்வா றுடன்கொள்பெரும்
பருவத்தகையின் றெனிற்சூக்கம் படநின்பாதங் கண்டுருகும்
பத்தித்திறமா யினுநல்கப் படாதோவுனதோ ரடியனுயி
ரிருளிற்கிடந்து தவிக்குமியல் பின்னம் பொறுத்தன் முறைதானே
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௨0)

சகந்நாதகதி முற்றிற்று

ஆகூ கவி ருகூருஎ

---

எண்பத்தோன்றுவது

# இராசபத்திகதி

மகங்கொள்சாலையின் பால்வரநதிவர வழைத்துச்
சுகங்கொண்மெய்ச்சகந் நாதன்றன்சரித்திரஞ் சொன்னேன்
சகங்கொள்வேடத்த ராரையுமாலெனத் தன்ன
தகங்கொள்சீரிரா சபத்தியின்சரிதமே லறைவாம். (க)

மறைவிளங்கிசை வேதியரினங்களு மனத்தி
னிறைவிளங்கியற் சாவிநேர்மாதரு நிறைநூற்
றுறைவிளங்கிருந் தவப்புலவோர்களுந் துவன்றித்
தறைவிளங்கிய சீர்தழைத்துளதுபாஞ் சாலம். (௨)

ஆயமாநக ராட்சிசெய்திடுசெங்கோ லரசன்
மாயனுண்மலர்ப் பதத்திடைவைத்திடு மனத்தன்
றாயவன்னவ னுமமந்திரஞ்சொலச் சோம்பான்
மேயவைம்புலன் களுக்குமெய்யருள்விருந் திடுவோன். (௩)

பத்தர்தம்பணிக் கெனப்புறக்கரணங்கட் படைத்தோ
ஞெத்தவேடத்தர் தமையெலாமாலென வுன்னி
நத்தலானபொன் னிணையவரின்புற நல்கிச்
சுத்தமிக்கபாற் கடனிகர்மனம்பெறு தூயன். (ச)

கரவாராயினும் பதிதர்களாயினுங் கருணை
விரவுமாதவன் ரொண்டர்வேடத்தொடு மேவிற்
பரவிவேட்டவை யளித்திடுமிவ்விதம் பகலு
மிரவுமோர்கிலன் புரிந்தனனித்திறந் தெரிந்தே. (ரு)

உத்தமத்தகை மேயவித்தகர்கடம் முளமேல்
வைத்தமாலிவ னென்றனரோர்ந்துவன் மாயைப்
பித்தமைந்தவர் தாமுந்தம்முளத்திடை பெரிதா
வைத்தமாலிவ னென்றரசனையுளே மதித்தார். (சு)

இன்னவாறிய ஞளிற்பண்டாரங்காத் திடுவோ
ருன்னலாயின ரிறைவன்பாகவதரென் றுடன்மேற்
றுன்னலானவே டங்கொடெய்துநர்க்கெலாந் துணிந்து
பொன்னவாவறச் சூழ்ந்திடான்பொழிந்தனன் புயல்போல். (எ)

அன்னவேடம்யா மணிதராத்தன்மை யினன்றே
மன்னவன்பணி யிராப்பகலெலப்புடன்வயக்கித்
தன்னமாம்பய னுற்றனந்தருமறி வில்லா
ரென்னபேறுரி னும்மிலாரெனுமொழிக் கிலக்காய். (அ)

என்றுதம்முளங் கொடுதுழாய்மாலையு மெழின்மிக்
கொன்றுமூர்த்துவ புண்டரமாதியு மொளிர
நன்றுநாரண மந்திரமிடையற நவின்றே
துன்றுநாடகர் மன்றலைவாயிலிற் றுதைந்தார். (கூ)

அன்னபான்மைதேர் துவாரபாலகர்மன்பா லணுகி
மன்னர்மன்னவ நந்திருவாயிலின் மாடே
பன்னரும்பெருந் தேசுருப்பரமபா கவதர்
துன்னலாயின ரென்றலுமெழுந்துபோய்த் தொழுதே. (க0)

சினைமுகிற்புரை யருள்பொலிமேனியெங் திருமா
லனையபத்தர்சி காமணியாகினீர் நீர்நும்
மனைவிமைந்தர்சுற் றத்தினர்தமைபெலா மதியா
தினையமெய்விரா கங்கொடுசஞ்சரித் திடலால். (கக)

சாலவும்பெருந் தன்னியரெவணின்று சார்ந்தீர்
மேலணைந்திட லெத்தலத்தினுக்கென வேடர்
கோலமார்துவா ரகையினுங்குறுகினே மபோத்திப்
பாலணைந்திடு வோந்தம்மெய்ப்பத்திமான் மியத்தை. (கஉ)

வினவிவந்தன மென்னலும்வேந்துளங் களித்தே
யனகர்நும்வர வான்மிகுதன்னிய ஞானேன்
வனமுதற்கடந் திளைத்தநீரின்றிவண் வதிந்தே
புனல்படிந்தயின் றிளைப்பொழிந்தயோத்தியிற் புகலாம். (௧௩)

என்னவைம்புல வேடராலியைந்தபொய் வேடர்
மன்னனீண்டுறி லறியுங்கொலென்றுளின் மதித்தே
யின்னல்கொண்டுரைத் திடுவர்மெய்ப்பத்தர்கட் கிறைவ
கொன்னயோத்திகா ணுவன்மிக்குளத்திடை கொண்டேம். (௧௪)

ஈண்டுபாணித்தற் கிசைகிலமயோத்தியி லெய்தி
மீண்டுவந்திடு வேமெமக்கருள்விடை யென்ன
மாண்டுலங்குமன் னவர்கட்குப்பூசனை வயக்கி
வேண்டுபொன்னா தனமுதல்வழங்கினன் மிதப்ப. (௧௫)

அன்னகாலையி லிராணிமன்னவனுட னறைவா
ளின்னர்யாவரு நமதுபண்டாரங்காத் திருந்தோர்
துன்னலானவிவ் வேடம்பொய்யேயெனச் சொல்ல
மன்னவன்விர தத்தையோர்ந்துட்சின மருவான். (௧௬)

கனிவிற்போற்றிமுன் னுற்றதேபொய்யிது காற்கொள்
புனிதவேடமே சத்தியத்தகைத்தெனப் புகழ்ந்திட்
டினிதனோர்க்கியல் விடையளித்திராணியி னுடனே
நனியுவந்தந்தப் புரத்துற்றனராதிபத் தகையோன். (௧௭)

புள்ளுவங்கொள்வே டத்தர்பொன்கொடுபுறம் போந்து
கொள்ளும்வேடமுற் றொழித்தனரென்னினுங் குரிசி
லுள்ளுவந்துமெய் விரதரென்றுஞற்றுபூ சனையாற்
றெள்ளுணர்ச்சிதோய்ந் தத்தகைச்சீலம்வாய்ந் திட்டார். (௧௮)

அக்கணத்தின்மன் னளித்திடுதிரவிய மனைத்து
மிக்கவந்தணர்க் களித்தனர்மேற்கொள்வே டத்தா
லிக்கணைத்தரு நாரணனிக்கன மளிக்கிற்
புக்கவுள்ளத்து மவனையேகொளிலெவை பொருந்தா. (௧௯)

என்னவுன்னிநா ரணனுருவிதயமே விருத்திப்
பன்னரும்பஃறீர்த் தந்தலங்காணுறப் படர்ந்தா
ரின்னவாச்சரி யச்செயலோர்ந்திராச் சியத்திற்
றுன்னலாயினர் யாருமிக்கோகையுட் டோய்ந்தே. (௨0)

மன்னவன்றனை நாரணனேயென மதித்தார்
பின்னர்வேந்தன்மைந் தனுக்குப்பட்டாபிடே கஞ்செய்
தன்னவாகனன் றன்கரங்கொண்டுட லமையா
தன்னவற்றரு தாதைவாழ்வைகுந்த மடைந்தான். (௨௧)

பொன்னைவேட்டுமெய்ப் பத்தர்போல்வேடமேற் புனைந்தோர்
தன்னைநேரிறை பாலணைந்தவன்சங்கற் பத்தான்
மின்னைநேருல காசைவிட்டருணிலை மேவி
லென்னைசாற்றுவன் பத்திமான்மியத்தைபா னெடுத்தே. (உஉ)

ஆதலாலரி தாநமசென்மத்தை யடைந்து
மேதகைப்பெரும் பத்திகொண் டருணிலை மேவா
தேதமாயையிற் சுழல்வரின்கழைரச மிகந்து
கோதயின்றுவாய் நோதலெப்தினர்தங் குருவே. (உஙு)

வேறு

பகலுமிரவு மிடையினுநின் படிவாநின்று திருநாமம்
பகர்ந்துபாக வதரேபோற் பதிதர்சரவ ருற்றிடினு
மகமாருவப்பிற் பூசைபுரிந் தமைமன்சீர்சேதர் பண்டார
மளிப்போரவ்வே டங்கொடுற வவர்களடியா ராயினரென்
றுகடீர்சங்கற் பத்தவர்க டோயுந்திறம்போ னீடுியனைநின்
றாயவுளத்தி லிவனமதோர் தொண்டனென்னக் கருதிலுட
னிகமான்முற்று மற்றருட்பே ரின்பக்கடலின் மூழ்கேனே
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உச)

இராசபத்திகதிமுற்றிற்று

ஆக கவி ருகூஅக

---

எண்பத்திரண்டாவது

# சுகானந்தகதி

கள்ளவேடரு மாதவன்பத்தராய்க் கதியெய்த
வுள்ளருட்பொலி யிராசபத்தியின்கதை யுரைத்தேன்மேல்
விள்ளலாஞ்சரா சரமெலாங்கானத்தான் மெய்யின்ப
வெள்ளமூழ்கச்செய் திடுஞ்சுகானந்தன்சீர் விள்வேனே. (க)

மகத்துவத்தவத் தினரெலாம்போற்றிரா மானந்தன்
சுகத்துவங்கொண்மா ணுக்கரிலொருவனுஞ் சுகானந்தன்
றகத்துலங்குமெக் கலைகளுமுணர்ந் திடுந் தகையோன்விண்
முகத்துளாமு துவட்டுகானத்திறன் முந்துற்றோன். (உ)

போதுபாவியத் தேமிகுபத்திமை பொதிந்தொப்பில்
சாதுசேவையின் மெத்தவுங்காதலுட் டழைத்*தூன்றி
மீதுநாடகம் புரிந்தருள்கிருட்டிணன் விரைக்கஞ்சப்
போதுளாம்பர மானந்தமார்ந்திடு புலந்தோய்ந்தோன். (ஙு)

---

* ஊன்றி - பாம்பாகிய காளிங்கன்.

கனியுளம்பெறு சுகானந்தனிசைவிஞெ கானஞ்செய்
தினிதுகிட்டிண லீலைபாடுதல்வின விடின்மேலா
மனிதரன்றுபுள் விலங்குகளும் மிசைமயமெய்து
நனியன்னேனென்வன மிசையமைந்தனன்றுதி நவில்காலே. (௪)

பசுமுதற்புகல் விருகவர்க்கங்கடம் பகைநீங்கிச்
சுசுரங்கேட்டின்ப நீர்விழிகளிற்சொரிந் தசைவற்றே
வசுமதித்தலே யெழுதுசித்திரமென வயங்கிற்கும்
விசுவமேற்கொள்விச் சாதரர்வீணைகை விடுவாரால். (௫)

இன்னவாறியன் றிடுபரமானந்த மெய்தற்குண்
மன்னவாவிற்சு கானந்தன்பின்னர்மக் களுமாவுந்
துன்னலாம்வழக் கமைந்ததன்னவன்றலந் தொறுமேவி
நன்னலம்பெறு கிருட்டிணசரிதங்க ணவில்வானல். (௬)

எத்தலத்திலெத் தனைதினம்பாடல்க ளிசைத்திட்டா
னத்தலத்துளா ரதுவரையூண்டுயி லகன்றுரா
யுத்தமச்சுக கானத்தின்மனேலய முற்றின்பா
லொத்தமெய்ச்சுகா னந்தம்பேருருவுகொண் டுளதென்பார். (எ)

வேறு

இன்னவா பதிகளெங்கு மெழிற்சுகானந்தன்மேவிக்
கொன்னமை கீதம்பாடிக் குலவுயிர்த் திரள்கட்கெல்லாந்
தன்னகத் தோங்குமின்பந் தந்தனன் மதுரைமேவி
நன்னல விராதைகோயி னண்ணினன் பாடினுனல். (அ)

அத்ததி யங்நாட்டின்க ணமைந்தபண் டிதர்கள்யாரு
மொத்தமை தரவன்னேரை யுட்பெரு கன்பாற்போற்றி
வித்தகச் சுகானந்தன்றுன் வீணைகைக் கொண்டுபாடச்
சித்தருட் பிரமானந்தத் தெண்டிரை யினிற்படிந்தே. (௯)

விரகமிக் கமைந்துசில்லோர் விளம்புவ ருபர்வொப்பில்லாப்
பரமபா கவதவின்பாற் பாடுநின் கீதங்கேட்டு
விரவிடு கானரூப மேயமெய்ப் பிரமானந்தப்
பரவையிற் படிந்துஞ்சற்றும் பட்டிலேந் திருத்திமன்னே. (௧0)

அருத்தியார் பிரமானந்த மநுபவித் தாலுளத்திற்
றிருத்தியெய் தாமையோரற் புதமெனச் செப்பலாமோ
மருத்தியல் வளப்பிருந்தா வனத்திற்கோ பியரைவிட்டு
விருத்திசான் மதுரைக்கேக விரகமிக் கவாரயன்னேர். (௧௧)

பாடியல் போல்வன்னித்துப் பாடுகவதனைக்கேட்ப
நீடிய காதலெங்க ணெஞ்சகத் துண்டென்றோத
வீடில்சீர்ச் சுகானந்தன்று னிராதைகிட் டிணன்செம்பொற்று
ணுடிமிக் கன்பினேடு நனிமனே கரம்பொருந்த. (௧௨)

சிறிதுபோ திசைப்பக்கேட்டோர் சிந்தைமெய்ப் பரவசங்கொண்
டெறிதிரை யறுங்கடற்போ லியங்குகா லொழிதீபத்திற்
செறிதர வோவன்மீட்டத் திகழ்ந்தசித் திரங்கள்ளேபோற்
றறியென வசையாக்காயந் தழைத்துமெய்ச் சமாதியார்போல். (கங)

அழுகையர் சிலவரொன்று மறிகில தங்கைகூப்பித்
தொழுகையர் சிலவர்போ ;நந் துறந்தனர் புவியின்மீதில்
விழுகையர் சிலவர்கண்ணன் விரைமலர்த் தாளினெஞ்சங்
கெழுகையர் சிலவரானர் கீதங்கேட் டவர்களம்மா. (கச)

ஈட்டகத் தன்பர்தேட்டத் தின்னருண் மேனிகொண்டென்
ஞட்டமுற் றோங் கி ரா ம ா ன ந் த ச ற் கு ர வ ன் பா த
மாட்டமை தொண்டரல்லால் வளர்சுகா னந்தன்கீதங்
கேட்டமைந் தார்கட்கியாரைக் கிளத்துவதுவமைமன்னே. (கரு)

தருக்கொடி சலனமற்ற தளிர்த்தன வுலவையன்றித்
திருத்தளி சாலிராதா தேவியி னுருவம்வெண்ணெய்
நெருப்புறுந் தகைமைதோய்ந்து நீள்விழி நீருகுத்த
துருக்கவச் செயலாற்கீதஞ் சுகா னந்த ஞெழித்தான்மன்னே. (கசு)

மெத்தியன் மூர்ச்சைகொண்டு விளங்கினர் தம்மையெல்லா
மொத்தியன் மாந்தர்சைத்தி யோபசா ரம்புரிந்து
பித்திய லுலகபோதம் பெறப்புரிந் திட்டார்தம்மெய்ப்
புத்திவாய்ந் தவர்பொருந்தும் பொருவின்மெய்ச் சுகத்தையுன்னி. (கஎ)

அளப்பருங் களிப்பராகி யருட்சுகா னந்தன்செம்பொற்
றளப்பது மத்தாள்போற்றித் தமக்குயர் கீதத்துக்குக்
கொளப்படு முவமைவிண்ணிற் கூறிட வில்லையென்றூற்
சளப்படு புவியின்மேலுஞ் சாற்றிட வறிந்திலேமால். (கஅ)

தன்னியர் பாக்கியப்பேர்ச் சத்தத்தா லழைக்கத்தக்கா
ரிங்கிலத் தும்மையல்ல தில்லையொப் பற்றீர்நீரே
மன்னிய பத்தர்சூடா மணியென விதந்துசாலப்
பன்னினர் வணங்கித்தத்தம் பயிலிடங் களிலணைந்தார். (கக)

முதிர்சுகா னந்தன்கண்ணன் முயல்புகழ்க் கீதம்பாடி
யதிரலை யமுனைதீர்த்தத் தமைலதாக் கிருகந்தோறும்
வதிதல்செய்தளவிலின்ப வாரியின் மூழ்கிக்கானத்
துதிபுகன் றிருந்தேயீற்றிற் றாயவை குந்தஞ்சார்ந்தான். (உ0)

காணிலுட் கருதிற்கேட்கிற் கரையில்பே ரின்பநல்கு
மாணில வருட்கண்ண ன்றன் மலர்ப்பதப் பத்திவிட்டு
வீணிய லலகைத்தோராய் மிக்கதுன் பளிக்குமாயைக்
கோணியற் படுபொய்மாக்கள் கோளிலாம் பொறியரம்மா. (உக

வேறு

கானத்தமையும் புள்விலங்குங் கானத்தமையு மிசைகேட்டுக்
கனலின்மெழுகொத் தெலும்புமனங் கரையப்பாடுஞ் சுகானந்தன்
மானத்தகையார் மதுரையிட மருவியவர்கள் வழுத்திடலான்
மதுரமிகப்பா டியிராதா வடிவங்கரையப் பாடுவித்தே
யூனத்தகையா ரவன்வடிவு முருகிக்கரையக் கொண்டுளநீ
யுலகத்திடைநா யேன்றனக்கீண் டொருபேறுதவா துண்டுடுத்திட்
டீனத்தகையா ருடலினைக்காத் திருக்கவைப்ப தியல்புகொலோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உஉ)

சுகானந்தகதிமுற்றிற்று

ஆ கவி ௬௦௦௩

---

எண்பத்துமூன்றுவது

# சேனுபத்திகதி

வானகத்தமு தெனக்கிருட்டிணன்புகழ் மதுர
கானஞ்செய்சுகா னந்தன்மெய்ச்சரித்திரங் கரைந்தேன்
கோனகங்கொதி யாதரிதன்றொழில் குயிற்று
மேனலங்கொள்சே னுபத்திசரிதமேல் விள்வாம். (க)

கயலுலாவுதண் பணைகளுங்கடிமலர்க் காவும்
புயல்குலாமணி மாடமாளிகைகளும் பொருந்தும்
வியனிலாவுபாந் தவகடநாட்டையாள் வேந்தன்
மயலிலாமனக் கோயிலின்மாலடி வைத்தோன். (உ)

சாதுசேவையி லதிதிகட்காற்றுபூ சனையின்
மீதுமீதெழுங் காதலின் மிகையன்வ் வேந்தற்
கோதுமெண்ணெயிட் டிடன்முதலாந்தொழி லுஞற்றுந்
தீதுதீர்தொழில் புரிநன்மஞ்சிகக்குலச் சேனன். (௩)

உற்றவாலிப முதற்கொடம்மன்னனுக் குவகை
பெற்றசேவக னுயதனுற்பெறும் பொருளா
னற்றவம்பொலி சாதுபூசனையற நவிற்றிக்
கொற்றவன்பணி தீர்தரிலரிகதை கூறும். (ச)

இடமணேந்தனன் வினவியேயெல்லையி லின்பக்
கடலின்மூழ்குவ னல்குரவெய்தினோர் கட்குக்
கடமைகொண்டதன் குலத்தொழிலறத்தினாற் கண்பான்
படர்வினைவிளைத் தார்தந்தாள்வருடுவன் பரிவால். (ரு)

இன்னவாறரி பத்தியுமுயிர்களுக் கிதமு
மன்னவாற்றினன் வாழுநாள்வைகறை யொன்றின்
மன்னவன்பணி குறித்தணைந்திடவுறும் வழிக்க
ணின்னல்வெம்பசி கொண்டன்பரேகிடல் கண்டான். (சு)

துடிதுடித்துளஞ் சோர்ந்துமற்றவரடி தொழுதே
கடிது தன்மனைப் பாலவர்கலந்திடப் புரிந்து
முடிவிலோகையி லவர்க்கமுதாற்றிடன் முயன்றான்
வடிகொள்வேலிறை தன்னைத்தன்றொழிலையுண் மறந்தான். (எ)

வேறு

மன்னவ னெழுந்துநானம் வயக்கிடச் சேனனெய்து
மென்னவுள் ளெண்ணினன்காத் திருந்தன னெய்தாப்பண்பாற்
றன்னகத் தற்பங்கோபந் தளிர்த்தன னன்னபோழ்தின்
மன்னரு ணிறைவார்பத்த வற்சல னுருங்கண்ணன். (அ)

நிருபனுட் சினக்கினம்பா னிறையுமன் புளசேனற்குப்
பருவர லெய்துமஃதைப் பார்த்துநாஞ் சகிக்கொணுதென்
றருளுளத் துன்னியன்னே னனையவோர் படிவமெய்தி
யருமைமா தவஞ்சான்மன்ன னரண்மனைப்பால்வந்தங்கு. (கூ)

வழக்கம்போற் றயிலந்தேய்ப்ப மன்னவற் குளத்தின்மெய்யிற்
சழக்கறு பரமானந்தந் தழைத்ததத் தினத்தின்மன்னன்
பழக்கமார் சேனன்செய்யும் பணிக்குமிக் குவகைகூர்ந்தே
புழக்கமா ருண்கோள்சாலை புகக்கள்ள னுடன்மறைந்தான். (க0)

உண்மையாஞ் சேனன்பத்த ருண்டகன் றிட்டபின்னர்
வண்மைதோய் தனதுபோத மருவிமன் னவனைபுன்னி
*யெண்மையெய் தினனுய்நாமே திதற்கியற் றிடுவதென்று
புண்மையன் மனத்தனுகிப் புரவல னிற்பாற்போந்தே. (கக)

உண்ணுழை தரற்குளஞ்சி யுறுதலை வாயிலின்பா
னண்ணுபு கலங்கிநிற்ப நாடுசே வகராண்டுற்றே
புண்ணுறு மனத்தனுபுட் புகாதிவ ணிற்பதேது
விண்ணுழை திறத்தையென்ன வினவிட விளம்புகின்றான். (கஉ)

அடியவர் பணியினின்றே னரசனே வலைமறந்தே
னெடியகுற் றத்தால்யாது நேருங்கொ லெனும்பயத்தான்
முடிகெழு வடிவேல்வேந்தன் முன்பணை கிலனிருந்தேன்
கொடியனேன் பிழையையுள்ளங் கொற்றவன் கொள்ளாவண்ணம். (கங)

மன்னிக்கப் புரியினும்மோர் நன்றியான் மறவேனென்று
பன்னிப்போற் றிடத்தயாவுட் பதியோர்சே வகன்போய்ச்சாற்றத்
தன்னித்தக் கடன்கள்யாவுந் தவறற முடித்தமன்ன
னென்னிப்பண் புரைத்தாய்பித்த மெய்திற்றோ நினக்குச்சாற்றாய். ()

* எண்மை - பரிதாபநிலை.

சேனனன் ருேவெனக்குச் சிறந்திடத் தைலந்தேய்த்துப்
போனவ னவ்வாருகப் புகல்வதென் னவனிவந்தென்
பானவில் கின்றதென்னை பயமுரு தலையிங்ஙன்
மேனலம் பெறுமென்முன்ன மேவிடத் தருதியென்ன. (கரு)

சாற்றினன் கொணரச்சேனன் சங்கைமிக் கவனுய்மன்னற்
போற்றின னிற்பவேந்தன் புகல்வனெற் கெண்ணெய்தேய்த்த
லாற்றின னீயேயவ்வா ருகவிவ் வண்ணமான
கூற்றின னுதற்கேது கூறுதி யுணரவென்ருன். (கசு)

செய்கைமுற் ருேதமன்னன் சிந்தைவிம் மிதனுயங்ஙன்
வைகைபெற் ருேரையெல்லாம் வருவித்து வினவுகின்ரு
னைகைபெற் றிவண்டோய்சேன னம்மரண் மனையின்பாங்க
ரெய்கைபெற் றகன்றசெய்தி யாவருந் தேர்விரன்ரே. (கஎ)

என்னமன் னுமாமுன்னே யான்கண்டே யான்கண்டேனென்
றன்னவர் பலருமோதி யகங்கொளற் புதத்தராகி
யென்னவாச் சரியச்செய்கை யீதென்று ரன்னபோழ்தின்
மன்னவன் றனதுளத்தின் மதித்தன னிங்ஙன்மாதோ. (கஅ)

செயலிது சேனன்மீதிற் செறிந்தவாற் சல்லியத்தா
லயனையம் புயநாபிப்பா லளித்தருள் பகவன்செய்த
வியன்விளை யாட்டிதற்கு விளம்பிலோ ரையமில்லை
யியலுநம் முடற்கணேபே ரின்பமெய் தியதே சான்ரும். (கசு)

என்றுணிச் சயித்துச்சேன னிடம்புகன் றிடுகின்ருனீ
யின்றுதொட் டெனக்கொரேவ லியற்றலை புனிதநின்னு
னன்றுதோய் பகவற்கண்டு நான்முகன் சிரத்துந்தீட்டும்
பொன்றுணைக் கரங்கடீண்டும் பொருவில்பே றெய்தப்பெற்றேன். (உ0)

நானுனக் காற்றுமாறிந் நானில மீதன்றந்த
வானுல கத்துமில்லை மாதவற் குவப்பார்பத்த
மானுடர் யார்க்குமேவல் வயங்குநின் காங்கொண்டாற்றேல்
வேனுறு பத்தர்கண்ணன் வியத்தகு சேவைசெய்வாய். (உக)

வேண்டுபொன் னளிப்பேனன்றி மிக்கவோர் நகருமீவே
னீண்டுறு மாந்தர்யார்க்கு மெழிற்குரு வாவாழ்கென்ன
மாண்டுலங் கிறைவன்சாற்ற வணங்கித்தன் மனையின்மேவி
நீண்டுறு மறங்களாற்றி நெடிதிருந் தரிதாள்சேர்ந்தான். (உஉ)

சேனனு விதக்குலத்திற் செனித்தவ னெனினும்பத்தி
யானவம் பியினுன்மாயை யார்கலி தன்னைத்தாண்டி
மானமார் யோகியர்க்கு மருவருங் கதிபெற்றிட்டா
னுனதான் மனிதரானு ரழிதரு பிரபஞ்சத்தில். (உங)

எய்திடற் கரியயாக்கை யேய்ந்திடிற் சாதிமேன்மை
பொய்திகழ் செல்வங்காயம் பொருந்திடு பலத்தையெண்ணி
மைதிக ழகந்தைகொண்டு மாண்டிடா துற்றசீவ
னுய்திபெற் றிடமெய்ப்பத்தி யுறுவது சால்பாமன்றே. (உச)

வேறு

பார்த்திபனுக்குத் தயிலமிடப் படர்காற்பரம பாகவதர்
பசியாற்றளர்ந்தெய்த் துறனடிப் பதைத்துப்பணிந்திற் பாற்சேர்த்திட்
டார்த்தியுடன்மெய்ப் பணிசெய்துற வரசன்சினவா வணஞ்சேன
னனையவுருக்கொண் டவன்பணியு மாற்றுங்கருணைப் பெருங்கடலே
சூர்த்தமாய வுடன்மனையிற் றுதையிச்சையுடன் கிரியையெனுந்
தோகையரைத்தோய்ந் தேரீங்காத் துன்பமகப்பெற் றுழல்வேனை
யீர்த்தின்புறுஞா னக்கொடியொ டிணைத்துன்றிருத்தா ளினிற்சேர்ப்பா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உரு)

சேனபத்திகதிமுற்றிற்று

ஆ கவி ௬௦உஅ

---

எண்பத்துநான்காவது

# நந்ததாசகதி

கானார்துளவக் கண்ணன்றன் னுருவங்கொள்ளக் கண்டவன்றன்
வானாருருத்தான் கொள்சேன பத்திசரிதம் வகுத்தேன்மே
லீனாவின்கன் றினைக்கொன்றோ னிவனேயென்று ரீனமுறத்
தானாதரங்கொண் டெழுப்புநந்த தாசன்சரிதஞ் சற்றுரைப்பாம். (க)

மணிகடிரைக்கை கொடுமூழ்கு மாந்தர்பெறவிம் மையிலீந்து
தணிவில்கதியு மறுமையினிற் றரும்பாகீர தியின்வடபா
லணிகொடீரத் தமைநேமி யங்கானகத்தின் மேற்றிசையிற்
கனிதமறுசீர்ப் பரேளியெனக் கவினுநகர மொன்றுண்டால். (உ)

அன்னநகரங் கலைமகட னருளாமறையா றங்கமுடன்
பொன்னம்புயந்தோய் திருவருளும் பொருந்துமறையோர் தமக்கிடமாங்
கொன்னன்கமைந்த தாண்டுநந்த தாசனெனுநல் குரவுடைமை
துன்னந்தணன்கல் வித்தகைமை தோயானொருவன் வாழ்ந்திட்டான். (௩)

ஏற்றகல்விப் பெருக்கமைந்து மெய்தற்கருமா னிடப்பவங்கொண்
டாற்றலாவ திதுவென்ன வறியாதிறப்பார்க் கேனையனு
யாற்றவரிபத் தியுங்கமைமுன் னுச்சொல்குணமு மேப்ந்துதின
மாற்றலுடனே பயிர்த்தொழில்சைப் தல்விற்றனது மனையணைந்தே, (ச)

மிக்கவரிபூ சனைபுரிந்து மேவும்பத்தர்க் குணவளித்துத்
துக்கசுகங்கள் சமங்கொண்டு துதையுநாளிற் றுட்டர்சிலர்
தக்கநந்த தாசன்மிசை தாமிக்கழுக்கா றுற்றூராப்ப்
புக்கவிவன்று ரித்திரியம் பொதிந்துமிடம்ப மமைந்தானுய். (௫)

இரவில்வருவார் பலர்க்குமன்ன மிடுகின்றுனிம் மாநகரிற்
பிரபுத்தகையோர் பலரிருந்தும் பிணம்போன்றுற்று ரவர்புகழ்ச்சீர்
விரவிற்றில்லை யிவனிசைநாற் றிசையினூடு மேவிற்று
லரவிற்கொடியா னிவனிடம்ப மழியப்புரிவோம் யாமென்றே. (௬)

ஏய்ந்தவிசைகெட் டிடவுமின்மீ தெவருமணுகா மலும்புரியப்
போந்தசூழ்யா தென்னெனத்தம் புந்திக்கிடையுன் னினருறுகால்
வாய்ந்தவோர்நாள் *வசுவொன்று மடிந்துகிடக்கக் கண்டுவந்து
தோய்ந்தநந்த தாசன்வயற் றுறையிலிட்டுத் திரும்பினுர். (௭)

பின்னுட்சென்று தாசன்றுன் பிராமைகொடுபார்த் தனனிற்ப
வின்னுநிரயத் தாவிபுக வியற்றுமுயற்சிப் பேதையர்க
டுன்னுநந்த தாசன்மிசை தோய்வெஞ்சினங்கொண் டோதிடுவா
ரென்னேமூர்க்க வரிபத்தி யிசைபாகவத ரெனநடித்தாய். (௮)

மாந்தர்தமைவஞ் சித்திடவே வாய்மையெனிலிஃ தியற்றுவைகொல்
போந்தநினது வயலிடைநெற் புற்றின் றதற்கீதாற்றினையால்
சாந்தனெனவே பூனைநிகர் தன்மைபடைத்து மருட்டினு
யேய்ந்தநினதுட் கொடுங்குணங்கள் யார்க்கும்புலனு யினவன்றே. (௯)

நன்றுமறையோர் குலத்துதித்து நாடாதகத்திற் பசுக்கன்றைக்
கொன்றுய்ப்பாவ சண்டாள கோகத்தியறக் கொடிதுன்முன்
னின்றுலுமிவன் கொடும்பாவ நேருமெனச்செப் பினர்நகர்க்கண்
சென்றுண்டனைவோ ரையுமழைத்துச் சென்றுர்பலவாச் செப்பினர். (௧௦)

நிகழ்த்தல்வினவிக் கயவர்மிக நிந்தித்திட்டார் சற்சனர்த
மகத்துட்டுயர்மிக் கொருமாற்ற மறையாரமைந்தா ரதுகாற்பொன்
னகத்துக்கிணைநெஞ் சுறுநந்த தாசனவில்வா னுன்செய்திலேன்
சகத்துச்சாட்சி யாம்ராம சந்திரன்சான் றுகுமால். (௧௧)

எனினுமிதனை யவனருளா லெழுப்பியணைவே னீவிரெலா
நனிநும்மனைப்பா லணைந்திடுதிர் நானங்ஙனமாற் றிலனுயி
லினிதுநுஞ்சொற் படியமைவே னென்றேயவர்க ளேகியபின்
கனிவிலிராம நாமசெபங் கணித்தான்சிறிது போழ்தரோ. (௧௨)

இராமனருளாற் கன்றுயிர்த்தாண் டியையும்புன்மேய்ந் திடத்தாசன்
கிராமமிசைகொண் டேகவங்ஙன் கிளர்சற்சனர்கண் மிகவியந்து
பராவிநின்னை நிட்களங்க பத்தனெனமுன் பேயறிவோம்
பிராமணர்க்குட் சிரேட்டநிலை பெற்றுருனையற் றின்றென்றே. (௧௩)

* வசு - பசுவின்கன்று.

பலவாப்புகழ்ந்து கொண்டாடப் பார்த்தகயவர் சிரந்தூங்கி
நிலநோக்கினர்நின் றனரக்கா னிலவுங்கன்று தெழிப்புடன்றன்
னலமார்தாயை விளிப்பவுட னண்ணுங்கயிற்றை யறுத்துவரக்
குலமாமறையோன் பசுவின்பின் கூடித்தொடர்ந்தாண் டடைந்திட்டான். ()

அப்போதவண்மே வியபெரியோ ராருமணைந்த வந்தணனை
மெய்ப்போதுநியார் கன்றிதுசால் விருத்தாந்தங்க ளேதென்னத்
துப்போர்தரவோ துவனிஃதென் றாயபசுவின் னதன்கன்றே
யெய்ப்போவருவெம் பிணியடைந்திஃ திறந்துநாண்மூன் றாயினவால். (கரு)

பயிலுநகரின் புறத்திட்டேன் பசுவன்னதனுற்புல்லாதி
யயிலாதேங்கிக் கதறியுற்ற தமையுமிவர்பே ரருட்டிறத்தா
லொயிலார்கன்று பிழைத்தழைப்ப வொலிகேட்டொல்லையுறப்பிணித்த
கயிறுனதனை யறுத்திங்கட் கடிதுவரயா னுடன்வந்தேன். (கசு)

உண்மையிதுமட் டுணர்வனென வோதக்கேட்ட சற்சனர்கள்
வண்மைபெறுதா சனையுவகை மலிவிற்புகழ்ந்தா ரகன்றிட்டா
ரண்மைபெறுசம் பவந்தெரிந்தூ ரதிகாரத்தோன் றுட்டரைக்கூய்ப்
புண்மைபெறத்தண் டித்துநகர்ப் புறத்திலமையப் புரிந்திட்டான். (கஎ)

ஒன்றுசெயல்கேட் டருட்டாச னுள்ளம்வருந்தி யிரங்கினு
னன்றுதொடங்கித் தாசன்சீ ரசலமிசையார் விளக்கேபோற்
றுன்றுநாடெங் கணுஞ்சாலத் துலங்கிற்றிதனுற் றுட்டரின்றே
னன்றுபொலியுத் தமர்சீர்த்தி ஞாலத்தோர்க ளறிவரிதே. (கஅ)

அந்நாண்முதனந் ததாசப்பே ரமையும்பெரியோ னகத்துவப்பான்
முன்னுளினுமால் பூசைமிக முயன்றுசாது சேவைபுரிந்
தின்னுவென்ப தற்றருட்பே ரின்பக்கடன்மூழ் கினன்வதிந்து
பின்னுளிராமச் சந்திரன்பொற் பிரசமலர்த்தாட் டுணைசேர்ந்தான். (கசு)

வேதமுதலாஞ் சலைத்தெருட்சி மேவாநந்த தாசனரி
பாதபத்தி கொண்டொப்பில் பரமபதம்பெற் றனனிதனுற்
போதமுறுமா னிடசெனனம் பொருந்தினீர்புன் கல்விகள்கற்
றேதமருவா துயர்பத்தி யெய்திச்சுகமிக் கேய்வீரால். (உ௦)

வேறு

தெருளார்நந்த தாசர்புகழ்ச் சீலஞ்சகியா தவர்டணையிற்
செத்தபசுங்கன் றிட்டிவனே செகுத்தானெனுந்தீ யவர்நாண
வருளார்நினது திருநாம மன்பிற்செபிக்க வக்கணத்தி
லாவிவழங்கித் தாசர்புக ழகிலமுணரப் பரப்பிடுவாய்
மருளாராக்கை யானென்று மாதர்மைந்த ருறவென்று
மண்ணுள்சுகமே வாழ்வென்று மதித்துமயங்கி மதியொழிந்தே
யிருளார்பலத்திற் கிடந்தெய்ப்பேற் கின்பவுணர்வென் றீந்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உக)

நந்ததாசகதிமுற்றிற்று

ஆகவி கூ௦சகூ

---

எண்பத்தைந்தாவது

# ஆக்கிலதாசகதி

துட்டர்சோதித் திடவாவி துறந்தவான்கன் றினையெழுப்பி
யட்டதிசையும் புகழ்நிறைத்த வருளார்நந்த தாசர்கதை
யிட்டமுடனே தினனினியன் பிசைந்தாக்கிலதா சன்சகமேற்
சிட்டர்புகழ வாற்றுபெருஞ் சித்திக்கதையோ துவன்மாதோ. (க)

மந்தாகினியின் வடபாலாய் மருவும்பிரமாவர்த்தப்பா
லுந்தாச்சிரம மொன்றிடைவாழ் வுற்றோனுயராக் கிலப்பெயரோ
னந்தார்கரத்தெம் பெருமான்றா ணளினமமைத்த மனமுடையோ
னந்தாமரையோன் முதற்கிருமி யந்தமாய பிரபஞ்சம். (உ)

முழுதும்விண்டு மயமென்ன முன்னுமுராத்தோன் பரப்பிரமச்
செழுமைமிகுமு பாசனையிற் சிறந்தோனாகி வீற்றிருந்தான்
பழுதிலன்ப னிவ்வண்ணம் பயிலுமொருநாட் டன்மனத்தில்
வழுவினைமி சக்கானின் மருவும்பலதீர்த் தமும்படிய. (௩)

தன்னுள்விழைந்து பத்திமிகத் தழைத்தசீட னொருவனுடன்
றன்னும்வழிக்கொண் டனன்சிறிது தூரம்போந்து வளப்பமிக
மன்னுமொருமாஞ் சோலையிடை வதிந்தான்பசிதா கத்திளைத்த
கொன்னுந்தியசீ டன்றருவிற் குலவுபழங்க ணாடினான். (ச)

வளர்ந்ததருவி னுச்சியிடை மாடைநிறங்கொண் டுளகனிகள்
விளங்கல்கண்டு குருபரன்பான் மேவியிந்த மரச்சிகையில்
வளங்கொண்டமையுங் கனிநுகர்வான் வாஞ்சைமிக்குற் றனனென்ன
வுளங்கொள்பரிவாற் குருபரன்கா வுடையானிடம்போய் வினவுவான். ()

எமதுபசிக்குக் கனிகளிரண் டீவாய்கொல்லோ வென்னவவ
னமராருலகெய் திடற்கமைத்த வாரோகணம்போன் றியன்மரத்தி
லமையும்பழங்கொண் டிடவேட்போ ராவிமானமகன்றோரோர்
சமயம்வீழி னெடுத்திடுதிர் தடையின்றெனச்சாற் றினன்பின்னும். (சு)

பரிகாசங்கொண் டறைந்திடுவோன் பத்தசிரேட்டர் நீயிரருள்
விரிவார்யோகீச் சுரரன்றோ விருக்கமதனுச் சியிலமைகாய்
பரிவாய்வேண்டிற் றாழ்ந்துபுவிப் பாலெய்தித்தூந் தேகாதோ
பெரிதாகியமெய்ச் சித்தருக்கிப் பெற்றியரிதோ வெனப்பேச. (எ)

புகலுமொழிகேட் டடன்சாந்தம் பொங்குமுயராக் கிலதாசன்
பகர்நின்சொன்மெய் யத்தரிச்சை பலவும்வழங்கும் பகவனுக்கு
நிகழுஞ்செயலீ தசாத்தியமா நிகழ்த்தப்படுமோ வேண்டுவனென்
றகமுட்டிருமா றனைநாடி யன்பனிவ்வா றறைகுவான். (அ)

பகவசர்வாங் திரியாமி யாரீபரோப காரச்சீர்
திகழப்பார்மே லித்தருவாங் திறங்கொண்டமைந்துற் றனையன்றே
புகலுமிதுசத் தியமெனிலிப் போதென்சீட னிதிற்கொள்கனி
நுகரவிச்சித் தனன்கருணை யுண்டேற்றருதி யெனநுவன்றே. (கூ)

அவ்வாறளிக்கி னேயிவண்விட் டகல்வேனென்னு முராமமைந்து
செவ்வாதரஞ்சா லன்பனவண் சிறிதுவைகுங் காலைகனி
வவ்வாநிகழுஞ் சினைகளெலாம் வல்லேபத்தற் பணிவனபோ
லொவ்வாப்புகழாக் கிலதாச னுடையவருகி லுற்றனவே. (கo)

உற்றசெயல்கண் டடன்ருச னுடையாற்கூவி நல்கென்னச்
சொற்றபோதன் னவன்பயந்து தொழுதுபரிக சித்துரைத்த
குற்றமுழுதும் பொறுத்தறிவில் கொடியேற்கருள்வீ ரிப்பொழிற்கட்
பெற்றகனிமுற் றுங்கொளினும் பேசேன்றடையென் றிடக்கேட்டே.()

சீடனுடன்வேண் டுங்கனிகள் கொள்ளாயென்னச் செப்பிடச்சந்
தோடமருவி யைந்துபழஞ் சொந்தமுறக்கொண் டுண்டமைந்தா
னுடலிதனை யறிந்தயலி லமைந்தார்பலரு மறிந்துவியந்
தீடற்றமையாக் கிலதாச னிணைத்தாள்வணங்கி யின்புற்றார். (கஉ)

அன்னகாலை தாசனரு ளமையுந்தருவைப் பார்த்துரைப்பா
னின்னன்மிகுத்தென் பொருட்டிங்ங னிசையேல்சுகமே வாழ்தியுய
ருன்னதிடத்தின் மேவுகென வுரைக்கவங்ங னமைந்திடலு
மன்னன்புடையான் சீடனுடன் மகிமைப்புனலா டிடப்போந்தான் (கங)

படருங்காலாண் டையரவர்பின் பற்றிக்கனிய னுடனணையத்
தொடருமவரைத் தாசரன்பிற் றொழுதுநின்மி னெனச்சாற்றி
யடருந்தீர்த்தந் தொறுமுழுகி யரிதாளன்பிற் பணிந்தேற்றி
விடருந்திடுவெம் பவமணுகா வின்பக்கடலுண் மூழ்கினர். (கச)

வேறு

அகிலத்திலகுஞ் சராசரங்க ளனைத்துமுனது வடிவேயென்
றகத்திற்றெளிவாத் தெரிந்துபத்தி யாற்ருக்கிலதா சனுக்கவன்று
ணெகிழன்பினிற்போற் றிடுசீட னெஞ்சிற்கருதும் படிவானி
னிவந்தமாங்கொம் பவனிக்க னிலவிக்கனியீந் திடக்கண்டு
மகிடத்திவரந் தகனுயு மாதர்புடைசூழ்ந் திடமலைய
வனியாங்தேரி லுலாப்போது மதனுகியும் வாரிசத்தமைப்பு
மெகினக்கொடியோ னுகியுநீ யேமேவிடலோ ராதிளத்தே
விராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (கரு)

ஆக்கிலதாசகதிமுற்றிற்று

ஆகூ கவி கூoகூச.

———

எண்பத்தாறுவது

# பிருதுவிராஜகதி

மருமலர்தோய்தரு வாதியும்விண்டுவின் மயமெனவோர்ந்தருண்மெய்த்
தெருளுறுமாக்கில தாசனியற்றிய சீர்சிறிதோதினன்மேற்
குருபரனோதிடு மொழிவழிநின்றருள் கொண்டுயர்வானிலமே
லொருவருசீர்பெறு பிருதுவிமன்னனு யர்ச்சியுரைத்திடுவாம். (க)

மருமலர்வாவிபு மோதிமமேயவ யற்பொலிவுந்திகழும்
பொருவிலிராணவி ராச்சியமன்னருள் புத்திரனெப்பறுசீர்ப்
பிருதுவிராசனெ னுமமுளான்மிகு பெருமைபடைத்தியலுங்
குருபரனனகி ருட்டிணதாசர்மெய் கொண்டமைமாணவகன். (உ)

சற்குருசேவையி லொப்பருமேன்மைத ழைத்தனன்வாய்ந்துறுநாள்
பொற்குவடன்னம னம்பெறுதேசிகர் போந்துளசீடருடன்
விற்குலமாளிகை கொண்டதுவாரகை மேவவிழைந்திடுகாற்
பற்குனனன்னவ னன்னவரோடுப டர்ந்திடவுன்னிடலும். (ங)

அன்னதுகண்டுகி ருட்டிணதாசரொ ரன்பமையுந்திறலோன்
சொன்னமைசற்குர வன்புடையன்பொடு கூறுவன்மன்னவனு
நன்னலமிக்கந மோடுதுவாரகை நண்ணவிரும்பியுளா
னின்னவனைக்கொடு போகிலிராச்சிய மென்படுமென்றிடலும். (ச)

தேசிகர்மன்னனெ டியாந்துவரைப்பதி சென்றிவணெய்திடுவோ
மாசினன்மன்னவ னீவரினுட்டி லனர்த்தமிகுக்குமெனப்
பேசிடவேந்தன ருட்குருவோடு பிரீதியினோதிடுவான்
றேசியலுந்துவ ரைப்பதிபுக்குபர் சீர்மலிகோமதியில். (ரு)

நானமியற்றுபு கிட்டிணமூர்த்தி நலம்பெறுசேவைசெய்தென்
மானவுடன்மிசை சங்கொடுசக்கர மன்னியமுத்திரைவைத்
தானநகர்க்கிடை யெய்தவெனெஞ்ச மவாவியதோதினன்மேன்
ஞானவுருப்பொலி தம்மிசைவொத்து நடந்துகொள்வேனெனலும். (சு)

தந்திருவாக்கினை யென்வரினுந்தண வேனெனவோதுதல்கேட்
டுந்தியபோரு டோய்குருவோதுவ ருற்றநினுட்டிடையே
பைந்திருமேனிகொள் கண்ணனையுட்பொலி பத்தியினுடியுறின்
முந்தியனின்னசை முற்றிடுமென்ன மொழிந்தனரேகிடலும். (எ)

ஆரியனோதுமொ ழிப்படிகண்ணனை யன்பொடுசிந்தனைசெய்
தூரிடை மேவிய வேந்தனொர்நாண்மனை யோடுசில்சேனைகொடே
சீரியலாரணி யத்திடையாடல் செயப்புகுவோனிசியி
லோரிடையிற்றுயில் கொண்டனனப்பொழு துற்றதொர்நற்கனவே. (அ)

தன்குருவந்தது வாரகைநற்பதி சாரவழைத்தலையார்
கொன்குலவும்புனி தத்தகைநீடிய கோமதியிற்படிவித்
தின்குயினன்னமெய் கொண்டுளகண்ண னெழிற்றரிசித்தபினே
நன்குறுமுத்திரை கட்புனைவித்தது நாடிபுளோகையினல். (கூ)

நனவுபொருந்தின னுடினன்முத்திரை நண்ணியொர்தன்னுடன்மேல்
வனமலிகோமதி யிற்படிவுற்றதில் வாய்ந்திடுமீரமுடன்
புனலுடைநின்றெழு கத்தெரியாமிரு புந்திகொளற்புதனுய்க்
கனவிதுவேகொலெ னக்கொடுநாற்றிசை களையுமனுடினனல். (க0)

செவ்வியின்மன்னரு காயுயர்கோமதி தீர்த்தநிறைந்துறல்கண்
டொவ்வியபாரியை வல்லையெழுப்பி யுறும்வியனேக்கெனலுந்
திவ்வியமன்னவ னீருமொர்கோமதி தீர்த்தமமைந்துறலு
நவ்வியுறழ்ந்தக ணுண்மிகநாடின ணனிவியனுற்றனளாய். (கக)

ஆவியமைந்துள வோவியமன்னவ ளற்புதமிவ்வனமேன்
மேவியகாரண மோதுதிரென்னமன் விண்டனனப்பொழுதிற்
கூவியகுக்குட வோசையுணர்ந்துறு கொற்றவனன்மனையாள்
பாவியசேனைக ளோடுறுதேசிகர் பாதமனத்தமையா. (கஉ)

ஆர்வமிகக்கொடு கோமதியிற்புன லாடினனச்செயலோர்ந்
தூர்வதிமாந்தர்கள் யாருமணைந்து ளுவப்பொடுமூழ்கினர்பின்
னேர்வயவேந்தன் தன்கரையின்புடை யெழின்மிகவும்பொலியுங்
கார்வதியத்திக மூலயமொன்று களிப்புடனுற்றினனுய். (கங)

மறைவிதியின்படி கண்ணபிரான்றிரு வடிவபதிட்டைபுரிந்
தறைதருசோடச நீடுபசாரமொ டன்பமைபூசைமுயன்
றுறையுமரண்மனை யாதியுமங்க ணுஞற்றினனுடொறுநற்
றுறைபெறுகோமதி நானமிபற்றுபு சுகமிகவுற்றனனல். (கச)

நராதிபனிங்ஙன மைந்துறவைத்திய நாதர்தளிக்கருகாய்
விராவுபதிக்கண மைந்தவொர்வைசியன் விழிகளிழந்திறைவற்
பராவினன்வைகிட நாள்சிலசென்றுறு *பரதனொர்நற்கனவி
லுராவுவயித்திய நாதனணைந்திவ ணேதிடுகின்றனனல். (கரு)

திகழ்தருபிருதுவி மன்னுயர்கோமதி தீர்த்தமுண்மூழ்கியபின்
னிகழ்தருதன்மெய்து வட்டிடுவத்திர நின்கையிலேற்றணைநல்
லகமொடுகண்க டுடைத்திடின்மிக்கொளி யமையுமெனப்புகலத்
தகமகிழ்வெய்துபு பிற்றையின்மன்புடை சார்ந்துவிளம்பிடலும். (கசு)

மன்னவனவ்வண மேபுனநீரேய்ந்துது வட்டினன்வத்திரமெய்
தன்னவனுக்கரு ளக்கணிலொற்றி யவிர்ச்சிபடைத்துளமேற்
பன்னருமோகைப டைத்தியன்மன்னிரு பாதப்வணங்கினனுய்த்
தன்னகரெய்தின னுத்தமபத்தர் தமக்கரிதாவதெதே. (கஎ)

* பரதன் - வைசியன்.

பொருவருகடவுளை வழிபடுதொண்டர்கள் போய்முழுகத்தருமோர்
திருமலிதீர்த்தம மைந்தவிடத்திடை தேடியமைந்ததுவு
மிருவிழியற்றமை வைசியனிம்மெனு முன்னவைபெற்றதுவுங்
குருமொழிநம்பிய மைந்ததனல்வரு கொற்றமெனத்தருமே. (கஅ)

இத்திறவாடல்கள் பற்பலவாக வியற்றிடுமன்றனதோர்
புத்திரனுக்கர சீந்துவைகுந்த புரத்திலணைந்தனனு
லெத்திறமுந்தரு பத்தியின்மாட்சிமை யென்னெனவோதுபுநாங்
துத்தியமாற்றிட லல்லதுவாய்கொடு சொற்றுமுடிப்பதுவோ. (கசு)

வேறு

அரசைமதியான் றுவாரகைப்பா லடைந்துகோம தியின்மூழ்கி
யாழிசங்கக் குறியமைத்தற் கவாவும்பிருது விராசன்றன்
குரவன்மொழியா னகரினுறக் குறித்தபடிசொப் பனத்தினிடை
குயிற்றிப்புலங்கோய் நனவினிலுங் குலவப்புரிந்த கோமானே
பரவுமடியேற் குறுமொர்கனுப் பலிதமுறச்செய் திடிலுலகப்
பாசமுழுது மொருவியருட் பரமானந்தக் கடற்படிந்தே
யிரவும்பகலு நின்றிருத்தா ளெண்ணித்துதிசெய் திடுவனன்றே
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உ0)

பிருதுவிராஜகதிமுற்றிற்று

ஆ. கவி சு0அசு

---

எண்பத்தேழாவது

# கோகுலநாதகதி

கனவிற்காண்டரும் பொருளெலாநனவினுங் காணுமாதவம்பெற்று
மனமுவந்திடு பிருதுவிமன்னவன் மாட்சிசற்றுரைத்திட்டேன்
முனமுவந்துகந் தன்றெழுநாதமா மூர்த்திபூசனையாற்று
மனகபத்திசால் கோகுலநாதன்ற னணிக்கதையினிச்சொல்வாம். (க)

வல்லபாசிரி யன்சுதன்விமலசு வாமியன்னவனல்கு
நல்லமைந்தனு விளங்கிடுங்கோகுல நாதன்றன்சீரின்று
மல்லல்சோனுதத் துவாரநன்னகருளார் வழுத்திடுகின்றூர்க
ளொல்லங்நாட்டிடை நாதமூர்த்திப்பெய ருடன்கிருட்டிணன்வாழ்வான். (உ)

அன்னமூர்த்தியின் பூசகனுயவிர்ந் திட்டனனம்மூர்த்திக்
குன்னதம்பெறு மாலயமாதிய வொன்றிலைபகிரங்கத்
தன்னமாதிய நிவேதனஞ்செய்தன னமைதருதினமொன்றிற்
கொன்னமைந்தவந் நகரிடைபுலையுடற் கொண்டவன்பெயர்கந்தன். (ங)

கொல்லேக்கேகுந ஞெருதினமவ்விடை கோகுலநாதன்றுன்
குல்லேத்தார்புனே நாதற்குப்பூசனே குயிற்றிடுந்திறங்கண்டான்
றெல்லேச்சென்மவா சனேயினுற்சிறிதவண் டோய்ந்துநின்றனன்போற்றி
யெல்லேத்தன்றெழிற் கேகுவானிங்ஙன மியற்றிடுநாளொன்றில். (ச)

வாய்ந்தபூசனே முடித்துக்கற்பூரவா ராதனேவயக்குங்கா
லேய்ந்தநாதமூர்த் தியைநனிகண்டன னின்பமிக்குற்றுனுய்ப்
போந்ததன்மன மூர்த்திமீதிலிலயம் பொருந்துபுசமாதிச்சீர்
தோய்ந்தமாதவர் போலுடன்மறந்தனன் சுகக்கடற்படிந்தங்கே. (ரு)

சிறிதுபோதகன் றுணர்வமைந்ததனேயே சிந்தைகொண்டனன்சென்று
னெறிகொடிவ்வணந் தினம்பளிதச்சுடர் நேருங்காற்கண்டேத்து
மறிதருந்தடை களேயுமேபட்சித்தக்கொன் வழுவலன்றெரிசிப்பா
னறிவனிவ்வண மாற்றுநாளங்ஙனெ ரந்தணன்குறுகுற்றே. (சு)

நாதமூர்த்தியைப் பூசித்தான்கோகுல நாதனன்னதன்பின்ன
ராதாங்கொடாற் றிடுசெயல்யாவைபு மமைதருவழக்கம்போ
னீதமார்கந்தன் சேணினின்றனன்றெரி நிலேயையம்மறையோன்கண்
டோதலாயினன் கோகுலநாதனுக் குற்றபூசனேமுற்றும். (எ)

புலேயன்பார்த்தன னன்னதாற்பித்திகை பொருக்கென்றூற்றுதியென்ன
மலேவுறுதிது போதுசெய்வேனென வகுத்துச்செய்வித்திட்டான்
றலேமையன்புசால் கந்தன்பின்னுளவண் டழைத்தமூர்த்தியைக்காண
வுலேவில்காதன்மிக் குற்றனன்பித்தியி னுண்மறைந்துறும்பண்பால். (அ)

துக்கவாரியின் மூழ்கிமோகித்தனன் சோர்ந்துபூமியின்வீழ்ந்தான்
மிக்கதன்னுணர் வமைந்துநாடினன்றனேர் மிக்ககாதலின்வைப்பாப்
புக்கமூர்த்தியைக் கண்டிலன்சென்னியைப் புவியின்மோதுபுமார்பை
மெய்க்கரங்களி லெற்றினன்சகிக்கிலன் விம்மிநொந்தழுதப்பால். (கூ)

உலகையாக்கையைத் தான்புரிதொழிலினே யுளமிசையறிந்தில்லான்
கலகவைம்புல விடயமோகப்பெருங் காமுகனுயிரேபோல்
விலகுறுதகா தலியினேர்பிரிவினு முலோபமிக்கேய்ந்திட்டான்
குலவுதன்றன மிழத்தல்போலொப்பிலோர் குமரன்மாண்டிடுகாலே. (க0)

வார்த்திகம்பொலி யிருமுதுகுரவர்கண் மருவுதுக்கம்போலுட்
பூர்த்தியார்பெருந் துயர்கொடுகுடிவிடை போந்துணர்வற்றோர்பாற்
சீர்த்திமிக்கவன் கிடந்தனனிவன்றுயர் தேர்ந்தமையான்போன்*றென்
மூர்த்திமேற்கட லாழ்ந்தனனருணுத மூர்த்தியுட்சகிப்பானே. (கக)

வல்லேகோகுல நாதன்சொப்பனத்தினின் மருவியோதுவனென்னேர்
சொல்லேச்சென்னியிற் கொண்டின்றுகட்டிய சுவரிடிக்குதியென்பா
லெல்லேதீர்பெருங் காதல்கொள்கந்தனீ யியற்றுபூசையின்போதிற்
றெல்லேமாதவத் தாற்றெரிசிப்பவன் றேய்தருபின்னுளில். (கஉ)

---

* எல் - சூரியன்.

காண்டரானெனி லுயிர்துறந்திடுவனீ கடிதியற்றினையன்றே
ஞண்டணைந்திடிற் றெரிசிக்கப்புரிதியென் றவன்கனவினுமேவி
மாண்டழைத்திடு பத்தனீதுயரலை மறைத்தபித்திகைதீர்த்தே
னீண்டகாதலிற் றெரிசனைபுரியென்று நிகழ்த்திநீங்கிடக்கந்தன். (௧௩)

எழுந்துடன்றன துளத்தெழுமோகைக்கோ ரெல்லைகாண்கிலனாகிச்
செழுந்தகைத்திரு நாதமூர்த்தியைத்தொழச் சென்றனனதுகாலை
தொழுந்தகைக்குலக் கோகுலநாதன்றன் சுவரிடித்தனன்காத
லழுந்துகந்தன்மூர்த் தியைக்கண்டான்வேறொன்று மறியகிற்கிலனாகி. (௧௪)

நயனநின்றரு வியில்வருபுனலுட னனைத்திட வானந்த
வியனருட்கடன் மூழ்கிநின்றிடவயன் மேவிக்கோகுலநாத
னியலுநீயெவ னிவணிதுபோழ்தினி லென்புரிகுதியென்ன
நயமுடன்கந்தன் றன்னியன்முழுவது நவிலவர்ச்சகன்கேட்டே. (௧௫)

கந்தன்பத்தியு நாதமூர்த்தியினுளங் கலந்தபேரருட்சீரு
மந்தமற்றவென் றகத்திடைவியந்தன னவனுடன்புகல்கின்றா
னிந்தநாண்முத லாகநின்றொழில்விடுத் திவ்வழியலகாற்றிற்
சொந்தமோடுனை வாதிநல்குவனெனச் சொல்லவுட்களிப்பாகி. (௧௬)

தன்னதாமனை தொழிலெலாம்விடுத்தருச் சகன்புகல்பணியாற்றிக்
கொன்னமைந்தநன் னாதமூர்த்தியின்கழல் கொண்டசிந்தையனாகிப்
பன்னரும்பகல் பார்மிசைவதிந்துபின் பயின்றதம்மனமேபோ
னன்னலம்பெறு மிருவரும்பகவன்ற னண்மலர்ப்பதத்துற்றார். (௧௭)

கந்தன்றன்புலை யுடற்கொண்டும்பத்தியாற் கண்ணன்றாட்டுணைதோய்ந்தா
னிந்தவாற்றினா லருட்பிரசாதத்துக் கேற்றவாந்தகைவாய்ந்த
தந்தணப்பிறப் பாச்சிரமாதிக ளன்றுயிர்க்கின்பீதல்
சொந்தமாருளப் பத்தியேமற்றவை தூலசுத்திகளாமால். (௧௮)

வேறு

கொல்லைக்கணைகா லுன்றனருட் கோலந்தனைக்கோ குலநாதன்
குயிற்றும்பெரும்பூ சனைச்சிலங் குறித்துநோக்கித் தன்மனத்தி
லெல்லையறுபத் தியிற்றினம்பார்த் திருக்கப்புலைக்கந் தன்றனேக்
கிடாதுசுவர்வைத் தலிற்காணா தேங்கித்தளர்கா லருச்சகன்பாற்
றெல்லைப்படிபித் திகையொழிக்கச் சொல்லியவன்றன் பொழித்தருளுந்
தூயகருணைக் கடலேயென் றுயர்கண்டொழித்தா யிலையுனக்கன்
பில்லையெனிலன் னதுநான்கொ ளியல்பின்பாற்றே விசைத்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௧௯)

கோகுலநாதகதிமுற்றிற்று

ஆக கவி ௯௧௦௩

---

எண்பத்தெட்டாவது

# கதாதரபட்டகதி

நாதமூர்த்தியின்பே ரன்பமைகந்த னலம்பொலிகோகுலநாத
னேதமாயையின்வன் றொடக்கறுத்தின்ப மெய்தியகாதைசொற்றிட்டேன்
போதநற்குணங்க ளியாவையுந்திரண்ட பொற்குவடுறழ்மனம்பொருந்து
மாதரம்பொலிநற் கதாதரபட்ட னருட்சரித்திரமினியறைவாம். (க)

அன்னமார்பணைசூ ழாந்தரதேயத் தருமறைக்குலத்தில்வந்துதித்தோன்
கொன்னமையிராதா கிருட்டிணன்மீதிற் கொண்டபத்தியிற்கரையில்லான்
றன்னதிற்புடையே காந்தநற்றுனஞ் சார்ந்திடையறுதுபாகவத
நன்னலம்பெறப்பா ராயணம்புரிந்து நனிமனமகிழ்ந்திடு நாளில். (உ)

வரம்பில்பேரருட்கிட் டிணவிலீலைகளின் மனமிரமித்திடுதிறத்தா
லுரம்பயிலுளத்தி லுலகபோதஞ்சற் றுறுமலின்பக்கடன்மூழ்கித்
தரம்பெறத்திகழு நாளிலோர்கீதந் தானிருமித்தனனதனில்
வரம்பயில்சியாம ராகேணரத்தோ கம்மெனவாய்ந்ததோர்பதமே. (ங)

உத்தமத்தகைதோய் கீதமன்னதனை யுபர்கதாதரபட்டன்பாட
வத்ததியங்க னெய்தொருபத்த னதைவினவினன்மனனஞ்செய்
தொத்தசீர்ப்பிருந்தா வனத்திலுற்றன்பி னேதிடச்சீவகோசாமி
யித்தகுகீதம் பாடினுரெவரென் றிடவிருத்தாந்தமுற்றிசைத்தான். (ச)

உடனுயர்சீவ கோசுவாமிகடா மொப்பிலோர்கீதநிர்மித்தே
மடல்கெழுமிரஞ்ச னத்தலியாய மதுரையையெய்திடாதெங்ஙன்
மிடல்கெழுசியாம ராகத்தாலிரத்த னுகிமேவினையெனும்பொருட்டாய்த்
தொடர்புறுமக்கி தத்தினைத்தம்பாற் றேய்ந்தசீடன்காத்தளித்தே. (ரு)

பத்திமிக்கமைக தாதரபட்டன் பாலளிக்குதியெனவன்னே
னைத்தியனுட்டின் மேவினனடி யுறுநகர்ப்புறத்தொர்கூவப்பா
லெத்தியபட்டற் கண்டுபோற்றினனின் றிடவெவரெனவுசாவிடுகா
லுய்த்திடுசீவ கோசுவாமிகள்சீ ருரைத்துடன்முடங்கலீந்திடலும். (சு)

வினவினன்காத்திற் கொடுபரவசனுய் மேவுகூவத்தயல் வீழ்ந்து
கனமுறுகடிகை யிரண்டொழிந்துணர்வு கலந்தெழுந்துவகைமிக்கமைந்திட்
டனகவக்கிதந் தனைச்சிரமேல்வைத் தறல்பொழிகண்களிலொற்றி
மனமலிகாத லாற்படித்துடனே மதுரைக்கன்னவருடன்போந்தான். (எ)

அங்குசின்னுள்வாழ்ந் தருட்கிருட்டிணன்பொன் னடிமலர்பரவியேத்துபுசீர்
பொங்குநற்பிருந்தா வனமணைந்தன்பு பொலிசீவகோசுவாமிகடஞ்
செங்குசேசபத்தாள் வணங்கியாண்டுற்ற சீலமெய்ப்பத்தர்கள்குழுவிற்
கங்குலும்பகலு ஞானநூல்கண்ணன் கவின்விளையாடல்சொற்றமைந்தார். ()

இவ்வணந்திகழ்நா ளத்தலத்தருகா வியன்றதெளகாரகரிறைவ
னெவ்வனம்பொலிகல் யாணசிங்கப்பே ரேய்ந்தனனவ்விடையணுகித்
துவ்வமுதுறழ்க தாதரபட்டர் தூயஞானேபதேசங்கேட்
டெவ்வமில்விரத்த ணய்மனையிடத்து மிச்சைசற்றில்லவனுனன். (கூ)

செயலிதையுணர்ந்து கற்புமெவ்வனமுந் திகழிறையவன்மனையாளு
ளியறனுயகற்கிவ் வகையதோர்விரத்தி யியன்றிடச்செய் தவனிந்த
நயனிறைதருக தாதரபட்ட னெனவுளேநாடியஞ்ஞான
மயனிறைபுளத்தள் சினந்தவமானம் வயக்குமாறுளத்தினுண்மதித்தாள். ()

இன்னவாறியனு ளொன்றினிற்கருப்ப மேய்க்தவோரேழைமாதினையே
தன்னருகழைத்துப் பொன்சிறிதளித்துச் சாற்றுவணி * துழாய்வனம்புக்
குன்னகத்தஞ்சேல் கதாதரபட்ட னுபநியாசம்புரிதருகா
னன்னலப்பட்டர் நீரன்றோகருப்ப நான்மருவிடப்புரிந்திட்டீர். (கக)

மதிநிறைவமைந்த தியான்பிரசவிக்கும் வயினுரைக்குதிரெனவங்கண்
வதிபவர்யாருங் கேட்டிடவுரமாய் வழுத்திடென்றோதியேவிடலு
மதியறுபேதை யவ்விதநவிற்ற வைகினேர்தந்தலைதாழ்த்திப்
பதிலுரைபகரா ரிருந்தனர்களிப்பிற் பட்டரோதுவரென்னற்றூயே. (கஉ)

சிறிதிவணமையி லோதுமத்தியாயந் தீர்ந்தபின்காட்டுவனென்று
நெறிபெறுகாதை சாற்றுகாலங்க னேர்ந்துளோர்வெருட்டவுமேகாள்
வெறியெனநிற்ப விராதாவல்லபப்பேர் மேவினன்றடிகரங்கொண்டுட்
செறிதருவெகுளி யமைந்தடிபேதாய் செப்புதியுன்னையீண்டமைய. (கங)

ஏவினர்யாவர் சாற்றுதியின்றே லித்தடியாலடித்துன்ன
தாவியைக்கூற்றூர்க் கனுப்புவனென்ன வதட்டினன்வினவலுமஞ்சிப்
பாவியாமிராணி சாற்றன்முற்றோதிப் பணத்தையுங்காட்டிடமன்னன்
றேவிமேற்சினமிக் கென்பொருட்டானந் தேசிகர்தமக்கொருகளங்கம். (கச)

உண்டுபண்ணியதா லிப்பொழுதேயென் னுறையினிற்பொதிந்துளவாளாற்
றுண்டுபண்ணுவனென் றெழுந்தனனேகத் தூயர்மன்னவன்றனைநோக்கி
மண்டுறுசினத்தா னீயங்ஙன்புரியில் வன்பழிபாவமெய்திடுந்தீங்
கண்டுறுவெகுளி யறக்கதைகேட்டி யவள்சொலாலெனக்கெதேயமையும். ()

என்றுசாற்றிடமன் வறிதமைந்திட்டா னித்தகையாமபவாத
மொன்றுசொற்கேட்டும் பதைப்பொர்சற்றேனு முளமிசையுற்றிலராகி
நன்றுறுகாதை சாற்றிமன்னனுக்கு ஞானபோதம்புகன்றூர்பொற்
குன்றுறழ்ந்ததேன்பதன்றியன்னவர்தங்குளிர்மனத்திணையெதைக்குறிப்பாம்

தேசியல்பட்ட ரிவ்வணம்பிருந்தா வனத்திடைசேர்ந்துளார்தம்மாற்
பூசிதராகி யியலுநாள்சேணிற் பொருந்துநாட்டியலொருபத்தன்
மாசில்சீடர்கள்பல் லோருடன்பிருந்தா வனத்தணைந்தவையிடைமேவிப்
பேசிடுகதைகேட் டாண்டுளார்கண்ணீர்ப் பெருக்கினனனைந்துறக்கண்டான் ()

* துழாய்வனம் - பிருந்தாவனம்.

தனதுகண்களினீர் வராமையிலிலச்சை தழைத்தகன்றிட்டவன்பின்னுந்
தினமவைபுகுங்கா லையின்மிளகின்றா டிட்டியுளிட்டனனேகிப்
புனல்பொழியுங்கண் களினொடங்குறுகாற் பொருந்தினோர்பலர்களுநோக்கி
மனமிசையமையா வியப்புடன்சிரிப்பான் வலித்தனர்த்தகுதுணையில். (கஅ)

பட்டர்யாதென்ன வினவவன் னவன்மெய் பகர்ந்திடக்கேட்டுடன்பரிவாய்ச்
சிட்டனீங்கிவனைப் பரிகசிக்கலிர்நீர் சிறந்தமெய்ப்பத்தனன்னவனே
மட்டறுமின்ப நீர்வாமுயற்சி வயக்கினனம்மின்மேலவனென்
றுட்டையைகொடுசாற் றினரவருள்ளத் துறுசமபுத்தியென்னுரைப்பாம். (கசூ)

ஒருதினத்திரவிற் கதாதரபட்ட ரோங்குமாச்சிரமத்தோர்கள்வன்
மருவியாண்டுளசா தனங்கொடுதூக்கும் வன்மைபற்றனன்வருந்திடுகா
லருணிறைபட்டர்கண்டுதூக்கினர்மே லமைத்திடக்கள்வனையுற்றே
வெருவாலுடனீ யாரெனமெல்ல வினவிடச்சாற்றிடுகின்றார். (உ0)

யாவராயினுமா குகநினக்கோரு றெய்திடாதொல்லையேகிடுவா
யாவலின்படியெற் றெரியினீநின்னை யறிவர்கள்பலருமென்றோதுஞ்
சாவதானச்சொற் கொண்டுபர்பட்டர் தானெனச்சிந்தையுட்டுணிந்து
பாவன்முட்டையினை யிறக்கியன்னவர்தம் பரிசத்தாற்சிட னுப்பதிந்தான். ()

விளம்புநாளொன்றிற் கதாதரபட்டர் மிக்கபூசாக்கிரத்தை
வளம்படமெழுக்கிட் டமைதருமேல்வை வயங்கயனகர்கொளோர்செல்வன்
சளம்படாமனஞ்சால் பட்டரைக்காண்பான் றக்ககாணிக்கையாதிகள்கொண்
டுளம்பொலிகளிப்போ டுற்றுசாவிடுகா லுட்புகுந்துரைப்பனோர் சீடன். (உஉ)

தனிகனுந்தமைக்காண் பானடைந்துளதாற் றுமிதைத்தணைந்துசெல்குதிர்நீர்
நனிபுரிபணியை யாங்கவன்காண்ட னலமலவென்றுரைத்திடலும்
புனிதர்தாநகைத்திட் டென்னைநீமூர்க்கர் போன்மொழிந்தனையெனையுடையா
னினியதொண்டடியே னியற்றினன்யான்செய் திடும்பணியேனையர்க்கிமேயன்.

காணவேண்டுநர்யாரெனினுமீண்டணையக் கழறுதியெனவழைத்துறுகா
லாணமிக்கமைந்து செல்வன்றுன்பட்ட ரடிதொழுதாடகமுழுது
மாணவிர்தான்முன் வைத்தனன்கனிவின் வழுத்துவனிப்பணியடியே
னேணவிர்தரச்செய் திடுவன்றும்புரித வியல்பலவென்றிடவினவி. (உச)

நிகழ்த்துவரெனதோர் பிரபுவட்கருணை நிறைதரத்தாசனுகியயா
னகத்துவகையினிற் செய்பணியானே யாற்றுதன்முறைமைநிற்கிச்சை
மிகத்துதைதரிலீண் டியவுநற்பணிகள் வேறியற்றுதிபத்தரானூர்
மகத்துவப்பூசைப் பொருள்கடங்கையான் மாண்புறவீட்டலேசால்பாம். (உரு)

உடன்மறந்துடையா னேடைபேதமதா வொன்றநுபூதியெய்தினருந்
திடமுறுபோத முற்றிடிலாண்டான் றிருப்பணிசெய்திடல்வேண்டுங்
கடமையக்கதனைச் சீடரைக்கொண்டுங் காதலர்க்கொண்டுமாற்றிடுதன்
மடமையூனுதி யவர்கொளிற்றிருத்தி மற்றவர்க்குறுங்கொலோவென்ன. (உசு)

இன்னவாபட்ட ரோதுபரீதசமேற்றுயர்செல்வனன்னவர்தம்
பொன்னடிவணங்கி யேகினனிதனுற்புந்தியுளிடம்பஞ்சற்றில்லா
ரென்னனன்கிலங்கிற் றித்தகைமகிமை யியைகதாதரபட்டாசிரியர்
துன்னலாஞ்சரிதம் வினவிலர்சாலச் சுருக்கமென்றுரைதிடத்தகுமால். (உஎ)

பிறங்குமின்னவரே தருக்கசாத்திரத்திற் பிரதமமாத்துலங்கிடுமெய்த்
திறங்குல்வியக தாதரியப்பேர் திகழ்கிரந்தம்புரிந்திட்டா
ரறங்குலவதனை யின்றும்விற்பனர்க ளாருமெச்சிடுகின்றாரின்னோர்
சிறந்துலகிடைபன் னுளமைந்தீற்றிற் சிலவைகுந்தமேவினரே. (உஅ)

வேறு

சீலமிகுபா கவதமன்பிற் றினமும்படித்துன் றுதிக்கீதஞ்
செப்பிப்பிருந்தா வனத்தடைந்து சீவகோசா மிகட்கண்டங்
கேலவசிக்கும் போழ்திறைவ னில்லாடுவேசத் தியற்றுபிழை
யெண்ணுதும்பத் தியிலனிலை யினிதென்றுவந்துஞ் சாலையிடை
சாலப்பொருள்கொண் டெடுப்பரியான் றளரத்தூக்கி வைத்தவனைத்
தாசனுக்கி யும்பணிச்சீர் தவாதகதாத ரபட்டன்முன்னு
ளேலவளித்த குணங்களென திதயத்தமைய வருள்புரிவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உகூ)

கதாதரபட்டகதிமுற்றிற்று

ஆக கவி கூகஙஉ

---

எண்பத்தோன்பதாவது

# இரத்திநாவதிகதி

சிரத்தையிற்பத் தியிற்கல்வித் திறத்தினிக ரற்றிலங்குந்
தரத்தையுறு கதாதரபட் டரின்சரிதஞ் சற்றுரைத்தேன்
வரத்தகைசால் கண்ணனன்பு வாரியின்மூழ் கியமாதா
மிரத்தினு வதிகதையி லியைபந்ததிற மினிச்சொல்வாம். (க)

கானணையும் பூம்பொழிலுங் கயலணைதண் பணைப்பெருக்கும்
வானணைமா ளிகைநிரையு மாலணையா லயப்பொலிவும்
வேனணைசெந் தாமரையின் மேலணையுந் தாக்கணங்கா
மானணையுங் குடதிசையின் மாடணையும் வளநாடு. (உ)

அணிமிகுமத் திருநாட்டை யாட்சிசெயுங் காவலவன்
றிணிகுவவுத் தோண்மான சிங்கனெனும் பேருடையான்
கணிதமில்சீ ருடையனவன் கவின்றசகோ தரனுன
மணிதிகழ்மார் புடையவனோர் மாதவசிங் கப்பெயரோன். (ங)

அன்னவன்கற் பியன்மனைவி யவிரத்தி னவதியாந்
தன்னபிதா னத்தினலந் தழைத்துள்ளா ளவள்வயிற்றி
னன்னலஞ்சால் பிரேமசிங்க நாமமக வுளனனன்
மன்னதிரு ரன்கண்ணன் மலர்ப்பாத மனத்தமைத்தான். (௪)

மைந்தனவன் றனையீன்ற மாதவசிங் கன்றனிலு
முந்தமைபு மானசிங்கன் மூளுமுவ கையில்வளர்த்தான்
சுந்தரப்பிரேமசிங்கன் றேய்தருநா மத்தகையிற்
சொந்தமக னிலுமுரிமை துலங்கவமைந் தொழுகினன். (௫)

இற்றமையுங் காலத்தோ ரிரவிவிரத் தினவதிதன்
விற்றழைபூஞ் சயனத்தின் மிசைதுயிலும் போதவளுக்
குற்றகுற்றே வற்சேடி யொளிர்பதங்கள் வருடியுற்று
ளற்றமிரத் தினவதிதன் னனந்தலொழிந் தவட்பார்த்தாள். (௬)

விராவிடுகா லவணந்த மேவுகைக்கே சவமாயா
விராதாகிட் டினமுகுந்த வென்னவிரா சியம்படச்சொற்
றராவுவிழி நீர்ப்பெருக்கோ டுரோமாஞ்சி தங்கொடின்பப்
*பாராவரத்தின் மூழ்கியுற்ற பான்மைதெரிந் தனள்பரிந்தே. (௭)

வேறு

என்னுயிர்த்தோழி யேதுவொன்றின்றி யின்பமிக்கெய் தினைபித்த
மன்னுறுபவர்போ னடுங்கினையுற்ற வாய்மையோதுதியெனத்தாதி
பன்னுவளொன்று மின்றுநீசுகமே பள்ளிகொளெனத்துயர்படுத்தே
லென்னுமாற்றங்கேட் டிராணியென்பகர்தி யிசைத்தலதுனைவிடேனென்ன.()

இயல்விருத்தாந்த முன்னிடமோதற் கிசைந்ததன்றாயினும்பகர்வே
னயமலிபத்த ரொருவரெற்கருளா னனியிராதாகிருட்டிணன்றன்
செயமலிதிருமந் திரவுபதேசஞ் செய்தனரன்னதையன்பாற்
பயனுறச்செபஞ்செய் திடுவனிப்போதப் பண்பினலின்பமுற்றேனல். (௯)

எனவுரைத்திடுதா தியின்மொழிவினவி யிரத்தினவதியுளமீதி
லனகவற்புதமும் பத்தியுமெய்தி யறைவணீயிதுமுதலெனக்குக்
கனமுறுபணிசெய் யேலருள்கூர்ந்தக் கவின்மறைப்போதமாற்றென்ன
மனதுவப்புடனேற் றிடவமன்புரிய வாய்ந்தனள்பத்தியுளம்மா. (௰)

பகலிரவினுமம் மறையுருவேற்றிப் பவித்திரம்பெறுமுளத் தினளாய்
நகமுறுகுடையாக் கொண்டுகோவினத்தி னலிவொழித்தருள்பகவனைத்தன்
முகவிழிகொளக்கண் டின்புறும்வாஞ்சை முதிர்ந்தனளிந்திரநீலத்
திகழ்சிலைபதனற் கிருட்டிணனெப்பி திருவுருவமைத்தருச்சித்தாள். (௧௧)

பரமபாகவதர் யாவருங்கண்ணன் படிவமேயென்றுபூசிக்கு
முரமமைந்தனளிவ் வணந்திகழ்நாளொன் றினிலொருபத்தன்கிட்டிணன்றன்
றிரமலிகாதை பாடியங்கெய்தத் திருவனுள்கானங்கேட்டுவந்தே
தரமலிபத்தன் பூசனையாற்றத் தான்வெளிப்போந்திடத் துணிந்தாள். (௧௨)

*பாராவரம் - கடல்

ததியதிற்றுதி யெனுங்குருவான டான்புறத்தெய்தலையென்னப்
புதியமெய்யுணர்ச்சி பெற்றவளுலகைப் பொருட்படுத்தாளருச்சனைக்காம்
விதிபெறுபொருள்கைக் கொடுபுறத்தெய்தி விண்டுவென்றுளங்கொடுபூசித்
ததியுபசாரத் தோடமுதாடை யாதியீந்தடிதொழுதகன்றாள். (௧௩)

இரத்தினவதிதன் குலவொழுக்கமெலா மிகந்தனளமைந்துறுசெயலைப்
புரத்தில்வாழமைச்சன் மானசிங்கப்பேர்ப் புரவலற்கோர்முடங்கலிடை
விரத்திமிக்கிரத்தி னவதிசாதி விதிகடந்தரிபத்தர்க்காணிற்
சிரத்தைமிக்கன்ன மீந்தனணிருத்த கீதமாதியசெய்கின்றாளால். (௧௪)

யாந்தடைபுரிந்து மமைந்திலளென்ன வெழுதியுய்த்திடவதையுணர்ந்த
வேந்தன்வெஞ்சினமிக் கன்புறுசுதனை விளங்கியபிரேமசிங்கனைக்கூய்ப்
போந்தவன்றன்னை நோக்குபுவேசி புத்திரவென்றுமேலெறிந்து
பாந்தளிற்சீறி மனையகத்தெய்தப் பார்த்துயர்பிரேமசிங்கன்றான். (௧௫)

எல்லையில்களிப்புற் றன்னைக்கோரோலை யிவ்வகையெழுதுவ னம்மே
தொல்லைமாதவத்தா லெய்துமெய்யுணர்வைத் துறந்திடேலுன்செயலுணர்ந்து
கல்லனேர்மனங்கொண் மானசிங்கன்றான் கடுஞ்சினமெய்தினனென்னை
முல்லைதீர்வேசி மைந்தனென்றுரைத்தான் முயங்குயிர்க்கிறுதியெய் திடினும்.

வாய்ந்தபத்தியைக்கை விடாதொழுகென்று வரைந்தனுப்போலைகண்டம்மை
யாய்ந்தமெய்யுணர்ச்சி பெறுமகற்கன்பாலனுப்பினண்முடங்கலொன்றுன்னைத்
தேய்ந்தசிற்றறிவோன் புகன்றசொல்பொய்மை திருவருளறியநான்பிறரை
யேய்ந்தவென்மனத்து மிச்சித்ததில்லை யெழிற்சகதீசனையல்லால். (௧௭)

இவ்விரதத்தை நான்விடேனுனக்கின் றிசையபகீர்த்தியைப்பின்ன
டிவ்வியவிராதா கிருட்டிணன்றானே தீர்ப்பனீகவன்றிடேலென்னுஞ்
செவ்வியலன்னை முடங்கல்கண்டுவகை செறிந்தனன்மானசிங்கன்பின்
னெவ்வியவிரத்தி னவதிசெய்தி யுசாவினன்மிகைபடவுணர்ந்தே. (௧௮)

மானமுஞ்சினமு மேற்கொடுநந்தம் வங்கிசத்துக்கொருகளங்க
மானவன்னவளைக் கொல்வதுதுணிவென் றகத்தினுட்கொண்டமைச்சர்கடம்
பானவில்போதன் னவருரைத்திடுவர் பார்த்திபநீகொலைபுரியின்
மானவர்யாரு நிந்தைசாற்றுவர்பெண் வதைமன்னர்க்காஞ்செயலன்றே. (௧௯)

கொன்றிடவிழையிற் புலிகொள்பெட்டகத்தைக் கோதைவாழ்மனைத்தலைவாயி
லொன்றிடவமைத்துத் திறந்துவிட்டிடலஃ துறுமவட்கொன்றயின்றிடுமா
லென்றிசைத்திடுமந் திரிமொழிவினவி யிதயமேலுவகைமிக்கிறைவ
னன்றியம்பியவா றாளையவ்வண்ண நவிற்றுதியென்னவவ்வாறே. (௨௦)

மந்திரிபுரிந்தான் பெட்டகமொருவும் வன்புலிகண்டவர்மபங்க
வுந்தியகோர மிகப்பகுவாயு முறுபொறியுகுக்கும்வாள்விழியும்
பந்தியாருரோமச் சிலிர்ப்புமேய்ந்தில்லுட் பாய்ந்துறவிரத்தினவதிதன்
புந்தியுளஞ்சா ளெதிர்கொடுபோற்றிப் புகழ்ந்துநீபத்தனைக்காப்பான். (௨௧)

நரசிங்கமூர்த்தி யாமவதார நண்ணியோன்னலனெனவமைந்த
விரணியகசிபு மடிதாப்புரிந்த வெஞ்சகதீசுரனன்றோ
விரவுபேருளா லெனக்கருள்செய்ய மேவினையென்றுரைத்தன்பாற்
றாமுறத்தீர்த்தங் கொண்டடிவிளக்கிச் சந்தனஞ்சிந்துரஞ்சாத்தி. (உஉ)

வனத்திருமாலை களத்திடைசாத்தி மதுரபாயசமுதலமைத்து
மனத்துவகையுடன் பூசனைபுரிகால் வரிப்புலிசாந்தமோடேற்றுச்
சினத்துடன்வெளிச்சார்ந் திடும்பொழுதங்கட் சேர்ந்துளார்பலர்களுநோக்கி
வனத்தாக்கியற்கை மாறுபசுவில் வயங்கிடல்கண்டுளம்வியந்து. (உங)

நின்றனர்புறம்போந் திடுபுலிசூழ்ச்சி நிகழ்த்தியமந்திரிதன்னைக்
கொன்றருந்திடக்கண் டவர்பயந்தோடிக் கொற்றவன்மானசிங்கன்பா
லொன்றலாஞ்செய்தி யோதவன்னவன்ற னுட்பயந்துற்றசோதரனு
நன்றமைதருமா தவசிங்கற்கூவி ரத்தினவதியிடத்துய்ப்ப. (உச)

சென்றவனிரத்தி னவதிகண்ணன் றியானநிட்டையிலுறக்கண்டே
மன்றலார்பதங்கள் வணங்கிடவொப்பின் மந்திரோபதேசஞ்செய்தாதி
கன்றகத்துடன்வல் விரைந்தெழுகுதிநின் காதலன்றெழுமுதனனென்ன
நன்றமையம்மை யெழுந்தெனேர்பிரான நாதனித்தேகமாற்குரித்தாம். ()

ஆதலினிராதா கிருட்டிணர்தம்மை யன்புடன்பணிந்தனரென்ன
மேதருமிரத்தி னவதிபத்தி மேன்மைதேர்மாதவசிங்கன்
போதருபுலியைச் சாந்தஞ்செய்தெம்மைப் புரந்தருளென்றுவேண்டிடுகா
லாதரத்துடன்சென் றழைத்தனள்பசுவி லாண்டமைதூணிடைபிணித்தாள்.

இன்னவாறுணர்ந்தார் யாவருந்திருமி னிவளெனப்பலபடவியந்தார்
கொன்னமைமான சிங்கன்றன் னுளத்திற் கொண்டுளவசூயைமுற்றெழிந்தே
தன்னதோர்குலதே வேயெனப்புகழ்ந்தான் றவம்பொலியிரத்தினவதிபின்
மன்னருட்கண்ணன் றனைத்துதித்திருந்து வைகுந்தவான்பதத்தமைந்தாள்.

இத்தகையிரத்தி னவநிபத்தி யிணையில்வைபவத்தினையின்று
மத்தலத்தமைந்தார் பலருமெச்சினர்மிக் கறைந்திடுகின்றனருன்னி
லுத்தமபத்தர் தமக்கரிதொன்றுண் டுலகிலென்றுரைத்திடலாமோ
வொத்தவித்திரத்தாற் பத்தியல்லதுமெய் யுணர்வுளார்கோடலொன்றிலையே.

வேறு

தாதிபுகன்மந் திரங்கொடன்பு தழைத்துப்பத்தர் தமைக்கடவு
டகவேமதித்துப் பூசைசெய்சீர் தார்வேந்தறிந்து மன்னவர்தஞ்
சாதியொழுக்கங் கடந்ததெனத் தன்னுட்சினந்து செகுத்துண்ணத்
தரக்கைமனையுட் செலுத்தவதைத் தகைசானுரை சிங்கமெனக்
கோதிலன்பாற் போற்றிவெளி கூடியமைச்சற் புலிகொலலாற்
கொண்கன்வேண்ட வுடனழைக்குங் கோலவிரத்தி னவதிசீ
ரீதியடிமை கொண்டுவெறி திறக்கப்புரிமெ யுனக்கபய
மிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உகூ)

இரத்தினவதிகதிமுற்றிற்று

ஆகூ கவி கூககூக

---

தொண்ணூறாவது

# கூபதாசகதி

சீற்றமிக்குறு புலியைமெய்ந்நா சிங்கமென்றுவ ணங்கிடுந்
தேற்றமிக்கவி ரத்தினாவதி சீர்த்தியிற்சிறி தோதினே
னாற்றநாள்கிண றாடமைந்தத னாலடைந்திடு நாமமாண்
பேற்றசீர்மலி கூபதாசனன் பெய்துகாதையி னிச்சொல்வாம். (க)

திருமிகப்பொலி மருவெனும்பெயர் சேர்நன்னாட்டின்மு கம்புரை
பெருமைமிக்கியல் சீதரப்பெயர்பெற்றவூரிடை வாழ்ந்திடுந்
தெருளின்மிக்கவன் கும்பகாரர்செ யுந்தவந்திரண் டேயிகத்
துருவெடுத்தவன் கூபதாசனென் றோதிடும்பெய ருற்றவன். (உ)

மாலியைந்திடு வஞ்சமாயை வலைப்படாமலு டற்பெறும்
பாலியந்தனி லேவிரத்திப டைத்துளத்தொரு வாதருண்
மாலியைந்தச ரோருகக்கழன் மகிழ்வினாலக மொடுபுறப்
பாலியைந்திட வைத்தருச்சனை பண்ணுமெய்ந்நெறி பற்றினான். (ங)

உற்றதன்றொழில் கொண்டணைந்திடு மூதியங்களை மால்பதப்
பற்றமைந்தமெ யன்பர்பூசனை பண்ணலிற்செல விட்டனன்
பெற்றவன்னைபி தாபிரித்தன ரோபிரிந்தன ரோதமெய்
நற்றவச்சுத னுக்கியைந்தனர் நண்ணினார்கொல றிந்திலேன். (ச)

இன்னவாறுயர் கூபதாசனி யற்றிவாழ்தரு நாளவன்
மன்னகத்தமை பத்தியாமலர் வாசமெங்கணும் வீசலாற்
பன்னகத்தறி துயில்கொண்மெய்ப்பக வன்பதந்தொழு பத்தராந்
துன்னளிக்குல மோகையோடு சுலாவலாயவின் மீதரோ. (ரு)

விரவிடும்பக றோறுமன்பர்கண் மெய்த்திருப்பணி செய்துறு
மிரவினிற்றன தோர்குலத்தொழி லெய்ப்புறுமலி யற்றுவா
னுரவனிவ்வணம் வாழுநாளினி லுவணகேதனன் றாசனோர்
கரவின்மெய்ந்நிலை யுலகமேவினர் காணுமாசெயவுன்னியே. (சு)

பொருள்வளங்குறை வெய்துமாறு புரிந்துவந்தொர் தினத்தினின்
மருவுபத்தர்கள் பற்பலோரைம னைக்கணெய்திட வாற்றினன்
கருணையன்பர்தன் மனைநிறைந்துறு காட்சிகண்டுறு தாசனுட்
பெருகுகாதல்கொ டொப்பில்பூசனை பெரிதுமன்னவர்க் காற்றியே. (எ)

எய்ந்ததொண்டர்க டமைமனைக்கணி ருத்தியின்னவர் கட்கெலாம்
வாய்ந்தவுண்டிய மைத்திடப்பொருள் வளமிலேனெது புரிவனென்
றாய்ந்தபற் பதியிற்குலாவதி காரிதன்மனை யண்மியே
தோய்ந்தவன்மிடி கொண்டுநானதி துக்கமிக்கன னித்ததி. (அ)

சிறிதுபொன்கட னல்கிடிற்றெழில் செய்துபின்றரு வேனெனச்
செறியுமேழைமை மிக்கிரந்திடு செய்கைகண்டுறு செல்வன்றான்
வெறிகொளென்புனத் தூடோர்கூபம்வி ளங்கவெட்டிடு கூலியீ
தறிதியென்றுபொ னல்கினனுட னன்பனேற்றடி யார்க்கெலாம். (கூ)

பெரிதுபட்சண சாதனங்கொடு பிரியமிக்கமு திட்டனன்
பரிவினன்பர்கள் கூபதாசனெர் பத்திமெச்சின ரேகினு
ருரிமையன்பனு டன்பொனல்கின னுழியணைந்தசும் பெவ்விடை
புரிதலென்னவி னவியோதுபு லத்தினூடு புரிந்தனன். (க0)

தன்னமாழும மைந்த தொப்பறு தாசனின்றனன் வெட்டமேற்
றுன்னலாகிய மண்ணிடிந்துளிற் றேயுமன்பனை மூடலு
மன்னபண்பைய றிந்துளோரதி காரியோடவன் மனையிடம்
பன்னவெய்தினர் மண்ணெடுத்தனர் பகவன்மெய்யருட் பண்பினல். ()

முடிவுறுமையி னெந்தகன்றனர் முடிவில்கூபதாச சன்றனை
மடிவதாயின னென்றுசுற்றம தித்தியற்றினர் கிரியைபின்
னிடிவதானகி ணற்றினேர்புடை யியலொர்திங்கள்க ழிந்தரி
யடிகள்பேணுமொர் பத்தனெய்தவு ளமையிராமராமாவென. (கஉ)

ஓது சத்தம்வி னவுபத்தனு வந்துநோக்கின னுள்ளுறப்
போது மானிடர்க் கண்டிலானிறும் பூதுகொண்டதி காரிபா
லேதுவோதிட வுற்றமண்ணெடு பித்தபோதிடை யீடறக்
கோதுதீரிரா மன்றிருப்பெயர் கூறினன்சுக மாவுற்றான். (கங)

வேறு

அருணலம்பொலியுங் கூபதாசன்ற னருகினிலன்னமும்புனலு
மருவுபாத்திரங்கண் முன்னமைத்திட்ட வண்ணமேவிளங்கிடக்கண்டார்
பெருகும்விம்மிதராய்த் தலைவன்பாலடைந்து பேசிடக்கேட்டவன்வியப்புற்
றருகமைந்தனன்கண் டனன்வியனிதுதேர்ந் தணிநகர்மாந்தராண்டணைந்தே()

பார்த்தனர்பலவா விதந்தனரவன்மெய்ப்பத்தியைப் பத்தவற்சலன்றான்
சேர்த்தவன்னவன்மீ தமைந்தபேரருளைத் திறன்மலிகூபதாசன்ற
னார்த்தியாருயிர்சேர் காததற்புதமன் றவன்புடையமைந்தசீரன்ன
நேர்த்திமிக்கமைத்த படியுறுசீர்மை நிகழ்த்தரிதாம்வியப்பாமால். (கரு)

என்றுபோற்றினருள் ளடங்கிடாவுவகை யெய்துபுவணங்கியேபொன்முற்
குன்றுபோற்குவித்தா ரவைகொடுகூப தாசனோராலயங்குயிற்றி
பொன்றுமன்னதன்பாற் கண்ணன்விக்கிரக மொன்றுதாபிக்கவுட்குறித்துத்
துன்றுநகம்மெண்ண முடிவதெற்றென்னச் சூழ்ந்தனனிருந்திடுதுணையில்.(கசு)

துவரையம்பதிநின் றுஞ்சிலபத்தர் சுந்தரமிகப்பொலிகண்ண
னுவமையின்மூர்த்த மொன்றுகொண்டங்க ணுற்றிடக்கண்டுடன்வணங்கித்
தவவுபசார மாற்றியூணுதி தந்துபசரித்தனன்றான்செய்
நவமலிதளியிற் றங்கிடப்புரிந்தா னனியுறங்கினாவரக்கால். (கஎ)

நண்ணினர்தம்பா லொன்றும்விக்கிரக நாடினன்சுந்தரப்பொலிவார்
கண்ணியமூர்த்த மிதனைநந்தளியின் கட்பிரதிட்டைசெய்திடினு
மெண்ணியவெண்ண முற்றுமத்தகுசீ ரெய்துபாக்கியநமக்குளதோ
புண்ணியமூர்த்தி திருவுளமெற்றோ புந்தியுட்டேர்கிலனென்றே. (கஅ)

வலிதிவண்வந்த கண்ணன்வைகறையின் மற்றவருடனிவணென்னு
மெலிவுடன்பலவா றெண்ணினனமைகால் விடியலின்மேவினராரும்
பொலிவுறுதமதூர் புகநினைத்தங்கட் பொருந்துவிக்கிரகமேலெடுப்ப
மலியருட்கூப தாசனன்மனம்போன் மற்றதுசற்றசைந்திலதால். (கக)

அன்னவர்கூப தாசனைக்கூவி யணிகொளிவ்விக்கிரகத்தைக்
கொன்னமையெமது நகரிடைபதிட்டை குயிற்றிடவுன்னியாந்துவரை
நன்னகர்நின்றுங் கொணர்ந்தனமிக்கா ளுங்கள்பற்பலவிதமுயன்று
மின்னவான்றளிநின் றசைந்திலதிங்ங னிருந்திடவரிக்கிச்சைபோலும். (உ0)

உத்தமப்பத்த னுகுநின்றன்பா லுவகைகண்ணன்பெறுதிறத்தா
லொத்தநீபூசை புரிந்துவாழ்தியென வோதினரகன்றனரக்காற்
சித்தமேற்கூப தாசன்கொணிலைமை செப்பிமுற்றுறச்செயற்பாற்றோ
மைத்தகைக்கண்ணன் வடிவுளவுளத்தர் மதித்திடின்மருவரிதெதுவே. (உக)

திருவருட்கடலாங் கண்ணன்மெய்ப்பூசை செய்துறுகூபதாசன்றான்
றருமமிக்கமையுந் துவாரகைப்பதியிற் சார்ந்துகோமதியினீர்படிந்து
தருநிகர்கண்ணற் போற்றியேசங்கு சக்கரமுத்திரையுடற்கண்
மருவிடவமைத்து மீண்டிடமனத்துண் மதித்தனனத்தினத்திரவில். (உஉ)

கண்ணனன்னவன்சொற் பனத்திலிவ்வண்ணங் கழறுவனீயிவணமையி
லெண்ணமுற்றுறுமென் றோதலாற்றருமென் றிருந்தனனொருதினங்கனவி
னண்ணருட்டுவரை யடைந்துகோமதிப்பேர் நதியிலாடுபுரணசூர
வண்ணமூர்த்தியைக்கண் டேத்திச்சங்காழிவயங்குமுத்திரைதரித்ததுபோல்.

கண்டனனனவு படர்ந்துநோக்கிடுகாற் கவின்மிகப்பொலியுமுத்திரைகள்
கொண்டதன்னுடலிற் குலவிடக்கண்டான் கோர்த்தவின்பக்கரைகாணன்
றெண்டகப்பத்தி வளரமேன்மேலுந் தூயனற்பூசைசெய்துற்றான்
மண்டதிசயந்தேர் மாந்தர்பற்பலரும் வரம்பில்பேரின்பினரானர். (உச)

இன்னணந்திகழ்நாளொன்றில்வைகறைப்போதியல்குளந்தன்னின்மூழ்கிடுகா
லன்னதுட்பொருவி லோர்செபமாலை யமைந்திடக்கண்டெடுத்திறைவன்
றன்னருட்செயலென் றதுகொடுநாளுந் தக்கமந்திரஞ்செபித்துற்றான்
பின்னமைநாளொன் றினிற்றுவரையினும்பெயர்ந்தொருபத்தனுண்டணைந்தே

பத்திசால்கூப தாசனில்லின்பாற் படர்ந்தயின்றளவளாயுறுங்கா
லொத்தியருசன் றன்கரமீதி லுறுசெபமாலையுய்த்தறித்து
மெத்திறம்பூது பெறுமுளத்தினனாய் வினவுவனின்கரமீதில்
வைத்திடுமாலை யெவ்வணமுன்பால் வந்ததியான்றுவரையம்பதியில். (உகூ)

சூரியகிரக ணத்தினங்கோம திப்பெயர்த்தீர்த்தம்வேலையின்பாற்
சேரியற்கோம தீசங்கமத்திற் றிருந்தமுழ்கிடுந்ததிநெருக்கால்
வாரியுள்வீழ்ந்த துடனவண்மேய மாந்தரும்யானுநேடிபுங்கா
ணேரியைந்திலதஃ தான்மிகவாடி நீடுவாரகையினும்போந்தேன். (உஎ)

என்னவோதிடுகாற் கூபதாசனெனக் கீண்டியல்குளத்தினுட்கிடைத்த
துன்னதேற்கோடி யென்றளித்திடுகா லுற்றபத்தன்வியந்திதன்னே
மன்னருட்கோம தீசங்கமத்தில் வழுவியமாலையிக்குளத்தி
னன்னலம்பெறவெய் தியதிதற்கேது நானுணர்தரப்புகலென்றான். (உஅ)

பத்தன்வினவக் கூபதாசன்மெய்ப் பகவன்றன்பத்தவாற்சலியஞ்
சித்தமீதுன்னிப் பரவசனாகித் திருட்டிகளின்பனீர்பொழிய
மைத்தகைமாயா தீதனும்பகவன் மாயையாரறிவரென்றோதி
யொத்ததன்றனுவா தியமறந்துமையோ டுணர்வுமற்றனன்முள்காந்துற்றான்.

உற்றிடுபத்தன் கூபதாசன்மெய் யுணர்வமைகாற் பணிந்தேத்தி
நற்றிருக்குளத்தின் மூழ்குபுதன்னூர் நண்ணினனெப்பில்சீர்த்தாசன்
பற்றிலார்பற்றாப் பொருந்தருட்கண்ணன் பதமலர்ப்பணிபனளியற்றி
மற்றிணையறுமெய்ப் பத்தர்தோய்வைப்பாம்வைகுந்தப்பெரும்பதத்துற்றான்.

இழிகுலக்கூப தாசனெவ்விடத்தா னிணையில்யோகியர்க்குமிக்கரிதா
மொழிதருபத்தி யெங்ஙனித்தகையான் முயங்குயிர்கட்குற்றதுணைதான்
செழியமெய்ப்பத்தி யல்லதுண்டோவித் திறவெளிதாமிதைவிட்டே
யழிவழிகளின்மா னிடர்களாயினரு மடைந்திறக்கின்றனரந்தோ. (ஙக)

இகல்படுமாயா வடிவமாய்மனத்தி லெண்ணிடும்பொழுதெலாந்துக்க
மிகவளித்திடுசெல் வஞ்சுதர்மாதர் மிசைநசைவைத்துளமாந்தர்
தகவதிற்கோடி தனிலொருபாகந் தயைநிறைபகவன்மீதமைக்கி
னிகமமிக்கரிதா நுவனரசென்ம நிட்பலமாயொழியாதால். (ஙஉ)

வேறு

அன்பர்பூசைக் கடன்மீர்ப்பா *னசும்புதொடுங்கான் மண்மூட
வாற்றநாளுன் றிருநாம மறைந்துட்கிடந்து பின்னெடுத்துப்
பொன்பற்பலருந் தரக்கோயில் புரிந்துமூர்த்தி தேடிகொற்
புந்தியிச்சைப் படிதானப் பொருந்திச்சங்கா ழிக்குறிகள்
கொன்பற்றியசொப் பனத்தமைத்துக் குலவுநனவி லுறக்காட்டிக்
கோமதீசங் கமத்தில்விழுங் கோலச்செபமா லையைக்குளத்தி
லின்பமுடன்கூ பதாசர்கொள வியற்றல்போலென் றெனக்கருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ஙங)

கூபதாசகதிமுற்றிற்று

ஆ கவி கூகககூச

---

*அசம்பு-கிணறு,

தொண்ணூற்றேன்றுவது

# கரமௌதிகதி

உரத்தின்மாலடி யார்பணி யுளுற்றிவை குந்த
புரத்தின்மேவிய கூபதாசன்றிறம் புகன்றேன்
* கரத்திலாவியை மயக்கிடுமாயபோ கத்தில்
விரத்திதோய்கர மௌதிசீர்சற்றினி விள்வாம். (க)

பிரபலத்தகை பெற்றசேடாவதிப் பெயர்தோய்
தரமிகுத்தநாட் டிறைபுரோகிதனெனத் தழைத்த
பரசுராமப்பேர் விப்பிரனற்றவப் பயனுய்த்
தரணிமேல்வரு சுதைகரமௌதிப்பேர் தரித்தாள். (உ)

அன்னள்பாலியத் தேகிருட்டிணன்றிரு வடிமேன்
மன்னகத்திலொப் பற்றமெய்ப்பத்தியுள் வாய்ந்து
தன்னதாமுடற் குப்பருவம்புகுந் தகைபோன்
மின்னருட்பொலி பத்திஞானங்களின் மிகுந்தாள். (ங)

மூன்றதாம்பரு வஞ்சுதையெய்து தன் முன்ன
மேன்றவிப்பிர ஞெருவற்குமணஞ்செய்தீந் திட்டா
ளுன்றமங்கைமுன் போற்றந்தையில்லகத்தமைந்து
கான்றழைத்தது மாய்முடிக்கடவுட்பூ சித்தே. (ச)

இயலுநாளினின் மங்கையம்பருவம்வந் தெய்த
மயலுலாமுட ணயகன்றன்னதூர் மருவும்
வியனுறுந்தனுட் கோள்கரமௌதிபால் விளம்பச்
செயமுறும்புல னுடையளுட்டிகைத்தொன்றுஞ் செப்பாள். (ரு)

தன்னகத்துணு யகற்குநாமென்விடை சாற்ற
லென்னவேயுசா வினளிங்ஙனுட்டுணி வேய்ந்தா
ளின்னவேல்வையிற் சிறிதகமிளைத்துநா மின்னோர்
பன்னலாமொழி யேற்கினஞ்சனனமே பாழாம். (சு)

நடலையாருல கிதனைமெய்யென்றுள நம்பி
யுடலைநானென வேயலங்கரித்தொன்று முணரா
விடலையாகிநம் முடலின்மீதோவுறு விருப்பங்
கடலையொப்பெனக் கொண்டுளகாமுக னிவனும். (எ)

அன்னைதந்தையென் றமைந்துளார்தாமும்வா னவிரு
மின்னையொத்தழி வுற்றிடும்வினைசெறி யுடலந்
தன்னைமாயவாழ் விதனைநம்பியசழக் கர்களே
யென்னையீங்கிவர் தமைக்கொடெய்திடும்பய னந்தோ. (அ)

---

* காம் - விடம்.

எதுசெய்துமியான் றுயர்ச்சமுசாரமென் றிசைக்குங்
கோதுதோயிருட் கிணற்றுள்வீழ்கின்றிலன் கொடியோ
ரோதுசொற்கொளில் வேழமுண்விளங்கனி யொப்பப்
போதுநம்முயிர் பத்திஞானங்கெடப் புரிவர். (கூ)

எவ்வனப்பெரும் பிணியமைந்தேங்குமா டவர்க்குச்
செவ்வனப்புறு மடந்தையர்களுந்திரு வனேயார்க்
கெவ்வமேவுமா டவர்களுங்கூற்றமா யிற்பேர்
வெவ்வகோரசம் சாரமாநிரயத்துள் வீழ்ப்பர். (க0)

கிட்டினான்பத மாஞ்சுகக்கடலினுட் கிடந்து
மட்டிலாதபே ரின்பமெய்துற்றவென் மனத்தைப்
பட்டியிந்தியப் பாலையுட்பரக்கவிட் டின்ப
மெட்டிடாதுழல் கானனீர்வேட்டமா னிணையேன். (கக)

வேறு

என்றுபற் பலவாத்தன்னு ளெண்ணியே யிகத்தினிச்சை
பொன்றுமெய்ப் பத்திமாது பொருந்துமவ் விரவிலங்க
ணென்றுநர் யாருங்காணு தோடினள் சிறிதுதூரஞ்
சென்றுமெத் திருளிற்றூரி தெரிகில ளாண்டமைந்தாள். (கஉ)

புலரியெய் திடுகாலங்கட் பொன்றிய தசைதீரொட்டைப்
புலவுறு மென்புக்கூட்டுட் புக்கனண்மிகுதுர்க் கந்தங்
கலவிய தெனினுஞானக் கண்ணிலார் வீழ்ந்துமாயு
முலகியற்குடும்பநாற்ற முன்னிலிஃ துயர்வாமென்றே. (கங)

ஆன்மஞா னங்கொண்டாக்கை யங்கனே போல்வாய்ந்துள்ளின்
மான்மய மறுக்குஞான மான்மய மாகிநின்றாள்
வேன்மனத் தூடுகொண்டு மேவினு ளன்னகாலை
கான்மரு வியமாவன்னார் கரமௌதி யைக்காணாய். (கச)

ஓடின ரங்காட்டின்க ணுளமனே தோறுஞ்சென்று
நாடினர் காணர்தேம்பி நறுமலர்க் கானமீதிற்
கூடின ரொட்டையத்திக் கூண்டரு கமைந்துநாசி
மூடின ரஃதகன்ற மூளிகள் யாமென்பார்போல். (கரு)

இன்னண மிரண்டுவைகல் யாங்கணுந் தேடிக்காணு
ரின்னன்மிக் கவர்மனேப்பா லெய்தின ரிரங்கியுற்றூர்
கன்னலங் குதலைத்தீஞ்சொற் கரமௌதி மகந்தோய்மந்த
னன்னர்நீங் கலும்பிருந்தா வனத்திடை யமைந்தாளாகி. (கசு)

வளமலி யமுனேயங்கண் மருவியற் சிறப்பெல்லாங்கண்
டுளமகிழ்ந் தறலின்மூழ்கி யுற்றதன் பணிகள்யாவும்
பளகில்சீ ரிராதையென்னப் படருமந் தணமின்னூர்க்கீந்
தளவிலோ கையுடன்கண்ண னருட்பதஞ் சிந்தித்துற்றூள். (கஎ)

இவ்வணஞ் சிலநாள்செல்கா லெழின்மதுராபுரிக்க
ணெவ்வரு மறையோன்றுக்கத் தூழல்பர சுராமன்பாற்போந்
தெவ்வமி லுனதுகன்னி யியல்பிருந் தாவனக்கட்
செவ்வனப் பமைகாளிந்தி தீரமே லமைந்தாளென்ன. (கஅ)

ஓதலு மின்பதுன்ப மொருங்கமை யுளத்தனகி
யேதமிக் கேகியன்னா ளெதிரினின் றிசைப்பானுசிச்
சேதமாற் றினைமேலேனுஞ் செல்வானா யகன்மனைக்கட்
போதர வருதிகானிற் பொருந்தின்மா வுனைப்புசிக்கும். (கசூ)

வல்விரைந் தெழுதியென்றான் மந்தகா சஞ்செய்தொப்பில்
செல்வியோ திடுவடந்தை செப்பிய தென்னைநின்பா
லொல்விய ஞசிகொய்த துணரில்யா னன்றுநீயே
கொல்வினை மனக்கோட்பட்டுக் கொய்துகொண் டனையென்சொற்கேள்.

அரியமா னிடசென்மத்தை யடைந்தவர் யாருங்கோடற்
குரியது பத்தியன்ன துற்றிலா ரெவராஞலுந்
தெரியி*லேற் கெனவேமூக்குச் சிதைந்துளா ரதனாலன்றோ
சொரிமல முதற்கொள்யாக்கைத் தூர்க்கந்த முணர்ந்திலாரால். (உக)

மூக்கையோ விழந்தாயன்பின் முகுந்தனை மஞ்சொல்லாமே
நாக்கையு மிழந்தாய்காணா நயனமு மிழந்தாய்பத்தர்
போக்கைநீ கொள்ளாப்பண்பாற் பொருந்தியவுயிரோடுற்ற
யாக்கையு மிழந்தாய்வாழ்ந்து மிறந்தனை போலுமந்தோ. (உஉ)

மணமக ன்வீட்டிலெய்த வழுத்தினை யவனெனக்குக்
கணவனன் றெந்தைநீயுட் கருத்தில துலகமாயைப்
பிணவிய னெறிகைக்கொண்டு பெரிதுமோ தினைபச்சொல்லி
லணவியற் பொருணன்கோரி லறைந்திடத் துணிவுறுயால். (உங)

பூதலக் கொடுவழக்கிற் புருடனிற் புகுந்துநான்றன்
காதலிற்புத்ரீசற்போற் காதலர் பலரையீன்று
வேதனை மிகுசம்சார வேலையு ளழுந்துவேனேற்
பாதக நீயஃதாற்கொள் பயனெது பகர்திமன்னே. (உச)

நீதவ மாற்றுயாற்று நெறியுளார் தம்மைக்காணி
லாதரத் தோடன்னோர்கட் காவதா மியல்புஞ்செய்யாய்
கோதமை யுலகமாவிற் குப்புற வெனக்கும்போத
மோதலா யினையீதல்லா லொருவிய னுலகிலுண்டோ. (உரு)

அயிறரும் வியாக்கிராதி யாயமா வென்றுயன்ன
செயிருறு முடற்கேயூறு செயலன்றி யெனையென்செய்யும்
பயிலுமற் றவைநகர்ப்பாற் படிதரு சுற்றம்போல
வுயிருணர்ச் சியைக்கொள்ளாமை யானுமக்குபர்ச்சியாமால். (உசூ)

* ஏற்கெனவே - முன்னமே.

எந்தைநீ சமுசாரப்பே ரிருட்கிணற் றாடுமூழ்கிச்
சிந்தையிற் றுக்கமென்னத் தெற்றெனத் தேர்ந்தறிந்தும்
விந்தைமிக் கியன்றவான்ம விசாரமோர் சிறிதுமில்லா
* யந்தைமந் தையுனையல்ல தம்புவி மீதில்யாரோ. (உஎ)

பொய்த்தபுன் புலன்கட்கின்பம் பொருத்துபு புவியின்மீதிற்
பித்தர்க ளொப்பச்சாலப் பிரமைகொண் டலையுநின்சீர்
சித்தமீ துன்னிலங்கே தா சினந்துய ரிரக்கமூர
லொத்தமை கின்றதுண்மை யுணர்கிலை யென்செய்வாயால். (உஅ)

தனயன்யார் மனைவியாவ டழைத்தசுற் றத்தார்யாவர்
தனமெனி லென்னையோர்ந்து சாற்றுதி நீதான்யாரே
கனவுறழ் சகசாலத்தை மெய்யெனக் கருதியெய்த்தா
யுனதிறு தியிலிவற்று ளூதவுவ தொன்றுரைப்பாய். (உகூ)

மானிடர்க் கயனமைத்த வயதினிற் பாதியின்மே
லூனிதி லொழித்தாயின்ப முதவுமோர் பொருளுள்ளோரா
யானிதோய் விடயவின்பத் தழுந்தினை பேய்த்தேர்நாடிக்
கானிடத் தலையுமானிற் கருத்துமீளார் கிலையுமுன்றாய். (௩௦)

உண்டதே யுண்டுமுன்னு ளுடுத்ததே யுடுத்தும்பின்னுங்
கண்டதே கண்டுங்கேட்டுங் கருத்தினுட் சலிப்போர்சற்றுங்
கொண்டதே காணேன்மூப்புக் குறுகுங்கா லென்செய்கிற்பாய்
தண்டதே துணையாயின்பந் தருமனை வியெனக்கொள்வாய். (௩க)

பந்தமுற் றன்னைநாடிற் பதைப்பதென் னுளம்பிடர்ப்பா
லந்தக னுற்றதோரா யறைந்தனை யெனக்குப்போத
மந்தமி லன்பென்மீதி லமைந்துகாத் திட்டபண்பா
லிந்தவா றுரைத்தேன்சிந்தைக் கிசைந்திடிற் கொண்டுய்வாயால். (௩உ)

என்றுபற் பலதன்செல்வி யிமையவ ரமுதமென்ன
நன்றுரைத் திடல்கேட்டுய்தி நண்ணுறு பரசுராம
னென்றுறக் கந்தெளிந்தா ரொத்துமெய் யுணர்ச்சிதன்னே
டன்றுறு மெஞ்ஞானத்தா லளவிலின் பெய்தியன்பால். (௩௩)

புதல்வியைப் புகழ்ந்துளன்பாற் பொருக்கென விற்பாலெய்தி
முதன்மைசால் கண்ணனுெப்பின் மூர்த்தமொன் றினைத்தாபித்தே
யிதமிகப் பூசைபாற்றி யெதிர்படு காலந்தன்னின்
மிதமில்பே ரன்பனுகி விரத்திமிக் கமைந்தானானன். (௩ச)

நிருபனோர் சேவையாதி நீத்துயர் பரசுராமன்
கருணைமா றென்டனுகிக் களித்துவாழ் போதின்மன்னன்
மருவுபு ரோகிதன்றன் மாட்டனு காமைநாடித்
தருதியென் றேவற்கோதச் சார்ந்தவன் சாற்றக்கேட்டு. (௩௫)

---

* அந்தைமந்தை - மந்தக்குணம்.

பரசுரா மன்மன்னற்கியான் பகர்புரோ கிதனுமல்லே
னரசுமென் சீடனல்ல ளுற்றுமென் பாக்கியத்தாற்
சுரர்களும் போற்றிராசேச் சுரனெனத் திகழுங்கண்ணன்
வரமலி சேவைபெற்றேன் மற்றென்று மதியேனென்றான். (ந௬)

வினவுசே வகன்போய்ச்சாற்ற வேந்தன்விம் மிதத்தனாகி
யனகநற் குருமனைக்க ணடைந்துசம் பாடித்திற்றாங்
கனவிரத் தியைநீர்கொள்ளுங் காரண முரைத்திரென்னத்
தனயைதன் றரிசனத்தாற் றழைத்தவா றனைத்துஞ்சொன்னான். (ந௭)

கேட்டமன் வியந்தருட்சீர் கிளருநுஞ் செல்விதன்னை
நாட்டகத் தமையும்வண்ண நானழைத் துறுவேனென்று
வேட்டவன் புலியைக்கூவ மேவுமே டக்கன்றேபோ
லீட்டமார் சேனைசூழ வெழிற்பிருந் தாவனம்போய். (ந௮)

அக்கினிச் சுவாலையேபோன் றவிருட லபிமானந்தீர்ந்
துக்கிரத் தவஞ்செய்கின்றா ளொளிர்சுவ ணத்தமைந்த
விக்கிர கத்தையொத்து விளங்கரு ளுருவைக்கண்டான்
கைக்கிரி யனையானெஞ்சுங் காயமுங் கலங்கியேங்கி. (ந௯)

அன்னள்பா லடைந்தோர்மாற்ற மறையவுந் துணிவுற்றில்லான்
றன்னமாஞ் சேணினின்று தடங்கைகூப் புபுபின்பையப்
பன்னலா யினனம்மேநிற் பயந்தவ னின்னீக்கத்தாற்
கொன்னமை யுலகவாழ்விற் கொண்டுளன் விரத்தியற்றால். (௪௦)

உறுமனைப் பானீயெய்த லுசிதமென் றிடக்கேட்டன்பா
னறுமலர்க் கொம்புபோல்வா ணராதிபன் றன்னைநோக்கிக்
குறுகுநீ யாவனென்னக் கொற்றவ னின்பிதாவின்
மறுவறு சீடன்சேடா வதிநகர் மன்னனென்றான். (௪௧)

நரபதி தன்னையுற்று நாடின ணவில்கின்றாளென்
குரவனிந் நாண்மட்டுன்றன் கொடையநுக் கிரகங்கொண்டே
தரணிசால் போகமுற்றுந் தகவநு பவித்தானிப்பால்
விரவுவார்த் திகத்திலேனும் விரத்தியுற் றனனுய்ந்தானல். (௪௨)

குரிசினீ யென்னேதானங் கொட்டுகுஞ் சரமேபோல
மரியுடல் கொழுப்பச்சால மாந்திநிர் விசாரனாகிக்
கரிபரி யாதிசூழக் கண்டுளஞ் செருக்குற்றிங்ஙன்
றிரிதலா யினையெக்காலுந் தீர்தரா திருப்பாய்போலும். (௪௩)

பேதைநின் போலநெஞ்சிற் பெருஞ்செருக் கடைந்துவாழ்ந்த
தாதைமூ தாதையாண்டுச் சார்ந்தன ரவர்கள்போங்கா
லேதையே கொண்டுபோந்தா ரியலவர் தம்மிற்சேர்த்த
கோதைசே ரிறைவநீகைக் கொண்டகன் றிடுவைபோலும். (௪௪)

அன்னவர் தாமுன்கண்ட வரசன்யா மெனுங்கனவை
யின்னநா ளீகண்டுற்று யெதிர்வருங் காலந்தன்னி
லுன்னதிக் கனவைமைந்தற் குதவிப்பின் முன்னேரேய்ந்த
வின்னலார் தென்புலத்திற் கேகிட விரைந்துற்றுயால். (சரு)

அன்னியப் பொருள்கடம்மை யவாவினை யுனதுடற்கண்
மன்னிய விளமையாதி மாய்ந்தொழிந் திட்டவென்றுற்
பின்னியல் பருவப்போக்கைப் பேசவேண் டுவதோபோங்காற்
றுன்னிட மாவதியாண்டு சூழ்ந்தெனக் குணர்த்தாய்மன்னே. (சசு)

வாய்ந்தசே டாவதிக்கு மன்னனீ யென்னிலப்பாற்
றோய்ந்தநாட் டுக்கின்றென்னச் சொல்வதென் பொறிபுலப்பாற்
போந்தகாட் சிகட்கண்டந்தோ பொன்றுதன் மறந்திருந்தாய்
மாய்ந்தநின் னிளமைகொண்டோன் பிடர்மிசை வதிவதோராய். (சஎ)

அன்னதோர் பகைவனுனை யைம்புலப் படையெடுத்துக்
கொன்னமை யுனதான்மாவைக் கொள்ளைகொண் டிடவேயுற்று
னன்னவன் றன்னைவேட்டை யாடிட மதித்தாயில்லை
யென்னவின் னனவிளம்ப விறைவின வினனடுங்கி. (சஅ)

தெண்டனிட் டெழுந்தம்மேமீ செப்பிய வண்ணஞ்செய்வேன்
றெண்டன்யா னென்றுநாட்டிற் றேய்ந்துதன் புதல்வனுக்கு
மண்டலத் தரசுநல்கி வளப்பிருந் தாவனக்கண்
விண்டவா றணைந்துபத்தர் வியனருட் பணிகளாற்றி. (சகூ)

அறம்பல புரிந்துகண்ண னடிமலர்ப் பூசையாற்றிச்
சிறந்தபே ரன்பனுகித் திகழ்ந்தனன் பத்திஞானத்
திறம்பொலி கரமௌதிப்பேர்ச் செல்விபன் னுள்வாழ்ந்தீற்றிற்
பறந்தபுட் கேதனத்தன் பதத்திடை மருவினளால். (ருo)

பெண்ணிய வுருவம்வாய்ந்தும் பிறங்கிசைக் கரமௌதிப்பேர்ப்
புண்ணியக் கொடிவிரத்தி பொருந்தியே பகவன்றளா
நண்ணிய கொழுகொம்பேறி நற்கதி பெற்றுளஃதான்
மண்ணிய னரர்க்குப்பத்தி மார்க்கத்திற் சிறந்ததின்றே. (ருக)

வேறு

மறையோர்குலப்பெண் மணியாயெவ் வனமெய்தியபோழ் தினிலிரவே
மனையைத்துறந்து பகலுறத்தூர் வாசம்பெறுமில் வாழ்விலிஃது
ளுறைதன்மேன்மை யென்றுதசை யொழிந்தவொட்டைக் கூண்டுள்வதிந்
துறவோரகல்காற் பிருந்தைவனத் துற்றுத்தவஞ்செய் சீர்விளைவி
நிறையாகுலங்கொண் டணைந்தபிதா நிருபனுதி யருக்குலக
நிலையும்பத்திப் பெருமையது நிகழ்த்திஞானச் சுடர்கொளுத்தி
யிறைநின்பதஞ்சேர் கரமௌதி யிதயவிரத்தி யெனக்கருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (ருஉ)

கரமௌதிகதிமுற்றிற்று

ஆகூ கவி கூஉசகூ

---

தொண்ணூற்றிரண்டாவது

# பிரேமநிதிகதி

கண்டோர்தமக்கு மெஞ்ஞானக் கண்டோய்தரச்செய் கரமௌதி
விண்டோய் கண்ணன் பதமடைந்த மேன்மைசிறிது விண்டனன்மேற்
பண்டோய்பாக வதபடனம் பலருங்கேட்கப் பகர்ந்தரிதாட்
கண்டோய்பிரேமநிதியினருட் கதையிற்சிறிது புகல்வேனே. (க)

அணிமிக்கியலு மாகரப்பே ரமைபுநாட்டி லந்தணர்கள்
கணிதமறவாற் றியதவத்தாற் காதலானோன் பிரேமநிதித்
தணிவில்பெயரோன் றானமைபோர்த் தகையிற்கண்ணன் றாட்டுணையிற்
குணிதமறுபி ரேமபத்தி கொண்டோனொழுக்கங் குன்றாதான். (உ)

நாளுமதிகா லையிலெழுந்து நதியிற்படிந்து மனையின்பான்
மீளும்பொழுது தன்கரத்தின் விண்டுபூசைக் குச்சலங்கொண்
டாளும்பெருமான் றிருவடிக ளகத்திலமைத்து வந்திடுவான்
வாளுந்தியவை கறையணையின் மாந்தருணர்வா ரெனநினைந்தே. (ங)

இவ்வாறியலு நாளொர்தினத் தியலேழ்பரியோ னுதிப்பதற்கு
வவ்வேழரைநா ழிகைமுன்ன மனைநின்றகன்று புறத்தணைகால்
வெவ்வாணவத்தோ ரிதயம்போன் மிக்கவிருண்மே வியசெயலா
லொவ்வாதரஞ்சால் பத்தன்வழி யுணரான்றிகைப்புற் றனனிற்க. (ச)

ஆயகாலை யமுனைபுகு மாற்றிலொருவன் விளக்கொடுறத்
தூயமறையோன் களிப்புடன்பிற் றோய்ந்துநதியி னீர்படிந்து
சேயவநுட்டா னாதியெலாஞ் செய்துமுடித்துத் திரும்பினன்முன்
மேய்மனிதன் விளக்கெடுத்து விரைவாய்நடக்குஞ் செயல்கண்டே. (ரு)

அன்னோன்வடிவச் சுந்தரச்சீ ரசாதாரணமாந் திகழ்ச்சிமிக்கு
நன்னோன்பியற்றுந் தன்விழிக ணயப்பத்தோன்றும் பண்பினாற்
பின்னோடினன்வந் திடவெட்டாப் பெற்றியானா முன்படர்ந்தான்
பன்னோர்மறைக்கெட் டாதன்பர் பத்திக்கெளிய னாம்பகவன். (சு)

பின்னேபடரும் பிரேமநிதி பெற்றவிருத்தாப் பியத்தாலுந்
தன்னேர்கரத்திற் கனத்தகல சந்தாங்கிடுமோர் தகையாலு
முன்னேகிடுவான் றனைப்பிடிக்க முடியான்றனதிற் பான்மேவிக்
கொன்னேர்கலசந் தனைப்படியிற் குலவவமைத்துப் பின்னோட. (எ)

அக்கான்மாய மனிதன்விளக் கவித்தானோடி மறைந்திடுகான்
மிக்கான்றன்னு ளடங்காத வியப்பெய்தினனுன் னிடுகின்றான்
மைக்காரனைய நிறக்கருணை வள்ளலேயான் மயங்கிடக்கண்
டிக்காலணைந்தான் றிருவருட்சீ ரென்னென்றெடுத்துப் புகல்வேனால். (அ)

என்றுபலவாத் துதித்தினியா னிவ்வாறியற்று கின்றிலேன்
றுன்றுமறைகட் கெட்டரிதாந் துணைத்தாண்மலர்க ளென்பொருட்டா
லொன்றுபால்க ளூறுத்திடுமா றுற்றதாவா வெனப்பரிந்து
சென்றுபுரிபூ சனைபுரிந்தான் செழுமாதவப்பி ரேமபத்தன். (கூ)

அந்நான்முதலா மிக்கிருளி லணையான்புலரி தனிற்புக்கான்
பின்னுட்பசனம் புரிந்தருட்சீர் பிறங்குபாக வதபடன
மன்னுதாவிற் புரிந்துவந்தான் மருவுபுராண சிரவணத்துக்
கென்னுவவ்லூர் தனிலாண்பெண் ணென்பார்பலருமெய்தியே. (க0)

வினவிக்களிப்பா ரிவ்வண்ணம் விளங்குநாளாங் கதுகண்டு
மனதிற்றுவேச மிக்கமையு மதியீனர்கள்சில் லோர்டல்கிச்
சினமிக்கமையு மிலேச்சமன்பாற் சென்றுபுகல்வா ரெங்கர்வாழ்
பனவன்பிரேம நிதியெனும்பேர் படைத்தோன்மாய வஞ்சமிக்கான். (கக)

புராணபடனஞ் செய்வனெனும் பொய்மேற்கொண்டு பொருணசையால்
விராவுமாந்தர் பலரிடத்தும் வித்தம்பறித்துந் தருணிகள்பாற்
றுராசையமைந்து தன்மநெறி தொலைத்தானன்னோன் றிரநாடிப்
பாராநுகூல முறத்தண்டம் பண்ணுயென்னச் சாற்றுதலும். (கஉ)

வடவைநிகர்வெஞ் சினங்கொண்டு மதியின்மிலேச்ச மன்னவன்முன்
றிடமிக்கமையு நான்குபிருக் தியரைச்செலுத்தி யவனையென்முற்
படவிக்கணத்திற் கொணர்திரெனப் படர்ந்தவ்வாறு செபவவற்பார்த்
தடன்மிக்கமைமன் னவன்மறையோ யன்பனென்ன மேனடித்தே. (கங)

புத்தியறுமாந் தர்களின்கைப் பொருள்கள்பறித்தாய் நீகடவுட்
பத்திபுரித லெவ்வனஞ்சால் பாவைமார்கள் பற்பலர்தம்
மத்திதனிலோ விவ்விதியெம் மறையிற்படித்தாய் மதியில்லாய்
நத்தினரையெய் தினைநன்மை நவைசற்றுணரா யெனக்கேட்டான். (கச)

விரதமறையோன் புருடர்களு மிக்கமாதர் களும்வருவர்
தாமிக்கவரை யானெனது தாய்போன்மதிப்பே னெனமன்னன்
சாதஞ்சாத மென்றெதிரிற் சார்சேவகர்பா லிவற்காராக்
கிரகந்தன்னில் வைம்மினெனக் கிளத்தவவரவ்வணம் புரிந்தார். (கரு)

சிறையிலிருந்து பகவனடி சிந்தித்திருந்தான் பிரேமநிதி
முறையிற்சிரவ ணம்புரிவோர் முற்றுஞ்செயலோர்ந் தனரகத்தி
னிறையுந்துன்பங் கொண்டுண்ணு நியமத்துடனெம் பாலுற்ற
குறைதீர்த்தருளா யெனப்பகவற் குளிர்பேரன்பிற் றுதித்துற்றார். (கசு)

விண்டுபகவ னன்றிரவின் மிலேச்சமன்னன் கனவிலவன்
கொண்டுவணங்குந் தேவேபோற் குறுகியேட தாகமிக
வண்டுந்தகையுற் றேனறல்சற் றளித்தியென்ன வல்விரைந்து
மண்டுமன்பி னல்கவென்னீ வழுவற்றியலோர் மறையோனே. (கஎ)

துட்டர்மொழியேற் றுச்சிறையிற் றேயவமைத்தா யெனமன்னும்
பிட்டன்வினவி யிதுமனத்தின் பிரமையென்றெண் ணினன்றுயின்றுன்
கட்டமொழித்தன் பரையென்றுங் காக்குங்கருணைக் கடலவன்பாற்
சட்டமீண்டுந்தோய்ந்துரமேற் றண்டாமரைத்தா ளாற்சவட்டி. (கஅ)

வடவுரைத்தும் புனல்சிறிதெற் கீந்தாயிலையென் னென்றிடலும்
பாடன்மறையுச் சியிற்குலவும் பாதமிசைதோய் பாக்கியத்தான்
மூடனுணர்ச்சி பெற்றெழுந்து முதிர்பேரன்ப னிடமணைந்து
தோடமறத்தாட் டுணைதொழுதுட் சூழாதுமையிவ் வணம்புரிந்தேன். (கக)

செய்கையிதனு லெம்மதருட் டேவன்றிருத்தாள் சூட்டிடப்பெற்
றுய்கையடைந்தேன் நமக்கடியே னுஞற்றுமாறென் றிலையென்று
நைகைமனத்தி னேடுவிடை நல்கப்பகவன் றிருவருட்சீர்
மெய்கைவரப்பெற் றிடுந்தொண்டன் விண்டுவருள்யா வையுமென்றே. (உ0)

சூரிசிற்காசி வழங்கியணி குலவும்யமுனைத் துறைபடிந்திட்
டரிபூசனைசெய் தன்பரெலா மலகிலின்பக் கடல்படிய
விரிபாகவதக் கதைபுரிந்து விளங்கிப்பலநா ளிருந்தீற்றி
லுரிமைத்தொழும்பர் புகலிடமா முயர்வைகுந்த முற்றனே. (உக)

அரிதன்றெண்டற் கோரிடையூ றுற்றமிலேச்சர் தொழுந்தேவாய்ப்
பரிவின்மிலேச்சன் றனைச்சிட்சை பண்ணுந்திறத்தாற் றிருமாலே
விரியுஞ்சமய மெவ்வெவற்றும் விளங்குகின்று னென்பதற்கு
முரிமைப்பத்திக் கிணையின்றென் றிடற்குங்கதையீ துறுசான்றே. (உஉ)

வேறு

அதிகாலையினீ ராடிடுவா னுற்றுக்குறும்போ திருண்மிகவி
னகமிக்கயரச் சகியாதுள் ளவிர்தீபங்கைக் கொடுநடந்து
நதிமூழ்கினன்மீள் காலுமங்ங னண்ணிக்காம ருருக்காட்டி
நாடித்தொடர்கா லொளித்துமற்பர் நவிறுற்போதங் கொண்டுற்ற
பதியாண்மிலேச்சன் சிறைசெயுங்காற் பரவுமவன்றே வாகிச்சொற்
பனமீதுரைத்தும் பிரேமநிதிப் பத்தற்காட லியற்றியவா
றெதிர்காலத்தா யினுமென்பா வியற்றுயுன்பொன் னடிக்கபய
மிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உந)

பிரேமநிதிகதிமுற்றிற்று

ஆக கவி கூஉகூக

தொண்ணூற்றுமூன்றாவது

# ஜகதேவநர்த்தகிகதி

பற்றறுமெய்த்தவர்பற்றும் பகவனருட்பங்கயத்தாள் பாழ்மிலேச்சக்
கொற்றவன்சூடிடப்புரியும் பிரேமநிதிசரிதமிங்ஙன் கூறினேன்மே
லற்றதலைதானுஞ்சொற் படிபெண்முகம்பாராம லாகத்தோன்றப்
பெற்றசகதேவநர்த்த கியின்சரிதமோர்சிறிது பேசுவேனே. (௧)

சகதேவனெனும்பெயர்மன் னிடுகுறிப்பேர்காரணமாத் தழைத்துவானிற்
றிகழாதித்தன்புரைதே சவிர்ந்தான்றானத்தினிற்ற தீசியொப்பா
னிகழ்சரணார்க்காத்திடலிற் சிபியனையனேகபத்தி னிவிரதத்திற்
பகர்சிராமனையுறழ்வான் சுவிகாரபாலனத்திற் பலியையொப்பான். (௨)

சத்தியத்தினுயரிச்சந் திரனனையனரிபத்தர் தம்மின்மேலாந்
துத்தியஞ்சால்பிரகலா தனைநிகர்வான்பாகவதர் தொகையிற்சில
மெத்தியனற்செயதேவ னெப்பானித்தகையபல மேன்மைதோய்ந்தோன்
பத்திமிகுந்தரிபூசை சாதுக்கள்சேவையிவை பரிவினாற்றி. (௩)

அரசியற்றிவாழ்நாளில் வாணிவரப்பிரசாத மமைந்தாளாமோர்
பிரபலநர்த்தகிசகதே வன்கோயிலணைந்துகண்ண பிரான்முனன்பா
லரமகளிர்தாமும்வியந் திடப்பாடியாடிடுகா லரசோடங்கட்
டிரண்மாந்தர்பலரும்வியந் தனரலகிலாவுவகை செறிந்தாரானார். (௪)

சகதேவனானந்த பரவசனாயித்தகுநிர்த் தத்தையாண்டுந்
திகழ்தரக்கண்டேனில்லை யெதிர்வருகாலத்தினுமத் திறமேயென்றுட்
டகமதித்துக்கணிப்பரும்பொன் மணியுடையாதியபரிசு தந்துந்தன்னெ
ரகமிசைசற்றுந்திருத்தி யடையானாயென்றலைநிற் களித்தேனென்றான். (௫)

உடனேநர்த்தகியரசன் றலையைவலக்கைகொடுதொட் டுரைப்பாள்யானின்
மிடலார்சென்னியையிவத்தங் கொண்டுவாங்கினனெனக்கோர் விரதமுண்டஃ
திடலாமெப்பொருள்களையும் வலக்கைகொடுவாங்கிலிட்டோர்க் கீதலாமென்
றிடவிரதந்தவாதுநின்பா லேயிருக்கட்டுமெனவெட்டுஞ் செயலிற்றீர்த்தாள்.

வேந்தனவ்வாறமைந்தனனர்த் தகிமற்றோர்நாட்டினிடை மேவியாண்டே
யேந்தலின்முன்னர்த்தனஞ்செய் தனளசாதாரணவவ் வியல்புநோக்கிப்
போந்தகளிப்பாற்பரிசு மன்னளிக்குந்தகியிடக்கை பொருந்தநீட்ட
வாந்தகைகண்டவன்சினந்து பேதாயென்செப்தனையா னளித்தல்கொள்ள. ()

இடக்கைதனைநீட்டியெனை யவமதித்தாயெனவன்னா ளிசைப்பாளீகைத்
தடக்கைமன்ன ரேறேநின் றன்னையவமானஞ்செய் தனனன்றேனைத்
திடக்கைசகதேவனுக்கீந் துள்ளேனக்கையிற்கொள்பொருட் டிரளைக்கொண்டு
கடக்கையிலதவர்க்கியும் விரதமுள்ளேனதனாலிக் கைகாண்பித்தேன். (௮)

என்னல்வினவியமன்னன் சகதேவனீயுவப்ப வீந்தடுதன்னே
யன்னதையென்முற்கொணர்ந்துகாட்டுதியேல்வேண்டுபொருளளிப்பேனென்று
பன்னவுடன்சென்றுநின்று சிரசைநல் கென்றனளரிந்து பரிந்தீந்தான்மன்
னன்னருடலினைமறைத்து நர்த்தகியேவியவிறைபா னண்ணிக்காட்ட. (கூ)

கண்டமன்ன னவசமுற்றுக் கீழ்விழுந்துதேறிநர்த்த கியைக்களிப்பாற்
றெண்டனிட்டுவேண்டுபொரு ணல்கவுடன்செகதேவன் றேயஞ்சார்ந்து
முண்டமிசைசிரஞ்சேர்த்து வாணிவரப்பிரசாத முறைமைதன்னான்
மண்டலமன்னனைப்பிழைப்பித் தனளேகினள்சால மகிழ்ந்துமாதோ. (க0)

சகதேவனித்தகைமாட் சிகளறிந்தும்வினவியுமத் தராதிபன்றன்
மகளிறைவன்றனைவரனாக் கொளவாஞ்சித்துற்றிடுமா தாபிதாபாற்
பகர்சகதேவனையென்மனத் தேவரித்தேனெனைவேறு பார்த்திபற்குத்
தகமணஞ்செய்திடமுயலேன் மின்னெனுமின்வார்த்தையவ டாதைகேட்டு. ()

தன்புதல்வியுட்கோளைச் சகதேவற்குரைத்திடச்சம் மதியானாகப்
பின்புமன்னன்வற்புறுத்தச் சினந்துசகதேவனுயிர் பிரிந்தபோதுங்
கொன்புணர்நின்புதல்விமுக நோக்கேனென்றிடக்கேட்டுட் கொதித்தானாகி
மின்புணர்வாளாற்சகதே வன்சிரங்கொய்தனன்றன்னூர் மேவியீன்ற. (கஉ)

கன்னிமுகம்பார்திடநேர் பிடித்திடவும்பின்றிரும்புங் காட்சிகண்டே
மன்னிதயத்தற்புதமெய் தினன்பார்த்தோர்சகதேவன் மாட்சிமெச்சிப்
பன்னினர்பல்வாறு கொடுந் தொழில்புரிந்தமன்னவனுட் பரிந்தீந்திட்ட
மின்னிமித்தமித்தகுசத் தியவந்தனுமிறையை வெட்டினேனால். (கங)

என்றுதன்னுளெண்ணினன்மிக் கிரங்கிமுள்காந்திருந்திடுமெவ் வேல்வையின்மு
னென்றுவரநர்த்தகியாண் டெய்தினணற்செகதேவற் குறுகைநாடிப்
பொன்றுநரிலயர்ந்திரங்கி முன்புரையவெழுப்பினளப் போர்வேந்தன்பா
னன்றுசெகதேவனைநர்த் தகியைவணங்குபுதுதிப்ப நாட்டிற்புக்கார். ()

இன்னவகைசெகதேவ மன்னனுநர்த்தகியுமரிக் கினிதுபூசை
மன்னகப்பத்தியிற்புரிந்து சித்திபலவுலகறிய வயக்கியீற்றி
லுன்னதமெய்ப்பேறடைந்தா ராதலின்மானிடசனனமுற்றார்யாரு
மென்னமுயன்றும்பத்தி யெய்திடிலன்னவர்க்கரிதொன் றில்லை மெய்யே. ()

வேறு

பத்திப்பெருக்குஞ் சற்குணங்கள் பலவுந்தோய்ந்து படியறுநற்
    பாதமியற்று நர்த்தகிக்குப் பரிவாற்சென்னி தனையீந்து
தித்திக்குஞ்சொன் மகள்வேட்கை செப்பியிரக்கு மிறைபானின்
    செல்விமுகம்யான் செத்திடினுந் திரும்பிப்பாரே னென்றவணஞ்
சத்தியச்சீர் காட்டியுநர்த் தகியான்மீண்டும் பிழைத்தருடோய்
    சகதேவனெனர்நர்த் தகியிவர்பாற் றழைத்தவருட்பே றெனக்கீந்தே
யித்திக்கொடுவா னமுமுணர்சீ ரிசைவித்துன்று ளிடைசேர்ப்பா
    யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கசு)

ஜகதேவநர்த்தகிகதிமுற்றிற்று

ஆகூ கவி கூஉஅரு

---

தொண்ணூற்றுநான்காவது

# கோவிந்தடக்கரகதி

சத்தியத்தகைமிக் கமைசெகதேவன் றன்னொடுநேர்த்தகைமாதும்
பத்திகொடியற்றுந் திருவிளையாடற் பண்பிலோர்சற்றுரைத்தேன்மே
னத்தியல்காத்த னருணைவீத நன்கருந்துபுநலிவகன்று
நித்தியப்பதவி பெற்றகோவிந்த டக்கரனிகழ்கதையுரைப்பாம். (க,

கானியன்மலர்த்தண் சோலையுங்கஞ்சக் களைமலிபழனமுங்கவின்று
நானிலமதிக்கும் புகழ்மலிமிதிலை நாட்டினந்தணர்தவப்பேறு
மேனிதோய்ந்தருள்கோ விந்தடக்கரன்றான்விண்டுபத்தியின்மிகச்சிறந்தோன்
றேனியன்மறைசாத் திரங்கொடத்துவங்கடெருண்மிகுமறிவுகொண்டளந்தோன்

காவியப்பிரதீ பக்கிரந்தத்தைக் கழறினன் சாதகர்க்கினிதாத்
தேவிபூசையினன் னெறியைமந்திரசாத் திரமெனச்செய்தவன்விண்டு
சேவிதப்பத்தி நெறியினிற்சாலச் சிரத்தைதோய்விரதமொன்றுள்ளான்
றாவியற்கண்ணன் பதங்களைப்புதிய துழாயிலைகொண்டருச்சித்து. (ங)

திருந்தியநிவேத்தி யப்பிரசாதந் தீர்ந்துமற்றொன்றுணாச் சீலம்
பொருந்தியவிரதத் தியலுநாண்மேன்மை புணர்ந்தகாவியப்பிரகாச
மருந்தியற்கிரந்தஞ் செய்துகர்த்தாவா மன்மடபண்டிதற்காண்பான்
விருந்தியல்காட்சிச் சீடனேடியர்கான் மீரதேயத்துறப் போந்தான். (ச)

பதியதிற்பிரசித் தித்தகைவாய்ந்த பண்டிதர்மூவரம்மடனீண்
மதிகொள்கையடன்மன் மடனெனுநாமம் வாய்ந்தவர்சகோதரமுறையோர்
முதிருமம்மடனு ரணங்கொள்பாடியத்தை மொழிந்தவன்கையடனதற்கு
விதிபெறுடீகா வியற்றினேன்மன்ம டன்றண்காவியப்பிரகாசம். (ரு)

இயற்றினேனுறுகோ விந்தடக்கரன்ற னிளையமன்மடபண்டிதன்ற
னயத்தகையிற்பா லடைந்துசாவுழிசார் நாயகிசாற்றுவள்வீட்டின்
றயற்படர்ந்துள்ளார் வருவதன்முன்னீ ராடுதிருகினிற்கூபம்
வியத்தகவுளதென் றோதிடவங்ஙன் மேவினனேக்கிடுகாலை. (சு)

ஆழ்ந்தியல்கிணற்றி னயற்குறுகியதாம் பமைதல்கண்டெடுப்பதெற்றென்னச்
சூழ்ந்தனனிற்ப மன்மடனங்கண் டோய்ந்தனன்சிகையுடன்காலிற்
றாழ்ந்திடுசெருப்பிட் டவிந்தர்போற்கோவிந் தடக்கரன்கண்டுசெங்கையனு
யூழ்ந்தனனேக்கி நிற்பமன்மடன்றா னுறுமவன்றனைத்தொழுதுரைப்பான். ()

மிக்கமன்மடன்யா னீயிர்யாரீண்டு மேவுகாரணமெவனென்னப்
புக்கவன்றன்விர்த் தாந்தமுற்றோதிப் போதவாழ்கிணற்றயல்குறிதா
மிக்கயிறமைத்தீ செங்ஙனம்புனல்யா னெடுத்துநீராடுதலென்ன
வக்கணமுயர்மன் மடன்மனையுட்போந் தறலொர்பாத்திரத்தின்மந்திரித்து. ()

கிணற்றினுள்விடுத்தா னக்கணமகிமை கிளர் திருப்புகழ்த்தண்டபாணி
மணத்தகைமுருகதாசன் மெய்த்திருவாய் மலர்ந்தவத்துவிதகௌமாரக்
குணத்தனிநெறிகைக் கொண்டவருளத்திற் குலவுமானந்தமேபோல
வணப்படநிறைந்து பொங்கியதுவகை மலிந்துழூழ்கினாகம்புறத்தும். (கூ)

உடனிவேத்தியஞ்செய் தருட்கிருட்டிணனை யுலப்பிலன்பாலருச்சித்துக்
கடமையாருண்டி வினைமுடித்தங்கட் கவின்றமன்மடபண்டிதன்றன்
மிடல்கெழுசகோத ரர்க்கிவர்வருகை விளம்பினனழைத்துவந்திட்டான்
றொடர்புறுமொருநால் வருமெய்ச்சாத்திரதத் துவசம்பாடணைபுரிந்துற்றார்.

மேவிடுகாற்கோ விந்தடக்கரன்றுன் விளங்குமன்மடனிருமிதமாங்
காவியப்பிரகா சத்தினைக்காணூங் காதலோ தின னல்கக்களித்தே
தாவியற்றன்கா வியப்பிரதீபந் தனையவர்கையிடையளித்தான்
றாவியல்பினநய்த் துணர்ந்துமிக்குவகை தோய்ந்தனர்மெச்சினராளுர். (கக)

இவ்வணஞ்சின்ன ளவண்வதிந்தவர்தம் மிதயமேவுள்ளிடவிடைகொண்
டெவ்வமாரொருகான் வழிப்படர்போதில் யாங்கணுந்துளசிகிட்டிலதாற்
செவ்வகைப்பூசை யூண்வினையாதி செய்திலன்பிற்ஷ றநாடனிலு
மவ்வகையாக வுச்சியம்பொழுதிற் கோவிந்தடக்கரனயர்ந்தே. (கஉ)

நடைகொளமுடியான் காட்டிலோர்நிழலி னலிவுடன்கிடந்துசீடன்பா
லடைதருதுயர்சொற் றருச்சனையின்றி யார்கிலனென்றும்யானென்ன
மிடையுமாணுக்க னழுதுநான்செய்யும் விதமெவனென்றுசூழ்ந்தக்கா
னிடைதுழாயமையிற் கொடுவருவேனென் றேகிடவங்கொர்கோபாலன். (கங)

கண்டகண்களைமுற் றுந்திறையாக்கொள் காமர்மிக்கவன்பசுமேய்த்துக்
கொண்டமைந்துற்று னவனருகினிலோர் குளிர்தடாகமுமதன்கரைமேற்
றண்டழைதுளசிச் செடியுமெய்துறலாற் சார்ந்தமாணுக்கனுட்களித்துப்
பண்டழைபால னுடனவரீதம் பயினின்வீட்டுளதுகொலுண்டேல். (கச)

நானணைந்தவண்வாங் கிக்கொள்வேனெனது நற்குருவிருதினமாகப்
போனகங்கொள்ளா ரயர்ந்துளார்துளசிப் புதுமைசால்பத்திரந்தன்னுன்
மானளினத்தா ளருச்சனைப்பூசை வயக்கியல்லாதுறுபுனலும்
பானமாற்றுகிலா விரதரென்றோதப் பகவனும்பாலகன்பகர்வான். (கரு)

ஈண்டியல்வெண்ணெய் நெய்விற்பார்யாரு மில்லைதாகம்பெறிலுண்ண
வேண்டியான்சிறிது கொணர்ந்துளேன்றுளசி வியன்குளக்கரையின்மேவுளது
காண்டிவல்லையினிற் கொண்டளிக்குதிமெய் கலந்தவாருயிரினைச்சமன்போன்
மாண்டிடப்புரியு மித்தகுவிரதம் வம்புகாண்மானிடர்தமக்கு. (கசு)

பத்திமாத்திரத்தான் மிக்கெளியவன்மெய்ப் பகவனென்றியானுரைத்தனனென்
றெத்தியலுனது குரவனுக்குரையென் றோதியுமாயையின்றிறத்தான்
மெய்த்திறற்பகவ னென்றறிந்தில்லான் விரைந்துபோந்தாரியற்கிசைத்தா
னத்திருக்குளநீர் கொடுகுளித்திடல்செய் தருச்சனையூண்வினைமுடித்தார். ()

அமாராமமுநி வினியவவ்வெண்ணெ யார்தனுமற்புதனுகி
முமலவாதனையு மற்றிடப்பெற்ருன் முயங்குமாணுக்கற்குநல்கி
யமலகோபாலன் யாண்டையானவனை யறிந்துசெல்குவமெனச்சீடன்
சிமயநேர்குரவன் முன்படர்ந்தங்கட் டிகழ்பொருளொன்றுமின்மையினுல். ()

மதிமயங்கினனின் றீண்டுகோவினமும் வாய்ந்தபாலகனுமேவியபே
ரதிசயங்கண்டேன் சாதமென்ருேத வாரியன்குளமெவணென்னத்
ததியினுற்றிசையு நோக்கினன்களவார் ததியவன்செயலிதென்ருேரான்
முதிர்மருட்சியன்கோ விந்தடக்காரன்பான் முன்பினீண்டமைந்தவிவ் விருக்கம்,

கண்டவக்குளத்தின் கரையினுற்றதயற் கலந்தமைந்தது தளவுமிது
கொண்டல்வண்ணன்செய் மாயைகொலென்னக் கூறினர்சிறிது தூரம்போந்
தண்டுமானிடர்பற் பலருடன்குளமீண் டமைதனீர்தேர்விர்கொலென்ன
மண்டுவார்பலரு மொருவர்போலங்கண் வாவியின்றென்னநன்குணர்வோம். ()

உளதெனச்சொல்வார் பித்தரல்லதுபொய் யுரைப்பவரெனக்குருபரன்ருன்
குளவியல்பீது நீதெரிதருகோ பாலன்யாண்டுளன்பகரென்னப்
பளகறுசீடன் சாற்றுவனன்னேன் பன்னிரண்டாண்டமைந்துள்ளான்
கொளவருமேனி காணிநெஞ்சகங்கண் குளிர்வவெண்டொறுங்களிபொங்கும்.

நீலமேகம்போன் றொளிவிடுமொப்பி னிறமுளான்ருமரையிதழ்நேர்
கோலமார்விழிகள் வாய்ந்தவனரையிற் குலவுபீதாம்பரமஞ்சள்
சாலவுங்கருணை ததும்புபுன்னகையான் றரிசனங்கொண்டவென்மனத்தை
யாலயமெனக்கொண் டமைந்தனனென்ன வாரியனவன்கிருட்டிணனே. ()

ஐயமின்றெனச்சொற் றனன்பரவசமுற் றவனிமேல்வீழ்ந்தனனக்கான்
மையதிரிடிபோ லோர்தொனிகேட்டுண் மனந்திகைத்துற்றமாணுக்கன்
றய்யசற்குரவன் றனைக்காத்தெடுத்துச் சூழ்ந்தரிபதம்புகுசெயலால்
வையமேல்விழுந்து புரண்டழுதேங்கி மறைவிதிக்கிரியைகளாற்றி. (உ௲)

அன்றிரவினிலான் டமைந்தனனயர்கா லருட்கடலவன்கனவிடத்தி
லொன்றியந்தணவீண் டியர்கொளேல்பத்தி யுற்றகோவிந்தடக்காரற்குத்
துன்றியபிறவி யிதுமுடிவதனுற் றேய்ந்தனனென்பதத்திடைமெய்
நன்றியன்முன்சென் மத்தவத்தானீ நலங்கொண்மாணுக்கனுவமைந்தாய். ()

ஆதலானீமுன்கண்டகோபால வருட்சொருபத்தையெந்நாளும்
போதமெய்த்தியானம் புரிதரினினக்கும் பொருவின்மெய்க்கதிகிடைக்குமென
வோதலினுரமிக் கெழுந்தனன்மிதிலை யூரடைந்தியனலமுரைப்பக்
காதலில்வினவி னேரெலாங்கோவிந் தடக்காரன்கதிதெரீஇக்களித்தார். (உரு)

சீடனுயினன்மெய்ப் பகவனேதியவா தியானமாற்றினனிருந்தீற்றிற்
பீடருட்கண்ணன் பதத்திடையடைந்தான் பிறங்குமத்தவரிருவரின்சீர்
மாடமார்மிதிலா புரியுளாரின்றும் வழுத்திடுகின்றனரிதனுற்
கேடறுபத்தி யல்லதாருயிர்க்குக் கிளர்துணையில்லை சத்தியமே. (உசு)

வேறு

துளவுபுதிது கொண்டுஜனா டொறுமர்ச்சித்துன் பிரசாதந்
துய்க்குநியமத் திற்றிறம்பாத் தூயகோவிந் தடக்கரன்மெய்
தளர்போதினிற்கோ பாலனெனத் தழைத்துவெண்ணெய் தந்துயர்பூந்
தடமுந்துளவுங் காட்டவவன் சற்சீட ன்கொண் டீந்திடுகா
லுளமாரன்பிற் பூசைபுரிந் துண்டுபோங்கா லுண்மைநிலை
யுணர்த்திப்பதத்திற் சேர்த்தருளு மொருவாவடியேன் றனைச்சற்று
மிளகாமனத்தோ னென்றுவெறுத் திடினீயலதோர் திக்கறியே
னிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உஎ)

கோவிந்தடக்கரகதிமுற்றிற்று
ஆ. கவி கூ௩கஉ

---

தொண்ணூற்றைந்தாவது

# அந்தர்பத்திராஜகதி

கொண்டல்வண்ணனல் கியவெண்ணெயுண்டவன் குளிர்தாண்
முண்டகங்கொள்கோ விந்தடக்கரன்கதி மொழிந்தேன்
றெண்டனென்றுல கோர்தரா திருந்தன்பர் தோய்வை
குண்டமாரந்தர் பத்திசீர்சிறிதுகூ றிடுவாம். (க)

அன்னமார்பணை குலவுபாஞ்சாலநா டாளு
மன்னவன்குடத் துட்பொதிதருஞ்சுடர் மானத்
தன்னகத்திடை தன்னமாருப்பத்தி தழைத்தே
நன்னலங்கொள்சீ தாராமநாமமு ணவில்வான். (உ)

புறத்திற்காண்பவ ரியாவர்க்குங்கொடியகோல் பொருந்து
மறத்தகைக்குரு ரத்தனுவயங்கினன் மனையாந்
திறத்தள்சாலவும் பத்தியுற்றுணரா திபன்றன்
விறத்தவன்குணங் கண்டுருவிசனமே வினளாய். (௩)

காலனிற்கொடுங் குணங்கலந்துள்ளநங் கணவன்
ஞாலமானிடர் போன்றசீர்நண்ணுவ தரிதேன்
மாலடிக்கன்ப னுகுநன்மாண்பெற லுண்டோ
நீலனுமிவற் றிருத்தலெவ்வகையென நினைவாள். (௪)

நிறையுநந்துயர் யாவர்பானிகழ்ந்துவ தென்றே
யிறைவனுட்பொலி பத்திமாண்பறிகில ளிரங்கி
யுறையுநாளிர வொன்றினிலிச்செய லுன்னி
யிறையுநித்திரை யெய்திலண்மிகத்துயர்ந் திருந்தாள். (௫)

அன்னவேல்லைமன் னவனதரங்கள்சற் றசையப்
பன்னலாவதென் னெனமிகக்கூர்ந்தனள் பார்க்க
மன் னருட்சிதா ராம்சிதாராமென வழுத்துங்
கொன்னமைந்தமந் திரம்வினவினள்குது குலித்தே. (௬)

அடங்கிடாதபே ருவகையிற்முன்வெளி யணைந்தே
யுடன்பிராமண ராதியர்க்கூவியுற் ளூர்க்குக்
கடன்முகந்தெழு முகிலெனக்கனகமா தியபெய்
திடங்களெங்கணும் பல்லியமொலித்திட வியற்றி. (௭)

மங்களத்தகை யனவெலாமியற்றுகான் மன்னன்
சங்கமாதிய வியங்களானித்திரை தணந்து
துங்கமார்மனை யிடம்வினவுவனென்னே துழனி
தங்கைக்கோசகோ தானுக்கோவாண்மகன் சனித்தான். (௮)

பகர்தியென்னவி ராணிமன்னன்பதம் பணிந்து
மகவெவர்க்குமீங் குதித்திலதுமதுவா யென்றுந்
தகவிராமநா மம்புகலாததன் மையினன்
மிகநிர்மூடனென் றகங்கொடுவிசனமிக் கமைந்தேன். (௯)

மாதர்கட்குநா யகன்குருவாகும்வாய் மையினற்
போதமாற்றவுந் துணிகிலன்செயலெது புரிந்து
மாதவன்கழற் பத்தராவுமைவயக் குவதென்
றேதமிக்குழந் துற்றதாலனந்தலெய் தில்லேன். (௧௦)

நம்மைநாடவா யிராமமந்திரநுவன் றதனற்
செம்மைராகவன் சீதையோடுளத்துறுஞ் செயறோர்ந்
தம்மையாரிடி நாணுறவியங்களார்ப் பித்துப்
பொய்ம்மைதீர்மறை யோர்க்கெலாங்கொடைமிகப் புரிந்தேன். (௧௧)

எழுந்துதந்திருக் கைகொண்டும்புரிதிரென் றியம்ப
வழுந்துபத்திமன் புகல்வனீசுகிர்தமாற் றியதாற்
செழுந்தகைப்பய னெய்துவைசெப்புதல் கேட்பா
யெழுந்திரைக்கடல் சூழுலகத்திருக் கில்லேன். (௧௨)

சுந்தரங்கொள்சீ ராமன்சீதையினெடென் றுகட
ரந்தரங்கத்தின் மேவினர்ப் பூசனை யாற்றி
யந்தமில்பெருங் களிப்பமைந்துற்றன னந்தோ
விந்தநாளிலென் வாய்வழியாற்புறத் தேய்ந்தார். (௧௩)

ஆனபான்மையின் மரிப்பதுசாதமென் றறைந்து
மானமார்புதல் வனையமைச்சரைவரக் கூவிக்
கோனமைந்ததன் னாட்சியைமைந்தற்குக் கொடுத்துச்
சானகிக்கொரு நாயகன்றனைத்தியா னித்து. (௧௪)

சீரியற்றிரு வைகுந்தபதத்திடை சேர்ந்தான்
பாரியுந்தன்னு யகனுடன்பதமது பெற்று
டேரியற்பெறு மாந்தர்யாவருங்களி சிறந்தா
ரோரினுள்ளெழு பத்திநேரொருநெறி யுளதோ. (கரு)

வேறு

உலகோரறியா துனையுள்வைத் துன்பேருன்னித் துயில்புரிய
வொருநாண்மனைவி கண்டதனு லுறும்வாய்வழியே யினையென்னப்
புலவாருடலை யக்கணத்திற் புவியில்விடுத்துன் பதத்தினிடை
புகுந்தவந்தர் பத்திமன்னன் பொருவினிலைமை கண்டறிந்துஞ்
சலவாழ்க்கைக்குட் புரண்டொழிவார் தமதுபுகழை விழைந்தவமே
சகமேலிடம்பப் பூசைசெய்துன் றாட்டாமரைகட் கன்பனென்றே
யிலவார்கனிவேட் டுழல்வேனின் னின்பத்திருத்தாட் புகுவதுண்டோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கசூ

அந்தர்பத்திராஜகதிமுற்றிற்று

ஆ கவி கஙஉஅ

---

தொண்ணூற்றாறுவது

# குருபத்திகதி

சொந்தமுறுநன் மனைக்குந் தோற்றுதுள்ளத் தமைந்த
வந்தர்பத்தி ராச னருடோய்கதிசற் றறைந்தே
னந்தமுறுந்தன் குருமீண் டணைந்துபத்தி மகிமை
பந்தமறத்தேற் றுகுரு பத்திசரிதம் பகவர்வாம். (க)

மதுராபுரிநன் னகர்சான் மறையோர்குலத்தி லுதித்தோன்
சதுர்மாமறையோ டங்கந் தன்னையளந்த வறிவோன்
பதுமாதனனை நாபிப் பானின்றளித்தோன் றுணைத்தாண்
மதுவாரிசத்தி லின்ப மாந்துமளிநேர் மனத்தன். (உ)

உள்ளமென்னப் புறத்து முலகத்தவரோ டொட்டான்
வள்ளன்மதுரைப் புறத்தோர் வளமார்குடிலொன் றியற்றி
யெள்ளலறுநற் பிட்சை யேற்றுண்டமைகா லொருநாட்
கள்ளமறுமெய்ப் பத்தி கவினோர்*மாணி யெய்த. (ங)

கண்டுகருணைப் பொலிவாற் கவினூர்குழந்தாய் நீயார்
மண்டுநகர்யா தென்ன வழுத்துமறையோர் மனைச்சே
யண்டுகுரவ ருறவ ரானூர்யாரு மடிந்தார்
தொண்டுநுமக்காற் றிடுமெய்த் துணிவாலிவண்போந் திட்டேன். (ச)

---

* மாணி - பிரமசாரி

என்னவுரைக்கக் களிப்புற் றியலாச்சிரமத் தமைவித்
தின்னலறப்புத் திரன்போ லினிதுகாத்து வந்தா
னன்னமகன்றந் தையினே டருட்சற்குருவா முறையி
னன்னர்பணிசெய் துண்மை ஞானமுணர்ந்து திகழ்ந்தான். (ரு)

இவ்வாறியலு நாளி லிளையோன்பலமு லங்கட்
கொவ்வாரணியம் புகுங்கா லுற்றகுரவன் மால்பொற்
செவ்வாரிசத்தாட் டுணையிற் சேருந்தநிபெய் திடலோர்ந்
தவ்வாச்சிரமத் தருகி லமையோர்மறையோற் கூவி. (சு)

நானிப்பொழுதென் னுடல நழுவநேருந் திறத்தாற்
கானிற்புகுமென் சீடன் கடிதெய்துவனம் மட்டென்
மேனிக்கிடையூ றெய்தா விதங்காத்தவனீண் டமையின்
வானிற்புகுநின் குரவன் மகிழ்விற்பசனை புரியில். (எ)

எழுமென்றுரைத்தி யெனச்சொற் றியாக்கைவிட்டே கினனப்
பொழுதிலணைந்த சீடன் புனிதக்குருபோந் தகையா
லழுதுவீழ்ந்து மூர்ச்சை யடைந்துதேறி யெழுந்து
கெழுமுமறையோற் பார்த்துக் கேட்பானெனது குரவன். (அ)

பகவன்றிருந்தா ளடையும் பதத்திலிவண்மே வினிரோ
தகவேதேனு நும்பாற் சாற்றினரோ வென்னப்
புகலுமறையோன் பத்தி பொருந்திப்பசனை புரியி
லிகமேலணைவே னென்று ரியற்றவ்வாறென் றிசைத்தான். (கூ)

வினவுசீட னுடனே வியன்றாரகமந் திரமா
மனகராம நாம மன்பாற்செபித்த பொழுதிற்
கனவுபெறுநித் திரையிற் கலந்தோன்மீண்டிங் திரிய
நனவுபெறுமோர் செயல்போ னகைகொண்டிம்மென் றெழுந்தே. (க0)

திரையற்றியலுங் கடல்போற் சித்தமசைவற் றென்பு
கரையப்பத்தி பெருகிக் கண்மூடுபுதா ரகத்தை
யுரையற்பமைசீ டனேக்கூ யுயிரெய்தினன்மெய்ப் பத்தி
வரையற்றியன்மான் மியநின் மனத்திற்றெரிந்திட் டனையோ. (கக)

விதமிங்கிதுதேற் றிடவே மீட்டுமெழுந்தே னினிப்*புற்
புதநேருடலி லமையப் புந்தியினிலிச் சையிலே
யிதமிக்கிவணீ யென்று மிருந்தேயரிதாட் பத்தி
திதமுற்றிடச்செய் தின்பச் சிறப்பெய்துதியென் றுரைத்தே. (கஉ)

அரிமேவியவை குந்தத் தணைந்தானதுகாற் சீடன்
பரிவோடியற்றுங் கிரியை பலவும்புரிந்து குருசொற்
றிரியாதங்க ணமைந்து சிராமனைச்சிந் தித்துப்
பெரிதாம்பரம பதத்தைப் பெற்றுனிகர்வா ரற்றான். (கங)

---

* புற்புதம் - நீர்க்குமிழி

இவ்வாற்றூன்மா னிடராயிலங்கும்பெரும்பாக் கியத்த
ரெவ்வாற்றூனும் பத்தி யிசையப்பெறிலன் னவர்கட்
கோவ்வாப்பேறுன் றிலேயென் றுணர்ந்துட்கனிவி ஞேடும்
வவ்வாத்திகரா யழியா வாழ்க்கைபெறனன் னலமே. (கச)

வேறு

பலமூலங்கொண் டிடக்கானிற் படர்காற்றனது சற்குரவன்
பரமபதத்தெய் திடத்தளர்ந்து பனவன்பாற்சொன் மொழிவினவி
நலமார்கீர்த்த னம்புகன்றுன் ஞமதியானம் புரிந்துகுரு
நாதன்புவிப்பான் மீண்டமைய நவிற்றுகுருபத் தியினுள்ளத்
தலமீதமையும் பெருநிலைமை தனைக்காட்டியெனு ரகம்புறத்துந்
தரிசித்தனல்சேர் மெழுகினுளஞ் சடமாரென்புங் கரைந்துநில்வே
றிலதாக்கரையும் படிக்கருள விதயத்திடையென் றெண்ணிடுவா
யிராமானந்தப் பெயர்கொடென திதபத்திலங்கும் பெருமாளே. (கரு)

குருபத்திகதிமுற்றிற்று

ஆகூ கவி கூஙசங

---

தோண்ணூற்றேழாவது

# இராமப்பிரசாதகதி

அத்திநோருட் குருபரனறைதலி னமலப்
பத்திமான்மியந் தேர்குருபத்திசீர் பகர்ந்தேன்
பத்திராசல ராமதாசன்கொள்பாக் கியச்சி
ரொத்தியைந்தரா மப்பிரசாதன்மாண் புரைப்பாம். (க)

சிறிதுநாளின்முன் னயோத்திமாநகரிடை சீல
நெறிகொள்சீரிரா மப்பிரசாதப்பேர் நிலவு
மறிவறிந்தவே தியமணியொருவனுண் டானுன்
வெறிதரும்புவி மால்சிறிதுங்கொளா விரத்தன். (உ)

இடைவிடாதிரா கவனடிப்பூசைசெய் திற்பா
லடைதலாமரி பத்தராயினர்க்கமு தளிப்பான்
கொடைசெய்தாரெனி லொருவரப்பொருளுடன் கொடுபோய்த்
தடையிலாதன்பர் பூசைக்காம்பொருள்கொடு சார்வான். (௩)

இன்னவாறிய ஞளினிலிராகவன் செயலாற்
றன்னமும்பொருள் யாவருந்தந்தில ரதனுற்
கொன்னமைந்தவர்த் தகனிடங்கடனெனக் கொண்டு
நன்னர்சாதுபூ சனைதினநடத்தின னமைந்தான். (ச)

சகத்திரத்தொகை படவெள்ளிப்பணங்கடன் சார
வகத்துளெண்ணில னற்றிலன்பின்னொரா னியத்தின்
மகத்துவம்பொலி சாதுக்கண்மிகமரு விடுகாற்
றகப்பதார்த்தம்வாங் குபுவரத்தாசனை யனுப்ப. (ரு)

வருத்தகன்றனுள் வருத்தமிக்கித்தினம் வரையா
மருத்தநல்கினல் லாலளிக்கிலனென்ன வறையும்
வருத்தமானங்கேட் டலுமிராமப்பிர சாதன்
கருத்துட்சாலவுங் கவலையுற்றிராகவன் கழல்கள். (சு)

மனத்துணுடினன் றுதித்தலும்பத்தவற் சலனுங்
கனத்தைநேர்திரு மேனிகொள்கருணைரா கவனத்
தினத்தினிற்பிர சாதனேர்திருவுருக் கொண்டு
தனத்தினைக்கைக்கொ டுற்றவைசியன்மனை சார்ந்தான். (எ)

கண்டவைசிய னெழுந்தனன்கைகுவித் தடிகள்
கொண்டவென்மனைப் பாலெங்ஙன் குறுகினி ரென்ன
வண்டலாலொரு தோடமின்றெனக்குநீ யளித்த
பண்டமுற்றபாக் கியைக்கொளென்றுதவியிப் பகலில். (அ)

சாதுபூசனை புரிவதற்கியல்பதார்த் தங்கள்
யாதுமில்லையோ ராள்வசமமைத்தனுப் பென்றே
போதுவானென மறைதலும்புனிதவை சியன்று
ளேதுசாதனங் கொடுபிரசாதனில் லுற்றான். (கூ)

அன்னகாலைரா மப்பிரசாதனன் னவற்பார்த்
துன்னகங்கொளுங் கடன்றொகைமுற்றும்யா னொழித்த
பின்னருன்புடை பொருள்கள்கொள் வேனெனப்பேச
மன்னர்பின்னன்றன் மனத்தில்விம்மிதமரு வினனாய். (கo

என்னைதேவரீ ரிப்பொழுதென்மனைப் பாலாய்ப்
பொன்னையீந்துவந் திங்ஙனம்புகன்றனி ரென்சொற்
றன்னைநம்பலி ரென்னினீர்தந்திடும் பொருளும்
முன்னைகொண்டுவந் தறியக்காட்டுவனென மொழிந்து. (கக)

அன்னவண்ணமாற் றிடவமைந்தோரனை வோரு
மன்னகத்துளற் புதமிகவாய்ந்தனர் பத்தி
நன்னலம்பொலி மெய்ப்பிரசாதனுண் ணயந்திட்
டென்னருட்கட லாகுமிராமசந் திரனே. (கஉ)

தனிவில்பேரரு ளாற்செய்திட்டானெனச் சாற்றிக்
கனிதமின்றெழு பத்தியன்பரவசங் கலந்தென்
மணிநிறப்பெரு மானைக்கண்டனையென வழுத்தி
வணிகன்றுட்டுணை வணங்கினன்புகழ்ந்தனன் மகிழ்ந் தான். (கங)

ஆயவற்புதம் வினவியேவைசிய னகத்துண்
மேயபத்திமிக் கமைந்துபோகங்களில் விரத்தி
தோயமீடிரா மப்பிரசாதனற் றுணைத்தாட்
கேயதொண்டனு யமைந்தனனின்னவா றியனுள். (கசு)

தணிவில்பத்திமை சாலிராமப்பிர சாதன்
வணிகனுதிய சீடர்கடன்னுடன் மருவ
வணிகுலாவிய மிதிலைபுக்கமையருட் சீதை
பணிகொளாலயம் போற்றினன்பதியிடத் தமைநாள். (கரு)

அன்னநாட்டிறை யவனருட்டிறம்வினு யமைந்து
பன்னரும்பெரும் பத்தியிற்பணிபல வியற்ற
மன்னரண்மனைப் புடைசினுள்வதிந்தன னக்காற்
கொன்னமைந்தசீ தாகல்யாணோற்சவங் குறுக.  (கசு)

விண்ணுலாவிய தேவருங்கண்டகம் வியப்ப
நண்ணுமுற்சவத் தினைமிகச்சிறப்புற நடத்தி
யண்ணுசீர்மிதி லாபுரத்தாரைவை குந்தக்
கண்ணுளார்கொளு மின்பமெய்தினரெனக் கண்டு. (கஎ)

பத்திமான்மிய மவர்கொளப்போதனை பகர்ந்து
மெய்த்திறம்பெறு மன்முதலோரிடம் விடைபெற்
றொத்தியைந்தமா ணுக்கர்களுடனயோத் தியிற்புக்
கெய்த்திடாதிரா கவற்றுதித்தவன்பதத் தேய்ந்தான். (கஅ)

கதிகொள்சீரிரா மப்பிரசாதனைக் கண்டோர்
மிதிலைநாட்டிலிற் றையுமுளார்விரவுமிக் காதை
முதிர்சுவைப்பிற பாடைகொண்மொழிபெயர்ப் பன்றன்
றெதிர்கொள்காலத்தீர் தேர்வன்சந்திரதத்தன் யானே. (கக)

என்னவோதலிற் கலியுகத்தித்ததி தன்னின்
மன்னருட்கட வுட்டெரிசனமரு வாதென்
றின்னன்மிக்கிரங் கலிர்பத்திபுரியிலெவ் விதத்தும்
பன்னகப்பெரும் பாயலான்பதந்தரும் பாரீர். (உ௦)

வேறு

அயலார்தரும்பொற் றிரள்கொண்டு னன்பர்பூசை புரிந்தெவரு
மளியாக்காலம் பொருள்கடன்கொண் டாற்றத்தொகையா யிரமாக
நயமார்வணிகன் முன்கொள்கட னல்கிற்பொருண்மே லளிப்பனென
நண்ணுமிராமப் பிரசாத னல்லவடிவாச் சென்றவணங்
தயவாலளித்தா யெனக்குமங்ஙன் றரிலிவ்விகஞ்சா றுன்பமறத்
தவிர்ந்துன்பங்கே ருகச்சரணந் தனையேநாடிக் கசிந்துருகி
யியலானந்தப் பெருவாழ்வை யெய்துவேன்சற் றீந்தருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (உக)

இராமப்பிரசாதகதிமுற்றிற்று

ஆ. கவி கூ௩.கூச

---

தொண்ணூற்றெட்டாவது

## வருணவணகதி

இன்னவாறுயர் பத்தமான்மிய விதி காச
முன்னமைந்துள நாலிடைமுரண்படா வண்ண
மென்னகத்துண்மே வியவிராமானந்த விறைவன்
பொன்னடித்துணை கொடுவிரித்தோதினன் புவியீர். (க)

உற்றபத்தர்க ளிற்சிலரரியுட னைக்கம்
பெற்றபேர்சிலர் பிறங்குசாரூப்பிய ராகிக்
கொற்றமார்திரு மாலடிபோற்றிவை குந்தத்
திற்றழைத்துளா ராகும்வீண்பட்டவ ரின்றே. (உ)

தந்தையைப்புகழ் வதினுமங்கவன்றன்கா தலரை
விந்தைபெற்றிட விதந்திடின்மிக்கவன் னவற்றுச்
சிந்தையுடள வற்றவின்பெய்தலாந் திறம்போல்
வந்தைசேர்பத்தர் மான்மியந்தனைவகுத் திட்டேன். (ங)

அண்டமுற்றவு முண்டருளகண்டமா யவிருங்
கொண்டல்வண்ணன்றன் மாட்சிமை கூறமாட்டேற்கித்
தொண்டமைத்தது பெற்றவர்பொறியிலாச் சுதற்குக்
கொண்டதம்பொருண் முற்றளித்தளிப்பதொக் குமரோ. (ச)

அரசனன்பில ராயினுமன்னவன் றன்னைப்
பரசுமுத்தமச் சேவகர்பால்விசு வாசம்
விரவுவாரெனில் வேந்தனைக்காணலாம் விதிபோற்
சரதபத்தர்பத் திகொடுமாறரிசனஞ் சாரும். (ரு)

வானக்கண்ணியைந் திட்டமெய்ப்பத்தர்தம் வடிவ
மூனக்கண்கொடிந் நாளிற்காணுறமுடி யாதான்
ஞானக்கண்கொடு பார்க்குநற்றவமிலே னன்னோர்
மானக்கண்ணியம் வாய்கொடுதுதித்தனன் மன்னே. (சு)

வாக்குக்கெட்டிய வொருபொருண்மறுவலு முயலி
னேக்குக்கெட்டிடு மென்னமேலோர்நுவன்றதனு
லூக்குற்றேதின னிதற்கருளுதவிய பத்தர்
மீக்குற்றேவல்கொண் டெனக்கருள்புரிவர்கண் மெய்யே. (எ)

கொன்படைத்தவா ருயிர்தொறுங்கலந்துளே குறிக்கி
லின்பமீவதெப் பொருளதையிதயமேல் விளைத்து
முன்பமைந்திடச் செய்தலிற்பத்தர்தம் முதுசீ
ரன்பமைந்தகேள் வியர்கள்பினத்தகை யமைவார். (அ)

ஒத்தவெம்பவப் பிணியொழித்துறுமுயிர்த் திரளை
முத்தியங்கரை யெய்தவேணையவழி மொழிநூல்
கைத்தவன்மருந் தாஞ்சிரவணத்தினுங் களிப்பார்
பத்தமான்மிய முயிர்க்குறுமமுதமாம் பாரீர். (கூ)

கிரியைநூலினம் பிறபொருட்டேடுபு கிடக்கப்
புரியுஞானநூ லினமதிகாரநீர் பொருந்து
முரிமையாளர்கள் சிற்சிலபேர்கட்கே யுதவும்
பெரியபத்தமான் மியந்தருமனைவர்க்கும் பேறே (கo)

புண்ணியக்கதை யாமிதுபுகன்றிடு மிடத்தி
னண்ணிடத்தகு மநுமனுமொருவனே நான்மைக்
கண்ணியப்புரு டார்த்தமுந்தரு மெனிற் கருத்தி
லெண்ணியெண்ணியா னிசைப்பதென்னிதன்புக ழெடுத்தே (கக)

ஒலிகொடன்மமார்க் கங்கண்முற்றொழிதரு கடையாங்
கலியுகத்திற்பொய்க் கட்டுரைக்காதைகள் யாண்டு
மலிவமைந்துமெய்ப் புராணமாதியமறை யுமெனச்
சொலிபெரும்புகழ் வியாசன்பௌடியத்திற்சொற்றுளதால். (கஉ)

அன்னவாறவை யுணர்பவரரியராங் காலே
யின்னநூன்மந்த பக்குவமேய்ந்தவர் தமக்குங்
கன்னமார்பிருந் தாகிமேற்கதிவழி காட்டு
மென்னவோதுவ ரறிஞர்களுய்த்துணர்ந் தினிதே. (கங)

சாதுசற்சனர் தம்புகழாமிது நாரை
யோதுகாலேயி லாயினும்பத்திமாண் புளத்தின்
மீதுகொண்டுவந் திடப்புரிந்தேகிர மேணத்
தாதுதீர்கதி புகச்செயுமையமின் றம்மா. (கச)

உத்தமத்தகைப் பத்தமான்மியம்வின வுறுவோர்
சித்தமேனிணைத் திட்டவைமுடியுமுன் றிருமான்
மெத்தருட்பெருக் கால்விரைவினிலளித் துளத்தை
யொத்த *தேறிடு நீரெனவுணர்வினைத் தெளிக்கும். (கரு)

அனுமனற்கதிச் சிரவணமனைத்தையு மளிக்கு
முனும்விபீடணன் கதிபுலகந்தொழ வுஞற்றும்
பனுமெய்ச்சீர்ச்சப ரியின்கதிபத்திமிக் களிக்கு
மனுமசாமிளன் கதிகொடும்பவமற மாய்க்கும். (கசு)

உம்பர்தோய்சடா யுவின்கதியிராமனன் புதவு
மம்பரீடன்றன் காதையாபத்தெலா மகற்றும்
பம்புமெய்வி துரமங்கைசீர்ப்பிரேமபத் திதரு
நம்புசீர்க்குசே லன்கதிசெயுமிடி நாசம். (கஎ)

ஆய சந்திர காசன்சீர்சத்துரு வழிக்கு
மேயசீர்ச்சிபி மன்கதியெண்ணமுற் றீயுந்
தூயபாஞ்சாலி கதிசங்கடங்களைத் தொலைக்கு
மேயவான்மீகி கதியளித்தருளுமெய் ஞானம். (கஅ)

உருக்குமாங்கதன் கதிசர்வபாவமு மொழிக்குந்
தருக்கினன்மயூ ரத்துசன்கதிபத்தித் தாயாம்
பெருக்கமாபிர கலாதன்சீர்பந்தந்தீர் பேரின்
பருக்கனுக்குமே னையவுமித்தகையின வாமால் (ககூ)

* தேறு - தேற்றாங் கொட்டை.

ஆற்றுபத்தமான் மியமரிப்பிரீதியா குகவீ
தேற்றுமால்பிர சன்னனு யிலங்குக வென்றுஞ்
சாற்றுபத்தர்கள் யாருமென்மேலரு டதும்ப
போற்றுவேன்றவக் கந்தசாமிச்சுதன் புகழ்ந்தே. (உ௦)

வேறு

வினையாற்றடித்த பொய்யுடலை மெய்யென்றெண்ணி யவத்தோம்பி
வேடரெனப்போ தங்கவரும் வேடன்சேனைத் திரளிச்சைக்
கனைவாரியினுக் குவாவுறழ்நால் கழறிக்காலன் பதிபுகுந்து
கலங்குங்கொடியோர்க் கோராசாங் கடையேன்றன்னைச் சிறப்புற்ற
வனைகோடியர்நேர் போருளா லன்பர்புடைசேர்த் தரிபத்த
ரமலப்பெருமான் மியம்பகர்பே றளித்தபான்மை போற்சரணு
மெனையாதரப்பத் தரிலொருவ னென்னவிளங்கப் புரிந்தருளா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமானே. (உக)

வருணனைகதிமுற்றிற்று

ஆ கவி கூங அரு

---

## நூற்பயன்

பத்தமான் மியப்பெயர்கொண் டிலங்குமிந்த நூலைப்
பரிவினுடன் படிப்பவர்கேட் பவர்பலநன் மலரா
னித்தமருச் சித்திடுநன் னேயமுளோ ரெல்லா
நிலவுலகி லூரியசெல்வ நிறைந்துபிணி யிலரா
யொத்தமனை மக்கள்குழாஞ் சூழநிகழ்ந் ததனி
லுழலாதுத் தமத்தவஞ்செய் தொளிசெய்சித்தி யெய்திச்
சித்தமலந் தீர்ந்து பத முத்தியினு மேலாந்
திரும்பாமெய் வீட்டினிடை சேர்வதுநிச் சயமே.

## வாழ்த்து

பரந்தாமன் றிருவருளா லுலகமய லகன்று
பரமபுதம் புகுமேன்மைப் பாகவதர் வாழ்க
சுரந்தமுலைப் பசுக்கன்மழை யால்வருந்தா தோங்கல்
சுமந்தளித்த மால்வனசத் துணைப்பதங்கள் வாழ்க
தரந்திகழ்மெய்ச் சிரவணமா புரத்திலெனை யாட்கொள்
சற்குருராமானந்தன் றண்ணருட்சீர் வாழ்க
வுரந்திகழ்செந் தமிழ்ப்பத்தமான்மியநூல் வாழ்க
வுண்மையறு பூதியுட னுயர்தவம்வா ழியவே.

பக்தமான்மியநூன்முற்றுப்பெற்றது

## குருபாதமேகதி.



உ

குருவே துணை

# பக்தமான்மியத்தின்

# அநுபந்தம்

---

## பாயிரம்

### திருமால்துதி

திருமகள் குலவுமார்பச் செழுமுகி லனையமாயன்
பொருவின்மெய் யருளாம்வாசப் புதுமல ரடிகள்போற்றிக்
கெருவமில் லாமெஞ்ஞானங் கிளர்ந்தமெய்ப் பத்தர்மாட்சி
மருவநு பந்தமென்ன வகுத்திடத் துணிந்தேன்மாதோ. (க)

### நூற்காரணம்

சந்திரதத்தன்புகன்ற முதனூலின்படிதமிழிற் சாற்றுகென்ன
முந்தியுரைத்திட்டவுரை சிரமேற்கொண்டவனருளான் முடித்துப்பின்னு
மந்திரவித்தாகுமிராமானந்ததேசிகன்சின் மகிமைத்தொண்ட
ருந்தியசீர்க்கதையையநு பந்தமுறக்கூறுகென்றூங் குரைப்பனீதே. (உ)

### ஆக்கியோன்றுணிவு

முதனூலிற் சந்திரதத் தன்புகலா மையினன்
மொழியநுபந் தப்பிரிவின் முயங்குபத்த ரெல்லா
முதவாத்தன் மையரென்ன நீக்கியதன் றறிவி
லுதித்தவள வினில்வாணி யுதவியவா றுரைத்தா
னிதநாடு மன்புடையோ ருணரவின்னஞ் சில்லோர்
நிகழ்த்தினர்பல் பாடையில்யா னிறைதமிழிற் கூறிப்
பதவாரி சந்தருமெங் குருபரன்மெய்க் கருணை
பதியவிழைந் தனன்மேலோர் பாவியுவப் புறவே. (ங)

### அவையடக்கம்

தொண்டர் மெய்ப்புகழ் சொல்லின்முற் றுதென
விண்ட வெளவை வியன்மொழிக் கஞ்சிலேன்
கொண்ட மட்டினிற் கூறிய தன்பயன்
கண்ட மைந்து களிப்புறு மாசையேன். (ச)

ஆற்றினீ ரருந்தச்சென்றோ னறன்முழு தருந்தவேண்டுங்
கூற்றிலே தாகந்தீருங் குறிப்பறிந் திகத்தல்போல
வேற்றிணை தவிருமாயன் வியனருட் டொண்டர்காதை
சாற்றிடல் பந்தநீக்கஞ் சார்தரற் பொருட்டேயாமால். (ரு)

பாயிரமுற்றிற்று

குருபாதமேகதி

உ

குருவே துணை

# பக்தமான்மியவநுபந்தம்

முதலாவது

## போசலபாவாகதி

சூர்கொண்ட திகிரிசங்கங் குடிகொண்ட திருமின்மார்பி
லேர்கொண்ட கவுத்துபத்தோ டெழில்கொண்ட துளவப்பைந்தண்
டார்கொண்ட முகில்போன்மேனி தயைகொண்ட மனத்தர்போற்றுஞ்
சீர்கொண்ட திருமால்வாழுந் திருத்தலம் பலவவற்றுள். (க)

மால்காட்டு மனத்தினுக்கு மால்காட்டி மயக்கநீங்க
மேல்காட்டுந் தொண்டர்சால மேவுபண் டரிக்கணித்தாய்ச்
சேல்காட்டும் வாவிவாசஞ் செறியவாட் டயரேலத்தைம்
பால்காட்டுங் கற்புடைப்பெண் பால்காட்டும் பால்காட்டூரில். (உ)

பெருகுசீர் வேளாண்டொன்மைப் பெருங்குலத் தூடுவந்தார்
மருவுசத் தாப்பெனும்பேர் வாய்ந்தவிர் குடிவிளக்கும்
பருதிபோல் பவர்மாசில்லார் போசல பாவாவென்றும்
பொருவின்மாண் கோசிபோத லேயென்றும் புகல்பேர்கொண்டார். (ங)

சாதுவென் ரேதுநாமந் தனக்கிலக் கியச்சிறப்ப
ரோதுவா ரிதியோரேழு மொன்றுபட் டெனமால்பொற்றாண்
மீதுறு பத்திவாய்ந்தார் விளைநிலம் பொருண்மிக்குள்ளார்
கோதுதீர் மமதாயிப்பேர் கொளுங்கற்பு மனைவிவாய்ந்தார். (ச)

குணவயி ராகஞ்சாலக் குலவுமே மாசிநாம
மணவிய புதல்வன்றன்னை யரம்பையின் கன்றிலீந்தே
மணவினை புரிந்தாரொப்பின் மருகிசங் கரன்சிரத்திற்
புனர்பாகீ ரதித்திருப்பேர் புனைந்தியல் பமைந்துவாழ்வாள். (ரு)

பாண்டுரங் கன்பொற்றாளிற் பதித்துள மையன்முற்றுந்
தாண்டுமெய்த் தொண்டரேகா தசிதொறும் பண்டரிக்குக்
கூண்டுளா ரொடுசென்றின்பிற் குளிர்மதித் துண்டந்தோய்ந்து
வேண்டுசீர்ப் பாண்டுரங்க விட்டலற் புகழ்ந்துபாடி. (சு)

துவாதசித் தினத்தில்யாருந் துய்த்திட வுணவுநல்கி
யவாவினிற் பாண்டுரங்க னருள்விடை கொண்டுமீள்வர்
தவாதன்ப ரிவ்வாறுற்றுந் ததியினின் மாரியின்றி
விவாதபஞ் சத்தான்மாந்தர் வெதும்புறுந் தன்மைகண்டே. (எ)

கற்பணங் கனையாளோடு கழறுவர் மாதேமாந்தர்
பற்பலர் களுமுணின்றிப் பதைப்பநாஞ் சுகித்தனன்றோ
மற்படர் நேர்பஞ்சம்போம் வரைபகலிரவினந்தம்
மிற்படர்ந் திடுவார்யார்க்கு மிடுதியால் விருந்தென்றோத. (அ)

கணவனுர் மொழிக்குமாறு கருத்தினு முதித்தலில்லா
டணவரு முவகையோடு சார்ந்தவர்க் குடையூணல்கிக்
குணமுடன் வாழுநாளிற் குலவுதந் நிதிகள்குன்ற
வணவுதம் முடையூணுதி யனைத்தும்விற் றுற்றினுர்கள். (கூ)

மற்றவை களுந்தீர்வாக வரம்பில்பே ரருண்மெய்த்தொண்ட
ருற்றமெய் வருந்தவேலை யுஞற்றுபு கூலிகொண்டு
நற்றவத் தொண்டர்பூசை நலிவறச் செய்துவந்தார்
பற்றக லன்பர்செய்கை பாண்டுரங் கன்றெரிந்து. (கo)

கருணையாற் சேவைநல்கக் கண்டக மகிழ்ந்துபோற்றி
யிருபதஞ் சிரமேற்சூடி யின்பமெய் தினர்மறைந்தா
னருள்செறி தொண்டர்பின்ன ரணையொரே காதசிக்கண்
டிருவளர் பண்டரிக்குச் செலவுற்றுர் செலவுக்கற்றுர். (கக)

மனமெலி வுற்றுவிற்க மருவுமா டையுமற்றன்பர்
கனதுய ரடையக்கண்ட கற்பலர்ப் பொலங்கொம்பன்னுள்
வனமிசை விறகுகொண்டு வயங்குபண் டரிபுரத்தின்
கனமணி மாடவீதி களிற்புகுந் ததனைவிற்றே. (கஉ)

வந்தவற் றினைக்கொண்டன்பின் மகிணரோடிந்து பாகை
யுந்தறல் படிந்துசங்கற் பமோதுவே தியற்கோர்காசு
தந்தடி வணங்கிமால்பூ சனைக்கபீர் துழாய்பழங்க
டந்தகைக் கேற்பவாங்கித் தளியணைந் தருச்சித்தேத்தி. (கங)

பாண்டுரங் கவிட்டலப்பேர்ப் பகவனைத் தழுவித்தாழ்ந்து
மீண்டுள தொண்டரோடும் விரவியன் றிரவுமுற்று
மீண்டுபே ரன்பாலென்பு மிளகக்கீர்த் தனங்கள்பாடித்
தூண்டுமேழ் பரியோன்றேன்றுந் துணையினி னதியிற்றேய்ந்து. (கச)

வேறு

உடலினுலிரண்டாத் திகழ்மனைவியைப்பார்த் தோதுவர்காதலிவறுமைப்
படருறுவேம்யா மறையவர்பூசை பண்ணுமாறேதெனவிலதென்
மிடல்கொள்கற்புடைப்பெண் கொண்டவர்க்கென்ன விளம்புவேதத்திலக்காணு
ளுடன்மிகுங்காசு கொண்டரைச்சேர்மா வாங்கிவந்துடையர்பானல்க. (கரு)

பெற்றவாறு சுவைகொளுணயிலும் பிராமணர்நாமளித்திடுமிச்
சிற்றளவுடைய மாவினைக்கொள்ளச் சிந்தைசெய்வார்கொலென்றயர்ச்சி
யுற்றமைதருகா லிச்செயன்முழுது முணர்ந்தருள்விட்டலப்பெம்மான்
பற்றமைவிருத்த வேதியனுகிப் பத்தர்பால்வரவுளங்கொண்டான். (கசு)

நடக்குறுசென்னி மிசைபழம்பாகை நண்ணிடப்புனைந்துதண்டேன்றி
யுடுக்கையற்றரையிற் கோவணத்தோடென் றாழ்புகுங்குடைகொடுபைய
வடுத்தருட்டொண்டர் பாலிசைப்பானீ ரனந்தநாளென்மிடியறப்பொன்
கொடுத்துளீரதனை னுமதமுதயின்று குளிருமாசிகணுமக்கோதி. (கஎ)

ஈண்டுவாழ்தருகின் றேனிவணணைவா ரேவருமிலங்குடையணிகள்
பூண்டுளார்க்களிப்ப தன்றியேழைகளென் போன்றுளார்க்கிடுகிலர்சோறு
மேண்டுலங்குணவே தேனுநும்பாலொன் றிருந்துளதேலிடீரென்ன
மாண்டுலங்கன்பர் நமதுகைம்மாவை வாஞ்சையின்யார்வலிதிரப்பார். (கஅ)

பத்தவற்சலனு நீடருட்கடலாம் பாண்டுரங்கவிட்டலன்கொலெனுச்
சித்தமீதுன்னி நாணுபுதுகிலிற் சேர்ந்துளமாவைமாதவன்ற
னத்தமீதமைகந் தையிற்பெய்திட்டன்பா லங்கைகூப்பினரறைகின்று
ருத்தமவீதல் லதுபொருள்வேறென் றுதவவெங்கரத்திலையென்ன. (கக)

வருத்தமிக்கோதல் கேட்டருண்மறையோன் மனஞ்சலிக்கவிரமைந்ததனைத்
திருத்தமாரன்பி லளித்தனிரதனுற் றிருத்திமிக்கெய்தினனென்னத்
திருத்தகுதொண்ட ரிதனையெவ்வகைவார்த் திகங்கொள்வேதியருண்பாரெனத்தன்
கருத்தகத்துன்னுங் காலையாண்டுற்ற கபடவேதியனுரைக்கின்றான். (உ0)

சாலவும்வறியன் யானெனக்கிவ்வூர் தனின்மனையொன்றிலைபொதுவா
மாலயத்தமைப்பே மெனிலதிகார ரடிப்பரெற்றுரத்தியாதலினிப்
பாலமைத்திடுவே னிந்தனமெனக்குப் பரிவினீர்கொணர்ந்தளிக்குதிர்யான்
கோலசந்திரபா கையிற்குளித்திங்ஙன் குறுகுவனென்றகன்றிட்டான். (உக)

தூயமெய்த்தொண்ட ரிந்தனங்கொணர்ந்து சுல்லிமூட்டிடுதலுமறையோ
னேயமிக்கறலின் மூழ்குபுதுணியி னீர்வடிந்திடவவணடைந்து
பாயபேரருளி னுலடைதட்டப் பண்பதுதேர்ந்துருக்குமணி
மாயவன்சாய லொப்பவோர்விருத்த வடிவுகொண்டுடன்மிகநடுங்க. (உஉ)

அத்தமேற்றண்டு பிடித்துப்பைப்பைய வடைந்துநாயகன்செயலறிந்து
சித்தமேனகைகொண் டெனைப்பிரிந்திங்ஙன் சேர்ந்தடைசெய்வதெனென்றே
மெத்தவுங்களைத்தீர் நான்புரிந்துமக்கு விரைவினல்குவனெனமறையோ
னெத்ததன்மனைபா லளித்தருட்டொண்ட ருடனுறுகாலவர்நினைவார். (உ௩)

ஒருவர்க்குப்போதா மாவிதுபசிமிக் குற்றுளதம்பதியிருவர்
பருகிடச்சாலா தென்றவண்படர்ந்து பார்த்தலும்விருத்தவேதியன்றான்
றருமமிக்குடையீ ரெம்முடனீருந் தகநுகர்தரவணைதிரெனப்
பொருவருதொண்டர் புசித்துநீர்திருத்திபொருந்தில்யாம்புசித்ததாமென்றே

செழுமறையவர்நீர் புசித்தபினும்முச் சிட்டமீந்திடினுகர்வமெனப்
பழுதறுதொண்ட ரோதல்கேட்டுடன்செம் பாவையினோடுதானருந்த
விழுமியமுனிவர் சித்தராகாய வெளியினிற்றிரண்டுவிம்மிதராய்
வழுவறுமறையாற் றுதித்தியோகியர்தம் மனவெளியினிற்றுதைவாதன். ()

அழற்றுமென்றாழ்சுட் டிடப்பொடிமணலி லமுதுறழ்குதலையர்தீஞ்சொன்
மிழற்றுருக்குமணித் தாயுடனுப்பில் வெற்றடையட்டிணையறுதன்
கழற்றுணையன்பன் பொருட்டருந்தினனென் காட்சியீ தற்புதமெனவின்
குழற்றுணைவியரோ டண்டரும்விதந்து கூறியோகையிற்படிந்திட்டார். (௨௬)

அக்கணமமலன் றெண்டரங்கையி லடைகொடுத்துடன்மறைந்திடலு
மிக்கவர்பாண்டு ரங்கவிட்டலன்செய் வியன்விளையாடலென்றுணர்ந்து
புக்கநன்மனையோ டமலனுச்சிட்டம் புசித்தளவறுமகிழ்வடைந்து
தக்கவாலயத்தின் மருவியச்சுதன்பொற் றாட்டுணைதொழுதுசாற்றிடுவார். ()

பத்தவற்சலத யாநிதிதீன பந்துகோவிந்தபாண்டுரங்க
சத்தமாமறையுச் சியுமறிவரிய தத்துவதத்துவாதீத
பித்தனேன்பொருட்டான் மண்மகள்வருடுன் பிரசமாமலர்ப்பதஞ்சிவப்ப
மெத்தவும்விருத்த னுய்மிகவருந்தி மேயநின் னருட்கைமாறெதுவே. (௨௮)

பின்னையென்றொருபேர் கொண்டுலகினுக்கும் பிதாமகனுகியவயற்கு
மன்னையாய்த்திகழ்வாய் நினதுபஞ்சப்பு மம்புயமலர்மிசைவதிசெம்
பொன்னைநேர்பதங்கள் வருந்தவந்தடியேன் புசித்திடவடைபுரிந்தளித்தா
யென்னைநின்கருணை யிருந்தவாறனையா னென்புகன்றேத்துவனம்மா. ()

குளகிருதாதி யின்றியேழைமையேன் கொடுத்திடுமற்பமாவையருள்
வளமுடன்வலிதி லிரந்துவெற்றடையா வயக்கியுண்டகமகிழ்ந்தனிரோ
சளமுறுகொடியேன் மிசையமைந்துள நுந் தயாவையாதெனப்புகழ்வேனென்
றிளகுளத்தொண்டர் பலபடத்துதிக்கும் போதரியின்பமிக்கிசைக்கும். (௩0)

நிதிப்பெருக்கினரந் தணர்க்களித்திடுகா னேர்வதுண்டியானுமங்கவர்கண்
மதிக்கிலர்புறத்தெற் றாரத்துவரீது வாய்மைநீயுணர்தரவேண்டிற்
றுதித்தகையன்ப பின்வருகென்னத் தொடர்ந்தனரன்றொருசெல்வன்
விதிப்பிராமணர்க ளாயிரர்க்கின்று விருந்திடுவேனெனவிளம்ப. (௩௧)

சகத்திரமறையோர் மேவினரவர்க டம்முடன்விட்டலப்பெருமான்
மிகத்தளர்விருத்த வேதியன்வடிவாய் மேவிடமறையவர்யாரு
மகத்தினுளெண்ணி விடவிட்டலன்று ணுயிரத்தொன்றெனவுறலாற்
புகத்தகாயுனக்கீண் டிடுபவரில்லை போபுறத்தெனப்புகன்றிடலும். (௩௨)

எல்லையாயிரவே தியர்க்கமுதளிக்கு மிவ்விடையேழையென்னொருவற்
கில்லைகொலில்லை யென்றிடாதொருசற் றீயினும்போகுவனென்னக்
குல்லிமாலிகையா னேதல்கேட்டன்னக் கொடைசெய்வோனெண்ணின்மேலேழை
நல்லைநீயென்றுள் விடிலுன்போற்பலர்க ணண்ணுவர்போபுறத்தென்றான். ()

என்றிடவிறையாம் விருத்தன்யான்பசிமிக் கெய்த்துளனேகலனெனவாண்
டொன்றிலையின்பால் வன்புறவிருப்ப வுரியன்றனூழியர்க்கூவித்
துன்றிவன்றன்னைத் தண்டுகொண்டடித்துத் துரத்துமின்புறத்தெனவன்னோர்
நன்றியோர்சிறிது மின்றியத்தந்தா ணற்சிகைபிடித்துருமினராய். (௩௪)

தூக்கிவந்தயலி லிட்டனரகனுந் துணையில்வார்த்திகவடிவமைந்த
மாக்கிளருாத்த னயர்ந்துன்பப்பைய மாண்கோசிபோதலேபான்மேய்
நோக்கிடச்சண்ட மாருதமங்க ணுழைந்திலேகளின்மணனிறைத்து
மீக்கிளர்பந்தர்ச் சுழற்றுபுவல்லே வீற்றுவிற்றுழியெறிந்ததுவே. (௩௫)

கண்டனர்மறையோ ருண்டிலரெழுந்தார் கடுகியெண்டிசையினும்பாய்ந்தார்
தொண்டரொத்தணையு மண்டநாயகற்குச் சோறிடாதிடம்பமேற்கொண்டு
கண்டதுற்குணச்செல் வன்மனஞ்சாலக் கலங்கினனிருந்தனனக்காற்
பண்டரிநாதன் றெண்டரைநோக்கிப் பார்த்தியோவுலகியல்பென்று. (௩௬)

இடம்பமிக்கத்த முடையவர்க்கேவ லியற்றலல்லதுநின்போற்றீன
ரிடம்பரிவுடைய ருலகினின்றிதனை யெண்ணியேயுன்புடைவந்திட்
டிடம்படாவெறுமா வேற்றனனடைசுட் டுண்டனனெனல்விநுத்தொண்டர்
திடம்படுநினது மகிமையிற்றெனத்தேர் சிலர்யாரேயெனத்தொழுதார். (௩௭)

உருகினர்தொழுத தொண்டரைத்தழுவி யுத்தமசீபதிதிகட்குத்
தருகிலமன்ன மெனத்தளரலேபான் றகநுகர்ந்திட்டதெவ்வுயிரும்
பருகியவாகுந் தவத்துருவாசன் பசிமிகுந்துற்றகாலேயில்பான்
றுருபதன்மகளீந் திடுமிலேயருந்திச் சோகமாற்றியதறிந்திலேயோ. (௩௮)

உருசியைவேண்டு கின்றவனலன்யா னுத்தமர்பத்தியின்சுவையைப்
பருகுகின்றவனு தாரணமாகப் *பணித்துசன்விருந்தோரீஇவிதுரன்
றருமிலேக்கறியு மவன்மனையன்பிற் றந்திடுபுரணியுஞ்சபரி
யருளெச்சிற்கனியுந் துய்த்தனன்வறிய னல்லன்யானுனதுமா†வற்றால். (௩௯)

நீயளித்திடுமா நானருந்தலிலிந் நிலமலசருவலோகத்து
மேயவான்மாக்க ளனைத்துமுட்டிருத்தி மேயினவெனவிடையளிப்பத்
தூயவூர்புகுங்கால் வழியிடைமெத்தச் சோகதாகங்கொளல்சகியான்
மாயவனூருக்கு மணியுடனந்த வனத்திலோர்மனையமைத்தமைந்து. (௪0)

ததியடையமைத்துத் தொண்டர்முனன்பிற் சார்ந்துநீர்பண்டரிப்பானின்
றதிதளர்வுடன்வந் தீரெம்வீட்டிடைநும் மடித்துணைபடவெழுந்தருளித்
ததியடியேம்வீட் டருந்தினிர்பிரசா தந்தந்துபோதிரென்றேத
விதிபெறுந்தொண்ட ரிவண்மனையேது மேவுநர்யாவரேபன்னாள். (௪௧)

போதுநாமொருநா ளினுமறிகில்லேம் புதுமையீதெனவயிர்த்தணைந்து
மாதுடனயின்று சோகமாறுதலு மாயவன்மாயவனனன்
போதுமற்றதனி லெழுந்தருட்டொண்டர் போதுளாள்பதிசெயலுணர்ந்திட்
டேதுமொன்றறியேன் மீதினிநுங்கட் கித்தனைதயவிருந்ததுவே. (௪௨)

கொடியனேன் பவஞ்சா பவியமாயிற்றோர் குறையிலெனெனக்குதுகுலித்தே
நெடியவனருளைப் பலபடத்துதித்தார் நேர்ந்துதஞ்சோளக்கொல்லேயினைக்
கடிபுரிந்துற்றார் பறவைகடினனக் கண்டுமோட்டிலர்களித்தனரிப்
படியிலாருயிர்க டோறும்விட்டலன்றான் படிந்துளானெனப்பரிவுற்றே. (௪௩)

*பணித்துசன் - சர்ப்பக்கொடியுடைய துரியோதனன். †அற்று - அத்தன்மைத்து.

வந்திடுமாந்தர் தமக்கெலாங்கதிர்கள் வழங்கிவிட்டலற்றுதித்திருந்தா
*ரந்திலவ்வமையத் தில்லவளுண்கொண் டணைந்தன ளூட்டினளறைவாள்
பந்தியார்பறவை தின்றிடிலோட்டீர் படர்பவர்யாவர்க்குமீந்தீர்
புந்தியீரிங்ங னறஞ்செயின்மனையிற் புரிவதென்னிறைவற்கென்புகல்வாம்.

உதவலிரினிப்பாண் டுரங்கன்றனுணை யுண்டுமக்கென்றனளகல
வதரிடைபண்ட ரிச்செலவினர்க ளன்பர்பாலனுகிமுன்னெமக்கு
மிதமறுகொடைசெய் தனிருமைப்போன்ற மித்திராரெனவுமது
பதமிவண்மிதித்துத் தரிசனமளிக்கும் பாக்கியமமைந்தனவென்ன. (சரு)

பலபடத்துதித்து வணங்கினரன்னோர் பலருளோரந்தணன்கிட்டி
நலமிகவாசி புகன்றுவெம்பசியா னலிந்துளே ன்கதிர்சிறிதீயி
னலமரலொழிவே னென்றலும்புனித ராட்டிசொல்லோதலர்நுங்கைத்
தலமுறவேண்டல் கொண்டணைதிரெனச் சார்ந்தனர் யாவருமங்கே. (சசு)

எமக்குமீந்திடிற்புண் ணியமும்விட்டலன்ற னிணையில்பேரருளுமேன்மேலு
முமக்குறுமென்ன வவர்க்குநன்முகம னுரைத்துவேண்டுவகொண்மினென்னச்
சுமக்குமட்டுங்கொண் டேகினர்கரும்பின் சுவைகொடுவேருடன்கொள்வார்
தமக்குறழ்ந்தியல்கொல் லையிற்கதிரின்றித் தவ்வெனவியன்றிடவம்மா. (சஎ)

எதிரினிற்கண்டோ ரியாவரும்வியப்புற் றிவருளத்திகமயலொழிந்த
முதிர்தருவிரத்தி யுளரெனப்புகழ்ந்தார் மூடர்பற்பலருமிக்கிகழ்ந்தார்
பதிதருதொண்டர் மனைசுதனம்மைப் பழியுரைத்திடர்படுத்துவரென்
றுதிநினைவுடனிற் கேகலரங்ங னுறைதலுமகனவணணுகி. (சஅ)

வறிதுறுங்கொல்லை கண்டயர்ந்தொருபால் வதிதரக்கண்டவணணைந்து
சிறியநீயெதற்கே வருந்தினைவாழி தியாகமீந்ததுகுறித்திரங்கிற்
பறிகொடுத்தவன்போ லோர்பயனடையோம் பட்டும்யாம்பாவியாவோமோ
வறிவுசற்றில்லார் போன்றனையீக்க ளளிக்குந்தேனவையருந்துவவோ. (சசு)

பொருளினைப்புதைத்தீ கலருணர்காவற் பூதர்களல்லரோவதனுற்
பருவரலல்ல தவருடலுயிர்க்கோர் பயன்சிறிதுண்டுகொலநித்த
மருவியபொருளைத் தம்முயிர்த்துணையா வந்திடமதிக்குநர்திருமான்
மருமலர்ப்பதத்தொண் டன்பினரகட்டின் மாட்டிடுமெதியினரலரோ. (ருo)

வரங்கிளர்பெரும்பே றடைந்தபாக்கியனீ மகிழ்வதைவிட்டிருநிலத்திற்
றிரங்கிளர்பொன்னைப் புதைத்தும்வட்டியினுற் சேகரித்துந்தமதுயிர்க்கா
முரங்கிஞ்சித்தேனு முணர்கிலாதியானென் றுடலையெண்ணுநரெனவுணர்வற்
றிரங்கினைபொருட்சார் புடனுயிர்ச்சார்பி னிழப்பினுக்கிரங்குதன்மதியோ.

விட்டிதுபாண்டு ரங்கவிட்டலன்றன் வியனருட்டிருவுருவத்தை
நட்டிடுபரமா னந்தவாரிதியி னுமுழுகிடப்புரிந்திடுமா
லொட்டியவுடலின் பொருட்டினும்வேண்ட லூணுடைமற்றவைநமக்குக்
கிட்டிடுமெந்த வகையினுன்மைந்த கிலேசநீயுற்றிடல்கிளத்தாய். (ருஉ)

* அந்தில் - அவ்விடம்

எனப்பலதாதை யோதிடத்தெளிவுற் றிணையடிபணிந்தருண்மைந்தன்
வனப்பமையிற்பா லமையவேண்டினன்சம் மதித்துறமகன்மமதாயிக்
கினப்படுதாதை சாற்றுபதேச மிசைத்தலுந்தாயிறையாணை
யெனப்பகர்ந்திருந்தும் விட்டிலரீகை யீதிறம்பூதெனக்களித்தாள். (ருரு)

திருவமுதூட்டி யினியிறைக்கீயுந் தீர்வைக்கென்செய்வரென்றெண்ணிப்
பருவான்மிக்குற் றிருந்தனளதுகாற் படர்ந்துசேவகனியதிப்பொன்
றருதிரென்றுறுத்துக் கேட்டிடத்தொண்டர் தம்புடைவிராகன்மூன்றுளதை
மருவுமற்றவன்பா னல்கிப்பிற்றையினில் வழங்குவன்விராகனுன்கென்றே. ()

சேவகற்போக்கி யங்ககருற்ற செல்விநாகாயியர்தணிபொற்
காவலார்பேய்நாம் வறிதுபொன்னிதனைக் காத்துறிலொருபயனில்லை
பூவகத்தொருமா துருவுகொண்டிந்தப் புதையலுங்கொண்டணைவேமேன்
மேவலாம்வட்டி கொண்டுபொன்மேன்மே லும்பெருக்கிடுதலாமென்றே.(ருரு)

வந்ததுபோன்று ளூலோபத்தாற்றனக்கு மானுவரொருவரில்லாதா
ளந்தவந்தணிபா லடைந்துபொன்வட்டிக் களித்தியோர்நால்விராகனெனப்
பந்தமுற்றவ்வா றீகுவனீள படர்திரென்றுரைத்துடன்றன்கண்
முந்தமேவினரியா னரயுமவர்தரமென் மொழிதிரென்றுசாவினள்பலரும். ()

விரத்தனுயுலகி னிபல்பிலொட்டாது விளங்குபோசலைக்குநீகடனுத்
தரத்தகுபொருளின் றென்றுபோகாது சாற்றுமுன்னுயிரினிமற்றோர்
*புரத்தமைந்திடுகாற் றந்திடுஞ்சரதம் பொய்மையன்றென்றுநக்குரைப்ப
மரத்தகையவனெஞ் சிசைகிலனுற்றாள் வந்தனர்பிற்றைநாடொண்டர். (ருஎ)

களிப்பமைந்தம்மே பொன்றருகென்னக் கபடம்வைத் தொருவன்றன்கடன்
னளிப்பனென்றகன்றின் றடைந்திலனென்றா ளன்பர்போந்திற்கிசைத்தவ்வூர்
வெளிப்பதிவீரா ளாவணிகன்பான் மேவினரத்துணைப்போதூ
ருளிப்படர்மன்சே வகரிடந்துட்ட றுரைக்குவர்போசலபாவா. (ருஅ)

அரசிறையேமாற் றுதல்குறித்தூர்விட் டகன்றனனென்றுரைத்திடலும்
விரவுசேவகருட் சினந்துவீட்டுள்ளார் வெளிப்படாவணங்கதவடைத்துத்
திரவிலச்சினையிட் டனரிவையாவுந் தெரிந்தருட்பண்டரிநாதன்
பரவருளாலோர் வெட்டியானென்னும் படிவமைந்தரசனேவலர்பால். (ருகூ)

போசலபாவா தந்தனவென்னப் புகன்றுநால்விராகனீந்தொளித்தா
னுசறுதொண்டர் பொன்கடன்கொண்டே ரணைந்துசேவகர்புடையளிப்பத்
தேசவிருமது பொன்வெட்டியான்முன் றினத்தளித்தனனென்றார்வியந்து
வாசமாரிற்புக் கெவர்வெட்டியான்பால் வழங்கினர்பொன்னெனவினவ. (கூ0)

யாந்தந்ததிலையென் றனைவருமுரைத்தா ரிதயமேல்விம்மிதராகிப்
போந்தவெட்டியானை வினவயானறியேன் புதுமையீதெனப்பொனென்பொருட்டா
லீந்தவர்யாரே யென்றுளத்துன்னி யிணையில்பாண்டரெங்கவிட்டலன்கொ
லேந்தலன்னவனல் லாதுநம்மீதி லிரங்கிபார்பொன்னளித்திடுவார். (கூக)

---

* புரம்-சரீரம்.

விரவுமென்பொருட்டால் வெட்டியானுயு மேவினையேகொல்பாண்டுரங்க
பிரமருத்திராதி கட்குமேலான பிரபுபத்தவற்சலவாத
பரமதயாள வேழையென்பொருட்டாற் பாவரீசப்படிவெடுத்துச்
சிரமமிக்குறநிற் கமைந்ததேயென்னச் சிலம்பினின்றுமுகருவியென. (௬௨)

விழிகணீர்பொழிய வயர்ந்திடும்போழ்தில் விட்டலன்றேன்றலுந்தொண்டர்
செழியமென்மலர்த்தா டொழத்திருக்கரத்தாற் றாக்குபுதழுவ வுமக்காற்
கழிமகிழ்வமைந்து வினவுவருனக்குக் கனவிராகன்கிடைத்துளசீர்
மொழிதியென்றலுநிற் கீகுவனென்று மோசஞ்செய்தாள்பொருளென்றுன். ()

கடாவிடுமென்பர் கேட்டனர்நகைத்துக் காரணமிப்படிக்கொல்லோ, நடா வினையந்தோ வேழைபார்ப்பனிதன் னுணயமேன்களவயர்ந்தா, யடாதவள் பொன்கொண் டிடல்பொருளீந்தியா னகற்றுவனின்களவென்னக், கொடாது மக்கொளித்தாள் பொன்னெலாநீர்பொன் கொடுக்கில்யானுழிப்பனென்றமலன். (௬௪)

ஓதலுந்தொண்ட ரச்சமிக்கமைந்தா ருடனரியன்பருணுடையற்
றேதமிக்குழப்ப ரென்றுகொல்லையின்பா விறுங்குநல்விளைவுறவருளி
மாதவனகன்றுன் மற்றதுகண்ட மாந்தர்கணனிவியந்தழிந்து
போதருமிறுங்கிவ் வகைவிளைந்ததுமன் புதுமையேபோசலபாவா. (௬௫)

சிலையினைக்குடையாக் கொண்டருள்பகவன் றிருவருட்பெருக்கமைவுற்ற
நிலையினரென்னப் பலபடவிதந்து நிகழ்த்தினர்மற்றவர்மனைப்பான்
மலைநிகரெனத்தா னியங்களுங்கடல்போன் மலிகளஞ்சியங்களுநிறைய
வுலைவறுதொண்ட ரெதிரணைவார்கட் குதவினர்புயனிரையொல்க. (௬௬)

அன்னபின்சோளக் கொல்லையைக்காவ லாற்றுபுவிட்டலனுமங்
தன்னமுமிடைய ருதுருவேற்றித் தழைக்குநாளிவர்க்கம்மான்முகத
மென்னவோதிடுபே ருடையவன்கொல்லை யிவர்நிலத்துக்கணித்துற்ற
தன்னகொல்லையினைக் காக்குமோர்தெரிவை யாசியென்றிடும்பெயரமைந்தாள்.

உரியவக்குடிகண் காணியாயென்று மோம்புவாளுற்றவங்காளி
லரியசீர்முகத மனையுடன்வான மடையமுன்னினுமுரித்தமைந்து
தெரிவைபேணினளக் காலவனீன்ற செல்வர்துன்மார்க்கராய்க்குடும்ப
விரிவிவகார நோக்கமற்றவராய் வீணராய்மானமற்றிருந்தார். (௬அ)

ஆயவர்க்கனையொத் தவிர்வுறுமாசி யரிபெயரல்லுடன்பகலு
நேயமிக்கறைவாள் போசலபாவா நிகழ்த்திடுகீர்த்தனங்கேட்க
மேயபேரன்பிற் றினமருகமைவாண் மிக்கபேரன்பமைந்தொருநாட்
டேயவர்திருமுன் னடைந்தடிவணங்கிச் சொல்லுவளுன்பாதீனே. (௬௯)

ஆயினுமாயன் பதத்துணையடையு மாவண்மிக்கமைந்துளனதனுற்
றூயினுமினியீர் தாமுபதேசஞ் சாற்றுதல்வேண்டுமென்றிரப்பத்
தூயியலன்பர் மானிடர்க்கடிமை தோயிவண்மாலடியடைய
வாயின்முற்றுவதோ கேட்டவட்கோர்சொ லறைந்திடாதகற்றலும்பிழையாங்

எனமனத்தாய்ந்து நீயரியுருவை யிருதயத்தமைத்தரி தினமாங்
கனமுறுமேகா தசிதொறுமென்னிற் கலந்தரிநாமங்கேளுடையார்
மனதுவப்புறவே விடைதரப்பெற்று மருவின்மாலடிகொள்வாயென்ன
வனகர்பொன்னடிதாழ்ந் தில்லமைந்தரிதா ளயர்வறக்கருதித்தொண்டாற்றி.

அரிதினத்துபவா சஞ்சிதைவின்றி யன்றிரவாண்டைபர்விடைகொண்
டுரியதொண்டரினில் லணைந்தடியவர்தா ளுவந்துதாழ்ந்தரிபுகழ்வினவிப்
பரிவினேகாத சித்தினந்தோறும் பயின்றனளுணர்ந்திதுமாய
புரியினின்றணைந்து பலர்வினவிடுவர் பொருந்துநாளோர்தினந்தன்னில். ()

வளமிகுமாய புரத்தினின்றன்பர் மனைகொள்வார்பலர்களிலொருவற்
றளர்வுறவுரகந் தீண்டிடமரித்தான் சார்ந்துளார்போசலபாவா
சளமறவரிநன் னுமமோர்நான்கு சாமமுஞ்சாற்றிடுமாண்பாற்
பளகறவிவனைப் பிழைத்திடச்செயுங்கொல் பார்த்துமென்றெடுத்தவணடைந்தார்

பொருவின்மெய்த்தொண்ட ரருகமைத்தாவி பொருந்துநன்போலிருத்தினரா
யருளரிநாமம் வினவினரிருந்தா ராயபோழ்தன்பர்பாண்டுரங்க
னருமைநன்னும மமிழ்தின்மிக்கினிமை யமைந்துளதாலனைவருநும்
பருவரலொழியக் கைபுடைத்தன்பிற் பகர்மினென்றிடச்சொனார்பலரும். ()

மற்றிவனேதான் கைபுடைத்தில்லான் வறிதிருந்தனனெனவோத
வெற்றிசாலன்பர் பிணமெனல்குறியார் விரைந்தருகடுத்திசைக்கின்றார்
பெற்றிடற்கரிய பிறவியீதமையப் பெற்றவர்க்கரிபெயரோதி
நற்றிருக்கரங்கள் புடைத்திலிற்பெரிதொன் றில்லைநீ*நவிற்றுதியென்றார். ()

தன்றிருத்தொண்டர் சவத்தினைநாமஞ் சாற்றெனவிசைத்தலையங்க
னொன்றினருடன்கேட் டுறுமரிவறிதுற் றிடிற்சவமென்னடியார்க்கு
மென்றிருப்பெயர்க்கும் பிழைபுறுமென்ன விறையிலன்னவற்பிழைப்பிக்க
நன்றிருகைகொட் டுபெயரோதி நடனமாற்றினனன்பருடனே. (எகூ)

கண்டவர்யாரும் பரவசமருவிக் கைபுடைத்தாடினர்மெய்தேர்
தொண்டரானந்த மிக்கடியேன்சொற் சோர்வுறுவகைபுரந்தனையோ
பண்டரிநாத பரமதயாள பத்தவற்சலவெனப்பகர்ந்து
கண்டரவின்பப் புனன்மனமென்பு கரைதரக்கீர்த்தனம்பாடி. (எள)

அலரிசிழ்க்கடலி லுதிக்கவிட்டலனுக் காரதிபுரிந்தனைவோர்க்கு
நலமுறப்பிரசா தம்வழங்கிடலு நனிமகிழ்ந்தமைந்தவர்பலரு
முலகையுத்தரிப்பான் மாயவனேயிவ் வுருவுகொடுற்றனனென்ன
வலகறத்தொண்டர் தமைப்புகழ்ந்தேத்தியணிகொடம்பதிதொறுமமைந்தார்.

வருடமூன்றிவ்வா றெழிதாமுகத மைந்தர்பங்கிடநினைத்தாசி
பொருவர்தங்களிற்கொண் டிடச்சகியார்வேற்றாருளார்க்களித்திடத்துணியப்
பருவரன்மிகக்கொண் டாசிபோசலபா வாவிடமச்செயல்பகர்ந்து
தருமோர்பிதாயா தாகுருதெய்வந் தமையலாற்பிறிதிலையெனக்கே. (எகூ)

---

*நவிற்றுதல் - சொல்லல், செய்தல்.

சேண்படுநகரத் தவற்கெனைவிற்கிற் சிறந்தவேகாதசிதோறு
மாண்படுமன்ப ரோடுவந்தும்மை வழிபடற்கிசைவுறுததனல்
வீண்படுமிதுநாள் காறுநானுற்றும் விரதமுமெனதுசென்மமுமீ
ரேண்படுவிராக னிருபதோடைந்தீந் தெனைப்பெற்றுக்கொள்ளுதிரென்றே.

உமதடைக்கலம்யா னெனவிழிகளினீ ருகுத்தனளோவெனவிரங்க
வமலமெய்த்தொண்ட ராக்கையாண்டுறினு மாவதென்விட்டலன்றிருத்தாட்
கமலநெஞ்சகத்தி லமைத்தனையின்பங் கலந்துவாழ்குதியெனக்கழற
வமரரிற்சிறந்தீர் நுமைப்பிறிந்திடுதற் காற்றலனகமெனவயர்ந்தாள். (அக)

அருணிறைதொண்ட ரென்செய்வாங்கோடற் கத்தநம்பாலிலையென்றுட்
பருவரல்கொடுநங் கொல்லைவிற்றேனும் பாவையின்றுயரொழிப்பமெனக்
கருதியஞ்சலைசெல் லெனமனங்களித்தூர் கலந்தனளன்பர்பின்சென்று
மருவுமைத்துனர்பா லாசியைவிலைக்கு வழங்குதிரெனவிருவரையும். (அஉ)

தனித்தனிவினவத் துட்டர்களுறவாத் தழைத்தவர்க்களித்திடேமேனை
மனித்தருக்களிப்போ மெத்தனைபொன்னீர் வழங்கினுமீகலமென்றார்
நுனித்தவர்சொற்கேட் டாசிதன்விதியை நொந்தகத்தோர்புடைபுறுகாற்
றுனித்தமெய்ப் புகழா ருணர்ந்துநீசற்றுந் துயரலையென்றுளாரறிய. (அங)

விலைகொடுத்துன்னை வாங்கிடத்துதித்து விடுவன்விட்டலனையென்றிடுவார்
சொலைபுணர்ந்தாசி மகிழ்ந்தனளக்காற் றுட்டர்களிவர்துதிக்கிரங்கி
யலைகடற்றுயில்வோன் வருமுனம்பிறருக் களித்திடத்துருவினரந்த
நிலையினில்விராகன் றருபவன்கிடைப்ப நேர்ந்தனராசியையவற்கே. (அச)

ஆசியக்காலை தன்னுளம்பதைப்புற் றறைகுவளருட்கடலாமென்
றேசிகர்மாற்றம்பிழைபடாதென்னச் சிந்தையினம்பினனிருந்தே
னீசிறிதின்னந் தாழ்க்கினின்னடியார் நிந்தையேற்றிடவரும்பிணத்தைப்
பேசிடப்புரிந்த கீர்த்தியும்பொன்றும் பெற்றிநீயறிகிலதன்றே. (அரு)

ஆதிமூலப்பே ரோதியானையின்முன் னடைந்தனைதுரோபதைபொருட்டா
னீதியற்றிடுபாழ்ங் கவுரவர்சபைப்பா னேர்ந்தனையானிரைவருந்தும்
போதினில்வரையைக் குடையெனக்கொண்டு புரந்தனையுனைச்சரண்புகுமென்
மீதிலித்தனைப ராமுகமென்னே விமலபாண்டுரங்கவிடோபா. (அகூ)

எனவியாகுலமிக் காசிபற்பலவா றேத்திடவிரங்கிவிட்டலனோர்
பனவனும்வடிவுற் றவ்வயினடைந்து பலர்களும்பார்க்கநின்குரவர்
மனதுவந்துன்னை யழைத்துறச்சொன்னார் வருதியென்றலுமவள்வணங்கத்
தனயைதாயோடு விட்டலன்மறைந்து தன்பதத்தவரைவைத்திட்டான். ()

ஆசியைத்தனயை யோடுவிட்டலன்ற னருட்பதத்தமைத்தமைகண்டு
மாசின்மெய்த்தொண்டர்ப் பழித்தனரவர்தம் மகிமைதேர்ந்தனர்மிகவியந்தார்
தாசியாக்கொள்வான் பொற்றிரண்முகதந் தனயருக்கீந்தவனெனக்குத்
தேசிகமாசி யிரண்டிலொன்றளித்திர் சீக்கிரத்தெனவழக்கிடலும். (அஅ)

உனக்கியாம்பொன்னு மாசியுமுதவோ மொப்புவித்தெங்கடனெழிந்தோ
நினக்கினியாசி வேண்டுமேலழைத்து நீங்கும்போசலையிடமேவிக்
கனத்தவா திடுதி யென்னவர்த்தகன்முன் கண்டிலார்தம்புடையெவ்வா
*றனத்தவாசகமோ துவனெனநியாய மாடினன்றொண்டர்தேர்ந்துவந்தார். ()

பற்றகலன்ப ரானபோசலபா வாமொழிபயன்படப்பதகர்
குற்றடிமையெனத் திகழுமாசியைச்சால் குமாரியினேடுகொனகந்தோய்
நற்றவர்க்கரிதாந் தன்பதமெய்த நல்கினனெனிலியற்பத்தி
பெற்றமான்மியமும் பாண்டுரங்கேசன் பேரருட்பெருக்குமோதுவவோ.(கூ0)

வேறு

போதுநாளிலம் மாநகர்மருவொர் புலையனுடொறும் போந்தருளன்பர்
கோதுதீர்பதந் தொழுதிடும்விரதங் கொண்டுளாருெருதினம்பணிந்தடியேன்
மீதுபோருள் வைத்துபதேசம் விளம்பவேண்டுமென் றிரப்பயானூர்க்கு
மோதினேனிலை யுரைப்பவர்தம்பா லுறுதியென்றிடவுளங்கனிந்திசைப்பான்

பாண்டுரங்கவிட் டலப்பெருமான்மெய்ப் பத்தருட்பெரி துத்தமராகு
மாண்டுலங்குதா மறுத்திடில்யானூ் மாட்டடைந்திசைப் பேன்மனதிரங்க
வேண்டுமென்றலுந் தொண்டர்விட்டலன்றான் விடைதரிற்புரி வேனென
விளம்பித் தூண்டுறுச்சுடர் விளக்குறழ்மனத்துட் டுதித்துவேண்டிடத்
தோன்றிமால்சொல்வான். (கூஉ)

அன்புமெய்யறி வோடருட்குருப்பா லளவிலாவிசு வாசநல்விரத்தி
புன்புலப்பகை யாதியசிலம் பொருந்தினூர்களே பொருவருஞ்சீடர்
துன்புகல்குபே ராசைகட்காமந் தொடர்ந்தபொய்கொலை களவிரங்காமை
பொன்புரைந்ததேசிகன்மொழிபிறர்க்குப் புகலுவோரிகழ் புகழ்மதித்துழல்வோர்.

ஆதியாயமா சினருபதேச மடைந்திடற்கதி காரிகளல்லர்
கோதினூன்றிறங் காணநீயிச்சை கொள்ளிற்கூறிடு வேனொருபாயந்
தீதினீபுழு மெருத்தையின்னவனைச் செற்றுநல்கெனச் செப்பியன்னதையின்
மீதிலேய்ந்துளா ரொடுபுசித்திதனை வேறெவர்க்குநீவிளம்பிடலென்றே. ()

வற்புறுத்தியோ தினைபிறகவன்சீர் மதித்துத்தேரென வழுத்திடும்பகவன்
சொற்புலத்திடை மேவலுந்தொண்டர் துடித்துக்கைகளிற் றுணைச்செவிபுதைத்துப்
பொற்புமிக்கநின் வாய்கொடிச்சொற்றூன் புகல்வதேதுக்கூன் புசித்தல்யானேதுக்
கற்புதச்செய லீதெனவுலகை யருந்தும்வாய்கொண்மா லறைந்திடுகின்றூன்.

பகருமென்மொழிப் படிபுரிபாவம் பழியுனக்குறு தெனப்பகர்ந்தைதிற்
பகவன்மின்னென மறைந்தனன்றொண்டர்பகர்ந்தவாறவன் றனைக்கொடுபுரிந்தே
நிகழுமிச்செய லகத்தனைத்தாயே னியெனக்குநற் சீடனென்றேதிப்
பகலவன்மறை தலுமினத்தார்க்கூப்ப் பரிவிலுண்டிடும்படிவிருந்திட்டார்.

---

* அனத்தம்-பயனின்மை.

மிசையுமன்னவர் தகரெனமதித்திவ் விதமின்னேன்செயல் வியப்பென வகன்று, ரிசையுமேல்வையிற் றெண்டரப்புலைய னெய்தக்கூவிநீ யென்புதோலாதி, வசையுறுதுநங் கொல்லையிற்புதைத்து வாவென்றேதவவ் வண்ணஞ் செய்திட்டின், மிசையடைந்தவன் விடிதலும்விடையூன் மிசைந்துளோர் கடம் வீட்டினுட் சென்றான். (கூஎ)

ஆண்டுளாரறிந் தேதுவன்புலைய னகத்துள்வந்தன னச்சமற்றென்னக்
கூண்டுவெஞ்சின மிக்கெம்வீட்டிடைநீ குறுகலாகுங்கொ லோவெனவினவக்
கோண்டுதைந்தநெஞ் சினனெமக்குமக்குக் குலவும்பேதமென்கூறுதிர்நென்னன்
மாண்டுலங்கியற் போசலபாவாமாட்டிறைச்சியை மகிழ்ந்தருந்தினிரே. (கூஅ)

என்றபோதவ னியைந்தவரன்பரியற்றுவார்கொல்பொய் யிவன்சொலலென்றார்
சென்றணைந்தவ ரெருதிலையென்னச் செப்பநெஞ்சகந் தியங்குபுபலரு
நன்றணைந்துகாண் குதுமெனச்செல்வார் நவின்றிடும்புலை யன்றனைநோக்கி
யின்றறைந்தநின் சொற்பிழைத்திடுமே லேற்றதண்டஞ்செய் திடுவம்யாமெனலும்.

பிசகுறுதுமெய் காட்டுவனென்றான் பெரிதுள்வெஞ்சினம் பெற்றவராகி
நிசமுறிற்கொடும் போசலைதனைப்பொய்ந் நிந்தையாகிலிந் நீசனையேமன்
வசமளிப்பமென் றுயுதங்கொண்டு மருவினாது காலையிலன்பா
ரசலமொத்திரு விழிகண்மூடினரா யச்சுதற்றியா னித்தனரடியர். (க00)

கதத்தொடேகினர் போசலபாவா கண்டிறத்திநிற் கைக்கொளெம் படையா, லதப்படுத்திட வந்தனமென்ன வன்பர்தாம்விழி யாதரியுடனிவ், விதத்தவத்தையெற் களித்தனையிவர்க்கென் விளம்புவேனென, வினவியுற் றூரப், பதத்தின் மேவினர் புலையநின்சொன்மெய்ப் படுத்துமுன்னெனக் கடுத்துரைத்திடலும். (க0க)

காட்டின்மேவினன் புதைத்தவற்றையவர் காணமேலிடக் கலந்ததோலாதி
யாட்டின்மேனியி லமைந்தனவாக வாவதைப்புலை யன்மனந்திகைத்துக்
*கோட்டியங்கொடு நிற்றலும்பொய்மைகூறுமின்னவற் கொன்மினென்றுரைப்பத்
தாட்டிகங்கொள்வோர் சிலர்மறுத்தறபந் தாழ்மின்போசலைசாரிடத்தடைந்தே.

விடையிருப்பது தெரிந்தவனுயிர்க்கு விடைகொடப்பமென் றணைந்து நோக்கலுமஃ, தடைதல்கண்டன ருட்சினந்தேட வகத்துளோர்சிறி தச்ச மற்றெம்மிற், புடையடைந்தனை பொய்புமோதினைநிற் புலைக்குணத்துடன் றொலைக்குதுமெனக்கைப், படையொடண்டுமக் காலையிற்புலையன் பத்தர்பாற் சென்ற பயமெனவீழ்ந்தான். (க0௩)

ஆயசெய்கைகண் டடனருட்டொண்ட ரணைந்துளோர்களை யமைவுறச் செய்ய, மேயபேர்தொழு தெம்பிழைபொறுக்க வேண்டுமென்றன்பில் விளம்பிவீட்டடைந்தார், மாயனத்ததி யன்பருட்டோன்றி மறங்கொள்வஞ் சனீர் தெரிந்தனைகொலெனத், தூயர்நின்னரு ளாடவின்புதுமைத் தொகைக் கெண்ணின்றெனச் சொல்லுபுதுதித்தார். (க0ச)

* கோட்டியம் - அதிசயம்.

எருதைக் கொன்றது மதனுடற்றசைதன் னினத்தரோடுதின் றதும் புலீசன், கெருவச்செய்கையு மினத்தர்தஞ்செயலுங் கிளருமேடத்தி னங்க மங்குறலும், பருவரற்கொள்போ சலப்பெயர்த்தொண்டர் படர்மனைக்கணவ் வெருதிருந்ததுவுங், குருவுஞ்சீடனு மல்லவரியலுங் குறிப்பைக்காட்டமால் குயிற்றுகூத்தாமே. (௧0௫)

ஓரெறும்பினைக் கொன்றிடின்மேலா முத்தமக்கதி யுதவுவனென்ன, நேரிலீசன்வந் துரைக்கினுங்கொலையா னிகழுமுத்தியெந் தமக்குவேண்டா மென், றுருமஞ்சிடப் பகர்ந்துமெய்த்தவஞ்செ யருட்குணக்கவு மாரர்பாலி விதச், சீருரைத்திடான் றுசமார்க்கத்தின் றிரத்திற்கேற்பவிச் செய்கை யாற்றினனே. (௧0௬)

தாசமார்க்கமென் பதுகவுமாரத் தன்மையோர்க்கிலை யென்பதுதவறு
மாசகன்றுள மார்க்கமோர்நான்கு மமைந்தநிச்சய வநுபவநிலையே
பாசமுற்றவர் தெரியினுநெருங்கிப் பற்றவெட்டிடாப் பண்பினதாகுந்
தேசவிர்ந்தநற் குருபதத்தன்பு சிறக்கவாற்றுமெய்த் தீரர்சொந்தமதே. (௧0௭)

எமதுசற்குரு நாதனுயுலகில் யாவுமா மிரா மா ன ந் த மு னி வ ன்
கமலபாதமெய்த் துணையெனுமுண்மைக் கருத்தமைந்தகௌ மாரர்கள்பலரு
முமலவாதனை தவிர்கதியடைய முன்னியேகொலை புலையிஞ்சைதவிர்நல்
விமலநோன்புகொண் டுரியகங்கணங்கை மிசைதரித்திடல் விழுமியதாமே.

ஆட்டினூனெனிற் குற்றமின்றெருதி னுகவூனெனி லருந்தொணுதென்கை
காட்டினுள்ளவர் கூறும்வீண்கதையா நாடுமெவ்வுடற் றசையுமெவ்விதத்தும்
வீட்டினும்பெருங் காட்டினுங்கோயில் வேள்விச்சாலையா தியவிடங்களினு
நீட்டியுண்பது சிறிதுமாகாது நிரயவாசலஃ தெனுந்தமிழ்மறையே. (௧0௯)

ஆதலாற்பாண்டு ரங்கவிட்டலன்ற னருள்வசப்படு போசலப்பெரியர்
போதநாரண னசைத்தவாறசைந்தார் புணர்ப்பனைத்துமப்புனிதர்சம்மதமன்
றீதமைந்தசான் றெனக்கொடுபிணவூ னினிதருந்திட வெண்ணமுறேன்மின்
பாதகக்கொலை புலையுடனிஞ்சை பண்ணுவோர்தவம் பாழ்படுநிசமே. (௧௧0)

வேறு

நிறைபுமன்பர்துதி கேட்டருண்மாய னீடுவப்பொடவர் நெஞ்சிலொளித்தான், பறையனத்தினமு தற்கொடுணிப் பத்தர்முன்வருப முக்கமொழிந்தா, னுறைபுநாளின்மழை குன்றிடுபண்பா லுற்றவாண்டினில்வி தைத்திலர்யாரு, முறைகொள்பின்வருட மோர்மழைபெய்ய முதுவர்மைந்தன்விதை முற்றும் விதைத்தான். (௧௧௧)

வேறு

விதைத்திடபினேமழைமி குத்திடலினலுற்ற விதைகண்முழுதழுகலாக
வதைத்தெரியுமன்பர்விதை வேறுகடன்வாங்கின ரமைந்தனரநாளிலங்ஙன்
கதைத்தொனிமிகுத்திலகு பண்டரிசெலன்பர்கள் கலந்திடமெயன்பரன்பாற்
சுதைத்தகையதுத்தியம்வி ளம்பினர்பணிந்தருள்கொ டேர்வரலெந்தவமெனு.

ஆனபொழுதங்கமையு மன்பரிலொரந்தணர்மெ யன்பமைதனுற்றதூயீர்
வானவளமற்றவிது டோதிலெமைமுன்காத்த வண்ணமருள்வைத்தளிப்பீர்
தீனரெமைநீரலது காக்குநலமுற்றவர் செகத்திலிலையாருமென்னத்
தானளவிறுதியோது போதவர்கண்மீதுமிகு தயவுமருவுற்றனர்நலோர். ()

தனியிடமடைந்துசுத னைக்கூவியன்பர்க டளர்ச்சியுடனெய்தினர்க,
ணனியவர்களுக்குதவ வொருபொருணமனையிலிலைநாளை வித்திடும்விதையலா,
லினிதனைதயளித்திடவெ னுளம்வலித்தனனினதொ ரெண்ணமென்னிசைவு
கொல்லோ, கனியுயிரினிலனுறவி தைத்துநாமளவற்ற கட்டமார்தொழில்
புரியிலே. (ககச)

நம்மதுமுயற்சியள வானசிறுபயனையது நல்குமுபர்பாண்டரங்கன்
செம்மலர்ப்பதமனதி லகலாததொண்டராஞ் சேதனரகட்டமைக்கி
னம்மவோநாம்வறி திருக்கினுந்தாமாக வமையுமிருமைப்பயன்கண்
மம்மரறவன்பர்கணம் வித்தையிக்கணமே வழங்கனல மெனல்வினவி. (ககரு)

வாழையடிவாழையென வருமறத்துறைமரபில் வந்துதித்தருளுமைந்
தன், கோழையொருசிறிதுளங் கொண்டிடான்மகிழ்வொடு கொடுத்தனல
மென்னநீண்ட, தாழையெனவேருண்ட நீரினைப்பின்றமது தலையாலளிக்கு
மன்பர், மாழைபொருமனமுடைய ரீகும்விதையேற்றனர் மகிழ்ந்தாசிசொற்
றேகலும். (ககசா)

அன்பர்பின்பொருவனிட மேகிவிதைகடனு வளிக்குதியெனக்கேட்பவவ்
வன்பனிலையென்னுதி வர்க்களிக்கிற்கடன் வராதெனவுளத்திலெண்ணிக்
கொன்பரவுபேய்ப்பரங் கிக்காயின்வித்தைக் கொடுப்பவாங்கினர்விதைத்தார்
பின்பவைகள்காய்த்திடக் கண்டவர்கள்யாவரும் பேயனெனமிக்கிகழ்ந்தே.

இந்நகரினிற்றலைமை யாகினவரிவரென்ன வெய்திடுதிறத்தர்யார்க்குந்
தன்னகமிசைப்பொருள்க ளிலவாயுமின்றெனச் சரதமோதவுமமைகிலா
னன்னர்விதையாதிகளு நல்கினனினித்தன்மனை நண்ணிலெதையேயீகுவான்
மன்னவறமாற்றினர்கண் முன்பலிருந்தனரிவ் வண்ணமவர்செய்திலரோ.

இவைகளையுமெற்குதவி டென்றொருவன்வரிலவற் கீகுவானிவனில்லற
நவையலதொர்பயனெய்த லுண்டுகொல்லோவென நவின்றனர்சிறுளொழிந்து
சுவையறுபரங்கிதனை நாடுதுமெனுவவர்கள் சூழ்ந்தனர்புனத்தின்மேவிக்
குவைகள்படுகாய்நிரையுளொன்றுகொடுநோக்கவுட்கோதுமைநிரம்பல்கண்டு.

நகமானகுடைகொண்டு கோப்புரந்திடுபாண்டு ரங்கனருளீதெனத்தம்
மகமேல்வியந்தவர்க ளாகிநகர்மேவிடுமொ ரதிகாரிவயினளிப்பத்
தகவீதுமன்னற் குணர்த்திடுவனின்றெனத் தானெழுதினன்றெரித்தா
னிகமாகமத்துறையு ளோராவவிந்தகுல நிருபனிஃதறிந்துவந்தே. (கஉ0)

அவிர்பாண்டுரங்கவிட் டலனடியனைக்கடி தழைத்திரிவணெனவொற்றர் பா, னவில்போதிலவர்கொண் டணைந்திடக்கண்டுட னராதிபனென்வகை சொல்லெனப், புவிமாதுகொண்கனன் பினர்தேர்கிலேன்யான்மெய் புதுமை யிதையென்னமன்னன், கவினீடுதொண்டர்தமை வஞ்சனெனவேதன் கருத் துட்டுணிந்திதுசெய்வான். (கஉக)

நன்றிவனைநம்மதுகு லத்தினிலமைப்பனென நாடியுடனுமாமிசஞ் சொன்றியுடனேயமைத் துண்ணுதியெனுவருட் டொண்டர்முனம்வைத்தபோதி லொன்றியவைமாயனரு ளான்மலர்துழாயாக வுற்றசெயல்கண்டவித்தன் றுன்றிவர்பகிரெனத் தன்னுட்பகிரொன் றுணுக்குடன்வியன்றுதைந்தே. ()

தெண்டனிட்டென்னுவு மக்காகவேண்டுவது செப்பிலுடனல்குவனெ னத், தொண்டரொன்றும்வேண்டி லேன்விடையளித்திடிற்றேய்வனெனி டத்தென்னலும், வண்டனுள்வியந்தடிவ ணங்கிவிடைநல்கமனை வந்தறிவின் மூடர்தாமும், பண்டரியிறைக்கடிமை யாமாறுமகிமைசால் பற்பலாடல்களி யற்றி. (கஉஙு)

வேறு

மாதராதலத் தவமெனவாய்ந்தமான் கோசி
போதலேயெனப் புகன்றிடும்போசல பாவா
மாதரார்மனை சேய்மருகியினுடன் மாயன்
பாததாமரை மேவினர்பொய்ப்பவம் பாற்றி. (கஉச)

வேறு

வெறுமாவளிக்க வுருப்பிணித்தாய் வெய்யிலிடத்தி லடைபுரிந்து
மேவுமவர்தா கந்தணிப்பான் வியனூர்தண்ணீர்ப் பந்தர்வைத்து
முறுகாவலற்கு வெட்டியா ளுருவங்கொண்டு திறையீந்து
முரகங்கடிக்க மாய்ந்தானை யுயிர்ப்பித்தாசி தனைப்புகன்முன்
குறுகாவழைத்துந் தினுமெருதுகுலவும்விளையாட் டிசைத்தும்விள்ளக்
கூடாமகிமைத் திரளருண்மாண் கோசிபோத லேபாற்செய்
திறுவாய்பெறநின் பதத்தமைத்தா யினியாற்றிடினிற்றடுப்பாரா
ரிராமானந்தப் பெயர்கொடேன திதயத்திலங்கும் பெருமாளே. (கஉரு)

போசலபாவாகதிமுற்றிற்று

ஆகூ கவி கஙo

இரண்டாவது

# பெரியதாசகதி

தாரதலம்புகழ்பாண்டு ரங்கவிட்டலனருட் சாகரத்திடைபடிந்தே
பராவுநற்கதிகொள்போ சலநாமமுறுநலப் பத்தர்மெய்க்கதையுரைத்தேன்
விராவுசீர்த்தஞ்சையிடை யவதரித்தளவிறிரு விளையாடலாற்றியன்பா
லராவணையினிற்றுயிலு மாயனன்பமைபெரியதாசர்சீ ரறைகுவேனே. (க)

மருமலர்ப்பொழில்குலவு தஞ்சைமாநகரத்தில் வளவணிகர்தங்குலத்தி
லருமைநற்குணமிசைகொள் சேசாசலஞ்செட்டி யார்பகிரதிநாமமார்
திருவணையமனைவிபுட னில்லறநடத்தியத் தேயத்தையாட்சிபுரியு
நிருபன்மன்னூர்நாயு டாமவனிடத்திலே நிகழ்சராப்பதிகாரியாய். (உ)

சீரம்பலசெய்து திகழ்நாளிலச்சுதன் றிருவருளினலிகத்திற்
சாரனைவரும்பத்தி மார்க்கநிலையறிதரவோர் தனயன்செனித்தருளின
னீரறுதினத்தவற் குப்பெரியர்சொற்படி யியற்பெரியசாமியென்னும்
பேரமைதரச்சூட்டி யேதானதன்மங்கள் பிரபலமுறச்செய்தானே. (ங)

ஐந்தகவையெய்துகாற் பள்ளியிலமைத்தனவ ரும்பெரியசாமிகொண்ட
சுந்தரமுறுண்ணறிவு நோக்கினர்வியந்திடத் தூயமனமோடுமற்றைப்
பந்தமுறுபாலரொ டிபைந்திடானுடிடான் பரிசுத்தசாதுவென்ன
மைந்தனையெதிர்ந்தவர்கள் யாவருநுவன்றிடமெய் வளர்கல்வியிற்சிறந்தே. ()

நவிறருமிளம்பருவ மகலாமுனவன்மனதி னரசிங்கமூர்த்திவடிவங்
கவினுறவிளங்கிடக் கண்டளப்பருஈகக் கடலினிடைமூழ்கினனைப்
புவியின்மிசைதோய்பிறக்க ளறியாதுகுடமுட் பொதிந்தசுடரொத்திலகின
னிவிதநிகழ்நாடந்த தாதைவார்த்திகபருவ மெய்தலின்மெய்வலியொழிந்தே.

மாதவச்சேயையரு கேகூவியப்பனே மைந்தாவெனதுசடலம்
போதவுந்துற்பலம டைந்ததாலொருதொழில் புரிந்திடற்கிசையவில்லை
யாதலினெனுத்தியோ கத்தைநீபாரென் றறைந்திடமறுத்தோதலாற்
காதலனுடன்சிறிது ளேடிநீபோகாத காரணமுரைத்தியென்ன. (சு)

மைந்தனென்றேதுகிலன் வறிதமைதாத்தந்தை மனமொத்தவாசெய்திடே
விந்தனையதந்தைசொலின் மிக்கமந்திரமொன்று மில்லையெனுநூலினங்கள்
சந்தமுறுமென்மொழி கடந்துநீசெய்வதெது சாற்றிடுதிமுன்னுளினிற்
பந்தமறுபரசுரா மன்றந்தைவார்த்தைபரி பாலனஞ்செய்திட்டனன். (எ)

சீராமனுந்தசா தன்மொழிபுரந்தழிவில் சீர்த்திமருவுற்றனனிதை
யோராதபேரெவர்க ணீமெத்தநூலின முணர்ந்துளாய்க்கோதன்மிகையே
தாராளமாகவு னுளக்கருத்துள்ளபடி சாற்றுதியெனச்சொல்கின்றான்
சீராருமுத்தமோத் தமமாய்விளங்குமுயர் சேவகத்தைத்துறந்தே. (அ)

அற்பர்களிடத்துதர வாதையினிமித்தமவ ராளாகிவாழன்மாபன்
றற்பவமறுத்தருளு நாராயணன்றெண்டி லுயர்வுடையதொன்றில்லையா
னற்பகவனுக்குற்ற தொண்டனுய்மனதையவ னுண்மலர்த்தாளில்வைத்தே
விற்பனமிருக்குமன் னவனருட்காதைகளே வினவிபவனைத்துதித்து. (கூ)

மெய்யன்பர்கூட்டத் தமைந்தவன்றிருநாம மிகவோதனுவின்பயன்
றுய்யவன்றெரிசனங் கண்ணுடன்மனங்கொளத் தூயமலர்கொண்டுபோற்றி
மெய்யமையுமங்கமோவ் வொன்றினுமவன்றெண்டு மிகவேயிபற்றிலென்று
மையலறுபேரின்ப வாரிதியின்மூழ்கிடுதல் வாய்க்குமானிடர்செயலிதே. (கூ0)

இகபரமிரண்டினிலு மின்பமிகநல்குபணி யிதனைக்கைவிட்டுவறிதே
சகமிசைதருக்கொடு கொடுங்கோல்செலுத்திடு தாரபதிபற்காளாகவென்
னகமிசைகிலேனென்னு மைந்தன்மொழிகொடுதாதையளவறமகிழ்ந்துசொல்வான்
சுகனிகரெனதுகுமா நம்மரபினுக்குற்ற தொழிலேனுமுயலுதியெனு. (கூக)

பலவிதப்படுவளைய லின்குலஞ்சேகரம் பண்ணுபுகடைத்தெருக்கண்
ணுலகியல்வியாபார நீத்தானைவைக்கவவ னெண்டொடியிலாதமடவார்
பலர்களையுமருகுறக் கூவிவலிதிட்டுற்ற பரிசொன்றும்வினவிலானு
யிலகுகடைதனைவறிது செய்தான்மலாபத்தை யெய்துவழிபார்க்குமோதும்.

பரமசாதுக்களே நமதுயிர்க்கெய்துபல பருவரற்றிரள்கண்மாய்க்குந்
தாணியிடைபெறலரும் பேருனமானிடச் சன்மமுற்றூர்கள்புரியுந்
திரமானவர்த்தகமி தாகுமோர்நட்டமுஞ் சேராதுகிட்டரியதா
முராமேவிரத்தினநா ராயணப்பெயர்கொ டுள்ளரத்தினமாகுமால். (கூ௩)

திரிலோகசஞ்சாரி யாகுநாரதமுனிவர் சிந்தையுளமைத்துநாளும்
பரிவோடுபாராய ணம்புரியிரத்தினம் பாசபந்தங்களைந்தே
விரிவானசிற்சுகத் துட்டோயிரத்தினநன் மேருவில்லேந்துமொருவன்
கிரியரையன்மகளோடு எங்கொளுமிரத்தினங் கேட்கினுஞ்சுகமளிக்கும். ()

பாமரர்களுக்கரிதி ராமரத்தினமுற்ற பத்தர்கட்கெளியதாகுங்
காமமதமாச்சரிய மோகவிருளற்றிடக் கண்டிக்குமெண்ணிடுதொறுஞ்
சேமமிகநல்கிடுங் கோபாலரத்தினஞ் சீலநற்குணபத்தர்கா
ளுமரத்தினமிதனை விலையிலாதுங்கண்மன நல்கிக்கொடேகுதிரோ. (கூரு)

கொண்டுபின்செந்தா மரைக்கண்ணும்வாரியறல் கொண்டகொண்டலைநிகர்க்குந்
தண்டுளவலங்கலுங் கௌத்துவாபரணமொளிர் தடமார்பிடத்தின் மின்போன்
மண்டுசுந்தரமிலகி லக்குமியும்வன்சிலையை மாதுருவமாக்குதாளுந்
தண்டுமுதலைம்படை தரித்திடுகரத்தொடுட்டங்கவைத்தேத்துவீரால். (கூசு)

என்றுபலவிதபோத மியாவர்க்குமோதினரிருக்கவிருமுதுகுரவர்தா
நன்றுபொலிசுதனிலைமை கண்டுளம் வருத்தமொடு நம்போதமேற்கிலானு
யொன்றுமனவழியோடு மிவனைநம்புபொரு ளுலப்பிலவொழித்தனமிவன்
றுன்றுநகர்மேயவர் பலர்க்கும்வறிதீந்துபொரு டொலைவுற்றசெயலுநினையான்

கோபாலராமநா ராயணவிரத்தினங் கொள்ளுதிர்களென்றிருந்தா
னுபாலனிவன்வர்த்த கஞ்செய்யினம்பொரு ளனைத்துங்தொலைந்திடமினேற்
பூபாலனிடமுத்தி யோகத்திருத்திடுதல் புந்தியெனவெண்ணுபுபலோர்ச்
சோபானமுறமைந்த னுக்கேற்றபோதனை சொலப்புரிந்தனர்வினவியே. (கஅ)

தந்தைதாய்நற்பணி புரிந்துதந்தந்தைசெப் சராப்புத்தியோகமும்வகித்
திந்தையுதவிதயங்கொண் மாயனைத்தன்னுளத் திடையறச்சிந்தைசெய்தே
நிந்தையறவாழுநா ளொன்றிலவர்பரியின்மிசை நிருபனிடமேவுகாலை
விந்தைபெறுசிறுவர்கெச் சைக்காயினுடல்கள் விளைத்திருந்தனர்வீதியில். ()

அன்னகாயொன்றிவர்செல் குதிரைக்குரத்திடை யணைந்ததுதெரித்தகலலுங்
கொன்னமையுமைந்தர்கள் கொதித்தளவினிந்தைமொழி கூறினாடிக்கமுயல்கா
னன்னகரினிற்குலவும் யாதவவிரங்கனவ ணனிவிரைந்தெய்துபுமகா
ரின்னலுடனேடத் துரத்தியிவரருகே யிசைந்துபுனைநாமமோர்ந்து. (உ௦)

இவர்பெரியதாசரென விம்மிதமுடன்றெழு திருக்கயாதவராங்கனைத்
தவர்திருத்தொண்டரிவர் தெரிசனநமக்குற றபோபலமெனத்துதித்தே
யுவகையுடனவனைப் பணிந்துதமதுடைமையற வுற்றவன்றேற்குதவியே
பவமறுத்தாளரி கடாட்சமெற்கெய்தியது பாக்கியமெனப்பரிந்து. (உக)

பார்த்திபனேர்கொலுவினுக் கேகாதுபூவினிடை பட்டை நாமந்தரித்தே
யார்த்தியொடுநேர்குலவி னையெல்லாம்பொருவி லரியடியரென்றடுத்துப்
பூர்த்திபெறுமன்பினொடு தெண்டனிட்டவர்பணி புரிந்துவருவார்கோமக
னேர்த்திபெறுமுத்தியோ கத்தையன்றேடொழிய நீத்தரிதனிபமேவி. ()

இடையீடறத்துதிசெய் தானந்தவாரிதிபி னிடைமூழ்கிவீற்றிருப்பார்
நடைதேர்ந்துதாய்தந்தை வாட்டமொடுதாசர்பா னண்ணியழுதனரிரங்கப்
புடைமேவுமன்னவர்க் கோதிடுவரென்னைநம் புத்திரனெனக்கருத்தி
னிடைநாடிவீண்டுயர மெற்றுக்கடைந்தனிர்க ளேதுசுகமிதனிலந்தோ. ()

தூலசூக்குமகார ணங்களெனமூன்றுடல்க டோய்ந்திடுமெவர்க்குமவையுட்
சாலநீர்நும்மைந்த னென்றுகொண்டழலெச் சரக்கதனைநாடியவையிற்
றேலத்தியாகிடும் வினைச்சடமிதனையென்று சொல்லுதிர்களாயினிதனுன்
ஞாலமேலெப்பயனை யீதுமக்குத்தருமெய் ஞானசூனியர்கேண்மினோ. (உச)

தந்தைதாயார்மைந்த னர்பந்துவாரிவைகள் சகசாலமாகுமெற்றேய்
விந்தையார்கனவிதனை மெய்யென்றுநம்பாதிர் வெறுமாயையீதாகுமான்
முந்தைதோய்கனவினுக் கிதுகனவதாகுமேன் மொழிவதெதைநனவாகநா
நிந்தைதோய்வாழ்வின்மயங்காதிர்காண்பவைக ணீர்க்குமிழிபோலுமாதோ

காயநிலையன்றென்கை கண்கூடமெற்றிதைக் கண்டறிந்துந்தொலைவிலா
மாயமுறுசமுசார விர்த்திசெய்தேமிகு மதோன்மத்தராயவமுயன்
றேயபொருள்சிலவற்றை யென்னதெனுமமகார மெய்துபுசெருக்கிமாரன்
சாயகமதாற்றளர்ந் தற்பசுகநாடிவனி தையர்மையல்வலையிலுற்றே. (உசு)

தொட்டிடிற்ளுடங்கை விட்டிடிற்கதியொன்று தொல்லுலகிலில்லையென்றே
மட்டிறுன்புடனிலவு பொன்னென்றுமண்ணென்றுமைபல்கொடகங்கரப்பேய்
கெட்டியுறவேபற் றிடப்பிள்ளைகட்கென்று கிளர்நிதியமீட்டியீட்டி
வட்டிகொடுபெருகப் புரிந்தியமன்வருகாலை மற்றெருர் துணைகாண்கிலாராய்.

வாயுலர்ந்தந்தோ மடிந்துநிரயத்தினிடை மல்லாந்துபின்னுமாயைப்
பேயுலகமீதாக்கை கொண்டிறப்பாரிவர் பிறப்பிறப்பெல்லையினவோ
வோயுமனமுற்றவர்களுக்கலான்மற்றவர்களுக்குணரவொண்ணுதிதை
நீயிர்களுளத்தோர்ந்து மேலேனுமரிபத நினைத்தடைதிரென்றூதியே. (உஅ)

சற்றசைகிலாதுவரை குற்றசித்திரநிகர் சமாதியிடைமைந்தனமையப்
பெற்றவர்கள்சுதனேது ஞானமார்க்கத்தினிலை பெற்றசிந்தையராகியே
கொற்றமுறுதம்மனத் திற்குதிகொளுலகியற் குப்பைகளைமுற்றெருவியே
யற்றவர்களுக்கற்ற நாராயணன்பத மமைத்ததிலமைந்தாரரோ. (உகூ)

வேறு

இத்தகைபெரிய தாசர்தாநிகழ்நா ளியனகர்மேயபற்பலரும்
பித்தனென்றிகழ்ந்தார் மற்றிவரவரைப் பேயரென்றுன்னினரிருந்தா
ரொத்தமைநாளங் நாட்டுமன்மன்னர் நாயுடுவோர்தினத்தவைதோய்
வித்தகருடனு ரணன்கொள்வைகுந்த மேயதூரஞ்சொன்மினென்றான். (௩௦)

பொறியுரங்குலவு நாரணனுண்மை *பொறியினுலுணர்ந்ததையன்றி
யறிவினிலறியா வெம்மையன்னவனூ ரளவுகேட்டிடிற்சொல்வதாமோ
நெறிபெறுநான்கு வேதவுச்சியுமா னிலைதெரிந்துரைத்திலவென்று
னறியவன்னவன்மன் மங்களைப்பிரம ஞானிகளன்றியார்காண்பார். (௩க)

அத்தகையரைவி னுவிடிலறிய லாமெனவற்றருட்டகையா
ருத்தமர்த்தெரிவீ ரென்னிலியானுணர வுரைத்திரென்றிடவுயருண்மைச்
சித்தமைபெரிய தாசரையல்லாற் செகத்திந்நாளில்லையென்றிடலும்
பித்தனுமன்சே வகருடனவரைப் பிடித்திவணடைதிரென்றேத. (௩உ)

விரைந்துசென்றுடன்சே கவர்களாலயத்தில் விண்டுவின்றுணையடிகருதிக்
கரைந்துருகுளத்தோ டமைதருதாசர்க் கண்டுநுந்தமைமன்பல்லியங்க
ளிரைந்ததன்சபைப்பாற் றம்மினென்றெம்மை யேவினனுதலினெஞ்சொல்
வரைந்திடாதொல்லை வருதிரென்றழைப்ப மகிமைசாருசர்சாற்றிடுவார். ()

சருவசங்கபரித் தியாகியாய்மால்பொற் சரண்சரணுயமைவேன்யா
னிருபனுலெனக்கொன் றிலையெனைக்கொண்டு நிருபற்கோர்காரியமில்லை
மருவிடேன்யான்பா மரர்கடம்மவைக்கு வந்தவாபோமினீரென்ன
விருகமன்னவர்க டாசர்கைப்பற்றி வேந்தவையணையவிட்டிடலும். (௩ச)

மன்னவன்வணங்கி யுடனெராசனத்தின் மன்னிடத்தாசரையிருத்திப்
பொன்னமையுரத்தன் றிருவருட்செல்வம் பொருந்தினீரெனப்பலபுகழ்ந்து
பன்னகசயன னுகுமாலமைந்த பரபதமானவைகுந்தந்
துன்னலாந்தூர மித்தனையென்னச் சொல்லிடவேண்டுமென்றிரப்ப. (௩ரு)

* பொறி-யெழுத்து.

அரையனதுரைகேட் டலுமரிதாச ரானந்தமிக்குரைத்திடுவார்
திரைபொருவாவி யிடைகராப்பிடித்த சிந்துரமழைத்தலும்வந்தான்
கரையறுதுயர்கொண் டழைத்தபாஞ்சாலி கவின்றுகில்வளர்தாப்புரிந்தா
னுரைதருசெயலாற் கூப்பிடுந்தூரத் துள்ளதுவைகுந்தமென்றார். (௩௬)

வினவியவேந்த னுவகைவாரிதியில் வீழ்ந்துதன்மேற்கொள்பொற்றூனை
யனகர்மீதினிலிட் டித்தகைஞான மடைதல்பானெவ்வகைகூற்கொள்
கனங்கர்மேனி யானையெவ்விதத்திற் காண்பனுகிலும்பெரிதல்ல
வினயமிக்கமைவார் கீர்த்தனங்கொண்டு விண்டுதாளெய்தலாமென்ன. (௩௭)

தன்னுளங்கொண்டு மன்னவன்பெரிய தாசரைநாடினன்சொல்வான்
கொன்னுறுபெரியீ ரும்மியற்றிருவாய் கொண்டென்மூதாதையேமுதலா
மன்னுமென்குலத்தார் நலம்பெறவென்மேன் மாநகர்ச்சிறப்புமிக்கமைத்துப்
பன்னுதிர்சிலபாட் டென்றுவேண்டுதலும் பார்த்திபற்குரைக்குவர்தாசர். ()

தாரணிதனக்கோர் தாரணிந்தென்னத் தழைத்திடுதஞ்சையினிறைபா
ஞாசிங்கத்தைப் புகழ்ந்துபோற்றிடுமென் னுக்கியவூர்ச்சிங்கமாகுந்
தூரணுநின்னைப் பாடிடாதென்னச் சூழ்ந்துளார்பலர்களுங்கேட்ப
வீரசிங்கத்தி விசைத்தனர்கேட்டு வேந்தனுள்வெகுட்சிகொண்டுற்றான். ()

அன்னகாலையிலாண் டுற்றவந்தணர்க டாசர்மேலசூயைகொண்டவரா
யின்னபோழ்தேநம் முளங்கொள்வைரத்தை யீருறப்புரிந்திவன்றன்னை
மன்னவமானம் படப்புரிவமெனு மதித்துமன்னனைப்புகழ்ந்திசைப்பா
ரின்னவன்பட்டை நாமமிட்டவர்க ளிழிந்தபஞ்சமர்களேயெனினும். (௪0)

மற்றவர்மிசைப்பா டிடுவன்றம்மனைய மண்டலாதிபர்தமைப்பாடான்
பற்றவுங்கெருவி யென்னவோதலுநீர்ப் பரவையார்வடவைபிற்கொதித்துக்
கொற்றவன்பெரிய தாசரைமுன்னங் கொணர்ந்திடச்சேவகர்க்கோதக்
குற்றமாராசி யம்பலபுரிந்து கொம்மெனக்கழுதைமுற்கொணர்ந்து. (௪௧)

நண்ணுமக்கழுதைக் குடம்பெலாம்பட்டை நாமமிட்டனருடனதனைக்
கண்ணுறுதாசர் வணங்கினரச்சீர் கண்டமன்வறியகர்த்தபமொன்
றண்ணுறப்புரிந்தான் றாசர்தாம்வாளாங் கமையமன்னவனடமூடா
வெண்ணுறுகழுதை யிதையடிபணியா தேன்வறிதிருந்தனையென்றான். (௪௨)

தாசர்கேட்டறைவா ரடகுட்டிச்சுவரே சார்ந்தவாலேயஞ்சூனியமார்
நீசநின்போல்வ தாகையாலதையென் னிகரில்கைதொழுதிடாதென்னப்
பேசல்கேட்டலுமன் பெருஞ்சினங்கொண்டு பெரிதவர்தமைத்துயர்படுத்திக்
கூசலற்றுடன்கா ராக்கிரகத்துட் குறுகுவித்திலச்சினையிட்டான். (௪௩)

நாரணுவென்ன வோதினருடனே நரகரிகோயிலிலவிர்ந்தார்
கோரமன்னுடன்கா வலர்களைக்கூவிக் கொதித்துநான்கதவினைமூடி
வீரவென்குறிவைத் திருப்பவன்னவன்றான் வெளிப்படலெற்றெனவினவத்
தீரமன்பூட்டாங் கமைந்ததன்னவன்போந் திறமறிகின்றிலமென்றார். (௪௪)

அன்னவன்மிக்க மந்திரவாதி யாமெனவரைக்கணத்தவனைக்
கொன்னமைதருமென் முன்னுறக்கட்டிக் கொண்டுவாருங்களென்றோதிப்
பன்னரும்படைகொண் டடுமினென்றேதப் பாவிகளவ்வணம்படுப்ப
வின்னலொன்றின்றித் தாசர்நாரணன்ற ளேத்தினரின்பமிக்கிருந்தார். (௪௫)

எப்படையாலு மூறுசற்றடையா திருந்திடக்கண்டமன்வெகுண்டு
மைப்பருவதநேர் யானைகடம்மை மகிமைதோய்தாசர்மேனடத்தத்
துப்பவிர்தாசர் நாரசிங்கத்தைத் தோத்திரித்தனரவருருவங்
கைப்பகடுகள்கண் கட்கரியேருக் காணலாற்சாலவுங்கலங்கி. (௪௬)

எண்டிசைச்கரிக டாமுமிக்கஞ்ச விரிந்தனதிசைதொறுமதனைக்
கண்டிறையான ஞானசூனியன்மெய்க் கண்பெறுதாசரைவேங்கை
மண்டியபெட்ட கத்தினுட்செலுத்த மற்றதுதொண்டரைக்கண்டே
யண்டிடற்கஞ்சி யாற்றிடப்புறஞ்செய் தறனிறைதடத்தினுள்ளழுத்த. (௪௭)

ஏவினன்றூதர் பலவிசைபுனலுள் ளியைதரவழுத்தியுமமிழார்
மேவியசுரைபோன் மிதந்திடத்தூதர் மெய்சலித்திறையுடன்விளம்பி
யாவிபோம்படிபா டாணநஞ்சயில்வித் தவயவங்களையெலாங்கட்டி
யோவிடச்சிலையும் பிணித்தெறிந்தெம்மை யுறுசனியொழிந்ததென்றகன்றே.

வேந்தனுக்குரைத்துச் சென்றனரக்கான் மேலவர்மாயனைப்போற்றி
யாந்தடப்புனன்மேன் மிதந்திடக்கண்டா ரதிசயித்தாசனுக்கறைந்தார்
பாந்தளிற்கொடிய பாதகனமைச்சர்ப் பார்த்திசைப்பானிந்தப்பாவி
நாந்தகப்புரியுந் தண்டமுற்றடைந்து நலிவுசற்றெய்திலனந்தோ. (௪௯)

அங்கமெத்தவும்பூ ரிப்படைகின்ற தானனமழகமைகிறதால்
கிங்கார்துயர்செய் காலையும்விழியிற் கிஞ்சித்தும்புனல்வந்ததில்லை
யங்கவனுஞ்செய் தண்டனைகளுக்கு ளற்பமுமஞ்சிடக்காணேன்
பங்கயக்கண்ண கோவிந்தாவெனமா னுமம்பற்பலபகர்ந்திருந்தான். (௫௦)

எவ்விதமுயற்சி யாலும்வீந்தனனின் றென்றுசோகித்தனனிணைதீர்
திவ்வியர்க்காளா யுய்யலாமென்னுஞ் சிரத்தையற்றிட்டமாபாவி
யவ்வியமிகப்பின் னும்புகல்கின்ற னமைதூரான்மாவினுக்கையெலா
மொவ்விடுகோலாற் சூடமைக்குதிரென் றேதினன்கோதினனந்தோ. (௫௧)

கொடியரங்கெருமுட் டைகண்மலையென்னக் குவித்தெரிகொளுத்திக் கோல்காய்ச்சிப், படியறுதவர்மே னியினிடமெல்லாம் பதித்தவத்திரட்சியிற் பயின்ற, கொடியகோலிறைமுன் கொடுநிறுத்திடலுங் கொடியவன்றூதரை நோக்கி, நொடியிலின்னவனை வடிபெறுங்கழுவி னுதியிலேற்றுதிரெனநுவன் றான். (௫௨)

தேரிடத்தமைத்து நகருலாவருங்காற் றேயமாணிடர்தெரிந்தாற்றி
யாரிடத்தினுமொன் றேற்கலரரிதா ளெண்ணுபுசாந்தாய்த்தளியு
ளோரிடத்தமையும் பெரியதாசர்க்கி தூறுவதோவரியரியென்றே
மாரிடத்தினிற்கண் ணீர்விழவரிதாள் வந்தனைபுரிந்துநொந்திருந்தார். (௫௩)

அன்னகாலையினிற் றூதர்கள்பெரிய தாசரையவிர்கழுமரத்தின்
முன்னமைத்தனர்சித் தஞ்செயப்பெரியோர் முகுந்தனைத்துதித்தனர்நாடப்
பன்னகாபரணன் முன்னுறுமதன்போற் பருங்கழுமுற்பமாகிடலுந்
துன்னருட்செயல்கண் டமரர்பூப்பொழிந்து துந்துபியதிர்த்தனர்மாதோ. ()

அக்கணத்தரிமன் னவன்புடைவிரைவி லடைந்துமாபாவியாங்காரி
பொக்கமார்வஞ்சப் புலையநெஞ்சிரக்கம் பொருந்திடாவரக்கவென்றோதிக்
கைக்கண்மேவியவன் கசைகொடென்றெண்டற் கடியதண்டனைபலசெயலா
லிக்கணத்துன்னை மடிப்பனென்றவனி யிடைபுரட்டினனடித்தகன்றான். ()

ஒப்பின்மாதவன்ற னடிகளைச்சகியா னேவெனக்கதறினனுகித்
தப்பின்மாதவரைக் கழுவிலேற்றாதே சனத்தழைத்துறுமினிங்கென்னச்
செப்பினன்றூதர் தமைத்துரத்துதலுஞ் சென்றவர்தாசரைப்போற்றி
நப்பினைமார்ப னுடல்சொற்றிறைபா னண்ணிடவழைத்துவந்திட்டார். ()

பத்தரைக்கண்ட வேந்தடியற்ற பனையெனத்திருவடிமேல்வீழ்ந்
துத்தமப்பெரியீ ரும்மகிமைகணன் குணர்ந்தும்யானுணர்ச்சியற்றவனுப்
பித்தரின்மயங்கிப் பேயரிற்புரிந்த பிழைகளொன்றையுந்திருவுளத்தில்
வைத்தகற்றுதும் மைந்தனிலென்னை மன்னித்தாட்கோடிரென்றிரந்தான்,

தற்குவமானந் தானெனவிளங்குந் தாசருட்டயைநிறைந்தவராய்த்
துற்குணக்கொடியோன் புரிபிழையொன்றுஞ் சூழ்ந்திலர்பற்பலதண்ட
மெற்குநீபுரிந்த தன்மையாலரிதன் றெரிசனமெய்தினைநீதான்
பற்குனனனைய தன்னியன்சாலப் பாக்கியவான்பெரும்பத்தன். (ருஅ)

கருணையங்கடலாம் பகவனதங்கைக் கசையடிபட்டகண்ணியனீ
பருவரலடையே லவசியம்பரம பதத்தினையெய்துவைபகவன்
றிருவடிகணமு மறந்திடேலென்னச் செப்பினரகன்றனர்தம்மைப்
பொருபவரில்லா வருட்பெருங்கடலே போன்றவிர்சான்றவர்மாதோ. (ருகூ)

சென்றவர்தளியுட் புகுந்தருணார சிங்கனைப்பலபடத்துதிப்பத்
துன்றருளமுதக் கடன்முகந்தெழுந்த சூற்புயன்மேனிகொண்முகுந்த
னன்றமைதருந்தன் றரிசனமளித்தா னனிமகிழ்ந்தடிதொழுந்தாசர்த்
தன்றருப்புரையுங் கரங்களால்வாரிச் சலசைதோய்திருப்புயத்தணைத்தே. ()

சத்துவகுணத்தென் றெண்டநீயென்பின் சார்திபூலோகவைகுந்த
மொத்துறுமரங்க மாளிகையணைது மென்றுதன்னுருவினைமாற்றிச்
சித்துருநார சிங்கன்வேதியநற் றிருவுருவமைந்துதஞ்சையிற்றேய்
புத்துருக்கோட்டை யடைந்துகத்தூரிப் பொட்டிட்டான்றுசருக்கம்மா (சுக)

தாசர்பின்னணையும் பத்தவற்சலனுட் டழைத்தெழும்பேருவகையினுல்
வாசனைத்திரள்கள் பூசியும்பலவா மணிக்கலன்பொன்னுடையீந்து
நேசமிக்கவிர்தன் கரங்கொடுகவிகை நிழற்றியுங்கவரிவீசியுநற்
றேசவிர்சம்பு கேச்சுரத்தயல்போய்த் திகழுமின்னெனமறைந்திட்டான். ()

பத்தியிற்பெரிய தாசர்நம்முடனே படர்ந்துறுபகவனெங்கென்னை
யித்திறத்துபசா ரம்புரிந்தணேந்தா னிடையில்விட்டகன்றனனென்ன
நத்தியல்காத்தாற் றுதித்தரங்கத்தி னண்ணியகாலேவிண்ணகத்தின்
மொய்த்திமையோர்க டாசரிற்பெரியோர் முயங்கினரரங்கமென்றேத்தி. (சுங)

துந்துபிகலிப்ப மலர்மழைபொழிந்தார் சுபமிதைத்தெரிந்தரங்கத்தின்
முந்துறுபலரும் பல்லியங்கலிப்ப முன்னணேந்தெதிர்கொடாலயம்புக்
கிந்துதவிதயத் தண்ணலேப்போற்ற விரங்காதன்வடிவாகி
யுந்துமெய்ச்சேவை யளிக்கவர்ச்சகர்க ளுடன்பிரசாதமுற்றளித்தார். (சுச)

அரங்கனேமனத்தி லிருத்தினரமுத மழையெனவனந்தமாத்துதித்துக்
கரங்குவித்துரைப்பா ரெனக்குநீசிறிய காலேயினரசிங்கவுருவாய்
வரங்கமழ்சேவை யளித்தின்றுவேறு வடிவமாத்திகழ்வதென்னெனலு
முரங்கவினந்தச்சொரூபனுய்த்தாசர் தமையுண்டாஞெப்பிலாவொருவன். ()

வேறு

பட்டைநாமந் தரித்தவரைப் பரமபாக வதரெனவே
பாவும்பெரிய தாசர்தஞ்சைப் பார்த்திபன்செய் பெருந்துயரா
னிட்டைகலேயா தருள்புரிந்து நிருபன்குற்றங் கசையடியா
னிவிர்த்தியுறச்செய் தன்பர்பணி நிறைபேருவப்பிற் புரிந்தவர்க்குன்
னெட்டையுருவந் திருவரங்க நியமத்திடைகாட் டுபுவிப்பா
னேராதயிக்க முறப்புரிந்தாய் நிலேயாமனத்தாற் றட்டழிவேற்
கெட்டையிரண்டை யறிவித்திட் டெந்நாளின்ப முறப்புரிவா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும்பெருமாளே. (சுசு)

பெரியதாசகதிமுற்றிற்று

ஆ. கவி கசுசு

---

மூன்றாவது

# தாமாசிபண்டிதகதி

சாந்தமோருருவாத் தழைத்தியல்பெரிய தாசர்தஞ்சரித்திரப்பெருக்கிற்
போந்தவாறுெருசற் றுமைத்தனனினிச்சீர்பொருந்துவிட்டலப்பிரான்மிலேச்ச
வேந்தன்பாற்றலேயா ரித்திருவேட மிலேந்துபோய்க்கப்பமுற்றிலுமே
பாந்தமுற்றிடநல் கச்செய்தாமாசி பண்டிதர்சரித்திரம்பகர்வாம். (க)

வளமைமிக்கமையும் பேதரிநாட்டின் மறையவர்குலத்தவதரித்தே
யிளமைதீர்வதன்முன் கலேமுழுதறிந்திட் டியன்றசற்குணங்களினிரம்பித்
தளமலியுந்தி யம்புயத்தயனேத் தந்தவன்றாட்டுணேபுறத்து
முளமிசையினுமா ரூதமைத்தன்பி லொப்பில்கீர்த்தனங்கொடுபோற்றி. (உ)

சாதுபூசனைசெய் துலகவாழ்க்கையினிற் சார்தராமனவிரத்தியராய்ப்
போதுநாளங்நா டாட்சிசெய்மிலேச்சப் புரவலனவர்புகழ்வினவி
மீதுளத்துவகை யடைந்துமங்களவே டப்பெயர்மேவுசீர்ப்பதியைக்
கோதுறுதாட்சி செயுமதிகாரங் கொடுத்திடவங்நகர்மேவி. (௩.)

நன்றுறக்கடமை செலுத்தியன்பருக்கு நண்ணியவதிதிகடமக்குங்
குன்றுறுவுவப்பிற் பூசைசெய்திச்சை கொடைபுரிந்தரியருட்பசனை
யொன்றுபேரன்பி லியற்றிவாழ்நாளி லுறுமழைவறத்தலிற்பஞ்சந்
துன்றுதலாக வுயிர்த்திரள்பசிக்குத் துய்க்குமூண்கிடைத்திலதிறந்தார். (௪)

இன்னவாறியனுள் பண்டரிபுரத்தி லியையுமோர்வேதியன்பசிமிக்
கன்னமின்னவர்வீட்டெய்துமென் றடைய வருள்கொள்பண்டிதரவற்போற்றி
நன்னலம்பெறநீ ராடியூண்கொள்ள நண்ணுதிரை தினிலென்ன
வன்னவாபுரிந்தாங் கணைந்தனனுடனுங் கமைந்தபந்தியின்வைத்துளன்பால்.

பண்டரிநாதன் வந்தனனென்னப் பண்டிதர்வந்தனைபுரிந்து
மண்டனைவருந்துய்த் திடுதிரென்றேத மறையவர்யாருஞ்சங்கற்பம்
விண்டனாருந்துங் காலைபண்டரியின் வேதியன்கட்புனலுகுப்பக்
கண்டபண்டிதருட் கலங்கினர்முன்போய்க் காரணமென்னெனப்புகல்வான்

நண்ணுமென்குடும்பத் துற்றவாருந்தி நாளோர்நான்காயினவிங்ங
னுண்ணுமேல்வையிலன் னவர்தமைபுள்ளத் துன்னினனழுங்கினனென்னத்
தண்ணுறுகருணைப் பண்டிதர்நம்மிற் றழைத்துளார்யார்க்குமோராண்டுக்
கெண்ணுமாறுணவு தருவனுண்ணுதிரென் றிசைத்தவர்த்தேற்றியுண்பித்து.

தக்கணை தாம்பூ லாதிகணல்கச் சார்ந்தவராசிசொற்றகன்றார்
மிக்தபண்டரிவே தியற்குரைத்திடுமா மிதப்பவேதானியப்பொதிக
டொக்கவூழியர்பா லளித்துப்பண்டரியிற் றேய்த்திவண்வருதிரென்றேதப்
புக்ககாலையிலாண் டுள்ளவர்கூறை புரிந்தனர்கொண்டகன்றிடலால். (அ)

அந்தணன்சென்னி புடைத்தழுதேங்கி யாசுசேர்தீவினைமிக்க
மைந்தரானவர்பொன் வரைமிசையுறினும் வாய்ந்தநற்சுகங்கொளாரென்னுஞ்
சந்தமாமறைச்சொன் மெய்யெனத்தளருந் தன்மைகண்டயலுளார்மருவி
யிந்தநற்பொருளுன் னுடைமையோபிறர்கிற் கீதலோவுரைத்தியென்றுசாவ.

உளவுரைத்துடன்று மாசிபண்டிதர்பா லுற்றனனுரைத்துறுமெல்லை
பளகறுபண்ட ரிப்பதிமறையோர் பலரும்பின்றொடர்ந்துபண்டிதர்தம்
வளவிலுற்றிரப்ப வவரைவிட்டலனு மதித்தனர்வணங்கிடமறையோர்
கிளருவகையரா யாசிசொற்றும்முட் கெழுவுதாரத்தகைதேர்ந்தே. (க௦)

மருவினமெமது வன்பசிப்பிணியை மாற்றுதிரென்னப்பண்டிதர்தாங்
கருணைமிக்ககத்துள் வருந்துதலொழிமின் காக்கும்விட்டலனெனக்கழறித்
தருமபத்தினிபா லடைந்துவேதியர்கள் சார்ந்திடுசெயலுந்தான்சாற்றும்
பொருவின்மாற்றமுநன் கோதிச்சொல்போய்ப்பிற்பூசுராருயிர்தணப்பாரால். ()

இயம்பியவண்ண நல்கிடநம்பா லேதுமின்றென்செய்வோமெனன
வயம்பொலிகற்பா முருவமைந்துள்ள மாதராள்கணவருக்குரைப்பாள்
வியம்பொலிநம்மின் மேவினர்தமக்கெவ் விதத்துந்துன்பொழித்தல்சால்பென்னச்
சயம்பொலியன்பர் மன்பொருளுளது தரினமதாவிபோந்திடுமால். (கஉ)

பொருவில்பண்டரிவாழ் வமைந்தபற்பலர்தம் பொருட்டினுலென்னதோராவி
யொருவின்மாநலமென்றுன்னுகின்றேனென்றுரைத்தன்மனைப்புறத்தணைந்து
மருவியமறையோர்க்கூவித் தானியஞ்சால்வைப்பினைத்திறந்துவேண்டுவகொண்
டருளுதிரென்னச் சாற்றமிக்குவந்தா ராசிபற்பலர்களுமிசைத்தே. (கங)

மாதமொன்றகலு மட்டுமெய்துற்ற மாந்தர்கள்யாருங்கொண்டேகப்
போதலாமிடியுந் தீர்ந்ததொப்பருசீர் பொருந்துபண்டிதர்களிப்புடனே
மாதவன்பசனை செய்தனரமைந்தார் மற்றதுகாலையன்னவர்த
மேதமிலேவற் புரிபவனொருவ னிவர்செயற்கிதயமொவ்வானய். (கச)

பண்டிதர்பாலோ திடுவன்மன்னவன்றன் பகுதியையெண்ணிடாதிங்க
னண்டினோர்கொள்ளை கொண்டுசென்றிடப்பார்த் தமைவதுநீதிகொலவன்பொன்
கொண்டியான்வறிதீண் டமைதரேனிறைவன் கொள்சினம்பொறுக்கரிதென்ன
விண்டிறையறிய முடங்கலொன்றுய்ப்ப மிலேச்சமன் றேர்ந்துளம்வெம்பி.

என்னதோராணை யின்றியுண்மதியா திங்ஙனம்புரிந்தவனுயிரைப்
பின்னமுற்றிடச்செய் திடுதல்வேண்டுமவற் பிடித்தரைக்கணத்தில்வம்மினெனத்
தென்னகர்த்தூத ரனையர்சிற்சிலரைச் சீட்டொடுசாரவேவுதலு
மன்னவர்பண்டி தரினிடமணுகி யரசன்றன்முடங்கல்கையளித்தே. (கக)

கடிதரசவைப்பா லெய்துதியென்னக் கடுகடுத்தோதமன்னுணைப்
படியவருடன்சென் றனரிடையவிர்நற் பண்டரிபுரத்திலுற்றிறைவ
னடிமலர்தொழுதே கிடும்விருப்பினரா யவர்க்கினிதானவாசகஞ்சொற்
றொடிவில்சந்திரபா கையிற்படிந்தார்வ மோங்கியதளியருகமைந்தே. (கஎ)

கருடகம்பத்தின் பாலமைந்தென்பு கனவிடுமெழுகெனக்கரைவுற்
றுருகவானந்த நீரிருவிழிக ளுகுப்பவுச்சியிற்கரங்கூப்பி
யிருநிலமிசைபல் கால்விழுந்தேத்தி யிலங்குசெங்கன்மிசைவதியுங்
கருணைநாயகன்ற னருகுபோய்ச்சிரசு கழற்றுணையமையநின்றிசைப்பார்.

ஞானவானந்த நாயகமறைக ளடியெட்டிடமிகவரிய
மோனமாவெளியே பத்தரெண்ணங்கண் முடித்திடவிருதுகொண்டுற்ற
தீனதயாள தேவரேத்தெடுக்குந் தேவமன்றெண்டியாதென்னை
யானவூர்புகவிட் டிடிவிங்ஙன்பீம வாற்றிடைபடிந்துநிற்றொழுவேன். (கக)

கொன்றிடில்விரசா நதியின்மூழ்குபுவை குந்தமுற்றுனைத்தொழுதிடுவே
னென்றிறுதியினின் றெரிசனம்பெறலு முன்னருளேயெனவோதிக்
குன்றிடாவுவப்பிற் றழுவினர்செலவு கொடுதிருமகணிலமகள்வாழ்
நன்றியல்கோவின் மேவிமெய்யன்பி னமக்கரித்திவ்வகைநவில்வார். (உ0)

பிரமருத்திரேந்தி ராதியர்போற்றும் பிரான்றிருவருளுருவாகி
விரவியவன்னை மீருமக்கடியேன் விளம்புவதொன்றிலையென்னப்
பரசினன்கருட னனுமனைப்போற்றிப் பார்த்திபன்படருடன்படர்கார
புரமிசைபவர்யா வருநமைக்காத்த புண்ணியர்க்கீதுறலாமோ. (உக)

பத்தவற்சலமா நவவருட்கடலே பண்டரிநாயகநின து
சித்தமொப்பிடலாஞ் செய்கைகொலென்னச் செப்பினர்துதித்துருகிடவு
மத்தநியினின்மெய்ப் பண்டரிநாத னென்றபண்டிதர்துபரொழியா
தொத்தமைவேனேற் றீனரட்சகனென் றேதுபேர்கோதுபட்டிடுமால்.(உஉ)

என்றுளங்கொண்டு கந்தையார்பாகை யிசையக்கம்பலக்கயிறரமே
லொன்றுறக்கோவ ணந்துயல்வரமா சுறுமொருதடிகரத்தியலத்
துன்றுபூமகடை வருமறைமுடிதோய் துணையடிகளிற்செருப்பார
நன்றுபண்டிதர்தீட் டினரளித்ததுவா நல்லபத்திரமொர்கைக்கொண்டு. (உங)

கருமைநேர்மேனி மாறிலனகலக் கமலைகண்டனள்சிரித்திசைப்பாள்
பொருவில்பேரருளீர் நாணமற்றென்னே புரிந்தனிரெனவினவிடுகான்
மருவுகாரியமொன் றறிகிலைபத்தி வாய்ந்தநின்னடியவன்றன்னை
நிருபனேவலர்கொண் டகன்றனர்நம்மூர் நிலவுவார்துன்பொழித்தானை. (உச)

தன்னுட லுயிரா தியவெலாநமக்குத் தத்தமாத்தந்தவர்க்காப்ப
வென்னுளத்திடைநா ணஞ்சிறிதில்லை யென்றுபொற்சாளிகைசிரமேன்
மன்னுறக்கொண்டு பேதரிநகர்ப்பான் மருவித்தன்வரவிறைக்கோத
முன்னுறுவாயி லோர்க்கறிவித்து முறையிற்போந்தனன்சலாம்புரிந்தான். ()

முன்னுறநிற்ப யாவனீயிங்ஙன் முயங்கியதேதுசாற்றென்னப்
பன்னுவன்மறைவாய் விண்டுதாமாசி பண்டிதர்வெட்டியானவர்தம்
பொன்னுறழ்கரத்தாற் பொறித்தபத்திரமேபொருளிதன்னுடையதேயென்றுன்
மன்னுவப்பொடுதன் கையிலேற்றுணர்கால் வாய்த்தவிப்பஞ்சகாலத்தில். ()

அரண்மனைத்தானி யங்களையேற்ற மாம்விலைக் களித்துறும்பொன்னை,
விரவியபையு ளமைத்துநம்பிடுமென் வெட்டியான்வசமனுப்பியுளேன், றாமு
றுபொன்முற் றுங்கொண்டுசீட்டுத் தந்திடவேண்டுமென்றுள்ள, தாசனோர்ந்
தனன்பொன் னெங்கெனக்கொட்டி யளவுசெய்கென்றுமுன்வைத்தான்.

எண்ணியிலக்கத் தைம்பத்துநாலா யிரம்விராகன்றுதைதாலுங்
கண்ணியப்பொன்முற் றிலுமொருபையிற் கலந்தவாறவன்செய்மாயையினு
லுண்ணினைகிலன்மன் பொக்கிசத்தமைக்க வுரைத்துடனேலையொன்றின்க
ணண்ணியவுன்கீழ்க் கணக்கன்விண்ணப்ப நம்பியான்றாதரைவிடுத்தேன். ()

நன்னலம்பொருந்தும் பண்பறிகில்லே னனிமகிழ்ந்தனனுலைனுப்பும்
பொன்னனைத்துங்கொண்டதற்கிரசீதும்பொருந்தவுய்த்துளனெனப்பொறித்து
மன்னணிச்சிவிகை யாதியவளங்கள் வழங்கிவெட்டியானெனவந்தோற்
குன்னருமுபசா ரங்களாற்றினனே கிடவிடையுதவலும்பகவன். (உகூ)

நன்றுநன்றென்று பண்டிதர்மனைப்பா னண்ணியன்பரின்மனையிடத்திற்
றுன்றுமன்கையொப் பங்கொடுத்துற்ற தூயவாம்வரிசைகளவண்வைத்
தொன்றுதன்னுருவ மறைத்தனன்வீர ருடன்வளப்பேதரியெய்துங்
குன்றுறழ்மனப்பண் டிதர்தமைக்கண்டு கொற்றவன்குதுகுலித்தெழுந்தே. ()

எதிரணைந்தன்பிற் றழுவிநும்போல விராசகாரியங்களிற்சிரத்தை
பதிதருமதிகா ரிகளையென்பதியிற் பார்த்திலேனீரனுப்புவித்த
நிதிமுழுதுங்கைக் கொடுவெட்டியான்பா னிகழிரசீதுடன்முடங்க
றதியிதிலளித்து விடுத்தனனெதிரிற் சந்தித்திலான்கொலென் றுசாவ. (௯௰௧)

கேட்டநற்றொண்டர் வியப்புடனையங் கிளர்ந்திடுசிந்தையராகி
வேட்டபண்பினிற்சம் பாடணைபுரியும் வேந்தனைநோக்கினானுணக்குச்
சீட்டனுப்பியது மில்லைபொற்பொதியுஞ் செலுத்திய தில்லைநீயிங்கு
நாட்டவரறியச் சொலுமொழிகளையா னம்பிலேனிசஞ்சொலென்றிசைப்ப ()

பண்டிதரேநீ ரெனக்கெழுதியதாம் பத்திரம்பார்மினென்றளித்தான்
கொண்டிதுநான்றீட் டியதன்றிராம கோவிந்தபண்டரிநாத
வண்டிடுபத்த வற்சலவென்று ளன்புடன்கண்ணிலொற்றினராய்
விண்டிகழ்தேவர்க் கரியநீயெனக்கா வெட்டியானுவரல்விதியோ. (௯௰௩)

பத்தியார்மணிப்பொன் முடிபுனைசிரத்திற் பழங்கந்தைதரித்தனைமலர்மின்
னித்திலவடந்தாழ் கொங்கைதோய்மார்பி னீனிறக்கம்பலம்புனைந்தாய்
நத்தியலாழி தயங்குகைம்மலரி னனிதடிகொண்டனைதங்க
வத்திரமுடுக்கு மரையினுன்றிடுகோ வணந்தரித்தேதழைகள்போன்றாய். ()

புரந்தராதியர்தந் திருமுடிக்கணியாய்ப் புவிமகள்காந்தண்மாமலர்நேர்
கரந்தடவிடச்சேப் பெய்திமாமறைகள் காணரிதாயுலகளந்த
வரங்கமழ்திருத்தாண் மலர்களிற்செருப்பு வாய்ந்துவந்தண்டமுற்றுண்ட
தரந்திகழ்திருவாய் கொண்டுசாற்றிடத்த காதவார்த்தையுமுரைத்தனையால்.

பொற்பணப்பையு முடிமிசைசுமந்தென் பொருட்டிலித்தகுதுயருற்றாய்க்
கற்பனேனியற்ற லாவதென்னென்ன வனந்தமாத்துதித்துமாதவன்றன்
பொற்பமைமனத்த ரவசராய்நிற்பப் புரவலன்புந்தியுள்வியந்தென்
முற்படவமைந்தான் மாதவனென்ன முன்னிலேன்மூடனேனந்தோ. (௯௰௫)

இலக்கத்தைம்பானு லாயிரம்பொன்னை யெளிதெடுத்திட்டதுமுன்னேன்
கலக்கமுற்றிடுமென் கருத்தமைந்துற்றகாட்சியென்னெனச்சொல்வனிணைதீர்
துலக்கமார்சேவை யீதுபண்டிதர்நற் றொடர்பினாற்பெற்றனனிவரை
யலக்கணுற்றிடச்செய் திட்டபுன்றொழிலா லரும்பயனமைந்ததுமாதோ. ()

என்றுபற்பலவாப் புகழ்ந்திடுமன்சொ லேற்றபண்டிதருரைசெய்வார்
கன்றுமென்னிமித்த மால்பதமலர்கள் கன்றநின்முன் னுறுசெயலா
லொன்றுநின்னதிகா ரங்கொடுவிடையெற் குதவுதியென்னமன்புகல்வா
னன்றுறுநமது புணர்ப்பினாலன்றோ ஞானநாயகனைநான்கண்டேன். (௯௰அ)

உம்மையொத்திடுமெய்ப் பத்தர்கண்மும்மை யுலகில்யாருளரெமோர்பொருட்டாற்
செம்மையாரதிகா ரத்தைநீர்கொண்டு திகழ்தரவேண்டுமென்றிரந்துந்
தம்மைநேரன்ப ரிகழ்ந்துபண்டரிநற் றலத்திடைமேவிப்பாண்டுரங்கன்
சும்மையார்கழற்றுண் மிசைவிழுந்தின்பத்துணைக்கணீர்கொண்டலம்பினராய்.

பாவியேன்பொருட்டால் வெட்டியான்வேடம் பரித்துமன்சபைபுகுந்தங்கண்
மேவினர்பலருங் காண்டரத்திகழ்ந்த விட்டலபாண்டுரங்கேசா
வோவிலாதுன்னைத் துதித்துருகென்முன் னுற்றிடாதென்னெனக்கனிவிற்
கூவிடுதொண்டர்க் காண்டரமிலேச்சக் கொற்றவன்பண்டரியெய்தி. (௪௦)

மீண்டுமெய்ப்பகவன் றிருவுருக்காணும் விரகமைந்துற்றபண்டிதரை
வேண்டுறமன்ன னுட்கொள்வேட்கையினை மெய்த்தவப்பண்டிதர்புகலப்
பாண்டுரங்கேசன் மீண்டுமத்தகைய படிவுடன்றெரிசனமளித்தான்
காண்டுளோர்பலருங் களிக்கடற்கரையைக் கண்டிலரவசராய்க்கவின்றார். (௪௧)

பண்டிதருடனின் றிருவருட்பெருமைப் பண்பிதோவென்றுளத்தன்பா
லொண்டிருவடிகள் வணங்கிடப்பகவ னுடன்றிருக்கரங்களாற்றாக்கித்
தண்டிகழ்துளவத் தாரவிர்மார்பிற் றழுவினன்மறையமன்குருவாக்
கொண்டியற்பண்டி தரைப்பணிந்தனனூர்குறுகினன்கோதில்சீர்த்தொண்டர்

மனைவியாதியரைப் பண்டரிப்பதிக்கு வரவழைத்தனர்பரவசராய்
நினைவெலாம்பாண்டு ரங்கன்பொற்றாளி னிறுத்தினர்பகலுடனிரவுஞ்
சினைமுகிலெனக்கண் ணீர்பொழிந்தன்பிற் செழுந்துதியோதிவாழ்ந்தீற்றிற்
றனைநிகர்மனைவி யோடுவைகுந்தத் தலத்திலுற்றனர்பிறப்பொழித்தே. (௪௩)

வேறு

வளப்பேதரிமா நாடாட்சி வயக்குமிலேச்ச மன்னவன்கீழ்
வாழ்தாமாசிப் பண்டிதர்தா மகிமைப்பண்ட ரியில்வதிவோ
ரிளப்பார்பஞ்சத் தாற்றளர்வுற் றிரங்கச்சகியா திறைக்களிக்கு
மிறைமைத்தானி யங்கண்முழு தீயத்தண்ட மருவாமே
சளக்கோன்முன்வெட் டியானெனவே சார்ந்துபொன்முற் றீந்தவனுந்
தாசனுகப் புரிந்தருளுந் தயைச்சாகரமே யிகபரத்தா
ரௌப்பேயெனவே வறிதயர்வே னின்பம்பொருந்த வென்றருள்வா
யிராமானந்தப் பெயர்கொடெனை திதயத்திலங்கும் பெருமாளே. (௪௪)

தாமாசிபண்டிதகதி முற்றிற்று

ஆகூ கவி உ௪௦

---

நான்காவது

# ஏகநாதசுவாமிகதி

வெட்டியான்வேடங் கொண்டுபாண்டுரங்கன் வேந்தனுக்கிறையளித்திடச்செய்
தட்டில்சீர்பெறுதா மாசிபண்டிதர்தஞ் சரித்திரத்தினிற்சிறிதுரைத்தே
னெட்டியமாந்தர் பலருமெய்ப்பத்தி யினிதுதேர்ந்துய்ந்திடவருளான்
மட்டில்பேரருளாட் டியற்றிடுமேக நாதர்தம்வான்கதைவகுப்பாம். (க)

வளமிகக்குலவும் பைடணபுரஞ்சான் மறையவர்தஞ்சிகா மணியாய்க்
கிளர்தருபாநு தாசர்மெய்ச்சுதனுக் கிடைத்தருண்மாதவப்பெருக்கார்
பளகின்ஞானப்ர காசசூரியநா ராயணர்பாரியாத்துலங்கும்
குளம்விரவியபா லனையசொன்முல்லை குலவுருக்குமணிநாமத்தாள். (உ)

பணிகொடில்லறத்திற் பயின்றிடுநாளிற் பகவனதமிசமாயுலகர்க்
கணிபெறுகுருவா விளங்குமோர்மைந்த ரவதரித்தருளினரவர்க்குக்
கணிதநூன்முறையி லேகநாதரெனக் கவின்பெயரிட்டியற்கிரியை
தணிவறப்புரிந்தெவ் வனமுறமணமுந் தகைபெறநடத்தினர் களித்தார். (ந)

நன்னலம்பொருந்தி வாழுநாளேக நாதர்ஞானக்கடலாகி
மன்னருட்டத்தாத் திரேயர்சீடரென வயங்குறுசநார்த்தனர்பாற்போய்ப்
பொன்னடிவணங்கி நிற்பநீயாரை பொருந்துகாரணமெனேதென்றூர்
கொன்னமைகரங்கள் குவித்துமுன்னின்று குலவுதஞ்சரிதைமுற்றோதி. (ச)

அன்னைதந்தையர்த முவர்ப்பிலேனுளமே லமைதருகாமமாதிகடா
னென்னைமிக்கவத்தை யியற்றலின்மெலிவுற் றியன்றதேவகிரியைநீத்தும்
பொன்னைநேர்பதங்க ளடைந்தனனென்னைப் புரந்தருள்வீரெனப்பணியப்
பின்னைகோனிகர்பண் டிதரிளமையினிற் பெறுமவர்ஞானமோர்ந்துவந்தே. ()

என்புடையிருத்தி யென்னநாரதர்பா வியைதுருவனிலுளங்களிப்புற்
றன்புடனிரவும் பகலுமாரியர்மெய் யருட்பெருஞ்சேவைசெய்தனந்த
லின்புடைபாதம் பிடித்துத்தாம்பூல மீந்துமிழ்காற்படியகத்தை
முன்புறப்பிடிப்பர் பூசைக்குவேண்டு முறையெலாமமைப்பர்வழாதே. (சு)

ஆரியருச்சிட் டம்புசித்தங்க ணமைபணிபலவுஞ்செய்தமைநாள்
சீரியகுரவ ரொருதினமுவகை செறிந்திவன்மானிடனல்ல
னேரியற்றேவா மிசனன்மாணுக்க னெனநமக்கமைந்தனனென்றுள்
வாரிநேர்கருணை வழிந்தெனக்கூவி வழுத்துவரேகநாதாநீ. (எ)

என்பணிபன்னா ளாப்புரிந்திங்ங னிருந்தனைநின்னையீன்றவர்க
டுன்பமைவிருத்தர் வறுமைமிக்குள்ளத் துயருறுவார்களன்னவர்கட்
கின்பமார்பணிசெய் குதியெனவவ்வா றியற்றிநாடொறுங்குருநாதர்
முன்பமைந்தேத்தி யியல்பணித்திறமு முயன்றனரின்னவாறமைநாள். ()

கருணைமிக்கமைச னார்த்தனர்மடத்தின் கணக்குவேலையுமமைத்திட்டார்
வருதினந்தோறு மாரியர்முன்னர் வழாதறிவித்தனரியல்போழ்
தொருதினத்தொருகா சிலக்கத்திற்பிழைப்ப வூணுறக்கத்தையுந்துறந்தே
குருபாற்கென்சொற் றிடுவதென்றிரவிற் கூர்ந்துநாடினரமைந்திருந்தார். ()

குருபரரேக நாதரைச்சயனங் கொள்வயினின்மையின்மடத்து
மருவியன்னவர்தே ராதுபின்புறத்தின் மறைந்துநோக்குழிகணக்கறிந்தா
ரிருகரங்கொட்டி மகிழ்தரக்குரவ ரேதுவென்சிரித்திடற்கென்றூர்
பொருவிலார்பணிந்து வகைசொலக்காசு போந்ததற்குளமொன்றல்போல. ()

கண்ணனற்றிருத்தாண் மிசையமைத்திடின்மெய்க் காட்சிபெற்றிடுதலாமென்னத்
தண்ணருட்குரவர் மொழிசெவியேற்றுத் தன்னியனுயினேனெனக்கேட்
டுண்ணனிமகிழ்ந்து தேசிகர்கணக்கை யுரைத்தியென்றிடப்பிரபஞ்சக்
கண்ணமையுளம்போய்த் தத்துவஞானங் கார்பொழிந்தெனக்கழறிடலால்.

தேசிகர்வினவி வியந்துஞானுபை தேசமேற்றிடத்தெளிந்தனனென்
ருசிறங்காத்தாற் றழுவித்தாரகத்தை யவர்செவிப்பாலுரைத்திட்டார்
மாசிலார்மறையை மிகவுருவேற்றி மாண்குருபணியுஞ்செய்தியல்காற்
பேசிடுகுரவ ரிவனரியமிசம் பெற்றவனுலகையுத்தரிக்க. (கஉ)

வந்தனனிவற்கு நங்குருசேவை வழங்கிடப்புரிவமென்றுன்னி
யந்தமாரேக நாதரைக்கூவி யறைவரென்சற்குருநாதர்ப்
பந்தமோடுனக்குத் தெரிசனமளிக்கப் பண்ணுவனவரெதிருறுகாற்
சொந்தமார்வடிவ மறைத்துவேற்றுருவாய்த் தோற்றுவரென்மொழியோர்ந்து

பேதமற்றிறைஞ்சி யளித்திடுபொருளைப் பிரியமிக்குண்ணுதியென்ன
நாதர்நும்மினுமே லானவருளதார் நான்கொளேனெனக்குருபரரென்
போதனைப்படியென் னுபாசனைத்தேவாப்பொருந்துதத்தாத்திரேயரின்பொற்
பாதம்வந்தனைசெய் தவர்கருணைக்குப் பாத்திரனுகில்யான்களிப்பேன். ()

என்றுசாற்றிடப்பாக் கியமென்றூர்கானி லெய்திச்சனார்த்தனர்குருவை
நன்றுபட்டாணி வடிவுடன்மருவ நாடினரவ்வணநண்ண
வொன்றுமாணுக்கற் குரைப்பரென்குரவ ருற்றனரெனவேகநாதர்
துன்றுமிலேச்ச னுகிவாள்கொண்டு துரகமேல்வருந்திறம்பார்த்தே. (கரு)

ஞானதேசிகரின் னவற்குருவென்ன நவின்றனர்நன்றெனமனத்தின்
பானயந்திலர்நின் றனரவர்குரவர் படர்ந்தசற்குரவரைவணங்கித்
தேனனதுதிகள் செப்பினர்சிறப்ச் சேரனகூயைபுத்திரர்தா
மீனமார்மிலேச்ச பாடையிற்பசிமிக் கெய்த்துளேற்கமுதருளென்றூர். (கசு

தவத்தினுன்மணிப்பொற் கலத்தறுசுவைப்போ சனம்படைத்திருவருநுகர்கா
னவத்தகைச்சனார்த்த னருடன்சார்குரவர் நண்ணுபாலகனையுநம்மோ
டுவப்புடனுகர வழைத்தியென்றிடக்கேட் டுடனேகநாதர்மிலேச்சப்
புவத்தனேடெவ்வா றுண்பதென்றயலிற் பறிந்திடவந்தவர்மறைந்தார். (கஎ)

பின்னுறுமேக நாதர்சற்குருவைப் பேணிநீரென்பரிமீதிற்
றன்னுறுமிலேச்சன் றனைத்தொழுதொன்றுத் துய்த்தனிரெனக்குருசொல்வார்
முன்னுறவுனக்கு மொழிந்துமந்திரிதன் முதிர்தவப்புத்திரர்தம்மை
மன்னும்வேற்றுருவங் கொடுவரவறியாய் மயங்கினைமாயையாலிகழ்ந்தாய். ()

வானவரமுதந் தனைக்கழுநீரின் மதித்தவர்போலளவில்ல
வானயோகஞ்செய் திடுதலாமுயிர்க ளகக்கருத்தறியாலாங்கடலை
யீனமற்றிடநீந் திடுதலாங்கால வியல்பனைத்தையுமுணர்ந்திடலா
ஞானமார்திரிமூர்த் திகள்வடிவாமென் னுதனைக்காண்பரிதரிதால். (கக)

வருந்திடாதவரைக் கண்டுநீவணங்கி வரமொன்றும்பெற்றிலைபங்தோ
திருந்திடவினியெய் திடிற்பணியென்னச் செப்பினர்போந்துபின்னொருநாள்
பொருந்திடுகோனத் தடைந்தெதுவடிவம் புணர்ந்தெனுயகர்வருகினும்யான்
விருந்தியல்விழிகொ டெச்சரிப்பேனின் வேட்கைகள்பேணிவேண்டென்ன.

ஆண்டமைந்தனரக் காலனுருவை யளிந்திடுமைந்தர்பக்கிரியா
யூண்டருகாம தேனுவோடெய்த வுடன்சநார்த்தனரடிபோற்ற
மாண்டதங்கையால் வாரினர்தழுவி மாந்தவூணல்குதியென்னக்
காண்டருகாம தேனுவினரும்பால் கறந்தனர்கலத்திற்பெய்தளித்தார். (உக)

அருந்திடுகாலை யிச்சிறுவனைபு மழைத்திரும்மோடுணவென்னுந்
திருந்தியற்குரவர் மொழிகொடுவிழியாற் றெரித்தழைத்திடவருகாகப்
பொருந்தினர்நிற்ப வத்திரிபுதல்வர் புசித்திடவருதியென்றழைப்ப
விருந்திலரஞ்சி நின்றுதங்கையி லியல்பிரசாதமீதிரென்றூர். (உஉ)

அருணிறைபரமா சாரியரவ்வா றமைந்ததம்வாய்கொள்போனகத்தைத்
திருமணிக்கரத்தா லளித்திடவன்பிற் றிருந்துமுன்றனையிற்கொண்டா
ரிருவரும்புசித்த பின்றத்தாத்திரேய ரேற்றதஞ்சீடரைநோக்கி
மருவுமிச்சிறுவன் யாரெனக்கூவி வணங்குவித்தெனதுமாணுக்கன். (உங)

என்னலுங்கடைக்க ணருள்புரிந்துரைப்ப ரிவன்கலையினங்களாம்பாலை
நன்னலம்பெறவே கடைந்தெடுத்திட்ட நவநீதமானபாகவதத்
துன்னலாம்பொருண்மிக் காழ்ந்துறுசெயலா லுறுபிராகிருதத்திற்செய்வா
னன்னவாறிராமா யணமுஞ்செய்தரிகீர்த் தனங்களுமனந்தமாப்பகர்வான்.

அவைகளைச்சிரவ ணம்புரிந்தவர்க ளாருஞ்சாயுச்சியம்பெறுவர்
நவையறவாழ்க வென்றவர்சிரமே னுண்மலர்க்கரமமைத்தகலச்
சுவைபெறுகுரவ ராசிகேட்டுவகை துளும்புறுசநார்த்தனரின்பக்
குவைபெறுமேக நாதரையெந்தை கொடுத்தபேரருட்பிரசாதம். (உரு)

வாங்கியென்செய்தா யெனத்தறையின்மேல் வைத்தனனென்னலுமங்தோ
பாங்கினில்வலிது வந்தபாக்கியத்தைப் பரிந்துகொள்ளாதவரேபோற்
றீங்கிதுபுரிந்தா யெனப்பதைத்தேதஞ் செழியவாய்கொண்டதம்பலத்தை
யோங்கியவருளார் கைமிசையுமிழ்ந்துண் டிடப்புரிந்தனர்மடத்துற்றே. (உசு)

மணியொளிமலர்கொண் மணமெனக்கலந்து வாழ்ந்தனரொருதினந்தன்னி
லணிகொள்சற்குரவ ரிவன்பணிகொள்ள லமைவுறுதெனக்கினியென்றுட்
டுணிவமைந்தேக நாதரைக்கூவித் தூயநீமனையிடைதோய்ந்து
தணிவறநீரா டுதலரிபதவர்ச் சனையதிதியர்கண்மெய்ப்பூசை. (உஎ)

ஆதியசற்கன் மங்களிலொன்று மகன்றிடாதரியருட்டுதிக
ளோதிவாழ்ந்திடிற்கண் ணன்பெருஞ்சேவை யுதவுமென்றருட்காஞ்சென்னி
மீதில்வைத்தநுக்கி ரகித்தனரனுப்ப விளங்குதம்மனையகத்தடைந்தார்
மாதிறன்மைந்தற் கண்டுதாய்தந்தை வரம்பிலானந்தமுற்றிருந்தார். (உஅ)

ஒப்பறுமேக நாதர்சற்குரவ ரோதியபடிசற்கன்மங்க
டப்பறப்புரிந்து பத்தர்களுடனே தாம்புசித்தேபகலெல்லாம்
பப்பருட்புராண படனஞ்செய்திரவிற் பயிலரிகீர்த்தனம்பகர்ந்து
முப்பழச்சாறு போற்சுவைக்கவிகண் முகிலெனப்பொழிந்தனரமைந்தார். ()

இன்னவாறியனு ளோர்கனவின்க ணிராகவன்றேன்றிவான்மீகி
யுன்னதப்புலவர் தேரவாரியத்தி லோதிராமாயணந்தன்னை
யின்னலற்றுணரப் பிராகிருதத்தி லெளிதுறவியற்றுதியென்ன
வன்னவாறந்நூற் பொருண்முழுவதுநன் காய்ந்தியற்றினரதுகண்டே. (௩௦)

அயன்மனைதனில்வா ழந்தணனொருவ னகத்தழுக்காறுகொண்டிவன்று
னயன்மலிவான்மீ கியின்வடமொழிநூன் ஞாலமேல்விளங்கிடக்கண்டும்
பயனிலதிவன்பி ராகிருதத்திற் பகர்வதென்னெனப்பழுதுரைசொற்
றியலுநாளொன்றின் மாதவன்கனவி னிடையணைந்திவர்க்கருள்புரிவான். ()

இத்ததிதுயினீத் தெழுந்திராமகதை யிசைத்திநின்னருண்மணங்கமழும்
புத்தமுதனைய மொழிகளைவினவப் புந்தியுளவாவினேனெனச்சொற்
றுத்தமர்தேரும் படிமசிக்கூடுமுயரிலேகணியும்வைத்தகலச்
சித்தமேல்வியந்து செப்பினர்க்காணர் செறியவைத்துளபொருள்கண்டே. ()

எழுதுறுங்கால சதாகதிமைந்த னெறிதிரைதாவல்வந்தெய்தப்
பழுதில்சீரேக நாதரவ்வேகம் பயின்மனங்கொடுபரவசத்தின்
முழுகினர்பாய்ந்து நிந்தைசெய்வானின் முன்றிலிற்கிடந்தனரிற்பால்
விழும்விழுமியர்சீர் தெரிந்தகமயங்கி வியன்கையேட்டினைக்கொடுநோக்கி.

அனுமனின்மதித்துப் பாய்ந்தனரென்ன வகத்துணர்ந்ததிசயனுகிப்
பனுவல்செய்துறுவோர்ப்பார்த்துநீரிங்ஙன் பாய்ந்துவீழ்ந்திட்டதென்னெனத்
தனுவினையறியார் வறிதுறமறையோன் றருமவதாரமூர்த்தியினை
யுனுமறிவின்மை யாலிகழ்ந்தனனென் றுளத்தநுதாபமிக்கானுய். (௩௪)

எடுத்தணைத்திற்பா லமைத்திடநாத ரெழுதிடத்துவக்கினரதுகண்
டடுத்தவீட்டவனன் புடனடிவணங்கி யருள்செயவேண்டுமென்றேத்தித்
தொடுத்ததன்மனைபுக் கிவரநுக்கிரகந் தோய்ந்திடுகாதன்மிக்கெனைக்கை
விடுத்திடாதிவணுட் கொள்ளுதிரென்ன வேண்டமுள்காந்துசற்றமைந்தே. ()

உனக்கியல்குருப்பா லெய்தெனவந்தோ னுமைவிடுத்தயலமைகில்லே
னெனக்கிளத்துபுதாள் வணங்கினனிற்ப விவனதிகாரியன்றெனத்தம்
மனத்திலுன்னினரோர் சுபதினத்தெம்பால் வருதியென்றுரைத்தகற்றினரத்
தினத்தின்மால்பூசைக் குதகமில்லின்பாற் செறிநரைக்கொணர்கிலிரென்றே.

பாண்டுரங்கனைப்பூ சித்திடத்துவக்கம் பண்ணினரத்ததியவனு
மாண்டுமேவினனக் காலையினுத ரகத்திலுற்றார்களைக்கூவி
யேண்டுதைபூசைக் கின்றுமஞ்சனமே னின்னமுங்கொணர்ந்திலிரைதி
லீன்டுறக்கொணர்தி ரென்றுபற்பலகா லியம்பினர்கண்ணனைப்போற்றி. ()

சிறிதுசென்றவன்பக் குவந்தெரிதரத்தஞ் சிந்தையினுடியாவர்களு
நறியமஞ்சனங்கொண் டணைந்திலர்யாரு நண்ணியதில்லைகொலென்னச்
செறிமனையுள்ளார் வினவிலரென்னத் திகழ்ந்தனரவனுமாங்குற்று
னறிவறுமறையோன் றிறமுணர்நாத ரணைந்தவன்காணுறவெழுந்தே. (௩௮)

தங்கரத்திடையோர் கலங்கொடுதீர்த்தந் தாங்கிவந்திடுதிறங்கண்டு
மங்கவனசையா னின்றியல்பூசை யாற்றமையத்தடிவணங்கி
மங்களவுபதே சம்புரிதிரென மஞ்சனங்கொணர்தரப்பலகா
லிங்கறைந்துஞ்சற் றேற்றிடாதிரும்பி லியைமனத்தகங்கரமிகுந்தே. (௩௯)

நின்றனன்யாமஞ் சனங்கொணர்ந்திடவு னெஞ்சிடையுன்னிலனிவற்கே
யொன்றலாமுபதே சம்புரிந்திடுத லுசிதமன்றென்றுரைத்திடுவா
ரின்றரிபூசைக் கறல்கொணர்ந்திடுவா ரின்மையினுத்தமவேளை
சென்றதென்றிடமு டன்மனைபுகுந்தான் சீலர்பூசனைபுரிந்துற்றார். (௪0)

நனியருட்பொலிச நார்த்தனரேக நாதரையொருதினங்கூவிக்
கனியுளக்கருணை பொங்கினர்புகல்வார் கவின்மலிசுலீபமால்வரைப்பா
லினியசூரியதீர்த் தச்சமீபத்தி லின்பமார்க்கண்டநற்றலத்திற்
புனிதர்பற்பலர்பாண் டுரங்கனைப்போற்றிப் பொருவின்மெய்ப்பேறுபெற்றிட்டார்.

நீயவண்போந்து பானுதீர்த்தத்தி னெஞ்சுவப்பொடுபடிந்தரவப்
பாயலார்பாண்டு ரங்கனற்றியானம் பயின்றுவாழ்ந்திடிலருட்சேவை
மேயபேரருளா லளித்திடுமென்ன மிக்கபேருவகைகொண்டாசான்
றாயமாமலர்ச்சே வடிதொழுதங்ஙன் றேய்ந்தருந்தவம்புரிந்தமைந்தார். (௪௨)

அன்னகாலையிலம் மலைமிசையுறுமோ ரரவுவந்தவருடற்சுற்றி
யின்னறீருணவு கிடைத்ததென்றெண்ணி யியல்பரிசத்தினுற்பசிதீர்ந்
தின்னவாநாளு நாதர்மெய்ப்பணியாற் றிச்சைமிக்கன்பர்தந்தலைமே
னன்னலக்கவிகை யெனப்படம்விரித்து நண்ணியேயோகநீக்கத்தில். (௪௩)

நீங்குபுதியானம் புரிகையிற்குடையாய் நிழற்றிடுமிவ்வணமமைகாற்
பாங்குறுநகர்வாழ் பவன்மலைமீதிற் பயின்றிடுசாதுசற்சனர்க்குள்
ளோங்குமாவலின்வேட் டவையெலாமுதவு முதாரமிக்கவனொருநாளி
லாங்குபோந்தேகநாதரைவணங்கி யாவின்பாலளித்துணவேண்ட. (௪௪)

அன்னவன்பத்திக் குவந்தனரயின்று ரவனனவரதமாங்களித்தா
னின்னவாறியனு ளொன்றில்வைகறையி லெய்திநாடினனதுகாலை
மன்னருணுதர் யோகஞ்செய்துறலும் வாளராமிசையமைதலுங்கண்
டின்னன்மிக்கவரைத் தீண்டுங்கொலென்ன வெண்ணிவிட்டலன்றனைக்கூவி. ()

இத்ததியேக நாதரைப்புரத்தி யென்றுபல்வாறுபோற்றிடுமச்
சத்தமோர்ந்துரகம் போயதுநாதர் சகநிலையமைந்தவனுடனே
மெத்தநீகூச்ச லிட்டகாரணமென் விளம்பெனவிளைவுமுற்றோத
மெய்த்தவரரிதா சர்க்கியமனுமுள் வெருளுநீதேர்கிலையேயோ. (சகூ)

என்றுரைத்தனர்கண் முகிழ்த்துப்பாண்டுரங்க விணையறுவிட்டலநாதா
நன்றுநின்சேவை பெறும்பெருவிருப்பா னுனிவணமைதலோராயோ
குன்றுறழ்கரிமுன் னுதிமூலமெனக் கூவியவுடன்குலவியசீ
ரின்றுபோகியதோ வெனப்பலவாறேத் தினர்கனிந்துருகுமத்ததியில். (சஎ)

விட்டலன்சகுண வுருவனுக்கண்முன் விரவிடத்தாழ்ந்திருகண்ணீர்
கொட்டநாக்குழறப் பாடியுச்சியிற்கை கூப்பினர்பணிந்திடவெடுத்து
மட்டவிழ்மார்பி லணைத்தஞ்சேனீயுண் மதித்திடுதோறுமெய்துவனென்
றுட்டழையோகை யுடன்புகல்போதாண் டுற்றவன்றானுமிக்கன்பாய். (சஅ)

தவவிரதங்க ளாற்றிலன்யானுந் தயைபெறுநாதர்சேவையினு
னவமறையினமுந் தேவருங்காணு நாதனைக்கண்டனனென்ன
வுவகையிற்றுதிப்ப வருட்கணுனடி யுடன்மறைந்திட்டன னன்னோன்
றவமகிழ்ந்தேக நாதரைவணங்கித் தான்விடைகொடுநகர்சார்ந்தான். (சகூ)

பரவுசீரேக நாதர்சற்குரவர் பாலணைந்தன்பினிற்போற்றி
விரவநுபவங்கள் விளம்பினர்தழுவி விடையளித்திடநகர்மேவி
யிரவுடன்பகலு மரியருட்டுதிக ளியம்பினர்பூசைசெய்தியல்காற்
பரவைநேர்கருணை மேனிகொள்பத்த வற்சலன்பாண்டுரங்கேசன். (ரு0)

வேறு

இரவுபகலகம்புறத்து மிடையீடற்றென்னுருவை யிருத்தியன்பிற்
பரவுபுகழேகநா தன்றனருகமைந்தவன்மெய்ப் பணிசெய்தல்லால்
விரகமெனக்கொழியாதென் றுடனொருவேதியனுகும் வேடங்கொண்டு
தரமிகுதேவகிரியிலுற் றிவ்வூரில்விருந்தளிக்கத் தக்கார்யாவர். (ருக)

என்றுபலரையும்வினவ வெதிர்வார்யாவருமேக நாதரென்ன
வொன்றுமவர்தமைக்கண்டு பணிந்துபரதேசிநா னுறுமிவ்வூரிற்
றுன்றுநரைவினவினனீர் போனகநல்குவிரென்னச் சொன்னாரஃதா
னன்றுநும்பாலடைந்தனனு னுடையளிக்கிற்பணியாது நனிசெய்வேனல்.

எனவோதக்கேட்டேக நாதர்பதியெதுபேர்யா தியம்பாயென்னக்
கனநிகர்மேனியனெனக்கோ ரூரின்றென்பெயர்கண்டி யாவெனுது
மனதுவந்தோர்யாவரெனத் தேடிவந்தேனும்மையொத்த மாட்சிமிக்க
வனகவருட்பத்தர்களைக் கண்டிலன்விண்ணினுமென்ன வறையக்கேட்டே. ()

நாதருனக்கின்டமைய விச்சையுறிற்றடையின்றி நண்ணலாமென்
றோதவெனக்குற்றபெரும் போகமிதுவேயென்றுள் ளுவந்தானுகி
நாதமுடிமீதினின்ற ஞதாடியேவலன்பி னவிற்றப்புக்கா
ஞதாத்திற்பகவனுளப் பிரீதியளித்திடுபொருளொன் றகிலத்துண்டோ. (ருச)

சாணமெடுத்துக்குவித்தன் மனையலகிட்டேமெழுக றுகலங்கண்
மாணமையச்சுத்திசெய்த றுகிற்பணியாற்றிடனீர்க்கா வடிசுமத்த
லாணமுறுபூசாசா தனமீட்டன்மஞ்சனநீ ரமைத்தல்சந்தங்
காணவிழைத்திடுதல்பூத் தொடுத்தல்விளக்கேற்றன்முதற் கன்மமாற்றி. ()

நாதர்மனைபகர்வேலை புரிதறயிர்கடைதனவ நீதந்தன்னைப்
பேதமுறவெடுத்திடல்போ னகவகைசெய்திடல்சாலை பிறக்கல்பின்னு
மாதரத்திற்பணிவினவ லருமறையோருடனுதர்க் கன்னமீதல்
பாதமலம்பிடப்புனனல் குதல்புட்பதாம்பூலம் *படீரம்வைத்தல். (ருசு)

உச்சிட்டமெடுத்திடல்கோ மயங்தெளித்தன்முதற்பணிக ளுஞற்றியப்பான்
மெய்ச்சிட்டர்வேண்டுதிரு வடிகாங்களலம்பியுண மிசைந்துளன்பா
னச்சிப்புராணபட னஞ்செயிடம்வசதிசெய்து நல்கிக்கேட்டுண்
மெச்சித்தன்முடிதுளக்கி யமைந்திரவிற்செய்பணிகள் வியப்பவாற்றி. (ருஎ)

சயனமமைத்ததன்பினியல் குற்றேவன்முற்றுமின்பிற் சாலச்செய்து
வியனுறப்பின்ருன்பருகி யுறங்குவனிவ்வாருக விளங்குநாளின்
மயலறுசிரேகநா தரின்றந்தைதாய்விண்ண மருவவன்னோர்க்
கியன்மறைநல்விதிப்படியாற் றிடுமபரக்கிரியைகுறை வின்றியாற்றி. (ருஅ)

எதிராண்டிலமைந்தபிதிர் தினத்தின்முன்ஞளினிலவ்வூ ரிடைபார்ப்பாரா
வதிவார்தம்மனைதொறும்போ யழைத்துமறுநாளுறுவை கறையின்மூழ்கிப்
பதிவேபோற்பணியினமைந் தனனேகநாதர்கடன் பலவுஞ்செய்து
மதிதோயுப்பரிகையின்மீ தமைந்திடுகாற்குப்பையந்த மறுகிற்கூட்டும். (ருகூ)

புலையனெடுபுலைச்சியுமன் னவர்மனையினட்டிலின்கட் போந்தவாச
நிலையறிந்தப்புலைச்சிதன்ன யகற்குரைப்பாள்பேர்னகத்தி னேர்த்தியென்னே
யுலைவறநந்தமக்கிதுகிட் டிடுவதெவ்வாறெனப்புலைய னுரைப்பான்பேதாய்
கலையுணரந்தணர்க்கல்லா லிதுதகுமோவுச்சிட்டங் கைக்கணெய்தில். (கூ0)

நாம்புரிபுண்ணியமாகும் பிதிர்தினமீதாகையின னண்ணுதஃதுங்
காம்புறழ்தோளாய்வீணே யிச்சைகொளேலெச்சிலிலைகளுங்காணுதே
யாம்புவிக்கட்புதைப்பரெனும் புலையனுரையுபரிகைக்க ணமைந்தநாதர்
தாம்புனிதக்கேள்விகொடு வல்லையிறங்கினர்மனைபாற் சாற்றுகின்றார். (கூக)

பெண்ணேயிவ்விதியல கிடுபுலையன்மனைவிகறி பெற்றவாச
முண்ணேயமொடுமுகர்ந்து சாலவிரும்பினளதனை லுறவோருண்ணப்
பண்ணோர்கொள்பதார்த்தமவட் கிடல்வேண்டுமெனவினவுபாரியன்ன
ளுண்ணேதப்பட்டமிகை வேதியர்கள்பின்னுகர வுதவாதஃதால். (கூஉ)

* படீரம் - சந்தனம்.

எங்குநிறைந்துள்ளவன்ச னார்த்தனனுதலினன்னோ ரினத்தர்யாரும்
பொங்குமின்பெய்திடவிடுவா மெனநாதர்களித்துவெளிப் புறம்போந்தூரிற்
றங்குமினத்தரையெல்லா மழைத்துவந்துபுசித்திரெனச் சாற்றக்கேட்டோன்
மங்குல்கண்டமயிலேபோ லுவந்துபுலையரையழைத்து வந்தானப்பால். (கூங)

தெருவிலவர்தமையிருத்திச் சூத்திரரைப்பரிமாறச் செய்துகண்ணற்
கொருவலிலர்ப்பணமென்ன நுகர்தரச்செய்தந்தணர்கட் குதவவைத்த
மருமலர்சந்தனந்தாம்பூ லமுங்கொடுத்துவிடையளிப்ப மகிழ்ந்தன்னோர்க
ளருமையுணவிதுபோல்யா மறிந்திலமிச்சகத்திலெனவறைந்துபோனார். (கூச)

புலையரகன்றிட்டபின்கோ மயங்கொண்டவ்வீதியெலாம் புதுக்கியில்லின்
றலையுளபாத்திரங்களெலாஞ் சுத்திசெய்தாடைகடுவைத்துத் தானமாற்றி
யெலையில்சுவைக்கறியொடுபோ னகமமைத்தந்தணரையெலாமெதிர்கொண்டேற்ற
நிலையிலவரனைவோருஞ் சிரார்த்தமென்றுநமையழைத்து நீசர்க்கிட்டான். ()

இதுதகுமோ மறையோர்க்கென் றழன்றவனில்லிடத்தருந்த லேற்காதென்று
ரதுமனைகடொறுமேக நாதர்புகுந்தழைப்பவவ ரறைவரேட
சதுர்மறையோர்க்குணவமைத்தீ னருக்களித்திட்டனைகன்ம சண்டாளாநின்
பிதுரர்சண்டாளர்கள்கொல்லோ பேசுமறையொழுக்கமுற்றும் பிழைத்திட்டாயால்

எனவேகநாதர்நமக் காற்றுமுணவினைப்புலைச்சி யிச்சித்துண்டா
ளனதோடமமைந்துளபோ னகநுமக்காகாதென்றன் னவர்கட்கிட்டே
புனல்படிந்துசுத்திபெற மீண்டுமமைத்தனன்பிழையுட் பொறுத்துமுன்னோ
ரனககருமத்தைமுடித் தருளுதிரென்றிரப்பவவ ரறைவதானார். (கூஎ)

மகவமுதைநாய்க்கிடுதல் போலுநறுந்துளவதனை மசீதினுக்குத்
தகவணிதலொத்துமெமை யவமானம்புரிந்தனையாஞ் சார்கிலேமென்
றகலவிசனித்தேக நாதரமைகாற்கண்டி யாநாமந்தோய்
பகவனவர்முகநோக்கித் துயரமைபுங்காரணமென் பகர்திரந்தோ. (கூஅ)

சிரார்த்ததினமிதிற்கவலை யுறுவதழகன்றுமது சிந்தையூடு
பிரார்த்தனைசெய்திடிற்பிதுர்க ளணையாரோவெனக்கள்வன் பேசமாயைப்
பராக்கொழிதம்மனத்துணினைந் திலைபரப்பியமுதுபரி மாறுங்காலை
யராப்பள்ளியோனருளா லணைபிதிரர்க்கர்க்கியமா தியவளித்தே. (கூகூ)

மருவுசநார்த்தனர்முதலோர்க் காசனங்கற்பித்தவர்கண் மாந்தவீற்றிற்
பொருவறுதக்கணையாதி நல்கிமிகுபோனகத்தைப் புரிவதென்னென்
றருளேகநாதர்வின விடப்பிதிரரிட்டருட னருந்தாயென்ன
வருமவர்சொன்மொழிகேட்டு மறையவரீதென்னெனத்தம் மனம்வியந்தே. ()

அகத்தினுழைந்தனர்நோக்கப் பிதுரர்மறைந்தனர்வியந்தீண் டமையுநாத
மகத்துவஞ்சால்விண்டுகலை யுடையோர்யாங்கன்மாபி மானந்தன்னு
லுகத்தலுருமையினவமா னப்படவன்னவர்பிதிர ருண்டுபோனார்
தகக்கிடைக்குந்தக்கணையை யிழந்தனமின்றகந்தையுளந் தழைத்தியாமே. ()

பின்னுளிற்பரிகார மவர்க்கியற்றிமானநிலே பெறச்செய்வேமென்
றன்னுவேகினா தனு லும்மானம்போமென்னு முணர்விலார்பின்
கொன்னுர்கங்காதீர மேவினர்நாதரையழைக்கக் குறுகிப்போற்றி
யன்னுர்பாலெனேயழைத்த காரணமென்னெனமறையோ ரறைவதானுர்.(எஉ)

உமதுபிழைக்குற்றபிரா யச்சித்தமியற்றவென வுளம்பொருந்தார்
கமலவிழியானருள்பெற் றேற்கஃதவசியமன்று கன்மகாண்டத்
தமருழப்பீரெனமறையோர் நின்மாற்றஞ்சத்தியமே யாமானுலு
மெமதுரைக்கு வீறுதந்தவ் வாறுசெயிற்றேகசுத்தி யெய்துமென்று. (எஙு)

சம்மதமாகச்செய்து புனன்மூழ்கிப்பரிகாரந் தகச்செய்காலே
மைம்மலர்த்தண்டலேத்திரியம் பகத்தினில்வாழொருமறையோன்மருவிப்போற்றி
யிம்மகிமைப்பதியேக நாதரெவரிசைமினென வீண்டும்பார்ப்பார்
நும்மதுநாடெதுவந்த காரணமென்னெனன்னவவ னுவலலானுன். (எச)

குட்டநோயாற்றுயர்ந்து திரியம்பகேச்சுரனைக் கும்பிட்டன்பா
லிட்டமுடன்றுயில்காலே பரமனென்சொப்பனத்திவ்வா றிசைத்தானஃது
மட்டவிழ்பூம்பொழிற்றேவ கிரியிடத்தேகநாதப்பேர் வாய்ந்துமாலன்
புட்டழைத்தவொருவனுளான்பிதிர்தினத்திற்புலேயர்கொளவுணவீந்திட்டான்

அவன்பாற்போங்தொருபுலேயற் கிட்டபலன்பெற்றிடினே யகலுமென்னச்
சிவன்சாற்றவந்தனனென் றிடப்பார்ப்பாரதிசயித்துட் டிகைத்துச்சொல்வார்
நவந்தோயந்தணர்க்கமைந்த வுண்டிபுலேயருக்கீத னலமென்றோர்நூ
லெவன்சாற்றினுனெனச்சிற் சிலர்கைப்புண்காண்பதற்கா டியெற்றுக்கென்று.

அருளேகநாதர்செய லனைத்துங்கண்டனமினிமே லாற்றும்பண்புந்
தெருளுறக்காண்பேமென்று வந்தவற்குத்திட்டிகொடு தெரித்தார்நோயாற்
பருவரன்மிக்கவன்றூழ்ந்து செப்பவொருவன்பலத்தைப் பரிவாலீந்தார்
மருவியநோயக்கணத்தி லொழிந்துதெய்வவொளிபமைந்தம்மறையோன்வைக

கண்டமறையோர்வியந்து சயசயவென்றேதியுளக் கனிவினேடு
தொண்டர்தமைவாழ்த்திமனம் வருந்தினர்சொல்வாரிழிவார் தூலபுத்தி
கொண்டமைகன்மாசாரா பிமானிகளாயெமைமேலாக் குறித்துமக்கு
மொண்டமைபிராயச்சித் தஞ்செய்யத்துவக்கினம்யா மூணர்வற்றந்தோ. ()

என்றுதமையிகழ்ந்தேகநாதரைநீர்கண்ணனென்றுமிகத்திலெம்போ
லொன்றுநரலன்றென்றுந்தெளிந்தனஞ்சூரியற்குவெம்மையுறுத்தல்போலும்
நன்றுறுதபஞ்சோமற் கமைப்பதுறழ்ந்துங்காட்சி நண்ணிலேம்யாந்
துன்றுபிராயச்சித்தந் துவக்கியதெஞ்செயல்கொடுண்மை துலங்கக்கண்டேம்.

எனப்பலதோத்திரம்புரிந்து நாதர்மனேயடைந்துகனிந் தீதலான
கனப்படுதக்கணேகொண்டு வாழ்த்தியவர்மனேதோறுங் கலந்துளன்பால்
வனப்பமையுநாதரரி பத்தர்மறையவர்பத்தி வாய்த்தோரென்ன
மனப்பகையற்றெழிந்திரு மாலென்றுதம்முளத்தின் மதித்துவாழ்ந்தார்.()

வேறு

துவரைவாழ்மறை யோன்கிருட்டிணன்றனைத் துணைவிழிகொடுகொண்பான்
றவமுயன்றுமா தவஞ்செய்காலவனிரு தயவெளிக்கட்டோற்றி
நவவிராதைநல் லுருக்குமணிப்பெயர் நண்ணிருவருஞ்சொல்வா
ருவகைமிக்குநீ விரும்பியகண்ணன்ரு னேங்குதேவகிரிப்பால். (அக)

ஏகநாதர்வீட் டிடைகண்டியாவென விசைந்தபேரினனுகிச்
சோகமற்றவர் பணிசெய்தீரறுசமை தொலையவாழ்ந்தனனீபோய்
மோகமற்றெம்மை யகன்றவன்றனையிவண் முயங்கிடப்புரியென்னத்
தாகமிக்கவ ணடைதரநாதரத் தாபதன்றனைப்போற்றி. (அஉ)

ஆதனத்தமைத் தெப்பதியீரிவ ணணைந்தகாரியந்தன்னை
யோதல்வேண்டுமென் றிடக்கண்டியாவெவணுற்றுளானவற்காணுங்
காதல்கொண்டணைந் தேனெனநாதர்தாங் கங்கையம்புனல்கொள்ளப்
போதலாயின னெய்துமிக்கணத்தெனப் புகன்றவருறும்வேலை. (அஙு)

கண்டியாவுந்தோ ளிடைபுனற்காவடி யோடவண்கலந்திட்டா
னண்டினேன்றனைக் கண்டுளத்திலச்சைகொ டகத்தினுட்புக்கிங்ஙன்
ருெண்டியற்றியீ ரறுவருடங்களாச் சுகமிகவிருந்தேனெற்
கண்டிவண்டொடர்ந் தெய்தினனொருகடன் காரனென்றுளனைந்தே. (அச)

நின்றகாலையி னுதர்கண்டியாவிதோ நேர்ந்தனனெனவந்தோன்
சென்றருட்பதம் வணங்கவொன்ருேதிலன் செழியகாவடிவைத்தே
மன்றன்மிக்கவா ராதனையகத்துட்போய் மறைந்தனன்வரக்காணு
னென்றருந்தவ னுட்புகுந்தாய்ந்துமங் குற்றிலாமையினொந்தே. (அரு)

பின்னைதன்னைமார் பிடைவைத்தகிருட்டிண பிரபுபாண்டரங்கேசா
வன்னையப்பனு யாருயிர்த்தொகுதிக ளனைத்துளங்கலந்தோனே
நின்னைக்காணவிந் நகருளாரெத்தவ நிரப்பினர்தொழவெய்து
மென்னைநாடியோர் மொழிபுகலாய்மறைந் திட்டனைமுறையேயோ. (அசு)

விரிபவம்பெறுங் கொடியனேனியானிவண் மேவிலேனெனிற்றேவ
கிரியின்பாலரெல் லாநின்னுனந்தமெய் கிளரருள்வடிவத்தைத்
தரிசனம்புரிந் தமைவர்கள்பாவியேன் சார்தருதிறத்தாலோ
கரியவாவுயிர்க் கரியவாமாயையாற் கரந்தனைநின்மேனி. (அஎ)

என்றுபற்பல சாற்றினன்கீழ்விழுந் திரங்கவேதெரிநாதர்
கன்றுநெஞ்சுடன் போந்துநீரிரங்கிடுங் காரணமென்னென்னத்
துன்றுமுண்மைசாற் றிடவுணர்நாதருட் டுயரமிக்குற்ருரா
யொன்றுமாதவன் றனைக்கையால்வாரித்தம் முரத்தணைத்தனர்சொல்வார். ()

தவத்தராகுநீர் புரிந்ததேவாய்மையாந் தவமருட்கண்ணன்றன்
னவத்தகைத்திரு வுருவுகண்டவனரு ளுண்மலர்ப்பதந்தாழ்ந்தீ
ரவத்தனேனென தேவலென்றெப்பிலா னுற்றியபணிகொண்டேன்
புவத்தையெவ்வணந் தொலைக்குவனையகோ பாவியேன்றெரிகில்லேன். (அகூ)

பாமரத்தகை பெற்றவென்பொருட்டினுற் படியிலுன்மணிவண்ணக்
கோமளத்திரு மேனிதுன்புற்றிடு கொள்கையேதோகஞ்சத்
தூமலர்க்கரங் காய்த்தவேமறைதொடாத் துணையடிகன்றிற்றே
தோவறும்படை தாங்குதோள்காவடி சுமந்தலுப்பெய்திற்றே. (கூ0)

பகலிராவுனைத் தெரிசித்துமித்தகு பவமுற்றேன்றெருளில்லார்
திகழுமெய்ப்பொருள் காணினுமோர்பயன் செறிதாரெனச்சாற்று
நிகமமாற்றத்துக் கோரிலக்கியமதா நின்றனனெனநாதர்
பகருமாற்றங்கேட் டருள்பொலிதேவியார் படியில்வீழ்ந்திரங்குற்றார். (கூக)

இன்னவாறவ ரழுதிரங்கிடவந்தோ னியல்விடைகொடுபோந்தான்
பின்னர்நாதர்தம் மனையுடனுடொறும் பிரான்புரிபணிபுன்னி
யின்னன்மிக்கிருந் திட்டனரொருபக லிடைகொள்சொப்பனந்தன்னின்
மன்னருண்மெஞ்ஞா னதேவர்நீயளகையின் மருவுமென்சமாதிப்பால். (கூ௨)

வந்துசற்றிரி சனம்புரிந்தசா நுப்பேர் மாத்தின்வேறென்பாங்கர்
முந்துறுதொதுக் கிப்பலம்பெறும்படி மூடிதியெனச்சாற்ற
வுந்துமுத்தர வின்படியடைந்தவ னுறுமிந்திராயண்ணிப்
பைந்துறைக்கண்மூழ் கினர்சித்தேசுரன்றனைப் பணிந்துசமாதிக்கண். (கூ௩)

வச்சிராதனத் தமைந்தஞானேச்சுரர் வடிவுகண்டனர்போற்றி
யுச்சிதப்பணி திறம்பெறமுடித்தன ருறுமவர்பல்லோரு
நச்சிலொன்றிவெம் பசிகொள்கால்விட்டல னுப்கனும்வடிவுற்று
மெச்சிடும்பல பொருள்கொடங்காடிப்பான் மேவியாண்டணைவோரை. (கூச)

ஏற்றவென்கடைப் பாற்பொருள்வேண்டுவ வியைந்துளகொண்மென்னச்
சாற்றவோரிரு வேதியர்பொருள்கொடு சற்றிவண்வதிவீரேன்
மாற்றமைந்தபொன் றருவமென்றிடவிரா மன்னுமட்டிவணெய்வே
னுற்றநாதரை யறிவன்யானவரெனை யறிகிலாரவரிங்ஙன். (கூ௫)

வந்தசெய்திகேட் டணைந்தனன்சரக்குடன் மாடையூண்டுய்த்தீவீ
ரந்தணீர்பசித் துற்றனிர்வல்லைகொண் டமுதுசெய்குதிரென்று
பந்தமோடுரைத் தீரடிபேர்த்துப்பின் பார்த்திடக்கண்டில்லா
ருந்தகம்வியந் தார்களாய்நாதர்பா லுற்றசம்பவஞ்சொற்றார். (கூசு)

வினவிநாதர்நம் பொருட்டினல்விட்டலன் மிகவருந்துகின்றானென்
றனலுறும்புழு விற்றுடித்தேத்திப்பி னமுதயின்றனல்லின்
மனமுவந்துகிர்த் தனஞ்செய்துசமாதியை வைகறையினிற்போற்றி
யனகவூர்புகு வார்சநார்த்தனரைத்த மகத்திலுன்னினர்செல்கால். (கூஎ)

ஆங்கணைந்திடத் தேசிகர்க்கண்டுளத் தன்பினிற்றொழுதேத்திப்
பாங்கமைந்திடு நாதர்தாம்புவியுள பாமரர்களைமாயன்
பூங்கழற்றுணைக் கன்பராப்புரியத்தம் புந்திகொண்டுறனடித்
தேங்கருட்குரு நாதர்பார்மிசைதிகழ் தீர்த்தம்யாவினுமூழ்கி. (கூஅ)

சரணடைந்தவர்க் கநுக்கிரகித்திவன் சார்தியென்றிடக்கேட்டே
குரவரைப்பிரிந் திடச்சகியார்துயர் கொண்டுபோற்றினரங்ஙன்
வாதனுற்றபஃ றலங்தொழுதுவப்புடன் வயங்குதீர்த்தந்தோய்ந்து
பாவுகீர்த்தனம் பாடிமாந்தரையெலாம் பத்திமிக்கவராக்கி. (கூகூ)

சீலமிக்ககோ தாவரிக்கருகினிற் றிகழ்பிரதிட்டானப்
பாலமைந்துபல் கீர்த்தனமியற்றுபு பாடினர்வினவுற்றோர்
சாலவுங்களிப் பமைந்துமாதவனவ தாரரிங்கிவரொப்பார்
ஞாலமீதுமுன் பின்னுமின்றென்றரு ணாலயிற்படிந்திட்டார். (க00)

நாதர்கீர்த்தனஞ் சிரமமிக்கொருவரே நவின்றிடச்சகியானுய்க்
கீதவேதிய வுருக்கொடுவிட்டலன் கிளர்ச்சியிற்பின்னின்றே
யோதலாயின னதுமுதல்வினவுவா ருடன்மறந்தருளுண்மைப்
போதமேவின ரவர்பெறும்பாக்கியம் புகன்றுமுற்றுவதேயோ. (க0க)

நண்ணுநாள்கிருட் டிணசயந்தித்திரு நாண்மருவிடநாத
ரண்ணுவாருட னிதுசிறப்பெய்தநா மாற்றனன்றெனவவ்வூர்க்
கண்ணுளார்பல ரும்பொருள்யாவையுங் கனிவுடன்குவிவாக்க
விண்ணுளார்புக ழுவ்விழாவை பவம் விரவிக்காண்டருமாறே. (க0௨)

தேசிகர்க்குவிண் ணப்பிக்குமாறொரு செழுமறையவற்போக்கி
மாசிலார்மகிழ்ந் தேகுடும்பத்துடன் வளநகர்புகும்போதி
லாசிசாறத்தாத் திரேயரைநினைப்பவக் கணத்தவணவரெய்தத்
தேசிலங்கவர் புகழ்துதித்தன்பினிற் றிருவடிமிசைவீழ்ந்தார். (க0௩)

உடனெடுத்துமார் பிடையணைத்துவகைகொண் டனதுசற்சீடன்போற்
றிடவிரத்தியும் பத்திமெஞ்ஞானமுஞ் செறிந்தவர்செகத்தில்லை
விடலரும்பெருங் காதலினவன்புகன் மிக்ககீர்த்தனங்கேட்டே
மடமமைந்தவா யிலினிடைபாலனு வதியவேட்டிவண்வந்தேன். (க0௪)

என்றுரைத்தவர் வருசெயனுதர்பா லியைபவர்சொலக்கேட்டே
நன்றுளத்தெழு முவகையர்விரைந்தெதிர் நண்ணுபுபணிந்தன்பா
லொன்றுதம்முட லறிகிலர்கிடந்திட வுவந்தருட்குருநாதர்
மென்றுணைக்கரத் தாலெடுத்தனர்தழீஇ மிகவுமுண்மகிழ்ந்திட்டார். (க0௫)

ஆரியர்த்திரு மடத்தினுட்கொண்டணைந் தாதனத்தவிசேற்றிச்
சீரியற்பதி னாறுபசாரமுஞ் சிறப்பவாற்றினர்பாத
வாரிசம்விளக் கருட்புனலுட்கொடு மருவமுதயின்றப்பான்
மாரிநேர்மணி வண்ணனைக்குரவரை வாளரித்தவிசேற்றி. (க0௬)

வேறு

தனதனத் தனதான தனதத்ததானனு

அவிர்கிருட்டிணலீலை களையருட்கடல்வாரி
யவனியிற்கொடுமாயை யெனவுற்றவேடையா
லயருயிர்த்திரளாகி நிகழ்பயிர்க்குலம்யாவு
மதிசெழிப்புறுமாறு மதகொத்துமேன்மைதோய்

செவிவழிப்புகுமாறு பொழியவற்புதநீர்கொள்
செயல்படைத்தவர்யாரு நிறைவுற்றவார்வநீர்
திகழ்விழிப்புடைமாரி யெனவடித்தியன்ஞான
திருவுருப்பெறுமாய னெனுமொப்பினுதனீள்
கவின்மலர்ப்பதமான மனையிடைத்தமதாவி
களையமைத்தகலாத சுகமுட்குலாவியே
கனவனத்திடைநாசி யிடைவிழித்தமையோகர்
கணம்வியப்புறுசீரோர் கணமுற்றுருமுனே
யவிழுளத்தினர்நீர்மை தெரியும்விட்டுலராரு
மமுதையப்புறம்வீசி யலர்கைக்கொள்காலையே
யவசமுற்றறியாது பொழிதலுற்றனர்பாடு
மணிகொள்விட்டலனுதர் மிசைபத்தர்மீதரோ. (௧0எ)

தனதான தத்ததன தனதானதந்தன

அதுகாலையிற்பருதி மிகுகோமளத்தகைமை
யமைமேனிவிட்டலனு மவிர்நாதருங்கொள்பே
ரயர்வானதைத்தனுள மிசையேசகித்தலில
தவிர்வானெனக்குலவு செயறேறியன்பொடே
முதுவோகைமிக்கரிம குடமோதியுற்றமறை
முறையாரதித்தொழில்செய் துதுழாயமைந்தநீர்
முருகோடினித்தபல பிரசாதமிட்டுநதி
முழுகாவரிக்குவகை பெறுபூசையுஞ்செய்தே
சதுர்வேதியர்க்குமரி யடியார்களுக்குமுறு
சவிதாவினத்தம்வரை யளவாதவின்பொடே
தகுபூசனைத்தொழில்செய் தலர்தூவியொப்பிலமு
தமுளோகையிற்பெரிது மிடுவாரினன்செல்கால்
விதுவானதைத்தருமி தயனுதர்செப்புசுவை
மிகுபாடலைச்செவியி னிடமேயருந்துவார்
விரையார்தருப்புடையி லமர்தேவர்நத்திடவி
திநாளொரெட்டொழியும் வரையேமுயன்றரோ. (௧0அ)

தனதந்ததானதன தத்ததனதானதன தனதத்ததத்தன

வருமொன்பதானநவ மித்திதியிலோகையுட
னுடனின்றுபாகவத மெய்த்திடலிலாதமிகு
மதுரங்குலாவும்வகை செப்பியறியாதவிடம் வளர்கிட்டிணப்பிரான்
மகியின்கண்மானிடரெ னச்செனனமேவுமவர்
பலருஞ்செய்தேககதிபெ றப்புரியுமாடல்களின்
வகையொன்றறுதமுய லுற்றியல்பினுள்குலவு தசமித்திதிக்கணே

யுருமொஞ்சுபோதைமலி பற்பலியகானமுடன்
விபவங்குலாவநக ரத்தைவலமாதல்செய்து
ஞுறையின்பராகியவிர் விக்கிரகமேவுதளி யிடையுற்றிடச்செய்தே
யொளிகொண்டவாரதிசெய் தொப்பில்பிரசாதமனே
வருமின்பொடேகொளவ ளித்திறுதியாகியபி
னுறுமன்பினுதர்குரு வைப்பணியுமேல்வையவ ருளமிக்குவப்பரா
யருகொன்றுகீதவறி வுற்றசகபாடிமிகு
நிபுணன்குலாவிடல்வி யப்புநகர்மேனியின
வயலொன்றுபாடல்பெறு மொற்றுமையெனேகிளவிகொடுமுற்றுவிப்பதோ
வணிமிஞ்சுகானசர பத்தகைகுலாவுநமை
யிவணென்றுகூடவருள் விட்டலனேநீயிரினி
யகல்கின்றிலாதமைத ரற்கருளுமாறுகரு துவதிச்சையெற்கெனு
வருள்கொண்டதேசிகர்சொ லைச்செவிகொணுதருட
னயலொன்றுபாடகனே யுற்றபதியோடுபெய
ரறைகென்றுசாவவன் விட்டலனெனுதுபெயர் நகரெற்கிலைச்சதா
வடலங்குலாவுநமை யொத்தபெரியோர்களுட
னுறமிஞ்சுமாவன்மிகை பெற்றுளனுமோடுபிறி
வறவென்றும்வாழும்வகை யெற்கருளுவீரெனவெ னதுநற்கருத்ததே.()

வேறு

எனவிருவரோதுமொழி வினவியசநார்த்தனர்த மிதயக்களிப்பெய்தியே
யனகர்விடைபெற்றுநக ரெய்தவிருவருமளவ ளாவினர்கள்வாழுநாளிற்
கனமருவுபண்டரியில் விட்டலனெர்சகுணவுரு வங்காணும்வேட்கையுடனேர்
பனவனிந்துத்துண்ட நதியின்முழுகித்தொண்டு பலவாறியற்றிவந்தான் ()

அருண்மருவுவிட்டலனெ னுதுருவைநீகாணு மாசைவிரவுற்றனையெனிற்
றிருமருவுமொப்பில்பிர திட்டானநகரினிடை சேர்ந்தேகநாதர்பின்யான்
பெருகுமதுரக்கீர்த்த னம்பாடிநிற்பனீ பேணுதியெனச்சொலக்கேட்
டுருகுளம்பெறுமறைய வன்கணத்தங்கூரி லுற்றவர்கள்பாடுமமையம். (ககக)

நின்றசகபாடியைவ ணங்கவுடனவ்வுருவ நீத்தாழிகம்பிலங்கு
மென்றளிர்க்கரநிரையும் விலகிவில்லுமிழ்விரவியின்பொடமழகொழுகுமுகமுந்
துண்றணிக்குண்டலம்வி ளங்குமிருகாதுமணி தோய்ந்திலங்கியதோள்களு
மின்றயங்கியவெழிற் பீதாம்பரத்தொடருண் மென்மலர்ப்பதமுநிலவ.(ககஉ)

விழிவிருந்தெனவுற்ற திருவுருக்கண்டின்ப வேலையிடைமூழ்கினைப்
பொழியின்பநீர்பெருகி டப்பரவசங்கொண்டு போற்றிசயபோற்றியென்னு
மொழிவிண்டுபோற்றினன்வணங்கவுடனேதன்னெர் முதிரொளியுருக்கரந்தான்
செழியதவவேதியன் பின்னேகநாதரிரு திருவடிகள்போற்றிநுவல்வான், ()

பன்னிரண்டாண்டுவிட் டலனுமக்குற்றசக பாடியாகப்பாடியே
மன்னினனெனிற்றம்மோர் மகிமையரவரசலான் மற்றெவருரைப்பரென்னப்
பன்னினன்விதந்திடவி னாவியருணாதர்நம் பால்வந்துபாண்டுரங்கன்
றன்னியன்மெய்மிகவருந் தினனென்றுபோற்றியே தம்மூரடைந்தருளினார்.

ஒருதினத்தினிலேக நாதர்தம்மாணாக்க னுத்தவன்றாள்கள்போற்றி
மருவியற்பாகவத றம்வாயினால்வினவு வாஞ்சையேனென்றிரப்ப
வருசுபதினத்திற் றொடங்கவருள்விட்டலனோர் மறையோனுருக்கொடெய்தி
வருணாதரைத்தொழுது மூரேதுபேரென்னை யறியவுரைசெய்திரென்ன. ()

இன்னவூரென்னநிலை யில்லைகேசவனும மேயபாகவதமன்பிற்
பன்னலாயினரென்ன வோதுசொல்வினாவிநும் பாலமைந்தேனென்னநன்
றென்னவோதுபுநாத ரோதினர்தினந்தொறுமி வாறிபலோர்நாளிராவிற்
கன்னன்மூழைவந்துற்ற காலைதேசாந்தரர்க ளாயினரோர்நால்வர்வந்தே. ()

பசிமிகுத்துற்றசெயல் சாற்றவேநாதர்மனை யானகிரிசாபாயியைக்
கசிவுடன்கூவியமு திடுகெனவருந்தியுட் காட்டமிலைசெய்வதென்னிந்
நிசியிலெனநாதர்மனை முழுதும்விறகாபுறுத னீயறிந்திலைகொலென்றே
சுசிமனம்பெறுமுத்த வற்கூவியிற்பிரித் துத்தருதியிந்தனமென. (ககள)

மனைபிரித்திடநோ மெய்துமால்யான்றுயிலு மஞ்சம்பிளந்துநல்கென்
றனையனையர்சாற்றவவ் வாறளித்துணவட் டவர்க்குதவியுண்டபின்ன
ரினைவறத்தாம்பூல தக்கணையளிக்கவவ ரேற்றுவாழ்த்தினரகன்றா
ரனையகாலத்திற் சிரார்த்தத்தினுக்கமு தமைத்தந்தணர்க்கூவினார். (ககஅ)

அத்ததியினாதர்நிலை யுலகுணர்தரத்தேற்ற வருள்கொடிரிமூர்த்தியானோ
ரொத்தமைபகீர்களாய் மிக்கபசியோடடைத லுற்றேமெமக்கூணளித்
துச் தமவெமைகாத்தி யெனமனைதனைக்கூவி யுணவிடச்செய்துவகையோ
டத்தமுயர்தாம்பூல நல்கிமிக்குபசார மாற்றவவருளமகிழ்ந்தே. (கககூ)

தம்முருவினைக்காட்ட நாதர்மிகுபேரின்ப சாகரத்துட்படிந்து
கைம்முகிழ்த்துப்பணிந் தேத்தவவர்விடைகொண்டு கள்ளவேடந்தாங்கியே
விம்முமகிழ்வொடுதங்கள் பாடையில்வியந்துதவு வெற்றிலைச்சுருளருந்தி
யிம்முனிவர்வருணபே தஞ்சற்றிலாரென வியம்பினர்செல்வேலையங்கண். ()

நாதர்வீட்டுக்குண்ண வேய்துமறையோர்வினவி நனிசினந்தவரிடம்போய்க்
கோதறுசிரார்த்தத்தி னத்திலிழிவார்பகீர் கொள்ளவுணவிட்டனையதா
னீதமறையோனன்று நீயெனப்பலவாறு நிந்தித்துநாட்டாண்மைபா
லோதவவணாதரைக் கூவியிவிதஞ்செய்த லுசிதமோவெனவினாவ. (கஉக)

பசிமிக்கடைந்தவர் தமக்குதவினேன்சுசிப் படவினியமைப்பன்வந்து
புசிமினெனவியலாது பிதிரர்வந்துண்டிடிற் போந்தியாமயில்வமென்னக்
கசிமனம்பெறுநாத ரவ்வாறியற்றுவன் காண்மினென்றில்லின்மருவிப்
பசியமாலடியுன்ன வக்கணத்திற்பிதிரர் பல்லோருமவணெய்தினார். (கஉஉ)

உடனவர்தமைப்பூசை யாற்றவவருண்ணமறை யோரெலாமதிசயித்துப்
படவரவின்மீதுதுயி லுதனோதராப் பார்மீதில்வந்தனனெனுந்
திடமமைந்தனருண்ட பின்னர்தாம்பூலமா தியவீந்துவிடைநல்கினர்
படரிரவிலரிநாம சங்கீர்த்தனஞ்செய்து பரவுபிரசாதமீந்தார். (கஉங)

அந்நாளிலவ்வூரில் வாழ்கிருட்டிணதாச னுமறையவன்காளிதன்
மின்னாருட்புலமை வாய்ந்தவன்வான்மீகி விண்டராமாயணம்போற்
கொன்னார்பிராகிருத பாடையிற்செய்திறமை குலமருவினோர்களோர்ந்து
நன்னாதர்பாலோத வுள்வியந்தனர்காளி நாடுபாசனையமைந்தான். (கஉச)

அரிபுகழ்கிளத்துமிய னன்றுநன்றென்றன ரவன்யுத்தகாண்டமொழிகாற்
பரிவுடனெரிரவினில வன்கனவினிடைகாளி பார்க்கவந்தன்பநாளைப்
பரிதியுதயத்தினின் மரிப்பையெனவுள்ளப் பதைப்புடனெழுந்தையகோ
புரிகிரந்தம்பூர்த்தி பெற்றிலதிதற்கியான் புரிவதென்னெனவுன்னினன். ()

அருளேகநாதர்புடை சென்றேதனன்றென வகங்கொடவர்பாலணைந்தே
திருவாரிசக்கழல் பணிந்துபத்திரகாளி செப்புமுத்தரவையோதிப்
பொருவாவிராமாய ணம்பூர்த்திசெய்தனும் பொறையென்னவோதிநல்கத்
தெருளார்கரங்கொண்டு ணர்ந்துமிக்கினிதென்று சிந்தையுண்மகிழ்ந்துசொல்வார்.

ஒருவர்வாக்கேலினிய திதுமுடிவுறுந்துணையு முன்னுயிர்க்கீறுறாதுள்
வெருளலைநின்மனையகத் தெய்திடாயென் னவுண் மிகக்களித்தன்பர்பொற்றாண்
மருமலர்முடிக்கணிந் தனனேகிநிறைவுற வகுத்தனன்பத்தரல்லாற்
றருநிழல்கொள்சுரரும்விதி தாண்டமுடியாதெனச் சாற்றுசொற்கிஃதொர்சான்றே.

கருநாடதேயமிசை வைசியன்பாண்டுரங் கன்பதப்பத்திமிக்கான்
பொருவாவிடோபா வுருப்பீதகங்கொடு புரிந்துபிரதிட்டையாற்றப்
பெருகாதரச்சுபதி னம்பார்த்துறுங்காற் பிரானவன்கனவினெய்தி
வருதேவகிரியினிடை திகழ்பத்தர்தஞ்சிகா மணியானவேகநாதர். (கஉஅ)

தம்பாலளித்தியல திந்தவிக்கிரகந் தனைக்கருத்துற்றவாசீ
நம்பாதலைக்கினிற் களவற்றதுன்பங்க ணண்ணிடுமெனப்பயந்தே
பம்பாகுலத்துட னெழுந்துமறையோர்புடை படர்ந்துபகர்போழ்திலவர்தா
மொய்ம்பார்கனுவிவண மூன்றுதினமெய்திடில முறைபுரிதியெனவவாறே. ()

கனவுகண்டுறுவணிக னம்மூர்த்தியோடுயர் கவின்றேவகிரியினண்ணி
யனகர்திருமுன்வைத்த னன்பணிந்துற்றசெய லடைவுறவுரைத்தபோதிற்
கனசுந்தரங்குலவு விக்கிரகநாடிக் களித்தனர்தமார்பிடையமைத்
தனன்மெழுகினுள்ளமுரு கிப்பாண்டுரங்காந லருள்விடோபாமுகுந்தா. (கங0)

நின்னதருண்மகிமையைக் காண்பார்கள்யாரென நிகழ்த்தியொருசுபதினத்தி
லங்கர்கோண்மாந்தர்பல ரையுமழைத்தன்பினுட னங்குபிரதிட்டைசெய்தே
பன்னரியவுபசார மீரெட்டுமாற்றிமிகு பரிவின்மிகுவெண்ணெய்கைக்கொண்
டின்னதைநினதுசெவ் வாய்திறந்துண்ணென் றிடப்பலோர்களுமுணரவே. ()

உண்டருளல்கண்டவர்கள் சயசயவெனப்புகன் றுவகைக்கடற்குண்மூழ்கித்
தொண்டர்தமைவந்தித்துமூர்த்தியையும்வலமுறச்சூழ்ந்தந்தணர்க்குணவளித்
தண்டர்களுமெச்சிட மகோற்சவநலம்பெற வயர்ந்தவணிகன்மீதினின்
மண்டளவினுவகைகொடு நாதமாசிகள்சாற்ற வைசியன்றெழுதுரைப்பான். ()

அருக்கனிகர்விட்டலனெ ஞதுநகரம்புகி லவற்கினியதேவியாகு
முருக்குமணிவிக்கிரக மொன்றுசெய்வேன்மண முளுற்றியருள்வீரென்றுளத்
துருக்கமொடுசாற்றவவ் வாறேகநாதரு ளுவந்துடன்பாடாதலாற்
பெருக்கமுறுசெல்வனவ்வாறுற்றினன்வரவுபெறுமாறிரந்தபோதில். (கஙக)

அருளேகநாதர்மிகு சம்பிரமமோடிய மதிர்ந்திடப்பரிசனருடன்
றிருவார்விடோபா வினைக்கொடவனூர்க்கருகு சென்றபோதவன்மகிழ்ந்தே
பெருகாதரத்தொடுப ணிந்துபசரித்தணி பிறங்குமனைமீதமைத்து
வருதூயசுபமுகூர்த் தத்திலுலகனையப்பர் மணமாட்சிபெறமுடித்தே. (கஙச)

அனவரதமொருதிங்கள் வரைபகலெலாமன்ப ரந்தணர்க்கமுதளித்தே
மனமகிழ்வினுதர்கீர்த் தனமிரவுதொறுமொர்மதி மட்டுமோதக்களிப்பாய்
வினவியப்பதியின்மே வினர்பத்திஞானத்தின் மிக்கவர்களாகிவாழ்ந்தா
ரனகவணிகன்பின்பு பெண்சீதனப்பொருள்க ளளவிலவுவந்தளித்தே. (கஙரு)

பரிசனமிகச்சூழ்ந்து மிகுமங்களங்குலவு பல்லாண்டுபாடியேத்திப்
பெரிதுபல்லியநிரை முழங்கவிட்டலனெடு பிராட்டியைத்தேரின்மிசைவைத்
துரியவைசியனுத ரைப்பணிந்தனன்வாழ்த்த வோகையொடவற்கருளியே
புரியின்மிசைவந்துபிர திட்டைசெய்தரிபுகழ் புகன்றின்பின்மூழ்கிவாழ்ந்தார்.

வேறு

இன்னவாறியலு நாளினுதர்நல மிசையுமுத்தவனை நோக்கியே
யன்னமார்கழனி கொண்டபண்டரி யடைந்துவிட்டல னருட்பத
மன்னவாவின்வழி பட்டிவண்புகுது மட்டுமிங்கமையும் விட்டல
னன்னலத்திருவி ழாவுலாவிவை நடத்திவைகுகென வோதியே. (கஙஎ)

சாதுசற்சனர்க ளோடுகூடிமிகு தாளம்வீணைகுழ லாதியா
வோதுபல்லியமு ழங்கமாதவனு வந்தகீர்த்தனைபி சைத்தனர்
போதுபீமநதி தீரமேவியருள் பொங்குநீர்படியு மேல்வையின்
மோதுவாரிதிமு கந்தெழுங்கருணை முகிலேநேர்படிவ விட்டலன். (கஙஅ)

அருச்சகன்மிசைகு லாவியோதுவனெ னன்பெனுங்கடல்ப டிந்திடுந்
திருச்சமைந்தவரு ளேகநாதனெனொர் தெரிசனம்பெறவ டைந்திவண்
கருச்சளங்கெடமு ருக்குசந்திரபா கைக்கணேமுழுக லாயினன்
மருச்சமைந்தவெனு லாவினிற்புரியும் வைபங்களொடு நீயிர்போய். (கஙகூ)

ஈண்டழைத்துவரு வீரெனப்பலரு மிதயமீதுவகை யெய்தியே
மாண்டழைத்தவிரு தோடுபல்லியமு ழங்கமாநதியின் மாடுபோ
யீண்டலானபல ருந்துணைப்பதமி றைஞ்சியேத்தியுளு வப்புட
னுண்டநாதனரு ளாணையோதவய ரன்பர்கேள்விபுகு மத்துணை. (கச0)

பரவசங்கொடருள் விட்டலன்றனடி பரவியேத்தியரிமாதவ
வரதவென்மிசைநி னுள்ளிசைந்தவருள் வண்மையென்னெனவ குப்பனென்
றிரதமிஞ்சுபல கவிகளோதியெதி ரெய்தருச்சகர்க ளோடுசம்
பிரமமோன்றநகர் வலமமைந்தணிபி றங்கிடுங்கருட கம்பமுன். (கசக)

மருவியங்கமிரு நாலுமண்படவ ணங்கிநான்மறையி னுச்சியைப்
பொருவுசெங்கன்மிசை நின்றுபேரருள்பொ ழிந்துதொண்டர்தமை யாளவே
விருதுகட்டியமை ஞானபூரணவி லாசமேனிபெறு விட்டலன்
றிருவடித்துணைவ ணங்கியின்பவறல் சிந்திடத்தழுவி யார்வராய். (கச௨)

அங்கணுறுதிவ சங்குலாவினர தன்பினுகுமொரு நாளினிற்
றுங்கவிட்டலன ருச்சகன்றன்மிசை தோய்ந்திநாளிரவிலன்புசால்
பொங்கமேவுமுயர் பானுதாசனிசை பொருவில்கீர்த்தனமெ னச்செய்தே
மங்களம்படவு ரைத்தியென்றிடவவ் வகைசெய்தூர்விடைகொடேகினர். ()

அணிகொடேவகிரி மருவியேபகலி லரியபாகவத மறைகுவார்
தணிவிலாதரமொ டிரவெலாமரித னுதுநாமததி பாடுவார்
கணிசநாதரிஙன் வாழுநாளிலரி கவினெர்வேதிபனெ னக்குலாய்த்
திணிகொள்கேசவனெ னுதுநாமமுயர் தீர்த்தயாத்திரைசெல் கின்றனன். ()

பன்னிரண்டுவரு டங்களிவ்விடைப டிந்திருந் தனனெனச்சொலப்
பின்னிவண்டரிச னம்பெறும்படிபி றங்குவீரெனமெய் நாதர்தாழ்ந்
துன்னிடும்படிவி டுக்கநன்றெனவு ரைத்தகன்றனன்மெ யன்பருக்
கன்னியம்படவி ருக்குமோர்விறலி லாதபூரணவ ருட்பிரான். (கச௫)

நாதரிவ்வகைவி ளங்கவங்கரி னண்ணுமோர்புலைய னுடொறும்
போதமார்மனைவி யோடணைந்தயல்பொ ருந்திநாதர்புகல் பாடல்க
ளாதாங்கொடுவி னுவியன்னரைய கண்டபூரணனெ னத்தெளிந்
தேதமற்றவவர் வடிவினைத்தமித யத்திருத்தினர்க ளாகியே. (கச௬)

அவர்பொருந்தும்வழி யலகிடுந்தொழில யர்ந்திருந்தனரொர் நாளினிற்
றவமிகுந்தமனை தவனுடன்புகல்வ டயைகொள்விட்டலனி வுலகெலா
நவநலம்பெறவி யற்றவேநமது நாதராய்நிலவி னனஃதா
னுவமையற்றவரொர் வேளைநம்மனையி லுண்ணினங்குலமு முய்யுமால். (கசஎ)

என்றபாரிமொழி கொண்டனேனுவகை யெய்திநாதர்தனி யாகியே
யொன்றலானததி மேவியென்பிதிர ருய்யுமாறென்மனைமீதிலுற்
றென்றனீரமுது செய்திரென்றுபரி வெய்தியன்னவனிரந்திடக்
குன்றனாரவனு ளன்பறிந்துநெரு குறைமுடிப்பனென வாழ்த்தியே. (கசஅ)

திருவடித்துணை வணங்கினன்மனைசெ றிந்துபத்தினியொ டோதுகா
லுருகுநெஞ்சமுறு மவள்பினளுணவு ளுற்றிநாதனெடு நாதரைப்
பெருகுகாதலின ழைக்கவேவினள்பி றங்கிடும்புலைய னேகுபோழ்
தருமைநாதர்புன லாடியெய்தவவ ரடிவணங்கினன ழைத்திட. (கசகூ)

நன்றணைந்திடுவ னென்றபோதிலவ ணண்ணும்வேதியர்பொ றார்களாய்க்
கன்றகத்தொடுபு லைப்பயன்மனைக லந்தருந்திடலி சைந்ததோ
வின்றகத்திசைவு கொண்டதற்கிவணி யற்றுமைதுபரி காரமென்
றொன்றலாயினரி யம்பநாதரிவ னுத்தமன்பகவ னன்புளான். (௧௫௦)

பரமபாகவத னாமிவற்பறைய னென்றுபாகவத நன்குதே
றாமுளீர்புகல்வ தேற்றதன்றிவனு ளன்புகண்டிசைவ தாயினேன்
விரவுமென்பிழைபொ றுத்திரென்றுபல வேண்டவுந்தமுன மொவ்விலார்
பரவுசாந்திபுரி யீரெனிற்கொடிய பதிதனாகுவிரெ னச்சொலி. (௧௫௧)

நதியயற்குலவி னார்கள்சாந்திவினை நன்கியற்றவுறு புலையுனுண்
மதிகலங்கிமனை பாலுரைப்பவவள் வந்துநாதரயி லாவிடிற்
பொதியுமாவிவிடு வேனெனக்கருணை பொங்குதேசிகர்சொ லோர்ந்துபின்
விதியினவ்வகையி றத்தலைநமது விதியெனச்சொலிய.மைந்தனன். (௧௫௨)

மீண்டுநாதர்புடை சென்றுபோற்றிமனை மேவி நீரமுது கொண்டிட்
வேண்டுமென்னவரு னாதர்நன்றென்மொழி யினவுவேதியர்பு ழுங்கியே
மூண்டுமுற்சொல்பிழை தீர்தரத்தவமு யன்றவெல்லைபினு மோதினீ
ரீண்டுனாற்றிலெனி தற்கிசைத்தபடி யிவர்செய்வாரெனுமு ரத்தராய். (௧௫௩)

கடிமனைக்குளமை யச்செய்தேபெரிது காவலாகினர்க ளத்ததி
படியினாதர்கட னாற்றியுண்டிசைப யின்றபாகவத மோதுகா
லடியனாமவன ழைப்பமுன்செலணை கின்றனன்பினென வோதியே
நெடியவிட்டலனை நாடியிக்குறைநி ரப்புகென்றனர்ப டித்தனர். (௧௫௪)

விட்டலன்கடிது நாதர்தம்முருவ மேவியேபுலையன் மனையிலுற்
றுட்டதும்புவகை யோடனோர்களுப சாரமேற்றயில லாயினா
னிட்டவேதியர்க ளிங்குநாதரிசை வுற்றுளார்புலைய னில்லமே
லெட்டலானசெயல் யாவதென்றறிவ மென்றுசென்றவணுமெய்தலால். (௧௫௫)

ஐயமிக்கவர்க ளங்குமிங்குமலை வாகியோடிமனை மீதினிற்
றுய்யபாகவத மோதுவாரையெது துணிவுகொண்டுபுலை யன்மனைக்
கையதாமமுத ருந்தினீரெனல்க லந்ததாகுமொரு போழ்தினின்
மெய்யரிந்தவகை செய்ததாலருள்கொள் விண்டுவேயிவரெ னப்பல்கால். ()

ஓடிநாவுலர்வ தாயினார்தமுள மூடமைந்ததுணி வாளரா
மீடினாதரைவ ணங்கியர்ச்சனையி யற்றிவிட்டலனு மொப்பினும்
மாடியைந்துபணி யாறிரண்டுவரு டம்புரிந்திடின்வ குத்திடக்
கூடிடுங்கொலும தற்புதத்தகைமை கூறநாகவர சுக்குமே. (௧௫௭)

வேறு

என்றுபற்பலவாத் துதித்தனரகன்றா ரியலுமோர்தினத்திலவ்வூர்க்க
னொன்றுமோர்மறையோ னுறுபரிசக்க லுதவிகொடில்லறமியற்றி
நன்றுவாழ்தருகா லவன்மனைசுதனு நாசமுற்றிடத்துபர்சகியான்
றன்றுகாசிக்கே கத்துணிந்தனனத் துணைதன்பாலமைதருகல்லை. {௧௫௮)

கொண்டுசென்றிடிற்கைதவறுமற்றவர்பாற் கொடுக்கினும்பின்கொடாரொப்பில்
விண்டுவினருட்பே றுற்றிடுநாதர் விருப்பிலாரென்றணைந்தேத்தி
யண்டுவிர்த்தாந்த மறைந்தவர்தம்பா லளிக்கவிஃதமைகல்லுமொன்றே
மண்டுமின்னதன்மாண் பென்னெனவிரும்பை மாடையாப்புரிதருமென்றே. ()

தீர்த்தயாத்திரைசெய் துறுதநியளிப்பத் திருவுளஞ்செய்திரென்றிரப்பச்
சீர்த்திசானாதர் விடையளித்தாண்டு செறிநின்மாலியத்தினுளன்னேன்
பார்த்திடச்சிலையன் னதனைவீசினருட் பனுத்தனோன்வழுவுறினீரே
யார்த்தியோடளிக்க வேண்டுமென்றகன்றா னண்டொன்றுகழியவந்தேத்தி.

என்னதுபரிசக் கல்லைநல்குதிரென் றிரப்பவக்குப்பையுட்டேடி
நன்னலமுறக்கொண் டகலுதியென்ன நாடினன்கிடைத்திடாமையினா
லின்னலுற்றிரங்கப் பலவிசைகுப்பை யாற்றினிற்கொண்டுபோயிட்டே
மன்னவண்போய்க்கண் டெடுத்துக்கொளென்ன மறையவன்வாய்புடைத்தாற்ற.

நாதரஞ்சலைநீ வருதியென்றுடன்போய் நதியினுள்ளிறங்கித்தங்கையாற்
போதவுஞ்சிலைகொண் டுறுமவற்கீந்து பொருந்திவற்றுன்கல்யாதென்னக்
கேதமார்மறையோ னிரும்பினிற்றேய்ப்பக் கினத்தெல்லாம்பரிசக்கல்லாக
மேதகுநாதர் தமைத்துதித்தருடோய் விட்டலனெனத்துதித்தகன்றான். ()

ஒருதினத்திரவிற் கரவர்களல்வ ருறுமனைப்பொருள்கொடுபுறத்தின்
மருவவுன்னிடக்கண் ணற்றனர்நாதர் வயினுறப்பெருகொளிபடைத்துத்
திருவடிதொழுது நிற்பநீர்யாவர் செப்புதிரெனத்திருடர்கள்யா
மருமனைப்பொருளைக் கவர்ந்துகண்ணிழந்தும் மருகுறப்பெற்றனமதனால். ()

தந்தரிசனத்தின் மகிமைநன்குணர்ந்தெஞ் சன்மசாபல்யமுற்றனமென்
றுந்தகக்கண்ணும் பெற்றனர்நும்மாண் புணர்கிலேம்பிழைத்தனமென்று
சுந்தரத்திருத்தாண் மறுவலும்பணிந்து துதித்திடநாதரஞ்சலிர்நீ
ரெந்தவோர்பொருள்வேட் டுற்றனிரதனை யெடுத்துக்கொண்டேகுமினென்ன.

கருணைசாலேகநாதர்சொற்கேட்ட கள்வர்கணடுங்கிமாலனைபீர்
பொருபசிமிக்கெய்த் தனமதுதீரப் புரியினன்றெனவுடனாதர்
திருவுறழ்கிரிசா பாயியையெழுப்பிச் செப்பவூணட்டுடனளித்தா
ளருமைசால்பிரசா தம்புசித்தவர்மெய் யன்பராய்விடைகொடுசென்றார். ()

பின்னரோர்தினமன் னவன்சிறைத்தண்டம் பெற்றொழிந்தகலுமோர்கள்வ
னன்னலநாதர் மடத்தின்முன்மூர்ச்சை நண்ணினனிருளிடைகிடப்ப
மன்னருட்சொருபர் வல்விரைந்தங்கண் மருவியார்நீயிவணுற்ற
தென்னகாரணஞ்சாற் றுதியெனவவனென் றிசைத்திலன்கைச்சயிக்கினையால்.

பசிமிகைகாட்ட மயக்கமையிவற்கிப் பதத்துணவளிக்கில்விக்கவினா
னசிதருவாளென் றுடன்சருக்கரைப்பா னன்கமைவள்ளத்திற்கொணர்ந்து
கசிவுடனூட்டப் பருகிமெய்யுணர்ச்சி கலந்துநான்புலையன்சோரத்தா
லசிகொண்மன்னவன்றண் டத்தினிற்சாத லாந்துயர்கொடுதளர்ந்தேனால். ()

ததியிதிற்காத்த தேவரீரென்மெய்த் தளர்வறும்வரைபுரந்தனிரே
லதிகபுண்ணியமுண் டாகும்யானும்ம தடைக்கலமெனவவாவியவா
வதிதியிங்கென்று தம்மதுச்சிட்டம் வழங்கிமிக்குபசரித்திருந்தார்
பதிமறையவரச் செயலறிந்திகழ்ந்தார் பதிதன்மெய்யுணர்ச்சிவாய்ந்தகன்றான்.

அத்ததிநாதர் நானமாற்றிடப்போ மதரிலோர்*பிப்பலத்தருவின்
மைத்தகைப்பவத்தாற் பிரமராக்கதனு வைகுமோர்மறையவன்முன்வ
துத்தமப்பெரியீர் பலர்க்கன்னதான முஞற்றியோங்கவினலம்வாய்ந்தீ
ரொத்தவன்னவற்றி லொருபுலையன்கொண் டுறவளித்திடுபலனுதவில். ( )

புனிதமெய்துவன்யா னெனப்பணிந்திரப்பப் பொருவிலார்நல்கவக்கணத்தி
லினியதிப்பியமெய் படைத்துநாதரைமிக் கேத்துபுபணிந்துடன்மறைந்தான்
முனிவின்மிக்கிகழ்ந்த மறையவர்யாரு மொழிந்ததம்பிழையறநாதர்
பனிமலர்ப்பதங்கள் போற்றினர்விதந்து பகவனேயிவரெனமகிழ்ந்தார். ( )

வேறு

பின்புவட மொழிப்பாக வதத்தையத்தா மலகப்
பெருநூலைச் சுகாட்டகப்பேர் பெற்றபனு வலினை
யின்புறுபி ராகிருதந் தனில்டீகா வாக
வியற்றியபங் கக்கவிக ளெண்ணிலசெய் திட்டா
ரன்புடன்மற் றவைகளைத்தேர்ந் தறிஞர்கள்பற் பலரு
மானந்தித் தார்பாக வதடீகா வதனைக்
கொன்புணர்பா ராயணஞ்செய் யொருமறையோன் காசி
குறுகிமணி கன்னிகையிற் குளித்தவண்செய் துற்றான். (க௱௭க)

காசியில்வாழ் சாத்திரிச்சந் நியாசியினற் சீடர்
கணமதனைக் கேட்டுவந்து கனிவொடவன் பாற்போய்ப்
பேசியதியா ரெனநாதர் தகைசொலக்கேட் டீது
பிரபலமுற் றிடிற்றேவ பாடைகொள்பா கவத
மாசிரயிப் பாரின்று மென்றுகரு தினர்தம்
மாசான்பா லுரைக்கவவ னழன்றுகொதித் தானாய்
மாசிலது புகன்றவனை யிப்பொழுதே யழைத்து
வாயடக்கித் தண்டிப்பே னெனமனங்கொண் டடனே. (க௱௭௨)

சீடர்வயின் முடங்கலொன்றுய்த் திடக்கண்டுநாதர்
சீலவுத்த வன்பால்யான் செழுங்காசி கண்டு
மீடலாந் துணையும்யா னியற்றுமொரு திறம்போல்
விட்டலன்பூ சனைமறையோ ருண்டிகதை துதிமெய்ப்
பாடறவா தியற்றுகெனப் பகர்ந்தணைந்தா ரோடு
பழுதறுகா சியிற்புக்குப் பகிரதியிற் படிந்து
பீடமைவிட் டலனடிசிந் தித்திருந்தார் கூவப்
பெயர்ந்தவர்தம் மாசான்பாற் பேசினர்வந் துறுசீர். (க௱௭௩)

* பிப்பலம் - அரசமரம்.

மடத்தழைத்து வந்துவைமி னென்றுமுன்றூ ரூன
மாணுக்க ரொடுபிட்சை வாங்கிமோ றகன்ரூன்
றிடத்தகையா சான்சொற்போ லவர்நாதர் தம்பாற்
சேர்ந்துமடத் தமைத்தனரச் செவ்விபிட்சைக் கெனப்போம்
விடத்தரவம் போன்றவன்முன் ஞோர்கவியை யொழிப்போன்
மேவினன்முன் சென்றவன்மெய்ம் மீதிலவ்வைந் தாமெண்
படத்தடங்கை கொடுகுத்து மின்னெனச்சீ டருக்குப்
பகர்ந்துபின்வந் தனன்ஞானம் பயில்சிலர்யோ சித்தே. (௧௭௪)

குருவுரைத்த படிபுரியி லவனிறப்பா னிறக்கிற்
கொலைப்பாவ மணுகுமங்கு கூவியவ னியல்பைத்
தெருளுறக்கண் டதன்பின்னே தக்கபடி கருமஞ்
செய்திடனன் றென்றனர்முற் சேர்தரவிட் டலன்றன்
றிருவடிவா வயங்கிடுஞ்சீர் கண்டுபயந் தன்பிற்
றெண்டனிட்டுத் தோத்திரித்துத் தேசிகர்பாற்பன்ணுண்
மருவலிலெய் திடுபேறின் றெய்தினமென் றின்பான்
மாதவபாண் டரங்கவென வழுத்தினர்பின் புறத்தில். (௧௭௫)

நின்றுவின வினர்சிலர்போய்த் தங்குரவ னிடத்தி
னேர்ந்தவர்பா வரும்பணிந்து நின்றனரென் றிடவுட்
கன்றுசினங் கொடுவசியஞ் செய்துகொண்டான் போலுங்
கடிதவண்போய் நீர்யான்ரூன் கலந்தமையா சனத்துக்
கொன்றுதிரை யிடுதிரென்று வேறுவழி யாலாண்
டுற்றமைந்து சீற்றமிகுத் துரப்பியரு ணுதர்
துன்றுசெவி கொளவுரைப்பான் யான்மறையோ ரெல்லாந்
தொழுமொர்சிகா மணியாகித் துறவறத்தி னின்றேன். (௧௭௬)

உன்பகட்டு வித்தையெல்லா மொழித்துறுதண் டஞ்செய்
தோட்டவந்தே னெனச்சாந்த வுருப்பொலியு நாத
ரின்பமிகு மாதுரியச் சொற்கொடடி களேயா
னிறைஞ்சுகின்றேன் றம்பால ஞனவென யழைத்துங்
கொன்பயிலு முகங்காட்டா மற்றிரைக்குள் ளிருந்து
கோபித்துப் பேசிடயான் குயிற்றுபிழை யென்னே
வன்பமைவே னியற்றிடினும் பொறுத்துமுகங் காட்டி
வழிப்படுத்து வீரெனுமம் மாற்றம்வின வுதலும். (௧௭௭)

திரைநீக்கி நாதர்தமை நோக்கிடவிட் டலனுத்
திகழுவெருண் டடிவணங்கிச் சிறியவனேன் றன்னை
மரைமலர்த்தாட் கடிமைகொள்ள வந்தாயோ கண்ணு
மணிவண்ணு வெனத்துதித்து வாய்ந்ததகி யதனிற்

றரைபுகழ்மெய்த் தேவகிரி நாதரெனத் திகழச்
சந்யாசி யரியுலகுத் தரிப்பிக்க விவராய்த்
திரையுடைப்பார் மிசைவந்தா னென்றுதுணிந் தன்பாற்
றிருவடிகள் சென்னிமிசை தீண்டவணங் கினனுப். (கஎஅ)

நமதுபெருந் தகையறியேன் பிழைபொறுப்பீ ரென்று
நழன்மெழுகி னுளமுருகித் தரைமிசைவீழ்ந் தானை
விமலர்கரத் தாற்றூக்கி நிலையிலுயர் நீரிவ்
விதமெனைத்தாழ்ந் துரைத்திடுதல் விதியோவென் றோத
நுமதுதிரு வாய்மலர்ந்த பாகவதம் வினவ
நுதலினன்சாற் றிடுதிரென நுவன்றனர்கேட் டுவந்தீண்
டமரரனை யீரிருந்து முற்றுமரங் கேற்றி
யருள்வீரென் றிரப்பவவ்வா றமைந்தருளி வாழ்ந்தார். (கஎகூ)

அதுதெரிந்து பண்டிதர்கள் சிலருலகோ ரெனநம்
மாசானை யும்வசஞ்செய் தடிவணங்கப் புரிந்தான்
கதுமெனவன் னவன்பாக வதத்தினைக்கைப் பற்றிக்
கங்கையில்வீ சிடனுஞ்செய் கடனெனவுட் டுணிந்தார்
சதுரமைதங் குரவனைப்போய் வணங்கியெந்தங் குலந்தோய்
சாமிபிரா கிருதகிரந் தத்தினை நீரேற்கின்
முதுமைகொணூற் கேதுபுக ழவனூல்கங் கையினுண்
மூழ்கவலித் தெறிந்திடுதன் முன்னிவந்தே மென்றூர். (கஅ0)

குரவனுரைப் பானுங்கோண் மூன்னுளென் கோளே
கோதிலர்மெய்ப் பாண்டுரங்கன் கொண்டதிரு வுருவம்
விரவினரிங் கிவரைக்கான் டலும்பணிந்தா ளாக
விரையாமா னிடர்தம்மின் விலங்கினங்கண் மேலென்
றுரமுடனு சான்சொலவுங் கேட்கிலர்நா தரெதி
ருற்றபுத்த கத்தினைக்கொண் டெய்த்திடுகொற் கங்கை
வரமலிகங் கணச்செங்கை நீட்டினள்கொண் டிடத்தோர்
மறையவருஞ் சினராசான் வகுத்ததுமெய் யென்றே. (கஅக)

நாதர்திரு வடிவணங்கி யறியாதியாஞ் செய்த
நவைபொறுத்தா ளுதிரென்ன நவின்றுமிக வேண்டும்
போதவரா சாரியன்வந் திவரடிக்கா ளாகிப்
பொலிமினென விரந்தனரப் பொழுதவண்சார் சில்லோர்
மேதகுகங் கையின்கரப்புத் தகத்தினைக்கொண் டணைந்து
விளம்புநுஞ்சொன் மறைமொழியின் மேலெனக்கொண் டாட
வாதரந்தோய் துறவியொடவ் வூரிலுள்ளோர் பலரு
மமலரைப்பூ சிக்கமறை யோர்தாசன் யானல். (கஅஉ.)

ஆதலினீ ரெனைப்பூசித் திடலாகா தன்பா
லாற்றுகிரங் ஷத்தினையா ராதிப்பீ ரென்னப்
போதகத்தின் மிசையமைத்துப் பல்லியங்க ளொலிப்பப்
பொலிந்தசுவைக் கீர்த்தனங்கள் புகன்றபீர் மலர்க
ளாதரத்திற் றூற்றியள வற்றவிப வமுட
னாற்றிஞளா ராற்றுமுப சாரங்கொண் டேழ்நாள்
காதலினூர் வலம்புரிந்தெட் டாநாளின் மடத்திற்
கலந்துமறை யோர்க்குணவு கனிவினளித் திட்டார். (கஅ௩)

நாதர்பின்ன ஞளரிகீர்த் தனம்புரிந்தாங் கமைந்து
நனிபெறவா ரதிபுரிந்து பிரசாத நல்கிப்
போதருமுற் சவமுடித்துத் துறவிமுத லோர்பின்
போந்துவிடை கொடுநாதர் புக்கவழி யின்க
ணுதரந்தோய் தாசோபண் டிதர்கடின தவத்தா
லருள்பொலிதத் தாத்திரே யரைநேர்கண் டருள்பெற்
றுதவனிற் றிகழ்கின்றூர் நாதர்வர வுவப்புற்
றடிவணங்க நாதருந்தாழ்ந் தனர்தழுவிக் களித்தார். (கஅச)

பன்னகசா லையிலணைவித் துபசரித்தா னுதவிப்
பாகவத படனங்கீர்த் தனம்புரிந்து களிப்பா
யின்னமொரு மதியிங்ங னிருத்திரென நாத
ரியன்றகிருட் டிணசயந்தி யெய்தியதக் கானீர்
நன்னலமார் தேவகிரிக் கணை திரென்று செல்ல
நண்ணினர்யா னத்தினிற்பின் னுதர்மடக் காவ
லென்னவருட் டத்தாத்தி ரேயர்நிற்பக் கண்டா
ரிதயமிசை வியந்தடிக ளிறைஞ்சிவின விடுவார். (கஅரு)

திரிமூர்த்தி வடிவர்மெந் தேசிகமா மணிநீர்
தீனரிலீண் டடுத்துறலென் செப்புகெனச் சொல்வா
ரரியவுலகினையீடேற் றிடவுதித்தார் நாத
ரவர்வாயிற் படிக்காவ லருள்பணிகொண் டமைந்தேன்
பெரியதவம் பலபிறப்பிற் புரிந்தவர்க்கே யன்னோர்
பெருமைவிளங் கிடுமென்னப் பேசியுட்போ யுரைப்ப
விரியுவகை யாற்றுசோ பண்டிதரை வணங்கி
மெய்தழுவி யுபசார விதங்களெலாம் புரிந்தார். (கஅசு)

பகலிலருட் பாகவத படனமுநீள் கங்குல்
படர்தொறுங்கீர்த் தனமுமிகப் பகர்ந்திருந்தார் வினவி
யகமிசையொப் பறுகளிப்புற் றிருந்தனர்பண் டிதராங்
கவிர்சயந்தி விழாத்தெரிசித் தருள்விடைகொண் டேகி

சுகநாதர் பெருமையறு தினந்துதித்து வாழ்ந்தார்
 தூயர்பக விரவறியார் துதிகதைசொற் றமைந்தார்
நிகழ்நாள்கோ தாவிரியி னீர்படிந்துற் றிடுகா
 னீசமுறு துலுக்கனெச்சி னிகரிலர்மே லுமிழ்ந்தான். (கஅஎ)

அன்னதற்குட் சினவாரின் னவனகந்தை யாலே
 யாற்றுபிழை யாற்றுயர்மிக் கமைந்துதவிப் பானே
யென்னபுரிந் தும்புனித னுப்புரிவே னென்றுள்
 ளெண்ணினர்மீண் டும்படிந்தில் லெய்தினர்பூ சைமுடித்
தின்னமுதோ ராள்வயினீந் தனரவனிற் பாற்போ
 யெய்துநற்கூ யீதரித னினியபிர சாத
நன்னலமுற் றிடநுகர்தி யென்றிடச்சற் குணச்சீர்
 நண்ணினன்முன் றுன்புரிந்த நவைநினைத்தஞ் சினனாய். (கஅஅ)

மதமிகுசண் டாளனுமை மதியாதே புரிந்த
 வன்பிழையெண் ணுதென்பால் வந்திதமிக் கறைந்தீர்
மிதமறுநும் பெருமையையென் னெனத்துதிப்பே னருட்கு
 வீணனே னென்கைம்மா றுற்றிடுவே னெனப்பொற்
பதமலர்போற் றிடநாதர் நின்பிழைதீர் தரநான்
 பரிகார மியற்றினனீ பதைத்தவத்திற் றுயரா
திதமுறுமால் பிரசாத மயிலுதியென் றிடவுண்
 டிதயமிகத் தெளிந்தரிதாட் கினியபத்த னுனன். (கஅகூ)

நாதரொரு நாள்கோதா விரிமூழ்கிக் கடன்க
 ணவிற்றியுச்சிப் போதின்மனை நண்ணிடுகான் மனவிற்
போதமிலோர் மகவகப்பட் டோடவறி யாதே
 புரண்டழக்கண் டடனருகிற் போந்துகரு ணையிற்றம்
மேதகுகைக் கொண்டுகலை யால்விசிறிச் சோபம்
 விலக்கினர்நின் மனையெதென விரல்கொடறி விக்கப்
போதருங்காற் பெற்றவள்சேய் நாடினள்கொண் டகலப்
 புலைச்சியெனத் தேர்ந்துபின்போய்ப் புனல்படிந்தா ரக்கால். (ககூ0)

திரியம்ப கப்பதியில் வாழ்மறையோன் றெருழுநோய்
 செய்மருந்தாற் றொலையாமற் சிவபெருமான் றுணையென்
றுரிமையுடன் கனிமூல மருந்தினன்பன் னிரண்டாண்
 டொழிதரவன் னவன்கனவி லுரைப்பனுமை பாகன்
புரிவுடனீ தேவகிரிப் பாலடைந்து நாதர்
 புலைமகவைக் காத்தபலன் பொருந்தநல்கக் கொண்டா
விரியுநின்னோ யெனக்கோதா விரியிடத்தக் கணம்போந்
 தேற்றனனே யொழிதரக்கண் டெவருமிகத் துதித்தார். (ககூக)

ஒருதினமுத் தவர்முதலாம் பாகவத ரியாரு
முத்தமரைப் பாகவத முரைத்தருள வேண்ட
வருளானு டொறும்பகர்ந்து வந்தாரங் நாளி
லணிக்கோதா விரிதெய்வ வலங்காரம் பொருந்திப்
பெருகுகளிப் பானுதர் தமைநோக்கி வினவிப்
பிறர்பாலொன் றுரையாதே பேர்ந்திடுசேர் கண்டோர்
மருவுகதை முடிவுறுநா ளவளுடன்சென் றுய்கான்
மணிக்கோதா விரிமுழுகும் வண்மைகண்டுள் வியந்தார். (௧௧௨)

நாதரிடம் வந்துபணிந் தோதவின வினர்நீர்
நன்னலஞ்சால் பாக்கியர்கோ தாவிரிநங் கையினை
யாதரத்தாற் றெரிசித்தீர் தவமிகுத்தீ ரென்ன
வடிவணங்கி யும்பாக வதமகிமை யேயென்
றேதமற நாடொறும்யா வரும்பாரா யணஞ்செய்
திட்டசித்தி பெற்றனரவ் வேல்வையினு தரின்முன்
போதருவீட் டிடைவசிப்போ னென்றேனு மரிதன்
புண்ணியநா மங்கேட்கப் பொருந்துகிலா வீணன். (௧௧௩)

மிக்கவரு ணாதரவ னம்முனுறப் பெற்றும்
விவேகமுறு தொழிதனன்றன் றெனக்கருதி னாரய்ப்
புக்கவவன் றனைவழியி லெதிர்தரப்பெற் றன்பு
பொருந்துகுடும் பஞ்சுகமோ புகறியொவோர் தினத்துந்
தொக்கவொரு கடிகையெனி னும்பகவன் காதை
துயரறக்கேட் டிடுதியெனத் தோயொர்கண மேனுந்
தக்கவொழி வெனக்கிலையென் றிடத்திருமா னமங்
தனைப்பணிசெய் போதெனினுஞ் சாற்றுதியென் றோத. (௧௧௪)

ஈனனெது போழ்துமனை மக்கள்விவ கார
மிதயமமைந் துறலினதை யியம்பவொண்ணு தென்ன
ஞானவரு ணாதர்கையா லவன்முகத்தைத் தடவி
நலமுறவோர் சுலோகத்தை நனிவரைந்தீந் திதனை
யேனுமுரைத் திருத்தியென்றீந் தனரகல வுணர்ச்சி
யெய்தினன்பின் னருமடைந்தொன் றெழுதிநல்கக்கேட்டான்
வேனமையப் படித்தனனு டொறும்வினவி யருட்சீர்
விரவியுல கேத்துநல மேவினன்வாழ்ந் திட்டான். (௧௧௫)

நாதருக்குக் கோதுபாய் கங்காபா யின்னோர்
நடுவிலரி நாமமுறு நந்தனரு முதித்தா
ராதரமுற் றவர்க்குமண முடித்தார்பின் சுதனு
மரிபண்டி தற்கொருமுன் றனசுத ருதித்தார்

வேதமங்க முதற்புகலா ரியப்புலமை வாய்ந்து
விளங்குமரி நாமசுதன் பிராகிருதம் வெறுப்புற்
றேதமறு தாதையையும் விடுத்தனன்கா சிக்க
ணெய்தினனன் னவன்சுதரி லிராகவப்பேரினையோன். (௧௯௬)

பாட்டனிட மிருந்துபணி புரிந்தவர்கிர்த் தனங்கள்
பாடிற்ற ளம்புடைத்துப் பாக்களெல்லா முணர்ந்தா
னாட்டகத்துள் ளாரவன்சீர் கண்டிவனே நாதர்
நாமகவி லற்குரிய னென்னநனி வியந்தா
ராட்டயரன் னவனொருநா ளுதாடி வணங்கி
யருண்ஞான வுபதேச மளித்திடுமா றிரப்பக்
கேட்டகமிக் கவும்வியந்தன் னவன்றகைமைக் கேற்பக்
கிளத்தினர்பின் மூப்புடலிற் கிடைத்திடலினாலே. (௧௯௭)

மைந்தாரு கின்றியிருந் திடன்மரபன் றெனத்தம்
மனங்கொடுகா சிப்பதிக்கண் மருவிடவாண் டுற்ற
செந்தகைச்சீ ரரிபண்டி தப்பெயர்கொண் மைந்தன்
சேவடிதாழ்ந் தனன்பூசை செய்தமையு நாளின்
முந்தருட்சீர் நாதர்சுத னேடுரைப்ப ரென்மெய்
முதிர்ச்சியமைந் ததனாற்கான் முளைகளையீண் டமைத்தே
சொந்தநகர் மேவியென துடன்வதிவாய் வேறு
சுதருனையல் லாலெனக்குத் துணையிலதா லென்ன. (௧௯௮)

அரிபண்டி தன்புகல்வான் பிராகிருதநூல்க
ளறையாம லும்பரரு ணயிலாது மிருக்கிற்
பரிவுடனும் முடன்வதிவேன் யானென்ன நகைத்தப்
படிநடப்பே னெனவடசொற் பகர்ந்தவற்கொத் துறலாற்
புரியிலுளார் நாதரென்னே புதுமைபெறு மார்க்கம்
புகுந்தனரென் றின்னலுற்றார் போழ்ததனிற் றேவ
கிரிமருவோர் பார்ப்பனிதன் னேயகலும் வண்ணங்
கிளர்மறையோ ராயிரர்க்குக் கிளத்துகுரு மொழிபோல். (௧௯௯)

அன்னமிட்டுத் தீர்ந்தனள்பின் னருமவ்வா றியற்றற்
காசைகொண்டு பொன்னிலதா லல்லன்மிகத் தோய்ந்தா
ணன்னலஞ்சா றன்குரவன் பாலுரைத்து முன்போ
னவிற்றுதற்கென் செய்வனென நலிவடையுமேல்வை
யன்னவனே ருபாயமறை வான்சுதபண் டிதரை
யணையானோர் வேதபா டகனவரா யிரரோர்
கின்னமறும் யாககர்த்தா வொப்பவரா யிரரோர்
கேடில்சிதேந் திரியனன்னர் கிளத்தவரா யிரர்கள். (௨௦௦)

அண்டமுற்று மளந்தபத மகத்தமைத்த வடியா
ரவரின்மிக்க காதருக்கூ ணளித்திடுதி யானுற்
கொண்டநின தெண்ணமெளி தாகமுற்றி யின்பங்
கூடுமென வுவப்பொடுசெற் குரவனடி பணிந்து
விண்டழைத்த சிரேக நாதர்புடை மேவி
விரதமுற்ற வருடிரென வேண்டவென்சேய் பானீ
விண்ட*னுக்கை பெற்றடையின் மேவுவனென் றிடப்போய்
வேண்டவெந்தை காசியினும் விரவியநாண் முதலாய். (உ0க)

அன்னியர்வீட் டோதனங்கொள் கிலதாகும் விரத
மமைந்துள்ளா ரென்னவவ ளாகுலமிக் காளாய்த்
தந்நிகர்நா தரின்றிருத்தாள் வணங்கியருள் சுரந்தென்
சங்கற்பம் பூர்த்திசெய்து தருவீரென் றிரங்க
மன்னிதயஞ் சகியார்தம் மைந்தனைப்பார்த் தன்னை
மானுமிம்மா துண்மகிழும் வகைபுரிய வேண்டு
நின்னிதயமிசைதியெனக் காசியிற்செய் யாணை
நிட்பலமா மென்னவிவ ணிகேதனத்தி னீபோய். (உ0உ)

இவளளிக்கும் பொருள்களைக்கொண் டுன்கரத்தாற் றுதியே
லேய்ந்திடுநம் விரதநிறை வேறிடுமென் றோத
வவணமரி பண்டிதனன் னவண்மனைபோ யமுத
மாற்றினனு தரையழைப்ப வம்மாதைச் செலுத்த
வுவகையுட னழைத்துவரும் வழியிடையி னாத
ருடனம்மா துரைப்பாள்யா னுற்றபல கார
நவமுறச்செய் துள்ளேனீ ரருந்துதிரென் றிரப்ப
நாதர்நுகர் காலிடையி னண்ணினைபெய் யென்றே. (உ0௩)

இல்லணைந்தா ருடனரிபண் டிதன்பரிமா றிடவுண்
டிருந்தனரக் காலையம்மா தியல்பகா ரமெலா
மெல்லனையார் நுகரவிட்டா ணுதர்விரைந் துண்டா
ரீதுணர்ந்து மைந்தன்வெகுண் டியன்மாதை நோக்கிச்
சொல்லழியுந் தாதைநுகர்ந் ததன்பின்விசா ரிக்குந்
துணிவமைந்துற் றனதுகாற் றாயரமு தருந்தி
யொல்லரிபண் டிதனையெச்சின் மாற்றிடுதி யென்ன
வுற்றவிலை யெடுத்தெறிந்தில் லெய்தினனேக் கிடுகால். (உ0௪)

முன்னுறழ வெடுத்தெறிந்தான் பின்னுமியை தலான்
முயன்றுபல காலெறிந்து முடியாம லமையத்
தன்னுடல மயர்ந்திதயம் வருந்தியிந்நாள் காறுந்
தாதையென்றுன் னினன்பகவன் றனெனவோர்ந் தில்லேன்

---
* அனுக்கை-விடை

மன்னுலக ரோதிடவுந் தேர்கிலன்மா யையினுன்
மயங்கியென நாதர்திரு வடிமிசைவீழ்ந் துமது
மின்னுபெரு மகிமைதத்தாத் திரேயரும்பாண் டுரங்க
விட்டலனு மன்றியுணர் விரகுளர்யா ரென்றே. (உ0ரு)

கல்வியினு லெனைமதித்துக் கருவமிகப் பொருந்திக்
கடையேன்செய் பிழைபொறுத்துக் கடைக்கணிப்பீ ரென்ன
நல்வினைதோய் தருமரிபண் டிதனிரப்ப நாதர்
நகைபுரிந்து சிறுவாரீ நலிவடையே லினியிவ்
வில்விரவு மிலையகற்றி லொழிதருமென் றிடக்கேட்
டெடுத்தகற்றிக் கோமயமிட் டினியசந்த மடைகாய்
மெல்விரைப்பூ வாதியதந் தவள்பணிவுற் றுவகை
மிக்குவிடை யளிப்பமனை மேவினரக் காலை. (உ0சு)

அரிபண்டி தன்பொருவி னுதரடி போற்றி
யையவென்பா லறைந்தமொழி யகற்றிமுன மேபோ
லுரியபிரா கிருதத்திற் பயின்றமைவீ ரென்ன
வுயர்பாக வதகாதை யுயர்துதிசொற் றமைந்தார்
புரியிலுளோர் விடயமுணர்ந் தின்பமிக்குற் றூரப்
போழ்தவ்வூர்க் கடுத்தநகர் பொருந்திடுமோர் கணக்கன்
பெரிதுமிலம் பாடுடையா னவனீற்றுச் சுதன்வாய்ப்
பேச்சற்று மூங்கையெனப் பிறங்கிடலால் வருந்தி. (உ0எ)

நாதரிடங் கொண்டணைந்து வணங்கியிங்ஙன் தனற்கு
நவவாண்டின் மேலாயு நயமொழியொன் றுரையான்
போதவறு மையிற்றளர்வே மிவனைவளர்ப் பதனற்
பொருந்துபய னென்றறியேம் புண்ணியரா நுமது
பாதமலர்க் கடைக்கலமாக் கினனீரே யிவனைப்
பாலனஞ்செய் துய்யும்வணம் பரிந்தருளி னுமக்கு
மேதகுபுண் ணியம்புகழுண் டென்றுவிடுத் தகன்றான்
மிக்கசுத னுதர்பணி விடையிலுவந் துற்றான். (உ0அ)

இயனுளி னுதாருட் பூசைவினை முடித்தோ
ரேகாந்தத் தலத்தரிதா ளெண்ணியமைந் துறுகா
னயமலிசீ ராகவன்வந் தியல்ராமா யணத்தை
நண்ணுபிரா கிருதத்தி னவின்றுமுடித் ததற்குப்
பெயர்பாவார்த் தராமாய ணம்மெனவைத் திடெனப்
பேசிமறைந் திடத்துவக்கிப் பிறங்குயுத்த காண்டத்
தயர்வறுநாற் பத்திரண்டத் தியாயவரை சாற்றி
யதன்பின்முன் னூமையென வமைதருகாட் சியைக்கூய். (உ0கு)

முன்னமையர் தணர்முதலோ ரதிசயிக்கப் புகல்வார்
மொழிராமா யணமீது முற்றுகு முன்ன
நன்னலஞ்சால் பரந்தாமர் தோய்தருநா ளெனக்கு
நண்ணியதா லிக்குறையு நவின்றுலகம் போற்றப்
பின்னவிருத் தரகாண்டந் தனையும்வரை தியெனப்
பேசிமைக்கூ டிலேகிணியும் பெறவழங்கி யூமை
சென்னிமிசை யபயகர மமர்த்தியருண் முருந்தன்
திருநாம வுபதேசஞ் செய்யவுடன் சிறுவன். (உகo)

எழுந்தருணு தரின்றிருத்தாள் வணங்கியிருவிழிநின்
றின்பவறல் பெருகிடவென் புருகிடநின் றன்பாற்
செழுந்தகைநா தரைத்துதித்து முன்னரமைந் தோரத்
தியாயநுவன் றிடவமைந்தோர் செவிவிருந்தி லருந்தி
விழுந்தருணு தரைவணங்கி மூங்கையுறுங் கவிபோல்
விண்டனனற் புதமென்ன விதந்தமைந்தார் பின்னுட்
டொழுந்தகைசால் பரந்தாம நாதருறல் வினவித்
தூயவருட்சாதுசன ரொருங்கவண்டுன் றினராய். (உகக)

மத்தளதா ளங்கலிப்பக் கீர்த்தனஞ்செய் துற்றூர்
மகிமையது தேர்தரவுள் வாஞ்சைமிக்கா னேபோற்
சத்தபரித் தேரிவிர வியுமணந்தா னக்காற்
றமையனைய நாதருட் டகைபொலிவிட் டலன்பொன்
ஞெத்தவடி மலர்போற்றித் துதிகள்புகன் றுடி
யோங்கடியார் பலருமுள முருகினர்தாழ்ந் தேத்தி
யத்தமிசை *யபீர்மலர்க ளிறைத்தனர் சூழ்ந் தெய்த
வணிக்கோதா விரிதீரத் தணைந்துபுகன் றிடுவார். (உகஉ)

கலிகாலத் ததுமறைச்சா ரப்பொருளென் பீரேற்
கருணைகொள்விட் டலன்பெயர்ச்சங் கீர்த்தனமே யென்னப்
பொலிவார்யா வருமறியப் போதித்தா ருயிர்மேற்
பொருவருகா ருணியமிகப் பொருந்தினிர்வாழ் மினெனு
வொலிசான்மா மகுடமிசைத் தாரதிசெய் தங்க
ணுறுமறையோ ரன்பர்களை யுவகையினிற் பணிந்து
மலிவாரன் பினின்மால்பொற் பதமனத்தி விருத்தி
மருவுநதிப் புனலினிடை மறையவணைந் தருளி. (உகங)

அண்டர்கள்பூ மழைபொழியத் தொண்டர்கள்யா வருமிக்
கரிநாமஞ் சாற்றிடப்பே ரகண்டவடி வாமால்
புண்டரிகத் தாட்டுணையிற் கலந்தாரக் காலை
போந்திடுசேற் சனர்பரிவு பொருந்திமறை முறையால்

---

* அபீர் - வாசனைப் பொடி.

விண்டமைசீர் நாதர்திரு மேனியிணைக் கோதா
விரிநதிதீ ரத்தினிடை மிளிர்தகன மாற்றிக்
கொண்டவெலும் பிணையெடுக்க வஃதரச மரமாக்
குலவிடவிவ் வுருவா*யங் குரித்தனரென் றுவந்தே. (௨௧௪)

பாவியலா லயமமைத்தங் கதனுளரு ணாதர்
பாதுகையைப் பிரதிட்டைப் படுத்தியன்ப ராஞர்
விரவியபே ரன்பினிற்பூ சித்திரவி லின்ப
மிக்கரிகீர்த் தனம்புகன்று மேவுபக லெல்லாம்
வரமலிபு ராணகதை புரிந்துமிது நாளு
மாதவரா வாழ்கின்றார் மகிமைகொளிச் சரிதம்
புரணமுறக் கற்றவர்கள் கேட்டவர்க ளழியாப்
புகழொடுமெய்ப் பத்திநலம் பொருந்திடனிச் சயமே. (௨௧௫)

வேறு

ஏகநாத சுவாமிகட மில்லிற்கண்டி யாவெனும்பே
ரேய்ந்தன்னவர்குற் றேவலெலா மீராரூண்டு புரிந்தவர்தாம்
பாகமதுரக் கீர்த்தனங்கள் பாடுங்காற்பின் பாடகனுப்
பதிந்துமிராமா யணமெழுதப் பயின்மைக்கூடு மிலேகினியு
மோகமுடனல் கிணையந்த முறைவேட்டிலனெப் பற்றவவர்
முன்னுமுங்கை பேறடியேன் முயங்கவருளா வித்ததியி
லீகவெனவேண் டினன்சிறிது மிரக்கமிலர்போ லிருப்பதென்னே
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௨௧௬)

ஏகநாதசுவாமிகதிமுற்றிற்று

ஆகூ கவி சடுசூ

---

ஐந்தாவது

# ஞானேசுரகதி

வெண்ணத்தியல்கை மாலருளாம் வேலைமுகந்தா ருயிரின்ப
நண்ணப்பொழிமை நிகரேக நாதர்திறஞ்சற் றுரைத்திட்டேன்
விண்ணத்தியல்வார் புவிப்பிறவி வேட்பவிளையாட் டியற்றுபுகழ்த்
திண்ணத்தகைஞா னேசுரர்தஞ் செயலிற்சிறிது செப்புவாம். (௧)

நறையார்பொழிலாப் காவெனுநன் னகரிற்கருணீ கப்பெயர்சான்
மறையோர்குலத்தி லுதித்திட்டான் மருவுகோவிந் தபண்டிதப்பேர்
முறையாலீன்றோ ரிடப்பெற்றோன் முல்லைத்தகைசா னிருபாயென்
றறைநாமங்கொண் மனையுடனில் லறத்திற்பிழையா தமைந்துள்ளான்.()

* அங்குரித்தல் - முளைத்தல்.

மன்னனிடந்தன் குலமுறையில் வாய்ந்தவுத்தி யோகம்வகித்
தின்னலின்றி மலைடிக ளிதயத்திருத்தி வாழ்தருநாட்
டன்னதுயர்வாங் குடிவிளக்குந் தக்கமைந்த னின்மையினு
லன்னமுயர்த்தோன் றுதையிட மன்பாற்றினம்வேண் டினனமைந்தான்

மாயன்கருணைப் பெருக்கான்மெய் வசிட்டன்கலைபெற் றிலங்குமொரு
சேயன்றனைப்பெற் றரிவரத்தாற் செனித்தவொப்பில் பாலகனுந்
தூயன்றனக்கு விடோபாப்பேர் சூட்டிவளரு மதியேபோ
னேயம்பொருந்த வளர்த்துமறை நியமக்கிரியை முறையாற்றி. (ச)

வேதமுதலாங் கலைகளெலாம் விளங்கவுணர்த்தி யெவ்வனந்தான்
போதலாகுந் ததியின்மணம் புரியநினைந்தார் செயலுணர்ந்தே
யேதமுழுதுந் தருங்குடும்பத் தியலும்வீச கோசத்தி
லாதலமையேன் றுறவறத்தி லமைவேனென த்தன் னகங்கொண்டு, (ரு)

சாதமொழியிற் றுய்தந்தை தடுப்பாரெனவுன் னினனுயான்
வாதன்மகிழுந் தலங்தொழுது மகிமைத்தீர்த்தங் களின்மூழ்கி
விரவுமன்பர் சேவைசெய்து மீண்டுவருவே னெனக்கேட்ட
குரவர்சிந்தா குலக்கடலிற் குளித்துக்கண்ணீர் சொரிந்துரைப்பார். (சு)

வேறு

மைந்தனின்றிப்பலகாலந் தவம்விரதமுடித்தருண்மால் வரத்தினுலே
நந்தனநிற்பெற்றெமது குறையொழிந்துவாழ்ந்தோமிந் நாளினீதா
னெந்தம்வினையாற்றுறப்ப வெண்ணினைவயோதிகத்தி லெம்மைக்காப்பான்
பிந்தவொருதுணையில்லை யென்பதுநீயறியாத பெற்றித்தன்றே. (எ)

எந்தவப்பேறுக்குலவுங் குழந்தாய்தாய்தந்தையர்க ளில்லாதோரும்
பந்தமுறுசமுசார விச்சையில்லாதோருமிகு பாவத்தோரு
மந்தமிலாச்சஞ்சலத்தோர் தாமுமுயல்யாத்திரையை யறிஞுநீ
யெந்தவகைகொளத்துணிந்தா யெம்மையெங்ஙனீப்பவுர மெய்தினுயால். (அ)

கற்புமிகுமனைவியுட னில்லறத்திலிருந்தறங்கள் கவினவாற்றிப்
பொற்புமலிபுதல்வரைப்பெற் றரியடியாரதிதிகடம் பூசைசெய்தே
யற்புடனெஞ்சொல்லொடெமைப் புரந்துசுகங்கலந்திங்ங னமைதராமே
வெற்புடன்கானகந்தொறுஞ்சென் றுடல்வருத்தவெண்ணியதென்விவேகிநீயே.

எனப்பலவாச்சாற்றுமிரு முதுகுரவர்மொழிவினவி யிசைப்பானீர்தா
மனப்படுபெற்றறுபிரம சாரியென்யாத்திரையையிங்ஙன் மறுத்தீர்பாச
வினப்பரமோக்கத்தடையா மணம்புரிந்தபின்னிசைவீ ரோவுண்டேனுங்
கனப்படுவல்விலங்கமைந்தேன் விலங்கலுளதோவிலங்கிற் கடையாவேனல்.

இளமையிதுநீரின்மேற் குமிழியென்றுஞ்செல்வமலை யிணைவதென்றும்
வளமைபெறுமாக்கைபுன லெழுத்தென்றுமறைகளெலாம் வழுத்துமஃதா
லளகுசிறைமுளைத்துமுற்று முன்பறந்தாபத்தடையு மதுபோன்மாயைச்
சளமுறுமில்லறத்திலிப்போ தமைகலன்யான்பூப்பிரதட் சணஞ்செய்தன்பால்,

சற்குரவன்பணிபுரிந்து ஞானோபதேசநலந் தாங்கிநின்று
பொற்குவடுபோலுமனம் பொருந்தியபினில்லறத்திற்புகனுஞ்சொற்போ
னிற்குவனென்னுயிர்பத்தி ஞானவருட்சிறைகொடிவ ணேரும்வண்ணம்
விற்குலவுமதியுடையீர் தடைபுரியாதெனக்குவிடை யீதல்வேண்டும். (கஉ)

என்றுபலபுகலுமைந்தன் மொழிவினவியானந்த மெய்தினாராய்
நன்றுனதுசங்கற்பம் பூர்த்திசெய்தோராண்டுளிவ ணண்ணும்வண்ணங்
குன்றுகுடையெனக்கொண்டோ னருள்புரிகவென்றாசி கூறக்கேட்டு
ளொன்றுபரமானந்த முடன்விடோபாவணங்கி யுவந்துசென்றான். (கங)

துவாரகாபுரிமதுரை தருமபுரிதவளபுரி சோமநாதந்
தவாமகிமைசால்பாலு காதீர்த்தமூலமா தவநீள்சங்காத்
துவாரமருணைவருணை பிரபாத்தீர்த்தம்மமலே சுவரமாதி
யவாவிலடைந்தீற்றினற்சக் கரதீர்த்தமைந்தாடி யவணமைந்தே. (கச)

நித்தவினைமுடித்தயற்றாேய்ந் துறுமளகாவதிப்பதியி னேரும்போதி
லுத்தமசற்குணம்பொலிசித் தோபண்டிதன்விருந்தா வொருவர்க்காணான்
சித்தமிளைத்தனன்வருங்கால் விடோபாவைக்கண்டின்பஞ் செறிந்தானாகி
யொத்தமனத்துடன்மனைப்பாலமைதரக்கொண்டேகியுவப் பினிலுண்பித்தே

வேதரகசியப்பொருள்க ளுசாவியவன்பெற்றமையும் விவேகத்துக்கும்
போதவிளங்கிடும்வடிவக் காமர்பொறையாதிகுணப் பொலிவுக்குந்தன்
மேதகையவுளத்தின்மிக வியந்தமைந்தானிரவுவரை விவகரித்தே
யர்தரத்திற்றுயில்செயுங்காற் சித்தோபண்டிதன்கனவி லரிவந்தோதும். ()

நன்றமைநின்செல்வியையீண் டமைவிடோபாவினுக்கு நாளையேநீ
மன்றல்புரிந்தளித்தியென வியந்துடன்பண்டிதனெழுந்தென் மனத்தினூடே
யின்றமைந்தநினைவுகொலோ பகவனநுமதியோவென் றெண்ணித்தன்பா
லொன்றனந்தல்புரிவிடோ பாவையெழுப்பினனடந்த வுளவுசொல்ல. (கஎ)

வினவுவிடோபாமிகவும் பரிதபித்திச்செயலெனது வினையோவீன்றாேர்
கனமொழியுமறுத்துலகைத் துறந்தாசான்றனைத்தேடிக் காணுதெய்ப்பேற்
கினவிதியும்வராலாமோ வென்றுபலவிதந்தன்மனத் தெண்ணிவாடி
யெனதுநிலைகுலகோத்தி ரந்தெரியாதிவ்வார்த்தை யிசைக்கலாமோ. (கஅ)

பெண்ணாசைகொண்டில்வாழ்க் கையிலமைவார்பெறுந்துயரைப் பேசலாமோ
விண்ணுடர்புகழ்கலைக்கோட் டாரைமன்னன்மருகாக்கும் விதமேபோலப்
பண்ணுமலெனக்குவிடை தந்தருள்வீரெனச்சித்தோ பண்டிதன்றான்
றண்ணாருந்தெய்வமொழி தடுத்தன்முறையன்றென்னச் சாற்றக்கேட்டே. ()

உன்கனவிலுரைத்தபக வனுக்கருகிற்கிடந்துதுயி லுறுமென்பாலு
நன்கறையுமுரமின்றாே வெனச்சித்தோபண்டிதனுண் ணயப்போடின்றல்
வின்கணும்பாலுரைத்திடுமென் றாேதிநித்தியக்கடன்க ளியற்றிமாயன்
மென்கமலத்தாள்சிந்தித் தன்றிரவிலுறங்கவிடோ பாகனவில், (உ0)

பகவனணைந்திச்சித்தோபண்டிதனின்றருள்கற்பார் பாவைதன்னை
யகமகிழ்விற்கொள்ளுதியென் றுரைப்பவுடன்விழித்துமண மாகாதென்னத்
திகழ்தருநம்விரத்திதனைத் தெய்வமேகெடுத்திடில்யாஞ் செய்வதென்னென்
றிகழவிசையான்கொள்ளற் கமையானேரியின்கரைப்பாலேய்வோரொத்தான்

தந்தைதாய்கட்டளையில் லாமலெங்ஙன்புரிவதெனத் தன்னுளெண்ணிச்
சிந்தையாகுலங்கொண்டு துயிலமையாதுழன்றிடுவான் செய்கைகண்டு
விந்தையுடன்சித்தோபண் டிதனெழுந்துமாலருட்சீர் வினவிநம்மின்
முந்தைமுயறவப்பேறென் றுறவினர்க்கூயுற்றகுல முறைவினவி. (௨௨)

மங்களவைபவம்பொலிய மணமுடித்தான்விடோபாத்தன் மனத்துட்சாலச்
சங்கடமுற்றிசைகில்லான் களத்திலிலிங்கந்தரித்த சரிதமேபோ
லிங்கருட்டெய்வம்புரிந்த தென்றுகடந்தேகிடுமோ ரெண்ணங்கொண்டு
துங்கமுறுசித்தோபண் டிதன்றனைப்பார்த்துத்தலங்கள் சூழ்ந்துற்றேனே. ()

இடைவழியிலழைத்துவந்து சமுசாரியாக்கிநம்மு ளெண்ணும்வண்ணந்
தடையறச்செய்தீரினியா கிலுமெனதுமனதிலுறு சங்கற்பம்போல்
விடையருண்மின்யாத்திரைமுற் றுக்கியைதின்யானிங்ஙன் மேவவென்ன
வடைவினெடுசொற்றுவிடோ பாமொழிக்குப்பண்டிதனுள் ளேயுற்றுனைய். (௨௪)

உடனணைந்துபலதலமுந் தெரிசனஞ்செய்தனன்றன்னூ ருற்றுனக்காற்
றிடவிரத்தியமையும்விடோ பாசித்தோபண்டிதன்பாற் செப்புகின்று
னிடர்பொருந்தென்றாய் தந்தை யரைப்பிரிந்துநாளாயிற் றியல்விவாக
நடவுதலுமறிகில்லார் நாளையவர்பானண்ண நசைத்தேனென்ன. (௨௫)

வினவுசித்தோபண்டிதனும்மைப் பெறற்காந்தவம்விரதம்விளைத்தோர்தம்மை
யெனதுகண்கள்கொண்டுதரி சித்திடற்காவற்சால வேய்ந்தேனென்ன
மனதுவகையுடனடந்தாப் காமூரைமருவியுற்ற வாலாறெல்லா
ம்னகவிடோபாவியம்பக் கேட்டவர்களானந்த மமைந்தோரானார். (௨௬)

அக்கணத்திலடிதொழுத வருக்குமாபாயினுளத் தன்புமேனி
தொக்கசுந்தரப்பொலிவா தியநிரூபாயிகண்டு துதைபேரின்பாற்
றக்கமருகியைத்தழுவிச் சனகியைக்கண்டுளமகிழ்சோ சலையேபோலப்
புக்கவுவகையிலாசி வழங்கியவண்மாதாவைப் புகழ்ந்துமெச்ச. (௨௭)

மருவியசித்தோபண்டி தன்கோவிந்தபண்டிதனை வணங்கவுள்ளம்
பெருகுவப்பினுந்தெருளா லென்புதல்வனித்தகைச்சீர் பெற்றபண்பென்
னிருவிழிகளுங்குளிரக் கண்டனன்கைமாறுமக்கே தியற்றுவேனென்
றருமைமொழிபலபுகல வுமதுதவப்புதல்வனுக்கென் னரிவைதன்னை. (௨௮)

மணம்புரியும்பான்மையினுன் மாயனடுத்துரைக்குமொரு மாண்பும்பெற்றேன்
குணம்பொலிநுந்தமைக்காணப் பெற்றபண்பேற்றமதென்னக் கூறியாருங்
கணம்பொலியின்பத்தினராக் கலந்துசின்னுள்வதிந்துதம்மூர்கல்பானுள்ளத்
தெணம்பொலிசித்தோபண்டிதன்கோவிந்தபண்டிதன்பாலிறையேற்றேனைய்.

மகளுருக்குமாபாயிக் குளமகிழப்புந்திசில வழுத்தித்தான்வாழ்
நகரடைந்தான்விடோபாகல் யாணமுடிந்தறுபருவ நண்ணியுந்தன்
னகமகிழப்பணிபுரிபத் தினிமுகம்பாரான்றுறவி லவாமிக்கோனுய்
நிகழ்தருநாளன்னைபிதா சமாதிநிட்டையாலரிதா ணிழலிற்றேய்ந்தார். (௯0)

ஏககாலத்தினிற்ச மாதியினுற்றம்முடல மிகந்தோர்தன்மை
பாகமனம்பெற்றவிடோ பாவறிந்துவியந்தபர பணிகளாற்றிச்
சோகமுடனுப்காமூ ரிடைசின்னுள்வதிந்துற்ற தேவிதன்பா
லாகம்விடுந்தாய்தந்தை யத்திகொடுகாசிபுக வகத்திச்சித்தேன். (௯க)

நீதனித்தீண்டிருக்கமுடி யாதளகாவதியின்பா னேர்தியிங்கென்
றுதாஞ்சால்பிதாவீட்டுந் திரவியத்திலுனதிச்சையளவு கொண்டு
மீதமெல்லாமதிதிகட்கின் றேயிடுதியெனவொர்சற்றும் விரும்பாள்யாவு
நாதனுரைப்படியீந்து வணங்கிடவுத்தமியென்று ணயந்தானுகி. (௯உ)

மனைவியுடனணியளகா வதியடைந்துமாமனடி வணங்கியுற்ற
வினைமொழிந்துவிடைபெறுவா னுன்னியமைகாலைமகள் வினயமோடுந்
தனைநிகர்காதலர்விரத்தி தந்தைதாய்க்குரைத்திவரைத் தனியேவிட்டான்
மனையணுகாரெனச்சாற்ற மாமன்விடையளித்திடான் வாளாங்குற்றான். (௯௩)

பற்பன்முறையிரந்தும்விடை சித்தோபண்டிதனளியாப் பான்மையாலே
வெற்பனையவுளம்பெறும்வி டோபாவுள்ளத்திலிங்ஙன் விள்ளுகின்றா
னெற்பதுதம்வடிவாகித் தாய்தந்தைநங்கலசத் திசையக்கண்டுஞ்
சொற்பனநேரில்வாழ்வை மதித்தவென்னேர்விவேகசூ னியர்களுண்டோ. ()

சின்னுண்முன்னம்வாழ்க்கை திறமெனக்கொளன்னைபிதா செயலீதாயிற்
பின்னுள்யாம்பெறுங்கதியு மீதல்லால்வேறினிமேற் பேசவுண்டோ
கொன்னுர்சித்தோபண்டி தன்யார்நாமாரிவனைக் குறிக்கொண்டுற்ற
லென்னுகும்பெறலரிதா மானிடச்சென்மமெனத்தன் னிதயத்தெண்ணி. ()

அநித்தியத்தைநித்தியமென் றுன்னவைத்துநரகினுக்கா ளாகச்செய்து
செனித்திடப்பின்னும்புரியு மாயைவலியைக்கடப்பார் செகத்திலுண்டோ
சனித்தகையஞ்ஞானத்தான் மனைவிபுறவினரென்னுஞ் சாலத்தேய்ந்தே
னினித்தடைபட்டிண்டமையே னெகுவதேதுணிபெனக்கொண் டில்லாட்கூவி.

பெண்ணேயெற்கில்லறத்தில் வாஞ்சையிலைசந்யாசம் பெறுவேன்வஞ்ச
மெண்ணேனிற்குண்மையுரைத் தேனின்றுய்தந்தையருக் கிசைத்தெனெஞ்சம்
புண்ணேயப்பலதுயரம் புரியாதுவிடையளிக்கப் புகல்வாயென்னப்
பண்ணேறுமொழிபதிவாக் கைக்கடவாள்குரவரிடம் பகர்ந்தபோதில். (௯எ)

சித்தோபண்டிதன்விடோ பாலணைந்துநீரிளமை தீருமுன்ன
முத்தோவென்றிடுமூரற் கற்புமனைபாலிங்ஙன் மொழியலாமோ
பித்தோவேதத்திலெழு பானைந்தின்மேற்றுறவு பேசினர்கட்
கத்தோவிவ்விளமைதனி லிந்தியங்களிறந்திடுத லரிதாமம்மா. (௯அ)

பாலவயதிற்பொருந்தும் விரத்தியைநம்பித்துறந்து பாரின்மீதி
லாலமெனமயக்குமிந்திரியக்கரணசேட்டையரு தனந்தம்பேர்கள்
சாலவருந்தினருபயப் பிரட்டர்களாயினர்சந்நி யாசமென்கை
சீலமுறுகாவிவத்தி ரப்பகட்டேயோமனத்தின் செயமாமன்றே. (ருகூ)

உற்றபிரமஞ்ஞான மெளிதென்றுன்னுதிர்திரி யுலகந்தன்னிற்
பற்றறுமெஞ்ஞானியரி தொருவனென மேலோர்கள் பகர்ந்தாரஃதாற்
செற்றமனமற்றவனே துறவிமாயையைக்கொல்சிதேந் திரியரான
கொற்றமுறுநாரதனும் பருவதனுங்கொண்டதுயர் கூறலாமோ. (சு0)

பிரமசிருட்டிக்கெதிர்செய் கோசிகனுஞ்சுராசுரர்தம் பிரானுநும்
விரவியபஃறேவர்களுங் காமத்தாற்பட்டதுயர் விளம்பப்போமோ
வுரமுறுமேமனைச்செயித்தார் பலர்காமன்றனைச்செயித்தா ருணரிலற்பங்
கரவறவில்லறத்திருந்து மனோசயத்தாற்சிரேட்டபதங் கைக்கொள்வீரால்.

என்றுபலசித்தோபண் டிதன்கூறவிடோபாநீ ரிசைத்தல்யாவு
நன்றுமறையெழுபானைந் திற்றுறக்கநவின்றவிதி ஞானஞ்சற்றுந்
துன்றுதலில்லாததன்மே லுங்கிரகத்திடைமனைசேய் தொடக்கமைந்து
பொன்றுதற்குத்துணியுமந்த பக்குவரைமனையைவிட்டப் புறமாக்கற்கே.

மறைவிதிமெஞ்ஞானமுற்றார்க் குஞ்சடர்க்குமாகாது மத்தியத்தி
லுறைபவர்கைக்கொளற்பாற்று நாரதராதியர்காம முற்றபண்பா
னிறைதவங்குன்றினரோவன் னவர்கள்செயல்காரணமா நிகழ்த்தலன்றித்
தறையினரொத்ததின்மயங்கிப் பவத்தொடக்குண்டனரென்னச் சாற்றப்போமோ.

செகசாலத்துழல்வாரன் னவர்மேலேபுரிந்தசெய றோர்வாரன்றி
யகமேவுசூக்குமச்சீ ரறிவாரோநாமுமவ ரனையேமென்று
மகமாயைவலைப்பட்டுத் தொலைவார்மெய்வீடுபுக வாஞ்சித்தேனுக்
குகவாதுஞ்சிறுபோதம் பயனிலசொலாதுவிடை யுதவுகென்று. (சச)

வல்விரைந்துபோகவுருக் குமாபாய்தன்னுயிரனைய மணவாளன்பின்
னல்விரைத்தார்க்குழல்சரிய நடந்துநயந்துரைத்தடிக ளன்பிற்போற்றிப்
பல்விதமோதியுமிளகா மனத்துடனீகற்புடைய பாவையேலென்
சொல்விதிபோற்றந்தையில்லி லமர்திியெனவடிபெயரா டியர்ந்துநின்றே. (சரு)

கணவன்மறைதருங்காறு நோக்கிமறைதலுமூர்ச்சை கலந்துவீழ
வணவுதந்தையாதியர்தேற் றிடவெழுந்துதன்னுவி யகற்றவுன்னக்
குணமுறுசித்தோபண்டி தன்றுயர்ந்துநீமரிக்கக் குறிக்கில்யாமுங்
கணமொழியுமுன்னொழிவோ மிப்பாவமுன்கணவற் கலக்குமன்றே. (சசு)

பதியினைப்பாவங்கலக்கப் புரிபவட்கற்புடையளெனப் பகரப்போமோ
மதியுளநின்னுளத்துமிந்தச் சங்கற்பம்வரலாமோ மங்காய்முன்னாள்
விதியொழிசத்தியவானை யெழுப்பியசாவித்திரியை வெற்பன்மாதைத்
துதிபெறுசீருருக்குமணி யைப்போற்கௌரீவிரதந் தொடிலின்பாமால். (சஎ)

என்னவுரைத்திடவுருக்கு மாபாயிநாயகன்பின் னெய்திற்கற்புப்
பின்னமுறுமிறக்கில்வசை பொருந்தும்விரதம்புரிந்து பெறனன்றென்னத்
தன்னகத்துட்டுணிந்தியற்றி யுற்றுள்விடோபாகா சித்தலஞ்சார்ந்
தன்னமமைகங்கையிலா டினன்விசுவநாதனடி யன்பிற்போற்றி. (௪அ)

சுகந்தருமெஞ்ஞானகுரு பாற்றேடிச்சிற்சிலநாள் சுற்றியங்கட்
டிகம்பரராய்மாயாதீ தராயுடலமறந்தியற்சிற் சுகத்தின்மூழ்கித்
திகழ்ந்தவருட்சிபாத சாமிகளைக்கண்டன்பாற் றெண்டனிட்டே
யுகந்தபலதுதிபுகன்று கண்களினீருறைப்பவுள முருகிநின்றான். (௪௯)

திரிலோகசஞ்சாரி யாயவிர்நாரதரமிசாத் திகழுமன்னோர்
பரிவோடுநோக்கியெனைத் தொழுதுநிற்குநீயாருன் பதியேதுன்னுட்
பெரிதானவாவலென்னென் றிடவாப்காமூர்மறையோன் பிறவிக்கஞ்சி
விரிபாவல்கொண்டுநுமைச் சரணடைந்தேனெனையாள வேண்டுமென்ன. ()

புன்னகைசெய்தருட்குரவர் மானிடர்யாவரும்விடய போகந்துய்த்தே
நன்னலமுற்றமையவுன்மட் டினிலென்னேயிந்தவிதி நண்ணிற்றென்ன
வின்னல்விடயங்களென்னுந் தேள்களுமிந்தியங்களென்பாம் பினமுந்தீமை
துன்னறுதுற்குணப்புலிக ளுடனகங்காரக்கரியின் றொகையுமற்றும். (௫க)

ஓதிடுதத்துவமாக்க ளுற்றவஞ்ஞானத்தமஞ்சா லுடலக்கான
மீதிலகப்பட்டகன்றோ டடவொர்வழியறியாது விழித்துற்றேனிப்
போதினும்பாற்புக்கவெனைப் புரந்தருள்வீரென்னவுனைப் போலேயானுஞ்
சோதியருட்குருபரனைத் தேடியுற்றேன்பதவிழைந் திடிற்றோய்விப்பேன்

என்றுபலபுகலவய னுதியர்தம்பதத்துமிச்சை யில்லேனோரு
னென்றுதலில்பெருங்கதியே வேட்டனனென்றிடவதனை யுணரேன்யானு
நன்றுதருசற்குரவற் றேடியடைகெனநவின்று நாதரின்பந்
துன்றுபிரமானந்த வாரிதிமூழ்கினர்மௌனந் துதைந்தாராகி. (௫௩)

பலபலசோதனைபுரிந்து மும்மைவிடேன்யானென்னப் பரிவாலன்னோர்
சலசமலர்ப்பதப்பணிசெய் தியலவருள்சுரந்தின்பாய்ச் சாற்றுகின்று
ருலகிலுனையொத்தமைதீ விரவிரத்தியுடையனையே யுசாவியுற்றேன்
சலமறுநீகிரகத்த னேபோகந்தோய்வில்*வன்னி தானேசாற்றாய். (௫௪)

எனவினவுகுருவிடமில் லறத்தனெனிலுபதேச மிசையாரென்ன
மனமதுசான்றாகப்பெண் போகமிற்றென்றுணராத வன்னியென்ன
வுனதுபிதாமாதாக்கள் யான்டுளரென்றிடமரித்தா ருண்மையென்று
னனகவருட்குரவருடன் களித்தகண்டஞானநிலை யருளிச்செய்தே. (௫௫)

அத்தமலர்சிரத்திலமைத் தையமுறேனீதானின் னுன்மாத்தனை
யொத்தபராமான்மாவி லைக்கமுறப்புரிந்தின்ப முற்றுவாழ்கென்
றுத்தமசிடன்றனக்குப் பூரணபிடேகஞ்செய் தும்பர்தாமு
நத்தருட்சைதன்னியப்பேர் சூட்டவியற்சமாதிநிலை நண்ணிவாழ்ந்தான். ()

* வன்னி - பிரமசாரி

வேறு

மற்றிதுநிற்க மன்னணியளகா வதிகொள்சித்தோபண்டிதன்ருன்
சற்றிடையின்றி யரியிருபதுமத் தாளிடைமனமமைத்தவனுப்
வெற்றிசால்பூசை புரிந்துநாரணன்பால் விள்ளுவனென்மகடன்னை
யிற்றிகமாலற் றியல்விடோபாவுக் கீந்திடும்படிவலிதிசைத்தே. (ருஎ)

பெரிதுமன்னவர்க ளொத்தமையாது பிரித்தெனோர்கற்புடைச்செல்வி
பரிதபித்துழலுங் கொடுமையையென்னைப் பார்க்கவைத்தனையினிச்சகியே
னரியருட்பகவ வேழைநானிதற்கென் ணுற்றுவேனெனத்துதித்திருந்தான்
பிரியவன்னவனில் லாளிலக்குமியைப் பேணினள்குறைபுகன்றமைந்தாள். ()

உருக்குமாபாய்நா டொறும்புலர்வதன்மு னுறக்கநீத்தறல்படிந்தரச
விருக்கநூற்றெட்டு வலம்புரிந்துற்ற விடோபமந்திரத்தையோ*ரயுத
முருச்செபித்தொருக்கா லுண்டுபார்மீதி லுறங்கிநற்றுகிலணியாளாய்
மருச்செறிகூந்தல் வேணிகளாக மாதவநோற்றனள் வதிந்தாள். (ருகூ)

படியிலின்னவர்செய் தவப்பெரும்பயன்சீ பாதசாமிகண்மனம்புகுந்து
நெடிதுசஞ்சார சமாதிசெய்திடுமா நினைவளித்திடவவணீங்கி
வடிமலர்ப்பொழிலு டுகள்கடந்தளகா வதிபின்மேய்ச்சக்கரதீர்த்தம்
படிதல்செய்தரசி னீழலிலொப்பில் பரனெனநிட்டைசெய்தமைந்தார். (கூ0)

இன்னவாமறுநாண் மட்டசைவின்றி யிருந்திடக்கண்டுருக்குமபாய்
தன்னகம்வியந்திம் மூர்த்தியானமது தவக்குறைமுற்றுமென்றுவந்தா
ளன்னமாதியகொண் டணைந்தடிவணங்கி யமுதுசெய்தருடிரென்றிரப்ப
மன்னருந்ததிதன் கலைகொள்வாளின்ப மாற்றங்கேட்டடென்விழிமலர்ந்தே. ()

திருவனுபார்நீ யிவ்விளம்பருவத் திற்றவவேடம்வாய்ந்துறலேன்
கருதியகுறையே துரைத்தியென்றிடமெய்க் கற்புருவாள்பசிமிகையாற்
பருவாலுற்றீர் பருகியபின்யான் பகர்வனெனசரிதமென்றன்பா
லருமைசாலுபசா ரங்கண்மிக்கியற்ற வயின்றருந்தவாகமகிழ்ந்தே. (கூஉ)

உனக்கியானுன்கு மகவுதித்திடுமா றுளமகிழ்ந்தனன்வரமளித்தேன்
வனக்கிளிமொழியா யித்தவவேட மாற்றிநின்னுயகனுடனே
மனக்களிப்புடன்வாழ் குதியெனமங்கை மந்தகாசம்புரிந்தனளா
யெனக்கியலுவப்பா லிவர்வரமளித்தா ரெவ்வகைமுற்றுமீதென்றே. (கூங)

நீர்த்துளிபொருக்கும் விழியொடுதன்முன் னிற்பவடன்னைச்சீபாதர்
பார்த்துநீதுயர்வ தேதுளத்தையம் படிந்திடேல்யான்பகர்மாற்ற
மூர்த்திகண்மூவ ருந்தடைசெயினு முற்றுவிப்பேனெனமாது
ளார்த்திமிக்கிதுநந் தவப்பயனேயென் றகங்கொடுதன்கதையறைந்தே. (கூச)

அகம்பொலியுவப்பால் வரமளித்தீரில் லறத்தியல்காலையேயெனது
முகந்தனைநோக்காக் கணவர்சங்யாச முதுநிலையைந்தவித்ததிதந்
நகங்கொடுதீண்டத் துணிவரோவென்ன நங்கைநீதவிப்பநின்கணவற்
குகந்துசங்யாச மளித்தவன்யாரஃ துதவினேனுங்குற்றமுறுவான். (கூரு)

---

* அயுதம் - பதினாயிரம்.

உன்னதுகணவன் யாண்டுளானின்னே யொருவியாண்டெத்தனையொழிந்த
வன்னவன்வயது குறிகுணமுற்று மறைதியென்றிடவவிழுத்த
நன்னகர்புகுந்த தும்பதினாறு நளிர்மதியொழிந்தவும்பிறவும்
பன்னவையுற்றார் நாமமேதென்னப் பாவைபார்மிசைவரைந்திட்டாள். (கூகூ)

கண்டசிபாத ருளமிசைக்கனன்று கைதவமுரைத்துபதேசங்
கொண்டவன்றனைநீ ருக்குவனினக்குக் கொடுத்துளவரத்தினுற்றவிர்ந்தேன்
கண்டனமொழிநீ கலங்கலையவனைக் கடிதிவணழைத்துறுவேனென்
றெண்டவர்காசி புக்குமாணுக்க னுவந்தடிதொழச்சினந்துரைப்பார். (கூஎ)

அடாவசத்தியச்சை தன்னியாசியில் லறத்தனுவன்னியாபொய்மை
படாதினியேனு முரைத்தியிக்கணத்திற் பற்பமாக்கிடுவனென்றோத
வடாதகாரியத்துக் கஞ்சினன்கண்ணீ ராறெனப்பெருக்கியாரியகை
விடாதருள்வீரென் றடிமிசைவீழ்ந்து மிக்கழுதனனருள்கூர்ந்து.. (கூஅ)

மருவுநின்சரித முழுமையுமளகா வதியிடையுருக்குமாபாயாற்
றெருளலாயினனீ யரிதனுணையினுற் றிருமணங்கொண்டனையென்பா
லருள்பெறவன்றோ பொய்யுரைத்தனைநீ யஞ்சலையென்னுடன்வருகென்
றுருகுமன்புளஞ்சா லுருக்குமாபாய்முன் னுறவுவகையிற்றொழுதமைந்தாள்.

மனைவிதன்போலத் தவத்துறைபுகுஞ்சீர் மதித்துவந்தருட்குருநாத
ரினையள்பாலமைய விதிப்பரோவென்ன வெண்ணுபுநின்றிடுமெல்லை
முனைவர்விடோபா வினைவிளித்திநம் முன்னிற்பாள்யாரெனவினவ
வினைவுடன்மௌன முற்றனனின்று னிசைப்பர்சீபாதராங்குரவர். (எ0)

கற்பருள்வடிவ ளிவளுளங்கலங்கிற் கவின்றுறவுருப்புனைந்திடும்யாம்
பற்பமாகிடுதற் கையமின்றின்னாள் பாரியாந்தவம்பெறுநீதான்
சொற்படியமையு மனைபெறூர்கொள்ளுந் துறவறவேடமேற்றுங்கி
வெற்பருங்கானத் துழன்றிடும்வண்ணம் விரும்பியவிதிமிகக்கொடிதால். ()

என்றுபற்பலபோ தம்புகன்றிங்ங னிருத்தியானேகுவனென்று
துன்றுசற்குருவே கிடத்துவக்குங்காற் றுயரொடன்னவர்பிறகணைந்தே
மின்றுணைத்தாள்கண் மிசைவிழுந்தெனையில் விலங்கிடையழுத்திநீரேக
னன்றுகொலும்மைப் பிரிந்தரைக்கணமு நானுயிர்தரிக்கிலேனென்ன. (எஉ)

பலவிதமாகத் துதித்தெழானிரங்கப் பரமசற்குருவிடோபாவை
நலமுறக்கரத்தால் வாரினரணைத்திந் நாள்வரைநான்புரிதவமுற்
றிலகிடவுனக்கிந் தனனின்னோர்குலத்த ரியாருமுய்ந்தனர்நின்னுனக்குத்
தலமிசைதிரிமூர்த் திகளுநீடாதி சத்தியுங்குழவியாச்சனிப்பர். (எங)

எனதுசொற்படியீண் டிருத்திசின்னாள்சென் றியானுநின்புடையடைந்திடுவேன்
மனதுவந்தெனக்கு விடைநல்காயென்ன மறித்துமாரியர்கழல்வணங்கிக்
கனசமுசாரத் தாற்சமாதிநிட்டை கலைந்திடாதருடிரென்றிரந்தா
னனகசற்குருவா யெங்கணுந்தோற்று மருட்டீரியாநுபூதிநல்கி. (எச)

சென்றிடயாண்டுங் குருபரனுருவந் திகழ்தரப்பெற்றனரிருந்தார்
மின்றிகழ்கற்பா ருருக்குமாபாயுண் மேவியவிதனமுற்றொழித்தே
தன்றிருக்கணவன் பணிபுரிந்தின்பந் தழைத்துவாழ்ந்தனளதுகாலை
யொன்றியசித்தோ பண்டிதன்மருக னுற்றதற்கோகைமிக்காணய். (எரு)

அந்தணர்பலர்க்கும் விருந்துசெய்திடுமா றவாவினனழைக்கமற்றவர்தாம்
வந்தருமறையோய் நின்மருகன்றன் வாரணசியிலணைந்துலக
பந்தமற்றியல்சந் நியாசியாயேற்றுப் பலர்மனையினும்புசித்திருப்பா
னந்தவோர்பிரட்ட னுடனெமையுண்ண வழைத்தெமைக்கெடுத்திடநினைத்தாய்

அவனையிக்கணத்தோட் டிடினுகர்ந்திடுவோ மன்றெனமறுத்திடி லுனக்குத்
*தவமியற்றிடுவோ மெனவவர்ப்பணிந்து †சந்தயமுளத்திடை கொள்வீர்
நவமுறவும்மைப் பணிவனென்றோத நாங்களுன்பணிவுக்குமயங்கி
நுவல்குலவொழுக்கம் விடோமெனப்பலவா நுவன்றுதத்தம்மனைபுகுந்தார் ()

வேறு

சம்பவமீ துணர்ந்துவிடோ பாசித்தோ பண்டி
தன்றனைப்பார்த் தென்னுனீர் தாழ்ச்சியுற னன்றன்
றிம்பர்வழக் கொத்தமைதிர் யான்கானம் புகுவே
னென்னவவ ரிசையாராய் மறுத்தியம்ப விசையார்
வம்பலர்த்தண் டலைகுலவு மலைக்குகையில் வதிந்தே
வரம்பறுபே ரின்பநிட்டை வாய்ந்தமைந்தார் மலர்தோய்
கொம்பனையா ளுடோறு மமுதுகொணர்ந் தளித்துக்
கொண்கனுவக் கும்பணிகள்குயிற்றிவதிந் திட்டாள். (எஅ)

இன்னணமீங் கியனுளிற் சீபாத சாமி
யினியவிடோ பாவைத்த னிதயமிசை யெண்ணி
யுன்னகத்தோ கையின்மும்மூர்த் திகளாதி சத்தி
யுனக்குமக வாவாரென் றுரைத்துவந்தோ மன்றோ
வன்னவகை யெய்திடன்மிக் கரிதன்றோ களிப்பா
வளித்தவரம் பலித்திடுமா றுற்றுவனென் றன்பான்
முன்னவர்நால் வரும்பிரசன் னமதாகத் தம்முண்
முன்னுபுதி யானமொரு முகூர்த்தமுயன் றிட்டார். (எகூ)

அக்கணத்தி னல்வர்களும் பிரசன்ன மாகி
யறிவவெம்மைக் கருதியதென் னறைதியென வுயிருட்
புக்கரி யாயவிரு நமக்கடியே னெண்ணம்
புகன்றிடவோ வெனப்பலவாப் போற்றிநிற்கும் போதின்
மிக்கவென்மா ணக்கனுக்குக் குழவிகளாச் செனிக்க
விரும்பினே னென்னுளெழும் விருப்புமும தன்றோ
தக்கவென்வாக் கைப்புரக்க வேண்டுமெனத் துதிக்கத்
தன்னிகர்மால் சாற்றிடுவன் றவத்தர்சிகா மணியே. (அ0)

* தவம் - பிராயச்சித்தம். † சந்தயம் - சந்தேகம்.

நீகருது முன்னேயா மூலகிலவ தரித்து
    நிட்குணச குணத்தியா னம்வன்னுச் சிரம
பாகதரு மங்கணிலே நிறுத்திடச்சூழ்ந் துற்றோம்
    பான்மையதா னின்வாக்கிற் பகர்ந்தனமிம் மாற்றஞ்
சோகமறும் விடோபாயா ரெனநினைத்தாய் வசிட்டன்
    றாயகலை யதன்விவரஞ் சொற்றிடக்கே ளயோத்தி
யேகவர சாற்றுதச ரதன்சேயா யானு
    மென்சயன மாழிசங்கு மிசைந்தரசன் மடியில். (அக)

நானமைந்த போதிலக்கு மணனுமிளையோரு
    நண்ணவிடம் போதாம னனிகலங்கித் தழலாற்
கோனிலக்கு மணனைமடி மீதிலென்னோ டமைத்துக்
    குலவியதோண் மிசையிளையோர்க் கொண்டனனக் காலை
யானபுயத் தமையும்வண்ணம் யானுமிலக் குவனு
    மமைபரத சத்துருக்க ரத்தந்தொட் டீர்த்தோ
மானமிக்கன் னவரிரங்கார் மன்களத்தைப் பிடித்தே
    வலிகொடசை யாதமைய மருவியயா முன்பின். (அஉ)

பக்கமமைந் தேகட்டிப் பிடித்தன நாற்றிசையும்
    பார்த்திபனை யீர்த்திடுஞ்சீர் பார்த்தவலி னின்ற
மிக்புகழ்க் கோசலைசு மத்திரைகை கேசி
    வியனிதுதேர்ந் தின்பத்தான் மெய்க்கரங்கள் புடைத்துப்
புக்கநகை யினரானர் நெடுநாட்சே யின்றிப்
    பொருந்தினன்பின் னல்வர்களைப் பொருக்கெனவெய் திடலாற்
றக்கபுள காங்கிதனுய்ப் பரவசத்தா லென்னைத்
    தழுவியின்ப நீர்* தாரை மானவடித் திட்டான். (அங)

பொருந்துசெய விதைவசிட்டன் றேர்ந்திவுல கத்திற்
    புத்திரபாக் கியந்தன்னைப் பொருவதின்றென் றுன்னி
யருந்தல்புரை யோகையுட னெனைத்தன்றோண் மீதி
    லமைத்தின்ப முறக்கருதி யருகணைந்து மன்ன
னிருந்துயர நீக்குநன்போ லென்னையிலக் குவனை
    யெடுத்திருதோண் மிசையமைத்திட் டிச்சைமிகைபெறலான்
மருந்துறழ்சீ ராமாநிற் சுதனெனக்கொ ணன்னுண்
    மருவலுண்டோ வென்றுகண்ணீர் வடித்தெனையாட் டிடலால். ()

நானவர்கட் புலனெதிர்மும் மூர்த்திவடி வாகி
    நன்குதெரி சனமளிக்க நயந்தொருவ னுநீ
வேனமையென் கண்ணெதிர்மும் மூர்த்திகளின் வடிவாய்
    விளங்கவினத் திரிபான்முன் மேவியபண் பேபோ

* தாரை - பெருமழை.

லானசுத ராப்பிறந்தித் தசரதன்போ லுவக்க
வானந்தந் தருதியென்றென் னடிக்குமுத்த மிடமெஞ்
ஞானசுகம் பிறத்தலிற்று னேதியசொன் மறந்து
நனிதசர தற்பார்த்துன் பாக்கியம்பாக் கியமால். (அரு)

இத்தகுசீர் கலைக்கோட்டா னருள்கொடன்றே ரீதா
னெய்தினையென் றிடமன்னன் யாவுமும தருளே
யுத்தமவென் குரவவென முடிதாழ்த்து மன்ன
னுமக்கேயிவ் வாஞ்சையுறி லோதலெனக் கென்னென்
றத்தமுடி மேற்கூப்பி யனந்ததுதி வழுத்த
வமைந்தவெமை வசிட்டனரா சன்புடையீங் தகன்று
மெய்த்தகைக்கற் பருந்ததிபா னடந்தவித மோதி
மிக்கிலச்சை யாயினனவ் வேலையவள் சொல்வாள். (அசு)

நாரதர்தெய் வச்சபைப்பா லநுசூயை தன்சீர்
நனிபுகன்ற போதுமிம நகத்திலரன் மணத்து
நாரணியை மகவாகப் பெறநசைத்தே னென்ன
நவின்றமைகா லத்திலவ ணாதன்வந் தவர்பா
லீரமுறு நுமதிச்சை கலியுகத்திற் றீரு
மினிப்புதல்வ ராசைமொழி யிசைக்கிலிர்போ துமென
நாரகமூர்ந் திவர்செவியி னண்ணுமொழி யெல்லா
நாற்றிசையு மேகுமென்று ணனிவசிட்ட ணுணி. (அள)

சாற்றுவனக் காலையெமக் காசாணு வரவுந்
தழைத்தவிர கசியமிதைத் தான்மறைக்கு மாறும்
போற்றுபுநுந் தமைவேண்டு கின்றேனென் றிடலாற்
புந்தியிசை நாரதர்நீ புகன்மொழிபொய்த் திடுமோ
கூற்றுறழ்சந் தேகமனங் கொடுவருந்தே லென்னக்
கூறிமறைந் தனர்முன்னங் குழவியெனப் பார்மேற்
றோற்றுறுமெம்பரமேசன்றனை வேண்ட வங்ஙன்
றுலங்குதன்னே ரமிசத்தைத் தூயவிடோ பாவின். (அஅ)

வீரியத்தில் விடுத்துநிட்டை கலைத்தருக்கு மாபாய்
விழைச்சமைத்துத் தேவரினம் விரைமலர்கள் பொழியப்
பாரிலுதித் திடுங்காலைச் சுபங்களுமிக் கிசையும்
பண்பாலுந் தோன்றுசுதன் பரனமிச மமைந்தே
சீரியல்சித் திர்த்திலசை யாதுநிகழ் திறமுந்
தேர்ந்துபெயர் தானிவிர்த்தி சாதுவென்றிட் டார்பின்
காரியன்மே னியனமிசந் திருவவதா ரஞ்செய்
காலையே ஞானமத்தன் களிப்பநுவன் றறலால், (அகூ)

சதிபதிகள் வியந்திவன்ஞா னேசுரனே யென்னச்
சாற்றினரக் காற்பிரமன் றன்னமிசம் வரலால்
வதி*யுலவை தளிர்த்திறந்த வுயிர்களெலா முயிர்த்த
வாய்மையிற்சோ பானதே வப்பெயர்சூட் டினர்பின்
முதிராதி சத்திகலை யவதரிக்கும் போதே
மோனமே முத்தியென மொழிந்துறுங்கா ரணத்தா
லதிமகிழ்ச்சி பெற்றுமுத்தா பாயெனப்பேர் சூட்டி
யருட்குழவி களைமிகுபே ரன்பின்வளர்த் துற்றார். (௬0)

கயிலாய வாசனைவை குந்தமிசை மருவுங்
காரணனை யயனையருள் கனிந்தசத்தி தன்னைப்
பயிறவத்தா லொருங்குமக வாயமையப் பெற்ற
பாக்கியவா னுனவிடோ பாநிட்டை தன்னிற்
சயிலமென வமைந்துறுமோர் நிலைவிடுத்து ஞானத்
தனயருட னுடியுற்றூர் தகையுருக்கு மாபா
யயில்பொருள்கள் வாரமொரு முறைதாதை யிற்பா
லணைந்துகொணர்ந் தீட்டினளா னந்தமிக வதிந்தாள். (௬௧)

இவ்வகையாண் டாறேழியச் சித்தோபண் டிதன்று
னிலம்பாடுற் றேற்றிடுமா றெத்தனித்தா னிச்சீர்
செவ்வனச மங்கையன்னு டேர்ந்தழுங்கிக் கணவன்
சேவடிதாழ்ந் துரைப்பணம்மாற் செல்வமிழந் தெந்தை
யெவ்வமிக வேற்றுண்ண விசைந்தனர்கா னத்தி
லியைந்திவரைப் புரக்கநம்மா லியலாதா னகர
மொவ்வனல மெனவிதுவே யின்னவரை நீத்தற்
குபாயமென வுள்ளமிசை யுன்னியுரைப் பானல். (௬உ)

நங்காய்நீ குழவிகளைக் கைக்கொடுநா டடைந்து
நன்கவரைப் புரந்துசுக நண்ணியமைந் திடுநான்
பைங்கான மிதிலமைவே னெனவுருக்கு மாபாய்
பாலர்களா லன்றேநாம் பதியைவிட லாயிற்
றங்காரச் சுதரைவிடுத் திங்கமைவே னென்ன
வானந்தமிக்குவிடோ பாவந்ந னேவிச்
சிங்கார மிக்கவன மதைவிடுத்துச் சேணிற்
றிகழ்சிலம்பின் பாற்செல்லச் சிந்தைதுணிந் தாராய். (௬௩)

சென்றிடுவார் மைந்தர்களைக் கண்டேகச் சிறிது
திரும்பிடுவார்பினுந்துணிந்து செல்வார்சற் றயர்ந்து
நின்றிடுவா ரிவ்வாறு கடலிலிடுஞ் சுரையை
நேர்ந்தலைந்து பின்னரொரு நிலையடைந்தா ரசிு

---

* உலவை - உலர்ந்தமரம்.

வென்றிடுமைம் புலம்படைத்துச் சித்திரங்காற் றற்ற
விளக்கேபோற் பிரமநிட்டை விரவியமைந் தாரு
மொன்றிடுதாய் செல்வமகார்ப் பிரிந்தாற்ருள் கணவ
னுடனிருக்கும் வாஞ்சையினு ளுளத்துயரோ துவதோ. (௬௪)

காதலர்வாற் சல்லியப்பே ராழிதனைக் கடந்து
கணவனன்புவேலையினோர் கரைகாணு ளாகி
யேதமுடன் மகிணனுறு மிடமணைந்து நோக்கி
யின்மையினேங் கினள்கான மெங்கணுமே தேடிப்
போதலுற்ருள் சாலமிகுங் குழவிகடா யகலப்
புலம்பவது தெரிந்துசித்தோ பண்டிதனு மனையு
நோதலுற்ரு ரிவர்கடிய ரெய்திடலால் விடோபா
நோன்கொண்மனங் கலங்கிகத்தி னுழையவிங்ஙனுவல்வார். ()

ஓநிவர்த்தி சாதுநின்னோர் பரிசமெய்தி லுடனே
யுழலுமன மொடுங்கிமௌன னந்தமுத விடுமே
மேனிலைநல் குனைப்பிரிந்தே னேஞானே சுரநின்
மென்ருள்பட் டிடின்மாயை விலக்கியின்பீந் திடுமே
வேனியல்சோ பானதே வாநினைத்தீண் டிலுடன்
வேதாந்த ரகசியங்கள் விளங்கிடுமே ஞானக்
கானியன்முத் தாபாயென் ருய்நீயென் மடிமேற்
கவின்றிடிற்கா ணுதவின்பக் காட்சிமுற்றும் வருமே. (௬௫)

குருமொழியைத் துறந்துமனை வியைத்துறந்தோ மென்னக்
குழம்புவரிவ் வாறலைவு கொண்மனத்த ராகி
மருவியதன் சரிதமெலா நினைந்துநினைந் தயர்ந்து
வாடியருட் பாரப்பிரமந் தனைநாணூற்றுமுப்பான்
பெருமதுரச் சுலோகத்தாற் றுதிப்பவச ரீரி
பேசும்விடோ பாநீசீர்ப் பிரமநிட்டை பெறுவாய்
தருமிவற்றைத் தோத்திரஞ்செய் வாருமுனைப் போலச்
சஞ்சலமற் றின்பநிலை தாங்குவர்க ளென்ன. (௬௭)

வினவினர்சங் கற்பமுழு தற்றின்ப நிறைநிர்
விகற்பசமா தியிலமைகால் விமலனருள் கூட்ட
வனகவுருக் குமையடைந்து திருவடிகள் போற்றி
யழுதிரங்க நீயிக்கா ரடவியிலே னடைந்தாய்
தனயர்களை யார்வசத்திற் சேர்த்தனையன் னவரைத்
தவிக்கவிடுத் திங்கணங்கென் றவத்தையொழித் தெனையு
மனமறுகப் புரிந்தனையின் மருவுதியென் றுரைத்தே
வரம்பறுபே ரின்பநிட்டை வாய்ந்தமைந்தார் மாதோ. (௬௮)

கற்பமையு முருக்குமைவி டோபாவைப் பிரியாள்
கனியாதி யளித்தின்பங் கலந்துறக்கண் டுள்ளத்
தற்பமைந்து தோகாய்நின் னன்னைபிதா விலம்பா
டமைந்தெங்ஙன் வார்த்திகமிக் கல்லல்கொண்டுள் ளாரோ
பொற்பமைநம் பாலர்நமைக் காணுதெவ் வண்ணம்
புலம்புகின்ரு ரோநான்முன் பொருந்துமிடத் தணேவே
னற்பயன்சால் பாலர்களைப் பார்த்தவர்துன் பொழித்து
நண்ணிவனென் றனர்முன்னர் நறுமலர்க்கா னடைந்தார். (௯௯)

உடனுருக்கு மாபாய்தன் பதிமொழிபோ னகரத்
துற்றுமைந்தர்க் கண்டுவகை யோங்கியிரு தினமில்
லிடமமைந்து குரவர்களைப் போற்றினனு யகன்பா
லெய்துபுசே யர்கணிலமை யிசைத்திவண நாளுங்
கட்முறலா ரிடம்புகலாய்க் களித்தமைந்தாள் விடோபா
கலங்காத சித்தமுடன் கனதவஞ்செய் துற்றூர்
நடலைகொள்சித் தோபண்டி தன்சுற்ற மானர்
நல்கிடக்கொண் டவரிடம்பி னண்ணிடஞ ணினனுய். (௧00)

பிச்சைகொள முயன்றுனேர் நாண்ஞானே சுரரும்
பிறகுசெலச் கண்டவர்கள் பெரிதுதுன்புற் றிசைப்பா
ரிச்சையறு சிறுவனேயு மழைத்துவந்தீ ரென்னென்
றிதயமிரங் கினர்பொருண்மிக் கீந்தனரான் னவற்றை
*மிச்சையினுற் றளரும்விருத் தாப்பியன்முன் றெருவில்
விரவுதிண்ணை மீதமைத்து மிகைகொள்பொரு ளிவற்றைக்
†கொச்சைபெறும் யானெவணங் கொண்டணேவே னென்னக்
குணம்பொலிஞா னேச்சுரர்நான் கொண்டணேவேன் பாதி. (௧0௧)

ஈதிரெனக் கொண்டுசிறி தகன்றிடுவார் தங்கா
விடறிவிழுந் தேதாதை யிதையறியிற் சினந்து
மோதிடுவா ரெனப்பயந்து சிதறியதா னிபத்தை
முயன்றனர்கூட் டிகொலை முன்னணேவா னேக்கி
யோதிடுவான் பன்முறையான் மறுக்கவுங்கேட் டிலையா
யுரமுளன்போற் கொண்டுதவ.ற யுழிக்கவிழ்த்தாயென்று
தீதியல்வன் மிடியாலும் பசியாலுந் தளர்ந்தோன்
சினந்துதலை மேற்குட்டச் சிறுவர்வெருண் டவர்போல். (௧0௨)

விறல்கொடுமூ தாதையைக்கீழ் விழுந்திடத்தள் ளியதால்
விரவியதா னியம்புவியின் மீதுகொட்டுண் டிடக்கண்
டறல்பொழிகண் ணினன்றுடர்ந்தோ டிக்குட்ட வோவென்
றழுங்கினர்கண் டந்தாத்தி லமையிமையோர் பலருந்

* மிச்சை - தரித்திரம். † கொச்சை - இளைப்பு.

திறமிதனைக் கண்டுவியந் தனர்பலவாத் துதித்துத்
திறன்மிகுவல் லரக்கர்களைச்செயம்பெறுநீ யிந்து
நிறநரைவார்த் திகன்பிடிக்கக் கிட்டியதுன் மாய
லீலைகொலோ விக்கலியி னிலைமைகொலோ சாற்றாய். (கoந)

என்று பலவாறுவியந் தனவிதந்தா ராமவ்
வேல்வையின்ஞா னேச்சுரர்மிக் கின்பமடைந் தவராய்
நன்றுபோலி தாதையின்பா லடைந்தினிமே லிங்ங
னவிற்றுகிலே னெனமகிழ்ந்து நண்ணியவோ ராண்மே
லொன்றுபொதி களைச்சுமத்தி மனையடைந்தா னிவ்வா
றொழுகிடுநா ளொன்றிற்சந் தர்ப்பணவோ ரில்விற்
றுன்றுசித்தோ பண்டிதன்சேய் நால்வருடன் றுதையச்
சுளித்துமறை யோர்களிந்தச் சுதர்களையிங் கமையேல். (கoச)

பிரட்டனுக்குப் பிறந்தமக்க ளாமிவரைநமது
பிராமணபந் தியிலமைக்கும் பெற்றிதகா தப்பாற்
றூரத்தியனை தரினின்னைச் சேர்ப்பமின்றே லுனையுந்
துறப்பமெனப் பிடித்தெழுப்பித் தூரத்தி லமைத்தே
சிரத்தையுட னமுதுபடைத் தயின்றிடுமத் தருணந்
திகழ்ஞானேச் சுரர்தமையன் செப்புமொழி கொள்ளா
தூரத்துடன்மூ தாதையிலே யருகமைந்துண் டிடக்கண்
டுளங்கொதித்தந் தணர்களமை யுண்ணுமற் கெடுத்தாய். (கoரு)

எனப்பலநிந் தித்தடித்துச் சித்தோபண் டிதற்பார்த்
தினிச்செயலென் னெனப்பலரு மிரைந்துவின விடுகோன்
மனப்பரிவோ டிக்குழவி யுண்டதனு னீயிர்
மருவியவா சாரமொன்றும் வழாதிதற்காச் சாலுஞ்
சினத்துடனிக் குழவிதனை வைதடித்தன்முறையோ
தீவினையீ தாற்றுயரஞ் சேரவரு மென்னக்
கனத்ததுவே சங்கொடுபோர்ப் பார்பண்டி தனையுங்
கடிந்துரைத்துப் பிரட்டருடன் கலந்துண்ட முறையால். (கoசு)

எம்மதுபந் தியிலமையத் தக்கவனன் றப்பா
லெழுந்தகலா யெனப்பலவா றிகழ்ந்துரைக்க வவர்மேற்
கைம்மருவு பாத்திரத்தைச் சினந்தெறியப் பலருங்
கவன்றசித்தோ பண்டிதன்மெய் களைப்பவடித் திடக்கண்
டம்மலர்வாய் திறந்தருண்ஞா னேச்சுரர்சாற் றிடுவா
ரருமறையீர் பிரமஞ்ஞா னந்துபிரா மணவென்
மெய்ம்மறைச்சொ லறியாரீர் பிராமணரோ வனஞ்சால்
வேடர்மிலேச் சரிற்றாழ்ச்சி மேவவிவே சிகளே. (கoஎ)

வீணேயெம் மூதாதை தனையடித்தீ ரும்மை
 விடமாட்டே னெனவயற்சார் விறகினைக்கைக் கொண்டு
தூணேநேர் மறையவரைத் துரத்தவவர் தாமுந்
 துட்டனைக்கொல் லுவமென்று துணிந்தமையு மமைய
மாணேயு நிவிர்த்திசா துடனவரை விலக்கி
 மறையவர்காள் பாலனைவார்த் திகனையுந்தா னடித்துக்
கோணேய மடித்திடல்பூ சுரர்க்கியல்போ வென்னக்
 கொதித்திவன்கொல் லோநமக்குக் குணமுரைக்க வல்லான். ()

தனனத் தனத்தத் தனத்தனன தானனு

உபயப் பிரட்டற் குதித்தமக வாயினு
 ருறுதுற் குணத்தைத் தெரித்தனர்க ளாகையா
லபமுற் றுமித்துட் டருக்கெவன மாமுனு
 ரதைவிட் டகற்றிற் சுயத்தகைகொள் வேமெனு
விபமொத் துடற்கட் கதித்தமத மேகொள்வா
 ரிதயத் துனிப்பற் கடித்துவெறி நீடியே
சுபமிக் குரைத்துத் தடுக்கவுநி லாதரோ
 துனிமெத் துறக்குத் தடித்திரென வோதியே. (க0கூ)

தனத்த தானதன தானுன தனனதன

நிவிர்த்தி சாதுவையு ஞானேசு வர்தமையு
 நிசித்த மாமொழிக ளாலேவை தமர்புரிய
வவித்தை வேதியர்க டாநாடு மதுபொழுதி
 லரக்கர் சேனையினு ளேமேவு மநுமனென
வவிர்ச்சி நீடுபுகழ் ஞானேசு வரர்மருவி
 யடித்த னேர்பலரு மேமாளும் வகைசெய்தெதிர்
குவிக்க நாடியுட னேசாது தடைசெய்திகல்
 குதர்க்கர் நீடுகலி தோய்நீர்மை தெரிகிலையோ. (கச0)

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன

அக்கிரம விக்கலியு கத்தினதன் மத்தகைய
 கத்துணர்த லுற்றுமுறு விப்பிரர்த மைச்சமர்செய்
துக்கிரமி குத்தொழித ரச்செயல்பொ ருத்தமல
 வுற்றகட முட்பொதிவி ளக்கினமை யிப்புவியின்
மக்கள்சில்வை கற்றெரித லற்றுறம றைத்தமையின்
 மட்டறுந லத்தகைகயெ னச்சொலியி றத்தலுறு
வக்கிரமொல் விப்பிரர்க ளைத்தமுயிர் பெற்றியல
 மைக்கிணைவி ழித்துணைசெ லுத்திடவு யிர்த்தனையோர். (ககக)

வேறு

பயமிகுத்தனர்நாற் றிசையினுமோடிப் பார்த்திபன்பான்முறையிட்டே
கயவராம்விடோபா வீன்றருள்சுதரைக் கணத்திலிங்நாட்டினுந் துரத்திச்
சயமலிவேல வெமைப்புரந்திலையேற் றணப்பநின்னாட்டினையென்ன
வியறம்மெய்க்காயங் காட்டினரிரங்க விறைமிகுசினம்படைத்தவனாய். (ககஉ)

படர்களைநோக்கி விரைவினிற்சித்தோ பண்டிதன்றனைச்சிறுவரையென்
னிடமழைக்குதிரென் றேவவோடினர்மன் னிட்டவாக்கினையுரைத்தழைப்ப
வடன்மிகுஞானேச் சுரர்சொல்வார்படர்கா ளமைந்தவெந்தாதையந்தணர்க
ளிடர்மிகப்புரிந்து புடைத்தலின்மூர்ச்சை யெய்தினரிற்புடைகிடந்தார். ()

என்னதுதமைய னாதியரவருக் கியலுபசரணைசெய்திருந்தா
ரன்னவர்பொருட்டும் யானடைந்திறைவற் களிக்குவன்விடையென்றாவைசேர்ந்
தின்னலற்றெம்மை யழைத்தகாரணமென் னெனவினவினாதிசயித்து
மன்னவனேட நீயிரீண்டுற்ற மறையவர்ப்புடைத்ததென்னோதாய். (ககச)

எனவினவிடஞா னேச்சுரர்நீதி யிறைவசந்தர்ப்பணமனையிற்
பனவராமெமையின் னவர்மறுத்திட்ட பண்புமெந்தாதையைவறிதே
சினமிகப்புடைத்த காலையெந்தமையன் சீலமாமறையுணர்வமைந்தீ
ரினசெயற்புரித னன்றலவென்ன விசைப்பவன்னவர்மிசைவிழுந்தே. (ககரு)

அடித்ததற்கேது வும்விசாரித்திட் டதன்பின்யாமாற்றுவெம்பிழைகள்
பிடித்தவைக்கேற்ற முறைபுரியென்னப் பேசமன்மறையவர்ப்பார்த்து
நொடித்திர்நும்முறையென் றிடவிவன்றாதை நூன்முறைதுறவறம்புகுந்து
படித்தலமிசைபற் பலர்மனைப்பாலும் பயிக்கமேற்றருந்தியபண்பால். (ககசு)

முன்னமேபிரட்ட னென்றுநீத்தனம்பின் முளைத்தனரிவர்களத்தகையா
னன்னலம்பொருந்தெம் முடனுணவண்ண நாந்தடுத்திட்டனமென்றார்
பின்னமின்ஞானே சுரர்சொல்வார்பிரமக் ஞானந்துபிராமணவென்னு
மன்னருண்மறைச்சொற் படிபிரமத்தின் மாட்சிதேர்ந்திடவெந்தைதுறந்தார்.

இத்தகையாலன் னவர்பிரட்டப்பண் பெவ்வகையாயினரென்ன
வொத்தசண்டாளர் வீட்டினும்புசித்த வுளவினானீக்கினமெனக்கேட்
டுத்தமப்பரமாம் சன்பிராமணரோ டுண்ணுதற்கருகனேயென்ன
மெய்த்தகைவேதம் பகருமேற்பிரட்டம் விரவுவதெவ்வகையன்றி. (ககஅ)

முனிவர்பற்பலர்முன் கானிடைதவங்கண் முயன்றுஞ்சந்நியாசிகளாயு, நனிசமுசாரத் தியைந்தனரன்றோ நற்றவந்தோய்கலைக்கோட்டார், புனிதமன் னவன்கன் னியர்களைவதுவை புரிந்ததென்னேகுறுமுனிவன், கனிவுடன் மணம்பின் செய்துகொண்டதுபொய்க் கதைகொலெந்தைக்கொருவிதியோ.

பிரமஞானிகளா யினர்க்கும்பொய்ச்சாதி பேதமோதியதெநூலந்நூல்
சரதமேற்குணுங்கர் மனைதனில்வளர்ந்தா டனைமணங்கொள்வசிட்டனுநீள்
பரவையின்மச்ச கந்திபெற்றிட்ட பாலனும்வியாசனுங்கிராதர்
தரமுறும்வான்மீ கனும்வலைஞனையே சற்குருவாக்கொணாதனும். (கஉ0)

விதிதவிர்பிரட்டத் துவமடைந்திருக்க வேண்டுமென்றேவஃதொழிந்து
முதிர்மறைபிரம ஞானியந்தணு மொழிந்துள தன்மையாலதனை
மதியுடனெப்பார் தம்மனப்போங்கா வகுப்பரேபிரட்டர்களெந்தை
கதியருண்ஞானம் விரும்பினர்காசி கலந்துசற்குரவனைநாடி. (கஉக)

பிராமணோத்தமரா விளங்குசீபாதர் பெய்மலர்க்கழல்சரணடைந்து
விராவுஞானோப தேசம்பெற்றமல மிகுபிரமானந்தநிறைந்து
சுராசிரியனோ ரவர்மொழிமறுது தோய்ந்தனரில்லறத்தென்னிற்
பாரவவர்பிரட்டத் துவமருவியதெப் படிபுயாறிவுளீர்பகர்மின். (கஉஉ)

கருணையாதியசற் குணம்விடுத்துடற்கட் கன்றபிமானிகடாமோ
வருணனேர்பிரமஞானிகடாமோ வமைதருபிரட்டர்களன்றி
மருவியகுணமே சிரேட்டமெய்க்குலந்தான் வழுவெனவசிட்டர்வியாச
ரிருமைசானடைகாட் டியதினியுங்கட் கேற்றதீர்ப்புச்செய்மினென்றார்.(கஉஙு)

மன்னனுள்வியந்து மிக்கஞானேசு வரர்தமைமார்புறத்தழுவி
நன்னலமைந்த நின்றிருவாயி னவின்றசொன்மறைகொண்மந்திரநீ
பன்னலாயினசொன் மறுப்பவரிந்தப் பாரன்றியாண்டுமின்றென்று
தன்னருகமைந்த வமைச்சர்பாற்சிறுவன் சாற்றுசொல்வினவினிர்கொல்லோ.

இக்கணஞ்சிவிகை மூன்றுகொண்டேகி யிவர்சகோதரர்க்கொணர்கென்னப்
புக்கனர்கொணர்கா லவர்களைநோக்கிப் புரவலன்பொருவில்விம்மிதனுய்த்
தக்கவாறுபசா ரம்புரிந்திவர்தந் தரிசனம்பெற்றபாக்கியத்தான்
மிக்கதன்னியனு கினனிவர்நாட்டின் மேவியதென்றவமென்றே. (கஉரு)

மன்னவன்பலவாப் புகழ்தரக்கண்ட மறையவர்திடுக்கமெய்துபுதஞ்
சென்னிகோட்டினர்பின் றிடவிறையவர்பாற் செப்புவனந்தணர்காணீர்
தன்னமுங்குற்ற மின்றியவிவரைத் தக்கநும்பந்தியிற்சேர்த்திட்
டென்னகங்களிப்பச் செய்திர்நும்மிதயத் திச்சையிலீவன்பொன்னென்றான்.

தோல்வருணத்தை மெய்யெனக்கொண்டு சுழலுநருமர்கள்போற்செங்
கோல்வயங்கியகை மன்பொருள்கொண்டிற் குறுகியாய்ந்தனர்பினுளிறைவன்
பால்வயவேந்த வெங்களாசிரியர் பைடணபுரத்துளாரவர்கை
சால்வதாமுடங்கல் பெற்றுறிலின்னோர் தமைக்கொள்வோம்பாமெனச்சாற்ற.

பார்த்திபன்பின்செய் குவனென்றுசித்தோ பண்டிதன்றனையழைத்தொப்பில்
சீர்த்திசால்விடோபா வுருக்குமாபாயைத் தெரிசனஞ்செய்திடவேட்டே
*னேர்த்தியென்றிருதண் டிகையளித்திடக்கா னேர்ந்துமன்னுவலோதிடக்கேட்
டார்த்தியார்கான்விட் டகல்கிலேனீயி ரணைதிர்நாட்டினுக்கெனமறுத்தே. ()

பிரமநிட்டையில்வீற் றிருந்திடச்சீர்த்தி பிறங்குஞானேசுரர்பாட்டற்
புரமுறவனுப்பித் தந்தைபால்வாதம் புரிந்துதோற்றிடப்புரிந்தொப்பில்
வரமலிமூவ ருஞ்சொருபத்தை வயங்கிடக்காட்டலுந்துதித்துப்
பரவசமடைந்தா ராயருண்முத்தா பாயியைத்தோத்திரித்துரைப்பார். (கஉசு)

*நேர்த்தல் - காணச்செய்தல்

அம்மைநீயாவள் வாணியோபொன்னோ வம்பிகையேகொல்யாங்தேரச்
செம்மைசேர்நினது திருவுருவத்தைத் தெரித்தெமையாட்கொளென்றிரப்ப
மெய்ம்மைசால்வடிவங் காட்டினளீன்றோர் மிகக்களிப்பெய்தினராகி
யும்மையாமுதாத் தமைத்தனம்பெறுமா றுயர்தவமுஞற்றினமென்ன. ()

பலபடத்துதிக்குங் காலிருவரையும் பார்த்துமையியம்புவள்பெரியீ
ரிலகும்யாநால்வ ரும்புவியிடத்தி லியல்கொடுந்தீமைமுற்றொதுக்கி
நிலவியசகுண நிர்க்குணத்தியான நிலைபெறப்புரிதர வயோத்தித்
தலமருவியமன் மைந்தர்போற்புவியிற் சனித்திடவெண்ணுபுபிறந்தோம். ()

ஆதலினீரெஞ் சொன்மறுக்கலிர்நா டடைதிர்பிர்மாநுபூதிச்சீர்
மேதகையடையப் பெறுமவர்காடு வீடெனநோக்கல்கூடாதுட்
பேதநோக்குடையா ரத்தகுநிட்டை பெறலொருபோதினுமுடியா
தோதலாம்வண்ண மிருத்திரென்றிசைப்ப வுமைதனையிருவரும்வணங்கி. ()

தம்மதுத்தரவொத் திசைகுவமென்னத் தற்பரையெம்மதுண்மையினை
யிம்மகிதலத்தோர்க் குணர்த்திடாதியாங்க ளியற்றிடுமாடல்கள்கண்டே
சம்மதமுடன்வாழ்ந் திடுதிரெம்பின்னர் சார்திர்நாட்டினுக்கெனச்சாற்றிச்
செம்மல்செல்வியெனும் வடிவுகொண்டவர்தஞ் சிந்தையில்வாஞ்சையுண்டாக்கி.

பயினகரடைந்து பாலர்போலாடல் பலபுரிந்திருந்தனர்விடோபா
வொயில்குலாஞ்சித்தோபண்டிதற்போற்றியுவந்துவாழ்ந்தனருருக்குமைப்பேர்
மயில்கணவனைப்புத் திரர்தமான்மியத்தை மதித்தளவறமகிழ்ந்தவளா
யொயில்குலாவிபசீ பாதராசியின்சீ ருன்னினள்புளகமிக்குற்றாள். (கஙச)

பிற்றைநாண்ஞானேச் சுரர்விடோபாவைப் பிறங்குமன்னவைக்கழைத்தேகப்
பொற்றைநேர்புயமன் னவரடிபோற்றிப் பொருந்துபசாரங்களாற்றி
யிற்றையென்றனையாட் கொள்ளுதிரென்ன விறைநிலையுணர்ந்தருள்புரிந்தார்
கற்றையங்கதிரா ழிக்கரத்தோலை கவினுமந்திரிவயினளித்து. (கஙரு)

வளமலிபைட ணத்திருநகர்க்கண் மருவிபாண்டமைந்ததேசிகர்பாற்
பளகிலரிவரென் றோலைபெற்றிங்ஙன் படர்தியென்றிடவவணேகி
யளவளாயமைச்ச ஞோலைநல்கிடக்கொண் டாரியன்முன்னமந்தணரா
லுளவறிந்துறுது வேசத்தாற்றன்ன துளமிசைகிலன்மறுத்தோதி. (கஙசூ)

பிரட்டனென்றேசா தித்திடச்சாந்தம் பெற்றியனிவிர்த்திசாதுமறைத்
திரட்டிறமறியு மேலவரிங்ஙன் செப்பிடாராரணந்தன்னில்
விரத்தியிலுலகைத் துறந்துமெஞ்ஞான மேவினோர்ப்பிரட்டர்களென்ன
வுரைத்திலதென்ன வுண்டெனஞானேச் சுரருடனவ்வுழியுற்றே. (கஙஎ)

மந்தமேதியின்க டாவினைக்காட்டி மகிடமீங்கிதைநிகராகச்
சந்தமாமறைதேர்ந் துள்ளிரேலிங்ஙன் சாற்றிடீரெனமறையவர்க
ளந்தவாறுணரக் காட்டுதியென்ன வறிமினின்னதன்றிறமென்று
புந்தமோடதன்மேற் கையமைத்துண்மைப் படுதவத்தினர்பிராமணரோ. ()

சாதியாற்கன்மத் தாற்பிராமணரோ தக்கமெய்ப்பிரமஞானத்தோ
வோதிடாயென்ன வுடன்சதுர்மறையு முரைத்துச்சன்மத்திற்சூத்திரன்பின்
போதியகன்மத் திற்றுவிசன்மெய் பொருந்துவேதத்தில்விப்பிரனு
மீதியல்பிரம ஞானத்தினுலே விளங்கிடும்பிராமணனுவன். (கஙகூ)

ஆதிசான்முனிவ ராயினர்பிறப்பா லநுசிதமடைந்தவரேபின்
னேதியான்மேன்மை படைத்தனரென்ன வொன்றொழியாதுரைத்திடலாற்
சாதியார்மானத் தாற்றளேயுண்டு சரதமொன்றறிகிலாதுழலும்
வேதியர்பலரும் வியந்தனரொப்பார் வெருண்டுநாற்றிசையினராஞர். (கசO)

தேசிகர்வெருண்டு பணிந்துவன்மேதி செப்புசொன்மெய்யெனத்தெருண்டே
யாசிசொற்றெனேயாட் கொள்ளுதிரென்ன வறைந்துதன்மனேக்கழைத்தேதகி
மாசில்வேதாந்த முரைத்தனரமைந்தார் வகையிதையுணர்ந்தபார்ப்பார்நம்
மாசிரியனுமற் றவர்க்கொடுபிரட்ட ஞகினனென்றுவைதலேந்தார். (கசக)

அன்னநாளாசா ரியன்பிதுர்திவச மணேதலினந்தணர்க் கூவ
மன்னருமறையோர் பலர்களும்பிரட்டன் மந்திரவித்தையினுலே
முன்னமைபெருமைக் கடாவினுட்புகுந்து மொழிசுலோகங்கொடுமயங்கி
யன்னவருடன்சேர்ந் தனேகுலாசார மகன்றெமை யுங்கெடவழைத்தாய். ()

வருகிலோம்யாமென் றியம்பவாசிரியன் மயங்கினன்வாட்டமிக்கமையப்
பெருமைசானிவிர்த்தி சாதுரீர்துக்கம் பெற்றதேதுக்கெனச்சொலக்கேட்
டிருமைசான்ஞான மிலர்சண்டாளரென விருக்குரைத்திடுவதாலவரை
யொருவுமினென்ன வாரியனுட்டா ரோடநாமோடல்வேண்டுமென்றுன். ()

ஓதுசொல்லுண்மை தேர்ந்தனனுலகோ டொத்தும்வாழ்கிலன்றுறவியெனப்
போதுகில்லேன்மத் தியிலமைந்திங்ஙன் புலம்புகின்றேனென நிவிர்த்தி
சாதுமெய்ப்பிரம ஞானிமேலென்னச் சார்ந்தமேதியைக்கொடோதுவித்துங்
கோதுதோயவிச்சை தீர்ந்திடார்க்கினியென் குயிற்றுவதென்னவாசிரியன்.

அராவுறழவர்க்கொண் டக்கரையில்லே யாயினும்பிதுர்களுக்கிடுமூண்
பிராமணரல்லார்க் கிடுபவனிரயம் பெறுவனென்றிடுகென்மகாண்ட
நிராகரித்திடவஞ் சினனெனக்கேட்டு நிகரின்ஞானேச்சுரர்புகல்வார்
தராதலத்தொருவ ருண்ணமற்றொருவர் தாம்பசியறுரேனுமுறைபோல். ()

பிதுருக்கிடுமூ ணவர்கொளலன்றிப் பிராமணர்க்கிடத்தகாதவரை
யிதுததியினிலீண் டழைக்கின்றேன்பூசை யியற்றுமென்றனரழைத்திடலுங்
கதுமெனவெய்தி நுகர்ந்தகல்பான்மை கண்டபார்ப்பாரகங்கலங்கிச்
சதுரீங்கிவரோ டிகன்றிடிற்றூழ்ச்சி தாங்குவம்யாமெனச்சூழ்ந்தே. (கசசு)

தேசிகர்மனேக்க ணடைந்துதாழ்ந்தொப்பி றெய்வமாகியவுமையிகழ்ந்து
பேசியவெமது பிழைபொறுத்தருளாற் பெரிதுமாட்கோடிரென்றியம்ப
மாசிறேசிகரா னந்தமிக்கவரை வணங்கியெம்மெய்த்தவத்திறத்தாற்
றேசியனுமது தெரிசனம்பெற்றுச் சிறந்தனமென்று வாழ்த்தினரே. (கசஎ)

அங்கியன்மார்தர் பலருஞ்சின்னுளாண் டமைதரவவாவியர்ச்சித்துப்
பொங்கியவின்ப ராகவன்னவர்பாற் பொருந்துமெய்யன்பினுல் விடைபெற்
றுங்கியலளகா வதியணேதரவாண் டுறுமறையோருடன்கூடிப்
பொங்கியகளிப்பிற் றுதித்தளவளாவிப் புசித்துமச்சிற்சினுள்வதிந்து. (கசஅ)

திருமலிமகால யப்பெயரூரிற் சேர்ந்துஞானேச்சுரர்கீதைக்
கிருமைசால்வியாக்கி யானஞ்செய்தருள வியன்றசோபானர்யாவர்களுந்
தெருள்கொளப்போதித்திருக்குமத்ததியிற்செம்மைதோய்கைனியர்வேந்தன்
வெருளறுசுவானு பவத்தைநீர்மேவ வேண்டுமென்றிடவவற்பணிந்து. (கசகூ)

அருள்புரிந்திடவேண் டினர்குருவாக்கொண் டக்கணத்தமைஞானேசுரர்தா
மருளறுசுவா நு பவத்தமிர்தா நு பவமெனுல்வகுத்தொர்கோயிலயற்
கருமைமேதியுயிர் துறந்துறச்சமாதி கண்டனரவண்மைசோபாப்பேர்
மருவியிந்நாளுந் திகழ்ந்ததுபின்னர் மாணளகாபுரியடைந்தார். (கரு0)

ஆண்டுளாரிவரைக் கண்டுபோற்றினர்பா ராட்டல்கண்டுளம்பொருனுகிக்
கோண்டுதைவிசோபா மறையவன்றுறவு கொண்டவன்மக்களென்றிவர்பான்
மூண்டுறும்பகைமிக் கமைந்துநால்வர்கடம் முகத்தைநோக்கலனிந்தித்திருந்தா
னீண்டுநாணிவிர்த்தி தேவர்முத்தாபா யிடஞ்சுவையப்பநல்கென்ன. (கருக)

உவகைமிக்குடன்மா முதலமைத்தனளோ ரோடுகொள்வான்மட்கோவன்ற
னவமனைக்கணேகா லெதிரில்விசோப னண்ணிநாடான்புறத்தணைய
வுவமைதீர்முத்தா பாயிநீயெனைக்கண் டொதுங்கியதேதெனவன்னே
னெவணணைந்தனையென் றிடக்கலங்கொள்வா னேகுவன்குயவனிற்கென்றாள்

நானுனைச்சந்தித் திடுதிறந்தன்னு னைநல்வினைபுரிந்தல்லால்
மேனுவல்கரும முனுற்றலனென்ன விளம்பியங்கைகொடெற்றினன்பின்
னுனுழைந்தனன்மட்கோவன்பாலிவட்கொன்றளித்திடேலெனச்சொல்லியகன்றான்
மானுறழ்கண்ணு ளமுதனண்மனைப்பான் மருவஞானேச்சுரர்வினவி. (கருஉ)

மதியறுவிசோபற் கித்தகைபுரிதல் வழக்கநீயென்னதுமுதுகை
வதிதருகலமாக் கொண்டனையப்பம் வயக்கெனவுதரத்தீப்புறத்தின்
முதிர்தரவெழுப்ப வட்டனருண்ணு முறையெலாஞ்சாளரவழியி
லதிசயமிகநா டுபுவிசோபன்ற னகத்தினுளச்சமெய்தினனாய். (கருச)

இத்தகைமகிமை யமைந்துளமேலோ ரியல்பறியாதுநாம்வீணே
பித்தரினிந்தை புரிந்தனமிந்தப் பிழைக்கெதுதண்டமென்றுன்னிச்
சித்தாமிவரைச் சரணடைவமெனச் சேர்ந்திடுகான்ஞானேசுரர்தாந்
துய்த்தநெட்டிலையைப் புறத்தெறிதரமெய்ச் சுகம்பெறுநாளவற்குறலால். ()

அன்னதைக்கரத்தேந் தினனொருபிடிகொண் டயிலஞானேசுரர்கண்டே
யென்னகாண்பருந்தி லயின்றுகர்த்தபத்தை யிணைந்தனையென்னவிசோபன்
றன்னகத்தஞ்சி னன்றிருவடிகள் சரணமென்றனன்பணிந்தேத்தி
யென்னறிபாமை பொறுத்தருடிரென வியனிலைதெரிந்தருள்புரிந்தார். (கருகூ)

இன்னணமியணு ளிந்திரனமிச மிசைந்தசார்ங்கதேவநன்னும
மன்னருட்சித்த ஞெருவன்யோகத்தின் வலியிலாயிரத்துநானூறு
கொன்னமைவருடம் வாழ்ந்துளானவ்வெண் கொண்டமாணக்கர்கள்வாய்ந்தா
னன்னலக்கோதா விரியின்மூழ்கினனுய் ந்ண்ணுதீரத்தினிலமர்ந்தே (கஅள)

நம்மையொப்பவர்யா ரெனநனியகந்தை நண்ணிடுமேல்வைவானகத்திற்
சும்மைமிக்கமையு மோரசரீரி துலங்குநின்னுண்மையையொழிக்குஞ்
செம்மையார்பிரம ஞானிநீடளகைத் திருநகர்ப்பாலுற்று னவண்போய்
மெய்ம்மையாரருள்பெற்றுய்குதியென்னவிளம்பல்கேட்டுள்வியந்தானுய். ()

அத்தகையருக்கோர் நிருபமுன்னனுப்பி யதன்பின்பாமுறன்முறையென்னச்
சித்தமீதுன்னி ஞன்கடிதத்திற் றேவரீரெனவெழுதவஞென்
மெத்தவுஞ்சிறியன் றேசிகனுக மேவுவாற்காசிசாற்றிடலு
மொத்ததன்றெனவொன் றெழுதலன்வறிதா யுறுங்கடிதத்தினைச்சுருட்டி ()

சீடனுமொருவன் றனையழைத்திதனைச் சிறந்தஞானேச்சுரர்தமது
மாடளித்திடென வேவவன்னவன்விண் வழியவர்பாலணைந்தளிப்பப்
பீடமைசார்ங்க தேவனே விடலாற் பெயர்ந்தனையோவென்றுர்விரித்து
நாடவொன்றிலதால் வருடமாயிரமே ஹற்சதமும் வறிதொழித்தான். (கசூ0)

என்பதையறிய வுணர்த்தியதொத்த திங்கிருபச்செயலென்றே
கொன்படவயதித் தனையொழிந்துமினங் குருவினுன்ஞானமோர்ந்தனையின்
றின்பமார்சுத்த சைதன்யமொன்றே யெங்குமேவியதுமூப்பிளமை
யென்பதற்றியன்மா யாசரீரத்தி லியைந்துள தோர்ந்துய்வாயினியே. (கசூக)

எனவரைந்தனர்நல் கிடக்கிடைக்கப்பெற் றியல்பொருள்யாவுநன்குணர்ந்தே
மனமயர்ந்தந்தோ நம்மதுவாணுள் வறிதொழிந்தனஞானேச்சுரரைக்
கனமுறவிதுகாற் றெரிசிப்பேமென்னக் கருதியோர் புலிமிசையிவர்ந்து
பனகமொன்றினைக்கொண் டணைதருபெருஞ்சீர் பார்த்தவர்யாவரும்வியந்தார்.

அன்னகான்ஞானேச் சுரரவன்முன்ன மமைதருசுவர்தனைச்செலுத்தி
மன்னநேர்கண்ட சார்ங்கதேவன்றன் மனம்வெருண்டனன்பணிந்தேத்தி
மின்னருண்ஞான மளித்தெனையாள வேண்டுமென்றிரப்பவுளிரங்கித்
துன்னலாமோரா னீழலிலமைந்து! தூயமெஞ்ஞானநன்கருளி. (கசூ௩)

இம்மரீழ லெய்தினர்வீட்டை யெய்துவரென்றுரைத்தவனைத்
தம்மனைக்கேக விடையளித்திட்டார் சார்ங்காண்டெய்திடுமேல்வை
செம்மலர்த்திருவை நேர்முத்தாபாயி சேலையற்றறல்படிந்துறலாற்
கொம்மெனமறையக் கண்டருளம்மை கோதின்ஞானேச்சுரர்தம்பால். (கசூச)

அருளநுக்கிரகம் பெற்றுநிற்குயர்மெய் யறிவமைந்திலதுகொலென்ன
மருவியசார்ங்க தேவரன்னவள்செம் மலரடிபோற்றியென்னம்மே
சருவவாருயிர்க்குந் தாயகமாநின் றன்மைபானறிகிலனென்னப்
பொருவருஞானேச் சுரர்சிரத்திற்கை பொருத்தியின்பளித்திடப்போந்தான்.

இன்னவாறிவாமல் வருமிகத்துயிர்க ளின்புறவியற்றுபோாட
லன்னவைமுற்று முடிப்பவர்யாரோ வறிகிலனீற்றின்ஞானதேவர்
கொன்னமைபண்ட ரியினில்விட்டலன்முற் குறுகிமெஞ்ஞானசமாதி
நன்னலமுறநல் குதியெனவிரப்ப நன்றென்றுசுப தினமொன்றில். (கசுசு)

திருந்துமெய்த்தொண்டர்க் கறிக்கைசெய்தொப்பி றிருவிழாநடத்திவிட்டலன்றான்
பொருந்துமிந்திராய ணிக்கரையின்பாற் புணரளிந்திப்பெயரூரில்
வருஞ்சித்தேசுரர்கோ யிற்கருகாக வயங்கசாறுத்தருவின்கீழ்
விருந்துறழ்தாநின் றுரைப்பன்கார்த்திகையில் விரவுகிட்டிணபக்கந்தன்னில்.

எனக்குரித்தாகு மோணநாளதனி லிருதியலாண்டுகடோறு
மனக்களிப்புடன்யா னமைவன்றீர்த்தோற்ச வம்பொலிதருமெனச்சாற்றிக்
கனத்தசீரியநா மத்துதியொலியுங் கலந்திடஞானதேவர்க்கு
வனப்புறுசமாதி தந்தங்ஙன்சதுர்நாள் வைகிப்பண்டரிபுரஞ்சேர்ந்தான். ()

சிலதினங்கழிந்துநாமர்ஞானதேவர் தெரிசனம்பெற்றிடவிரும்பி
யலமாலுணர்ந்தன் னவர்முனோர்விமானத் தணைந்துவிட்டலனடிவணங்கி
நலமுறவாறு மதியவரோடு நண்ணிப்பின்மறைந்தனரதன்பி
னிலவியநிவிர்த்தி தேவர்க்குத்திரியம் பகத்தினுநிகழ்சோபானர்க்கு. (கசுக)

வளமலிசம்வற் சரநகரிடத்து மாண்கொள்பாண்டரெங்கவிட்டலன்றான்
கொளவருசமாதி யீந்தனன்சத்தி குளிர்கலையாமுத்தாபாயுந்
தளர்வருவசிட்டா மிசம்பெறுவிடோபாத் தானுமுருக்குமாபாயுந்
கிளர்தருதத்தம் பதம்புகுந்தனர்தங் கீர்த்தியைமண்மிசையமைத்தே.(கஎ0)

வேறு

வசிட்டமுனிவன் றன்னுளத்தின் வாஞ்சைப்படிமும் மூர்த்திகளாம்
வடிவங்காட்டி யவனுளத்தின் மதித்தபடியே மகவாகிக்
கசித்தவருளான் மறையோர்கள் கண்டுதேறும் படிமேதிக்
கடாவால்வேத மோதுவித்துங் கலங்காரியன்றோர் தாப்பிதுரர்ப்
புசிக்கவழைத்து மகந்தைகொடு புலிமேல்வந்தான் றேறவவண்
பொருந்துஞ்சுவரை நடத்திநிந்தை புரிவான்றனையுங் கணித்தாண்டா
யிசிக்கும்பவத்துட் பட்டுமுறை யிடுமென்றுதிகேட் டிலைகொல்லோ
விராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (கஎக)

ஞானேசுரகதிமுற்றிற்று

ஆ கவி கூஉஎ

---

## ஆறுவது

# துக்காராமசுவாமிகதி

பாமாத்திர லுய்ந்திடத்தோன்றுமெய்ப் பகவனங்கிசம்வாய்ந்த
சேமமிக்கஞா னேச்சுரர்சரித்திரஞ் சிறிதுரைத்தேனிப்பா
ஞமதேவர்மெய்த் திருவவதாரமா ஞாமின்புறத்தோற்று
மாமகத்துவர் தோய்துக்காராமர்தம் மாட்சிசற்றிசைப்பேனே. (க)

அராமமும்பழ னமும்பொலிதேகூவென் றணிப்பெயர்பெறுமூர்தோய்
மராடர்தந்தவச் சுதர்விசுவம்பர மாண்பெயர்புனைந்துள்ளா
ரிராவுநண்பக லும்பகவன்பத மேத்துவர்சாதுக்கட்
பராவுபூசைசெய் காதலிற்பரவையாம் பண்பமைந்துளமேலோர். (உ)

இரவணைந்திடுந் தொறுமியம்பொலியவின் னிசைகொள்கீர்த்தனம்பாடிப்
பரவிவாழ்பவர் நிகழுநாளையிலவர் பாலருட்டாய்சொல்வாள்
விரவுநின்குல முன்னவர்யாவரும் விட்டலன்றனைப்போற்ற
வரநிலாவுபண் டரிக்குவற்சரந்தொறு மருவுவரவர்போன்றே. (ங)

விரதமன்னது கொள்ளெனப்பேருண் மிக்கதாய்சொலக்கேட்டே
பரவியேத்தினர் சாதுக்களுடனன்பிற் பசனைசெய்தனரேகி
விரவுசந்திர பாகையிற்படிந்தருள் விட்டலன்றனைப்போற்றித்
தரமிகுத்தபண் டரிவலம்புரிந்தருட் டளியுட்போய்ப்புள்வேந்தை. (ச)

ஆஞ்சனேயனைப் பணிந்துபத்தர்களுவ லரியகீர்த்தனங்கேட்டுள்
வாஞ்சைமிக்குட்போந் தனருயிர்நுகரின்ப வாரிநேர்கண்ணன்றன்
பூஞ்சரண்டொழு தனருபசாரங்கள் பொலியப்பூசனையாற்றிப்
பாஞ்சசன்னிய தாற்றமுவினரின்பம் படிந்துநாளுந்துற்றூர். (ரு)

அன்பர்கீர்த்தனம் வினவிமிக்கானந்த மடைந்துபாண்டுரங்கன்றன்
கோன்பதத்துணை பணிந்தகலாவிடை கொண்டனரகத்தெய்தி
யின்பமிக்கதாய் பதந்தொழுதாங்கமை யியல்பலவாப்பன்னி
மின்பயின்றக ணின்பநீர்பெருக்கிமுன் விரவிநின்றிடப்பார்த்தே. (சு)

சடத்திநுக்கன்றி யாவிக்குந்துணையெனத் தழைத்தபேருளன்னை
திடத்தபத்தியின் மைந்தன்முன்னேரினுஞ் சிறந்தமைதகைநோக்கிப்
படத்தமைந்தியல் பொன்னுறழ்மனத்தினிற் பொலிந்தவின்பினளானு
ளிடத்தின்மைந்தனுந் தவமுளார்பண்டரி யெய்தும்வேட்கையின்மிக்கார். (எ)

முன்பின்மேவினர் சந்திரபாகையின் மூழ்கிவிட்டலற்போற்றி
யின்பின்மூழ்கினர் தசமியிலோர்பொழு துண்டேகாதசியல்லி
லன்பில்விட்டலன் புகழ்விளைக்களித்துப்பி னமைதுவாதசிதன்னிற்
கொன்பிறங்குபா ரணைசெய்துகண்ணன்முற் குறுகியன்பினிற்புல்லி. (அ)

விடைபெறும்பொழு தினிற்பிறிவாற்றலர் விழிகணீருகுத்தே
ரிடையறத்தளர் மீனமொத்தேனென விரங்கவிட்டலனடித்
தடையில்பேரரு ளான்முற்றேன்றுபுநினுட் டழைத்தபத்திமைநன்றென்
றடைவொடோதுவ னஞ்சலையாண்டுநீயமர்ந்தெனையினைத்தாலும். (கூ)

அங்குடன்றெரி சனந்தருவேனென வகங்களித்தனர்சொல்வார்
பொங்குகாமர்சா னின்சகுணத்தருட்பூவைநேர்வடிவத்தை
யெங்குங்காண்டர வவாவினேனெனநகைத் தினிதுதழீஇபுச்சி
தங்குமாறுகை சேர்த்திரன்மந்திரந் தகச்செவியிடைசாற்றி. (க0)

அன்பநீகரு தியவிடைசேவைதந் தருள்வனென்றிடவோத
வின்பமோடுதந் நகரடைந்தெண்மதி யெழில்கொள்பண்டரியெய்தி
யொன்பதாமதி தன்னின்முன்னுளென வுறுநலட்டமிதன்னிற்
பொன்பயின்றமார் பினன்விசுவம்பரர் புரிதுயிற்கனவின்கண். (கக)

தோன்றியெண்மதி நீயெனதூரின்கட் டுதைந்துபோற்றியபண்பா
னுன்றிகழ்ந்தநின் னகரணைந்தேனென நவின்றயலமைகூதக்
கான்றிகழ்ந்தவோ ரிடைமறைதரவுடன் கண்விழித்துறவோர்பால்
வேன்றிகழ்ந்தக னுத்திறஞ்சாற்றினர் விரைந்துமாம்பொழின்மேவி. (கஉ)

நாடிக்கண்டில ரவ்விடை*யபீர்துழாய் நறுமணம்பொலிபண்பாற்
கூடிச்சென்றவர் கனுநிசமேயென்றுட் குறித்தனர்வியந்திட்டார்
நீடிச்சைப்பொலி வார்விசுவம்பரர் நிகழ்த்துவரகழ்ந்திந்நன்
பேடிக்கோர்துணை வனைத்தெரிவேனெனப் பெரிதுதோண்டிடப்போங்கால்.()

அவருளன்புகண் டடன்ககனத்தில்வி சுவம்பரரேபத்தி
நவமிகுந்தநும் பத்தியால்விட்டல னண்ணினனிவண்மெய்மை
கவலுறுதகழ்ந் தனிர்கொள்வீர்நும்மியற் கால்வழிதனிலொப்பி
றவவுருப்பெறுஞ் சேயுதித்திடுமென்றுஞ் சாற்றிடவியந்தாராய். (கச)

அன்னவாறகழ்ந் திடத்துழாயபீர்ப்பொடி யமையருக்குமணிப்பேர்
நன்னலம்பொலி தேவியொடமர்திற நாடியார்வத்தோராய்க்
கொன்னமைந்தவிந் திராயணிமாநதிக் குளிர்கரையதன்மாடே
பன்னருஞ்சிறப் புடன்பதிட்டித்தனர் பரிந்துபோற்றினர்வாழ்கால். (கரு)

ஒருதினத்திர வினில்விசுவம்பர ருடையநாயகன்முன்னின்
திருகணின்பநீர் பொழியநெஞ்சுருகவா னியலமுதேபோலும்
பெருகுமின்சுவைத் துத்தியமோதினர் பிரமனுதியர்காணு
வருளொளிப்பிழம் பேதிரணத்திணை யாச்சொலப்போதாதேன். (கசூ)

முன்னணைந்தநின் கருணையின்பெருக்கையான் மொழிவதோவென்றோதி
மன்னகத்துணர் வொழிந்துமெய்ப்பரவச மருவினருறுகாலை
பொன்னமைந்தமார் பினன்விழிமுன்னுறப் போந்தன்பநின்னிச்சை
யென்னவுந்தரு வேனெனவணங்கிநி னிணையிலன்பென்னெஞ்சில். (கஎ)

* அபீர் - வாசனைப்பொடி

வரம்பிலாதெழு கடலெனப்பெருகவென் வழியமைந்தவர்யாருந்
தாம்பிறங்குநின் னன்பராவிளங்கவுந் தயாநிதிநீயிங்ஙன்
வரங்கடந்தென்றும் விளங்கவும்வேண்டினேன் வழங்கெனத்தந்தேதகந்
தாம்பொலிந்திடு மின்னெனமறைந்தனன் றணந்துபின்சிலகாலம். (கஅ)

வைகுந்தத்தினின் றரிதன்றாதர்களோர்வி மானங்கொண்டவர்பாற்போந்
துய்கும்பற்பொலி நாரணனுலகிடை யுறவழைத்திடுகாலை
வைகுந்தொண்டர்விட் டலற்பணிந்தென்னிரு மைந்தரைமனைதன்னைப்
பொய்குன்றுப்பெரு மாயையிற்படாவணம் புரப்பதுன்பொறையென்றே. ()

முயங்குமெய்கழித் தேகிடவம்மாபாய் முகுந்தனோடரியென்பார்
தியங்கியேகிரி யைகண்முடித்தரிபதஞ் சிந்தைகொண்டுறுநாளில்
வயங்குமோரிராக் கனவினன்னவர்முன்மால் வந்துநம்முளங்கொண்ட
வியங்குலாவிய காதலென்னெனநின்றாள் விரவுதலென்றேத. (உ0)

மிகமகிழ்ந்தவர்த் தழுவினனேகலும் வியன்கொள்கீர்த்தனஞ்செய்தே
யகமுவந்துவாழ்ந் தவர்தமுளுசாவின ரன்னைபாலறைகின்றார்
தகமனைக்கணும் பொருளுனக்கிருக்கயாந் தாதிபன்பால்வேலை
திகழ்தரக்கொடு தியம்பெறமதித்தனந் திருத்தியின்விடையீவாய். (உக)

எனவுரைத்தடி தொழுமறுத்தனளவ ரிசைதராப்பண்போர்ந்து
மனதிசைந்தவர்க் கருள்விடைநல்கினண் மற்றவரிருவோருங்
கனமிகும்படைத் தலைவராயயனகர் கலந்துதாயினைக்கூவ
வனகபாண்டுரங் கன்றளிக்கேகின ளழுதிசைத்திடுகின்றாள். (உஉ)

தனையராலுனைப் பிறிந்திடனேர்ந்ததுன் றரிசனம்பெறலென்றென்
றினைவினோடுந்தன் மருகியரொடுஞ்சுத ரிலகயனகர்மேவி
நினைவெலாமரி பதத்தில்வைத்தமைந்தன ணிகழுநாட்கனவொன்றிற்
சினைமுகிற்புரை மேனியனம்மாபாய் தெரிசனம்பெறத்தோன்றி. (உந)

உந்தமோர்பொருட் டாலன்றோவீண்டியா னுற்றனன்சுதர்மேற்கொள்
பந்தத்தாலெனை விட்டுநீங்கினையகப் பற்றைமுற்றொழித்துந்தஞ்
சொந்தத்தேகுவுக் கெய்துதியெனவுடன் றுணுக்கெனத்துயினீங்கி
மைந்தர்பாற்சொல நகைத்தனர்கனவதும் வாய்மையாமோவென்றார். (உச)

இன்னவாதின நான்கொழிந்திட்டபி னியன்றதாய்பாலன்னோர்
றென்னலாரிராக் கனவிலென்விட்டல னிகழ்த்தினனுனக்கென்று
பன்னரும்பரி யாசஞ்செய்திடவவர்ப் பார்த்தம்மாபாயந்தோ
பொன்னமைந்தமார் பினன்சொலையாசியம் புரியலிர்பிழையாமால். (உரு)

எனப்பரிந்துசாற் றினரமைகாலையன் றிரவில்விட்டலப்பெம்மான்
சினத்தொடம்மாபாய் கனவின்வந்தியான்முனஞ் செப்பியுஞ்சுதர்மீதின்
மனத்தமைந்தகா தலிற்கொண்டிலாய்பினுண் மத்தியானப்போதி
லனத்தமெய்துவ ரெனவினவினண்மிக வழுதுநொந்துரைக்கின்றாள். (உசு)

ஐயனேயென்சே யர்களிறந்திடிலெனக் கபரவான்றெழிலாரே
செய்யவல்லவ ரென்னவிட்டலன்யானே செய்வனஞ்சலேயென்று
மையமைந்தமின் னெனமறைதரவெழீஇ மைந்தர்பாலுளவோத
மெய்யகன்றிடு விதியர்தாய்வயோதிகம் விரவவிற்பித்துற்றாள். (உஎ)

எனவுரைத்தனர் நகைத்தியாமின்றிறந் திடுதன்மெய்யேயாகி
லுனதுசெங்கையா லுணவிடாயென்றயின் றுற்றதாம்பூலங்கொ
ளனபதத்தின்மன் றா தர்வந்திகலவ ரனிகமீண்டமர்செய்யத்
தினமிதிற்புரப் புறத்துறலான்மன்னன் செருவுக்கேவினனென்ன. (உஅ)

நன்றுநன்றென வேகினரிகலவர் நால்வகைப்படைமுற்றுங்
கொன்றுலாவின ரிகலவராலடி கொண்டுமிக்கயர்கின்றார்
துன்றுமன்னேசொற் கொள்கிலம்விமலனேத் தூடணஞ்செயலாலே
யின்றுதீங்கிது பொருந்திற்றென்றரி யிணைமலர்த்தாளுடி. (உகூ)

பலபஃறேத்திரம் புரிதரக்கருணையெம் பகவனன்னவர்கண்முன்
னிலவியஞ்சலி ரெனத்தழுவினனரு ணீள்விசும்புறவுய்த்தான்
குலவுசம்பவந் தேர்ந்தம்மாபாயுடன் குமரர்தம்மனைமாரு
மலமரும்பெருந் துயர்மிகுத்திரங்கின ரமைமுதன்மகன்றேவி (௩0)

கொண்கனேடிறந் திடவவடனக்கும்வை குந்தமீந்தனன்மாய
னுண்கணுரிளையவன் மனைகருவமைந் துறுதலினன்னாளை
வண்கவின்றவம் மாபாயிதேகுப்பான் மருவிடக்கொண்டேகி
விண்கவின்றமே னியன்றிருக்கோயிலின் மேவிவிட்டலற்போற்றி. (௩க)

முண்டகத்திருத் தாட்டுணைகளைக்கையான் முறுகப்பற்றினள் சொல்வா
டொண்டராயினர் தங்குடிகெடுக்கவே துசர்கட்டியுற்றேனே
வண்டழைத்தவென் சுதரிருவரையுமே மடித்தனையே மூப்புக்
கொண்டவென்றனைக் காப்பவர்யாரெனக் கூறிமிக்கழுதேங்கி. (௩உ)

மருகியோடுவீ ழணைந்தரிதிருவடி மனத்திடைமாறாதே
கருதியுற்றன ளவள்படுதுயரினைக் கண்டரிசகியானுப்
பருவரற்கொடே னிரங்கினையுனக்கெது பதத்தினுமுளத்திச்சை
மருவிடும்பொரு ளளிப்பன்யான் விதிமுறை வருவதுவந்தாகும். (௩௩)

என்றபோதம்மா பாய்நினையன்றிவேற் றிச்சையொன்றிலனென்ன
மன்றலந்துள வோன்மகிழ்ந்தியானிரோர் மகன்மருமகள் பொன்னென்
றென்றலாமவள் பணிபுரிந்தாளுட னுண்டமைந்தனன் சின்னாள்
சென்றபோதம்மா பாயுடற்கடவனுள் சேரவிட்டலப்பெம்மான். (௩ச)

தன்னருட்குறங் கினிலம்மாபாய்தனைச் சார்த்தியாருயிர்தன்னை
நன்னலங்கொள்வை குந்தவான்பதத்தினி னண்ணிடச்செய்தொப்பில்
கொன்னமைந்தபல் கிரியையாற்றினனுடன் கொம்மெனமறைந்திட்டா
னின்னசெய்கை தாய் வீட்டுறுமருகிகேட் டினிதுதம்மூர்மேவி. (௩ரு)

மாமியார்க்குரி மைகள்செயற்குதவிடா மையைவகுத்தனளேங்கத்
தோமில்சுற்றத்தா ரிருந்துீரபாவான் றெழின்முறையேசெய்து
மாமிம்மாற்றமோ தியதென்னையென்னமிக் கம்மகள்வியப்புற்று
*ளேமியாய்நிகழ்சேய்விடோபாவரி யியற்றருட்செயலென்றே. (கூகூ)

ஆலயத்திடை மேவிவிட்டலனிணை யடிதொழுதடியார்கள்
போலநின்பதம் புகச்செயாயெந்தையர்ப் போர்க்களத்திடைகொன்றாய்
ஞாலமேற்பிர கலாதனங்கதன்றனை நல்கினர்போற்செய்தாய்
சீலநின்றருமத்திதுனுக்கேற்பதாஞ் செய்கைகொலிஃதந்தோ. (கூஎ)

ஆனபான்மையி னின்னருகியானினி யமைதல்கூடாதென்றே
மானமிக்கியல் கரப்படைதன்னிற்றன் மார்பைப்போழ்ந்திடமுன்னத்
தீனபந்துவல் விரைந்து வந்தவன்கரந் திருக்கரங்களிற்பற்றிப்
பானல்வாய்ச்சுத வறிதென்மேற்சினந்துயிர் பாற்றவுன்னினையென்னே. ()

பிராத்தவல்வினை யநுபவத்தாலன்றிப் பெயர்தார்திமையோர்க்கு
மாத்துவல்வினை யோர்கொள்வைகுந்தவா னளித்தனனென்றேகண்
விராய்த்ததும்புநீர் துதித்திடத்தேறினன் விட்டலனருளுன்னிப்
பாராய்த்துதித்தெனோர் பிழைபொறுத்தாள்கெனப் பகவனுட்டயைகொண்டு.

நவவிதம்படு பத்தியன்னவன்கொள நன்குபதேசிக்கக்
குவடுறழ்ந்தநெஞ் சினன்பணிந்தமையுநாள் குலவுபதாசிப்பேர்
நுவல்சுதன்பிறந் தனனரிபூசனை நோன்பினுலன்னோன்று
ஹுவமையற்றகா னியாசங்கரப்பெய ருடையசேயினைப்பெற்றான். (சo)

அவனுமுன்னவர் முறையின்மால்பத்தனு யமைந்துபோளோபாப்பேர்
நவமிகுஞ்சுதற் றந்தனனவனறு நான்குவற்சரமாய
னுவமைதீர்பதப் பூசைசெய்தன்பர்கட் கொப்பிலேவல்களாற்றித்
தவமிகுந்தசாத் துவிகநற்குணங்கொடு தழைத்திலங்கிடுநாளில். (சக)

துயிலுமோரிராக் கனவின்மும்மூர்த்திக டோன்றிநின் னுளமீதிற்
பயில்வதாநசை யோதெனவவர்பதம் பணிந்துநற்றுதிசாற்றிச்
செயிரின்மைந்தனல் குதிரெனவுடன்பர சிவனளித்தனனென்னக்
குயினிகர்த்தமே னியனருள்கொண்டியல் குவலயத்தரையெல்லாம். (சஉ)

உத்தரிப்பிக்குஞ் சுதற்றந்தேனெனவய னுதவினனற்றென்னச்
சித்தமிக்குவந் துடன்கனகாயியாந் தேவியையெழுப்பிச்சொற்
றுத்தமத்தகை யோர்மகிழ்ந்தமையுநா ளுமாபதிவரந்தன்னான்
மெய்த்தகைச்சம்பா சிப்பெயர்க்காதலன் மேதினிமேல்வந்தான். (சங)

அன்னகாலைவிட் டலன்போளோபாவினுக் கருள்வரப்படிமாந்த
ரின்னனிக்குநன் யாரெனவைகுந்தத் தியல்பலோரையுநாடிக்
கொன்னமைந்தநன் னுமதேவேதகுங் கொற்றமுள்ளானென்று
தன்னயற்படக் கூவிநீமுற்பகர் சதகோடிதுதிதன்னில். (சச)

---

* ஏமி - உடனிகழ்வான்.

அஞ்சுகோடியா றுபத்திலக்கங்குறை வமைந்தவன்னவைசாற்றி
மிஞ்சுசீவகோடிகளைநல்வழியிடை மீட்பப்போனோபாப்பான்
மஞ்சுநீண்மஞ்ச ஞகெனவங்ஙனம் வயங்குவேனெனமாயன்
கொஞ்சுநூபுரப் பதந்தொழுதனர்விடை கொண்டவதரித்திட்டார். (சரு)

பிறந்தசேயினைக் குரவர்கள்விட்டலன் பிறங்குமாலயஞ்சேர்த்திட்
டறந்தழைத்ததாண் மிசைகிடத்தினர்துதித் தமைபுமேல்வையிலோகை
சிறந்துபாண்டுரங் கன்னுருக்குமணிபாற் சிறுவனீங்கிவன்றன்னை
நிறந்தழைத்தநின் கரத்தெடுத்தீன்றவ ணெடுங்கரத்தருளென்ன. (சகூ)

திருவருட்சொரு பத்துருக்குமணிமால் செப்புமாறவள்பாலீந்
தருளிஞசிசாற் றிடவுவந்தனர்தொழு தகத்திலுற்றனர்போற்றிப்
பொருவில்பேரிடக் கருதருக்குமணிமுற் போந்துதுக்காராமென்
றருடிர்நாமமென் றிடவிட்டார்சடங்கெலா மாற்றினர்மகிழ்நாளில். (சஎ)

திசைமுகன்வரத் தாற்கனகாயிதன் றிருமணிவயிற்றின்க
ணசைகுலாவுகா னியாப்பெயர்க்காதல னண்ணிடச்சுதர்க்காத்திட்
டசைவிலன்பின்மால் பூசனைபசனைசெய் தமையவாலிபஞ்சேய
ரிசைவதானநாள் வதுவையங்தொழின்முடித் தியலிருகுரவோரும். (சஅ)

வார்த்திபத்தகை மருவலிற்றுதைமுன் மைந்தனைமுற்கூவிச்
சீர்த்திமிக்கவிக் குடும்பநீநடத்தெனச் செப்பவொப்பானுகி
*யார்த்திசற்றுமெற் குலகவாழ்வினிலிலை யங்கண்ஞாலத்துள்ள
தீர்த்தயாத்திரை விழைவுளேனெனினுநீர் செப்புமேவலினிற்பேன். (சகூ)

நிருமலன்வரத் துதித்தசேயிவன்றெய்வ நீதிக்கேற்றவனென்னக்
கருதிவல்லைதுக் காராமர்க்கூவினன் கழறியொப்புவிக்கக்கொண்
டருமைபெற்றிட நடத்திவந்தாரங்ஙா ளவர்மனையாளுட்குப்
பொருவில்காசரோ கந்தொடர்திறத்திறுற் புனுவில்வாழப்பாசி. (ருo)

ஈன்றசெல்விசிச் சாயியைமணம்புணர்த் தினிதுவிட்டலற்போற்றி
வான்றழைத்திடு தேவருமெச்சிட வாழுநாள்குரவோரைக்
கான்றழைத்திடு பிருந்தையார்மணிமுடிக் கடவுடன்பதஞ்சேர்த்தா
னன்றசேயர்துன் புற்றவர்க்கியற்றலா மபரநற்றொழின்முற்றி. (ருக)

வேறு

வாழுநாள்சம்பா சியின்மனைவிண்ண மருவவன்பந்தமுற்றொழித்தே
கேழுறுவிரத்தி மிக்கருட்பகவன் கிளர்திருநாமங்களோதி
வீழுறுதீர்த்த யாத்திரைபுரிந்து வியன்முத்தித்தலங்களேழ்போற்றி
யேழுடனைந்தாஞ் சோதிலிங்கங்க ளேத்திப்புட்காதியின்மூழ்கி. (ருஉ)

சாதுசங்கத்திற் கலந்துமெய்ப்பரம சாந்தநன்னிலைமைபெற்றமைந்தார்
போதுறுதுக்கா ராமர்விட்டலன்றாள் போற்றியீன்றவருறு துணையு
மேதுமோர்துயரற் றிருந்தனரவரோ டீட்டியதனங்களுமொழிந்த
போதுமுணுடையுங் கிடைத்திலதென்றுட் புன்கணுற்றனர்கடைவைத்தார்.

---

* ஆர்த்தி - விருப்பம்.

நட்டமிக்குறக்கண் டுறவர்பொன்கடனல் கிடவிடைநான்குவாங்கினராய்
விட்டலற்றுதித்துப் பொதிகளேற்றினர்பின் விவிதமாந்தொழில்பலபுரிந்துங்
கட்டநட்டங்கள் கலந்தனர்செம்பொன் கடனளித்தார்தடைசெயலான்
மட்டறுதுயர்கொண் டமைந்தனருற்றூர் வழங்கியன்னவர்தமையொழித்து.

பத்தியினுனைப்போற் பகலிரவிடைமெய்ப் பகவனுமஞ்சொல்வார்பலரும்
வத்திரமூழிணைய் திலர்வறுமையினுள் வாடியுற்றுரிதுதிறத்தா
லத்திமுன்வந்தாண் டவற்றுதித்தவமே யனுருநேமெலென்றுவாணிபஞ்செய்
புத்திகள்புகன்றூ ரில்லவனுறவர் போங்குறுமையினிந்தித்துற்றுள். (ருரு)

யாவரென்சொலினு மேற்றிடார்மாய னிணையடிபோற்றியுற்றூர்நாற்
கோவவற்றினின்மூன் றத்ததியிறப்பக் குலவுமொன்றூல்வியாபார
மாவலிற்புரிந்தா ரொருதினஞ்சிலரோ டகலுங்கால்யாருமுன்னுகப்
போவதாயினர்தாந் தனித்தொருகானிற் புக்ககாலேயிற்பொதிநழுவி. (ருசு)

தறைமிசைவீழ்ந்த திருவிருகடிகை சார்தரமழையிருள்கலப்ப
நிறைதுயருடன்மற் றதையெருத்தின்மே னேர்தரவைக்குமோர்துணையற்
றுறைபொழுதங்கட் புலிமுதல்விருகத் தொலிவினுய்க்கலங்கினர்குடும்பத்
துறைபுகலாற்றேய் துயரிதையெவர்பாற் சொல்வனென்றயர்ந்துபாண்டுரங்கா

இத்ததியென்னைப் புரத்தனின்கடனென் றிரங்கிடவாருயிர்த்திரளின்
சித்தமுற்றுளித்தன் னவர்கள்பிராத்தந் தீர்தரக்கருணையாலசைக்கும்
பத்தவற்சலனோர் பதிகன்போலவர்தம் பாலடைந்தியாவர்நீரென்ன
வுத்தமர்யானோர் செட்டிதூரத்தூ ருறுபவன்பொதிவிழுந்திடலான். (ருஅ)

மாட்டின்மீதமைப்பா ரிலதெய்த்தேனென்ன மற்றதையேற்றியிவ்விருளிற்
காட்டினில்வழிதேர் கிலதெய்யேலென்பின் கலந்திடென்றிந்திராயணியின்
மாட்டியைந்தாறு பெருகல்கண்டுடன்றன் வயங்குசக்கரத்தைவிட்டதன்மேற்
றேட்டியன்முழந்தாள் வரைநனைந்திமொ தோய்த்திலத்தமைத்தனன்மறைந்தான்.

சிலதினம்போயின் னவரொர்மூன்றெருது சேகரம்புரிந்துமேன்மிளகாய்
நலமுறக்கொடுகொங் கணம்புகுந்தங்க ணற்கடைவைத்தவ்வூர்மாந்தர்
நிலவியோர்மணங்கென் விலையெனப்பகவ னிசவடிவின்மனம்பதிந்தார்
சலமறவேண்டல் கொண்டியன்றிடுபொன் றருதிரென்றிடவளித்தகன்றூர் ()

சிலவரொன்றளித்தி லார்கொடுசென்றூர் செயலிதுதெரிந்தொருதுட்டன்
குலவுமோர்பொதியெற் கீதியென்றவர்தங் கோணிபுங்கொடுசெலக்கண்டார்
நலமிளகாய்கொண் டுற்றகோணியினை நல்கெனமீண்டணைகாற்பெய்
கலமிலேனளிப்பே னென்றனன்போந்தான் கடைபொழிதவிற்சலமற்றே. ()

புனல்படிந்தரிதாள் கருதினரமையப் புயல்வண்ணன்முப்பொதிமிளகாய்
முனமணைவோருக் கீந்தனன்கடனெம் முறையினுற்றீர்த்துண்பானென்றே
கனமுறுமனித வேடமேற்றூருட் கலந்துவாங்கினர்வயின்மேவி
யினம்விலையளிக்கா திருந்ததென்வல்லை யீமினென்றுறுக்கிடமாந்தர். (சுஉ)

யாவனீமிளகாய்க் காரனேவென்ன வெழிற்றுக்காராமசெட்டிதனே
ரேவலானும்பாற் றண்டீற்கெய் தினனென் றியம்பிடத்தூக்கியுமதித்து
மாவதைக்கொடுத்தா னேவெனத்தூக்க லாற்றுக்காராமனென்றிடுபேர்
மேவருஞ்செயலோர் கிவிர்கொலோவென்ன விளம்புறுநிறையெனவினவ. ()

உற்றவந்நிறைசற் றும்வழுவாம லுரைத்தலினுவந்துபொன்னளித்தார்
துற்றகோணியுடன் கொண்டதுட்டன்பாற்றேய்ந்துபொன்றருகெனவுனேயாட்
பெற்றவன்பானல் குவனெனவிலேப்பொன் பெறுமலேகிடிலவரென்மேற்
செற்றமிக்கமைவார் கொண்டன்றியவர்பாற் சென்றிடேனெனச்சண்டியாகி.()

தருகிலேனெனநல் கிடாயெனின்மனேப்பாற் சாவனென்றிடவவனீதென்
பருவரலந்தோ நின்பொதிகொண்டு படரெனக்கொண்டதைத்திருப்ப
றருமமன்றென்ன வெவ்வகைபொன்னீதான்கொள்வாயெனக்கடுத்துரைத்தான்
றருணமன்னதின்மா யவனெருகயிறுத்தரத்திட்டான்சுருக்கிட்டன்கழுத்தில்

சம்பவமிதுதேர்ந் தயலுளார்பலருஞ் சார்ந்துபொன்னளித்திடாயென்னில்
வம்பனுன்மனேக்க ணிறந்துவெம்பழிநீ மருவவைப்பானெனவெருட்டிச்
செம்பொனல்குவித்துக் களத்திடுசுருக்குந் தீர்த்தனரத்ததிமாய
னம்பருட்டுக்கா ராமர்பாலவ்வூர் நண்ணதிகாரிபோன்மேவி. (சுசு)

பொன்னளித்திடவிஃ தேதெனவறிதிப் புரத்துளார்நின்பொருள்கொள்ள
னன்னலமன்றென் றளித்திரென்றேதி நல்கினர்கொடுவந்தேனென்று
னன்னவனிடமோர் பணமளித்தாநெய் வாங்கினேயணேகெனமகிழ்ந்து
கொன்னமைசெம்பு நிறைதரமலிவிற் கொண்டமைசெயற்குளமுவந்து. (சுஎ)

உணவுகொண்டகல்கென் றிடவிசைந்துறுகா லுமாபதியதிதியாச்சார்ந்து
குணமலிநீயெற் குச்சிறிதன்னங் கொடுத்தியென்றிரப்பமற்றவரோ
டணவினருண்டு மறைந்திடப்பெரியோ ரமைபொழுதாண்டுளார்மருவி
யெணமிலாதொருதுட் டற்குநீர்மிளகா யீந்தும்மாளாம்விடோசியினே. (சுஅ)

விலேகொடுவாவென் றனுப்பினீர்கொடாதவ் வீணன்வாதித்தலின்வந்தோன்
மலேதரான்களத்திற் சுருக்கிட்டெனவி மாய்ப்பனின்மனேப்புடையென்ன
நிலேயிதோர்ந்துடன்யாந்தடுத்துப்பொன்னளிக்க நிகழ்த்தின மீதும் மானேர்ந்த
வலேவெமக்கென்னு மவர்சொலும்பொருள்களனேத்துமெய்தியதுமுள்ளுணர்ந்தே.

இவைமுழுவதும்விட் டலனருளாற்செ யியல்விளேயாட்டெனத்தேறி
நவைகொளேன்பொருட்டா னீயிவ்வாறடைய நண்ணியதேயெனப்பலவாச்
சுவைபடத்துதிசெய் திடத்துக்காராமர்ச் சூழ்ந்துளோர்யாவருந்துதித்தார்
குவைபடுபுகழா ருடன்றம்மூரணேயக் குறுகினர்வழியிலொர்வஞ்சன். (எ0)

பித்தளேக்காப்பை மேற்சுவணத்தாற் பிறக்குவித்தேதுக்காராமா
வொத்தவிங்கிதைநிற் கிலவசவிலேகொண் டுதவுவனென்னவிங்கிதுகொள்
வித்தமின்றெனவித் தியுளதளித்தி மீட்டுளபொருள்கொள்வேனெனக்கேட்
டுத்தமர்கொண்டு கடனளித்தானுக் குதவிமீதியைத்தருகென்ன. (எக)

அவனகைத்தூரார் பாற்சொலத்துணைவி யறிந்து தன்சிரத்திலெற்றியுனை
நவமலிதருபண் டரியுளோன்பித்த நண்ணவாற்றினனவனேயங்
தவவுனக்கனந்தஞ் சாற்றியும் விடாதித் தன்மைதோய்ந்தனையிருத்தலினு
மவமுறமடித னன்றெனோர்குடும்ப பழிந்ததென்செய்வனென்றுரப்ப. (எஉ)

மருவுசிச்சாயி சினத்தினுக்கஞ்சி வருகடன்காரனேகவனு
ளிகுமைசால்குடும்ப மோம்பவாங்கருகி லிசைகுநன்பாற்கடனுகப்
பொருளிருநூறு கொண்டுநாயகன்பாற் போந்தினிமோசம்போகாமல்
வருவியாபார மியற்றெனவுப்பு வாங்கிப்பாலேகாட்டின்மேவி. (எங)

மாறியப்பொன்கொண் டுடன்வெல்லங்கொண்டு மற்றதையும்விற்றூதியங்கொண்
டாறிதயத்தர் வணிகரோடேர்க்க ணமைதரவரும்வழியிடையி
லாறியல்குடும்பி யொருவன்சங்கிலியி லுறு*மிதைமாட்டியகளத்தன்
வீறியல்வணிகர் பாலடைந்தியானோர் வேதியனரசிறைக்கிலாமல். (எச)

தண்டனையிதுபெற் றடைந்தனன்பொன்னீர் தந்தெனைப்புரத்திரென்றிரப்ப
வண்டலையென்ன வுடன்றுக்காராம ரருகிலுற்றையைம்பானூறுபொன்
னெண்டகத்தரிலித் தண்டமற்றின்ப மெய்துவனென்றுபன்முகமன்
விண்டனன்வேண்ட வவன்சுகமுறக்கை விரவுபொன்முற்றவுமளித்தே. ()

போந்தவேதியன்றுன் பகற்றிடற்பொருட்டென் பொருளுதவியதெனக்கழற
வாய்ந்தவைசியர்பொன் பனவற்கீந்தனைநின் மனைவிக்கென்சாற்றுவையென்றுட்
சார்ந்தரைவெறுத்துப் பிரிந்துமுன்செல்லத் தயைபொழிவிழிகொள்பாண்டுரங்கன்
றேய்ந்தவிச்செயலை மனைவினவிடிற்பஃ றுயர்செய்வாளன்பனையென்றே. ()

விட்டலன்றுக்காராமர்தம்வடிவம் விரவிமுன்கடனளித்தவன்பால்
வட்டியுமுதலுந் தந்துபொன்னைந்தென் மனைவிக்கு நல்கெனவளிப்ப
விட்டமோர்நீயே தருதியென்றன்னோ னீயநாட்சென்று நானுறலாற்
சட்டவென்றனக்கோ பிப்பணியேகித் தருதியென்றளித்தனன்மறைந்தான்.

வணிகன்சிச்சாயி பாலுளவோதி வழங்கிடயாண்டுளோரென்னு
மணியிழைபாலெங் கேனும்விட்டலன்சீ ரறைந்தனன்றிரிவனீயவனுட்
பிணிபெறச்சினவே லென்றவன்சென்றான் பிற்றைநாட்பசனைசெய்துற்றூர்
கணிதருவணிக ரவர்செயலுரைப்பக் கருத்தினுள்வியந்துசிச்சாயி. (எஅ)

பொன்னளித்தவன்விட் டலனெனமதித்துட்பொங்குசீற்றங்கொளாதமைந்தா
ளின்னணந்திகழ்நாட் பஞ்சத்தாற்றீனி யிலாதெருதிறந்திடும்பண்பா
லன்னமாடையுமெய் திலர்கடன்கொடுப்பா ராரையுமறிகிலர்சால
வின்னலிற்கிரை யாதியும்பசிக்கெய் திலருறமுன்மனையிறந்தாள். (எகூ)

அன்னகாலுறவர் பலருநேர்ந்திவைமுற் றரிபசனையிலமைந்தனவா
முன்னமேயுரைத்துங் கேட்டிலையின்ன மோசிலைவிடாயெனிற்பலப
வின்னன்மேன்மேலும் வந்திடுமந்தோ வென்செய்வாயெனவிரங்கினராய்ப்
பன்னவிட்டலனைத் தொழுதிலார்துயரப் படுகிலரோபகர்வீரால். (அ௦)

*இதைக - லப்பை.

தருமமன்றுமது வாசகமென்னச்சாற்றினரிருந்துழியவர்தம்
பெருமைசான்மூத்த ஊமந்தன்சந்தோபாப் பெயரினன் விண்ணுலகெய்தப்
பருவரன்மிக்குற் றையகோகொடிதிப் பவஞ்சமார்வாழ்விதுசிச்சீ
மருவிதிலமைந்தீ டேறினரெவரே மாயையென்றகம்வெறுத்தவராய். (அக)

எனக்கியல்பன்மூன் றினின்மனைப்பார மேற்றினருறுபதினேழில்
வளப்புறுதாய்தந் தையர்மடிந்திட்டார் வயங்குபன்னெட்டினின்மூத்தோன்
மனத்துலகியலை யுவர்த்தனன்கான மருவினனிருபதின்மனைசே
யினப்படவிறந்தா ரெத்தனைகால மில்லறத்துறினுநன்றிலையே. (அஉ)

இனித்திருமகள்கோன் பதத்திடைமனத்தை யிருத்திவாழ்வதுமுறையென்று
பனித்தடம்பொழில்சூழ் போபநாத்தென்னும் பருப்பதத்தமைந்துகன்மூடிக்
கனித்தொகைபுனலா தியுமருந்தாராய்க் கடுந்தவமியற்றுகான்மாயன்
றுனிச்சினவரவா கித்துக்காராமர்ச் சூழவுட்பயமிலர்துணிவாய். (அங)

அரிதிருநாமஞ் செபித்துற்றார்கண்ண னரவுருக்கொண்டணைந்தானென்
றுரிமையில்வானத் தோரசரீரி யொலிப்பப்பாண்டுரங்கன்றன்வடிவாய்த்
தரிசனமளிக்கிற் பார்ப்பனென்றமைவார் தம்விராகந்தெரிந்துவந்து
விரிகதிர்ப்படைபொன் னுடைசதுர்ப்புயம்வில் விடுமெழிற்குண்டலமாதி. ()

துலங்கிடநீல மணிவரையெனமுற் றோன்றியன்பியறுக்காராம
நலங்கிளரெனது வடிவுகாணென்ன நவிலவானந்தமிக்காராய்ப்
புலங்கடந்திட்ட சுகப்பெருவடிவிற் பொருந்தினரமைதருதிசஞ்
சலங்கொடுகானி யாதமையனைக்கா ணுன்சலமுதற்பருகிலனுய். (அரு)

இராகவற்பிரிந்த பரதனினகர்கா னிடமெலாந்தேடியம்மலைப்பால்
விராவுகாலையில்விட் டலன்றமயனுடன் விளங்குசிர்கண்டுவப்புற்றுப்
பராவியோர்முயற்சி யின்றிமால்சேவை படைத்தனனெனத்துதித்துற்றான்
றாதரக்குடையோ னுடன்றுக்காராமர்த் தழுவித்தன்னருகுறவிருத்தி. ()

வேண்டியதுனக்கென் னெனவுனைமறவா விதமருளெனவுனையருளா
லாண்டிடற்பொருட்டிவ் வடிவுகொண்டுனுந்தோ றடைவனூர்புகுந்தெனைக்கருதி
யீண்டியற்சுகமிக் கமைதிபேதமிலா திபைவனுன்புடையெனவோதி
மாண்டிகழ்கண்ணன் மறைந்தனனங்ஙன் மலர்ப்பதச்சுவடின்றுமுளதால். ()

பின்புதம்பியுமி ராமருமூர்க்குப் பெயர்ந்திந்திராயணிக்கரையி, வின்புடனமைந்து விடிந்தபின்னுன மியல்கிரியைகண்முடித்தருந்தி, யன்புறுமிளவனுடன்புகல்வார்நம் மத்தனன்னிபர்க்கிட்டகடன்சீட், டென்புடைமுற்றுங் கொணர்தியென்றவைகொண் டிவரெலாந்தரக்கென்செய்திடுவர். (அஅ)

சீட்டுளதேனிர்ப் பந்தஞ்செய்திடவே சிந்தையுண்டாமஃதாலிவற்றை
மாட்டுளநதிபி விடுதனன்றென்ன வகுத்திடத்தம்பிநீர்விரத்தா
கூட்டுறுகுடும்பி யாலென்செய்வனெனக் குலவவன்பாகமீந்துறுதா
மீட்டுறுபங்கு நதியிவிட்டிளையோ னிடமெவரையும்வருத்தாதே. (அகூ)

வாழ்தியென்றவனைப் போக்கினரிரவின் மாலடிபோற்றிவைகறையி
லாழ்திரையிந்தி ராயணிமூழ்கி யாணியத்தணைந்துணவயின்று
சூழ்திருநகர்க்கு மூன்றுகோசயலிற் றுதைபாண்டாரச்சிலம்பிடைபோய்க்
கேழ்திகழ்மேனி விட்டலன்றிருத்தாள் கிளர்மனத்துட்டியானித்து. (கூ0)

அத்தமித்ததன்பி னகரணைந்திறைவ னருள்வடிவகம்புறங்கண்டு
புத்தமுதனைய துதிபுகன்றுறங்கார் புலருமட்டாடிவைகறையி
னத்தமையிந்தி ராயணிபடிந்து நனிகடன்முடித்துநாடோறு
மைத்சவழ்வரைமீ தேறிவிட்டலன்றாண் மதித்தமைந்தனரொருநாளில். ()

கரைமிசையமைந்து விட்டலனமைங் கணித்திருந்தனராதுகாலை
நிரைகதிர்பெறுமோர் சோளக்கொல்லைபுளா னிலவுதுக்காராமருடனே
தரையில்வீண்காலம் போக்கிடுமீயென் றனதுசோளக்கொல்லைபுரக்கி
லரைமணங்குனக்கு நல்குவனென்ன வாரெதுசொலினுநன்றென்பார். (கூஉ)

அவ்வணம்பாண்மீ தமைந்துவிட்டலன்ற னருட்டிருநாமங்களோதி
யெவ்வமற்றுறைவார் புட்கள்பாற்சோள மினிதருந்திடக்கண்டுமுகுந்த
னெவ்வனைத்தினுமேய்ந் துளனதாலிவற்றை யோட்டுதல்பாவமென்றயின்றுஞ்
செவ்வியிற்புட்கா ளறல்பருகவினிச் சென்மினெனன்பாரருட்செல்வர். (கூ௩)

முதன்மனையிறந்த பின்றுக்காராமர் மூத்தமைந்தனுமிறந்ததனல்
விதனமிக்குளவிவ் வுலகவாழ்வினையான் வேண்டிலேனெனமலைவனம்போ
யிதமுறமாய னிணையடிகருதி யிருந்துபின்னவனருளுரையாற்
சுதநலமுறுதங் நகாருகிந்தி ராயணிதீரத்திற்றங்கி. (கூச)

நன்னலத்தவஞ்செய் தரிபுகழ்ப்பசனை நடத்தியுற்றிறுங்குசார்கொல்லை
மன்னவுற்றிடு புட்காவல்செய்தொழிலில் வாய்ந்துளார்தமதுநற்கொண்க
ரென்னலைப்பலாற் சொல்லிடவினவி யிதயமீதுவகையுஞ்சினமு
மின்னலுமடைந்து தனதுதீவினையை யெண்ணியேயிருந்திடுமிளைய. (கூரு)

மனைவிசிச்சாயி கணவனைக்காணுன் மகளுடனேதுவள்பசிமிக்
கினைதலானென்ன னவர்க்களித்தன்றி யாதுமுண்ணேனென்மூத்த
தனையைகாசிபாயி தலமெலாந்தேடிச் சாமிவாழ்வதுகண்டுதந்தாய்
நினைவிலிரோவூண் கொளவெனக்காவ னியமித்தோனத்தமானமட்டும். (கூசு)

கொல்லைகாத்திருக்கச் சாற்றினனெங்ஙன் கூடுமென்வரவுனதனைக்கிச்
சொல்லையோதென்ன வினவுசிச்சாயி துப்பினங்கொணர்ந்திட்டுண்பளிரா
வெல்லையிற்பாண்டு ரங்கனைப்போற்றி யெல்லுதித்திடிற்பாணமைவார்
தொல்லையற்றவரிவ் வாறமைதருகாற் சோளக்கொல்லைத்தலைவன்றான். (கூஎ)

விளைவுகண்டிடவோர் நாளில்வந்தியாவும் வெறுங்கதிராம்விளைவினைக்கண்
டுளைவுறுமனத்தன் சினத்துடன்மால்பே ரோதியுற்றிடுமவர்க்கண்டே
களைகனென்றுனைநம் பினன்கதிர்முற்றுங் கருத்திலாய்கொள்ளையிட்டனதோ
கிளையொடென்குடியை முழுகச்செய்தனையே கேடவென்றனந்தமாய்வைதே

மருவுமூர்த்தலைவன் பாற்பிடித்தேகி வயிற்றிலெற்றினனுளவுரைப்பப்
பொறுவிறுக்காரா மரையவனேக்கிப் புகலுதிர் நுந்திரமென்னக்
கருணைமாலன்பர் தாய்பரண்வதிந்தே காத்தனன்டீறவைகளன்றி
யொருவர்கொண்டனரின் றெனநகைத்துன்செ யுறுவிளைவெவளவாமுறையாய்.

எனவினவுழிநாற் பதுமணங்காகு மிதிற்சிறிதையமின்றென்றுன்
கனமிகுதலைவ னிராமர்பாலுமது காவலிற்பழுதுறுதிறத்தாற்
றனமிவற்களித்திர் பொருளின்றேலெழுதித் தருதிரென்றிடவங்ஙன்றந்தா
னவதிகாரி யழிபுலம்பார்க்க வேண்டிப்போய்நாடிடுகாலை. (கOO)

விட்டலனருளா லளவறவிளைந்து விளங்குசீர்கண்டுவந்தார் * கூ, ழிட்ட
வனிவற்றை யளித்திடிற்சீட்டை யிவற்களிப்பேனெனத்தலைவ, னிட்டமார்
துக்கா ராமர்மால்பேரன் பெய்தினராதலின்விளைந்த, தொட்டமொத்திடப்
பொன்கொண்டுறும்விளைவை யுய்த்திடுயென்மனைக்கெனைன்றுரைத்தான்.(கOசு)

அதுமுந்நூறுடனுற் பதுமணங்காக வவற்குநாற்பதுமணங்கீந்திட்
டதுலன்பாலிவற்றை நீர்கொண்மினென்ன வையகோவிதனைநான்கொள்ளிற்
கதுமெனத்துன்பங் கலக்குமென்றிடவுட் கலங்கியூர்த்தலைவனுங்கொள்ளான்
பொதுவுறமகதா சிப்பண்டி தன்பாற் பொருந்தவைத்திருமினென்றீந்தான். ()

செயலிதுதேறி யருட்டுக்காராமர் சீதரன்புகழ்மிகப்பாடி
மயலறுசுகிர்த ராய்த்திகழ்ந்தனரோர் வைகலில்விட்டலன்கோயி
லயல்பழுதுறக்கண் டுடன்றிருத்தமுயன் றமையுமண்குழைத்துமேற்றடவ
நயமலியன்பர் வருந்திடல்சகியா ஞரணனியன்மகதாசி. (கOரு)

கனவின்மேவினனின் பாற்கொடானிபத்தாற் கதுமெனவெனதருட்டளியை
யனகமுற்றிடச்செய் கெனக்கனுத்திறத்தை யனைவர்க்குமோதவெல்லோரு
மனதுவப்புடன்கோ யிலிற்சென்றுநாட மயலிலார்பணிசெயற்கண்டே
யெனதொருகனவுக் கீதுசான்றென்ன வியன்மகதாசிசாற்றிடலால். (கOசு)

உற்றவர்பலரும் வியந்தனரங்ங னுயர்திருப்பணிசெய்தப்பொருளான்
முற்றலின்மையின்மெய்த் தொண்டர்தாஞ்சால முயலுதற்குளம்பொருண்மலன்
கொற்றமார்மகதா சியின்கனவிடத்திற் குறுகுபுனமுளான்முன்னஞ்
சொற்றவாகாத்தோன் றனக்கரைமணங்கு சோளநல்கிலனதைவாங்கி ()

திருப்பணிபூர்த்தி செய்தியென்றிடவத் திறம்பலபேர்கட்குஞ்சாற்றி
யொருப்படுமனத்த னூரினுள்ளோர்கட் கொருங்குதான்வரிவைத்துத்திரட்டிப்
பொருப்பனகோயிற் பணிமுடித்திடுகாற் புகறுக்காராமரின்பமைந்து
மருப்பயில்சபாமண் டபத்திற்கீர்த்தனங்கள் வழுத்தினர்நடனமாற்றினராய்.

மனதுவந்தனர்நா மதேவர்ஞானதேவர் வகுத்தசாயித்தியத்துடனே
கனவிராமகதை பாரதமுதலாங் கதியருணூல்கள்கைக்கொண்டு
வனமலிபாண்டா ரத்திருமலைமேல் வதிந்தனர்மனனஞ்செய்துவந்தார்
தினமுங்காதலியப் பமுஞ்சுரைக்குடுவைத் தீர்த்தமுமீந்துவந்துண்பாள். ()

* கூழ் - பயிர்.

வேறு

வருந்துறுசிச் சாயிவிசு வம்பரர்தே வாத்தம்
வங்கிசுஎா சஞ்செய்ய வருகுருங்குள் ளனுக்குப்
பொருந்துமிவ்வூ ரினிற்கோயில் கட்டிவைத்தா ரவனென்
புருடனுக்குப் பித்துமிகப் பொருத்தியவ னுமங்
திருந்தவிராப் பகலோதித் திரியவைத்தான் யானென்
செல்வமெல்லாந் தோற்றனனென் சிறுவருண வின்றிப்
பெருந்துயர்கொண் டனரெனது குடும்பமெலா மூரார்
பேசுமலர்ச் சொற்கயரப் பெற்றதுந்தோ வந்தோ. (க0அ)

இவ்வகைசெய் பவன்றனைத்தெய் வமதென்றெவ் வண்ண
மெண்ணுவன்கண் ணுனுமினி யான்பாரேன் பகன்முற்
றெவ்வசல மிசைவதிந்தி ராவிலிவன் முன்வந்
துவந்தாடிப் பாடிமனை யெய்தியுண்ணர் கொண்க
ரெவ்வமிகத் தினமுமலை யேறியலுத் தனன்மே
லெவ்வாறு செல்வமெனை வெண்ணிவருந் தமுடன்
செவ்வகையப் பமுநீருங் கொடுவிவைவில் வெயிலிற்
சென்றிடுகான் முட்டைக்கச் சிச்சாயி வீழ்ந்தாள். (க0கூ)

மாயனருள் ளாற்குடுவை தோய்நீருங் கவிழ
மயங்கிவிழுந் தனடேறி வருந்தினடாணடிச்
சேயவுதி ரம்பெருகத் தியங்கினண்முள் ளீர்க்கச்
செறிந்துவரா மையிற்கருங்குள் ளன்செயலென் றோர்ந்தே
யாயவற்கு நான்புரிந்த தீமையென்னே விவ்வா
றரும்பழிசெய் திடத்துணிந்தா னுற்றலிதற் கென்னென்
றேயவிரங் கினள்கண்ணன் றன்படிவத் தொடுமுன்
னெய்தவிவ னிங்கேனேய்ந் தனனிவனைக் கண்ணல். (கக0)

பார்க்கிலன்யா னென்றுபுறந் திரும்ப வங்கு நிற்கப்
பாராள்வே ரெருதிசையின் பாற்றிரும்ப வங்குந்
தீர்க்கமுடன் மேவினன்பின் னுந்திரும்ப நாடுந்
திசைதொறுமே வினன்றேவர் தேர்வரியா னன்னுண்
மூர்க்கமுடன் விழிமூட வுடனகத்துட் டிகழ்ந்தான்
முழுவைரங் கொண்டெனது முற்போந்திவ் வகைய
போர்க்கதஞ்செய் கின்றுன்கங் குலினிறத்தா னென்னப்
புகன்றுவைய வம்மவென்மேற் பொருந்தியதென் சினமே. (கககூ)

என்றினிமை மொழிபலசொற் றென்னைவெறுத் திடலென்
றிருந்தவள்கா வினைத்தொடைமீ தேற்றியனுத் துன்ப
மின்றியம்முட் பிடுங்குபுநோக் கிடவுறுதுன் பொழிந்தா
ளினிதுகண்ணன் றனைநாடி யியம்புவணின் வடிவ

நன்றிதயத் தமைத்தவென்று யகருணவற் றமைந்தார்
நானேகு வேனெனப்பின் னுதனுமெய் திடுசீர்
குன்றிலமை தருதுக்கா ராமர்கண்டு வியந்து
குளிர்நீர்தீ விடமமிர்தங் கூடியுறுந் திறமே. (ககஉ)

கண்ணனுஞ்சிச் சாயியுநேர் கலந்துவர லென்னக்
கருதியரு குறப்பகவன் கழற்றுணைகள் பணிந்தா
ரண்ணறுக்கா ராமரைத்தன் மார்பினிடைத் தழுவ
வன்பர்மனை யுடன்கண்ணற் கன்னமிடென் றேதத்
தண்ணமையோ ரப்பத்தை யிருவருண்ணும் படிநாந்
தருவதெவ்வா றென்றிலச்சை தாங்கிநந்தங் கொண்க
ருண்ணவரு வதினிலுமண் ணிடக்கருங்குள் ளனிவ
னுற்றனன்றேக் கெறிந்திவனுக் கென்பசிவந் ததுவே. (ககங)

ஒருவருக்குப் போதாதோ ரப்பமென்று மான்முன்
னுறவமைக்க வுண்டவன்றுநெளிர்கலத்தி லமுதம்
பெருகநிறைத் தனனுடை மூடினன்சிச் சாயி
பெரிதுதிறந் தனணுடப் பெற்றசுவை யன்ன
மருவிடக்கண் டுடன்பவா னிகொல்லபர வன்கொன்
வகையிதுசெய் தவரென்ன வணங்கிடமா னீதான்
கருதுதெய்வஞ் செய்ததன்று நான்செய்தே னென்னக்
கழறவொப்பா ளிருவருக்குங் கலத்தமுதம் வழங்கி. (ககச)

நீரிலது வாடிடுசிச் சாயியைப்பார்த் தரிதா
னின்கரத்திற் றேண்டிலங்க னீருறுமென்றேதக்
காரியன்மே னியன்காட்டு மிடங்கையா லகழ்ந்து
கலித்தறன்மே லெழவியர்து கலத்தமுத மெய்த
வோரிவியற் றினவனுமிக் கருங்குறள னென்றுள்
ளுன்னிமிகு மாயவன்மை யுடையனந்நா யகரைப்
பேரியற்பிச் சேற்றினன்கை வசஞ்செய்* திறுங் கனத்தும்
பெற்றனனென் னிவன்செய்கை பெரிதும்வியப் பாமால். (ககரு)

என்றுசுரந் திடுநீர்கொண் டளித்தவர்கள் சுத்தி
யியற்றியபின் றுனுமயின் றிருந்தனளப்போதி
னன்றுறுவிட் டலன்றுக்கா ராமருட னிவணீ
நண்ணலினிற் கமுதுகொண்டு நல்கிடச்சிச் சாயி
கன்றுமனத் துயருறலா வின்றுதொட்டிவ் வெற்பின்
கண்ணமையே லெனத்தொண்டர் கழல்வணங்கத் தழுவி
யொன்றுதளி சேர்தரத்துக் காராமர் மனையோ
ரேடைந்து பகவனடி யுன்னியின்புற் றிருந்தார். (ககசு)

---

* இறுங்கு - சோளம்.

சாதுக்கள் சேவைசெய்து மவர்பாத தீர்த்தந்
தனிற்படிந்தன் னவர்கள்புகழ் சாற்றியரு ளன்ப
ரோதுற்ற கீர்த்தனங்கள் கேட்கவருவார்போ
லுறுபோதிற் செருப்பவர்முன் னுறவமைத்து மிங்ஙன்
மீதுற்ற போன்பிற் பணிபுரிந்து சாந்த
வித்தகர்வாழ் நாளில்லின் வெளித்திண்ணை மேவிப்
போதுற்ற ளுயகனைத் துதித்துறுகாற் பாரி
புனைதுகினீத் தனள்சுவர்மேற் பொருந்தினனீ ராட. (கஎ)

அயலமையோ ரேழைப்பார்ப் பனியுடையற் றல்ல
லடைந்திவர்பாலிரப்பமனை யாடையெடுத் தகல்கென்
றுயர்விழியார் காட்டவெடுத் தனளுருக்கு மணிகோ
னுடையவரு ளுமக்குண்டா மெனவோத நங்காய்
பயமுறக்கூ வாதேகு கெனக்குறிப்பிற் காட்டிப்
பயினதிமே வினர்மூழ்கிப் பசனைபுரிர் திருந்தா
ரியன்மனைநீ ராடியுடை வைத்தவிடந் தனிற்பார்த்
தின்றியதாற் றிகைத்திதையா னெவர்க்குரைப்பே னந்தோ ()

மைந்தரிரு வருநதிக்கண் மருவினர்பெண் மூவர்
வாயிலின்மே வினர்கொண்டு மறைந்தார்யாரென்றே
பந்தமுடன் கூவவயல் வீட்டமைந்தா ளொருத்தி
படாமிலையெற் குடுக்கவெனப் பகர்ந்திடுசொற் கேட்டே
னெந்தவகை போயிற்றோ தேரேனென் றிடப்பித்
தேறியவென் னுதரவட் கிட்டிருப்பா ரென்று
ளந்தமறத் துயர்ந்துறுகாற் சம்பந்தி வீட்டா
ராற்றுமணச் செய்திசொல வணைந்தனர்கூ விட்டும். (ககக)

மானமளித் திடத்துயருஞ் சினமுமிகுத் தயர்ந்தான்
மருவுருக்கு மணிபனழன்ம வாய்ந்ததன்று னையினை
யீனமற வவடலைமே விடவியந்து நரருக்
கெய்தரிது கருங்குறள னியற்றுசெய லென்று
தானணிந்தான் மனைமுழுது மொளியெறிப்ப விற்பாற்
சார்ந்தவர்கள் வியந்துவரல் சாற்றியகல் காலை
வேனமைதுக் காராமர் மனையுறிற்சிச் சாயி
வெறுப்பளென்று லயத்திடைவெண் கற்றுளம் புடைத்தே. ()

பாடுமொலி கேட்டுமகள் கரத்திலப்பங் கீரை
பரித்தனுப்ப வுண்டுமுன்போற் பாடிவோரனந்தல்
கூடுறத்தஞ் சிகைபிணித்துத் தூணினிடை கட்டிக்
குலவிரவு தொறுங்கீதங் கூறியமைந் திடுவர்

வீடுறுத்தும் யாத்திரிகர் கால்பிடிப்பர் மால்சீர்
விளம்புநர்வேர்த் திடில்விசிறி கொண்டுவிசி றிடுவர்
நீடுபதி கரின்றுகங் தீர்ப்பர்நக ருடே
நிலவுமெவ ரெதுசொலினு நெஞ்சுவப்பிற் புரிவர். (கஉக)

இவ்வண்ணங் கருணைவிரா கம்பத்தி ஞான
மியலுருக்கொண் டன்பரியை தருநாளொன் றின்க
ணெவ்வமுடன் முதுமறையோ னொருவன்றண் டேன்றி
யேகிடக்கண் டனர்சகியா ரிம்மெனமுன் னேகிச்
செவ்வகையீர் நடக்கமிகத் துயர்கூர்கின் றீர்நீர்
செல்வதெங்கென் முதுகிடையூர்ந் திடுவீரென் றோத
வவ்வந்த ணன்விளக்கி னெய்ப்பொருட்டே குவனென்
றறையமனக் கேகுமினென் றருள்கலம்பொன் கொண்டே. ()

வாங்கிமறை யவனிடஞ்சென் றளித்தாரங் நெய்தான்
மாதமட்டுந் தீராமை யான்மறையோன் வியந்து
ளோங்கியவூ ரார்க்குரைப்பன் யான்கொளினு ளெட்டி
லொழியுநெய்துக் காராம ரொப்பிலருட் கரத்தாற்
றூங்கியளித் திட்டதுபன் னாளமைந்த தென்னச்
சகலருமவ் வாறுகொண்டு சாதமுறக் கண்டே
தீங்கிலன்பர் பாற்பணமும் பாத்திரமு நல்கத்
திரள்பெறக்கா வடியாக்கித் திகழ்கடையிற் சேர்த்து. (கஉங)

வணிகனிடம் பொருளுதவி நெய்விடுதி யென்ன
வகையறியா னெக்கலத்தெவ் வளவுவிட லென்றான்
பணியிலறி துயில்புரிந்தா ருயிரையெல்லாம் புரக்கும்
பகவனரு ளுருக்கொள்பத்தர் பணத்தளவா நெய்யைக்
குணிதமுற வுனக்குத்தோற் றியபடிவார்த் தியெனக்
கூறவவ்வா றேபெய்தான் குலவியநெய்வழிபா
தணிபெறவே சுருக்கிட்டோர் கோலிடைக்கோத் திட்டா
ரவரவர்பாத் திரம்பொன்னுக் கமைவுறுநெய் யீந்தே. (கஉச)

அவரவர்சொல் பணிகண்முடித் தாலயத்தின் மேவி
யரிநாம கீர்த்தனஞ்செய் தமைவாரிச் செயலை
நவமுறுசிச் சாயிதெரிந் தாரார்பாற் பித்து
நண்ணுமென்ன யகரிடத்தி னுடோறு மேவ
லுவகையுடன் கொள்கின்ற தன்றிபெரு தேபோ
லுறுசுமையு மேற்றினிரென் றுளங்கொதித்து வையத்
தவமிகுகின் கணவரொப்புக் கொண்டியற்றி விடுவார்
தமைவெறுத்த லென்னெனத்தை யலர்சாற்ற வமைந்தாள். (கஉரு)

ஒருநாள்சிச் சாயிதுக்கா ராமருட னின்றைக்
குமதுபிதா திவசமுற்ற தில்லிலொன்றின் றென்ன
மருவார்கான் புகுந்தடகு பறித்தணைவேன் வேக
வைத்தவர்க்குத் திருத்தியுறும் வகைசெய்கென் றிதன்
றிருநாமஞ் செபித்தகன்று ரதரிடைகோ துமைதோய்
செய்புடையான் முன்னன்பர் சேர்தரக்கண் டுவந்தே
விருதாவி லெங்குசெல்வாய் நீயுங்கொய் யென்ன
விளம்பிடவாட் டிராளுடனவ் வினையின்முயன் றனரே. (கஉகூ)

அடகுகொண்டொல் லையிலணைவே னெனவகன்றூர்க் காணு
ளகஞ்சினந்து சிச்சாயி யறவைதா ளமைகாற்
கடலனபே ரருட்பாண்டு ரங்கனவர் வடிவங்
கலந்துதிதிக் கானபொருள் களையொர்சிப்ப மாக்கிப்
படரொளிமா முடிபுனைதன் றிருமுடிமே லமைத்துப்
படர்ந்துசிச்சா யியைக்கூவிப் பரிந்தளித்துக் கடையி
னிடமணுகி னன்மூட்டை யவிழ்த்தனணேக் கவதில்
யாவுமமை தலிற்களிப்பெய் தினள்புனலிற் படிந்து. (கஉஎ)

அடுதொழிலின் முயன்றுளங் காதிபுகு மாய
னுடைகலங் கொண்டுறவோ ரகந்தொறுமுற் றழைப்ப
நடுமுறவோ ரதிசயித்துத் துக்காரா மற்கு
நன்மதியின் றமைந்ததன்பி னமையழைத்தா னென்று
கெடுமுலகப் பித்தணைந்தார் யாரும்விரைந் தெய்தக்
கிளருவப்பி லிருத்தியின்சொற் கிளத்தினன்பூ சித்தே
வடுவில்புரோ கிதற்கூவிப் பவித்திரமுந் தரித்து
மறைவிதியிற் றிதிமுடித்து மருவுறவோர்க் கெல்லாம். (கஉஅ)

அறுசுவையன் னம்படைத்துச் சங்கற்ப தீர்த்த
மன்புடன்விட் டவருண்டி யறுதிபினீர் நல்கி
நறுமணச்சந் தனம்புட்பந் தாம்பூல மாதி
நல்கவுற்றூர் சிச்சாயி நன்முகத்தை நாடிப்
பெறுகுடும்பச் சுமையுன்மணு ளன்கொண்டா னினிநீ
பேதுறலென் றிடவகத்திற் பெருகுமுவ கைபளா
யிறுதிபெற வெவ்வகைசெய் வாரெனுநம் பிக்கை
யின்றெனமா யவனன்னம் யாவர்கட்கு மிட்டே. (கஉகூ)

பாத்திரங்க டம்மையெல்லாஞ் சுத்திசெய்வோ னங்ஙன்
படுத்தியவ ரவர்க்கிட்டுப் படிவமறைத் திட்டான்
காத்திருப்பாண் மனையெனக்கோ துமைபறுத்தோர் மனைப்பாற்
கலந்தனர்நா லரிகொண்டு கடுகியளித் திதனு

லேத்தியல்சால் பிதிர்திருத்தி யெய்திடச்செய் கென்ன
வில்லவளிங் கிருந்துதிதி யியற்றியன்ன மிட்டோர்
வாய்த்திடுபித் தாலோமேற் றாளிமொய்க்கச் சுமந்து
வந்தீரென் றிடத்தூயர் மருண்டுகண்ணீர் வார. (கசு0)

பலபலவாத் துதித்தருள்விட் டலபாண்டு ரங்க
பரமதயா நிதிபத்த பாலனநீ வந்தென்
*குலமணைந்து திதிசெய்தென் குலத்தரையுந் தரிக்கக்
கொடியேன்செய் தவமேதோ கூடவிருந் துண்ணு
தலமரவென் றனைப்புறஞ்செய் திட்டதென்னே யுன்னோ
டன்றியருந் தலனென்னு மன்பர்துயர் சகியா
னிலகுதிரு வருளுருக்கொண் டெய்தினனைத் தயின்றே
யிணையிலன்பர்த் தழுவியவ ரிதயமிசை மறைந்தான். (கசுக)

திருந்துதுக்கா ராமரிடை யின்றியரி நாமஞ்
செபித்தமைகால் விட்டலனோர் தினத்திரவி லவர்முற்
பொருந்திமுன்னு ணீநாம தேவனவ தாரப்
போதுசத கோடிகொள்பாப் புகலவிழைந் ததனி
விருந்தவின்ன மைங்கோடி யேயறுபா னிலக்க
மியம்புகென்று னன்றெனத்தா ளிறைஞ்சிநிற்கப் பகவ
னிருந்தயையாற் கடைக்கணித்தா லிங்கனஞ்செய் தேக
வியல்பாக வததசமக் கந்தத்திற் கண்ணன். (கசுஉ)

புரிபால லீலைகளைப் பிராகிருதந் தன்னிற்
புகன்றரிநா ளினிற்கீதம் புரிந்துநிகழ் நாளில்
விரிபொழிற்சிஞ் சுவடிமம்பா சிபாவாப்பேர் மறையோன்
வியன்றேகுப் பதியின்மடம் விசாலமுறக் கட்டி
யுரியகுடும் பத்தொடுமா ணுக்கரொடும் வாழ்வா
னுத்தமர்தம் புகழ்சகியான் மெத்தவமுக் கறுத்தியாங்
தெரிதரப்பா டங்கற்ற சூத்திரனின் னவனைச்
செழுமறையோ ரும்பணிந்தார் தெய்வகலை கற்று. (கசுங)

மறையவனும் மகிமைபெற்ற வெனைமதிப்பா ரில்லை
மற்றவனை வணங்கியுற்றார் மாந்தர்மதி யென்னே
குறைவுறவன் னவனையவ மதித்துநஞ்சீர் வளர்த்துக்
கொள்வேனென் றவர்கீதங் கூறுமிடத் தினிலுற்
றறைபிழைநோக் கினனிருந்தெய் தாமையொரு நாளி
லரிதினத்தன் னவர்பசனை யாற்றியன்ப ரோடு
முறைகனக விமானம்வலம் வரும்போது தாளி
லுறுத்தமுள்ளுன் றினன்றறையி லுருவினர ரொத்தான். ()

* குலம் - வீடு.

தகைகொடுக்கா ராம ரவண் சார்தரத்தா ளிடைமுட்
டைக்கவுடன் பிடுங்கியெறிந் தனர்சாது சனர்க
ணகைமலர்த்தா ளிற்படுமென் றுடன்சோதித் தொழிப்ப
நண்ணுமம்பா சிப்பெயர்கொண் ஞானசூனியன்றன்
மிகைகொள்சினம் படைத்தொருமுட் டடியான்மேலவரை
மிகவடித்தன் னதுமுறிய வேறொன்று லடித்தில்
பகைவிளைத்தான் பின்னொருமுட்டடிகொடடித் தலுத்துப்
பாவிமடம் போய்ச்சேர்ந்தான் பத்தர்சற்றுநலியார். (கரு௫)

அடித்தவன்மே லணுவளவுஞ் சினவார்துன் பமையா
ரணிகொள்விமா னம்வலஞ்செய் தரிதிருமுன் னின்றே
தடித்தமைகார் மேனியவென் றன்னையிங்ஙன் றண்டித்
தனையெனமூன் றபங்கப்பாச் சாற்றக்கேட் டமலன்
வடித்தகண்ணீ ரினனுனன் சிச்சாயி வினவி
வந்துமுள்வாங் கிடமாயன் மலர்க்கண்ழுழு கிடலாற்
செடித்தகைத்துன் பிலரின்பஞ் செறிதருகீர்த் தனங்கள்
செப்பிடப்பா கவதரெல்லாந் திரண்டனரக் காலே. (கருசு)

மம்பாசி யணைந்திலதா லழைத்திடச்சொற் றவனேய்
மருவியுற்று னெனப்பறைத்து மடத்தணைந்து நோக்கி
வெம்பாகு லத்தொடடித் தலிற்கரநொந் தனவோ
மேனியயர் வுற்றதுவோ வெனவிளம்பிப்பணிந்து
பம்பாத ரத்தொடவ னுடம்புமுற்றும் பிடித்தும்
பதத்தடியேன் மிசைகோபம் படைத்ததென்னே யுமக்கு
வம்பாக வபராதி யானேனென் பிழைகண்
மன்னித்துக் கோயிலுற வருதிரென வழைத்தார். (கருஎ)

கேட்டுளநா ணினன்கோயின் மேவியவ ரோதுங்
கீர்த்தனத்தெவ் விடத்தில்வழுக் கிடைக்குமென வுற்றான்
மீட்டுமிசை வீணைமுத லியங்கலிப்ப வவசம்
விரவினர்பா டினரமையும் வேலையன்பர் மனையின்
மாட்டுளமே தியைக்கரவர் கவர்ந்தரைநா ழிகைசால்
வழியமையக் கண்ணனுடன் வறிதிருப்பே னுயி
னீட்டுநங்கீர்த் தனஞ்சொறுக்கா ராமனைச்சிச் சாயி
நிந்தித்துக் கடிவளென்றந் நிசியினிற்றண் டேந்தி. (கரு அ)

கோரவுருக் கொண்டடிக்க வருவான்போ லாதற்
குறித்துளத்தஞ் சினருடனோர் குறுக்குவழிப் படுகால்
வீரமுட னங்குநிற்க வேறோர்திசை செல்ல
விரவுதிசை தொறுமேவ வெருண்டிதுப சாசோ

வாரவரு குறள்கொல்பிர்ம ராட்சசுகொ லந்தோ
வரிநாம மோதுதுக்கா ராமனவன் காரான்
சோரமியற் றிடலினிப்பூ தத்தைவிடுத் தனன்மெய்
தோய்மேதி கொண்டகலிற் றுலைக்குநமை யென்றே. (கநகூ)

விட்டணையுங் காலையினு மெதிரணைபக் கண்டு
வெருண்டுதுக்கா ராமரிடம் விளம்பினன்றி விடாதென்
றுட்டளர்வுற் றூர்கோயின் மேவியன்ப ரடிதாழ்ந்
துளவுரைப்பக் கேட்டவர்க ளுள்வியப்புற் றமைந்தார்
சிட்டருடன் விட்டலனைச் சிந்தைசெய முன்னஞ்
சேராமை யாற்றிருடர் செப்புசொன்மெய் யெனக்கொண்
டிட்டமுடன் பலவாறு துதித்தென்முறை கேளா
யிளமையிற்கொள் பசுக்காப்பி விச்சைகொண்டெய்த்தனையால். ()

அருணனுத யப்பதத்து மாரதிகொள் வானீ
யணையாத தென்னெனப்பே ரன்பர்மிகத் துதிப்ப
மருவுதண்டத் தொடுபாண்டு ரங்கன்வரக் கண்டுண்
மகிழ்ந்துகர வரைப்பார்த்தம் மகிடம்விரும் பினிரேல்
வெருளறக்கொண் டேகுமென வவருயிரோ டெமக்கு
விடையளிக்கிற் போதுமென்றூர் விதமிவைமுற் றோர்ந்தே
யிருணிறையா ணவங்கொண்மம்பா சிப்பெயரோ னொணி
யிவர்மகிமைக் களவிலையென் றனன்செருக்கற் றியைந்தான். ()

அன்பருட னாரதிசெய் திந்திரா யணியி
லாடியரி பூசைசெய்கா லறிந்தவர்சிச் சாயி
முன்பணைந்து சாற்றுதலு மேதிகட்டா தமைபு
முறைமையுநா டினளுவகை முயங்கினளாய்க் கணவற்
கின்பமுட னடகப்பம் பாலொருவள் ளத்து
மிசையவமைத் துபசரித்துண் டிடுதிரென வோத
வென்பரிவின் றமைந்ததிவட் கென்றுமனை வியைப்பார்த்
தின்புடன்பா லொருவள்ளத் திவ்வகையீ வாயேல். (கசஉ)

நித்தியம்விட் டலற்களிப்பே னெனவிரைந்தோர் செம்பி
னிறைத்தீய வரிக்களித்தின் னேர்ந்துபுசித் திருந்தா
ரித்திறநேர் கான்மனையிற் பாறயிரின் றுக
வியல்கருங்குள் ளற்களித்த வியல்பலவென் றுன்னிப்
பைத்தியராந் தந்தையின்பின் னுடொறுங்கோ யிலிற்சார்
பாவைபகீ ரதியுடன்மால் பால்குடித்தன் மெய்யோ
சத்தியமோ தெனவாந்துப் தெந்தைக்கு நல்குஞ்
சாதமென நானொருநாள் சார்ந்தறிவே னென்றே. (கசங)

செம்பிடைபால் கொண்டணைய விட்டலனன்பகத்துட்
சிறிதிலணல் கிடுபாலார்ந்தி டுதல்விதி யலநாழ்
வெம்பியகற் றிடிற்றுக்கா ராமனைப்போய் மாற்றம்
விளம்பினையென் றனள்சினந்து வெறுக்குவளென் செய்வேன்
வம்பிதனுக் கென்றுன்னி யமைதருகால் வெப்ப
மலிதருபா லூட்டவிதழ் கொப்புளிக்கச் சென்னி
கம்பிதமுற் றிடுதலிற்கண் டங்கோண லமையக்
கண்டுகல்பால் குடித்ததுயிர் கலந்துளதோ வென்றாள். (௧௪௪)

பாண்டுரங்கன் முகநாடி யிதழிடைகொப் புளித்த
பண்பறிந்தாச் சரியமிகப் படைத்தனளே குங்கான்
மாண்டுலங்கு மன்பர்மன வெளியினிற்றேய்ந் தென்னை
வன்பகைவ னுநினைத்து வைதிடுநின் மனையை
யீண்டுறப்பால் கொடுவரநேர்ந் தாய்சுடவுண் டதனு
லிதழிடைகொப் புளங்கொண்ட தென்னவுளங் கலங்கி
யாண்டுறுபன் னியைவினவ நீர்புகல்கீர்த் தனத்தி
லாறிருயோ சனையகல மமைந்தகனற் பரப்பை. (௧௪௫)

விருந்தையெனு மவ்வனத்தோ டுண்டனனென் றீரென்
மென்கையிற்கொண் டணைந்தவிள வெப்பமுறு பாலை
யருந்தலிற்கொப் புளமமைந்த தென்கின்றீ ரிதின்மெய்
யாவதெது சாற்றுதிரன் னதுபொய்யா கிடுஞ்சீ
ரிருந்தளியிற் போய்க்காண்மி னென்னவொன்றே திலர்சென்
றிதழமைகொப் புளங்கண்டா ரிதயமிசை சகியர்
பொருந்தகில முண்டவநிற் கிதுவருமோ வென்று
புலம்பிடக்கொப் புளமாறிப் புகல்களமிந் நாளும். (௧௪௬)

கோணியது செவ்வைபெறு தியல்சிலையூ டுருட்சீர்
குலவாதென் பவர்கள்சென்னி கோணவவிர்ந் துளதே
மாணியலச் செய்கையறிந் தன்பர்மகிழ்ந் திற்பான்
மருவினரோர் நாணிசியில் வனத்தமைகான் மசகந்
தேணிலையின் மொய்ப்பவருந் தினரிவையுண் பயனந்
தேகமுற்ற தாலிவைசெய் திறநலமென் றரிபொற்
றுணினைத்துற் றார்சகியான் மாயனக்காற் பதிகன்
றூனெனக்கை யிடைதோகை தாங்கியசைத் திருந்தான். (௧௪௭)

வைகறையெய் தலுமன்பர் தேகுவிற்போய் நானம்
வயக்கிநித்தக் கடன்முடித்து மால்புகழ்ச்சீ ரோதி
மைகலந்த விரவிலரி கோயிலிற்போய்க் கண்ணீர்
வார்தரக்கீர்த் தனம்புரிந்து வருசாம நான்கின்

மெய்கவிஞ ரதிபுரிந்து வாழ்ந்திருந்தா ரக்கான்
மிக்கமகா தேவன்விடோ பாவெனும்பேர்ச் சுதரி
லகவின்ற மூத்தசுதன் றனக்குக்கல் லடைப்பா
* மாமயந்தோய் தலின்வருந்த வன்னைகண்டாற் றளாய். (கசஅ)

திருந்துமுப சாந்தியொடௌழ் தம்புசிப்பித் திடவுந்
தீராதா யுணவொன்றுஞ் செல்லாதா யயர்காற்
பொருந்துமயல் வீட்டவள்பாற் சிச்சாயி யானென்
புரிவனென்னு யகர்பித்தாய்ப் போந்தாரின் னவனென்
றருந்துகிலான் மரிக்குநிலை மேவினனென் றுரைப்ப
வவளணைந்து பார்த்துன்ற னன்பாரி பசனை
புரிந்திடவுன் னிடுநாளே போந்ததுதுன் பின்று
புலம்பியென்னை பயனென்னப் பொங்குசினத் தினளாய். (கசகூ)

எனதுகொண்கன் றனைவசஞ்செய் தென்குடும்பங் கலங்க
வியற்றினனெஞ் செனவுடலு மிருண்டகருங் குள்ள
னெனவிகழ்ந்து பலபடவை தனளிருப்பச் சுதனீ
ரிறங்கிலனுய்த் தவித்திடல்கண் டெய்துதுன்பங்கோப
மனமிசைதாங் காள்சுதன்வாழ் வதினுமிறந் திடலே
மாண்பவன்மே லெறிந்துமடித் திடுவேனென் றுறுகாற்
கனபகையாத் தன்னைநினைத் தணைதருசிச் சாயி
கருத்தறிந்து பாண்டுரங்கன் கமலையுடன் புகல்வான். (கரு0)

என்புரிவேன் சிச்சாயி வந்தனள்பா லகனை
யென்மிசைவீ சிக்கொல்லின் யார்க்காமிப் பழியென்
னன்புடையாய் பகர்தியென வோதிடமா யன்றன்
னணிமுகம்பார்த் தம்மைசொல்வா ளகிலமெலா நொடியின்
முன்புபடைத் தளித்தழிப்பீர்க் கித்தகுதுன் பென்னீர்
முன்னிலச்சே யுயிருடலின் முயங்காதோ விதற்குட்
டுன்புளங்கொண் டெனைவினவுஞ் செய்கைவியப் பென்னத்
துணைமகனை யெறியவயற் றேய்ந்தனள்சிச் சாயி. (கருக)

உடனென்மிசை யெறியேலென் றெருசொலொலித் திடக்கேட்
டுறுசிலையல் லதுபிறரில் லாமையினுள் வியந்து
நடலையொழிந் தனணிற்ப வம்மையுன்சேய்க் கின்ப
நண்ணியதே கெனமைந்த னுன்பசித்தே னெனக்கேட்
டடலுறுகல் லும்பேசிற் றிதுதெரிந்தே கொண்க
ரகமயக்குற் றனரிவ்வா றுற்றிலனே வின்னேன்
றிடமனஞ்சற் றிரங்கான்மா மாயைவல்லா னென்னச்
செப்பிமனை போந்துணவு சேய்க்கருத்தி யமைந்தாள். (கருஉ)

---

* ஆமயம் - நோய்.

இன்னசெய றெரிந்துதுக்கா ராமர்மிகு சிரம
மிவளிறைவற் கீந்தனளென் றிரவினிலா ஷயப்பான்
மன்னவவண் கங்காசி மவாளர்சொல்கீ தங்கள்
வரையவல்லா ருடன்பாடல் வகுப்பார்சாங் கணப்பேர்
நன்னகர்வாழ் சந்தாசி வணிகர்மறை யவர்க
ளனிசூழ வந்திவரை நனிபணிந்தூ ரமைந்தார்
பன்னருமின் புறநாளும் பாடினமால் களித்துப்
பயில்சாமந் தொறுந்தழுவப் பணிந்தாரா தித்தார். (கருக)

பின்னுருக்கு மணியொடரி துக்காரா மருக்குப்
பெரிதுபதே சம்புரியப் பெட்டனனென் றிடத்தாய்
பன்னுவள்வீ டணனநும ஞதியர்நின் னருளாற்
பாரில்விளி யாநிலைமை பற்றினரந் நிலைமை
மன்னுமது பக்குவந்துக் காராமன் மேவில்
வழுத்துகென நன்றென்று மாகசுத்த தசமி
துன்னுகுரு வாரத்திற் றுயில்கனவி லன்பர்
தூயநதி படிந்துகையிற் றுளவலங்கல் கொண்டு. (கருச)

விட்டலனுக் கணியவருங் கான்மறையோ ஞமுன்
மேவவன்பர் பரவசராய் விரைகொடுழாய் மாலை
யிட்டடிதாழ்ந் தேத்தமறை யவனுவந்து சென்னி
யிடைகரம்வைத் தருணமிசைத் திவுப தேசஞ்
சிட்டர்கட்கோ திக்குருப ரம்பரைத வாதே
செழித்துறச்செய் தியெனவன்பர் தேசிகர்தாள் வணங்கி
யிட்டமொடென் மனைபவித்தி ரத்தகைதோய் தருமா
றெழுந்தருளி யென்பொருள்சற் றேற்றயின்றின் புறுவீர். (கருரு)

எனமறையோன் காற்சேர் செய் யானுவக்கும் வண்ண
மீயில்வரு வேனெனநன் றெனவழைத்தே கினராய்ப்
பனகநிகர் சிச்சாயி பான்மொழியச் சினந்திப்
பார்ப்பானெங் கடைந்தனன்யான் பதிசுதர்க்குப் பானெய்
யினமரிதா கிடத்துயர்வே னெங்ஙனமீந் திடுவே
னியல்பித்த ளைக்கலங்கள் யாவுமொழிந்தனவே
கனமுறவிற் றளிக்கவுமோ டன்றியிலை யிற்பாற்
கலந்தவர்க்கெல் லாமுணவு கனிந்திடவென் செய்கேன். (கருசு)

மக்களும்யா னும்வயிறு வளர்ப்பதரி தாக
வாய்ந்துறவந் தவர்கணெய்பால் வழங்கெனநா டொறுமென்
பக்கல்வந்திப் படிவருத்தன் முறையோவென்றுரப்பப்
பயந்துமறை யோரகலப் பதத்திலன்பர் விழித்தே

மிக்கவருந் தினர்சனனக் கடல்கடத்தா ரியருள்
விரும்பு நெய்யீந் திலனென்னுள் விரவுமன்பித் தனையோ
புக்கவருட் கேசவசை தன்னியனே யென்னப்
புலம்பியன்பர் மூன்றுகவிபு கன்றுவப்பெய் தினராய். (கருள)

உயர்தவத்துக் காராமர் பின்புதம்பா லடைவோர்க்
கொப்பறுமம் மறையுபதே சித்தனரன் னவர்பா
னயவுபதே சங்கொள்வார் சொற்பனத்துந் துக்கா
ராமரணைந் தின்னமுநன் னலக்கட்சி யளித்தே
மயலொழித்து வாய்ந்தனர் மெய்த்தெண்டரதன் பின்னர்
மனைவிகன வினுமின்மொழி வழுத்துகிலா ளிவள்பா
லியலினடி யார்திறத்தி லபராதி யாவே
னெனத்துறந்தோ ராரணியத் தெய்திபின்புற் றிருந்தார், (கருஅ)

வேறு

பகலெலாமரி கீர்த்தனங்கானிடை பகர்ந்தமைந்திரவூடே
நிகரிலானுறை கோயிலில்யாமஞ னிகழ்த்தியாரதிசெய்தே
சுகமொடாதவ னுதயத்தினதியிடைதோய்ந்துகானிடஞ்சேர்ந்தே
துகளிலார்வலிந்துணவளித்திடிவிறை துய்த்தனரமைகிற்பார். (கருகூ)

மனைபுகாதிங்ஙனிருமதியுறமனை வருந்திமற்றவர்பாலென்
வினைகொலோபதி பித்தாய்ப்பதிபுக்கும் வியன்மனையிடமேவார்
தனையராதிபர் வாஞ்சையில்லாரெம்மோர் தரித்திரத்திநாடா
ரெனைசெய்வேனென்பா ளோர்தினம்புனல்கொள்வா ணிந்திராயணியெய்த. ()

நதியிலன்பர்மூழ் கிடக்கண்டாளிருமதி நழுவியுமனையெய்தீர்
வதியும்பாலரும் யானுமெய்த்துறவுண்டு வாழ்ந்தனிர்யாஞ்செல்லுங்
கதியுரைக்குதி ரெனமடிபற்றிடக் காதலருயிர்க்கெல்லாந்
திதிசெய்மாயனுந் திருவுமீன்றோரெனச் சிந்தைசெய்துறுவீரேல். (கசுக)

குறையுமக்குறு தென்னநீர்மனையிடை குறுகுதிரெனக்கூவ
வறையுமென்மொழிப் படிகடவேனென வாணைநீசெய்வாயே
லுறையுளெய்துவ னெனவியற்றிடலினுற் றிரவிற்பாடிடல்கேட்பா
னிறையச்சற்சன ரவரையென்மனைக்கணீர் நேரவிரெனவைதாள். (கசுஉ)

அன்பர்மால்புக ழிவர்வினவிடிலுனக் கழிந்ததென்னலமன்றோ
வுன்பணித்திறம் விட்டுவந்திவைசொல லுசிதமன்றெனச்சென்றாள்
பின்பவண்புகப் பயந்தனர்யாருமப் பெற்றியோர்க்தொப்பில்லார்
வன்பமைந்தசிச் சாயிபால்யானிவண் வழுத்துகீர்த்தனங்கேளாய். (கசுஙு)

எனமறுத்திடி லாணைபோமென்றமைந் திசைந்தகாலையிற்சொல்வார்
கனவைநேருடல் சதமன்றுவீணினீ காலம்போக்கேல்பொன்னுந்
தனயருஞ்சொந்த நமக்கென்றுன்னிடேலரி தன்பொருளாம்யாது
மனகவிட்டல னேயனைபிதாகுரு வமையுந்தெய்வமுமாவன். (கசுச)

அவனையேசரண் புகிற்புகழ்கதிமுத லானவின்பமுமெய்து
நவநிலாவுடை யூண்பணிதேடிநீ நடலைகொள்ளலையின்றூ
புவனிபோற்றுமே காதசிநாளையிற் திராயணிப்புனன்மூழ்கி
யுவகையோடுநம் பொருளெலாமரிபத்தர்க் குதவியுள்ளன் பெய்தி. (கசுரு)

வள்ளலாகுநம் விட்டலன்பொன்னடி மனத்திருத்தினைவாழென்
றுள்ளமேலருள் சுரந்துசெய்புள்பதி னென்றிறுலுணர்வெய்த
வின்ளவன்னது பூரணபோதப்பேர் விரவியதனைதயோர்ந்தோர்
கள்ளமாயையவன் றொடக்கறுவிரத்தியுட் கலந்தனள்சிச்சாயி. (கசுசு)

வினவியாதித்த னுதிக்குமுன்மூழ்கினள் விரத்திமிக்குற்றாளாய்ப்
பனவர்கொள்ளவிற் பொருளெலாம்வழங்கினள்பழையகந்தையைக்கட்ட
மனதவாவிலெய் யிலிலுலர்த்துழிமலர் மகள்புலைச்சியைப்போல்வந்
தனகவன்பர்முன் வந்தொர்வத்திரமெனக் களிக்கிற்புண்ணியமெய்தும். ()

என்னமுன்னுலர் துகிலளித்தியார்க்குநா னீந்ததாப்பகரேல்போ
மன்னலீண்டென வஃதுணர்மக்கண்மா தாவிடமணைந்தோதக்
கொன்னருட்பத்தர் சொன்மறந்தனள்சினங் கொதித்துவந்தென்றுதன்
பன்னலானசொற் கிசைந்தனனக்கரும் பாவிதாணினைத்திட்டேன். (கசுஅ)

நினைக்குமுன்மனைப் பொருளெலாம்பரிதிமுன் னேரிருட்டொகையேபோ
லனைத்துந்தீர்ந்தவா விதில்வருந்தீமையென் றயலுளார்சொலன்மெய்யே
யெனைக்குலத்தொடு கெடுத்தவனடியையா னின்றொழிப்பேனென்று
வினைத்தொடக்கினு ளொருபெருங்கற்கொடு விரைந்தனடளியெய்த. (கசுகூ)

பாண்டுரங்கனுன் னடுங்கினனலர்மகள் பாற்சொல்வானிவள்கற்கொண்
டீண்டுவந்தன ளஞ்சுறுளிருபதத் திடுவள்யானென்செய்கேன்
மீண்டுபோதரப் புரியென மலர்மகள் வெஞ்சினத்துடனெங்கோன்
மாண்டுலங்கடி முறிப்பவெய்தியதேவன் வகுத்தியென்றிடச்சொல்வாள்.

எனதுநாயகன் சாற்றலினின்றிரா விறையுளெண்ணினேனஃதா
லினனுதிக்குமு னெனதுமாற்றுடையுமற் றின்னலெய்தினளுஞ
மனதிறுடுவார்க் கெவைபுருவாதலின் மற்றவன்பதந்தன்னைக்
கனமிகுங்கல்லாற் சிதைக்கவந்தேனெனக் கமலைநின்வாழ்வெண்ணி. ()

உளம்வருந்தலை யெனச்சதவிராகனே டுடையினங்களுமீய
வளமுடன்வரும் போழ்தன்பர்வினவினர் வகைதெரிந்தவைகொண்டே
பளகிலாமறை யோர்க்களித்தொருசில பாரிக்கீந்தவணீங்கிச்
சளமிலார்புனு வடைந்தொர்செட்டியினில்விற் றங்கிக்கீர்த்தனஞ்செய்தார்.

அன்னபண்பறிந் துடன்சிவாசிப்பெய ரரசன்காதலுற்றேனு
மன்னங்நாட்டிற்றன் பகைவராமிலேச்சர்கண் மருவலினுருமாறிக்
கொன்னமைந்ததுக் காராமர்க்கண்டுளங் கொள்ளரும் வியப்புற்றே
பொன்னடித்துணை போற்றிமோகராவினம் பொலன்றட்டின் முன்வைத்து,

துதித்துநிற்கப்பொன் மணுளனையன்றியான் றேய்பொருள்பிறவற்றை
மதித்திடேனின தஸ்புதாரம்புகழ் வழுத்தமுன்கேட்டுள்ளே
னிதிக்கணுசையெற் கில்லையெற்குவகையு ணிரப்பவேட்டனையென்னிற்
கதிச்சுகந்தரு துழாய்த்தொடைபுனைந்தேகா தசிவிரதங்கண்டே. (களச)

பாண்டுரங்கன்று ளடியவனெனும்பெயர் படைத்தியென்றிடமன்னன்
மீண்டுமன்பர்தாள் வணங்கினன்கீர்த்தனம் வினவியுற்றிடுகாலை
கோண்டுலங்குமி லேச்சமன்சிவாசிதான் குறுகல்காவலராற்றேர்ந்
தாண்டுவீரரைச் செலுத்தவன்னவர்வளைந் தவையுளாய்ந்திடுமேல்லை. ()

மன்னனுண்ணடுங் கினன்வெளியெய்திடும் வகையறிகிலன்சால
வின்னலுற்றவா றோர்ந்தன்பரிவனையா மெவ்வகையாற்காப்ப
தென்னவிட்டலற் றுதித்துன்கீர்த்தனம்வினு யிருக்குமிம்மன்னற்கு
மின்னவாபத்து வருவதோவளவிலன் பென்கண்வாய்ந்தெய்துற்றேன். ()

முடியிலென்கதி யன்னதேயென்றன்பர் மொழியவிட்டலன்மன்னன்
படிவுடன்வெளி நின்றுசிவாசியான் பதிபுகுகின்றேனென்
றிடியிலார்த்தன னிவர்பரிசெலுத்திட வியன்றவீரர்கள்பின்னே
கடிதுசென்றனர் மறைக்குணர்வரியவன் கயவர்கைப்படுவானே. (களஎ)

மன்னனேடுறு வீரர்தந்திரளையு மதித்துநோக்கிடுமாந்த
ரின்னநாள்கொல்சி வாசிமன் னவனுயிர்க் கிறுதிநாளெனவுன்னி
யின்னலுற்றனர் பற்றுபற்றெனப்பிற கேகுநர்வீரஞ்சால்
பன்னரும்பல ராகுநங்கைக்கவன் பட்டிலனேயென்னு. (களஅ)

ஓடியெய்த்தன ரெட்டிடாமையிற்களை யுற்றுநின்றிடமாயன்
கூடிடுந்துருக் கரையிம்மட்டினில்விடல் குணமன்றென்றருதற்றே
வாடிநிற்குநீர் மாதர்கொலலிகள்கொல் வகுத்திரென்றிடமான
நீடினுர்தொடர்ந் திடப்பரன்முண்ணிறை நெறியிடைப்பரியுய்த்தான். (களகூ)

முண்ணிறைந்துள விருக்கங்களவயவ முற்றிலுஞ்சிதைவெய்தப்
பண்ணிடக்கரு கிருளிடையதரெனப் பாழ்ங்கிணற்றுள்வீழ்வார்
புண்ணியத்திருத் தொண்டர்கணடுக்குறப் புன்கணுற்றியபாவ
மண்ணின்மீதிலிப் பயனளித்ததுபெறு மறுமைக்கென்னுமென்பர். (கஅ0)

இன்னவாறுபஃ றுயரடைந்தனரதற் கிணைதுக்காராமப்பேர்
மன்னருட்டவ ரன்பரின்புக்கிணை வகுக்கலாமெனிலஃதும்
பன்னலாகுமற் றவரைவிட்டொப்பறு பாண்டரங்கன்றெண்டர்
நன்னலச்சபை மேவிக்கீர்த்தனம்வினுய் நாடகம்புரிந்திட்டான். (கஅக)

படியிலான்புரி நடனங்கண்டவரெலாம் பரவசத்தினராகி
விடியுமேல்வையா ரதிசெயவணங்குபு விடைபிரசாதம்பெற்
றெடிவில்சீர்ச்சிவா சிவேந்துநாட்டின்புடை யுறக்கண்டார்வியப்புற்று
முடிகொண்மன்னநிற் றெடர்ந்தவீரர்களேவண் முயங்கினர்மீண்டேநீ. ()

அன்பர்கீர்த்தனம் வினவவந்திட்டதெவ் வாறெனவராசானு
வின்பமேவுபாண் டுரங்கவிட்டலன்செயல் யாவுமென்றனன்போனான்
பின்பவிந்தவர் நோவிந்தர்கண்மிகு பீழையொடேவுற்றோன்
முன்பணிந்துதங் துயர்மொழிந்தவன்றனை முற்றுதுன்பிடையாழ்த்தார். ()

சிவாசிமன்றுக்கா ராமர்தம்மகிமைதன் சிந்தையுள்வியந்தானாய்த்
தவாதுநாடியன் னவர்க்குநானியற்றிடத் தகுபணியெதுசெம்பொன்
னவாவிடாருனும் பொருடரிற்கொள்வரென் றடல்கொள்சேவினிலேற்றி
யுவாவைநேரரு ளன்பரைவணங்கின னுமக்கமுதுக்கென்றே. (கஅச)

கொணர்தலாயின வீதெனவுபேட்சிக்கிற் கொற்றவனயர்வாலொன்
றணவுறுஞ்சிச்சா யியையழைத்துறுமர சளித்தநெல்விதிவிற்றை
யுணவுக்குக்கொடு மிக்கதைவேதியர்க் குதவெனச்சினமேவி
யிணர்கோனான்முகன் விதியெனத்தன்சிரத் தெற்றினளிசைக்கின்றாள். ()

அயாசிதத்தினிற் சிவாசிவேந்தளித்திட லால்வரும்பொருளீதை
வியாகுலம்பெறு தியானுமென்மக்களு மிசைதரச் சகிக்கில்லீர்
ஙியாதிமிக்குறப் பிராமணர்க்களித்திடக் கிளத்தினிர்நும்முள்ளத்
தயாவுநன்றென யாவையுங்கொண்டில்லிற் சார்தாவமைத்திட்டாள். (கஅ௬)

தாளம்வீணையா தியவுறத்தாசர்கீர்த் தனம்புகன்றமையேல்வை
நீளகங்கொள்பத் தியின்வளைவிற்பவ னேர்ந்துகேட்பான்றேயோர்
நாளவன்சுதன் மரித்திடுநிலையின் னண்ணலோர்ந்துதங்கான்
மூளகங்கொள்கா தலிற்செலமனைவிகான் மூளபிழைத்திடான்போன்றான். ()

இன்றுசெல்லவி ரெனத்தடைபுரியவு மெண்ணலனவையெய்தி
நன்றுகீர்த்தனம் வினவினன்குழவியை நாடலனுறுபோழ்திற்
பொன்றுறச்சுதன் மனையெடுத்தவைபிடை போந்துதுக்காராமர்
முன்றுதைந்திடக் கிடத்தினளிவ்வகை மொழிவளெம்முன்னோரில். (சஅஅ)

யாருமிக்கதை கேட்டிலரென்பதி யிதுவினவிடுநீரா
லேருறுஞ்சுத னிறந்தனனெனப்பழி யிசைப்பவாண்டுற்றோர்கள்
சீருலாமரி கதைதடைபடுதலிற் றிகழமுதுண்கான்மண்
ணாருமன்னதில் வீழல்போற்பிணத்தைக்கொண் டணைந்தனளிவளென்னா. ()

இங்குநீயிது கொணர்தலாலோர்பய னின்றுதுக்காராமர்
சிங்குமாவிவர் திடச்செயுஞ்சுதைகைவைத் திட்டனரிலைபித்தின்
முங்குகோதைபோ வெனவருளன்பர்தா மொழிவர்பற்றறுமேலோர்
நங்குசீரரி நாமவாரமுதுக்கு நொய்யராகியவானோர். (ககூ0)

அமுதபொப்புறு திந்திராதியரிதை யறிகிலாதனுனீர்
*குமுதமுற்றிட விட்டலனமத்தைக் கூறுவிரெனிற்சேய்தான்
சமுசயப்பெறு துயிர்த்திடுமெனவங்ஙன் சாற்றினரக்காலை
சமுகமேவுபல் லியங்களுமரிபெயர் சாற்றியால்வடிவெய்தி. (ககூக)

* குமுதம் - பேரொலி.

விளங்கிச்சேயுயிர் பெற்றெழல்கண்டகம் வியந்துமற்றிதுமாயன்
வளங்கொளாடலென் றுவந்தனர்வாழ்த்தினர் வளையல்விற்பவடானு
முளங்கொடன்பதி யரிகதைவினவலி னுறுபயனீதென்றே
கிளர்ந்தவோகைய ளன்பரைவணங்கினள் கீர்த்தனம்வினவுற்றாள். (ககூஉ)

ஈதறிந்தரி நாமமாட்சிமைபுணர்ந் தியாருமன்பமைந்தாராய்ப்
போதமிக்கவர்ப் போற்றினரன்பர்மால் புரிசெயலெனச்சாற்றி
யாதரத்தொடா ரதிபுரிந்தனரிவ ரன்புகண்டருண்மாயன்
காதன்மிக்கன்ப ரோடயின்றமைந்தனன் கலந்ததுபுகழெங்கும். (ககூ௩)

பகருமேல்வைசிஞ் சுவடியந்தணர்கண பதியுபாசனையுள்ளோர்
நிகழுமிச்செய லுணர்ந்துநாமறைமுறை நியமபூசனைசெய்துஞ்
சுகமுறக்கண பதியைமுன்கண்டிலஞ் சூத்திரக்குலத்தோன்பாற்
றிகழுமாயனுண் பானெனவுலகுளார் செப்பினர்மெய்யாமோ. (ககூச)

மற்றவன்றனை யழைத்துநாம்வாய்மைபை மதித்தறிகுதுமென்றே
பெற்றவேதியர் தலைவன்சிந்தாமணிப் பெயரினனுடனேயோ
ரொற்றன்பாற்றுக்கா ராமனையெம்வயி னுறவழைத்தெய்தென்னச்
சொற்றனுப்பவாள் வருமுனுள்ளுணர்ந்தவண் டோய்ந்தெதிரவற்கண்டே.

அவன்சொல்செய்தியை வினவிச்சிந்தாமணி யந்தணன்மனைசார்கா
னவம்பொருந்துமன் னவன்புனல்படிந்துவி நாயகன்றனைநெஞ்சுட்
டவம்பொருந்துமா னதத்திற்பூசனைபுரி ததியினந்தனங்காப்போன்
சிவம்பொருந்துறச் சுத்திசெய்யாதுறுந் திறநினைவிடையெய்த. (ககூரு)

அவனைத்தண்டனை புரியப்போமனந்தனை யகற்றிப்பூசனையாற்றி
யுவகையிற்புறம் போந்திடவஞ்சலி யுஞற்றினருறுதொண்டர்
நவமுறுஞ்சிந்தா மணியெதுபோழ்திவ ணண்ணினிரெனக்கேட்பக்
கவளகுஞ்சர முகனைநீர்நினைத்தமை காலையிற்சினமேவி. (ககூஎ)

மலர்வனம்புக்க போதில்வந்தேனென மற்றிவர்தமைப்பார்மே
விலகுமாந்தர்மெச் சிடுதிறமேற்பதே யினியிவரொடுமாய
னலமுறப்புசித் திடுதிறமாத்திர நானுணர்தற்பாற்றென்
றலகிலாமறை யோரமைபந்தியி லன்பர்க்கோரிலையிட்டார். (ககூஅ)

அதுதெரிந்தரு ளன்பரென்னுடனிருந் தரியுமுண்பானஃதாற்
சதுமெனவிரண் டிடுமெனவந்தணர் கடாவுவரிழிசாதி
முதுமையாரொழுக் கற்றவுன்னுடனெங்ஙன் முகந்தனுண்பானென்றார்
சதுர்மறைக்குலத் துடலொழுக்கங்களாற் றான்வசப்படான்மாயன். (ககூகூ)

சித்தசுத்தியி லடைதருபத்தியிற் சேர்வனாலுணர்வீரென்
றுத்தமப்பெரி யோர்சொலவுடனமைத் துண்டியிட்டனரக்கா
லொத்தவேதியர்க் குருவுகாட்டாதுமா லுணப்பொருள்குறைபண்பான்
மெய்த்தகைத்தென வுணர்ந்திழிகுலத்தன்பான் மேவிமாலுண்பானேல். ()

உயர்குலஞ்சுசி லங்கொணம்பானுண வுரூன்கொலைங்கரனென்றே
யியல்குலச்செருக் கினர்கணபதிமுன்போந் தினிதுபோற்றினரெய்தான்
மயலணைந்தனர் புறத்தினில்வந்தன்பால்வகுப்பர்மோல்போலெலங்
கயமுகத்தனை யழைத்தியென்றிடநன்று காட்டுவேனென்றனன்பர் (௨௦௧)

வறிதுசற்றுறக் கண்டுவேதியரென்னீ வரவழைத்திலையென்னச்
செறியுமுடிகத் தேறுநனிதுதகி திகழிம்மூர்த்தத்தில்லை
மறிதிரைக்கட விற்றுயர்ந்திடுமொரு வனைப்புரந்திடப்போனான்
சிறிதுதாழ்மினென் றனர்விநாயகனிலை தெரிந்துதோத்திரஞ்செய்ய. (௨௦௨)

கணபதிப்பிரா னெப்தியுண்டனனுடன் காணுதிரெனவோத
மணமமைந்தலுண் குறைதல்கண்டுவந்தவன் மன்னுகோயிலிற்போந்தர்
தணர்கணுடிகால் வத்திரநனைந்துறுந் தன்மையிற்பிழிந்தஃதை
யுணவம்போதிரீ ராயுறவெளியணைந் துரைத்தவர்தமைநோக்கி. (௨௦௩)

தெய்வராசிய மிவ்வெலாமெவ்வகை தெரிந்தனையெனயாவு
மைவனப்புறு விட்டலனருளென வகுப்பவந்தணரோரெண்
கைவரும்பிர மாதியர்தமக்குநின் காட்சியின்றெனவாழ்த்தி
நெய்வயங்கிய குளமெனவவர்சொலு நிகரில் கீர்த்தனங்கேட்டே. (௨௦௪)

ஒழுக்கமுங்குல மும்பெரிதென்றுளத் துன்னிடுஞ்செருக்குந்தம்
விழுத்தகைத்தரி சனத்தொழிந்தனமென வியந்தனர்விதந்தேத்தப்
பழுத்தஞானமெய்த் தொண்டர்தாம்விடைகொளப் பனவரின்னொருகாலெஞ்
செழுத்தகைப்பதி புகுதிரென்றிரப்பத்தஞ் சிந்தைபொப்பினர்சென்றார். ()

வழியிலோர்கழைக் கொல்லைபுளான்கண்டுன் மகிழ்பரவசனாகிச்
செழியதன்குடி லெய்துறவழைத்தன்பு சேரப்பூசனையாற்றிப்
பிழிகருப்பஞ்சா றன்பினிலுதவலிற் பெருகுபத்திமைக்கொப்பிப்
பொழியருட்கணார் நகரமற்றவனுளம் பொங்குகாதலுற்றேனாப். (௨௦௫)

மைந்தர்கட்கெனக் கரும்பொருகட்டவண் வழங்கக்கொண்டணைகாலை
முந்தவாட்டயர் சுதர்க்கெலாமளித்தொன்றை முயங்குமில்லாட்கீப்ப்
பந்தமார்சுமைக் கழையெலாமுன்னுறும் பாலர்க்கீந்திஃதொன்று
நந்தம்பாலர்க்குக் கொடுவந்தீரெனச்சின நண்ணிமற்றதுகொண்டு. (௨௦௭)

முதுகின்மீதடித் திடவதுமூன்றென முறிதரச்சினமில்லார்
மதுரமென்மொழி கொண்டுசாற்றுவர்நிற்கு மைந்தர்க்குமெனக்குந்தான்
கதுமெனப்பங்கிட் டளித்தனன்விட்டலன் களிப்பினுண்குதியென்ன
வதுலர்தந்திறந் தேர்ந்துசிச்சாயிதன் னநீதமாஞ்செயலுன்னி. (௨௦௮)

பரமசாந்தரை யிவ்வகைதுயருறப் பண்ணினேனேயிஃதால்
விரவலாகுமெற் குப்பெரும்பவமென்றுள் விதனமிக்கவர்ப்போற்றி
யுரவர்நுந்திறந் தேர்கிலேனென்பிழை யுளங்கொளீரெனவேண்ட
வாதனுடல்கள் யாவுநிற்கோர்செயல் வழுத்திடிவிலையென்றார். (௨௦௯)

அன்னதோர்ந்துசிச் சாயிநாடொறுமன்பர்க் கரியபூசனைசெய்தா
ளின்னவாறிய ஞள்காஜீபாகீர திகங்காவென்றிடுநாம
மன்னலானசெல் விகள்பருவம்பெற மனைமணஞ்செயவேண்டக்
கன்னலின்மொழி யார்க்கிவரிவர்களே கணவரென்றவர்க்கூவி. (உகo)

சுற்றமாயினர் வியப்புறமணவினை துவக்கிடவார்தம்மைப்
பெற்றபேர்நமை வினவிலார்செய்வதென் பெற்றியென்றியல்பின்னு
ளுற்றபற்பல வரிசைகளொடுமணந் துலகியற்சடங்காற்றி
யற்றமின்மகிழ் வொடுநகர்தோய்ந்தன ரன்பரின்புடன்வாழ்நாள். (உகக)

வேறு

பீடபரகண நகர்மறையவன்சீர் பிறங்குபண்டரிப்பதிபுக்கு
நீடருட்பாண்டு ரங்கன்றனுன்னி நிகழ்ம்மைமறுமையின்பங்கள்
கோடலாம்விழைவாற் பத்துநாளுண்ணுன் குலவிடவிட்டலன்கனவின்
மாடமைந்தளிந்தி நகரின்ஞானேசர் வதிந்தனரவரிடமெய்தில். (உகஉ)

தந்திரமுனக்கோ துவரெனவங்கட் சார்ந்துபன்னிருதினமுண்ணு
னெந்தியல்கான்ஞா னேச்சுரர்தம்மு னுனிக்தறிந்திவன்விருப்பங்கை
வந்திடலரிதென் றுடன்றுக்காராமர் வயினுறக்கனவினிற்சாற்றப்
புந்தியின்மறையோன் சூத்திரனவனே பொருந்துநம்விழைவுநல்கவலான்:

ஞானதேவரிங்ஙன் சாற்றலென்னென்ன நலிவுடனன்பர்முன்னெய்தி
யானதன்னிகழ்ச்சி சாற்றக்கேட்டெருமை யாரணஞ்சொலச்செய்துசுவரை
மேனடந்திடச்செய் தவரெனைப்பொருளா விளம்பியதாற்செய்வேனென்று
வேனமைபாண்டு ரங்கனைமனத்துள் வேண்டினாரவனருளசைவால். (உகச)

உத்தமஞானப் பெயர்ப்பதிரெருபாட் டுரைத்தொர்தேங்காயுமீந்திதனைத்
துய்த்தருட்கவிக ளோதினின்விருப்பந் துதைபுமென்றிடப்பிராகிருதத்
தொத்தசெய்யுட்க ளுதவுமோவென்ன துள்விருப்பென்றவணெறிந்துண்
மெத்தநாட்புசியா மைபின்முனம்பித்தம் விளைந்தவன்போதாக்கூவி. (உகரு)

ஈண்டியல்செயலைக் கவிபதின்மூன்றி விசைத்திதைஞானதேவர்முன
மாண்டிகழ்தரச்சாற் றுதியெனக்கொண்டு மருவிடவங்கொராவேச
னீண்டிடுமிழுக்க னிவனனுகாமே நீக்குதிரெனவவர்வெருட்ட
மீண்டியற்றுக்கா ராமர்பாலுற்றுன் வேலையங்கதிற்சிவாசியிறை. (உகசு)

வேறு

புராணிகனேவலன்மூர்க்கன் கோடோபாவென்றிடுபேர் புனைந்தோனங்கண்
விராவியருட்டுக்காரா மரைப்பணியவருள்கூர்ந்து விதியில்பார்ப்பான்
றராதலத்திலெறிந்திடுமுத் தமஞானத்தொடுதேங்காய் தந்திஃதுண்டு
பராவிடுபாப்பன்னென்றும் படித்தியெ னவுடன்புரிந்து பத்திஞானம். (உகஎ)

வாய்ந்தமைந்தானக்காலை யாமதாபாத்திலுறும் வணிகன்றன்னு
ளேய்ந்தவெண்ணம்பூர்த்திபெறின் ஞானதேவருக்குப்பொன் னிலக்கமீயத்
தோய்ந்தவுளத்தெண்ணியுற்று னதுமுடிவெய்தலினளிந்தி துதைந்தன்னேர்மெய்
யேய்ந்தசமாதியின்முன்னங் குவித்திடவாவேசனிந்த விலக்கம்பொன்னும்.

துக்காராமர்க்களித்தி யென்னவவ்வாறளித்தன்பிற் றெழுதுபோனன்
மிக்காரப்பொற்றிரள்கோ டோபாவுக்களிப்பவவன் வேண்டிலானுப்
புக்காகுலத்தொடுறு மறைபவற்கீந் திடமகிழ்ச்சி பொருந்தியேற்று
மெய்க்காரணத்துக்கா ராமர்தமைவாழ்த்தினனூர் மேவிவாழ்ந்தான். (உகக)

கயமைமிகுகோடோபா நாடணைந்துசிவாசிமன்பாற் காட்சியாவு
நயமிகச்சாற்றிடவுவந்து ளுணர்வறுபேதைக்கிங்ஙன் ஞானமெய்தச்
செயவலதுக்காராமர் தமைத்தரிசித்திடுமாவல் சிறந்தானை
னியனுளிலன்பர்புகல் கீர்த்தனங்கேட்டிடும்விழைவுள் ளிசைந்தாராகி. (உ௨௦)

அணிமிகுமுலோகமெனு நகர்மறையோரழைப்பவங்க ணணைந்தோர்மாதந்
தணிவிலன்பர்கீர்த்தனஞ்செய் துறுகாலங்கரின்விருத் தாப்பியத்தந்
தணிவறுமைமிக்குடையன் பதின்மர்தமக்கமுதிடுசா தனங்களீட்டிப்
பணிவுடன்றுக்காராமர்க் கமுதிடநாள்பார்த்துறுகாற் *பனிப்பாம்பணபால்.()

வதியுமனைச்சுவர்சாய்த லாலழுங்கியன்பர்புடை வல்லைபோந்து
நிதிகொள்கலங்கவிழ்நாய்கன் போலழுங்கித்தன்குறைக ணிகழ்த்தத்தொண்டர்
மதிகலங்கேல்யாங்கிதம் புரிந்துபுசித்தகன்றிடுநாண் மட்டும்வீழா
ததிர்கழற்கால்விட்டலன்காப் பாவென்றுபின்றினநான் ககன்றணைந்து. ()

தொண்டர்தமையழைத்துக்கீர்த் தனஞ்செய்துற்றூர்களெலாந் துய்த்தபின்னர்
தண்டருதுக்காராம ரந்தணியைக்கூவியுன்சா தனங்களெல்லாங்
கொண்டணைதியெனவெளியெய் தினளுடன்வீழ்ந்திட்டதன்னுள் குலவவீடு
தண்டமையவ்வூதிகா ரியைச்சமைத்துத்தரத்தாசர் சாற்றச்செய்தான். ()

அந்தணிக்கீந்திடும்வீடு புனிதமுறப்பிரவேச மாற்றுநாளிற்
சுந்தரத்தொண்டரைக்கதைசெய் திடவிரப்பச்செய்துதம்மூர் தோய்ந்தாரக்கா
லந்தமலிவாகோளிப் பதிமறையோனருமறைபா றங்கம்வல்லா
னுந்தரசசன்மான னியலிராமேச்சுரபட் டப்பேருற்றோன். (உ௨௪)

சாந்தர்புகழ்வினவினனுள் ளெழுந்தபெருந்துவேசத்தன் சகியானகி
வேந்தனிடம்போய்த்துக்கா ராமனெனுஞ்சூத்திரன்சீர் மிக்கதேகு
வாந்தலத்துள்ளான்மறைச்சா ரங்களரிகீர்த்தனத்தி லமைத்துப்பாடிப்
போந்தமறையோர்களையு மயக்கிவணங்கிடப்புரிந்து புனிததன்மம். (உ௨௫)

ஆனவைமுற்றுங்கெடுத்துப் பலருமரியன்பர்களா கப்புரிந்தான்
கோனவனைநீவிசா ரித்திலையேன்மறைவழக்கங் குன்றுமென்ன
வேனவில்கைமன்சினந்திக் கணந்துக்காராமனையூர் விட்டுநீக்கென்
றேனகாத்தலைவனுக்கோர் நிருபமனுப்பிடவவன்கை யேற்றுள்ளஞ்சி. (உ௨௬)

அன்பரிடங்காட்டவுடன் விட்டலனலபமடைந்தோ ரபங்கஞ்சாற்றி
யின்பமுடன்வாகோளி யெய்தினர்பட்டன்பூசை யியற்றுமேல்வை
முன்பமைந்தோர்கீர்த்தனம்பா டினர்வினவிச்சூத்திரநீ மொழியும்பாவிற்
கொன்பயிலாரணசாரங் குலவவிற்கேட்டோர்நிரயங் குறுகுவாரால். (உ௨௭)

*பனிப்பு-விடாமழை.

ஆதலினீயினிக்கவிகள் பாடேன்முன்னுரைத்தவெல்லா மாற்றினூடே
போதரவிட்டிடுதியெனவூர்புகுந்தவ்வாறுசெய்து புயல்வண்ணன்றன்
பாதமலர்பணிந்தாராங் கதுகண்டுசிட்டர்மிகப் பரிந்தார்துட்டர்
மேதகுசீர்ப்பட்டரிவன் செருக்கழித்தாரெனக்களித்தார் மேவுமேல்வை. ()

அன்பருடன்விட்டலன்பால் யான்கவிசாற்றியதுனரு ளாலேயவன்றே
வென்பதுலகறியவுணர்த் துதியெனநந்தனத்தினிலே ரிடத்தின்மேவி
மின்பயின்மாறிருநாம மோதியிராப்பகறுயிலூண் விட்டுவைகத்
துன்பமைந்தன்பர்கள்பலரும் வேண்டியுமொப்பாரமையுந் துணையிற்பட்டன்.

பரிசனஞ்சூழ்தாப்புனச் சிவதலத்தைத்தரிசிப்பான் படர்ந்தானங்கட்
டிரிவின்மனத்தனகடசித் தப்பெயர்கொள்பகீராவோன் றிகழ்நிமாசு
புரிகுளத்திலறியானீர் படிந்துகெடுத்தலினவன்றுன் புகல்சாபத்தீ
விரியகந்தைப்பட்டனுட லிடைமேவியழற்றுதலின் வெம்பிவாடி. (உகூ)

இக்குளத்தின்மூழ்கவுட லழற்றுறுகாரணந்தானென் னென்னவங்குப்
புக்குளபேர்களைவினவ வனகடசித்தனிமாசு புரியுஞ்சொந்த
மெய்க்குளிர்வான்றடமீது நீர்மூழ்கலாற்சாபம் விள்ளக்கேட்டேந்
திக்குணர்சீர்த்திகொளவனை வணங்கிடிலித்துன்பைதிற் றீர்ப்பானென்றார். ()

வினவுபட்டனுத்தமவே தியனுகும்யானிழிபு மிலேச்சன்றன்னை
யெனதுடன்மாய்கினும்வணங்கே னென்றுநனைதுகில்போர்த்து மிணைதீர்காமக்
கனலின்மிகக்கொடிதாஞ்சா பத்தழல்வாட்டப்பல்பரி காரஞ்செய்து
மனகதுக்காராமரரு ளுங்கலத்தலாலொழியா தாகத்தேர்ந்து. (உகூஉ)

பரிசனரைப்பார்த்தினியான் பிழைப்பதரிதியான்செயறம் பலவுமந்தோ
வுரியவெனக்கித்ததியி லுதவினவின்றிடைமரண முற்றதென்றுட்
பரிபவமிக்கூர்புகுதத் துவக்கிடுகாற்பலருமிது படர்தற்கேது
பெரியதுக்காராமர்கவி தனைக்குலைத்ததேயென்னப் பேசக்கேட்டோன். ()

அருண்ஞானேச்சுரர்திருச்ச மாதியடைந்தனன்றனதா பத்துநீங்கப்
பெருகாதரத்துடன்போற் றினன்வதிந்தானிதுகிடக்கப் பிழைதீரன்ப
ரொருபான்முத்தினந்துயிலூ ணிலரமைகால் விட்டலன்முன் னுற்றென்னன்ப
பொருவாவென்னருள்கொடுநீ பாடியநூலொழியாதியான் புரந்துள்ளேனுல். ()

அதன்மகிமைபுவிக்குணர்த்த யானுற்றுமாடவிதை யகத்திலுன்னி
விதனமடையேலென்னத் தழுவியுடன்மறைந்தவ்வூர் மேவுஞ்சாது
முதல்வர்கனவினிற்றோன்றித் துக்காரமன்னதியின் முறையிலிட்ட
விதமறைப்புத்தகங்களெலா நீரின்மிதந்துளநீசென் றெடுப்பாயென்ன ()

ஓதிமறைதரவளவி லுவகையுடனன்பர்களோ டுற்றுக்கண்டுள்
ளாதிதிருவருள்வியந்து கொண்டுதுக்காராமர்முன மணைந்துகாட்டிக்
கோதிலன்பர்மகிமையைவிட் டலன்புகழைத்துதிக்கவன்பர் குலவும்பட்டன்
றீதியல்வன்சினத்துரைத்த சொற்கொடிந்திராயணியிற் செல்லவுய்த்தேன் ()

தினம்பநின்மூன்றாகியுமன் னவற்றையுமுணுடனேநித் திரையுமின்றி
யுனம்புயத்தாட்டுதித்துறுவேன் றன்னேயுமோரூறணுகா துவப்பிற்காத்த
கனம்பரைமேனியனேநின் கருணேயென்னென்பேனினக்குக் கலந்ததுன்ப
வினம்பலதந் திடுவேனேக் காத்தருளென்றேழுபங்க மியம்பிப்போற்றி. (உஙஎ)

இன்பமிகுத்தன்பருற்ற ரருண் ஞானேச்சுரர்கோயி லிடைசேர்பட்டன்
றன்பவழற்பிணிசகியான் பற்பலவாறவர்தம்மைத் துதித்துப்போற்றக்
கொன்பயின்ஞானேச்சுரரான் னவன்கனவிலடைந்தன்பிற் கூறுவார்நீ
யன்பர்துக்காராமர்முனந் தருக்கினிலாற்றியபிழையா லடர்ந்ததீதே. (உஙஅ)

அன்னவரைச்சரணடையி லித்துயர்முற்றொழிந்துபவ மானநோயுங்
கன்னலொன்றின்முற்கடப்பா யவரருளற்றிதற்கொர்பரி காரமில்லை
யென்னவுரைத்தனர்மறைய வுடன்மறையோனெழுந் தவர்பா லெய்தற்கஞ்சித்
தன்னதுகைகொடுதிருப்பம் வரைந்தனுப்பக்கண்டன்பர் சசியாராகி, (உஙகூ)

பகைநட்பாம்புவிசர்ப்பந் துயர்செய்யாவிடமமுதப் பண்பாந்துன்பு
மிகைகொளின்பாமக்கினியுஞ் சீதளமாமனம்புனித மேவுமென்னிற்
றகைபெறுசிதரனருளு மெய்துமுமக்கித்தகுநோய் சாரலாமோ
சிகைபெறுமாமறையுணர்வீரென்றபங்கமொன்றெழுதிச் செலுத்தக்கண்டான்.

உடனழற்றுநோய்நீங்கத் துக்காராமரைக்காண்பா னுற்றபோதிற்
கடனிகர்பேரருளாளர் மறையவரையான்முன்போய்க் காண்பேனென்னப்
படர்தரலானுரெதிர்காண் டலும்பட்டனடியற்ற பனேபோலன்பர்
மடல்பொலிவாரிசத்துணைத்தாள் வணங்கியென்றன்பிழைமனத்தின் மதியீரொன்ன.

பலவாறுதுதித்திடத்துக் காராமரிழிகுலத்தேன் பாதந்தன்னேக்
குலமறையோர்சிகாமணிநீர் தாழ்தன்முறையன்றென்னக் குலவும்பட்ட
னிலவுநும்பாடலேநோக்கு முன்னமென்வன்பிணிகண்முற்று நீங்கப்பெற்றுக்
கலகவகந்தைப்பிணியு நீங்கினனுந்தாசனெனக் கவின்மாண்புற்றேன். (உசஉ)

ஆதலினுந்தாள்வணங்குந் தகுதிபடைத்தேனினிவிட் டகலேனென்னப்
போதவின்புற்றயரருண்மெய்ப் போதமிகுபட்டனன்பிற் புகலக்கேட்டே
யாதரமெய்ப்பத்தர்நக ரணேதரவச்செயலுணர்ந்தாங் கமைந்தார்யாரு
மேதகைத்துக்காராமர் தமைப்பலவாப்புகழ்ந்துசுக மேவிவாழ்ந்தார். (உசங)

அனகடசித்தப்பெயர்கொள் வோனிதுதேர்ந்தென்சாப மகற்றினோரா
மனகரைச்சேவிப்பேனென் றணேதருகாற்சிஞ்சுவடி யடைந்தவ்வூர்வாழ்
பனவர்சிகாமணிபாஞ்சிந் தாமணிவேதியன்மனேயிற் படர்ந்துபிட்சை
கனமுறவேட்டிடவிரப்ப வவனேவலன்கடிதிற் கலத்திற்பெய்து. (உசச)

அதுநிறையாமையிற்பலகா லிட்டலுத்தான்றலேவனிட மறையவன்றான்
புதுமைமிகுமிவர்க்குமனேப் பொருளெல்லாம்பெய்கென்னப் புரிந்துமுன்போல்
வதுதெரிந்தான்மறையவன்பாற் சாற்றவுபாசனேவலத்தான் மாற்றப்போனன்
மதுமலர்த்தண்டலேத்தேகு வடைந்துதுக்காராமரெழின் மனேயின்மேவி. ()

ஏற்றிடச்சிச்சாயிசினந் தேதுமில்லாவித்ததியி லெவனேவந்து
கூற்றினிற்கூவினனென்ன விடாதுரப்பவாண்டமைபெண் குழவிகங்கா
வேற்றியல்பாணேயிலுறுமா வங்கையிலேக்தினளணைய விகல்சிச்சாயி
யாற்றிலள்கைபைத்திருகி வாங்கிடக்கைத்தலத்திலொட்டி யமைந்தமாவை.()

அன்னவன்பாத்திரத்திலிட நிறைதரலால்வியந்துளத்தி லனகடப்பேர்
மன்னவன்கங்காவுடனீரோதுக்காராமரென்ன மாதுசொல்வா
ளென்னவன்பிராந்தன்கொனீயெனேப்பெண்ணென்றறியா யிதுகேட்டாயென்
னன்னலப்பிதாவேதுக் காராமராலயப்பா னண்ணினூால். (உசஎ)

எனவுரைப்பத்தளியணேந்து நோக்கிடச்சிற்சுகவொளியா யிலகக்கண்டு
மனதுவப்பில்வணங்கிடக்கண் டுடனன்பருபசார மாற்றஞ்சாற்ற
வனகருடனிரண்டுதினம் வதிந்தனன்கீர்த்தனம்வினவி யானந்தங்கொண்
டினபெரியோர்சேவைபட்ட ராற்கிடைத்தசெதனவிடைகொண் டேகினனே.

துக்காராமரின்கீதங் கேட்டொருசுந்தரியவரைத் தோயுங்காதன்
மிக்காளாயிரப்பவவர் நடுங்கியென்றூய்நீயிவிதம் விள்ளேலென்ன
வக்காரிகைக்கொடியாள் சாற்றுவணீரெனேவெறுப்பீ ராயிலென்னே
மெய்க்காதலாற்பிடித்தீர்த் தனிரென்றுபழிசுமத்து வேனென்றோத. ()

அன்பருரைப்பாரிரையே லென்பகைவரானவறு வரையும்யான்றுன்
பொன்பயின்மார்பினனன்பா னீற்றினனீயதுதேரப் புந்திகொள்ளிற்
கொன்பயிலென்மேனியில்வைக் கோலிடுதியெனவவிதங் குயிற்றுகாலை
தென்பயில்சாம்பற்படுசீர் கண்டுபயந்தத்தெரிவை சென்றூண்மாதோ. (உருo)

அன்பரிங்ஙன்றிகழ்தருநா ளூலோகநகரத்தர்தம்மூ ரடைந்துநாளு
மின்பவருட்கதைபுரிய வேண்டவிசைந்தனரேகு மியல்புதேர்ந்து
கொன்பயில்கங்காசிமவாள் சந்தாசிவணிகர்பட்டர் கூண்டுமேவிப்
பொன்பயின்மாநகர்மேயா ரெதிர்கொடுபூசித்துவகை பொலிந்தாராகி. (உருக)

தமதுமனேதொறுநாளும் விருந்துசெய்வித்தரிகதைகள் சாற்றக்கேட்டுச்
சமரவன்மாயைத்தொடக்கற் றின்பமிகவாழ்ந்தாரத் ததியவ்வூர்க்க
ணமர்வளேவாணிகன்சிவா சிப்பெயரோனன்பர்திற மறியானகித்
தமமாயையபற்றெழிவா னவிசுடரிற்சாலவுநிந் தனேசெய்துற்றான். (உருஉ)

அந்நாளோர்வேதியன்பொன் கடன்மிகையான்மிகவருந்தி யருளாற்றீர்ப்பான்
கொன்னூர்ஞானேச்சுரர்ச மாதியடைந்தனன்குறைகள் கூறிப்போற்ற
வன்னூரன்னவன்கனவி லடைந்துதுக்காராமரிட மணைந்துசாற்றி
லுன்னுவலளிப்பரென வுலோகநகர்புகுந்தன்பர்க் குரைத்துவேண்ட. (உருங)

தூயருடனூரதிகா ரியைக்கூவியிங்குவளேத் தொழில்செய்வாற்கு
மேயவரிவிதித்திவர்தங் கடன்றீர்த்தியெனயாரு மீந்தாரக்கான்
மேயவளேவணிகனிரு காசளிப்பக்கொண்டன்பர்க் கிசைத்துக்கண்முன்
றேயவைப்பக்கைக்கொடதை யோர்கல்லாற்கீறியுடன் சொன்னமாக்கி. ()

மறையவற்கீந்திடக்களித்துச் சென்றனன்மேவினர்விதந்தவ் வண்மைதன்னைக்
குறைபுகன்றுதிரிபும்வளை வணிகனுக்கோதிடவியப்புட் கொண்டன்னோர்பா
லுறைபரிசக்கல்லையெது புரிந்தேனும்பெறுவேனென் றுன்னிபெய்தி
நிறையுவப்பெய்திடப்பணிசெய் தோராண்டுகீர்த்தனங்க ணிதமுங்கேட்டே.

ஓர்தினத்திலவனீயப் பொதியேற்றிவந்தனனா ருற்றுநோக்கச்
சார்பொருள்யாவையும்வெள்ளி யாயமையவவன்சோர்விற் றந்தானென்னச்
சீர்திகழன்னவற்குய்த்திவ் விரசிதங்கொண்டீயமெற்குச் செறிப்பாயென்று
நார்திகழவெழுதினன்றன் பொதிகாரர்தமையேவ நாடியன்னோன். (உருசு)

வெள்ளியன்றிஃதீயமே கோடியெனவனுப்பலினுள் வியந்தானாகித்
தெள்ளிமைசாலன்பரிட முரைப்பநினைக்கரியளித்த செல்வமாகு
மொள்ளியவின்னவற்றையன்பர்க் களித்தவர்தம்பணித்திறங்க ளுஞற்றுவாயேற்
புள்ளியரவணைமாய னருளெய்துமெனவிரத்தி பொருந்தினனாய். (உருஎ)

அன்பர்பணியாலெய்தாப் பொருளொன்றின்றெனுஞான மமைந்துநாளு
மின்பமிகப்பகலெல்லா மரிநாமமோதியன்பர்க் கேவலாற்றிக்
கொன்பயிலெல்லியிலரிகீர்த் தனம்வினவுஞ்செயன்மனையாள் குறித்துநோக்கித்
தன்பதிக்குப்பித்தேற்றி னார்துக்காராமரெனத் தன்னுளெண்ணி. (உருஅ)

வெகுளிமிகுத்தவற்கொல்வே னெனப்பரண்மேற்கொப்பரையில் வெந்நீரூற்றித்
தகுமுபசாரத்தொடன்பர் தமையழைத்துவந்ததன்கீழ்த் தங்கவைத்திட்
டுகும்வகைசெய்தாள்வெப்பப் புனல்வீழவாகம்வெந்தா ருடன்மாயன்ரு
ணெகுமனத்திற்சிந்தித்தோர் கவிபுகன்றுபுண்ணொழிந்தார் நெஞ்சுவந்தே.()

அவ்விடைவிட்டகல்சாற்றங் களத்தியன்மாலையைமுன்றி லவரைப்பந்த
ரோவ்விடவீசித்தமிடஞ் சேர்ந்தாரக்கொடும்பாவி யுஞற்றுந்தீதால்
வெவ்விடப்பாம்பணைப்பெருமாள் சீறிடலாற்சுரநோய்மே வினள்வருந்தி
யெவ்விதமாஞ்சிகிச்சையினுந் தீராள்சோர்தரவணிக னெய்திநாடி. (உகூ0)

பலவாருய்ந்தும்பிணிதோய் வகையறியா னுறுமவரைப் பந்தர்மீதி
னலமார்தேசிகர்மாலை கண்டவர்க்கெத்தீங்கிவடா னவிற்றினளோ
வலவாநிற்பேனவியே னெனவுடன்றேய்பட்டர்சொல்வா ரமைசேறிங்ங
னிலவாநின்றதுநமது தேசிகர்சீராடியுற்ற நிகழ்ச்சிபோலும். (உகூக)

ஆதலினிச்சேறெடுத்தன் னவண்மேனிக்கப்பிடினே யகலுமென்னக்
காதலனவ்வாறுற்றச் சுகம்படைத்தாடன்றீமை கருதிவாடி
யாதரமிக்கன்பர்பணி யாற்றியரிகதைவினவி யமலந்தோய்ந்தாள்
போதவருட்டுக்காரா மரின்புகழ்ச்சீரென்னெனயாம் புகல்வதம்மா. (உகூஉ)

வேறு

இன்னவாறன்ப ருலோகமாநகரி லிசைந்துறல்வினவிச்சிவாசி
மன்னவனமைச்ச ரோடமைந்தன்பால் வளம்படப்பூசனையாற்றிப்
பன்னலாங்கதைகேட் டிருந்தனனக்காற் பரமபாகவதர்மாமாயை
யின்னலார்குடும்பந் தன்னைநம்பலிர்சீர் யாவரும்விட்டலற்போற்றி. (உகூங)

வாழ்விரேற்செனனக் கடலினைத்தாண்டி மாயன்றாட்சேர்வது திண்ணந்
தாழ்விரேல்வினை முடிவிர்களென்னத் தகவெதிர்மறையினுஞ்சாற்றப்
போழ்விதிமன்னன் விரத்திபிக்காணுய்ப் பொருவிலாரதியயிற்றியபின்
காழ்வியனரசை யுவர்த்தனன்வனத்திற் கலந்துமாலடிதுதித்தமைந்து. (உகூச)

கங்குலிலமைந்து கதைவினவுபுவை கறையிலாரணியமெய்திடுவான்
றங்குமந்திரரை யெய்தலிரென்னத் தணப்பவன்னவர்செயலெல்லாங்
கங்குறவரைந்து சீர்த்துக்காராமர் காதலிக்குச்சிவிகையொடுய்த்
திங்குநாட்டியல்வா ருமதடைக்கலமென் றிரந்திடப்பலர்தமைபேவ. (உகூரு)

அதுதெரிந்துடன்சிச் சாயியுலோக வணிநகரடைந்துநாயகர்தம்
மதுமலரடிதாழ்ந் திருகணீருகுத்து மருவுமுன்றானைகையேந்தி
விதுவுறழ்கருணை யீர்சிவாசிப்பேர் வேந்தொருதாயினுக்கொருசேய்
கதுமெனவுலகா ளவுமவற்குச்சேய் காணவுமருள்புரிதிரென்றாள். (உகூசு)

வினவிமெய்யன்ப ரிரங்கலையிரவின் மேவுவன்சிவாசியக்காலுன்
மனவிருப்பத்தின் படிசெய்வேனென்ன வகுத்தனரன்றிரவூடே
கனமுறுவருணச் சிரமதன்மத்திற் கலந்துநின்றரிதனைக்கருதி
லனகநற்சேவை யீந்திடுமென்ன வதனைவற்புறுத்தலினரசன். (உகூஎ)

தன்னரசியலின் வழாதுநின்றருண்மால் சாதுபூசனைமுயன்றமைந்தா
னன்னதோர்ந்தவன்ற னன்னையாதியர்க ளன்பரைத்துதித்துவந்திட்டா
ரின்னவாறியனு ணவசிப்பெயர்தோய்ந் திடுகுடியானவனன்பர்
நன்னலக்கீர்த்த னம்புரிகாலை நமக்கரித்தோதிடுகின்றான். (உகூஅ)

அடிகணீர்வருந்தா வணமிடைநடன மாற்றுவனன்னதுகாறும்
படிதருமிளைப்பா றுகவெனச்சொற்றப் படிமுயன்றன்பர்பாடிகோ
லடியவர்க்கெல்லா மாலைசாத்திடுவா னன்பரன்னவனுறுந்தோறு
மொடிவிலென்னதுசி ரமபரிகாரி யுற்றனனெனவுரைத்திடுவர். (உகூகூ)

மாதநான்கங்க ணமைந்துபின்றம்மூர் மருவிவிட்டலற்றுதித்தமைகா
லாதரச்சிந்தா மணிப்பெயர்ப்பனவ னமைபுனுச்சிவதலந்தொழுவான்
மேதகுமறிஞர் சிலருடன்றேகு மேவல்கேட்டன்பர்தா மெதிர்போய்ப்
பேதமிலன்பிற் றழீஇயளவளாவிப் பேசுகாற்பனவன்சாற்றிடுவான். (உஎ0)

ஒருவருக்குணவு நல்குதிரென்ன வுடன்மனைபுக்கெடுத்துறுகான்
மருவினர்பலரு மெமக்குமீதிரென வாடினர்பாண்டுரங்கனையுட்
கருதிடத்தோன்றி நின்கரப்பொருளே கலந்துளோருணப்பெருகுமென
வருளலும்பசியற் றிடநுகர்ந்தின்ப மடைந்திராக்காதைகேட்டகன்றார். ()

பொன்னவாமறையோ னொருவன்ஞானேசர்ப் போற்றவன்னவரவன்கனவிற்
சொன்னவாறிவர்பா லெய்திடவளையற் றொழிற்சிவாசியின்புடை யனுப்பி
யன்னவனளித்த நான் * கயப்பாள மந்தணன்கொடுவரலாற்றான்
முன்னமைகோண்கே ரப்பருவதத்தின் மூன்றறையிட்டொன்றுகொண்டணைய

* அயம் - இரும்பு

அருள்விழிகொடுநோக் கினர்பொன் னுச்செய் திட் டமலஞானேச்சுரருனக்குத்
தருவதிஃதினைக்கொண் டேகிநின்குடும்பந் தனைப்புரப்பாயெனச்சென்றேன்
மருமலர்ப்பொழிற்கோண் கோரவெற்பிடத்தில் வைத்தவைகாண்கிலனமக்குத்
திருவருண்ஞானேச் சுராளித்திட்ட செல்வமீதெனச்சுகித்திருந்தான். ()

முளாவொடுபீவ ராசங்கமத்தின் மூழ்கவூராருடனன்பர்
வளாவினர்போங்கா லொருபெருவனத்தின் மருவொராட்டுக்கிடைதன்னி
லளாவொருகொடிய ஞமலிசென்றிடுவா ரணிமிடற்றைக்கடித்திரத்தங்
கொளாநிகழ்ந்ததுமெய் யன்பரைக்கண்டு கொம்மெனப்பற்றவெய்தியதால்.

கலங்குறுதன்பர் சாற்றுவருலகிற் கவின்றவெச்சீவர்கடமையு
மலந்திடவெறுக்கேன் மிசைவெறுப்புன் னுளமைந்தேதனெனச்சினந்தணிந்து
நலந்திகழ்சாந்த மேவியேகியதந் நாண்முதற்சினமொழிந்துறலாற்
புலந்திகழிடையர் கிடைக்குதவாமற் போயிற்றேஞமலியென்றயர்ந்தார்.

அன்பர்சங்கமத்திற் படிந்திராஞ்சணவூ ரமையொருமறையவன்மனையின்
முன்பணைதரமா லடியவரென்ன முகமனேதினனமுதளித்துக்
கொன்பயிறன்சேய் மூங்கையாயமைதல் கூறினனிரங்கிடத்தொண்ட
ரின்பமைந்தவனைக் கூவிவிட்டலன்பே ரியம்பெனப்பலவிசையிசைத்தான்.

மகனுரைபகரக் கண்டவருளத்தில் வரம்பிலின்பமைந்தவராகி
மிகவுமன்பரைக்கொண் டாடினரவர்பால் விடைகொடுகானிடைக்குறுக
நிகழிடையர்கடங் கிடைக்குதவாதா நாயைநீர்கொண்டணைகென்னத்
துகளிலந்நாயன் பரைத்தொடர்ந்தரிநாட் டுய்ப்பொழிந்தரிகதைவினவி.

மருவிடக்கண்டார் வியந்தனரொப்பின் மாலடியார்புகலாவார்க்
கிருநிலத்தரிதொன் றுளதுகொலென்று ரிதுநிற்கவெலவடவூர்வா
ழுருமறையவன்மா லசிப்யெரோனெற் கருடிரென்றன்பரைவேண்டப்
பருவமுய்த்துணர்ந்து பகவற்கீதையைப்பா ராயணஞ்செய்தமைகென்ன. ()

அன்னவனவ்வா ரூற்றிடப்பாண்டு ரங்கன்போன்பினேற்றிருந்தான்
றுன்னலாநாளிற் கேடகப்பெயரூர்ச் சோதிடன்பனவன்பாலடைந்தே
யின்னகிதையைநீ படிப்பதானிரய மெய்துவையெனவவன்விட்டான்
பன்னஃதாம்பாண்டு ரங்கன்சோதிடன்சொற் பனத்திடைமேவிவிள்கின்றான்.

மறையவன்றன்னை முன்பெனக்கீதை வகுத்திடப்புரிதிசெய்யாயே
னிறைபெருந்துயரு நிரயமுமுனக்கே நேருமென்றிடநடுங்கினன்வை
கறையிற்போய்முன்போ லோதிடப்புரிந்தான் கவின்றபேரருட்டுக்காராமர்
முறைபெறக்கண்ணன் பாலலீலைகளை மொழியராமேசுரப்பட்டன். (உ௮௦)

திருத்தினன்வேறு விதம்படித்திடலாற் சீர்கொளன்னவன்கனவிடைமேய்
மருத்தியற்றுக்கா ராமன்பாடலைநீ மாற்றியோதினையஃதென்றனக்குத்
திருத்தியன்றென்ன வியந்தன்பர்தம்பாற் செப்பியன்னவர்சொலவெழுதி
யருத்தியிற்பாரா யணம்புரிந்திருந்தா னன்பர்யாத்திரைசெயவிரும்பி. ()

அருமறைக்குலக்கங் காசிமவாளு மமைசந்தாசிவாணிபர்தாமு
மருவிடக்கோத ளேச்சுரப்பெயர்தோய் வரைபொலிசிங்கனுப்பூருக்
கருகமைசரோவ ரத்தடத்திடைநீ ராடினருடனணைந்தவர்பாற்
பொருவருமன்பர் நால்வர்கட்கீண்டு போனகம்புரிதிரென்றோத. (உஅஉ)

அவரவ்வாறியற்ற வுடன்வரையதன்மே லமைதருமரோபவப்பெயர்தோய்
சிவனிருவாணி யாய்ச்சடாமகுடந் திகழநீற்றுத்துளனுகி
நவமலிபலிப்பாத் திரங்கொடங்கவர்முன் னண்ணிநாடெனடும்பகலாக
வுவமைதீரும்மைக் காண்டருகாத வுடனுபவாசனுயுற்றேன். (உஅங)

என்பசியொழியப் பிட்சைநல்குதிரென் றியம்பவுள்ளெழுமுவகையரா
யன்பராதனத்தி லதிதியையமைத்தா ராதனைசெய்தனர்போற்றி
யின்பகங்காசி மவாளுடனிவருக் கிடுதிர்முன்னதிதிபூசனையின்
பின்பருந்திடுவோம் யாமெனத்தொண்டர் பேசல்போற்கலத்தமைத்திட்டார்.

உமைமணவாள னல்வர்கட்கட்ட வுண்டிமுற்றருந்திக்கையலம்பிக்
கமையுளார்தருதாம் பூலமேற்றுசி கழறினன்கரந்திடக்கண்டா
ரமைவிலானந்த மடைந்தனரன்ப ராலரன்றனைத்தரிசித்தே
யிமைவிழிப்பேறெய் தினமெனவியந்தா ரின்பத்தாழ்ந்தனர்துக்காராமர். ()

உடனவர்யாமுந் துய்த்துறிலதிதிக் குண்டிபோதாதுறுமென்று
ரடர்நகர்ப்பாற்போ யூண்பொருளீட்டி யணைந்துபாத்திரத்தினைநோக்க
மிடல்பெறவுறக்கண் டதிசயித்துண்டு மிக்கபற்பலதலம்போற்றி
மடல்கெழுதீர்த்தம் படிந்தனர்தேகு மருவிவிட்டலற்றுதித்துற்றார். (உஅசு)

வேறு

ஒப்பில்சீர்த்துக்கா ராமரோர்நாள்கதை யோதும்போதரி நாமத்தையன்பினிற்
செப்பியோரடி வைத்திடிலோர்மகஞ் செய்தவோர்பலன் சேருமென்றோதலாற்
றுப்பியைந்தவர் யாவருமங்ஙனஞ் சொல்லியோரடி வைத்துக்கயிற்றினி
லெய்ப்பிலார்முடி யிட்டுவந்தாரிங்ங னியலத்திங்க ளீராறுசெய்துற்றனர். ()

பேசுநாளய லூருளன்பற்றிய பிரமராட்சசு நீங்கிடவெண்ணியே
யாசுதீர்க்கு மரியரசேத்திர மனைத்தையுந்தெரி சித்துறவத்ததி
கூசுறுதன் னவன்முனிராட்சசு குறுகியெற்கொரு வேள்விப்பலந்தரி
னீசுகம்பெற விட்டகல்வேனென நிகழ்த்தவன்னே னிகழ்பதியாவுளும். ()

எய்தியேற்று மளிப்பவரின்மையா லெய்த்துலோக நகரினுற்றேன்றதன்
செய்தியோத வொருத்தனரிபெயர் செப்பியேமுடி யிட்டதிலொன்றினைக்
கொய்திரந்தவ னுச்சியின்மேற்புனல் கொம்மெனப்பெய் திடலுமிராட்சசு
வுய்தி பெற்றிடவந்தவன்போற்றின னுண்மைகண்டுவப் பாற்புரிந்தார்களே.

நண்டுதேண்மதி யிற்பண்டரித்திரு நகர்புகும்விர தத்துக்காராமர்தாம்
விண்டுவின்னரு ளாற்சுரநோய்கொடிம் மிக்கபுண்ணிய காலத்தில்விட்டலற்
கண்டுபோற்றும் விதியொழிந்தோமெனக் கவன்றுறுந்தி யிற்கருடக்கொடி
கொண்டொராயிரத் தீரிருநூறன்பர் குலவக்கண்டுப சாரங்குயிற்றியே. ()

பாண்டுரங்க பரமதயாளவிப் பத்தருன்னுருப் பார்த்தின்பமெய்துற
வீண்டுநாயே னொருவனைமாத்திர மிருக்கநின்னுளத் தெண்ணினைதன்மமோ
வேண்டுமென்பிணி நீக்கிடினின்முன மேவிப்பாடல்விண்டாடல் செய்யேன்கொலோ
மாண்டுலங்கரு ணல்கென்றிடுபொருள் வைத்துநாலறு பாக்கள்வரைந்தன்பால்.

சாதுசற்சன ரைப்பணிந்தென்குறை சாற்றுவீர்பக வன்சந்நிதியிலென்
றோதுமன்பரை வாழ்த்திப்பணிந்தவ ருதவுபாசுர மும்விடையுங்கொடு
கோதுதீரன்பர் பண்டரிமாநகர் குறுகிச்சந்திர பாகையின்மூழ்கியே
போதுமின்பருட் கீர்த்தனம்பாடினர் போந்துவிட்டலன் பொன்னடிபோற்றியே.

விட்டலன்றிரு மேனியைப்புல்லினர் மிக்கசீர்த்துக்கா ராமர்விண்ணப்பத்தை
யிட்டனேர்முறை செப்பிடவிட்டல னிதயமேற்றுய ரேய்ந்துபிராட்டிபாற்
சிட்டனைதுக் காராமன்பண்டரி சேர்ந்திடற்குத் திறமையற்றேவரைந்
திட்டமோடனுப் புங்கவிகண்டுமிக் கின்னலெய்தினன் யானவண்மேவியே. ()

அன்பரைக்கண் டிவணணேவேனென வம்மையும்ம தருட்பெருஞ்சேவைகண்
டின்பமெய்தப்பல் லாயிரந்தாசர்க ளெய்துமேல்வை யிதிற்செலனன்றல
கொன்பயின்றமெய் யன்பர்நீர்போந்திடிற்குறைவொடுள்ளங் குமைவர்களென்றிடப்
பொன்பயின்ற வரம்பொலிமாயவன் பொருக்கெனக்கரு டன்றனைக்கூவியே.

ஒப்பிருக்காரா மன்றனைநின்மிசை யூர்தரக்கொண் டுறுதிகணத்தெனச்
செப்பியன்னவர்க் குங்கருடன்மிசை சேர்தியென்னத் திருமுகமொன்றுதந்
தெய்ப்பில்சீர்க்கருடன்றனையேவிட விம்மென்முன்றிருத் தேகுவிலெய்தியுள்
வைப்பின்மேவிய பாண்டரங்கன்றனை மதித்துத்தம்மெய்ம் மறந்துறுவார்தமை.

கண்டுவாழ்த்திப் பகவன்றிருமுகங் கனிவினேடளிப் பக்கண்ணிலொற்றியே
விண்டுநோக்கின ருற்சவகாலத்தான் மேவிடத்தடைப் பட்டுவிகங்கவேந்
தண்டமோறனுப் புற்றனனூர்ந்தனை யணேதியென்னு மருளிறையாணையுங்
கொண்டுவந்த கருடனுரைப்பதுங் கோதிலாருணர்ந் தேகுபின்மேனியான்.

ஏறும்வாகன மாகியநின்மிசை யேறிடற்கிசை கின்றிலனென்மிசை
வீறுகொண்ட பகவற்கருளுறன் மெய்மைபாகினின் மீதிவர்ந்தென்றுய
ராறுசேவைசாதித்திடல்வேண்டுமென்றடிமைவேண்டுவிண்ணப்பத்தைமான்முனங்
கூறுகென்று பலபடப்போற்றலுங் கொம்மெனக்கரு டன்குறுகிச்சொனன்.()

பத்தவற்சல மாயன்பிராட்டியைப் பார்த்திதற்கென் பகர்வதெனத்திரு
வொத்தவுற்சவந் தீர்ந்தபின்சேர்வமென் றோதலாலமைந் துற்றனன்விட்டலன்
மெய்த்தகைத்திரு நாளொருநான்குநாண் மேவுஞ்சேவை விழிகுளிரத்தெரிந்
துத்தமத்திருத் தொண்டர்தம்மூர்செல்வா ரோங்குசீர்த்துக்கா ராமரின்மேவிட.

தொண்டர்போற்றிப் பகவனுமம்மையுஞ் சுகங்கொலென்று வினவிச்சுகமெனக்
கொண்டபேருவப் பிற்பண்டரித்திசை குறித்துநாடியோர் குற்றியினின்றருட்
கொண்டல்வண்ணன் றனைத்தியானித்துறக் கொன்பிறங்கு முருக்குமணியுட
னண்டர்பூமழை பெய்தனர்வாழ்த்தப்புள் ளரசின்மீதமை சேவையளித்தனன்.

கண்டதொண்டர் பரவசராயிரு கண்கணீர்பொழி யக்கனன்மீதினின்
மண்டலாமெழு கொத்துருகிக்கவி மாலைபாட வரதனுவகைமிக்
கொண்டழைத்தமெய் யன்பரைப்புல்லியே யொப்பிலாய்ப்பசி மிக்கமைந்தேனெனத்
தொண்டர்தஞ்சுதைநல்கப்பங்கீரையுந் துய்த்தின்பாசிசொற்றுன்மறைந்திட்டனன்.

வேறு

ஞானநீண்முகுந்த மன்னவனிசைத்த நலங்கொள்விவேகசிந்துப்பேர்
வேனமைகிரந்தந் தனைப்படனஞ்செய் வேதியனொருவன்றுக்காரா
மானமார்சீர்த்தி வினவிவைகுந்த வாசனெஞ்சகத்தவனுகக்
கானம்வெற்பாதி யிடங்கள்புக்கவர்தாங் கருத்திலதேனுழல்கின்றுர். (௬௦௪)

மிக்கசீர்விவேக சிந்துவாங்கிரந்தம் வினவின்மெய்தேர்வரென்றவர்பாற்
புக்கனனேத வுடன்றுக்காராமர் பொருவில்கம்பளத்தின்மெய்ம்மூடித்
துக்கமாருலகைப் பார்த்துநீர்சொல்லுந் தூயவான்கிரந்தத்தைவினவிற்
றக்கமெய்ப்பொருடேர் வரிததான்மூடித் தகும்வகைகேட்டிடுகின்றேன். ()

ஞானமிக்கீர்சொல் லுதிரெனமறையோ னம்பியோதினனொருசாம
மானபின்சற்று மசைகிலரொன்று மறைகிலராயன்பருறலா
னூனவின்மறையோன் கம்பலநீக்கி நோக்கிடத்துணைச்செவிபுதைத்து
மானளினத்தாள் கருதியன்னவன்பேர் வருத்துறக்கண்டுறுமறையோன். ()

யானளவிறந்த சேணினின்றிங்ங னணைந்தொருசாமத்தினளவும்
வேனமைகிரந்தம் படித்துரைத்தனுத்தேன் வீணிலென்றிடத்துக்காராம
ரானவன்றேற வோதுவர்மாய னருட்சகுணத்திருவுருவி
னுனகம்பதித்த பான்மையால்யாது நன்குருசிக்கிலததுபோல். (௬௦௭)

ஆதலினெனக்கா ரீர்வருத்தமுறு தருள்செய்தும்மூரடைதிரெனப்
போதமாற்றிடவந் தவனடிவணங்கிப் பொருவில்சற்குருபார்நீரே
யோதலாம்விவேக சிந்திணுற்பயன்யா னென்றறிகின்றிலன்பலர்பால்
வாதமாற்றியெனே ராணவந்தன்னை வளர்த்ததல்லாலருள்வடிவீர். (௬௦௫)

இன்றுமைப்பரிட்சிப் பானடைந்திட்ட வென்பிழைபொறுத்தருடிரெனக்
குன்றுறழ்வாரன் னவன்றனையருகிற் கூவினர்சென்னியிற்கரம்வைத்
தொன்றுமாலருண்மந் திரவுபதேச முரைத்துநீயுன்னகரணைந்து
நன்றுறப்பசனை புரிந்தமைகென்ன நனியருட்டன்மைவாய்ந்தமைந்தான். ()

ஒருதினத்தன்பர் தமையுலோகப்பே ருறுநகரினரழைத்தேகிப்
பொருவருகீர்த்த னங்கள்கேட்டின்பம் பொருந்தவாரதிபுரிந்ததற்பின்
பருதிதோன்றியபி னங்கொருவருக்கும் பயன்படாவுவர்க்குளத்திடைபோய்த்
திருவருளுருவர் மூழ்கவானமுதிற் றிகழ்புனலமைதலின் வியந்தார். (௬௦௭)

பிற்றைநாளன்பர் கதைசெய்காற்றுவேசம் பெறுமிருதுறவர்களடைய
வற்றைமானுமந் தனைவிதந்ததையே யனைவருமோதவேண்டுமெனப்
பொற்றைநேர்மனத்தர் நன்குவற்புறுத்திப் புகன்றிடத்துறவர்பொறுரா
யிற்றையின்னவனை வெல்வமென்றந்நாட் டிறைவனுந்தாதுகோடுவின்பால். ()

எய்தினர்சினத்தி னொடுதுக்காரமென் றியம்புரூத்திரன்பிராமணரை
வைதிகக்கன்ம ஞானமார்க்கத்தின் மருவிடாமீதனையருடனே
மைதிகழ்மேனி மாயவனும மந்திரப்பத்திமார்க்கந்தோய்
செய்திகொண்டெவருங் குருவெனவணங்கத் திகழ்தனீயறிந்திலைகொல்லோ.

அன்னவன்றனைமுன் னழைத்தனை தண்ட மாற்றிலையேலெம்மாவியைநின்
முன்னகற்றுவமென் றகங்கவர்ந்தெழுந்த முனிவினற்கமண்டலந்தண்டை
மன்னன்முன்னெறியப் பொறுமின்மாதவர்காள் வல்லையானன்னவர்தம்மை
நன்னகர்ப்பான்மே விடச்செய்வேன்வாத நவிற்றுமின்றேல்வியுற்றுரை. ()

தன்டமாற்றுவனென் றேதியுலோகத் தனிநகராருடனன்பர்
விண்டதன்னகர மெய்துறக்கூவி வேந்தெதிர்போந்திடுகாலை
வண்டராந்துறவர் மறுப்பமன்யான்செய் வந்தனைமறுக்கலிர்தோல்வி
கொண்டவர்தமைத்தண் டிப்பனென்றயலிற் குலவொருசோலையிலமைந்தே.

அன்பரைப்பூசை யாற்றினன்புளக மரும்பிநற்கீர்த்தனம்வினவி
யின்பமிக்கமைபோழ் தவன்சடாமகுட மிலங்கநீற்றுத்துளணுகிக்
கொன்பயினிருவா ணத்துடனொருவன் குலவியன்பரைத்தழீஇமகிழ்ந்தே
நின்படிவினைநோ் காணுறப்பலநா ணெஞ்சவாவுற்றனனமைந்தேன். (ருகஉ)

இன்றுமுற்றியதென் மனோரதமென்ன வியம்பினன்ககனமேலடைய
நன்றுமேவினர்யா ருங்களிதுளும்பி நண்ணினோனரன்கொன்மும்மூர்த்தி
யொன்றுமெய்பெறுதத் தாத்திரேயர்கொலென் றுன்னினர்வியந்தனரக்காற்
றுன்றுமாரதிசெய் தனர்பிரசாதந் துலங்குமியாவர்க்குமீந்திட்டார். (ருகங)

உடனரசன்றன் மனைக்கழைத்தேகி யுற்றவர்தமக்கமுதுதவி
யடல்கொடன்சபைப்பா லனைவருமேவி யமைந்தபின்றுறவரைநோக்கி
மிடல்பெறுவாத முனுற்றுமின்றேல்வி விரவினர்தமையொறுப்பனென
நடலைதீர்துக்கா ராமர்கீர்த்தனத்தி னவிலுவரிவ்வகையம்மா. (ருகச)

வேறு

வான்மீகி யசாமிளன்பி ரகலாதன் கணிகை
மண்டூகந் துருபதமன் மகடுருவன் முதலோர்
மான்மேவுந் திருநாமம் வழுத்தியருட் பதத்தின்
மருவியதா லிதிற்சிறந்த சாதனமின் றிதற்கு
மேன்மேவு மோர்பொருளுண் டென்றிடுமே டனைநோ்
விளம்பவொரு மூடனுமண் மீதிலையென் றுரமாய்க்
கோன்மேவு நாமசித்தாந் தம்பகர்ந்தெல் லோருங்
கூறுமின்விட் டலனும மெனக்குலவும் பலரும். (ருகரு)

விட்டலன்றன் திருநாம மோதியசை வற்று
விடோபாவின் திருவடிவா விளங்குறக்கண் டடனே
துட்டமனம் பெறுதுறவர் துக்காரா மரின்று
டொழுதுநிற்ப மன்னவன்பொய்த் துறவோரே யும்மை

யிட்டசப தப்படிதண் டிப்பனென வன்னே
　　ரியன்றனுக்கா ராமரிமை யவரறிதற் கரிதா
மட்டவிழ்பூந் துளவணிமா யவனுச்சங் காழி
　　வைத்தொருநாற் புயந்துலங்க வயங்கிடலாற் பணிந்தேம். (௩கசு)

என்னமன்னன் வெகுண்டரிகீர்த் தனத்தினுக்கோ ரிகலா
　　மிவர்தமையான் சிறைத்தண்ட மியற்றுவனென் றாக்க
மன்னருட்டுக் காராமர் சற்குணரா மிவர்மேல்
　　வன்சினங்கொள் ளேலென்ன மறுத்தனரா ரதிசெய்
தின்னலறப் பிரசாத மீந்தனர்வாழ் காலை
　　யிவாருள்பெற் றிடுகோடோ பாவளப்பி ராடா
நன்னகர்மே வினனங்கு புராணபட னஞ்செய்
　　ஞானமகா பண்டிதரா கினரவையுண் மேவி. (௩கள)

அன்னவர்யா வருமாலோ சித்தொர்சுலோ கத்துக்
　　கறைந்தபொருள் பிழையென்ன வதுகொள்பொரு ளுரைப்ப
நன்னலமென் றனர்வியந்திம் மூர்க்கனுக்கித் தகுமெஞ்
　　ஞானமுற்ற தெற்றெனவுண் ணுடினர்வி னுவ
மன்னருட்டுக் காராம ரருளாலென் றேத
　　மற்றவரையி வணழைத்து வருதியென்றே ராள்பாற்
பன்னவவ னன்பரிடம் படர்ந்துகதை வினவிப்
　　பரவசமுற் ருன்விழித்த பார்வையனு யம்மா. (௩கஅ)

அத்ததியப் பந்தரிற்றீச் சுடரணைந்து சிதைய
　　வறியாரா னந்தமயமாகியுற்றுர் யாரு
மொத்தமையும் போழ்தினிற்கோந் திப்பதிவா ழவிந்த
　　னேங்கியசக் கிலிச்சேக்கு மகம்மதெனும் போரா
னுத்தமர்பா லரிகதைசெய் தமைகான்மே லெழுந்தே
　　யுற்றபந்தர் தனைத்துடைத்திட் டொன்றுமிடத்தணைய
மெய்த்தகையோர் பலருமிப்போழ் தென்புரிந்தீ ரென்ன
　　வினவிடத்துக் காராமர் வியன்கதைசெய் யிடத்தில். (௩கக)

தீப்பற்றிக் கொண்டதுபந் தரிலவித்தே னென்னச்
　　செப்பவொரு வருமதனைத் தேர்ந்திலரோ வென்றுர்
மாப்பற்று முரத்தனரு ளுமம்வினு வினர்மெய்ம்
　　மறந்தனரென் றிடமாயன் மாற்றிலனே வென்றுர்
வாய்ப்பற்றன் னவனுமன்பர் மனநிலவி யயர்ந்தா
　　னறிதிரென வோரானை யனுப்பியுண்மை தேர்ந்து
மீப்பற்றுர் சேக்குமுகம் மதுஞானப் பெருஞ்சீர்
　　வியந்தவன்றுள் பணிந்தின்ப வேலையின்மூழ் குற்றுர். (௩உ0)

அந்தணர்க ளனுப்பியவாள் பலநாளா யங்ஙு
    னணையாதாற் பின்னொருவன் றனையனுப்ப வவனு
முந்தணைந்தா னிலையமைய வியந்தனர்தஞ் சாதி
    முறைமைவிடுத் தருளன்பர் முன்மேவ வருஞ்சீர்
சிந்தனையிற் றேர்ந்துதுக்கா ராமரெதி ரணைந்து
    செழுமறையோர் தமைத்தழுவிச் சிந்தையுவப் புறுங்கால்
வந்தவர்க ளிக்கலியிற் புதுமைபல கோடி
    வயக்கினர்நீர் யாரென்ன வயங்குதுக்கா ராமர். (௬௨௧)

*ஊருவினைக் கிழித்தனர்காட் டிடப்பஞ்சி னிறமா
    யுறக்கண்டார் தணர்சிவனே யுலககுரு வாகச்
சாருதலா யினனென்ன வணங்கிமிகத் துதிப்பத்
    தகைகொளன்ப ரிதுசிவற் சலாஞ்சனமென் றோதி
நீருயர்மேற் குலத்தீரெற் றொழுதறகா தென்ன
    நிகழ்தருநீர் தேவரினு நெடியீரென் றுணர்ந்தேம்
பாருறுநுந் திருவடியைக் கண்டுதொழு தேத்தும்
    பாக்கியம்பெற் றேமெமையாட் படுத்தினிரா டிரென்றே. (௬௨௨)

மறையவரன் பரைச்சிஞ்சு வடிக்கழைத்துச் சென்றோர்
    மாதமரி கீர்த்தனங்கள் வழுத்திடக்கேட் டிருந்தார்
நிறைதருகா லோர்குடியா னவன்குதிரை யூர்ந்து
    நித்திரைசெய் தேகிடுசீர் நேர்ந்தருட்பண் டரியி
லுறைதருவே தியன்வினவ வியற்றுக்கா ராம
    ரோர்மாதம் புரிந்தவரி கதைவிளைவித் துயிலா
முறைமையினுன் மயங்கினனென் றோதிடவிவ் வூருண்
    முயங்கிடில்யா னவரெதி†ரென் முன்னுறுமின் மினியே. (௬௨௩)

இந்நகர்வாழ் மாந்தர்நமைப் பொருட்படுத்திப் பொருளொன்
    றீயார்துக் காராம ரிடமொர்பத்தன் யானென்
றென்னவங்க யாலணைவே னென்னகர்ப் புறத்தி
    லேகிடமெய் யன்பர்தமதி தயமிசைத்தேர்ந்தே
யன்னமறை யோன்றனைமெய் யன்பினுடன் றழுவி
    யணைவதெங்ஙு னெனவினவ வந்தணனென் சுதற்குக்
கொன்னமையு மிடபமதி தன்னின்மண மாற்றக்
    குறித்திரும்பொன் யாசிப்பக் குறுகினனீண் டென்றான். (௬௨௪)

மயைறவனை யழைத்துவந்தோர் மனையிலமைத் தனரோர்
    மாதம்வரை கீர்த்தனங்கள் வகுத்திடக்கேட் டின்ப
நிறைவுடன்வாழ்ந் தனரக்கான் மறையவனூர் புகுத
    நேயமுடன் விடைகேட்க நிகரிலருட் டொண்ட

* ஊரு-தொடை. † எல்-சூரியன்.

ருறைதருமவ் வூரினர்யா ரையுமிவர்க்குப் பைம்பொன்
னுதவுதிசென் றிடக்குறைவுற் றுளதென்றம் மறையோ
னறைதரத்துக் காராமர் யார்வரிநல் கிலரென்
றூய்தாரெய் திடுமொருவ னளித்திலனென் றறைய. (கூ௨ரு)

நானவின்றே னென்றவன்பாற் கேண்மினென வெய்தி
நவிலவவன் சினங்கொடொன்று நல்குகிலே னென்றூ
னீனமறு மவன்மனையாள் பலபடப்பே பா தித்து
மீயேனென் றிடவவண்மிக் கின்னல்கொடோர் செம்பைத்
தானமளித் திடக்கொண்டன் பரின்முன்வைக்க வதனைத்
தங்கரத்தேற் றனர்நெய்வோன் றமநியச்செம் பீந்தான்
மானமறை யோர்கொண்மி னெனவிதுபித் தளைநீர்
மதித்துணர்தி ரெனநெருப்பில் வைத்திரும்பொன் செய்தே. ()

தந்திடயா வரும்வியந்தார் மறையவனும் வாழ்த்தித்
தகுபுகழ்ப்பண் டரியமைந்தான் றகைகொடுக்கார.ம
ருந்தியலங் நகர்மறையோர் பால்விடைபெற் றயலா
ருலோகநக ரெய்தினர்பின் புற்றியல்கீர்த் தனஞ்சொல்
வந்தியனுங் கோடோபா யாத்திரைசெய் விருப்பம்
வாய்ந்தனன்பொன் னின்மையினுல் வருந்துகிறே னென்னத்
தந்திருப் பீடத்தின்கீ ழுமையொர்விரா கனைக்கை
தந்திடப்போ தாதென்னைச் சாற்றிடுவர் மேலோர். (கூ௨எ)

ஈங்கிதனை மாற்றியன்பர்க் கிட்டுநின்வத் திரத்தி
னிடையிலொரு காசுமுடிந் தேகுதிவேண் டுங்காற்
றுங்கியவம் முடியவிழ்த்துப் பார்த்திடுதோ றும்யான்
றந்தவிரா கன்றுலங்குந் தகச்செலவு செய்தென்
பாங்கியல்கா லைபிவிதனை நல்கிடுதி யென்னப்
பணிந்துவந்து சென்றவணம் பலித்திடலால் வியந்து
நீங்கிடுகா லையிலன்பர் மூன்றுகவி நல்கி
நிகழ்விசுவே சுரன்கங்கை நெடியவன்முன் னேதி. (கூ௨அ)

வருதியெனக் கொடுவணங்கிச் சென்றவன்கங் கையின்பான்
மருவியன்பர் கவிகொடுப்ப மஞ்சளங்கை நீட்டிற்
றருகமைவோர் பலரும்வியந் தாடைபொன்னக் கரத்தி
லளித்துவந்தார் விசுவேச னுலயத்தி லணைந்து
பொருவில்சுவைக் கவியோதச் சென்னியசைத் தேற்கப்
பொருந்தினர்பற் பலருமிறும் பூதுடைய ரானுர்
பெருமைக்கோடோபாபின் கயையடைந்து மாயன்
பிரசமலர்க் கழலிலன்பர் பேசுகவி யனமத்தே. (கூ௨கூ)

மாலடிபோற் றினன்பொன்கொண் டந்தணர்க்குத் தானம்
வழங்கினன்றீர்த் தங்களெலா மருவினனைத் தீற்றிற்
கோலமுறும் விராகனையன் பர்க்களிக்கா திற்பாற்
குறுகிவைத்துக் கொளுநினைவு கொண்டுமனை யமைத்துச்
சீலர்முன மடைந்துபணிந் தனனிற்ப வெனது
செய்யவிராக னைக்கொடைசெய் திடுதியெனச் செப்பிச்
சாலநகைத் திடக்கபடன் கைதப்பிற் றெனப்போய்
சாற்ற*வற்றோ வென்றுமௌனஞ் சார்ந்தமையப் படிறன். (௬௬0)

மனையணைந்து நோக்கிடவின் றுகவந்தோ பொன்னு
மாய்ந்துகுருத் துரோகமும்யான் மருவினனென் றுள்ளத்
தினைவுகொடற் றுன்பொன்னா சையினுலிப் பாவ
மேய்ந்தனனென் றேங்கினனோ ரிரவிலன்பர் மாய
னனைமலர்த்தா ளிடைகலந்து கீர்த்தனஞ்செய் துறுகா
னண்ணும்விளக் கணைதரவி னுவியுற்றுரெல்லாம்
புனையெழிற்சித் திரம்போல நின்றருட்பே ரன்பர்
பொலிமேனி யொளிவிளக்கிற் பொலிதரக்கண் டுவந்தார். (௬௬௧)

வேறு

பின்னருட்டுக்கா ராமர்தாங்தேகுப் பெரும்ப தியணைந்துவிட்டலன்றன்
வன்னமாமலர்த்தாள் வணங்கியென்றன்னை மகிமையாந்தளைப்படுத்துலகிற்
றின்னல்சோம்புடனித் திரைகொடுவாடச் செய்தனையிவற்றினுக்கயர்ந்தே
னன்னலப்பதஞ்சேர்க் குதியெனப்பாண்டு ரங்கன்றுனகைபுரிந்தருளி. ()

அஞ்சலையன்ப வுனக்கினியிட்ட மருள்வனென்றன்பினுற்றழுவப்
புஞ்சமாமதுரத் தோத்திரம்புரிந்து பொலிசபாமண்டபத்தணைந்து
மிஞ்சருண்ஞானே சரைப்பணிந்தயலின் மேவுகாலையிலமைகக்க
டஞ்சமெய்யன்பர்க் கண்டுளம்வெருவித் தனித்தனிபறந்திடக்கண்டார். ()

உவகைமிக்கமைந்த பறவைகளனைக்கண் டுளம்வெருண்டோடியதிறத்தா
னவமுறுமென்னுள் ளம்பரிசுத்த நண்ணிபதின்றெனத்தெரித்த
வுவமைதீர்நிலையெய் துறும்வரையிவண்விட் டொருவிலேனென்றுசித்திரம்போற்
றவமலிதொண்டர் நின்றிடக்கண்டு சகிக்கிலன்பாண்டுரங்கேசன். (௬௬௪)

தன்னருளன்ப ரிடத்திலெவ்வுயிருஞ் சார்தரவருள் புரிந்திடலாற்
பின்னர்நாடோறும் பறவைகளன்பர்ப் பிறிகிலாதியறுவேபோன்
மன்னமெய்க்கீதம் பாடினராடி வயங்கல்கண்டியாவரும்வியந்தா
ரின்னபான்மையைச்சிஞ் சுவடிவேதியர்கேட் டிதயமேன்மிகவியந்தனராய்.

சாதமோர்ந்துறவோர் தூதனையனுப்பச் சார்ந்தவன்கீர்த்தனங்கேட்டுப்
பரவசமடைந்து தனைமறந்திரவு பகலுமோர்ந்திலனவண்வதிய
விரவுமுத்தினங்க ளகன்றுமற்றவன்றுன் மேவிடாமையின்மறையோர்கள்
குரவரைச்சென்று தரிசிப்போமென்னக் குறுகவன்னதையுணர்ந்தன்பர். ()

---

* அற்றோ - அத்தன்மையோ.

பல்லியங்கலிப்ப வரியருட்கீதம் பாடியாடினரெதிரணைய
நல்லியன்மறையோர் புள்ளூடலன்பர் நயங்கெதிர்பொருந்துறஞடி
யொல்லியற்பரவ சத்தாய்மேலோ ரொளிர்பதம்வணங்கமற்றவரைப்
புல்லினர்தம்மூ ரணைவித்துமுந்நாள் போற்றிடவிடைகொடுபோனர். (கூகூஎ)

அன்னகாலேயின்மெய் யன்பர்பாண்டரங்க ஞலயத்தணைந்தனர்போற்றி
யென்னகாரணத்துக் கெனைப்புவிமீதி லெய்தவைத்தனையதுநிரம்பிற்
றின்னமுந்துயர்கொண் டிடச்செயே லுன்ற னிருபதநல்கெனவிரப்பப்
பொன்னமையுரத்த னினைவுறேலுனது புந்தியிற்பொருந்தியவிருப்பம். ()

பொருந்திடுசோம வாரத்தின்முற்றப் புரிவனென்றிடவுடன்பிராட்டி
மருந்தியன்மொழியாற் சாற்றுவணமது மகிமையன்பன்றுக்காமற்
கிருந்திரையிந்தி ராயணிப்பானம் மினிபவைகுந்தமெய்ப்பதம்போற்
றிருந்தியலொருவீ டமைத்துவைகுந்தஞ் சேர்ந்துளார்களைவருவித்தே. ()

விபவமிக்குறப்போ னகமளித்தன்பன் வீட்டுறப்புரிந்தருளெனவான்
றபதியைக்கூவி யங்ஙனம்புரிந்து சனகாதியர்சுகர்வீணைத்
தபமுனிபிரக லாதனம்பரீடன் றகுமுத்தவன்முதலானோர்
நபமுறுவிச்சா தரர்கண் மொய்த்திடவே நண்ணுமேகாதசித்திதியில். (கூச0)

வந்துசூழ்தரச்செய் தவர்க்குருக்குமணி மலர்க்கையாற்போனகம்வழங்க
வைந்துநாட்டுக்கா ராமர்தாமிடையீ டறச்செழுங்கீர்த்தனமிசைத்து
மைந்துடனடத் தேவர்கண்டுவந்து மலர்மழைபொழிந்தனருவாத்தோ
யிந்துநாளணையக் காலையாரதிசெய் திசையுடன்மகுடமோதிடுகால். (கூசக)

விட்டலனன்பா லன்பரைத்தழுவி விள்ளுவானுலகினியெய்தி
மட்டறும்பலரைத் தேற்றினையுவகை மவிந்தனன்வருமினிவிமானஞ்
சட்டநீயதனி லணைந்துவைகுந்தஞ் சார்கெனவணங்கினரில்லாட்
கிட்டமிக்கணைதி யான்கொள்வைகுந்தத் தினுக்கென்றோரளேயேவுதலும்.

அன்னவன்சென்றோ திடவிகப்பாச மமைந்துளாளமதிக்கருப்பந்
துன்னலாயினன்றோய் கறவைமேதியையுஞ் சுதர்களையும்பிறிந்தெங்ங
னுன்னரும்பதத்தெய் துவனிதுசமயத் தொவ்விடேனெனவிசைத்திட்டாள்
பின்னமாமாயை யோடபேதமதாப் பிணைந்துறுபித்தமிக்கமைந்தாள். (கூசஙு)

தூதனேதிடக்கேட் டருட்டுக்காராமர் தோகையன்னுள்பெறும்விதியைப்
போதரப்புரியுஞ் செயலிலையெனத்தம் புந்திகொண்டடனெதிர்பொருந்து
மாதரச்சீடர்க் கோதுவரிடையீ டறவரிதனைத்துதித்தமைந்தே
கோதமைகலியை வென்றுவைகுந்தங் குலவுவீரெனப்பலபுகன்றே. (கூசச)

அரிதிருநாம மோதினருருகா லன்பமைசீடர்களாரும்
பரிபவமுறுஞ்சீ ரென்னெருநாவிற் பகரினுமுற்றுறுதக்காற்
பெரியமெய்த்தொண்டர் கவியிருபானேழ் பேசிடவிமானமெய்தியதூர்ந்
துரிமையிற்றேவ ரலர்மழைபொழிய வொப்பில்வைகுந்தநாடுற்றார். (கூசரு)

அன்னகாலையிற்சிச் சாயிவிமானத் தந்தரத்தணையுநாயகர்ப்பார்த்
தின்னமாண்புடையா ரென்றறிகிலன்பித் தெய்தினரென்றுனிக்கெட்டே
னென்னவேபலவாப் புலம்பினளினிபாதெனன்செய்வேனென்றனளமைந்தாண்
மன்னருட்டம்பி கானியாவுடனே மதுகீர்த்தனஞ்சொலீரெழுவர். (௩௪௬)

அன்பரைக்காணு விடிலுயிர்துறக்கு மதிவிரத்தியுடன்முத்திவசந்
துன்பமைந்தியல்காற் றம்பியோவிப்பேர்ச் சுவைக்கவிகொண்டுதோத்திரிக்க
மின்பயிலன்பர் கஞ்சுகந்தாள மேதினிமேல்விழுத்திடலா
லின்பமிக்கனர்நந் தமக்கருள்பரிசென் றெடுத்தனர்வணங்கிவாழ்ந்திட்டார்.

பட்டர்தம்மனும திப்படிபஞ்ச மித்திதிபற்றியாண்டுதொறு
மிட்டமார்பூசை யுற்சவாதிகள்செய் தியைந்தனர்மதியொரைந்தொழிந்து
மட்டறுபுகழ்நா ரணப்பெயர்ச்சுதனை மன்னுசிச்சாயிபெற்றிட்டாள்
சிட்டனுஞ்சுதன்றன் றுதையொத்திடுசீர் திகழ்ந்தரிபசனைசெய்தமைந்தான். ()

கவினுறுதுக்கா ராமர்கான்யாவின் கனவினில்வந்துபதேசஞ்
செவிகொளப்புகன்றே கினர்முனட்செந்தூர் வாடியூர்சேர்கவர்சேட்டென்
றவிர்தருபெயரோ னன்பர்பானீரென் னந்தியகாலத்திற்சேவை
தவிர்தாதளிக்க வேண்டுமென்றிரப்பத் தயவினலிசைந்தமைந்திட்டார். ()

அன்னவாறவனுக் கந்தியமுறுகா லன்பரையழைத்துறும்வண்ணந்
துன்னதேவலனை யேவிடத்தமைய னின்மையிற்றம்பியுஞ்சுதரு
நன்னலப்பட்டர் தாமுமாங்கணைய நவின்றசொற்பழுதுறுவண்ணங்
கொன்னமைதுக்கா ராமரெய்தினர்கை குவித்துவாழ்த்தினர்கள்பல்லோரும்.

ஆயகாலையின்மெய் யன்பர்தம்பிக்கு மணைதருபட்டர்க்குஞ்சிறிய
சேயனுக்கும்பே ரருளநுக்கிரகஞ் செய்துவைகுந்தத்திற்சேர்ந்தார்
நேயர்பின்பகினு வொடுகங்காதரர்ஸ்ரீ ளோபாகோசாமிக்குங்கனவிற்
றாயகல்லுபதே சம்புரிந்தனர்மேற் றுதையுமேல்வையுனுஞ்செய்வாரால். ()

மருள்வயப்பட்டோர் தமக்கருவினைகள் வடிவமாப்போகமீந்தீற்றி
யிருள்வயத்தெய்தப் புரிதல்போனிவிர்த்தி யெய்துமார்க்கப்பரபோகத்
தெருள்வயப்பட்டோர் தமக்குமுன்னேருந் தெய்வமுமுருவமாத்தோற்றி
யருள்வயப்படச்செய் திடும்பின்னையுடனே யபின்னையாய்ப்பக்குவமொத்தே.

சத்தியத்தகைதோய்ந் திரக்கமாசாரந் தாங்கிமெய்த்தவம்புரிந்தீடில்
சித்திபற்பலவிவ் வுலகிடத்தியற்றித் திருவருளிடைகலந்தோரைப்
பத்தியால்விரும்பி வணங்குநர்க்கந்தப் படிவமாயுயர்பரந்தானே
நத்திமுற்படுமென் றுயரநுபூதி நலங்கொண்மேலவர்நவில்வாரே. (௩௫௫)

காயிரும்பதனு லுணப்படுநீர்போற் கதியிடைகலந்தவர்நீங்கி
மாயிரும்புவியிற் பிறங்கிடார்நிசமே மறுவிலெஞ்சற்குருபரனு
மேயிருபதப்பூ வெமக்கணிந்தருளும் விமல ராமானந்தனருளென்
வாயிருந்தசைப்பப் பத்தமான்மியநூல் வழுத்தியின்புறமுடித்தேனே. ()

### வேறு

௧

நாமதேவர் திருவுளங்கொ ணசைமுற்றுமற் செய்தருளான்
ஞாலத்தினருய்ங் திடத்துக்கா ராமராக வரப்புரிந்து
சேமமார்பே ரருளாடற் றிரள்கோடியெனச் செயப்புரிந்து
சீலம்பொலிபல் சிறப்பியற்றித் திருவைகுந்த முறவழைத்தாய்
நேமஞான வுண்மையரு ணிலையொன்றறியே னுபினுமென்
னிகழாவியைநிற் கடைக்கலமா நேர்ந்தேனெனைநன் னெறிசெலவுய்த்
தேமனனுகா தாணையன்ப ரினமெய்திடுபே றளித்தருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௫௫)

### அபிப்பிராயம்

கொல்லாவிரத நெறியொன்றே குணமாநெறியா மஃதில்லார்
கூறுநெறியெத் தனைநன்மை கொண்டநெறியா யினுந்தீதே
கல்லாரெனினுங் குருபரன்றாள் கருதுமுறுதி பெறினுயர்வே
கலைகற்றிடினும் பேதமொழி கழறியஃதில் லார்கடையே
நில்லாவுலக சுகமதனை நீங்கத்துறந்து தவவாழ்வி
னிலையாமடியா ருறவதனை னேராநலமொன் றிலையென்ன
வெல்லாமுணர வுரைத்தனையா னினிதுபெறச்செய் தேற்றருள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௫௬)

நெல்லைப்பதியி லவதரித்து நீலமயில்வா கனக்குமர
னிறைமெய்யருளாற் றமிழ்மாரி நிலவுத்தமர்த முளங்குளிரச்
செல்லைப்பொரவெங் கணும்பொழிந்து திகழ்நான்முகன்சொல் சதுர்வேத
சித்தாந்தச்சண் மதசமயா தீதவத்து விதநிலையா
மெல்லைப்படுகௌ மாரநெறி யினிதுவிளக்கித் திருப்புகழ்ப்பே
ரிசையுந்தண்ட பாணியென வேய்ந்துமவன்ற னூற்கிலக்கா
யெல்லைப்புரைமா னுக்கனென்று மிகத்தோர்புகலத் திகழ்கின்று
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௫௭)

தனதுகரத்திற் சங்காழி தயங்குமிரேகைக் குறியமைந்து
சாருமிருதோ ளினுந்திருமண் டணித்தென்கலையும் வடகலையு
மினமார்துளசி மணிபதுமத் தினதுமணியுந் தரித்தரித
னினியபுகழ்தோ யரங்கத்தா யிரம்பாடுதென் னரங்கனெதிர்
மனமாருரித்தோ டுரைத்திகோல் வாய்ந்தபனவப் பெண்ணரவின்
வலியவிடத்தா விறந்தொழியா வண்ணங்கருட னுற்புரந்தா
னெனதாரியனென் றேதினைநீ யெனக்கன்னவனுன் னிலும்வேறன்
றிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. ()

கோலப்பொலிவார் கொங்கிலணி குலவுஞ்சிரவ ணப்பதியிற்
குழவியாகிக் கலைபயின்று குமான்றனைச்செந் திலில்வணங்கிச்
சிலைப்பழனிக் கிரியருகிற் றிகழ்சற்குரவ னுபதேசஞ்
செயப்பெற்றரிய வநுபூதி சேரவடைந்து தவவேடஞ்
சாலத்துலங்கி யடியர்பலர் சகமாலொழிந்து ஞானநிலை
சாரக்கடைக்கண் ணருள்வீசித் தகைதோய்கனக சபைக்கொலுவி
லேலற்புதமார் குருபரவுன் னிணைத்தாளிடைசேர்த் தெனையாள்வா
யிராமானந்தப் பெயர்கொடென திதயத்திலங்கும் பெருமாளே. (௩௫௬)

துக்காராமசுவாமிகள்கதிமுற்றிற்று

ஆ கவி ௬௮௬

நூற்பயன்

சுத்தமான் மியமுறு தூய செந்தமிழ்ப்
பத்தமான் மியவநு பந்தந் தேர்பவர்
சித்தமான் மியத்திறஞ் சிறந்து தீதிலா
நித்தமான் மியக்கதி நிலைமை தோய்வரே.

வாழி

ஆதிமூ லப்பெயர்கொள் பகவன் வாழி
யன்படியார் யாருநல மமைந்து வாழி
போதியல்வோ ணுதிமறை யாதிநூல்கொள்
புனிதமுறும் பொருள்களெலாம் பொலிந்து வாழி
சோதியிராமானந்தத் தேசிகேசன்
றெண்டருட னென்றுமின்பந் தோய்ந்து வாழி
கோதில்பத்த மான்மியநூல் படிப்போர் கேட்போர்
குளிரருட்சீர் கொண்டுமிக வாழிவாழி.

பக்தமான்மியவநுபந்தம்
முற்றுப்பெற்றது

குருபாதமேகதி

---

உ

# குருவே துணை

## ஸ்ரீ துக்காராமசுவாமிகள் பரமபதம் அடைந்து (அ0,) வருடங்களுக்குப்பின் பூவுலகத்தடைந்து பக்தகதாசிரவணஞ் செய்துபராயணர்களுக்கு

## அநுக்கிரகஞ் செய்து சென்ற வைபவம்.

கலியுகாதி (சஅகக) வருஷத்தில் துக்காராம சுவாமிகள் புத்திரியின் மைந்தனுகிய வாசுதேவபாவா என்பவர் பண்டரிபுரத்தில் பிரமாம்சரான நாபதாசர் செய்த பக்த சாரத்தைப் பாராயணஞ் செய்து கொண்டிருப்பதை அந்நகர்க் கிறைவனுகிய பாதுஷா நாடோறும் சிரவணஞ் செய்து கொண்டே வந்து துக்காராம் தமது தூலசரீரத்துடன் யாவருங்காண வைகுந்தஞ் சேர்ந்தாரென்பதை வினவிச் சந்தேகங்கொண்டு அப்போது பார்த்தவர்கள் இக்காலத்துளரோ என விசாரிக்குங்கால் இரண்டொருவர் நாங்கள் சிறுவராயிருக்குங்காலை போகக்கண்டேம் மெய்மையே யென்றுரைக்கவும் அரசன் சற்றும் தன்னுள் நம்பிக்கை கொள்ளானுய், இவர் மொழி சுத்த அபத்தமென்றறைய அது கேட்ட வாசுதேவபாவா, வயதில் மிகுந்த மாதாவுக்குத் தெரியுமென அது கேட்டு மன்னவன் இது விஷயம் உன் மாதாவை அழைத்து வந்து மெய்ப்பித்தாலும் நம்பத்தகாததே. இனி இத்தகைய அபூர்வ கற்பனுலங்காரங்களால் நிறைவுபெற்ற இந்நூலையும் கேட்க வொப்பேனென, உடனே வாசுதேவபாவாவும், தன் மனத்திற் சந்தேகங் கொண்டு உண்மை தெரிய அவாவினுப் புராண சிரவணத்தை நிறுத்திச் சபையோருடன் அடியேன் இதன் உண்மை யுணர்த்துங்காறும் யாவரும் போகக்கூடாதெனப் புகன்று தன் அன்னையிடம் செல்லுங்காலையில் அச் சபையின்கண் சாது வேஷத்துடன் அமைந்து நாடோறும் கதா சிரவணம் செய்து கொண்டிருக்கும் துக்காராம் தமது வடிவமைந்து வாசுதேவபாவாவைக் கூவிக்கொண்டு பின்னணைந்து நானே துக்காராம் என, ஆயின் எனது மாதாவிடம் வருதிரென்றழைத்துச் செல்ல அங்கு சென்று தம் புத்திரியின் நாமத்தைச் சொல்லி யழைக்கத் திருவருள் வடிவாகிய தந்தையின் தொனி கேட்ட புத்திரிசாலவும் வியப்பெய்தினளாய் எழுந்தோடி வணங்கி, ஓ என் தந்தையே நீர் இங்கு வந்தது விந்தையே. (அ0) வருஷங்களாகத் தாங்கள் எவ்விடை மறைந்தமைந்தீரெனத் தோத்திரம்புரியத் துக்காராம் தமது ஞான சித்திப் பிரதாபங்களை யோதி அருகமைந்த பேரனுகிய வாசுதேவபாவாவைப் பார்த்துச் சொல்லுகிறுர், அரசன் இப்போது சங்கை கொண்டதும் பண்டரிநாதன் திருவருளேயாகும். அது குறித்து நீ சிறிதும் கவலையடைய வேண்டுவதில்லை. நான் மீட்டிக்கொண்டிருந்த இந்தத் தம்புருவைச்

சபைக்குக் கொண்டுபோய்ச் சபையோர்கள்பால் துக்காராம் பொந்தி யோடு மேலுலகம் புக்கது மெய்மையாகின் அவீர்காத்தால் மீட்டிக் கொண்டிருந்த இந்தத் தம்புரும் அந்தரத்திற் செல்லுமென்றுரைத்துக் ககனத்திலெறியின் உடனே நான் பிடித்துக்கொண்டு வானுலகிற் செல்கின்றேனெனக் கேட்டவாசுதேவபாவா விம்மிதமும் சந்தோஷமும் பொருந்திச் சபையின்கண்ணணைந்து, அரசனுடன் ஓ, பாதுஷாவே உமக்குற்ற சந்தேகத்தை இத்தம்புருவால் நீக்குகிறேன் பாருமென்று ஸ்ரீமந்நாராயணனைப் பலவிதங்களாகப் போற்றி துக்காராம் பொந்தியோடு வானுலகிற் சென்றது சாதமாயின் அவர் தம்புரும் அந்தரத்திற் செல்லு மென்றியம்பி ஆகாயத்திலெறிய உடனே துக்காராம் அதைப் பிடித்து மீட்டிக்கொண்டு பாண்டரங்கன்புகழ்களைப் பலவாறாகப்பாடிக்கொண்டே அந்தரத்திற் சென்றதன்றிப் பக்தசரித்திரத்தை யோதுமிடத்தில் நித்திய முத்தர்களும் தேவர்களும் வேற்றுருக்கொண்டு சபையிலும் ஆகாயத்தும் அமைவதால் அன்புடன் ஓதுபவர்களும் கேட்பவர்களும் பவசாகரத்தையும் துக்கசாகரத்தையும் கடந்து சகல சுகங்களையும் பிரமானந்தப் பிராப்தியையும் அடைவார்களென்று அங்குள்ள பாதுஷா முதலிய அனைவரும் தங்கள் கண்ணாரக்காணுமாறும் காதாரக்கேட்குமாறும் தமது சத்தியத்திருவாக்காற் கட்டளையிட்டு மறைந்தாராதலின், பக்தமான்மிய சிரவணமானது மானிடர்களுக்கு அபீஷ்டதான கற்பகத்தருவென்பது வெள்ளிடை மலையாம். ஆதலால் பக்தமான்மியநூலை அன்புடன் ஓதுபவர்களும் கேட்பவர்களும் எண்ணிய வெண்ணியாங்கு எய்தும்படி நல்க இறைவனையும் அடியார்களின் திருவடிகளையும் பிரார்த்தித்து முக்கரணங்களாலும் வணங்குகிறேன்.

கௌமாரமடாலயம்,<br>
சிரவணபுரம். }

இங்ஙனம் அடியார்க்கடியேன்,<br>
கந்தசாமி.

# குருபாதமேகதி.

---

# பிழைதிருத்தம்

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 9 | 32 | 3 | கஙகை | கங்கை |
| 13 | 63 | 1 | புகழ்பத்தர் | புகழ்ப்பத்தர் |
| 21 | 40 | ,, | கன்கத்தின் | கன்மத்தின் |
| 23 | 58 | 4 | றதிசி | றதீசி |
| 24 | 66 | 3 | மெய்த் | மெய்ச் |
| 25 | 2 | 4 | பிரி | பரி |
| 32 | 18 | 3 | காகிச் | காதிச் |
| ,, | 19 | 1 | உலகனி | உலகின |
| 33 | 26 | 4 | ளிங்நிலத்து | லிங்நிலத்து |
| ,, | 28 | ,, | சிட்டி | கிட்டி |
| 37 | 43 | 3 | ரூவுட | ரூனுட |
| ,, | 47 | 6 | கணலே | கனலே |
| ,, | 48 | 4 | மதிபிப்போ | மதியிப்போ |
| 40 | 61 | 1 | துலஞ் | துலவுஞ் |
| 43 | 28 | 4 | மணப்பொ | மணம்பொ |
| 46 | 50 | 5 | வவணே | வவனே |
| 52 | 48 | 2 | வொர் | வர் |
| ,, | 53 | ,, | தமபா | தம்பா |
| 54 | 67 | ,, | காலக்து | காலத்து |
| ,, | 69 | 3 | ளென்னும | ளென்னும் |
| ,, | 73 | 4 | போமே | போமோ |
| 58 | 99 | 2 | கழ்ல் | கழல் |
| ,, | ,, | 3 | பசெய | பச்செய |
| 66 | 60 | ,, | தேர்ய் | தோய் |
| 74 | 52 | 2 | மக்த | மகத் |
| ,, | 1 | 3 | ஞறபுரி | ஞறப்புரி |
| 77 | 22 | 7 | யெதிர்ப்பி | யெதிர்ப்பி |
| 84 | 71 | 4 | மன்ஞுரை | மற்ஞுரை |
| 89 | 118 | ,, | டனள் | டனன் |
| 92 | 5 | 3 | வதரத் | வதரக் |
| 94 | 19 | 1 | எது | ஏது |
| ,, | ,, | 3 | மீதைமை | மீதமை |
| ,, | 20 | 4 | தனண் | தனன் |
| 97 | 3 | 3 | யாவாவி | யவாவி |
| 98 | 8 | ,, | குலேன் | குசேலன் |
| 102 | 46 | 4 | தேதெனுங் | தேதேனுங் |
| ,, | 47 | 3 | ஞாடோர் | ஞாடோர் |
| 108 | 80 | 1 | பேருங்தேவி | பெருங்தேவி |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 109 | 8 | 2 | தின்னி | திண்ணி |
| 112 | 30 | 3 | றரியா | றிரியா |
| 113 | 36 | ,, | மகனெத் | மகனெனத் |
| ,, | 42 | 1 | கரச | காச |
| 115 | 56 | 4 | கவள் | கள் |
| 118 | 83 | ,, | றறற்றி | றாற்றி |
| 124 | 14 | ,, | னீதியோ | னீதியே |
| 125 | 24 | 2 | பெறுமின் | பெறுநின் |
| 130 | 11 | 1 | யுரி | புரி |
| 137 | 72 | 1 | கொன்ட | கொண்ட |
| 138 | 86 | 3 | லச்கை | லச்சை |
| 152 | 26 | 4 | லெத்றிசை | லெத்திசை |
| 156 | 66 | 3 | னிரந்த | னிறந்த |
| 164 | 37 | 1 | யீர்ந்ற | யீர்ந்த |
| ,, | 39 | 3 | நடந்தி | நடத்தி |
| 166 | 59 | ,, | திறத் | திறந் |
| 167 | 8 | 2 | முயற்கி | முபற்சி |
| 193 | 232 | 3 | கிற்பே | கிற்போ |
| 214 | 37 | 4 | யார்கவர் | யார்க்கவர் |
| 218 | 11 | 2 | விபுதர்தளு | விபுதர்களு |
| 229 | 8 | ,, | புதவர் | புதல்வர் |
| 232 | 39 | 1 | சுடை | கடை |
| 242 | 16 | ,, | மிதிலைத்தொன்னக | மகிடமதிநக |
| ,, | ,, | 4 | கப்பதியினி | கர்மிதிலையி |
| 243 | 21 | ,, | கார்க | கார்க்க |
| 245 | 36 | 1 | கொன் | கொண் |
| 246 | 46 | 2 | பெருந்துவ | பொருந்துவ |
| ,, | 48 | ,, | முறவி | யுறவி |
| 253 | 108 | 1 | முழ்கி | மூழ்கி |
| 254 | 120 | 4 | ஞன | ரூன |
| 264 | 210 | ,, | தினைந்து | தணைந்து |
| ,, | 211 | ,, | பூடிகை | பூமிகை |
| 269 | 259 | 3 | சங்சர | சங்கர |
| 274 | 301 | 1 | துள்ளா | துள்ளாய் |
| 275 | 307 | 3 | விறய்பெ | விறப்பெ |
| 276 | 317 | 2 | வெளள | வெள்ள |
| 286 | 366 | 4 | அழைதன | அழைத்தன |
| 287 | 370 | 1 | ளார்கெலா | ளார்க்கெலா |
| ,, | 376 | ,, | சிணை | கிணை |
| ,, | ,, | 4 | வலித்தர்ர் | வலித்தார் |
| 288 | 381 | 3 | கனவா | கலவா |
| ,, | 384 | 2 | புண்ணிம் | புண்ணியம் |
| ,, | 385 | 3 | நிர்குணே | நிர்க்குணே |
| 291 | 406 | ,, | தக்த | தத்த |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 291 | 460 | 3 | சீர | சீர் |
| ,, | 467 | 1 | மூழ்ந்து | சூழ்ந்து |
| 299 | 476 | ,, | புகழ | புகழ் |
| 301 | 503 | 3 | தளித்கு | தளிக்கு |
| 303 | 520 | ,, | கொன்ட | கொண்ட |
| 304 | 531 | 4 | போனுடன் | யோனுடன் |
| 306 | 543 | 3 | பாண்டகை | பாண்டக |
| 307 | 551 | ,, | கழ்ற | கழற |
| ,, | 552 | 1 | மூழ்கின | மூழ்கின |
| 308 | 561 | 5 | திருந்தத | திருந்த |
| ,, | 563 | 7 | யனுகி | யணுகி |
| 318 | 638 | 2 | யன்பு | மூன்பு |
| 320 | 653 | 4 | குழ | சூழ |
| 321 | 657 | 3 | மிக்கவாராய் | மிக்கவாராய் |
| ,, | 658 | 2 | முழ்கு | மூழ்கு |
| ,, | 659 | 4 | தனத்த | தணத்த |
| 324 | 684 | 1 | பிரவக | பிரவாக |
| 328 | 726 | ,, | பரமமென் | பரமென் |
| 350 | 77 | 2 | ரேயவன் | ரேலவன் |
| 384 | 186 | 4 | ஞென்று | னென்று |
| 405 | 347 | 2 | சியம | சிமைய |
| 438 | 167 | 1 | ளின் | பொருளின் |
| ,, | 168 | ,, | விலிமை | வலிமை |
| ,, | 171 | 3 | கெய்பக | செய்பக |
| 469 | 33 | 1 | விசால | விசார |
| 501 | 1 | 2 | னரூட் | னருட் |
| ,, | 6 | ,, | றேனுர் | றேனுங் |
| 502 | 13 | 3 | கொண்டங் | டங்கொண் |
| 505 | 15 | 4 | பழைத் | யழைத் |
| 516 | 24 | 1 | விறப | விற்ப |
| 519 | 17 | 3 | ஞன்று | னன்று |
| 528 | 14 | 4 | ளின்றெனை | னின்றெனை |
| 531 | 1 | 4 | சாறறி | சாற்றி |
| 534 | 26 | 4 | தினிற | தினிற் |
| 538 | 14 | 1 | போற | போற் |
| ,, | 20 | 4 | னுதைய | றுதைய |
| 541 | 15 | 1 | ணண்னி | ணண்ணி |
| 543 | 37 | ,, | வாரானதப் | வாராதனப் |
| 557 | 148 | 4 | புல்வாய் | புகல்வாய் |
| 561 | 187 | 1 | தாள்றிகை | தான்றிகை |
| 568 | 39 | 2 | யொய் | பொய் |
| 570 | 56 | 4 | மலர்கக | மலர்க்க |
| 571 | 64 | 1 | மேப்படு | மேம்படு |
| 573 | 77 | 4 | கபீரீன் | கபீரின் |

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 576 | 110 | 2 | மன்னியமி | மம்முறையில்லை |
| 577 | 119 | 4 | மெபபயன் | மெய்ப்பயன் |
| 580 | 146 | ,, | னனைங் | னணைங் |
| ,, | 147 | 2 | சீர்கக | சீர்க்க |
| 589 | 22 | 4 | புமனி | புனி |
| 590 | 1 | ,, | ளக்கூ | ளச்சூ |
| ,, | 6 | 2 | னிரவணை | ளிரவணை |
| ,, | 8 | 1 | வேவுசீர் | மேவுசீர் |
| 596 | 24 | 3 | சாக்காத் | சாக்கரத் |
| ,, | 26 | 4 | தேத்கி | தேத்தி |
| 597 | 32 | 3 | ணெங்கனும் | ணெங்கணும் |
| ,, | 36 | 2 | றமுங் | றவமுங் |
| 604 | 91 | 4 | தெவரீர் | தேவரீர் |
| 607 | 9 | 2 | மடைத்தே | மடைந்தே |
| ,, | 12 | 3 | விரங்கிடு | விரங்கிடு |
| 620 | 24 | 2 | ரென்னங் | ரென்னச் |
| 621 | 39 | 4 | நானடங் | தானடங் |
| 622 | 43 | ,, | ளுன்டோ | ளுண்டோ |
| 626 | 20 | ,, | ருகக்த | ருகத்த |
| 634 | 73 | ,, | யிற்றனின் | யிற்றினின் |
| 641 | 18 | 4 | கன்கறுர் | கன்றுர் |
| ,, | 22 | 1 | புகழ்வார் | புகல்வார் |
| 642 | 2 | ,, | நாமுளான் | நாமமுளான் |
| ,, | 4 | ,, | தனனுன் | தனனுண் |
| 643 | 9 | 3 | லாம்பா | லம்பா |
| 647 | 48 | 4 | தச்சோ | தமச்சோ |
| 654 | 11 | ,, | புவகை | யுவகை |
| 659 | 25 | 2 | யெனை | யென் |
| 664 | 38 | 4 | ததசும்பி | தசும்பி |
| 679 | 2 | ,, | வினடமிக | விடைமிக |
| 688 | 11 | 2 | யண்ணி | ட்ண்ணி |
| 699 | ,, | 3 | பருக | புருகக் |
| 700 | 16 | 2 | வாமேன் | வான்மேன் |
| 709 | 79 | 4 | பெரன் | பொன் |
| 713 | 114 | ,, | வசலம் | லசலம் |
| 746 | 7 | 2 | தெழுக்து | தெழுந்து |
| 755 | 23 | 1 | ன்ன்ன்வ | னன்னவ |
| 759 | 19 | ,, | ஒத்லு | ஒதலு |
| 771 | 5 | ,, | னிகழ்ந்துவ | னிகழ்த்துவ |
| 773 | 4 | ,, | பொவிவாற் | பொலிவாற் |
| 774 | 9 | ,, | றிருந்தா | றிருத்தா |
| 776 | 13 | 4 | மகிழ்ந்ான் | மகிழ்ந்தான் |
| 780 | 23 | 2 | பரமபுதம் | பரமபதம் |
| 788 | 58 | 1 | கடன் | கடன்பொன் |

